இதிகாசமாகிய

# ஸ்ரீ மஹாபாரத வசனம்

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்

திருமகள்விலாஸ அச்சியந்திரசாலை

சென்னை.







ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

இதிகாசமாகிய

# ஸ்ரீமஹாபாரதம்

வசன காவியம்

[ஐதீக பல கலர் திருவுருவப் படங்களடங்கிய சுத்தப் பதிப்பு]

ஆரணிய பர்வம் - விராட பர்வம் - உத்தியோக பர்வம்.

இவை,

ஸ்ரீ வேதவியாசர் செய்த கீர்வாண பாரதத்தைத்
தமிழில் நல்லாப் பிள்ளை அவர்கள் செய்த பாடலுக்கிணங்க
அமைத்தெழுதியது.

2-வது புத்தகம்




பிரசுரித்தவர்கள்:—

**B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,**

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

1933.

4-வால்யம் செட்] [விலை ரூபா 10.





ஸ்ரீ கிருஷ்ணாயநம:

# இரண்டாம் புத்தகத்தின் சருக்க அட்டவணை

## ஆ ர ண் ய ப ர் வ ம்

# அட்டவணை

## விராடபர்வம்

## உத்தியோக பர்வம்



இரண்டாம்பாகத்தின் சருக்க அட்டவணை

முற்றிற்று.



ஸ்ரீ கிருஷ்ணாய நம:





ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## மூன்றாவது,

## ஆரண்யபர்வம்

### கண்ணன் துதி

ஒருதலத்திடை யவதரித்தணி பொதுவர்சிற்குடி லுறைவதோர்
மரகதப்புய றணையெடுத்தொரு மகவெனத்தன திறுதியா
லரிதுபற்றிய வல்கைசெற்றிட வணிமுலைப்புய நுகர்வுரு
மருதிடைத்தவழ் பொருவில்வித்தகன் மலரடிக்கண் வழுத்துவாம்.

### சூதபுராணிகர் வாக்கியம்

[ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு ஆதிபஞ்சகத்தின் இரண்டாம் பாகமாகிய சபாபர்வத்தைக் கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெயமகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! காண்டவவன தகனத்தினின்று தப்பிவந்த மயனென்னுஞ் சிற்பியால் இந்திரப்பிரஸ்தத்திற் சமைத்துத் தந்த சபா மண்டபத்தில், நமன் சபையுளிருக்குந் தந்தையின் கருத்தை நாரதமுனிவரா லுணர்ந்த உதிஷ்டிரன் கண்ணனை விரோதிகளாகிய ஜராசந்தனையுஞ் சிசுபாலனையுஞ் சங்கரித்து, தம்பியர் நால்வர் திக்குவிஜயத்தாற் கொணர்ந்து வந்த பொருள்களைக் கைக்கொண்டு, வியாசராதியர் முன்னிலையில் இராஜசூய முடித்துச் சம்ராட்டாகி, பெரிய தந்தையின் கருத்தைப் பரிபாலனஞ் செய்யவேண்டி, அத்தினபுரஞ்

சென்று சூதாடி அதர்மோஷ்நதீரத் துரோணு
சாரியரால் நியமித்த பன்னிரண்டு வருடம்
வனவாசமும் ஒருவருட மக்ஞாதவாசமும் உள்
ளக்களிப்போடு வகித்து, உடனே தம்பியர்
நால்வரும் பாஞ்சாலியுஞ் சூழப் புறப்பட்டு
வரப்பெற்ற சரித்திரங்க ளனைத்துஞ் சாங்
கோபாங்கமாகக் கேட்டு, ஒருபாற் சந்தோஷ
மும் மற்றொருபாற் றீரா வியசனமு மாயினேன்.
இப்பால் மூன்றாம் பாகமாகிய ஆரண்ய பர்
வத்தை அவ்வியசனந்தீர வநுக்கிரகிக்க
வேண்டுமென்று கேட்க, வைசம்பாயன முனி
வர் சொல்லத் தொடங்கினார்.]

தனியராய் பலவாய்
தாயர்ப் மகவாய் நிற்கு மொருவன்
தீயா யானுய் மாயனைக் கணுக
மாயா மெய்னாய் மனநீங் கிலனே.
வாயா தவ்வினை மனநீங் கிலனே.

முதலாவது,

## பாண்டவர் வனம்புகு சருக்கம்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! ஐவர்களில் வீமன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் பின்னும் பாஞ்சாலி இவர்கள் கூறிய கடுஞ் சபதத்தைக் கேட்ட திரிதராஷ்டிரன் மெய் நடுங்கி, பாஞ்சாலியை வணங்கிக் கோபந்தணிய நல்வசனங் கூறி, உன் பத்தாக்களாகிய பாண்டவர்கள் அகமகிழ்ச்சியாகச் சூதில் தோற்ற நாடு நகரங்கள் முதலிய எல்லாவற்றையுந் தந்தேன் தந்தேன் என்று கூறி அவளைச் சமாதானப்படுத்தி, பின்பு பாண்டவர்களையும் அழைப்பித்து நீங்கள் ஐவருஞ் சீக்கிரம் எழுந்து மாதர் சிரோன்மணியான பாஞ்சாலியை அழைத்துக்கொண்டு உங்கள் நகரத்துக்குச் செல்லுங்களென்று சொல்ல, அதை யறிந்த சகுனி துரியோதனனுக்குத் தெரிவித்துச் சில துற்போதனையைச் செய்ய, அதனால் துரியோதனன் பிதா வாக்கின்படி உங்கள் நாடு நகரத்தைக் கொடுத்தோமே யல்லது அடிமைத்தனத்தைமாத்திரம் விடுவிக்கோமென்று துச்சாதனனைக்கொண்டு சொல்லுவிக்க, அதுகேட்ட திரிதராஷ்டிரன் மனவருத்தங்கொண்டு வில்லாசிரியரைப் பார்த்துத் தன் கருத்தையும் பிள்ளைகளின் கருத்தையும் எடுத்துக்காட்டி உடனே இதற்கொரு தீர்ப்பு கொடுமென்று கேட்க, வில்லாசிரியராகிய துரோணாசாரியர் ஸ்ரீராமன் கதையை எடுத்துக்கூறிப் பஞ்சவர்க்கு அதிக நலமுண்டாகவுந் துரியோதனனுக்கு மகிழ்வுண்டாகவும் யோசித்துப் பன்னிரண்டு வருஷம் வனவாசஞ் செய்து ஒரு வருஷம் அக்ஞாத வாசமாயிருந்து வருகின்றது நன்மையென்றும் அந்தப்படி செய்து வந்தபின்பு முன்போலவே பஞ்சவர் நாடு நகர முதலியவற்றைப் பெறுதல் தகுதியென்றுரைக்க, துரியோதனன் கிஞ்சித் தாலோசித்துத் தீர்மானித்த இப்பதின்மூன்று வருஷத்துக்குள் அக்ஞாதவாசமாகிய ஒரு வருஷத்தில் இவர்களை எவ்விதத்திலாவது கண்டுபிடித்து முன்போலவே வனவாசஞ் செய்ய அனுப்பிவிப்போமென்று எண்ணி மகிழ்ந்து அவ்வெண்ணத்துக் கொத்துக்கொள்ள, பாஞ்சாலி அரசருள் அடிமை யில்லையாதலால் அடிமை மீட்டுக்கொள்ள ஒரு ஆட்டம் சூதாடக் கட்டளையிட வேண்டுமென்று பெரியோர்களைக் கேட்டுக்கொண்டு தருமராஜனை நோக்கி நானே நீராக இருந்து ஓர் ஆட்டஞ் சூதாடுமென்று கூற, தருமராஜன் அக்கருத்துக் கிணங்கிச் சான்றோர்கள் முன்னிலையில் தான் செய்த தருமத்தை மந்திரமாக வைத்து ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியைத் தியானித்துச் சகுனியுடன் ஓர் ஆட்டம் சூதாடி வெற்றியடைந்து அடிமைத் தனத்தை மீட்டுக்கொண்டு பெரியோர்கள் முதலானவர்களிடத்தில் விடைபெற்றுச் சபையை விட்டுத் தானுந் தன் சகோதரரும் பாஞ்சாலியோடு புறப்பட்டு நகரத்தைக் கடந்துவர, அப்போது தங்களைக்கண்டு விசனப்படுங் குடிகளுக்குத் தருமபுத்திரரானவர் இனிய வார்த்தைக் கூறி, பன்னிரண்டாட்டஞ் சூதாடி பல வாபரணங்களையும், ரதங்களையும், கஜங்களையும், துரகங்களையும், பதாதிகளையும், நாட்டையும், நகரத்தையும், அரசுரிமையையும், சித்திராங்கதன் கொடுத்த அசுவங்களையும், போகஸ்திரீகளையும், மற்றுமுள்ள எல்லாச் செல்வங்களையும் பாஞ்சாலி முதலிய எங்களையும் ஒவ்வொரு ஆட்டத்திற்குப் பந்தயமாக வைத்துத் தோற்றபடியாற் பன்னிரண்டு வருஷம் வனவாசஞ் செய்து அந்தப் பாவத்தைப் போக்கி அடிமையை நீக்கிக்கொள்ள ஆடின ஓர் ஆட்டத்திற்கு ஓர் வருஷம் ஒருவருக்குந் தெரியாமல் அக்ஞாதவாசமிருந்து பதின்மூன்று வருஷத்தையும் பதின்மூன்று நாளாக நினைத்துக் கழித்து வருகிறேனென்று திடஞ்சொல்லித் தானுந் தன் சகோதரர்களும் பாஞ்சாலியுமாக வனத்தை நோக்கி வெளிப்பட்டார்களன்றோ? அதுவே பிரயாணமாக வந்து சவுனக முனிவருடைய வனத்தில் வந்து சேர்ந்தார்கள்.

### சூரியபகவான் தருமராஜனுக்கு அக்ஷய பாத்திரமளித்தல்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் தருமராஜன் முதலிய ஐவரும் பாஞ்சாலியும் வனத்துக் கேகின செய்தியைப் பாண்டவர்களுடைய சேனைகட்குத் தெரிய வந்தது. அனலிட்ட மெழுகைப்போல மனமுருகி, ஐயையோ!! தெய்வமே! தெய்வமே! தருமஸ்வரூபியாகிய நம்முடைய அரசனுக்கு இப்படிக்கொத்த வருத்தம் நேரிடுகிறதானால், இனி என்னயிருக்கிறது? தன் பிராணனைப்போல மற்றப் பிராணிகளையுங் காப்பாற்றுவதில் அன்புகொண் டிருக்கின்ற தம்பிமார்களையுடைய அரசனே வனவாசஞ் செய்

யப் போனுரென்கிற சொல்லைக்கேட்டு, இன்னும் நமதாவி இருக்கின்றதே என்று வெகுவாய்த் துக்கித்துப் புலம்பி, சேனைத்தலைவர்-அணித்தலைவர்-வியூகத்தலைவர்-அர்த்தரதாள்-சமரதாள்-பட்டவர்த்தனுள்-மகுடவர்த்தனுள் இவர்களெல்லாருஞ் சவுனகமுனி வனத்துக்கு வந்து, அங்கிருக்கும் தங்கள் அரசனுகிய தருமராஜனைக் கண்டு வேறற்ற மரம் போல விழுந்து புலம்பித் துக்கித்தார்கள். ஆனுல், தருமராஜன் துன்பமுண்டானபோதும், இன்பமுண்டான போதும் ஒரே சிந்தையை யுடையவராய் இருந்தபோதிலும், பிரஜைகளினுடைய கோஷ்டத்தைக் கேட்ட மாத்திரத்தில் மனவருத்தமுற்று வந்தவர்களுக்கெல்லாம் இனிய வசனஞ் சொல்லி, யாவரையும் சந்தோஷிக்கும்படி சில சாஸ்திரங்களைச் சொன்னுர். அதற்கு யாவரும் தருமராஜனை வணங்கிச் சொல்லுகிருர்கள்:

ஓ ஸ்வாமி! பொறை-வீரம்-நீதி இவை இல்லாத அரசனிடத்திலிருந்து அஷ்ட ஐஸ்வரியத்தைப் பெற்று வாழ்கிறதைப் பார்க்கிலும், அப்பொறை-வீரம்-நீதி இவைகளையுடைய அரசனிடத்திலிருந்து அஷ்ட தரித்திரத்தை அடைந்து வாழ்வதே மேலாகும். ஆதலால், தங்களைப் பிரிந்து நாங்கள் இருக்கமாட்டோமென்று சொல்ல, தருமராஜன் புன்சிரிப்புகொண்டு சொல்லுகிருர்: ஓ சற்சனர்களே! நீங்கள் ஏன் வருத்தப்படுகிறீர்கள்? செல்வம் நிலையல்ல. யானையின் பிடரியில் இந்திரனைப்போலப் பொருந்திப் பூரண சந்திரப் பிரகாசம்போன்ற தவளச்சத்ர நீழலிற் செல்லுவோ ராயினும், பொல்லாத காலம் நேரிட்டால் பிராண நாயகியையும் இழந்து அலைவரென்று மறைகள் முறையிடுகின்றன. ஆதலால், நாங்கள் ஒரு காரண நிமித்தம் பெரியோர்களுடைய வாக்கின்படி பன்னிரண்டு வருஷம் வனவாசம் ஒரு வருஷம் அக்ஞாதவாசமுஞ் செய்யவேண்டும். இந்தப் பதின்மூன்று வருஷத்தையும் பதின்மூன்று நாளாக நினைத்துக் கழித்து வருகிறோம். அதுகாறும் எங்கள் தாயாரும், எங்கள் பிள்ளைகளும் இங்குத்தானே இருக்கிறார்கள். நீங்களெல்லாம் அவர்களை எங்களைப்போலப் பாவித்து அவர்களிடத்தே நீங்கள் சம்பிரமத்தோடும் இருங்களென்றுரைத்தார். அதுகேட்ட யாவருந் தங்களரசன் கட்டளைக்கு இசைந்து அவரையும் மற்றையரையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு அப் பாண்டவர்களுடைய புத்திரர்களிடம் வந்து சகல சம்பிரமத்தோடுங்கூடி வாழ்ந்துகொண் டிருந்தார்கள்.

இப்பால் அத்தருமராஜனை இடைவிடாமலிருந்த பன்னீராயிரம் வேதியர்கள் தருமராஜன் வனத்துக்குச் சென்றதைக் கேள்விப்பட்டுக் கனவருத்தமுற்று, ஓ! ஓ! நமது அரசன் சேஷ்டபிதாவின் சமுகங் கண்டு வருவானென்றல்லவோ எண்ணியிருந்தோம். இப்போது மின்னுமல் இடி இடித்ததுபோல நமக்குத் தெரியாமல் அரசன் வனத்துக்கு யேகின காரணம் என்னவென்று ஏக்கங்கொண்டு தவசியருடன்யாவரும் பிரயாணப்பட்டுச்சவுனகமுனிவர் வனத்துக்கு வந்து தருமராஜனைக் கண்டார்கள். தருமராஜன் தம்பியருடன் அவர்களை எதிர்சென்று வணங்கி அழைத்துவந்து இருக்கச்சொல்லி, பிதாவின் சமுகங் காணப் போனதுமுதல் வனத்துக்கு வந்த வரைக்கும் நடந்த காரியத்தைக் கூறினார். வேதியர்கள் தருமராஜனைப் பார்த்துச் சொல்லுகிறார்கள்: ஓ மகாராஜனே! எந்தெந்தக் காலத்தில் எதை எதை அனுபவிக்க வேண்டுமோ அந்தக் காலத்தில் அதை அனுபவிக்கத்தான் வேண்டும். ஆனுல், நாங்கள் உம்மைவிட்டுப் பிரிந்திருக்க எங்களுக்கு மனமில்லை. நாங்களோ நீருண்டானபோது ஏரியை இடைவிடாமலிருந்து நீரில்லாக்காலத்தில் ஏரியை விட்டுவிடும் பறவைகளை யொத்தவர்களல்ல. ஆனுல், அவ்வேரியில் நீருற்றபோது செழித்திருந்து, நீரற்றபோதும் ஒட்டி வளர்ந்திருக்கின்ற கொட்டியையும், ஆம்பலையும் ஒத்திருக்கின்றவர்கள் நாங்கள். ஆதலால், எங்களைக் கைவிடாதிருக்க உம்மை வேண்டுகிறோமென்றுகூற, தருமராஜன் அந்த வாக்கியத்தை மறுப்பதற்கு அவ்வவ் வேதியர்களின் நடக்கையே தடை செய்தமையால் அக்கருத்துக்கிசைந்த யாவரையுந் தன்னிடத்தி லிருக்கும்படி உத்தரவு கொடுத்தார். வேதியர்கள் யாவரும் மன மகிழ்ச்சியோடு தருமராஜனை அகலாதிருந்தனர்.

பின்பு தருமராஜன் பெரிய தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணவேண்டி சூதாடி அவரை யடுத்திருக்கும்பன்னிராயிரம் வேதியர்கள் பசிப்பிணியையும், அக்கால் தனது தம்பிமார் தன் வாக்கின்படி அடங்கிப் பூனைபோலிருந்ததையும், பாஞ்சாலி பலவிதத்

தால் அவகோலப்பட்டதையும் எண்ணி எண்ணிக் கனவருத்தமுற்றவராய், மீண்டும் அதற்கு அதிக வருத்தமுறாமல் மனதைத் தேற்றிக்கொண்டு, எனக்குள்ளாக்கி வருத்தப்படுவார்களே என்கிற ஏக்கத்தை மனதில் வகித்து, கொடிய வெய்யலி லகப்பட்ட பாம்புபோல் மனம் பதைத்து இருந்தனர். அத்தருணத்தில் அவ்வனத்துக்கு அதிபதியாகிய சவுனகர் பஞ்சவர் காட்டில் வந்ததை யுணர்ந்து, ஓ! ஓ! மகா புண்ணியவானாகிய தருமராஜன் ஏதோ சில சிந்தையினால் நமது வனத்துக்கு வந்திருக்கிறபடியால், நாம் போய்க் கண்டு மனந் தளர்ந்திருக்கும் அத் தருமனுக்குத் தேறுதல் சொல்லவேண்டுமென்று எண்ணித் தக்ஷணமெழுந்து, அவர் வந்து இறங்கியிருக்கிற திக்குநோக்கி வருவதாயினார். அப்போது கவிகாம்பர தண்டு கமண்டல சடாதாரியாகிய அச்சவுனகர் வரவை நெடுந்தூரத்தி லிருக்கிற தருமராஜன் கண்டு, ஓ! ஓ! இந்த வனம் முனிவர்களது ஆச்சிரமமா யிருக்கின்றது. அதோ ஒரு மகா பெரியவர் வருகிறார். ஆனதால் அவரை நான் முன்னதாகச் சென்று எதிர்கொள்ளவேண்டுமென்று கருதி, தட்சணந் தானுந் தன் சகோதரர்களும் எழுந்து எதிர்கொண்டுபோய் அவரைக்கண்டு வணங்கி அழைத்துவந்து, அங்கொரு தருப்பாசனமிட்டு இருக்கச்செய்து, பலவாறு புகழ்ந்து சாஷ்டாங்கமாகப் பணிந்து நின்றனர். சவுனகர் தருமராஜனுடைய நல்லொழுக்கத்தைக் கண்டு உள்ளம் பூரித்துச் சொல்லுகிறார்:

ஓ தருமநந்தனா! உன்னுடைய பெயரையும் உன்னுடைய நல்லொழுக்கத்தையும் பல முனிவர்களாற் கேட்டு ஸ்ரீமந் நாராயணனது திருநாமத்தை நினைத்தவுடன் எவ்வாறு மகிழ்வுண்டாகுமோ அதுபோல் உனது பெயரை நினைத்து நினைத்து மகிழ்வடைந்திருந்தேன். தற்காலத்திற் சூரியனைக்கண்ட தாமரையைப்போலவும், மேகத்தைக் கண்டு மகிழு மயிலைப்போலவும், இன்று உன்னைக் கண்டு மகிழ்ந்தேனென்று பல ஆசிகள் கூறிப் பின்னுஞ் சொல்லுகிறார்: ஓ தருமநந்தனா! நல்லொழுக்கத்தை யுடையவனெவனோ அவனுக்கு நாட்டைவிடக் காடு மகா சிறந்தது. ஏனென்றால், நல்லொழுக்கத்துக்கு இருப்பிடமானது வனம். ஆதலால், பெரியோர்கள் வனவாசஞ் செய்து க்ஷேத்திர விசேஷத்தாலும், தீர்த்த விசேஷத்தாலும், மூர்த்திகள் விசேஷத்தாலும் ஒழுக்கஞ் சிறந்து, மறுமைப் பயனை அதிகமாக அடைவர். ஆதலால், நீ வனத்துக்கு வந்தது எனக்கு மாத்திரமல்ல, உனக்கும் நலமாகத்தான் இருக்கின்றது. அப்படிப்பட்ட கருத்து உனக்கிருந்தும், அக்கருத்தை ஏதோ ஒரு துன்பம் நேரிட்டு வாதிக்கின்றது. அது உன் முகக்குறியில் தெரிகின்றதென்று இவ்யாக்கினியாகிய சவுனகர் கூற, தருமராஜன் மறுபடியும் வணங்கிச் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! உலகிலுள்ள உயிர்கள் அனைத்துக்கும் ஆதாரமான ஸ்ரீமந் நாராயணன் தலைமையாக இருந்தபோதிலும் ஒருவர் மூலமாகப் பல பெயர்களுக்கும், பல பெயர்கள் மூலமாக ஒருவருக்கும் சீவனம் நடந்து வருகிறது. என்னொருவனால், என் சகோதரரும், நெருப்பில் பிறந்த பாஞ்சாலியும் சுகமிழந்தனர். ஆகிலும், அது எனக்குப் பெரிதான வருத்தத்தைக் கொடுக்கவில்லை. இப்போது என்னை அடுத்திருக்கின்ற பன்னீராயிரம் வேதியர்கள் பசிப்பிணிக்குள்ளாகி வருந்துகிறார்கள். அவர்கள் கொண்டிருக்கிற வருத்தம் என்னை வருத்துகின்றது. அதற்கு யாதொரு வகையும் அறியாமல் மயங்கி வருகிற தமியேனுக்கு, வாடும் பயிருக்கு மழை வந்ததுபோல் தாங்கள் வந்தீர்கள். ஆதலால், என் மனவருத்தம் நீங்கத் தேவரீர் அடியேனுக்கு ஒரு வழி காட்டவேண்டுமென்று வினவச் சவுனகமுனிவர் சொல்லுகிறார்:

ஓ தருமநந்தனா! கெட்டவர்களுக்கு அணுவளவு துன்பம் வந்தபோதிலும் உதவி செய்பவர்கள் இல்லாவிட்டால், அத்துன்பம் மலைபோலாகும். நல்லவர்களுக்கு வரும் துன்பம் மலைபோல் இருந்தாலும், அது தெய்வ கடாக்ஷத்தினாற் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கும். ஆதலால், உனக்கு நேரிட்ட துன்பம் நீடித்திராமல் விரைவிற் கெட நானொரு மந்திரத்தை உபதேசிக்கிறேன். அந்த மந்திரத்தை யுச்சரித்து ஆதித்தனை நோக்கி மூன்றே முக்கால் நாழிகை தவத்தி லிருந்தால் உன் மனங் களிப்புறச் சூரியபகவான் வருவார். அவரிடத்தில் உனது குறையைச்சொல் அவர் அக்குறையை அகற்றுவார் என்று கூறித் தருமராஜனை ஸ்நானஞ்செய்து வரச்சொல்லி ஒரு மந்திரத்தை உபதேசித்து தருமராஜனிடத்து விடைபெற்றுத் தமது இருப்பிடத்திற்குச் சென்றார். பின்பு தருமராஜன் அம்முனிவர் கூறிய மந்திரத்தை யுச்சரித்து, ஒரு

முகூர்த்தம் ஆதித்தனை நோக்கித் தவத்தி
லிருந்தார். ஆதித்தன் தருமராஜன் செய்யுந்
தவத்திற்கு மகிழ்ந்து, ஒரு வேதியனுருவந்
தரித்துத் தருமன் கண்ணுக்குத் தோன்றி
னன். தருமராஜன் அவ்வேதியனுக்குச் சோட
சோபசாரஞ் செய்து வணங்கித் துதித்தார்.
வேதியனாகிய சூரியபகவான் தருமராஜனை
வாழ்த்தி, ஓ தருமநந்தனா! உனக்கு வேண்டி
யது யாதென்று வினவ, தருமராஜன் ஓ
ஸ்வாமி! அடியேனை யடுத்திருக்கிற பன்னீ
ராயிரம் வேதியர்களும் பசிவேதனை யடையா
திருக்கக் கிருபை புரிய வேண்டுமென்று கூற,
அந்தச் சூரியன் மகிழ்ந்து, அவரவர்களெண்
ணப்படி அதிக மாதுரிய பதார்த்தத்தோடு
உண்டியை யுதவுகின்ற ஒரு அக்ஷய பாத்தி
ரத்தைத் தருமன் கையிற் கொடுத்துச் சொல்
லுகிறான்: ஓ தருமநந்தனா! இந்தப் பாத்திரம்
நினைத்தபடி உணவு கொடுக்கும். நீங்கள்
வனத்திலிருக்கிற பரியந்தம் வைத்திருந்து,
நகரத்திற்குச் செல்லும்போது என்னிடத்திற்
கொடுத்து விடுங்களென்று கூறிப் போயினன்.

தருமராஜன் அந்தப் பாத்திரத்தைப்
பெற்று மனமகிழ்ச்சியோடு வேதியர் கூட்டத்
துக்கு வந்து வணங்கிப் பாத்திரத்தை அவர்
கள் கையிற் கொடுத்துச் சொல்லுகிறார்:
ஓ ஸ்வாமிகளே! உங்கள் கருத்தின்படி
இந்தப் பாத்திரஞ் சகல உண்டிகளையுமுதவும்
இதனை நீங்கள் வைத்துக்கொண்டு யாதொரு
குறைவுமின்றிச் சீவனஞ் செய்து வாருங்க
ளென்று சொல்லினார். அவ்வேதியர் அந்தப்
பாத்திரத்தால் தங்கள் தங்கள் கருத்தின்படிக்
குச் சந்தோஷமாய்ச் சீவனஞ் செய்து வந்
தார்கள். பின்பு தருமராஜன் முதலான ஐவ
ரும் பாஞ்சாலியுங் காட்டிலுள்ள கந்தமூல
பலாதிகளை யுண்டு பசி தணிந்து, அன்றைய
தினம் அங்கிருந்து மறுநாள் உதயத்திற்கு
எழுந்து நித்திய கருமங்களை முடித்துக்கொ
ண்டு, வேதவேதியர்களோடு பிரயாணப்பட்
டுச் சவுனகமுனி வனத்தைவிட்டுக் காடு மலை
முதலிய வனாந்திரத்திற் சஞ்சரித்து, மத்தி
யானப்பொழுதில் ஒரு வனத்தில் இளைப்
பாறி, மறுபடியும் பிரயாணப்பட்டுக் காட்டு
வழியாக வருகிறபோது சூரியன் பாண்டுமக்
களின் வருத்தத்தைக்காண மனங் கூசிப்
போனவன்போலத் தன் கிரணங்களை யெல்லா
மொடுக்கிக் கொண்டுபோய் மேற்றிசைக் கடலி
லாழ்ந்தான்.

## பகாசுரன் தம்பியாகிய கிம்மீரணன் வதை

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே!
சூரியன் அஸ்தமயமானவுடன் பன்னீரா
யிரம் வேதியர்களோடு ஐவரும் ஒரு காட்டிற்
புகுந்தனர். அக்காடு பகாசுரன் தம்பியாகிய
கிம்மீரணனுக்கு வாசஸ்தலமாக இருப்பது.
அவனோ மகா பராக்கிரமசாலி. பகாசுரனுக்
கிளையவனென்று வயதாற் பேர்பெற்றாலும்
வல்லமையிற் பகாசுரனுக்கு இளையவனல்ல.
அவனைத் தேவர்கள் கண்டால் யமதெரிசனை
செய்தவர்களைப்போ லாவார்கள் என்றால்
அவனாற்றலை நீரே அளவிட்டுக்கொள்ளும்.
மேலுந் தன் தமையனிறந்த சேதி தனக்குத்
தெரிந்தகாலத்திற்றானே என் தமையனைக்
கொன்றவனை நானே கொல்லுகிறேனென்று
வஞ்சங்கொண்டு, தீர விசாரிக்கு மிடத்திற்
பாண்டு புத்திரரில் ஜேஷ்டனுக் கிளையோனா
கிய வீமனென்று தெரிந்து காலம் பார்த்துக்
கொண்டிருக்கிறவனாதலால், தன் வனத்தில்
மனித ரரவமுண்டானதைக் கண்டு ஓடோடி
யும் வந்து பார்க்கும்போது, ஐந்து வண்ண
மாகிய ஐவரைக் கண்டு, ஓ! ஓ! இந்த ஐவரும்
பாண்டுபுத்திரர்களாக இருக்கின்றனர். இவர்
களில் கறுந்துயர்ந் திருக்கின்றவன்தான் நம
து தமயனுக்கு யமனாக விருந்தவன். இவ
னைக் கொல்ல நெடுநாள் வஞ்சம் வைத்திருந்
தோம். இன்று அந்த வஞ்சம் நிறைவேறுங்
காலம் நேரிட்டது என்று கருதி வெளிப்
பட்டவன் பாஞ்சாலியைக் கண்ணுற்று ஆ!
ஆ! இந்த மாது மகா ரூபவதியா யிருக்கின்
றாள். நாம் எண்ணியபடி வீமனோ டெதிர்ப்
போமாகில் ஜயாபஜயம் ஒருவர் பங்கல்ல.
நமது தமயனைக் கொன்றவன் ஒருவேளை நம்
மையுங் கொன்றுவிடுவான். சாகாமுன்னம்
இந்த மாதின் நலத்தை அனுபவிக்கவேண்டு
மென்று கருதி, இருளாயிருப்பதோடு பின்
னும் அதிக இருளுண்டாக ஒரு மாயை செ
ய்து, அந்த இருளில் ஒரு பாய்ச்சல் பாய்ந்து,
பஞ்சவர்க்கும் வேதியர்க்கும் மத்தியிற் கன
வருத்தத்தோடு நடந்து வருகிற பாஞ்சாலி
யைத் தூக்கிக்கொண்டு, மின்னலோடு மேகங்
கர்ச்சித்து வானத்திற் செல்வதுபோலக் கிம்
மீரணன் அந்தரத்திற் றாவினான்.

பாஞ்சாலி கிம்மீரணன் கையி லகப்பட்
டுக்கொண்டு பெருமூச்செறிந்து, பஞ்சவரைக்
கூவி ஓலமென் றரற்றினாள். அந்தச் சத்தஞ்
செவ்வையாய்க் கேட்கு முன்னமே வீமன்

அதிக சினங்கொண்டு, கதாயுதத்தைப் பூமியில் ஊன்றி ஒரு பாய்ச்சல் பாய்ந்து, அந்தரத்திற் செல்லுங் கிம்மீரணன் மார்பிலுதைத்துக் காலைப்பற்றிப் பூமியில் இழுத்தான். ஆற்றலையுடைய வீமனுதைத்த உதையினாற் கிம்மீரணன் சாம்பவமூர்த்தியின் காலுதைப்பட்ட யமனைப்போல மனவருத்தமுற்று, எடுத்துப்போன பாஞ்சாலியை எறிந்துவிட்டுப் பூமியிற் குதித்தான். பாஞ்சாலி பூமியில் விழுமுன் அர்ச்சுனன் தாவிப்பிடித்து, தேகவருத்த மில்லாமற் பூமியில் இறக்கினான். கிம்மீரணன் பூமியில் வந்து நின்று, அண்டகடாக மனைத்தும் வெடித்திடும்படியாகக் கடுகடுத்த ஓர் கர்ச்சனை கொண்டு, இடியேற்றை போலச் சென்று வீமனை ஒரு குத்துக் குத்தினான். வீமன் அக்குத்தைத் தட்டித் தன்னிரண்டு கைகளாலும் அவன் முகத்திலறைந்தான். அந்த அறை பட்ட மாத்திரத்திற் பொறி கலங்கினவனாக இருந்தபோதிலும், அதிக பராக்கிரமசாலி யாகையால் ஒரு மலையைப் பிடுங்கி வீமன்மேலெறிந்தான். வீமன் தன் கதையினால் அம்மலையைப் பொடிப்பொடியாக்கி, அவன் தோளிரண்டும் முறிபட ஒரு உதை உதைத்தான். கிம்மீரணன் அந்த உதைக்கஞ்சாமல் வந்து மேல் விழுந்து இறுகப் பிடித்தான். வீமன் அவனை நன்றாக இறுகப்பிடித்து வாரித் தூக்கிப் பூமியிலறைந்தான். அதனால் அக்கிம்மீரணன் உடல் பிளந்து சின்னபின்னமாயும், அவன் மனஞ் சற்றுங் கலங்காமல் இடையிலிருந்த உடைவாளை யுருவி வெட்டினான். வீமன் அந்த வெட்டைக் கதையினால் தட்டி, அவ்வாளை அனந்த துண்டங்களாக வெடித்துப் பொடிப்பொடி யாக்கினான், உடனே கிம்மீரணனும் ஓர் கதையைக் கையிலேந்தி அட்டகாசஞ் செய்து கொக்கரித்து, ஓடோடியும் வந்து ஓர் மோதுமோதி அடித்தான். வீமன் அந்த அடியைத் தன் கதையினால் தட்டி, அவன் கதையையும் ஆயிரஞ் சுக்கலாய்ப் போகும்படி பொடியாக்கினான்.

அக்கால் கிம்மீரணன் தனது வாளாயுதமுங் கதாயுதமும்போய் நிராயுதனாகியும் அஞ்சாமல், மல் யுத்தஞ் செய்ய யத்தனித்துத் தோள்தட்டி யார்த்தான். வீமன் தன் கதையை அரையிலிருக்குங் கச்சையிற் பூட்டி விட்டு, தானும் மல் யுத்தத்துக்கு ஆரம்பித்தான். உடனே இருவரும் எதிர்த்து ஒருவர்க்கொருவர் வெற்றியடைய வேண்டுமென்று வீராவேசங் கொண்டு, இரண்டு சிங்கங்கள் எதிர்த்தன போலெதிர்த்து ஒரு முகூர்த்தகால பரியந்தம் போர் செய்தார்கள். அப்போது வீமன் கடுஞ் சினமடைந்து, இந்த அசுரனோடு இவ்வளவு நேரம் போராடுகிறதா வென்று அவனைப் பிடித்தெடுத்து அந்தரத்திலெறிந்தான். அப்படியெறிந்த வேகத்தாற் கிம்மீரணன் சப்த மண்டலங்கட்கு அப்பாற் சென்று மீண்டு பூமியில் விழுந்து, அவயவங்கள் எல்லாஞ் சிதைந்தவனாய் இருந்தும் இராப்பொழுதாகையால் வலிமை குறையாமல் மறுபடியும் வந்தெதிர்த்தான். உடனே வீமன் மகா வுக்ராகாரத்தோடு அக்கிம்மீரணனைச் சேர்த்துப் பிடித்துப் பகாசுரனுடைய தலையைத் திரிகி யெறிந்தது போல் அவன் தலையைத் திரிகி யெறிந்து, அவனுடலை இருபிளவாகக் கிழித்துத் தலைமாற வெறிந்து விட்டு, தமயனாகிய தருமராஜனை வந்து வணங்கினான். தருமராஜன் முதலான நால்வரும், பாஞ்சாலியும், வேதவேதியர்களும், தவுமிய முனிவனும், சொல்லத் தரமில்லாத மகிழ்வடைந்து வீமனைப் பலவாறு புகழ்ந்தார்கள்.

அப்பால் அன்றிரவில் ஓரிடத்திலுந் தங்காமல் நடந்து பரிதி வனத்துக்கு வந்தார்கள். ஐவர் அப்பரிதி வனத்துக்கு வரவே சூரியன் யெதிர்வந் தழைப்பதுபோல உதயமாயினான். அந்தப் பரிதிவனத்தின் விநோதங்களைப் பார்வை யிட்டுக்கொண்டு அவ்வனத்தைக் கடந்து, தைதவனத்துக்கு வந்து, அங்கு நீர்வள மிகுந்து இருக்கின்றமையால் தங்கிக் காலைக்கடனை முடித்துக்கொண்டு சற்றிளைப்பாறி, மறுபடியும் பிரயாணப்பட்டுக் காடு மலைகளிற் போய்ச் சஞ்சரித்து, மேகங்கள் கெர்ச்சித்துக் கொண்டிருக்கும் நெருங்கிய சோலைகளை யுடைய காமியவனத்துக்கு வந்து, அங்கும் நீர்வள மிகுந்து இருக்கின்றமையால் அந்த வனத்தின் செழிப்பைக் கண்டு மனமகிழ்ந்து, அந்த வனத்தில் ஐவரும், பாஞ்சாலியும் தங்கி ஸ்நானஞ் செய்து, பூசை முதலிய நித்தியானுஷ்டான விதிகளை முடித்துக் கந்த மூலபலாதிகளை யருந்திச் சுகித்திருந்தனர். பன்னீராயிரம் வேதியரும், தவுமிய முனிவரும் ஸ்நானஞ் செய்து பூசைமுடித்து, அக்ஷயபாத்திரத்தி லுண்டான அறுசுவையோடு கூடி உண்டியைப் புசித்துத் தருமராஜனிடத்து வந்து சத்கால க்ஷேபஞ் செய்து கொண்டிருந்தனர்.

## பாண்டவர்களை பந்துக்கள் வந்து காணுதல்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! அக்காமிய வனமானது நைமிசாரண்யத்திற்குப் கந்தமாதனத்திற்கும் ஒப்பாய் இருக்கின்றதுமன்றி, சுவர்க்க மத்திய பாதாளமென்னும் முப்பு வனத்தில் இருப்பவர்களும் இச்சிக்குந் தன்மையைப் பொருந்தி, சந்தனம்-பாரிசாதம்-கோங்கு-பலா-பாதிரி - மந்தாரை-சண்பகம்-அசோகு - மல்லிகை - முல்லை-இருவாட்சி-புன்னை-கமுகு-தேமா-வாழை முதலியவற்றைப் பெற்று, வெங்கதிரைத் தண்கதிராகச் செய்யுங் குளிர்ச்சியை யுடையது. அப்படிக் கொத்த வனத்தில் ஐவருஞ் சென்ற மாத்திரத்தில், மேற்சொன்ன விருக்ஷாதி புஷ்பச் செடிகள் அதிகமாகப் புஷ்பித்தும், காய்த்தும், பழுத்தும் மிகுந்தனவன்றி, அவ்வனத்திலுள்ள சிங்கம் - யானை -புலி-மான்-பாம்பு-கீரி முதலிய மிருக ஜெந்துக்களும் ஒன்றோடொன்று விரோதமின்றிச் சிநேகித்து விளையாடிக் கொண்டிருந்தன. ஐவரும் அவ்வனத்தின் விநோதங்களையும் மிருக ஒற்றுமையையுங் கண்டு மகிழ்ந்து இருந்தார்கள். அப்போது ஐவர் வனவாசஞ் செய்யச் சென்ற சேதி உலகெங்கும் பரவினதோடு, தூதுவர்களுந் தங்கள் தங்கள் அரசர்களுக்கு அறிவித்தார்கள். உலகிலுள்ள அரசர்கள் அது கேள்விப்பட்டு மனவருத்த முற்றுத் தங்கள் தங்கள் பரிசனத்தோடு காமிய வனத்துக்கு வந்தார்கள். பாஞ்சாலன் பஞ்சவர் காடுறைந்ததைத் தூதுவரால் உணர்ந்ததுவுமன்றி, தன் குமாரத்தியைத் துர்ச்சாதனன் சபைக்கு இழுத்து வந்ததையுங் கேள்விப்பட்டு, நெருப்பில் நெய்யை விட்டாற்போல் கோபத்தீ சுவாலிக்க எழுந்து போர்க்கோலங் கொண்டு ரதாரூடனாயினன். திஷ்டத்துய்மன் - மந்திரிமார் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர் - அணித்தலைவர் - வியூகத்தலைவர்-படைத்தலைவர் இவர்கள் யாவரும் ரதகஜதுரகபதாதிகளோடு வந்து அரசனைக் கலந்தார்கள். பாஞ்சாலன் மஹா உக்கிரத்தோடு பிரயாணப்பட்டு, மருமக்கள்மார் எந்த வனத்தில் இருக்கிறார்கள் பார்த்து வாருங்களென்று தூதுவர்களை நாற்றிசையிலு மனுப்பினன். உடனே தூதுவர்கள் சென்று ஐவரிருக்கின்ற வனத்தைக்கண்டு அரசனுக்குத் தெரிவித்தார்கள். அரசன் சகல பரிசனங்களோடும் ஐவரிருக்கிற காமிய வனத்தை நோக்கி வந்தான்.

இப்பால் சித்திரவாகன பூபால பாண்டியன் ஐவர் வனவாசஞ் செய்யச் சென்றதை ஆதியோடந்தமாகத் தூதுவரால் அறிந்து, அவனுந் தனது ரதகஜ துரக பதாதியோடு ஐவரிருக்கும் வனத்தை நாடி வந்தான். விராடன்-சல்லியன் - மகாதபதி முதலான அரசரும், பஞ்சவர்களின் சொந்த ஜனமாகிய சுபத்திரை-குந்திதேவி-அபிமன்னன்-இளம்பஞ்ச பாண்டவர் இவர்கள் முதலான உள்ளிட்டாரும் ஆற்ற மாட்டாதவர்களாய், அனலிலிட்ட மெழுகுபோல மனமது உருகிக் காமிய வனத்தை நாடி வந்தார்கள். சில தூதுவர்கள் மதுராபுரிக்குச் சென்று ஐவர் வனவாசஞ் சென்றதையும், அப்படி செல்வதற் குண்டான காரணத்தையும், தெரிந்துந் தெரியாதவர்போல் இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்கும் அறிவித்தார்கள். அதுகேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் அப்போதுதான் தேள் கொட்டினவர்போலத் துடிதுடித் தெழுந்து, ஓ! ஓ! கள்ளங்கபடறியாத தருமராஜனைத் துரியோதனாதிகள் ஏமாற்றினார்களே! இனியென்ன செய்கிறது? நாம் சென்று ஐவருக்குத் தேறுதலை சொல்லாவிட்டால் நலமல்லவென்று வாயாற் சொல்லிக் கொண்டு, தன் பரிசனத்தை எல்லாம் வரும்படி கட்டளையிட்டு, அப்பரிசனத்தோடு தானும் ஒரு அரசனைப்போலக் காமிய வனத்தைத் தேடி வருகிறார். அங்க-வங்க-கலிங்க-காஸ்மீர-காந்தார தேசத்திலுள்ள அரசர்களெல்லாம் பஞ்சவரைக்காணக் காமிய வனத்துக்கு வந்தார்கள். இவர்களையெல்லாந் தருமராஜன் தன் தம்பியரோடும் வந்தெதிர் கொண்டு வந்த அரசர்களுக்கெல்லாந் தகுந்த உபசாரஞ் சொல்லி, குந்திதேவிக்கு வந்தனை செய்து, சுபத்திரை - அபிமன்னன் - இளம் பஞ்ச பாண்டவர் முதலானவர்களை அன்போடாதரித்து இருக்கச் செய்து, ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி வரவைக்கண்டு எதிர்கொண்டார். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தருமராஜனுக்கு நமஸ்காரஞ் செய்து, மற்றை நால்வரையும் பாஞ்சாலியையும் ஆதரித்தார். தருமராஜன் அவருக்கு எதிர் நமஸ்காரஞ் செய்து அழைத்து வந்து இருக்கச் சொல்லி, தானுந் தன் தம்பியருமாக அருகிலிருந்து, இந்திரப்பிரஸ்தம் விட்டு அத்தினபுரிக்குச் சென்று வனமடைந்த மட்டும் நடந்ததை ஆதியோடந்தமாக எடுத்துரைத்தனர்.

அதனைக் கேட்ட பாஞ்சாலன் - பாண்டியன்-விராடன் முதலான அரசர்கள் கடுஞ்சின

அதிக சினங்கொண்டு, கதாயுதத்தைப் பூமியில் ஊன்றி ஒரு பாய்ச்சல் பாய்ந்து, அந்தரத்திற் செல்லுங் கிம்மீரணன் மார்பிலுதைத்துக் காலைப்பற்றிப் பூமியில் இழுத்தான். ஆற்றலையுடைய வீமனுதைத்த உதையினாற் கிம்மீரணன் சாம்பவமூர்த்தியின் காலுதைப்பட்ட யமனைப்போல மனவருத்தமுற்று, எடுத்துப்போன பாஞ்சாலியை எறிந்துவிட்டுப் பூமியிற் குதித்தான். பாஞ்சாலி பூமியில் விழுமுன் அர்ச்சுனன் தாவிப்பிடித்து, தேக வருத்த மில்லாமற் பூமியில் இறக்கினான். கிம்மீரணன் பூமியில் வந்து நின்று, அண்டகடாக மனைத்தும் வெடித்திடும்படியாகக் கடுகடுத்த ஓர் கர்ச்சனை கொண்டு, இடியேற்றைப் போலச் சென்று வீமனை ஒரு குத்துக் குத்தினான். வீமன் அக்குத்தைத் தட்டித் தன்னிரண்டு கைகளாலும் அவன் முகத்திலறைந்தான். அந்த அறை பட்ட மாத்திரத்திற் பொறி கலங்கினவனாக இருந்தபோதிலும், அதிக பராக்கிரமசாலி யாகையால் ஒரு மலையைப் பிடுங்கி வீமன்மே லெறிந்தான். வீமன் தன் கதையினால் அம்மலையைப் பொடிப் பொடியாக்கி, அவன் தோளிரண்டும் முறிபட ஒரு உதை உதைத்தான். கிம்மீரணன் அந்த உதைக்கஞ்சாமல் வந்து மேல் விழுந்து இறுகப் பிடித்தான். வீமன் அவனை நன்றாக இறுகப்பிடித்து வாரித் தூக்கிப் பூமிலறைந்தான். அதனால் அக்கிம்மீரணன் உடல் பிளந்து சின்னபின்னமாயும், அவன் மனஞ் சற்றுங் கலங்காமல் இடையிலிருந்த உடைவாளை யுருவி வெட்டினான். வீமன் அந்த வெட்டைக் கதையினால் தட்டி, அவ்வாளை அனந்த துண்டங்களாக வெடித்துப் பொடிப்பொடி யாக்கினான், உடனே கிம்மீரணனும் ஓர் கதையைக் கையிலேந்தி அட்டகாசஞ் செய்து கொக்கரித்து, ஓடோடியும் வந்து ஓர் மோதுமோதி அடித்தான். வீமன் அந்த அடியைத் தன் கதையினால் தட்டி, அவன் கதையையும் ஆயிரஞ் சுக்கலாய்ப் போகும்படி பொடியாக்கினான்.

அக்கால் கிம்மீரணன் தனது வாளாயுதமுங் கதாயுதமும்போய் நிராயுதனாகியும் அஞ்சாமல், மல் யுத்தஞ் செய்ய யத்தனித்துத் தோள்தட்டி யார்த்தான். வீமன் தன் கதையை அரையிலிருக்குங் கச்சையிற் பூட்டி விட்டு, தானும் மல் யுத்தத்துக்கு ஆரம்பித்தான். உடனே இருவரும் எதிர்த்து ஒருவர்க்கொருவர் வெற்றியடைய வேண்டுமென்று வீராவேசங் கொண்டு, இரண்டு சிங்கங்கள் எதிர்த்தன போலெதிர்த்து ஒரு முகூர்த்தகால பரியந்தம் போர் செய்தார்கள். அப்போது வீமன் கடுஞ்சின மடைந்து, இந்த அசுரனோடு இவ்வளவு நேரம் போராடுகிறதா வென்று அவனைப் பிடித்தெடுத்து அந்தரத்தி லெறிந்தான். அப்படி யெறிந்த வேகத்தாற் கிம்மீரணன் சப்த மண்டலங்கட்கு அப்பாற் சென்று மீண்டு பூமியில் விழுந்து, அவயவங்கள் எல்லாஞ் சிதைத்தவனாய் இருந்தும் இராப்பொழு தாகையால் வலிமை குறையாமல் மறுபடியும் வந்தெதிர்த்தான். உடனே வீமன் மகா வுக்ராகாரத்தோடு அக்கிம்மீரணனைச் சேர்த்துப் பிடித்துப் பகாசுரனுடைய தலையைத் திரிகி யெறிந்தது போல் அவன் தலையைத் திரிகி யெறிந்து, அவனுடலை இருபிளவாகக் கிழித்துத் தலைமாற வெறிந்து விட்டு, தமயனாகிய தருமராஜனை வந்து வணங்கினான். தருமராஜன் முதலான நால்வரும், பாஞ்சாலியும், வேதவேதியர்களும், தவுமிய முனிவனும், சொல்லத் தரமில்லாத மகிழ்வடைந்து வீமனைப் பலவாறு புகழ்ந்தார்கள்.

அப்பால் அன்றிரவில் ஓரிடத்திலுந் தங்காமல் நடந்து பரிதி வனத்துக்கு வந்தார்கள். ஐவர் அப்பரிதி வனத்துக்கு வரவே சூரியன் யெதிர்வந் தழைப்பதுபோல உதயமாயினன். அந்தப் பரிதிவனத்தின் விநோதங்களைப் பார்வை யிட்டுக்கொண்டு அவ்வனத்தைக் கடந்து, தைதவனத்துக்கு வந்து, அங்கு நீர்வள மிகுந்து இருக்கின்றமையால் தங்கிக் காலைக்கடனை முடித்துக்கொண்டு சற்றிளைப்பாறி, மறுபடியும் பிரயாணப்பட்டுக் காடு மலைகளிற் போய்ச் சஞ்சரித்து, மேகங்கள் கெர்ச்சித்துக் கொண்டிருக்கும் நெருங்கிய சோலைகளை யுடைய காமியவனத்துக்கு வந்து, அங்கும் நீர்வள மிகுந்து இருக்கின்றமையால் அந்த வனத்தின் செழிப்பைக் கண்டு மனமகிழ்ந்து, அந்த வனத்தில் ஐவரும், பாஞ்சாலியும் தங்கி ஸ்நானஞ் செய்து, பூசை முதலிய நித்தியானுஷ்டான விதிகளை முடித்துக் கந்த மூலபலாதிகளை யருந்திச் சுகித்திருந்தனர். பன்னீராயிரம் வேதியரும், தவுமிய முனிவரும் ஸ்நானஞ் செய்து பூசைமுடித்து, அக்ஷயபாத்திரத்தி லுண்டான அறுசுவையோடு கூடி உண்டியைப் புசித்துத் தருமராஜனிடத்து வந்து சத்கால க்ஷேபஞ் செய்து கொண்டிருந்தனர்.

### பாண்டவர்களை பந்துக்கள் வந்து காணுதல்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! அக்காமிய வனமானது நைமிசாரண்யத்திற்கும் கந்தமாதனத்திற்கும் ஒப்பாய் இருக்கின்றதுமன்றி, சுவர்க்க மத்திய பாதாளமென்னும் முப்பு வனத்தில் இருப்பவர்களும் இச்சிக்குந் தன்மையைப் பொருந்தி, சந்தனம்-பாரிசாதம்-கோங்கு-பலா-பாதிரி - மந்தாரை-சண்பகம்-அசோகு - மல்லிகை - முல்லை-இருவாட்சி-புன்னை-கமுகு-தேமா-வாழை முதலியவற்றைப் பெற்று, வெங்கதிரைத் தண்கதிராகச் செய்யுங் குளிர்ச்சியை யுடையது. அப்படிக் கொத்த வனத்தில் ஐவருஞ் சென்ற மாத்திரத்தில், மேற் சொன்ன விருக்ஷாதி புஷ்பச் செடிகள் அதிகமாகப் புஷ்பித்தும், காய்த்தும், பழுத்தும் மிகுந்தனவன்றி, அவ்வனத்திலுள்ள சிங்கம் - யானை -புலி-மான்-பாம்பு-கீரி முதலிய மிருக ஜெந்துக்களும் ஒன்றோடொன்று விரோதமின்றிச் சிநேகித்து விளையாடிக் கொண்டிருந்தன. ஐவரும் அவ்வனத்தின் விநோதங்களையும் மிருக ஒற்றுமையையுங் கண்டு மகிழ்ந்து இருந்தார்கள். அப்போது ஐவர் வனவாசஞ் செய்யச் சென்ற சேதி உலகெங்கும் பரவினதோடு, தூதுவர்களுந் தங்கள் தங்கள் அரசர்களுக்கு அறிவித்தார்கள். உலகிலுள்ள அரசர்கள் அது கேள்விப்பட்டு மனவருத்த முற்றுத் தங்கள் தங்கள் பரிசனத்தோடு காமிய வனத்துக்கு வந்தார்கள். பாஞ்சாலன் பஞ்சவர் காடுறைந்ததைத் தூதுவரால் உணர்ந்ததுவுமன்றி, தன் குமாரத்தியைத் துர்ச்சாதனன் சபைக்கு இழுத்து வந்ததையுங் கேள்விப்பட்டு, நெருப்பில் நெய்யை விட்டாற்போல் கோபத்தீ சுவாலிக்க எழுந்து போர்க்கோலங் கொண்டு ரதாரூடனாயினன். திஷ்டத்துய்மன் - மந்திரிமார் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர் - அணித்தலைவர் - வியூகத்தலைவர்-படைத்தலைவர் இவர்கள் யாவரும் ரதகஜ துரகபதாதிகளோடு வந்து அரசனைக் கலந்தார்கள். பாஞ்சாலன் மஹா உக்கிரத்தோடு பிரயாணப்பட்டு, மருமக்கள்மார் எந்த வனத்தில் இருக்கிறார்கள் பார்த்து வாருங்களென்று தூதுவர்களை நாற்றிசையிலு மனுப்பினன். உடனே தூதுவர்கள் சென்று ஐவரிருக்கின்ற வனத்தைக்கண்டு அரசனுக்குத் தெரிவித்தார்கள். அரசன் சகல பரிசனங்களோடும் ஐவரிருக்கிற காமிய வனத்தை நோக்கி வந்தான்.

இப்பால் சித்திரவாகன பூபால பாண்டியன் ஐவர் வனவாசஞ் செய்யச் சென்றதை ஆதியோடந்தமாகத் தூதுவரால் அறிந்து, அவனுந் தனது ரதகஜ துரக பதாதியோடு ஐவரிருக்கும் வனத்தை நாடி வந்தான். விராடன்-சல்லியன் - மகாதபதி முதலான அரசரும், பஞ்சவர்களின் சொந்த ஜனமாகிய சுபத்திரை-குந்திதேவி-அபிமன்னன்-இளம்பஞ்ச பாண்டவர் இவர்கள் முதலான உள்ளிட்டாரும் ஆற்ற மாட்டாதவர்களாய், அனலிலிட்ட மெழுகுபோல மனமது உருகிக் காமிய வனத்தை நாடி வந்தார்கள். சில தூதுவர்கள் மதுராபுரிக்குச் சென்று ஐவர் வனவாசஞ் சென்றதையும், அப்படி செல்வதற் குண்டான காரணத்தையும், தெரிந்துந் தெரியாதவர்போல் இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்கும் அறிவித்தார்கள். அதுகேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் அப்போதுதான் தேள் கொட்டினவர்போலத் துடிதுடித் தெழுந்து, ஓ! ஓ! கள்ளங்கபடறியாத தருமராஜனைத் துரியோதனாதிகள் ஏமாற்றினார்களே! இனியென்ன செய்கிறது? நாம் சென்று ஐவருக்குத் தேறுதலை சொல்லாவிட்டால் நலமல்லவென்று வாயாற் சொல்லிக் கொண்டு, தன் பரிசனத்தை எல்லாம் வரும்படி கட்டளையிட்டு, அப்பரிசனத்தோடு தானும் ஒரு அரசனைப்போலக் காமிய வனத்தைத் தேடி வருகிறார். அங்க-வங்க-கலிங்க-காஷ்மீர-காந்தார தேசத்திலுள்ள அரசர்களெல்லாம் பஞ்சவரைக்காணக் காமிய வனத்துக்கு வந்தார்கள். இவர்களையெல்லாந் தருமராஜன் தன் தம்பியரோடும் வந்தெதிர்கொண்டு வந்த அரசர்களுக்கெல்லாந் தகுந்த உபசாரஞ் சொல்லி, குந்திதேவிக்கு வந்தனை செய்து, சுபத்திரை - அபிமன்னன் - இளம்பஞ்ச பாண்டவர் முதலானவர்களை அன்போடாதரித்து இருக்கச் செய்து, ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி வரவைக்கண்டு எதிர்கொண்டார். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தருமராஜனுக்கு நமஸ்காரஞ் செய்து, மற்றை நால்வரையும் பாஞ்சாலியையும் ஆதரித்தார். தருமராஜன் அவருக்கு எதிர் நமஸ்காரஞ் செய்து அழைத்து வந்து இருக்கச் சொல்லி, தானுந் தன் தம்பியருமாக அருகிலிருந்து, இந்திரப்பிரஸ்தம் விட்டு அத்தினபுரிக்குச் சென்று வனமடைந்த மட்டும் நடந்ததை ஆதியோடந்தமாக எடுத்துரைத்தனர்.

அதனைக் கேட்ட பாஞ்சாலன் - பாண்டியன்-விராடன் முதலான அரசர்கள் கடுஞ்சின

மடைந்து சொல்லுகிருர்கள்: ஓ தருமபூபதி! உலகிலுள்ள அரசர்கள் தங்கள் பகைஞரை வெற்றி யடையக் கருதுவார்களாகில் நால்வகைச் சேனையோடு சென்று நியாயமாகப் போர் செய்து வெற்றி யடைதல் நலம். போர் செய்து வெற்றி யடைதற்கு வல்லமை இல்லாதவர்கள், சில ருதவியைப் பெற்றுப் பகையை முடித்துக் கொள்ளுவர். உதவியாலும் வெற்றி யடையாத காலத்து, நஞ்சிடுதல், படுகுழி பாய்ச்சல், சூதாடல் முதலிய கொடிய பாதகச் செய்கையால் வெற்றியடைவர். இவ்விடத்தில் துரியோதனன் உங்களைச் சூதில் வெற்றி யடைந்தான். அது ஒரு பட்சத்துக் கொத்துக்கொண்டோம். ஆயினும், மாது சிரோமணியாகிய திரௌபதியைச் சபையி லிழுத்தவர நியாயமுண்டா? நீங்கள் எவ்வாறு பார்த்திருந்தீர்கள்? அந்த மாது சிரோமணியைப் பிடித்து இழுத்துவந்த துர்ச்சாதனனையும், படுபாவியாகிய துரியோதனனையும், துரியோதனன் சொல்லுக்கு மாறுபடாமல் உதவியாகப் பேசி வருகிற துன்மார்க்கனாகிய கர்னனையும், சூதாட்டத்தில் உங்களை வெற்றியடைந்த துராத்துமாவாகிய சகுனியையும் இந்நிமிஷத்தில் யமதண்டனைக்குள்ளாகும்படி இதோ எங்கள் கையிலிருக்குங் கார்முகத்தி லிருந்துண்டாகும் பாணத்திற்குக் கட்டளை யிடுகிறோம். தாங்கள் இந்தவேளை தடைகூறாம லிருக்கவேண்டுமென்று சொல்ல, சிலர் ஆர்ப்பரித்து எழுந்தனர், சிலர் தங்கள் தங்கள் கையிலுள்ள வில்லை அங்குதானே வளைத்து டங்கார ஓசையெழுப்பி, ஒரு கணையை வில்லிற் பூட்டி, இந்தக் கணையினாலேயே கவுரவர்களை யமலோகத்துக் கனுப்பி விடுகிறோமென்று கூறினர். இவ்வாறு அரசர்களெல்லாருந் தங்கள் தங்கள் சேனைகளை யெச்சரித்துப் போர்க்கெழுந்தார்கள். வீமன்-அர்ச்சுனன்-நகுலன்-சகாதேவன் நால்வரும் போர்க்கெழுங் கருத்திற் கிஞ்சித்து விருப்பமுற்றார்கள். அரசர்கள் போர்க்கெழுந்ததையும் வீமன் முதலான நால்வரின் கருத்தையும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கண்டு, தாமுங் கோபங்கொண்டவர்போ லபினயித்து அரசர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்:

ஓ அரசர்களே! உங்கள் கருத்து எவ்வாறிருக்கின்றதோ அவ்வாறே என் கருத்துமிருக்கின்றது. ஆனால், போர்க்கெழுவதற்கு ஒரு சங்கட மிருக்கின்றது. அஃதென்னெனில், தருமராஜன் ஒன்றுந் தெரியாதவரல்ல. வீமன்-அர்ச்சுனன்-நகுலன்-சகாதேவன் நால்வரும் அற்பமானவர்களல்ல. மேலும், அளக்கரிய ஆற்றலைப் பெற்றவர்கள். அவர்கள் தமையன் வாக்குக்கு மாறுபடாமலடங்கிக் கலகஞ் செய்யாமல் வந்துவிட்டார்கள். தருமராஜனோ நீதிக்கு விரோதப்படார். வில்லாசிரியராகிய துரோணாச்சாரியின் தீர்ப்பின்படி பன்னிரண்டு வருஷம் வனவாசஞ் செய்து, ஒரு வருஷம் அக்ஞாத வாசஞ்செய்து வந்த பின்பு, வில்லாசிரியர் முதலான பெரியோர்களின் கட்டளைப்படியே துரியோதனன் நாடு நகர முதலியவற்றைக் கொடுத்தால் கலகமில்லாமல் முன்போலிருப்போம். துரியோதனன் பெரியோர்களின் கட்டளையைமீறி நாடு நகர முதலியவற்றைக் கொடுக்காமல் மாறுபடுவானாகில் அக்காலத்தில் தற்காலத்திற் கொண்ட கோபத்தைக் காட்டிப் பஞ்சவர்க் குதவிசெய்யுங்களென்று அரசர்களின் சினத்தைத் தணித்து, தருமனைப் பார்த்துச் சொல்லுகிறார்: ஓ தருமநந்தனு! நீங்கள் மனவருத்த முறாமல் வில்லாசிரியர் கொடுத்த தீர்ப்பின்படி பதின்மூன்று வருஷத்தையும் பதின்மூன்று நாளாகப் பாவித்துக் கழித்து நகரம் வந்து சேருங்கள். துரியோதனன் பெரியோர்களின் கட்டளைப்படி நாடு நகர முதலியவற்றைக் கொடுக்காமற்போனால், அக்காலத்தில் இந்த அரசர்களினுதவியைப் பெற்று உங்கள் பகையை முடித்துக் கொள்வீர்கள். அதுவரைக்கும் உங்கள் சுயஜனத்திலே இளம்பஞ்ச பாண்டவரைப் பாஞ்சாலனிடத்தும், உமது தாயை விதுரராஜனிடத்தும், அபிமன்னனையும் சுபத்திரையையும் பலராமனிடத்தும், சித்திராங்கதையைப் பாண்டியனிடத்து மனுப்பிவித்து, நீங்கள் வனவாசஞ் செய்யுங்களென்று கூற, தருமன் அக்கருத்துக் கிசைந்து, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் கட்டளைப்படி தங்கள் தங்கள் புத்திரர் முதலானவர்களை அவ்வண்ணமே சென்றிருக்கும்படி ஆதரித்துரைத்து, அன்னையை ஐவரும் வணங்கிச் சொல்லுகிறார்கள்:

ஓ எங்கள் மாதாவே! நாங்கள் தேவரீர் வயிற்றி லுதித்த நாள்முத லிதுவரைக்குந் தங்களை விட்டுப் பிரிந்தறியோம். அப்படியிருந்த எங்களுக்கு உங்களைப் பிரியும்படி காலகதி நேரிட்டது. நீங்கள் அதைக் குறித்து வருத்தமுறாமல், பதின்மூன்று வருஷத்தையும் பதின்மூன்று நாளாகப் பாவித்து, எங்

கள் சிறிய பிதாவாகிய விதுரராஜன் அரண்மனையி லிருங்களென்று கண்ணீர் ததும்ப நின்றுரைக்க, அம்மக்களின் வார்த்தையைக் குந்திதேவி கேட்ட மாத்திரத்தில் மனம் வெதும்பி, ஓ மைந்தர்களே! உங்களைவிட்டு இமைப்பொழுதும் பிரியாமலிருந்த என் மனம் என்னமா யிருக்கும்? ஐயையோ!! உங்களையும், அனிச்சம் பூவை மிதிக்கக் குழையும் பாதத்தை யுடைய திரௌபதியாகிய இக்குல விளக்கையும் எவ்வாறுவிட்டு என்னுயிர் தரித்திருப்பேன் காலகதியை நோக்கித் துணிவு கொண்டாலும், உங்கள் மீதுவைத்த அன்புடைமை என்னை யுருக்கிவிடுகிறதே என்று மக்களையும் மருமகளையுங் கண்ணீரால் ஸ்நானஞ் செய்வித்து விசாரப்பட்டாள். அப்போது பாஞ்சாலி கண்ணீர் ததும்ப நின்று சொல்லுகிறாள்: ஓ மாமீ! எல்லாந் தெரிந்தவர்களே கண்ணீர் விட்டால் ஒன்றுமறியாத பேதையாகவும் இளந்தையாகவு மிருக்கும் என் மனமென்ன கல்லா? என்னம்மணீ! தங்கள் புத்திரர்கள் வாக்கின்படி அத்தினபுரத்துக்குச் சென்று என் அம்மான் மகனுகிய விதுரராஜனரண்மனையிற் சிறிதுநாள் மனம் பொறுத்திருங்களென்று கூறினள். அவை யனைத்துங் கேட்ட குந்திதேவி காலகதியை நோக்கி, இனி நாம் வருத்தப்படுவதிற் பயனில்லை யென்று கருதி, புத்திரர் கருத்திற் கிசைந்து விதுரனரண்மனைக்குச் சென்றாள்.

அப்பால் சித்திராங்கதை - சுபத்திரை முதலான தேவிகளும், இளம்பஞ்ச பாண்டவர் முதலிய புத்திரர்களும் வந்து வணங்கித் தேகமெல்லாம் நனையும்படியாகக் கண்ணீரொழுகி நின்றனர். ஐவரும் பாஞ்சாலியும் அதிக ஆர்வமையோடு மக்கள் முதலானவரைத் தழுவி, இனிய வசனங்கள் கூறி, யார் யாரை எந்தெந்த விடங்களிலிருக்க எம்பெருமான் நியமித்தனரோ அவரவர் அந்தந்த இடத்திலிருங்களென்று கட்டளையிட்டு அனுப்பிவித்தனர். வந்த அரசர்கள் தருமராஜன் முதலானவரை வணங்கி விடைபெற்றுத் தங்கள் நகரம்போய்ச் சேர்ந்தார்கள். பாஞ்சாலன் இளம்பஞ்ச பாண்டவர்களோடு தன்னகரம் வந்து சேர்ந்தான். பாண்டியன் சித்திராங்கதையை அழைத்துக்கொண்டு தன்னகரத்திற்குச் சென்றான். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சுபத்திரையை அழைத்துக்கொண்டு தன்னகரத்திற்குச் சென்றார். பஞ்சவர் - சேனைகள் இளம்பஞ்சவ ரிடத்தும், அபிமன்னனிடத்தும் பிரிவற்றிருந்தார்கள். தருமன் முதலான ஐவரும் பாஞ்சாலியுங் காட்டையே நகரமாக எண்ணிக் காமியவனத்தி லிருந்தனர். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இனி இரண்டு கண்ணில்லாதவன் தன் சகோதரனுகிய விதுரராஜனோடு யோசித்ததையும், அதற்கு விதுரன் கூறியவற்றையும், அப்போது துரியோதனன் செய்கையையும் எடுத்துக் கூறுகிறேன் கேளும்:

## பாண்டவர்களிடத்தில் விதுரன் வரவு.

ஓ மஹாராஜனே! பஞ்சவர் வனத்திற் சென்ற மாத்திரத்தில் துரியோதனன் மேல் வருங் கெடுதியை நினைக்காமல் அதிக மகிழ்வையுற்று, சபாமண்டபத்துக்கு வந்து சிங்காசனத்தில் இருந்து, வீஷ்மர் - துரோணர் - கிருபர் - விதுரர் முதலான பெரியோர்களையும் மற்றும் உண்டான மந்திரிமார் முதலானவர்களையும் அழைப்பித்துச் சொல்லுகின்றான்: ஓ பெரியோர்களே! என் கருத்தின்படி பஞ்சவர் பஞ்சையாகிக் காட்டிற் சென்றனர். இனி அவர்களின் நாட்டை நாம் ஆளவேண்டும். இந்திரப்பிரஸ்தம் அரசுக்கு யோக்கியமாக விருப்பதன்றி, மயன் புதுக்கிய சபை மகா விநோதமாக விருக்கின்றமையால், என்னரசை அங்கிருந்து செலுத்தக் கருதி யிருக்கின்றேன். ஆதலால், தங்கள் கருத்து என்னவென்று வினவ, விதுரன் சற்றுலோசித்து, அடடா!! இவன் ராக்ஷத அம்ஸம். ஐவர் தேவாம்சம். இவனுக்கு இந்திரப்பிரஸ்தம் தகாது. இவனோ இந்திரப்பிரஸ்தம் செல்லக் கருதி யிருக்கின்றான். இக்கருத்தை ஒருவிதமாக மறுக்கவேண்டுமென்று கருதிச் சொல்லுகிறான்: ஓ துரியோதனா! இந்த அத்தினபுர முண்டான நாள் முதல், இதுவரைக்கும் அநேகம் அரசர்கள் இந்த நகரத்திலேயே யிருந்து அரசாக்ஷி செய்து வந்தார்கள். நீ இந்த சமஸ்தானத்தை விட்டு மற்றொரு விடத்திலிருந்து அரசு செய்வது தகுதியல்ல. மஹா மண்டலேஸ்வரருக்கு எக்காலும் இருப்பிடமாகிய இந்தச் சமஸ்தானத்திற்குத் தற்காலத்தில் நீயே மஹா மண்டலேஸ்வரனுகிய படியால், நீ இந்தச் சமஸ்தானத்தில்தானே யிருந்து அரசு செய்து, வில்லாசிரியராகிய துரோணாச்சாரியை இந்திரப் பிரஸ்தத்துக்கு அனுப்பிவித்து, அவ்விடத்தில் நடக்க வேண்டியவற்றை அவரால் நடப்பித்துக்

கொள்ளென்று மஹா பரிவுடன் சொல்பவனைப்போற் கூறினன்.

துரியோதனன் அக்கருத்துக் கிசைந்து, வில்லாசிரியரை நோக்கி நமஸ்கரித்துச் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! தாங்கள் இந்திரப்பிரஸ்தஞ் சேர்ந்து அங்கு நடக்க வேண்டியவற்றைக் கிரமப்படி நடத்தி வாருங்களென்று கூறினன். வில்லாசிரியர் அக்கருத்துக் கிசைந்து, தன் பரிசனத்தோடு இந்திரப்பிரஸ்தஞ் சென்று, அங்கிருந்துகொண்டே தனக்குந் துரியோதனனுக்கும் ஆகவேண்டிய ராஜகாரியங்களை நடத்தி, ஒவ்வொருவேளை துரியோதனனையும், திரிதராஷ்டிர மஹாராஜனையும் வந்து கண்டுகொண்டு இந்திரப் பிரஸ்தத்திலிருந்தார். தருமராஜனைக் காணப்பெறாத நாடு நகரங்களெல்லாஞ் சூரியனைக் காணாத நாள்போலாயின. நீர்வளம், நிலவள முதலியவைகளும் அழிந்தன. துரியோதனன் மனக்கவலை யற்றவனாக எங்குந் தன்னரசு செலுத்திப் பஞ்சவர்களின் சொத்துக்கள் எல்லாவற்றையும் அபகரித்துக்கொண்டு மகிழ்வாகிய கடலிலாழ்ந்து சுகித்திருந்தான். திரிதராஷ்டிரன் பஞ்சவர்கள் பஞ்சையாகி வனத்திற் சென்றதையும், அவர்கள் கூறிய சபதத்தையும் மனதில் நினைத்து, தன் புத்திரர்களின் கடினசித்தத்தையும், சொற்ப பலத்தையும் ஐவர்களின் தரும சிந்தனையையும் அளக்கரிய ஆற்றலையும் சீர் தூக்கி, நமது புத்திரர்கள் கெடுவதற்கு ஐயமில்லையென்று தீர்மானித்து, இதற்கென்ன செய்யலாமென்று தனக்குள் ஆலோசித்து ஒன்றுந் தோன்றாமல், நமது சகோதரனாகிய விதுரனால் நமது கவலையை மாற்றவேண்டுமென்று கருதி, அருகிலிருந்த தூதுவர்களை நோக்கி விதுர ராஜனை அழைத்து வாருங்களென்று கட்டளையிட்டான். தூதுவர்கள் விதுரராஜன் அரண்மனைக்கு வந்து விதுரனைக் கண்டு வணங்கி, அரசன் வரும்படி கட்டளையிட்டதை எடுத்துரைத்தார்கள்.

விதுரன் தக்ஷணம் தமையனிருக்குமிடத்திற்கு வந்து சாஷ்டாங்கமாக வணங்கி எழுந்து, தன் பெயரை யெடுத்தோதினன். திரிதராஷ்டிரன் தம்பியைத் தழுவிப் பல ஆசிகள் கூறி, அருகிலிருக்கும்படி சொல்லிச் சொல்லுகிறான்: தம்பி விதுரா! என் சகோதரனாகிய பாண்டுவின் புத்திரர்கள் நெடிய கடல் சூழ்ந்த பெரும்புவி யாசையைக் கைவிட்டுக் கொடிய வெம்பரற் காட்டடைந்தனர். அவர்கள் வில்லாசிரியராகிய துரோணசாரியர் கூறிய தீர்ப்பின்படி, பதின்மூன்று வருஷத்தையுந் தொலைத்து வருவார்களா? அல்லது நகரத்தில் அதிக சவுக்கியத்தை யடைந்தவர்கள், வனத்திற் சென்று பசிப்பிணி முதலிய தேக வுபாதியை யடைந்து இறந்து விடுவார்களா? ஒருவேளை நாட்டிலிருப்பதிற் பயனென்ன? மறுமை லாபத்துக் கேதுவானது துறவறமாயிற்றே அத் துறவறத்தை அநுசரித்துக் காட்டில்தானே இருப்போமென்று கருதி அக்காட்டில்தானே இருந்து விடுவார்களா? இதனைச் சீர்தூக்கிச் சொல்லென்று திரிதராஷ்டிரன் கூற, விதுரன் குறுநகைகொண்டு சொல்லுகிறான்: ஓ மகாராஜாவே! அந்த ஐவர் துரோண விதித்த கட்டளைப்படி பதின்மூன்று வருஷத்தையும், பதின்மூன்று நாளாக எண்ணிக் கழித்து வருவார்கள். செல்வத்திலிருந்தவர்கள் வெம்பரற் காட்டிற் சென்றால், தேகஞ் சுட்கிப் பலஹீனப்பட்டு வியாதிக்குள்ளாகி வருந்தி இறந்து விடுவரென்பதை மறந்துவிடும். ஏனென்றால், தரும சிந்தையும் தெய்வபக்தியு முடையவர்க் கிடையூறுவராது. மேலுந் தருமராஜன் வடவைத் தீயைப்போல வெப்பத்தைக் கொடுக்குங் கொடிய வெம்பரற் காட்டிற் பாதத்தை வைப்பானாகில், அக்காடு குபேரனுடைய சிங்கார வனம்போற் குளிர்ச்சி பெற்றுப் பூக்காதெல்லாம் பூத்துக் காய்க்காதெல்லாங் காய்த்துப் பழுக்கும் என்றால், ஐவருக்குத் தேகமெலிவு எந்த விதத்தால் வரக்கூடும்? ஒருக்காலத்தும் வராதென்று விதுர ராஜன் சொல்லியதைக் கேட்ட திரிதராஷ்டிரன் மனவருத்த முற்றுச் சொல்லுகிறான்: தம்பீ விதுரா! தருமராஜன் தரும சிந்தையை யுடையவனென்பதற்கும், தெய்வபக்தி யுடையவனென்பதற்கும் ஐயமில்லை. ஐவர் வனவாசஞ் செய்ய இந்த நகரத்தை விட்டுப் போகும்போது, துரியோதனன் முதலானவர்கள்மேல் வஞ்சம் வைத்துச் சென்றார்களா? அல்லது நமது தலையிலுள்ள விதிவசமென்று கருதிச் சென்றார்களா? இதனை நீ யறிந்திருந்தால் ஒளிக்காமல் எனக்குரை யென்று வினவினன். அதற்கு விதுரன் சொல்லுகிறான்: ஓ மகாராஜாவே! ஐவருள் தருமராஜன் தவிர, மற்ற வீமன் - அர்ச்சுனன் - நகுலன் - சகாதேவன் - பாஞ்சாலி இவர்கள் முன்னஞ் சபையிலுள்ளவர்கள் திடுக்கிட்டேங்கச் சபதஞ் செய்தபோதே, மனதில் வஞ்சம் வைத்து விட்டார்களென்று விளங்குகின்

றது. மற்றத் தருமராஜன் வாயினாலொன்றுங் கூறாமல் மேலுக்குச் சாந்தமுள்ளவன்போல் இருந்தாலும், அவன் உமது புத்திரர்மேற் கொண்ட கோபத்துக்கு அளவில்லை. ஆனால், அந்தக் கோபக்குறியை அறியவேண்டிய கருத்திருந்தால், அந்தத் தருமராஜன் முதுகிற் பிடி எள்ளைப்போட்டால், பளபளவென்று உடனே பொரிந்துபோகும். இதற்கு அவ்வெள்ளளவுங்கூடச் சந்தேகமில்லை. ஓ மகாராஜனே! இனிப் பலபலவாக சிந்திப்பதிலும் வருத்தப்படுவதிலும் பயனில்லை. ஐவரையும் அழைப்பித்து முன்போல் அவர்கள் நாடு நகர முதலியவற்றைக்கொடுத்து வருவீராகில் உமது புத்திரர்க்குக் கெடுதிவராதிருப்பதோடு நம்மை யொத்த அரசரெல்லாம் மதித்துப் புகழுவார்கள். இந்த யோசனைக்கு மேலான யோசனை வேறில்லையென்று கூற, திரிதராஷ்டிரன் சொல்லுகிறான்: தம்பி விதுரா! இந்த யோசனையை ஆதியிலேயே நான் நினைத்துச் சபையில் அவ்வைவரை அழைத்து, அவர்கள் தோற்ற நாடுநகர முதலியவற்றை மீண்டுங் கொடுத்ததற்குப் பாவியாகிய என் புத்திரன் தந்தை வாக்கியமென்று மதிக்காமல் மறுத்துவிட்டது உன் கருத்தறிந்தது தானே. ஆதலால், அதைக்குறித்துப் பேசுவதிற் பயனில்லை. மேல் நடக்கவேண்டியதற்குத் தகுந்த யோசனை கூறென்று வினவ, அதற்கு விதுரன் சொல்லுகிறான்:

ஓ மகாராஜனே! தற்காலத்தில் துரியோதனன் கடின சித்தத்தைப் பெற்றிருந்தாலும் பஞ்சவர்கள் அப் பதின்மூன்று வருடமும் வனவாசஞ் செய்து இவ்விடம் வந்து, முன் கூறிய தீர்ப்பின்படி வனவாசஞ் செய்து வந்தோமாதலால், எங்கள் நாடு நகர முதலியவற்றைக் கொடுத்துவிடென்று கேட்பார்கள். அக்காலத்திலும் இக்கொடும்பாவியாகிய துரியோதனன் நாடு நகர முதலியவற்றைக் கொடுக்கான். நாமெல்லோருங் கூடி சொன்னபோதிலும் நமது வார்த்தையுங் கேளான். அதன் மேல் ஐவர் மீறிச் சபையிற் கூறிய சபதப்படி வீமன் - துரியோதனன் முதலான நூற்றுவரையும், அர்ச்சுனன் - கர்ணனையும், நகுலன் - சவுபலனையும், சகாதேவன் - சகுனியையுங் கொன்று, திரௌபதியின் கூந்தலை முடிப்பித்து, தங்கள் வெற்றி முரசை அறைவித்து, இருளைச் சிதறவடித்து உலகத்திற் பிரகாசிக்குஞ் சூரியனைப்போலத் தருமராஜன் நமது புத்திர பௌத்திராதிகளென்னும் பொருள் அனைத்தையும் அதமாக்கி உலகத்தில் பிரகாசிப்பான் என்று கூறிய இவ்வாக்கியத்தைக் கேட்ட திரிதராஷ்டிரன் நாவுலர்ந்து, நெஞ்சந்தளர்ந்து, மெய் நடுங்கி, வாய் குழறி, நெடுமூச்செறிந்து அப்பா விதுரா! நீ சொல்லும்போதே என் மனம் நிலைதளர்வுற்று அதிக துன்பத்தை அடைகின்றதே. ஐவர் மீறி என் மக்களை யதமாக்குங்காலத்தில் என்னுயிர் உடலில் தரிக்குமோ? தரித்திருக்காதே; ஆகையால், அவ்வகையான கெடுதி நேரிடாதிருக்க, ஒரு தந்திரஞ் சொல்லென்று கூற, விதுரன் சொல்லுகிறான்:

ஓ மகாராஜனே! இனி ஒரு தந்திரந்தானிருக்கின்றது. அதைவிட வேறொரு தந்திரமில்லை. அதென்னவெனில், உமது புத்திரர்கள் நூறு பேர். பாண்டு புத்திரர்கள் ஐந்து பேர். ஆக நூற்றைந்து பேர்களில் உமது சிரேஷ்ட புத்திரனாகிய துரியோதனன் தான் குலபாதகன். அவனொருவன் இல்லாவிட்டாற் குருகுலம் வாழையடி வாழையாக விளங்கி வரும். அவனிருந்தாற் குருகுலம் நாசமாகும். ஆதலால், உடலில் ஒரு புரைக்குழல் தோன்றினும் அதனைக் கத்தியா லறுத்து விடுகிறோம். உன் புத்திரன் குலநாசஞ்செய்ய இருக்கிறான். அவனைக் கொன்றுவிட்டாற் குலநாசமாகாதிருப்பதுவுமன்றி, நூற்றினாலு புத்திரரைக் கண்ணாற் காணாவிட்டாலும் அவர்களின் வசனங்களைக் காதினால் கேட்டு மகிழ்ந்திருப்பாய். ஆதலால், துரியோதனனைக் கொன்று விடுகிறதே நலமென்று கூற, இந்த வாக்கியத்தைக் கேட்ட திரிதராஷ்டிரன் இரண்டு கரத்தையுஞ் செவியில் வைத்து, ஐயையோ! தெய்வமே! தெய்வமே! என்று ஓவென்றலறிப் பூமியில் வீழ்ந்து சாவுக்குச் சரியான மூர்ச்சையடைந்து, மீண்டும் அவ்விதுரனால் உபசரிக்கப்பட்டு மூர்ச்சை தெளிந்து எழுந்து உட்கார்ந்து, வடவாக்கினிபோலக் கோபத்தீ சொலிக்கவும், வாயினின்றும் புகை யெழவும் விதுரனை நோக்கிச் சொல்லுகிறான்: அடா விதுரா! என்ன வாக்கியத்தை வழங்கினை? ஐயையோ! பெற்ற பிள்ளையைக் கொன்ற அரசர்களும் உலகத்தில் இருக்கிறார்களா? இதுவரைக்கும் உன்னைப் புத்தி யுக்தியிற் சிறந்தவனென்று அப்தமான மந்திரியாக வைத்துக் கொண்டதற்கு, நல்ல யுக்தி சொன்னாய். உன்னைப்போலச் சில மந்திரிகள் இந்தச் சமயல்

தானத்தில் இருப்பார்களாகில், இந்தச் சமஸ்தானங் கெடுவதற்கு ஐயமில்லை. அடா பாவி! பெற்ற பிள்ளையைக்கொல்ல வாயினுற் சொன்னையே உன் முகத்தில் விழிக்கலாமோ? சீ! சீ! இனி நீ என் சமுகத்துக்கு வரவேண்டியதில்லை. தக்ஷணம் நீங்களென்று கூறி முகத்தைத் திருப்பினான்.

உடனே விதுரன் கடுஞ்சின மடைந்து சொல்லுகிறான்: ஓ மகாராஜனே! மேல் விளைவதைக் கண்டு நலம்பெற நடுவு நிலைமையான வாக்கியத்தை எடுத்துரைத்தேன். அதுவும் உமக்குப் பொல்லாத சொல்லாக இருக்கின்றமையால், மேல்வருங் கெடுதியை நீரே அனுபவத்திற் கண்டு கொள்ளுமென்று கூறி, தமயனைவிட்டு நீங்கி, இனி அரைமாத்திரைப் போதாவது இந்தச் சமஸ்தானத்தில் இருக்கொணுதென்று மனம் வெறுப்புற்றுத் தனது இருப்பிடத்துக்கு வந்து, தன் சுயபரிசனஞ் சூழ்ந்துவர இரதமேறிப் பஞ்சவர் இருக்குங் காமிய வனத்தைத் தேடிக் கண்டு, ஐவர் இருக்கும் இடத்திற் சென்றான். விதுர மகாராஜன் வரவைக் கண்டமாத்திரத்தில் ஐவரும் எழுந்து எதிர் சென்று வணங்கி அழைத்து வந்து, ஒரு ஆசனத்தில் இருக்கச்சொல்லிச் சோடசோபசாரமுஞ் செய்து நின்றனர். விதுரன் ஐவருக்கும் பாஞ்சாலிக்கும் பல ஆசிகள் கூறி, வேதவேதியர்களை நமஸ்கரித்து அவர்கள் கூறிய ஆசியை ஏற்றி, பஞ்சவரை நோக்கித் தனக்குந் திரிதராஷ்டிர மகாராஜனுக்கும் நடந்த விருத்தாந்தத்தைக் கூறி, இனி நான் நகரத்திலிருந்து உயிர் வாழ்வதைவிடக் காட்டிற் சென்று மறுமைலாபத்தை யடைய நற்றவம் புரிதலே நலமென்று கருதி வனவாசஞ் செய்ய வெளிப்பட்டேன். உங்களைக் கண்டு போகலாமென்று வந்தேன் என்று கூறியதைக் கேட்ட தருமராஜன் சிறிய பிதாவாகிய விதுரனுக்கு மகிழ்வுண்டாகவும் பெரிய பிதாவின் மேற்கொண்ட கோபந் தணியவும், சில இனிய வசனங்கூறிக் கொண்டு, அவ்விதுரனோடு ஐவரும் அக்காமிய வனத்தி லிருந்தார்கள்.

இங்கே திரிதராஷ்டிரன் தனது தம்பியாகிய விதுரன் கூறிய கடுஞ்சொல்லைக் கேட்டுக் கனவருத்தமுற்று, மேல் விளையும் விபரீதத்தையு மறிந்துகொண்டு, விதுரன்மேற் கொண்ட கோபந்தணிந்து, மீண்டுந் தன்னருகிலிருக்கிற தூதுவரை அழைத்து, என் சகோதரனுகிய விதுரராஜனை அழைத்து வாருங்களென்றான். உடனே அத்தூதுவர்கள் ஓடோடியும் வந்து விதுரனரண்மனை சென்று அங்கிருக்குங் காவலாளிகளை விசாரிக்க, அக்காவலாளிகள் விதுரராஜன் காமியவனத்திற் சென்றிருத்தலைக் கூற, தூதுவர் வந்து திரிதராஷ்டிரனை வணங்கிச் சொல்லுகிறார்கள்: ஓ சுவாமி! தங்களிடத்திற்கு வந்து அரண்மனைக்குச் சென்றவுடனே விதுரராஜன் தன் பரிசனத்தோடு ஐவரிருக்குங் காமியவனத்துக்குச் சென்றதாகக் காவலாளிகள் கூறினரென்று சொல்லினர். அவ்வார்த்தையைக் கேட்ட திரிதராஷ்டிரன் இடி விழுந்த மரம்போல் ஏங்கி மனந்தளர்ந்து, ஓ! ஓ! உண்மையான கருத்தை எடுத்துரைத்த விதுரனை நீதியின்றிப் புத்திர வாஞ்சையால் வெறுத்துக் கொண்டோம். அதுகண்டு விதுரன் நம்முடையபேரில் வெறுப்படைந்து ஐவரிடத்திற்குச் சென்றனன். ஐயையோ!! ஓ தெய்வமே! ஐவர்களோ சத்திய சொரூபிகள். அதிக வல்லமை யுடையவர்கள். அவர்களுக்குப் பலராமனின் சகோதரனுகிய கபடநாடக சூஸ்திராவதாரியாகும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி உதவியா யிருக்கிறார். அந்த உதவியோடு திரிலோகத்தையும் ஒரு முகூர்த்தத்தில் வெற்றிபெறும் பராக்கிரம வியாக்கிரமமாகிய விதுரனுஞ் சேர்ந்துகொண்டால், காற்றும் நெருப்பும் வெறே வேண்டுவதில்லை. இனி சொற்ப வல்லமையைப் பெற்றிருக்கிற நமது மக்கள் எவ்வாறு உயிரோடிருப்பர். ஆதலால், அரைமாத்திரைப் போதாவது விதுரராஜனை ஐவரிடத்தி லிருக்கவொட்டாமல் நமதிடத்தி லிருக்கும்படி செய்துகொள்ள வேண்டுமென்று கருதி, தக்ஷணந் தூதுவரை நோக்கிச் சஞ்சயனை அழைத்து வரக் கட்டளை யிட்டான்.

அத் தூதுவர் சஞ்சயனுக்கு அரசன் கருத்தைத் தெரிவித்தனர். சஞ்சயன் தக்ஷணந் திரிதராஷ்டிரனிடத்து வந்தனன். திரிதராஷ்டிரன் சஞ்சயனுக்கு உபசார வார்த்தை சொல்லி, விதுரனுக்குந் தனக்கும் நடந்த விருத்தாந்தத்தைத் தெரிவித்துத் தற்காலத்தில் ஐவரிடத்தி லிருக்கிற விதுரனைச் சமாதானஞ் செய்து இவ்விடம் அழைத்துவாவென்றனுப்பினன். சஞ்சயன் அரசன் கட்டளைப்படி காமியவனத்துக்கு வந்தான். தருமராஜன் முதலான ஐவருஞ் சஞ்சயன் வரவை யுணர்ந்து, உடனே எழுந்தெதிர்சென் றழைத்து

வந்து இருக்கவைத்து உபசாரஞ் செய்தனர். சஞ்சயன் தருமராஜனையும் விதுரனையும் நோக்கிச் சொல்லுகிறான்: ஓ அரசர்களே! உங்களுக்குத் தெரியாத நியாய மொன்றில்லை. இந்த விதுரமகாராஜன் சந்திரகுலத்தரசனாகிய திரிதராஷ்டிர மகாராஜனுக்கு முதன் மந்திரி. அரசன் ஒருவேளை வெறுத்துக்கொண்டாலதனை நியமாக வைத்துக்கொண்டு வெறுத்து வந்துவிடுகிறது தகுதியா? நீங்களே யோசியுங்கள்; தற்காலத்தில் மகாராஜா விதுரராஜன் வரவுக் கெதிர்பார்த்திருக்கிறார். அவர் கருத்து மகிழ்வெய்தும் வகையை நாடுங்களென்றுக் கூற, தருமராஜன் விதுரராஜனுக்குச் சில இனிய வசனங்களைக் கூறி, மகாராஜனிடத்திற்குச் செல்லுங்க ளென்றனர். விதுரன் தான் கொண்ட கோபந் தணிந்து, தன் பரிசனஞ் சூழ்ந்துவரச் சஞ்சயனோடு அஸ்தினபுரத்திக்கு வந்து, தன் தமயனாகிய திரிதராஷ்டிர மகாராஜனை வணங்கித் தன் பெயரை யெடுத்தோதினன். திரிதராஷ்டிரன் விதுரனை அழைத்துவந்த சஞ்சயனுக்கு அதிக உபசார வார்த்தைகளைச் சொல்லி விடை கொடுத்து விட்டு, தம்பியை மார்புறத் தழுவி அதிக ஆற்றாமையோடு சொல்லுகிறான்:

ஓ தம்பி விதுரா! கடல் சூழ்ந்த நெடிய வுலகத்தை யாளும் அரசர்களுக்கு உயிர்த் துணையாக யிருப்பவர்கள் மந்திரிகள். அந்த மந்திரிகள் அரசனுக்கொரு இக்கட்டு வந்த காலத்து, அரசன் வெயர்வை சிந்தினவிடத்துத் தம்முதிரத்தைச் சிந்தச் செய்வதோடு, சமயம் வந்தபோது நல்ல நீதிகளெடுத்தோதி, அரசனை நல்வழியிற் றிருப்பவேண்டும். அரசன் மந்திரிகள் சொல்லை மீறிக் கடுஞ்சினமடைவானாகில், மந்திரிகள் அக்கோபத்துக்குள்ளாகித் தங்கள் உயிரை அவ்வரசனுக்குத் தத்தஞ் செய்வார்களே யன்றி, அரசனை விட்டு வெளியில் செல்லார்கள். நீ இந்தச் சமஸ்தானத்தில் இருக்கும் எல்லா மந்திரிகளுக்குத் தலைமையான மந்திரியாக இருக்கிறதுமன்றி, இந்தச் சமஸ்தானத்திற்குத் தலைமையாக இருக்கும் எனக்குச் சகோதரனாகவும் இருக்கிற நீ நான் கடுஞ்சினமடைந்து தெரிந்துந் தெரியாமையுமாக உன்னை இகழ்ந்தால், அதற்கு மனவருத்தமுற்று என்னை இகழ்ந்தால், அதற்கு மனவருத்தமுற்று என்னை வெறுத்ததுவுமன்றி, இந்த நகரத்தையும் வெறுத்து ஐவரிடத்துச் சென்றனையே இது தகுதியா? எல்லாம் தெரிந்த உனக்கு நான் சொல்லவேண்டிய தென்ன இருக்கின்றது. மேலும், அறிவுடையோர்களுடைய லக்ஷணம் அறிவிலாருடைய சோர்வைப் பொறுத்தல்தானென்று பலபல இனிய வசனங் கூறினன். விதுரன் தமயனிடத்து உண்டாகிய கோபத்தை நீக்கி, அன்று முதல் தமயனை விட்டு அகலாமல் இருந்தான். மேல் நடந்த விருத்தாந்தத்தையுஞ் சொல்லுகிறேன் கேளும்:

### துரியோதனன் அமித்திரிய முனிவரால் சாபம் பெறுதல்

ஓ மகாராஜனே! விதுரன் திரிதராஷ்டிரனை வெறுத்துக் காமிய வனத்துக்குச் சென்று பின்பு சஞ்சயனால் மறுபடியும் திரிதராஷ்டிரனிடத்து வந்து சேர்ந்ததைத் தூதுவரால் துரியோதனன் கேள்வியுற்றுக் கடுஞ்சினமடைந்து அன்றையதினம் போக மறுநாள் உதயத்தில் எழுந்து காலக்கடனை முடித்துக்கொண்டு போஜனம் செய்து, மகர குண்டல ஆரகேயூர கடக கங்கண மகுட முதலியவற்றை யணிந்து, நல்ல பீதாம்பரம் உடுத்தி, தாம்பூலாதிகள் தரித்து, தன் சகோதரர்களோடு கொலுமண்டபத்துக்கு வந்தான். மற்ற மந்திரிமார் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர் - அணித்தலைவர் - வியூகத்தலைவர் - வேதவேதியர் - கிருபாசாரி - வீஷ்மாசாரி - துரோணச்சாரி - அஸ்வத்தாமா - கர்னன் - சகுனி முதலானவர்களும் வந்தார்கள். துரியோதனன் யார் யாருக்கு எந்தெந்தவிதமாக மரியாதை செய்யவேண்டியதோ அந்தந்த விதமாக மரியாதையைத் தாழ்வின்றிச் செய்து, யாவரையுந் தகுந்த சிங்காதனத்தில் இருக்கச் சொல்லிச் சொல்லுகிறான்: ஓ சபையாரே! நான் சொல்லுஞ் சொல்லுக்கு யாவரும் இஞ்சித்துச் செவிகொடுத்துக் கேட்டு ஒரு தீர்ப்புச் சொல்லவேண்டும். அதாவது இந்தச் சமஸ்தானத்தில் நடந்து வருகிற கெடுதியைப் போல எந்தச் சமஸ்தானத்திலும் நடந்ததில்லை. பஞ்சவரில் வீமார்ச்சுனன் இருவருங் கெட்டவர்கள். அவர்களைக் கொல்லப் பலபல தந்திரஞ் செய்தும், இந்தச் சமஸ்தானத்தில் இருக்கிற பெரியோர்களால் அந்தத் தந்திரம் நிறைவேறாமல், முடிவில் என் குலகுருவாகிய சகுனிமாமாவின் கிருபாகடாக்ஷத்தால் ஐவரையும் இலேசாக வெற்றி யடைந்தேன். இப்

போது ஐவரும் என்ன அபிப்பிராயப்படி காட்டிற் சென்றனர்.

இஃதிப்படியிருக்க, உள்ள நாளுள்ளளவும் இந்தச் சமஸ்தானத்தின் பொருளைச் சொந்தமா யனுபவித்து, தனக்கு வழிபடுவோர்க் குதவாமல் அயல் வீட்டுக்காரர்க் குதவி செய்யும் முடத் தென்னமரம்போற் பகைவராகிய ஐவர் பக்ஷமிருக்கின்ற விதுரன் அவ்வைவர்க்காக இதுவரையில் நீதியுணர்ந்தவன்போற் பக்ஷமாகப் பேசிவந்தது மல்லாமல், அவர்கள் காட்டிற் சென்ற பின்பும் என் பிதாவுக்குச் சில துர் நியாயங்களை எடுத்துக் கூறி, அத் துர் நியாயத்தை என் தந்தை கடிந்து கொண்டதின்மேல் ஐவரிடத்திற் சென்றானும் என் பிதா மறுபடியுஞ் சஞ்சயனால் அழைப்பித்துக் கொண்டாராம், இதென்ன அநியாயம்? சமஸ்தான மந்திரிகளுக்குத் தலைவனாகவும், என் பிதாவுக்குச் சகோதரனாகவும் இருக்கிற விதுரனுக்கு இது தகுதியாவென்று கூறினன். இவ்வாறு துரியோதனன் வழங்கிய சொற்களைக் கேட்ட சபையாரனைவரும் மனவருத்தமுற்று, ஓர் உத்திரவுமின்றித் தேனில் விழுந்த ஈயைப்போல மயங்கி இருந்தார்கள். அப்படியிருக்கிற தருணத்தில் நாலு வேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்து நான்கு கலைக்கியான முதலியவற்றை யெல்லாம் ஐயமின்றி யுணர்ந்து, நல்ல நெறியினின்று, பிரமத்தி னிச்சயத்தை யறிந்து, தபோ சிரேஷ்டர்களெல்லா மதித்துத் துதிக்கத் தகுந்த சிறப்பினை வகித்த அயித்திரிய முனிவர் காவிகாம்பர தண்டு கமண்டலதாரியாய்த் தீர்த்த யாத்திரைசெய்து வருகிறபோது, ஐவர் வனவாசஞ் சென்றதைக் கேள்வியுற்று மனவருத்தமடைந்து, பஞ்சவர் பஞ்சையானதற்குக் காரணந் துரியோதனனாதலால், அத் துரியோதனனைச் சமாதானஞ் செய்து, முன்போலப் பாண்டவர்களையும், கவுரவர்களையும், நேசஞ் செய்விக்கக் கருதி, அஸ்தினபுரியடைந்து, துரியோதனனுடைய கொலுமண்டபத்துக்கு வந்தார்.

அதுகண்ட துரியோதனன் உடனே எழுந்து எதிர் கொண்டுபோய் அழைத்து வந்து, பொற்பீடமளித் திருக்கச்சொல்லி உபசாரஞ்செய்து, ஓ சுவாமிகளே! அடியேனிடத் தன்புவைத்து, இங்குவந்த காரண மென்னவென்று வினவ, அயித்திரியமுனி துரியோதனனுக்குப் பல ஆசிகள் கூறி, அவனைச் சிங்காதனத்திலிருக்கச்சொல்லி, இதனைச்சொல்லுகிறார்: ஓ துரியோதன மகாராஜனே! நான் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்யக் கருதி, வெளிப்பட்டுப் புண்ணிய க்ஷேத்திரங்களிலிருக்கிற திவ்விய தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ் செய்து வருகிறபோது, காமிய வனத்தில் உன் சிறிய பிதாவின் புத்திரர்களாகிய பஞ்சவர் பஞ்சைபோல வனவாசஞ் செய்கிறதை யறிந்து தீரவிசாரித்தேன். ஐவர் வனவாசஞ் சென்றதற்குக் காரணம் நீயாக என் புத்திக்குப்பட்டது. அது நோக்கி, உன்னைச் சமாதானப்படுத்த இங்கு வந்தேன். நான் சொல்லுவதை நன்றாகக்கேள்: உலகமே நிலையல்ல, அப்படிக்கிருக்க, அவ்வுலகி லுள்ளவை நிலையாக இருக்குமோ? அதிலுங்காயம் நீர்மேலெழுத்து. இளமையோ நீர்மேற் குமிழி. செல்வங் கடலினலையைப்போல் மாறி மாறி வரும். ஆதலால், உலகத்தில் மானிடதேகமெடுத்தவர் புகழுடம்பைச் சம்பாதிக்க வேண்டும். நீ தருமராஜனுக்கு விரோதியல்ல. சகோதரனே தான். அப்படிக்கிருக்க, உனக்கு அவர்கள்மேற் பகையென்ன? அந்தப் பாண்டவர்களை பகைப்பவர்கள் ஒருவருமில்லை. ஒருக்கால், யாராவது பகைப்பார்களாகில், அவர்களின் நன்னடத்தையே அப்பகையை வெல்லும் என்றால், அவர்களது வல்லமையை ஒருவர் வாயாலுரைக்கக் கூடுமோ? மேலும், ஐவர்கள் மானிடரோடு மானிடராக யிருந்தாலும், தேவரேயன்றி மானிடரல்லர். அவர்களுக்கு மிகுந்த பராக்கிரம மிருந்துஞ் சத்தியத்துக்கு மாறுபடாமல் பெரியோர்களின் சட்டப்படி அடங்கிக் காட்டுக்குச் சென்றனர். இந்த ஒரு செய்கையே ஐவர்கள் சத்தியவான்களென்று பரிஷ்காரமாக விளங்குகின்றது. ஆதலால், இனி நீ ஐவர்கள் மேல் வஞ்சம் வைக்காமல் அவர்களை அழைப்பித்து அவர்களது அரசுரிமை முதலியவற்றைக் கொடுத்துவிட்டு, உனக்குரிய பூமியில் நீ யிருந்து செங்கோல் செலுத்தென்று பல பல நியாயங்களை எல்லா மிகவுங் கனிவோடு எடுத்தோதினர்.

இந்த வாக்கியங்களைக் கேட்ட துரியோதனன் சபையைப் பார்த்துச் சிரித்துக் கடுஞ்சினமடைந்து சொல்லுகிறான்: ஓ சபையார்களே! இந்த முனியைப் பார்த்தீர்களோ? இவர் மொழிந்த சொற்களை நன்றாகக் கேட்டீர்களோ? முழுதுந் துறந்த பெரியோராக

இருக்கிறவர்க்கு உலகிலுள்ளவர்கள் எக்கேடு கெட்டாலென்ன? இந்த மகாமுனி தான் கருதியபடி தீர்த்த யாத்திரை செய்யாமல், ஐவரையு மென்னையுஞ் சம்மதிக்கச் செய்ய வேண்டியதென்ன? அப்படிதான் நாங்களிருவருஞ் சம்மதித்தால், அதனால் இவர் அடையும் பயனென்ன? ஒன்றுமில்லை. இவர் வழங்கியசொற்களை நன்றாக உய்த்து நோக்கினால், விதுரன் பஞ்சவரிடத்துச் சென்றிருந்தபோது இதொரு குடில யுக்திசெய்து வைத்துவந்தான். ஐவர் விதுரன் வாக்கியத்தை நம்பி, இந்தச் சுவாமியைத் தூதாக அனுப்பிவித்தார்கள். ஐயையோ! பஞ்சவர் புத்தியை என்னென்று மதிக்கிறது? வில்லாசிரியரையும், என் பிதாவையும் விட இந்த முனி சிறந்தவரோ? இவர் மொழியைக் கேட்டு, மகிழ்ந்து நான் சம்மதிக்கிறவனோ? ஆ! ஆ! இது நன்றாயிருக்கிறது. முனிவரைப் பார்த்துச்சொல்லுகிறான்: ஓ முனியே! நீ காவிகாம்பர தண்டு கமண்டல தாரியாக வந்தமையால், அந்த வேடத்துக்காக உனக்கு உபசாரஞ் செய்தேன். ஐவர் விடுத்த தூதுவனென்று கிஞ்சித்து முன்னந் தெரிந்திருக்குமாகில், உன்னை இந்தக் கொலுமண்டபத்திலிருக்கச் செய்யேன். முன்ன மெழுந்து இச்சபையை விட்டகலுமென்று கடுஞ்சினத்தோடு கூறினன். துரியோதனன் வழங்கிய மரியாதைத் தாழ்வான வார்த்தையை அயித்திரிய முனிவர் கேட்ட மாத்திரத்திற் கடுஞ்சினமடைந்து சொல்லுகிறார்:

அடா பாவி துரியோதனா! பொருட்செல்வம்-கல்விச் செல்வம்-வீரச்செல்வம் இவைகளை யுடையோர்கள் முக்கியமாக அடக்கமுடைமையை வகிக்காவிட்டால் முதற்கூறிய மூவகைச் செல்வமிருந்தும் பயன்படாமற் கெடும். நீ மூவகைச் செல்வத்தையும் பெற்றிருக்கிறோமென்று மமதை கொண்டிருக்கிறாய். அந்த மமதை உன்னுயிர்க்கு வாளாக இருக்கின்றது. அதிலும் நீ அடக்க முடைமையில் இலக்கணத்தை அறியாதவனாதலால், என்னையொரு துரும்பாகப் பாவித்திகழ்ந்தனை. (துறவிக்கு வேந்தன் துரும்பு) என்கிற பழமொழி கேட்டறிகிலையா? நியாயத்தை எடுத்துரைத்த என்னை நீ அவமதித்தல் செய்தாய். மேல் விளையுஞ் சமர்க்களத்தின் முடிவில் வீமனால் உனக்குத் தொடைமுறியப்பட்டுப் பூமியில் விழுந்து நீ சாகக்கடவை யென்று சபித்து விட்டுத் தக்ஷணம் சபையைவிட்டுத் தனக்கிஷ்டமான விடத்துக்குச் சென்றனர். துரியோதனன் முனிவர் கொடுத்த சாபத்துக்கு அஞ்சாத நெஞ்சனாகிச் சபையை நோக்கிச் சொல்லுகிறான்: ஓ சபையார்களே! பஞ்சவர் பஞ்சையாகி வனத்திற் சென்றும், இன்னும் அவர்கள் குறும்பு நீங்கவில்லை. முனிவனை அனுப்பி என்னைச் சாபத்துக் குள்ளாக்கினர். இனி அரைமாத்திரைப்போதாவது ஐவரையும் உயிரோடிருக்கச்செய்யேன். இந்தவேளை பெரியோர்களாய் இருக்கிறவர்கள் என்னைத் தடுக்காதிருக்க வேண்டுமென்று கூறி, அருகில் இருக்குந் துச்சாதனன் கர்னன்-சகுனி இவர்கள் முகத்தை நோக்க, அவர்கள் அரசன் முகக்குறிப்பை அறிந்து நால்வகைச் சேனைகளுக்கும் போர்க்கோலங் கொண்டு வரும்படி கட்டளையிட்டுத் தாங்களும் அளவற்ற ஆயுதங்கள் முதலான சின்னங்களைச் சன்னாகப்படுத்திப் போர்க்கோலங் கொண்டார்கள்.

பாண்டவர் வனம்புகு சருக்கம் முற்றிற்று.

---

இரண்டாவது,

## அருச்சுனன் தவநிலைச் சருக்கம்

### கண்ணன் துதி

மேவரு ஞானானந்த வெள்ளமாய் விதித்தோனாகி, மூவரு மாகியந்த மூவர்க்கு முதல்வனாகி, யாவரும் யாவுமாகி யிறைஞ்சுவாரிறைஞ்சப்பற்ப, தேவரு மாகிநின்ற செங்கண்மா லெங்கள்கோவே.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! துரியோதனன் போர்க்கோலங்கொண்டு அந்நால்வகைச் சேனையோடு கலந்து, துச்சாதனன்-சகுனி-கர்னன் இவர்கள் தன்னைச் சூழ்ந்துவரத் தேரேறி நடந்தான். நால்வகைச் சேனைகளுஞ் சேனைத்தலைவர்களும், முரசு, டங்கா, பேரி, காளம், எக்காலம், துத்தாரி, சின்னம் இவைமுதலிய வாத்தியங்கள் அஷ்டதிக்கு மொலிக்க வீராவேசத்தோடு சென்றனர். பதாதிகளினொலியும், யானையின் கர்ச்சனையும், குதிரைகளின் கனைப்பும், தேரோசையும் கடலொலிக்கொப்பாக இருந்தன. அப்போது சேனைகளின் ஆரவாரத்தை ஒருவராற் சொல்லத்தக்கதல்ல. அவ்வளவு வீராவேசத்தோடு துரியோதனன் சேனைகளை நடத்திக் காமியவனத்தை நோக்கிச் செல்லுகிறபோது பெரி

யோர்களாக இருக்கிற வீஷ்மர் - துரோணர் - கிருபர் - விதுரர் - அஸ்வத்தாமர் இவர்கள் மனவருத்த முற்றவர்களாகி, இனி நம்மாலாகும் பயனொன்றுமில்லை. இத் துரியோதனன் தற்காலங்கொண்ட எண்ணத்தை விட்டு திரும்பாமற் காமிய வனத்திற்குச் செல்வானாகில், அவ்வனமே அவனுக்குத் தகனஞ் செய்யும் வனமாகுமென்று எண்ணியிருந்தார்கள். சிலர் ஐயையோ! யாதொரு உதவியுமின்றி பஞ்சைகள்போலக் காட்டிலிருக்கிற ஐவர்மீது பகைகொண்டு படையெடுத்தான். இது தகுதியாவென்று மனம் நொந்து இருந்தனர். இப்படி நகரிலுள்ளவர்கள் சஞ்சலப்படச் சேனையை நடத்திச் செல்கின்ற துரியோதனன் கண்ணுக்கு வேதவியாசர் காவிகாம்பர தண்டுக மண்டலதாரியாக வந்து தோன்றினர். அவரைத் துரியோதனன் கண்ட மாத்திரத்தில் தேரைவிட்டு இழிந்து வணங்கி நின்றனன். வேதவியாசர் துரியோதனனுக்குப் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறார்:

அப்பா துரியோதனா! நீ சகல கலைவல்லவனாகியிருந்தும், மூடரைப்போற் சினங்கொண்டு காலமல்லாத காலத்திற் பஞ்சவர் மேற் பகைகொண்டு போருக்கு எழுந்தாய். உனக்குத் தெரியாத தருமசாஸ்திரம் ஒன்றிருக்கின்றதா? எல்லாந் தெரிந்தும் தெரியாதவர்போலச் சினங்கொண்டாற் பகுதிகட்டும் அரசர்கள் உன்னை வணங்குவார்களா? நிதானி நிதானி போர்க்கெழாதே. துரோணாச்சாரியின் தீர்ப்பின்படி பதின்மூன்று வருஷத்தையுந் தொலைத்து வரட்டும். அதன் பின்பு உன் கருத்திற் கிசைந்தபடி செய்யென்று தடுத்தனர். வமிச பரிபாலனராகியும், குருவாகியும் விளங்கும் வியாசர் கூறிய வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில் அயித்திரிய முனியாற் சாபமேற்ற துரியோதனன் அவ்வாக்கை மறுப்பதற்கு அஞ்ச வணங்கி, தன் தேரிலேறித் தேரை அஸ்தினபுரத்துக்குத் திருப்பினான். மற்ற சேனைகளுஞ் சேனைத்தலைவர்களும், கர்னன் - சகுனி - துர்ச்சாதனனாதியர்களுடனே திரும்பினார். துரியோதனன் அஸ்தினபுரத்துக்கு வந்து சேர்ந்து, முனிவரிட்ட சாபத்தை நினைத்து மனவருத்த முற்றவனாகி, பஞ்சவர்மீது தணியாக் கோபம் வகித்து தன் அரசுசெய்திருந்தான். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! மேல் நடந்தனவற்றைக் கூறுகிறேன் கேளும்:

### வேதவியாசர் பாண்டவரைத் தேற்றி அருச்சுனனுக்கு மந்திரோபதேசஞ் செய்து தவஞ்செய்ய விடுத்தல்

கேளும் மகாராஜனே! எனது குருவாகிய வேதவியாசர் துரியோதனன் கண்ணுக்குத் தோன்றி, அவன் கொண்ட தணியாக் கோபத்தைத் தணித்து, அவனை அஸ்தினபுரத்துக்கு அனுப்பிவிட்டு, ஐவரிருக்குங் காமிய வனத்துக்குச் சென்றார். ஐவரும் பாஞ்சாலியும் வேதவியாசரின் வரவைக் கண்டு, சந்திரனைக் கண்ட சமுத்திரம் பொங்குவதுபோல் உள்ளம் பூரித்து, எதிர்ச் சென்று அழைத்து வந்து தருப்பாசனத்தி லிருத்திச் சோடசோபசாரமுஞ் செய்து வணங்கித் துதித்து நின்றனர். அவர்களை வேதவியாசர் பல ஆசிகள்கூறி இருக்கக் கட்டளையிட்டனர். தருமராஜன் வியாசரை நோக்கி, ஓ எங்கள் ஆண்டவரே! இந்திரப்பிரஸ்தத்தில் இருந்த எங்களை அஸ்தினபுரத்துக்கு வரவழைத்து சகுனியோடு சூதாடும்படி வேண்டிய முயற்சி செய்து முடிவில் வனம்போக செலவு கொடுத்தார்கள். நாங்களும் பெரியோர் வாக்கியத்தை தடுக்காமல் வனத்துக்கு வந்துவிட்டோம். என்னொருவனால் என்னுடைய சகோதரரும் பாஞ்சாலியுங் கனவருத்த மடைந்து வருகின்றார்கள் என்று இந்திரப்பிரஸ்தத்தி லிருந்து அஸ்தினபுரத்துக்கு வந்து சூதாடி வனஞ் சேர்ந்தவரையில் நடந்த விருத்தாந்தத்தை விவரமாக எடுத்தோதவும், வியாசர் சொல்லுகிறார்: ஓ தருமநந்தனா! நடந்துவிட்டதை நினைத்து வருத்தப்படுகிறவனும், இனி வரப்போகிறதைக் கருதி மகிழ்கிறவனும் மனிதருள் பதரென்றும், தற்காலத்தில் அனுபவிப்பது சஞ்சலத்துக் கிடமாக இருந்தபோதிலும் அதனை நன்மையாகப் பாவித்திருக்கிறவன்தான் புருஷோத்தமனென்றும், மனிதருள் தேவனென்று மதிக்கப்படும். ஆதலால், உனக்குத் தெரியாத நியாயமொன்றில்லை. சூதில் நாடு நகர் முதலியவற்றை இழந்து, பஞ்சைகள்போல் வனத்துக்கு வந்துவிட்டோம் என்று வருத்தப்படாதே. முன்பு தன் நன்னெறியினாற் சக்கரத்தை நடத்தி சக்கிரவர்த்திகளோடு தானுமொருவனாக விருந்த நளச்சக்கிரவர்த்தியென்பவன் புஷ்காராஜனென்பவனோடு சூதாடித் தனது நாடு நகர முதலியவற்றைத் தோற்றுக் காட்டிற் சென்ற அக்கதையை நீ கேட்டிருக்கவில்லையோ? என்று கூறிப் பின்னுஞ் சொல்லுகிறார்:

ஓ தருமநந்தனா! யயாதி முதல் உங்கள் தலைமுறை வரைக்கும் இந்தச் சந்திரவமிசத்திலிருந்த அரசர்கள், கொலை-களவு-கள்-காமம்-சூது - வாது - அக்கிரமம் என்பனவற்றைக் கனவிலும் நினைக்காமல் அரசாட்சியை நடத்தி வந்தார்கள். துரியோதனன்காலத்தில் முற்கூறிய பாபங்கள் சூரியனைப்போலப் பிரகாசித்து வருகின்றன. ஆதலால், இனி நடக்கும் விபரீதத்தைச் சொல்லுகிறேன். நீங்கள் சுகப்படுகிறவர்களாக, இருப்பீர்களாகில், நான் சொல்லும் வாக்கியத்தின்படி நடந்து, உங்கள் பகையை முடித்து, முன்போலச் சுகித்திருங்களென்று கூற, தருமராஜன் வணங்கிச் சொல்லுகிறார்: ஓ சுவாமி! எங்களுக்கு வயதில் முதிர்ந்தவர்கள் யாவரேயாயினும், அவர்கள் சொல்லும் வாக்கை, இதுவரையிலும் நாங்கள் தடுத்தறியோம். உங்கள் வாக்கியத்தையா நாங்கள் தடுக்கப்போகிறோம். ஓ பரமதயாளுவே! தற்காலத்தில் தெய்வாதீனத்திலிருக்கிற நாங்கள் எங்கள் குலதெய்வமாகிய தேவரீரை மீறுவோமா? தாங்கள் கிருபைகூர்ந்து மேல் நடக்கப் போகின்றதையும் அதற்கு நாங்கள் முன் ஜாக்கிரதைப்பட வேண்டியதையும், திருவுளங்கனிந்து கூற வேண்டுமென்று பணிந்து கேட்டுக்கொள்ள, வியாசர் சொல்லுகிறார்: ஓ தருமநந்தனா! துரியோதனன்-அசத்தியன்-துரோணாச்சாரி கொடுத்த தீர்ப்பின்படி நீங்கள் பதின்மூன்று வருஷத்தைக் கழித்து வந்தும், அக்கொடும்பாவி உங்கள் நாடு நகரத்தைக் கேட்டாற் கொடுக்கான். பிர்மா-விஷ்ணு-உருத்திரன் என்கிற மூவரைக்கொண்டு சொல்லுவித்தாலும், அவன் மனமிதங்கிச் சிறிதுங் கொடான். அவ்வளவு கெடுதியையுடையவன். மேலும், சுவயபல முண்டாயிருப்பதோடு, துணைவர்கள் பலமுமுள்ளவன். அவனை இலேசாக எண்ணக்கூடாது. ஆதலால், நீங்கள் அந்தத் துரியோதனனை வெற்றிபெறக் கருத்திருந்தாற், சாம்பவமூர்த்தியை நோக்கித் தவம் புரிந்து, அந்தச் சாம்பவமூர்த்தியின் கரத்திலிருக்கும் பாசுபதாஸ்திரத்தைப் பெறவேண்டும். அந்த அஸ்திரத்தைப் பெற்றால், துரியோதனனை இலேசாக வெற்றியடையலாம். அந்த அஸ்திரத்தைப் பெறத் தக்கவன் உங்களிலொருவனாகிய அர்ச்சுனன். அவன்தான் தவத்துக்குச் செல்ல வேண்டுமென்று கூறினார்.

## அருச்சுனன் தவக்கோலங்கொண்டு கைலைக்குச் செல்லுதல்

அதனை அருகிலிருந்து கேட்டிருந்த அர்ச்சுனன் உடனே எழுந்து வியாசரை வணங்கிச் சொல்லுகிறான்: ஓ சுவாமி! தங்கள் திருவாக்கினால் என்னைத் தவத்துக்கு யோக்கியனென்று சொல்லப்பெற்ற பூஜாபலமே பலம் தங்கள் திருவாக்கின்படி சாம்பவமூர்த்தியைநோக்கித் தவஞ்செய்து பாசுபதாஸ்திரம் பெற்றுவரப் பூரண கடாக்ஷம் வைத்து விடைகொடுங்களென்று கூற, வியாசர் அர்ச்சுனனை ஸ்நானஞ் செய்து வரச்சொல்லி, அவன் காதில் ஒரு மந்திரத்தை உபதேசித்து, இதை உச்சரித்துத் தவஞ் செய்து சாம்பவமூர்த்தியைக் கண்டு பாசுபதாஸ்திரம் பெற்று வரக்கடவை யென்று ஆசி கூறி, தருமராஜனை நோக்கிச் சொல்லுகிறார்: ஓ தருமநந்தனா! உன் சகோதரனாகிய அர்ச்சுனன் சிவனை நோக்கித் தவஞ் செய்து பாசுபதாஸ்திரம் பெற்று வருவான். நீ சஞ்சலப்படவேண்டாம். உலகிலுள்ள அரசர்கள் தமக்கொரு பொல்லாத கெடுதியை வேறொருவர் செய்தால், அதை மனதில் வைத்துக்கொண்டிருந்து, நல்ல சமயம் பார்த்துத் தன் கோபத்தை வெளிப்படுத்தித் தமக்கு இடையூறு செய்தவரைத் தக்ஷணங் கெடுப்பர். நீ அதனைக் கைவிட்டு, யார் வருகிறார்களோ அவர்களிடத்தெல்லாம் உன் குறையைச் சொல்லிச் சொல்லி முறையிடுகிறாய். அது அரசர்க்குத் தகுதியல்ல. அதிலும் நீ அரசருட் சிறந்த அரசனாதலால், மனவருத்த முறாமல் இருவென்று கூறி, தமது கருத்துக்கிசைந்த விடத்துக்குச் சென்றார். இப்பால் தருமராஜன் முதலான நால்வரும் அர்ச்சுனனைப் பார்த்து, ஓ பார்த்திபா! சாக்ஷாத் விஷ்ணு சொரூபமாகிய வேதவியாசரால் தவத்துக்குச் சிலாக்கியனென்று மதிக்கப்பெற்றாய். உன் பாக்கியமே பாக்கியம். அவர் கட்டளைப்படி தவம் புரிந்து பரமனைக் கண்டு பாசுபதாஸ்திரம் பெற்று வாருமையாவென்று கூறினர்.

அம்மாத்திரத்தில் தவமென்றால் தரணியேழும் பெற்றவனைப்போல் களிக்கும் அர்ச்சுனனுடைய மனம், ‘பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோ’லாகி நவரத்தின முடியை நீக்கிச் சடைமுடி தரித்து, வெண்பட்டாடைகளை விலக்கி மரவுரி யுடுத்தி, மரகதம்போற் பிரகாசிக்குந் தன் தேகத்தைக் கோமேதகம்போற்

பிரகாசிக்கத் திருநீரணிந்து, அக்கினிபகவானாற் கொடுக்கப்பட்ட காண்டீபமென்று பெயர் வகித்த வில்லைக் கரத்திலேந்தி, அம்புப்புட்டிலை முதுகிற்றூங்கி, எல்லாப் புண்ணியங்களுக்கும் இருப்பிடமாகிய தசரதமகாராஜன் மைந்தனுகும் ஸ்ரீ ராமமூர்த்தியைப்போல விளங்கி இரண்டு தமையன்மார்களையும் வணங்கி அவர்கள் கூறிய ஆசியை யேற்று, மற்ற இரண்டு தம்பிமாருக்கும் பாஞ்சாலிக்கு மினிய வசனங்கள் கூறி, நல்ல சுபமுகூர்த்தத்தில் விடைபெற்றுக் காமியவனத்தை விட்டு, இருபுறமும் ஊசி நுழைவதற்கு இடமில்லாமல் நெருங்கி யிருக்குங் கொடிய கடும்பாறகானில் நுழைந்து, அங்கு தோற்றுங் கொடிவழியைப் பற்றிக்கொண்டே காடு-மலை-வனம்-வனந்திரங்களிற் சென்று, அங்கங்கிருக்கும் விநோதங்களையும் அங்கங்கு சஞ்சரிக்கும் பூதபசாசங்களையும் மற்றுமுள்ள எழ்வகைப் பிராணிகளையுங் கண்டு வியந்து, பரமன் திருவடியிற் கருத்தைச் செலுத்தி வடதிசையிற் சென்று, அப்சர ஸ்திரீகள் மனமகிழ்ச்சியோடு விளையாடித் திரியும் இமவத் பர்வதச் சாரலுக்கு வந்து, அதின் வளப்பத்தையும் அங்கங்கிருக்கும் மிருக ஜெந்துக்களின் நன்னடக்கையையும் பார்த்து மகிழ்ந்து, அங்கு தவஞ் செய்யும் முனிவர்களைக் கண்டு வணங்கி அவர்களுடைய கிருபை பெற்று, தேவர்-கருடர்-காந்தருவர்-சித்தர் வித்தியாதரர் முதலாகிய அந்தர வாசிகளும், வேதவிதி பிசகாமல் தவத்திலிருக்கும் பெரியோர்களும், மற்று முண்டான தேவஜீவவுயிர்கள் நெருங்கி யிருக்கு மவ்விய மலையைக் கடந்து, இரவென்றும் பகலென்றுங் குறிக்கக்கூடாத வனந்தரங்களிலெல்லாஞ் சென்று, யானைகளும் போர் செய்ய அந்த ஓசையைக் கேட்டுச் சிங்கம் பாய்ச்சல் கொள்வதையும், புலியும் புலியும் போர் செய்ய அந்த அரவத்தைக் கேட்டுச் செந்நாய்கள் பாய்ச்சல் கொள்வதையும், பன்றியும் பன்றியும் பாய்ச்சல் கொண்டிருக்க, அதனைக் கண்டு வேடர்கள் பதுங்கி வில்லை வளைத்து பாணங்களைத் தொடுக்கிறதையும், இன்னும் இப்போப்பட்ட அளவிறந்த விநோதங்களை யெல்லாங் கண்டு, பின்னுங் காட்டேறி முதலாகிய துர்ப்பிசாசாதிகள் ஆரவாரித் தலைகின்ற சப்தத்தையுங் கேட்டு வியந்து, அவ்வாரவாரிப்பைக் கேட்ட தோஷ நிதிர பஞ்சாக்ஷரத்தை மன்னஞ் செய்து கொண்டு, பிரம்மா விஷ்ணுவுக் கிருப்பிடமாகிய மகாமேருவையும் வைகுந்தத்தையுங் கண்டு துதித்து, அப்பால் எவ்வுயிர்க்குந் தலைவனுக விளங்கும் பரமசிவன் இமயமலையளித்த பார்வதியோடு வீற்றிருக்கும் புண்ணிய சொரூபமாகிய கயிலாசகிரியைச் சேர்ந்து அக்கயிலாசகிரிக்கு நாற்றிசையு மிருக்கின்ற கணித்தற்கரிய அற்புதங்களை யெல்லாங் கண்களிக்கப் பார்த்து, சாம்பவமூர்த்தியினது திருவுருவத்தைப் பாவனை செய்து மனதாரத் துதித்து, அங்கு தவஞ்செய்யு மகாமுனிவர்களிருக்கின்ற வனத்திற் புகுந்தான்.

அங்கு சிலர் நீரினின்றும், சிலர் ஒரு பாதத்தினின்றும், சிலர் பஞ்சாக்கினி மத்தியிலிருந்தும், சிலர் பதுமாசனத்தி லிருந்தும், சிலர் தலைகீழாக இருந்தும், சிலர் இரண்டு முழந்தாளையும் இரண்டு கரத்தையும் பூமியிலூன்றித் தலையெடுத் தாகாயத்தை நோக்கியிருந்தும், சிலர் திகம்பரியாக இருந்தும், இவ்வாறு அளவற்ற கோலாகலங்களோடு ஆதிமத்தியாந்த ரகிதராகிய சாம்பவமூர்த்தியைத் தியானித்துத் தவஞ் செய்தலைக் கண்டு வியந்து, அங்குள்ள யாவர்களையும் வணங்கி வனத்தின் பெருமையையுங் கயிலாசகிரியின் பெருமையையுங் கண்டு மனவருத்தம் நீங்கித் தானுந் தவஞ்செய்ய விருப்பங் கொண்டான். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அந்தக் கயிலாசகிரியின் பெருமையை யாவரா லளவிடக்கூடும்? சொர்க்க மத்திய பாதாள மென்னும் முப்புவனங்களுக்குந் தலைமையாகிய கடவுளுக்கு அஃது இருப்பிடமாக இருக்குமாகில் அதனது மாட்சிமையை யெடுத்துரைப்பவர் யார்? ஆகிலும் என்னுற் கூடியமட்டுங் கிஞ்சித் தெடுத்துரைக்கிறேன் கேளும்:

கைலாசகிரிச் சிறப்போடு அருச்சுனன் தவநிலைச் சிறப்பு

ஓ அரசனே! அந்தக் கயிலையங்கிரியானது வேதாகமவிதி பிசகாமற் பொருளைச் சம்பாதித்து, பிரமசாரி - வானப்பிரஸ்தன்-சன்னியாசி-ஆதாரமானவராலே துறக்கப்பட்டவன் - தன்னிடத்தில் வந்திரந்தவன் - இரப்போர்-தென்புலத்தோர் - தேவர்கள்-விருந்தினர்-சுற்றத்தார் என்னும் பதின்மருக்கு மப்பொருளைப் பகுத்துக் கொடுத்து, தானும் ஒரு பங்கு ஏற்று, பொறுமை - பேராசை-கடுஞ்சொல்-கோபம் என்பனவற்றை விலக்கித் தருமஞ் செய்தோருடைய புகழைப் போல் வெளுத்தும், காலையிலும் மாலையிலும்

வேதாகம புராணங்களைச் சிந்தித்து, கயி
லாசபதியாகிய சாம்பவமூர்த்தியின் சன்னி
தானத்தில் நின்று அவரது துஷ்டஜன நிக்
கிரகஞ் சிஷ்டஜன பரிபாலன மென்னும்
அறக்கருணை மறக்கருணைகளைப் புகழ்ந்துரை
த்து, இவ்வாறு மனங்களித்து தொழும் அடி
யார்களின் கண்களில் நின்றிழியும் ஆனந்த
பாஷ்பம்போல் அருவி சொரிந்தும், பஞ்சா
க்ஷர சொரூபியாகிய பரமசிவன் தன்னை
அடைந்தவரைத் தன்மய மாக்கிக்கொள்வது
போல, தன்னை அடைந்தவரைத் தன்னைப்
போல வெண்ணிறமாக்கியும், முப்பத்து முக்
கோடி தேவர்-நாற்பத்தெண்ணாயிர முனிவர்-
கருடர்-காந்தருவர்-சித்தர்-வித்தியாதரர்-சிவ
கணங்கள்-பிரம்மா-விஷ்ணு இவர்கள் முத
லான அளவற்ற அந்தர வாசிகள் வலஞ்
செய்து வணங்கித் துதித்து வழிபட, சிவ
னடியார்களுக்குஞ் சிவனடியாரைப் பூசித்த
வர்களுக்குங் காணியாட்சியாக விளங்கியும்,
வெள்ளியங்கிரி யென்று பெயர் வகித்து யாவ
ராலுந் துதிக்கப்பட்டு விளங்குகின்றது.

அக்கயிலைமலையின் தென்பக்கத்தில் அர்ச்
சுனன் தவநிலையொன்று இயற்றி, அங்குள்ள
திவ்ய நதியில் ஸ்நானஞ் செய்து, குற்றமற்ற
வேதவிதிக்கு எள்ளளவேனுங் குறைவுபடா
மல், சகல வினையையுந் தகிக்குந் திருநீற்றை
யெடுத்து, உச்சி-நெற்றி-மார்பு-உந்தி-இரு
முழந்தாள்-இரு தோள்-இரு முழங்கை-இரு
கணுக்கை-இரு செவி-கண்டம் ஆகிய இவ்
விடங்களில் அவ்வவ்விடத்துக்குரிய மந்திரங்
களை உச்சரித்து அணிந்து, பஞ்சாக்கினியை
வளர்த்தி மத்தியில் ஒருதாளைப் பூமியில்
வைத்து மற்றொருதாளை ஊன்றிய தொடை
யில் மடித்துக் கமலங்களானவை சூரியனைத்
தாவுவதுபோல் தன்னிரண்டு கரங்களையும்
ஆகாயத்தில் ஏந்தி நின்று இரண்டு விழிகளை
யும் ஆதித்தனைப் பருகுவதுபோல் விழித்து
நோக்கிப் பவளக் கொடிகள்போலப் பிரகாசிக்
குஞ் சடைகள் நாற்றிசையும் புரள, காண்
டீபமும், அம்புப்புட்டிலும் தோளிற் பிரகா
சிக்க, கயிலாச பதியினை இதயகமலத்தில் நிறு
த்தி, ஓ உம்பர்கள் பரவிய உயிர்க்கயிலாசா!
அம்புஜபாதா! அடியவர் நேசா! நம்பின
வென்மன வாலயவாசா! சம்போ சம்போ
சகலலோகேசா! சர்வஜீவ உத்தாரா! சனக
ராதியர் மகிழ்சீரா! ஹரஹர சிவசிவ சம்போ
சங்கர, பரிபூர் வுபய பதம்போகந்தர, ஒரு
சரண் முயலகன் மேலினும் மற்றொரு, உயர்
சரணும்பர்கள் தம்புவிபாலும், தூக்கி நிர்த்த
மிடுகர்த்த சுத்தாத்வித, வாக்கிய சிற்சொரூப
நித்ய வித்தியாஸ்பத, பரம்பரம பரமார்த்த
மலரகித, தருமதரும உயர்மோக்ஷ சுகசகித,
தற்பர வீற்பன சற்குணருக்கருள் சுவாமீ!
சுவாமீ! என்றோலமிட்டுத் துதித்து, சித்தி
ரப் பிரதிமெய்போலச் சற்றுமசைவில்லாமல்
நின்றனன்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே!
அர்ச்சுனன் தவஞ்செய்தானென்று, வாயினாற்
சொல்லுவது மாத்திரமே யன்றி, தவத்தி
னது அருமையும், அவன் சிந்தை யொரு
மித்திருந்ததையும் என்னால் மாத்திரமல்ல
ஆயிரம் பணாமுடியையுடைய ஆதிசேடனா
லுஞ் சொல்லத்தக்கதன்று. அவனைச் சூழ்ந்தி
ருக்கும் பஞ்சாக்கினியானவை தலைவிலிருக்
கும் மரமுதலியவற்றைக் கருக்கிச் சாம்பராக்கி
வருகின்றனவென்றால், மத்தியிலிருக்கும் அர்ச்
சுனன் எவ்வாறிருக்கவேண்டும்? அதனை நீரே
மதித்துக்கொள்ளும். அவ்வகையான தீயின்
மத்தியிற் பஞ்சாக்ஷரமூர்த்தியின் கிருபையி
னாலேயோ அல்லது அர்ச்சுனனாற் பசிதணி
யக் காண்டவ வனத்தைப் புசித்த அக்கினி
பகவான் நன்றியறிந்த தன்மையினாலேயோ
அர்ச்சுனன் அந்தப் பஞ்சாக்கினிக்கு வருத்
தப்படாமற் குளிர்கோட்டையில் இருப்பவர்
போல் இருந்தான். அங்குள்ள மாதவ
சிரேஷ்ட சிகாமணிகள் யாவரும் வந்து
வந்து, பவளக்காட்டைபோற் பிரகாசிக்கும்
பஞ்சாக்கினிக்குள் முத்தைப்போற் பிரகாசிக்
குந் திருநீற்றை மரகதம்போற் பிரகாசிக்குந்
தேகத்திற்பூசிச் செம்மணிபோற் பிரகாசிக்
குஞ் சடைகளை விரித்து வச்சிரக் கட்டுடனே
பிரகாசிக்குங் காண்டீபத்தைத் தோளில்
அணிந்து பஞ்சரத்தினக்குன்றுபோற் பிர
காசிக்கும் அவ் வர்ச்சுனன், வெள்ளியங்கிரி
யின் பிரகாசத்தால் தாவள்ளிய நிறமாகிப்
பிரகாசித்து நிற்கின்றதை அவ்வவர்கள்
கண்டு பிரம்மித்து சிலர் மரகதக்குன் றென்
பர், சிலர் பவளமலை யென்பர், சிலர் காட்டுத்
தீயென்பர், சிலர் காலாக்கினியே யென்பர்,
சிலர் உய்த்துநோக்கி, ஒருபால் வெண்ணிறம்,
ஒருபால் மரகத நிறமாகிய அவயவ லக்ஷணத்
தாற் பர்வதராஜன் மனைவியாகிய மேனை
யளித்த பச்சை நிறப் பார்வதி சமேதனாகிய
பால் வண்ணச் சாம்பவமூர்த்தி யென்பர். இவ்

வாறு அங்குள்ள சகல முனிவர்களுந் தயங்கி மயங்கி வியந்து நயந்துரைக்கத் தவஞ் செய்தனன். விஜய காண்டீபமென்னும் வில்லைக் கையிலேந்திய விஜயமகாராஜன்.

ஓ அரசனே! ஒருகாலத்தில் எனது குருவாகிய வேதவியாசர் இவன் செய்த தவத்தைப்பற்றிச் சொல்லி வரும்போது சூரிய குலத்தரசரிற் பகீரதன் முதலான அரசர்களிலும், சந்திரகுலத்தரசரில் யயாதி முதலான அரசர்களிலும், இந்த அர்ச்சுனனைப்போலத் தவம் புரிந்தவரெவருமில்லையென்றும், மற்ற மனவுறுதியையுடைய அரசருள்ளும், தேவர்களுள்ளும், மனுக்களுள்ளும், இந்த அர்ச்சுனனைப்போல் மனவுறுதி கொண்டவர்களில்லையென்றுங் கூறியிருக்கின்றனர். ஆகையால், அத்தவத்தின் மாட்சிமையை நீரே மதித்துக்கொள்ளும். இப்படியாக அர்ச்சுனன் பரமசிவனது உபய சரணாரவிந்தங்களை இதய கமலத்திலிருத்தி, அப்பரமசிவனது ஆற்றலையுங் குணாதிசயங்களையும் பலவாறெடுத்தோதி, இரண்டு விழியிலும் ஆனந்த நீர்பெருகி அருவிபோலச் சொரிய, என்புருகிப் புளகாங்கிதனாகி, நெடுங்காலம் தவநிலையுற்றனன். இந்த அர்ச்சுனனைப் பெரிய கல்லென்று கருதி, யானைகளும், யானைப்பேடுகளும், யானைக்கன்றுகளும் உடலிலுண்டாகிய தினவுக்கு உராய்ந்துகொள்ளும். செவிகளைப் புற்றின் வாயென்று நாகங்கருகிப்போய்க் குடியிருக்கும் சடைகளைக் கொடியென்றும், அர்ச்சுனனைக் கொடியோடு கூடிய மரமென்றுங் கருதி, பறவைகள் வந்து கூடுகட்டி வாழும். வெய்யிலுக்கு மெலியாமலும், மழைக்குஞ் சலியாமலும், கானலுக் கஞ்சாமலும், பனிக்குப் பரிவுறாமலும், இராப்பகலென்பதையறியாமலும் நெடுங்காலமாக அர்ச்சுனன் இப்படிப்பட்ட அகோரமான தவத்திலிருந்தான். இவன் இப்படிப்பட்ட அகோர தவஞ்செய்ய இவனுக்கு நேரிட்ட துன்பமென்னமோ வென்றால், இவனுக்கு ஒரு குற்றமும் நேரிடவில்லை. வேதவியாசரின் கருத்தின்படி தவம்புரிய வேண்டுமென்று நினைத்த நினைப்பென்று, என் புத்திக்குத் தோன்றுகிறது. சந்திரகுலத்தரசர்க்குட் சிறந்த அர்ச்சுனன் தவம்புரிதலைக் கண்ட சூரியனானவன் இவன் பெருமையை எண்ணி மகிழ்ந்து, இவனளவில் தன்மையுடைய சந்திரனைப்போல் ஆயினனென்றால், அர்ச்சுனன் செய்கிற தவத்துக்கு வேறொரு திருஷ்டாந்தம் வேண்டுவதில்லை. அக்கினியால் அக்கினியைத் தகித்து, அதனாலுண்டாகும் வருத்தத்தை வாயுவால் நீக்கி, துவாதசாந்தத் தலத்துதிக்கும் அமுதத்தாற் குளிர்ச்சியடைந்தவனாகி, இதமாக நாளுக்கு நாள் மனத்தை யடக்கி, தற்பர சுவானுபவாள் சித்தம்போற் றழைத்து நின்றான் அர்ச்சுனராஜன். இவ்வாறு தற்பர நிச்சிநிலை யுற்றோரைப்போல் சித்தஞ்சலிக்காதிருந்தவனாயிருந்தாலும், பரமசிவனது பெருமை பொருந்திய அஷ்ட லக்ஷணத்தைக் குறித்து மாறாமலறிவாற் புகழ்ந்துரைத்து மகிழ்ந்து, இரவும் பகலும் ஒழிவில்லாத பத்தியோடுங்குழைந்து, கடினமான வைராக்கிய சிந்தையோடு சற்றுமசைவில்லாமல் நின்று, தன் பகைவரை யதமாக்கும் பர்சுபதாஸ்திரத்தை விரும்பி, அக்கணையைத் தரல் வேண்டுமென்று இரு கரங்களை யேந்தித் துதித்திருந்தனன். அவ் விஜய காண்டீபதரனென்னும் அர்ச்சுன மகாராஜன்.

## இந்திரன் அருச்சுனனுடைய தவநிலை யறிதல்

கேளும் மகாராஜனே! குருகுலாதிபனாகிய அர்ச்சுனன் தவஞ் செய்கிறதை அந்தரவாசிகளாகிய சாரணர்களறிந்து, முப்பத்து முக்கோடி தேவர்கள்-நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் - அஷ்டவசுக்கள் - கருட காந்தருவ-சித்த வித்தியாதரர் முதலிய சகலரும் இருபுறமு நெருங்கியிருக்க, சாம்பவமூர்த்திக்கொப்பாகிய வியாழபகவான் வலப்பக்கத்திலிருந்து பல ஆசிகள் கூற, இடப்பக்கத்தில் அயிராணியிருந்து புளகமுற, கற்பகச் சோலையின் மத்தியி லிழைத்திருக்கும் நவரத்தின மயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்து அரம்பை-திலோர்த்தமை பாட, மேனகை-யூர்வசி யாட, அதைக்கண்ணுற்றிருக்கும் இந்திரனைக்கண்டு வணங்கி, அர்ச்சுனன் தவஞ்செய்யுந்திறத்தை யெடுத்தோதினர். இந்திரன் அர்ச்சுனன் செய்யுந் தவத்தின் சிறப்பை மதித்து, உள்ளம் பூரித்து, அருகிலிருக்குங் குலகுருவாகிய வியாழபகவானைப் பார்த்து அஞ்சலி வந்தனஞ் செய்து சொல்லுகிறான்: ஓ சுவாமி! ஆணவம் மாயை காமியம் என்று சொல்லப்படுகின்ற மலங்கள் மூன்றில் ஒன்று ஒருவனிடத்திருக்கின் மற்ற இரண்டுந் தன்னோடு விர்த்தியாவதற்கிடஞ் செய்யும், இப்போது சாரணர் வந்து கூறிய அர்ச்சுனனோ அரசர்குலம். அரசர் குலத்திலுஞ் சந்திரகுலத்து அரசன்.

மேலும் எனது அமிசையாயிருக்கிறவன். குணம் - கல்வி-ஒழுக்கம்-தைரியம்-வீரம்-சத்தியம் இதை யெல்லார்க்குமேயிரா. இவற்றுள் எவர்க்குஞ் சிற்சிலவே யுண்டாயிருக்கும். அவர்கள் மும்மலத்திற் சிக்கிப் பயனடையாமல் நானென்று கர்வித்து வருத்த முற்றழிவர். இந்த அர்ச்சுனனோ அவையனைத்தையு முற்று, மண்டலாதிபர்களை யெல்லாம் வெற்றி பெற்றதுவுமன்றி, என்னையும் புறங்கண்டான். அவ்வளவு ஆற்றலைப்பெற்ற மஹானுபாவன், இப்போது ஆணவம் மாயை காமியம் என்னும் இவைகளைப் பகைத்து வெற்றிகொண்டு தவஞ்செய்யுந் திறத்தை யான் சோதித்தறிய விருப்பங் கொண்டிருக்கிறேன். ஆதலால், இது விஷயத்தைப்பற்றித் தங்கள் கருத்தென்னவென்று வினவ, வியாழ பகவான் குறுநகை கொண்டு சொல்லுகிறார்:

ஓ தேவராஜனே! அர்ச்சுனனை மானிடனென்றும் தேவனென்றும் உனது அமிசையேற்றவனென்றுஞ் சொல்வது சொல்மாத்திரமே யல்லாமல், அவன் தேவனுமல்லன் மானிடனு மல்லன் மற்ற யெதுவுமல்லன் உத்திரா மிசையே ஓர் உருவமாகி வந்தவனென்றும், தேவபக்தி விசுவாச மென்பதே உயிராக வகித்தவனென்றுஞ் சொல்ல வேண்டும். அவன் தவம் உன்னாலும், உன் கட்டளைக்குட்பட்டவர்களாலும் அழியத் தக்கதல்ல. ஆதலால், உன் கருத்துக்கு எப்படி இசைவோ அப்படி சோதியென்று கூற, இந்திரன் மகிழ்வடைந்து, தன் சபையிலிருக்கும் மேனகை-ஊர்வசி - அரம்பை - திலோர்த்தமை என்கிற நால்வரையு மழைத்து, ஓ மாதவர்களே! நீங்கள் இதுவரைக்கும் அனேக தவசிரேஷ்டர்களை மயக்கி, அவர்கள் தவ நிலையை அழித்து யாவராலும் புகழ்ந்துரைக்கப்பட்டீர்கள். தற்காலத்திற் சந்திர குலத்தரசனாகிய பாண்டு புத்திரர்கள் ஐவரில் நடுப்பிறந்தோனாகிய அர்ச்சுனன், வெள்ளியங்கிரியில் தென்றிசையில் தவஞ் செய்கிறான். அத்தவத்தை அழித்து வருவீர்களாகில் அதுதான் உங்களுக்கு மேலான சிறப்பென்று கூறினன். அதை அந்நான்கு ஸ்திரீகளுங் கேட்டுக் குறுநகையோடு ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு இந்திரனை நோக்கிச் சொல்லுகிறார்கள்: ஓ ஸ்வாமி! இளமையிலேயே துறவறத்தைப் பூண்டு, யவ்வனத்தசைக்குரிய குற்றங்களில் அழுந்தாமல் மனதை அடக்கித் தவஞ்செய்து சிறப்புற்று, சாபானுக்கிரக சாமர்த்தியம் விளங்கும் மகா முனிவர்களை எல்லாம் எங்களில் ஒவ்வொருத்தி மயக்கி விட்டனள் என்றால், காமோபாதையுட் சிக்கி, அக்காமன் வசமாகி, சித்திராங்கதை சுபத்திரை முதலான காந்தையரைக்கண்டு காமமுற்று, அவர்களை யெல்லாங் கலவிற் புணர்ந்து, பின்பு மணமும் புரிந்த ஓர் மனிதனை நாங்கள் மயக்குவது எங்களுக்குப் பெருமையோ? எங்களில் ஒருத்தியே அர்ச்சுனன் தவத்தை அழிக்கப் போதும். ஆனால், மகாராஜா வாக்கியம் பழுதுறாமல் நாங்கள் நால்வருஞ்சென்று, தங்கள் கருத்து மகிழ்வடைவதையே எங்களுக்குச் சிறப்பாகக் கொண்டு, இப்போதே அவ்வர்ச்சுனன் தவத்தை அழித்து வருகிறோமென்று கூறினர்.

அதுகேட்ட இந்திரன் மகிழ்ந்து விடைகொடுக்க, அவ்விடையையேற்ற நான்கு மாதர்களுந் தங்களரண்மனைக்கு வந்து, ஆகாய நதியில் ஸ்நானஞ் செய்து பூசைமுடித்து, நல்ல வஸ்திரம் உடுத்தி, சைவலத்தையும் நீர்கொண்ட மேகத்தையும் வென்ற நெருங்கிய கரிய கூந்தலை வாரி முடித்து, பரிமளமிகுந்த நறுமலர் மாலைகளையும் பாரிஜாத புஷ்பங்களையும் புனைந்து, நெற்றியில் திலதமிட்டு, கண்ணுக்கு மையெழுதி, சந்தனம்-புனுகு-கஸ்தூரி-கர்ப்பூரம் - சவ்வாது - குங்குமம் இவை முதலிய அணிந்து, வட்டமிட்ட பயோதரமென்னும் சக்கிரவாகப் பக்ஷியானது பறந்து போகாவண்ணம் நவரத்தின மாலைகளாகிய வலையை மார்பாகிய இடத்தில் பரப்பி, நாகரத்தினங்கள் பதித்த கைக்கடகங்களை யணிந்து, இருவர்களில் ஒருவரைக்கண்ட மாதவ முனிவர்கள் காமவெறிகொண்டு ஓலமிடுவதுபோல ஒலிக்கும் நூபுரங்களைக் காலில் புனைந்து, பூலோகத்தில் உள்ளவர்களெல்லாம்காமவெறிகொள்ள வெளிப்பட்டு, தங்களுக்குச் சகாய புருஷனாகிய மதவேளை எச்சரித்துக் கைலையைச் சார்ந்தார்கள். அம்மதவேளுந் தன்னையழகில் வென்ற அர்ச்சுனனை வெற்றிபெறுங் கால மிதுதானென்று கருதி வெளிப்பட்டான். வசந்தகாலமு மொத்துக்கொண்டது. மரங்களெல்லாந் தளிர்த்தும், தழைத்தும், அரும்பியும், மலர்ந்தும், காய்த்தும் பழுத்தன. மலர்வர்க்கமெல்லாம் வண்டினங்களிக்க மதுவைச் சொரிந்தன. தடாகத்திலிருக்குந் தாமரைகள் மலர்ந்து அன்னங்களுக்குப் பஞ்சணை

ளாயின. வண்டுகள் யாழொலிபோ லொலிக்க, குயில்களுங் கிளிகளும் பாட, மயிலினங்க ளாடின. எத்திசை நோக்கினும் மல்லிகை-முல்லை-இருவாட்சி - சண்பகம் - கோங்கு மந்தாரை முதலிய மலர்களின் வாசனையாக விருந்தன. நற்குண நற்செய்கையையுற்று இராஜ வமிச பரம்பரையிற்றோன்றி, வாழ்வுமிகுந்து இள்வயதுடைத்தாகி கருப்பவதியாகிய ஓரி ராஜ கன்னிகை பத்து மாதத்தின் நடக்கும் நடைபோல, சாம்பவமூர்த்தி சன்னிதானத்திற் றமிழோதிய கும்பமுனிக் கிருப்பிடமாகிய பொதியமலையி லிருக்குந் தென்றலானது சந்தனவனத்திற் சஞ்சரித்து மலர்களிற் படிந்து அச் சாம்பவமூர்த்தியின் சடாபாரத்தி லிருக்குங் கங்கையும் வெள்ளியங்கிரியில் நின்றிழியும் அருவியும் சந்தன வாசனையுற்று மணக்க மெல்லென நடந்து வந்தது.

அப்போது மாரனானவன் முன்னமொரு தரங் கைலைக்கு வந்து உருவழிந்ததை எண்ணிக் கண்ணியமனத்தனாக இருந்தபோதிலும் இமயமலையிற் பிறந்த இமையாக்ஷியினுக்கின மாகிய கோகிலங்கள் தனக்குத் துணையாக இருக்கின்றதென்கிற கருத்தினாலும், தவஞ் செய்கிறவன் மானிடனன்றோவென்கிற அலட்சியத்தினாலுங் கிஞ்சித்துத் தைரியங்கொண்டு, கைலையைச் சார்ந்து, மகா மேருவை வில்லாகப் படைத்த சாம்பவமூர்த்தியை வெற்றி பெற்ற தன் கருப்பு வில்லை யொடித்து நிறுத்தி வளைத்துப் பிடித்து, வண்டாகிய நாணியை யேற்றி, வனங்களெங்கும் மலர்க்கணை மாரி பாய்த் தயங்கும்படி சுப்பிரயோகம் விப்பிரயோகம்-சோகம் - மோகம் - மரணம் என்னுமவத்தைகளைத் தரத்தக்க உன்மத்தம், மதனம், சம்போகம், சந்தாபம், வசீகரணம் என்னும் பெயர்களையுடைய வனசம்-சூதம்-அசோகு-முல்லை-நீலமென்கிற மலர்ப்பகழிகளை அமோகமாகத் தூவி, அங்குள்ள உயிர்களனைத்துஞ் சொல்லும் நினைவும் வெய்துயிர்த்திரங்கலும், வெதுப்புந், தெவிட்டலும், அலுங்கலும், பிதற்றலும், அயர்ப்பும், மயக்கமும் ஆகிய செயல்களையடையத் தன்னரசு செய்துகொண்டு வருகிறான். அப்போது முன்பு கைலையைச் சார்ந்த மேனகை-ஊர்வசி - அரம்பை-திலோர்த்தமை என்னும் நால்வரும் கைலையங்கிரிக்குத் தென் பக்கத்தை நோக்கி அர்ச்சுனன் தவஞ் செய்யும் வனத்துக்கு வந்து தங்கள் மேனியி லணிந்த வாசனை யோசனை தூரம் நாற்றிசையிலும் வீச, நான்கு சந்தன மரத்தடியில் நின்றனர். மாரனும் அந்த வேளைவந் தொத்துக் கொண்டான்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! மனுநெறி முறைப்படி செங்கோல் நடாத்தும் வீர தீர உதார காம்பீர சூரியகுல சிரேஷ்டராகிக் கௌசிக மகாராஜனென் றியற்பெயரை வகித்த விஸ்வாமித்திரரானவர் ஒரு திவ்விய தினத்தில் மிருகவேட்டையாடும் பொருட்டுத் தனது சேனாசமூகங்களோடு குரூரவனாந்திரத்துட் பிரவேசித்துக் கோர மிருகங்களைக் கண்டதுண்டஞ்செய்து வரும் வழியில் ஜலம்-நலம்-மடம்-தடம்-சாலை - சோலை இவை யில்லாத உக்ர தீக்ஷண்ய ஆரண்யத்துளகப்பட்டு அந்த க்ஷேத்திர தீக்ஷண்யத்தினால் தானுந் தன்னுடைய வீரசைனியங்களும் மிகுந்த இளைப்புங் களைப்புப் பொருந்தி அன்னபான பலாதிகள் யாதொன்றுங் கிடையாமல் மிகுந்த கிலேச சாகரத்தி லாழ்ந்து தவித்துத் தள்ளாடி மெய் சோர்ந்து மயங்குங் காலையில், பிறவிக்குருடனுக்குத் தெய்வங் கண் கொடுத்ததுபோல் அநேக தவோ முனிவர்கள் புடை சூழ்ந்து ஆத்மஞ்கியான வாகிகளாக மலரடி வணங்க, திரிபுண்டர குண்டல திரிதண்டுகமண்டல காவிகாம்பரமானது பசுபதியைப்போலிலங்க, சத்வ விசாரணைகோஷமானது முழங்க, ஒரு பர்னகாசிரமத்திலே வீற்றிருக்கும் பிர்ம்மக்கியானியாகிய வசிஷ்ட மகாமுனிவரைக் கண்டு தீர்க்கதெண்டஞ் சமர்ப்பிக்க, அவர் வணங்கி நின்ற அரசனையும் அவனுடைய சேனைகளையுங் கண்ட மாத்திரத்தில் தமது கியான நேத்திரத்தினால் இவர்களனைவரும் இன்னரென்றும், இவர்கள் வந்த ஏது வின்னதென்றுங் கண்டுணர்ந்துகொண்டு உடனே காமதேனு வென்னுந் தெய்வப் பசுவை வரும்படி நினைக்க, அது வந்து வசிஷ்டரை வணங்கி அவரது ஆக்ஞாபனைப்படி அந்தக் கௌசிக மகாராஜனுக்கும், அவன் சைனியங்களுக்கும் விடுதி முதலிய சவுக்கியங்களையும் உபசாரமிகப்பெற்ற திவ்யபோஜனங்களையும் ஈய்ந்து களைதவிர்த்துப் புளகிதமுறச் செய்ய, இப்படிச் செய்த அவ்வற்புதத் தெய்வப் பசுவைக் கண்ட கௌசிகராஜனும் பிழை கொண்டு பேர்காமல் ராச்சியபாரத்தை நாம் பாரிப்பதில் நமக்கென்ன லாபமென்று கருதி வசிஷ்டர்பாற் சென்று வணங்கி, ஓய் தவ சிரேஷ்டரே! இந்தப் பசுவை எமக்களிக்க

வேண்டுமென்று கூற, வசிஷ்டர் அது எனக்குச் சொந்தமல்ல தேவர்களின் பொதுவென்றுரைக்க, அம்மொழியை மறுத்து அரசன் அப்பசுவை துராக்கிரதமாய் பலவந்தத்தில் பிடிக்க எத்தனிக்க, அப்போது அப்பசுவானது ராஜ சைனியங்களை அதாகதஞ்செய்து தெய்வலோகம்போய்விட, அக்காரணமறியாத கௌசிகராஜன் தனது படை அதமானதற்குக் காரணம் வசிஷ்டரேயென்று கருதி அவருடனே ஆயுதவர்க்கங்களால் கொடும்போர் புரிய, அதுகண்டு வசிஷ்டமுனிவர் தமது யோகதண்டத்தைத் தமக்கெதிரே நாட்டி வைத்துவிட்டுத் தமது தபோநிஷ்டையில் இருக்க, அரசன் தான் விடுத்த ஆயுதங்களையெல்லாம் அந்தத் தண்டங் கபளீகரித்துக் கொள்ளுவதால் அம்முனிவரை மேற்கொள்ளச் சக்தியில்லாமை கண்டு அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வமென்பதையுந் துறவிக்கு வேந்தன் துரும்பு என்பதையுங் கருதி தனது ராச்சியத்தை வெறுத் தப்படைகளை நகருக்கு அனுப்பி வசிஷ்டர் வாயினால் பிரமரிஷியாக வேண்டுமென்று மிகுந்த பக்திமுக்தி வைராக்கியத்தினால் யாவரும் துதிக்கத் தவம் புரிந்து பிரம சிருஷ்டிக்குப் பதிற் சிருஷ்டி செய்து சாபானுக்கிரக சாமர்த்தியமும்பெற்ற அவரையும் மேனகை யென்பவள் தன்னுடலில் பூசிய பரிமள வாடையில் சொக்கச்செய்து தவத்தை அழித்தனள்.

ஒருவரால் அளவிடத்தக்கதல்லாத சுந்தரமுடைய திலோத்தமை யென்பவளோ சுந்தோபசுந்தரென்று பெயர்வகித்து மூன்று லோகத்தையும் தங்கள் வசமாக்கிக்கொண்டு சக்கிரவர்த்திகள்போ லிருந்தவர்களை மயக்கிவிட்டதுமன்றி, அவர்களுக்கவர்களே விரோதித்து ஒருவர் கையில் ஒருவரை மடியும்படி செய்துவிட்டனள். பெருமைக்கு அளவில்லாத ஊர்வசி யென்பவளோ தன் அவயவக்குறியாற் சதானந்தரை மயக்கிவிட்டவள். அரம்பையோ பாரத்துவாசரை மயக்கிவிட்டவள். அந்த நால்வர்க்குஞ் சகாயமான மாரனோ அளக்கரிய ஆற்றலைப் பெற்றிருக்கிறதுமன்றிக் கலங்கா நெறியையுடைய சாம்பவமூர்த்தியின் யோகத்தை அழித்தவன். மகா பராக்கிரமசாலி. அவனுந் தனது பஞ்ச பாணங்களில் முல்லை முதலாய் நான்கு பாணம் வரைக்கும் எய்து, அதற்குதவியாக மற்ற மலர் வாளிகளையும் பிரயோகித்தான். மேருவில்லியாகிய பரமசிவனது யோகத்தை நீக்கிய மலர் வாளிகளானவை அர்ச்சுனனளவில் ஒரு பயனுமடையாமல் முகமலர்ந்து கண்ணீர் சிந்தி வாடிப்போயின. இவ்வளவு ஆரபாரத்திற்கும் விழித்தகண் விழித்தபடியிருக்கும் அர்ச்சுனன் சிந்தையானது எள்ளளவேனுங் கலங்கவில்லை. மேனகை முதலாகிய நான்கு ஸ்திரீகளும் அர்ச்சுனன் தவத்தின் திறத்தை நோக்கி, நாம் தோல்வியிருப்பதிற் பயனில்லை யென்றுகருதி, விழித்த கண்ணுடனிருக்கும் அர்ச்சுனன் முகத்துக் கெதிற்றோன்றுஞ் சுனையருகில் வந்து ஸ்நானஞ் செய்பவர்கள்போல் அபிநயித்தும், உடுத்தியிருக்கும் வஸ்திரங்களை அவிழ்த்து, அவயவந் தோன்ற நின்றும், நிருவாணிகளாக வஸ்திரங்களைக் கரத்திற்பிடித்து உலர்த்துந் தன்மையாயச் சற்று நேர முலாவினார்கள். அதிலும் அர்ச்சுனன் சித்தங் கலங்கவில்லை. அது பார்த்துப் பின்னும் நெருங்கி அர்ச்சுனன் முன் பந்தடித்தும், பூமாலைகளையும் புஷ்பங்களையும் அவன்மீது எறிந்தும், புருஷன் எதிரி லிருக்கிறானென்று எள்ளளவேனும் நாணங் கொள்ளாமல் தங்கள் வஸ்திரங்களை அவிழ்த்து விடுகிறவர்கள்போல் அல்குலாதிகள் தோன்ற எதிரில் நின்றும், இன்னுமிவ்வாறான பற்பல மாயா மோகன மதனுமிர்த ஜால விநோத வித்தைகளையெல்லாஞ் செய்து வந்தார்கள். இத்தனைக் கோலத்திற்கும் அர்ச்சுனன் கண் விழித்திருந்தும் அவர்கள் செய்கையை யறிந்தவனும் அவர்கள் உருவத்தைக் கண்டவனும் அவர்கள் அரவத்தைக் கேட்டவனுமல்லன்.

அதனால் நான்கு மாதரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, ஓ! ஓ! மோசம் வந்தது. இதுவரைக்கும் நாம் ஒற்றையாய் அநேக முனிவர்களை மயக்கிப் பெரிதான சிறப்புற்றிருந்தோம். நாம் நால்வரும் ஏககாலத்தில் ஒரு நரனை மயக்க வந்து, நாமே இந்தத் தென்றலாலுந் தவஞ் செய்வோனது தேக சவுந்தரியத்தாலுங் காமமீறி மனவருத்த முறலாயிற்று. இனி நமக்கென்ன சிறப்பிருக்கின்றது? தேவப்பிரமரிஷிகளை வென்ற நாம் ஒரு மானிட ராஜரிஷியை வெல்லாமல் தேவராஜனிடத்தில் செல்வோமாகில், நமக்கென்ன பெருமை கிடைக்கும்? பின்பு நம்மை யார்தான் மதிப்பார்கள் என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு முடிவில் எதற்கு முருகாதவன்

இசைக்குருகுவான் என்கிற பழமொழியை நினைத்து, இசையால் இந்த ராஜரிஷியை நமது மனதுக்கிசைவிப்போமென்று கருதி, அரம்பை - திலோர்த்தமை இருவரும் மகர யாழ்களை எடுத்து ஏழிசை நரம்புகளை ஏழிசைக்குஞ் சரியாக இறுக்கி இசைகூட்டிப் பாடினர். மேனகையு மூர்வசியும் அவ்விசைக் குறைவுபடாமல் திவ்விய அபிநய ரசத்தோடு நிர்த்தனஞ் செய்தனர். இந்த இசையைக்கேட்ட மிருகங்களும், பறவைகளும் பரவசமாகி நின்றனவென்றால், அந்த இசையினது பெருமை என்னுவுரைக்கவல்லதோ? இவ்வாறு நான்கு மாதர்களுந் தங்கள் தங்கள் சாதுரிய சமர்த்தால் பலபல விநோதங்களைச்செய்தும், அவற்றுள் ஒன்றும் பயன்படாமற் காட்டிற் காய்ந்த நிலவைப்போலவே மனந் தளர்வுற்றுக் காம வெறி யுற்றனர். பஞ்சாக்கினி இல்லாவிடில் அவர்கள் கொண்ட காமவெறி அர்ச்சுனன் மேல் தாங்காமல் விடாது. அவ்வளவு காம வெறி கொண்டவர்களாயும் அர்ச்சுனனை நெருங்குவதற்குப் பயந்து சில ஜால வித்தைகள் செய்தார்கள். அதற்குத் தக்கபடி மாரனும் மலர் வாளிகளைத் தனது கருப்பு வில்லிற் றொடுத்தெய்வச் சாவகாச மில்லாமற் கொண்டது கொண்டமட்டுங் கையோயாமல் வாரிவாரியுந் தூவினான். அதனாலும் அவன் கலங்காமற் போகவே அந்நான்கு மாதர்களுஞ் சக்தி யற்றவர்களாகி இனி நம்மால் அர்ச்சுனன் மயங்கானென்று கருதி மன வருத்த முற்று வந்த வழியை நோக்கி இந்திரலோகஞ் சென்று தங்கள் நாயகனாகிய இந்திரனை வணங்கிப் புஷ்பித்த மரம்போ லிருந்தாரே யன்றி, ஒரு மொழியுங் கூறினவ ரல்லர். அதனை இந்திரன் கண்டு, ஓ மாதர்களே! நினைத்துப்போன கருமம் நிறைவேறிற்றோ வென்று வினவினன்? அதற்கவர்கள் மன வருத்தத்தோடு தலை வளைத்து, மிகுந்த நாணத்தோடு இல்லை யென்று கூறி விடை பெற்றுத் தங்கள் தங்களிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

அர்ச்சுனன்மே லெதிர்த்த மாரன் தன் கார்முகமாகிய கருப்பு வில்லில் திவ்விய மலர் வாளிகளைத் தொடுத்தும், கைகொண்ட மட்டும் வாரி வாரி யெறிந்தும், யாதொரு பயனுமடையாமல் மனங் கலங்கி, ஓ! ஓ! சாம்பவ மூர்த்தியை யெதிர்த்த காலத்து அவரால் நமது தேக மொழிந்தாலும் நாம் நினைத்துப் போன கருத்தை நிறைவேற்றிக் கொண்டோம் தற்காலத்தில் அந்த மானிடன்மே லெதிர்த்தும் அவனது தவம் அழியவில்லை. இனி நாம் நிற்போமாகில் இந்த மகாத்துமாவால் நமக்கென்ன கெடுதி நேரிடுமோ வென்று கருதி, சாம்பவமூர்த்தியின் யோக நிலையை யழிக்க வந்து தன் தேகத்தை யிழந்த அம்மாரனானவன் அவர் பத்தர் நிலையை யழிக்கப் புகுந்தால் தனது சீவனும் போய்விடு மென்று கருதிச் சூடுண்ட பூனை யோடுவது போல் தன் னிருப்பிடத்திற் சென்று துன்ப சாகரத்தில் அழுந்தினான். அவனைப் போலவே சூரியனுந் தனக்கு உள்ள சுபாவ காந்தி இவனுடைய தபாக்கினிக் காந்தியால் அழிவுறுமென கருதிப் பயந்து மேற்றிசைக் கடலில் ஆழ்ந்தான். இப்பால் இந்திரன் தன் புத்திரனாகிய அர்ச்சுனன் தவ வுறுதியைக் கண்டு மகிழ்வடைந்து நாமே உருமாறிச் சென்று அர்ச்சுனன் மனவுறுதியை அறியலாமென்று கருதி, தக்ஷணங் கயிலைக்கு வந்து தன்னுருவை மாற்றிப் பிராமண சன்னியாச வேடந்தரித்து காவி காம்பர தண்டு கமண்டலதாரியாகி, மான்தோல் - புலித்தோல் தோளிற் பிரகாசிக்க, அர்ச்சுனன் தவநிலை சேர்ந்து, அவன் செய்யுந் தவத்தின் திறத்தையுந் திடச்சித்தத்தையுங் கண்டு வியந்து, அத்தவநிலை யருகிற் சென்றான். அர்ச்சுனன் தவஸ்ரூபியாகிய வேதியரைக் கண்டு சித்தத்தைச் சிவனிடத்திற் செலுத்தி வந்த தவசிக்கு மனமகிழ வந்தனை செய்தான். அப்போது வேதியனாகிய இந்திரன் சொல்லுகிறான்: ஓ தவசி! நெடுநாளாக இந்த விடத்தில் தவஞ் செய்கிறாய். நீ கருதிய கருத்தென்ன வென்று வினவினன்? அர்ச்சுனன் சொல்லுகிறான்: ஓ சுவாமி! இந்த கைலாசபதியை என் கண்ணாற் காணத் தவம்புரிகிறே னென்றான். அதற்கு இந்திரனாகிய பிராமணத்தவசி நகைத்துச் சொல்லுகிறான்:

ஓ தவசி! நீ இந்த வனத்துக்கு வந்த நாள்முதலிதுவரைக்கும் நீ தவஞ்செய்ததை பார்த்து வருகிறேன். ஐந்துவருட காலமாயிற்று, உன் மனக்கருத்து நிறைவேறவில்லை. 'கிட்டாதாயின் வெட்டென மற' என்கிற வேத வாக்கியத்தை நீ கருதாமற் கிட்டாப்பொருளை கருதித் தவநிலை சேர்ந்தவனாக என் கருத்துக்குத் தோற்றப்படுகிறது. ஐயையோ! கிட்டாப் பொருள் கிட்டுமோ? இதென்ன புத்தி? உன்

வடிவத்தைப் பார்த்தால் இராஜ வடிவமாக இருக்கிறது. தவசிரேஷ்ட சிலாக்கியர்களாகிய முழுதுந் துறந்த பெரியோர்களுக்குங் காணவொண்ணாப் பரமனை அரசனாகிய நீ காண்குவையோ? பிர்மா விஷ்ணுவுக்கும் அருமையானவர் உனக்கு எளிதில் தரிசனங் கொடுப்பாரோ என்று கூறினன். சிவனிடத்தில் கருத்தைச் செலுத்திய அர்ச்சுனன் எதிரில் நின்று கேலிபண்ணுந் தவசியைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ சுவாமி! எண்ணிய வெண்ணம் பயன்படுமென்று வேதம் முறையிடுகின்றமையால், நாம் நினைத்த கருமம் நிறைவேறுகிற பரியந்தம் இத்தவ லீலையை விட்டகலேன். காயம் அநித்தியமென்பீராகில், காலம் வந்து காயமழிந்து விடுகிறபரியந்தம் இந்தத் தவத்தை விடேனென்று கூற, இந்திரன் மகிழ்ந்து மாறுரூபத்தை மாற்றித் தன் சுயரூபத்தைக் காட்டி, மைந்தனைப் பலவாறு புகழ்ந்து, அப்பா அர்ச்சுனா! நீ சாம்பவமூர்த்தியைக் கண்டு தரிசித்துக் கருதியபடி பாசுபதாஸ்திரத்தைப் பெறக்கடவாய் என்று பல ஆசிகள் கூறித் தன்னிருப்பிடத்துக்குச் சென்றான். அர்ச்சுனன் கங்கையு மூன்றாம்பிறையையுந் தரித்த முடியையும், மதனையெரித்த விழியையும், புரத்தைக் கொளுத்தி நகைத்த முறுவலையும், விஷத்தை யடக்கிய கண்டத்தையும், மேருவை வில்லாகவளைத்த புஜங்களையும், யானையை யுரித்த கரங்களையும், புலித்தோலை வரிந்து கட்டிய இடையையும், பார்வதி கலந்த திருவுருவத்தையும், யமனை யுதைத்த பாதத்தையுங் கருத்திற் பாவனை செய்து துதித்துக் கற்சிலைபோல் ஐந்து வருஷகாலந் தவத்திலிருந்தான்.

### அர்ச்சுனன் செயலை நாரதமுனிவரா லறிந்து துரியோதனன் மூகாசுரனை ஏவுதல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! கைலையங்கிரியில் அர்ச்சுனன் செயல் இவ்வாறிருக்க, அஸ்தினாபுரியிற் கவுரவகுலத் திலகனான துரியோதனன் ஆறுலக்ஷத்து அறுபத்தினாலாயிரம் பட்டவர்த்தனரும், மூன்று லக்ஷத்து முப்பத்தீராயிரம் மகுடவர்த்தனரும், பௌரோகிதர்-பண்டிதர்-மந்திரிமார்-தண்டத் தலைவர்-வியூகத்தலைவர்-அணித்தலைவர்-படைத்வர்-சேனைத்தலைவர்-வேதவேதியர்-வீஷ்மர்-கிருபர்-துரோணர்-அஸ்வத்தாமா-விதுரன்-கர்னன்-துர்ச்சாதனன் முதலானவர்களும், இன்னுமுள்ள பரிவாரஜனங்களுந் தன்னைப் புடைசூழ்ந்திருக்க சபா மண்டபத்தில் இருக்கும் நவரத்ன சிங்காதனத்தில் பூலோக தேவேந்திரனைப்போல இனிது வீற்றிருக்கிற தருணத்தில், இசையில் வல்லவராகிய நாரத மகாமுனிவர் வந்தார். நாரதர் வரவைக்கண்ட துரியோதனன் எழுந்து எதிர் சென்று அழைத்து வந்து பொற்பீடத்தில் இருத்தி, சோடசோபசாரமுஞ் செய்து வணங்கினான். நாரதர் வணங்கிய துரியோதனனுக்குப் பல ஆசிகள் கூறி, சிங்காசனத்தில் இருக்கக் கட்டளையிட்டார். அவ்வாறே துரியோதனன் சிங்காசனத்தில் இருந்து, பஞ்சவரைப் பஞ்சைகளாக்கிக் காட்டில் துரத்திவிட்டு மிகுந்த மமதைகொண்டிருக்கிறவனாதலால் பஞ்சவர்க்குத் தரிசனந் தரவந்த நாரதரைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! தங்களைப்போன்ற மகா முனிவர்களுக் கெல்லாம் பூஷணமாகி யிருந்த பாண்டு புத்திரர்கள் இந்திரப்பிரஸ்தத்தை விட்டு இங்கு வந்து, எங்கள் நல்லம்மானாகிய சகுனிராஜனோடு வலியச் சூதாடி நாடு நகர முதலியவற்றைத் தோற்றுப் பெரியோர்களுடைய கிருபையை அதிகமாகப் பெற்றிருந்தும் அப்பஞ்சவர் பஞ்சைகளாகிவனத்துக்குச் சென்றார்கள். அவர்கள்சேதி ஏதாவது தெரிந்திருந்தால் அடியேனுக்கு தெரிவிக்க விரும்புகிறேனென்று வினவ, திரிலோக சஞ்சாரியாகி யாவருடைய மனதையுங் கண்டு தெளிந்திருக்கிற மகாத்துமாவாகிய நாரதமுனிவர் சற்று ஆலோசித்து, அடடா! இவன் கொடிய துன்மார்க்கன். நம்மை இழிபடுத்தாததுபோல இழிவு படுத்தத் தங்களைப்போன்ற பெரியோர்களுக்குப் பூஷணமாகிய பஞ்சவரென்று ஐவரைச் சிறப்பித்துப் பின்பு பஞ்சவர் பஞ்சையாயினரென்று குறித்தான். இப்படி குறித்ததினாற் பெரியோர்களுக்கு இழிவுவந்ததென்று தமது கருத்தில் மதித்து, இத்தருணத்தில் உண்மையை வெளிப்படுத்தினால் இறுமாப்படைந்த இவனுக்குக் கிஞ்சித்து அஞ்சிக்கையுண்டாவதோடு, தேவாகண்டகனான மூகாசுரனும் நாசமடைவானென்று கருதி, துரியோதனனைப் பார்த்துச் சொல்லுகிறார்:

அப்பா துரியோதனா! பஞ்சவருள் தருமன்-வீமன்-நகுலன்-சகாதேவன்-பாஞ்சாலி இவர்கள் சேதி எனக்குத் தெரியாது அவருள் நடுப்பிறந்தோனாகிய அர்ச்சுனன் கைலாசகிரிக்குச் சென்று, தன் பகைவரை முடிக்கப் பாசுபதாஸ்திரம் வேண்டிப் பரமசிவனை

நோக்கித் தவத்திலிருக்கிறான். இந்தச் சேதி மாத்திரம் எனக்குத் தெரியும். இதனைக் குறித்து நீ முன் ஜாக்கிரதைப் படுவாயென்று உனக்குச் சொல்லவந்தேன் என்றுகூறி தமது கருத்துக்கிசைந்த விடத்துக்குச் சென்றார். இப்பால் துரியோதனன் நாரதர் வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில் இடியைக் கேட்ட நாகம்போல் நடுக்கமுற்றும், மனவருத்த முற்றவனைப்போல் அபிநயித்துக் கொலு கலைந்து அரண்மனைக்குச் சென்று, மனைவியாதி பிடித்து, இதற்கென்ன செய்கிறதென்று பலவாறு யோசித்து, பூர்வ ஜென்மத்தில் இவன் அசுர ராஜனாகையால் தன்னினமான மூகாசுரனென்கிற அசுரனை நினைத்தான். தக்ஷணந் துரியோதனன் எவனுக்கு எதிர்பார்த்திருக்கும் அசுரர்களில் ஒருவனாகிய அம்மூகாசுரன் அவன் கண்ணுக்குத் தோன்றி வணங்கி நின்றான். அவனைத் துரியோதனன் கண்டு ஆலிங்கனஞ் செய்து பலவாறு புகழ்ந்தான். மூகாசுரன் வணங்கிய சிரத்தனாகிச் சொல்லுகிறான்: ஓ மகாராஜனே! என்னை நினைத்த கருமம் என்ன? அதனைத் திருவுளங் கனிந்து கூறல் வேண்டுமென்று உரைத்தான். அதற்குத் துரியோதனன் சொல்லுகிறான்: ஓ எனது அன்பிற் சிறந்த நண்பனே! எனக்குப் பகைவனாகிய அர்ச்சுனன் என்னைக்கொல்லப் பாசுபதாஸ்திரம் விரும்பிச், சாம்பவமூர்த்தியை நோக்கித் தவஞ் செய்கிறானாம். நீ ஒரு பன்றிரூபம் எடுத்துக் கைலைக்குச் சென்று, தவஞ் செய்துகொண் டிருக்கும் அவ்வார்ச்சுனனைக் கொன்று போடவேண்டு மென்றான். தன்னுயிர்க்குக் கெடுதி வருவதை யறியாத மூகாசுரன் அக்கருத்துக் கிசைந்து விடை பெற்று, அத்தினபுரத்தைக் கடந்து, தன்னுருவத்தை மாற்றிப் பன்றிரூப மெடுத்தான். அப்பன்றியினது பெருமையை என்னாலுரைப்பதற் கருமையாயினுங் கூடியமட்டும் எடுத்துச்சொல்லுகிறேன் கேளும்:

ஓ மகாராஜனே! அப்பன்றியின் தேகம் சொர்ண நிறம், நகங்கள் வெள்ளி நிறம், கண்டம் உயர்ந்த புஷ்பராகம், கால்கள் பவள நிறம், கண்கள் செம்மணிகள், முகம் பச்சை, செவிகள் நீலம், பற்களுங் கொம்புகளும் வச்சிரம், காத்திரம் பர்வதாகாரம். அது நடக்கும்போது அஷ்டகுல பர்வதங்களும் அஷ்டகஜங்களும் அசையும். சுவாசம் விட்டு வாங்கும்போது அளவில்லாத மிருக ஜெந்துக்கள் மடியும். வயிற்றினால் கடல் சூழ்ந்த நெடிய வுலகத்தை மறைக்கும். இப்படிப்பட்ட பன்றி எவற்றைப்போலிருந்ததென்றால், முன்னொருபோது ஒரு கொம்பினால் ஈரேழுலோகத்தையுந் தூக்கிய திருமால் கொண்ட வராகம் போலும், அரிச்சந்திரனை வெற்றிபெற விஸ்வாமித்திரன் தவத்தால் சிருஷ்டித்த வராகம் போலுமிருந்தது. மேலும், பாசக்கயிறு கொண்டு உலகிலுள்ள உயிர்களைக் கொள்ளை கொள்ளும் யமனும், இப்பன்றியின் சுவாசத்தைத் தன்னுயிர்க்குக் கெடுதி விளைக்கும் பாசக்கயிறென்று கருதி, அஞ்சி யொதுங்கிப் போவானெனில், அதனது பெருமையை யாவரா லுரைக்கக் கூடும். இப்பன்றியானது இடியைப்போலுருமி, காற்றைப்போல் நடந்து, காடு - மலை முதலிய பல வனாந்திரங்களைக் கடந்து, வெள்ளியங்கிரியைச் சேர்ந்து, நடந்து வந்த இளைப்பாற ஒரு பெரும்புதரிலிருந்தது.

## கைலாசபதி அருச்சுனனிடத்தில் வேடுவனாக வருதல்

இங்கே அர்ச்சுனன் மெய்-வாய்-கண்-மூக்கு-செவி இவற்றின் வழியாகிய ஐம்புலன்களையு மடக்கிப் பரமசிவனைத் தியானித்துப் பஞ்சாக்கினி மத்தியில் நின்று தவம்புரிகிறான். சகலலோக கர்த்தனாகி யாவருள்ளத்து மிருக்கின்ற சாம்பவமூர்த்தி அர்ச்சுனனுடைய தவத்தின் திறத்தையும், மன வுறுதியையும் அறிந்து, உள்ளம் பூரித்து, யாதுமுணராதவர்போ லிருந்தனர். அத்தருணத்தில் பார்வதியாரின் பணிப்பெண்கள் ஏதோ ஒரு காரியார்த்தமாக அர்ச்சுனன் தவஞ் செய்யுந் திசைக்கு வந்து, அவன் நிலையைக்கண்டு ஆச்சரியமடைந்து, தங்கள் யஜமானியாகிய பார்வதியாரிடத்து வந்து வணங்கி, அர்ச்சுனன் தவத்தின் திறத்தை யோதினர். பார்வதி தேவியார் கேட்டு, உடனே ஞான திருஷ்டியால் பார்த்து மகிழ்ந்து, தமது கணவனாகிய பரமசிவனிடத்து வந்து வணங்கி, நின்று சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! எப்புவனங்களினுமுள்ள ஜீவராசிகளுக்கெல்லாம் பிதாவைப்போல விளங்கி, யாவர் கருத்தையும் ஒரு கணத்தில் அளந்தறிகின்றவராயும், சகல தேவர்களுள்ளுஞ் சிறந்த மஹா தேவனென்னும் பெயருடைமையைப் பெற்றவராகியு மிருக்கிற தாங்கள், ஏது மறியாதவர்கள்போல் வெள்ளியங்கிரியைவிட் டகலாமலும், அடுத்தவரை யாதரியாமலு மிருக்கின்றது தகுதியா? சந்திர

குல திலகனாகிய அர்ச்சுனன் தவத்தின் பெருமையைத் தங்கள் சித்த மறியாதா? கிருபை கூர்ந்து, அர்ச்சுனன் மகிழும்படி தரிசனங் கொடுத்தருளுமென்று வேண்ட, சாம்பவமூர்த்தி குறு நகைகொண்டு சொல்லுகின்றனர்:

ஓ பெண்கள் சிகாமணியே! அர்ச்சுனன் தவஞ் செய்தலை நீ இன்றுணர்ந்தாய். நான் முன்னமே தெரிந்துகொண்டேன். அவன் தவஞ்செய்ய ஆரம்பித்து, மானிட வருஷத்தில் ஐந்து வருஷ காலமாயிற்று. இதில் தேவேந்திரன் தன் கட்டளைக்குக் கீழ்ப்பட்ட மேனகை-அரம்பை-ஊர்வசி-திலோத்தமை என்னும் நான்கு மாதரை விடுத்து, அர்ச்சுனன் தவத்தை அழித்துவரக் கட்டளையிட்டான். அந்த நான்கு மாதர் தங்களாற் கூடிய மட்டுஞ் சாலவித்தை செய்தும், அச்சாலமொன்றும் பயன்படாமல் நாணமுற்றுப் போயினர். பின்பு, தேவேந்திரன் மாறுவேடங்கொண்டு அர்ச்சுனன் சிந்தை கலங்கச் சில மொழிகூறினன். அதற்கும் மனந்தளரவில்லை. அதுகண்ட இந்திரன் சந்தோஷச் சித்தனாய் வாழ்த்திப்போயினன். நாரதன் அர்ச்சுனன் தவஞ் செய்கிறதைத் துரியோதனனுக்குத் தெரிவிக்க, துரியோதனன் இந்த அர்ச்சுனனைக் கொல்ல, மூகாசுரனை யழைத்துப் பன்றியாகச் செல்லென்று ஆக்கியாபித்தான். மூகாசுரன் பர்வதாகாரமாகப் பன்றிரூபங்கொண்டு நமது மலைச்சாரலில் வந்து, நடந்து வந்த இளைப்பை ஆற்றிக்கொண்டு இருக்கிறான். இளைப்பாறினவுடனே அர்ச்சுனனைக் கொல்ல வரப்போகிறான். இனி நாம் சும்மா யிருக்கலாகாது. அந்த மூகாசுரன் அதிக பராக்கிரமசாலி. மிஞ்சி அர்ச்சுனனை நெருங்கினால் மோசம் வருதலோடு, நமக்குப் பழிவந்தடையும். அந்த மூகாசுரன் முந்தா முன்னம் நாம் வேடுவரூபந் தரித்துக்கொண்டு பன்றியைத் தேடிச் சென்று கண்டு, அதனைக் கொன்று அர்ச்சுனனை மகிழச் செய்வோம். நீ வேடுவச் சிறுமியாகுக என்று கட்டளையிட்டுத் தமது கயிலைக் காவலாளராகிய நந்தியெம் பெருமானை நினைத்தருளினர்.

உடனே நந்திதேவர் வந்து வணங்கி நிற்க, சாம்பவமூர்த்தி சொல்லுகிறார்: ஓ நந்தி! நாம் வேடுவ வுருவந் தரித்துப் பன்றி வேட்டையாடிப் பாண்டு புத்திரனாகிய பார்த்தீபனுக்குத் தரிசனங் கொடுக்க விருப்பங் கொண்டோம். நமது சிவகணங்களை வேடுவராகவரச் செய்வதோடு, நான்கு வேதத்தையும் நாயாக்கி வேடுவச் செய்கைக்குத் தக்க வலை முதலியவற்றைச் சேகரித்துக்கொண்டு சாக்கிரதையாக இருமென்று ஆக்கியாபித்தார். நந்தியெம்பெருமான் அக்கருத்துக்கிசைந்து வணங்கித் தன்னிருப்பிடத்துக்கு வந்து, சிவகணங்களெல்லாம் இங்கு வரக்கடவதென்று தன் கருத்தில் நினைத்தார். உடனே சிவகணங்கள் எல்லாம் நந்தியெம்பெருமானைக் கண்டு வணங்கித் துதித்து நிற்க, நந்தியெம்பெருமான் யாவரையும் பார்த்துச் சொல்லுகிறார்: ஓ சிவகணங்களே! நமதாண்டவன் வேடுவ உருவந்தரித்து வருகிறபடியால், யாவரும் வேடர்களாகுங்களென்று கூறி, தானும் வேடுவரூபந் தரித்து, நான்கு வேதங்களையும் நாய்களாக்கி, ஆறு சாஸ்திரங்களைச் சங்கிலிகளாக்கி, அச்சங்கிலியை அவற்றின் கழுத்தில் அணிந்து கரத்தில் பிடித்து எஜமான் வரவுக்கெதிர் பார்த்திருந்தனர். சிவகணங்கள் யாவும் வேடுவரூபந் தரித்து, வலை-வில்-வாள்-கதை முதலிய ஆயுதங்களை யேந்தி தத்ஜாதி வேடரைப்போல நந்தியெம்பெருமானை சூழ்ந்திருந்தார்.

கேளும் மகாராஜனே! பரிமள மிகுந்த கொன்றை மாலையைப் புனைந்த ஜடாமகுடத்தையுடைய பரமசிவன் தனது சடைகளைப் பின்னலாக்கிப் புறத்திற் றொங்கவிட்டு, மயிலிறகினாலும் பலபல நிறத்தையுடைய பறவைகளி னிறகினாலும் செய்யப்பட்டுப் பலகரைகளையும் வக்கா மணிகளையும் புனைந்திருக்கிற வேடர் மகுடத்தை நேத்திரத்தை யுடைய நெற்றிமறையச் சிரத்தில் முடித்து, குழைகளையுடைய செவிகளில் திவ்ய மலர்களைச் சொருகி நீலம்போலப் பிரகாசிக்குங் காளகண்டம் முத்தைப்போலப் பிரகாசிக்கப் பலகரைக் கோர்வைகளை அதிகமாகப் புனைந்து, மார்பினில் தந்தங்களாற் செய்யப்பட்ட சிறிய மணிகளைக் கோத்திருக்கின்ற மாலைகளைத் தரித்து, இரண்டு புயாசலத்திலும் வச்சிர ஒளிபோற் பிரகாசிக்கும் பக்ஷி றெக்கைகளின் படிவமுள்ள இப்பியினத்தாலாகிய வாகு வலயங்களைப் புனைந்து, ஒளிதங்கிய தந்தக் கங்கணங்களை முன்கையிலிட்டு, இடையிற் புலித்தோற் சல்லடமிட்டிருக்கி, புலித்தோற்கச்சையால் அதைவரிந்து கட்டிக் கடலிற் பிறந்த பலகரைக் கோர்வைகளை இரண்டு கொடைகளிற் புரளப் புனைந்து, மண்டியிடும்போது முழங்கால் வருந்தாதிருக்

கத்தோலணிந்து, உடைவாளை அரைக்கச்சையில் தரித்து, பாதத்திற்குச் செருப்பணிந்து, வீரகண்டாமணி காலிற் புனைந்து, வில்லைக் கரத்திலேந்தி, அம்புப் புட்டிலை முதுகிற் றூங்கி, படிகம்போல் வெண்ணிறமான தமது திருவுருவத்தைக் கருநிற முகில்போலாக்கி வெளிப்பட்டார்.

உமாதேவியார் கறுத்த அளகத்தை வாரிப் பின்னி, குறிஞ்சி நிலத்துக்குரிய கோட்டுப்பூக்களை முடித்து, தந்தத்தாற் செய்த குழைகளைக் காதிலணிந்து, பலகரை மாலைகளைக் கழுத்திற் புனைந்து, தந்தக் கடகத்தை முன்கையி லணிந்து, அத்தந்தங்களாற் செய்யப்பட்ட வளையங்களைக் காலி லணிந்து, இடையிற் பலகரை மாலைகளைப் புனைந்து, வாசனையுள்ள தழைகளையும், மலர்களையுங் காதிலுங் கழுத்திலுமணிந்து, இரண்டு பயோதரங்களிலும் பால்சுரந்து விம்மச் சூரபத்மன் முதலான அசுரர் குலத்தை நாசஞ் செய்யும் வேலாயுதக் கடவுளை இளங் குழந்தையாக்கிக் கரத்திலேந்தி, சாம்பவமூர்த்தியின் பின்றுடர்ந்தார். சாம்பவமூர்த்தி நந்தியெம்பெருமானோடு கலந்து, பன்றி வந்திருக்குந் திசையைக் குறித்துக்காட்டி அத்திசையிற் செல்லும்படி கட்டளை யிட்டார். நந்தியெம்பெருமான் பூதகணங்களாகிய வேடுவர்களை யெச்சரித்துத் தாம் முன்னதாக நடந்தார். வேடர்கள் ஆடல் பாடல்களோடு கைகொட்டி ஆவலித்து, காளம்-எக்காளம்-துடி-தம்பட்டம்-சின்னம்-துத்தாரி முதலிய வாத்தியங்களொலிக்க வலைகளைக் கட்டி, நாற்றிசையிலு மிருக்கும் மிருகங்களெல்லாம் மனங் கலங்கித் திகைத்து எல்லாம் ஒரு திக்கில் வந்துசேர ஆர்ப்பரித்துச் சென்றனர். சாம்பவமூர்த்தியாகிய வேடுவர் தன்கையி லிருக்கும் வில்லையெடுத்து நிறுத்தி வளைத்துக் குணத்தொனி செய்து, தமக்கெதிர்ப்படு மிருகங்களைக் கடுங்கொலை புரிபவர்போ லபினயித்துக் கணை தொடுத்துக்கொண்டு, திருமாலானவர் பன்றியுருவமாகித் தேடியுங் காணொணா திருவடிகள் வருந்த மூகனென்னும் அசுரனாகிய பன்றியை நாடி, வேடுவர் கூட்டத்தின் மத்தியில் விரைவாகச் சென்றனர்.

இப்பால் பார்வதி தேவியாராகிய வேடுவச் சிறுமி இளங்குழந்தையைக் கரத்திலேந்தி, அன்னமில்லாது அருந்தவர் நடக்கும் நன்னடைக்கு மகிழ்ந்து தரிசனங்கொடுக்க அன்னம்போல் நடந்து வரும் என் தாய் அவ்வன்ன நடையை மறந்து, ஆள் நடைக்கிசைய அவர்பின் நடந்தாள். மூகனென்னும் அசுரன் பரமசிவன் பாணத்தினாலன்றி மற்றொருவர் பாணத்தினா லிறக்கிறவனல்லன். அவ்வளவு பராக்கிரமம் பெற்ற அரசன் பன்றியாகி அர்ச்சுனனைக் கொல்ல வந்திருக்கின்றமையால், எங்கே மிஞ்சி அர்ச்சுனனைக் கொன்று விடுகிறானோவென்று மனத்தராகி அன்பர்க்கெளியனாகிய பரமசிவன் அப்பன்றியின் அடிச்சுவடுகளைக் கண்டு அவ்வழியே சென்று அதிக வேகமாய்த் தொடர்ந்து தேடி வருகிறபோது, அளக்கரிய வேதங்களி னுருவாகிய சுவானங்கள் நாற்றிசையெங்கும் மேகம் உறுமுவதுபோல உறுமிக்கொண்டு, சிறு புதல்-பெரும்புதல் - மலையடிவாரம்-குகை-கானாறு-பள்ளம்-மேடு இவை முதலிய விடங்களிற் றேடிக்கொண்டு வருகின்றன. பூதகணங்களாகிய வேடுவர்கள் வலைகளை விசிறி, எங்கெங்கும் நெருங்கிக் கைகொட்டிப் பார்த்து அப்பன்றியைத் தேடிக்கொண்டு வந்தனர். இவர்களைக் கண்ட அந்தரவாசிகள், ஓ! ஓ! இனி இந்தப் பூவுலகம் ஆதிசேஷனாற் சுமக்கப்படுவதரிதாகுமென்று ஏங்கித் தளர்வெய்தினர். சாம்பவமூர்த்தியானவர் பன்றியை நாடி அஃதிருக்கும் இடத்துக்குச் சமீபித்து வந்தனர். வேடர்களும் அப்பன்றியைநெருங்கினர். நாய்கள் யாவருக்கு முன்னமே கண்டுகொண்டு அப்பன்றி யிருக்கும் புதலைச் சூழ்ந்து கொண்டன.

### மூகாசுரன் வதை

அப்போது பன்றியாகிய மூகன் தான் இருக்குமிடத்தை நாய்கள் சூழ்ந்ததையும் வேடுவத் தலைவன் வளைத்த வில்லுந் தொடுத்த பாணமுமாக வருதலையுங் கண்டு மன நடுக்கமாகி, உடல் தளரக் கனவருத்தமுற்று, ஓ! ஓ! நாம் துரியோதனன் மகிழ அர்ச்சுனனைக் கொன்று வருகிறேனென்று சொல்லிவந்தும் வேடுவராலும் நாய்களாலு மடிவோமாகில், அரசனாகிய துரியோதனன் வருத்தமுறுவதுமன்றி, நம்மினத்தாராகிய அசுரரெல்லாம் வேடுவரால் மடிந்தானென்று இழிவு கூறுவர். இனி அரைமாத்திரையில் அர்ச்சுனனை வதைக்கிறதே பெரும்பயன். அர்ச்சுனன் நம்மால் இறந்தபின்பு நாம் இறந்துவிட்டாலும் இழிவில்லை யென்று கருதினவனாய்த் தக்ஷணம் அண்டகடாகமும் இடித்திடக் கடு

கடுத்துக்கொண்டு இடிக்கும் இடிபோல் உறுமி எதிரேறிப் பாய்ந்து, வேடரும் நாய்களும் கலங்கிப் பிரமித்து விலங்கச் சக்கிராகாரமாகச் சுழன்றுகொண்டு வாயுவேகத்துக்கும் அதிகமாகவே நடந்து, அர்ச்சுனன் தவஞ்செய்யும் இடத்து நெருங்கி, மேகங்களும் அஷ்டகஜங்களுந் தத்தளிக்க உறுமிப் பாய்ச்சல் கொண்டு தாவி நின்றது. அதைப் பராக்கிரம வியாக்கிரமாகிய அர்ச்சுனன் கண்டு தவத்துக்கு இடையூறு வருமென்றஞ்சி அவன் தனது திடசித்தத்தால் தவநிலை விடாமலே நின்று நோக்கி தன் காண்டீபத்தை விரைவிலெடுத்து நிறுத்தி வளைத்து வச்சிராயுதத்துக் கொப்பாகிய ஒரு கணையை எடுத்து தொடுத்து விடுத்தான். அக்கால் பக்த்ரை ரக்ஷிக்கும் பரமசிவனானவர் தமது வேடர் கூட்டமும் நாய்களும் பின் செல்ல மனோவேகத்தோடு தாம் முன் சென்று வாயுவேகத்தோடு முன் செல்லும் பன்றியின் முகம் பிளக்கத் தமது அழகிய கார்முகத்தில் ஒரு திவ்வியக் கணையையெடுத்துத் தொடுத்து விடுத்தார்.

இவ்விருவருடைய பாணங்களில் அர்ச்சுனன் விட்ட பாணம் நெற்றியிற்றைத்துப் பின்புறத்துருவிற்று சாம்பவமூர்த்தி தொட்ட பாணம் பன்றியின் பின்புறத்திற் பட்டு முகத்தைப் பிளந்தெறிந்ததுமன்றி, அண்டம் பிளக்க ஓலமிட்டுப் பூமியில் விழுந்திறந்தது. அர்ச்சுனன் தன் கணையினால் இறந்ததென்று கருதி முன்போல் தவநிலை யுற்றனன். சாம்பவ மூர்த்தியாகிய வேடுவப் பெருமானைச் சூழ்ந்து வருகின்ற வேடுவர்கள் கைகொட்டி ஆவலித்து, தவஞ்செய்யும் அர்ச்சுனனைச் சூழ்ந்து ஆர்காணுந் தவசி! எங்கள் தலைவன் குறிவைத்தெய்யும் பன்றியை நீ எப்படி எய்தாய்? வில்லாளிகளானவர் ஏதாவதொன்றைக் குறிவைத்து எய்யும்போது, அதனைத் தாமும் எய்தவர் உலகிலுண்டோ? தவசியாக இருக்கிற உனக்கு இது தகுதியல்லவென்று கூறி நாற்றிசையிலு நின்றேகினர். அர்ச்சுனன் கேட்டுச் சினங்கொண்டு சொல்லுகிறான்: ஓ வேட்ரே! அப்பன்றியானது என் தவநிலையில் வந்து உறுமி ஆரபாரஞ் செய்தது. தவத்துக்கு இடையூறு வராமலிருக்க என் கணையை விட்டு அதனைக் கொன்றேன். நீங்கள் அஃதுணராமல் எங்கள் தலைவன் எய்த பன்றியை நீ எய்வது தகுதியா வென்று தாறுமாறாக உளறுகிறீர்கள். உங்கள் தலைவன் எய்தது உண்மையாக இருக்குமாகிற் பாணம்பட்ட இடத்தில்தானே விழாதா? போம் போம் பயித்தியம்பிடித்தவேடரே! உங்களை யார் கண்டார்? உங்கள் தலைவனை யார் கண்டார்? என்று கூறலும், பழமையாக இருக்கின்ற வேதாகம புராணாதிகளின் ஸ்வரூபனாகி விளங்குஞ் சாம்பவமூர்த்தியாகிய வேடன் விராதன் முதலாகிய அசுரரை வெற்றிகொண்ட ஸ்ரீ ராமமூர்த்திபோல் விளங்கும் விஜய காண்டீபதரனாகிய அர்ச்சுனனை நெருங்கிச் சொல்லுகிறார்:

### கைலாசபதிக்கும் அருச்சுனனுக்கும் வாது.

ஓ தவசீ! இந்தப் பன்றியை நானெடுந்தூரத்திற் கண்டு துரத்திக்கொண்டு வந்து, இங்கு அந்தப் பன்றியின்மேல் என் கணையை விட்டேன்; அக்கணை பின் புறத்திற் பட்டு முகப் புறத்தில் உறவிப் போயிற்று. நீ வில்லாளிபோல் ஒரு பாணத்தை விட்டனை அக்கணை பன்றியின் சிரகிற் பட்டும் பின் புறத்தில் உருவிற்று. இதோ உன் பாணக்குறி. இதோ என் பாணக்குறி. திருஷ்டாந்தமாகக் குறிகள் இருக்க வேடுவர் அதைக் குறித்து வினவினால் நீ முன்பின் யோசிக்காமல், ஆணவமாயை காமிய மென்பனவற்றை நீக்கித் தவசியாயிருக்கிற நீ நானென்கிற கர்வத்தினாலேயோ? அல்லது அப் பன்றியை நாம் எய்தோ மென்கிற வில்லாண்மை பற்றியோ? சிறிது மதிக்காமல் வசனிக்கிறாய் என்று கூறக் கேட்ட அர்ச்சுனன், ஓ! ஓ! வேடுவத்தலைவா! சபாசு நன்றாகச் சொன்னாய். கிராதனென்கிற சொல்லே இரக்கமில்லாதவனென்று பொருள் கொடுக்கும். இரக்கம் இல்லாதவனுக்கு விவேகமில்லை. நீ கிராதருக்கெல்லாந் தலைவனாக யிருக்கிறவன் உனக்கு விவேக மிருக்குமா? இப் பன்றியை நெடுந்தூரத்திற் கண்டு துரத்திக்கொண்டு வந்தே னென்கிறாய். இதனால் நீ வில்லாளியல்ல வென்று விளங்குகின்றது. வில்லாளியாக இருக்கிறவன் தனக்கு லக்ஷியப்பட்டது மிஞ்சிச் செல்லுமாகில், அது பத்து யோசனை தூரஞ் சென்றாலும் இருந்த இடத்தில் இருந்து அப்பாலத்தை செல்லா திருக்கும்படி செய்யவல்ல சரக்கூடிட்டு நெருங்கி லக்ஷியப்பட்ட அவ்வுயிரைக் கொல்லுவான்.

அல்லது அப்பத்து யோசனையுஞ் செல்லாதபடி நின்றவிடத்தில்தானே நின்று அதனை வெல்லுவான். இந்த இரண்டு விதத்தில் ஒரு விதமுஞ் செய்யாமற் பன்றியுடனே பின்

சென்றோடிவந்து, பாணந்தொட்டேனென்று நாணமில்லாமல் என்னுடன் சொன்னதுமன்றி, பன்றியின்மேல் என் பாணம் பட்டதென்று வழக்கிட்டு என்னை இழிவு கூறினை. நான் தவநிலையில் இருந்தமையால் இந்த வசனஞ் சொல்லி இன்னமும் உயிரோடிருந்தனை. தவநிலையுற்றிராமலிருந்தாற் பன்றியடைந்த கதியை உன் சேனை யடைவதுமன்றி, உன் உயிர்க்குஞ் சேதம் வரும். இனி அரைப்போதாவது இவ்விடத்தில் நிற்காமல், தெய்வங் கூட்டி வைத்ததென்று கருதி, இறந்த பன்றியைச் சுமந்துகொண்டு துலைவிற் சென்று நீயும் உன்னினத்தவருங் கூடிப் புசியுங்கள். தபசியானவர்கள் சருகருந்துவரென்று சொல்லுவார். நான் அந்தச் சருகையு நீக்கி யிருக்கிறவனாதலால் இப் பன்றி யுணவு எனக்குதவாது. ஆதலால், நீயே எடுத்துச் செல்லென்று கூற, சாம்பவமூர்த்தியாகிய வேடுவர் கைகொட்டிச் சொல்லுகிறார்: ஓ தபசீ! சுபாசு! சபாசு! உன் தைரியம் உன் வீரியம் நன்றாக இருக்கின்றன. வில்லாளி என்பவன் நீதான்; உருத்திராக்ஷப்பூனையின் கதை யொன்றுண்டு அக்கதை உன்னளவில் திருஷ்டாந்தமாயிற்று.

அஃதெவ்வாறெனில், நாட்டில் இருந்து சீவனஞ் செய்ய சக்தியில்லாமற் காட்டில் வந்து ஸ்வய ரூபத்தோடு சஞ்சரித்தால், எங்களையொத்த வேடுவரால் இடையூறு வரும் என்று அஞ்சித் தவரூபங் கொண்டு பஞ்சாக்கினி மத்தியில் தவஞ் செய்கிறதுபோல் அபிநயித்து, எங்கள் காட்டிலுள்ள மாதுரியமான சுவைகளையுடைய மிருகங்களை வதைத்துச் சீவனஞ் செய்கிற நீ எங்களைப் பார்த்தவுடனே அச்சமுற்று எதுவோ ஒரு சாக்குச்சொல்லி, சுத்த வீரர்களாகியும் வில்லாளிகளாகியும் இருக்கிற எங்களுக்கு சில குற்றமுங் கற்பித்து, முடிவிற் சருகும் புசிக்காத எனக்குப் பன்றியுதவுமாவென்று கூறிப் பன்றியை எடுத்துக்கொண்டு துலைவிற் செல்லென்றுங் கூறினை. இது உனக்கு நன்றாக இருக்கின்றதா? பலநாள் இருடன் ஒருநாளிலகப்பட்டுக் கொள்ளுவானென்கிற பழமொழிபோல் நீ இன்றெங்கள் கையில் அகப்பட்டுக்கொண்டனை. நீ உண்மையான தபசியாக இருந்தால், உன் மனம் நீ நாடிய கடவுளின்கண் சென்றிருக்கவேண்டும். உனக்கொரு அழிவுவராமல் அக்கடவுள் காக்கவேண்டும். நீ கபட சன்னாசி. ஆகையால் கடவுள்பாற் கருத்தைச் செலுத்தாமல், எங்கே நல்ல மிருகம் வருதோவென்று கண்விழித்துப் பார்த்துக்கொண்டு, எங்களுக்குப் பயந்தோடி இந்த வழியாகவரும் மிருகங்களைக் கொன்று தின்கிறாய். இனி உன்னை விடுகிறதில்லையென்று கடுகடுத்துக் கூறினார்.

இவ்வாறு மகாதேவர் கூறிய வசனங்களை அர்ச்சுனன் கேட்டுச் சித்தத்தைச் சிவனிடத்திற் செலுத்தினவனாக இருந்தாலும் வேடுவத் தலைவன் கூறிய வாக்கியத்தைக் கேட்டமாத்திரத்திற் கலகலவென்று நகைத்து, அடா வேடுவத்தலைவா! நான் இங்குள்ள வேடுவர்க்குப் பயந்து சன்னாசி வேடங்கொண்டு உங்களுக்குப் பயந்தோடிவரும் மிருகஜெந்துக்களைக்கொன்று சீவனஞ் செய்கிறவனென்றும், கபட சன்னாசி யென்றும் உரைத்தனை. அப்படி உரைத்த வாயிலுதிரங் கக்கும்படி உன்னுயிரை வாங்குவேன். நானுண்மையான தபசியாதலால் மனம்பொறுத்தேன். இப்போதும் நீ இந்தப் பன்றியைச் சுமந்துகொண்டு யாதொன்றும் வசனியாமல் உன் சேனையோடு விரைவிற்செல்லாமல் முன்போல் ஏதாவது இன்னும் வசனிக்க வருவையாகில், உன்றன் சேனைகளின் தலைகளைச் செடிக்கொன்றாகச் சிதறக் கணை தொடுப்பதுவுமன்றி உன்னுயிர்க்குங் கெடுதிவர வயிரவாளிகளை விடுவேன். பத்திரம் இந்நிமிடத்தில் இங்கு நிற்காமல் செல்லென்று கூறினார். அதுகேட்ட வேடர் பெருமான் புன்சிரிப்பு கொண்டு சொல்லுகிறார்:

### கைலாசபதிக்கு அருச்சுனன் தனது குலமுறை கிளைத்தல்

அடா தவசீ! உன் பேச்சும் உன் வீச்சுங் கண்டால் நீ வில்லாளியல்லவென்று கண்ணடியிற் றோன்றும்பொருள்போல் தோன்றுகின்றது. நல்லது உன்மனதின்படி என்னையும் என் சேனையையும் வெற்றி பெறுவாய். அந்த லக்ஷணத்தைச் சிறிது பார்க்கலாமென்றால், நான் உன்னுடன் எதிர்த்து போர்செய்வதற்குக் கிஞ்சித்துச் சந்தேகம் நேரிட்டிருக்கின்றது. உன் குலத்தையும் வரன்முறையையும் அறிந்து பின்பு என் கைத்திறத்தைக் காட்டவேண்டும். ஆதலால் நீ மறையவனோ? க்ஷத்திரியனோ? வைசியனோ? சூத்திரனோ? அல்லது தேவாசுரர்கள் முதலியோர்களுடைய வமிசத்தில் ஓர் சார்பினனோ? அதனைச் சொல்

லென்று கூற, அர்ச்சுனன் அதுகேட்டு மகிழ்
வடைந்து, இத்தருணத்தில் நமது குலத்தை
யும் பெயரையும் எடுத்துரைத்தால் மாட்சிமை
பெற்ற நமது திறமும் வெளிப்படும். வேடு
வன் அச்சமுற்று அடங்கிச் செல்லுவான்
என்று மனதில் மதித்துச் சொல்லுகிறான்:
ஓ வேடுவராஜனே! என் குலத்தையும் வரன்
முறையையும் கூறுகிறேன் உன் கருத்தை
மற்றொருவரிடத்திற் செலுத்தாமல் உய்த்
துக் கேள்: ஆதியில் திருமாலுந் தேவ
ருங் கூடித் திருப்பாற் கடல் கடைகிறபோது
மந்திரகிரியாகிய மத்துச் சுழலத் தான் தறி
யாகி, விஷந் தோன்றினபோது அவ்விஷத்
தின் சுவாலை யடங்க அமுதத்திற் றோன்றி,
உலகங் குளிர்ச்சி பெறத் தனது சோடசகலை
களை வீசி எங்கும் பிரகாசித்துப் பரமன் சடா
டவியி லினிது வீற்றிருந்து மிகவுஞ் சிறப்புற்
றோங்கிய சந்திரனுண்டே; அவனுடைய
குலம் நான். ஆதியிற் சந்திரனுக்குப் புதன்
பிறந்தான். புதனுக்குப் புரூரவன் பிறந்தான்.
புரூரவனுக்கு ஆயு பிறந்தான். ஆயுவுக்கு நகு
ஷன் பிறந்தான். நகுஷனுக்கு யயாதி பிறந்
தான். யயாதிக்குப் புரூவன் பிறந்தான். புரூ
வனுக்கு ஜெனமேஜெயன் பிறந்தான். ஜென
மேஜெயனுக்குப் பிராசீனன் பிறந்தான். பிரா
சீனனுக்குச் சையாதி பிறந்தான். சையாதிக்
குச் சார்வபூமன் பிறந்தான். சார்வபூமனுக்கு
ஜயசேனன் பிறந்தான். ஜயசேனனுக்கு நயு
தன் பிறந்தான். நயுதனுக்கு குரோதன் பிறந்
தான். குரோதனுக்குத் தேவாபி பிறந்தான்.
தேவாபிக்கு உரிச்சகன் பிறந்தான். உரிச்சக
னுக்கு அரிசகன் பிறந்தான். அரிசகனுக்கு
மதிவான் பிறந்தான். மதிவாகனுக்குத் திடன்
பிறந்தான். திடனுக்கு நீலன் பிறந்தான்.
நீலனுக்குத் துஷ்டியந்தன்பிறந்தான். துஷ்டி
யந்தனுக்குப் பரதன் பிறந்தான். பரதனுக்
குப் பவுமன் பிறந்தான். பவுமனுக்குச் சுகோத்
திரன் பிறந்தான். சுகோத்திரனுக்கு அஸ்
தன் பிறந்தான். அஸ்தனுக்கு நிகும்பன் பிறந்
தான். நிகும்பனுக்கு அரசர் மீளி பிறந்தான்.
அரசர் மீளிக்குச் சவ்வருணன் பிறந்தான்.
சவ்வருணனுக்குக் குரு பிறந்தான். குருவிக்குப்
பரிச்சித்து பிறந்தான். பரிச்சித்துக்குப் பிரத்
தீபன் பிறந்தான். பிறத்தீபனுக்குச் சந்தனு
பிறந்தான். சந்தனுக்குச் சித்திரசேனன் விசித்
திரவீரியன் என்று இரண்டு புத்திரர்கள் பிறந்
தார்கள். இவர்களில் விசித்திர வீரியன் காசி
ராஜா குமாரத்திகளில் அம்பிகை அம்பாலிகை
என்கிற இரண்டு கன்னிகைகளை மணந்து
இறந்தான். அந்த அம்பிகை அம்பாலிகை
இருவரும் வேதவியாசர் அநுக்கிரகத்தினால்,
அம்பிகை திரிதராஷ்டிர மகாராஜனையும்,
அம்பாலிகை பாண்டு மகாராஜனையும் பெற்
றார்கள். திரிதராஷ்டிரன் காந்தாரியை மண
ந்து துரியோதனன் முதலான நூற்றுவரைப்
பெற்றான். பாண்டு மகாராஜன் குந்திதேவி-
மத்திராதேவி என்கிற இரண்டு கன்னிகை
களை மணந்து, குந்திதேவியிடமாகத் தரும
ராஜனையும், வீமராஜனையும், என்னையும் பெற்
றான். மத்திராதேவியி னிடமாக என் சகோத
ரர்களாகிய நகுல சகாதேவர்களைப் பெற்றான்.
என் பெயர் அருச்சுனனென்று சொல்லுவார்
கள் என்று தன் மரபை எடுத்துக்கூறச் சாம்
பவமூர்த்தியாகிய வேடுவர்பிரான் கைகொட்
டிச் சிரித்துச் சொல்லுகிறார்:

### கைலாசபதி அருச்சுனனை இழிவு கூறிப் பகை கொள்ளுதல்

ஓ அர்ச்சுனா! நீ பாண்டு புத்திரனா? ஆ!
ஆ! சபாசு! சபாசு! இதுவரைக்கும் நீ வழங்
கிய வாக்கியங்களை வைராக்கிய வாக்கியமென்
றும், வாக்கியத்திற்குச் சரியாகச் செய்கையிலு
மொத்திருப்பை யென்று நினைத்திருந்தேன்.
உன் மரபையும் பெயரையும் கேட்ட மாத்தி
ரத்தில் உன் பண்டவாளம் வெளிப்பட்டது.
வில்லினது திறமையைக் கிஞ்சித்தேனு மறிந்
தவனல்ல. அஃதெப்படி விளங்குகிறதென்
றால், துரியோதனன் தன் தம்பியாகிய துச்
சாதனனை விட்டு உங்கள் ஐவர்க்கும் பெண்டா
கிய திரௌபதியை இழுத்து வந்து சபை
யில் மானபங்கஞ் செய்யும்போது, நீ வில்லா
ளியாக இருப்பையாகில் அந்த துரியோதன
னையும் மற்றுமுள்ள துராத்துமாக்களையும் நீ
செய்ததென்ன? வில்லாளிகளல்லாத சில
எளிய அரசரை வெற்றிபெற்று இறுமாப்பு
அடைந்து விஜயனென்று பெயர் வகித்துக்
கொண்டதாய் தோன்றுகிறது. இல்லாவிட்
டாற் பஞ்சாக்கினியின் நின்றெழுந்த பாஞ்
சாலி உங்கட்கு தவப்பேறாகக் கிடைக்கப்பெற்
றும், அவளை அரசர் சபையிற்றோற்று அவ
மானஞ் செய்விப்பையோ? அப்போ தவளை
நினைத்தால் அவ்வஸ்தினபுரியனைத்தும் அந்
நிமிடத்திற் சாம்பராகுமே? பார்த்தாக்களாகிய
நீங்கள் பக்கத்திற்றானே இருக்கின்றீர்களென
றல்லவோ சும்மா யிருந்தாள். அந்த அவக்
கேடு அப்படி இருக்கட்டும். உன் குலத்தின்

திறத்தை நோக்குங்கால் எனக்கதிக நகைப்புக் கிடங் கொடுக்கின்றது. ஏனென்முல், உன் பிதா மனைவியைச் சேர்ந்தால் தலைபிளந் திறக்கக் கடவதென்று ஒருமுனி சாபமிட் டிருந்தான். அந்தச் சாபத்தை நினைத்து அரசுரிமையை நீக்கி தன்னிரண்டு மனைவியரும் பணிவிடை செய்யத் தபசியாகி, எங்களுக்குரிய காட்டிற் சஞ்சரித்திருந்தனன். அவனுக்கு ஐந்து புத்திரர் பிறந்தாரென்று சொல்வது அபத்தம். நீங்கள் ஐவரும் தருமசந்தான புத்திரர்களே யொழிய, அவனுக்குச் சுய புத்திரரல்லர். அதுவு மிருக்கட்டும். ஒருவன் பல மாதரைப் புணரலாம். நீங்கள் ஐவரும் ஒரு மாதினைப் புணர்ந்து வருகிறீர்கள். உங்கள் குலமும் உங்கள் நடக்கையும் உங்களுக்கே சரியல்லாமல், காட்டில் திரிகிற எங்களை யொத்த வேடருக்குஞ் சரிப்படாது. இழிவான குலமும் இழிவான நடத்தையுமுள்ள உன்னை எதிர்த்துக் கொல்வது தகுதியல்லாததாக இருந்தாலும் உன்னைக் கொல்லவேண்டும் என்று நெடுநாளாக நினைத்திருந்தேன். அதற்குக் காரணமென்னவென்முற் சொல்லுகிறேன் கேள்:

முன்னொருபோது தன்னைப் பங்கப்படுத்தின பாஞ்சாலனைக் கட்டித் தன் சமுகத்துக்குக் கொண்டுவரக் கருதிய துரோணர் உனக்கும் உன் சகோதரர்களுக்கும் வில்வித்தை கற்றுக் கொடுக்கிற காலத்தில், எங்கள் குலத்துக்கோர் திலகனுன ஏகலைவனென்கிற வேடன் துரோணரை யடுத்து வில்வித்தையைக் கற்பிக்கச் சொல்லி வேண்டிக் கொள்ளும்போது, துரோணர் தனக்கு ஒழிவில்லை யென்று சொல்ல, அதனை கேட்ட ஏகலைவன் தன்னிருப்பிடத்துக்குச் சென்று துரோணரைப்போல் ஒரு திருவுரு அமைத்து, அந்த உருவின் மூலமாக வில்வித்தை யனைத்தையுங் கற்றுக் கொண்டான். அக்காலத்தில் நீ வேட்டைக்குச் சென்முய். உன்னுடன் வந்த நாய் ஏகலைவன் செய்துவைத்திருக்கிற துரோணர் திருவுருவத்தின் மேடையில் நீர்விட்டது. அது கண்டு ஏகலைவன் தன் வில்லின் ஒரு பாணத்தைத் தொடுத்தான். அஃதோர் விநோதத்தால் நாலுபாணமாய் நாயின் நெற்றியில் நாற்புறத்துந்தைத் திருவிற்று. அதோடு அந்நாய் ஓலமிட்டு உன்னிடத்தில் வர, அது கண்ட நீ வியந்து அந்நாயால் அந்த ஏகலைவன் சில்ம்பக்கூடத்தைக் கண்டு அங்கு செல்ல, அப்போது ஏகலைவன் வந்து வணங்கி உனக்குபசாரஞ் செய்தலும் நீயவனைப் பார்த்து, ஓ ஏகலைவா! இந்த நாயை எய்தவன் யாரென்று வினவினை. நான்தானென்று ஏகலைவன் கூறினன். உனக்கு வில்லாசிரியன் யாரென்று நீ வினவினை. எனக்கு வில்லாசிரியன் துரோணரென்று ஏகலைவன் கூறினன். அதனைக் கேட்ட நீ உடனே அத்துரோணரை அழைத்து வந்து, அந்த ஏகலைவன் வில்திறத்தை யறிந்துகொண்டு வில்லாளியென்று மதித்து, அவன் வில்வித்தைகள் பயன்படாதிருக்க மனதிற் பலவாறு யோசித்தனை. அப்போது திவ்யக் கியானியாகிய துரோணர் ஏகலைவனை யழைத்து, நமக்குத் தக்ஷிணையாக உன் கைப் பெருவிரலைக் கொடுவென்று வினவினர். ஏகலைவன் கைப் பெருவிரலை அறுத்துக் கொடுத்துவிட்டுச் சிலநாளில் இறந்தான். எங்கள் குலதிலகனுன ஏகலைவன் இறந்ததற்குக் காரணம் நீதான். இதன்றி, ஒரு பிராமணனுக்காக அநேகம் வேடர்களைக் கொன்றனை. காண்டவ வனத்தை தகனஞ் செய்தபோது அவ் வனத்திலிருந்த வேடர்களைக் குஞ்சு குட்டிகளோடு நாசஞ் செய்தாய். ஆகையால், நீ எனக்குச் சென்மப் பகையாளி. உன்னை விடேன் என்று கூறி, தமது கையில் இருக்கும் வில்லை வளைத்து நாணேற்றி டங்கார ஓசை யெழுப்பித் திவ்ய கணைகளில் ஒன்றை நாணியிற் சேர்த்துக்கொண்டு, பின்னும் அன்பனுகிய அர்ச்சுனனைப் பார்த்துச் சொல்லுகிருர்:

## அருச்சுனனுக்கும் கைலாசபதிக்கும் வில் யுத்தம்

அடா அர்ச்சுனு! குரு தக்ஷிணைக்காக அக்கினி வைசியரிடத்தில் வில் வித்தை கற்ற பராக்கிரம வியாக்கிரமமாகிய பாஞ்சாலனைப் பிடித்துத் தேர்க்காலில் கட்டியவன் நீயே யானுலுமாகுக. அக்கினிபகவான் இடத்தில் அழியாத தேரும் ஒடியாத வில்லும் அருத நாணியும் பெற்றவன் நீயே யானுலுமாகுக. ஏதோ என்னிடத்தில் உன் வீரத்தன்மையைக் காட்டு பார்ப்போமென்று சொன்னுர். இச்சொற்களைக் கேட்ட அர்ச்சுனன் அனலிலிடு மெழுகுபோல் மனமது உருகிக் கடுஞ்சினமடைந்தாலும் சித்தத்தைச் சிவன்பால் நிறுத்தி எதிர் நின்று வழக்கிடும் வேடுவனேடு யெதிர்த்து, அடா வேடா! சற்று நில் ஓடிப் போகாதே. அரைமாத்திரையில் உன்னைக் கொல்லுகிறேனென்று கூறி, தன் வில்லை

எடுத்து நிறுத்தி வளைத்து டங்கார ஓசையெழுப்பி, வச்சிராயுதத்துக் கொப்பாகிய ஒரு திவ்ய கணையைத் தொடுத்து, வேடராஜன் மார்புக் கிலக்காக விடுத்தான். வேடராஜன் அக்கணை வருகிற நேர்ப்பை கண்டு, தன் கைக் கணையி லொன்றை விடுத்து, வரும் பாணத்தை நடுவது பாதியி லறுத்துவிட்டு, உடனே இரண்டு கணைகளைத் தொடுத்து விட்டார். அக் கணை யிரண்டும் அர்ச்சுனன் மார்பிற் பட்டுப் பின்புறத்தி லுருவிப்போயின. அப்போதும் அர்ச்சுனன் சிந்தை கலங்காமற் சித்தத்தைச் சிவன்பால் நிறுத்தி; மார்பிற் பட்ட காயத்திற் குக் கிஞ்சித்தேனும் அஞ்சாமல், அர்த்த சந்திர பாணத்தில் மூன்று பாணத்தை எடுத்து நாணியில் வைத்து வேடராஜன் தோளுக்கும், மார்புக்கும், பீலி முடிக்கும் இலக்காக எய்தான். வேடர்பிரான் அந்த மூன்று பாணங்களையும், பதின் மூன்று பாணங்களால் கண்டித்து, பின்னுஞ் சில கணைகளைத் தூண்டி, அர்ச்சுனனை நோக்கச் செய்தார். அர்ச்சுனன் மறுபடியும் கணைகளைத் தொடுத்து விட்டான். மறவராகிய மகாதேவன் அக்கணைகளைக் கண்டித்து வந்தார். அர்ச்சுனன் கடுஞ்சின மடைந்து, ஓ! ஓ! இந்த வேடன் வில்லில் கிஞ்சித்துத் திறமுடையவன். நாமிலக்கு வைத்து எய்கிற கணைகளைக் கண்டிக்கிறான். இவனை ஏமாத்தி நாம் நினைத்த லக்ஷியத்தைச் சாதிக்கவேண்டுமென்று கருதி, இரண்டிரண்டு மும்மூன்றாக அடுக்கடுக்காய்ப் பாணந் தொடுப்பவன்போலச் சில பாணத்தைத் தொடுத்து, அவற்றின் சந்தில் தன் விநோத வித்தையால் வேறு மூன்று பாணத்தைத் தொடுத்து விட்டான். பித்தனென்று பெயர் படைத்த கயிலைக்கு அரசனாகிய வேடன், அவற்றை அலக்ஷியமாக எண்ணி, முன்னம்விட்ட கணைகளை மாத்திரம் கண்டித்துவிட்டு, வேறு பாணத்தை யெடுத்து வில்லில் மாட்டி விடுவதற்கு முன்னே விநோத வித்தையால் அர்ச்சுனன் விட்ட மூன்று பாணத்தில் இரண்டு பாணம் மார்பிலுந்தோளிலும்பட்டு, மற்றொருபாணம் பீலிமுடியைப் பிளந்தெறிந்துவிட்டது. அது கண்ட கைலைவேடர் ஆச்சரியமாயினர்.

கேளும் மகாராஜனே! இவ்வாறு ஆச்சரியப்பட்ட சாம்பவமூர்த்தியாகிய வேடர், ஓ! ஓ! நாம் பார்த்துக்கொண்டு நிற்கும்போதே பாணம் வந்தது தோன்றாமற் போய்விட்டது. இவன் வில் விநோதத்திற் சிறந்தவனாகை யால் நம்மை ஏமாத்தினனென்று உள்ளம் பூரித்து, வெளியில் அதிக சினங்கொள்பவற் போற் கோபங் கொண்டு, வில்லிற் சில கணைகளைத் தொடுக்க கருத்துக்கொண்டார். பீலிமுடி பிளக்கவே அங்குள்ள கங்கையும் மதியு நடுக்க முற்றன. வேலாயுதக் கடவுளை இளங் குழந்தையாகக் கரத்திலேந்தி நிற்கும் பார்வதியார் திடுக்கிட்டனர். பக்கங்களிற் சூழ்ந்திருக்கும் வேடுவர்கள் தங்கள் தலைவன் பீலிமுடி யறுபட்டதைக் கண்ட மாத்திரத்தில், யுகாந்த காலத்து மேகங்களைப்போலக் கர்ச்சித்து, அர்ச்சுனன்மீது கவிந்து, அடா தபசி! அடா தபசி! இதோ உன்னைத் தென்றிசைக் கனுப்புகிறோம் என்று கூறித் தோள் தட்டி யார்த்து வந்தார்கள். பார்வதியார் தமது கணவனாகிய வேடரிறையைப் பார்த்துச் சினங் கொள்ளாதீர் என்று சைகை செய்தனர். அதுகண்ட ஐயன் அர்ச்சுனன்மேற் செல்லும் வேடர்களை அதட்டி நிறுத்தி, தாம் முன்னம் வில்லில் தொடுத்திருக்கிற கணைகளை ஒன்றன்பின்னொன்றாகச் செல்லும்படி வம்புக்கு விட்டார். அர்ச்சுனன் அக்கணைகள் அனைத்தையுங் கண்டதுண்டமாக்கி, தன் வில்லினுஞ் சில கணைகளைத் தொடுத்து விட்டான். வேடராஜன் அக்கணைகளை யெல்லாம் வெட்டிச் சில வேறு கணைகளைத் தொடுத்து அர்ச்சுனனை நோக்கச் செய்தார். அர்ச்சுனன் அதற்குங் கலங்காமல் 1-10-100-1000-10,000-100,000-1,000,000-சங்கம் இப்படியாக வளருந் திவ்ய கணைகளைத் தொடுத்து விட்டான். அக்கணைகள் ஒன்றோடொன்று உராய்ந்துகொண்டு அக்கினிச் சுவாலையாக வந்தன. வேடர்கள் கண்டு நடுக்க முற்றனர். சரமாரியாய் அருகிலிருக்கிற பார்வதியார் தமது கணவராகிய வேடுவராஜனைக் காணகில ராகிக் கிஞ்சித்து வருத்தமுற்றனர். வேடுவராஜன் சரமாரியை நோக்கி, அவன் விற்றிறத்தை மதித்து மகிழ்ந்தும் மேல்வருங் கணைகளின் மேல் திருக்கண்வைத்தனர். திருக்கண் வைத்த மாத்திரத்தில் அர்ச்சுனன்விட்ட கணைகளெல்லாந் தம்மேற் படாமற் சுத்தி வேலியிட்டது போல் விழுந்தன. அதை அர்ச்சுனன் கண்டு, ஓ!ஓ! இந்த வேடன் சில ஜாலவித்தை கற்றவனாக இருக்கிறானென் றுணர்ந்து, பர்வதங்களைப்பொடியாக்குந் திவ்யகணைகளை மாரிபோற் சொரிந்தான். இவைகளுங் கிட்ட நெருங்காமல் வேலி யிட்டதுபோலாயின. பின்பு, வேடர்பிரான் சில பாணங்களைத் தொடுத்து அர்ச்சுனனை நோக்கச் செய்தார். அர்ச்சுனன்

அதிக சினங்கொண்டு, ஒரு திவ்யக் கணையை எடுத்துத் தன் வில்லிற் றொடுத்தான். தொடுத்தகணை அவன்வில்லிலிருந்தெழும்பிவெளிப்படுமுன் தமது கணையால் அதனை உடனே வெட்டி எறிந்தனர். அதுகண்ட அர்ச்சுனன் காலாக்கினி உருத்திரனைப் போலச்சீறி, ஓரிலைவேல் முகக்கணை - ஈரிலைவேல் முகக்கணை - மூவிலைவேல் முகக்கணை - பிறைமுகக்கணை முதலியவற்றை மணலை வாரி இறைத்தாற்போலச் சொரிந்து வேடுவனைக் கைகாலாட்டவொட்டாமற் செய்தான்.

### அருச்சுனனாற் கைலாசபதி வில்லடி பொறுத்தல்.

கேளும் மகாராஜனே! வேடுவனாக இருக்கிறவர் சாம்பவ மூர்த்தியாகையால், அர்ச்சுனன் கணைகள் வழக்கோரஞ் சொல்வார் வாழ்வைப்போல நாசமுற்றன. மற்றொருவராக இருப்பாராகில் ஒரு கணைக்கு நிர்வகிக்க மாட்டார்கள். அந்த வேளையிற் சாம்பவ மூர்த்தியாகிய வேடுவர் இனிச் சும்மா யிருப்போமாகில் வரவர விபரீதப்போருண்டாகுமென்று கருதி, இதுவரையிலுஞ் செய்த போரால் அர்ச்சுனன் சிறிது மனங் கலங்காமல் நம்மிடத்திற் கருத்தைச் செலுத்தி வருகிறான். உறுதியாக அடித்தால் அப்போது இவன் கருத்தெவ்வாறிருக்குமோ அறியவேண்டுமென்று சில திவ்ய கணைகளை யெடுத்துத் தொடுத்து விடுத்தார். அக்கணைகள் அர்ச்சுனனுடைய தோளிலும் மார்பிலும் நெற்றியிலும் பட்டுருவிப்போயின. அப்போது கலங்காச் சிந்தையையுடைய அர்ச்சுனன் கலங்கி, தன் சித்தத்திலிருக்குஞ் சிவனிடத்தில் முறையிட்டு, ஓ சுவாமி! ஒரு வேடுவனால் நான் அவமானமடைகிறதா இருக்கின்றதே என்று அறிவாற் புலம்பி, இரு தொடையும் நடுக்கமுற்று, மடித்த காலைப் பூமியில் வைத்து, தவநிலை இடத்தை விட்டு மற்றொரு விடத்தில் வந்து நின்று துன்பசாகரத்தில் அழுந்திப் பிரமித்து நின்றனன். பார்வதி தேவியார் அதுகண்டு, ஓ சுவாமி! கலங்கா மனத்தையுடைய அர்ச்சுனன் மனங்கலங்கியும் நம்மை மறக்கவில்லை. ஆதலால், அவனுக்கு விரைவிற் கிருபை புரியுமென்று கூறினர். உடனே சாம்பவமூர்த்தி அர்ச்சுனனுக்கு வீரமுந் தைரியமும் உண்டாகக் கிருபா நோக்கம் வைத்து, அதிக சினங் கொள்பவர்போல் வெகுண்டு அர்ச்சுனன்மேற் சென்றார். அர்ச்சுனன் தான் அடைந்த வருத்தத்தை நீக்கி, யானையைக்கண்ட சிங்கஞ் சீறுவதுபோலச் சீறி, வில்லில் அனேகந் திவ்ய கணைகளைத் தொடுத்தான். வேடர்பெருமான் தமது வில்லிற் சரமாரி பொழிந்தார். இவ்விருவர் சரங்களுங் கயிலாசகிரி முழுமையு நிறைந்தன. தேவர்களிலும் மண்டலத்தரசர்களிலும் இவ்விருவர் போர்செய்ததுபோலொருவருஞ் செய்ததில்லை. இவ்வாறு ஒரு முகூர்த்தகாலஞ் சரவருஷம் ஓயாமற்பொழிந்தனர். அதுகண்ட தேவர்கள் மகிழ்ந்தனர். வேடர்கள் தியங்கினர். தபசிகள் மயங்கினர். பார்வதி தேவியார் அர்ச்சுனன் கரவேக சரவேகத்துக்கு மகிழ்ந்தனர். இவ்வாறு அவ்விருவருங் கையோயாமற் சரவருஷம் பொழிந்து முடிவில் வேடர்பிரான் அர்ச்சுனனைப்பார்த்து, அடா தபசீ! அறாத நாணியையுடைய வில்லைப் பெற்றமையால் என்னுடன் இதுவரைக்கும் போர் செய்தாய். இதோ அந் நாணியை அறுக்கிறேன் பாரென்று ஒரு கணையில் நாணியை அறுத்துவிட்டார். ஆக்கல்-காத்தல்-அழித்தல் என்னு முத்தொழிற்கும் வல்லவர் சொன்னவாக்குப் பழுதாகாமல் வில் நாணி அறவே, வில் நிமிர்ந்தது. அதை அர்ச்சுனன் கண்டு, ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்! தேவர்களாலும் மற்ற அசுரர்களாலும் அறாத நாணி ஒரு வேடுவனால் அறுந்ததே இனி யோசிப்பதிற் பயனில்லையென்று கருதி வீராவேசங் கொண்டு, நிமிர்ந்த வில்லைக் கரத்திற் பற்றிக் கதாயுதத்தை சுற்றுவதுபோற் சுற்றிக்கொண்டு ஓடோடியும் வந்து, தன் வலிகொண்டமட்டும் ஓங்கி வேடுவராஜன் முடியிற் புடைத்தனன். அந்த அடியைப்பட்ட சாம்பவமூர்த்தியாகிய வேடன் ஐம்புலன்களை யொடுக்கிய சனகர் சனற்குமாரர் முதலான நால்வர்க்கும் நிச்சயப் பொருளை யறிவிக்க யோகத்தில் நின்ற பான்மைபோல, சித்திரப் பிரதிமையொத்து சற்றுமசைவில்லாமல் விழித்தகண் விழித்தபடி நின்றனர். அப்போது முடியிலிருந்த கங்கை வாய்விட்டலறி அந்தரத்திலுற்றனள். சடைமுடியில் இருந்த மூன்றாம் பிறையும் புலம்பி மேற்றிசையில் விழுந்தது. நர்காபரணங்கள் நாற்றிசையிலுஞ் சிதறிப்போயின. பார்வதி தேவியாரும் அச்சமுற்று நின்றனர்.

கேளும் மகராஜனே! சர்வஞ்ஞத்துவம், சர்வேச்சுரத்துவம், சர்வநியந்திருத்துவம், சர்வாந்தியாமித்துவம், சர்வகற்பிதத்துவம், சருவசத்தித்துவம் முதலியவைகளோடு வரம்

பில் ஞானம் - வரம்பிற்காட்சி-வரம்பிலின்பம்-வரம்பிலாற்றல் - நாமமின்மை-தோத்திரமின்மை - ஆயுவின்மை-இடையூறின்மை-கர்த்தத்துவம் - அகர்த்தத்துவம்-அன்னியதாகர்த்தத்துவம் என்னும் அளவற்ற பிரபுத்துவ சாமர்த்திய குணங்களையும் வகித்த சாம்பவ மூர்த்தியின் முடியில் வில்லடிப்பட்டதென்று நான் இலேசாய்ச் சொல்வதிற் பயனில்லை. ஏனென்றால், "விண்ணிலுறைவானவரி லாரடிபடாதவர் விரிஞ்சனரியே முதலினோர், மண்ணிலுறைமானவரிலாரடிபடாதவர்மனுக்கண் முதலோர்களதலக், கண்ணிலுறை நாகர்களிலாரடிபடாதவர்கள் கட்செவிமகீபன் முதலோர், எண்ணில்பல யோனியிலு மாரடிபடாதன விருந்துழி யிருந்துழியரோ, வேதமடியுண்டன விரிந்தபலவாகம விதங்களடி யுண்டனவொரைம், பூதமடி யுண்டனவி நாழிகை முதற்புகல் செய்பொழு தொடுசலிப்பில் பொருளின், பேதமடி யுண்டன பிறப்பிலி யிறப்பிலி பிறங்கலரசன்றன் மகளார், நாதனமலன்சமர வேடவடிவங்கொடு நரன்கையடி யுண்டபொழுதே" என்றால் அந்த அடி சொற்க மத்திய பாதாளமென்னு முப்புவனங்களி லுள்ளவர்க்கும், பிர்மா-விஷ்ணு-இந்திரன் முதலானவர்களுக்கும் பட்டதுமன்றி, விலங்குகள் - பறவைகள் - ஊர்வன - நீர்வாழ்வன - தாபரமென்பவற்றிற்கெல்லாம் பட்டன. வேதாகம புராண கலைகளு மடிபட்டன, பூதவேதாள கணநாதருமடிபட்டனர். அர்ச்சுனன் தைரியத்தையும் புஜபலத்தையும் யாவரால் அளவிடக்கூடும். அன்பர்க் கெளியனாகிய சாம்பவமூர்த்தியின் பேரருளுடைமையின் அதிலக்ஷணமே லக்ஷணம்.

## கைலாசபதிக்கும் அருச்சுனனுக்கும் மல்யுத்தம்

இப்பால் வேடுவச் செம்மல் வில்லடியுண்டு வெகுள்பவர்போல வெகுண்டு, அடா தபசியென்று கூவி, உன்னை இன்னிமிடத்தில் அதமாக்குகிறேன் பாரென்று உக்கிரங்கொண்டவர்போற் பராக்கிரமங் கொண்டனர். அப்போது அருகிலிருக்கிற பார்வதி தேவியார் சுவாமிக்குக் கிருபை பெருகும்படி இனிய வசனங் கூறினர். சாம்பவமூர்த்தியாகிய வேடன் அர்ச்சுனனைப் பார்த்து, ஓ தவசி! நாணியிருக்கிற பரியந்தம் விற்போரிட்டாய். அந்நாணி யற்றவுடன் வில்லையே கதையாக்கொண்டு என் தலையில் மோதியடித்தனை. இவ்வளவுக்கும் நான் அஞ்சவில்லை. இனி உன்னுடன் விற்போர் புரிவது தருமமல்ல. நீயும் நானும் மல்லுயுத்தம் புரிவோம் வாவென்று அழைத்தார். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! அந்தச் சுத்தசாட்குண்ய மூர்த்தியாகிய கைலாசபதிக்கு அவ்வருச்சுனன் இடத்திலுண்டாகிய கிருபையின் பெருக்கை என்னென்று சொல்லுவேன். முன்னமளவற்ற தேவாசுராள் தம்மை நோக்கித் தவஞ்செய்தடைந்த வரச் செருக்கினால் ஆக்கிரமித்தபோதெல்லாம் அவர்களை யோர் பொருள் படுத்தி எதிர்த்து அவர்கள் பராக்கிரம மனைத்தும் யாவருமறிய வெளிப்பட்டொழியும் வரையிற் போராடி, முடிவில் அவர்க்கு முத்திப் பயனுமுதவும்படியான துஷ்டசன நிக்ரக மென்னு மறக்கருணையை வகித்த மகாதேவ மூர்த்திக்கு அச்செருக்கொன்று மின்றி அன்பே உருவாவமைத்து, உட்கரணங்களனைத்தையும் அவ்வுடையானிடஞ் செலுத்தி, புறக்கரணங்களாற் புங்கவருங் கொண்டாடப் போர் புரியும் விஜயனிடத்திற் சிஷ்டஜன பரிபாலனமென்னும் அறக்கருணையை வகித்தல் அருமையோ? அதனாற்றான் அவன் எத்தனைதரமுறிய வடிக்கினும், தந்தை யாயினோன் தனதருமைச் சிறுவர் ஊடிச் செய்யுஞ் சிறு குறும்புகளைப் புத்திர வாஞ்சையாற் சகித்து, புளகாங்கிதனாதல்போற் றாமும் வாஞ்சையாற் சகித்து முன்செய்த ஆயுதச்சமரை வெறுத்து, அவனோடு ஆலிங்கனச் சமர் செய்யத் தமக்குள் ஆவலித்து மீண்டு மீண்டு அழைக்கலாயினார்.

இவ்வாறு அழைத்தலும் அர்ச்சுனன் அக்கருத்துக் கிசைந்து, புலித்தோல்-தட்டி-சல்லடம் இவைகளை இருக்கிக்கட்டித் தோள்தட்டி யார்த்தான். வேடர் பெருமானும் புலித்தோல்-தட்டி-சல்லடம் இவற்றை இறுக்கிக் கட்டித் தோள்தட்டி யார்த்தார். இருவரும் ஓரடி-ஈரடி-மூன்றடி-நான்கடி என்னுங் கணக்கிற் பாய்ந்து, முன்னடி-பின்னடி-மேலிடி-கீழிடி என்னும் விதிமுறைப்படி எதிரெதிராய்ப் போந்து, எட்டிக் கரங்களைப்பற்றிப் பிசைந்து அதிக உக்கிரத்தோடு, தட்டிப் புஜங்களைக் கட்டிப் புரண்டு மிக விக்கிரமித்தோடும் இவ்விருவரும், ஒருவராலொருவர் படுங் குத்துக்களத்தனையும் பூச்செண்டுகளாற் படும் மொத்துக்களாகப் பொறுத்துப் போராடுங் காலையில், மத்தகஜத்தை யுரித்தவனைப் பேச்சின்றி விடாய் கொண்டு தத்தளிக்க அர்ச்சுனன் மிகப் பொத்தினன். அத்தனைக்கும்

உத்தமன் மகிழ்வுற்றனன். மீண்டும் ஒருவரை யொருவர் வாரித் தூக்கி எறிவார். ஒருவரை யொருவர் மோதிப் போக்கி யறைவார். அவருக்கவர்கள் பின்னவிட்டுக்கொண்டு வரிசையிலுருளுவர். அதில் என்னையன் தன்னிடத்திப் பெண் தியங்க மறுபடி வருகுவர். ஓடி ஓடி காட்டில் மரங்களைப் பிடுங்குவர். சாடிசாடி மேட்டிற் கெழும்படித் தொடங்குவர். இப்படி ஒரு முகூர்த்தம் இருவருஞ் களையாமல் போர்புரிந்தனர். அதை இவ்விதமென்றெப்படி விவரித்துரைப்பேன். வேடர்களும் பார்வதி தேவியும் இவ்விருவர் செய்யும் பெரும் போரைக் கண்டு ஒருவேளை மகிழ்வடைவர். ஒருவேளை வருத்தமுறுவர். இந்திரன் முதலான தேவர்கள் கண்டு ஆனந்தக் கண்ணீர் தளும்ப இரண்டு கரங்களைச் சிரமேற் குவித்து ஓ பக்தரக்ஷகா! ஓ பரமதயாளா! ஓ சாம்பவமூர்த்தி! உன் திருவிளையாடலை யாவரா லறியக்கூடுமென்று பலவாறு துதித்தனர். அத்துதிகளைக் கேட்டும், இன்னும் அவ்வர்ச்சுனனோடு போராட வேண்டுமென்னும் ஆவலுடையவராய், அவனை இவனறைய இவரை அவனறைய ஒருவர்க்கொருவர் கட்டிக்கொண்டு தலையோடுதலையும், நெற்றியோடு நெற்றியும், கண்ணோடு கண்ணும், மூக்கோடு மூக்கும், வாயோடு வாயும், மார்போடு மார்பும், தோளோடு தோளும், தாளோடு தாளுந் தாக்கி அஷ்டகுல பர்வதங்கள்-அஷ்டதிக்குங் கஜங்கள்-அஷ்டமா நாகங்கள்-அஷ்டதிசைப் பாலர்கள் தத்தளிக்க, ஆதிசேஷன் முடிமாத்த, அம்புவிமாது உருண்டு சுருண்டு புரண்டு யுத்தஞ் செய்து முடிவிற் சாம்பவமூர்த்தியாகிய வேடன் தன் காற் பெருவிரலால் அர்ச்சுனனை மேலே தூக்கி எத்தினர். அர்ச்சுனன் அந்த எத்தின விசையினால் வாயுமண்டலம்-மேக மண்டலங் கடந்து சூரியமண்டலம் நெருங்கச் சென்று, மறுபடியும் பூமியை நோக்கி வருகிறான்.

## கைலாசபதி தரிசனங்கொடுக்க அருச்சுனன் துதித்தல்

அப்போது இந்த அர்ச்சுனன் தன் முதுகு சத்துருவுக்குத் தெரியாமலிருக்கவேண்டுமென்று கருதி முதுகை மறைத்துப் பரமசிவனிடத்துக் கருத்தைச் செலுத்தி வேடன் மேல் ஆராத கோபங்கொண்டு அந்தரத்திலிருந்து வரும்போது, அவ்வர்ச்சுனன் பூமியில் விழுமுன் பார்வதிதேவியார் தமது கணவனை நோக்கி, ஓ சுவாமி! அடியனாகிய அர்ச்சுனனைக் காப்பாற்றவேண்டுமென்று வேண்டினர். உடனே சாம்பவமூர்த்தியாகிய வேடன் திருவுளங் கனிந்து, யாதொரு வருத்தமும் அர்ச்சுனனுக்கு நேரிடாமலிருக்கக் கிருபை புரிந்தனர். அர்ச்சுனன் ஒரு வருத்தமு மடையாமற் பூமியிற் குதித்து, மறுபடியு மற்போர் செய்ய எத்தனித்துத் தோளையுந் துடையையுந் தட்டி நிமிர்ந்து வேடனை நோக்கினன். எதிரில் நின்ற வேடனும், பாலசுப்பிரமண்யரைக் கரத்திலேந்தி யிருந்த வேடுவச் சிறுமியும், பக்கங்களிற் சூழ்ந்திருந்த வேடர்களும் மாயமாக மறைந்தனர். அப்போது அர்ச்சுனன் திகைத்து நாற்றிசையிலுஞ் சுற்றிப் பார்த்துப் பதைத்து நிற்கும்போது அந்தரத்தில் தேவதுந்துமி முழங்க, மந்தார பாரிஜாதமலர் சொரிய, அப்சரஸ்திரீகளுந் தேவர்களும் ஜெய விஜைபவா வென்று வாழ்த்திப் பல ஆசிகள் கூற, அம்சவாகனத்திற் பிரமனும், கருடவாகனத்தில் திருமாலும், ஐராவதத்தில் இந்திரனும், மற்ற அக்கினி-இயமன்-நிருதி-வருணன்-வாயு-குபேரன் - ஈசானன் - அஷ்டவசுக்கள்-உருத்திரகணங்கள்-கணபதி-மயில்வாகனக்கடவுள்-நந்தியெம்பெருமான்-பூதவேதாளமாதி-சிவகணங்கள் மற்றுமுள்ள முப்பத்துமுக்கோடி தேவர்கள்-நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் - கருடகாந்தருவர் - சித்த வித்தியாதரர் முதலான அந்தரவாசிகளும் புடைசூழ, வேடுவனாகயிருந்த சாம்பவமூர்த்தி மழவிடைமேற் பார்வதி சமேதராக எழுந்தருளி அர்ச்சுனன் கண்ணுக்குத் தோன்றினர்.

அப்போது அர்ச்சுனன் அகமுகத்தாற் கண்டிருந்த காக்ஷிபோற் பகிர்முகத்தும் புலப்பட்ட கடவுளைக் கண்டமாத்திரத்தில் இரண்டு கண்ணிலும் ஆனந்தநீர் சொரிந்து, இரண்டு கரங்களையுஞ் சிரமேற் குவித்து, தேகமுழுதும் புளகாங்கிதமுற நின்று தொழுவான், அழுவான், எழுந்திருப்பான், விழுந்திருப்பான், பாடுவான், ஆடுவான், பணிவான், பரதவிப்பான், தன்னை மறந்து நிற்பான், உள்ளம் பெருகுவான், உருகுவான், மயங்குவான், தியங்குவான், பதைப்பான், குதிப்பான், தான் போர் புரிந்ததை எண்ணியெண்ணி நடுங்கி ஒடுங்கிக் கனிந்த சிந்தை யுடையவனாகி, ஓ சுவாமி! இருவினைப் பந்தங்களினாற் கட்டுண்டு மெய் சோர்ந்து பிறவிக்கடலிலழுந்தி வருந்துகிற நாய்க்குங் கடையனான எளியேனைப் பாது

காக்கக் கருதி மிகுந்த பிரகாசத்தையுடைய
மாணிக்கங்களை உச்சியிற் பெற்றிரானின்ற
சர்ப்பாபரணாதிகளையுங் கங்கையையுந் தரித்த
சடாமகுடத்தை மறைத்து வந்ததென்ன
நியாயமோ? இதோர் மாயமோ? ஓ என்
னையனே! என்று சொல்லித் துதிப்பதாயி
னன். "சம்போசங்கர கௌரீசா-சாம்பசதா
சிவ கயிலாசா, தந்திர மந்திர யெந்திரபாதா-
சங்கர சங்கர சங்கர நாதா, சகலகலாண்ட
சராசரகாரண-சகுணசிவாண்டபராபரிபூரண,
அந்தண அங்கண அம்பரபோகா - அண்டர்
கள் சூழ்தரு மம்பிகைபாகா, அரிபிரமாதியர்
தேடியநாதா-அரகர சிவசிவ அருடரு பாதா,
சதபரி சதவுப சதமத விதபவ-சிதபரி கதபத
சிவ சிவ சிவ சிவ, அரகர வரசுப கர கர
பவ பவ-சிரபுர சுரபர சிவ சிவ சிவ சிவ,
அங்க சங்க மங்கைபங்க ஆதி ஆதி
ஆதியே, துங்க புங்க வங்க லிங்க ஜோதி
ஜோதி ஜோதியே, அத்த முத்த பத்தர்சித்த
ஆதி ஆதி ஆதியே, சுத்த சித்த சப்த நிர்த்த
ஜோதி ஜோதி ஜோதியே, பாசநாச பாபநாச
பாசதேச வீசனே, வாச வாச தாசர்நேச
வாசநாச பேசனே, அகில புவன வுயிர்கள்
தழைய வபயமுதவு மமலனே, அயனுமரியு
மரனுமகிழ அருளுநடன விமலனே, சதா
சிவா மகாசிவா சதாசிவா சிவசிவா, சதா
சிவா சதாசிவா சதாசிவா சதாசிவா, வாசிவா
சதாசிவா மகாசிவா தயாசிவா, வாசிவாசி வாசி
வாசி வாசிவாசி வாசிவா, அருட்பிரகாசா பரப்
பிரகாசா அகப்பிரகாசா சிவப்பிரகாசா, நடப்
பிரகாசா, தவப்பிரகாசா நவப்பிரகாசா சிவப்
பிரகாசா சங்கர சிவசிவ மாதேவா - எங்களை
யாட்கொள வாவாவா, அரகர சிவசிவ மகா
தேவா-அருளமுதந்தர வாவாவா, சம்போ சங்
கர கௌரீசா-சாம்பசதாசிவ கயிலாசா" என்று
துதித்து ஸ்ரீஜெயஞ்ஜெயாவிஜைபவா! தேவ
தேவ பிர்மாண்ட திவ்ய சர்வபர்வோன்னதா!
சிருஷ்டி திதி சம்மார திரோபவானுக்கிரகா!
அண்டரண்ட பகிரண்ட உத்தண்ட காலப்பிர
சண்ட சீர்கொண்ட கண்ட கண்டகா! அந்
தாகசுர சம்ஹாரா! திரிபுராந்தகா! இந்திராதி
பர்க்கருள் பத்மவிலோசனா! திவ்ய மகர
குண்டல ஆரகேயூர கடககங்கணதரா! சங்
கரா! தற்பரா! அகண்டிதா லாங்கிர்த கிருபா
சமுத்திர நேத்ரசூத்ர சாத்ரகோத்ர பூசிதா!
அங்க தங்க துங்க லிங்க மஹேஸ்வரா! பிரா
ணேஸ்வரா! பரமேஸ்வரா! சர்வேஸ்வரா!
தேவா! ஆவா! காவா! மகானுபாவா! என்னை
யாதரி! மாதரி! வீரி! மகேஸ்வரி! அரியபர
மேஸ்வரி! அகிலாண்டகோடி பிர்மாண்டநா
யகி! காலபயிரவி! அகோரபயிரவி! அகோர
வீரேஸ்வரி! வீரபத்திரி! ஆயி! மகமாயி!
தேவி! அமுதகாதலி! ஆதிசத்தி! ஆனந்தத்
தாண்டவி! அகோரத்திரிசூலி! கபாலி! சுடர்
மழுவேந்தி! என்று ஆனந்தக் கூத்தாடி,
"ஆதியே யண்டமு மனைத்து மாயொளிர்,
சோதியே கொன்றையந் தொங்கன் மௌலி
யாய், வாதியே மரகதவல்லி யாளொரு, பாதி
யேபவள்மாம் பரமரூபியே, பைபராவணி
மணிப் பவள மேனியாய், செய்யவாய் மர
கதச் செல்வி பாகனே, யையனே சேவடி
யடைந்தவர்க்கெலா, மெய்யனே எங்குமாய்
விளங்குஞ் சோதியே, முக்கணு நிலவெழ
முகிழ்த்த மூரலுஞ், சக்கர வதனமுந் தயங்கு
வேணியு, மைக்கயன் மரகதவல்லி வாழ்வுறு,
செக்கர்மெய் வடிவமுஞ் சிறந்து வாழியே,
விழுந்தரு வினையினின் மெலிந்து நாயினு,
மழுந்திய பிறவியி னயருவேன் முனஞ், செ
ழுஞ்சுடர் மணிப்பணிந் திங்கண்மௌலியா,
எழுந்தருளிய விஃதென்னமாயமோ, அன்
பறு தருமனுக் கநுசனாயினே, னன்பரம்
பொருளுக்கு நண்பு மாயினேன், பொன்
புரை மேனியாய் போற்றினேனுனே, என்
பெருந்தவப்பயன் யார்பெற்றார்களோ" என்று
மீண்டுந் துதித்து, கைலாசபதியோடு வந்தி
ருக்கின்ற கணபதி-வேலாயுதக்கடவுள்-நந்தி
யெம்பெருமான்-திருமால்-பிரமன் - இந்திரன்
முதலான சகல தேவர்களையுந் துதித்து
வணங்கினன்.

### கைலாசபதி அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திர முதலியவை கொடுத்தல்

இவ்வாறு மனம் - வாக்கு - காயம் - என்
னுந் திரிகரணங்களாலுஞ் சாம்பவமூர்த்தி
யை வணங்கிய அர்ச்சுனனை வாரித் தமது
திருமேனியி லழுந்தப் புல்லினர். சாம்பவ
மூர்த்தியின் திருமேனியில் தன்தேகம் பட்ட
மாத்திரத்தில் அர்ச்சுனனுக்குண்டாகிய பசி
தாகம்-சோகம்-மெய்வருத்தம் யாவும் நீங்கிப்
பரமானந்தத்தை அடைந்தான். அப்போது
சாம்பவமூர்த்தி சொல்லுகிறார். அர்ச்சுனா!
முன்னம் நாம் வேடுவ வுருவந் தரித்து உன்
னுடன் போர் செய்தனம். அப்படி வந்ததற்
குக் காரணம் என்னவென்றால், உன் பெரிய
பிதாவின் புத்திரனாகிய துரியோதனன் உங்க
ளவர்களின் நாடுநகர முதலியவற்றைச் சூதி

ஞற் பறித்துக்கொண்டதுமன்றி, உங்களைக் காட்டிற் றுரத்திவிட்டனன். நீங்களனைவரும் பெரியோர்கள் வாக்கின்படி வனத்துக்குவர, நீதனித்துத் தவஞ்செய்யக்கயிலைக்கு வந்தனை. நீ கயிலைக்கு வந்து தவஞ்செய்தலை நாரதர் துரியோதனனுக்குக் கூற, துரியோதனன் மூகனென்னும் அசுரனை அழைத்து உன்னைக் கொல்லப் பன்றியாக அனுப்ப, அப்பன்றி உன்னைச் சேதஞ்செய்யவந்தால் நாம் வேடுவனாகி அப்பன்றியைக் கொன்று உன்னோடு விளையாட்டாகப் போர் புரிந்தனம். அதினாலும் உன் மனம் நம்மைவிட் டகலவில்லை. ஆதலால், உனது பத்தி நிலைமைக்கு யாம் மகிழ்வுற்றுத் தரிசனமாயினோம். உன்னைப் போல் திடச்சித்தன் உலகிலில்லை. இனி உனக்கு வேண்டிய வரத்தைக் கொடுப்போம். நீ கருதிய பொருளைக் கேட்டுக்கொள்ளென்று கூறினர். இந்த வசனங்களைக் கேட்ட அர்ச்சுனன் சாம்பவமூர்த்தியோடு போர்புரிந்தோமேயென்கிற அபசாரத்தை மனதிற் கருதி ஏக்கமுற்றுச் சோர்ந்து, உடல் நடுக்கமுறவும் வாய் குழறவும் சொல் தடுமாறவுங் கலங்கிச் சொல்லுகிறான்: ஓ சுவாமி! அடியேன் வேடனென்று அலக்ஷியமாக எண்ணிப் பலவாறு தூஷித்ததுமன்றி, என் பாணத்தினாற் பீலி முடியைப் பிளந்தேன். வில்லாற் சிரசில் மோதினேன். மல்லு யுத்தத்தில் அடித்தேன், உதைத்தேன், இடித்தேன், பொல்லாத அபசாரம்புரிந்தனன்; இனி என் காயத்தை வைத்திருக்கேன் என்று பலவாறு புலம்புகிற போது சாம்பவமூர்த்தி அர்ச்சுனனை ஆதரித்துச் சொல்லுகிறார்: அப்பா அர்ச்சுனா! நீ வழங்கிய தூர்ப்பாஷைகளெல்லாம் நமக்குச் சாமவேதம். நீ விட்ட பாணங்களோ மலர் வாளி. உன் வில்லடி வில்வமாலை. ஆதலால் அதுபற்றி நீ கவலைப்பட வேண்டாமென்று கூற, அர்ச்சுனன் சொல்லுகிறான்:

ஓ சுவாமி! தரும சொரூபியாகிய தருமராஜனுக்குத் தம்பியாகினேன். மகா தேஜோமயத்தோடுங்கூடிய சொர்ன நிறமுள்ள தேவரீர் திருமேனியினழகை என் கண்ணாரக்கண்டு துதித்தனன். தவசிரேஷ்டர் சிலர்க்கியருக்கு மருமையான இன்பத்தை அடைந்தனன். என் தவப்பயனே பயன் என்று கூறிப் பின்னுஞ் சொல்லுகிறான்: ஓ சுவாமி! உமது திருவிளையாடலைப் பிரமாதி தேவரால் அளவிடத் தக்கதல்லவென்றால், எளியவனால் உரைக்கத் தக்கதோ? உமது உபய சரணாரவிந்தத்தைக் கண்ணாரக் கண்டவர் மற்றொரு பொருளையும் இச்சிப்பாரோ? ஓ என்னாண்டவனே! எளியேன் என் பகைவரை நாசஞ் செய்ய உமது திருநாமத்தோடு விளங்கும் பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்தருள வேண்டுமென்று இரந்தனன். அதற்குச் சாம்பவமூர்த்தி உளமகிழ்ந்து, உமையவளும் மற்றவர்களும் களிப்புற அதிக வலிமையையும், ஒடியாத வில்லும், அருத நாணியும், மாளாத அம்புப்புட்டிலும், அழியாத கவசமும், ஒழியாத வச்சிரமுடியும் தாமே திருவுளங்கனிந்து கொடுத்ததன்றி, அவன் கேட்டுக்கொண்ட பாசுபதாஸ்திரமுங் கொடுத்து மந்திரோபதேசமும் செய்தனர். அப்போது உமையவள்-கணபதி-முருகக்கடவுள் - திருமால் - பிரமன் - இந்திரன்-தேவர்கள் முதலானவர்கள் தங்கள் தங்கள் நாமதேயத்தால் விளங்கும் அஸ்திரங்களைக் கொடுத்து மந்திரோபதேசஞ் செய்தனர்கள். சாம்பவமூர்த்தி அர்ச்சுனனை நோக்கிச் சொல்லுகிறார்: அப்பா தனஞ்சயா! இந்த பாசுபதாஸ்திரத்தைக் கொஞ்சம் பலத்தை யுடைய மானிடர் பேரில் விடாதே. தேவர்கள்மீதும் அசுரர்கள் மீதும் விடுவாயென்று கூறி வாழ்த்தி, தமது பரிசனத்தோடு கயிலைக்கு எழுந்தருளினர். அர்ச்சுனன் ஆராவின்பக்கடலி லாழ்ந்து மகிழ்வுற்றனன். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! மேல் நடந்தனவற்றையும் கூறுகிறேன் கேளும்:

### அருச்சுனன் இந்திரனாற் பொன்னுலகத்திற் கொண்டுபோகப்பட்டு அவனோடு கொலுவீற்றுண்டிருத்தல்

ஓ மகாராஜனே! சாம்பவமூர்த்தி தன் பரிசனத்தோடு கயிலைக் கெழுந்தருளின பின்பு திருமாலும் பிரமனும் தமது இருப்பிடம் சென்றார்கள். இந்திரன் தன் பரிசனத்தோடு துந்துமி முழங்கப் பூதலத்தில் தங்கிய தன் மைந்தனாகிய அர்ச்சுனனை நெருங்க, அர்ச்சுனன் பிதாவாகிய இந்திரனுக்கு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்ய, அப்படி வணங்கிய மைந்தனை வாரித் தழுவி பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறார்: அப்பா புத்திரசிகாமணியே! சாம்பவமூர்த்தியோடு எதிர்த்து வில்லுயுத்தம் மல்லுயுத்தஞ் செய்த விஜயப் பிரதாபா! நீ அருமையாகச் செய்த தவம் நாளுக்கு நாள் அழிவின்றி வளரக் கடவது. நீ பெற்ற வில் அம்புப் புட்டில் முதலானவைகளோடு, அரன்

கொடுத்த பாசுபதாஸ்திர முதலாய் விர்த்தியாகி வாழக்கடவன். பரமசிவன் திருமேனியில் அழுந்த மல்லுயுத்தம்புரிந்த உன் தூய்ய திருமேனி நீடூழிகாலம் வாழக்கடவது என்று பலவாறு புகழ்ந்துரைத்து, புத்திரனை எடுத்துத் தன்னுடைய ரதத்தின்மேல் வைத்துக்கொண்டு மாதலியை எச்சரித்தான். அவன் தேரை விண்ணுலகத்துக்காகத் திருப்பி நடத்தி, அந்தர லோகங்களை யெல்லாங் கடந்து சொர்க்கலோகத்துக்கு அருகில் சென்றான். தேவ சாரதியாகிய மாதலி செலுத்தும் பெரிய ஒரு இரதத்தில் இரண்டு மரகத மலை இருந்தனபோல் இந்திரனும் அர்ச்சுனனும் இருந்து, அங்கிருக்கும் அந்தர லோகத்தின் மாட்சிமைகளை இந்திரன் கூற, அவற்றை அர்ச்சுனன் கேட்டுக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தனன். இரதமும் பொன்னுலகத் தோரண வாசலை அடைந்தது. முற்காலத்தில் திருமாலானவர் வாமன ரூபங்கொண்டு மாவலியினிடத்தில் மூன்றடி இடங்கேட்டு, ஓரடியால் பூமியை அளந்துவிட்டு, மற்றொரு அடியால் அந்தர லோகத்தை அளக்க நீட்டிய பாதத்துக்குச் சரியாகத் தோன்றிய அந்தரலோகமானது விண்ணவரையும் முனிவரையும் பெற்றுப் பொன்னிறமாகி ஆகாயஞ் சேர்ந்திருத்தலால், அர்ச்சுனன் கண்ணுக்குச் சாம்பவமூர்த்தியின் திருமேனிபோல் தோன்றிற்று. இவ்வளவு சிலாக்கியம்பெற்ற பொன்னுலகில் இந்திரனும் அர்ச்சுனனும் வந்து, முப்பத்துமுக்கோடி தேவர்கள் - நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்கள்-கின்னரர்-கிம்புருடர்-கருடர்-காந்தருவர் - சித்தர் - வித்தியாதரர் - மேனகை - அரம்பை - ஊர்வசி - திலோர்த்தமை - தேவமாதர்கள் முதலிய யாவரும் மகிழ, ஒளியிற் சிறந்த பெரிய முத்துக்களைப் பெற்ற சங்கநிதி-பதுமநிதி-சிந்தாமணி - கற்பகவிருக்ஷம்-காமதேனு முதலியவைகள் விளங்கி இருக்கின்ற கொலுமண்டபத்தில் ஒளிமிகுந்த நவரத்தின சிங்காதனத்தில் இருவரும் இனிது வீற்றிருந்தனர்.

அதுகண்ட தேவ தூதுவர் உடனே அரண்மனைக்குச் சென்று, இந்திரன் மனைவியாகிய புலோமிசையை வணங்கி, ஓ அம்மணி! தங்களுடைய நாயகன் கயிலையங்கிரிக்குச் சென்று வருகிறபோது, ஒரு மானிடனைத் தமது தேரிலெடுத்து வைத்துக்கொண்டு நமது நகரத்திற்கு வந்து தமது சிங்காதனத்தில் அவனைச் சமமாக வைத்துத் தாமுமவனோடு தழைய வீற்றிருக்கின்றார். அவன் உருவத்தில் மானிடனாக இருந்தபோதிலும் தேவாமிசையேற்றவனாகி, நமதரசனைப் போலவே திருவுளலக்ஷணம் பொருந்தியிருக்கிறான். மேலும், அவன் பெருமையைக் கேள்விப்பட்டால் திருமாலவதாரமாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் சகோதரியாகிய சுபத்திரைக்கு மணவாளனாகியும், அந்த விஷ்ணுவுக்கு மைத்துனனாகியும், திரிபுவனங்களை ஒருநொடியில் அழிக்கும் பராக்கிரம வியாக்கிரமாகியும், நமது மன்னவனுக்குப் புத்திரனாகியுமிருக்கிறவனென்று சொல்லுகிறார்களென்று கூற, அதனைப் புலோமிசை கேட்டு மகிழ்வடைந்து, அந்தப் புத்திரனைப் பார்க்கவேண்டுமென்று அந்தப் புரத்தை விட்டு, தாதிமார் புடைசூழ, முத்துச் சிவிகையிலேறிக் கொலுமண்டபத்தில் வந்திறங்கினள். கரும்பிற்கும் அமுதத்திற்கும் இனிமையூட்டுஞ் சொல்லையும் மின்போலொளிரு மிடையையுமுடைய புலோமிசையின் வரவைக் கண்ட அர்ச்சுனன் தன்னன்னையென்று கருதி, கனிந்த மனத்தனாகிச் சிங்காதனத்தை விட்டிழிந்து வந்து, தாயின் உபயசரணாரவிந்தத்தில் தன் முகாரவிந்தத்தை வைத்து வணங்கினன். புலோமிசை வணங்கிய மைந்தனை வாரித் தழுவிப் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறாள்: அப்பா என் புத்திரசிகாமணியே! விஜயப்பிரதாபனாகி உன் பிதாவின் செல்வத்துக் குரியவனாகுவையென்று வாழ்த்தி, இந்திரனுக் குயிராகிய புலோமிசை அந்தப்புரத்துக்குச் சென்றாள். அர்ச்சுனன் முன்போல பிதாவுடன் கொலுவிருந்தான். ஒரு பக்கம் அந்தரத் துந்துமியொலி - ஒரு பக்கம் வேதாகம ஒலி-ஒரு பக்கம் வீணையொலி - ஒரு பக்கம் உச்சை சிரவங்களினொலி - ஒருபக்கம் ஐராவணங்களினொலி-ஒரு பக்கம் மேகவொலி-ஒரு பக்கம் தும்புரு நாரதரிசையொலி - ஒரு பக்கம் மந்தார மலர்களின் தேனைக்குடித்துலவும் வண்டுகளினொலி - ஒரு பக்கம் காவிகாம்பர தண்டு கமண்டலதாரிகளாகிய அகத்தியர்-புலத்தியர்-வசிஷ்டர் முதலான சப்தரிஷிகள் கூறும் பல ஆசிகளொலி-ஒருபக்கம் அஷ்டவசுக்கள் உருத்திரகணங்கள் முதலான தேவர்குழாம் வாழ்த்தெடுக்குமொலி-ஒருபக்கம் மேனகை-ஊர்வசி-திலோர்தமை-அரம்பை என்னும் நான்கு மாதர்களில் இருவர் நடிக்க, இருவர் பாடுமொலி இப்படி பார்ப்பதற்கு அருமையாகிய விநோதங்களை

யுடைய தேவராஜன் சபையை அர்ச்சுனன் பார்த்து மிகுந்த மகிழ்வடைந்திருந்தான்.

### அருச்சுனனுக்கு ஊர்வசியாற் பேடிரூபம் நேருதல்

கேளும் மகாராஜனே! இவ்வாறு மகிழ்ச்சிகொண்ட நரேந்திரனுந் தேவேந்திரனுங் கோடிசூரியப்பிரகாசமாகிய நவரத்தின சிங்காதனத்தில் நீலகிரிகளிரண்டு கொலுவிருந்தன போல விருந்தார்கள். இருமருங்கும் உபயசாமரை இரட்டசந்திரனை நாணச்செய்யும் வெண்பட்டுக் குடைகள் கவிய, மந்தாரமலரில் வண்டுகள் ரீங்கார ஓசையுடன்வந்து விழுந்து தேனைக்குடித்து முகத்தில் வந்துசூழ, வேதகோஷ்டம் அதிகரிக்க, தேவர்கள் புடைதாவ, வியாசபகவான் வலப்பக்கத்திலிருந்து சுரர் விர்த்தி-அசுரர் நாஸ்தி யென்று முக்காலுங் கூற, மேனகை-அரம்பை-ஊர்வசி - திலோர்த்தமை என்கிற நான்கு மாதருள், திருமால் தொடையி லுற்பத்தியாகி ஊர்வசியென்று காரணப்பெயர் கொண்டு தெய்வலோகக் கணிகை மாதர்க்கெல்லாந் தலைமையா யிருக்கின்றவள், தனது பரதசமர்த்தைத் தெரிவிக்க முந்தி வந்து சபையில்நின்று, மற்ற மூன்று கணிகை மாதரும் இசைபாடத் தான் நடனஞ் செய்தனள். அந்த ஊர்வசி செய்த நடனத்தின் திறத்தை என்னொரு நாவால் சொல்லத் தக்கதல்ல. இரண்டாயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷன்தான் சொல்லவேண்டும். அர்ச்சுனன் அவள் செய்துவரும் நடனத்திலுள்ள பாவங்கள் - அராகங்கள் - தாளங்கள் முதலிய பலவற்றுள்ளும் இரசமான இடங்களிற் சிரக்கம்பஞ் செய்து, அபிநயரசத்தை யுண்டு மகிழ்ந்து, இவளைப்போல் நடிப்பவரும் அஸ்தம் பிடிப்பவரும் இரண்டிற்குஞ் சரியாகப் பாடுவோரும் ஒருவருமில்லை யென்று மனதிற்குள் மதித்திருந்தான். இந்திரன் தன் மைந்தனைப் பார்த்து இந்நாடகச் சீர் எப்படியிருக்கின்றது என்று வினவ, அர்ச்சுனன் பணிவுடையவனாகி, ஓ ஐயா! இந்நாடகம் புதிதாக இருப்பதுவுமன்றி, அதிகசரசமாக இருக்கிறதென்று புகழ்ந்துரைத்தான். இந்திரன் கேட்டு மகிழ்ந்தனன். ஊர்வசி அர்ச்சுனன் கல்வித் திறத்தைக் கண்டு களிப்புற்று, அவ்வர்ச்சுனன்மீது தன்னுள்ளே நீங்காத காதல் கொண்டனள். இந்திரன் கணிகை மாதருக்கு நல்ல பரிசு கொடுத்து அனுப்பி, தேவர் முதலானவரைத் தம் இருப்பிடத்துக்குச் செல்லும்படி கட்டளையிட்டுக் கொலு கலைந்து தானுந் தன் புத்திரனும் அரண்மனைக்குச் சென்று, வானநதியில் ஸ்நானஞ் செய்து பூசை முடித்து, போசனசாலைக்கு வந்து புசித்து, தாம்பூலந் தரித்து, பரிமளக் கலவைச் சாந்துகள் பூசி, மலர்மாலைகள் புனைந்து இனிதிருந்தனன். சூரியனும் மேற்றிசைக் கடலி லாழ்ந்தான். உடனே சந்திரன் உதயமாயினன்.

அப்போது இந்திரன் சில ஏவலாளிகளை அழைத்து, நமது அரண்மனையில் இருக்கும் பள்ளியறைகளில் ஒன்றை நன்றாய் அலங்காரஞ் செய்து எனது புத்திரனாகிய அர்ச்சுனனை அப் பள்ளியறைக்கு அழைத்துப் போங்கள் என்று கட்டளை யிட, அவர்கள் ஒரு பள்ளியறையைத் திறந்து நன்றாய் அலங்காரஞ் செய்து திருவிளக்கேற்றி, அர்ச்சுனனை அழைத்துப்போய் அவ்வறையிற் சேர்ந்தனர். அர்ச்சுனன் அதிற் சயனித்திருந்தனன். அர்ச்சுனன்மீது காதல் கொண்ட ஊர்வசி நடுச்சாமத்தில் எழுந்து, ஆடையாபரண லங்கிரதமாகி, பரிமள கந்தங்களை அணிந்து, தனது காதற் றோழியைத் துணையாகக் கொண்டு அர்ச்சுனன் படுத்திருக்கும் பள்ளி யறைக்குள் வந்தாள். அவள் வரவைக்கண்ட அர்ச்சுனன் திடுக்கிட்டு எழுந்து, எதிர்சென்று சாஷ்டாங்கமாக வணங்கி, ஓ அம்மணி! எங்கள் மூதாதையாகிய ஆயுவென்பவர்க்கு மனைவியாகி உயிர்க்குயிராக இருந்த என் தாயாகிய நீர் இந்நேரத்தில் இங்கு வந்த காரணம் என்னவென்று வினவினன். அர்ச்சுனன் வழங்கிய சொற்களைக் கேட்ட ஊர்வசி தன் எண்ணம் வீணாயினதை நோக்கி, அனலிலிடும் மெழுகு போல் மனமிகவுருகி, ஒரு நாழிகை பரியந்தம் ஒன்றுந் தோன்றாமல் மயங்கி யிருந்து பின்பு தெளிந்து கடுஞ்சின மடைந்து சொல்லுகிறாள்: ஓ அர்ச்சுனா! நான் இன்று பகல் இந்திர சபையில் நடனஞ் செய்தபோது உன் வடிவத்தைக் கண்டு, காதல்கொண்டு பகற்பொழுது எப்போது நீங்கும் என்று வருத்தமுற்றிருந்து, இராப்பொழுது அடைந்தவுடனே வராமல் ஒருவரறியாமல் இருக்கவேண்டும் என்று கருதி நடுச்சாமத்தில் எழுந்து உன் பள்ளியறைக்கு வந்தால் நீ என் மனமகிழ்ச்சியில்லாமல், மூதாதையின் மனைவியாயிருந்த என் தாய் என்று தாய்முறைகொண்டு என்னாசையை நிராசை யாக்கினை. மேலுந் தாசிகளுக்கு முறையில்லை. நான் விரும்பி

வலிய வந்தால் நீ அணைய வேண்டும். தரும சாஸ்திரத்தில் தாயானவளுங் காம முற்று வலிய வந்தால் தழுவச் சொல்லி விதி யிருக்கின்றது. இதனை நீ யுணர்ந்திருந்துஞ் சுத்த மூடனைப்போல் என்னைப் பங்கப் படுத்தினை. இப்படிச் செய்தது உன் தவச் செருக்கா? பராக்கிரமத்தின் கருக்கா? அல்லது நமது அழகுக்கு இவள் ஒப்பானவள் அன்று என்று அவமதித்தல் செய்தனையா? நல்லது, எந்த விதத்தினாலேயோ என்னை நீ பங்கப்படுத்தினை. உன்னை நான் பங்கப்படுத்தாமல் விடேன். இதோ உன்னைச் சபிக்கிறேன் பாரென்று கூறி, நீ இன்றுமுதல் பேடியுருவமாகக் கடவை யென்று சபித்துவிட்டுத் தன் னிருப்பிடத்துக்குச் சென்றாள். அர்ச்சுனன் பள்ளியறை சேர்ந்தான். உடனே ஊர்வசியிட்ட சாபம் வந்து பற்றிக்கொண்டது. அதனால் தன்னுடைய திருவுருவமாறிப் பேடிரூப நேர, அந்த உருவத்தைக் கண்ட அர்ச்சுனன் ஐயையோ தெய்வமே! எனக்கு இவ்வுரு வருமென்றறியேனே. இவ் வுருவத்தைப்பெற்று யெப்படி உயிர் தரிப்பேன் என்று பலவாறு புலம்பி, பிறரறியாமலிருக்கத் தன்னுடல் முழுவதையும் வஸ்திரத்தால் மூடி வருத்தமுற்றிருந்தான். அர்ச்சுனன் வருத்தமுறுதலை மனம்பொறாமல் அவ் வுருவத்தைத் தீர்க்க இந்திரன் வருதல்போற் சூரியன் கீழ்த்திசையிற் றோன்றினன். கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! மேல் நடந்தனவற்றையுங் கூறுகிறேன் கவனமாய்க் கேளும்:

அருச்சுனன் தவநிலைச்சருக்கம் முற்றிற்று.

---

மூன்றாவது,

## நிவாதகவசர் வதைச்சருக்கம்

---

### கண்ணன் துதி

வேதன் சகலவி ஞ்ஞேதனகோபியர் நாதனருள்பிரக் கியாதனைப், பூதனின்மல போதன் றத்துவ நீதன்பங்கய பாதன்றேர்ச், சூதன்கமலைச மேதன்மெய்க்கும் நீதன் றூற்சனர் பேதன்சங், கீதனபஞ்சவர் தூதன்சரண் மலர்த்தாதென்னெஞ்சக லாதன்றே.

இப்பால் சூரியோதயமானவுடன் இந்திரன் எழுந்து காலைக்கடனை முடித்து ஸ்நானஞ்செய்து பூசையை நிறைவேற்றி, ஆடையாபரணாலங்கிர்தனாகி, தன் பரிசனத்தோடு கொலு மண்டபத்துக்கு வந்து, எதிரில் இருக்கும் யக்ஷக தூதனை யழைத்து, என் புத்திரனாகிய அர்ச்சுனனை அழைத்துவா வென்றனுப்பினான். யக்ஷத் தூதன் அர்ச்சுனன் இருக்கும் பள்ளியறைக்குட் சென்று அழைக்க, அர்ச்சுனன் தனக்குற்ற சாபத்தைக் கூற, தூதுவன் கேட்டு ஓடோடியும் வந்து இந்திரனை வணங்கி, ஊர்வசியால் அர்ச்சுனனுக்குச் சாபம் நேரிட் டிருக்கின்றதைக் கூறினான். அது கேட்ட இந்திரன் சோகமுற்று, ஆயிரங்கண்களிலும் நீர்ததும்பிப் புலம்பி, அங்குள்ள தேவர்களோடுங் கூடி அர்ச்சுனன் பள்ளியறைக்குட் சென்று, அவனைக் கண்டு தழுவிக் கனவருத்தமுற்று, அவனுக்குச் சில தேறுதலைச் சொல்லி, உடனே தூதவரை அழைத்து ஊர்வசியை அழைத்துவரக் கட்டளையிட்டான். தூதுவர் ஊர்வசியைக் கண்டு அரசன் வரும்படி கட்டளையிட்டதைத் தெரிவித்தார்கள். ஊர்வசி தனக்குள் தானே அதிக அச்சமடைந்தவளாகி, இந்திரன் சமூகத்துக்கு அதிக விரைவுடன் வந்தாள். இந்திரன் தேவர்கள் முகத்தை நோக்க, அக் குறிப்பறிந்த தேவர்கள் ஊர்வசியைப் பார்த்துச் சொல்லுகிறார்கள்: ஓ கணிகையர் சிகாமணி! நீ கொண்ட காதலுக்குக் கெடுதி நேரிட்டதென்று பூலோக இந்திரனாகிய அர்ச்சுனனைச் சபித்துவிட்டாய். அர்ச்சுனன் தன் மூதாதையின் மனைவி யென்று மதித்து மறுத்தான். ஸ்திரீகள் வலிய விச்சித்தால் அந்த ஸ்திரீ யாராயிருந்த போதிலும் புணர விதியிருக்கின்றது. அர்ச்சுனன் அதனை யுணர்ந்தவனாக இருந்தும் உன்னளவின் அந்த விதியை மறந்து அவிதியடைந்தான். நமது அரசனால் அர்ச்சுனன் இந்த சொர்க்கலோகத்துக்கு வந்தான். அவனுக்குக் கெடுதி நேரிட்டால் நமதரசனுக்கு இழிவு வரும். நாமே அரசனுக்கு இழிவுவரச்செய்வது தகுதியல்ல. ஆதலால், நீ அவன்மீது கொண்ட கோபத்தை மாற்றி அந்தப் பேடி வடிவம் நினைத்த போது வரும்படி மறு சாபங் கொடுவென்று வேண்டினார்கள். அதுகேட்ட ஊர்வசி மகிழ்ந்து, அந்தப்படியே அவன் நினைத்தபோது அச்சாபம் வரக்கடவது மற்றவேளை வராதிருக்கக்கடவதென்று பிரதிசாபங் கொடுத்தாள். அர்ச்சுனன் பேடியுருவம் நீங்கி முன்னுருவந் தரித்து மாசற்ற மணியைப்போலப் பிரகாசித்தான். இந்திரன் மகிழ்ந்து ஊர்வசி

யைப் பலவாறு புகழ்ந்துரைத்து, விரைவிற் கொலுமண்டபத்துக்கு வரும்படி கட்டளையிட்டு, அர்ச்சுனனை அழைத்துக்கொண்டு தேவருடன் கொலுமண்டபம் வந்து சேர்ந்தான்.

### தேவேந்திரன் அருச்சுனனுக்கு இளவரசு பட்டாபிஷேகஞ் செய்தல்

கேளும் மகாராஜனே! பேடிரூபந்தரித்த அர்ச்சுனனுவின் அந்த ரூபம் நினைத்தபோது வரும்படி வரங்கொடுத்த ஊர்வசியாகிய அன்னையைப் பணிந்து, பிதாவாகிய இந்திரனோடு கோடி சூரியப்பிரகாசமாகிய சிங்காதனத்தில் இனிது வீற்றிருந்தான். அப்போது இந்திரன் தன்பட்டத்தைப் பிள்ளையாகிய அர்ச்சுனனுக்குக் கட்டவும், தனக்குப் பிரமன் கொடுத்த மகுடத்தை அவனுக்குத் தரிக்கவும் எண்ணங்கொண்டு, அக்காரியமாக வேண்டிய தற்காகத் தேவர் முதலான யாவரையுஞ் சம்மதிக்கச் செய்யவேண்டு மாதலால், அதற்கு அர்ச்சுனனுடைய பராக்கிரமத்தையும் அவனால் நமக்கு வரும் நன்மையும் எடுத்தோதினால் சம்மதிப்பார்களென்று கருதி, தேவர்களை நோக்கிச் சொல்லுகிறான்: ஓ தேவர்களே! ஓ முனிவர்களே! இதோ என்னருகிலிருக்கிற அர்ச்சுனன் நரனாக இருந்தாலும், இவன் நரனல்ல தேவாமிசையைப் பெற்றவன். நமக்கிடையூறு விளைத்துப் போர்முகத்தில் வளைத்து வீழிட்டோடச் செய்யும் அரசரை வெற்றி கொள்ளும் பராக்கிரமசாலி நாமெல்லாம் பார்த்திருக்கச் சாம்பவமூர்த்தியோடு வில் யுத்தம், மல் யுத்தம் புரிந்தவன். இவன் வல்லமையை ஆதிசேஷனாலுஞ் சொல்லத் தக்கதல்ல. பசிநோய் கொண்ட அக்கினிபகவானுடைய பசிதணிய நமது காண்டவவனத்தைத் தகனஞ் செய்ய அவனுக்கு உத்திரவு கொடுத்து, அழியாத தேரும், ஒடியாத வில்லும், அறுத நாணியும் அக்ஷயத் தூணீரமும் பெற்று, நம்முடனும் எதிர்த்து, நம்மையும் நம்மாலேவப்பட்ட மேகத்தையுங் கர்வபங்கஞ் செய்து, நம்மை யெல்லாம் வீழிட்டோடும்படி போரிட்ட பராக்கிரமசாலி ஆதலால் நான் பிரமன் கையிற் பெற்ற மகுடத்தை இவனுக்குச் சூட்டி என் பட்டத்துக்கு இளவரசாக வைக்கவேண்டு மென்று கருதி யிருக்கிறேன் அதற்கு உங்கள் கருத்தென்னவென்று வினவினன். இந்திரன் வழங்கிய சொற்களைக் கேட்ட தேவருமு முனிவரும் வியப்படைந்து, அர்ச்சுனனைத் தங்கள் கண்களாகிய மலர்களினால் அர்ச்சனை செய்பவர்போல் அவனிடத்தில் திருக்கண்ணோக்கம் வைத்துத் தேவேந்திரன் கேட்கச் சொல்லுகிறார்கள்:

ஓ மகாராஜனே! தாங்கள் வழங்கிய சொற்களும் இந்த மகானுபாவன் செய்கையும் ஒத்திருக்கின்றமையால், உங்கள் கருத்துக்கு நாங்களும் இசைந்தோ மென்றார்கள். அதுகேட்ட இந்திரன் மகிழ்ந்து, தக்ஷணந் தம்மிடத்திலிருக்கும் பெரியோர்களால் வானநதி கொண்டுவரக் கட்டளையிட்டு, அந் நதியால் அர்ச்சுனனுக்கு ஸ்நானஞ் செய்வித்து, வேதவிதிப்படி சிங்காசனத்திலிருத்தி, ஆடை ஆபரணலங்கிர்தஞ் செய்து, சந்தனம் - புனுகு - சவ்வாது - கஸ்தூரி - கற்பூரம்-குங்குமம் முதலானவைகளை யணிந்து, பரிமள மிகுந்த நறுமலர் மாலைகளைப் புனைந்து, மகர குண்டல ஆரகேயூர கடககங்கண முதலாகிய இராஜபூஷணங்களைத் தரித்து, தேவரும் முனிவரும் மற்றுமுள்ள யாவரும் ஜெயா விஜைபவாவென்று பல ஆசிகள் கூறிக் கற்பகப் பூமாரி தூவ, அந்தரத் துந்துமிமுழங்க, எக்காளம் - சின்னம் - துத்தாரி முதலியவைகள் பூரிக்க, மற்ற வாத்திய ஓசை எந்தெந்த லோகத்திலுங் கேட்க, இந்திரன் பிரமனாற் பெற்ற கோடி சூரியப் பிரகாசமாகிய மகுடத்தை எடுத்து அர்ச்சுனன் சிரசில் தரித்து, கிரீடி கிரீடி கிரீடி யென்று மூன்றுதரந் தன் வாயாற் சொல்லிப் பலவாறு வாழ்த்தினான். மற்றத் தேவர்களும் முனிவர்களும் பலவாறு வாழ்த்தி இந்திரனுக்குச் செய்யத் தகுந்த மரியாதைகள் எத்தன்மையவோ அத்தன்மை மரியாதைகளை எல்லாம் அர்ச்சுனனுக்குச் செய்து மகிழ்ந்தார்கள். மற்ற அரம்பாஸ்திரீகளும், யக்ஷர் - கருடர்-காந்தருவர்-சித்தர்-வித்தியாதரர் முதலான யாவரும், இந்திரனுக்குச் செய்யத் தகுந்த மரியாதை செய்து மகிழ்ந்தார்கள். இந்திரன் அர்ச்சுனனுக்கு மந்திரவாள்-தேவாஸ்திர முதலியவை கொடுத்து, யாவர்க்கும் விருந்தளித்து, தானுந் தன் புத்திரனாகிய அர்ச்சுனனும் ஒரு கலத்தி லுண்டார்கள். அந்த வேளையில் அயிராணி கண்டு மனம் பொறுதவளாகி, ஓ! ஓ! நமது அரசனென்ன புத்தி மயங்கியிருக்கிறார். நரனுடன் தானும் ஒரு கலத்தில் அமுதுண்கின்றாரே யென்று சினங் கொண்டு, தன் கணவனைப் பார்த்துச் சொல்லுகிறாள்: ஓ மகாராஜனே!

நீரோ விண்ணுலகாதிபதி உம்முடன் புசிப்பவனோ மண்ணுலகாதிபதி இருவரும் ஒரு கலத்தில் அமுதுண்டால் யார்தான் நகையாரென் றுரைக்க, அதை இந்திரன் கேட்டுக் குறுநகை கொண்டு சொல்லுகிறான்:

ஓ மாது சிரோன்மணி! இந்த அர்ச்சுனன் நரனாக இருந்தாலும், அவன் உருவத்தால் நரனே யன்றிச் செய்கையால் நரனல்ல. நமக்குச் செய்கை சிறந்ததே யன்றிக் குலஞ் சிறப்பல்ல. மேலும் இந்த அர்ச்சுனன் திருமாலுக்கு மைத்துனன். கைலாசபதியோடு போர் புரிந்தவன். எனக்குப் புத்திரன். வேத விதிக்கும் பிசகாத நன்னெறியையுடையவன். பராக்கிரமசாலி. ஆதலால், அவனோடு நான் ஒரு கலத்தி லுண்ண யாதொரு விரோதமுமில்லை என்றுகூறியதைக்கேட்ட அருகிலிருந்ததேவர்கள் அயிராணியை நோக்கிச் சொல்லுகிறார்கள்: ஓ அம்மணி! திருமாலுக்கு மைத்துனனென்றபோதே வேறொரு உறுதி வேண்டுவதில்லை. அந்தத் திருமால் நமதுலகிலுள்ள கற்பக விருக்ஷங்களைப் பூலோகத்தில் நாட்டினவர். அவரே இந்த மஹானுபாவர்க்கு மைத்துனனானால், நமதரசன் இவரோடு ஒரு கலத்திலுண்பதற்கு நாம் வேறு நினைக்கக் கூடுமோ? ஆனால் இந்தப் புருஷோத்தமன் இங்கு வந்ததற்கும் ஒரு காரண மிருக்குமென் றுகூற, புலோமிசை மனமகிழ்ந்தாள். புலோமிசை கூறியவற்றையுந் தேவர்கள் கூறியவற்றையுங்கேட்ட அர்ச்சுனன் இந்திரனைப்பணிந்து சொல்லுகிறான்: ஓ ஐயா! தாங்களோதேவராஜசிகாமணி நானோநரன் நாமிருவரும் ஒரு ஆசனத்தி லிருப்பதும், ஒருகலத்தி லுண்பதுந் தகுமாவென்றனன். இந்திரன் புத்திரனைத் தழுவிச் சொல்லுகிறான்: அப்பா கிரீடி! சொர்க்கமத்திய பாதாளமென்னும் முப்புவனங்களி லுன்னைவிட பராக்கிரம சாலிகளுண்டோ? காண்பதற்கு அருமையான சாம்பவமூர்த்தியோடு நாங்களெல்லாம் பார்க்க விற்போர் மற்போர் புரிந்தனை அழியாத தேர் ஒடியாத வில் அட்சயதூணீரம் முதலானவைகளோடு திருமால் பிரமன்-பார்வதி குமரவேள்-முதலான கடவுளருடைய கிருபையையும் பெற்றிருக்கின்றனை. மேலும், நீ கிடைத்தற்கரிய பாசுபத முதலிய திவ்வியாஸ்திரங்களைப் பெற்ற மகானுபாவன். உன்னுடன் நான் சிங்காதனத்திலிருப்பதும் ஒருகலத்திற் புசிப்பதும் அருமையோ? என்று சொல்லிப் புத்திரனை மகிழச்செய்தனன். அர்ச்சுனன் மனமகிழ்ந்து, இந்திரனோடு புசித்துத் தாம்பூலந் தரித்துக் கொலுமண்டபத்திலிருக்குஞ் சிங்காதனத்தில் இனிது வீற்றிருந்தான்.

### இந்திரன் அருச்சுனனுக்கு நிவாதகவசர் கொடுமை யுரைத்தல்

கேளும் மஹாராஜனே! இவ்வாறு சில நாள் கழிந்தபின் இந்திரன் தனக்கு ஜன்மப் பகையாகிய நிவாதகவசரை அர்ச்சுனனால் அதமாக்க கருதி, அவனைப் பார்த்துச் சொல்லுகிறான்: அப்பா என் புத்திரசிகாமணி! நான்குவேதம் - ஆறுசாஸ்திரம் - அறுபத்து நான்கு கலைக்கியான முதலியவற்றைக் கற்றுணர்ந்து யாவர்க்குங் கற்பிக்கவல்ல பெரியோர்களாயினோர், தங்களுரியோர்களுக்கு உன்னைப்போல் பராக்கிரமசாலிகளாற் பெருஞ் செல்வமடைய வேண்டுமென்று கூறுவார்கள். நான் உனக்குப் பிதாவாகவும் குருவாகவும் இருந்தாலும், உன்னால் நான் இன்னும் பெருஞ்செல்வமடைய வேண்டுமென்று கருதி இருக்கின்றேன். ஆதலால், என்மீது நீ மனமகிழ்ந்து எனக்கொரு வரங்கொடுக்க வேண்டுமென்று கூற, பிதா வழங்கிய சொல்லைக்கேட்ட அர்ச்சுனன் வணங்கிச் சொல்லுகிறான்: ஓ ஐயா! தாங்களோ சொர்க்க மத்திய பாதாள லோகமென்னும் முப்புவனங்களுக்கும் அரசுரிமை பூண்டவர். நானோ நரன். என்னால் செல்வம் வருகிறதாக இருந்தால் திருவுளங் கனிந்துரைக்க வேண்டுமென்று கூற, இந்திரன் சொல்லுகிறான்: அப்பா அர்ச்சுனா! இதற்கு மேற்றிசையில் நிவாத கவசரென்று சொல்லப்பட்ட பொல்லாத பாவிகளாகிய மூன்று கோடி அசுரர்களுண்டு. அவர்கள் திருப்பாற் கடலில் அஷ்ட லட்சுமி சமேதனாகப் பன்னக சயனத்தின்மேல் அறிதுயிலில் இருப்பவனாகிய திருமாலும், பிரமனும், உருத்திரனும் ஒன்று கூடிவந்து எதிர்த்தாலும் அழியாத நெறியையுடைய மேலானவர்கள். இம்மூவரும் அழிந்தாலும் தாங்களழியாதவராகி, மூன்று லோகத்திலுள்ள யாவரையும் போர்முகத்தில் வீறிட்டோட அமர் செய்யுந் திறத்தில் உயர்ந்தவர்கள். கோழிக் கொடியோனாகிய சுப்பிரமணியர்க்கும் பின்னிடையாத பராக்கிரமசாலிகள். கெடாத கவசத்தையுடையவர்கள். அதிக் தவப்பலத்தை உற்றவர்கள். வில்லில் வல்லவர்கள். தங்களுடைய ஆச்சினால் திரிலோகத்தையும் தத்தளிக்கச் செய்ப

வர்கள். எக்காலமும் விகண்டவாதம் புரிபவர்கள். எந்நேரமும் கடுஞ்சினமடைந் திருக்கிறவர்கள். கிருபையை அறியாதவர்கள். எப்போதும் நீங்காமல் கவசத்தை அணிந்திருக்கிற காரணத்தினால் நிவாத கவசரென்று நாமம் படைத்தவர்கள். பொல்லாத பாவிகள். அவர்களுக்கும் எனக்கும் ஜன்மப்பகை. அவர்கள் என்னை ஒரு துரும்பாகப் பார்த்திருக்கிறவர்கள். எவ்வகைப்பட்டவர்க்கும் வெற்றி பெருதற்கு அசாத்தியமானவர்கள். மாயையில் வல்லவர்கள். அவர்கள் உன் பாணத்தினாலன்றி மற்றவர் பாணத்தினால் மடியார்கள். ஆதலால், என்னிடத்தில் அன்புவைத்து, நான் பெருஞ் செல்வமடைய அம்மூன்றுகோடி அசுரரைக் கொல்லுகிறேனென்று வாக்குக் கொடென்று வினவ, போரென்றாற் பூரிக்கும் புயாசலங்களையுடைய அர்ச்சுனன் உடனே அக்கமலமும் முககமலமும் மலர்ந்து, உடல்புளகம்போர்ப்ப இந்திரனை வணங்கிச் சொல்லுகிறான்:

ஓ ஐயா! தங்கள் கிருபாகடாட்சம் பெற்ற என்னை அந்நிவாதகவசர்மேல் மாத்திரமல்ல இன்னும் யார்பேரிற் போருக்கு அனுப்பினாலும் அவர்களை ஒரு மாத்திரையில் வெற்றி பெறுவேனாதலால், தங்கள் கருத்துக் கிசைந்தேன். இனி தாமசஞ் செய்யாமல் தங்களுக்கு ஜன்மப் பகைவர்களாகிய நிவாதகவசர்மேற் போருக்கு அனுப்பிவையுமென்று கூற, இந்திரன் மகிழ்ந்து, தக்ஷணந் தன்னருகி லிருக்கிற மாதலியை நோக்கிச் சொல்லுகிறான்: ஓ சாரதி! நமக்கு ஜன்மப் பகைவராகிய முக்கோடி யவுனரையும் வெற்றிபெறும் இந்த விஜயப்பிரதாபனுக்கு நீரதசாரத்தியம் செய்ய வேண்டி யிருப்பதால், இதுவரையில் இரதத்துக்குப் பூட்டி வந்த குதிரைகளைப் பூட்டவேண்டாம். வாயுவேகமாகச் செல்லும் வேகத்தை யுடைத்தாகி, கோபத்தீ ஜொலிக்கும் நயனத்தைப் பெற்று விளங்கி நல்ல ஜாதியாக இருக்கிற குதிரைகளைப் பூட்டு. அவை மேற்றிசை யெவ்வளவோ அவ்வளவுஞ் சென்று வருவதோடு, மேகமும் யமனும் நடுங்குறச் சஞ்சரிக்குமென்று கூற, இந்திரன் சொற்படி மாதலி அர்ச்சுனனுக்கு ரதசாரத்தியஞ் செய்ய ஒத்துக்கொண்டு, இந்திரன் கூறிய குறிக்கொத்திருக்கிற குதிரைகளிற் பதினாயிரங் குதிரைகளை இந்திரனேறுந் தேரிற் பூட்டி, அத்தேரை முருக்கம்பூ நிறம்போல் அலங்கிருதஞ் செய்துகொண்டு வந்தான். உடனே அர்ச்சுனன் போர்க்கோலங் கொண்டு, தந்தையாகிய இந்திரனை வணங்கி விடை கேட்டனன். இந்திரன் மகிழ்ந்து, அழியாத கவசமளித்து வாழ்த்தி விடை கொடுத்தான். அர்ச்சுனன் இரதத்தினருகிற் சென்று தேரை வலம்வந்து ஏறி, ஆயிரந் தட்டுக்கு மேலிருக்குங் கோடிசூரியப் பிரகாசமாகிய நவரத்தின சிங்காதனத்தி லிருந்து, மாதலியை நோக்கி, ஓ மாதலி! எனது பிதாவாகிய தேவராஜனுக்கு நாடோறு மிடையூறு செய்துவருகிற பாவிகளாகிய நிவாதகவசர்களிருக்கிற அந்தத் திசைக்காக இரதத்தை நடத்தென்று கூற, மாதலி சொல்லுகிறான்:

### அருச்சுனன் தோயமாபுரஞ் சென்று தாதனுப்புதல்

ஓ ஐயா! நிவாதகவசர்களுடைய பராக்கிரமத்தை என்னொரு நாவாற் சொல்லத்தக்கதல்ல. மகா பராக்கிரமசாலிகள். அவர்களிருக்கிறது மேற்றிசை. அம்மேற்றிசைக் கடலருகில் தோயமாபுர மென்றொரு நகரமிருக்கின்றது. அந்நகரத்தி லவர்கள் தங்கள் பராக்கிரமத்தைச் செலுத்திக்கொண் டிருக்கிறார்கள். நாம் தன்னந்தனியே செல்லுகிறோம். நாம் போர்க்கு வந்தசேதி அவர்க்குத் தெரிகிற தெப்படி? சித்திரசேனனையாவது கூட அழைத்துச் சென்றோமாகில் நாம் வந்த சேதியைத் தெரிவிப்பானென்று கூற, அர்ச்சுனன் அக்கருத்துக் கிசைந்து, சித்திரசேனனை அழைத்துத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டு இரதத்தை நடத்த மாதலியை எச்சரிக்க, அவன் தேரை நடத்தி வருகிறான். தேவமாதர்களிற் சிலர் மாதலியையும், மாதலி விடும் இரதத்திலிருக்கும் அர்ச்சுனனையும் பார்த்து, ஓ!ஓ! முப்பத்து முக்கோடி தேவர்கள்-அஷ்டவசுக்கள்-திக்குப் பாலகர்-உருத்திரகணங்கள் முதலான தேவ வீரர்களாலே வெற்றிபெறக் கூடாத நிவாத கவசத்தாரை இந்த மானிடனோ வெல்பவனென்று நகைத்தார்கள். சிலர் ஜெயாபஜெயம் ஒருவர் பங்கல்ல. இந்த நரனை நோக்கும்போது நமது நாட்டுக்கு அரசனாகிய இந்திரனைப்போல் இருக்கின்றது. இந்த மகானுபாவன் முகமலர்ச்சியோடு செல்கிறதினால் வெற்றி பெறுவானென்று நினைக்கவேண்டியதாக இருக்கின்றதென்றனர். அங்கங்கிருக்குந் தேவர்கள் இரதத்தைக் கண்டு இந்திரன் வருகிறானென்று கருதி அரசனைக் காண வந்தார்கள். அருகில் வந்த மாத்திரத்தில் இந்

திரனல்லாமையா யிருக்கிறதைக் கண்டு மாதலியை நோக்கி, ஓ தேவசாரதீ! நமது அரசனுக்குரிய இந்த இரதத்தின்மேலொருவரு மேறக்கூடாதே அந்த ரதத்தின்மேல் யாரோ ஒரு மகானுபாவ ரிருக்கின்றார். அவர் யாவரென்று வினவ, மாதலி சொல்லுகிறான்:

ஓ தேவர்களே! இந்த மகானுபாவர் பூலோகாதிபதி. மகா பராக்கிரமசாலி. சாம்பவமூர்த்தியோடு விற்போர் மற்போர் புரிந்தவர். தவசிலாக்கிய சிகாமணி. பரமசிவனிடத்து யாவராலும் பெறுதற்கரிய பாசுபதாஸ்திரத்தைப் பெற்றிருக்கிறவர். நமது அரசனுக்குப் புத்திரன் நம்மையாளும் அவ்வரசனுக்குப் பிரமன் கொடுத்த மணிமகுடத்தைத் தாங்கி இருக்கிறவர். இவரை நமது அரசன் நிவாதகவசர்மேல் போருக்கு அனுப்புவித்தார். அப்பால் நாங்கள் போருக்குச் செல்கிறோமென்று கூறினான். இந்த வாக்கியத்தைக் கேட்ட தேவர்கள் அனைவரும் மகிழ்வுற்றுப் பல ஆசிகள் கூறி, வெற்றிபெற்று வரக்கடவதென்று வாழ்த்தி, அர்ச்சுனனை பார்த்துச் சொல்லுகிறார்கள்: ஓ மகானுபாவா! முற்காலத்தில் இராவண கும்பகர்னனென்று இரண்டு இராக்கதர் உண்டாகி உலகங்களை நாசப்படுத்தினதுமன்றி, சொர்க்கலோகத்திலும் வந்து உமது பிதாவாகிய இந்திரனைப் புறங்கண்டார்கள். இப்படி யாவராலும் அபஜயப்படாதிருந்த அவ்விராவண கும்ப கர்னாதிகள், தசரதராஜ புத்திரனாகிய ஸ்ரீ ராமமூர்த்தியால் நாசமடைந்தார்கள். அதுபோல், உம்மால் நிவாதகவசர் நாசமடைவார்கள். இதற்குச் சந்தேகமில்லை என்று கூறித் தாங்கள் பெற்றிருக்கிற வேதத்தை யளித்துப் போயினர். பராக்கிரமசாலியாகிய அர்ச்சுனர் மனமகிழ்ந்து வந்த தேவர்களுக்கெல்லாம் வந்தனை செய்து மாதலியைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ தேவசாரதி! என் பிதாவாகிய இந்திரனுக்குத் தேரை எவ்வாறு நடத்துவையோ அவ்வாறு நடத்தென்று கூற, மாதலி மகாப்பிரசாதமென்று புரவிகளை எச்சரித்து, அந்தரத்தில் தேரை நடத்துவதிற் சிலநேரங் குலாலன் சக்கரம் போல்வும், சிலநேரஞ் சலவேகம் போலவும், சிலநேரம் பாம்பூர்வது போலவும் நடத்தினான். அர்ச்சுனன் அதைக் கண்டு, வெகு சந்தோஷத்துடன் மாதலியை மெச்சிக்கொண்டவனானான். மாதலியானவன் தேரை நடத்தி அந்தர லோகத்தைக் கடந்து, மேற்றிசைக் கடலருகில் கொண்டுவந்தான். அப்போது அர்ச்சுனன் மாதலியைப் பார்த்துச் சொல்லுகிறான்:

ஓ மாதலீ! கடல் மத்தியில் கோடி சூரியப் பிரகாசமாக மாடமாளிகை கூடகோபுரங்களோடு ஒரு நகரம் இருக்கின்றதாகக் காண்கிறதே அதில் இருப்பவர்களுடைய இயல்பை எடுத்துச் சொல்லென்று கூற, மாதலி சொல்லுகிறான்: ஓ மண்டலாதிபதீ! இந்த நகரந்தான் தோயமாபுர மென்பது. இதில்தான் அந்த நிவாதகவசர்க ளிருக்கிறார்கள். இந்த நிவாதகவசத்தாருடைய பெருமையையும், பராக்கிரமத்தையும் மும்மூர்த்திகளாலேயுஞ் சொல்லுதற்கு அருமையென்றால், என்னால் அவர்களுடைய பெருமையைச் சொல்லத்தக்கதோ? மண்டலாதிபதியாக இருந்து தேவராஜனுக்குப் புத்திரனாகிய தாங்கள் வினவிய படியால், என்னால் கூடியமட்டும் இந்த அசுரர்களுடைய பெருமையைச் சொல்லுகிறேன்: கேளும் மகாராஜனே! இந்நகரத்தில் மூன்று கோடி அசுரர்களுண்டு. இவர்கள் இயமனை நினைத்து அநேக கற்பகாலம் அருமையான தவஞ் செய்து, யாவராலும் பெறக்கூடாத அருமையான வரத்தைப் பெற்றுக்கொண்டு, தங்களுக்குப் பகைவராகிய தேவர்கள்பேரிலெதிர்த்து, அவர்களைத் தங்கள் பாணாக்கினியால் தகிக்கிறது இவர்கள் தொழில். இதுகண்டு தேவராஜன் வந்தெதிர்த்தால் அந்தத் தேவராஜனை முதுகிட்டோடும்படி அடிக்கிறது. அப்படியே தேவராஜன் அநேகந்தரம் முதுகு காட்டினான். ஆதலால் இந்த மூன்று கோடி அசுரரும் இறுமாப்படைந்து தங்களுக்கு எதிரில்லையென்றும், எதிரியாக யாராவது வந்தெதிர்த்துப் பாணங்களைப் பிரயோகித்தாலும், அந்தப் பாணந் தாங்கள் அணிந்திருக்கிற கவசத்தைப் பேதிக்காதென்றுங் கருதி எவ்வளவேனு மதிப்பில்லாமல் தன்னரசாக இருக்கிறார்கள். இனிய சொல்லைக் கனவிலும் வசனியாமல் எப்போதுங் கடுஞ் சொல்லையே கலனாக்கொண்டு வசனிக்கின்றவர்கள். அன்றியும், வடவாக்கினியும் நடுங்கிப் பதுங்கிப் போகத்தக்கதாகத் தங்கள் கண்களிற் கோபாக்கினியை யுகுக்கிறவர்கள். உகாந்த மேகங்களைவிட அதிகமாகக் கறுத்த தேகத்தை யுடையவர்கள். பர்வதங்கள் கால்கொண்டு நடந்தாற்போல் நடக்கு மாட்சியை யுடையவர்கள். பிலத்துவாரங்களைப் பழிக்கும் வாயை யுடையவர்கள்.

இதன்றியும், பிரிதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களையும் ஒரு நொடியில் வெற்றி பெறுபவர்கள். இருளையும் எண்ணெயையுங் கலந்து உருட்டி ஒரு உருவு செய்ததுபோன்ற வடிவத்தையுடையவர்கள். உயர்ந்த பர்வதங்களுக்கு ஒப்பாக இருக்கின்ற புஜங்களினாலும், பூமியைவிட அகன்ற மார்பினாலும், ஆதிசேஷன் முடியால் வருந்திச் சுமக்கப்பட்ட பூலோகத்தை இவர்கள் வருத்தமில்லாமற் சுமக்கத்தக்கவர்கள். கமலாசனத்தில் வீற்றிருக்கும் பிரமனையும் திருப்பாற்கடலிற் கண்வளருந் திருமாலையும் வெள்ளியங்கிரியில் வீற்றிருக்குஞ் சிவனையும் பார்த்து அற்பவாழ்வை யுடையவரென்று ஏளனஞ் செய்பவர்கள். சுவாசத்தினால் ஊழிக் காற்றின் வல்லமையை யடக்குபவர்கள். வாயு பந்தனஞ் செய்து அநேக ஊழிக்காலம் அருமையான தவத்தைச் செய்யுங் கலங்கா சிந்தையை யுடையவர்கள். இந்தக் கடலைக் காலாலாழம் பார்ப்பவர்கள் வில்-வாள்-கதை-சக்கரம்-தோமரம்-பிண்டிபாலம்-ஈட்டி முதலிய ஆயுதங்களை எப்போதுங் கைவிடாதவர்கள். இந்த ஏழு சமுத்திரந் திரண்டு வருவதுபோற் சேனாசமுத்திரத்தோடு வருபவரையெல்லாங் கடலைக்குடித்த அகத்தியர்போல் அரைநொடியில் நாசப்படுத்திச் சத்துருக்களையும் புறங்காண்பவர்கள். அவர்கள் ஒரு சொற் சொல்லுவாராகில், அந்த ஓசை உயிரைக் கொள்ளை கொள்ளும். இயமனும் ஆரபாரமென்றுங் கோடைகாலத் திடியென்றும் நினைப்பன். எப்போதுந் தேவர்களை பகைத்து அதிகமாக வருத்தப்படுத்துகிறவர்கள். எந்தக் காலத்திலும் போர்முகத்திற் பின்னிடாமல் இந்திரனைப் புறங்கண்டு வருகிறவர். சப்த மேகங்களி லொன்றுசீறி வெளிப்பட்டாலே அதற்கஞ்சி உலகம் நடுங்கும். ஊழிமேகங்கள் வெளிப்பட்டால் யார்தான் அஞ்சார்கள். அதுபோல, இவர்கள் வெளிப்பட்டால் மூன்று கோடி ஊழிமேகங்கள் வெளிப்பட்டனபோலிருக்கும் என்றால் சொற்கமத்திய பாதாளமென்னு முப்புவனங்கள் என்ன பாடு படும் அதனை நீரே யோசித்துக்கொள்ளும். அவ்வளவு பராக்கிரமத்தையுடைய இவர்களை வெற்றி பெறுவது அசாத்தியமென்று கூற, அர்ச்சுனன் கேட்டுக் குறுநகை கொண்டு சித்திரசேனனைப் பார்த்துச் சொல்லுகிறான்:

ஓ சித்திரசேனா! நாம் நிவாதகவசத்தர் பேரிற் போருக்கு வந்தோம். நாம் வந்தசேதி அவர்களுக்குத் தெரியாது. நீ போய் நான் வந்திருக்கிறதைத் தெரிவித்துப் போருக்கு வரும்படி செய். உன்னை யவர்கள் வளைத்துக் கொண்டு கொல்லாதிருக்க நீ போகும்போதே தூதன் தூதனென்று சொல்லிக்கொண்டு செல்லென்றுகூறி, அச்சித்திர சேனனை அனுப்பிவித்தான். சித்திரசேனன் மாடமாளிகை கூடகோபுரங்களோடு கூடிக் கோடிசூரியப் பிரகாசம்போற் பிரகாசியாநின்ற தோயமாபுரத்தை நோக்கி வருகின்றனன். அர்ச்சுனன் அந்தரத்தில் வருகின்ற ரதத்தைப் பூமியில் தாழ்த்தி, தோயமாபுரத் தருகுவந்து, தான் வந்தசேதி நிவாதகவசருக்குத் தெரியத் தன் கையிலிருக்கும் ஆயிரங்கலப் பாரமுள்ள காண்டீபமாகிய வில்லை எடுத்து நிறுத்தி வளைத்து நாணேற்றி, அஷ்டதிக்குஞ் செவிடுபடும்படியாக டங்காரவோசை செய்தான். இந்த ஓசை தோயமா புரத்திலிருக்கும் அவுணர்களின் செவியிற் பட்டுச் சிலர் திடுக்கிட்டனர். சிலர் தாமரையிலைச் சலம்போல் தத்தளித்தனர். சிலர் உள்ளந்தடுமாறி ஒருநாளுங் கேட்டறியாத குணத்தொனி இன்று கேட்கவந்த காரணம் என்னவென்று மயங்கினர். சிலர் மரண மூர்ச்சை யடைந்தனர். நகரமெல்லாம் அவகோலமாயிற்று. மூன்றுகோடி அவுணரும் இந்த ஓசையைக்கேட்டு ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, இந்த வில்லினொலி ஏது? இந்திரன் பயந்தடங்கிப் போய்விட்டனன். பிரமன் முதலான மூவர்க்கும் நமக்கும் விரோதமில்லை. மற்ற யார் நமது நகரத்துக்கு வருவாரென்று ஐயமுற்று நிற்கிறதருணத்தில், தூதாகச் சென்ற சித்ரசேனன் அந்த மூன்றுகோடி அசுரர்க்குமுன்பாகச் சென்று சொல்லுகிறான்:

ஓ நிவாதகவசர்களே! நான் பூலோக மண்டலாதிபதிகளுக்கெல்லாஞ் சிறந்த குருகுலாதிபதியாகிய அர்ச்சுனமகாராஜனுடைய தூதுவன். என்பேர் சித்திரசேனன். நான் வந்தகாரண மென்னவெனில், திக்குவிஜயஞ் செய்து யாவராலும் நிறைவேற்றக்கூடாத இராஜசூய யாகத்தை நிறைவேற்றி, தேவராஜனுக் குயிர்க்குயிராகிய காண்டவவனத்தை அக்கினிபகவானுக்கு தத்தஞ் செய்து தகிக்க விடைகொடுத்து, அவ்வக்கினி பகவானுக்கு இடையூறு வராமல் தேவர்களைப் புறங்கண்டு சப்த முகிலையுந் தன் பாணக்கினியாற் கருக்கி யாவராலுங் காணக்கூடாத கயிலாசபதியோடு போரிட்டுத் தவசிரேஷ்ட சிலாக்

கியனுகிய ஒருவராலும் பெறக்கூடாத பாசுபதாஸ்திர முதலியன சகல அஸ்திரங்களையும் பெற்று, தன்னேடொப்பாரு மிக்காருமில்லாமல் ஏகச்சக்கிராதிபதியாக விளங்குவோர் அர்ச்சுனமகாராஜன். அவர் நீங்கள் தேவர்களை வருத்துகிறதைக் கேள்வியுற்று, உங்களை யமதண்டனைக் காளாக்க, தன் கணைகளாகிய காவலாளிகள் கையில் ஒப்புவித்துத் தென்றிசைக்கு அனுப்பக்கருதி, உங்களிடத்திலவர் உயுத்தப்பிட்சை கேட்க வந்திருக்கின்ருர். அந்தச் சேதியை யுங்களுக்குத் தெரிவிக்க என்னை அனுப்பிவித்தார் என்று சித்திரசேனன் கூறிய இவ்வாக்கியத்தைக் கேட்ட நிவாதகவசர்கள் காலாக்கினி உருத்திரனைப்போல்ச் சீறி, இரண்டு கண்களிலுந் தீப்பொறி பறக்க ஆர்ப்பரித்துக் கைகொட்டி அண்டம் பிளக்க நகைத்துச் சொல்லுகிருர்கள்: ஓ சித்திரசேனு! ஒரு சிறிய பூனையானது அளவிடக்கூடாத பராக்கிரமத்தையுடைய புலிக்கூட்டத்திற் பிரவேசித்து யாவையும் வெல்லுவேன் என்று சொல்லிக்கொண்டு வந்ததுபோல நரனுகிய ஒருவனே தேவர்களாலும், மற்றை யாவர்களாலும் வெல்லக்கூடாத எங்களை வெற்றிபெறுகிறேனென்று வந்தான். ஐய்யோ! இதென்ன அநியாயம்! மஹா பராக்கிரமசாலியாகிச் சாபானுக்கிரக சாமர்த்தியமுள்ள மகா முனிவர்களுக்கெல்லாந் தலைவனுக விளங்கும் இந்திரனே எங்களுடன் வந்தெதிர்த்துப் போரிட்டு அனேகந்தரம் முதுகு காட்டினன். தற்காலத்து ஓர் நரன் போருக்கு வந்தானென்ருல் இது எங்களுக்கு அதிக நகையாக இருக்கின்றதென்று கூறி, பின்னுஞ் சொல்லுகிருர்கள்:

ஓ சித்திரசேனு! கைலாசபதியாகிய சாம்பவமூர்த்தியாலும், கமலாசனக் கடவுளாகிய பிரமனுலும், திருப்பாற்கடலிற் பள்ளிகொண்ட திருமாலாலும் வெல்லக்கூடாத எங்களை உலகங்களிற் ருழ்ந்த மண்ணுலகாதிபதியான ஒரு நரன் வெல்லுவனே? தனுசரென்று நாங்கள் பெயர்கொண்டிருக்கப் போருக்கு அஞ்சுவோமோ? ஒரு மனிதன் எங்களில் ஒருவனுடைய சேனுதிபதி எதிரில் அரைமாத்திரையிருந்து போர்புரிவனே? நல்லது வந்தவன் வில்லாளியா? அப்படி வில்லாளியாக இருப்பானுகில் தன் பெரிய பிதாவின் மகனும் நாகக்கொடிக்குத் தலைவனுமாகிய துரியோதனனுக்கு நீதியின்றித் தனது நாடு நகர முதலியவற்றை விடுத்ததல்லாமல், தன் மனைவியைச் சபையிலிழுத்து பங்கப்படுத்தும்போது பார்த்திருந்த வீரனு எங்களோடு யுத்தஞ் செய்பவன்? சபாசு! சபாசு! நன்ருயிருக்கின்றது. இந்த அர்ச்சுனன் இந்திரனுல் ஏவப்பட்டவனுதலால் இவனைக் கொன்றுவிட்டு, இனி எப்போதும் இந்திரன் தலையெடுக்காதிருக்க நன்ருயடித்து, அவன் வாழ்வனைத்தும் பறித்துக்கொண்டு, அவனையுமுன்போல் விட்டுவிடாமல் அகலாச் சிறையில் அடக்கி வைக்கிறோமென்று சபதங்கூறிப் பல்லை நெறநெறவென்று கடித்து, கோபச்சிரிப்பு சிரித்து, அடா சித்திரசேனு! நீ தூதுவன் ஆதலால் உன்னை உயிரோடு விட்டோம். நீ அரைமாத்திரைப் போதாவது இவ்விடம் நிற்காமல் நரனிடத்திற் சென்று மூன்றுகோடி அவுணரும் போர்க்கோலங் கொண்டு வருகிருர்களென்று சொல் என்றுகூறிவிட்டு தங்கள் தங்கள் சேனுதிபதிகளின் முகத்தை நோக்கினர்கள். உடனே சித்திரசேனன் அர்ச்சுனனிடத்திற்கு வந்து, அவுணர் கூறியவற்றைக் கூறித் தேரில் ஒரு பக்கத்தில் இருந்தனன்.

அவ்வசுரர் சேனுதிபதிகள் தங்கள் யஜமான்களின் முகக்குறியைக் கண்டு, தட்சணம் எழுந்திருந்து தங்கள் தங்கள் கட்டளைக்குட்பட்டிருக்கிற நால்வகைச் சேனைகளையும் போர்க்கோலங்களுடன் வரும்படி கட்டளையிட்டுத் தாங்களும் போர்க்கோலங் கொண்டு வாகனருடராகி, அளவிறந்த சேனைகளோடு நகர்ப்புறத்து வந்திருந்தனர். அப்பால் இராஜாக்களாகிய முக்கோடி அவுணர்களுந் தங்கள் தங்கள் அந்தப்புரத்துக்கு சென்று ஸ்நானஞ்செய்து பூசைமுடித்துப் பலவகை மாமிசம் மது முதலானவைகளை உண்டு தாம்பூலந்தரித்து, பரிமள கதம்பங்கள்பூசி உடலில் இருக்கும் கவசத்தோடு வச்சிர கவசத்தையுந் தரித்து, மகரகுண்டல ஆரகேயூர கடக கங்கண மகுட முதலியவைகளை யணிந்து, மலர் மாலை புனைந்து, அம்பு புட்டிலை முதுகிற்ருங்கி, பதினுயிரங்கல பாரமுள்ள வில்லைக் கரத்தில் ஏந்தி, உடைவாள் - கதை - சூலம் - சக்கரம் - மழு - தோமரம் முதலிய ஆயுதங்களைத் தாங்கி, வீரலட்சுமி சமேதராகி போருக்கழைத்த நரன் எங்கிருக்கிருனென்று ஆர்ப்பரித்து ஆயிரந் தட்டுகளோடு அண்ட முகட்டை பரிசிக்குங் குடைகள் கூடிய சிகரத்தையுடைய உன்னத ரதாருடருகி, நகர்ப்புறத்தில் இருக்கும் நால்

வகைச் சேனையோடு வந்து கலந்து சேனாதிபதிகளை எச்சரித்தனர். சேனாதிபதிகள் பிரயாணமாகும்படி கட்டளையிட்டனர். இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளும் அண்டம் பிளக்க, கைகொட்டி ஆரவாரித்து மகா உக்கிரத்தோடு பிரயாணமாயினர். பேரிகை-டங்கா-டமரம்-தம்பட்டம்-துடி-உடுக்கை-தாளம்-எக்காளம்-பேய்க்காளம்-சின்னம்-துத்தாரி முதலிய வாத்திய வொலி முழங்க, யானைவீரர் யானைகளை எச்சரித்து, குதிரைவீரர் குதிரைகளை எச்சரித்து, காலாள்கள் கடுகிவர நடத்திக்கொண்டு பிரயாணமானார்கள்.

## அருச்சுனனுக்கும் நிவாதகவசர்களுக்கும் உயுத்தம்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! நால்வகைச் சேனைகளின் அளவையும் பிரமனாலும் ஆதிசேடனாலுஞ் சொல்வதற் கருமையென்றால், நான் எப்படி சொல்லுவேன். காலாள்கள் பூமியில் நடப்பவராய் இருந்தாலும் அவர்கள் சிரமுங் கரமும் அண்ட முகட்டைத் தடவிவரும். அவர்கள் இரண்டு கரத்தையும் விரிப்பார்களாகில் நாற்றிசையளவுஞ் சரியாக விருக்கும். அவர்கள் தேகம் பர்வதத்துக் கொப்பாக இருக்குமென்று உவமைசொல்லுவ தல்லாமற், பர்வதங்களும் அவர்கள் தேக காத்திரத்திற் கொப்பாகாது. அவர்கள் பாதம் எடுத்து வைக்கும்போதெல்லாம் ஆதிசேடன் கனவருத்த மடைவான். அவர்கள் குதிரைகளோ இமை தட்டுமுன் அஷ்ட திக்குப் பதினாறு கோணமாகிய புவனத்தை வலம் வரும். அந்தரத்திற்றாவும். மலையிற்றாவும். மறுபடியும் முன்னிருந்த விடத்தில் வந்து நிற்கிறதுபோ லிருக்கும். பின்னும் அந்தரலோகத்தை யெல்லாஞ் சுற்றிவரும். அவர்கள் யானைகளோ நீர் கொண்ட மேகங்கள் கர்ச்சனையிட்டு மழையைச் சொரிந்துகொண்டு பூமியிற் செல்வதுபோற் செல்லும். கால்களை யெடுத்துவைக்கும் இடமெல்லாம் பிலத்துவாரம்போல் இடி விழுந்து போம். அவர்கள் ஏறி நடத்துந் தேர்களோ அண்டமுகடுபட வளர்ந்து அஷ்டதிசைகளி னிடத்தையு மடைக்குங் காத்திரமாக இருக்கும். தேருருளையினால் உண்டாகும் பள்ளம் பெரிய மடுப்போலாகும் என்றால், அந்த அவுணர் சேனைகளி னளவை யாவரா லுரைக்கக் கூடும். ஆதலால், அவர்களின் திறத்தை நீரே மதித்துக்கொள்ளும். இப்படியாக நால்வகைச் சேனைகளோடு மூன்றுகோடி அசுரருங் குன்றுபோல் ஒற்றைத் தேருடன் இருக்கிற அர்ச்சுன னிடத்துக்கு வந்து, அவ்வர்ச்சுனனைப் பார்த்து அண்டம் பிளக்கச் சிரித்து, மீசை முறுக்கி, புஜந் தட்டி, அடடா! இந்த நரன் நம்மைப் போருக்கழைக்கிற தென்று கடுஞ்சின மடைந்து, முக்கோடி அசுரருந் தங்கள் தங்கள் சேனாதிபதிகளையுஞ் சேனைகளையும் பார்த்துச் சொல்லுகிறார்கள்:

ஓ சேனாதிபதிகளே! ஓ நால்வகைச் சேனைகளே! நம்முடன் போர்புரிய வந்தவன் பூலோகாதிபதி. ஏதோ கிஞ்சித்துத் தவப்பலத்தால் இந்திரலோகம் வந்தான். வந்தவிடத்தில், (ஊமைக்குளர்வாயன் உற்பாதபிண்டம்) என்கிற பழமொழிபோல் நமக்கு முதுகு காட்டி ஓடிப்போன இந்திரன் இவனைப் பலசாலி என்று கருதி, இவனுக்கும் பூஜிதை செய்து பெருமைப் படுத்தினதலால் இவன் மகிழ்ந்துவிட்டான். அந்த மகிழ்ச்சியில் நம்மை அலட்சியமாக யெண்ணி, (பொரிமாவை மெச்சினான் பொக்கைவாயன்) என்பதுபோல் தன்னை மெச்ச இந்திரன் கூறியபடி நம்மேற் போருக்கு வந்தான். இவன் அனுப்பிய அத்தூதுவனுடைய சொல்லாற் பிரமித்து நல்ல யுத்தம் நேரிட்டதென்று ஆசை கொண்டு இரண்டொருத்தராய் வராமல், நாமெல்லாம் ஏககாலத்திற் கூடிப் போருக்கு வந்துவிட்டோம். இவன் நானுதலாற் பயந்தோடிப் போவான். அவனோடிப் போகாதிருக்க அவனைச் சுற்றிலும் வளைத்துச் சக்கிரவியூகம் வகுத்துக் கொண்டு, உங்கள் கருத்தின்படி யுத்தஞ் செய்யுங்கள். நாங்கள் நாற்றிசையிலும் வளைந்து போர் புரிகிறோம் என்று கூறி, முன்னதாய் முக்கோடி அசுரரும் நாற்றிசையிலுஞ் சுற்றிக்கொண்டு நின்றனர். சேனாதிபதிகள் நால்வகைச் சேனைகளை எச்சரித்து, ஒரு சண்பகப் பூங்கொத்தை அநேகம் வண்டுகள் சூழ்ந்து வளைந்து கொண்டால் எப்படியோ அது போலும், முன்னொருபோது பெரும் போர் செய்த பிரமனையும் மாலையும் பின்னிடச்செய்ய மத்தியில் தோன்றிய அக்கினி மலையைத் தணிக்க மேகங்கள் தோன்றினால் எப்படியோ அதுபோலும், ஒரு சொர்ணரதத்தி லிருக்கிற அர்ச்சுனனைச் சூழ்ந்து வளைத்துச் சக்கிரவியூகங் கட்டி, அவ்வரவர்கள் தங்கள் தங்கள் கையிலிருக்கும் ஆயுதங்களை யெடுத்து அதிர்த்து, அஷ்ட திக்குந் தத்தளிக்க அட்டகாசஞ்

செய்து, சூலம்-சக்கரம்-வேல் - வாள்-ஈட்டி-கட்டாரிகுடோரி இவைகளை எடுத்தெரிந்தனர். வில்லாளிகளானவர் தங்கள் தங்கள் கையில் இருக்கும் வில்லை வளைத்து நாணேறிட்டுக் கூரம்பு - முள்ளம்பு முதலியவைகளை யெடுத்து மழைபோற் சொரிந்தனர். குதிரைவீரர் குதிரைகளை எச்சரித்து நீண்ட ஈட்டிகளை கரத்தில் ஏந்தி கடலிற் றிரைதாவி வருதல்போல் வந்தனர். யானைவீரர் யானைகளை எச்சரித்துச் சூலமுதலிய ஆயுதங்களை யெறிந்து ஆர்ப்பரித்தனர். முக்கோடி யவுணரும் நாற்றிசையிலும் பரவிநின்று மணலை வாரி யிறைத்தார்போல் சரமாரி பொழிந்தனர்.

அக்காலையில் தேவசாரதியாகிய மாதலி விடும் ரதத்திலிருக்கின்ற அர்ச்சுனனானவன் தன்னை எதிர்க்கவந்த அவுணர் சேனைகளைத் துந்திடுக்கிட்டுப் புத்தி மயங்கும்படியாக வில்லை வளைத்து நாணேறிட்டு குணத்தொனி செய்து, முக்கோடி அவுணர்களும் சேனைகளும் விட்ட பாணங்களும் பலவித ஆயுதங்களும் பொடிப்பொடியாகி யுதிரச் சில கணைகளைத் தொடுத்து, அம்முக்கோடி யவுணர்களையும் பார்த்து, ஓ அவுணர்களே! நானொருவன். அதிலும் நரன். என்னொருவன்மேல் அளவற்ற சேனையோடு கவிந்து போர்செய்ய வந்தீர்கள். ஆகிலும் நீங்களல்ல. இன்னும் இந்த உலகத்திலும் அந்தப்புறத்திலும் இருக்கிற அசுரர்கள் அல்ல. இப்படி எத்தனை பேர் வந்து எதிர்த்தபோதிலும் அவர்களை யெல்லாம் அரைமாத்திரையில் வெற்றி பெறுவேன். நீங்கள் மாத்திரம் ஓடிப்போகாமல் வந்து சற்று நின்று போர் செய்யுங்களென்று கூறி, தன் அம்புப்புட்டிலிற் கரத்தை வைத்துச் சில பாணங்களை எடுத்து மந்திரோபதேசஞ் செய்துவிட்டான். அக்கணைகள் வில்லில் தொடுக்கும்போது சொற்ப தொகையா யிருந்தாலும், நல்லோர்க்குச் செய்த சொற்ப உதவி உலகமெல்லாம் பரவுகிறதுபோல் ஒன்று பல கோடிகளாக வளர்ந்து, அளவிறந்து ஆகாய முழுவதும் பார்த்து, அவுணர் சேனையிற் புகுந்து ஒரு கணப்போதில் அளவற்ற பேர்களைச் சின்னபின்னங்களாகத் துளைத்து நாசப்படுத்தினமையால், வந்த சேனைகளில் பதினாறில் ஒருபங்கு நாசமடைந்தன. அதை யவ்வவுண் சேனாதிபதிகளுஞ் சேனைகளுங் கண்டு மனம் பொங்கி, ஏழுகடலும் மார்ப்பரித் தெழுந்தனபோற் சீறி யெதிர்த்து, இடியைப்போல் ஆர்த்து, சேனாதிபதிகளுஞ் சேனைகளும் அளவிறந்த கணைகளை யேவினார்கள். அவுணராஜர்கள் அர்ச்சுனன் கூறிய வாக்கியத்தை கேட்ட மாத்திரத்தில் நெருப்பில் நெய்யை விட்டாற்போல கோபத்தீ ஜொலிக்க ஆரவாரித்து தங்கள் தங்கள் கைவில்லில் அனேகங் கணைகளைத் தொடுத்துக், கோவர்த்தனகிரிமேற் சொரிந்த சோனை மாரியைப்போற் சொரிந்தார்கள்.

அர்ச்சுனன் தன் வில்லிற் சில திவ்யக்கணைகளைத் தொடுத்து மந்திரோபதேசஞ் செய்து விடுத்தான். அக்கணைகள் ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடி கோடாகோடிகளாகி, அவுணர்கள்விட்ட பாணங்களையுஞ் சேனாதிபதிகள் விட்ட பாணங்களையுங் கண்டதுண்டங்களாக நடுவது பாதியிற் கண்டித்து, அவ்வவ்வவுணர்களையுங் கால்வேறு தலைவேறு குடல்வேறு நிணம்வேறு என்று சொல்லும்படிக் காக்கின. ஒரு தேர்வீரனாகிய அர்ச்சுனன் விட்ட கணைகளால் ரதகஜதுரகபதாதிகள் கால்வேறு தலைவேறாக அற்று விழுகின்றவையைக்கண்ட சேனாதிபதிகள், ஆ! ஆ! நாம் இப்பாரிலேற்பட்டு இன்னாள்வரையும் விண்ணுலகத்திலுள்ளவரை யெல்லாம் ஒவ்வொரு கணத்தில் முதுகு காட்டி யோடும்படி செய்தோம் இதுவரைக்கும் நமது சேனைகள் கணைகள் பட்டறியாது. அப்படியாகப் பாதுகாத்துவந்த நமது சேனை ஒரு நரனாற் கலங்கித் தாமரையிலைச் சலம்போலத் தத்தளிக்கின்றது. இனி நாம் சும்மாயிருப்பதிற் பயனில்லை யென்று சேனாபதிகளனைவருந் தங்கள் தங்கள் இரதங்களை முடுக்கி நாற்றிசையிலும் வந்து வளைத்துக் கொண்டு, தங்கள் தங்கள் கார்முகத்தைக் குனித்து ஒவ்வொருவனும் மணலைவாரி இறைத்ததுபோற் சரமாரிகளை அபரிமிதமாகப் பெய்தார்கள். சேனாதிபதிகள் முனைந்து போர்செய்வதைக்கண்ட சேனைகளிற் காயம்பட்டவையும் மரணமடைந்தவையும் போக மற்றச் சேனைகளெல்லாந் திரண்டு, மதுராபுரியை அழிக்கக் கடல் புரண்டு வந்ததைப் போலச் சிகரங்களோடுகூடிய தேவரதத்திலிருக்கிற அர்ச்சுனனொருவனை வளைத்துக்கொண்டு, தங்கள் தங்கள் கையிலிருக்கிற ஆயுதங்களை எறிந்தார்கள். ஏககாலத்திற் சேனைகள் திரண்டு தன்மேலெதிர்த்ததைக்கண்ட அர்ச்சுனன் குஞ்சிரிப்பு கொண்டு, தன் காண்டீபத்தில் இந்திரன்-அக்கினி-யமன்-நிருதி-வருணன்-வாயு-குபே

ரன் - ஈசானன் - அஷ்டவசுக்கள் - பதினேரு ருத்திரர் என்று சொல்லும்படியான தேவர்களாற் கொடுத்த திவ்யாஸ்திரங்களை யெடுத்து நாணியிற் பூட்டி அபிமந்திரித்து தூப தீப முதலியவைகளால் மானத பூசை செய்து அந் நாணியைக் காதளவும் வாங்கி, வீராவேசத்தோடு நாற்றிசையிலும் விட்டு மாதலியைப் பார்த்து, ஓ மாதலீ! இந்த அவுணச் சேனைகள் படும் அவஸ்தையைச் சற்றுக் கண்ணுற் காணென்று கூறினன். மாதலியும் அவ்வஸ்திரங்கள் செல்கிற விநோதங்களைப் பார்வை யிட்டுக்கொண்டு ரதசாரத்தியஞ் செய்து வந்தான்.

கேளும் மகாராஜனே! முன்னமே இவ்வவுணரோடு இந்திரன் முதலான அஷ்டதிக்குப் பாலகரும் - அஷ்டவசுக்களும் - பதினேருருத்திர கணங்களும் நேராக நின்று போரிட் டிளைத்தார்களே, அவர்கள் பெயர் கொண்ட அஸ்திரங்கள் அவுணரை யென்ன செய்யுமென்று இலேசாக நினைக்காதேயும், க்ஷேத்திர பலத்தால் முளை நன்ருயுருவிச் செழிப்பதுபோல், கிருஷ்ணமூர்த்தியின் கருணையைப்பெற்ற அர்ச்சுனனுலே வ்ரபப்பட்டதாகையால் அந்தந்த அஸ்திரங்களுக்கு அதிக வல்லமை யுண்டாகி, அந்தரத்தி லெழும்பி, வடவாக்கினிபோலத் தீயைக் கக்கி, ஒரு பக்கங் காற்று, ஒரு பக்கம் மழை, ஒரு பக்கம் மின்னல், ஒரு பக்கம் இடி, இப்படியாக வுண்டாகி, எல்லாப் பக்கமுஞ் சூரியகாந்தியைப்போ லொளி வீசி அவுணர் சேனையிற் பாய்ந்து, சேனுதிபதிகளின் வில்லை முறித்து, கவசத்தைப் பொடியாக்கி, மகுடத்தை உடைத்து, சாரதிகளை அதஞ்செய்து, தேர்களைக் குத்துக்கால்-கொடுங்கை-கொடுமரம்-குடை முதலிய சின்னங்களோடு தவிடு பொடியாக்கி, யானைகளைப் பிளந்து, குதிரைகளை வெட்டி, காலால்களைக் கால்வேறு தலை வேருக்கி, அவுணர் சேனைகளாகிய இருளை அரைநொடிப்போதில் ஓடச்செய்து, முன்போல் அவ்வஸ்திரங்களெல்லாம் அர்ச்சுனனுடைய அம்புப் புட்டிலில் வந்திருந்தன. இதனைப் பார்த்திருந்த மாதலி உள்ள மகிழ்ந்து, இவ்வளவு பராக்கிரமத்தை யுடைய மஹானுபாவனை இலேசாக நினைத்தது அறியாமையென்று மிகவும் மனவருத்தமுற்று, அதுமுதல் அர்ச்சுனனைத் தேவராஜனிலு மேலாகப் பாவித்து அடங்கி மஹா எச்சரிக்கையாக சாரத்தியஞ் செய்து வந்தான். மூன்று கோடி அவுணர்கள் தங்கள் சேனைகளுஞ் சேனுதிபதிகளும் நாசமானதைக் கண்டு காலாக்கினி உருத்திரரைப் போலச் சீறி, அண்டம் பிளக்க ஆரவாரித்து, ஓ! ஓ! நமது சேனைகளனைத்தும் நமது கண் முன்னே நாசமாயின. இவன் நரனென்று லேசாக நினைத்து முந்தி யோசனை செய்யாமற் சேனைகளை அனுப்பினேம். காயம் பட்டறியாத சேனுதிபதிகளுஞ் சேனைகளும் நாசமடைந்து விட்டனர். இனி ஏககாலத்தில் நாமெல்லாம் ஒன்ருகத் திரண்டு வளைத்து நமது பாணத்துக்கு நரனைப் பலிகொடுப்பதே காரியமென்று கருதினவராகித் தங்கள் தங்கள் சாரதிகளை எச்சரித்து, தங்கள் தங்கள் ரதத்தை அர்ச்சுனன் தேரை நெருங்கச் செலுத்தி, அடா நரனே! எங்கள் சேனைகளை யதமாக்கினேமென்று மமதை கொள்ளாதே. இதோ அரை மாத்திரையில் உன்னை வென்று உன்னைப் போருக்கு அனுப்பிவைத்த இந்திரனைப் பிடித்துச் சிறைச்சாலையில் வைக்கிறேம் பாரென்று கூறி, சக்கிரவாளகிரி வளைந்தது போல் அர்ச்சுனனை வளைந்துகொண்டு, தங்கள் தங்கள் வில்லை வளைத்து நாணியேறிட்டு டங்கார வோசை யெழுப்பி, ஒவ்வொருவரும் ஏககாலத்தில் அளவற்ற கணைகளைத் தொடுத்து விட்டார்கள்.

அப்போது அர்ச்சுனன் மாதலியை நோக்கிச் சொல்லுகிருன்: ஓ மாதலீ! ஒரு முகமாக வந்தெதிர்க்காமல் வலையிட்டதுபோல் வந்து வளைந்து போர் செய்கிற அசுரர்களை நான் இப்போது ஒரே முகமாக வந்து போர் செய்யச் செய்கிறேன். நீ இதுவரைக்குந் தேர் நடத்தினதுபோல் நடத்தாதே. குலாலன் சக்கிரம்போல் ரதத்தை நடத்து. வந்தெதிர்த்த அவுணர் திறத்தையுந் திடச் சித்தத்தையும் ஒரு மாத்திரைப்போதிற் பறக்க அடிக்கிறேன் பாரென்று கூறித், தன் காண்டீபத்தில் 1-10 - 100-1,000-10,000-100,000-லக்ஷம்-கோடி, சங்கமாகக் கணைகளைத் தொடுத்து வில் விநோத வித்தையால் அந்தப் பாணங்களே ஒவ்வொன்று கோடியாகப் பரவிச் சென்று தைக்கும்படி மந்திரோபதேசஞ் செய்து விட்டான். மாதலியுந் தேரைக் குலாலன் சக்கரம்போலச் சுழல நடத்தினுன். தேர் சுழலவே அர்ச்சுனன் விடுத்த பாணங்கள் யார் யார் எந்தெந்தப் பக்கத்தில் எந்தெந்தத் திக்கில் நின்று

பாணங்கள் தொடுத்தார்களோ அவரவர்கள் தொடுத்த பாணத்தை யெல்லாங் கண்ட துண்டங்களாகக் கண்டித்து, அவரவர்கள் தேரிற் கட்டிய சிங்கங்களையுஞ் சாரதிகளையும் நோகச் செய்து, அவுணர்களையும் பிரமிக்கச் செய்தது. அதை அவுணர்கள் கண்டு, ஓ ஓ ஏதோ மோசம் வந்திருக்கிறது. இல்லாவிட்டால் நம்மிலொருவன், அல்லது இருவர், அல்லது மூவர் மிஞ்சிப் போயெதிர்த்துப் போர் செய்தால் இந்திராதி முதலிய தேவர்களும் உருத்திர கணங்களும் மற்றுமுள்ளவர்களும் நமது கரசரவேகத்துக்குத் தத்திக்கெட்டுத் தடுமாறித் திப்பிரமைகொண்டு, சித்திரப் பிரதிமைபோலக் கைகாலசைவின்றி இறந்தவர் போலாவார். இந்த நரன் ஒருவனுகை யிருந்தாலும், அவன் தொடுக்கிற பாணம் நாம் விடும் பாணங்களை யெல்லாம் அதமாக்கின தன்றி நம்முடைய சாரதிகளையும் ரதத்திற் பூட்டிய சிங்கங்களையும் நோகச் செய்ததைப் பார்த்தால், இவன் வில்வித்தையிற் கிஞ்சித்து வல்லவனுகி யிருக்கிறான். அதனுற்றான் இந்திரன் இந்த நரனை நம்மேற் போருக்கு விடுத்தான். ஆகிலும் இவன் நரன். நாம் அவுணர். இவன் கைக் கிளைக்கிறது கனவிலும் இல்லை. ஒரு நொடியில் இவனுடைய தேரையும்,சாரதியையும், குதிரைகளையும் அதமாக்கி, இவனணிந்திருக்கிற கவசத்தைப் பிளந்து உயிரைக் கொள்ளை கொள்ளுவோ மென்று கருதி மகா உக்கிரங்கொண்டு, ஒவ்வொருவருங் கோடிகோடியாகப் பாணங்களைத் தொடுத்துச் சிங்கநாத அட்டகாசங்களைச் செய்து பின்னும் ஓரிலைவேல் முகக்கணை - ஈரிலைவேல் முகக்கணை - மூவிலைவேல் முகக்கணை - கமலமுகக்கணை - முள்ளம்பு இவை எடுத்துத் தொடுத்து கத்தி - சூலம் - கதை - முதலியவைகளையு மெடுத்தெறிந் தார்ப்பரித்தார்கள்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! இந்த அவுணராஜரில் ஒவ்வொருவரும் உகாந்தகால உருத்திரனுக்கொப்பானவரா யிருப்பதன்றி, இவர்கள் விடுக்கும் பாணங்களும் மூன்று லோகத்தையு மதமாக்குமென்றால், ஓர் சிறிய ஒற்றைத் தேரிலிருக்கிற அர்ச்சுனன் இவர்கட் கெவ்வளவு? ஆனல், அந்த அர்ச்சுனன் தேவாமிசையிற் றேன்றியவனுகியும், வில்வித்தையில் அதிக சாதுரிய முள்ளவனுகியும், அதற்குத் தகுந்த மந்திரோபதேசங்களைப் பெற்றவனுகியும், அதிக தபோபலத்தையும் பெற்றிருக்கிறவ னுகியு மிருப்பதால், அவுணர் தொடுத்த கணைகள் வருகிற நேர்ப்பைக் கண்டு கிஞ்சித்தேனு மஞ்சாமல், தன் வில்லிற் கழுகிற்கு பூண்டு மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற திவ்விய கணைகளை யெடுத்துத் தொடுத்து மந்திரோபதேசஞ் செய்துவிட்டான். அதனுல் அந்தக் கணைகள் ஒவ்வொன் றனேகமாகப் பெருகி, பர்வதத்தை மூடிய பனியைப்போல் வந்து, அவுணர் கணைகளெல்லாஞ் சூரியனை நாடிய பனியைப்போல் நீங்கக் கண்டதுண்டங்களாக நடுவது பாதியிற் கண்டித்து, சாரதிகளையுந் தேரிற் கட்டிய சிங்கங்களையும் இரத்தமயமாக்கிவிட்டதுகள். பின்னும் அவ் வசுரர் கடுஞ்சினமடைந்து சோனைமாரிபோல் ஏககாலத்தில் யாவரும் ஒரு முகூர்த்தகாலஞ் சரமாரி பெய்தனர். இந்தச் சரமாரியால் விண்ணும் மண்ணுமே மறைந்ததென்றால், ஒற்றைத் தேர் வீரன்மேல் வந்த கணைகளை நீரே அளவிட்டுக்கொள்ளும். அர்ச்சுனனும் நிவாத கவசருஞ் செய்யும் போரைக்காண விருப்பங்கொண்டு வந்து அந்தரத்தில் நின்ற தேவர்களனைவருந் தாங்கள் நிற்க விடமில்லாமல் எங்கும் பாணமாய் நிறைந்திருக்கிறதையும், அர்ச்சுனனை மூடிய கணைகளையுங் கண்டு திடுக்கிட்டவராகி மனக்கலக்கமுற்று, ஓ! ஓ! வந்தெதிர்த்திருக்கிறவர்கள் மூக்கோடி யவுணர்கள், அவர்களோ ஒவ்வொருவர் திரிலோகங்களையுந் தகிக்கத்தக்கவர்கள் அவர்களோ டெதிர்த்தவனே ஒருவன் அவனும் நரன் அவன் ஒரு கையால் தொடுஞ் சரங்கள் மூன்றுகோடி அவுணர் விடுத்த அளவற்ற கணைகளை என்ன செய்யும்? நமது தேவராஜன் இதுவரைக்கு மிருந்ததுபோலிராமல் இந்த நரனுல் வெற்றி பெறலாமென்று கருதி இவனைப் போருக்கு அனுப்பிவித்தனன். புலிக்கூட்டங்களி லகப்பட்ட மானைப்போல் நரன் மத்தியில் அகப்பட்டுக்கொண்டான். அவுண வீரர் விடுத்திருக்குஞ் சரமாரியால் நரனிருக்கிறவிடமே தெரியவில்லை. இனி என்ன செய்வோமென்று மனவருத்தமுற்று மேல் நடக்குங் காரியங்களையு மறிவோமென்று பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

அப்போது அர்ச்சுனன் கிஞ்சித்தேனும் அஞ்சாமல், தன் காண்டீபத்தில் திவ்ய கணைகளைக் கணக்கில்லாம லெடுத்துத் தொடுத்து, தன்மேலும், குதிரைமேலும், சாரதிமேலும், தேரின்மேலும் வந்தகணைகளையறுத்துவிட்டு,

பின்னுந் திவ்ய கணைகளை யெடுத்து மாரி
போல் தூவி, அவரவர்கள் இரதத்தைக் கிஞ்
சித்தேனு மசையாமலிருக்கச் சரக்கூடுகட்டி, அவர்
கள் நாட்டிய வெற்றிக்கொடியை யறுத்து,
குத்துக்காலை வெட்டி, கொடிக்கம்பத்தை
முறித்து, தேரிற்கட்டிய சிங்கங்களை கொன்று,
சாரதிகளை யதமாக்கி, மகுடங்களைப் பிளந்து,
வாகு வலயங்களைத் தள்ளி, வில்லை வெட்டி,
நாணியை யறுத்து அவரவர்களுடைய மார்
பில் தைக்க ஆயிரமாயிரம் பாணங்களை விட்
டுத் தேவதத்தமென்கிற சங்கத்தை யெடுத்து
வாயில் வைத்து, பம்-பம்-பம் என்றூதினன்.
தேவர்கள் புகழ்ந்தனர். அசுரர்கள் விடுத்த
கணைக்கஞ்சி நடுங்கியிருந்த மாதலி நடுக்கம்
நீங்கி, அர்ச்சுனனுடைய கரவேக சரவேக
பராக்கிரமத்துக்கு மகிழ்ந்து உடல் பூரித்து,
அதிக பயபக்தியோடு ரதசாரத்தியஞ் செய்து
வந்தான். சித்திரசேனன் மனச்சஞ்சலம் நீங்கி
னன். அர்ச்சுனன் பாணத்தினால் லவகோலப்
பட்ட அவுணர்கள் சங்கத்தொனியைக் கேட்ட
மாத்திரத்தில் நெருப்பில் நெய்யைவிட்டது
போல் எரிந்து, அக்கினிப்பொறி பறக்கக்
கண்ணை உருட்டி விழித்துப்பற்களைக் கடித்து,
கரங்களோடு கரங்கள்தட்டி, மகா ஆக்ரோஷத்
தோடு தங்களுக்குதவியாக வந்திருக்கிற தேர்
களிலேறி வில்லை யெடுத்து நிறுத்தி வளைத்து
டங்காரவோசை யெழுப்பி, அண்டம் பிளக்கக்
கொக்கரித்து மேலிட்டார்கள். தனிவீரனாகிய
அர்ச்சுனன் அவுணர்கள் மீண்டும் வேறு தேர்
களிலேறி மேலிட்டு வந்ததைக் கண்டு தக்ஷ
ணந் தன் அம்புப்புட்டிலிற் கரத்தை வைத்து,
கமலாசனக் கடவுளின் பெயரால் விளங்கும்
பிரம்மாஸ்திரத்தை எடுத்துக் காண்டீபத்திற்
றொடுத்து, அதற்குத் தூபதீப நைவேத்திய
முதலியவைகளை மனதாற் செய்துவிட்டான்.
அந்தப் பிரம்மாஸ்திரங் குபீலென் றந்தரத்தி
லெழும்பி, தன் மகத்துவத்தால் அஷ்டதிக்குப்
பாலகரையும், உருத்திரகணங்களையும், அவ
ரவ ராயுதங்களோடு உண்டாக்கி, வடவாக்கினி
நடுங்கிப் பதுங்கத் தீப்பொறிகளைச் சிதறி,
நான்கு முகத்தோடு பிரகாசித்து அவுணர்க
ளுள்ளந் தடுமாற வந்து, அர்ச்சுனனுக்கு
முந்திவந் தமர்செய்த ஒருகோடி அவுணர்களை
யும் வளைந்து, அழியாத கவசத்தை யழித்து,
மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலிய
ஆபரணங்களை யுதிர்த்து, வில்லை முறித்து,
நாணியைத் தறித்து, அவ் வொருகோடி
அவுணராஜர்களின் தலைகளை யறுத்துவிட்டுத்
திருப்பாற்கடலில் ஸ்நானஞ் செய்து முன்
போல் அம்புப்புட்டிலில் வந்து சேர்ந்தது.

அப் பிரமாஸ்திரத்தால் அர்ச்சுனனுக்கு
முந்தி நின்று போர்கொடுத்த ஒருகோடி யவு
ணருந் தேர்களோடு நாசமாகவே, மற்ற இர
ண்டுகோடி யவுணருங் கண்டு, ஓ! ஓ! ஒரு நர
னால் அளக்கரிய ஆற்றலைப் பெற்ற நமது
சகோதரர்களில் ஒருகோடி ஜனம் மடிந்து
விட்டார்கள். இனி நாம் சும்மாயிருப்பதிற்
பயனில்லையென்றுகருதி வீராவேசங்கொண்டு,
இறந்த சேனைகளையுஞ் சேனாதிபதிகளையும்
ஒருகோடி யவுணர்களையும் எழுப்பிக்கொண்டு,
உகாந்தகாலத்தில் ஊழிமேகங்கள் வெளிப்
பட்டு ஒரு மலையைக் கவிந்ததுபோல அர்ச்
சுனனை வளைத்துக்கொண்டு, தங்கள் தங்கள்
கையிலிருக்கும் ஆயுதங்களையும் பாணங்களை
யும் மழைபோற் சொரிந்தார்கள். தேவர்கள்
நடுக்கமுற்றனர். மாதலி அச்சமுற்றனன். மகா
பராக்கிரமசாலியாகிய அர்ச்சுனன் அதராமல்,
பதராமல், சஞ்சலப்படாமல், இவரோ நமக்
கெனச் சினந்து, காற்றுடிபோற் சுழலுங்
கணக்கற்ற கணைகளை ஒவ்வொருவர்மீதும்
இலக்கு பார்த்துத் தொடுத்து, அவுணர்கள்
விடுத்த ஆயுதங்களையும் பாணங்களையும் பொ
டிப்பொடியாக்கி, யார் யார் எந்தெந்தத் திக்கி
லிருந்தார்களோ அவரவர்களுடலை யெல்
லாஞ் சல்லடைக் கண்கள்போலத் துளைத்து,
சேனைகளையெல்லாம் வளைத்துக்கொண்டு, கால்
வேறு-கைவேறு-தலைவேறு-தொடைவேறு-
இடைவேறு-முடிவேறு இப்படி வேறுவேறா
கச் சின்னபின்னஞ் செய்து உதிரக்கட லுண்
டாக்கினன். அவ் வவுணர்களுடைய உதிரக்
கடலால் உவர்க்கடல் சிவந்த நிறமாயிற்றென்
றால், இறந்த சேனையின் தொகையை நீரே
யளவிட்டுக்கொள்ளும். இவ்வாறு அர்ச்சுனன்
தன்னோடெதிர்த்த அவுணர்களைக் காலாக்கினி
உருத்திரனைப்போல் நாசப் படுத்துவதைக்
கண்ட அவுணராஜர்கள் கடுகடுத்து, சபாசு!
சபாசு! இவன் நரனாகயிருந்தாலும் வில்வித்
தையில் அதிக திறமுள்ளவனாக யிருக்கிற
னென்று கிஞ்சித்தச்சமுற்று, மீண்டும் இறந்
தவர்களை எழுப்பிக்கொண்டு ஆர்ப்பரித்துக்
கவிந்து சரவருஷம் பொழிந்தார்கள். அர்ச்
சுனன் அதுகண்டு அதிக சினங்கொண்டு,
வறுத்த பயறு முளைக்கிறதுபோல நம்மால்
இறந்தவர்களெல்லாம் மறுபடியும் பிழைக்
கிறார்கள். இனி இவர்களை இந்த அஸ்திரங்

களினால் வதைக்கக்கூடாதென்று அவைகளை நிறுத்தி, லோக கர்த்தாவாகிய ஸ்ரீமந்நாராயணாஸ்திரத்தை எடுத்து வில்லிற் றொடுத்து மானசபூஜை செய்துவிட்டான். இந்நாராயணாஸ்திரத்தை லேசான அரசர்கள் தொடுத்தாலும், அது வீண்போகாமற் பல பல விநோதங்களோடு சென்று எதிரியை நாசப்படுத்துமென்றால், தனக்கு மைத்துனராகிய திருமாற் படையைத் தானே எடுத்துவிடுவானாகில் அந்நாராயணாஸ்திரம் வெளிப்பட்ட பெருமையும், அதினிடத்திலுண்டான விநோதமும் என்னாற் சொல்லத்தக்கதல்ல. ஆயினும், கூடிய மட்டும் ஒருவாறாகச் சொல்லுகிறேன் கேளும்:

ஓ மகாராஜனே! அர்ச்சுனன் தொடுத்த நாராயணாஸ்திரமானது அவன் எடுக்கும்போது வாமனரூபம் போலச் சிறியதாக இருந்தாலும், வில்லில் தொடுத்துவிட்ட பின்பு அண்டரண்ட பிர்மாண்டமெல்லாம் ஓரடியாய் அளக்க வளர்ந்த நெடுமாலைப்போல் அந்தரவெளி யெல்லாம் பரவி, இந்திரன் - அக்கினி - யமன் - நிருதி - வருணன் - வாயு - குபேரன் - ஈசானன் - அஷ்டவசுக்கள் - உருத்திர கணங்கள் - முப்பத்துமுக்கோடி தேவர்கள் முதலானவரையும் அவரவர்கள் ஆயுதங்களோடு உண்டாக்கி, ஒருபக்கம் பர்வதங்கள், ஒருபக்கம் மின்னல்கள், ஒருபக்கம் இடிகள், ஒருபக்கம் மழைகள், ஒருபக்க மிருள்கள், ஒருபக்கந் தீக்கள் இப்படியாக உண்டாக்கி கோடி சூரியப் பிரகாசம்போலப் பிரகாசித்துக்கொண்டு, அவுணர் சேனைகளிற் பாய்ந்து, அச் சேனைகளை யெல்லாம் நாசப்படுத்தி, அவுணர்களையும் வளைத்துக்கொண்டு, அவர்களுடைய அழியாத கவசத்தை யெல்லாம் பொடிப்பொடியாக்கி, மகா உக்கிரத்தோடு அவர்கள் மகுடங்களோடு கூடிய தலைகளை அற்றுவிழச் செய்து, திருப்பாற்கடலில் ஸ்நானஞ் செய்துவந்து முன்போல் அம்புப்புட்டிலி லிருந்தது. அது கண்ட மற்ற அவுணராஜர்கள் நாராயணாஸ்திரத்தால் மடிந்த அவுணருக்குஞ் சேனைகளுக்கும் மறுபடியு முயிருண்டாக்கித் தலைகூட்டி, முன்போல் யாவரையும் எழுப்பிக்கொண்டு, இந்த நரனால் நெடுநாள் தவஞ் செய்து பிரமனிடத்திற் பெற்ற கவசம் பொடிப் பொடியாயிற்று. இனி நம்மையுங் கொல்லுவான் என்று அச்சமுற்றவராகி யிருந்தாலும் அவுணர்க ளாதலாற் கடுஞ்சின மடைந்து மகா உக்கிரத்தோடு வந்து வளைத்துக் கொண்டு தாங்கள் பெற்றிருக்கிற தேவாஸ்திரங்களை எல்லாம் யெடுத்து மந்திரோபதேசஞ் செய்துவிட்டார்கள். அந்தந்த அஸ்திரங்களெல்லாம் அந்தர வெளியை யடைந்து மந்திரரூபமாய் மகா மகிமையோடும் வந்தன. அதை அர்ச்சுனன் கண்டு, தட்சணஞ் தன் வில்லில் மஹேந்திராஸ்திரத்தை எடுத்துத் தொடுத்துத் தூபதீப நைவேத்திய முதலானவைகள் மனதாற் செய்து மந்திரித்துவிட்டான். அந்த மஹேந்திராஸ்திரம் அந்தரத்தி லெழும்பி அண்டமெல்லாம் பரவி, யார் யார் எந்தெந்த அஸ்திரங்களை விட்டார்களோ அந்தந்த அஸ்திரங்களுக்கு அந்தந்த அஸ்திரமாகி, ஒரு நொடியில் அவுணர் விட்ட அஸ்திரங்களை பதமாக்கினதுமன்றி அவுணர்களையும் வளைந்துகொண்டு, அவர்கள் கொண்டிருக்கும் மமதையை நாசமாக்கி சித்திரப் பிரதிமைபோலப் பிரமிக்கச்செய்து மறுபடியும் அர்ச்சுனன் அம்புப் புட்டிலில் வந்து சேர்ந்தது.

அதுகண்ட அவுணர்கள் கலங்கி மனநடுங்கி, ஓ! ஓ! இந்த நரனை நாம்மனிதனென் றெண்ணி இகழ்ந்தோம். இவனுக் கிருக்கிற வல்லமையும் திவ்வியாஸ்திரங்களும் அவற்றிற்குத்தக்க கரவேக சரவேகமும் யார்க்கிருக்கின்றது? இனி இந்த மகானுபாவனை நமது மாயையால் வெல்லவேண்டுமென்று கருதி, தங்கள் தங்கள் வில்லில் மேகாஸ்திரத்தைத் தொடுத்து விட்டார்கள். அர்ச்சுனன் அக்கினியாஸ்திரத்தால் அவைகளை அதமாக்கி, உடனே பின்னுஞ் சில பாணங்களைத் தொடுத்து அவுணர் சரீரங்களைத் துளைத்துவிட்டான். அவுணர்களெல்லாந் தத்திக்கெட்டுத் தடுமாறித் திப்பிரமைகொண்டு, அவனோடு பூமியில் நின்று போர் செய்வதற்கு அஞ்சி, குபீலென் றந்தரத்தி லெழும்பி மேகத்தில் மறைந்து, தங்கள் தங்கள் வில்லில் அளவற்ற கணைகளைத் தொடுத்ததுமன்றி, தங்கட் குரித்திற் கிடைத்திருந்த வாயுவாஸ்திரங்களை யெடுத்துத் தொடுத்து விட்டார்கள். அர்ச்சுனன் அவுணர்கள்விட்ட அஸ்திரங்களத்தனையுந் தனது சில கணைகளாற் கண்ட துண்டங்களாகக் கண்டித்துவிட்டு, பர்வதாஸ்திரத்தை யெடுத்து வில்லில் தொடுத்து மந்திரித்துவிட்டான். அந்த அஸ்திரம் அநேக பர்வதங்களை யுண்டாக்கிக் காற்றை யடக்கி, அவுணர் விட்ட வாயுவாஸ்திரத்தை நாசப்படுத்தி

வந்து அர்ச்சுனனைச் சேர்ந்தது. அதனை அவ்வவுணர் கண்டு தேவர்களால் கடுஞ்சின மடைந்து, ஓ! ஓ! இந்த நரன் தேவர்களால் அனுப்பப்பட்டவன். ஆதலால், தேவாஸ்திரங்கள் இவன் முன்னிலையில் பயன்படவில்லை. இனி மாயாஸ்திரத்தால் வெற்றிபெற வேண்டுமென்று கருதி, அண்டரண்ட பிரமாண்டங்களில் இருக்கிற தேவர்களை யெல்லாம் அரை நொடியில் மயக்கிக் கட்டி யுருட்டிப் பெரும்புறக் கடலில் போடும் சக்தியை யுடைய மாயாஸ்திரத்தை எடுத்து வில்லில் பூட்டிப் பூசித்து மந்திரோபதேசஞ் செய்து விடுத்தார்கள். அந்த மாயாஸ்திரம் அந்தரத்தில் எழும்பி, ஒரு நொடியில் ஒருவர் முகம் ஒருவருக்கும் தெரியாமலிருக்க இருளை யுண்டாக்கி, ஒரு பக்கம் இடி, ஒரு பக்கம் மின்னல், ஒரு பக்கம் காற்று, ஒரு பக்கம் மழை, ஒரு பக்கம் பர்வதம் இன்னும் சொல்வதற்கரிய அஸ்திரங்களை யுண்டாக்கி, எங்கும் தானாகி, அர்ச்சுனன் விடுக்கும் கணைகளை யெல்லாம் நாசப்படுத்திக்கொண்டு மகா மகிமையோடு நெருங்கிற்று.

கேளும் மகாராஜனே! அவுணர் விடுத்த மாயாஸ்திரம் கிட்ட நெருங்க நெருங்கத் தேரிற் கட்டிய குதிரைகள் சோர்ந்து அசைவற்று நின்றன. மாதலி கட்குடியன்போல் உரக்கங் கொண்டவனாகிச் சாரத்தியஞ் செய்வதில் கிஞ்சித்துச் சோர்வடைந்தான். சித்திரசேனன் மயங்கினன். இதைக் கண்ட அர்ச்சுனன் அண்டகடாகம் வெடித்திடக் கடுகடுத்த கர்ச்சனை கொண்டு இடிக்கும் இடிபோல் அட்டகாசஞ் செய்து, மாதலியை ஒரு அறை அறைந்து, அவன் மயக்கமறச் சில மந்திரோபதேசஞ் செய்து, குதிரைகளைத் தேற்றித் தக்ஷணம் தன் வில்லில் ஞானாஸ்திரத்தை எடுத்துத் தொடுத்து மந்திரோபதேசஞ் செய்து உக்கிரத்தோடு விடுத்தான். அந்த ஞானாஸ்திரம் வில்லிலிருந்து வெளிப்பட்ட மாத்திரத்தில் குதிரைகள் தெளிந்தன. சாரதியும் சித்திரசேனனும் தெளிந்தார்கள். ஞானாஸ்திரம் வெளிப்படவே மாயாஸ்திரம் தன் வலிமை குன்றி அசத்தியர் செய்த தருமம் போலத் தேய்ந்து மாய்ந்துவிட்டது. அர்ச்சுனனும், சாரதியும், சித்திரசேனனும் அறம் பொருள் பெற்று விளங்கும் சிறப்புற்ற நல்லறிவாளருள்ளம்போல் மாயையில் நின்று நீங்கி மகிழ்ந்தனர். சூது-வாது-அக்கிரமம்-கொலை-களவு-கள்-காமம் இவைகட்குப் பாத்திரராகிய அவுணர்களெல்லாம் போர்த்தொழிலை மறந்தவராகிச் சோர்ந்து விழுந்து, பின்பு தெளிந்து, கிஞ்சித்து அறிவுடையவர்களாய்த் தங்கள் தங்கள் இரதங்களில் வந்து வழி நடத்தி அஞ்சன மலைபோல் இருக்கும் அர்ச்சுனன் மீதும், மாதலிமீதும், தண்டு - சூலம் - வாள் - வேல் - சத்தி முதலிய ஆயுதங்களை எடுத்து எறிந்து, மணலை வாரி இறைத்ததுபோலக் கணைகளையும் தூவினர். அர்ச்சுனன் தன் காண்டீபத்தில் அளவற்ற கணைகளைத் தொடுத்து, அவுணர் விடுத்த ஆயுதங்களையும் கணைகளையும் தவிடுபொடியாக்கி, முள்ளம்பு-அர்த்தசந்திரபாணம்-நாராசம் முதலிய கணைகளை எடுத்துத் தொடுத்தான். இவன் கணை எடுக்கிறதும் தொடுக்கிறதும் அந்தரத்தில் நின்று பார்த்திருக்குந் தேவர்களுக்கும் தெரியாதென்றால், அர்ச்சுனனுடைய கரவேக சரவேகத்தை நீரே மதித்துக்கொள்ளும். அக்கணைகள் அவுணரை வளைத்துக்கொண்டு, அவ்வவர்களுடைய வில்லை முறித்து மார்பைப் பிளந்து சல்லடைக் கண்கள்போலத் துளைத்துவிட்டன.

அதனால் அவுணர்கள் வெய்யலில் அகப்பட்டுக்கொண்ட புழுவைப்போல் பதைத்து உருகி நின்று, சுத்தவீரராகையால் முதுகு காட்டி ஓடாமல் அர்ச்சுனன் எதிரில் சென்று, ஆயுதங்களையும் வில்லையும் சுமந்த சித்திரப்பிரமைபோல் அசைவற்று நிற்பர். கணை தொடுக்க வீராவேசங்கொண்டு வில்லைத் தூக்குவர். வில் எடுக்கவும் சக்தியற்று விழிப்பர். இவ்வாறு அவுணர்கைகள் இளைத்ததைக் கண்ட அர்ச்சுனன் தன் வில்லில் அளவற்ற கணைகளைத் தொடுத்து, ஒவ்வொன்று கோடி கோடியாக வளரும் மந்திரத்தை உபதேசித்து விட்டனன். அக்கணைகள் கல்வி கேள்வியில் பயின்று சிறந்த குணத்தை யுடையவர்களுக்குக் கொடுத்த பொருளைப்போல் வளர்ந்து, ஒன்று கோடியாகி அசுரரைத் துளைக்கத் தலைப்பட்டன. தேவர் கோமான் குமாரனாகிய அர்ச்சுனன் விட்ட பாணங்களினால் அவுணர்கள் மிகவும் நொந்து வீராவேசங்கொண்டு, அடா அர்ச்சுனா! எங்களை இலேசாக நினைத்துப் போருக்கு வந்து, உன் கரவேக சரவேகத்தால் எங்கள் சேனைகளை அதமாக்கி, அழியாத கவசத்தைப் பெற்ற எங்களையும் வளைத்து, கவசத்தைப் பிளந்து சித்திரவதை செய்தனை. இனி நீ சொற்க மத்திய பாதாள

மென்னு முப்புவனத்தில் எங்கொளித்தாலும் உன்னை விடாமற் பின்றுடர்ந்து, உன்னுயிரை எங்கள் பசிக்கிரையாக்குகிறேம் பாரென்று மேல் விழுந்து வந்தார்கள். உடனே அர்ச்சுனன் தன் காண்டீபத்திற் கூர்மைதங்கிய வேலுக்கொப்பாகிய சிற்சில கணைகளைத் தூண்டி, தன்னை மதிக்காமல் அடாவென்று கூறிய வாயி லுதிரங் கக்கச்செய்து, பின்னுங் கோடையிடிக் கொப்பாகிய சில கணைகளை யேவி, அவரவர்களுடைய கரங்களையும் - சிகரங்களையும் - கால்களையும் - அவர்கள் விட்ட வேல்களையும் - அவர்கள் பிடித்த வாள்களையுந் துண்டித்து; யாவரையும் வெட்டித் தள்ளிச் சங்கத்தொனி செய்தான். அச்சங்கொலி யடங்குமுன் மூன்று கோடி அவுணரும் மறுபடியும் உயிர்பெற்று வந்து போர் புரிந்தனர். பின்னும் அர்ச்சுனன் அவர்களை வெட்டினன். இப்படி அர்ச்சுனன் வெட்ட வெட்ட அவுணர்கள் மீண்டு மீண்டும் உயிர்பெற்றுவர, அர்ச்சுனன் கைசலித்து, ஓ! ஓ! இந்த அவுணர் இறந்திறந்து உயிர்பெற்றால், நாம் இவர்களை யெல்லாங் கொன்று எந்தக் காலத்தில் வெற்றி யடைகிறது? நமது பிதாவாகிய சொர்க்காதிபதியென்னுந் தேவேந்திரனுக்கு யெவ்வாறு மனக்கவலையை நீக்கிவைக்கிறது? மற்றத் தேவர்கள் முனிவர்கள் முதலிய பேர்களுடைய சிந்தாகுலங்களை எவ்வாறு சிதைப்பது யென்று ஏக்கங் கொள்ளுவதானன்.

### அருச்சுனன் அசரீரியால் நிவாதகவசர் நிலைமையுணர்ந்து பாசுபதாஸ்திரம் பிரயோகஞ் செய்தல்

அத்தருணத்தி லசரீரி ஓ விஜயப்பிரதாபா! ஓ அர்ச்சுனா! என்று கூவிச் சொல்லுகிறாள்: ஓ மகானுபாவா! இவர்களோடு நீடூழிகாலம் போர் புரிந்தாலும், இவர்களை வெற்றி யடைகிறது அருமை. ஏனென்றால், இவர்கள் யமனைக் குறித்தும் பிரமனைக் குறித்தும் அநேக நாள் அருமையான தவத்தைச் செய்தவர்கள். திவ்வியாஸ்திரங்களைப் பெற்றவர்கள். இவர்களை நூறுநூறாக வெட்டி யெறிந்தாலும் மறுபடியும் ஒன்றாகக்கூடி உயிர் பெறுவார்கள். அவ்வளவு வரப்பிரசாத முள்ளவர்களாகிய இவர்களை வெற்றியடைய ஒரு உபாயஞ் சொல்லுகிறேன். அஃதென்னவெனில், இவர்களோடு கடும்போர் புரிந்து, இவர்கள் வாயுங் கையும் ஒன்றாக இருக்கும்படி செய்து, அந்த வேளையில் பாசுபதாஸ்திரத்தை எடுத்துத் தொடுத்தால் இவர்கள் மாளுவார்கள் என்று கூறினாள். அதைகேட்ட அர்ச்சுனன் மகிழ்வுற்று, மாதலியைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ மாதலீ! நான் கடும்போர் செய்கிறேன். அத்தருணத்தில் நீ தேரை முன்னே செலுத்துகிறதுபோலக் காட்டி உடனே பின்னிடச் செய்யென்று கூறி, அவுணர்களை வளைந்துக்கொண்டான். அவுணர்களும் மகா உக்கிரத்தோடு அர்ச்சுனனை வளைந்துகொண்டு, தங்கள் கையிலிருக்கிற வில்லில் அளக்கரிய பாணங்களைத் தொடுத்தார்கள். இருதிறத்தாரும் ஒரு முகூர்த்தம் சரவருஷம் பொழிந்தார்கள். எந்தத் திசையை நோக்கினபோதிலும் அந்தத் திசையெல்லாம் அவுணர் விடுத்த பாணமும் விஜயன் விடுத்த பாணமுமாகத் தானிருந்ததென்றால், சரவருஷம் பொழிந்த திறத்தை நீரே மதித்துக் கொள்ளும். இவ்வாறு கடும்போர் நடக்கிற தருணத்தில் தேவ சாரதியாகிய மாதலி தன் சாதுரியத்தால் தேரைக் குலாலன் சக்கரம்போற் சுழலவிட்டு, அப்பாற் பின்னுக்கு நடத்தினான். இதனைக் கண்ட அவுணர்கள் பூரணச் சந்திரனைக்கண்ட சமுத்திரம்போலப் பொங்கி, நரன் முதுகுகாட்டி பின்னிட்டனனென்று கொக்கரித்து, யாவரும் சிரித்து, இவ்வளவு வல்லமைசாலி நம்மோடு இந்நேரங் கடும்போர் புரிந்தது ஆச்சரியந்தானென்று யாவரும் ஆர்ப்பரித்து கைகொட்டி, வாயுங்கையும் ஒன்றாகும்படி மூக்கிற் கரத்தை வைத்தார்கள். அர்ச்சுனன் அதுகண்டு, இதுதான் தருணமென்று தக்ஷிணம் அம்புப் புட்டிலிற் கரத்தை வைத்து, கைலாசபதி கொடுத்த திவ்ய பாசுபதாஸ்திரத்தை எடுத்து வில்லிற்றொடுத்து, தூபதீப நைவேத்திய முதலியவைகளை மனதாற் செய்து தொழுது விட்டனன்.

தேளும் மகாராஜனே! பல்லாயிரங்கோடி அண்டங்களுக்கும் அவற்றிலுள்ள சராசரங்களுக்குந் தலைவனாகிய பரமன் வாளி வில்லினின்றும் வெளிப்பட்ட மாத்திரத்தில் அந்த ரத்திற்றாவி, அநேகம் பிரமாஸ்திரம் - அனேகம் நாராயணாஸ்திரம் - அனேகம் இந்திராஸ்திரம் - அநேகம் சந்திராஸ்திரம் - அனேகம் சூரியாஸ்திரம் - அநேகம் வருணாஸ்திரம் - அநேகம் வாயுவாஸ்திரம் - அநேகம் இடியாஸ்திரம் - அநேகம் குபேராஸ்திரம் - அநேகம் கருடாஸ்திரம் - அநேகம் காந்தருவாஸ்திரம் இன்னுமிவ்வாறான அஸ்திரங்களை அனேகமுண்டாக்கித், திக்கெட்டுந் தத்தளிக்க உக்கி

ரத்தோடு கர்ச்சித்து, அவுணர்களை வளைந்துக்கொண்டு யாவரையுங் கால்வேறு கைவேறாகத் துண்டித்து, அவரவர்களணிந்த மகர குண்டல ஆரகேயூர கடக கங்கணங்களைத் தவிடு பொடியாக்கி, மகுடங்களோடு கூடிய சிரங்களைக் கண்டித்து, வானநதியில் ஸ்நானஞ் செய்து முன்போல் அர்ச்சுனனுடைய அம்புப்புட்டிலில் வந்திருந்தது. அர்ச்சுனன் விட்ட பாசுபதாஸ்திரத்தால் அவுணர்கள் எல்லாம் மடிந்து, தாங்கள் இறந்தாலும் பிறக்க வரங்கொடுத்த யமனிடத்துச் சென்று உமது வரம் பாழாயிற்றே என்று முறையிட ஏகுவது போல் அவன் புரத்தை அடைந்தனர்கள். அர்ச்சுனன் செய்த யுத்தத்தைக் காண அந்தரத்தில் வந்திருந்த தேவர்கள் எல்லாம் அவன் விட்ட பாசுபதாஸ்திரத்தால் அவுணர்கள் எல்லாம் எமலோகத்தை யடைந்ததைக் கண்டு, இருவினைப் பந்தங்களில் நின்று கனவருத்த முற்றவர்க்குப் பரமபதம் கிடைத்தால் அவர்கள் எவ்வளவு மகிழ்வடைவரோ அவ்வளவு மகிழ்வடைந்து, ஓவென்று கெக்கலி கொட்டி, ஜெயா விஜைபவா வென்று கற்பக மலர்களை யெடுத்து மாரிபோல் அர்ச்சுனன் மீது வருஷித்து, ஓ பாண்டு புத்திரா! ஓ சந்திரகுலதித்தா! ஓ சத்துரு சங்காரா! ஓ விஜயப்பிரதாபா! ஓ சங்கு சக்கரகதா கட்கசோ தண்டதாரனாகிய திருமால் மனதிற்குகந்த மைத்துனா! ஓ தருமபூபதிக்குச் சகோதரா! ஓ சுபத்திராதேவி மனோகரா! ஓ பார்த்தீபா! ஓ பற்குனா! ஓ கிரீடி! ஓ திக்குவிஜயா! ஓ காண்டவவனதகனா! ஓ தேவர்க்காதாரா! ஓ அசுராந்தகா என்று பலவாறு துதித்து, இன்றல்லோ நாம் பிழைத்தோம் இனி நமக்குச் சத்துரு வில்லை யென்று கூறிப் பரமானந்தம் அடைந்தனர். இங்கே அசுரர்கள் சிரந்துணிந்து பூமியில் விழுந்த மாத்திரத்தில் அவரவர்கள் உடலில் இருந்து உதிரப் பிரவாகம் உண்டாகி இப் பூமியிற் பெருகி, சமர்க்களத்திலிருக்கும் இரதங்களையும், யானைகளையும், குதிரைகளையும், காலாள்களையும் அடித்துக்கொண்டு போய்க் கருங்கடலிற் பாய்ந்து செங்கடல் ஆக்கியது. தேவர்கள் வாழ்த்தொலியைக் கேட்ட முக்கோடி யவுணர்களின் மனைவிகள் மனங்கலங்கி, தங்கள் தங்கள் மேல் உப்பரிகையில் ஏறிப் போர்க்களத்தை நோக்கினர். எக்காலத்தும் எந்தவிடத்தும் நமக்கழிவில்லை யென்று மனக்களிப்புற்ற அம்மாதர் கண்களுக்கு அர்ச்சுனன் இரதமொன்று தவிர மற்றொன்றுந் தோன்றாமல் இருக்கிறதைப் பார்த்து, இடிவிழுந்த மரம்போல் ஏங்கி, உப்பரிகையை விட்டிறங்கி யாவரும் ஒன்றாகக் கூடி, அரண்மனையை விட்டு நகரப்புரத்திலிருக்கும் சமர்க்களத்தில் வந்து, தங்கள் பிராணநாயகர் மடிந்ததைக் கண்டு, ஓவென்றலறிப் பூமியில் விழுந்து பலவாறு புலம்பி, இனி வருத்தப்படுவதிற் பயனில்லை யென்று மனந்தேறி யாவருந் தங்கள் தங்கள் நாயகன் பிரேதத்தோடு தீயில் விழுந்து இறந்தனர்கள். இப்பால் மேல் நடந்தனவற்றையுங் கூறுகிறேன் கேளுமென்று ஜெனமேஜெயனைப் பார்த்து வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

நிவாதகவசர் வதைச்சருக்கம் முற்றிற்று.

---

நான்காவது,

## காலகேயர் வதைச்சருக்கம்.

---

### கண்ணன் துதி

மீனமைகோலநெடு நரசிங்கமாகி நிலம் விரகாலளந்தகுறளா, யானதுசீறுமழு வல்வில்லுவெல்லுமுனை யலமுற்றசெங்கையவராய், வானடர்வந்துதொழு மண்ணுடர்யாவரையு மடிவிக்கவந்தவடிவாய், நானுவிதங் கொள்பரி யாளாகிநின்றருளு நாராயணாய நமவே.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அர்ச்சுனன் மூன்று கோடி அவுணராகிய நிவாதகவசரைக் கொன்றுஞ் சினமடங்காமல், மகா உக்கிரத்தோடு மாதலியை நோக்கிச் சொல்லுகிறான்; ஓ மாதலீ! இன்னுமிந்த அவுணர்களைப்போற் சில அவுணர்கள் அந்தர லோகத்தில் எந்த விடத்திலாவது ஒளித்திருப்பார்கள். அவர்களுடைய வேரைக் களைய வேண்டும். ஆதலால் தேரை அந்தர லோகத்திற் செலுத்தென்று கூற, மாதலி அர்ச்சுனன் கருத்தின்படி இரதத்தை அந்தர லோகத்திற் செலுத்தி வந்தான். அர்ச்சுனன் தனது கண்ணுக் கெட்டின வரைக்கும் பார்த்துக் கொண்டு வருகிறபோது, பொன்மயமான ஒரு நகரங் கண்ணுக்குத் தோன்றிற்று. அர்ச்சுனன் மாதலியைத் தேரை நிறுத்தும்படி சொல்ல, அப்படியே நிறுத்திய மாதலியை நோக்கி, ஓ மாதலீ! சொர்ணமயமாக இதோ ஒரு நகரந் தோன்றுகின்றது. இதின் வரலா

றென்னவென்று வினவினன். மாதலி அர்ச்சுனனை வணங்கிச் சொல்லுகிறான்: ஓ மகாநுபாவா! திதியென்றும் அதிதியென்றும் இரண்டு மாதருண்டு. இவருள் திதி என்பவள் முப்பத்து முக்கோடி தேவர்களைப் பெற்றாள். அதிதியென்பவள் அந்தத் தேவர்களுக்குப் பகைவராகிய அசுரரைப் பெற்றாள். அந்த அசுரருள் காலகை யென்றொரு மாதுண்டு. அந்த மாது புரோமையென்னும் அசுரனை மணந்து, நெடுநாள் இருவரும் தவம்புரிந்து அறுபதினாயிரம் புத்திரர்களைப் பெற்றார்கள். அப்புத்திர பாக்கியத்தைப் பெற்ற காலகை-புலோமை என்கிற இருவரும் தங்கள் புத்திரர்க்குப் பகைவராகிய தேவர்களால் ஒரு இடையூறும் வராமலிருக்க ஆலோசித்து, கமலாசனக் கடவுளைக் குறித்து அநேக ஊழிகாலந் தவஞ்செய்து, தேவராலும் மற்ற மூவராலும் பின்னும் யாவராலுந் தங்கள் புத்திரர்களுக்கு இடையூறு வராமலிருக்கவும், திவ்வியாஸ்திரங்கள் கிடைக்கவும், நினைத்த விடத்துக்குச் செல்லத்தக்கதாக ஒரு சொர்ன நகரமும் வேண்டுமென்று வரங் கேட்டுக் கொண்டு, மக்களைப் பாதுகாத்து, பின்பு அவர்களைத் தக்க வயதிற் பிரமனாற் பெறப்பட்ட சொர்னபுரியிற் குடியேற்றுவித்தார்கள்.

அப்பால் அந்த அறுபதினாயிரம் பெயர்களும் அந்த நகரத்திற் குடியேறி, தன் தாய் பெயரைத் தாங்கள் வகித்து காலகேயரென்று விளங்கி, தாய் தந்தையராற் சம்பாதித்துக் கொண்ட வரமும் திவ்வியாஸ்திரங்களும் போதாமற் பின்னும் அதிக அருமையான தவஞ்செய்து, கமலாசனக் கடவுளாற் சொல்வதற்கு அருமையான திவ்யாஸ்திரங்களையும் அதிக பலத்தையும் பெற்றுக்கொண்டு, சொர்காதிபதியாகிய இந்திரனை எதிர்த்துப் பலபல இமிசைசெய்து, தேவர்களை ஒரு நாலுக்குஞ் சர்ட்டுக்குங்கூட ஆக வொட்டாமல் எக்காலத்தும் அவர்களை மடக்கிப் பிடித்து அடிக்கின்றவர்களானார்கள். இவர்கள் கோபாக்கினியைக் கண்டே வடவாக்கினி யோடி கடலிலொளித்த தென்றால், அவருடைய திடச் சித்தத்தையும் பராக்கிரமத்தையும் யாவரால் சொல்லக்கூடும்? அவுணர்களைப்போலக் கறுத்த தேகத்தை யடைந்தவரல்ல; மகா சொர்ன நிறம்போன்ற தேகத்தையுடையவர்கள். சந்திர சூரியர்போற் பிரகாசிக்கின்ற குண்டலங்களைக் காதிலேயுடையவர்கள். உலகிலுள்ள சீவர்களைக் கொள்ளை கொள்ளும் யமனோடு போரிட்டு எப்போதுந் தாங்களிருக்குந் திசையை நோக்காமலிருக்கச் செய்பவர்கள். தோன்றிய மின்னல் உடனே நாணி மறையும்படியான வொளியையுடைய ஆயுதங்களைக் கையிலுடையவர்கள். அவர்கள் கண்களிலிருந்து வெளிப்படுந் தீப்பொரியைக் காணில், விஷாக்கினியும் அஞ்சி நடுங்கும். காலகேயரென்கிற பெயரைக் கேட்ட அஷ்டதிக்குப் பாலகருந் தலையெடுக்காரென்றால், அவர்கள் பெருமையை யாவரால் மதித்துச் சொல்லக்கூடும்? இவர்கள் செய்கிற அக்கிரமமென்னவெனில்; தேவர்களுக் கிடுக்கண் செய்கிறதோடு வேதாகம விதிப்படி நின்று மூன்று வேளையும் முத்தீ வளர்த்திச் சூரியோதயத்திலும் அஸ்தமானத்திலுங் கிரமப்படி சூரியனுக்கு அர்க்கியபாத்தியங் கொடுக்கும் வேதவேதியரைத் தங்களுக்கிரையாகக் கொள்பவர்கள். மகா பாவிகள் முற்காலத்திற் கயிலாசபதியாகிய சாம்பவமூர்த்திக்கு நேர்ப்பட்ட முப்புராதிகளைப்போலச் சொர்ன நகரத்திலிருந்து, அவர்களைவிட எண்மடங்கதிகமான அக்கிரமத்தைச் செய்பவர்கள். ஒருவனைப்போலவே இந்த அறுபதினாயிரம் பெயர்களுஞ் சமமாகப் போர் செய்பவர்கள். மகா பராக்கிரமசாலிகள் என்று கூறக்கேட்ட அர்ச்சுனன் மகிழ்வுற்றுச் சொல்லுகிறான்.

### அருச்சுனன் காண்டீபக் குணத்தொனி காட்டக் காலகேயர் யுத்தசன்னத்தராய் வருதல்

ஓ மாதலீ! நிவாதகவசத்தராகிய முக்கோடி அவுணர்கள்மேல் எதிர்த்துப் போரிட்டு வெற்றிகொண்டது அருமையல்ல. அவர்களால் தேவர்களுக்கு மாத்திரம் இடையூறுண்டாயிற்று. இவர்களோ தேவர்களுக்கு இடையூறு செய்கிறதுமன்றி, தெய்வீகத்தன்மையிற் சிறந்த வைதீகப் பிராமணர்களையும் வதைத்து வருகிறதினால், இவர்களைத்தான் முன்னங் கொல்லவேண்டும். இவர்கள் இருக்கிறது எனக்குத் தெரியாமற் போயிற்று. என் பிதாவாகிய இந்திரனுங் கூறவில்லை. தற்காலத்தில் நிவாதகவசரை அதஞ்செய்ததில் தேவர்களுக்குக் கிஞ்சித்து நலமுண்டாயிற்றே யன்றிப் பெரும்பயனடையவில்லை. இந்த காலகேயரை அதமாக்கினால் தேவர்களே யன்றி, மற்ற யாவரும் பெரும் பயனடைவார்கள். ஆதலால், இந்தச் சொர்ன நகரத்தில் இருக்கிற காலகேயர் அறுபதினாயிரவரையும் அத

மாக்கி ஜெயசங்கம் பூரித்தபின்புதான் சொர்க்க லோகஞ் செல்லுவேன். நீ தடை செய்யாமல் தேரை அந்தரத்திற் செலுத்தி, அந்தத் துராத்மாக்களிருக்கிற நகரத்தருகிற் கொண்டு போய் விடென்று அதிக உக்கிரகத்தோடுகூற, மாதலி காலகேயருடைய பராக்கிரமத்தை அறிந்தவனாதலாற் கிஞ்சித்து அஞ்சினவனாக யிருந்தபோதிலும், நிவாதகவசர் நாசமானதை மனதில் மதித்து மகிழ்வுற்று, இந்தக் காலகேயருக்குங் காலமுடிவாயிற்றென்று கருதித் தேரை அந்தரத்திற் செலுத்திக், காலகேயரிருக்கிற சொர்ன நகரத்து அருகிற் கொண்டுபோய் நிறுத்தினான். விஜயப்பிரதாபனான அர்ச்சுனன் தான் வந்த சேதி அவுணர்க் கறிய ஆயிரங்கல பாரமுள்ள தன் காண்டீபத்தை எடுத்து நிறுத்தி வளைத்து டங்கார ஓசை எழுப்பினான்.

அந்த ஓசையைக்கேட்ட சொர்னபுரியிலுள்ளவர்களிற் சிலர் மரணமடைந்தார்கள். சிலர் மரணமூர்ச்சை யடைந்தார்கள். சிலர் திகைத்தார்கள். சிலர் பிரம்மித்துச் சித்திரப் பிரதிமைப்போல் அசைவின்றி யிருந்தார்கள். சிலர் தாமரையிலைச் சலம்போலத் தத்தளித்தார்கள். சிலர் இந்த நாணொலி யேதென்று ஒருவரையொருவர் வினவினார்கள். பலர் நிவாதகவசர்மேல் போருக்கெழுந்த நரன் நமது நகரத்தின்மேலும் போருக்கு வந்தானோ என்று ஐயமுற்று நடுங்கினார்கள். இப்படி நகரமுழுதும் அவகோலப்பட்டுக் கலங்கிற்று. நாணொலியைக் கேட்ட காலகேயர் திடுக்கிட்டவராகி ஒருவரையொருவர் பார்த்து, ஓ! ஓ! நமது நகரத்தின்மேற் சொர்க்காதி புவனங்களிலுள்ள தேவர்கள் போர்க்கெழார்கள். பிரம்மா-விஷ்ணு- உருத்திரன் என்கிற மூவரும் நம்மேற் போருக்குவரக் காரணமில்லை. பின்னையார் நமது நகரத்தின்மேல் அஞ்சா நெஞ்சுபடைத்துப் போருக்கெழுவர்? யாரோ பூலோகாதிபதிகளில் ஒருவன் இந்திரலோகம் வந்ததாகவும், அவனை இந்திரன் நிவாதகவசர்மேற் போருக்கு அனுப்பிவித்ததாகவும் கேள்வி. அந்த நரன் உண்மையாக நிவாதகவசர்மேற் போருக்குச் சென்றால், அவன் மீண்டுவரப் போகிறதில்லை. ஏதோ ஒரு உள்வினைச் சூதுமார்க்கங்கொண்டு அந்த நிவாதகவசர்களை வெற்றிபெற்று, அவர்களைப் போல நம்மையும் வெற்றியடையலாமென்று மமதைகொண்டு வந்ததுபோற் காண்கிறது. எல்லாம் நகர்ப்புறத்துச் சென்று நோக்கினால் தெரியுமென்று கருதினவராகி, தக்ஷணங் கவசமணிந்து, மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலானவைகளைப் பூண்டு, அம்புப்புட்டிலை முதுகிற்றூங்கி, வில்-வாள்-கதை - சூலம் முதலிய ஆயுதங்களைக் கரத்திலேந்திப் போர்க்கோலங் கொண்டு, தங்கள் சேனாதிபதிகளை எச்சரித்து நால்வகைச்சேனைகளோடு வரும்படி கட்டளையிட்டு, தங்கள் இரதமேறி நகர்ப்புறத்துக்கு வந்தார்கள். சேனாதிபதிகள் தங்கள் தங்கள் கட்டளைக்குட்பட்டிருக்கிற சேனைகளோடு போர்க்கோலங் கொண்டு ரதாரூடராகித் தங்கள் யஜமான்களிருக்கிற விடங்களில் வந்து நிறைந்தார்கள். காலகேயர் தங்கள் சேனாதிபதிகளை நோக்கிச் சொல்லுகிறார்கள்: ஓ சேனாதிபதிகளே! சற்று நேரத்திற்கு முன்னே ஒரு ஓசையுண்டானதை நீங்களுங் கேட்டீரன்றோ? அந்த ஓசை மேகத்தொனி யென்றும், சமுத்திர கோஷடமென்றும், முருகவேள் சாரிவிடு மயிலின் ஓசையென்றும், அல்லது யாரேனும் நம்மேற் போருக்கு வந்து, வந்தசேதி தெரிவிக்கச் செய்த வில் நாணொலியென்றுந் தெரியவில்லை. ஆதலால், நீங்கள் நாற்றிசையுஞ் சென்று பார்த்துவரத் தூதுவரை யனுப்புங்களென்று கூற, சேனாதிபதிகள் தூதுவரை யனுப்ப, அத்தூதுவர் நாற்றிசையிலுஞ் சென்று, ஒரு திசையில் வந்திருக்கிற ஒற்றைத்தேர் வீரனைக் கண்டு ஓடோடியும் வந்து, காலகேயரை வணங்கிச் சொல்லுகிறார்கள்.

ஓ ஸ்வாமிகளே! யாரோ ஒரு தேர்க்காரன் வந்திருக்கிறான். அத்தேரையுஞ் சாரதியையும் நோக்கினால் யிந்திரனுடைய தேரைப் போலும், அவனுடைய சாரதியைப்போலுமிருக்கின்றது. தேரிலிருப்பவனை நோக்கினால், அவ்விந்திரனைப் போலவே இருக்கிறான். அவன்தான் ஓர் பெரியவில்லை ஏந்திக் கொண்டு நிற்பதால், முன்பு கேட்ட விற்குணத்தொனி அவனுடையதாக விருக்கலாமென்று கூற, உடனே யாவருந் திரண்டு அர்ச்சுனனிருக்கிற திசையில்வந்து, அர்ச்சுனனைப் பார்த்து அட்டகாசஞ் செய்து, ஒருவரையொருவர் நோக்கி, ஓ! ஓ! வந்திருக்கிறவன் ஒருவன் இவன் இந்திரனென்று மதிப்போமாகில், அவனுடல் முழுதுங் கண்கள் இருக்கும், இவனுடலிற் கண்களைக் காணோம். இயமனென்று கொள்வோமாகில், கழுத்த

தேகமும், பெருத்த கெதையும் இவனிடத்தில் இல்லை. அந்த எமனும் நம்மோடு போருக்கு வரான். அசுரர்குல காலனான சுப்ரமண்யன் என்று கருதுவோமாகில், இவனுக்கு இரண்டு கரம், ஒரு தலை இருக்கின்றதேயன்றி, ஆறு தலையும், பன்னிரு கரமும் இல்லை. மற்ற எந்த வீரன் நம்மீது போருக்கு வந்தவனென்று கருதி, அர்ச்சுனனை நெருங்கினார்கள். வந்த காலகேயருடைய வடிவத்தைக் கண்ட அர்ச்சுனன் கடுஞ்சினமடைந்து, ஓ! ஓ! இந்த அசுரரை நோக்கினால், அழகில் மாரவேளை யொத்திருக்கிறார்கள். இவர்களுடைய ரூப சவுந்தரியங்கள் தேவர்களுக்குமில்லை. இவர்களைக் கொல்லும்படியாக இந்திரனும் விடை கொடுக்கவில்லை. ஐயையோ! இதென்ன பாவமென்று கிஞ்சித்து மனவருத்தமுற்று, இந்தக் காலகேயர் பிறருக்கு இடையூறு செய்கிறதினாலும், வேதவேதியர்களை எல்லாம் கொலை செய்கிறதினாலும், துஷ்ட நிக்கிரகஞ் செய்கிறதென்று மனுசாஸ்திர முறையிடுகின்றதினாலும், முன்னம் நாம் இவர்களைக் கொன்றுவிட்டுச் சொற்கலோகஞ் செல்கிறதென்று சபதம் செய்தமையாலும், இவர்களைக் கொல்லுகிறதே உத்தமமென்று கருதித் தன் காண்டீபத்தை மீட்டும் குணத்தொனிசெய்து, அஷ்டதிக்கும் தத்தளிக்கக் கொக்கரித்தான்.

காண்டீபனுக்கும் காலகேயர்க்கும் யுத்தம்

அதுகண்ட காலகேயர் கடுஞ்சினமடைந்து, தங்கள் சேனைகளை நாற்றிசையும் வந்து வளையக் கட்டளையிட்டு, தங்கள் இரதங்களை முந்திவிட்டு, அறுபதினாயிரம் பேர்களும் தங்கள் தங்கள் வில்லை வளைத்து நாணேற்றிட்டு டங்கார ஓசை எழுப்பிச் சில பாணங்களை எடுத்துத் தொடுத்துவிட்டு, அர்ச்சுனனைப் பார்த்துச் சொல்லுகிறார்கள்: ஆரடா! ஆரடாரரா! நீ யென்ன? உன் வல்லமை எவ்வளவு? ஒரு மண்டலாதிபதியாகிய நீ எந்த வல்லபத்தைக்கொண்டு இந்திரன் வார்த்தையைக் கேட்டுக் கிஞ்சித்தேனும் அஞ்சாமல் எங்கள் மீது போருக்கு வந்தனை? உன்னை அனுப்பிவித்த இந்திரனும், இந்திரனுக்குத் துணையாகவந்த திக்குப் பாலகரும், உருத்திர கணங்களும், வசுக்களும், மற்றத் தேவர்களும் எங்களில் ஒருவனைக் கண்டவுடன் புலியைக் கண்ட மானைப்போலச் சந்திலும் பொந்திலும் நுழைந்து ஓடி உயிர் பிழைப்பாரென்றால், நீ எங்களுடன் போர்புரியத் தக்கவனோ? எங்கள் பெயரைக் கேட்ட தேவரெல்லாம் நடுக்கங்கொண்டு சோர்வடைவார்கள். நீ அஞ்சாமல் எங்கள் நகரத்துக்கு வந்தமையால், திடச்சித்த முடையவனென்று சொல்வதற்குச் சந்தேகமில்லை. ஆயினும், நீ யொருவன் எங்களை எவ்வாறு வெல்லுவை யென்று வீரவார்த்தை கூறினார்கள். இவை யனைத்தும் கேட்ட அர்ச்சுனன் குறுநகைகொண்டு சொல்லுகிறான். ஓ காலகேயரே! நீங்கள் மகா பாவிக ளென்றும், நாள்தோறும் தேவராதியர்களுக்கு இடையூறு செய்து வருகிறீர்கள் என்று கேள்விப்பட்டு, உங்களைக் கொன்று உங்கள் உயிரை எமனிடத்தில் ஒப்புவிக்க வந்தேன். முன்னம் நிவாதகவசரைக் கொன்றேன். உங்களையும் அரைமாத்திரையில் கொல்லுகிறேன் பாருங்களென்று கூறி, தன் வில்லில் பாணங்களைத் தொடுத்துவிட்டு, அவுணர் விட்ட பாணங்களை வெட்டித் தள்ளிப் பின்னுஞ் சில பாணங்களைக் காலகேயர்மேல் விடுத்தான். அர்ச்சுனன் கூறிய வார்த்தையைக் கேட்ட காலகேயர் காலாக்கினி உருத்திரனைப்போற் சீறி, அண்டங்கள் பிளக்கக் கொக்கரித்து, தங்கள் தங்கள் வில்லில் அளவற்ற பாணங்களைத் தொடுத்து மழைபோற் சொரிந்தார்கள். சேனைகளும் பலபல ஆயுதங்களை எடுத்தெறிந்து ஆர்ப்பரித்தார்கள். சேனாதிபதிகளு தங்கள் வில்லில் அளவற்ற கணைகளைத் தொடுத்து அட்டகாசஞ் செய்தார்கள்.

இவையனைத்தையும் அர்ச்சுனன் கண்டு, தன் வில்லிற் சில வயிரவாளிகளை யெடுத்துத் தொடுத்து, ஒரு வாளி பத்து-நூறு-ஆயிரம்-பதினாயிரமாக வளரும் மந்திரத்தை உபதேசித்துவிட்டு, அவுணர் விடுத்த கணைகளையெல்லாம் நடுவதுபாதியிற் கண்டித்தெறிந்து, ஓரிலைவேல் - மூகக்கணை - ஈரிலைவேல் - மூகக்கணை - மூவிலைவேல் மூகக்கணை - கமலமூகக்கணை - அர்த்த சந்திரக்கணை - முள்ளம்பு - நாராசம் இவை முதலியவைகளையு மெடுத்து மந்திரோபதேசஞ் செய்துவிட்டான். அக்கணைகள் அந்தர மெல்லாம் பரவி, அவுணர் சேனையிற் கலந்து, யானைகளைப் பிளந்து, குதிரைகளை வெட்டி, தேர்களை சின்னாபின்னமாகக் கண்டித்து, காலாளுகளை யதமாக்கி, சேனாதிபதிகளை வளைந்துகொண்டு வில்லை முறித்துக் கவசத்தைப் பிளந்து, மகுடத்தை யுடைத்து, வாகுவலயத்தைத் தள்ளிக் கொடிகளையறுத்து,

மார்புகளைப் பொத்தலாக்கி விட்டன. சேனைகளுஞ் சேனாதிபதிகளும் நிலைகலங்கி ஒன்றுந் தோன்றாமற் பிரமைகொண்டு நின்று போர் செய்வதற் கஞ்சினவராகித் தங்கள் யஜமான்களின் முகத்தைநோக்குவர். கணைகளாலறுப்புண்டு விழுவர். தொடைமுறிந்து மைநாக பர்வதங் கடலிற் சஞ்சரிப்பதுபோல் உதிர வெள்ளத்திற் புரளுவர். முள்ளம்பு தைத்துருவப்பட்டவர்களெல்லாம் வெய்யலி லகப்பட்ட புழுவைப்போலப் பதைத்துருகி விழுவர். இப்படி சேனைகள் அவகோலப் பட்டதைக் கண்ட அறுபதினாயிர மவுணரும் உகாந்த காலத்து மேகங்களைப் போலக் கர்ச்சித்து, அடா நரா! வருத்தமென்பதை அறியாத எங்கள் சேனைகளைக் கனவருத்தத்துக் குள்ளாக்கினை. உன்னைச் சித்திரவதை செய்கிறோம் பாரென்று கூறி, மாதலி மீதும் குதிரைகள் மீதும்-அர்ச்சுனன் மீதும் சரமாரி பொழிந்து அட்டகாசஞ் செய்தார்கள்.

அர்ச்சுனன் அவுணர் கணைகளையெல்லாம் அதமாக்கி, அஷ்டதிக்குப் பாலகரும் அஷ்டவசுக்களுங் கொடுத்த திவ்வியாஸ்திரங்களை எடுத்து வில்லில் தொடுத்து, தூப தீப நைவேத்திய முதலானவைகளை மனதாற் செய்து விட்டான். அம்மாத்திரத்தில் அதுகள் அந்தரத்தி லெழும்பிக் கோடையிடிகளைப்போ லார்த்து, நெருப்பைவாரிக் கொட்டிக் கொண்டு திக்குத் திசைகள் தத்தளிக்கும்படியாக வாக்கிரமித்து அவ்வவுணர்கள் மீது ஒரு பக்கம் மின்னல் - ஒரு பக்கங் காற்று-ஒரு பக்கம் மழை-ஒருபக்கம் பலபல ஆயுதங்களைச் சொரிந்து கொண்டு, அவுணர்களையும், அவுணர் சேனைகளையும் வளைத்துக்கொண்டு, ரதங்களைப் பிளந்து குதிரைகளைக்கொன்று, சாரதிகளை வெட்டி, குத்துக்காலை நறுக்கி, கொடியைத் துண்டித்து, வில்லை முறித்து, நாணியை அறுத்து, கவசத்தைப் பிளந்து, ஒரு நொடியிற் சேனைகளையும்-சேனாதிபதிகளையும்-அதமாக்கி, அவுணர்களைச் சல்லடைக் கண்கள் போலத் துளைத்து விட்டனன். அர்ச்சுனன் எய்த பாணத்தினால், அவுணர்கள் பூமியினின்று போர் செய்யச் சக்தியற்றவராகிக் குபீலென்று அந்தரத்தி லெழும்பி மேகத்தில் மறைந்து, தங்கள் மாய்கையால் இருளையுண்டாக்கி, அண்ட கடாகம் வெடித்திடக் கடுகடுத்த கர்ச்சனை செய்து, வேல்-வாள்-சூலம்-சத்தி-தோமரம்-பிண்டி-பாலம்-சக்கரம்- அக்கினியாஸ்திரம்-வாயுவாஸ்திரம் - குபேராஸ்திரம் - இடியாஸ்திர முதலியவைகளை மாரி போற்றூவி அட்டகாசஞ் செய்தார்கள். அர்ச்சுனன் அம் மோகாஸ்திரத்தால் இருளைப் போக்கி, அசுரர்கள் விட்டபட்ட அஸ்திரங்களையும், ஆயுதங்களையும் நடுபாதியிற் கண்டித்து, ஒன்று-பத்து-நூறு-ஆயிரம்-பதினாயிரம்-கோடி என்று சொல்லும் படியாக வளருங் கணைகளைத் தொடுத்து, அறுபதினாயிர மவுணர்களும் நிலைதளர்ந்துருகத் துளைத்து விட்டான். இவ்வாறு அர்ச்சுனன் செய்து வருகிற அமர் திறத்தைக் காலகேயர் கண்டு வெகுண்டு, இனி யிவன் நேரில் நின்று அமர் புரிவோமாகில் அரைமாத்திரையிற் கொல்வானாதலால், இவனை வஞ்சனையாற் கொல்லவேண்டுமென்று கருதி, ஓடிப்போனவர் போல் தங்கள் நகரத்தோடு மறைந்து விட்டார்கள். அதை அர்ச்சுனன் பார்த்து ஓ! ஓ! அவுணர் புறங்காட்டினரென்று பத்துத் திசைகளையும் நோக்கி நிற்கும்போது, அவுணர்கள் திரண்டு மறைந்து நின்று மாயாஸ்திர முதலிய அஸ்திரங்களை அளவற்றனவாகச் சொரிந்தார்கள்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வாறு கரவேக சரவேகத்தினால் வரும் அஸ்திரங்களுக்கு அர்ச்சுனன் பிரதி அஸ்திரம்விட்டு அறுத்துத்தள்ளி, மாயாஸ்திரத்துக்கு ஞானாஸ்திரத்தை விடுத்துப் பாழ்படுத்தி, அண்டரண்ட பிர்மாண்டமெல்லாம் நிறையப் பின்னும் பல கணை மாரி பொழிந்தும் சினமடங்காமல், மீண்டும் அஷ்டதிக்குப் பாலகரும் அஷ்டவசுக்களும் கொடுத்த அஸ்திரங்களோடு, முள்ளம்பு நாராச முதலியவைகளையும் அளவில்லாமல் தொடுத்துச் சங்கத்தொனி செய்தான். இதனால் எந்தத் திக்கிலும் இருந்த அசுரருக்கும் பிரமைதோன்றி, ஒரு தேர்வீரனாகிய வில்லாளி அறுபதினாயிரம் பெயராகிய நம்மைக் கைகாலாட வொட்டாமல் செய்ததுமன்றிக், கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்து, நாம் பொழிந்த அஸ்திர வருஷத்தையும் நாசப்படுத்தி, நம்மையும் சித்திரவதை செய்கிறான். வீரனென்றால், இவனே வீரனென்று மதித்து, யாவரும் ஒன்றாகத் திரண்டு பூமியில் வந்து எதிர் நின்று, தங்கள் தங்கள் கையிலிருக்கும் வில்லில் திவ்யாஸ்திரங்களையும் காலதண்டம்-சூலம்-சக்கிர முதலிய படைகளையும் ஏவினார்கள். அர்ச்

சுனன் அவைகளெல்லாவற்றையும் நாச
மாக்கி, அவர்கள் முன்போல் ஓடிப்போகா
திருக்கச் சரக்கூடிட்டுக் கணைமாரி பெய்தான்.
அக்கணைகளால் அவுணர்கள் நிலைகலங்கி கை
சோர்ந்து மெய் சோர்ந்து, ஓ! ஓ! ஒரு மானிட
னால் நமது வீரங் குலைந்து அவகோலம்படக்
காலம் நேரிட்டது. இதென்ன காலவித்தி
யாசமென்று மனதுக்குள் மதித்து யாவரும்
வீராவேசங்கொண்டு திரண்டு ஒரே முகமாக
மேலிட்டு, முள்ளம்பு - முகக்கணை - முத்தலைச்
சூலம் முதலியவற்றைச் சோணைமாரிபோலச்
சொரிந்து, தங்கள் அருமையான தவத்தால்
பெற்ற காலதண்டம் - வேல் - மந்திரவாள்
முதலியவை எடுத்தெறிந்து ஆர்ப்பரித்தார்
கள். அர்ச்சுனன் அவுணர் விடுத்த கணை
களையும் ஆயுதங்களையும் நாசப்படுத்தித்
திவ்யாஸ்திரங்களை எடுத்துத் தொடுத்து
அவரவர்களுடைய தேரைப் பொடியாக்கி,
சாரதிகளைக் கொன்று, வில்லை முறித்துக் கவ
சத்தைப் பிளந்து, யாவரையும் உதிரங் கக்
கும்படி நாராசங்களால் துளைத்துவிட்டான்.

அப்பால், அவுணரெல்லாம் நாராசத்தா
லுண்டாகிய உபத்திரவத்தை எவ்வளவும்
நினைக்காமல், காலாக்கினி ருத்திரரைப்போ
லச் சீறிக் கோபச்சிறிப்பு சிரித்து, பக்கங்க
ளில் தமக்கு உதவியாக வந்திருக்கும் க்ஷேமத்
தேர்களி லேறிக்கொண்டு, வில்லெடுத்து
வளைத்து நாணேறிட்டு டங்கார ஓசை யெழு
ப்பி அஷ்டதிக்குந் தத்தளிக்கக் கொக்கரித்து
அளவற்ற கணைகளை யெடுத்து வில்லில் தொ
டுத்து, யுகாந்தகாலத்து மேகங்கள் பொழி
வது போலச் சரவருஷம் பொழிந்து, சிங்க
நாத அட்டகாசத்தோடு சுற்றிலும் வந்து
வளைத்துக்கொண்டு, பின்னும் மணலைவாரி
இறைத்தாற் போலப் பற்பல விதமாகிய சர
மாரி பெய்தார்கள். அர்ச்சுனனும் - காலகேய
ரும் போர் செய்வதைப் பார்த்திருக்கிற தேவர்
களனைவரும் பிரமை கொண்டவர்களாகி; ஓ!
ஓ! அர்ச்சுனன் இருக்கிறவிடம் நமக்ககப்
படவில்லையே, இவன் அவுணர்கள் விடுத்த
கணைகளை எவ்வாறு வெட்டி இந்த மஹா பாத
கரை வெற்றியடையப் போகிறானென்று
ஏக்கங்கொண்டு, அர்ச்சுனன் இரதத்தையே
பார்த்திருந்தார்கள். அர்ச்சுனனோ? அவ்
வவுணருக்குச் சற்றேனும் அஞ்சாமல், அத
ராமல், பதறாமல், சஞ்சலப்படாமல், மாத
லியைக் குலாலன் சக்கரம்போலத் தேரை
நடத்த எச்சரித்து, தன் காண்டீபத்தில் அள
வற்ற திவ்யக் கணைகளை மந்திரோபதேசஞ்
செய்து மாரிபோற் சொரிந்துவிட்டுப், பின்
னுஞ் சில கணைகளைப் பிரசண்டமாருதம்
போற் பறக்கத் தொடுத்து விட்டான். முன்
விடுத்த கணைகள் அவுணர்கள் விடுத்த கணை
களை யெல்லாம் நடுவது பாதியிற் கண்டித்துத்
தேரை யுடைத்து, குடைகளை யறுத்து,
தேரிற்கட்டிய யாளிகளைக் கொன்று, சாரதி
யை யுமதமாக்கப் பின் விடுத்த கணைகள் அவ்
வவுணர்களை வளைந்துகொண்டு மகுடத்தை
உடைத்து, வில்லை முறித்து, கவசத்தைப்
பிளந்து, யாவரையுஞ் சல்லடைக் கண்கள்
போலத் துளைத்துவிட்டன. மஹா பராக்கிரம
சாலிகளாகிய அவுணர்கள் பின்னுமதிக உக்
கிரங்கொண்டு, இனி இந்த நரனை யமலோ
கத்திற் கனுப்பிவிக்கிறதே நமதாண்மை யெ
ன்று ஒருவர்க்கொருவர் வீராவேசங்கொண்டு
சபதங்கள் கூறி, மகா உக்கிரத்தோடு சிங்கங்
கள் பாய்ந்து வருதல்போல உடைவாளையுங்
கேடையத்தையுங் கைக்கொண்டு, அறுபதி
னாயிரம் பேர்களும் ஒன்றுபடக் கூட்டிக் கொக்
கரித்து வந்தார்கள்.

### அருச்சுனன் பாசுபதாஸ்திரப் பிரயோகஞ் செய்தல்

அப்படி வந்தவர்களைக் கண்ட அர்ச்சு
னன் குஞ்சிரிப்புக்கொண்டு, அவரவர்கள்
கையிலிருக்கிற கேடயங்களையுங் கத்திகளை
யும் பொடிப்பொடியாகப் போகும்படி அர்த்த
சந்திர பாணங்களை யேவி, அவர்கள் நிற்ப
தற்குஞ் சக்தியற்றவராகக் கணைமாரிகளையும்
பெய்தான். இப்படிக்குச் சற்றுஞ் சளையாமற்
போரிடுகின்றதை அவுணர்கண்டு மனம்பொங்
கிக் கை கால்களை யுதறிக்கொண்டு, இடையி
லிருக்கிக் கட்டியிருக்கிற கச்சையில் வரிந்து
கட்டியிருக்கிற கதாயுதத்தைக் கரத்திலேந்திக்
கரகர வென்று சுழற்றி அர்ச்சுனன் மீதெறிந்
தார்ப்பரித்து, மறுபடியும் இரதத்திலேறிக்
கவசம் பூண்டு, வில்லை யெடுத்து வளைத்து நா
ணேற்றி டங்கார ஓசை யெழுப்பி, அளவற்ற
கணைகளையுந் தூவினார்கள். அர்ச்சுனன் தன்
மேல் வருங் கதைகளையும்-கணைகளையும்-சர
வருஷத்தால் தடுத்து, பின்னும் அளவற்ற
கணைகளை மாரிபோற் றூவினான். அதனால்,
அவுணர் நிலைகலங்கி ரதத்தில் நிற்பதற்குஞ்
சக்தி யற்றவராகியும், வீரா வேசங்கொண்டு
கொக்கரித்து மறுபடியும், அத்தேரிலிருந்தே

வில்லை வளைத்துப் பாணங்களைத் தொடுத்தனர். உடனே அர்ச்சுனன் மறு பாணங்களால் அவ்வவுணர் ஏறிய இரதங்களைப் பொடிப் பொடியாக்கிச், சின்னாபின்னமாக அவர்களையும் நோகச் செய்தான். இப்படி அவுணர்களும் அர்ச்சுனனுங் கண்பொழுதேனும் ஓயாமற் போர் புரிந்தனர். இவ்விருவரும் அமர் புரிந்தனரென்று சொல்வதற்கு மாத்திரம் நாவெழுமேயன்றி, இவ்விருதிறத்தாரென்று சொல்வதற்கு யாவர்க்கும் நாவெழாது. இவ்விதமாக இருதிறவருங் காடு-மலை-வனம் வனாந்தரம்-கடல்-அந்தர லோகம்-அண்டம் என்று சொல்லும்படியான இவை யனைத்திலுஞ் சுத்திசுத்திப் போர் புரிந்தனர். இவ்வாறு போர் புரிகிறபோது அர்ச்சுனன் கைமிஞ்சி, அவுணர்களை யெல்லாந் தன் கணைகளால் ஒன்றுந் தோன்றவொட்டாமற் பிரமிக்கச்செய்து, இனி இவர்களை உயிரோடு வைக்கலாகாதென்று கருதித் தக்ஷணம் அப்புப் புட்டியில் கரத்தை வைத்துப், பாசுபதாஸ்திரத்தை எடுத்து வில்லில் தொடுத்து, தூபதீப பூசை நைவேத்திய மாதியை மனதாற் செய்து தொழுது விட்டனன்.

கேளும் மகாராஜனே! அர்ச்சுனன் வில்லிலிருந்து வெளிப்பட்ட பாசுபதாஸ்திரமானது மூன்று பிரிவான தலையை யுடையது. ஆறு தோளையுடையது. தலைகள் தோறும் விளங்கும் கண்களில் வடவாக்கினியும் நடுங்கிப் பதுங்கத் தீப்பொறி சிந்துகின்றது. விஷாக்கினிக் கொப்பானது. முற்காலத்தில் இந்திரன் மலைகளின் சிறகரிய எடுத்த வச்சிராயுதத்துக் கொப்பாகியதென்று உவமை கூறுவதல்லாமல், அக்கணைக்கு உவமையான தொன்றுமில்லை. அந்தப் பரமன் வாளியானது அந்தரமெல்லாம் பரவி, அநேக திவ்யாஸ்திரங்களை யுண்டாக்கி, அவுணர்களை வளைத்துக்கொண்டு, அவர்கள் மகர குண்டல ஆரகேயூர கடக கங்கணங்களையும்-மகுடத்தையுங்-கவசத்தையும்-பொடிப் பொடியாக்கிக் கைவேறு - கால்வேறு - துடைவேறு - தோள்வேறாகத் துண்டித்து, மஹா மேருவின் சிகரம் போன்றிருக்கின்ற சிரங்களை யறுத்துப் பூமியிற்றள்ளி, அவுணருயிரைத் தென்றிசைத் தலைவனாகிய யமனிடத்திற் செலுத்தி, வான நதியில் ஸ்நானஞ்செய்து முன்போல் அர்ச்சுனன் அப்புப் புட்டியில் வந்திருந்தது. அவுணர்கள் நாசமாகவே, அவர்கள் வாசஞ் செய்த பொன்னகரமும் மாயமாகி, தன்னைக் கொடுத்தவனாகிய கமலாசனக் கடவுளிடத்துச் சென்றொடுங்கியது. அவுணர்கள் சிரம் பூமியில் விழுந்த மாத்திரத்தில், அவர்களுடைய உடலிலிருந்து வெளிப்படும் உதிரமானது ஓர் பெருங்கடல்போற் பெருகிற்று. காளியும்-கூளியும்-களித்தன. நரிகளும்-நாய்களும் - அவுணர்களின் சதையைத் தின்று சலித்தன. சூரியனுஞ் சுரர்களுங் கண்டு மகிழ்ந்து பலவாறு புகழ்ந்தனர்.

அர்ச்சுனனை இலேசாக மதித்திருந்த மாதலி குதிரைக் கயிற்றைத் தேரிற்கட்டி எழுந்து நின்று, இரண்டு கரங்களையுஞ் சிரமேற் குவித்து அர்ச்சுனனைப் பார்த்து, ஓ விஜயப்பிரதாபா! ஓ தனஞ்சயா! ஓ ஆபத்பாந்தவா! ஓ திருமால் மைத்துனா! ஓ தேவேந்திரன் புத்திரா! ஓ மஹாராஜனே! முற்காலத்தில் இராவணனைச் சம்மாரஞ் செய்யவந்த தசரத ராமருக்குச் சாரத்தியஞ் செய்யத் தேவராஜன் எனக்குக் கட்டளையிட்டார். தைவீகத்தன்மையையுடைய அந்த ராமமூர்த்திக்குச் சாரத்தியஞ் செய்ததே என் மனதுக்குக் கனவருத்தமாயிருந்தது. தற்காலத்திலு மவ்விந்திரன் உமக்குச் சாரத்தியஞ் செய்யக் கட்டளையிட்டனர். அப்படி யிட்டபோது, என் மனம் உம்மை யலட்சியமாக எண்ணியிருந்தது. இப்போது வந்தெதிர்த்த நிவாத கவசரையுங் காலகேயரையு மதமாக்கிய உமது பராக்கிரமத்தைக் கண்ட மாத்திரத்தில் என்னுள்ளந் தனக்குத்தானே பொங்கி உண்மையை வெளியிட்டது. ஓ ஸ்ரீராமமூர்த்தியினு மதிக்கப்படும் விஜயப்பிரதாபா! என் பிழையைப் பொறுத்துக் காத்தருள வேண்டுமென்று பலவாறு புகழ்ந்து பணிந்தான். தேவர்கள் ஓவென்று கெக்கலிகொட்டி, நமது துயரம் இன்று நீங்கிற்று. நமக்கினிமேற் பயமில்லை. விஜயனென்கிற பெயர் இந்த மஹாநுபாவனுக்குத் தகுந் தகுமென்று புகழ்ந்து பல ஆசிகள் கூறி, தெய்வ கற்பகப் பூமாரி சொரிந்தார்கள். அப்பால், அர்ச்சுனன் அவ்வவுணர்மேற் கொண்டிருந்த கோபந்தணிந்து, காண்டீபத்தில் ஏற்பட்டிருந்த நாணைத் தளர்த்திச் சிறிதுநேரம் இளைப்பாறி யிருந்தான்.

காலகேயர்வதைச் சருக்கம் - முற்றிற்று.

ஐந்தாவது,

# அருச்சுனன்

## தேவேந்திரபோகச் சருக்கம்

### கண்ணன் துதி

பற்றறுப்பவர் பற்றிய பற்றினை பதத்தின், குற்றமற்றவர் கூடிய வின்பத்தைக் குறித்துக், கற்றகல்வியாற் காண்பதிற் காணுணுக் கருத்தை, முற்றுமாயதை யென்கொலோ யாமொழிவதுவே.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் சித்திரசேனன் தேரைவிட்டு இறங்கி, சொர்க்கலோகத்திற் சென்று இந்திரனைக் கண்டு வணங்கி, அர்ச்சுனன் நிவாதகவசரும் போர்புரிந்த திறத்தையும், பின்பு அந்தரலோகம் வந்ததும், வந்தவிடத்திற் காலகேயர் நகரந் தோன்றி அவர்களை எதிர்த்தமர் புரிந்ததும், முடிவில் அந்நிவாத கவசரையும், காலகேயரையும் மூன்றுகோடி அறுபதினாயிரமென்னும் கணக்கில் ஒருவனையேனும் ஒளித்துங் கூட யிராமல் கொன்றதையும், ஆதியோடந்தமாக எடுத்துக் கூறினன். அதுகேட்ட இந்திரன் மகிழ்வாகிய கடலிலாழ்ந்து தன்னை மறந்தவனுகி, பின்பு தெளிந்து முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள், அஷ்டவசுக்கள், திக்குக் காவலர்கள், உருத்திர கணங்கள் மற்றுமுள்ள அரம்பாஸ்திரீகள் யாவரும் வெளிப்பட்டு, அந்தரலோகத்தை கடந்து, அர்ச்சுனன் வருகிற வழியைப் பார்த்து எதிர்கொண்டு வந்தான். அர்ச்சுனன் மாதலியை எச்சரித்து, இரதத்தை சொர்க்கலோகத்துக்கு செலுத்த கட்டளையிட, மாதலி தேரை அந்தரத்தில் எழுப்பி நடத்த, இந்திரனும் நெருங்கினன். அர்ச்சுனன் தேரை நிறுத்தி இந்திரனை வணங்க, இந்திரன் புத்திரனை மார்புறத் தழுவி பல ஆசிகள் கூறிப் புகழ்ந்துரைத்து, தன்து இரதத்தை அவனிரதத்தோடு நெருங்கவிட்டு, பின்பு இருவருஞ் சொர்க்கலோகத்தை நோக்கி நடந்தார்கள். இவ்வாறு சொர்க்காதிபதியாகிய இந்திரனும், மண்டலாதிபதியாகிய அர்ச்சுனனும் நெருங்கி செல்கிறபோது, அந்தா துந்துமி திந்திந்திமியென சங்கொலி முழவொலி பம்பம்பம்மென இடக்கை உலக்கை-உறுமி-தம்பட்டம் - பம்பை - பேரிகை - மத்தளம்-முரசு முதலாகிய வாத்தியங்களை முழக்கி, யாவரும் ஒன்றாகத் திரண்டு மங்கல ஓசையோடு சென்று சொர்க்கலோகத்தருகில் வந்தார்கள். இந்திரன் தூதர்களை அழைத்துச் சொல்லுகிறான். ஓ தூதர்களே! என் பட்டத்துக்குரிய ஐராவதத்தை அலங்கரித்துக்கொண்டு வரும்படி பாகனுக்குச் சொல்லுங்களென்று கூற, தூதவர்கள்போய் பாகனுக்கு அறிவிக்க, அப்பாகன் ஐராவதத்தை அலங்கரித்துக்கொண்டு விரைவில் வந்தான். இந்திரன் தேவர்களையும் மற்ற முனிவர் முதலானவர்களையும் நோக்கிச் சொல்லுகிறான்.

ஓ அந்தரலோக வாசிகளே! எப்போதும் நமக்கு இடையூறு விளைத்து துன்பத்தைச் செய்துவந்த நிவாதகவசர்களையும் முப்புராதிகள்போலக் கொடுமை செய்துவந்த மகாப்பராக்கிரம சாலிகளாகிய காலகேயரையும் நாசப்படுத்தி, நமக்கு பெருவாழ்வளித்த இந்த மகாநுபாவனைத் திருவோலக்கத்தோடு நமது அரண்மனைக்கு அழைத்துப் போகவேண்டும்: வெள்ளையானையும் வந்திருக்கின்றது. அந்த வெள்ளை யானையின்பேரில் அவனை யேற்றித் திருவோலக்கஞ் செய்ய எனக்கு விருப்பமாகவிருக்கின்றது. ஆதலால், உங்கள் கருத்தென்னவென்று வினவ, தேவர்கள் மகிழ்ந்து, ஓ மகாராஜனே! தேவர்க்கரசனுகிய உம்மை எக்காலத்தும் புறங்கண்டு வந்த அசுரரை வெற்றியடைந்தமையால், இந்த மகாநுபாவனைச் சொர்க்காதிபதி யென்றே கூறவேண்டும். அப்படி கூறுவதல்லாமலுஞ் சொர்க்காதிபதியாகிய உமக்குரியவை யெல்லாம் இந்த மகாநுபாவனுக்குரியன. ஆகையால், தங்கள் கருத்தின்படியே எங்களுக்குஞ் சம்மதமாமென்று கூற, இந்திரன் தன்னருகில் இருக்கிற அர்ச்சுனனை அழைத்து, ஐராவதத்தில் வைத்து, தான் சுவேத அஸ்வத்திலேறியருகில் நின்றான். அர்ச்சுனன் ஐராவதத்தில் ஏறின மாத்திரத்தில், சப்தரிஷிகளு மிருமருங்கு நெருங்கி வேத மந்திரங்களைக் கூறி, பல ஆசிகள் வழங்கினர். தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவான் அருகிலிருந்து வாழ்த்தினர். சூரியன்-சந்திரன்-செவ்வாய்-புதன்-வெள்ளி-சனி-ராகு-கேதுவாகிய நவக்கிரகங்களும், ருத்திர கணங்களும், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும், அஷ்டவசுக்களும், கின்னரர்-கிம்புருடர்-கருடர்-காந்தருவர்-சித்தர்-வித்தியாதரர் - தேவ

மாதர்-அப்சரஸ்திரீகள் முதலாகிய அந்தர லோக வாசிகளெல்லாம் வந்து சூழ்ந்து, அக்ஷதைகளையுங் கற்பகப்பூவையுஞ் சொரிந்து, ஜெயா விஜையாவென்று பல ஆசிகள் கூறினர். மேனகையும் ஊர்வசியும் நடிக்க, திலோர்த்தமையும் அரம்பையும் பாட, சகல வாத்தியங்களும் அண்டங்கள் அதிர முழங்கவும், யாவரும் மனக்களிப்புடன் அர்ச்சுனனை சூழ்ந்துவர, பாகனை எச்சரிக்க, பாகன் ஐராவதத்தை எச்சரித்தனன், புண்ணிய சொரூபமாகிய ஐராவதம் பரமனைக் கண்ணாரக் கண்டு, அப்பரமன் திருவுருவத்தோடு தன்னுருவம் கலக்க ஆலிங்கனஞ் செய்துகொண்ட அர்ச்சுனனைச் சுமக்கப்பட்டதே நமக்கு மேலான தவப்பயனென்று கருதி, இரண்டு கண்களிலும் ஆனந்தநீர் ததும்ப அதிக மகிழ்வோடு அர்ச்சுனனை அசையாமல் இருக்கச் சுமந்து பூர்ண கர்ப்பவதி நடப்பதுபோல் நடந்து, சொர்க்கலோக வீதிகளிற் பிரவேசித்துத் திருவோலக்கம் வந்தது.

## அருச்சுனனை அலக்ஷியஞ்செய்த யக்ஷன் பின்பு அடங்கித் துதிசெய்தல்

கேளும் மகாராஜனே! வெள்ளை யானையின்பேரில் திருவோலக்கம் வரும் அர்ச்சுனனைக் கண்ட தேவரும், தேவமாதரும் பரமாநந்தத்தை யடைந்தவராகிப் பலவாறு புகழ்ந்து வந்தார்களென்று சொல்வதே யல்லாமல், அவர்கள் புகழ்ந்துரைத்ததை இரண்டாயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனும் சொல்லத் தக்கதல்ல. அவ்வாறு திருவோலக்கம் வருகிற தருணத்திற் கல்வி கேள்வியிலொன்று மிகவுஞ் சிறப்புற்று யக்ஷரிலொருவன் இந்திரனை நெருங்கி வணங்கிச் சொல்லுகிறான். ஓ தேவராஜனே! உலகங்களுக்கெல்லாந் தாழ்ந்த மண்ணுலகாதிபதியாகிய ஒரு நரனுக்கு இவ்வளவு சிறப்புச் செய்தல் தகுதியாவென்று வினவினன். அதைக்கேட்ட இந்திரன் கடுஞ்சினமடைந்து, இரண்டு கண்களிலுங் கோபத் தீச்சொலிக்க உருட்டி விழித்துச் சொல்லுகிறான்: ஓ யக்ஷகா! உன் உருவத்தை நோக்கினால் மாத்திரந் தேவரிலொருவனென்றெண்ணத்தக்கதாக இருக்கின்றதே யன்றி, உன் புத்தியை நோக்கினால் தாழ்ந்த உலகத்திலிருக்கிற மானிடருக்குண்டாகிய புத்தியைவிடத் தாழ்ந்ததாக இருக்கின்றது. ஏனென்றால், நரனானவன் என் கண்போலிருக்கின்ற காண்டாவனத்தைத் தகிப்பனோ? அதற்காக நான் போர் செய்தால் என்னையும் என் சேனைகளையும் புறங்கண்டது மன்றி, என்னாலேவப்பட்ட மேகங்கள் பொழிந்த நீரை அக்காண்டாவனத்தில் விழவொட்டாமற் சரக்கூடிட்டு மேகங்களை பங்கப்படுத்துவனோ? கைலாசபதியாகிய சாம்பமூர்த்தியோடு விற்போர் மாத்திரமல்ல, கட்டிப் புரண்டு உருளும்படியாகிய மற்போரு புரிவனோ? ஒருவராலுங் காணக்கூடாத பரமனைக்கண்டு, பரமன் திருமேனியுந் தன்மேனியும் பொருந்த ஆலிங்கனஞ் செய்வனோ? பெறுதற்கரிய பாசுபதாஸ்திர மாத்திரமல்ல, சகல தேவாஸ்திரம் பெறுவனோ? அக்கினி பகவானிடத்தில் அழியாத தேரும், அருத நாணியும், ஒடியாத வில்லும் பெறுவனோ? சொர்க்கலோகத்தில் வந்து என்னாற் சுமக்கப்படாதிருந்த பிரமன் கொடுத்த மகுடத்தைத் தாங்குவனோ? என்னாலும் மூவராலும் வெல்லக்கூடாத முக்கோடி அவுணர்களாகிய நிவாதகவசரையும், அறுபதினாயிரம் பெயராகிய காலகேயரையும் எதிர்த்து, அவர்கள் பெற்ற திவ்ய வரங்களையும் நாசமாக்கி, யாவரையுந் தென்றிசைக் கடவுளாகிய யமனிடத் தொப்புவித்து, எனக்கும் அந்தரலோக வாசிகளாகிய யாவர்க்கும் பெருவாழ்வளிப்பனோ? இவற்றையெல்லாங் கேட்டுச் சிலவற்றைக் கண்ணாரக்கண்டும், அஞ்சாநெஞ்சுபடைத்து என்னருகில் வந்து, சகல கலைகளையுங் கற்றுணர்ந்த நாவால் இந்த மஹாநுபாவனை நரனென்று குறித்து இகழ்ந்தனை இனி இந்தப் புருஷோத்தமனைக் குறித்து ஒன்றும் வசனிக்காம லிருப்பதே உனக்கு அழகென்று கூறிப் பின்னுஞ் சொல்லுகிறான்:

ஓ யக்ஷா! பூமிபாரம் நீக்க ஆதிகடவுளாகிய திருமால் அவதாரஞ் செய்ததுபோல் நமது துயரமும், அப்பூமி பாரமும் நீங்க அவனே மற்றொன்றான இந்தத் திருவுருவங் கொண்டானென்று கூற, இந்திரன் வழங்கிய சொற்களைக் கேட்ட யக்ஷன் அர்ச்சுனன் பராக்கிரமத்திற்குந் தபோபலத்திற்கு மகிழ்ந்தவனாகி, ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமாக இருந்துவிட்டான். இந்திரன் தன் புத்திரனாகிய அர்ச்சுனனைச் சிறப்பான திருவோலக்கத்தோடு வீதியை வலம்வரக் கொண்டுவந்து, தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று, கொலுமண்டபத்திலிருக்குங் கோடிசூரியப்பிரகாசமாகிய சிங்காதனத்திலிருத்திச் சிறப்பு செய்தான். மற்ற முனிவருந் தேவர்களும்

இந்திரனுக்குரிய மரியாதைகளை அர்ச்சுனனுக்குச் செய்தனர். அர்ச்சுனன் தனக்குச் சிறப்பு செய்தவருக்கெல்லாந் தானுஞ் சிறப்பு செய்து மகிழ்ச்சியோடு இருந்தனன். கேளும் மஹாராஜனே! அந்தரலோக வாசிகளாகிய தேவர்க ளனைவரும் தாங்களரிதிற் பெற்ற திவ்யாஸ்திரங்களை அர்ச்சுனனுக்குக் கொடுத்தும், திவ்ய மந்திரங்களை உபதேசித்தும் மகிழ்வுற்றார்கள். இந்திரன் சித்திரசேனனால் நிவாதகவசர் போரையுங் காலகேயர் போரையுங் கேட்டதுமன்றித், தன் சாரதியாகிய மாதலியாலும், அர்ச்சுனன் செய்த போர்த்திறத்தைக் கேட்டு, மிகவு மகிழ்ந்து தன்னை மறந்தவனாகி, அர்ச்சுனனைப் பலவாறு புகழ்ந்து தன் மனதிற்குள் தானே மகிழ்ந்துக் கொண்டான். தேவசிங்காதனத்தி லிருந்த அர்ச்சுனன் எழுந்து தன் பிதாவாகிய இந்திரனை வணங்கிச் சொல்லுகிறான்: ஓ ஐயா! தமியேன் என் சகோதரர்களைப் பிரிந்து நெடுநாளாயிற்று. நான் தவத்துக்கு வந்ததும், நாடி வந்த பொருளை யடைந்ததும், என் சகோதரர்களுக்குத் தெரியாது. என் தமையர் தம்பிமார்கள் என் பேரிற் கருத்தைச் செலுத்தி வருத்தமுற் றிருப்பார்கள். அவர்கள் வருத்தம் நீங்கவும், என் மனம் மகிழ்வுறவும் விடை கொடுத்தால், யான் என் சகோதரர்களி னிடத்துக்குச் செல்லுகிறேனென்று கூறி விடை கேட்டனன்.

அருச்சுனன் பரதசாஸ்திரம் பயிற்றல்

இந்திரன் இப்படி வணங்கிக்கூறி விடை கேட்ட விஜயப்பேர் படைத்த மைந்தனை முகத்தோடு முகம் வைத்து ஒத்திக்கொண்டு, தனது மார்புறத் தழுவிச் சொல்லுகிறான். அப்பா புத்திரசிகாமணி! எனக்குச் செய்த உபகாரத்துக்கு உன்னை இந்த உலகத்தை விட்டுப் போகவொட்டக்கூடாது, நீ தமயன் தம்பிமார்களைப்பார்க்க ஆவல்கொண்டிருக்கின்றமையால், அந்த ஆசையையுங் கெடுக்கொணாது. இதுவரைக்கும் எங்களுக்கு உபகாரஞ் செய்தனை. இனி உனக்கு நடக்கவேண்டியதற்கு ஒரு பொருள் வேண்டி யிருக்கின்றது. அது ஒருநா ளிரண்டு நாளிற் சம்பாதிக்கப்பட்டதல்ல. சில நாளிருந்து சம்பாதித்துக்கொள்ள வேண்டும். அஃதென்னெனில்; துரோணாச்சாரியார் கட்டளைப்படி பன்னிரண்டு வருஷம் வனவாசஞ் செய்து ஒரு வருஷம் அஞ்ஞாத வாசமுஞ் செய்யவேண்டி யிருக்கிறது. அஞ்ஞாதவாசத்துக்கு நீங்க ளைவரும் வேறு வேறு ரூபந் தரிக்கவேண்டி யிருக்கின்றது. அந்த ரூபத்தில் உனக்கு ஊர்வசியாற் பேடிரூபம் வந்திருக்கின்றதே, அந்த உருவத்தை நீ யடையப்போகிறாய் அதற்குத் தகுந்த செய்கை இருக்கவேண்டு மல்லவா? அந்த ரூபத்துக்குத் தகுந்த செய்கை பரதநூல்; அந்நூலைக் கற்று அதனைப் பிறருக்குக் கற்பிக்கவேண்டும். ஆதலால் உனக்குப் பேடிரூபம்வரச் சாபமிட்டு, நினைத்தபோது வரவும் நீங்கவும் வரங்கொடுத்த ஊர்வசியு மதிக்கும்படியாக, நீ சில நாளிருந்து என்னிடத்தி லிருக்கிற நாரதர் தும்புருவராலே அந்தப் பரத சாஸ்திரத்தைக் கற்க வேண்டும், உன் விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாகச் சொல்ல, உன் தமயர் தம்பியரிடத்திற்கு உரோமசன்மரை அனுப்பிவிக்கிறேனென்று கூறி, தூதுவரால் நாரதர் தும்புருவரை அழைப்பித்து, அர்ச்சுனனுக்குப் பரத சாஸ்திரத்தைத் தெளிவுறக் கற்பியுங்களென்றுக் கட்டளையிட்டு, காட்டிற் சஞ்சரித்துத் துன்பமுற்ற அர்ச்சுனன் மகிழ்வுற ஐயாயிரம் போகமாதரைக் கொடுத்து, ஒரு திவ்ய அரண்மனையுங் கொடுத்தான். அர்ச்சுனன் இந்திரனளித்த போகமாதரைத் தடுக்காம லேற்றுக் கொண்டவனாகிக் கருத்தில் அன்னைகள்போல் மதித்து, மேலுக்கு லீலா விநோதனைப்போல் அபிநயித்து, முனிவர் கற்பிக்கும் பரதநூலிற் கருத்தைச் செலுத்தி, இரவும் பகலும் அந்த நூலின் கருத்தையும், அதற்குத் தகுந்த நாட்டியத்தையுங் கற்றுவந்தான். இந்திரன் தன் சபையிலிருக்கிற உரோமசன்மரை அழைத்துச் சொல்லுகின்றான்.

ஓ முனிநாதா! ஐம்பூதமிருந்து உடலைப் பயனுறச் செய்வதுபோல், ஐவரும் ஒன்றாயிருந்து பயனுற்றிருந்தார்கள். திரிதராஷ்டிரன் புத்திரனாகிய துரியோதனனால், ஐவரும் நாடு நகரத்தைவிட்டுப் பரிவாரகி வனவாசஞ்செய்ய வந்தார்கள். வந்தவிடத்தில் வேதவியாசர் வந்து ஐவரைக் கண்டு, அவர்கள் கூறிய துன்ப மொழியைக் கேட்டுச் சத்துரு சங்காரஞ் செய்ய ஐவருள் அர்ச்சுனனைத் தவத்துக் கனுப்பினர். அர்ச்சுனன் தவஞ்செய்து பாசுபதாஸ்திரம்பெற்று, நமது துன்பமெல்லாம் நீங்கச் சொற்கலோகம் வந்து நிவாதகவசரையும் காலகேயரையும் அதமாக்கி, எனக்குச் சொற்காதிபத்தியத்தைக் கொடுத்தான். வருத்தமுற்ற அர்ச்சுனன் சில

நாள் இங்கிருந்து சுகத்தை அனுபவிக்க வேண்டி யிருக்கின்றது. ஆதலால், நீர் மண்ணுலகத்திற் சென்று வனத்திலிருக்கும் தருமராஜன் முதலான நால்வரையுங் கண்டு, அர்ச்சுனன் தவத்துக்குச் சென்றதுமுதல் நிவாத கவச காலகேயரை அதமாக்கித் தேவசிங்காதனத்தி லிருக்கிற பரியந்தம் நடந்த சரித்திரத்தை விபரமாக எடுத்தோதி, அவர்களுடன் நீருஞ் சிலநாளிரும். நான் அர்ச்சுனனை அழைத்துவந்து தருமராஜனிடத்து ஒப்பிவிக்கிறேன். நீர் மண்ணுலகத்திற்குச் செல்லுமென்று கூற, உரோமசன்மர் மனமகிழ்ந்து விடைபெற்று, அர்ச்சுனராஜனிடத்துக்கு வந்து, அவன்செய்த வந்தன வழிபாட்டை ஏற்றுப் பல ஆசிகள்கூறி விடைபெற்று, மண்ணுலகத்திற்கு வருவதானார். இங்கே தருமராஜன் முதலான நால்வரும், ஒப்பில்லாத பாஞ்சாலியு மிருக்கின்ற இயல்பைச் சொல்லுகிறேன் கேளும்.

அருச்சுனன் தேவேந்திர போகச்சருக்கம்
முற்றிற்று.

---

ஆறுவது,

## உரோமசமுனிச் சருக்கம்

### கண்ணன் துதி

ஸ்ரீதரனை வெண்சங்கந் திகிரிகரந் தரித்தானைப், பூதரனைப் பூதகியைப் பொருந்தி யுயிர்மாற்றினனை, வேதரனை வேதாந்தவேதியனை வெற்பருண்மின், சோதரனை யாதரவாற் சொற்றவரே கற்றவரே.

ஓ மகாராஜனே! அர்ச்சுனன் இந்திரலோகத்தி லிருந்து பர்தசாஸ்திரங் கற்றுக்கொண்டு மகிழ்வுற்றிருக்கிறான். இங்கே தருமராஜன் முதலான நால்வரும் மாதுசிரோமணியாகிய பாஞ்சாலியும், அர்ச்சுனன் தவவேடங்கொண்டு தங்களைவிட்டுப் பிரிந்த நாள் முதல் மனம் வேறுபட்டு, நம்மை விட்டுத் தவத்துக்குச் சென்ற அர்ச்சுனன் கொடிய வெம்பரற் காட்டிற் சென்றானோ? அல்லது வனம் வனந்திரங்களைக் கடந்து வெள்ளியங்கிரிக்கே சென்றானோ? அங்கு மெய் - வாய்- கண்-மூக்கு-செவி இவ்வழியாக ஐம்புலனையு மடக்கி யரிய தவஞ் செய்கிறானோ? ஒருவேளை பஞ்சாக்கினி மத்தியில் நின்று சாம்பவமூர்த்தியின் திருவடிகளைத் தியானிக்கின்றானோ? சொற்காதி புவனத்துள்ளோர்க்கும் அருமையான சாம்பவமூர்த்தி அவனுக்கு அன்பு கூர்ந்தாண்டாரோ? என்னமோ; யாதொன்றுந் தெரியவில்லையே என்று யெண்ணி ஏக்கங்கொண்டு, அன்று முதற் பண்டு பலாதிகளின்மேற் கருத்தைச் செலுத்தாமல், தூக்கமின்றி, அர்ச்சுனா! அர்ச்சுனா! என்று புலம்பிக் கொண்டிருந்தார்கள். அத்தருணத்திற் காவிகாம்பர தண்டு கமண்டல தாரியாகிய உரோமசன்மர் மண்ணுலகத்தை நோக்கி, ஐவரிருக்கிற காமியவனமடைந்தார். நெடுந்தூரத்தில் வரும் உரோமசன்மரை ஐவர் கண்டு திடுக்கென்றெழுந்து, யாரோ ஒரு மஹாத்மா வருகிறார். அவரைக் கண்டு தரிசித்தால் நமக்குண்டாகிய துன்பத்துக்கு ஒரு வழி யுண்டாகும் என்று கருதினவர்களாய் யாவரும் எதிர் சென்று, உரோமசன்மருக்குச் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு அழைத்து வந்து தருப்பாசனம் அளித்து இருக்கச் சொல்லி, சோடசோபசாரஞ் செய்து வணங்கி எழுந்தெதிர் நின்று, ஓ மாதவா! ஓ தவசிரேஷ்ட சிலாக்கிய மகாநுபாவா! நாங்கள் செய்த தவப்பயனோ? இந்த வனத்திற்குரிய மகத்துவமோ? மற்ற யாது காரணத்தினாலோ தற்செயலாய்த் தேவரீர் வந்து அடியேங்கட்கு அடிகளுடைய தரிசனங் கடாக்ஷித்தது. ஓ சுவாமி! நாங்கள் நாடு நகரத்தை இழந்ததுமன்றி உயிர்க்குயிராகிய எங்கள் சகோதரனிலொருவனை யிழந்து கனவருத்தமுற் றிருக்கிற தருணத்தில், வாடிய பயிருக்கு மழையுண்டானதுபோலத் தரிசனுங் கொடுத்தருளினீர். ஓ மகாத்மாவே! நாங்கள் செய்த பாக்கியமே பாக்கிய மென்று பலவாறு துதித்து நின்றனர். அதற்கு உரோமசன்மர் மனமகிழ்ந்து, ஐவரையும் வருத்தப்பட வேண்டாம் என்று ஆதரித்து, நல்லவர்களுக்கு எப்போதும் நன்மையுண்டாகும் என்று வாழ்த்திப் பல ஆசிகள் கூறித் தருமன் முதலான நால்வரையு மிருக்கும்படி கட்டளையிட்டு மாதுசிரோமணியைப் பார்த்து, ஓ அம்மணி! நீயுமிரு தாயே யென்று இனிய வார்த்தை சொல்லித் தருமராஜனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

ஓ மஹா மண்டலேஸ்பரனான தருமநந்தனா! நான் இந்திரலோகத்தி லிருக்கிறவன். என் பேர் உரோமசன்மன் என்று சொல்லுவார்கள், உங்களிடத்துக்கு என்னைச் சொற்

காதிபதியாகிய இந்திரன் அனுப்பினன். நான் வந்ததற்குக் காரணமென்னெனில், உன் சகோதரனுடைய சரித்திரத்தைச் சொல்ல வந்தேன். அதனைக் கேளுங்கள் என்று கூறிச் சொல்லுகிறார். ஓ மஹானுபாவா! உன் சகோதரனாகிய அர்ச்சுனன் வியாச பகவானிடத்தில் மந்திரோபதேசம் பெற்றுத் தவவேடங்கொண்டு உங்களை விட்டுப் பிரிந்த பின்பு, காடு-மலை-வனம்-வனாந்தரங்களைக் கடந்து வெள்ளியங்கிரியிற் சென்று, அவ்வெள்ளியங்கிரியின் தென்பக்கத்தில் தவநிலையொன்றியற்றி பஞ்சாக்கினிமத்தியில் நின்று, பரமனைக் குறித்துச் சருகு முதலியவைவையும் நீக்கி ஐந்துவருஷகாலம் அருமையான தவம் செய்தான். இந்திரன் அவன் தவநிலையறிய மேனகை-அரம்பை-ஊர்வசி-திலோர்த்தமை-என்கிற நான்குமாதரை யனுப்பிச் சோதித்து, பின்பு தானே பிராமணரூபமாக வந்து சித்தங் கலங்கச் சிலவசனம் வசனித்தும், அர்ச்சுனன் கலங்காச் சிந்தையை வகித்திருப்பதைக்கண்டு வாழ்த்திப் போயினன். பின்பு நாரதர் அர்ச்சுனன் தவஞ்செய்தலை துரியோதனனுக்குத் தெரிவிக்க, அத்துரியோதனன் அர்ச்சுனனைக் கொல்ல மூகனென்னு மசுரனைப் பன்றியாகச் செல்லென்று கூறினன். மூகனென்னும் அசுரன் பன்றியாகி அர்ச்சுனன் தவநிலைக்கு வருகிற தருணத்தில், பாதரக்ஷகராகிய பரமன் அர்ச்சுனனைக் காப்பாற்ற அன்பு பெருகி வேடுவரூபந் தரித்து, அப் பன்றியைத்தேடி அதை யெய்தார். அர்ச்சுனனுஞ் சித்தத்தைச் சிவன்பால் நிறுத்தி, அப்பன்றியால் தனது தவத்துக் கழிவு வராமலிருக்கத் தன் வில்லை வளைத்து ஒரு பாணம் எய்தான். இந்த இரண்டு பாணமும்பட்டு அம் மூகாசுரனென்னும் பன்றியிறந்தது. வேடுவனாகிய பரமன் அர்ச்சுனனோடு துர்ப்பாஷை கூற, அர்ச்சுனன் சிவத்தைத் தியானித்து வேடுவனோடு தவநிலையி லிருந்தபடியே போர்புரிந்து, பரமசிவமாகிய வேடுவனணிந்த மயிற்பீலி முடியைத் தள்ளினன். அதற்குப் பரமன் மகிழ்ந்து, கோபமுற்றவரைப்போலச் சில கணைகளைத் தொடுத்தார். அர்ச்சுனன் அக்கணைகளைக் கண்டதுண்டமாகக் கண்டித்துச் சரவருஷம் பொழிந்தான். அதுகண்ட பரமேஸ்வரி திடுக்கிட்டும், அர்ச்சுனன் கரவேக சரவேகத்துக்கு மகிழ்ந்தனள். தேவர்கள் களிப்புற்றனர். வேடுவனாகிய ஐயனுமகிழ்ந்து அவன் உயிர்மல்விட வருங் கணைகளை நோக்கினர். அவைகளெல்லாம் அவர் புறத்தில் வீழுந்தன. பின்பு வேடர்பிரான் அர்ச்சுனன் சித்தவிர்த்தியின் வலுவை அறியச் சில கணைகளை விட்டு அவன் மார்பைத் துளைத்தார். அதனால் அர்ச்சுனன் மனந்தளர்ந்து தன் இருதயத் திருத்திய பரமசிவனிடத்து முறையிட்டு, மடித்தகாலைப் பூமியில் வைத்துக் கடவுளைக் குறித்துப் புலம்பி ஒரு மரத்தடியில் நின்றான். பார்வதிதேவி பரமசிவனுக்குக் கிருபை வரும்படி வேண்ட, பரமன் கிருபைகூர்ந்து முன்போல் அர்ச்சுனன் பலமடையக் கடாக்ஷித்தார். உடனே அர்ச்சுனன் சித்தத்தைச் சிவன்பால் நிறுத்தி மீண்டும்வந்து அவ்வேடுவராஜனோடு விற்போர்புரிந்தனன். அவ்வேடராஜன் வில்நாணியை அறுத்து விட்டார். உடனே அர்ச்சுனன் சினங்கொண்டு, நாணியறுந்த காண்டீபத்தைக் கதையாகக்கொண்டு, பரமனாகிய வேடுவத்தலைவன் முடியில் மோதினன். அந்த அடி திரிலோகங்களிலுள்ள சகல ஜீவாத்மாக்களுந் தாமாயிருப்பதை யறிவித்தவாறுபோல எவ்வுயிர்க்கும் பட்டது. அக்காலத்து நீங்களுஞ் சகித்து வியப்புற்றிருப்பீர்கள். இவ்வுலகத்தினர் அறிவித்தா லறியத்தக்க கிஞ்சிக்ஞாளானபடியினாலே அதன் வரலாற்றை யுணர்ந்திலர்.

ஓ மகானுபாவா! படைத்தாலும் இவ்வகைப்பட்ட சகோதரனைப் படைக்கவேண்டும். இப்படியாக இருவரும் விற்போர் புரிந்தபின் மற்போர் செய்யத் தனித்து, ஒருவரையொருவர் கட்டிப்புரண்டு, முடிவில் அச்சிவவேடுவன் தனது காற் பெருவிரலால் அவனையேந்தி யந்தரத்தில் எறிந்தார். அப்போது பூமியில் விழுந்தால் அவனுக்கு வருத்தமில்லாதிருக்கப் பார்வதி கேட்டுக்கொள்ள, வேடுவராஜன் அவ்வாறே கிருபைபுரிய, பூமியில் விழுந்த அர்ச்சுனன் மறுபடியும் போர்புரிய யத்தனித்து வேடுவனைப் பார்த்தான். அப்போது வேடுவனும்-வேடுவச்சியும்-மற்ற வேடுவச் சேனையும் மாயமாக மறையவே, அர்ச்சுனன் தியங்கி மயங்கிப் பிரமித்து நின்றான். அத்தருணத்தில் கைலாசபதி ரிஷபவர்கனரூடராய்ப் பார்வதியோடு தரிசனமாகி அர்ச்சுனனை ஆலிங்கனஞ் செய்து வாழ்த்திப் பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்து, வில்-நாணி-வச்சிரமுடி-முதலியவையுங் கொடுத்தார். பரமனோடுவந்த தேவர்களனைவருந் தங்கள் தங்கள் பெயரால் விளங்கும் பல அஸ்

திரங்களைக் கொடுத்தார்கள். பரமன் அர்ச்சுனனை வாழ்த்தி வந்த தேவகணங்களோடு கயிலைக்கெழுந்தருளினார். பின்பு இந்திரன் அர்ச்சுனனைச் சொற்கலோகத்துக் கழைத்துக்கொண்டுபோய் மகுடாபிஷேகஞ் செய்து, கிரீடி யென்று நாமதேயம் அளித்து, தனக்கு இடையூறுண்டாக்குங் காலகேய நிவாதகவசர் மேற் போருக் கனுப்பிவித்தான். அளக்கரிய ஆற்றலைப் பெற்ற அவ்வவுணரோடு தானொருவனே யெதிர்த்து வெற்றி பெற்று, இந்திரனுக்கு இனி என்றும் அவுணர் பயமில்லாத பெருஞ் செல்வமளித்து, இப்போது அவனை வழிபட்டுத் தொழும்படியான பரிசனங்களெல்லாந் தன்னை வழிபட்டுத் தொழும்படியாக இந்திராசனத்தி லிருக்கிறான். இந்தச் சேதி உங்களுக்குத் தெரிவிக்க என்னை இந்திரன் அனுப்புவித்தான். அவன் அர்ச்சுனனை உங்களிடத்திற் கொண்டு வந்து விடுகிற பரியந்தம் என்னை உங்களிடத்தில் இருக்கக் கட்டளையிட்டான் என்று கூறினர். உரோமசன்மர் வழங்கிய சொற்களைத் திரௌபதி முதலிய ஐவருங் கேட்ட மாத்திரத்தில், உடல் முழுது முரோமாஞ்சிதம்பூப்ப அவர்கள்கொண்ட களிப்பை என்னென்று சொல்லுவேன்? எழுந்தாடுவார், துள்ளுவார், பேரானந்த மடைந்தவர்போல இன்பமேலிட்டுப் பேச்சின்றியிருப்பார், உரோமசன்மரைப் பலதரம் புகழ்வார், துதிப்பார், இவ்வாறு அளவற்ற மகிழ்வடைந்தவராகி, உரோமசன்மரை மிகவும் பூசை செய்து, வாழ்த்தித் துதித்து வணங்கினர். உரோமசன்மர் மகிழ்வுற்று அவர்களோ டிருந்தனர்.

### நளச்சக்கிரவர்த்தி கதை

கேளும் மஹாராஜனே! தருமராஜன் முதலான நால்வருந் துரோபதையும் உரோமசன்மருடைய கிருபா நோக்க முற்றிருக்கிற நாளில், ஒரு நாள் தருமராஜன் நாடுநகர முதலியவற்றைச் சூதிலிழந்ததையும், வனம் வந்ததையும் நினைத்து, மனவருத்த முற்றிருந்தார். உரோமசன்மர் தருமராஜனது முகவாட்டத்தைக் கண்டு, ஓ தருமபூபதி! சூரியனைக் கண்ட தாமரை மலர்போல் மலர்ச்சியாகயிருக்கும் உமது முகமானது இப்போது வாட்டமுற்றிருக்கின்றதை நோக்கினால், மனதில் ஏதோ கிஞ்சித்து வருத்தமுற்றிருக்கிறதாகத் தோன்றுகிறது. அஃதென்னென்று வினவ, தருமராஜன் அவரை வணங்கிச் சொல்லுகிறார். ஓ ஸ்வாமி! என்னொருவனால் என் சகோதரரும் பாஞ்சாலியுஞ் சுகமென்பதை யறியாதவராகிக் கன வருத்தம் அடைந்து வருகிறார்கள். அவர்கள் கருத்தின்படி இந்திரப்பிரஸ்தத்தில் தானே யிருக்காமல் அத்தினபுரத்துக்கு வந்து, பெரிய தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணவேண்டிச் சகுனியோடு சூதாடி, நகரத்தைத் தோற்றுப் பராரியாகி வனத்துக்கு வந்துவிட்டேன். இதனை நினைக்கும்போதெல்லாம் என் மனம் அனலிடுமெழுகுபோல் உருகிப் போகின்றதென்றுகூற, உரோமசன்மர் குறுநகைகொண்டு சொல்லுகிறார். ஓ தருமநந்தனா! நன்மையுந் தீமையும் நம்மால் வருகிறதென்று நீர் நினைக்கவேண்டாம். பிராரத்துவத்தினாலுங் காலவித்தியாசத்தினாலும் நடக்கும். ஆதலால், நீரதற்காக மனவருத்தமுறுகிறது தகுதியல்லவென்று கூற, தருமன் வணங்கிச் சொல்லுகிறார். ஓ ஸ்வாமி! தாங்கள் சொல்வது உண்மைதான். ஆகிலும் விளக்கைப் பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுந்தவர் போலச் சூதென்று தெரிந்திருந்தும் நான் சூதாடி, நாடு நகர முதலியவற்றை யிழந்தேன். அதனை நினைக்கில் என்மனமே என்னை நகைக்கிறதென்று கூற, உரோமசன்மர் சிரித்துச் சொல்லுகிறார். ஓ தருமநந்தனா! நீர் சகல சாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்திருப்பதன்றி, பெரியோர்களுடைய கேள்விகளென்னு மமுதத்தினால் எக்காலத்துங் குறைவுபடாமல் நிறைந்திருக்கிற சித்தத்தையுடையவர். உமக்குச் சூதாடினது பெருங் குற்றமாகத்தோன்றினது எனக்கு ஆச்சரியமாக யிருக்கின்றது. ஏனென்றால், சூதினால் வாழ்வை யிழந்து விடுகிறது உலகத்திற் சகசமாக இருக்கின்றது. அதற்குத் திருஷ்டாந்தஞ் சந்திரகுலத் திலகனான நளனே போதுமான சாக்ஷியாக இருக்கிறான். அந்த நளன் சரித்திரத்தை இதுகாறும் நீர் கேட்டிலையோவென்றார். அதற்குத் தருமன் வணங்கி, ஓ சுவாமி! நளன் என்பவனது சரித்திரத்தைச் சாங்கோபசாங்கமாக இதுகாறுங் கேட்டதில்லை. அவனும் என்போற் சூதில் வாழ்விழந்தவனாகச் சொல்லப்பட் டிருக்கிறபடியால், அந்தச் சரித்திரத்தை விவரமாக எடுத்துரைக்கவேண்டுமென்று வினவ, உரோமசன்மர் சொல்லுகிறார்.

கேளும் தருமநந்தனா! முன்னொருபோது தேவர்களும் அசுரர்களுங் கூடித் திருப்

பாற்கடல் கடைந்தபோ துண்டாகிய விஷத்தை எடுத்துப் புசித்துக் கண்டமட்டி லிருக்கும்படி செய்துகொண்ட சந்திர சடாதர சாம்பவமூர்த்திக்கும், கல்வி கேள்வியிலான்று கற்றோர்களில் மிகவுஞ் சிறப்புற்ற ஆயிர நாவையுடைய ஆதிசேஷனுக்கும், இசைப்பதற் கருமையான பெருமையையுடைய நிடதமலையென்றொரு மலையுண்டு. அந்த மலையின் காரணத்தால் அதைச் சூழ்ந்த நாட்டுக்கு நிடதநாடென்று பெயர். அந்த நாடு உலகிலுள்ள பாண்டிய நாடு-சோழநாடு-குட்நாடு முதலியவைகளோடு தானுமொரு நாடென்று பெயர்கொண் டிருப்பதேயன்றி, அதற்கிணையாக ஒரு நாடு மில்லை. பெருமையையுடைய பொன்னாட்டுக்கு மேலான சிறப்பையும், நீர்வளம்-நில்வளம்-குடிவளம்-முதலிய எல்லா வளங்களையு முடைத்தானது, அந் நாட்டிலுள்ள குடிகளின் சிறப்பை யாவரால் அள்விட்டுச் சொல்லக்கூடும். தரும சிந்தையையுடையவர்கள் கனவிலுந் தீமையை நினைக்காதவர்கள் தவசிரேஷ்ட சிகாமணிகள் யாவராலும் புகழ்ந்துரைக்குஞ் சிலாக்கிய பாக்கியவான்கள் நன்னெறியை யுடையவர்கள் ஆகிய இவர்கண் முதலாயினோர்களைப் பெற்று விளங்கும்படியான சிறப்புற்ற அந்நிடத நாட்டுக்கு ஒரு நகரமுண்டு. அந் நகரம் அளவற்ற மாடமாளிகை கூடகோபுரங்களோடு, கடலைச் சூழ்ந்திருக்கிற சக்கிர வாளகிரிபோல் அகழியைப் பக்கங்களிற் கொண்ட மதில்களைப் பெற்று விளங்கும். அந்த நகரத்தின் உன்னதத்தைக்கண்ட விந்த பருவத மிறுமாப்படைந்து நிமிர்ந்த காலத்தில், சூரியனானவன் தான் செல்லுங்கதிக்கு இந்த நகரத்தின் தலைவாசற்படியின் கபாடங்களைத் திறக்குஞ் சமயத்தைப் பார்த்திருப்பானெனில், அந்த நகரத்தின் அகல நிகளத்தை ஒருவரால் மதிக்கக் கூடியதோ? அந் நகரிலுள்ளவர்களின் சிறப்பை என்னொரு நாவாற் சொல்லத் தக்கதல்ல. அவர்களுடைய பெருமையி னளவைக் கல்வி கேள்வியிலான்ற உமதறிவால் மதித்தள விட்டுக் கொள்ளும். அந் நகரஞ் சொற்கமத்திய பாதாள லோகங்களிலிருக்கிற நகரங்களைத் தன் வளப்பத்தினால் வென்று, அந்த மூன்று லோகங்களிலுஞ் சஞ்சரிப்பவர்கள் நிரந்தரந் தன்னைவிட்டு நீங்காமலிருக்க மங்கல வோசையையும் வேத கோஷத்தையுஞ் சதா காலமும் பெற்றிருக்கின்றது.

ஓ பாண்டவ சிரேஷ்டனே! அந்த நகரத்துக்கு ஒரு அரசனுண்டு. அவ்வரசன் சந்திரவமிச பரம்பரையிற்றோன்றி சக்ரவாள கிரி பரியந்தந் தன்னாணையைச் செலுத்தி, சத்துருவை நாசஞ்செய்து, மித்துருவைப் பரிபாலித்து, நல்லொழுக்கத்தி னின்றோர்க்கெல்லாம் யாதொரு குறைவும் வராமல் வேண்டியவற்றை யுதவி, தன்னுயிர்போல் மன்னுயிரனைத்தையும் பாதுகாக்குந் தயாநிதி. இளமுலை மங்கையர் காதல் கொள்ளத்தக்க மாரனுக்குஞ் சிறந்த அழகினையுடையவன். போருக்கு உருத்திர மூர்த்தியையுந் திருமாலினையு மொத்தவன். செல்வத்தில் உயர்ந்த குபேரனானவன். இந்த அரசனது செல்வத்தை நோக்கி வடதிசை முடிவிற் செல்லத் தக்கவனாயினன். அருளுடைமை யென்பது இந்த அரசன் முகத்திலுதித்துப் பிரபஞ்சத்திற் பரவிற்றென்றால், அந்த அரசனது அருளின் லட்சணத்தை யாவரால் உரைக்கக் கூடும்? அவ் வகைப்பட்ட அருளுடைமை-அறிவுடைமை - பொறையுடைமை - அன்புடைமை - ஒழுக்க முடைமை - வலி யுடைமை-வெற்றி யுடைமை முதலியவற்றை பெற்று, சக்கரவர்த்திகளென்று பெயர் பெற்றிருக்கும் எழுவருள் தான் ஒருவனாகி, நளச்சக்கரவர்த்தி யென்னும் இயற்பெயர் வகுத்து, அம் மாவிந்த நகரத்திலிருந்து,மண்டலேஸ்வரர்களெல்லாம் மணிமகுடந் தேய வணங்கி, மகா மண்டலேஸ்வரனாக இனிது வீற்றிருக்கும் அரசன். இவ்வித மேலான மகத்துவங்களையெல்லாம் மதாணி முதலிய ஆபரணங்களாக வகித்து விளங்கும் அவ்வரசன் உலகங்களையெல்லாம் பாதுகாத்துச் செங்கோல் நடத்தி வந்தான். ஆனால், அந்த அரசனுக்கு விவாகமில்லை. விவாகம் இல்லாமல் இருந்தாலும், யௌவன தசைக்குரிய காமாதி துர்க்குணங்களைக் கல்வியிற் சிறந்த நல்லறிவால் அடக்கி, அந்த யௌவன தசையை அடைந்த காலத்தும் வேதாகம விதியினும்-மனுசாஸ்திர நீதியினும் வழுவாமல் அரசு செலுத்தி வந்தான். அம்மஹா மண்டலேஸ்வரனாகிய நளன் விவாஹஞ் செய்துகொள்ள மனமுள்ளவனாக இருந்தபோதிலும், தனக்கொன்று வேண்டுமென்று ஒருவரைக் கேட்பதைவிட நமக்கு இழிவு வேறொன்று மில்லையென்றும், நமதரசுரிமைக்கும் இல்லறத்திற்குந்தகுந்த நற்குண நற்செய்கையையுஞ் சுந்தரத்தையு முடைய கன்னிகை கிடைப்ப தருமையென்றும் நினைத்

துக் கடவுளைத் தியானித்துக்கொண்டிருப்பான்.

இப்படி அரசுசெலுத்தி வருகிற நாளில் ஒருநாள் தன் சிங்காரவனத்துக்குத் தன்னந்தனியாய்ச் செல்ல விருப்பங்கொண்டு, தன் குதிரையைக் கொண்டுவரத் தூதுவர்க்குக் கட்டளையிட்டான். தூதுவர் ரவுத்தனுக்கு அரசனிட்ட கட்டளையைத் தெரிவித்தார்கள். ரவுத்தன் சொர்க்கலோகத்திருக்கிற சுவேத அசுவத்துக்கும் அதிக லக்ஷணத்தைப் பெற்று வாயு வேகத்துக்கும் மனோவேகத்துக்கும் அதிகமாகச் செல்லும் வேகத்தையுடைய அஸ்வத்தை அலங்கிர்தஞ்செய்து சேணமிட்டு, அரசன் சமுகத்திற் கொண்டுவந்தான். உடனே நளனெழுந்து அவ் வஸ்வத்தினருகில் வந்து, கடிவாளத்தைக் கரத்திற் பிடித்துத் தாவி யேறினன். ஏறின மாத்திரத்தில் நல்ல ஜாதி குதிரையாதலாற் சூரியன் தேரிற் கட்டிய பச்சைக் குதிரைகளைப் பார்த்து, உலகத்தையெல்லாம் ஒரு புஜத்திற் றங்கு மகா மண்டலேஸ்வரனாகிய நளச்சக்கிரவர்த்தியை நானொருவன் தாங்குகிறேன். நீங்களெழுவரும் அந்தரத்தில் வருகிற ஒரு சூரியனைத் தாங்குகிறீர்கள். என்னொருவன் பலத்திற்கு உங்களெழுவர்பல மெம்மாத்திரமென்று பழித்துச் சிரிப்பதுபோல் தனது மின்னலைப் போற் பிரகாசிக்கின்ற பற்கள் விளங்கக் கனைத்தது. அரசன் குதிரையின்மீது ஏறினமாத்திரத்திற் சில ஏவலாளிகள் வந்து, திருவடிகளுக்குத் தோற்ற கமலங்களுந் தளிர்களும் வாசமாக இருக்கின்ற வனத்துக்கு அரசன் செல்கின்றமையால், திருவடிக்குப் பங்கயாகிய கமல முதலியவற்றாலொரு யிடையூறும் வராதிருக்கக் கழற் காப்பணியாகிய பொன்னிறம்போன்ற சோடுகளை அரசன் பாதத்திற் பூட்டினர். கட்டியக்காரர் எச்சரிக்கை செய்தனர். பாடகர் புகழ்ந்துரைத்தனர். அடைக்காய் வெள்ளிலை முதலியவைகளை அரிவையர் கொண்டு சூழ்ந்தார்கள். பூரணச் சந்திரனைப் போல் விளங்கும் வெண்பட்டுக் குடை பிடித்தனர். இவ்வித கோலத்துடன் நளராஜன் மனக்களிப்போடு அஸ்வத்தை நடத்திச் சிங்கார வனத்திற் சென்று, அவ்வனத்திலிருக்கும் விநோதங்கள் யெல்லாம் பார்வையிட்டுக்கொண்டு, திருப்பாற் கடல்போல் இருக்கின்ற ஓர் தடாகத்தருகில் வந்து, அந்தத் தடாகத்திலிருக்குங் கமலங்களையும், அக்கமலங்கடோறும் விளையாடித்திரியும் அன்னங்களையும், பார்வையிட்டுக் கொண்டிருக்கிற வேளையில், தடாகத்தில் விளையாடித் திரியும் அன்னங்களுள் தெய்வலோக அன்னங்கட்கு மரசாகிய ஓர் சேவலன்னம் அதன் பெட்டையன்னத்தோடு தாமரை மலரைப் பஞ்சணையாகக்கொண்டு கூடிக் கலந்து, கலவியினால் மெய் சோர்ந்து அக்கமலமலரிற் சயனித்துக் கொண்டிருந்தது.

அதுகண்ட நளராஜன் அன்னத்தைக் கைப்பற்ற விருப்பங்கொண்டு, அஸ்வத்தை விட்டிறங்கி தன்னருகில் இருக்கிறவர்களால் அன்னத்தைப் பிடித்துவரக் கட்டளையிடுமுன் அன்னத்தைப் பிடித்துவந்து அவன் கையில் ஒப்பிவித்தார்கள். அரசன் பொன்னிறமான அன்னத்தின் சுந்தரத்தைக் கண்டு மகிழ்ந்து இருக்கிறபோது, மானிடர் கைப்பட்டறியாத அவ்வரச வன்னம் உள்ளம் நடுங்கி விடவிடத்து, அரசன் கரகமலத்தில்தானே சோர்ந்து விழுந்தது. அதைக் கருணைக் கடலாகிய நளராஜன் கண்டு, அன்னமடைந்த கொடிய துன்பத்தைவிட எண்மணங் கதிகமான துன்பத்தையடைந்து, தன் கண்களிலிருந்து அருவி போல் நீர்சொரிந்து, ஓ! ஓ! நாம் விளையாட்டுக்குப் பிடித்தோம் அது வினையாகமுடிந்ததே ஐயோ! இதற்கென்ன செய்வோமென்று கனவருத்தப்பட்டான். அரசன் கண்களிலிருந்து வந்த ஜலமே அவ்வன்னத்தின் சோர்வை நீக்கும் ஜலமாக யிருந்ததென்றால், அரசன் தயாள உள்ளத்தை என்னென்றுசொல்லலாம். அரசன் கண்ணீர் தன்மேற் பட்ட மாத்திரத்தில் அன்னங் களை நீங்கி எழுந்தது. அதை அரசன் பார்த்து, ஓ அன்னமே! இவ்வுலகில் உள்ள அன்னம்போல வெண்மையாக இராமல் பொன்னிறமாக யிருந்தமையால், உன்னைப் பிடித்தெடுத்துப் பார்க்கும்படி விருப்பங்கொண்டேன். அவ்வாறே பார்த்து ஆசை தீர்ந்தேன். இனி உன் கருத்துக்கிசைந்த விடத்துக்குச் செல்லென்று விட்டுவிட்டான். அரசன் விடைபெற்ற அன்னம் முன்போலத் தடாகத்தில் இருக்கும் கமலமலரி லிறங்கி நல்வினை தீவினைப்பந்தங்களி லலைப்புண்டு கனவருத்தமுற்றவர்க்குப் பரமபதங் கிடைத்தால் அவர்களடையும் இன்ப மெவ்வகைத்தோ? அவ்வகைத்தான இன்பத்தை யடைந்ததாகி, ஓ! ஓ! இந்த அரசன் தருமசிந்தையை யுடையவன். கொலை செய்தலைக் கனவிலும் நினைக்

காதவன். நம்மைப் பிடித்தும் நமக்கொரு இடையூறு நினைக்காமல் நாம் அடைந்த வருத்தத்தைக்கண்டு தானும் வருத்தமுற்று நம்மை விட்டுவிட்டபடியால், கருணைக் கடலென்றே இந்த அரசனை மதிக்கவேண்டும். என்று கருதினதாய், இந்த அரசனுக்கு நாம் வருத்த முண்டாக்கினோம். அவ்வருத்தம் நீங்கச் சில மொழி கூறவேண்டும். அம்மொழிக்கு இசைவானாகில், அதற்குத் தகுந்த முயற்சியில் நாமே எடுத்துக்கொள்ள வேண்டும் என்று தனக்குள் மதித்து, மீண்டும் தானே அரசன் கரகமலத்தில் வந்திரங்கிற்று. அதுகண்ட அரசன் மகிழ்வுற்று, மகா விசுவாச சித்தத்தோடு தன் ஒரு கரத்தில் ஏந்தி, மற்றொரு கரத்தால் அதனுடலைத் தடவிக் கொடுத்து, அங்கிருக்கும் ஓர் சந்திரகாந்த மண்டபத்தில் வந்து, அதின் மத்தியிலுள்ள ஓர் மணி மேடையில் தன்னந்தனியே இருந்தான். அப்போது அன்னமானது அரசனைப் பார்த்துச் சொல்லுகின்றது.

ஓ வண்டினங்கள் பசிநோயடங்கி மகிழ்வுறத் தேனைத் துளிக்கும் முல்லை-அசோகு-நீலம்-மாம்பூ-கமலம் என்கிற ஐந்து பூவாளிக்குந் தலைவணங்கிய மாரனும், நாணத்தகும் அழகினையும் வெற்றியையுமுடைய மஹா மண்டலேஸ்வரா! நல்ல வழியில் நின்று எல்லோரும் பயன்பட நூலையுண்டாக்கிய மகாத்மாக்கள் அரசர்க்குக் கூறிய மநுசாஸ்திரத்தில், வேட்டஞ் செய்யக் கருதிவந்த அரசன என்னகொலை செய்தபோதிலும் தோஷமில்லையென்று முறையிடுகின்றது. அப்படி முறையிட்டும், நீ மூன்றுவித வேட்டத்தில் ஒரு வேட்டமாகிய சிங்காரவனம் பார்ப்பதைக் கருதி வந்தனை. வந்தவிடத்தில் என்னைப் பிடித்தும் கொலைசெய்யாமல் விடுத்தனை. இந்த ஒரு செய்கையினாலேயே உன்னை உலகிலுள்ள அரசர்க்குள் உயர்ந்தவரென்றும், கருணைக் கடலென்றும் கூறவேண்டுமென்று கூறிப் பின்னும் சொல்லுகின்றது. ஓ மகாராஜனே! என்னைப் பிடித்து என்னழகைக் கண்டு மகிழ்வுறக் கருதிய உன் கருத்துக்கு நான் வருத்தத்தை உண்டாக்கினனே யன்றி, நீ கருதியபடி மகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை. அந்த வருத்தம் நீங்கச் சில மொழி கூறுகிறேன் கிருபை கூர்ந்து கேட்க வேண்டுமென்று வேண்டிச் சொல்லுகின்றது: ஓ அரசனே! உலகிலுள்ளவர்கள் கிளியை வாங்கிவந்து அதனைப் பாதுகாத்துத் தங்கள் வாய்மொழியை அதற்குக் கற்பித்து, அந்த மொழியை அக்கிளி சொல்லுமாகில் மகிழ்வடைவார்கள். நான் கிளியல்ல, பேசும் பழக்கமில்லாத அன்னம். எனக்கு ஒருவரும் அக்கிளிக்குக் கற்பிப்பதுபோல் கற்பிக்கவில்லை. ஆதலால், என் சுதாவில் நான் பேசும் மொழி எவ்வாறு இருந்தபோதிலும் மனம் பொறுத்து, கிளி மொழியைப்போல இதுவுமொரு சொல்லென்று அங்கீகரித்து, கருத்தை வேறொரு இடத்தில் செலுத்தாமல் கேட்க வேண்டுமென்று வியப்புறச் சொல்லுகின்றது: கேளும் மஹாராஜனே! சிறப்புற்ற விதர்ப்ப தேசமென்றொரு தேசமுண்டு. அதில், குண்டினபுர மென்னும் ஓர் நகருண்டு. அந்நகரத்தில் வீமராஜா வென்னும் அரசனுக்கு எல்லாப் பாக்கியம் இருந்தும், புத்திர பாக்கியமில்லை. அதனால், அவன் இராஜபோகத்தில் வெறுப்புற்றுத் தன் அரசுரிமையை மந்திரிகள் வசத்தில் ஒப்புவித்து, தானும் தன் மனைவியும் துறவற வேடங்கொண்டு வனம் புகுந்து, அநேக மாதவ முனிவர்களின் சேர்வைகண்டு, முடிவில் தமன முனிவர் இடத்திற்குச் சென்று, அவரது நற்குண நற்செய்கையையும், சாபானுக்கிரக சாமர்த்தியத்தையும் சீர்தூக்கி, இவர் மிகவும் சிறந்தவராய் இருப்பதால், இவரால் நமது மனக்குறையை தீர்த்துக் கொள்ளலாமென்று கருதி, அவர் மகிழும்படியாக இருவரும் பணிவிடை செய்து வந்தார்கள்.

இவர்கள் நெடுநாள் பணிவிடை செய்து வருகிறதை யறிந்த அந்தத் தவசிரேஷ்ட சிகாமணியாகிய தமனமுனியானவர், ஒருநாள் இருவரையும் அருகில் அழைத்து, நீங்கள் யார்? வலியவந்து எனக்குப் பணிவிடை செய்ய வேண்டிய காரணமென்ன? அதனை யான் அறியும்படியாகச் சொல்லவேண்டுமென்று வினவ, உடனே வீமராஜன் வணங்கி, ஓ சுவாமி! நான் விதர்ப்பதேசாதிபதி என்பெயர் வீமன். நான் நெடுநாள் புத்திரபாக்கியமில்லாதிருக்கிறேன். அப்பாக்கியம் எங்கட்குண்டாகக் கிருபை புரிய வேண்டுமென்று கூற, அவ்வீமராஜன் மனைவியும் பணிந்து வேண்டினள். அதற்குத் தமனமுனி மகிழ்ந்து, வீமன் களிப்புற ஓர் சற்குணமுள்ள ஒரு புத்திரனும், வீமன் மனைவி களிப்புற ஒரு புத்திரியும் உண்டாகக் கிருபைபாலித்தனர். அந்த வரத்

தைப் பெற்றுக்கொண்ட இருவரும் அவரை வணங்கி விடை பெற்றுத் தமது நகரம் வந்து சேர்ந்தார்கள். பின்பு வீமன் முன்போல அரசுரிமையைப் பெற்று, தானுந் தன் மனைவியுங்கூடிக் குலாவி வாழ்கிற காலத்தில்; தமனமுனி கட்டளைப்படி முன்னம் ஒருபுத்திரனையும், பின்பு ஒரு புத்திரியையும் பெற்று, முனிவருடைய பெயரைக் குமாரத்திக் கிட்டு தமயந்தி என்றழைத்து, மிகுந்த அன்போடு வளர்த்து வந்தார்கள். இருவருள் அந்த தமயந்திக்கு இன்னு மணஞ் செய்யவில்லை. நீரும் மணமில்லா திருக்கின்றீர் நீங்களிருவரும் குணத்திலும் அழகிலும் ஒத்திருக்கின்றீர்களென்றுஎன்கருத்துக்குத்தோன்றின்மையால், உங்களிருவரையும் கூடும்படி செய்யக் கருதினேன். அந்த மாது சிரோமணியின் சுந்தரத்தை தேவராலும் ஆதிசேடனாலும் சொல்லக் கூடாதென்றால், பறவைச் சாதியுள் ஓ ரன்னமாகிய நான் என்னென்று கூறுவேன்? ஆகிலும் என்னாற் கூடியமட்டும் சொல்லுகிறேன் கேளும்: ஓ மகாராஜனே! சொற்கமத்திய பாதாள மென்னும் முப்புவனத்திலுள்ள மாதர்களின் அழகெல்லாந் திரண்டு ஒரு வடிவங் கொண்டதுபோல் விளங்கும் சுந்தரத்தையுடையவள்.

அஃதங்ஙனமாகில், அவளது கேசாதி பாதங்கட்குள்ள சிறப்புகளை கேட்கவும் வேண்டுமோ? கறுப்பில் நீர்கொண்ட மேகத்தையும், நெருக்கத்திற் சைவலத்தையும், நீட்சியிற் கொன்றைக்காயையும், பளபளப்பிற் கருமணலையும் நாணச்செய்யுங் குழலையுடையவள். பார்ப்பவர் கண்களைக் கிரகிக்குந் தன்மையையுடைத்தாகி, சிவந்தநிறமும் திலத பொட்டும் பொன்னிறமும் பெற்று விளங்கும் ஒரு சந்திரப்பிறை யுண்டாகி யிருக்குமாகில், அதற் கொப்பாகிய நெற்றியையுடையவள். மாரனும் ரதியும் தங்கள் கரத்திற்பிடித்த வில்லை தமது குடையாகிய சந்திரனிடத்து வைத்தாற்போல விளங்கும் புருவத்தை யுடையவள். கண்களாகிய கடலுக்கு அணைவிட்டாற்போல விளங்கி குமிழம்பூவையும் எள்மலரையும் வென்ற நாசியையுடையவள். ஆலத்தைப்போற் கறுத்து பாலைப்போல் வெளுத்து, பிறழுவதிற் கயலையும், ஊடுருவப்பாய்தலில் வேலையும், ஆடவருடைய ஆவியை வெட்டி வாதிப்பதில் வாளையும், கொலைபுரிதலின் யமனையும் வெற்றிகொள்ளும் இரண்டு நேத்திரங்களையு முடையவள். கண்ணாடியைப்போல் விளங்குங் கன்னத்தையும், குமுதமலர்போல் விளங்கும் இதழையும், பவளக்கிண்ணத்தில் முத்துக்களை நிரை நிரையாக வைத்தாற்போல விளங்கும் பல் வரிசைகளையும், கமுகையொத்த கண்டத்தையும், குயிலை நாணச்செய்யுந் தொனியையும், வேயை நிகர்த்த தோள்களையும், கல்லெனத் திரண்டு பருத்த தனத்தையும், தனமாகிய தாமரை மலர்களுக்குண்டாகிய கொடியைப்போல விளங்கும் உரோமவரையையும், ஆற்றுநீர்ச் சுழியையொத்த உந்தியையும், ஆடவர்கள் அவர் எவ்வளவோ அவ்வளவும் உவமையாகக்கொண்ட அல்குலையும், வாழை ஸ்தம்பங்களையொத்த தொடைகளையும், சினைவராலை நிகர்த்த கணுக்கால்களையும், காமன் புத்தகத்தையொத்த பாதங்களையுமுடையவள் அத்தமயந்தி.

அந்த மாதுசிரோமணியின் முகத்தை நிகர்க்க மேற்றிசையி லுதயமாகிவருஞ் சந்திரனைப் பிரமன் நாள்தோறும் புதிதாகச் செய்தும், சந்திரன் அவளது வதனத்துக்கு ஒப்பாகா திருத்தலை நோக்கி, அப் பிரமன் வருத்தமுறுவனெனில், அந்த மாதின் சுந்தரத்தை என்னாற் கூறத்தக்கதோ? அந்த மாதின் முன்கைக்கு நாணிய காந்தள்கள் வனத்திற் சென்று இதழ்களைப் பூமியி லுகுத்தன. அவளது இடையைக்கண்ட மின்னல் நாணத்தினால் வெளிப்பட்டு நிற்கமாட்டாமல் தோன்றி மறைகின்றது. கல்வியில் வாணியையும், கற்பில் அருந்ததியையும், குணத்தில் இலக்குமியையும் நிகர்த்தவள். அந்த மாதுசிரோமணியின் ரூபசவுந்தரியமும், உமது ரூபசவுந்தரியமும் ஒத்திருப்பதினால், உமக்கு அவளே மனைவியாக வேண்டும் என்று கருதினேன். ஆனால், அந்த மாதின் அழகைக் கண்டு இந்திரன் முதலான தேவர்களும் விருப்பங்கொண்டு இருக்கிறார்களென்றால், மண்ணுலகாதிபர்க்கு அவள் வாய்ப்பது அரிதாக இருக்குமே. அதைப் பற்றித் தான் கொஞ்சம் ஆலோசிக்கிறேன் என்று கூற, அன்னங் கூறியவற்றைக் கேட்ட நளன் அனலிடு மெழுகுபோல் மனமது உருகி, அவ்வன்னத்தைப் பார்த்து, ஓ அன்னமே! எனக்கும் பெரியவர் என் குடும்பத்திலில்லை. உலகத்திலுள்ள அரசரனைவரும் என்னுக்கினைக் குட்பட்டவர்களேயன்றி உடன் படாதபேர் ஒருவருமில்லை. நீ எடுத்துக்கூறிய மாது சிரோன்மணியைப்

பெற்ற அரசன் என் வாக்கியத்தைத் தடுக்கிறவனல்ல. நானும் எனக்கொன்று-வேண்டுமென்று கேட்கிறவனுமல்ல. ஆதலால், நீயே இருவரையுங் கூட்டிவைக்க வேண்டும். இவ்வளவு உபகாரம் நீ எனக்குச் செய்வையாகில், தாய் தந்தையரைவிட எண்மடங் கதிகமான பெருமை யடைவதுமன்றி; சந்திர சூரியரிருக்கிற பரியந்தம் பெரும் புகழைப் பெற்றிருப்பா யென்று கூறினன். அதற்கு அன்ன மகிழ்ந்து சொல்லுகின்றது.

ஓ மஹாராஜனே! உன் மனதின்படி அந்த மாதுசிரோமணியைக் கூட்டி வைப்பதற்கு எவ்வகைப்பட்ட தேவர்கள் தடை நேரிட்ட போதிலும், அத்தனையும் விலக்கி உனக்கே மனைவியாகச் செய்விக்கிறேனென்று நான் வாயாற் சொல்வதில் பயனில்லை. என் கிரியாலன்றோ தெரிவிக்க வேண்டும். ஆதலால் இதோ நான் அந்த மாதுசிரோமணியிடத்துச் சென்று, அவள் மனதை உன்பால் திருப்பி, அவள் உள்ளமாகிய மனக் கோட்டையில் உன்னை இனிது வீற்றிருக்கச் செய்து வருகிறேன். பறவை யாயிற்றே யென்று ஐயமுறுமலும், காமத்தின் வழியிற் கருத்தைச் செலுத்தாமலும் இருவென்று கூறி, அரசனிடத்து விடைபெற்று கருமையாகிய அந்தரவெளி யெல்லாம் பொன்மயமாகத் தன்னினத்தோடு சிறகை விரித்துப் பறந்து, விதற்பதேசத்தை நோக்கிச் சென்று குண்டலிபுரமடைந்து, தமயந்தி யிருக்கிற கன்னிகா மாடத்தை நெருங்கிற்று.

அத்தருணத்திற் சவுந்தரியத்திலுயர்ந்த தமயந்தியானவள் தன் தாதிமார்களோடு சந்திரகாந்தக் கல்லினாற் கட்டப்படுஞ் சலத்தினால் வெகுவாய்வளர்ந்து புஷ்பிக்கும் முல்லை மல்லிகை இருவாட்சி முதலிய புஷ்பவகைச் செடிகளையுடைய சிங்காரவனத்துக்கு மலர்கொய்து விளையாட வந்தனள். அப்படி வந்ததை அன்னங் கண்டு, ஓ!ஓ! தேடிப்போன மருந்து காலில் அகப்பட்டது போல் நாம் நாடி வந்த கன்னிகை மலர் கொய்து விளையாடச் சிங்கார வனத்துக்கு வந்தனள். இந்த வேளை காலமுமிடமும் ஒத்திருக்கின்றது. நாம் நாடி வந்த கருத்தும் நிறைவேறும் என்று கருதி, நக்ஷத்திரங்களின் மத்தியிற் பிரகாசிக்குஞ் சந்திரனை யொப்பத் தாதிகள் மத்தியில் விளங்குந் தமயந்தியை வலஞ் செய்வது போல் வட்டமிட்டு அன்னங்களெல்லா மிறங்கின. அவ்வாறிறங்கினவைகள் தாமரைத் தடாகத்தி லிறங்காமல் தமயந்தியின் கண்ணுக்குங் கைக்கும் எட்டும்படியாக அங்கிருக்கு மணல் மேட்டிலிறங்கிச் சிங்காரமாக நடந்தன. அன்னங்கள் இறங்கியதனால் அதுகளின் சிறகினின்றுண்டாகி காற்றின் கடுமைக் கிடை வருந்திக்கனவருத்த முற்ற தாதியர் மத்தியி லிருக்குந் தமயந்தி அன்னத்தைக் கண்டு மகிழ்வுற்று, தன் கரகமலத்துக்கு எட்டுமென்றுகருதி, தான் அணிந்திருக்குஞ் சிலம்பு முதலிய ஆபரண ஒலியை அடக்கி மெல்லென நடந்து அவ்வன்னங்களினருகிற் சென்றாள். பக்கங்களில் இருக்குந் தாதியர்கள் கண்டு, ஓ! ஓ! நமது மாதுசிரோமணி அன்னத்தின்மேற் கருத்து கொண்டு பிடிக்கச் செல்லுகிறாள். ஆகாயத்திற் சஞ்சரிக்கும் அன்னங் கைக்கெட்டுமோ? ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம் என்று கைக்கொட்டிச் சிரித்தனர். தாதியர் நகைப்பதைக் கண்ட தமயந்தி சினங்கொண்டு, அன்னத்தைப் பிடித்துக் கொடுக்கச் சக்தியற்றவராகியிருந்து விட்டதுமன்றி, நாம் பிடிக்கச் சென்றால் அன்னம் பறந்துபோகக் கைகொட்டிச் சிரிக்கிறீர்களா வென்று கோபித்துக் கூறி, அன்னத்தை நாடிப் பின்னுஞ் சென்றாள். தாதிகள் பயந்து ஒன்றும் பேசாமல் நின்றுவிட்டனர். அன்னம் இது தான் தருணம் என்று கைக்கெட்டுவதுபோல் அபிநயித்துக் கொண்டே தமயந்தியை நெடுந்தூரம் அழைத்துக்கொண்டு, நிறையப் பூத்திருக்கும் ஒரு புஷ்பப் புதருக்குட் புகுந்து, தன்னை விரும்பி வந்த தமயந்தியை நோக்கிச் சொல்லுகிறது.

ஓ மாதுசிரோமணி! நானோ ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பறவைகளின் இனத்தில் ஒன்றாகிய அன்னம். அந்த அன்னத்திலும் இந்த மண்ணுலகத்தில் இருக்கின்ற வெள்ளை அன்னத்தின் இனமல்ல. பொன்னுலகத்தில் இருக்கிற பொன்னன்னத்தின் இனம். நீ என்னைப் பார்த்தமாத்திரத்திற் பிடித்துக்கொள்ளலாமென்று எண்ணங்கொண்டு அனிச்சமும் அன்னத்தின் தூவியு மிட்டு மிதிக்கினுங் கடுமைதாளாது கண்ணிப் போகத்தக்க மிருதுவாகிய பாதம் வருந்த இவ்வளவு தூரம் வந்தனை. நீ யார்? உன் பெயரென்ன? இவைகளை யெனக்கு விபரமாகச் சொல்லென்று வினவ, கிளிகளின் வார்த்தையையும் நாகணவாய்ப் பக்ஷிகளின் வார்த்தையையுங் கேட்டதே யன்றி, மற்றப் பறவைகளின் வார்த்தை

யைக் கேட்டறியாத தமயந்தி ஆச்சரியத்தையும் அதிக மகிழ்வையுங்கொண்டு சொல்லுகிறாள்: ஓ அன்னமே! நான் விதர்ப்பதேசாதிபதியாகிய வீமராஜன் புத்திரி. என் பெயர் தமயந்தி. மலர்கொய்து விளையாடும்படி இந்தச் சிங்காரவனத்திற்கு வந்தேன். வந்தவிடத்தில் உன்னைக் கண்டு, உன்னை என் கரத்தில் வைத்து விளையாடி மகிழ உன்னை இவ்வளவுதூரந் துடர்ந்து வந்தேன். ஆதலாற், சிலநேரம் என் மனங் களிப்புற என் கரத்தில் வந்திருவென்று கூற, அன்னங் குறுநகைகொண்டு சொல்லுகின்றது: ஓ மாதுசிரோமணி! நான் எப்போதும் விண்ணுலகத்திற் கமலாசனக் கடவுளாகிய திசைமுகன் கரத்தும், மண்ணுலகத்தில் மகாமண்டலேஸ்பரனாகிய நளச்சக்கிரவர்த்தியின் கரத்துமிருப்பதே யன்றி, மற்றவர் கைக்கரிதாக யிருப்பேன். ஆதலால், என்னை உன் கரத்தில் வரவழைப்பது தகுதியல்ல என்று கூற, அவ்வாக்கியத்தைக் கேட்ட தமயந்தி, கமலாசனக் கடவுளுக்கு ஒப்பாக விளங்கும் அவ்வளவு மாட்சிமையை யடைந்த அரசன் மண்ணுலகத்திலு மிருக்கின்றானோ வென்று மனதில் மதித்து, முகமலர்ச்சியோடு அன்னத்தை நோக்கிச் சொல்லுகிறாள்.

ஓ அன்னமே! மண்ணுலகச் சுகத்துக்கு மேலானது இந்திரபோகம். இந்திரபோகத்திலுஞ் சிறந்தது சத்தியலோகம். சத்தியலோகாதிபதியாகிய திசைமுகன்கரத்தி லிருக்கிற நீ மண்ணுலகாதிபதியாகிய நளச்சக்கிரவர்த்தியின் கரத்திலும் இருக்கிறதென்றுகூறினதை யுய்த்து நோக்கினால், திசைமுகன் பெருமைக்கு அந்த அரசன் ஒத்திருக்கிறதாகவும், அவ்வரசனது பெருமையை நீ நன்றாக அறிந்து இருக்கிறதாகவும் விளங்குகின்றது. ஆதலால், தயை செய்து அவ்வரசன் பெருமையைக் கிஞ்சித்தெடுத்துக் கூறென்று வினவினாள். அதற்கு அன்னம் நகைத்துச் சொல்லுகின்றது. ஓ மாதரசே! முப்பத்து முக்கோடி தேவர்கள் புடைசூழக் கொலுவிருக்கும் இந்திரன் சபையில் இருக்கிறவர்களும், வேதவேதியர்களும், மண்டலாதிபதிகளாகயிருந்து புண்ணியவசத்தாற் சத்தியலோகத்திலிருக்கிற மனுமந்தாதிகளும், பிரமனும், நளனென்கிற பெயரைக் கேட்ட மாத்திரத்தில் மகிழ்வார்களென்றால், மண்ணுலகத்தில் மகிழாதவர்கள் யார்? என்று கூறிப் பின்னுஞ் சொல்லுகின்றது. வெற்றிமாலை புனைந்து மகுடாதிபதிகளாகிய இந்திர போகத்திலுஞ் சிறந்த போகத்தை வகித்து விளங்கும் அரசர்களெல்லாங் குடங்கையைத் தலையணையாகக் கொண்டு, தாங்கள் கொண்டுவந்த திரையைக் கட்டுவதற்குச் சமயம் வாய்க்காமல் அந்த நளராஜனது அரண்மனைத் தலைவாய்தலின் புறத்தில் படுத்திருப்பார்கள். அழகிற் சிறந்தோனாகிய சாம்பவ மூர்த்தியையும், அவர் கண்ணுலெரிபட்டிறந்த மாரனையும், இந்திரன் குமாரனாகிய சயந்தனையும், உலகத்தைப் பாதுகாத்துவருந் திருமாலையும் பார்த்திருக்கிறேன். இவர்களிலொருவரையேனும் நளச்சக்கிரவர்த்திக் கிணையாக உரைப்பதற்கு என்னா வெழவில்லை. ஏனென்றால், அந்த நளனது பெருமையை யாவரால் உரைக்கக்கூடும்? நான் அந்த நளராஜன் சமுகங் காணும்பொருட்டு, விண்புவி பாதாளலோக முதலியவைகளில் எங்கு சென்றாலும், அங்கங்குள்ளவர்களால் எனக்கிடையூறு வராதிருக்கப் பிரமனைக் குறித்துத் தவஞ்செய்து, அப்பிரமன் வரந்தரப் பெற்று, அச்சமின்றிப் பூமிக்கு வரவும் போகவுமாக யிருக்கிறேன். இந்த ஒரு திருஷ்டாந்தமே நளன் சிறப்புக்குப் போதுமான சாட்சியாக இருக்கின்றதென்று கூறிப் பின்னுஞ் சொல்லுகின்றது.

ஒருநாள் என் குழுவினரோடு இந்திரலோகஞ் சென்றேன். இந்திரன் என்னை நோக்கி, மண்ணுலகாதிபதியாகிய நளனது பெருமை யெவ்வகைப்பட்டதென்று வினவ, யான் அந்த நளனது அழகையும், அவன் கொடுக்குங் கொடையையும், பகைவரை யதமாக்குங் கூர்மைபொருந்திய அவன் வேலின் திறத்தையும், அவன் சம்பத்தையும், நற்குண நற்செய்கைகளையும் எடுத்தோதினேன். அதை இந்திரனருகி லிருந்த புலோமிசை கேட்டு, ஆசைப் பெருக்கத்தால் இரண்டு தனமும் பூரித்து, ஓ! ஓ! விழுமிய உடலமெங்குங் கண்களைப் பெற்றவனைக் கணவனாகப் பெற்றது நமது விதிவசமென்றெண்ணி நளராஜனது பெருமையை நினைத்துக் கண்களில் ஆனந்த நீர் துளித்தனள். அதனை நோக்கிய இந்திரன் நாணமுற்றான். இந்தச் செய்தி சொர்க்கமெங்கும் பரவி எங்கணும் பெரு வார்த்தையாக யிருக்கின்றது. மற்றொரு நாள் வைகுந்தத்திற்குச் சென்றேன். மகாலட்சுமி சமேதனாகிய திருமால் என்னைப் பார்த்து நளன்

சீரை உரையென்று வினவினர். நான் நளனது வளப்பத்தை யெல்லா மெடுத்துரைத்து அவனது திருவடிக்குப் பதும மலரிணை யாகாதென் றெடுத் தோதினேன். இந்த வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில் திருமா லுந்திக்கமலம் நாணி, நளனைப் படைத்த பிரமனைச் சிறைச்சாலையி லிடுவதுபோலத் தனக்குள் ஐக்கியப் படுத்திக்கொண்டு மூடிக்கொண்டது. அப்போது நளன் சீரைக்கேட்டுப் புளகாங்கிதமுற்ற இலக்குமி தக்ஷணந் தன் காமவெறி மாறத் திருமாலைப் புணர்ந்துகொண்டாளென்றால், அந்த நளன் அழகையும் பெருமையையும் என்னொரு நாவாற் சொல்லத்தக்கதோ? அந்த மகாராஜனது சீரையுஞ் சிறப்பையும் எடுத்துரைப்பதற்கு இரண்டாயிரம் நாவைப் படைத்த ஆதிசேடன்தான் வல்லவன். அவ்வளவு மாட்சிமையுற்ற மகாராஜன் மகாமண்டலேஸ்வரனாக யிருந்தும், இன்னும் விவாகஞ் செய்துகொள்ளாம லிருக்கிறான்.

ஓ மாதரசி! இந்த நளனது பெருமையையும், விவாகமில்லாம லிருப்பதையும் இந்திரன் யோசித்து, இந்த மகானுபாவனுக்கு இசைந்த மனைவி மண்ணுலகத்தில் யாரிருக்கின்றார்களென்று சந்தேகங்கொண்டு, தன் பரிசனத்தோடு பிரமன் சமுகத்திற்கு வந்து, பிரமனை வணங்கிப் பூலோகாதிபதியாகிய நளச்சக்கிரவர்த்திக்குத் தகுந்த மனைவி யார் என்று வினவினன். அதற்குப் பிரமன் மகிழ்வுற்று, உன் பெயரை எடுத்தோதினன்போலு மிருந்தது. நானெடுந்தூரத்தி லிருந்தமையாலும், பிரமனைக் காண வருபவருடைய ரதவோசையினாலும், என் செவியில் நன்றாகக் கேட்கவில்லை. பிரமன் கூறினது உன் பெயராகவே யிருக்குமாகில் அந்த நளராஜனுக்கு நீ மனைவியாதலுக்குச் சந்தேகமில்லை. நளராஜனுக்கு நீ மனைவியானால், அதை நோக்கிய உன் உற்றார் பெற்றார் தாய் தந்தையர் யாவரும் மகா சந்தோஷத்துடன் உன்னை வாழ்த்தி முன்பு நல்ல தவஞ் செய்திருந்தாளென்று புகழ்வார்கள். என்று கூறி அவள் முகக் குறியை நோக்கிற்று. அப்போது நளன் சிறப்பைக் கேட்ட மாத்திரத்தில் தமயந்தி காதல்மீறி, உடலமெங்கும் புளகம் போர்ப்ப மெய்மறந்து, சித்திரப் பிரதிமைப் போல் அசைவின்றி முகமலர்ச்சியோடு நிற்பதை அன்னங்கண்டு மகிழ்ந்து, பின்னும் கூறுகின்றது: ஓ மாதுசிரோமணி! நீயோ ராஜகன்னிகை. பறவைகளில் ஒன்றாகிய நான் எவ்வளவும் அச்சமில்லாமல் உன்னை நளராஜனுக்கு மனைவியாக எடுத்துரைத்து விட்டேன். அதனால், நேரிடும் குற்றத்திற்கு என்னை நீ எவ்வாறு தண்டித்துக் கொள்ள வேண்டுமோ? அவ்வாறு தண்டித்துக் கொள். நான் தடை கூறவில்லை. அல்லது அந்த நளராஜனைக்குறித்துப்பேச உனக்கு மனமுண்டாயிருந்தால் பேசு. அதற்காக என்ன கட்டளை இடுகிறையோ, அக்கட்டளைக்கும் பாத்தியப் படுகிறேனென்று கூறிற்று. அன்னம் கூறியவற்றைக் கேட்ட தமயந்தி மகிழ்ந்து அதை நோக்கிச் சொல்லுகிறாள்.

ஓ அன்னமே! நீ எந்தத் திக்கிலிருந்து பறந்து வந்தனையோ? எவ்வளவு வருத்தத்தையும் பசியையும் கொண்டிருக்கின்றனையோ? அதனைத் தெரிந்துகொள்ளாமல் இந்தச் சோலையிலுள்ள தடாகத்தில் இறங்கி, பசிகளை-தாகம் இதுகள் தணியக் கருதி வந்த உன்னைப் பிடித்து விளையாடக் கருதி நெடுந்தூரம் துரத்திக் கொண்டுவந்து உனக்குக் கனவருத்தத்தைக் கொடுத்தேன். அது என் பிழை. அப்பிழையையும் மறந்து நான் சுகமுறத் தகுந்த சில வசனங்கள் கூறினை. ஆதலால், உன்னைக் குற்றவாளியாக நினைத்தல் தகுதியல்ல. உனக்கு நானே குற்றவாளி. உன் கருத்துக்குத் தக்கபடி என்னைத் தண்டித்துக் கொள்வது தகுதி. அப்படி தண்டிக்காமல் என்னை மன்னித்ததற்காக மிகவும் மகிழ்வடைந்தேன். நீ நிடதேசாதிபதியின் சீரை எடுத்துரைத்து உன் கருத்து என்னவென்று வினவினை. அதனைக்குறித்து எனக்கொன்றும் தோன்றவில்லை யாயினும், என் கருத்துக்கு இசைந்தனவற்றைச் சில கூறுகிறேன் கேள்: சோடச கலைகளோடு விளங்கும் சந்திரன் விண்ணிற் சஞ்சரிப்பதேயன்றி, மண்ணுலகத்தில் நின்று கண்களிக்க நோக்குபவர்க்குப் பரிசித்து மகிழக் கைக்குக் கிட்டுவனோ? அதுபோல் நெடுந்தூரத்தில் இருக்கும் நிடததேசாதிபதியின் சீரைத் தூதியர்களாலும், தேர்ப்பாகர்களாலும், என் பிதாவின் சமுகத்தி லிருக்கும் பெரியோர்களாலும், புகழ்ந்து உரைப்போர்களாலும் முன்னம் கேட்டதைவிட, இப்போது உன்னால் எண்மடங் கதிகமாகக் கேட்டுக் களிப்புற்றேன். என் மனங் களிப்புற்றதுபோல் மெய்-வாய்-கண்-மூக்கு-செவி ஆகிய ஐம்புலன்களுக்கும் அக்களிப்பு தோற்

றுவ தெப்படி? மேலும், உலகிலுள்ள கன்னியர்களிற் கணவன் வேண்டுமென்று வலியக் கூறுபவரில்லை. ஆதலால், அதனைக் குறித்து யாதேனும் உரைப்பதற்கு நாவெழாமல் இருக்கிறேனென்று கூற, அன்னம் சொல்லுகின்றது. ஓ மாதுசிரோமணி! உலகில் அடைவதற்கு அருமையானது பேரின்பவீடு. அந்தப் பேரின்ப வீட்டையும், மகத்துக்கள் மெய்-வாய்-கண்-மூக்கு-செவி வழியாகிய ஐம்புலன்களையும் அடக்கி, ஐயமில்லாமல் அடைகின்றார்கள். மண்ணுலகத்திலுள்ள பொருளை அம்மண்ணுலகத்தார் அடைவ தருமையோ? உன் கருத்து நளன்மேல் விருப்பமுற்றிருந்தால் தெரிவி. அதற்குத் தகுந்த முயற்சி செய்கிறேனென்று கூற, அன்னம் வழங்கிய சொற்களைக் கேட்ட தமயந்தி குறுநகைகொண்டு சொல்லுகிறாள்.

ஓ அன்னமே! நானிலத்துற்ற பொருளை நன்றாகத் தெரிவிக்கும் கண்ணாடியைப்போல் உள்ளக் கிளர்ச்சியைத் தெரிவிக்க என் முகமொன்றிருக்க, என்னால் சொல்லுஞ் சொல் யாதுளதென்று கூறினாள். அதனை அவ்வன்னம் கேட்டுச் சொல்லுகின்றது: ஓ மாதுசிரோமணி! உன் வார்த்தையையும் உன் முக மலர்ச்சியையும் கண்ட, எனக்கு, முன்னமே உன் கருத்து நளராஜனிடத்து விருப்புற்று இருக்கிறதென்று விளங்கிற்று. அதனை நம்புகிறது தகுதியல்ல. ஆதலால், உன் கருத்தை வெளிப்படையாகத் தெரிவி. அதனால், ஒரு குற்றமுமில்லை என்றுகூற, தமயந்தி உள்ள மகிழ்ந்து நாணமீதூறத் தலை வணங்கிப் பெருவிரலால் நிலத்தைக் கீறிக்கொண்டு சொல்லுகிறாள்: ஓ அன்னமே! நீ தெய்வலோகத்து அன்னம். நான் மண்ணுலகத்தில் இருக்கும் மனிதர் ஜாதி. அம்மனித ஜாதியிலும் பெண்பால். என் கருத்தைச் சோதிக்க நீ கருதி இருக்கிறாயென்று விளங்குகின்றது. ஆதலால், உள்ளத்தில் இருக்கும் கருத்தை வெளியிடத்தான் வேண்டுமென்று சொல்லுகிறாள்: ஓ அன்னமே! நீ எடுத்துரைத்த நிடத தேசாதிபதி என்னை மாலையிடுவாரென்று கருதியே நான் இதுவரைக்கும் இந்த உடலைச் சுமந்தேனென்று கூற, அது கேட்ட அன்னம் மகா சந்தோஷத்தோடுஞ் சொல்லுகின்றது. ஓ மாதுசிரோமணி! கடல்சூழ்ந்த நெடிய வுலகத்திலிருந்து, சகல அரசர்களும் வணங்கச் செங்கோல் செலுத்தி, யாவராலும் மதிக்கப்பெற்ற சக்ரேஸ்வரனாகிய நளமகாராஜன் சமுகத்திற் சென்று, ஒரு ராஜகன்னிகை உன்மேல் ஆசையுற்றிருக்கிறாளென்று சொல்லுகிறேன். அப்படிச் சொல்லி அந்த மகாராஜன் கருத்தை உன்பால் திருப்பின பின்பு, தாய் தந்தையர் சுவாதீனத்திலிருக்கிற உன்னை அத் தாய் தந்தையர் மற்றொருவர்க்குக் கொடுத்து விடுவாராகில் அந்த மகாராஜனுக்கு நான் கூறிய வாக்குப் பழுதாகும். அப்படி என் வாக்குப் பழுதாகிப் பொய்த்தால், அப்பாற் சொற்கலோகம் என்னைத் தாங்குமோ தாங்காதாதலால், அதற்குத் தகுதியான மொழியைக் கூறுவாயாகில் அதற்குத் தக்க முயற்சி செய்ய நான் காத்திருக்கிறேனென்று கூற, தமயந்தி சொல்லுகிறாள்.

ஓ அன்னமே! குமுத மலருக்குச் சந்திரனுந் தாமரை மலருக்குச் சூரியனுமே யல்லாமல், வேறொரு தலைவரில்லை. அதுபோல நானும், நிடத தேசாதிபதியைத் தான் கணவனாகக் கொண்டிருக்கிறேன். ஆனால் என் தாய் தந்தையர் என்னை மற்றொருவர்க்கு மணஞ்செய்து கொடுப்பாரென்கிற வாக்கியத்தை நீக்கு. ஏனென்றால், மாதாபிதாவின் கருத்தின்படி புத்திரன் நடக்கவேண்டும். பெண்கள் கருத்தின்படி மாதா பிதா நடக்கவேண்டும். ஆதலால், என் கருத்திலிருக்கிறவன் நிடத தேசாதிபதி தான். அந்த அரசனையன்றி மாதரை மயக்கும் மாரன் வந்தாலும் மயங்காமல், என் கையிலிருக்கும் மணமாலையை நளனுக்கே சூட்டுவேன். என் தாய் தந்தையர் அந்த விதியைத் தள்ளி என்னை மற்றொருவர்க்கு மணம் புரிவிக்கக் கருதுவாராகில், உடனே அக்கினிப் பிரவேசமாகி என்னாவியை விட்டு உனக்குக் கொடுத்த வாக்குத் தத்தத்தை நிறைவேற்றுவேன். இனி என்னால் தடையில்லை. உன் கருத்தின்படி நானின்றேனென்று கூறிப் பின்னுஞ் சொல்லுகிறாள். ஓ அன்னமே! நிடத தேசாதிபதியின்பால் என் கருத்தைச் செலுத்திவிட்டேன்; இனி மற்றொரு புருடனைக் கனவிலுங் கருதேன்; என் கருத்து மகிழ அம் மகாராஜனைக் கூட்டுவிப்பது நின்கிருபை. என்னையும் அந்த மகாராஜனையும் நீ கூட்டி வைக்காமற் கைவிடுவையாகில், என்னுயிர் அக்கினிக்கு இரையாகும். அதனால் உனக்குப் பெண்பாவஞ் சேரும். ஆதலாற் பாப ரகிதமாகிய நீ என்னுயிரினுஞ் சிறந்த நிடத தேசாதி

பதியி னகன்ற மார்பை என் முலை முகட்டில் அழுந்தும்படி செய்விப்பது மேலான உதவி. இந்த உதவிக்கு மறு உதவி யான் செய்வேனென்று வாயாற் சொல்வது பெருங் குற்றம். ஏனெனில், உதவிக்கு மறுவுதவி செய்கிறோமென்று நினைக்கு நினைப்பு உதவி செய்தவர்க்குடனே யிடையூறு வரக் கருதினதுபோலாகுமென்று மனுசாஸ்திரமுறை யிடுகின்றதாதலால், நான் அதைப்பற்றி பதறி யொன்றுஞ் சொல்லமாட்டேன். நீமாத்திரம் தயைசெய்து உலகத்தை யெல்லாம் ஒரு வெண்பட்டுக் குடையில் நிகழ்த்திப் பாதுகாத்து வரும் நிடத தேசாதிபதியின் கருத்தை யென்பால் திருப்புவது உன் கடமையென்று கூறிப், பின்னுஞ் சொல்லுகிறாள்.

ஓ அன்னமே! நீ சகல கலைகளையுங் கற்றுணர்ந் திருப்பதோடு, சொற்க மத்திய பாதாள மென்னு முப்புவனத்திலிருக்குஞ் சிறந்தோரிடத்தும் நேசித்திருக்கின்றனை. ஆதலால், உனக்குச் சகலமுந் தெரிந்திருக்கும். ஆகிலும், யான் சொல்லுஞ் சில வசனத்தைக் கேட்டு அவ்வாறு நடப்பது உத்தமமாதலால், என் சிற்றறிவுக் கிசைந்ததைச் சொல்லுகிறேன் கேள். இராஜ சமுகத்துக்கு தூதாகச் செல்பவர்கள் தாங்கள் நாடிய ராஜன் தனக்குட்பட்ட அரசர்களிடத்துப் பகுதியைப் பெற்றுக்கொள்ளும் போதும், வித்துவான்கள் செய்யும்பிரசங்கத்தைக்கேட்டிருக்கும்போதும் ஒரு ஸ்திரீயினிடத்துக் கருத்தை வைத்திருக்கும்போதும், முக்கியமான காரியத்தை யோசிக்கும்போதும், தாங்கள் வந்த காரியத்தை கூறாமல்; அதனை மற்றொருவர் கேட்டு விகாதந் தேடாமல் இருக்கின்ற நற்சமயம் எப்போது வாய்க்குமோ? அப்போது தயாராக விருந்து அடுத்த காரியத்தை எடுத்துக் கூறவேண்டும். அப்படி கூறினாலுந் தாம் சொல்லி வருகின்ற வசனமானது, ஒழுக்கம்-சங்கதி-தொடர்பும்-பிறழாது, தாம் சொல்லி வந்த காரியத்தின் மேல் இராஜவினுடைய மனங்கோணாது வர வர விருப்பம் ஜெனிக்கும்படி உண்டாக்கி வைக்கின்ற சாமர்த்தியத்தையுடைய தூதுதான் சிறந்ததென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆதலால், நீ அம்சமென்னும் பெயரைப் படைத்ததற் கேற்றபடி என் பக்ஷத்திலும் இன்னும் சமமாகவிருந்து, காலம்-இடம்-தன்மை-இவையறிந்து, நான் கொண்டிருக்குங் கருத்தை முடிப்பதற்கு இன்ப மூண்டாக எடுத்துரைத்து, எவ்விதத்திலேனும் என்னை ஆதரவுபடுத்தென்று தமயந்தி கூறினள். இவ்வளவு சங்கதியைக்கேட்ட அன்னம் அளவற்ற சந்தோஷமடைந்து, இனி பயமில்லை. இதுதான் நல்ல சமயம். இப்போது ஊன்மையை எடுத்துரைப்பதே சகஜியமென்று கருதிச் சொல்லுகின்றது.

ஓ மாதுசிரோமணி! அந்த நளமகாராஜன் உன்னுடைய நற்குண நற்செய்கைகளையும் - ரூபலாவண்ய சௌந்தரியங்களையும்-சொல்லத் தக்கவர்களாற் பலதரங் கேட்டுக் காதல்மேற் கொண்டு, கனவிலும் நனவிலும் அனவரதமும் உன் பெயரை மறவாதவனாகி புலிபோல வந்து பாயுந் தென்றலுக்கும்-அழலை யுண்டாக்குஞ் சந்திரனுக்கும்-மன்மதனுடைய பேரிகை வாத்தியமாக சமுத்திர இரைச்சலுக்கும்-மாவிளந் தோப்பிலுள்ள குயிலொலிக்கும்-மாரவேளுக்கும்-அஞ்சாமல், அவைகள் மிஞ்சாமலிருக்க வேண்டியதற்கு மாறாக உடல் மெலிந்து, உன் வடிவச் சிறப்பைக் கேட்டுக் கேட்டு உன்னை நேர்க்கண்டு வசனிக்கிறதுபோல் வசனித்தும், உன்னுடன் விளையாடுதல்போல் விளையாடியும், உன்னுடன் பிணக்கங் கொண்டதுபோலப் பிணங்கியும், மனதிரங்கியும், உன்மீது கனமோகமாய் மனவேகமாய் தினசோகமாய் புன்முகமாய் ஏக்கமே தூக்கமா யிரங்கி வாடுகிறான். யார்யார் என்னென்ன கூறினும் அந்தச் சொல்லைக் கேட்காமல், தமயந்தி நம்மை மணம்புரிவாளோ? இலட்சுமிக் கொப்பாகிய அந்த மாதின் தனங்களிரண்டும் நமது மார்புற வழுந்துமோ? நமது மனம்போல் அந்த மாதின் மனம் நம்மை நாடியிருக்குமோ? நம்மை ஒரு பொருளாக மதிப்பாளோ? அவள் உள்ளக் கருத்தென்னோ? என்று பலவாறு நினைத்துச் சோர்வுற்றிருக்கிறான். அந்த மகாராஜன் நின்மேற் கொண்டிருக்குங் காதலுக் களவில்லை. அதனை யெடுத்துரைப்பவர் இவ்வுலகிலில்லை. ஆதலால், உன் மனவுறுதியை அறிந்துகொண்டு போகவந்தேன். நீ அந்த மஹாராஜன் கொண்டிருக்கிற காதலுக்கும் எண் மடங்கதிகமான காதலைக் கொண்டிருக்கிறாய். இதோ யான் சென்று அரசனைக் கண்டு, இங்கு நடந்த விருத்தாந்தத்தை யெல்லாம் எடுத்தோதுகிறேன். நீ நின் தாதியோ டிருவென்று கூறி விடைபெற்று, நளராஜ னிடத்துக்குச் செல்லக் குறிலென்று அந்தரத்திற் பறந்து

மறைந்து விட்டது. தமயந்தி அன்னஞ் சென்ற திசையிற் கண்ணையுங் கருத்தையுஞ் செலுத்திச் சித்திரப் பிரதிமைப்போல் நின்று விட்டாள்.

இப்பால் அன்னம் விரைவாகப் பறந்து நிடததேசத்தை யடைந்து அரசனைக்கண்டு, அவன் கரத்திலிறங்கிச் சொல்லுகின்றது. மின்னலைப் பழிக்கும் வேலாயுதத்தை யுடைய அரசனே! நற்குண நற்செய்கையை யுடையவர் ஒரு பொருளை விரும்பினால் அப்பொருள் உடனே கிடைக்குமாகில், அவைகளோடு மகா மண்டலேஸ்வரனாயு மிருக்கிற நீ நினைத்தபொருள் உனக்குக் கிடைப்பதும் அரிதாக இருக்குமோ? நான் நின் கிருபைபெற்று விதர்பதேசஞ் சென்று குண்டலி புரத்தை யடைந்து, தமயந்தியைக் கண்டு நின்புகழை எடுத்தோதி, அவள் கருத்தை உன்பால் திருப்பிவித்தேன். இனித் தேவர் அல்லது மாதரை மயக்கும் மாரன் தான் வந்தபோதிலும் அந்த மாதுசிரோமணியின் கருத்து நின்பாலிருக்குமேயன்றி, அவர்பால் திரும்பாது. அவ்வளவு உறுதிசெய்து வந்தேன். நாளைச் சுயம்வரஞ் சாட்டுவார்கள். நீ சென்று மணமாலை புனைந்துகொள்ளென்று கூறி, அரசனிடத்து விடைபெற்றுத் தனது கருத்துக் கிசைந்த விடத்திற் சென்றது. இங் கிவ்வாறாக, அங்கு முன்னம் விளையாட்டிற் பிரிந்த தாதியர்கள் தங்கள் தலைவியைக் காணமற் பூஞ்சோலையிற் றேடி வருகிறபோது, அசைவின்றிச் சித்திரப் பிரதிமைப்போ லிருக்குந் தமயந்தியைக் கண்டு அஞ்சிக் கையை நெரித்துக் கொண்டு, அவளருகில் வந்து உடல் முழுதுந் தடவி, ஓ! ஓ! மாதுசிரோமணி தன்னந்தனியே வந்தமையாற் கிஞ்சித்துப் பயந்ததுபோற் றோன்றுகின்றதென்று கருதி, திருஷ்டி ஆலாத்தி முதலியவை சுத்தி, குலதேவதை-இஷ்டதேவதை-வனதேவதை - இவர்களைப் பிரார்த்தித்துத் திருநீறிட்டு, எங்களாதீனத்தைச் செந்தாமரை மலரென்று விரும்பி வந்த இலட்சுமியே! நீ அணிந்திருக்கும் ஆபரணங்களின் பாரம் பொறுமல் உடல் சோர்ந்தனையோ? சூடிய மலர் மாலையில் வந்துவிழும் வண்டுகளை ஓட்டி ஓட்டி கைகள் சோர்ந்தனவோ? என்று பலவாறு கூறித் தமயந்தியை அழைத்துவந்து, கன்னியாமாடத்தில் இருக்குஞ் சந்திரகாந்த மண்டபத்திற் சேர்த்தனர். தமயந்தி, அன்னங் கூறியு நளச் சக்கிரவர்த்தியின்மேல் மிகுந்த காதல்கொண்டு, அந்த மகாராஜன் புஜமாகிய தறியினிடத்துக் கனத்துப் புளகித்துப் பாரிக்குந் தனமாகிய யானையைப் புணைப்படநேரிடுங் காலமென்றென் றேக்கங்கொண்டு, கமல மலரோடு மற்றொரு கமல மலர் வைத்ததுபோல் முக கமலத்தில் கரகமலத்தை வைத்து, பரிமள மிகுந்த நறுமலர் மாலை புனைந்த நீண்ட அளகஞ்சோரச் சயனித்து,ஒன்றும் பேசாமல் ஸ்மரணையின்றி யிருந்தனள்.

அதைத் தாதிகள் கண்டு, ஓ! ஓ! இதென்ன மாயம்? நம்மோடு விளையாடித் திரிந்த மாதுக்கு அகஸ்மாத்தாய்ச் சோர்வு வரவேண்டிய காரணமென்னவென்று அச்சங்கொண்டவராகி, சோர்வு நீக்கத்தகு முபசாரங்களைச் செய்தனர். சூரியனு மேற்றிசைக் கடலிலாழ்ந்தான். சந்திரனுதயமாயினன். உடனே தமயந்தி சிறிது சோர்வு நீங்கினவளாய், புலிபோற் பாய்ந்துவருந் தென்றலாலும், அழல்போற் காய்கின்ற சந்திரனாலும், மலரம்புகளை வீசு மன்மதனாலும் வருத்தமுற்று ஓ தென்றலே! இனிமையாகிய தமிழைப் பெற்று விளங்குஞ் சந்தனசலத்திற் பிறந்து உலகமெல்லாஞ் சுகத்தையடைய வரும்படியாகிய நீ, என்னை மாத்திரம் வருத்துகின்ற காரணமென்னவென்றும், சந்திரனைப் பார்த்து, ஓ மதியமே! நீ பிறக்கும்போது அமுதத்தோடு பிறந்தாய். ஒரு கலைபெற்ற காலத்து லோக கர்த்தாவாகிய பரமன் முடியிற் பொருந்தினை. பின்பு கலைகள் திகரிக்குந்தோறும் யாவராலுந் தன் சுடரென்று சொல்லும்படியான பெயர் கொண்டனை. இவ்வளவு மாட்சிமையுற்ற நீ எனக்குங் குளிர்ச்சியைத் தராமல் வெம்மையைத் தருவதை நோக்கினால், பிறந்த விடத்தில் விஷத்தோடு பழகி, ஒரு கலையுற்றபோது வளர்ந்த இடமாகிய பரமனது நெற்றித் தீக்கண்ணோடு நேசித்து, சோடசகலையும் பெற்று விளங்கின காலத்து விஷாக்கினியையுடைய பாம்பின் வாயிற்பட்டு மிருந்தமையால், செயற்கை வாசனைகொண்டு வெய்யோ னயினையோ வென்றும்; மாரனை நோக்கி, அடா மாரா! நான் உனக்கு ஒரு குற்றமுஞ் செய்யாதிருக்க என் மேற் படை யெடுத்தனை. இதென்ன கொடுமை? எனக்கிருக்குஞ் சடையைப் பரமன் சடை யென்றும், பசலையால் வெளுத்த என்னுடலைத் திருநீறணிந்த சாம்பவ மூர்த்தியின் திருவுரு வென்றும், சாந்தணிந்த என் கண்

டத்தைப் பரமன் காளகண்டமென்றும் நினைத்து வந்தனையோ? ஐயையோ!! நான் பெண்பால் என்மேல் வீணாகப் போருக்கெழாதே யென்றும் புலம்பித் தன்னை மறந்து சோர்ந்து விட்டாள்.

அதுகண்ட தாதியர் பனிநீரைத் தெளித்து, சந்தனத்தை வாரிப் பூசி, ஆலவட்ட முதலியவற்றாற் காற்றுவர வீசிச் சோர்வை யகற்றினர். தமயந்தி கிஞ்சித்துக் களை நீங்கிக் கண்விழித்துப் பார்த்து, அடி தாதியர்களே! சந்திரனுடைய அழலால் வேகும் என் தேகத்தைப் பாது காப்பது போல் அபிநயித்து, அந்தத் தீ அதிகரிக்க நெய்யை விடுவது போல் வெப்பமாகிய பனி நீரையுங் கலவைச் சாந்தையும் என்மேற் றெளிக்கிறீர்கள்; என்மேலுண்டாகிய அன்பு இதுதானோவென்று சொல்லி, ஓவென்றலறிக் கைசோர்ந்து மெய் சோர்ந்து விட்டாள். உடனே தாதியர்கள் யாவரும் ஒன்றாகக்கூடிச் சுற்றிலும் உட்கார்ந்து, தமயந்தியின் தலையையெடுத்து மடியின்மீது வைத்துக்கொண்டு முற்றும் நோக்கி ஒருவரை யொருவர் பார்த்து, ஓ! ஓ! சந்திரனுடைய அழற்சியால் உடலமெங்குங் கண்ணிப்போனதுமன்றி முத்தாரமும்வெந்துவிட்டது. நாம் தெளித்த பன்னீர் முத்துக்களின் மேற் பட்ட மாத்திரத்தில் வெண் சுண்ணம் போல நீற்றுப் போயின. குளிர்ச்சியைக் கொடுக்குங் கலவைச் சாந்து அக்கினிக் குழம்பாயிற்று. சொல் தடுமாறிற்று. கைகால் அசைவற்றன. நாசியிற் கைவைத்துப் பார்த்தாற் சுவாச மிருக்கிறது போலும் இல்லாததுபோலும் இருக்கின்றது. ஐயையோ!! இனி நாம் என் செய்கிறது இது காமக்குறியாக இருக்கின்றமையால், நமது யஜமானியாகிய வீமராஜன் மனைவிக்குத் தெரிவிக்க வேண்டும் என்று பேசிக்கொண்டவராகி, அன்றிராத்திரி முழுவதும் உபசாரங்களைச் செய்து வந்தார்கள். பெண்பாலிடத்துத் தீமைபுரியுந் திங்களைத் தண்டிப்பதற்கு ஓரரசன் வந்தாற்போற் சூரியனுதயமானான். தமயந்தி சோர்ப்பு நீக்கி நளனது திருவுருவத்தை மனக் கோட்டையில் வைத்து, அவனோடு வசனிக்கிறதும் களிக்கிறதும் ஊடுகிறதுமாக இருந்தாளேயன்றி, தாதியர் செய்யும் உபசாரங்களையும் மற்ற விளையாட்டுகளையுங் கருத்தில் மதிக்காதவளாகி யிருந்தாள்.

அதனைத் தாதியர்கள் கண்டு, இன்றைய தினமும் நாம் சும்மா யிருப்போமாகில், இன்றைய விரைவில் மாது படும் வருத்தத்துக்கு உபசாரஞ் செய்ய நம்மால் முடியாது என்று கருதினவராகி, வீமராஜன் மனைவியிடத்துச் சென்று வணங்கி தமயந்திபடும் வருத்தத்தை எடுத்துரைத்தனர். அதை வீமராஜன் மனைவி கேட்டு, நமது புத்திரி பக்குவகாலத்தை யடைந்தனளென்று கருதி, தன் கணவனிடத்துச் சென்று சொல்லுகிறாள். ஓ பிராண நாயகா! நமது புத்திரி பக்குவகாலத்தையடைந்தனள். இனி நாம் சும்மா இருப்போமாகிற் கெடுதி நேரிடும். மணஞ் செய்வதற்குத் தகுதியான முயற்சியைத் தேடுமென்று கூறினள். மனைவி கூறிய வாக்கியத்தைக் கேட்ட வீமன் மனக்களிப்புற்று, தன் கொலு மண்டபத்திற்கு வந்து மந்திரிகளை நோக்கிச் சொல்லுகிறான். ஓ மந்திரிகளே! நமது குமாரத்திக்கு மணஞ் செய்ய வேண்டும். நகரத்தை நன்றாக அலங்கரிக்க முரசு முன்னிலையில் யாவருக்குந் தெரிவித்து, தேவர்களும் வியப்புறக் கல்யாண மண்டப மொன்றியற்றி, மன்னர் மன்னர்களுக்கும் முனிவர்களுக்கும் - குடிகளுக்கும் தகுந்த ஆசனங்களிட்டு, சுயம்வரஞ் சாட்டி திருமுக முன்னிலையிற் சகல தேசாதிபதிகளுக்குந் தெரிவியுங்களென்று கட்டளை யிட்டனன். மந்திரிகள் தங்கள் கட்டளைக் குட்பட்டவரால் நகர முழுவதும் கல்யாண முரசறைவித்து, தேவர்களும் வியப்புறக் கல்யாண மண்டப மொன்று இயற்றி, அதில் அரசர்களுக்கும் முனிவர்களுக்குங் குடிகளுக்குந் தகுந்த ஆசனங்களிட்டு, சுயம்வரஞ் சாட்டி, கல்யாணவோலை எழுதி ஏழு நாளில் யாவரும் வருகிறதென்று அதிற் குறித்து, அத்திருமுகத்தைத் தூதுவர் கையிற் கொடுத்துத் தேசதேசத்துக் கனுப்பினார்கள்.

உடனே தூதுவர்கள் அத் திருமுகத்தைச் சகல தேசாதிபதிகளுக்குங் கொடுத்து, சக்கிரேஸ்வரனாகிய நளராஜனுக்குங் கொடுத்துப் போயினர். சகல தேசாதிபதிகளுந் திருமுகத்தைக் கண்ட மாத்திரத்தில் தங்கள் தங்கள் பரிஜனத்தோடு குண்டலிபுரத்தை வந்தடைந்தார்கள். வீமன் வந்த ராஜர்களுக்கெல்லாந் தகுந்த மரியாதை செய்து விடுதிகள் விட்டு உபசரித்து வந்தான். நகரிலுள்ளவர்கள் மாடமாளிகை கூட கோபுரங்களைப் புதிதாக்கி வெண்சாந்துபூசி, வீதிகடோறுந்

தோரணங்கட்டி, முத்துப்பந்தரிட்டு, பூரண
கும்பங்கள் நிறுத்தி, வாசற்படிகடோறும்
வாழை-கமுகம்பாளை-இளநீர்-முதலியவற்றை
நாட்டி, புஷ்பமாலைகளுந் தூக்கி, சந்தனத்
தாற் றரைமெழுகி விசித்திரமான கோலமிட்டு,
தாங்களும் ஸ்நானஞ் செய்து வஸ்திராபர
ணங்களினு லலங்காரஞ் செய்துகொண்டு,
மனக்களிப்புடன் யாவருஞ் சுபசோபன மங்
களம் பாடிக்கொண் டிருந்தனர். நிடத
தேசாதிபதியாகிய நளராஜன் மணவோலை
யைக் கண்டமாத்திரத்தில், மாரன் எய்த
பாணங்களை அதமாக்க மணக்கோலங் கொள்
ளக் கருதி மந்திரிகளை நோக்கி, விதற்பதேசத்
தரசன் குமாரத்தியின் சுயம்வரத்துக்குச்
செல்லவேண்டு மாதலாற் சகலரும் பிரயாண
மாகுங்களென்று கூறி, சபையைவிட்டு அந்
தப்புரத்துக்குச் சென்று, ஸ்நானஞ் செய்து
பூசைமுடித்து, பலவகை பதார்த்தங்களோடு
அமுதுண்டு, தாம்பூலந்தரித்து, மகரகுண்டல
ஆரகேயூர கடககங்கண மகுட முதலியவற்றை
அணிந்து, கவசந் தரித்து, அம்புப்புட்டிலை
முதுகிற்றூங்கி, வில்லைக் கரத்திலேந்தி, உடை
வாள் முதலிய ஆயுதங்களை தரித்துக்கொண்டு,
தூதுவர்களை அழைத்துத் தனது தேரை
அலங்கரித்துக் கொண்டு வரும்படி பாகனுக்
குரையுங்களென்று கூறினன்.

அவ்வாறே தூதுவர் பாகனுக்கு அர
சன் கட்டளையைத் தெரிவித்தனர். பாகன்
தேரை அலங்காரஞ்செய்து ஒரு நொடியிற்
கொண்டுவந்தான். உடனே அரசன் தேரேறி
நகர்ப்புறத்து வந்தான். மந்திரிகள் - தண்
டத்தலைவர்-வியூகத்தலைவர் - அணித்தலைவர்-
படைத்தலைவர்-முதலானவர்கள், தங்கள் தங்
கள் சேனைகளோடு அரசனுக்கு முன்னமே
தானே நகர்ப்புறத்து வந்திருந்தனர். அர
சன் அவர்களோடு கலந்து பேரிகை-டங்கா-
டமாரம் - காளம் - எக்காளம் - பேய்க்காளம்-
துத்தாரி-சின்ன முதலிய வாத்திய ஓசைகள்
கடலைப்போல் ஒலிக்கக் களிப்புடனே தன்
தேரைச் செலுத்தி, காடு-மலை-வனம்-வனந்
திரங்களெல்லாங் கடந்து விதர்ப்பதேச மடை
ந்து, குண்டலிபுரத்துக்கு வந்தான். சகல
அரசர்க்கு மேலான சக்கிரவர்த்தி வருதலை
வீமன் கண்டு எதிர்சென்று உபசாரஞ் செய்த
னன். நளன் நகர்ப்புறத்திற்றனே தன் சேனை
சமுத்திரத்துடனே யிருந்தான். ஒரு கமல
மலரை அநேகம் வண்டுகள் நெருங்கிச் சூழ்

வதுபோலக் குண்டலிபுரத்தை மற்ற நகரத்
தரசர்களெல்லாம் நெருங்கிச் சூழ்ந்தனர்.
கேளும் தருமராஜனே! மாது சிரோமணியா
கிய தமயந்தியென்னும் ஒரு கன்னி நிமித்திய
மாக உலகிலுள்ள அரசர்களெல்லாம் திரண்டு
குண்டலிபுரத்தில் வந்திருந்தமையை யாழ்
வல்லோராகிய நாரதமுனிவர் கண்டு, உடனே
சொற்கலோகத்துச் சென்றார். அவரை சொற்
காதிபதியாகிய இந்திரன் கண்டு எழுந்தெதிர்
சென்று அழைத்து வந்து, ஒரு பொற்பீடத்தி
லிருத்திச் சோடசோபசாரஞ்செய்து பலவாறு
புகழ்ந்து சொல்லுகிறான். ஓ முனிநாதா!
சொற்கமத்திய பாதாளமென்னு முப்புவன
சஞ்சாரியாகிய தேவரீரை அடியேன் செய்த
மாதவப்பேற்றால் இன்றிங்கு வரக் காணப்
பெற்றேன். தாங்கள் இவ்விடம் வந்த காரண
மென்ன? ஏதாவது அதிசயமான சமாசாரங்க
ளுண்டாவென்று வினவினன். நாரதர் இந்தி
ரனுக்குப் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறார்.

ஓ தேவராஜனே! பூலோகத்தில் விதர்ப்ப
தேசத்தரசனாகிய வீமனுக்கு தமனமுனி கிரு
பையினால் ஒரு புத்திரி பிறந்தாள். அவள்
பருவகால மடைந்தனள். அவளுடைய ரூப
சவுந்தரியங்களை ஒருவரால் உரைக்கத் தக்க
தல்ல. உரைக்கவென்றால், இரண்டாயிரம்
நாவைப் படைத்த ஆதிசேஷன்தா னுரைக்க
வேண்டும். அவ்வளவு சுந்தரத்தை யுடைய
வளுக்கு விவாகமாம். அதற்காகச் சகல
தேசாதிபதிகளும் விதர்ப்ப தேசத்தில் வந்து
சூழ்ந்திருக்கிறார்கள். அந்தத் தமயந்திக்
கொப்பானவர் இந்தச் சொற்கலோகத்திலும்
மாத்திரமல்ல, பாதாள லோகத்திலுமில்லை.
அவள் கருத்தோ? நிடத தேசாதிபதியாகிய
நளச்சக்கிரவர்த்தியின்மேற் காதல் கொண்டு
இருக்கிறது. இந்த அதிசயத்தை உனக்குத்
தெரிவிக்க வேண்டுமென்று இங்கு வந்தேன்.
இனி விடை கொடென்று சொல்லி, விடை
பெற்றுத் தமது கருத்துக் கிசைந்த விடத்துக்
குச் சென்றார். இந்திரன் தமயந்தியின் வனப்
பை நாரதராற் கேள்விப்பட்ட மாத்திரத்தில்,
ஆசையாகிய கடலுள் மூழ்கி, கீழ்த்திசைக்
கடவுளாகிய தானும், தென்றிசைக் கடவுளா
கிய யமனும், வடமேற்றிசைக் கடவுளாகிய
வாய்வு பகவானும், தென்கீழ்த்திசைத் தலைவ
னாகிய அக்கினி பகவானும், இந்நால்வருமா
கத் தத்தம் பரிசனத்தோடு விதர்ப்பதேசத்துக்
குத் திலதம்போ லொளிருங் குண்டலிபுரம்

வந்து சேர்ந்தார்கள். மற்ற அந்தர லோக வாசிகளும் வந்து நெருங்கினர். திருப்பாற் கடலி லுதித்த அமுதத்தை யுண்ட இந்திரன்- அக்கினி-யமன்-வாயு இத்தேவர்களே தமயந் தியின் இதழமுதத்துக்கு இச்சைகொண்டு வந் தனரென்றால், மண்ணுலகத்தி லிருக்கும் மன் னர் மன்னவர்கள் தமயந்திக்காக மடலூர்வ தற்கு நாணுவரோ? ஒருக்காலும் நாணமாட் டார்கள். சகல தேசாதிபதிகளுஞ் சகல தேவர் களும் வந்து நெருங்கிய குண்டலிபுரமானது, திருமாலுக் கிருப்பிடமாகிய வைகுந்தம்போ லிருந்தனவென்றால், அந்நகரத்தின் மாட்சி மையை நீரே மதித்துக் கொள்ளும்.

இவ்வாறு விண்ணுலகாதிபதிகளும் மண் ணுலகாதிபதிகளும் நெருங்கியிருக்கும்போது, சக்கிரேஸ்வரனாகிய நளன் தேவர்கள் வர வைக் கண்டு, அவர்களைத் தரிசிப்பதற்குச் சென்றான். இந்திரன் முதலான நாற்றிசைக் காவலர்களும் நளன் உருவத்தை நோக்கி மகிழ்ந்தவர்களாகி, தங்கள் கண்களாகிய வண்டு களை நளன் முகமாகிய கமலத்தி லிருக்கும்படி செலுத்தினர். நளன் அவர்கள் அருகிற் சென்று நாற்றிசைக் காவலர்களையுங் கை குவி த்து வணங்கி நின்றனன். அதற்கு நால்வரு மகிழ்ந்து பல ஆசிகள் கூறி, தங்களுடன் சம மாக ஒரு சிங்காதன மளித்து இருக்கச்சொல்லி, அவருள் இந்திரனானவன் நளராஜனோடு இதனைச் சொல்லுவதானான். ஓ மஹா மண்ட லேஸ்வரா! இதோ நிற்கிறவர் தென்றிசைக் கடவுள். அவர் பின்பக்கத்தி லிருப்பவர் வட மேற்றிசைக் கடவுள். என்னருகி லிருக்கிறவர் அக்கினி பகவான். நான் இந்திரன். நாங்கள் நால்வரும் ஒரு காரியார்த்தமாக மண்ணுலகத் திற்கு வந்தோம். அக்காரியம் உன்னால்தான் நிறைவேற வேண்டுமென்று கூறினன். இந் திரன் வழங்கிய சொற்களைக் கேட்ட நளன் உள்ளம் பூரித்து, ஓ! ஓ! சொற்காதிபதிகளா கிய இந்த நால்வர்க்குங் கிடைப்பதற் கருமை யான பதார்த்த மொன்று மில்லை. அப்படி யிருக்க, இவர்கள் ஒரு பதார்த்தத்தை நாடி யிருக்கிறோ மென்றும், அப்பதார்த்தத்தை நம்மா லடையவேண்டு மென்றுஞ் சொல்லு கிறார்கள். நாமோ? மண்ணுலகத்தி லிருப்ப வன். நம்மால் அந்தப் பொருளை அவர்க ளடைகிற தெவ்வண்ணம்? அப்பொரு ளின்ன தென்றுங் கூறவில்லை. குறிப்பறிந் தீவதே கொடையென்று மனுசாஸ்திரத்திற் கூறுகின் றது. இவர்கள் மனக்குறிப்பு நமக்குத் தோன்ற வில்லை. இவர்கள் காதலித்த பொருளின்ன தென்று நமக்குத் தோன்றுமாகில் அப்பொரு ளைக் கொடுப்பதுவு மன்றி, என்னுயிரையுங் கொடுப்பேன். ஒருவர் ஒரு பொருளை நாடித் தங்கள் கருத்தும் முகமும் நாண மற்றொருவ ரிடத்துச் சென்று கேட்பதே அரிது. அப்படி கேட்டுங் கொடாதவரை யல்லவோ பாபிய ரென்று நூல்கள் முறையிடுகின்றன. அது பற்றி யல்லவா நம் முன்னோர்கள் கேட்போன் உரைப்பதற்கு முன்னமே நாடிவந்த பொருளை உதாரத்தோடும் தத்தஞ் செய்கிறார்கள்.

மேலும் ஐந்து கற்பகவிருக்ஷத்தின் செல் வத்தையுந் தேவாமுதத்தையும் பெற்ற இந் திரனே நம்மை நாடி ஒரு பொருள் கேட் டால், அவர் களிப்புற அளித்தல் நமக்கு மேலான சிறப்பு. அந்த மகாராஜன் ஒரு பொருளை நாடிவந்தேனென்று கூறினனே யன்றி, இன்ன பொருளென்று கூறவில்லை. இதற்கு நான் என்ன செய்வேன்? என்று பல வாறு தனக்குள் யோசித் திந்திரனைப் பார்த் துச் சொல்லுகிறான். சொர்க்க மத்திய பாதல மென்னு மூவுலகிற்குங் கர்த்தனே! நான்செய்த பூஜாபலமோ? எங்கள் முன்னோர்செய்த பூஜா பலமோ? சொற்கலோகத்தைவிட்டு மண்ணுல கத்திற்கு வந்து என் கட்புலனுக்குத் தோற்றி என்னாலொரு காரிய முடித்துக் கொள்ள வேண்டுமென்று கூறினீர். அக்காரிய மின்ன தென்று விளங்கத் திருவுளங் கனிந்து கூறி னால், தங்கள் அடிமையாகிய நான் தடை யின்றி அக்காரியத்துக்குத் தகுந்த முயற்சி செய்கிறேனென்று கூறினன். அதற்கு இந் திரன் மகிழ்ந்து சொல்லுகிறான்: ஓ சொர்க்க மத்திய பாதாள மென்னு முப்புவனத்திலும் வெற்றி கொண்ட மாரனை வென்ற தீரனே! நாங்கள் நால்வருந் தமயந்தியின் வனப்பைக் கேட்டு மோகங்கொண்டு மண்ணுலகத்துக்கு வந்தனம். காமனுந் தன் வில்லை வளைத்து மலர்வாளி தொடுத்து எங்களுயிரை வாட்டு கிறான். அத்துன்பம் நீங்க நீ மாது சிரோ மணியாகிய அத் தமயந்தியி னிடத்திற் சென்று, என் பெயரையும் என் சிறப்பையும் எடுத்தோதி, எனக்கு மணமாலை சூட்ட இசைவி. என்மேல் மோகங்கொள்ளாமல் நீக்கி விடுவாளாகில், அக்கினிபகவான் அல்லது வாயு - யமன் இவர்களில் ஒருவருக்காவது பொருத்திவையென்று கூறினர்.

இந்திரன் வாக்கியத்தைக் கேட்ட நளன் அனலிடு மெழுகுபோல மனமது உருகி, ஒன்றுந் தோன்றாமல் சித்திரப் பிரதிமெய்போல் நின்று, பின்பு சிறிது தெளிந்து, ஆ! ஆ! நாம் தமயந்தியின்மேல் மனப்பூர்த்தியாகிக் கருத்தைச் செலுத்தியிருக்கிற செய்தி இந்த இந்திரனுக்குத் தெரியாததல்ல. நாமோ? அதிக காதல் கொண்டதுமன்றி,மாரனால் அவ தோலப்பட்டும் இருக்கிறோம். எல்லா மறிந்த தேவராஜன் நம்மை அப்பெண்பாலினிடத்திலேயே தூதாகச் செல்ல வேண்டுமென்று வேண்டுகிறான். அந்த மாது சவுந்தரியத்தில் மிகுந்தவளென்றும், அவளைத் தேவர்களுங் காதலித்து இருக்கிறார்களென்றும் அன்னஞ் சொன்னது இன்றுண்மையாயிற்று. இனி நாம் இந்திரன் வாக்கியத்தைத் தடுப்போமாகில் வாக்குப் பிழைநேரிடும். இந்திரன் கருத்தின்படி தூது செல்வதே தகுதியென்று மனதை உறுதிசெய்துகொண்டு, இந்திரனை வணங்கிச் சொல்லுகிறான்; ஓ தேவராஜனே! என்னுள்ள நிலையைக் கண்டிருந்துந் தமயந்தியினிடத்துத் தூதாகச் செல்லவேண்டுமென்று தாங்கள் கூறினது எனக்கு அதிக ஆச்சரியமாக இருக்கின்றது. உலகத்தில் யார் யார்க்கு எந்தெந்த வேலையிட வேண்டியதோ? அந்தந்த வேலையை அவரவர்களுக்கு இடவேண்டும். அதனை நீக்கி என்னை ஒரு பெண்பாலிடத்தில் தூதாகச் செல்லென்று கட்டளையிட்டீர்கள், நீங்களோ? தேவர்கள். நானோ? மண்ணுலகத்தில் இருக்கிறவன். தங்களுக்குத் தெரியாத நீதி ஒன்றில்லை. நீங்களே தூது செல்லென்றால், நான் மறுக்க வல்லவனல்லன். நான் அக்கன்னி காவலைக் கடந்து எவ்வாறு செல்லுவேனென்று கேட்க, இந்திரன் சொல்லுகிறான்.

ஓ மகாராஜனே! நாங்கள் நாடிவந்த கன்னிகை உன்மேல் அதிக காதல்கொண்டிருக்கிறமையால், உன் வாக்கியத்தைத் தடுக்காம லிணங்குவாளென்று கருதி உன்னைத் தூது செலுத்தக் கருதினோம். நீ எங்கள் வாக்கியத்தைத் தடுக்காமல் தூது சென்று அந்த மாதைப் பொருத்துவிப்பையாகில், சந்திர சூரிய ரிருக்கிற பரியந்தம் உனக்குச் சிறப்புண்டா யிருக்கும். கன்னி காவலைக் கடக்கும்படி உன் திருவுருவத்தை ஒருவர் காணாமலிருக்க மஹாவிநோதமான ஒரு அஞ்சனந் தருகிறோம் அதனைப் பெற்றுத் தமயந்தியினிடத்துச் சென்றவுடன் அந்த அஞ்சனத்தைத் துடைத்துவிடு, அவளுக்கு உனது உருத்தோன்றும். ஆதலால், இப்போதே போய் நீ தமயந்தியினிடத்திற் பேசவேண்டியவற்றைப் பேசி எங்களில் யாருக்காவ தொருவர்க்குப் பொருத்திவிட்டு வாவென்றுகூறி, உருத்தெரியாதிருக்க அஞ்சன மளித்தனன். நளன், இந்திரன் கருத்துக்கிசைந்து விடைபெற்று, உருமாறு மஞ்சனத்தை நெற்றியிலணிந்து குண்டலிபுர மடைந்து, வீதிகளை யெல்லாங் கடந்து தமயந்தியிருக்குங் கன்னியாமாடத்துத் தலைவாசற்படியிற் புக்கினன். கன்னி காவலாளர்கள் ஆளரவத்தைக்கேட்டு, யாரோ வந்தாற்போலிருக்கின்றது, ஆளைக்காணோம். இதென்ன ஆச்சரியம்? என்று ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துப் பேசிக்கொள்வதை நளன் கேட்டு, தலையை இரங்கி நாணமீதூற அக்காவலைக் கடந்து உட்புறத்துச் செல்லும்போது, அங்கங்குள்ள தடாகங்களையும், அத்தடாகத்தில் விளையாடும் மாதர்களையும், சோலைகளையும், அச்சோலையில் மலர்கொய்து விளையாடு மங்கையர்களையும், இன்னுமுண்டான பல அதிசயங்களையும் பார்த்துக்கொண்டு சென்றான்.

அப்படி செல்கின்றபோது, செண்டு விளையாடு மாதர்கள் தங்கள் கையிலிருக்குஞ் செண்டைத் தனக்கெதிரி லிருக்கும் மாதர்களிடத் தெறிந்தனர். அச்செண்டு செல்லுங் கதிதப்பி நளன் மார்பிற் பட்டுப் பூமியில் விழுந்தது. அதைச் சேசண்டெறிந்த மாதர்கள் கண்டு, ஓ! ஓ! நாமெறிந்த செண்டு அந்தரத்திற் சென்று தடைப்பட்டது போல மீண்டு பூமியில் விழவேண்டிய தென்னவென் றையுற்று,ஒருவரை யொருவர் பார்த்து மயங்கி நின்றனர். இதனைக்கண்ட நளன், யாதொன்றும் வசனியாமல் தலையை யிறங்கிக் கொண்டே தமயந்தி யிருக்கும் மாளிகைக்குச் சென்றான். நளன்மீது காதல்கொண்ட தமயந்தி ஆசைப் பெருக்கத்தினால் நளன் பெயரை யெடுத்தோதிக் கொண்டே யிருக்கிறவளாதலால், அந்தமாது களிப்புறத் தாதியர்கள் இதோ வந்தான் நளனென்று அடிக்கடி எடுத்துரைப்பர். அப்படி உரைப்பதினால், அங்குள்ள கிளிகள் அவ்வார்த்தையைக் கற்றுக்கொண்டு, எந்தவேளையும் அந்த வசனத்தையே சொல்லிக்கொண்டிருக்கும். நளன் வந்தபோதும் இதோ நளன் வந்தானென்று கிளிகள் சொல்லின. அதை நளன் கேட்டுத்

திடுக்கிட்டு, ஓ! ஓ! கிளிகள் நம்மை யறிந்து கொண்டது இனி என்னசெய்கிறதென்று மன வருத்தமுற்றுச் சற்றுநேரம் நின்றான். அச் சமயத்தில் நளன்மேற் காதல்கொண்ட தம யந்திக்கு மகிழ்வுண்டாகச் சில தாதியர்கள் நளனைப்போல் ஒரு படமெழுதிவந்து, இதோ நளன் வந்தான் பாரென்று சொல்லுகிறதை யும், தமயந்தி ஆவலுடன் அப்படத்தைப் பற்றி அணைகிறதையும், படமென்று கருத் துக்குத் தோன்றின மாத்திரத்தில் அத்தாதி யரை வெறுத்துக்கொள்வதையும் நளன் கண்டு களிப்புற்று, அன்னங் கூறியதும் அன் னத்தின் வாக்கின்படி ஒத்திருக்குஞ் சுதந்தரத் தையுங் கண்டு, இவள்தான் தமயந்தியென்று தெளிந்து, அவளது ரூபசவுந்தரியத்தைப் புகழ்ந்து, மனக்களிப்புடனே தானணிந்த அஞ்சனத்தைக் கையாற்றுடைத்தனன்.

அஞ்சனங் கலைந்தவுடன் நளனது திரு வுருவந் தோன்றிற்று. அங்குள்ள தாதியருந் தமயந்தியுங் கண்டு உருவெளித் தோற்றம் என்று கருதினவராகி, பின்பு தெளிந்து, யாரிக் கன்னிகாவலைக்கடந்து வருபவரென்று ஐயுற்றுத் திடுக்கிட்டு இரங்கின தலையை நிமி ராமல் நளன் பாதவடிவத்தைக் கண்டு, இந்த புருஷன் யார்? தேவனாகில் மண்ணுலகத்தி லிருக்கும் பொருளை விரும்பி வாரான். பாதம் நிலந்தோயாது. பாதாளத்தி லிருப்பவனாகில் எல்லா வுலகத்திலுஞ் சிறந்தது பாதாளம் அதிலில்லாத பொருள் மண்ணுலகத்திலில்லை. மண்ணுலகத்தி லிருப்பவனானாற் கன்னிக் காவலைக் கடந்து வருவதரிது. ஆதலால், வந்த புருஷன் யாரென்று தமக்குள் யோசித் துக்கொண் டிருக்கும்போது, தமயந்தி தாதி யை எச்சரித்து, வந்தவன் யாவனென் றறி மின்களென்று ஆக்யாபித்தாள். அருகிலிருக் குந் தாதியர்கள் நளனைப் பார்த்துச் சொல்லு கிறார்கள்: ஓ புருஷோத்தமா! உன்னைப் பார்த் தால் உருக்கொடு விளங்கும் மாரவேளைப்போ லிருக்கின்றாய் அதிக காவலையுடைய இந்தக் கன்னியாமாடத்துக் கெப்படி வந்தனை? காவ லாளர்கள் உன்னைக் காண்பாராகில், நீ கன வருத்தத்திற் குள்ளாகுவையே; இவ்வகைப் பட்ட கடினகாவலைக்கடந்து இங்கு வரவேண் டிய காரணமென்ன? நீ யார்? உன் பெயரி யாது? உனக்கிங்கு ஆகவேண்டுங் காரிய மென்னவென்று வினவினர். அதற்கு நளன் சொல்லுகிறான்: ஓ தாதிகளே! நான் நிடத தேசாதிபதி. என் பெயர் நளன். இங்கு வந்த தற்குக் காரணமென்னவெனில், இந்திரன் - வாயு - அக்கினி - எமன் - இந்நால்வரும் உமது எஜமானியாகிய தமயந்தியின்மேற் காதல்கொ ண்டு, என்னைத் தூதாக அனுப்புவித்தார்கள். தேவர்கள் கொடுத்த அஞ்சனத்தாற் காவலர் கள் கண்ணுக்குத் தோன்றாமல் இவ்விடம் வந்தேனென்று கூறினன்.

இந்த வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத் தில் உருவெளித் தோற்றத்தைக் கண்டு மகி ழுங் கருத்தையுடைய தமயந்தி உருவத்தோடு விளங்கும் நளன் நேரில்வந்து வசனித்ததைக் கேட்டுப் பரமானந்த மடைந்து, தலையை நிமிர்ந்து நளராஜனை முற்றுநோக்கி, அன் னங் கூறியதற்கும் நளனிருக்குஞ் சுந்தரத் துக்கு மொத்திருத்தலை யெண்ணி, கண்களால் நளனது அழகினுண்டாகிய நலத்தைக் கிர கித்து, தான் கொண்ட காமநோயைத் தணி த்து, நாணமீறத் தலையை வணங்கி தாதி யோடு பேசுதல்போலப் பேசத்தொடங்கி, ஓ! மஹாராஜனே! இந்திரன் முதலான நால் வருந் தூது அனுப்பிய கருத்தென்னவென்று வினவினள். அதற்கு நளன் சொல்லுகிறான். ஓ மாதுசிரோமணி! உன்னுடைய ரூபசவுந் தரியத்தைக்கேட்டு நின்போகத்தை விரும்பின வராகி இந்த மண்ணுலகத்தில் வந்தார்கள். அந்நால்வருள் இந்திரனென்பவன் பெரு மையை என்னொரு நாவாற் சொல்லத்தக்க தல்ல வாயினும், என்னாற் கூடியமட்டுஞ் சொல்லுகிறேன் கேள். அந்த இந்திரன் அசு ரர்குலகாலன். பர்வதங்களின் சிறகை அரி ந்த வச்சிராயுதன். அக்கினி முதலான எழு திசைக் காவலர்களுக்கும், இந்த மண்ணுல கத்துக்கும், பாதாளத்துக்குந் தலைவனாகி, சொர்க்கத்துள்ள முப்பத்து முக்கோடி தேவர் கள் - நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் - கின் னரர் - கிம்புருடர் - கருடர் - காந்தருவர் - சித்தர் - வித்தியாதரர் முதலான சகலரும் வணங் கும் பாதகமலத்தை யுடையவன். போகத்தி லுயர்ந்தவன். மஹா பராக்கிரமசாலி. சாபா னுக்கிரக சாமர்த்தியன். திருப்பாற்கடலில் அமுதத்துடனுற்பவித்த அயிராவதத்தைப் பெற்றவன் சுவேதாஸ்வங்களை யுடையவன். தேவாமிர்த கலசத்தை யுடையவன். சங்க நிதி - பதுமநிதி - கற்பகவிருக்ஷம் - காமதேனு - இவை முதலிய சிறந்த பொருள்களையுடைய வன். அளக்கரிய புகழைப் படைத்தவன்.

மேலும் அந்த மஹாராஜன் புலோமிசை-அரம்பை-ஊர்வசி முதலானவர்களைக் காதல் கொள்ளாமல் நின்மேற் காதல் கொண்டானென்றால், உன் தவப்பயனே பயன். நீ மானிட ஜன்மமாக இருந்துந் தேவர்களெல்லாம் உனக்குப் பணிவிடை செய்யும்படி எதிர் பார்த்திருக்கிறார்களென்றால், உன் சிறப்பே சிறப்பு. நீ மனமகிழ்ந்து இந்திரனுக்கு மணமாலை புனையக் கருதுவை. சொல்ப ஆயுளையுடைய மண்டலத் தரசரை மணந்து கொள்வதிற் பயனில்லை. நீடூழி காலஞ் சுகத்தைத் தருவதாகிய தேவபோகத்தை யனுபவித்தற் கிச்சை கொள்ளென்று கூறினன். இவ்வாறு கூறிய நளன் வாக்கியத்தைக்கேட்ட தமயந்தி அனலிடு மெழுகுபோல மனமது உருகி, இருசெவியிலுங் கரத்தை வைத்து மூடிக்கொண்டு, இஷ்ட தேவதையைத் துதித்துச் சொல்லுகிறாள். ஓ மகாராஜனே! மண்ணுலகத்தாருக்கு விஷ்ணுலகத்தார் தாய் தந்தையரென்று வேத முறையிடுகின்றது. அந்த வேதங்களை நன்றாகக் கற்றுணர்ந்து அந் நெறியினின்ற இந்திரன் காமத்தால் மதிமயங்கி என்னை விரும்பி உன்னைத் தூதனுப்பினாலும், எல்லாந் தெரிந்த நீர் மறுக்காமல் இந்திரன் கருத்திற்கிசைந்தீர், அதனை யுய்த்து நோக்கினால் தேவவாக்கியத்தைத் தடுக்கக் கூடாதென்கிற விதியை அநுசரித்து வந்தவராகத் தோன்றுகிறது. என் கருத்தை வெளியிடுகிறேன் கேளும். தேவரல்ல மற்ற மும்மூர்த்திகளேயாயினும் வேத விதிக்குப் பிசகுவார்களாகில் எள்ளளவேனும் அவர்களை மதிக்க விதியில்லை. ஆதலால் இந்திரன் கூறிய கர்ண கடூரமான வாக்கிய மிங்கு செல்லாது. மேலும், உத்தம ஸ்திரீகளின் லக்ஷண மென்னவெனில், ஒருவனைக் கணவனாக என் கருத்திற் குறித்திருக்கிறேன். அவனுக்கு மணமாலை சூட்டுகிறதேயன்றி மற்றொருவருக்கு மணமாலையிடேன், இனி இந்திரனைக் குறித்திங்கு பேசவேண்டியதில்லை. என்று கூறக்கேட்ட நளன் தமயந்தியின் மனவுறுதிக்கு மகிழ்ந்தவனாகிச் சொல்லுகிறான்.

ஓ மாதுசிரோமணி! இந்திரன் கருத்துக் கிசையாவிடினும், மற்ற வாயு-அக்கினி-இயமனாகிய மூவர்களுள் உனக் கிஷ்டமான வருக்கு மணமாலை சூட்டென்று கூறினன். அதற்குத் தமயந்தி சொல்லுகிறாள். மகாராஜனே! இந்திரன் கருத்துக் கிசையாத நான் மற்ற மூவர் கருத்துக் கிசைவனோ? அவர்களென்ன தேவர்களல்லவா? போகம்-ஆயுள்-புகழ்-செல்வம் ஆகிய இந்நான்கு பொருளும், அற்பம் கற்பொன்றிருக்குமாகில் மேற்குறித்த நான்குந் தனக்குத் தானே வந்தடையும். அவ்வளவு சிறப்புற்ற கற்புடைமையை நீக்கி சொற்ப பொருள்களுக் கிச்சை கொள்பவர் யார்? ஒருவருமில்லை. கற்புடைமையிற் கருத்தைச் செலுத்திய மாதர் கருதிய புருஷனுக்கு மாலையிடுவரே யன்றி, மற்றவர்க்கு மாலையிடார்கள். ஒருவேளை கருதிய புருஷன் கைக்குக் கிட்டாமற்போனால், அக்கினியில் விழுந்திறப்பரென்று கூறினள். அதை நளன் கேட்டு உள்ளம் பூரித்துச் சொல்லுகிறான். ஓ மாதுசிரோமணி! நீ கூறிய வாக்கியத்தை யுய்த்து நோக்கினால் இந்திரன்முதலான நால்வரை மணம்புரியேனென்றும், கருதிய புருஷனுக்கே மாலை யிடுவேனென்றும், கருதிய புருஷன் கைக்குக் கிட்டாதகாலத்தில் நெருப்பில் விழுந் திறப்பேனென்றும் அர்த்தமாகின்றது. நெருப்பில் விழுந்திறந்தால் அக்கினியை மணந்தது போலாகும். அல்லது நீரில் விழுந்திறந்தால் வருணனை மணந்ததுபோலாகும். இதற்கென்ன சொல்லுகிறாய்? அப்போது நீ கூறிய வாக்கியம் பழுதாகின்றதே யென்று வேடிக்கையார்த்தமாகவும், ஆக்ஷேபனையாகவும் வினவினன்.

இந்த வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில் தமயந்தி மதிமயங்கி, உத்திரவு கொடுக்கச் சக்தியற்றவளாகி, ஓ! ஓ! இந்த மஹாராஜன் நம்மேல் விருப்பற்றவனாக இருப்பானாகில், நமது வாக்கியத்தை ஆக்ஷேபிப்பனோ அன்னம் நம்மைக் குறித்து விசேஷித்து உரைக்கவில்லை போலுந் தோன்றுகின்றது. ஐயோ! நளமகாராஜனே என்னுயிரென்று நினைத்திருக்குமெனதுயிர் சோர அவரே இச் சொல்லைச் சொல்லத் துணிந்தமையால், உயிரைப்பருகும் யமதூத ரென்பவரிவரேயென் றேங்கி மனந்தளர்கின்றபோது, இருவர்க்குந் தூதாகச் சென்ற அன்னம், அவ்வேளையில் அந்த யிடத்துக்கு வந்து, மனவருத்தப்படுகிற தமயந்தியைப் பார்த்து, ஓ அம்மணி! தூதாகவந்தால் அந்த விதிக்கு மாறுபடாமல் நடக்கவேண்டுவது தகுதியாதலால், மஹாராஜன் தாட்சண்ணிய மின்றிச் சில வார்த்தைகளைக் கண்டிப்பாக பேசினன். அதைக்குறித்து

அரசனுக்கு நம்மிடத்தில் அன்பில்லையென்று
மதிக்கலாமா? நீ வருந்தப் படாதே யம்மா
வென்றுகூறி அரசனைப்பார்த்து, ஓ மகா
ராஜனே! மஹா பண்டிதரெல்லாம் உமது
சொல்லுக்கு விடை கொடுக்காரென்றால்,
பெண்பாலாகிய தமயந்தி விடை கொடுப்பா
ளோ? நீர் வந்த தூதுக் கிசைந்தபடி பேசி
னீர். அப்படி பேசினவர் இங்கு நடந்த விருத்
தாந்தத்தை மாத்திரம் உமது எஜமான்களுக்
குச் சொல்வதே நலமன்றி, இவள் சொல்லிற்
சொற்குற்றம் பிடித்துப் பரிக்ஷிப்பது தகுதி
யல்லவென்று கூறிற்று. அதுகேட்ட அரசன்
மனமகிழ்ந்து, தான் வந்த தூது பொருந்தா
மைக்கு மனவருத்த முற்று, தமயந்தியின்
மனவுறுதிக்கு மகிழ்ச்சி யடைந்து, முன்போல்
அஞ்சனமிட்டுக் கன்னிகாவலைக் கடந்து,
இந்திரன் முதலான நால்வரிருக்கிற இடத்
துக்கு வந்தனன்.

இந்திரன் முதலான நால்வரும் நளனைத்
தூதுவிட்ட பின்பு தாங்கள் வண்டு ரூபமாகி
அவன் பின்னாகவேசென்று, நளனுந் தமயந்
தியும் பேசியவற்றை யெல்லாங் கேட்டுக்கொ
ண்டு, அவனுக்கு முன்னதாக வந்து தங்கள்
பழைய உருக்கொண்டு ஒன்று முணராதவர்
போல நளனது வரவைப் பார்த்திருந்தார்
கள். நளன் நால்வருக்கும் நமஸ்காரஞ்செ
ய்து, தமயந்தி கூறியவற்றையும் அவள் கருத்
தையுந் தெரிவித்தான். இந்திரன் முதலான
நால்வரு மகிழ்ந்து, இந்திரன் பலபல அஸ்
திரங்கள் கொடுத்து, அந்தந்த அஸ்திரங்க
ளுக்குத் தகுந்த மந்திரங்களை யுபதேசித்து
நளனை வாழ்த்தினன். அக்கினி பகவான்
நளனை ஆசீர்வதித்து, அனலின்றி அடிசில
மைய மந்திரோபதேசஞ் செய்து, அந்த
அடிசிலுக்கு நளபாகமென்று பெயர் வரக்
கடவதென்று வரங் கொடுத்தான். வாயு பக
வான் நளனை வாழ்த்தி அவ்வ மந்திரத்தை
உபதேசித்தான். யமன் நளனுக்குப் பல ஆசி
கள் கூறித் தன் கையிலிருக்குங் கதைக்கு ஒப்
பாகிய ஒரு கதை யளித்தான். இந்த நால்வர்
கொடுத்த பரிசைப்பெற்று நளன் தனது
விடுதி வீட்டுக்குவந் தினிது வீற்றிருந்தான்.
கேளும் தருமநந்தனா! அன்றைய தினங்
கழிந்த பின்பு, மறுநாள் ஆயிரங் கரங்களை
யுடைய சூரியன் கருங்கடல் முகட்டிலுதய
மானவுடன், விதர்ப்பதேசத்துக் கரசனாகிய
வீமன் தன் மந்திரிமார்களை நோக்கி, ஓ மந்
திரி மார்களே இன்றைய தினம் நமது குமா
ரத்திக்கு மணம்புரிய வேண்டியதாகையால்,
அரசு முன்னிலையிற் சகல அரசர்களையுங் கல்
யாண மண்டபம் வந்து சேர்ந்து, அங்கிட்டி
ருக்கும் சிங்காதனத்தி லினிது வீற்றிருந்தார்
கள். ஏகசக்கிராதிபதியாகிய நளராஜன் தன்
பரிசனங்களை நிறுத்தி, சிலரோடு வெளிப்
பட்டு வெண் பட்டுக்குடைகவிய நவமன்மதன்
போல் நடந்து நகரத்தையடைந்து, கல்
யாண மண்டபம் வந்து அங்கிட்டிருக்குங்
கோடி சூரியப் பிரகாசமாகிய சிங்காதனத்தி
லினிது வீற்றிருந்தான்.

இப்பால், வீமராஜன் தன் குமாரத்தியை
அலங்கரித்துக்கொண்டு வரும்படி தாதியர்
களுக்குக் கட்டளையிட்டான். தாதியர் தமயந்
திக்கு ஸ்நானஞ் செய்வித்து ஈரம் புலர்த்தி,
வெண்பட்டாடை யணிந்து, கரிய குழலைவா
ரிச் சடையிட்டு, மல்லிகை முல்லை முதலிய
மாலைகளைப் புனைந்து, சகல ஆபரணங்களு
மணிந்து, கலவைச் சாந்துபூசி, மகாலட்சுமி
யும் நாணத்தகுந்த அழகினையுடைய தமயந்
தியை அலங்காரஞ்செய்து, கல்யாண மண்ட
பத்துக் கழைத்து வந்தார்கள். தமயந்தி தன்
பிதாவாகிய வீமராஜனை வணங்கி நின்றனள்.
பிதா தன் புத்திரியின் முகக்குறியை அறிந்து
லோக கர்த்தாவாகிய திருமாலைத் தியானித்
தான். திருமாலுள்ளங் கனிந்து பிரமனை
நோக்கி, ஓ புத்திரசிகாமணியே! நின் மனைவி
யாகிய சரஸ்வதியைத் தமயந்திக்குத் தாதி
யாக இருந்து வந்த அரசர்களின் பெயரை
எடுத்தோதிவரக் கட்டளையிடென்று கூறினர்.
பிரமன் தன் மனைவியாகிய சரஸ்வதிக்குக் கட்
டளை யிட்டனன். சரஸ்வதி ஒரு மானிட
ஸ்திரீபோல் வந்து தமயந்தியின் கரத்தைப்
பற்றிக்கொண்டு, அரசர்குழ மிருக்கு மிடத்துக்
குச்சென்று, அங்கு வந்திருக்கும் மன்னர் மன்
னர்களைச் சுட்டிக்காட்டி, அவரவர்கள் பெய
ரையும் சிறப்பையும் தேசத்தையும் எடுத்
தோதி, நளனுருக் கொண்டிருக்கிற இந்திரன்
முதலானவர்களைக் குறித்துத் தனித்தனியே
சுட்டிக்காட்டி, அவர்கள் விண்ணவரென்று
விளங்கச் சிலேடை மொழிகளால் தெரிவி
த்து, நிடத தேசாதிபதிகளாகிய நளராஜனி
டத்து வந்து அவனைக் குறித்துக் காட்டிச்
சொல்லுகிறாள். ஓ அம்மணி! இதோ இருக்
கும் அரசன் வெற்றியிற் குமாரசுவாமியை
யும், அழகில் மாரனையும், காத்தலில் திருமா

லையுமொத்தவன். இவன்தான் நிடத தேசாதிபதியென்று கூறினள்.

இப்படி கூறிய தாதியாகிய சரஸ்வதியின் வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில், தலையை நிமிர்ந்து நளனைப்பார்த்தாள். அப்போது தாதிகாட்டிய நளனோடு ஐந்து நளனிருத்தலைக்கண்டு, அவருள் நால்வர்க்குக் கண்ணிமைக்காம லிருத்தலையும், மாலைகள் வாடாதிருப்பதையுங் கண்டு, இவர்கள் தேவரென்று தெளிந்து, வாடியமாலையுங் கண்ணிமைத்தலையுமுடைய நளனையே நளனாக உணர்ந்து, தன் கையிலிருக்கும் பரிமளமிகுந்த நறுமலர் மாலையை யெடுத்துக் குமாரசுவாமி போல விளங்கும் நளராஜன் கழுத்திற்சூட்டிச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து நின்றாள். அந்தவேளையில் அந்தர துந்துமி முழங்கிற்று. அப்சர ஸ்திரீகள் மங்களம் பாடினர். தேவர்களெல்லாங் கற்பகப்பூவை மாரிபோல் தூவிப் பல ஆசிகள் கூறினர். கல்யாண மண்டபத்தில் பேரிகை - டங்கா - டமாரம் - காளம் - எக்காளம் - பேய்க்காளம் - சின்னம் - துத்தாரி - முதலிய வாத்தியகோஷமும், அரசர்களின் கோஷமும் அண்டரண்டங்கள் அதிர முழங்கிற்று. கேளும் தருமநந்தனா! பாலசுப்பிரமண்ணியரிடத்துத் தெய்வயானை யிருந்தது போல நளராஜனிடத்துத் தமயந்தி சேர்ந்த மாத்திரத்திற் கல்யாணமண்டபத்தி லிருந்த ஐம்பத்தாறு தேசத் தரசர்களெல்லாம் முகம் வேறுபட்டுச் சினங்கொண்டு, நளனைப் புறங்கண்டவர்க்கே தமயந்தியுரியவளென்றுகூவிக் கொண்டு யாவரும் ஒருமிக்கத் திரண்டு போர்க்கெழுந்தனர். அதனை நளன்கண்டு குறுநகைகொண்டு, வீமராஜனிடத்துத் தமயந்தியை ஒப்பிவித்துப் பாதுகாக்கச் சொல்லி, தான்தன் இரதகஜதுரகபதாதிகளோடுபோர்க்கோலங் கொண்டு, தன்னை எதிர்த்த அரசர்களோடு மேலிட்டு வில்லைவளைத்து, நாணியேறிட்டு டங்காரவோசை யெழுப்பி, சோனைமாரிபோல் கணைகளைத் தூவி, யார் யார் என்னென்ன கணைகளைத் தொடுத்தார்களோ? அதற்குப் பதிலாகவும் மாறாகவும் அவ்வக் கணைகளைவிட்டு அறுத்து, தேரை உடைத்து, குதிரைகளைக் கொன்று, யானைகளைப் பிளந்து, காலாள்களை அதமாக்கி, அரசர்களைக் கைகால் ஆடவொட்டாமல் நாராசங்களைத் தொடுத்து அட்டகாசஞ் செய்தான்.

அவனோடு அரசர்களெல்லாம் எதிர் நின்று போர்செய்யச் சக்தியற்றவராகி, முதுகு காட்டித் தங்கள் தங்கள் நகரத்துக்குச் சென்றனர். இந்திரன் முதலாகிய நால்வரும், மற்ற தேவர்களும் தம்தம் இருப்பிடத்துக்குச் சென்றனர். இங்கே நளன் தன்னை எதிர்த்த அரசர்களை வெற்றிகொண்டு ஜெயசங்கம் பூரித்து, தனது சேனைகளோடு அரண்மனைக்குத் திரும்பினன். உடனே வீமன் எதிர்சென்று, நளனை அழைத்துவந்து ஸ்நானஞ் செய்வித்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் கல்யாண மண்டபத்தில் தன் குமாரத்தியைக் கொண்டுவந்து நளனோடு உட்காரவைத்து, வேத வேதியர்களால் கல்யாணச் சடங்கைக் குறைவின்றி நிறைவேற்றி, மங்கலத்தை நளன் கையால் அணிவித்து, சகல வாத்தியங்களும் முழங்க ஆசீர்வதித்து, நாடு - நகரம் - ஆடை - ஆபரணம் - தாதியர் முதலியவைகளைச் சீதனங் கொடுத்து, வேதவேதியர்க்கும் மற்ற வித்வ ஜனங்கள் முதலானவர்களுக்கும் உள்ளம்பூரிக்கத் தானம் செய்து, இரவலர் முதலானோருக்கு இருகையாலும் ஓயாமல் சொர்னமாரி பெய்து, மகளையும் மருமகனையும் அரண்மனைக்கு அழைத்துப்போய் மணவிருந் தளித்து மகிழ்வுற்றனன். நளனும் தமயந்தியும் ஆறாத காதல் கொண்டு, இரதியும் மதனும்போலக் கூடிக் கலந்து சுகத்தை அனுபவித்து, சிலநாள் விதர்ப்பதேசத்தில்தானே யிருந்து, பின்பு வீமராஜனிடத்து விடைபெற்றுத் தானும் தன் மனைவியும் இரதமேறி, தன் நால்வகைச் சேனையும் தொடர்ந்துவர தன்னகரத்துக்குள் சென்று, அந்நகரை வலமாகவந்து அரண்மனைக்குள் புகுந்து குடிகள் முதலான யாவர்க்கும் விருந்தளித்து, தானும் தன் மனைவியுமாக இன்பத்தை அடைந்திருந்தான்.

கேளும் தருமநந்தனா! சத்தியத்தினால் சக்கரம் நடாத்திவரும் நளன் இவ்வாறு சுகித்திருக்கிற காலத்தில், கல்யாண மண்டபத்துக்கு வந்திருந்த இந்திரன் முதலான நால்வரும் சொர்க்கலோகம் செல்லும்போது, சனிபகவான் அந்நால்வர்க்கு எதிராக அரையில் இருக்கும் ஆடை சோர்வதையும் அறியாமல் அதிக விரைவாக ஓடிவந்தான். அவனை இந்திரன் முதலான நால்வருங்கண்டு, ஓ சனிபகவானே! இவ்வளவு வேகமாக எங்கு செல்கிறாயென்று வினவினர். சனிபகவான் சொல்லுகிறான்: ஓ சொர்க்காதிபதிகளே! பூலோகத்தில்

விதர்ப்பதேசத்து அரசனுகிய வீமராஜன் தமனமுனி வரத்தால் ஒரு கன்னிகையைப் பெற்ருனும். அக்கன்னி மிகுந்த சுந்தரத்தை யுடையவளாம். அவளுக்கு இன்று கலியாணம் செய்ய நிச்சயித்து சுயம்வரம் சாட்டி இருக்கிருனும். அதற்காக நான் இவ்வளவு வேகத்தோடு செல்கிறேனென்று கூற, இந்திரன் முதலான நால்வரும் சிரித்துச் சொல்லுகிருர்கள். ஓ சனீஸ்வரா! வீமன் புத்திரிச்குச் சுயம்வரமென்று கேள்விப்பட்டுதான் நாங்களும் உன்னைப்போல் காதல்கொண்டு சென்ருேம். ஆனுல், அவள் நளராஜன்மேல் காதல் கொண்டவளாகி எங்களை நீக்கி நளனுக்கு மணமாலையைச் சூட்டினள். அதுகண்டு அரசர்கள் எதிர்த்துப் போர்புரிந்து புறங்காட்டித் தத்தம் பதிக்குச் சென்றனர். நாங்களும் வந்துவிட்டோம். நீரேன் செல்லுகிறீர். வாருமென்றழைத்தனர். சனிபகவான் அதிக கோபங்கொண்டு, நான் காதல்கொண்ட தமயந்தியை மணந்த நளனையும், அந்தத் தமயந்தியையும் கனவருத்தத்துக் குள்ளாக்காமல் விடேனென்று சபதங்கூறி, நிடததேச மடைந்து, மாவிந்த நகரத்தில் புகுந்து, அந்நகரத்தில் இருப்பவர்கள் ஒழுக்கத்தைக் கண்டு வியந்து அரண்மனைக்குள் சென்ருன்.

அங்கே நளனிருக்கும் நெறியும், அவன் நடாத்தும் அரசுரிமையையும் கண்டு கனவருத்தமுற்று, இந்த மகாராஜனை நாம் பிடிப்பது எவ்வாறு? இவனது நற்குண நற்செய்கையை அறியாமல் தேவராஜன் முன் சபதங் கூறிவிட்டோம். இந்திரன் சமுகத்தில் இனி எப்படி நிற்கிறதென்று பலவாறு துன்பமுற்று, அங்கிருக்கும் ஒரு தான்றிமரத்தில் ஏறிச் சமயம் பார்த்துக்கொண் டிருந்தான். நளன் மநுசாஸ்திரவிதி பிசகாமல் செங்கோல் செலுத்தி தமயந்தியினேடு கூடிக்கலந்து, ஒரு புத்திரனையும் புத்திரியையும் பெற்ருன். இதுவரைக்கும் ஒழுக்கத்தில் சிறிதும் தவிர்ந்தவனல்ல. ஒழுக்கத்தில் நின்றும் நீங்காத நளன் ஒருநாள் காலலம்பும்போது, புறங்காலில் எள்ளளவிடம் நனையாமலிருந்தது. சனி பகவான் அதுகண்டு, இதுதான் தருணமென்று நனையாதிருந்த புறங்காலில் வந்தடைந்தான். சனி பகவான் பாதத்தில் வந்துசேர்ந்த மாத்திரத்தில் தருமசிந்தையையுடைய நளன் குணமாறுபட்டு, வேட்டையாடக் கருத்துக்கொண்டு வேட்டையாடியும், முன்னம் நடக்காமல் நீக்கிய சில கொடிய நீதியைத் தழுவியும், அரசு செய்து வந்தான். செல்வஞ் சிறிது குன்றிற்று. ஒளி நாளுக்குநாள் மழுங்கிற்று. நளனது நடத்தையைக் கண்ட குடிகளும் மற்ற அரசர்களும் ஆச்சரியத்தையடைந்து எண்ணுது எண்ணி தங்களுக்குள் வருத்தமுற்றிருந்தனர். அப்போது சனிபகவான் இந்த நளனை பராரியாக்கக்கருதி, நளனுக்கு பகுதிகட்டும் அரசரிலொருவனுகிய புஷ்கரராஜனிடத்து சென்று, அவனை தேற்றி தன் வசமாக்கி, ஓ அரசனே! நீ இப்போதே சொக்கட்டானென்கிற சூதில் வல்லவனென்று கொடிபோட்டுக் கொண்டு மாவிந்தநகரம் வந்து சேர்ந்து நளனேடு பந்தயம் வைத்தாடு. அந்த நளனுடைய நாடு நகர முதலியவற்றை உனக்குச் சுவாதீனப்படுத்துகிறேன் என்று வாக்கு தத்தஞ்செய்து கொடுத்து அவனை விரும்படி திட்டஞ்செய்ய, அப்புஷ்கரன் சனிபகவான் உத்தரவை யுறுதியாகக்கொண்டு, தன் தேரிற் சூதுக்கொடி போட்டு மாவிந்த நகரத்துக்கு வந்து தன் வரவைத் தெரிவித்தான்.

அதனை யுணர்ந்த நளன் புஷ்கரனை வரும்படி கட்டளையிட்டு, வந்த புஷ்கரனுக்குத் தகுந்த மரியாதைகள் செய்து உட்காரவைத்து, நீர் சூதுக்கொடி பிடித்த காரணமென்னவென்று வினவினன். புஷ்கரன் சொல்லுகிருன்: ஓ மகாராஜனே! சூதாடுபவரிலென்னைப்போல வல்லவர் நெடிய கடல்சூழ்ந்த இந்த பூமண்டலத்தி லொருவருமில்லை. ஆதலால், அதனையே ஒரு விருதாகப் பிடித்திருக்கிறேன். யாராவதெந்தனை வெல்பவர் இருந்தால் இந்த விருதையும் இத்துடன் என் நாடு நகர முதலிய எல்லாவற்றையுங் கொடுத்து விடுகிறேன். தோற்பாராகில் அவர்களைப் பராரியாக்கிக் காட்டிற்கு துரத்தி விடுவேன். இதுதான் என் கருத்தென்று கூற, நளன் குறுநகை கொண்டு சொல்லுகிருன். ஓ புஷ்கரா! இந்தச் சூதுக்கொடி பிடித்துக் கொண்டு எத்தனை அரசரை வஞ்சித்தாய்? நல்லது நம்மோடு ஒரு ஆட்டம் ஆடுகிறையா வென்று வலிய வினவினன். அவ்வினவுக்குப் புஷ்கரன் மகிழ்ந்து, அந்த வாக்கியத்தை உறுதிப்படுத்தக் கருதிச் சொல்லுகிருன். ஓ மகாராஜனே! நீர் மகா யோக்கியர். உமக்கு இந்த சூதாட்டத் தெரியாது. நீரேன் வீணுகப் பெருமையிழக்கின்றீர்? வேண்டாம் என்று கூறியும் நளன் கடுஞ்சினமடைந்து, அடா புஷ்கரா!

சூதாடுவதில் நீ வல்லவனென்றும் அந்த வல்லமை என்னிடத்திலில்லையென்று மதித்தனை. சபாசு! நல்லது ஒரு ஆட்டம் ஆடு. நான் தோற்றால், என் நாடு நகரத்தை கொடுத்து விடுகிறேன். நீ தோற்பையாகில் அந்தக் கொடியை பறித்துக்கொள்வதுமன்றி, உன் நாடு நகர முதலியவற்றையும் பறித்துக் கொள்ளுவேன் என்று கூறினன். நளன் வாக்கியத்தை கேட்ட புஷ்கரன் சிரித்து, நல்லது உமது கருத்தின் படி சூதாடுவோம் வாருமென்று கூறி, சூதுப் பலகையை விரித்து காய்களை வைக்கு முறையுடன் வைத்தான்.

கேட்டீரோ தருமநந்தனா! இந்த விபரீத காரியத்தை அந்நளனுடைய மந்திரிமார் கண்டு மனவருத்தமுற்று, அவர்கள் அரசனுக்கும் பல நீதிகளெடுத்தோதியும் சனியின் மகத்துவத்தால் அரசன் மீறினன். அதைக் கண்ட யாவரும் பெட்டியிற் பாம்படங்குவது போல அடங்கி விட்டார்கள். நளன் எதிர்ப் பந்தயமாகத் தன் நகரத்தை வைத்தாடினான். சனிபகவான் புஷ்கரன் பக்கமிருந்து நளனைத் தோற்கும்படி செய்தான். நளன் பின்னும் ஒரு ஆட்டமாடி நாட்டையுந் தோற்று விட்டான். இப்படி ஒவ்வொரு ஆட்டத்திற்கு உம்மைப்போல் ஒவ்வொரு வகைப் பொருளை வைத்தாடி, தானுந் தன்மனைவியும் புத்திரருந் தவிர மற்ற எல்லாவற்றையுந் தோற்றுப் புஷ்கரனிடத்து ஒப்புவித்து, பின்பு ஒன்று மற்ற பராரியாகிக் கட்டியவுடையோடு நகரத்தை விட்டு உங்களைப்போல வனத்துக்கு வந்து விட்டான். கேட்டீரோ தருமநந்தனா! நீர் ஒருவன்றான் வலியச் சூதாடி வருத்தத்துக் குள்ளானோமென்று ஏக்கங் கொண்டீரோ? இந்த நளனுக்குவந்த வருத்தத்தைக் கேட்டிலீரோ? இந்த நளன் சக்கிரேஸ்பரனாயிருந்தும் காலத்துக்குத் தக்க புத்தியை அடைந்தானே அன்றி, சுயபுத்தியை வகித்திருந்தானா? என்று கூறத் தருமராஜன் தான் கொண்ட வருத்தத்தை நீக்கி, உரோமசன் மரை வணங்கிச் சொல்லுகிறார்: ஓ மாதவ சிரோமணி! ஓ எனது துன்பசாகரத்துக்கொரு தோணியாக வந்த மஹாநுபாவா! நளன் சரித்திரத்தைக் கேட்கவே பின்னும் பின்னுமின்னுங் கேட்க வேண்டுமென்று என் மனம் விரும்புகின்றது. ஆதலால், மற்றதையும் விளங்க வுரைக்கவேண்டுமென்று வேண்ட உரோமசன்மார் சந்தோஷித்துச் சொல்லுகிறார்.

கேளும் தருமநந்தனா! காட்டிற் சென்ற நளனுடைய மனஞ் சற்றும் வருந்தாமல், மணமகன் மனம்போல் முக மலர்ந்திருக்கின்றது. அன்றியுந் தனக்கு நேர்ந்த விபத்தைக் குறித்து எள்ளளவேனும் வருத்த மடையாமல் தானுந் தன் மனைவியும் புத்திரருமாகக் காட்டிற்சென்றான். அனிச்ச மலரையும் அன்னத்தின் தூவியையும் நெரிஞ்சிப் பழம்போல் நினைக்குந் தமயந்தியின் பாதங்கள் காட்டிலுள்ள வெம்பரல்களாற் கண்ணியும், தேகம் வெய்யிலாற் குண்ணியும், பசியால் வாடியும், தாகத்தாற் களைத்தும், அவளது முகஞ் சிறிதும் வாடாமல், எல்லாம் விதிப்பயனென்று கருதி, நாயகனுடைய வருத்தத்தைக் கண்டு மாத்திர மனந்தாளாமல் உள்ளம் நடுங்கி அவனுக்குப் பின் சென்றாள். நளன் சில தூரங் காட்டிற் சென்று, அங்கு தோன்றும் விதர்ப்ப தேசத்திற்குச் செல்லும் வழியைக் கண்டு தமயந்தியை நோக்கி, ஓ மாதுசிரோமணி! இவ்வழி உன் தந்தை யூருக்குச் செல்லும் வழியாதலால், இந்த வழியாக நீயும் உன் புத்திரருமாகச் சென்று உன் பிதாவினிடத் திருங்கள். நானனுபவிக்க வேண்டியவற்றை யனுபவித்து வந்து சேருகிறேனென்றான். இந்த வாக்கியம் நன்றாகச் செவியிற் படுமுன் தமயந்தி சோர்ந்து விழுந்து எழுந்து நின்று வணங்கிச் சொல்லுகின்றாள். ஓ பிராணநாயகா! உத்தம ஸ்திரீகள் நாயகனைவிட்டுப் பிரிந்திருப்பதைக் கேட்டிருக்கின்றீர்களா? அப்படியிருக்க, என்னை என் பிதாவினிடஞ் சேரக் கட்டளை யிடுவது என் மேல் வைத்த அன்புடைமையோ? அல்லது என்னைக் காப்பாற்றுஞ் சுமையாலுமக்குத் தலைநோவுகின்றதோ? அவ்வகைப்பட்ட கட்டளை யிடாமல், அடியேனை மாத்திரம் பிரியாமலிருக்கும்படி வேண்டுகிறேனென்றாள்.

அவ்வாக்கியத்தைக் கேட்ட நளன் அனலிடு மெழுகுபோல மனமது உருகி, சற்றுநேரஞ் சோர்வுற்றுப் பின்பு நெளிந்து நிற்கின்ற தருணத்தில், ஒரு வேதியன் கண்ணுக்குத் தோன்றினன். அவ்வேதியனை யருகிலழைத்துப் புத்திரர்களை அவன் வசத்திலொப்பி வைத்து, இவர்களை வீமராஜனிடத் தொப்பிவித்து விடென்று கூறி அவனிடத்து விடைபெற்று, தானுந் தமயந்தியுமாகச் சேர்ந்து காட்டிற் சென்று, காய்கனிகளை யருந்திப் பசிநோயைத் தவிர்த்துக் கொடிய வனத்திற் சஞ்

சரித்துக் கொண்டு வருகிற நாளில், ஒரு நாள் சனிபகவான் இந்த இருவருக்கும் ஒரு உடையாக இருக்கக் காணவேண்டு மென்கிற விருப்பத்தைக் கொண்டு, (அட்டமச் சனியன் புட்டத்துத் துகிலைக் கொண்டு போவான்) என்கிற பழமொழியைத் திருஷ்டாந்தப் படுத்தத் தன் மாயையாற் சில அன்னங்களை உண்டாக்கி, இருவர் வரும் வழியில் மேய்ந்து திரியும்படி கட்டளை யிட்டான். அவ்வன்னங்களை நளனுந் தமயந்தியும் பார்த்து, முன்னங் கூட்டுவித்த அன்னம் போல் இருக்கிறதுகள் என்று யோசித்து நிற்கும்போது, தமயந்தி ஓர் அன்னத்தைப் பிடித்துக் கொடுமென்று தன் கணவனை வேண்டினள். நளன் தானணிந்த வஸ்திரத்தை யவிழ்த்து வலை யிட்டது போல அன்னங்கள் மேல் விசிறினன். அன்னங்கள் தங்கள் மேல்விழுந்த வஸ்திரத்தைத் தூக்கிக் கொண்டு அந்தரத்திற் பறந்து துலைவிற் சென்று சில சொல்லுகின்றன,

ஓ நளராஜனே! நீங்களிருவரும் ஒரு ஆடை புனைந்திருக்க எங்கள் யஜமானுகிய சனிபகவான் எங்களைப்பற்றி எறிந்தனை. யாங்கள் அதனை எடுத்துக்கொண்டு பறந்து வந்து விட்டோம். இனி இந்த ஆடை யுனக்குக் கிடைக்காதென்று கூறி, மாயமாக மறைந்து விட்டன. நளன் இச்செய்கை சனி பகவானது செய்கையென் றுணர்ந்துகொண்டு, தன் மனைவியுடையிற் பாதியுடையைத் தான் போர்த்துக் கொண்டு சரியாக நடந்து, அவ்வனத்தைக் கடந்து மற்றொரு வனத்திற் சென்று, அன்று பகல் முழுதுங் காடெல்லாம் அலைந்து காய் கனிகளை தின்று, பசியைத் தணித்துக் கொண்டு, சூரியன் அஸ்தமித்தவுடன் அக்காட்டிலிருக்கும் ஒரு பாழ் மண்டபத்தில் வந்து, அன்றிரவுப் பொழுதைத் துலைக்க அந்தவிடத்தில் தானே பருக்கைக் கல்லுகளை பஞ்சணையாகக்கொண்டு சயனித்தனர். கேட்டீரோ தருமநந்தன! இவ்வாறு நளனுந் தமயந்தியும் பாழ்மண்டபத்திற் சயனித்து நித்திரை கொள்ளும்போது, சனிபகவான் கண்டு இவர்களைப் பிரிக்கவேண்டுமென்று கருதினன். சனிபகவான் நினைத்த மாத்திரத்தில் நடுச்சாமத்தில் நளன் நித்திரை தெளிந்து, வெம்பரலில் நித்திரைசெய்யும் மனைவியைக் கண்டு பலவாறு புலம்பி, இந்த மாது நம்மை விட்டுப் பிரிவதரிது. நித்திரை செய்யும்போது பிரிவோமாகில், விடிந்தவுடன் நம் மனைவி நாம் காட்டிய வழியாகச் சென்று தன் தந்தை பாலிருந்து கிஞ்சித்துச் சுகமுற்றிருப்பள். என்று கருதிப் பிரியத் துணிந்து, இருவர்க்கு மொரு வஸ்திரமாதலால் அவ்வஸ்திரத்தைக் கிழிப்பதற்குக் கருவியில்லாமல் மயங்கி, அங்கு சுற்றிலும் பார்க்கும்போது சனிபகவான் ஒரு கத்தியாக இருந்தான்.

அதனை நளன் கண்டு, அக்கத்தியால் ஆடையை வகிர்ந்து கட்டிக்கொண்டு, தமயந்தியின் திருவுருவத்தையும், அவளிருந்த செல்வத்தையும் நினைத்து, வெம்பரலிற் படுத்து நித்திரை செய்வதைக்கண்டு அனலிடு மெழுகு போல் மனமது உருகி எழுந்திருப்பான். உட்காருவான். கண்ணீர் விட்டுப் புலம்புவான். துணிந்து விரைவி லெழுந்து நடப்பான். வருவான். தமயந்தியை முற்றும் நோக்குவான். ஆகாயவாணியைப் பிரார்த்தித்து இம்மாது உன்னடைக்கல மென்று கூறுவான். தேவர்களைத் துதிப்பான். இவ்வாறு பல துன்பமுற்றுப் பிரிவுறுத கருத்தையுடைய நளன், சனியன் மகத்துவத்தால் மனைவியை நடுக்காட்டில் நடுச்சாமத்தில் விட்டுப் பிரிந்து நெடுந்தூரஞ் சென்றான். அந்தச் சனியன் மகத்துவத்தால் ஒரு மூங்கிற்புதர் நெருப்புப் பட்டு வேகுகின்றது. அதனை நளன் கண்டு அவ்விடத்திற் சென்றபோது, அந்தப் புதரில் ஒரு நாகம் ஓவென்று புலம்பி, ஓ நளராஜனே! ஓ மகா மண்டலேஸ்வரா! தன்னுயிர் போல் மன்னுயிரைப் பாதுகாக்குந் தயாநிதி! என்னுயிர்க் கிடையூறு வராமலிருக்கக் காப்பாற்ற வேண்டுமென்று பலவாறு துதித்தது. அதை அருட்கடலாகிய நளன் கண்டு, தக்ஷணம் அங்கிருக்கும் மரங்களில் ஒரு மரத்தின் கொம்பைக்கொண்டு பாம்பை நெருப்பில் நின்று மெடுத்து வெளியில் விட்டான். நெருப்பைவிட்டு நீங்கி உயிர்பிழைத்த நாகமானது உடனே நளனது காற் பெருவிரலிற் கடித்தது. கடித்த மாத்திரத்தில் விஷாக்கினியால் நளனது திருவுருவங் கரியமுகில்போற் கறுத்துப்போயிற்று.

அதனை நளன் கண்டு மனவருத்தமுற்று நாகத்தை நோக்கி, ஓ நாகமே! நான் செய்த உதவிக்கு நீ நல்ல வுதவி செய்தனை. இப்படிச் செய்ய உனக்கு விருப்பமிருந்தால் நானென்ன செய்வேனென்று கூறினன். அதற்கு நாகஞ் சொல்லுகின்றது. ஓ மகாராஜனே! நீ மகா மண்டலேஸ்பரன். ஏதோ ஒரு காலை

கதியால் காட்டுக்கு வந்துவிட்டனே. உன்னை
யாராவது கண்டால் உனக்கே ஒரு நாண
முண்டாகும். ஆதலால் உன்னுரு பிறர்க்குத்
தெரியாதிருக்க என் விஷாக்கினியால் தேக
வாளியை மாற்றினேன். நீ உன் சுயரூபந்
தரிக்க எண்ணி என்னை எப்போது நினைக்கின்
றாயோ? அப்போது வந்து கடித்த விஷத்தை
வாங்கிக்கொண்டு பழைய வுருவம் உனக்குண்
டாகும்படி செய்கிறேன். நீ உன் கருத்துக்
கிசைந்த விடத்துக்குச் செல்லென்று கூறித்
தான் சிலதூரஞ் சென்று, சனிபகவான் மகத்
துவத்தால் தோன்றிய நாகமாதலால் மாயமாக
மறைந்துவிட்டது. உடனே நளன் உருவேறு
பட்டு, காடு-மலை-வனம்-வனாந்திரம்-நாடு நகர
முதலியவற்றிற் சஞ்சரித்து, முடிவில் அயோத்
தியாபுரத்துக்குச் சென்று, அந்நகரத்துக்குத்
தலைவனாகிய ரிதுபர்ன மஹாராஜனிடத்துச்
சென்று, தேர்ப்பாகனாகவும், அடிசிற்றொழில்
புரிபவனாகவு மிருந்து காலத்தைக் கழித்து
வந்தான்.

கேளும் தருமநந்தனா! நடுக்காட்டில் நடுச்
சாமத்தில் பாழ்மண்டபத்திற் சயனித்திருக்
குந் தமயந்தி தன்னித்திரையிலுங் கண
வனைப் பிரியாமலிருந்தவளாதலால், காந்தண்
மலர்போன்ற விரல்களையும், பொன்னாற்செய்த
வளையல்களையுமுடைய முன் கையாற் கண
வனைத் தழுவினள். கணவன் கைக்குக் கிட்டா
மையாற் கை பூமியில் விழுந்தது. தமயந்தி
திடுக்கிட்டு விழித்துச் சுற்றிலுந் தடவிப்
பார்த்தாள். எங்குந் தனது நாயகன் பரிசந்
தோன்றாமையைக் கண்டு, ஓவென்றலறி எழு
ந்து மண்டபமுழுதுந் தேடினள். அப்படி
தேடியுங் கணவ னில்லாமையைக் கண்டு,
வெளியிற் சென்றாரோவென்று மண்டபத்து
நாலுதிசையிலும் வந்து தேடிப் பார்த்தாள்.
அந்நாற்றிசையினுங் கணவனில்லை, என்
செய்வாள்? உடனே இரண்டு கரத்தையு
நெரித்தும், அக்கரத்தால் முகத்திலும் வயிற்
றிலும் வாயிலு மறைந்துகொண்டும், பூமியில்
விழுந்து புரண்டு முட்டிக்கொண் டழுதும்,
காட்டிற் கண்டபடி ஓடிப்பார்த்துப் புலம்பியும்,
கனவருத்தமடைந்து சோர்ந்து பூமியில் விழு
ந்தும், மறுபடியு மெழுந்து ஓவென்றலறி
வயிற்றி லடித்துக்கொண்டும், இவ்வாறு பல
விதமாய் அன்றிராத்திரி முழுதும் புலம்பிச்
சூரியோதயமானவுடன் மீண்டும், அக்காட்டிற்
சென்று தேடியும், கூவியும், முறையோ முறை
யோவென்று தெய்வத்தை நோக்கிப் புலம்பி
யும், அவ்வனத்திற் சஞ்சரிக்கும் விலங்கினத்
தையும் பறவைகளினத்தையுங் கண்டு பயந்
தவளாக இருந்தாலும் கணவன்மேலிருக்கு
மாசையால், அச்சமின்றி அம்மிருகங்களினி
டத்துச் சென்று, ஓ விலங்கினங்களே! ஓ பற
வைக் கூட்டங்களே! என் கணவனைக் கண்டி
ருந்தாற் சொல்லுங்களென்று வினவிப் புலம்
பிக் கொண்டே செல்லும்போது, எள்ளள
வேனுங் கிருபை யில்லாத சனிபகவான் தம
யந்திக்குப் பின்னுந் துன்பத்தைச் செய்யக்
கருதி, தன் மாயையால் ஒரு பெரிய நாகத்
தினை யுண்டாக்கி அனுப்பிவித்தனன்.

அந்தப் பெரும் பாம்பானது, தமயந்தி
யைப் பற்றி விழுங்கத் தலைப்பட்டது. பெரும்
பாம்பின் வாயிற்பட்ட தமயந்தியின் துன்
பத்தை என்னொரு நாவாற் சொல்லத் தக்க
தல்ல; அவள் படுந் துன்பத்தைக் கல்வி கல்வி
கேள்வியிலான்ற உமது மனத்தா லளவிட்டுக்
கொள்ளும். அவ்வளவு துன்பத்தையடைந்து
ஓ வென்றலறி, தனது நாயகனைக் கூவி, தெய்
வத்தைத் துதித்து, தேகமெல்லாம் நடுங்கி,
வெயர்வு நீர்ததும்பி, வாய்குழறி, நெஞ்சுலர்
ந்து, கைசோர்ந்து, மெய்சோர்ந்து விழுகிற
தருணத்தில், சனிபகவான் மகத்துவத்தால்
ஒரு வேடன் வில்லம்பு முதலிய ஆயுதங்க
ளோடு தோன்றி, தமயந்தியை விழுங்கின
பாம்பைக் கண்டதுண்டமாகக் கண்டித்து விட்
டான். தமயந்தி பாம்பின்வாய் நின்றுந் தப்
பிப் பிழைத்து வெளியில் வந்து நின்று பாம்
பால் நேரிட்ட துன்பத்தை நீக்கிக் கணவனை
நினைத்துப் புலம்பிக்கொண்டு செல்லுகிறாள்.
அப்போது, பாம்பைக் கண்டித்த வேடன் தம
யந்தியின் திருவுருவத்தைக் கண்டு காதல்
கொண்டு, தமயந்தியி னருகிற்சென்று கர்ன
கடூரமான சில வசனங்களை வழங்கினன். தம
யந்தி அச்சொற்களைக் கேளாதவள் போலத்
தன் கணவன்மீது கருத்தை வைத்துத் தெய்
வத்தை நினைத்துப் புலம்பிச் சென்றாள்.
வேடன் மிஞ்சித் தமயந்தியை மடக்கி அணை
க்க நெருங்கினன். பதிவிரதா சிரோமணியாகிய
தமயந்திக்கு அதிக சினமுண்டாகித் தன் விழி
யால் நோக்கினள். அப்படி தமயந்தி பார்த்த
மாத்திரத்தில், சாம்பமூர்த்தியின் நெற்றிக்
கண்ணுக்கு எதிர்ப்பட்டு உடலை இழந்த மார
னைப் போல, அத் தமயந்தின் கண்ணுக்கு
எதிர்ப்பட்ட வேடனுடலுஞ் சாம்பராகிப்
பூமியில் விழுந்தது.

கேட்டீரோ ஜெனமேஜெய மஹா ராஜனே! இப்படி சொன்னமாத்திரத்தில் தருமன் முதலானவரும் கற்புக்கரசாகிய பாஞ்சாலியும் தங்களை மறந்தவர்களாகிப் பின்பு தெளிந்து, இருகண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிய இரண்டு கரங்களையும் கூப்பி உரோமசன்மரை வணங்கிச் சொல்லுகிறார்கள்: ஓ முனிநாதா! உமது திருவாக்கினால் கேட்டுக்கொண்டு வரும் நளனது சரித்திரமே சரித்திரம். மற்றவை யெல்லாம் எங்கள் காதுக்குப் புறம்பானவையாம். ஆதலால், அந்த நளனுடைய மற்றச் சரித்திரத்தையும் விளங்க உரைக்கவேண்டுமென்று கூறலும், உரோமசன்மர் சொல்லுகிறார்: கேளும் தருமநந்தனா! வேடன் எரிந்து விழுந்த மாத்திரத்தில், தமயந்தி தன்னந் தனியே நடந்து, காடு-மலை-வனம்-வனாந்திர முதலியவற்றைக் கடந்து வரும்போது சேதிபதேசத்துக்குச் செல்லும் வழி தோன்றிற்று. அவ்வழியாகச் செல்லும் போது சில வணிகர் பல சரக்குகளை மாட்டின் மேல் போட்டுக்கொண்டு அவ்வழியில் சென்றார்கள். அவர்களைத் துணையாகக்கொண்டு, அவர்கள் இறங்கின சோலையில் தானும் ஒரு பக்கத்தில் நீர் அருந்திக் களை நீங்கி யிருந்து, அந்த வனத்தில் இருக்கும் முனிவரைக்கண்டு வணங்கி, அவர்களால் பல ஆசிகள்பெற்று, அவர்களாலும் வணிகர்களாலும் சேதிபதேசத்துக்கு வழி கேட்டுக்கொண்டு, அவ் வழியாகச் சென்று சேதிபதேசமடைந்தாள். அச் சேதிபதேசம் அடைந்தவள் நகரத்துட் புகுந்து ராஜவீதியில் செல்லும்போது, தமயந்திக்குத் தமக்கையினுடைய புத்திரன் அந் நகரத்துக்கு அரசனா யிருக்கிறவன். அந்த அரசனுடைய தாய் வீதியில் புலம்பிச் செல்லும் தமயந்தியைப் பார்த்து, தன் தாதிகளால் தமயந்தியை அழைப்பித்து அருகில் உட்கார வைத்து, அவள் துன்பம் நீங்கப் பல இனிய வசனங்கூறி, ஓ பெண்பாவாய்! உன் தேயமென்ன? உன் நகரமெது? நீ எந்தச்சாதி? நீ வருத்தமுடன் இந்த நகரத்துக்கு வரவேண்டிய காரணமென்ன? இவற்றை யெல்லாம் எனக்குத் தெரியச் சொல்லென்று வினவினள். தமயந்தி உண்மையை வெளிப்படுத்தாமல், ஒரு போக்காகச் சொல்லக் கருதிச் சொல்லுகிறாள்: ஓ அம்மணி! என் கணவரும், நானும் வனத்துக்கு வந்துவிட்டோம். வந்தவிடத்தில் என் கணவர் என்னைவிட்டுப் பிரிந்துவிட்டார். அவரைத் தேடிக்கொண்டு, காடு-மலை-வனம்-வனாந்திரத்தைக் கடந்து இந் நகரத்துக்கு வந்தேனென்று கூறினள். இவ்வார்த்தையை அந்த மாதுகேட்டு சொற்குறியினால் இராஜ கன்னிகையென்று உணர்ந்துகொண்டவளாகி, தன் மருமகளாகிய சுனந்தையினிடத்தில் சென்று தமயந்தியைக் காண்பித்து இந்த மாதின் கணவன் கண்ணுக்குப் புலப்படுகிற வரைக்கும் நீ இந்த மாதைப் பாதுகாத்து வாவென்று கட்டளையிட்டாள். சுனந்தை தன் சகோதரிபோலப் பாவித்துத் தமயந்தியைப் பாதுகாத்து வந்தாள். தமயந்தி கணவனைப் பிரிந்தவளாதலால், சிறையிருப்பவர்போல் இருந்து, பிராணதாரத்துக்கு மாத்திரம் ஒரு வேளை ஜலபானஞ்செய்துகொண்டு உயிரைப் பாதுகாத்து கணவன்மேல் கருத்தைச் செலுத்தி நாள்தோறும் வருத்தமுற்று சில நாள் இருந்தாள்.

கேளும் தருமநந்தனா! தமயந்தியும், நளனும் நகரத்தைவிட்டுக் காட்டுக்குவரும்போது, வழியில் ஒரு பிராமணனைக்கண்டு அவனிடத்துத் தமது புத்திரர்களை ஒப்புவித்து, அப் புத்திரர்கட்கு மூதாதையாகிய வீமராஜனிடத்து விடுமென்று சொல்லி விடுத்து, நளனும் தமயந்தியும் வனத்தை நோக்கிச் சென்றார்களன்றோ? அப்பால், அவ்வேதியன் நளனுடைய மக்களைக் கட்டளைப்படி அழைத்துக்கொண்டு விதர்ப்பதேசத்துக்கு சென்று, குண்டினபுரத்தில் இனிது வீற்றிருந்து செங்கோல் செலுத்தும் வீமராஜன் சமுகங்கண்டு, மக்களை ஒப்புவித்துச் சொல்லுகிறான்: ஓ மகாராஜனே! இந்த மக்கள் இருவரும் உமது புத்திரியாகிய தமயந்தியின் புத்திரர், நளன் புட்கர ராஜனோடு சூதாடித் தன் நாடு நகர முதலியவற்றைத் தோற்றுத் தன் மனைவியோடு காட்டிற்குச் சென்றார். நான் அவர்களுக் கெதிர்பட்டேன். அவர்கள் இந்த மக்களை உம்மிடத்தி லொப்பிவிக்கக் கட்டளை யிட்டார்கள். நான் அக்கட்டளைப்படி ஒப்பிவித்து விட்டேனென்றுக் கூறி விடைபெற்றுத் தன் கருத்துக்கிசைந்த விடத்துக்குச் சென்றான். வீமன் மக்களை வாரித்தழுவி முத்தமிட்டு, நளன் காட்டிற் சென்றதைக் கேட்ட மாத்திரத்தில் அனலிடு மெழுகுபோல மனமது வுருகிக் கனவருத்த முற்றவனாகி, மகளையும், மருமகனையும் எவ்வாறு காண்போமென்று கருதிப் பலவாறு சிந்தித்து ஏக்கங்கொண்டு, இரவும் பகலுந் தூக்கமின்றி, அரசுரிமையிலுங் கருத்தைச்

செலுத்தாமல், எவ்வேளையும் இருவரையும் நினைத்து வருத்தப்பட்டு, பின்பு ஒருவாறு தேறித் தூதுவர்களால் இருவரையுங் கண்டு பிடிக்க வேண்டுமென்று கருதி, ஒரு நாள் கொலுமண்டபத்தில் வந்து, தன் மந்திரிமார்களாற் கைசாஸ்திரத்தில் தேர்ந்த பிராமணரிற்சிறந்த ஒரு பிராமணனை அழைப்பிவித்து, அவ்வேதியனுக்கு வந்தனை வழிபாடு செய்து சொல்லுகிறான்:

ஓ ஸ்வாமி! தமியேன் நெடுநாள் புத்திரனில்லாமல் மனவருத்தமுற்றுத் தமனமுனிவரிடத் தருமையான பணிவிடைசெய்து, அவர் கிருபையினால் ஒரு புத்திரியையும், ஒரு புத்திரனையும் பெற்றேன். அவ்விருவரில் புத்திரியை என்னையொத்த அரசரெல்லாம் வணங்கும் வீர கண்டாமணியை அணிந்த பாதத்தையுடைய நளனுக்கு மணம் புரிவித்தேன். நளன் புட்கரனோடு சூதாடி நாடு நகர முதலியவற்றைத் தோற்றுக் காட்டிற் சென்றான். என் மகளும் அவ்வரசன் பின்றொடர்ந்து சென்றாள். அவ்விருவரையும் என் கண்களாற் காணு நாளெந் நாளென்று ஏக்கங்கொண் டிருக்கும் என் கருத்து மகிழ முன்னம் என் மகளைக் கண்டு பிடித்து அழைத்து வந்தால், என்னுடைய செல்வமெல்லாம்உம்முடையசெல்வமாகயிருக்கும் என்று கூற, வேதியன் மகிழ்ந்து அரசன் கருத்துக் கிசைந்து சொல்லுகிறான். ஓ மகாராஜனே! உமது கருத்தின்படி உமது குமாரத்தியைக் கண்டு பிடித்துச் சிலநாளி லழைத்து வருகிறேனென்று கூறி விடை பெற்று, நாடு-நகரம்-காடு-மலை-வனம்-வனந்திரங்களிற் சென்று, அங்கங்கிருக்கும் மாதர்களின் கைக் குறிகளைப் பார்த்துக்கொண்டு சேதிப தேசமடைந்து, அத்தேசத்துக்குத் தலைவனாகிய சுவாகுவின் சமுகத்துக்கு வந்து, அவன் அனுமதியின்மேல் அந்தப்புரத்துக்குச் சென்று, அங்குள்ள ராஜஸ்திரீகளின் கைகளிருக்குங் குறிகளைப் பார்த்து, அக் குறிகளுக்குள்ள நன்மை தீமைகளை யெல்லாம் எடுத்துக் கூறிக்கொண்டு வரும்போது, சித்திரப் பிரதிமெய்போல அருகில் நிற்குந் தமயந்தியைக் கண்டு, ஓ அம்மணி! எதோ உன்கையைக் காட்டென்று தன் கரத்தை நீட்டினன். உடனே தமயந்தி தன் கரத்தை நீட்டிக் காட்டினள். தமயந்தியின் கைக்குறிகளை முன்னமே கண்டு தெளிந்திருக்கிற வேதியன் தமயந்தியின் கரத்தைப் பார்த்த மாத்திரத்தில், ஓ! ஓ! இந்தக் கை விதற்பதேசத்துக்குந் தலைவனாகிய வீம ராஜன் புத்திரியின் கரம்போ லிருக்கின்றதென்று புலம்பி, யாவரும் காண ஓலமிட்டு ஏக்கங்கொண்டு பூமியில் விழுந்தான்.

அப்போது, பிராமணன் வாக்கியத்தைக் கேட்ட தமயந்தியுந் தன்னை மறந்து, அதிக துன்பத்தோடு அவ்வேதியன் பாதத்தில் விழுந்து புலம்பிச் சோர்ந்தாள். இவளுடைய அவகோலத்தைக்கண்ட சுனந்தையுஞ்சோர்ந் தாள். தாதியர்கள் இந்த அவகோலத்தைக் கண்ட மாத்திரத்தில், அரசனுக்குத் தெரிவித் தனர். அரசன் கேட்டுத் திடுக்கிட்டோடியும் வந்து பார்த்துத் தானுஞ் சோர்ந்து, பின்பு வொருவாறு தெளிந்து, சோர்ந்திருக்கிறவர் களைத் தேற்றி, அப்பிராமணனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஐயா! இந்த மாது எங்கள் குலமாதென்று நானெவ்வளவுந் தெரிந்தி லேன். இன்று உம்மால் என்குல மடந்தையரி லும் எனக்குப் பெரிய தாயின் குமாரத்தியென் று தெரிந்துகொண்டேன். இந்த மாதுசிரோ மணிக்கு இவ்வளவு துன்பம் வந்த காரணம் என்னவென்று வினவினன். வேதியன் நள னது சரித்திரத்தையெல்லாஞ் சொல்லித் தான் வந்த காரியத்தையுங் கூறினன். அரசன் மன ந்தேறி, விதிவலியை ஒருவரால் விலக்கக்கூடா தென்று சொல்லித் தமயந்தியைப் பார்த் துச் சொல்லுகிறான். ஓ அம்மணி! ஓ எங்கள் குலவிளக்கே! என்னால் வந்த அபசாரங்களைப் பொறுத்து ரக்ஷி. நான் உன்னை யறியாமற் பணிவிடைப் பெண்களைப் போலப் பாவித்து வந்தேன். இன்னுமென்று விளங்கினால் நான் அப்படி நினைக்கேன். என்று துணிவுகூறி, இனிய வசனங்களால் துன்பத்தை நீக்கி, வேதியனுக்கு வேண்டியமட்டுந் திரவியங் கொடுத்து, தமயந்தியைத் தேரிலேற்றி வீம ராஜனிடத்துக் கனுப்பவிட்டான். நல்ல பரிச வீமராஜனிடத்து வந்து, ஓ! தமயந்தி பிப் பாதத்தில் விழுந்து நமஸ்காரஞ் செய் தாள். வீமனும் வீமன் மனைவியும் மகளை வாரித்தழுவிப் புலம்பி, தங்கள் கண்ணீரால் புத்திரியின் மேனியிலிருக்கும் புழுதியைப் போக்கினரென்றால், அவர்கள் பட்ட துயரத் தை நீரே மதித்துக்கொள்ளுமென்று சொல் லுகிறார்:

கேளுந் தருமநந்தனா! வீமராஜன் தன் புத்திரியைப் பார்த்து, ஓ அம்ம...

விடத்திலிருந்து உங்கள் நகரத்துக்குச்சென்றபின் நடந்ததென்ன வென்று வினவ, தமயந்தி நடந்தனவற்றை யெல்லாம் ஆதியோடந்தமாகச் சொல்லி, நெஞ்சுலர்ந்து வாய்குழறி இரண்டு கண்ணிலும் அருவிபோல் நீர் சோர விழுந்துபுலம்பினள். அவையனைத்தையும் வீமன்கேட்டு வருத்தமுற்று, புத்திரியைத் தேற்றி, ஓ அம்மணி! சில நாளில் உன் கணவனைக் காணும்படி செய்விக்கிறேன். நீ இது முதற் கவலையற்றிரு வென்று உறுதி கூறி அந்தப் புரத்துக்கனுப்பிவிட்டு, தான் கொலுமண்டபத்துக்கு வந்து, முன்ன மனுப்பிவித்த வேதியனை யழைத்து, அவனுக்கு வந்தனை வழிபாடுசெய்து, ஓ ஸ்வாமி! என் கருத்து மகிழவுற என் புத்திரியைக் கொண்டுவந்து என் கண்களுக்குக் காட்டிக் கண்ணீரை மாற்றினீர். அதுபோல இவ்வேளை நீர் சென்று, என் மருமகனையுங் கொண்டுவந்து கண்களுக்குக் காட்டுவீராகில் என்னுயிர் தரிக்கும். உமக்கும் பெருமை கிடைக்கும். என்று பல்வாறு புகழ்ந்து கூறினன். வேதியன், அரசன் கருத்துக்கிசைந்து விடைபெற்று நளனைத் தேடச் சென்றனன். தமயந்தி அந்தப் புரத்துக்குச் சென்று மக்களைக்கண்டு வாரியெடுத்துத் தழுவி முத்தமிட்டுப் பலவாறு புலம்பி, ஜலம் ஒன்று தவிர மற்ற உண்டி ஆடை ஆபரணங்களைக் கண்ணினாலும் நோக்காமலிருந்து காலத்தைக் கழித்து வந்தாள். வேதியன் நாடு நகர முதலியவற்றிற் சென்று, நெடிய கடல் சூழ்ந்த பெரும்புவியையாளு மரசருள் காதலியைக் காரிருளிற் கானகத்தில் விட்டகலு மன்னவருளரோ வென்று இந்த வாக்கியத்தையே எடுத்து மிக உரத்த சப்தமாகச் சொல்லிக்கொண்டு எங்குஞ் சுற்றினவனாய், நவரத்தினங்களை யழுத்திய குத்துக்கால், கொடுங்கை சிகரங்களோடு கூடிய ஒற்றை யாழியையுடைய சூரியன் தேரைத் தடுக்குங் கோடி சூரியப் பிரகாசமாகிய மாணிக்கங்களையும், நீலரத்தினங்களையு மழுத்திய மாடமாளிகை கூடகோபுரங்கள் நிறைந்த அயோத்தியாபுரியைச் சேர்ந்து, அந்நகரத்துக்குத் தலைவனாகிய ரிதுபன்னராஜன் சமுகத்துக்கு வந்தான்.

அப்படிவந்த வேதியனை அரசன் கண்டு எதிர்சென்றழைத்து வந்து, வந்தனை வழிபாடு செய்து, ஒரு ஆசனத்திலிருத்தி உபசாரஞ் செய்தான். வேதியன் பல ஆசிகள் வழங்கிச் சொல்லுகிறான். ஓ மஹாராஜனே! கடல் சூழ்ந்த நெடிய உலகத்தை யெல்லாந் தன்னொரு வெண்பட்டுக் குடை நீழலிற் பாதுகாத்துவரும் மஹா மண்டலேஸ்பரனாகிய நளன் காலகதியால் நாடு நகர முதலியவற்றைப் புஷ்கரராஜனுக்குச் சூதினாற் றோற்றுப் பராரியாகித் தானுந் தன் மனைவியுமாகக் காட்டில் வந்து விட்டான். வந்த விடத்தில் தன்னை நம்பிவந்த தமயந்தியை, நடுகாட்டில் நடுச்சாமத்தில் நித்திரை செய்யும்போது பிரிந்து தன்னந்தனியே போய்விட்டான். இதனையுய்த்து நோக்கினால் அவன் கற்ற கல்வி கேள்வி முதலானவை எல்லாம் பாழாயிற்றேயன்றிப் பயன்படவில்லை. இந்த நளன் செய்த குற்றம்போல யாவர் செய்தனர்? ஒருவருமில்லை. நளன் சக்ரேஸ்வரனென்று பெயர் பெற்றும் பெருங் குற்றம் பெண்பாலிடத்துப் புரிந்தனனென்றிழிவாக எடுத்துரைத்தான். இவை யனைத்தையும் ரிதுபன்னன் கேட்டு ஆச்சரியமுற்றிருக்கிற தருணத்தில், அருகிலிருக்கும் நளனாகிய சாரதி இடியைக்கேட்ட நாகம்போல் ஏங்கி மனந்தளர்ந்து வேதியனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஓ பிராமணோத்தமா! நீர் சகல கலைகளையும் வேதாகமங்களையும் ஐயந்திரி யில்லாமற் கற்றுணர்ந்து, கேள்வியிலுமான்றவராக யிருக்கிறீர். நீரேஒரு சக்கிரவர்த்தியை முன்பின் யோசிக்காமல் இராஜ சபையில் நிந்திக்கலாமா? நான் சொல்லுகிறதைக் கேளும்:

கடல் சூழ்ந்த உலகத்தையாளு மன்னவர்களெல்லாரும் இருபுறமும்வந்து வணங்க, வெள்ளை யானையின் பிடரியி லினிது வீற்றிருந்து வெண்பட்டுக் குடைகவிய, மஹாபண்டிதர்களெல்லாம் புகழ்ந்துரைக்க, அளக்கரிய பராக்கிரமத்தோடு செல்லுஞ் சக்கிரேஸ்வரருக்குங் கெடுதிகாலம் வந்து விட்டால், சகல பெருமையு மிழந்து தம் மனைவியையும் பகைவரிட மாக்கிக் கெடுவரென்றால் விதிவலிதோ? மதிவலிதோ? நீர் அதனை யோசிக்காமல், விதிவலியிற் கட்டுண்ட நளனை நிந்திப்பது தகுதியல்லவென்று கூற, வேதியன் கேட்டு நளராஜனிவன்தா னென்கிற நிச்சயத்தால் உள்ளம் நடுங்கியும் நளனைக்கண்டோமே என்கிற கருத்தால் உள்ளம் பூரித்தவனாய், எதிர்த்து விடைகொடுத்த நளனாகிய சாரதிக்கு விடைகொடுக்காமற் கவுரவத்தோடு அவ்வரசனிடத்து விடைபெற்று விதற்பதேசமடைந்து, தமயந்திக்கு ரிதுபன்னராஜன் சபையில்

நடந்தனவற்றைக் கூறினான். அதுகேட்ட தமயந்தி, தானுஞ் சந்தேகித்தவளாய் பின்பு இருவரும் யோசித்து, நளன் வருவதற்காக ஒரு மணவோலை யெழுதிக்கொண்டு, வேதியன் முன்போல அயோத்தியா புரிக்கு வந்து, ரிதுபன்னராஜனைக் கண்டு மணவோலையை வைத்தான். அரசன் மணவோலையின் கருத்தை அறிந்துகொண்டு வேதியனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஓ பிராமணோத்தமா! வீமராஜன் புத்திரியாகிய தமயந்தி, உலகத்தை எல்லாம் ஆளுஞ் சக்கிரேஸ்வரனாகிய நளராஜனுக்கு மணமாலை புனைந்தாள். அவள் மறுபடியும் ஒருநாயகனை இச்சிப்பது தகுதியா? அவளிச்சித்தாலும் அவளுடைய பிதா மணவோலை எப்படி அனுப்பிவிப்பான்? இதென்ன ஆச்சரியமென்று வினவ, வேதியன் சொல்லுகிறான்:

ஓ அரசனே! நாயகனைப் பிரிந்த தமயந்தி பரமனை நோக்கித் தவஞ்செய்து கன்னிகைப் பருவ மடைந்தாள். வீமன் சுயம்வரஞ்சாட்டி மணவோலை யனுப்பினன். இது குற்றமல்ல நாளையதினம் மணமாதலால், நீங்கள் வரவேண்டுமென் றுரைத்து விடைபெற்றுப் போயினன். அரசனும், அரசன் சபையிலிருக்கிறவர்களும் மணவோலையைப் பார்த்த மாத்திரத்தில் நெடுந்தூரத்திலிருக்கும் விதர்ப்பதேசத்துக்கு நாளைக்குள் செல்வதரிதென் றொருவர் முகத்தை யொருவர் பார்த்திருக்கும்போது, அச் சபையிலிருக்குஞ் சாரதியாகிய நளன் சொல்லுகிறான். ஓ அரசனே! உமக்கு விதர்ப்பதேசத்துக்குச் செல்லக் கருத்திருந்தாற் பிரயாணங்கொள்ளும்; நாளையுதயத்திற்கு உம்மை விதர்ப்பதேசத்துக் கழைத்துப் போகிறேனென்றுகூற, அரசன்கேட்டு மகிழ்ந்து, நாள்தோறுஞ் சாரதியின் திறத்தைப் பார்த்திருக்கிறவனாதலால், நளனாகிய சாரதி சொல்லை நம்பிப் பிரயாணப்பட்டான். நளனாகிய சாரதி அவ்வரசனேறும் முழுரதத்தை முருக்கம்பூப்போல் அலங்கரித்து, நான்கு குதிரைகளைப் பூட்டி, வாயுபகவான் உபதேசித்த மந்திரத்தை அஸ்வங்களின் காதுகளில் உபதேசித்துக்கொண்டு வந்தான். ரிதுபன்னராஜன், ஸ்நானஞ்செய்து பூசை முடித்துண்டு, கலவைச்சாந்து பூசி, தாம்பூலமணிந்து, பரிமளமிருந்த நறுமலர்மாலை புனைந்து, ஆடையாபரணாலங்கிரதனாகி வந்து தேரிலேறினான். நளனாகிய சாரதி அரசனை எச்சரித்து, ஜாக்கிரதையாகத் தைரியத்தோடு இருமென்று கூறி, தான் குதிரைகளை யச்சரித்து இரதத்தை விட்டான்.

கேளும் தருமநந்தனு! நளராஜன் விடும் இரதத்தின் வேகத்தை என்றனு நாவாற் சொல்லத்தக்கதல்ல. ஆயினும், என்றனுக்கு இசைந்த மாத்திரம் எடுத்துச் சொல்கிறேன். அந்தத் தேர் மாரனது தேராகிய தென்றற் காற்றோ? கஜேந்திர னோலமிட்டு அழைக்கும் போது வந்த திருமாலின் வேகமோ? தனது நாயகிக்குண்டான அந்திரத்தோடுங் கூடிய நளனது மனோவேகமோ? இவற்றிலெதுவோ நீரே மதித்துக்கொள்ளும். அந்த ரதத்தின் வேகத்தைக்கண்ட மேகம், மலையின் குகைக்குளொடுங்கிற்று. ஆதிசேடன் முடி நலிவுற்றது. அஷ்டகுல பர்வதங்கள் நடுங்கின. திக்குக் கஜங்கள் தத்தளித்தன. ஒரு நொடியில் லக்ஷத் திருபத்தையாயிரம் யோசனைசெல்லும் சூரியனுடைய குதிரைகள் வெட்கின. இவ்வாறு ரதத்தையோட்டி சூரியோதயமாகுகிற வேளையில், மாடமாளிகை கூட கோபுரங்களோடு கூடிய குண்டினபுரத்துக்கு வந்தான். தூதுவர்கள் ரிதுபர்னராஜன் வரவை வீமராஜனுக்கு உரைத்தார்கள். வீமன் அவ்வரசனை எதிர்சென்று அழைத்துவந்து தன் கொலுமண்டபத்தில் இருக்கவைத்து, தகுந்த மரியாதை செய்து சொல்லுகிறான்: ஓ மகாராஜனே! தற்காலத்தில், தாங்கள் இவ்விடம்வந்த காரணமென்னவென்று வினவினன். ரிதுபன்னன் கேட்டு திடுக்கிட்டு, ஓ! ஓ! இதென்ன முழுமோசமாக இருக்கின்றது? சுயம்வரஞ் சாட்டி மணவோலை யனுப்பியது உண்மையாக இருக்குமாகில், நம்மையொத்த அரசர்கள் வந்திருப்பார்கள். அரசர்களுமில்லை. இந்த அரசனும் நம்மை இவ்வாறு வினவினன். இது என்னமோ ஒரு மோசமாக இருக்கின்றதென்று பலவாறு தனக்குள் யோசித்துக்கொண்டு, கேட்ட அரசனுக்கு மறுவுத்திரவு சொல்ல நாவெழாமல், ஒரு போக்காகச் சொல்லுகிறான்: ஓ மகாராஜனே! உமது சேவை பார்க்க விருப்பங்கொண்டு வந்தேனென்று கூறினன்.

அதுகேட்ட வீமன் மகிழ்ந்து; ஒரு விடுதிவிட்டு அங்கிருக்கும்படி விடை கொடுத்தனன். ரிதுபர்னன் அரசன்விட்ட விடுதியிற் சென்று பலவாறு யோசித்துக்கொண் டிருந்தான். நளன் குதிரைகளின் களையை நீக்கி, தேர்நிலையில் தேரை நிறுத்திவிட்டு, தன் அரசனிருக்

கிற இடத்தில் தானும் வந்திருந்தான். மண வோலையைக் காட்டிய வேதியன் தமயந்தியி னிடத்துக்கு வந்து, ஓ அம்மணி! உமது கண வனை அழைத்து வந்தேன். உமது கணவன் ரிதுபர்ன ராஜனோடு நமது நகரத்திலொரு விடுதியிலிருக்கிறான் என்று கூறக் கேட்ட தம யந்தி சிந்தித்து மகிழ்ந்தவளாகி பிதாவினிடத் திற் சென்று வணங்கிச் சொல்லுகிறாள்: ஓ ஐயா! தாங்கள் ஒரு வேதியரைவிட்டு என் கணவனைத் தேடிக் கண்டுபிடிக்க அனுப்பினீர் கள். அவ்வேதியன், அயோத்தியாபுரியரசன் சமுகத்திற் சென்று, என் கணவனை நிந்தித் துக் கூறினன். அதை யவ்வரசன் சாரதி கேட்டு, அந்த நிந்தனைக்கு முகம் வேறுபட்டு எதிர்மொழி தந்தனன். அவ்வேதியன் அந் தச் சாரதி இவ்விடத்துக்கு வருமாறு எனக்கு விவாகமென்று கூறி, ஒரு மணவோலை காட்டி அவ்வரசனையுஞ் சாரதியையும் நமது நகரத் துக் கழைத்து வந்தனன். அந்தச் சாரதி, என் கணவனாகிய நிடததேசாதிபதிதானோ? அல்லவோ? அதனைத் தாங்கள் சிலராலறிந்து கொள்ள வேண்டுமென்று கூறினள். வீமன் கேட்டுத் திடுக்கிட்டு, ஓ அம்மணி! இந்தச் சங் கதி தெரியாமல் என்னிடத்துக்கு வந்த ரிது பர்ன ராஜனை நீரேது இங்கு வந்ததென்று வினவினேன். இந்தக் காரியத்தை எனக்கு முன்னமே தெரிவித்திருந்தால், ரிதுபர்னன் மகிழ இனிய வசனங் கூறுவேன். மிஞ்சிப் போனதற்கு வருத்தப்படுவதிற் பயனில்லை. நீ அந்தச் சாரதியைச் சோதிக்கச் சொல்கின் றனையே? உன் கணவன் செய்கையைக் கூறெ ன்று வினவினன். தமயந்தி சொல்லுகிறாள்:

ஓ ஐயா! அந்த ரிதுபர்ன ராஜனுடைய சாரதி உண்மையாக நிடததேசாதிபதியாக இருப்பானாகில், அறுசுவையோடு பல பதார் த்தமும் அமுதுபடியுங் கொடுத்தால், நெருப்பு- ஜலம்-விறகு இவை முதலியவை யில்லாமற் சமையல் செய்வான். அவ்வடிசில் தேவாமு தத்துக்கு மினிப்பாக இருக்கும். அதனை முன் னஞ் சோதித்துக் கொள்ளுமென்றனள். வீமன் அக்கருத்துக்கிசைந்து, தனது ஏவலாளர்கள் கையில் அமுதுபடி முதலானவைகளை ரிதுபர் னனுக்குக் கொடுத்தனுப்பிவித்து, சில தூது வர்களை யழைத்துச் சொல்லுகிறான்: ஓ தூது வர்களே! நீங்கள் ரிதுபர்ன ராஜனிருக்கும் விடுதிக்குட் சென்று பதிவிருந்து, அங்கு வந் திருக்குந் தேர்ச்சாரதி சமையற் செய்வதைப் பார்த்திருந்து, கண்ட அதிசயத்தை வந்து சொல்லுங்களென்று கூறினன். தூதுவர் அவ்விடுதியிற் சென்று பதிவிருந்தனர். ஏவ லாளர்கள் அமுதுபடி முதலியவைகளை ரிது பர்னன் சாரதியின் கையிற் கொடுத்தார்கள். சாரதி அவற்றைப் பெற்றுக்கொண்டு, நீரின்றி நெருப்பின்றி விறகின்றி அடிசிற் சமைத்து, அரசனுக்கிட்டு தானும் புசித்தனன். தூது வர்கள் இந்த ஆச்சரியத்தைக் கண்டு வீமராஜ னுக்குத் தெரிவித்தனர். வீமன் கேட்டு மகிழ் ந்து குமாரத்தியோடு கூறினன். தமயந்தி கிஞ் சித்து ஐயந்தீர்ந்து பின்னுஞ் சொல்லுகிறாள்: ஓ ஐயா! என் புத்திரனை அனுப்பிவியும் அத னால் என்ன விளையுமோ அதனையும் அறியலா மென்று கூற, வீமராஜன் சில தாதியரை யழை த்து, நளராஜன் புத்திரனை அவர்களோடு கூட்டி அனுப்பினன். தாதியர் புத்திரனைக் கொண்டு சாரதியிருக்கும் விடுதிக்குட் சென்ற னர். கேட்டீரோ தருமராஜனே! "தொடர்ந்த மும்மலமுருக்கி வெம்பவக் கடற்றலைய, கடந் துளோர்களுங்கடப்பரோமகக்கண்மேற் காதல்" என்றபடி சாரதியாகிய நளச்சக்கிரவர்த்தி தன் புத்திரனைப் பார்த்த மாத்திரத்திற் புத்திர சோகம் பெரிதாதலால் முன்பின் யோசிக்கா மல், புத்திரனை வாரித்தழுவி முத்தமிட்டு, இரண்டு கண்ணிலும் நீர் சோரக் கதறினன். அதைத் தாதியர்கள் கண்டு சொல்லுகிறார்கள்: ஆர்காணும் சாரதி! எங்கள் யஜமானியாகிய தமயந்தியின் குமாரனைக் கண்டு ஓடிவந்தெடுத் துத் தழுவி முத்தமிட்டு அழுகிறாய். நீயோ ஓர் அரசனுக்குத் தேர்ச்சாரதி. புத்திரனோ அவ் வரசனைப்போலொத்த அனேக அரசர்கட்குச் சக்ரேஸ்வரனாகிய நளராஜ புத்திரன். உனக் கும் அந்தப் புத்திரனுக்குச் சம்பந்தம் என்ன வென்று உல்லங்கனமாகப் பேசினர்.

அதை அரசனாகிய சாரதி கேட்டுத் திடுக் கிட்டு, அடடா! புத்திரசோபத்தால் நம்மை நாமே வெளிப்படுத்திக் கொண்டோம்; தாதி யரோ மேலிட்டுச் சுடாததுபோல சொல்லாமற் சுட்டார்கள் என்றுணர்ந்து தழுவிய புத்திர னைப் பூமியில் விட்டுத் தாதியரை நோக்கிச் சொல்லுகிறான்: ஓ தாதியரே! நானெடுந் தூர த்திலிருக்கிறவன். சீவனார்த்தமாக ரிதுபன்ன ராஜனிடத்திற் சாரதியாகஇருக்கிறேன். எனக் கொரு புத்திரனும் ஒரு புத்திரியு மிருக்கிறார் கள். அவர்களைப் பார்த்து நெடுநாளாயிற்று. அவர்களைப்போல இப்புத்திரன் இருந்தமை

யால் ஆசை வெட்கமறியாது என்கிறதுபோல வாரியெடுத்தனன். அதற்காக நீங்களென்னை நிந்திக்கிறீர்கள். இது உங்களுக்குத் தகுதி யல்லவென்று கூறினன். தாதிகள் புத்திரனை எடுத்துக்கொண்டு வீமராஜனிடஞ் சென்று, சாந்தி மைந்தனை எடுத்தணைத்து துன்பமுற் றதைக் கூறினர். வீமராஜன் தன்னருகிலிருக் கும் ஒரு வேதியனை யழைத்து ஓ பிராமணோத் தமா! நீ சென்று சாரதியின் மனோபாவத்தை யறிந்து உண்மையைக் கண்டு தெரிந்துவா வென் றனுப்பினன். பிராமணன் சாரதியிருக் கிற விடத்துக்குச்சென்று, சாரதியின் திருவுரு வத்தை யுற்றுநோக்கி, ஓ! ஓ! இந்தச் சாரதி யின் லட்சணத்தை நோக்கினால் அரசருடைய லட்சணம்போல் இருக்கின்றது. தேகஒளியை பார்த்தாற் சாரதிபோலும் இருக்கிறதென்று ஐயங்கொண்டுஅருகிற்சென்றுசொல்லுகிறான்: ஓ சாரதி! நீ யார்? உன் பேரென்ன? நீ இந்த ரிதுபன்ன ராஜனிடத்தில் வந்து எத்தனை நாளாயிற்று? இதுகளை எனக்கு விளங்க உரைக்க வேண்டுமென்றான். சாரதியாகிய நளன் குறுநகை கொண்டு சொல்லுகிறான்;

ஓ பிராமணோத்தமா! நான் நிடதேசத் திற் பிறந்தவன். அந்தநாடு நல்ல செழிப்பா னதால் என் தேகம் இராஜதேகம்போல இருக் கின்றது. நான் நளசாரத்தியன். நளன் சூதினாற் றன்நாடிழந்து காட்டிற்சென்றமாத் திரத்தில், நானும் வெளிப்பட்டு இந்த ரிது பர்னனிடத்துச் சாரதியாக இருக்கிறேன் என்று தன்னை மறைத்துக் கூற, வேதியன் யா தொன்றும் வசனிக்காமல் வீமராஜனிடத்து வந்து நடந்தனவற்றைச் சொல்லினன். வீம ராஜன் மனவருத்தமுற்று, சாரதியின் வரலா ற்றை ரிதுபர்னராஜ னிடத்தாவது சென்று தெரிந்து வாவென்று மீண்டு மவ்வேதியனை அனுப்பினன். வேதியன் சென்று ரிதுபன்ன னைக்கண்டு, உமது சாரதியின் வரலாற்றை நன் றாகத் தெரிந்துகொண்டு யதார்த்தத்தை அரச னுக்குக் கிஞ்சித்துத் தெரிவியுமென்று கூறிப் போயினன். ரிதுபர்னன் முன்னமே கலவரப் பட்டிருக்கிறவனாதலால், வேதியன் சொல் லிப் போயினபின்பு தன் சாரதியை அழை த்து, ஓ சாரதி! நாம் வேதியன் வாக்கைநம்பி நெடுந்தூரமாகிய இந்நகரத்துக்கு வந்துவிட் டோம் வந்தவிடத்தில் மணத்தை விரும்பி வந்த நமது கருத்து மகிழ அதற்குத் தகுதியா கிய செய்கை இங்கு நடக்கவில்லை. உன்னிடத் தில் வீமராஜன் சந்தேகங்கொண்டு தூதர்க ளாலும் மற்றவர்களாலுஞ் சோதிக்கிறான். இதென்ன காரணம் எனக்கும் உன்மேற் சந் தேகமாகத்தா னிருக்கின்றது. ஏனென்றால், நானோ சமரதவீரன். என்னைத் தவிர்வீரனா கிய நளச்சக்கிரவர்த்திக்குரிய மூழு ரதத்தி லேற்றி, அந் நளனைப்போலத் தேரை நடத் தினாய். அதனால் உன் வரலாற்றைக்கண்டு தெளிய விருப்புற்றேன். என் கருத்து மகிழ உன் வரலாற்றை ஒளிக்காமற் சொல்லென்று வினவ, அரசன் கூறிய வாக்கியத்தைக் கேட்ட வுடன் நளன் ஓ! ஓ! இனி நாம் மறைப்பதிற் பயனில்லை யென்று உண்மையை வெளிப் படுத்த விரும்பிச் சொல்லுகிறான்:

ஓ மகாராஜனே! நான் விதர்ப்பதேசாதி பதியின் குமாரத்தியை மணந்து என் நகரத் துக்குச் சென்றபின், ஒருநாள் அந்திக்கடன் முடிக்கும்போது காலலம்பினேன். அக்காற் புறத்தில் எள்ளளவு நனையாம லிருந்தது. அது மூலமாகச் சனிபகவான் என்னைப் பற் றிப் பலவித இமிசைக் குள்ளாக்கினன் அத னால் எனக்குப் பகுதிகட்டும் புஷ்கரனுக்குச் சூது முன்னிலையில் என் நாடுநகர முதலியவற் றைத் தோற்றுப் பராரியாகி, கட்டினவுடை யோடு நானும் என் மனைவியும் புத்திரருமாகக் காட்டில்வந்து, புத்திரரை ஒரு வேதியர்முன் னிலையில் வீமராஜனிடத் தொப்புவித்து, நானும் என் மனைவியுமாகக் காட்டிற் சஞ்சரி த்து வந்தோம். அப்போது சனியின் மகத்து வத்தா லென்முன் சில அன்னங்கள் தோன் றின. அவ்வன்னங்களை என் மனைவியான வள் பிடித்துக் கொடுவென்று வேண்டினள். நான் என்னுடைய வஸ்திரத்தையே வலையா கப் பாவித்து விசறி எறிந்தேன் அன்னங்கள் அவ்வஸ்திரத்தை எடுத்துக்கொண்டு அந்த ரத்திற்றாவி, நாங்கள் சனியின் மகத்துவத் தால் வந்தவர்கள். இவ்வஸ்திர முமக்குக் கிடைக்க மாட்டாதென்று கூறி மறைந்து விட்டன. அதனால் நான் மனவருத்தமுற்று மனைவியின் உடையிற் பாதி யணிந்து சில தூரஞ்சென்று, அன்றிராப்பொழுதைத் தலை க்க அங்கிருந்த ஒரு பாழ்மண்டபத்தில் வந்து படுத்தேன். சனியின் மகத்துவத்தால் என் மனைவியைப்பிரிய நடுச்சாமத்தில் ஓர் கருத்து தோன்றிற்று. தக்ஷணம் அகஸ்மாத்தாய் அங்கு கிடந்த ஒருகத்தியால் என் மனைவியின் புடவையை பாதி துண்டித்துக்கொண்டு, மனை

வியை அங்ஙனே விட்டுப் பிரிந்து வருகிற போது, வழியில் ஒரு மூங்கிற் புதருள் தீப்பட்டெரிந்தது. அதனைப் பார்க்க அருகிற் சென்ற போது அத்தீயில் ஒரு பாம்பிருந்து புலம்பிற்று. அதனை எடுத்துவிட்டேன். அப்பாம்பு என்னைக் கடித்து என்னுருவத்தைக் கெடுத்து இந்த ரூபமாக்கிற்று.

பின்பு உம்மிடத்தில் வந்து சேர்ந்து காலங்கழித்து வந்தேன். வீமராஜன் தன் மகளையும் என்னையும் கண்டுபிடிக்கப் பிராமணனை ஏவினன். பிராமணன் முன்னம் என் மனைவியைக் கண்டுபிடித்து வீமராஜனிடம் ஒப்புவித்து, என்னைக் கண்டுபிடிக்க என்னை இராஜ சபைகடோறும் நிந்தித்து, உமது சபையிலும் வந்து நிந்தித்தான். எனக்கு மனம் பொறுக்காமல் மறுமொழி கொடுத்தேன். அந்த வேதியன் என்னை இந்நகரத்துக்கு வரும்படி செய்ய உமக்குப் பொய் மணவோலைகாட்டி உம்மை இவ்விடத்துக்கு வரும்படி செய்தான். உம்முடன் நானும் முழூரத மேறி இங்குவந்தேன் வந்தவிடத்தில் என்னை இன்னாறென்று அறிந்துகொள்ள என்மனைவியும் வீமராஜனுஞ் சில யேதுக்களால் தூதரைக் கொண்டும் இன்னுஞ் சிலரைக் கொண்டுஞ் சோதித்தார்கள். அவர்களுக்கு நான் உண்மையை வெளிப்படுத்தாமல் இருந்தேன். தற்காலத்தில் நீரே என்னை அழைத்து உண்மையை வெளிப்படுத்த வேண்டுமென்று கேட்டமையால், உண்மையை வெளிப்படுத்தினேன். நான்தான் நளன் என்று கூறிய வாக்கியத்தைக் கேட்ட ரிதுபன்னன் பிரமித்துச் சித்திரப் பிரதிமைபோற் சற்றுநேரம் அசைவின்றி யிருந்து, பின்பு தெளிந்து, ஓ! ஓ! மோசம் வந்தது. மஹா மண்டலேஸ்பரனென்று உணராமல் நாம் ஏவலாளாக இதுவரைக்கு மிந்த மஹானுபாவனை வைத்திருந்தோமே. இந்த அபசாரத்துக்கு என்ன செய்கிறதென்றேங்கி மனந் தளர்ந்து, தக்ஷணம் விழுந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு எழுந்து நின்று, இரு கையைக் கூப்பிப் பலவாறு துதித்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். நளன் அவ் வரசனைத் தேற்றிச் சொல்லுகிறான்:

ஓ மஹாராஜனே! உலகத்தில் மக்களுக்குப் பிதாக்கள் எவரெனில், இன்பமாகப் பெற்றோன் இடர்தனைத் தீர்த்தோன் எந்த விதத்திலாவது அன்னமிட்டுப் பாதுகாத்துவந்தோன் ஓதிவித்தோன் உபதேசித்தோனாகிய இவ்வைவருமாம். ஆதலால், என்னை இதுவரைக்கும் அன்னமிட்டுப் பாதுகாத்து வந்தீர் உமக்கு நானென்ன வேலை செய்தபோதிலும் அதனால் எனக்கொரு இழிவில்லை. உமக்குமொரு குறைவில்லை. இதற்காக நீர் மனவருத்தப்படாதேயும் இன்னமொரு முகூர்த்தத்தில் நான் வெளிப்படுவேன். அதுவரைக்கும் என்னை வெளிப்படுத்தா திருக்க வேண்டுமென்று கூறி, இருவருஞ் சமமாக உட்கார்ந்துகொண்டு வசனித் திருக்கும்போது, ஒரு தான்றி மரம் இவ்விருவருக்கு மெதிரிலிருந்தது. அதனை ரிதுபன்னராஜன் கண்டு நளனைப்பார்த்துச் சொல்லுகிறான்: ஓ மகா மண்டலேஸ்வரா! இதோ தோன்றுகின்ற மரத்திலிருக்கும் இலை பூ பிஞ்சு காய் கனி இவைகளித்தனை யென்றெண்ணி விட்டு இங்கிருந்தபடியே சொல்லுகிறேன் நீர்போய் பார்த்துக்கொள்ளுமென்று கூறி, அவ்விலை பூ பிஞ்சு காய் கனி இத்தனை யென்றுரைத்தான். நிடததேசாதிபதி அதனை அறிய அத்தான்றி மரத்தடியிற் சென்றுயெண்ணி, கணக்குச் சரிப்பட்டதற்காக அக மகிழ்ந்து திரும்பி வருகிற தருணத்தில் சனி பகவான் சுயரூபத்தோடு தோன்றி நளனது திருவடியிற் பணிந்து சொல்லுகிறான்: ஓ மகா மண்டலேஸ்வரா! ஓ தருமதயாளா! ஓ சத்திய சொரூபா! அபயமபயம் நான் செய்த குற்றங்களனைத்தும் பொறுத்து இரக்ஷிக்கவேண்டுமென்று பலவாறு துதித்தான்.

நளராஜன் சனிபகவானைக் கண்ட மாத்திரத்திற் கடுஞ்சினமடைந்து, சபிக்கக் கருத்துகொண்டவனாக இருந்தபோதிலும் அடைக்கலமென்பவரைப் பாதுகாக்குந் தயாநிதியாகையால் தனக்குத் தோன்றிய கோபத்தை நீக்கிச் சனிபகவானை ஆதரித்து, ஓ சனிபகவானே! யார் யார் என்னென்ன அனுபவிக்கவேண்டுமோ அதனை யெல்லாம் அனுபவிக்கத்தானேவேண்டும். அதற்காக கடிந்துகொள்வதிற் பயனில்லை. ஆதலால், உன்னை நான் வெறுக்கவேண்டியதில்லை என்று கூற, சனி பகவான் சொல்லுகிறான்: ஓ மகாராஜனே! என்னாற் பெருந்துயரத்தை அனுபவித்தாய் இனி உன் நாடுநகரமுதலிய எண் வகைச்செல்வமும் உன்னையடைய உன் பக்ஷமிருந்து புஷ்கரனை இளைக்கச்செய்கிறதுமன்றி, உனது சரித்திரத்தைக் கேட்டோர் படித்தோர் படித்தோரின் பெயரை எடுத்தோதினோர் இவர்க

ளிடத்து நானனுகிறதில்லை, இது சத்தியம் சத்தியம். என் சொல்லை நம்பு ஒருவேளைச் சாதகபலத்தாற் சேரநேரிட்டால் என் கடூரத்தைக் காட்டாமற் பாதுகாத்து வருவேனென்று உறுதி கூறி, அரசனிடத்து விடைபெற்றுத் தன்னிருப்பிடத்துக்குச் செல்லாமல் அத் தான்றி மரத்தில் தானே யிருந்தான். அரசன் ரிதுபன்னராஜனிடத்துவந்து, நான் கணக்கிட்டதற்குச் சரியாக இருக்கின்றது. ஆதலால், நீர் இந்த வித்தையை யெனக்குக் கற்பியுமென்று வினவினன். ரிதுபன்னன் மகிழ்ந்து, ஓ மகாராஜனே! அஸ்வநிலை மந்திரத்தை எனக்குபதேசித்தா லிதனையுமக்குத்தெரிவிக்கிறேனென்று கூற, நளன் அஸ்வநிலை மந்திரத்தை யுபதேசஞ் செய்துவிட்டு, அந்த வித்தையை அவனிடத்துநின்றுங் கற்றுக் கொண்டு இருவரும் இனிது வீற்றிருக்கும் போது, இதற்குமுன் வீமராஜனாலே வரப் பட்ட தூதுவர்கள் அப்போ தப்போது நடக்குஞ் சேதிகளைத் தெரிவித்து வந்தவர்களாதலால் இந்தச் சேதியையுந் தமயந்திக்குத் தெரிவித்தார்கள்.

உடனே தமயந்தி ஒரு தனித்தவிடத்தில் வந்து, தன் தாதியர்களால் தேர்ப்பாகனை அழைத்துவரக் கட்டளையிட்டாள். தாதியர்கள் நளராஜனிடத்து வந்து வணங்கி, ஓ ஐயா! எங்கள் யஜமானி உங்களை யழைத்து வரக்கட்டளையிட்டாள். ஆதலால்தயைசெய்து வரவேண்டுமென்று கூற, அரசன் அக்கருத்துக் கிசைந்து, தாதியரோடுசென்று தமயந்தி யிருக்கிற விடத்துக்கு வந்தான். தமயந்தி கறுகறுத்த தேகத்தோடு விளங்கும் அரசனைக் கண்டு ஓவென்றலறிப் புலம்பி, அரசன் திருவடியில் விழுந்தழுதாள். அரசன் தமயந்தியின் தேகம் வாடித் தளர்ந்து மாசடைந்திருக்கிறதை நோக்கினமாத்திரத்தில், அன்புடைமையை யடைத்து வைப்பதற்கு ஒரு அறையுமில்லை யென்று பெரியோர்கள் கூறிய வாக்கியத்துக்கொப்பாக மனந் தளர்வுற்று, இரண்டு கண்களிலும் அருவிபோல் நீர் சோர நின்று, விழுந்த மாதை எடுத்து நிறுத்தினான். அப்போது தமயந்தி சொல்லுகிறாள்: ஓ மஹாமண்டலேஸ்வரா! ஏதோ ஒரு காலஹேதுவினால் அரசு - நாடு - நகரம் - வீரம் முதலியவை யிழந்தாலும், உமது தேகவொளி யேன் மழுங்கிற்று? அதனை அடியாட்குந் தெரிவிக்க வேண்டுமென்று பணிவுடனே வினவினாள்.

அதற்கு நளன் சொல்லுகிறான்: ஓ மாதரசே! எனக்கு ஒரு பாம்பின்மூலமாக இந்த உருவு கிடைத்தது. இப்போது அப்பாம்பை நினைத்தால் அது வந்து இந்த உருவத்தை வாங்கிக் கொண்டு சுயரூபத்தைக் கொடுக்கும். இதற்காக நான் வருத்தப்படவில்லை. விதிவலியாலுன்னைவிட்டுப் பிரிந்தால் நீ மறுமணஞ் செய்துகொள்ள சிவனை நோக்கித் தவஞ்செய்துக் கன்னிப்பருவமடைந்து ஒரு மணவோலை அனுப்பி வித்தனையே இதென்னவென்று வினவ, தமயந்தி கேட்டுச் சொல்லுகிறாள்: ஓ மஹாராஜனே! நான் உண்மையாக மணம் புரிந்துகொள்ள விரும்பினவ ளல்ல. உம்மைக் காணுதற்காகச் செய்த பொய் மணவோலை. இதனைக் குறித்துக் கோபித்துக் கொள்ளாமல் மன்னித்து தங்கள் சுயரூபத்தை விரைவில் அடியாட்குத் தெரிவிக்க வேண்டுமென்று கூறினள்.

அதற்கு நளன் மகிழ்ந்து, தன்னைக் கடித்த நாகத்தை நினைத்தான். நாகம் தக்ஷணம் வந்து நளனைக் கடித்து விஷத்தை வாங்கிக் கொண்டு சுயரூபத்தைக் கொடுத்துப் போய் விட்டது. நளன் பாலசுப்ரமணியரைப்போலத் தன் சுயரூபத்தைக் கொண்டான். தமயந்தி அந்த ரூபத்தைப் பார்த்தமாத்திரத்தில் தக்ஷணம் வருத்தத்தை யெல்லாம் நீக்கி, முப்பொழுதும் அமுதருந்தி இனிது வீற்றிருக்குங் கன்னிகையின் உருவத்தைப்போல பூரித்துப் பிரகாசித்தாள். இந்தச் சேதியைத் தாதியர்கள் வீமராஜனுக்குத் தெரிவித்தனர். வீமராஜன் கேட்டு மகிழ்ந்து ஓடோடியும் வந்து, மகளையும் மருமகனையும் பார்த்து உடல் பூரித்து, பேரின்பக்கடலி லாழ்ந்தவர்போல மகிழ்வாகிய கடலில் மூழ்கி, நளனைப் பலவாறு துதித்தான். ரிதுபன்னன் இச்சேதி யறிந்து நளனைக்கண்டு காடாலிங்கனஞ்செய்து மகிழ்ந்தான். நகரத்தி லுள்ளவர்களும் உணர்ந்து வந்து பார்த்து மகிழ்ந்து வணங்கினர். அந்தரலோக வாசிகளாகிய இந்திரன் முதலான தேவர்களும் வந்து பலஆசிகள் கூறி, இந்தத் தமயந்தி அருந்ததியிலுஞ் சிறந்த கற்புடையவள். இவளுக்கு யாதொரு தீங்கும் வராமல் நாங்கள் பாதுகாத்து வந்தோம். இவள்மீது ஐயங் கொள்ளாமல் முன்போல் சுகித்திருவென்று நளனுக்குரைத்துப் போயினர். நளன் ஐயம் நீங்கி மனைவியை ஆதரித்து மக்களைத் தழுவி முத்தமிட்டு, ரிதுபன்னராஜ

ணைப் பலவாறு புகழ்ந்து, வேறொரு சாரதியை யமைத்து அவ்வரசனை அனுப்பிவிட்டான். ரிதுபர்ணனுந் தன்னகரஞ் சென்று இனிது வீற்றிருந்தான். வீமன் முதலான நகருளார் யாவரும் மேலான மகிழ்வுற்றனர்.

இப்பால் நளன் தன் மனைவியோடு சில நாளங்கிருந்து வீமராஜனிடத்து விடைபெற்று, தன் புத்திரரையு மனைவியையு மழைத்துக்கொண்டு இரதமேறி சில இரதகஜதுரகபதாதிகளோடு பிரயாணப்பட்டு, நாடு-நகரம் காடு-மலை-வனம் - வனாந்திரங்களைக் கடந்து, தன் தேசமாகிய நிடத தேசத்துக்கு வந்து, நகர்ப்புறத்தி லிருந்து, சில தூதுவர்களை விட்டுப் போர்புரியக் கருத்திருந்தாற் போர் செய்ய வா, அல்லது முன்போலச் சூதாடக் கருத்திருந்தாற் சூதாடென்று புட்கரனைக் கேட்டு வரச் சொல்ல, அப்புட்கரன் சூதாடுவதற்கே இசைந்ததை தூதுவர்களா லறிந்துகொண்டு தானுந் தன் மனைவியுமாக நகரத்துட்புகுந்து இராஜசபைக்குவந்து புஷ்கரனைக்கண்டு என் மனைவியைப் பந்தயமாக வைத்துச் சூதாடுகிறேன் நான் தோற்றால் என் மனைவியை விட்டுச் செல்கிறேன், நீ தோற்றால் என் நாடு நகர முதலியவற்றோடு உன் நாடு நகர முதலியவற்றையும் எனக் கொப்புவித்துப் போவென்று பேசி, சூதுப்பலகை விரித்து சூதாடிக் கெலித்து, தன் நாடுநகர முதலியவைகளோடு அந்தப் புஷ்கரனுடைய நாடு முதலியவற்றையுங் கிரகித்துக்கொண்டு, அவனைக் கர்வபங்கஞ் செய்த பின்பு மீண்டும் அவனுடைய நாடு நகர முதலியவற்றைக் கொடுத்துப் பகுதிகட்டி வரக் கட்டளையிட்டு அனுப்பிவிட்டு, தான் சிங்காசனாதிபதியாகி புத்திரர்களையு மற்று முள்ள நால்வகைச் சேனைகளையும் ஆதரித்து, முன்போல் மநுசாஸ்திர விதி பிசகாமற் சக்கிர நடாத்தி அரசு செய்து வந்தான். கேட்டீரோ தருமநந்தனா! சக்கிரவர்த்திகளாகிய எழுவருள் தானுமொருவனாக இருந்த நளனடைந்த துன்பத்தை விட நீ யடைந்த துன்பம் என்ன. காலகதியை ஒருவரால் தடுக்கொணாதாகையால் நீ மனம்வருந்தாமலிருவென்று கூறினர். உரோமசமுனிவர் தருமன் முதலாகிய நால்வரும் பாஞ்சாலியும் எழுந்து, அவ்வுரோமசன்மருக்குச் சோடசோபசாரஞ் செய்து வணங்கிப் பலவாறு புகழ்ந்தினிது வீற்றிருந்தார்கள். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே! மேல் நடந்தனவற்றையுங் கூறுகிறேன் கேளும்:

## நாரதமுனிவரால் தருமராஜன் தீர்த்த மகத்துவங் கேட்டு தீர்த்த யாத்திரை செல்லுதல்

ஓ ஜெனமேஜெய மஹாராஜனே! தருமன் முதலாயுள்ள நால்வரும் பாஞ்சாலியும் உரோமசன்மரும் இனிது வீற்றிருக்கின்ற தருணத்தில் யாழ்வல்லோனாகிய நாரதர் வந்தார். அவரைக் கண்ட ஐவரும் எழுந்து எதிர் சென்றழைத்து வந்து, ஓராசனத் திருத்திச் சோடசோபசாரஞ் செய்து பலவாறு புகழ்ந்து நின்றார்கள். நாரதர் பல ஆசிகள் கூறி அவர்களை இருக்கச் சொல்லி யோக க்ஷேமங்களைக் கேட்டுக்கொண் டிருக்கும்போது, தருமராஜன் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! கடல் சூழ்ந்த நெடிய உலகத்திலிருக்கிற திவ்ய நதிகளில் ஸ்நானஞ் செய்தோர்க்கு வரும் பயன் பலவாறென்று பல பெயர்களாற் பலவிதமாகக் கேள்வியுற்றனம். அதனால் நான் தெளிவுறாமல் தங்கள் திருவாக்கினாற் கேட்டால் என் மனந் திருப்தியடையுமென்று கருதியிருந்தேன். கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததுபோற் காட்டிலிருக்கும் எங்கள் கண்களுக்குமுன் செய்த பூஜா பலத்தால் தரிசனமானீர்கள். ஆதலால், அடியேன் மனங்களிப்புறத் தீர்த்த மகிமையை யெடுத்துரைக்க வேண்டுமென்று வினவினர். அதற்கு நாரதர் அன்பு கூர்ந்து சொல்லுகிறார்: ஓ தருமநந்தனா! தனியரசு செலுத்திய உங்கள் மூதாதையாகிய சந்தனுமகாராஜன் தன் மனைவியாகிய கங்கைக்கரையில் அனேகம் யாகங்களைச் செய்துவந்தார். அக்காலத்தில் தவசிரேஷ்டசிகாமணியாகிய புலத்தியர் வந்தார். அவருக்குச் சோடசோபசாரஞ்செய்து வணங்கித் தீர்த்த மகத்துவத்தைக் கேட்டார். புலத்தியர் அதின் மகத்துவங்களை யோதினர். அவ்வாறு உமக்குச் சொல்லுகிறேன் கேளுமென்று சொல்லுகிறார்: கேளும் தருமநந்தனா! தேவர்-மக்கள் - விலங்கு - புள்-ஊர்வன- நீர்வாழ்வன- தாவரம் என்னும் எழுவகைத் தோற்றத்துள் உயர்ந்தது மக்கள் யாக்கை. அந்த மக்களுள் கூன்-குருடு-செவிடு-ஊமை-மூடம் முதலியபழுதில்லாமல் இருப்பது அரிது. அதிலுங் கல்வியுடைமை அரிது. அதிலும் நற்குணசெய்கையிருப்பது அருமை. அதிலும் பொருளுடைமை யிருப்பது அருமை. அதிலுந் தானதருமத்தைச் செய்வது அருமை. ஆதலால், மேற்கூறியவற்றிற் சிலதுடைத்தாகிச் சிலது அடையாத மக்களுக்கு நன்மையை விளக்க மூர்த்தி

தலம் தீர்த்தம் என்று மூன்றுண்டாகி யிருக்கின்றன.

மேலும் ஐம்புலன்களின் வழியாக அறிவைச் செலுத்தாமலடக்கி, துர்விஷயத்திற் பிரவேசிக்காமல் உலகத்தின்கணுள்ள சற்போகபாக்கியங்களை அடைந்து, இல்லறவியலைத் தழுவி, பொறாமை பேராசை கடுஞ்சொல் சினம் என்பனவற்றை நீக்கி, நன்மை வந்த காலத்தில் மகிழ்ந்துந் தீமைவந்தகாலததில் வருத்தமுற்றுமிராமல் சித்தசாந்த சீலத்தோடு சத்தியத்தை மறக்காமல், கடவுளிடத்துக் கருத்தைச் செலுத்தியிருக்கிறவனெவனோ அவன் எவ்வருணத்தானாயினும், அவனுக்கு வேதங்களினால் வெளிப்பட்டிருக்கிற எல்லா யாகத்தின் பலனுண்டாகி, உலகில் யாவர்க்குஞ் சிறந்தோனாகி யிருப்பான். மேற்கூறிய புனிதமாகிய ஒழுக்கமுடைமை முதலியவற்றை தழுவாமல் இருப்பவர்கள் தங்கள் குற்றம் நீங்க அஜமேதம் - அஸ்வமேதம் - சொர்ண தானம் - கோதானம்-பூதானம் முதலியதுகளை செய்து, தீர்த்தம் மூர்த்தி தலம் என்கிற மூன்றின்மேல் விருப்பமுற்று விதியுடன் தீர்த்தத்தில் ஸ்நானம் புரிந்தும், மூர்த்தியைத் தரிசித்தும், தலத்தில் வாசஞ் செய்தும், குற்றத்தை நீக்கிக்கொள்வர். அப்படி தீர்த்த முதலியவற்றையுஞ் சொர்னதானம் முதலியவற்றையும் விரும்பாமலிருப்பார்களாகில், அவர்களை வறுமைப்பேய் பிடித்து அரைக்கணமேனுஞ் சுகத்தில் வையாமல் இகபரசவுக்கியத்தைக் கெடுத்துவரும். அளவற்ற திரவியங்களைச் செலவிட்டு அநேகம் யாகங்களைச் செய்து பெறும்பேறெல்லாவற்றையும் ஒவ்வொரு நதியே கொடுக்குமென்றால், அந்நதியின் சிறப்பை யாவரா லுரைக்கக்கூடும்? அவ்வளவு சிறப்புற்ற தீர்த்த மகத்துவத்தைக் கேட்டுப் புனிதமுற்ற வீஷ்மரைப்போல் நீயும் என்னால் அந்தத் தீர்த்த மகத்துவத்தைக் கேட்க விரும்பினை. அப்படியே உன் மனங் களிப்பை யடையச் சொல்லுகிறேன் கேள்:

ஓ தருமநந்தனா! உலகத்திலுள்ள நதிகளின் பெயரை என்னொரு நாவாற் சொல்லத் தக்கதல்ல. புலத்தியர் தம் வாக்கினால் மூன்று கோடி தீர்த்த மிருக்கின்றதென்று ஒரு போக்காக ஒரு கணக்கிட்டுக் கூறினர். அவற்றுள் என்னாவிற் கிசைந்த நதிகளின் மகத்துவத்தைச் சொல்லுகிறேன். அகத்தியவட தீர்த்தம்- அகலிகை தீர்த்தம் - அத்திரி தீர்த்தம் - அபிசா தீர்த்தம்-அயிராவேக தீர்த்தம்-அரங்கத்துவார தீர்த்தம் - அர்க்கிளிதாரை தீர்த்தம்- ஆரண்ய தீர்த்தம் - இந்திரசந்தன தீர்த்தம்- உத்தரசிந்து தீர்த்தம் - உத்தரஜோதி தீர்த்தம்- கங்கை தீர்த்தம் - கன்னி தீர்த்தம் - கபிலை தீர்த்தம் - கயா தீர்த்தம் - கம்பா தீர்த்தம் - கால தீர்த்தம் - காவேரி தீர்த்தம் - குமாரதாரை தீர்த்தம்-குமார தீர்த்தம்-குரு தீர்த்தம்- குமரி தீர்த்தம்-கேதார தீர்த்தம் - கோடி தீர்த்தம் - கோமதி தீர்த்தம் - கோதாவரி தீர்த்தம்- கௌசிக தீர்த்தம்-கௌரி தீர்த்தம் சக்கர தீர்த்தம்-சங்கினி தீர்த்தம் - சந்நித தீர்த்தம் - சம்பிராம தீர்த்தம்-சம்பவ தீர்த்தம்-சம்பக தீர்த்தம்- சம்பு தீர்த்தம் - சம்புகேஸ்வர தீர்த்தம்-சரவணபவ தீர்த்தம்-சவுநக தீர்த்தம் - சரஸ்வதி தீர்த்தம்-சரகாமபரி தீர்த்தம்-சரயு தீர்த்தம்-சாப்பிய தீர்த்தம்-சாளக்கிராம தீர்த்தம்-சாலோகி தீர்த்தம்-சிவந்தபஞ்சக தீர்த்தம்-சுரக தீர்த்தம்- தசரத தீர்த்தம்-தண்டகாரண்ய தீர்த்தம்- நதீசி தீர்த்தம்-தக்ஷணசிந்து தீர்த்தம்-தருபாரண்ய தீர்த்தம்-தாமரைபரணி தீர்த்தம் - தாரக தீர்த்தம்-துங்கபத்திரி தீர்த்தம்-தூமவதி தீர்த்தம்- தூருவாச தீர்த்தம்-தேவதிட தீர்த்தம்-தேவிகை தீர்த்தம்-தேவிச்சிறவை தீர்த்தம்-தைவத தீர்த்தம்- நசிர தீர்த்தம்- நமிசகுண்ட தீர்த்தம்-தமதை தீர்த்தம்- நாபக தீர்த்தம்- நாரத தீர்த்தம்- நிமிட தீர்த்தம்-பங்குன தீர்த்தம்-பதரிகை தீர்த்தம்-பரத தீர்த்தம்-பரிதி தீர்த்தம்-பிரதூதகை தீர்த்தம்- பிரபாசை தீர்த்தம் - பிரயாகை தீர்த்தம் - பிலவாதி தீர்த்தம்-பிரமமானியதி தீர்த்தம்-புஷ்கர தீர்த்தம்-பெண்ணை தீர்த்தம்-பொற்றாமரை தீர்த்தம்-மகாநாள தீர்த்தம்-மகேஸ்வர தீர்த்தம்-மணிநாத தீர்த்தம்-மவுத்திரேய தீர்த்தம்- மாத்துரு தீர்த்தம்-மாண்டிட தீர்த்தம் - யமுனை தீர்த்தம் - யாதிபத தீர்த்தம் - உருத்திரகோடி தீர்த்தம்-உருத்திர தீர்த்தம்-வசுத்தான தீர்த்தம் - வன்மீக தீர்த்தம் - வாகினி தீர்த்தம்- வாசிட்ட தீர்த்தம்-வாமன தீர்த்தம்-விந்தாரக தீர்த்தம் - வியாச தீர்த்தம் - வைதரணி தீர்த்தம் - ஜானகி தீர்த்தம் என்று இவைபோல்வன இன்னுமனேகமுள.

இந்நதிகளில் ஸ்நானஞ் செய்தபேர்கள் அடையும் பேறுக்கு அளவில்லையாயினும், என்னால் கூடியமட்டும் எடுத்துரைக்கிறேன் கேள். சங்கநிதி-பதுமநிதி-சிந்தாமணிமுதலிய செல்வப்பொருள்களை அடைவர். புத்திர பாக்கியத்தை அடைவர். தேவர்களாகவும், பிரம்ம

கணங்களாகவும், விஷ்ணு பக்தர்களாகவும், சிவ பக்தர்களாகவும், மிக்க அன்பு பொருந்தி விளங்குவர். நல்வினை தீவினைகளாகிய இரு வினைப் பாசங்களில் கட்டுண்டு, ஆணவம்-மாயை - காமியம் என்னும் மூக்கதையினால் மொத்துண்டு, வறுமைப் பேய்க்குள்ளாகி, நகர் நாய்போல் சஞ்சரிக்கும் பாவிகளானவர் ஸ்நானஞ் செய்தால், சாந்தி - விசாரம் - சந்தோஷம்-சாதுசங்க மென்னும் நால்வகைப் பொருளை அடைந்து, பரமாசாரியை அடுத்து மெய்ப்பொருளை அடைந்து, சச்சிதானந்த தேசோமயத்தில் சொக்கித் தேகவாசனையை யற்ற மகத்துக்களாவர். இல்லற தருமத்தின் து லக்ஷணத்தை இன்னதென்று நோக்காத் அசேதனர் இந்த நதிகளில் ஒன்றில் ஸ்நானம் செய்வார்களாகில், இல்லற தருமத்துக் குண்டாகிய பயனைத் தட்சணம் அடைவர். இத் தீர்த்த ஸ்நான மகிமைகளைப் பல பலவாக எடுத்துரைப்பதில் பயனில்லை. வேதத்திலும், ஆகமத்திலும், மற்றுமுள்ள நூல்களிலும் கூறப்பட்ட பரமார்த்தமாகிய நன்மைகளை அடைவிக்கிறதுமன்றி, மண்டியமாகிய நீரைத் தெளியவிக்குந் தேற்று வித்தின் தன்மைபோல் சுத்த மூடராகி அவரையும் சகலகலை வல்லவராகத் தெளிவித்து, வேதம் ஓதலாகிய பிரமயாகம், ஓமம் வளர்த்தலாகிய தெய்வயாகம், பலியீதலாகிய பூதயாகம், தருப்பண முடித்தலாகிய பிதுர்யாகம், இரப்போர்க் குணவு முதலியவை யீதலாகிய மாநுடயாகம் ஆகிய இவ்வைவித யாகத்தின் பயன்களைத் தரும்.

மேலும், அக்கினிஷிடோமம் - அத்தியக்கினிஷ்டோமம் - உகத்திபம் - சோடசி - வரசபேயம்-அதிராத்தியம்- அப்தோரியாமம்- அக்கினியாதேயம்-அக்கினிகோத்திரம்-தரிசபூர்ணமாசம்-சாதுர்மாசியம் - நிரூடபசுபந்தம் - ஆக்கிரயணம் - சௌந்திராமணி - அட்டகை-பார்வணம்-சிரார்த்தம்-சிராவணி-ஆக்கிரகாயணி-சைத்திரி-ஆசுவயுசு என்னும் இவைகளோடு, அறத்தாலீட்டிய பொருளை மூக்குற்றமற்ற நற்றவத்தோரைக் கொள்கெனப் பணிந்து தம்முள்ளுவந் தீதலாகிய தலைப்படுதானம், ஆதுலர்-அங்கயீனர் - மாதர் முதலாய பிறர் சிறுமைப்பற்றி மனமிரங்கியீவதாகிய இடைப்படுதானம், புகழ்-ஆர்வம்-கைமாறு - அச்சம்-தாட்சண்ணியம்-காரணம்-கடைப்பாடு இவற்றைப்பற்றி யீவதாகிய கடைப்படுதானம், கோதானம்-பூதானம்-சொர்னதானம்- அஸ்வமேததானம் - அஜமேததானம் - கோமேததானம்-நரமேததானம்-ஆதுலர்க்குச் சாலை- ஓதுவார்க்கு உணவு - அறுசமயார்த்தார்க் குண்டி-பசுவுக்கு வாயுறை - சிறைச்சோறு-ஐயம்-தின்பண்ட நல்கல் - அறவைச்சோறு - மகப்பெறுவித்தல் - மகவு வளர்த்தல் - மகப்பால் வார்த்தல் - அறவைப் பிணஞ் சுடுதல் - அறவைத் தூரியம்-சுண்ணம்-நோய்-மருந்து-வண்ணார்-நாவிதர் - கண்ணாடி - காதோலை-கண்மருந்து-தலைக்கெண்ணெய்-பெண் போகம்-பிறர் துயர் காத்தல் - தண்ணீர் பந்தல் - மடம் - தடம் - சோலை-ஆவுரிஞ்சுதறி - விலங்கிற்குணவு - ஏறு விடுத்தல் - விலைகொடுத் துயிர்காத்தல் - கன்னிகாதானம் இவற்றை யெல்லாம் செய்தவர்க்கு என்ன பலன் கிடைக்குமோ அந்தப் பலனையும் கொடுக்கும். ஆனால், ஓ தருமநந்தனா! இதுவரைக்கும் சொல்லிய நதிகள் கொஞ்சம் இன்னமும் அளவிறந்த நதிகளிருக்கின்றன. அந்நதிகளின் பெருமையை யாவரால் அளவிட்டுச் சொல்லப்படும். நதிகளின் நாமத்தையும் மகத்துவத்தையும் சொல்லிய பேரையாவது, அல்லது கேட்டபேரையாவது, யார் கண்ணாரக் கண்டார்களோ அவர்கள் இக்கடல் சூழ்ந்த நெடிய உலகத்திலுள்ள திவ்ய நதிகளெல்லாவற்றையுந் தோய்ந்தவ ரடையும் பயனை யடைவரென்று நாரதமுனிவர் கூற, தருமராஜன் முதலாகிய நால்வரும் பாஞ்சாலியும் உரோமசன்மரும் மற்ற வேதியர் குழாமும் பரமானந்தத்தை யடைந்தவராகி, நாரதருக்குச் சோடசோபசாரஞ் செய்து பல தரம் பணிந்து புகழ்ந்தார்கள். நாரதர் தருமன் முதலாகிய யாவர்க்கும் பல ஆசிகள் வழங்கி விடைபெற்று, தமதிருப்பிடத்தை நோக்கிச் சென்றருளினர்.

ஓ மகாராஜனே! அப்பால் தருமராஜன் எழுந்து உரோமசன்மரை வணங்கிச் சொல்லுகிறார்: ஓ சுவாமி! மானிட ஜென்னமெடுத்ததற்குப் பயன் பல தருமத்தைச் செய்யவேண்டும். தருமத்துக்குக் காரணம் பொருள். அப்பொருளை அடையாத நான் கடைத்தேறும் பொருட்டு யாழ்வல்லோனாகிய நாரதபகவான் திருவாய் மலர்ந்தருளிய திவ்ய தீர்த்தத்திலாவது ஸ்நானஞ் செய்யவேண்டு மென்று விருப்புற்றேன். அவ்விருப்பம் நிறைவேற எளியேன்மீது கிருபைகூர்ந்து தீர்த்த யாத்திரை செய்துவர எழுந்தருள வேண்டுமென்

று கூற, உரோமசன்மர் மகிழ்வுற்றுச் சொல்லுகிறார்: ஓ தருமநந்தனா! நான் வந்த காரணம் உம்மைத் தீர்த்த யாத்திரை செய்விக்கத்தான். நீர் நளன் சரித்திரத்தைக் கேட்டமையால் அதனைச் சொல்லி முடித்தேன். அத்தருணத்தில் நாரதபகவான் வந்தார். அவரால் நீர் தீர்த்த மகத்துவத்தைக் கேட்டீர். இனி நீவிரும் நாம் தீர்த்த யாத்திரை செய்து கந்தமாதனம் போய்ச் சேருகிற காலத்தில், உமது சகோதரனாகிய அர்ச்சுனனை இந்திரன் கொண்டுவந்து விடுவான். ஆதலால் வாருமென்று கூறி யெழுந்தனர். தருமராஜன் தம்பியராதியரோடு உரோமசன்மரைத் துணைகொண்டு தீர்த்த யாத்திரைச் செல்லுகின்றார்.

## அகஸ்தியமுனிவர் சரித்திரம்

இவ்வாறு உரோமசன்மரோடு தருமன் முதலானவர்களெல்லாம் பின் செல்லும்போது, யெதிரில் ஒரு சோலை தோன்றிற்று. தருமராஜன் உரோமசன்மரை வணங்கி, ஓ சுவாமி! எதிரிலிருக்கும் வனம் யாருடையது அதனைத் தேவரீர் திருவாய்மலர்ந் தருள வேண்டுமென்று வினவ, உரோமசன்மர் அகத்தியரிருந்த வனமென்று கூற, தருமராஜன் அகத்தியர் இவ்வனத்திலிருந்த காரணமென்னென்று வினவ, உரோமசன்மர் சொல்லுகிறார்: கேளும் தருமநந்தனா! அங்குஷ்டப் பிரமாணமுள்ள அகத்தியமுனியானவர் பூர்வ காலத்திலே பிரமசரியத்தை மேற்கொண்டு; இல்லறவியலைத் தழுவாமல் தவம் இயற்றித் தீர்த்தயாத்திரை செய்து வருகிறபோது அவ்வகத்தியருடைய பிதுர்த்தேவதைகள் தங்கள் வமிசத்திற் பிறந்த அவர் சந்ததி விளக்காதிருந்த குற்றத்தினால் தென்றிசைக் கடவுளின் ஆக்கினைக்குள்ளாகி, ஒரு வனத்தில் ஒரு ஆலமரத்தில் வெள்வால்கள்போல அதோ முகமாகத் தொங்கினர். அக்காலத்தில் அகத்தியர் அவர்களைக் கண்டு, இப்படியும் ஒரு தவமுண்டாவென்று ஐயுற்று, அவர்களிடத்திற்சென்று வணங்கி, ஓ ஸ்வாமிகளே! நீங்கள் அதோமுகமாக இருந்து தவஞ் செய்யவேண்டிய காரணமென்ன? இவ்வாறு தவஞ் செய்யச் சொல்லி எந்த நூலிற் கூறியிருக்கின்றதென்று வினவ, பிதுர்க்கள் சொல்லுகின்றார்கள்: ஓ தவசி! நாங்கள் அதோமுகமாக இருப்பது தவமல்ல. யமதண்டனை எங்களுக்கு வந்ததற்குக் காரணம் (கோடரிக்காம்பு குலத்துக் கேடு)என்றாற்போல, எங்கள் குலத்தில் எங்கள் வமிசத்தில் அகத்தியனென்று ஒருவர் பிறந்திருக்கிறான். அவன் இல்லறத்தைத் தழுவிச் சந்ததி விளக்காமற் பிரமசரியத்தை மேற்கொண்டு திரிகிறான். அந்தக் குற்றத்தினால் யமன் எங்களுக்கு இந்த தண்டனை விதித்தானென்று கூற, இதைக்கேட்ட அகத்தியர் உள்ளம் நடுங்கி வாய்குழறி, நெஞ்சுலரப் பலதரம் பணிந்து எழுந்து நின்று சொல்லுகிறார்: ஓ ஸ்வாமிகளே! சினங்கொள்ளாதீர் உங்கள் அகத்தியனென்கிற பிதுர்த்துரோகி நான்தான். இல்லறத்தில் அதிக பயனில்லையென்று கருதிப் பிரமசரியத்தை மேற்கொண்டேன். இனி இல்லறத்தைத்தழுவி ஒரு கன்னிகையை மணந்து சந்ததி விளக்குகிறேன். நீங்கள் முன்போலப் புண்ணியலோகத்தை யடையுங்களென்று கூற, பிதுர்க்கள் அவரை வாழ்த்தி புண்ணியலோக மடைந்தார்கள்.

அப்பால் அகத்தியர் இல்லறத்தின் மேல் விருப்ப முற்றவராகி, வனத்திற் சஞ்சரிப்பதை விட்டு நாடு நகரங்களிற் சஞ்சரித்து தமது கருத்திற்கு இசைந்த கன்னிகையைத் தேடிக்கொண்டு வருவதாயினார். அக்காலத்தில் விதர்ப்பதேசத்தரசன் யாகமுன்னிலையில் லோபாமுத்திரையென்னும் ஒரு குமாரத்தியைப்பெற்று வளர்த்து வந்தான். அச்சேதியிவர்க்குத் தெரிந்து விதர்ப்பதேசத் தரசனைக் கண்டார். அவ்வரசன் அகஸ்தியர்க்குச் சோடசோபசாரஞ் செய்தழைத்து வந்து, ஒரு ஆசனத்திலிருத்திப் பலவாறு புகழ்ந்து தேவரீர் இங்கு வந்த காரணமென்னென்று வினவ, அகஸ்தியர் சொல்லுகிறார்: ஓ மகாராஜனே! நீர் யாக முன்னிலையிற் பெற்றிருக்கிற உன் குமாரத்தியை எனக்கு விவாகஞ் செய்து கொடுக்கும்படி கேழ்க்கவந்தேனென் றுரைத்தார். அதுகேட்ட அரசன் மனமகிழ்ந்து, தக்ஷணம் மந்திரிகளாற் கல்யாண மண்டபம் இயற்றுவித்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் தன் குமாரத்தியை அலங்கரித்துக் கொண்டுவரச் சொல்லி, வேதவேதியர்கள் பல ஆசிகள்கூற, அக்கினி சாக்ஷியாகக் கன்னிகாதானஞ் செய்து கொடுத்தான். அகத்தியர் லோபாமுத்திரையுடன் அரசனிடத்து விடைபெற்று, ஒரு வனத்தில் வந்து பர்னகசாலை யியற்றி, மனைவி பணிவிடை செய்யத் தான் தவத்திலிருந்தார். ஒரு நாள் தன் மனைவியின்மேற் காதல் கொண்டு காமப்பார்வை பார்த்தார். லோபாமுத்திரை

யாகிய ராஜகன்னிகை அப்பார்வையின் குறிப்பை யுணர்ந்து, அருகில் நெருங்கி வந்தனை செய்து, ஓ ஸ்வாமி! தாங்கள் பார்த்த பார்வையின் குறிப்பு அடியாளுக்கு விளங்கிற்று. அக்குறிக்கிசைந்த செய்கைக்குத் தகுந்த இடம் பொருளேவ லிருந்தால் மாத்திரம் அது சிறக்கும். இல்லாவிடில் மிருகப் புணர்ச்சியாகுமென்று கூறினள்.

அதுகேட்ட அகஸ்தியர் சொல்லுகிறார்: ஓ மாதரசே! புணர்ச்சியி லின்பத்துக்கு உதவியானவை இன்னவைகளென்று உன் புத்தியில் தோன்றினதுபோல என் புத்திக்குத் தெளிவாக இன்னதென்று விளங்க உரைப்பாயாகில், அதற்குத் தகுந்த முயற்சி செய்கிறேனென்றுகூற, கற்புக்கரசாகியலோபாமுத்திரை சொல்லுகிறாள்: ஓ ஸ்வாமி! சகல கலைகளையு முணர்ந்து அருமையாகிய தவபாக்கியத்தைப் பெற்றிருக்கிற தங்களுக்குத் தெரியாத தொன்றுமில்லை: தாங்களே என் கருத்தை வெளியிடுமென்று கூறினமையாற் சொல்லுகிறேன். இடமாகிய பரிமள மிகுந்த நறுமலர் சோலையின் மத்தியில், தென்றற் காற்று வரும்படியான சாளரங்களையுடைய சந்திரக்காந்தக் கல்லினா லியற்றப்பட்ட ஒரு மாளிகை இருக்கவேண்டும். ஏவலாக நமது கருத்தறிந்து செய்யு மறிவாளர்களாகிய தொழிலாளர்களிருக்கவேண்டும். பொருளாகிய ஆடையாபரணாலங்கிர்தமாகி, நல்ல வாசனைத் திரவியங்களை யணிந்து, அம்சதூளிகா மஞ்சத்திற் சயனித்து, ரதியும் மதனும்போலக் கூடிக் குலாவிப் புணர்தல்வேண்டும். இது பெண்போகம். இப்போகத்திற்கு முக்கிய காரணமாக விருக்கின்றது பொருள். இப்பொருளொன்றிருந்தால் மேற்கூறிய மற்ற இரண்டும் எளிதிலடையும் தவசித்தி தங்களுக்குண்டா யிருக்கிறதாதலால் தாங்கள் வேண்டுமென்று சித்தத்தில் நினைத்தால் அப்பொருள் தக்ஷணங் கிடைக்கும். இடம் பொருள் ஏவல் படைத்தபின் என்னைக்கூடக் கருதுவது இருவருக்கு மின்பமாக விருக்குமென்று கூறிய மனைவி வாக்கியத்தைக் கேட்ட அகத்தியர் சற்றுலோசித்து, இச்சிறிய வின்பத்துக்காக நமது தவமகிமையாற் பொருளை நினைப்பது தகுதியல்ல. அதனால் அருமையாய்ச் செய்த தவத்துக்குக் கிஞ்சித்துக் குறைவு வருகின்றது. மண்டலத்தரசர் முன்னிலையிற் பொருளைப் பெறவேண்டுமென்று கருதி, மனைவியிடத்து விடைபெற்றுத் தன்னந்தனியே வெளிப்பட்டுக் கிருதபவ ராஜனிடத்துச் சென்றார்.

கிருதபவன் அகஸ்தியர் வரவைக் கண்ட மாத்திரத்திற் பரமானந்த மடைந்தவனாகி, எதிர்சென்றழைத்துவந்து ஒரு பொற்பீடத்திலிருத்தி, சோடசோபசாரமுஞ் செய்து, இரண்டு கரத்தையுங் கூப்பிச் சிரமேல் வைத்து, ஓ ஸ்வாமி! ஓ தவசிரேஷ்ட சிகாமணிகள் புகழத்தகுந்த மாதவா! எங்கள் முன்னோர் செய்த மாதவமோ? இந்த நகரஞ்செய்த பூஜா பலமோ? யான் செய்த நன்மையோ? மற்றயாதினாலோ அறியேன் தாங்கள் இவ்விடம் வரப்பெற்ற சிலாக்கியம். அடியேனை நாடி வந்த கருத்தை வெளியிட்டால் என்னாற் செய்யத்தகுந்ததைத் தக்ஷணம் முடித்தனுப்புவித்கிறேனென்று கூற, அகஸ்தியர் வணங்கிய அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கிச் சொல்லுகிறார்: ஓ மகாராஜனே! எனக்குக் கிஞ்சித்துப் பொருளுதவி வேண்டியிருக்கின்றது. உன் பொக்கிஷத்திலிருக்கிற பொருளில் உன் மனவர்த்தி முதலாகிய செலவுக்கும், இரதகஜதுரகபதாதி முதலிய ஏவலாளர்களின் செலவுக்கும் ஒரு வருஷத்திற்குவேண்டிய பொருளைக் கைப்பற்றிக்கொண்டு, மற்ற திரவியத்தை எனக்குக் கொடுவென்று வினவினர். அரசன் தக்ஷணந் தன் மந்திரிகளை யழைத்து, ஒரு வருஷத்திய செலவுக்கு வேண்டிய பொருள்போக மிகுந்த திரவியத்தை கொண்டுவரச் சொல்லி அனுப்பிவித்தான். உடனே மந்திரிகள் கணக்கிட்டு, ஒரு வருஷத்திய செலவுக்கே கிஞ்சித்து பொருள் குறைவுற்றதைக் கண்டு அரசனுக்கு தெரிவித்தார்கள். அரசன் பொருளிருப்பை அகத்தியர்க்குத் தெரிவித்தான். அகத்தியர் மனமகிழ்ந்து, ஓ ராஜசிகாமணி! உனக்குப் பொருள் போதாது என்னுடன் வா. எனக்குப் பொருள் கிடைக்கிறவிடத்தில் உனக்கும் பொருள் சம்பாதித்துக் கொடுக்கிறேனென்று கூறி, அரசனை அழைத்துக்கொண்டு வதுவாதிப ராஜனிடத்திற்குச் சென்றார். அகத்தியன் கிருதபவன் என்னு மிவர்கள் வரவைக்கண்ட அரசன் எதிர்வந்து அழைத்துப் போய் ஆசனத்தில் இருக்கவைத்து, தகுந்தபடி பூசித்து, வந்தகாரணமென்னென்று வினவினன். அகத்தியர் பல ஆசிகள் கூறி, தாம் கருதிவந்த காரணத்தைக் கூறினர். அரசர் மந்திரிகளாற் பொருளிருப்பை யுணர்ந்து, கிருதபவராஜன் கூறினதுபோற் கூறினன். அகத்தியர் கிருத

பவனோடு வதுவாதிப மகாராஜனையு மழைத்துக்கொண்டு திராவிட மகாராஜனிடத்துச் சென்றார். அந்த அரசன் மூவர்க்குந் தகுந்த மரியாதை செய்து, அகத்தியரைத் துதித்து வந்த வரலாற்றை வினவினன். அகத்தியர் தாம் நாடிவந்த கருத்தை வெளியிட, திராவிடபூபதி தன் பொருளை கணக்கிட்டு பொருட்குறைவை தெரிவித்தனன். அகத்தியர் அந்த அரசனையும் அழைத்துக்கொண்டு, ஆக நால்வரும் வில்வலன் வனத்திற்கு வந்தனன்.

## வில்வலன் வாதாபி சரித்திரம்

கேளும் தருமநந்தனா! காசிபர்க்கும் மாயை யென்று பெயர் வகித்த அசுர ஸ்திரீக்கும் பிறந்த, சூரபன்மன் - சிங்கமுகாசுரன் - தாருகாசுரன் - அரமுகி என்னும் நால்வருள் அசமுகி வயிற்றிற் பிறந்த வில்வலன்-வாதாபி இருவரும் பிரமனை நோக்கி, தவஞ் செய்து பெரியோர்களுக்கு உபசாரத்தோடு அன்னமிட்டு அவர்களைக் கொல்லாமற் கொன்று புசிக்க வேண்டுமென்று வரம் பெற்றவர்களாய், ஒரு வனத்திற் ஆச்சிரம மியற்றிக்கொண்டு, அங்கு வரும் பெரியோர்களுக்குத் தன் சகோதரனாகிய வாதாபியை ஆடாக்கி அறுத்துச் சமையல் செய்து, உபசாரத்தோடு அன்னமிட்டு,பின்பு ஓரிடத்திலிருந்து வாதாபி என்று வில்வலன் அழைக்கிறது தக்ஷணம் வாதாபி பெரியோர்களுடைய வயிற்றைக் கீறிக்கொண்டு வெளியில் வந்து விடுகிறது. பெரியோர்கள் உடனே மரணமடைவார்கள். வில்வலன் வாதாபி இருவரும் பெரியோரைப் புசித்து விடுகிறது. இப்படி நடக்கும் துராத்துமாக்களாகிய வில்வலன் வாதாபியிருக்கும் வனத்திற்கு அகத்தியர் வந்த மாத்திரத்தில் வில்வலன் தன் சுயரூபத்தை மறைத்துத் தவமுனிபோல் வேடங்கொண்டு, அகத்தியர் திருவடியில் வந்து வணங்கிப் பலவாறு துதித்து, ஓ ஸ்வாமி! நெடுந்தூரம் நடந்துவந்த இளைப்பாறஇங்கு சற்றுநேர மிருங்கள்.வந்தவர்களுக்கு அன்னமிடுகிறது எனக்கொரு விரதமாதலால், அவ்விரதம் நிறைவேற யானளிக்கும் அன்னத்தைப்புசித்து என்னைக் கிரதார்த்தனாக்க வேண்டும் என்று வேண்டினான். அகத்தியர் வில்வலனாகிய அம்மாமுனியின்வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில் உள்ள மகிழ்ந்து, அந்த வில்வலன் கருத்துக் கிசைந்து, அவனுடன் சென்று ஒரு ஆசனத்திலிருந்தார். அகத்தியரோடு வந்த மூன்று அரசர்களும் அகத்தியரை வணங்கி வில்வலன் சூதைத் தெரிவித்தனர். அகத்தியர் கேட்டுச் சிரக்கம்பஞ் செய்து குஞ்சிரிப்பு கொண்டு, ஓ அரசர்களே! நீங்கள் மூவரும் இவனிடம் அன்னத்தைப் புசிக்காதிருங்கள். நான் புசிக்கிறேன் ஏதாவது கெடுதி நேரிடுமாகில் தக்ஷணம் அவர்களுக்கே கெடுதியைச் செய்கிறேன். நீங்கள் அஞ்சவேண்டாமென்று கூறினர். அரசர்கள் வணங்கி வாய் பொத்தி ஒரு இடத்திலிருந்தனர்.

இப்பால் வில்வலன் தன் சகோதரனை ஆடாக்கிக் கொன்று சமையல் செய்து, அகத்தியரிடத்துக்கு வந்து வணங்கிப் போசனஞ் செய்ய அழைத்தான். அகத்தியர் எழுந்து போசனச்சாலையிற் சென்றார். வில்வலன் பலவகை பதார்த்தத்தோடு அன்னமிட்டான். அகத்தியர் போசனஞ் செய்து மற்றொரு இடத்தில் வந்து உட்கார்ந்து இளைப்பாறியிருக்கும்போது, வில்வலன் மறைவான ஒரு இடத்திற் சென்று வாதாபி என்று வழைக்கப்படி விளித்தனன். வாதாபி அகத்தியர் வயிற்றைக் கிண்டி எழுந்திருந்தான். அகத்தியர் அதுகண்டு தக்ஷணஞ் சிவத்தை தியானித்து, வாதாபி சீர்ணபி என்று தன் கரத்தை வயிற்றின்மீது தடவினர். வாதாபி தக்ஷணம் மரணமடைந்து சீர்ணமானான். இவை யனைத்தையும் அந்தரத்திலிருந்து பார்ப்பவர்களாகிய தேவர்கள் கண்டு மகிழ்வடைந்து, பலவாறு புகழ்ந்து, அந்தரதுந்துபி முழங்கக் கற்பகப் பூமாரி சொரிந்து ஆனந்தக் கூத்தாடினர். வில்வலன் தான் விளித்தமாத்திரத்திற் சகோதரன் வராதிருப்பதைக் கண்டு மன நடுங்கி, ஓ! ஓ! சாம்பவமூர்த்திக்கு ஒப்பாகிய அகத்தியரால் வாதாபி மரணமடைந்தானென்று நிச்சயித்துக்கொண்டு, நாம் சும்மாயிருப்போமாகில் இனி அரைமாத்திரையில் நமக்குங் கெடுதி வருமென்றெண்ணி அச்சமுற்று அதனால் நெஞ்சுலர்ந்து மொழிதடுமாறித் தேகம் நடுக்குற ஓடோடியும்வந்து, அகத்தியர்க்கு நமஸ்காரஞ் செய்து சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! தவத்தினாலும் வல்லமையினாலுஞ் சிவத்தை யொத்திருக்குந் தங்கள் மகிமையை அறியாமற் சிறியேன் செய்த பெரும்பிழையைப் பொறுத்து என்னைக் காப்பாற்றவேண்டும் உமது திருவடியே புகலிடமென்று அடியற்ற பனை

போல் விழுந்து வேண்டிக் கொண்டான். அருட்கடலாகிய அகத்தியர் தமதடியில் விழுந்து வேண்டும் வில்வலனை யாதரித்து, அடா துராத்துமாவே! இறந்துபோன வாதாபி வரப்போகிறதில்லை. நீபிழைத்திருக்க விருப்பமிருந்தால் நாம் நாடிவந்த கருத்துக்கிசைய நடப்பையாகில் நீ செய்த குற்றத்தை மன்னிக்கிறேனென்று கூற, வில்வலன் வணங்கிச் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! தாங்கள் நாடி வந்த கருத்தை வெளியிட்டால் தக்ஷணம் அக்கருத்தை நிறைவேற்றுகிறேன். ஆதலால், தேவரீர் கிருபைசெய்து திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கூற, அகத்தியர் சொல்லுகிறார்:

அடா துராத்துமாவே! எனக்கும் என்னுடன் வந்த மூவர்க்கும் வேண்டிய பொருள் கொடுப்பையாகில் உன்னை மன்னிக்கிறேன். எனக்கு அறுபதினாயிர மணங்கு பொன்னும், என்னுடன் வந்த அரசர்களுக்குத் தனித்தனி முப்பதினாயிர மணங்கு பொன்னுங் கொடு என்று வினவினர். வில்வலன் அக்கருத்துக்கு இசைந்து, தக்ஷணம் பொக்கிஷத்தைத் திறந்து, அகத்தியர் கூறியபடி மூன்றரசருக்குந் தனித்தனி முப்பதினாயிர மணங்கு பொன்னும், அகத்தியர்க்கு அறுபதினாயிர மணங்கு பொன்னுங் கொடுத்து, தன்னிடத்தி லிருக்கின்ற பசுக்கூட்டங்களை நான்கு பிரிவாக்கி நால்வர்க்குமளித்து, பொற்குவைகள் அவர்களிடத்திற் சேர்க்க ஒவ்வொரு திவ்ய ரதத்தையுங் கொடுத்தான். அகத்தியரும் மற்ற மூன்றரசர்களும் பொருளைப்பெற்று தங்கள் தங்களிருப்பிடத்துக்குவந்து சேர்ந்தார்கள். இவர்களில் அகத்தியர் லோபாமுத்திரையினிடத்து தாம் கொண்டுவந்த திரவியத்தையும், பசுக்களையுங் கொடுத்து, ஓ மாதரசே! இதோ உன் கருத்துக்கிசைந்தபடி ஈய்ந்தேன். இனி உன் கருத்துக்கிசைந்தபடி பொருளைச் செலவழித்துக்கொண்டு சுகத்தை அனுபவித்துக்கொள்ளென்று கூறினர். லோபாமுத்திரை அப்பொருளை தன் வசமாக்கிக்கொண்டு, அந்த வனத்தில்தானே தேவர்கள் வியப்புற ஒரு மாளிகையியற்றி, இல்லறத்துக்கு தகுந்தவையெல்லாஞ் சேகரித்துக்கொண்டு தன் கணவனாகிய அகத்தியரைவணங்கிச் சொல்லுகிறாள்: ஓ ஸ்வாமி! அடியேன் கருத்து மகிழும்படி இடம்பொருளேவல்களை அளித்தீர்கள். இனி தங்கள் கருத்து மகிழ் வெய்துமாறு பணிவிடை செய்ய விருப்புற்றுந் தங்கள் கிருபைக் கெதிர்பார்த்திருக்கிறேனென்றுகூற, அகத்தியர் அன்றுமுதல் மனைவியினிடத்துக் காதலுற்றவராகிக் கூடிக் கலந்து, இல்லறத்துக்குத் தகுந்த தருமத்தை அனுசரித்து வாழ்ந்து வருகிற காலத்தில் ஒருநாள் அகத்தியர் மனைவியை நோக்கிச் சொல்லுகிறார்: ஓ மாதரசே! உன் மனங்களிப்புற என்னாற் பெறவேண்டியதெதுவோ அதனைக் கேட்டுக்கொள்ளென்று வினவினர். லோபாமுத்திரை மகிழ்வுகொண்டு வணங்கிச் சொல்லுகிறாள்:

ஓ ஸ்வாமி! பெண்களுக் கழகானது சந்ததி விளக்குதலே யாதலால், பிதுரர்-தேவர்-விருந்தினர் - சுற்றத்தார் -ஆதாரமானவராலே துறக்கப்பட்டவர்- தன்னிடத்தில்வந்- திரக்கப்பட்டவர் - தரித்திரர் - பிரமசாரியர்-வானப்பிரஸ்தர்-சன்னியாசிகள் ஆகிய இவர்களுக்கு உபசாரஞ் செய்து இல்லற தருமத்தை நடத்த, நமக்குப் பின்பு ஒரு புத்திரன்வேண்டும். ஆதலால், ஒரு புத்திரனைப் பாலியுமென்று கூற, அகத்தியர் அக்கருத்துக் கிசைந்து லோபாமுத்திரையைக் கூடி ஒரு புத்திரனை யளித்தார். லோபாமுத்திரை புத்திரனைப் பெற்று வளர்த்து வந்தனள். அகத்தியர் அப்புத்திரனுக்கு வேதாகம புராண முதலியவற்றைக் கற்பித்து, திரிதசி யென்று நாமமிட்டு, சகல மந்திரோபதேசமுஞ்செய்து நல்வழியிலிருக்கக் கட்டளையிட்டனர். திரிதசியென்பவர் தந்தையைவிட எண்மணங் கதிகமாகித் தவத்திலுயர்ந்து, ஒரு கன்னிகையை மணந்து சன்னுத னென்னும் ஒரு புத்திரனை யளித்தார். அகத்தியர் கிரகஸ்தனாகிப் புத்ரபவுத்திர பாக்கியத்தை அடைந்ததைக் கண்ட பிதுர்த்தேவர் அதுமுதல் தென்றிசைக் கடவுளின் ஆக்கினைக் குள்ளாகாமல், அந்த யமன் தங்களைக் கண்டவுடன் துதித்து வணங்கும்படியான பெருமையை வகித்துச் சுகித்திருந்தனர். அகத்தியர் லோபாமுத்திரை பணிவிடை செய்யத் தமது கருத்துக் கிசைந்த விடங்களில் தவஞ் செய்துகொண்டிருந்தார். அவர் கிரகஸ்தனாக இருக்கும்போது வசித்திருந்த வனம் இதுவென்று கூற, தருமராஜன் வணங்கிச் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! அகத்தியர் மகத்துவத்தைக் கேட்கக் கேட்கச் செவிக்கு விருப்பமாக இருக்கின்றது. இன்னும் அவருடைய சரித்திரத்தைச் சொல்ல வேண்டுமென்று கூற, உரோமசன்மா மகா சந்தோஷத்தோடுஞ் சொல்லுகிறார்:

## தேவேந்திரன் சரித்திரம்

கேளும் தருமநந்தனு! அகத்தியருடைய பெருமையை என்னெரு நாவாற் சொல்லத் தகுந்ததல்ல. ஆயினும் என்னுற் கூடியமட்டுஞ் சொல்லுகிறேன். முற்காலத்தில் ஒரு நாள் இந்திரன் கொலுவிருக்கும்போது பிரகஸ்பதி பகவான் வந்தார். இந்திரன் சபையில் நடிக்கு மாதர்களின் இசைரசத்தையும் நடனத்தின் அபிநய ரசத்தையுமாந்தி மகிழ் வாகிய கடலில் மூழ்கி யிருந்தமையால், வந்த பிரகஸ்பதி பகவானுக்கு மனவருத்த முண்டாகி அந்தர்த்தானமாக மறைந்து விட்டார். பிரகஸ்பதிபகவான் மறையவே இந்திரன் போகம் உடனே குன்றிப்போயிற்று. இந்திரன் அதுகண்டு குருவைப்பணியாதகுற்றத்தை வகித்தமையால் நமக்கிவ்வளவுகுற்றம் நேரிட்டதென்று கருதி, இக் குற்றத்தை ஒருவித உபாயத்தால் நீக்கிக் கொள்ளுமாறு பிரமனிடத்துச் சென்று வணங்கிக் குரு மறைந்துவிட்டதைச் சொன்னுன். பிரமன் துவட்டாவின் புத்திரனுகிய விற்சுவரூபனென்பவன் தவ மகிமையால் முத்தலையுற்றுப் பிரமபட்டத்திற்குக் காத்துக்கொண் டிருக்கிறதை யோசித்து, ஓ தேவராஜனே! உமது குரு வருகிறபரியந்தம் இந்த விற்சுவவுருவனைக் குருவாக வைத்துக் கொள்ளென்று கூறிக் கூட்டி யனுப்பிவித்தான். இந்திரன் விச்சுவவுருவனைக் குருவாகக் கொண்டு தன்னகரத்துக்குச் சென்று ஒருநாள் குருவாகிய விச்சுவவுருவனை வணங்கி ஒரு யாகஞ் செய்யச் சொன்னுன். விச்சுவவுருவன் அசுரனுதலால் தேவர் நாஸ்தி என்று கருத்தில் மதித்து, வாயி லொருவிதமாக மந்திரங் கூறி யாகத்தை நிறைவேற்றி வந்தான். இந்திரன் அந்தச் சூதை அறிந்து, தக்ஷணந் தன் கையிலிருக்கும் வச்சிரப்படையால் விச்சுவவுருவனது முச்சிரத்தையு மிற்றுவிழ வீசினன். இவத்திலுயர்ந்த விச்சுவவுருவனது சிரங்கள் மூன்றும் மூன்று பக்ஷிகளாகிப் பறந்து போய் விட்டன. விச்சுவவுருவன் மரணமடைந்தான்.

அப்பால் அசுரனுகிய விச்சுவரூபன் குருவாக இருந்தமையால் தேவராஜனுக்குப் பிரமஹத்தி பற்றிற்று. இந்திரன் தன்னியற்கை யறிவு மாறுபட்டுப் பித்துப் பிடித்தவர்போலாயினன். தேவர்கள் அதுகண்டு உலகத்துக்கு நன்மையை விளைவிக்கும் பொருட்டு நமதரசன் செய்த செய்கையால் நமது அரசனுக்கே இடையூறுண்டாயிற்று. இந்தப் பழியை நாலு பங்காகப் பங்கிட்டு, மாதர்க்கும், நீருக்கும், மரத்துக்கும், பூமிக்குங் கொடுத்துவிடவேண்டுமென்று கருதி, அந்நால்வகையாரையும் அழைத்து, இந்திரனைப் பற்றிய பிரமஹத்தியை நாலு பங்காக்கிக் கொடுத்தார்கள். அந் நால்வரும் அப்பங்குகளைப் பெற்றுக்கொண்டு சொல்லுகிறார்கள்: ஓ தேவர்களே! குற்றமொன்றுஞ் செய்யாத எங்களுக்குப் பழியைக் கொடுத்தீர்கள். இப்பழியைச் சுமந்த எங்களுக்குப் பயனென்ன? பழிதீரும் வகை என்ன? என்று வினவவுந் தேவர்கள் கேட்டு வியந்து, முதலாவது கருத் தரித்தவுடன் கூடாத விலங்கினத்தைப்போல விருக்கும் மாதர்களுக்குக் கருவுயிர்க்கு மாதத்திலுங் கணவரைப் புல்லும்படி ஒரு நன்மையும், அவர்களைப் பற்றிய பழி பூப்பாகங் கழியக்கடவதென்றும், இரண்டாவது வெட்டினுல் மறுபடியும் துளிர்க்காத மரங்களுக்குத் தளிர்க்கும்படி ஒரு நலமும், பழி பிசினுகக் கழிவதெனறும், மூன்ருவது வெட்டின வாய் மூடாத பூமிக்கு வாய்மூட ஒரு நலமும், பழி உவர் மண்ணுகி நீங்கவும், நான்காவது இறைக்கச் சுரக்காத நீர் சுரக்கும்படி ஒரு நலமும், பழி நுரையாகக் கழியக்கடவதென்றும் வரங்கொடுத்து அனுப்பிவிட்டார்கள். இந்திரன் தன்னைப் பற்றிய பிரமஹத்தி நீங்கி மாசொழித்த மணியைப்போலப் பிரகாசித்து இனிது வீற்றிருந்தான்.

பின்பு விச்சுவவுருவன் இறந்தது எங்கணும் பெரு வார்த்தையாக வழங்குகிறபோது விச்சுவவுருவனுக்குப் பிதாவாகிய துவட்டாவென்னும் அசுரன் கேள்விப்பட்டு அதிக சினங்கொண்டு, இந்திரனைக் கொல்ல ஒரு யாகம் செய்தான். அந்த யாகத்தில் விருத்திராசுரன் என்றொரு அசுரன் பிறந்தான். அவனைத் துவட்டா கண்டு மகிழ்ந்து, இந்திரனை நாசப்படுத்தி வாவென்று அனுப்பினன். விருத்தாசுரன் ஒரு நொடிக்கொரு விதமாக மேன்மேலும் வளர்ந்து, வில்-அம்பு-இருப்புலக்கை-பிண்டி-பாலம்-பெருத்தகத்தி-தண்டு-சூலம் முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அசுரர் சேனைகள் பின்வர மஹா மேருவைப் போல் விளங்கும் ஒரு ரதத்திலேறிப் பொன்னுலகமடைந்து சங்கத்தொனி செய்தான். அதனை இந்திரன் அறிந்து தக்ஷணம் தனது

நால்வகைச் சேனையோடு அவனை எதிர்த்து, அசுர சேனைகளை அதமாக்கி, விருத்திராசுரனைப் பலவித ஆயுதத்தாலும் போராடி, முடிவில் தன் வச்சிரப் படையை எடுத்து வெட்டினன். அந்த வச்சிரம் பஞ்சுப் பொதியில் விழும் வாளைப்போல விருத்திராசுரன் உடலில் இறங்காமல் பயனற்றவுடனே விருத்திராசுரன் தன் கையில் இருக்கும் கதையை எடுத்துப் புலோமிசையின் முலைக்குவடழுந்தக் குழைந்து போகும் மிருதுவாகிய தோளில் மோதினான். இந்திரன் காலதண்டத்தினால் மொத்துண்ட பாபிகள்போல் ஸ்மரணை தப்பி விழுந்து, சற்றுநேரம் சென்றபின்பு தெளிந்து, நமது வச்சிரப்படை இந்த அசுரனை வெற்றியடையாதென்று முதுகிட்டோடினன். விருத்திராசுரன் தன்னரசாகப் பொன்னுலகத்தும் மற்ற இடத்தும் ஆண்மை செலுத்தி வந்தனன்.

அப்பால் இந்திரன் தன் பரிசனத்தோடு பிரமனிடத்திற் சென்று, விருத்திராசுரனால் வந்த குறைகளை எடுத்துக் கூறினன். அப்பிரமன் இக் குறைக்கொரு வழி காண்போம் வாவென்று அழைத்துக்கொண்டு வைகுண்டம் போனான். இந்திரனும், பிரமனும், மற்றத் தேவர்களும் திருமாலை வணங்கி விருத்திராசுரனுடைய துர்ச் செய்கையை எடுத்தோதினர். திருமால் மகிழ்ந்து இந்திரனை அழைத்துச் சொல்லுகிறார்: ஓ தேவராஜனே! உன் கையில் இருக்கும் வச்சிரப்படை கூர்மழுங்கி இருக்கின்றமையால், விருத்திராசுரனை வெற்றியடைய மாட்டாமல் போய்விட்டது. ஆதியில் திருப்பாற்கடல் கடைகிறகாலத்தில் தேவரும் அசுரரும் ஆயுதங்களோடு வந்தனர். ஆயுதமிருந்தால் அனர்த்தம் நேரிடுமென்று கருதி, அந்த இருவர் படைகளை நாம் அக்கடல் கரையில் இருந்த ததீசி மஹா முனிவரிடத்து ஒப்புவித்துப் போயினோம். அத்தவசி தவத்துக் கிடையூறு வராமலிருக்க அந்த ஆயுதங்களைத் தன் தவசித்தியால் உட்கொண்டு, முதுகெலும்பில் கோத்து வைத்துக்கொண்டார். அந்த முனிவரை யடுத்து அவர் முதுகெலும்பை வச்சிரப் படை யாக்கிக்கொண்டு போருக்குச் செல்லுவாயாகில், விருத்திராசுரனை வெற்றி யடைவாய் என்றனர். இந்திரன் அந்த வாக்கியத்தைக் கேட்டமாத்திரத்தில் வணங்கி விடைபெற்று ததீசி ஆச்சிரமத்துக்குச் சென்று, தவசிரேஷ்ட காமணியாகிய அத் ததீசி மஹா முனிவரை வணங்கி, உம்மால் சொர்க்க மத்திய பாதாளமென்னும் மூப்புவனமும் இடையூறுகளினின்று நீங்கிச் சுகத்தை அடைவதாக இருக்கின்றது. அடியேன்மீது கிருபை கூர்ந்து நான் கேட்கும் பொருளை இல்லையென்று கூறாமல் கொடுக்கவேண்டுமென்று முறையிடலும், அருட்கடலாகிய ததீசி மஹா முனிவர் ஆச்சரியமுற்று, இந்திரனுக்குப் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறார்:

ஓ தேவராஜனே! என்னால் பெறப்பட்ட ஒரு உதவியால் மூன்று லோகமும் சுகமடைகிறதாக இருந்தால், அந்த உதவியைத் தடையின்றிச் செய்யக் காத்திருக்கிறேன். ஆதலால், அத்தன்மைத்தான உதவியை நீர் கூறுமென்று கூற, இந்திரன் முனிவருடைய தயாளத்தைக் கண்டு, ஓ! ஓ! இந்த மஹா முனிவருடைய முதுகெலும்பு நமக்குவேண்டும். அதனைக் கேட்டால் அவர் காயத்துக்கு அழிவு வரும் இவரைநோக்கும்போது சாட்சாத்பிரமஸ்வரூபமாக இருக்கின்றார். ஆனபடியால், அதனை எவ்வாறு கேட்கிறதென்று அச்சமுற்று, தனக்கும் உலகிலுள்ளவர்க்கும் நேரிட்டிருக்குந் துன்பமிகுதியின் பொருள் விளங்க ஒரு போக்காகச் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! அடியேன் நாடிவந்த பொருள் தங்கள் முதுகெலும்பிலிருக்கின்றது; அது கிடைக்குமாகில் அதனை வச்சிரப்படையாக்கி திரிபுவனங்களிலுள்ளோர்க் கிடையூறு செய்துவரும் விருத்திராசுரனைக் கொன்று நன்மை யடைகிறேனென்றுகூற; அதற்கவர் ஓ தேவராஜனே! காயமெடுத்தால் எந்த விதத்திலாவது பிறர்க்குப் பயன்படுத்தலே நலமென்று நூல்கள் முறையிடுகின்றமையால், நாய்க்கும்-பேய்க்கும் வறுமைக்கும்-பிணிக்கும் - பசிக்கும் - காலனுக்கும் பங்காகிய இவ்வுடலை மூப்புவனத்துக்குத் தலைவனாகிய உமக்குக் கொடுத்தேன். அதனாலடையும் பயனை யடைந்துகொள்ளுமென்று கூறி, தட்சணம் சமாதி நிஷ்டை வகித்து, சதாசிவத்தின் பதயுகத்திலடைந்துவிட்டார். அதுகண்ட இந்திரன் மகிழ்ந்து, தேவதச்சனால் முதுகெலும்பை வச்சிரப்படையாக்கிக் கொண்டு, முன்போல் விருத்திராசுரனோடெதிர்த்துப் போர்புரிந்து முடிவில் தன் வச்சிரப்படையைக் கரத்திலெடுத்தான். அதை விருத்திராசுரன் கண்டு, தவசிரேஷ்ட சிகாமணியாகிய ததீசி முதுகெலும்பினாலாகிய இந்த வச்சிரப்படை நம்மைக் கொல்லுமென்

று கருதி, முத்துக்களைக் கொழிக்கும் கடலிற் பாய்ந்து ஒளித்துக்கொண்டான்.

இவ்வாறு அவன் கடலின்கணொளித்ததை இந்திரன் கண்டு மனவருத்தமுற்று ஓ! ஓ! இந்த அசுரனை இந்தக் காலத்திற் கொல்லாவிட்டால் மற்ற எந்தக் காலத்திலுங் கொல்லக் கூடாத வன்மையை அடைவானென்று கருதி, சகல புவன கர்த்தாவாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினிடத்துக்குச் சென்று அவர் திருவடியில் வணங்கிப் பலவாறு துதித்து தானும் விருத்திராசுரனும் போர்புரிந்ததையும் அவன் முதுகிட்டு கடலிலொளித்ததையும் எடுத்துரைத்து ஒளிந்துக் கொண்ட அசுரனை இக்காலத்திலே நாசமாக்க ஒரு தந்திரங் கூறவேண்டுமென்று வேண்டினன். அதற்குத் திருமால் மகிழ்ந்து சொல்லுகிறார்: ஓ தேவராஜனே! கடலில் நீர் வறண்டால் அல்லது அந்த அசுரன் கண்ணுக்குந் தோற்றான். அக்கடல் நீரைப் பானஞ்செய்ய வல்லவர் அகத்தியரே யன்றி மற்றொருவருமில்லை நீங்களெல்லாம் அகத்தியரிடஞ் சென்று முறையிட்டால், அருட்கடலாகிய அகத்தியர் கடல் நீரைப் பானஞ் செய்வர். அப்போது உன் பகைவன் கண்ணுக்குத் தோன்றுவனென்றார். இந்திரன் திருமாலை வணங்கி விடைபெற்றுப் பொதியமலைக்கு வந்து, அகத்தியரைக்கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து பலவாறு துதித்துச் சொல்லுகிறான்: ஓ தவசிரேஷ்ட சிகாமணி! முப்புவனத்துக்கும் பெருங்குற்றஞ் செய்துவரும் கொடிய விருத்திராசுரனை அதமாக்க முனிசிரேஷ்டராகிய ததீசி மஹா முனிவருடைய முதுகெலும்பை வச்சிரப்படையாக்கிக்கொண்டு போர்செய்தேன். அந்த அவுணன் என் கையிலிருக்கும் வச்சிரப்படையைக் கண்டு பயந்து கடலிலொளித்துக்கொண்டான். அவனை இக்காலத்தில் தானே கொல்ல வேண்டும். அவன் இந்தக்காலத்தில் தப்பித்துக்கொண்டால் அவனை மற்ற எந்தக் காலத்திலுங் கொல்லக்கூடாத வல்லமை பெற்றுக்கொள்ளுவான். ஆதலால், தாங்கள் தயை செய்து கடல்நீரை வற்றச்செய்ய வேண்டுமென்று வேண்ட, அகத்தியர் இந்திரனுக்குப் பல ஆசிகள் கூறி, தக்ஷணம் எழுந்து கடலருகில் வந்து விஷ்ணுவை இருதயகமலத்தில் நிறுத்தி, பரப்பிரம்மஸ்வரூப மந்திரத்தை யுச்சரித்துக் கையேந்தினார். கடல் நீரெல்லாந் திரண்டு ஒரு உளுந்துருவமாகி அகத்தியர் கரத்தில் அமர்ந்தது. அகத்தியர் அச்சலத்தைப் பானஞ் செய்துவிட்டார். கடல்வறண்டுவிட்டது.

பின்பு இந்திரன் மகிழ்ந்து வச்சிரப்படையைக் கரத்திலேந்திக் கடலுட் சென்றான். அவன் வரவை விருத்திராசுரன் கண்டு மனநடுங்கி, இனி ஒளித்திருப்பதிற் பயனில்லையென்று கருதித் தக்ஷணந் தன் உடைவாளைக் கரத்திலேந்தி, பால சுப்பிரமண்ணியர்மேல் எதிர்த்துவந்த சூரபத்மனைப் போலச் சீறி வந்தான். இப்படி வாளாயுதத்தோடு வருவதை இந்திரன் கண்டு சினங்கொண்டு, திக்குத் திசைகள் தத்தளிக்கக் கர்ச்சித்து தன்கையிலிருக்கும் வச்சிரத்தை வீசினன். வச்சிரப்படை சென்று விருத்திராசுரனைக் கொன்றுவிட்டது. உடனே இந்திரன் மகிழ்வடைந்து அகத்தியரிடத்துச் சென்று வணங்கிச் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! அடியேனும் மற்ற முப்புவனத்திலுள்ளவருஞ் சுகமடையும் பொருட்டுக் கடல் நீரைப் பானஞ்செய்து விட்டீர்கள். மறுபடியுங் கடல்நிறைய ஜலத்தையுண்டாக்க வேண்டுமென்று துதித்தான். அகத்தியர் சொல்லுகிறார்: ஓ தேவராஜனே! நான் புசித்த நீர் உதராக்கினியால் வறண்டு போயிற்று. இனி அந்நீர் வராதென்று கூறினர். அதுகேட்ட இந்திரன் தக்ஷணங் கமலாசனக்கடவுளிடத்துக்கு வந்து வணங்கி, விருத்திராசுரனை வெற்றி யடைந்ததைக்கூறி, கடல் முன்போல ஜலநிறைய அகத்தியரை வினவியதையும் அவர் தன்னால் முடியாதென்று கூறினதையுஞ் சொல்லி, கடல் முன்போலச் சலநிறைவதற்குக் காரண மென்னவென்று வினவினன். பிரமன் கேட்டுச் சொல்லுகிறான்: ஓ தேவராஜனே! அகத்தியராற் கடல் நிறையாவிட்டால் இனி யாவராற் கடல் முன்போல் நிறையப்போகின்றது. மண்ணுலகத்திற் சக்ரச்சக்கிரவர்த்தி அரசாட்சி செலுத்தி வருகிறான். அவன் சந்ததியில் ஒரு புத்திரன் பிறக்கப்போகிறான். அவனால்தான் கடல் முன்போற்சலநிறையுமென்றுகூற, இந்திரன் அதுகேட்டு, நிராசையையுடைய சித்தத்தைப் பெற்றவனாகி, தனது நகரத்துக்குச் சென்று முன்போலத் தன்னரசு செலுத்திவந்தான். வறண்டுபோயின கடல் முன்போல் ஜலநிறைந்த கதையைச் சொல்லுகிறேன் கேளும்:

---

## சகரச்சக்கிரவர்த்தி சரித்திரம்

கேளும் தருமநந்தனா! கடல் சூழ்ந்த நெடிய உலகத்தில் மிகவுஞ் சிறப்புற்ற கோசல மென்றொரு தேசமுண்டு. அத் தேசத்தில் அயோத்தியாபுரி யென்றொரு நகருளது. அந்த நகரத்திற் சூரியகுல திலகனான சகல மகாராஜன் ஏகசக்கிராதிபதியாகி இருந்து அரசு செலுத்தி வருகிறகாலத்தில், அவ்வரசனுக்குப் புத்திரபாக்கிய மொன்று தவிர மற்றப் பாக்கியங்களெல்லாம் அதிகரித்திருந்தன. அரசன் அப்புத்திரபாக்கிய மில்லாமையாற் கனவருத்தமுற்று தன் அரசாட்சியை மந்திரிகளிடத் தொப்புவித்து, தானுந் தன் மனைவி இருவருமாகக் காட்டிற் சென்று, பரமனை நினைத்து அருமையிலும் அருமையாகிய கொடிய தவத்தை நெடுநாள் செய்து வந்தனன். அத் தவத்திற்குச் சாம்பவமூர்த்தி மகிழ்ந்து அவ்வரசன் கட்புலனுக்குத் தோன்றினர். உடனே சகரன் நமஸ்காரஞ்செய்து பலவாறு துதித்து, ஓ ஸ்வாமி! அடியேன் மனக்களிப்புறப் புத்திர பாக்கியத்தை கொடுத்தருளவேண்டுமென்று வினவ, சாம்பவமூர்த்தி மகிழ்ந்து ஒரு புத்திரனைப் பாலித்தனர். சகரன் மறுபடியும் வணங்கி, ஓ ஸ்வாமி! அடியேனுக்கு இரண்டு மனைவியர். ஒரு மனைவிக்குப் புத்திரனளித்தால் மற்றொருத்திக்கு மனவருத்த முண்டாகும். அவளுக்கும் புத்திர பாக்கியத்தைக் கொடுக்கவேண்டு மென்று வினவ, சாம்பவமூர்த்தி சிரித்துச் சொல்லுகிறார்; ஓ சகரச் சக்கிரவர்த்தி மற்றொரு மனைவிக்கும் புத்திர பாக்கியத்தைக் கொடுத்தனம். ஆனால், அந்த மனைவிக்கு அறுபதினாயிரம் புத்திரர்கள் உண்டாவார்கள். அவர்கள் துன்மார்க்கராகித் தேவர்களுக் கிடுக்கண் செய்து முடிவில் ஒரு முனிவருடைய கோபத் தீயினால் ஏககாலத்தில் மடிந்து விடுவார்களென்று கூறி, முதற்கொடுத்த பிள்ளையின் வழியில் ஒரு புத்திரன் பிறப்பான். அவனால் உனது குலத்துக்குங் பெருங்கீர்த்தி வருகிறதுமன்றி, வறண்டு கிடக்கிற கடல் நிறையப் புண்ணிய தீர்த்தமாகிய கங்கா நதி வருமென்று கூறி மறைந்து விட்டனர்.

அப்பால் சகரன் தன் நகரத்துக்கு வந்து முன்போல் அரசாண்டு, சாம்பவமூர்த்தி வரப்பிரசாதப்படி மூத்த மனைவியினிடத்து ஒரு புத்திரனையும், இளையாளிடத்து அறுபதினாயிரம் புத்திரர்களையும் பெற்று மகிழ்ந்து, அப்புத்திரர்களைப் பாதுகாத்து வளர்த்து வந்தான். அதிற் பின்னவர்கள் சகல கலைக்கியானராகி, வில் முதலிய ஆயுதப் பயிற்சியிலுஞ் சிறந்து, வாலைப் பருவமடைந்திருக்கிற அக்காலத்திற்றானே துர்விஷயத்திற் கருத்தைச் செலுத்தி தேவர்களுக்கெல்லாம் இடுக்கண் செய்து வந்தார்கள். முன்னவனாகிய புத்திரனோ வெனில், நல்ல புத்தியை வகித்து யாவர்க்கும் நலத்தை உண்டாக்கி வந்தான். சகர மகாராஜன் எல்லாப் புத்திரர்களுக்கும் விவாக முடித்து, இளவரசு பட்டத்தை மூத்தாள் பெற்றசுகுண புத்திரனுக்குக்கட்டி மகிழ்வுடன் அரசு செலுத்தி வந்தான். அச்சுகுண புத்திரன் தந்தையைவிட எண்மடங் கதிகமாகக்குடிகளைப் பாதுகாத்து, இளவரசுபட்டத்துக்குரிய செய்கையை நடத்தி, தன் மனைவியோடு கூடித் தன்னைப்போல ஒரு சுகுண புத்திரனைப் பெற்றான். அதுகண்ட சகரச்சக்கிரவர்த்தி சந்ததி உண்டாயிற்றென்று மகிழ்ந்து, அஸ்வமேத யாகத்தைச் செய்யவேண்டுமென்று கருதி, அந்த யாகத்துக்குத்தகுந்த குதிரையை அழைப்பித்து, வேத வேதியர்கள் நெருங்க யாகக்குண்டம் புதுக்கி, யாகதீக்ஷை வகித்து, குதிரையைப் பூசித்துப் பூமியை வலம்வரத் தன் புத்திரர்கள் அனைவரையும் அதன் பின்னனுப்பினன். புத்திரர்கள் பூமிப் பிரதக்ஷணமாக அஸ்வத்தை நடத்திக்கொண்டு வருகிற போது, தேவதூதர்கள் சகரச் சக்கிரவர்த்தி அஸ்வமேதயாகஞ் செய்யக் கருதி, அஸ்வத்தைப் பூமிப் பிரதக்ஷணஞ் செய்ய அனுப்பிவித்ததை இந்திரனுக்குத் தெரிவித்தனர். இந்திரன் அந்தச் சகரருடனே நேர்நின்று போர்செய்வதற்கஞ்சி, மாயையால் வெற்றியடையவேண்டுமென்று கருதி, அந்த அஸ்வம் ஈசான திசைக் கடலருகில் வருகிறபோது, அதனை அத்திசையின் பாதலத்தில் தவஞ்செய்திருக்குங் கபிலமுனிவர் வனத்தில் ஒரு மாயையாற் கொண்டுவந்து விட்டுப் போயினன்.

பின்பு அறுபதினாயிரம் பெயர்களும் அஸ்வத்தைக்காணமல் ஈசானதிசையிற் பூமியைவெட்டிக்கொண்டு பாதலத்திற் செல்லும் போது, கபிலமுனிவர் வனந் தோன்றிற்று. அவ்வனத்தில் அக்குதிரை யிருக்கக்கண்டு, அதைக் குறித்து அவரை யொன்றுங் கேட்டு

றிந்து கொள்ளாமல், மமதையினால் அவ்வறுபதினாயிரவரும் அட்டகாசஞ் செய்து அம்முனிவர்மே லெதிர்த்தார்கள். அதை யம்முனிவர் கண்டு, நாம் ஒரு குற்றமுஞ் செய்யாதிருக்க நம்மேற் பெருங் கூட்டமாகப் போருக் கெழுந்தனர். இவர்கள் யாராயிருந்தபோதிலும் நமக்கென்னவென்று தக்ஷணங் கோபத்தீ சொலிக்கக் கண்ணால் நோக்கினார். அப்படி நோக்கின மாத்திரத்திற் பரமன்கண்ணுக்கு நேர் எதிர்ப்பட்ட மாரனைப்போல், அவ்வறுபதினாயிரஞ் சகரர்களும் மூத்தாள் குமாரனும் நீறாயினார்கள். இந்திரன் மகிழ்வடைந்தான். இந்தச் சேதி சகரச் சக்கரவர்த்தி யறிந்து, யாகதீக்ஷை வகித்தபடி ஓடோடியும் வந்து கபிலரை வணங்கித் துதித்து தான் யாகஞ் செய்யத் துணிந்ததும், அந்த அஸ்வம் வந்திருக்கிறதையும் எடுத்துரைத்தான். கபிலர் மகிழ்ந்து சொல்லுகிறார். ஓ சக்கரவர்த்தி! உமது குதிரை நமது வனத்தில் வந்திருக்கிறது எனக்குத் தெரியாது; அவர்களும் என்னை வினாவினவ ரல்லர். நாமும் முன்பின் யோசிக்காமல் உமது புத்திரரைக் கொன்றுவிட்டோம். மிஞ்சிப்போனதற்கு வருத்தப்படுவதிற் பயனில்லை. உமது அஸ்வத்தைக் கண்டுபிடித்துக் கொண்டுபோய் யாகத்தை நிறைவேற்றிக் கொள்ளுமென்று விடை கொடுத்தனர். சக்கரவர்த்தியாகிய சகரன் அஸ்வத்தைக்கொண்டுவந்து யாகத்தைக் கிரமப்படி நிறைவேற்றி, தான தருமங்களைச் செய்து, முன்போல் அரசுசெலுத்தி, தன் மூத்தமனைவியிடமாகப்பெற்ற குமாரனுக்குப் பிறந்த மைந்தனுக்குப் பட்டத்தைக் கட்டி, அவனுக்குச் சகரர் அறுபதினாயிரவர் மடிந்ததை எடுத்துரைத்து, அவர்கள் நற்கதி அடையும்படி நடவென்று கூறித் தான் சொற்கலோக மடைந்தான்.

அந்த மைந்தன் மகுடாபிஷேகனாகி ஒரு கன்னிகையை மணந்து, திலீபன் என்று ஒரு புத்திரனைப்பெற்று அரசுசெய்து, பிதுரர்களை நல்லகதியி லேற்றுவிக்கும் பொருட்டுத் தான் நல்வழியில் நடந்து, தன் காலமுடிவானத்தைக் கண்டு தன்புத்திரனாகிய திலீபனுக்குப் பட்டங்கட்டி, பிதுரர் புண்ணியலோகமடையாதிருப்பதை உரைத்து வனத்துக்குச் சென்று தவஞ்செய்து சொற்கலோக மடைந்தான். திலீபன் மகுடாபிஷேகனாகி ஒரு கன்னிகையை மணந்து ஒரு குமாரனைப் பெற்று அரசுசெய்து பிதுரர்களுக்கு நன்மையுண்டாகத் தன்னால் கூடியமட்டும் நன்முயற்சியில் இருந்து காலமுடிவானதைக் கண்டு தன் புத்திரனுக்கும் பட்டங்கட்டி, பிதுரருடைய வரலாற்றைக் கூறி, அவர்கள் சுகமடைய நடவென்று கட்டளையிட்டு, தானுஞ் சொற்கலோகஞ் சென்றான். அந்த இராஜகுமாரன் மகுடாபிஷேகனாகி ஒரு கன்னியை மணந்து பகீரதனைப்பெற்று, தன் பட்டத்தை அப்புத்திரனுக்குக் கட்டி, பிதுரர் வரலாற்றைக் கூறிச் சொற்கலோக மடைந்தான். பகீரதன் தந்தை வாக்கியத்தைச் சிரமேற்கொண்டு, தன்னரசை மந்திரிகளிடத் தொப்பிவித்து, வசிஷ்டமஹாமுனிவரை வணங்கிப் பிரமனை நோக்கித் தவஞ்செய்ய மந்திரோபதேசம் பெற்றுக்கொண்டு தவவேடங்கொண்டு வனத்திற் சென்று, பதினாயிரம்வருஷந் தவஞ்செய்தனன். அவனுக்குப் பிரமன் தரிசனமாகித் தவஞ்செய்யுங் காரணமென்னென்று வினவினன். பகீரதன் வணங்கி, ஓ ஸ்வாமி! எங்கள் முன்னோர்கள் கபிலருடைய கோபத்தீயினால் நீறாகிவிட்டனர். அவர்கள் புண்ணிய லோகமடையும்படி கிருபைகூற வேண்டுமென்று வேண்ட, பிரமன் சொல்லுகிறான்.

ஓ பகீரதா! உங்கள் முன்னோர்கள் நல்லகதியடைய வேண்டுமென்றால், ஆகாயத்தில் இருக்கிற கங்கை பூமியிற் பெருகவேண்டும். அப்போது அக்கங்கையில் உங்கள் முன்னோர்களின் அஸ்திகள் நனையும் அதினால் உங்கள் முன்னோர்கள் புண்ணியலோக மடைவர். அக்கங்கை பூமியில் வந்தால் பூமி பொறுக்காது. அதனைப் பொறுப்பவர் சந்திரசடாதர சாம்பவமூர்த்தி அல்லது மற்றொருவர் பொறுக்க மாட்டார்கள். நீ அந்தச் சாம்பவ மூர்த்தியை நினைத்துத் தவஞ்செய்யென்றுகூறி மறைந்துவிட்டான். பகீரதன், பிரமன் கட்டளைப்படி சாம்பவமூர்த்தியை நோக்கிப் பதினாயிர வருஷந் தவஞ்செய்ய, சாம்பவமூர்த்தி மகிழ்ந்து பிரம்ம கணங்களோடு பார்வதி சமேதராக அவன் கண்ணுக்குத் தோன்றினர். பகீரதன் பணிந்து பலவாறு புகழ்ந்து, தனது பிதுரர் புண்ணியலோகத்தை யடையக் கருதி பிரமனை நோக்கித் தவஞ்செய்ததையும், அதற்குப் பிரமன் வந்து கூறியதையுஞ் சொல்லி துதித்தான். சாம்பவமூர்த்தி மகிழ்ந்து, கங்கையை நோக்கித் தவஞ்செய்யென்று கூறி மறைந்துவிட்டனர். பகீரதன் கங்கையைக் குறித்து ஐயா

யிரம்வருஷந் தவஞ்செய்ய, கங்கை ஒரு கன்னிகையைப்போலத் திருவுருவுகொண்டு பகீரதன் கண்ணுக்குத் தோன்ற, அவன் பலவாறு துதித்து எங்கள் முன்னோர் சுகமடையத் தாங்கள் பூமியின்கண் வரவேண்டுமென்று வினவ, கங்கை சொல்லுகிறாள்: ஓ பகீரதா! நான் பூமியில் வருவனாகிற் பூமாதேவி பொறுக்கமாட்டாள். என்னை பொறுப்பவர் சாம்பவமூர்த்தி ஒருவரல்லாமல் மற்றவர் பொறுக்கமாட்டார்கள். அவர் கடாக்ஷமுண்டானால் வருகிறேன் என்றுகூறி மறைந்துவிட்டாள். பகீரதன் பின்னும் பரமனைக் குறித்து ஐயாயிர வருஷந் தவஞ்செய்தான். பரமன் திருவுளங் கனிந்து முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிர முனிவர், பிரமகணம், உருத்திர கணம், பிரம்மா, விஷ்ணு முதலானவர் புடைசூழப் பிரத்தியக்ஷமாயினர்.

உடனே பகீரதன் பணிந்து, என் முன்னோர்கள் சுகமடையக் கங்கையை அனுப்பியுமென்று துதித்தான். சாம்பவமூர்த்திமகிழ்ந்து கங்கையை அழைத்த மாத்திரத்தில், கங்கை அண்டங்களைப் பிளந்துகொண்டு மகா மேரு முதலியவைகளை யெல்லாம் வேரோடு கிளப்பி அவைகள் கீழ்மேலாக உருளும்படி மகாவிசையோடு வந்தனள். சந்திர சடாதர சாம்பவமூர்த்தி அக்கங்கையை தமது முடியில் தாங்கி, பத்தனாகிய பகீரதன் கருத்து மகிழ்வுற சொல்லுகிறார்: ஓ பகீரதா! நீ முன்னங் கருதியபடி கங்கை வரும்படிசெய்தேன். உங்கள் மூதாதைகளிறந்த இடத்துக்குச் செல்லென்று கூறினர். பகீரதன் தன் மூதாதைகளிறந்த கபிலர் வனமோ கங்கையும் பகீரதனைப் பின்பற்றித் தொடர்ந்த, கபிலர் வனத்திலிறந்தசகரர் அறுபதினாயிரவருடைய அஸ்திகளை நனைத்து விட்டு, அகஸ்தியரால் வறண்ட கடலை நிரப்பிவிட்டனள். பகீரதன் பிதுரர்கள் பாபரகிதராகிப் புண்ணியலோக மடைந்து அப்பகீரதனைப் புகழ்ந்தார்கள். கங்கையும் பகீரதனை புகழ்ந்து உன்னால் நான் இப்பூமிக்கு வந்தமையால் உன்பெயர் எனக்கிருக்க வேண்டுமெகூறு கூறி பகீரதியென்று அழை என்றனள். பகீரதன் அக்கங்கையின் கருத்தின்படி பகீரதி என்று மூன்றுதரம் அழைத்தனன். அன்று முதற் பகீரதியென்று கங்கையானவள் மற்றொரு நாமம் பெற்றாள். அகத்தியர் உண்ட கடல் மறுபடியும் முன்போல நீரை அடைந்தது. ஓ அரசனே! கடல்நீரை யெல்லாந் தன் சடாக்கினிக் கிரையாக்கிக்கொண்ட மகத்துவின் சுறப்பை மதிக்கத்தக்கதோ! என்று உரோமசன்மர் கூறத் தருமராஜன் வணங்கிச் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! அகத்தியர் மகத்துவத்தைக் கேட்கக்கேட்க இனிப்பாக இருக்கின்றது. இன்னும் அவரது சரித்திரத்தைச் சொல்லவேண்டுமென்று கூற உரோமசன்மர் சொல்லுகிறார்.

---

## விந்தபருவத சரித்திரம்

கேளும் தருமநந்தனா! யாழ்வல்லோனாகிய நாரதமகாமுனிவர் மகா மேருவிடத்துக்குச் சென்றார். மகாமேரு நாரதர் வரவைக் கண்டு, ஒரு பிராமணரூபந்தரித்து எதிர் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து பலவாறுபுகழ்ந்து நின்றது. நாரதர் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறார். ஓ மகாமேருவே! நீ மலையாயிருந்தாலும் உன்னை நவக்கிரகங்களும் வலம் வருகிறார்கள். இதன்றித் தேவர்களுந் தவசிரேஷ்ட சிகாமணிகளுஞ் சதாகாலமும் நின்னைவிட் டகலாமலிருக்கிறார்கள். பிரம்மா - விஷ்ணு - உருத்திரன் முதலானவரும் நின்னை யடைகிறார்கள். சாம்பவமூர்த்தி உன்னை வில்லாக்கி கையிலேந்தியல்லவா திரிபுரத்தை வெற்றிகொண்டனர் என்று பலவாறு புகழ்ந்தனர். மகாமேரு களித்து வணங்கிச் சொல்லுகின்றது. ஓ சுவாமி! என்னைப்போல் உயர்ந்தும் பருத்தும் சிறப்புற்றமலை ஒன்றுளதோ கண்டிருந்தாற் கூறுங்களென்று வினவ, நாரதர் ஓ! ஓ! இந்த மகாமேரு நாம் புகழ்ந்ததில் அதிக மமதை யடைந்ததாகி விட்டது. இதன் மதத்தையடக்க யுத்தி செய்யவேண்டுமென்று தமக்குள் யோசித்துக்கொண்டு சொல்கிறார். ஓ மகாமேருவே! நான் முன்னங் கூறியதே சரியாகையால், உன்னைப் புகழும்படியிருந்தது. நீயே யுலகிற் பெருத்து முயர்ந்துமிருக்கி யென்று கூறி விடைபெற்று, தக்ஷணம் விந்தகிரியினிடத்து வந்தார். விந்தம் ஒரு பிராமண வேடங்கொண்டு நாரதரை வணங்கி ஓ ஸ்வாமி! தாங்கள் என்னிடத்தில் வரப்பெற்ற காரணமென்னென்றுவினவிற்று. நாரதர் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறார்.

ஓ விந்தமே! நான் மகாமேருவிடத்துக்குச் சென்றேன். அம்மலை ஒரு பிராமண உருவ மெடுத்துவந்து வணங்கிற்று. நான்

பல ஆசிகள்கூறிப் புகழ்ந்தேன். மகாமேரு உடனே மமதை கொண்டதாகி, என்னைவிட உயர்ந்தவரில்லையென்று கூறிற்று. இந்தச் சேதியை உனக்குத்தெரிவிக்க வந்தேனென்று கூறித் தமது கருத்துக்கிசைந்த விடத்துக்குச் சென்றார். விந்தம் தனக்குட் சினங்கொண்டு, சூரியபகவானிடத்திற்குச் சென்று ஓ ஸ்வாமி! மகாமேரு என்னைவிட உயர்ந்தவரில்லையென்றும், சிறப்பி லுயர்ந்தவன்தானென்றும், தன்னைத்தானே சிறப்பித்துக் கொண்டிருக்கிற காரணமென்னவென்று வினவ, சூரியபகவான் சொல்லுகிறார். ஓ விந்தமே! என்னுடனே ஒன்பது நவக்கிரகங்கள் தன்னை வலஞ் செய்கிறபடியினாலும், மூவர்களும் தேவர்களும்-முனிவர்களும் - நீங்காமல் அதனிற் சஞ்சரிப்பதினாலும், பரமன் கரத்திற் கிசைந்த வில்லானதாலும், அதிகச் சிறப்புற்றது. உயர்வில் அதற்கு மிஞ்சினதில்லை. என்று சூரியன் கூறலும், விந்தங்கேட்டு அதிக சினங்கொண்டு வளர்ந்து, அம்மகமேரு நாணை அண்டகடாகங்களைப் பிளந்துருவி, நவக்கிரகங்கள் மற்றத் தேவர்கள் வீதியையடைத்துப் பெருத்தது. அதுகண்ட தேவர்கள் நடுக்கமுற்று இந்திரனிடத்து முறையிட்டனர். இந்திரன் அதிக இறுமாப்பைக் கொண்டு வளர்ந்த விந்தத்தை யடக்க கும்பமுனியல்லது மற்றவரால் முடியாதென்று கருதி, தக்ஷணந் தேவர் கூட்டத்தோடு பொதிய மலைக்குச் சென்று, அகத்தியரைக் கண்டு வணங்கிப் பலவாறு புகழ்ந்து, விந்தம் இறுமாப்படைந்ததைக் கூறினன்.

அதுகேட்ட அகத்தியர் மனமிரங்கி, தக்ஷணந் தானுந் தன் மனைவி லோபாமுத்திரையும் விந்தகிரிக்கு உத்தரதிசையிலிருந்து வருபவர் போல் வந்தனர். அதனை விந்தங் கண்டு, தவசிகாமணியாகிய அகத்தியரைக் காண ஒரு வேதியருருவந் தரித்துவந்து நமஸ்காரஞ் செய்து, பலவாறு புகழ்ந்து, தாங்கள் இங்கு வந்த காரண மென்னென்று வினவியது. அதற்கு அகத்தியர் சொல்லுகிறார். ஓ விந்தமே! நாம் பொதியமலைக்குச் செல்ல வந்தோம். நீ அண்டமுகடளாவி யிருக்கின்றனை. இதென்னவென்று யோசித்திருக்கும்போது நீயும் வந்துவிட்டனை. ஆதலால், எனக்கு வழிவிடென்று கூறலும், விந்தங் கேட்டு அங்குஷ்டப் பிரமாணமாகிய அகத்தியர்செல்லத் தன் சொரூபத்தை யடக்கிப் பூமி மட்டமாயாகிச் சொல்லுகின்றது. ஓ ஸ்வாமி! அடியேன் புனிதமாகும்படி தங்கள் திருவடியை என்மேல் வைத்து நடவுமென்று வேண்டிற்று. அகத்தியர் மகிழ்ந்து, அவ்விந்த மேல் நடந்து கடந்து விந்தத்தை நோக்கிச் சொல்லுகிறார். ஓ விந்தமே! நாம் பொதியத்துக்குச் சென்று வருமளவும் இப்படியாகவே இருவென்று கூறிப் போயினர். விந்தம் முனிவர் கட்டளைப்படி பூமிக்குச் சரியாகவே யிருந்துவிட்டது. தேவர்களும் நவக்கிரகங்களும் களிப்புற்றனர். ஓ தருமநந்தனு! அகத்தியர் பிரதாபத்தையும் மகிமையையும் யாவரா லுரைக்கக் கூடும்? என்று கூறி அகத்தியர் ஆச்சிரமத்தைக் கடந்து சிலதூரஞ் சென்றார்கள். அங்கு கவிசிக நதி தோன்றிற்று. அதில் உரோமசன் மர்முதலான வேதியர்குழாமும், தருமராஜன்-வீமன்-நகுலன்-சகாதேவன்-பாஞ்சாலி இவர்களும் ஸ்நானஞ் செய்து கந்த மூலங்களைப் புசித்தனர். இவர்களில் தருமஸ்வரூபியாகிய தருமராஜன் உரோமசன்மரை வணங்கிச் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! இதோ யிருக்கிற ஆச்சிரமம் யாருடையது? அதனை எனக்கு விளங்க வுரைக்கவேண்டும் என்று கூற, உரோமசன்மர் சொல்லுகிறார்: ஓ தருமநந்தனு! இந்த ஆச்சிரமங் கலைக்கோட்டு மஹா முனிவ ரிருந்தது. அவரது சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேளும்.

## கலைக்கோட்டுமுனிவர் சரித்திரம்

ஐயா தருமநந்தனு! காசிபமுனிவருடைய புத்திரர் விபாண்டகமுனிவர். அவர் அருமையிலும் அருமையாகிய தவத்தைச் செய்து தீர்த்தயாத்திரைசெய்யக் கருதி, மண்டலத்தி லுள்ள தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ் செய்ய, அந்நதியில் ஒரு அரம்பை ஸ்திரீ வந்து ஸ்நானஞ் செய்துகொண் டிருந்தாள். விபாண்டகமுனிவரானவர் அவளது உருவத்தைக் கண்டு காமவெறிகொண்டு தத்தளித்ததனால், அந்நதியில் அவர் விந்து கலிதமாகி விழ, அதுகண்ட விபாண்டகர் தேறி அந்நதியில் ஸ்நானஞ்செய்து கரையேறினர். ஒரு மான் வந்து அந்நதியில் நீரை அருந்த, விபாண்டகமுனிவர் விட்ட விந்து நீரின் மூலமாக மான்வயிற்றி லடைந்து கருவாகி, ஒரு முகூர்த்தத்தில் அம்மான் வயிற்றினின்றுங் காவிகாம்பர தண்டு கமண்டலதாரியாகத் தலை

யில் ஒரு கொம்புடனே ஒருபுத்திரன் வெளிப்பட்டான். அதுகண்ட மான் தன்னிடத்தினின்றும் பிறந்தது மானிடமா யிருத்தலால், அச் சிசுவின்மேல் விருப்பமுறாமற் பயந்தோடிப் போய்விட்டது. ஞானத்தோடு விளங்கும் விபாண்டகமுனிவருடைய விந்தாதலால், அப்புத்திரன் பிறந்தவுடன் எழுந்து அந் நதிக்கரையிலிருக்குந் தன் பிதாவைக்கண்டு பணிய விபாண்டகமுனிவர் கண்டு மகிழ்ந்து, புத்திரனை வாரித்தழுவிப் பல ஆசிகள்கூறி, சகல கலைக்ஞானமுந் தனக்குத்தானே விளங்கும்படி கிருபாநோக்கம் வைத்து, கலைக்கோட்டுடன் பிறந்தமையால் கலைக்கோட்டு மஹாமுனியென்று பெயரிட்டு, பல பல மந்திரோபதேசஞ்செய்து, நல்லகதியை யடைய நல்லமுயற்சியிலிருவென்று கூறிப் போய்விட்டனர்.

கலைக்கோட்டு மஹாமுனிவர் அன்றுமுதல் தவத்திலிருந்தனர். ஆனால், அந்த கலைக்கோட்டு மஹாமுனிவர் இப் பிரபஞ்சத்தின் செய்கை எள்ளளவேனு மறியாதவராகி, சுத்த வைதீகத் தன்மையிற் சிறந்தவராயும், ஆண்-பெண் என்கிற பேதங்களை யுணராதவராகியுமிருந்தனர். தவத்திலேயோ அவரைவிட உயர்ந்தவரில்லை. அநேகங் கற்பகாலம் அவருக்கொரு நொடிப்பொழுதாக இருக்குமென்றால், அவர் பெருமையை யாவரா லுரைக்கக்கூடும். அவ்வளவு சிறப்பினை வகித்த முனிவரானவர் தவஞ் செய்திருக்கிற காலத்தில், அங்கதேசத்துக்கு அதிபனாகிய ரோமபாதனென்னும் அரசன் தன்னரசு செல்லுமிடங்களி லிருக்கிற பிராமணர்களை அலக்ஷியமாக எண்ணி அரசு செலுத்திவந்தான். அக்காலத்தில், ஒரு பிராமண முனிவனாலே அவ்வரசனுக்குச் சாபம்நேரிட்டு, அவன் நாடெல்லாம் மழையில்லாமற் சகல உயிர்களும் பசிநோய்க்குள்ளாகிக் கனவருத்தமுற்றன. அரசன் அது கண்டு வருத்தமடைந்து தன்குருவை அழைப்பித்து வந்தனை வழிபாடுசெய்து, மழையுண்டாவதற்கு ஒரு ஏது சொல்லவேண்டுமென்று வினவினன். அதற்கு அக்குருவானவர் சிறந்த தவத்தினையுடைய கலைக்கோட்டு மகாமுனிவர் நின்னாட்டுக்கு வந்தால் மழை பெய்யுமென்று கூற, அரசன் அப்படியே கலைக்கோட்டு மகாமுனிவரை யாவரழைத்து வருகிறார்களோ, அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்கிறேனென்று முரசு முன்னிலையில் தன் நகர முழுவதுந் தெரிவித்தான்.

அது தெரிந்த அந்நகரத்தி லிருக்குங் கணிகை மாதர்களில் இருவர் வெளிப்பட்டு அரசனிடத்து வந்து, நாங்களழைத்து வருகிறோமென்று கூறி தாம்பூலம்பெற்று வெளிப்பட்டு, நாடு-நகரம்-காடு-மலை-வனம் - வனாந்திரங்களைக் கடந்து, கலைக்கோட்டுமகாமுனிவரிருக்கிற ஆச்சிரமத்திற்கு ஒரு யோசனை தூரத்தில் மற்றொரு ஆச்சிரமமியற்றி, இரண்டு கணிகையருங் காவிகாம்பர தண்டுகமண்டலதாரியாகித் தவவேடங் கொண்டு, அங்கிருந்து கலைக்கோட்டுமகாமுனிவரிருக்கிற இடத்துக்குச் சென்றார்கள். கணிகையர்களாகிய பொய்த்தவ வேடரைக் கண்ட கலைகோட்டு மகாமுனிவர் ஓ! ஓ! இவர்கள் மகாமுனிவர்கள் நமக்கு ஒருகொம்பு சிரசிலிருந்தால், இவ்விருவருக்கும் இரண்டிரண்டு கொம்பு மார்பிலிருக்கின்றதென்று எண்ணி, எதிர்வந்து அழைத்துப் போய் ஆசனத்தி லிருத்திச் சோட சோபசாரஞ் செய்து புகழ்ந்தனர். வேடங்கொண்ட கணிகையர் இருவரும் முனிவர்களைப் போல அபிநயித்து, அவ்வேடத்திற் கேற்ற சில வார்த்தைகளைப் பேசி விடைபெற்று வந்து, இவ்வாறே ஒருதரம் இரண்டுதரஞ் சென்று அவர்மனோபாவத்தையறிந்துகொண்டு, இவர் சுத்த வைதீகத் தன்மையிற் சிறந்திருக்கிறார். ஆதலால், இவரை நமது நாட்டுக்கு அழைத்துப்போகவேண்டுமென்று துணிவு கொண்டு; ஒருநாள் கலைக் கோட்டாரிடத்துக்கு வந்து வந்தனைசெய்து ஓஸ்வாமி! நாங்கள் அநேகந்தரந் தங்க ளாசிரமத்துக்கு வந்தோம். தாங்கள் ஒருதரமாவது எங்கள் ஆச்சிரமத்துக்கு வராதிருப்பது தகுதியல்ல, எங்கள் மேற் கிருபை கூர்ந்து ஏழையேங்கள் புனிதமாகும்படி எங்களாச்சிரமத்துக்கு எழுந்தருள வேண்டு மென்று வினவ, கலைக் கோட்டார் அவர்கள் கருத்துக்கிசைந்து அவ்வாச்சிரமத்துக்கு வர, அவர்கள் கலைக்கோட்டாருக்குச் சோடசோபசாரஞ் செய்து, காட்டிலுள்ள கனிகளைப் புசிக்கும் அவருக்கு நாட்டிலுள்ள மாதுரியக் கனிகளைக்கொடுத்துப் புசிக்கச் செய்தார்கள். கலைக்கோட்டார், அக்கனிகளைப் புசித்து அதிக மதுரமாக இருப்பதைக் கண்டு, இக்கனிகளேது? இவை எங்கிருக்கின்றவைகள்! என்று வினவினர். அதுகேட்ட கணிகையர் பார்த்து, இதுதான் தருணம் என்று கருதினவராகிச் சொல்லுகிறார்கள்.

ஓ ஸ்வாமி! இக்கனிகளின் மேல் தங்கள் கருத்துச் சென்றமையால், அக்கனிகளிருப்பி

டத்துக்குச் செல்லுவோம் வாருமென்று இர
ண்டு கணிகைமாதரும் அவரை அழைத்துக்
கொண்டு காடு-மலை-வனம்-வனந்திரங்களைக்
கடந்து அங்கதேசம் வந்து சேர்ந்தார்கள்.
கலைக்கோட்டாருடைய திருவடி அங்கதேசத்
திற்பொருந்தினமாத்திரத்திற் பிராமணமுனி
வன் சாபத்தால் மழையில்லாமற் பாலை வனம்
போல் இருந்த அங்கதேசம் மாத மும்மாரி
பெய்து வரும் நாட்டைப் போலச் செழிக்கச்
சப்தமேகங்களுஞ் சோனைமாரிபோலப்பொழி
ந்தன. மழைபெய்யவே அரசன் தானனுப்பிய
கணிகைமாதர் கலைக்கோட்டாரை அழைத்து
வந்தனரென் றுணர்ந்து, தக்ஷணந் தன் பரி
சனத்தோடு வெளிப்பட்டுக் கணிகைமாதரிரு
க்கும் இடத்துக்குவந்து, கலைக்கோட்டாரைக்
கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து,
அவரிரண்டு பாதத்தையும் விடாமற் பற்றிக்
கொண்டு, ஓ ஸ்வாமி! அடியேன் செய்தமாத
வப்பேறோ? எங்கள் முன்னோர் செய்த நல
மோ? இந்நாடு செய்த சுகிர்தமோ? தேவரீர்
இங்கு வந்தீர். தாங்கள் இங்கு வந்ததற்குக்
காரணம் இந்த இரண்டு கணிகை மாதர்கள்
தான். இவர்கள் எனக்கும் என்னாட்டிலுள்ள
வருக்கும் நேரிட்ட பசிவருத்தம் நீங்குதற்
கேதுவாகிய மழைபொழியத் தங்களையடைந்
தழைத்துவந்தனர். எங்கள் துன்ப நீங்கும்
பொருட் டிம்மாதர்கள் பொய்த்தவ வேடங்
கொண்டு மெய்த்தவசிகாமணியாகிய தங்களை
ஏதோ ஒருவித உபாயஞ் செய்திருக்கின்றனர்.
அதற்காகத் தாங்கள் சினங்கொள்ளாமல்
அடைக்கலமென்று புகுந்த தமியேன்மேற்
கிருபைகூர்ந்து, எனக்கும் அம்மாதருக்கும்
நலமுண்டாக இந் நகரத்துக்கு எழுந்தருள
வேண்டுமென்று வேண்டினன்.

அதுகேட்ட அருட்கடலாகிய கலைக்கோ
ட்டு மகாமுனிவர் சினங்கொள்ளாமல் வந்து
வணங்கிய அரசனுக்குப் பல ஆசிகள் கூறி,
பொய்த் தவவேடங் கொண்ட இரண்டு கணி
கையரையுமாதரித்து, அரசன் கொண்டுவந்த
இரதத்திலேறி நகரத்துக்குவந்து சிலநாளி
ருந்து, பின்பு அரசன் அனுமதியினால் அவ்
விரண்டு கணிகையரையுந் தனக்கு மனைவிய
ராக்கொண்டு, உடனே அரசனிடத்து விடை
பெற்று அவ்விரண்டு மனைவியரோடு இந்த
வனத்திற் சிலநாள் வாழ்ந்திருந்தனர். என்று
உரோமசன்மர் கூறியதைத் தருமராஜன்
கேட்டு மகிழ்வடைந்து, அங்குள்ள நதியில்
ஸ்நானஞ்செய்து, தம்பியரும் மனைவியும்
வேதவேதியருந் தன்னைச் சூழ்ந்துவர, உரோ
மசன்மரோடு பிரயாணப்பட்டு சிலதூரஞ்
சென்று, பரசிராமர் ஆச்சிரமத்தருகில்வந்தார்.
அப்போதத் தருமராஜன் உரோமசன்மரைப்
பார்த்துச் சொல்லுகிறார். ஓ சுவாமி! இவ்வ
னம் யாருடையது? அவருடைய நாமத்தைக்
கூறினால் நாம் சென்று தொழலாம். ஆதலால்,
தேவரீர் தயைசெய்து கூறுமென்று வினவ,
உரோமசன்மர் சொல்லுகிறார். ஓ தருமநந்
தனா! இந்தவனம் பரசிராமர் ஆச்சிரமம்.
அவரைக்கண்டு தரிசிக்கவேண்டுமென்று நீர்
விரும்புகிறபடியால், இது பூர்வபக்ஷமாகை
யால் இந்நதியில் ஸ்நானஞ்செய்ய நாளையுத
யத்துக்கு இவ்விடம் வருவார். இன்றையப்
பொழுதை இங்கிருந்து கழிப்போமென்று
கூற, அப்படியே ஆகுகவென்று தருமன்
முதலாயினோர் அப்பரசுராமர் ஆச்சிரமத்தருகி
லிருந்தார்கள் சூரியன் அஸ்தமித்தான்.

## பரசுராமர் சரித்திரம்

இப்பால் தருமராஜன் உரோமசன்மரை
வணங்கி, ஓ ஸ்வாமி! இன்றையப்பொழுது
வீணாகக் கழியாமலிருக்க இவ் வனத்தின்
முனிவருடைய சரித்திரத்தைச் சொல்ல
வேண்டுமென்று வினவ, உரோமசன்மர்
சொல்லுகிறார். கேளும் தருமநந்தனா! பிருகு
முனி யென்பவர்பிரமசரியத்தைமேற்கொண்டு
நெடுநாள் தவமியற்றிச் சாபானுக்கிரக சா
மர்த்திய முள்ளவராகி யிருந்தனர். அக்காலத்
தில், ஒரு ராஜனுக்கு இரண்டு குமாரத்திகள்
இருந்தனர். அவ்விருவரில் மூத்தாளைத் தான்
மணந்து வனத்தில் வந்து, மனைவி பணி
விடை செய்யத் தான் தவத்திலிருந்தார்.
அநேககாலந் தவத்திலிருக்கிற பிறகு முனி
யானவர் தனக்கு மனஞ்சலியாமற் பணிவிடை
செய்துவரும் மனைவியின்மேற் களிப்புற்றுச்
சொல்லுகிறார். ஓ மாதே! நீ என்னாற் பெற
வேண்டிய தெதுவோ? அதனைப் பெற்றுக்
கொள்ளென்று கூறலும், மனைவி மகிழ்ந்து
வணங்கிச் சொல்லுகிறாள். ஓ சுவாமி! எனக்
கும், காசிராஜனை மணந்த என் சகோதரிக்கும்
புத்திர பாக்கியமில்லை. தாங்கள் தயைசெய்து
புத்திர பாக்கியத்தை யளிக்கவேண்டுமென்று
வினவ, முனிவர் மகிழ்ந்து சொல்லுகிறார் ஓ
மாதே! உன் கருத்தின்படி வரங்கொடுத்தேன்.

பூரணை சோமவாரத்தில் அதோ இருக்கும் நதியில் ஸ்நானஞ்செய்து உன் தங்கை முருக்க மரத்தையும் நீ அரசமரத்தையுந் தழுவுங்கள். நீ ஒரு பிராமணப்புத்திரனையும் உன் தங்கை இராஜ புத்திரனையும் பெறுவீர்களென்று கூறினர்.

பின்பு பிருகுமுனி மனைவி தங்கையை அழைப்பித்துக்கொண்டு தன் கணவன் கூறிய சோமவாரத்தில் இருவரும் நதியில் ஸ்நானஞ் செய்து, பிருகுமுனி கூறியபடி தழுவாமல் அரசன் மனைவி அரசமரத்தையும், பிருகுமுனிமனைவி முருக்க மரத்தையுந்தழுவி, அப்பால் யோசிக்கும்போது மரம் மாறுபட்டதைக் கண்டு இரண்டுமாதர்களும் மனவருத்தமுற்று முனிவரிடத்து வந்து, தாங்கள் இருவரும் மரத்தை மாறுபாடாகத் தழுவியதைக் கூறினர். முனிவர் குறுநகை கொண்டு சொல்லுகிறார். ஓ மாதரசே! நாம் கூறியபடி தழுவாமல் மாறுபட்டுத் தழுவினமையால், இராஜ மனைவிக்கு வேதியனும், உனக்கு அரசனும் உண்டாவாரென்று கூற, இருவரும் மன வருத்தமுற்றுப் பலவாறு துதித்து, ஓ சுவாமி! உலகம் பழிக்குமாதலால் திருவுளங் கனிந்து யார்யார்க்கு எந்தக் குலபுத்திர னுண்டாகவேண்டுமோ அந்தக் குலபுத்திர னுண்டாகும்படி கிருபை செய்யவேண்டு மென்று வேண்ட, முனிவர் மகிழ்ந்து இராஜ கன்னிகை இராஜ புத்திரனையும், நீ பிராமண புத்திரனையும் பெறக்கடவதென்று வரங் கொடுத்தனர். அம் முனிவர் கட்டளைப்படி காசிராஜன் மனைவி ஒரு ராஜபுத்திரனைப் பெற்றாள். அப்புத்திரன் கவுசிக ராஜனென்று பெயர்கொண்டு மகுடாபிஷேகஞ்செய்து அரசாண்டு வேட்டைக்கு வந்து வேட்டையாடி வசிஷ்டர் ஆசிரம மடைந்து அந்த வசிஷ்டமுனிவர்கட்டளையினால் அன்ன மிட்ட காமதேனுவைப் பிடிக்கப் போய்ப் பங்கப்பட்டு, தவமகிமையே பெரிதென்றெண்ணித் தவசியாகிய விஸ்வாமித்திர னென்று பெயர் வகித்து, சாபாநுக்கிரக சாமர்த்திய முள்ளவரா யிருக்கிறார்.

இங்கே முனிவர் மனைவி ஒரு புத்திரனைப் பெற்று ஜமதக்கினியென்று பெயரிட்டு வளர்த்து வந்தாள். பிறகு தன் புத்திரனாகிய ஜமதக்கினிக்கு நாலுவேதம், ஆறுசாஸ்திரம், அறுபத்து நாலு கலைக்கியான முதலியவற்றைக் கற்பித்துத் தவத்துக்கு உபயோகமாகிய மந்திரங்களை உபதேசித்தனர். ஜமதக்கினி தவவேடங்கொண்டு, இந்த வனத்தில் வந்து தவம் புரிந்து, ரேணுகையென்னும் இராஜபுத்திரியை மணந்து கூடிக்கலந்து வாழ்ந்து வந்தனர். அவ்விரேணுகாதேவி தன்னுவன்-அனுவன்-விச்சுவாவசு-இராமன் என்னும் நான்கு புத்திரர்களைப் பெற்றாள். அவர்களில் இராமனென்னும் பெயரையுடைய புத்திரன் தமயன்மார்களைவிட மேலாய் வேதாகம கலைக்கியானங்களை யுணர்ந்து, முற்செய்கையால் அரசர்க்குரிய தனுர்வேதங்களையும் பயின்று, தவ சிரேஷ்ட சிராமணிகளுக்கும் அருமையாகிய சாம்பவமூர்த்தியை நோக்கித் தவத்திலிருந்து அச் சாம்பவ மூர்த்தியின் அனுக்கிரகத்தாற் பரசு என்னும் ஆயுதம்பெற்று, பரசுராமனென்று யாவரும் புகழ இனிது வீற்றிருந்தார். புத்திர பாக்கியத்தைப் பெற்ற இரேணுகை தன் கணவனாகிய ஜமதக்கினிக்குச் சதாகால மும் பணிவிடை செய்து வந்தனள். ஒருநாள் பூசைக்கு சலந்திரட்டிவர நதிக்குச்சென்றாள்; அங்கொரு காந்தருவ புருஷன் அந்நதிக்கு நேராக அந்தரத்திற் செல்ல, அவன் சாயல் அந்நதியில் தோன்ற, ரேணுகை அந்தச் சாயலைப் பார்த்து அவனது அழகைக்கண்டு மனதில் மதித்து வியந்து சலந்திரட்டினாள்.

ஓ தருமநந்தனா! பூர்வசன்மத்தில் ஒருவனுக்கு மனைவியாக இருந்துமற்றொரு ஜனனத்தில் வேறொருவருக்கு மனைவியாக இருப்பவள், பூர்வபிராரத்துவ சம்பந்தத்தால் பூர்வ ஜன்மப் புருஷனை வேறொருவடிவமாக இருக்கக்கண்டு மனதில் மதித்து வியந்தாலுங் கற்புக்கழிவுவருமென்று கற்புசாஸ்திர முறையிடுகின்றமையால், ஜன்மவாசனையுமில்லாத இரேணுகை ஒரு புருஷனை வியந்து சலந்திரட்டினாற் சலங் குடத்திற் றிரளுமோ? சலந் திரளாதிருக்கிறதைக் கண்ட அம்மாது மனவருத்தமுற்று, உடனே தன் கணவனிடத்துச்சென்று சித்திரப் பிரதி மெய்போல் அசைவற்று நின்றனள். திரிகாலத்தையு மறிந்த ஜமதக்கினிமுனிவர் மனைவியின் கருத்தை யறிந்து கொண்டவராகி, தக்ஷணந் தன்னருகிலிருந்த மூன்று குமாரர்களை அழைத்து இந்தமாதினை வெட்டி விடுங்களென்று கூறினர். மூன்று புத்திரரும், அன்னையைக் கொல்வதற் கஞ்சினவராகிப் பின்னிடைந்தனர். ஜமதக்கினி சினங்கொண்டு மூவரையும் நோக்கி, அடா பாபிகளே! பிதாவாகிய என் சொல்லை நீங்கள்

மறுத்தமையால், நீங்கள் மூவரும் பிராம
ணுக்தமழிந்து, நீங்கள் படித்த வேதாகமங்க
ளெல்லா மறந்து, வேடுவராகி வில்லம்பு
முதலியவற்றை யேந்தி, மிருகவதைசெய்து
அதனது மாமிசத்தைப் புசித்துக் கொண்டு
நீச்சத்துவமெய்தக் கடவீர்களென்று சபித்து
விட்டார். மூவருந் தந்தை சாபப்படியாயினர்.
ஜமதக்கினி பின்பு நாலாவது புத்திரனுகிய
பரசுராமரை அழைத்து இம்மாதைக் கொலை
செய்துவாவென்று கட்டளையிட்டனர். பரசு
ராமர் தந்தை வாக்கியத்தை வேதவாக்கியமா
கக்கொண்டு, தாயினைத் தலைவி லழைத்துப்
போய் உடைவாளால் வெட்டி எறிந்து விட்
டுத் தந்தையிடத்துவந்து வணங்கி நின்றனர்.

அதைச் சமதக்கினிகண்டு மனமகிழ்ந்து
வணங்கிய மைந்தனை வாரித்தழுவி, அப்பா
புத்திர சிகாமணியே! யென் வாக்கியத்தைத்
தடுக்காமல் தாயைக் கொலை செய்தனை. நீ சத்
தியசொரூபியென்பது இதனுல் விளங்குகின்
றது. உனக்கு என்ன வேண்டியதுகேள் தரு
கிறேனென்று கூற, பரசுராமர் மறுபடியும்
வணங்கிச் சொல்லுகிருர். ஓ ஸ்வாமி! என்
தமயன்மார் மூவருந் தங்கள் சாபத்தினுல்
நீச்சராயினர். அவர்கள் முன்போல் மாதவ
சிரேஷ்டராகவும், கற்புக் கழிவுவந்து இறந்த
என் மாதா முன்போற் கற்புடைமை பெற்று
உயிர் பெறவும், தாயைக்கொலைசெய்த பாவம்
என்னை யணுகாமற் பறக்கவுங் கிருபைசெய்ய
வேண்டுமென்று வினவினன். ஜமதக்கினி மகி
ழ்ந்து, பரசுராமர் கருத்தின்படி நீச்சராயின
மூன்று குமாரரை முன்போலாக்கி, ரேணு
கையை யெழுப்பி, பரசுராமரடைந்த பாவ
த்தை யகற்றி முன்போல் வாழ்ந்திருந்தனர்.
பரசுராமர் வேறொரு வனத்திற் சென்று தவ
நிலையியற்றி தவஞ்செய்திருந்தனர். கேளும்
தருமநந்தனு! அக்காலத்தில் கார்த்தவீரியார்ச்
சுனன் என்றொரு அரசனுண்டாகி உலகத்தை
யாண்டு வந்தனன். அந்த அரசன் முனிவர்க
ளிருக்கிற ஆச்சிரமங்களில் வந்து, எள்ளள
வேனும் இரக்க மில்லாமல் வனங்களை அழிக்
கிறதும், அதைக் குறித்து வந்த முனிவரை
யும், முனிவருடைய சீஷரையும் அதமாக்கு
கிறதுமாக இருப்பான். அந்தக் கார்த்தவீரி
யார்ச்சுனன் ஒருகால் தன் சேனைகளோடு
வேட்டைக்கு வந்து வேட்டையாடி, ஜமதக்
கினி ஆச்சிரமத்துக்கு வந்து அந்த ஆச்சிர
மத்தை அதமாக்க, ஜமதக்கினியின் புத்திரர்
கள் மூவரும் வந்தெதிர்த்துக் கார்த்த வீரி
யார்ச்சுனனைத் தடுத்தனர்.

அதனுற் கார்த்தவீரியார்ச்சுனன் அளக்
கரிய ஆற்றலை யுடையவனுகி, அந்த முனிவர்கள்
மேல் எதிர்த்தனன். அதை யங்கிருந்த முனி
வர்குழாங் கண்டு, அயலிலிருக்கும் வனத்தில்
தவஞ் செய்திருக்கும் பரசுராமருக்குத் தெரி
விக்க, அவர் கடுஞ்சினமடைந்துவந்து கார்த்த
வீரியார்ச்சுனனை யெதிர்த்து, அவனுடைய
இரதகஜ துரகபதாதிகளை யெல்லாம் அத
மாக்கி, அவனையும் வெட்டி யெறிந்தார். அவ்
வர்ச்சுனனுடைய நால்வகைச் சேனைகள் சுரு
வளியி லகப்பட்ட மயிலிறகுபோற் பயந்தோடி
நகர மடைந்தார்கள். நகரியி லுள்ளவர்கள்
பெரிய சபையொன்று கூடி, கார்த்தவீரியார்ச்
சுனன் புத்திரனுக்கு மகுடாபிஷேகஞ் செய்
கிறதென்று ஒரு ஏற்பாடு செய்து, அப் புத்தி
ரனை யழைத்து நல்ல சுபமுகூர்த்தத்தில் மங்
கள ஸ்நானஞ் செய்வித்து, வேதவேதியர்கள்
பல ஆசிகள் கூற, மகுடாபிஷேகஞ் செய்து,
சகலரும் தகுந்த மரியாதை செய்தனர். கார்த்த
வீரியார்ச்சுனன் புத்திரன் மகுடாபிஷேகனுகி,
அரசு செலுத்தி, தன் தந்தையைக் கொன்ற
வன் இன்னுனென்று உணர்ந்துகொண்டு,
எவ்விதத்திலும் அவன் தந்தையை கொல்லு
கிறேனென்று கங்கணங் கட்டிக்கொண்டு,
நேராகச்சென்று கொல்வதற்குச் சக்தியில்லா
தவனுகிப் பரசுராமர் இல்லாத சமயம் பார்த்
துச் சென்று, கரவடமாகி ஜமதக்கினியை
வெட்டி எறிந்துவிட்டான். அந்த ரேணுகை
அறிந்து ஓவென்றலறி மார்பிலடித்து அழு
தாள். அங்கிருக்கிற முனிவர் குழாமுஞ் சீஷ
ரும் அறிந்து, அருகில் ஒரு வனத்தில் தவம்
செய்துக் கொண்டிருக்கிற பரசுராமருக்குத்
தெரிவித்தனர்.

அக்கொடுமையைக் கேட்டமாத்திரத்தில்
பரசுராமர், காலாக்கினி உருத்திரனைப்போலச்
சீறி விரைவில் வந்து, தந்தையின் களேபரத்
தைக் கண்டு துக்கிக்காமல் தாயை நோக்கி,
ஓ அம்மணி! நீ வருத்தப்படாதிரு. நீ என்
கண் காண இப்போது ஏழுதரம் மார்பிலடித்
துக்கொண்டு அழுதமையால், சூரியகுலம் ஏழு
தலைமுறை இல்லாமலிருக்க என் பரசுக்கிரை
யாக்கி, சூரியகுலத்து அரசரை யெல்லாம்
நாசப்படுத்துகிறேனென்று சபதங் கூறி,
உடனே தந்தை களேபரத்தை அடக்கஞ்

செய்து, செய்யவேண்டிய பிதுர்க்கடனை நிறைவேற்றி, பின்பு போர்க்கோலங் கொண்டு வெளிப்பட்டுச் சூரியகுலத்து அரசரோடு எதிர்த்து நாசப்படுத்தி, கார்த்தவீரியார்ச்சுனன் புதல்வன்மேல் எதிர்த்து அவனைத் தனது மந்திராஸ்திரத்துக்கு இரையாக்கி; அவனுடைய புத்திரமித்திரர் முதலியோரையும் நாசமாக்கி, அச்சூரிய வமிசத்தில் எங்கேனும் கருவிருந்தாலும் அதனையும் விளங்கவொட்டாமல் செய்து, பெரிய ஓர் உதிர ஆறு உண்டாக்கி, அந்த ஆற்றில் தந்தைக்குச் செய்யவேண்டிய மற்றைக் கடனையும் நிறைவேற்றி, வீரகங்கணத்தோடு சூரியகுலத்து அரசர்களின் பூமியை எல்லாம் காசிபரிடத்து ஒப்புவித்து, தான் முன்போலத் தவ வேடங் கொண்டு மகேந்திரிக்குச்சென்று, அங்கு தவநிலையொன்று இயற்றித் தவத்தில் இருக்கிறார். அவர் சூரியோதயமானவுடன் இந் நதியில் ஸ்நானம் செய்ய வருவார். என்று கூறினவுடன் சூரியனும் உதயமானான். பரசுராமரும் வந்தனர். அவரைத் தருமராஜன் கண்டு தம்பிமாரோடு எதிர்சென்று வணங்கித் தன் பெயரை எடுத்தோதினர். பரசுராமர், தருமராஜனையும் அவன் சகோதரரையும் கிருபா நோக்கம் பெருக நோக்கிப் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறார்.

ஓ தருமநந்தனா! நீ சத்திய சந்தனன். உன்னால் பல தருமங்களும் நிறைவேறும். தருமதேவதை நாலு பாதத்தோடு நடக்கும். ஆதலால், உனக்கு யார்யார் என்னென்ன குற்றம் செய்தபோதிலும் உனக்கொரு அழிவில்லை. நீ இன்னும் சிலநாளில் உலகாதிபதியாகி இருப்பாயென்று வாழ்த்தி, தாம் நாடிவந்த நதியில் ஸ்நானஞ்செய்து தமது இருப்பிடம் சென்றார். — தருமராஜன் தம்பியரோடு அங்குள்ள நதியில் ஸ்நானஞ்செய்து அங்கு சில நாளிருந்து, பின்பு கோதாவிரி நதிக்குச் சென்று அந்நதியில் ஸ்நானஞ்செய்து, அந்நதிக்கரையில் யாகசாலை ஒன்றியற்றி, அந்த யாகசாலையில் சகல முனிவர்களும் வேதமந்திரங்கூற யாகஞ் செய்தனர். அத்தருணத்தில், துவாரகைக்கு அதிபனாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பஞ்சவராகிய தன் மைத்துனரைப் பார்க்க விருப்புற்று, தான் தன் சகோதரனாகிய சாத்தகியையும், பரிசனங்களில் சிலரையும் அழைத்துக்கொண்டு இரதமேறி வந்து, கோதாவிரிக் கரை யணுகித் தருமராஜனைக்கண்டு வணங்கினார். தருமராஜன் காடாலிங்கனஞ் செய்தனன். வீமன், நகுலன், சகாதேவன், பாஞ்சாலி இவர்கள் விழுந்து வணங்கினர். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் சாத்தகியும் மகிழ்ந்தவராகி, பின்பு அப்பாண்டவர்களும் தாங்களும் ஒருவரை யொருவர் ஆலிங்கனம் செய்து சந்தோஷங் கொண்டாடினர். தருமராஜன் கிருஷ்ணமூர்த்தி சாத்தகி இவ்விருவரோடு சிலநேரம் நல்வசனம் வசனித்து, பின்பு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியையும், சாத்தகியையும் துவாரகா நகர்க்கு அனுப்புவித்து, தான் தன் சகோதரர்களோடு அக்கோதாவிரி நதியைக் கடந்து, சையாதி மஹாராஜன் யாகம் செய்த பூஞ்சோலைக்கு வந்து சேர்ந்து, தன்னுடன் வருகிற உரோமசன்மரைப் பார்த்து வணங்கிச் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! இந்த வனம் யாருடையது? இதில் யாகவேதிகை முதலியவை இருக்க வேண்டிய காரணமென்ன? இதனை அடியேனுக்கு விளங்க உரைக்க வேண்டுமென்று வினவ, உரோமசன்மர் மகா சந்தோஷத்துடன் சொல்லுகிறார்.

## சவுநகமுனி சரித்திரம்

கேளும் தருமநந்தனா! பிருகு முனியினுடைய புத்திரராகிய சவுநகமுனி இவ்வனத்தில் அனேக நாள் தவஞ் செய்தனர். நெடுங்காலந் தவத்தி லிருந்தமையாற் சவுநகரைப் புத்து மூடிற்று. அக்காலத்தில், சையாதி மகாராஜன் வேட்டைக்கு வந்து அவ்வனத்தி லிறங்கினான். அந்த அரசனுடன் வந்த தன் குமாரத்தி சுகன்னிகை அவ்வனத்தின் விநோதங்களைப் பார்க்க வெளிப்பட்டு, சவுநகர் கண்ணொளி பிரகாசிக்கின்ற புத்தினிடத்து வந்து, இதென்ன ஒளியென் றையுற்று, அங்கிருக்குந் துரும்பி விரண்டு துரும்பெடுத்து இரண்டு ஒளியின் வழியிற் குத்தினள். அந்தத் துரும்பு புத்தில் தவஞ் செய்திருக்கிற சவுநகர் கண்ணிற்குக் கிஞ்சித்து வருத்த முண்டாக்கிற்று. சவுநகர் சினங்கொண்டு, அரசன்-இராஜ கன்னிகை-மந்திரிகள் இவர்கள் தவிர மற்ற நால்வகைச் சேனைக்குங் கண் தெரியாம லிருக்கச் சபித்தனர். அரசன் அதையறிந்து முற்றுஞ் சோதித்து, தன் குமாரத்தியாற் குற்றம் நேரிட்டதென்று உணர்ந்து, புத்தினிடத்து வந்து பலவாறு புகழ்ந்து முனிவரைக் கண்டு வணங்கி, என் குமாரத்தியால் வந்த குற்றத்தை

மன்னித்து அந்தக் கன்னிகையை மணந்து என்னை யாதரிக்கவேண்டுமென்று கூறினன். அதைக் கேட்ட சவுநகர் கோபமாறி, சேனைகளுக்குக் கண் தெரிய வரங் கொடுத்து, சுகன்னியை மணந்து அரசனுக்கு விடைகொடுத்துத் தான் தவத்தி லிருந்தார். சுகன்னிகை புருஷனுக்குப் பணிசெய்து வந்தாள்.

அப்படி பணிவிடை செய்து வருகிற காலத்தில், ஒரு நாள் சலந்திரட்டி வரப் போனாள். அத்தருணத்தில் அஸ்வனி தேவர்கள் சுகன்னியைக் கண்டு அவளைச் சோதிக்க எண்ணி, ஓ மாது சிரோமணி! உன் புருஷன் யார்? இந்த வனத்தில் நீ யிருக்க வேண்டிய காரணமென்னென்று வினவினர். அதற்குச் சுகன்னிகை ஓ அதிதிகளே! என் கணவன் சவுநகமுனி அவர்க்குச் சலந்திரட்டி வருகிறேன் என்று கூறினள். அதற்கு அஸ்வனி தேவர்கள் சிரித்து, ஓ மாதே! நீ மகா ரூபவதியாகவும், இராஜ கன்னிகையாகவு மிருக்கிறாய். உனக்குக் கிழவன் கணவனாயிருப்பதி லுனக்கு வரும்பய னென்னவென்று வினவ, இந்தக் கடூர வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில், மறுமொழி கொடாமல் தன் கணவனிடத்து வந்து வழியில் நடந்தனவற்றைக் கூற, சவுநகர் ஞானதிருஷ்டியால் இன்னாரென் றறிந்து கொண்டவராகி மனைவியை நோக்கி, ஓ பெண்கள் சிகாமணி! உன்னுடன் தாறுமாறாக வசனித்தவரிடத்துச் சென்று, உங்கள் கருத்தின்படி இணங்குகிறேன் உங்களிலொருவர் ஏற்படுங்களென்று கூறு. அதன்மேலவர்கள் என்னிடத்திற்கு வருவார்கள். ஆதலால் விரைவிற் செல்லென்று கூறினார். சுகன்னிகை அஸ்வனி தேவர்களிடத்துக்கு வந்து, ஓ அதிதிகளே! உங்கள் கருத்தின்படி நடக்கிறேன் உங்களிலொருவ ரேற்படுங்களென்று கூற, அஸ்வனி தேவர்கள் நீ கூறுவதிற் பயனில்லை. உன் கணவனோடு யோசித்துக்கொண்டு கருத்து மகிழும்படி நடக்கிறோமென்று கூறி, இருவருஞ் சவுநகரிடத்துக்கு வந்து அவரை அழைத்துக்கொண்டு, சுகன்னிகையோடு ஒரு சுனையிற் சென்று நால்வரும் மூழ்கி, சுகன்னிகை கண்ணுக்கு அவ்வஸ்வநிதேவ ரிருவருஞ் சவுநகரும் ஒரேவித வாலிபரைப்போல் நின்று சுகன்னிகையை நோக்கி, ஓ பெண்கள் சிகாமணியே! எங்களில் யார்மேல் உனக்கிஷ்ட மிருக்கின்றதோ? அவர்களைத் தொடுவென்று கூறினர். சுகன்னிகை, தன் கணவனை மனதில் நினைத்து ஒரு வாலிபனைத் தொட்டனள். தொட்ட வாலிபன் கணவனாக இருந்தமையால், அஸ்வநி தேவர்கள் மகிழ்வடைந்து, தங்கள் சுயரூபத்தோடு விளங்கிச் சுகன்னியைப் பலவாறு புகழ்ந்து, சவுநகரைப்பார்த்துச் சொல்லுகிறார்கள்.

ஓ சவுநகமுனிவரே! நீர் தவசி. இராஜ கன்னிகை நற்குண நற்செய்கைகளைக் கண்டறிந்து உமக்கு யௌவனநிலை கொடுத்தோம். நீர் இன்றுமுதல் அக்கன்னிகைக்கு இன்பம்பெருக நடப்பது உமது கடமையென்று கூறினர். சவுநகர் மகிழ்ந்து சொல்லுகிறார். ஓ ஸ்வாமிகளே! முதுமைப் பருவமடைந்த எனக்கு வாலிபத்தைக் கொடுத்தமையால், யாகத்தில் உங்களுக்கு அவிர்ப்பாகங் கொடுக்கிறேனென்று வாக்குத்தத்தஞ் செய்து பணிந்து விடைபெற்று, இந்த ஆச்சிரமத்துக்கு வந்து தன் மனைவியோடு கூடிக்கலந்து வாழ்ந்து சுகத்தை அனுபவித்துக்கொண்டிருந்தார். சையாதிமகாராஜன், தன் மருமகனாகிய சவுநகமுனிவரைப் பார்க்கத் தன் பரிசனத்தோடு வனத்துக்கு வந்து மருமகனைக் கண்டு வணங்கி, சவுநகரடைந்திருக்கிற வாலிபருவத்தைப்பார்த்து வியப்படைந்து வாலிபப் பருவ மடைந்ததற்கு காரணமென்னவென்று வினவினன். சவுநகர் அஸ்வநி தேவர்களால் வாலிபப்பருவ மடைந்ததை எடுத்தோதினர். அரசன் மகிழ்வடைந்தவனாகிச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! அடியேன் நெடுநாள் மகுடாபிஷேகனாகி இம்மைப் பயனெவ்வளவோ அவ்வளவையும் அடைந்தேன். இனி மறுமைப்பயனை சம்பாதித்துக்கொள்ளவேண்டும். அப்பயன் எனக்குச் சித்திக்கும்படி திருவுளங் களித்தருள வேண்டுமென்று வினவ, சவுநகர் மகிழ்ந்து சொல்லுகிறார்.

ஓ மகாராஜனே! உனக்கு மறுமைப்பயன் கிடைக்க வேண்டுமென்றால், யாகங்களைச் செய்யவேண்டும். யாகங்களுக்குத்தகுந்தபதார்த்தங்களைச் சேர்ப்பையாகில், யாகஞ் செய்து மறுமைப்பயனை அடையும்படி செய்விக்கிறேனென்றுகூற, அரசன் அக்கருத்திற்கிசைந்து, யாகத்துக்கு வேண்டிய பதார்த்தங்களை யெல்லாம் நகரத்தி லிருந்து அழைப்பித்துக் கொண்டு. அந்த யாகவேதிகைகளை யியற்றிச் சவுநகரையே குருவாகக்கொண்டு, சில முனிவர்கள் புடைசூழ்ந்து வேதமந்திரங்களைக் கூறத் தானுந் தன் மனைவியும் யாகதீக்ஷை வகித்து, சவுநகர் முன்னிலையில் அந்த யாகத்

தை வேதாகம விதிப்படி நடத்தினன். சவுநகர் யாக அவிர்ப்பாகத்தை அஸ்வநிதேவர்களுக்குக் கொடுக்கிறேமென்று வாக்கு தத்தஞ் செய்தபடி அஸ்வனி தேவர்களை நினைக்க, உடனே அவர்கள் வரவும் யாகத்தைப் பூர்த்தி செய்து அவர்கட்கு அவிர்ப்பாகங் கொடுக்க எத்தனித்தார். இந்திரன் இக்கருத்துணர்ந்து யாக அவிர்ப்பாகத்துக்கு நாமும் உரியவனாயிருக்க, அஸ்வநி தேவர்களுக்கு இந்த சவுநகர் கொடுப்பது அக்கிரமம் என்று கருதி, தக்ஷணந் தன் வச்சிரப்படையை யேந்திச் சவுநகரை அதமாக்க எண்ணினன். இந்திரன் கோட்பாட்டை திவ்வியாக்கினியாகிய சவுநகரறிந்து, ஒரு மந்திரத்தை உச்சரித்தார். அந்த மந்திர சாலத்தால் இந்திரனுடைய கரம் ஸ்தம்பித்து அசைவற்றுக் காட்டுக் கொம்புபோல் ஆயிற்று. மறுபடியுஞ் சவுநகர் அதிக சினங்கொண்டு இந்த இந்திரனுக்கு இவ்வளவு இறுமாப்பாவென்று கோபித்து, அவனை நாசப்படுத்தத் தாம் செய்துகொண்டிருக்கும் யாகத்தில் வேறொரு மந்திரத்தை யுச்சரித்து யாகஞ்செய்தார்.

அந்த யாகத்தில் அக்கினிக் கொழுந்துபோலத் தலைமயிரும், பிறையை இரண்டு துண்டாக்கி வைத்தாற்போல் விளங்குங் கோரப்பல்லையும் பெற்று, காத்திரமான தேகத்தோடும் உடைவாளோடும் ஓர் அசுரன் வெளிப்பட்டனன். அந்த அசுரனை சவுநகர் பார்த்து, ஓ பூதமே இறுமாப்படைந்திருக்கிற இந்திரனை நாசப்படுத்தி வாவென்று கட்டளையிட்டனர். பூதம் வெளிப்பட்டது. இந்திரன் அச்சேதியறிந்து, கைகால்கள் உதறலெடுத்துக்கொண்டு முறையோ முறையோவென்று ஓலமிட்டு, ஓ சவுநகமுனீந்திரா! அடைக்கலம் அடைக்கலம் அடியேன் பிழையைப் பொறுத்து இத்தருணங் காப்பாற்றுவது உமது கடமை யென்று புலம்பினன். கருணைக் கடலாகியுஞ் சாபானுக்கிரக சாமர்த்தியமுள்ளவராகியு மிருக்கிற சவுநகர்கேட்டு மனமிரங்கி, தாம் அனுப்பிய அசுரன் யாகத்தில் அடங்க மற்றொரு மந்திர முச்சரித்து, அவ்வசுரனை யாக குண்டத்திற் போகச்செய்து, இந்திரனுக்குக் கைகால்கள் முன்போல்ஆகும்படிக்கு திருவுளங்கனிந்தார். இந்திரன் கைகால்களை யுதறிக்கொண் டெழுந்து, சவுநகரிடத்துக்கு வந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுப் பலவாறு புகழ்ந்து சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! உமது மகிமையை அறியாமல் துர்ச்செய்கையை மேற்கொண்டேன். என்னை மன்னித்துத் தங்கள் கருத்தின்படி அஸ்வநி தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்து மனக்களிப் பெய்துமென்றுகூற, சவுநகர் யாகத்தைப் பூர்த்திசெய்து, அஸ்வனி தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்து, சையாதி மகாராஜனைப் புனிதனாக்கி, மறுமைப்பயனை உதவினர். இப்படி உரோமசன்மர், அந்த சையாதிமகாராஜன் யாகஞ் செய்தவிட மிதுவென்றும், சவுநகர் வாழ்ந்திருந்த சோலை யிதுவென்றுகூற, தருமராஜன் வீமன் முதலானவர் கேட்டு மகிழ்வடைந்து, அந்நதியையுஞ் சோலையையுங்கடந்து, யமுனைநதியை அடைந்து, அந்நதியில் விதிப்படி ஸ்நானஞ் செய்து, அதையுங் கடந்து வடதிசை நோக்கிச் செல்லும்போது, அங்கொரு நெருங்கிய சோலை தோன்றிற்று. தருமராஜன் அந்தச் சோலையைக்கண்டு இது யாருடைய வனம் என்று வினவ, உரோமசன்மர் சொல்லுகிறார்.

---

## அஸ்வமகாராஜன் சரித்திரம்

கேளும் தருமநந்தனா! முன்னொருகாலத்தில் அஸ்வமகாராஜ னென்றொரு அரசனிருந்தான். இவன் ஆறுசாஸ்திரம், நாலுவேதம், அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றை யோதி யுணர்ந்து, தருமதேவதை நாலுபாதத்திலும் நடக்கச் செங்கோல் செலுத்தி அரசாண்டிருந்தான். அவனுக்குப் புத்திரபாக்கியமில்லை. அதனால் மனவருத்தமுற்றுப் புத்திர பாக்கியத்தைப் பெறவேண்டுமென்று கருதி, தன்னரசை மந்திரிகளிடத் தொப்பிவித்து, தானுந் தன் மனைவியுமாய் மரவுரி தரித்துக் காட்டிற் சென்று, அங்குள்ள பெரியோர்களைத் தரிசித்து, பிருகுமுனிவரைக் கண்டு வந்தனைசெய்து, மிகுந்த ஆவலோடு எதிர்நின்று பலவாறு புகழ்ந்தனன். தவசிரேஷ்ட சிகாமணியாகிய பிருகுமுனி அரசன் முகம் வாடியிருப்பதை யுணர்ந்துகொண்டு சொல்லுகிறார். ஓ மகாராஜனே! நீயோ மண்டலேஸ்பரன். நீ காட்டுக்கு மரவுரிதரித்து வரவேண்டியதென்ன? உன் முகம் வாட்டமுற்றிருக்கவேண்டியதென்ன? என்று வினவலும், அரசன் புத்திரபாக்கிய மில்லாதிருக்கிறதை எடுத்தோதினன். அதைப் பிருகுமுனி கேட்டுச் சொல்லுகிறார். ஓ மகாராஜனே! உனக்கு புத்திரபாக்கியம் வேண்டியதாக இருந்தால் யாகத்

த்தைச் செய். அதன்மூலமாக உனக்குப் புத்திரனுண்டாவானென்று கூற, அரசன் மகிழ்ந்து, தக்ஷணந் தன்னகரத்துக்கு தெரிவித்து யாகத்துக்கு வேண்டிய பதார்த்தங்களை அழைப்பித்து, யாகவேதிகை யியற்றி, தானுந் தன் மனைவியும் யாகதீக்ஷை வகித்து, பிருகுமுனியைக் குருவாகக்கொண்டு சில முனிவர்களையுஞ் சேர்த்துக்கொண்டு ஏழுநாள் பரியந்தம் யாகத்தை நிறைவேற்றி, பிர்மா-விஷ்ணு-உருத்திரன் முதலான தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்து, யாகத்தாற் கிடைத்த சலத்தைக் கலயத்திலேந்தித் தருப்பையால் மூடிவிட்டு அன்றிரவில் யாவருஞ் சயனித்தனர்.

அரசன் நித்திரை செய்திருக்கும்போது தாகமெடுத்தது. அரசன் ஒருவரோடுஞ் சொல்லாமல், யாக முன்னிலையில் வந்திருக்கிற கலயத்திலிருக்குஞ் சலத்தையெல்லாம் அருந்தினன். சூரியனுதயமானவுடன் யாவருமெழுந்து காலைக்கடனை முடித்துக் கொண்டு யாகசாலைக்கு வந்தார்கள். பிருகுமுனி கலயத்தில் நீரில்லாமலிருக்கிறதைக் கண்டு, அரசனையழைத்து இதில் நீரில்லாமல் இருப்பதற்குக் காரண மென்னவென்று வினவினர். அரசன் நடுங்கிச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! இரவில் அடியேனுக்குத் தாகமுண்டாயிற்று. அத்தாகமடங்க அந்நீரை நான் அருந்தி விட்டேன் என்று கூறினன். முனிவர் கேட்டு மனவருத்தமுற்றுச் சொல்லுகிறார். ஓ மஹாராஜனே! அருமையாக யாகத்தைச் செய்து அந்த யாக முன்னிலையிற் பெற்ற சலத்தைப் புசித்து விட்டனையே அந்நீர்தான் புத்திரன். உன் வயிற்றில் புத்திரனுண்டாகி யிருக்கிறதே. இதற்கென்ன செய்கிறது. மேலும், அந்தப் புத்திரன் பத்துமாதத்தில் வெளிப்படுகிறவனல்ல, நூறுவருஷங் கர்ப்பத்திலிருந்துபின்பு வெளிப்படுவான். அது வரைக்கும் உனக்குக் கன வருத்தம் நேரிடுவது மன்றி, அப்புத்திரன் வெளிப் படும்போது உன் வயிற்றைக் கீண்டு வெளிப்படுவான். அக்காலத்தில் உனக் கழிவு வருமே யென்று மிகுந்த வருத்தப்பட்டார். அரசன் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! அடியேன் வருத்தப் படுகிறதும், மரணமடைகிறதும் எனக்கோர் பெரிதல்ல. புத்திரனில்லாதிருக்கிறதே பெரிய வருத்தமாதலால், புத்திரனுண்டானால் அதுவே மேலான பயன். நான் இவ்வுலகத்தி லடையவேண்டிய பயனை யெல்லாம் அடைந்து விட்டேன். இனி யானடையப் போகிறது மறுமைப் பயன்தான். ஆகலால், மறுமைப் பயனைக் கொடுக்கும் புத்திரனுண்டானாற் போதுமென்று கூறினான். அதற்குப் பிருகுமுனி மகிழ்ந்து, அரசனுக்குப் பல ஆசிகள் கூறி விடை கொடுத்தனர்.

பின்பு அரசனானவன் தன் பரிசனத்தோடு நகரம்வந்துசேர்ந்து அரசு செலுத்தி, நூறுவருஷகாலங் கருவைச் சுமந்து வருத்தமுற்று, பின்பு ஒரு புத்திரனைப் பெற்றான். அப்புத்திரன் வெளிப்படும்போது வயிற்றைக் கீண்டு கொண்டு வெளிப் பட்டமையால், புத்திரன் முகதரிசனமானவுடன் அரசன் சொர்க்கலோக மடைந்தான். சொர்க்கலோகத்தி லிருக்கின்ற அரம்பா ஸ்திரீகள் அந்தப் புத்திரனையெடுத்து, தேவாமிர்த மூட்டி வளர்த்து வந்தார்கள். அந்தப் புத்திரன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். இறந்துபோன அஸ்வமஹாராஜனுடைய மந்திரிமார் முதலான யாவருங் கூடி அப்புத்திரனுக்கு மாந்தாதா வென்று நாமமிட்டு, சகல கலைக்கியானமும் விளங்க நால்களைக் கற்பித்து, வில் முதலிய ஆயுதப்பயிற்சியுஞ் செய்வித்தார்கள். மாந்தாதா வாலைப்பருவம் அடைந்து மகுடாபிஷேகனாகி, நீதிதவறுமற் செங்கோல் நடாத்திக் குடிகளைப் பாதுகாத்து வந்தான். ஒருகாலத்தில் மழையில்லாமல் உயிர்களெல்லாம் வருத்தமுற்றன. அது கண்டு மாந்தாதா மேகத்துக்கதிபனாகிய இந்திரனோடு எதிர்த்துப் போரிட்டு மழைபெய்யும் படிசெய்து, சிலகாலஞ் சென்றபின்பு இந்த இடத்தில் யாகசாலை யியற்றி அநேகம் யாகங்களைச் செய்தான். அதுதான் இதுவென்று உரோமசன்மர் கூறினர். தருமராஜன் கேட்டு மகிழ்வுற்றுச் சகோதரர்களோடு அங்குள்ள நதியில் ஸ்நானஞ்செய்து, அவ்விடத்தை விட்டு சரஸ்வதி நதிக்கு வந்தார். அங்கொரு ஆச்சிரமந்தோன்றிற்று. அதனைக்கண்ட தருமராஜன் உரோமசன்மருக்கு வந்தனை செய்து சொல்லுகிறார். ஓ ஸ்வாமி! இந்தவனம் யாருடையது? இதனது சரித்திரம் என்னவென்று வினவ உரோமசன்மர் சொல்லுகிறார்:

## சோமமஹாராஜன் சரித்திரம்

கேளும் தருமநந்தனா! முற்காலத்திற் சோமமஹாராஜன் என்றொரு அரசனுண்டு.

அந்த அரசன் மகுடாபிஷேகனாகி நூறு கன்னிகைகளை மணந்து இன்பத்தோடு வாழ்ந்து வருகிற காலத்தில், அவனுக்கு முதல் மனைவியினிடத்து குஷ்டநோயுடனே விளங்கும் ஒரு மூடப் புத்திரன் பிறந்தான். மற்ற தொண்ணூற்றொன்பது மனைவிகளும் புத்திரபாக்கியமில்லாதவராகி யிருந்தார்கள். அதனால் அரசனுக்கு மனவருத்தமுண்டாகி தன் அரசை மந்திரிகளிடத்து ஒப்பிவித்து, தன் மனைவிகளோடு வெளிப்பட்டு, ஒரு முனிவரிடத்துச் சென்று வணங்கித் தன் மனக்குறையைச் சொல்லிக்கொள்ள, அம்முனிவர் கேட்டு, உன்னுடைய மனக்குறையை நீக்க நீ விரும்பியபடி வேதமுறைப்பிரகாரம் நான் சொல்லுகின்றதை நீயும் உன்னுடைய பத்தினிகளும், மற்றைச் செனங்களுந் தவறுதல் செய்யாமலும், யாதொரு மனவருத்தங் கொள்ளாமலும், ரோதனம் புரியாமலும், மனோதிடத்துடனே செய்வீர்களா வென்று கேட்க, அதற்கு அவ்வரசனும், அவனுடைய ஸ்திரீகளும், வித்தியாசமில்லாமற் செய்கிறோம் என்று ஏகமனதாகச் சொல்ல, அம்முனிவர் அவ்வரசனை நோக்கி, உன்னுடைய மூத்த மனைவியிடத்துண்டாகிய குஷ்டநோய்கொண்டிருக்கும் மூடப்பிள்ளையை உன் கரத்தின்கணுள்ள கூர்மை பொருந்திய வாளாயுதத்தினாலே வகிர்ந்து யாக்குண்டத்திற் போட்டுத் தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுப்பித்தால், உன்னுடைய நூறு பத்தினிகளுக்கும் நூறு பிள்ளைகளுண்டாகுமென்றார். உடனே அவ்வரசன் யாகஞ்செய்வதற்கு வேண்டிய பதார்த்தங்களை வருவித்து யாகத்தீ வளர்த்தி, அதில் தன்னுடைய மூடபிள்ளையை முனிவர் கூறியபடி அறுத்துப்போட்டுக் கிரமப்பிரகாரம் யாகஞ் செய்கையில், அதிலிருந்து ஓர் சுவர்ண பாத்திரம் உண்டாகி, அதினிடத்தில் மிக்க வெண்மை பொருந்திய சாதமிருக்கக் கண்டு, அதை யெடுத்து அவ்வரசனுடைய நூறு பத்தினிகளுக்கும் பங்கிட்டுத்தர, அதை அவர்கள் வாங்கிப் புசித்தார்கள். அதுவே அந்த ஸ்திரீகளுக்குக் கெர்ப்பமாயிற்று. சிலகாலஞ் சென்றபிறகு அம்முனிவர் சிசுஹத்திதோஷஞ் செய்வித்ததினால் நரகலோகஞ் சேர்ந்தார். இதர ஜெனங்கள் என்ன இந்த அரசன் நூறு ஸ்திரீகளைக் கலியாணஞ் செய்துந் தொண்ணூற்றொன்பது ஸ்திரீகளுக்குப் புத்திரர்களில்லாமல், ஒரு பெண்சாதி யிடத்தில் மாத்திரங் கடவுள் செயலாற் கிடைத்த குஷ்டத்தோடுங்கூடிய ஓர் மூடப் பிள்ளையையேனும் வைத்துக்காக்காமல், எப்படி மனந்துணிந்து கொன்று யாகஞ் செய்தானென்று பழி பேசிக்கொண் டிருந்தார்கள்.

அதுநிற்க, அந்த நூறு ஸ்திரீகளுங் கருப்பமுற்ற நாள் தொடர்ந்து பத்தாமாசத்தில் நூறு பிள்ளைகளைப் பெற்றார்கள். இந்தச் சேதி அரசன் கேள்விப்பட்டு மிகுந்த சந்தோஷமடைந்து, அந்த நூறு குழந்தைகளையும் நாளொருமேனியாய் பொழுதொரு வடிவமாய் ஒன்றினொன்றுங் குறைவில்லாமலும், பேதமில்லாமலும், சோர்வில்லாமலும், மகா ஜாக்கிரதையாய் வளர்த்து, சகல வித்தையையுங் கற்றுக்கொடுத்து நெடுநாள் அரசையாண்டான். காலமுடிவிற் பிள்ளைப் பழி நிவர்த்தியாக நரகலோகந் தெரிசித்துக் கொண்டிருக்க, நீதியாய் அரசைச் செலுத்தி அதினாற் பின்பு சொர்க்கலோகம்போகப் பிரமதேவன் கட்டளையாயிற்று. அந்தக் கட்டளையின்படி அவ்வரசன் நரகலோகத்தைத் தெரிசித்து வரும்போது, தனக்குப் புத்திர பாக்கியந் தருவித்தவராகியமுனிவர் நரகவேதனையிலுழன்றுகொண் டிருப்பதைக் கண்டு, யாது காரணத்தினால் இந்தச் சங்கடம் நேரிட்டது என்று வினவ, அதற்கு அம்முனிவர் உனக்கு நற்பிள்ளைகளில்லாக் குறையை என்னுடன் முறைய மிட்டுக் கொண்டதற்கு நான் செவிகொடுத்துக் கேட்டுச் சும்மாயிராமல் உன் பிள்ளையையறுத்து யாகஞ் செய்யச் சொன்ன தோஷத்திற்காக எனக்கு நகரமும், என் வாய்ச் சொல்லின்படி நீ நடந்துகொண்ட தோஷ நிவாரணத்திற்காக இந்த நரகலோகத்தைக் கொஞ்சந் தெரிசித்துச் சுவர்க்கலோகத்திற்கு நீ போகவு மாயிற்று. ஆயினும், எனக்கு இந்த நரகவாதனை நீங்கவேண்டும் என்று மனதிருந்தால் உன்னாலேயே நிவாரணமாகலாம் என்று வருந்திக் கேழ்க்க, அந்த சோமமகாராஜன் தனக்கு அம்முனிவர்செய்த நன்றியை யுற்றுணர்ந்து நல்லது என்று சொல்லி, யமதர்ம ராஜனிடத்திற்குப் போய், அம்முனிவர் தனக்குச் செய்த சகாயத்தையெல்லாங் கிரமமாய்ச் சொல்லி, அச் சகாய முன்னிலையில் அவருக்கு நேரிட்ட பாபத்திற்கீடாய் நரகவேதனையைப் படும்படியாய் நேரிட்டது. அதற்கு நான் செய்த புண்ணியப் பலன்களிலே பாதி அவர்க்காகத் தத்தம் பண்ணுகிறேன். அவருக்குச் சுவர்க்க லோகங்

கிடைக்கச் செய்யவேண்டு மென்று வேண்டிக் கேட்க, யமதர்மராஜன் நன்றி வகித்த அவ் வரசனுடைய நற்குண நற்செய்கைகளைக் கண்டு சந்தோஷப்பட்டு, அப்படியே கொடுத் தேனென்று சொல்ல, உடனே அம்முனிவ ரும் அவ்வரசனும் மனமகிழ்ந்து இருவரும் ஒன்றாகச் சுவர்க்கலோக மடைந்தார்கள். அந்த முனிவருடைய ஆசிரமம் இதுதான் என்று தருமராஜனுக்கு உரோமசன்மர் காண் பித்தார்.

## சிபிச்சக்கிரவர்த்தி சரித்திரம்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! அப்பால் சில தூரஞ் சென்றபோது ஒரு ஆசிரமந் தோன்ற, இஃது ஆருடையதென்று தருமன் கேட்க, உரோமசன்மர் சொல்லுகின் றார்: ஓ உதிஷ்டிர மகாராஜனே! பூர்வத்திற் பிரமதேவன் யாகஞ் செய்த இடம் இது இந்த இடத்தில் இருக்கின்ற தீர்த்தமானது வெகு சிறப்பைப் பெற்றது. எப்படியென்னில், முன்னம் பரதனென்னப்பட்ட ஓர் அரசன் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து ஆகா யத்தைப் பார்த்தான். மேலேழு லோகமும் அவன் கண்களுக்குக் காணப்பட்டபடியால் அவன் அநேக அதிசயமடைந்தான். ஆகை யால் நீங்களும் இந்தத் தீர்த்தத்திலே ஸ்நா னம் செய்வீர்களாகில், உங்களுக்கும் அதி சயங்களைத் தோற்றுவிக்கும் என்று உரோம சன்மர் சொல்லவும், அப்படியே தருமராஜ னும், அவருடைய தம்பிமார்களும், திரௌ பதி தேவியும், பிராமணர்களும், ஸ்நானஞ் செய்து, மேலேழு உலகத்தின் வளப்பங்களைக் கண்டு, பின்னும் சுவர்க்க லோகத்திற்கு மேலா கிய உலகத்திலே பாண்டு மகாராஜனையும் தரி சித்து, அதற்குமேல் தேவேந்திரனுடைய பட்டணத்தையுங் கண்டு, அதில் அர்ச்சுனன் மகா சந்தோஷ சாம்ராச்சியத்துடன் வீற் றிருக்கின்றதையும் பார்த்து, உள்ளங்களித்து, உடலம் பூரித்து கரையேறி வந்து அப்பால் போகப் புறப்பட்டார்கள்.

அப்போது அவ்வழியில் சரஸ்வதி நதி யைக் காண்பித்தார். அந்த நதிக்கு அநேகந் துறைகளுண்டு. அவற்றில், ஒரு துறையில் இறங்கி யாவரும் ஸ்நானஞ்செய்து தற்பணங் கள் பண்ணி அவ்விடம் விட்டு வடதிசையை நோக்கிப் போகையில், தருமராஜனைப் பார் த்து உரோமசன்மர் சொல்லுகிறார்: இது பூர் வத்தில் தக்ஷப் பிரஜாபதியின் யாகசாலை. அன்றியும், உங்கள் குலத்தில் நகுஷனென் னப்பட்டவன் தேவேந்திர பட்டம் பெறு தற்கு யாகஞ்செய்த சாலை. இது குருக்ஷேத்திர பூமிக்கு வடக்கு. இதன் எல்லை முடிவு அதோ இருக்கின்றது. அந்த எல்லை முடிவில் தெரி கின்றதே அது உங்கள் குலத்தி லுதித்திருந்த யயாதி மகாராஜன் செய்த யாகசாலை. அதற்கு அருகில் இருப்பது பூர்வத்தில் நரநாராயணர் கள் தவசு செய்த சாலை என்று இவ்வாறு உரோமசன்மர் சொல்லிக் காண்பித்துக் கொண்டு போகையில், சில தூரத்திற்கு அப்பால் பிர்மவேதி யென்கிற தீர்த்தத்தைக் காண்பித்து, இது தெய்வப் பிறப்பை யபே க்ஷித்த மாந்தர்கள் இந்தத் தீர்த்தத்தில் முழு கித் தேகத்தை விடுவார்களாகில், தேவர்க ளாவார்கள். அந்த நதி சிந்துமாநதி எனப் பேர் பெற்றது. அதனுடைய கரைத் துறை யில் ஜமதக்கினி மகாரிஷியினுடைய குமா ரன் திரிநேத்ரதாரியாகிய பரமேஸ்வரனைக் குறித்து அருந்தவஞ் செய்து, மழுவாயுதத் தையும் பரசிராமனென்கிற பேரையும் பெற் றான். அதோ காண்கின்ற வனம் வசிஷ்ட ருடைய ஆசிரமம். அதற்கு அப்பாற் காணப் படுகிற சோலை சிபிச்சக்கிரவர்த்தி தவம்புரிந்த இடம் என்று உரோமசன்மர் சொல்லக் கேட்ட தருமன் சாஷ்டாங்கமாகத் தெண்ட னிட்டு, சிபிச்சக்கிரவர்த்தியின் வரலாற்றைக் கடாட்சித் தருளவேண்டு மென்று கேட்க, உரோமசன்மர் சொல்லத் தொடங்கினார்.

ஓ தருமபூபதி! சிபியென்னப்பட்டவர் மிகுந்த சத்தியப் பிரதாபத்துடன் நெடுநாள் ராச்சியபரிபாலனஞ்செய்து, பின்பு இவ்வனம் புகுந்து அநேக நாளாகத் தபசுசெய்து வரு கையில், அவருடைய மனதைச் சோதிக்கத் தேவேந்திரன் வேடனாகவும், அக்கினிதேவன் புறாவாகவும் வேடம் பூண்டு, அவ்வேடன் கைப் பாணத்தினால் அப்புறா காயம்பட்டு உட லம் வருத்தமுற்று ஆபத்து சம்பவித்ததாகத் தோற்றி, சிபியினிடத்தே பறந்து அலறி எழும்பி வந்து, சரணம் சரணம் என்று முறையமிட்டது. புறாவைச் சிபியானவர் சீக் கிரத்தில் தன்னிரு கையாலு மெடுத் தேந்தி நீ பயப்படாதே, உன்னை யார்வந்து பற்றவந் தாலும் என் பிராணனுள்ள பரியந்தம் உன்

னைப் பாதுகாக்க உறுதியாக விருப்பேன் என்று அபயஸ்தங் கொடுத்துத் தம்மிடத் திலே வைத்துக் கொண்டார். வேடனாகிய தேவேந்திரன் தலையில் மயிலிறகும் உடலில் தழையாடையுங் கட்டிக்கொண்டு அம்புறாத் தூணீரமும் வில்லுங்கையுமாக படபடப்பான பசியுடனே சிபிக்கெதிரில் ஓடோடியும் வந்து நின்று சொல்லுகிறான்: ஓ அரசனே! அந் தப் பட்சியைக் கொடுத்துவிடும். என் பெண் சாதி பிள்ளைகள் யாதொரு ஆகாரமு மில்லா மற் பசித்திருக்கிறார்கள். அவர்களுக்கு அது தான் ஆகாரமாக வேண்டுமென்று கேட்டான். சிபியானவர் வேடனைப் பார்த்து, ஓய் வேட ராஜனே! உலகத்தில் ஓர் ஆத்மாவைக் காப் பாற்ற யாவருந் தங்கள் பிராணனையாவது பிராணனுக் கொப்பாகிய பெண்சாதியை யாவது கொடுத்து விடுவார்களே யன்றி, அடைக்கல மென்போரைக் காட்டிக் கொடார் கள். இப்புறா என்னைச் சரணாகதி யென்கிற தாய் வந்தடைந்திருக்க, அதைக் கொடுத்து விடென்று கேட்டாற் கொடுப்பேனோ? கொடுக் கேன். உன் பெண்சாதி பிள்ளைகளுக்குப் பசி யாற்றல் செய்ய நவநவமாய் வேண்டிய மாம் சங்களைக் கொடுக்கிறேன். வேண்டுமானால் வாங்கிக்கொள்ளுக வென்று கூறினார்.

அம்மொழிகளைக் கேட்ட வேடுவன் சிபி யைப் பார்த்து, ஐயா! நீர் எவ்வகைப்பட்ட இறைச்சிகளைக் கொடுப்பீரானாலும் அப்புறாவி னுடைய மாம்ஸ ருசி அவைகளுக் கிருக்காது. ஆதலால், உம்மைச் சரணமடைந்த ஜீவனை விடமாட்டாத நீர் உம்முடைய தேகத்தி லிரு ந்து அப்பட்சிக்குரிய அவ்வளவு தசையை யறுத்துக் கொடுத்தால் மாத்திரம் நான் வாங் கிக்கொள்ளச் சம்மதிப்பேனென்று சொல்லி னான். அதுகேட்ட சிபியானவர் மன மகிழ் ந்து, உடனே வாளைக்கொண்டு தன்னுடைய தேகத்திற் கொஞ்சந் தோலையும் எலும்பையும் அறுத்தெடுத்து, அதை நிறைகோலாக்கி அந்தத் தராசைத் தன்னுடைய இடது கையில் தூக்கிப் பிடித்து, ஒரு தட்டில் அப் புறாவை வைத்து, மற்றொரு தட்டிற் சரியிடை யாக இரத்தம் பெருக்கெடுத்தோடத் தன் தேகத்திலுள்ள மாம்சங்களை யெல்லாம் அரி ந்து வைத்துஞ் சரிகாணாமையால், சிபி அவ் வேடனைப் பார்த்து, ஓ வேடராஜனே! நான் என்னுடைய தசையுண்ட எலும்புக்கூட்டுடன் அந்தத் தட்டில் நிற்கின்றேன். நீ தராசைத் தாங்கென்றார். அப்படியே அவ்வேடன் தாங்கி நிறுத்தி நிறுக்கும்போது சரியிடை காணவே, சிபியானவர் வேடுவனைப் பார்த்து, இப்போது நீயும் உன்னுடைய பெண்சாதி பிள்ளைகளும் பசிதீரப் புசியுங்களென்று வரு த்தமில்லாமல் மகா தைரியத்துடன் சொன் னார். அப்படிச் சொல்லுகின்றதை வேடுவ னாகிய இந்திரன் கண்டு மிகுந்த சந்தோஷங் கொண்டு, அதிசீக்கிரத்தில் தான் வேடுவரூபத் தைப் போக்கித் தேவேந்திரனாகவும் புறா அக் கினி வடிவமாகவும் பிரத்தியட்சமாகி, சிபிக் குப் பழையபடி சரீரமுண்டாகச் செய்து அவர் கோரிய வரத்தை யெல்லாங் கொடுத்து அவ ரவர் ஸ்தானங்களை நோக்கிப் போனார்கள். ஆகையால், இந்தச் சோலை சிபிச்சக்கிரவர்த்தி தவம்புரிந்த யாகசாலை யாகுமென்று உரோம சன்மர் கூறினார்.

## அஷ்டகோண மகரிஷியின் சரித்திரம்

கேட்டீரோ ஜனமேஜயமகாராஜனே! அவ் வைவரோடும் அப்பாற் சில தூரஞ் சென்ற உரோமசன்மர் தருமனைப் பார்த்து, ஓ தருமநந்தனா! இதோ காண்கின்ற ஆசீர்மம் அஷ்டகோண மகாரிஷியும் ஸ்வேதகேது வென்பவரும் கூடியிருந்து தவம் பண்ணி இடமென்று கூறினர். அதுகேட்ட தரும ராஜன் உரோமசன்மரை நோக்கி, அவர்க ளுடைய சரித்திரம் எப்படிப்பட்டதோ அதைக் கொஞ்சம் தெளியச் சொல்லவேண்டு மென்று வினவ, உரோமசன்மர் சொல்லத் தொடங்கினார். இப்பூமண்டலமெங்கும் கொண் டாடும்படியான அநேக பக்தரென்னும் நாமம் புனைந்த பிர்மரிஷியானவர் நெடுநாள் தவ மிருந்து, பிறகு சுசாது யெனப் பேர்கொண்ட பிராமணப் பெண்ணைக் கலியாணம் செய்து, அப் பிராமணப் பெண்ணுடன் காமநூலில் கூறியபடி வாசமுடன் நேசித்துக் கூடியிருந் தார். பின்பு அந்த அம்மாள் கருப்பமுற்று நெடுநாளாகியும் பிரசவிக்காமல் இருக்கையில் அம்மாதினுடைய பதியாகிய அநேக பக்தர் பிள்ளை ஆசையினால் கணக்கில்லாப் பிராமணப் பிள்ளைகளுக்கு இரவும் பகலும் இடைவிடா மல் வேதாகம சாஸ்திரங்களைப் போதிக்கும் போது, அப் பிள்ளைகளில் ஒருவன் நித்திரை

மயக்கத்தால் கண்ணைமூட, அவனைப் பார்த்து அடா பயலே! நித்திரை செய்கிருயோ வென்று அதட்டிக் கேட்க, சுசாவினுடைய கருப்பத்துள் நெடுநாளாக இருந்த பிள்ளை யானது கருப்பத்தில் இருந்தபடியே பிதா கோபமாகச் சொன்ன சப்தத்தைக் கேட்டு, ஓய் பிதாவே! அறுபது நாழிகையிலும் ஏமாறுமல் வித்தையைக் கற்பித்துக் கொடுத்து வந்தா லும் ஒருபோதாவது நித்திரை ஏமாரிக்கை செய்யாது விடுமோ என்று சிசு சொல்லக் கேட்ட பிதாவானவருக்கு அக்கணமே கோபம் மிகவுமுண்டு, வேத வித்தைக்கு நீ இடையூறு சொல்ல வந்தபடியால், நீ பூபதனமாம்போது அஷ்ட கோணத்துடனேகூட முடவனுகப் பிறக்கக்கடவை யென்று சபித்தார்.

அன்றுபோய் மறுநாள் அவர் பெண் சாதியானவள் புருஷனை நோக்கி, ஸ்திரீகளுக் குப் பிரசவகாலம் நேரிடப் பத்து நாளைக்கு முன்னதாகக் காயமருந்துகளைப் புருஷர்கள் சேகரித்து வைத்திருக்கின்றது வழக்கமாமே? ஆகையால், தேவரீர் அவ்வௌஷதங்களைக் கிரமமாகச் சேகரித்து வைக்கவேண்டுமென்று சொல்ல, நல்லதென்று பெண்ஜாதியை வீட்டில் இருக்கச்சொல்லி, மிதிலாபுரிக்குரிய அரசனானவன் யாகஞ் செய்த சாலையிடமாய் அநேக பக்தர் போனுர். அவ்விடத்தில் வந் திக ரென்னப்பட்ட ஓர் பிராமணருக்கும் அநேக பக்கரென்னப்பட்ட இப்பிராமணருக் குஞ் சாஸ்திர தர்க்கஞ் சம்பவித்து, வந்திக ரென்பவருடைய கேள்விக்கு அநேக பக்தர் சமாதானங் கூற வகையற்றுப் பின்னிட்டு, அந்த மனஸ்தாபத்தாற் சமுத்திரத்திலே கடுந்தவஞ் செய்யச்சென்றுரே யொழிய, தன் பெண்சாதியின் பிரசவகாலத்திற் குபயோக மாகும்பொருட்டுச் சேகரஞ் செய்யப்போன காயச்சாமானைச் சம்பாதித்து வீடுவந்து சேர் ந்தவரல்லர். இவ்வித சமயத்தில் அவரு டைய பெண்சாதி கருப்பவாதையுடன் சுப முகூர்த்தத்திலே ஓர் புத்திரனைப் பெற்றுள். அப்புத்திரன் பிதாவாக்கியப்படியே எட்டுக் கோணலாகப் பிறந்தான். அவனைத் தாயான வள் கிஞ்சித்தும் சந்தோஷமுங் கிஞ்சித்துத் துக்கமுமாய் வளர்த்துக்கொண்டும், அதோ டுங்கூட காயமருந்து கொண்டுவரப்போன புருஷன் வரவு மாயமானதைச் சிந்தித்துக் கொண்டு மிருக்கும்போது, இச்சாதுவினு டைய தமக்கையைத் தானவரென்னப்பட்ட முனிவர் கலியாணஞ்செய்து அந்த வனத்தில் ஒரு ஆசிரமத்திலிருந்தார். அவளிடத்திற் சுகேதுவென்னும் பிள்ளை யொன்றுண்டாயிற்று.

அப்போது சுசாது ஆனவள் அஷ்ட கோணப்பிள்ளையை எடுத்துக்கொண்டு தமக் கை வீடுபோய்ச் சேர, இந்த அஷ்டகோணப் பிள்ளையானது தனது பெரிய தாயாருடைய புருஷனாகிய தானவரென்பவரைத் தனது தகப்பனாராக யெண்ணிக்கொண்டு, அவரிடத் தில் அவருடைய குமாரனாகிய சுகேதுவென் பவனுந் தானும் வேதமுதலிய சகல சாஸ்தி ரங்களையுங் கற்றுணர்ந்திருக்கையில், ஓர்நாள் தானவரென்பவரைத் தன் தகப்பனாரல்லவெ ன்று நிதானித்துத் தாயாரைக் கண்டு எனது பிதாவெங்கே என்று கேட்க, அதற்குத் தாயா ரானவள் கேளாய் குழந்தாய்! உனது தகப் பன் மிதிலாபுரியென்னும் பட்டணத்திற்குப் போனவிடத்திலே வந்திகன் என்னும் பேர் கொண்ட ஓர் பிராமணனுடன் சாஸ்திரவிதி யில் வாக்குவாதஞ் செய்து தோற்றுச் சமுத் திரத்திற்போய்த் தபசுசெய்கிருரென்றுசொன் ஞள். அதைக் கேட்டவுடனே அஷ்டகோ ணப் பிள்ளையானது மிதிலாபுரியை நோக்கிப் போய் அப்பட்டணத்து ராஜனிடத்தில் நெருங்கி, தன் தகப்பனை ஜெயித்த வந்திக ரென்பவரை அழைத்து வரவும் அவரும் என் தகப்பனும் எந்தச் சாஸ்திரத்தில் வாக்குவாதஞ் செய்தார்கள் அதை நானறியச் செய்யவும் வேண்டியதென்றுகேட்க, அவ்வர சனும் அந்தச் சிறுபிள்ளையைப் பார்த்துச் சந்தோஷித்து வந்திகர் என்பவரை வர வழைத்தான். வந்திகரானவர் அஷ்டகோ ணப் பிள்ளையைப் பார்த்துப் புன்னகை கொ ண்டு, அப்பா! இன்னசாஸ்திரத் தர்க்கத்தி ஞல் உனது தகப்பனைத் தோற்கச் செய்தேன் என்றுர். அதுகேட்ட அஷ்டகோணப்பிள்ளை அப்படியா வெகு சந்தோஷமாச்சுது என்று சிரகம்பிதஞ் செய்து, ஆனல் இந்த சாஸ்திர முமக்குப் பரிச்சிய முண்டாவென்று ஓர் சாஸ் திரப் பேரைச்சொல்லி, அதில் நீரும் நானும் தருக்கஞ் செய்வோமாவென்று அப்பிள்ளை கேட்க, அப்படியே தருக்கஞ் செய்வோ மென்று அவர் சம்மதிக்க, அவ்வரசனுடைய சபையிற்றுனே இவர்களிருவருந் தருக்கஞ் செய்ய ஆரம்பித்தார்கள்.

அப்போது அத்தருக்க முடிவில் வந்தி கர் என்பவர் அந்தப் பிள்ளையினுடைய

ஆக்ஷேபத்திற்குச் சமாதானஞ் சொல்ல வல்லமையில்லாமற் போனபடியால், அஷ்டகோணப் பிள்ளையானது வெற்றி யடைந்தது. உடனே ஜெயஸ்தம்பம் நாட்டித் தனது தகப்பனாரிருக்கின்ற சமுத்திரம்போய் அவரைக் கண்டு தரிசித்து, கைகூப்பி வணங்கித் தீர்க்க தெண்டஞ் சமர்ப்பித்து, வந்திகன் என்கிற பிராமணனைத் தான் ஜெயித்த வயணத்தையெல்லாஞ் சொல்லிற்று. அனேக பக்தரென்னப்பட்ட அத் தகப்பனாரானவர் அந்தப் பிள்ளையினுடைய சாமர்த்தியத்திற்கு மிகவுஞ் சந்தோஷமாகி, அப்பிள்ளையைத் தழுவிக்கொண்டு தமது ஆசிர்மம் வந்து சுகாது என்கின்ற அவருடைய பெண்சாதியின் துக்கத்தை மாற்றி, ஒருவர்க்கொருவர் பிரியாமலிருந்தார்கள். ஆகையால், அஷ்டகோண மஹாமுனி தபஞ் செய்த ஆசிர்மம் இதுவென்று சொல்லி அப்புரம் போகையில், மற்றோராசிர்மங் காணப்பட்டது. அதைக் காட்டி இந்த ஆசிர்மத்தில்தான் பாரத்துவாச ரிஷியினுடைய குமாரன் காமவாஞ்சையினாலே இறந்துபோனான் என்று உரோமசன்மர் சொல்லி, பின்னையும் அவனுடைய பூர்வோத்திரத்தைச் சொல்லுகிறார்:

## துல்யவக்கிரன் சரித்திரம்

கேளும் தருமநந்தனா! பாரத்துவாச முனிவரானவர் துல்யவக்கிரனென்றொரு பிள்ளையைப் பெற்றார். ஹிரப்யமுனிவரென்பவர் இரண்டு பிள்ளைகளைப் பெற்றார். இவ்விரண்டு முனிவரும் இணைபிரியாச் சிநேகிதர்களாக விருந்து அம்மூன்று பிள்ளைகளுக்கும் வித்தைகளைச் சொல்லிவித்தார்கள். ஹிரப்யருடைய இரண்டு பிள்ளைகளுக்குச் சகல வித்தைகளுஞ் சம்பூர்ணமாக வந்தன. பாரத்துவாசருடைய பிள்ளைக்கு ஓர் அக்ஷரக்கியானமும் வரவில்லை. அந்தப் பிள்ளையாகிய துல்யவக்கிரன் காட்டினிடம் போய்த் தனக்கு வித்தை வரவேண்டுமென்று தபசு செய்யும்போது, வானவர் கோமானாகிய தேவேந்திரன் அவனுக்குப் பிரத்தியக்ஷமாகி வித்தை வரவேண்டுமாகில் ஓர் குருவினிடத்திற் போய்ப் பிரயாசைப்பட்டுப் படித்துவரப் பண்ணிக்கொள் என்று சொல்லி மறைந்தான். திரும்பவும் துல்யவக்கிரன் தவஞ் செய்துகொண்டிருக்கையில் தேவேந்திரன் விருத்தப் பிராமண வடிவமாக மறுபடியுந் தோன்றி, கங்கையில் ஓடுகின்ற பிரவாகத்தை மண்ணை வெட்டிப் போட்டுத் தடுத்து அணைகட்டென்றான். அதுகேட்ட இந்தத் துல்யவக்கிரன் நகைத்து, ஒருவராலுந் தடுக்கக்கூடாத பிரவாகத்தை மண்ணினால் அணைகட்டென்கிறீர். நீரோ தேவேந்திரன். ஆனால், என் கோரிக்கையை மோசஞ் செய்ய இந்தப் பிராமணவேடம் பூண்டு வந்தீர். ஆகிலும் உம்முடைய உண்மையான சரீரத்தைக் காட்டுமென்று துல்யவக்கிரன் கேட்க, அப்படியே தேவேந்திரன் தனது நிஜரூபத்தைக் காண்பிக்க, அவனுக்குத் துல்யவக்கிரன் சாஷ்டாங்க தெண்டனிட்டு வித்தை வரும்படி வரந்தர வேண்டுமென்று கேட்டான்.

அதற்கு இந்திரன் சொல்லுகிறான்: அப்பா சிறுவனே! வித்தையானது ஓர் ஆசான் முன்னிலையில் உனக்கு வரவேண்டுமே யொழிய மற்றப்படி வராதென்றான். நீர் வேண்டுமானால் வித்தை யொன்றுதானா வராது நீரே குருவாயிருந்து அக்ஷரக்கியானானுக்கிரகம் பண்ணுமென்று தடுத்துத் தடுத்துச் சொல்ல, அப்போது இந்திரனுக்குச் சந்தோஷம் பிறந்து, உனக்குச் சகல வித்தைகளும் வரக்கடவதென்று சொல்லி மறைந்து போய்விட்டான். உடனே துல்யவக்கிரனுக்கு எல்லா வித்தைகளும் வந்தன. அதன்பேரில் தன்னுடைய தகப்பனாராகிய பாரத்துவாசரிடத்திற்குப் போய்த் தெண்டனிட்டுத் தான் வரத்தினாற் பெற்ற வித்தைகளின் வயணங்களைப் பெருமையாகச் சொல்ல, தகப்பன் கேட்டு இவனுக்கு வித்தியா கெர்வமிருக்கிறதாகையால் இவனைத் தெளிவுறச் செய்யவேண்டுமென்று கருதிக் கீதவித்தையைச் சொல்லி வைத்தார். அதையும் அவன் செவ்வையாகக் கற்றுக்கொண்டான். இப்படியிருக்க, துல்யவக்கிரனானவன் தன்னுடைய தகப்பனாருக்குப் பிராண சிநேகராகவிருந்த ஹிரப்யரென்பவருடைய ஆசிர்மத்துக்குப் போய், அங்கு அவருடைய இரண்டு குமாரர்களிற் பராவசு என்பவருடைய பெண்சாதி திவ்ய செளந்தரியவதியா யிருக்கக்கண்டு மோகங் கொண்டான்.

அவளோ மேகங்களை அந்தரத்திலகற்றி, கூந்தற் பனைகளை வனங்களிற் றுரத்தி, கரிய மணல்களை நதிகளிற் படுத்தி, இருட்கூட்டத்தைப் புதர்களிற் போக்கி, கைவலங்களைச் சிந்துவில்விடுத்து, சூரியனுடைய பிரபையை

மாற்றுவேனென்று தாவிய ஊழிமாலையினுங்
கறுத்து, பனிநீர் தோய்ந்து சிக்கற்ற வார்குழ
லும், இளம்பிறைபோன்ற திருநுதலும், மன்
மதனுடைய கரும்பு வில்லைப் பொருவும் புரு
வங்களும், அந்த மன்மத னழகுபார்க்குங்
கண்ணாடிக்கிணையாகிய கன்னங்களும், அவன்
கணைகளும் வாரிதி நஞ்சு மஞ்சும்படியான
வெற்றிவேற்கிணையாகிய நெடிய விழிகளும்,
எள்ளின் மலரைப்பழித்த நாசியும், முல்லை
முகையைக் கடிந்த தந்திபந்திகளும், உரிசை
யில் முந்துஞ் செந்தேன்சிந்து மொழிகளும்,
ஒள்ளிய வலம்புரிச் சங்குக்கிசைத்த கழுத்தும்,
கொவ்வையினுஞ் செவ்வையாய்ச் சிவந்த
அதரங்களும், செவ்விள நீருட னெதிர்த் தம
ராடிவென்று அவைகளைக் கீழ்ப்படுத்தி, விலை
யுண்டு-அடியுண்டு-உள்ளங்கையிற் றூக்குண்
டு-குலையுண்டு-இடியுண்டு-கண்ணீர் ததும்ப
வெட்டுண்டலைச் செய்வித்த குசங்களென்னும்
ஸ்தன்னியங்களும், நெடிய வேலைவென்ற
கஸ்தங்களாகிய அஸ்தங்களும், மதனராஜ
னுடைய ரொக்கப்பெட்டிக்குத் திறவுகோல்
போன்று வானகம் புக்குழும் வானகங்களும்,
நெடுமால் பள்ளிகொண்ட வடவால் போன்ற
உதரமும், மல்லிகை மலரினுமழகிய உந்தி
யும், சந்தேகமாகிய இடையும், ஆடவர்களு
டைய ஆசையின் பிரமாணம் எவ்வளவோ
அவ்வளவாகி அரவினுஞ் சிறந்தோங்கிய
அல்குலும், காமுகராகிய மதயானைகளைக் கட்
டும்படியாகிய இரண்டு பசுங்கதலித் தொடை
களும், நண்டுபோன்ற முழந்தாட்களும், சினை
விரால்யொத்த கெண்டைக்கால்களும், தராசி
லுஞ் சிறந்த கணைக்கால்களும், கூர்மத்தின்
முன்கை ஜெயித்த புறங்கால்களும், செம்பஞ்
சும் மூதுபஞ்சு மிருதுவாகிய பாதங்களும்
பொருந்தி யிருக்கின்ற இத்தியாதி லக்ஷ
ணத்தை யுடையவள்.

இப்படிப்பட்டவள் அவ் வாசிரமத்தில்
வீற்றிருக்கக்கண்ட அந்தத் துல்யவக்கிரனென
வன் மயங்கி தயங்கி காமாந்தகாரியாக வியங்கி
இருக்கையில், ஒருநாள் அந்தச் சற்குண
முடைய பொற்கொடியானவள் நற்குடங்
கொண்டு தீர்த்தக்கரைக்குப் போகும்போது,
மேற்கூறிய துல்யவக்கிரனென்பவன் அந்தப்
பெண்ணரசியின் பின்தொடர்ந்து அடர்ந்து,
மன்மத பாணத்தினாலே என் பிராணன் வாடு
தென்றும், உன்னைத் தேடுதென்றும், சித்தம்
நாடுதென்றும், காமாக்கினி நீடுதென்றும்,
உன்னிடத்தில் எனக்கு மிகுந்த ஆசை யாகுக்
கிற விந்நேரமே சையோகிக்க வேண்டுமென்
றுஞ் சொல்லி அவளுடைய கையைப்பற்றப்
போகையில், அந்த மகா கற்புடையவள் பார்த்
துத் தன்னைத் தப்புவித்துக்கொள்ள யோசனை
செய்து, அவன் தன்னை அடாதது செய்யத்
தொடாதபடிக்கு இன்றைய்தினம் போகட்டும்
நாளையத்தின மாகட்டுமென்று நல்வசனங்க
ளாலே மாற்றிப் போய், தன் மாமனாராகிய
ஹிரப்பியரானவர் நேமத்துடனே ஹோமம்
பண்ணுகையில் அவரை அவள் சாஷ்டாங்க
மாகத் தெண்டனிட்டு, அந்தத் துல்யவக்கிரன்
செய்த அக்கிரமங்களைச் சொல்லிக்கொண்ட
னள். அவைகளைக் கேட்டமாத்திரத்தில் அவ
ருக்கும் கோபம்பிறந்து, ஒரு மந்திரத்தினாலே
அந்த ஹோமத்தி லாகுதியிடவும், அந்த
ஹோம அக்கினியிலே மிகுந்த அகோர
தந்தங்களுடனே ஓர் இராக்ஷசனும் ஓர்
இராக்ஷசியும் உற்பவமாகி வர, அவர்களை
அம்முனிவர் பார்த்து, நீங்கள் இக்கணமே
சென்று பாரத்துவாசர் பிள்ளையாகிய துல்ய
வக்கிரனைக் கொல்லுங்கள் என்று ஆக்கியா
பித்தனுப்ப, அவர்கள் அவ் விடைபெற்றுத்
தடையின்றிப் போய் அந்த அக்கிரம மிகுந்த
வக்கிரனைக் கொன்று மென்று தின்று போட்டு
வந்து, மீளவும் அந்த ஹோமாக்கினியிலே
விழுந்து மறைந்துபோனார்கள். பின்பு அந்த
பழிவசனத்தையும் பிள்ளை யிறந்துபோனதை
யுங்கேள்விப்பட்ட தகப்பனாராகிய பாரத்துவா
சர் தமது பிராணனைவிட்டுப் பரலோக மடைந்
தார். அந்த இடந்தா னிதுவென்று சொன்ன
உரோமசன்மர் பின்னுஞ் சொல்லுகிறார்:

### பிருகுத்துய்மராஜன் கதை

ஓ தருமபூபதி! அந்தஹிரப்பியரும் அவ
ருடைய இரண்டு புத்திரர்களும் ஆசிரமத்தில்
இருக்கையில், இராச்சிய பரிபாலனஞ் செய்து
வரும்படியான பிருகுத்துய்மனென்னப்பட்ட
மகாராஜனானவன் தானொரு யாகஞ் செய்ய
வேண்டி, ஹிரப்பியரிடத்திற்கு வந்து தீர்க்க
தெண்டம் சமர்ப்பித்து அவரைப் பார்த்து,
அந்த யாகத்தை நிறைவேற்றுவதற்கு உம்மு
டைய பிள்ளைகளிருவரையுந் தயவு செய்து
அனுப்ப வேண்டுமென்று வணங்கிக் கேட்
டான். ஹிரப்பியர் சம்மதியாகித் தமதிரண்டு
பிள்ளைகளையும் அவ்வரசனுடனே கூட்டி
யனுப்ப, அவர்கள்போய் அரசனுக்கு வீர
தீக்ஷை கொடுத்துத் தாங்கள் ஆசிரியர்களாக

ஏற்பட்டு ஒரு வருஷபரியந்தம் இடைவிடாது யாகத்தைச் செய்துவந்தார்கள். அவர்களுடைய தகப்பனாராகிய ஹிரப்பியரானவர், என்ன நமது பிள்ளைகள் போய் நெடுநாளாகியுந் திரும்பி வராமலிருக்கின்றார்களே. நாமாவது போய் அவர்களைப் பார்த்து அழைத்துக் கொண்டு வருவோமென்று கருதி, தமது ஆசிரமத்தை விட்டு புறப்பட்டு அவ்வரசனுடைய நாட்டை நாடித் தேடிவருகையில், யாகம் செய்விக்கிற நமது பிள்ளைகளிருவரில் மூத்தபிள்ளையானவன் தருப்பைவேண்டிக் காட்டை நோக்கிப் போய்த் தருப்பைகளை சேகரிக்கும்போது, அவ்விடந் தேடிக்கொண்டுவருந் தன்பிதாவை மனுஷனென்று குறியாமற் புலியென்று இலி கொண்டு ஒரு தருப்பையை மந்திரித்து எறிந்துவிட்டான். அந்தத் தருப்பையே ஓர் ஆயுதமாக வந்து ஹிரப்பியருடலிற்பட்டுருவிற்று. அவர் அக்கணமே இஷ்ட தெய்வத்தின் நாமத்தை அலறிக் கூப்பிட்டுப் பூமிமீது வீழ்ந்திறந்தார்.

அப்பால் அச்சப்தத்தைக் கேட்ட பிள்ளையானவன் சற்று நிதானித்து, ஐயோ! புலியென்றெண்ணியல்லவா தருப்பையை மந்திர பிரயோகஞ் செய்தது. அந்தத் தருப்பை ஓர் மனிதனைக் கொன்றுவிட்டதுபோல் இருக்கின்றதே. அதனாற்றான் மனுஷனுடைய கூக்குரல் சப்தமாகவிருக்கின்றது. ஆனதாற்போய் பார்ப்போமென்று வந்து பார்க்குமிடத்தில் அம்மந்திரந் தருப்பையினால் இறந்தவன் தன்னுடைய தகப்பனென்று கண்டு, ஓவென்றலறி அழுது பெருமூச்செறிந்து, அந்தத் துக்கத்துடனே அந்தச் சாவின் சமாசாரத்தை தம்பியுடன் சொல்லுவோம் என்று பட்டணத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தான். அப்போது பிரமஹத்தியானது அவனை அப்புரமிப்புரம் அசையவொட்டாமல் இருத்தித் தகைத்தது. அதற்கு அவன் மிகவும் பயந்து, கண்களைக் கெட்டியாக மூடிக்கொண்டு இருந்துவிட்டான். ஆனால், அவனுடைய தம்பியானவன் நெடுநேரம்வரையில் தமயன் வராமையினாலே தானும் தமயனைப் போய்க் கண்டு அழைத்து வருவோமென்று காட்டினிடம் போகையில், பெருங்காற்றினால் அடிப்பட்டு வேரற்றுவிழுந்த மரம்போல் விருந்திருக்கின்ற தகப்பனைக் கண்டு மிகவுந் துக்கப்பட்டு, பக்கத்திற்கண்ணை மூடிக்கிடக்கின்ற தமயனையும் பார்த்து, தட்டி எழுப்பி விவரமெல்லாங் கேட்டறிந்து, தகப்பனாரை அவ்விடத்தில்தானே தகனம் செய்து போட்டு தமயனைப் பார்த்து, நீ அரசனிடத்திற்குப் போய் யாகசாலையினுடைய அலுவலை பார்த்துக் கொண்டிரு. நீ தகப்பனைக் கொன்றதினால் உன்னைத் தொடர்ந்திருக்கிற பிர்மஹத்தியையும் அதனால் உனக்குண்டான பாபத்தையும் நான் விமோசனமாக்கி வருகிறேன் என்று சொல்லி அனுப்பி, அந்தப் பிர்மஹத்தியைத் தானேற்றுக்கொண்டு, பூமியில் இருக்கின்ற புண்ணிய தீர்த்தங்களாடி, தேவதா பூசைகளையுந் தரிசனங்களையும் செய்து, அதனால் தினே தினே பிதாவைக் கொன்ற தோஷத்தையும் அதனால் உண்டான பிர்மஹத்தி தோஷத்தையும் நிவர்த்திபண்ணி புண்ணிய தேகியாகி, மறுபடியுந் தன் தமயன் யாகஞ்செய்து வைக்கின்ற அந்த அரசனுடைய யாகசாலையை நாடிப்போனான்.

அக்கால் தன்னை நாடிவருகின்ற தம்பியைப் பார்த்தவுடனே தமயனுக்குப் பொறாமை ஜெனித்து, பிருகுத்துய்மன் என்னப்பட்ட அரசனை நோக்கி, இவன் பிர்மஹத்தி சூழ்ந்தவன். இவன் இந்த யாகசாலைக்கு வரத்தகுந்த யோக்கியனல்லன். ஆகையால், இவனைப் புறம்பாக்க வேண்டியதே சரியென்றான். இதைக் கேட்டுக்கொண்டுவந்த தம்பியானவன் உடனே அவ்வரசனிடத்தில் நெருங்கி, ஓ அரசனே! பிர்மஹத்தியைத் தனக்குத் தெரியாமல்வரப் பண்ணிக்கொண்டவன் இவனேயென்று தன் தமயனைச் சுட்டிக்காட்டி, அந்த ஹத்தியை நான் ஏற்றுக்கொண்டு பூமிப்பிரதக்ஷணம் வந்து புண்ணிய நதிகளில் ஸ்நானம்பண்ணி தேவதாபூசைகளைச் செய்து புனிதனாகி இவனையுஞ் சுகப்படுத்த வந்தேன். அதற்கு இவன் சந்தோஷப்படாமல் வீணாக என்பேரிற் பொறாமை கொண்டு உம்முடனேயே சொல்லுகிறானே! இது தர்மமா? இது உமக்குச் சரியாக விருந்தால் நான் செலவு வாங்கிக் கொள்ளுகிறேன் என்று சொன்னான். இதுகளைக் கேட்ட அந்த அரசன் அவ்விருவருள் தம்பியிடத்திற் சந்தோஷப்பட்டு, தமயனுந் தம்பியும் வேற்றுமையின்றி யொற்றுமையா யிருக்கும்படியாகச் செய்து, அவ்விருவர்களைக்கொண்டே தானெண்ணிய யாகத்தை நிறைவேற்றி வந்தான். அப்படி நிறைவேற்றி வருகையில் தேவர்கள் எல்லாரும் வந்து அவிர்ப்பாகங்களைப் பங்குபடி வாங்கிச் சாப்பிட்டுச் சந்தோஷமடைந்து, அவ்வரசனுக்கு

வேண்டிய வரத்தைக் கொடுத்து, அப்பிராமணப் பிள்ளைகளைப் பார்த்து உங்களுக்கு வேண்டிய வரத்தைக் கேளுங்கள் தருகிறோமென்று தேவர்கள் சொன்னார்கள்.

அப்போது தமயனுந் தம்பியுந் தேவர்களை நோக்கி, எங்களாலிறந்துபோன எங்கள் பிதாவையும், அந்தப்பிதாவினு லிறந்துபோன துல்யவக்கிரனையும், அந்த வக்கிரனிறந்தானென்று உயிர்விட்ட பாரத்துவாசரையும் பிழைப்பிக்கத்தக்க வரத்தைக் கடாக்ஷிக்க வேண்டுமென்று கேட்க, தேவர்கள் அப்படியே அவர்கள் எழுந்து வரக்கடவர்களென்று அனுக்கிரகம் பண்ணினார்கள். அக்ஷணத்தில் தானே ஹிரப்பியரும் பாரத்துவாசரும் வக்கிரனும் வந்து தேவர்களுக்குத் தீர்க்கதெண்டஞ் செய்தார்கள். அவர்களைத் தேவர்கள் ஆசீர்வதித்தார்கள். அப்போது வக்கிரனானவன் தேவர்களைப் பார்த்து, ஹிரப்பியர் என்னைக் கொல்லவும் நான் சாகவும் நேரிட்டது. எந்தவிதத்தினாலென்றும், அந்த ஹிரப்பியர் ஒரு மானிடனிடத்தில் வாசித்துக் கொண்டவர். நான் தேவேந்திரனை நோக்கி நெடுநாள் தபஞ்செய்து அவருடைய வரப்பிரசாதத்தினாற் சகல வித்தையும் வாசித்துக் கொண்டவன். நான் அவருக்கும் மீசுரப்பட்டவனாக இருக்க வேண்டுமே. அப்படிக்கில்லாமல் அவர் மீசுரப்பட்ட காரியம் எப்படி யென்று வினவினான். அதற்குத் தேவர்கள் ஓ வக்கிரா! ஆசிரியனிடத்திற் கிரமமாக வாசித்த எவர்களும் எப்போதுந் திறமைசாலிகளாத் தான் இருப்பார்கள். மற்றப்படி வரப்பிரசாதத்தினால் வாசித்தவர்கள் அவர்களுக்கீடாக மாட்டார்கள் என்று சொல்லிப் போய்விட்டார்கள். பின்பு பிருகுத்தூய்மனென்னப்பட்ட அரசனானவன் தான் கோரிய யாகத்தை முடித்த ஆசாரியர்களிருவருக்கும் அவர்களுடைய பிதாவாகிய ஹிரப்பியருக்கும், வக்கிரனுக்கும், அவனுக்குப் பிதாவாகிய பாரத்துவாசருக்கும் வேண்டிய நிதிகளைக் கொடுத்துச் சாஷ்டாங்க தெண்டஞ் செய்தான். அவர்களும் அவைகளை வாங்கிக்கொண்டு ஆசிகூறி, அவனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு தத்தம் ஆசிரமம் வந்து சேர்ந்து நெடுங்காலந் தபத்தில் இருந்தார்கள். அவர்களுடைய ஆசிரமங்கள் இவைகளென்று உரோமசன்மர் சொன்னார்.

உரோமமுனிச்சருக்கம் முற்றிற்று.

## ஏழாவது,

## வீமன் மந்தாரபுஷ்ப யாத்திரைச் சருக்கம்

### கண்ணன் துதி

எண்டோளா னிதயத்தி லிருப்பவனைச் சுதனென்கு, திண்டோளா னிதயத்திற் செறிந்திருப்போன் சிவனாமாற், பண்டோதியுணர்ந் திரண்டாய்ப் பகர்சமய வாதிகளைக், கொண்டோதே னவரையுமோர் பொருளாயுட் கொள்ளேனால்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவையனைத்துங் கேட்ட தருமராஜன் சந்தோஷப்பட்டு, அவ்விடத்திலுள்ள தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ்செய்து, ரிஷிகளெல்லார்க்குந் தெண்டனிட்டு ஆசீர்வாதம் பெற்று, கங்காநதிக் கரையில் வந்து ஸ்நானஞ் செய்து தர்ப்பணங் கொடுத்து, அதற்குமேலும் உரோமசன்மர் காண்பிக்கப்பட்ட எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்து, பிறகு இந்திரநீலசயில மென்னப்பட்ட பர்வதச்சாரலுக்குப் போனார். அங்கே அந்தப் பர்வதத்தினுடைய உன்னத முதலானதையுங் கண்டு அதிலுள்ள சுனைகளில் ஸ்நானஞ் செய்து அப்பாற் போகையில் உரோமசன்மர் தருமனைப் பார்த்து, ஓ மகாராஜனே! உம்முடைய தம்பி அர்ச்சுனன் தபசு செய்த ஸ்தானம் இதுவென்று சொன்னார்: அப்படிச் சொல்லவே யாவரும் உதிர சம்பந்தத்தினாலும் பிராதுர்வாஞ்சையினாலும், அவ்விடத்திலேயே அருச்சுனனைப் பிரத்தியக்ஷமாகக் கண்டவர்கள்போல் ஆனந்தப்பட்டு, தசாங்கரென்னப்பட்ட ரிஷி ஆசிரமம் போனார்கள். அங்கிருந்த தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்ததுமல்லாமல், ரிஷிகளாலும் ஆசீர்வதிக்கப்பெற்று அப்பாற் போகையில், இதுதான் தேவர்கள் அமிர்தங் கடைந்த மந்தரகிரி என்று காட்டி வணங்கச் செய்து, கங்கா நதிகளும் அருவிசொரியப்பட்ட காந்தர்ப்ப மென்னும் மலை இதுவென்று காண்பித்து, அந்தப் பர்வதச் சாரலில் தவஞ் செய்கின்ற ரிஷிகள் எல்லாரையுங் கண்டு தரிசிக்கச் செய்து, தருமராஜனைப் பார்த்து உரோமசன்மர் பின்னுஞ் சொல்லுவதாயினர்:

கேளும் தருமநந்தனா! இவ்விடத்திற்கு நாறுயோசனை தூரத்தில் என்னை யாண்டரு

ளிய பரமசிவன் எழுந்தருளி யிருக்கப்பட்ட கிரி இருக்கின்றது. அதோ வாகையுடன் தோகைமயிலின்மீது எழுந்தருளாநின்ற சுப்பிரமணியருடைய ஸ்தலம். அந்த காந்தர்ப்ப கிரியிலே ஓர் ஆண்டுவரையில் தவஞ் செய்துகொண்டிருப்போம் வாருமென்று உரோமசன்மர் சொல்லக்கேட்ட தருமன் சந்தோஷப்பட்டு, அப்படியே செய்வோமென்று இணங்கித் தானுந் தம்பிமார்களும் பிராமணர்களும் அவ்விடத்திற்போய் தங்கி, காய் கிழங்குகளைப் பக்ஷணம் பண்ணிக்கொண்டு தவத்திலிருந்தார்கள். ஓர்நாள் மேகவாகனனாகிய தேவேந்திரனுடைய சிரத்திலிருந்து புஷ்பமொன்று நழுவி அக்கினி குமாரத்தியாகிய திரௌபதி தேவி முன்பாக வந்து விழுந்தது. அதைக் கண்டெடுத்து அவள் வாயு புத்திரனாகிய வீமராஜனைப் பார்த்து இந்தப்புஷ்பம் பிரமதேவனிடத்தில் வாசமாக யிருக்கப்பட்டதோ? சூரிய பகவான்கையிலிருக்கின்ற மந்தாரபுஷ்பமோ? திருப்பாற்கடலில் வீற்றிருக்கின்ற ஸ்ரீ மகாலட்சுமியுடன் பிறந்த மலரோ? ஒன்றுந் தெரியவில்லை. இதின் மணம் எங்கும் வியாபித்திருக்கின்றது என்று சொல்லி, இதுபோலொத்த புஷ்பமொன்றைத் தனக்குச் சம்பாதித்துக் கொடுக்கவேண்டும் என்று கேட்டாள்.

அதுகேட்ட வாயு குமாரனாகிய வீமன் சந்தோஷமாய்ச் சம்மதித்து, அப்புஷ்பத்தை வாங்கிக்கொண்டு உரோமசன்மருடைய பாதத்தில் வைத்து தீர்க்கதெண்டஞ் செய்து, இந்தப் புஷ்பத்தைப்போ லொன்றைச் சம்பாதிக்கவேண்டியதற்கு இடம் எவ்விடமோ அவ்விடத்தை தேவரீர் தெரியச் சொல்லவேண்டுமென்று கேட்டான். அதற்கு உரோமசன்மர் ஓ வீமராசனே! இவ்விதபுஷ்பங் குபேரனுடைய பட்டணமாகிய அளகாபுரியிலுந் தேவேந்திரனுடைய பட்டணமாகிய அமராபதியிலுஞ் சம்பாதிக்கலாம். ஆனால், முன்னொருகால் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஒரு ஸ்திரீயினிமித்தந் தேவலோகத்திற்குப் போய் ஒரு புஷ்பங் கொண்டுவர, அவர் பட்டபாடு மெத்தவுண்டு. அவருக்கே அப்படியானபோது, உனக்கு அதிலும் வெகு பிரயாச மிருக்கலாமென்று சொன்னார். வீமன் உடனே அவருக்கு மறுபடியுந் தெண்டனிட்டு, தன் கையிற் கெதையும், வில்லும் எடுத்துக்கொண்டு, திரௌபதா தேவிபாற் செலவு பெற்றவனாய் மும்மதம் பெருகித் தான் போனவழியே சம்மதமாக நடக்கும் யானையைப்போல அளகாபுரியை நோக்கி நடந்தான்.

இவ்வாறு தனிமையாக அளகாபுரியை நோக்கி ஒரே நெட்டாகச் செல்லுகையில், மகமேருவைப்போல் விளங்காநின்ற அவனுடைய சரீரத்துக்குத் தகுந்த தாஷ்டீகமான கைவீச்சு கால்வீச்சுகளினால் உண்டாகின்ற காற்றுகளினாலே வழிநடையிலுள்ள பர்வதங்கள் மராமரங்கள் முதலிய யாவும் வேர்களற்று விழவும், உகாந்த காலத்துப் பெருங்காற்றென்று சங்கங்கள் புலங்களில் முத்துக்களை ஈனவும், அந்த முத்துக்களினுடைய ஒளியானது சந்திரோதயம்போற் பிரகாசிக்கவும், அப்பிரகாசத்தைக் கண்டு ஆம்பற்புஷ்பங்கள் மலரவும், இவ்விதத் தன்மையோடுங் கூடிய குருநாட்டு வளமைக் கதிபதியாகிய வீமராஜன் நடக்கிற விசை பின்னும் எப்படியிருந்ததென்றால், ஸ்ரீராமருடைய தூதனாகிய அனுமான் இலங்காபுரிக்குத் தூது போகும் போது அவ்விடத்துள்ள அரசர் குலத்தை அதஞ் செய்ததுபோல், வீமனுடைய நடைவழியி லிடையி லகப்பட்ட வேடர்கள்-இராக்ஷசர்கள்-பக்ஷிசாலங்கள்-மிருகசாலங்கள் - விருக்ஷசாலங்கள் - பர்வதசாலங்கள் இவைகளெல்லாஞ் சுருண்டு, புரண்டு, திரண்டு, உருண்டு போகும்படி நடந்து, காஞ்சன வனத்தைக் கடந்து, வடமேற்றிசையிற் குலைகுலையாய்க் காய்த்திருக்கின்ற கதலி வனத்தைக் கடக்கும்போது, அக்கதலிவனத்தைக் காத்திருக்கின்ற இராக்ஷசர்கள் எல்லோரும் வீமனை வந்து சூழ்ந்து கொண்டு அப்புறம் இப்புறம் போக வொட்டாமல் மடக்கிக் கொண்டார்கள். அவர்கள் எல்லோரையும் வீமசேனன் அதாகதப்படுத்தி ரத்தாரூடும்படிச் செய்தான். அதைக் கண்டிருந்த நாகலோகத்தாரும் தேவலோகத்தாரும் பயந்து கண்களை மூடிக்கொண்டார்கள். அத்திசைக் காவலனாகிய தன் தந்தையுந் திப்ரமை கொண்டவனாய், பின்பு தன்றனையனென் றுணர்ந்து சிறிது தேறிக் கவலை யொழிந்திருந்தனன்.

## வீமசேனன் அனுமானோடு வாதித்துப் பின்பு சிநேகித்து விஸ்வரூபந் தரிசித்தல்

பின்னும் வீமன் வடதிசையாகப் போகையில், அங்குள்ள வனங்களும் - ஜனங்களும்-மலைகளும்-பூமியும்-சமுத்திரமும்-யானைகளும்-அந்தத் திசைக் காவலர்களும், திடுகி

டாயன மாகும்படியாய் நடக்கின்ற அதிர்த்தலைப் பர்வதாகிர்தி புஜத்தோடுங்கூடிய ஆஞ்சநேயன் கேட்டு, முன்ன மிலங்காபுரிக்குப் போகக் கடலைக் கடக்க வேண்டியதற்கு உபய பாதங்களையுந் தோள்களையும் நீட்சி செய்து கொண்டுபோய் இராவணனுடைய நகரத்தை யெரித்த நீண்ட வாலுடனும், ஸ்ரீராமமூர்த்தியின் நேத்திரத்திற்கு மாத்திரங் காணப்படுங் காத்திரமாகிய மகரகுண்டலங்க ளிரண்டுடனும் பிரகாசிக்கத்தக்கதாய், ஓர் உன்னதமாகிய பர்வதத்தின்பேரில் மற்றொரு பெரிய பர்வதந் தோன்றின லெப்படியோ அப்படி விளங்கி யிருந்தான். விந்தகிரிக்குச் சமதியாகிய தோட்களையுடைய வீமசேனன் ஆரவாரத்தோடு ஆர்ப்பரித்துக்கொண்டே வந்து அனுமனைக் கண்டு, இவனும் வாயு புத்திரனாகிய அனுமானின் மாய்கையால் நமக்குச் சகோதரனாக வேண்டுமென்று கருதி, உடனே பயங்கொண்டு நயங்கொண்டு ஒடுங்கி நின்றான். அப்படி நடுங்கி ஒடுங்கி நின்ற வீமசேனனை ஆஞ்சநேயன் பார்த்துக் கோபித்துச் சொல்லுகிறான்: இவ்விடத்தில் தேவர்கள் முதலிய யாவர்களும் மற்றை வீராதி வீரர்களும் வரப் பயப்படுகிறதானால் நீயோ மனிதன் எப்படி அஞ்சாமற் கெஞ்சாமல் வந்தாய் என்று அதட்டி உதட்டியாக்க் கேட்டு மறுத்தான்.

அதற்கு வீமன் ஓ வானர வீரனே! ஏன் என்னைத் தடுக்கிறாய் என்றான். உடனே அனுமானுக்குக் கோபம் பிறந்து வீமனைப் பார்த்து, உன் கையில் வில்லு, கெதையும் இருக்கின்றதென்கிற ஆண்மையினா லல்லவோ இந்தச் சேவகம் பேசுகிறாய். உன்னை நீ அறியாத மனிதனானாலும் என்னையேனும் நீ அறியச் செய்கிறேன் உன் பிரதாபத்தையும் பார்ப்போமிதோ குறுக்கே கிடக்கின்ற என் வாலை மாத்திரஞ் சற்றப்பா லெடுத்துப் போடுவையேயானால் உன்னை வீரனென்று சொல்லப்படுமென்று அனுமன் கூற, அதற்கு வீமசேனன் ஓ வானரமே! இராகவருக்குத் தூதராகக் கடலைக் கடந்து இலங்காபுரியை யடர்ந்து, அப்பட்டணத்தைத் தீயவிட்டு, இராக்கதரை மாயவிட்டு, சீதாபிராட்டியைக் கண்ணினாற் கண்டு வந்த வென் தமயனாராகிய அனுமந்தரைப் பார்க்கிலும் நீ தொட்டகுரங்கோ அவருடைய வாலிலும் உன் வால் பெரியதோ என்று அலக்ஷியமாகச் சொல்ல, அனுமன் நகைத்துச் சொல்லுகிறான்: ஓ நரனே! உன்னைப்போல நானாகிய ஸ்ரீ ராமமூர்த்தியைச் சுமந்து சுமந்து தோள்கள் தேய்ந்து சொல்பபலத்துடன் கிடக்கின்ற அனுமனையா எனக்குச் சமானமாகவும் அதிகமாகவும் பேசினாய். ஆஹா! நன்றா யிருக்கின்றது. நீ அவனை மதித்தபோதே உன் பண்டவாளம் இப்போப் பட்டதென்று வெளிப்பட்டது என்று ஏனைய குரங்குகளுக்கு ஒப்புறவாகப் பேசி வருகின்ற அனுமனைப் பார்த்து வீமராஜன் சொல்லுகிறான்: ஓ மற்கடகமே! அரக்கர் குலத்திற் கதிபனாகிய இராவணனைச்சுரானுடைய இலங்கா த்வீபத்தை வாலினாற் சுட்டெரித்த மகா வீரனாகிய அனுமனை நீ அவர் குலத்தனாகி யிருந்தும் இப்படி கேவலம் இகழ்வாகப் பேசுகிறது ஞாயமோ என்று நகைத்து அதட்டிக் கேட்டான்.

இப்படிக்கு ஒருவர்க்கொருவர் வாதி பேசி அனுமன்றானே அனுமந்தனை இகழவும் அந்த அனுமந்தனையோ இந்த வீமன் புகழவும், அச்சமயத்தில் நல்லது அனுமனையும் ஸ்ரீராமனையும் தூஷணையின்றிப் பூஷணமாகப் பேசி வருகின்றனையே, நீ யார் நீ இங்கு வந்த காரணம் என்னவென்று வீமனைப் பார்த்து அனுமன் வினவினன். அதற்கு வீமன் சொல்லத் தொடங்கி, ஓ வானரவீரனே! மகா நீதியுடன் அரசு செலுத்தப்பட்ட தருமராஜனுக்கு நான் தம்பி. அர்ச்சுனனுக்குத் தமயன். என் பேர் வீமன். வாயுவினுடைய புத்திரன் என்றான். அதுகேட்ட அனுமன் வீமனைப் பார்த்து, ஸ்ரீராமமூர்த்தியினுடைய பிரதாப முதலானதை யெல்லாம் சொன்னையே; நீ யாவரால் சொல்லக் கேள்விப்பட்டாய் என்றான். அதற்கு வீமன் பாரத்துவாசரிஷி சொல்லக் கேள்விப்பட்டே னென்றான். நல்லது உன்னுடைய விர்த்தாந்தத்தைச் சொன்னையே என்னுடைய விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேள் என்று அனுமன் வீமனைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ வீமராஜனே! வாயு பகவானுக்கும் அஞ்சனா தேவிக்கும் பிள்ளையாகப் பிறந்து, சுக்கிரீவனுக்கு மந்திரியாகி, ஸ்ரீராமமூர்த்திக்கு மெய்யடிமைப்பட்டு, ஸ்ரீ சீதாதேவியைக் காண நெடுங் கடலைக் கடந்து, இலங்கா த்வீபத்திற்குப் போய்ச் சீதாலட்சுமியைத் தரிசித்து, அநேக ராக்ஷசர்களை நாசப்படுத்தி, அவ்வூரைக் கொளுத்தி, திரும்பவும் ஸ்ரீ ராமமூர்த்தியைத் தரிசித்து, இந்நேரம் வரையிலும் அவருடைய நாமத்

தை ஸ்மரிக்கப்பட்ட அனுமனென்பவன் நான் தான் என்றான்.

இப்படி கூறக்கேட்ட வீமன் இரண்டு செவிகளிலும் தேவாமிர்தத்தை நிறையச் சொரிந்ததுபோல் மனங் குளிர்ந்து, தேகம் புளகித்து, அனேக ஜென்மங்களிலே செய்த தபோ பலன்களெல்லாம் இப்போது பலித்த தென்று குதித்துக் குதித்து, ஆஞ்சநேய னுடைய பாதங்களில் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டான். இப்படித் தெண்டனிட்ட தம்பியாகிய வீமனைத் தமயனாகிய அனுமான் வாரி யெடுத்து மார்புறக் கட்டியணைத்து, உச்சியை முகந்து, சகோதரவாஞ்சைத் தயை யுடனே அவனைப் பார்த்து, அப்பா வீமா! நீ சிறுபிள்ளை யாச்சுதே. உன்னுடைய கால்கள் சிவந்து போகும்படி ஓண்டியாய் இங்குவந்த காரியம் என்னவென்று கேட்டான். வீமன் சொல்லுகிறான்: ஓ அண்ணா! எங்கள் ஞாதி யாகிய துரியோதனனும், அவனுடன் கூடிய துன்மார்க்கர்களும், சகுனி மாமனை யெடுத்து விட்டு மாயச்சூதாடச் செய்து, அதனால் எங்களைத் தோற்கப்பண்ணி, எங்கள் செல்வங்களையும் நகரங்களையும் பிடுங்கிக்கொண்டு, வனவாச மிருக்கச்சொல்லிக் கெடுவுவைத்துத் துரத்திவிட்டபடியால், நாங்கள் நாட்டை விட்டுக் காட்டினிடம் சஞ்சாரஞ் செய்யவந்தோம். அங்கு ஆகாயத்தினின்று மந்தாரப் புஷ்பம் ஒன்று திரௌபதிதேவி முன்பாக விழக்கண்டு, அதைப்போன்ற புஷ்பத்தைச் சம்பாதித்துக் கொடுக்க வேண்டுமென்று அவள் என்னைக் கேட்டுக்கொண்டமையால், அந்தமாதிரிப் புஷ்பம் அமராபதியில் அல்லது அளகாபுரி யில் அகப்படுமென்று உரோமசன்மரிஷி உரைத்தபிரகாரம் இவ்வழியாக நான்வந்தே னென்று கூறினான்.

அதுகேட்டதும் அவ்வீமனுக்கு தமயனாகிய அனுமந்தன் ஆச்சரியமாகி, அப்படியா? தம்பி வீமா! அந்தப் புஷ்பம் உரோமசன்மர் சொன்னப்பிரகாரமே அளகாபுரியில் குபேரனுடைய வீட்டுப் புறக்கடையில் அவன் வீட்டார் விளையாடப்பட்ட மஞ்சனவாவிக் கரையிலே புஷ்பித்திருக்கின்றது. அது தேவர்களுக்கும் கிடைப்பது அருமை. அந்த யிடத்தில் அசுரர்களும், இயக்கர்களும், கின்னரர்களும், பட்சாபாதம் பூததயை இல்லாத பாமரஜென்மங்களும், காவலாளர்களாய் இருப்பார்கள். எப்படிப்பட்ட வீரர்களும் அவ்விடம் செல்ல அஞ்சுவார்கள். ஆனால், உன்னிடத்தில் வாய்மையும், தூய்மையும், அறிவும், பொறுமையும், ஞானமும், நற்றபோபலமும், நற்குணமும், நற்செய்கையு மிருக்கின்றபடியால், உனக்கு அந்தப் புஷ்பங் கிடைப்பது பிரயாசமா யிராது என்று அனுமான் சொல்லக் கேட்ட வீமன், ஓ அண்ணா! உம்முடைய கிருபாகடாக்ஷமும், எங்கள் தமையன் தருமராஜனுடைய தபோபலமும், யென்னுடைய தோள் பலமும் இருக்கின்றவரையில், தேவர்களும் இராட்சதர்களும் மும்மூர்த்திகள் முதலான யாவர்களும் அவ்விடத்தில் வந்து என்னோடு எதிர்த்தாலும், அவர்களை ஜெயித்து அந்த மந்தார புஷ்பத்தைக் கொண்டு வருவேன் எனக் கூறக் கேட்ட அனுமன் சந்தோஷப்பட்டு, இன்னும் என்னாலாக வேண்டியதைக் கேள் தருகிறேனென்ன, வீமன் களங்கமில்லாத உள்ளத்தோடு உங்கள் வாக்கு விசேஷமே எனக்கு வெகுபாக்கியமாயிற்று. ஆனால், இந்தப் பதின்மூன்று வருஷமுங் காடே கதியாய்ச் சஞ்சரித்து, அதற்குமேல் நாடே பதியாய் வசித்துச் சத்துருக்களை ஜெயிக்கின்ற பட்சத்தில், அத்தருணத்தில் தாங்கள் தடையின்றி வந்து தம்பியாகிய அர்ச்சுனனுடைய தேர்மீது சிறப்புடன் இனிது வீற்றிருந்தால் மாத்திரம், நாங்கள் ஜயமடைவதற்கு யாதோரனுமான மிராது. ஆகையால் இந்த வரமொன்றை மாத்திரந் தாங்கள் தயைபுரிந்தருள்வீரென்றான்.

அதுகேட்ட அனுமான் நல்லது வீமா! அப்படியே தம்பி அருச்சுனனுடைய இரதத்திற்கு அக்காலையில் துவஜமாக வந்திருப்பேன். இவ்வரங் கொடுத்தேன். மேலென்ன வேண்டுந் தெரிவி யென்றான். அதன்பேரில் வீமன் அவனைப்பணிந்தெழுந்து, ஓ அண்ணா! ஸ்ரீ ராமமூர்த்தி பின்சென்று இராக்கதர்களை நாசஞ்செய்தகாலையில் தாங்கள் எடுத்த விஸ்வரூபத்தைச் சற்று என்மீது கடாக்ஷித்துக் காட்டவேண்டுமென்று வேண்டினான். அனுமாரனவன் வீமனைப் பார்த்து, நல்லது நான் விஸ்வரூபத்தைக் காண்பிக்கிறேன். நீ பயப்படாமற் பாரென்று அந்தநிமிஷத்தில்தானே ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் மகாபலிச் சக்கிரவர்த்தி யிடத்தில் மூன்றடி மண் தானங் கேட்கும்போது எவ்விதப் பெருமையாக விஸ்வரூபத்தை எடுத்தாரோ அவ்விதப் பெருமையாக விஸ்வரூபத்தை எடுத்தான். அப்போ

தவன் பாதம்வரையில் பூமியெல்லாம் மறைய வும் அவன் இடுப்புவரையி லாகாயமெல்லாம் நிறையவும், அவன் தேகமும் சிரசும் அண்ட முகடு வரையில் அளாவவும், அவனுடைய வாலானது மந்தரகிரி உன்னத உயரத்திற் பூர்வம் அமிர்தங்கடைந்த வாசுகி பேழையிட் டுக்கொண் டிருந்ததுபோலிருக்கவும், ஆதித் தியாதி நவக்கிரகமுந் தாரகாகணமும் பிரதக்ஷி ணஞ் செய்து வரும்படியான மஹா மேருகிரி யொப்பாகப் பெருத்து நிமிர்ந்து வளர்ந்து விஸ்வரூபத்தைக் காட்டினன். அதை விண் ணுலகத்திலிருக்கின்றதேவர்களும், மண்ணுல கத்திலிருக்கின்ற நாகர்களும், குவலயத்திலிருக் கின்ற சகல ஜெனங்களும் கண்டு நடுங்கிக் கண்களை விழிக்காமல் இருந்தார்கள்.

அப்போது வீமன் அவனுடைய பாதத் தை மாத்திரங் கண்டு, மற்ற அவயவங்களைக் காணத் திப்பிரமை கொண்டு, இரண்டு கரங் களையும் உச்சிமேற் கூப்பி அவன் பாதத்தில் விழுந்து, போதும் போதும் அண்ணு! ஆஞ்ச நேயக் கடவுளே! தங்களுடைய இவ்விதப் பெருமையோடுங் கூடிய இந்த ஸ்தூலதேகத் தை யடக்கிப் பழையபடி சூட்சும தேகத்தை நான் பார்த்து மகிழக் கிருபை செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தான். அனுமன் தயை யுடன் தத்பூர்வ தேகத்தைக் காட்டினன். உடனே வீமன் சாஷ்டாங்கமாக அனுமந்த னுக்குத் தீர்க்க தெண்டஞ் செய்து, தேவரீ ருடைய மகத்துவத்தை யறியாமல் முன்னம் நான் பேசிய பிழையைப் பொறுத்து அருள் செய்ய வேண்டியதென்று மிகவும் பிரார்த்தித் தான். ஆஞ்சநேயக் கடவுளானவனும் சம் பூர்ண கடாக்ஷத்துடனே வீமனைப் பார்த்து, தம்பி! நீயும், உன் தமயன் தருமநந்தனனும், உன்னுடைய தம்பிமார் மூவரும், திரௌபதி தேவி முதலானவர்களும் உங்களுடைய சத்து ருக்களை யெல்லாம் அதஞ்செய்து வெகுகாலம் வரையிலும் இதமெய்தி இராச்சியம் ஆண்டு முடிவில் நம் பெருமானுடைய பாதத்தில் வந்து சேரக்கடவீர்களென்று ஆசீர்வாதஞ் செய்தான். அந்த ஆசீர்வாதத்தைப்பெற்ற வீமன், குபேரனுடைய பட்டணத்திற் போ கின்ற மார்க்க முதலானதை அவ் வனுமா னிடத்தில் வகைவிபரமாகக் கேட்டுக்கொண்டு, ஓர் நாழிகையளவில் வித்தியாதரருடைய காடு போய்ச் சக்கர நாகம் என்னப்பட்ட மலையைக் கண்டு, அம் மலைச்சருவில் தபசு பண்ணப் பட்ட பெரியோர்களைத் தரிசித்து, திவாகரப் பர்வத மார்க்கமாக வந்தான்.

## புண்டரீகன் வதை

கேட்டீரோ ஜெனமே ஜெயமகாராஜனே! அவ்விடத்தில் புண்டரீகன் என்றொரு இரா க்ஷதன் உளன். அவன் அஞ்சனமேகம் போன்ற நிறமும், வஞ்சனையே குடிகொண்டி ருக்கும் உரமும், செந்திப்போலொத்த சுருட் டைத் தலைமயிரும், சூரியமண்டலமொளாவிய சிர சும், மஹாபர்வதங்களி லிருக்கின்ற குகையொ த்த வாயும், மூன்றுப்பிறை நிகர்த்த கோரதந் தங்களும், பன்னிருகாத வழிதூரம் பரந்த தோள்களும், இருநாறுகாதவழி தூரத்தை நொடியிற் கடக்குங் கால்களும், ஏறுடையா னுகிய பரமேஸ்வர கணங்களோடு யுத்தத்திற் ஜெயிக்கும் பலமும், திசைகளெட்டையுஞ் ஜெ யித்துத் திரைகள் வாங்குந் திறனுங் கூடிய வன். இப்படிப்பட்ட பராக்கிரமம் பொருந் திய அவன் கண்களில் நெருப்புப் பொறிகள் பறக்கும்படியான பார்வையுடன் வீமனைப் பார்த்து, சப்தமேகங்களும் நடுங்கத்தக்கதா கச் சிரித்து, பற்களை நெறநெறவென்று கடி த்து, அடா மானிடப்பயலே! இந்தவழியே இந்திராதி தேவர்கள் முதலாகிய மற்றையா வர்களும் வரப் பயப்பட்டுக்கொண்டிருக்க, நீ சொல்பமனிதன் அஞ்சாமல் மனந்தொஞ்சா மல் வந்தாயல்லவா? இப்போது எனக்கு நீ ஆகாரமாகப் போகிருய். அது இருக்கட்டும். இங்கு முன்னே நீ வந்த காரியத்தைச் சொல் லென்ருன்.

அதற்கு வாயுபுத்திரனுகிய வீமன் புஜங் கள் குலுங்கும்படி நகைத்து, இங்கு உன்பிரா ணனை வாட்ட வந்தேனே யன்றி உன்னிடத் தில் வேறு காரியமாக வரவில்லை யென்ருன். அங்ஙனே புண்டரீகனுக்குக் கோபம் பிறந்து வீமன்பேரிற் சாய்ந்தான்; அவன் பேரில் வீம ன் பாய்ந்தான். அதற்குமேல் ஒருவரோடொ ருவர் மலையும்மலையும் எதிர்த்தாற்போல நெடு நேரம் இளையாமற் சளையாமல் மல் யுத்த முதலிய நல்யுத்தஞ் செய்தார்கள். அப்போது ஆகாயத்திலிருந்து அசரீரி ஓ வீமராஜனே! இந்த இராக்ஷசன் எது முகாந்திரத்திலுஞ் சாகான். அவனைச் சாகச்செய்யவேண்டுமா னுல் ஓர் ரிஷி சாபம் அவனுக்கிருக்கிறது. அந்தச் சாபப்படி தோமரத்தை அவன் பேரிற் பிரயோகம் பண்ணினுல் உடனே இற ந்து போவானென்று சொல்லிற்று. வீமரா

ஜன் உடனே தன் கதையினாலே அந்த இராக்ஷசனுடைய தோள்மேல் அடித்தான். அந்த அடியாலே பூர்வம் வாயுதேவன் மந்தரகிரியைப் பேர்த்துவந்து திருப்பாற் கடலிற் போட விழுந்ததுபோலப் புண்டரீகன் பூமி மீது விழவும், அவன் பிராணன் யமனுக்கு ஆஹுதியாகப் போயது. அவனுடலமானது நாய்களுக்கும் பேய்களுக்குந் திருப்திகரமான விருந்தாயது. அதன்பின்பு வீமன் சந்திர சயிலத்தையுங் கடந்து அளகாபுரியில் நடந்து, அந்நகரத்துத் தென்பாரிசத்தில் மலை போல நின்றுகொண்டு பார்த்து, மந்தார புஷ்பவன மிருக்கிறதைக்கண்டு சமீபத்திற் சென்றான்.

குபேரன் புஷ்பவனக் காவலாளர் கதை

அந்தப் புஷ்பவனத்தைக் காக்கின்றவர்கள் விசாலமான மார்பகங்களும், ஆகாசபரியந்த மளாவிய தோள்களும், வாய்களில் அகோர தந்தங்களும், நெருப்பைக் கக்குகின்ற கண்களும், இருட்டைத்தானே திரட்டி வைத்த கறுத்த தேகங்களும், பெலத்துவாரங்களைப்பார்க்கிலும் பெரிய வாய்களும், முதுகில் முகங்களும், மார்பில் மூக்குகளும், செம்பட்ட மயிர்களோடுங்கூடிய சிரங்களும், ஆயிரமாயிரங் கரங்களும், ஆயிரமாயிரங் கால்களும், ஆயிரமாயிரங் கண்களும், ஆயிரமாயிரங் காதுகளுமா யிருப்பதல்லாமல், ஒருநாழிகையிற் பதினாலுலகத்தையு மதஞ்செய்யும் பலத்தை யுடையவர்களும், திருப்பாற்கடலைக் கடையும்போது கூடயிருந்த அசுரர்களெல்லாம் இளைத்தோடும்போதுங்கூட ஓடிப் பிழைத்து அன்றுமுதல் இன்றையவரையில் நீண்ட ஆயுளோடுங்கூடி யிருக்கப்பட்டவர்களும், வஞ்சைதப்பிப் பகைநேரிட்ட காலத்துந் தர்ம நினையாமல் அதர்மத்துடன் உறவாடி குடிகெடுக்கின்றவர்களும், அனேககாலந் தவசு செய்து அனேக வரங்களைப் பெற்று அனேக வேதங்களைக் கற்று அனேக ஜாலங்களையுற்றுச் செய்யவல்லவர்களு மானவர்கள், கூர்மைபொருந்திய வாள்கள்-வேல்கள்-சூலங்கள்-சக்கரங்கள் முதலிய ஆயுதங்களைத் தரித்து, விழித்தகண் விழித்தபடியே நிமை கொட்டாமற் காத்திருக்கின்ற இவ்வெண்ணிறந்த இராக்கதர்களும், இராக்கதவீரர்களும், வீமனைப் பார்த்து, அங்கே யாரோ ஒரு மனிதன் பயப்படாமல் வந்தானென்றுபோய் அவனைச் சூழ்ந்துகொண்டு, நன்றாய் அண்ணாந்து பார்த்து, தங்கட் பங்குக் கதாயுதனைக வந்த காலனாகிய வீமன் இவன்தானென்று எண்ணாமல் அலக்ஷியஞ்செய்து, சூலங்களாலே குத்துவோ மென்றும், பாசங்களாலே கட்டுவோ மென்றும், கரங்களினாலே நசுக்குவோ மென்றும், கால்களினாலே பிசக்குவோ மென்றும், தசையார நசிப்போ மென்றும், பசியாரப் புசிப்போ மென்றும், இவ்விதக் கொரேமாகிய பற்பலவித வசனங்களை வசனித்துக்கொண்டே, அடா நரனே! இந்திராதி தேவர்களுங் கூடக் கண்ணெடுத்துப் பார்க்கக்கூடாத இந்தப் புஷ்பவனத்தினிடத்து வந்த நீ உன் பிராணனை இழந்து போகாததற்கு முன்னமே விபரத்தைச் சொல்லென்று அக்கிரமித்துக் கேட்டார்கள். அதற்கு மறுமொழி கூறுமலே குறுநகை செய்து, மாரவேளை நெற்றிக் கண்ணினாற் பஸ்மீகரித்த சடாமகுடதாரியாகிய ஈஸ்வரனைப்போல விருந்து, ஒன்றுக்கும் அஞ்சாமல் வெற்றிக்குந் துஞ்சாமல் மறுமொழி சொல்லத் தொடங்கினான்:

ஓ இராக்ஷசக் கிருமிகளே! யான் இவண் வந்த காரியம் இதோ இருக்கின்ற மந்தாரப் புஷ்பத்தைப்பார்த்து, உங்களையெல்லாம் வருத்து, உங்கள் உயிரை இயமன் அருந்தும்படி விருந்து செய்விக்க வென்று அறிவியுங்கள். வேறொன்றற்கல்ல. அப்படி வந்த என்னைக் கேவல மனிதனென்றல்லவா இகழ்கின்றீர்கள். பூர்வந் தீண்டாத ஒரு கோதண்டங் கையிலேந்தி உங்கள் குலத்தை அழித்துக்கொன்று குவித்த ஸ்ரீராம மூர்த்தியை மனுஷனென்றே நன்றாய் அறிந்திருக்கின்ற நீங்கள், என்னை இகழ்வாகப் பேசுவதே னென்றான். அது கேட்ட உடனே இராக்கதர்கள் எல்லோரும் இரைந்து பொங்கி ஆர்ப்பரித்து, வால் வில்லியர் முதலிய படை வீரர்களோடு ஏககாலத்தில் வீமனை நெருங்கி, அவன் பேரில் அநேக ஆயுதங்களை யெறிய, அவைகளை வீமசேனன் தன் கைத் தண்டாயுதத்தினாலே எத்தித் தட்டிப் பொடி செய்தும், சிலரை யடித்தும், சிலரை வாரி ஆகாயத்தி லெறிந்தும், சிலரைக் கையினாற் பிசைந்தும், சிலரைக் காலினால் தேய்த்தும், சிலரை வாளினாற் சிதைத்துக் கொன்றுங் குவிக்கையில், பின்னும் நூறாயிரம் இராக்ஷசர்கள் சகல ஆயுதபாணிகளாக வந்து எதிர்க்க, வீமன் கெதையைப் போட்டுவிட்டு, வில்லைக் கையிலேந்தி, அஷ்டதிக்கஜங்களும் மூர்ச்சை யாகும்படி குணத்தொனி செய்து,

ஆதிசேஷனும் பயந்து விஷத்தைக் கக்கும் படியான பாணங்களைச் சொரிந்தான். அப்பாணங்கள் அவர்கள்மேற் பட்டதனால், ஸ்ரீராம பாணத்திற்குக் கரனென்னப்பட்ட இராக்கதனுடைய ஜனங்கள் எவ்வாறு மாண்டார்களோ அவ்வாறு மாண்டார்கள். மேலும் அவ்விராக்கதக்கூட்டங்கள் சூலாயுதமுதலிய நாலாயுதங்களை வீமன்பேரிற் பிரயோகம் பண்ணினார்கள். அவைகளை யெல்லாம் வீமன் தட்டி வெட்டி, அவர்களை யெல்லாங் கண்ட துண்டமாக்கி, சிங்கங் கர்ச்சனை செய்ததுபோற் சிரித்து நின்றான். இவைகளை யெல்லாம் பார்த்து இருந்த சாரணரோடி, இயக்கர்பிரானாகிய குபேரனிடத்தில் வந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, எழுந்து கைகட்டி வாய் புதைத்து, ஓ ஆண்டவனே! யாரோ ஒரு நரன்வந்து புஷ்பவனத்தி னிடத்திற் காவலாக விருக்கின்ற இன்னாரை இன்னாரை அவர்களுடைய அநேகம் சேனைகளோடு கொன்று குப்பற் குப்பலாகக் குவித்து, யானை, குதிரை முதலிய கூட்டங்களையும் அதம் செய்து, இடி ஏறு சிங்கத்தை நிகர்த்து நிற்கின்றான் என்று சமாசாரம் சொன்னார்கள்.

## குபேரனால் அனுப்பப்பட்ட சங்கோடணன் வீமனால் அபஜயப்பட்டோடி முறையிடுதல்

அந்த சமாசாரத்தை கேட்டுக்கொண்ட குபேரனானவன் தன் அருகில் இருக்கின்ற படை வீரர்களில் முனை நாயகனாக இருக்குஞ் சங்கோடணனைப் பார்த்து, நீ உன்னுடைய திரண்ட சேனைகளைக் கூட்டிக்கொண்டு போய் அந்த நரனைக் கொன்று போடாமற் பிடித்த பிடியிற்றானே அவனைப் பின்கட்டு கட்டி என் முன் கொண்டுவா வென்று கட்டளையிட்டான். அந்தக் கட்டளையை அவன் குனிந்த ஆசாரத் துடன் சிரமீது வைத்துக்கொண்டு, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து விடை பெற்று, அவனுடைய சேனா சமுத்திரங்களை பின்பற்றி வரும்படி உத்தரவு செய்து, வீமனுக்கு எதிர் வந்து அவனை நகமுகமுஞ் சூழ்ந்து கொண்டு, அநேகமநேகம் விதமான பாணங்களைப் பிரயோகஞ் செய்தான். அவைகளை வீமன் சின்னா பின்னமாகச் சிதற அடித்துப்போடவும், பின்னும் அந்தச் சேனை நாயகன் முதலாயினோர் வேண்டிய பாணங்களைச் சரமாரியாகப் பொழிந்தார்கள். அவைகளை எல்லாம் வீமன் தன் கைப்பாணத்தால் அறுத்தெறிந்து அத்தனைப் பேரையும் கொன்று, தன்னடையாளம் இருக்கும்படி அப்படைத் தலைவனாகிய சங்கோடணனுடைய மார்பிற் கெதாயுதத்தால் ஓர் அடி அடிக்கவும், அவ்வோரடிக்குச் சங்கோடணன் இடிக்குப் பயந்த நாகம்போற் பயந்து நடுநடுங்கி ஓடுங்கி, குபேரனிடம் ஓடிப்போய்த் தெண்டனிட்டு, சுவாமி! தாங்கள் கட்டளையிட்டபடியே புஷ்ப வனத்தினிடம் இருக்கின்றவனைக் கேவலம் மனிதன் என்றெண்ணி நெருஞ்சி யுத்தஞ் செய்தோம். செய்த யுத்தம் இலேசானதல்ல. அப்படிச் செய்தும் அவன் எம்மைப் பின்னிட்டு முதுகுகாட்டிஓடோடும்படியாக அதோ கதப் படுத்திக்கொண்டு வருகின்றபடியினாலே, அவன் மனிதனன்று. ஆகையால், இந்நேரம் அவனுக்கு நவநிதிகளைத் திரைகளாகக் கொண்டுபோய்க் கொடுத்து நல்ல வார்த்தை பேசி அவனைச் சந்தோஷமா யனுப்பினால் மாத்திரம், நாம் இன்னுஞ் சிலகாலந் தப்பிப் பிழைத்து உயிரோடிருப்போம். இல்லையாகில் அவன் தம்முடைய பட்டணத்தை யெல்லாஞ் சூறையாடி எல்லாவற்றையுங் கொள்ளை கொண்டு, நம்மை எல்லோரையும் நாசப்படுத்திச் சத்தியமாய் வெற்றி கொள்ளும்படியான வீர தீரனாக்கும் என்று சங்கோடணன் ஆசார உபசாரத்துடன் சொன்னான்.

## குபேரன் தன் குமாரனாகிய உருத்திரசேனனால் வீமனைச் சமாதானப் படுத்துதல்

இதைக் கேள்விப்பட்ட குபேரனுக்கு ஆச்சரியமிகுந்து, அப்படிக்கொத்த நரனொருவனு மிருக்கின்றானா அவனுடைய சமாச்சாரத்தை இன்னும் நன்றா யறியவேண்டும் என்று தனக்குள் கருதினவனாய், தன்னுடைய குமாரனாகிய உருத்திரசேனனைப் பார்த்து, நீ போய் அந்த மனிதனுடைய சவிஸ்தாரத்தை யறிந்துவாவென்று உத்திரவு கொடுத்தான். அவன் அந்த உத்திரவைச் சிரசாக வகித்து வணங்கி விடைபெற்றுக்கொண்டு, புஷ்பவனத்தினிடத்து மகா பராக்கிரமத்துடனிருக்கின்ற வீமனைக் கண்டு, நீர் யார் இங்குவந்த காரியமென்ன ஏன் வீணாக இவ்விடத்துப் பிரஜைகளை நாசப்படுத்துகிறீர் இந்த வனத்தினிடத்தில் வண்டுகளும் வந்து மொய்க்கக் கூடாது. இவ்வித வனத்தில் நீர் வந்த காரிய மின்னதென்றும், நீர் இன்னாரென்றுஞ் சொல்லும். அதன்பேரில் உமக்காக வேண்டிய காரியத்தை நான் முடித்துக் கொடுக்கிறேனெனச் சொல்ல, அதுகேட்ட

வீமராஜன் உத்தரஞ் சொல்லுகிறான்: முன்னொருபோது இந்த அளகாபுரிக் கதிபனுடைய பிள்ளைகள் ஓர் சாபத்தினாலே மருதவிருக்ஷமாக, அப்போதவர்களைச் சாப நிவர்த்தி செய்த ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு மைத்துனனாகிய தர்மராஜாவினுடைய தம்பி நான் வாயு குமாரன். குந்தி புத்திரன். என்பேர் வீமசேனன். திரௌபதி தேவிக்கு மந்தார புஷ்பம் வேண்டியதைப்பற்றி இங்கு வந்தேன் என்றவுடனே உருத்திரசேனன் சந்தோஷமாச்சுதென்று தக்ஷணமே வீமனுக்கு வேண்டியவரையில் மந்தாரபுஷ்பங்களை யளித்து, இனிய வசனங் கூறிப் போய் வாரும் என்று செலவு கொடுத்து, பிதாவாகிய குபேரனிடத்திற்குப் போய் நடந்த சமாச்சாரத்தை யெல்லாஞ் சொன்னான். அந்தச் சமாச்சாரங் கேட்ட குபேரன் மிகவுஞ் சந்தோஷங்கொண்டிருந்தான். வீமன் அந்த மஞ்சனவாவிக் கரையில் ஸ்நானஞ் செய்து தீர்த்தபானமும் பண்ணிச் சற்றிளைப்பாறி யிருக்கும்போது, நடந்த வர்த்தமானத்தைச் சொல்லுகிறேன் கேளும் ஜெனமேஜெய மகாராஜனே என்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

### தருமராஜன் கடோற்கஜனோடே சென்று வீமசேனனைக் கண்டழைத்து வருதல்

ஓ மகாராஜனே! வீமசேனன் அளகாபுரியிற் குபேரனுடைய புஷ்ப வனத்திற்குப் போனதைத் தருமநந்தனரறியாமல், வீமன் போன வயணமென்னவென்று திரௌபதி தேவியைக் கேட்டார். திரௌபதி தேவியானவள் ஆகாயத்தினின்று மந்தாரபுஷ்பம் விழுந்ததும், அப்புஷ்பத்தைப்போற் சிலபுஷ்பந் தனக்கு வேண்டுமென்று வீமனுடன் சொன்னதும், அதற்கு வீமன் தனிமையாகக் குபேரனுடைய பட்டணத்திற்குப் போனதும் விபரமாகச் சொன்னாள். இதைக் கேட்ட மாத்திரத்தில் இடிக்கொடிபெற்ற தேவேந்திரனுடைய குமாரனாகிய அர்ச்சுனன் தன்னைப் பிரிந்து தவசுக்குப் போனதுமுதலிதுவரையில் வராதிருப்பதினால், அவனை எப்படி காணப்போகிறேனென்று தவித்துக்கொண்டிருக்கிற தருமராஜனுக்குப் புண்ணிற் கோலிட்டதுபோல் மனதில் மிகுந்த வியாகூலம் வந்து நேரிட்டு, அதிதீவிரத்தில் இடும்பிக்கு மகனாகவும், இடும்பாசுரனுக்கு மருமகனாகவும் காட்டில் தானே வாசஞ் செய்துகொண்டிருக்கிற கடோற்கஜனை தன் மனதிலே நினைத்தார். அந் நினைப்பைத் தெரிந்து கொண்ட கடோற்கஜனானவன் தனது ரதத்தின்பேரில் ஏறி வந்து, ஜேஷ்ட பிதாவாகிய தருமராஜனுக்கு சாஷ்டாங்கம் தெண்டனிட்டு, என்ன கட்டளை என்றான். தருமன் அவனைத் தழுவி மார்புடன் அணைத்து, அப்பா மகனே! உன் தாயாராகிய திரௌபதை சொல்லைக் கேட்டு, உன் தகப்பன் வீமசேனன் என்னுடன் ஒன்றுஞ் சொல்லாமல் தனிமையாகக் குபேரனுடைய பட்டணம் போனானும், அவன் போன இடத்தில் அவனுக்கு ஓரபாயமும் வராததற்கு முன்னமே, நாம்போய் அவனைக் கண்ணினாலே பார்க்கவேண்டும் என்று சொல்லி நகுல சகாதேவர் இருவரையும் பார்த்து, நாங்கள் போய் வருமளவும் பிராமணர்கள்-பிராமண ஸ்திரீகள் - தௌமியாசாரியர்-உரோமசன்மா-திரௌபதி முதலான நீங்களும் இந்த பன்னகசாலையிற்றானே யிருங்கள் என்று திட்டம் சொல்லி, கடோற்கஜன் கொண்டு வந்த தேரின்மேல் அவனுடன் ஏறிக்கொண்டு ஆகாய மார்க்கமாகப் போனார். அஃதெப்படி இருந்ததென்றால், வாயுவேகம் பின்னிடும்படியாகவும், சூரியனுடைய தேருக்குச் சமதியர்கவும் ஆகாச கெங்கை பரியந்தந் தேரை நடாத்திச் சென்று, நான்கு நாழிகைக்குள் குபேரனுடைய திரண்ட சேனைகளைக் கொன்று இரத்தயாறோடப் பிணங்களை மலைகளைப்போலக் குவித்து சோலையினிடத்து இளைப்பாறும் வீமனைக் கண்டார்.

அப்படி கண்ட மாத்திரத்தில் தேரைத் தாழ்த்தி வீமனிடம் வந்து பார்த்து, தருமன் தன் மனதிலிருந்த துயரம் நீங்கி, சந்தோஷமடைந்தார். கடோற்கஜனானவன் தன் தகப்பனுக்குத் தீர்க்கதெண்டம் செய்தான். அவனுக்கு வீமன் ஆசீர்வாதஞ் செய்து, தமயனாகிய தருமராஜனுக்கு மும்முறை பிரதக்ஷணை நமஸ்காரம் புரிந்து, அநேக மந்தார புஷ்பங்களை பாதத்தில் அர்ச்சித்து, சாஷ்டாங்கமாக தெண்டனிட்டு எழுந்து கைகட்டி வாய் புதைத்து மகாஉபசாரமாக அவரெதிரில் நின்றான். அவனைப் பார்த்து ஒருபோதும் கோபித்துப் பேசத்தெரியாத தருமநந்தனர் சொல்லுகிறார்: அப்பா வீமசேனா! என்னுடைய அனுமதியில்லாமல் ஸ்திரீபுத்தி கேட்டு இந்தப் புஷ்பத்தை ஒரு பொருட்டாக எண்ணி இங்கு வந்து இத்தனை கோடி ஜெனங்களைக் கொன்று இந்தப் புஷ்பத்தைப் பெற்றையல்லவா? என்னைத் தமயனாகவுடைய நீ என் சொற்படி நடக்

காமல் உனக்குச் சம்மதமானபடி நடப்பாயே யானால், உனக்கு இளையவர்களாகிய தம்பிமார் மூவரும் உனக்குக் கீழ்ப்பட்டு நடக்கப்போகிறது எப்படி? அதைத் தெரிந்துகொள்ளப்பாவென்று சொல்லி, பின்பு தானுங் கடோற்கஜனும் அந்த மஞ்சன வாவிக்கரையில் ஸ்நானஞ் செய்து புஷ்பவனத்தை விட்டுத் தருமனும் வீமனுங் கடோற்கஜனுமாக ரதமேறி திரௌபதாதேவி முதலானவர்களிருக்கிற பர்னகசாலையிடம் வந்திறங்கி, உரோமசன்மருடைய உபய பாதங்களில் மந்தார புஷ்பத்தைச் சொரிந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு, திரௌபதிக்குச் சந்தோஷம் வரும்படி மந்தார புஷ்பங்களைக்கொடுத்து, கடோற்கஜனைக் கானகம் போயிருக்கச் செலவளித்து, உரோமசன்மரிடத்திற் பார்வதி சமேதராகிய பரமசிவனுடைய சரித்திரங்களைச் சிரவணானந்தமாகக் கேட்டு சந்தோஷச் சித்தராயிருந்தார்.

வீமன் மந்தாரபுஷ்ப யாத்திரைச்சருக்கம் முற்றிற்று.

---

## எட்டாவது,

## சடாசுரன் வதைச்சருக்கம்

### கண்ணன் துதி

தாரார் கொன்றைத் தண்சடை யானுந் தலமீன்ற, நீரார் போதில் கண்டுயில் வானு நிகழ்கின்ற, சீரார் பற்பல தேவரு மானேன் றிருமேனிக், காரார் வண்ணங் கருதுவர் கருவைக் கருதாரே.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! தருமனுந் தம்பியர் மூவருந் திரௌபதிதேவியும் பிராமணர்களும் அவ்வனத்திலிருந்து உரோமசன்மரால் அநேகம் புண்ணிய கதைகளைச் சந்தோஷமாகக் கேட்டுக்கொண்டு வருகையில் அக்கானகத்தில் இடைவிடாது தவஞ் செய்யும்படியான ரிஷிகளும் பிராமணர்களும் கூட்டமாகத் தருமராஜனிடம் வந்து, ஓ தருமநந்தனா! இந்த ஆரண்யத்தில் வாசஞ்செய்யும் யானைகள்-புலிகள்-சிங்கங்கள் - யாளிகள் முதலான துஷ்ட மிருகங்கள் எங்களைச் செய்யும்படியான தொந்தரவினால், எங்களுடைய செபதபங்களுக்கு மிகவும் விக்கினம் வந்து நேரிடுகின்றது. ஆகையால், நீர் அம்மிருகங்களையெல்லாம் அதஞ் செய்து எங்களை ரக்ஷிக்க வேண்டியதென்று கேட்டுக்கொள்ள, அதற்கு நல்லது உங்களிஷ்டப்படியே செய்கிறேனென்று தருமராஜன் சொல்ல, வீமன் அதைக் கேட்டு வந்து தமயனுக்குத் தெண்டனிட்டுக் கைகட்டி நிற்க, அவனைத் தருமன் பார்த்து, தம்பி வீமா! நீ இந்தக் காட்டிலுள்ள துஷ்ட மிருகங்களையெல்லாம் நிமைநேரத்தில்தானே அதோகதப்படுத்தி, ரிஷிகள் முதலிய பிராமணர்கள் சந்தோஷமாக யிருக்கச் செய்துவாவென்று கட்டளையிட்டார். அந்தக் கட்டளையைப் பெற்றுக்கொண்டு வீமன் போயினான்.

இங்கு தருமராஜன் முதலியவர்கள் சத்காலக்ஷேபந்தோடிருக்கிற தருணத்தில், ஓர் இராக்கதன் மைநாக பர்வதம்போன்ற தேகமும், பிலத்துவாரம்போன்ற வாயும், அகோரமான தந்தங்களும், அக்கினிச்சுவாலை யொத்த கண்களும், சிவந்த அரக்குகம்பியை நிகர்த்த செம்பட்டமயிர்களும் உடையவனாய், பாபமே ரூபமாகவும் தேவர்களுடனே சர்வதா யுத்தஞ்செய்கிறதே தொழிலாகவுங் கொண்டிருக்கிற சடாசுரனென்பவன் பிராமணரூபங்கொண்டு பாண்டவர்க ளிருக்கின்ற பர்னகசாலைக்கு வந்து, ஓர் நொடியில் மாயமந்திரத்தினாலே யாருடைய கண்ணுக்குந் தன்னைத் தெரியவொட்டாமல், பின்வருங் கெடுதியையும் நினையாமல், பர்னகசாலையிலிருக்கிற திரௌபதி தேவியைப் பிடித்து எடுத்துக்கொண்டு ககன மார்க்கமாகப் போனான். அப்படிப்போகையில் மகா பதிவிரதையாகிய திரௌபதி தேவியானவள் அபயம் அபயமென்று கூக்குரலிட, அதைக் கேட்ட நகுல சகாதேவ ரிருவர்களும் வில்லம்பைக் கையிலெடுத்துக்கொண்டு ஓடி மறித்து, அடா பாதகா! நீ பிராமணவேடத்துடன் வந்து பிறருடைய ஸ்திரியை வஞ்சித்துத் திருடிக்கொண்டுபோகிறது எந்த பலத்தைக்கொண்டோ சொல்லடா? பூர்வத்தில் ஸ்ரீ ராமருடைய மனைவி சீதாதேவியை உங்கள் குலத்துதித்திருந்த ராவணன் வஞ்சித் தெடுத்துக்கொண்டு போனதினால் அவனும் அவனுடைய வம்சமும் நாசமானதை யறிந்தும் நீ மறந்தையோ? என்று கேட்டு வில்லில் நாணேறிட்டுக் குணத்தொனி செய்து பாணப் பிரயோகஞ் செய்தார்கள்.

அந்த இராக்கதன் அந்தப் பாணங்களை ஒரு பொருட்டாக எண்ணாமல் ஆகாயமார்க்கமாகப் போய்க்கொண் டிருக்கும்போது, முன்னம் ரிஷிகள் பிராமணன் இவர்கள் நிமித்த

மாக மிருகங்களைக் கொல்லப்போன வீமராஜன் அக்காட்டிலிருந்த துஷ்ட மிருகங்களை யெல்லாங் கொன்று, ரிஷிகள் முதலானவர்களுக்குச் சவுக்கியத்தை யுண்டுபண்ணி, அவர்களால் ஆசீர்வாதம் பெற்றுப் பர்ணசாலையை நோக்கி வருகின்ற தருணத்தில் ஆகாயவீதியில் அவ்விராக்கதன் தோளின்பேரில் திரௌபதிதேவி முறையமிட்டுச் சொல்லுகிறதையும் நகுலசகாதேவாள் பூமியின்கணிருந்து அவ்விராக்கதன்பேரிற் பாணங்களைப் பிரயோகஞ்செய்கிறதையும் வீமன் கண்டு மிகவும் நகைத்து, தோள்களைத் தட்டி, கண்களில் நெருப்புப்பொறி பறக்கப் பிரளயகாலத்துப் பெருங்காற்றைப்போற் பறந்தோடி ஓர் மராமரத்தைப் பிடுங்கிக் கையிலேந்திக்கொண்டு, அடா இராக்கதா! இடும்பாசுரனை பகாசுரனை புண்டரீகனை இன்னும் அநேக இராக்கதர்களையுங் கொன்று இயமனுக்கு விருந்திட்டேன். அடா பிள்ளாய்! இப்போது உன்னையும் அந்த இயமனுக்கு விருந்துண்ணச் செய்கிறேன் பார் என்று அம் மராமரத்தைக் கரகரவென்று சுழற்றி அவன்பேரி லெறிய அது போய் சடாசுரன்மேல் விழுந்து நல்ல அடியைக் கொடுக்கவும் அந்த அடியைப் பட்டுக்கொண்ட சடாசுரனானவன் பூமியிடம் வந்து திரௌபதிதேவியைப் போட்டுவிட்டு உடனே உன்னதமாகிய ஓர் மலையைப் பிடுங்கி வீமன்பேரில் எறிந்து ஹா ஹா வென்று கர்ச்சித்தான்.

அப்படி கர்ச்சிக்கவும் அந்த மலையை வீமனானவன் கையினால் தட்டிப் பொடிசெய்து நிமிர்ந்து பார்க்கையில், மறுபடியும் சடாசுரன் ஆகாயமார்க்கமாய் எழும்பினான். வீமன் அவனைத் தொடர்ந்து அந்தரத்தில் எழும்பி அவன் தோளைத் தன் தோளுடனுறச்செய்து கையினால் இறுக்கி, காலினாற் பின்னி, அங்கிருந்து அந்த இராக்கதனைப் பூமியில் காயம்பட அதிக வேகமாகத்தள்ளி அவன்மேலேறி பூர்வத்தில் மகா மேருகிரியைப் பேர்த்து எடுக்கப்போய் ராவணேச்சுரன் நசுங்கி அகப்பட்டதுபோல் அவனவயவங்களெல்லாம் நசுங்கிப் போகும்படி துவைத்து, அவன் முகம் முதுகின் பக்கம் வரும்படி கழுத்தை முறுக்கி காலினாலுதைத்தான். அதுகளையெல்லாம் சமாளித்துக்கொண்ட அந்த இராக்கதன் வீமனை அடித்து இழுத்துப் பூமியிற் படத் தள்ளினான். உடனே வீமன் எழுந்திருந்து, முன்னம் கம்சனென்பவன் வீட்ட மதயானையினுடைய இரண்டு தந்தங்களைக் கிருஷ்ண பகவானானவர் பிடித்து நாசஞ் செய்ததுபோல் சடாசுரனுடைய கோரைப்பற்கள் இரண்டையும் பிடுங்கி எறிந்தான். சடாசுரன் உடனே நிலவில்லா இராக்காலம்போலக் கறேலென்று இருக்கப்பட்ட மேகம்போல் மின்னலில்லா இடியை நிகர்ப்ப வந்து, வீமன் மார்பகத்தின் பேரில் பெருமலையில் பேரிடி விழுந்த தன்மைபோல் இரண்டு கைகளினாலும் ஓங்கிக் குத்தினான். இவ்விதமாக இவ்விருவரும் அநேக நேரமாக மல் யுத்தம் முதலிய பல யுத்தங்கள் செய்கையில், சடாசுரனை வீமன் ஒடுக்கிப் பிடித்து, கைகால்களைக் குண்டுகட்டாகச் செய்து தனது முழங்கால்களால் அமுக்கிப் பிடித்து எடுத்துக் கறகறவென்று சுழற்றிக் ககனமார்க்கமாக எறிந்தான்.

ஓ மகாராஜனே! அது எத்தன்மையை ஒத்திருந்ததென்னில், ஸ்ரீராமரானவர் சுக்ரீபன் முதலான படைத்தலைவர்கள் ஆச்சரியப்படத் துந்துபி என்னும் பேர்கொண்ட எலும்பு மலையைக் காலினாலெத்தி எடுத்தெறிய அது ஆகாயம் போயப் பூமியில் வந்து விழுந்து எவ்வாறு துகளாயினதோ அதுபோல சடாசுரனானவன் பூமியில் விழுந்து சின்னபின்னப்பட்டு இயமலோகம் போய்ச் சேர்ந்தான். அதைப் பார்த்திருந்த பெரியோர்களெல்லாரும், அடாதகாரியஞ் செய்த சடாசுரன் படாதபாடுபட்டிறந்தானென்று சந்தோஷித்தார்கள். கேதுக்கிரகத்தால் பீடிக்கப்பட்ட சந்திரன்போலவும், புலியினிடத்தில் அகப்பட்ட மான்போலவும் விஷங்களையடக்கி அமிர்தங்களைப் பொழியப்பட்ட கண்களையுடைய திரௌபதிதேவியானவள் சடாசுரன் கையில் நின்று தப்பிப் பிழைத்து, வீம நகுல சகாதேவாளுடன் கலந்து நடந்து பன்னசாலையில்வந்து, தருமராஜனுக்கு சாஷ்டாங்க தெண்டனிட்டு, சென்ற சேதியை யெல்லாஞ் சொன்னாள். அதுகேட்ட தருமன் மிகவும் வருத்தமாகி, மகா உருக்கமாகவுஞ் சந்தோஷப்பட்டு, பிறகு உரோமசன்முதல் தம்பிமார்களும் பிராமணர்களும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு ஸ்தபதி நாராயண ரென்கிற ரிஷி வசித்திருக்கின்ற ஆசிரமம் போய் அவரைத் தரிசித்து அவருடைய ஆசீர்வாதம் பெற்று அப்பாற் போகையில், அஷ்டகோண மகாரிஷியின் ஆசிரமத்தைக் கண்டு அவரைத்

தெரிசிக்க, அவர் இவர்களை வரவழைத்துப் போய்த் தன்னிடத்தில் நெடுநாள்வரையில் வைத்திருந்தார். அப்போது அவரா லநேக புண்ணியக் கதைகளைக் கேட்டிருந்தார்கள். அதுவரையில் ஒன்பது வருஷ காலமாகக் காட்டிற் காலத்தை கழித்து வந்தார்கள். பின்பு பத்தாம் வருஷத்தில் நடந்த வர்த்தமானங்களைச் சொல்லுகிறேன் கேளும் ஜெனமேஜெய மகாராஜனே யென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

*சடாசுரன் வதைச்சருக்கம் முற்றிற்று.*

---

ஒன்பதாவது

## வீமன் பரிஜாதபுஷ்ப யாத்திரைச் சருக்கம்

### கண்ணன் துதி

மண்ணா டின்பம் வானிடை யின்ப மதியாதோர், கண்ணா டென்றுங் கண்டுகளிக்கும் பொருளாவ, தொண்ணா டெண்ணி லைம்படை தாங்கு மெழில்வீறிப், பெண்ணா டெய்து மஞ்சன வண்ணம் பெறுமன்றே.

ஓ மகாராஜனே! பாண்டவர்கள் இவ்விதமாக அஷ்டகோண மஹாரிஷியினுடைய வனத்தில் வாசம்பண்ணிக்கொண்டு வரும்போது, அவிடத்திற் பொருந்திய மிருகங்கள் யாவும் மருண்டு வெருண்டு நாடவும், மலைப் பாம்புகள் அரண்டு புரண்டு வாடவும், நுரைகள் திரண்டு திரைகளெழுந்து திவலை பொழிந்து விரைவி விரைந்து பாயும் ஓர் நதியானது புதிதாகிய வெள்ளத்தாற் பெருக்கெடுத்தோடவும், குயில்கள் பாடவும், மயில்களாடவுமாக யிருக்கின்ற சிங்காரங்களை நோக்கினர். திரௌபதிதாதேவியும் சில பிராமண ஸ்திரீகளும் அகமகிழ்ந்து முகமலர்ந்து அந்த நதியினிடத்திற் சென்று ஸ்நானஞ் செய்கையில், மிகுந்த பராகநிறைந்த தகுந்த சுகந்தபரிமளமிகுந்த ஓர் பாரிஜாத புட்ப மிதந்து வரக் கண்ட திரௌபதாதேவியானவள் தனது கரங்களாற் றடுத்தெடுத்துக் கொண்டுவந்து, வீமசேன மகாராஜனை யடுத்துக் கரத்திற் கொடுத்து வணங்கி, முன்னெனக்குக் கொண்டுவந்தளித்த புஷ்பத்தைப் பார்க்கிலும் உயர்ந்த நிறமும் மணமுங் குணமு முண்டாகிய இந்தப் புஷ்பம், எந்த நிலையில் எந்த மலையில் எந்த நதியில் எந்தப் பதியி லிருந்தாலும் இல்லை என்னாது இப்போதே எந்தனுக்கு ஈதல்வேண்டுமென் றிரந்து கேட்டாள். அப்படி கேட்ட திரௌபதியை நோக்கி, ஓ அழற் கடவுள் அளித்த அணங்கே! அமராபதியிலும் அளகாபுரியிலும் அலங்காரமாக நிறைந்து சிறந்திருக்கின்ற இந்த மலரை அதி சீக்கிரத்திற் கொண்டுவந்து தருவேன். இந்த ஜாதிமலரைக் கொண்டுவராவிடிற் சத்துருக்களாகிய துரியோதனாதிகளைப் படைமுகத்தில் வென்று என் சபதத்தை யெப்படி நிறைவேற்றுவேன்? என்று பற்பல உறுதி வார்த்தைகளைச் சொல்லிப் பாஞ்சாலியை அவிடத்தில் நிறுத்தி, வீமசேன மகாராஜன் தன் தமையனாகிய தருமராஜனுக்கும் தம்பிமார்களுக்கும் தௌமியாசாரியருக்கும் மற்றை யாருக்குஞ் சொல்லாமல், தனிமையாக வாளுங் கதையும் வில்லும் அம்புறுத்தூணியும் ஆகிய இவைகளையே தனக்குத் துணைகளாகக்கொண்டு இடும்பாசுரன் பதைக்கச் சிதைத்த இரண்டு தோளும் அசையும் விசையில் இருபக்கத்திலுமுள்ள மலை மர முதலியனவும் வேரறிந்தாடவும், கார்சுழன் றோடவும், தனது வேகம் பின்செல்ல, மனதின் மோகம் முன்செல்ல, விரைமலர் வந்த நதியின் கரைமேல் நடந்து நெடுந்தூரஞ் சென்று, சந்திராதித்தர் முதலிய தவக்கோள்களியாவும் வலம் வராநின்ற இரத்தினகிரிச் சாரலோரமாக வருகிறான்.

அப்படி வருகையில், முத்து - பவளம் - கோமேதகம்-புஷ்பராகம் - நீலம் - மரகதம் - மாணிக்கம்-வச்சிரம்-வைடூரியம் - பொற்சன்னம் - இயானைத்தந்த முதலியவைகளை யடித்தலைத்து வாரிக்கொண்டு வராநின்ற கானயாறும், வரைச்சுனையும், பளிங்குப் பாறைகளும், சந்திரகாந்தக் கல்மேடைகளும், கின்னரர்-கிம்புருடர்-கருடர்-காந்தருவர்-யக்ஷர் - சித்தர்-வித்தியாதரர் முதலியபேர்களும், இவர்களுக்குரிய மாதர்களும், சரிகமபதநிச வென்னுஞ் சுரமூல்யமும் பேதமில்லாமற் பாடி ஆடியும், கலவியமளியில் ஊடியும், உடனே கூடியும் விளையாடியு மிருக்கின்ற விந்தையும், மும்மதமிருந்த கைமலைகளெல்லாம் பெண்யானைகளுடன் கலந்து சுனைச் சலத்தை நாடிவந்து ஒன்றுக்கொன்று அருந்தி தாகவிடாய் தீர்த்து மாதவத்தி னோர்க்குக் கமண்டலத்திற் கங்கையை நிறைத்துக்கொண்டு வந்து கொடுத்து வலம் வந்து பணிந்து கோடசைத்துச்

செல்கின்ற யானைகளின் சிந்தையும், கர்ப்பமா
யிருக்கின்ற பெண் குரங்குக்கு ஆண் குரங்கு
மூங்கில் துளையிற் கட்டி யிருக்கிற தேனைக்
கொண்டு வந்து நல்ல கிழங்குகளைச் சுட்டு
வைத்துச் சிறுகச் சிறுக ஊட்டிவைக்கும் உரி
மையும், வேர்ப்பலாப்பழத்தை விரைந்துண
ணத் தலை கவிழ்ந்து தின்னுங் குரங்கின் சிரத்
தில் அதற்குமேலாக விருக்குங் கனியற்றுவிழ
தலை புதைந்தமையைப் பார்த்த உரிய பெண்
குரங்கானது அதின் வால்பிடித் திழுத்து வழி
காட்டிவரும் அருமையும், புலி-கரடி-சிங்கம்-
சார்த்தூல முதலானவை யெல்லாம் இருந்தத்
தானத்தில் இரை புசிக்கும் பெருமையையும்,
நல்லோ ரனுபவிக்கும் இருமையையும், மற்
றெல்லா அதிசயங்களையும் கண்டான். கண்ட
துண்டமாகப் புண்டரீக னென்னும் இராட்ச
தனைக் கொன்ற வீமசேனன். இப்படி கண்ட
வாயு புத்திரனானவன் நன்று நன்றென்று
கொண்டாடிக்கொண்டு அப்பாற் போகையில்,
வடதிசைக் கதிபனுடைய பட்டினமும், அதை
சூழ்ந்து உயர்ந்த மதிலும், அம்மதி லாழ்ந்
தகன்ற அகழும், சிகர கோபுரமும், காவலி
னால் நெருங்கிய நான்கு வாயில்களுந் தோன்
றப் பார்த்து, மேற்குவாயிலிற் சென்று நின்று
தனது பாரியசேயரிச் சங்கத்தை வாயிற்
சேர்த்து ஊழிக்காலத் தொலிபோற் பம்பம்
மென்று ஊதினான்.

அந்தத் தொனியானது பட்டினத்தி
லுண்டாகிய மகா ஜனங்களுடைய காதுகளிற்
சென்று, முன் வந்து வெகுபேரை முடித்து
சென்றவன் இன்னும் இருப்பவரை
விட்டுச் சென்றவன் இன்னும் இருப்பவரை
எமலோகம் ஓட்டவந்தா னென்று இசைப்
பதுபோ லிருந்தபடியால் யாவருங் கலகலத்து
நடுநடுங்கி ஒடுங்கி யிருந்து, பின்பு எழுந்து
விழுந்து, இப்படி தட்டுக்கெட்டுத் தடுமாறித்
தங்களாற் றொழுந் தகவினையுடைய சேனாதி
பதியினிடத்திற் போய்ச் சொல்லித் துதித்தார்
கள். பதை பதைத்தார்கள். அதுகேட்ட
சேனாதிபதி உடனே யாவருக்கும் பயந்தீர
உறுதி கூறி, இரதகஜ துரகபதாதிகளுடனே
சுத்த வீரர்களோடு சகல மேளவாத்தியம் முழ
ங்க ஆரவாரித்து வந்து, ஆரடா நரன்! ஆர
டா நரன்! என்று உறக்கக் கூவித் தருமனுக்
கிளையோனை வளைத்துக் கொண்டார்கள். அவ
னது உருவத்தைக் கண்டார்கள். ஓட்டங்
கொண்டார்கள். அதிலொரு வித்தியாதரன்
நல்ல வல்லமையுடைய வீரன். அதிக சூரன்.
மகா தீரன். அப்பேர்ப்பட்டவன் தைரியத்
துடன் நெருங்கி, சிரமுதற் காலளவும் பார்த்
துச் சந்தேகமுற்று, சுப்பிரமணியக் கட
வுளோ அப்படியானால் வேலெங்கே தண்
டைக்காலெங்கே. அல்லது விஷ்ணுவோ
அவரானால் சங்குசக்கர கதாகட்கசோ தண்டம்-
பீதாம்பரம்-துளபமாலை இவை யிருக்கவேண்
டுமே, அல்லவென்றால் இந்திரனோ அவ
னானால் வச்சிராயுதமெங்கே ஆயிரங்கண்ணெ
ங்கே என்று இப்படி பற்பலவிதமா யோசித்
துப் பார்த்து, அப்பாவென்று அலறிக் கீழே
விழுந்து புரண்டு உருண்டு எழுந்து, மீண்டும்
ஓடி வாடி யாடி நாடி ஒன்றுந் தோன்றாமல்
உலர்ந்தமரம்போல் நின்றான். அப்படி நின்
றதை மற்ற யாவருங் கண்டுவந்து அவனைத்
தேற்றி என்னவென்று வினவும்போது,
இவன் முன்னொரு விசைவந்து வெகுபேரைக்
கொன்று உயிரைக் கவர்ந்துபோன தென்றி
சைப்பாலன். வடதிசைக் கிப்போது மறுபடி
யும் வந்தானென்று சொல்லிக் களைத்தான்.
இளைத்தான். திரும்பியோடி சேனைக்கதிபதிக
ளுடன் சொன்னான். அவர்களெல்லோருந்
தங்கட்கெல்லாம் பெரிய தலைவனாகிய மணி
மாலனுடன் உரைத்தார்கள்.

## குபேரன் சேனாதிபதிகள் வதை

அதைக் கேட்டவுடனே கண்களிரண்
டுஞ் சுழன்று திருகி மறுகிச் சிவக்கக் கோபங்
கொண்டு, நடநடவென்று பல்லைக்கடித்து,
நிலத்தில் ஓங்கியடித்து பாரியவில்லைக்கரத்திற்
பிடித்து, யுத்தசன்னத்தனாக வெளியே புறப்
பட்டு, மற்றைய வீரர்களை நோக்கிக் கலகல
வென்று நகைத்து, ஆ! ஆ! இதென்ன
ஆச்சரியம்! ஈரேழு பதினான்கு லோகத்திற்
கும் யானைமுதல் எறும்பீறுகவுள்ள எண்
பத்துநான்கு லட்சம் யோனிபேதங்களாகிய
ஆன்மகோடிகளுக்கும் ஆதாரபூதமா யிருக்
குங் கைலாசபதியாகிய பசுபதிக்கு உற்ற
துணைவனென்றும், யக்ஷசகுல இராஜசிரே
ஷ்டனென்றும், நவநிதிக்கோனென்றும் புகழ்
பெற்றிராநின்ற குபேர மஹாராஜனுடைய
பட்டினத்திலே ஒரு மானிடனாகிய சிறுவனோ
இப்பேர்ப்பட்ட துன்பம் விளைக்கின்றவன்.
பளா! பளா! வெகு நேர்த்தி! யானை சிக்கிக்
கொள்ளும்படியாகச் சிலந்திப்பூச்சி நூல்
வலை கட்டியதைப்போலாயிற்றென்று வெகுளி
மேல் கொண்டு, இவன் எவ்வளவு மனுஷன்,
எவ்வளவு புருஷன், எவ்வளவு வீரன், எவ்

வளவு சூரனென்றெண்ணி நமது யஜமா
னிடத்திற் சொல்வது அழகல்ல. இவனைக்
கொன்றுபோட்டு ஜெயத்தைத் தெரிவிப்பது
நமது வெற்றிக் கியல்பென்று யோசித்துத்
திடச்சித்தத்துடனே படை யெடுத்து, சது
ரங்கச் சேனைகளும் அவ்வவர்கள் சேனாதி
பதிகளோடு யுத்த சன்னத்தராய் வரும்படி
உத்தரவு செய்தான். தக்ஷணஞ் சாலேந்திரன்
முதலிய எண்ணாயிரஞ் சேனாதிபதிகளும் அவ்
வவர்களுடைய அளவிறந்த சேனைகளும்,
பேரி-பங்கா-உறுமி-த்வுண்டை-மல்லரி-கொ
ம்பு-குழல்-முரசு-காகள முதலிய வாத்தியங்க
ளோடு, குடை-கொடி-பீலிக்குஞ்ச முதலிய
விருதுகளும் நெருங்க, ஈட்டி-எறியீட்டி-
வாங்கு-சாங்கு-வச்சிராயுதம்-குந்தம்-சூலம்-
வேலாயுதம்-தோமரம்-இருப்புலக்கை-வச்சிர
தண்டம் இவை முதலிய திவ்வியாஸ்திரங்க
ளுடனே, கடலேழுங் கரைபுரண்டு வருவன
போல் அதிர்த்திடித்து முழங்கி வந்து, வீம
சேனனை நாற்புறத்தும் வளைந்து கொண்
டார்கள்.

இப்படி எண்ணாயிரஞ் சேனாதிபதிகளும்
அவ்வவர்களுடைய ரதகஜதுரக பதாதி
களுஞ் சேர்ந்து சூழ்ந்து கொள்ளவுங் கீசகாரி
நடுவில் நின்றது எப்படி யிருந்ததென்றால்,
சேனைகள் யாவும் பாற்சமுத்திரங் கவிந்திருப்
பது போலும், குந்தி புதல்வன் அச் சமுத்தி
ரத்தைக் கடையும்படி மஹா விஷ்ணுவினால்
நாட்டி வைத்த மந்தரகிரியைப் போலவும்
நடுவில் நின்றான். அக்காலையில் சேனைகளெல்
லாம் ஒரு முகமாக நின்று, சுடர் நாடிய கதி
ரோனைப் பனி மூடியது போலும், விளக்கை
விட்டிற் பூச்சிகள் மொய்த்தது போலும், விட
முடைய நாகத்தைத் திடங்கூறித் தேரைகள்
வளைத்தது போலும், ஒரு சிங்கத்தைப் பல
யானைகள் சூழ்ந்தது போலும் கதாயுதனைப்
பதாதிகளுடன் வந்து யுத்தந் தொடுத்துக்
கொண்டார்கள். அது காலையிற் குந்தி புதல்
வன் சந்தோஷத்துடன் மந்தர மனைய வில்லை
அந்தரம் வரையிலுயர்த்தி, கந்தர முழக்க
முங் கலங்க நாணியேற்றி, சுந்தரமாகப் பிடி
த்து வந்து எதிரில் நின்றான். அதைக்கண்ட
சாலேந்திரன் சமீபத்தில் நெருங்கி, தங்கள்
சேனைகளைக் கையமர்த்தி, இடும்பன் வயிரிக்
கெதிரிற் போய் நின்று, நீ யார்? இவ்விடத்
திற் றனித்துவருந் தயிரியமுனக் கென்னமா
யுண்டாயிற்று? சங்கர நண்பனுடைய தனி
நகரமென்று பயமில்லாமல் வந்த நீ சீக்கிரஞ்
சொல்லு? உன் பிராணன் போகு முன்னமே
நீ யிருக்குமூருக்குச் செல்லு? இவ்விடத்திற்றா
னே எங்கள் ஆயுதங்களால் இறக்கவேண்டு
மானால் நில்லு என்று சொல்லும் வார்த்தை
யைக் கேட்ட பகாசுர மர்த்தனன் கலீரென்று
நகைத்து, முன் இவ்விடத்தில் வந்து மந்தார
புஷ்பம் வாங்கிப்போன விமசேன னென்றறி
யீர்களா? இத்தனை சீக்கிரத்தில் மறந்து விட்
டீர்களா? ஆனால் இப்போது பாரிசாத புஷ்
பத்தை நாடிவந்தேன். தந்தாலாச்சுது
இல்லாவிட்டால் என்றென்றைக்கும் என்பேர்
கியாபக மிருக்கும்படியாக இயற்றுவேன்
என்று சொல்லினான். அதுகேட்ட சாலேந்தி
ரன் கடுகடுத்துச் சினந்து, பூமியில் இருக்கிற
அற்ப மனிதர்களோ இந்தப் புஷ்பத்தை
முடிப்பவர்கள்? எங்கள் புஜபல பராக்கிர
மத்தை அழிப்பவர்கள்? அடடா! தன் பல
மும் எதிரி பலமும் பார்க்காமற் பேசுகிறாய்
என்னடா? நீ எங்களிடத்தினின்றுந் தப்பிப்
பிழைத்துப் போகிறவனாகிற் புஷ்பங் கொடுப்
போம் நீயும் எடுத்துக்கொண்டு போவாய்!
எங்கள் ஆயுதத்திற் எம்மாத்திரம்? இப்போ
திறக்கப்போகிற நீ குள்ளநரிபோல மருட்டு
கிறாய் என்ன? நல்லதடா உன்னை விட்டோ
மா வென்று அதட்டி யுறுக்கி, தன் சேனைகளை
யெல்லாம் நோக்கி, சீக்கிரத்தில் இந்த ஏழை
மானிடனுடைய பிராணனை யகற்றுங்க
ளென்று உத்தரவு செய்தான்.

அவ்வுத்திரவு ஆனவுடனே யாவரும்
நானாவிதமாகிய ஆயுதங்களைப் பிரயோகஞ்
செய்தார்கள். அந்தச் சமயத்தில் வாயு மைந்
தன் கோபங் கொண்டு, மறமுந் திறமும் வர
முஞ் சிரமமுடைய பாணங்களை யெடுத்துக்
குணத்திற்றொடுத்து, ஆகர்ண பரியந்தம்
இழுத்து விடுத்தான். அவர்கள் தொட்ட அம்
பும் பல பராக்கிரமத் தென்பும் அழிந்து விழு
ந்து ஒழிந்தார்கள். தங்கள் சேனைகளில் உதிர
வெள்ளம் வழிந்தோடக் கண்ட வித்தியாதரர்
மனஸ்தாபமுங் கோபமுங் கொண்டு எதிரில்
வந்து நின்றறைகூவி, இலக்கமற்ற கணைகளை
யேவி, மழைத் திவலைகள் போற்றூவி, அடா
பாவி! எங்களுக்கென்று யெங்கிருந்து வந்
தாயடா யென்று மேவி, நாலுபக்கங்களிலுந்
தாவி, இன்றழியப்போகின்ற துன்னாவி
யெனக் கோபித்து அடர்ந்து வந்தார்கள்.
அப்படி வந்தவர்களை யெல்லாந் தொடர்ந்து

வந்த தீவினைபோற் படர்ந்தவைந் தெரிக்கும்
விடந்திணிந்த ஆசுகங்களை விடுத்து, அவர்
கள் தொட்ட கணைகளையும் அவர்களையுந் தடுத்
துப் படுத்தான் வீமசேனன். அதைக்கண்ட
சாரணர் கூடி, நமக்கும் எதிரியென்றொருவ
னிருக்கிறானென்று நாடி, வீரப் பாடல்
களைப் பாடி, இரதகஜ துரகபதாதிகட்கும் நய
முண்டாகும்படி மடங்கற் கொடியோனை வளை
த்து இதுவரையிலுமிளைத்து இறந்துபோன
வர்களைப்போலெங்களை யெண்ணாதே. இதோ
பார் உன் கண்ணாலே யுன்தேக மண்மேலே
யென்று சொல்லி, வீமனுடைய மெய்முழு
துங்கெல்லி, சல்லடைக்கண்ணாக்கும்படியாய்ப்
புல்லி, வில்லினிடத்திருந்து கொல்லனுலைக்
களத்திற் காய்ந்து சிவந்து விஷத்திற்
றோய்ந்து சத்துருக்களி னுயிர்களையெல்லா
மேய்ந்து சகல நிர்வாகமும் ஆய்ந்து வீரப்
பட்டங் கழுகிறகு பூண்டிருக்கிற கருடாஸ்
திரம்-மாயாஸ்திரம்-இடியாஸ்திரம்-விருக்ஷா
ஸ்திரம் - பர்வதாஸ்திரம் - கமலாஸ்திரம் -
பிறைமுகக்கணை முதலிய கங்கபத்திரங்களைப்
பாண்டு புத்திரனுடைய அங்கத்திலழுத்தி
இகழ்ந்தார்கள். தங்களைத் தாங்களே புகழ்ந்
தார்கள்.

சிங்கக்கொடியோன் அதுகண்டு, உகாந்த
காலத் திங்கட் சடையோ னென வெகுண்டு,
அங்கங்கிருந்தவர்க ளெங்கெங்கு மோடிப்
பொங்கிப் புகழ்ந்தவர்கள் மங்குதலில் வாடி
யோடும்படியாக அயிந்திராஸ்திரங்களினாற்
சாடவும்; யாவரும் வருந்தி, மறுபடியுங்கூடிப்
பொருந்தி, இரதங்களைவிட்டு நிலத்திலிறங்கி,
கதைகளைக் கையிலெடுத்து வீமசேனனைத்
தடுத்து, எங்கேயுன் வல்லப மிதிற்றெரியப்
போகுதென்று இரைந்தார்கள். யாவரும்
விரைந்தார்கள். இதை நோக்கிய வாயுகுமா
ரன் திரிபுர தகனனென நகைத்து, யாவருந்
திகைத்துப் போகும்படி தன் கரத்திலிருந்த
வில்லை நாணி தளர்த்தித் தோளில் மாட்டிக்
கொண்டு, யாளிமொய்ம்பினன் றாளியெழும்
படியாய்க் கூளிகளின்று கொண்டாட வாளி
கொண்ட வலது கரத்திற் றண்டாயுதத்தைப்
பிடித்துக்கொண்டு எதிரிலே வந்து கோடிபே
ருக்கொருவனாக நின்று, ஓடி வாருங்களென்று
விறுவிறெனச் சுழற்றினான். அவர்களும்
நான்கு திசையிலுமோங்கிக் கதையைக் கரகர
வென்று வீசி யடித்தார்கள். வீமசேனனும்
அதைத் தட்டிவிட்டு அவர்களைக் கிட்டியெட்டி
நீட்டி மாட்டினான். சிலர்கள் அம்புகளைப்
பொழிந்தார்கள். சிலர்கள் எறிவலயம்-கை
வேல்-சொருகட்டி-எஃகம் இவைகளைக்கொண்
டெறிந்தார்கள். அவைகள் வீமனுடைய
கதை வேகத்தினால் அடிபட்டு முறியவும்,
வெடிபட்டுப் பிரியவும், கதைகளுடன் கதை
தாக்கும்போ துண்டாகும் கனலும், பாணங்
களிலிருந்துவரும் அனலும், சக்கரங்களோடு
சக்கரங்கணெருங்க வெழும்புகையும், கோப
மேலிட்டுண்டாகும் பகையும், இவர்கள் கண்
களினின் றெழும்பும் கோபாக்கினியும், கருத்தி
னின் றெழும்பி மின்னுந் தாபாக்கினியும், நவ
கண்டங்களிலும் நிறைந்து அண்டங்களி
லுறைந்து கனல் நீருஞ் சுவற வறண்டு
போகும்படியாய் ஆகவே, சாரணர் கூட்ட
முழுமையு மோய்ந்து மாய்ந்து சாய்ந்து
அவிந்தார்கள்.

உடனே யக்ஷகுல சிரேஷ்டர்களெல்லோ
ரும் நெருங்கி வந்து, கரத்திலுஞ் சிரத்திலும்
உரத்திலுங் கணைகளாற் றுளைத்தார்கள். வீம
சேனனை வளைத்தார்கள். அந்தச் சமயத்திற்
பிரசண்ட மாருதம்போலெதிர்த்து, அவர்கள்
தொட்ட பாணங்களையெல்லாமுதிர்த்து, மத்தி
யிற்போய்க் குயவன் றிகிரிபோற் சுழன்று, யாவ
ரும் உயிர் கழன்று போகும்படி மோதினான்
கேசரியானவன். அந்த அடியினாற் கரமுறி
ந்து சிரமுடைந்து உரமழிந்து உதிரம் வழிந்
தோடவும், பேய்களாடவும், கழுகு பருந்துகள்
கூடவும், சேனைகளும் வீரர்களுந் தலையறு
பட்டு நின்றாடவும் இப்படியிருக்கின்ற சமயத்
தில் இதைப் பார்த்த இராக்ஷசரும் பிழைத்
தோடி நின்ற யக்ஷர்களும் நால்வகைச் சேனை
களில் இறந்தவர்போக இருந்தவர்களை கூட்டி
வந்து கதாபாணியை வளைத்துக்கொள்ள,
பதாதிகளொருபக்கம் ஹதாகதஞ் செய்கிறோம்
பாரென்று நூறுவிதமாகிய கத்தி - கடாரி-
ஈட்டி - பாங்கு - சாங்கு முதலிய ஆயுதங்களி
னால் வருத்தினார்கள். அஸ்திர சஸ்திரங்களி
னால் அநேகங் கோடிபேர்க ளாரத்தி லழுத்தி
னார்கள். கதை-கவுண்டு-கலப்பைமுதலியவை
களினால் வெகுபேர் பொருத்தினார்கள். இவை
களையெல்லா மொறுத்துப் பூமியிற் பொறுத்
திருந்த மகாமேருவைப் போன்ற வாயுகுமா
ரன் நகைத்து பதினாயிர மான்கூட்ட மத்தி
யில் அகப்பட்ட வேங்கையைப்போல் ஆக்ர
மித்து, பராக்கிரமத்துடன் மலைமிசை வீசும்
வாயுபோலும் நிலமிசை பொங்கும் நெடுந்

திரைபோலுஞ் சீற்றங்கொண்டு திரும்பிச் சுழன்று, மாற்றலரெல்லா மண்ணிலுழன்று, கையுமெய்யுங் காலுந்தறிந்து, ஐயகோவென் றங் கலறியே இறக்கக் கெதையினாற் புடைத்துக் கதிவழி சேர்த்தான்.

மணிமாலன் வதை

காற்றினாற் பறக்கும் பூளைப்பூப்போற் கருதலரிற் சிலர் கதறியோடி, அளகாரியில் அமர்ந்த சேனாதிபதி, மணிமாலன் வீரமணியணிப் பதத்தில், வீழ்ந்து வெதும்பி மெலிந்து நலிந்து, கண்ணீர் சோரக் கால்தள்ளாட, செந்நீர்பெருக, ஸ்திரமொழி குளர, வாக்கும் நாக்கும் மனமுந்துடிக்க, நையுமவரைக் கையினாலணைத்து, நில்லுமென்றுரைத்து சொல்லுமென்று கேட்க, தேவரீரனுப்பிய திரண்ட சேனைகளில், மண்ணுற்று வந்த அம்மானிடனொருவன்,எண்ணற்றபேரை இறக்கவிடுத்து, தானிங்குவந்த சங்கதியுரைத்து, தானையுள்ளதுவுந் தாங்களுமிருக்குந், தலைவர்களியாவருஞ் சேர்ந்தொரு தரமாய்ச், சீக்கிரம் வாவெனச் செப்பியனுப்பினான். சீவராசிகளைக் கொல்லும் யமனே இந்த உருவாகி இப்புவிக்கண் வந்தானென்று சொல்லி விழுந்தார்கள். இந்த வசனத்தைக் கேட்ட மணிமாலன் உடல் பதைத்து ஓங்காரமிட்டு, இதுவரை நாம்பிழைத்த பிழைப்பெல்லாம் ஒரு மனிதனால் அவமானமாகுங் காலமா இதுவென்று கண் சிவந்து, பக்கத்திருக்கும் பலசாலிகளை நோக்கி, சகல விருதுஞ் சப்பிரக்கோலமும் ஆயுதவகைகளும் அங்கையிற்றாங்கி, தங்களுக்குத் தாங்களே ஒப்பென்றுசொல்லி, சட்ட வார்த்தைகள் சாற்றும் நீங்கள், சமயத்தில் ஒருமசகமவ்வளவு மனிதனை சிதைத்தெறிந்து வந்து செய்தி சொல்லாமற் சிங்கத்தைக் கண்டு திரண்டோடி வந்த யானையைப்போல் இருக்கின்றீர்கள்.

ஆ! ஆ! சேனாதிபதிகளே! உங்கள் திறங்கள் எல்லாந் தெரிந்தேன் என்று சினந்து கேயூர மணிமகுட குண்டலாதிகளைத் தாங்கி வீரகண்டை யார்த்து, வீரப்பட்டங் கட்டி, வீரகண்டை யணிந்து, உடைவாள் படை-வாகுப்பட்டை யணிந்து, உடைவாள் படை-வாள்-உறுவேல்-எறிவேல்-வில்லு-அம்புறுத்தூணி - கதை - சக்கரம் - எறிவளையம் இவை முதலிய ஆயுதங்களும் கட்டிக்கொண்டு,யுத்தப் பிரசண்ட கோலனாகவும், வீரப்பிரதாப லோகனாகவும், யானையைக் கொண்டுவரச் சொல்லி அவன்மேல் ஆரோகணித்துக்கொண்டு பட்டவர்த்தனர்-மகுட வர்த்தனர் - யானைத்தலைவர்-சேனைத் தலைவர் - படைத் தலைவர் - அணித் தலைவர்-குடைத்தலைவர்-கொடித் தலைவர்-ஆயுதத்தலைவர் இவர்கள் யாவருஞ் சூழ, சகல மேளவாத்தியங்களு முழங்க, பாடுவோர்கள்-கட்டியர் - வந்தியர் - புகழ்வோர் இவர்கள் நெருங்கிவரப் பிரயாணப்பட்ட காலத்தில், மணிமாலன் ஏறும் யானையானது சோணமேகம்போல் மதம் பொழிந்து உரலடி பெயர்த்து நிழலைக் கருவி பாகனை எடுத்துப் பந்துபோல் எறிந்து, தறியைப் பெயர்த்துச் சங்கிலியை அறுத்து, நிகளத்தைமுறித்து, நிலத்தையுதைத்து, நெடுநீரைக் கலக்கி, நிசாசரரை விலக்கி, மேகத்தை பிழிந்து, நாகத்தைக்கருந்தி, கிம்புரி கோடோங்கக்கிளர்கத்திகட்டி, விரிபட்டமும், விபூதிரேகையும், சிந்தூர திலகம், திகழ்பொற் கும்பமும், நான்கு காலுக்கும் வீரவெண்டயமும், கர்னகவரியும், கந்துகச் செருக்கும், இருபுறந்தீரர்கள் இலங்கு பொட்டியும், வாலுக்குக் கத்தியும், வாயினுக்குலக்கையும் உடைத்தனதாய் மதர்த்து இறுமாந்து எவரையும் சீறிக்கொண்டுவர, மண்ணுலகமும் விண்ணுலகம் எண்ணங் கொள்ளும்படியாக வந்து, புண்டரீகனைக் கொன்ற தண்டதரனைக் கண்டு வடவாமுகாக்கினியும் விழுங்கி ஏப்பமிடத்தக்க வல்லவர்களாகிய நீங்களெல்லோரும் இந்த மனிதனை இன்னமும் உயிரோடு வைத்திருக்கின்றீர்களாவென்று தன் சேனைகளைப் பார்த்துக் கோபித்து, இனியேனும் என்முன் சென்று, அஞ்சாமல் எஞ்சாமல் துஞ்சாமல் மிஞ்சி வந்த மனிதனை மிதித்துத் துவைத்து மிர்த்தியுவுக்காகாரமர்க்குங்கள் என்று பெருங்கூச்சலிட்டுரைத்தான். இந்த மணிமாலனுடைய கூச்சலையும், அவனது உள்ளக் காச்சலையும், சேனாசமுத்திரத்தின் பெருக்கத்தையும் கண்ட வீமசேனன் கைகொட்டி நகைத்து, திசாதிசைகளுந் திகைக்க ஒரு பேரொலி செய்தான்.

அந்த ஓசையைக்கேட்ட மணிமாலன் ஏறி வந்த யானை பயந்து, சேனையின் பின் போனதைக் கண்ட அச்சேனை வீரர்களெல்லோரும் சேனாதிபதி நம்மை முன்சென்று யுத்தம் பண்ணச்சொல்லித் தான் பின்பலமாக வந்தாரென்று நினைத்து ஆர்ப்பரித்து பற்பல ஆயுதங்களும், பாணங்களும், அஸ்திரங்களும், சஸ்திரங்களும், அம்புகளும், வளைதடி முதலிய கொம்புகளும் விடுத்தும் அடித்துந் தொடுத்தார்கள். அப்போது கைலாசபதியினுடைய திவ்ய கழலிணையைப் பூசிக்

றும் மார்க்கண்டேயர் தம்மைத் தாவிவந்த யமனைக் கண்டு சுவாமியின் பின்புறத்தில் ஒதுங்கிப் பதுங்கியபோது காலபாசத்தைக் காலன் விசியிழுக்கும் வரையிலுமிருந்து பின்பெழுந்து உதைத்தருளிய கண்ணுதல் போல், கடோத்கஜன் றந்தையானவன் சற்றிருந்து கான்றெழுந்து கொழுந்துவிட்டுப் பணைத்திருந்த மராமரத்தை சல்லிவேர்-ஆணிவேர்-புறவேர் யாவுங் கழன்று வரும்படியாய் மடமடவென்று பிடுங்கி, நடநடவென்று பற்கடித்து வந்த சேனைகள் யாவும் விடவிடென்று நடுங்கி ஒடுங்கி ஓடும்படியாய் விறுவிறென்று சுழற்றிச் சாடினான். அந்த அடியினால் அவர்கள் தெழித்துவிட்ட ஆயுதங்களெல்லாம் மொழிந்து, தாங்களும் உடலுடன் உயிருமிழந்து அழிந்தார்கள். நாள்கு திசையினும் பிணமலையும் உதிர அலையுமாக விளங்கக் கண்ட மணிமாலன் திப்பிரமைகொண்டு திரும்புவது அழகல்லவென்று வெட்கத்துக்கஞ்சி, கைமிஞ்சி வீசும் வீமன் எஞ்சும்படி அஞ்சி தேவதாஸ்திரங்களைவிடுத்தான். அதை வீமன் பஞ்சாகப் பறக்கடித்தான். மறுபடியும் மணிமாலன் நூறு பாணங்களைத் தொடுத்தான். அவைகளையும் வீமன் மடித்துக்கெடுத்தான். மீண்டுமவன் ஆயிரங் கணைகளை யெய்தான். அவைகளை இவன் தூளியாகச் செய்தான். மணிமாலன் கோடிவச்சிர தண்டங்களை ஏற்றினான். தண்டதரன் அவைகளை மாற்றினான். நண்ணலன் நாகாஸ்திரங் கோடாகோடி கொண்டு மோதினான். நரேசனோரடியாலூதினான். கருதலன் சூலாயுதங்கொண்டு துளைத்தான். காலின் மகன் கரத்தினாலதை வளைத்தான். மணிமாலன் விண்ணெல்லாம் மகழியென விதிர்த்தான். அண்ணலதையெல்லாம் மண்ணில் உதிர்த்தான். மணிமாலன் அக்கினிக் கணையால் வீமசேனன் வீசிய மரார்மரத்தை அனைத்தான். வீமசேனன் அங்கை கையில் வில்லையெடுத்துப் பிடித்து நிறுத்தி நாணியேற்றி மணிமாலனை நோக்கி நகைத்தான்.

இந்தப்படிக்கு இருவருடைய வில்லுஞ் சுழல மனமுமழல நெடுநேரம் யுத்தஞ் செய்தார்கள். அந்தச் சமயத்தில் மணிமாலன் பர்வதாஸ்திரந் தொடுத்து வீமன் வில்லையொடிக்க விடுத்தபோது, அவன் தனது கடுத்தவில்லை இடது கரத்திற் பிடித்துக்கொண்டு வலது கரத்திற் கெந்தையை யெடுத்து எதிரேறிவந்து பூமியிலோர் காலூன்றி, யானையின் மத்தகத்தி லோர்கால் நாட்டி, மிகப் பருத்தோங்கி வீங்கிய மணிமாலன் தோளின் பேரிலும் மார்பினிடத்திலும் ஓர் அடி அடிக்கவே, அவன் துடிதுடித்துப் படிமிசை வீழ்ந்து, எலும்புகளெல்லாம் பொடிப்பொடியாக நொறுங்கி, நரம்புகள் அறுந்து, இந்திரியங்கள் கலங்கி, மந்திரி தந்திரிமார்கள் நழுவ இடிவிழுந்த அரவமென ஏங்கி, சற்றுநேரம் பிராணமூர்ச்சையாகத் தூங்கி, உடனே சோப நீங்கி வீரர்களெல்லாம் இகழுவார்களே என்று குறுகுறுத்து, இவனை வெல்லும் வகையைக் காணேமே யென்று கறுகறுத்து, வஞ்சனையால் கொல்லவேண்டுமென்றுன்னி வானத்தில் மாயையினாற்றுன்னி மறைந்தான். இப்படி மறையவே, மணிமாலனை வாயுகுமாரன் வனமெல்லாம் தேடி பிணமலை யெல்லாம் நாடி நிற்குங்காலையில் உலகமெல்லாம் இருண்டது. அது பார்த்து மாயாஸ்திர மறைந்து தொடுத்தானென்று அறிந்து, சூரியாஸ்திரம் விடுத்து அதனை நீக்கிப் பிரகாசிக்கச் செய்தான். உடனே மணிமாலன் அங்கிருந்தபடியே அக்கினியாஸ்திரம் விடுத்து நெருப்பு மழை மயமாக்கினான். அதை வீமன் வருணாஸ்திரம் விடுத்து வெப்பத்தைத் தவிர்த்தான். வாயுவாஸ்திரம் தொடுத்துச் சூறுவளியைக் காட்டினான். நாகாஸ்திரம் விடுத்து அவ்வொளியை யோட்டினான். பர்வதாஸ்திரம் எடுத்து விடுத்தான். இடியாஸ்திரம் விடுத்துக் கெடுத்தான். நாகாஸ்திரம் எய்து தூற்றினான். கருடாஸ்திரம் எய்து மாற்றினான். இப்படி அனேகமாகிய பாணங்களை மணிமாலன் தொடுக்கவும் அவைகளுக்குச் சத்துருவாகிய அஸ்திரங்களை வீமசேனன் விடுத்து யுத்தஞ்செய்துவந்தான். இந்தப்படி இலக்குமணனும் இந்திரசித்தும் யுத்தம் செய்த தன்மைபோல் மாயா யுத்தம் பண்ணிய மணிமாலன்பேரில் வாயுபுத்திரன் நாராயண மந்திரத்தை யுச்சரித்து இவ்யாஸ்திரமொன்றை ஏவினான்.

அதனால் மாயைகளெல்லாம் அற்றுப் போகவும் மணிமாலன் சூலாயுதமொன்றை எடுத்துத் துதித்து மந்திரித்து ஏவினான். அதை வீமசேனன் கண்டு பிர்மாஸ்திரத்தைப் பூசித்து விடுத்துத் தாவினான். அந்த பிர்மாஸ்திரமும் சூலமும் திக்குகளெல்லாம் சிதையப் புதைய யுத்தஞ்செய்து போராடிப் பிர்மாஸ்திரத்தினால் சூலம் பொடியாகி விழவும், உடனே வீமன் கிருஷ்ணமூர்த்தி தனக்கு உப

தேசித்திருந்த பாசுபதாஸ்திர மந்திரத்தை
ஒரு ருத்திராஸ்திரத்திற் பிரயோகஞ்செய்து
வணங்கி விடவே, அது புறப்பட்டு அண்ட
ரண்ட பிர்மாண்ட பகிரங்களெல்லாங் கரிய,
எல்லாம் எரிய, யாவும் பொரிய, மிகவும் பெரிய
காலாக்கினி ரூபங்கொண்டு மணிமாலன்மேல்
செல்லும்போது, அநேகம் ஆயுதங்களை விடுத்
துத் தடுத்துப் பார்த்தும் தடைபடாமல் வரு
வதை நோக்கிய மணிமாலன் வாடியோட,
அவனை விடாது பின்றொடர்ந்து அவன் பிரா
ணனை வாங்கிச் சமுத்திர ஸ்நானஞ் செய்து
வீமசேன னிடத்தில் வந்து சேர்ந்தது.
உடனே மணிமாலன் ஓர் பெரிய மலை வேர்
அறுந்து விழுந் தன்மைபோலும், சூல்
கொண்ட மேகம் தவறிப் பூமியிற் கரிந்து
விழுந்த தன்மைபோலும் இறந்து விழுந்
தான். இதைக்கண்டசேனைகளிலும்சேனாதிபரி
லும் பிழைத்திருந்தவர்கள் வீமனை வாழ்த்திப்
போற்றி, கரத்தை சிரத்திற்கூப்பி எமக்கு உயிர்
பிச்சை கொடுத்த உத்தமனே! இனி உன்
னுடையது அளகாபுரி என்று சொல்லிக்
கொண்டு திரும்பித்திரும்பி பார்த்தவண்ணமே
அளகாபுரிக்கு ஓடினார்கள். அப்பால் சற்று
நேரமிருந்து பார்த்துக் கதாயுதன் ஒருவரும்
யுத்தத்துக்கு வராமலிருப்பதைக் கண்டு சந்
தோஷங்கொண்டு தன் கையிலிருக்கும் சேயரிச்
சங்கத்தை வாயில் வைத்தூதி, ஒருவரும்
தனக்கு நிகரில்லாமல் உலகம் நடுங்க உற்சாகத்
துடன் உலாவி ஜெயம் ஜெயமென்று குலா
விக்கொண்டிருந்தான்.

தருமராஜன் வீமனைத்தேடி விசனப்படுதல்

இவ்விடத்தில் தருமராஜனும் தௌமி
யாசாரியரும் பன்னீராயிரம் பிராமணக் கூட்
டங்களும் உரோமசன்ம மகாரிஷியும் மற்றெல்
லோரும் சேர்ந்திருந்து தருமசாஸ்திரம்
முதலிய நூல்களைப் பேசிக்கொண் டிருக்கும்
போது, தருமராஜன் சுயேச்சையாய்த் தன்
பக்கத்தில் திரும்பிப் பார்க்க, அப்போது எப்
போதும் நீங்காதிருக்கும் தம்பியைக் காணாது
ஏங்கி எங்கேயென்று வினவ, பக்கத்திலிருந்த
பாஞ்சாலி தீர்க்க தெண்டன் செய்து எழுந்து
நின்று, ஐயா! இன்றையத்தினம் பெருக்கெடு
த்துவந்த அந்நதியில் ஸ்நானஞ் செய்யப்
போனேன். அவ்விடத்தில், பாரிஜாதபுட்பம்
மிதந்துவரக்கண்டு, அதனை யான் கொண்டு
வந்து அவர் கையிற் கொடுத்து, இந்தப் புட்
பத்தின்பேரில் எனக்கு இச்சையிருக்கின்ற

தென்று விரும்பி வருந்தினேன். ஓ திருந்
திழையே! இதோ கொண்டுவந்தே னென்று
அளகாபுரிக்குச் சென்றனரென்றாள். அதைக்
கேட்டவுடனே இரண்டு செவி வழியிலும் பீரி
வாற்றுமை யென்னும் விஷங்களேறி, தலை
மயக்குற்றுத் தளர்ந்து தலத்திற் சாய்ந்தார்.
உடனே அவரைத் தம்பிமாருந் திரௌபதி
யும் பெரியோர்களுஞ் சமீபித்துத் தூக்கி, மார்
போடணைத்துச் சாந்தாற்றிகளினால் விசிறி
யுபசரிக்கவே சற்றுநேரந் தரித்து மூர்ச்சை
நீங்கி யெழுந்து உரோமசமகாமுனி பாதங்க
ளில்விழுந்து, மிகுந்த விசாரத்துடன் தேம்பி,
ஐயனே! அழலிற் பிறந்த இவள் நிமித்தம்
நாடுநகரம் யானைசேனை செல்வஞ்சீர் முதலிய
வற்றும் விடுத்து காட்டில் வாசம் பண்ணிக்
கொண்டு காலங் கழித்து, எப்போது நல்ல
காலம் வருமென்று பெரியோர்களுடைய ஆசீர்
வசனங்களை விரும்பிக்கொண் டிருக்கிறேன்.

இதல்லாமல் அரவகேதனன் செய்த
பொல்லாங்கினால், அவன் அவன் தம்பிமார்
என்னும் நூறுபேரையுங் கொன்ற பிற்பாடு
கையினாற் றண்ணீ ரள்ளிப் பானம் பண்ணு
வதே யன்றி, அதுவரையில் கதையினாற் சலத்
தில் அடித்து மேலெழுந்திவலைகளை நாவினாற்
புசித்து வருவேனென்று சபதங்கூறி, பத்து
வருடம் வரையிலுங் காலங் கழித்து வந்து
விட்டான் வீமசேனன். நானித்தனை யவமான
மடைந்தும் அவனைப்பற்றி உயிர்வைத்திருக்
கின்றேன். அவனே எங்களை இதுவரையி
லுங் காப்பாற்றிக்கொண்டு நேரிட்டதுன்பங்க
ளியானவயும் நீக்கி ரக்ஷித்து வந்த உத்தமன்
அவனொருவ னில்லாவிட்டால் மற்றென்னு
லென்னாகும் (தம்பியுடையவன் தரியலர்க்கஞ்
சான்) என்னுந் தன்மையினாலவனைக்கொண்டு
கடல்சூழ்ந்த உலகமென்னும் பூவைப்பறித்து
இத்திரௌபதியினுடைய குழலை முடித்து,
தலைவாயலில் ஜெயபேரி யடித்து, இடையூறு
செய்தோரை இனிது முடித்து, பெரிய வெற்
றிக்கொடியை அஸ்தினாபுரத்தின் கோட்டை
மதில்மேல் விரித்துப் பிடித்து வாழ்வென்னும்
பெருக்கத்திற் றம்பிமார்களுடன் பொருந்தி
யிருக்க வெண்ணின யெண்ணத்தை விருதா
வாக்கினா ளிந்தப்பூவை. இதன்றியும், முன்
னொருதர மிப்படித்தான் ஒரு புட்ப நிமித்த
மனுப்பியபோது, எனக்குப் பின்னிட்டுத் தெ
ரிந்து மெத்த வருத்தப்பட்டு, பெரியவர்களன்
பினாலுந் தெய்வானுகூலத்தினாலும் நானே

போய்க்கண்டு அழைத்து வந்தேன். பின்பு அவனையும் வைத்துக்கொண்டு இந்தபாவை போன்றவளுக்கு எத்தனை விதத்திலேயோ புத்தி சொன்னேன். என் தம்பியோ இளங் கன்று பயமறியாது என்பதுபோ லெதுவுந் தனக்கிணை யில்லையென் றிருப்பவன். அவ னைப்பிடாரன் பெட்டியிலடக்கி வைத்திருக்குங் கொடிய விஷமுடைய நல்ல பாம்பைப்போல் மந்திரித்து வைத்திருப்பவன் யான். இன்று ஏமாறிப்போனேன்.

அந்தோ! குபேரனென்ன இலேசான வனு! கைலாசபதியினுடைய தோழன். சனக் கட்டும் பணக்கட்டும் உடையவன். அவ்விடத் தில் ஏதாகிலு மொருகுறைவு என் தம்பிக்கு நேரிடுமாகில் க்ஷணப்போதிவ்விடத்தி லியாரு மிருக்கோம். உடனே இறப்போம். இதென்ன காலம் என்னுடையவிதியோ! தெய்வகதியோ! என் தம்பிக்குப் புன்மதியோ! இனி யான் கேட்ப தென்ன கதியோ! ஆனாலும் என்போ லனியாயமான பேர்கள் யாருமிரார்கள். ஒரு தம்பி தவஞ் செய்து வருவேனென்று வியாச ரருள் பெற்றுப் போயினான். அவனோ தமை யனை நீங்கிய கியாபக மில்லாமற் றனித்துத் தெய்வலோகத்திற் சகல பாக்கியங்களையு மனு பவித்துக்கொண் டிருந்து விட்டான். இத் தம்பி குபேரனுலகம் போய்விட்டான். மற் றிரு தம்பிக ளறியாதவர்களா யென்னுடன் வருந்தி யிருக்கின்றார்கள். அப்படியானாலும், அர்ச்சுனன் தேவர் காரியங்களி லிருக்கின்றா னென்று சிந்தை மகிழ்ந்தேன். இவன் போன காரியம் விருதாவே யன்றி வேறில்லை. தெய் வமே! என்னையே னிப்படி வைத்து இந்தத் துன்ப வார்த்தைகளைக் கேட்கவும் நோக்கவுஞ் செய்தாய் என்று சொல்லி மகா மனவருத்தத் தோடுஞ் சோர்வுற்றார் உதிஷ்டிரனனவர். பக் கத்தி லிருக்குந் தம்பிமா ரிருவருந் துயர்கூற, பாவகன் பெற்ற பாஞ்சாலி மாதுந் துன்புற, பெரியோரியாவரும் அவரருகி லணுகித் தேற்றி, துயர்மாற்றி, களையாற்றி, ஆசீர்வச னங்களினால் வாழ்த்தினார்கள். உடனே சிறிது தேறி எழுந்த தருமராஜன் அப்பெரியோர் களைப் பார்த்து, ஓ சுவாமிகளே! உங்களாத ரவே யன்றி வேறு துணையில்லை யென்று சொல்லி, உரோமசமாமுனியினுடைய பாதத் தில் விழுந்து பதறிக் கதறி யழுதார்.



### தருமராஜன் உரோமசன்மராற்றேறி நகுல சகாதேவர் திரௌபதி இவர்களோடு கடோற்கஜன் தேரேறிச் சென்று வீமனைக் காணுதல்

உடனே இவருடைய துயரம் போகும்படி உரோமச மாமுனிவரானவர் சற்று நேரம் நிதானித்து, ஓ தருமநந்தனு! நீரேன் அதை ரியப் படுகிறீர்? பயப்படவேண்டாம். குபேர லோகத்தில் உமது தம்பி வீமசேனன் வெகு கோடி படைகளைவெட்டி மறுத்து வெதுப்பிப் பூழியாக்கி விட்டான். இதைக்கேட்ட குபேர னுடைய பெரிய சேனாதிபதி மணிமாலன் வந்து மாயா யுத்த முதலிய வஞ்சனைகளைச் செய்து வீமசேனனா லிறந்துபோனான். இனி யொருவரு மெதிர்த்து வருவதற் கில்லாமற் சங்கத்வனி செய்துகொண்டு இதுவரையி லுஞ் சுகமாக விருக்கிறான். தப்பிப்போன படைகளிற் சிலர் அளகாபுரிக்குப் போயிருக் கின்றார்கள் குபேரனிடத்திற் சொன்னாலினி என்ன நடக்குமோ தெரியாது. ஆகையால் நீர் விசனத்தை மாற்றி, தம்பிமார்களையுந் திரௌ பதியையுந் துன்பப்பட வொட்டாம லாற்றி, இதற்கு நடக்கவேண்டிய கருமங்களை யோசிக் கக்கடவது என்று உரோமச மகாமுனிவர் சொன்னார். அப்படி சொல்லக் கேட்ட தரும ராசன் களித்தெழுந்து, இந்த யுத்தங்களையும் வெகுபேரிறந்து போன சேதிகளையுங் குபே ரன் கேட்டுக் கோபித்து வந்து என் தம்பியை வளைத்துக் கொள்ளுவதற்கு முன்னமே நான் அவ்விடத்திற்குப் போகவேண்டுஞ் சுவாமி! இதற்கெப்படி என்னையனே! இவ்வாபத்து நீங்கும்படியா யெனக்கோ ருபாயஞ் சொல்ல வேண்டுமையா வென்று தருமராஜன் கேட்க, உரோமசன்மர் சொல்லுகிறார்: கேளுந் தரும ராஜனே! இடும்பி குமாரனாகிய கடோற்கஜன் இவ்விடம் வரும்படி நினைப்பீராகில், அவனால் உமதெண்ணம் நிறைவேறுமென்று சொல்ல, அது கேட்டவுடனே தருமராஜன் கடோற்க ஜனை நினைத்தார்.

அப்படி நினைத்தவுடனே கடோற்கஜனு னவன் பேய்கள் கட்டியிருக்கு மிரதத்துடனே வந்து, தன் பெரிய தந்தை பாதங்களி லும் சிறிய தந்தை பாதங்களிலும் பெரிய தாயார் பாதங்களிலும் பெரியோர் திரு வடிகளிலும் பணிந்து, யாவராலும் ஆசி பெற்று நின்றான். அப்படி நின்ற குமாரனைத் தருமராச னணைத்து, அப்பா! உன் தந்தை

என்னிடத்திற் சொல்லாமல் உன் தாய் வார்த்தையினாற் பாரிஜாதமலர் கொண்டுவரும்படியாய்க் குபேரலோகத்திற்கு மறுபடியும் போய் இருக்கிறான். அவ்விடத்திற் கொடிய யுத்தம் நடந்திருக்கின்றதாக உரோமசன்ம மகாமுனிவர் சொன்னார். இனிக் குபேரன் கேட்டால் எப்படியாமோ வென்று அவர் சொல்லவும், எனக்குக் குலையுடன் தலையு நடுக்கமுற்றன. ஆதலால், நீ எம்மைக் கூட்டிப்போய் உன் தந்தையைக் காட்டி வரவேண்டுமென்று கூறவும், இரதத்திற் கட்டிய கூளிகள் மீறவும், தருமராஜன் நகுல சகாதேவர் திரௌபதி உரோமசன்மர் முதலாயினோரேறவும், இரதம் ஆகாயவீதியிற் பாறவும், நிலத்திலுற்றோர்க்குக் கரதலத்தைக் குவித்து வணங்கி நிமிர்ந்தார்கள். குபேரனுடைய பட்டணத்தின் மேற்குவாசலிற்போயிறங்கினார்கள். அவ்விடத்திற் சிங்கார வனமும், திருமதிலும், மணி மேடையும், மலரோடையு மிகுந்திருப்பதைக் கண்டு பேரானந்தங் கொண்டு, வீமசேனனைக் காணும்படி உள்ளே நுழைந்து போக, அங்கே இரத்தவெள்ளந் தோய்ந்து நானுமுகத்திலுங் காய்ந்து வீரப்பிரதாபர்களுடன் யானைகளுஞ் சேனைகளு மாய்ந்து பலவாறாய்க் கிடக்கக் கண்ட மெய்விரதன் நடுங்கிக் குழைந்து, அப்பாற்றேறிச் செல்லும்போது ஜெயப்பிரதாபத்தோடும் இன்னும் எதிர்க்கவருபவர் உளரோவென்று சமர்க்கு விழைந்து நிற்கும் வீமசேனன் கண்டு ஓடிவந்து, தமையன் பாதங்களிற் பற்பல மலர்தூவிப் பணிந்து எழுந்து வாய்புதைத்துக் கைகட்டி வணக்க மிணக்க மடக்க மொடுக்கத்துடனிற்க, தம்பிமார்களுந் திரௌபதியுந் தனயனும் வீமசேனனைத் தழுவி வணங்கி நின்றார்கள்.

### தருமராஜன் வீமசேனனுக்குப் புத்தி கூறுதல்

அந்தவேளையில் வீமசேனனுடைய முகத்தைப் பாராமற் பூமியைப் பார்த்தவண்ணமே அவ்வறத்தின் மைந்தன் வீமனைக் கூவி, அப்பா! உன்னை நம்பியிருக்குமென்னை இப்படிச் சதிசெய்யலாமா முன்னொருதரஞ்சொல்லாமல் வந்த உன்னை வெகுவாகிய நீதி சொல்லித் தருமங்கூறி, என் விசனங்களுஞ் சத்துருக்களுடைய எண்ணமும் நாம் காலங்கழித்து வரும் வண்ணமுந் தெரிவித்துத் திருத்தியிருக்கவும், என்னுடன் சொல்லாமல் திரௌபதி வார்த்தையைக் கேட்டுச் சிறு பிள்ளைபோலிப்படி வரலாமா? நேரிட்டிருக்கும் நமது துன்பமெல்லா முனக்குத் தெரியாமலிருக்கலாமா? நல்லது குபேரமகாராஜ னென்பவன் யார்? அவனை இன்னானென்றும், இன்னாருக்குச் சினேகனென்றும், அவனுடைய பலமுந் துணையுந் தெரிந்து கொண்டையா? நீந்த அறியாதவனை ஆறுகொண்டுபோ மென்கிற மொழி மறந்தனையா? அல்லது என்றாய்ப்பிரியாகிய பார்த்தீப னிவ்விடத்தி லில்லாத வேளையென்று நீ அறிந்திருந்தாய். இப்படி செய்வது உனக்கழகா? தான் தொழுந் தெய்வமானாலும் பொய்ச்சத்தியஞ் செய்தாற் சகிக்குமா? நமது வீட்டிலேற்றிய விளக்கானாலு முத்தமிடப் போகுமா? பெற்ற தாயானாலுங் குற்றமெத்தனை பொறுப்பாள்; முன்னொருக்கால் வந்து வெகுபேரை முடித்ததுமல்லாமல் இப்போதும்வந்து இவ்வளவுகோடி சேனையினுயிரை எமலோக மேற்றினையே. குபேரன் உத்தம குணவானா யிருந்தபோதிலும் இதுகளைக் கேட்டு வெகுளி மேற்கொண்டு வந்தானென்னை வளைத்துக்கொண்டால், அப்போது என்ன செய்குவாய். மறந்திருந்தேன் பிராணனே வா வென்றால் வருமா? நமது காலத்தை யோசித்து யாவரையு முறவாக்கிக்கொண்டால் நலம். விரோதஞ் செய்துகொண்டால் நமது பகைவருக்கு அனுகூலம்.

தம்பி வீமசேனா! இதுகளை யெல்லாம் யோசிக்காமற் சிறுபிள்ளை கட்டுஞ் சிற்றுடைனச் செய்தாய் உனக்கு நான் எத்தனை விதத்திற் சொன்னாலுங் கேட்காவிட்டால் நானென்ன செய்வேன். அவனவனுக்காய் புத்தி வரவேண்டுமேயல்லது வேறல்ல. என் பேச்சைக் கேளாது இப்படி நடப்பையாகிலு முனக்குத் தம்பிமார்களிருக்கின்றார்கள். அவர்கள் உன் பேச்சைக் கேட்பார்களா? (முன்னளந்த நாழி பின்னளக்கும்) என்னும் மொழியை யோசிக்கவில்லையே. தம்பி! ஓரூரில் ஒரு கிழவன் தான் முன்னஞ் சம்பாதித்து வைத்திருந்த பொருளைத் தானும் உண்ணாமல், பந்துக்களுக்குங் கொடாமல், தானதருமமுஞ் செய்யாமல், தன் பிள்ளையினிடத்தி லொப்பிவைத்தான். அந்தப் பிள்ளை சம்பாதியாத கிழவனுக்குத் தெண்டச்சோறு போடவேண்டியது ஏனென்று அவன் கொடுத்த திரவியங்களைக் கெட்டிப்படுத்த அவனையே புறக்கடைக்குக் காவலாகப் போட்டு, அவனுக்கு ஓரோட்டிலே கஞ்சி வார்த்து வந்தான். அதை இவன் பிள்ளைப்

பார்த்து, ஒருநாள் ஓட்டையெடுத்து ஒளித்து வைத்தான். கிழவன் ஓட்டைக் காணாமல் மக னடிப்பானோ வென்றழும்போது, மகன் வந்து நித்தமொருவோடா உனக்குடைப்பதென் றடித்தான். அதைக்கண்டு சமீபத்திருந்த பேரனானவன், அப்பா! ஐயாவை ஏன் அடிக்கிறாய் என்றான். இந்தக் கிழவன் நித்தமும் ஓட்டைப் போக்கடிக்கிறபடியினா லடிக்கிறேனென்றான். இதோ யிருக்கிறது ஓடு. நான்தானெடுத்து வைத்தேன் என்று கொண்டு வந்தபோது நீ யேண்டா யெடுத்தொளித்தா யென்று கேட்க, அவன் தன் தந்தையை நோக்கி, உனக்கொரு வோடு நானெங்கே சம்பாதிப்பேன்? நாளைக்கு வேண்டுமே. அதற்காகவெடுத்து இப்போதே வைத்துக்கொண்டேனென்றான். அப்பிள்ளை மொழியைக் கேட்டு வெட்கி, நாளைக்கு நமக்கு மிதுதானே கெதியென்று அன்றுமுதல் தன் தந்தையை உபசரித்து வைத்திருந்தான் என்று முதியோர்கள் சொல்லுவார்கள். அது போல நீ யெனக் கடங்கி நடந்தால் அல்லவா உன் தம்பிமார் உனக்கடங்கி நடப்பார்கள். மேலும், உன் தம்பியாகிய விஜயன் சின்னவனாலும் ஈஸ்வரனைக் குறித்துத் தவமியற்றிப் பாசுபதாஸ்திரம் பெற்றுக்கொண்டு, தேவர்களுக்குதவியாகக் காலகேய நிவாதகவசாளைக்கொன்று ஜயம்பெற்று, வெள்ளை யானையின்மேலேறிப் பவனிவந்து, தேவர்கள் மகிழக் கிரீடம்பெற்று இந்திரனுடனுண்டு, கற்பகப் பூங்காவினிழலி லிந்திராசனத்தி லமர்ந்திருக்கின்றானும். இந்திரன் முதலிய தேவர்களுங் கண்மணிபோற் றழுவி யிருக்கின்றார்களாம். அவனப்படி தேவர் சகாயனா யிருக்க, நீ இவ்விடத்தில் வந்து குபேரனுடைய பகையைப் பெற்றாய். இவனைப்பற்றி ஈஸ்வரன் பகை வரும். அப்பால் நமக்கென்னயிருக்கின்றது? இந்த மகாராசன் வடதிசைக் கதிபன். செல்வமுடையவன். இவனை வணங்கித் தவமிருந்தாலும் நமக்கு வேண்டிய வுதவி யெல்லாஞ் செய்வன். ஈஸ்வரனுடைய அன்பு நமக்குண்டாம் என்று பலபலவான புத்திகளை யெல்லாம் யெடுத்தோதிக் கொண்டிருந்தார் தருமநந்தனர்.

### சேனாதிபதிகள் மாண்டதைக் கேட்ட குபேரன் யுத்தசன்னத்தனாகி, அவனை யவன் பிள்ளையாகிய உருத்திரசேனன் அடக்குதல்

அப்போது வீமனால் அடிபட்டுக் களைத்தோர்களிலொருவன் களை நீங்கி யெழுந்திருக்கப் பயந்து, ஆமைபோற் பதுங்கிப் பிணக்குவைகளில் ஒளித்திருந்தவன் சற்றே தலை நீட்டிப்பார்த்து, தருமராஜன் வீமசேனனுக்கு இப்படிக் கெல்லாஞ் சொல்லி இறந்தவர்களைக் குறித்து விசனப்பட்டுக் குபேரனை அநேகமாக ஸ்தவுத்தியஞ் செய்ததை கேட்டிருந்து இனி நமக்குப் பயமில்லை. இந்த உத்தமர் மெத்த இரக்கமுடையவர் என்றெழுந்து ஓடிப்போய் குபேர மஹா ராஜாவினுடைய காலில் விழுந்து புரண்டழுது, ஐயா! புஷ்ப வனத்திற்குக் காவலாயிருந்த ஆயிரங்கோடி கின்னரர்களும், யக்ஷகர்களும், சாலேந்திரன் முதலிய எண்ணாயிரஞ் சேனாதிபதிகளும், பெரிய சேனாதிபதியாகிய மணிமாலனும் மற்ற யாவரும் ஒரு மானிடனால் மடிந்தார்களென்று சொல்லவே, கண்களில் அக்கினியும் பகையுங் கப்பிக்கொண்டுவர நிலத்தில் அறைந்து, ஆ! ஆ! என் சேனாதிபதி மணிமாலனு மிறந்தானென்று நானுமுயிருடனிருந்து கேட்டேன் அல்லவா! இது வெகு நேர்த்தி! வெகு நேர்த்தி! நான் இவ்வளகாபுரிக் கிறைவனாயிருந்து, பூமியில் இருக்கும் அற்பமனிதனால் என் சேனையுஞ் சேனாதிபதிகளும் இறந்தார்களென்று கேள்விப்பட்டேன் அல்லவா? இனி என் செல்வத்தையும் அவனே வந்து கைக்கொள்ளுவான். இனி என்னயிருக்கிறது. இது என்ன காலம் பளா! பளா! காற்றில் அடிப்பட்டுப் போம் பஞ்சு ஒரு மந்தரகிரியைக் கசக்கி விட்டதென்று சொல்லுங் கதையாச்சுது என் வீரம். ஓ பரமசிவமே! ஒரு இலேசாகிய மானிடனோடு நானுஞ் சரியாய் நின்று எதிர்த்து யுத்தஞ் செய்யும்படியாக உமக்குத் திருவுள மிருந்ததோ என்று உடல்பதறி, சந்திர சூரியர் திக்குப்பாலகர் முதலிய தேவர்களானால் இந்நேரம் நானெதிர்ப்பதற்குத் தடையில்லை. சொல்ப மனிதனை எவ்வாறு எதிர்ப்பது. ஆனால், வியாதி அல்பமென்றும் விஷஞ் சொல்பமென்றும் உன்னக் கூடுமா? உடனே அவிழ்தம் பலமாகக் கொள்ளவேண்டுமல்லவா? நல்லது இப்போதுமென்ன, ஓ அசுராள்-கின்னராள் - காந்தருவாள் - வித்தியாதராள்-சாரணாள் முதலிய என் மித்திரர்களே! இந்நிமிடத்தில் யாவரும் யானை சேனை பரிவாரங்களுடன் பயணமாகுங்கள். இதோ நானும் வந்தேன் என்று யுத்த கோலங் கொண்டு புறப்பட்டு விமானங்கொண்டு வரச் சொன்னான் யக்ஷராஜன்.

அதைக் கேட்ட குபேரனுடைய பிள்ளை உருத்திரசேன னோடிவந்து பாதங்களிற் பணிந்து, ஐயா! அவனை மானிடனென்று எண்ணவேண்டாம். மானிடனானால் நமது பட்டினத்தில் வந்து இப்படி உயிரைக் கொள்ளை கொள்ளுவதுண்டோ? இதினுடைய பூர்வோத்திரம் யான் விசாரித்துக் கேட்டபடி சொல்லுகிறேன் கேளும்: அஃதென்னவென்றால், பூமிதேவியார் பூமிபாரம்பொறுக்க மாட்டாமற் கயிலாசபதியினிடத்தில் வந்து முறையிட, அவரப்பாரத்தை இன்னுஞ் சில நாளையிற் தீர்த்துவைப்போமென்று சொல்லி நாராயணனாகிய கடவுளையும் ஐந்து இந்திரரையும் பூமியிற் கிருஷ்ண மூர்த்தியாகவும் பாண்டவர்களாகவு மேற்படுத்தி, நமக்கெல்லாஞ் சகாயமாகப் பிறப்பித் திருக்கின்றார். அந்தப் பாண்டவர்களில் வீமசேனன் வாயுவின் புத்திரனாகப் பிறந்த மிகுந்த பலசாலி. அவன்தான் இவ்விடத்தில் வந்திருக்கின்றவன். இவன் தம்பி அர்ச்சுனன் பரமேஸ்வரனைக் குறித்துத் தவஞ்செய்து பாசுபதாஸ்திரம் பெற்று, தெய்வலோகம் போய் இந்திரனுக்கு நெடுநாட் பகையாகிய காலகேய நிவாதகவசர்களை ஜெயித்து, தெய்வலோகத்தில் தேவேந்திர போகத்தை யநுபவித்துக்கொண்டு இன்னுமங் கிருக்கின்றான். தேவர்களுக் குபகாரியாகிய இவர்களை மானிடரென் றிகழ்ச்சியாகச் சொல்லப்படாது. ரூபத்தில் மாத்திரம் நீறால் மூடப்பட்ட நெருப்பைப்போ லிருப்பார்கள். யுத்தத்திற் பிரவேசித்தா லிவர்களை ஜெயிப்பது தேவர்களுக்கு மரிது. இவர்களுக்குரிய துணை கிருஷ்ணபகவான். மேலுஞ் சங்கரபக்தர்கள். அன்படியினாலே மாபலியினிடத்திற்குத் தானம் வாங்கச் சென்ற வாமனவுரு மானிடமே யன்றி வேறோ. அன்றியும், இராவணனைக்கொன்ற இராமவுரு மானிடமே யன்றி வேறோ. உரு மாத்திர மானிடமே செய்கையோ தேவர் செய்கையிலுஞ் சிறந்தது. ஆகையால், இவர்கள்தேவர்களுக்கும் பூமிதேவிக்கும் உபகாரியாயவதரித் திருக்கின்றவர்கள். அப்படியானாலும் உமது சேனாதிபதிகளைக் கொன்றதனாற் கோபமேலிட் டிருக்கின்றது.

அதிகாரண மென்னவென்றால், உலகத்திற் சமமாகிய பெலவான்கள் ஏழுபேர் பிறந்தார்கள். அவர்களுக்கு நிகராக ஒருவரையு மொப்புசொல்லக் கூடாது. அவர்களுக்கு ஈஸ்வரனருளெப்படி யென்றால், அவரவர்கள் செய்யும் அதர்மங்களே அவரவர்கள் பெலத்தையுந் தலைத்தையுங் குறைக்கும். இதில் எவனொருவன் முந்தி யொருவனைக் கொல்லுகின்றானோ அவனுடைய பெலமிவனைச் சேரக்கடவதென் றருள்புரிந்திருக்கிறபடியால், இந்த வீமன் இடும்பனைக்கொன்று அவனுடைய பெலத்தையும், பகாசுரனைக்கொன்று அவனுடைய பெலத்தையும், சராசந்தனைக்கொன்று அவனுடைய பெலத்தையும், மணிமாலனைக் கொன்று அவனுடைய பெலத்தையும் பெற்றுக்கொண்டான். இனி கீசகனொருவன் துரியோதனனொருவ னிருக்கின்றார்கள். ஆகையால் தேவரீர் கோபங் கொள்ளக்கூடாது. அல்லவென்று யுத்தஞ் செய்தாலும், யக்ஷசிரேஷ்டன் நரனுடன் யுத்தஞ் செய்தானென்று வசனிப்பார்கள். வென்றாலுந் தோற்றாலும் வசையல்லாம லிசையில்லை இப்படி நினைப்பதிற் பசையில்லை. இப்படியெல்லாங் காட்டி யுத்தத்தை நிறுத்திவிட வேண்டுமென்று புத்திரன் வணங்கிச் சொல்லியுங் கேளாமல், ஓ பிள்ளாய்! என் சேனைகளுஞ் சேனாதிபதிகளும் போனாலும் போகட்டும். என்னுயிர்க்குயிராகிய மணிமாலனையும் பறிகொடுத் திங்கிருப்பேனோ கொன்றவனைக் கொல்லாமல் விடுவேனோ என்று இதழ்துடிக்க புருவந்துடிக்க விழிதுடிக்க மீசை துடிக்க வெயர்வு பொடிக்கப் புட்பகத்திலேறி, படைகளெல்லாம் நடக்கக்கூறி, சினக்குறிப்போடுஞ் சீறி, இந்நிமிடத்திற் றூறிவிடுகிறேன் பாரென்று சுற்றிலும் அனேக விமானங்கள் சூழ, முற்றிலும் யானை சேனைகள் நெருங்க, பேரி - பாங்கர - தவுண்டை - மல்லரி-மேளம் இவைகள் யாவுமுழங்க, சேனாபதிகளுந் தானாபதிகளுந் திரண்டு சமுத்திர மடியோடு புரண்டு வருவதுபோற் றனக்கு முன்னும் பின்னும் வரப் புறப்பட்டான் அளகாபுரிக் கிறைவன்.

அப்படி வந்த குபேரனையும் அவனோடு வந்த படையையும் பலவருணக் குடையையும் சேனைகளின் நடையையுங் கண்ட கருணைக் கடலாகிய முரசக்கொடியை யுடையோன் இருகரங்களையுஞ் சிரத்திற் குவித்து எதிர் நோக்கிச் சென்று, தம்பிமார்களுந் தானுந் தீர்க்கதெண்டமாகவிழுந்து எழுந்து, இவ்வளவு வம்புக்கிடஞ்செய்த வீமசேனனைப் பார்த்து வெறுத்து, குபேர மஹாராஜனு

டைய திருவுருவத்தைக் குமித்து வணங்கி ஸ்துதிக்கத் தொடங்கினர். "அளகனே யமலமெனளகை வேந்தனே, தனதனே சங்கரன்றன் சகாயனே, புனிதனே குபேரனே புலத்தியன் குலச், செளகனே செல்வனே தேவதேவனே, வெறுப்பதோ விளைந்தது மிகையதாயினு, மறுப்பதோ யென்மொழி மாறுகொண்டெதிர், செறுப்பதோ வினையவர் செய்த தீமைகள், பொறுப்பதே பெரும்புகழ் புனித மூர்த்தியே! ஓ அளகனே! ஓ அமலனே! ஓ அளகைக்கிறையாகிய குபேரனே! ஓ சிவனன்பனே! ஓ பரிசுத்தனே! ஓ நிதிக்கோனே! ஓ புலத்திய பிர்மாவினுடைய குலத்துதித்த புத்திரனே! ஓ திருவுடையவனே! ஓ தேவர்களுக்குத் தேவனே! எளியேங்களால் வெறுத்துக்கொள்ளும் பொல்லாங்குகள் மிக விளைந்தாலுந் தேவரீரவைகளை மாற்றத்தக்கதே. என்னுடைய அடைக்கல வார்த்தைக்குப் பகை கொண்டு கொல்ல நினைப்பதோ? ஏழைகள் செய்த தீங்குகள் எல்லாவற்றையுஞ் சகிப்பதே மேலோர்களுக்குப் பெரும்புகழ், ஓ சுத்த மூர்த்தியே! என்று போற்றி வாழ்த்தி ஏற்றித் துதித்தார். இப்படி துதித்த அறத்தின் மைந்தனை இருநிதிக் கிழவன் நோக்கி, கோபதாபங்களாறி, விமானம் விட்டிறங்கி, குதலைத் தாருடையவனை அதிக சந்தோஷத்துடன் மார்புற இறுகத்தழுவி, அய்யா மகாராஜனே! சத்தியமும் குணமும் நிறையும் நிதானமும் புத்தி நுட்பமும் பொறுமையும் உம்மிடத்திற் குடியாக இருக்கக்கண்டேன். உம்மாலே சந்திர குலந் தழைக்கும். உலகமும் பிழைக்கும். தருமமுஞ் செழிக்கும். தென்றிசைக் கோனுடைய புத்திரனை உம்மைக் காணப்பெற்றேன். இனி என்னுடைய செல்வமும் அவைகணிறைந்த அரண்மனை முதலிய நகரமும் மற்ற யாவும் உம்முடைய சொந்தம். நீர்வேறுயான் வேறாக இனிமேல் நினைக்கவேண்டியதில்லை. ஆகையால், நீர் மற்றவர்களோடு என்னுடைய அளகாபுரி பட்டினத்திற்குள்ளாக வந்து, அரண்மனை மண்டப முதலிய யாவுங் கண்டு, யான் கீர்த்திபெற மகிழ்ச்சி கொண்டு போகவேண்டுமென்று தழுவி, விமானத்திலியாவரையு மேற்றிக்கொண்டு போவதாயினன்.

### குபேரன் தருமனுதியரை யழைத்துப்போய் விருந்தளித் துபசரித்தல்

அப்படி போகும்போது அளகேசன் வீமசேனனைப் பார்த்து, அப்பா என் தம்பீ! உன்னுடைய செல்வம் நிறைந்த நகரத்திற்கு வந்து வேண்டியதைப் பெற்றுக்கொண்டு போகாமல், அனேகம் வீரர்களையுஞ் சேனாதிபதிகளையு மடித்துவிட்டனையே. நான் கொண்டு வந்த கோபாக்கினியை யெல்லாந் தருமராஜனென்னு மேகமல்லவா ஆற்றிக் குளிரச்செய்தது. ஆகிலும், உன்னை வெறுக்கவேண்டியதில்லை வினைப்பயனிப்படி முடியும்படியாகவிருந்தது. போகட்டும் இனிமேலும் நீங்களும் யாமும் பிதுர்வாற்சல்லியமாக இருப்போம் என்று பேசிக்கொண்டு அளகாபுரியிற் சென்று அனேகங்கோடி யக்ஷரர் வீதிகள் முதலிய சாலைகள்-சோலைகள்-மேடைகள்-உப்பரிகைகள்-தடாகங்கள்-கூபவாவிகள்-திருமஞ்சனச்சாலைகள்-கொலுக்கூடங்கள்-சேனைச்சாலைகள்-யானைக்கொட்டாரங்கள்-குதிரைப்பந்திகள்-விமான நிரைகள்-ஆயுதச்சாலைகள்-கச்சபநிதி-கற்பநிதி-நந்தநிதி-நீலநிதி-பதுமநிதி-மகாநிதி-மகாபதுமநிதி-முகுந்தநிதி-பொன்மலைகள்-வெள்ளிமலைகள்-நவரத்தினக்கேணிகள்-தனக்குவையல்கள் இவைகள் முதலாகிய எல்லா வதிசயங்களையுங் காண்பித்து திரௌபதிதேவியைத் தன்னுடைய பெண்சாதியினிடத்திற் கனுப்பினன். அந்தத் தேவியை இந்தத் தேவி நமஸ்காரஞ் செய்துகொண்டவுடனே வாரி யெடுத்தணைத்து, மாலை-சந்தனம்-மஞ்சள்-குங்குமம்-சீரைபட்டு-பட்டாவளி-திவ்யமணிமாலை-நவமணிமாலை இதுகளெல்லாங் கொடுத்து, அமிர்த போசனமுஞ் செய்வித்து, தாம்பூலம் பஞ்சவிடயங்களுடனளித்து உபசரித்திருந்தாள்.

கின்னரர் பிரானும் நன்னயமுடனே மன்னவர் தமக்கு நன்னதியால் நீராட்ட ஆடி பொன்மயமான இலைக்கலத்திற் கன்னியர் போஜனங் கொண்டுவந்துண்பிக்க உண்டு. சந்தன தாம்பூல புஷ்பமுத லுபசாரங்களுங் கொண்டு, சகல சம்பிரமத்தோடு மன்னிப்பொலிந்திருக்குங் காலையில், தனபதியானவன் தருமபூபதியை நோக்கி, இன்றெனக்கு நல்லகாலம் நீங்கள் வந்து இவ்விடத்தில் இருந்து உலாவிப்போகப் பெற்றதும், இனிமேலும் உங்களுடைய படைவலிமை யுதவி எனக்குற்றதும், இதுவே மகா பாக்கியம். இதுவே மிகவும் யோக்கியம் என்று சிலாக்கியத்துடன் குபேரன் கொண்டாடும்போது, உதிஷ்டிரன் ஐயமாகிய எங்களிடத்தில் தாங்களன்பு வைக்

கப்பெற்ற எங்கள் பாக்கியத்தை வாக்கிறைச் சொல்லத் தக்கதோ! என்று உபசாரமாக இருவரும் நெடுநேரம் வார்த்தை யாடிக்கொண்டு இருந்தார்கள். அந்தச் சமயத்திற் குபேரனுடைய பிள்ளை உருத்திரசேனன் வந்து சந்தோஷமடைந்து, வெகுநேரம் ஒருவரோடு ஒருவர் பேசி குலாவிக்கொண்டு இருந்தபோது உருத்திரசேனன் தெய்வலோகத்தில் இருக்கும் அர்ச்சுனனுடைய வீரப்பிரதாபமும், மேலாகிய இன்பத்தை யடைந்து தேவர் சகாயன் என்று பேர்பெற்றிருப்பதும், நாளைக்கே இந்திரனும் அவனும் பூலோகத்திற்கு வரப்போகிற சேதிகளையும் சொல்லி, பாண்டு பூபதியுங் குந்திதேவியும்செய்த தவமே தவமென்று புகழ்ந்திருந்தான். அப்போது திரௌபதாதேவி வந்து குபேரனுடைய பாதங்களில் நமஸ்கரித்தாள். நரர்பிரான் இருகரங்களிலேயும் பற்றி எடுத்து உபசரித்து, அம்மணி! உம்மை துரியோதனன் சபையில் நிறுத்தி துகில்களை யச் சொன்னகாலையில் விரிந்த இக்குழலும் அன்னோனுடைய உயிரு முடிக்கத்தக்க பலசாலி எவனென்றால், என் சேனாதிபதிகளான எண்ணாயிரம் வீரர்களையும், இவ்வெண்ணாயிரவர்க்குந் தலைவனாகிய மணிமாலனையும் வென்று அதமாக்கிக்கொன்ற வீரப்பிரதாப வீமசேன மகாராஜ னொருவன்தான். அவரிதோ இருக்கின்றார். உமக்கொரு குறைவுமில்லை என்று மங்களாசனஞ் சொல்லி, அணிமணிப் பணிகளோடு பட்டுத்துணி வகைகளுங் கொடுத்து, கடோற்கஜனுக்கு இராக்ஷதாளணியுங் கடக கங்கண வீரப்பட்ட விருதுகளெல்லாம் அளித்தான்.

குபேரன் தன் பரிசனத்தோடு வந்து
பாண்டவரை வழிவிடுதல்

அப்போது வீமசேனன் எழுந்து நரவாகனனுடைய கழலிற் பணிந்து, ஓ தனவானாகிய கனவானே! நான் அறியாதவனாகிய சிறியேன் தமதுகுணாதிசயத்தை குறியேனாகிய வறியேன். இப்படிப்பட்ட வெறியேன் செய்த குற்றங்களை மனம்பொறுத்து ரக்ஷிக்கடவது. "நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே, சீர் ஒழுகு சான்றோர் சினம்" என்பதுபோல என் மீதுள்ள சகல கோபமும் இப்போதே மாறிவிட்டது என்பதற்கு சந்தேகமில்லை. இனி உங்களை ஒருக்காலும் மறக்கமாட்டேன் என்று துதிக்க, அவனை குபேரன் எடுத்து இருகவுணைத்து, ஒன்றுக்கு நீ யோசிக்க வேண்டியதில்லை. கொன்றவனுங் கொல்லுவித்தவனும் வேறாக விருக்க, உன்மேற் கோபங் கொள்ள வேண்டியதேன்? நீங்கள் அபராதக்காரர்களல்ல. உன்னை நான் நினைத்து வருந்தாங் கொள்ளுவனாகில், எய்தவனிருக்க அம்பை நொந்தவனைப்போல் ஆமேயென்று உபசரித்து, தேவதாஸ்திரங்கள் முதலிய திவ்யாஸ்திரங்களும் அதற்குத் தகுந்த மந்திரங்களும் மற்றுமுள்ள முஷ்டியாதி பல கஷ்ட நிலையுங் கற்றுக்கொடுத்து, வணங்கிய நகுல சகாதேவர்களுக்கும் வேதமொழியால் வாழ்த்தி யாவருந் தன்னிடத்தினின்றும் விடைபெற்று பயணப்படும்போது தானுங் குமாரனுந் தகுந்த சேனைகளுடன் கூடவே வந்து, தமது பட்டினத்தின் தெற்குக் கோபுரவாயில் வரைக்கு மிருக்கிற வேடிக்கைகளையுங் காட்டி யுபசரித்து, நானொருவன் இவ்விடத்தில் இருக்கிறேனென்னுங் கியாபக முக்கியமாக இருக்கவேண்டும். என்னாலாகத்தக்க காரியங்களைத் தெரிவிக்கவேண்டும் என்று சொல்லி விடைகொடுத் தனுப்பினான் அளகாபுரிக்கிறைவனாகிய குபேரமகாராஜன்.

அப்பால் தருமராஜன் அக்குபேரனை வீமசேனனுடன் தாழ்ந்து பூமியில் வீழ்ந்து வணங்கி, கடோற்கஜனுடைய இரதத்தில் யாவரும் ஏறிக்கொண்டு, ஆகாயமார்க்கமாக வருகிறபோது தம்பிமார்களுந் தையலும் மிக மகிழ வானமளாவிய மலைவளம் - நதிவளம் - வனவளம் இயாவுங் காண்பித்துக்கொண்டு, நந்திசேனருடைய ஆசிரமத்தில் தியாவந்தன முடித்துக்கொண்டு இறங்கி சந்நியினுடைய பாதங்களில் யாவரோடும் பணிந்தார். பணிந்து நின்ற எல்லோருக்கும் அம்முனிவர் வேதமந்திர சாகைகளால் ஆசீர்வதித்து, ஓ புண்ணிய நாதா! என்ன சமாச்சாரமென்று வினாவினர். அதற்கு முரசக்கொடி முதல்வன், சுவாமி! சுயோதனாதிகளால் வருந்திப் பன்னிரண்டு வருடம் வனவாசம் பண்ணும்படி வந்து வருத்தமுற்று, இப்போது பத்தாவது வருடம் நடந்தேறி வருகின்றது. இப்படியிருக்க, இத்தம்பி வீமசேனன் அத் திரௌபதியினுடைய வார்த்தையைக் கேட்டு முன்னொருதரங் குபேரலோகத்திற்குப்போய் மந்தாரைமலர் கொண்டுவந்தான். அப்போது நான் வருந்தி பயந்து ஏதேதோ புத்திமதிகளைச் சொல்லியிருந்தேன். இப்போது மறுபடியும் அந்தப் பாஞ்சாலி பாரிசாதமலரை விரும்பிக் கேட்டதாக என்னிடத்திலுஞ் சொல்

கப்பெற்ற எங்கள் பாக்கியத்தை வாக்கினுற் சொல்லத் தக்கதோ! என்று உபசாரமாக இருவரும் நெடுநேரம் வார்த்தை யாடிக்கொண்டு இருந்தார்கள். அந்தச் சமயத்திற் குபேரனுடைய பிள்ளை உருத்திரசேனன் வந்து சந்தோஷமடைந்து, வெகுநேரம் ஒருவரோடு ஒருவர் பேசி குலாவிக்கொண்டு இருந்தபோது உருத்திரசேனன் தெய்வலோகத்தில் இருக்கும் அர்ச்சுனனுடைய வீரப்பிரதாபமும், மேலாகிய இன்பத்தை யடைந்து தேவர் சகாயன் என்று பேர்பெற்றிருப்பதும், நாளைக்கே இந்திரனும் அவனும் பூலோகத்திற்கு வரப்போகிற சேதிகளையும் சொல்லி, பாண்டு பூபதியுங் குந்திதேவியும்செய்த தவமே தவமென்று புகழ்ந்திருந்தான். அப்போது திரௌபதாதேவி வந்து குபேரனுடைய பாதங்களில் நமஸ்கரித்தாள். நரர்பிரான் இருகரங்களிலேயும் பற்றி எடுத்து உபசரித்து, அம்மணி! உம்மை துரியோதனன் சபையில் நிறுத்தி துகில்களையச் சொன்னகாலையில் விரிந்த இக்குழலும் அன்னேனுடைய உயிரு முடிக்கத்தக்க பலசாலி எவனென்ருல், என் சேனுதிபதிகளான எண்ணுயிரம் வீரர்களையும், இவ்வெண்ணுயிரவர்க்குந் தலைவனுகிய மணிமாலனையும் வென்று அதமாக்கிக்கொன்ற வீரப்பிரதாப வீமசேன மகாராஜ னெருவன்தான். அவரிதோ இருக்கின்ருர். உமக்கொரு குறைவுமில்லை என்று மங்களாசனஞ் சொல்லி, அணிமணிப் பணிகளோடு பட்டுத்துணி வகைகளுங் கொடுத்து, கடோற்கஜனுக்கு இராக்ஷதாளணியுங் கடக கங்கண வீரப்பட்ட விருதுகளெல்லாம் அளித்தான்.

### குபேரன் தன் பரிசனத்தோடு வந்து பாண்டவரை வழிவிடுதல்

அப்போது வீமசேனன் எழுந்து நரவாகனனுடைய கழலிற் பணிந்து, ஓ தனவானுகிய கனவானே! நான் அறியாதவனுகிய சிறியேன் தமது குணுதிசயத்தை குறியேனுகிய வறியேன். இப்படிப்பட்ட வெறியேன் செய்த குற்றங்களை மனம்பொறுத்து ரக்ஷிக்கடவது. "நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே, சீர் ஒழுகு சான்ருேர் சினம்" என்பதுபோல என் மீதுள்ள சகல கோபமும் இப்போதே மாறிவிட்டது என்பதற்கு சந்தேகமில்லை. இனி உங்களை ஒருக்காலும் மறக்கமாட்டேன் என்று துதிக்க, அவனை குபேரன் எடுத்து இருகவணைத்து, ஒன்றுக்கு நீ யோசிக்க வேண்டியதில்லை. கொன்றவனும் கொல்லுவித்தவனும் வேருக விருக்க, உன்மேலிற் கோபங் கொள்ள வேண்டியதேன்? நீங்கள் அபராதக்காரர்களல்ல. உன்னை நான் நினைந்து வருந்தங் கொள்ளுவனுகில், எய்தவனிருக்க அம்பை நொந்தவனைப்போல் ஆவேனென்று உபசரித்து, தேவதாஸ்திரங்கள் முதலிய திவ்யாஸ்திரங்களும் அதற்குத் தகுந்த மந்திரங்களும் மற்றுமுள்ள முஷ்டியாதி பல கஷ்ட நிலையுங் கற்றுக்கொடுத்து, வணங்கிய நகுல சகாதேவர்களுக்கும் வேதமொழியால் வாழ்த்தி யாவருந் தன்னிடத்தினின்றும் விடைபெற்று பயணப்படும்போது தானுங் குமாரனுந் தகுந்த சேனைகளுடன் கூடவே வந்து, தமது பட்டினத்தின் தெற்குக் கோபுரவாயில் வரைக்கு மிருக்கிற வேடிக்கைகளையுங் காட்டி யுபசரித்து, நாளொருவன் இவ்விடத்தில் இருக்கிறேனென்னுங் கியாபக முக்கியமாக இருக்கவேண்டும். என்னலாகத்தக்க காரியங்களைத் தெரிவிக்கவேண்டும் என்று சொல்லி விடைகொடுத் தனுப்பினுன் அளகாபுரிக்கிறைவனுகிய குபேரமகாராஜன்.

அப்பால் தருமராஜன் அக்குபேரனை வீமசேனனுடன் தாழ்ந்து பூமியில் வீழ்ந்து வணங்கி, கடோற்கஜனுடைய இரதத்தில் யாவரும் ஏறிக்கொண்டு, ஆகாயமார்க்கமாக வருகிறபோது தம்பிமார்களுந் தையலும் மிக மகிழ வானமளாவிய மலைவளம் - நதிவளம்- வனவளம் இயாவுங் காண்பித்துக்கொண்டு, நந்திசேனருடைய ஆசிரமத்தில் இறங்கி சந்தியாவந்தன முடித்துக்கொண்டு அம்மகரிஷியினுடைய பாதங்களில் யாவரோடும் பணிந்தார். பணிந்து நின்ற எல்லோருக்கும் அம்முனிவர் வேதமந்திர சாகைகளால் ஆசீர்வதித்து, ஓ புண்ணிய நாதா! என்ன சமாச்சாரமென்று வினவினர். அதற்கு முரசக்கொடி முதல்வன், சுவாமி! சுயோதனுதிகளால் வருந்திப் பன்னிரண்டு வருடம் வனவாசம் பண்ணும்படி வந்து வருத்தமுற்று, இப்போது பத்தாவது வருடம் நடந்தேறி வருகின்றது. இப்படியிருக்க, இத்தம்பி வீமசேனன் அத் திரௌபதியினுடைய வார்த்தையைக் கேட்டு முன்னெருதரங் குபேரலோகத்திற்குப்போய் மந்தாரைமலர் கொண்டுவந்தான். அப்போது நான் வருந்தி பயந்து ஏதேதோ புத்திமதிகளைச் சொல்லியிருந்தேன். இப்போது மறுபடியும் அந்தப் பாஞ்சாலி பாரிசாதமலரை விரும்பிக் கேட்டதாக என்னிடத்திலுஞ் சொல்

லாமல், நிருதிக்கிழவன் பதிக்குப்போ யளவிறந்த சேனைகளையுஞ் சேனாதிபதிகளையு மதமாகியதல்லாமல், அவனுடைய பிராணபதமாகிய பெரிய சேனாதிபதி மணிமாலனையுங் கொன்றான். அச்சேதி கேட்டுக் குபேரன் கோபங்கொண்டெழுவதற்கு முன்னமே இத்தம்பியின் குழந்தையாகிய கடோற்கஜனைத் துணையாகக்கொண்டு, அங்கு போய் இவனைக்கண்டு, குபேரனை வணங்கி நின்று, அவனுடைய உபசார மரியாதையாகிய சிநேகத்தைக்கொண்டு வரா நின்றேன். அப்படி வரும்போது யான் செய்த தவப்பயனாய்த் தேவரீராச்சிரமங்கண்டிறங்கினேன் என்று சொல்லக்கேட்ட அவ்வுத்தமரானவர் வீமசேனனை நோக்கி இதனைச் சொல்லுகிறார்:

அப்பா! நல்லோர்கள் ஒரு காரியத்தை முடிக்க யத்தனித்து வீரகங்கணங் கட்டினால், திரேக வருத்தமும்பசியும் நித்திரையும் நினைக்காதிருப்பதோடு, எவர்களுடைய பொல்லாங்கு இடையில் வந்தாலும் அவைகளையும் அவைகளாலுண்டாகும் அவமரியாதையையும் தங்களுடைய அருமையையும் எண்ணிப் பார்க்கமாட்டார்கள். இதன்றியிலும், ஆரியக் கூத்தாடினாலும் காரியமே கண்ணெண்ப ரறிஞர் இவைகளையெல்லாம் நினைத்து நீங்கள்கொண்டிருக்கும் விரதத்தை முடித்து, சபதத்தை நிறைவேற்றுகிறவரையிலும் அதற்கு வேண்டிய தானபலங்களைத் தேடவேண்டும். தருமங்களை அநுசரிக்கவேண்டும். அதைவிட்டு நல்லோர்களுடைய பகையைத் தேடிக்கொள்ளக்கூடாது. தமயன் வார்த்தையைத் தட்டி நடக்கலாகாது என்று வெகுவாகிய நீதிகளைக் கூறி வாழ்த்தினார். பின்பு தருமநந்தனர் கடோற்கஜனுக்குத் தான் குபேரனால் பெற்ற அணிமுடி முதலிய ஆபரணங்களோடு, அளவற்ற சின்னங்களுங் கொடுத்து ஆசீர்வதித்தனர். அவன் அவ்வாசீர்வாதத்தோடு விடையும் பெற்றவனாய், தந்தையர் பாதத்திலும், தாயார் பாதத்திலும், பெரியோர் பாதத்திலும் வணங்கி ஆசி பெற்று, சகல சத்துருக்களையும் ஜெயம் செய்யும்படியாகத் தந்தையின் முதல் வன்றந்த சற்குண வாக்கியங்களையுங் கொண்டு இடும்பவனம் போய்ச் சேர்ந்திருந்தான். பாண்டவர்களும் மற்றையரும் இவ்விடத்தில் இருந்தார்கள்.

வீமன் பாரிஜாதபுஷ்ப யாத்திரைச் சருக்கம் முற்றிற்று.

பத்தாவது,

## அருச்சுனன் வனமீட்சிச்சருக்கம்

### கண்ணன் துதி

நாவிதழிடையி லிருந்தவீரியனும் நாவிரண்டிதழிருந் தவனும், தோலுலாமீரைந் திதழிருப்பவனுந் துவாதச கோணம்வை கினனுந், தாலமூலத்திற் சோடசவிதழ்மேற் றரித்திரண் டிதழ்பொருந் தினது, மேலுமாயிரப் பொற் கமலம்வைகினது மெவனவனிருபதம் விழைவாம்.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இப்படியாகப் பாண்டவர்கள் நால்வரும், பாஞ்சாலியும், பன்னீராயிரம் பிராமணர்களோடும் தௌமியாசாரியரோடும் பற்பல வனங்களிலும் ஆச்சிரமங்களிலுமுள்ள திவ்ய தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ் செய்துகொண்டு, உரோமசன்மரால் நல்ல காலக்ஷேபஞ் செய்துகொண் டிருந்தார்கள். அர்ச்சுனனானவன் கைலாயகிரிக்குச் சென்று தவசு செய்து, ஈஸ்வரனுடைய கிருபாவினோத விளையாட்டிற்குப் பாத்திரனாகிப் பாசுபதாஸ்திரம் பெற்று, தேவர் பகைகளைத் தீர்த்திருந்தானென்று முன்னமே சொல்லி யிருக்கின்றேனல்லவா? இப்படியிருக்க, தேவேந்திரன் தனக்கு எந்தெந்த இடத்தில் சல்லியமுண்டோ அவைகளை யெல்லாம் இவனைக் கொண்டு முடித்துக்கொண்டவனாய், அட்டதிக்குகளிலுந் துட்ட னிக்கிரகன் இவ்வர்ச்சுனனே யென்று பட்டவர்த்தனர் முதலாயினோர் புகழ, ஓர் வீரப்பட்டத்தை விதிப்படி அவன் நெற்றியிற் கட்டி, கட்டு வர்க்கங்களும், பட்டு வர்க்கங்களும் கொடுத்து இந்திரன் இட்டமுற்றிருக்குங் காலையில், இவனுடைய வீரமும் உதாரமும் உலகத்தில் நிறைந்திருப்பதுபோல் தெய்வ முத்தாரமுஞ் சுகந்த பரிமளக் கற்பகப் பூவாரமும் இவன் மார்பிற் பொருந்தி இருக்கக்கண்ட அரம்பா ஸ்திரீக ளெல்லோரும் அப்போதைக்கப்போது நெருங்கி, விஜயனுடைய அழகை எடுத்துப் பேசி, மண்டலஞ் செய்த புண்ணியம் விண்டலம் செய்யவில்லையே? புண்டரீகன் முதல் அண்டர்களிக்கும் சுந்தரத்தைக் கொண்டவன் அண்டையிலிருக்க விரதமிழைத்த பெண்டுக ளெத்தனை தவமிழைத்தவர்களோ? என்று கொண்டாடி, நமது இந்திரனுக்கும் சண்டை யெல்லாம் ஒழித்து அமு

தம் உண்டிருக்கச்செய்த நமது இஷ்ட தெய்வம் இவனேயென வாழ்த்தி, ஆலாத்தி முதலிய உபசாரங்களெல்லாம் செய்து ஆசீர்வதித்தார்கள்.

அப்படி இருக்கிறநாளில் ஓர்நாள் காண்டீபன் மகிழ்ச்சியுடனெழுந்து ஆகண்டலனிடத்தில் வந்து பணிந்து, ஐயா! ஆரணியத்தில் என் தமையனையும், தம்பிமார்களையும், பன்னீராயிரம் பிராமணர்களையும், தௌமியாசாரியையும் விட்டு வந்து நெடுநாளாய்விட்டது. நான் பூலோகத்திற்குப்போக இச்சைகொண்டு இங்கு வந்தேனென்றான். உடனே வலாரியும் சந்தோஷித்து, தானும் கூடக்கொண்டுபோய் விட்டுவர வேண்டுமென்று இஷ்டங்கொண்டு, மாதலியை அழைத்து இரதங் கொண்டுவரச் சொன்னான். இதற்குள்ளாக அர்ச்சுனன் இந்திரன் மனைவியை சந்தோஷத்துடன் சென்று நமஸ்கரித்தான். அந்த அம்மன் மகா விசுவாசத்துடன் வாழ்த்தி சத்துருக்களை ஜெயஞ் செய்து நல்லோர் பெரியோர்களுடைய நன்மைகளைப் பெறக்கடவை யென்று உபசரித்து அனுப்பினாள். அக்காலத்திற் சகல தேவர்களுஞ் ஜெயமங்களங் கூற, தேவதாஸ்திரீகள் புட்பமல ரிறைக்க, தேவதுந்துமி முழங்க, வேதகோஷ்டம் வழங்க, தானதரும முதலியவைக ளெல்லாந் தங்கள் தங்க ளிஷ்டப்படி அவரவர்கள் கொடுக்க, சமுத்திரமுழக்கம்போ லமராவதி மகா களிப்படைந்திருந்தது. அச்சமயத்திற் பதினாயிரங் குதிரைபூண்ட தேரை மாதலி கொண்டுவந்து நிறுத்தினான். மேகவாகனன் அந்தத் தேரின்பேரிற் பற்குணனை யேற்றி, தான் நான்கு கொம்பினையுடைய அயிராவதத்தி லேறிப் புறப்பட்டான். சகல தேவர்களும் விமான நிறைகளிலேறி அர்ச்சுன னிரதத்தைச் சூழ்ந்தார்கள். இப்படி யாவரும் பொருந்தி வந்து ஆகாயத்தி னின்றுகொண்டு சுவேதவாகனனை மாத்திரம் இரதத்துடன் தருமராஜனிருக்கும் நந்திசேனர் வனத்திற்கு அனுப்பிவித்தார்கள். அப்படியே அனுமக் கொடியோன் பகற்காலத்தை யளிக்குஞ் சூரிய பகவானைப்போற் கோடிசூரியப் பிரகாசமாக விளங்கிக்கொண்டு யாவரும் பிரமிக்கும்படியாக வந்து இறங்கினான்.

**இந்திரன் தருமனுதியரைக் கண்டு குலாவி உரோமசன்மரை யழைத்துக்கொண்டுபோகுதல்**

அப்போது தருமராஜன் முதல் யாவருங் கண்டு எதிரெழுந்தோடி வரக்கண்ட ஆண்டொழின் மைந்தன் சயந்தனத்தை விட்டிறங்கி, உதிஷ்டிரனுடைய பாதங்களிற் பணிந்தான். அவரவனை இருகரங்களினாலும் வாரியெடுத்து மார்போடணைத்து முகத்தோடு முகம் வைத்து, தோளோடு தோளணைத்து உடல் பூரித்து, கண் களிகூர்ந்து, காணாது கண்டவர்களைப் போலவும் நித்திய மிடியோன் நிதிப்புதையல் பெற்றது போலவும் உளங்களித் துபசரித்து வாழ்த்தினார். உடனே வீமசேன மகாராஜனுடைய தாள்களில் வணங்கவும், அவன் தோள்களி லெடுத்தணைத்து உச்சி மோந்து உபசரித்துப் புகழ்ந்து மகிழ்ந்தான். நகுல சகாதேவர் இரண்டுபேரும் மண்மீது வீழ்ந்து பணிந்தார்கள். அவர்களைக் கேசவற்றோழன் கிருபையுட னணைத்து ஆசீர்வதித்தான். திரௌபதி வந்து வணங்கி நிற்க, அதுகண்டு சிவபெருமானருளால் உன் சிந்தைத் துயரம் நீங்கக் கடவ தென்றான். தௌமியாசாரியருக்கும் உரோமசன்மருக்கும் பன்னீராயிரம் பிராமணர்களுக்குந் தீர்க்க தெண்டனிட்டான். யாவரும் வேதகோஷஞ் சொல்லி ஆசீர்வதித்தார்கள். நந்திசேனருடைய திருவடியை நாடிப் பணிந்தான். அவரும் உன் அண்ணன் தம்பிகளுடன் சத்துரு ஜெயஞ் செய்து கூடி வாழக்கடவ தென்றார். இப்படி யிருக்கிற சமயத்தில், சுரேந்திரனும் அமரர்களும் பூமியி லிறங்கினார்கள். அவர்களைக் கண்டு உதிஷ்டிரர் எதிரோடிப் பணியும்போது கோமதி யெடுத்து மார்போடணைத்து, ஓ பூபதி! உம்முடைய தர்மமே தர்மம். உமது பாக்கியமே பாக்கியம் என்று புகழ்ந்து தேவர்களுடன் மகிழும்போது, முரசுயர்த்தோன், ஐயா! யான் மகா பாவியானவன் என்னை இப்படி புகழவேண்டாமென்று சொல்லினார். அச்சொல்லைக் கேட்ட புருகூதன் சொல்லுகிறான்:

ஓ தருமராஜனே! உமது தம்பி என்னரசாக்ஷியை நிலைக்கச்செய்து, இந்திரலோகங் குடியேற்றினா னென்பது யாவருக்குந் தெரிந்திருக்கின்றது. வீமசேனன் குபேர லோகத்திற்கு போய்த் தன்னை யெதிர்த்து வந்த பல சேனைகளி னுயிரையுஞ் சேனாநாயகனாகிய மணிமால னுயிரையுங் கொள்ளையிட்டதுங் கேட்டேன். இப்பேர்ப்பட்ட பலசாலிகள் உமது சமீபத்தி லிருக்க, நாடு நகரங்களை யெல்லாஞ் சொக்கட்டானிலாடித் தோற்றது மல்லாமல் அவமரியாதையாகிற பேச்சுங் கேட்டு உத்தம ஸ்திரீயை மயிரைப் பிடித்து இழுத்து

வந்து சபையில் நிறுத்தி ஆடை களையச் சொன்னபோதுந் தம்பிமார்களை மீறவொட்டாமல் அடக்கிக்கொண்டு, நீரும் பொறுத்திருந்தீரன்றோ? உம்முடைய பொறுமையும் புண்ணிய நினைப்புந் துரியோதனாதிகளை வறுமையாகச் சுற்றிக்கொண்டு நாளையே யழியப்போகிறார்கள். சகல புவன ராஜசிரேஷ்டராக நீரே தம்பிமாருடனிருந்து வாழ்வைப் பெறப் போகிறீர். அப்போது நாங்களே வந்து காணப்போகிறோம், நீரேன் விசனப்படுகிறீர்? வேதங்களாலு முணரக்கூடாத உண்மைப் பொருளா யுள்ளவர் உமது தம்பி செய்த தவத்திற் கெதிர்வந்து, வேடுவ ரூபத்துடன் வில் யுத்தமும், மல் யுத்தமுஞ் செய்து வாது புரிந்து, வில்லடியும்பட்டு, மேலாகிய பாசுபதாஸ்திரமுங் கொடுத்தருளினார். அப்படி கொடுக்கப்பெற்ற உத்தமனைத் தம்பியாகப் பெற்ற உமக்குஞ் சத்துருக்களுண்டா? உங்களை யடுத்த எங்களுடைய பகைவரெல்லாம் நாசமாகிறபோது உங்களுக்கென்ன தாக்ஷி? ஆ! ஆ! ஈதல்லவோ கண்காட்சி! இதோ ஆச்சு; சமுத்திரந் தாண்டிவிட்டீர்கள். இன்னுஞ் சிறு கால்வாய் தாண்ட இரண்டு வருஷமிருக்கிறது. நல்லகாலம் வருகின்றது. பார்வதாதேவியாரும், பரமேஸ்வரனும், விஷ்ணுவும், பிரமாவும் இன்னுஞ் சகலமான பேர்களுந் திவ்வியாஸ்திரங்கள் கொடுத்த தல்லாமலும், ஜெயம்ஜெயமென்றே வாழ்த்தினார்கள். இந்தம்மாளுக்கும் விரித்தகுழல் முடித்துச் சத்துருவினுயிர் முடிக்குங் காலம் இதோ வந்தது. லோகத்திலே இப்படி தவம்பண்ணி ஈசனைக் கண்டு அஸ்திரம் பெற்று, அதைக் காலகேய நிவாதகவசாள்பேரிற் பிரயோகித்துக் கைபழகித் தேறினவர்களை யான் இது வரையிலும் பார்த்தறியேன். இப்போது உம்முடைய தம்பி அர்ச்சுனனாலறிந்தேன் என்று சொல்லிய பொன்னகர்க் கிறைவனை மன்னவர்க்கிறைவன் மகா பக்தி விசுவாசத்துடன் பலமுறை துதித்து வணங்கி, எல்லாம் உங்களுடைய ஆசீர்வசன பாக்கியமே யென்று புகழ்ந்தார். அதுகாலையில் மருதநிலத் திறைவன் தீர்த்தயாத்திரை செய்து வைக்கும்படி அனுப்பிய உரோமசன்மரை அழைத்துக் கொண்டு, யாவரையு மிவ்விடத்திலிருக்கும்படி மங்களாசனஞ் சொல்லிச் செலவு பெற்றுக் கொண்டு வானுலகமுற்றான். இவர்களும் மகிழ்ந்து போற்றித் துதித்துக் கானகத்தில் யிருந்தார்கள்.

## அருச்சுனன் தான் போய்வந்த சேதியைத் தருமனுதியர்க் குரைத்தல்

அப்போது மெய்விரதன் அருச்சுனனாகிய தம்பியைப் பார்த்து, என் அப்பனே! உன் பாக்கியமே பாக்கியம். உன்னோடு பசுபதியாகிய பரஞ்சோதி வந்து விளையாடப்பெற்ற உன் தவத்தை என் அகக்கண் குளிரவும் மற்ற யாவருங் கேட்டு மகிழவும், ஒன்றையும் விடாமற் சொல்லவேண்டு மென்று வருந்தி வினவ, சுரேந்திரன் மைந்தன் சொல்லலுற்றான்: என் அண்ணாவே! நான் உங்களைவிட்டகன்று, காடு - மேடு-மலை-வனம்-வனாந்திர முதலானவைகளைக் கடந்து போய் இமோத்கிரிச்சாரலில் தவச்சாலை ஏற்படுத்திக்கொண்டு, பூருவாக்கினி - தக்ஷணாக்கினி-வாருணாக்கினி-உத்தராக்கினி-சூரியாக்கினி என்னும் பஞ்சாக்கினி மத்தியிலிருந்து சிலநாள் வரையில் அருமையான தவஞ் செய்துகொண்டிருந்தேன். துரியோதனன் மனதுக்கிசைந்த மூகனென்று சொல்லும் ஒரு ராக்ஷசனானவன் பன்றிரூபமா யென்னைக் கொல்லவந் திருந்தான். அது யெனக்குத் தெரியாது. பராசத்தியாருடைய பணிப்பெண்க ளவ்விடத்திலிருந்த வஞ்சகனைக் கண்டு அஞ்சனாட்சியினிடத்திற் சொல்ல, அவராற் சிவபெருமானறிந்து அபிராம வேடரூபங்கொண்டு சிவகாமியுடன் குன்றுதோறாடல் செய்பவனைக் குறித்துக் குழந்தையாக்கி மடியிற் கட்டி அநேகம் நாய்கள் சூழக் காட்டை வளைத்துப் பறைகள் முழக்கி மறைகளை வேடப் பாஷையாகப் பேசிக் கொண்டு வந்தார். அந்தச் சந்தடியைக் கண்டு பன்றி என்மேற்றாவ, யான் பாணப்பிரயோகஞ் செய்ய, அபிராமவேடருங் கணைதொடுக்க, இறந்து விழுந்த பன்றியைக் கிட்டி நோக்கி என் பேரில் வீண் வழக்கிட்டு, நான் துரத்தி வந்த பன்றியை நீயேனடா அடித்தாயென்று யுத்தஞ் செய்து, யென் வில் நாணியை யறுத்தார். உடனே எனக்குக் கோபம் வந்து ஓங்கித் தலையிலடித்தேன் அவ்வடியானது என்றலையிற்றானே விழுந்ததுபோ லிளைத்துநின்றேன். அப்பா லுன்னை விடுகிறதில்லை யென்று வந்து என்னுடன் மல் யுத்தஞ் செய்து என்னை வாரி ஆகாயத்திற் சுழற்றி யெறியவும், சங்கா சம்போவென்று பூமியில் வந்து விழுந்து, சற்று நேரந் தரித்து எழுந்து வேடர்பிரானை வாரி யெறிவதற்குப் பார்த்தேன்.

அப்போதவ் வேடுவர் மாயமாய் மறைந்து, ஆகாயத்தில் வெள்விடையின்மீது ஐந்து முகமும் சிவந்த சடையும், புலித்தோல் உடையும், சூலப்படையும், அரவாபரணமும், அம்புலிச்சடையும், கரியினுரியும், கபாலக் கரமும், முப்புரிநூலும், கொன்றைகூவிளம், அறுகு,எருக்கு இவைமுதலிய பத்திரபுஷ்பங்களும் திரிபுண்டரமும் திரிநேத்திரமு மிலங்கும்படியாய், பச்சைக்கொடியைப் பாகம் வகித்து,நாராயணன்-பிரமன்-ஆகண்டலன்-விநாயகர்-சுப்பிரமண்யர்-வீரபத்திரர் இன்னுமுண்டான சகல தேவர்களுடனே பிரசன்னமாகி தேவபூரி - தேவசங்கம்-தேவமுரசு-தேவதுந்துமி முதலிய வாத்தியங்கள் கோஷிக்க, ஜெய ஜெயவென்று புஷ்பமாரி வருஷிக்கத் தரிசனந் தந்தனர். உடனே நான் எழுந்தோடி விழுந்து வணங்கி, அரனே போற்றி யாதியே போற்றி ஆரணமறியா வமலனே போற்றி என்று துதித்துக் கண்ணீர் சோரக் கால் தள்ளாடி நின்றேன். நின்றவென்னை நிமலனணைத்து சந்தோஷத்துடன் தானவன் பன்றியாய் வந்தவாறுரைத்து, பாசுபதாஸ்திர மளித்து, மந்திரோபதேசஞ் செய்து முஷ்நிலையுங் கற்பித்தனர். உமையவளுஞ் சத்தி யளித்துச் சத்துரு ஜெயஞ் செய்யக் கடவை யென்ன, பிரம்மா விஷ்ணு முதலிய யாவரும் அநேகம் ஆயுதங்களும் அஸ்திரங்களுங் கணைகளுங் கொடுத்தார்கள். நான் அவர்களை வணங்கி வாங்கி வாழ்த்தியிருந்தேன். தேவர்களுடனே சிற்பரநாதன் சங்கரியோடு தன் சாரலுக்கெழுந்தருளினர். அக்கால் தேவேந்திரன் தன் விமானத்தின்மீது ஏறும்படி சொல்லி, தேகந் தவ மிழைத்து இளைத்திருக்கின்றபடியால் தெய்வலோகம் வந்திருந்து பின்பிங்கு வரலாமென்று அழைக்க, அப்படியே சென்றேன் யாவரையுங் கண்டேன். வெய்யிலிலுங் காற்றிலும் பனியிலுமிருந்து வருந்தியிழைத்த தவத்தினுலுற்ற ஆயாச மெல்லாந் தணிந்தேன். அதுகாலையில் இந்திரன் வந்து என்னை யிரந்து, சத்துருக்களைக் கொன்று இந்திரலோகத்தை நிலைநிறுத்திவையென்று கேட்க, நல்லதென்று காலகேயரையும் நிவாதகவசத்தார்களையுங் கொன்று, தேவதத்தமென்னுஞ் சங்கமும் எட்டுத்திசையும் கிரணம் வீசுங் கிரீடமும்பெற்றுக் கொலுவிருக்கும்போது, இந்திரன் மகிழ்ந்து அமுதபோஜனமூட்ட வுண்டு, இந்திராணியு மகிழ்ந்து உபசரிக்கச் சிலநாள் வாழ்ந்தேன்.

அப்படியிருக்க, என்மீது ஊர்வசி மோகங் கொண்டுவர, நான் தாயென்று விலக்க, அப்போதவள் என்னைப் பேடி ரூபமாகச் சபித்தாள். உடனே தேவராஜனறிந்து அச் சாபத்தை விலக்கிவிடும்படி அந்த ஊர்வசியை அழைத்தார். அவள் வந்து சாபத்தை மாற்றும்போது, அப் பேடி யுருவத்தை நான் எப்போது நினைக்கின்றேனோ அப்போது வரவும் மற்றவேளையில் நீங்கவுஞ் செய்து, இஃதுனக் குதவுங்கால முண்டென்று சொன்னாள். அப்படியே யான் பெற்றுக்கொண்டு, தேவர்களை விட்டுப் பிரிந்து நெடுநாளாகையாற் பூமியில் தங்களைப் பார்க்கவேண்டுமென்று இங்கு வந்தேன். இதுவரையிலும் நான் போய்வந்த வர்த்தமானம் என்று சொல்லி நமஸ்கரித்த தம்பியைத் தருமராஜ னணைத்துப் புளகமுற்று, இவ்வளவு பாக்கியம் யான் செய்யாமற் போனேன். ஆனால் உன்னைக் கண்டேன். ஈஸ்வரனோடு தழுவிய தேகமிது. அவரால் வாரி எறியப்பட்ட சரீரமிது. அவருடைய பாதங்களிற்றொழுத சிரமிது. அவரை வில்லினால் மோதியடித்தகரங்களிதுஎன்று அவ்வங்கங்கள்தோறு முத்தமிட, மகிழ்ச்சியுடன் மற்ற யாவருங் களித்திருந்தார்கள்.

அருச்சுனன் வனமீட்சிச்சருக்கம் முற்றிற்று.

---

பதினோராவது,

## நகுஷன்

## சாபவிமோசனச்சருக்கம்

### கண்ணன் துதி

தாயாகி யுற்பவகா ரணனாகித் தமராகிச் சாட்சியாகி, மாயாவிப் பிரபஞ்சமயக்கறுக்குங் குருவாகி வானோராகி, நீயாகி நானாகி யவனாகி யகம்புறமாய் நிமிர்ந்தமூர்த்தி, தேயாநல் லருள்பொழியுந் திருவடியென் கருவடியத் தெரிசித்தேனே.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! கைலாசபதியைத் தரிசித்துப் பாசுபதாஸ்திரமும் பலவரங்களையும் பெற்றுத் தேவேந்திர போக மனுபவித்து வந்து தருமனாகிய சகோதரரோடுங் கலந்துகொண்ட சவ்யசாசியை மஹானுக்களெல்லோரும் வந்து கண்டு, ஈஸ்வரனுடைய திவ்விய குணங்களையும், தெய்வலோக மகத்துவங்களையும், நித்த நித்தம் நவ

தேவேந்திரன் அருச்சுனனுக்கு இளவரசுபட்ட மளித்தல்.



நகுஷன் சாப விமோசனம்.

நவமாகக் கேட்டுக்கொண் டிருக்குங் காலையில்,
வீமசேனன் மெள்ள வெழுந்து, தருமனுக்
கும் மற்ற யாவருக்குந் தெரியாமல் வனங்க
ளிற் சென்று, யானை முதலான மிருகங்களை
யெல்லாமருட்டி வெருட்டி யோட்டியும் மலைப்
பாம்புகளைப் பிடித்துத் தலைகீழாக ஆட்டி
யும், மரங்களையும் மலைகளையும் பிடுங்கி மாறி
மாறி நாட்டியும் விளையாடிக்கொண்டு வரு
வான். அப்படியிருக்குநாளில், ஒருநாள் ஓர்
மலைப்பாம்பானது மிகுந்த நீளத்தையும்,உயர்
ந்த கனத்தையும், திணிந்த படத்தையும்,
சுவாலையாகிய விடத்தையும், மிகுந்த ஆட்த்
தையுமுடையதா யோடிவந்து, அவனைக்
கால்முதல் தலைவரைக்கும் இறுக்கிப் பந்தித்
துக்கொண்டது. அஃது எப்படி யிருந்ததென்
றால், மந்திரகிரியை வாசுகியானவன் ஆயிரஞ்
சுற்றுறச் சூழ்ந்ததுபோ லிருந்தது. அது
காலையில் வீமசேனன் பயந்து நடுங்கி யொடு
ங்கி, பெருமூச்சுடன் களைத்து, இளைத்து,
தேககாந்தியும் புத்தியி னலமும்போய் பதினா
யிரம்யானையின் பெலமுங்குன்றி, அந்தப்பாம்
பின் பிணிப்பை விடுவித்துக் கொள்ளச் சக்தி
யில்லாமல் தன்னுடைய புஜபலபராக்கிரமங்
களை யெல்லாம் எண்ணி, இடும்பன்-பகாசுரன்
ஜராசந்தன் - புண்டரீகன்-மணிமாலன் இவர்
களுடைய வல்லபங்களையும், அவர்களை வெகு
சொல்பமாகக் கொன்ற தன்னுடைய ஆண்
மிக்கையையும் யோசித்து, சரிதான்; இது
நமக்கு முடிவுகாலம். (ஜெயமிருக்கின்றவரை
யிலும் பயமில்லை) என்று பழமொழியொன்று
சொல்லுவார்கள். அது சரியாய்விட்டது.

இஃதல்லாமலும் (மூத்தோர்சொல் வார்த்
தையமிர்தம்) என்பார்களாகையால், நமக்கு
அபஜெயகாலமோ? அல்லது நமது தமயன்
தன்னைவிட்டு நீங்காதிருக்கச் சொல்லிய வார்த்
தையைக் கடந்துவந்த தீவினைமேலிட்டதோ!
மற்றியாதோ! இப்போது நல்வினை போய்
விட்டதென்று வருந்தி, ஆனாலும் உயிர்
போம்போதுந் தயிரியம் விடலாகாதென்று
பெரியோருரைத் திருக்கின்றார்களே; அந்த
உறுதியைக்கொண்டு கூடியவரையிலும் பார்ப்
போமென்று கருதி, தன் தேகம் பூரிக்கும்
படியாய் வாயுவைக் கும்பித்துப் பார்த்தான்.
அப்போதும் பிணிப்பு தளரத்தக்கதா யில்லை.
போகட்டும்; நயமொழியினால் ஜெயமுண்
டென்று ஒருவாக்கிய மிருக்கின்றதால், அதை
யாகிலும் நடத்தி யறிவோமென்று கருதி,
கேதுவினாலகப்பட்டு ஒளியிழந்து வருந்துஞ்
சந்திரன்போலுருகி, ஓ ஐயா! நாகராஜேந்
திரா! ஓ ஐயா! யோகபோகேந்திரா! இவ்வுல
கத்தில் துஷ்டகண்டகனென்று பேர்பெற்று
இறுமாந்து ஒருவரும் நிகரில்லாமல் மதத்
துத் திரியும் யான், இன்று உம்மிடத்தி லகப்
பட்டு வருந்தி யிருக்குங்காலம் வாய்த்தது.
இத்தேகமோ என்றென்றைக்கும் அனித்திய
மேயொழிய நித்தியமன்று. நாய்-நரி-எறும்பு
பருந்து-கழுகு இவைகளினாகாரத்திற் காய்
வளரும் புழுக்கூடு. அப்படி விறுதாவிற்போ
கிற ஓர் பொருள் உமக்கு இரையாகிறது என்
க்கு மெத்த லாபம். ஆகிலும் நான் சிறியேன்,
அறியாமற் கேட்டபோதிலுங் கோபங்கொள்
ளாமற் சொல்லவேண்டும். அஃதென்னவெ
னில், ஓ உத்தமனே! நீரார்? தேவர்கள் முத
லிய பேர்கள் என்பொருட்டாகச் செய்த தீங்
கோ? சத்துருக்கள் செய்த வஞ்சகமோ? உங்க
ளுக்கும் எங்களுக்கும் பூர்வப்பகையோ? அல்
லது என்னுடைய விதியோ? தெய்வஞ் செய்
யுஞ் சதியோ? நான் யாதொன்றுமறியேன்.
உமக்கு நானொரு பொல்லாங்குஞ் செய்யவில்
லையே? யாதொரு பகையுமில்லையே? என்மற
முந்திறமுமெல்லாம் எங்கேபோ யொளித்தன
வோ? என்று வருந்தவும், அவனை நோக்கி
மலைப்பாம்பானது சீறி, அடா! என்னிடத்தி
லகப்பட்டு இறந்துபோகப்போகிற நீ இத்
தனை பரிதாபப்படுகிறாய் என்னை யாரென்று
கேட்கிறாய். நல்லது உன்னுடைய ஆசை
யையும் எண்ணத்தையும் அறிந்து வெல்ல
வேண்டும். நீ யார்? அதனை யெனக்கு முன்
னஞ் சொல்லென்று பாம்பு வினவ, சூதா
பாணி சொல்லுகிறான்:

**நாகம் வீமன் வரலாற்றைக் கேட்டறிந்து,
பாண்டவருக்குந் தனக்குமுள்ள பகை
காட்டிப் பயமுறுத்துதல்**

ஓ விஷ்ணுவுக்குப் பாயாகவும், பரமசிவ
னுக்கு ஆபரணமாகவும், பூமிக்கு ஆதாரமா
கவு மிராநின்ற உத்தமகுலத்துதித்த கர்த்த
னே! கேளும்: சந்திரவமிசத்திலுதித்தபாண்டு
பூபதியினுடைய புத்திரர்களிற் சிரேஷ்ட
ராகிய தருமராஜனுக்கு இளைய வீமசேனன்.
யான் வாயுவினமிசைபெற்ற புத்திரன். துரி
யோதனாதிகளால் நாடுநகர மியாவுமிழந்து
காடேகியாய் வந்திருக்கின்றோம் என்று
சொல்லக் கேட்ட நகுஷனாகிய நாகங் கல கல
வென்று நகைத்து, சிரத்தை யசைத்து,

நாக்கை நீட்டி, விஷத்தைக் கோபத்துடன் கக்கி, விசனத்தினால் விக்கி, அடடா!! தேடிப் போன மருந்து காலில் அகப்பட்டாற்போல் ஆச்சுது. என்னெண்ணம் வாய்ச்சுது. அடா வீமா! அவனெங்கே உனக்கு இளையவர்ச்சுனன்! அவனைத்தான் நானென்ன விட்டேனோ! என்று உக்கியுறுக்கி, பூர்வத்தில் உன் தந்தையாகிய வாயுதேவன் என் தந்தையாகிய ஆதிசேடனை மகமேருவில் வளைத்துக்கொண்டு நெடுநாள் யுத்தஞ்செய்து அவமானப்படுத்தி இருக்கின்றான். விஜயன் காண்டவவன தகனஞ் செய்யும்போது எங்கள் கூட்டத்தாரைக் குப்புகும்பாய் நெருப்பில் வெதுப்பி விட்டான். அல்லாமலும் என்னுடைய பந்துவாகிய தக்ஷகன் பெண்சாதியைத் தலை யறுத்துக் கொன்று, அச்சுவ சேனனென்னும் பிள்ளையை வாலறுத்து வருத்தினான். உங்கள் வமிசத் தலைவனாகிய சந்திரன் முன் காலத்திலே எங்கள் பெரியவர்கள் அமுதமுண்ண மாறு வேடங்கொண்டு வந்தபோது உளவுசொன்ன தின்பேரில், அவர்களுடைய தலையைச் சொட்டையாக விஷ்ணு அடித்திருக்கின்ற பகை நாளதுவரையில் உமிழ்தலுண்ணலென்று உலக்கத்திருக்கின்றமையால், அந்தக் குலத்தில் யார் உதித்தாலும் எங்களுக்குப் பகைவரே யன்றி வேறில்லை நாங்கள் விடோம்.

மேலும் துரியோதனன் எங்களுக்கு நெருங்கிய சினேகன். அவனுக்கு வேண்டிய துணையும் உதவியுஞ் செய்வோம். அது எதினால் என்றால், சில நாளைக்கு முன்னே எங்களை வருந்தி ஒருவரங் கேட்டுக்கொண்டான். அது என்னவென்றால், தன் முடியிலுஞ் ஜெயமாகியகொடியிலும் நீங்களிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, அன்றுமுதல் இன்றைய வரைக்கும் அரவக்கொடியோனெனப் பெயர் கொண்டிருக்கிறான். ஆகையால் அவனுக்கு நீங்கள் பகைவரானதினாலும், இத்தனை விதப் பெரும்பகை உங்களுக்கும் எங்களுக்கும் நேரிட்டிருக்கின்றதினாலும், முன்னம் உன்னை விழுங்கிவிட்டு, அர்ச்சுனனிருக்கும் இடத்திற்கும் இதோ போகிறேன். அவனையும் விழுங்கி என் பகை தீர்ப்பேனென்று சொல்லிற்று. இப்படி பெரும்பாம்பு சொலக் கேட்ட இடும்பி நாயகன் என் செய்வான்? ஐயோ! (கிணறு வெட்டப்போய் பூதம் புறப்பட்டது) என்னுங் கதையாக முடிந்ததே. (குளிச்சங்கட்டக் குட்டி மிரட்டித்தது) என்னுங் கொள்கையாய் நேரிட்டதே. (என்னை நீக்கிக் கொண்டுபோன பேய் என்னை வந்திக் கொண்டு வந்தது) என்னும் இயல்பாய் வாய்ச்சுதே என்றேங்கி, ஏது! ஏது! இனி நாம் பிழைப்போமென்னும் இச்சை வைக்கவேண்டியதில்லை. ஓ தெய்வமே! நான் பாண்டு பூபதிக்கு வாயுதேவன் அனுக்கிரகத்தால் பிறந்து வளர்ந்து இப்போது இக் கடுங்கோபங் கொண்ட விடநாகத்திற்கு இரையாகவோ இருந்தேன். ஓ நீலமேகச் சாமளவண்ணா! ஓ என் அண்ணாவே! என்று திடத்துடன் உயிராசையை நிராசைசெய்து, ஐம்புலன் வழியில் அறிவு செல்லாதபடி அந்தக் கரணத்தை அடக்கி, தகேதத்தியான பரனைப் பரமசிவன் பதத்தில் இன்புற்று, சமாதி நிஷ்டையைப் பெற்றவனைப்போலத் தத்துவங்களெல்லாம் அடங்கி யிருந்தான்.

### வீமனைக்காணாமல் வருந்தித் தேடிய தருமன் அவனுக்குண்டான ஆபத்தைக்கண்டு நாகத்தைத் துதித்தல்

இவ்விடத்தில் இவனிவ்வாறிருக்க, அவ்விடத்தில் தருமராஜன் அர்ச்சுனனுடைய வெற்றி லாபங்களைக்கேட்டு, தம்பி வீமசேனா! உன் தம்பி அனுமக்கொடியோன் பெற்ற பெருங் கீர்த்தியைப் பார்த்தையா வென்று சொல்லிக்கொண்டே அவனை நோக்கத் தன் பக்கத்தில் திரும்பினார். விருகோதரனைக் கண்டிலர். உடனே அங்கிருந்த மற்றையரை நோக்கி, என் தம்பி எங்கே போனானென்றெழுந்து கேட்கும்போது, அவர்கள் இப்படி வனத்திற்கு இப்போதுதான் சென்றானென்றார்கள். உடனே அவனடிச்சுவட்டைப்பற்றித் தொடர்ந்து, அடர்ந்து, படர்ந்திருக்குங் காட்டில் நுழைந்து, அந்தணர் முதலியோரும் பின் தொடர்ந்துவர, நான்கு முகத்திலுந் தேடி, எங்குங்காணாமல் வாடி, தம்பி வீமா வீமா என்று கூவிக்கூவி மேவி வரும்போது, ஆவி போம்படியாகிய நிலையில் ஆழியிலமிழ்ந்த மந்தரம்போல் மதிமுகமாத்திரந் தோன்ற, பர்வதாகிர்தியாக இருக்கக்கண்டு, பயந்து, அயர்ந்து, நடுநடுங்கி, வாய்வெருவி, கண்ணீரருவிபோலோடச் சமீபித்து உற்று நோக்கி, அவனைச் சூழ்ந்துகொண் டிருக்கிற புஜங்கராஜனைக் கண்டு, தம்பிக்குப் பிராணனிருக்கின்றதோ போய்விட்டதோ வென்று தெரிந்துகொண்டு, தீர்க்கதெண்டமாக விழுந்து, முறையோ முறையோவென்றழுது, ஓ பழுதி

லாக் குலத்தில் பிறந்த பாக்கியவானே! இவனோடு உமக்கு வேண்டிய இரைகளைச் சொன்னால் உடனே அநேகங் கொடியாகக் கொண்டு வந்துகொடுக்கும் பெலசாலியாக்கும். நித்தியம் நீர் இருந்த இடத்தி லிருந்து அருந்தலாம். உமக்கு இவனாழியனாக இன்றுமுதல் விட்டு விடுகிறேன் இவன் உனக்கு எவ்வளவு. இவனுக்கு எவ்வளவு தேகம். இவனைப் புசிப்பதனால் உமக்குப் பசி எப்படி தணியும். உமது கடைவாய்க்கும் பத்தானே. எங்கள் தாய் தந்தை இவனை வெகு தவமிருந்து பெற்று வளர்க்க எனக்கு உதவியாக இங்குற் றிருக்கின்றான். இன்று செத்தானேயாகில், எனக்கென்ன வாழ்வு? என்ன இன்பம்? ஒன்றுமில்லை. எங்களையும் நீர் விழுங்கிவிட்டுப் பசியை ஆற்றிக் கொள்ளும். ஓ ஏந்தலே என்றிரந்து நின்றார்.

இவ்வாறு இரந்து நின்ற உதிஷ்டிரரை அந்நாகமானது கோபமுடனே நோக்கி, நான் புசிக்கப் பிடித்திருக்கும் இவனைக் குறித்து, இத்தனைப் பரிதலுறுஞ் சுத்தமான நீ யார்? அதனை முன்னம் எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்ட அரவை நோக்கி, இதனைச் சொல்லுகிறார்: ஐயா சந்திரவம்சோத்தாரகன் பாண்டு பூபதி, குந்திதேவி, மத்திராதேவி, இவ்விருவரும் அவர் மனைவியர். இவர்களுக்குப் பிறந்த பிள்ளைகள் ஐவரில் யான் மூத்தவன். என் பெயர் தருமன். நீர் பிணித்திருப்பவன் வீமசேனன். இவனுக்கிளையவன் அர்ச்சுன நகுல சகாதேவர்கள். நாங்கள் துரியோதனனுடைய பொருமை வஞ்சகத்தால் உங்களைப்போலொத்த பெரியோர்களே தஞ்சமென்று காட்டில் வந்திருக்கிறோம் என்று சகலமுந் தெரிவிக்கவே, இதைக் கேட்ட பாம்பானது கண்ணீர் சொரிந்தழுது, குழந்தாய் தருமபூபதி! என்னுடைய கதியைக் கேளும்: சந்திரகுலத்தில் பிறந்த தோன்றல் ஆயு மஹாராஜன் அவனுடைய மைந்தன் நான். என் பெயர் நகுஷன். யான் நான்குவேதம்-ஆறுசாஸ்திரம்-பதினெண் புராணம்-முப்பத்திரண்டு உபநிடதம்-இருபத்தெட் டாகமம்-அறுபத்தினான்கு கலைக்கியானம் இவை முதலிய கிரந்தங்களை யாவும் கற்றுணர்ந்து, உலகமெல்லாம் ஒரு குடை நிழலில் ஆண்டவன். சகல வரசரும் வணங்க, சத்துருக்களென்றும் பகையில்லா திணங்க, நூறு அசுவமேதமுஞ் செய்து, விக்கினமின்றி தேவர்களுக்குப் பூரணாகுதி கொடுத்து, கலகம்-பயம்-அசுசி பொய்-பொருமை-லோபம் இவைகளில்லாமல், அமரர்கள் வாழ்த்த அமராபதிக்குவந்த தேவராஜனானேன். அப்படி தேவேந்திரனாகித் தேவபோகத்தை யெல்லாங் குறைவற வனுபவித்திருக்குங் காலையில், ஜென்மாந்திர வினையினால் அகஸ்தியர் சபிக்க, இவ்வல்ப கதியை யடையலானேன். வெகு காலமாகத் தேடிக்கொண்ட பெரும் புகழாகிய பதத்தை ஓர் சொல்ப போகத்தைக் கருதி நிமிஷத்தில் இழந்தேன்.

ஓ தருமபூபதி! நான் என்ன செய்வேன்! பின்பு அச்சாபத்தினால் வருந்தி விழுந்து, அகஸ்தியருடைய பதத்தைப்பற்றி, சுவாமி! அடியேற் கருள்புரிகவென் றிரந்தேன். அப்போது என்பேரில் இரக்கமுற்ற அந்தக் கருணாநிதியானவர் அருள் புரிந்தது என்னவெனில், நான் கூறிய சாபம் பொய்மையல்ல, மெய்மையே. நீ இந்தப் பதத்தை யிழந்து பாம்பின் வடிவமாய்க் கானகத்திற் சென்று, பாரியவுடலுடன் பருவதச்சாரலிற் பொருந்தி, யானை-யாளி-சிங்கம்-சரபசார்த்தூல முதலிய எவைகள் வந்தாலும், எவ்வளவு பெல முற்றிருந்தாலும், உன் பெலத்திற்கு அடங்கி யொடுங்கிப்போக நீ யவைகளை விழுங்கி, காட்டிற்றானே காலங் கழித்துவரும் நாளையில், உன் குலத்திற்பிறந்த உதிஷ்டிரன் தன் தாயாதியர் உபத்திரவத்தினாற் கானகம் வரும்போது, அவன் தம்பியை நீ பிடிப்பாய் அப்போதவன் வந்து உனக்குப்பிரிய வசனஞ் சொல்லுவன் அப்போதவ்வுத்தமனால் தருமசந்தேகமென்னு மொழிகள் உன் காதாரக் கேட்பாய், அதனால் இந்தச் சாபம் உடனே நீங்குமென்று உரைத்தனர். அதைக் கேட்டுக் கொண்டு இந்த வனத்தில் அன்று வந்து விழுந்து வருந்தி, தெய்வமே! எப்போது என் குறையை நீக்குவையென் றெண்ணிக் கொண்டிருக்குங் காலையில், இந்த உத்தமன் வந்தான் உடனே நமக்குச் சித்தியாகுங் காலமென்று பற்றினேன். உம்முடைய தரிசனமுங் கண்டேன். சாப விமோசன காலமென்று சந்தோஷங் கொண்டேன். ஆகையால் என்னையும் இரட்சித்து, உன் தம்பி தன்னையும் பெறக்கடவை யென்று சொன்னவையைக் கேட்ட மன்னவனானவன், அண்ணலே! நமது கால்வழியில் வந்த அல்பனாகிய நான் என்ன சொல்லப்போகிறேன்; எனக்கென்ன தெரியும்; நானென்ன தருமங்களை யறிந்தேன்; என்ன

சந்தேக நிவர்த்தி சொல்லுவேன்; அதிலும் ஆபத்பாந்தவானவ னொருவனிருக்கின்றான். ஆதலால் உமது சந்தேகத்தைக் கேளுமையா வென்று உதிஷ்டிரன் சொல்ல, நகுஷராஜன் கேட்கின்றான்.

### நாகன் தருமசந்தேகங் கேட்கத் தருமன் விடைதரல்

இந்தப் பூமியிலுதித்தவர்களில் உயர்ந்த ஜனனமுள்ளோர் யாரென்று நகுஷன்கேட்க, மானிட ஜனனரென்று தருமன் மறுமொழி சொல்ல, அதிலுமுயர்ந்தவராரென, பிராமணனென்றுசொல்ல, அவனுக்கு என்னகுண மிருக்கவேண்டுமென்ன, சத்தியம்-சவுசம் - நன்னெறி-பொறுமை-தவம்-ஜெபம் இவைகளிற் குறைவில்லாமல் இருப்பதே நற்குணமென்று சொல்ல, அவன் என்ன பொருள்களைப் பெறவேண்டுமென்ன, இன்பம் துன்பம் மோகம் உலோபம் இவைகளை நீக்கி நடப்பதே யவன் பெறவேண்டிய பொருளென்ன, இந்த குணங்களிலும் பொருள்களிலும் குறைவுபடுமாகில் அவனை என்னென்று சொல்லுவதென்ன, ஒன்று குறைந்தாலும் பிராமண தத்துவம் போய்ச் சூத்திரத்துவம் வருமென்ன, இந்தக் குணங்களும் நற்பொருளுஞ் சூத்திரனிடத்துமாகிற் பிராமணனென்று சொல்லலாமோவென, அதற்கு முரசக்கொடியோன் சொல்லுகின்றார்: ஓ ஏந்தலே! பூர்வத்தில் இந்தப் பூமியிற் பிறந்த மானிடர்களில் வருணக்கட்டுப்பாடில்லாமற் சங்கரமாக மயங்கியிருக்கையில், சூரியவம்சத்தில் மநுவென்பவன் பிறந்து, வேதவிதியை யநுசரித்து, மநுவியாக்யானமென்றோர் விதியை விதித்திருக்கின்றான். அவ்விதியிற் சொல்லி யிருக்கின்றது யாதெனில், ஒழுக்கம்-சத்தியம்-சவுசம்-நற்குணம்-கிருபை-தர்மம் இந்தக் குணங்களெல்லாஞ் சூத்திரனிடத்திலு முண்டாயிருக்கலாம்; அப்படி யிருந்தால் அவனைச் சற்சூத்திரனென்று சொல்லுவதே யல்லாமல், பிராமணனென்று சொல்லத்தக்க தல்லவென்று சொல்லி யிருக்கின்றது என்று தருமனுரைக்கக்கேட்ட நாகன் சந்தோஷமடைந்து, ஓ புண்ணியசாலி! இப்போது நீர் சொன்ன குணங்கள் யாவுமுடைய சூத்திரன் மோக்ஷம் அடையக்கூடுமோவென்று வினவ, தருமநந்தனன் சொல்லுகிறார்: அப்படி யமைந்திருந்தால் இவனுக்குப் பதவியுண்டு, மோக்ஷமில்லை யென்றார்.

பின்பு நாகம் பதவியானது என்னென்று கேட்க, இந்திரபதவி - குபேரபதவி - சந்திர பதவி-யமபதவி என்று சொல்லப்பட்ட இப்படிப்பட்ட பதவிகள் இப்பதவிகளை அவரவர்கள் செய்யும் நற்கருமங்களுக்குத் தக்கதாகப் பெறுவார்கள். மோக்ஷமென்றாலோ, சூத்திரன் மேற்சொன்ன குணங்களி லொன்று மாறாமல் இருந்தானாகில், வைசிய கன்மத்தில் வந்து, அதிலுஞ் சிறந்திருப்பானாகில், க்ஷத்திரியனாக வந்து, அதிலுஞ் சிறந்திருந்தாற் பிராமண கருமத்திற் சிறந்து, அதிலுஞ் சிறந்திருந்தால் மோக்ஷமடைவான். இந்தக் கருமங்களில் எதுகளிலாவது பாபலோப சப்பந்தங்கள் ஏதாகிலும் நேரிடுமாகில், பழயகதிக்குந் தாழ்வாகிய புன்கதியிற் கொண்டுபோய்விடும். ஆகையால், நற்குணமுடைய சூத்திரனுக்கு மோக்ஷமிப்படி வருமென்றார். பிராமணனுடைய குணங் குறையுமாகிற் சூத்திரனாவான் என்றீரே? அவனுக்குக் கதியென்னென்று வினவ, அந்தச் சூத்திரகன்மங்கள் ஒழிந்து, நல்லொழுக்க நன்னடக்கைகளைச் செய்து படியேறி, பழைய பிராமணக் குலத்தின் கன்மங்களைச் செய்து மோக்ஷமடைவான். தவறிவிட்டாலோ இழிவாகிய யோனிகளிற் பிறந்து, அளவிலாதவனுபவங்களை அனுபவிக்க வேண்டியதே. அதெப்படியென்றால், உயர்ந்த உப்பரிகை அல்லது கோபுரம், அல்லது மரம், அல்லது மலை இவைகளில் ஏறினவர்கள் ஜாக்கிரதையாகப் பூமியை பார்த்து நடந்தால், காயம் படாமலுங் குறைவில்லாமலும் உச்சி வரையில் ஏறலாம். மத்தியில் வழுவினாலும் தழுவினாலுந் தவறினாலுங் கவிழ்ந்து பார்த்தாலும் பூமியிற் கொண்டுவந்து விடும். விட்டதுமல்லாமல் கைகால் முறிந்து இக்காயமும் பலகாயம்படுமல்லவா? ஆதலால் மேல் ஏறவேண்டுமானாலும் அப்படியே, இதுபோலவென்று அறியும் என்றார்.

### நாகன் வீமனை விடுத்துத் தருமனையும் அவனையும் வாழ்த்தி விடைபெற்று சொர்க்கலோக மடைதல்

இவ்வாறாக காரியங்களை நாகங்கேட்கவே அதற்கு மிகுந்த சந்தோஷம் வந்து, தான் பூண்டிருந்த தேகத்தினால் வருந்திய வீமசேனனை விட்டுவிட்டு, திவ்ய தேவதேகத்தைப் பெற்று, தருமராஜனையும் வீமசேனனையும் மார்போடு அணைத்து இறுகத்தழுவி, உச்சியை மோந்து முத்தமிட்டு, ஓ சற்குணவான்க

ா! ஒரு குலத்தில் ஒருபிள்ளை பிறந்தால் அவ ல் மூவேழு தலைமுறையுங் கரையேறுவார்க ன்று முன்னோர் மொழிந்திருக்கின்றார்கள். மலும் தாய்வமிசம், தந்தை வமிசம், மாம ர் வமிசம் என்று சொல்லப்பட்ட எல்லா மிசங்களிலேயும் பொல்லாங்கை அடைய ட்டார்கள். அவன் யாரென்றால், பழிச் சால்லில்லாத குணம் நிறைந்த பிள்ளைகளைப் பற்றவர்கள். ஆகையால், சந்திரவமிசம் ன்ன தவத்தை யுடையதென்று யான் சொல் வன். உலகமதிக்கும் உத்தமனாகிய நீர் ஒரு ன் பிறந்திருந்தபடியினால், பின்பு அதுவும் ற்று மலைப்பாம்பாயிருந்த என்னைக் கரை யறவைத்தீர். ஓ என் குலமணியே! ஓ என் ண்மணியே என்று வாழ்த்தி உடல் பூரித்து மனை நோக்கி, அப்பா! நான் இறுக்கிப் டித்ததினால் உன் தேகம் வருந்தியதோ யப்படாதே இன்றுமுதல் யான் பாம்பாக ருந்த பெலமும் உன்னைச் சேரக்கடவது. த்துருக்களாகிய யாவரும் உன்னால் அழி க்கடவது என்று ஆசீர்வதித்து குவ ரத்தாரனைப் பார்த்து, நம்முடைய வமிசத் ல் இதுவரையிலுந் தாயாதி விரோதஞ் சத் ரு பகையில்லாமல் யாவர்களும் அரசு புரி து வந்தார்கள். இப்போது துறிதலையன் யோதனன் தலைப்பட்டு இப்படி அனியாயங் ளச் செய்துவந்தான். அல்லாமலுங் குடும்ப க்ஷியாகிய குலமகளைச் சபையில், அவமா ஞ் செய்துவைத்தான். நீங்கள் கொண்ட தக் கருத்தின் வண்ணம் அவன் யாருடனே ம் உங்கள் கையினால் மாண்டுபோவான். ங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம் ன்று உபசாரஞ் சொல்லி, அனேகம் ராஜ திகளுந் தருமங்களும் உரைத்து, படை-டி-கூழ்-அமைச்சு என்று சொல்லப்பட்ட )வைகளின் விபரங்களுஞ் சொல்லி விடை கொண்டு, தெய்வ லோகத்திற்குச் ன் நகுஷமஹாராஜன்.

அப்பால் தருமபுத்திர மஹாராஜன் வீம சனனையும் பிராமணர்களையும் அழைத்துக் காண்டு வந்து, வனத்தில் இருந்த தவமுனிவர் தலிய எல்லோரையுங் கண்டு நமஸ்கரித்து, மகான்களே! என்னைவிட்டுச் சற்றுநேரம் ங்கினான் வீமசேனன். இவனின்று பிழைத்து ந்தது குந்தியம்மன் கர்ப்பத்திருந்து இப் பாது தான் பிறந்ததுபோல் என்றெண்ணுங் ள் என்று சொல்லவும், அவர்கள் அஃதென் னவென்று அதிசயத்தோடு கேட்க, தருமன் நடந்த விருத்தாந்தங்கள் அனைத்தையுஞ் சொல்லி, ஆனால் இன்று நான்பெற்ற சந்தோ ஷம் அர்ச்சுனன் பெற்ற இன்பச்சரித்திரத் தைக்கேட்ட பலனாயிருந்தது. அஃதென்ன வெனில், எங்கள் சந்திரவமிச சிகாமணியாய் தேவேந்திரப்பட்டம் பொறுத்திருந்த நகுஷ மஹாராஜனைக் கண்டு தரிசித்தேன் என்று சொல்லவும், யாவருமகிழ்ந்து புகழ்ந்து எல் லாங் கண்ணனுடைய அருளுங் கண்ணுத லுடைய கிருபையும் என்று சந்தோஷித்து இருந்தார்கள்.

நகுஷன் சாபவிமோசனச்சருக்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது,

## மார்க்கண்டேய முனிச் சருக்கம்

### கண்ணன் துதி

அண்ட முட்டையி னகத்தினும் புறத் தினு மாகிக், கண்ட வன்பர்கள் கண்ணினு நெஞ்சினுங் கலந்தோன், பண்டை வேதங் கள் பழிச்சியு மறியொணாப் பழையோன், மூண்ட காசன ஞதியர் மூவர்கண் முதல்வன்.

கேளுஞ் சந்திரகுலோத்துங்கனே! பாண் டவர்கள் பத்துவருடம் வனவாசஞ் செய்து, பதினொன்றாம் வருடம் நடந்துவருங் காலை யில், வானமெல்லாம் இருண்டு குளிர் காற்று மிகுந்து குமுறலும், இடிப்பெருக்கமுமிகுந்து நாலாபக்கங்களிலேயு மின்னி, இந்திர தனு சுஞ் சிறந்து, இந்திரகோபப்பூச்சியு மலிந்து, சூரிய சந்திராதிகளு மறைந்து, இருள்கள் செறிந்து, மரங்களு முறிந்து, மலைகளுஞ் சரி ந்து,செடிகளுமொடிந்து,கொடிகளுமறுந்து, குணங்களு நிறைந்து, கான்யாறுகளும் மலை யருவிகளும்வழிந்து, பெருக்கெடுத்தோடவும், மயில்கள் வனங்களிலாடவும், தாமரை மலர் கள் குவியவும், குயில்களொலிக்கவும், அன் னங்க ளொதுங்கவும், வானரங்கள் மலைச்சார் பிற் பதுங்கவும்,சோனைமாரியாகிய விடாமழை பொழியவுங் கார்காலம் நேரிட்டது. அப் போது எவ்விடங்களிலேயும் வெள்ளப்பெருக் கமாகச் சிவேலென்னும் நிறங்கூடி, நுரைக ளும் அலைகளும்பெருகி விருக்ஷசாலங்களையும் மிருககக்கூட்டங்களையு மடித்துக்கொண்டுவரா நின்ற நதிப்பெருக்கத்தின் இரைச்சலினால்

சிங்கங்களுடைய கொர்ச்சிக்குங் கூச்சலும், யானை யடங்கியிருக்கும் ஓச்சலும், புலியின்பேரொலியும், காட்டுமாடுகளின் முழக்கமும், மான்கள் முதலியவைகளின் குமாளமும், காட்டு முருக்கு செங்கந்தள் முதலியவை புட்பித்திருக்கும் அலங்காரங்களும், வானநதி மலையிலிருந் திழிந்துவருந் தன்மைபோல் மலைப் பாம்புக்களூர்ந்து சஞ்சரிக்கு மாட்சியும், மலைபடு திரவிய முதலியவைகளை மணத்துடனடித்திழுத்துக்கொண்டு வருஞ் செழுமையும் ஆகிய இவையனைத்தையும் பாண்டவர் முதலிய பலருங் கண்டு, மழைவிட்டபோது மலைவளங்களையுஞ் சுற்றிப்பார்த்து, மிகுந்த சந்தோஷத்துடன் சரஸ்வதி தீர்த்தம் போய்ச் சேர்ந்து அந்நதியில் ஸ்நானஞ்செய்து சங்கல்பத்தோடு தற்பண முடித்துக்கொண்டு அவ்விடத்தி லிருக்குந் தவசிரேஷ்டராகிய முனிநாதர்கட்கெல்லாந் தெண்டஞ் செய்து அவர்கள் ஆசீர்வாதமும் பெற்றுக்கொண்டு, அங்கங்கிருக்குந் தேவாலய தரிசனத்தோடு அவ்வவ்விடங்களில் நடத்தவேண்டிய நன்னெறிகளை யெல்லாம் வேதவிதிப் பிரகாரம் நடத்தி, பெரியோருட னுறவாகக் கலந்து சிலநாள் கழித்து வருகையில், முன்னிருந்த காமியவனம் போகவேண்டுமென்று கருதினவர்களாய்த் தௌமியாசாரியர் முதலிய பலரோடுஞ் சென்று, அவ்விடத்தில் தாங்கள் தங்கியிருந்த பர்னசாலைகளுந் திரௌபதிதேவியார் சில ஸ்திரீகளுடனிருந்த தனிமனையும் புதுக்கிக்கொண்டு, முன்ன மவ்விடத்திலிருந்து பெரியோர்களெல்லாம் வந்து சூழ்ந்து தழுவி இடையிற் பிரிந்திருந்த வுயிர் மீண்டு இனிதோடிவந்து தேகத்திற் பொருந்திய தன்மைபோற் சந்தோஷமுறும்படியாய்கூடிக்குலாவ, தாங்களு மவ்வாறே கூடிக்குலாவி, ஒருவரோடொருவர் இதுவரையிலும் நடந்த அதிசய மியாவுங் கேட்டுங் கூறியும் மகிட்சியுற் றிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் தற்செயலாய் துவாரகாபுரிவாசர்-பாண்டவநேசர்-ஜெகம் நிவாசராகிய ஸ்ரீ கிருஷ்ணதேவர் சத்தியபாமை சமேதராக இரதத்தின்மீதில் வர, அதுகண்ட பாண்டவர்கள் முதலிய யாவரும் யெதிர்கொண்டு பூசித்து சகல வுபசார சந்தோஷத்துடன் அழைத்துவந்து ஆசனத்தி லிருத்தி சத்தியபாமையைப் பாஞ்சாலி யிருக்குந் தனிமனைக் கனுப்பி, தாங்களொருவருக் கொருவர் முகமன்கூறிச் சம்பாஷித்துக்கொண்டு இனிதுவீற்றிருந்தார்கள். அப்போது தருமபுத்திரரானவர் அக்கண்ணனுக்குப் பார்த்தன் தவசு செய்யப் போனதும், பரமசிவன் உமாதேவியுடன் வேடுவ ரூபங்கொண்டு வந்து திருவிளையாடல் புரிந்து அர்ச்சுனனுக்குத் தீங்குசெய்ய வந்திருந்த மூகாசுரனென்பவனைக்கொன்று தொடுவழக்கிட்டு வாரியெறிந்து மகிழ்ந்து சகல தேவர்களுஞ் சந்தோஷிக்கப் பாசுபதாஸ்திரமும் முஷ்டிநிலை மந்திரமுங் கொடுத்ததும், அக்காற் பற்பல ஆயுதங்கள் கிடைத்ததும், தேவேந்திரன் வந்து தன்னிரதத்தி லேற்றிக்கொண்டு போய் உபசரித்துத் தவமியற்றிய விடாய்தீர அமிர்தபோஜனமூட்டிக் காலகேய நிவாத கவசரென்னும் சத்துருக்களைக் காட்டி மடிவித்துத் தேவ தத்தங் கொடுத்துக் கிரீடமுந் தரித்து உபசாரஞ் செய்து ஆசீர்வதித்ததும், சிலநாள் அர்ச்சுனன் இந்திரப்பட்டம்செலுத்தி மறுபடியும் இந்திரனுக்குப் பொன்னுலகத்தைச் சுதந்தரமாக்கிவைத்து வந்ததும், அவன் வருகிறவரையிலும் தாங்கள் விசனப்படாம லிருக்கும்படியாக அவ்விந்திரன் உரோமசன்ம ரென்னும் மகானுபாவனை அனுப்பிவைத்துச் சகல புண்ணிய சரித்திரங்களும் புண்ணிய தீர்த்த மகத்துவங்களும், அவரால் தாங்கள் கேட்கவும் ஸ்நானஞ் செய்யவும் செய்வித்ததும், அதனால் தங்கள் காலம் வெகு சுளுவில் அகற்றும்படியா யிருந்ததும், அம்முனிவரால் பாசுரமர் தரிசனம் பெற்றதும், அப்பாற் கிரீடி தங்களிடத்தில் வந்துற்றதும், அருச்சுனன் நீங்கிப் போனபிற்பாடு தாங்க ளிருந்தவிடத்தில் நடந்த விந்தைகளும், வீமசேனன் குபேரன் உலகத்திற்கு இரண்டுதரம் போன வயணமும் அவன் அனுமார் தரிசனம் அளகைபாளி தரிசனம் பெற்ற வரலாறும், திரௌபதியைக் கொண்டுபோன சடாசுரனை வீமன் வதைத்து மீட்டதும், அவ்வீமனால் நகுஷன் சாபம் விலகியதும், ஆகிய யாவையுஞ் சொல்ல, இவையனைத்துங் கேட்ட ஜனார்த்தனனாகிய பகவான் சந்தோஷமடைந்து, தன் மைத்துனனாகிய விஜயனைப் பார்த்து மகிழ்ந்திருந்தார்.

### பாண்டவரைக்காண மார்க்கண்டேய முனிவர் வருதல்

அக்காலையில் வையகத்திலுற்ற சிவனடியார்களுக்கு ஜெயமும் வானவர்முதல் மற்ற யாவருக்கும் பயமும் வரமிருந்து பெற்றதாய்

க்கு நயமுஞ் செய்துவைக்க மஹே
டைய மலரடியை வருந்தி விரும்பிப்
ந்து, மறலியை மண்ணில்விழ மாய்
படி யருள்புரியப் பார்த்து என்றும்
வயதென்று ஈசன் விளம்ப யேற்று,
திர புராணங்களையும் கற்றுச் சந்
ற்ற மார்க்கண்டேயரானவர், அநேக
வர் நெருங்க, தண்டு கமண்டல
ருத்திராட்சத் தாழ்வடங்களிலங்க,
ந் துலங்க, கிருபாசமுத்திரம் ஓங்
டவாிருக்கும் வனத்திற்கு வந்தார்.
கண்டவுடனே பாண்டவர் இடுக்
ழுந்து எதிர் சென்று, தாயைக்கண்ட
போலும்; மழையைக்கண்ட புயிரைப்
; புயலைக்கண்ட மயிலைப்போலும்
ந்து, ஏகாங்கத் திரியாங்க பஞ்சாங்க
ங்க சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து,
ிகுந்த உபசாரத்துடன் அழைத்து
மைத்து அதின்பேரில் எழுந்தருளச்
அவருக்கும் அவருடன் கூடவந்த
வரர்கள் ரிஷீஸ்வரர்கள் முதலிய யாவ
அர்க்கியபாத்திய ஆசமன்னிய அட்
பதீப அலங்காரங்கள் யாவும் செய்து
தொழுந்தனர். அப்படி பணிந்து எழு
ண்டவர்களுக்கு அம்முனிவர் அள
ஷிகள் வழங்கி, பெருங் கோஷ்டியா
ற்றெல்லோரையும் நெருங்கி யிருக்கக்
யிட்டு, பிற்பாடு தருமராஜனை நோக்கி,
ராஜனே! நீங்கள் செல்வமாகிய குலத்
ந்துஞ் சகல வளங்களையும்விட்டு வரு
னகத்திற் தவமியற்றி காய் கிழங்கு பச்
த்தின்று, வெய்யில் பனி காற்று மழை
ளில் வருந்தும் எங்களைப்போல் நீங்க
ருந்தி யிருக்கிறீர்களென்று கேள்விப்
உங்களையுந் திரௌபதாதேவியாகிய
ணத்திற் சிறந்த உங்கள் பத்தினியை
க்க அபேட்சித்து வந்தேன்.

தருமநந்தனு! எவ்வளவு உயர்ந்த
லுந் தனத்திலும் ஜனத்திலும் உறுதி
மனத்திலுங் கனத்திலும் மற்றனைத்
சிறந்திருந்தாலும், வினைப்பயனை
வதற்கு வேதன் முதலிய மற்ற யாவ
டிவதரிது. அதை யனுபவித்தே தீர
ம். கோடி பசுக்கூட்டங்களில் ஒரு
ன்றைக் கொண்டுபோய்விட்டால் அது
யை நாடிச் சேருமாறுபோல், இவ்
தின்கண் அடங்கிய ஆத்மகோடிகளில்

எவன் எந்த வினையைச் செய்தானோ அந்த
வினை அவனைத் தேடிப்பிடித்துக்கொள்ளும்.
ஆகையால், உங்களுக்கு விசனம் வேண்டிய
தில்லை. இன்னுங் கொஞ்சநாள் கழித்துவிட
வேண்டியது. இஃதல்லாமலும், சர்வலோக
சரண்யன், சாமள நாதன், ஆபத்பாந்தவன், ஆ
திமத்தியாந்த ரகிதன்-ஜனார்த்தனன்-பக்தவற்
சலன்-பரமதயாளன் - பரமபுருஷோத்தமன்
என்று சொல்லும்படியான திவ்வியமங்களத்
திருநாமங்களைப்பெற்ற இந்த ஸ்ரீ கிருஷ்ண
மூர்த்தி உங்கள் அகங்கை நெல்லிக்கனிபோல்
அமையக் கிடைத்திருக்கையில், உங்களுக்கு
நாளுங்கோளும் நமனும் வினையுஞ் சத்துருவு
முண்டென்று சொல்லத்தக்கதோ? எவர்களா
லுஞ் செய்கிறதற்கு அருமையாகிய காரியங்
களை யெல்லாஞ் செய்ய வல்லபமுடைய அந்
நாதனே உங்களுக்குரிய மைத்துனன். எவர்க
ளுக்கோ அறிதற்கரிய சித்தினன். இவனைப்
பெற்றிருக்கும் உங்களுக்கு என்னதாட்சி?
இதல்லாமலும் இவ்வர்ச்சுனனே பஞ்சாக்
கினிமத்தியினின்று அரியதவத்தினைச் செய்து
தவத்தினராலும் சகத்தினராலும் மறை
களினாலும் மற்ற முறைகளினாலுங் காண்ப
தற் கருமையாகிய காலகாலனைக் கண்ணுறக்
கண்டு, விண்ணவர் மகிழ்ந்து அண்ணலைப்
புகழ்ந்து வேண்டிக்கொள்ள அத்தாண்டவ
மூர்த்தியுடன் விளையாடி முடிமேலடித்து,
மற்கட்டித் தழுவி விழுந்து புரண்டு பேரான
ந்தமடைந்து, பாசுபதாஸ்திர முதலிய படை
களைப் பெற்றிருக்கிறான். அவனோர் தம்பி
யாக உமக்குக் கிட்டியிருக்கப் பகைவரென்ப
தேது? ஓ மண்ணுலகெல்லாம் வாழ்த்த மகு
டாபிஷேகங்கொண்டு வாழ்வைப் பெறப்போ
கின்ற வள்ளலே! உமக்கு வஞ்சகமிழைத்
தோர் மடிந்தழிவார்கள். நீங்கள் மகிழ்ச்சி
பெறுவீர்கள். ஆதலால், நீங்கள் பல்லாண்டு
பல்லாண்டாய் வாழிவாழி யென்று மார்க்கண்
டேயர் ஆசீர்வசனமாகச் சொல்லினர்.—

அதுகேட்ட உதிஷ்டிரனெழுந்து தாழ்
ந்து வணங்கி, சுவாமி! நீருண்ட காளமேகம்
போன்ற வண்ணனாகிய கண்ணனருளுந்
தேவரீருடைய கிருபையுமிருக்க, எங்களுக்
குத் தாட்சி யொன்றுமில்லை, ஏதோ ஈதெல்
லாம் ஒரு காலகதி. இதற்கு ஒருவரை நோகத்
தக்கதே யில்லை. எனக்கு ஒருவரும் விரோதி
யென்பதில்லை. துரியோதனன் எங்கள் நாடு
நகர முதலிய யாவுங் கைக்கொண்டாலும்,

ஸ்திரீயைச் சபையிலவமானப்படுத்தினு னென்னும் விசனத்தைத் தம்பிகள் சகிக்கமாட்டாம லிருக்கிறார்கள். எனக்கு அவனளவில் மெத்த சந்தோஷ முண்டா யிருக்கின்றது. அஃதேனென்றால், நான் பட்டினத்தில் அரசாட்சி செய்துகொண்டிருந்தால் இங்ஙனம் பெற்ற பெருமையும் உத்தமர்கள் தரிசனமுந் தேவரீருடைய கிருபாநோக்கமும் நான் பெறக்கூடுமோ? ஈதெல்லாஞ் சுயோதனனுடைய தருமமென்று நினைத்திருக்கின்றேன். ஆனால், தம்பிகளுக்கு இந்தக் கருத்தைக் காட்டமாட்டேன். என்னை அவர்கள் மெத்த நிந்திப்பார்கள். நடக்குங் காரியம் எந்தவிதத்திலேனும் நடக்கும். பழுத்தபழங் கொம்பிலிராதென்று தம்பிமா ரறியமாட்டார்கள். அதிபாலியாளாக விருந்தாலும் என்னை இதுவரையிலும் பூசித்து என் வார்த்தையைத் தட்டாமல் வருகின்றார்கள். அதுவும் உங்களுடைய ஆசீர்வாதத்தின் பலனேயன்றி வேறன்று. இன்று உங்களைக் காணப்பெற்ற எங்களைப்போற் பாக்கியவான்கள் எங்குமில்லை. ஆதலால், ஓ ஐயனே! தேவரீர் ஏதாகிலுமொரு தருமசரித்திரந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று தோத்திரஞ்செய்து கேட்டுக்கொண்டார் தருமபுத்திரர். அப்படி கேட்டுக்கொண்ட தருமராஜனை மார்க்கண்டேயர் இருக்கும்படியாக உத்தரஞ் செய்தருளினர்.

### நாரதமுனிவர் வருதல்

அது காலையில் தவுமியர்சாரியர் மார்க்கண்டேயரை வணங்கி நோக்கி, சுவாமி! தேவரீர் கருணையனுற் கடாக்ஷம்பெற்ற பிற்பாடு எத்தனை பிரமப் பிரளயம் பார்த்திருப்பீர்? வடபத்திர சாமியாகிய கடவுளுடன்கூட எத்தனை விசை மகிழ்ச்சி யடைந்திருப்பீர்? அவைகளையெல்லா மடியேங்கள் கேட்டுக் கடைத்தேறக் கருணைபுரிந் தருளவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அப்போது நாரத மகாமுனிவர் வீணையும்-மாலையும்-பொன்னுபரணமும் முப்புரி நூலும்-திருவெண்ணீறும்-திலகமுமிலகும்படிவர, அவரைக்கண்டு மகிழ்ந்து யாவரும் விழுந்து பாதங்களிற் றொழுதார்கள். உடனே யாவர்களுக்கும் பூர்ணசீர்வாதமாக வாழ்த்தி முரசக்கொடியோனை நோக்கி, ஓ தருமநந்தனு! என் தவமே தவம். சாக்ஷாத்காரமாகிய பரமசிவனை அன்பென்னும் அகத்திலடக்கிய ஐயனும் ஆதிமூலப் பொருளுமாகிய பரந்தாமனோடு, மற்ற அரிய மாதவரும் ஏககாலத்தில் இவ்விடத்திருக்கப் பெற்றேன். அதேனென்றால், ஒருநாள் துவாரகைக்குப் போய் ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் பார்க்கக் கருதி அரண்மனையிற் சென்றேன். அவர் அவ்விடத்திலில்லை. அப்பால் ஊரெங்குந் தேடினேன் எங்குமில்லை. எவர்கள் எந்தயிடத்திற் சொன்னார்களோ அந்த யிடங்களெல்லாம் பார்த்துக் காலோய்ந்து வரும்போது, அவர் ஒரு வீட்டில் விளையாடிக் கொண்டிருக்கக்கண்டு, நடந்துநைந்து திரிந்து அனுத்த வருத்தமெல்லாம் போகப் பேசிக் கொண்டிருந்து சிலவு பெற்றுப் போகும் போது, எனக்கெதிரிலே வருகின்றார். அங்கேயிருந்தீரே இங்கே யெப்படி வந்தீரென்றேன். இங்குதானிருக்கின்றேனென்றார். அங்கேயும் அவரைவிட்டு வரும்போது மற்றோரிடத்தில் என்னைப்போல மற்றொரு நாரதரும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் பேசிக்கொண்டுபோகப் பார்த்தேன். ஐயையோ!! நம்மைக்கூட வேறாகச் செய்து விட்டதுபோல் இருக்கின்றதே யென்று ஓடி வணங்கி உத்தமனுடைய திருநாமங்களைப் பாடி, சர்வேஸ்வரனு யெங்குந்தானுயிருக்கு மிரக்ஷகன் இவரே யென்று மதித்துக் களித்தேன். அப்பேர்ப்பட்ட திருவுருவம் இந்த மார்க்கண்டேயரும் உமக்குத் தரிசனமானபோதே இனி குறைவில்லை என்று சொல்லி, மார்க்கண்டேயரை நோக்கி, ஓ மகானுபாவரே! தேவதேவனுகிய பரமசிவனுடைய கிருபை யென்னுங் கடலிற் குளித்தெழுந்த நீர், இந்த தருமராஜனுக்கு வேண்டிய தருமங்களைச் சொல்லிக் கிருதார்த்தனுக்கச் செய்யவேண்டும். சந்திரன் குளிர்ச்சியாகக் காய்ந்தாலுஞ் சூரியனையே லோகத்தார் நாடுவார்கள். அதுபோல மகாரிஷிகளால் எத்தனை கதை கேட்டிருந்தாலுந் தேவரீரிடத்திற் கேட்கத் தருமராஜன் விரும்புவார் என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியையும் பணிந்தெழுந்து, நாரதமகாமுனிவர் தமது கருத்துக்கிசைந்த விடத்திற் போயினர்.

### மார்க்கண்டேயரைத் தருமராஜன் வருண முறைகேட்க அதற்கவர் சொல்லுதல்

அவர் போன பிற்பாடு மார்க்கண்டேயர் குந்தி புதல்வனை நோக்கி, ஓ மகாராஜனே! உமக்குச் சந்தேக மிருக்கின்றவைகளைக் கேளுந் தோன்றினமாத்திரஞ் சொல்லுகிறேனென்றார். அது காலையில் உதிட்டிரர் சுவாமி

பாக்கியமென்று இரண்டு கரத்தையுஞ் சிரத்திலிருத்திக் கேட்கின்றார்: சுவாமி! பிராமணர் செய்யவேண்டிய முறைமையும் க்ஷத்திரியர் நடக்கவேண்டிய திறமையையுஞ் சொல்லவேண்டுமென்று வினவ, சோடச வயதினையுடைய சுந்திரன் சொல்லுகின்றார்: கேளும் அரசனே! எந்த வருணத்திற் சரீரமெடுத்தாலும் இறந்துபோம் மறுபடி யுற்பவிக்கும். இது ஸ்தூலபூத சம்பந்தமான தேகத்தின் சுவாபீகம். இந்தத் தேகம் எத்தனை விதமாக மாறினாலும் இருவினைப்பற்று மாத்திர மாறாது. நல்வினைகட்குத் தகுந்த நலன்களையுந் தீவினைகட்குத் தகுந்த பலன்களையும் அநுபவித்துத் தீரவேண்டும். இதன்றியிலுங் கன்மத்தினாற் சாதியே யன்றி ஜன்மத்தினாற் சாதியில்லை. நீர் சொல்லிய நன்னெறி நல்ல நடக்கையுடையவ னெவனோ அவனே நல்ல ஜனனம் அவனே பிரமக்கியான முடைய பிராமணன். அவனுக்கே மோட்சம் உயர்ந்தோரென்பவர் நெறிவழுவி யிருப்பார்களாகில் அவர்களே பாவிகள். அவர்கள் அடையுங் கதிதான் நரகம். இவ்வுலக முறைமை நாலு பங்காகத் தருமசாஸ்திரங்களில் வகுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஒருவன் மிகுதியாகிய திரவிய சம்பத்தைப்படைத்து நந் தானுமுண்ணாமல், தானதருமமுஞ் செய்யாமல் பந்துக்களுக்கு மீயாமல், வித்துவான்களுக்குங் கொடுத்து மேலாகிய புகழைப் பெறாமல், தேவாலயம் விஷ்ணுவாலயங்களுக்கு மூதவாமல், பெட்டிவிட்டுப் புதைத்து, உன்னையெடுத்தால் அறுத்துத் தின்னுவேனென்று ஒட்டிட்டுக்கொண் டிருக்கிறவன் யாவராலும் லோபியென்று எப்படி பேர்வகித்துக் கொண்டானோ அப்படியே பரலோகத்திலும் அவன் சுகமடையப் போகிறதில்லை. மேலும், இவ்விடத்திற் பொருள்களைச் சேகரித்துத் தானும் புசித்து, வேண்டியவர்களுக்கும் இல்லையென்னாது கொடுத்து, சீலம்-விரதம்-ஆசாரம்-ஸ்நானம்-சந்தி-ஜெபம்-தபம்-நோன்பு-தெய்வபூசை இவை முதலியவைகளுஞ் செய்து, சரீரமும் வருந்தி, யாவராலும் புகழைக்கொண் டிருப்பவ னெவனோ அவன் அவ்விடத்திலும் இத்தன்மையவாகிய போக பாக்கியங்களைக் குறைவிலாது அநுபவிப்பன். அன்றியும், அன்னதானம்-வித்தியாதானம்-கன்னிகாதானம்-யாகம் இவை முதலியன செய்து, நல்ல வாகனாதிகளையும் போகங்களையும் அநுபவிப்பவர்கள் சத்தியலோகத்திலும் இப்படியே நிறைந்த செல்வந்தரா யிருப்பார்கள். இப்போது சொல்லிய நன்மைகளில் யாதொன்றுமில்லாமல், பொய்-கொலை-களவு-கள்-காமம் முதலானவைகளிற் சிறந்து, வெகுளி வீசத் துற்பாஷைகளும் பேசி, இகத்தில் யாவராலும் என்ன மேன்மையைப் பெறுவார்களோ அவர்கள் பரத்திலுந் துற்கதி-துற்சோபம்-துர்வியாதி இவைகளில் இருந்து வருந்தி யழிபவர்களென்றறியும். ஓ தருமநந்தனா! இதற்குச் சாட்சி நீரேதான். எப்படியென்றால், உமக்குத் துன்பஞ் செய்த துரியோதனனை யுலகமென்ன சொல்லுகின்றது; மனம் பொறுத்திருந்த வும்மை யென்னவென்று கொண்டாடுகிறார்கள். நாளைக்கே உமது சத்துரு குடும்பத்துடன் அழியப் போகின்றான் நீரே இவ்வுலகமெல்லாம் அரசுபுரிந்து ஆளப்போகின்றீர். அதற்கு ஓர் திருஷ்டாந்த மும்மக்குச் சொல்லுகிறேன் கேள்.

---

## அயராஜன் சரித்திரம்

ஓ மகாராஜனே! இந்தப் பூமியை முன்னாண்ட அரசர்களில் அயனென்றொரு ராஜா வுண்டு. அவனுடைய குமாரன் திந்து வென்னப்பட்டவன். அவன் வேட்டைக்குப் போய், காட்டிலுள்ள கரடி-புலி-முயல்-கடமை-மான்-கலை-காட்டுப்பன்றி-யானை-பட்சியினங்கள் இவைகளையெல்லாம் அடித்தும், பிடித்தும், அழித்தும், வலைகள் கட்டியும், கண்ணிகள் வைத்தும், படுகுழி வெட்டியும், இப்படிப்பல விதமாக வேட்டையாடி சந்தோஷித்து வரும் போது, பராரையையுடைய மராமரத்தி னிழலிற் சகல வேதசாஸ்திரபுராண பண்டிதராகிய ஒரு ரிஷீஸ்வரன் புள்ளிபொருந்திக் கொம்புகாதுகளுடனிருந்த மான் தோலைச் சரீர முழுதும் போர்த்துக்கொண்டு நிஷ்டையி லிருந்தார். அப்படி யிருக்கும்போது அத் திந்து என்பவன் ஒற்றைமா னிருக்கின்றதென்று உன்னி, தன் பாணத்தினால் உருக அடித்தான். உடனே அசைவற்றிருந்த அம் முனிவன் நிஷ்டை கலைந்து கிருஷ்ணாவென்று கூவி யிறந்துவிழ, அதைக் கண்ட இராஜகுமாரன் வெருண்டு, ஐயையோ! யாரோ மகாநுபாவ ரிவரென்று சமீபித்து வந்து பார்த்து, வில்லையும் அம்பையும் பூமியிலெறிந்து மகா துக்கத்தோடும் பூமியில் விழுந்து புரண்டு உருண்டு

பதறிக் கதறிப் புத்தி சிதறி, உடல் உதறலெடுத்து மூர்ச்சைபோய் சற்றுநேரத்தில் தெளிந்தெழுந்து, அந்தோ பிரமஹத்திக்கு ஆளாயினேமேயென்று துக்கமுற்று மந்திரிகள்-பிரதானிகள்-சேனைகள் - யானைகள் முதலானவைகளைவிட்டுத் தன் நகரத்தை நாடி, கால்வேகங் கொண்டோடி, தந்தையின் பாதத்திற் போய் விழுந்து அழுதான். அயமகாராஜன் பிள்ளை வருந்தி வியர்த்து விழுந்து அழுவதைக் கண்டு அவனை யெடுத்து அணைத்து என்ன குழந்தாயென்று கேட்க, அவன் தன்னால் நேரிட்ட தோஷத்தைச் சொல்ல, அது கேட்ட அவ்வரசனுங் கூடவே வந்து, ரிஷி இறந்து கிடக்கும் இடத்தை வந்து பார்த்து, தெய்வமே என்று ஏங்கித் தியங்கி மயங்கி, ஐயோ! இதுவரையிலும் நான் செய்துவந்திருந்த நீதிநெறி யாவும் போய்விட்டதே. இனி பிரமஹத்தியுடையவன் என்னும் பேர் நேரிட்டதே என்று புலம்பும்போது பரியாரி தலைமாட்டிலிருந் தழுந் தன்மைபோற் கண்ட புத்திரன் இனிப் பிராணனை விட்டுவிடவேண்டியதே யென்று எண்ணங்கொள்ள, அக் குறிப்பை இறைவனறிந்து, புத்திரனைக் கையிற் பிடித்துக்கொண்டு, அப்பா! இனிப் பட்டினம் போகலாகாது. காட்டிலே சென்று புலி முதலிய மிருகங்களுக்கு இரையாவதே நலமென்று இருவரும் முகம்விட்டவாறே நெடுந்தூரம் சென்று, காடுகள் மேடுகள் கடந்து போவதானார்கள்.

அவ்வாறு போனவர்கள் தாக்கரென்னு மகா முனீஸ்வரன் தவஞ்செய்துகொண்டிருக்கும் சூழலைக் கண்டோடி, அவரை இருவரும் பிரதக்ஷணம் வந்து வணங்கிக் கைகட்டி வாய் புதைத்துக்கொண்டு நிற்க, அவர்களைத் தாக்கரென்னும் உத்தமர் கண் விழித்துப் பார்த்து, ஓ! ஓ! அரசனே! வாரும்; உட்காரும். நான் உம்மைப் பூஜித்து உபசரிப்பதற்கு நீர் மகா யோக்கியர். நீதி நிறை குன்றாத சத்தியவான் என்று சொல்லக்கேட்ட அரசன் கண்ணீர் பொழிந்து, ஐயோ! நான் மகா பாவி. பிரமஹத்தி தோஷமுடைய துரோகி. தேவரீரைக் கண்டு நமஸ்கரித்து அத்தோஷத்தை நிவாரணம் செய்து கொள்ளலாமென்று வந்த என் குறையை அறிந்ததனாலன்றோ சுவாமிகள் இவ்வாறு என்னை இழியாதிழித்துச் சொல்லிய வசனம். ஆ ஆ தெய்வமே! என்று உடல் நடுங்கி, வாய் மொழி பதறி, நாவுலர்ந்து தடுமாறுகையில், அதை முனிவர் கண்டு, இவன் மிகவும் பயங்கொண்டு வந்தவனென்று தெரிந்துகொண்டு, நல்லது பயப்படவேண்டாம். உமக்கு நேரிட்ட துன்பத்தைச் சொல்லும் என்று கேட்க, நடந்த விர்த்தாந்தங்களை அவன் சொல்ல, அது எந்தயிடத்திலென்று கேட்டறிந்துகொண்டு, தன்னுடைய குமாரன் சாந்தமகாரிஷியை அழைத்து இவர்களுடன் கூடப்போனால் ஒரு மகாரிஷியைக் காட்டுவார்கள். அவரை நீ எழுப்பி இவர்களுக்கு ஆசியும் வாங்கிக் கொடுத்துவா போவென்று உத்தரவு செய்தார். அவ்வுத்தரவை சாந்தரிஷி சிரசாக வகித்து, இவர்களை அழைத்துக் கொண்டுபோய் அந்த இடத்தில் சாய்ந்து கிடக்கிற மகாத்துமாவைக் கண்டு, வேத மந்திரங்களினால் எழுப்பிப் பழையபடி நிஷ்டையிலிருக்கச் செய்தபோது, இவர்களில் அரசன் அவரைப் பணிந்து வாழ்த்தி, சுவாமி! என் புத்திரன் துஷ்டனல்ல. பெரியோர்களுக்கு உபகாரி. வேட்டையாட வந்து தெரியாமையினால் அபராதியாயினன். அவ்வபராதத்தை தேவரீர் மன்னிக்க வேண்டுமென்று இரந்தான். அதுகாலையில் அந்த உத்தமர் அவ்வரசனைப் பார்த்து, ஐயா! உமது பிள்ளையால் எனக்குண்டான குறைவு யாதொன்றுமில்லை. கயிலாசபதியினுடைய கட்டளைப்படி நடந்தது. ஆதலால், நீர் மகாராஜனாக இருக்கக்கடவதென்று வாழ்த்தினர். அவ் வாழ்த்தலைப்பெற்ற அரசன் அவரிடத்தினின்றும் விடை பெற்றுக்கொண்டு, சாந்தமகாரிஷியுடன் சேர்ந்துவந்து தாக்கருடைய திருவடிகளில் பணிந்து, ஓ ஆண்டவனே! எத்தனை ஜெனனமெடுத்தாலும் தீராத அத்தியைத் தீர்த்து வைத்த தெய்வமே! தேவரீர் அனுக்கிரகத்தால் யாங்கள் பிழைத்தோம். ஆனால், ஒரு சந்தேகமிருக்கின்றது. அதைத் தாங்கள் தயவு செய்தால் சொல்லுகிறேனென்ன, சொல்லுமென்று முனிவர் கேட்க, அயமகாராஜன் வணங்கி, என் இறையே! பாணம் பட்டு இறந்துபோன பாக்கியவானைப் பிள்ளையினால் எழுப்பி வரும்படி உத்தரவு செய்து எங்களையும் பவித்திரராக்கிய வல்லமை எதனால் நேரிட்டது. அதனைத் தேவரீர் தயை செய்யவேண்டுமென்ன, தாக்கமகாரிஷி மகா சந்தோஷத்தோடும் சொல்லுகிறார்:

கேளும் அரசனே! கிருபையும், சத்தியமும், தவமும், பற்றில்லாமையும் பொருந்தி

வேதவிதியின் வண்ணம் நன்னெறிகளை நடா
த்தும் நடையும், நித்திய கரும அனுஷ்டா
னங்களும், யாவரிடத்தும் இன்சொல்லும்,
எவர்கள் மனமும், எவைகள் மனமும், வருந்
தாதிருத்தலும் ஆகிய ஒழுக்கங்களை வகித்து,
நல்ல உத்தம ஸ்திரீயுடன் கூடி, இல்லற
வாழ்க்கையை இயல்பாக நடத்தி வருகின்ற
வன் எவனோ அவனுக்கு இதுமாத்திரமல்ல
இன்னும் எப்பேர்ப்பட்ட பெரிய காரியங்
களும் அதிசொற்பத்தில் முடியுமென்று வேத
விதியில் விளம்பி யிருக்கின்றது. இதல்லாம
லும், பூர்வத்தில் இந்த வனத்தின்கண் பெரி
யோர்கள் சுத்தசீலராகத் தவம்செய்துகொண்டு
வந்தார்கள். அப்போது பரமேஸ்வரர் எழுந்
தருளி யாவருக்கும் அருள்புரிந்து, தவத்தின்
உறுதியையும் பெரியோர்களுடைய அன்பை
யும் நோக்கி, இந்த வனத்தில் யாவத்துமான
ஜீவராசிகளும், பசி - நோய் - மூப்பு - துற்
சொற்பனம்- துற்பயங்கரம் - துர்வியாதி - துர்
மரணம் இவைகளெல்லா திருக்கும்படியாய்
அநுக்கிரகஞ் செய்து, ஒருவேளை தப்பி விதி
வசத்தால் மரணம் நேரிட்டதாகில் உடனே
எழுப்பி விடும்படியாக அப் பெரியோர்களுக்
கும் எனக்கும் வேதமந்திரம் அருள்புரிந்
திருக்கின்றார். அந்த சோமசுந்தரக் கடவுளி
னுடைய கிருபையினால் இப்போது அகஸ்
மாத்தாய் இறந்த மகாநுபாவர் பிழைத்ததே
யன்றி, நம்மாலாகத்தக்க தொன்று மில்லை
என்று சொன்ன தாக்ஷ மகாரிஷியினுடைய
சரணங்களில் அவ்வயனென்னுஞ் சூரியவமி
சத்தரசனுந் துந்துவென்னுங் குமாரனும்
விழுந்து ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு,
சேனைசமுத்திரத்திற் கலந்து, சம்பிரம சந்
தோஷத்துடன் பட்டினஞ் சேர்ந்து, முன்
னிருந்த நன்னெறியிலும் மேலாகிய விதியை
அனுஷ்டித்து வாழ்ந்திருந்தார்கள். ஆகை
யால், இப்பேர்ப்பட்ட செய்கையும் நீதிநெறி
யுங் களங்கமற்ற மனதுமுடையவர்கள் பிரா
மணரென்று சொல்லப்படும். அந்த உத்த
மர்களுடைய மகத்துவங்களை எடுத்துச்
சொல்ல என்தரமல்ல வென்று மேலுஞ்
சொல்லுகின்றார்:

## அத்திரிமகாரிஷி சரித்திரம்

ஓ உதிஷ்டிர மகாராஜனே! அரசராகிய
க்ஷத்திரியர்களுடைய நன்னெறி - ஒழுக்கம்
இவை முதலிய நீதிகளையுங் கொஞ்சஞ் சொல்
லுகிறேன் கேளும். அத்திரியென்று ஒரு பிரா
மணன் வேதங்களை யெல்லாங் குற்றமறக் கற்
றுச் சுத்த பவித்திரனாகி உத்தமத் தருமபத்
தினியுடன் சித்தசலோலனாக வெற்றி மிகுந்த
அனேகம் பிள்ளைகளைப் பெற்று மகிழ்ந்து
வாழ்ந்துற்றிருக்கு நாளையில், பத்தி செறிந்து
புத்திநிறைந்த அப்பத்தினியானவள் கற்பில்
அருந்ததியும் இவளிடத்தி லடுத்துப் பழக
வேண்டுமென்று சொல்லும் நன்மார்க்கத்
தோடு புருடனுக்கு உபசரித்து ஒரு மொழியும்
மறுத்துச் சொல்லாமற் பணிவிடைபுரிந்து
வருவள். அப்படி வருபவளாகிய அத்தேவி
யை அப்பிராமணனோக்கி, பெண்ணே! எத்
தனைகாலம் இவ்வாழ்க்கையில் முறைமையா
யுற்றாலும் பற்றுவிடாது மோகமறாது. மோ
க்ஷத்தை விரும்புமவர்கள் தவமிருந்து வரு
ந்தவேண்டிய தாகையால், இதுவரையிலும்
பெற்ற பிள்ளைகள்போக இன்னுஞ் சில சுதரை
நீ பெறவேண்டி யிருக்கின்றது. அவர்களைப்
பெற்றவுடனே நான் தவஞ்செய்ய வனம்
போக நாடியிருக்கிறேன். ஆதலால், உன்
னுடைய கருத்தென்ன? இவ்விடத்திற் பிள்
ளைகளுக்குத் துணையாக இருக்கின்றையோ?
அல்லது எனக்கு உபசாரஞ் செய்யக் கூட
வருகின்றையோ? என்று கேட்கவே அவரை
அம்மாது நமஸ்கரித்து, சுவாமி! தரும
தேவதையே ஒருருவாக வெழுந்தருளிய
தென்று சொல்லுந் தேவரீரையே நித்திய
பூஜை - நித்திய விரதம் - நித்திய நோன்பு
என்று சொல்லும்படியான இவைகளால்
வரும் பயனாக நம்பித் தமது திருவடித்துணை
யைப் புணையாகப்பற்றிக் கரையேறக் காத்
திருக்கின்ற அடியாள், இந்த வையகவாழ்வை
யுங் கிஞ்சித் போகத்தையுங் காதலரையு மாத
லரையு மாதாவென்று நம்பித் தேவரை
விடத்தக்க தல்ல. யாரும் மாதர் கருக்குழியில்
அறுகுநுனி பனிப்போலமைந்து பத்துமாத
முஞ் சென்று பூமியில் வரும்படி செய்யுங்
கடவுள் ஒருவருண்டல்லவா? அவ்வையன்
பெருமையை யாவரறிவார். எவரையும் உய்
யச் செய்வது தெய்வச்செயலே, இதற் கைய
மில்லை. ஆதலால், யானதுகளுக்குப் பிணை
யல்ல. அவைகளெனக்குத் துணையல்ல. அணி
யும் பணியும் அணையும் துணையும் தேவரீர்
பொற்பாத கமலமேயன்றி வேறில்லை.

அன்றியும், கற்பினின்றும் வழுவாமல்
தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தனக்குற்ற

நாயகனை உண்டி முதலிய வகைகளினு லுப
சரித்து, தங்களிருவரிடத்தும் நீங்கா நன்மை
யமைந்த புகழைக் காப்பாற்றி முன்சொல்
லிய நற்குண நற்செய்கைகளிலும் மறதியில்
லாம லிருப்பவளே பெண்ணென்று நீதி கூறி
யிருக்க, அப்பெண்களாயினோர் பர்த்தாவை
விட்டுப் பிரியக்கூடுமோ? ஆதலால், தேவரீ
ருடன் யானுந் தவசுக்கு வரத்தக்கவளே.
ஆகினும் உலகத்தோடொத்து வழவேண்டும்
மென்றும், அப்படி யல்லாதவர்கள் பல கற்றி
ருந்தாலும் பிரையோசனமில்லை யென்றுங்
கூறுகின்றமையால், தேவரீர் தபசுக்குப் போக
யானுங் கூட வந்துவிட்டால் இவ்விடத்திற்
பிள்ளைகள் வருந்தி துன்பப்படுவார்கள். அப்
போது யாவரும் நம்மை நிந்திப்பார்கள்.
இப்பேர்ப்பட்ட உத்தமனே தவசுக்குப் போய்
விட்டபோது நமக்கென்ன யிருக்கின்ற
தென்று உலகமும் நாடும் நாம் அப்படிச்செய்
யாமல் பாசபந்தங்களி லாழ்ந்தவர்களைப்
போற் காட்டிப் பணங்கள் சேகரித்து இந்
தப் பிள்ளைகளுக்கு ஆதாரமாக வைத்துவிட்
டுப் போவதே உத்தமமென்று நினைக்கின்
றேன். ஆனால், தேவரீர் எங்கே பணஞ் சம்பா
திப்பதென்று யோசிக்கவேண்டாம். தாங்கள்
நினைத்தால் கடவுளருளினால் வேண்டிய திர
வியம் வரும். அதெப்படியென்னில், தயிரிய
மகாராஜன் அசுவமேதமென்னும் யாகஞ்செய்
கின்றான். அந்த ராஜனிடத்தில் சென்று திரு
வாய் மலர்ந்தருளுவீராகில் வேண்டிய திரவி
யங் கொடுப்பான். அவைகளைப் பிள்ளைக
ளிடத்தில் வைத்துவிட்டு நாமிருவரும்
போகலாமென்று சொல்ல, அம்மொழி தனக்
குஞ் சம்மதமாகக் கொண்டு, தயிரியமகாராஜ
னுடைய யாகசாலைக்குச் சென்றனர். இவரைக்
கண்டவுடனே இராஜ னெதிர்கொண் டோடி
வந்து வணங்கி, உபசாரத்துட னழைத்துப்
போய் உயர்ந்த ஆசனத்திலிருத்தி, அறுகு
மலர் அக்ஷதை சந்தனம் சுத்தோதகங்களி
னால் அபிஷேகஞ் செய்து, ஆடையாபரணாதி
களால் அலங்கரித்து, தூபதீப உபசாரமுஞ்
செய்து துதித்தான்.

அவனுக்கு உடனே இந்த மகாரிஷி
யானவர் வேதமந்திரங்களா லாசீர்வாதஞ்
சொல்லி, சதமகனும்-பிரமதேவனும்-துளப
மாலையணிந்த ஸ்ரீஹரியும்-வில்வஜடா மகுட
தாரியாகிய சிவபெருமானும் மற்றத் தேவர்க
ளும் ஓருருவாகக் கூடித் தேவதாசரீரமாகப்
பெற்ற மகாராஜனாகிய உம்மிடத்திற்குக்
கொஞ்சம் பொருளாசைகொண்டு வந்தே
னென்று தோத்திரம் செய்தார். அந்த வசனங்
களை யாகத்தின் பொருட்டு வந்திருந்த மகா
முனிவர்கள் ரிஷீஸ்வரர்க ளெல்லோருங் கேட்
டுச்சகிக்கமாட்டாமல், அருவருப்புங் கர்னகடூர
முமாகிவெறுத்துக்கொள்ள அந்தச்சமயத்திற்
சூரியனைப்போலும் விளங்கிக்கொண்டிருந்த
கௌதமர் அவ்வத்திரி முனிவரைப்பார்த்துப்
பிரளயகாலாக்கினி உருத்திரனைப்போற் கோ
பங் கொண்டு, இவ்வரசன் செல்வத்திற் சிற
ந்து பூமியைப் புரந்தாலும் மனிதனேயன்றி
வேறல்ல. அப்படியாக அரசனைக் கயிலாசபதி
யென்றும், விஷ்ணுவென்றும், பிரமனென்
றும் இப்படியெல்லாந் துதிக்கவும் மதிக்க
வும் எந்தவேதத்திற் சொல்லி யிருக்கின்றது
பொருளாசை கொண்டு வந்தாய் அதற்குத்
தக்க நியாயங்களைப்பேசி இதங்கள் சொல்
லிப் பெறவேண்டுமே யன்றி, இப்படியும் நர
ஸ்துதி சொல்லுவார்க ளுண்டோ? இது
வரையிலுங் கேட்டறியேன். நீர் சொன்ன
படி சகல தேவர்களு மிவனானால், நாமெல்
லோரும் இவனைக் குறித்தே தவஞ் செய்து
தொழுது வேண்டிய வரங்களைப் பெறலாமே
நம்மை யேன் இவன் பூசித்து விசுவாசிக்க
வேண்டியது என்று பற்பலவாறாகப் பேசிய
போது எல்லோரும் ஒரேமுகமாய் வார்த்தை
யாடினார்கள். அதைக் கேட்ட அத்திரிமகா
ரிஷியானவர் சிறிது நிதானித்து, இப்போது
யான் சொன்னது சரிதான். வேதவாக்கியமே
யப்படி சொல்லுகின்றது. நீர் (பிரதிபதே
விஷ்ணு) என்னும் வாக்கிய மறந்து பேசுகி
றீர். அதை யுணராதவர் என்னைச் சங்கிக்கத்
தகாதென்று சொல்லவும், அதைக் கேட்ட
கௌதம ரெழுந்து, நீரே தாரதம்மிய முண
ராமற் பேசி யிருக்க, அதை மறுபடியும் ஸ்தி
ரப் படுத்துகிறீர் என்று இரண்டு பேரும்
பெருவழக்கிட்டு, ஆராகிலும் ஒரு பெரியோ
ரிடத்திற் சொல்லிக்கொள்ளுவோம் வாரு
மென்றெழுந்து, சகல கூட்டத்தாரையும்
இராஜனையு மழைத்துக் கொண்டு, பூர்வத்திற்
கல்லாலின்கீழ் எழுந்தருளிய பரமசிவனிடத்
தில் மௌனோபதேசம் பெற்ற நால்வர்களிற்
சனற்குமார ரென்பவரிடத்திற் சென்று
சொல்லி நின்றார்கள். அவர் இவர்களுடைய
வசனத்தைக் கேட்டு யோசித்து, இருதிறவர்
களையும் இருக்கச் செய்து, மனோமயக்கந் தீரு
ம்படி இதனைச் சொல்லுகிறார்:

கேளுங்கள் மகாரிஷிகளே! இந்தப் பூமியில் வாழ்கின்ற ஜனங்களுக்குக் கண்ணும், கருத்தும், பிராணுதாரமும், காவலும், நீதியும், நெறியும், இன்பமும், கதியும், இராஜனுலாகவேண்டியதே. தேவாலயம் - விஷ்ணுவாலயம் - தீர்த்தம் - திருநாள் இவையாவும் அரசனுலாகத்தக்கதே. மாதமும்மாரியும், பயிர் விளைதலும், மகாரிஷிகளுடைய ஜெபங்கள் யாவும் மன்னவனுடைய உதவியினுலாக வேண்டியதே. யாகம்-ஓமம்-பிதுர்-கர்மம்-சோபனம்-மங்களம்-கல்யாணம் இவை யாவுக்கும் ஏந்தலே துணை. வருணுச்சிரமந் தப்பாமல் நடப்பதும், வந்தனமரியாதையும் ஸ்திரீகளுடைய பதிவிரதா தன்மமும், வேந்தனலன்றி வேறல்ல. ஆகையால், துஷ்டஜன நிக்கிரகஞ் சிஷ்டஜன பரிபாலனமென்னு முறைமையை வகிப்பதினுலும், மன்னுயிரெல்லாந் தன்னுயிர்போலோம்புதலினுலும், கடவுளர்க்குச் சரியான பெருமையும் அருமையுமுடையவன் அரசனென்று சனர்க்குமாரர் சொல்லி, அத்திரிமகாரிஷி சொல்லிய வாக்கியம் வேதவாக்கியமே யென்று விளம்பினர். அதைக் கேட்ட மகானுக்களெல்லாஞ் சனர்க்குமாருடைய பாதங்களில் விழுந்து பணிந்து வாழ்த்தி உபசாராதிகளெல்லாம் நடத்தி பிற்பாடு அத்திரி மகாரிஷியைக் கௌதமரும் மற்றப் பெரியோர்களும் பார்த்து, நாங்களிப்படி கேட்டோமென்று கோபஞ் செய்யலாகாது. இன்று உம்மால் எங்களுக்குச் சந்தேக நிவர்த்தியாய் விட்டது என்று போற்றிப் புகழ்ந்து தயிரிய மகாராஜனுடனே யாகசாலைக்கு வந்து, யாகத்தை ஆரம்பஞ் செய்து, தேவர்களுக்குப் பூர்ணுகுதியுங் கொடுத்து, அரசனை யாவரும் வாழ்த்திச் சகலதிரவியமும் ஆடையாபரணங்களும் பெற்ருர்கள். பின்பு அரசன் இந்த அத்திரி மகாரிஷியைப் பணிந்து, சுவாமி! கருணைக்கடலாகிய தேவரீர்க்கு அல்பனுகிய யானென்ன உபகாரஞ் செய்யப்போகிறேனென்று வேண்டிய திரவியங்களும் பட்டு பட்டாவளியும் அணிமணிப் பணியுங் கொடுத்து அனுப்பிவைக்க, அவைகளை யெல்லாம் அந்த மகாரிஷி வாங்கிக்கொண்டு வந்து மனைவியினிடத்திற் கொடுக்க, மனைவியார் பிள்ளைகளுக்கு ஆஸ்தி ஜாஸ்தியாக வைத்து விட்டு, அவர்களைக் கிரகாச்சிரம தருமத்திலிருந்தி பதியுஞ் சதியும் சதியைக்கருதித் துதியை புரிந்து, கயிலாசபதியின் திருவடித் தியான பரராகத் தவமிழைக்கப் போனுர்கள். ஆகையால், ஓ தருமபூபதி! நீதிநெறி குன்ருத அரசாக்ஷி செய்யப் புவனசக்ரேஸ்வரன் முக்கடவுளராலுந் துதிக்கப்பட்ட முதல்வனென்றும், பூலோக தெய்வமென்றுஞ் சொன்னேம். இன்னுஞ் சொல்லுகின்றேம் கேளும்:

## தார்க்கமுனிவர் சரித்திரம்

ஓ பொறுமையுடைய புண்ணியவானே! பாரதிகதையென்னும் ஒருகதையுண்டு. அது என்னவென்ருல், தார்க்கமுனி யென்பவர் வேத சாஸ்திரங்களெல்லாம் பயனுடன் தேர்ந்து எவர்களும் நினைத்தற் கருமையாகிய தவத்தைப் புரியும்போது, ஆகாயவாணி பிரசன்னமாக வந்து உமக்கு வேண்டியதென்னை விள்வுமென்ன, அவர் அவ் வன்னையை நோக்கி, என்ன தானஞ் செய்தால் மேலான பதத்தைப் பெறுவார்களென்று மகாரிஷி கேட்டார். அதற்கு ஆகாயவாணி சொல்லுகின்ருள்: நல்ல சாதுவாய், விஸ்தாரம் பால்கொடுக்கத் தக்தாய், சுத்தவெள்ளையா யிருக்கின்ற கன்ருேடு கூடிய பசுவை அதற்குத்தகுந்த பால்கறக்குஞ் சொம்பு - தும்பு - அணைகயிறு இவைகளுடன் கொண்டுவந்து, அந்தப் பசுவைக் குளிப்பாட்டி, மஞ்சள் பூசி, குங்குமமிட்டு, அக்ஷதை சாத்தி, நாலுபாதக் குளம்பிலுஞ் சொர்ணம் வைத்து, சதுர்வேத பண்டிதனுகியும் ஆசாரவற்ற சாதுவாகியும் இருக்கின்ற ஓர் வைதீகப் பிராமணனுக்குத் தானஞ்செய்தவர்கள், தங்களுக்குரிய குடும்பத்துடன் தெய்வலோகபோகத்தை அளவிறந்த காலம் அநுபவிப்பார்கள். இதன்றியும், சுத்த வெள்ளையாகிய எருதைத் தானஞ்செய்த பேர்கள், முன்சொன்ன பலனிலும் பத்துபங்கு அதிகமாகிய போகத்தை அனுபவிப்பார்கள். ரசிததானஞ் செய்தவர்கள், சந்திரபதவி பெற்று வாழ்வார்கள். பொன் தானம் பண்ணினவர்கள், குபேரபதவி யனுபவிப்பார்கள். கன்னிகாதானஞ் செய்தவர்கள், தம்பதி சமேதராய்க் கற்பகத்தரு நிழலில் இருந்து சகல போகங்களையும் நீங்காமற் பெறுவார்கள். யாகாதிகளைச் செய்து தேவர்களுக்கு அக்கினி முகத்தில் அவிர்ப்பாகங்களை கொடுக்கிறவர்கள், மேலாகிய சத்தியலோகத்தில் நித்தியராக யிருப்பார்கள். தேவர்களும் அவர்களை விட்டு நீங்காதிருப்பார்கள். பூதானம் செய்தவர்கள், வருணபதவியைப் பெறுவார்கள். வஸ்திரதானம், வித்தியாதானம் இவைகளைச் செய்பவர்கள், சூரியபதவியைப் பெறுவார்கள்.

இப்போது சொல்லி வந்த தானங்களிலும் தவங்களிலும் சிறந்தது ஒன்றுண்டு. அது யாதெனில், வாக்கு மனமும் ஒத்து, பிரயாசையும் வெற்றியும்பெற்று ஒரு அசுவமேத யாகஞ் செய்து, மோகம் - லோபம் - கோபம் கலகமில்லாமல், தேவர்களுக்குப் பிரீதியாக ஆகுதி கொடுத்தபேர்கள் பரமபத மடைவார்கள். இப்படி நூறுயாகஞ் செய்து, அவிர்ப்பாகங் கொடுக்கும்போதும் யாகஞ் செய்ய ஆரம்பிக்கும்போதும் எந்த இஷ்டத்தைக் குறித்து சங்கல்பம் பண்ணிக்கொண்டு ஆகுதி கொடுக்கின்றார்களோ அந்தப் பலனைப் பெறுவார்கள். ஆதலாற் சிலபேர்கள் தேவேந்திரப் பட்டமும் பெற்றிருக்கின்றார்கள். அப்படி யல்லாமற் பரமபதமே விரும்பி யடைந்தபேர்கள் வைவசு மநுமுதலான பெரியோர்கள் என்று தானங்களினுடைய பெருமையும் யாகங்களினுடைய அருமையும் பதவிகளின் இன்பமும் எல்லாவற்றையும் எடுத்துச் சொல்லி, ஓ முனிவனே! தானத்தின் பெருமையும் அத்தானத்தால் உண்டாகும் பதவியும் இவ்வகைத் தானபோதிலும், (பாத்திரமறிந்து பிட்சையிடு, கோத்திரந் தெரிந்து பெண்ணைக்கொடு) என்றும் பழமொழியும் யோசிக்கக் கடவை என்று தெரிவித்து அடங்கினன். ஆதலால், அவனியை யாளுமரசன் இவ்வருமையான தானங்களையும் யாகத்தையும் வகித்தலால், அரசன் யாவராலுஞ் சிறந்தவ னாகின்றான் என்று மார்க்கண்டேய முனிவர் கூறினர்.

## மனுராஜன் சரித்திரம்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வாறு கூறிய மார்க்கண்டேய முனிவரைக் குவலையாத்தாரான் வணங்கி, ஓ குவலயத்திற் பதினாறு வயதுகொண் டருளிய கோமுனியே! மநுவென்பவருடைய சரித்திர மகத்துவத்தைக் கேட்க விரும்பினேன். அதனைத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று மலரடி பரவலு மார்க்கண்டேயர் சொல்லுகின்றார்: ஓ முன்னவர் பெருமையை யுன்னிக்கேட்கும் மன்னவர் பிரானே! கேளும் சூரிய பகவானுக்குஞ் சாயாதேவியாருக்கும் பிறந்த பிள்ளைகள் மூவர். பெண்களிருவர். இவர்களில் ஒரு பிள்ளை சனிபகவான், ஒருவன் யமன், மூத்த பிள்ளை மநு. இம்மநுவென்பவர் பதினாயிரம் வருடந் தவசு செய்து புநிதருடனாக யிருந்து, நூறாயிரம் வருடம் இராச்சிய பரிபாலனஞ் செய்து, மறுபடியுந் தவத்தை நினைத்துப் போகும்போது ஒரு தடாகத்தைக் கண்டு அதிலிறங்கி ஸ்நானஞ் செய்து, நித்திய கருமவிதிகளை முடித்துக்கொள்ளக் கரையிலிருக்கையில், ஒரு சிறிய மீன் ஜலத்தைவிட்டு நீங்கி இவருக்கெதிரிற் குதித்துப் பதைத்தது. அதை யவர் ஆச்சரியமாகப் பார்க்கையில், அந்த மச்சமானது மனுராஜனுக்குச் சந்தோஷமும் இரக்கமும் வரும்படியாக ஒரு வார்த்தைசொல்லியது. ஓ மன்னவனே! பொடிமீனெல்லாம் பெருமீனுக் கிரையென்று சொல்லியபடியே, என்னை இந்தக் குளத்திலுள்ள செந்துக்களெல்லாந் தின்றுவிடக் காத்திருக்கின்றன. இப்போதென்னைப் பிடிக்க வந்த ஒரு பெரிய மீனின் பயத்தாற் கரையில் தாவி விழுந்தேன். ஆகையால், என்னை எடுத்துப்போய் எங்கேயாகிலும் ஓரிடத்தில் விட்டால் நான் பிழைப்பேன் இல்லாவிட்டால் இறந்துபோவேன், என்னை இப்போது காத்து இரட்சிப்பீராகில் உமக்கும் ஒரு காலத்திற் பதிலுபகாரம் என்னாற் கிடைக்கும். ஆனால், நான் சலசரமாகிய அல்ப ஜெந்து வென்று என்னை நினைக்க வேண்டாம். (அறுகின் கட்டையும் நல்ல ஆபத்துக் குதவும்) என்கிற மொழியை யுன்னி எனக்குச் சகாயம் பண்ணுமென்று சொல்லிற்று. இப்படி சொன்ன மச்சத்தின் வாக்கியத்தை அரசன் இச்சையாகக் கேட்டு, இருகரத்தையுங் குவித்துச் சலத்துட னெடுத்துக்கொண்டுபோய் ஒரு கூபத்தில் விடுத்து, அதற்கடுத்த வனத்தில் தவஞ் செய்துகொண்டு, நித்திய மொருதரம் வந்து மீனைப் பார்த்துப் பேசிப்போவார்.

அப்படி போகும்படியான அரசனை மச்சம் நோக்கி, எனக்கு இந்தக் கிணறு இடம் போதாது. ஆதலால் வேறொரு விசாலமான இடத்தில் என்னைக் கொண்டுபோய் விடுமென்று சொல்ல, அப்படியே சம்மதித்து எடுத்துப் போய் ஒரு துரவில்விட்டு, நித்தம் வந்து பார்த்துப் போவார். அப்போது ஒருநாள் துரவு நிறைந்திருக்க, அதுகண்ட அரசன் மச்சத்தை நோக்கி, ஓ மச்சமே! என்ன உன்னுடைய கதியென்று கேட்டனர். அதற்கு மச்சமானது இதுவு மிடம்போதா தாகையால் வேறொரு இடத்தில் விடுமென்ன, அப்படியே கங்கையிற் கொண்டுபோய் விட்டு வழக்கப்படி பார்த்துவரும் நாளையில், ஒருநாள் அக்கங்கை

இருகரையும் ஒன்ருகப் பொருந்தியிருந்தது. அக்காலாசனம் மீனைப் பார்த்து, என்ன உன் கதி யென்று கேட்டனர். அதற்கு மச்சம் ஓ ஐயா! நானென்ன செய்வேன்! இவ்விடமும் எனக்குப் போதாது. ஆதலால் வேறே யிடத்திற் கொண்டுபோய் விடுமென்ன, அப்படியே கொண்டுபோய் இந்த லவண சமுத்திரத்தில் விட்டனர். அப்போது அந்த மீனுனது ஓ மனுவே! எனக்காக மெத்தவும் பிரயாசை எடுத்துக்கொண்டீர். இப்பவும் உமக் குபகாரமாக ஒன்று சொல்லுகிறேன் கேளும்: இந்த ஏழு சமுத்திரமும் பொங்கிப் பதினலு லோகமும் ஆத்மகோடிகளுடன் அழியப் போகின்றன. அதற்கு முன்னடி மரத்தினுல் ஒரு ஓடம் பண்ணிக்கொண்டு, அதிற் சாப்பிடத்தக்க வஸ்துக்களும் நிரம்பச் சேகரித்து, சப்தரிஷிகளுடன் நீரும் வந்து இந்தக் கடற் கரையி லிருந்தால் உமக்காற்றல் செய்வேனென்று சொல்லித் துள்ளி மூழ்கிப்போய்விட்டது. அதைக்கண்ட மனுவரசனுனவர் சந்தோஷ மடைந்து திரும்பிவந்து, சில நாளையில் ஓடஞ்செய்து, அதில் மச்சஞ் சொல்லியபடி புசித்தற்கு வேண்டியவைகளை யமைத்துக்கொண்டு, சப்த ரிஷிகளையுங் கண்டு வணங்கி ஓரிடத்தி லேற்றின வராய், இலவண சமுத்திரத்தருகிற் சென்று அந்த மீனை நினைக்க, உடனே அம்மச்சம் அலைமீது பறந்து வந்து, ஓடத்தின் அணிமுகத்தில் தொங்கிய கயிற்றை வாயிற் கவ்விக்கொண்டு சமுத்திரமத்தியிற் கொண்டுபோயது.

அந்தக் காலத்தில் சப்தமேகங்களும் ஒன்ருகக்கூடி இடித்துமின்னி ஆர்ப்பரித்து, திசையானைகளின் துதிக்கைப் பிரமாணம் ஒருமுகூர்த்தகால் மழை பொழியவும், அதனுல் எழுகடலும் ஒன்ருகி, குலகிரிகள் எல்லாமூழ்கி, மகமேருவின் உச்சியிலும் வெள்ளம் பரவி, சந்திர சூரியரும் மறைந்து, இருள் நிறைந்து, ஆத்மகோடிகளும் இறந்துபோக நேரிட்டது. அப்போது மச்சமானது அம்மிகுதி வெள்ளத்தில் இந்த ஓடத்தை கவிழவொட்டாமல், பக்குவமாக எவ்வளவு தண்ணீருயர்ந்தாலுங் குன்று பருவதங்களிற் சென்ருலுங் குறைவில்லாமற் காத்து வருகையில், அநேகங்கால் நீங்கிக் கடல்களெல்லாம் பிரிந்து, அஷ்ட குலாசலங்களு மேற்பட்டு, சந்திரசூரியரும் பழைய கதியின்படி வந்து பிரகாசித்தனர். பூமி முதலியவைகளெல்லாம் சலம் வறண்டு உலர்ந்து, கழுவி யுலர்த்தியதுபோ லிருந்தன. அக்காலையில் மச்சமானது அந்த ஓடத்தை இழுத்து வந்து, ஒரு மலையில் மாட்டிக் கட்டிவிட்டு, தண்ணீரிற் மறைந்து தலையை நீட்டி, ஓ மனுவே யென்று கூவி யழைத்து, மிக மகிழ்ச்சியுடன் அம்மனுவேரடிருக்குஞ் சப்த ரிஷிகளைப் பார்த்து ஒரு வசனஞ்சொல்லியது. அஃதென்னையெனில், இப்போது உலகமழிந்து, மழை பொழிந்து, கடலேழுமெழுந்து, குலகிரியும் அழிந்து, மகமேரு சிகரமும் வழிந்தோட நேரிட்ட இந்தகாலத்தை யறிந்தீர்களல்லவா? இது ஒருமனுவந்தரமென்றுபேர். இந்த மனு வழிந்தால் ஒரு அந்தரம். அப்படி இவரழியாமல் இரண்டு மனுவந்தரங்காத்தேன். இந்த இரண்டுக்குந் தப்பிப்பிழைத்தான் இந்த மநு மகாராஜன். ஓ சப்தரிஷிகளே! உங்கள் நிமித்தம் நான் மீனுகவந்து உங்களையுங் காத்தேன். உங்களுக்கு பின்துணையாக இந்த நீதிபரனையும் இரட்சித்தேன். நானே இத்தனை பிரளயத்திலும் செழித்த தாமரை கமலத்தில் நிஷ்டையிலிருந்து விழித்த பிரமனென் றறியுங்கள் என்று மீனுரு வகன்று மறைந்துபோயினர். சகல சராசரங்களையுஞ் சிருஷ்டிக்குந் தொழில் படைத்த இரண்ய கருப்பனுனவர்.

பின்பு, சப்தரிஷிகளும் மனுராஜனும் அவரை வந்தித்துச் சிந்தித்துப் பணிந்து வாழ்த்தி, ஓடம்விட்டிறங்கி, நெடுநாள் தவம் புரிந்து கண்ணை விழித்துநோக்கி, அப்போது பூமி சுத்தமாய் ஒரு புற்பூபாதி செந்துக்களும் இல்லாதிருக்கக்கண்டு, மனுவும் ரிஷிகளு மும்மூர்த்திகளிடத்திற்போய் வணங்க, அவர்கள் மனுராஜனை மகா மகிழ்ச்சியோடு நோக்கி, ஓ அரசனே! நீர் மகாதவத்திற் சிறந்தவர். இப்போதும் அநேககாலந் தவஞ் செய்திருக்கின்றீர். உமக்குச் சப்தரிஷிகளும் உதவியா யிருக்கிறார்கள். ஆகையால், இவ்வுலகத்தை ஏற்படுத்தித் துரைத்தனஞ் செய்யக்கடவீர் என்று உத்தரங் கொடுக்கவும் அம்மனுவானவர் அவர்களின் பொற்றளை வணங்கிப் பூசித்து, சப்த ரிஷிகளோடும் வந்து பிரமனத்தினருளினுல் உலகத்துயிரை ஏற்படுத்தி, சகல மரியாதையுடன் மநுநீதியு மியற்றி நெடுநாள் அரசு செலுத்தி வாழ்ந்தார். ஓ தருமபூபதி! முன் யுகாந்தரத்திற் பிறந்து இரண்டு மநுவந்தரங் கழித்து இறவாதிருந்து மெய்யைப்பெற்ற ஐயனுகையால், இந்த மனுவினுடைய நாமத்தை யுச்சரித்தவர்கள்-சொன்னவர்கள்-கேட்டவர்கள் ஆகிய யாவர்களுக்குந் துன்பம் நீங்கி,

இகத்தில் இன்பமுற்றுப் பரத்திற் குடும்பத்துடன் நெடுநாள்வரையிலுஞ் சுகபோகத்தையநுபவிப்பார்கள். இதன்றியும், இவ்வுலகத்திலே ஏதொரு காரியமும் ஆத்மலாபமாகத் தொடங்கும்போது சங்கல்பஞ் சொல்லிகொள்பவர்கள் (வைவச்சுதே-மன்வந்தரே) என்று சகல காரியங்களுஞ் சித்தியாகும்படியாய் இந்த சித்திபுருடரைச் சிந்திக்கத்தக்கதன்று மார்க்கண்டேயருரைத்த வாக்கியங்களைத் தருமன் முதலிய யாவருங் கேட்டு மகிழ்ச்சியுற்று வணங்கி, சுவாமி! மன்வந்தரத்தின் வகையைக் கட்டளையிட்டீர். கிருதார்த்தரானோம். ஊழியென்பதும், சகல ஆத்மகோடிகளழிதலும், மறுபடியுற்பத்தியுந் தெரிவிக்கவேண்டுமென்னுள்ளத் தெளிவேயென்று இரந்த முராசக்கொடி முதல்வனை நோக்கி, மிருகண்டேய புத்திரர் அகமகிழ்வுடன் சொல்லுகின்றார்:

பிரபஞ்ச லயோற்பவம்

கேளும் பூபாலனே! கிரேதாயுகம்-திரேதாயுகம்-துவாபரயுகம்-கலியுகம் இந்த நாலுங் கூடியது மகாயுகம். இந்த மகாயுகம் இரண்டாயிரங் கூடினாற் பிரமதேவனுக் கொருநாள் அந்த ஒருநாளில் பாதி யிரவு. பாதி பகல். ஒரு பகலுக்கு ஆயிரஞ் சதுர்யுகம். இதிலே பதினாலு தேவேந்திரபட்டம் அழிந்துபோம். பிரமதேவனுக்குப் பகற்பொழுது நீங்கும். அப்பால் ஆயிரஞ் சதுர்யுகம் இராப்பொழுதாகும். அந்த வேளையில் பிரமதேவர் ஒரு தாமரை மலரீற் போய் நித்திரை செய்வார். அந்தவேளையிற் சப்தமேகங்களும் ஒன்றாகச் சேர்ந்து, இடி குமுறலுடன் உலகம் நடுங்கப் பொழியும். அச்சலப்பெருக்கம் மகமேருவினுச்சியை நாடும். உடனே யெங்கு மிருள் மூடும். இவ்வாறு சலப்பிரளயத்தாற் பூமியிலுற்ற சராசரங்களெல்லா மழிந்து வொன்றுந் தோன்றாமல் எங்கும் ஏகாரணவமாய் நிரம்பியிருக்குங் காலத்தைத்தான், கற்பமென்று சொல்லப்படும். இப்பிரளய கற்பமொன்றில் எல்லாமழிந்து நானொருவன் அந்த மகமேரு சிகரத்தைப் பற்றிக்கொண்டு அலையிலலைந்து கவலை மிகுந்து வருந்தி யிருந்தேன். அப்படி யிருக்கும்போது, இந்தவுலகம் விரிந்ததைப்போலொத்த ஒரு ஆலிலையின்மீது-ஓர் சிறிய குருத்துக் குழந்தை மல்லார்ந்து திரையில் மிதந்து என்னருகில் வரக்கண்டு, மனங்களித்து ஆனந்தங்கொண்டு, நிராதரவாகிய காலத்திலுற்ற நெடுந்துணைபோற் பார்க்குங்காலையில், ஓ மார்க்கண்டேயரே! ஏன் விசாரப்படுகிறீர்? என் வாயிற் புகுந்து வயிற்றிற் சுகமுற்றிருக்கலாம் வாருமென்றழைக்கவும், யான் மனத்துணிவுடன் சென்றேன். அந்த வயிற்றிற் பதினான்குலோகமுங் கண்டேன். சந்திரசூரியர்-வசுக்கள்-திசைப்பாலர்-ஏகாதசருத்திராள் - தேவர்கள் இவர்கள் முதலான யாவர்களையும், மற்றெல்லா உயிர்வகைகளையுங் கண்டு, தொகையிறந்த நாள் அவர் கர்ப்பத்தி லிருந்தேன். பின்பு அவருக்கே மனமிரக்கம் வந்து தன்வாயைத் திறந்து வாவென்றழைக்க, யானவ் வாயிலிருந்துவந்து குறுகியிருக்கும் வெள்ளத்திற் குதித்தேன். எனக்கு நிலையில்லாமல் ஆலிலையைப்பற்றிக் கொண்டு நீந்தி இந்தச் சிறு குழந்தையின் முகத்தை நோக்கி, வெள்ளத்தில் முழுகிப் போகிற என்னை அன்னைபோல் வந்து ஆதரித்த ஐயனே! தேவரீர் ஆர்? உம்முடைய பூர்வோத்திரமென்னை? அதை யெனக்கருள் புரிய வேண்டுமென் றிரந்தேன்.

அதுகாலையில் அந்தக் குழந்தை நகைத்து, ஐயா மார்க்கண்டேயமுனியே! என்னை இரட்சகனென்றும் வைகுந்தவாசனென்றுஞ் சொல்லுவார்கள். இது பிரளயகாலமாகையால் நீர் மெத்தவும் வருந்தித் துயரப்படப் போகிறீரென்று உன்னி, உம்மிடத்திருந்த கிருபையினால் இரக்ஷிக்கவேண்டி வந்தோம். இனிமேலும் எத்தனை யுகப்பிரளயம் வந்தபோதிலும் நீரெங்கே யிருக்கவேண்டுமென்று நினைக்கின்றீரோ அந்த யிடத்திற் சுகத்துட னிருக்கும்படி யருள்புரிந்தோம். இன்னுஞ் சிலநாளையில் உலகமும்-கடலும்-மலைகளும்-மற்றியாவு முண்டாம். ஆதலால், நீர் இவ்விடத்தில்தானே யிருமென்று சொல்ல, அதுகேட்ட யான் நடுங்கி, சுவாமி! தேவரீருடைய கர்ப்பத்தில் யானுற்றிருக்கும்போது ஒன்றாகிய அகண்டப்பரப்பும், இரண்டு சந்திர சூரியரும், மும்மூர்த்திகளும், நான்கு வேதங்களும், ஐந்து பூதங்களும், ஆறு மதமும், ஏழு கடலும், எட்டு மலையும், ஒன்பது கிரகமும், பத்துத்திசையும், பதினொரு ருத்திரரும், பன்னிரண்டு ஆதித்தரும், ஆனந்த சாஸ்திர ஆகமாதிகளை எல்லாங் கண்டேன். குறைகளெல்லாம் விண்டேன். அவைகளெல்லாம் இனி யுலகில்வந் தெப்படி யுண்டாகும்? பிரமனென்பவர் நித்திரைபோவதென்ன? அவர் நித்திரை கொள்ளுங்காற் பிரபஞ்ச

மெல்லாம் அழிவுறலென்ன? சலமும் இருளாய்த் தயங்குவதென்ன? சகலமுந் தேவர் திருவயிற்றி லுறங்குவதென்ன? இதென்ன சகாயம்? இதென்ன மாயம்? இதென்ன உபாயம் சொல்லவேண்டும் சுவாமியென்று தொழுதேன். ஓ தருமநந்தனு! அதற்கு அந்தச் சர்வலோக சரண்யனுஞ் சர்வஜீவதயாபரனுமாகிய குழந்தை ரூபங்கொண்ட பகவான் சொல்லுகிருர்: ஓ மார்க்கண்டேயரே! பிர்ளயமாகின்ற நகரத்திற் பிரபஞ்சத்தைக்கர்ப்பத்திலடக்கிக் காக்குந் தன்மையால், எனக்கு நர்ராயணனென்று மூலநாமம் வந்தது. இதன்றியும், பிரமனுகயிருந்து சிருஷ்டி செய்தும், விஷ்ணுவாகயிருந்து இரட்சித்தும், உருத்திரனுகயிருந்து சங்கரித்தும், இந்தப்பூமியே பாதமாகவும், ஆகாயமே சிரமாகவும், இந்திரன் முதலாகிய தேவர்களெல்லாம் எனக்கு அவயவமாகவும், மேலுலகங்களெல்லாம் முகமாகவும், சந்திரசூரியர் கண்ணுகவுங் கொண்டு, இத் திவ்யதேகம் பெற்ற விராட்டாகி உலகமெல்லாம் என்னை நீங்காமலும், தான் அவைகளை நீங்காமலும் கர்ப்பத்தில் வைத்துக்கொண்டிருந்து காப்பேன்.

இதன்றியும், பலம் நிறைந்த ஆதிவராகமாக ரூபீகரித்து, பாதலத்திற் சென்று பதுங்கியிருக்கும் பாவசம்பவரைக் கொன்று, தேவர் முதலிய யாவரையு மிரக்ஷிப்பேன். பாற்கடல் கடைந்து அமுதமெடுத்து தேவர்களுக்கு அளித்து, அவர்கட்கு நரை-திரை-மூப்பு-பசி - நோய் இவைகளில்லாமற் காத்தபோது, ஆதிகூர்மமாக இருந்து மந்தரகிரியைத் தாங்கினேன். ஆயிரம் பணமகுடமுடைய ஆதிசேடனுக இந்தப்பூமியைச் சுமப்பேன். இப்போது வந்த இந்தப் பிரளயமும், எல்லா உயிர்களி னுடுக்கமும், இனி வறழ்தலும், சூரிய சந்திரர் காய்தலும், யாவத்மான உயிர்கள் மீண்டும் பிறத்தலும், எல்லாம் என்னுடைய விளையாட்டென் றறியக்கடவை. இதல்லாமலும், துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனஞ் செய்யும்படியாகவும், தருமங்கள் கெடாதிருக்கவும், அத்தருமதானம் - பரவுபகாரம் - பெரியோர் விசுவாசம்-புர்ராண காலக்ஷேபம் இவை முதலிய சத்புண்ணியங்கள் விர்த்தியாகவும், யுகந்தோறும் பிறந்து வருபவன் யான். கிரேதாயுகத்தில் வெள்ளை ரூபமும், திரேதாயுகத்திற் சிவப்பு ரூபமும், துவாபரயுகத்தில் நீலரூபமும், கலியுகத்திற் பச்சை ரூபமுமாகப் பிறந்து, தருமதேவதை ஸ்வரூபமாய் விளங்கியிருப்பேன். இதல்லாமலும், இந்தப் பிரமதேவனை என்னுடைய திருநாபியிலிருந்து தோன்றும்படியாகச் செய்து, இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கச்செய்வேன். அவனுறங்கும் இராக்காலம் வருகையில், சகலபுவன சரர சரங்களையுங் கர்ப்பத்தில் வைத்துக்கொண்டு, இந்த ஜலப்பிரளயத்திலுழலுவேன். இவைகளெல்லாந் தேவர்களாலும் முனிவர்களாலும் மற்றியாவர்களாலு மறியக்கூடா. நம்முடைய மகா மாயையை யாவராலு மளவிடக்கூடாது. நீர் நமக்குரிய பத்தராயும் ரிஷி தல்யருமாகிய வாற்ருல், உம்மிடத்தில் மனங்கலந்து இந்தத் தேவ ரகசியங்களைச் சொன்னேம். இப்போது பிரமதேவ னுறங்குமிடம்போய் பாருமென்று சொல்லி என்னை அந்தயிடத்திற் கனுப்பினர்.

உடனே நான் போய்ப் பார்த்தேன் அவர் இன்னு முறக்கம் நீங்காதிருக்கக்கண்டு, சில நாள் அவ்விடத்தில்தானே யிருந்தேன். அப்போது நித்திரை நீங்கி எழுந்திருந்தார். நித்திரை செய்து எழுந்திருக்கும் ஒரு ராத்திரிக்கு ஆயிரஞ் சதுர்யுகமாயின. உடனே வெள்ளங்களெல்லாம் வடிந்து, சூரிய சந்திரோதயமாகி, நக்ஷத்திரங்களும், நவக்கிரகங்களும், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம் ஜீவராசிகளும், தாபரசங்கமங்களுமுண்டாக, சிருஷ்டி திதி சங்கார முதலிய தொழில்களுங் குறைவிலாது நடந்துவந்தன. இந்தப் பிரளயந்தான் கயிலாசபதியைப் பூஜித்து எமனை வென்ற மூதற் காலத்திற் கண்ட பிரளயம். இப்பால் நடந்த பிரளயத்திற்குக் கணக்கில்லை. இவைகளெல்லாம் நாம்றிவோம். கேளுங் குந்தி புதல்வனே! இவ்வுலகத்தில் முதல் மநுவந்தரப் பிரளயம், அப்பாற் பிரமப் பிரளயம், அப்பாற் சர்வசம்மாரப் பிரளயமென்று சொல்லத்தக்கது. இனிமேலும் இப்பேர்ப்பட்ட பிரளய மெத்தனை வருமோ அத்தனைக்கும் வடபத்திர சாமியாகிய மகா கடவுளின் கர்ப்பமே காவலாக இருக்கும். அப்படி இருக்கும்படியான திருவிளையாட்டை மேற்கொண்டருளிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தியே இங்கு ஸ்ரீ கிருஷ்ணபகவானுகத் திருவவதாரஞ்செய்து உங்களுக்கு மைத்துனனென்னும் பந்து விஷய சம்பந்தமாக உடன்பட்டிருக்கும்போது; உமக்குச் சரியாக யான் ஆரைச் சொல்லப் போகிறேனென்று மார்க்கண்டேயர் சொல்லியருளினர்.

### கலிகால் முறைமை

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இவை யனைத்தையுந் தருமராஜன் கேட்டு, அவரருகில் ஏது மறியாதவரைப்போற் புன்னகை கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய முகத்தையும் நோக்கி, மனதில் தியானித்து மார்க்கண்டேயருடைய பாதங்களிற் பணிந்து, சுவாமி! தேவரீர் அநேக யுகங்களையும் ஜலப்பிரளயங்களையுங் கண்ட உத்தமராகையால், பெரியோர்கள் சாஸ்திரபுராண ரீதியாய் இனி வருங் கலியுகத்தில் வருணாச்சிரமமுஞ் சகல தருமங்களுங் குன்றிப்போமென்று சொல்லி இருக்கின்றார்களே; அதினுடைய விபரங்களையுஞ் சொல்லவேண்டு மென்று கேட்க மார்க்கண்டேயர் சொல்லுகிறார்: கேளும் முழுமதிவட்டக் குடையினையுடைய முதல்வனே! தருமதேவதை யென்று சொல்லப்பட்டது பரிசுத்தமாகிய வெள்ளை எருதின் ரூபமாக, நாலுகாலும், இரண்டு கொம்பும், உயர்ந்த முசிப்பும், பூமியிற் படியும் வாலுமுள்ளதா யிருக்கும். இது முதல் யுகத்தில் நாலு பாதத்துடனும், இரண்டாம் யுகத்தில் மூன்று பாதத்துடனும், மூன்றாம் யுகத்தில் இரண்டு பாதத்துடனும், கடையுகத்தில் ஒரு பாதத்துடனும் நடக்கும். அதென்னவென்றால், யுகந்தோறும் பஞ்சிட்டுப் பாரமேற்றுந் தன்மைபோற் கொஞ்சங் கொஞ்சமாகப் பாவ மேலிட்டுவந்து, இந்தக் கலியுகத்திற் பீடிக்கும். அதெப்படியெனில், பிராமணாள் உதய ஸ்நானம் - செபம் - காயத்திரி - அவுபாசம்- ஓமம்-கருமம்-தவம் - வேதாத்தியயனம்-சுசி-ஆசாரம் - நியமம் - தேவதாபத்தி இவைகள் முதலிய யாவும் விட்டு பொருளவர்க்கொண்டு, தம்மை வணங்குமிடத்திற்குத் தாம் போய் வணங்கி யாசித்துக் காலத்தை வீணாகக் கழிப்பார்கள். அவர்கள்முகத்திற் பிரமதேஜசிராது; வாக்குப் பலிதமிராது; யாவரு மதியார்கள்; வந்தனைகளுடன் துதியார்கள்; மமதாங்கார மேலிட்டுத் திரிவார்கள்.

இதனால் க்ஷத்திரியர் நித்திய ஸ்நான செபங்களையும், நீதியாகிய விக்கியானங்களையும், தருமதானாதிகளையும், தேவதார்ச்சனை, காலநீதி விசாரணை, சாதுக்கள் தரிசனம் இவை முதலியவைகளையும் நீங்கி, திரவியத்திலாசை அதிகங்கொண்டு, தன்னுயிர்போல் மன்னுயிரை நோக்குவது விடுத்து, உயிரைக் கைக்கொள்ளும் யமனைப்போற் கடுகடுத்து, அன்னிய ஸ்திரீகளி னாசைகொண்டு, பெரியோர்களுக்கு உபகார முபசார மில்லாமல், யாகாதிகளை நடத்தித் தேவர்களுக்கு அவிர்ப்பாக மீயாமல் கொடுங்கோல் செலுத்திக் குறைவார்கள். இதனால் மாதமும்மாரி பொழிதலும் குடிகளினுடைய வளங்களுங் குறைபடும். பயிர்கள் பாழாகும். துற்சோபம்-துற்பயங்கரம் - துர்மரணம் - துர்வியாதி இவைகள் மேலிட்டு, உலகத்திலுற்றோர்கள் கொலை-களவு-கள்-காமம்-பொய் இவைகளிற் பயின்று குடிகேடராகத் திரிவார்கள். அதனால் மகானுக்கள் தவமும் யாகமுஞ் செய்வதற்கில்லாமற் பயமுடையவர்களாய், மிருக உபத்திரவங்களுமேலிட்டு மெலிந்து வாடித் திரிவார்கள். உலகத்திற் பொய்யும், பொல்லாங்காகிய பகையும், கெடுநினைப்பும், அசத்தியமும் பெருகும் பிறருடைமை-பிறர்பொருள் - பிறர்தாரம் இவைகளைக் கவர்தலே மேலாகும். மனிதர்-மரங்கள்-விலங்குகள்-பக்ஷிகள் இவை முதலியவைகட்கு வலி குறையும். பூமியிலுண்டாகுங் கிழங்கு முதற் சகல வஸ்துக்களுக்கும் ருசி கெட்டுப்போம். ஜலம் வெப்பங்கொண்டு போகும். பூத்தல்-காய்த்தல்-பழுத்தல் இவையாவுங் குறையும். பாலுள்ள மாடுகள் முதலியதும் வறண்டு போம். சகலமானபேர்களுக்கும் வியாகூலமுந் துன்பமு நிறையும். மேலாகிய குலத்தோர் தாழ்வாகிய அற்பத்தொழிலைச் செய்தும், அற்பகுலத்தோர் மேலாகிய தொழிலைச்செய்தும், பிழைப்பார்கள். தெய்வதூஷணை யுண்டாகும். விரதம்-நோன்பு-பிதுர்கன்மம் இவைகளெல்லாம் பொய்யென்று இகழ்வார்கள். ஏதோ ஜன்மாந்திர தவத்தையுடைய புண்ணியர்கள் ஒருவேளை இவைகளை யெல்லா மநுஷ்டித்து வந்தால் மற்றையவர்கள்கூடிப் பழிப்பார்கள்.

பின்னுஞ் சிலர் பிரமணாதியர் அர்ச்சாவதாரங்களை நிந்தித்து, தெய்வமெங்கே, தருமத்தின் பலனெங்கே, பிதுர்தேவதை எங்கே என்று கேட்டு இகழ்வார்கள். ஆகாரம் - நித்திரை - மைதுனம் இம்மூன்றே யுள்ளதன்றி, வேறொன்றுமில்லை யென்பார்கள். தானதருமம்-பரவுபகாரம்-தயை-சாந்தம்-பொறுமை-பண்பு-ஜீவகாருண்யம் இவைகளை யெல்லாம் நீங்குவார்கள். பெரியோர்களுடையமடாலயம்-கோவில்-குளம்-தீர்த்தம் - திருநாள் இவைகளெல்லாவற்றையுங் கெடுப்பார்கள். செய்பவர்களையுந் தடுப்பார்கள். அண்ணன்-தம்பி-சுற்றம்-தாய்-தந்தை - ஆசான் இவர்கள் முதலிய

பேர்களையும் விலக்கிக் கலக்கிவிடுவார்கள். பரஸ்திரீ பிள்ளைக்குச் சகல கன்மமும் பாக்கியமுஞ் செய்து, குலஸ்திரீ பிள்ளையைக் கோமுண்டியாக்கி விடுவார்கள். அக்கினி சாக்ஷியாகவும், ஆதிப்பிராமணர்-பந்துக்கள்-சால்-கர்கம்-அரசாணிக்கால் இவைகள் சாக்ஷியாகவும் பிரமாணஞ் செய்து, வேதமந்திரங்களை வேதியரோடோதித் தாலிகட்டிப் பாணிக்கிரகணஞ் செய்த மனைவி மனம் நொந்து குழைந்து வாட, பரஸ்திரீகளைக் கூடிப் பூரித்து மகிழ்ச்சியுறுவார்கள். தருமசொத்து-பிராமணருடைமை - சிவசொத்து - விஷ்ணுசொத்து இவை முதலியவைகளை யெல்லாந் தருமஸ்வரூபியெனக் காட்டி அபகரிப்பார்கள். பிறர் பொருளை அறத்தின்வழி செலவழிப்பார்கள். தம்பொருளைத் தாழப்புதைப்பார்கள். மதுமாமிச பக்ஷணஞ் செய்வார்கள். புருடரை ஸ்திரீகள் மதியார்கள். பிள்ளைகள் தந்தை தாயை துதியார்கள். ஆசாரியரைச் சதிசெய்வார்கள். ஆசாரியருஞ் சிஷ்யரை வஞ்சிப்பார்கள். இப்படி பலவிதங்களாக, சகலமுங் குறுகி, இந்த யுகமுடிவிற் புருடர் வயது பதினாறாகவும், ஸ்திரீகள் வயது பன்னிரண்டாகவும், ஏழு வயதிற் புதல்வனையும் புதல்வியையும் பெறுவார்கள். இப்போதிருக்கிற ரூபங் குறைந்து குள்ள மாவார்கள். மெத்தவுந் தரித்திரப்படுவார்கள். ஈனர்கள் மேலிடுவார்கள். எல்லா மதஸ்தருக்குமொரேகடவுளென்றும் நாமெல்லாம் அவருக் குரியவர்களென்றும், சமய பேதஞ் சாதிபேதமில்லை யென்றுஞ் சகலத்தையும் மாற்றுவார்கள். தாழ்வு உயர்வு யென்பதில்லாமல் ஈனர் வேதசாஸ்திரம் புராணஞ் சொல்லவும், மேலோர் அதைக் கேட்கவு நேரிடும். ஸ்திரீகள் பதிவிரதையென் றெண்ணப்படாமற் போகும் அநேகர் குரூபிகளா யங்கவீனராய்ப் போவார்கள்.

இப்படி வருண சங்காரமாக முறைமை மாறிப் போகுங்காலத்தில், சர்வரக்ஷகனாகிய விஷ்ணுதேவர் அவதரித்து, ஈனர்களைமாட்டி, பிராம்மணர்களை நிலைக்க நாட்டி, காயத்திரி மந்திரஜெப ஹோம யாகங்களெல்லாஞ் செய்து வைத்து சகல சாதியாரையும் வருணாச்சிரமந் தப்பாமல் நடக்கும்படியாக்கி தருமதேவதை ஒரு பாதத்தில் நடப்பதை நீக்கி, நாலுபாதங்களில் நடக்கவுஞ்செய்து கோயில்-குளம்-தீர்த்தம்-திருநாள் இவையாவும் தொடரப்பண்ணி உலகத்தைச் சுகப்படுத்தி வைப்பார். அது முதலாகக் கிரேதாயுகம் பிறந்து, தர்மதேவதையுஞ் சந்தோஷத்துடன் நடக்கும். மாதமும்மாரி பெய்யும். மநுவிக்யான முடைய மன்னவர்களும்மறையவர்களுந் தானம்-தருமம்-உபகாரம் முதலியவைகளை நடத்தி, சத்தியத்தை வகிப்பார்கள். ஸ்திரீகள் நல்ல நடத்தை யுடையவராவர். ஆயுசு விர்த்தியாகும். தான்யமலியவும் விளைவும் பெருகும். சுவர்க்கலோக விர்த்தியும் நரகலோகம் பாழும் யாகாதி தருமங்களும் தேவர்களின் களிப்பும் அவிர்ப்பாகச் சிறப்பும் அசுரர் நீதியு மோங்கி, யாவரும் நித்திய மங்களமாக வாழ்வார்கள். ஆகையால் பிராமணராலே ராஜநீதி-மழை மன்னுயிர் தழைத்தல்-ஆயுள் விர்த்தி-தபம்-ஜெபம்-ஓமம் - யாகம்-வேதமந்திரம்-தேவதாபூஜை-ஆசீர்வாதம் இவை யனைத்தும் மேன்மேல் வளருமென் றறியக்கடவீர். பிர்மா-விஷ்ணு-பரமேஸ்வரன்-தேவேந்திரன் முதலிய தேவர்களுக்கு மேலானவர்கள் பிராமணர்கள். இவர்களாலே எவர்களுக்கும் பூஜாவிதி முதலியவைகளை நடத்தல் வேண்டும். இதுவே தங்களிற் கூறி இருக்கும் விதி. இந்தப்பிரகாரம் யார் ஒருத்தர் அந்தப் பிராமணர்களுடைய மகத்துவங்களைக் கேட்டு வருகின்றார்களோ அவர்களுக்குச் சகல துன்பமும், நோயும், சத்துரு பீடையும் அகன்று நித்தியசுரவார்கள் என்று சொன்ன உத்தமரைத் தருமபுத்திரர்பணிந்து ஓ சித்தசனை எரித்தருளிய நெற்றிக் கண்ணனிடத்திற் பத்திசெலுத்திய சத்வகுணமுடைய கர்த்தனே! இன்னும் பிராமணர்களுடைய பெருமையைச் சொல்லவேண்டுமென்று கேட்கச் சொல்லுகிறார்:

## பரிச்சித்துராஜன் சரித்திரம்.

கேளும் அரசனே! அயோத்தியாபுரியை ஆண்ட சூரியகுல திலகனாகிய பரிச்சித்தென்றொரு ராஜனிருந்தான். அவன் ஒருநாள் சகல படைகளோடும் வேட்டைமார்க்கம்போய் சகல மிருகங்களையும் கொன்று விளையாடி யுலாவித் தனியாய்த் திரியும்போது, சூரியன் உச்சியில் வந்தான். கடும்பகலாகையால், அரசனுக்குத் தாகம் நேரிட்டு, ஓர் தடாகத்தை நாடியோடி வாடி மன்னவன் தானாடிய வேட்டையால் வந்த வெப்ப வருத்தந்தீர அத்தடாகத்தில் இறங்கப் போகையில், அந்த குளத்தின் கரையில் ஒரு ஸ்திரீ நிற்கக்கண்டு விசனங்

கொண்டு, யாரோ? எவரோ? அமராபதி மாதோ? அளகாபுரி மங்கையோ? நீருறை மானோ? வரைவளர் தேனோ? நாகலோக நங்கையோ? யக்ஷகந்திருவர் அரிவையோ? அல்லது மன்மதன் விடுத்த தெரிவையோ என்று நைந்து நொந்தவனாய், கருவண்டைபோன்ற விழியும், பூச்செண்டைபோன்ற மூலையும், கூற்கொண்டல்போன்ற குழலும், கற்கண்டைப் போன்ற மொழியும், வாழைத் தண்டைப் போன்ற தொடையும், பெண் யானைக்கன்றைப் போன்ற நடையும், பாதம் வரையிற் றாழ்ந்த ஜடையும், என்னை நோக்கும் அருள்விழிக் கடையும், சிவந்த விதழாகிய செங்கிடையும், காமன் படையும், அவனது குடைமுகமாகக் கொண்டு நின்று பார்க்கும் மாதரசி யாரோ? மாமலைமே லுலாவும் மயிலோ? மாமரச்சோலையில் குலாவும் குயிலோ? வாள்விழி இரண்டும் அயிலோ? அல்லது மருண்டு புரளுங் கயிலோ? மலர்மேலுற்ற அன்னமோ? வடிவஞ் சொலிக்கும் சொர்னமோ என்று மயங்கிச் சமீபத்திற் சென்று வார்த்தையாடும்போது, அந்த நங்கையானவள் சொல்லுகின்றாள்:

கேளும் அரசனே! நான் ஆயுத மகாராஜனுடைய பெண். என் பேர் சோபனை. உம்முடன் கூடி விளையாடி வாழ்வதற்கு உன்னி வந்தேன். ஆனால் ஒரு வரங் கொடுக்கவேண்டும். அதென்னவென்றால், உம்மைக் கலந்து நான் வாழும்போது என்னைச் சலத்தில் விடாது யெத்தனை நாள் வைத்திருந்தாலும் இருந்து மருவுவேன். தண்ணீரில் எப்போது இறங்கவைப்பீரோ, அப்போது உம்மை விட்டுப் பிரிவேன் என்று சொல்லிய அப் பூவையின் மொழியைக் கேட்டுச் சம்மதித்து, இருவரும் அந்தக் காட்டிற் காந்திருவர் விவாகமாகக் கலந்து, தேகத்தி லுண்டாகும் வியர்வையைத் தென்றற் காற்றினாற் புலர்த்தி இருவரும் ரதமேறிப் படைகளுடன் கலந்து கடலென மேளமார்ப்ப அவ்வடவிகள் நீங்கி அயோத்தியாபுரியி லோங்கி, மாரனும் இரதியும்போலும், மாலுந் திருவும்போலும், பாலு நீரும்போலும், பாடலும்பொருளும்போலுஞ் சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள். இப்படி ஒருவரையொருவர் பிரியாமல் ஒருமையாக மருவும்போது வசந்தகாலம் நேரிட, அப்போது சுகந்த பரிமள மேலிட்ட ஓர் சந்தனச் சோலையில் அச்சோபனையும் ராஜனும் புகுந்து, அங்கிருந்த தடாகத்தில் வந்திருந்த ஸ்திரீகளுடன் கலந்து தாம் முன் சொன்ன வார்த்தையை மறந்திறங்கி இருவரும் மற்றியாவரும் விளையாடினார்கள். அப்போது ஸ்திரீகளெல்லா மிருக்க, அரசன் சோபனையைக் காணாமல் ஏங்கித் திகைத்து, குளமுழுமையுந் தடவிப் பார்த்து, அந்தச் சலமியாவையும் ஒரு நொடியி லிறைப்பித்து சேற்றுக்களையும் வாரிக் கரைமீ தேற்றித் தேடினன். அப்படியுங் காணாமல் எப்படிப் போவாளென்று நெடுநேரஞ் சிந்தைசெய்து, இவ்விடத்தில் தவளைகள்தானே யிருக்கின்றதன்றி வேறொன்றினையுங் காணோமே. ஆகையால், இந்தத் தவளைகள் விழுங்கி விட்டதென்று பெண்ணின் மயலால் மதிமயங்கி யேதொன்றுந் தோன்றாதவனாகி, (அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்) என்பதுபோல் அவைகளையெல்லாம் கொல்லச் சொன்னான்.

இன்னமும் ஒருவன் ஒரு குடும்பத்தில் புகழ்பெற்றாலும் இகழ்வுற்றாலும் அவனைச் சார்ந்த குலத்தாருக் கெல்லாம் ஆகுமல்லவா வென்றெண்ணி, ஊர்களிலும் நாடுகளிலு மிருக்குங் குளங்கள்-நதிகள்-குட்டைகள்-ஆறுகள்-மடுக்கள்-வாவிகள்-கூபங்கள் - துரவுகள்-கயங்கள்-ஓடைகள்-கழனிகள்-பள்ளங்கள்-படுகுழிகள் இவைகளி லிருக்குந் தவளைகளை யெல்லாமுங் கொல்லச் சொல்லி சேனைகளுக்கு உத்தரஞ் செய்தான். அப்படியே எல்லாவற்றையுங் கொன்று குவித்தார்கள். அந்தச் சமயத்திற் சாதிமானஞ் சமயமானஞ் சங்கிரமருக்கும் உண்டென்று சொல்லுந் தன்மையினால் இந்தத் தவளைகள் இறந்துபோவதைக் கண்டு தரியாதிரங்கிய இவைகளுக் கரசனாகிய மண்டூக நாதனென்பவன் பிராமண வேடங்கொண்டு வந்து நின்று, அரசனைக் கண்டு சிறப்புடன் வாழ்த்தி, ஐயோ! சூரியகுலத்திலுதித்த மன்னவர்கள் ஒன்றைத் துயருறக் கொல்லார்கள். தங்கள் பிராணனையாகிலுங் கொடுத்து ஆபத்து வந்த காலத்து இரட்சிப்பார்கள். அப்படிப்பட்ட குலத்தில் தோன்றி வெகுவாகிய அல்ப வுயிர்களைக் கொல்லத் துணிந்தவாறு சொல்லவேண்டுமென, கேளுமையா பிராமணனே! என்னுயிர்க் குயிராகிய மனையாளுடன் ஓர் தடாகத்தி லிறங்கி விளையாடும்போது அவளைக் காணோம் சலத்தையும் இறைத்துப் பார்த்தேன். இந்தத் தவளைகளன்றி வேறொன்றையுங் காணேன். ஆதலால், தவளைகள்தான் அவளை மோசம்பண்ணி

விட்டனவென்று கோபங்கொண்டு கொல்ல லுற்றேன் என்று சொல்லக் கேட்ட பிராமண ரூபன் சொல்லுகின்றான்:

ஓ அரசனே! ஸ்திரீகளுடைய மனது தங்களுக் கிச்சையிருந்தால் எத்தனைபேர் தடுத்தாலுங் கேளார்கள். இச்சை யில்லாவிட்டால் ஈசன் சொன்னாலு மிணங்கார்கள். இஃதுனக்குத் தெரிந்திருந்தும், சாஸ்திரங்களெல்லாங் கற்றுணர்ந்தும், இப்படி பழியும் பாவமுஞ் சுமக்கலாமா? அல்லது நமக் கீடில்லாத சொல்ப ஜெந்துக்களைக் கொன்றதினால் நீங்கிப்போன பெண் வருவாளா? இதென்ன அநியாயம்! போகட்டும், இப்போது என் பெண்ணுக் கென்னவகை சொல்லுகிறீர்? நான் நெடுநாளாய்ப் பிள்ளையில்லாமல் வருந்தித் தவத்தினால் பெற்று வளர்த்து வந்த அச்சோபனை யென்னும் பெண்ணானவள் கன்னி தடாக தீரத்தில் உலாவிக்கொண் டிருக்கக்கண்டு நீர் அழைத்து வந்துவிட்டதாய்க் கேள்விப்பட்டு ஊரெல்லாம் தேடிக்கொண்டு வந்தேன். ஆதலால், என் பெண்ணைக் கொண்டுவாருமென்று கேழ்க்கவே, அரசன் பயந்து இதென்ன பாபம்! இனி என்ன விளையுமோ? ஏதாய் முடியுமோ? அப்பெண் நான் அரசன் குமாரத்தி என்றாளே? அந்தோ! தவளைகளைக் கொன்ற பாவமும், பிராமணன் இடும் சாபமும், நமக்கு ஒன்றாய் நேரிடுங் காலமோ இதுவென்று ஏங்கித் தியங்கி, மாறுத்தரஞ் சொல்லவும் மனமெழாதிருக்க, அவனை அப்பிராமண உருவம் நோக்கி, ஓ அரசனே! பயப்படாதீர். அந்தப் பெண்ணானவள் உம்முடன் கலக்கப் பேசும்போது என்னை நீரிலிறங்கவொட்டாமல் வைத்திருமென்று சொல்லியிருக்க, அம்மெல்லியல் மொழியை மறந்து நீரிலிறங்கி விளையாடித் துறந்து மிகவும் வாடுகின்றீர். எங்கும் தேடுகிறீர். வேறொன்றும் நாடவேண்டியதில்லை. நான் பிராமணனல்லன். தவளைகளுக் கெல்லாம் அரசன். என் பேர்தான் ஆயுதன். நீர் மொழிதப்பவும் நீரில் முழுகிப் போயின பெண் என் குமரி. அவள் பேர் சோபனை என்று சொல்லவும், இராஜன் நகைத்துச் சிரக்கம்பஞ் செய்து, நீரும் உம்முடைய பெண்ணும் அஞ்சலசித்தனாகிய என்னைச் சஞ்சல சித்தனாக்கி விட்டீர்கள். ஆ! ஆ! இது மெத்த கெட்டி. ஐயாவே! எங்கே உம்முடைய பெண்ணை என் கண்ணிற்காட்டி என் விசனத்தை ஓட்டிவையும். இல்லாவிட்டால், என் பிராணனுக்கு அழிவு வரும். ஐயனே என்றிரங்கினன்.

உடனே அப்பிராமண ரூபனாகிய ஆயுதராஜன் பெண்ணைத் தருவிக்கவும், மங்கையானவள் வந்து தந்தையைப் பணிந்து, மகாராஜனுடைய அங்கையைப் பிணைந்து நின்றனள். அப்படி நிற்கக்கண்ட வேந்தன் வெகுகாலம் விட்டு நீங்கிய உயிர்வந்து உடலில் உற்றமைபோல் களித்து நிற்கையில், தந்தையானவன் பெண்ணை நோக்கி, அம்மா! மறுப்படாத இரவிகுலோத்துங்கனை வையகம் பழிக்கப் பாவமேற்றி வைத்தாய். உன்னாலே வெகு தவளைகள் மாண்டன. ஆகையால், இந்தப் பாவம் உனக்கேயொழிய தோன்றலுக்கில்லை. அதனால், உன் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகளெல்லாம் கொடிய பாவ துஷ்டாளாய்ப் பிறக்கக் கடவதென்று சபித்து, இனிமேலும் பயமில்லாமல் வாழ்வைப் பெறலாம் என்று கன்னியின் கையைப்பிடித்து மன்னவன் கரத்திலமைத்துக் கையடை கொடுத்துவிடுத்து, அடித்துக் கிடந்த தவளைகளையெல்லாம் எடுத்து குளத்தில் விடுத்து, கடவுளினுடைய அருளினால் அவைகளெல்லாம் பிழைக்கத்தான் மறைந்து, பழயபடி தான் குளத்திற் புகுந்து வாழ்ந்து கொண்டிருந்தான். ஆயுதனவன் இப்பால் பொறையும் நிறையுமுடைய இறையும் இறைவியுங் கூடிக்கலந்து அரண்மனை சேர்ந்து வாழ்ந்திருக்கும் நாளையில், இந்த சோபனையானவள் கர்ப்பவதியாக விருந்து ஒரு பிள்ளையைப் பெற்றாள். பிறகு ஒரு பிள்ளையைப்பெற்றாள். அரசன் இவர்களுக்குப்பேர் ஜலன் - நலன் என்று நாமதேயம் புரிந்து, ஆறு கருமமுங் கிரமமாகச் செய்து, இராஜநீதிமுறை வில்-வாள் - வேல் - கதை - யானை - குதிரை - தேர் இவை முதலாகிய எல்லாக்கல்வியுங் கற்பிக்க அவையனைத்துங் கற்று விளங்கிய பிள்ளைகளில் மூத்த பிள்ளையாகிய ஜலனுக்குப் பட்டங்கட்டி, முத்திரை மோதிரமும் செங்கோலுங் கொடுத்து, இராஜநீதிகள் எல்லாஞ் சொல்லி, மந்திரி-பிரதானி-சேனாதிபதி முதலிய பேர்களுக்கும் புத்திமதிகளைச் சொல்லிவிட்டு பரிட்சித்து மகாராஜன் தபசு செய்யக் காட்டுக்குப் போய்விட்டான்.

---

## ஜலன்–நலன் என்னும் இவர்கள் சரித்திரம்

ஓ தருமராஜனே! இப்பால் இந்தப் புத்திரன் நாட்டை ஆண்டு வரும்போது, ஒரு நாள் காட்டில் இருக்கும் மிருக உபத்திரவங்களைக்கேட்டு, வேட்டையாட வீட்டை விட்டுச் சகல சேனைக் கூட்டத்துடன் அசுவங்களைப் பூட்டி வந்த இரதத்தின்மீதில் தாஷ்டியுடன் ஏறி, மேட்டிமையாகக் கோட்டினை யுடைய குஞ்சரங்கள் சூழப்போய்க் காட்டை வளைத்துக் கலைந்து மிருகங்களை வெருட்டி வதைக்கும்போது, ஒரு மானானது பாய்ந்து வேகத்துடனோடக்கண்ட வேந்தன் அதிக கோபத்துடன் அதை அடிக்கவேண்டி சாரதியை நோக்கி இரதத்தை முடுக்கி விடுகவென்றுமொழிய, அதுகேட்ட சூதனானவன், சுவாமி! நமது தேறிற் கட்டிய குதிரைகளெல்லாம் காலைமுதற்கொண்டு திரிந்தபடியாற் கால்கள் ஓய்ந்து வியர்வை பாய்ந்து விலாழி பெருகிக் கருகிப் போயிருக்கின்றன. இனி இதுகள் ஓடாது. தேவரீருக்கு மானையடிக்க மனமிருக்கின்றமையால் உறுதிமொழி யொன்று சொல்லுகிறேன். அது என்னவெனில், நமக்கெதிரில் வாமதேவ மகரிஷியினுடைய ஆச்சிரமந் தெரிகின்றது. அங்கே போவோமாகில் அவரிடத்தில் நல்ல அசுவங்க ளிருக்கின்றன. அவைகளை இதிற் போட்டுக்கொண்டு வாயுவேகம் மனோவேகத்துடன் நடத்தி மானைக் கொன்று உமது மனமகிழ்ச்சி யுறலாமென்று வலவன் சொல்ல, அதுகேட்ட அரசன் அந்த மகானுபாவனுடைய ஆச்சிரமத்துக்கு தேரை நடத்திப்போய் இறங்கி, அவரெதிரிலே சென்று வணங்கி யெழுந்துநின்று, சுவாமி! தேவரீருடைய குதிரைகளை சற்றுநேரத்திற்கு இரவலாகக் கொடுத்தால் இந்த ரதத்திற் பூட்டிக்கொண்டு நான் நாடிய மானை அடித்த பிற்பாடு தேவரீர் குதிரைகளைக் கொண்டுவந்து விட்டுவிடுகிறேன். அதுவரையில் என் குதிரைகளையும் இங்கேதானே கட்டிவைத்துப் போகிறேனென்று கேட்டான்.

அதைக் கேட்ட வாமதேவர் மன்னவனை நோக்கி, நீங்கள் மகாராஜர்கள். செல்வவந்தர்கள். நாங்களேழைகள். உங்களுக்கு ஒரு பொருள் கொடுத்தால் திரும்பவுங் கொடுக்க மாட்டீர்கள். நாங்களும் உங்களைக் கேட்கப் படாது கேட்டால் மனவருத்தமுங் கோபமும் வரும்என்றுசொல்லக்கேட்ட அரசன், சுவாமி! பிராமணருடைய சொத்துகள் அற்பமானாலும் ஆசைவைக்கப்படாதென்று பெரியோர்களாலுஞ் சுருதி வசனங்களினாலுங் கேட்டும் உணர்ந்துமிருக்கும் யாங்கள் அப்படி வைத்திருப்பதில்லை. (ரிஷிப்பிண்டம் இராத்தங்காது) என்னும் பழமொழிபோல் உடனே அனுப்பி வைத்துவிட்டு மறுகாரியம் நோக்குவேன். இதற்கு சந்தேகமில்லை என்று உறுதி வசனஞ்சொல்லிக் குதிரையை வாங்கி இரதத்திற் பூட்டிக்கொண்டு வனத்திற் சென்று, மானைக்கண்டு அதை யடித்துக்கொண்டு, சந்தோஷத்துடன் திரும்பி வாமதேவரிஷியின் வனத்தைவிட்டு வேறுமார்க்கமாகப் பட்டினம் போய்ச் சேர்ந்தான். இப்படியிருக்க, சில நாள் தரித்து வாமதேவரானவர் தன்னுடைய சிஷனையேவிக் குதிரைகளை வாங்கிவரச்சொன்னார். அப்படியே அந்தப் பிராமணப்பிள்ளையானவர் அயோத்தியாபுரிக்கு வந்து, சிங்காதனத்திலிருக்கும் ஜலமகாராசனைக்கண்டு ஆசீர்வதிக்க, அரசன் நீ யாரென்று கேட்டான். உடனே இந்த சீஷனானவன் நீர் சிலநாளைக்கு முன் காட்டுக்கு வேட்டையாட வந்தபோது உம்முடைய குதிரைகளிளைத்தபடியால் வாமதேவ மகாரிஷியினிடத்திற் குதிரைகள் வாங்கிக் கொண்டுவந்து உடனே கொடுக்கிறதாகச் சொல்லி இதுவரையிலுங் கொடுத்தனுப்பவில்லையே; அரசன் பலவிதக் கியாபகத்தினால் மறந்துவிட்டாற்போலு மிருக்கின்றது. நீ போய் எச்சரித்து வாங்கிவாவென்று என்னை யனுப்பி வைத்தாரென்று சொல்லினன்.

அதைக் கேட்டவுடனே ஜலன் கலகலவென்று நகைத்து, ஓய் பிராமணனே! நான் கொடுத்தவன்றான். அவர் வாங்கினவர்தான், நீர் பெற்றுப் போகிறவர்தான். போங்காணும் போம் என்று நகைத்தான். அதைக்கேட்டு அந்த சீஷனானவன் போய் ஆசாரியரிடத்தில் நடந்த வர்த்தமானங்களைச் சொல்ல, உடனே அவருக்குக் கோபம்வந்து, சில பிராமணர்கள் தம்மைப் புடைசூழ வந்து அயோத்தியா நகரத்திற் புகுந்து, அரசுபுரியுஞ் ஜலனிடத்து அடைந்து, ஓ செல்வவந்தனே! நீர் என் பரிகளை என்னசொல்லி வாங்கிவந்தீர். நான் என்னசொல்லிக் கொடுத்தேன் அவற்றை மறந்து என்னை ஏளனஞ்சொல்லி அனுப்பி வைத்தீராமே. ஆ! ஆ! சீமானே! என் குதிரை

களை ஏதொரு தடையுங் கூருமற்ருரும் என்று கேட்கும்போது ராசஞனவன் சொல்லுகிருன்: நான் உம்முடைய குதிரைகளைக் கொடுக்கமாட்டேன். என்னுடைய இரண்டு குதிரைகளையுந் தருவேன். இன்னும் வேண்டிய குதிரைகளுங் கொடுக்கிறேன். திரவியங்களுந் தருகிறேன். நீர் உம்முடைய தபோவனத்திற்குப் போம். இனி இந்தக் குதிரைகளின்மீது ஆசைவைக்க வேண்டாம். நிராசை பண்ணிக்கொண்டு நல்ல மனதுடனே எழுந்துபோம் என்று சொல்ல, வாமதேவருக்குக் கோபம் வந்து, வேந்தனே! அன்று நீ பரவசஞ் சொல்லிக்கொண்டுவந்து, (கையிலகப்பட்ட பொருளுக்குக் கணக்கில்லை) என்னும் பழமொழிபோல் இப்படி சொல்லத் தகாது. மேலும், பிராமணர்களுடைய சொத்துக்களையும் அடைக்கலம் வைத்த பொருள் களையும் அபகரிக்க ஆசையுற்றவர்கள் பாவமாகிய நரகத்திலழுந்துவார்கள். பசிக்கு பனம் பழத்தையுண்டாற் பின்னர் படும்பாட்டைப் படுவோமென் றுன்ஞீர். நரகமென்பதை நாளைக்குப் பார்த்துக் கொள்ளுவோம் என்று மறைநீதி தப்பி நினைப்பீராகில், என் குதிரைகள் இரண்டும் இனி உமக்கு உதவாதே. இப்போதே நல்ல மனதுடன் கொடுத்துவிடும் என்று கேட்டார்.

அதற்கவ்வரசன் புன்னகை செய்து, ஓ வேதியரே! கேடாகிய நரகத்திற்குப் போகயிருக்கும் நான் கொடுப்பனே? சுகங்கெட்டால் விரதலாபம். விரதங்கெட்டாற் சுகலாபம். இரண்டுங் கெட்டால் என்ன வுண்டென்று இறைவன் சொல்ல, மறைமுனி சொல்கிருர்: வீணுக என் பிராணனுக்கு ஆனிதேடிக் கொள்ளுகிறீர் வேண்டாம். குதிரைகளைக் கொடுமென்று மீட்டும் பற்பல இன்சொற்களாற் கேட்டனர். அப்போது இராஜனுக்குக் கோபம் பிறந்து, கண்கள் சுழலச் சமீபத்திலிருந்த ஒரு வீரனை நோக்கி, உன் சூலாயுதத்தால் இந்தக் காட்டு மனிதனை குத்திக் கொன்றுவிடென்று கோபித்துச் சொன்ஞன். உடனே அந்த வீரன் பல பராக்கிரமத்துடன் பற்கடித்துச் சூலத்தை ஓங்கி சமீபத்தில் வர, அவர் வருமுன்னமே நெற்றிக்கண்ணை மறைத்து வந்த உருத்திரனைப்போன்ற வாமதேவர் வெகுண்டு மனவருத்தமுற்றுங் காலையில், அநேகம்பேர் ராட்சத சிரேஷ்டாள் பிண்டிபாலம் - சூலம் - வேல்-கதை-தோமரம் இவைகளுடன் உலகம்நடுங்க அங்குற்றவர் யாவரும் ஒடுங்க வந்து, ஜலனென்னும் இறைவனையும் சூலம்பற்றி வந்த வீரனையும் வாரிப்பிடித்துக் கிழித் தெறிந்து போய்விட்டார்கள். மகாத்மாவுந் திரும்பித் தானிருக்கும் வனம் வந்து சேர்ந்தனர். இப்பால் இவ்விடத்திருந்த அமைச்சர் - சேனுதிபதியர் முதலிய பேர்களுந் தம்பியு மளவற்ற துக்கமுற்று, மிகுந்த விசனத்துடன் அண்ணலைக் கொண்டுபோய் ஈமத்தில் வைத்துச் செய்யுங் கருமங்களெல்லாம் செய்து முடித்து பத்துநாளுஞ் சூதகமிருந்து, அந்திய கருமமுந் தீர்த்துக்கொண்டு புனிதராகி, உலகத்திற்கு இறைவன் வேண்டியபடியால் இறந்தவனுக்கு இளையவனுகிய நலனுக்குப் பட்டாபிஷேகங் கட்டிவைத்தார். அந்நலன் யாவரும் வணங்க மகா மேன்மையோடும் வாழ்ந்து கொண்டு வந்தான்.

கேட்டீரோ தருமநந்தனரே! இந்த நலனென்னுமிராஜன் அரசாண்டு வருகையில், ஓர்சிறந்த ராஜகுமாரத்தியை விவாகம்செய்து துன்முகனென்னும் ஓர் புதல்வனைப்பெற்று வளர்த்து வந்தான். சில நாள் சென்ற பிற்பாடு ஒரு நாள் வாமதேவ மகாரிஷி வந்து நலனை நோக்கி, உன் தமையன் வாங்கிக் கொண்டு வந்த என் குதிரைகளை நீயாவது நன்மையாய்க் கொடுத்து விடுவென்று கேட்க, அவனுக்குக் கோபம் வந்து, என் தமயனை மாறுபாடாகிய வஞ்ச மாயையினுற் கொன்று போட்டு ஓடிப்போன உன்னை அன்றுமுதலின்றளவுந் தேடிக்கொண் டிருந்தேன். உன் பொல்லாத காலங் கூட்டி வந்துவிட்டது. உன்னை உயிருடன் விடமாட்டேனென்று சாரதியைநோக்கி இரதங் கொண்டுவரச் சொல்லி, வில்லைக் கையிலெடுத்துத் தன் பல்லைக் கடித்துப் பிடித்துப் பாணத்தைத் தொடுத்து விட்டான். அதிவேகங் கொண்ட அப் பிறைமுகப் பாணம் புறப்படுவதற்கு முன்னமே, இந்த முனிவர் அப்பா நலனே! நீ தொடுக்கும் பாணம் உன் மூத்த பிள்ளையாகிய துன்முகனைக் கொல்லக்கடவதென்று சொல்ல, உடனே பிள்ளை யிறந்தான். பாணம் பட்டென்று வெளிப்பட்ட சத்தங் கேட்டவுடனே அந்தப் புறத்திலிருந்த ராஜஸ்திரீகளெல்லாம் அலறியோடி வந்தார்கள். அதைக்கண்ட அரசனொருவன் இன்னமென்ன நஷ்டம் வந்தாலுந் துஷ்டனுகிய உன்னைக்கொல்லாமல் விடுவதில்லை யென்று மீண்டும் வில்லை யிழுக்கவும், அதைக்கண்ட புண்ணியமூர்த்தி நகைத்து,

உன்னுடைய வில்லும் இரண்டு கரமும் உயர்ந்து ஸ்தம்பிக்கத் தக்கதென்று சொல்லினர். இப்படி சொல்லவும் அவனுடைய வில்லும் அவ்வில்லைத் தாங்கிய கரங்களும் ஏற்றக்கோல்போல் மேலெழும்பி அசைவற்று நிற்க, அதுகண்ட ராஜ ஸ்திரீகளெல்லாம் அருகில் வந்து, வாமதேவர் மலரடியில் வீழ்ந்து அழுது துன்புற்று, சுவாமி! எங்கள் பேரில் இரக்கம் வைத்துக் கோபத்தைத் தணிக்க வேண்டுமென்றிரந்து கேட்டுக்கொண்டனர்.

உடனே அவர் கிருபை யுடையவராக, இரங்கி ஸ்தம்பித்த கரங்களும் வில்லும் வளையும்படியாக உத்தரஞ் சொல்ல, அவைகளப்படியே ஆக, அரசன் பூமியில் விழுந்து புரண்டழுது, நான் பாவ சம்பந்தத்தினால் இந்தக் கோபங்கொண்டேன், தேவரீர் மனஸ்தாபமில்லாமல் என் பிள்ளையைக் காப்பாற்றி என்னையும் இரக்ஷிக்க வேண்டுமென்று பரிந்து உபசாரத்துடன் வருந்தி நிற்க, அம்மன்னவனைக்கண்ட திருந்திய சிந்தையையுடைய அருந்தவத்தினேன் இறந்துபோகிற பிள்ளையை மறுபடியும் பிழைக்கச் செய்ய, உடனே அவன் தாய்மார்களும் மந்திரி பிரதானி முதலிய பேர்களும் வந்து வணங்கித் துதிக்க, அவர்களையும் முனிவர் ஆசீர்வதித்து மீண்டும் அரசனை நோக்கி, இனி உன் பிள்ளை துன்முகனால் பழியும் பாவமுமில்லாமல் அரசாக்ஷி நடக்கும் யாதொன்றிற்குங் குறைவில்லை என்று ஆசி சொல்லவுங் கேட்ட அரசனாகிய நலன் சந்தோஷமடைந்து, தன் தமயன் வாங்கிவந்த இரண்டு குதிரைகளையுங் கொடுத்து, வேண்டிய உபசாரத்துடன் பணிந்து மங்களாசனம் பெற்றுக்கொண்டு, அயோத்தியாபுரி பட்டினத்திற் சுகத்துடன் அரசுபுரிந்து வாழ்ந்துகொண் டிருந்தான். இப்பால் வாமதேவ மகாரிஷியானவர் தன் குதிரைகளை வாங்கிக்கொண்டு வனம் போய்ச் சேர்ந்திருந்தார். ஆகையால் கேளுந் தருமபூபதி! பிராமணர் முறைமைதப்பா துற்றிருந்தால், அவர்கள் மகத்துவமும் பெருமையையும் ஒருவராலும் அளவிட்டுச் சொல்லக்கூடாது என்றும் மார்க்கண்டேயர் சொல்ல, அது கேட்டு மனமகிழ்ந்த தருமராஜன் வணங்கி, சுவாமி! தேவரீர் யாவராலும் பெரியவரென்று யாங்களெல்லாஞ் சந்தோஷ மடைந்திருக்கின்றோம். அப்படி யிருந்தபோதிலுந் தேவரீரைவிடப் பெரியவர்கள் உலகத்தி லிருக்கின்றார்களா இல்லையா? அந்தச் சந்தேகந் தெளிவிக்க வேண்டுமென்று கேட்க, மார்க்கண்டேயர் சொல்லுகிறார்:

---

## இந்திரதூய்மராஜன் சரித்திரம்

ஓ தருமநந்தனா! ஆதியிற் சந்திரவமிசத்தை யாண்டு, உலகத்தில் பற்பல கீர்த்திகளைச் சம்பாதித்து, யாகாதிகளைச் செய்து பெருமையடைந்து, தேவவிமான மூர்ந்து, தேவலோகத்தில் நித்தியனாகத் தேவேந்திரனுடனே சரியாசனத்திலிருந்து, சகல போகங்களையும் அனுபவித்து சந்தோஷமுற்றிருந்த இந்திரதூய்மனென்னும் ஒரு ராஜன் தெய்வலோகத்தில் நெடுநாள் வாழ்ந்திருக்கையில், நூறு அசுவமேதயாகஞ் செய்து தேவேந்திர பட்டத்திற்கு வந்த இந்திரர், தேவவருடத்தில் ஒவ்வொருவரும் நூறுவயது வரையில் இருந்து இறந்து போனவர்கள் அநேகருண்டு. அப்படியிருக்க, இவன் மாத்திரம் இறக்காமல், முன்பு இரண்டு மநுவந்தரஞ் சொன்னேனே அந்த மநுவந்தரம் எத்தனையோ வந்தது. அவைகளுக்கெல்லாம் இவன் தப்பிப் பிழைத்திருக்கையில் தேவர்கள் கூடி, பூமியில் உம்முடைய பேரழிந்து விட்டது. மறுபடியும் பூமியிற் பிறந்து பேருண்டாக்கிப் பிரபலப்படுத்துமென்று தள்ளிவிட்டார்கள். ஓ தருமநந்தனா! ஒவ்வொருவனும் பூமியிலே அழியாதிருக்கும்படி செய்த நற்செய்கையா லுண்டாகிய பேருள்ளவரைக்குந் தெய்வபதவி பொருந்தியிருப்பார்கள். ஆதலால், தன் பேர் விளங்கும்படியாக சாவடி-சத்திரம்-தடாகம்-குளம்-கோவில் அல்லது நற்குணமுடைய பிள்ளைகள் இவைகளில் ஏதாகிலும் இருக்கவேண்டும். இப்பால் தேவர்களால் தள்ளப்பட்ட அவ்விந்திரதூயமென்னும் ராஜன் பூமியில் வந்து திரிந்து, என்னைக் கண்டு வணங்கித் தன் சங்கதிகளெல்லாஞ் சொல்லி, என்பேர் உலகத்திலிருக்கிறதா அழிந்து போய்விட்டதா சொல்லுமென்று கேட்டான். அதற்கு நான் சிவபெருமானுடைய கிருபையினால் யமனைச் சாதித்து என்றும் பதினாறு வயதென்று பெற்ற நாள்முதல் அந்த ராஜன் என்னைக் கேட்ட நாள்வரையில் கணக்குப்பார்த்து, நூற்றெண்பத்தேழு பிர்மாயுசு நடந்து, இப்போதிருக்கிற பிர்மாவுக்கு வயது எண்பத்தாறச்

சுது. இன்னும் இருபத்துநாலு வயது இருக்கப்போகிருன் இந்தப்பிரமன். ஆதலால் இதற்குள்ளாக நீர் துரைத்தனஞ் செய்திருக்கவில்லை இதற்கு முன்னுதாக இருக்கவேண்டுமென்று நான் சொல்லினேன்.

அதைக் கேட்ட அந்த அரசன் உம்மைவிடப் பெரியவருண்டோவென்று கேட்க, இமோத் பர்வதத்தில் ஒரு கோட்டான் தவம் பண்ணிக்கொண் டிருக்கிறதென்று எனக்குக் கேள்வி; அதைக்கேட்டால் தெரியுமென்றேன். நீருங்கூட வரவேண்டுமென்று அழைத்தான். நல்லதென்று செல்லும்போது இந்திரதுய்மனுகிய ராஜன் ஒரு வெள்ளைக் குதிரையாய் வடிவமெடுத்து, என்னை ஏற்றிக்கொண்டுபோய் அந்த மலைச்சாரலில் விடுத்து, குகைக்குள்ளே தவசு செய்துகொண்டிருக்கிற கோட்டானைக் கண்டு பணிந்து, தான் வந்த வர்த்தமானங்களைச் சொல்லினன். அதைக் கேட்டு அந்தக் கோட்டான் நகைத்து, நானொரு அற்பாயுசு உடையவன் என்னை நீர் கேட்கவந்தீர் நான் இதுவரையிலும் இருநூற் றிருபத்திரு பிர்மாயுசு கண்டேன் இதற்குள் இல்லை. நீர் இராச்சிய பரிபாலனஞ் செய்து இதற்கு முன்னிருந்தா லிருக்கவேண்டும். ஆனாலும், என்னிலும் மூத்தவர் சரஸ்வதி தீரத்தில் தவமிருக்கின்ருர். அவர் பேர் குரண்டதேவர். அவரைக் கேட்டறியுங்களென்று சொல்லிய கோட்டானையுங்கூட வேற்றிக்கொண்டு, அந்த இடத்திற்போய் அவரை யழைத்தனன். அந்தக் கொக்கானது வெளியே வர, இந்திரதுய்மன் அதை நோக்கி வணங்கித் தன்னுடைய சங்கதிகளைச் சொல்லினன். அதுகேட்ட குரண்டம், ஓ அரசனே! நான் இரு நூற்றைம்பது பிர்மாயுசு அறியேன். இதற்குள்ளாக உம்முடைய பேரைக்காணேம் இன்னுமுன்னுக இருக்க வேண்டுமோ யென்னமோ வென்னக்கேட்ட இறைவன் ஆச்சரியமுற்று, ஐயா குரண்டதேவா! உங்களைவிட இன்னும் பெரியவர்களுண்டோ வென்று கேட்டனன். அப்படி கேட்கவும் அதற்கு அந்தக் கொக்கு சொல்லுகின்றது. மெத்தப்பெரியவர் கோபஞ்சகத்தில் தவமிழைக்கிருர். அவர் பெயர் கூர்மதேவர். ஆதலா லவரிடத்திற்குப் போங்களென்று சொல்லவும் அக்குரண்டத்தையுந் தன்முதுகிலேற்றிக்கொண்டு அவ்விடத்திற்குப் போய் அவரை யழைத்தனன்.

உடனே அந்தக் கூர்மமானது வெளிவந்து, இராஜனுடைய வாய்மையைக் கேட்டு இரக்கமுடன் கிருபை கூர்ந்து, கண்களில் ஜலம் பெருகப் பெருமூச்சுவிட்டு, ஓய் ராஜனே! நீர் நீதியுடன் துரைத்தனஞ் செய்யும்போது எனக்கொரு சத்துருவினுல் அபாயம் நேரிட்டது. அக்காலத்தில் தருமதேவதையாகிய இந்திரதுய்மன் துரைத்தனத்திலும் இப்படி துன்பம் வந்ததல்லவா என்று நானினைத்தேன். உடனே உமது ஆக்ஞாசக்கரம் வந்து என் சத்துருவையகற்றி என்னைக் காப்பாற்றி விட்டது. அதை எக்காலத்திலும் மறக்கமாட்டேன் என்று சொல்லி உம்முடன் கூட வந்திருப்பவர்களில் இவரா ரென்று கேட்க, அரசன், ஓ கூர்மதேவா! இவர் குறை கண்டருக்குக் காலகாலனென்னும் பேர்தந்த மார்க்கண்டேயரென்று சொல்ல, அக்கூர்மதேவர், ஐயா மார்க்கண்டேயரே! நீர் பரமேஸ்வரனுடைய கிருபைபெற்ற இளங்கன்றுன போதிலும், புத்தியுள்ளவனே பெரியவன். ஆகையால், நானிருக்குமிடத்திற்கு வருத்தமெடுத்துக்கொண்டு வர நான் செய்த தவம் எப்படிப்பட்டதோ அறியேன் என்று உபசரித்து, ஓ அரசனே! இதோ யிருப்பவர் ஆரென்று கேட்டறிந்துகொண்டு, ஐயா கோட்டானே! என்னுடைய பாக்கியமே பாக்கியம் யான் இருந்தயிடத்திலிருந்து உங்களைக் காணப்பெற்றேன் என்றுபசரித்தான். பின்பு மற்றொருவரையும் இவராரென்று கேட்டு, குரண்டதேவ ரென்றறிந்து துதிசெய்து, ஆனால் நீங்களெல்லாஞ் சிறுபிள்ளைகளான போதிலுந் தவசிரோமணிகள் எனக்கு மெத்த இளையவர்கள் என்று சொல்லக்கேட்ட இறைவன் தேவரீருக்கு வயதென்னவென்று வினவ, அப்பா இராஜகுமாரனே! நான் மூந்நூற்றறுபத்தொரு பிர்மாயுசுதான் கண்டேன் என்று சொல்லி, கேளுங்கள் உத்தமர்களே! இந்த ராஜனை நீங்கள் அறியமாட்டீர்கள் போலும். ஆயினும் நானிந்தமட்டுஞ் சொல்லுகிறேன் யாவருங் கேளுங்கள்.

ஓ நண்பர்களே! இந்த மன்னவன் துரைத்தனஞ் செய்யும்போது நடத்திய நீதிநெறிகளைச்சொல்ல வென்தரமல்ல. இப்புவிதன்யாகாதி கிருதிகளைச்செய்து தேவர்களுக்கு அவிர்ப்பாகம் ஊட்டிவைத்ததையும் அளவிடமாட்டேன். சோடச மகா தானங்களைச் செய்த தொகைகளையும் அதினது வகைகளை

யுஞ் சொல்ல வெனக்குக் களைவிளையும். ஆயா சம் உண்டாகும். நான் தள்ளாதவனுகையால் உபாயமாகச் சொல்லுகிறேன். நிதானமாய்க் கேளுங்கள்: இந்நித்திய கோதானஞ் செய்த சத்தியவந்தனன் ஆளும் நாளையில் உத்தமப் பிராமணர்களுக்குக் கொடுக்கும் பசுக்கள் மிதி த்த குளப்படிப்பள்ளமிது. அதோ யிருக்கும் வெள்ளம் அப்பசுக்களைத் தானங்கொடுக்கும் போது வார்க்குந் தீர்த்தஞ்சேர்ந்த வெள்ளந் தான். அவ் வெள்ளத்தினின்றும் பிரிந்து கோபஞ்சக மென்னும் பெயரினையுடைய இந்த மடு மகா முக்கியமுடையது. ஆனதால், நான்றிலிருந்து பரமேஸ்வரனைக் குறித்துத் தவமிழைக்கிறேன் என்று கூர்மதேவர் கூறிய வனைத்துங்கேட்ட நாங்கள் ஆனந்தங் கொள் ளவே, உடனே தேவர்கள் தேவவிமானங் களுடன் புட்பமாரிபொழிந்துவந்து, கோபஞ் சகதீர்த்தக்கரையில் இறங்கி இருந்த அர சனை நோக்கி, இந்தப் புகழ் குன்றுமல் இன்னும் விர்த்தியாகும்படியாய் உம்மை அனுப்பிவைத்தோம். இப்போது கேட்டவர் களும் இந்தக் காலமன்றி யெந்த யுகாந்தரங் களிலேயும் அழியார்கள். இவர்கள் உள்ள மட்டும் உமது கீர்த்தியுங் குறையாது. நீருந் தேவபதவி பிரியாமலிருக்கலாம். ஆதலால், நீர் வாருமென்று தேவதூதருந் தேவர்களும் அழைக்க, அதுகேட்ட அரசன் மகிழ்ந்து சொல்லுகிறுன்:

ஓ பண்ணவர்களே! சற்றுநேரம் யிருங் கள். இவர்களை என் காரிய நிமித்தமாக அழைத்துவந்து இவ்விடத்தில்விட்டுப்போகி றது நன்மையல்ல; அவரவர்களை யதாஸ்தா னஞ் சேர்த்து வருகின்றேன் என்று ஆமையி னிடத்தில் விடைபெற்றுக் குதிரை ரூபமாகி, அவர்களை முன்போல எடுத்துக்கொண்டு, குரண்டத்தை சரஸ்வதி தீர்த்தக்கரையில் விடுத்து, கோட்டானை இமவத் பருவதத்தில் விடுத்து, என்னையுங் கொண்டுவந்துவிட்டு நமஸ்கரித்து ஆசி பெற்றுக்கொண்டு, இந் திர விமானத்திலேறிப் பொன்னுலகமுற்ற அந்நாள்முதல் இதுவரையிலும் எத்தனை தேவேந்திரரிறந்து பிறந்திருப்பார்கள். இது வரையிலுங்கூட அழிவில்லாமற் சகல சம்பிர மங்களையும் அனுபவித்துக்கொண் டிருக்கி ருன் இந்திரதூய்மனென்னும் ராஜன். ஆத லால், எத்தனை நல்வினைகளைச் செய்தாலும், அந்த வினைகள் பூமியிற் கெடாமலிருக்கிற வரையில் தெய்வலோகபதவியுண்டு. அவைக ளழிந்துபோனுல் மறுபடியும் பூமியில்வந்து பிறக்கவேண்டியதே. அதற்காகத்தான் இவ் வுலகத்தில் யாவருஞ் சத்திரம் - கோவில் - குளம்-சாலை-சோலை-மடாலயம்-நாடு-நகரங்க ளெல்லாஞ் செய்கிறதும் பிள்ளைகள் வேண்டு மென்று தவமிழைப்பதும், இவன் பிள்ளை இன்னுனென்று சொல்லுவதற்குத் திதிப் பிர யோசனஞ் செய்வதென்று வைத்து நாமதே யங்களைச் சொல்லுகின்றதுமென் றறிந்து கொள்ளும். எல்லாஞ் சொல்லுகிருர்களா வென்ருல், சந்ததி முழுமைக்குமென்று நீர் இறைக்கவேண்டியது. இப்படி யெல்லாங் கூறியிருக்கின்றது வேதவிதி. ஓ தருமநந் தனு! தவத்திற் சிறந்து ஆயுளிற் பெரியவர்க ளாய் இருப்பவர்களையெல்லா மறிந்துகொண் டீர் அல்லவா என்று கேட்ட மார்க்கண்டேய முனிவரைத் தருமபூபதி வணங்கி, சுவாமி! தங்கள் கிருபையினுல் அறிந்துகொண்டேன் என்று சொல்லி மற்ருென்று கேட்கலாயினர்.

## துந்துமாரமகாராஜன் சரித்திரம்

ஓ என்னுண்டவனே! சூரிய வமிசத்திற் பிறந்து சகல வேதநீதியுந் தெரிந்து, கோப மென்பவைகளை யகற்றி, லோபமாதிகளை நீங் கித் துரைத்தனஞ் செய்துவந்த இட்சுவாகு மகாராஜனுடைய வமிசத்திற் பிறந்த ஒருவ னுக்குத் துந்துமாரனென்று ராக்ஷசப் பெயர் வரவேண்டியது என்ன காரணம்? அதனை எனக்குச் சந்தேக நிவர்த்தியாகச் சொல்ல வேண்டுமென்று கேட்கவும், மார்க்கண்டேயர் சொல்லுகிருர்: கேளும் இறைவனே! இந்தப் பூமியில் உதங்கமகாரிஷி என்பவர் பரிசுத்த சாத்மீக சீலசம்பன்னராகத் தவமிழைத்து வருங்காலையில், சங்குசக்ரகதாகட்க கோதண்ட பாணியாய்த் துளபமாலை கவுஸ்துவாபரண முதலியவை இலங்கக் கருடவாகனரூடராய்ப் பரமபதநாதன் பிரசன்னமாக, அதுகண்ட உதங்கர் எதிரெழுந்து பணிந்து, ஸ்வாமி! சமுத்திரத்தினலைபோலும், ஊசலைப்போலும் இறந்தும் பிறந்தும் உழலும் வருத்தத்தை நீக்கித் தேவரீருடைய திருவடிநீழல் தந்து இரக்ஷிக்கவேண்டு மென்று கேட்க, அந்த உதங்கரிஷியை அவர் நோக்கி, இனிமேல் உமக்கு இறத்தலில்லை. நித்தியராக இருந்து நம்மைத் துதித்துக்கொண் டிருக்கக் கடவீர்.

உம்மால் ஒரு உபகாரம் உலகத்திற்குந் தேவர்களுக்கும் ஆகவேண்டியிருக்கிறது என்று மறுமொழியுரைத்துப் பரவாசுதேவன் பரமபதத்திற்குச் சென்றனர். அதுகேட்டு மகிழ்ந்த அம்மகாரிஷி அவ்வனத்திற்றானே தவம் புரிந்துகொண்டு சிலநாளிருக்கின்ற நாளையில், சூரியகுலத்தரசரில் இட்சுவாகு மகாராஜனிருந்தான். அவன் புத்திரன் யதுமகாராஜன். அவன் சுதன் காகுத்தன். அவன் மகன் பிரசேனன். அவன் பிள்ளை பிருது. அவன் மதலை புத்ரீகன். அவன் கான்முளை மறதிகன். அவன் குழவி ஆசு. அவன் சிசு சாபத்திரன். அவன் சேய் பிருகுதச்சுவன். அவன் மகவு குவலையாச்சுவன். அவன் மகிழ்வு இருபத்தோராயிரம் பிள்ளைகள்.

இந்த இருபத்தோராயிரம் பிள்ளைகள் மிகுந்த திரத்தினையுடையவர்களாக இருக்கவும், குவலையாச்சுவனே துரைத்தனம் பண்ணிக்கொண்டுவந்தான். அந்த நாளையில் உதங்கமகாரிஷி யென்பவர் அவனிடத்தில் வர, அதுகண்ட அரசன் உபசார நமஸ்காரங்களெல்லாஞ் செய்து, சுவாமி! இந்த வுலகத்தாசையை விடுத்துக் காட்டுக்குப்போய்த் தவமிழைக்க நினைந்திருக்கின்றேன். ஆதலால் எனக்கு அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று சொல்ல, அதுகேட்ட உதங்கமகாரிஷியானவர், ஓ வேந்தே! நீதி குன்றாமல் யாகங்களைச் செய்து வேதவிதிப்பிரகாரம் மநுக்களை இரக்ஷித்துவருகிற ராஜனடையும் பலனைத் தவமிழைப்பவர்கள் பெறமாட்டார்கள். ஆகையால், நீர் அரசுபுரிவதே தருமம் இதைவிட மேலானது வேறொன்றுமில்லை. மேலும், உம்மிடத்தில் ஒரு லோகோபகாரமாக் காரியத்தைப்பற்றி வந்தேன். அது என்னவென்றால், ஸ்ரீமந்நாராயணன் பாற்கடலில் ஆயிரம் பணமகுடமுடைய ஆதிசேடன்மீது கியான நித்திரை செய்யுங்காலையில், அவருடைய சுவாசத்திலிருந்து இரண்டு ராக்ஷசாள் பிறந்தார்கள். அவர்கள் மதுகயிடவரென்னும் பேருடையவர்கள். இவர்கள் யமனும் நடுங்கி யாவத்துவமாகிய உயிரும் நடுங்கி யொடுங்கும்படியாக உலகமெங்கும் யுத்தஞ்செய்து, பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும் பரந்தாமனிடத்தில் வந்து பலபலவித உபத்திரவங்களைப் பண்ணுகையில், மகாவிஷ்ணுவுக்குக் கோபம் பிறந்து பஞ்சாயுதத்துடனெதிர்த்து யுத்தஞ் செய்தும், அவர்களைக் கொல்லக்கூடாமலிளைத்து, தன் பெலமுந் தனக்குத் தெரியாமல் நின்று மயங்கி, இவர்களை உபாயத்தினாற் கொல்லவேண்டுமென்று கருதி, இதனைச் சொல்லுவதாயினர்:

ஓ பெலவான்களே! உங்கள் திறத்திற்கு நானிளைத்துப் போய்விட்டேன். இப்போது எனக்கு உங்கள்மீது மிகுந்த சந்தோஷமுண்டாச்சுது. உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள் தருகிறேனென்று சொல்ல, அதையவர்கள் கேட்டுக் கலீரென நகைத்து, பளா! பளா! வெகுநேர்த்தி! (துட்டுப்போடாதவர்களுக்கு இரட்டைப்பங்கு) என்பதுபோல் நீ பட்டபாட்டை யோசிக்காமல் எங்களுக்கு வரமா கொடுக்கப்போகிறாய் போதும் போதும் இன்னும் ஊரிலுன்னைத் தேவனென்று யாவருங் கொண்டாடுகிறார்கள் உனக்குச் சக்தியில்லாதபடியால் வேண்டிய வரங்களைக் கேள் நாங்கள் தருகிறோமென்று சொன்னார்கள். அப்படி சொல்லிய இருவரையும் விண்டு நோக்கி, சொல் தப்பாதிருப்பீர்களாகில் உங்களை நான் வரங்கேட்பேன். நீங்கள் வேளைக்கொரு பேச்சுப் பேசுகின்றவர்களாச்சே எவ்வாறு கேட்பதென்றனர். உடனே அவ்விருவர்க்கும் கோபம் பிறந்தது. நீதான் சொல் தவறுகிறவன். மோசக்காரன். நாங்கள் ஒருக்காலும் தவறமாட்டோம் என்றவுடனே விஷ்ணு சொல்லுகிறார்: ஆனால், நான் எனக்கு வேண்டிய வரத்தைக் கேட்கின்றேன். அஃது யாதெனில், நீங்களிருவரும் என்னால் இறந்துபோக வரங்கொடுக்க வேண்டுமென்ன, அதற்கவர்கள் நகைத்து, நீ சூதனானபடியால், இப்படிப்பட்ட வரத்தைக் கேட்டாய். அப்படியே கொடுத்தோம். ஆனால், தண்ணீரில்லாத இடத்தில் எங்களைக் கொல்லென்று சொல்லினார். உடனே தம்முடைய இரண்டு தொடையிலும் இருக்கும் உதிரத்தையும் நீரையும் ஒதுக்கி வைத்து, அந்த இரண்டு பேரையும் தொடைசந்தில் இறுக்கிக் கொன்றுவிட்டார்.

உடனே அவர்களுடைய குமாரனாகிய துந்துவென்பவன் இந்தச் செய்திகளைக் கேட்டு, பிரம்மாவைக்குறித்து அரியதவஞ்செய்தான். உடனே பிரம்மன் பிரசன்னமாகவே எழுந்து விழுந்து வணங்கி, விஷ்ணுவைக் கொல்ல வரங்கேட்டான். அதற்குப் பிரம்மா சொல்லுகின்றதாவது: நீ மெத்த பெலசாலியாகுக. ஆனாலும், இன்னும் சிலகாலம் என்னிடத்தில் பெற்ற இவ்வரத்தைப் பெலப்படுத்

திக்கொண்டு அப்பால் விஷ்ணுவிடத்திற் சென்று யுத்தம் செய்யக்கடவை என்று சொல்லக்கேட்ட அவன் எப்படி வரத்தைப் பெலப்படுத்துகின்றது என்று கேட்க, சமுத்திரக்கரையோரத்தில் படுத்துக்கொண்டு சில நாளைக்கு நித்திரை செய்தால், ஒரு வருஷத்துக்கொரு சுவாசம் புறப்படும். அதனால், பெலமுண்டாம் என்று சொல்லிப் போனார். உடனே அவன் கடற்கரையில் வந்து படுத்துக்கொண்டு நித்திரை போகிறான். அப்போது அவனுக்குச் சுவாசம் புறப்படும்போது, மலை-மரம் முதலிய யாவற்றும், வாடையும் தென்றலும் அடிக்க மடிந்து விழும் தன்மைபோல் இருந்தன. அந்த மூச்சில் அகப்பட்டுக்கொண்ட என்னுடைய ஆச்சிரமமும் நானும் குடிசையும் ஊசலாடா நின்றோம். அந்த வனங்களுடைய வளங்களெல்லாம் அழிந்து போய்விட்டன. பெரியோர்களெல்லாம் வாடியோடிப் போனார்கள். நான்மாத்திரம் உலர்ந்த சருகானேன். தேவர்கள் வருந்துகின்றார்கள். ஆகையால், எங்களைப்போலொத்தவர்களுக்கு ஒரு ஆபத்து வருமாகில் உலகத்தை யாளும் அரசன்தானே துணையாக விருந்து காப்பாற்ற வேண்டும்? உமக்கு வேண்டிய பெலங்களும் எங்கள் தபோபலங்களுங் கொடுக்கின்றோம். நீர் தயவுசெய்து படையெடுத்துப் புறப்படும் உம்மால் அவன் அபஜெயப்படுவானென்று சொல்லினர்.

அதைக் கேட்ட குவலயாச்சுவன் தனது ரதகஜ துரகபதாதியோடும் இருபத்தோராயிரம் பிள்ளைகளோடும் இரதாரூடனாகப் புறப்பட்டான். சகல தேவர்களும் பெரியோர்களும் வாழ்த்தினார்கள். அப்படியே சமுத்திரக்கரையில் வந்து பார்த்து, தூங்குகிற துந்துவென்பவனை எழுப்பச் சொல்லி தன் பிள்ளைகளுக்கு உத்தரவு செய்தான். உடனே இருபத்தோராயிரம் பிள்ளைகளும், பிண்டி-பாலம்-உலக்கை-வச்சிர தண்டம்-கொழு-மழு-முஸலம் - சூலம்-வேல் இவைகளைக்கொண்டு குத்தியும்-அடித்தும்-இடித்தும்-துவைத்தும் இப்படி பலவிதமாகத் துன்பப்படுத்தும்போது, அவனுடைய தீவினை வசத்தாற் கும்பகர்ணன் நித்திரை தெளிந்ததுபோ லெழுந்தான். அவனுடைய சுவாசத்தினால் அப்போது வந்த யானை சேனைப் படைகளும் இரத முதலியவும் எதுகை மோனை விட்டபாட்டைப்போல் ஓட்டங்கொள்வதாயின. அந்த வேளையில் அரசனும் அவன் பிள்ளைகளும், சேனைகளும், சிறந்த வித்வான்களால் திருத்தப்பட்டுக் கற்பனையலங்காரங்கொண்ட கவியைப்போல் வளைந்துகொண்டு யுத்தஞ் செய்தார்கள். அப்போது துந்துவானவன் சோம்பல் நீங்கியெழுந்து காலாக்கினி பொழியுங் கண்ணையுருட்டி விழித்து நெடுநேரம் போராடி, சேனைகளெல்லாம் இளைக்கவும் இருபத்தோராயிரம் ராஜபுத்திராள் களைக்கவுஞ் செய்தான். அக்காலவனை அரசனெதிர்க்கவும், தானு மவனை யெதிர்த்து இருவருஞ் சூலம்-வேல் முதலியவற்றால் ஒருவருக்கொருவர் சோலைப்பெய்தலைப்போலும் சித்திரைத் தீக்காச்சலைப்போலும் யுத்தஞ் செய்தார்கள்.

அந்த வேளையில் அரக்கன் சூலாயுதமெடுத்து விடுத்துக் கெதித்தே னுலகத்தையென்று கடுகடுத்தான். அதற்கு அரசன் பஞ்சாக்ஷர மந்திரத்தை யுச்சரித்து வச்சிரதண்டப் பிரையோகஞ் செய்யவும், அவுணன்சூலம் பொடியாயது. அதுகண்ட அரக்கன் தண்டாயுதத்தினாற் சாடினான். இராஜனும் ஒரு பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தான். அந்த அஸ்திரமானது தண்டாயுதத்தையுந் தகர்த்து துந்துவென்பவனுடைய சரீரத்தை இரண்டு துண்டாக்கியது. அதைக் கண்ட தேவர்கள் பலவாறு அரசனைக் கொண்டாடிப் புஷ்பவருஷந் தூற்றினர். ரிஷீஸ்வரர்கள் தவசிகள் முதலிய யாவரும் மங்களாசனஞ்சொல்லி வாழ்த்தினர். பின்பு அத்தேவர்களும் மற்றையர்களும் உதங்க மகாரிஷியுடன் கூடிக் குவலயாச்சுவ மகாராஜனைப் பார்த்து, ஓ புண்ணியவானே! எவர்களாலுஞ் ஜெயிக்கக்கூடாத துந்துவென்னும் அரக்கனைக் கொன்று எங்களுக்கு இன்று சவுக்கியங் கொடுத்தபடியால் இன்று முதற்கொண்டு உன்னை யாவருந் துந்துமாரனென் றழைக்கக்கடவது. உலகமுள்ளமட்டும் இந்தப் பேரே உனக்கு வழங்கக்கடவதென்று இன்னு மவனுக்கு வேண்டிய மந்திரார்த்தங்களுஞ் சொல்லி, உனக்கு வேண்டியனவாகிய வரங்களைக் கேள் தருகிறோமென்றனர். அவர்களை அரசன் தீர்க்கதெண்டமாகப் பணிந்து, சுவாமிகாள்! தங்களாசீர்வாதத்தினாற் சகலமும் பெற்றிருக்கின்றேன். ஆனால் ஒரு வரமுண்டு. அதாவது எனக்கும் என்கால் வழியில் வருபவர்க்கும் எக்காலத்திலும் பிராமண விஸ்வாசமும் பகவத்பக்தியு மிருக்கவேண்டும். அப்பிராமணாதிகள் பொருட்டில்

எங்களுக்குச் சகல வெற்றியும் உண்டாகும்படியாய் அநுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று வருந்திய பூபதிக்கு அப்படியே வரங்கொடுத்து, வேதமந்திரங்களினால் திவ்யாஸ்திரங் கொடுத்துப் புகழ்ந்து போயினார்கள். மகாரிஷிகளெல்லாம் வனம்புக்கினார்கள். இப்பால் உதங்கமாமுனிவர் அரசனை அயோத்தியிற் கொண்டுவந்து விடுத்து, புத்திரவர்க்கத்துடன் வாழ்ந்திருக்க வருளளித்து, தானுஞ் செலவு பெற்றுக்கொண்டு தவச் சூழலுக்குப் போயினர். இந்தச் சூரியவம்சத்து ராஜனுக்கு முன்பேர் குவலயசுவன். இந்தத் துந்துவென்னும் அரக்கனைக்கொன்ற ஜெயத்தினால் துந்து மகாராஜனென்று பேர் வாய்த்ததென்று மார்க்கண்டேய மகாமுனிவர் தருமராஜனுக்குச் சொல்ல, தம்பிமாரும் வேதபுங்கவரும் சுத்தநிட்களஸ்வரூபராகிப் பக்தவச்சல பரமாத்மாவாய் விளங்காநின்ற ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியோடுங் கேட்டு மகிழ்ந்திருந்தார்கள்.

## கௌசிகன் சரித்திரம்

கேட்டீரோ ஜனமேஜெய மகாராஜனே! இப்பால் தருமபுத்திரர் மார்க்கண்டேயரை வணங்கி, சுவாமி! இந்தப் பாஞ்சாலியை விவாகம் செய்துகொண்ட நாள்முதல் இதுவரையிலும் எங்களைந்து பேருக்கும் காலமறிந்தும், சமயமறிந்தும் தருணமறிந்தும், உண்பன தின்பனவற்றிலும், புனைதல் அணிதல் முதல் எவைகளிலும் குறைவிலாதியற்றி யாங்கள் மனோமகிழ்ச்சி கொள்ளத்தக்கதாய் நன்மார்க்கமாக நடந்து வருகின்றாள். ஆகையால், உலகத்தில் இந்தத் திரௌபதிக்கு மிஞ்சின ஸ்திரீகளு மில்லையென்று அடியேன் நினைத்திருக்கின்றேன். இப்படிப்பட்ட விசுவாசத்தோடு இவளிருக்கின்ற காரணமும், உலகத்தில் பெண்களைப் பெற்றவர்கள் ஒருவனுக்குப் பாணிக்கிரகணம் பண்ணிக் கொடுத்தவுடனே அந்த ஸ்திரீயானவள் புருஷனுக்குரியவளேயன்றித் தாய் தந்தையர்களுக்கு உரிமையில்லாமற் போவதும், பிள்ளைகளைப் பெறுகின்ற வருத்தம் இன்னாருடைய தென்றும், தீயகருமங்களையுடைய ஸ்திரீகள் என்ன கதி புகுவார்களோ அதையும், எனக்குச் சந்தேகந்தீரச் சொல்லவேண்டுமென்று துதித்துக் கேட்ட உதிஷ்டிரனை நோக்கி, மார்க்கண்டேயர் சொல்லுகின்றார்: ஓ அரசனே! ஸ்திரீகளுக்கு மூன்று காவலுண்டு. அஃதென்னவெனில், பெற்று வளர்த்துக் காத்தல் தாய் தந்தையின் கடமை. ஒருவனுக்குக் கொடுத்துவிட்டால் காப்பது அவன் கடமை. அப்பால் புத்திரன் கடமை. இப்படியிருக்க, ஒரு ஸ்திரீ புருஷனிடத்திலகிட்டி வாழ்விலுற்றால், கற்பு-அன்பு-நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு-நற்குண நற்செய்கை-புத்திரப்பேறு-விருந்தோம்பல் இவைகளெல்லாம் உடைத்தாயும், நாயகனே தெய்வம்-விரதம்-பலன்-நோன்பு முதலியவென்று உன்னிப் போற்றி நடந்து வந்தும், இல்லற வாழ்க்கைக்கு ஓர் இன்றியமையாத துணையா யிருந்துகொண்டும் வாழ்வுற்றவள் எவளோ அவளே இல்லறக் கிழத்தி இவ்வில்லறம் ஏனைய அறத்துக்கெல்லாம் துணையாகையாலும், நாயகனும் நாயகியும் அதற்குரியவ ராகையாலும், அந்த நாயகனே இந்த ஸ்திரீக்குச் சகல சுபமும், பெலமும் என்றறிவீர்.

இதல்லாமல் தந்தையானவன் புண்ணிய வசத்தினாற் பொருளைத்தேடி, பிள்ளை வேண்டுமென்று தவம்-தானம்-விரதம்-நோன்பு இவை முதலியவைகளைச் செய்து, மூர்த்தி தலம் தீர்த்தம் இவைகளைத் தரிசித்து, நல்லோர் பெரியோர்களை நாடி, ஓர் புத்திரன் பிறந்தபிற்பாடு அவனுக்கு புத்திரோற்சவம்-ஜாதகன்மம்-நாமகன்மம்-அன்னப்பிராசனம்-கவளம்-உபநயனம்-அக்ஷராப்பியாசம் இவைகளெல்லாம் தன் கடமையாகச் செய்தாலும், தாயார் பத்துமாதமுஞ் சுமந்து பெற்று வருத்தமுற்று அமுதமூட்டி வளர்த்தாலும், இருவருக்கும் இந்த வருத்தஞ் சரியென்று அறியக்கடவீர். இப்படி பிறந்த பிள்ளையானவன் உலகத்து திக்க கல்வியைக் கற்று நல்ல பண்பிற் சிறந்து, யாவரும் இவனைப் பெற்ற தாயுந் தந்தையும் என்ன தவமிழைத்தார்களோவென்று புகழும்படியாகச் சிறந்து, தன் மனையாளுடன் இல்லற தருமத்திற்குரிய ஒழுங்கின்படி மருவி, தன் தாய் தந்தையரைப் போற்றி, அவர்கள் நிரியாணத்திற்குரிய கடன் முறைகள் யாவுமியற்றி, நீர்க்கடன் தீர்த்து, நிலைபெற்று வாழ்பவனெவனோ அவன்றான் சற்புத்திரன். அவனால் ஏழு ஜனனங்களிலுந் தந்தைதாய்க்குப் பழியில்லை யென்று அறியக்கடவீர். பெண்ணாகப் பிறந்தால் தன் பதிவிரதா நிலையைக் காப்பாத்தி, உண்டி முதலியவற்றாற் புருஷனை யுபசரித்து, நல்ல புகழைப்பெற்று,

உலகமகிழ வாழ்வதே தனக்கும் தன்னையீன்ற தந்தை தாய்களுக்கும் பிரயோசன மென்று அறியும்; புருடனில் எந்த விரதங்களுமின்றி ஈனவிருத்திகளைச் செய்து கன்மம் நீங்கி நடப்பவன், பாவகதியை அடைவான். அதை விட்டு மேலாகிய உத்தமர்களையும் புராண சித்தாந்தங்களையும் கேட்டு கன்மம் வழுவாது செய்து வருபவன் கதியைப் பெறுவான். ஓ தருமநந்தனா! இதற்கு திருஷ்டாந்தமாக ஒரு பிராமண சிரேஷ்டனாகிய கௌசிகனுடைய சரித்திரத்தை சொல்லுகிறேன் கேளுமென்று மார்க்கண்டேயர் சொல்லத் தொடங்கினார்.

ஓ முரசத்துவஜனே! விசுட்டபுர மென்னும் பட்டணத்திற் கௌசிகன் என்றொரு பிராமணன் வேதாப்பியாசம் பெற்றுச் சன்மார்க்கத்தை அடையவேண்டி, வசிஷ்டர் ஆச்சிரமத்திற்குச் சென்று நெடுநாள் பாடங்கேட்டு வருகையில், ஒருநாள் வெப்பத்தினால் வருந்தி, ஒரு மரத்தின் நிழலில் வந்து நின்றான். அப்படி நிற்கவும் அந்த விருக்ஷத்தின் மீதிருந்த ஒரு கொக்கானது எச்சமிட, அது இவன் தலையிற்பட, உடனே கோபம் வந்து கண்களைச் சிவக்க விழித்து மேல் நோக்கினான். அந்தக் குரண்டமானது வெந்து சாம்பராகப் போயது. அதனால் இந்தப் பிராமணன் தன்னைத்தானே புகழ்ந்து, நமக்கு மிஞ்சிய பெரியோர்களுமுண்டோவென்று நினைத்து, தவச்சிரேஷ்டனாய்விட்டோமென்னும் ஆங்காரம் படைத்து, நாள்தோறுந் தனக்குள்ள வழக்கப்படி அந்த ஊர்ப்பிராமணரிருக்கும் அக்ராரத்துட் புகுந்து அன்னம்வாங்கி யுண்பவன். ஒரு வீட்டினுட் போய் (பவதி பிக்ஷாந்தேகி) என்றிரந்தான். அதைக் கேட்ட அவ்வீட்டு உத்தமியானவள் தன் புருஷனுக்குச் செய்ய வேண்டிய உபசாரத்தில் மிகுந்த அன்பும் பத்தியும் பொருந்தினவளாகி, அவன் அன்னமுண்டு வாய்பூசிச் சயனத்திற்குச் சென்றவுடனே அந்தப் புண்ணியவதி அவன் கால் கரங்களை யழுத்தி வருடிக்கொண் டிருந்து, அவன் நித்திரைபோனபிற்பாடு இந்தப் பிராமணனுக்கு அன்னமெடுத்து வந்தாள்.

அதைக்கண்ட பிராமணன் கோபங்கொண்டு, நான் பிட்சைக்கு வந்துகேட்டு எத்தனை நாழிகை யாய்விட்டது. இதுவரையிலும் உண்டென்றும் இல்லையென்றுஞ் சொல்லாமல் என்னைக் காக்கவைத்தாயல்லவா? அதிதிக்கு உபசாரம் பண்ணுகிறதைப் பார்க்கிலும் புருஷனுக்குப் பத்திசெலுத்துவது பெரிதோ என்று கண்களைப் புரட்டிப்பார்த்துக் கோபித்தான். அப்போதந்த ஸ்திரீயானவள் நகைத்து, கொக்கென்று என்னைப் பார்க்கின்றையோ? ஓ பிராமணனே! நீ அறியாதவன். உனக்குத் தருமத்தின் வழி தெரியாது. சொன்னாலுங் கிரகிக்கமாட்டாய். இன்னும் நீ யத்தருமத்தை யுணர்ந்து பக்குவப்படவேண்டி யிருக்கின்றது. இதற்குள்ளே அவசரப்பட்டுவிட்டாய் அது உன்னைக் கெடுக்கும்படியாக வந்து உன் தலைமீதிருக்கின்றது. இதற்கு சாஸ்திர விசாரணையுந் தக்க வநுபோகமுஞ் சாதுசங்கப் பழக்கமும் உறவேண்டும். நான் ஏன் இப்படி சொல்லுவதென்றால், எனக்கு விதித்திருப்பது தன்னைக் காத்தலுந் தலைவனைப் பூசித்தலும் நற்குணமும் நற்செய்கையுமென்றும், விரதம் நோன்பு-தவம் இவை முதலிய யாவும் புருடனென்றும் வேதத்திற் சொல்லியிருக்கின்றமையால், என்னாயகனுடைய பணிவிடைகளில் யானிருக்கும்போது, சாக்ஷாத் மூர்த்தியாகிய கயிலாசபதி வந்தாலும் எனக்கு நிமித்தமில்லை. இப்படியிருக்க, நீ தெரியாத தன்மையாற் கோபங்கொள்ளுவது அழகல்ல வென்று சொல்லவே அவ்வந்தணன் பயந்து நடுங்கி, வனத்தில் நமக்குத் தெரியும்படி நடந்த கொக்கின் சங்கதியை இவ்விடத்திலிருந்து சொன்ன இந்தப் பாக்யசாலிபோலும் விரதசீலி யாரிருக்கிறார்களென்று மூன்றுதரம் வலம் வந்து பாதங்களில் வீழ்ந்து, தாயே எனக்கு நல்லுணர்வு வரத்தக்க தருமத்தைக் கட்டளையிட வேண்டுமென் றிரந்தனன். அப்படியிரந்த அந்தணனுக்கு அவ்வுத்தம குணவதி உள்ள மகிழ்ந்து சொல்லுகின்றாள்:

ஓ வேதியனே! மிதிலாபுரியில் தருமவியாதனென்னும் ஒரு வேடனிருக்கின்றான். அவனிடத்திற் சென்றால் உனக்கு தரும சந்தேகங்களும் நீதியும் விளங்குமென்று சொல்லினள். அதற்கவன், தாயே! என்னுடைய ஜன்மாந்திர தவமாக்களுந் தாங்கள் இப்படி உருக்கொண்டு சொல்லும்படி நேரிட்டது. நான் தெரியாமற் கோபங்கொண்டதை க்ஷமிக்கவேண்டும் என்று நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு அம்மாதுசிரோமணி சொன்னபடி மிதுலாபுரிக்குச் சென்று தருமவியாதனென்னும் வேடனை விசாரித்தான். அப்போது அவன் கடைவீதியி லிருப்பானென்று சிலர் சொல்ல, அதைக் கேட்டுவந்து பார்க்கும்

போது அந்த வேடன் கடைவீதியில் மாமிசங்களை யறுக்கிறதும் வெட்டுகிறதுங் கொத்துகிறதுமாக இருக்கக்கண்டு, இந்த பிராமணன் மனவருத்தமுற்று என்னபாவம்? இப்பேர்ப்பட்ட ஈனத்தொழிலைச் செய்பவனிடத்தில் அனுப்பிவைத்தாளே அந்த உத்தமி யென்று நினைத்து, மீண்டும் நல்லது, ஒன்றை நாடி வந்தால் அதினது உண்மையை யறிந்து போகவேண்டும். (எந்தப்புற்றில் எந்தப்பாம்பிருக்கிறதோ) என்பார்கள். இதன்றியுங் கமலஞ்சேற்றிலும், முத்துச்சிப்பியிலும், அக்கினிகோவிலும் உண்டாவதன்றி, புனுகு முதலிய வஸ்துக்களும் அற்பமான விடத்தில் உற்பத்தியாகின்றன. குணம் பெரிதேயன்றிக் குலம் பெரிதல்ல என்று நினைத்துக்கொண்டு அவ்வேடன் சமீபத்தில் நெருங்காமல் தூரமாக ஒரு திண்ணையின்மீது போயிருந்தான். அப்படி யிருக்கக்கண்ட அந்த வேடனெழுந்து, தன் வேலைகளெல்லாம் முடிந்த பிற்பாடு துட்டுகளைச் சேகரித்துக்கொண்டு கைகால்களைச் சுத்திபண்ணி, இந்தப் பிராமணன் இருக்கும் இடத்திற்கு வந்து தீர்க்க தெண்டஞ் செய்து, சுவாமி! இன்ன அகரத்திலிருக்கும் இன்ன வுத்தமி சொல்லி அனுப்ப வந்தவரல்லவா நீரென்று அவ்வேடனைவன் கேட்டான்.

அதைக்கேட்ட கௌசிகன் ஆச்சரியமும் வருத்தமும் அடைந்து, இதென்ன விநோதம்? இப்பேர்ப்பட்ட உத்தமர்களை நாம் எப்படி சிறுக நினைப்பது? இதெல்லாம் ஈஸ்வரச் செயலேயன்றி வேறல்ல என்று உன்னி நிற்கும்போது வேடன் அந்தணனைப் பார்த்து, ஓ சுவாமி! நீர் விசிஷ்டாசாரந் தெரிந்துக் கொள்ளவேண்டி வந்தவர். நான் புன்தொழிலையுடைய வேடன். அவ்வாசாரத்தை குறித்து என்னென்ன தெரியும் என்று சொல்லவே, வந்த பிராமணன் மதிமருண்டு, இவன் அகம் புறம் இரண்டும் தெரியும்படியான மகாஞானியாயிருந்தும், நமக்கென்ன தெரியும் என்றே சொல்லுகின்றான். நாம் யாதொன்றுந் தெரியாதவனா யிருந்தும், தவசிரேஷ்டராகிய வசிஷ்டமகா முனிவருடைய சார்பில் இருந்த மகத்துவத்தால் கொக்கை யெரித்த போதே, எல்லாந் தெரிந்ததாய் ஆங்காரங் கொண்டோம். ஆ! ஆ! என்ன பேதைமை என்று உன்னும்போது அந்தத் தருமவியாதத் கிராதன் இவனைப் பார்த்து, வாருமென்று தன் வீட்டுக்கு அழைத்துப்போய் ஒரு ஆசனங் கொடுத்து அதிலிருக்கச் செய்து, இவர் எப்படியும் பிராமண குலத்திற் பிறந்த தருமதேவதை ஸ்வரூபமாய் விளங்கப்பட்டவர். இவருடைய மனதிலிருக்கும் சந்தேகங்களைத் தீர்த்துவிட்டு வேண்டிய நூல்களும் அவைகளின் பிரயோசனமும் அறியும்படி செய்யவேண்டும் என்று வேடன் நினைக்கும் போது, இந்தப் பிராமணன் தரும வியாதனை நோக்கி, நீர் தேவதாஸ்வரூபமாய் விளங்குகின்றீர். உம்மிடத்தில் இருக்கும் நெறிகள் யாவும் பார்க்க எனக்கு மெத்த சந்தோஷமாச்சுது. ஆனால், இப்படிப்பட்ட நீர் இந்த ஈனத்தொழிலில் இருந்து வாணிபஞ் செய்கிறதற்கு எப்படி சம்மதமாயது, யாவத்துமான பாவங்களிலும் பெரிது கொலை. பஞ்சமாபாதகத்திலும் முன்னணியிலிருக்கிற அல்பத் தொழிலை நீர் அனுஷ்டிப்பது அழகல்லவென்று சொல்லினன்.

அதைக் கேட்ட தருமவியாதன் ஐயா கௌசிகரே! கேளும்: பிராமணர்கள் சாந்தம்-பொறுமை - ஒழுக்கம் - ஆசாரம் - ஜெபம் - விரதம் - தவம் இவை முதலியகருமங்களை அனுஷ்டிக்க வேண்டியது. அரசர்கள் ஜெபம் - தவம் - விரதம் - நீதி - இரக்கம் தன்னுயிர்போல் மன்னுயிர் காத்தல் - விகிதர்களைக் காப்பாற்றுதல் - அகிதர்களைத் தண்டித்தல் இவை முதலியதுகளை நடத்த வேண்டியது. வைசியர் உழுது பயிர்செய்தல் - பசுகாத்தல் - பொருளீட்டல் - தருமம் புரிதல் - இறைவழியினிற்றல் - பெரியோரைப் பூசித்தல் இவைகளைச் செய்யவேண்டியது. சூத்திரர் இந்த மூவருக்கும் ஏவற்றொழில் புரிந்து ஆணைகடவா திருக்கவேண்டியது. இப்படியிருக்க, நாங்கள் வேடர் குலம் பட்சி - மிருகம் இவை முதலியவற்றைக் கொன்று மாமிசங்களை விற்றுச் சீவனஞ் செய்யவேண்டியது எங்கள் குலதர்மம். இப்படி அவரவர்கள் குலத்தொழிலை நடத்தாவிட்டால், இந்த மிதுலாபுரி ஆளப்பட்ட சத்திய சந்தனாகிய ஜனகமகாராஜன் தன் பிள்ளையான போதிலுந் தண்டனை செய்வார். அதினால் நான் என் ஜாதி ஆசார முறைமைப்படிக்குக் கொன்றுகொண்டு வருகிறவர்களிடத்தில் விலை கொடுத்து வாங்கி விற்று, வந்த லாபங்களில் - தேவாலயங்கள் - விஷ்ணுவாலயங்கள் - பெரியோர்கள் - பிராமணர்கள் - அதிதிகள் - சுற்றத்தார் - வேலைக்காரர்கள் - அண்

ணன் தம்பி பெண்சாதி பிள்ளைகள் இவர்களுக் கெல்லாங் கொடுத்து, என் தாய் தந்தையருக்கு முபசரித்தூட்டி, மிகுந்ததை யான் புசிக்கா நின்றேன்.

இதன்றியும், எனது தாய் தந்தையரைப் பூசாவிதி முறைமைப்படி நித்தியமும் பாத பூசை புரிந்து, சத்திய சவுசம் நித்திய ஜெப நியமந் தப்பாமல், பொறுமையுஞ் சாந்தமும் உடைத்தாய், கிருபை - நற்குணம்-சீவகாருண்யம் இவைகளை வகித்து, அன்னியதார மிச்சியாமலும், பிறர் பொருள் கவராமலும், துஷ்டயிஷ்டஞ் செய்யாமலும், தெய்வ தூஷணை - பெரியோர் தூஷணை - வேதாகம புராண துஷணை இவை யில்லாமலும், பெரியோர்கள் விதித்திருக்கும் விரதம்-நோன்பு-நன்னடக்கை இவைகளை அநுசரித்து, பொய்க்கருமங்களிற் பிடிவாத மில்லாமல், மெய்க்கருமங்களில் உறுதிகொண்டு, மனம் அடங்கிய பேர்களுக்கு வேத நீதியின் அநுபோகங்களைத் தெரிந்த மாத்திரஞ் சொல்லி, என்றும் நல்ல காலமாகக் கழித்து, எவர்கள் மனமுந் திடுக்கிடச் செய்யாமற், அந்த யீன குலத்திற் பிறந்தும் எவர்களுக்கும் பாததூளி போன்றவனாக யிருக்கின்றேன். இவைகளை உம்முடன் சொன்னதைப்போல் இதராளுக்குச் சொல்லமாட்டேன். இஃதல்லாமலு ந் தன் குலாச்சார தருமந் தப்பாமல் நடக்கிறதே உத்தமம். எந்த ஜெந்துக்களிடத்திலேயும் பூர்த்தியான இரக்கம் வைத்து நடக்கிறவன் இகலோகத்திலும் பரலோகத்திலுஞ் சவுக்கியம் பெறுவான். உள்ளும் புறம்பும் ஒத்த நடக்கையும் நினைப்பும் உடையவன் உத்தமன். சத்தியசவுசம் உடையவனெவனோ அவனே சுசியானவன். பேராசை நீக்கி, கோபம் - லோபம் - மோகம் இவைகளை விடுத்து, புத்தி சிதறவொட்டாமல் தரும வழியிலே நின்று, ஒருவன் செய்த தீங்கினைப் பொறுத்து, உடனே அதை மறந்து, துஷ்டவுறவை விலக்கி, வீண்காலம் போகவொட்டாமல் நல்விஷயத்தைப் பெற்று, பிறன்பழி கூறல் - குடிதோஷமுரைத்தல் இவைகளை அகற்றி, பெரியோரையும் உலகத்தையுந் தழுவி நடக்கும் நெறியைவிடாமலும், பிரமசாரி-கிரகஸ்தன்-வானப்பிரஸ்தன்-சந்நியாசி இந்த நான்காச்சிரமத்தில் எதைப்பற்றினாலும் அதின் வழியில் உறுதியாக நின்று சாதித்தல் வேண்டும்.

இப்படி அநேகமாகிய நன்மார்க்கங்களை அநுஷ்டிப்பதெல்லாம் நல் நடக்கை இவைகளைத் தப்பி நடத்தல் தீய நடக்கை. நல்ல வழிகளால் மேலான மோக்ஷமுண்டு. தீயவைகளால் நரகமுண்டு. எப்போதும் அந்தக்கரணஞ் சுத்தியா யிருக்கவேண்டும். இதுகளையெல்லாம் வழுவாமல் நீர் நடத்துவீராகிற் பிறருக்குக் கியானோபதேசஞ் செய்யும்படியாகிய ஆசாரியத்துவ முண்டாவதன்றி, மேலான மோட்சத்துக்கும் விதைபோலு மாகுவீர். மேலும் ஜீவயிமிசையைக் குறித்துச் சிலது சொல்லுகின்றேன் கேளும்: அதாவது வேதவேதியர்களெல்லாம் எத்தனை பசுக்களை யாகத்தில் வதைக்கின்றார்கள். அசுரர்களெல்லாம் வேட்டைமார்க்கத்தில் எத்தனை சீவனை மாய்க்கின்றார்கள். யுத்தகளத்திற் கண்ட கண்ட துண்ட துண்டமாக எத்தனைகோடி சதுரங்கச் சேனைகள் இறக்கின்றன. பூர்வத்தில் அரசர்களில் வெகுபேர் தினம் ஒன்றுக்கு இரண்டாயிரம் பசுவரையிலும் வதைத்து யாகம்பண்ணி இருக்கின்றார்கள். இவர்களுக்கெல்லாம் நற்கதியே யன்றி துற்கதி கிடைத்ததில்லை. இவ்வுலகத்தில் வெகுபேர் ஜீவயிமிசை செய்கின்ற தில்லையென்று வாக்கினாற் சொல்லுகின்றார்கள். அவர்கள் நடக்கிறபோதும் படுக்கிறபோதும் மண்வெட்டிக்கொண்டு வெட்டும்போதும் கோவில்-குளம்-ஏரி-துறவு-கிணறு இவைகளெல்லாஞ் செய்யும்போதும், அநேகங்கோடி, சீவன்கள் மாய்ந்து போகின்றன தங்களுக்குத் தெரிந்திருந்துங் கொல்லுவதில்லையென்று சொல்லுவது மயக்கமேயன்றி தெளிவல்ல.

ஓ கௌசிகரே! பிரமதேவனாற் சிருஷ்டியாகும்போது இன்னயின்ன ஜெந்துக்கள் இன்னார் இன்னாரால் இவ்விதமாய் இவ்வேளையில் இப்படியாவதென்று நேமித்தபடி நடக்கயிருக்கின்றபோது, இவர்களேன் நான் கொல்லுவ தில்லையென்னும் மொழி கூறுவது? ஆனால், இவர்களால் ஒன்றைக் கொல்லவும் பிறப்பிக்கவுங் கூடுமாயிருந்தால், இந்த மொழி சொல்லலாம். இவர்கள்கதியே இவர்கட்குத் தெரியாதிருக்கும்போது, மற்றொரு ஜெந்துவின் கதியைப் பேசவேண்டியதில்லை. யாவுங் கடவுள் சித்தமென்று மனப்பூர்த்தியாயிருக்க வேண்டியது. மேலும், எவனொருவன் தன் குலாச்சார தருமந்தப்பாமல் நடக்கின்றானோ அதுவே கொல்லாவிரதம். அது

வே ஒருவராலும் அளவிட்டுச் சொல்லா விரதம். இவைகளைத் தப்பி நடந்தவர்களெல்லாம் விரதத்தைப்பூண்டவரல்லர் பின்னையும் பூர்வ ஜென்மத்திலே செய்த நல்வினை தீவினைகளினாலே அந்த ஜனனம் வந்தது இந்த ஜன்மத்திலும் ஜாக்கிரதைப்படாமற் கர்மங்களைச் செய்து பொய்யாம் புழுக்குரம்பையை மெய்யென்று கருதி, நான் செய்தேன் நான் போனேன் என்னுடையது என் சம்பாதனை என்று சொல்லிக்கொண்டு இந்தச் சரீரத்தைப் பாதுகாத்தலினால், எத்தனைகாலங்களானாலும் இது நழுவிப்போய் மோசுப்படுத்தும். மறுபடியும் வேறு புதுவஸ்திரந் தரிப்பதுபோல் தேகம் வரும். அதோடுவியாதி-துல்பம்-சுகம்-துக்கம்-பாலியம்-யௌவனம்-கௌமாரம்-விருதாப்பியம் இவை முதலியவைகள் வந்து திரும்பவும் இறந்துபோம். இதில் நல்வினையைச் செய்திருந்தால் தேவாமிசை ஆவார்கள். நல்வினையுந் தீவினையுஞ் செய்திருந்தால் மானிடராவார்கள். சுத்த தீவினைகளையே செய்திருந்தால் தாபரசங்கமங்களில் பிறந்து, இப்படியாக வருத்தப்பட்டு இறக்கிறதும் பிறக்கிறதும் இதுவே ஓயாத வேலையாய் முடியும்; கறையேறவொட்டாது.

ஆகையால், உடலை வெறுத்து, அதற்குள்ள பாசபந்தங்களையும் அகற்றி நிலைபெற்று, பஞ்சேந்திரியங்களையும் அடக்கி, நிராசையாக விருந்து கடவுளைக் கியானத்தில் நிறுத்தின பேர்கள், பிறவிப் பெருங்கடல் நீந்துவார்கள். இதல்லாமலும் பூதம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, பொறி ஐந்து, அந்தக்கரணம் நான்கு, இவைகள் ஆத்மதத்துவம். இதுகள் கூடியதே ஒரு தேகம். எல்லாத் தேகத்திலும் மானிட தேகம் உத்தமமென்று சொல்லப்பட்டது. அது எப்படியென்றால், இது நன்மை தீமை என்று அறியப்படுங் காலம் எதுவோ அப்போதுதான் இது நல்ல ஜனனம். அறியாத வரையிலும் மிருகத்திற்கும் இதற்கும் பேதமில்லை. கருமமும் விடாது. பிறப்பும் இறப்பும் நீங்காது ஆகையாற் புலன் வழியில் அறிவு செல்லாமல் ஞானவழியிலே அறிவை நடத்தி, தன்னை அறிந்து, தலைவனையும் நோக்கிக் கண்டு கலந்த காலையில், அன்றைக்குக் கிடைக்கும் மேலாகிய பெரும்பதவி யென்னு மோட்சம் என்று சொல்லக்கேட்ட கௌசிகன் பிரமானந்தத்தை அடைந்து ஆனந்த பாஷ்பம் பெருக நின்றான். அதைக்கண்ட தருமவியாதன் தன்னுள்ளே அறிந்து, அவ்வந்தணனுடைய பக்குவ நெறிகண்டு அவ்விடம்விட்டு உள்ளறையில் அழைத்துக்கொண்டு போய் ஆசனங்கொடுத்து இருக்கச் செய்து, இதனை நடத்துவதாயினன்.

அஃதென்னவென்றால், தன் தாய்தந்தையரை மெல்லிய ஆசனத்தில் வைத்து ஊசலில் அமைத்து, நித்திய பூசையை நியதிப்படி செய்து துதித்து, வலமிடமாகப் பிரதட்சணம் வந்து நமஸ்கரித்து, தன் பத்தினி ஜலம்-புட்பம்-சந்தனம்-அட்சதை இவை முதலியவை கொண்டுவர அவைகளினால் ஸ்நானஞ் செய்துவைத்து பாதங்களில்மலர்களால் அர்ச்சித்து, சந்தனாட்சதைகள் அணிந்து, புருஷனோடு பத்தினியுமாய் வணங்கிக்கொண்டு, நேத்தியாகிய மாமிச வகைகளும் பழவகைகளும் அன்னமுதற் பற்பல கச்சாய வகைகளும் உபசரித்தூட்டி, கரங்களாற்சுத்திசெய்து, தாம்பூலங் கொடுத்து, பழயபடி ஊசலில் யேற்றி உபசரித்து இன்னும் உங்களுக்கு வேண்டிய விதங்களைக் கட்டளையிட வேண்டுமென்று வேண்டினன். அப்படி வேண்டிய பிள்ளையை அவர்கள் நோக்கி, அப்பா! எங்களுக்கொரு தாட்சியுமில்லை. உன்னைப்போலொத்த நற்குணம் நிறைந்த பிள்ளையைப் பெற்ற எங்களுக்கு ஏழு ஜன்மங்கள் ஒரு வேளையிருந்தாலும், அந்தக் காலங்களிலேயுந் தீயவைகள் நீங்கி மேலாகிய பதவியைப் பெறுவோம். ஆனால், நீயும் உன் பத்தினியுந் தீர்க்காயுவாய் நிலைபெற்ற தருமங்களைச் செய்து புகழைப் பெற்று வாழ்வதே எங்களுக்கு வேண்டியதென்று உரைக்க, உடனே அவர்கட்கு இந்தப் பிராமணரைக் காட்டி பதிவிரதையினால் அனுப்ப வந்த மகாநுபாவரென்று சொல்லினன். அதைக்கேட்ட அவ்விருத்த ரிருவரும் இறங்கி நமஸ்கரித்து, சுவாமி! எத்தனைவித விரத நோன்புகள் செய்து தவமிருந்தாலும், தாய் தந்தையரைப் பூசித்து மனைவாழ்க்கையிலிருந்து வாழ்வதற்கு மிஞ்சின பலன்கள் ஏதுவுமில்லை என்று அவர்கள் சொல்லி ஊசலினிடத்துமீட்டு மமைந்தார்கள்.

இப்பால் தருமவியாதன் பிராமணரை நோக்கி, கேளும் ஐயனே! பூமியிற் பிறந்த பேர்கள் புண்ணியத்தையும் மோக்ஷத்தையும் பெறுவதற்கு அநேக நதிகளில் ஸ்நானஞ் செய்தும், தேவாலயங்களைத் தொழுதும்,

பிரதக்ஷணம் பண்ணியும், விரதமிருந்தும், நோன்பிழைத்தும், ஓமங்கள்-யாகங்கள்-தவங்கள் இவைகளைச் செய்தும், சோடச மகா தானங்கள் வழங்கியும், வெகு வருத்தப்படுவார்கள். அதுகளினால் யாதொரு பிரையோசனமுமில்லை. சூக்ஷமத்தில் விதித்திருக்கின்ற தருமங்களைக்கேளும். சத்தியமேமதில், பொறுமையே அகழி, சத்வகுணமே ரதகஜ துரக பதாதிகள், தவமே ஆயுதம், சற்பாத்திரங்களுக்குக் கொடுக்கிற தானமே கோட்டைவாயிலும் உறுப்புக்களும், தேவதாபத்தியே மந்திரிகள், இன் சொல்லுகளே கவசம், நல்லொழுக்கமே இரதம், இப்படியாகக் கொண்டு காம்க்குரோத லோபமோக மதமாச்சரிய மென்னும் பகைகளை வேரறுத்து, ஆத்ம தத்துவமாகிய கடவுளைக் கண்டு சிங்காசனமேறியிருந்து பட்டஞ் செலுத்த வேண்டியது பிரமசாரி விரதம் வெகு வருத்தப்பட்டுச் செய்கின்றார்கள் அஃது சுத்தப்பொய். தன் தாரமன்றிப் பரதாரத்தை விரும்பாதிருப்பவனெவனோ அவன் பிரமசாரி. ஒருவர் பொருளுக்கு ஆசைவையாதிருப்பவனெவனோ அவன் சோடச தானஞ்செய்த கிரகஸ்தன். சத்தியவசனந் தப்பாமல் நடப்பவனெவனோ அவன் யாகங்களைச்செய்து பலன் பெறுகின்ற வானப்பிரஸ்தன். நன்மை தீமை இரண்டையுஞ் சரியாகப் பார்ப்பவனெவனோ அவன் சுத்தக்கியானியாகிய சன்னியாசி யென்றறியும்.

ஓ அந்தண சிகாமணி! இன்னுங்கேளும்: சிலர் துறவறமென்று சொல்லுவார்கள் அதிற் கொஞ்சமுந் தப்பாமல் நெருப்பாறும் மயிர்ப்பாலமுமாக நடக்கவேண்டும். தப்பினாலோ அதோ கதியிற் கொண்டுவந்து விடும். இல்லற தருமமோ? தெரிந்துந் தெரியாமலுஞ் செய்த பாபலோகங்களெல்லாந் தான் நம்பி நடத்துஞ் செய்கைகளாலும், கொடுக்கும் உபகாரங்களினாலும் நல்ல பலனைத்தரும். ஆபத்தினின்றுங் காப்பாத்தும். அதனால் இல்லறமே பெரிதென்று எல்லா நூல்களினாலும் பெரியோர்கள் சொல்லி யிருக்கின்றார்கள். மற்ற மூன்று விரதத்தை யுடைய பேர்களுக்கும், பிதுர்களுக்கும், தரித்திரருக்கும், அநாத்தி விரந்தோர்க்கும், அதிதியருக்கும், சுற்றத்தாருக்கும் இல்வாழ்வானென்பவனே துணை. அதற்குத் தகுந்த மனையாள் வாய்க்கவேண்டும். அப்பேர்ப்பட்ட ஸ்திரீ வாய்ப்பாளாகில், அவளுக்குப் பிரமன்-விஷ்ணு-உருத்திரன் - இந்திரன் முதலிய யாவரும் நிகரல்ல. தன் புருஷனே சகலமுமென்று அவனிஷ்டப்படி உபசரித்தலே அவளுக்கு விரதம். அப்பேர்ப்பட்ட ஸ்திரீயினோடு தன் தாயையுந் தந்தையையுங் காத்து இரக்ஷிப்பதே அவனுக்கு விரதம். இந்தப் பிள்ளையைப் பெற்ற உத்தமனுத்தமியெவர்களோ அவர்களுடையதே தவமென்று சொல்லும்படியாகிய வாக்கியம் உலகத்திலுண்டாவதே அத்தாய் தந்தையர்களுக்கு நலமும், குலமும், கலமும், மோக்ஷமுமாம். இதல்லாமலும், குபேர சம்பத்தோடுங்கூடி இல்வாழ்க்கையைச் செய்வனாலும், நற்குணம் - நற்செய்கை-பெருமை-புகழ் இவையில்லாத பெண் சாதி கிடைத்திருக்கில் என்ன லாபம்? மேற்சொல்லிய துற்குணமில்லாமல் நற்குணஞ் செறிந்திருக்கும் ஸ்திரீ வாய்ந்திருந்தால், மேலாகிய பதத்தின்படியிலேற்றிவைக்கும். இல்லாவிட்டால் துற்கதியிற் சேர்க்கும். ஆகையால் எந்த விரதத்திலேயும் இல்லறவிரதமே பெரிதென்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிறான்.

ஓ பிராமணரே! நீர் உம்முடைய தாயுந் தந்தையும் வருத்தப் படும்படியாகச் செய்து, அவர்களுடைய அனுமதி யில்லாமல் வெளிப்பட்டு எத்தனை தவமுஞ் செபமும் செய்யக் கற்றாலும், அவர்கள் படுந்துன்பம் உம்மையும் அவைகளையும் ஈடேற்றாது. ஆகையால், இப்போது நான் சொல்லிய நெறியின் வண்ணமும் அநுபோகத்தின்படிக்கு மிருந்து பொருந்தி வாழ்வைப் பெறக்கடவீர் என்று சொல்லிய வேடனைக் கௌசிகன் நோக்கி, ஐயா! நீர் இவ்வளவு சாஸ்திர விசாரணையுஞ் செய்து, தாய் தந்தையரைப் பூசித்து நன்னெறிப்படி நடந்து வருமியற்கை உமக்கு எப்படி வந்தது? ஜன்மாந்தர தவத்தினாலல்லவோ வந்தது? அந்த ஜன்மாந்தரத்தில் நிரம்பிய தவம் இவ்வளவு நற்குண நற்செய்கைகளை நல்கியும், குலத்தில்மாத்திரம் இன்னும் மேலாகிய குலத்தைத் தராமல், இந்த வேடுவ குலத்திற் பிறக்கச்செய்ததென்ன காரணமோ வென்று கௌசிகன்கேட்க, அதற்குத் தருமவியாதன் சொல்லுகின்றான்: ஓ ஐயரே! நீர் கேட்டது நல்ல ஞாயம். விவேக முடையவர்களுக்குப் புத்தியின் சூக்ஷமிப்படி யிருக்கவேண்டும். எனக்கு மெத்தச் சந்தோஷமாய்விட்டது.

கேளும் சுவாமி! நான் பூர்வத்தில் உத்தம குலத்தி லுதித்த பிராமணன். தநுசாஸ்திரங் கற்றுக்கொண் டிருந்தேன். ஒரு ராஜபுத்திர னுக்கும் எனக்குஞ் சிநேகம் நேரிட்டு அவனு டன் பிரியாத் துணையாயிருக்கும்பேது வேட் டைக்கு என்னையும் அழைத்துக்கொண்டு போனான். நான் ஓரிடத்திற் சென்று தனித்து வேட்டை யாடும்போது, அவ்விடத்தில் ஒரு பெரியவர் மான்தோலைப் போர்த்துக்கொண்டு தவத்திலிருந்தார். நான் தெரியாமலடித்தேன். உடனே சிவாவென்று சொல்லி விழுந்தார். அதுகண்ட நான் ஓடிப்பார்த்து பாணத்தை மெள்ளப் பிடுங்கிவிட்டு உபசரித்து, தண்ணீர் கொண்டுவந் துதவினேன். உடனே களை நீங்கி எழுந்தார். அப்போது ஓர் காயமாறு மூலி கை நான் கொண்டுவந்து பாணம்பட்ட காயத் தில் வைத்துப் பாதத்தில் விழுந்து, சுவாமி! தங்களை மானென்றுன்னி அடித்தேன் மன தறிந்து செய்த குற்றமல்ல ஆனதால் தேவ ரீர் க்ஷமிக்கவேண்டும் என்று கேட்கவும், அவ ருக்குக் கோபம் வந்து நல்ல வேதோத்தமனாக இருந்தும் உனக்கேன் இந்தக் கேடென்று சீறி, நீ வேடுவனாகக் கடவதென்றார்.

அந்த வேளையிற் கண்ணீர் சொரிந்து கதறி யழுதுதொழுதேன். அதைக்கண்டு மன மிரங்கி, நீ அப்படி கிராதகனாகப் பிறந்தா லும் வேத முதலிய நன்னெறி நூல்களைக் கற்று, கியானஸ்வரூபியாகி எவர்களுக்குஞ் சந்தேக நிவர்த்தியாக உலக நடக்கைகளை நடந்து காட்டிக்கொண்டு, நல்ல மனைவியுடன் இல்லற தருமத்திருந்து பெருமையுற்று மேலான விரதமிழைத்துப் பழய பிராமண னாகக் கடவை யென்று சாபத்தீர்வு கூறினார். அச்சாபத்தீர்வோடு மவரைப்பணிந்து விடை பெற்று வந்து விட்டேன். உடனே அந்தச் சாபம் எனக்கு நேரிடவே அந்த ரூபத்துடன் வேடுவ குலத்தொழிலைப் புரியா நின்றேன். இதுவிட்டு நீங்கினால் பழயகதியைப் பெறு வேன் என்று சொல்லக் கேட்ட கௌசிகன் சந்தோஷமடைந்து, அவனுக்குச் சகலவித மரியாதை-உபசாரம்-வந்தனை - வழிபாடுகள் யாவும் இயற்றி விடைபெற்றுக்கொண்டு மகா பதிவிரதையாகிய பிராமண ஸ்திரீயினிடத் தில் வந்து வணங்கி, தாயே! நானுமது பிள்ளை, உம்மாற் கடைத்தேறினேன். சகல தன்மமுந் தெரிந்துகொண்டேன் என்று சொல்லி நமஸ்கரித்தான் பின்பு அவ்வம்மன் கௌசிகனை நோக்கி, அப்பா! இல்லறத்திற்கு மேலாகிய அறமில்லை. ஆகையால் நீ போய் நல்ல மனையாளை விவாகம் பண்ணிக்கொண்டு வாழக்கடவை யென்று ஆசீர்வதித் தனுப் பினள். உடனே அம்மாது சிரோமணியிடத்தி னின்றும் விடைபெற்று நீங்கிப்போய்த் தன் மரபில் விசாரித்து, நற்குணவதியாகிய உத்த மியைக் கலியாணஞ் செய்துகொண்டு தாய் தந்தையரைத் தருமவியாதனைப்போற் போற் றிப் பூசித்து, அளவற்ற விசுவாசத்தோடும் நேசித்து வாழ்ந்து வந்தான் கௌசிகனென் னும் பிராமண சிரேஷ்டன். ஆகையால் உத்தமி யாகிய பத்தினியை உடையவர்களுக்கே இல் லற தருமம். உங்களுடைய இஷ்டப்படி நடந்துவரும் இந்தத்திரௌபதாதேவியினால் சகல ஜெயமும் - நயமும் - நற்கதியும்-பதியும் பெறுவீர்களென்று மார்க்கண்டேயர் தரும ராஜன் முதலிய யாவருங் கேட்கச் சொல்லினர்.

---

## ஸ்ரீ குமாரசுவாமி சரித்திரம்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வண்ணம் மார்க்கண்டேயர் சொல்லி வந்த சரித்திரங்களைக் கேட்ட தருமராஜன் முதல் யாவருஞ் சந்தோஷம் அடைந்து வணங்கி, குமாரசுவாமியாருடைய உற்பவங் கேட்க விருப்பங்கொண்டோமென்று துதித் துச் சொல்ல, மார்க்கண்டேயர் சொல்லுகின் றார்: கேளுஞ் சந்திரகுலதிலகனே! திங்களை யுங் கங்கையையும் அணிந்து பொங்கரவு பூஷணம் பூண்ட சங்கர சுயம்புவானவர், கிருபையே வடிவமாயோங்கிய கயிலாசத்திற் பார்வதிதேவியாருடன் கொலுவாக எழுந் தருளி யிருக்குங்காலையில் தேவேந்திரனும், அமரர்களும், ரிஷீஸ்வரர்களும் வந்து வண ங்கி, தங்களுடைய மனவருத்தங்களை தீர்த்து இரட்சிக்கவேண்டு மென்று அசுரர்களுடைய உபத்திரவங்களைச் சொன்னார்கள். அவை களைக்கேட்டருளிய கண்ணுதலுக்குக் கோபஞ் ஜனித்து, தேகமுழுமையும் பொங்கி, வீரி யப்பொறி துளியாகச் சிதறிப் பாரிய உல கத்தை நீறுநீறாகப் புரிந்தது. அப்போது நேரிலிருந்த தேவர் யாவருங் கலங்கிப் பாரில் விழுந்து பயந்து, சுவாமி! இந்த வருத்தமாத் திரம் இப்போது நீங்கி யாங்கள் பிழைத்திருந் தால், அசுரர்கள் செய்யுந் துன்பத்திற்கு அப்

பாற் பார்த்துக்கொள்ளலா மென்று அபயம் புகுந்தார்கள். உடனே கருணாநிதி இரங்கி, சமீபத்திலிருக்கும் அக்கினிதேவனை அவ் வீரியப் பொறியைப் பரிக்கும்படி கட்டளை செய்தார். அக்கினிதேவன் அந்தப்படியே பொறிகளைத் தாங்கி, அதினுடைய வெப்பத்தை யாற்றமாட்டா தியங்கி எல்லா வஸ்துவையும் எரிக்கும்படியாகிய என்னைச் சுடுகின்ற இப் பெருநெருப்பை நான் எப்படி சகிப்பேன் என்று விசனமுற்றிருந்தான்.

இப்படி சிலநாள் சென்றபிறகு வச்சிர பாணி முதலிய யாவரும் அசுரருடைய வருத்தங்களைச் சகிக்கமாட்டாமல் துயரங்கொண்டிருக்கும் நாளையில், இந்திரனும் சப்தரிஷிகளுங்கூடி சத்துருஜெய சாந்தி யென்றொரு யாகஞ் செய்யும்படி யோசித்துத் துவக்கினர். அக்காலையிற் சகல தேவர்களும் மற்றியாவர்களும் நெருங்கியிருந்து யாகம் நடாத்தி, சப்த ரிஷிகளுடைய பத்தினிமார் கைகளினால் அவிர்ப்பாகம் அக்கினி தேவனுக்குத் திருப்தி செய்து வைக்கும்போது, அவ்வக்கினிதேவன் அந்த ரிஷிபத்தினிகளுடைய சுந்தரங்களை நோக்கி நொந்து, அக்காலத்திலவர்கள் கையைத்தொட பயந்திருந்து, பூரணாகுதி நிறைவேறியவுடனே விடை பெற்றுக்கொண்டு ஒரு பூங்காவனத்தில் போயிருந்து மன்மத விகாரத்தினால் வாடி மெலிந்து வருந்தியிருந்தான். அக் குறிப்பை மனைவியாகிய சுவாகா தேவி அறிந்துகொண்டு, சப்த ரிஷிகளின் பத்தினிகளின் ஒருத்தியைப்போல் உருவம் எடுத்துவந்து, அவன் எதிரில் மறைதலும் நாணப்படலும் இப்படியாக இருந்து மயலூட்டினாள். அதைக்கண்ட அக்கினிதேவன் அதிவேகமாக எழுந்து எதிர் நோக்கி, ஏது இவ்வளவுதூரம் தயைபுரிந்து வந்ததென்று வினவினன். அதற்கு அந்த ஸ்திரீயானவள் சொல்லுகின்றாள்: ஓ அனற்கடவுளே! யாகத்தில் அவிர்ப்பாகம் கொடுக்கும்போது உம்மை கண்டோம். மோகங் கொண்டோம். ஆகையால், உம்மைக் கூடிக் காமந்தீர்த்துக் கொள்ள வேண்டி யான் வந்தேன். மற்ற ஸ்திரீகளும் வருவார்கள். நீர் இவ்விடம்விட்டு நீங்காதிரும் என்று சொல்லினவளாய், உடனே அவ்வக்கினி பகவானிடத்தில் தோய்ந்து விளையாடி அவனுடைய நெடிய மோகத்தைத் தீர்த்து மகிட்சிகொண்டு விடைபெற்றுச் சென்று, அந்த வனத்திற்குப் பக்கத்தில் இருக்கும் ஓர் நதியினிடத்தில் அந்த வீரியத்தைக் கொண்டு போய் விடுத்து ஸ்நானஞ் செய்து, மீண்டும் வேறொரு ரிஷிபத்தினிபோல் உருவமெடுத்து வந்து கலந்திருந்தாள்.

இந்தப்பிரகாரம் ஆறு ரிஷிபத்தினிகளை போலவும் வந்துகூடி, ஆறு தரமும் வீரியத்தைக் கொண்டுபோய் அந்தக் கங்கையில் விடுத்து, ஏழாவது வசிஷ்டருடைய பத்தினி அருந்ததியைப்போல் வடிவமெடுக்கப் பார்த்தாள். அப்போது அந்தச் சுவாகாதேவிக்குக் கூடாமையால் வருத்தமுற்று, முதல்வந்த ஸ்திரீயைப்போலவே வந்தாள். அதைக் கண்ட அக்கினிதேவன் என்ன நீதானே மறுபடியும் வந்தாய்? அருந்ததி எங்கே யென்றான். உடனே அவள் திகைத்துப் பாதகமலங்களில் வணங்கி, தன்னுடைய நிஜ உருவத்தைக் காட்டி நின்றாள். அப்படி நின்றவளைக் கண்டு அக்கினிதேவன் வெட்கமுற்று, நாம் சப்தரிஷிகளுடைய பத்தினிமார்களின்பேரில் மோகங்கொண்ட செய்தி கேட்டு நமது பத்தினியே மாறுவேடம் பூண்டு வந்தாளோ என்னமோ? உடனே இதற்கு எப்படி யென்று அக்கினி பகவான் பயந்திருக்கையில் சுவாகாதேவி அக்கினியை நோக்கி, என்னைக் கண்டவுடனே அருந்ததி யெங்கே யென்றும் மறுபடியும் நீதானே வந்தாயென்று இப்படி கேட்ட மதிமயக்கம் என்னவென்றாள். உடனே அக்கினிதேவன் பொய் சொல்லா விரதம் பூண்டோன் ஆகையால், உண்மையைச் சொன்னான். தானும் அஃதறிந்து, வேடங்கொண்டு வந்து கூடிய விதங்களைச் சொல்லி, சப்தரிஷிகள் பத்தினிகளின்பேரில் உத்தமராகிய நீர் இப்படி சத்தியந்தப்பி வித்தியாசம் நினைக்கப்படுமோ வென்றுஞ் சொன்னாள். அதைக்கேட்டு நாணமுற்றான். உடனே சுவாகாதேவி அவன் கொண்ட எண்ணத்திற்கு மனம் வருந்தி உபசாரஞ் செய்து, நாயகனை யழைத்துக்கொண்டு தன் மனையிற்போய் மருவி வாழ்ந்திருந்தாள். இப்பால் உலகத்தில் அக்கினி தேவனுடனே சப்த ரிஷிகளுடைய பாரியர்களில் அருந்ததி தவிர மற்றையர்களெல்லாங் கூடினார்களென்னும் மொழி வழங்கக் கேட்ட மகாரிஷிகள் வருந்தி, பழியான சொல் நேரிட்டதே யென்று தங்கள் தங்கள் பத்தினிகளை நிந்தித்து வெறுத்து, உங்கட்கு நேரிட்டிருக்கின்ற இழிச் சொல்லைப் போக்கி வாருங்களென்று நீக்கி விட்டார்கள்.

உடனே அந்த ஸ்திரீகள் ஆறுபேருஞ் சரவணப்பொய்கை ஓரத்தில்வந்து பரமேஸ்வரனைக் குறித்துத் தவம் இழைத்து, எங்கட்கு நேரிட்டிருக்கும் பழிச்சொல் நீங்கும்படியாய்த் தேவரீரே காப்பாற்றி இரட்சிக்கவேண்டுமென்று போற்றித் துதித்திருந்தார்கள். இஃதிப்படியிருக்க,சுவாகாதேவியினுற் கங்கையில் விடப்பட்ட சிவனுடைய வீரியத்தைக் கங்காதேவி சகிக்கமாட்டாமல் சரவணப் புற்களினுல் நிறையப்பட்டிருந்த ஓர் பொய்கையில் கொண்டுவந்து விடவும், உடனே ஆறு பிள்ளையாகி, திவ்ய தேஜோமயமாக விளங்கி இருப்பதைக் கயிலாசபதி திருவுள்ளத்தில் அறிந்து, பார்வதியாரை அழைத்துக் கொண்டு உல்லாசமாக அந்தப் பொய்கைக்கு போயினர். அப்போது அம்மனுடைய திருப்பாதங்களில் அணிந்திருந்த சிலம்புகள் ஒன்ரேடு ஒன்று தாக்கி ஒன்பது பொடிகள் உதிர, அவைகளிலிருந்து நவவீரர்கள்பிறக்க, அதை கண்டு மகிழும் சுந்தரியை நோக்கி, இவராரென்று பரமசிவன் வினவ, இவர்கள் எனது காற்சிலம்புகளினின்றும் பிறந்தார்களென்று உமையவள்சொல்ல,அதைகேட்டு இவர்களும் நமது பிள்ளைகள்தான் என்று மகிழ்ச்சியுடனழைத்துக்கொண்டு சரவணப்பொய்கை ஓரத்திற் போய் நின்று வேடிக்கைப் பார்த்திருக்கும்போது, உமையவளுடைய திருக்கண்களால் ஆறு குழந்தைகள் அந்தப் பொய்கையில் மிதக்கக் கண்டு அதிசீக்கிரத்தில் அக்குழந்தைகளை அன்போடு சென்று வாரி அணைத்தெடுத்தனள். அவ்வாறெடுக்கவும் ஆறும் ஒன்ருகக் கூட, அவ்வுருவைப் பரமேஸ்வரரிடத்திற் கொண்டுவந்து காண்பித்தனள். அதைக் கண்ட சம்பு சந்தோஷமடைந்து, இதுவும் உன் குழந்தைதான். ஆனுல், அமரர் சிறை நீக்கவும், அசுரர்குலம் மாய்க்கவுங் கொண்ட கோலமிது வென்று உரைத்தனர். அதைக் கேட்ட என் தாய் சந்தோஷங்கொண்டு, இந்தப் பிள்ளைக்குப் பால் கொடுக்க வேண்டுமேயென் ருலோசித்து, அவ்விடத்தில் தவம் இழைத்திருந்த ரிஷிபத்தினிகள் அறுவரையும் அழைத்து அருள் அளித்து, உங்கள் அரும்பழி தீர்ந்து பெரும் பதவியை யடையும்படி இந்தப் பிள்ளைக்குப் பால் கொடுத்து வளர்க்கக் கடவீர்களென்று உரைத்துக் கொடுத்து, கயிலாசபதியும் அம்மனுந் தங்கள் வெள்ளிமாடத்திற்கு எழுந்தருளினுர்கள்.

இப்பால் அச்சண்முகக் குழந்தை இந்த ஆறுபேர்களும் மிகுந்த அன்புடன் வளர்த்து வரும் நாள்களில், பிள்ளை செழித்து வளர்ந்து நவவீரர்களுடன் கூடி, விளையாடிக்கொண்டு கந்தமாதனகிரிவந்து சேர்ந்து, திக்கு யானைகளைப் பிடிக்கின்றதும், ஒன்ரேடொன்று முட்டவிடுகின்றதும், மேற்கடலைக் கீழ்க் கடலுடன் கலக்க செய்கின்றதும்,இந்திரலோகத்திற் புகுந்து கற்பகக் காவினை யழிக்கின்றதும், மலைகளைப் பிடுங்கி மாறி நாட்டுகின்றதும் இப்படியெல்லாஞ் செய்தற் கரியனவாகிய வேலைகளைச் சிறிய விளையாட்டாகச் செய்து, அவனுறைந்துவருங் காலையில், இந்த அதிசயங்களையும் அண்டரண்டங்கள் கிடுகிடுத்துப் பயங்கொள்ளுந் துயரங்களையுங்கண்ட தேவர்கள் முதல் யாவருந் தேவேந்திரனிடத்திற் சென்று, ஐயா! (சணப்பன் வீட்டுக்கோழி தானே தாள்களில் தலை மாட்டிக்கொண்டது) என்னுந் தன்மைபோற் சப்த ரிஷிகளைக் கொண்டு யாகஞ்செய்யச் சொன்னீரே. அந்த யாகத்தில் வந்த ரிஷிபத்தினிகள்பேரில் இச்சைக்கொண்டு சேர்ந்த அக்கினிதேவனுடைய வீரியத்தினுற் பிறந்த ஒரு புத்திரனவன் ஆறுமுகமும், பன்னிரண்டு கையும், இரண்டு தோளும், ஒன்பதுபேர் வீரர்கள் அவனுக்கு ஆளுமாக அமைந்து, உலகத்தை யெல்லாம் அழிக்கின்ருர்கள். இனி சிலநாளில் அண்டம் புரண்டுபோகும். ஆதலால் நாம் துண்டத்தனமாகிய அரக்கரைச் சாதிப்பதற்கு முன்னமே, நமக்கு வந்திருக்கும் இந்த கெண்டாதிகெண்டத்தைத் தப்பித்துக்கொண்டால் உண்டாகும் நமக்குவாழ்வு இல்லாவிட்டால் உடனே வருந் தாழ்வு, என்று உரைக்கக்கேட்ட இந்திரனனவன் ஆயிரங்கண்ணுங் கொதிக்கவெழுந்து, வெள்ளை யானையின்பேரில் ஆரோகணித்துக் கொண்டு, வச்சிராயுதத்தோடு வில்லும் அஸ்திரங்களுங்கொண்டு, திக்குப்பாலகர்-அஷ்டவசுக்கள் - அமரர்-சித்தர்-கருடர்-காந்திருவர்-கின்னரர்-யக்ஷரென்று சொல்லும் முப்பத்து முக்கோடி தேவர்களோடு இரதகஜ துரகபதாதிகளு நெருங்கச்சென்று, சப்த மாதர்களுடனேயும் வளைத்து யுத்தஞ்செய்யத் தொடங்கினுன்.

அதுகாலையிற் சண்முகக்கடவுளோடு விளையாடி வரும் நவவீரரும் ஒன்ருகச் சேர்ந்து தேவர்முதல் யாவரையும் அவர்கள் ஏவிய ஆயுதங்களையும் அழித்துப் புறமுதுகிட்டோடும்படி முடிக்கிவிடவும், அதனுல் ஒருவரும்

நிலைகொள்ள மாட்டாமல் ஓடி இந்திரனை
நோக்கி, ஏதேது, இனிப்பிழைப்பதற்கு இட
மில்லையென்று சொல்லினர். அதைக் கேட்டு
இந்திரன் பல்லைக் கடித்து, வில்லைப் பிடித்து
மெல்ல அடுத்துச் சிற்சில அஸ்திரங்களைத்
தொடுத்தான். அவைகளை யெல்லாம் மத்தி
யில் தானே அற்றுவிழும்படி முத்துக் குமார
சுவாமி அருள்புரியக் கண்டு மீண்டும் அனேக
வித அஸ்திரங்களும், எறிவலையம்-முசுண்டி-
பிண்டி-பாலம் இவை முதலிய யாவும் விடுத்
துக் கடுகடுத்து நின்று வச்சிராயுதத்தையும்
உந்தினன். அது வரும்போது பாரிலுள்ள
மலைகளெல்லாம் பழமையை நினைந்து உருக
வும், பலபல விருக்ஷங்களெல்லாம் கருகவும்,
தீப்பொறிகள் பெருகவுமாக வந்தது. அப்
படி வருகின்ற வச்சிராயுதத்தைத் தனது
வலது புஜத்தில் தாங்கினர் வடிவேலர். அப்
பால் அவ்வச்சிராயுதம் இவருடைய தோள்க
ளில் உருவமாட்டாமல் திரும்ப, அதைப்பார்
த்து, தியங்கி மயங்கி நிற்கின்ற தேவநாத
னுடைய சிரத்திலும் உரத்திலும் இருப்புலக்
கைக்கொண்டு சாடும்படியாகச் சிவசண்முகக்
கடவுள் தனது திரண்டதோளை நோக்கினர்.
அதிலிருந்து கோடிவீரர்கள் உற்பவமாகிக்
கூடி, ஆகாயமும் பூமியும் ஒன்ருக நின்று
சுவாமியை வணங்கி, திடவீர பராக்கிரமத்
துட நெருங்கி, விடாதீர்கள், பிடியுங்கள், அடி
யுங்கள் என்று பேரொலி பிறப்பித்தனர்.
அதைக்கேட்ட இந்திரன் பின்னிடும்போது
இந்த வீரர்கள் தொடர்ந்து ஓடி அடித்தார்
கள்.

அப்போது பிராண மூர்ச்சைகொண்டு
பூமியில் விழுந்து புரண்ட புரந்தகனைத்
தேவர்கள்சேர்ந்துவந்து களையாற்றித்தேற்ற,
உடனே இந்திரன் தெளிந்து எழுந்துவந்து
நிற்குஞ் சமயத்தில் தேவகுருவானவர் வந்து
அமராபதியோனைக்கண்டு, இறையே! மறந்து
போனீரோ; மதிமயக்க முற்றீரோ? இவரை
யாரென்றுன்னி யுத்தஞ் செய்தீர். முன்னம்
முக்கண்ணனை முனிவருடன் சென்று வணங்கி
முறை கூறியபோது, இன்னுஞ் சில நாளை
யில் உங்க ளிடையூரைத்தீர்க்கும் யிறைவன்
வருவானென்று யிசைந்திருந்த மொழிப்படி
வந்த நம்மீசனிவனென றுன்னுது எதிர்த்தீர்;
போம் போம் பயித்தியக்காரரே யென்று புக
ன்று, பிரகஸ்பதியானவர் சப்த ரிஷிகளோடு
தேவர்களுஞ் சசிமணாளனும் தம்மைநெருங்கி
வர அழைத்துக்கொண்டு போய்ச் சரவணப்
பொய்கையிற் பிறந்த சரவணனுத்பவத்தி
னிடத்திற் கொண்டுவந்து விட்டனர். உடனே
யாவருஞ் சரணம் சரணமென்று துதித்து,
வைகாசிமாதம் விசாக நக்ஷத்திரத்திற் பிறந்த
படியால் விசாகப்பெருமாளே என்று வணங்கி
இப்படி அநேக நாமங்களைச் சொல்லி வழி
பட்டு அடைக்கலம் அடைக்கல மென்றூர்கள்.
இந்திரனுந் தேவரீரை பெரு நெருப்பென்று
தெரியாமற் சிந்தைநைந்தேன், தகுவர்களால்
மிகநொந்தேன். என்னைக் காத்தருளல்வேண்
டுங் கயிலைநாயகரின் கன்றேயென்று பூமியில்
தீர்க்கதண்டமாய் வீழ்ந்து, அவரது பொன்
னடியே நன்முடியாகக் கொண்டு வணங்கி
ஞன். அப்படி வணங்கிய புரந்தரனை ஆதரி
த்து, நீரிப்புங்கவர்களுடன் இங்கு தங்கி இரு
மென்று அருள் புரிந்தனர். அவ்வருள் வாக்
கியங்கேட்ட யாவருந் துயர்தீர்ந்து கண்ணீர்
சொரிய, அதைக்கண்டருளிய ஸ்காந்த மூர்
த்தி என்ன உங்களுடைய வருத்தமென்று
வினவினர். உடனே அவர்கள் மீண்டும் பணிந்
தெழுந்து, கச்சியப்ப பிரமாவுக்குப் பிறந்தவர்
கள் மூன்று பிள்ளைகள், அவர்கள் சூரபன்
மன்-யாளிமுகாசுரன்-சிங்கமுகாசுரன். சூரபன்
மனுடைய பிள்ளை பானுகோபன். இவர்கள்
முதலிய அசுரர்களால் நாங்கள் பட்ட துன்பம்
சிறிதல்ல. இந்திராணியைச் சிறை பிடித்துத்
தேவஸ்திரீகளுடன் கைப்பற்றினர் என்று
அவ்வரலாறுகள் யாவுஞ் சொல்லக்கேட்டரு
ளிய சுப்பிரமணியக்கடவுள் அவர்களைப் பரி
ந்து நோக்கி, ஓ விண்ணவர்களே! பயப்படா
தீர்கள். யாம் உமக்குற்ற துணையாகின்றோம்
என்று அருள் வழங்கினர்.

உடனே யாவரு மகிழ்ந்து பூமாரி சொரி
ந்து, கயிலாசபதியினிடத்திற் சென்று துதித்
துப் பணிந்தார்கள். சிவபெருமான் செவ்
வேளை அழைத்து, நீ இவ்வேளைத் தெவ்வ
ரைக்கொன்று இந்தத்தேவரைக் காக்கக் கடவ
தென்று அருளளித்து, சிவபெருமானும்
உமையவளும் மகிழ்ச்சியில் ஓங்கி வாழ்த்தி
னர்கள். தேவர்களுங் களித்துத் தேவர் சேனு
திபட்டம் இவர்க்குக் கட்ட திட்டஞ் செய்ய
வேண்டுமென்று அரனை இரக்க, உடனே சண்
முகக்கடவுளும் சம்மதமாக, இந்திரனுதியோர்
தெய்வத்தச்சனால் ஆலயம்-மேடை-அணிமு
கப்புச்சாலை இவை யாவும் இயற்றுவித்து,
தெய்வலோகத்தில் இருந்து கற்பகப்பூமாலை
இரத்னகிரீடம்-இரத்னகவசம் - வீரகண்டை

சகலாபரணம் - பீதாம்பரம் இவையாவுங் கொணர்வித்து, பரமேஸ்வரனும் பார்வதியாரும் மகிழ்ச்சியுற சகல முனிவரும் சகல ரிஷிகளும் சகல தேவர்களும் நிறைந்து நின்று, ஸ்நானம் செய்து வைத்து, திருவெண்ணீற்றுக் காப்பணிந்து, அலங்காரத்துடன் நல்ல முகூர்த்தத்திற் சேனதிபதி பட்டங்கட்டினார்கள். தேவதுந்துமி - வீணை இவை முதலிய யாவுமுழங்க, திவ்யாஸ்திரப் படைகளும் தியங்க கடவுளற் கடப்பமாலை முதலிய புட்பங்கள் குமாரனுக்குத் தரித்து, மங்களமாக வாழ்த்தினார்கள். பராசத்தியாரானவர் ஞானசத்தியென்னும் வேலாயுதமுந் திவ்யக் கணைகளுங் கொடுத்து ஆசிகூறி விடுத்தார். அப்பாற் சண்முகதேவர் சகல வீரர்களுடன் யுத்தகோலங்கொண்டு, தாய் தந்தையரை வலம் வந்து பணிந்து, நவவீரர்களுஞ் சூழ்ந்துவரப் பிரயாணமாகி, அக்கினி பகவானே இரதமாகவும், வாயுதேவனே சாரதியாகவும், மனோவேகமே குதிரையாகவுமுடைய தேரின்பேரிலெழுந்தருளி, தேவகணங்கள் பூதகணங்கள் ஜெயஜெயவென்று நெருங்கிச் சகல மேளவாத்தியங்களு முழங்க வரும்போது, வழியில் மலைவடிவமாக ஒருவராலும் அழிவில்லாமலிருக்குங் கிரவுஞ்சமென்னு மலையைக் கண்டு, தனது கரத்திலிருக்கும் ஞானசத்தியைக் கை பழகுமாறுபோல அதன்மீது பிரயோகஞ் செய்தனர்.

உடனே அச்சத்தி ஈரேழு பதினன்கு லோகமும் இடர் முதலிய திருடர்களும் எரிந்துவருந்துந் தன்மையைக்காட்டி, அதிலுருவாகவிருந்த தாருகனைக் கொன்று மீண்டது. உடனே உதிரவெள்ளம் புரண்டு இவர்கள் போகும் வழியை அடைத்துவிட்டபோது, குமாரதேவர் இஃதென்னவென்று விசாரிக்குமளவில், இறைவனே! நிறைவுற்ற தவத்தினர்களையும் முறையாகிய யாகங்களையும் துறையாகிய உலகங்களையுங் குறையாகச் செய்த, கொடிய பாவியாகிய தாருகனென்றொரு சூரனிறந்தான். இனி எங்கள் சங்கடம் விட்டதென்று சாற்றி, மலர்களை வாரி மாரிபோல் தூற்றி மகிழ்ந்தார்கள். அந்த வேளையில் அசுரனை முடிப்பதற்கு முதற்பலியென்று எல்லோரும் புகழ யாவரு மகிழ வழிகொண்டு நடந்து, திருச்செந்தூரிற் போயிறங்கி, திரண்டவீரர்களுடன் தேவர் சேனதிபதி சிந்தை மகிழ்ந்திருந்தனர். அப்போது தேவகுருவானவர் வந்து தீர்க்கமங்கள ஜெயங்கூறித் திருவருள் பெற்றிருக்க, அவரை என்னுருத் துயர்களைய ஆறுமுகங்கொண்ட ஐயன் நோக்கி சூரபன்மனென்பவன் யாண்டுளன் அவனது சேனைகளின் பெருக்கம் யாது அதைத் தெரியப்படுத்த வேண்டுமென்று திருவாய் மலர்ந்தருளிய செங்கதிர்வேற் செல்வனைத் தேவகுருவானவர் பணிந்து, எங்கள் பவக்கொழுந்தைப் பறிக்கவந்த சிவக்கொழுந்தே என்று துதித்து, அச்சூரபன்மனுடைய செல்வம்-சிறப்பு-படைவூக்கம்-வலிவரங்கள்-பட்டினம்-புத்திரர்-குடும்பம்-கோபம்-உற்பவம் இவை யாவுஞ் சொல்லினர். இவை யனைத்துமெனையன் கேட்டுச் சிறுநகைகொண்டு, வீரவாகுதேவரை யழைத்துச் சூரபன்மனிடத்தில் தூதுவிடுக்க, அவர் போய்ப் பேசித் தன்னுற் கூடியவரையிலுந் தருமங்களையுஞ் சுவாமி அவதாரத்தின் சரித்திரங்களையுஞ் சொல்ல, அதைக் கேளாது வெகுண்ட சூரனைத் தூறிப் பேசிக் காவலாளை யெல்லாம் அடித்துவந்து, காங்கேயரிடத்திற் போய்வந்த காரியங்களைச் சொல்லி யுத்தத்துக்கே சம்மதித்திருக்கின்றானென்று கூறினர். உடனே அவன்மீது தமது படையெடுத்துச் சென்று பிரபல யுத்தங்கள் செய்யும்போது, மாயாவிசித்திர வல்லமைகளுடன் அவன் பிள்ளையாகிய பானுகோபன் முதலிய அசுரர்கள் செய்த யுத்தத்தின் திறத்தை என்னொரு நாவாற் சொல்லி முடிவதோ?

ஓ தருமராஜனே! குமாரசுவாமியும் நவவீரர்களுஞ் சகல கணங்களும் ஒருங்காகச் சேர்ந்து யாவரையுங் கண்டதுண்டமாகப் படுத்தி, கரம்வேறு-சிரம்வேறு-உரம்வேறு-கால்வேறு-தோல்வேறு - உடல்வேறு - குடல்வேறு இந்தப்பிரகாரம் பதைக்கச் சதைத்துச் சிதைத்துப் புதைத்து, வதைத்துக் கொன்று வென்று, யாவருமழிந்து உதிரவெள்ளம் வழியப்போர்செய்யும்போது அவ்வவுணர்கள் அநேக கோடி மாயாஸ்திரங்களோடு மலைகளும் மரங்களும் பொழிய அவைகளெல்லாம் பொடியாக என்னையன் மடித்தும் அடித்தும் ஜெயங்கொள்ள, அதுகண்ட அசுரர் பயங்கொள்ள, சூரன் மாத்திர மடங்காது யெதிர்த்துள்ள, அவன் சேனைகளின் தலைகளெல்லாங் கொள்ளை கொள்ளச் செவ்வேளானவர் தேவதாஸ்திரங்கள் விடுத்து மடித்தபோது, தமது தந்தையாகிய ஈஸ்வரனுற் கொடுத்திருந்த இந்திரஞாலத் தேரேறி எதிர் வந்தான் சூர

பன்மன். அவனுடன் அசுரகுலகாலன் ஆறுமுகனென்னும் பாலன் எதிர்த்துப் போர் புரிந்து, அநேக மாயைகளினால் வருந்தி மறுபடியும் பொருந்திப் பஞ்சாக்ஷரமே துணையாகக்கொண்டு அந்தச் சூரனை வெல்லும்போது, அவன் சகல பலங்களும், சகல சேனைகளும், தனக்குற்ற துணைவர்களும், ஆகிய யாவும் போய் மடியவே மனமடிந்து மாய வேட மராமரமென உருக்கொண்டு, மான் மருகனுடைய ஞானசக்தியினாற் பிளப்புண்டு, மயிலுஞ் சேவலுமெனும் வடிவாக, அதுகண்டு மந்திர விபூதியினால் வாகனமாவும், பதாதையாகவுங் கொண்டருளிய மயிலேறுஞ் சேவகனை மாயா வாரணத்துவஜனைக் கண்ட வானவர்கள் முதலிய ரிஷிகளும் - சந்திரசூரியர்களும்- திசைப்பாலகரும்-வசுக்களும் - உருத்திர கணங்களும் மற்ற யாவரும் நெருங்கி, அடிகளி லிறைஞ்சி மலர்மாரி பொழிந்து, வாத்திய முழக்கஞ் செய்ய, மனமகிழ்ச்சியுடன் திரும்பி வந்து மயேஸ்வரியையும் பரமேஸ்வரரையும் வணங்கி நின்றனர்.

அப்படி வணங்கிநின்ற பிள்ளையை மடிமீதிருத்தி, மற்ற வீரர்களையும் வாழ்த்தி மகிழ்ந்தார்கள். அப்போது தேவேந்திரன் தேவர்களோடு சோமாஸ்கந்தமூர்த்தமாய்எழுந்தருளியிருக்கின்ற இறைவர்களைத் தீர்க்க தெண்டம் செய்து, ஓ உமாபதி! எளியேங்கள் துன்பம் நீக்கி இன்பம் அளித்த சுப்ரமண்யக் கடவுளுக்கு ஒப்பாகிய என் குமாரத்தியை விவாகம் பண்ணிக் கொடுத்து, என் மருமகனென்றும், தேவர் சேனாபதித் தலைவனென்றும் பேர் பெறும்படி அருள் புரிய வேண்டுமென்று நமஸ்கரித்து இந்திரனிரக்க, அதற்கவன் இஷ்டப்படியே சுபமுகூர்த்தம் நேமித்து, சகல கூட்டங்களுடனே பிரகஸ்பதியும் சப்த ரிஷிகளும் சடங்குகள் செய்யத் தெய்வயானையைத் திருமணஞ் செய்து வைத்தனர். பின்பு சண்முகதேவர் தெய்வயானையின் சமேதராய்ச் சகல சம்பிரம வைபவ மோங்கச் சந்தோஷித்திருந்தார். அந்தக் காலையிற் பரமேஸ்வரன் யாவர்களையும் நோக்கி, என்னைத் துதித்துப் போற்றி வணங்கிப் பெறும் பலன்கள் யாவும் கொடுப்பதற் குரித்தாகிய கடவுள் நமது குமாரசுவாமி யாகையால், என்று பூரண வுருவிற் றோன்றிய இப்புனித மூர்த்தியைப் போற்றி யாவரும் பெறவேண்டிய யாவு முறலாமென்று திருவாய்மலர்ந்தருளினார். உடனே பராசக்தியாரும் அருளளித்துக் கிருபையுடன் வாழ்த்தி மகிழ்ந்தனர். அந்தச் சமயத்தில் அக்கினி தேவனும் சுவாகாதேவியும் வந்து எதிரில் நின்று, கடவுளே! எங்களுக்கு அருள்புரிய வேண்டுமென்று இரக்க, அவர்களின் உள்ளக் குறிப்பறிந்து அருளளித்தனர். சப்த ரிஷிகளும் வந்து தோத்தரித்தார்கள். அவர்களுக்கு மனோபயம் அகற்றி, மகிழ்வுறச்செய்தனர். கங்காதேவிவந்து கண்டு மகிழ்ந்திருக்கப் பார்த்து, அம்மணி! யாம் உம்மால் காங்கேயனென்னும் நாமம் பெற்றனவென்று கருதிச் சொல்ல, அதைக் கேட்டுக் களித்தனள்.

பின்பு ஆறுபேர் ரிஷிபத்தினிகள் வந்து எதிரில் நின்று பூர்வத்தில் நடந்த வர்த்தமானங்களை யெல்லாஞ் சொல்லி, எங்கள் நாயகராலும் உலகத்தாராலும் நிந்திக்கப்பட்ட எங்கள் குறைதீரத் தவமிழைத்துத் தேவரீரை வளர்த்தனம். ஆதலால், இரக்ஷிக்க வேண்டியதென்று துதித்தார்கள். அவர்களை நோக்கிச் சந்திரனுடைய பத்தினிகள் இருபத்தேழு பேர்களில் மூன்றாவது தேவி அபிசித்தென்பவள் தவசுபுரிந்து மோக்ஷமடைந்து இருக்கின்றாள். ஆகையால், சந்திரனுக்கு அசுவனி முதல் இருபத்தாறு பேர்கள் இப்போதிருக்கின்றார்கள். இதுமுதல் அந்த மோக்ஷமடைந்த நக்ஷத்திரத்திற்குப் பதிலாகக் கிருத்திகையெனப் பெயர்கொண்டு, நீங்கள் அறுவரும் அங்கிருந்து யாவராலும் பெருமையுறத் தக்கது. உங்களை உலகத்தில் யாரொருவர் அனுஷ்டித்து விரதம் பத்தியாகச் செய்து உபவாசம், அல்லது மாவு, அல்லது பழவர்க்கம் இவை புசித்து நோற்பார்களாகில், அவர்களுக்கு வேண்டிய பொருள்களும் சத்துருஜெயங்களும் உண்டாம். பழி பாவமும் நீங்கச் செய்வோம். இதன்றியிலும், கார்த்திகேயன் என்றொரு நாமமும் பெற்றோம்என்று அவர்களுடைய துன்பம் அகற்றி, அவர்களைச் சந்திரனுடைய இன்பப் பதவியில் அமைத்தார். தான் பிறந்த விசாக நக்ஷத்திரத்திலும் சூரனைக் கொன்ற சஷ்டியிலும் விரதமிருந்து தவமிழைப்பவர்களுக்கு வேண்டிய இஷ்ட லாபங்களும் இகபர சவுக்கியங்களுமுண்டாம் என்றார்.

அப்பால் சப்தமாதர்கள் வந்து பணிந்து எங்களுக்கு அருளளிக்க வேண்டும் இறைவனே யென்று ஏத்தினார்கள். அவர்களை நோக்கி, நீங்கள் பூமியின்கண் சிறு பாலர்

களுக்கு வரும் நோய் முதலிய பீடைகள் யாவும்
நிவாரணஞ் செய்து, அவர்களால் பூசை
பொங்கல் உபசாரமெல்லாம் பெற்று நித்திய
மாக இருக்கக் கடவீர்களென்று அநுக்கிரகஞ்
செய்தனர். அதன் பின்பு அரம்பை-ஊர்வசி-
மேனகை - திலோர்த்தமை முதலிய அப்சர
ஸ்திரீகள் ஆடல் பாடல் செய்யவும்; துந்துபி-
பேரி-டங்கா-முரசு இவை முதலிய வாத்தி
யங்களெல்லாம் முழங்கவும் எழுந்தருளி,
திருச்செந்தூரினில் தெய்வானையுடன் அமர்
ந்து, பின்பு திருப்பரங்குன்றம்-திருவாவினன்
குடி-திருவேரகம் சோலைமலை-குன்றுதோருடல்
இவை முதலாகிய பிரதான ஸ்தலங்களிலும்
எழுந்தருளி, தினைப்புனத்திலுற்ற வள்ளியம்
மை மணந்து, ஆறுசமயத்தில் ஓர் சமயக்கட
வுளாய் அமர்ந்தருளினார். இவ்வாறு அஞ்சு
முகங்கொண்டு அகிலங்களை எல்லாம் காய்ந்த
அவுணர்களைச் சங்கரிக்க ஆறு முகங்கொண்டு
எழுந்தருளித் தேவர்களாதியோர் சிறை
தீர்த்த குமாரசுவாமியினுடைய சரித்திரத்
தைக் கேட்டோர் படித்தோர் எழுதினோர்
ஒருவருக்குந் தெரியும்படி யுணர்த்திய் பேர்
கள் இவர்களுக் கெல்லாந் தீர்க்காயுசுங் குறை
விலாச் செல்வமும் நோயற்றவாழ்வும் புத்திர
பாக்கியங்களு முண்டாகும். சகல விடையூறு
களும் நீங்குமென்று மார்க்கண்டேயர் தரும
ராஜனுக்குச் சொல்ல, யாவருங் கேட்டு மகிழ்
ந்து எழுந்து, அம்மகாநுபாவருடைய திரு
வடிகளில் வீழ்ந்து வணங்கி வாழ்த்தினார்கள்.

### ஸ்ரீ கிருஷ்ணதேவர் சத்தியபாமையோடு துவார்கைக் கெழுந்தருளல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே!
இந்தப் பிரகாரம் மார்க்கண்டேயர் தருமராஜ
னுக்குப் பலவித நீதிகளையும், சரித்திரங்களை
யும், குமாரசுவாமியி னுற்பவச் செயலையுஞ்
சொல்லிக்கொண்டு வரும்போது; கிருஷ்ண
மூர்த்தியுடன் வந்த சத்தியபாமை திரௌ
பதா தேவியினிடத்திற் சென்றுற் றிருந்தன
ரென்று முன் சொல்லி யிருக்கின்றோமன்றோ?
அவ்விடத்தில் நடந்த அதிசயங்களைக்கேளும்:
திரௌபதி சத்தியபாமையைக் கண்டவுடனே
உபசரித்தழைத்து ஆசனங் கொடுத்து வார்
த்தை யாடிக்கொண்டு வரும்போது; பலபத்தி
ரர்-தேவகிதேவியார்-ரோகணிதேவியார்-சுபத்
திரை - அபிமன்னு இன்னுமுள்ள பந்துக்க
ளெல்லோருடைய க்ஷேமங்களையும்விசாரித்துக்
கொண்டு மனங்கலந்து பேசிவந்தனள். அக்
காலையிற் சத்தியபாமை திரௌபதியை
நோக்கி, அண்ணி! இவ்வுலகத்தில் ஒரு ஸ்திரீ
யானவள் தன் புருஷனுடைய மனோபீஷ்டப்
படி நடந்து திர்ப்தி செய்வது வெகு வருத்த
மாக இருக்கின்றது. எத்தனைவித வுபசார
மரியாதைகளைச் செய்தாலும், அவர்கள்
கோபிக்கின்றார்கள். தூறுகின்றார்கள். வேறோர்
ஸ்திரீயினிடத்தில் இச்சை வைக்கின்றார்கள்.
அல்லது தன் பத்தினியை நீக்கி விடுகின்றார்
கள். தண்டிக்கின்றார்கள். கடுமொழி கூறுகின்
றார்கள். தங்களைத் தாங்களே நொந்துக்
கொள்ளுகின்றார்கள். இப்படி பற்பல விதங்
களாக இருக்கின்றன. அப்படி யிருக்க,
தேவரீர் ஐந்து புருஷரை வசப்படுத்தி,
அவர்கள் எந்நேரமும் பிரியம் விடாமலும்,
மற்ற ஸ்திரீகளை நாடாமலும் கோபமில்
லாமலும், மனங் களிக்கச் செய்து வைத்தி
ருக்குந் திறம் யாதோ? இதென்ன உபாயமோ?
தந்திரமோ? அல்லது மந்திரமோ? அவுஷ
தத்தின் பலமோ? மூலிகையின் திறமோ? குண
விசேடமோ? குறியின் நிதானமோ? பற்பல
சாஸ்திரத்திற் சொல்லிய பக்குவமோ? இதுக
ளின் முறைமை எனக்குத் தெரியப் படுத்த
வேண்டியது. ஏனென்றால், இந்த ஸ்ரீ கிருஷ்
ணரானவரை எத்தனை விதத்தில் வசப்படுத்தி
னாலும், என் பக்ஷத்திலிருக்க வில்லை. எங்கெங்
குந் திரிந்துகொண் டிருக்கின்றார். ஆகையால்,
நீர் தயவு செய்தால் இவரை என்னை விட்டு
நீங்காதிருக்கச் செய்து நானும் பாங்காக
இருப்பேன். உமக்குஞ் சுகிர்தமுண்டு. அவருக்
குந் தேகசவுக்கிய முண்டு. இல்லாவிட்டால்
நான் மெத்த வருத்தத்தில் நையும்படியாய்
இருக்கின்றேன் என்று சொல்லிக் கேட்ட சத்
தியபாமையை நோக்கி ஐவர்க்குரியாள் சொல்
லுகின்றாள்:

கேளும் சத்தியபாமா! இவ்வுலகத்தில்
உதிக்குஞ் ஜெந்துக்களில் எல்லாம் ஸ்திரீ
ஜெனனம் மகா பாவங்களையுடையது. ஆனால்,
இந்த ஸ்திரீ ஜனனத்துக்கு மேலாகிய புண்
ணிய ஜனனமும் இல்லை. அதெப்படியெனில்,
அக்கினி சாட்சியாய் விவாகம் பண்ணிக்
கொண்ட நாயகனே தெய்வமென்றும், அவ
னுக்கே விரதம்-நோன்பு-புகல்-பூசனை இவை
முதலின வென்று மெண்ணி காலம் அறிந்து
உண்டி உபசாரங்களுந் தந்து, தடுத்துரைக்
காமல், அவர் மனோபீஷ்டமாக நடந்து வரு
வார்களாகில், இதைவிட வேறு புண்ணியங்க

ளில்லை. இதற்கு மாறுபட்டு நடப்பதெல்லாம் பாவங்களாகும். ஆகையால் உம்முடைய புண்ணிய தேகத்தின் தன்மையையும் பாக்கிய வசத்தையும் நினைத்தவர்கள் கேட்டவர்கள் கண்டவர்கள் இந்த யாவருக்கும், புனித சவுக்கியங்கள் கிடைக்கும் அதுபற்றி உம்மைத் தரிசிக்கும்படி வெகுபேர் எண்ணி யிருப்பார்கள். நானும் அப்படியே நினைத்தேன். உம்முடைய நிலைமையை யோசிக்குமிடத்தில் உம்மைத் தரிசிக்கவும் பேசவும் பழகவும் யோக்கியதையைக் காணேம். அதென்ன வென்றால் தேவர்களும் ரிஷிகளுந் தேடியுங் காணக்கூடாத திருவடிகளையுடைய ஜகநிவாசனே ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியாக அவதரித்து உம்முடன் கூடி விளையாடி மோகங்கொண்டிருக்கப் பெற்றிருந்தும் புத்திச் சபலமாயினீர். இந்த அம்மாள் யார் என்று எவர்களாகிலும் விசாரிப்பார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பத்தினியென்று சொல்லும் வாக்கியமே உமக்கு வெகு பாக்கியம். அதுவே உலகத்திற்கும் யோக்கிய சிலாக்கியம். அப்படி யிருக்க, பதிவிரதாபத்தியென்பது எவ்வளவும் நினைக்காமல், பொருளாசையுங் காமத்தையும் விரும்பிய அற்ப ஸ்திரீகளைப்போல் எண்ணங்கொண்டு மந்திரமும், மருந்தும் விரும்பினீர். இப்படி பல வித உபாயங்களினால் புருஷரைக் கைவசப்படுத்த நினைக்கும் பூவைமார்களைப் பெண்ணிற் சிறந்தாளென் றெண்ணத்தகாது. புன்மையாகிய வேசி தாசி யென்று விளம்பவேண்டியது. இந்தத் துற்குணங்களையுடைய பெண்களுக்கு நீங்காத நரகமும், நோயும், தரித்திரமும் குடிகொண்டிருக்கும்.

ஓ சத்தியபாமா! பாண்டவர்கள் என்னிடத்திலிருக்கும் விசுவாசத்தின் நன்மையைக் கொஞ்சங் கேளும். இந்த ஐந்து நாயகர்களும் ஐந்து கர்த்தாக்களென்றும், இவர்களைவிட வேறு தெய்வமில்லை யென்றும், நோன்பு-விரதம்-தீர்த்தம் - திருநாள் யாவும் இவர்களென்றும் நினைத்து, இவர்களுக்கு மனது களிக்க நடந்து வணங்குவதே வரம்பெற்ற செல்வம் என்று நான் கருதி திரிகரண சுத்தியாக பத்தி செலுத்தி வருகின்றேன். அதனால், அவர்கள் பரஸ்திரீகளை விரும்பத்தக்க தில்லை. ஒருவேளை காமம் யாரையும் விடாது. எப்பேர்ப்பட்ட உத்தமர்களின் மனத்தையுங் கலைக்கும். ஆகையால், இவர்கள் இப்படியே இச்சித்து வேறு பெண்களைப் புணர்ந்தாலும், நானுங் கூட அனுகூலமாக யிருந்து, வந்த ஸ்திரீகளை விசாரித்து, தேகத்தின் திறமறிந்து நல்ல வஸ்திர பூஷணங்களால் அலங்கரித்து அனுப்பி வைப்பேன். அந்த மாதர்களுக்குக் கொடுக்கும்படியாகிய வெகுமதிகளையும் ஐவர் மனங் குளிரக் கொடுத்தனுப்புவேன். இதன்றியும், கோடைக்காலம்-மழைக்காலம்-முன்பனி-பின்பனி இப்பேர்ப்பட்ட காலமறிந்து, இவர்களுக்குத் தகுந்த போஜனாதிகள், வஸ்திரங்கள், படுக்கை வீடுகள், மேடைகள், உப்பரிகைகள், சாலைகள், சோலைகள் இவைகளில் எந்தெந்தக் காலத்தில் ஏதேது வேண்டுமென்று நினைக்கின்றார்களோ அததை அந்தந்தக் காலத்தில் நினைக்கு முன்னமே தெரிந்து கொண்டு அமைத்துவிடுவேன். எத்தனைபேர் சுயம்பாகிகள் வேலைக்கார ரிருந்தாலும் என் கண்ணாற் பார்த்துக் கரங்களால் எடுத்து உபசரித்து திருப்தியடையச் செய்வேன். அவர்களுடைய கோபம் - சந்தோஷம் - தயாளம் - வீரம்-பொறுமை இவைகளின் குறிப்பறிந்து நடந்துகொள்ளுவேன். மேலும், கொலுவுக்கும் பவனிக்கும் பரராஜ கண்டனத்திற்கும் புறப்படுங் காலமறிந்து, அந்தக் காலத்திற்குத் தகுந்த ஆபரணங்கள்-வஸ்திரங்கள்-அட்சதை முதலிய பொட்டுகள் - ஆயுதவிதங்கள் - வாகனாதிகள் இவை முதலிய யாவும் அலங்கரித்து வைப்பேன். பசுநிரைகள்-யானைவரிசைகள்-குதிரைகூட்டங்கள்-பதாதியினங்கள்-இரத வகைகள் இவை யாவும் விசாரித்து, எவைகளைக் குறைக்க வேண்டுவனவோ எவைகளை அதிகரிக்க வேண்டுவனவோ அவற்றையறிந்து அந்தப்பிரகாரஞ் செய்து வைப்பேன். இவைகளைக் காக்குந் தொழிலாள்களுக்குச் சம்பளம் முதலிய வெகுமதிகளும், விசாரணை-தெண்டனை-கண்டனை இவையெல்லாம் நானே நடத்தி, எதிலுங் குற்றமில்லாமலுங் குறைவில்லாமலுஞ் செய்வேன். சிவாலயம் - விஷ்ணுவாலய முதலாகியதையும் தருமங்கள்-தானங்கள் முதலாகியதையும், அன்ன சத்திரங்கள்-மடாலயங்கள் முதலாகியதையும், அப்போதைக் கப்போது விசாரித்து, உலகிலுள்ளோர்களெல்லாம் பாண்டவர்களுடைய துரைத்தனமே துரைத்தனம். மற்ற அரசர்களுடைய துரைத்தனமெல்லாம் அரைத்தனமென்று கீர்த்திகொண்டாடச் செய்வேன்.

மேலும், எக்காலத்திலும் பட்டினத்துள்ளோர்களெல்லாம் நித்தியமங்களமாக இருக்-

கச் செய்வதன்றி, அரண்மனை வாயிலிடத்தில் முழங்குகின்ற ஜயபேரிகை முதலாகிய யாவும் கொடி-குடை-மகரதோரணம் இவை முதலிய வைகளெல்லாமும், அந்தந்தக் காலமறிந்து அலங்கரித்திருக்கச் செய்வேன். மேலும், அவைகளை எல்லாம் அப்போதைக் கப்போது சிதல்களினுலேனும் மற்ற எவைகளினுலேனும் பழுதுபோகவொட்டாமற்காத்து ஆயுதங்களுக்கெல்லாந் தயிலபூசை செய்து துருவு பற்ருமற் பண்ணி, சித்திரச்சாலை-திருவிழாச் சாலை-மயிலாடுங்கூடம்-குயில்கூவுமாடம்-அன்னம் உலாவு மாளிகை-ஆடவர்வசிக்கு மரண்மனை இவைகளை யெல்லாம் புதுக்கிக்கொண்டும் வருவேன். சில காலங்களில் ஊழியக்காரர்களைப்போல் வருத்தமாகிய வேலைகளைச் செய்வேன். மந்திரியைப்போற் சில யுத்திகளையுந் தெரிவிப்பேன். நீதிகளைப் பேசுவேன். சிநேகிதரைப்போல் மருவி யிருப்பேன். நான் என் புருஷர்களிடத்திற்கு வரும்போது நல்ல வஸ்திரங்களும் ஆபரணங்களும் அணிந்து, சந்தனம்-புனுகு-சவ்வாது முதலியவைகளைப் பூசி, சகல அலங்காரங்களுடன் வருவேன். வெளியே புறப்படவேண்டி யிருந்தாலும் அரண்மனையி லிருந்தாலும் நாலு பேர்களைப் போல நானும் ஒருத்தியாக இருப்பேன். அது ஏனென்ருல், வெளியே வருகிறபோது நான் சகலவித ஆபரணங்களும் வஸ்திரங்களும் அலங்கரித்து வருவதைப் பரபுருஷர்கள் பார்ப்பார்களே யொழிய, எனது நாயகர்கள் பார்ப்பதில்லை. அதினுல் எனக்குப் பாபமும் பழிச்சொல்லுமே யன்றி வேறில்லை. இதல்லாமலும் பாண்டவர்களுக்கு என்னை அல்லாமல் இன்னும் வேண்டிய ஸ்திரீகள் இருக்கின்ருர்கள். அவர்களில் நான் மூத்தவள். ஆகையாற் காலமறிந்து மனையிற் படுக்கச் செய்து, வேண்டிய பூஷணலங்கிரதங்களுங் குறைவில்லாமற் கொடுத்து, அவர்கள் என்பேரில் மிகுந்த ஆசைகொண்டு நீங்காதிருக்க நடத்தி வருவேன். மறுதேசத்து அரசர்கள் கொண்டு வருங் கப்பங்களைக் கணக்கின்படி அறிந்து வாங்கி அவைகளைக் கெட்டிசெய்து வேண்டிய வரிசைகள் அவர்களுக்கு நடத்த ஐவர் நினைத்தால், அந்தப் பிரகாரங் கொடுத்து அனுப்பி வைப்பேன், பாண்டவர்களுக்கு வேண்டிய கிரீட முதலிய சகல ஆபரணங்களுஞ் சேகரித்துவைப்பேன். இன்னது வேண்டியது; இவைகள் இல்லை; என்னும்படியான மொழி அவர்கள் காதுக்குப் புகவொட்டாமற் செய்வேன்.

இதன்றியிலும், தருமராஜனுடனே பதினையிரம்பேர் பிராமணர்கள் சமபோசனஞ் செய்து வருவார்கள். நித்தியம் அவர்களுக்குப் பத்தியும்-அன்பும்-பண்பும் நிறைந்து, உபசாரங்களும் நடத்தி வருவேன். மாமியாராகிய குந்தி அம்மனையும், இன்னுமுள்ள பெரியோர்களையும் இஷ்ட தெய்வம்போற் பூசித்து மரியாதைகளிலும் பணிவிடைகளிலுங் குன்ருமல் நடந்து வருவேன். அதிதிகள்-விருந்தினர்-சுற்றத்தார் இவர் முதலானவர்கட்கெல்லாந் தக்கபடி உபசரித்து வருவேன். பிதிர்த்தினம்-பஞ்சபருவம்-விரதநாள் யென்னும் விசேஷ நாள்களில், செய்ய வேண்டிய சிறப்புக்களை யெல்லாம் லோபமில்லாமல் என் நாயகர்கள் சந்தோஷிக்கும்படி செய்துவருவேன். இப்படியாகப் பலவித காரியங்களும் நடத்தி பெருமையையுங் கீர்த்தியையும் பாண்டவர்களுக்கு ஆஸ்தியாகச் சம்பாத்தியஞ் செய்து சேகரித்து வைத்துவரும் நன்னடத்தைகளைக் கண்டு அவர்கள் என்னிடத்தில் அன்பு செலுத்திக்கொண்டு வருகின்ருர்கள். இதையன்றி வேருெரு விதமுமில்லை. உம்முடைய புத்தி இப்படி நினைத்திருக்குமென்று என் புத்தியிற் படாமற் போய்விட்டது. நீர் நினைத்ததல்லாமலும் என்னையும் அப்போப்பட்ட செய்கையை உடையவளாய்க் கருதிக் கேட்டது வெகுயோக்கியமாய் இருக்கின்றதென்று திரௌபதாதேவி சொல்ல, அதைக்கேட்ட சத்தியபாமா மெத்த வருத்தமுற்று, அண்ணீ! யான் சிற்றறிவினுற் கேட்டேன். உத்தமியாகிய நீர் சித்தம் பொறுத்து அருளவேண்டுமென்று எத்தனையோகோடி வணக்கம்புரிந்து நின்றனள். அவளைத் திரௌபதி நோக்கி, இனிமேலும் நான் சொல்லிவந்த பிரகாரம் ஒன்ருகிலுங் குன்ருமற் செய்து வருவையாகில், தண்டாமரைத்தாள் அண்ணலாகிய புண்டரீகாட்சன் கொண்ட மோகத்தை என்னண்டையில் தானே சொல்லிக் கொண்டாடப் போகிருயென்ருள். அந்த வசனத்தைச் சத்தியபாமா கேட்டு, அண்ணீ! இவ்வுலகத்திலுள்ள கல்லெல்லாம் ஒரு மாணிக்கக் கல்லுக்கொப்பாமோ? பெண்ணெல்லாம் உம்மைப்போற் பெண்ணுருமோ? என்று சொல்லித் துதிக்க, பின் இருவரும் மகிழ்ந்து சந்தோஷித்துக்கொண் டிருந்தார்கள்.

அப்படி யிருக்கையில், பாண்டவர்களிடத்தில் அந்த கிருஷ்ணமூர்த்தி யாவருந்தொழ

விடைபெற்றுக்கொண்டு மார்க்கண்டேயரிடத்திலுஞ்செலவுபெற்று இன்று நல்லகாலம் உம்மால் திவ்ய சரித்திரங்களெல்லாங் கேட்டேன் என்று அவரைப் புகழ்ந்து அந்தப்புரஞ்சென்று சத்தியபாமையைப்பிரயாணப்படுத்தி திரௌபதாதேவியிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு, வெளியேவந்து தமது ரதத்திலேறி நடக்கும்போது சத்தியபாமாவின் முகத்தை நோக்கி, பெண்ணே! இதுவரையில் நீயுந் திரௌபதியும் என்னபேசிக்கொண்டிருந்தீர்களென்று கேட்டனர். அதற்கு ஒன்றுமில்லையென்று சத்தியபாமா சொல்ல, ஒன்றும் பேசாமல் வாயை மூடிக்கொண்டா யிருந்தீர்கள்? நீங்கள் புருஷனுக்கு மருந்து வைத்து வசப்படுத்திக்கொள்ளப் பேசிய வார்த்தையை நான் அறியப்படாதோ என்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லவே, சத்தியபாமா வெட்கமுற்றுத் தலை கவிழ்ந்துகொள்ள, உடனே சத்தியபாமையைத் தன் மடிமீதிற் சேர்த்து, ஒளிக்காமல் உண்மையைச் சொல் என்றபோது நடந்த விர்த்தாந்தங்களில் ஒன்றொளியாமற் சொல்ல, அதைக் கேட்ட கண்ணன் திரௌபதை சொல்லிய வார்த்தை யனைத்தும் ஞாயமே என்று சொல்லித் தன் மனதிற் வைத்துக்கொண்டு மற்ற அதிசய மொழிகளினாற் சத்தியபாமையைச் சந்தோஷப்படுத்தித் துவாரகாபுரிபோய்ச் சேர்ந்தார்.

---

## ஸ்ரீ ராமமூர்த்தி சரித்திரம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! குமாரதேவர் சரித்திரங் கேட்ட தருமபுத்திரர் மகா ஆனந்த சித்தராய் மார்க்கண்டேய மகா முனிவரைத் தீர்க்க தண்டமாய்ப் பணிந்தெழுந்து, சுவாமி! சூரபன்மனாதிகளைச் சங்கரித்துத் தேவர்களைக் காக்கும் பொருட்டுச் சிவாம்சையி லுண்டான சரவணபவன் சரித்திரத்தைக் கேட்டுச் சன்மசாபல்ய மடைந்தேன். இராவணாதிகளைச் சங்கரித்து இமையவர் துயர் தீர்க்கும்படி விஷ்ணுவினம்சையா லுண்டான ஸ்ரீராமமூர்த்தி சரித்திரத்தைச் சாங்கோபாங்கமாகத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, மார்க்கண்டேயர் சொல்லத் தொடங்கினார்: கேளும் உதிஷ்டிரனே! முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும் நித்திய ஸ்நானஞ் செய்து தத்துவ ஞானத்தைப் பெறக் கருதவும், இவ்வுலகத்தாருக்குப் பெருமையும் அருமையும் நிறைந்த தாயைப்போ லிரட்சிக்குந் தன்மையைச் சகல வளங்களுடனுதவவும், பாவ விமோசன பவித்திரமுடன் பிரகாசிக்குஞ் சரையுமாநதி வளைந்த கோசல தேசஞ் சூழ்ந்தது அயோத்திமா நகரம். அந் நகரத்தைச் சூரியன் முதற் பரம்பரமாய்த் துரைத்தனஞ் செய்துவந்த அரசர்களுடைய திருநாமங்களெல்லாங் கேள்வியுற் றிருக்கின்றீர். ஓ தருமநந்தனா! அந்த வமிசத்தில் அயனென்னு மிராஜனுடைய புத்திரன் தசரத மகாராஜன். அந்த மகாராஜன் இவ்வுலகத்திற் சத்துருவென்பவரின்றி, நித்திய மங்களாகாரமாய் பத்தினிமார் மூவருடன் உத்தமமா யுலகத்தை சித்தசனெனப் புரந்துவர, அவ்வெற்றி மிகுந்த மன்னவனுக்குப் புத்திரனில்லாமையினால் மெத்த வருத்தமுற்று, ஆசாரியராகிய வசிஷ்டரை நோக்கி யழுது, அவர் மலரடியைத்தொழுது, இரவிகுலம் பழுதுபடலாச்சே, இனி இவ்வுலகினரென்னைப் பேசுவது மலடனென்னும் பேச்சே, புத்திரப் பேறுடையோர்களுக்கு முன் எனக்கது மகாயிழிவாச்சே, இன்னான் மகனின்னானென்று சொல்வதற்கு இல்லையே இனி எனக்கு மோக்ஷமென்பது மகா தொல்லையே என்ன செய்வேன்? ஐயோ கும்பியென்னு நகரத்திற் கிலக்கானேனே; நல்ல குமாரரைப் பெறத்தக்க தவம்பண்ணாமற் போனேனே என்று வருந்துவதைக் கேட்ட வசிஷ்டர் அரசனைப்பார்த்து, ஓ மகாராஜனே! கலைக்கோட்டு மகாரிஷியினால் யாகஞ் செய்தால் மக்களைப் பெறலாமென்று சொல்ல, அதின்படி அரசன் யாகத்தைச் செய்து பூரணாகுதி கொடுக்க, அக்காலையில் ஒரு பூதம் பொற்கிண்ணத்திற் பாயசங் கொண்டுவர, அதைக்கண்டு வாங்கிச் சரிபாகமாகப்பகுந்து ஒரு பாகத்தைக் கௌசலைக்கும் மற்றொரு பாகத்தைக் கைகேசிக்கும் அளிக்க, அதைக்கண்டு முகம் வாடி நின்ற சுமித்திரைக்கு அவ்விரண்டிலும் பாதியேற்றுக் கொடுக்க, அம்மூவரும் நமஸ்கரித்து வாங்கிப் புசித்துக் கர்ப்பவதிகளாகி, மூத்த கோசலை கர்ப்பத்தில் ஸ்ரீராமரும், கைகேசியினிடத்திற் பரதனும், சுமித்திரை வயிற்றில் இலட்சுமணனுஞ் சத்துருக்கனுஞ் சுபமுகூர்த்தத்தில் நான்கு வேதங்களைப்போற் பிறந்தனர். அப்புத்திரரை அரசன் கண்டு களித்து, ஜாதகன்ம முதலிய சட்கருமங்களும் நடத்தினார்கள். அந்தப் பிள்ளைகள் நால்வருஞ்

சுக்கிலபக்ஷ சந்திரனைப்போல் விர்த்தி யடைந்து வளர்ந்து வந்தனர்.

அக்காலையில் வசிஷ்ட மகாமுனியாற் சகல வேதாகமங்களும், தனுர்வேத சாத்திரங்களும், யானை, குதிரை, இரத முதலியவைகள் செலுத்தலும், நடத்தலும் ஆகிய இவைகளோடு, சாந்தம் - பொறுமை- நற்குணம் - தருமம் - தயை - வீரப்ரதாபம் - ஊக்கம் இவைகளெல்லாமும் ஒப்புவமையில்லாமல் விளங்கக் கற்றனர். அதைக்கண்ட தசரத மகாராஜன் பரமானந்த மூற்றிருக்கும் நாளையில், ஒரு நாள் விசுவாமித்திரர் வந்து தரசத மகாராஜனைக் காண, அவரெழுந்து நமஸ்கரித்து வணங்க, இரப்பவர்போற் கௌசிகர் இருகரத்தையும் விரித்து, ஓ சர்வசம்மார சூரனை யழித்துத் தேவேந்திரப் பட்டம் நிலைக்கச்செய்த தனயனே! எனக்கொரு வரங்கொடுக்க வேண்டும். அதாவது என்னுடைய யாகம் நிறைவேற உன்னுடைய பிள்ளைகளில் நீலமேகச்சாமள வர்னனாகிய ஸ்ரீராமனைத் தருதலே என்று சொன்ன மாத்திரத்தில் அரசன் உடல்பதறி உயிரை யமன் கேட்கும்போது அவர்கள் அடையும் துன்பம்போல் அயர்ந்து பூமியில் விழுந்து அழுது அம்முனிவர் திருவடிகளிற் றொழுது, சுவாமி! அறியாத குழந்தை என்னுசை தீரவந்த அமுதம் என்னிருமைப்பேறளிக்குந் தவம் என் கருத்தை நிறைவேற்ற வந்த தனிப்பேறு. அவனுக்குத் தானவருடன் சண்டை செய்யத் தெரியாது. தனுர்வேத முதலிய மந்திரங்களும் வராது. தமது திருவடிக் கடிமை யானிருக்கும்போது அவனை விரும்பத்தகாது. இராக்கத மாயையோ பெருஞ்சூது, அவர்களை நானே யழித்து நாசப்படுத்தி யாகத்தை நிறைவேற்றுவேன் என்று சொல்லக்கேட்ட முனிவன் முனிந்து, தீக்கொழுந்தனைய சடைகள் விரிந்து ஈரேழுலக முங் கரிந்து இடியுங்காலமிதுவென மூறிந்தெழுந்த தன்மையைச் சமீபத்திலிருந்த வசிஷ்டரானவ ருணர்ந்து, அரசனைத் தேற்றி, உன் குமாரனுக்கு இது நல்லகாலம். இசைந்தனுப்பாவிட்டால் இவர் கொண்டது கோபக்கோலம் அது ஈசனுண்ட மஹா ஆலகாலம் அதனால் இமைப்போதிலழியு மிஞ்ஞாலம். ஆனதால் இவருடன் கூட்டி யனுப்புவதே இணையற்ற கீர்த்தியுண்டாம் நெடுங்காலம் யென்று மொழியும் வார்த்தையைக் கேட்ட அரசன் கௌசிகருடைய இணையடிகளைச் சிரத்திற் பூண்டு இறைஞ்சி மூத்த பிள்ளையையும் இலக்குமணனையுங் கையடைகொடுத்துக் காப்பதுன் கடனென்று விடுத்தான்.

அப்பால் விசுவாமித்திரன் மகிழ்ந்து, தசரத மஹாராஜனைப் புகழ்ந்து பிள்ளைகளிருவரையும் அழைத்துக் கொண்டுபோய் இராக்ஷசமாயையும் அவர்கள் செய்யும் அக்கிரமத்தையுஞ் சொல்லி, மந்திரார்த்தங்களும் உபதேசித்து, அவ்விருவரையுந் தனதிரண்டு பக்கத்திலுங் காவல் வைத்து யாகத்தை செய்தனர். அப்போது தாடகை வந்து மலைமர முதலியவற்றை லெறிந்து யாகத்தை யழிக்க, ஸ்ரீராமர் பெண்ணென்றுன்னி இளைக்க, அதைக் கண்ட கௌசிகர் தருமஞ் சொல்லக் கேட்டு, விண்ணின்றிழிவு மேகம்போற்றுண்ணென்று பூமியில் வீழக் கணை தொடுத்துத் தாடகையைக் கொன்றார். உடனே அவள் பிள்ளைகளாகிய சுவாகு-மாரீசன் இவ்விருவரும் வந்து வளைந்து, கொடுமையாகிய யுத்தங்களைச் செய்தார்கள். அவர்கள்பேரிலுந் திவ்யாஸ்திரங்களைத் தொடுத்து, வெகுபேரிராக்கதரை யழித்து உதிர வெள்ளமாகச் சுவாகுவைக் கொன்று, மாரீசன் றலைக்குங் கணைபிடித்தனர். அதைக்கண்டு மயங்கி அவன் மறைந்து கடலிடத் தொளித்தனன். உடனே கௌசிகர் யாகத்தை நிறைவேற்றி அவிர்ப்பாகங் கொடுத்து இவர்களிருவரையு மழைத்துக்கொண்டு போகும்போது வழியிற் கருங்கல்லாய்க்கிடந்த வுரு பெண்ணுய் வரக்கண்டு, இதென்னவென்று இராமர் வினவினர். அதற்குக் கௌசிகர் இம்மாது கௌதமர் பாரியாகிய அகலிகை, இவளை இந்திரன்கூடிக் கௌதமர் சாபத்தால் ஆயிரங் கண்ணுற்றான். இவள் கல்லானாள் என்று சொல்லக்கேட்ட ராமர் கருணைகூர்ந்து அழைத்துக் கொண்டுபோய் கௌதமரிடத்தி லொப்பிவைக்க, உடனே கௌசிகர் அவரை யழைத்துக்கொண்டு மிதுலாபுரிக்குச் சென்று சபாமண்டபத்திலிருந்த சனகன்முதலிய வேந்தர் யாவரும் களிக்கக் குலமுறைகளெல்லாஞ் சொல்லி, இவனது கரத்தின் றிரத்தைத் தாடகை சுவாகுபேரிற் கண்டேன். காலின் றிறத்தைக் கௌதமர் பாரியாளாகிய அகலிகை யளவிற் கண்டேன். இன்று உன்னுடைய வில்லைக் காணவும் வந்தேனென்று சொல்லினார். அதைக்கேட்ட சகலருஞ் சந்தோஷமுற்றார்கள். சதானந்தரும் உள்ளமகிழ்ந்தார். ஜனகராஜன் அப்படியே நேரிடுமாகி லென்னுடைய

தவப்பயனென்று மகிழ்ந்து வில்லைக்கொண்டு வந்து சபையிற் போடவும், ஸ்ரீராமர் முகத்தை விசுவாமித்திரர் நாடவும், அவர் அவ்வில்லை வளைத்துப் பேரொலி யுலகத்தை மூடவும், அதுகண்ட சுபமங்கிலிகள் மங்களசோபனம் பாடவும், உடனே பாங்கிமார்கள் சீதையினிடத்தி லோடவும், அவர்களலங்கரித் தழைத்து வந்தவுடன் அச்சீதா பிராட்டியாருக்கும் ஸ்ரீ ராமருக்குங் கலியாணங் கைகூடவும், வெகு சனங்களும் பிராமணர்களும் புகழ்ந்து பாடவும், வந்திருந்த தந்தை வருக்கத்தாருந் தாய் வருக்கத்தாருஞ் சந்தோஷத்துடன் கொண்டாட மற்றுந் தம்பிமார்களுக்கும் விவாகஞ் செய்துகொண்டு, சனக மஹாராஜனிடத்தில் விடைபெற்றுச் சதுரங்க சேனைகளுஞ் சூழ வரும்போது, வழியிற் பரசுராமர் வந்து தடுத்துச் சிற்சில வார்த்தைகளைப் பேச, அப்போது ஸ்ரீராமர் பயப்படாமல் எதிர்நின்று அவரை வென்று ஓட்டிவிட்டு, அவருடைய வில்லை வருணனிடத்தில் ஒப்பிவைத்து யாவரோடும் அயோத்தியாபுரி வந்தனர்.

பின்பு அங்குள்ள யாவரும் விசுவாமித்திரரை நமஸ்கரிக்க, அவர் எல்லோருக்கும் ஆசீர்வதித்துப் போக, அதற்கப்பால் மணவாளக் கோலமுடைய பரதனுஞ் சத்துருக்கனும் பாட்டனாகிய கேகயனிடத்திற்குப் போகும்படி அனுப்பிவைத்து, அப்பட்டினத்தில் ஸ்ரீராமரும் இலக்குமணரும் இருக்குநாளையில் ஒரு நாள் தசரதச் சக்கரவர்த்தி வசிஷ்டர் முதலிய பெரியோர்களுடன் இருந்து, இதுவரையிலும் யான் சுமந்திருந்த இந்த பூபாரத்தைச் சிரேஷ்ட புத்திரனாகும் ஸ்ரீராமனிடத்தில் ஒப்பிவைத்து யான் காட்டுக்குப்போய் தவஞ் செய்யக் கருதினேன் என்று சொல்ல, அதைக் கேட்ட பெரியோர்களெல்லாம் சந்தோஷித்துப் பிரமானந்தமுற்று நல்ல காரியமென்றார்கள். உடனே முகூர்த்தநாள் நேமித்து, சகல சாமக்கிரியையும் புண்ணிய தீர்த்தங்களுஞ் சேகரிக்கச் செய்து, நாடு நகரமும் அலங்கரிக்கும்படி பறை யறைவித்து, பட்டினம் யாவும் புகழ் கொண்டாட மறுநாட்காலமே ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று விகிதப் படுத்தி, அன்றிராத்திரி யாவருந் தங்கள் தங்கள் இடத்திற்குச் சென்றார்கள். அரசன் அரண்மனைக்குட் போனான். சபையில் நடந்த சமாச்சாரங்களை யெல்லாம் கேட்டிருந்த மந்தரை யானவள் கேகயன் பாவையாகிய கைகேசியினிடத்திற்குச் சென்று, அம்மா! என்ன சும்மா இருக்கின்றாய்? உன் புருஷனாகிய தசரதமகாராஜன் கௌசலையின் பேச்சைக்கேட்டு அவள் மனங்கோணாமல் ஸ்ரீராமனுக்குப் பட்டங்கட்ட நாளைக்கே நாள் நேமித்துக் கொண்டார். நீ ஏதுந் தெரியாமல் நித்திரை போகின்றாய் என்றவள் விம்மிச் சொல்லுமுன் கைகேசியானவள் எழுந்து புளகித்து, அவளுக்கு முத்தாரங் கொடுத்தாள். அதை மந்தரை கடுகடுத்து விலக்கி, ஆ! ஆ! இதென்ன அநியாயம்! ராமனுக்குப் பட்டமானால் உன் பிள்ளை பரதன் போய் அவனுக்கு ஊழியனாக ஏவற்றொழில் செய்து பிழைக்கவும், நீ கௌசலா தேவிக்குப் பணிப்பெண்ணாகவும், உன் மருமகள் கோசலை மருமகளாகிய சீதைக்கு வேலை செய்யவும், உன் தகப்பன் வணங்கிப் பயந்து இராமனுக்குப் பகுதி கட்டவும், பின்பு நாம் யாவரும் அந்த ராமனுடைய அபராத ஆக்கினைக்குட்படவும், உன்னுடைய மனிதர் மக்கள்வந்தால் நீ கௌசலையை வணங்கி அன்னவஸ்திர முதலிய திரவியங்கள் வாங்கிக் கொடுக்கவும், தன்னைப் பணிவாரைத் தான் பணிந்தேத்தவும், உன்னை நம்பியிருந்த நான் உலைந்தழுது வாடவும், ஏதொரு சுதந்திரமும் உனக்கில்லாமல் எல்லா மூத்தபெண்சாதி வசத்தில் ஒப்புவித்து, பிண்டமுந் துண்டமுங் கண்டதன்றி வேறொன்று மில்லையென்று அரசனுன்னை அடக்கிவிட்டான்.

ஐயோ கைகா! நீ பிறந்த சீரும் உன் சிறந்த பேரும் உன் தந்தையினாரும் உன் இச்சையின்படி அனுபவித்த செல்வமும் போய்க் கௌசலைவீட்டுத் தாதிக்கு தாதியாய்ப்போகுங் காலமாய் நேரிட்டதே. சூரியனுக்கு முன் சந்திரன் போலும், சந்திரனுக்கு நேர் மின்மினிபோலும் அன்றி, உன் பிள்ளையை ராமனுக்கு நேராய்ச் சொல்லத்தகாதே. பரதனோ மெத்த அறியாதவன். கபடு சூது வஞ்சமொன்றுந் தெரியாதவன். உன்னுடைய மனம் போற் கள்ளங்கமற்றவன். அதெப்படியென்னில், கலியாணப் பிள்ளையும் பெண்ணும் வீட்டுக்கு வந்து பெரியோரைப் பணிந்து ஆசீர்வசனம் பெறுவதற்கு முன்னமே அரசன் கௌசலை யுரைத்த தலைக்கணை மந்திரத்தை மனதில் வைத்துக்கொண்டு, வஞ்சக நினைப்புடன் வழியிற்றானே பாட்டன்வீட்டுக்கு போய் வாவென்று அனுப்பிவிட்டு, தன் பட்டணத்தை இந்த ராமனுக்குக் கட்ட நினைத்தான்.

என்ன கெட்ட நினைப்பு பார்த்தையா? இனி பேசுவதென்பது வார்த்தையா? இன்ன முன் மனதிற்கு தெரியவில்லையா? மறுமொழி எனக் கொன்றுஞ் சொல்லையா? அழகிய சிங்காதனத்தில் ஸ்ரீராமனிருக்க, சுமித்திரையின் பிள்ளை இலக்ஷ்மணனுங் கூடயிருக்க, உன்பிள்ளை பரதன் கால் பிடித்துக் கொண்டிருக்க நேரிட்ட காலத்தைக் குறித்து நானென்ன செய்வேன். என்று மார்பி லடித்துக்கொண்டு வாய்விட்டு அழுதாள் மந்தரையானவள். இந்தவார்த்தையைக் கேட்ட கைகேசி மெத்தவும் வியாகூல முற்று மபங்கி, நீ சொன்ன வசனங்கள் எல்லா முண்மையே நானென்ன செய்வேன். எனக்கொரு உபாயஞ் சொல்லுவையாகில் அந்தப்படி நடப்பேனென்ற கைகேசியின் மனத்தை யறிந்துகொண்டு, நமக்கு வசப்பட்டாளென் றுணர்ந்து, கூனி சொல்லுகின்றாள்: அம்மா! பூர்வத்தில் தசரதமகாராசன் உனக்கு இரண்டு வரங் கொடுத்திருக்கின்றா ரல்லவா? அதற்கு இது நல்ல சமயம் வந்துவாய்த்தது. சொன்ன சொல்லைக் கடக்கவறியாத அரசனிடத்தில் முன் கொடுத்த வரமிரண்டையுந் தரவேண்டுமென்று கேட்டு உன் குமாரனாகிய பரதன் நாடாள ஒருவரமும், ஸ்ரீராமர் பட்டம் நீங்கி காடாள ஒருவரமும் பெற்றுக்கொள்ளுவையாகில், நமக்கெதிரொருவருமில்லை. நாடுநகர முதலிய செல்வமியாவும் நம்முடையதேயென்று மந்தரை சொல்ல, அப்புத்தியைக் கேட்டு மனமகிழ்ந்த கைகேசியானவள் தலைமயிர்களெல்லாம் விரிந்து புரளவும், வஸ்திரஞ் சோர்ந்து கழலவும், பரிமளகெந்த புட்பமெல்லாம் பக்கத்திற் சிதறியிருக்கவுமாயினள்.

இப்படி அலங்கோலமாக இருக்கின்ற கைகேசியினிடத்திற்கு ஒன்றுமறியாத அரசன் ஆசையுடனே வந்து உன் குமாரனுக்குப் பட்டாபிஷேகம் நாளையென்று சொல்லிப்பார்க்கும்போது, மிகுந்த விசனத்துடன் புலம்பிக் கொண்டிருக்குந் தேவியை யெடுத்து மார்போடணைத்து, இந்த மனோதுக்கம் உனக்கு வந்த விதம் யாது? ஓ மயிலனைய மாதே! உனக்கிங் குற்றதுரைப்பாய் என்று விரும்பி வருந்தித் திருந்திழையைக் கேட்க, அதற்குச் சிற்சில வசனங்களை வெடிப்பாகவும் வெறுப்பாகவும் பேசி, மனங் குழையும்படியாகவு மேசி, எத்தனைவிதச் சமாதானஞ் சொன்னபோதிலுங் கேளாமல், இரண்டு வரம் எனக்குத் கொடுத்திருப்பதை இப்போதெனக்குத் தரவேண்டுமென்று கேட்டனள். அவ்வாறு கேட்ட மனைவியை அரசன் பரிந்து நோக்கி, அன்று சொல்லிய வாக்கியத்தை அழித்துப் பேசமாட்டேன். அப்படியே தந்தேன் பெற்றுக்கொள் விரைவில் எழுந்திரு முகத்தை யலங்கரித்துக் கொண்டு உன் பிள்ளையாகிய ராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு வாவென்று அரசனழைக்கவும், அதைக் கேட்ட கைகேசி நகைத்து, இப்போதே கொடுத்தாலொழிய வரேனென் றாடினள். அதற்கரசனிசைந்து, பெண்ணே! அப்படியே தருகிறேன் கேளென்று கூற, நீர் கொடுத்த இரண்டு வரத்தில் ஒருவரம் பரதன் நாடாளவும், மற்றொருவரம் ராமன் காடாளவுங்கொடுமென்றுசொல்லினள். அவ்வாக்கியம் இரும்பு நாராசம்போல் அரசன் காதுகளில் நுழைந்து, வேட்டனது கைப்பாணம் பட்டு வெருண்டு மருண்டு விழுந்த சிலைமான் போற் பூமியில் விழுந்து மூர்ச்சைபோனான். மறுபடி தேறி எழுந்து, பெண்ணே கைகா! எனக்கு உயிர்ப்பிச்சை தரவேண்டும். உன் மகனாகிய பரதன் நாடாளட்டும். ஸ்ரீராமன் மாத்திரம் வனத்திற் போகாமற் இவ்விடத்தில் இருக்கட்டும் என்று அரசன் சொல்ல, அதைக் கேளாது அவள் நில்ல, பின்பு இன்னும் எத்தனை விதத்திற் சொல்லியுங் கேளாமையால் முத்திரை மோதிரத்தைக் கழற்றிக் கைகேசிக்கு முன் எறிந்துவிட்டு அடா குழந்தாய்! அடா ராமா! அடா ராமா! என்று பூமியில் விழுந்து தன்னைத்தான் மறந்தான் தசரதமகாராஜன். இவ்விடத்தில் இப்படியிருக்க, மறுநாட் காலமே வசிஷ்டர் முதலிய மந்திரிமார்களும்மன்னவர்களுங் கொலுச் சபையில் வந்து நிறைந்து மங்கள வாத்திய முழங்க, மன்னர் மண்டலீகருடன் ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகமென்று யாவரும் உள்ளக்களிப்புடன் இருக்குங் காலையில், அந்தப்புரத்தில் நடந்த சங்கதி யாவும் அறிந்துகொண்ட ஸ்ரீராமர் மனமகிழ்வுடன் தசரதச் சக்கரவர்த்தியி னிடத்திற்கு வரும்போது அவ்வந்தப்புர வாசலில் நின்ற கைகேசியை நோக்கித் தீர்க்க தெண்டனிட்டுப் பணிந்தனர். அதைக்கண்ட தாயாகிய கைகேசி ஸ்ரீராமரைப் பார்த்து, அப்பா ராமா! உன் தந்தை இப்போது உன்னுடன் பேசத் தக்கவரல்லர். நீ இன்னிமிடம் பிரயாணமாகிப் பதினான்கு வருஷங் காட்டிற் றிரிந்து வாக்கடவை. உன் றம்பி பரதன் இந்த நாட்டையாளக் கடவான் என்றுரைத்தனள்.

கேட்டீரோ தருமபுத்திரரே! அம்மொழியைக் கேட்ட ஸ்ரீராமர் மனமகிழ்ந்து, அம்மணி! என் பாக்கியமே பாக்கியம். இதை விடவும் உண்டோ சிலாக்கியம்? யென்று அநேக முறைமையாகப் பணிந்து, என்னரசன்சொல்லாமற் போனாலுந் தேவரீர் கட்டளையைத் தள்ளி நடக்க வென்றரமோ? தாயே! நீர் சொல்லிய வாக்கியமே வேதவாக்கிய சிலாக்கியமன்றி வேறில்லை. இதுவே பிரயாணமாகப் போய்வருகின்றேன் என்று அகமகிழ்ச்சியோடு வணங்கி, அடிக்கடி மண்மீதினில் வீழ்ந்து தாழ்ந்து விடை பெற்றுக்கொண்டு, தந்தை இருக்கும் அந்தப்புரத்திற்குப் போகாமல் தன் சொந்த கிரகத்துக்கு வந்து, கேயூர மணி குண்டல கிரீடமுதலிய யாவையுங் களைந்து, அச் சிற்றன்னையால் அனுப்பி வைத்த மரவுரியுங் காவி வஸ்திரமுந் தரித்துக்கொண்டு, காடே காணியாட்சியாகப் புறப்பட்டனர். அப்போது தேவர்களெல்லாம் புகழ்ந்து பாரிஜாத மலர்களைப் பொழிந்து, எங்கள் குறையகற்று மேந்தலே என்று வாழ்த்தினார்கள். அதுகாலையில் ஸ்ரீராமர் பட்டாபிஷேகக் கோலம் நீங்கி சடைமுடி மரவுரியுடன் வருந்தன்மையைக் கண்ட வசிஷ்டர்முதலான மகாரிஷிகளும் பல மன்னவர்களும் மற்றையர்களும் வாடிக் கலங்கி, ஏதொன்றுந் தோன்றாமல் ஏங்கி யிருக்க, அதைக் கண்ட ராமசுவாமியானவர் வசிஷ்டரை வணங்கி, தாயாகிய கவுசலையையுந்தொழுது, அந்தம்மாளும் அழுது விடைதர, நீங்கிச் சீதையினிடத்திற்கு வர, அவ்வம்மன் கண்டு கலங்கிக் கூட வரும்படியாகிய கொள்கையோடுற, அதையறிந் தழைத்துக்கொண்டு சுமித்திரையைக்கண் டிறைஞ்ச, அக்கால் அவ்வார்த்தைகளைச் சொல்லக்கேட்ட தம்பி இலக்குமணர் கோபங்கொள்ள, அதை மாற்றி யவரையு மழைத்துக்கொண்டு தாங்கள் மூவரும் புறப்பட்டு அயோத்தியை நீங்கினர். அப்போது உயிரிழந்த உடல்போல் யாவருந் துயரங்கொள்ளக் கண்ட கோதண்டராமர் அவர்களை நிறுத்திவிட்டு, தாங்கள் மூவருமாய் மூன்று யோசனை தூரஞ்சென்று கங்கையைக் கடந்து, குகப்பெருமானுடைய உறவுகொண்டு, அப்பாற் சித்திரகூடம்போய்ச் சேர்ந்து அங்கு சிவனடியார் திருமாலடியார் முதலிய பெரியோர்கள் வந்து ஆசீர்வதிக்க அவர்களுக்கு வணங்கி உபசரித்துக்கொண் டிருந்தார்கள். இவ்வாறு இம்மூவர்களும் வனம் நோக்கிச் சென்ற செய்தியைத் தசரதமகாராஜன் மந்திரி யென்னுஞ் சுமந்திரன் சொல்லக் கேட்டு, ஆ! ஆ! மகனே! என்று கூவி ஆவியகன்றான். உடனே வசிஷ்டர் திருமுக மனுப்பக் கண்ட பரதசத்துருக்கா ளிரண்டுபேரும் அயோத்தியாபுரியில் வந்து அரண்மனையிற் புகுந்து, அரசனிறந்தமையும் அண்ணன் அகன்றமையு முணர்ந்து, தங்கள் தாய் முகம் பார்க்க வயிறெரிந்து, தந்தைக்குச் செய்யுங் கரும விதிகளெல்லாம் புரிந்து, ஐயோ! என்னைப் பழிக்காளாக்கி விட்டாயே தாயே என்று கண்ணீர் சொரிந்து, கௌசலைத்தாயைப் பரிந்து, சபதங்கள் அநேகமாகப் புரிந்து, இனிமேல் என் தமயனைப் பிரிந்து இகத்தில் இமைப்போதும் உயிர் வைத்திருக்கேனென்றிரைந்து, என் அண்ணனைப்போல் யானுங் காட்டுக்குச் செல்கின்றேனென்று விரைந்து தவவேடங்கொண்டு புறப்பட்டனன். தம்பி சத்துருக்கனும் அதுவே கோலங்கொண்டு வந்து நின்றனன். தாய்மார் மூவர்களும் வசிஷ்டர் முதலிய முனிவரும் மற்ற மந்திரி பிரதானிகளும் ரதகஜதுரகபதாதிகளும் நகரத்திலுள்ள ஜனங்கள் யாவரும் கடல் நெருங்கி வருவதுபோல் வந்து நெருங்கி நின்றார்கள்.

உடனே பரதராஜனானவன் அவர்களனைவரோடும் பிரயாணமாகி, அண்ணன் திருவடி நாட்டிய இடங்களிற் றன்னுடைய திருமுடி சூட்டி, கண்ணீர் ஆறாகப் பெருகும்படியாய்க் கங்கைக்கரைபோய்ச் சேர்ந்து, அங்கு குகனைக் கண்டு வார்த்தையாடி, பின்பு ஓடத்திலேறிச் சென்று சித்திரகூடம்போய் ஸ்ரீராமரைக் கண்டான். கண்டமாத்திரத்திற் பரதன் தாயை கண்ட சேயைப்போலும் பசுவை நோக்கிய கன்றைப்போலும் கதறி முறையிட்டு அலறி தந்தை இறந்த சங்கதியை தமயனோடு கூடித் தாயாகிய சீதையின் சரணங்களிற் பணிய, பணிந்த பரதனை வாரி எடுத்து மார்போடு அணைத்த ஸ்ரீராமரும் இலக்குமணனும் வெகுவாகிய விசனங்கொண்டு விம்மினார்கள். அக்காலையில் வசிஷ்டரும் மற்றுமுள்ள மகா முனிவர்களும் அவர்கள் துயரம் நீங்கத் தருமஞ் சொல்லி ஸ்நானஞ் செய்வித்து, அவ்விடத்தில் நடத்தவேண்டிய கருமங்களெல்லாம் முடித்தார்தள். பின்பு ஸ்ரீராமர் பரதனை நோக்கி தம்பி! நான் மாதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்யும்படியாய் வனத்திற் பதினான்கு வருடங் கழித்து, பதினைந்தாவது வருட முதலிற் றசமினன்றைக்கு வருகிறேன். அதுவரையி

னும் நீ தாய்மார்கள் மனதின்படி நிறைமுறை தவறுமல் நடந்து நீதிசெலுத்தி, மந்திரியர்-சேனாதிபர்-ஆசாரியர் முதலிய யாவரு மகிழத் துரைத்தனஞ் செய்யக்கடவை என்று கட்டளையிட்ட சீதாபிராமனுடைய திருவடிகளிற் பரதன் பணிந்து, அண்ணலே! தேவரீருடைய திருவடியுந் தாயாருடைய திருவடியுஞ் செல்லும் வனங்களிற் கல்லும் புல்லும் நீக்கிக் கொண்டு வருகின்றேன். அல்லும் பகலும் விழித்துக் காவலிருக்கின்றேன். சொல்லும் ஏவற்றொழில்களைச் செய்து வருகின்றேன். என் அண்ணாவே! யென்று அலறி அழும் பரதனை இராமர் யெடுத்தணைத்து, அப்பா! தாய் தந்தையர் கூறிய வாக்கியந் தப்பி நடப்பது நமக்கு யோக்கியமல்லவே. தம்பி! என் போலொத்த பிள்ளை பிறந்து மாதா பிதாவை வையகத்தார் பழிக்கச் செய்து நானரசு புரிவது அழகல்ல. தருமமல்ல. நமது குலமுறைக் கடுத்ததல்ல. என் வார்த்தையை நீ தள்ளி நடப்பது இயற்கையல்ல. ஆகையாற் பதினுன்கு வருடமும் பதினுன்கு நாளாய் நினைத்து அரசு செய்திருப்பையாகில், நான் பதினுன்கு நாழிகையாகக் கழித்து வருவேன் என்று சொல்லிய வாக்கியங் கேட்ட பரதன் முகம் வாடி, ஸ்ரீராமருடைய பாதுகையை நாடிக் கண்களி லொத்திக்கொண்டு, இதையாகிலுங் கருணை புரிந்தாற் சிங்காசனத்தி லேற்றிப் பூசை புரிந்திருந்து, எப்போது நடந்து வரு மரசாட்சியைத் தப்பாமல் ஒப்பி வைத்து, நாணிப்போதிருக்குங் கோலத்துடன் தேவரீர் வருகிற வரையிலு முப்போதுண்ணுமல் இருப்பேன். தேவரீர் வருங்காலம் எனக்குச் சொன்னபடி வராதிருந்தால், அக்கினியி லிறப்பேன் என்று சொல்லிய தம்பிக்குப் பாதுகை மகுடஞ் சூட்டியனுப்ப, உடனே விடை பெற்றுக்கொண்டு, யாவரோடும் உயிர் நீங்கிய உடல்போலும் சூரியன் நீங்கியவானம் போலும் துன்பமுடன் திரும்பி அயோத்தியாபுரிக்கு வந்து சேர்ந்தான் பரதமகாராசன்.

இவ்வாறு அயோத்திக்கு வந்த பரதராஜன் நந்திக் கிராமத்திற் சிங்காசனம் ஏற்படுத்தி, அதின்பேரிற் பாதுகையை யமைத்து சடைமுடி மரவுரியுடன் ஸ்ரீராமமந்திரத்தைச் செபித்து, சிந்தை தளராமற் றென்றிசையை நாடி, ஸ்ரீராமரைவிட்டுப் பிரிந்த நாளை எண்ணிக்கொண் டிருந்தான். சத்துருக்கனும் அவனுடன் கூடவே யிருந்தான். கேளும் தருமநந்தனு! இங்கே ஸ்ரீராமர் முன்னுஞ் சீதாதேவியார் மத்தியிலும் இலட்சுமணர் பின்னுமாக நடந்து, மகானுக்களை யெல்லாம் நமஸ்கரித்து அவர்கள் ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு, யாளி-சிங்கம்-யானை-கரடி முதலிய மிருகங்கள் சஞ்சரிக்கும் வனங்களிற் செல்லுவதாயினர். அப்போது வடவாமுகாக்கினி குடியிருக்குங் கண்களும், அதினுடைய கொழுந்து தாவிப்படருந் தன்மை போன்ற சடைமயிரும், மலை பெயர்ந்து வரும்படியாகிய நடையும், வானமளாவிய முடியும், சப்த மேக முழக்கம்போன்ற குழலும், சமுத்திரத்தை உறிஞ்சிக் குடிக்கும் வாயும், தேவர்களும் ரிஷிகளும் தியங்கி நிஷ்டைகொண்டிருக்கும் காதுகளும் ஆகிய இத்திடகாத்திர தேகமுடைய விராதனென்னும் இராக்ஷசன் வந்து, திடுக்கிடச் சீதாதேவியை எடுத்துத் தோளிலேற்றிக் கொண்டு ஆகாய வீதியிற் சென்றான். அப்படி செல்லும்போது தாயார் துயரமுற்றுக் கூச்சலிட்டு அலறக்கண்ட ஸ்ரீராமரும் இலக்குமணரும் பயப்படாதே யென்று உறுதிகூறித் திவ்யாஸ்திரங்களைத் தொடுக்கவும், அதைக்கண்ட விராதன் நிலத்திலிறங்கி இவர்களிருவரையும் வாரி யெடுக்கவும், இவர்களும் அவன் தோளிலேறிக்கொண்டு வாளை யுருவி ஓங்கி வெட்டிய காலையில் அவன் இரண்டு புஜமும் அற்றுப் பூமியில் விழவும், ஸ்ரீராமரும் சீதையம்மனும் இளையபெருமாளும் நிலத்தில் கிடங்கொண்டு இருக்கும்போது, தேவ விமானத்துடன் அனேக ஸ்தவுத்தியங்களைச் சொல்லிப் பணிந்து சென்றான் விராதன். தேவர்கள் அடங்கா மகிழ்ச்சியுடன் புட்பமாரி பொழிந்தார்கள். அப்பால் மூவரும் நெடுந்தூரஞ் சென்று, அங்கே விரதம் - ஓமம்-யாகம்-தவம்-செபம்-சாஸ்திரப் பழக்கம் இவையாவு முணர்ந்து பிரபஞ்சத்தின் வாழ்க்கையைப் பொய்யென்றிகழ்ந்து மெய்யை நாடிக்கொண்டு இருக்கும் சரபங்கருடைய ஆசிரமத்திற்கு வந்து, அந்த மஹரிஷிய முதலிய மாதவத்தினர்க் கெல்லாம் நமஸ்காரஞ் செய்து, அவர்கள் ஆசீர்வசனமும் பெற்றுக்கொண்டு, ராக்ஷதரால் வருந்தும் அந்த உத்தமர்களுடைய துன்பம் நீங்க அபயஸ்தங் கொடுத்து, மூவரும் அவ்விடத்தி லிருந்த கோதாவிரி தீர்த்தத்தில் வந்து, இளையோனு லிடும்படியாகிய பர்ணகசாலையில் சீதாதேவியும் ஸ்ரீராமரும் எழுந்தருளியிருக்க, இளையபெருமாள் கந்தமூல பலவர்க்கங் கொண்டுவந்து உபசரித்துக் கொடுத்

துத் தலைவாய்தலிற் காத்திருந்தார். அந்த நாளையில் இராவணனென்பவன் சீதாபிராட்டியாரை எடுத்துக்கொண்டு போனான் என்று சொல்லக்கேட்ட தருமராஜன் வருந்தி நமஸ்கரித்து, சுவாமி! இராவணன் உற்பவமும் அவன் வந்து எடுத்துப்போன விபரமும் முறையாகச் சொல்லவேண்டுமென்று கேட்க, மார்க்கண்டேயர் சொல்லத் தொடங்கினார்.

ஓ தருமநந்தன! பிரமதேவனுடைய குமாரன் புலத்தியப்பிரமன். அவன் குபேரனென்னும் பிள்ளையைப் பெற்றான். அந்தப் பிள்ளையானவன் அநேகந் தவங்களைச் செய்து அளவில்லா நிதியும், அளகையம்பதியும், ஈஸ்வரனன்பும், ஈரேழு பதினான்கு லோகமும் நொடியி லுலாவிவரும் புட்பக விமானமும் பெற்று, இலங்காபுரியில் மதிப்பில்லாமல் வாழ்வுற் றிருக்குநாளையில், பெற்ற தகப்பனாகிய புலத்தியருக்குப் பிள்ளையாகிய இக்குபேரன்பேரில் விருப்பில்லாமல் வெறுப்புடன் சலிப்பாய்க் கோபங்கொண்டு, (மாதாபிதா மனநோவ வாழ்வானது ஒருநாளும்) என்னும் பழமொழிபோல் மனத்தி னினைத்து, இவனுக்குச் சத்துருவுண்டாகக் கடவதென்று தனது சரீரத்தில் இடது பாகத்தை நோக்கினார். அப்படி நோக்கவும் அந்த இடத்தி லிருந்து தேககாத்திரமும் க்ஷாத்திரமும் தோத்திரமுங்கொண்டு ஒரு சற்பாத்திரனாகிய புத்திரன் பிறந்து நமஸ்கரித்து நிற்க, அவனைக் கண்டு மகிழ்ந்து விச்சிரவாகு வென்று பெயரிட்டு, சகல நன்னெறிகளும் அனுக்கிரகஞ் செய்து தபசுக்கனுப்பினார். அவ்விச்சிரவாகு வணங்கிச் சென்று ஒரு ஆச்சிரம மியற்றிக்கொண்டு, அதில் அனேக காலந் தவஞ் செய்திருந்தார். இந்தச் சங்கதிகளை யெல்லாம் இலங்கையிலிருக்குங் குபேரன் கேள்விப்பட்டு, நமது தந்தையின் இடது பக்கத்திற் பிறந்த இவரும் நமக்குத் தந்தைதானென்று சிந்தித்து, நமக்குச் சத்துருவாகப் பிறந்த விரோதத்தைத் தவிர்த்துக்கொள்ள வேண்டுமென்றுன்னி, அவருடைய ஆச்சிரமத்திற்கு வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து ஐயனே! உமக்கு நான் பிள்ளையே யன்றி வேறல்ல; பெற்றோர் இகழ்ந்தால் பிறரும் பழிப்பார்கள் என்னுந் தன்மைபோல் என்னைக் கைவிடாமல் இரக்ஷிக்க வேண்டுமென்று வணங்கித் துதிக்க, அக் குபேரனுடைய நன்மார்க்கத்தைக் கண்டு மனமகிழ்ந்து இரக்கமுற்று, சாந்த தயை யுடையவராய் ஆசீர்வதித்தருளினார். அதுமுதற்கொண்டு குபேரனவன் நித்தியமும் அவரிடத்திற்குப் போகிறதும் வணங்குவதுமாகி, விச்சிரவாகுவின் அன்பு தன்னிடத்திற் பூரணமாகும்படி நடந்து வந்தான். இப்படி யிருக்கும் நாள்களில் ஒருநாள் மஹாலட்சுமிக்கு மேலாகிய சவுந்தரியங்களையுடைய மூன்று இராக்கத ஸ்திரீகளை அழைத்துக் கொண்டுபோய் விச்சிரவாகுவின் பாதங்களில் வணங்கி, அத்தனே! சித்தசன் மயங்கும் உத்தமராகிய இந்தப் பெண்களைத் தேவரீர் பணிவிடைக் குரித்தாய்க் கொண்டுவந்தேன். அங்கீகரிக்க வேண்டும் என்று துதிக்கவும், அவர் சம்மதித்துச் சந்தோஷங்கொண்டு மதிக்க, அதுகண்ட குபேரன் அங்கவர்களை விட்டு இலங்கைக்குப் போய்விட்டான்.

அப்பால் அந்த ஸ்திரீகள் மூன்று பேரும் நித்தியநியம உபசார பணிவிடைகளிற் குறைவு வராமல் பத்தியாய் முத்தி நிலையை நாடிய முனிவர்கள் நெறியை யேற்றிருக்கும் அவ்வுத்தமருக் குகந்த தொண்டு புரிந்து வந்தார்கள். அந்த விச்சிரவாகுவின் தவம் நிறைவேறியபோது இந்த ஸ்திரீகளை நோக்கி, ஓ என்னிடத்தில் பேரன்பு வைத்து இரவும் பகலுங் காத்து ஊழியம் பண்ணிக் கொண்டுவந்த உண்மையாகிய வாலிபப் பெண்களே! உங்களிடத்தில் எனக்கு மிகுந்த உற்சாகஞ் செனித்திருக்கின்றபடியால் நீங்கள் கேட்கும் வரங்களைத் தடையில்லாமற் றருவேனென்ன, அதற்கவர்கள் சந்தோஷமடைந்து வணங்கி, சுவாமி! எங்களுக்குக் கர்ப்பதானஞ் செய்யவேண்டுமென் றிரந்தார்கள். அப்படியே நல்லதென்று மூத்தவளாகிய புஷ்பகடை என்பவளுடனே கலந்து, அவள் கருப்பத்தில் தசக்கிரீபனும் கும்பகர்ணனும் உதிக்கச் செய்து, இரண்டாவது பெண்ணாகிய மாலியென்பவளுடன் கூடி விபீஷணனைப் பெறச் செய்து, மூன்றாவது வாகை என்பவளுடன் புணர்ந்து பசாகரனைப் புரட்டும் மோசகரனென்பவனையும், மறுபடியுஞ் சேர்ந்து ஆலகாலவிடத்தைத் திரட்டி யுருவாக்கிய சூர்ப்பனகை என்னும் பெண்ணையும் பெறச்செய்து, இந்தப் பிள்ளைகள் நால்வரும் பெண்ணொன்றும் ஆக ஐந்துபேரையும் அதிக மகிழ்வாய்ப் பாராட்டி, பிள்ளைகள் நால்வருக்கும் வேதவிதிப் பிரகாரஞ் சாதகன்மம் - நாமகன்மம்-உபநயனம், இவை முதலியன செய்து,

நான்கு வேதம்-ஆறு சாஸ்திரம் - அறுபத்து நான்கு கலைக்கியானம் - தனுர்வேதம் முதலிய வெல்லாங் கற்பித்து, பிரமதேவரைக் குறித்துத் தவம் செய்யும்படி விடுத்தார். அப்படியே நாலு புத்திரரும் ஆயிரம் வருடம் வரையிற் றவம்புரியுங் காலையில், அதுகாறும் பிரமதேவர் பிரசன்ன மாகாம லிருக்கக்கண்டு கோபங்கொண்டு, மனவயிரத்துடன் பெரியவனாகிய தசக்கிரீபன் ஒரு தலையை வாளினால் அறுத்து ஓமாக்கினியிலிட்டு அவிகொடுக்க, அப்போதும் பிரமதேவர் வராமையால் ஆயிரம் வருடத்திற்கொரு தலையாக அறுத்து ஒன்பதினாயிரம் வருடத்திற்கு ஓமஞ்செய்து, பத்தாவது தலையையும் அறுக்கப் போகின்ற சமயத்திற் பிரமதேவர் பிரசன்னமாகவந்து கரமமைத்து, அறுத்துப்போட்ட ஒன்பது சிரமும் உண்டாகச்செய்து, அவனுடைய திடதைரியத்தை நோக்கிக் களித்து இதனைப் பேசுவதாயினர்.

அப்பா தசக்ரீவனே! இதுகாறும் நீ செய்துவந்த இந்தத் தவத்திற்கு மெச்சினேன் உன்னுடைய தலைகள் எத்தனை தரம் அறுபட்டாலும் உடனே முளைக்கக்கடவது: எந்த தேவர்களாலும் உனக்கு இடையூறில்லாமலும், எந்த ஆயுதங்களாலும் சாவில்லாமல் மூன்றரைகோடி ஆயுளும், வமிசவிர்த்தியும், இலங்கை ராச்சிய பட்டாபிஷேகமும் உண்டாகக்கடவதென்று கூறி பின்னும் அவன் விரும்பிக் கேட்ட வரங்களெல்லாவற்றையும் கொடுத்து ஆலிங்கனஞ்செய்து மகிழ்ந்து, கும்பகருணனை நெருங்கி, உனக்கு வேண்டிய வரம் என்னவென்று கேட்டனர். அதற்கவன் நித்தியதத்துவங் கேட்கத் திறக்கும் வாயிலிருந்து நித்திரை தத்துவமென்று மொழி மாறிவரவும், அப்படியே உனக்குக் குறைவில்லாமல் கொடுத்தேன் கொடுத்தேனென்று கூறி, விபீஷணனைப் பார்த்து, உனக்கு வேண்டிய வரங்களைச் சொல்லென்றனர். அதற்கவன் சொல்லுகிறான்: ஓ சுவாமி! பாபரகிதமாய் புண்ணியச் சகிதமாய் பெரியோர்கள் உத்தமனென்றுன்னவும், தீங்கில்லாச் சிந்தை துன்னவும், தரையுந் தாக்ஷண்யமும் அருளல் வேண்டும் என்று போற்றிச் சாற்றவும், அன்ன வாகனத்தோர்க்கு ஆசை பெருகி, அப்பா விபீஷணா! நீ அசுரர் நடத்தையை நீக்கி, அமரர் சகாயம் நோக்கி, ஆனந்தவெள்ளந் தேக்கி, அசத்தியமென்பவை போக்கி, அருணிறைந்த சத்தியவாக்கியாய் எக்காலத்திலும் அழிவில்லாமல் சிரஞ்சீவியாய், தேவர் சகாயனாய், தருமகுணவானாய், யாவரும் கொண்டாட இருக்கக் கடவை என்று அருள்புரிந்து, கரனிடத்தில் சென்று அவன் கேட்ட பிரபல வரங்களையும்கொடுத்து, பிரம்மதேவர் சீக்கிரத்தில் சத்தியலோகம் போய்விட்டார். அப்பால், தசக்கிரீவனும் தம்பிமார்களும் இராக்ஷசக் கும்புகளைச் சேகரித்துக்கொண்டு, பூரியருக்குப் புதுச்செல்வம் வந்த பொங்காரம்போற் பொங்கிப் புகழ்ந்து, லங்கையின்பேரிற் படையெடுத்து வருவதாயினார்கள். அப்படி வருதலைக் கேட்ட இருநிதிக்கிழவன் எதிர் நிற்கமாட்டாமை விளைத்து அளகாபுரிபோய்ச் சேரவும், இலங்கையைத் தசக்கிரீவன் கைக்கொண்டு ஏகபோகமாக யிருந்தான். அதைக்கண்டு பிலத்துவாரங்களிலிருந்த இராக்கதாக ளெல்லாம் வந்து தெண்டனிட்டு இலங்கைக்குக் காவலாளராகவும் சேனாதிபதிகளாகவு மிருந்து பின்னும் அனேகமாயிரம் வெள்ளங்களாக நாளுக்குநாள் சமுத்திரப் பெருக்கம் போல் வந்து நெருங்கினார்கள். அப்படி யாவனைத் தேவர்கள் கண்டு பயமடைந்து ஓடுங்கவும், தவம் - தானம் - யாகம்-ஓமம்-யெதுவுமில்லாமலிருக்கவும், இராவணன் துரைத்தனஞ் செய்து, மண்டோதரியைக் கலியாணம் பண்ணிக்கொண்டு தம்பிமார்களுக்கும் விவாகம் நடத்தி, இராவணி-அதிகாயன்-அக்கன்-சலன்-பிலவந்தன் என்னும் அநேகம் பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டு, வெகுவாகிய ஸ்திரீகளையுந் தேவமணம்-காந்தருவமணம்-பூதமணம்-ராக்கதமணம் இப்படியாகச் செய்தவர்களிடத்திலும் புத்திரப் பேறுண்டாக லட்சம் புத்திரர்களைப் பெற்று, அப்பிள்ளைகளின் பலமும் தம்பிமார்களின் பலமும் சகோதரபலமும் சேனாசமுத்திரபலமும் பிரமதேவரின் வரமும் மற்ற நலமுங் கூடினவனாய், தனது மகத்துவ மகிழ்ச்சியினால் எவரையும் மதியாமல் அக்ரமம் அகந்தை இவை முதலியவைகள் மேலிட்டு தேவர்களை யெல்லாங் கலக்கிச் சிறை பிடித்து, தேவேந்திரனை ஓடவிட்டடித்து, யாவருக்குந் திகிலுண்டாக நடத்தி வருகின்றான்.

அப்போது தேவர்களெல்லாங்கூடி இவனுக்குத் தமயனாகிய குபேரனிடத்தில் முறையிட்டுக் கொண்டார்கள். இதைக் கேள்வியுற்ற குபேரன் வியசனமடைந்து, ஐயோ! நமது தம்பிமார்கள் சவுக்கியமாக இருந்தால் நமக்

கழகு. வருத்தமுற்றால் என்னலாபம்? தம்பி யுடையவர் படைக்கஞ்சாரென்னுந் தன்மை யாய் யான் சந்தோஷிப்பதற் கிடமில்லாமல் தேவர்களுக்கு விகிதராக இருப்பதை விட்டு அகிதராக இருக்கின்றார்களே என்று வரு ந்தி ஒரு தூதனை யழைத்து, நீ இன்னிமிடத் திற் தசக்ரீவனிடத்திற் சென்று, தமது வாழ் நாளுஞ்செல்வமும் நீடித்திருப்பதற்குப் பெரி யோரைப் பணிதலும், பொய் புறங்கூறாமை யும், இயாகாதி கிருதுக்களுஞ் செய்யவேண் டியது தெய்வ சகாயத்தைப் பெறவேண்டி யது என்று சொல்லித் தேவர்களிடத்திற் கிருபை வைக்கும்படியாய்த் தெரிவித்துவா வென்று அனுப்பினன். அப்படியே சென்ற தூதனைத் தசக்கிரீவன் கண்டு, குபேரன் சொல்லியனுப்பிய வார்த்தையை யுட்கொண்டு கண்கள் சிவந்து, தான் பரிசுத்தனும் யோக்கி யனும் நான் அசுத்தனும் அயோக்கியனுமாக நினைத்தோ புத்தி சொல்லி யனுப்பினான். அப்பா தூதா! கெட்டவனுக்கு எத்தனைப்படிப் பித்தாலுந் துட்டத்தனம் விடானென்று அவ ருடைய புத்திக்கு எட்டாமற் போனதென்ன? கெட்ட பால் நல்ல பாலாமோ? செல்லாக்காசி செல்லுமோ? மேலோரறிவு கீழோருக்கு வரு மோ? இப்படிக்கு யெனக்குச்சொல்லி யனுப்பி யது செல்வத்தின் கர்வமோ? தேவர்களைச் சகாயமாகக்கொண்ட வர்மமோ? இவ்வா றேளனமாகச் சொல்லியனுப்பியது தர்மமோ? என்று மடமட நடநடவென்று பல்லைக் கடித்து, அந்தத் தேவர்களையும் அவர்களைச் சகாயமாகக்கொண்ட புத்திமானகிய குபேரனை யும் இந் நிமிடத்திற் கண்டு வரவேண்டியது. சுங்கமூன் கூழும் இருக்க விருக்கத்தடிக்கும். இப்போது நகத்தாற் கிள்ளுவதை இனி கோடாலிகொண்டு வெட்டவரும். ஆகையாற் கேட்டபோதே மாட்டிவிட வேண்டும். தாட்டி யுடன் யாவரும் வாருங்களென்று பற்பல படைகளுடன் சென்று விற்படை-வேற்படை முதலியவைகளைக் கொண்டு அளகாபுரியை வளைந்து, அமரர்முதலிய பேர்களைத்தளைந்து, குபேரனைப் புறங்கண்டு, புஷ்பக விமானத்தை கைக்கொண்டு, அண்ட முகடுமுதல் மண்டல மும் எண்டிசையும் நடுங்க, விண்டலமார்க்க மாய் அப்புட்பக விமானத்தைச் செலுத்திச் சண்ட பிரசண்ட வேகமாகக் கொண்டுவருகி றான்.

அப்படி வருகையிற், பச்சைப் பசுங்கொ டிப் பார்வதியாருடன் பவளமலையாகிய பர மேச்சுரக் கடவுள் எழுந்தருளிய கைலையங்கிரி யின் சிகரத்தினேராய் வந்த புட்பக விமானம் அசைவற்று நின்றுபோக, அதுகண்ட தசக்ரீ வன் தன் தம்பியர் தனயர் மற்றுஞ் சேனு நாயகர் முதலாயினரோடும் பயந்து ஏதுந் தோன்றாமல் மயங்கித் தியங்கி வாடுங் காலை சொல்லுதற்கரிய தவத்தைப் புரிந்து பவத் தையொழித்துச் சிவத்தையடைந்த நந்திகே சுரர் கண்டு, ஓய் தசக்ரீபனே! திரிபுரசங்கார மூர்த்தியாகிய சித்விலாச சத்வகுண சிவபெரு மானெழுந்தருளிய வேதண்ட மாகையால், உன்னுடைய விமானஞ் செல்லாமல் நின்று போய்விட்டது. வந்தவழி திரும்பிப்போகக் கடவாய் என்று சொல்லக்கேட்ட தசக்ரீவ னுக்கு வினைவசத்தால் முன்பின் னெண்ணு மற் கோபம் வந்து, குரங்கு முகங்காட்டிச் சொல்லவந்த நீயாரென்று கேட்டனன். அப் படி கேட்கவுஞ் சர்வ சமையத்தலைமைப் பொருளாகிய சாம்பசிவ மூர்த்தியின் இனிய கிருபையைப்போன்ற நந்திதேவர் நகைத்து இராவணனை நோக்கி, என்னையோ குரங்கு முகனெனக் கூறினை? அடா அரக்கனே! உன் வாக்கினுற் சொன்ன வானரங்களினுல் உன் குடும்ப முதல் நீயும் இலங்காபுரியும் நாச மடையக் கடைவதென்று சபித்தனர். அதைக் கேட்ட தசக்கிரீவன் சப்தமேகமும் இடிந்து தாரணியில் வீழ்ந்த தன்மைப்போற் குதித்து, பளபளவென்று இருபது புஜத்தையுந் தட் டிக்கொண்டு, ஒரு காலூன்றி ஒரு கால் மடி த்து மண்டியிட்டு, சூலப்படையாற் கயிலையங் கிரியைக் கெல்லி அடுத்து, தனதொருபது தோளையு மடுத்து எடுத்தான். அமரர்-சித்தர்-அசுரர்-விஞ்சையர்-இயக்கர்-யட்சகர்-காந்தி ருவர்-முனிவர்-முதலியோரோடு பார்வதியா ருந் திடுக்கிடக் கண்ட தேவதேவன் இடது காற் பெருவிரலை யூன்றவும், இராவணன் மா சற்ற மலையின்கீழ் அகப்பட்டு, மணிமுடி நெரு ங்க, அணியுர நொறுங்க, திணிபுயம் வரு ந்த, திருவும்-தேகமும்-சிறப்பும்-சீரமும் திண் டோள் வலியுந் தவவலியுஞ் சிதைந்து தேய் ந்து, தேசுந் திறனின்றியழுது, நெடுநாளொ டுங்கி வருந்தி யிருந்தான். அமரர் முதலிய யாவரும் அகமகிழ்ந்து முகமலர்ந்து அர னைப் புகழ்ந்து பாடிப் பணிந்தார்கள். இப் படி பல்நாளடங்கிக்கிடந்து வருந்து நாளை யில், மகதியாழ்க்கதிபனுகிய நாரதமஹா முனி வரானவர் மஹா தேவனைக்கண்டு வணங்கிக் கயிலைமலையை வலம் வரும்போது, நொந்து

நைந்தழுது வாடிய இலங்கேசனைக் கண்டு, ஓ அறிவற்ற வெற்றியுற்றவனே! அடா நன்னெறியற்றவனே! எப்பொருட்கு மிறைவன் இறைவியுடன் வீற்றிருக்கும் இனிய கயிலையங்கிரியையும், ஈசனடிக்கு முடிசூடும் எம்பெருமானாகிய நந்திதேவரையும் இகழ்ந்து இக்கெதியடைந்தனை. இனித் தேறுவையோ? ஆகிலும் ஒரு உபாயஞ் சொல்லுகிறேன் கேள். இருக்கு முதலிய நான்கு வேதங்களுள்ளுஞ் சாமவேதப் பிரியனாகிய சாம்பவமூர்த்தியைச் சார்வதாய்ப் பாடுவையாகில், பிழைப்பையென்று சொல்லி நாரதர் நீங்கினர்.

உடனே இராவணேச்சுரன் ஒரு தலையையும் ஒருகரத்தையும் அறுத்து வீணை யுருவாக்கி, சகல தேவர்களும், சகல முனிவர்களும், சிவனடியார்களும் புகழ்ந்து மகிழும்படியாய்ச் சாமவேத கானம் பொழிந்தான். அது காலையில் நந்திதேவருங் களிக்க, அமரர் முதலியோரும் பார்வதியாருடன் சொலிக்க, ஞான முனிவர் முதலிய யாவரும் பிரமிக்க, சிவபிரான் அவ் விராவணனுக்குப் பிரசன்னமாகி உள்ளன்புட னுரைத்து, அவன் கேட்ட வரமும் வாழ்நாளும் அஸ்திரசஸ்திர முதலியதுங் கொடுத்தனர். அவை யனைத்தும் பெற்றபின் நந்திதேவர் முதலாகிய பலரையும் வணங்கி விடைகொண்டு, இராவண னென்னுங் கீர்த்தி எங்கும் பரிமளிக்கும்படியாய் இலங்காபுரத்தைச் சேர்ந்து வாழ்ந்திருந்தான். இப்படி சிலநாட் சென்ற பிற்பாடு இராவணனவன் கரதூஷணன் திரிசிரன் இவர்களை யழைத்து, அடர்ந்த தண்டகவனத்திற் காவலாக இருக்கும்படி சிலபடைகளுடன் அனுப்பிவிட்டு, தம்பிமார் பிள்ளைகள் முதலிய யாவரையும் இலங்கையி லிருக்கும்படி நிறுத்தி தான் புட்பகவிமானத்தி லேறிக்கொண்டு, திக்கெட்டிலிருக்குந் திக்குப் பாலகரையுந் திக்கு யானைகளையுஞ் ஜெயித்து, ஒப்புவமையற்ற ஓர் முதல்வனாகி மற்றெல்லா வுலகங்களையும் வெற்றிகொள்ளும்படி சென்றான். இங்கே தனது வளமைதங்கிய இலங்கையிற் கும்பகருணன் பெருந் தூக்கத்திலிருந்தான். புத்திரர்முதல் யாவரும் மலைச்சாரலிற் சென்று பசுபதிக் கடவுளைத்தொழுது, தவங்கள்-யாகங்கள் - விரதங்கள்-பூசைகள் இவை முதலானவைகளெல்லாஞ் செய்து அழகிய வில்லும், திவ்யாஸ்திரமும், திடவீர தைரிய பராக்கிரமமும் பெற்று வரும்படியாய்ச் சென்றார்கள். இலங்கையிற் சில ராட்சசச் சேனையும் விபீஷணனும் இருந்த சமயத்தில், தேவேந்திரனானவன் தேவர்கள் தேவகணங்கள் முதலிய எல்லோருஞ் சூழவந்து இலங்கையை வளைத்துக்கொண்டு, அரக்கர் முதலிய படைகளையெல்லாம் நொறுக்கி இறக்கவடித்து, ராட்சச ஸ்திரீகளையுஞ் சிறைபிடித்துத் துன்பமுண்டாகும்படி சின்னாபின்னமாய் முடித்து, இலங்கையைக் கொள்ளை யடித்து தெய்வலோகம் போய்ச் சேர்ந்தான். அதனால் விபீஷணன் மாத்திர மிகவும் வருந்தி இருந்தான். அக்காலத்தில் திக்குவிஜயத்திற்குப் போயிருந்த இராவணனும், தவஞ் செய்யப்போன பிள்ளைகள் முதலாகிய எல்லோரும் இலங்கையில் வந்து சேர்ந்தார்கள்.

உடனே விபீஷணன் தேவர்கள் நடத்திய அனியாயங்களை யெல்லாம் இராவணனுடனே சொல்ல, அதைக் கேட்ட மாத்திரத்தில் அவ்விராவணன் அனற்பொறி சொலிக்க நகைத்து, கையோடு கையறைந்து பெருமூச்சுவிட்டு, எயிறு தின்றெழுந்து சேனைகளியாவும் க்ஷணத்திற் சேரவேண்டியதென்று தூதுபோக்கினான். உடனே பிரமதேவனால் வகுத்த உயிர்த் தொகைகளெல்லாம் ஓரிடத்திற் சேர்ந்ததைப்போற் கறுத்திருண்ட தேகமும், செம்பட்டமயிரும், செவ்வரக்கனைய கண்ணும், தேவர் நடுங்குங் கூச்சலுமுடைய ராட்சசர் கூட்செறிந்தார்கள். கும்பகருணனுந் தூக்கம் நீங்கிக் குலவரைப்போ லெழுந்து, இந்த செய்தியை கேட்டுக் கொடுங்கோபங் கொண்டான். அந்தவேளையில் திணிந்துயர்ந்துபூரித்துப் பாரித்த தோள்களையுடைய வேலிந்திறந்த இராவணியானவன் சிவந்த பொற்சிகரம்போல எழுந்து, காளவிடமெனக் கடுத்து, தேவேந்திரன் முதற் றேவர்களைக் கொல்லவும் வெல்லவுஞ் சேனைப்படை ஏன்? தேவரீர் ஏன்? சிறிய தந்தை ஏன்? யானொருவனிருக்க விடைதாருமென்று பற்பல வரக்கருட னெழுந்து, தெய்வலோகம் போய் அடர்ந்து உறுதியாகிய போர்புரியுங் காலையில், அஷ்டவசுக்கள்முதல் திக்குப்பாலகர்கள்-தேவர்கள் மற்ற யாவர்களையும் பறக்கடித்தான். அப்படி யடிக்கும்போது இந்திர னெதிர்த்துவந்த அரக்கரையெல்லாங் காய்ந்து சிந்துசிந்தாக்க அச்சமயத்தில் ராவணியானவன் அவனை எதிர்த்து தேவர்கணமுதல் மூவர் கணங்களையு மழித்து தேவர்கள் முதல் யாவரும் புறமிட்டோட

அடித்து, நாகாஸ்திரத்தால் தேவேந்திரனுதி
யோரைப் பிணித்து தெய்வலோகத்தைக்
கொள்ளை யெடுத்து, வெகுபேரை மடித்து, அர
ம்பாஸ்திரீகளைச் சிறைபிடித்து, யாவரையும்
இரதத்துடன் கட்டிக்கொண்டு சகல வாத்திய
முழுங்க, சகல படைகளுநெருங்க, இலங்காபுரி
வந்து சேர்ந்து தந்தையின் தாளிற்பணிந்து,
சசிமணாளனைக் கொணர்ந்து, கும்பகர்ணன்
படுக்கை வீட்டின் கம்பத்திற் றளைந்து வைத்
தான். அதைக்கண்ட இராவணேச்சுரன் இந்
திரஜெயித்தென்று இராவணியை அழைத்து
இறுகத் தழுவிய காலையில், இவ்வுலகத்தை
படைத்த பிரமதேவர்கள் வருத்தப்படுவதைப்
பார்க்க மாட்டாமல் இராவணன் இடத்திற்கு
வந்து, உபசார நயிச்சிக வார்த்தைகளைப்பேசி
மேகவாகனனுகிய தேவேந்திரனைக் கட்டவிழ்
த்து விடச்செய்து ஆசீர்வதித்தேகினர். பின்பு
தசக்கிரீவன் தனக்கு யாரு நிகரில்லாமல் மூவுல
கமுங்காவல்பூண்டு, தேவர்கள் எல்லாரும் ஊழி
யஞ்செய்ய தேவஸ்திரீகள் அடிமைப்பட்டுய்ய
திக்குப்பாலகர் ஏவற்றெழில் புரிய வெள்ளைக்
குடை நீழலிற் சிங்காசனத்தில் வீற்றிருந்து
சகல வளப்பங்களுடன் குறைவில்லாமல்
இலங்காபுரியில் ஐம்பது லட்சவருடம் நற்கரு
மம்- நல்லதருமம் இவை முதலானவைகளுக்
கிடையூருய் அரசுபுரிந்து வந்தான்.

இப்படி தவம்-செபம்-ஓமம்-யாக முதலிய
பெரியோர்களின் கிர்த்தியங்கள் நடக்கவொட்
டாமல் அகிர்த்தியங்களைச் செய்து சகல தேவர்
களுந் தன்னூழியஞ் செய்ய நடத்திவரும்
அரக்கருடைய வருத்தஞ் சகிக்கமாட்டாமல்
முனிவர் யாவரும் மகமேருவிற் சென்று பிரம
தேவரைக் கண்டு வணங்கி நின்றார்கள். அவர்
அவர்களை நோக்கி வந்தகாரியம் என்ன
வென்று கேட்க, ஐயா மண்பொதுத் தந்தை
யாகிய தெய்வமே! தருமம் - தானம்-யாகம்-
அவிர்ப்பாகம் -தெய்வவணக்கம்- நல்லிணக்கம்
இவை யாவையும் கெடுத்து, தேவமாதர் பூமா
தர் யாவரையும் சிறை பிடித்து, அறத்தைக்
கெடுத்து, எங்களை அவத்தில் விடுத்து அலை
யச்செய்தான். பணைந்த தோளிணையுடைய
இலங்கைக்கிறைவன். அவனால் அழிவதைப்
பார்க்கிலும், ஐயா! உமதடியிணையே அடைக்
கலமென்று அடைந்து அழிவது மேலென்று
வந்தோம். எங்களைக் காத்துத் தருமத்தையும்
நிலைநிறுத்தக் கடவீர் என்று முறை கூறக்
கேட்ட பவளம்போன்ற இதழும், படிகம்

போன்ற மேனியுமுடைய சரஸ்வதியாருக்கு
நாயகன் அபயமென வந்த அம்முனிவர்கள்
பயமகன்று நலமெய்த ஓர் அதிசயமான சங்
கதியை உரைக்கலுற்றார். கேளும் முனிவர்
களே! முன்னமே இந்த அரக்கர்களுடைய
பொல்லாங்கை யுன்னி இவர்களை முடிக்கும்
படியாய், க்ஷீராப்தி நாயகனுகிய திருமால்
பூலோகத்திற் சூரியவமிசத் தலைவனுகுந் தச
ரதனுக்குப் புத்திரனுகப் பிறந்திருக்கின்றார்.
தேவர்கள் முதல் யாவரும் நந்தீசருடைய
ரூபத்தின் வண்ணம் வானர சிரேஷ்டராய்
உதித்து, வனத்திலும் மலைகளிலும் வளர்ந்து
வருகின்றார்கள். மந்தரை யென்பவளை பூலோ
கத்தில் அவதரிக்கும்படி யனுப்பிவைத்தேன்.
அவள் கூனியென்னும் பெயர் கொண்டு கை
கேயன் மகளிடத்தில் தாதியாக அமைந்திருக்
கின்றாள். அவளுடைய போதனையால் ஸ்ரீரா
மர் நாயகியுடன் வனத்திற்குப் போகும்படி
யாய் நேரிடும். அந்தக் காலத்தில் இளைய
பெருமாளுங் கூடப்போவார். இன்னுஞ் சில
நாளில் அரக்கனும் அவனுடைய புத்திரமித்
திர சுற்றத்தார்களும் அழிவார்கள். உங்கள்
தவமும்-அன்பும்-அறமும் செழித்துப் பொழி
யும் பயப்படாதீர்கள் என்று தம்மை யடைந்த
முனிவர்களுக்கு பிரமதேவர் சொல்ல, அவர்
கள் அகமும் முகமுமலர்ந்து களி கூர்ந்து,
துன்பம் நீங்கி இன்பம் அடைந்தவர்களாய்
சென்றார்கள். பிரமனுடைய வாக்கியப்படி
சீதையின் பொருட்டால் இராவணன் குலத்
தோடிறந்தான் என்று சொல்லிய மார்க்கண்
டேயரை யுதிஷ்டிரன் பணிந்து வணங்கி,
ஸ்வாமி! சீதை பொருட்டால் இராவணன்
இறந்த விதத்தை விபரமாகச் சொல்லி யருள
வேண்டுமென்று கேட்க, புரத்தை யெரித்த
புனிதனைப் பூசிக்க வரத்தினாற் பதினாறு வயது
பெற்ற பரமதயாளுவாகிய அம்மார்க்கண்
டேயமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

கேளுந் தருமராஜனே! இராவணனு
டைய தாயானவள் புற்கடை. இவளுடன்
பிறந்த பெண்களில் மூன்றுவது வாகையென்
பவள் வயிற்றில் கரனும் சூர்ப்பனகை யென்
னும் பாவியும் பிறந்தார்களென்று முன்னஞ்
சொல்லி இருக்கின்றோ மன்றோ? அந்தச்
சூர்ப்பனகையானவள் திரிலோக சஞ்சாரியாகி
கானகங்களிற் றிரிந்து முனிவர்கள் செய்யும்
தபஜெப முதலியவைகளை அழித்து அறந்
திரும்பி மறம் இழைத்து வருநாள்களில் ஒரு

நாள் ஸ்ரீராமமூர்த்தி சீதாசமேதராய் எழுந்தருளி யிருக்கிற பஞ்சவடி தீரத்திற்கு வந்து கோதண்டபாணியின் திவ்ய திருவுருவத்தை கண்டு தீராக்காமநோய் மேற்கொண்டு தியங்கி, மயங்கி, உயங்கி, விளர்த்து, களைத்து, தளர்ந்து, விழுந்தெழுந்து; சுழன்று, கொழுந்துவிட்டெரியு மக்கொடிய காமத்தால் வருந்தி, தனது இராக்கத ரூபத்தை மறைத்து, அரம்பா ஸ்திரீகளைப்போல வேடந்தரித்து, மகா அலங்காரத்துடன் துலங்க நடந்து, இருகொங்கைகளுங் குலுங்க நகைத்து, ஆரிய குல வீரியனிடத்தில் அடைந்து வணங்கி யொடுங்கி வொதுங்கி, ஐயனே! இன்று யான் செய்த மாதவப்பலன்பெற்றேன். கைநிறைந்த பொன்னிலுங் கண்ணிறைந்த கணவனே போதுமென்பதைக் கையுற்றேன் என்று தனது மாயமோகினி நடத்தைகள் யாவற்றையும் பற்பலவாறாக காணப்படுத்தினாள். இவைகளையெல்லாம் மாறுமற் கண்ட வீரகோதண்டபாணி அவளை நோக்கி, பெண்பாவாய் உன் எண்ணமெல்லாந் திண்ணமே; ஆனால் எனக்கோர் மனைவி யிருக்கின்றாள். தருமவிருத்தமாக ஒருறையி லிரண்டுவாள் நிறையலாகுமோ? உலகினர் பழிப்புக்கு உடன்படலாமோ? ஆகையால் அதோ இலக்குமணனென்றிருக்குங் குமாரப்பருவமுள்ள பிள்ளைக்குத் தருமபத்தினி இவ்விடத்தில் இல்லை அவனிடம் போய்ச் சேருவையாகில் உனக்குத் தக்கபடி செய்யத் தக்கவன் என்று வழிவிடவும், பழியினையுடைய பாவி, இளையவரிடத்தில் மேவி, மோகத்துயரினைக் கூவி, இருகரத்தையும் விரித்து தாவி, பஞ்சபாணனாற் என்னாவி பதைபதைக்குதே பாவிநெஞ்சம் உம்மைப் பரிந்தழைக்குதே தாலி கட்டிக்கொண்டு பணிவிடைக் குத்தரவு செய்யும். என்மேற் பரிந்து உங்கள் பட்சத்தை வையும் என்று பற்பலவிதத்தில் அவரை மயக்கம்பண்ணி நின்றாள். அதைக்கண்ட இளையபெருமாளானவர் அவள் அண்ணனிடத்திற் போய் பேசிவந்த வண்மையும் அவள் அரக்கியே யல்லது வேறல்லவென்னுந் திண்மையும் அறிந்துகொண்டு, பெருங்கோபங்கொண்டு, அரையிலிருக்கும் வாளை யுருவிக்கொண்டு, அவள் தலையிலிருக்குஞ் சுருட்டை மயிரைப் பிடித்திழுத்துத் தள்ளிக்கொண்டு மலைக் குகைபோலொத்த மூக்கையும், கறுத்த மணியினையுடைய தனத்தையும், செம்பட்டை மயிரையுடைய கொண்டையையும் அறுக்கவும் அவள் மனம் வெறுத்து அண்டமுகடு



நடுங்க உறுத்து, அபயமென்று காகுத்தனிடத்தில் ஓடிவந்து அலறி விழுந்து இதனைச் சொல்லுகிறாள்:

சுவாமி! தேவரீரை அறியாமல் இளையவர் இப்படி செய்தார். ஆகிலும் பெரிதல்ல. அடியேன் மீதில் ஏதோ தப்பிதம் இருந்து தண்டித்தீர்கள். நான் மீண்டுஞ் சுதந்தரியாய் விட்டேன். என்னை அங்கீகரிக்க வேண்டும். கரும்புக்குக் கணுவிருந்தாலுங் கசக்குமா? என்று சொல்லிச் சீதையும் பயந்து வாடத் திடுதிடுவெனச் சேரவருவதை வியர்த்த முகத்தினை யுடையவரால் இளையவர் கண்டு உடைவாளை யுருவிக்கொண்டு, இன்னமிடத்தி லோடிப் பிழை. இவ்விடத்திலிருந்தால் இன்னும் பிழைவரும் என்று சொல்லக் கேட்ட அப்பாதகி சப்தமேகம்போல இரைந்து தனி வனம் எல்லாங் கரிந்து எரிந்து புகையவும், தாரை தாரையாய் உதிரம் பெருகவும், தம்பி அறுத்த மூக்கு முலை கொண்டை இவைகளைக் கைக்கொண்டு கரனிடத்திற் சென்று, கதறிச் சிதறிக் கலங்கி அழுதாள். அவன் கால்மேற்றொழுதாள். அதைக்கண்ட கரனுடைய கண்கள் இரண்டிலுந் தங்கை மூக்கிரத்தங் குடிகொண்டதைப்போலச் சிவந்து மெய்மறந்து, பதினாலாயிரந்தேர் கரி முதலிய படைக்கூட்டமும், திரிசிரன் தூஷணன் முதலாயுள்ள துணைக்கூட்டமும், பேரிகை முதலிய வாத்தியங்களும், குடை, கொடி முதலிய பலவிதச் சின்னங்களும் விளங்கப் பயணப்பட்டுப் புறப்பட்டு சூர்ப்பனகை வழிகாட்ட வந்து, சதயமொழி நாட்டிக் காட்டில் வந்திருக்கும் ஸ்ரீராமமூர்த்தியைச் சூழ்ந்து கொண்டனன். உடனே அவர் தம்பியை நோக்கி, ஜானகியைச் சற்று நேரங் காத்திருக்கக் கடவை இந்தச் சேனைகளை இதோ எமலோகம் ஏற்றித் தூற்றி விட்டு வருகின்றேன் என்று விஜயகோதண்டத்தைக் கரத்தில் எடுத்துப் பிடித்து வளைத்து இழுத்து நாணி மாட்டி டங்காரஞ் செய்து, ஓங்காரம் இட்டுவந்த சேனைகளையுந் திரிசிரன் - தூஷணனிவர்களையுங் கொன்று குவிக்க, இதைக் கரன் கண்டு வாகைவிற்கொண்டு கையோயாமற்செய்யும் போரினில், ஐயன் அவன் வில்லை முறித்துத் தலையைத் தமித்து, ஒரு நிமிஷ நேரத்தில் வனமெல்லாம் இரத்தமும் - பிணமலைகளும்-முண்டமும்- துண்டமும்-உருளும்படியாகச் செய்தனர். பின்பு தம்பியினிடத்தில் வில்லைக் கொடுத்துக் கைகாற் சுத்தி செய்துக்

கொண்டனர். பிணங்களைப் பைசாசுகள் உண்டுக் களிக்கும் விந்தையைச் சீதை-லக்குமணர்-ஸ்ரீராமர் மூவருங்கண்டு மகிழ்ந்திருந்தார்கள். தேவர்கள் புட்பமாரி பொழிந்தார்கள். இவைகளைக் கண்ட சூர்ப்பனகை நடுநடுங்கிப் பயந்து ஒடுங்கி இனி இவ்விடம் நின்றால் நமது தலையும் போம்; இன்னொரு மூலையும் போம் என்று இலங்கையில் ஓடி, எங்கும் நின்றாடி, இரைந்து வாடி, இராவணனை நாடி, இரு காலையும் பிடித்துக்கொண்டு ஒப்பனை சொல்லிப் பாடி, ஓ இந்திரசித்தே! ஓ என்னருமை மருமகனே! என்று கூவி ஆவினைப் பிரிந்த கன்றுபோற் கதறி ஓவென்று அலறினாள். அரக்கர் குலாந்தகியாகிய அச் சூர்ப்பனகை.

இப்படி அலறியவளை இராவணன் பார்த்துப் பதறி நான்குதிசையிலுங் கோபாக்கினிப் பொறிச் சிதறி, அகட்டிலோங்கி அறைந்து, அஷ்டமா நாகமும் அஷ்டகெஜங்களும் அலைந்து உலைந்து பெருமூச்சுவிட ஆங்காரமிட்டு எழுந்து அதட்டி, ஆரடி உன்னை அங்கயீனஞ் செய்தவன்? அயனா? அரியா? அரனா? மற்ற யார்? இவர்கள் மூவருங்கூடிச் செய்த வேலையோ? கரன் முதலிய நமது படைகள் அவ்விடத்திலில்லையோ? நான் பிழைத்த பிழைப்பு இன்று இப்படி ஆச்சே. என் கீர்த்தி முதலிய வலிமை வீணாகப் போச்சே. ஓ சூர்ப்பனகா! சீக்கிரஞ் சொல்லு சீக்கிரஞ் சொல்லு யென்று கேட்கவும், அண்ணா! தேவர்கள் முதலிய திருமூர்த்திகளும் அல்ல. அயோத்தியை ஆளும் தசரதனுடைய பாலராம இராமன் இலக்குமணனென்று இருவருளர். இவருள் இராமன் பெண்சாதி சீதை என்பவள். இவர்கள் மூவரும் ரிஷி வேஷங்களுடன் பஞ்சவடியில் இருக்கக் கண்டேன். அரம்பா ஸ்திரீகள் முதலிய யாவரும் அந்தச் சீதையம்மாளுடைய அழகுக்கு நிகராக மாட்டார்கள். அந்தம்மாளை வருணித்துச் சொல்ல ஆதிசேடனுக்கும் நாவு போதாது. அப்பேர்ப்பட்ட கனநாயகியானவள் திக்கெல்லாம் ஜெயங்கொண்ட செல்வப்பிரானாகிய தேவரீருக்குக் கிடைத்திருந்தால் அதுவே திருவென்று எண்ணி, எப்படியாகிலுங் கொண்டுவந்து அண்ணனிடத்திற் சேர்த்துவிடவேண்டுமென்று உன்னி மெள்ள வசப்படுத்தப் போனேன். அவ்விடத்திற் காவலிருந்த இளையவன் என்னைப் பிடித்து அங்கயீனஞ் செய்து, உன் தமயனிடத்திற் சொல்லிக்கொள்ளடி என்று அனுப்பினான். நான் அழுது பழுதுபட்ட மூக்கு முதலியவற்றை எடுத்துக்கொண்டு கரனிடத்திற்காட்டி முறையிட்டேன். அவன் கோபத்துடன் சேனைகள் யாவற்றையுஞ் சேகரித்து திரிசிரன் - தூஷணன் முதலான இவர்களோடு வந்து வளைந்து கொடிய யுத்தம் புரிந்தான். அந்த ராமன் நொடியினில் அவனைப் படியினிற் புழுதிபோல் மடியச் செய்தான். கெடி வீரப்ரதாபனாகவும் இருக்கின்றான். அவர்களிடத்திலிருக்கின்ற பெண்ணரசியை, பெண்கள் மாணிக்கத்தை, பேரெழிற் றிலகத்தை, பெண்ணிற் பெருந்தகையை, நீர் போய்க் கண்டால், அண்ணா! நான் அவ்விடத்திற்குப் போகத் தகும் தகாதென்று தேவரீருக்கு நன்றாய்த் தெரியும். நான் எப்படி போனாலும் போகட்டும். அந்த அணங்கரசியானவள் உம்மிடத்திலிருக்க ஒரு நாள் பார்த்தாலும் போதும். அண்ணா! நான் இன்னமும் என்ன சொல்லப்போகிறேன் என்று சொல்லி ஓய்ந்தனள்.

இவ்வாறு சொல்லிய சூர்ப்பனகையின் வார்த்தையை இராவணன் உற்றுக் கேட்டு அனலிற் காட்டிய மெழுகுபோலுருகி, ஆசைமேலிட்டு, ஐயோ சூர்ப்பனகா! நீ சொல்லிய பெண்ணை நினைத்தால் என் உடலெல்லாம் உருகுது உயிருங் குருகுது நல்லதாகட்டும். உன்னை இப்படி பங்கப்படுத்திய பகிதர்களை இந்நேரமே இவ்விடங்கொண்டு வருகிறேன். நீ இவ்விடத்திற்றானே இரு என்று சொல்லி, இலங்கையைவிட்டுப் புறப்பட்டு கோகரணம் வந்தான். அவ்விடத்தில் தாடகை சம்மார காலத்திலே ஸ்ரீராமருடைய பாணங்களுக்குத் தப்பிப் பிராணனைத் தப்பவைத்துக்கொண்டு தபசு செய்கிற மாரீசன் பக்கலிற் போய் நின்றான். அந்த மாரீசன் இவனைக்கண்டு திக்கென்றெழுந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு, ஏது இவ்வளவு தூரந் தயைசெய்து மீசொல்லவேண்டும் என்று கேட்கவும், தசரத குமாரருள் இரண்டுபேர் சீதாதேவியோடு காட்டிலிருக்கின்றார்களாம். நமது சூர்ப்பனகையைக் கொண்டை, மூக்கு முதலாயறுத்து, கர தூஷணன் முதலியபேர்களைக் கொன்று இறுமாப்படைந்து யிருக்கின்றார்களாம். அந்த சீதை மெத்த அழகாயிருக்கின்றாளாம். அவளை நான் கைப்பற்றும்படியாய் அந்த இராமலட்சுமணருள் இருவருஞ் சீதையைவிட்டுப் பிரிந்து போகும்படியாகிய மாய தந்திரங்களை நீ செய்யவேண்டும்.

இது உன்னைவிட மற்றொருவரால் நடக்கமாட்டாது. என் எண்ணமும் நிறைவேற மாட்டாது. எனக்கு இந்த உபகாரம் நீ செய்ய வேண்டும் என்று வேண்டியவரையிலும் உபசரித்து மிகுதியுஞ் சொல்லவே, மாரீசன் நடு நடுங்கி சொல்லுகிறான்: ஐயா! அவர்களுடைய திருஷ்டிக்கு நீ நிகரல்ல. உன்னையும் உன்பலத்தையும் உன் குலத்தையும் உன் வரத்தையும் பெரிதாக எண்ணியிருக்கின்றாய். அவர்கள் பலத்துக்கு ஒரு திரணங்கூட சரிப்பட மாட்டாய். இதுவுமல்லாமல், உன்னை ஜெயித்த பலசாலிகளாகிய வீரர்களை யெல்லாம் ஒவ்வொரு கணைகளினால் கொல்லத்தக்கவர்கள் வீராதி வீரர்கள். அவர்களை வஞ்சனை செய்வ தென்பது நடவாது. தண்ணீருஞ் சாபமுந் தாழ்ந்தயிடத்திற் கல்லது, உயர்ந்தயிடத்திற்கு ஏறாது. வஞ்சனையினால் ஒருவேளை பிரியச் செய்தாலும் உலகமாதாவாகிய வைதேகியை நீ தொட்டு எடுக்க மாட்டாய். எடுத்துப்போனாலும் உனக்குத் தக்க பொருளல்ல. நாய்க்கு முழுத் தேங்காய் அகப்பட்டால் என்ன செய்யும்? எட்டாக் கனிக்குத் தொரடு கட்டுகிறாய்? முட்டவன் கொம்புத்தேனுக் கிச்சை கொண்டதைப்போல் எண்ணுகிறாய். (அக்கிரமம் ஆரையும்விடாது) என்னும் பழமொழியை நீ யுன்னிப்பார் என் வார்த்தையைத் தள்ளி உன் எண்ணப்படி செய்யத் துணிவையாகில், உன் புத்ரமித்ர களத்ராதிகளுடன், உன் கோட்டை - கொத்தளம் - தளம்-கனம்- இனம் முதலியவை யெல்லாம் இழந்து போய்விடுவாய் இது முடியாத காரியம். ஆதலால் இந்த யெண்ணத்தை நீ விட்டு விடு என்று மாரீசன் அவர்களுடைய பராக்கிரமங்களை வெகுவாகச் சொன்னான்.

இவ்வளவு சொல்லியுங் கேளாமல் இராவணனுக்குக் கோபம் வந்து, கயிலையங்கிரியைப் பெயர்த்த தோளும், திக்குக் கஜங்களை வென்ற மார்பும், உடைய என்னை இந்த அல்ப மனிதர்களுக்கு ஈடல்லவென்று சொல்லப்போமா? ஐம்பது லட்சம் வ்ருஷம் ஆயிசுண்டாய்ச் சகல தேவர்களையும் நான் ஜெயித்தேனே அல்லாமல், என்னை ஒருவரும் வென்றவர்களில்லை. அப்படி யிருக்க, அல்ப மனிதர்களுக்கு இளைத்தவனாக வாய் புளித்ததோ மாங்கா புளித்ததோவென்று சொல்லிப்போட்டாய். இப்போதும் என் படைகளுடன் எழுந்து யுத்தஞ் செய்து அந்த இரண்டு மனிதர்களையுங் கொன்று அந்தச் சீதையை நான் கைப்பற்றிக் கொள்ளத் திறம் இருந்தும், நாள் செல்லும் என்று கருதிச் சகல மாயையினும் வல்லவனாதலால் உன்னைக் கொண்டு துறையாய்க் கைப்பற்றலாமென்று உன்னிடத்திற் சொன்னால், எனக்குப் புத்தி சொல்லுகிறா யல்லவா? நல்லது. இப்போதும் நான் சொல்லிய வண்ணங்கேட்டு உனக்குத் தெரிந்த மாயைகளெல்லாஞ்செய்து அந்தப் பெண்ணை எனக்குக் கிடைக்கச் செய்யாவிட்டால் உன்னை என் கைவாளுக்கு இரையாக்குவேன். இந்த மண்ணுலகத்தை விட்டுப் போக்குவேன் என்றுச் சீறினான். அதைக் கேட்ட மாரீசன் சொல்லுகின்றான்: ஓ ராவணா! கேளும்: உன்னுடைய கையினால் இறந்தால் கொடிய நரகங் கிடைக்கும். தாசரதி கைக்கணையால் இறந்தால் சுவர்க்கங் கிடைக்கும். அதனாலே உன் கையில் இறப்பதைவிட, எனக்கு அது மேல். இதோ நான் போய் இறந்து இடம் பண்ணி வைக்கிறேன். சீக்கிரத்திற் குடும்பத்துடன் வந்து சேரக்கடவை யென்று சொல்லி, பொற் பிரகாசமாகிய மானுருக் கொண்டான். அதை இராவணன் மகிழ்ந்து உடன் கண்டான். அப்போதே மாரீசன் ஸ்ரீராமருடைய பர்ணசாலையினிடமே போய், சீதாதேவியார் கண்ணுக்கு எதிரில் இத்தேசங்களிற் கிடையாத சிங்கார நிறத்துடன் திரிந்து திரிந்து விளையாட, அதைக் கண்ட அம்மன் அற்புதம் அடைந்து, ஒரு நாளும் நான் பார்த்தறியாத இந்த மானைப் பிடித்துக் கொடுமென்று மேல்விளையப்போகிற காரணங்கள் தெரியாமல் ஸ்ரீராமரைக் கேட்கவும், இரகுபதியானவர் தம்பியைப் பர்ணசாலைக்குக் காவலாக்கி, வில்லும் அம்பும் கைக்கொண்டு விரைவுடன் மானைத் தொடர்ந்துபோனார். அப்படிபோகையில் தம்பி சில தரும நீதிகளையும் இராக்கதர் மாயைகளையுஞ் சொல்லித் தடுக்க, அதையுங் கேளாமற் காலை விடுக்க, மானானது சமீபத்தில் வந்து துடிக்க, அந்தச் சந்தோஷத்தின் பேரில் தானும் அதனருகி லடுக்க, இப்படி நெடுந்தூரம் போயுங் கையில் அகப்படுந் தன்மைபோல் இளைத்துக் கூடியும், ஸ்ரீராமர் விரைந்துபோய் எட்டிப் பிடிக்க ஓடியும், இப்படி ஒரு யோசனை தூரங் கொண்டுபோகையில் அவருக்குக் கைகால்களெல்லாம் வருந்தி, அதிக வெய்யிலால் அவருடைய திருமேனியுங் கருகியது.

அப்போது இராமரானவர் சிரித்து, இது உண்மையான மானல்ல. தம்பி சொல்

லியபடி மாயமானே என்று எண்ணி வில்லிற் தொடுத்திருந்த பாணத்தை விட்டனர். அந்தப் பாணம் மானினுடைய மார்பிற் பட்டு உருவும்போது, ஓ லட்சுமணா! என்று கூவி இராக்ஷச ரூபத்துடன் பூமியில் விழுந்து இறந்தது. இவைகளை ஸ்ரீராமர் கண்டு, விசுவாமித்திரர் யாகத்தில் அடிபட்டு ஓடிப்போன மாரீசனிவன். ஏதோ ஒரு வஞ்சனை செய்யக் கருதி வந்தான். இவன் கூவிய சப்தத்தால், பர்னகசாலையில் ஒரு விந்தை உண்டாயிருக்குமென்று எண்ணிக்கொண்டு, அதிக விரைவுடன் ஐயன் நடந்து வருமுன்னமே சீதாபிராட்டியார் காதில் இலட்சுமணா வென்று கூவிய கூச்சல் கேட்டு மைத்துனனை நோக்கி, ஐயா மைத்துனரே! அரக்கரால் ஏதோ அபாயம் வந்து உம்மைக் கூப்பிட்ட ஓசை கேட்டும், போகாமலும், பாராமலும் இருக்கலாமாவென்று சொல்ல, அதற்கு இலக்குமணர் சொல்லுகிறார்: என் தாயே! கேளும்: அரக்கராலும், அரசராலும், ஆகாய வாசிகளாலும், மற்றெவர்களாலும் எங்கள் அண்ணனுக்கு அபாயம் ஒருக்காலும் வராது. நான் முன்னமே இது மாயமென்று சொல்லியபடி மாரீசன் என்னும் மான் அவருக்கு மயக்க முண்டாகச் செய்த மாறுபாடான வஞ்சகமன்றி வேறல்ல, எங்கள் அண்ணனுடைய கூச்சலே யல்ல. இந்தப் பதினுன்கு உலகமும் அழிந்தாலும் எங்கள் அண்ணன் கலங்கத்தக்கவரல்லர். நீர் மயங்க வேண்டாம். இதோ வரப்போகின்றார் என்று அநேக விதத்தில் தேறுதல் சொல்லியும் சீதைக்கு மனது ஒப்பாமல் மெத்த விசனப்படவும், அதை இலக்குமணர் பார்த்து, அம்மா! அப்படி எங்கள் அண்ணனுக்கு அபாயம் வருங்காலத்தில், ஆகாச வீதியில் தேவர்களும், சந்திர சூரியர்களும், நவக்கிரகங்களும், மற்றியாவும் நிலைபெற்றிருக்கமாட்டா. நீரேன் பிரமிக்கின்றீர் என்று வணங்கிச் சொல்லக் கேட்டு, ஜானகியம்மன் சொல்லுகின்றாள்: ஆ! ஆ! நீர் சொல்லுவது (செத்தவனுடைமை இருந்தவனுக்கு அடைக்கலம்) என்னும் பழமொழி போலவும்; (மைத்துனன் இறந்தால் மயிர்போச்சு கம்பிளி எனக்காச்சு) என்பதுபோலவும் இருக்கின்றது. இவ்வளவு அபாயக் கூச்சல் கேட்டு மனந்தாள இருக்கின்றீர் அல்லவா? இலக்குமணரே! ஆனால், இதோ நான் போய் எரியுங் காட்டழலில் விழுந்து இறக்கிறேன் என்று எழுந்து நடக்க எத்தனித்தனள்.

அதை இளைய பெருமாளானவர் கண்டு இரண்டு காதுகளையும் இரு கரத்தால் மூடிக்கொண்டு, ஸ்ரீராமா! ராமா! என்று பலமுறை ஸ்மரித்தவராய் மனம் கவிண்டு, ஊழ்வினை ஒருவரையும் விடாது. தாயே! உந்தன் இஷ்டப்படி இதோ போய் வருகின்றேன். நீர் பத்திரமாய்ப் பன்னகசாலையில் இரும் என்று சொல்லிப் பலபல எண்ணங்களையும் யோசித்துக் காவலை விடுத்து, ஏன் வந்தாயென்று தமயன் கேட்டால் என்ன உத்தரம் சொல்லுவோமென்று ஏங்கி நடந்தார் இளையபெருமாள். இவ்விடத்தில் சீதாதேவியார் ஸ்ரீராமரைக்குறித்து ஏங்கிப் பர்னகசாலையில் தனிமையாக இருக்குங்காலத்தில், இது நல்ல சமயமென்று இராவணன் விருத்த தவவேடம் பூண்டு பர்னகசாலையில் வர, அதைக் கண்ட ஜானகி எதிர்கொண்டோடி மஹா ரிஷீஸ்வரரென்று அர்க்கிய பாத்தியம் அளித்து, ஆசனங்கொடுத்து உபசரித்தனள். மாய வேடக்காரன் அவ்வாசனத்தி லிருந்து, நீர் ஆர்? இவ்விடத்தில் தனிமையாய் இருக்க வந்த காரணம் யாது? என்று வினவ, வைதேகியார் சொல்லுகிறார்: ஐயா! அயோத்தியாபுரியை ஆண்ட தசரதமகாராஜன் பாலகர்களாகிய ஸ்ரீராமர் இலட்சுமணர் இவ்விருவரும் பிதுர் வாக்கிய பரிபாலனம் செய்யப் பதினான்கு வருஷம் கானகம் வந்தார்கள். நான் கோதண்டபாணியின் தருமபத்தினி. என்பேர் சீதை. நான் இவ்விடம் இருக்கின்றேன். அவர்கள் ஒரு மானைத் தொடர்ந்து போயிருக்கின்றார்கள். இதோ வருவார்கள் என்று மொழியவே அக்கபட சன்னியாசி மிகவும் இரக்கங் கொண்டவனைப்போல் சீதையைப் பார்த்து, ஐயோ! உம்மைப்போலொத்த சௌந்தரியவதிக்கு இந்தக் காட்டினில் பஞ்சைக் குடிசையில் இருக்கவும், அல்பமனிதர்களுக்கு ஸ்திரீயாகவும், இளமைப் பருவகாலம் வீணுகப் போகவும் செய்து வைத்தான் அல்லவா பிரமன். உமக்குத் தகுந்த புஜபல தீர விஜய பராக்கிரம தசக்கிரீவனை ஏற்படுத்தாமல் போனும். அப்படி கிடைத்தால், அடடா! என்ன பாக்கியம்! என்ன யோக்கியம்! என்ன சிலாக்கியம்! நன்மை வாக்கியம் யாவும் அனுபவிக்கலாமே என்று சொல்லக் கேட்ட என் தாய் இடிவிழுந்த அரவம்போ லேங்கி, இவனை ரிஷியென்றல்லவோ மரியாதை செய்தோம். இந்தப் பாவி அரக்கனே யென்று மதித்துத் திடங்கொண்டு, அடா பதிதா!

தண்டகாரண்ய வாசிகளுக்கு அபயஸ்தங் கொடுத்து அசுரர் குலத்தை அழிக்க வந்திருக்கும் ஆண்டவனை அறியாமல், மாண்ட பிணமென இருந்து உபசனித்தாய். சேண்டயங்குந் தேவர்கள் நகைக்க நீ ஈண்டிறப்பதற்குள்ளே ஓடிப் பிழையென உத்தாரஞ் சொல்லித் தாயார் பர்னகசாலேக்குள்ளே போகவும், மாயரூபத்தை மறைத்துத் தன்னுடைய பேயாங் கோர ரூபத்தைத் தெரியப்படுத்திப் பின்தொடர்ந்தான்.

அதைச் சீதை கண்டு தியக்கங்கொண்டு வாதைப்பட, உடனே அப்பாதகன் வலுவினிற் பிடித்துத் தன் தேரிலேற்றி ஆகாய வீதியாய்ச் செலுத்த, அக்காலேயில் இரதத்தில் விழுந்து எழுந்து புரண்டு ஓவென்றலறி உடல் பதைத்து, ஓ வனதேவதையே! ஓ தெய்வமே! ஓ பூமிதேவியே! ஓ என்னம்மாவென்று அழுது அரற்றும் இந்த ஓசையைக் கேட்ட சடாயுவானவர் தனித்த மேகம்போல வந்து வளைந்து, மநுநீதிகளும், தரும சாஸ்திரங்களும், ஸ்ரீராமருடைய புயவலிமையும் அநேகமாகச் சொல்லியும் அரக்கன் கேளாமல் தேரை நடத்த, ஸ்ரீ ராமஜெயமென்று கூறி, றெக்கையால் மோதித் தேரைப் பொடிப் பொடியாக்கி, அவன் தேகமெல்லாங் கால் நகத்தாற் கிழித்துப் போர் புரிவதாயினர். அப்போது இராவணனுக்குக் கோபம் வந்து பரமசிவன் கொடுத்த வாளினால் உயிர்நிலே கேட்டு இறகினை வெட்டிப் பூமியிற் றள்ளி, புஜத்தின் மேல் ஜானகியைத் தாங்கி ஆகாய மார்க்கமாகப் போனான். அப்படிப் போகையில், அம்மன் அழுது அலறிப் புரண்டு சடாயுவைக் கூவி, சுவாமி வருமளவும் உயிருடன் இருந்து என் செய்தியை உரைப்பீரென்று சொல்லி விரைந்து போகும்போது, ஓர் மலையினுச்சியிற் சிலபேர் கூடியிருக்கக் கண்டு, தன் ஆபரணங்களைக் கழற்றி, அழகிய கச்சிற் சுருட்டி அவ்விடத்திற் போட்டு, என்னாண்டவன் வந்தாற் கொடுங்களென்று அயர்ந்து சோர்ந்து அவசமுற்றிருந்தனள். இராவணன் இலங்காபுரிக்குப் புகுந்து அசோகவனத்தில் அம்மனை வைத்து, அரக்கியர் காவல் அமைத்து, அநேக வசனங்களால் திருத்தி என் வசப்படுத்துங்கள் என்று சொல்லி, இராவணன் தன் அரண்மனைக்குட் புகுந்து அளவிடற்கரிய சந்தோஷமுற்றிருந்தனன்.

இப்பால் தமயனைத் தேடிக்கொண்டு போன தம்பிக்கு ஸ்ரீராமர் எதிர்ப்படவும், ஸ்ரீராமருடைய பாதங்களில் தம்பியானவர் சாஷ்டாங்கமாக நமஸ்காரம்செய்யவும், தம்பி! நீ என்ன சீதையை ஒண்டியாய் விட்டு வந்துவிட்டாயென்று கேட்கவும், அண்ணனுக்கு நடந்த செய்திகளில் ஒன்றையும் விடாமற் சொல்லவும், அவையனைத்தும் ஸ்ரீராமர் கேட்டு, அந்தோ! சீதையை இழந்தோமென்று சொல்லி, மனதில் ஒன்றுந் தோன்றாமல் இரண்டு வீரர்களும் விரைவாக ஓடிவந்து சீதையைப் பார்க்க, அங்கு காணதபடியால் பெருமூச்சுவிட்டு வியாகூலமுற்று, தம்பி நான் சொன்னபடி சரியாச்சுதென்று ஏங்கி பூமியிற் சாய்ந்து விசாரத்துடன் மூர்ச்சை போயினர். உடனே இலக்குமணர் தமையனைத்தேற்றி தேவரீரே இப்படிவிசனப்படப்போமா? அடியேனுக்கு உத்தரங் கொடுத்தால் எப்பேர்ப்பட்ட பலசாலியானாலும் அவனையுமடித்து, எங்கள் தாயாரையுந் தேவரீரிடங் கொண்டு வந்து சேர்ப்பேன் என்ற தம்பி வாக்கியத்தைக் கேட்டுச் சிறுநகை நகைத்து, பிரளயகால உருத்திரனைப்போற் கண்கள் சிவந்து, அனற்பொறி மலியச் சினங்கொண்டு, தேவர்களும் பார்த்திருந்தார்கள் அல்லவா? இந்த மூன்று லோகத்தையும் இந்நிமிடத்தில் மாண்டுவிழச் செய்கின்றேன் பாரென்று கோதண்டத்தை வளைத்து நாணேற்றினர். உடனே இலக்குமணர் சமீபித்து, அண்ணா! ஒருவன் செய்த பெரும்பழிக்கு உலகமூன்றையும் பாழாக்க நினைப்பது தருமமல்லவே? என் தாயை எடுத்துப்போன பாவியைக் கண்டு, அவனுயிரைக்கொண்டு தேவர் தேவிகளைப் பட்டுப்போ விருக்கச்செய்வதே வீரம். அதுவே புருஷ தருமம் என்று தம்பி சொல்லக் கேட்ட இரவிகுல புங்கவன் மனந்தேறி துணிவுகொண்டு, எல்லாம் ஊழின்படி நடக்குமல்லது வேறில்லை யென்று திடத்துடன் எழுந்து சீதையைத்தேடி இருவரும் போகையில், அவ்விடத்தில் ஒரு ரதம் வந்து திரும்பிப்போயிருக்கும் வழியைப்பற்றிச் சிலதூரஞ் செல்ல, அவ்வழியில் யிறகு துணிந்து கிடக்கப்பட்ட சடாயுவைக் கண்டு தமது கையிலெடுக்க, இன்னு னெடுத்துப்போனானென்று பெயரைச்சொல்லுவதற்கு முன்னே அச் சடாயுவின் பிராணன் சுவர்க்கலோகம் போய்விட்டது. உடனே ஸ்ரீராமர் தான் கொண்ட துயரத்திலும் மேலான துயர

மடைந்து, ஐயா! மருமகளுக்கு உபகாரமாக வந்து வாளினால் வெட்டுப்பட்டிறந்தையோ! ஓ எங்கள் சிறிய தந்தையே! என்று புலம்பிக் காஷ்டத்தில் ஏற்றித் தகனஞ்செய்து கருமக்கிரியைகள் யாவுமுடித்து, இருவருந் தென்றிசையை நோக்கிச் சீதையைத் தேடி வருவதானார்கள்.

அப்படி வரும்போது அவ்வழியிற் கவந்தன் என்னும் ஒரு இராக்கதன், தலை வயிற்றுக்குட்சென்றிருக்கத்தக்கவன், ஒரு யோசனை தூரங் கைகளை நீட்டி அதற்குள் அகப்பட்ட செந்துக்களியாவையுந் தனக்குளிரையாய் வாயிற் றள்ளிக்கொண்டு அநேக நாளாய்ப் பிழைத்திருக்கின்றவன். அவன் கையில் அவ் வீரராம விலக்குமணரிருவரும் அகப்பட்டுக் கொள்ள, அவன் இவர்களைத் தன் வாயிற் றள்ளிக்கொள்ள, அதுகண்ட இவ்விரண்டு வீரர்களும் வாளையுருவிக்கொண்டு திரண்டு பருத்திருக்கும் அக்கவந்தனுடைய புயத்தை வெட்டித் தள்ளினார்கள். உடனே அவன் தேவ விமானத்திற்றோன்றி இவர்களை வந்தித்து, பூர்வத்தில் நான் வித்தியாதரன், பிரமதேவர் சாபத்தினால் இந்தப் பாபதேகம் பெற்று வெகு நாளாய்த் துன்பமுற்றேன். தேவரீருடைய கிருபா நோக்கினாற் பாபந்தொலைந்து பரிசுத்தனானேன். ஐயா! நீங்கள் சுகமாக வாழக் கடவீர்களென்று வாழ்த்தி, வணங்கி, என் தாயாகிய சீதாதேவியாரைத் திருடிக்கொண்டு போனவன் இலங்கைக் கதிபனான இராவணன். அவனை ஜெயிப்பது எளிதல்ல. அநேக வரங்களையும் அரைக்கோடி ஆயுளும் பெற்றிருக்கின்றான். ஆகையால் இன்னுஞ் சில தூரம் தெற்கு நோக்கிச் செல்வீர்களாகிற் பம்பா நதி யொன்றிருக்கின்றது. அவ்விடத்திற் கிட்கிந்த மென்றொரு மலையிருக்கின்றது. அந்த மலையில் வாலி - சுக்ரீபரென்று அண்ணன் தம்பிகள் இருக்கின்றார்கள். இருவர்களில் ஒருவர்க்கொருவர் கொடிய பகை நேரிட்டு, சுக்ரீபனென்பவன் முகமனென்னப் பட்ட மலையிலிருக்கின்றான். அவனுக்கு மந்திரிமார்கள் வாயு தேவனுக்கும் அஞ்சனாதேவிக்கும் பிறந்த அனுமார் முதல் நால்வரிருக்கின்றார்கள். அவ்விடம் நீங்கள் போனால் அவர்கள் உங்களுக்கு மிகுந்த நண்பராய் ஏற்பட்டு எழுபது வெள்ளம் வானரங்களுடனே சுக்ரீபனும் படைத்துணையாக வந்து கூடுவான். அப்பால் நீங்கள் கடலைக்கடந்து இலங்கையை வளைந்து இராவணனைக்கொன்று வெற்றியைப் பெறுவதற்கு உதவியாவார்கள். தேவரீர் என் தாயாகிய சீதையைக் கொண்டு சுகமே வரலாம் என்று தொழுது வணங்கித் தனது யதாஸ்தானமாகிய வித்தியாதரர் லோகம் போய்ச் சேர்ந்தான். இப்பால் இவர்கள் இரண்டு பேர்களும் பம்பா நதிக்கரையில் வந்திறங்க, அவ்விடத்திலிருக்கும் பக்ஷிகள் - மிருகங்கள் - மலைகள் - வனங்கள் - புட்பங்கள் இவைகளைப் பார்த்த ஸ்ரீராமமூர்த்தி சீதாதேவியின் அவயவங்களுக்கு ஒப்பு சொல்லிக் கொண்டு விசாரப்பட்டிருந்தனர்.

அக்காலையில் இவர்களைக் கண்ட சுக்கிரீபன் திகில்கொண்டு அனுமாரை யனுப்பி வைக்க, அவர் வந்து விருட்சத்தின்மீது இருந்து இவர்களுடைய திருவுருவத்தைப் பார்க்கும்போது, ஸ்ரீராமர் கண்டு குண்டலதாரியாகிய நீ யாரென்றுவினவ, அதற்கு நான் வாயுவுக்கும் அஞ்சனா தேவிக்கும் பிறந்த அனுமானென்று சொல்லி அடியினை வணங்கி வாய்புதைத்துக் கைகட்டி நிற்க, அதைக்கண்டு தங்களுடைய வரலாற்றை அவருக்குத் தெரிவிக்க, உடனே அவர்போய் சுக்கிரீபனை அழைத்து வந்து சரணம் புகச்செய்து இருவருக்கும் உறவுண்டாக்க, பின்பு இருவரும் ஸ்ரீராமரை வணங்கி அழைத்துக்கொண்டு தாங்களிருக்கும் மலையிற் போய் அலங்காரச் சாலையிற் எழுந்தருளச் செய்து, சுக்கிரீபன் தன்னுடைய தமயனுக்குந் தனக்கும் பெண் சாதியினால் நேரிட்ட பகையைச் சொல்லினன். அதைக் கேட்கவே இராமர் மெத்தவும் விசனமுற்று, அந்த வாலியைக்கொன்று உனக்கு கிஷ்கிந்தையைப் பட்டங்கட்டி வைக்கிறேனென்று அபயஸ்தங் கொடுத்தனர். அதைப்பெற்ற சுக்கிரீபனானவன் ஸ்ரீ ராமரை நோக்கி, சுவாமி! அடியேனுக்கு ஒரு சந்தேகம். தேவரீர் வாலியைக் கொல்லுவது உண்மையாகில், வருஷத்திற்கொருதரம் ஏழு மராமரத்தை இழுத்துப் பார்த்து விட்டுவிடுகிறதும், துந்துபி யென்னும் இராக்ஷதன் எலும்பை நித்தியம் அசைத்து விடுகிறதுமாய் இருக்கின்றான். அவைகளை அவன் செய்யும் வலிமைக்கு மேலாகத் தேவரீர் காட்டினால் என் மனந் திடங்கொள்ளும் என்று சுக்கிரீபன் சொல்ல, நல்லதென்று அந்த மராமரத்தினடிவாரத்திற் போய் நின்று, அது ஒரு சாப காரணத்தாற் பாம்பின்மேல் முளைந்திருக்கும்

மரமென்று அறிந்து, அதின் வாலே மிதிக்கவே ஏழுகோணலாயிருந்த அந்தபாம்பு ஒரே ஒழுங்கில் வரக்கண்டு, ஒரு பாணத்தால் ஏழு மரமும் உருவயெய்து, பின்பு துந்துபியின் எலும்பையுங் கால் விரலால் உந்திவிட்டனர். அதைக்கண்ட வானர அரசனும் மற்றையர்களும் புகழ்ந்துமகிழ்ந்து வணங்கி, இவராலே வாலியைக் கொல்லப்படு மென்று நிச்சயங்கொண்டு, மறுபடியுந் தாங்களிருக்கும் ஸ்தானத்திற்கு வந்து, சீதாதேவியார் கழற்றியெறிந்துபோன நகை மூட்டையைக் கொண்டு வந்து ஸ்ரீராமருக்கு எதிரில் வைத்து, சில நாளைக்கு முன்னே இராவணன் ஒரு அம்மனை யெடுத்துப் போகும்போது அந்த அம்மாள் போட்டமூட்டை இதுவென்று சொல்லினர்.

உடனே ஸ்ரீராமர் அம் மூட்டையைப் பிரித்து தலைநகைமுதற் பாத நகைவரைக்குஞ் சரியாக அமைந்திருக்கப் பார்த்து, உடனே தம்பியை நோக்கி, இது ஆருடைய உடமை யென்று கோதண்டபாணி கேட்க, அதற்கவர், அண்ணா! திருவடியிற் சூட்டும் நகைகள் மாத்திரம் தாயாருடையது. மற்ற ஆபரணம் ஆருடையதோ யெனக்குத் தெரியாதென்று இளையபெருமாள் சொன்னார். கேட்டீரோ தருமநந்தனா! ஸ்ரீராமர் கேட்ட வினாவுக்கு இலக்குமணர் தந்த விடையெப்படி யிருந்ததென்றால், தமயன் பத்தினி தாயாகையால் திருவடி தரிசனம் அன்றி மற்ற மேல் நோக்கம் இல்லை யென்றும், கொழுந்தன் இருக்கவேண்டிய மரியாதை உபசாரம் இதுவென்று வேதமுறைமையினால் விளங்கக் காட்டியதைப் போலும் யிருந்தது. அந்த வார்த்தையைக் கேட்டுஞ் சீதையின் திருவாபரணங்களைப் பார்த்தும் ஸ்ரீராமர் விசனப்படும்போது சுக்கிரீபன் எழுந்து திருவடிகளில் விழுந்து, சுவாமி! தேவரீர் விசனப்படவேண்டாம். என்னிடத்தி லெழுபதுவெள்ளம் வானரப் படைகள் இருக்கின்றது. ஒரு நொடிப்போதினில் இலங்கையைக் கலங்கச் செய்து, இராவணனைச் சர்வண்ணம் புரிந்து, தாயாரையுங் கொண்டுவந்து தமது திருவடிகளில் ஒப்பி வைக்கிறேன் என்று வானரமகிபன் சொல்லக்கேட்ட இராமர் மகிட்சி யடைந்து புளகமுற்றவராய், இப்போது நடக்க வேண்டிய காரிய மென்னவென்று கேட்க, வாலியைச் சம்மரிப்பதே யென்று சுக்கிரீபன் சொல்ல, நல்லது நீ வாலியினிடத்திற் சென்று போர் புரியும்படி அழைத்துக்கொண்டு வரக்கடவை யென்று அனுப்பி, தானுந் தம்பியுங் குற்றுச்செடிமறைவிற் கோதண்டபாணியாக நின்றார். அதுகாலத்திற் சுக்கிரீபன் வாலியின் அரண்மனைக்குப் போய், சுத்தவீரப்பிரதாபம் உனக்கு இருப்பது நிசமாகில் இப்போது புறப்படு யுத்தத்துக்கென்று அறைகூவினன். அக்காலையில் வாலியின் தேகத்தில் நிறைந்திருக்கும் உதிரமனைத்தும் பொங்கி, கோபம் கொழுந்துவிட்டோங்கி, இன்றைக்கு இவனைக் கொல்லுவதென்று மனவுறுதியைத்தாங்கி, இருதோளும் வீங்கும்படி எழுந்து பளபளவென்று புசத்தைத் தட்டிக்கொண்டு யுத்தத்திற்குப் பயணப்படுகையில், தாரையென்பவள் ஓடிவந்து தன் புருஷனைத் தடுத்து ஆறுமாசத்திற் கொருதரம் வருகின்றனன். இப்போதுதான் உன்னால் அடிபட்ட பச்சை உதிரம் இன்னுங் காயாதிருக்குமுன்னமே வந்து சண்டைக்கு அழைக்கின்றதை யோசிக்கவேண்டியது.

இதல்லாமலும், நானொரு சொப்பனங் கண்டேன். அயோத்தியையாளும் தசரதமகாராஜனுடைய பிள்ளைகள் இராமலட்சுமணர் என்னும் சுத்தவீரர்கள் சீதாதேவியுடன் பஞ்சவடியில் வந்து இருக்கும்போது, இராவணன் மோச மாயை செய்து ஜானகியைத் திருடிக் கொண்டு போய் இலங்கையிற் சிறைவைக்கவும், அந்தம்மாளைத் தேடிக் கொண்டுவந்த அவ்விருவரையும் உங்கள் தம்பி அடுத்துச் சரண மடைந்து, ஏழு மராமரத்தையுந் துந்துபி எலும்பையும் பரிக்ஷை பார்த்து, அவர்கள் பலத்தின்பேரில் இவ்வளவு சீக்கிரமாய்ச் சண்டைக்கு வந்து அழைக்கிறதாகவும் நான் ஒரு சொப்பனங் கண்டேன். ஆகையாலின்று போவதை நிறுத்தி நாளைக்குப் போகலாம். இன்றைக்கே போவீராகில் ஜெயங் கிடைக்கத் தக்கதாய் இருக்கவில்லை. வினைவலியுந் தன் வலியுமாற்றான் வலியுந், துணைவலியுந் தூக்கிச் செயல் என்று நீதிசொல்லி யிருப்பதால், சாரணர்களை விடுத்து எதிரி பலத்தை யறிந்து கொண்டு யுத்தத்திற்குப் போவது இராஜதருமம் என்று தாரை சொல்ல கேட்ட வாலியானவன் மகா கோபத்தோடும் உடைவாளை யுருவிக்கொண்டு, அடி பாவி குற்றமில்லாத சூரியவமிசத்திற்குக் குற்றஞ் சொன்னாய். ஒருகாலுஞ் சூரியகுலத்தரசர்கள் வஞ்சகத்துக்கு உடன்படமாட்டார்கள். மகா இரக்கமுள்ள குலம். ஒரு புறாவுக்காகத் தன் தேகத்தை அறுத்துத் துலை

யேற்றிய வமிசத்தையா பழிப்பாகச் சொன்
ஞய்? இந்நேரம் உன்னை வெட்டியறிவேன்
நீ பெண்ணுகையால் மனம் பொறுத்தேன்.
ஆனுலுந் தேவர்களுக்கு அமுதங் கடைந்து
கொடுத்த எனக்குச் சகாயப்படாமல் இவ
னுக்கு ஆர் சகாயப்படுவார்கள். அப்படி வந்
தாலுந் தன் பெண்சாதியை அபகரித்துப்
போன இராவணன் ஏன் வால்மயிரில் தொங்
கிக்கொண்டிருந்தவன். அவனை ஏன் வீரப்பிர
தாபங்களையும் யான் பெற்றிருக்கின்ற பெரு
வரங்களையுங் கேட்டறிந்திருக்கும் தான் என்
னைக்கொண்டு ஜெயித்துக்கொள்ளாமல், என்
னிடத்தில் அடிபட்டு நான் போகக்கூடாமல்
ஒரு ரிஷி சாபம் நேரிட்டிருக்கிற மலையில்
ஒதுங்கிக் கிடக்கும் அல்பனுகிய சுக்ரீபனைக்
கொண்டோ இவன் பகையை முடித்துகொள்
ளக் காத்திருக்கிறுன்? அவனு என்னை ஜெயிப்
பவன்? மேலும் அந்த ராமனுக்கும் எனக்கும்
எந்தவிதத்திலும் ஒருவிதப் பகையுமில்லை.
அவன் என்பேரில் சண்டைக்கு வரக்கூடாது.
அப்பேர்ப்பட்ட சகாய வலிமையையும் சுக்ரீ
வன் கொண்ட மனவுறுதியையும் இன்றைக்கே
நான் பார்க்கவேண்டி யிருப்பதால் யுத்தத்திற்
கென்று வெளிப்பட்ட யான் மறுபடியுந் திரு
ம்பமாட்டேன். சுக்ரீபனையும் அவனுக்குச்
சகாயமாக வந்த அவர்களையும் முடித்துத்
திரும்புவேன் வீட்டுக்குள் போவென்று அனு
ப்பிவைத்து தம்பியின்பேரில், முனைகொண்டு
வந்து ஆர்ப்பரித்தான்.

அம்மாத்திரத்தில் இருவரும் நாலடி
இரண்டடியில் திருகி இருந்து எழுந்து பது
ங்கி தாவி மேவி கூவி இடம் வலஞ் சுழன்று;
ஒருவரையொருவர் கோடையிடிபோற் குத்தி
ஒருவன் கரத்தினுற்பற்றிக்கரவென்று
காலினுல் எத்தி கரத்தினுற்பற்றிக்கரவென்று
சுழற்றி, ஆகாயவீதியில் வீசி, தலை கீழுங் கால்
மேலுமாகச் சுழன்று, பூமியில் இலகுவு
கொண்டு நின்று, சுக்ரீபன் வாலியின் மார்பில்
இருகரத்தையுங்கொண்டு மோதவும், உடனே
வாலி சுக்ரீபனைப்பிடித்துக் கரங்களினுல் அடி
த்து உடலை யொடித்து உயிரை முடித்துவிட
வேண்டுமென்று நாடினுன். அவனுடைய
மனதைக்கண்ட சுக்ரீபன் ஓடினுன். ஸ்ரீராம
மூர்த்தியின் திருவடிகளில் முடிசூடினுன்.
சுவாமி! என்னை இப்படி ஏவிவிட்டு என்னுடைய
வில் உறையும் ஆவிவிட்டுப் போகும்படி பார்த்
திருந்தது ஞாயமா? இஃதோ ருபாயமா என்
னையனே என்று அழுது வருந்துஞ் சுக்ரீபனை

இராமர் நோக்கி, அப்பா! நீங்கள் இருவருங்
குயவன் திகிரிபோற் சுழலும்போது நான்
பாணப்பிரயோகஞ் செய்தால், அது உனக்கே
படுமோ அவனுக்கே படுமோ என்னுஞ் சந்
தேகத்தினுலும் நீயென்றும் அவனென்றுந்
தெரியாமையாலும் மயங்கி யிருந்துவிட்
டேன். வேசி மாதர் விஷசூரணப் பிரயோகம்
போலானுல் நான் என்ன செய்வேன். இனி
அப்படி இரேன். இதோ இந்த புஷ்பத்தை நீ
தலையில் முடித்துக்கொண்டு மறுபடியும் வாலி
யை அழைத்துப் போர்புரியக்கடவை. எப்படி
யும் அவனை மாட்டிவிடுகிறேன் இதற்குச் சந்
தேகமில்லை என்று ஒரு பூவைச்சூடி அனுப்
பியபோது சுக்ரீபன் ஓடி, அடா வாலி! எங்கும்
ஓட்டாதே யென்று கூவி யழைத்தான். அவ்வா
றழைக்கவும் அவன் கோபந் தழைக்க ஓடி
வந்து, சமர் செய்யும்போது தாசரதி தனது
கோதண்டத்தி லவதரித்திருந்த பாணத்தை
ஆகர்ணபரியந்தம் இழுத்துவிட்டு வாலியின்
கண்ணிற்படாமல் இருந்தார். அக்காலையில்
அந்த பாணமானது வாலியின் மார்பிற்கனிந்த
வாழைப்பழத்தில் ஏறிய ஊசிபோல் நுழை
யும்போது தன் காலினுலும் வாலினுலுந் தடுத்
துப் பிடித்து இழுத்துப் பார்த்தான். அதில்
ஸ்ரீராமன் என்று எழுதியிருக்கும் முத்திரை
யை நோக்கி மூர்ச்சையாய் விழுந்து போயி
னன்.

உடனே ஸ்ரீராமரு மிலக்குமணரும் வெளி
யில் வந்து வாலியினிடத்தில் நிற்க, சுக்ரீபன்-
அங்கதன்- அனுமார்- தாரை முதலியபேர்கள்
வாலியின்பேரில் விழுந்து, ஓவென்று பதறிக்
கதறி அழுது உபசரிக்கும்போது அவ்வாலி
மூர்ச்சை தெளிந்தெழுந்து ராமருடைய திரு
முகமண்டலத்தை ஏறநோக்கிச் சொல்லுகின்
ருன். இதுவென்ன ஆச்சரியம்? சூரியவமிசத்
திற் பிறந்த ராஜனுகிய உனக்குச் சீதை போய்
விடவே, உன்னுடைய பொறுமையும் சாந்த
மும் - புகழும் சீவகாருண்யமும் பேரறிவும் -
தருமமும்- நற்குணமுங் கூடப்போய்விட்டன
வோ (கெட்டாலு மேன்மக்கள் மேன்மக்களே)
என்று சொல்லும் நீதிவாக்கியமுங் கெட்ட
தோ? மநுவிக்கியான முதலிய நீதிசாத்திரத்
தை மறந்தாயோ? பாவம் பழிக்கஞ்சாதென்று
துறந்தாயோ? உன்னளவில் ஒரு குற்றமுஞ்
செய்யாதிருக்க, என்ன குற்றத்தைக் கண்டிப்
படி செய்தாய்? ஒரு ராட்சசன் உன் மனைவியை
எடுத்துக்கொண்டுபோயிருக்க, மலையில்வாசமா
யிருக்குங் குரங்கரசனைக் கொல்லும்படி வேத

முறைமையிற் கூறி இருக்கின்றதோ? கிருபையுள்ள சூரிய வமிசத்திற்கு நீ பிள்ளையாகப் பிறந்து பழியும் பாவத்தையும் நிறைத்து வைத்தாயே? உன் குலத்தில் முன்னிருந்த கிருபையை எவர்கள் தாங்குவார்கள். அப்பா ராமா! எனக்கு பயந்து ஒளித்திருந்த ஒரு பஞ்சையாகிய சுக்ரீபன் வார்த்தையைக் கேட்டு, பாரி யோசனை செய்யாமல், சில காரியங்களைச் சாதிக்கலாமென்று நினைத்து எண்ணித் துணியாக் காரியஞ் செய்தாய். உனது பத்தினியை எடுத்துப்போன இராவணனை வெல்லவேண்டுமென்று ஒரு வார்த்தை எனக்குச் சொன்னால் என்னுடைய வால் மயிரே அவனையும் அவன் இலங்கையையுங் கொண்டு வந்து வைக்குமே? சீதாபிராட்டியாரை என்தோள்கொண்டுவந்து திருவடியிற் சேர்ப்பிக்குமே. அப்படி யிருக்க, என்னை வஞ்சித்து மறைவில் இருந்து கணை விடும்படி உனக்கு எந்த ஆசான் சொல்லிக் கொடுத்தான். என்ன விதியைக்கொண்டு எய்தாய்! ஓ வீரனே! காலத்திற்குத் தகுந்த புத்தி நேரிட்டதோ என்று வெறுத்துக் கொள்ளும் வாலியை இளையபெருமாள் நோக்கி சொல்லுகின்றார்; தம்பிக்குத் தாரமா யுற்ற பெண்ணை தான் பெற்ற பெண்ணென்று எண்ணாமல் அபகரித்த உன்னைக் கொல்லாமல் விட்டால் தரும விருத்தமென்று கொன்றோம். எதிரில் நின்று அடித்தால் நீ இரங்கி வர நேரும் அப்படி வருவையாகில் சுக்கிரீபனுக்கு நாங்கள் கொடுத்த கிஷ்கிந்தை நகரப்பட்டந் தப்பிப் போமே யென்று மறைந்து இருக்கலானோம் என்று சொல்லக்கேட்ட வாலி சொல்லுகிறான்:

ஐயா! நான் கானகத்தி லிருக்கும் மிருகம். அதிலேயுங் குரங்குச்சாதி. இதுகளுக்கு முறைமையுண்டோ? நீங்கள் செய்த்து தருமத்தின் துறைகண்டோ? எதிரிலே உங்களை நோக்கிச் சரணம் புகுந்தால் அனுக்கிரகஞ் செய்யக்கூடாது என்பது சூரியகுல நிறையோ? ஆனாலும் பரதமகாராசன் தண்டிக்கவேண்டுமேயொழிய சந்நியாசியாகிய நீங்கள் யார்? உங்களுக்குப் பாணமேது? வில்லேது? அரசின் முறைமையைச் சாந்த சொல்லேது என்று வாலி கேட்கும் போது ஸ்ரீராமர் தம்பியைக் கையமர்த்தி வாலியைப் பார்த்து, உனக்கும் நமக்கும் ஏதொரு பகையும் பழியும் இல்லை. நான் கேட்டார்பேச்சைக் கேட்டு மனைவியைப் பிரிந்திருந்த விசனத்தால் மற்றொருவனுக்கும் இப்படித்தானே துன்பம் இருக்குமென்று பாணப்பிரயோகஞ் செய்து விட்டேன். இது மிஞ்சிப்போன காரியம். ஆனால், பூர்வகர்மமும் வினைவசமும் இல்லாமல் இப்படி நடவாது. நீயுங் காயம்பட்ட வருத்தத்தினால் இப்படி துக்கப்படவும் என்னை விபகாரங் கேட்கவும், நீ சொல்லிய ஞாயங்கள் என் மார்பைத் துளைக்கவும் அச்சுது யிப்போது நான் விட்ட பாணத்தை வரவழைத்து விடுகின்றேன் உன்னையும் பிராணனுடன் பிழைக்கச் செய்கின்றேன் உன்னுடைய மனோபாவம் இப்போது தெரிய வந்தது உன் தம்பியும் நீயும் வயிரியங்களை விட்டுச் சுகமாக வாழ்ந்திருங்கள் என்று ஸ்ரீராமர் சொல்லவும், வாலி குறுநகை செய்து, சுவாமி! எங்கள் சாதியிற் காயம்படக் கூடாது. காயம் பட்டால் உயிருடனிருந்து வாழக்கூடாது. நீங்கள் முன் காயம் வாங்குவீர்கள். நாங்கள் வடுப்பட்டாச்சாதி வடுபட்டுப் பிராணனுடன் வாழமாட்டோம். மேலும் எத்தனை காலம் இருந்தாலும் இறப்பது நிச்சயமே. இனி யிருந்தாலும் இதுவரையிலும் அனுபவித்த இன்ப நலமே இந்தப் பூமியின் ஆசை பொய்யே பெண்டு பிள்ளைகள் பொய்யே எல்லாம் மாயா விசித்திரமே அல்லது மற்றொன்றல்ல. தேவரீர் திருமூர்த்தியும் ஒருமூர்த்தியாய் அவதரித்து அசுரர்குலம் வேரறுக்க வந்திருக்குங் கடவுள் உம்முடைய பாணத்தால் நான் இறக்க எத்தனை நாள் தவஞ் செய்தால் எனக்குக் கிடைக்கும். உன்னுடைய தவம் மேலானது: ஆதலால் என்னைக் குறித்து ஒன்றும் யோசிக்க வேண்டாம். இனி நடக்கவேண்டுங் காரியங்கட்கு யான் சொல்வதைக் கேளும் என்று சொல்லுகிறான்:

ஓ ஆதிமத்தியாந்த ரகிதனாகிய ஐயனே! தேவரீரைச் சில ஞாயமும் யிகழ்வுமாகப் பேசி விட்டேன் அவைகளை யெல்லாம் பொறுத்த தேவரீருடைய திருவடி எனக்குக் கட்டளையிட வேண்டியது. இதுவல்லாமல் என் தம்பி சுக்கிரீபன் அறியாதவன் என்பேரிற் காட்டியபகையை அவன் பேரிலுங் காட்டாமல், கிஷ்கிந்தைக்கு இராஜனாகப் பட்டங் கட்டி, அங்கதனை இளவரசனாக்கி இரட்சிக்க வேண்டும் என்று வாழ்த்திச் சுக்கிரீபனையும் அங்கதனையும் அழைத்து, ஸ்ரீ ராமமூர்த்தி கையில் ஒப்பிவைத்து, தன் பக்கத்தில் இருந்து அழுந் தாரையை நோக்கி, பெண்ணே! நான் அநேக ஜென்மங்களிற் செய்த தபோபலத்தினால் வைகுந்தவாசனாகிய ஸ்ரீ கோதண்

டபாணியின் திருவடிகளில் ஐக்கிய மாயினேன். நீ ஏதொன்றுக்கும் விசாரப்படவேண்டாம். எனக்கு மோட்சங் கொடுத்த தெய்வம் உன்னை ரட்சிக்கும் என்று சொல்லி அங்கதனை அழைத்து, அவன் கையில் தாரையை ஒப்பிவித்து, சோனாமேகம்போற் பொழியுங் கண்ணீரைத் துடைத்து, ஸ்ரீராமக் கடவுளை நோக்கி, சுவாமி! தேவரீருடைய பாணத்தை வரவழைத்துக்கொண்டு ஸ்ரீ வைகுந்தங் கட்டளையிடவேண்டுந் தேவதேவனே என்று சிந்தையில் தியானஞ் செய்தான். அப்படியே கிருபாநோக்கஞ் செய்யவே, தேவர்கள் பாரிஜாத புட்பங்களை வாரி யிறைக்க வாலி போய் வைகுந்தவாசக்கதி அடைந்தான். உடனே வானரவீரர்கள் -சுக்கிரீபன்-அனுமான்-அங்கதன் - தாரை இவர்கள் முதலிய பேர்களெல்லாம் பூமியிற் புரண்டு அழுது, அடங்கா விசனமுற்றுத் தேறி தம்விதி முதலிய கடன்களியாவும் ஆற்றி, ஸ்ரீராமர் திருவடிகளில் தீர்க்கதெண்டஞ் செய்தார்கள். உடனே ஸ்ரீராமர் தன் தம்பியை அழைத்து கிஷ்கிந்தைக்குப் போய் வாலி சொன்னவண்ணம் சுக்கிரீபனுக்குப் பட்டங்கட்டி, அங்கதனுக்கு இளவரசுபட்டங் கொடுத்து, யாவருந் தாரையின் உத்தரவின் வண்ணம் நடக்கும்படி திட்டஞ் செய்துவரக் கடவை யென்று அனுப்பினார். அவரும் அப்படியே சென்று, சகல சம்பிரமத்துடன் பட்டங்கட்டி வைத்து வந்தார்.

அப்பால் யாவர்களும் வந்து ஸ்ரீராமருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கி, சுவாமி! வானரப்படைகளை அழைத்து வரத் தூதர்களை அனுப்பிவிட்டோம். வருவது மழைக்காலம். ஆகையால், இதை யொழித்து வெயிற்காலம் வருகிறவரைக்கும் தயை செய்ய வேண்டும் என்று சரணம் புகுந்து கேட்க, அப்படியே ஆகட்டுமென்று சொல்ல, அது கேட்ட யாவரு மவரை நமஸ்கரித்து விடைகொண்டு கிஷ்கிந்தையிற் போய் இருந்தார்கள். இப்பால் ஸ்ரீராமர் அம் மலைச்சார்பில் இலக்குமணரா லுண்டாகிய ஓர் பர்னகசாலையிலிருந்து சீதாதேவி உருவத்தைக் குறித்து விசனம் அடைந்துகொண்டு, புரட்டாசிமாத முதல் மார்கழிமாத வரைக்குங் காலங் கழித்து இருக்கும்போது, பேரிடிகள் - மின்னல்கள் - பெருமழைகள் - மந்தாரங்கள் - அளவில்லாத வெள்ளங்கள் - இந்திர தனுசு - ஊதைக் காற்றுகள் இவைகளெல்லாம் நீங்கி, சூரியபகவானும் மகரராசியில் வந்து பிரவேசித்தான். உடனே ஸ்ரீராமர் மழைக்காலங்கள் நீங்கி வருகிறேனென்று போன சுக்கிரீபன் வராமையால் தம்பியைநோக்கி, நீ சுக்கிரீபனைக் கண்டு அழைத்துவா போவென்று அனுப்ப, அவர் அவ்வாறே செல்ல, அவரைக் கண்டவுடனே சுக்கிரீபன்முதல் யாவரும் ஓடிவந்து சாஷ்டாங்கமாக வணங்கி, நான்கு திசையிலும் இருந்துவரும் வானரப்படைகளைச் சேகரித்து வந்தார்கள். இப்படியிருக்க ஆஞ்சநேயர் ஸ்ரீராமமூர்த்தியை நமஸ்கரித்துச் சொல்லுகிறார்: சுவாமி! இந்தச் சேனைகள் இன்னு முள்ளளவுங் கூடுமுன்னாக எனது தாயாரிருக்கும் இடத்தை முன்னந் தெரிந்து கொள்ளவேண்டும் என்று சொல்ல, ஸ்ரீராமருஞ் சுக்கிரீபனும் யோசித்து, இது ஞாயமென்று கிழக்கு-வடக்கு-மேற்கு இந்த மூன்று திசைகளுக்கும் அனேகம் வானரங்களை அனுப்பிவைத்து, தெற்குத் திசைக்கு அனுமார் - அங்கதன் - சாம்புவந்தன் முதலாகிய வானர வீரர்கள் அநேகம்பேரை அனுப்பிவைத்தார்கள். கிழக்கு முதலிய மூன்று திசைகளுக்கும் போன வானரங்கள் சீதை அம்மனைத் தேடிக்காணாமல், மகாவருத்தத்தோடும் வந்து தெரிவித்து வணங்கி யிருந்தார்கள்.

இவர்கள் இவ்வாறாக தனியே தெட்சண திசையிற் போன அனுமார் முதலாகிய வீரர்கள் பற்பல இடங்களிலுந் தேடிக்கொண்டு போகையில், மிகுந்த இருளுடனே ஒரு பிலத்துவாரத்தைக் கண்டு, அதிலே வழி தெரியாமற் கால்களினால் வழிதேடித் தடவிக்கொண்டு போக, அங்கே இரத்தினகசிதமாய் அநேகங் கோடி சூரியப்பிரகாசமுடன் ஒரு பட்டினங் காண, உடனே அதிற் புகுந்து தேடிப் பார்க்கையில் அங்கே விரிந்த சடையும், சரிந்த உடையும், உலர்ந்த சரீரமும்பெற்று, யோகஞ் செய்பவர்களைப்போல் அரைக்கண் பார்வையாய்க் கண்களை மூடிக்கொண்டு, சபரி யென்னும் ஒரு மகாநாயகியார் தபசிலிருக்கக் கண்டு சீதாதேவியார் இவர்தானோ அல்லவோ என்று அனுமானங்கொண்டு அவ்விடத்தில் நின்று ஸ்ரீராமா! ராமா!! வென்று கூவினார்கள். அந்த ஸ்ரீராம மந்திரங் கேட்டவுடனே அச் சபரிநாயகியார்க்கு இந்திரனிட்ட சாபம் நீங்க, உடனே விண்ணின்றிழந்த தேவ விமானத்தில் ஏறிக்கொண்டு ஸ்ரீராமகாரியஞ் ஜெயமாகக் கடவதென்று சொல்லித் தேவலோகம்

போயினர். இந்த ஆச்சரியத்தைக் கண்ட அனுமார் முதலியயாவருஞ் சந்தோஷமுற்று, பின்பு அவ்விடம் விட்டு வெளிப்பட்டுத் தெற்கு நோக்கிச் சென்று, பட்டினங்கள்-நாடுகள்-நகர்கள்-மலைகள்-குகைகள் இவை முதலிய யாவுந்தேடி தென் சமுத்திரக்கரைவந்து சேர்ந்து, மாலிய வந்தம் என்னுங் கிரி முதலிய இடங்களுந் தேடி ஐயோ தாயார் அகப்படவில்லையே நாம் என்ன செய்வோம் ஸ்ரீ ராமரிடத்திற் சென்று சீதையம்மனைக் காணோமென்று சொல்லுவதிலும், புண்ணிய சாலியாகிய சடாயுவைப்போல் ஸ்ரீராம காரியத்திற் பிராணனை விட்டு விட்டாற் கதியடையலாம் என்று அனுமார்முதல்யாவரும் பேசிக்கொண்டிருந்தார்கள். அதைச் சடாயு தமையனாகிய சம்பாதி கேட்டு, நீங்கள் யார்? இவ்விடம் வர வேண்டிய காரியம் யாது? விசனப்படுவானேன்? என் தம்பியாகிய சடாயுவின் வார்த்தை இவ்விடத்தில் வரவேண்டிய காரணம் என்ன என்று கேட்கவும், அனுமார் சொல்லுகின்றார். ஐயா! அயோத்திமா நகரம் ஆண்ட தசரதருடைய குமாரராகிய ஸ்ரீராமரும் இலக்குமணரும் சீதாதேவியோடு பிதுர்வாக்கியத்தாற் காட்டில் வந்திருக்க, ஒரு ராக்ஷசன் வஞ்சித்து வைதேகியைக் கொண்டுபோக, அதைக் கண்டு சடாயுவானவர் யெதிர்த்து தாயை மீட்கும்படி தடுத்துப் போர்புரிய, அப்போரில் அவர் அவ்வரக்கன் வாளினாற் சிறையறுபட்டு இறக்க, அந்த ஸ்ரீராமரும் இளையவருங் கண்டு அவருக்கு உத்தரிமைகளை நடத்த, பின்பு எங்கள் அரசனாகிய சுக்கிரீபனும் ஸ்ரீராமரும் நண்பு பூண்டு ஜனகன் மாது இருக்கும் இடந்தேடி வர எங்களை அனுப்ப எவ்விடங்களிலுந் தேடியுங் காணமையால் நாங்கள் விசனமுற்றோம் என்று சொல்லினர்.

இப்படி சொல்லக் கேட்ட சம்பாதி சடாயுவைக் குறித்துத் துன்பமுற்று, ஐயோ! என் தம்பி அரக்கனால்மாள யிருந்தது அல்லவா என்றழன்று, மீண்டும் ராமகாரியத்தில் இறந்ததே எங்கட்கு மேலான மோட்சமென்று மன மகிழ்ந்து, ஐயா! வைதேகியாரை திருடிக் கொண்டு போனவன் இலங்கையில் இருக்கும் இராவணன் நேர் தெற்காகச் சமுத்திரத்தைத் தாண்டிப் போனால் அம்மனையும் அவனையும் அவனூரையுங் காணலாம். பலசாலிகளாய் உள்ளபேர் கடலைத் தாண்ட வேண்டும் என்று சொல்லி நீங்களெல்லோரும் ஸ்ரீராமமந்திரத்தைக் கூவிச் சொல்லுங்களென்று யோகத்திலிருந்து இருகாதிலும் இவர்கள் கூறிய மந்திரத்தைக்கேட்டுக்கொண்டே பிராணனைப்பிரிந்தார். அப்போதவருடைய பிள்ளையாகிய சர்ம்பு வந்தர் துயரப்பட, அத்துயரத்தை அனுமார் முதலியோர் அகற்றி, தாங்களும் கூடயிருந்து அறக்காட்டருங் கடன் முடித்து, சமுத்திரத்தை யார் தாண்டுவது என்று யோசிக்கும் போது சாம்புவந்தர் அனுமாரைத் துதித்து, சுவாமியின் முத்திரை மோதிரங் கைகொண்ட மகாநுபாவர் நீரேயன்றி வேறல்லவென்று புகழ்ந்தனர். உடனே அநுமார் ஸ்ரீ ராமருடைய திருவடிகளை மனதிற் சிந்தித்து, ஸ்ரீ ராமஜெய மென்று கந்தமாதனத்தினின்றும் பந்துபோ லெழுந்து, சிந்துவைக் கடந்து, இலங்கனியை வதைத்து, இலங்கையிற் குதித்து, அந்நகரத்திலுள்ள மாடங்கள்-கூடங்கள்-மண்டபங்கள்-மேடைகள் - சாலைகள்-சோலைகள்-ஆலயங்கள் - ராவணனுடைய அந்தப்புரங்கள் - சயனக்கிரகங்கள் இவை யாவும் புகைபோல் நுழைந்து தேடி, அசோக வனத்திற் புகுந்து, அணில்போற்றுவி, அம்மன் இருக்கும் இடத்தில் மேவி, அவ்விடத்தில் நடக்கும் விதத்தையும் இராவணனாகிய பாவியின் எண்ணத்தை அறியவேண்டி மறைந்திருக்கையில், ஓ தருமநந்தனு! சீதாதேவியாரை இராவணன் எடுத்துவந்து அசோகவனத்தில் வைத்தானென்று முன்னஞ் சொல்லி யிருக்கின்றோமன்றோ? அங்கே அவன் இரண்டாயிரம்பேர் இராக்ஷச ஸ்திரீகளையும், விபீஷணன் பெண்ணாகிய திரிச்சடையையும் காவலாக வைத்துப் பயங்காட்டும்படி சொல்லிப் போக, அவ்வண்ணம் அரக்கியர் கும்பு கூடிக் கொண்டு, இராவணனிஷ்டப்படி நடந்தால் ஈரேழு பதினான்கு லோகமும் உனக்குப் பணிவிடை செய்யும். அப்படி நடவாவிட்டால் எங்கள் கையிலிருக்கும் ஆயுதங்களினால் ஏற்றுவோம், குத்துவோம், கையிலானபடி கொல்லுவோம், கசகசவென்று மெல்லுவோம், எஃகுலக்கையைக்கொண்டு இடிப்போம், எலும்பையெல்லா மொடித்து அடிப்போம் முறிப்போமென்று பலவித பயங்காட்டுவர். அத்தன்மைகளா லுண்டாகும் பயத்தை திரிச்சடை தேற்றுவள். இத்தேறுதல்களைக் கொண்டு என் தாய் இராமநாமமே அமிர்த விருந்தாகவும், வேறு அன்னந்தண்ணீர் காய் கனி முதலிய யாவும் ஆலகால மருந்தாகவும் கொண்டு இரவும் பகலும் நித்திரையில்லாமல், இருந்த

இடத்தைவிட்டு எங்கும்பெயராமல், வெய்யல்-மழை-பனி-குளிர் எதற்கும் அஞ்சாமல், இராமலட்சுமணர் எப்படியும் சத்துருவை ஜெயித்துத் தன்னை மீட்பார்களென்று கருதி மனமஞ்சாமல், கண்களில் தாரை தாரையாய் நீர் பெருக்கி, தும்பு முதலிய புழுதிகள் தேகத்தில் படியச் சகித்து, இடைவிடாது பெருமூச்சு விட்டுக்கொண்டு, திரிச்சடை தவிர மற்ற அரக்கியர் முகத்தை ஏரெடுத்துப் பாராமல், வடக்கு முகமாய் முகம் வைத்துக் காலம் கழித்து வருவள். அத் தாயாரை அனுமார் கண்டு, இவளே லோகமாதாவென்று நிச்சயம் கொண்டிருக்கையில், சூரியன் அஸ்தங்கதனாய்ச் சந்திரன் உதயமானான்.

அந்த வேளையில் அநேகம் ஸ்திரீகளும் அரக்கர்களும் புடைசூழ்ந்து நெருங்கி வரச் சகல ஆடம்பரத்துடன் இராவணன் அசோகவனத்தில் வந்து, ஓ மாதரசி! நான் பிரமனுடைய பேரனுக்குப் பிள்ளை. ஜாதியிற் பிரமகுலம். அநேகங்கோடி வேதங்களை சிக்கறுத்து ஆயிர மாயிரமாகச் செய்து ஓதிய பராக்கிரமன். கயிலையங்கிரியைப் பெயர்த்தெடுத்தவன். அரைக்கோடி ஆயுள் பெற்றவன். இந்திரன் முதலாகிய யாவரும் வந்து பணியப்பெற்ற திண்ணியன். நூறாயிரம் பிள்ளைகளைப் பெற்றவன். தீர வீர விசய பல பராக்கிரமசாலியாகிய தம்பிமார்களை உடையவன். அளவிறந்த சேனைகளுக்கு இறைவன். சமுத்திர மத்தியில் இலங்கை நகரமுடையவன். திக்கஜங்களை உதிரங் கக்கும்படி செய்பவன். தசக்கிரீவன் என்னும் பிரதாப நாமத்தை யுடையவன். இப்படிப்பட்ட யான் உன்னை விரும்பி வேறு ஸ்திரீகளையும் நினையாமல் விடுத்து, உன்னை யடுத்து வேண்டிக்கொண்டும், உனது மனம் இரும்பிலும் கொடியதாய் இருக்கின்றதே யன்றி, இளகவில்லையே? என்னளவில் அன்பு வைத்தால் எல்லா பாக்கியமும் உன்னுடையதே? கோடி பெண்களும் உனக் கடிமையே? என் பிராணனும் உனக்குத் தத்தமே? அந்த மானிடர் இந்தச் சமுத்திரத்தைத் தாண்டி வரமாட்டார்கள். வந்தாலும், தப்பிப் பிழைக்க மாட்டார்கள். மும்மூர்த்திகளும் என்னை ஜெயிக்கமாட்டார்கள். உன்னை ஒருக்காலும் மீட்கமாட்டார்கள். ஆகையால், என்னிடத்தில் கிருபா நோக்கம் வைத்து என் பிராணனை அடிமை கொள்ளுக. என்று சாஷ்டாங்கமாகத் தெண்டஞ்செய்து எழுந்து கைகட்டி வாய் புதைத்து வணங்கி நின்று இரந்தான். இப்படியிரந்த இராவணனை, என் தாய் சிறிது நோக்காமல் தன் பிராணன்பேரில் ஆசை வைக்காமல், ஒரு துரும்பைப் பார்த்து, அடா இராவணத் துரும்பே! கயிலையைப் பெயர்த்து எடுத்ததும், அரைக்கோடி ஆயுள் பெற்றதும், பலசாலிகளாகிய இலட்சம் பிள்ளைகளை ஈன்றதும், தம்பிமார்கள் உற்றதும், அஷ்ட திக்கும் ஜெயித்தேன் என்னும் அகங்காரமும், ஆயிரம் வேதம் வருமென்னும் வித்தியா கர்வமும் கொண்டிருக்கிற நீ உன்னுடைய பத்துத் தலையும், இருபது கையும், புத்திர மித்திர களத்திராதிகளும் நாளையே நாசம் அடையப் போகின்றாய். பதிவிரதைகளுடைய வயிற்றெரிச்சல் உனது குலகோத்திரம் யாவற்றையும் எரிக்கும். யாகங்களில் தொடுக்கும் சோமபானத்திற்கு நாய் இச்சை வைத்தால் நடக்குமோ? தேவர்களுக்கும் தண்டகாரண்ணிய வாசிகளுக்கும் ஸ்ரீராமர் கொடுத்திருக்கும் அபயஸ்தம் உன்னை விடுக்குமோ? உன் தலை பத்தும், கரம் இருபதும் பூமியிலுருள, அவற்றை காக்கை-கழு-நரி-நாய்-பேய் இவைகள் பிடுங்கித் தின்னக் காலம் சமீபித்தது. போடா துரும்பே! அடா பதரே! என்று சொல்லவும் இராவணன் கோபங்கொண்டு வாளை யுருவி வெட்டவரக் கிட்டயிருந்த திரிச்சடை தடுக்க, சீதை போனால் தன்னுயிரும் போகுமென்று இராவணன் நினைத்து, இராக்கத ஸ்திரீகளை நோக்கி, இன்னும் தக்கபடி பயங்காட்டும்படி சைகை செய்து தனது அரண்மனைக்குப் போய் விட்டான்.

அப்பால் அரக்கியர் எல்லோருங்கூடி அண்டரண்டங்களுக்கும் அதிபதியாகிய தசக்கிரீவன் வந்து உன்னை ஒரு பொருளாக நினைத்து நமஸ்கரித்துக் கேட்டால் நீ சிறிது மனம் இளகாமல் இருக்கின்றா யல்லவா? அவரிடத்தி லிருக்கின்ற ஸ்திரீகளினுடைய அழகுக்கு நீ எம்மாத்திரம்? அவரை இகழ்ந்து பேசியபடியால் நாங்களே உன் பிராணனை வாங்குகிறோம் பாரென்று கோபங் காட்டி, இப்போது நாங்கள் சொன்னபடி கேட்டு இராவணனைத் தழுவி வாழ்ந்தால் சுகப்படுவை இல்லாவிட்டால், சூலத்துக்கு இரையாக்குவோம் என்று சொல்லிய இராக்கத ஸ்திரீகளினுடைய பேச்சைக் கேட்ட சீதாபிராட்டியார் அலட்சியமாக நினைத்து, அடி அரக்கிமார்களே! உங்கள் இஷ்டப்படி கொல்லுங்க

ளென்று சொல்ல, திரிச்சடையானவள் அவர்களைக் கையமர்த்தி அப்பாற் போகும்படி செய்து சீதையைப் பார்த்து, அம்மா! எங்கள் தகப்பனாராகிய விபீஷணர் ஸ்ரீ ராமருடைய செய்திகளைச் சொல்லக் கேட்டேன். அதென்னவென்றால், மாயமானைத் துரத்திப்போனதும், அது மடிந்ததும், ஓர் மாயக்கூச்சல் கேட்டு இலக்குமணரைத் தேவரீர் அனுப்பிவிட்டதும், இராவணன் மாறுவேடங்கொண்டு தங்களை எடுத்து வந்ததும், ஸ்ரீராமரும் இலக்குமணரும் பர்னகசாலையில் தேடி விசனப்பட்டு வரும்வழியில் உமக்காக இராவணனோடு எதிர்த்திறந்த சடாயுவைக் கண்டு தகனஞ் செய்ததும், பின்பு சுக்கிரீப சிநேகமாய் வாலியைக் கொன்று அச்சுக்கிரீபனுக்குப் பட்டங் கட்டியதும் மழைக்காலம் நீங்கியவுடன் வானரப் படைகளோடு யாவரும் வரவிருக்கிறதும், இப்போது சுக்கிரீபனுக்கு மந்திரியாகிய அனுமார் முதலிய பேரை நான்கு திசையிலும் போய்த் தேவரீரைத் தேடவிட்டிருக்கிறதும் கேள்விப்பட்டேன். எனக்குப் ஒரு சொர்ப்பனம் ஆச்சுது. ஸ்ரீராமதூதன் இவ்விடத்தில் வந்து உமக்கு நல்ல சமாச்சாரஞ் சொல்லக் கேட்கப் போகிறீர். பள்ளம் உள்ளயிடத்தில் தண்ணீர் நிற்கும். பதிவிரதைகளை இதராள் பாசம் வைத்தால் நாசப்படுவார்கள். நீர் கிலேசிக்க வேண்டாம் என்று திரிச்சடை கூறிய மொழியைக் கேட்ட மாத்திரத்திற் சீதாபிராட்டியார் பிராணனை யொழிக்க நினைத்த எண்ணத்தை விட்டுச் சந்தோஷம் அடைந்திருக்க, அச்சமயத்தில் அநுமாரானவர் தேக புளகாங்கிதங்கொண்டு அரக்கியரெல்லாம் அயர்ந்து நித்திரை போகும்படி அபிமந்திரித்து, தான் மெள்ள இரங்கி தாயாருக்கு எதிரில் வரும்போது ஸ்ரீ ராமா ராமாவென்று துதித்து வந்து தீர்க்கதெண்டஞ் சமர்ப்பித்து வணங்கி அடக்க ஒடுக்கத்துடன் எழுந்து இருகரத்தையுங் கூப்பி நின்றார்.

அப்படி அஞ்சலியஸ்தராய் நின்ற அநுமாரை அன்னை நோக்கி, நீ யாரப்பா? அரக்கர் மாயமோ? இராவணன் செய்யும் அநியாயமோ? அல்லது அசுபனோ? அரிபரந்தாமனுடைய தூதனோ? எனக்குத் தெரியச் சொல்லென்று கேட்கவும், தாயாருடைய திடசித்தத்தைக் கண்டு களித்து தெண்டனிட்டு, தாயே! நான் ஸ்ரீ ராமருடைய தூதன். என் பேர் அனுமான். நான்கு திக்கும் வானரச் சேனைகள் உம்மைத் தேடிக்கொண்டுபோ யிருக்கிறார்கள். நான் தெட்சண திசைக்கு வந்தேன் என்று சொல்லக்கேட்ட சீதாதேவியார் முக மலர்ந்து, அப்பா! ஸ்ரீராமரும் இளையபெருமாளுஞ் சுகமா யிருக்கின்றார்களா? என்னை மறந்துபோனார்களா? அல்லது மனதில் வைத்திருக்கின்றார்களா என்று வினவியதைக் கேட்ட அனுமார் பணிந்து தொழுது, அம்மா! சுவாமி உம்முடைய வார்த்தையின்படி மாயமான் பின் சென்று அதைக் கொன்று திரும்புகையில், தம்பியைக்கண்டு பர்னகசாலையில் உம்மைக்காணாமல் வருத்தமுற்றுத் தேடிவர, வழியிற் சடாயுவைக்கண்டு சங்கதி தெரிந்து அவருக்குரிய கடனை முடித்துக்கதியடையச் செய்து கவந்தனைமாட்டி பம்பா நதியோரத்தில் வந்திருந்து, எங்களரசன் சுக்கிரீபன் வந்து சரணம்புக அபயஸ்தங் கொடுத்து, தேவரீர் போட்ட நகைகளைக் கண்டு விசனங் கொண்டு, மறுநாள் வாலியைக் கொன்று சுக்கிரீபனுக்குக் கிஷ்கிந்தையைப் பட்டங்கட்டி, அங்கதனை இளவரசாக்கி, எழுபதுவெள்ளம் வானரப்படைகளைக் கூட்டச்செய்து மழைக்காலத்தைக் கழித்துக்கொண்டு இப்போது உம்மைத் தேடும்படி சில வானரவீரர்களைச் சேனைகளோடு அனுப்பிவைத்தனர். அவருள் யான் இத்தெற்குத் திசைக்கு வெகு வானரச்சேனையுடன் வந்து, அவ்விடத்தில் அவர்களை நிறுத்திவிட்டு நான் மாத்திரம் இவ்விடம்வந்து இலங்கை முழுமையுந்தேடி, இவ்வசோக வனத்தில் தேவரீரைக் கண்டேன். காசாம்பூவை யொத்த திருமேனியையுடைய கருணையங்கடவுள் உம்மைக்காணும் வரையில் ஆவி வைத்திருப்பது அருமையாயிருக்கின்றார் என்று அனுமார் சொல்லிய வனைத்துங் கேட்ட சீதாதேவியார் சிந்தைகளித்து, ஓ அனுமானே! ஸ்ரீராமருடைய சமாச்சாரங்களெல்லாம் இத் திரிச்சடையம்மன் சொல்லக் கேள்வியுற்றேன். ஆனாலும், ஒரு பாவியானவன் தொட்டெடுத்துப்போன என்னை நமக்கு உதவியாகமாட்டாளென்று ஒருவேளையிருந்தாலும், மோசஞ்செய்த பாவியை நாசஞ்செய்து வெற்றியைப் பெறுவது இராஜதருமமென்று சொல்லக்கடவை. நானிருக்குஞ் சுகதுக்க முதலிய யாவும் நீ பார்த்தபடியே சொல்லுவாய். அப்பால் அவர் சித்தம் எப்படியோ நான் அறியேன் என்று கண்ணீர் பெருகச்சொல்லுந் தாயார் வசனத்தை அனுமார் கேட்டு தீர்க்க தெண்டனை செய்

தெழுந்து நின்று இதனைச் சொல்லுவதாயினார்:

அம்மா! உம்மை யெப்போது காண்போமென்றும், இருக்குமிடத்தை என்று கேட்போமென்றும், ஒரு நாளை ஒரு யுகமாகக் கழித்து வருகின்றார் ஸ்ரீ ராமபிரான். இப்போது நான் போய்ச் சொன்ன மாத்திரத்தில் எழுபது வெள்ளம் வானரப்படையுடன் வந்து, எட்டு நாளையில் இந்தத்துஷ்டனையும் அவன் குடும்ப முதலிய இயாவற்றையும் நீறுகச்செய்து தேவரீரைமீட்க நாங்கள் பார்க்கப்போகிறோம் தாயே! இதோ உமக்குத் தமது திருவாழியை அடையாளமாகக் கொடுத்தாரென்று காட்டவும், என் தாய் இருகரங்களையு நீட்டி வாங்கிச் சிரத்தின்மீது வைத்து கண்களில் ஒத்தி மார்பிலணைத்து மகிழ்ந்து அனுமாரைப் புகழ்ந்து, ஓ குழந்தாய்! ஓ அஞ்சனாதேவிக்கும் வாயுவுக்கும் புத்திரனாகிய மாருதியே! நீ எப்போதுஞ் சிரஞ்சீவியாய்ப் பல்லாண்டு பல்லாண்டு வாழக்கடவை. ஓ என்றுயர் நீக்கிய தெய்வமே! என்று மகிழ்ந்து ஆசீர்வதித்து, அனுமானே! ஸ்ரீராமருக்கு என்னுடைய சூடாமணியை அடையாளமாகக் கொடுவென்று கொடுத்து இதுவரையிலும் ஒன்பது மாசமாச்சுது இன்று முதல் முப்பது நாளைக்குள்ளாக இவ்விடம் வந்து பாதகனாகிய இராவணனை மாய்த்து என்னையு மீட்டுக் கொண்டு போகாமற் போனால், என்னுவியை வைத்திரேனென்று சொல்லுக என்று கூறியதைக்கேட்ட அநுமார் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, அம்மணி! அதிசீக்கிரத்தில் ஸ்ரீ ராமமூர்த்தியை இவ்விடம் அழைத்து வந்து பகையை முடித்து உமது சிறையை விடுத்துச் சந்தோஷம்பெறச் செய்கிறேன் எனக்கு உத்தாரந்தாருந் தாயே யென்று வணங்கி விடை பெற்றுக்கொண்டு அசோகவனத்தை அழிக்கத் தொடங்கினார். அக்காலத்தில் அநேகங்கோடி அரக்கரையும், பஞ்சசேனாதிபதிகளையும், அட்சயன்முதலாகிய பேர்களையுங் கொன்று ஜெயங்கூறிய காலத்தில் அவரை இந்திரசித்து வந்தெதிர்த்துப் பிரமாஸ்திரத்தாற் கட்டிக்கொண்டுபோய் இராவணன் சமுகத்தில் விடுத்தான். அப்படி விடுக்கவும், அனுமாரானவர் தனது வாலைச்சுருட்டி உயர்ந்த ஆசனமாக அமைத்து இருக்க, அதை இராவணன் கோபித்துப்பார்த்து ஆரடா குரங்கே யென்று அவன் ஒரு மொழி கேட்க, ஸ்ரீ ராமருடைய தூதன் நானடா அடா இராவணாவென்று ஆயிரம் அடாப் பட்டங் கூற, இராவணன் தனதிருபது கண்களுஞ் சிவந்து வாளையுருவி வெட்ட வருவதாயினன். அக்காலையில் விபீஷணன் தூதரைக் கொல்லலாகாதென்று விலக்க, உடனே இராவணன் அரக்கரைக்கூவி வாலில் துணி சுற்றித் தீக்கொளுத்தும்படி கட்டளையிட, அவர்கள் அப்படியே செய்ய, அப்போது அநுமார் தன் வாலைப்பற்றிய தீயினாற் அசோகவனந்தவிர மற்ற இலங்கைப்பட்டின முழுவதும் எரித்துக் கரியாக்க, அதனால் இராவணன் முதலிய பேரும் அந்தரத்தில் ஒளிக்க, அங்கு காவலிருந்த அரக்கர் அரக்கியரியாவரும் இறக்க, மறுபடியும் இராக்ஷசத் தச்சனால் இராவணன் இலங்கையை ஏற்படுத்திக்கொண்டு குடிபுகுந்திருக்க, பின்பு விபீஷணன் முதலாகிய பேர் அநேக நீதிகளைச் சொல்லிச் சீதையை விட்டுவிடும்படி பேச, அதற்குச் சிறிது மனமொவ்வாது வெகு கோபங் கொண்டு வீற்றிருந்தான் இராவணன்.

இப்பால் அனுமார் சீதையிருக்குந் திசையைநோக்கிப் பணிந்து, ஸ்ரீராமஜெயமென்று கடலைத் தாண்டிக் கந்தமாதனத்தில் வந்து குதித்தார். அங்கிருந்த அங்கதன்-சாம்புவந்தர் முதலிய பேர்களும் ஜெயஞ் ஜெயமென்று அனுமாரைத் தழுவிக்கொண்டு, சகல செய்தியுங் கேட்டு மகிழ்ந்து மதுவனத்தில் வந்து நுழைந்து கொள்ளைகொண்டு தெற்கே போன தூதரைக்காணோமே யென்று விசனப்பட்டுக் கொண்டு இருக்கின்ற ஸ்ரீராமர் திருவடிகளுக்கெதிரில் விரைந்தோடி வந்து, வரும்போதே கண்டேன் கண்டேன் கண்டேன் சீதையை யென்று சொல்லிக் கொண்டுவந்து வணங்கி, சகல சமாச்சாரங்களையுங்கூறி சூடாமணியையுங் கரத்திற்கொடுத்தனர். அதைக் கண்ட மாத்திரத்தில் ஸ்ரீராமர் அளவிறந்த சந்தோஷம் அடைந்து புளகிக்க, இளையபெருமாள் இறுமாந்து தனது வில்லை நோக்க, சுக்கிரீபன் முதலிய பேர்கள் ஆனந்தக் கூத்தாட, அனுமாரை யாவரும் ஆலிங்கனஞ் செய்துகொள்ள, ஆகாயவாசிகள் புட்பமாரி சொரிய, அரம்பாஸ்ரீகள் சுபசோபனங்கள்பாட, அந்தச் சமயத்தில் நூறுகோடி வானரங்கள் புடை சூழ்ந்து வர நீலனென்னும் படைத்தலைவன் வந்து, ஸ்ரீராமர் இலக்ஷ்மணர் சுக்கிரீபன் இவர்கள் பாதங்களில் வீழ்ந்து வணங்கினான். இரண்டு சதகோடி வானரர் புடைசூழக் குமுதனென்

னும் படைத்தலைவன் வந்து நமஸ்கரித்து நின்றான். அறுபதுகோடி வானரர் புடைசூழ சாம்புவந்தனென்னும் படைத்தலைவன்வந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து நின்றான். கவயன் - கவையாக்கன் - மயிந்தன் - துமிந்தன்-கேசரி இவர்கள் முதலாகிய படைத்தலைவர்கள் அளவிறந்த வானரப்படைகளுடனே வந்து வணங்கியிருந்தார்கள். இன்னும் வரப்பட்ட சேனைகளையும் பதினெட்டு படைத்தலைவர்களையும் நோக்கி மகிழ்ந்து தென்முகமாகச் செல்லும்படி உத்தரவு செய்து, ஸ்ரீராமரும் இலக்ஷ்மணரும் புறப்பட்டார்கள். இந்தச் சேனைகள் பத்துயோசனை அகலத்தில் பத்து நாள் இரவும்பகலும் நடந்து தெற்குச் சமுத்திரக்கரையைச் சேரவும், ஸ்ரீராமர் சுக்கிரீபனை நோக்கி, அப்பா சுக்கிரீபா! நீ சொன்ன தொகைக்குமேற்பட்டிருக்கும்போல் இருக்கின்றது சேனைகளென்று சொல்ல, அதற்கவன் சுவாமி! இது பிரமன் ஏற்படுத்திய தொகையெவ்வளவோ அவ்வளவு இதின் மத்தியில் விர்த்தியாகியதெல்லாங் கூடியிருப்பவைகள் எண்ணற்கரியனவென்றான்.

அதைக்கேட்ட ஸ்ரீராமபிரான் மகிழ்ந்து தென்சமுத்திரத்தைக் கண்டு, இதைத் தாண்டிப்போம் உபாயம் எப்படியென்று யோசித்திருந்தார். அந்தக் காலத்தில் விபீஷணன் இராவணனுக்கு அநேகந் தருமங்களைச் சொல்லி, சீதாபிராட்டியாரைக் கொண்டுபோய் விட்டு ஸ்ரீராமரை வணங்கிக்கொண்டால் நமக்கு நலம். இல்லாவிட்டால் ஒரு குரங்கால்வந்த அவ்கேடு இப்படியிருக்க, இன்னும் எழுபது வெள்ளங் குரங்குகளும் வந்தால் எப்படி முடியுமோ என்று சொல்லக்கேட்ட இராவணன் கோபங்கொண்டு, நீ பயந்தால் ஓடிப்பிழை. இப்படி யென்னிடத்தில் வந்து அடிக்கடி சொல்லவேண்டாம் போவென்று வாளையுருவி, வெட்டவந்தான். அப்படி வரவுங் கிட்டநின்ற விபீஷணன் அவனிடத்தி னின்றுந் தப்புவித்துக்கொண்டு, நாலு மந்திரிமார்களுடன் ஆகாயவீதியாய்ப் புறப்பட்டு, ஸ்ரீராமமூர்த்தியின் பாதங்களில் வந்து வீழ்ந்து சரணமடைந்தான். உடனே ஸ்ரீராமமூர்த்தி அவனுக்கு அபயஸ்தங்கொடுத்து, இலங்காபுரிபட்டணம் உன்னுடையதென்றருள்புரிந்து ஆதரித்தனர். தேவர்கள் புட்பமாரி பொழிந்தனர். அப்பால் இராமர் முதல் யாவருங்கூடி, அவ் விபீஷணனால் இராவணனுடைய சம்பத்துகளையுஞ் சேனைப் பெருக்கங்களையுங் கேட்டு மகிழ்ந்தனர். அப்போது ஸ்ரீராமர் எழுநாள் சரசயனத்திருந்து வருணனைப் பிரார்த்திக்க, அவன் வராமையாற் (சிறுமை கண்டவர் பெருமைகண்டல்லது தேறார்) என்ற வாக்கியத்தை நினைத்து, விசயகோதண்டத்தை கொண்டு அக்கினியாஸ்திரந் தொடுத்தனர்; உடனே வருணனானவன் பொரிந்து கரிந்து ஓடி வந்து இராமருடைய திருவடிகளில் வீழ்ந்து தாழ்ந்து வருந்தினன். அதைக்கண்ட இராமர் திருவணை கட்டுவதற்கு எப்படி வகையென்று கேட்க, அதற்கு யான் முதுகு கொடுக்கிறேனென்று அவ்வருணனுடன்பட ஸ்ரீராமருக்குச் சந்தோஷம் வந்து வானரங்களை ஏவி மலைகளைப் பிடுங்கி வரும்படி உத்தரவு செய்ய அப்படியே கோடிகோடி மலைகளைக் கொண்டு வந்துபோட, அவைகளை நளன் வாங்கி அடுக்கிப் பத்து யோசனை அகலமும் நூறுயோசனை நிகளமுமாய்த் திருவணை ஏற்படுத்தி ஸ்ரீராமருடைய திருவடிகளில் நமஸ்கரித்துச் சொல்ல, அதைக்கேட்ட இராமர் சகல சேனை சயினியங்களுடன் சேதுபந்தனத்திற் சென்று இலங்கையை வளைக்க, உடனே கூடகோபுர மாடமாளிகை வனங்கள் முதலிய யாவற்றையும் வானரப்படைகள் அழித்து அட்டகாசம் பண்ணி அதஞ்செய்து கொண்டிருந்தார்கள்.

கேளும் உதிஷ்டிரரே! இந்தச் சங்கதிகளை யெல்லாம் தசக்கிரீவன் கேட்டுச் சுகசாரணரை அழைத்து, நீங்கள் போய் உளவறிந்து வாருங்கோள் என்று அனுப்பினன். அவர்கள் அவ்வாறே வந்து வானரப்படைகளில் வந்து புகுந்த மாயத்தை விபீஷணன் கண்டு ஸ்ரீராமமூர்த்தியின் சன்னிதானத்தில் விண்ணப்பஞ்செய்ய, அவர்களிடத்தில் இராமர் அநேக நீதியைச் சொல்லி இராவணனுக்குத் தெரிவித்துப் பிழைக்கும் விதத்தைத் தேடிக்கொள்ளச் சொல்லுமினென்று அனுப்பினர். அவர்கள் போய் இராவணனிடத்திற் சொல்லவும், அதுகேட்ட அரக்கன் கலகலவென்று நகைத்து, நரிக்கும்புகள் நாலுகோடி கூடிவந்தாலும் அரியாகிய சிங்கத்தை அசக்கலாமோ? இவர்கள் எல்லோரும் ஒரே காலத்தில் என் கையால் முடியப் பிரமன் எழுதியிருந்தானுக்கும் என்று வீரமேன்மைகளைப்பேசி உத்தர கோபுரத்தின் மீதேறி ஸ்ரீராமர்-இலக்குமணர்-சுக்கிரீபன் - விபீஷணன் இவர்களையும், மற்றுமுள்ள வானரப்படை-

களையும் சாரணர் காட்ட இராவணன் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது சூரியகுமாரனாகிய சுக்கிரீபனுக்கு ஒரு வீராவேசம் வந்து கிளம்பி, கோடையிடியைப்போல வடக்கு கோபுரத்தில் வேடிக்கை பார்த்துநின்ற ராவணன்மேற் போய் விழுந்து, இருவரும் கட்டிப்புரண்டு அகழியில் விழுந்து எழுந்து, கரகரவெனச் சுழன்று, இடசாரி வலசாரி கால்மாடு தலைமாடாகத் திரிந்து ராவணன் தலையிலிருந்த ரத்தின கிரீடங்கள் பத்தையும் பறித்துக்கொண்டு, சுவேலமலையிற் குதித்து, ஸ்ரீராமருடைய பாதங்களில் வைத்து, ராவணன் தலையைக் கொண்டுவந்தேன் கடவுளே யென்று வணங்கி நின்றான். இதைக்கண்டு யாவருஞ் சந்தோஷ மடைந்தார்கள். ஸ்ரீராமர் சுக்கிரீபனை நோக்கி விசனப்பட்டு, இப்படி தனிமையிற் செல்லலாகாதப்பா என்று சில நீதிகளையும் இராஜ தர்மத்தையுஞ் சொல்லிக்கொண்டிருந்தார். அங்கே ராவணன் பத்து கிரீடத்தையும் போக்கடித்துக்கொண்டு, சுக்கிரீபனைக்குத்தாற் சரீரமுழுமையும் நொந்து, ராஜமண்டபம் போயிருந்து, பலவாறான எண்ணத்தாற் பரிதபித்துக்கொண் டிருந்தான்.

இப்பால் ஸ்ரீராமர் அங்கதனை யழைத்து நீ ராவணனிடத்திற் சென்று கண்டு, சீதையைக் கொண்டுவந்து விட்டுச் சரணம் அடைகின்றையா? அல்லது யுத்தத்திற்கு வருகின்றையா என்று இரண்டிலொன்று இராஜமுறைமைப்பிரகாரங் கேட்டு வாவென்றனுப்பினார் அதற்கவன் நல்லதென்று நமஸ்கரித்துப் போய் இராவணனுக்கு எதிரில் நிற்க, அவன் நீ யாரென்று கேட்க, நான் ஸ்ரீராமசுவாமியின் தூதன், உன்னை முன்னொருபோது வாலிற் கட்டி யாட்டிய வாலியின் குமாரன். என்பேர் அங்கதன். நீ வஞ்சித்து உலகமாதாவைத் திருடிக்கொண்டு வந்தனை. அந்த அம்மனைக் கொண்டுவந்து இராமரிடம் விடுத்துச் சரண் அடைந்தாற் பிழைப்பாய். இல்லாவிட்டால் இறப்பாய் உனக்கு நல்லகாலம் இருந்தால் என்னுடன் கூடவரலாம். போல் இருந்தால் (கெடுமதி கண்ணுக்லாத்காலம் இருந்தால்) என்னும் பழமொழிபோல் குத் தோற்றுதி) என்னும் பழமொழிபோல் யுத்தத்திற்கு வரலாம். எல்லாச் சேனைகளும் வந்து இலங்கையை வளைத்துக் கொண்டார்கள் ஆதலால் நீ என்னசொல்கின்றாய் என்று கேட்கவந்தேன் என்று சொல்லிய அங்கதனை பார்த்த இராவணன் அரக்கரைப்போற் கண் சிவந்து, நடநட வென்று பல்லைக் கடித்து, அடா சிறுபிள்ளாய்! நான் கருதிக்கொண்டு வந்த சீதை திரும்பிவருவாள் என்று கனவிலும் நினைக்கவேண்டாம் யுத்தத்திற்கு வரச் சித்தமாய் இருக்கின்றேன். ஆனால் என்னிடத்திலிருக்கும் பல பாணங்களில் ஒரு பாணத்தாற் குரங்குகளையுங் கறுத்த மனிதர்களையுங் கொன்றுவிட்டால் அப்பால் இருக்கும் பாணத்திற்கு யாரும் இரையில்லையே என்று லச்சைபட்டுக்கொண் டிருக்கின்றேன். மேலும், உன் தகப்பனுருக்கும் எனக்கும் நெருங்கிய சிநேகமென்று நீ யறிந்திருந்தும், உன் தகப்பனைக் கொல்லச் சொல்லிய சுக்கிரீபனையும் அவன் பேச்சின்படி கொன்ற இராமனையும் நீ பகையாளியாய்க் கருதி, என்னிடத்திற் சேர்ந்து அவர்களைக் கொன்று பழிக்குப்பழி முடிக்காமல், அவர்களுக்கு அடிமைபோல் இருப்பது ஞாயமா? இராஜநீதியா? இதுவீரமா? பிள்ளை பிறந்து பேரைக் கெடுத்தாயே? எனக்கு நீ பிள்ளை மரியாதை உன்னை யான் பார்க்கவே மெத்த விசனம் நேரிட்டது. இப்போதே சுக்கிரீபனைக் கொன்று கிஷ்கிந்தைப்பட்டம் உனக்குக் கட்டுகிறேன். நராளையுங்கொன்று சீதையை நான் கட்டிக்கொள்ளுகிறேன் என்று சிறிதுங் கூசாமற் கூறிய இராவணனை அங்கதனேக்கி, தனது தோள்களைத் தட்டி, அண்டங் குலுங்க நகைத்து, அதட்டி, அடா இராவணா! அவிற்பாகத்திற்கு வைத்த நெய்யென்று அறியாமல், அடுத்துவந்து நக்கும் நாய்போலொத்த நீயோ சிங்கக்குட்டிக்குப் பட்டங்கட்டுவது. நீ கெட்டாய்! அடே பேயே! ஸ்ரீராமமூர்த்தியும் இலக்ஷ்மணரும் ஒரு கட்டாகவந்து வில்லை வளைத்து பாணம்பூட்டி, உன் தலைக்குக் கணக்கு வைத்திருக்கின்றார்கள். அதைத் தப்பித்துக் கொள்ளடா சவுங்கலே என்று கூறினன்.

இப்படி அங்கதன் கூறவே ராவணனுக்குக் கோபம் வந்து, தன்னெதிரில் நிற்கும் நூறாயிரம்பேர் இராக்கதரை நோக்கி இவனைக் கொல்லுங்கள் என்று உத்தரஞ்சொல்லி, அவர்களும் வந்து நெருங்க, அதைப்பார்த்து ஒவ்வொரு வுதையும் இடியும் அடியும் அறையும் முறையாகக் கொடுத்து, தரையில் வீழ்த்தி ஒருவரையும் தப்பவிடாமல் ஜடாவாய்க் கொன்று இராக்கதனைப் பார்த்து அடா துரோகி! தூதனைக் கொல்லச் சொல்லிய உனக்கு இதோ வந்தது வேதனை யென்று கூறி, ஸ்ரீராமரிடத்தில் வந்து பணிந்து, சுவாமி!

சீதையம்மனை விடுகிறதானால் தன்னுயிரை முன்னதாய்க் கொடுக்கிறேன் என்று சண்டைக்குக் கங்கணம் கட்டிக்கொண்டு இருக்கிறான் இராவணன் என்று சொல்லினன். அதைக் கேட்ட இளைய பெருமாளுக்கும் அனுமாருக்கும் சந்தோஷம் அதிகரிக்க, ஆகாசவாசிகள் சுகப்பட்டோம் என்று பூரிக்க, ஸ்ரீராமரும் இலக்ஷ்மணரும் வில்லை வளைத்து குணத்தொனி செய்து வானரப் படைகளைப் பார்த்து இலங்கை மதிலையுங் கோட்டை கொம்மைகளையும் பெயர்த்தெரியுங்கள் என்று கட்டளை யிட்டார்கள். அம்மாத்திரத்தில் வானரப்படைகள் சுற்று மதிலைப்பெயர்த்து, அகழைதூர்த்து, இலங்கைக்குள் பிரவேசித்து, மாடமாளிகை கூட கோபுரங்களை இடித்து பொடியாக்கி, இராக்கதர் முதலிய பேர்களை வதைத்து, பதைபதைக்கப் புதைத்து, ஆயுதங்களாலும் மரங்களினாலும் சிதைத்து, காலினாலும் உதைத்து துரத்தி யடித்தனர். உடனே இராக்கதசேனைகள் பாதல நடுங்க, மீதலங் குலுங்க, பற்பல முகத்திலும் பரவி, குரங்கினங்களைக் குப்பல் குப்பலாய்க் குவித்து, ஒட்டொழியாமல் அவித்து, ஒருவரையும் விடாமல் வளைத்துக் கவித்து வாட்டினார்கள். அதனால் வானரப்படைகள் ஓடோடியும் வந்து ஸ்ரீராமமூர்த்தியின் திருவடியில் வந்து வீழ, இதைக்கண்ட சுக்கிரீபன் முதலாகிய வானர வீரர்களும்புறப்பட்டு, ஓடிவந்த வானரப் படைகளைச் சேர்த்துக்கொண்டு போய் இராட்சசப் படைகளை கலக்கி அலமலக்க, அப்போது ஸ்ரீராமரும் பாணப் பிரயோகஞ் செய்ய, அதனால் அநேகம் ராக்கதர் இரதகஜதுரக பதாதிகளோடும் இறந்து இரத்தவெள்ளம் கடலைப் பொருதும்படியாயது. இப்படியாக இலங்கைப் பட்டினங் கிடுகிடுவென்று நடுங்குஞ் செய்திகளை சாரணர்களோடி இராவணனுடனே சொன்னார்கள்.

அந்த வார்த்தையைக் கேட்ட அவுணன் அதிக கோபங்கொண்டு, பத்து முடியுந் திருத்தி, இருபது தோளும் பருத்து, அளவற்ற ஆயுதங்களைத் தாங்கி, கேயூர மகுட குண்டலங்க ளணிந்து, வீரகண்டாமணியும் தரித்து இரதமேறினன். இந்திரசித்தனும் இருநூறு வெள்ளம் சேனைகளுடன் கலந்து இரதமேறினன். இப்படி இவ்விருவரும் இரதாரூடராய் வரவும், கழுகுகளும் காக்கைகளும் ஒன்றோடொன்று அடித்து வீழ்ந்தன. நாற்புறத்தும் உதிரமாரி சொரிந்தது. இந்த அவசகுனத்தைக் கண்டும் சிறிது மதிக்காமல் இருவரும் எண்ணிறந்த இராக்கதச் சேனைகளோடும் எதிர்த்து வர, இங்கே ஸ்ரீராமர் இலக்குமணர்-சுக்ரீபன்-அனுமார்-அங்கதன்-விபீஷணன்-சாம்புவந்தன் இவர் முதலாகிய பேர் எழுபது வெள்ளம் வானரப் படைகளுடன் எதிர்த்துவர, இருதிறச் சேனைகளும் பிரமுகாளும் கைகலந்து யுத்தஞ்செய்கையில், வானர வீரர்களெல்லாம் மலைகள் - மரங்கள்-குன்றுகள் இவைகளை ஓயா மாரிபோல் வாரி இறைத்துச் சாயாமல் நின்றனர். இராக்கதர்களெல்லாம் யானை-குதிரை-இரதம்-விமானம்-புலி-கரடி-சிங்கம்-யாளி - கோவேறு கழுதை-கூளிகள்-நாய்முகப் பேய்கள்-நரிமுகப் பேய்கள் இவை முதலாகிய வாகனங்களில் ஏறிக்கொண்டு, வில் - வாள் - வேல்-சூலம்-பாசம்-கதை-சக்கரம் - பிண்டி - பாலம் - எறியீட்டி-வாங்கு-சாங்கு-குடிதடி - குண்டாந்தடி - சுக்குமாந்தடி-முறுக்குத்தடி-கிலுக்குத்தடி-வளைதடி இன்னும் பற்பல ஆயுதங்களைக்கொண்டு போர் புரிந்தனர். அப்போது ஆயுதங்களினால் மலை-மரம் முதலியவைகள் அழியவும், மலை மரங்களினால் அஸ்திர சஸ்திர ஆயுதங்கள் ஒழியவும், அரக்கர் அநேகர் இறக்கவும், வானரங்கள் வெகுபேர் பறக்கவும், உதிர வெள்ளங்கள் எங்கெங்கும் சிறக்கவும், இவ்விதமாகச் சிலநேரம் யுத்தஞ் செய்து இருபடைகளும் இளைப்பாறி, மறுபடியும் போர் தொடங்கினார்கள். இராவணன் வந்து ஸ்ரீராமரை வளைத்துக்கொண்டு இருபது கரங்கொண்டு பொழியும் பாணத்தாலும், ஆயுதங்களினாலும், பனியினால் மறையும் சூரியனைப்போலானார் இராமமூர்த்தி. இந்திரஜித்து இலக்குமணரை வளைத்துக்கொண்டு பொருகினான். விருபாட்சன் சுக்கிரீபனுடன் எதிர்த்தான். அங்கதன் அரக்கர் கூட்டத்தில் ஆண் புலிபோற்சீறி ஏறினான். விபீஷணன் பிரகஸ்தனுடன் யுத்தஞ் செய்தான். இவ்விதமாக ஒருவருக்கொருவர் தொந்தயுத்தஞ் செய்தார்கள்.

இந்த யுத்தத்தில் இராவணன் ஸ்ரீ ராமருடன் நெடுநேரஞ் சண்டைசெய்து, தனது தேர்-குதிரை-கூளி-யாளி - சாரதி - கைவில் - பாணம்-கொடி-குடை - படை இவை முதலிய யாவும் அழிந்து, இரத்தவெள்ளம் வழிந்து, உள்ளங்கழிந்து, தன்னோடு வந்த இருநூறு வெள்ளஞ் சேனைகளும் பெருங்காற்றில் அகப்பட்ட பஞ்சுபோல் ஒழிந்து, தன் தேகமும்

ர்ரம்பாணத்தால் துறந்துபோக, அதனால் லச்சைகொண்டு நாண்முற்றுப் பத்துத் தலையும் நிலநோக்க இரங்கி நின்ற தசக்கிரீவனைத் தாசரதி பார்த்து, ஜானகியைக் கொண்டுவந்து விட்டு, சரணம் அடைகின்றது நன்மையா? அல்லது சண்டைசெய்வது நன்மையா? முதல் நாள் யுத்தத்தில்தானே இப்பேர்ப்பட்ட கெதி அடைந்தாயே, ஐயோ! இனியேனும் நன்றாய் யோசித்துக்கொண்டு நாளைவா போவென்று சொல்ல, மறுவார்த்தையொன்றுஞ் சொல்லாதவனாய்க் கால்நடையாக அரண்மனையைப் போய்ச் சேர்ந்தான் இராவணன். இளைய பெருமாளுடன் யுத்தஞ்செய்த இந்திரசித்துவுஞ் சாரதி-குதிரை-தேர் இவை முதலியவையோடு வில்லுமுதற் சொல்லும் அடங்கி, மிகுந்த பயமும் விசனமும் மேலிட்டு, பாதசாரியாகப் பட்டினம் போனான். விபீஷணனிடத்தில் யுத்தஞ்செய்த பிரகஸ்தன் குடை-கொடி-குதிரை-படை இவை முதல் தேருங் குமிங்கிப் போய் மகமேருவனைய தண்டாயுதத்தை விபீஷணன் மார்பில் எறிய, அவன் ஸ்ரீராமஜெயமென்று அத்தண்டாயுதத்தைத் தனதொரு கரத்திற் பிடித்துக் கரகரவென்று சுழற்றித் திரிந்து மாறி அவன் மார்பில் விடுக்க, அது போய் வையகங்கலக்கும் வானத்திடிபோற் பிரகஸ்தனுடைய மார்பிற் படவே அப்பிரகஸ்தன் வையகம் ஆசையை மறுத்து யமலோகம் போய்ச் சேர்ந்தான். தேவர்களெல்லாம் விபீஷணனை வாழ்த்தி மலர்மாறி தூற்றி ஸ்ரீராமரை ஏற்றிப் போற்றினார்கள். இராக்கதப் படைகளெல்லாம் பயந்து அயர்ந்து ஓட்டமெடுத்து வாட்டமுடித்து இராவணனை யடுத்து, உமது தம்பி விபீஷணன் நமது சேனைகளைக் கெடுத்து, பிரகஸ்தனென்னும் மந்திரியையும் படுத்தானென்று சில சொற்கள் தொடுத்தார்கள்.

அதைக் கேட்ட இலங்கை வேந்தன் குலுங்க நகைத்து, அவ்விபீஷணனடுத்திருக்கின்ற அனைவரையும் அலமலங்க அடித்து வெற்றிகொள்ளும்படி தூமாக்ஷனென்பவனை விடுக்க, அவன் அளவற்ற அவுணர்களோடு ஆலகால விஷம்போல அடுத்து, அனித்தியா கால யமன்போற் கரத்திற் சூலகத்தை எடுத்துப் பிடித்து, வானரங்களையெல்லாம் அடித்து பிரமுகானை லட்சயம் பிடித்தான். அதை அனுமார் கண்டு, கண்கள் சிவக்கக் கோபங்கொண்டு வாடிய வானரச் சேனைகளைக் கூட்டிக்கொண்டு மலைகள் மரங்களைப் பிடிங்கிக்கொண்டு இராக்கதர்பேரில் எறியவும், அவர்கள் பற்றிய படைகள் தறியவும், உடனே யாவரும் புறமுதுகிட்டு முறியவும், அது கண்ட தூமாட்சன் அனுமாரை எதிர்த்துச் சாட, அனுமாரு மவனோடு மல்யுத்தம் போட, மலையுடன் மலை எதிர்த்ததைப்போல் தலையுடன் தலைமோதியும், கரத்தோடுகரம் பத்தியும், காலோடுகால்பிணைத்தும், கீழுமேலாக விழுந்தும், கிறுகிறெனச் சுழற்றி எறிந்தும், திக்குமுக்கலாடி விக்கி உதிரங் கக்கும்படி தூமாட்சன் மார்பில் அனுமார் குத்த, அவனாவி இமய லோகத்தைப் பற்ற, அரக்கர் சேனை அடங்கலுஞ் சுழன்று மடிய, சுகசாரணரோடி, தசக்கிரீவன் அடியில் முடிசூடி, ஐயா! நீர் இவ்விடம் வந்த பிற்பாடு வானரவீரர்கள் மேலிட்டு இராட்சதப் படைகளை முடித்து தூமாட்சனையுங் கொன்று, இலங்கைப் பட்டினத்தையும் இடித்து, இந்தக் கடலையுந் துற்கின்றார்கள் என்று சொல்லக் கேட்ட இராவணன் இடிவிழுந்த மரம்போலெரிந்து, இவ்வளவு வானரங்களையு மிரண்டு நரர்களையும் எடுத்து விழுங்கி ஏப்பமிடும்படியாகிய என் தம்பி கும்பகர்ணனை இப்போதே எழுப்புங்களென்று இசைக்க, உடனே அனேக இராக்கதர் கதைகளைக் கைக்கொண்டு இடித்து பேரி-பாங்கா-சங்கநாதம்-சிங்கநாதம் இவை முதலிய வாத்தியங்களை எண்டிசையு மதிரும்படி முழக்க, அவ்விடியினாலும் பேரோசையினாலும் புரண்டுபுரண்டு நித்திரை செய்தவன் ஏதோ வொரு விதிவசத்தால் விழித்துக் கொண்டு, என்ன காரியமென்று கேட்டான். அதற்கவர்கள் விளைந்த தன்மைகளை விபரமாய்ச் சொல்லினார்கள்.

அதைக் கேட்ட மாத்திரத்தில் மகமேரு இரண்டு காலுங் கையு முளைத்து வருவதைப் போல் தமயனிடத்திற்கு வந்து வணங்கி நிற்க, அவனை இராவணன் நோக்கி, அடா தம்பி! இராமன் இலட்சுமணன் இரண்டுபேர் நரர்கள். சுக்கிரீபனைத் துணைக்கொண்டு வானர வெள்ளத்துடன் வந்து பிரகஸ்தன் முதலாகிய படைத் தலைவர்களையும் கொன்று, சேனைகளையும் வென்று ஜெயங்கூறி நின்றார்களாம். அவர்கள் முழுமையும் உன் சூலத்திற் கிரையாகவும், அமரர் முதலியவர்களின் சந்தோஷமழியவும் வெற்றிபெற்று வரக்கடவை விண்ணவர்க்கெமனே என்று இராவணன் சொல்ல, அதுகேட்ட கும்பகர்ணன் அவனைப்பணிந்து,

அண்ணா! மும்மூர்த்தியும் ஒரு மூர்த்தமாகிய கடவுள் இராமன். அவனுடன் பகைத்து யார் இனி வாழ்வோர். அம்மனைக் கொண்டுபோய் அடிமலர் சேர்த்து அபயமென்று இறந்தால் அருள் பெறலாம். தம்பி வார்த்தையையுந் தள்ளினீர். முன்னம் துட்டப் புத்தியை இட்டமாய்க் கேட்டீர். அழியாத இலங்கைக்கு அழிவு தேடிக் கொண்டீர் என்று சொல்லிய இளையவனை நோக்கி, இராவணன் வெகுண்டு, எனக்கு நீதி சொல்லவா உன்னை எழுப்பினேன். விபீஷணனைப்போல் நீயும் போய் சேரு. போ போ. எனக்கடிந்து புழுங்கினான். அந்தவேளையில் கும்பகர்ணன் தமயன் அடிமலர்தொழுது அடியேன்மீது ஆயாசம் வேண்டாம் என் அண்ணாவே என்று சொல்லி யுத்தகோலத்துடனே சூலந் தாங்கித் துரிதமாகச் சென்று கோட்டை வாயிலினின்றும் வெளிப்பட்டு இரதமேறி, இராக்கதப் படைகளுடன் சர்வ சம்ஹாரகால உருத்திரனைப்போல் வருவதானான். அப்படி வருவதை, ஸ்ரீராமர் கண்டு மகிழ்ந்து இவன் யாரென்று விபீஷணனைக் கேட்க, சுவாமி! இவர் என் தமயன். இராவணனுக்குத் தம்பி. இவர் பேர் கும்பகர்ணன். இவரும் அனேகம் புத்திகளைச் சொல்ல, இராவணன் அவைகளைக் கேளாமல் கோபங் கொள்ள, அவனால் இறப்பதைவிடத் தேவரீரால் மடிவது மோட்சமென்று கருதி வருகின்றார் என்று சொல்லக்கேட்ட இராமர் விபீஷணனைப் பார்த்து, அப்பா புனிதனே! நீ போய் அந்தப் பாவி அரக்கனுக்காக ஆவியழியாது நம்மை மேவிச் சுகப்படலாம் என்று சொல்லி அழைத்துவா வென்ன, அவன் அப்படியே போய் அழைக்க, ஐயோ! நீ நல்ல தவத்தை யுடையவன் இம்மையில் தானே நன்மையைப் பெற்றாய். என் வினை எனக்கு: உன் வினை உனக்கு. ஸ்ரீராமரிடமே போய்ச் சேர்ந்து சுகப்படு என்று சொல்லி வில்லை வளைத்துப் பல்லைக் கடித்து நாணியேற்றி, நறநறவென வருஷம்போற் கணைமாறி தூற்றி, குரங்குப்படைகளை உறங்க அடித்து, சிரக்குவியலும் கரக்குவியலும் காற்குவியலும் மேற்குவியலுமாகச் செய்தான் கும்பகர்ணன்.

அதுகாலையில், அங்கதன் - நீலன் - வசந்தன் - சாம்புவந்தன் முதலிய படைவீரர்களெல்லாந் தொடை தட்டிக்கொண்டு, மலைகளைப் பிடுங்கிக் கும்பகர்ணன் மீதில் எறிந்து நான்கு திக்குகளிலும் வளைந்து நமனும்உயிருலைந்து நடுங்கும்படி வீசி, நானாவித வார்த்தைகளினால் ஏசிப் போர் விளைத்தார்கள். சில வானர வீரர்களோடிப் பாரியப் பருவதங்களையும் பருத்த மரங்களையும் வாரிக்கொண்டு வந்து அவன் மார்பில் எறிந்தும், கரங்களினாற் குத்தியும், கால்களினால் உதைத்தும், வால்களினால் வீசியும், இவ்வாறு சிதைத்துக் கையிளைத்து, இவன் காலாகாலனோ! ஆலகாலமோ! என்று வருந்தி இருந்தார்கள். இதை ஆஞ்சநேயர் கண்டு ஒரு பெரிய கிரியை அடிவேருடன் பிடுங்கி வந்து, கும்பகர்ணன் உரத்திலுஞ் சிரத்திலும்பட வெறிந்தார். அப்படி எறியவும் அண்ட முகடெல்லா மதிர்ந்து போகும்படி விழுந்த அம்மலை பொடிப்பொடியாய் உதிரவும் அதையனுமார் கண்டு, இவனை வெல்ல நம்முடைய வல்லமையல்ல ஸ்ரீராமருடைய கோதண்டம் இவனைக் கொல்லக் காத்திருக்கிற தென்று படைத்தலைவர்களுடன் சொல்ல, இதைக் கேள்விப்பட்ட சுக்கிரீபன் வாயுவைப்போல் எழுந்து அவன் இரதத்தில் விழுந்து கொழுந்து விட்டெரியுங் கண்களுடன் அவனைப் பிடித்துத் தள்ள, அந்தச் சுக்கிரீபனைக் கும்பகர்ணன் பிடித்து மெள்ளத் தேரிற் கட்டி இலங்காபுரிக்குத் திரும்ப, வசந்தன் நீலன் முதலியோர் வந்து மறிக்க, அவ் வசந்தனையும் நீலனையுங் கசக்கித் திலகமாய்ச் சேர்த்து, தேக முதலியதும் வியர்த்து, சங்கத்தொனி முழக்கி நடப்பதாயினன் கும்பகர்ணன். அப்போது வானரச்சேனைகள் கரங்களை நெறித்துக் கண்ணீராற் கையலம்பிக் கலங்கி நிற்கக்கண்ட இளையபெருமாள், கரத்திலிருந்த உரத்த வில்லை வளைத்துக் குணத்தொனி செய்து, கும்பகர்ணன் அப்பாற் செல்லாமல் அயர்ந்து நிற்க அநேகம் பாணங்களை அநுசந்தித்து, அவனுடைய நெற்றியிற் பத்து பாணம் உருவிப் போகும்படி தொடுத்தனர். அதனால் அவன் மயங்கி மூர்ச்சையாய்ப் படுக்க, அந்த வேளையிற் சுக்கிரீபன் அவனுடைய மூக்கையுங் காதுகளையும் பிடுங்கிக்கொண்டு வந்து ஸ்ரீராமருடைய பாதங்களிற் பணிய, வானர சிரேஷ்டாளுடைய வருத்தமெல்லாந் தணிய, அமரர் யாவரும் அணிமலர்களைச் சொரிந்தனர்.

இப்பாற் கும்பகர்ணன் மூர்ச்சை தெளிந்தெழுந்து, மூக்குங் காதுகளும் மூளியா யிருப்பதை அறிந்து தங்கை மூக்கைப்போல் என

ஹையுஞ் செய்த சமர்த்தர்களே. ஒரு மூளிக்கு இரண்டு மூளியாய் இலங்கையூருக்கு எப்படி போவேன்? உங்கள் கரத்திற் சாவேன். இதோ வருகின்றது கொடிய விஷக்கணை என்று சொல்லிக்கொண்டு ஓடிவந்து இலட்சுமணர்மீது விடுத்துச் சமர் புரிந்தான். அச்சமரில் இலட்சுமணரால் அக்கணையோடு தானும் முறிந்து, இரதமும் அவ்விரதத்திற் பூட்டிய கழுதைகளும் அழிந்து, சாரதியும் ஒழிந்து உதிரம் வழிந்து உலரவும், மீண்டுந் தெழித்துப் பூமியிற் குதித்து, வானரச்சேனைகளை வாரி எறிந்து, வாணுள் மடித்து, கரங்களாற் குத்தி, கால்களால் எத்தி, பாசங்களாற் கட்டி, தரையில் தேய்த்து, சவமாய்ச் சாய்த்து போர்க்களமெல்லாம் புருஷதீரனுய் யார்க்கும் அடங்காமல் யாரும் நிகரில்லாமல் உரைவினுன். அப்போது வானர அரசனும், பதினெண் படைத்தலைவரும், விபீஷணனும், இளையமூர்த்தியும் ஸ்ரீராமரிடம் வந்து மனம் நொந்து, இந்தப் பாவியைக் கொல்லாமல் தேவர் வேடிக்கை பார்ப்பது விஷப்பரீக்ஷை போல் இருக்கின்றது. இன்னுஞ் சற்றுநேரத்தில் எம்மையும் உம்மையு முடித்து, அம்மையையும் அபகரிப்பான். இது உண்மை என்று யாவரும் உரைக்கும்போது திக்குப்பாலர்கள் தியங்கி மயங்கவும், இந்திராதி தேவர்களும் ரிஷிகள் யாவரும் வெந்துயர்கொண்டு குலைந்து வாடவும், வானரப்படைகளும் மற்றுமுள்ள வீரரும் அலமாந்தோடவும், அண்டங் குலுங்கவும், அலைகடற் கலங்கவுமாக ஸ்ரீராமர் கரத்திற் பிடித்த வில்லைக் குணத்தொனி பண்ணி, யுத்தகளத்திற் சென்று நின்று அக் கும்பகர்ணனை எதிர்த்தனர். அவரே நேரில் வந்தெதிர்க்கவுங் கும்பகர்ணனும் வில்லிற் குணமேற்றிப் பல்லைக் கடித்து அளவிறந்த அஸ்திரங்களை அபாரியாய்ச் சொரிந்தனன். உடனே அரக்கர்குல காலன் அவைகளையெல்லாம் பொடியாய்ச் சிதைக்க, அரக்கனுஞ் சளையாதெதிர்க்க, இவ்வாறு இருவரும் நெடுநேரம் யுத்தம் புரிந்து, இராக்கதன் வில்லை ஸ்ரீராமர் அழித்தனர். உடனே அவன் ஒரு தண்டாயுதத்தைச் சுழற்றிக் கொண்டல்வண்ணன்மேல் வீச, அது இரண்டு துண்டமாய்ப் போகமீண்டும் அவன் ஒருசூலாயுதத்தை ஏற்ற அதையும் அவர் தூளாக மாற்ற, அரக்கன் இரண்டு மலைகளைப் பிடுங்கி வேகங்கொண்டு எறிய, அம் மலைகளிரண்டும் அமலன் விடுங் கணையால் தகிய, அப்பால் அக் கும்பகர்ணனவன் யுத்தகளமெல்லாம் உலாவி யுலாவி வானரங்களை வாரிப் பிடித்து வாயிற் போட்டுக்கொண்டு கசகசவென்று மென்று தின்றும் கரங்களையுங் கால்களையும் வால்களையும்பற்றிக் கொன்றும், ஸ்ரீராமர்பேரிற் சில குரங்குகளைப் பிடித்துக் கரகரவென்று சுழற்றி எறிந்தும், ஆதிசேடனுடைய படமுறியும்படி நடந்தும், இவ்வாறு மீறி அமர் செய்யுங் கும்பகர்ணனுடைய இரண்டு கால்களையும் ஸ்ரீராமர் இரண்டு அஸ்திரத்தால் அறுத்துவிட்டனர்.

அதுகாலையில் தேகங் குழவியாகவும் பூமி அம்மியாகவு மிருந்த அக்கும்பகர்ணனனவன் சற்றுஞ் சளையாமல், வானரப் படைகளை அரைத்துக் கடலிற் கரைத்து மானிடரையுங் கொல்வேனென்று நாக்கை நீட்டி, யுத்தகளத்திற் கிடக்கின்ற ஒரு பெரிய மலையை நக்கி வாயிற் சேர்த்து, நடமுடவென்று கடித்து, சின்னக்குழலில் உண்டையைத் தூதுந் தன்மை போல் ஊதி, இராமர்-இலட்சுமணர்-வானரச்சேனைகள்-படைத்தலைவர்கள் இவர்கள் யாவரும்பட்டு மயங்கச் செய்தான். அவரவர்களுக்குக் காயம் படவும் ஸ்ரீராமர் இவனுடைய வீரத்தைக் கொண்டாடிப் புகழ்ந்து, ஒரு ராமபாணத்தைவிட்டு அவன் தலையை வெட்டி எறிந்தனர். உடனே தேவர்கள் வாழிபாடி ஆழிபோ லிரைந்தனர். சாரணர்களோடித் தேவரீர் தம்பி கும்பகர்ணன் இறந்தானென்று இராவணனிடத்திற் சொல்லினர். அதைக் கேட்ட இராவணன் மூர்ச்சைபோய் எழுந்து புரண்டு அரண்டு வெருண்டு அழுது இந்திரசித்தனைப் பார்த்து, அப்பா! நமக்குப் பழுது வந்துவிட்டதே. நீயிருந்தும் என் தம்பியை இப்போது இழந்தேனே என்று கண்ணீர் சோரவிட்ட இராவணனை இந்திரசித்து தேற்றி, ஐயா! அவ்விரண்டு மனிதரையும் பழிவாங்கிக்கொண்டு வருவேனல்லது இதுமத்தில் நான் வரமாட்டேன் என்று கூறி, சேனசயினியங்களுடன் புறப்படு முன்னமே இராவணன் பிள்ளைகள்- வெகுபேரும் கும்பகர்ணன் பிள்ளைகளிரண்டுபேரும் யுத்தகளத்தில் வந்து இலக்குமணர் முதலாகிய பராக்கிரமர்களால் இறந்து அவிந்தார்கள். அதிகாயன் முதலிய தம்பிமார்களும் வச்சிர வேகனும் பெருஞ்சேனைகளுடன் வந்து, சுக்ரீபன்-அங்கதன்-அனுமார் இவர்களுடன் யுத்தஞ் செய்து இறந்தார்கள். இச்சம்பவத்தையும் இராவணன் கேட்டு, இதற்கு முடித்த பட்சிபோ

விருந்தான். இச்சேதிகேட்ட இந்திரசித்தன் இரதகஜ துரகபதாதிகள் முதலிய சகல ஆடம்பரங்களுடன் நெருங்க வந்து, வில்லைக் குணத்தொனி செய்து, இரவிமுதற்கோள்களும் இந்திரன் முதல் திக்கு பாலகர்களும் விடவிடவென்று நடுங்க விண்ணவர்கள் எல்லாம் ஒடுங்க, வேதவேதியரோடு ரிஷிகளெல்லாம் அடங்க, அனுமந்தன்-அங்கதன்-சுக்கிரீபன்-சாம்புவந்தன்-நீலன்-குமுதன் - குமுதாக்கன்-இவர்கள் எல்லோருஞ் சேர்ந்து யுத்தந்தொடங்க, நீங்கள் எல்லாம் படுங்களென்று விடங்களைப் போலச் சீறி, வெகுவாய் வார்த்தைகளைக் கூறி, நிராயுதருடன் யுத்தஞ் செய்வது நீதியன்று என்று இலக்குமணன் என்னும் வில்லாளியுடன் சண்டை செய்வேன் என்று யானை யாளியுடன் எதிர்க்க வந்தது போல் வந்து பராக்கிரமித்து நின்றான்.

அப்போது இளைய பெருமாளும் வில்லைக் கொண்டு நாணி பூட்டி யிழுத்து டங்காரஞ் செய்தனர். உடனே இராவணி அளவற்ற பாணங்களை வாசாமகோசரமாய்விடுத்து வானரங்களைச் சாடவும், இளைய பெருமாளும் அவனோடு வந்த அவுண சேனைகளெல்லாம் ஆளும்படி கோடி பாணங்களைப் போடவும், இருவருஞ் செய்யும் யுத்தங்களைத் தேவர்கள் பார்த்து சமயுத்தமென்று சந்தோஷப்படவும் இராவணி தேரிலிருந்து கொண்டு யாதொன்றுக்குஞ் சளையாமற் பாணங்களை யெய்யவும், இளையவர் பூமியில் நிற்பது நன்றல்லவென்று அங்கதனனவன் தன் தோளில் ஏறிக் கொள்ளச் செய்யவும், பின்பவன் இரதத்துடன் சுழன்று இடசாரி வலசாரியாக அங்கதன் தாவவும், வாயுவேகமும் எஞ்ச நமது இரதவேகத்திலு மிஞ்சி வருகின்றான் என்று எவர்களும் அஞ்ச இராவணி ஒருகதையைச் சுழற்றி அங்கதன் மார்பில் எறியவும், இளைய பெருமாள் அதை வெட்டி முறிக்கவும், மறுபடியும் ஒருவர்போரில் ஒருவர் ஓயாமற் கணைகளும், அஸ்திரங்களும், பாணங்களும், பற்பல ஆயுதங்களும் உற்பவம்போல் எடுத்து விடுத்துச் சமர் செய்தார்கள். அப்போது இராவணி விடும் ஆயுதங்களையெல்லாம் இலக்ஷ்மணர் உராவிய பொடிபோல் உதிர்த்து, அவனுடைய இரதகஜ துரகபதாதிகள் எல்லாவற்றையும் இடியும் பொடிபோல் மடியப்பண்ணினர். அக்கால் இராவணி யொருவனும் தேருடன் நின்று இளைத்துப் பதைத்து மாயையினாலே மறைந்து மேகலோகம் போய் ஒளித்துக்கொண்டனன். அதை விபீஷணன் கண்டு விசாரமடைந்து, இளையவரை நோக்கி, இந்த மகாபாதகன் ஓடி ஒளித்தானென்று எண்ணப்படாது. ஏதோ ஒரு வஞ்சனை நெஞ்சில் நினைத்து மறைந்தான். மாயச்சூதுகள் செய்வான் என்றுரைத்த வாக்கியத்தைக் கேட்ட இலக்ஷ்மணர் அவன் எந்த லோகத்திலிருந்தாலும் இந்த முகூர்த்தத்திற் கொல்லுகிறேனென்று வில்லை யேந்தி அந்தரத்தில் அசையுங் கந்தரத்தைப் பார்க்க, இராவணி இளையபெருமாளைப் பார்த்து மேகத்தில் ஒளித்திருந்தபிரகாரம் பிரமாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து அபிமந்திரிக்க, அவ்வஸ்திரமானது இராமர் இலக்ஷ்மணர் முதலாகிய வீரர்கள் எழுபது வெள்ளம் வானரசூரர்கள் ஆகிய வெல்லாருடைய தேகத்திலு மளவிறந்த கணைகளாக வந்து பட்டுருவி, எல்லாரும் பூமியிற் சோர்ந்து விழும்படியாகச் செய்தது.

இராவணி அந்த நிமிஷத்தில் நாகாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்து, இலக்ஷ்மணரைக் குண்டுகட்டாகக் கட்டி உருட்டிப் புரட்டி யெடுக்க அசைத்துப் பார்க்கும் சமயத்தில், இந்தக் கணைகளாற் கட்டுப்படாமல் இருந்த விபீஷணன் மிகுந்தவிசாரங்கொண்டு, ஐயோ! பழிக்கு ஆளானேனே யென்று பரதவித்து, அனுமார் விழுந்து கிடக்கும் இடத்திற்கு வந்து, அவருக்கு முகூர்த்தநேரம் இருக்குங் கணையைத் தீர்த்து எழுப்பிக்கொண்டுபோய் இராவணி இளையபெருமாளைப் பலங்கொண்டு எடுப்பதைக்காட்ட, அவர் உகாந்தகால உருத்திரனைப்போற் கோபமும் மனஸ்தாபமும் திடமுங்கொண்டு, குதித்தெழுந்து சுழன்றுவந்து விழுந்து, இந்திரசித்தனைக் கழுத்தை ஒடியும்படி உதைத்தார். அவ்வுதையினால் அவன் பதைபதைத்துக் கண் சுழன்று திடுக்கிட்டு எழுந்து, இலங்கையிற் சென்று தன் தந்தையைக்கண்டு விஷயங்களைச் சொல்லிப் பாடவும், இராக்கதருடன் இராவணன் ஆடவும், சீதையைக் கொண்டுவந்து இராமர் லட்சுமணரைக் காட்டவும், அந்தம்மாள் அழுது புலம்பிவாடவும், திரிச்சடை தேற்றி விசனங்களை மாற்றி என் தந்தை இருக்குமளவுஞ் சிந்தனை யில்லையென்றுபோற்றவும், இவ்விடத்தில் விபீஷணனவன் சாம்புவந்தர் - சுக்ரீபன் - அங்கதன் இவர்கள் முதலிய பேர்களை அந்த ராத்திரியிற் கண்டு, அவர்கள் எல்லாரும் மாயைதெளிந்து

எழுந்திருக்கக்கொண்டு அவர்களைக் கூட்டி வந்த ஸ்ரீராமர் லட்சுமணர் முதலிய பேர்களும் பிழைக்கும்படியாக யோசித்தனன். அப்போது சாம்புவந்தரானவர் சல்லிய கருணி-சந்தான கருணி முதலிய சஞ்சீவிகளிருக்கும் மலையினிடமும் வழியுஞ் சொல்ல, அதைக் கேட்ட அனுமார் உடனே பாய்ந்து, அம்மலையைப் பெயர்த்துக்கொண்டு பொழுது விடியுமுன் வந்து வைத்து, இவர்களுடைய தேககாயங்களெல்லாம் ஆறச் செய்து, மறுபடியுஞ் சஞ்சீவி மலையை அத்திசையை நோக்கி விட்டெறிந்தார். பின்பு நாகபாசத்தாற் பட்ட கட்டவிழாமல் இருக்கக்கண்டு, பெருக்கத் துயரங் கொண்டிருக்குங் காலையில், பிரமன் முதலிய தேவர்களின் உதவியால் கருடபகவான் வந்து வட்டமிட்டுப் பறக்க, நாகாஸ்திரமுங் கட்டுவிட்டு இறக்க, உடனே ஸ்ரீராமர் முதலிய பேர்கள் இராகு கேதுக்களினால் தொட்டுவிட்ட சூரிய சந்திரரைப்போற் சிறக்க, அக்கால் இவர்கள் இறக்கச் செய்த இராவணியையும் அவன் தந்தை இராவணனையும் அரக்கர்களையும் இப்போதே பறக்கச் செய்கின்றோம் என்று குரங்கு சேனைகளியாவும் உரக்கக் கூவி இலங்கையிற் சென்று கலங்கச்செய்து ராக்கதரைக் கால்மாடு தலைமாடாய் குப்பற் குப்பலாய் பிணமலையாய்க் குவிக்கத் தலைப்பட்டன.

அக்காலையிற் சாரணர் சென்று இராவணனிடத்தில் முறையிட, உடனே அவன் இந்திரஜித்தை அழைத்து, அப்பா இராவணீ! நமது மந்திர நாகபாசக்கட்டும் விட்டுப் போய், நமது குட்டுங் கெட்டுப்போய் ராக்கதச் சேனைகள் யாவும் பட்டுப் போங்காலங் கிட்ட வந்ததென்று சொல்லினன். அதைக் கேட்ட மாத்திரத்தில் அவன் அஷ்ட திசையும் நடுங்க வட்டமாகிய தேரிலேறி அட்டகாசம் பண்ணி வந்து, விபீஷணனை நோக்கி, அடா துஷ்டனே! என்று சில வார்த்தைகள் மொழிந்து சூலாயுதத்தை விடுக்கத் தொட்டெடுத்தான். அவன் அதைத் தொட்டெடுத்து விடுக்கு முன்னமே இளைய பெருமாளுடைய அஸ்திரத்தால் அது கெடவும், விண்ணுமண்ணுங் குலுங்கச் சிலநேரம் வேறுவேறான யுத்தஞ் செய்து, மேல் மண்டலத்தில் ஒளித்து நிகும்பலையாகஞ் செய்யப் புகுந்து, இரகசியமாக அதற்குரிய வேலைகளை நடத்த வாரம்பித்தான். அப்படி நடத்தும் வேலையைத் தெரிந்த விபீஷணன் ஸ்ரீராமருடனே சொல்ல, அவர் தம்பியை அழைத்து ஆலிங்கனஞ் செய்து சகல தருமங்களும் யுத்த முறைகளுங் கூறி விடுக்க, அவர் உடனே கோபங்கொண்டு நிகும்பலை யாகத்திற் சென்று, அனுமார் முதலிய பேர்களால் யாகத்தை அழித்து, அவன் தேகமுழுமையும் அஸ்திரத்தை அழுத்தினர். அதனால் அவ்விராவணி அதிக விசன வெகுளி கொண்டு தேரேறி, இன்று நமது பிராணத்தியாகம் இராம லட்சுமணர்களுக்குச் செய்வது நிச்சயமென்று தேறி, நீ எவ்வளவு ஒரு பஞ்சை மனிதன் என்று கூறி, இதோ பார் என் வீரத்திற் பாணத்திரத்தினால் உன்னைத் தமயனுக்கி உன் தமயன் ராமனைத் தம்பியாக்குகிறேன் என்று சீறி, நூறு நூறாயிரங் கணைகளை வாரி மாரிபோற் பொழிந்தான். அவைகளை யெல்லாம் இலட்சுமணர் இமைக்குமுன் தடுத்துக் கெடுத்துக் கடுகடுத்து, அடா இராவணி! உன்னை இந்நிமிடத்திற் படுத்து, இராவணனை உனக்குப் பிள்ளையாகக் கொடுத்து, உங்களிருவருக்கும் விபீஷணனை விடுத்துக் கருமஞ் செய்யத் தொடுத்து வைக்கிறேன் பாரடா பாதி யுத்தத்தில் ஒளியுந் திருடா வென்று சப்தமேகமுந் தாரைவிடுந் தன்மைபோற் பாணங்களைத் தூற்றவும், இராவணியுங் கனைத்து இரதத்தில் இருந்து அம்புகளையேற்றவும், இலக்குமணர் அங்கதன் தோளிலேறிக்கொண்டு, அரக்கன் விட்ட அஸ்திரங்களை யெல்லாந் தன் பாணங்களால் அறுத்தெறிந்து, பின்னுஞ் சில கணைகளை விடுத்து அவன் உடம்பெங்குஞ் சல்லடைக்கண்ணாய்த் துளைத்தனர். இவ்வாறு இலட்சுமணர் விடுக்குங் கணைகளினால் இராக்கத வீரர்களும் அவர்களுடைய ரதகஜ துரகங்கள் முதலிய சேனைகளும் ஒன்றொழியாமல் இளைக்கவும், இராவணியின் கவசம்-வீரபட்டம்-கைவில்-தேர்-குதிரை-கூளி-சாரதி இவை யாவும் அழிந்தொழியவும், தான் விட்ட கணைகளெல்லாம் பொடிப்பொடியாய்ப் படியில் விழவுங் கண்டு, முடி யிறங்கிக்கொண்டு பயந்து ஆகாயத்தில் ஒளித்து, இலங்கையிற் புகுந்து இராவணனைப் பணிந்து, அப்பா! ஜானகியை விடுத்துச் சரணம் அடைவது நன்மை. என்னுடைய மாய்கை வல்லமையும் பிரமாஸ்திரம் நாகாஸ்திரமுதலிய யாவுஞ் சூரியனைக்கண்ட பனிபோலாய்விட்டன. நம்முடைய வீரம் பல்லில்லாதவர் சொற்போலாயது. நமது பராக்கிரமங் குடத்திலிட்ட விளக்காச்சுது. நம்முடைய பாணங்களெல்லாம் உவர் நிலத்தில் இட்ட

விதையாய்ப்போயின. இனிமேல் என்னுலாவது ஒன்றுமில்லை என்று முறையமிட்டான்.

இப்படி முறையிட்டு விளம்பிய மகனைக் கொன்று தின்றுவிடத்தக்க கோபங்கொண்டு அண்டர்களை வென்று நீலகண்டனைக் கண்டு எண்டிசையுஞ் சென்று வென்று எமகண்டகனென்று பேர்கொண்டிருக்குஞ் சண்டப் பிரசண்ட உத்தண்டனுகிய என்னிடத்திற் கோதண்டனைக் குறித்து இளைத்துச் சொல்லிய நீ என் குமாரன் அல்ல. நீ கெட்டாய்போ என்று வாளை யுருவி வெட்ட வருவானை இராவணி நோக்கி, துஷ்டனுகிய இவனிடத்தில் இறப்பதிலும் பட்டாபிராமனுல் மடிவது பாக்கியமென்றுகருதி, சிறுமணிகள் கட்டிச் சப்திக்குந் தேரேறி, இலக்ஷுமணருக்கு எதிரில் வந்து நின்று, இருகண்களிலுஞ் சலம் பொழிந்து இந்திராஸ்திரம்-சந்திராஸ்திரம்-வாயுவாஸ்திரம்-தேயுவாஸ்திரம் இவை முதலியவைகளை வில்லிற் றெடுத்துவிடுத்தான். அதைக்கண்ட இளையபெருமாளுக்குக் கோபம் வந்து இவன் எத்தனை தரம் ஓடி ஒளித்து வருபவனென்று அர்த்தசந்திரபாணத்தை அவன்மேற் றெடுத்து, அவன்விடுத்த அஸ்திரங்களையுமழித்து, அவன் கரத்தையும் அணிமுடி பொருந்திய சிரத்தையும் அறுத்துத் தள்ளினர். உடனே வானரப்படைகளும் அமரர் முதலிய யாவரும் எழுந்து துள்ளினர். அக்கால் அங்கதன் இலக்ஷுமணரைச் சுமந்தவண்ணமே அந்தச் சிரத்தை எடுத்துக்கொண்டு போய் சுவாமியின் அடியிணையில் வைத்துப் பணிந்து நின்று மகிழ்ச்சி கொள்ள, அரம்பாஸ்திரீகள் கற்பக மலரை வாரியிரைத்து மங்களம்பாட, இளைய பெருமாளும் பெரிய பெருமாளைப் பணிந்து போற்ற, தம்பியை மார்புடன் தழுவி மகிழ்ந்து சந்தோஷங் கொண்டார். தாசரதி அந்தக் காலத்தில் அவ்விடம் இருந்த சாரணரோடி இராவணனிடத்தில் இராவணி இறந்தான் என்று கூறவும், அம்மாத்திரத்தில் ஆருத் துயரங் கொண்டு, மாருக்கண்ணீர்பொழிந்து, தேரு விசனமுற்று, சிங்காசனத்தில் யிருந்து பூமியில் திட்டென்று விழுந்து, மூர்ச்சை போய் இனி உலகிலுள்ள பெண்கள் கூட சண்டைக்கு வருவார்களே! அப்பா மகனே! இனி நான் என்ன செய்வேன். தம்பிமார் சொல்லையுந் தள்ளி, வீண்பழிக்காளாய் விது தாவிற் குடும்பங்களையுஞ் செல்வங்களையும் இழந்தேனே, இதோ நானும் ஒழிந்து அழிந்து வருகின்றேன். ஓ என் புத்திரபாக்கியமே என்று அழுது பின்பு தேறித்துணிந்து திடங்கொண்டு சீதையிருக்கும் அசோகவனம் போய் இதனை நடத்துவதாயினன்.

ஓ சனகன் பெண்ணே! என் பட்டினமும் பிள்ளைகளுந் தப்பிமார்களும் அளவிறந்த சேனைகளும் மற்றியாவும் உன் பொருட்டினுல் அழிந்து ஒழிந்தார்கள், நீ பிராணனுடன் இருக்கும் வரையிலும் அந்த மனிதர்கள் விடார்கள். ஆகையால், உன்னைக் கொன்று விட்டால் அப்பால் ஒன்றுமில்லை. என்று சொல்லி வாளை யுருவிக்கொண்டு வெட்டவந்தான். அப்போது மாலியவான் என்னும் பாட்டன் ஓட்டமா யோடி வந்து உலகங்களையெல்லாம் வெற்றிகொண்டு கைலையங்கிரியையெடுத்து, அஷ்ட கஜங்களை ஜெயித்து அமரர்களை அடக்கி உனக்கெதிர் ஒருவரும் இல்லையென்று வெற்றி பெற்ற வீரன் ஸ்திரீயின் பேரில் வாள் யெடுத்தான் என்ருல் உன்னுடைய புகழ் குன்றிப் போகாதா? அப்பா! இதல்லாமலும், (ஓடம் வண்டியின்மீது வண்டி ஓடமீது) என்று சொல்லுவார்கள். அதுபோல இராமனையும் இலக்குமணனையும் வென்று ஜெயத்தைக்கொண்ட நீ இப்போது சீதையை வெட்டி விட்டால், நாளை யார் முகத்தில் விழிப்பாய் என்று பேசவும், அக்குறிப்பை யுணர்ந்து மகிழ்ந்து அரண்மனைக்குவந்து ஒருராட்சதனை ஜனகனுக்கி மடல் விரியக்கட்டி, சீதைக்கு எதிர் கொண்டுபோய் நிறுத்தி, இதோ உன் தகப்பனைக்கொண்டு வந்தோம். நாளை பரதசத்துருக்கனையுங் கட்டிக் கொண்டுவருவோம். இங்கே உன்னைகொண்டு போக வந்திருக்கு மனிதர் இருவரையுங் கொல்லுவோம். உனக்கு ஆதரவு என்னயிருக்கிறது என்னையன்றி வேறே துணையார் என்று சொல்லவும், அந்த ஜனக வேடக்காரன் கண்ணீர் காட்டித் தளர்ந்து, அம்மா! உன்னைப் பெற்று இந்தக் கெதிகண்டேன். அரக்கன் இஷ்டப்படி பொருந்தியிருந்தால் நான் சவுக்கியபடுவேன் உன் தாயாரும் முதலிய பேருந் தளர்வு நீங்குவார்கள் என்று சாற்றவும், தந்தை யென்றே விசனங்கொண்ட தாயானவள் இது மாயகையினுற் செய்ததென்று ரகசிய மாய்த் திரிசடை சொல்லத் தேறினுள். இப்பால் இராவணன் மருத்துவனைச் சீதையாக்கி, இராமர் இலக்குமணருக்கு எதிரிற் கொண்டு போய் ஆகாயத்தில் நிறுத்தி தலைமயிரைப்

பிடித்து ஆட்டி இதோ பாருங்கள் ஜானகியையென்று காட்டி, இவளாலே யல்லவா இவ்வளவு கலகம் விளைந்தது? இவளை வெட்டியெறிந்தால் நீங்கள் ஜெயித்து என்ன காணப் போகின்றீர்கள் என்று சொல்லவும், அந்த மாயச் சீதையானவள், ஓ அனுமாரே! ஓ இராமரே! ஓ தம்பி இளைய பெருமாளே என்று அலறியழுதனள். அப்போது ஸ்ரீராமருக்கும் இலக்ஷ்மணருக்கும் ஒன்றுந் தோணாமல் மெய் மறந்திருந்தார்கள். அனுமார் முதலியபேரும் பெருங்கூச்சலிட்டு அழுது, இருந்தாளென்ற வாயால் இறந்தாளென்று எப்படி சொல்லுவோம் தெய்வமே நீதியில்லையோ? நிலையில்லையோ? என்று ஏங்கித் துன்புறவும் விபீஷணனறிந்து, இது மாயவஞ்சனை நீங்கள் பயப்பட வேண்டாம். தாயார் சுகமாயிருக்கின்றாள் என்று ஏற்றவும், யாவரும் அகமகிழ்ந்து களி கூர்ந்திருந்தார்கள்.

இப்பால் இராவணன் மூலபலச்சேனை வரும்படி உத்தரவு செய்ய, அவ்வண்ணம் ஆயிரம் வெள்ளஞ் சேனைகளும் வந்து ஏழு சமுத்திரம்போ லடர்ந்து நெருங்கி, ஸ்ரீராமர் இறங்கி இருக்குஞ் சுவேலாத்திரிவரைக்கும் நிறைந்து, யாரவன் மனிதன், யாரவன் மனிதன் என்று அண்டம் இடியக் கூவி, அகில புவனங்களையுந் தாவி, நாய்முகம்-நரிமுகம்-கரடிமுகம்-புலிமுகம் இப்படிப் பல பல முகங்களும் விகார ரூபங்களும் உடைத்தாய், விளக்கை விட்டிற்பூச்சி வளைந்ததைப்போலும், பாம்பைத் தேரைகள் சூழ்ந்ததுபோலும், சிங்கத்தைப் பலகோடி யானைகள் கவிந்ததைப் போலும், சூரியனைப் பனிமறைத்ததைப்போலும் வளைத்துக்கொண்டு சகலவித ஆயுதம்-அஸ்திரம்-சாஸ்திரம்-அம்பு-கணை-வில்-வேல்-வாள்-கதை-முதலியதைக் கொண்டு மோதவும், வானரப்படைகள் காதவழி கடலைக்கடந்து ஓடவும், அனுமாருந் தேற்றி அவர் சாம்புவந்தரும், ஆற்றித் திரும்பவும், பெரும்புறக்கள் பயம் கடலை உறிஞ்சிக் குடித்து ஏப்பமிட்டு வந்தெதிர்த்த அம் மூலபலச் சேனைகளை யெல்லாம் ஸ்ரீராமரானவர் வளைத்து, விஜய கோதண்டத்தைக் கரத்திற் கொண்டு நாணியேற்றிக் குணத்தொனி காட்டி, நான்கு திசைச் சேனைகளையும் பம்பரம்போலாட்டி, பூமி முழுமையும் நிறைந்த இரத்த வெள்ளங்களிற் புரண்டழிய மாட்டி, போக்கிய சேனைகள் போக மிஞ்சி மேலிட்டுவரும் படைகளை மோகனாஸ்திரந்தொடுத்து கெடுத்து அங்கும் ராமன் இங்கும் ராமன் மற்றெங்கும் ராமனாக நின்று நிலத்தோடு நிலமாக அத்தனை பேரையும் மடித்து, யுத்தகளத்தை வெறுங்களமாக்கி பூதப் பிரேத பைசாச கணங்கள் பிணங்களைத் தின்று கொழுத்துச் செயங்கொண்டாட்டஞ்செய்தனர். அதைக்கண்ட சாரணர் போய் இராவணனிடத்திற் சொல்ல, அதைக்கேட்ட இராவணன் நகைத்து, தலைக்குக் கிரீடம் பத்துஞ் சூட்டி, மாலை இருபதுந்தரித்து, குண்டலங்கள் அணிந்து, அரைப்பட்டிகை கட்டி, ஆடை தரித்து, வீரகண்டை வீக்கி, விதவிதமாகிய ஆயுதம் இயாவும் அமைத்து, சந்தன புட்ப சவ்வாதுகள் அணிந்து, யுத்தகோலம் ஒளிபெறக்கொண்டு, அந்தரத்தோர்கள் அலறிக் கதற அநேகம் படையோடு அரக்கர் நெருங்க, குடை-கொடி-குஞ்சம்-சாமரை-பஞ்சம்-வீரவிருது இவை முதலாகிய சின்னங்கள் விளங்க, டமாரம்-காளம் - பூரி - கர்ணை-திருச்சின்னம்-உடுக்கை-பம்பை-உறுமி-தப்பட்டை இவை முதலிய வாத்தியங்கள் முழங்க, பாதலம் நடுங்க, மீதலம் ஒடுங்க, பாவையர்கள் வாழ்த்திப்பணிந்து போற்ற, அண்டம் அளாவிய முண்டகக்கலசத்தேரினிலேறி, ஸ்ரீராமனை இன்றே யழித்து எழிற் சீதையை யான் கண்டு களித்து வாழ்ந்திருப்பேனென்று சென்றனன்.

அப்போது எரிகொள்ளித் தேர்மேல் எண்ணிலவிழ்ந்தன. செந்நீர்மாரி சேர்ந்து பொழிந்தன. நரிகளும் நாய்களு நன்றாளையிட்டன. மாலைகள் கருகின. மரங்களும் பட்டன. இவ்விதமாக இடர்ச்சகுனங்கள் கண்டு மெண்ணாது கைதவன் களித்து, வீணைக்கொடி மேல் விண்டல மளாவ காண்போரெல்லாங் காலனென்றோட, வானவர் மகிழ்ந்து வண்மைகள் கூற, வீரியமாக மேவினன் சமரில். அவன் வரவுக்கு ஸ்ரீராமர் முதலியோர் சிந்தை களித்தெதிர்த்தனர். அப்போது தசகண்டன் தேர்மேற் கொண்டு தாசரதி பூமியில் நின்று யுத்தஞ் செய்வது நன்றல்லவென்று அண்டர் நாயகன்கண்டு, இந்திரவிமானங்கொண்டு, போகும்படி மாதலியாகுஞ் சாரதிக்கு உத்தரவு செய்ய, அதிவேகத்துடன் அவனுங் கொணர்ந்தான். அமரர்பூமாரி அன்புடன் பொழியக் கோதண்டபாணி பூதண்டம் அளாவிய அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு குரங்குப்படைகளும், பதினெட்டுப் படைத்தலைவர்களும் பக்கங்களிற் சூழ்ந்து நிற்க, இளையபெருமாளும்

அங்கதன் மீதில் ஏறி எங்கும் உலாவி அரக்கர் சேனைகளை அழித்துக்கொண்டு வர, ஸ்ரீராமரும் இராவணனுங் கண்கள் சிவந்து வில்லை வளைத்துக் குணத்தொனி காட்டிய குயவன் திகிரிபோற் குறைவரச் சுழன்று இருவருங் கையோயாமற் சரங்களை எய்தனர். இராவணன் ஏவிய எல்லாக்கணைகளுங் கோதண்டராமன் விடும் பகழிகளாற் சுழற்காற்றில் அகப்பட்ட துரும்புபோல் அழிந்து பறக்க, காடுகள்-செடிகள்-மலைகள்-பிலத்துவாரங்கள்-நதியோரங்கள்-கிரிச்சாரல்கள் என்னு மிவ்விடங்களிலிருந்து வந்த அரக்கரினமாகிய வெவ்விடச்சேனை வெள்ளமியாவுங் கார்வண்ணன் கணையாற் கருதி இறக்க அதைக் கண்ட இராவணன் இருபது கண்களுஞ் சிவந்து அக்கினிப்பொறி பறக்கும்படி முனைந்து அளவிறந்த அஸ்திரங்களை அம்புமாரியாய்ப் பம்பிய மேகம்போல வெம்பிப்பொழிய, அக்கால் அகில முய்யவந்த ஸ்ரீராமர் தனது விஜய் கோதண்டமணிகள் கலகலவென்று சப்திக்க, வளைத்துப் பல பல வென்று கணைகளைச் சொரிய, இப்படியாக யிருதிறத்தாரும் ஒருவருக் கொருவர் ஒப்பில்லை என்று சொல்லும்படி மலைந்து பரவை யெண்டிசையும் பஞ்சபூதமும், எல்லாங் கலங்க, ஒடுங்க, இகத்தினிலுற்ற யின்னுயிர் யாவும், இரங்கி வேசாரி யெண்டிசைக்கு மோட, தேவர்கள் பயந்து சென்று மேலாட, திக்குப்பாலகர் தியங்கிவாட, திக்குக் கஜங்கள் குப்புற்று வீழ, அஷ்டமா நாகமும் அணிமணி சிந்த இப்படியாகச் சகல பிராணிகளும் முக்கி உதிரங்களை கக்கி, உடல் குலுங்க விக்கி, உயரலைந்து சொக்கிச் சோரும்படியாய் ஆக்கிரமத்துடன் பராக்கிரமத்தைக் காட்டி யுத்தம் செய்தார்கள்.

அப்போது இராவணனனவன் இறந்து போன யாவரும் பிழைக்கும்படி மாயமந்திரத்தை மறைந்து ஜெபிக்க, அக்குறிப்பை விபீஷணன் விளம்ப, அதை ஸ்ரீராமர் கேட்டுக் கியானுஸ்திரத்தை அபிமந்திரித்துப் பிரயோகம் செய்ய, அதனாலே வெய்யலில் விழுந்த புழுவைப்போலும், வெந்தீயில் விழுந்த பஞ்சைப்போலும், அம்மாய மந்திரம் யாவுமடிய தசக்கிரீவனுக்குக் கோபஞ் சனித்து ஒரு சூலாயுதத்தை எடுத்துப் பூசை செய்து மிகு வேகத்துடன் காகுஸ்தன் பேரில் விட்டு முடுக்கவும், அதைத் தம்முடைய கைப்பாணங்களினால் வெட்டி மடிக்கவும், மறுபடியும் ஒரு தண்டாயுதத்தைச் சுழற்றி எறியவும், அதையும் பொடியாக்கி அவனுடைய கவசத்தையும், வீரப்பட்டத்தையும் அறுத்தெறியவும், இராவணன் சகிக்கமாட்டாமல், மழு-கொழு-சக்கரம்-முஷ்டி-கரம்-வாள் முதலாகிய திவ்யாஸ்திரங்களையும், பலமாகிய ஆயுதங்களையும், வாரி வாரி ஆரியகுல வீரியன்மீது இறைத்தான். அவைகளை யெல்லாம் தாசரதி கோடி பாணங்களினால் குறைத்தார். இராவணன் தன் காலத்தை தானறிந்துகொண்டு ஒரு முத்தலை வேலைப் பத்தியுடன் பூசித்து, ஓ மனிதர்களே! நீங்கள் மடிந்தீர்கள். ஐயோ பாவம்! இந்த இடர் உங்களுக்கு விதித்திருந்தது என்று எடுத்து விடுத்தான். அந்த வேலானது, கடுகடுத்து படபடத்து, விடமெனக் கறுத்து, மேகமென யிடித்து, வெய்யலெனக் காய்ந்து, வடவாமுகாக்கினிபோற் சீறி, வாடைக் காற்றுடன் ஏழு கடலையும் தூறி, அண்டமுகடுவரையிலும் ஏறி, அஷ்டகஜம் அஷ்டதிசைப் பாலகரையும் பீறி, ஆருயிர்களை யெல்லாம் அதிரக் கலக்கி வருவதாயது. அதை அரக்கர் குலாலன் கண்டு அநேகங்கோடி அஸ்திரங்களை விடுக்கவும், அவைகளை யெல்லாம் அவ்வேலானது முடுக்கவும், தேவர்கள் முதல் யாவரும் கண்டு அழுங்கவும், பதிவிரதா ஸ்திரீகளுடைய மனங்களெல்லாம் புழுங்கவும், அம்முத்தலை வேலானது மேலெழுந்து ஸ்ரீராமருடைய திருமார்பில் உருவும்படி ஓங்காரமிட்டுச் சமீபித்துவர, அதைக்கண்டு தம்பிமார் முதலாகிய பேரும் வெம்பி ஒதுங்கி ஒடுங்கிப் போக, இம்பரில் இறந்தோமென்று ஸ்ரீராமர் மயங்கி ஒன்றும் தோன்றாமல் ஓமென்று ஒரு சப்தந்திறக்க, அந்தச் சப்தக்காற்று படவும் வேலானது பொடியாய் ஒடிய அதைத் தசக்கிரீவன் கண்டு, தழலெனக் கோபங்கொண்டு ஒரு மாயாஸ்திரத்தை எடுத்து மந்திரித்துப் பிரயோகஞ் செய்தான். அதையும் அரிபரந்தாமர் ஒரு கணையால் அழித்து ராவணனை நோக்கி இதனைச் சொல்லுகிறார்:

அடா அரக்கனே! உன் மாயையின் திறம் விற்றிறம்-கைத்திறம்-கணைத்திறம் - வரப்பிரசாதத்திறம் - உன்னுடைய பலத்திறம் யாவுமறிந்தேன். இப்பவும் நானொரு அஸ்திரம் விடுகின்றேன், அதைத் தப்பித்துக் கொள்ளுஞ் சக்தி உனக்குண்டோ? என்று ஒரு பிரமாஸ்திரத்தை எடுத்து மந்திர வணக்கத்

துடன் உந்திவிடவும், செந்துவர்வாயாள்
சீதை களிக்க, அரவந்தரத்தமரர் யாவரு
மகிழ, அண்டங்களெல்லா மதிரவந்து ராவ
ணன் பத்துத் தலைகளையும் அறுத்துத் தள்ளி
யது. அப்பால், அறுத்த சிரங்கள் அந்நேரமே
முளைக்க, அரிபரந்தாமன் திரும்பவுந் தறிக்க,
திரும்பவுங் கிளைக்க, திரும்பவு முறிக்க, இரா
மர் விபீஷணன் முகத்தைப் பார்க்க, அவன்
உடனே அமுதமுண்டவன் என்று விளம்ப,
அவ்வமுதஸ்தானம் நோக்கித் தசரதன்மதலை
பிரம்மாஸ்திரத்தை அன்புடன் விடுக்க, அது
உகாந்த காலத்து உருத்திரன்போல் வந்து
விழுந்து அமுத கலசத்தை மாற்றிச் சிரங்க
ளைச் சிதைத்து தேவர் கொண்டாடப் பாலாழி
யிற் போய்ப் படிந்து வந்து அம்புறுத்தூணி
யில் அடங்கி யிருந்தது. இராவண னிறந்து
பூமியில் விழவே, ஆகாய வீதியில் அமரர்கள்
யாவரும், அரம்பா ஸ்திரீகளும், வேதவேதி
யர்களும், மிகுதவத்தோர்களும் மற்றியாவரும்
புகழ்ந்து, இசையுடன் மகிழ்ந்து, பொன்னும்
பூவும் பொழிந்து வாழ்த்தி, மங்களம் லாலி
வகையுடன் கூறி, அடங்கா மகிழ்ச்சி அடை
வுடன் கொண்டு கொண்டாடினர். நம்பொ
ழுது விடிந்தது சுகப்பட்டேனென்று இந்தி
ரன் புளகமுற்று ஸ்ரீராமரைத் துதித்தான்.
அனுமார் முதலாகிய வானரவீரர்கள் யாவருங்
களித்தார்கள். அப்போது விபீஷணன் முகத்
தளர்வுடனே யிருக்க, ஸ்ரீராமர் அது கண்டு,
(தானுடாவிட்டாலும் தன் சதையாடும்) என்
னும் வாக்கியம் இகத்தினில் வழங்கும். ஆத
லால், நீ போய் உன் தமையனை அடக்கஞ்
செய்து வருகவென்று உத்தரவு செய்தனர்.
உடனே விபீஷணன் போய் விசனமுற்று,
அப்பாற் றேறினவராய் அறக்காட்டருங்
கடனை அன்புடன் செய்து, மற்ற அரக்கர்
யாவருக்கும் அருங்கடன் முடித்து, ஆதி பாண்
டரங்கன் அடியிணையில் வந்து தொழுதான்.
அப்போது, ஸ்ரீராமர் இளையபெருமாளைப்
பார்த்து, தம்பி! இந்த விபீஷணனுக்கு இலங்
கையைப் பட்டாபிஷேகஞ் செய்து வரக்
கடவையென்று கூறவும், அப்படியே சென்று
இருந்த அரக்கரையும், மந்திரிமார்களையும்
வைத்துக்கொண்டு சம்பிரமத்துடன் பட்டாபி
ஷேகஞ் செய்துவைக்க, அதைப்பெற்று மன
மகிழ்ந்து வந்து ஸ்ரீராமருடைய மலரடியில்
வணங்கி ஆசிபெற்றிருந்தான் விபீஷணன்.

அந்த வேளையில் அனுமார்-அங்கதன்-
விபீஷணன் முதலிய யாவருந் தாயாரிருக்
கும் அசோக வனம் வந்து ஜெயங்கூறிச்
சோபனம் பாடினார்கள். ஆடினார்கள். குதித்
தார்கள். இப்படி யாவரும் ஆனந்த பரவச
ராய்த் தாயார் பாதங்களிற் சரணஞ்செய்து,
ஸ்ரீராமருடைய ஜெயத்தைப் புகழ்ந்து, அம்
மணீ! தேவரீர் ஸ்வாமியின் உத்தரவின்படி
தரிசனத்திற்கு எழுந்தருள வேண்டும் என்று
இறைஞ்சவும், அந்தச் சொல்லைத் தேவாமிர்
தம்போற் சீதாதேவி கேட்டு, அவ்விடம் விட்
டெழுந்து திரிசடையுடனே சென்று ஸ்ரீராமர்
பாதங்களில் வீழ்ந்து தெண்டனிட்டுச் சமீ
பத்தில் நிற்க, அதுகண்ட தேவதேவன்
சீதையைப் பார்த்து, பெண்ணே! உன்னை
அரக்கன் தொட்டு எடுத்துப்போய் பத்து
மாதஞ் சிறையில் வைக்கவும், நீ பிராணனுட
னிருந்து நம்மிடத்திற்கு வரவும், நாம் அங்
கீகரிக்கவும், உலகம் பழிக்கவும், உள்ளூரார் நகைக்
கவும் அதனால் என்னுடல் நடுங்கி இலச்சைப்
படவுமாக யிருக்குங் காரியங்களுக்கு உடம்
பட்டு, யுத்தஞ்செய்தேனும் உன்னை மீட்க
வந்தவர்கள் நாங்களல்ல. எங்கள் ஐயா
ஜடாயுவைக் கொன்ற பழியை முடித்துக்
கொள்ள வந்து வெற்றிகொண்டோ மன்றி
மறுவில்லாத சூரியகுலத்திற்கு வடுத்தேடிக்
கொள்ள வந்தவர்களல்ல. ஆகையால், நீ
மாசற்றவள் என்னும் வகையைத் தெரிவித்
தால் உன்னை ஒப்புக்கொள்ளலாகும். என்று
சொல்லிய இறைவன் மொழியைக் கேட்டும்,
பக்கத்தில் ஒருவரும் ஒன்றுஞ் சொல்லாதிருப்
பதைப் பார்த்த அம்மன் சொல்லுகின்றாள்:
சுவாமி! அரக்கன் வஞ்சித்து என்னை அப
கரித்தான். அப்படி அபகரித்தவன் புத்திர
மித்திர களத்திராதிகளோடு இறக்கக் கண்ட
பின் யான் என் சரீரத்தை விட்டுவிடுவதே தரு
மம். ஆனதால், இப்போது தேவரீர் கைப்
பாணத்தால் அவன் இறக்கக் கண்டேன். இனி
மேல் நான் பிறந்த குலத்திற்கும் பெருமை
உண்டாகும்படியாய் அக்கினிப் பிரவேசம்
ஆகிறேன் என்று நமஸ்கரித்துத் திரும்பி,
அங்கதன், அனுமார், சுக்ரீபன், விபீஷணன்
இவர்கள் யாவரையும் பார்த்து அருள்புரிந்து
இளைய பெருமாளை நோக்கி, என் வினை வசத்
தால் உம்மையும் இகழ்ந்து பேசினேன். அந்
தக் குற்றத்தை மனதில் வைக்காமல் அக்கினி
விர்த்தி பண்ணிக் கொடுக்கவேண்டும் என்று
கேட்கவும், அண்ணனுடைய மனது அறிந்த
நல்ல தம்பியானவர் ஒரு நொடிப் பொழுதில்
அக்கினி வளர்த்த, வைதேகியார் அந்த அக்

கினியைப் பிரதட்சணம் பண்ணி, எனது வாக்கினுலும், மனத்தினுலும், காயத்தினுலும் குற்றங்களுண்டாய் இருக்குமாகில், என் சரீரத்தைக் கொளுத்திச் சாம்பராக்கக் கடவது என்று இரவிகுல புங்கவனையும் இதயத்திற் சிந்தனை செய்து, செங்கால் அன்னமானது செந்தாமரைத் தடாகத்தில் இறங்குந் தன்மை போல் அக்கினிக் குழியில் பாய்ந்தனள்.

அப்போது அந்த அக்கினிதேவன் தாயாரைக் கரத்திலேந்தி, ஸ்ரீராமமூர்த்தியை வணங்கி, சுவாமி! உலகத்திலுள்ள யாவற்றையும் சுடுகின்ற என்னை இந்தக் கற்பின் சுவாலை சுடுகின்றது என்று வைத்து வணங்கவும், அம் மகாலட்சுமியை ஸ்ரீராமரும், இலக்குமணருங் கண்டு மனமகிழ்ச்சிகொள்ள இவ்வளவு பாடுபட்டும் விருதாவாய் போய்விட்டதே என்று விசனப்பட்ட வானரவீரர்கள் முதலிய பேரும் புளகாங்கிதம் பூப்ப, பிரமதேவன், இந்திரன் முதலிய தேவர்களும், ரிஷீஸ்வரர்களும் ஸ்ரீராமரையும் இலக்குமணரையும் வந்து கண்டு, இவர்களுடைய வீரப் பிரதாபமுள்ள தோள்களையும், வில்லுகளையும் வாழ்த்திப் புகழ்ந்து தாயாருடைய எண்ணமும், மன வுறுதியும், தீரமும், பதிவிரதா பக்தியும் தெரிவித்து, தசரத தரிசனமும் செய்து வைத்து அயோத்தியாபுரிக்குப் போய் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு, சீதா லட்சுமண பரத சத்துருக்க அனுமச் சமேத ஸ்ரீராமச் சந்திர மூர்த்தியாய் வாழ்க்கடவது யென்று வாழ்த்தி இன்னமும் உமக்கு வேண்டிய வரங்கள் ஏதாகிலும் உண்டாகில் தருகின்றோம் என்று சொல்லினர். அதைக்கேட்ட ஸ்ரீராமர் கேட்கின்றார்: ஓ மஹான்களே! என்னுடன் வந்த எழுபதுவெள்ளம் வானரப்படைகளும், பதினெட்டுவகைப் படைத்தலைவர்களும் குறைவில்லாமல் நிறைந்து இருக்கவேண்டுமென்று கேட்க, அப்படியே அருள்புரிந்துவாழிபாடித் தங்கள் தங்கள் இடஞ் சேர்ந்தார்கள். மாதலியும் இந்திரவிமானத்தைக் கொண்டுபோனான். இப்பால், ஸ்ரீராமர் ஜானகியைநோக்கி ஆலிங்கனஞ் செய்துகொண்டு உன்னுடைய பதிவிரதா தருமம் யாவர்களுக்குந் தெரியும்படியாகவும், அபத்துவந்த காலத்திலும் என்னுடைய நாமத்தையே உச்சரித்துக்கொண்டு இருந்த உன்னுடைய புத்தியின் விசேஷந் தெரியும்படியாகவும் இப்படி செய்ததல்லாமல் வேறல்ல. நீயும் கற்புடைய ஸ்திரீகளுக்குக் கணவனே தெய்வமென்பதை நிலைநிற்கக் காட்டினை என்று மிருதுவசனங்களைப் பேசித் தம்பியுந் தானும் படைகளும் வீரர்களும் அகமகிழ்ந்திருந்தார்கள்.

இப்படிக்குச் சீதா சமேதராக எழுந்தருளிய ஸ்ரீராமமூர்த்தியை யாவரும் நெருங்கி வந்து வணங்கி நிற்க, அப்போது தாசரதி விபீஷணனைப் பார்த்து நான் அயோத்தியை விட்டு வனம் வரும்போது என் தம்பி பரதனுக்குப் பதினாலு வருஷமுங் கழித்துத் தசமியினன்று வருகிறேனென்று சொல்லிய நாள் இன்று வந்தபடியால், நான் சென்று அவனைப் பார்க்கவேண்டியது என்று சொல்லவும், விபீஷணன் புட்பகவிமானத்தை கொண்டு வந்து வைத்தான். அதில் யாவர்களும் ஏறிக்கொண்டு மந்திரத்தைச் செபித்த மாத்திரம் க்ஷணப்பொழுதில் இலங்கைப் பட்டின முழுமையுஞ் சுற்றி திருவணையையுந் தாண்டிச் செல்லுவதாயது. அப்போது ஸ்ரீராமர் கிஷ்கிந்தை, சம்பாநதி, ஜடாயு இறந்தவிடம், அகஸ்தியர் ஆசிரமம், பஞ்சவடி தீரம் இவை யாவற்றையும் எல்லோர்க்குங் காண்பித்துக் கொண்டு பரத்துவாசருடைய ஆசிரமத்தில் இறங்கி, அவர் வேண்டுகோளினுற் போசனத்திற்கு ஒப்புக்கொண் டிருந்தனர். அப்போது ஸ்ரீராமர் அனுமானைக்கூவி குகப்பெருமானையும், பரதசத்துருக்கரையுங் கண்டு என் வருதலைச் சொல்லி வரக்கடவையென்று அனுப்ப, அவர் ஸ்ரீராம ஜெயமென்று அந்தரத்தில் எழுந்து கங்கைக்கரையில் வந்து ஓரிடத்தில் பந்துக்களுடனிருந்து ஸ்ரீராமரைக் காணேமேயென்று கங்கையில் ஓடத்தைக் கவிழ்க்கப் போகிற குகப்பெருமானுக்கு ஸ்ரீராமர் இதோ பரத்துவாசர் ஆசிரமத்தில் வந்தார் என்று சொல்லி, சஞ்சீவிமருந்து உதவியதைப்போற் குகப்பெருமானை நிலை நிறுத்திவிட்டு, நந்திக் கிராமத்திற்கு வந்தார். அப்படி வரும்போது, கௌசலை, கைகேசி, சுமித்திரை இவர் முதலிய பட்டினத்துச் சனங்கள் எல்லோரும் விசனப்பட அக்கினி வளர்த்தி மூன்று சுற்றில் விழ முயன்றிருக்கின்ற பரதனையுஞ் சத்துருக்கனையுங் கண்டு இதோ வந்தார் ஸ்ரீராமர் என்று வானத்திலிருந்து மழைபோற் குதித்து, அக்கினியை யவித்து, அருள்மொழி கொடுத்து, ஐயா! உங்களண்ணராகிய ஸ்ரீராமர் இலக்ஷ்மணரோடு சீதா சமேதராய் இவ்வயோத்தி நீங்கி ஆரணியஞ் சேர்ந்து, சூர்ப்பனகையை

மூக்கு முலையறுத்து, கரதூஷணரைக் காய்ந்து, மாயமானைக் கொன்று, ராவணன் சீதையைக் கொண்டுபோகக் கிஷ்கிந்தைக்கு வந்து சுக்கிரீபனுக்குப் பட்டந்தந்து, வானரவெள்ளங்களுடன் கடலைத் திருவணைகட்டி லங்கையிற் சென்று ராவணன் முதல் யாவர்களையுங் கொன்று, இதோ சீதையம்மனுடன் பரத்துவாச ராசிரமத்தில் வந்திருக்கின்றனர். நான் ராமதூதன், என்பேர் அனுமான். என்று எழுந்து கிளம்பி மீண்டும் பரத்துவாசர் ஆசிரமத்திற்கு வந்து, யாவர்களுடனும் பந்தியிலிருந்து, ஸ்ரீராமருடைய பரிகலம் வாங்கிப் புசித்து, தான் போய்வந்த சமாசாரங்களைச் சொல்லினர்.

அதுகேட்ட ஸ்ரீராமர் ரிஷிகள் முதலியபேர்களை நோக்கி, உங்கள் ஆசிர்வசனத்தினாலும், இந்த அனுமானுடைய பேருதவியாலும் இராவணசங்காரஞ் செய்தேன் என்று புகழ்ந்து வாழ்த்தவும், யாவர்களும் மகிழ்ந்து ஆசீர்வதித்தார்கள். அன்று அவ்விடத்திலிருந்து, மறுநாட்காலமே யாவரும் புஷ்பகத்திலேறிக் கங்கைக்கரையில் வந்து குகனை அழைத்துக்கொண்டு அயோத்தியாபுரி பட்டணம் வந்து சேர்ந்தார்கள். பரதன், சத்துருக்கன், மந்திரிமார்கள், பட்டினத்துச் சனங்கள், கோசலதேசாதிபர், கேகயதேசாதிபர் இன்னுமுள்ள சகலராஜர்களும் வந்து காகுத்தனை நெருங்கி வணங்க, வசிஷ்டராதி மகாமுனிவர்களுக்கும், தாய்மார்களுக்கும் தானுந் தம்பியும் சீதையும் வணங்கி, சகல செய்திகளையுஞ் சம்பிரமமாகப் பேசியிருந்து, எல்லோருக்கும் விடுதி அமைத்து இருக்கச் செய்து, எழுபதுவெள்ளம் வானரச்சேனையும் படைத்தலைவர்களும் நிறைந்திருக்கும்படியாக வீற்றிருந்தனர். ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி அப்போது எந்தலோகமும் இந்தலோகத்திற்கு ஈடில்லை என்று எவர்களும் புகழும்படியாக அவ்வயோத்தியாபுரியானது ஸ்ரீமந் நாராயணனுடைய கர்ப்பம்போல நலம்பெறயிருந்தது. வசிஷ்டர் முதலிய மகாமுனிவரரும், தாய்மார்களும், தம்பிமார்களும், மந்திரிமார்களும், தந்திரிமார்களும் மற்றுமுள்ள அளவற்ற பிரமுகாளும் ஒன்றாகக்கூடி, இம்மண்டல முழுமையும் எண்டிசைப்பாலரும் அண்டர்கள் யாவரும் தொண்டர்கள் பலருங் கண்டு கண்களிக்க ஸ்ரீராமச்சந்திரனுக்கு கவின்முடி சூட்ட இன்று நாள் நன்று என்றனர். உடனே ஸ்ரீராமர் தம்பியருடனே சடைமுடி களைந்து, அம்புவியெங்கும் அருமையாயுள்ள, புண்ணியதீர்த்தம் புனிதமால் மூழ்கி, வன்மை வேதியர் வாழ்த்தி, யட்சதைகள் எண்ணிலா தளிக்க, எவர்களுங் களிக்க, மந்த்ரவோமாக்கினி மறையுளி வளர்க்க, சுந்தரப்பணிகள் துலங்க வணிந்து, சீதாசமேதராய்ச் சீர்பெற எழுந்து, சிங்காசனத்தில் ஜெயமுடனிருக்க, எங்கோன் வசிஷ்டர் எடுத்தணி முடியை, திங்கள் மும்மாரி சீர்பெற வழங்க, தருமந்தழைக்க, தானமோங்க, வேதம் வாழ்க, வேதியர் வாழ்க, தேவராலயந் தினந்தோறும் வாழ்க, நித்தியமாக சத்தியமோங்கி, மன்னுயிர் யாவையும் நின்னுயிர் போலக் காத்து இரட்சிக்கக் கடனானக்கென்றே தரித்தனர். வேதஞ் சாற்றினர். புலவர் மங்கலவோசை மழையென முழக்கினர். விண்ணவர் பூமழை வியந்து பொழிந்தனர். அந்தரத் துந்துமியாதிகளார்த்தன. இப்பால் வரிசையாய் அரசர் வரி இறைகொடுக்க, மந்திரிமார்களும் மநுமுறை கூற, பகைவரின்றித் தொகையிலாச் செல்வம் நாளுக்குநாள் அபிவிர்த்தியாகி, தாரணி புகழ ஜானகி சமேதனாய் பரத சத்துருக்கர் இலட்சுமணருடனே யாவருங் களிக்க அயோத்தியை ஆண்டனன். காயாம்பூவண்ணன்! களங்கரகிதன்! இரவிகுலோத்துங்கன்! இராமச்சந்திரன்! இச் சரித்திரத்தை இயம்பினோர் கேட்டோர் நிச்சயமாக நினைத்துத் துதித்தோர் யாவருங் களித்து, இகத்தினில் வாழ்ந்து பரத்தில் நற்பயனும் பண்புடனடைந்து ஐயன் திருவடியடைந்து வாழ்ந்திடுவார். ஓ வையகம் புரக்கு மாமதி குலத்தோய் வாய்மொழி தவறா வள்ளலே! என்று மார்க்கண்டேய மகாமுனிவர் வகுத்துரைத்தனர். இவை யனைத்துங் கேட்ட பாண்டவர் - பாஞ்சாலி - தௌமியாசாரியர் - மற்றுமுள்ள பிராமணாள் யாவரும் அம் மார்க்கண்டேயரை அனந்தமுறை வணங்கித் துதிக்க, அவர் யாவருக்கும் ஆசீர்வதித்து விடைபெற்றுக்கொண்டு, தமது ஆசிரமத்திற் கெழுந்தருளினார்.

மார்க்கண்டேயமுனிச்சருக்கம் முற்றிற்று.

---

பதின்மூன்றாவது,

## சித்திரசேனன் சருக்கம்

### கண்ணன் துதி

அருவமாகியு முருவமாகியு மிரண்டலதா,
யருவையாயரும் புருடனா யிவ்விரண்டில

ராய்த், தருவதாய்த் தரிப்பவ னேற்பவன்ரு ளுய்த், தருவின்வண்ணமா மொருவனைச் சரணடைகுதுமே.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! பாண்டவர்கள் இவ்வாறு நல்ல காலக்ஷேபஞ் செய்துகொண்டு பெரியோர்களுடைய ஆசியும் பெற்று சௌக்கியம் அடைந்திருக்குங்காலையில், அஸ்தினாபுரத்தி லிருந்து வந்த ஒரு பிராமணன் தருமராஜனையுந் தம்பிமார்களையும் பார்த்து, முகம் வியர்த்து, கண்ணீர் சொரிந்து விசனமுற்று, ஆ! ஆ! பஞ்சவர்களே! உங்களையும் தெய்வம் இப்படி சோதித்த தல்லவா? என்று ஏங்கி கொஞ்சநேரஞ் சில பிரிய வசனங்களைப் பேசிக்கொண்டிருந்து விடை பெற்றுக்கொண்டு போயினன். இப்படி போனவன், திருதராஷ்டிர மகாராஜனைக் கண்டு ஆசீர்வதித்து, ஓ அரசனே! உமது தம்பி பிள்ளைகள் ஐவரும் வனத்தி லிருக்கின்றார்கள். வெய்யில் - மழை - காற்று - குளிரெல்லாம் அவர்கள்மேல் தாங்கிக் கால போஜனமும் இல்லாமல் வருந்தி யிருந்து பனிரண்டு வருடத்திற் சென்றதுபோக நின்றதை ஓட்டிக் கொண்டு வருகிறார்களென்று சொல்லினன். அவன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட திரிதராஷ்டிரன் வருத்தமடைந்து, பாண்டு பூபதியைக் கருத்தில் நினைந்து, உன்னைப் போல் என்னைக் கொண்டுபோகாமல் உலகத்துள் வைத்து இந்தத் துன்ப வார்த்தைகளை எல்லாங் கேட்கச் செய்தனையோ? நான் வருத்தமுற நோக்காத உனக்கு மனம் வெறுத்தோ? என்று வாடி விதுரனை அழையுங்களென்று சொல்லினன். உடனே சாரணரோடி யழைக்க, அதுகேட்டு வந்து பணிந்து நின்ற தம்பியைத் தமயன் அருகிலிருத்தி, அப்பா விதுரா! நானென்ன சொல்வேன்; வனத்தில் பாண்டவர்கள் மிகுந்த வருத்தமுற்று இருக்கின்றார்களென்று கேட்டேன். அது கேட்டமுதல், எனக்கு உயிர் தாளக்கூடவில்லையே? இன்னாட்டிலே அரண்மனை வீட்டிலே சகல போகங்களையும் அனுபவித்திருந்த என் தம்பி புத்திரர்கள் காட்டிலே வருந்திக் கலங்க, என் பாட்டிலே இருப்பது ஞாயமோ? இதென்ன தெய்வ சகாயமோ? தம்பி! நாளைக் கணக்கிட்டு இருக்கின்றார்களாமே? இன்னும் எத்தனை நாள் இருக்கின்றது? அதனைச் சொல்லென்று கேட்டான். விதுரன் சொல்லுகின்றான்: அண்ணா! ஆச்சு; இன்னும் ஒரு வருஷந்தான் இருக்கும்போல் இருக்கின்றது. அவர்கட்கு மற்றொரு வருத்தங்களுமில்லை. ஆனால், இப்போது மந்திரத்திற்கு அடங்கிய நாகம்போல் இருக்கின்றார்கள். என்று சொல்லக்கேட்ட கண்ணில்லா அரசன் நடுநடுங்கி அப்பா! நாளாய்விட்டால் இவ்விடத்திற்கு வந்து போர் புரிவார்களே. நமது பசங்கள் முழுமையும் மடிவார்களே. என் பிள்ளைகளை அழைத்துப் பாண்டவர்களுங்களை நீருக்குவரென்று கூறினாலும் என்னைச் சீறுகின்றார்களே. என் மனம் தேறவில்லையே. என் பிள்ளைகள் கோபம் ஆறவில்லையே. எனக்கொரு ஆறுதலைச் சொல்ல வேண்டுமடா தம்பீ என்று பரிதாபித்து வெருவினான். அப்படி வெருவிய அரசனை நோக்கி விதுரன் சொல்லுகிறான்:

ஐயனே! முன்னம் ஒரு நாள் நாரதர் வந்து சில மொழிகள் தந்துபோயினர். அவைகளை நினைத்தால் மனம் பகீரென்னும். அருச்சுனன் பரமேஸ்வரனைக் குறித்துத் தவஞ் செய்து அவருடன் விளையாடிப் பாசுபதாஸ்திரம் பெற்று காலகேய நிவாத கவசர்களைக் கொன்று, இந்திரலோகப்பட்டமுங் கிரீடமும் பெற்று, மேன்மையுற்று, அநேக அஸ்திரங்களெல்லாம் மந்திரமுஷ்டி நிலையுடன் கற்று, பூலோகத்திலுற் றிருக்கின்றானென்றும், வாயு புத்திரன் குபேரலோகத்திற்குப் போய், அநேகம் யட்ச கின்னர கிம்புருடர் முதலிய பேர்களையும் மணிமாலனையுங் கொன்று, வெற்றியடைந்து, தனதனுடைய தனத்தைப்பெற்று, அநுமாரால் சிநேகமும் வரங்களும் தரக் கொண்டு, அநேகம் இராக்கதரை யெல்லாம் அணுவாகச் செய்து பெரியோர்களுடைய ஆசீர்வசனம் பெற்று இருக்கின்றான் என்றுங் கேள்வியுற்றோம். உம்முடைய பிள்ளைகளோ ஒருவர்க்கு அடங்கினவரல்ல. என்ன செய்யலாம் என்று சொல்லி வாயடங்கினன். அது கேட்ட திரிதராஷ்டிரன் பின்னும் நடுங்கி, ஆம்; ஆம்; நீ சொன்னது சரியே. ஐயோ! முன்னிருந்த பல பராக்கிரமம் போரு தென்றோ இன்னமும் இப்பேர்ப்பட்ட திறங்களெல்லாங் கைக்கொண் டிருக்கின்றார்கள். இதல்லாமலும், முன்னொரு நாள் உன்னை அழைத்து யான் யோசிக்கும்போது, பாண்டவர்கள் கணைக்கும் இவர்கள் தலைக்குங் கணக்குச் சரிபிடித்திருக்கின்றான் நமனென்று துணிந்து சொல்லி இருக்கின்றாய். இப்போது என்ன செய்யலாந் தம்பி நான்வெம்பி உன்னை

நம்பி கேட்பதற்கு உறுதிமொழி கூறக்கடவை என்றான். அதைக் கேட்ட விதுரனானவன், ஐயா! யானென்ன சொல்வேன். தேவரீர் பிள்ளைகள் ஒழுங்கான வழிக்கு வரார்கள். நமக்கு மாத்திரம் பிள்ளைகளென்னும் பாசத்தால் மனம் சஞ்சலிக்கிறது. இதனாலென்ன லாபம். தேவரீர் பிள்ளைகள் ஒருவர் சொல்வழியு நடப்பவர்களல்லர். தெய்வசித்தமும் இப்படியிருக்கின்றது. நாம் செய்வதென்னை? தைரியம் விடாம லிருப்பதே தவமென்று கூறினான். இதனைக் கேட்டிருந்த ஒரு தூதனோடிச் சுயோதனனிடத்திற் சொன்னான். உடனே அச்சுயோதனன் மாமனையுங் கர்னனையுந் தம்பியையும் அழைத்துக்கொண்டு தந்தையிடம் வந்து பணிந்து இதனைச் சொல்லுகின்றான்.

## விதுரனாற் பாண்டவர் வலிமைகேட்டுப் பயந்த திரிதராட்டிரனைத் துரியோதனன் தன் வலிமைகூறித் தேற்றுதல்

ஐயா! பஞ்சபாண்டவர்களைக் குறித்து ஏதோ சில வார்த்தைகள் தங்களிடத்தில் வந்து பேசியவர்கள், தவத்திலும் வரத்திலும் உரத்திலும் அவர்கள் இப்போது சிறந்ததாராகச் சொன்னார்களாம். உங்களுக்கு என்னால் துயரம் வேண்டியதில்லை. நீர் ஏன் விசனத்தினால் உருகி வருந்துகின்றீர். எனக்குப் பயமில்லையென்றும், அவர்கள் சகல பலமுமுடையவர்களென்றும் உமக்குச் சொல்லுகின்றவர்கள் வார்த்தை எப்போது தெரியுமென்றால், மூன்றாங்கட்டவிழ்க்கும்போது தெரியும். ஹரிஹரப் பிரமாதிகளே அவர்களுக்கு மாத்திரம் உறவும், எனக்குப் பகையுமென்று நினைக்க வேண்டாம். மந்திரங்களுக்கு அவர்கள் மாத்திரஞ் சுதந்தரர்களென்றும், நான் பரதந்திரனென்றும் உன்னாதீர். எனக்குச் சமுத்திரஞ் சூழ்ந்த நாடிருக்கின்றது. அவர்களுக்குச் சருகு விளைந்த காடிருக்கின்றது. நூறு பேர் யாங்கள் அண்ணன் தம்பிகள். அவர்கள் ஐந்து பேர். எங்களுக்குக் காலபோஜன சவுக்கியமுண்டு. அவர்களுக்கு அகாலபோஜன அசௌக்கியமுண்டு. நாங்கள் சிங்கம். எங்களால் அவர்கள் படப்போகிறது பங்கம். பரசுராமனை ஜெயித்துச் சிதேந்திரியராயிருப்பவராகிய வீஷ்டுமாச்சாரியரும், அங்கதேசாதிபதியாகிய கர்னனும், தனுவலாசிரியராகிய துரோணரும், திரிலோக கண்டகனாகிய அசுவத்தாமாவும், சத்தியவசன உத்தமராகிய கிருபாச்சாரியரும், இவ்வுலகத் தரசர்களில் தேவரைக் கொல்லும் வல்லவர்களும், எண்ணற்ற இராக்ஷசசிரேஷ்டர்களும், எண்டிசையிலுற்ற மண்டலேஸ்வரரும், கணக்கிறந்த சேனைகளும், திவ்ய தேவாஸ்திரங்களும், வச்ரதேகமும், குன்றாத கவசமும், அரவத்துவசமும், இத்யாதி பலங்களுமுடைய யான் அவர்களுக்கு அஞ்சேன். என் பலமும் யானும் வெளிப்படுங் காலையில், அவர் பெற்ற வரமும் உரமுங் கெடுங் கேட்டை நீர் கேள்விப்படப் போகின்றீர். கலைப்பார் கலைத்தாற் கல்லுங் கரையும். அதுபோல் பற்பலபேருடைய வார்த்தையைக் கேட்டு மயங்காதீர். இவ்விடத்தில் நம்முடைய அன்னங்களையும், வஸ்திரங்களையும் அனுபவித்து உண்ட வீட்டுக் கிரண்டகம் நினைக்கும் அவர்களைப்போல், கடவுளும் பட்சபாதமாய் இருக்கமாட்டார் என்று உறுதி கூறிய செல்வக்குமாரனை இரு கண்ணுமற்ற அரசன் இறுகத் தழுவி அணைத்து, அப்போதே பாண்டவர்களைச் செயித்த நயம்போல அகமகிழ்ந்து, முகமலர்ந்து, அடா என் செல்வமே! அப்படியானால் உன்னிஷ்டப்படி சுகமாய் இருக்கக்கடவையென்று விடைகொடுத் தனுப்பினன். உடனே அவனும் நமஸ்கரித்துச் சென்று துஷ்ட துஷ்டாளான தாங்கள் நால்வரும் கூடி யோசிக்கத் தொடங்கினார்.

## பாண்டவர்களை அவமானப்படுத்த வேண்டித் துரியோதனாதியர் ஆலோசித்தல்

அஃதென்னவென்றால், கேளும் சகுனி மாமா! ஓ கர்னமகாராஜனே! தம்பி துச்சாதனா! இந்த விதுரனானவன் பாண்டவர்கள் இடத்தில் சென்றான்போலும், அவர்கள் இவன் காலிலும் கையிலும் விழுந்து அழுது முறையிட்டதின்பேரில், அங்கிருந்து இங்கு வந்து, எரியுங் கொள்ளியை ஏறத்தள்ளுவது போலவும், அந்த மரத்தில் பேயுண்டென்று அருக்கல் செய்வதுபோலவும், நமது அரசனிடத்தில் பொய்யு மெய்யுமாகக் கலந்து புகட்டிவிட்டான். முன்னமே நொந்திருக்கும் எந்தையானவர், இந்த வசனங்களைக் கேட்டவுடனே அதுவே திகிலாய் அவஸ்தையுற்றார். ஆகையால், அவர் நமது பிள்ளைகள் பலசாலிகளும், பாண்டவர்கள் பலயீனருமென்று தெரிந்துகொள்ள, ஒன்று செய்யவேண்டுமென்று சிந்தை கொண்டேன். இதற்குத் தகுந்த யுக்தி பண்ணுவீர்களாகில், எனக்கு இந்த விசனம் நீங்கும். யானும் என் தந்தை

யும் சேர்ந்து சேனை வேலைகளெல்லாம் முடித்துப் போடுவோம் என்று துரியோதனன் சொல்லக் கேட்ட, கர்னன் சொல்லுகின்றான்: கேளும் அரசனே! தருமராஜனுடைய செல்வ முதலிய யாவும் நீர் பெற்று இலட்சுமி கடாட்சத்தினால் பெருமையுற் றிருக்கின்றீர். அவர்கள் காடே கெதியாய் முகம் வாடி, பழி தேடி, உரு மாறி, நிலங் கீறி, ஒடுங்கி இருக்கின்றார்கள். நமது நகரத்திற்குச் சமீபத்திலும் வந்திருக்கின்றார்களாம். ஆகையால், நாளை குபேர சம்பத்தாகிய நீர் தம்பிமார் கூட்டத்துடன் அலங்கரித்துக் கொண்டு, நமது அந்தப்புரஸ்திரீகள்யாவரும் அலங்கரித்துக்கொண்டு வரச்செய்து, அவர்களுக்குப் பணிப்பெண்களுங் கூடவே சேர்த்துவரக் கட்டளையிட்டு, மன்மதனும் இரதியும் உங்கள் வடிவினையும் அலங்காரங்களையுங் கண்டு வரும்படி கோடி சூரியப் பிரகாச உல்லாசங்களுடனே இரதகஜதுரகபதாதியர் யாவருங் கொடி-குடை-குஞ்சம்-பிஞ்ச முதலிய சின்னங்களோடு பேரி-டங்கா-பூரி-மேள முதலிய வாத்தியங்களு முழங்கி வரச் சென்று, பாண்டவர் இருக்கும் வனத்திற் போய் இறங்கி, பலவித சித்திரான்னங்களும், பலவித பதார்த்தங்களும், பலவித பலகாரங்களும், பலவித பாயசங்களும் அமைத்துப் புசித்து, சந்தனம்-புஷ்பம்-பன்னீர்-புனுகு-சவ்வாது முதலியவைகள் பூசி, பஞ்சவிடயத்தோடு பரிமளத் தாம்பூலவகைகள் கொண்டு, அளவற்ற அரம்பாஸ்திரீகள் நடுவில் தேவேந்திர போகம்போலும், அநேக நட்சத்திரங்களின் நடுவில் ஒரு சந்திரன் பிரகாசிக்குந் தன்மை போலும், வெகுவாகிய பெண் சிங்கத்தின் மத்தியில் ஒரு ஆண் சிங்கம் உலாவுதல் போலும் நீரும்,குணவதிகளாகிய இராஜஸ்திரீகள் இத்தனை பேரும், யாமும் பவனி வருவோமாகில், நம்மைக் கண்டவுடனே பாண்டவர்கள் உயிரைவிட்டு இறந்து போவார்கள்.

இதல்லாமலும், திரௌபதி நல்ல வயதினையுடைய பாலிய ஸ்திரீயாகையால், உங்களுடைய ஸ்திரீகளையெல்லாம் பார்த்தவுடனே வயிறெரிந்து பாண்டவர்கள் பேரிற் போய் விழுந்து, அடா பாவிகளே! ஒவ்வொருவனுக்கிருக்கும் பெண்சாதிகள் உயர்ந்திருக்குஞ் சீருஞ் சிறப்பும் பார்த்தீர்களா? ஐந்து பேருக்கும் நான் ஒருத்தி மனையாட்டியாக அமைந்தும் நான் இருக்கும் அலங்கோலங்களையுங் கண்டீர்களா? உங்கள் பவிஷ இவ்வளவு தானோ? என்று கேட்பாள். அந்த வசனத்தினால் வரும் விசனத்தினாற் பாண்டு புத்திரன் ஆகிய தருமராஜன் இறக்கவேண்டும். அல்லது அந்த வனத்தைவிட்டுப் பறக்கவேண்டும். இல்லாவிட்டாற் பாஞ்சாலி பாண்டவர்களைத் தூஷித்து விட்டு உம்மிடத்தில் வந்து சரணம் புகுந்து, என்னையுங் காப்பாற்றும் என்று இரக்கவேண்டும். இந்த உபாயத்தால் எந்த விதத்திலாவது பாண்டவர்கள் நமது கண்ணிலுஞ் சிந்தையிலும் இனிமேற் படார்கள் என்று கொடையாளன் சொன்ன வார்த்தையைக் கௌரவ முதல்வன் கேட்டு, கர்னனைக் கட்டி அணைத்துக்கொண்டு அண்ணா! என்னெண்ணப்படி நன்றாய்ச் சொன்னீர். ஆ! ஆ!! இது மகா நல்ல யோசனை. சரிதான் இப்படி செய்வதற்கு நாம் அந்த வனத்திற்குப் போகவேண்டும். நமது இறையறிந்தால் அனுப்பமாட்டாரே. இதற்கெப்படி உபாயம் என்று வினவும்போது, சகுனி சொல்லுகின்றான். என்னருமை மருமகனே! நமது பசுக் கூட்டங்களை மேய்க்கும் ஆயனொருவனை அரசனிடத்தில் அனுப்பிவைத்து, காட்டிலிருக்கும் வேங்கைகள் கன்றுகளையும் பசுக்களையுங் கொன்று விடுகின்றன. இன்று வரையிலும் இறந்து சென்றது இருபது என்று புகன்றால், நாம் அவரருகில் நின்று வேட்டை போக உத்தரம் பெற்றுக் கொள்ளுவோம். என்று மாமன் கூறலும், சோமன் குலத்துதித்து நந்தியாவட்டத் தாமம் புனைந்த கோமான் குலுங்க நகைத்துக் கொண்டாடி ஓ சீமானே! இந்த மதியை எங்கே வைத்திருந்தீர்? என்று மகிழ்ந்தவனாய் உடனே தூதரையோட்டி ஆயருக்குத் தலைவனை அழைத்து வரச் செய்து அவனுக்குத் தக்கபடி போதனை செய்து, திரிதராஷ்டிரனிடத்தில் நாளையுதயஞ் செல்லென்று உத்தரவு செய்தான். அப்போது செங்கதிரோன் மேற்றிசையில் மறைந்து சென்று, இரவு கழிந்தபின்பு கீழ்த்திசையி லுதயமாயினன். அஃதெப்படியிருந்ததென்றால், பாண்டவரிடத்திற்சென்று துரியோதனனுடன் சில பாவிகளுஞ் சேர்ந்து இந்த யோசனை செய்தார்களென்று சொல்லிப் போய் சித்திரசேனனையுங் கண்டு படையுடன் வரச் சொல்லித் திட்டப்படுத்தி வைத்து தானும் மறுநாள் இந்த வேடிக்கையைப் பார்க்க வந்தவனைப்போ லிருந்தது.

## துரியோதனாதியர் திரிதராஷ்டிரனிடஞ் சென்று வேட்டைக்குப்போக உத்தரம் பெற்றுப் பிரயாணமாதல்

அந்த வேளையில் அரவத்துவஜ னெழுந்து நித்திய விதிகள் முடித்துக் கொண்டு, மாமனும் அங்கர் பூமனுஞ் சூழ்ந்துவரத் தந்தையின் அரண்மனையிற் புகுந்து சென்று நமஸ்கரித்து ஆசிபெற்று நின்றான். அந்த வேளையிற் பசுக்காப்போன் வந்து ஆசார முகப்பிலிருந்து மிருகங்களினால் நேரிடும் உபத்திரவங்களையும், பசுவின் நஷ்டத்தையுஞ் சொன்னான். அங்கிருக்கும் உயிர்ச்சேவகன் கேட்டு நொடியிலோடிவந்து அரசனுடைய அடிமலரிணையை இறைஞ்சி வாய்புதைத்து நின்றுரைக்க, அம்மகாராஜன் கேட்டுச் சற்றுநேரம் யோசித்து தன்னிடத்து வந்திருக்குங் கர்னனையுஞ் சகுனியையும் எச்சரித்து பாண்டவர்கள் அவ்விடம் வந்திருக்கின்றதாகக் கேள்வியுற்றேன். என் பிள்ளைகள் அவ்விடம் போனால் அவர்கள் இவர்களைப் பார்க்கும்போது வயிறெரிந்து இவர்களை மாத்திரம் இவ்வளவு சவுக்கியத்தை அநுபவிக்கிறதும் நான் வருத்தப்படுகிறதாவென்று துண்டகரனாகிய தண்டகரன் கண்டால் விடமாட்டான். ஆகையாற் சுயோதனன் முதலிய பிள்ளைகள் தவிர மற்றவர்கள்போய் மிருகபயத்தை அகற்றி வாருங்களென்றான். அதைக் கேட்ட சகுனியானவன் சொல்லுகிறான். அத்தான்! என்ன நீங்களிப்படி உத்தரவு செய்கின்றீர்கள்? பாண்டவர்கள் எந்தவனத்தி லிருக்கின்றார்கள்? நாம் எந்தயிடத்திற்குப் போகப்போகிறோம்? அவர்களிருக்குமிடத்திற் நமக்கென்ன காரியம்? கயிறுசுருட்டி விட்டதுபோற் போய் வரவேண்டியதேயன்றி, வீணாகிய காரியத்திற்குப் போகமாட்டார்கள் தங்கள் குழந்தைகள். மேலும், (அரசில்லாப்படை வெல்லுமா? ஆளனில்லாப் பெண்ணுக்கு வாழ்வுண்டா?) என்று பெரியோர் சொல்லுவார்கள். அது போல, அரசருக்குரியது வேட்டையாடல். நல்லது அப்படி சென்றாலும், பாண்டவர்கள் கண்டாலும், சபையிற் கூறிப்போன பதின்மூன்று வருடமுங் கழித்தல்லோ பேசவேண்டும்? இதினிடையி லொன்றுஞ் செய்யார்கள். அவர்கள் வெகு யோக்கியர்கள். சத்தியந்தப்பி நடக்கமாட்டார்கள். அதுபோகட்டும் நமக்கென்ன இவர்களிருக்கும் இடத்தில் வேலை? நாமேன் அங்கு போகவேண்டும்? என்று சொல்லித் துரியோதனனைப் பார்த்து, அப்பா மருமகனே! இறைவர் சொல்லுவது சிலருக்குக் குறைவாயிருந்தாலும், அதைத் தருமநீதியென்று ஒப்புக்கொள்ள வேண்டியதே? ஆனால், நமது பசுக்கள் அவ்விடத்தி லிருக்க வேண்டியதென்ன? அதுசரியன்று. இன்னும் அவைகளை அப்பாற் போகச்செய்து மிருக வேட்டையுமாடிச் சீக்கிரம் வந்துவிடுங்கள் என்று சொன்னான். இப்படி சகுனியின் வார்த்தையைக் கேட்ட இராஜன் நீர் போகவில்லையோவென்று கேட்க, தம்பிகள் போகின்றார்களே நானென்னத்திற்கென்ன அது சரியல்ல நீருங் கூடப்போய்ப் பிள்ளைகளை ஜாக்கிரதையாய் அழைத்து வாருமென்று கட்டளையிட்டான் திரிதராஷ்டிரன். அதைக் கேட்கவே யாவரும் நல்லதென்று வணங்கி, அப்பெரிய அரசனிடத்தில் உத்தரம் பெற்றுக்கொண்டு மகா சந்தோஷத்தோடுந் திரும்பினார்கள்.

இப்பால் யாவரும் ராஜசபையில் வந்து பறைசாத்துவோனை அழைத்து, வணங்காமுடியுடைய மகாராஜன் வேட்டை மார்க்கம் போகின்றார். யாவருஞ் சகல அலங்காரங்களுடன் புறப்படத் தக்கதென்று விளம்ப வைத்தார்கள். கர்னன்-சகுனி-துர்ச்சாதனன் முதலிய தம்பிமார்கள் இவர்கள் யாவரும் உயர்ந்த இரத்தினமுடிகளும், கவசங்களும், ஆயுதங்களும் தரித்துக்கொண்டு சகலவித அலங்காரங்களுடனே புறப்பட்டார்கள். துரியோதன மகாராஜன் கேயூரம்-மணிமகுடம்- குண்டலம்-மதாணி-புாகுவலயம் - வச்சிராங்கி- தும்பிப்பதக்கம்-மோகனமாலை- முத்துசரம்- இரத்தினக்கோவை-பத்துவிரல்களுக்கு மாதிரமயங்கு மோதிரங்கள் - பட்டை அரைஞாண்-வீரகண்டை - அரைப்பட்டிகை - திவ்யாஸ்திரங்கள் - செந்தூரத்திலகம் இவை முதலானவைகளோடு சந்தனமுதலிய பரிமளவர்க்கங்களும் நந்தியாவட்ட முதலிய கொந்தலர் மாலைகளும் விந்தைவிந்தையாக அணிந்தெழுந்தான். இத்துரியோதனாதிகள் நூறு பேருடைய பத்தினிமார்களும், முத்துப்பணி இரத்தினப்பணி கொத்துசித்ரப்பணி இவை முதலியவைகள் குலுங்கப் பாதாதிகேசபரியந்தம் அணிந்து, அநேகம்பேர் பாங்கியருஞ் சூழ, பணிப் பெண்கள் தாழ, பாதலஸ்திரீகளுங் காதலுற்றேங்க, பல்லக்குகள், ரதங்கள், குதிரைகள், பெண்யானைகள், விமானங்கள், இவைகளிலேறிப் புறப்பட்டார்கள். மறுதேச

த்து அரசர்களும் வாகனாதிகளுடன் வந்தார்கள். அப்பால் விண்ணவர்களெல்லாங் கண்டு களிகூற பெண்ணினங்களுடன் எண்ணங்கள் நிறைவேற, அண்ணலும் இரதத்தில் ஏறி, பேரி-பாங்கா-முரசு-காகளம்-கொம்பு-கரணு-பூரி-மத்தளம்-தாளம்-மேளம் இவைமுதலான வாத்தியங்கள் முழங்க, குடை-கொடி-குஞ்சம்-பிஞ்சம்-மகரதோரணம்-கருடடால்-அனுமடால்-சிங்கடால்-வேங்கைடால்-வீரடால்-ஆலவட்டம்-தாலவட்டம் இவை முதலிய விருதுகள் விளங்க, அரவக்கொடி அண்டமளாவப் பிடிக்க, அகண்ட துந்துமி அசனியேறென இடிக்க, சமுத்திரம்புரண்டு தரணியில்திரண்டு வருவனபோல் வெளிவந்து கட்டியப் பட்டுவான்கள்-வந்தியர்-புகழ்வோர் இவர்கள் யாவரும் பாடிக்கொண்டாட, சிலமங்கையர் நீராஞ்சன மெடுக்க, பல நங்கையர் பூரணகலச தீபம் பிடிக்க, சில அரிவையர் நிறைகுடமேந்திவர, பல தெரிவையர் சாமரை இரட்டிவர, சிலவஞ்சியர் கயலிணை நீட்ட, பல கொஞ்சியர் கண்ணாடி காட்ட, இவ்விதமான அஷ்டமங்கல வரிசைகள் நாற்புறங்களிலும் புடைசூழ்ந்து வரும்படியாகிய போகயோக சம்பிரமத்துடனும் நடனசங்கீத கோலாகலத்துடனும் புறப்பட்டுக் காட்டுக்கு வந்து, அன்று போதுமளவும் வேட்டையாடி மிருகங்களைக் கொன்று தின்று கூடவந்த ஆயர்கட்கெல்லாம் வெகுமதி கொடுத்தனுப்பி, அன்றிராத்திரி அவ்விடத்திலிருந்து, மறுநாட்காலமே யாவரோடும் நித்தியவிரத முடித்துக்கொண்டு, யாண்டு பூபதி பரிந்து பெற்றெடுத்த மன்னவரைவரும் மறையவருடனே வணங்கியிருந்து மகத்தைப் புரிந்து மகிழ்வுற்றிருக்கும் வனத்திற்கு வந்து, மாதருந் தாமும் வரிசை வரிசையாய் மானினம்போலும் மயிலினம்போலும் வளைந்து வளைந்து வனமெலாந்திரியா நின்றனர். இவர்களை யெல்லாம் பாண்டுபுத்திரர் பார்த்தும் பாராதிருந்தனர்.

### துரியோதனன் அங்கு ஜலக்கிரீடைக்கு வந்த கந்தருவராஜன் படைகளோடு தன் தம்பியர் முதலியோரை விடுத்து வம்புப் போர் விளைத்தல்

அந்தவேளையில் வந்த யாவரும் வியர்ந்து வெதும்பி வெய்யலால் வதங்கினவர்களாய் தாப்பிலிருந்த தோப்பினைக்கண்டு, தண்ணீர்த் தடாகமுஞ் சந்தனச் சோலையும் நிறைந்த இளைப்பினைத் தீர்க்கும்படியான வளப்பமிகுந்த இவ்வனத்திலிறங்குவோமென்றெண்ணி நடந்து அரசர்-அமைச்சர்-அன்பினோர்-ஸ்திரீகள் ஆகிய இவர்கள் தங்குதற்கும் இரதகஜதுரகபதாதிக ளிருப்பதற்கும், தகுந்த இடம் பார்த்துக் கூடாரம் போடுங்களென்று தூதரை யனுப்ப, அந்தப்படியே சாரணர் விரைவாகப் போய்ப் பார்க்கும்போது, கோபக் கண்களும் குந்தாயுதங்களும் கூரிய வேல்களும் கொடிய சூலங்களுங் கொண்டு, கூட்டமாகக் காவலிருக்குங் கந்திருவச் சேனைகளைக் கண்டு, திரும்பி யோடி வந்து, ஐயா! அந்த வனத்திற் கந்திருவ ராஜன் ஸ்திரீகளுடன் ஜலக்கிரீடை செய்கிறாராம் ஒருவரும் வரக்கூடாதென்று காவலாளிகள் நிறைந்திருக்கின்றார்கள் என்று சொல்லவே, துரியோதனன் கோபங்கொண்டு யாரானபோதிலும் ஓட்டிவிட்டு இடத்தைக் கைவசப் படுத்துங்களென்று சில வீரர்களையுஞ் சாரணர்களையும் அனுப்பினான். அவர்கள் ஓடி வந்து, அரப்பா காவலாளிகள் சீக்கிரம் ஓடிப்போங்கள். ஜகத்ரக்ஷகனாகிய வணங்கா முடியுடையோன் ராஜஸ்திரீகளுடன் வந்திருக்கின்றார். அவர் இவ்விடத்தில் இன்று பொருந்தியிருப்பதாகையால் நீங்களெல்லோரும் அப்பாற் போக வேண்டியது. தாமசஞ் செய்யாதீர்கள்; தலை போய்விடும், விரைவில் நீங்கி விடுங்கள் என்று ஓங்கிச் சொன்ன வார்த்தையை அவர்கள் கேட்டு, போங்களடா தூங்கி விழுகின்ற சோம்பற் பயல்களே! உங்களுக்கும் உங்களிறைவனுக்குஞ் சாங்காலஞ் சம்பவித்ததோ? என்காணும் வழியிலிருக்குங் கோடாலியை வலுவிலெடுத்துக் காலிலிட்டுக் கொள்ளுகிறீர்கள்? எதுகாரணத்திற்காகத் தான்சாகமருந்து தேடுந் தன்மைபோல் தேடிக்கொள்ளுகின்றீர்கள். ஓடிப்பிழையுங்கள் என்று கந்திருவர் சொல்ல, உடனே போய் துரியோதன இராஜனிடத்திற் சொன்னார்கள். அதைக் கேட்டு அவனுக்குக் கோபம் பிறந்து, பக்கத்திலிருந்த படைவீரரை நோக்கி, தடுத்துச் சொல்வோர்களை நீக்கி க்ஷணத்தில் யாவரும் போய் அக்கந்திருவர் சேனைகளை மடக்கியடித்துத் துரத்துங்களென்று ஆக்ஞாபித்தான். உடனே அவர்கள் உகாந்த மாருதத்தைப்போலோடி, கந்திருவச் சேனைகளை நோக்கி, உங்களுயிர்களொழியு முன்னாக வோடிப் பிழையுங்களென்று உரத்துச் சொல்லவும் அவர்களிவர்களைப் பார்த்து, இது மானிடருக்குத் தகுந்த வனமல்ல. தேவ

ரும் யக்ஷ காந்திருவரும் கடவுளர் மூவரும் முனிவர் முதலிய மூத்தறிவோரும் சத்தியவான் களுந் தனித்திருந்து சஞ்சரிக்கு மிடம். இந்த யிடத்தில் எங்களிறையாகிய சித்திரசேனன் சில ஸ்திரீகளுடன் சேர்ந்து விளையாடிக் கொண் டிருக்கின்றார். நீங்கள் தெரியாமல் துரிதப் படுகின்றீர்கள். யமதருமராஜன் உங் களை இவ்விடத்திற் கனுப்பினன்போலு மிருக் கின்றது. ஐயோ! நீங்கள் விரைவிற் போய் உங்களுடைய அறிவில்லா அரசனுக்குச் சொல்லுங்களென் றகற்றிவிட்டார்கள்.

உடனே யெல்லாச் சேனைகளும் ஓடி வந்து அவர்க ளுரைத்தபடியே தெரிவிக்க, அதைக்கேட்ட துரியோதனன் ஓங்காரங் கொண்டு, துசுவாசனன் தவிர மற்றத் தொண் ணூற்றெட்டு தம்பிமாரையும் இரதகஜ துரக பதாதிகளோடு சேர்த்து, அவ்விடத்தி லிடு ம்பு சொல்லியபேர்க ளெத்தனையோ அத் தனை பேரையுஞ் சாய்த்துவரக் கடவதென்று அனுப்பினன். அப்படியே யவர்கள் சென்று அவ்வவர்களும் அதிக பராக்கிரமத்தோடு விற்பிடித்து, பற்பல வார்த்தைகளைப் படித்து, அவ்விடத்திற் காவலிருந்த யாவரையு மடித் துப் போர் புரியும்போது, சிலரோடு சித்திர சேனனுடைய சேனா பதிகளிடத்திற் றெரிவித் தார்கள். அவர்கள் பெருங்கும்பு கூடி வந்து நாலு முகத்திலும் வளைத்துக் கொண்டு (கொட்டினால் தேள் இல்லாவிட்டால் மண் ணுள்) என்னுந் தன்மையைக்கொண்ட அறி விலாதவர்களே என்று வில்லை வளைத்து நாணேற்றிட்டுக் குணத்தொனி செய்து ஒரு முகப்பகழி-இருமுகப்பகழி - மும்முகப்பகழி- நான்முகப்பகழி-ஐமுகப்பகழி இப்படியாகக் கணைகளைத் தொடுத்தார்கள். அப்போது இவர் களும் இளைக்காமல் சளைக்காமல் களைக்காமல் ஒரு முகத்திற் காயிரமாயிரம் பாணமாகப் பற் பல அஸ்திர சஸ்திரங்களை விடுத்துப் போர் புரியும் போது, கடுகடுத்து வந்த கந்திருவச் சேனைகளோங்கி, காலாள்களையும், மேலாள் வில்லாள்களையும், மல்லாள்களை களையும், சின்ன பின்ன மாகும்படி சிதைத்து யும் தேருருள்களை யெல்லாமழித்து, தனுசை முறித்து, சாரதி தலைகளையு மறுத்துப் பதைபதைக்க வதைத்தார்கள். அக்காலை யிற் சேனைகளும் வீரர்களுந் தியங்கி மயங் கித் திகில் கொண்டு வாடியும் அச்சேனை வீரர் களோடு வந்த தம்பிமார்களுந் தங்களுடைய சவுரியங்களெல்லா மடங்கித் தேக முழுமை யுஞ் செந்நீர் புரண்டோடியும், தேர்கள் முத லிய வாகனங்களெல்லாந் துகளாகிப் பறக்க நாடியும், அண்ணன் கண்ணெதிர் வந்து நின்று கலங்கினார்கள். இதைக்கண்ட கௌரவ முதல்வன் நெருப்புப்பொறி பறக்கும்படி கரங்களை ஏற்றி நெட்டுயிர்ப்புடன் நெடுங் கோபத்தைச் செலுத்தி நெடநெடவென பல் லைக் கடித்து வில்லைப் பிடித்து வளைத்து, கட கடவெனத் தேரோடவும் கிடுகிடுவெனப் பூமி குலுங்கவும் மடமடவென மரங்கள் முறியவு மாக, படபடவென வருவதாயினன்.

### சகுனியுங் கர்னனுங் கந்தருவராஜனாற் கலங்கித் துரியோதனனைத் தனியே விட்டோடிப் போகுதல்

அதை நோக்கிப் பக்கத்திலிருந்த அங்கர் கோமானும், சகுனியும், துற்சாதனனும், பட்ட வர்த்தனரும்,மன்னர்மண்டலீகரும்,படைவீரர் பலரும் நெருங்கிச் சுயோதன மகாராஜனைப் பார்த்து, நாங்களெல்லா மிருக்கத் தேவரீர் இந்த அல்பகாரியத்திற் பிரவேசிக்க வேண்டு மோ? என்று ஆக்கிரமித்து, அரசனைப் பின் னேக்கித் தாங்கள் முன்னேக்கிச் சென்று பாரியவில்லை நிறுத்தி வணங்கி, பாதலத்தார் கரும் மீதலத்தமரரும் பயந்து நடுங்கப் பல வான் திவ்வியப் படைகளை யேவி, பார்நிறை ந்து வுளைந்த கந்திருவச் சேனைகளையுஞ் சேனாதிபதிகளையுங் கண் கலங்கச்செய்து, புண் களாகக் கொய்து, கரங்கள்-சிரங்கள்-உரங்கள்- வரங்கள் முதலிய யாவுந் தவறக் கடிய கொடிய விஷங்கொண்ட அம்புகளை யெங்கெங்குங் கிண்டச் சொரிந்து, கைவில்லும்போய் வாய்ச் சொல்லும் போய்க் கந்திருவர் யாவரும் நொந்து வருந்தக் கண்ட கண்ட துண்டமா கக் கலக்கிவிட்டார்கள். அவர்களை விலக்கி விட்டார்கள். அதனாற் கண் கெட்டோர் சிலர், புண்பட்டோர் சிலர், மண் கண்டோர் சிலர், விண்கொண்டோர் சிலர் என்று சொல்லும்படி யானவர்க ளாயினர்கள். அப்போது காடுக ளெல்லாம் இரத்த வெள்ளமாக ஓடவும், கண்ட யிடங்க ளெல்லாந் தலைபோன முண் டங்கள் நின்றாடவுமாயின. உடனே காய்ந்த கணைகளினால் மாய்ந்தவர் போக, மீந்தவர்க ளோடிக் கந்திருவ ராஜனிடத்திற் கலங்கித் தொழுது அழுதார்கள். அவர்களைக் காணவே ஜலக்கிரீடை சம்பிரமங்களை விட்டு, தன்து ஸ்திரீ ஜனங்களை யெல்லாம் இரதத்தில்

எற்றிவைக்கும்படி சாரதிகளுக்கு உத்தரவு செய்து, சில காவலாளிகளையும் அவ்விடத்தில் நிறுத்தி வைத்துவிட்டு, தான் அலங்காரஞ் செய்துகொண்டு சயந்தனமேறி பதினாயிரம் பட்டவர்த்தனருஞ் சேனாநாயகருஞ் சூழ்ந்து இரதஞ் செலுத்தி வரும்படியாகச் செய்து, இடி பேரி முதலியவை முழங்க வெளிப்பட்டு வனத்தில் வந்து ஆர்த்து, சேனைகளிறந்தும், சேனாநாயகர் பறந்தும், மண்டைகள் தொண்டைகள் திறந்துங் கிடப்பதைக் கண்ணிற் கண்டு எண்ணங்கொண்டு, தனுவேதி யென்னும் வில்லை வளைத்துச் சரமாரியாகப் பொழிந்து, சாரணர் முதலிய காரணர்களு மழிந்து சீர்கெட்டு அவர்களேறி வந்த தேர்கெட்டு அவ்வவர்களுடைய பேர் கெட்டுப் போகும்படியாய்க் கரணையாடிக் கண்டித்துத் துண்டித்துத் துளைத்து, நான்கு முகத்திலும்வளைத்து, இடியும் பெருமழையுமெனத் துணிந்து வதைப்பதாயினன்.

மேலும், குரண்டக கூட்டத்தில் விழும் இராஜாளிபோலும், குஞ்சரப் பெருக்கத்திற் பாய்ந்த பஞ்சானனம்போலும் பறக்க வடித்தான் கந்திருவராஜன். அதைக் கண்டு துரியோதனன் தம்பிமார்களுஞ் சகுனியும் வந்து கூடி, அளவிலாத கணைகளைச்சாடி, மண்ணும் விண்ணும் ஒண்ணாகும்படி மாட்டி, பம்பரம் போலாட்டி, கந்திருவ சேனைகளைக் கலைத்து அலைக்குங் காலையில், இவர்கள் விட்ட கணைகள் அந்தர முதலாக நிறைந்து நிற்பதைச் சித்திரசேனன் கண்டு, அக்கணைகளழியும்படியாக வாய்வாஸ்திர மெடுத்து வாரி வாரியிறைத்து, வச்சிராயுதமுந் தொடுத்தான். சகுனி அவ்வச்சிராயுதத்தைத் தன்னாற் கூடிய வரையிலுந் தடுத்து, அப்பாற் சத்துவமின்றித் தேகமுழுமையும் நொந்து மனம்வெந்து தேருங் குதிரையு மழிந்து திரும்பினான். அந்தவேளையில் துர்ச்சாதனன் முதலிய தம்பிகளுந் தங்கள் தேரில் அச்சாணி சக்கர முதலியவைகளழிந்து, வாயுலர்ந்து மதிமயங்கி வாடிய காலையில், அதை நாடிய கர்னனானவன் ஓடிவந்து அவர்களுக்கெதிரே சென்று கந்திருவ ராஜன்மீது கணைகளும் பகழிகளுங் காலாக்கினி சொரூபமாகப் பொழிந்து, கண்சிவந்து, கந்திருவப் படைகளையெல்லாங் கலக்கிக் கால்மாடு தலைமாடாகிவிழ மாட்டினான். அக்காலையிற் கந்திருவர்கோன் கனன்று கர்ணனை வளைத்துத் தனது வில் வளைக்க, ஒருவரையொருவர் பார்த்து முகம் வியர்த்து, மீசைகள் துடித்து, வீரபாஷைகள் படித்து, இருவரும் வெகுளி மேற்கொண்டு, இடசாரி வலசாரியாய் இரதத்தை சுழலச்செய்து இந்திரக்கணை-மோகனக்கணை-இயமன்கணை-வருணக்கணை - வாயுக்கணை -தேயுக்கணை-மலரம்புகள்-மலையம்புகள்-மாயாஸ்திரம்-தீயாஸ்திரம் இவை முதலிய யாவும் இருவரும் மாறி மாறி விடுத்து, சீறி சீறியடித்து, வானத்தவர் முதல் தானத்தவர்களும் வதங்கி, வெதும்பி, மயங்கி, தியங்கி வாடவும், பேய்கள் நின்றாடவும், குறைத்தலை முண்டங்களோடவும், சேனைகள் வீடவும், பூமி மூடவும், கோபம் நீடவுமாக மன்னி, இருவரும் துன்னி, கர்னன் பிரமன் கணையைப் பூசித்துந்தவும், பரமன் கணையால் பாழ்படுத்தினான் சித்திரசேனன். மறுபடியும் கர்னன், ஆலகால விஷச் சுவாலையை அடைய நாகாஸ்திரம் விடுத்தான். அதைச் சித்திரசேனன் கருடாஸ்திரத்தினால் பூமியிற் படுத்தான். அம்புகள் ஆயிரங்கோடி கர்னன் தொடுத்தான். அவைகளை வாயுக்கணையால் கந்திருவன் அழித்தான். கர்னன் சூலம் படையொன்று தொடுத்தான். கந்திருவன் அது நான்கு பிளப்புற ஆழிவிடுத்தான். மருந்துக் கணையினால் மாட்டினான் கர்னன். அதைப்பருந்துக் கணையினால் மாறச்செய்தான் கந்திருவன்.

இப்பால், கர்னன் இடியாஸ்திரமெடுத்து ஏவி சித்திரசேனனுடைய தேரைப் பொடியாக ஆக்கினான். உடனே கந்திருவன் வேறொரு தேரில் வீற்றிருந்து வெகுளி கொண்டு அம்புமாரி பொழிய, கர்னனானவன் அவைகள் யாவும் அழியக் கமலாஸ்திரம் விடுத்து அக் கந்திருவன் கைப்பற்றிய வில்லையும் நாணியையும் அறுத்தான். பின்பு சித்திரசேனன் வேறே வில்லெடுத்துக்கொண்டு நாரி பூட்டி வீரகேசரிபோல் வெளியில்வந்து அக்கினிக் கணைகளை அனேகமாகத் தொடுத்து அங்கர்கோன் கொடியையும் அயமுடன் தேரையும் அவன் அணிந்திருக்கும் கவசத்தையும் அழித்தான். உடனே கர்னன் வேறு தேரேறி வந்து சண்டப்பிர சண்டன் வுத்தண்ட மூர்த்தண்டமுடன் வாயுவாஸ்திரத்தை மந்திரித்து விட்டான். அந்த அஸ்திரம் சித்திரசேனனுடைய நெற்றியில் கட்டிய வீரபட்டத்தை அறுத்தது. அதைக்கண்டு கச்சையங் கொடியோன் கலகலவென்று நகைத்தான். அதனால், மிகுந்த லச்சையுடையவனாய்க் கர்ந்

திருவன் கண்கள் சுழன்று மனமழன்று காலாக்கினி உருத்திராஸ்திரத்தைக் கருத்தில் துதித்துக் கர்னன்பேரில் விடவும், அது அவன் ஏறியிருந்த இரதத்தின் அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை-சிகரம்-ஆப்பாணி-சுள்ளாணி-கடையாணி-அஞ்சுராணி-சக்கரம்-மேல்தட்டு-நாயகத்தட்டு இவை யாவும் நொடிப்போதி லிடித்துத்தள்ளி, அவனையும் பிடித்துத் தள்ளியதைப்போ லோங்கி யடித்தது. அதனாற் கர்னன் மிகுந்த வருத்தமுற்றுப் பூமியிற் குதித்து தேகமுழுமையுந் துளையாய்க் களையாய்த் திரும்பிப் பார்த்தான். அந்தவேளையிற் சித்ரசேனன் சோலைப்பேய்ச் சலைப்போல் தேவதாஸ்திரங்களைச் சொரிய, அப்போது கர்னன் கரமுஞ் சிரமும் அடாமற் கலங்கிநிற்க, அவ்வேளையில் விகர்னனவனோடிவந்து தன் தேரை அந்தக் கர்னனுக்குதவி தான் வேறே தேரை நாடிப்போனான். அக்காற் கலைந்துபோன கந்திருவச் சேனைகளெல்லா மறுபடியும் வந்து கூடிக்கொண்டு காட்டை வளைந்து வேட்டையாடுபவர்களைப் போலக் கர்னனையும் அவனோடுவந்த சேனை வீரர்களையுங் கரிகரியா யெரிக்கவும், சித்திரசேனனுங் கரவேக சரவேக உரவேகத்துடன் புரமூன் றெரித்தவன்போல் நகைத்து, அக்கர்னன்பேரிற் சந்தோஷங்கொண்டு நல்ல கைக்காரனிவனென்று கருத்திலுவந்து, கோடை மிடியையொத்த கூரம்புகளை மெத்தக் கூட்டி விடுத்தான். அந்த வருத்தஞ் சகிக்கமாட்டாமல் தேரை யோட்டிக்கொண்டு திரும்பினான் கர்னன். சித்திரசேனன் பத்தம்பேவி அவன் தேரைச் செலுத்துஞ் சாரதி தலையைத் தள்ளினான். உடனே கவசகுண்டலன் குதிரையின் கயிற்றைப் பிடித்துக் கடுகியடித்துத் தேரை முடுக்கி யோடுங்காலையில் கற்றோரை யிகழுங் கல்லாக் கயவருக்குற்ற கடுந்தீவினையைப் போல் வழியிற் கடுஞ்சேற்றுப் பள்ளமொன்று நேரிட்டு அதில் தனது மன முதலிய அந்தக் கரணங்களெல்லாந் தத்திக்கெட்டுத் தடுமாறி நிற்கும் நிலைமையினால் தேருங் குதிரைகளுந் தானுமாக வீழ்ந்து அமிழ்ந்தனன்.

**சித்திரசேனன் துரியோதனாதியர்களையும் ஸ்திரீகளையும் தாமணிப்பிணையலாய்க் கட்டிக்கொண்டுபோக தப்பிய சிலர் ஓடிவந்து தருமராஜனிடத்தில் முறையிடல்**

அந்தவேளையிற் கந்திருவராஜன் மீந்த சேனைகளைக்கொண்டு, துரியோதனாதிகள் முதலிய நான்கு வகைச் சேனைகளையு மாய்த்து வரும்போது எவர்களும் அவன் எதிரினில்லாமல் ஒதுங்குகின்றவர்களும் பதுங்குகின்றவர்களுமாக இருக்கப்பார்த்து கௌரவ முதல்வனண்டையிற் சென்று கடுங்கணை தூண்டி கார்பொழிவதுபோல் கன உதிரம் பொழியக் காஞ்சிர முதலிய உடலெல்லாந் துளைத்து இரதகஜ துரகசேனைகளையும் வளைத்து கழுகுக்கும், புழுவுக்கும், காட்டுநாய்க்கும், கூட்டப் பேய்க்கு மிரையாக்குங் காலையில் வணங்கா முடியோன் வாய்பேசாம லுணங்கி நிற்க, அவனைப்பிடித்து மடலுடனிறுக்கி வரிந்துகட்டி, அவன் மாதர்களையும், அம்மாதர் பாங்கிமார்களையும் அவரவர்கள் வஸ்திரங்களினாலேயே வரிந்து வரிந்து வரிசையாய்ப் பிணைத்து, தம்பிமார்களையும் மற்றச் சகுனி முதலோரையுங் கொடிச்சீரையினாலுங் குதிரைக் கயிற்றாலுங் குழுவாகப்பிணித்து, தாமணிப் பிணையல்போற் சகலரையு மொருகூட்டா யிழுத்துக்கொண்டு, சங்கம்-பேரி-தாரை-பூரி-சின்னம்-கொம்பு-செயகாகளம் இவை முதலிய வாத்தியங்களுங் கொடி-குடை முதலிய சின்னங்களுமுழங்கி விளங்கும்படியாய்த் தேரைச் செலுத்தி, தனது சேனைகளுங் கந்திருவ ஸ்திரீகளுங் களித்து மகிழ, நாட்டியப்பெண்களும் நடனம்புரிய, பட்டுவான்களும் புகழ்வோரும் கட்டியங்கூற, நந்தியாவட்டத்தாமனும், துசுவாசனன் முதலிய தம்பிமார்களும், மாமா சகுனியும், மற்ற ஸ்திரீ ஜனங்களும் ஓவென்றழுது அலற, ஒரே வோட்டமாக உத்திர திசையை நாடிச் சென்றான் சித்திரசேனன். அந்த வேளையில் ஓடி ஒதுங்கி அக்கட்டுக்குத் தப்பிக்கொண்ட காலாள்களுஞ் சிற்சில மந்திரி தந்திரிகளும் மற்ற மன்னவரும் அச்சித்திரசேனனுடைய கண்ணுக்கு அகப்படாமல் மறைந்து வந்து, புத்திநிறைந்து வெற்றி மிகுந்து யுத்தி செறிந்து சத்தியநிறைந்த குந்திதேவி புத்திரரிருக்கும் வனத்திற்குறுகி தருமபுத்திரரை நோக்கி, முறையோ! முறையோ! என்று அழுது தொழுது நொந்து, வெந்து நைந்து நின்றார்கள். அப்படி நின்றவர்களை யுதிஷ்டிரர் பார்த்து, அவர்களுடைய ஆகம முழுவதுந் துளைப்பட்டிருக்கும் அலங்கோலத்தையும் அவர்கள் ஆவிகுன்றி அலைந்தோடி வந்த துன்பத்தையும் அறிந்துகொண்ட குவளைத்தாரோன் அகம்பதறி, அப்பா! நீங்களிங்கு என்ன காரியமாய் வந்தீர்களென்று வினவினான். அதற்கவர்கள் ஐயா!

துரியோதனன் படைகள் தருமராஜனிடம் முறையிடல்.





சயிந்தவனை அவமானப் படுத்துதல்.

(தன்வினை தன்னைச்சுடும் ஓட்டப்பன் வீட்டைச்சுடும்) என்னுந் தன்மையாய் சகுனி கர்னன் இவர்கள் பேச்சைக்கேட்டுச் சந்திர குலத்தோன்றல் தங்களை அவமானப்படுத்த வேண்டுமென்று வந்து சித்திரசேனனுடன் எதிர்த்துத் தாங்களே சிறுமையுற்றார்கள். தாங்களுந் தங்கள் ஸ்திரீகள் முதலிய பேருந்தாமணிப் பிணையலாக அவன் கையிற் சிக்கிக்கொண்டார்கள். கொண்டுபோய் விட்டான். யமனுக்குச் சிலரை ஒப்பிவைத்து விட்டனன். குளத்தைக் கலக்கி பருந்துக் கிரையிடுபவர்போல விட்டுத் தானும் புறமுதுகிட்டுப் போய்விட்டான் கர்னன். சொல்வோர் சொன்னாலுங் கேட்போர்க்கு மதிவேண்டுமென்பது பொய்யோ? ஐயோ! இந்நேரம் எந்த மலையில் எந்தக் குகையில் அவர்களைக் கொண்டுபோய்ச் சிறை செய்தானோ அறியோம். ஓ தருமபூபதி! உங்களையவர்கள் செய்த அனியாயங்களை இந்த வேளையில் உன்னலாகாது. நல்லோர்களுக்கு பொறுமையே துணையென்று நாடெல்லாங் கொண்டாடுகின்றார்கள். சீரியர் கோபம் க்ஷணத்திற்றீரும். பூரியர் கோபம் அவர்கள் பிராணனுக்காணி. (கெடுவான் கேடு நினைப்பான்) என்னும் பழமொழிக்கு சரியாய் வந்து கெட்டான் துரியோதன மகாராஜன். இந்த வேளை அவர்களுடைய இஷ்ட தெய்வம்போலிறங்கி இரக்ஷித்தருளவேண்டும். சந்திர சூரியர் உள்ள நாள் வரைக்கும் உங்கள் செல்வமும் இந்த உதவியும் நீடித்து நிற்கும் என்று முறையிட்டார்கள்.

### தருமராஜன் துரியோதனாதியரை மீட்கும்படி வீமனுக்குரைக்க, அவன் தடுக்க, தான் சமாதானம் கூறி யனுப்புதல்

கேட்டீரோ ஜனமேஜயமகாராஜனே! இவ்வாறு முறையிட்டுக் கூறிய வனைத்துங் கேட்ட தருமநந்தனர் அவர்கள் முகத்தை நோக்கிக் கரமமைத்துக் கருணைசுரந்து கண்களில் நீர்ததும்பக் கவலையுற்று தன் சமீபத்தில் இருந்த தம்பியாகிய வீமசேனனை நோக்கி, தம்பி! அந்தணர் - விருத்தர் - வியாதிக்காரர் - வித்துவான்கள் - ஸ்திரீகள் - தரித்திரர் - பாலியர் - படையிலிழந்தோர் - அடைக்கலம் புகுந்தோர் இவர்களையெல்லாம் உடனே காக்கும்படி தரும சாத்திரத்தில் விதித்திருக்கின்றது. ஆகையால், நமது தம்பியர்களை நீ போய் மீட்டுவரக் கடவை என்று சொல்லவும், அதைக் கேட்ட வீமன் பூமியை யுதைத்துக் கிளம்பிக் கடுங்கோபங் கொண்டு, அண்ணா! ஆடாது செய்தாற் படாது படுவர் என்பது அசத்தியமல்லவே. மேலும், ஒருதுஷ்டன் சுவாமி பத்தியைச் செலுத்திய ஒருவனை இடக்குச் செய்தான். அவனந்தவேளையில் இந்தத் துஷ்டனோடு பேசினாற் சுவாமியை தொழுங் காரியங் கெடுமென்று இரண்டு பொன்கொடுத் தனுப்பி விட்டான். பார்த்தான் துஷ்டன். இது நல்ல உத்தியோகம். இப்படி வெகுபேரை நாம் துன்பஞ்செய்தால், ஆள் ஒன்றுக்கு இரண்டுபொன் தருவார்கள். இது நல்லசீவனம் என்று நினைத்து இன்னொருவன் அப்படியே இடக்குச் செய்தான். அவனோ அத்துஷ்டனை உடனே மண்டைகிழிய அடித்தான் துஷ்டனிறந்தான். ஆகையால், அவன் நம்மைச் செய்த வஞ்சனை முதலிய பொல்லாங்குகளை யெல்லாம் நான் கையிலாகாதவன் ஆனபடியாற் சகித்து எனக்குச் சரியானவர்களும் என்னிலுந் தாழ்ந்தவர்களும் நகைக்க உடம்படுத் திருக்கின்றேன். இது என் தலைவிதி. அந்தக் காந்திருவராஜனும் அப்படி இருக்கத்தகுமோ? அவனுக்கு என்னகாரியம்? அவன் கந்திருவராஜன் இவன் பூமிக்கிறைவன். இவன் அவனுடன் வம்பு செய்யப்போனால் விடுவானோ? போகட்டும். நீதான் ஒன்றுஞ் செய்யக்கூடாதென்றாலும் தெய்வம் பார்த்துச் செய்யும் வேலையைத் தடுப்பானேன்? நல்லது அடைக்கலம் வந்தவர் முதலிய பேர்களைக் காப்பாற்ற வேதஞ் சொல்லியதென்றீர். அந்த வேதம் இவனுக்கு மாத்திரம் சொல்லியதோ? மற்ற யாவர்களுக்கும் உண்டோ? அண்ணாவே! பாம்புகளைக் கடிக்க விட்டும், அன்னத்தில் விஷங்கலந்தூட்டியும், தண்ணீரிற் கட்டிப்போட்டும், அரக்குவீடு கட்டி அதிலமைத்து நெருப்பை மூட்டியும், மோசச்சூதாடி நாடு நகரங்களை யெல்லாம் பறித்துக்கொண்டும், சபையிற் குலஸ்திரீயை மயிர்பிடித்துவந்து நிறுத்தி வஸ்திரபங்கஞ் செய்தும், இழிவாகிய வார்த்தைகளைப் பேசியும் இப்படியாக அக்கிரமங்களை செய்யச் சொல்லி எந்த வேதத்தி லிருக்கின்றது என்று சொல்லிய வசனத்தைக் கேட்ட உதிஷ்டிரர் கலகலென்று நகைத்து, தம்பி வீமா! சபையினிடத்திற் சில அநியாயங்களை துரியோதனன் செய்தபோது நீ கோபங்கொண்டு உங்கள் நூறு பேரையும் கதையினலடித்துக் கொன்று துச்சாதனனுடைய உதிரங்களைவாரிக்குடித்து தாகந்தீருகிற பரியந்தமுந் தண்ணீரள்ளி குடிக்கேனென்று சபதங் கூறி, நாளதுவரையிலுங் கதையினால் எற்றித் திவலைகளைக் குடித்து வருகின்றாயே.

அப்பா! இப்போது அந்தச் சித்திரசேனன் இவர்களை யெல்லாஞ் சேர்த்துக் கொண்டு போய் வெட்டி எறிந்துவிட்டால், உன் சபதமெங்கே? என் தம்பி என்னும் பெயரெங்கே? ஆகையால், அவர்களை மீட்டு வைத்தாயாகில் நாளைக்கு உன் வாக்கியம் பொய் போகாமல் நிறைவேற்றிக் கொள்ளலாம். "ஒருத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர், பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து" என்றும், "ஒருத்தார்க் கொருநாளை யின்பம், பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும்புகழ்" என்றும், "திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந், தறனல்ல செய்யாமை நன்று" என்றும், வேதம் விளம்புகின்ற நீதிக்குச் செய்யவேண்டிய மரியாதையின் பொருட்டேனும், தற்காலத்து அவர்கள் பொருட்டில் நான் பொறையுடைமையை வகிக்கவேண்டியதல்லவா? ஆதலால், என் சொல்லுக்குத் தடை சொல்லாமல் விரைவில் அவர்களை மீட்டுக்கொண்டு வா; அதுவரையில் எனக்குச் சலபானஞ் செய்யவும் மனஞ் சம்மதியாது என்று சொல்லி விரைவு செய்தனர்.

### அருச்சுனன் வீமன் நகுலசகாதேவர்களோடு சென்று கந்திருவப்படைகளை வளைத்துச் சர்க்கூடங் கட்டுதல்

இந்தப்படி சொல்லிய பேச்சு நிற்பதற்கு முன்னே வீமன் எழுந்து நமஸ்கரித்து, அண்ணா! நிசந்தான் இதோ போகின்றேன் என்று வருமுன்னமே அருச்சுனன் வந்து, என் சின்னண்ணா! நமது தமயனுடைய வார்த்தைக்குத் தடுத்து பேசவேண்டாம். நானுங் கூட வருகின்றேன் வாரும் என்றழைத்து நகுலசகாதேவருட னிவர்கள் நால்வரு முரசுக் கொடியோன் பாதத்தில் முடிசூட்டி உத்திரம் பெற்றுக்கொண்டு அவ்விடத்தில் வந்திருக்கும் இரதங்களிலேறி, வாயுவேக மனோவேகத்துடன் மண்டூளி யெழுந்து முன் செல்லும்படியாக வடதிசை நாடி வருவதானார்கள். அப்போது அம் மண்டூளி செல்லுவது எப்படியிருந்ததென்றால், கந்திருவர் கோனைக் கண்டு, தண்டதரனுங் காண்டீபக்கரனும் இதோ அண்டையில் வந்துவிட்டார்கள். பெண்டுகளுடன் துரியோதனனைக் கொண்டு போய் விட்டு உன் மண்டலம் போகலாம். இல்லாவிட்டால், அண்டரும் நீயும் யெண்டிசைப் பாலகரும் அவிந்துவிட வேண்டும். கண்டது சொன்னேன் என்றதுபோ லிருந்தது. இவ்வாறு வீமார்ச்சுன நகுலசகாதேவர்கள் விண்டலமெங்கும் மண்டலமாகும்படி வந்து வளைக்கவும், இவர்களைக் கண்ட கந்திருவச் சேனைகள் கலித்து, மிகுந்த வேகத்துடன் ஒலித்து நமது அரசனால் அடிபட்டு ஓடினவர்கள் திரும்பி வருகின்றார்களென்று நினைத்து, நிதானிக்காமல் அமோகமாகிய பாணவருஷங்களைப் பரப்பி, இவர்கள் வருகின்ற வழியை மறைத்தார்கள். அந்த வேளையில் நகுலசகாதேவர்கள் கணைகளை இணையில்லாமற் பொழிந்து, அவர்கள் விட்ட பாணங்களெல்லாம் நடுவில் ஒடியும்படியாக வடித்து, அவர்களுடைய கொடியும், இரத்தி லணிந்த முடியும், முழங்கும்படியாக துடியும் பூமியிற் படியக் கண்டார்கள். அது கண்ட கந்திருவர் வடவாமுகாக்கினிபோற் பொங்கி வச்சிர தண்டம்-இந்திரக்கணை-வாயுக்கணை - தேயுக் கணை இவைகளை வாரி வாரி சாரி சாரியாக மாரிபோ லிறைக்கவும், வீமசேனனும் அருச்சுனனுங் கண்டு மின்னொளிப்படை - வெய்ய வன்பண்டி - வேதனார்படை இவைகளை மேன் மேலுஞ் சொரிய, அவைகளினால் அவர்கள் விட்ட பாணங்கள் முதலிய யாவும் ஒடிந்து - மடிந்து-கரிந்து-பொரிந்து-உதிர்ந்து போகவும், சில சேனைகளோடித், தங்கள் சேனாதிபதிகளிடத்திற் சென்று தெரிவித்தார்கள். அந்த உத்தமர்களும் யோசிக்காமல் வந்து, சதமுக பத்திரமே முதலிய தனிக்கணைகளை ஒவ்வொருவருக்குக் கோடியாக உந்தினார்கள். அப்போது வீமசேனனுந் தம்பிமார்களும் அவர்கள் முந்திப்போய் அவைகளை யெல்லா மறுத்துத் தறித்து அழித்தார்கள். அந்த வேளையில் அருச்சுனன் சேர்ந்து, அண்டங்களை யவிக்குந் துண்டப்பிறைக்கணை - தசமுகக் கணை - சதமுகக்கணை - சகஸ்திரமுகக்கணை - ஆயுதமுகக்கணை இப்படி அநேகங் கோடா கோடியாக விடுத்தான். கைகள் ஓயாமற் தொடுத்தான். அந்தக் கணைகளின் வெப்பங்களினாலும், குப்பல்களினாலும், திணிந்த கோபத்தினாலும், மிகுந்த வேகத்தினாலும்; அவைகள் துளைப்பதினாலும் தாங்கள் களைப்பதினாலும், நிலைபெறமாட்டாமல் முகம் விட்டவாறே ஓடவும், கணைகள் சாடவும், கந்திருவர் வாடவும் அது கண்ட தனஞ்சயன் அதி சீக்கிரமத்தில் இவர்கள் ஆகாயமார்க்கத்தில் மறைந்து ஓடிப் போவார்களென்று தெரிந்து வாசா மகோசரமாகிய அம்புகளும், கணைகளும், அஸ்திரங்களும், கோல்களும் விடுத்து, திசைகள் முழு

மையுங் கீழுமேலுஞ் சரக்கூடங் கட்டி, இனி யெங்கே இவர்க ளோடிப் பிழைப்பதென்று சொல்லி கரும்பு ஆலேயி லகப்பட்டதுபோற் கசக்கி விடுகிறேனென்று தம்பி தமயனுடன் பேசிக்கொண்டு நின்றான்.

சித்திரசேனன் அருச்சுனன்வர வந்து சமாதானஞ் செய்துகொள்ளுதல்

அப்போது, சில கந்திருவர் அரசனிடத்தில் ஓடி, ஐயா மகாராஜரே! யாரோ நாலு வீரர்கள் கொஞ்சம் வலுவனே யுடையவர்கள் எப்படியுந் துரியோதனுதிகளே மீட்டுக்கொண்டு போவதல்லாமல் விடுகிறதில்லேயென்று பேசிக்கொண்டு, எங்களே யெல்லா மாட்டுகின்றார்களென்று சொல்லினர். அதுகேட்ட சித்திரசேனன் நகைத்து, (அறுக்கமாட்டாதவனுக்கு அரிவாளேம்பது) என்பதைப்போல் இந்த மானிடர் நமது கையி லகப்பட்டு விடுவித்துக் கொள்ள மாட்டாமல் விழித்துக்கொண் டிருப்பவர்களுக்கிந்த கர்வமானல், எனக்கெவ்வளவு வீரிய மிருக்கவேண்டும்? விரலுரலானு லுரலெவ்வளவாகும். அடா பயித்தியக்காரர்களே! இரும்புண்ட நீர் திரும்புமாகில் இவர்களேயவர்கள் விடுவித்துக் கொண்டு போவார்கள். என்றுச் சொல்லி ஆக்கிரமித்து விஷம்போற் சீறிப் புறப்படும்போது, அருச்சுனன் கட்டிய சரக்கூடினுக் ககப்படாது தப்பிய சில சேனுதிபதிக ளோடிவந்து, ஐயா! அந்நால்வரில் ஒருவன் கிழக்கு-தெற்கு-மேற்கு-வடக்கு இந்த நாலு திக்கிலும் வழியில்லாமல் அண்டச் சுவர்போற் சரக்கூடங் கட்டிவிட்டு போனி லகப்பட்ட புலிகளேப்போலும் நமது வீரருஞ் சூரருஞ் சேனேகள் முதலியவையோடும் வருந்த அடித்துக் கொல்லுகிறு னென்றார்கள். அதுகேட்ட சித்திரசேனன், ஆ! ஆ! அப்படியா? அவ்வளவு வல்லபம் மானிடருக் குண்டாயிருக்கின்றதா என்று உறுக்கி விழித்துப் பார்க்கும்போது, உகந்தகாலத்திடிபோ லொரு பாணம் வந்து சித்திரசேனனுடைய மார்பிற் பட்டுருவியது. அப்போது அதை யிறுக்கிப் பிடித்துப் பார்த்தான். அக்கணையி லெழுதியிருக்கின்ற பெயரை நோக்கினுன். விஜய கிரீட்டியென் றெழுதியிருக்கக் கண்டான். உடனே வெட்கி மனஸ்தாபங் கொண்டான். ஐயோ! இவன் அண்டர்பிரானே ரட்சித்தவன்; காளகண்டனே மண்டை கலங்க அடித்தவன்; தண்டதரனுக்கிளேயவன்; தேவேந்திரனுக்குப் புத்திரனுகிய தனஞ்செயன் என்றால் இனி வேறு பேச்சேன்? பெரு மூச்சேன் யென்று இரத்தத்தை விட்டிறங்கிப் பாதசாரியா யெல்லோருஞ் சூழவந்து, அர்ச்சுனனுடைய யிருகரத்தையும் பற்றி, எந்தலே! இதென்ன அனியாயம். நெருப்பையும், வஞ்சமான மனேயாளேயும், துஷ்டரையும், விரோதிகளேயும், அனியாயக்காரரையும், அடிமைகளேயும், திருடரையும், தீயவாழ்க்கையவரையும் உடனுக்குடனே அடக்கிவிட வேண்டுமென்று நீதிசொல்லி யிருக்க, இந்தப் பாவிக்குத் துணைபட்டு நீங்களேன் வந்தீர்கள். இவர்களேப் பிடித்துக் கட்டிக் கொண்டுபோக நானினேத்தவனல்ல. இந்தத் துரியோதனன் உங்களேவரையுந் திரௌபதாதேவியையும் அவமானப் படுத்தவேண்டுமென்று ஆலோசித்து, நீங்களிருவரும் வனத்திற்கு வருகின்றதாக வறிந்து, தேவேந்திரனென்னே யழைத்து, நீ போய் அந்த வனத்திலிருந்து இப்படியாக யெண்ணங் கொண்டு வரும் அரவக்கொடியோனேப் பிடித்துக் கட்டிக்கொண்டு வரக்கடவை யென்றனுப்ப வந்தேன். அந்த உத்தரவின்படி உங்களுக்குச் சகாயஞ் செய்த யென்னே இப்படி வருத்தஞ் செய்யலாமா? அவனே யுமீட்கப்போமா? என்று புல வார்த்தைகளேப் பேசி சித்திரசேனனே அருச்சுனன் மார்போடணேத்து நோக்கிச் சொல்லுகிறான்:

சித்திரசேனன் அருச்சுனன் சொல்லுக் கிசைந்து சென்று தருமராஜனேக்கண்டு சன்மானித்து துரியோதனுதிகளே யவிழ்த்து விடுதல்

ஓ கந்திருவ அரசனே! கேளும்: தன்மானமென்றும் பிறர்மானமென்றுஞ் சொல்வதுண்டல்லவா? அன்றியும், தொடையி லிருக்கும் புண்ணே வெளிக்குக் காட்டலாமா? ஏதோ எங்களுக்கு பற்பல தீங்குகளே இவர்கள் செய்தபோதிலும், நாங்களும் அவர்களும் போராடவேண்டுமே யொழிய, பிறத்தியரால் துன்பமநேரிடப் பார்க்கலாமா? இந்த அவமான மிந்தத் துரியோதனுதிகளுக் கல்லவே. என்னடா பாண்டவர்களுக்குத் தாயாதிக ளிப்படி கட்டுப்பட்டார்களென் றல்லவா உலகஞ் சொல்லும்; மேலும் தர்மருடைய மனதை நீங்க ளறியமாட்டீர்களா? அவர் எது வந்தாலுந் தருமமே ஜெயமென் றிருக்கின்றவர். இதைக் கேட்டவுடனே என் சிறிய தமயனுராகிய இவ் வீமசேன மகாராஜனே நீ போய் மீட்டுவா வென்றார். இவர் அவர்களால் பட்ட வருத்தங்களேச்

சொல்லிக் கொண்டார். அதைக் கேட்டு வருத்தமுற்று, தம்பி வீமா! நீ போய் துரியோதனன் முதலிய தம்பிமார்களையும் ஸ்திரீகளையு மீட்டு வருமளவும் நான் தாகத்திற்குச் சலம் புசியேனென்று சபதங் கூறினார். அதை யான் கேட்டு, இதென்ன பாவமென்று அண்ணாவையும் தம்பியர் இருவரையும் அழைத்துக் கொண்டு, உம்மைக் கண்டு பேசி அவர்களை மீட்டுக்கொண்டு போகலாமென்று வந்தேன். இந்த சேனைகள் விஸ்தாரம் பாணங்களை முடுக்கி அடித்தார்கள். தான் சாவ மருந்துண்பார்களா? ஆகையால், நாமும் சில கணைகளை விடுத்து, அவர்கள் விட்டதைத் தடுத்து, உமக்குத் தெரியும்படி சரக்கூடங் கட்டினேன். இப்பவும் நீர் தயவுசெய்துவந்து எங்கள் தமயனாகிய தருமபூபதியைப் பார்த்து வார்த்தையாடி வரலாம். ஆதலால், விரைவில் வாருமென்று உபசாரஞ் சொல்லவே சித்திரசேனன் மகிழ்ந்து, சேனை சைனியங்களுடன் தாமணிப் பிணியலாய்க் கட்டுபட்டிருக்கின்ற கைதவர்களையும் அழைத்துக்கொண்டு திரும்பி பாண்டவர் முதல்வனிருக்கும் வனத்திற்கு இரதத்தின் மீதிலேறிவந்து, முரசக் கொடியோன் பிராமணருடன் இருப்பதை நோக்கி, இரதத்தை விட்டிறங்கிக் கால்நடையாய் வரவும், வீமார்ச்சுனன் முன்னடிவந்து தங்கள் அண்ணாவிடத்தில் இதோ வருகின்றவர்தான் கந்திருவராஜனென்று சொல்ல, அது கேட்கவே அவர் திடுக்கென் றெழுந்து எதிர்கொண்டுபோய்த் தழுவி முகமன் கூறி, சந்தோஷத்துடன் அழைத்துவந்து ஆசனம் அளித்து இருக்கச்செய்து, மிகுந்த வருத்தங் கொடுத்தேனென்று சொல்லி, இவர்கள் நமது தம்பிமார்கள் இவர்களுடைய தர்ம பத்தினிகள் அந்தப் பெண்கள். இவர்களை இப்படி கட்டும்படியாகிய கோபம் உங்களுக்கு வந்தது என்ன? மேலும், நான் இவ்விடத்தில் இருந்தேனே? என்னிடத்தில் ஒரு வார்த்தை சொல்லலாகாதா? போகட்டும்; தயவு செய்து கட்டுகளை அவிழ்த்து விடுங்கள் என்று கேட்கவும், சித்திரசேனன் மிகுந்த பத்தியுடன் இருந்து தன்னை இந்திரன் அனுப்பிவைத்ததும் இந்தப் பாவியாகிய துரியோதனன் சிந்தையில் எண்ணிய யெண்ணங்களையும் சொல்லினன். அதைக்கேட்ட குந்திதேவியினுடைய புதல்வரில் முதல்வன் சிந்தித்து வந்தனை புரிந்து, அந்த மகாராஜனாகிய தேவேந்திரனுடைய மொழிக்கு நான் தடுத்துச் சொல்லப் போமா? கூடாது. ஆனால் இவர்களை மீட்டு வருகிற பரியந்தந் தாகத்திற்குச் சலம் புசியேனென்று சபதங் கூறிக்கொண்டேன். அஃதொன்றிருக்கின்றபடியால் நானிவ்வளவு தூரம் யோசித்தேன். இப்போது நீர் சுகமாகவே கொண்டுபோய் இந்திரதேவனிடத்தி லொப்பிவித்துவிடும். அப்பால் என்றம்பி அர்ச்சுனனையனுப்பி, என் சபதத்தைத் தீர்த்துக்கொள்ளும்படியாய் அந்த தேவேந்திர மகாராஜனிடத்தில் உத்தரம் பெற்றுக்கொள்ளுகிறேனென்று சொல்லினர். அப்படி சொல்லிய சந்திரகுலத் தோன்றலின் வார்த்தைகளையெல்லாங் கேட்ட கந்திருவராஜன் வியப்புற்று, அடடா! ஆ! ஆ! என்ன ஆச்சரியம்? இப்பேர்ப்பட்ட சவுரிய பராக்கிரமமுடைய தம்பிமார்க ளிருக்கவும், இவர் யெவ்வளவு தாழ்மையும் வணக்கமுமாகச் சொல்லுகின்றார். இவர் சுத்த சாட்குண்ய மூர்த்தியாகிய சாம்பவமூர்த்திக் கொப்பானவர் போலும் என்று மெத்தவும் பயந்து யெழுந்து வந்தித்து, புந்திக்குக் கொண்டுபோன துரியோதனாதிகள் முதலிய எல்லோர்களையும் அவ்விடத்தில் விட்டுவிட்டு தருமராஜனிடத்திலும் வீமார்ச்சுன நகுல சகாதேவர்களிடத்திலும் உத்தரம் பெற்றுக்கொண்டு தன் சேனைகளெல்லாம் நெருங்கிவர, மிகவும் உபசாரத்துடன் சில தூரம்போய்த் தேர் ஏறிக்கொண்டு சித்திரசேனன் போய்விட்டான்.

### தருமராஜன் தம்பிமார்களால் துரியோதனாதியர் கட்டவிழ்ப்பித்துப் பரிதாபப் படுதல்

அப்பால் தருமராஜன் கட்டுப்பட்டுத் தலை கவிழ்ந்திருக்கும் அவர்களை யெல்லாம் நோக்கி கண்ணீர் சோரவிட்டுக் கலங்கி தன் தம்பிமார்களைப் பார்த்து, அவர்கள் கட்டவிழ்த்து விடுங்கள் என்று கருணை புரிந்தனர். உடனே துரியோதனன் முதலிய தம்பிமார்களை வீமசேனன் நெருங்கி கட்டுகளை யவிழ்க்கும்போது உயிருடன் செத்த பிணத்தைப்போல் இருந்தார்கள். அருச்சுனன்-நகுல சகாதேவர் இவர்கள் மூவருஞ் சகுனி முதலிய பேர்களையும் பாங்கிகள் முதலிய ராஜஸ்திரீகளையும் அவிழ்த்து விட்டார்கள். தருமராஜன் ஆடவராயுள்ளாரை எல்லாம் அழைத்து இருக்கச்செய்து ஸ்திரீகளை எல்லாம் திரௌபதி இருக்குமிடத்திற் கனுப்பினர். பாஞ்சாலியம்மன் ஓரகத்திமார்களைக் கண்டு, விசனங் கண்டு, ஐயோ! நீங்கள் உலகத்தையாளும் உயர்

ந்த குலத்திற் பிறந்தும், வணங்கா முடியினை யுடைய மன்னவன் முதலியபேருக்கு வாழ்க்கை புகுந்தும் உங்கள் தலைவிதி இப்படி இருந்ததா என்று கூறி விசனப்பட்டவளாய், அவரவர்கள் தலைமயிர்களை யெல்லாஞ் சேர்த்து கட்டச்சொல்லி, கந்தை கந்தையாய்ப் போயிருக்கின்ற வஸ்திரங்களை யெல்லாந் திருத்தி மானந் தெரியாமல் மறைக்கச் செய்து வாடி, யழுங் கண்ணீர்களைத் துடைத்துத் தண்ணீர் கொடுத்து சரீரத்தைச் சுத்திசெய்து கொள்ளப்பண்ணி வனத்தில் மகாரிஷிகள் முதலிய பேர்கள் தனக்குக் கொடுத்து குபேர மகாராஜன் அளித்துந் தன்னிடத்திலிருக்கும் வஸ்திரங்களை யெல்லாமெடுத்து அவர்களுக் கெல்லாம் அன்போடு கொடுத்து உபசரித்த னுப்பினாள். அப்பால் அறக்கடவுள் துரியோதனனைப் பார்த்து, தம்பி! எது கெட்டுப்போனாலும் மேன்மக்களுடைய விவேகங் கெடாது யென்று பெரியோர் சொல்லியிருக்க, களங்கமில்லாத குஜத்திற்குக் களிம்புதேடிக் கொண்டனையே! எத்தனை பேர்களை நீ வெட்டச் சொல்லவும் கட்டச்சொல்லவும் காவலில் வைக்கச் சொல்லவும் விடவும் ஆகிய பெருமையை யுடைத்தா யிருந்து, இப்போது மற்றொருவனாற் கட்டுப்பட்டாயே? ஐயோ! பேதைமை யுடைய ஸ்திரீகளைக் கொண்டுவந்து பேனிப்படி செய்தாய்? (கன்றுகள் கூடிக் களமடித்தால் வைக்கோலுமாகாது கூளமு மாகாது) என்னும் பழமொழி போலும், (நூற்றைக் கெடுத்தது குறுணி) (சோற்றைக் கெடுத்தது உமி) என்பதுபோலும், நமது குலத்தின் பெருமையைத் துன்மார்க்கருடைய பேச்சைக்கேட்டு இவ்விடத்திற் கெடுத்துவிட்டாய். அவர்கள் (மந்திதான் கெட்டது மல்லாமல் தங்கிய வனமெல்லாங் கெடுத்தது) என்பது போல் உன்னையும் ஸ்திரீகளையும் அவமானப் படுத்தி விட்டார்கள். எத்தனை செல்வம் அழகு ஆபரண மிருந்தபோதிலும் புத்தியிருக்க வேண்டும். புத்தியுள்ளவனே பெரியவன். கட்டிக் கொடுக்கும் அன்னமுங் கற்றுக் கொடுக்கும் சொல்லும் எத்தனை நாளைக்குத் துணையாகும், தம்பி! நல்ல சாஸ்திரங்க ளெல்லாம் வாசித்துக் கேட்டும் இப்படி மதிமயங்கலாமா? விதியையும் மதியால் வெல்லலாகுமென்று மேலோர் சொல்லுகிறார்களே? சாதுக்களுடைய நட்பைச் சம்பாதித்திருந்தால் சகல காரியங்களையும் வெல்லலாம். தீயர்களுடைய சிநேகமும் ஓர் துணையாகுமோ? அப்பா என்னிளவலே! (ஆற்றுக்குப் பார்ப்பான் துணையல்ல; கட்டுச் சோற்றுக்குப் பயிற்றங்காய் கறியல்ல) என்பதை யறியாயோ? பசுவின் வாலைப் பற்றினால் கரையேறலாமே யொழிய எருமை வாலைப்பற்றினால் இறக்கத்தக்கதே யன்றோ? தம்பி! கட்டுக் காவலைவிட்டு இரக்ஷியுங்கள் என்று வெகுபேர் நம்மை நாடிவந்து யாசிப்பது, போய் நாமொருவனிடத்தில் சென்று உபசரித்துக் கட்டவிழ்த்துக் கொள்ளும்படி நேரிட்ட தல்லவா? ஐயோ! பூவிற்ற கடையில் புல்லு விற்கும் காலமா? தம்மைப் பணிவாரை தாம் பணியக் கூடுமா? புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமா? உன் தம்பியாகிய அர்ச்சுனன் தேவர் பகைகளைந்து இந்திரனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணிவைத்து வந்திருக்க, வீணாய் நான் அந்தக் கந்திருவர்களைச் சட்டை செய்து உன்னால் வணங்கும்படி யாச்சுதே.

### தருமராஜன் சகுனியை வெறுத்துக்கொண்டு அறிவுறுத்தி, துரியோதனாதியரை உடன் கூட்டி அனுப்புவித்தல்

அப்பனே! நல்லது; உன்னை இத்தீயகாரியங்களில் எல்லாந் தேற்றி, ஒன்றில்லாமல் களைகிறேனென்று சகல சவுரியங்களையும் நாட்டி, சிறு குழந்தையாகிய உன்னை காட்டிக் கொடுத்துப் போய்விட்ட கர்ணமகாராஜனெங்கே? நமது மாமா அவர்களுக்கும் இந்தக் கெதி நேரிட்டதோ? அப்பா! அயல் வீட்டு ஆண்பிள்ளை ஆபத்துக் குதவுவானா? குதி குதி யென்பவர்க ளெல்லாம் கூடக் குதிப்பார்களோ? அரகர வென்பவருக் கென்ன? அன்னம் படைப்பவர்க்கல்லவோ தெரியும். குட்டிக் குரைத்துத் தாயின் தலையில் சுமத்தியதைப்போல் ஆய்விட்டதே? (கோடாலிக்காம்பு தன் குலத்துக் கீனம்) என்றாற்போல் குறைவில்லாத குலத்திற்குக் குறைதேடிக்கொண்டாயே? (சிறுவரிட்ட வேளாண்மை வீடுவந்து சேராது) என்பது போலும் செய்துவிட்டாயே? மேலும், உன்னுடைய தமயனாகிய வீமனுக்குத் தம்பியாகிய அருச்சுனனுக்குள்ள பலாபலன்கள் உனக்குத் தெரிந்திருக்கின்றதல்லவா? அந்த பலாபலத்தைக்கொண்டு அவர்கள் அந்தக் கந்திருவர் கோனுடன் சண்டை செய்யத் துணிந்தால், உங்களை மீட்பதரிதாகுமே அப்படியில்லாமல் அவனை வணங்கி யுபசாரங்கள் சொன்னதின்பேரில் எவ்வளவு மரியாதையும் பயமுங்கொண்டு உங்களை விட்டுப் போய்விட்டான். நீரே நீ பார்த்தையே;

குழந்தாய்! வணங்கிய வில் தைக்கும். வணங்கா வில் தைக்கமாட்டாது. அன்றியும், தானென்று நினைக்கத் தெய்வமொன்று நினைப்பது சகசமாதலால், சகல சனங்களையும் வைத்து சவரக்ஷணை செய்யுந் தன்னியனாகிய வுனக்கு, எண்ணித்துணிவது கருமமென்னும் யோசனையே இருக்கவேண்டும் என்றும் பற்பலவித நீதி வசனங்களைச் சொல்லி, சகுனியை நோக்கி, மாமா! எல்லாம் தெரிந்த நீரும் இப்படியான ஆபத்தில் இறைவன் குழந்தையைக் கொண்டுவந்து விடலாமா? நீ பார்க்க இவ்வினையோன் எந்த வீரருடன் எந்த யுத்தத்திலெதிர்த்துச் சண்டை செய்திருக்கின்றான்! அறியாப்பிள்ளை தெரியாத் தன்மையாற் குறியாமல் ஒன்று நினைத்தானாகில், பிரியாமலிருக்கு நீங்கள் உறுதி சொல்லவேண்டியதல்லவா? அப்படி சொல்லுவதன்றோ பெரியோர்கள் கடமை. (காலத்திரையஞ் சொல்லியபல்லி கழுநீர்ப் பானையில்விழும்) என்பதுபோலாச்சே! மாமா உம்முடைய பேச்சே; உமக்கென்ன போச்சே; எங்கள் மரபு இப்படியாச்சே; (ஆர் குடி கெட்டாலென்ன? ஆண்டிகுடி தாதகுடியானு லென்ன) என்பதுபோற் செய்து வைத்தீரே. யென்னடா தாதா ஆண்டியானு யென்றால், ஈஸ்வரன்கோயிற் திருநாளாகையால் இதுவுமொரு கந்தாய மென்பது போல் இருக்கின்றதே. ஐயோ! தலைநோயுங் காய்ச்சலுந் தனக்கு வந்தாற் தெரியும். பிறர்க்கு வந்தால் என்தெரியும்? தான்தேடாப் பொன்னுக்கு மாற்றேது உரையேது. செத்தவன் வீட்டிற் பாடுபட்டவர் யாரோ? கண்ணிலெண்ணெய் பட்டாற் கரிக்கும். புருவத்திற் பட்டாற் கரிக்குமோ மாமா அல்லவரு நல்லவரே; யெழுதாப் பொறுக்கி யழுதாகத்தக்கதோ? எங்கள் கால மிப்படியாகவும், தம்பி மனம் வேறாகப் போகவும் இருந்தபடியால், எங்களுடைய குலமும் கோத்திரமும் பலமும் நலமுமியாவுங் குன்றி, கேட்போர்களுக்கும் பார்ப்போர்களுக்கும் பழிப்புக்கிடமாய் விட்டது. போகட்டும், நீரடித்து நீர் விலகுவ தில்லை. (தானுடா விட்டாலுஞ் சரீரமாடும்) என்னுந் தன்மையாதலினால், எனக்கு நீங்கள் சிறப்பாகச் சவுக்கியமடைந்து இருக்கின்றீர்களென்று கேட்கவும்,நோக்கவும்ஆசையுண்டாகி,பெருமைக்குக் காப்புக் கட்டிக்கொண்டு விருதுக்கு வேட்டை ஆடுகின்றவனாக இருக்கின்றேன். என்னுடைய மனந்தாளாமல் இப்படி யெல்லாஞ் சொல்லி விட்டேன். இப்பவு முங்களுக்கு என்பேரிற் கோபம்வேண்டாம். மாமா! தம்பிமார்களையும் ஸ்திரீகளையும் அழைத்துக் கொண்டுபோய் அஸ்தினபுரஞ் சேர்த்துவிடும். இனிமேலும் இப்படி தனிமையில் வரவேண்டாம். ஒருவர் பேரிற் பகை செலுத்தவும் வேண்டாம். குபேர சம்பத்தாகிய செல்வச் செருக்குடன் துரைத்தனஞ் செய்துகொண்டு, ஐயா அவர்களையுந் தாயார் முதலிய பேர்களையுஞ் சம்ரட்சணை செய்து, மேலோர்களுடைய புத்திமதிப் பிரகாரம் நின்று வாழ்வைப்பெற்று கீர்த்தியைப் பொருந்தக் கடவீர்கள் என்று சொல்லி யனுப்பிவைத்தார் எல்லாம் இறைவன் செயலென் றுள்ளபடி யுணர்ந்த உதிஷ்டிரமகாராஜனவர்.

### துரியோதனன் தயித்தியவனஞ் சேர்ந்து தருமராஜன் செய்த நன்றியைச் சகியாது மனநோதலைச் சகுனி தேற்றுதல்

இவைகளை யெல்லாங் கேட்ட கௌரவ முதல்வன் முதலா யாவரும் ஒரு வார்த்தைகளும் பேசாமல் ஊமைகளைப்போ லுள்ளமாத்திரம் வேகும்படியாய்த் தலைகுனிந்தெழுந்து, நாங்கள் போய்வருகிறோமென்றுஞ் சொல்லாமல் நடந்து நெடுந்தூரஞ் சென்று, எதிரிலிருக்குந் தயித்தியவனத்தைக் கண்டார்கள். அந்த யிடத்திற் கூடார மடிக்கச்செய்து, அதில் யாவருங் கூடியிருந்து, ஸ்திரீகளையெல்லாம் வேறோரிடத்தி லிருக்கும்படியாக வமைத்துச் சில யோசனை செய்தார்கள். அதென்னவென்றால், இப்போது நாம் பாண்டவர்களைப் பழிதேடிக் கொண்டோம். (பழித்தார் தலையிற் பாடுவரும்) என்னு மொழி நமக்கே பலித்தது. சித்திரசேனனிடத்தில் யாவருமழிந்து வெட்டுப்பட்டதும் நஷ்டப்பட்டதும் கஷ்டப்பட்டதும் வெட்கங் கெட்டதும் பெரிதாகத் தோன்றவில்லை. அதேதென்றால், இராஜாதி ராஜர்களுக்கு யுத்தஞ் செய்கின்றதும் வெற்றிபெறுகின்றதும் அபசெயமாகின்றது மியல்பான காரியம். இதனலொருவரும் பழிப்பதற் கிடமில்லை. இந்தப் பஞ்சபாண்டவர்கள் நம்மை மீட்டுக் கட்டவிழ்த்தார்களென்று, நம்மால் ஒருமொழி யவர்களுக்குப் பெருமையாகக், (காக்கைப்பொன்) என்னுங்கீர்த்தியைப்போல் வந்திருக்கின்றபடியால், என்னுயிருள்ள வரைக்கும் அவர்களும் மற்றப்பேர்களுஞ் சொல்லுவார்கள். ஆ தெய்வமே! இந்த யிழிவாகிய வார்த்தையைக் கேட்டு இவ்வுலகத்தில் யானுஞ் சீவனுஞ்

செய்துகொண்டு மனுஷத்தனமாக இருக்கத் தக்கதோ? ஓ மாமா! ஓ தம்பி துர்ச்சாதனா! உதவியைப் பெற்றாலும் உயர்ந்தோர்களாற் பெறவேண்டும். அதனால் நமக்குப் பெருமையுண்டாகும். இவர்களோ பஞ்சைகள். வயிற்றுக்கு அன்னமும், உடுக்க வஸ்திரமும்மற்று இருக்க, எள்ளத்தனையேனு மண் மனையொன்றுமில்லாமல், வனத்தில் மிருகங்களைப்போல் வாடுகின்றவர்கள். இவர்கள் வணங்காமுடியுடைய என்னைக் காத்தார்களென்னும் வாக்கியங் கேட்டு, இந்த மண்ணில் யான் சிலாக்கியமான வாழ்வைப்பெற்றிருக்க, ஆ ஆ விதியே! ஐயோ என் மதியே! என்ன சதிசெய்தாய்? இனி என்னகதி? ஓ அதிபதியே! ஓ நிதிபதியே! அண்ணா கர்ணா! நீ எங்கு எவ்வாறாயினையோ தெரியவில்லையே என்று ஏங்கி விசனப்படும்போது சகுனி துரியோதனனை நோக்கி, இறைவனே! நம்மை அவர்கள் மீட்டுவிட்டாலுந்தா னென்ன? ஏதோ உரிமையுள்ளவனைப்போல் தருமராஜன் சில அருமையாகிய நீதிகளைச் சொல்லிப் பெருமை யடைந்த திறமையைப் பார்த்தனையா? ஆடு நனைகிறதென்று அழுததாங் கோனாய், அதுபோல் வெகு புத்திகளைச் சொல்லும் பாவனையாகத் தன் மனதிலிருந்த வருத்தங்களையெல்லாங் காட்டி, சுடாதுபோற் சுட்டான் தருமராஜன். ஆயினு மிருக்கட்டும். இப்போதா னென்ன முழுகிப் போய்விட்டது. கிணற்றின் சலத்தை வெள்ளங்கொண்டு போகவில்லை. அந்தக் கந்திருவனெங்கே பிழைத்தான்? இவர்களெங்கே தப்பிவிட்டார்கள்? நல்லதாகட்டும் என்று நகைத்து, ஓ துரியோதன மஹாராஜனே! ஓ தம்பி என்னருமை மருமகனே! நீங்களேன் இப்படி நினைக்கின்றீர்கள்? இவர்கள் மீட்டார்களென்பதை நமது நாட்டார்கள் கேட்டால் நம்பமாட்டார்கள். (ஓ அம்மணமாயிருக்கின்ற தாதா! உன்னண்டையி லிருப்பவரை யணைத்துப் போற்றலாகாதா) என்றுப்போ லிருக்கின்றது இவர்களுடைய கதி. (பழையது யிருந்தாற் போதும் உமக்குப் பசியில்லாமல் மருந்து தருவேன்) என்கிற வசனம்போல இவர்கள் தங்கள் விதியையே தொலைத்துக் கொள்ளமாட்டாமற் றயங்கியிருக்கின்றார்கள். இப்பேர்ப்பட்டவர்கள் நம்மைக் காப்பாற்றினார்களென்பது பொய்யாகும். நீங்களொன்றுக்கும் பயப்பட வேண்டாம். நானிருக்கின்றேன். இந்த வார்த்தைகளைத் திருப்பித் தோர்த்து விடுகிறேன். சித்திரத்திலெழுந்து நகரத்திற்கு வாருங்களென்று சொல்லி யழைத்தனன்.

### கர்னன் துரியோதனனிடம் வந்து மீண்டும் போருக்கு விடை கேட்க, ஊருக்குப் போக விடைதந்து தான் தனியே உள்ளறையிற் சென்றிருத்தல்.

அச்சமயத்திற் சூரிய குமாரனாகிய தோன்றல் இரதத்தைச் செலுத்திக்கொண்டு வந்திறங்கி, துரியோதனனிருக்குஞ் சாலையிற்போயவனைக் கட்டிக்கொண்டு மனவருத்தமுற்று, ஆ ஆ! இதென்ன வகைமோசமோ! மாயவஞ்சகமோ! மற்றியாதோ அறியேன். நானுங் கந்திருவனும் யுத்தஞ்செய்து, அவனது தேரையும் துவசத்தையும் வீரப்பட்டத்தையும் கவசத்தையும் வில்லையும் அறுத்து, மார்பிலுந் தோளிலுஞ் சில வயிரக்கணைகளை விடுத்து, அவன் முகமாறிப் போகும்படி அடித்தேன். அவன் என் தேரை யழித்தான். நமது தம்பி விகர்னன் தன் தேரைக் கொடுத்தான். அதின்பேரிலேறி மீண்டும் போருக்கடுத்தேன். அங்கே யொரு பள்ளமும் அதில் நிரம்பிய வெள்ளமும் அள்ளலாகிய சேறு மிகுந்து, என் இரதச் சக்கரங்களுங் குதிரைக் கால்களும் அதிற் புதைந்து போய்விட்டன. என்னும் கூடியவரையிலும் பார்த்தேன். இறங்கி வந்து விடலாமென்றால் என்னையும் மூழ்க வைக்குஞ் சேறாகையாற் றியங்கி யிருந்தேன். இப்போது அந்நீருஞ் சேறும் உலர்ந்து போகவும், குதிரைகளும் வீரத்துடனிழுக்கவும், நான் தத்தளித்துத் தேரை நடாத்திக்கொண்டு இங்குவந்தேன். என்விதி யிப்படியாய்விட்டது. உங்கள் கெதியென்ன என்று கேட்ட அங்கர் கோனுக்குத் துரியோதனன் தாங்கள் சித்திரசேனனுற்பட்ட பாங்கெல்லாஞ் சொல்லி, தருமராஜனேவலால் வீமார்ச்சுனர்கள் மீட்டு விட்டதையும், தருமராஜன் தனக்குஞ் சகுனிக்குஞ் சொல்லிய நீதிகளையும், அவையனைத்தையுந் தலைகுனிந்த வண்ணந் தாங்களுயிரிழந்த உடற்போற் கேட்டிருந்ததையும், அப்பாவிங்குற்றதையும், தான் யெண்ணிய கருமங்களையுஞ் சொன்னான். அதைக்கேட்ட சவுரியன் கண்ணீர்பொழிந்து, ஆ! ஆ! நமது பிழைப்பு நன்றாயிருந்தது. ஐயோ! பழிப்புக்கிடமாச்சே. நல்லது எனக்கு விடைகொடும். நான் போய்ச் சித்திரசேனனைக் கட்டிக்கொண்டுவந்து உம்மெதிரில் விடுகிறேன். அப்போது பாண்டவர்களும் தேவா

களு மும்மையிர்ந்து குறைதவிர்த்துக் கொள்ளும்படி இவ்விடத்தில் வந்து வணங்குவார்க்கள் என்றெழுந்து கோபாக்கினி பொழிந்து மொழிந்த பர்ராயணியைத் துரியோதனன் பார்த்து, அண்ணு! இனி யிவ்வா றேசிப்பதிற் பயனில்லை. (முதற்கோணல் முட்டக்கோணல்) என்பதாகும். எனக்காக இந்த வருத்தம் நீங்க்ள் எடுத்துக் கொள்ளுகிறதைவிட, யானொரு மொழி கேட்கின்றேன் அதற்கு விடைதாரும். அது யாதென்றால், தேவர் நமது தம்பிமார் முதலிய பேர்களையும் ஸ்திரீகளையு மழைத்துக் கொண்டு பட்டினம் போய்ச் சேர்ந்து, துசுவாசனுக்குப் பட்டங்கட்டி, சகல விசாரணையுந் தாமே பார்வையிட்டுக்கொண்டு, மாமாவைக் கைசோர விடாமல், மற்றத் தம்பிமார்களையும் அரவணைத்து, என் தாய் தந்தையர்களுக்கும் உறுதி கூறியவர்களைச் சம்ரக்ஷணை செய்து, இறந்தால் உத்துரிமைக் கடனியாவும் நீயே முதற்பிள்ளையாக விருந்து முடித்து வாழ்வைப் பெறக்கடவீர். யானிந்த வனத்திற் பிராணனை விட்டுக்கொள்கிறேன். சித்திரசேனனிடத்தி லகப்பட்டுக்கொண்ட துரியோதனுதிகளைப் பாண்டவர்கள் மீட்டுப் பிராணபிச்சை கொடுத்தார்க ளென்னும் மொழியை உலகஞ் சொல்லக்கேட்டு நானிருக்க மாட்டேன். என் வாக்கியத்தை எவருந் தடுக்காதீர்கள். விரைவிற் போங்களென்று விலக்கிக் கூடாரத்தினுட் போய் உள்ளறையி லிருந்துகொண்டு, ராஜயோகத்தைச் செய்பவர்கள்போற் பேச்சுடன் மூக்கையு மடக்கி, ஒரே தியானமா யிருந்துவிட்டான் அரவக்கொடியோன். வெளியிலிருந்தோர்க ளெல்லாங் காச்சுமூச்சென்று கதறிப் பதறி யழுதார்கள். வாசல் காவலாள்கள் சுயோதனனுடைய ஆக்கினையின்படி யாரையும் உள்ளே விடாமல், பேசாதீர்களென்று அமட்டிக்கொண் டிருந்தார்கள்.

### துரியோதனனைப் பாதலத்தரக்க ரழைத்துப் போய்ச் சில பரிவுகள்கூறி மிர்த்யு சஞ்சீவி மந்திரம் உபதேசித்தனுப்புதல்

அந்தவேளையில் பாதலத்திலிருந்த அரக்கர் அநேகம் பேருக்குப் பூமியில் நினைத்த அரவக்கொடியோனுடைய எண்ணந்தெரிந்தபடியால், தங்களுக்குற்ற தேவதையாகிய ஒரு சத்தியை யழைத்து உற்றதுரைத்து வெற்றி யையுடைய திரிதராஷ்டிரன் முதற் புத்திரனை இவ்விடங் கொண்டுவா வென்று விடுத்தார்கள். அந்தப்படியே அச்சத்தி மாயையினுலொருவருக்குந் தெரியாமல் துரியோதனனுக்கு மயக்கம் உண்டாகும்படி செய்து எடுத்துக்கொண்டு போய் பாதலத்தில் இருக்கும் இராட்சசர்களுக்கு எதிரில் விட்டது. உடனே அவர்கள் இவனைப் பார்த்து, உபசார மரியாதைகள் செய்து ஆசனங்கொடுத்துச் சொல்லுகின்றார்கள்: கேளுமையா துரியோதன மகாராஜனே! இவ்விடத்தில் அரசு புரிந்துக் கொண்டிருந்த இராட்சச ராஜனும் நாங்களும் தேவர்கள்பேரில் யுத்தம் செய்து வெற்றி கொள்ளும் காலையில், சில அரக்கர்களும் ராட்சச ராஜனும் தேவர்களால் இறந்து, நாங்கள் முறிந்துவந்து பரமசிவனைக் குறித்து எங்களிராஜனை சேனையுடன் எழுப்பித் தரவேண்டுமென்று தவமிழைத்தோம். அக்காலையில் கயிலாசபதியானவர் பிரசன்னமாகி, உங்கள் ராஜனும் சில ராட்சசர்களும் பூலோகத்தில் திரிதராஷ்டிரன் காந்தாரி இவர்களுக்குப் பிள்ளைகளாய்ப் பிறந்து பூமியை ஆளுகின்றார்கள். இன்னும் சிலர் சிந்து தேசாதிபதி-சகுனி-கர்னன் - சோமதத்தன்-பகதத்தன் இப்படியாகப் பிரிந்து இருக்கின்றார்கள். இவர்களெல்லாம் சுயோதனனுக்கு மெத்தவும் உரிய சிநேகிதர்கள். இதல்லாமலும், இந்திரன் முதல் ஐவர் பாண்டவர்களாகப் பிறந்திருக்கின்றார்கள். தேவர்களிற் சிலர் வீஷ்மர்-துரோணர்-கிருபர் இப்படி அவதரித்திருக்கின்றார்கள். இருந்தாலும் இவர்கள் மாத்திரம் உங்கள் ராஜனுக்கு ஒரு காரணத்தினால் துணையாய் இருப்பார்கள். மற்றைய தேவர்க ளெல்லாம் பாண்டவர்க்குச் சகாயமானவர்கள் என்று சொல்லி அந்தர்த்தானமாயினர். ஆதலால், ஓ துரியோதன ராஜனே! நாங்கள் சொல்வதைக் கேளும்: இன்னும் சிலநாளில் உங்களுக்கும் பாண்டவர்களுக்கும் தாண்டவராஜன் புரியும் சர்வசங்கார காலம்போல் யுத்தம் நடக்கப்போகின்றது. அந்தக்காலத்தில், நாங்களும் உமக்குப் படைத்துணை யாவோம்; நீர் விசனப்பட வேண்டாம். எல்லாப் படைகளும் இறந்து நீர்மாத்திரம் தனியே இருக்கும்படி நேரிட்டபோதிலும், அந்த வேளையில் இறந்துபோன யாவரையும் பிழைப்பூட்டிக் கொள்ளும்படியாய் ஒரு மந்திரம் உபதேசிக்கின்றோம். அம்மந்திரத்தை நீர் பெற்றுக்கொள்ளுமென்று மிர்த்தியு சஞ்சீவி மந்திரத்தை உபதேசித்து சில கணைகளும் கொடுத்து, மேலும் சொல்லுகின்றார்கள்: இன்று நீங்கள் சித்திரசேனனை ஜெயித்து வெற்றி பெறுவீர்கள். ஆனால், ஒரு

மோசம் நடந்திருக்கின்றது. அது என்னவென்றால், கர்னனுடைய இரத்தத்தைப் புதைந்து போகும்படியாய்ச் செய்து உங்களுக்கு அவமானந் தேடினவன் தேவேந்திரன் அவன் மாயையினால் இன்று உங்களுக்கு அபஜெயம் நேரிட்டது. இதல்லாமலும் இன்னும் சில நாளையில் கர்னனுடைய கவச குண்டலத்தைத் தானமாகக் கேட்டு வாங்கிக் கொள்ளுவான் இந்திரன். இதன்றியும், வேண்டிய அகிதங்களை உமக்கும் உம்மைச் சார்ந்தவர்களுக்குஞ் செய்து, ஐவருக்கும் வேண்டிய இதங்களைச் செய்யப்போகின்றான். அப்படியெல்லாம் நடந்தபோதிலும், நீ ஒன்றுக்கும் பயப்பட வேண்டியதில்லை. நாங்களிருக்கின்றோம். நீர் இந்த வனத்தில் பிராணனை விட்டுக் கொள்ளும்படி நினைத்த காரியம் யாது? இப்போது என்ன அதிசயத்தைக் கண்டீர்? இன்னும் பின்னால் இருக்கின்றது தேருக்குள்ள சிங்காரம். ஆதலால், இதற்குள்ளாக இப்படி மயங்காதீர் என்று பற்பல உறுதி மொழிகளை கூறி, யாங்கள் சொல்லிய தேவ ரகசியத்தை ஒருவருடனேயும் சொல்லாதீர். மர்மமாக வைத்திருந்து நடக்க நடக்கப் பார்த்துக் கொள்ளும் என்று விடை கொடுத்து, இஷ்ட சத்தியை நோக்கி, இவரை முன்னிருந்த இடத்திற் கொண்டுபோய் வைத்துவாவென்று உத்தரஞ்சொல்லி யனுப்ப, அப்பத்தராகிய நிருபர் சித்தப்படியே வைத்து வந்துரைத்தாள் சத்தியானவள்.

### துரியோதனன் ஐவரோடு மத்தினபுரஞ்செல்ல, வீஷ்மாதியர் விளைந்தது சொல்லி விவேகங்கூற அதுகேட்டு, வருந்துதல்

இப்பால் புவனகர்த்தனாகிய துரியோதனன் பூமியிற் சற்றுநேர மிருந்து மயக்கம் நீங்கி யெழுந்து, மாமனையும் அங்கர் பூபனையுந் தம்பிமார்களையும் மற்றப் பேர்களையுந் தேர்களி லேறச்சொல்லி, யாவருடனுஞ் சிந்தை மகிழ்ந்து பேசிக் கலந்து சந்தோஷமுற்று அஸ்தினாபுரத்தை நோக்கி, சகல வாடம்பரங்களுடன் சபையிற் போய்ச் சேர்ந்து தன் தந்தையைக் கண்டு வேறொன்றுஞ் சொல்லாமல், வேட்டையாடி மாட்டைக் காப்பாற்றிய விதங்களைச் சொல்லினான். அதைக்கேட்டு மகிழ்ந்தான் திரிதராஷ்டிரனனவன். அதுகாலையிற் பாட்டனாகிய வீஷ்மரானவர் பேரனைப் பார்த்து, அப்பா துரியோதனா! என்ன நினைந்தியாதுசொல்லி எவ்விடம்போனாய்? அவ்விடத்தில் நேரிட்ட அதிசயமென்ன? மாமன் சகுனியையும் மார்த்தாண்டன்சேய் கர்னனையுந் தம்பி துர்ச்சாதனனையும் மனதில் நீங்காமற்றரித்திருக்கின்றனையே. வனத்திலிவர்கள் வல்லமைத்திறமும், நினைத்தவையெல்லா முடிக்கு மறமும், அறக் கடவுண்முதல் ஐவருங் காட்டிலுறக்கமுற்றிருக்கு மிருப்பும், அவர்கள் உனக்குச் செய்த உதவியும், கந்திருவன்றிறமும், கதைவீம னுறமும், தனஞ்செயன் வின்மையும், தருமராஜன் நன்மையும், எங்கள் வார்த்தையிற் கசப்பும், மாமன் - கர்னன் இவர்கள் வசனத்தில் இனிப்பும் இவையாவும் நீயறிந்தாயல்லவா? ஆகையால், இனிமேற் சாபம்-தாபம்-பேதம்- தண்டமென்னும் நான்கில் முதலுபாயத்தின்படி ஐவரையும் அழைத்து சிநேகஞ் செய்துகொண்டு இழிச்சொற்களை நீக்கிப் பெரியோர்களுக்கு வழிபட்டுக்கொண்டு பெருமையுங் கீர்த்தியும்பொருந்தி வாழ்வதே உத்தமமாகும். நீங்கள் சித்திரசேனனிடத்திலகப்பட்டபோது உங்களை மீட்டுப் பிராண தாரைவார்த்துக் கட்டவிழ்த்து விடத்தக்க வல்லமைசாலிகள் துஷ்டர்களாயிருந்தால், உங்களியாவரையுங் கட்டுகளுடன் வெட்டி மடிக்க வெகுநேரஞ் செல்லுமோ? உன்னிஷ்டர்களாகிலும் அதை யோசிக்கவில்லையோ? அப்பா பாண்டவர்கள் மெத்தவும் மனம்பொறுத்த உத்தமச் சத்தியவான்கள். நல்லோர் பெரியோர் மனம் நோகலாகாது. (தாயார் மனமெரிய வாழா ரொருக்காலும்) என்னும் நீதிவசனஞ் சொல்லியிருக்கிறபடியால், இதுகளையோசித்து பாண்டவர்களை நேசித்து, இருதிறவரும் விசுவாசித்து வாழ்வதே நலம் என்று சொல்லிய கங்காபுத்திரன் வார்த்தையைக் கேட்ட கர்னனும், சகுனியும், துஸ்வாசனும், துரியோதனனும் ஒருவரையொருவர் நோக்கி நகைத்தார்கள். அந்த வேளையிற் காங்கேயனுக்குக் கோபம் வந்து, பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கொள்கைபோலாச்சென்றெழுந்து அரண்மனைக்குப் போய்விட்டார். உடனே துரோணாச்சாரியார் மன்னவனைப் பார்த்து, அரசனே! இந்த வமிசத்திற்கு முதல்வனாகிய விரதசீலன் உங்களளவிலன்புவைத்து, உரிய பாசத்தினால் நன்னெறிகளையும் நன்நீதிகளையுந் தெரிவித்து நடந்த சேதிகளையுஞ் சொல்லிவந்தால் இப்படி நகைக்கத்தக்கதோ? இனி நாளில்மெல்லாம் நகைக்க விருக்கின்றதை நாம் மாத்திரம் நகைப்பது காரியமோ?

கெடுவாய் கெட்டுப்போகாதே யென்று கிட்டி
யிருப்பவர் சில சட்டங்கள் சொன்னால், இன்
னுங் கெடுவேன் பந்தயம்போடு என்பது
போலுமிருக்கின்றதே. குற்றமில்லாதிருப்பதே
சுற்றம்; குறைவில்லா திருப்பதே நிறை; ஆத
லால், ஒரு குளத்திலுற்ற புற்பல மலர்களைப்
போலுடன் பொருந்தி வாழ்வதே வாழ்க்கை.
உமக்குப் பெருமை எமக்குஞ் சிறப்பு. எவர்க்
குங் களிப்பு. மேலும், அந்தப் பாண்டவர்க
ளுடைய வரமுந் திறமுங் கேட்கக் கேட்க
மகிழ்ச்சியும், உங்களை நோக்குங்காலையி லிகழ்ச்
சியுமாக விருக்கின்றது. இதனால் உலகமென்ன
சொல்லும். இன்னாரின்னாரிருந்தும்இப்பேர்ப்
பட்ட தீவினை விளையப் பார்த்திருந்தார்களா
வென்று சொல்லி, எங்களையல்லவோ பழிப்
பார்கள். இவைகளை யெல்லாம் யோசித்து,
பெரியோர்களை நேசித்துப் பூசித்து, ஆசிபெற்
றுக் காசினியாளக் கடவை யென்று அநேக
மாகிய தருமங்களைச் சொல்லி யகன்றார். அவ்
விடத்திலிருந்த மற்ற யாவர்களுந் தங்கள்
தங்களிடத்திற்குப் போய்விட்டார்கள். அர
வக்கொடியோன் அழகிய துணைவர்களும்,
அங்கதேசாதிபனும், சௌபலராஜனுந் தன்
னைச்சூழ்ந்துவர அரண்மனைக்குட் சென்றான்.

**துரியோதனன் இராஜசூயத்தால் இந்திரனை அவமானஞ்செய்யக் கருதி வீஷ்மராதியர் மாற்றி வேறு விதத்தால் நடப்பித்தல்**

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே!
(ஆயமூடர்க் குரைத்தபொருளாற்றில் வீழ்ந்த
பொருளொக்கும்) என்றாற்போல வீஷ்மருந்
துரோணருங் கூறிய உண்மையில் ஓரணுவள
வும் உள்ளத்தைச் செலுத்தாமல் அன்றிராத்
திரி இவர்கள் நாலுபேரும் புசித்து ஒரு மண்
டபத்தில் இருந்துகொண்டு யோசித்தார்கள்.
அண்ணா கர்னமகாராசனே! மாமா சகுனி!
தம்பி துஷ்வாசனா! நாம் வனம் போய் வந்த
தைக் குறித்துச் சபாமண்டபத்தி லிருந்த கிழ
வன் என்ன சொன்னான் கேட்டீர்களா? இவை
கள் இவனுக்கு எப்படி தெரியும் என்றான்.
பாண்டவர்கள் சொல்லி யனுப்பி யிருக்கவேண்
டும் என்றான் துர்ச்சாதனன். அதைக் கேட்
டுத் துரியோதனன் சொல்லுகின்றான்: நமக்கு
நேரிட்டிருக்கும் இந்த இழிவாகிய விசனந்தீர
வும் பெருமை கிடைக்கவும் ஒரு காரியம் உன்
னி யிருக்கின்றேன். அதென்னவெனில்,
தேவேந்திரன் நம்மை அவமானப்படுத்தச்
சொன்னானல்லவா. ஆகையால், முன்பு பாண்
டவர்கள் செய்த இராஜசூய யாகத்தை நாம்
செய்து, சகல அரசர்களையும் வெற்றிகொண்டு
அவிர்ப்பாகங் கொடுக்கும்போது இந்திரனை
அவமானப்படுத்த வேண்டுமென்று யெண்ணி
னேன். அண்ணா கர்னா! இதற்கு என்ன
சொல்லுகின்றீர் என்றான். உடனே அவன்
ஆ! மெத்த நல்ல காரியம். இது நல்ல புத்தி.
எனக்குச் செலவு கொடுத்தால் ஈரேழுபதினாலு
லோகத்தையும் ஒருநொடியிற் சுற்றிக்கொண்டு
வெற்றிபெற்று வருகிறேனென்றான். அப்
போது மாமனுந் துர்ச்சாதனனும் இதுவே
சரி யென்றார்கள். இந்நால்வரும் மறுநாட்
காலமே நித்தியவிதிகளை முடித்துக்கொண்டு,
சபாமண்டபத்திற் சகல சம்பிரமத்துடனே
சென்றிருந்து, தந்தையை வணங்கி, இந்தக்
காரியங்களைச் சொன்னான் துரியோதனன்.
அதைக் கேட்ட திரிதராஷ்டிரன், வீஷ்மர் -
துரோணர்-கிருபர்-அசுவத்தாமன் - விதுரன்
இவர்களை நோக்கி, தம்பி சொல்லிய வசனத்
தைக் கேட்டீர்களா? இதற்கென்ன சொல்லு
கின்றீர்களென்று இறைவன் கேட்டான்.
அதற்கு அவரவர்கள் யோசித்து, அவருள்
வீஷ்மருந் துரோணரும் இதனைச் சொன்னார்
கள். இராஜசூய யாகம் ஒருநாளிரண்டுநாளை
யில் முடிக்கின்றதல்ல. திக்குவிஜயஞ் செய்ய
வேண்டியது. திரவியக்குப்பல் சேர்க்கவேண்டி
யது. ஒக்கலுடன் பகையின்றி வாழவேண்டி
யது. ஒருவரும் பகை செய்யா திருக்கவேண்டி
யது. அப்படி யிருக்க, இப்போது அப் பாண்
டவர்களுக்கும் நமக்கும் நடந்திருக்குங் காரி
யங்களில், பாண்டவர்கள் பட்சம் பாதியும்,
நமது பட்சம் அதிற் பாதியுமாக இருக்கும்.
ஆகையால், இப்போது அந்த வேலை வைத்
துக்கொண்டால் நடப்பது பிரயாசம். ஆனால்,
கர்னராஜன் உலகமெல்லாஞ் ஜெயித்து வரு
வேன் என்று சொல்லி யிருப்பார். அந்த
உறுதிகொண்டு அரசன் இப்படி உரைத்தது
போல் இருக்கின்றது. அதற்கென்ன; மாங்கா
புளிப்போ வாய்புளிப்போ வென்று தமக்கு
இஷ்டமானபடி சொல்லலாம். சொன்னபடி
வெல்லுதல் பிரமனாலுங் கூடாது. ஆகையால்,
அந்த யாகத்தின் பலனைத் தரத்தக்க மற்றொன்
றைச் செய்தாற் செய்யலாமென்று சொன்
னார்கள்.

அதைக்கேட்ட திரிதராஷ்டிரன் ஏதேனு
மொன்றை யோசித்துச் சொல்லுங்களென்ன:
அவர்கள் அவ்வாறே யோசித்து, வயினவு

யாகமென்று ஒன்றிருக்கின்றது. அஃதவ் விராஜசூயயாகத்தின் பலனை எல்லாந் தரத்தக்கது. ஆனதால், அரசர்களுக் கெல்லாந் திருமுகமெழுதி அனுப்பிவிட்டு இவ்விடத்தில் யாகத்தைச் செய்யத் தொடங்கினால் அவரவர்கள் வரிசையுடன் வருவார்கள். பெருமையுமுண்டு என்று வீஷ்மருந் துரோணருஞ் சொல்ல, அதைக் கேட்ட அரசன் துரியோதனனுடன் உரைக்க, அவனுஞ் சம்மதிக்க, உடனே அரசர்களுக்கு ஓலை அனுப்பி அவரவர்களு மரியாதையுடன் வந்து சேரவும், யாகசாலை ஏற்படுத்தி அநேகங் கோடி பிராமணர்களுக்கு அன்னமும், சொர்னமும் இன்னமும் வேண்டிய பொருள்களெல்லா மளித்து, யாகம் நடத்தும்போது ஒரு பிராமணனைப் பாண்டவர்களுக்குஞ் சொல்லி யனுப்பி வைத்தார்கள். அப்பிராமணன் அவர்களிடத்திற் போய், ஐயா! வயிணவ யாகத்திற்கு அழைத்துவரச் சொன்னான் உங்களையாவென் றியம்ப, அதைக் கேட்ட தருமராஜன் அவ் வந்தணனைப் பார்த்து, ஐயா! என் ஐயா முதலிய பெரியோர்கள் யாவர்க்கும் வந்தனைபுரிந்து வணங்கினேனென்று சொல்லும். மேலும் வனத்திற் பதின்மூன்று வருஷங் கழித்துப் புரத்திற்கு வருவதென்று மன்னவர் சபையிற் சொன்ன மொழியை மாறி இப்போது நான் வரக்கூடுமோ? ஆதலால், என் தம்பிமார் யாவருக்கும் என் ஆசீர்வாதஞ் சொல்லும் என்று கூறலும், அவ்வேதியன் அவரிடத்தில் விடைபெற்று வரும்போது, அப்பிராமணனைத் தண்டதரன் வளைத்துக்கொண்டு, ஓய் ஐயரே! நீர் அவர்களிடம்போய் இப்படி சொல்லும். குருக்ஷேத்திரமென்னும் யாகசாலையில், துரியோதனாதிகளென்னும் நூறு பசுக்களை, திரௌபதியினுடைய கோபாக்கினி மூட்டி, வீமசேனனுடைய கதையினால் சதமென்னும் நெய் சொரிந்து, ஊழ்வினையென்னுங் காற்றடிக்க, பாண்டவர் பகையென்னுஞ் சமித்துகளிட்டு, கடுமொழியென்னு மந்திரம் புகன்று, திரிதராஷ்டிரன் காந்தாரி முதலிய சகல ஸ்திரீகளுடைய கண்ணீரென்னுந் தண்ணீரிறைந்து, யமனென்னுந் தேவனுக்கு அவிர்ப்பாகங் கொடுக்க யாகத்தைச் செய்வதற்கு நாள் நேமித்துக்கொண்டிருக்கின்றான் வீமசேனனென்று சொல்லும் என்று கூறி விடுக்கவும், அந்த வேதியன் போய்ச் சபையிலிருக்கும் யாவருங் கேட்க, தருமராஜன் சொல்லிய தன்மையையும், வீமசேனன் சொல்லிய வன்மையையும் அவர்கள் சொல்லியவண்ணமே சொன்னான். அதைக் கேட்ட திரிதராஷ்டிரன் இளைத்துக் களைத்தான்; மற்ற யாவருங் கலக்கங் கொண்டார்கள். துரியோதனன் அவைகளை யொன்றும் யோசிக்காமல், மகா மனமகிழ்ச்சியுடன் யாகத்தைக் குறைவற நிறைவேற்றி, வேதப் பிராமணர்கள் - மஹாரிஷிகள் - முனீஸ்வரர்கள் இவர்கள் யாவருங் களிக்கவேண்டிய தானங் கொடுத்து, தேவர்களுக்கும் அவிர்ப்பாகம் அளித்து சகல ராஜர்களுஞ் சகல தேவர்களுங் கொண்டு வந்த வரிசைகளைப் பெற்று, அவரவர்களுக்குத் தக்க வெகுமதிகளைச் செய்து அன்னதானமே முதலாகிய சோடச மகாதானங்களெல்லாம் நடத்தி, பெரியோர் யாவரும் இந்த யாகத்தின் பெருமைபோல் எங்குங் கண்டதில்லை யென்று கொண்டாடிச் சொல்லவும், அரசர்க ளியாவருந் தங்கள் புரசன ரியாவரு மகிழ்கொண்டு வாழ்த்தவும், அந்தந்த தேசங்களினின்றும் வந்திருந்த இராஜர்களெல்லாந் தமது சொந்த நகரங்களுக்குப் போகவும், இவ்விடத்திலிருந்த யாவருடனும் வணங்காமுடி மன்னன் - கர்னன் - சகுனி - துஸ்வாசனன் இவர்கள் நால்வருஞ் சகல சம்பிரம மேளவாத்திய நித்திய கலியாண மங்கள மனோகர மகிழ்ச்சியுடனிருந்தார்கள்.

## தருமராஜன் துர்சொர்ப்பனங்கண்டு இடம் பெயர்க்க, வியாசர்வந்து மௌற்சல்ய மகாரிஷி சப்தங்கூறித் தேற்றிச் செல்லுதல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! துரியோதனன் செயல் இவ்வாறாக. பாண்டவரைவரும் வனத்திற் காலங்கழித்துக் கொண்டிருக்கும் நாளையில், ஒரு நாள் தருமபுத்திர மகாராஜன் இராத்திரி பதினைந்து நாழிவரையிலும் விழித்திருந்து மாதவர்களுடன் வார்த்தையாடி, அப்பால் நித்திரை செய்துகொண்டிருக்கும்போது ஒரு சொர்ப்பனங் கண்டு எழுந்து, தௌமியர் முதலிய தம்பிமார்களையும் வரவழைத்து, ஓ அன்பர்களே! இப்போது எனக்கொரு சொப்பனவவஸ்தை யுண்டாகி, அதில் இந்த வனத்திலிருக்கு மிருகங்கள் எல்லாம் ஒன்றுகூடி வந்து, நீங்கள் இவ்விடம் வருமுன்னம் நாங்கள் சுகமாக இருந்தோம். இப்போது உங்களால் எங்களுக்கு வருத்தம் நேரிட்டது. நாங்கள் வெளியிற் புறப்பட்டு உலவக் கூடாமையா யிருக்கின்றது. வேறொரு வனத்திற்கு நீங்கள் நீங்கிப் போக வேண்டிய

தென்று கேட்டதாகக் கண்டேன். உடனே எழுந்தேன். உங்களிடத்திற் சொன்னேன். ஆகையால், இந்த வனத்தை விட்டு அப்பாற் போக நினைக்கின்றேனென்ன, தங்களிஷ்டப்படி செய்வதே கருமமென்று யாவருஞ் சொல்ல, உடனே யாவரோடும் எழுந்து காமியவனத்திற்றனே மற்றோரிடம் போய்ச் சேர்ந்து, வீமசேனனுற் கட்டப்பட்ட பன்னகசாலையில் இருந்து, காலைக்கடனை முடித்துக் கொண்டு, சூரிய நமஸ்காரஞ் செய்து, அக்ஷய பாத்திரத்தில் வரும் அன்னங்களைப் பன்னீராயிரம் பிராமணர்களுடன் புசித்து மகிழ்ந்திருக்குஞ் சமயத்தில், வேதவியாசர் வந்தனர். அவரைக் கண்டவுடனே உதிஷ்டிரர் எழுந்து போய்ப் பூமியில் விழுந்து தொழுதெழுந்து, அர்க்கிய பாத்திய மாசன்யமும் நடத்தி, ஆசனமளித் தெழுந்தருளச் செய்தனர். அப்போது அம்முனிபுங்கவர் ஐவரை நோக்கி, அர்ச்சுனனுடைய தவத்தின் வரலாற்றைச் சாங்கோபாங்கமாகச் சொல்லக் கேட்டு சந்தோஷமுற்று, உங்களுக் கென்ன தாக்ஷி சர்வசாக்ஷியாகிய பரமசிவமே காமாக்ஷியுடன் வந்து காட்சிகொடுத் திருப்பதால், மோக்ஷமென்பதை யுங்களுக்குக் காணியாட்சியாகத் தேடிக்கொண்டீர்கள். இன்னுஞ் சில நாளையில் உங்களுக்கு வருகின்றது அரசாக்ஷி. இந்த அன்னதான மென்னு மாட்சிமையைச் செய்து வருகின்றதே மிகச் செழிச்சி என்று புகன்றபோது உதிட்டிர ரெழுந்து வணங்கி, சுவாமி! என்னையுந் தேவரீர் வாக்கிஞல் தானஞ் செய்பவனென்று உரைக்கலாகுமோ? நான் மகாபாவி! பட்டினத்திலிருக்கும்போது பிராமணர்கள் முதலிய பேர்களுக்கு அன்னதானங்களுஞ் சொர்னதானங்களும் நடந்து வந்தன. காட்டில் வந்த பிற்பாடு அட்சய பாத்திர மென்னும் ஓட்டில் வரும் அமுதைப் புசித்து உறங்கி இருக்கின்றோம். இஃதோர் மாட்சிமையோ? யென்றுரைக்கக் கேட்ட வாதராயணர் சொல்லுகின்றார்:

ஓ மன்னவனே! கேளும்: ஒரு மகாரிஷி மௌற்சல்லிய ரென்பவர். அவர் சாஸ்திரங்களினளவுந் தவநெறியின் முகிவுந் தானங்களின் றெகையுஞ் சம்பூரணமாகத் தெரிந்து, தானங்களிற் சிறந்தது அன்னதானமென்றுணர்ந்து, அந்தத் தானஞ் செய்வது ஒருவரிடத்தில் யாசித்தும், உத்தியோக வியாபாரங்கள் செய்து சம்பாதித்தும், ஒருவர் மனநோவத் தண்டனை கண்டனை இயற்றியும், இவற்ருற் பொருளைச் சேர்த்துச் செய்வது மகா பாவங்களென் றுன்னினவராய் மலைகளிலும் வளங்கொண்ட கழனிகளிலு முதிர்ந்து கிடக்கும் நெற்களைப் பொறுக்கிச் சேர்த்து, அமாவாசையினன்று அதை யரிசியாக்கி அன்னஞ்செய்து, காட்டிலிருக்கும் இலைக்கறிகளையுங் கூட்டி நாலு பாகமாகப்பிரித்து, ஒரு பாகம் ஔபாச அக்கினிக்கும், ஒருபங்கு பிதிர்த் தேவர்களுக்கும், ஒரு கூறு அதிதிகளுக்கும், ஒரு பிரிவு தனக்குமாகக் கொண்டு மறுநாள் தொடங்கி உதிர்ந்த நெற்களைப் பொறுக்கிச் சேர்த்து, பௌர்ணமியினின்று அதைத் தண்டுலகமாகச் செய்து நாலு பங்கிட்டு, மேற்கூறிய வண்ணங்கொடுத்துத் தானும் புசித்து, ஒருமாதத்திற் கிரண்டுதர மிப்படி யுண்டுவாநிற்பர். இதைக்கண்ட துருவாச மஹாரிஷியானவர் அம்மௌற்சல்ய மஹாரிஷி யிடத்திற் சென்று, பசித்து வந்தேனென்று கூறினர். அதைக் கேட்டலுந் தான் பௌர்ணமியினன்று பங்கிட்டுவைத்த பாகத்தில் அதிதியின் கூறை யெடுத்துக் கொடுக்க, அதையவர் வாங்கிப் புசித்து, வயிறு நிரம்பவில்லையே யென்று சொல்லினர். அப்படி சொல்லவுந் தன்னுடைய பாகத்தையும் விசுவாசத்துடன் கொடுக்க, அதையும் வாங்கிப் புசித்துப் போயினுர். மறுதரம் அமாவாசையினன்று வந்து அன்னம் வேண்டு மென்று கேட்க, உடனே பாதபூசை செய்து, அதிதிகளுக்கு வைத்திருந்ததை இவரையு மதிதியாகக் கருதி யளிக்க, அதை வாங்கிப் புசித்து அவர் முன்போலவயிற்றுக்குப் பற்றுதென்றுசொல்லவும், அவரும் முன்போல் அத்துருவாச மகாரிஷிக்குச் சரணஞ் செய்து தன்னுடைய பங்கைக் கொடுத்து தான் தண்ணீர் புசித்திருந்தார். இப்படி யிருக்க, மறுதடவையுந் துருவாசர் வந்து கேட்க, அவரப்படியே கொடுக்க, ஐயா! மூன்று பட்சமாக எனக்கு உம்முடைய பங்கையுங் கொடுத்துவிட்டீரே உமக்குப் புசிப்பு எவ்விதமென்று வினவினர். அதற்கவர், சுவாமி! தேவரீர் பரிபூரணமாகக் கொண்டதே எனக்குத் திருப்தி யென்று சொல்லினர். அதுகேட்டலுந் துர்வாச முனிவர் சிந்தை மகிழ்ந்து, நீர் தேவவிமானம் பெறக்கடவ தென்று செப்பிப் போயினுர்.

இங்கே மறுபடியும் மௌற்சல்ய மஹாரிஷி தனது நியமப்படி நடத்திவருங் காலை

யில், தெய்வலோகத்திலிருந்து தேவவிமானம் வந்து, அதினின்றுஞ் சில தூதரிறங்கி, ஐயா! இந்த விமானத்தில் ஆரோகணித்துக் கொள்ளும். உம்மை யழைத்து வரும்படி தேவேந்திர னனுப்பிவைத்தார் என்று சொல்லக்கேட்ட மௌற்சல்ய முனிவர் அவர்களை நோக்கி, ஓ தேவதூதர்களே! இவ்விடத்திற்கவ்விட மிருக்கு மியல்பைச் சொல்லுங்களென்றார். அதற்கவர்கள் சொல்லுகின்றார்கள். ஓ முனிநாதா! இவ்விடத்திற்றான தருமம் பரவுபகாரம் ஜீவ காருண்யம் அன்ன தானம் இவைகள் முதலிய சற்கருமங்களைச் செய்த பேர்கள், எந்த வுத்தமர்கள் மனமெப்படி மகிழ்ந்து களித்தார்களோ? அப்படியே அநேக நாள் வரையிலும் அவ்விடத்திற் சவுக்கிய மடைந்திருக்கலாம். அந்தப் புண்ணியவசம் நீங்கிப் போய்விட்டால், மறுபடியும் பூமியில் வந்து பிறந்து, மேலாகிய சம்பத்தைப் பெற்றுத் தானங்களைச் செய்து தேவதேகத்தைப் பெறலா மென்றார்கள். அதைக்கேட்ட இந்த மஹா ரிஷியானவர் சொல்லுகிறார். அப்பா? உங்களுக்கும் உங்களை யனுப்பினவர்களுக்கும் ஒரு கும்பிடு போடுகின்றேன். நீங்கள் வந்த வழியே போங்கள். இப்படிப் போகவும் மறுபடி வரவும் என் தரமல்ல. நான் இங்ஙனே இருக்கின்றேன், என்று அவர்களை அனுப்பி விட்டு, சில நாள் வரையிலும் மேற்சொல்லிய வண்ணமே நடத்தி வருங் காலையில், பக்த பராதீனன் பரவாசுதேவன் பரமபுருஷோத்தமன் பஞ்சசன்யன் பஞ்சாயுதன் பரமதயாளு பக்தவற்சலன் பங்கஜலோசனன் பரந்தாமன் பரசிராமன் பாரவிமோச காரணன் பாண்டவர்களே உங்கள் சகாயன் பரமபத நாதன் அந்த மௌற்சல்ய மஹாரிஷியின் இடத்திற்கு வந்து தோன்றினார். அந்த மஹா ரிஷியானவர் உடனே எழுந்து வணங்கி சுவாமீ மலரயன்பொறி தலையிலுறாமல் வரமளித்தல் வேண்டும். ஓ மாதவனே! ஓ ஸ்ரீதரனே! ஓ துளபமாலையணி தோளனே! ஓ பங்கஜத்தாளனே! என்று வணங்கலும், அம்மாதவத்தோனை மாலானவர் விமானத்தி லேற்றி வைக்குந் தத்தமைத்து என்று மழியாச் சுகத்தில் வாழ்வுறச் செய்தார். ஓ தருமநந்தனா! வையகமோம்பி வாழ்வில் சிறந்து, ஐயமே முதலிய அறங்களைச் செய்தல் அருமையல்ல. மழைக்காலத்தில் மேகம் பொழிவது சுபாவம். வறண்ட காலத்தின் றூறல் பொன்மாரி யென்பார்கள். ஆகையால் நீங்களிந்த வனத்திற்பன்னீராயிரம் பிராமணர்களுக்கும், இன்னும் வருபவர்களுக்கும், அன்னமளித்திருக்கு மிந்தக் காலத்தின் மகிமையைச் சொல்ல என்னாற் கூடாது கண்ணனுடைய அருளினால் உங்களுக்குச் சகலமுங் கைவல்லியமாகும் இன்னுஞ் சில நாள் கழித்துப் பொன்னுலகனைப் போல் மண்ணுளீக்கடவீர். பயப்படாதீர்கள் என்று பற்பல வார்த்தைபுகன்று, அவர்களடி வணங்கித் தொழ ஆசிபுகன்று அகன்றார் வேதவியாசர். ஐவரும் வனத்தில் அருமறையவருடன், செய்யுங் கருமந்திறம்பலின்றி, வையகம்புகழ வாழ்ந்திருந்தார்கள்.

சித்திரசேனன் சருக்கம்-முற்றிற்று.

---

## பதினொன்றாவது,
## சயிந்தவன் சருக்கம்

### கண்ணன் துதி

கருங்கடலி னிறத்தானைக் கமலமலர் முகத்தானைக் கருணையானைப், பொருங்கடமாக் கோடொசித்த புண்ணியனைப் பூமானைப் புரிமார்போனை, பிருங்கமலப் பிருந்தையுறுந் தோளானை யைவருக்குப் பின்சென்றானைக், கருங்கலினைப் பெண்ணாக்குங் கண்ணனிரு திருவடியைக் கருதுவோமே.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! பாண்டவர்கள் காமிக வனத்தில் தவம்புரியும் கருணை நிறைந்த மாதவர்களைக்கண்டு வணங்கி ஆசீர்வசனம் பெற்றுக்கொண்டிருக்குங் காலையில், ஒருநாள் தவசிகளெல்லாரும் வந்து, தருமராஜனைக் கண்டு, ஓ தவத்திற்குச் சகாயனே! நாங்கள் செய்யும் தவசாலைகளெல்லாம் காட்டுப் பன்றிகளும் யானைகளும் வந்து நெருங்கி விழுந்து அழித்துப் போடுகின்றன. அந்த மிருகங்களை வரவொட்டாமலும், அதனால் எங்களுக்குத் துன்பமில்லாமலும் செய்ய வேண்டுமென்று கேட்க, அப் பெரியோர்களுக்கு உற்ற இடையூற்றைத் தவிர்க்கும்படி கருதி, தௌமியாச்சாரியரையும் திரௌபதா தேவியையும் பன்னீராயிரம் பிராமணரையும் பன்னகசாலையில் வைத்துவிட்டு, தாங்களைவரும் வேட்டைக்குப் புறப்பட்டு, யோசனை தூர மிருகங்களின் உபத்திரவமில்லாமல் இருக்கும்படி மிரட்டி யோட்டிக்கொண்டு போனார்கள்.

இவ்விடத்திற் சில பிராமணர்கள் வனங்களிற் சென்று மாவிலை - தருப்பை-புரசையிலை-சமித்து இவைகள் கொண்டு வரவும், சிலர் ஸ்நானஞ்செய்து நித்திய ஜெபமுடித்துக் கொள்ளவும், தங்கள் தங்கள் பத்தினிகளோடு போய் விட்டார்கள். திரௌபதாதேவி மாத்திரம் ஒன்றியாய்ப் பயமற்றுப் பன்னசாலையில் இருந்தாள். தௌமியருஞ் சில பிராமணர்களும் சபாமண்டபம்போல் இயற்றிய ஓர் சாலையில் இருந்தார்கள்.

## பாண்டவர்கள் வேட்டைக்குப்போய்த் திரௌபதி தனித்திருக்கும்போது சிந்துராஜன் கண்டு வந்து வசனித்தல்

அந்தச் சமயத்திற் கௌடதேசத்துராஜனுடைய கன்னிகையின் சுயம்வரத்திற்குப் போயிருந்த காசி தேசாதிபதி முதலிய சகல தேசதேசாதிபர்களும் சிந்துதேசாதிபதியுந் தங்கள் தங்கள் இரதகஜ துரகபதாதிகளோடு பாண்டவர்களிருந்த வனத்தோரமாக, பேரி-பாங்கா-கொம்பு-தவுண்டை-முரசு-திடி-தாளம்-முழவு-டங்கா இவை முதலிய வாத்தியங்கள் கணகணவென்று முழங்கத் திரும்பி வருகின்றார்கள். அவ்வோசையை யுள்ளறையிலிருந்த திரௌபதா தேவியானவள் கேட்டு, இதேது முழக்கம் முன்னே அந்த வனத்தில் வந்த துரியோதனன் இந்த வனத்திலும் வந்தானோ என்று சந்தேகங்கொண்டு வெளியே வந்து, தழைத்து மலர்ந்து புட்பங்களைச் சொரிந்து நிறைந்து நிழலைத் தந்துக்கொண் டிருக்கும் ஒரு கந்த விருக்ஷத்தின் கிளையை இருகரத்தினாற் பிடித்துக்கொண்டு கண்ணோட்டிப் பார்த்திருக்கும் காலையில் வெகு கும்புகளுடனே வந்த சயிந்தவராஜன் திரௌபதியைக்கண்டு, மன்மத விரகத்தினால் மோகங்கொண்டு, இந்த வனத்தி லிவ்வளவு காட்சியாகநின்று எதிரே தரிசனமாகின்றது இதுவென்ன ஆச்சரியமாகவிருக்கின்றது. பூமிவரையிலுந் தோய்ந்து விரிந்த குழலும், காதுவரையிலும் பாய்ந்து அகன்றவிழியும், வள்ளையும்-முல்லையும்-அல்லியும்-எல்லின் மலரையுமுடைய கமல முகமும், அழகிய தேகமும், சிறுத்தயிடையும், நகைத்த இதழுமாகத் தோன்றிய இப்பெண் யாரோ என்று ஏக்கங்கொண்டவனாய், தன் பக்கத்திலிருந்த யானைப்பாகனை நோக்கி, சீக்கிரஞ் சென்று அவ்விடத்தில் நின்ற தெரிவை இன்னாளென் றறிந்தோடி வாவென் றனுப்பினான்.

அவன் உடனே வந்து, அம்மா! நீ யார்? உம்முடைய பேர் யாது? ஊர் யாது? உமது நாயகரெங்கே? தாய் தந்தை யார்? இத் தனி வனத்தில் ஒண்டியா யிருப்பதேது? யாது காரணம்? இவற்றைத் தயைபுரிந்து சொல்ல வேண்டும் என்று கேட்ட தூதனைத் திரௌபதி நோக்கி, அப்பா! என்னை விசாரித்து வரும்படி யுன்னை யனுப்பிய வேந்தர் யார்? அவர் ஊரும் பேரும் பதியும் அவரெங்ஙனமிருந்து எவ்விடஞ் செல்கின்றாரோ அதனையுமெனக்குச் சொல்லக் கடவை யென்று கேட்க, அதற்கவன், தாயே! சில ராஜர்கள் கௌடதேசராஜன் கன்னிகையின் கலியாணத்திற்குப் போய் வருகின்றார்கள். அதோ தேரிலிருக்கின்றவர் காசிதேச ராஜன். அதோ விமானத்திலிருக்கின்றவர் திரிகர்த்த தேசவரசன். அதோ குதிரைமீ தாரோகணித்திருக்கின்றவர் கலிங்க தேசபோஜன். அதோ சிவிகையூர்ந் திருப்பவர் அயோத்தியாபுரி நேசன். அதோ யானையின்பேரி லிருந்து உன்னை இன்னாரென்று அறிந்துவரச் சொல்லிய விசுவாசன் சிந்துதேச மகாராஜன் என்று சொல்லவுந் திரௌபதி கேட்டு, அப்பா! நான் பாஞ்சாலராஜன் கன்னிகை, பாண்டவரைவருக்கும் பத்தினி. என் பேர் திரௌபதி. துரியோதனாதிகள் மாயச் சூதாடி வஞ்சித்தனுப்ப வனத்தில் வந்திருக்கின்றோம். என் மகிழ்நர் ஐவரும் வனத்தில் வேட்டையாடப் போயிருக்கின்றார்கள் என்று சொல்லவும், அதுகேட்டு அவன் ஓடிச் சென்று, சிந்துராஜனோடு அந்த வார்த்தைகளைச் சொன்னான். உடனே அவன் யானையை விட்டிறங்கி, உயர்ந்த இரதத்தி லேறிக் கொண்டு திரௌபதிதேவி நிற்கும் இடத்திற்கு வந்தான். அவனைத் திரௌபதி கண்டவுடனே இன்முகங் காட்டி, அண்ணா! வாருங்கள் வாருங்கள் என்று உபசரித்து ஆசனங் கொடுத்தாள். நான் அவசரமாகப் போக வேண்டுமென்றான். இதோ உமது மைத்துனன்மார் வரப்போகின்றார்கள். இருந்து இளைப்பாறி கண்டு வார்த்தையாடிப் போகலாமே யென்றாள். அஃதிருக்கட்டும்; உன்னுடைய கதியென்ன இப்படி காடெல்லாந் திரிந்து, முகங்கரிந்து, உடல்சரிந்து, ஊண்டிழுந்து, வாடிவருந்தி யிருப்பானே னென்றான். ஏதோ கடவுளின் சித்தம் இப்படி யிருந்தால் நாமென்னசெய்யலாம்? எப்போது எங்களுக்கு நல்லகாலம் வருமோவென்று எதிர்நோக்கிக் கொண் டிருக்கின்றோ மென்றாள்.

### சிந்துராஜன் திரௌபதியோடு அடாத வார்த்தையாடித் துராற்காரமாய்த் தன் தேர்மேல் கொண்டு போதல்

அதற்குச் சயிந்தவன் சொல்லுகிறான்:
ஐயோ! இனி நல்லகாலங் கூடவருமென்று
எண்ணங்கொண் டிருக்கின்றீர்களோ? நித்திய
தரித்திரனுக்கு ஆசை யதிகம். (இராக்கண்ட
சொப்பன மிடாப்போல் வீங்கியது) என்கிற
பழமொழிபோலும் இருக்கின்றது. யானை
வாய்க் கரும்பும்; பாம்பின் வாய்த் தேரையும்;
பெரு மணலில் விட்ட நெய்யும்; கமர் வெடிப்
பில் கவிழ்ந்த பாலும்; எமன் கைக்கொண்ட
உயிரும்; அணைகடந்த வெள்ளமும், ஈரேழு
பிறப்பினுள்ளும் ஒருபிறப்பில் ஒருவேளை
திரும்பினாலும், என் மைத்துனனாகிய அரவக்
கொடியோன் கைக்கொண்ட பொருள் இந்தப்
பிறப்பிலும் மற்றெந்தப் பிறப்பிலும் தலை
கீழாக நின்று தவஞ்செய்தாலும் வரப்போகிற
தில்லை. ஏன் வீணாசைகொண்டு வெதும்பி,
இந்தப் பஞ்சைகளை நம்பிப் பருவத்தைப்
போக்கடித்துக் கொள்ளுகிறாய்? இவர்கள்
பராக்கிரமசாலிகளானால், உன்னை வஸ்திர
பங்கம் பண்ணிய காலத்திலும், இவர்கட்கு
விலங்குபோட்டு வேலை செய்யச் சொல்லு
மென்று விதுரனிடத்தில் சொன்ன காலை
யிலும் சும்மா யிருப்பார்களா? அப்படி யிருந்த
இந்த விறுதாவிழலரை உறுதியாக நம்பி
ஒடுங்கிவிட்டாயே. உனக்கென்ன தாட்சி? பற்
பல ஸ்திரீகளும், பலபல சேனையும் உன்னை
அடிபணிந்து கேட்க, நீ சீருஞ் செல்வமும்
சிறப்பும் பெற்று, வையகங்களிக்க வாழ்ந்து
மகிழலாம். என்றைக் கிருந்தாலும் இறப்பது
நிச்சயம். இளமைப் பருவமும், இன்பமும்,
குணமும் நாளைக்கு வாவென்றால் வரமாட்டா.
கண்டதே காட்சி கொண்டதே கோலமென்
றிருந்து அநுபவிக்க நினைக்காமல், இப்படி
அவஸ்தைப் படுவானேன். எனக்கு மிஞ்சிய
இராஜருமில்லை. உனக்கு அதிகமாகும் அழ
கினையுடைய ஸ்திரீகள் ஒருவருமில்லை. எழுந்
துவா போவோம். என்னுயி ருன்னதே என்று
பல மொழிகள் இயம்பினான்.

இவை யனைத்துங் கேட்ட பாஞ்சாலி நடு
நடுங்கி, ஓ சுவாமி! ஓ கிருஷ்ணா! ஓ அரிவாசு
தேவா! ஓ ஆபத்பாந்தவா! ஓ அனாதரட்சகா!
என்று கூவி, இருகரங்களினாலுங் காதுகளை
மூடிக்கொண்டு, ஹரி! ஹரி! என்ன வார்த்தை
சொன்னாய். அண்ணா! சந்திரவமிச மென்
னுஞ் சாகரத்திற் பூத்த நூற்றைந்து தாம
ரைக்குள் ஓர் பொற்றாமரை போற் பிறந்த
துச்சலையின் நாயகனென்றும், எனக்குத் தமைய
னென்று மெண்ணி முறை தப்பாமல் உப
சரித்தபாவமா? நீர் இப்படிக்கெல்லாஞ் சொல்
லியது நீர் நினைத்தது தருமந்தானா? இனி
யுமது முகநோக்கிப் பேசினாற் றருமதேவ
தைக்கு அடாது, அமாவாசியை விரதத்திற்
குப் புசித்துப்போ வென்றால், உங்களுக்கிருக்
கும் ஆஸ்திபாஸ்தியைச் சொல்லுமென்று
கேட்ட அழிம்புபோலு மிருக்கின்றதே நீர்
சொல்லிய சொல் என்று சொல்லி, இந்தச்
சண்டாளனெதிரில் தனியே யிருப்பது அழ
கல்லவென்று கருதி, தௌமியாச்சாரிய ரிருக்
குஞ் சாலையை நோக்கித் தனது தாமரை மலர்
போன்ற பாதத்தை யெடுத்து ஓரடி வைத்
தாள். அப்படி வைக்கவும் அவனுடனே தாவி
யெழுந்து, இருகரங்களினாலுந் தகைந்து,
இராவணன் சீதா பிராட்டியாரை எடுத்த
கன்ற தன்மைபோ லிரதத்திலேற்றி, துரித
மாய்க் குதிரையைத் தூண்டிவிடுத்தான். அந்
தத் துரோகியாகிய சிந்து ராஜன் இப்படி
வாரி யெடுக்கும்போது திரௌபதியானவள்
கோ கோவென்று கூவி, அலறிப் பதைபதை
த்து, துடி துடித்து, நடு நடுங்கி, உடல்
வியர்த்து, கண்ணீர் சொரிந்து, ஐயா தௌமி
யாச்சாரியரே! ஓ தருமபூபதியே! ஓ வீமசேன
மகாராஜனே! ஓ விஜய பராக்கிரமனே! ஓ
நகுல மகாராஜனே! ஓ சகாதேவ தன்யனே!
ஓ வனத்திலிருக்கு மஹா ரிஷிகளே! ஓ அடர்
ந்து நெருங்கிய வனதேவதைகளே! ஓ மிருக
ராஜர்களே! ஓ பட்சி ராஜர்களே! ஓ அம்மா
பூமிதேவி! ஓ ஆபத்பாந்தவா! ஓ அனாதரட்
சகா! என்று அலறிக் கதறிப் பதறி ஸ்வாச
மடங்கிச் சோர்ந்தாள்.

இந்த ஓசையைக்கேட்ட தௌமியாச்
சாரியரும் பிராமணரிற் சிலரும் அத்தேர்க்குப்
பின்றொடர்ந் தோடி, அச் சிந்து ராஜனுக்கு
வெகுவாகிய தரும நீதிகளைச்சொல்லி அப்பா
வேண்டாம். இப்படி அநியாயஞ்செய்த இரா
வணனுடைய பலமும், குலமும், நலமும் கெட்
டுப் போனதைக் கேட்டறியாயோ? ஒருவர் பத்
தினி யொருவருக்குத் தாயல்லவோ? அப்படி
கொண்டுபோகத் தக்கவன் பின்னாலே வேதை
யில்லாமற் பார்த்துக்கொண்டு போகவேண்டி
யது. இதோ வரப்போகின்றார்கள் பாண்டவர்

கள். ஐயோ! அவர்களுன்னை யமனண்டையிற் கொண்டுபோய் விட்டுவிடுவார்களே இதற்குள்ளாகத் துள்ளிக் குதித்துத் தொப்பென்று விழுவானேன்? உன் தலைப்புழு மாண்டுபோவதறியாமற் றன்னையறியாச் சன்னதங் கொண்டாடுவானேன்? இனியேனும் மரியாதையுடன் விட்டுப் போட்டு, உன்னுயிரைக் காப்பாற்றிக் கொண்டு ஓடிப்பிழை என்று அநேகமாகிய வார்த்தைகளைச் சொல்லியுஞ் சிந்து இராஜன் அவைகளை யுணராமல், திரௌபதை மூர்ச்சை தெளிந்து கூவுஞ் சப்தங் கேட்கவொட்டாமற் பேரி முதலிய வாத்தியங்களை முழக்கிக்கொண்டு, தனது சேனை வெள்ளத்திற் கலந்து கீழ்த்திசையை நோக்கிச் சென்றான். இவனைத் தொடர்ந்தோடிய தௌமியரிளைத்துக் களைத்து ஒரு விருட்சத்தடியில் வந்து சோர்ந்திருந்துவிட்டார். சில பிராமணர்களும் ஓடியோடிப் பார்த்து வாடி நின்றார்கள்.

### திரௌபதி தன்னைப் பாண்டவர் தேடிவருவதைக் கண்டு சிந்தை களித்தல்.

இப்படியிருக்குஞ் சமயத்திற் பாண்டவர்கள் வேட்டையாடி, மிருகங்களை யெல்லாந் தூரத் தொலையி லோட்டிவிட்டு, வெய்யலில் வருந்தித் தமது பர்னகசாலையைநோக்கி வந்தார்கள். அப்படி வந்தவர்கள் தமது பர்னசாலைக்கருகில் தௌமியர் முதலிய பிராமணர்களைக்காணாமல் திரௌபதி இருக்கும் இடத்தை நோக்கினார்கள். அவ்விடத்திலும் ஒருவரையுங் காணாமையால் வருந்தி, இதென்ன மாயம்? இதென்ன வஞ்சகம்? இதென்ன மோசம்? என்று வாடி நாலுபுறமுந் தேடி நாடும்போது, வீமசேனனும் அருச்சுனனுஞ் சில குறி நிதானங் கண்டவர்களாய், இதோ இரதம் வந்து போயிருக்கின்றது. இதோ திரௌபதியினுடைய அடி பெயர்த்திருக்கின்றது. இதோ ஆரோ ஒரு புருஷனுடைய அடிச்சுவடிருக்கின்றது. இந்த ரதச்சக்கரம் இப்போதுதான் ஓடி இருக்கின்றது. சீக்கிரஞ் சென்றாற் காணலாம் என்று இருவரும் வியர்க்க வருத்தமுற்று, வியாக்கிர வேகம் போல் பராக்கிரமத்துடன் வெகு தூரம் ஓடிச் சென்று, தௌமியரைக் கண்டு சங்கதி கேட்டுக்கொண்டு தங்கள் காலிலுள்ள வேக முழுமையுங் காட்டி ஓடுவதானார்கள். அப்போது தருமராஜனும் தௌமியரும், பிராமணர்களும் பின்னிட்டு மெதுவாகச் சென்றார்கள். நகுல சகாதேவ ரிருவரும் விசனமுடன் இவர்களுக்குப் பிந்திச் சென்றார்கள். இப்படி வரிசை வரிசையாக இவர்கள் எல்லோருஞ் செல்லும்போது அதிவேகத்துடன் இரதத்தைத் துரத்திக் கொண்டோடுஞ் சேனைப் பெருக்கத்தை எதிற் கண்டார்கள். விசனம் விண்டார்கள்.

இப்படி இதோ அண்டையிற் போகின்றார்கள் என்று ஆனந்தங்கொண்டு சென்றோர்களிற் றண்டதரனனவன் கைக்கொண்டிருந்த வில்லை வளைத்து நாணேறிட்டுக் குணத்தொனிசெய்து கணக்கிறந்த கணைகளை வாரிச் சாடிக்கொண்டு நாடவும், இரதமுதலிய சேனைகள் ஓடவும், கிரீடி காண்டீபத்தை வளைத்துத் தொனி செய்து, இரதத்திற் பூண்டிருக்குங் குதிரைகளின் கால்களிலேயும், பதாதிகள் பாதங்களிலேயும், கஜங்களி னுரங்களிலேயும் கடுஞ் சரங்களைச் சொரிந்தனன். அப்போது அவ்வவைகள் நடு நடுங்கிப் பதை பதைத்து, வெப்ப காலத்து வெய்யலிற் சவட்டு மணலில் அகப்பட்டுக்கொண்ட பச்சைப் புழுவைப் போற் றுடிதுடித்து, காலோய்ந்து கதி தடுமாறி, கண்ணீர் சோரச் செந்நீரோடக் கலக்கமுற்று மயக்கங் கொண்டு தியங்கின. அப்படி அவைகள் தியங்கியதையுங் காரிடி போன்று முழங்குங் கணைகளின் ஒலியையுங் கேட்டுக் கண்ணுற்றுப் பார்த்த பாஞ்சாலியானவள் சயிந்தவனைப் பார்த்துக் கனைத்து, அடா துரோகி! அடா அழியும் பாவி! இதோ வந்துவிட்டார்கள் உன்னுண்டவன்மார். என்னைப் பார்த்த கண்ணும், என்னை எண்ணிய நினைப்பும், என்னைப் பதறியெடுத்த கரமும், பருந்துக்கு விருந்தாகுமடா! நாய்க்கு முழுத் தேங்காய் கிடைப்பதில் என்ன லாபமடா! நரியும் பரியா மென்பது யறியாய்டா! உனக்கு வந்தது கேட்டா! அடா நாசகாலா! இவர்களுக்கு எதிரில் யமனு நாடானடா! அவர்களைச் சற்று நாடி உற்றுப்பாரடா! நீயாரடா! அடாபதராகிய திருடா! பழிதேடிய சுமடா! என்று பல்வாறுகப் பேசி, அந்தப்படி தன் முகத்தைப் பார்க்கக் கூசி, பரிதிகண்ட பங்கஜ மலர்போல் அரிவைமுக மலர்ந்து, அகமகிழ்ந்து, மிகக் களித்திருந்தாள்.

### பாண்டவர்கள் சிந்துதேசராஜனுடை அரசர்களை யெல்லா முறியவடித் தோட்டுதல்.

இப்படி களித்திருக்குந் திரௌபதியை அப்பாதகன் பார்த்து, ஓ மஹா லட்சுமி

போன்ற வடிவிற் சிறந்த மங்கையே! பருவ
நங்கையே! என் வார்த்தையைச் சிறிது கேள்.
(காக்கையின் கண்ணுக்குப் பீர்க்கம்பூ பொன்
னிறம்) என்பதுபோலும், பொரிமாவை மெச்
சினான் பொக்கைவாயன்) என்பது போலும்,
பூரியர்தஞ் செல்வம் சீரிய தென்றான்னுந்
திறம்போலும் பாரிய யோசனையின்றி வீரிய
மற்ற காரியமில்லாத ஓரிபோன்றவரைச் சீரிய
ரென்று நம்பிப் பாரியாகயிருக்கும் நீ ஆரிய
மாகச் சொல்லுகின்றாய். இதோபார் ஒரேகணை
ஒரேவில். இதனால் அவர்களுடைய உடலையுங்
கிழித்து, உயிரையுமிழந்து, உன்னையுஞ் செழி
த்த பதவியில் இருத்தி உலகமெல்லாங்
கொண்டாடச் செய்கின்றேன் என்று, ஒரு
காலை மண்டியிட்டுக்கொண்டு, வாய் மடித்து,
மலரயன்கணை-மாயவன்கணை-வாசவன்சரம்-
வானவர்சரம் - மழையின் பாணம் - மதியின்
பாணம்-வருணாஸ்திரம்-மாயாஸ்திரம் என்று
சொல்லும்படியான பகழிகளை மாரிபோல
வாரிப் பிரசண்ட மாருதம்போற் றூற்றினான்.
அவனோடு சேர்ந்து செல்கின்ற மற்ற மன்ன
வர்களும் பின்னிடாமற் பாணப்பிரயோகஞ்
செய்தார்கள். அந்த வேளையில் அருச்சுனன்
ஆலகால சுவாலமாலினி யென்னும் அஸ்
திரங்களை விடுத்து, அதற்கு உபகருவியாக
அநேகம் பாணங்களையுந் தொடுத்தபோது,
காசி தேசாதிபதியானவன் தன் கரத்திற்
பிடித்த வில்லுங் குதிரையும் வீரபட்டமும்
போய் மேனி முழுமையுஞ் செந்நீரோடப்
புண்பட்டுத்தியக்கமுற்று, ஐயோ! இதென்ன
அனியாயம்? கூத்துப் பார்க்கப்போன யிடத்
திற் பேய்ப் பிடித்துக்கொண்ட கொள்கை
போலாச்சுதே; நமது பெருமையுங் கீர்த்தியும்
வீணாகப் போச்சுதே; (ஏட்டியுடன் கூடி இல
வுந் தீப்பட்டது) என்னுமியற்கை நேரிட்
டதே என்று வாடி யோடினான்.

அப்போது வீமசேனன் திரிகர்த்தனை
வளைத்துக்கொண்டு தாக்க அவனுஞ் சில அஸ்
திரங்களை வரிசை வரிசையாய் பந்திபந்தி
யாய் அணியணியாய் கூட்டங் கூட்டமாய்க்
குறித்து விட, அவைகளையெல்லாம் வாயுகுமா
ரன் முறிக்க, கமல காண்டிகை யென்னுங்
கணைமழைகளைத் திரிகர்த்தன் சொரிந்து மன
மெரிந்து புதைந்து நிற்குங் காலையில் திரி
மூர்த்தியும் ஒரு மூர்த்தமாக வந்து எதிருற்ற
போதிலும் அதிலொரு கர்த்தனையும் விடத்
தக்கவனல்ல இத்திரி கர்த்தனென்று சொல
லத்தக்க அப்பராக்கம வீரனை இந்திர குமாரனா
கிய சுவேதவாகனனும், வாயுமகனாகிய இடிம்பி
கொழுநனும் ஒன்றாய்ச் சேர்ந்து நகைத்து,
இடியாஸ்திரம் நூறும், எரிக்கணை ஐந்நூ
றும் அவன் இருபக்கத்திலும் நெருங்க
இறைத்தார்கள். இவைகளை யெல்லாம் திரி
கர்த்தன் ஈட்டுக்கு யீடாகிய அஸ்திரங்களை
விடுத்துத்தடுத்து எதிர்த்தான். இப்படி இரு
திறவரும் நெடுநேரம் போர் புரிந்து கணை
மாரி சொரிந்து வரவும், பாண்டவர் வீரமிஞ்சி,
தசமுகக்கணை-சதமுகக்கணை-உருகம்பு-சொரு
கம்பு இப்படி பலவிதக் கோல்களைத் தொடுத்து,
திரிகர்த்தன் தேரையும், குதிரைகளையும், சார
தி தலையையும், கொடியையும், சிகரமுடியை
யும் போக்கினார்கள். அந்த வேளையில் திரிகர்த்
தன் மிக நேர்ந்தவனாகிப் பூமியில் நின்று,
தெய்வமே! வல்லவனாட்டிய பம்பரம் மணலி
னும் ஆடுமென்பது மெய்யாச்சே! வல்லவனுக்
குப் புல்லும் ஆயுதமாகு மென்னும் வசனம்
சரிபோச்சே! நமது வாய் மதத்தால் வகை
மோசம் வரலாச்சுதே! நமது வீணாசையால்
வாணாளழிய லாச்சுதே? என்ன வெதும்பிப்
பதுங்கி மறைந்தான். அப்பால் கடோற்கஜன்
தந்தையும் பற்குணனும், கரவேக சரவேகங்
களில் மாறாமல் காலனைப்போல் வருவனைதக்
கண்ட மற்ற அரசர் இருவரும் சிறிது நிதா
னித்து, நீஞ்சத் தெரியாதவனை ஆறுகொண்டு
போமென்னும் நீதி நினைவில் வந்து, நாம்
எதிர்த்து யுத்தஞ் செய்தாலும் இவர்களை
வெல்லப்போகிறதில்லை. ஆதலால், நாம் இவர்
களால் அவமானப் படுவதைவிட அகன்று
போதல் உத்தமமென்று கருதி, இரதத்தைச்
செலுத்திக்கொண்டு எதிரிகள் கண்களுக்கு
அகப்படாமல் போய்விட்டார்கள்.

### சிந்துராஜன் பாண்டவர்களோடு போராட முடியாமல் திரௌபதையை நிலத்தி லிறக்கிவிட்டுத் தேரைவிரை விற் செலுத்திக்கொண் டோடுதல்

இப்பால், நகுலசகாதேவர்கள் சேனைகளை
யெல்லாம் வளைத்துக்கொண்டு கால்மாடு தலை
மாடாகக் கருணையாடி வரும்போது, சில சேவ
கத்திறமுடைய சேனாதிபதிகள் - யானைத்தலை
வர்-குதிரைத்தலைவர்-ரதத்தலைவர்-பதாதிதலை
வர் என்னும் இவர்கள் அந்நகுலசகாதேவரை
எதிர்த்துக்கொண்டதை அருச்சுனன் கண்டு,
மழைகளைப்போல அழற்கணைகளை விடுத்து

மாட்டினான். அந்த வேளையில் சயிந்தவன்
தேரின்மீது வீமசேனன் தாவிச் சென்று,
கோடி பாணங்களைப் குபுகுபு வென்று குறித்
தெய்து கூவி நெருங்க, அதைத் திரௌபதி
கண்டு, அடா முறைமை தப்பியது கருமமே!
புலி தின்னும் மாமிசத்திற்குப் பேராசைக்
கொண்ட பூனைபோன்ற பொய்யனே! அடா
புரட்டனே! இதோ உங்கள் ஐயன் வந்துவிட்
டார் பாரடா! இடும்பாசுரன் - பகாசுரன் - புண்
டரீகன் - ஜராசந்தன் ஆகிய இவர்களை யெல்
லாம் எமலோகத்திற் கனுப்பிய இறைவன்.
இனி உன் பிராணனையும் என் துன்பத்தையும்
யிமைப்போதில் நீக்கிவிடுவார் என்று சொல்
லக் கேட்ட சயிந்தவன் பல்லைக் கடித்து, இந்
திரக்கணை - அங்காரகன்கணை - சந்திரக்கணை -
அர்த்தசந்திரக்கணை இவைகளைத் தூவினான்.
இதற்குள்ளாகத் தனஞ்செயன் அச்சேனை
வீரர்களைச்சாடி, அவர்களெல்லாம் இளைத்துத்
திக்கானொருவரா யோடிச் சிதறியபின்பு
தானும் நகுல சகாதேவரும் வந்து சயிந்தவ
னைக் கண்டு, விடாதே! விடாதே!! யென்று
அடா மழைபோலும், வடவாமுகாக்கினிபோ
லும், பலதொடைகளைப் படபடப்புடன் விட
வும், அதுக்கண்ட சயித்திரதன் ஆயிரங்கோடி
யம்புகளைக் காயுங் கதிரோனை மூடும்பனிபோல
விடுத்து, படாபஞ்சனமாக அடித்தான்.
உடனே நால்வருந் தேவர் நாயகன் கணையை
யெடுத்து விடுத்து, மண்ணும் விண்ணும் ஒன்
ருகும்படி வளைந்து அடுத்தார்கள். அதைக்
கண்ட சிந்துதேசன் சந்தேகங்கொண்டு, அண்
டையில் வந்த அரசரும் நீங்கிச் சேனைகளுந்
குழுங்கிப் போயின. பக்கச்சொல் பதினாயிர
மென்னும் நீதிபோல நமக்கு உறுதி சொல்
லுவா ரொருவருமில்லை என்று யோசித்து
திரௌபதியைத் தேரிலிருந்து நிலத்தில்
விடுத்து சாரதியைக் கண்காட்டினான். அவ
னுங் குதிரைகளை யோட்டினான். அப்போது
வாயுவேக மனோவேகமாய் நெடுந்தூரங்
காடே கெதியாய் வழிதுறை யில்லாமல் ஓடி
மறைந்தான் சயித்திரதன்.

### தருமராஜன் பாஞ்சாலியைத் தேற்றி வீமார்ச்சுனராற் சயிந்தவனை உயிரோடு பிடித்து வரச்செய்தல்

இவ்விடத்தில் பூமியில் நின்ற பாஞ்சாலியை
நால்வரும் வந்து சூழ்ந்து உபசரித்துப் பய
மகற்றிக்கொண் டிருக்கும்போது பன்னீராயி
ரம் பிராமணருந் தௌமியாசாரியருந் தரும
ராஜனும் வந்து சேர்ந்து, திரௌபதாதேவி
யினுடைய மனவருத்தங்களை நீக்கி, அவன்
வந்து எடுத்துப்போன விதத்தை கேட்கவும்,
பாண்டவர்பிராட்டி பலபலவென்று கண்ணீர்
சொரிந்து, இந்தப் பாவியை நான் தமைய
னென்னு முறைமையில் உபசரிக்கத் தகாத
வார்த்தை மொழிந்தும், என்னை துராக்கதமா
எடுத்து வந்து உலகம் நகைக்கவும் நமது சத்
துருக்கள் ஒருங்கே பழிக்கவுஞ் செய்து வைத்
தவனை, உயிருடன் விடுத்து இவணுற்றிருக்
கின்றீர்களே; ஐயோ! இஃதென்ன வீரமென்
ருள். இந்த வசனங்களைக் கேட்ட வீமசேனன்
கதையைக் கரத்திற் பிடித்து விறுவிறெனச்
சுழற்றி வாயுவேகத்திலும் பதின்மடங்கதிக
மாகப் பாய்ந்தான். அதைக் கண்ட தரும
ராஜன் வீமனை யழைத்து திரௌபதையை
நோக்கி, ஓ மின்னலையொத்த அன்னமே! முன்
னமே பிரமன் விதித்தவிதி இதுவென்று எண்
ணுமல், இப்போதவனைக் கொல்லும்படி கூறு
கின்றனையே, அப்படி கொன்றுவிட்டால் உன்
னைத் தொட்டு எடுத்த குற்றமுங் குறையும் நீங்
கிப் பழிச்சொல்லுகளும் அற்றுப்போகுமா?
சிறியோர் செய்த தீங்கைச் சகிப்பவர்கள் எவர்
களோ அவர்களே தலைமை யுடையோரென்று
தருமஞ் சொல்லி யிருக்க, நாமும் அவனைப்
போல் முன்பின் யோசிக்காமற் செய்வது
முறைமையோ? நல்லது நாய்குரைத்து நத்
தம் பாழாகுமோ? அந்தத் துஷ்டன் அக்கிர
மத்தினு லுன்னை எடுத்துவந்தபடியால் (அரச
மரத்தைப் பிடித்தபேய் பிள்ளையாரையும் பிடித்தது) என்னும் வாக்கியம்போல அவனுடைய
தல்லாமலும் அவனைச் சேர்ந்த அரசருஞ்
சேனையும், அழிந்தும் பயந்தும் பதுங்கியும்
ஒதுங்கியும் ஓடிப்போனுர்கள். இளைத்தோடின
வரை எதிர்க்க லாகாதென்னுந் தருமமிருக்க,
இப்படி அவசரப்படலாமா வென்று சொல்லி
வீமசேனன் முகத்தை நோக்கினர்.

அப்படி நோக்கும்போது தான் சொல்
லிய தருமங்களியாவும் அவனுக்குச் சம்மத
மில்லா திருப்பதைத் தானறிந்து கொண்டு
தம்பி! அச்சயிந்தவனே நமது நூற்றைந்து
பேருக்கும் பின் பிறந்த அருமைத் தங்கைப்
புருஷன். நமக்கு மைத்துனன். வாழையடி
யும் வாழைக்கே நஷ்டம். முள்ளடியும் வாழை
க்கே சேதம். ஆகையால், அவனைக் கொல்லா
மற் பிடித்துவந்தால் இவ்விடத்தி லிருக்கும்
பெரியோர்களுக்கு முன்பாகவைத்துத் தருமம்

கூறி, மரியாதைத் தாழ்வும் பரியாச வார்த்தையுமாகச் சில வார்த்தைகளைப்பேசி அனுப்பிவிடலாம். அது நமக்கு மேன்மை. அவனைக் கொன்றுவிட்டால் நமது தங்கை விதவையாவளே? அவள் விதவையா யிருக்கப் பார்க்கும்போதெல்லாம் நமக்கே துன்பமும் அடிமடி நெருப்புமாக முடியாதோ? அப்பா தம்பி! என் வார்த்தையைத் தள்ளாமல் பிடித்துக்கொண்டு வரக்கடவை என்று தருமநந்தனர் கூடி வருவதற்கு முன்னமே வீமசேனன் கண்ணுக் கெட்டாமல் போய்விட்டான். அப்பால் விஜயனை நோக்கி, தம்பி! நீ போய்ச் சமீபித்திருந்து, உன் அண்ணனுடைய கோபாவேசத்தை யடக்கி, ஆளை உயிருடன் கொண்டு வருதல் உன் கடமை. நான் இவர்களை அழைத்துக்கொண்டு வனம்போய்ச் சேர்ந்திருக்கின்றேன். சீக்கிரம் வாருங்கள் என்று சொல்லி அனுப்பிவிட்டு, தௌமியர் நகுல சகாதேவர் திரௌபதி மற்றப் பிராமணர்கள் இவர்களோடு பிரயாணமாகி நடந்து, தங்கள் பன்னகசாலையுள்ள காமிய வனம்போய்ச் சேர்ந்திருந்தார் தருமராஜன்.

### வீமார்ச்சுனாள் சயிந்தவனைப் பிடித்துத் தேரிற் கட்டிக்கொண்டு வருதல்

இப்பால் வீமசேனன் தன் தமையன் சொன்ன வாக்கியம் எதையுந் தன் காதிற் கேளாதவனாகி மன வேகத்திலும் மிஞ்சின வேகமாய் வந்து, வழி துறையில்லாமல் வனத்தில் நுழைந்து, இரதச் சக்கரம் போயிருக்கின்ற தாரியைப்பற்றி வருகின்றான். அப்போது சயிந்தவன் நெடுந்தூரம் வரையிலும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு, பட்சி வேகத்திலும் அதிக வேகமாகச் சென்று குதிரைகளும் தானும் சாரதியும் இளைத்து வருத்தமுற்றபடியாலும், வீமன் முதலியபேர்கள் வராமையாலும் இரதத்தை மெதுவாய் நடத்தச் செய்து, தானும் சாய்ந்து, குதிரைகளும் ஓய்ந்து, உறங்கிக்கொண்டு செல்கின்றான். அந்தச் சமயத்தில் தண்டதரன் இரண்டு பின்னடியும் பிடரியிற்பட ஓடிக் கண்டான். தேரைக் கண்டவுடனே கடலுங் கலங்க, மலையுங் குலுங்க, காருஞ் சுழன்றோட, பாருங் கிழிந்தாட, ஓங்காரமிட்டு ஆரவாரஞ் செய்தான். இந்தப் பேரோசையால் குதிரைகளும் சாரதியும் மருண்டு வெருண்டார்கள். சோர்ந்திருந்த சயிந்தவன் திடுக்கிட்டுத் திரும்பி நோக்கி, சாரதி நமன் வந்துவிட்டான். நடத்து தேரை என்று தானுஞ் சாரதியுமாக அதிக விரைவில் முடுக்கவே, வீமனும் விரைந்து பறந்துவந்து சமீபத்தில் அடுக்கவே, பக்கத்திருந்த அடர்ந்த காரியபுதரிற் படுக்கென்று பாய்ந்து மண்ணைக் கவ்விக் கொண்டவனைப்போற் பதுங்கிப் பூமியுடன் பூமியா யிருந்தான். அப்போது வீமசேனன் வந்து இரதத்தை மறித்துப் பார்க்க, அதிலவனைக் காணாம லிருந்தமையாற் சாரதியை நோக்கி, அடா சாரதி! எங்கே சயிந்தவனென்றான். அதற்கவன் நடுங்கி, ஐயா! நான் பார்க்கவில்லையே யென்று வாய் திறந்தான். உடனே பளீரென வறைந்தான். அச் சாரதி திடீரெனப் பாரினில் விழுந்து மரவட்டைப்போற் சுருட்டிக்கொண்டான். வீமன் அவனை வாரிப் பிடித்து அரட்டிப் புரட்டிப் பொம்மையைப்போல் அசைத்தான். அச் சாரதி வணக்கமுடன் பார்த்து, சுவாமி! நான் வெகு குடும்பி என்னைக் கொல்லவேண்டாம். உள்ளது சொல்லுகின்றேன். வள்ளலே நீர் இங்கு நெருங்கி வரும்போது புறத்திலிருக்குங் காட்டிற் குதித்த தறிவேன். அது எந்தக் காடோ எந்தயிடத்தி லிருக்கின்றானோ எனக்குத் தெரியாதென்று சொல்லி வணங்கினான்.

அவனப்படி சொல்லவே அவனை நிலத்திற் போட்டுவிட்டுக் காட்டில் நுழைந்து, கொத்துச் செடிகளும் படருங் கொடிகளும் அடர்ந்த புதரும் தழைந்த சோலையுந் தப்பாமல், ஒவ்வொன்றாய் ஒவ்வோரடி கதையினால் அடித்து நொறுக்கி வரும்போது, அர்ச்சுனனும் வந்து அண்ணனைக் கண்டு, அகப்பட்டானா என்று மிகு கோபங்கொண்டு கேட்டனன். அப்படி கேட்கவும் வீமன் இங்குதான் மறைந்தானென்று சொல்ல, உடனே இருவரும் நுழைந்து காட்டை வேருடன் கெல்லிக்கொண்டு வரும்போது, ஒரு பெரிய புதரைக் கண்ட வீமன் கதாயுதத்தால் ஓங்கி யடித்தனன். அவ்வடியால் அந்தப் புதர் பொடியாய்ப் பறக்கவும் அதிலிருந்து அப்பா! அப்பா! என்றிரண்டு மொழியுண்டா யடங்கிவிட்டது. உடனே வீமசேனன் உட்புகுந்து, அவன் தலைமயிரை பற்றிப் பறபறவென்று யிழுத்து வெளியில்வந்து பாரிலோங்கி மோதி பதத்தினாற் றுவைத்து, கரத்தினா லறைந்து, சிரத்தினி லுதைத்து, புயத்தினை நெரித்து, புறத்தினி லிடித்து, கண்விழி பிதுங்கக் கழுத்தினைப் பிடித்து, தலையுடன் கால் சேர்த்துச் சக்கரம்போலாக்கி, ஆயர்பாடியில் அமலனானந்தன் சகட்டினை

யுதைத்த, தன்மைபோ லுருட்டி, தலைமயிர் பற்றித் தரையினில் மோத ஆக்ரமித்தெடுத்தான். அப்படி யெடுத்த அவசர நோக்கிய அருச்சுனன் அண்ணனை நெருங்கி வணங்கி, இவன் இப்போது இறந்தால் இசை நமக்கில்லை. இவனை உயிருடன் வைத்து உலகெலா நகைக்கச் சின்னப்படுத்த வேண்டுமென்று சிந்தை செய்திருக்கின்றேன். அப்பால் தேவரீர் சித்தமெதுவோ அதுவே சிறியேன் பாக்கியம் என்று அருச்சுனனுரைத்துத் தேரினிற் கட்டுவோமென்னவும், வீமனுக்குக் கோபம் எழுகடல்போற் பொங்கவும், உடனே தன் பல்லைக்கடித்துப் பிசைந்து கசக்கிப் பாரில் விட்டெறிந்தான். அப்போ சயிந்தவன் காற்று நீங்கிய துருத்தியொத்து, போட்ட காலும் போட்ட கையுமாய் பொம்மைபோல் மெய்யுமாய் பூமியிற் கிடக்க, அவனை அருச்சுனன் போயெடுத்துக் களையாற்றி, தேரில் வைத்திருந்த தண்ணீர் கொடுத்துத் தேற்றி, தேறி எழுந்தவுடன் அவனை இரதக்காலுடன் இருபுயம் ஒடியச் சேர்த்துக் கட்டினன்.

அப்போது வீமசேனனுடைய சிந்தை தாளாமல், ஓடிவந்து ஒரு உதை உதைத்து அரசிலைபோன்ற அக்கினிக்கணையில் அவன் தலைமயிரை ஐந்துப்பிரிவாக அமைத்து, மற்றவை எல்லாந் தீயினுற் கருக்கி, ஐந்து பிரிவிலும் அலர்களையுந் தழைகளையுங் கட்டி, கருமண்-வெண்மண்-பசுமண் இவைகளைக் குழைத்து கத்தரித்தோட்டத்துப் பொம்மைக் கிடுங்கோலம்போற் புள்ளியிட்டுப் பார்த்து கக்கடக்கடவென்று நகைத்து, சாரதியை நோக்கி இரதத்தைத் திருப்பிவிடச் சொல்லி, அதில் தாங்களிருவருமேறி நாயகத்தட்டி லுட்கார்ந்து வரும்போது நடந்த செய்திகளை யுன்னியுன்னி இரத்தம் பொங்கி, இரு கரத்தையும் நெருப்புப் பொறிபறக்கத் தேய்த்து ஓரறை கொடுத்தான். அவ்வறை கொம்மென்று படவும், அப்பாவென்று கொட்டாவி விடுபவர்களைப்போல் வாயைத் திறந்துகொண்டான் சயித்திரதன். அப்போது வீமசேனன் இந்திரியங்களெல்லாம் புலன்வழி சிதறவிருந்த சயிந்தவனை நோக்கி, அடா குருதுரோகி! உன்னை வதைத்துச் சதைத்துப் புதைத்துப் போடுவதற்கு நினைத்தேன். என் தம்பி யுனக்குப் பிராணபிக்ஷை கொடுத்தான். ஆகையால், நீ பிழைக்கவேண்டுமானுல் உனக்கொரு பேரிடுகின்றேன். அதை எவ்விடத்திலும் எப்போதும் மறவாமற் சொல்லிக்கொண் டிருப்பையா என்று கேட்டான். ஐயோ! அதற்கவன் என்ன சொல்லுவான். சொல்லாமற்போனுல் உதைமேலுதை, அடிமேல் அடி, குத்துமேற் குத்து, மொத்துமேல் மொத்து, என்ன செய்வான் பாவம். ஆண்டவனே! நானிந்தப் பூமியில் உள்ளவரையிலும் நீங்கள் இட்டபேரைச் சொல்லிக்கொண் டிருப்பதுமல்லாமல், என் பிள்ளைக்குக்கூட அந்த பேரை நிலைநாட்டி வைக்கிறேனென்றுன். அதைக் கேட்ட வீமசேன மஹாராஜன் சொல்லுகிறுன்: அடா! முறைதுறையற்ற மூடா! இன்றுமுதல் உனக்குப் பாண்டவ தாசனென்று பேரிட்டேன். எங்கே சொல்லு பார்ப்போம் எனவும், உடனே பாண்டவதாசன் பாண்டவ்தாசன் என்று வழி முழுவதுஞ் சொல்லிக்கொண்டு வந்தான்.

### தருமராஜன் சயிந்தவன் கட்டவிழ்ப்பித்து வீமசேனனைச் சில வினவ, அதற்கவன் விடைதரல்

அப்படி அவன் சொல்லிக்கொண்டு வரும்போது இரதத்தை வேகமாகச் செலுத்திக் கொண்டு வனத்திற்கு வந்து, தமயன் முதலிய யாவரும் நெருங்கி யிருக்கக்கண்டு, இரதத்தை விட்டு இறங்கி, இவனை நோக்கி வாயை மூடிக்கொள். தருமபுத்திர மகாராஜன் கேட்கும்போது உரக்கச் சொல். பத்திரம் என்று தன் கரத்தை நீட்டி விரலைக் காட்ட, அதை யவன் கண்டு, இவன்கை யமன் சூலமோ? ஆலகால விஷமோ? வடவாமுகாக்கினியோ? என்று மதிமயக்கங்கொண்டு, என் இஷ்ட தெய்வமே! உங்கள் சித்தத்தின்படியே சொல்லுகிறேனென்றுரைத்தனன். பின்பு சிந்துதேசனைத் தேரிலிருந்து இறக்கி, கட்டுடன் கொண்டுவந்து தருமபூபதிக்கு முன்னே நிறுத்தி, தாங்களிருவரும் அவரை நமஸ்கரித்துக்கொண்டு ஒருபுறத்திலொதுங்கி இருந்தனர். அப்போது திரௌபதாதேவி இந்த துஷ்டாத்மனுடைய முகத்தைப் பார்த்து நகைத்து, மறுபடியும் நோக்க வெட்கமுற்றுத் தலை கவிழ்ந்துகொண்டனள். அப்போது பிராமணர்களும், தௌமியாச்சாரியரும், தவசிரேஷ்டர்களும், ரிஷிபத்தினிகளும், பிராமண ஸ்திரீகளும் நெருங்கியிருக்க, அந்த சமயத்தில் வீமசேனனைத் தருமராஜன் பார்த்து, தம்பி வீமசேனு! இவனை எங்கே கண்டாய்? எப்படி அகப்பட்டான்? என்று வினவும்போது வீமன் சங்கதிகளெல்லாஞ் சொல்லி இவனுடைய பேரைக் கேட்

டால் தங்களுக்கு எல்லாந் தெரியு மென்றான். என்னவே தருமநந்தனர் இதில் ஏதோ விந்தை இருக்கின்றதென் றுணர்ந்து, அப்பா சிந்து ராஜனே! உன்பேரென்ன? என்று வினவவும், அவன் வெகுபேர் கூடியிருக்குமிடத்திற் சொல்ல வெட்கப்பட்டு மெள்ளப் பாண்டவதாச னென்றான். தருமராஜனுக்குப் பின்பக்கமாக இருந்த வீமசேனன் உறுக்கிப் பார்த்து, இருகரத்தையுந் தேய்த்தான். அப்படி தேய்க்கவே தன தடிவயிறு குறியும்படியாக எக்கி உரக்கக் கூவி, பாண்டவதாசன் பாண்டவதாசன் என்று வாய் ஓயாமற் சொன்னான். அதைக் கேட்ட அறக்கடவுளானவர் அடங்காத சந்தோஷமும் அவ்வளவு விசனமு முடையவரானார். மற்றையர்களெல்லாங் கலகலவென்று நகைத்தார்கள். தருமநந்தனர் சற்றுநேரம் பொறுத்துத் தம்பியை நோக்கி, இவனைக் கட்டவிழ்த்துவிடக் கடவை என்றார். உடனே அவருத்தரவின்படி தண்டதரன் கட்டவிழ்த்து விட்டனன்.

அதைக்கண்ட தருமராஜன் அந்த சயிந்தவனைச் சமீபத்தழைத்து நிறுத்தி, வீமசேனனைப் பார்த்து, இவனுக்குக் கண்ணைச்சுற்றி நாமமென்ன வென்று கேட்டார். அண்ணா! திண்ணையி லிருக்குந் தாதனுக்குக் கண்ணைச் சுற்றி நாமமிருக்குமென்றான். ஆனால், இவனுடைய மீசை எங்கே என்று வினவினர். மீசையையுடைய வீரனாகில் தாய், தங்கை என்னும் முறைதப்பி நடப்பானா? இல்லாமையினால்தான் இந்தக் கெதியாயினா னென்றான். அப்பா! இவன் தலைமயிர் ஐந்துபிரிவாயிருக்க வேண்டியதென்ன வென்றார். குடும்பசவரக்ஷணை செய்து குலத்துக்குப் பழி தேடாமற் புகழைத் தேடுகின்ற பிள்ளைகளுக்குச் சவளம் என்னுங் குடுமி கலியாணஞ் செய்கின்றதுண்டு. இவன் குலத்தையுங் கோத்திரத்தையுங் கெடுக்கவந்த பாவி. ஆகையால், அலையும்படியான ஐந்து குடுமித்தலையனாயினானென்றான். அது கேட்ட தருமபுத்திரர் மனமிளகி, இவ்வளவு வேலை இவனைச் செய்வதற்கு உன் மனம் இளைக்கவில்லையோ என்று கேட்கவும், வீமன் சொல்லுகிறான்: அண்ணா! கைம்பெண்சாதி பிள்ளையானாலுஞ் செய்யுஞ் சடங்கைத் திட்டமாய்ச் செய்யவேண்டு மென்னு மொழி தப்பாமல் நடத்தினே னென்றான். இவ் வீமசேனனுடைய திடத்தையுங் கோப அடத்தையுங் கண்டு, உதிட்டிரர் மறுமொழி கேட்காமல், தம்பீ! இவன் சாம்பிரதாய குலத்திற் பிறந்தவன். சந்திரகுலத்திலுதித்த சகலராஜப்பிரபுடகனாகிய சற்பக் கொடியோனுக்கு மைத்துனன் சிந்து தேசாதிபதி. மகா புத்திசாலி இவனால் விளைந்த தொன்றுமில்லை, சொல்லுவார் பேச்சைக் கேட்டுக் கெட்டான். ஆகிலும், நீ இப்படி அவமானஞ் செய்யலாகாது என்று கூறிய அண்ணனை வீமசேனன் பார்த்து, நாங்கள் ஒருகாலத்திலும் ஒருவரை அவமானம் பண்ணுகிறதில்லை. தேவரீருடைய வார்த்தையையுந் தள்ளி நடப்பதில்லை. ஆகையால் உத்தரவின்படி இவனை உயிருடன் கொண்டு வந்தேன். இவன் தேடிக்கொண்ட பழியும் பாவம் இவனை அவமானப்படுத்தியது தேவரீருடைய தருமமுஞ் சாந்தமு மிவன் பிராணனைக் காப்பாற்றி விட்டது. என்று வெகுண்டு விழித்தான்.

### சயிந்தவனுக்குத் தருமராசன் சிலதருமங் கூறி விடுக்க அவன் கைலாசபதியை வேண்டித் தவஞ் செய்து பாண்டவரை வெல்ல வரம் பெறுதல்

அதைக்கண்ட தருமராசன் அண்டையில் இருந்த தௌமியாச்சாரியரைப் பார்த்து, இந்த வண்டன் செய்ததுந் துண்டதனந் தான். அதனால் தண்டதரனுக்குக் கோபமூண்டு, பண்டு மதனை யெரித்த நீலகண்டனைப்போல் இவனை உண்டு இல்லை யென்று கண்டுவிட நிற்கின்றான். என்று சொல்லிச் சயிந்தவனை அழைத்து, அப்பா மைத்துனா! தாய் தங்கை தமர் என்று நினைக்காமல் நிறைமுறை தப்பி நடந்த உனக்கும், இந்தக் காட்டில் இருக்கும் மிருகங்களுக்கும் பேதமென்ன யிருக்கின்றது? எடுப்பார் கைக்குழந்தை போல வந்து இடியுண்டு எள்ளனங் கொண்டாயே! இது உனக்கு அழகா? இகத்தில் அழியாப்பழி பூண்டாயே; இறைவனென்று உலகம் ஆண்டாயே;இது உனக்கு என்றென்றைக்கும் புண்தானே; என்று பற்பல நீதிவசனங்களைச் சொல்லி, நீ இன்னிமிடத்தில் ஆலஸ்யஞ் செய்யாமல் உன்னுடைய நகரம் போய்ச் சேரக் கடவை. உன்னைப் பார்க்கப் பார்க்க மற்றையருக்கு மாளாக் கோப மூளுகின்றது என்று அனுப்பிவிடவும், சயிந்தவன் மிகுந்த விசனத்துடன், கண்ணீர் சோரத் தலை கவிழ்ந்து தன் சேனைகளிற் போய்ச் சேராமல் தனி வனத்திற்சென்று, அங்கே தனியு

சாந்தனென்னு மஹாரிஷி தவம்புரிந்திருக்கக் கண்டு, அவருடைய சரணங்களிற்ரூழ்ந்து பணிந்து, தவம் செய்யும் முறைமையையும் தகுதியாகியமந்திரங்களும் பெற்றுக்கொண்டு, தனது ராஜகோலங்களை நீக்கிவிட்ட தருமராஜன் முதலிய பாண்டவர்களைத் தன் கையால் கொல்லக் கருதி, ஆகாரம் நித்திரை முதலியவைகளை வெறுத்து, கைலேயங்கிரிக் கடவுளை நோக்கிக் கடுந்தவஞ் செய்தான். இப்படி இவன் அருந்தவ மிழைத்து வருங்காலையில், உமா மஹேஸ்வரர் விருஷப வாகனரூடராய் பிரசன்னமாகிவர, அதுகண்டு எழுந்து பாதங்களில் விழுந்து, வெகுவாகத் துதித்துக் கண்ணீர் பெருக நின்றான். அப்படி நின்ற சயிந்தவனை சாம்பவமூர்த்திநாடி, நீ நம்மைக் குறித்துத் தவமிழைத்த காரணமென்ன? உனக்கு வேண்டியதைக் கேள் என்று சொல்லிய சிவபெருமானைப் பணிந்து வாய் புதைத்துக் கை கட்டி வணக்கத்துடனின்று வாழ்த்தி, ஓ எப்பொருட்கு மிறைவனே! ஓ சுவாமி! பாரதயுத்தத்தில் பாண்டவர்களை நான் கொல்லும்படியாகிய வரமும், ஆயுத உரமும் எனக் கருள் புரிய வேண்டும் என்று கேட்டான் சிந்து தேசாதிபதி. அதையறிந்த பரமேஸ்வரன் சொல்லுகின்றார்: ஓ சயிந்தவனே! பூர்வத்தில் அருச்சுனன் நம்மை நோக்கித் தவஞ்செய்ய, நாம் வெளிவந்தபோது உபசாரத்துடன் வணங்கி, ஐயனே! இனி நடக்கப்போகிற பாரத யுத்தத்தில் எங்கள் சத்துருக்களை எல்லாம்முடிக்கத் திவ்யாஸ்திரம் வேண்டுமென்று கேட்டான். அப்படியே சகல வரமும் அஸ்திரமும் குறைவில்லாமல் கொடுத்துவிட்டேன். அவர்களை நீ எப்படி வெல்லுவை? உன்னால் ஆகாது. ஆனதால், அதைத்தள்ளி வேண்டியதைக் கேளென்றார். அப்படி சொல்லவும் சயிந்தவன் மீண்டும் பணிந்தெழுந்து, கர்த்தனே! அடியேனுக்கு வேறு வேண்டியது ஒன்றுமில்லை. அவர்களைச் செயிப்பதே எனக்குத் தர வேண்டிய வரம் என்று சொல்லவும், நல்லது நீயும் அருமையாகிய தவமிழைத்தபடியால், பாரத யுத்தத்தில் அருச்சுனன் தவிர மற்ற நாலுபேரையும் ஒருநாளிற் செயிக்கக்கடவை என்று அநுக்கிரகஞ் செய்து கைலாசத்துக்கெழுந்தருளினார் சாம்பவமூர்த்தி. இப்பால் சயிந்தவன் அவரெழுந்தருளிய திசையை நோக்கி நமஸ்கரித்துக்கொண்டு, அங்குள்ள தவச்சிரேஷ்டர்களையும் பணிந்து ஆசீர்வசனம் பெற்று, பலநாட் சென்றபின் தனது நகரம் போய்ச் சேர்ந்து, இந்தப் பகையை விடாமல் பாராட்டிக்கொண்டிருந்தான்.

### திரௌபதிக்கு நேர்ந்த சம்பவத்தைக்கருதி வருந்திய தருமனை மார்க்கண்டேய முனிவர்வந்து தேற்றிச் சாவித் திரி சரித்திர முரைத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இவ்வாறு பாண்டுவுக்கு முதற்புத்திரனாகிய தருமராஜன் சயிந்தவனுக்குச் சன்மார்க்க நெறிகூறி யனுப்பிய பின்பு, தௌமியரோடுந் தம்பியரோடும் வசனிக்காமல், தமது தர்மபத்தினிக்கு நேரிட்ட விபத்தை நினைந்து, ஐயோ! நாம் எவ்வளவோ மகிழ்ச்சியாய்ச் சாது சங்கப் பழக்கத்தோடு சதா நிஷ்டையி லிருந்துக்கொண்டு அநித்யமாகிய இவ்வுலக வாழ்வை மறந்திருந்தும், நமது கன்ம சம்பவம் இங்கேயும் விடாமல் குற்றமற்ற குணசாலியாகிய நமது திரௌபதியின் பக்கலிற்சென்று செருச் செய்கின்றதே. இப்போது சயிந்தவனால் நேரிட்ட அபகீர்த்தி சந்திர சூரியருள்ளவரைக்கும் தாழாதே. இது பகைவர் செய்வித்த மாயமோ? பகவான் செய்வித்த நியாயமோ? என்று தனக்குள் தானே வருந்தினவரா யிருக்கின்ற சமயத்தில், தற்செயலாய் எண்டோண் மூர்த்தியைப் பூசித்து எமனைப் புறங்கண்ட மார்க்கண்டேய மகாமுனிவர் எழுந்தருளினர். அவரைக் கண்ட உடனே தருமராஜன் முதலிய யாவரும் எழுந்து எதிர்கொண்டோடி, பேரானந்த முற்றவர்களாய்ப் பூமியிற் படிந்து பணிந்து, மகா உபசாரத்துடன் அழைத்து வந்து, மலராசனத்தில் இருத்தி, அருக்கிய பாத்திய ஆசமனிய அக்ஷதை சந்தனாதிகளும் கொடுத்து, தருமராஜனும் தம்பிமாரும் திரௌபதையுமாய் நமஸ்கரித்தார்கள். உடனே அவர்களுக்கு மந்திர வாக்கியங்களினால் ஆசீர்வதித்து உட்காரும்படி யுத்தரஞ்சொல்ல, யாவரு மிருந்து புகழ்ந்தார்கள். அதுகாலையில் தருமராஜன் மார்க்கண்டேயரை நோக்கி, சயிந்தவன்வந்து திரௌபதையை எடுத்துக்கொண்டு போனதும், தாங்கள் தொடர்ந்து அவனை அடித்து அவமானஞ் செய்ததும், பாஞ்சாலிக்கு உலகம் பழிக்கும்படியாகிய வசனம் வந்ததையும் சொல்லி விசனப்பட்டார். அதைக்கேட்ட மார்க்கண்டேயர், கிருபையுற்று, அவருடைய மனத்துய ராறும்படியாய் இதனைச் சொல்லத் தொடங்கினார்: கேளுந் தருமராசனே!

துஷ்டராகிய பேர்களை கண்டித்தல் தருமம். உங்களுடைய் மைத்துனன் செயித்திரதனென்பவனை சும்மாய்விடாமல் அவமரியாதை செய்தனுப்பி வைத்தபடியால், இனிமேல் அவனும் பிழைப்பான். அவனுக்கு நல்ல புத்தியும் வரும். உலகத்தில் உங்களுக்குங் கீர்த்தியுண்டு. ஏதோ யிதனால் இந்த பாஞ்சாலிக்குப் பழிப்புவசன முண்டாமென்று நீங்கள் நினைக்கவேண்டாம். (உள்ளிய தெள்ளியவ ராயினுமூழ்வினைப், பையநுழைந்து விடும்) என்னும் வாக்கியம் பெரியோர் உரைத்திருக்கின்றமையால், ஊழ்வினை யாரையும் விடாது. மேலும் கோசலநாட்டுக்கும் அயோத்திக்கும் அதிபதியாகிய கோதண்டதீக்ஷா குருவின் பத்தினியை இராவணன் எடுத்துப் போய் பத்து மாதம் வரையினுஞ் சிறையில் வைத்து, அவனுங் குடும்பமும் அழிந்தபிற்பாடு இட்டுக்கொண்டு வந்து பட்டத்திலிருந்த ஸ்ரீராமருடைய தேவியாகிய சீதையம்மனுக்கு நேரிட்ட விபத்தைச் சாங்கோபாங்கமாக உமக்கு நாம்சொல்லியிருக்கின்றோமல்லவா? அதில் அச்சீதையாகிய சிந்தாமணிக்கு என்ன தாட்சி வந்தது. தருமராஜனே! ஆகையா லுலகத்தில் அபவாதமும் அக்கிரமுந் துஷ்டர்களால் விளைவதுண்டு. அவைகளை உடனே விலக்கிப் பெறுமை பெறுவதே நமக்குக் காட்சி. அத்தன்மையாகிய ஸ்ரீராமரும் சீதையும் அந்தப்பாடு பட்டபோது, மற்றையர் படுவதை வசனிக்கவும் வேண்டுமோ? இந்தத் திரௌபதியை அவன் எடுத்ததும், நீங்கள் வனத்திலிருந்து வருந்துவதும், வினையின் சம்பந்தமேயன்றி வேறன்று. ஐயா தருமசுரூபி! சேய்மிதித்துத் தாய் வருத்தமுறுமோ; உறாது. அதுபோற் சயிந்தவன் எடுத்துப் போனதினால் இந்த உத்தமிக்கு ஒருக்காலுங் குறைவு வராது. அவன் உயிருடன் செத்த பிணம்போல் வீமசேனனால் அவமானம் அடைந்து போயினான். கற்புடைய திரௌபதையுங் காளமேக மறைத்து நீங்கிய கதிரவன்போல் ஆயினாள்.

என்று சொல்லக் கேட்ட உதிஷ்டிரன் எழுந்து அடியினை வணங்கி, சுவாமி! நல்ல ஒழுக்கம் உள்ள கற்புடை மனைவியாற் கணவனுக்கு விபத்து நீங்கிச் சம்பத்துண்டாகும் விதமும் உண்டோ? என்று கேட்கவும் மார்க்கண்டேய முனிவர் மனது இரங்கி, ஓ ஐவருள் முதல்வனே! சாவித்திரி என்னும் ஓர் மங்கையினாற் சகல சுபமும் ஆயுசும் பெற்ற ஒரு அரசனுடைய சரித்திரத்தைக் கேளும். மாதம் மாதம் வானம் மும்மாரி வழங்கவும், மன்னிய பயிர்கள் தழைக்கவும், துன்னிய உயிர்கள் பிழைக்கவும், மாதவர் தவங்கள் மருவவும், மறையவர் யாகங்கள் வளர்க்கவும், கோயில்கள் - குளங்கள் செழிக்கவும், கொடுமைகள் அனைத்துங் குறையவும், மனுநீதி குன்றாமல் அரசுபுரிந்துவந்த மத்திரதேசாதிப னென்னும், அசுபதி மகாராஜன் என்று ஒரு அரசனிருந்தான். அவன் மாளவியென்னுந் தேவியுடன் கூடி வாழுநாளில், சகல பாக்கியமும் நிறைந்திருந்தும் புத்திரபாக்கியம் இல்லாதிருப்பதினால் அவன் மனமகிழ்ச்சி குறைந்து வருந்தினன். அக்காலையில் நாரத மகாமுனிவர் அவ்விடம் எழுந்தருள, அவரை யவன் கண்டு பாதபூசை செய்து பணிந்து, பத்தினியுந் தானும் புத்திரனில்லாக் குறையைச் சொல்லிப் பரதவித்தனர். அவர்களுக்கு அம்முனிவர் ஆசீர்வதித்து, ஓ புனிதர்களே! நீங்கள் சாவித்திரியைச் சரணம் அடைந்து நோன்பிழைத்தால் உங்கள் மனங் களிப்புறும் என்று அதற்குரிய மந்திர உபதேசஞ் சொல்லி அந் நோன்பிழைக்கும் மார்க்கமுந் தெரிவித்துப் போயினர். அப்பால் இவர்கள் அந்த நெறியின்வண்ணம் நோன்புற்று அன்புசெலுத்தும் நாளையில் அந்தச் சாவித்திரியார் பிரசன்னமாக, அதுகண்டு அவர்கள் பலவாறுக வணங்கித் துதித்துப் பரவசமாகவும், அச் சாவித்திரி உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்களென்று சொல்லினள். அதற்கவர்கள் அப்பாரதியாரைப் பணிந்து எழுந்து, அம்மணி! எங்கட்குப் புத்திரவரம் வேண்டுமென்று பணிந்தனர். அதற்கு அச் சாவித்திரி உமக்கு ஒரு பெண்ணுண்டாமென்று அருள் புரிய, அதைக் கேட்டு, மீண்டும் பணிந்தெழுந்து, தாயே! பெண் சந்ததியில் மோட்சம் வருவதற்கும் இராச்சிய மாளுவதற்கும் யோக்கியப்படாதே என்று வருந்திக் கேட்கவும், அந்தப் பெண்ணினாற் சகலவைபவமும் பிள்ளைகளு முண்டாம் என்று விளம்பி மறைந்து போயினள். அப்பால் அரசனும் அரசியும் அவ்வம்மனையே ஆன்மார்த்த தெய்வமாக வாழ்த்தித் தொழுது வாழ்வில் சிறந்திருந்தனர்.

அந்நாளையில் மாளவி என்னும் இராஜபத்தினி கர்ப்பங்கொண்டு பத்து மாதமுஞ் சென்று திவ்யதேஜோமயமாகிய பெண்ணைப்

பெற்று, சாவித்திரி யென்றீ பெயருமிட்டு, சகல சிறப்புஞ் சீருஞ்செய்து, கணுவிலாக் கரும்பைப்போல் வளர்த்து மங்கைப் பருவம் வந்த காலத்தில் நங்கைக் கிசைந்த நாயகன் வேண்டுமே யென்னும் ஏக்கமுடையவர்களாய் எங்கு வாய்க்குமென்று அத்தந்தை தாய் யிருவரும் ஏங்கி யிருந்தார்கள். அப்படி யிருக்கையில், ஓர் நாள் சடைமுடியும் மகதியாழுந்தாங்கிய நாரத மகாமுனிவர் வர, அவர்க ளவரைக் கண்டு எதிர்கொண்டு சாஷ்டாங்க தெண்டனிட்டு அருக்கிய பாத்திய ஆசமன்யங் கொடுத்து, அந்தப் புரத்திற் கழைத்துவந்து சிங்காதனத்தில் எழுந்தருளச் செய்து, அரசன் ஓராசனத்திலிருக்க, மாளவிதேவி வந்து வணங்கி மலரடியை வாழ்த்தி, சுவாமி மகதியாழ் முனியே! எனக்கு மலடியென்னும் வைய்க நிந்தையை நீக்கிய எந்தையே! என்று மனங் குழைந்து விசுவாசித்து நின்றனள். அக்காலையிற் காவியங் கண்ணினையுடைய ஓவியம் போன்ற சாவித்திரி வந்து, தன் தாய் தந்தையரைப் பணிந்து, பின்பு தவமுனியினுடைய தாளிணையைப் போற்றவும், நாரதமுனிவர் அப்பெண்ணை அருட்பார்வையால் நோக்கி, வேளினையீன்ற விமலனார் அருளால் வாழ்வினி லோங்கி வாழ்கவென்று வாழ்த்தினார். அப்போது அரசன் தன் பெண்ணைத் தழுவி யெடுத்தணைத்துச் சிங்காசனத்தில் இருத்திக் கொண்டு, நாரதரைப் பார்த்து, ஓ சுவாமீ! தேவரீர் கிருபையாற் சகல நலமும் நல்லெழிலும் உடைத்தாய் தவத்திற் பிறந்த இச்சாவித்திரிக்கு, தகுந்த நாயகன் வேண்டுமே யென்று சஞ்சலப்படுகின்றோம். ஆதலால், தேவரீர் அவ்வெண்ணம் நிறைவேற அனுக்கிரகம் புரியவேண்டு மென்று விண்ணப்பஞ் செய்து கொண்டனன். அதற்கு நாரதர் சொல்லுகின்றார்: ஓ அரசனே! (நிதியுங் கணவனு நேர்படினுந் தன்தன் விதியின் பயனேபயன்) என்று வேதவாக்கியமுள்ள தாதலால், அவர்கள் வினையின்வண்ணம் நடக்கும். நீங்கள் ஒன்றும் யோசிக்கவேண்டாம். சர்வஜீவ தயாபர மூர்த்தியாகிய பசுபதியார் சாவித்திரியின் மனதிற் குறித்திருக்குந் தலைவனை ஏற்படுத்தியிருக்கின்றார். அவனுக்கே விவாகஞ் செய்து கொடுப்பது உத்தமம் என்று முனி சொல்லக் கேட்ட இறைவன் மகிழ்ந்து, குமாரத்தியின் முகத்தை நோக்கி, அம்மா! உன் மனதில் குறித்திருக்கின்ற நாயகனைச் சொல்லென்று கேட்டனன்.

அதற்கப்பெண் பருவமங்கை ஆதலினால் தலைகுனிந்து வெட்கமுற்று சற்றுநேரந் தரித்துச் சிந்தையில் நினைத்ததைத் தந்தை தாயிடத்தில் விந்தையாகச் சொல்லுகின்றாள்: ஐயா! நான் சிறு பெண்ணாகிய காலத்தில் உரிய தோழிமார்களுடன் பூங்கா வனத்திற் போய் விளையாடும்போது, அழகும் இளமையும் ஆண்மிக்கையுமுள்ள ஒரு அரசன் குதிரையின்மேற் போகக்கண்டு, இவர் யாரென்று பாங்கியரை விசாரித்தேன். அப்போதவர்கள் சாலுவ தேசாதிபதியின் குமாரன் சத்தியவானென்றார்கள். அன்றே மனதில் அவரை வரித்தேன் என்று சொல்லவும், இராஜன் கேட்டு, மனைவியுந் தானும் மனமகிழ்ந்து, நாரதருடைய நளினமலர்போன்ற அடியிணையைப் போற்றி அனந்தமுறை ஏத்திப் புகழ்ந்து பணிந்து, ஓ காசினி முழுவது மறிந்து காலத்திரயமுந் தெரிந்த உத்தம சத்துவகுணனே! தேவரீர் என் சுதனி சொல்லிய சத்தியவானுடைய உத்தம குணாதிசயங்களைச் சொல்ல வேண்டும் என்று கேட்கவும், நாரதர் சொல்லுகின்றார்: ஓ மகாராஜனே! அந்த அரசனவன் அழகிற் சிறந்தவன், ஆண்மையில் உயர்ந்தவன், சத்திய நெறியிற் றலைமைபூண்டவன், உத்தமகுணத்தில் ஓங்கியவள்ளல், நற்றவந் தருமம் நாளும் வளர்ப்பவன், கண்களிரண்டுங் கங்குல் பாய்ந்திட்ட அன்னை பிதாவை அரனெனத் தொழுபவன், சத்துருவிடத்திற் றரணிமுன் யாவும் பற்றவிட்டுப் பதாதியாய்க்கானில், இன்னலுற்றிருக்கு மியல்பினனவன். இனியோர் வருடத்திற் இறந்து போவான் என்று சொல்லவும், இராஜனுக்கு விசாரம் வந்து குமாரத்தியை நோக்கி, அம்மா! நாரத மகாமுனிவர் சொல்லிய வாக்கியத்தைக் கேள்வியுற்றையா? நீ அவனை மறந்து இன்னொரு புருடனை நிதானித்துக் கொள்ளுக என்று இயம்பவும், அந்த மொழிக்கு அப்பெண் இணங்காமல், தன் முகத்தை ஒருவாறு சுளுக்கி யிருக்கக் காட்டினள். அது கண்ட தந்தையானவன் அப் பெண்ணை நோக்கி, அம்மா! உன் எண்ணத்தின் வண்ணங் கலியாணஞ் செய்ய அச்சத்தியவானுக்கு அல்பவாயுசாம். அவன் தாய் தந்தையரிருவருங் கண்ணில்லாதவர்களாம். தங்கள் இராச்சியத்தைச் சத்துருவினிடத்தில் ஒப்பி வைத்துவிட்டுப் பதாதிகளாய் அன்னபலாதிகளுக்கும் வருந்தி ஆரணியத்திற் கஷ்டதிசையாய் வாசஞ் செய்கின்றார்களாம். அவர்கள்

குமாரனை நீ விரும்பியது அநியாயம். ஆதலால், என் அம்மணி! நீ வேறு புருடனை விரும்பிக்கொள் என்று அரசன் கூற, அதற்கேற்றபடி அன்னையும் வருந்த, அது கண்ட சாவித்திரியானவள் முகமலர்ந்து சொல்லுகின்றாள்:

ஐயா! பரமசிவனுக்கு ஒப்பாகிய நாரத பகவான் முன்னிலையில் நீர் கேட்டபோது, நான் வெட்கத்தைவிட்டு மனதில் நிச்சயித்திருந்த நாயகன் சத்தியவானென்று விளம்பினேன். அவ்வாக்கினால் வேறொரு புருடனை இனி விளம்பக்கூடுமோ அப்படிச் சொல்லுவேனாகில் தாய் தந்தை முதலிய சுற்றத்தாருக்குப்பழியும், பூலோகத்தில் நிலைபெற்றிருக்கும் பதிவிரதா தருமங்களுக்குக் குறைவும், அரசு செலுத்திய மநுநீதிக்கு அழிவும், எக்காலத்திலும் நீங்காத இகழ்வும் என்னொருத்தியினால் உண்டாகியதென்று யாவரும் நிந்திப்பார்களே; அப்படி நிந்திக்க இருப்பதை பார்க்கிலும் இறப்பது உத்தமம். மேலும், (கல்லென்றாலும் கணவன் புல்லென்றாலும் புருடன்) என்னும் உலகமொழிக்கிணங்க மனங்குவிந்து நிச்சயித்த மகிழ்நனைவிட்டு, மற்றொருவரைச் சொப்பனத்திலும் நினையார்கள் உத்தமகுணமுடைய ஸ்திரீகள். ஆகையால், அவர்கள் வருத்தமுற்று வனத்தில் இருந்தாலும் இன்னும் வர்த்தக்க தீவினைகள் வந்தாலும், அந்தச் சத்தியவானே நாயகன். நானே அவருக்குப் பத்தினி. என் வினையின்வண்ணம் நடக்குமே யன்றி வேறல்ல. நீங்கள் ஏதொன்றும் யோசிக்காமல் விவாகஞ் செய்து கொடுத்து விடுங்கள் என்று பிரகடனமாகச் சொல்லவும், தந்தை கேட்டு மனநொந்து தெய்வமே என்று தியங்கி, நாரதர் பாதங்களிற் பணிந்து நைந்தனன். அப்படி நைந்து வருந்திய வேந்தனை நாரதர் எடுத்திருத்தி, உய்யும்படி சொல்லுகின்றார்: ஓ வையகம்புரக்கும் மன்னனே! மகாலட்சுமிக்கு ஒப்பாகிய இச் சாவித்திரியானவள் மகாபதிவிரதை. நற்குணம் நற்சிந்தையிற் சிறந்தவள். மேலும், ஜன்மாந்திரத்திற் சத்தியவானுக்கும் புத்தியில் உயர்ந்த உன் பெண்ணுக்கும் சம்பந்தம் உண்டாயிருப்பதனால் இவள் அவன் விஷயத்தில் இவ்வளவு உறுதியாகப் பேசும்படி நேரிட்டிருக்கின்றது. எப்பொருட்கும் இறைவனாகிய ஈஸ்வரனுடைய திருவுளச்செயல் எப்படியோ! அஃது நாமறியோம். இந்த உத்தமியின் தபோபலத்தினால் அவனுக்குத் தீர்க்காயுசு உண்டானாலும் ஆகலாம். நீர் சஞ்சலப்படாமல் உமது பெண்ணின் எண்ணத்திற்கொண்ட வண்ணம் கலியாணம் முடித்து வைக்கக்கடவீர் என்று சொல்லி நாரதமகாமுனிவர் விடைபெற்றுக்கொண்டு போயினர்.

இப்பால் அசுபதி அரசனும் மாளவி தேவியும், பந்துக்களும், மந்திரிமார்களும், பெரியோர்களும் பற்பல நீதியுந் தருமமும் உலகவழக்கமும் எத்தனை விதத்திற் சொல்லியும், ஒன்றுங் கேளாமல் ஒரேமனதாய் யிருக்கின்ற சாவித்திரியை அரசனானவன் பல்லக்கில் எடுப்பித்துக்கொண்டு இரதகஜதுரகபதாதியும் மேற்கூறிய சகலரும் நெருங்கி வரும்படியாகப் பிரயாணமாகி, சாளுவதேசாதிபதி வந்திருக்குங் காட்டை விசாரித்துக்கொண்டு, அங்கே இவர்கள் யாவரோடும் போய் அவர்களைக்கொண்டு இரதம்விட்டிறங்கி, அவர்கள் முன்புசென்று நின்று நான் மத்திரதேசத்தை ஆளும் அசுபதி அரசனென்று தெரிவித்தனன். உடனே அச்சாளுவராஜன் அசுபதி ராஜனைக் கட்டி யணைத்துக்கொண்டு, உபசார வார்த்தைகள் பேசி ஆசனம் அளித்து, க்ஷேமலாபங்களை விசாரித்து, தனக்கு நேரிட்ட பொல்லாங்குகளையும் அதனாற் பத்தினிக்கும் புத்திரனுக்கும் உள்ள வருத்தத்தையும் ஒன்றேனும் விடாமற்சொல்லி, ஏது இவ்வளவு தூரம் என்பேரில் தயவுகொண்டு வந்தது என்று வினவினன். அதற்கு அசுபதியரசன் சொல்லுகின்றான்: ஐயா! நெடுநாளாகத் தவஞ் செய்து பெற்ற சாவித்திரி யென்னும் என் பெண்ணானவள் உம்முடைய குமாரனாகிய சத்தியவானைக் கலியாணஞ் செய்துகொள்ளக் கருதினாள். அதற்கு யாங்கள் சந்தோஷமுற்று வந்தோம் என்று சொல்லியதைச் சாளுவராஜன் கேட்டு நகைத்து, உம்முடைய பெண்ணையகம் எம்முடைய குமாரனை வரிக்கப்பெற்றதே எங்கள் பெரியோர்கள் செய்த பாக்கியம். ஆகிலும் எங்கள் செல்வங்களெல்லாம் பறந்து, சேனைகளியாவு மிறந்து, அரசாட்சியுந் துறந்து, ஆரணியத்திலிருந்து, யான் கண்களிழந்து கலங்கித் தவிக்குங்காலத்தில் எங்கள் கான்முளைக்குங் கலியாணஞ் செய்யவேண்டுமோ? என்று சாளுவராஜன் சொல்ல, அசுபதிமகாராஜன் அச்சாளுவராசனை நோக்கிச் சொல்லுகின்றான்: ஐயா! தேகமும், இளமையும், செல்வமும் நிலையோ? இன்பமும் துன்ப

மும் என்றும் இராது. இளைத்தவர் கிளைப்பார். கிளைத்தவர் இளைப்பார். மேடு பள்ளமாம். பள்ளம் மேடாம். ஓடம் வண்டியில். வண்டியோடத்தில். செல்வமும் வறுமையுந் தெரிந்தோர்க்கில்லை. வருகுவது தானே வரும். செல்வம் வந்தவர்களையும், அஃதின்றி வருந்தி நொந்தவர்களையும், அனுபவத்திற் பார்த்துங் கேட்டு மிருப்பதன்றி, சாஸ்திர விசாரணையினாலும், சாது சங்கப் பழக்கத்தினாலும், உள்ளத்தை யுள்ளபடி யறிந்திருக்கும் உமக்குச் சஞ்சலமே என்று தேற்றிச் சத்தியவானைப் பார்த்தான்.

அப்போதவன் அவ்வரசனை நோக்கி, ஓ மகாராஜனே! தாய்தந்தையரைச் சம்ரட்சணை செய்வதே தருமமென்று நாளைக் கழித்து நடாத்திவரும் எந்தனுக்கு, கால்விலங்கு பூட்டிக் கலங்கச் செய்ய நினைப்பது நலமல்லவே. இந்தப் பருவ மங்கையை நான் விவாகம் பண்ணிக்கொண்டால், இனி இவளுக்குவேண்டிய பக்குவ உபசாரங்களைச் செய்ய இதுகாலம் அல்லவே. பறப்போன் பயிரிழந்த கதையாய் முடியுமே. மேலும், ஒருபெண்ணை விவாகஞ் செய்துக் கொடுக்க நினைக்குந் தந்தையர்கள் கல்விக்கியானம் உள்ள பிள்ளையைக் கருதுவார்கள். தாய்மார் நிரம்பிய பாக்கியவானைத் தேடுவார்கள். பந்துக்கள் பழமையாகிய உறவை நாடுவார்கள். பருவப் பெண்கள் கை நிறைந்த பொன்னினுங் கண்ணிறைந்த கணவனைக் கூடுவார்கள். இவைகள் ஒன்றினும் உதவி இல்லாத என்னைக் குறித்தது ஏது காரணமோ? என்று கூறிய அப்புத்திரன்சொல்லை அசுபதிராஜன் ஆதரித்து, தாய் தந்தையர்-சுற்றத்தார்-நண்பினர்-இவை முதலியோரின் இயற்கையும், ஊழ்வினையின் றிறத்தையும், மற்றுமுள்ள உலக நடக்கையையும் எடுத்துக் காட்டி, அப்பா! நீ கானகத்திற் சென்று கனி கிழங்கு வகைகளைக் கொண்டு வந்து தந்தை தாயாருக்கு ஊட்டிவைக்கும் வரையில், இவர்களிடத்தில் இருந்து கால் கரம் முதலியவைகளைப் பிடித்து உபசரித்து, மிருக பயம் இல்லாமற் காத்து, தேகவாதை முதலியவற்றைக் கழிக்க விடுத்து, வஸ்திரங்களை மலினம் நீக்கி அலங்கரித்து, எப்போதுஞ் சமீபத்தில் துணையாயிருப்பதற்கு இந்தப் பெண் உதவியாய் இருக்கும். ஆதலால், இப்பெண்ணை நீ தர்மபத்தினியாகக் கொள்ளுக. உனக்கும் உன் தாய் தந்தையர்க்கும் மகா உதவியா யிருப்பள்

என்று சொல்லக் கேட்ட சத்தியவான் அதற்கிசைய, உடனே நல்ல முகூர்த்தம் நேமித்து, வேதபுங்கவர்கள் முன்னிலையில் சகல சம்பிரமங்களுடன் கன்னிகாதானமாகச் செய்து கொடுத்து, நாடு நகரங்கள்-யானை சேனைகள்-பாங்கர்-பாங்கியர் ஆடையாபரணங்கள் முதலிய யாவும் ஸ்திரீதனமாக அளித்து, மருமகனையும் மற்றையரையும் நோக்கி, நீங்கள் காட்டில் இருந்து வருந்துவானேன்? நாட்டுக்கு வந்து விடுங்கள் என்று வருந்தி அழைத்தனன். அப்படி யழைக்கவும் அவ்வரசனைச் சாலுவனேக்கி, ஐயா! எங்களுக்கு நல்லகாலம் வந்தபோது நாட்டுக்கு வருவதேயன்றி, இதன் மத்தியில் வரமாட்டோமென்று சொல்லினன். அப்பாலவன் தன் குமாரத்தியை நோக்கி, சில நீதி வசனங்களையும் பதிவிரதா மார்க்கங்களையும் கூறி, மகளையும் அம்மகளைப் பெற்ற காலத்தில் உண்டான மனமகிழ்ச்சியையும் அவ்வனத்தில் விட்டு விட்டு, மருகனிடத்திலுஞ் சம்பந்திகளிடத்திலும் விடை பெற்றுக் கொண்டு, தன் மனைவி முதலிய மற்ற யாவரோடும் மத்திர தேசம் வந்து சேர்ந்து வாழ்ந்திருந்தனர்.

இப்பாற் சாவித்திரியுஞ் சத்தியவானும் மகா விசுவாச முடையவர்களாய் பாலும் நீரும் மலரும் மனமும் நகமுஞ் சதையும் சொல்லும் பொருளும் எள்ளும் எண்ணெயும் கரும்பும் இரசமும் உடலும் உயிரும் எவ்வாறு ஒன்றையொன்று சம்பந்தித்திருக்குமோ அவ்வாறு மனம் பொருந்தி மகிழ்விற் சிறந்து மருவி வாழுங் காலத்தில் சாவித்திரி மூன்றுவது சாமத்தில் எழுந்து, ஸ்நான முதல் நித்திய விதிகளை முடித்துக்கொண்டு, தன் புருஷனை எழுப்பி, அவன் பாதங்களில் புஷ்பங்களினால் அர்ச்சித்து, பிரதட்சணம் வந்து நமஸ்கரித்து பண்டு பலாதிகள் கொண்டு வரும்படி வனத்திற்கு அனுப்புவள். பின்பு மாமன் மாமியாரை நித்திரை நீக்கி, அவர்களுடைய நித்திய கருமங்களுக்குத் துணையா யிருந்து, அவர்கள் திருவடிகளிலும் மலர் தூவிப் பணிந்து, வஸ்திர முதலியவைகளை நித்திய சுத்தி செய்து, இராத்திரி மிகுத்து வைத்த கிழங்கு கனி முதலியவைகளை ஆகாரமாகக் கொடுத்து, தண்ணீர் அருந்தி, அவர்களோடு தரும கதைகளைப் பேசிக்கொண்டு, அவர்கள் கால்களையுங் கரங்களையும் பிடித்துக்கொண் டிருக்கும்போது பத்து நாழிகைக்குமேல் நாயகன்

வருவன். உடனே கொண்டுவந்த பண்டு பலாதிகளை இருவருமாக் மற்றிருவருக்கும் ஊட்டி வைத்து; அப்பால் தன் காதலனுக்குக் களைதீரச் செய்து, அவனுண்டபின்பு தானும் புசித்து, அத்தையும் மாமனும் உத்தமி இவளெனச் சத்தியவான்மேலிருக்குந் தயையிலும் பதின்மடங்கு அதிகமாக வைத்துப் பாராட்டவும் இவள் காலிற்றைத்த முள் தங்கள் கண்களிற் றைத்ததைப்போல் அன்பும் பட்சமும் அதிகமாகக்கொண்டு ஆதரிக்கவும் கற்புக்கரசாகச் சொல்லும் அருந்ததியே இவளென அகமகிழ்ந்து யிருக்கவும் நடந்து வருவள்.

அந்நாளையில் தனக்கு நாரதமுனிவர் நவின்ற வாக்கியத்தை மனதில்யிருத்தி வருந்தும்படியான இத்தையல் ஒவ்வொரு நாளாக கணக்கிட்டு, முந்நூற்று ஐம்பத்தாறுநாள் சென்றுபோக இன்னும் நாலுநாளிருக்கின்றது நமது நாயகனுக்கு ஆயுளென்று கருதி, மிகுந்த ஜாக்கிரதையுடனே மாமன் மாமி உத்தரவின்பேரிற் கௌரிநோன்பு யிழைக்கும்படி சிந்தித்து, வேதவிதிப்பிரகாரம் மூன்றுநாள் அன்னபான முதலிய யாவற்றையும் நீக்கி நித்திரையை அகற்றி, மௌனங்கொண்டு பூசித்து, மூன்று தினமுங் கழிந்தபின்பு நான்காவது நாள் உதயத்திற்கு முன் ஸ்நானஞ் செய்து, தன் கணவனைப் பணிந்து நோக்கி, தேவரீருடன் யானும் காட்டுக்கு வருகிறேன் தடைசொல்லாமல் அழைத்துப்போகவேண்டுமென்று சொல்லினள். அதைக்கேட்ட சத்தியவான் திடுக்கிட்டு தனக்குப் பத்தினியின் மீதில் இருக்கும் உரிமையினால் அவளைப் பரிந்து நோக்கி, பெண்ணே! சத்தியைப் பூசித்து மூன்றுநாளாகச் சலபானம் இல்லாது இருக்கும் நீ இன்று பாரணை செய்தால் நாளைக்கு அழைத்துக்கொண்டு போகிறேனென்றுசொல்லினன். அப்படி சொல்லிய நாயகனை சாவித்திரி நோக்கி, நாளை என்பது நம்முடைய நாளோ? நமனுடைய நாளோ? அஃதின்னவிதமென நாமறியோம். அன்றியும், கௌரிநோன்பு நோற்பவர்கள் மூன்றுநாள் உபவாசம் இருந்து நான்காநாள் இராத்திரி தீபதரிசனம்செய்து, அப்பால் பாரணை செய்யும்படி வேதவிதியிலிருக்கின்றது. ஆகையால், இன்றுபகற்போதைக் கழிக்கவேண்டி காட்டுக்குவருகிறேன் என்று சொல்லக்கேட்ட சத்தியவானவன் என் தாய் தந்தையினுடைய உத்தரவின்பேரில் வருகின்றதானால் வரலாமென்று சம்மதிக்க, அதுகேட்ட சாவித்திரி அம் மாமன் மாமியாருடைய பாதங்களிற் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு அவர்களுடைய ஆசீர்பெற்று வணக்கமுடனின்று எனக்கு ஒரு வரந் தரவேண்டுமென்று கேட்டனள். அதற்கவர்கள் புளகாங்கிதமுற்று, அம்மா! உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் என்று சொல்ல, மீண்டும் பணிந்தெழுந்து உங்கள் குமாரனுடன் நானுங் காட்டுக்குப் போய் வருகிறேனென்று சொல்லினள். அவ் வார்த்தையைக் கேட்டலும் அவர்கள் புளகாங்கிதராய்ப் பூரித்து நல்வினைவசத்தினால் உடன்பட்டு புத்திரனை அழைத்து, அப்பா! உன் பத்தினி மூன்று நாளாய் உபவாசமாகயிருந்தமையால் பத்திரமாக அழைத்துக்கொண்டுபோய் வெகு சலுதியில் க்ஷேமகரங்களோடும் வரக்கடவீர்கள் என்று வாழ்த்தி அனுப்பி வைத்தார்கள்.

உடனே அந்த ஸ்திரீபுருஷர் இருவருஞ் சந்தோஷத்துடன் வனத்திற்குச்சென்று அங்குள்ள மலைகளும், அம்மலையருவிகளின் பெருக்கமும், மரங்களின் நெருக்கமும், மலைத்தேன்களின் மிகுதியும், காந்தள் முதலிய புட்பங்களின் மலர்ச்சியும், வேடுவர் குறவர் முதலாகிய பெண்களின் விளையாட்டும், யானைகளின் கலிப்பும், புலி முதலிய மிருகங்களின் ஒலிப்பும், காட்டுப்பன்றிகள் கொம்புகளினால் உழுத நிலங்களில் வேடப்பிள்ளைகள் தினைகளை விதைக்க முளைத்துக் காய்த்துக் கிளி முதலிய பட்சிகள் கதிர்களைக் கொய்துக்கொண்டு போவதும், குறிஞ்சிநிலப்பெண்கள் ஆயாலோட்டும் ஓசையும், அவர்கள் பேசிக்கொள்ளும் பாஷையும், காட்டெருமைகள் பசுக்கள் கும்பு கும்பாயக் கூடி மேய்ந்து இருமாந்து மலைப்பாறைகளிற் பீரிடச்செய்யும் பால்களும், இறால் கிழிந்து வழிந்துவருந் தேன்களும், மின்னலைப் போல தாவிவரும் மான்களும், பெருக்கெடுத்தோடிவரும் ஆறுகளும், கொடிகள் செடிகளிடத்திற் படர்ந்து மேற்கட்டியைப்போல நெருங்கியிருக்குந் தூறுகளும், புள்ளாங்குழலின் நாதமும், பூவைகளின் கீதமும், குயிற்கூவுகிறதும், மயிலாடுகிறதும், மலைப்பாம்புகள் புரண்டு கிடப்பதும், மலர்கள் செறிந்திருப்பதும், காய்-கனிகள் முதலிய யாவும் நிறைந்திருப்பதும் ஆகிய அவ்வனத்தின் வளப்பங்களை எல்லாஞ் சாவித்திரிக்கு காண்பித்து, இருவருங் கண்களித்து மனமகிழ்ந்து அப்பாற் சென்று இலைகள் காய்கள் கனிகள் நல்ல நல்ல

மணமுடைய மலர்கள் இவைகளையெல்லாம் பறித்துக் கொடுத்துக்கொண்டே வரும்போது சாவித்திரியானவள் பருந்துடன் நிழல் செல்வதைப்போலும், நாடாவினுடன் நூல் செல்வதைப்போலும், உடலுடன் உடற் செல்வதைப்போலும் பிரியாமல் தொடர்ந்து உலாவி வந்தனள்.

அப்போது சத்தியவான் பற்பல கனிகளையுடைய ஒரு விருக்ஷத்தைக் கண்டு, அதில் ஏறுவதற்கு விரும்பி, அதற்குத் தன்னால் முடியாமல் தனது பத்தினியை நோக்கி, பெண்ணே! இப்போது என் கரங்களுங் கால்களுஞ் சோருகின்றன; சரீர முழுமையும் நடுக்கங் கொள்கின்றது; இடை சாய்ந்து போகின்றது; கண்கள் சுழன்று ஒளிமழுங்குகின்றது; சுவாசந் திணருகின்றது என்று சொல்லி ஓய்ந்து சாய்ந்தான். அப்படி சாய்ந்த காதலனைச் சாவித்திரி தன் மடியின்மீது சிரத்தை நாட்டி, மற்ற உடல் முழுவதும் பூமியிற்படிய வஸ்திரத்தை விரித்துப் படுக்கவைத்துக்கொண்டு, பராசத்தியை உச்சரித்தவளாய் நான்கு திக்கு நோக்கி ஏங்கியிருக்குஞ் சமயத்தில் இயமதரும ராஜனானவன் சிரத்தினில் முடியும், செவியினிற் பிரகாசிக்குங் குண்டலமும், வெண்டாமரை மலர் போன்ற கண்களும் இருள் திரண்டதையொத்த உடலும், கரத்திற் சூலபாச தண்டாயுதமுங்கொண்டு திவ்யகந்த கஸ்தூரி பரிமள மலர்மாலை யிலங்க, அநேகம் எமபடர்கள் தொடர்ந்துவந்து வணங்கி விலங்க, எருமைக் கடா வாகனத்தை விட்டிறங்கி, பதிவிரதையாகிய சாவித்திரியம்மனை நெருங்கி அவ்வம்மனருகில் வர உடல் நடுங்கி, சற்று நிதானித்து மெதுவாக வந்து; தன் அதிகாரத்தைச் செலுத்தும்படியாக நினைத்து, சத்தியவானுடைய பிராணனைக் காந்தம் இரும்பை இழுக்குந் தன்மைபோற் கைக்கொண்டு தன் வாகனத்திலேறி நடந்தான். அப்படி நடப்பதைக் கண்ட சாவித்திரி தன் மடியிலிருந்த களேபரத்தின் தலையைப் பூமியில் வைத்துவிட்டு எழுந்து, தலைவனை இழந்து தரணியிலிருப்பது பிணத்திற் கொப்பாகு மல்லவாவென்று சிந்தனை செய்து, தன் கண்களுக்கு நேராகக் காணுகின்ற மகா புருஷனுடன் தொடர்ந்து போயினள். அப்போது மறலி திரும்பி பார்த்து, நீ யாரம்மா யானவன் என்று வினவினன். அதற்கவள், சுவாமி! நான் சாவித்திரி யென்னும் பெயரினள். ஆனால், என் பிராண நாயகனுடைய பிராணனைக் கைக்கொண்டுபோகின்ற நீர் ஆரையா வென்று கேட்டனள். அதற்கு நமனானவன் நகைத்து, பதிவிரதைகளின் மகத்துவத்திற்குச் சந்தோஷங்கொண்டு இதனைச் சொல்லுகிறான்:

அம்மா! நான் சம்ஹாரத்தொழில் செய்கிற இயமன். உம்முடைய பதிக்கு இன்று பதினைந்து நாழிகையுடன் ஆயுள் பரியாய் விட்டது. ஆயுள் முதிர்ந்தால் எப்பேர்ப்பட்டவர்களையும் இறக்கக் காண்பதல்லாமல், யிருக்கக் காண்பதில்லை. ஆனாற் பாபிகளாகிய பேர்களை என்னுடைய தூதர்கள் பந்தித்துக்கொண்டு வருவார்கள். புண்ணியசாலிகளை நான் வந்து கொண்டுபோவேன். ஆதலால் இந்தச் சத்தியவான் உத்தமனானதாலும், பத்தினியாகிய உமக்கு நாயகனானதாலும், நானே வந்து கைக்கொண்டேன். பூமியில் நாமரூபங்களாகத் தோற்றியதெல்லாம் அழிந்து போமென்று தேவரீருக்குத் தெரிந்திருக்கும். மேலும் நான் தேவன்; நீர் மானுடம். உம்முடைய நற்குண நற்சிந்தையினால் என்னைக் காணப் பெற்றீர். உமக்கு நிகராக உரைப்பதற்கு ஒருவருமில்லை என்று கொண்டாடினவனாய் நீரேன் கால் வருந்த வருகின்றீர்? இவ்விடத்திற்றானே நில்லும் நான் போகின்றேன் என்று சொல்லிச் செல்லவும், இந்த அம்மனானவள் பின்றொடர்ந்து, ஐயா! நாங்களிருவரும் இகத்திலுடலும் உயிருமாய் மிக உரிமையோடுங் கூடிப் பதி யென்றும், பாரியை யென்றும் பெயரில் மாத்திரம் இரு பிரிவாய் இருந்த எங்களில், உடலை மாத்திரம் விட்டு உயிரை கொண்டுபோவது ஞாயமல்லவே? என்னையும் கூடக் கொண்டுபோவது உத்தமம். இனி இவ்விடத்தில் யான் இருந்து பிழைக்கும் காரியம் யாது? என் புருஷப் பிரசாதமாகிய மஞ்சள் குங்குமம் - மலர் மனம் இவை முதலிய வெல்லாம் போய், இனிக் கைம்பெண்ணென்று சொல்லும்படி இவ்வுலகத்திலிருப்பதில்என்ன பயன்? என்று இயம்பக் கேட்ட இயமன் அவ்வம்மனைப் பார்த்து, அம்மணி! ஆயுள் முடியாமல் உம்மை அழைத்துக்கொண்டு போக எனக்கு அதிகாரம் இல்லை. நீர் என்னைத் தொடராதீர். நில்லும்; நில்லும்; ஓ நல்ல குணமுடைய நாயகியாரே! உமக்கு உமது புருஷன் தவிர வேறு வரங்கள் ஏதாகிலும் வேண்டியிருந்தாற் கேளும் தருகிறேன் என்று

கூறிய மொழியை சாவித்திரி கேட்டு, ஆண்டவனே என் மாமனாராகிய சாலுவராஜனும் மாமியாருக்குங் கண்கள் தெரியும்படியாகக் கடாக்ஷிக்கவேண்டும் என்று கேட்க, அப்படியே கொடுத்தேன் என்று சொல்லி மறலியானவன் நடந்தான். இந்தப் பெண்ணரசியுங் கூடத் தொடர்ந்தாள். அப்படி தொடர்ந்து வருவதை எமதருமராஜன் கண்டு, ஏனம்மா! மிருகங்கள் நிறைந்த காட்டில் ஒண்டியாக வருகின்றீர்? நீர் மெத்தவும் இளைத்திருக்கின்றீர்? வியர்வை பெருக வருந்தி வருவானேன்? நின்றுவிடும் என்று கூறவும், அதைக் கேட்ட சாவித்திரி சொல்லுகிறாள்:

ஓ சூரியபகவானுக்குஞ் சாயாதேவியாருக்குந் தோன்றிய தோன்றலே! நாயகனில்லாத வாழ்வு நட்டமென்றும், புருடனை யிழந்த பூவை பின்னமென்றும், எல்லோரும் பழிக்கவும், என்போலொத்த பெண்கள் யாவருஞ் செழித்துக் களிக்கவும், நான் கண்ணீர் சொரிந்து தத்தளிக்கவுஞ் செய்வது உமக்கழகல்ல. உயிர்போன்ற நாயகன் என்னை ஒருக்காலும் வஞ்சகஞ் செய்யார். உத்தமனே! நீர்தான் என்னைப் பிரித்துவிட்டுச் செல்லுகின்றீர். இது உமக்கு நீதியல்ல. என்னையும் என் புருடனோடு அழைத்துக்கொண்டு போவீராகில் உமக்குக் கோடி புண்ணியமுண்டு என்று அடியிணைகளில் அலறிவிழுந் தழுதனள். அந்த உத்தம ஸ்திரீயை மறலி நோக்கி, அம்மா! அணைகடந்த வெள்ளம் அழைத்தால் வருமோ? சிருஷ்டி திதி சம்ஹாரமென்னும் மூன்றுத் தொழிலும் மாறுமோ? தெரிந்துந் தெரியாமல் வருந்துகின்றீர். யான் முடிவறிந்து கைக்கொண்ட உன் காதலனுடைய ஆன்மா திரும்பமாட்டாது. என்னை நீர் வெறுத்துக் கொள்ளவேண்டாம். இவ்வுயிர் தவிர உமக்கு வேண்டியவரம் இன்னும் ஏதாகிலுங் கேளுந் தருகிறோம் என்று சொல்லவுஞ் சாவித்திரி பணிந்தெழுந்து, ஆண்டவனே! என் மாமன் சாலுவராஜனுக்குப் பழையபடி இராச்சிய சம்பிரமச் செல்வங்களெல்லாங் கிடைக்கும்படியாக அருள்புரிய வேண்டுமென்று வேண்டினள். அதற்கப்படியே கொடுத்தோமென்று சொல்லித் தென்திசைக்கோன் நடக்க, சாவித்திரி அவ் வியமனிடத்தில் இரண்டுவித வரம் பெற்ற இனிமையினால் இரக்கமுள்ளவரென்றுதெரிந்து, அவரை மீண்டும்விடாமல் அடர்ந்து நெடுந்தூரம் வரையில் அவனைத் தொடர்ந்து போவதாயினள். அது கண்ட காலமூர்த்தி தனது வாகனத்துடன் நின்று, தாயே! ஏனிப்படி வருந்தி வருகின்றீர். நானொரு உறுதி சொல்லுகின்றேன் கேளும்: இப்பூமியில் தந்தையின் கருப்பத்தில் இரண்டு மாதமும், தாயின் கருப்பத்தில் பத்துமாதமும் இருந்து, இவ்வுலகத்துதயமாகின்ற மானிடர்கட்கும் மற்ற உயிர்கட்கும் ஜன்மிக்கும்போதே ஆயுள் இவ்வளவென்று நிச்சயித்திருக்கும். அது என்னுடைய கணக்கில் வந்து விட்ட பிறகு நான் காலம் பார்த்திருந்து, எவர்கள் எப்படி துன்புற்ற போதிலுங் கொண்டுவந்து அவரவர்கள் நன்மை தீமைக்குத் தக்கதாய் நடாத்துவேன். தேவர்களாலும் மற்ற யாவர்களாலும் விதித்த விதியினைத் தள்ளி நடக்கக் கூடாது. இத்தேகம் வினையொழிந்தால் அரை நிமிஷமும் நிற்காதென்று மேலோர்கள் சொல்லுமொழியை நீர் கேள்வியுற்றது மில்லையோ? ஆகையால், எவர்கட்கும் வந்தவேளை தீர்ந்தால் இங்கு என்ன காரியம்; நீரிதை மறந்து உமது காதலனை நாடுகின்றீர்; நானும் நாடி நீரும் நாடுகிறதிற் காரியமில்லை, என்னாலாவது ஒன்றுமில்லை. தேவரீர் மனதை திடஞ் செய்து கொண்டு திரும்பும்; என்னை நீர் பின்பற்றி வருதல் உத்தமமல்ல; எனக்குச் செல்ல விடை தரும் என்றனன்.

அதுகேட்ட குணவதியானவள் தீர்க்கதெண்டஞ் செய்து, தெய்வமே! மலையினுயர்ச்சி மலைக்குத் தெரியாது என்பதுபோல தேவரீருடைய வல்லமையைத் தேவரீர் தெரியாமற் பேசுகின்றீர்; நான் சிறியவளானாலும் அசுவபதி மகாராஜனுடைய புத்திரி; சாவித்திரி என்னும் பெயரினையுடையவள்; என் தந்தையினிடத்திற்கு நித்தியம் வரும்படியாகிய உத்தமர்களைப் பணிந்து, முத்தொழிலின் பிரதாபத் தன்மைகளைச் சற்று உணர்ந்திருக்கின்றேன். அவைகளிற் சாத்துவிக குணத்தைக் கொண்டு பிரமதேவர் இவ்வுலகத்தைச் சிருஷ்டிக்கவும் இராசத குணத்தைக் கொண்டு மகாவிஷ்ணுதேவர் இரட்சிக்கவும், தாமத குணத்தைக்கொண்டு தேவரீர் சம்மரிக்கவும் இருக்கின்றமையால், மற்ற இரண்டு குணந் தேவரீரைவிட்டு நீங்கினதில்லை. ஆதலால், உமக்கு மேலாகிய தெய்வங்களுமில்லை. இந்த மூன்று தொழிலும் உம்மால் நடக்குமென்று உயர்ந்தோருரைக்க உணர்ந்திருக்கும் யான் சம்பத்து முதலியவற்றை விரும்பாமல் என் புருஷ

னுடன் என்னையும் கொண்டு போகும்படியாய் உம்மைச் சரணமடைந்தேன். ஓ கருணைக்கடவுளே! உன்னிஷ்டப்படி நிறைவேற்றவேண்டுமென்று வணங்கினள், அப்படி வணங்கிய கன்னியை அந்தகன் நோக்கி, தாயே! உம்மைக் கொண்டுபோகுங் காலம் இன்னும் பின்னால் இருக்கின்றது. இப்போது கொண்டு போவதற்கு என்னால் இல்லை. ஆதலால், உமக்கு வேண்டிய வரம் இன்னும் ஏதாகினுமிருந்தாற் கேட்டுக்கொள்ளும், தடையில்லாமற் றருகிறேன் என்று கூறக்கேட்ட அப்பொன்னனையாள் அவனைப் போற்றி செய்து, சுவாமி! என் தந்தைக்குச் சிந்தை குளிரும்படியாக நூறு மைந்தரைத் தந்தருள வேண்டுமென்று கேட்டனள். அதற்கும் அவன் தந்தேன் தந்தேனென்று மொழிந்து, இந்திரஜாலத்தைப்போல் அந்தரத்தில் மறைந்து போயினான். அப்பால் சாவித்திரியானவள் சிந்தை கலங்கி வந்தவழி தெரியாமல் மயங்கி, தருமமூர்த்தி எந்தவழி மறைந்தார் என்று ஏங்கி, தென்திசையை நாடி, ஓட்டமும் நடையுமாக ஓடி வருவதாயினள். அதை அந்தகன் கண்டு மனந்தாளாமல், முன்னம் மார்க்கண்டேயரால் தனக்கு நேரிட்ட விபத்தை யாலோசித்து, தன்னுடைய வாகனமுங் காலெழாமல் நிற்பதைக் கண்டு மகா பதிவிரதைகள் மனநொந்தால் ஏதாமோ? எப்படி விளையுமோ? என்று நைந்து, அச்சாவித்திரி கண்ணுக்குத் தோன்றினன். அப்படி தோன்றலும், அப்புண்ணியசாலி கண்டு தெண்டனிட்டு நிற்க, அவளைப் பார்த்து எமதருமராஜன் சொல்லுகின்றான்:

ஓ புண்ணியஸ்வரூபியே! இவ்வுலகத்தில் எத்தனைபேர் வைதாலும் வயிறெரிந்தாலும் பயப்படாத நான் உமக்குப் பயப்பட்டேன். ஏனென்றால், கற்புடைய தேவியான நீர் சிங்கங்கள்-புலிகள்-யானைகள்-கரடிகள்-செந்நாய்கள் இவைகளோடு துட்டவேடுவரும் நிறைந்திருக்குங் காட்டில் ஒண்டியாய் வருவது ஞாயமல்ல. உம்மை நான் விட்டுப் போவது தருமமல்ல. மேலும், நீர் கேட்டுக்கொண்ட வரங்கள் எல்லாங் கொடுத்தும், இன்னமும் என்னைத் தொடர்ந்து வருத்துவது முறைமை அன்று. தாயே! மலரைக் கசக்கி மணங்கொள்வார் உண்டோ? அதிக ஆசை அதிகநஷ்டம்; இதையறியாமற் பேராசைகொண்டு என் பின்னால் வருவது தரும விருத்தம். வீணாலோசனை வேண்டாம் நில்லும் என்று சிறிது கடிந்து சொல்லவுஞ் சாவித்திரி நமஸ்கரித்து, சுவாமி! இப்போதுதான் எனக்கு நல்லகாலம் பிறந்தது. என் பேரிற் கோபம் வராதவரையிலும் நான் பிழைத்திருந்தேன். உமக்குக் கோபம் வந்தபடியால் நானும் என் புருஷனுடன் கூடவந்து கூடிவாழ்வேன் என்ற வார்த்தையைக்கேட்ட நமன் குலுங்க நகைத்து, என்னம்மணீ! உன்னுடைய கருத்து என்ன சொல்லென்று வினவினான். அதற்குச் சாவித்திரி அவனைத் தொழுதெழுந்து, ஐயா! உத்தமர்களைக் கண்டு தெரிசித்தாற் சகல வினையுந் தீர்ந்து சௌக்கியத்தை யனுபவிப்பார்களென்று வேதபுராணாதிகள் முறையிடும்போது, எவர்களுக்குந் தரிசனமாகாத நீர் எனக்குத் தரிசனமானது மல்லாமல், உம்முடன் வார்த்தையுமாடி வரமுங் கொடுத்திருக்கின்றீர். அப்படியிருக்க, நான் அமங்கலமாக இருந்தாற் பெரியோர்கள் சொல்லிய தருமநூல்களும் வேதபுராணங்களும் பூமியில் நிலைக்காதே; அவைகள் நிலைக்கும்படி செய்து பெருமை அடைவதே புண்ணியம். ஓ தேவதேவனே! எனக்கு வேண்டிய வரங்கொடுத்தோம் என்று திருவாய்மலர்ந்தீர். தேவரீர் எனக்கு முன்புகொடுத்தருளிய மூன்று வரத்தைவிட இன்னமும் மேலாகிய பாக்கியங்களைக் கொடுத்தாலும் பிரேதத்திற்குப் பூமாலையோடு பொன்னாபரணங்களைப் பூட்டிப் பார்ப்பதுபோல் இருக்குமே தவிர என்ன பலனைக் கொடுக்கும். ஓ இறைவனே! என் புருஷனையுந் தயவுசெய்து விடுப்பீராகில், நீர் கொடுத்த பாக்கியமெல்லாம் பிரயோசனப்படும். ஆனதால், என் நாயகனும் நானும் எப்போதும் எவ்வுலகத்திலும் பிரியாவிடையாய் இருக்கும்படி எனக்கு மாங்கிலியப் பிட்சை அருள்புரிந்து இரட்சிக்க வேண்டும். ஓ ஜீவகாருண்யம் உடைய தெய்வமே! என்று வாழ்த்தி ஏத்திப் பணிந்த பெண்ணரசியை எமதருமமூர்த்தி பார்த்துப் பூரித்து, அனலைக்கண்ட மெழுகுபோல் உருகி, பருப்பத ராஜகுமாரியான பராபரையே இவளென்று கருணை சுரந்து, இவர்களாற் பூலோகத்தில் தானதரும பரோபகார முதலியவை பெருகி, இல்லறந் துறவறமென்னு மிரண்டும் விளங்கி விருத்தியாகுமென்று கருதி, அகத்தில் அன்புகொண்டு சாவித்திரியாரைப் பார்த்து இதனைச் சொல்லுகிறான்:

தாயே! நீர் சிறந்த உத்தமி; ஆதலால் உமது எண்ணத்தை நிறைவேற்றிக் கொண்

டீர் மெத்தவும் மகிழ்ந்தேன். இப்பவும் உம்
முடைய நாயகன் பிழைக்கவும் நானிலம் வாழ்
த்தவும், சகல நலங்களையும் நீர் பெற்று வாழும்
படியாகவும் வரம் அளித்தேன். இருவருங்
கூடி இசையுடன் வாழக்கடவது என்று
சொல்லி ஆசீர்வதித்தேகினன். அது கேட்ட
சாவித்திரியம்மன் அகமகிழ்ந்து சாஷ்டாங்க
மாகத் தெண்டம் செய்து விடை பெற்றுக்
கொண்டு திரும்பி, அதிக விரைவாக வந்து
முன்னிருந்த இடத்தில் உட்கார்ந்து, புருட
னுடைய சிரத்தை எடுத்து மடிமீது வைத்து
முகத்தை பார்த்துக்கொண்டு இருக்கும்போது
அச்சத்தியவான் நித்திரை நீங்கி எழுந்தவ
னைப்போல் எழுந்து தன்னுடைய ஸ்திரீயி
னது முகத்தைப்பார்த்து, ஓ பெண்ணே! நான்
அயர்ந்து நித்திரை செய்துவிட்டேன் நீ
ஏன் எழுப்பாமற் போனாய்? பகற்போதும்
போய்விட்டதே, தாய் தந்தை வருந்துவார்
களே, ஓ அருந்ததிக்குச் சமானமாகிய பெண்
ணே! ஒரு திவ்ய புருஷன் என்னைக் கைக்
கொண்டுபோகவும், ஒரு ஸ்திரீயானவள் பின்
தொடர்ந்து பிரிய வசனஞ் சொல்லி மீட்டுக்
கொண்டு வரவும் சொப்பனங்கண்டு விழித்துக்
கொண்டேன். இஃதென்ன குறிக்கே தெரிய
வில்லை என்று சொல்லினன். அம்மொழியைக்
கேட்ட சாவித்ரியானவள் நாயகன் முகத்தை
நோக்கி நகைத்து, நீர் கண்டது கனவு அல்ல.
நிசமாகிய காரியம். நாளைக்கே உம்முடைய
நகரஞ் சேர்ந்து இராஜரீகஞ்செய்ய போகின்
றீர். குறைவு ஒன்றுமில்லை. எழுந்து வாரும்
என்று சொல்லி அழைத்துக்கொண்டு இருவ
ரும் வேகமாக நடந்து வரும்போது, இந்நே
ரம் அந்த முதியோர் நம்மைத் தேடுவார்களே
இருவருக்குங் கண்கள் தெரியாதே, அவர்களை
உபசரிக்க நம்மிருவரில் ஒருவராகிலும் அவ்வி
டத்தி லிராமல் வந்துவிட்டோமே. பசியி
னால் வருந்துவார்களே. விடை நாயகனும்
விடை ஸ்திரீயும் ஆதலால் வனங்களிற் சம்பி
ரம சந்தோஷமாக இருந்து விட்டார்களோ
நம்மை மறந்துவிட்டார்களோ? என்று நாடு
வார்களே. இதுவரையிலும் கட்டிக் காத்திரு
ந்து நாம் பாடுபட்டதெல்லாம் இன்று வீணா
கப் போய்விட்டதே; பாழாகிய நித்திரை பகை
யாய் நேரிட்டதே என்று புலம்பிக்கொண்டு
வருவதானார்கள்.

இவர்கள் செயல் இவ்வாறாக வனத்தில்
இருந்த தந்தைதாய் இருவரும் மனம் நொ
ந்து வாடி, தாங்கள் இருக்குமிடத்தில் நிழல்
சாய்வதை நாடி, ஐயோ! பொழுது போய்விட்
டதே. எம் புத்திரனையும் மருமகளையும் இது
வரையிலும் வரக்காணோமே. மிருகங்களினாற்
பயமுண்டோ? ஸ்திரீயையும் கூடக் கூட்டிக்
கொண்டு போன விதத்தினால் அபாயம்
உண்டோ? யாதேனுமோர் மன வெறுப்பினால்
அகன்றாரோ? நாமிருவரும் வேடிக்கையாய்
வாழ்வோம் என்று சென்றாரோ? மரங்களில்
ஏறி விழுந்து வருந்தினாரோ? கனி முதலிய
கிழங்குகள் அகப்படாமற் பொருந்தினாரோ?
வழி தெரியாமல் மயங்கினாரோ? மலைப்பாம்பு
களினால் தியங்கினாரோ? மற்றெதினால் வருந்
துகின்றாரோ? இன்னும் வரக் காண்கிலோமே;
எங்களுக்கு ஏதோ தற்செயலாய்க் கண்கள்
தெரிகின்றனவே? இதென்ன ஆச்சரியம்!
என்று மயங்கி இருவருங் கூவிக்கொண்டு வழி
தெரிந்து நடந்து, தங்கட்கெதிர் வருவோர்க
ளைக் கண்டுகேட்டு, இப்படியாக வருந்தி வாடி
வருஞ் சமயத்தில் மகனும் மருமகளும் வந்து
சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, தாய் தந்
தையர்க்குக் கண்கள் தெரிவதைக் கண்டு சந்
தோஷங் கொண்டார்கள். உடனே அத் தாய்
தந்தையர் மைந்தனையும் மருமகளையும் வாரி
அணைத்து, மடிமீது இருத்தி முத்தமிட்டு,
காலமேபோன நீங்கள் இதுவரையிலும் வரா
மல் இருந்த காரணம் என்னவென்று கேட்
டனர். அதற்குச் சாவித்திரியானவள் சொல்
லுகின்றாள்: ஓ மாமா! ஓ மாமி! நான் அசுவதி
மகாராஜனுக்கும் மாளவ தேவியாருக்கும் வர
த்திற் பிறந்து வளரும்போது, குதிரையின்
மீது வந்த உங்கள் புத்திரனாகிய இச்சத்திய
வானைக்கண்டு இவரே நமக்கு நாயகன் என்று
எண்ண முற்றிருந்தேன். அது காலையில் எங்
கள் தந்தை தாய் இருவரும் விவாகஞ் செய்ய
எத்தனித்தபோது நாரதமஹாமுனி சாக்ஷி
யிற் சத்தியவானே நாயகன் என்று சித்தமா
கச் சொன்னேன். அப்போது நாரத பகவான்
என் தந்தையைப் பார்க்க, இன்னும் ஒரு வரு
ஷம் இருக்கின்றது அந்தப் பிள்ளைக்கு
ஆயுள். அப்பால் இறந்து போய் விடுவான்
என்று சொல்லினர். அப்படி சொல்லக் கேட்ட
என் தந்தையுந் தாயும் என்னை வேறே புரு
ஷனை நேமித்துக் கொள்ளச் சொன்னார்கள்.
அதற்கு நான் சம்மதிக்காமல், அவரே நாய
கன் நானே நாயகி என்று சொல்லினேன். அப்
போது என் தாய்தந்தையர் கோபங் கொண்டு,
பந்துக்களுடன் கானகத்திற்கு வந்து, உங்க

ளைச் சம்மதப்படுத்திக் கலியாணஞ் செய்து வைத்தார்கள்.

இப்படியிருக்க, அன்றுமுதல் முன்றைய வரையிலும் முந்நூற்றைம்பத்தாறு நாளும் கழிந்து, மூன்று நாள் கௌரியை நோக்கி விரதம் இருந்து, இன்று கடைசியாகிய நான்காவது நாளாகையால், உங்கள் உத்தரவின் பேரில் காட்டுக்குப்போகிற கணவனுடன் கூட போய், என் புருஷனுடைய பிராணனை வாங்கிக்கொண்டு போகின்ற இயமதருமராஜனைக் கண்டு வணங்கி, என்னையும் கொண்டு போம் ஐயனே என்று வருந்தினேன். வருந்திய எனக்கு அவர் மூன்று வரமும் கொடுத்து, என் நாயகன் உயிரையும் அருளச்செய்து, அப்பால் மறைந்து போயினர். பின்பு யான் அவர் சென்ற திக்கு நோக்கித் தெண்டனிட்டுத் திரும்பி, என் கணவனுடன் கூடி வருவதற்கு பொழுது போய்விட்டது. தேவரீர்கள் கோபம் கொள்ளவேண்டாம் என்று பணியும் மருமகளாகிய திருமகளை மார்போடணைத்து மகிழ்ந்தார்கள். அந்தக் காட்டில் வாசஞ் செய்யும் ரிஷி பத்தினிமார் யாவரும் அச் சாவித்திரி மகத்துவங் கேட்டு நடுநடுங்கி, அற்புதம்! அற்புதம்! என்று ஆச்சரியங்கொண்டு, இப்படியும் புண்ணியவதிகளுண்டோ வென்று தங்களைத் தாங்களே இகழ்ந்துகொண்டார்கள். அக்காலையில் மாமனாரும், மாமியாரும் மருமகளுடைய மகத்துவங்களை நினைந்து நினைந்து உருகி, ஓ அம்மணி! ஓ மனோன்மணி! ஓ உருக்குமணி! ஓ தெய்வசிகாமணி! ஓ சிரோமணி! ஓ சிந்தாமணி! ஓ மாசிலாமணி! நீ எங்களுக்கு மருமகளாக வாய்த்தபோதே இனி ஒரு குறைவுமில்லை. எங்கட்கு கெட்டுப் போய்விட்ட கண்ணை வரும்படி செய்த கேடுபடாத கண்மணியே! நீங்கிப்போன பாக்கியமும் ஓங்கச்செய்த சத்திய வாக்கியமே! என்று மகிழ்ந்து புகழ்ந்து வாழ்த்தி, மகாரிஷிகளுக்கு அன்னதானஞ்செய்து, மருமகளையும் பாரணை செய்யச் சொல்லி, பேரானந்த மென்னும் பெருக்கத்தினால் அவ்விராப் பொழுதைக் கழித்து, விடியற்காலத்தி லெழுந்து நித்திய விதி கருமங்களை முடித்துக் கொண்டனர். அப்போது பெரியோர்கள் முதலிய யாவர்களும் வந்து வந்து, சாவித்திரியினுடைய சரித்திரத்தைக்கேட்டு மனமகிழ்ந்து ஆசீர்வதித்து வாழ்த்தவும், அவர்களை இவர்கள் போற்றவும், அவ் வனங்களில் இருக்கும் மரங்களியாவும் மலர்ந்து மணங்கள் வீசவும், மிருகங்கள் முதலாகிய பட்சிகள் ஒன்றுக்கொன்று பகையில்லாமல் உலாவவும், தேவர்கள் புஷ்பமாரி தூவவும், இத்தன்மையவாகிய சம்பிரமங்களை அனுபவித்துக்கொண்டு மகா சந்தோஷத்துடன் அவ் வனத்திற்றானே சிலநாள் வசித்துக்கொண் டிருந்தார்கள்.

இப்படியிருக்கும்நாளையில் சாலுவதேசத்தைச் சண்டையிட்டு ஜெயித்த சத்துருவானவன் இறந்துபோய், பட்டினத்திற்கு அரசன் இல்லாமையால், பழைய மந்திரிமார்கள் யானையை அலங்கரித்துக்கொண்டு தங்கள் இராசனாகிய சாலுவதேசாதிபதி இருக்கும் காட்டிற்கு வந்து, அவ் வரசனைக் கண்டு அடிவணங்கி, சத்துருவுக்கு நேர்ந்த சம்பவத்தைக் கூறி, உடனே அவ்வரசனை யானையின்பேரில் எடுப்பித்துக்கொண்டு, இராஜபத்தினி - புத்திரன் - சாவித்திரி இவர்களை வாகனங்களிலேற்றி, இராஜ சின்னங்களெல்லாம் புடைசூழ்ந்து வரும்படி கொண்டுபோய் பட்டினப் பிரவேசஞ் செய்துவைத்து, அரண்மனையை அலங்கரிப்பித்துப் பட்டாபிஷேகமும் செய்து முன்போல் சிங்காசனத்தி லிருந்து துரைத்தனஞ் செலுத்தும்படியாகச் செய்தார்கள். அந்தக் காலத்தில் அரசனும், அரசன் தேவியும் கஷ்டதிசையை நீக்கிய மருமகளை இஷ்டதெய்வம்போல் சிந்தித்து வந்தார்கள். இந்தச் சாவித்திரியினுடைய தந்தை அசுபதிராஜன் நூறு பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டு செல்வங்களில் சிறந்து மகிழ்ந்து வாழ்ந்தனன். அக்காலத்தில் அரிய தவத்தில் பிறந்த நமது பெண்ணரசியானவள் என்ன வருத்தமடைகின்றாளோ? ஏது நினைத்து அழுகின்றாளோ? என்று மனம் வருந்தி மந்திரியரை விசாரிக்குங் காலத்தில், சகல செல்வமும் பெற்று அரசு புரிந்து தங்கள் சுதேசத்தில் வாழ்கின்றார்களென்று சொல்லக் கேட்டு, அசுபதிராஜன் ஆச்சரியங்கொண்டு, நால்வகைச் சேனையும், மந்திரிமாரும், புத்திரவர்க்கமும், தனது பத்தினியும் சூழ்ந்துவரப் பிரயாணமாகிவந்து, சாலுவதேசத்திற் சேர்ந்து, அரசனைக்கண்டு பிரிய வசனங்களைப்பேசி, மருமகனும் மகளும் வந்து பாதங்களில் தொழவும் அவர்களை வாழ்த்தி அணைத்து, அங்கு யாவரோடும் மனமகிழ்வுடனே இருந்தார்கள்.

அக்காலையில் சாலுவராஜன் அசுபதி அரசனை நோக்கி, ஐயனே! இவ்வரசு உம்

துர்வாசருக்கு அமுதளித்தல்.





இந்திரன் அந்தணருபியாய்க் கர்ணனிடம் வந்து கவசகுண்டலம் வாங்கி
ஓர் சத்திவேலை அவனுக்கு தந்து செல்லுதல்.

முடைய தவத்தினால் வந்த சாவித்திரி அளித்தது. இக் கண்கள் அந்த உத்தமியினால் கொடுக்கப்பட்டன. என்னுடன் புத்திரன் பிராணன் அந்த அம்மாள் தயை செய்து கொடுத்த பிச்சை உமக்குண்டான நூறு புத்திரரும் அந்த மகா லட்சுமியினுடைய வரப்பிரசாதமே; இங்குள்ள செல்வமெல்லாம் அந்தப் பதிவிரதா சிரோன்மணியால் உண்டான காரியமே என்று நடந்த சரித்திரங்களை எல்லாஞ் சொல்லக் கேட்ட அசுபதி ராஜனும் மாளவி தேவியும் அகமும் முகமும் மலர்ந்தனர். மற்ற யாவருங் களித்தார்கள். அசுபதி மகாராஜன் வேண்டிய வண்மை வரிசைகள் யாவுங் கொடுத்து, இகபர மிரண்டிற்கும் இந்தப் பெண்ணினால் நலத்தைப் பெற்றோம் என்று விருந்து போசன முண்டு, தன்னகரத்திற்குப் போகப் பயணங் கொண்டு, புத்திரா மருவச் சென்று பட்டினஞ் சேர்ந்து வாழ்ந்திருந்தான். இவ்விடத்திற் சாவித்திரியும் நாயகனுஞ் சுகத்தைப் பெற்று மாமியும் மாமனும் மகிழ்ச்சியுறப் புத்திர பாக்கியத்துடன் வாழ்ந்திருந்தார்கள். கேளும் தருமராஜனே! நல்ல குலத்திற் பிறந்தும் கோபம் நீங்கியும், நற்குண நற்செய்கையிற் சிறந்தும், உலகம் பழிப்பதற்கு இடங் கொடாமலும், சத்திய விரதங் கெடாமலும், நாயகனே கயிலை நாயகன் என்றும், தாய் வீடு முதல் அண்டை அசலிற் செல்ல இச்சை வையாமலும், தன் முன்தானையே தனக்குக் காவலாகக் கொண்டிருக்கும் உத்தமியாகிய ஒரு பதிவிரதையினால், புருடனுக்கும் மாமன் மாமிக்கும் தாய் தந்தையர்க்கும் அழியாச் செல்வம் உண்டாகும். ஆயுள் விருத்தியடையும். சத்துருபீடை துற்வியாதி-துற்மரணம்-துற்சோபம்-துற்பயங்கரம் இயாவும் நீங்கும். அறமும் ஓங்கும். ஆதலால், இந்தப் பாஞ்சாலி என்னும் பதிவிரதையினால் உங்களுக்குச் சகல சுகமுங் கிடைக்கும். சத்துரு ஜெயமும் உண்டாகும். பயப்பட வேண்டாம் என்று வாழ்த்தி அவர்கள் பணிய ஆசீர்வதித்துத் தம்முடைய சூழலுக்கு எழுந்தருளினார் மார்க்கண்டேய மகா முனிவர்.

சயிந்தவன் சருக்கம் முற்றிற்று.

---

பதினைந்தாவது,

## துருவாசமுனிச் சருக்கம்

---

கண்ணன் துதி

தன்னையொத்தான் மைமிற்றெவ்வர் தனி
யூர்தன்னிற் றம்பியொடு, மின்னையொத்தா
ளொடுநின்ற விற்சேவகனைக் கௌசலையாம்,
அன்னையிழைத்த தவப்பயனை யகத்துட்கருதி
யடிபணிந்தார், பின்னையுலகி னொருநாளும்
பிறவார்வினையி னிறவாரே.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! தருமபூபதியும், தம்பிமார்களும், திரௌபதியம்மனும், பன்னீராயிரம் பிராமணர்களும், தௌமியாச்சாரியரும், தவச்சிரேஷ்டர்களும், தருமம் முதலிய நீதிகளைப் பேசிக்கொண்டு அந்த வனத்திற் சிறிது நாளிருக்கையில், ஒரு நாள் சடைமுடியும், காவிகாம்பரமும், முப்புரி நூலும், உருத்திராட்சத் தாழ்வடமும், வீபூதி தூளிதமும், கோபக்குறிகுடியாகிய கண்களும், வாழ்த்தலுஞ் சபித்தலும் முந்திய நாவும், திருவடிகளில் மிதியடியும், இருடிகளிற் சிறந்த மேன்மையும் உடைய துருவாச ரிஷியானவர், அநேக முனீஸ்வரர்கள் கூட்டமுடன் ஆபத்துக் காலங்களில் அலைந்து அயர்ந்து அவதியுற்று வருபவர்களைப்போல், மத்தியானம் பதினைந்து நாழிகைக்குமேற் பாண்டவர்கள் இருக்கும் வனத்திற்கு வந்தார். அப்படி வரவும், அவர்களைக் கண்ட பஞ்சவர்கள் எதிர்கொண்டு, அருக்கிய பாத்திய ஆசமனியங் கொடுத்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஆசனம் அளித்து, வீசிறிகளினால் உபசரித்து, எங்கள் பெரியோர்கள் செய்த பூஜாபலத்தினால் இந்த உச்சிக்காலத்தில் தேவரீர்கள் எழுந்தருளப் பெற்றோம் என்று இருகரமுங் குவித்து இறைஞ்சி நின்றார்கள். இவ்வாறு இறைஞ்சி நிற்போருள் இறையாகிய தருமபூபதியைத் தூர்வாசர் நோக்கி, எங்களுடைய இளைப்பு நீங்க போசனம் அளிக்க வேண்டுமென்று சொல்லினர். அதற்குத் தருமராஜன் முதல் யாவருங் களித்து, யாவருந் தடாகத்திற் சென்று நித்தியவிதி முடித்துக் கொண்டு வரலாமென்று வணங்கவும், அப்படியே அவர்கள் எல்லோரும் மத்தியானக் கடன்களை முடித்துக்கொள்ளச் சென்றார்கள்.

### தருமனதியர் வருந்துவதை யுணர்ந்து ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அங்ஙன மெழுந்தருளுதல்

இப்பால் முரசக்கொடியோன் திரௌபதையைநோக்கி, இந்தமகாரிஷியானவர்வந்து புசிக்கவேண்டுமென்று நாம் எத்தனை காலந் தவஞ்செய்தாலுங் கிடைக்கமாட்டார். இன்று நமக்கு நல்லகாலம் நேரிட்டது. ஆகையால், ஒரு நொடிப்பொழுதிற் பஞ்சகச்சாயபரமான்னமுடனே போசனந் திட்டஞ் செய்யவேண்டும் என்று சொல்லவுந் திரௌபதி இரு கரத்தையும் நெரித்து, அடிவயிற்றைப் பிசைந்துகொண்டு, ஓ சந்திரகுலத்தேந்தலே! என் செய்வேன்? சூரியபகவானுகிய திரௌபதாதித்தன் நமக்கு அளித்த அக்ஷயபாத்திரம் பதினைந்து நாழிகையில் வேண்டிய புசிப்பை தரத்தக்கதே யன்றி, அப்பதினைந்து நாழிகைக்குமேல் உதவமாட்டாதென்று தங்களுக்குத் தெரிந்து யிருந்துஞ் செலவு கொடுத்தீர்களே; இதற்கு அடியேனுற் செய்யலாவது என்னவென்று திரௌபதை தியங்கினள். அதுகேட்ட சத்தியகுண சற்சீலனுகிய இயம தருமராஜனுடையபாலன் மயங்கி, பெண்ணே! நான் கியாபகமில்லாமற் சொல்லிவிட்டேன். பெரியோர்களுடைய மனம்நொந்தால் ஏதாக விளையுமோ என்று ஏங்கியபோது வீமசேனன் தமையனைப் பணிந்து, அண்ணு! கந்த மூலபலாதிகளினுல் திருப்தி செய்துவைத்து வணங்கிக் கொள்ளலா மென்றனன். அருச்சுனனும் நகுலனும் அப்படி செய்வதே ஞாய மென்று சொல்லினர்.

அதைத் தருமராஜன் கேட்டு, அன்ன மென்று வந்த பேர்களுக்கு காயுங் கிழங்குங் கொடுப்பது தருமமல்லவே. (பெரியவீடென்று பிச்சை கேட்டாற் கரியை வழித்துக் கையிலிட்டான்) என்னும் பழமொழிபோலாச்சே; என்னுடைய காலம் விருதாவாய்ப் போச்சே என்னு நொந்து, அந்தோ! இந்நேரம் பூஜை முடித்துக்கொண்டு வருவார்களே; என்ன செய்வேன். ஆசைகூறி மோசஞ் செய்த பாவியானேனே; துருவாசர் சாபத்தினுல் நாசமடையுங் காலத்தைப் பெற்றேனே; உலக முள்ளவரையிலும் உலவாப் பழிக்கு ஆளாயினேனே; ஒன்றுக்கு முதவாமற் போனேனே என்று வருந்தித் தௌமியர் பாதத்தில் விழுந்து தளர்ச்சியுற்றனர். உடனே சகாதேவனெடுத்து அணைத்து, அண்ணு! நமக்கு நேரிடும் பொல்லாங்கெல்லாங் காலத்திற்குத் தக்க படியாக வருமே யல்லது வேறல்ல. மலை வந்தாலும் தலை தாங்கவேண்டு மென்பதுபோல் இளைக்காமல், ஆபத்பாந்தவன்! அனுதரட்சகன்! பக்தவச்சலன்! பரமதயாளுவாகிய ஜனார்தனன் இவ்விடம் வரும்படியாக நாமெல்லோருஞ் சிந்தித்தால், அந்தக் கிருஷ்ணமூர்த்தி வந்து நமது துன்பத்தை இன்பமாகச் செய்வார் என்று சொல்லினன். அச்சொல் உட்கொண்ட மற்றயரும் பாஞ்சாலியுஞ் சிரத்திற் கரத்தைக் குவித்து, அவருடைய அளவற்ற திருநாமங்களைச் சொல்லித் துதி செய்தனர். அப்போது பாண்டவர் சகாயனுகிய ஆண்டவன், துரியோதனனேவலால் துருவாசர் அகாலத்திற் பிச்சை கேட்டதும், அதற்கவர்களோத்துப் பின் செய்யமாட்டாமல் தியங்குவது மறிந்து, இவர்களைக் காண்டல் நிமித்தியமாக வருகின்றதைப்போல் தாண்டலாகிய குதிரைபூண்ட இரதத்தின்மீது வந்து பாண்டவர்கள் முன்னின்றுர்.

### ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி துர்வாசமுனிவர் முதலியோர்க்கு அமுத விருந் தளித்தல்

அப்போது தேடிய மருந்து திருஷ்டிக்கெதிர்ப்பட்டதுபோல் வந்த சுவாமியைக் கண்டு, யாவரும் வீழ்ந்து வணங்கி, அகாலத்திற் றுருவாசர் வந்ததும், அவர்கேட்ட போஜனத்திற்குத் தாங்கள் யோசிக்காது இசைந்ததும், அட்சயபாத்திரத்தின் முறைமையையும், மற்ற யாவற்றையுஞ் சொன்னுர்கள். அதைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணபகவானன்வர் தமக்குள் யோசித்துக்கொண்டு, பாஞ்சாலியை நோக்கி, அம்மா! திரௌபதாதித்தன் கொடுத்த அட்சயபாத்திரத்தில் ஒன்று அரை அன்னம் ஒட்டிக்கொண் டிருக்கிறதா பாரும் என்று சொல்லினர். அண்ணு! சுத்தமாகக் கழுவிக் கவிழ்த்தமாத்திரத்தில் அன்னமிருக்குமா? ஆகிலும் ஈஸ்வரச்செய லெப்படியோ யான் அறியேன் என்று சென்று ஆத்திரப்படாமற் பாத்திரத்தைப் பார்க்க, அதில் ஒரு சாதம் ஒட்டிக்கொண் டிருந்தது. அதைக் கண்ட திரௌபதி மகா சந்தோஷத்துடன் எடுத்துவந்து ஜகரட்சகனிடத்திற் கொடுக்க, அவரதைக் கரத்தில் வாங்கி, நான்கு வேதங்களுந் மணக்குந் திருநாவில் வைத்துக்கொண்டு சுவைத்தனர். ஓ அரசனே! அவர் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவாகிய கடவுளாகையாற் கொஞ்சங் கொஞ்சமாக அவ்வன்னத்தின் இரசம் அண்டரண்டங்களை வைத்திருக்கும் அவர்

கருப்பத்திற் போய் விழுந்தவுடனே சராசர முதலிய எண்பத்துநான்கு நூறுயிர யோனி பேதங்களாகிய உயிர்களும் பிர்ம்மானந்த பரிபூரணமாகிக் களித்தன.

அக்கால் தடாகத்திற்குச் சென்ற துருவாசர்முதலிய சகலரிஷிகளுஞ் ஸ்நானஞ்செய்து, விபூதி யணிந்து, நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு கரையிலிருந்து செபஞ்செய்யுங் காலையில், அவரவர்களுந் தாய் முலை சுரந்து சேய்மிக வருந்துவதைப்போல் தேவாமிர்தத்தைத் திர்ப்தியாகப் புசித்து, வாய் வழிகளிலேயும் மூக்கின்வழிகளிலேயுந் தேக்கிவழிய ஏப்பமிட்டுக்கொண்டு, வயிறு எடுக்கமாட்டாமல், ஸ்ரீநாதனுகிய பரந்தாமன் செய்த விருந்து இதுவென்று துருவாசர் உணர்ந்து, அவ்விடத்தினின்று யாவரோடும் புறப்பட்டு வந்து, தருமபுத்திரரையும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியையுங்கண்டார். உடனே அவரையவர்கள் தெண்டனிட்டு, ஐயா முனிவரே! விரைவிற் போசனத்திற்கு வாருங்களென்று அழைத்தனர். அதற்குத் துருவாசர் பயந்து, ஓ தருமபூபதியே! எனக்கொரு வரங் கொடுக்கவேண்டும். அதென்னவென்றால், விருந்தாக வந்து உம்மைக் கண்ட புண்ணியவசத்தினால் அமரர்கள் புசிக்கும் அமுதமே உண்டோம். குசேலனுடைய அவலைத் தின்று அண்டத்துயிர்கள் யாவுங் குளிரச்செய்த ஆதிமூலப் பொருளையும் இவ்விடத்திற் கண்கள் களிக்கக் கண்டோம். இந்த ஜகரட்சகனைத் துணையாகக் கொண்ட உமக்குத் துன்பங்களும் உண்டோ என்று வாழ்த்தி இதனை சொல்லுவதாயினர்:

துர்வாசர் தான்வந்த விதங்கூறி ஆசீர்வதித்துச்
சொல்ல, ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியுந்
துவாரகைக் கெழுந்தருளல்

ஓ தண்டதரனுக்குத் தமையனுகிய உத்தமனே! அஸ்தினபுரத்தி லிருக்குந் துரியோதனன் இடத்திற்கு இந்தக் கூட்டத்தோடும் ஒரு நாள் போயிருந்தேன். அவன் நம்மை மிகவும் பூசித்து, அறுசுவை யுண்டிகள் அன்புடன் படைத்தான். அதை நாங்கள் யாவரும் புசித்து, சந்தனம்-மாலை-தாம்பூலம் இவைகளைப் பெற்றுச் சந்தோஷம் அடைந்து, உமக்கு வேண்டிய வரங்கள் கொடுக்கிறோம் கேளும் என்றேன். அந்தப் பாவியானவன் வேறொன்றையும் விரும்பாமல், வனத்திலிருக்கும் பாண்டவர்க ளிடத்தில் சென்று என்னிடத்திற் புசித்த வண்ணம் அவ்விடத்திலுஞ் சாப்பிடும்படி வரங்கொடுமென்று கேட்டான். அப்படியே கொடுத்து உம்மை வந்து கண்டோம். ஒரு நாளும் உண்ணாத அமிர்த முண்டோம். அந்தத் துரியோதனன் தன்னுடைய செல்வக் கொர்வத்தினால் உங்களை ஏழ்மையாக எண்ணி, நீங்கள் நல்ல போசனம் இடாவிட்டால் நாம் அதனாற் சபிப்போம் என்றும், நீங்கள் கெட்டுப் போவீர்கள் என்றும், தான் வாழலாம் என்றுங் கருதி என்னை அனுப்பினான். ஆகையால், அந்தத் துஷ்டனானவன் இன்னும் இரண்டு வருடத்திற்குள்ளாகப் புத்திர மித்திர களத்திராதிகளுடன் உருண்டு போய் விடுவான். நீங்கள் திரண்ட செல்வத்தைப் பெற்று, தீனதயாளுவின் திருவடி அநுக்கிரகத்தினால் வாழக்கடவீர்கள். உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள் தருகிறேன் என்றார். உடனே தருமராஜன் தாழ்ந்து வீழ்ந்து, ஓ சுவாமிகளே! இன்னொருக்கால் ஆராகிலுந் தேவரீரை இப்பேர்ப்பட்ட வரங்கேட்டாற் கொடுக்காமல் இருக்கவும், என்னைக் கேட்டவர்களுக்கு எந்த வஸ்துவாகிலும் இல்லை என்னாமல் நான் கொடுக்கவும் அருள் செய்ய வேண்டும் என்று இரக்கமுடன் கேட்க, அப்படியே கொடுத்தேன் என்று அருள் புரிந்து, தன்னோடு வந்த தவமுனிவர் முதலிய பேர்களுடன் கிருஷ்ணமூர்த்தியினிடத்திலும் பாண்டவர்கள் இடத்திலும் செலவு பெற்றுக் கொண்டு திரௌபதியை ஆசீர்வதித்து வாழ்த்தி, மற்றத் தௌமியர் முதலாயினோரையும் மனமகிழ்ந்து போற்றிப் புகழ்ந்து கொண்டு, துருவாசர் போய்விட்டனர். அப்பால் ஸ்ரீ கிருஷ்ணபகவான் செலவு பெற்றுக்கொண்டு துவாரகைக்கு எழுந்தருளினர். பின்பு பாண்டவர்களும் பிராமணர்களும் அகமகிழ்ந்து, பகவானுடைய கருணைப் பிரதாபத்தைப் பலவாறு புகழ்ந்து பேசிக்கொண் டிருந்தார்கள்.

துருவாசமுனிச் சருக்கம் முற்றிற்று.

---

பதினறுவது,

## இந்திரன் கர்னன்

## கவசகுண்டலங் கவர்ந்த சருக்கம்

---

கண்ணன் துதி

மிகுதியுஞ் சுலபமும் வெண்மை தன்மையும், தகுதியு மெனுதுபல ரதிகஞ் சார்ந்திடா

பகுதியோர் மிகுதியிற் பற்றிலார் பெருந்,
தொகுதியுள் ளுறப்படுந் துணை யெமக்கரோ.

ஓ சந்திரகுலத்துதித்த இந்திரனே! கிரு
ஷ்ணமூர்த்தி துவாரகையி லிருக்கும் நாளில்,
ஒருநாள் தேவேந்திரனை நினைத்தனர். உடனே
அவன் வந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு
அஞ்சலியஸ்தனாக நிற்க, அதைக் கண்
ணன் கண்டு ஆசனமளித்து இருக்கச் செய்து,
ஓ ஆகண்டலதேவே! அருச்சுனனுக்குங் கர்ன
னுக்கும் ஆதிமுதற் கொண்டு ஏற்பட்டிருக்கும்
பெரும் பகைகளும், காண்டவவன தகனத்
தில் தட்சகனுடைய புத்திரனாகிய அசுவ
சேனனானவன் வாலறுபட்டுத் தாயையும் பறி
கொடுத்து மனம் வருந்திக் கர்னனிடத்திற்
போய்ச் சேர்ந்து காண்டீபனைக் கொன்று
பகையைத் தீர்த்துக் கொள்ளுவேனென்று
நாகாஸ்திரமாக வளர்ந்து வருவதும், உமக்
குத் தெரிந்திருக்கின்றதல்லவா? அப்படிக்
கிருந்தும் நீர் சும்மாயிருப்பது எப்படி? நானை
ஒருகாலத்தில் கர்னனால் விஜயனுக்கு அபாயம்
நேரிடுமாகில், பாண்டவர்களில் மற்ற நால்
வரும் இறந்துவிடுவார்களே, அவர்கள் கூறிய
சபதமுந் திரௌபதை விரித்த கூந்தலும்
முடியாமற்போகுமே இந்தப் பழிகளெல்லாம்
உம்மையும் நம்மையுஞ் சாருமே இதற்கு
வேண்டிய யுத்திபுத்திகளை யோசித்துச் சொல்
லும் என்று பகவான் கேட்க, வலாரி வணங்கி,
சுவாமி! அடியேனால் ஆகத்தக்கதை ஆக்யா
பித்தால் அவ்வண்ணம் நடந்துகொள்ளு
வேன் என்று சொல்லிய சசிமணாளனைச்
சுவாமியார் பார்த்துச் சொல்லுகின்றார்:

## இந்திரனுக்குக் கண்ணன் கர்னன் வரலாறு கூறிக் கவசகுண்டலங் கவர வனுப்புதல்

கேளும் இந்திரனே! ஆதியில் வில்வித்
தை பரிட்சை செய்த காலத்திலும், வில் வளை
த்த கலியாண காலத்திலும், கந்திருவனிடத்
தில் அகப்பட்டு மெலிந்தகாலத்திலும் விஜ
யன்போரில் நேரிட்ட பகைகளைப் பாம்பின்
விடம்போற் பல்லில் வைத்திருக்கின்றான் கர்
னன், அதுவுமல்லாமல், எரியுங் கொள்ளியை
எழத்தள்ளுவதுபோல் அச்சுவசேனன் என்
னும் நாகாஸ்திரமுங் கைகூடியிருக்கின்றது.
இதன்றியும், இவனுடைய பூர்வோத்திரஞ்
சொல்லுகிறேன் கேளும்: ஓ வெள்ளை வார
ணனே! ஆதியில் இவன் ஆயிரக்கவசன் என்
கின்ற இராக்கதன். அதிக வரங்களினால்
தேவர்கள்முதல் மாதவர்களையும் வேரறக்
கொன்றுவென்று வருவான். அந்த வருத்தங்
கண்ட பிரமன் முதலாகிய பேரும் ஆதிநாரா
யண மூர்த்தியினிடத்தில் முறையிட்டார்கள்.
அவர் நாராயணரிஷியாக நரனுடன் பூமியில்
வந்து, அவனோடு ஒருவருடம் யுத்தஞ்செய்து,
அப்போதவனை ஜெயிக்கமாட்டாமல் இளைத்
துத் தவஞ்செய்யச் சென்றனர். அப்போது
நரனானவன் ஒருவருடஞ் சண்டை செய்து,
அப்பால் தானுங் களைத்துத் தவஞ்செய்யச்
சென்றனன். பின்பு நாராயண ரிஷிவந்து
ஒரு வருஷம் வரையில் யுத்தம் செய்து களை
த்து மீண்டுந் தவத்திற்குச்செல்ல, அதுகண்டு
நான் வந்து ஒருவருடகாலம் யுத்தஞ் செய்து
வெல்லக்கூடாமல் களைக்க, இப்படியாக இந்த
இருவரும் அந்த ராக்கதனை விடாமல் மாறி
மாறிப் போர்புரிந்து, வருஷத்திற்கு ஒரு கவ
சம் அழித்து வந்தார்கள்.

இந்தப்படி அமர்புரிந்ததில் தொளாயி
ரத்து தொண்ணூற்றொன்பது கவசம் அறு
பட்டு, ஒரு கவசம் இருக்கும்போது அரக்கன்
இளைத்து ஓடவும், இவர்களுந் தொடர்ந்து
போகையிற் சூரியனிடத்தில் அபயம்புகுந்து
அயிக்கியமாயினான். அந்த இராக்கதன்றான்
இப்போது கர்னனாக வந்து பிறந்து, மேற்
கூறிய நரநாராயணரை பகைகொண்டு இருக்
கின்றான். அந்த கவசகுண்டலம் இருக்கிற
வரையிலும் அவன் இறக்கமாட்டான். அருச்
சுனனுக்கு அபாயம் வரும். ஆகையால், நீர்
விருத்தப் பிராமணவேடங் கொண்டு அக்கொ
டையாளி இடத்திற் சென்று அதைத் தான
மாகக் கேட்டால், உடனே இரண்டையுந்
தடையில்லாமற் கொடுத்துவிடுவான். அவனோ
இல்லையென்னுஞ் சொல்லைக் கல்லாதவன்,
அப்பால் நாகாஸ்திரத்திற்கு நானிருக்கிறேன்
என்று சொல்லக்கேட்ட இந்திரன் எழுந்து
வணங்கிக்கொண்டு, தேவரீர் சித்தத்தின்படி
நடப்பேனென்று விடைபெற்றுச் சென்று,
பிராமணவேடத்துடன் கர்னனுடைய அரண்
மனைக்குப் போவதாயினான்.

## சூரியபகவான் இந்திரன் வருங் காரியத்தைக் கர்னனுக்கு முன்னதாய்ச் சென்றுரைத்தும் பயன்படாது போதல்

அப்படி அவன் போவதற்கு முன்னமே
சுவாமியும் அவ்விந்திரனும் பேசிக்கொண்ட

தைப் பார்த்திருந்த சூரியபகவான் விசனங் கொண்டு, நமது புத்திரனைக்கொல்ல இரண்டு பெரிய மனிதர்களும் அந்த எண்ணங்கொண்டார்களல்லவா? அவரவர்கள் தமது பானை சாயப் பார்ப்பார்களா? தான்சாவ மருந்துண்பார்களா? என்று நினைத்து உடனே அச்சூரிய பகவான் வேதிய ரூபங்கொண்டு கர்னனிடத்திற் சென்று, அவன் செய்த உபசார பூசை முதலிய யாவற்றும் பெற்றுக்கொண்டு அவனுக்கு ஆசீர்வதித்து, அப்பா! அர்ச்சுனன் நிமித்தமாகத் தேவேந்திரன் கவசகுண்டலங் கேட்க வருகின்றான். நீ அவனுக்கு அந்த இரண்டையுங் கொடுக்காமல் நிறுத்துவையாகில் திரிலோகங்களும் உன்னை ஜெயிக்கமாட்டாது. கொடுத்தாயாகில் நீ பார்த்தன் கைப் பாணத்தால் வீணே இறந்துவிடுவாய். ஆனதால் கொடுக்காதே என்று சொல்லி, நான் உன் தகப்பன் நீ என் பிள்ளை என்று பிறந்த வரலாறுந் தெரிவித்து, தான் சூரியனென்று தனது ரூபத்தைக் காட்டினான். உடனே அங் கர்கோமான் புளகாங்கிதங் கொண்டு, புனித ஜலத்தினாலும் புட்பங்களினாலும் பூசித்துப் பிரதட்சணஞ் செய்து, ஏகாங்க திரியாங்க பஞ்சாங்க அஷ்டாங்க சாஷ்டாங்க நமஸ்காரங்கள் புரிந்து இதனைச் சொல்லுகின்றான்:

சுவாமி! என் பிராணனைக் கேட்டாலுங் கொடுத்து விடுவதேயென்று விரதங் கொண்டிருக்கும் அடியேனுக்கு, தேவரீர் இப்படிக்குக் கட்டளையிடலாகாது. இல்லையென்னுஞ் சொல் என் சத்துருவின் இடத்திலும் வரக் கூடாது. உயிர்பெற்று இருந்தார் என்பட ஈந்தவர்களன்றி ஈயாதிருந்தவர்கள் இறந்தவர்களே. மேலும் ஈதலே அறமென்று வேதமும் விளம்பா நின்றது. சகல போகமும் தியாகமும் யோகமுமுடைய தேவேந்திரனே தேகி என்று என்னை இரந்து கேட்கவந்தால் நான் இல்லையென்பதுவும் ஒரு சொல்லோ? என் உயிரும் இவ்வுலகமும் மற்ற யாவும் போம். கீர்த்திமாத்திரம் அழியாமல் நிலைத்து நிற்கும். ஐயா! இந்தப்பூதவுடலோ நீர்மேற்குமிழி. இவ்வாழ்க்கையோ நிலையில்லாத வான்மீன். இச்செல்வமோ மாறிமாறி உருளுஞ்சகடம். முடிவில் இத்தேகமோ தாய், தந்தை, பிணி, பேய், நமன், நாய், நரி, புழு, காக்கை, கழுகு, பருந்து, இயமன் இவைகளெல்லாந் தங்களுடையதென்று காத்துக்கொண்டிருக்க, சூத்திரமுடைய பிரதி மெய்போல் நடமாடிவரும் இப்பொய்யான தேகத்தை மெய்யென்று நம்பி விருதாவிலழிவதைப் பார்க்கிலும், கேட்டவர்களுக்கு இல்லையென்னாமல் அளிப்பதே களிப்பாம். ஆதலால், கொடுத்ததென்பதை தடுக்காதீர். தேவரீர் என்மீது கருணைவைத்து வந்தபடியால், எனக்கு ஒருவரமாத்திரங் கொடுத்தருளவேண்டும் என்று வணங்கினான். அப்படி வணங்கிய புத்திரனை சூரியபகவான் கண்டு, மறுமொழி ஒன்றுஞ் சொல்லாமல் விதியை அனுஷ்டிக்கும் மதியென்று நினைத்து புத்திரனுடைய உத்தம குணத்திற்கு மெத்தவும் மகிழ்ந்து, இதனைச் சொல்லுகிறான்:

அப்பா தப்பாமொழியுடைய தனயனே! தனக்குமிஞ்சித் தருமமென்றும் சுவரைவைத்துக்கொண்டு சித்திரமெழுத வேண்டுமென்றும் உட்சுவர் தீத்திப் புறச்சுவர் தீத்தல் வேண்டுமென்றும் இப்படி உலகமொழியுண்டு. இதுகளை யோசித்து, உன் பிராணனுக்கு அழிவுவரவொட்டாத கவசகுண்டலத்தைக் கொடுக்காமல் நிறுத்துவையாகில், திரிமூர்த்தியும் ஒருமூர்த்தமாக வந்தாலும், உனக்குப் பயமில்லை. மிஞ்சிக் கொடுத்துவிடுவையாகில், உடனே இறந்தாயென்பதற்குச் சந்தேகமில்லை. (பெற்றமனம் பித்து பிள்ளைமனங் கல்லு) என்பதை என்னிடத்திலும் உன்னிடத்திலுங் கண்டேன் என்று சூரியபகவான் சொல்ல, இவையனைத்தையுங் கர்னன் கேட்டு, சுவாமி! தோற்றமாகிய நாமரூபங்களெல்லாம் நிலைத்து நிற்கத்தக்கதோ? தேவரீருக்குத் தோற்றாத காரியமுண்டோ? வினைப்பயனை வென்றவர்களைக் கண்டதுண்டோ? தேவரீர் என் காதில் இல்லையென்னுஞ் சொல்லைப் போடாதீர். இல்லையென்பாரிடத்திற் செல்வம் நில்லாது. வேண்டிய செல்வங்களைக் கொடுப்பதற்குத் துரியோதனமகாராஜன் காத்துக்கொண்டிருக்கின்றார். என்னுயிரையும் அவருக்கே கைமாறாகக் கொடுக்க விரும்பியிருக்கின்றேன். சகலபோகங்களையுமுடைய இந்திரனே வந்து இறப்பானாகில், இல்லையெனத் தக்கதோ? என்று கூறிய கச்சைக்கொடியோனைச் சூரியபகவான் பார்த்து உள்ளத்திற் களித்து, குழந்தாய்! உன்னுடைய மனது இப்படியிருப்பதாய், நான் சொல்லியும் இன்னும் எவர்கள் சொல்லியும் பிரயோசனமில்லை. ஆனாலும், அந்த இந்திரன் இதோ வரப்போகின்றான். அவனுக்கு உன்னிஷ்டப்படி கொடுத்த பிற்பாடு, அந்த இந்திரனிடத்தில் மீளாத வேல்

ஒன்றிருக்கின்றது அவ்வேலோ சிருஷ்டி திதி சம்ஹார திரோபவானுக்கிரக மூர்த்தியாகிய ஸ்ரீ கயிலாசபதி யீன்றருளிய சிவசுப்பிரமணி யக்கடவுள் கைக்கொண்டிருக்கின்ற சத்திவே லாயுதத்தின் அமிசை பெற்றுள்ளது. அதை யாகிலும் வாங்கிக் கொள். அப்பால் உன்னு டைய இஷ்டம் என்று ஆசீர்வதித்து விசு வாசத்துடனே சூரியபகவான் தன் கதியை நோக்கிப் போய்விட்டான்.

### இந்திரன் அந்தணரூபியாய்க் கர்னனிடம் வந்து கவசகுண்டலம் வாங்கி, ஓர் சத்தி வேலை அவனுக்குத் தந்து செல்லுதல்

உடனே கர்னமகாராஜன் நித்தியவிதி களை முடித்துக்கொண்டு, தானதர்மங்களெல் லாஞ் செய்து தேவப் பிராமணர்கள்-ரிஷிகள்-தரித்திரர்கள்-குருடர்-குட்டர் - செவிடர்-முட வர்-கூனர்-குள்ளர் வியாதியோர் இவர்கள் முத லாகிய பேர்களுக்கும் அவ்வவர்கள் கருதிய வற்றைக் கொடுத்து, இன்னும் யாராகிலு முண்டோவென்று விசாரித்து, தேவேந்தி ரன் எப்போது வருவானென்று எதிர்பார்த்தி ருக்குங் காலத்தில், வில்லைப்போல வளைந்த உடலும், நடுநடுங்கிய கால்களும், ஓய்ந்த நடை யும், கையிற்குடையும், கங்கையின் நுரையைப் போல் நரையும், கன்னமுதலியன சுருங்கிய திரையும், கந்தை யுடுத்திய அரையும், காலிற் றொடுத்த மிதியடியும், கையிற் பிடித்த மூங்கிற் றடியும், மார்பில் முப்புரிநூலும் இன்னமுண் டான கோலத்தோடு ஒப்புவமை இல்லாத கிழ வேடங்கொண்டு அத்தினபுரவீதியிற் பதி னைந்து நாழிகை வெய்யலில் நடக்கமாட்டா மற் புழுவைப்போற் பதைபதைத்து துடி துடித்து ஓட்டமும் நடையுமாக வருகின்றான் தேவேந்திர மகாராஜன். இப்படி வருகின்ற தைக் கண்டவர்கள் எல்லோரும் அவனுக்குக் கைகொடுத்து உபசரித்து அழைத்திவர்வும், மாயவேடத்துடன் வருந்தி வந்த இந்திரன் கர்னமகாராஜனுடைய தானவாச லெங்கே? அரண்மனை யெங்கே? என்று பலரையுங் கேட் டுக்கொண்டு வந்து, கோட்டை வாசலில் நுழைந்தான். அப்போது காவலாளிகள் தடுத்து, ஐயா! இங்கு தானங் கொடுத்தாயு விட்டது. நீர் போம் போம்; நாளைக்கு வாரும் மென்று சொல்லவும், அதைக் கேட்ட ஆகண் டல்வன் ஏக்கமுற்றவன்போல் நிற்க, அப் படி நிற்கின்றவனை யிடையூறு கற்றுங் கர் னன் கண்டு, எதிர்கொண்டுவந்து சாஷ்டாங்க தெண்டஞ் செய்து, சுவாமி! என் பாக்கியமே பாக்கியம். இவ்வளவு பிரயாசையுடன் தேகம் வருந்த எனக்குத் தரிசனந் தந்தீர் என்று வணங்கிக் கைகொடுத்து அழைத்துப் போய் ஆசனத்தி லிருக்கச் செய்து, அருக்கியம்-பாத் தியம்-ஆசமனீயம்-சந்தனம்-அட்சதை - தூப தீபம் இவை யாவும் அளித்து, உபசாரத் துடன் வந்து நின்றான்.

அப்படி வந்தித்து நிற்கின்ற அதரித் திரனை அந்தணன் நோக்கி மங்களாசனங் கூறி, அப்பா! என்னுடைய ஆசை முன்னுக்கு இழுக்க, கிழத்தனமாகிய தள்ளாண்மை பின் னுக்கு இழுக்க, கால்கள் வழுக்க, கனவருத்தப் பட்டு வருவதற்கு மத்தியானமாய் விட்டது. நானென்ன செய்வேன்? வாயிற் காவலாளர் வரேனென்கின்றார்கள் என்று சொல்லக் கேட்ட கச்சைக் கொடியோன் குலுங்க நகை த்து, ஓ சுவாமிகளே! நீர் காலந்தப்பி வந்தோ மென்று கவலைப் படவேண்டாம். உம்முடைய மனோபீஷ்டப்படிக்குக் கேளும் தருகிறேன் என்று சொல்லவும் தேவேந்திரனாகிய மறை யோன் மகிழ்ந்து கற்பக விருக்ஷத்தைப்போல் கேட்டதைக் கொடுக்க மாட்டுவையா என்றான். அதுகேட்ட கவசகுண்டலன் துடிதுடித்து, சுவாமி! எவர்கள் எதைக் கேட்கினும் இல்லை யென்னமல் கொடுக்கும்படியாகத் துவஜங் கட்டியிருக்கிறேன். அப்படிக் கொடாமல் மாறு வனேயாகில், யுத்த முனையிற் புறமுதுகிட்டு ஓடிய பாவிபோல் துற்கதி அடையக் கடவேன் நீர் தடையில்லாமல் கேளும்: ஓ புருஷ சிலாக் கியனே! ஓ வேதவாக்கியனே! என்று கர்னன் சொல்லவும், வச்சிராயுதன் புகழ்ந்து, உன் னுடைய தேகத்தோடு பிறந்திருக்கும் கவச குண்டலத்தை கொடுவென்று கேட்டனன். உடனே கனகக் கொடியோன் அகமகிழ்ந்து கொடுக்க எத்தனித்தான். அக்காலையில் அசரீரி தேவதை உரக்கக் கூவி, ஓ மிகுகொடை யாளனே! வந்தவன் இந்திரன் உபேந்திர னாகிய கிருஷ்ணபகவானுடைய போதனை யால் அர்ச்சுனனுக்குச் சகாயமாக உன்னிடத் தில் கவச குண்டலத்தைப் பெறும்படி பிரா மண ரூபத்துடன் வந்திருக்கின்றான். இவ் விரண்டையுங் கொடுத்து விடுவையாகிற் காண்டீபனுடைய கணையால் இறந்துபோ வாய். ஆகையால், கொடாதே! கொடாதே! என்று தடுத்தனள்.

அப்படி தடுத்துங் கர்னன் கேளாமல் கவசகுண்டலம் இரண்டையும் மாயப் பிராமணனிடத்திற்கொடுத்து, மலர்போன்ற பாதங்களில் வீழ்ந்து, ஐயனே! தேவரீர் வந்து இரு கரத்தையும் நீட்டிக் கேட்டதற்கு யான் கொடுத்தது ஒரு பொருளோ? என்று பிரிய வசனமுஞ் சொல்லினன். அதற்குத் தேவேந்திரன் புளகாங்கிதமுற்றுத் தன்னை மறந்து, இவனுடைய தவமே தவமென்று ஆசி கூறவும், பாரிஜாத புட்பங்களை தேவர்கள் வாரி மாரிபோல் தூறி தேவதுந்துபி முதலிய வாத்தியங்களை முழக்கினர். வையகத்துள்ள யாவரும் வாழ்த்தினர். அக்கால் ஐயமில்லா மனத்தோனாகிய சவுரியன் களித்து நிற்க, அப்போது தேவநாதன் தன்னுடைய யதாரூபத்தை எடுத்து எதிரில் நிற்க, அதுகண்ட ஈகையாளி அவனை இறைஞ்சிப் போற்றினன். உடனே இந்திரன் அவனை எடுத்து அணைத்து, அப்பனே! உன்னுடைய கருணை சுரந்த மனத்தினுக்கு நான் இளைத்தேன். அருச்சுனன் நிமித்தத்திற் கவசகுண்டலம் வாங்கவந்தேன். அசரீரி தடுத்தும் அந்த மொழியைத் தடுத்துக் கொடுத்த அன்பனே! உனக்குக் கைம்மாறு யான் செய்வதென்னவென்று தன் கையிலிருக்கும் சத்தி வேலாயுதத்தை எடுத்து கொடுத்து இதைக் கிரீடி தவிர மற்றப் பேர்கள்பேரிற் பிரயோகஞ் செய்வையாகில், உடனே தப்பாமல் கொல்லும் என்று பல்லாண்டு கூறினன். உடனே கர்னன் நமஸ்கரித்து, இரண்டு கரங்களினாலும் அவ்வேலை வாங்கிக்கொண்டான். அப்பால் இந்திரன் கர்னனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு துவாரகைக்குப் போய் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்திற் கவசகுண்டலத்தை வைத்தனன். அதுகண்ட பகவான் மனமகிழ்ந்து, இனிப் பாண்டவர்களுக்கு ஏதொரு குறைவும் இல்லையென்று சொல்லி, கர்னனுடைய உதாரத்தைக் கேட்டுப் புகழ்ந்தனர். பின்பு இந்திரன் கண்ணன் விடை கொடுக்கப் பெற்றுத் தெய்வலோகம் போய்ச் சேர்ந்தான். இப்பால் உலகத்தார் முதல் யாவருங் கர்னனைக் கொண்டாடினார்கள். பாண்டவர்களுக்கு இடது கண்ணும் இடது தோளுந் துடித்தன. இனிமேல் ஜெயம் பாண்டவர்களுடையதென்று வீஷ்மத் துரோணாதியர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். ஓ மகாராஜனே! இவ்வுலகத்தில், (இட்டோர் பெரியோர் இடாதோர் இழிகுலத்தோர்) என்னும் வாக்கியப்படிக்கு இல்லையென்னுமற் கொடுத்த சூரியபுத்திரன் இன்னமும் புகழுடம்பு கொண்டு இருக்கின்றான். இருந்தும் இல்லையென்னும் லோபியர் உயிருடன் செத்த பிணமாக உழல்கின்றார்கள். ஆதலால் ஈகையையுடைய தீரனே தீரன்.

இந்திரன் கர்னன் கவசகுண்டலங் கவர்ந்த சருக்கம் முற்றிற்று.

---

பதினேழாவது,

## பழம்பொருந்து சருக்கம்

### கண்ணன் துதி

மண்ணுடன் புனலுந்தேயு வாயுவா காய
ந்தன்னே, டெண்ணரு மிரவிதிங்க ளியமான
னினுமோரெட்டு, வண்ணமு மாகியெல்லா
வடிவினுஞ் சிறந்துநின்ற, கண்ணருளுடைய
கோவைக் கருதினோர் பிறவிதீர்ந்தோர்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! பாண்டவர்கள் பன்னீராயிரம் பிராமணர்களோடுந் தவுமியாசாரியரை வணங்கி சத்காலக்ஷேபஞ் செய்துகொண்டு வனத்திற் சஞ்சரித்திருக்கும்போது ஒருநாள் சாயங்காலவேளையிலருச்சுனனுந் திரௌபதியும் உல்லாசமாக வனத்தின் அதிசய வேடிக்கையைப் பார்க்கும்படியாக வந்து, வெளியே பெரியோர்கள் தவம் செய்யும் நெருக்கமும், விருட்சங்களின் மிகுதியும், மலையருவிகளின் ஓசையும், மிருகங்களின் ஆர்ப்பும், மலர்கள் நிறைந்த மணமும் இன்னமும் பற்பலவித வளப்பங்களையுங் கண்டு களித்து வரும்போது அங்கே ஒரு நெல்லிமரத்தில் ஓர்கனியானது மிகுந்த பிரகாசத்துடன் பழுத்து கொம்பில் இருக்கக்கண்டு, அம்பனைய கண்ணாளாகிய பாஞ்சாலி இதை அறுத்துத்தாரும் என்று அனுமத்துவஜத்தோனைக் கேட்க, விஜயன் காண்டீபத்தை வளைத்துச் சரத்தைத் தொடுத்து அறுத்து உடனே கொடுத்தான். அதைக்கண்ட மாதவர்கள் எல்லோருங் கூட்டமாகக் கூடிக்கொண்டு கிரீடியை நோக்கி, அடடா என்ன காரியஞ் செய்தாய். ஐயோ! பெரும்பழி தேடிக்கொண்டனையே; பெரியோருடைய சாபத்துக்கு ஆளாகினையே. இந்தப் பழத்தின் காரியம் என்னவென்று எங்களைக் கேட்கலாகாதா? பதறி அறுத்துக் கொடுத்தனையே; பாவத்திற்கு உட்பட்டனையே இனி யாங்கள் என்ன செய்வோம் என்று ஏங்கி இறைந்து விசனப்படும் பெரியோர்களை அர்ச்சுனன் பார்த்து, முகமுந்

தேகமும் வியர்த்து, பூமியில் விழுந்து நமஸ் கரித்து, சுவாமிகளே! என்பேரில் அபசாரம்; தெரியாமல் அறுத்துவிட்டேன். தேவரீர்கள் மன்னிக்கவேண்டும். இந்தாரும் உங்கள் நெல்லியங்கனி என்று பூமியில் வைத்துச் சாஷ்டாங்கமாக வணங்கினான்.

### அர்ச்சுனன் ஆமலக்கனிவரலா றுணர்ந்து தருமனிடஞ் சென்று முறையிட அவருந் தவித்தல்

அப்படி வணங்கிய பற்குனனைப் பார்த்து அந்தப் பெரியோர்கள் சொல்லுகின்றார்கள்: ஓ இராஜபுத்திரனே! இந்தக் கனி எங்களுக் குச் சொந்தமல்ல. மித்திர மஹாரிஷீஸ்வரர் இந்த வனத்தில் தவஞ் செய்துகொண்டு இருப்பதினால் இந்த வனத்திற்கு மித்திர மஹாரிஷிவனம் என்று பேர். யாங்கள் எல் லாம் அவருடைய அடிமைகளாக இருக்கின் றோம். அந்த உத்தமர் நித்தியம் ஒருவேளை இவ்விடத்திற்கு வந்து, இந்த ஆமலக விருட் சத்தின் அடியில் உட்கார்ந்து, சற்றுநேரம் யோகஞ் செய்து, பிற்பாடு எங்களுக்கு தவம்- தருமம்- நீதி இவை முதலிய யாவுஞ் சொல் லிப் போவார். அவருக்கு ஆகாரமாக ஈஸ்வ ரர் அனுக்கிரகத்தில் இந்த நெல்லி மரம் இரண்டு வருடம் பிஞ்சாகி, இரண்டு வருடங் காயாகி, இரண்டுவருடஞ் செங்காயாகி, நான்கு வருடத்தில் இரசம் பெருகிக் கனியாகி, அந்த மஹாரிஷியினுடைய கரத்தில்வந்து இறங் கும். அந்தக் கனியைக் கைலாசபதிக்கு அற் புதஞ் செய்து, தானுந் தன்னினமாகிய தவத் தினரும் புசித்துக் களித்து, மறுபடி பனி ரண்டு வருடம் வரைக்குங் காத்திருப்பார். அந்த மாதவருக்கு நாளைக் காலமே உதவியா குங் கனியைக் கன்னிகையின் வார்த்தையைக் கேட்டுஅறுத்து ஈந்தனையே? அந்தோ! என்ன செய்யலாம் என்றெல்லோரு மிரங்கக் கேட்ட இந்திரகுமாரன் இடிந்து இளைத்து, அக்கனி யைக் கைக்கொண்டு தருமராஜனுக்கு எதிரில் வந்து அவருடைய பாதங்களில் வீழ்ந்து அழுது பயந்து இதனைச் சொல்லுவதா யினன்.

அண்ணா! பாஞ்சாலி வார்த்தையைக் கேட்டு இந்தப் பழத்தை அறுத்துக் கொடுத் தேன். தவத்தைச் செய்யும் ரிஷிகள் எல்லாம் மித்திர மஹாரிஷியினால் சாபம் வரும் என் றும், பன்னிரண்டு வருடத்திற்கு ஒரு தரம் இந்தப் பழங் கிடைப்பது என்றுஞ் சொல்லு கின்றார்கள். இது நான் விவேகம் இல்லாமற் செய்த வேலை. (பெண் புத்தி கேட்டோர் பேதையாவார்) என்னும் பழமொழியையும் பாராமற் செய்து பாபியானேன். என்னைக் கோபியாமல் இரட்சிக்க வேண்டும் என்று வணங்கலும், உதிஷ்டிரர் அண்டையில் நின்ற தண்டதரனைப் பார்த்து, அப்பா வீமா! (பட்ட யிடமே படும் கெட்ட குடியே கெடும்) என் பது நமக்குப் பலித்தது. நாம் என்ன செய்ய லாம் மோர் சுடுகிறது என்று ஊதிக் குடிக்குங் காலத்திலும்,இந்தத் திரௌபதியினால்என்ன என்ன பொல்லாங்குகள் நேரிடுகின்றன. இன் னும் என்ன விளையக் காத்திருக்கின்றதோ நானறியேன் (கற்பகத்தைச் சார்ந்தவர்க்குக் காஞ்சிரங்கா யீன்றதே, முற்பவத்திற் செய்த வினை) என்னும் பழமொழி போல், அனுப விக்க வேண்டியதெல்லாம் அனுபவிப்போம் என்று உதிஷ்டிரன் விசனப் படும்போது, காண்டீபன் குதித்து, என்னால் ஒரு அபாயம் வந்தது என்னும் பெயர் வேண்டாம். பழ த்தை அறுத்தவன் நான். ஆகையால், என் னையே சபிப்பார். ஒருக்காலும் உங்களைச்சபிக்க மாட்டார். எய்தவன் இருக்க அம்பை நோ வார் எவருமில்லை. அவருடைய சாபத்திற்கு நானே ஈடாக இருக்கிறேன் என்று கூறினான். அப்படி கூறிய வெற்றி விசயனை தருமபுத்தி ரர் பார்த்து, தம்பீ! நீ சாபத்தினால் இறக்க வும், நாங்கள் எல்லோரும் பிழைக்கவுங் கூடு மோ? இறந்தால் எல்லோரும் மாய்வதே காரியம். இஃதல்லாமல் ஒருவர் போய் நால்வர் நிற்கிறதும் நால்வர் போய் ஒருவ னிற்கிறதுந் தருமத்தின் உரிமைப்பாடல்ல வென்றனர்.

### பாண்டவர் கிருஷ்ண மூர்த்தியைத் தியானிக்க அவரெழுந்தருளி அவர்களை ஆதரித்தல்

இப்படியாகப் பாண்டவர் கலங்கி யிருக் குஞ் சமயத்தில் அவருட் சகாதேவன் தரு மனை எதிர்கொண்டு வணங்கி, அண்ணா! பாண் டவர் சகாயனாகிய ஆண்டவன் ஆபத் பாந்த வன் என்று சொல்லும்படியாய் நம்மைச் சார் ந்தவனா யிருக்கின்ற ஒருவன் மடிந்தபோது அல்லவோ நாம் இறக்கவேண்டும். அவன் இருக்கும் வரைக்கும் நமக்கொரு குறைவும் இல்லை. அந்தக் கருணாநிதியை இவ்விடம் வரும்படி சிந்தித்தால் நமது ஆபத்து நீங்கும் என்று இளையவன் சொல்லக் கேட்ட யாவு

ருங் களித்து, ஏகமனத்தராய்ப் பக்தவத்ஸல ளுகிய பகவான் இவ்விடம்எழுந்தருளி இரட்சிக்க வேண்டும் என்று துதித்தார்கள். அக்காலையில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் பாண்டவர்களைப் பார்க்க வருகிறவரைப் போற் சத்தியபாமை சமேதராய் இரதத்தில் எழுந்தருள, உடனே ஆபத்துக்குப் பாபமில்லை என்பதாய்த் தருமநந்தனன் முதலாகிய பேர்கள் சாஷ்டாங்கமாகத் தெண்டஞ் செய்து, நெல்லிக்கனியினுல் நேரிட்ட குறையைச் சொல்லினுர்கள். அதுகேட்ட கண்ணன் மனந் துடித்து, அடடா!! இதென்ன காரியம்? இப்படியுஞ் செய்யலாமா? ஈசனுடைய அடியார் மனம் எரிந்து புகைந்தால் வீண்போமா? இந்தக் கனியைப் பொருந்த செய்ய என்னுலாமா? ஓ தருமநந்தனு! ஓ வீமசேனு! என்று அலறி அபயம் என்பவர்களுடன் தானுங் கூடி அவலிக்கத் தொடங்கினுர்கள். அதைக் கண்ட பஞ்சவர் முதல்வன் தஞ்சமையர் அஞ்சன மேனியனே! எங்களைத் தளரவிடாதீர் என்று தோத்திரஞ் சொல்லினர். அச் சொல்லைக் கேட்ட மாயன் சற்று நேரம் யோசித்து, இதனைச் சொல்லுவதாயினுர்.

ஓ முரசத்துவசனே! உங்கள் இஷ்டப்படி முடிப்பதற்கு நான் தேவனல்ல. மந்திர தந்திரங்களில் வல்லவனல்ல. ஆனுல், பெரியோருரைத்த வேதமொழி ஒன்றுண்டு. அதாவது (உற்றது பகர்ந்தால் அற்றது பொருந்தும்) என்பதுதான் இது உண்மையானது. மந்திரங்கால் மதி முக்கால் என்பது போல், அந்த மரத்தின் அடியிற் போய் நின்று, அவரவர்களுடைய மனோநிச்சயத்தை சொல்லுங்கள் எப்படியும் பொருந்தும் (ஜனவாக்கியந்து கர்த்தவ்யம்) என்பது பொய்யல்ல. என்றுரைத்துஇவர்களை அழைத்துக்கொண்டு சென்று, அந்த மரத்தின் அடியிற்போய் நின்று, தன் கரத்திற் பழத்தை எடுத்துக்கொண்டு, ஓ ஆகாயவாணி! ஓ பூமாதேவி! ஓ வன்தேவதர்! ஓ வேதமுதல்வனே! இந்தப் பாண்டவர்கள் சொல்லும் உண்மை வசனத்தினுற் பெரியோருக்கு அபசாரமாக அறுத்துவிட்ட பழமானது பொருந்தக்கடவது என்று இயம்பித் தருமராஜன் கரத்திற் கொடுத்தனர். அதை அவர் வணக்கமுடன் வாங்கி, வழிபடு கடவுளைத் தியானஞ்செய்து நின்றனர். மற்றையரும் அவ்வாறே தியான சிந்தையராய் இருந்தனர்.

தருமநந்தனனுரைத்த மனோநிச்சயம்

அப்போது கிருஷ்ணமூர்த்தியுந் தனக் கிஷ்டதேவனுகிய சம்புவைத் தியானித்து, பாண்டவர்களையும் பாஞ்சாலியையும் பார்த்து எச்சரிக்க முதலாவது, 'வெல்லுக்வறமுமெய்மையும்பொறையு மேகமேனுய னும்வெல்லாமற், செல்லுகபாவம் பொய்மொழி கோபந் தெயித்தியர் குலமெனத் தெளிவுற், றல்லும் வெம்பகலு மென்மனநிகழு மலகையாமன்னையை முன்னங், கொல்லுதல்புரிந்தோயென்றனன் இவனுரெனில், முரசங்கோட்டிய கொற்ற வெங்கொடியோன். இப்படியாக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை ஓ ஆதியில் வஞ்சகமாதாவாகி வந்த பூதகியைப் பாலைக் குடிப்பதுபோலவள் பிராணனைக் குடித்துக் கொல்லுந் தொழில் புரிந்த கோவே யென்று கூவி, தருமமும் சத்தியமும் பொறுமையும் நீலமேகவண்ணனுகிய நீரும் நித்தியமாக என்னிடத்தில் நீங்காமல் நீடூழி நிலைபெற்று வாழத்தக்கதுவேயல்லாமல், பாவமும் பொய்மொழியும் கோபமும் இராக்கத குலங்களைப்போல் நசித்துபோகக் கடவதென்று தெளிந்து என்னுள்ளமானது இரவும் பகலும் இதுவே வேலையாக நடந்துகொண் டிருக்கின்றது என்று முரசமெழுதிய வெற்றிக்கொடியினையுடைய தருமராஜன் தனது உண்மை யுறுதியைக் கூறியவுடனே, அகங்கையி லிருந்த ஆமலகம் இரண்டு முழம் உயர்ந்து நின்றது. அதைக் கண்டு யாவருஞ் சந்தோஷித்தார்கள்.

வீமசேனனுரைத்த மனோநிச்சயம்

இப்பால் இரண்டாவது, பிறர் மனைவியரைப்பெற்ற தாயெனவும், பிறர்பொருளெட்டியேயெனவும், பிறர் வசையுரைத்தல் பெருமையன் றெனவும், பிறர் துய்ரென்றுயரெனவும், இறுதியே வரினுமென் மனக்கிடக்கை யெம்பிரானிவை யெனவும் உரைத்தான். இவனுரெனில், மறலியும் மடியுமாறு மல்லியற்கை வலிமைகூர் வாயுவின் மைந்தன். இப்படியாக ஸ்ரீ வேணுகோபாலனை ஓ என் கர்த்தனே! யென்று கூவி, அன்னியர்களுடைய தருமபத்தினிகளைக் காணில் என்னைப்பெற்ற தாயெனவும், பிறருடைய பொருள்களைக் காணில் எட்டிப் பழமெனவும், ஒருவரையொருவர் வசைமொழிந்து புறங் கூறுதல் பெருமையல்லவெனவும், வேறொருவர் வருந்தும்படியாக நேரிடுந் துயரம் எனக்கு வந்த துயரமெனவும், எனக்கு இறுதிவந்தி போங்கால நேரி

டுஞ் சம்பத்தும் என் மனத்தை விட்டு நீங்காதிருக்கும் இந்தத் திடத்தை நீரே யறிந்து கொள்ளும் என்று இயமனை மடியச்செய்யும் வலிமையுங் குற்றமற்ற இயல்பையுமுடைய வாயுவின் குமாரனாகிய வீமசேனன் சொல்லவே அந்த நெல்லிக்கனியானது பின்னும் இரண்டு முழமும் உயர்ந்து நின்றது.

விஜயனுரைத்த மனோநிச்சயம்

இப்பால் மூன்றாவது, 'ஊனமேயான ஊனிடையிருக்கு முயிரினைத் துறந்து மொண்பூணு, மானமே புரப்ப தவனிமே லெவர்க்கும் வரிசையுந் தோற்றமு மரபு, ஞானமேயான திருவடி யுடையாய் ஞாலமுள்ளளவும் நிற்றலினு, லீனமேயுயிருக் கியற்கையாதலினு லென்றனன். இவனுரெனில், வீமனுக்கிளையோன். இப்படியாக ஸ்ரீ வாசுதேவனை ஓ மெஞ்ஞான உருவாகிய திருவடிகளையுடைய விமலனே! யென்றுகூவி, மாமிசம்-இரத்தம்-சீழ்-நரம்பு-எலும்பு-தோல் இவைகளாற் கூடி நீர்க்குமிழி போல் அழியும் உடலிற் பொருந்திய ஆத்மாவை இழந்தாகிலும், ஒழுக்கமுடைமையும், மதிப்பாகிய சத்திய மொழியும், நல்லக் குடிப்பிறப்பும், பூலோகமுள்ள வரையிலும் நிலை பெற்றிருப்பதனால், இவற்றைப் பொருளாய் பெறவேண்டும்.' அப்படி யவற்றைப் பெறாமல் மனத்தேகமெடுத்து விருதாவில் இறப்பது ஆத்மாவுக்கு ஈனம். ஆகையாற் புருடராகச் சன்னமெடுத்தவர்கள் மெய்ஞ்ஞான போதத்தை அறியவேண்டும். அல்லது யுத்தசங்கிராம வீரனாகவேண்டுமென்று என்னுடைய கடைப்பிடி என்னையாவது என் வில்லையாவது என் தமயனையாவது பழித்தவர்களையும், என்னோடு எதிர்த்தவர்களையும் கொன்று வெற்றித் துவஜம் நாட்டுவதே எனக்கு மேம்பாடாகிய கீர்த்தியென்று எண்ணங்கொண் டிருக்கின்றது. என்னிதயம் என்று வீமசேனனுக்கிளைய பார்த்தன் சொல்லவே, அதுகாலையில் கனியானது இரண்டுமுழம் உயர்ந்தது.

நகுலனுரைத்த மனோநிச்சயம்

இப்பால் நான்காவது, 'குலமிகவுடைய ரெழின்மிகவுடையர் குறைவில் செல்வமுமிகவுடையர், நலமிகவுடையரென்னினுங் கல்வி ஞானமற்பமு மிலாதவரை, வலமிகுதிகிரிச் செங்கையாய் முருக்கின் மணமிலா மலரென மதிப்பேன், சலமிகுபுவியிலென்றனன் இவனுரெனில், வாகைத்தார்புனை தாமரைவல்லான். இப்படியாக ஸ்ரீ பரந்தாமனை ஓ பலமிகுந்த சக்கிராயுதத்தை தரித்தருளிய செந்தாமரைக் கையனே என்று கூவி, மேலாகிய குலத்திற் பிறந்தோர்களானாலும், நல்லழகுகளெல்லா முடையவர்களானாலும், அழியாச் செல்வத்தை அதிகம் பெற்றவர்களானாலும், சகல நலங்களையு முடையவர்களானாலும் கல்வியும் அந்தக் கல்விக்குத் தகுந்த கியானமும் அற்பமேனுமில்லாதபேர்களை சமுத்திரஞ் சூழ்ந்த பூலோகத்தில் வாசனையற்ற முருக்கம்பூப் போல் மதிப்பதேயன்றி, அவர்களைத் துதிக்கேன் என்று வேகத்தின்கதிமாருத குதிரைக்கு வல்லவனாகிய வெற்றிமாலை புனைந்த நகுல மகாராஜன் சொல்லவே, அந்தப் பழமானது பின்னு மிரண்டுமுழம் உயர்ந்து நின்றது.

சகாதேவனுரைத்த மனோநிச்சயம்

இப்பால் ஐந்தாவது, 'ஒருமொழி யன்னை வரம்பிலாஞான முற்பவகாரண னென்றுந், தருமமே துணைவன் கருணையே தோழன் சாந்தமே நலனுறுதார, மரியதிண்பொறையே மைந்தன் மற்றிந்தவறுவரு மல்லதா ருறவெண், டிருவளர்மார்பா வென்றனன். இவனுரெனில், ஒருநாற் பிண்ணியர்க்குந் திகழுளவல். இப்படியாக ஸ்ரீ பக்தவத்சலனை ஓ அஷ்டலட்சுமிகள் குடிகொண்டு வளருமழகிய மணிமார்பா! வென்று கூவி, சத்தியமே தாய். அளவுபடாத ஞானமே தந்தை. எந்நாளும் தருமமே சகோதரன். கிருபையே தோழன். சாந்தகுணமே சகல நன்மையைத்தருந் தருமபத்தினி. அருமையாகித் திணிந்த பொறுமையே புத்திரன். இந்த ஆறுபேரும் எனக்கு உறவினர். ஆதலாற் குந்திமாதேவியும் மத்திராதேவியும் பாண்டுராஜனும் எனக்குத் தாய் தந்தை அன்று. தருமராஜன்-வீமசேனன் அருச்சுனன் - நகுலன் இவர்கள் சகோதரர் அன்று. இந்தக் கிருஷ்ணதேவர் எனக்குத் தோழன் அன்று. சேயை என்பவள் பத்தினி அன்று, விரசுகோத்திரனும் - சுதசேனனும் எனக்குப் புத்திரர் அல்லர் என்று தருமராஜன் முதலிய நால்வருக்கு மிளையோனாகிய சகாதேவன் இயாவருங் களிக்கத் தன்னுடைய இருதயகமலத்தில் இருந்ததை எடுத்துக் கூறவே, அதுகாலையில் அந்தப் பழமானது பின்னும் இரண்டுமுழ முயர்ந்தது.

திரௌபதியுரைத்த மனோநிச்சயம்

இப்பால் ஆறுவது, 'ஐம்புலன் களும்போலைவரும்பதிக ளாகவுமின்னம்வே றொருவ,

னெம்பெருங் கொழுந ளுவதற்குருகு மிறை வனேயெனதுபேரிதய, மம்புவிதனிற்பெண் பிறந்தவரெவற்கு மாடவரிலாமையி னல்லா, னம்புதற்குளதோ வென்றனள். இவளாரே னில், வசிட்டனல்லற மனைவியே யனையாள். இப்படியாக ஸ்ரீ ஜனார்த்தனனை ஓ என்தருமை யோர்ந்த அண்ணுவே! யென்றுகூவி, ஒன்றை விட்டொன்று நீங்காத ஐம்புலன்களைப்போல் பாண்டவர் ஐவரும் எனக்கு நாயகராகி யிருந்தும், இன்னமும் வேறொருவன் எனக்குப் புருடனாகும்படியாக விரும்புகின்ற என்னுடைய பெரிய மனம் ஆனாலும், அழகிய பூமியிற் புருஷர்களென்னும் போற்றிருக்குமாகிற் பெண்ணாகப்பிறந்த யாவரையும் பதிவிரதைகளென்று சொல்லலாம். புருஷர்களுள்ளவரையிலும் பதிவிரதைகளென்று நம்புவதற்கு இடமுமுண்டோ? என்று வசிஷ்டமகாரிஷியினுடைய வாழ்க்கைத்துணை நலத்திற் கமைந்த மனைவியாகிய அருந்ததிக்கு ஒப்பான பாஞ்சாலியானவள் சொல்லவே, மித்திர மகாரிஷிக்கு ஆகாரமாகிய நிறைந்த இன்சுவையினையுடைய தேவாமிர்தம்போன்ற நெல்லியங்கனி முன்னிருந்த கிளையினிடத்தில் ஒட்டிக்கொண்டது. ஓ மகாராஜனே! பிரம்மாதிபஞ்ச கர்த்தாக்களை யொத்த பாண்டவர்களும், வாணியாதி பஞ்ச சத்திகளை யொத்த பாஞ்சாலியுஞ் சொல்லிய வாக்கியத்திற்கு, வாக்கியம் வேதமேயன்றி வேறன்று.

### பாண்டவர்கள் தங்களிருக்கைவந்து சேர்ந்தபின்பு, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி துவாரகைக் கெழுந்தருளல்.

அப்போது மகாலட்சுமியையுங் கவுஸ்துவாபரத்தையுந் துளபத்தையு மணிந்த திருமார்பினையுடைய துவாரகாபுரிவாசன் இவைகளை யெல்லாங் கேட்டு ஆச்சரியங்கொண்டு, கேட்டீர்களோ பாண்டவர்களே! உண்மையுரைக்கில் உண்மை பலிக்கும். நன்மை பகரில் நன்மையைத் தரும். ஆதலால் உற்றது உரைக்கில் அற்றது பொருந்துமென்று பெரியோர்கள் பேசியிருக்கும் வாசகத்தின் மகத்துவத்தை அறிந்து கொள்ளுங்கள் என்று சொல்லவே, யாவருஞ் சந்தோஷங் கொண்டு வணங்கி, தாங்களிருக்கும் வனத்திற்குச் சென்றார்கள். அக்கால் தாமரைக் கமலத்தின் அரும்பைப்போல் எழுந்து விரியாது குவிந்து விளங்குந் தனங்களையுடைய ஆயர்மாதர்களின் மலர்போன்ற கைகளிலணிந்த வளையல்களின் தழும்பு நீங்காத மரகதம்போன்ற ரூபசிங்கார முடையவராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் இளைத்து வருந்திய பாண்டவர்களின் துன்பங்களை இன்பமாகச் செய்து பொங்கியெழுந் தரங்க முடைய பாற்கடலானது தனது நாயகனை விட்டுப் பிரியாதபடி உறையுந் தன்மை போன்ற அகழ் சூழ்ந்த வளப்பந்தங்கிய துவாரகையை நோக்கிப்போகத் திரும்பினார். இங்ஙனம் ஐவர்களும் இறைவனை இறைஞ்சி இருந்தார்கள்.

இவ்வாறு கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் வபுஷ்டா தேவியுடனெழுந்து வணங்கி, ஐயனே! பாஞ்சாலியானவள் புருஷர்களில்லாவிட்டால் ஸ்திரீகள் உத்தமிகளென்றும் புருஷர்கள் இருந்தால் மந்திமார்களென்றுஞ் சொன்னதாகச் செலவு கொடுத்தீர். அஃதென்ன காரணம்? என்று அரசன்கேட்க, வைசம்பாயனர் சொல்கின்றார்: ஓ இறைவனே! கேளும்: 'எந்தெழின் மிக்கானினையா னிசைவல்லான், காந்தையர் கண்கவரும் காட்சியான் வாய்ந்த, நயனுடையின் சொல்லான் கேளெனினுமாதர்க், கயலார்மே லாகுமனம்' என்றும் 'தந்தையாயினும் வினைவிற் றன்னுடனே ஒருவயிற்றிற் சார்ந்தாரேனும், மைந்தராயினு மிகவும் வனப்புடைய ரெனிலவர்மேல் மடநல்லார் தம், சிந்தை நடந்திடும்' என்றும் 'எழிலுடையோர் முகநோக்கி வழன்முகத்தி லிழிதென்ன மாதருள்ளங், குறையுமென யானுரைத்தால் குறிகொண்டாயிலேயோலும்' என்றும் எல்லா நீதிகளுஞ் சொல்லப்படுகின்றது. ஆகையால், 'பேதமை என்பது மாதர்க்கணிகலம்' என்றபடி சிந்தையானது சிறிது நிலைக்காதபடி சஞ்சரிக்குந் தன்மையினால், மகளிர்க்கு மனந்தாவும் என்பதுபற்றிப் பாஞ்சாலி அப்படி உரைத்தாள் அதைக்கேட்டு தனது பத்தினிக்கு மிஞ்சினபோகளில்லை என்று இருந்த தருமராஜனும் வெகுவா யோசித்து அந்த ரகசியம் அரிபரந்தாமன் அறியத்தக்கதே யன்றி நம்மால் அறியத் தக்கதல்லவென்று அஞ்சியிருந்தார். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியுஞ் சத்தியபாமையும் துவாரகைபோய்ச் சேர்ந்தார்கள்.

பழம்பொருந்து சருக்கம் முற்றிற்று.

பதினெட்டாவது,

## நச்சுப்பொய்கைச் சருக்கம்

### கண்ணன் துதி

விசும்பினை யாதியாய் விரியும் பூதவித்
தசும்புள வாழ்க்கையில் சார்வரோ கொலாம்
லசும்பிள முல்லையலர் மங்கை யாள்பவன்
பசும்புயல் வண்ணமே பரவும் பற்றினோர்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! பாண்டவர்கள் ஐவரும் பாஞ்சாலியுந் தங்களுக்கு நேரிட்ட துன்பத்தையும் பகவானால் நேரிட்ட இன்பத்தையும், தங்கள் சம்பத்தையும் நினைந்து நினைந்து மகிழ்ந்து புகழ்ந்து, தாங்களிருந்த வனத்தை விட்டகன்று, சார்வளம், நீர்வளம், கந்தமூலபலாதிவளம் நிறைந்த விண்டு சித்தமகா ரிஷியினுடைய வனத்தில் வந்து பனிரண்டாம் வருஷத்தை கழித்துக்கொண் டிருக்கையில், அத்தினபுரத்தில் இருக்கப்பட்ட துரியோதனன்-கர்னன்-சகுனி-துர்ச்சாதனன் என்னும் இந்த துஷ்ட சதுஷ்டர்கள்கூடி, பாண்டவர்கள் பனிரண்டு வருஷமுங் கழித்தார்கள். இன்னும் ஒருவருஷம் அக்கியாதவாசம் போக்கிவிட்டு, இவ்விடம் வந்து தங்களுடைய பங்கையை முடித்துக் கொள்ளுவார்கள். ஆகையால், அக்கியாதவாசம் ஆகுமுன்னமே நாம் ஏதாகிலும் ஒரு கலகம் செய்துவிடவேண்டும்; அல்லது அவர்களைக்கொன்று விடவேண்டும்; இதற்கு எவ்வித உபாயந் தேடலாமென்று துஷ்டர் நால்வரும் யோசிக்கும்போது, மாமன் சகுனி மருமகனை நோக்கி, காமனை வென்ற கர்ளமா முனியைக் கடிதினில் அழைத்தாற் காரியமாகும் என்று சொல்லவும், இது சரிதானென்று இவர்கள் பேசிக்கொண்டு எதிரில் இருந்த துர்ளமாமுனிவனை விடுத்து அக்கர்ளமாமுனியை கையோடு அழைத்து வாருமென்றுரைக்க, அம்முனிவன் அவ்வாய்ச்சொல் முடியுமுன்னே அழைத்து வந்தான். உடனே துரியோதனன் எழுந்து, அவருடைய அடிமலரிணைக்கு அர்க்கியாதிகள் அளித்து, சாம்பிராணி தூபமுஞ் சாஷ்டாங்க தண்டஞ் செய்து, எந்தையே போற்றி! ஈசனே போற்றி! சுந்தர வேடத் தோன்றலே போற்றி! 'பகைமேலிட்ட பாண்டவர் தம்மை, மாண்டிடச்செய்து வையகமுழுதும், துண்டாச் சுடர்போல் துன்பமொன் றின்றியான், ஆண்டிடச் செய்வதுன்னருளேயாதலால், என் சிந்தையின் மருளைத் தீர்த்து இரட்சிக்க வேண்டும் தேவனே என்று துரியோதனன் போற்றவும்; சகுனி-துர்ச்சாதனன்-கர்னன் இவர்கள் மூவரும் இருகரம் குவித்து, அரசன் எண்ணப்படியே அருள் செய்ய வேண்டுமையா முனிவர் பிரானே என்று வணங்கினர்.

### துரியோதனாதிகள் கர்ளமா முனியைக்கொண்டு பாண்டவர் பொருட்டு மாரண ஓமஞ் செய்வித்தல்

இவ்வாறு துரியோதனன் முதலிய துஷ்ட சிரோமணிகள் நால்வரும் வணங்கிக் கேட்டலும், கர்ளமா முனிவர் கலங்கிப் பயந்து இடிவிழும் பாம்புபோல் ஏங்கி இளைத்து பாவிகளிடத்தில் பக்ஷமாய் வந்தோம். இவர்களால் நமது இழிவும் குறையும் உலகப் பழிப்பு நம் முயிரின் இழப்பும், தவத்தின் பலன்களும், சத்திய விரதமும் அழியுங்காலம் அடுத்ததென்றெண்ணி, 'அரவக்கொடியோய் ஐவர்மேற் கொடுமை, தீயர்கள் நினைப்பினாற் செய்ய நினைப்பையேல், அரசும் வாழ்வும் ஆக்கமும் புகழும், புத்திர மித்திரரும் பொன்றுவதுண்மை. உன் வார்த்தையினால் உடம்பட்டு ஓமஞ்செய்து பூதத்தை அனுப்பினாலும், பூதகியைக் கொன்ற பூதநாதனும், புண்ணிய புருஷோத்தமனும், பாண்டவர் சகாயனும் ஆகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவர்களை ஆண்டு இரட்சிப்பான். நீயும் நானும் மாண்டுபோவோம். இந்த எண்ணம் உனக்குவேண்டாம். சத்துருக்களைச் சண்டையில் வெல்வது சத்திய தருமம். அதனால் வெற்றியும் உண்டாம். மோச நினைப்பு நாசம் விளைக்கும். ஆதிநாளையில், நீ அன்னத்தில் விஷத்தைக் கலந்து ஊட்டிவைத்தும் வசியை நாட்டிவைத்தும், மனையில் தீயை மூட்டி வைத்தும், இவைகட்கெல்லாம் தப்பிப் பிழைத்தவர் இன்னும் எதினால் இறப்பார்கள்? அப்பா! நீ சுகப்பட்டு ஏக சக்கிராதிபதியாய்த் துரைத்தனஞ் செய்யவேண்டுமானால், நான் சொல்லும்வண்ணம் நில்லு. கணப்படுவாய். நல்லோர்க்கு பொல்லாங்கு நினையாதே. நாமே பிழைக்கவேண்டும் பிறர்கெடவேண்டுமென்று உன்னாதே; நலமிலாத் துஷ்டரைச் சேராதே; நானிலம் பழிக்க நடவாதே; தாய் தந்தை வார்த்தையைத் தள்ளாதே; தானகுருமங்களை மறவாதே; பெரியோர் தம்மை இகழாதே; பேதையர் பேச்சைக் கேளாதே; சத்தியந் தப்பி நடவாதே; தையலார் மோகங்கள்

கொள்ளாதே; வஞ்சக நினைப்பு வையாதே; வாழ்நாள் வீணிற்போக்காதே; இத்தன்மைய வாகிய நீதியை அனுசரித்தால், உனக்குச்செல்வம் நாளுக்குநாள் நிறைவாகும். குறைவின்பது சிறிதுமிராது; ஆயுளுங் குறையாது; விஷைம்பரிகைஷ பார்ப்பவர்களைப்போல் மனது அறிந்து வசநாரியைப் புசிப்பார்களா? அரசனே! என்று தபோமுனி சொல்லினர்.

இவை யனைத்தையுந் துரியோதனன் கேட்டு, காளமாமுனியின் காலில் விழுந்து கண்ணீர் சொரிந்து, சுவாமி! என் வாக்கியத்தைத் தள்ளாமல் அவர்களைக் கொல்லவேண்டுமேயொழிய, சமாதானங்கள் சிறிதுஞ் சொல்லவேண்டாமென்று வருந்தி அவர் வாயையடக்கினன். மற்றையருஞ் சுற்றிலுஞ் சூழ்ந்து கொண்டு, ஒரே பிடிவாதமாய் பீடித்தனர். என்ன செய்வார் முனிவர்? விநாசகாலமுடையவனுக்கு விபரீதபுத்தி விளையுமென்று மேலோருரைத்த விதியின்வண்ணம், வினைவசத்தால் அவரும் நல்லதென்று உடம்பட்டுயாகத்திற்கு வேண்டிய வஸ்துக்களெல்லாம் எடுப்பித்துக் கொண்டு தாமிருக்கும் இடத்தைவிடுத்து, ஒருவருமில்லாமல் நரியும்-நரியும்-பேயும்-கழுகும்-பூதப்பிரேதமும்-கள்ளியும்-சுள்ளியும் நெருங்கி யிருக்குஞ் சுடுகாட்டிற் போயிருந்து அதர்வண வேதவிதியை அனுசரித்து மாரண ஓமஞ்செய்து மாடு-ஆடு-பன்றி-யானை இவை முதலிய பலிகள் கொடுத்து அசாஸ்திர வஸ்துக்களும்-ஓமவிறகுகளும் - விதிக்கு மாறுபாடாகிய நெய்களும் விடுத்து ஆகாயம் வரையிலும்புகையளாவும்படி ஓமஞ்செய்து அளவற்ற குரூர மந்திரங்களை உச்சரித்து, ஒவ்வொன்றுக்கு சகஸ்திர அுகப்பை நெய்வார்த்து, துஷ்டதேவதைகளை யெல்லாங் கட்டிக் காவல் செய்து பட்டப்பகற்போல் தீயைமூட்டி பூரணாகுதிவிட்டு வரும்போது, அந்த ஓமகுண்டத்திலிருந்து துரியோதனனுடைய பேராசையைப்போல் வளர்ந்து, அவனுடைய மனத்தைப்போற் கறுத்து, செவ்வானத்திற்கு ஒப்பாகிய மயிரும், வடவாமுகாக்கினிபோன்ற கண்ணும், அகோரப்பல்லும், பெரியகரமும், சிறிய காலும் உடையதாய், விகாரத்தன்மைப் பொருந்தினதாய், தீர்க்கமும் பருமனுஞ் சிவேலெனும் நிறமுமாக ஒரு பெரும் பூதம் பிறந்து, ஓமகுண்டத்தை உதைத்து எழும்பிப் பூமியிற் குதித்தது. அதுகண்ட காளமாமுனிவர் பொம்மென நடுங்கிப் பிரமைகொண்டு, அது தன் வயப்பட்டிருக்கும்படி வசிய மந்திரங்கள் கூறி, அப்பூதத்தை நோக்கி மந்திரக்கவசத்தினால் வலுவேற்றிக்கொண்டு இருக்கின்றார்.

### எமதருமராஜன் பிரமசாரியுமானுமாகச் சென்று பாண்டவரைக் கடம்பாலவனத்திற் கொண்டுபோய் விடுத்தல்

ஐயா மகாராஜனே! இப்படி இவர் இவ்விடத்தில் இருக்க, பாண்டவர்களுக்கு நேரிடும் நன்மையைச் சொல்லுகின்றோம் கேளும்: இந்தக் காளமாமுனிவர் செய்யப்போகின்ற யாகத்தை ஸ்ரீ கிருஷ்ணபகவான் அறிந்து, யமதருமராஜனை நினைத்தனர். உடனே அந்த யமதருமராஜன் ஒரு பிரமசாரிப் பிள்ளையைப் போல்வேடங்கொண்டு, பாண்டவர்கள் இருக்குங் காட்டில் ஓடிவந்து, அபயம் அபயம் என்று அலறி அழுது அவர்களெதிரில் விழுந்தனன். அப்போது ஐவர்களும் ஓடிவந்து அந்தப் பிள்ளையை அழைத்துப்போய், உபசாரஞ்செய்து, ஓ சிறுவனே! நீ ஏன் இப்படி அபயமிட்டு அழுகின்றாய் என்று கேட்க, அந்தப் பிள்ளை சொல்லுகின்றான்: ஓ அரசர்களே! நான் பிராமணப்பிள்ளை. எனக்கு உபநயனம் ஆகவில்லை. (ஜன்மனாஜாயதேசூத்திர, கர்மணாஜாயதேதுவிஜஹ, வேதபாடேன விப்ரஸ்யாத், பிரமக்கியானேன் பிராமணஹா) என்னும் வாக்கியம்போல் நானிருக்க, என்னைச் சில பிராமணர்கள்கண்டு நிந்தித்தார்கள். நான் ஒரு பெரியவரையடுத்து என்குறையைச் சொல்லிக்கொண்டேன். அந்தப் பெரியவர் உபநயனம் நான் செய்துவைக்கிறேன். நீ பயப்படாதே. ஆனால், அதற்கு ஒரு மான்குட்டி நாலுகாலும் வெளுப்பாய், தேகம் பரிசுத்தமாய், பால் மறந்ததாய், தருப்பையைப் புசிக்குங் காலத்திற் பிடித்து அதினுடைய தோல் கொண்டுவந்தால், முப்புரி நூலிற் கட்டி உபநயனம் முடிக்கலாம் என்று சொல்லினர். இப்படி சொல்லக் கேட்ட ஒரு வருஷ காலமாய் இந்த வனத்தில் வந்து ஒரு வேடனைச் சிநேகித்து, அவனுடன் திரிந்து, அவ்வாறான ஓர் குட்டியைக் கண்டு பிடித்து, அந்தக் குட்டியின் தோலை அவ்வேடனைக் கொண்டு உரித்து காயவைத்து பின்பு அவன் கொடுக்கப் பெற்றுக் கொண்டு, இன்று அந்தக் கருமம் முடித்துக் கொள்ளக் கருதி நான் போகா நின்றேன். போகும்போது ஒரு கலைமான் ஓடி வந்து, என் கையிலிருந்த தோலைப் பிடுங்கிக்கொண்டு

போய் விட்டது. ஓ ஐயமீர்! நான் இனி என்ன செய்வேன்? என்று ஏங்கி விசனப்பட்டான் அவ்வெம தருமப் பிரமசாரி.

அதுகேட்ட பாண்டவர்கள் மனதிரங்கி ஐயா பயப்படாதீர். நாங்கள் கொண்டு வருகின்றோம் என்று கரங்களில் வில்லும் பாணமும் எடுத்துக்கொண்டு ஐவரும் அந்தமான்போன வழி எது வென்று கேட்டுக்கொண்டு போய் அந்த மானைக்கண்டு தொடர்ந்தார்கள். அந்த மான் இவர்களைக்கண்டு பயப்படாமல் நிற்கும். சற்று நேரம் படுக்கும். பின்பு எழுந்து நோக்கும். இவர்கள் கையில் அகப்படுவதுபோற் றியங்கும். அப்பாற் காற்றிலுங் கடிய வேகமாய் ஓடும். சில நேரம் அயர்ந்து இளைத்து இருக்கும். இப்படிக்கு இவர்களுக்கு மன வெறுப்பு வரவொட்டாமல், தானும் அகப்படாமல், பாண்டவர்களை நீண்ட வனத்தில் நெடுந்தூரங் கொண்டு போய் விட்டு மறைந்தது. அப்போது பாண்டவர்கள் பகல் பத்து நாழிகை வரையிலும் ஓடி இளைத்துக் களைத்து, மான் அகப்படாமையால் வருந்தி, அந்தப் பிராமணப் பிள்ளைக்கு மான் தோலும் நேரிடாமையால் மனம் மெலிந்து, காடுகள், மலைகள், வனங்கள், வனந்திரங்கள் எல்லாந் தேடி, கடும் பாலை வனத்தை நாடி, தங்களுடைய காதுகள் கும்மென்று மூடி கண்கள் இருண்டு நாவறண்டு நாபி வரையிலும் உலர்ந்து நடுக்கம் மேலிட்டு அவர்கள் வருந்திய துன்பத்தை ஆயிரம் நாவினாலுஞ் சொல்லி முடியாது தேக விளைப்பும் தாக விடாய்ப்பும் பிராமணப்பிள்ளைக்குத் தோல் கொண்டு வந்து தருகிறோம் என்று கூறி வந்து அந்த மான் அகப்படாமற் போன உளைப்பும் எல்லாம் ஒன்றுபடவே தருமராஜன் தளர்ந்து கால் ஓய்ந்து சந்தன விருட்சத்தின் நிழலில் விழுந்து விட்டார். தம்பிமார்களுஞ் சோம்பி வெம்பி விழுந்தார்கள். சற்று நேரந் தரித்துத் தருமராஜன் கண்ணை விழித்துப் பார்த்து சகாதேவனை அழைத்து இதனைச் சொல்லுகிறார்:

### எமனாலுண்டான நச்சுப் பொய்கையால் வீமனாதிய நால்வருமிறக்க தருமனுயிர் சோர்தல்

அப்பா தம்பி! என்னுயிர் போகின்றது. கொஞ்சந் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தால் இந்நேரம் மெத்த உதவியா யிருக்கும். என்று சொல்லவுஞ் சகாதேவன் கேட்டு தன்னுடைய மெய் வருத்தத்தையும் பாராமல் காலோய்வையும் நோக்காமல் அவ்வனத்தில் நெடுந்தூரம் போய்த் தண்ணீர் தேடி வாடி வருந்தி எங்குஞ் சலமகப்படாமல் திரும்பி வந்து ஒரு பெரிய குன்றின்மேல் ஏறி நான்கு திக்கும் பார்த்தான். அப்போது மேற்குத் திசையில் ஒரு பெரிய ஆலமரந் தழைத்திருக்கக்கண்டு அவ்விடத்தில் தண்ணீர் இருக்கும் என்று உட்கொண்டுபோய்ப் பார்க்கும்போது ஓர் பெரிய தடாக மிருக்கக் கண்டு கால் கரஞ் சுத்தி செய்துகொண்டு இரு கரங்களினாற் புனலை வாரி வாயினாற் பருகினான். உடனே தலை சுழற்றி மயக்க முற்றுக் கரைமீது ஏற அங்கே தள்ளாடித் தடுமாற்றங் கொண்டு விழுந்து இறந்து போனான். இதனை அறியாத முரசத்துவஜன் நகுலனை நோக்கி, உன் தம்பிசகாதேவனை இதுவரையிலுங் காணோம். எவ்விடத்திற் தண்ணீர் தேடுகின்றானோ? அல்லது வாடுகின்றானோ? ஒன்றுந் தெரியவில்லை. நீயாகிலும் போய் அவனை அழைத்துக் கொண்டு தண்ணீர் மொண்டு வரக்கடவாய் என்று அனுப்பவும் அவனும் அப்படியே போய்த்தேடிக் குன்றேறிக் குளத்தைக் கண்டு, அந்தத் தடாகத் தண்டையிற் போகும்போது தம்பி விழுந்து கிடப்பதை நோக்கி, ஐயோ! இது என்ன தலைமயக்கமோ? அல்லது நிலத்தியக்கமோ? களையோ? என்று உன்னினவனாய்த் தானும் ஜலத்தைப் புசித்துத் தம்பிக்குங் கொடுத்து எழுப்பிக்கொண்டு தமயனுக்குக் கொண்டுபோவோமென்று கரங்களிற் கங்கையை வாரிப் பருகினான். உடனே கண்கள் சுழலமிட்டு அங்கனே விழுந்து இறந்தான். தருமராசன் நகுலனும்வரத் தாழ்க்கவே இப்பால் ஒப்பாருமில்லாமற் சுப்ரதீபம்போல் நின்ற அருச்சுனனைப் பார்த்து, அப்பா! பற்குனா! என் மெய்யோ மெலிகின்றது உயிரோ சோர்கின்றது தம்பிமார் இருவரும் சல்தி வரவில்லை. நீயாகிலும்போ யவர்களை யழைத்துக் கொண்டுநிமிஷத்திற் ஜலங்கொண்டுவாவென்றனர். உடனே யவன் முன்சென்றவர் அடிச்சுவடு தெரிந்து சென்று குன்றேறிக் கண்டு, குளத்தைச் சார்ந்து, தம்பிமாரிருவர் சாய்ந்ததை யோர்ந்து, தண்ணீரள்ளித் தானுங் கொள்ள சேற்றில் யானை சிக்கியவிதம்போல், பார்த்தனும் பூமியிற் படுத்து இறந்திட்டான்.

இவ்விடத்தில் உதிஷ்டிரர் இளைப்பினால் வாடி மூர்ச்சைபோகவும் முன்னின்ற வீமன்,

அண்ணனை மடிமேல் அணைத்துச் சாத்தி, தண்ணீர்கொண்டு தருவேனென்று சந்தன மரத்திற் சாயச்செய்து ஓட்டமாய் ஓடி உதகத் தைக் கண்டு, உயிர் இறந்துகிடக்கும் உத்தமர் மூவரை பார்த்தவுடனே, தாகம் பறக்க் வேர்த்து விதிர்த்து விசாரத்தில் மூழ்கி, கண்ணீர் ஆறுய்க்கசிந்து பெருக கையாலசைத்து காரியமிலையென அறிந்தோனாகி, ஐயோ! இதற்கு என்செய்வோம் சிவனே! தேவர்தந்தேவனே! கானியாறெல்லாங் கடந்தோம் சிறிய கால்வாய் தாண்டக் கதியற்றிறந்தோம். பாஞ்சாலி கூந்தலைப் பறக்கச் செய்தோம். பண்ணிய சபதம், மண்ணிலுகுத்தோம். வீரமும் புகழும் வெட்ட வெளியாச்சே. தெய்வசகாயந் தெரிந்து போச்சே. தீயோர் செய்கை செம்மையாச்சே. திருடர்க்கெல்லாந் திடமாய்ப்போச்சே. வினையே வலிமை. வினையே உறுதி. வினையே எல்லா விளைவுஞ்செய்யும். அண்ணனாவி அகன்றதோ உளதோ? திண்ணெனப் போய்ச் செய்தியைச் சொன்னால் ஆவியவர்க்கு ஆவென்று போமே அண்ணன்பாற் போய் அறைவதைப் பார்க்கிலும், கண்களில் நீரைக் கறப்பதைப் பார்க்கிலும், தண்ணீர் குடித்துத் தம்பிமாருடனே இறப்பதே சிறப்பது என்றுண்ணடி, இவர்கள் இறந்தது இந்த விஷத்தால், தேவர்கள் செய்த தீங்கிதுவாமோ? சத்துரு தன்னாற் சமைத்த சலமோ? வஞ்சகர் செய்த நஞ்சமிதுவோ? அண்ணன் தருமர் ஆயாசம் நீங்கி அலறி யெழுந்து அடிச்சுவடினை யறிந்து, ஓடிவரில் அவ்வுத்தமன் நன்மை நாடி யெழுப்புவார் நாவறண்டமையால் விஷ ஜலமென்று நிதானிக்காமல், வேஷ்டையாற் பருகினாற் விளித்து போய்விடுவார். ஆகையால், அவருக் கறிவிப்போமென, மணலைப்பரப்பி மாராஜ ராஜஸ்ரீ அண்ணா அவர்கட்கு அடியேன் சரணம். விண்ணப்பமொன்று விளம்புவதியாதெனில், தம்பிமார் மூவருந் தமயனுமிந்த, கஞ்சமலர்க்கய நஞ்சமருந்தி, கானகத்திடை நாள் கழிக்கவந்ததுபோய், காலனுக் குயிரைக் கழித்தோம், தேனலர் மாலைத்தேவனே தெரிதி, என்றிவையெழுதி இடும்பி நாயகனும், சென்று நீர் புசித்துச் சீவன் பொன்றினன், ஒன்றியாய்த் தனித்த உத்தம உதிட்டிரன், நன்மை யின்றி நால்வரும் பிரியவே, கண்ணீர் ததும்பிக்கால்களுந் தளர்ந்து, துக்கமேலிட்டு விக்கிச்சோர்ந்தனர்'

## மாரணமாகத் துண்டானபூதம் பாண்டவரிறந்ததை நோக்கிக் காளமாமுனியை வதைத்தல்.

ஓமகுண்டத்தில் உதித்தபூதம், என்னைப் பிறப்பித்தது யாது காரணம் யான் செய்யுந் தொழிலை இயம்பென கேட்க, மாமுனிபயந்து வணங்கிப் பணிந்து, காட்டில்வாழ் குந்தி காளயரைவரை, நாட்டில்வாழ் துரியன் றன் வின்படியே, அழித்து வருக ஆவேசு ஆவேசு, என்று கூற எழுந்து பூதம், பாண்டவர் என் கண்பட்டாற் கொல்லுவேன், காண்டவிலா விடிற் கடிதுமைக் கொல்லுவேன், என்று போற்றி ஈரேழுலகும், இடித்து முழங்கி எரி விழிகாட்டி, கரங்கால் விசையால் மரங்கள் முறிய, மண்ணும் விண்ணும் மாறிப்புரள, வனங்களிலுள்ளமாதவர்வாட, சினங்கொண்டு வந்து தென்மேற்றிசையில், மூர்ச்சையால் இறந்த முரசத்துவசனை, சந்தனமரத்திற்றனி முடிசாய்ந்து, கிடக்க நோக்கிக் கிட்டி புரட்டி, பொன்றினனென்று போய் நான்கு பேரையும், கண்டுயிரிறந்த காட்சியை நோக்கி, காளமாமுனிமேற் கறுவிச் சினவி, காளமாவிடம் போற்கறுத் தெதிர்வந்து, குருடன் மகன்றன் கொடுமையைக்கேட்டு, என்னையுண்டாக்கி இறந்தவர்போரில், ஏவிப் பழியை எனக்குச் சுமத்தினை, உத்தமரைவரும் உயிரிழந்தவிந்தார். செத்த பேர்களைச் சிதைப்ப தெவ்வண்ணம், பாவமும் பிழியும் படரப்பெற்றீர், பாண்டவர் உமக்குப் பகையோ விகிதமோ, துஷ்டர்கள் வார்த்தை நஷ்டப்படுத்தும், தீயோருறவு நாய் போலாகும், தெரிந்துத்தெரியா திறந்தீரையா, என்று மொழிந்து எறிந்து சூலத்தால், காளமாமுனியின் கடுந்தலை யறுத்து, தீயினில் எறிந்து க்ஷணத்தில் மறைந்து, போயது பூதம் பூமியும் வானும், பாவிகளென்ன ஆவி யிழந்தான், முனிவனென்று எங்கு முழங்க, துரியோதனன் முதல் நால்வருங் கேட்டு, வெளிக்கு வராமல் விசனமாயிருந்தார், பிர்மத்தி தோஷமும் பிடித்ததிவர்களை, வீஷ்மர் துரோணர் கிருபர் விதுரனும், கேட்டு நகைத்துக் கிலேச முற்றார்கள், பஞ்சவரைவருங் கொஞ்சநேரம் போய், பிழைத்த செய்கையின் பெருமையைக் கேளும்.

## தருமராஜன் சகோதரரிறந்தது நோக்கித் தானுமிறக்கத் துணிந்தபோது, யமன் அசரீரியாய்த் தடுத்தல்.

ஜெனமேஜெயனென்னுந் திங்கள் மர போய்! சந்தனமரத்திற் சாய்ந்த தருமன்,

கொந்தலர்வீசுங் குளுங்காற்றினாலும், ஜன்மாந்திர வினைத்தகைமையாலும், வழிபடுங் கடவுளின் வல்லமையாலும், தருமதேவதையின் தயவினாலும் போனவுயிர் தன் பொந்தியில் வரவும், கண்கள் திறந்து கைகாலாடி, புரண்டெழுந்திருந்து புலர்ந்த தாகத்தால், தண்ணீர் தண்ணீர் தம்பி தம்பீ, என்று தேடி ஏங்கிநடந்து, இறந்துகிடக்கும் இளையோரை நோக்கி, இவர்களிறந்தது யாது காரணமோ, சத்துருக்களின்மேற் சண்டையிட்டோ, காலவிலங்காற் கலங்கி யழிந்தோ, பசியினால் நொந்து பதைபதைத் தயர்ந்ததோ, வசையினாற் கலங்கிவாணாளிழந்ததோ, தாகவிடாயாற் சலம் புசித்தயர்ந்தோ, பேய்பூதகணத்தாற் பிசகுவந்துற்றதோ, தெய்வச்செயலோ, தீவினைவலியோ, ஜென்மாந்திரத்திற் செய்தபாவமோ, தவத்தினர்கோபமோ சாபவிசேடமோ, அவத்திலிறக்க அனியாயமேதோ, தாய்தந்தை செய்ததகாத கர்மமோ, உத்தமர் மன்து மெத்த வருந்தியோ, என்னமோ தெரியேன் ஈசனே இவர்கள், பின்னமில்லாமற் பெருநிலத்தவிந்தார், என்று கலங்கி இளைய தம்பியரை, தனித்தனி புரட்டித் தடவிப்பார்த்து, மயங்கியகாலையில் மருங்கிலிருந்த, மணலி னெழுத்தை வாசித்தறிந்து, விஷசலமிதனால் வீய்ந்தனர் நால்வர், என்றுணர்ந் தெழுந்து இனியென் செய்வேன், துரியன் செய்த சூது இதுதானோ, நினைப்பின் வண்ண நிறைவேற்றினானோ, என்னைப்பிரியா எம்பியர் மடிந்தார், இவர்களுயிரினு மென்னுயிர் சிறந்ததோ, தம்பயாரிறக்க நாம் தரணியிலிருந்து, வருந்தி வாடுவதிலும் மாய்வதே பெரிதென, குளத்திலிறங்கிக் குடங்கையில் நீரை, அள்ளியபோது அசரீரி தடுத்து, பஞ்சவர் முதல்வனே நஞ்சிது அருந்தேல், இந்த நால்வரும் என்மொழி தப்பி, இதனைப் புசித்து ஏங்கி யிருந்தார், என்றுகூற ஏங்கித் தருமனும், சென்றவருடனே யானுஞ் சேர்வேன், என்றலும் அந்தவெழி லசரீரி, ஆனாலொரு மொழியறையக்கேளும், தரும சந்தேகச் சங்கைகளுண்டு, உம்மை நான் கேட்க உத்தரஞ் சொல்லி, அப்பாற் சலத்தை அருந்துமென்ன, நல்லதென்று நகைத்தனர் தருமர்.

### உதிஷ்டிரனு லசரீரி தரும சந்தேகம் வினவிச் சுயரூபங்காட்டி, இறந்தவருக்குயிர்தந் தியன்றதுரைத் தேகுதல்

இப்பால் அசரீரி மகிழ்ந்து அறச்சேயை நோக்கி, ஐயா! மேதினிதன்னில் இலங்குநூல்களில் யாதுபெரிது. அம்மா! வேதமே பெரிது. ஐயா! தருமங்களிற் சிறந்தது யாது? அம்மா! மனையாளுடன் கூடிவாழும் இல்லற தருமமே சிறந்தது. ஐயா! புட்பங்களிற் சிறந்தது யாது? அம்மா! ஜாதிமல்லிகையே சிறந்தது. ஐயா! முனீஸ்வரர் முதலிய பெரியோர்கள் தொழுங் கடவுள் எவன்? அம்மா! துளபமாலையணிந்த முகுந்தனே பெரியோர் தொழுங் கடவுள். ஐயா! கிரகத்திற்குரிய பாக்கியம் யாது? அம்மா! குழந்தைகளே கிரகபாக்கியம் ஐயா! செவிக்கு இன்பம் யாது? அம்மா! அக்குழந்தைகள் மழலைச்சொல்லே செவிக்கின்பம். ஐயா! உலகத்தில் நிலைபெற்று நிற்பதியாது? அம்மா! சற்கீர்த்தியே நிலைபெற்று நிற்பது. ஐயா! கற்கவேண்டியதியாது? அம்மா! சாகாவிருக்குங் கல்வியே கற்கவேண்டியது. ஐயா! அர்பமென்பது யாது? அம்மா பிறரையாசித்தலே அற்பம். ஐயா! மெய்யுறுதி யென்பது யாது? அம்மா! சத்தியமே மெய்யுறுதி. ஐயா! நீக்கவேண்டுவது யாது? அம்மா! பொய்யொன்றினையே நீக்கவேண்டுவது? ஐயா! விரதத்திற் சிறந்தது யாது? அம்மா! ஐம்பொறிகளினாற் குற்றம் வராமற் காப்பதே சிறந்த விரதம். ஐயா நோன்பிலுயர்ந்தது யாது? அம்மா! கொல்லாமையே எல்லா நோன்பிலுமுயர்ந்தது. ஐயா! கடனென்பது யாது? அம்மா! பிதுரர்க்குச் செய்யவேண்டுவதே கடன். ஐயா! கடவாதிருத்தலென்பது யாது? அம்மா! தாய் தந்தையர் சொல்லையே கடவாதிருத்தல் இந்தப் பிரகாரம் யமதருமராஜன் அசரீரியாய் அநேகஞ் சங்கைகளைக் கேட்கவும் தருமராஜன் துன்பமென்ப தில்லாமல் இன்பங்கொண்டு அன்புடன் சொல்லவும், யமதரும ராஜனுக்குச் சந்தோஷம் வந்து தனது நிஜரூபத்துடன் எதிரில் நின்றான். உடனே உதிட்டிரன் கண்டு, தம்பிமாரிறந்ததையுந் தாகவிடாய் கொண்டதையு மறந்து சாஷ்டாங்கமாக தண்டஞ் செய்து அனேகஸ்தவுத்தியஞ் சொல்லினர். அப்படி துதித்த புத்திரனை எடுத்து அணைத்து முத்தமிட்டு, ஓ சத்தியவானே! உன் புத்திக்கு மெச்சினேன். யான் கேட்ட கேள்விக்கும் நீ சொல்லிய உத்தரவுக்கும் நான் என்ன உதவி செய்யப்போகின்றேன். ஆனாலும் ஒரு மந்திரமுபதேசிக்கின்றேன். அதனை இறந்துபோன உன் தம்பிமார்களில் ஒருவன் காதில் ஓதுவையாகில், உடனே பிழைப்பான் என்று சொல்லி உபதேசிக்கவும் அந்த மந்திரத்தை உதிஷ்டி

ரர் வணங்கிப் பெற்றுக்கொண்டு நகுல மகா ராஜனுடைய காதில் ஓதினர்.

அதைக்கண்ட யமதருமராஜனனவன், ஓ தருமநந்தன திடகாத்திர பலபராக்ரமனாகிய வீமசேனன் இருக்க, காலகேய நிவாதகவசர் குலவைரியாகிய அர்ச்சுனன் இருக்க, அறியாத பிள்ளையாகிய நகுலனை எழுப்ப நினைத்ததற்குக் காரணம் என்ன? அம்முறையைச் சொல்லும் என்று கேட்கவும், தருமராஜன் சொல்லுகின்றார்: தெய்வமே! பாண்டு பூபதிக்குக் குந்திதேவியார் என்றும்-மத்திரா தேவியார் என்றும் இரண்டு பாரியருண்டு. இத்தாயமார்களிற் குந்திதேவியாருக்குச் சிரேஷ்ட புத்திரன் நானொருவன் இருக்கின்றேன். மத்திரா தேவியாருக்குச் சிரேஷ்ட புத்திரன் நகுலனாகையால், அவனை எழுப்ப நினைந்தேன் என்று சொல்லவும், யமதருமராஜன் இதயங்களித்து, ஏ நந்தலே! உன்னுடைய நல்ல குணமே உனக்குத் துணையாகக்கடவது என்று ஆசிசொல்லி, மற்றப் புத்திரர்களையும் அந்த மந்திரத்தைக்கொண்டே எழுப்புவித்தனன். உடனே அவர்கள் உறக்க நீங்கினவர்போல எழுந்து நமஸ்கரிக்க, அவர்களை யமதரும ராஜன் தழுவிக்கொண்டு, நீங்களைந்துபேரும் நாளை நடக்கப்போகின்ற யுத்தத்தில் நித்தியராய் வெற்றி பெறக்கடவது என்று வாழ்த்தி, வில்லும், அம்பும், மந்திரமுஷ்டி நிலையுங் காட்டிக்கொடுத்து, அவர்களை இருக்கச்செய்து, ஓ குழந்தைகளே! நடந்த வர்த்தமானங்களைத் தெரிந்துகொண்டீர்களா? இதோ நான் சொல்கின்றேன் கேளுங்கள்: அஃதென்னவென்றால், துரியோதனன்--சகுனி-கர்னன்-துசுவாசன் இவர்கள் நால்வருங்கூடி, துரியோதனன் மற்ற மூவரைப் பார்த்து, பாண்டவர்களுக்கு வனவாசம் தொலைந்தது. இனி அக்கியாதவாசம் இருக்கின்றது. இன்னும் சில நாளையில் அதையும் போக்கிக்கொண்டு வந்து விடுவார்கள். நாடு நகரம் கேழ்ப்பார்கள். இல்லையென்றால், நாமெல்லாம் இறக்க ஒரு கை பார்ப்பார்கள். ஆகையால், ஒரு உபாயஞ் செய்து கொன்று விடுவதே காரியமென்ன, அண்டையில் நின்ற மாமனும் மற்றையரும், ஆம்; ஆம்; என்ன, பின்பு தங்களுக்குள் ஆலோசித்து, காளமா முனிவனைக் கொண்டு மாரண ஓமஞ்செய்து மடிப்பிக்க வேண்டுமென்று அந்த முனிவனை அழைத்துச் சொல்லி, வேண்டிய ஓமத் திரவியங்களும் பலி பாகங்களுங் கொடுத்து அனுப்பினர்.

அந்த முனிவனுனவன் மசான பூமியிலிருந்து யாகம் வளர்த்தியபோது, அந்த அக்கினியிலிருந்து உக்கிரமாக ஒரு பூதம் பிறக்க, இவைகளையெல்லாம் தெரிந்துகொண்ட யாம் அஃதம் முனிவனிடத்தினின்றும் வருமுன்னமே நீங்களிருக்கும் இடத்தில்வந்து, பிரமசாரியாக நின்று குறைகளைச்சொல்லி, அக்குறைதீர்க்க நீங்கள் வெளிப்பட்டபோது உங்கள் எதிரில் மானாகத் தோன்றி, நெடுந்தூரம் உங்களை இழுத்துக்கொண்டு வந்து, எங்கும் தண்ணீரில்லாமற்செய்து, இந்த தடாகத்தை உண்டுபண்ணி, இதின் சலத்தை விஷமாக்கி, உங்களுக்குத் தாகவிடாய் ஏற்படுத்தி, இந்தச் சலத்தைப் புசிக்கச்செய்து, தம்பிமாரை இறக்கவைத்து, உன்னை வனத்தில் களைக்கச்செய்து, உங்களைவரையுங் கொல்ல உதித்த பூதம் வருமாகில் உங்கள் பிரேத சரீரத்தைப் பார்த்து, பிணங்களென்று தள்ளிவிட்டு போகவும், தன்கைச் சூலத்தால் உங்களைக் கொல்லவனுப்பிய காளமா முனிவனைக் கொன்று அக்கினியிற் கூர்ந்துபோகவுஞ் செய்வித்து, அப்பால் உன்னைப் பிழைக்கச்செய்து, நீ வந்து சலம் புசிக்கும்போது அசரீரியாக யிருந்து தடுத்து, அத்தடைக்கு மஞ்சாதிறக்கின்ற உன்னைச் சில தருமசந்தேகங்களைக் கேட்டு பின்பு உனக்கு எதிரில் தம்து ரூபத்துடன் வந்து ஆசீர்வதித்தோம். நாம் யமதருமராஜன். உங்களிடத்திற் சத்தியமிருக்கின்றமையால் ஒரு காரியமுந் தாழ்வு வரப்போகிறதில்லை. சத்துரு நாசஞ்செய்து சபதமுடித்து வெற்றி கைப்பிடித்து மேதினியாள்வீர்; இதுவரையிலும் பனிரண்டு வருஷம் வனத்திற் கழித்துவிட்டீர்கள். இனி ஒரு வருஷம் அக்கியாதவாசமிருக்கின்றது. ஒரு நகரத்திலுறைந்து ஒருவருக்குந் தெரியாமல் மாறுருபமாய் மறைந்து காலங் கழிப்பதற்கு நானொரு மந்திரஞ் சொல்லுகின்றேன் கேளுங்கள் என்று சொல்லி அம்மந்திரத்தை தருமராஜனுக்கு உபதேசித்து, சகல துன்பங்களும் நீங்கி இன்பங்களைப் பெறக்கடவீர்களென்று வாழ்த்தி, ஐவரும் வணங்க மங்களாசனங்கூறி, யமதருமராஜன் மறைந்துபோயினன். இப்பாற் பாண்டவர்கள் பால்போன்ற அந்த தடாகசலத்திற் குளித்துப் பருகி, அத்தடாகத்தை விட்டு நீங்கித் தாங்களிருக்கும் வனத்திற்குச் சாயங்காலம் வந்து, தௌமியர் முதலாகிய சாஸ்திரியார்களுக்கு சரணஞ்செய்து, திரௌபதியின் முகத்தையும் நோக்கி, தாங்கள் புறப்பட்டதுமுதல்

நடந்த சரித்திரங்களை ஒன்றொழியாம லுரைத்து, நீலகண்டன் பாதங்களை நினைத்து, பிராமணர்கள் முதல் யாவர்களும் பல்லாண்டுகூற, மங்களமுகத்தராய் வாழ்ந்திருந்தார்கள்.

### பாண்டவரை வீஷ்மராதியர் வந்து கண்டுபோதல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! அப்போது துரியோதனனால் காளமாமுனி அழிந்தான் என்கிற மொழியும், பாண்டவர் பிழைத்தபரிசும் எங்கும்பரவ, அதைக்கேட்ட பாட்டன் வீஷ்மாசாரி-துரோணசாரி-கிருபாசாரி-அசுவத்தாமன்-விதுரன் - பாஞ்சாலன்-இன்னுமுள்ள மேலோர்-அரசர்-அமைச்சர்-சேனாநாயகர் முதலான யாவரும் ஐவர் வாழும் ஆரணியத்திற்கு வந்தனர். அவர்களை அவ்வைவரும் எதிர்கொண்டு தெண்டனிட்டு, அவ்வவர்கட்குச் செய்ய வேண்டிய வணக்க முதலிய உபசாரங்களை நடத்தி, ஆசனந் தந்திருக்கச் செய்தார்கள். அப்போது வீஷ்மாச்சாரியர் தருமராஜனைப் பார்த்து, அப்பனே! உன்னுடைய தவமே தவம்; வீமார்ச்சுனருடைய புண்ணியமே புண்ணியம்; யாங்களெல்லாம் மனிததேக மெடுத்தும் என்ன லாபம்? உங்களைப்போ லனுபவிப்பதே மேலாகிய லாபம். அத்தனே இந்த அருச்சுனன் ஆதிபாண்டரங்கனைக் கண்டு, அவருடைய சடாமகுடங் குலுங்க அடித்து பாசுபதமும் பெற்று காலகேய நிவாதகவசர்களையும் இரணியபுரவாசிகளையுங் கொன்று இந்திரனுக்குப் பட்டமுங் கட்டி, இந்திராணி களிக்க, இந்திரபதவியும் ஆண்டு, தேவாமிர்தமுந் தெவிட்டப் புசித்து வந்ததும், இந்த வீமசேனன் அளகாபுரிக்குச் சென்று, மணிமாலன் முதலிய பேர்களைக் கொன்று, குபேரனுடைய சன்மானம்பெற்று, ஆஞ்சநேயருடைய சிநேகமுங்கொண்டு, நகுஷன் என்னும் இந்திரன் சாபந் தீர்த்து, அவனால் பல ஆசீர்வாதங்களும் பெற்று வந்ததும், நாங்களெல்லாங் கேள்விப்பட்டு சந்தோஷமாயினோம். காளமாமுனி பூதத்தை அனுப்பியதும், நீங்கள் வருந்தியதும், எமதருமராஜனால் பிழைத்ததும், துஷ்டர் உறவு பற்றிய காளமாமுனி இறந்ததும் கேள்வியுற்று, மனது தாளாமல் உங்களைப் பார்க்கும் படியாக வந்தோம் என்று சொல்லவும், அதற்குத் தருமராஜன் சாஷ்டாங்க தண்டஞ் செய்து, ஐயா! தங்களைப்போலொத்த பெரியோர்களின் கிருபையினால் இதுவரையிலும் பிழைத்திருக்கின்றோம். இப்போது தேவரீர்களுடைய தரிசனமானபோது இனி ஒருகுறைவுமில்லை என்று உபசாரங் கூறவும், யாவர்களும் ஆசீர்வதித்து பாண்டவர்களிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு அஸ்தினபுரம் போய்ச் சேர்ந்தார்கள். இப்பால் பாண்டவர்கள் திரௌபதியினிடத்தில் இருந்த பாங்கியரைக் கூட்டிப் பாஞ்சால ராஜனிடத்தில் அனுப்பி விட்டு, மற்றப் பரிசனர்களைந் தங்கட் கிசைந்த விடஞ்செல்ல விடைகொடுத்து பின்பு தாங்கள் பன்னீராயிரம் பிராமணர்களும் தௌமியாசாரியரும் புடைசூழத் திரௌபதா தேவியோடு வனத்தில் வாசஞ் செய்துகொண்டு, பக்தவச்சலனாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைச் சதாகாலமும் தியானித் திருந்தார்கள்.

## நச்சுப்பொய்கைச் சருக்கத்தோடு

ஆரண்யபர்வம் முற்றிற்று.

---

ஸ்ரீ கிருஷ்ணாய நமஃ





ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நமஃ

# ஸ்ரீமஹாபாரதம்

## நான்காவது,

## ( விராடபர்வம் )

### கண்ணன் துதி

பஞ்சவர்க்குத் துணையான வுரத்தினனைப் பாங்குறுபஞ் சாயுதமார் கரத்தினனைக்
குஞ்சரத்துக் கிடரகற்று மாழியானைக் குண்டலியிக் கண்படுவா லாழியானை
அஞ்சனமா வெனுமெழில்சீர் நடையுளானை அசுரரையழித் தணிதுளபத் தொடையுளானைத்
தஞ்சமென்றூர்க் கருள்செயுஞ் செந்தாளினனைச் சரணடைந்தார் தரணியிற் றளர்விலாரே.

### சூதபுராணிகர் வாக்கியம்.

ஓ சவுன்காதி முனிவர்களே! இவ்வாறு ஆதிபஞ்சகத்தின் மூன்றும்பாகமாகிய ஆரண்ய பர்வத்தைக் கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! பாண்டவர்கள் பிதுர் வாக்கிய பரிபாலனம் பண்ணவேண்டி வனம் புகுந்து தௌமியாசாரியரோடும், பன்னீராயிரம் பிராமணர்களோடும், பாஞ்சாலி சமேதராய்ச் சூரியதேவனாற் கிடைத்த அக்ஷயபாத்திரத்துக்கு உண்டாகும் அமுதத்தை அருந்தவர்க்களித்துத் தங்கள் கந்தமூல பலாதிகளுண்டு காலங்கழித்து வருநாளையில் வேதவியாசர் கட்டளையின்படி அர்ச்சுனன் தவநிலைகொண்டு கைலாசபதியிடத்திற் பாசுபதாஸ்திரம் வாங்கி இந்திரன் பகைகளைந்து தேவலோக பட்டாபிஷேகம் பெற்று வந்ததும், திரௌபதி வேண்டுகோளின்படி வீமசேனன் மந்தார பாரிஜாத மலர்களுக்காக யாத்திரை சென்று ஆஞ்சநேயரைச் சிநேகங்கொண்டு புண்டரீகன் மணிமானுதியரை வென்று குபேரனோடு சன்மானித்து ஜடாசுரனை சங்கரித்து நகுஷனுடைய சாபந்தீர்த்து வந்ததும், இதுகாறும் தருமனுதியர் உரோமமுனிவராலும் மார்க்கண்டேய முனிவராலுங் காலக்ஷேபங் கேட்டு காலங்கழித்ததும், சித்திரசேனனாற் கட்டுண்ட துரியோதனாதியரை பாண்டவர் மீட்டுவித்து திரௌபதியைக் கைக்கொண்ட சிந்துராஜனை அவமானப்படுத்தித் துரியோதனனாற் சபித்து வரும்படி ஏவிய துருவாச முனிவரின் ஆசி பெற்றுக் கிருஷ்ணமூர்த்தி சகாயத்தால் நெல்லிக்கனியால் உண்டான சாபத்தை நீக்கிக்கொண்டு எமதருமராஜன் அநுக்கிரகத்தால் நாகக்கொடியோன் காளமாமுனிவனாற் செய்வித்த மாரண யாகத்தாலுண்டான விபத்தைக் கடந்ததும், இப்படி வனவாசத்திற்குரிய வருஷம் பன்னிரண்டை

யுங் கழித்த சரிதங்களை அவ்வவற்றின் உபசரித்திரங்களோடுங் கேட்டு ஆனந்தித்தேன். இப்பால் நான்காம் பாகமாகிய விராடபர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருள் வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

---

முதலாவது,

## பாண்டவர் கரந்துறை சருக்கம்

### கண்ணன் துதி

நாள் தாடனை நாராயணன் றனைக்
காள மாமுகிற் கண்டன்ன மெய்யனை
வாளை நேர்விழி மாமலர் மங்கையி
னாளு மன்பனை நெஞ்சு ணிறுத்துவாம்.

கேளும் ஜனமேஜய மகாராஜனே! அரவக்கொடிபடைத்த துரியோதன மகாராஜன் கருத்தையும் அம்புவிகுலத் தோன்றலாகிய தங்கள் பெரிய தந்தை யுத்தரவையும் நிறைவேற்றவேண்டிப் பாண்டவர்கள் திரௌபதாதேவி சமேதராய் தௌமியாச்சாரியருடனும் வனவாசம் புரிந்து, கானகத்துண்டான கந்தமூல பலாதிகளாலுங் கதிரவனளித்த அக்ஷயபாத்திர வமுதினாலுங் காலங்கழித்து வெய்யில் - பனி - மழை-காற்று இவைகளைச் சகித்து இரவும் பகலும் இருடியர்களால் தர்மார்த்த காம மோக்ஷத்திற்குரிய சத்காலக்ஷேபஞ் செய்துகொண்டு பன்னிரண்டு வருடம் பற்றறக் கழித்தபிற்பாடு தருமநந்தனர் அஞ்ஞாதவாசஞ் செய்வதற்கு ஆலோசிக்கவேண்டுமென்று தாங்கள் தங்கிய வனத்தைவிட்டு அப்பாற் போயிருந்து, தருமதேவதையைத் தொழுது, எந்தையே! நாங்கள் நினைத்தகாரியந் தடையில்லாமல் நிறைவேறும்படி நச்சுப்பொய்கையில் தேவரீர் வரங்கொடுத்த வண்ணம் இப்போது கைகூட வேண்டுமென்றிரந்து, தங்களுடனிருந்த வேதவேதியரை நமஸ்கரித்து, ஓ பிரமஞானமுள்ள மேலோர்களே! நீங்கள் இத்தனை நாளும் எங்களுடன் பொருந்தி மெத்தவருந்தி வனவாசம் புரிந்து உபவாச மிருந்தீர்கள். இனிமேல் நாங்கள் ஒருவருடம் மறைந்திருக்க வேண்டியகாலம் நேரிட்டிருப்பதால், நீங்கள் யாவரும் ஆசீர்வதித்து எங்களுக்கு விடைகொடுத்தருள வேண்டுமென்று உபசரித்துக் கேட்டார். இவ்விதமாகக் கேட்ட முரசக்கொடி முதல்வனைப் பார்த்து வேதியர் விளம்புகின்றார்கள்.

### தருமராஜன் சோகமுறத் தௌமியாசாரியருந் தம்பியருந் தேற்றுதல்

ஓ பாண்டவ முதல்வனே! நீங்கள் எண்ணிய காரியமெல்லாந் திண்ணமாய்க் கைகூடும். இனிமேல் யாதொரு தாழ்ச்சியுமில்லை. இன்னுஞ் சிலநாளையில் நீங்கள் வெளிப்பட்டுச் சத்துரு சங்காரஞ்செய்து சகல ராஜவைபவத்துடன் தரணியாளப் போகின்றீர்கள் என்று மங்கள வாழ்த்துதலுடன் ஆசீர்வதித்தார்கள். இப்படிக்கு ஆசீர்வதித்த மகாத்துமாக்களை நோக்கித் தருமராஜன் சொல்லுகின்றார்: ஓ உத்தமர்களே! இப்போது எங்கட்கு நேரிட்டிருக்கிற ஆபத்து நீங்கி வெளிப்பட, யதாப்பிரகாசம் உங்களுடன் கலந்திருந்து, இக்காலம்போல் எக்காலமும் உவ்வா மகிழ்ச்சியைத் தரத்தக்க உசித வசனங்கள் பேசி நேசித்து விசுவாசித்திருக்கக் கூடுமோ கூடாதோ? நான் தேடிய புண்ணிய வசன மெப்படியோ? அஃது அடியேனாலறிந்துகொள்ளுந் தகைமையதன்று என்று கண்ணீர் பெருக உள்ள முருகிச் சோர்ந்தார். அப்படிச் சோர்ந்த தருமராஜனைத் தம்பிமாரணைத்து உபசரித்து, ஆயாசமாற்றித் தேற்றிப் போற்றினார்கள். அப்படித் தேற்றியுந் தேறாமல் தியங்கிய சத்தியவானைத் தௌமியாச்சாரியர் கண்டு, ஓ உதிஷ்டிர மகாராஜனே! தைரிய விஜயசாந்த உதார தருமமுதலிய புகழ்ப் பிரதாபங்களிலும் சத்திய விரதசவுரசம்பத்கர் சாஸ்திர விசாரணைகளிலும், பிரபல நீதி நிறைந்த கருணையங் கடலாகிய நீர் தாமே விசாரப்பட்டால், மற்றியார்தான் சகிக்கக்கூடும். ஓ நிருபனே! முத்தொழிலியற்றிடு மூவர்க்கானாலும், பொற்றலத்துற்ற தேவர்க்கானாலும், முற்றத்துறந்த முனிவர்க்கானாலும், கற்றுத்தேர்ந்த கவீச்சுரர்க்கானாலும், ஆபத்தென்பது வராமற் போகாது. வந்தால் அந்த அநுபவிக்காமல் யாரையும் விடாது. இதற்குத் திருஷ்டாந்தஞ் சொல்லுகிறேன் கேளும்: தேவர்கட் கதிபதியாகிய தேவேந்திரன் சூட்சும ரூபமாய் ஒரு தாமரைத் தண்டினுள் ஒளித்து வெகுகாலந் தவஞ்செய்திருந்து, பின்பு தனக்கு நல்வினைப்பயன் நேரிட்டபோது வல்லவனானான். உலக ரக்ஷகனை ஸ்ரீமந் நாராயணன் அதிதியின் கருப்பத்திலடங்கி, வாமன மூர்த்தியாய் வந்து மகா

பலிச் சக்கிரவர்த்தியினிடத்தில் தானமாக மூவடி மண்கொண்டு, திரிவிக்கிரம அவதாரமாய் வானமளாவிச் சேவடியால் மூவுலகையுமளந்து, தன் சிந்தையிலெண்ணியவண்ணமுடித்தருளினான். அக்கினி தேவனானவன் அவுரமஹா முனியின் மனைவியாளுடைய தொடையில் மறைந்து, நெடுநாளிருந்து, தீவினை தீர்ந்த பிற்பாடு வெளிப்பட்டான். சூரிய பகவானானவன் பசுவின் வயிற்றிலொளித்து, பல பகல் கழித்து பண்ணவர் முதலிய விண்ணவருங்கொண்டாட மீண்டும் பாரிலுதயஞ் செய்தருளினான்.

இவ்விதமாக இன்னும் அநேகரும் இப்படியே காலத்திற்குத் தக்க கோலங்கொண்டு, இஞ்ஞாலத்தில் வாழ்ந்து வாழ்நாளைக் கழித்தார்கள். ஆகையால், தீவினையாலெய்துகின்ற ஆபத்தானது யாவரையுந் தீங்குட்படுத்தும். நீங்களும் அப்படியே அஞ்ஞாதவாசந் துலைத்து விஞ்ஞான மேலிட நிலைத்து, முன்போலவே இராஜ்ய பரிபாலனம் புரிய வருவீர்கள் என்று அன்புடனுரைத்த புரோகிதர் சொல்லை இன்பமுடன் கேட்டு மகிழ்ந்து எங்கள் வினை இனி எப்படியோவென்று தியங்கி மயங்கித் தேறிய தருமராஜனை மகா பலசாலியான வீமசேனன் பார்த்து, முகம் வேர்த்து, ஓ எங்களண்ணாவே! கதாபாணியாகிய நானும், காண்டீபதரனாகிய விஜயனும், நகுல சகாதேவரும், உமது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து இஷ்டப்படி நடந்து வரும்போது, இப்போதும் இனியெப்போதும் உமக்கென்ன குறையிருக்கின்றது? தேவரீர் உள்ளங் கலங்க வேண்டிய காரியமில்லை. இப்பவுஞ் சற்றே கடைக்கண் நோக்குவீராகில், இதுவரைக்கும் பற்பல துன்பங்களை செய்துவந்த பகையாளிகளை அடிவேரறுத்து, முடிசாய வீழ்த்தி, இப்படியாளு மன்னர் முடியால் வணங்கக் கெடிவஸ்தலாதிபனென்னுங் கீர்த்தி உமக்குண்டாக்கி வைப்போம். சீக்கிரத்தில் உத்தாரங் கொடுத்தருளும். ஓ முத்தார மணிந்த முதல்வனே! தேவரீர் அரசாளும் வேலையை முன்னடி முடித்துவிட்டு, மற்ற வேலைகளைப் பின்னடி பார்க்கின்றோமென்று துடித்தெழுந்துரைத்த தம்பியைத் தர்மராஜன் கையமர்த்தி, அப்பனே! எஃதெப்படியானாலுஞ் சத்திய நிலையைக் காத்து, தருமமுறையைப் பார்த்து, உத்தம கீர்த்தியைச் சேர்த்து, உண்மைக் குறியை நிறுத்தவேண்டும். ஆதலால், மெத்த நாளில்லை இன்னுஞ் சற்று நாளிருக்கின்றது இதற்குள் ஓ க்ஷாத்திரவான்களே! நீங்கள் ஆத்திரப்படவேண்டாம் என்று தம்பிமார்களுடன் சாந்தமாய்ப் பேசிக்கொண்டு, இரண்டு நாழிகை வழி தூரஞ் சென்று மேல் நடக்க வேண்டிய காரியத்தைக் குறித்துத் தௌமியாச்சாரியர் முதலிய பெரியோர்கள் முன்னிலையில் தம்பிமாரோடு ஆலோசனை செய்யத் தொடங்கினார்.

### தருமராஜன் தம்பியரோடு ஆலோசிக்க அதற்கவர்கள் கூறுதல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! சகல கலைக்கியானங்களையும் ஐயந்திரிபு அறியாமையில்லாமல் கற்ற தருமராஜன் வையம் புகழு மஹா வீரர்களாகிய தம்பிமார்களை நோக்கி, ஓ என் சகோதரரே! கல்லும் புல்லு நிறைந்த காடுமேடுஞ் செறிந்த கருங்கல் மலையுயர்ந்த இடங்கள்தோறும், நமக்கிருப்பிடமாகப் பொருந்திப் பன்னிரண்டாண்டு பலருமறியக் கழித்தோம். இனியொருவரு முணராமல் ஒருவருடந் தொலைக்க வேண்டியிருப்பதால், நாம் மறைந்திருப்பதற்குத் தகுதியான இடம் யாதோ! அதை முன்னே யோசியுங்கள் என்று விசுவாசமுள்ள தமையன் கூறவும், இந்திரன் மைந்தனான அருச்சுனன் எழுந்து, தாமரைக் கமலம் போன்ற அவர் தாள்மேற் பணிந்து, அண்ணா! நமது குருதேசத்திற்குச் சமீபத்திற் பாஞ்சாலதேசம்-மச்சதேசம்-சாளவதேசம்-விதர்ப்பதேசம்-பாகுலிகதேசம்-விதேகதேசம் - தசார்ன தேசம் - சூரசேன தேசம்-கலிங்கதேசம் - மகததேசம் இவைகளெல்லாம் மனோரம்மியமாயிருக்கின்றன. இத்தேசங்களுக்குள் மிச்சமாய்ச் சிறந்தது மச்சதேசம். அதேதெனனில், நீதியு நெறியு நிறைந்து, நிலவளம் நீர்வள முயர்ந்து, நிலையும் பொறையு மிகுந்து, நிலையாய் மும்மாரியாய்ப் பொழிந்து, தருமமுங் கருமமுந் தழைத்து, சகல நீதிகளுஞ் செறிந்து, பழுதற்ற குடிகளும் பரிந்து, படைகளுங் கடைகளுஞ் செழிந்து இருப்பது மல்லாமல், மநுநீதி வழியே அஷ்டதிக்களவும் ஆக்கியாச் சக்கரம் போக்கிச் செங்கோற் செலுத்தி வேத வேள்வி வேதியர் பலரும், வானவர் விற்பனர் மாதவர் சிலரும், மாதுர்வஸ்தானம்போற் பொருந்தி வாழ்வைப் பெறும்படியாக விராடனென்னும் இராஜனுடைய ஆஞ்ஞை பெற்றது அந்த மச்சநாடு. ஆதலால், இத்யாதி

நன்மைகளுக்கும் இருப்பிடமான அப்பட்டணம் சேர்ந்து, நமது உருவமறைத்து, பயமில்லாமல் காலங்கழிப்பதே ஜெயமாகும். நமக்கொருநாளுந் தீங்கில்லை. ஓ எங்கள் நாயகனே! வேறொரு நாட்டை விரும்புவோமாகில், நமது காரிய காரணங்கள் ஒருவேளை வெளிப்பட்டாலும் வெளிப்படும்.

இதன்றியும், துரியோதனனுடைய தூதர்களும், காரியஸ்தர்களும், மந்திரி சாமந்தர்களும், தினந்தோறும் போவதும் வருவதுமாயிருப்பார்கள். அப்பேர்ப்பட்ட நிர்ப்பந்தமான வருத்தம் நமக்கிந்த விராடநகரத்தில் இருக்கமாட்டாது. மேலும், அந்தப் பட்டணத்து மச்சராஜன் நமக்குப் பூர்வ சம்பந்தப் பொருத்தத்தினாலும், அவன் மெத்த குணசாலியானதினாலும், நாம் காட்டில் அநுபவித்த கஷ்டத்தை அந்நாட்டில் ஆற்றிக்கொள்ளும் வகைக் கநுகூலித் திருப்பதினாலும், அஸ்தினாபுரத்தைவிட்டு வனவாசஞ் செய்ய வரும்போது ஜோதிட நூலோருரைத்த ஆருடத்தினாலும், நாமிந்தப் பேச்சைப் பேசும்போது நல்ல சகுனங் கிடைத்ததினாலும், அடியேனுக்கிந்த நகரத்தின்மேல் ஆசை யுண்டாகி, பரிசுத்த பவித்திரமகத்துவ சுகத்தைத் தருமென்று தோன்றியதனால் என் புத்தியினால் தோன்றியதைப் புகன்றேன். உத்தமர் கற்றவர் நற்றவர் பலரும் புகழ்ந்து பேசும் பொன்னுலகமும் பின்னிடும்படியானது அந் நகரத்தின் பெருமை. அப்பால் தேவரீர் சித்தம் எப்படியோ? அதனை யறியேன் சிறியேன் என்று வணங்கி இதைவிட வேறோரிடமில்லை யென்றான். மற்றத் தம்பிமார்களும் இதுவே சரியென்று சம்மதி கூறினர். இவ்வாறு அருச்சுனன் சொன்ன மொழியையும், அதுவே சரியென் றிணங்கிய மற்றத் தம்பியர் கருத்தையும், அருளுக்கு ஆதாரமான தருமராஜன் கேட்டுத் தீர்க்காலோசனை செய்து, தங்களைக் காணும்படிக்கு வனத்தில் வந்திருந்த அரசர்களுக்கு இச் சங்கதி தெரியாமலடக்கி, அவர்களை யழைப்பித்து நோக்கி, ஓ இராஜர்களே! இன்னமும் எங்களைப் பீடிக்கா நின்ற தீவினைகள் தீரும் வழியைப் பார்க்கின்றோம். நீங்கள் உங்கள் பட்டணம்போய்ச் சேருங்கள் என்று விடைகொடுத்து அனுப்பிவிட்டு, பரதேசிகளான வனவாசிக ளென்னும் பிராமணர்களைப் பார்த்து, ஓ சுவாமிகளே! இனி எக்காலம் உங்களை நாங்கள் காணப் போகின்றோம்? தேவரீர்களுடைய திவ்விய சகவாசத்தாற் சென்ற பன்னிரண்டு வருடமுங் கழித்தது பெரிதல்ல. நின்ற ஒருவருடங் கழிப்பது ஒரு யுகமாக யிருக்குமாதலால், எளியேங்கள்மீது கிருபை வைத்து ஆசீர்வாதத்தோடும் விடை கொடுத்தருள வேண்டும் என்று இவ்விதமான இன்ப வார்த்தைகள் அன்புடன் பேசி அவர்கள் மனங்கனிந்துரைத்த வார்த்தையையும் ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொண்டு, முக்காலும் வலம் வந்து முடியுற வணங்கி, எக்காலு மூங்கள் கிருபை எங்கள் மேல் இருக்கட்டுமென்று உபசரித்து, பிறியப்படாத பிரியத்துடன் அவ்வவர்களினிடத்திலும் அன்போடு விடை பெற்றுக்கொண்டு அப்பால் நடந்து போவதானார்கள்.

### பாண்டவரும், பாஞ்சாலியும், பாங்கர், பாங்கியரோடும், தௌமியாசாரியரோடும் விராடபுரம் போதல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இப்பாற் பாண்டவர் ஐவரும், பாஞ்சாலியும், பல கலைக்கியானங்களை யுணர்ந்த தௌமியாசாரியரும், பாங்கர் பாங்கியரும் அன்றிரவு முழுதும் நடந்து சூரியோதயத்திற்கு முன்னதாகச் செல்வச் சிறப்பும் ஓங்கிய விராடபுரம் சேரவேண்டுமென்று தொலைத்தற்கரிய தூரந் தொடர்ந்தடர்ந்து படர்ந்திருக்கின்ற காடுகள் மலைகள் முதலிய யெல்லாங் கடந்து, பருக்கைக் கற்களும் பாலை வனங்களுமுள்ள பலவிடங்களையுந் தாண்டி, வருக்கை-மா-தேக்கு-தெங்கு இவை முதலியன நிறைந்த சாலையும், வகுளம் - கோங்கு - மந்தாரை - கொன்றை இவை முதலியன வளர்ந்த சோலையுங் குறுகி, அருவிகள் பெருகிய ஆறும், குருவிகள் மருவிய தூரும், எரியெதுவாய் நாடும், பள்ளர் வாழும் வீடும், பரந்த மணலார்ந்த திட்டையும், பதுமமலரார்ந்த குட்டையும், பற்பல பாஷை வேந்தரும், விற்பன விவேக சாந்தரும் ஆகிய வளங்கள் மிக்க சந்திரவட்டக் குடையினையுடைய விராடராஜனது மச்சநாட்டெல்லையில் வந்தார்கள். அப்போது பச்சைப் புரவி பூட்டி, ஓராழி அச்சுத்தேரினை ஓட்டி வருகின்ற சூரியனும் கிழக்குத் திக்கில் எழுந்தான். அன்றிரவு முழுதும் நடந்த பாண்டவரும், பாஞ்சாலியும், புரோகிதரும் இனிமேல் தங்களெண்ணம் பலித்ததெனக் களித்து, மிதமற்ற மீன்கள், முதலை இனங்கள், நீர் யானைகள், நீர்க் குதிரைகள் பொருந்திய

தடங்களையும், முளிருற்ற சித்திரங்கள், சிங்கார வனங்கள், நடை பாவிகள், நவமணி மண்டபங்கள் பொருந்திய இடங்களையும், பயிர்ப் புலங்கள் சூழ்ந்திருக்கின்ற நல்ல நாட்டையும், காவலனிருக்கும் கோட்டையையும், கால்நடை நடக்கும் பாட்டையையும், மாடமாளிகை பாட்டையையும், மகர தோரணவாயற் பேட்டையையும், மேகமளாவிய சிகிரிகளையும், மாகமளாவிய நகரங்களையுங் கண்டு களிகூர்ந்து பாதலம்வரைக்கும் ஆழ்ந்து நிறைந்த ஒருதாமரை தடாகத்தில் இறங்கி, நித்தியவிதி முடித்து, அருக்கியங் கொடுத்துச் சூரிய நமஸ்காரஞ் செய்து, வழி நடந்த வருத்தந்தீர ஓர் மரத்தினிழலில் தங்கி, அருள் குடிகொண்ட தௌமியரை நோக்கி, இருகரங் குவித்திறைஞ்சி வாழ்த்தி, இதுவரையிலும் நிகரற்ற வாழ்வைப் பெற்ற நாங்கள் இனி நடக்க வேண்டிய முறைமையைக் கட்டளையிட்டு அருளும் என்று மேலான நூலாய்ந்த தருமராஜன் கேட்க, நூலாகிய வேதமுணர்ந்த தௌமியாசாரியர் சொல்லுகின்றார்:

ஓ சந்திரகுலத்து இந்திரனான தருமநந்தனா! நீங்கள் அறியாத காரியம் நான் என்ன சொல்லப் போகின்றேன்? ஆகிலுங் காட்டிற் காலங் கழித்தது பெரிதல்ல. நாட்டில் ஒரு வருடம் மறைந்திருந் தொழிப்பதே பெரிய காரியம். ஆதலால், நீங்கள் உருவ மறைந்துறையு நாளையில், உங்கள் சொரூபத்தினாலாவது, பேச்சினாலாவது, செய்கையினாலாவது, கொஞ்சமேனுந் தெரியுமாகில் மறுபடியும் பன்னிரண்டு வருடம் வனவாசஞ்செய்ய நேரிடும். ஆனதால், உங்களை ஒருவரும் அறியாதிருக்கும்படி மாறுவேடந்தாங்கி, வெவ்வேறு பேர் கொண்டு, குலச் சிறப்புற்ற விராடராஜனிடஞ் சென்று, உங்கள் ஊக்கத்திற் குரிய தொழில் செய்து, அத்தொழிலுக் கிணங்க நடந்து காலங் கழிப்பதைவிட வேறு வுறுதியில்லை என்று வைதீகக் கருத்தரான தௌமியர் சொல்ல, அவருடைய வார்த்தையைக் கேட்ட தருமராஜன் மகிழ்ந்து, இவ்வாறு நடத்துகிறதைவிட இன்பம் வேறில்லைஎன்று ஒப்புக் கொண்டார். அவ்வாறு ஒப்பிய தமயன் பாதத்தில் தம்பியர் வீழ்ந்து, மதிமருண்டு மயங்கி, அண்ணா! நமது குலத்திற்கு முதலாகிய சந்திரனும், நம்மைப் பெற்ற பாண்டு பூபதியென்னு மித்திரனும், உம்மையல்லது வேறில்லை என்று நாங்கள் வணங்கி வாழ்த்துகின்றோம். எங்கட்கு ஜேஷ்டபிராதுருவாய் விளங்கிய சுதந்தரருள், களங்கம் இல்லா மனத்தினரும், ராஜபூஜா துரந்தரரும், கெடிஸ்தலாதிபரும், நிரந்தர காருண்யரும், காமக்குரோதிகளற்றவரும், தாமப்புனல் மேருவை யொத்தவரும், ஆகிய தேவரீர் உமக்குக் கீழ்ப்பட்ட ராஜனிடத்திற் போயிணங்கி, அவன் மனதின்படி வணங்கி வேலை செய்யத் தக்கதோ? ஐயா! ஓ பொய்யா மொழிப் புனிதராகிய தௌமியரே! ஐயையோ! இந்த அநியாயத்திற் கென் செய்வோம்? இவ்வுலகத்தைப் புணாமுடியால் தாங்கும் ஆதிசேடன் போலும் சப்தமேகம் வருஷிக்குந் தாரை போலும் பொருளமுதம் பொழிந்து, கலைக்கியான முதலிய வேதங் கருத்துங் கடந்து, சத்துரு ஜெயம்புரிந்து, வெற்றிமாலை புனைந்து, எத்திசையிலுமுள்ள கொற்றவர் பலரும் வந்து பணிந்து கொள்ள முற்றும் பெருமை பெற்று, அருமையுற்ற இருமுக முடித்து, சம்ராட்டு முதலிய சகல சிறப்பும் படைத்து, ஜகரட்சகனாகத் தனியரசு நடாத்திய தரும சொரூபியோ ஏழையாரிடத்தி லடங்கி இளைத்து ஒதுங்கி யிருப்பது, ஆஹா! வினை வலியே வலி என்று வாடி வாய்விட் டரற்றினார்கள்.

### தருமராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

இவ்விதத் துயரால் துன்பக்கடலுள் ஆழ்ந்த தம்பிமார்களைத் தருமராசன் நோக்கி, ஓ என்னுள்ளத்திற் கொப்பான சகோதரர்களே! நீங்கள் என்னைக் குறித்து விசாரப்பட வேண்டாம். பின்னால் இப்படி வருமென்று முன்னாடி நான் ஜாக்கிரதையா யிருக்கின்றேன். அஃதென்னவெனில், திக்குப் பாலகரி லொருவராகிய தென்றிசைக் கடவுள் எனக்குப் பக்குவமாக அநுக்கிரகித்தருளிய மந்திரமொன்றுண்டு. அம்மந்திர வசத்தால் நான் வேதவேதாங்க முணர்ந்த வேதியனாகி, மச்சராஜனது உச்சிதச் சபைக்குட் புகுந்து, அவ்வரசன் முதலிய யாவரும் எனக்கெதிர்வந்து இறைஞ்சவும், நான் அவர்கட்கு ஆசீர்வசனஞ் சொல்லவும் பெற்றிருக்கின்றேன். இதல்லாமலும், அவ்வரசன் என்னை நோக்கி, உமக்கு இருப்பிடம் யாது? உமது பெயர் என்ன? நீர் இவ்விடம் வந்ததற்குக் காரணம் ஏது? என்று கேட்பானாகில், நான் தருமராஜனை விட்டுப் பிரியா நண்பனானவன். அவர் பன்னிரண்டு வருடம் வனவாசஞ்

செய்யப் போன நாளையில் நானுங் கூடப் போயிருந்தேன். இன்னும் ஒரு வருடங் கழிப்பதற்காக இவ்விடம் வந்தேன். என் பெயர் கங்கப்பட்டன் என்று உரைப்பேன். இதன்றியும், பெரியோர்களால் இயற்றிய அக்ஷரவிலக்ஷணம் - கணிதம்-சங்கிராம லக்ஷணம்-வேதம் - வேதாங்க புராணம் - வியாகரணம் - நீதிசாஸ்திரம் - ஜோதிடசாஸ்திரம்-தருமசாஸ்திரம் - யோகசாஸ்திரம் - போகசாஸ்திரம் - மந்திர சாஸ்திரம் - சகுன சாஸ்திரம்-சிற்ப சாஸ்திரம்-வைத்திய சாஸ்திரம்-சொரூப சாஸ்திரம் - இதிஹாசம் - காவியம்-அலங்காரம்-மதுர பானம்-நிருத்தம்-சத்தபிரமம்-வீணை-வேணு-மிர்தங்கம்-தாளம் - அஸ்திர பரீக்ஷை - சஸ்திர பரீக்ஷை - இரத்தின பரீக்ஷை - கனக பரீக்ஷை - இரத பரீக்ஷை-கஜ பரீக்ஷை-அஸ்வ பரீக்ஷை-ஆயுத பரீக்ஷை-பூமி பரீக்ஷை - மல் யுத்தம்-ஆக்ருஷ்ணம்-உச்சாடனம் - வித்துவேஷணம் - ஜாலாதிஜாலம் - மோகம்-வசியம்-இரசவாதம் - மந்தரவாதம்-காந்தருவ வாதம்-பைபீலவாதம்-தாதுவாதம்-காருடம்-நட்டம்-முட்டி - ஆகாயப்பிரவேசம்-பரகாயப்பிரவேசம்-அதிரிசியம்-இந்ரஜாலம்-மகேந்திரஜாலம்-அக்கினிஸ்தம்பனம்-ஜலஸ்தம்பனம் - வாயுஸ்தம்பனம் - வாக்குஸ்தம்பனம்-சுக்கிலஸ்தம்பனம் - சுவாசஸ்தம்பனம்-கட்கஸ்தம்பனம் - அவஸ்தைப் பிரயோகம் இவை முதலிய கலைக்கியானங்களெல்லாம் அறிவேன். திக்கெட்டுங் கொண்டாடுஞ் சொக்கட்டாளுடும் பக்குவமும் எனக்குண்டு. ஓ விராடராஜனே! நீர் தயவுசெய்து உம்மிடத்தில் நானிருக்கச் செலவு கொடுப்பீராகில், ஒரு நாளைப்போல் ஒரு வருஷமும் இவ்விடம் விட்டு நீங்காமல் இன்புற்றிருப்பேன் என்று உரைத்து அந்த ராஜன் பக்கத்திலிருந்து, அவன் கருத்துக் கிசைந்த தேசவர்த்தமான காரணங்களைக் கால சமயம் அறிந்து பேசி, விநோதமான விந்தைகளை நிந்தையில்லாமல் சொல்லி, விதரணையான அரசாட்சிப் பெருமையுடன் நடத்தி, வேந்தன் உள்ளங் களிக்கச்செய்து, சுற்றிலும் சூழ்ந்த வெற்றி வீரர்களும், கற்றவர் முதலிய நற்றவத்தர்களும், தந்திரி மந்திரி சாமந்தர்களும், உத்தமர் இவரென்று கொண்டாடும்படிக்கு மெத்தவும் மேன்மையாகக் காலங்கழிப்பேன். ஓ சித்த சுத்திபெற்ற தம்பிமார்களே! என்று ஏழுலகத்திற்கோ ராழி செலுத்துங் குருகுலக் கோமானாகிய தருமராஜன் உரைத்தருளினார். அவருடைய பெருமித வாக்கியத்தை வீமார்ச்சுனர் முதலிய தம்பியர் கேட்டு, நமது தமயனுருக்கு இந்தத்தொழில் தகுந்தகுமென்று சந்தோஷமானார்கள்.

### வீமராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

அந்தவேளையிற் பொறுமையைப் பூஷணமாகப்பூண்ட தருமராஜன் வீமசேனனுடைய முகத்தைப் பார்த்து, கருணைவெள்ளங் கவிந்து, கனிந்துள்ள முவந்து, கருத்தினுற் பரிந்து, கண்ணீர் சொரிந்து, ஓ நினைத்தற்கரிய பலத்தையுடைய வாயு புத்திரனே! நீ அரக்குமாளிகைவிட்டு எழுந்தபோது உரக்கக் கூவிக் கொடும்பகை கொண்டுவந்து எதிர்த்த இடும்பனைக் கொன்றும், வேத்திரகீயத்திலிருந்த வேதியர்களின் துன்ப மாற்றும்படிக்குப் பகாசுரனுயிரை வென்றும், கிம்பிராசுரனைக் கெடுத்தும், குபேரலோகம் புகுந்து பவுண்டரீகன் உயிரும், மணிமாலனுயிரும் வாங்கி மந்தாரைமலர்-பாரிசாதமலர் பறித்து வந்ததும், ஜடாசுரனைத் தாக்கியும், இன்னும் இப்படி போருக்கு எதிர்த்த பேர்களைப் போக்கியும், இரக்கமில்லாக் கொடியோனாகிய துரியோதனன் அன்னத்தில் விஷங்கலந் தூட்டி அநேகங் கொடிகளாற் கட்டி ஆற்றுப் பெருக்கத்திற் போட்டகாலையில் நாகலோகம் புகுந்து விஷாமிர்தம் உண்டிருந்த உன்னை நாங்கள் ஏழு நாள் வரையிலுந் தேடிப் பட்சிபோற் பறந்து பரதவித்தலைந்த துக்கத்தை எட்டா நாள் வந்து விலக்கியும், அவ் வணங்காமுடியோன் செய்த எத்தனையோ வஞ்சனைகளினின்று நீங்கியும், உன்னைத் தனித்து செய்ததல்லாமல் எங்களையுங் கூட்டிச் செய்த பற்பல ஆபத்துக்களி னின்றும் நம்மை பெற்ற தாயான குந்திதேவியாருடன் எங்களையுங் காத்து ரட்சித்த தாஷ்டீகவண்ணலே! நீ ஒருவனுடைய நகரஞ் சேர்ந்து, அவனைக் காலமறிந்து, தாழ்ந்து, அவனுக்கு இசைவாகிய தொழில் புரிந்து, நாம் கடத்தவேண்டிய நாளைக் கழிக்க அறிவையோ? நீ ஒருவரிடத்தில் அடங்கி ஏவற்பணி செய்திருக்கும்படியாய்ப் பாவியான என்னிரு கண் பார்க்கத் தக்கதோ? ஓ படுவினையே! என்று பரதவித்துப் பெருமூச்சுவிட்டு, அப்பா தம்பி! நமது காலபலனறிந்து வேளைக்குத் தகுந்த வேடம் புனைந்து நாளைப்போக்கத் துணிந்தபோதிலும், நீ ஒருவரை வணங்கி இதம் பேச அறியாயே. ராஜசமயந் தெரிந்து நலம்பெற

உறவாடி நேச விசுவாசமுற நினைக்கமாட்டாயே. எந்த வேளையில் எத்தொழில் செய்ய வேண்டியதோ அந்த வேளையில் அந்த வேலை முடித்து அரசனை மனமகிழச் செய்யும் மார்க்கங் கற்றிலையே. ஐயோ! பரிசுத்த குலத்தானாகிய விராடன் புகழவும், அவனைச் சேர்ந்த சபையார் மகிழவும், நாம் இவ்விடத்தில் மறைந்திருப்பதை மற்றவர்கள் அறியாதிருக்கவும், அக்ஞாதவாசம் அகற்றவும் வேண்டுமே; நீ எவ்விதமிருக்கப் போகின்றாய்? ஓ என்னிளவலே! என்று தளர்ந்து இமைகொட்டாமல் ஏக்கமுற்று இருந்தனர்.

இவ்வண்ணந் தம்பியைக் குறித்து வெம்பிய அண்ணலைப் புகழ்ப்பிரதாப பூஷணம் அணிந்த புயவீமன் வணங்கி, ஓ அண்ணா! ஓ தந்தையிறந்த தளர்ச்சி தோன்றாமற் காத்த தமயனே! தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு இவ்வறுவகை ருசியுடன் பலவிதக் கச்சாயங்கள், பலவிதப் பச்சடிகள், பலவகைக் கறிகள், பலவகை ரசங்கள், பலவகைக் குழம்புகள், பலவகைப் பாயாசங்கள் முதலியவைகளோடு, புளியோதனம், எள்ளோதனம், மிளகோதனம், ததியோதனம், பாலோதனம், சக்கரைப் பொங்கல், அக்காரவடிசில் முதலிய பலவகைச் சித்திரான்னங்களும், பலவகைப் பலகாரங்களுந் திருத்தமாகச் செய்யக் கற்றிருக்கின்றேன். இந்தச் சுயம்பாகத் தொழிலால் இரத்தக் கறை நீங்காத வேலாயுதந் தாங்கிய விராடனும் மற்றவர்களுந் திருப்தியடைந்து, அமுதத்தை இகழ்ந்து, நான் செய்யும் பாகத்தைப் புகழ்ந்து, பாகசாஸ்திரங் கற்ற பக்குவனென்றென்னை மகிழ்ந்து, யாவரும் உபசரிக்கும்படியாய் இருந்து, விருந்து முதலியதும் புரிந்து, எந்தச் சமயத்தில் எதுவேண்டியதோ அந்த சமயத்தில் ஆச்சுதென்றளித்து, அடுப்புக்கு விறகு வேண்டியபோது மற்றொருவரைக் கேளாமல், ஆகாய மளாவிய விருக்ஷங்களைக் கோடாலிகொண்டும் பிளக்காமல், என் இரு கையினாற்றானே முறித்து ஏற்படுத்திக் கொள்வேன். ஒருவேளை மலையொத்த திண்புயனாகிய மச்சராஜன் மல்லர்களுடன் சண்டை செய்ய விடுப்பானாகில், மற்போர் வல்லவரை சொற்பமாய் அழித்துப் பற்பலவித பரிசுப்பெற்றும், விற்பன விவேகிகள் மெச்சப் பேரெடுப்பேன். இன்னும், யாளி, சிங்கம், புலி, கரடி, யானை முதலிய மிருகங்களைப் பிடித்து, இராஜனுக்கு முன்னே விடுத்து, மாச்சரியமூட்டி ஆச்சரியங் காட்டுவேன். உன்பெயர் என்னவென்னிற் பலாயனனென்பேன். உன் நகரேதென்றால், தருமராஜன் கீர்த்தியைப் புகழ்ந்து பேசுகின்ற புண்ய நகரமென்பேன். உன் குலகோத்திரம் என்னவென்றால், அறப்பெருங்கடவுள் மைந்தனாகிய முரசகேதனருக்கு அடிமை செய்யும் அடியேன் அறிவிலாச் சூத்திரனென்பேன் என்று வாயுசேனனான வீமசேனன் சொன்னான். இவன் சொன்னசொல்லை சாந்தகுணத் தருமராஜன் கேட்டு, இருபுயமும் பெருமலைபோல் ஓங்கி, பசுவானது கன்றின்மேல் வைக்கும் பக்ஷத்திலும் லக்ஷம்பங்கு அதிகமாய்க் கருணை கூர்ந்து, தம்பி! இந்தத் தொழில் உனக்குரியதுதான். என்றென்றைக்கும் அன்னத்திற்குக் கருப்பில்லை. இதுகாறுஞ் செய்து வந்த வனவாசத்திலும், நீ இவ்வக்ஞாத வாசத்தை வெறுப்பில்லாமல் நிறைவேற்றலாம் என்று வியந்து கூறினர்.

### அருச்சுனராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

இப்பால் தருமபுத்திரர் தன் பக்கத்திற் சார்ந்து நிற்கின்ற, சவ்வியசாசியென்னும் பார்த்தனுடைய முகத்தைப் பார்த்து, சொல்லுதற்கரிய துயரங்கொண்டு, அப்பா அர்ச்சுனா! தேவர்களாலும் ஜெயிக்கப்படாத காண்டவவனத்தை யழித்து அக்கினி தேவனுக்கு அவியாயளித்து பசிதணித்தனை. மகமேருவுக்கப்பாலுஞ் சென்று விஜயம்பெற்று விஜயனென்று புகழ் ஸ்தம்ப நாட்டி, அரசர்கள் அவித்த திறைகள் யாவற்றையுங் கொண்டு அடங்கா மறுமன்னரையும் வென்று ஜெயத்துடன் மீண்டாய். இதல்லாமலும், நான்கு வேதமும் நான்முகனும் நாரணனும் நாகலோகத்தினர் முதலியவரும் அறிதற்கரிதாகிய தேவாதி தேவனை, திரிநேத்திர தாரியை, ஆதி பாண்டரங்கனை, ஆதிமத்தியாந்த ரகிதனை, சேல்கெண்டை போன்ற தடங்கண்வாய்ந்த ஜெகதீஸ்வரியுடனே விருஷபவாகனரூடராய் எழுந்தருளி வந்து தெரிசனந் தரப்பெற்று; உன்னிருவிழியும் உள்ளமுங்களித்து ஆனந்த பாஷ்பத்துடன் தொழுது பழுதுபடாத இன்பமடைந்தனை. மூலகாரணனான அக்கண்ணுதலாற் பாசுபதமும் பெற்றாய். பிரமாவினாலும், அஷ்டவசுக்களினாலும், அஷ்டதிக்குபாலகராலும், துளபமாலை தரித்த நாரணனாலும், இந்திரனாலும், தேவர்களாலும், பற்பல மந்திரக் கணைகளைப் பெற்றாய். கற்பக நாட்டாருக்கு

நெடுநாட் பகைவராகிய காலகேய நிவாத கவசர்களை நொடியிற் பொடியாக முடித்தாய். மானுபரணமும், ஞானுபரணமும் அணிந்த மகா பதிவிரதையான இந்திராணி, உன் திராணி அறிந்து, சாவா மருந்தாகிய தேவாமிர்தத்தை ஊட்டுவிக்க இன்பமாய் உண்டு, தேவேந்திரனுடன் சிங்காதனமேறிச் சிறப்புற்றிருந்தாய். அரவக்கொடி படைத்த துரியோதனனையும், அவன் தம்பிமாரையும், அவர்கட்குரிய தருமபத்தினிகளையும், தாமணியாயாகக் கட்டிக்கொண்டுபோன சித்திரசேனனைக் கைப்பிடியாகக் கொண்டு வா என்று நான் சொன்ன வாய் மூடுமுன்னே சென்று, அவனைத் திருப்பிக்கொண்டு வந்து என் முன் நிறுத்தி, கட்டுப்பட்ட யாவரையுங் கட்டவிழ்த்து விட்டாய். மேலும், தேசுடையவரில் அக்கினிதேவன் போலும், தேசராஜர்களில் திசையானைகளில் சுப்பிரதீபம்போலும், ஜெய கீர்த்தியில் விடையோன்போலும் இருக்கின்றாய். ஓ அநுமத்துவசமும், அழியா வில்லும், அக்ஷய தூணியும், அழகிய தேரும், சுவேதப் புரவியும் படைத்த சுந்தரனே! விசித்திர வில்லாளி யென்னும் விராடராஜனுடைய பகுதியிற் புகுந்து, உன் வேடம் மாறி, வித்வத்தில் உயர்ந்த உன்னுள்ளமடங்கி, ஒரு வருடம் ஒடுங்கி, எத்தன்மையான சிற்றேவல் செய்வையோ? என் அத்தனே! என்று புத்தி மருண்டு கண்ணீர் ததும்ப, உண்ணீர் வெதும்பக் கரைந்து வருந்தினர். இவ்வாறு வருந்திய தருமராஜனது உள்ளத் தளர்ச்சியும், சற்று நிதானித்து ஆராய்ந்தெண்ணிய சவ்வியசாசி, ஓ என் அண்ணு! என்னைக் குறித்து எண்ணமுறு திருக்கும்படியாய் அடியேன் ஒரு வசனஞ் சொல்லுகிறேன் தேவரீர் திருவுள மகிழக்கடவது என்று வணங்கிச் சுபத்திரை மணாளன் சொல்லத் தொடங்கினன்:

ஓ தருமகுணாலயமே! பூர்வம் யான் தெய்வலோகம் போயிருந்தபோது வண்ணப் பெண்ணான ஊர்வசியின் எண்ணத்திற்கு இசையாத என்னைப் பெண்தன்மையிலும், ஆண் தன்மையிலும் இழிந்த பேடித்தன்மையாகச் சபித்தாள். அந்தச் சாபத்தால் தளர்ந்து வருந்திய வாட்டத்தை ஆயிரநாட்டமுள்ள அயிராவதத்தன் அறிந்து, அந்த ஊர்வசியினிடத்திற் சென்று, அடிபாவி! தேவர்கட் கனுகூலஞ்செய்த செஞ்சிலை விவேகனைப் பாவகாரியாகிய நீ இப்படிச் சபிக்கலாமா? ஆ! ஆ! துரோகி! இப்போது நீ இட்ட சர்பத்தை விலக்கி என் சஞ்சலத்தைத் துலக்கிவிடடி என்று வருந்திச் சொன்னர். அவ்வார்த்தை கேட்ட ஊர்வசியானவள் நான் இட்ட சாபம் பழுதுபடாமல் இவர் வேண்டும் பொழுது வந்து ஒருவருட மிருக்கவும், வேண்டாம் என்றபோது அகன்றுபோகவுங் கடவதென்று பிரதிசாபங் கொடுத்திருக்கின்றனள். அந்த நாளையில் வந்த சாபந் தந்தையான இந்திரன் உபகாரமென் றெண்ணிவந்தேன். இப்போதந்த ஊர்வசியிட்ட சாபமானது நாம் நாடிய வழிக்கு உபயோகப்பட்டு, நன்மை செய்கின்றது போலாச்சுது. ஓ உதிரக்கறையோங்கிய வேல்தாங்கிய காவலனே! நானப்படியே பேடி யுருவமெடுத்து, இம்மச்சராஜனிடத்தி லடுத்து, பெண்களுக்குப் பரதநாட்டியம் படிப்பிக்கவல்லவளென்று பகர்ந்து அவனருள் பெற்று ஆடரங்கச் சாலையிலிருப்பேன் உன்பெய ரென்னவென்றால், பிரகநளையென்றுரைப்பேன். நீ இருந்த பட்டணம் எதுவென்றால் தீயிற் பிறந்த திரௌபதாதேவிக்கு நடனத்தொழில் நடாத்தினவ ளென்பேன். நீ எதிப்படி வந்தாயெனில், பாண்டவர்களுடன் பாஞ்சாலியும் வனவாசஞ் செய்யப்போன நாளில் நானுங் கூடப்போயிருந்து ஒருவருஷம் அக்ஞாதவாசஞ் செய்வதற்காக உன்னிடத்தில் அடைந்தேனென் றிசைத்து, அவ்வரசனைச் சந்தோஷப் படுத்துவதற்கு என் மனங் குவிந்திருக்கின்றதென்று பற்குணன் பகர்ந்தான். அவன் கருத்தை யறிந்த தருமராஜன் இவை யுனக்குத் தக்கதுதான் என்று மகிழ்ந்து, பக்கத்தில் நின்ற நகுலனைப் பார்த்து பரதவிக்கத் தொடங்கினர்.

நகுலராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

ஓ எந்நாளும் என்னைவிட்டு நீங்காத விளஞ்சிங்கமே! நீதான் சொன்னபடி கேட்டு நடக்கத்தக்கவனே யல்லது, உன் சுயயுத்தியா யொன்றைத் தொடங்கிச் செய்யும் வல்லவனல்லவே, மெய்வருந்தும் வேலையிற் பிரவேசிக்க மாட்டாயே, வியர்வு உண்டாக மேனிகசங்காயே, முன்பின்னென்று முணராயே, அறியாச் சிறியவனான நீ சத்துருவின் கண்ணுக்குக் கிட்டாமல், மச்சராஜன் தேசத்தில் உருவமாறி ஒருவருடமிருந்து எவ்வாறு காலங்கழிப்பாய்? அப்பனே! ஓ அவ்வருடராஜனே! என்று தருமராஜன் கேட்கவும், சிவபெருமானுடன் விற்போரும் மற்போரும்

புரிந்த சிலைவிஜயன் தம்பியான நகுலராஜன் அமலனன் அண்ணலைப் பணிந்து, கமல மலர்போல் முகமலர்ந்து, கருணைக் கண்ணூர்ந்த அண்ணுவென்று கழறத் தொடங்கினுன்: ஓ தருமப்பிரபுவாகிய தயாநிதியே! தேவரீர் அடியேனுக்குப் படிப்பித்த சாஸ்திரங்களில் அஸ்வ சாஸ்திரத்தை முக்கியமாய் அறிந்தேன். பரிக்ஷையுந் தெரிந்தேன். அதனுல், குதிரைகளின் குலமும்-குரலும்-நலமும்-பலமும்-நன்மையும்-வண்மையும்-திறலும்-தீதும் தேசமும்-வாசமும் - சீரும்-சிறப்பும்-சித்தமும்-உன்மத்தமும்-பேதமும்- அபேதமும்-முகமும்-கண்களும் - சுழியும் - சுத்தமும் - துலக்கமும்-விலக்கமும்-வருணமும் - ஆரோகணமும்-அவரோகணமும்-வட்டமும்-கோணமும்-வளைவும்-வையாளியும்-சிறு நடையும்-பெரு நடையும்-சிம்புட் கதியும் - பிணிகளும் அவைகட்குக் கொடுக்கும் மருந்துகளும் செவ்வையாகத் தெரிந்திருக்கின்றேன். ஆகையால், அஸ்வ சாஸ்திர அதிபதியென வேடம்பூண்டு, மச்சலாதிபனிடம்சென்று, அவனுக்கு இச்சையுண்டாகும்படிக் கிசைந்து, பச்சைப் புரவி தூண்டும் பாகனிலும் மேலாயிருப்பேன். அவர் என்னூரையும், என் பேரையும், என் சீரையும், நான் வந்தவாறையும் கேட்பாராகில், குருமரபிலுயர்ந்த தருமராஜனுடைய நாட்டில் குதிரை நடாத்திவருங் குமரன் யான். என் பெயர் தாமக்கிரந்தி யென்றிசைந்து அருமைக் குதிரைகளையுஞ் சராளமாய்த் திருப்பி விடுத்து, சமயத்திற்குத் தகுந்த சவாரியுங் கொடுத்து, எஜமானைச் சந்தோஷப்படுத்தி, ஆடையாபரண முதலாகிய பரிசுகளும்பெற்று குதிரைத் தலைவர்கள் கொண்டாடும்படிக்குங் காலங் கழிப்பே னென்றுன். அந்தத் தம்பியின் வசனத்தைக் கேட்ட தருமராஜன் மனக்களிப்படைந்து, காலத்தில் தகுந்த கோலமாய் நீ கொள்ளப்போகிற தொழில் மெத்தவும் நன்றென்று உரைத்து மன்மதனிலும் உயர்ந்த வடிவமைந்த சகாதேவனை நோக்கிச் சொல்லத் தொடங்கினுர்.

சகாதேவராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

ஓ அதிபாலியனே! தந்தையான பாண்டு மகாராஜன் மார்பிலும், குந்திதேவி மடியிலும் விந்தகிரிபோன்ற என் தோளிலும், வேற்றரசர்களின் தலையிலும் விளையாடி மிதித்து நடைபழகி யுலாவிய உன் மெல்லடிகள், செம்பருக்கைக் கற்களுடன் சிவந்த தீப்பொறி கலந்த மலைச்சாரலிலும், வனங்களிலுந் திரிந்து பன்னிரண்டு வருஷம் தொலைத்தும், இன்னும் தீரவில்லை. ஐயோ! இது நீ முன்னம் செய்த தீவினையோ? ஓ கன்னெஞ்சனன அன்னவாகனனே! இவ்வறியாத பாலகனுக்கும் இவ்வனியாய வெழுத்தை அவ்வனருந் தலையிற் பொறுத்து வைத்தனையோ? கார் செறிந்த நீர் சொரிந்த பார்புரத்து தார்பூனைந்த பாண்டுராஜனுக்குப் பிள்ளையாகப் பிறந்தும், அருளுற்ற எம்போல்வார்க்குத் தம்பியாகப் பிறந்தும், சாஸ்திர கலைக்கியானங்களையுணர்ந்தும், சாதுசங்கப் பழக்கம் புணர்ந்தும், பழவினை யொழியாது அநுபவித்தனையோ? ஓ பாலனே! என்னிருகண் சீலனே! புத்தியில் பிரகஸ்பதியுஞ் சுக்கிராச்சாரியும் நிகரென்று சொல்லும்படியாய் மந்திர சாஸ்திர முற்றும் நீதி முதலிய மற்றுங் கற்றுணர்ந்த வல்லோனே! நீ எத்தொழில் செய்வாய்? எவ்வாறு சிற்றேவல் புரிவாய்? எவர்க்கும் தெரியாதிருக்க எந்தவேட மெடுப்பாய்? எப்படி நாளைக் கழிப்பாய்? அப்பா என்னிளவலே! என்று கண்ணீர் சொரிந்து ஏங்கி இறைந்த தருமராஜனைத் திரிகாலமும் தெரிந்த சகாதேவன் வணங்கிப் பேசத் தொடங்கினுன். ஓ வையக நாடுஞ் செய்ய கோலாடும் ஐயனே! தருமதேவதைத் தொப்பாகிய பசுவினங்களைச் சவரக்ஷணை செய்யுங் கோபால வேடங் கொண்டு, விராட ராஜனிடத்தில் சென்று, பசுக்கள் மேய்ப்போனுகி, அப்பசுக்களுக்கு நேரிடுங் கோமாரி-அடைப்பன்-தெறிப்பன்-வெக்கை-தொம்பை-சூலை - இசிவு-வயிறுப்பல் - பொருமல் - செருமல் - இருமல்-வாய்வு - அசைவுபோடா திருத்தல் முதலிய நோய்களைப் போக்கி, புல்லுள்ள புலத்தில் மேயவோட்டி, நீருள்ள இடத்தில் தண்ணீர் காட்டி, நிழலுள்ள தோப்பில் மந்தையைக் கூட்டி மடக்கி, ஆடிக்கறக்கும் பசு-அதட்டிக் கறக்கும் பசு-அணைத்துக்கறக்கும் பசு-பாடிக் கறக்கும் பசு-பழித்துக்கறக்கும் பசு இவைகளைத் தெரிந்துகொண்டு, இப் பசுக்களின் தேசம்-வாசம்-குணம்-மணம் இவை முதலியதுகளையு முணர்ந்து நடத்தவறிவேன். உன் பெயரென்னவெனில், தந்திரபால னென் பேன். நீ யாரிடத்தி லிருந்தனை யென்றால், பாண்டவர்களாகிய ஆண்டவமாரிடத்திற் பசு மேய்த்துக் காலங்கழித்தே னென்பேன். மேலும், நந்தகோபாலன் என்றன் மைத்துனனென் றுரைத்து, அவ்வரசன் சிந்தைக்களி

கூறிச் செல்வமோ டிருப்பேனென்பதாய்ச்
சகாதேவன் சாற்றினன். அந்த வார்த்தை
யைக் கேட்ட தருமராஜன் மகாதேவ சம்யோ
வென்று பெருமூச்சு விட்டு நம்மெல்லோரி
லுஞ் சிறந்த தொழில் இவன் பெற்றனென்
றிசைந்து அவனைத் தனது இருகண்ணிலும்
ஒத்தி முத்தமிட்டு, கற்புக்கணியான பாஞ்சாலி
யின் மதிமுகத்தை நோக்கி விதிர்விதிர்த்து
விளம்பத் தொடங்கினர்.

### திரௌபதாதேவி தன் கொள்கை யைக் கூறுதல்

ஓ அழகுக்காலயமான அன்னமே! ஓ பிற
விச்செல்வமுள்ள பேதையே! உனக்கு அனே
கந் தாதியர் ஏவற்பணிசெய்யத் துன்பமில்லா
மல் இன்பமடைந்த தோகைமயிலான நீ, எத்
தொழில் இயற்றிக் காலங் கழிப்பையோ? ஓ
இளம்பிடியே என்றேங்கிச் சுவாச மேலிட்
டிருந்த ஞானசம்பன்னனாகிய தருமராஜனது
மனக்குறிப்பறிந்து பெண்ணிற்சிறந்த பெருந்
தகைப் பாஞ்சாலியானவள் கண்ணீருகுத்துக்
கதறத் தொடங்கினள். ஓ புண்ணியமனமுந்
திண்ணிய புயமுமுள்ள வள்ளலே! நான் வண்
ணப் பெண்ணென்னும் வடிவங்கொண்டு,
மச்சராஜனுடைய மனைவியிடஞ் சென்று
ஆபரண அலங்காரஞ் செய்யவும், கண்ணிற்கு
மைதீட்டவும், ஸ்தனத்திற்குத் தொய்யில்
எழுதவும், பலவகை மலரெடுத்துத் தொடுக்க
வும், பன்னிற முத்தங்களைக் கோர்க்கவும்,
கொண்டையில் பூவேற்றி முடிக்கவும், கொடி
யிடையிற் பல சேலை யுடுக்கவும், நெற்றியில்
விபூதிரேகை யிடவும், நிறமிக்க சிந்தூரத்தி
லதம் வைக்கவும், சாந்து-சந்தனம்-சவ்வாது
கூட்டவும், சகலவித கதம்பப்பொடி தீட்ட
வும், இன்னும் பதவிதமான சின்னங்களுஞ்
செய்ய அறிவேன். நீ இங்கு வந்தகாரிய
மென்னவென்று கேட்டால், உம்மிடத்தில்
ஒருவருட மிருந்து காலங்கழிக்க வந்தேன்.
என்னைக் காதலித்த கணவர் ஜய விஜய
ஜயந்த ஜயசேன ஜயற்பாலனென்னும் ஐந்து
காந்திருவர். அவர்களைப் பகைத்துப் போரா
டும் வல்லவர்கள் எங்குமில்லை. எப்போர்ப்
பட்டவர்களும் என்னைப் பார்த்துத் தப்பான
எண்ணங் கொள்ளப்போகாது. அப்படியே
தாறுமாறான நினைப்புக்கொண்டால், நூறு
நூறு கூறாய் வேறாகி மாள்வார்கள்.
இப்போர்ப்பட்ட வல்லவர்கட்கு இல்லாளான
நீ வேலை செய்ய வெளிப்படுவானேனென்று
கேட்டால், என் குலத்திற்குரிய நல்லொழுக்க
மும், நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு குறைவு
படாமற் பிரதாபம் பெற்ற பாஞ்சாலிக்குப்
பணிவிடை செய்து, மாஞ்சோலைக் குயில்
போல் விசுவாசத்துடன் வாழ்ந்தேன். அவ்
விடம்விட் டிவ்விடம் வரும்படியாக அவசி
யம் என்னவென்னில், நல்வினைப்பயன் பெற்ற
அம் மாதுசிரோமணி வல்வினை வசத்தால்
வனவாசம் போனபோது, நானுங் கூடப்
போயிருந்தேன். இப்போது அப்பெண்
கொடி தன் கணவர்களோடு அக்ஞாதவசஞ்
செய்யப்போயினள். நான் அந்தக் காட்டி
லிலிருந்து விசனமடைந்து, உன்னாட்டிற் சில
பகல் கழித்து அவர்கள் வெளிப்படும்போது
நாம் போய்க் கூடிக்கொள்ளலாமென்று
யோசித்து வந்தேன். ஆதலால், நீர் என்னைச்
சேர்த்தாதரிக்க இஷ்டமுள்ளதோ வென்று
கேட்டு இன்பமொழி புகன்று, அவள் அன்
புடனுரைக்க ஆசையோடிருந்து, சமயோசித
வசனங்கள் தக்கபடி பேசி, முன்னிருந்த
தாதியரெல்லாம் நாணப்பட என் வல்லமை
யைக் காட்டி, அந்தச் சீமாட்டி இச்சைபடும்
படிக் கணிமலர் சூட்டி, நாளுக்கு நாள் பக்ஷ
முண்டாக நடந்து அக்ஞாதவாசங் கழிப்
பேன் என்று கற்புக்கொரு பொக்கிஷம்
போன்ற காதலி சொல்ல, அற்புக்கு அருங்
கடலாகிய தருமராஜன் கேட்டு, ஓ வெற்புக்
கிணையான சொற்கந் தாங்கிய மின்னலே! நீ
சொன்ன நன்னய மொழியால் நற்பயனைப்
பெறுவை என்றுரைத்துச் சில தருமங்களைச்
சொல்லத் தொடங்கினர்.

### திரௌபதாதேவிக்குத் தருமநந்தனர் சில தருமங் கூறுதல்

ஓ அன்னநடையும் மின்னலிடையும்
பின்னுசடையும் வன்னவுடையு முடைய மட
மானே! என் வார்த்தையைச் சிறிது கேள்.
என் செந்தேனே! வேதியராயினோர் ஒழுக்க
மும், வேந்தராயினோர் தருமநீதியும், மாதர்க
ளாயினோர் கற்பும் வகித்திருக்கின்றனர். அத
னால் மாதமும்மாரி பொழிவதென்றும், அம்
மழையினால் கற்காடுகள் திருந்திப் புற்பூடுகள்
பொருந்தி, செந்நெற்பயிர் நெருங்கிச் செகந்
தழைத் தோங்குவதென்றும், புண்ணியவான்க
ளாயினோர் தவம்புரிவதென்றும் பெரியோர்
புகன்றிருக்கின்றார்கள். ஆதலால், அந்த நீதி
யைக் கேட்டு நெறிமுறை வழுவாமல் நடக்
கும் நிலையினையுடையவள் நீ. ஆகையால்,

உனக்கு விசேஷித்து என்னசொல்லப்போகின்றேன். ஒரு கற்புள்ள மனையாளைக் கலியாணஞ் செய்துகொண்ட கணவனுக்கு விற்பன விவேக வேதசாஸ்திரங்களும், இன்பமும், அழகும், புகழும், வெற்றியும், புத்தியும், மெய்மையும், பெருமையும், செல்வமும், சீரும், திடமும், தீரமும், குறைவறப் பெருகுமென்று மஹா வாக்கியங்களிற் குறித்திருக்கின்றன. பாரியாளென்பதே பாரியாளென மருவிய மனைவியாவள். ஆதலால், அம்மனையாள் (கற்பெனப்படுவது சொற்பிறம்பாமை) என்னுங் கருத்திற் கிணங்க நடக்கவேண்டியது. அவள் கணவன் கருத்திற்கு மாறுபடுவாளாகில், அம் மாறுபாடு அவள்புருஷனுடைய மெய்த்தவத்தையும், செல்வத்தையும், ஆயுள் முதலிய யாவற்றையும் அழித்து, மீளா நரகத்திற்கு ஆளாக்கிவிடு மென்று இருக்கு வேதத்திற் சொல்லி யிருக்கின்றது. பதிவிரதையுடன் கூடி, இல்லற தருமம் இயற்றி, நல்ல மனதுடன் வாழ்வு கூர்ந்தபேருக்கு, கீர்த்தியும் பொருளுங் கிடைக்குமென்று உண்மைஞான மூணர்ந்தோர் உரைத்திருக்கின்றார்கள். அதற்குத் திருஷ்டாந்த மென்னவென்றால், மாதாவாகிய சீதாதேவியின் பதிவிரதா மகத்துவத்தால், இராமர்-தேவர் முதலிய தண்டகாரண்ணிய ரிஷிகளுக்கு அபயங் கொடுத்து, இராவண கும்பகர்ணாதியரை வதைத்துப் பட்டாபிஷேகம்பெற்ற கீர்த்தியைப் பல தரமுங் கேட்டிருக்கின்றனை. ஓ நிதமும் அருந்ததி துதிக்கும் அன்னமே! இப்படிக்கெல்லாம் இருந்தபோதிலும், (காவல்தானே பாவையர்க்கழகு) என்னுங் கருத்தின்படிக்கு, முதற் காவல் தந்தை, இரண்டாவது காவல் புருஷன், மூன்றாவது காவல் புத்திரன், இம் மூன்று காவலுக்கு உட்பட்டிருப்பவளே மகா பதிவிரதையாம். அதுவே பெண்கட்கழகாகும். நாம் அஞ்ஞாதவாசம் பண்ணவேண்டிய இத் தருணத்தில், உனக்கு யாதொரு காவலுமில்லை. ஆனதால், நான் சொல்லவேண்டுவ தென்னெனில், உன் புத்தியைப் பெருங் காவலாகக் கொண்டு, இஷ்டதெய்வத் துணையை இடைவிடாமல் நம்பி, நிறையாகிய அழிவின்மையை முறையாய் நிறுவி, இக் காலத்தைக் கழிக்க வேண்டும். உன்னிடத்தே துஷ்டர்கள் கருதிக் கிட்ட வந்தாலும், அம் மூடர்களை நீ பார்த்தபோதிலும், அவர்கள் கண்ணிற் கெடாமல் அகன்று அந்தக் கொடுமையாளருடைய துற்புத்திக்கும், உனது சத்துருவின் பார்வைக்கும் அகப்படா திருந்து, இராஜ ஸ்திரீக்கு விரோதம் வராமல் நடந்து, ஓ பாஞ்சால கன்னிகையே! நமக்கு நற்காலம் வருகிறவரைக்கும் இந்தத் துற்காலத்தைத் தொலைத்து விடவேண்டும் என்று பகர்ந்த தருமராஜனுடைய சத்தியமொழியான தரும நீதிகளை உத்தமகுணசாலியாகிய பாஞ்சாலி வணங்கிக்கேட்டு, புத்தி புத்தி யென்று பேசத் தொடங்கினாள்: ஐயா பொய்யாவிரதப் புனித மூர்த்தியே! தேவரீருரைத்த சிலாக்கிய வாக்கியத்தை ஜென்மாந்திர பாக்கியமென்றும், வேதமொழியென்றும், என் தலைமேற் கொண்டேன். தேவரீர் மொழிந்த தெவ்வண்ணமோ அவ்வண்ணம் நடக்க அடியாளிருக்கின்றேன். எனக்காகச் சிந்தனை செய்யவேண்டாம். ஓ சத்தியவத்துவின் தத்துவநிலையே என்று கை கூப்பி, அவர் சரண்மேற் றாழ்ந்தாள்.

## தௌமியாசாரியர் பாண்டவர்கட்குச் சில நீதி கூறி ஔபாசாக்கினி பெற்றுத் தவத்திற்கேகுதல்

இப்பால் தருமநந்தனர் தௌமியரை நோக்கி, சுவாமி! அடியேங்களிழைத்த வினை இப்படியாச்சுது. அரசாட்சி முதற் பெருமையும் போச்சுது. தம்மைப் பணிவாரைத் தாம் பணியக் காலமாச்சுது. இனித் தேவரீரால் யெப்படி கட்டளையோ அக்கட்டளைக்குக் கீழ்ப்பட்டிருந்து, தமது கிருபையின்படி நடக்கக் காத்திருக்கின்றோம். ஓ பரமரகசிய பதிதபாவனனே என்று தருமராஜன் சாற்ற, தௌமியாச்சாரியார் சந்தோஷித்து, ஓ சத்தியசீலனே! நீங்கள் ஆறுபேரும் விராட பூபனையடுத்து, இதுகாறு மிருந்தது போல் இச்சையின்படிக்குத் திரியாமல், ஒருவருக்குந் தெரியாமல், ஒருவரையொருவர் பிரியாமல், இப்போ திவ்விடத்தில் நிச்சயித்துக்கொண்டபடி வேறு வேடம்பூண்டு, அவரவர்க்குரிய தொழில்களை அலுப்பில்லாமலும், அவசரப்படாமலும் செய்யவேண்டும். அப்படி செய்கிற விஷயத்தில், ஒருவன் களங்கமறக் கற்ற கனவானாலுந் தனக்கு மேற்பட்ட புத்தியோரிடத்தில் ஆலோசித்து நடக்கத்தக்கதென்று நீதிநூலிற் பேசி யிருப்பதால், நீங்களறியாத நீதிநெறி யில்லை. அப்படிக்கு உணர்ந்து தெளிந்தபோதிலும், நானறிந்திருப்பதையுங் கொஞ்சஞ் சொல்லுகிறேன். நீங்கள் யாவரும் வெறுப்பின்றி விருப்பமாய்க்கேட்டருளுங்கள் என்று விரதசிலாக்கிய

வேதபுரோகிதன் விளம்பலுற்றனர். ஓ ஐவர்களே! ஜெகமுழுதும் ஒரு குடையிலாளுந் தீரனாலும், திகாரந்த வரையிலும் ஒரு நொடியிற் ஜெயிக்கும் வீரனாலும், ஒருவரிடத்திற் சேவகஞ் செய்யப் புகுந்தால், தீரமும் வீரமுமொடுங்கிச் சேவகஞ் செய்யவேண்டுமென்று பாவக நீதி சாஸ்திரத்திற் பகுத்திருக்கின்றது: ஆனதால், நீங்களனைவரும் மாறுருக்கொண்டு விராடனிடஞ் சென்று தொழில் புரியு நாளையில் உங்கள் பெருமையையும் புகழையும்பேசாமல்மறந்துவிடவேண்டும். பூர்வ காலத்தில் துளபமணி பூண்ட ஆண்டவன் ஒவ்வொரு காரியங்களை நிறைவேற்றுதற்காக, எத்தனை பாடோபட்டு அவதரித்துக் காரிய சித்தி கண்டு, கமலசம்பவன் முதலாகிய தேவர்களுக்கு அருள்செய் திருக்கின்றார். அதுபோல் நீங்களுங் காலங் கருதி, உங்கள் சிறப்பை மறந்து மச்சராஜனிடமருவி, ஏவலாளரினும் எளியராயிருந்து நாளைக் கழிப்பது நலமாகும். ஒருவனிடத்தில் ஊழியஞ் செய்வதும், அரசருக்கடிமையாவதும், வேறு வேஷங் கொண்டு வேலைக்கு அமர்வதும், கொடுமை, கொடுமை; இம்மூன்றில், அரசனிடத்தில் உத்தியோகஞ் செய்கின்ற முறைமையும், ஏவற்றொழில் கேட்குந் திறமையும் அரசன் தயவைச் சம்பாதிக்க வேண்டிய நன்மையும், கீர்த்தி தேடுந் தன்மையும் உச்சித வார்த்தைகளைச் சபை மெச்சப் பேசும் உசிதமும், நான் உணர்ந்தபடிக்கு உசிதமாக விளம்புகின்றேன் கேளுங்கள்:

ஓ திங்கள் குலந்தழைக்க வந்தவர்களே! பகைவர் உடலிற் பரவிய உதிர மாமிசத்தை முனைத்தலையிற் சுமந்த வேலாயுதந் தரித்த ராஜனானவன் சபைக்கு வருமுன்னமே, தனக்குத் தகுந்த ஸ்தானத்தில் தான் வந்திருந்து, அரசன் வாக்கிலிருந்து வருஞ் சொல்லினுடைய பொருள் நுட்ப மறிந்து அந்தச் சொல்லின் சூக்ஷத்திற்குத் தகுதியாகப் பதிலுத்தரங் கொடுத்து, மரியாதையாய் உடுத்து மனமகிழச் செய்தால், அவ்வரசனது பாக்கியங்கள் எல்லாம் அவனே பெறத்தக்க யோக்கியனாவான். உலகு காவலனாகிய வேந்தன் இடத்தில் நாம் வந்தடுத்த அந்நாள் முதல் இன்னாள் வரையிலும் வீணாய்த் துன்பப்பட்டோம். இதனால் என்ன பலன் கண்டோம் என்று பலருமறியத் தூற்றி, மனவெறுப்போடு பொறுத்துக் கொள்ளுகின்ற அவசரப் புத்தியுடையவர்கள்; இனிமேல் இராஜனால் கிடைக்கப் போகிற பெருமை, புகழ், ஐஸ்வரியம் இவை முதலிய சன்மானத்தைப் போக்கடித்துக் கொண்டவர்கள் என்று சொல்லலாம். மன்னன் மாளிகைக்கும் ஏற்பட்ட வீடும், அவன் சிறப்புக் கதிகமான சிறப்பும், அவன் நாகரீகத்திற் கதிகமாகிய நாகரீகமும், அவன் அலங்காரத்திற்கு அதிகமான அலங்காரமும், அவனாபரணத்திற் குயர்ந்த ஆபரமும், அவனது சுகந்த பரிமளத்திற்கு மிகுந்த வாசனையும், அவன் வஸ்திரத்திற் குயர்ந்த வஸ்திரமும், அவன் சொல்லிய நீதி பேதிக்கப் பேசுகின்ற துஷ்ட வார்த்தையும், மதிப்பில்லாத மரியாதையும், வணக்கமற்ற இணக்கமுங் கூடாது. இவைகள் ஒருவேளை அதிகப்பட்டிருந்தால், நல்ல பாம்பின் விஷத்தை நாள்தோறும் அருந்துவது போல் நன்மையைக் களைந்து, உயிரழிக்குந் தீமையை விளைவிக்கும். பூபதிக்குரிய புத்திரர் ஆனாலும், அவர்கள் ஆசைக்குரிய மித்திரரானாலும், அவர்களன்பு மேற்கொண்ட பௌத்திரரானாலும், இனவருக்கமானாலும், ஜனப் பெருக்கமானாலும், வெட்டி ஜெயிக்கும் வீரமுள்ள சகோதரரானாலும், அரசனது ஆணை மீறி நீதி நழுவி நடக்கலாகாது. அப்படி நடப்பார்களாகில், அரசன் மிகுதியான கோபங் கொண்டு, மனுநெறி முறைமைக்கு மாறாக உயிர் வதை செய்துவிடுவான்.

ஓ பாண்டு பூபதிக்குரிய பாக்கிய சிலாக்கியரே! மன்னர்களுக்குமகிழ்ச்சியைத்தரும்மைந்தர்களும், யுத்த முனையில் வெற்றி பெறுஞ் சக்தியையுடைய சுத்த வீரர்களும், செய்யத் துணிந்து பிரவேசித்த யாதொரு காரியங்களில் ஏதாகிலுங் காரியத் தாழ்ச்சி நேரிட்டு அந்தச் சங்கதி அவ்விடத்திலிருக்கின்ற மற்றப் பேருக்குத் தெரியுமாகில், அதை வெளியிற் பிரசித்தப் படுத்தப்படாது. திக்கு யானைகளை யொத்த திறம் பெற்றவர்கள் ஆனாலும், வேந்தனால் முடியாத காரியத்தை நானே முடிக்கிறேன் என்று வீரியம் பேசப்படாது. இராஜன் நமக்கு மிகுநேச விசுவாசமாயிருக்கின்றான் என்று அவனிடத்தில் தனக்கு இனிமையான காரியங்களைச் சொல்லி முடித்துக் கொள்ளுகிற பக்ஷமானது, அந்த ராஜனை அடுத்திருக்கிற சில பேருக்குத் துன்பத்தை விளைக்குமாகில், அது மகா கொடுமை என்று அறிந்து, புத்திமான்கள் ஒருபோதும் பிரஸ்

தாபத்திற் கொண்டு வரமாட்டார். தாங்கள் நினைத்த காரியங்களில் யாதொரு பயனுமில்லாது இருக்குமாகில், வித்வச்சிரேஷ்ட மகத்துக்கள் கூட்டத்தில் அந்தப் பயனில்லாச் சொல்லைப் பகர்ந்து, பழிப்புக்கிடமாகிய இழிவடையப் போகாது. ஆலோசனையில் உயர்ந்த பேரறிவாளர்கள் ஏழை யெளியோர் முதலிய யாவராஜுலும் அவர்களைக் கடிந்து கறுவி, (வெட்டெனப் பேசேல்) என்று மேலோருரைத்த நீதியை நினைத்துக் கோபங் கொள்ள மாட்டார்கள். வீரம் உடைய வேந்தனிடத்தில் உரிமையாய் இருப்பவர்களைப் பகைத்து தன்னருமை பெருமை கொடுமை முதலிய ஆணவப் பேச்சால் விரோதமாகத் தூறிக் கடின வார்த்தைகள் சொல்லப்படாது. அப்படி விரோதிப்பார்களாகில், எவராலும் மாற்றப்படாத கூற்றுவனைச் செய்யுங் கொலைத்தொழிலை நாளுக்கு நாள் விளைக்கும் என்று நன்றாய் உணர்ந்து, யாவருக்கும் நல்லவர்களாய் நடந்துகொள்ள வேண்டியது. நராதிபன் கொலுக்கொண் டிருக்குஞ் சபையில் தாராளமாய் எதிரில் நிற்கப்படாது. அரசனுக்குப் பின்புறத்திலும் நிற்கப்படாது. சிங்காதனத்தில் இருக்கும் வேந்தனுக்கு இரு பக்கத்திலு நெருங்கி நின்று, அவனுடைய கண்கள் யாரைப் பார்க்குமோ என்றும், அக் கண்ணோக்கானது கருணை நோக்கோ கலக நோக்கோ வென்றுங் கண்டறிந்து, காலமும் இடமுங் கருதி நடக்கவேண்டும்.

மேலும் அரசனுடைய வாக்கி லிருந்து வருகிற வசனத்தைக் கண் சிமிட்டாமற் பார்த்து, காது கொடுத்துக் கேட்டு எவர்களுக்கு என்ன சிலாக்கியமோ? ஏழைகளுக்கு என்ன பாக்கியமோ? எதிரிகளுக்கு என்ன போக்கியமோ? என்று யோசித்துக்கொள்ள வேண்டியது. அரசன் அரண்மனையிலுள்ள நன்மை தீமைகளைத் தானறிந்தாலும், ஒருவராற் கேள்விப்பட்டாலும், இராஜ காரியங்கள் எதுவானாலும், மற்றொருவருடன் சொல்லாமல் மறைக்கவேண்டும். உடனே அதை மறக்கவும் வேண்டும். அந்நியர் முதலிய மன்னவர்களாற் சண்டை சச்சரவு பொல்லாங்காகிய கட்டு வார்த்தைகள் நேரிட்டுக் கேள்விப்பட்டால், அதை உடனே தன் எஜமானுக்குத் தெரியப் படுத்தி மேன்மையைப் பெற்று, அவ்வரசனுக்கு மெய்ப்பட பொருந்தி யிருப்பதுவே அழகுக்கு அழகாகிய வணியை யுண்டாக்கும்.

ஐம்புலன்களை அடியோடறுத்து, ஆசை மூன்றை அடிவேர் களைந்து, ஆரணியத்தில் வாசஞ் செய்கின்ற அருந்தவத்தோர்களையுங் கலவை மிதிர்ந்த சலவையணிந்த கலச முலையார்களின் கடைக்கண் மருட்டுமாகில், பஞ்சேந்திரியங்களுடன் நாட்டில் வாழுகின்ற நம்மை விட்டுவிடத்தக்கதோ? ஆதலால், ராஜஸ்திரீகள் இருக்குமிடத்தில் தனித்துப் போகப்படாது. அவர்களுடன் சரச வார்த்தைகள் பேசப்படாது. நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் இந்நான்கும் அமைந்தஸ்திரீகளிடத்திலும், குள்ளனிடத்திலும், கள்ளனிடத்திலும், சிறுபிள்ளையிடத்திலும், ஈனசாதியினிடத்திலும், சிநேகஞ் செய்யலாகாது. சிநேகம் பண்ணினால் உடனே கலகம்நேர்ந்து அவமரியாதைக் குள்ளாக்கி, உயிர்த்தண்டனை வரையிலுங் கொண்டுபோய் விட்டுவிடும்.

ஓ பரம புருஷோத்தமரே! உலக மெல்லாந் தொழுதற்குரிய உயிர்த்தோழராயினுஞ் சிங்காதனக் கொலுமுகம் நோக்கிச் சென்றால், அவ்வரசன் தனக்கு மரியாதை செய்திலன் என்றும், வாகனங் கொடுத்திலன் என்றும், வசனித்திலன் என்றும், ஆசன மளித்திலன் என்றும், போஜனமளித்திலன் என்றும், வரிசை வண்மை, மணியணிப்பணி தந்திலன் என்றும், விசன மேற்கொண்டு குரூரப்படலாகாது. ஒருவேளை அக்கொற்றவனாற் சகல வெகுமானமும் பெற்றால் உடல் பூரித்து தன்னைத்தானே மறந்து மனமகிழ்ந்து கர்வங் கொள்ளப்படாது. அதிக சந்தோஷம் அதிக துக்கந்தருமென்று சாஸ்திரஞ்சொல்லுகின்றமையால், அவ்வரசனால் அப்போதே அவமானம் நேரிட்டாலும் நேரிடும். அதைக்குறித்து சிந்தை வாடப்போகாது. அரசனால் வந்த நன்மை தீமை இரண்டுஞ் சமமாகக் கொண்டு சஞ்சலமில்லாதிருந்தவர்கள், எல்லாம் உணர்ந்த வல்லவர்களென்று இயம்பத் தக்கவராம். இராஜன் ஒருவர்மீது கோபங்கொண்டு அவன் செல்வங்களை கைக்கொள்ளக் கருதிய காரணத்தை தாங்கள் அறிந்த துண்டாகில், அந்தப் பேச்சை யாரிடத்தும் பேசலாகாது. அதைக்குறித் தரசனையும் பேசலாகாது. கார் மேகங் கலந்து பொழிகின்ற மழையிலும், ஊர் வெந்து உலர்ந்து கரிந்துபோகக் காயும் வெயிலிலும், பைசாசு நித்திரை செய்யும் பாதிராத்திரியிலும், கைசரிய வீசிமோதிங் கடுங்காற்றிலும், வேந்தன் ஒரு வேலையாக அனுப்புவா

ளுகில், தன்னிடத்திற் சொல்லிய காரியமே கண்ணுக்கொண்டு தான்போன அந்த காரியத்தை முடித்து வர்வேண்டுமல்லது வேறென்று நினைக்கப்படாது. இராஜ காரியம் நிறைவேறுகிற வரையிலும், சோகம் - சோம்பல்-தேகவருத்தம்-பசி - இளைப்பு - ஆயாசம்-தாகம்-மனஸ்தாபம் - நித்திரை - பெருமை-அருமை - சிறுமை இவை முதலிய ஒன்றையும் பொருளாய்க் கொள்ளாமல், மானத்தையும் மன்னன் சொன்ன தியாகத்தையும் முக்கியமாகக் கருதி முடிவுபெற நடத்தி வரல் வேண்டும். கொலுமுகத்தில் நின்ற ஒருவனை அழைத்துப் பகைவர்மேல் அனுப்பினுல், அப்பகைவர் குடிகெடும்படி வென்று தங்கள் அரசாட்சியைக் காக்கவேண்டும். அவ்வரசனைத் தங்கள் தங்கள் கண்மணிபோற் பார்க்கவேண்டும். எந்தவேளையும் அரசனைப் புகழ்ந்து பேசவேண்டுமல்லது, எப்போது மிகழ்ந்து பேசலாகாது.

ஓ அறமாதி புருஷார்த்தங்களை ஆபரணமாகப் புனைந்த அருஞ்சீலரே! உற்ற துணையாய்க் கொற்றவனே சமம்பெற்றிருந்தாலும், அரசனவனை உயிர்போல் வைத்திருந்தாலும், அவனது பொன்னை-பொருளை-பூமியை-நேமியை-கன்னற்கோற்கள் வரைப்போற் கைபற்றக் கருதலாகாது. கணக்கு முதலிய காரியங்களிலும் மறந்தும் வழுவலாகாது. ஒருவேளை இராஜன் சந்தோஷமடைந்து, பொன்னை-பொருளை-பூமியை-மாளிகையை - மனையைக் கொடுப்பாஞகில், ஆசை அன்புடன் அவைகளைப் பெறத்தக்கது. மற்ருேருபாய தந்திரங்களாற் கிரகிக்க நினைப்பது, ஆலகால விஷத்தை அமுதென்று நினைத்த ஆசைபோலாகுமென்று அறிவினுயர்ந்தோர் மோசம் போகாமற் கிடைத்தவரையிலுந் திருப்தி யடைந்து சத்திய தர்மந் தவருமலிருப்பார்கள். இதன்றியும் (காற்றுள்ளபோதே தூற்றிக்கொள், கரும்புள்ளபோதே நாற்றிக்கொள்) என்னும் பழமொழியை நினைத்து, இந்த காலத்திற் சம்பாதிக்காமல் இனி எந்தக் காலத்திற் சம்பாதிக்கப் போகிருேமென்று கைகொண்ட வரைக் குங் கொள்ளையடிப்பதற் குடம்படுவோர், கசடர்-அசடர்-கயவர்-குயவர் என்றுரைக்கப் படுவதுமன்றி முன்பின்னுள்ள முதலுமிழந்து, மனையுமழிந்து, தேகப்பிரஷ்டத்துவ மாவார்கள். கொலுக்கொண் டிருக்குங் கோவேந்தன் சபையில், பொய் - புரட்டு-பெருமோசம்-டம்பம்-ஜம்பம்- தும்பல்-விக்கல்-கக்கல்-நெட்டை-சோம்பல்-கொட்டாவி - குறுகுறுத்தல் - திமிர் விடுத்தல் இவை முதலாகிய துற்குணங்கள் வரக்கூடாது. ஒருவேளை வருமாகில் அந்த இடத்தை விட்டு அப்பாற் போய்த் தீர்த்துக்கொண்டு வரவேண்டும். களிப்பாகச் செய்யுங் கயப்பாகிய வஸ்துக்களைக் கனவிலுங் கருதப்படாது. (கண்ணுரக் கண்டதும்பொய், காதார கேட்பதும்பொய், தீரவிசாரிப்பதுவே மெய்) இது முதியோர் மொழியாதலால், யாதொரு காரியத்தையும் நாவடக்காமற் பதறிச் சொல்லப்படாது. அப்படிச் சொன்னவர்களுக்குப் பெருந் துன்பத்தையும், மனுஷப் பதரென்னும் பெயரையும் வருவிக்கும். அரசனுல் நியமித்த குற்றவாளி முதலிய கொலையாளருடன் கூடிக் கலந்து குலாவலாகாது. கூடினுல், இவனும் அந்தக் குற்றங்களுக் குரியவனுவான். அரசன் கையெடுத்தழைத்தால் ஆனந்தப்படாமல், அந்தகன் அழைக்கவந்தபோது அவனைக்கண்டு நொந்தழுகின்ற அறிவில்லா ருயிர்போ லொடுங்கியடங்கி, வாய்பொத்தி வணங்கி வரவேண்டும். இராஜனு லழைக்க வரும்போது பூமியதிரத் திடுதிடென்று நடந்து, அலட்சியமாய்ப் பதறி வரலாகாது. (அடக்கம் அமரருளுய்க்கும்) என்னும் வாக்கியத்திற் கிணங்க மருவிச் சுகம்பெற வேண்டும்.

ஓ சர்வஜன மனேரதராகிய சத்திய சீலர்களே! வெற்றிவேலேந்திய வேந்தனிடத்திற் கட்டி காத்துப் பொருந்தி யிருப்பவர்கள், கொசுகுபோன்ற சிற்றறிவுடையவ ராளுலும், அவர்களோடெதிர்த்துப் பகைத்துக் கொள்ளப்படாது. அவர்கள் பகையானது நல்ல தருணத்திற் கழுத்துக்குக் கத்தியாய் வந்து நேரும். இவ்வரசனிடத்தில் வெகுவாகிய செல்வமும், சுபமாகிய இன்பமும், பெறுகிறதற்காக வல்லவோ எந்நேரமுங் கோள் குண்டினி சொல்லி நயிச்சிகமாக நடந்து கொண்டானென்று அரசனைச் சூழ்ந்திருப்பவர்க ளியாவரும் இகழ்ச்சியாய்ப் பேசிக்கொள்ளும்படிக்கு இடங் கொடுத்து, அதனுற் பலவித வளங்கள் சுலபமாய்க் கிடைப்பதாளுலும், அறிவினை யுடையோர் அவ்விதம் பழிச்சொல்லுக்காசை வைக்கார்கள். இராஜன் கொண்டாடிப் புகழ்ந்த போதிலும் பேரறிவாண்மையெனும் பெருஞ்செல்வப் பெரியோர்கள், வெகுபேர் நம்மை மெச்ச வேண்டுமென் றிச்சைகொண்டு, தன்னைத்தான்

மறந்து, ஆணவத்தாற் சிறந்து அகந்தை கொள்ளமாட்டார்கள். பரிசுத்தவான்களாகிய உத்தமர்கள் உலக காவலனாகிய அரசனையும், உபதேசஞ் செய்தருளிய குருவையும், வித்தியாப்பியாசம் பண்ணிய உபாத்தியாயரையும், முத்திபெறுதற்குப் பெற்றபிதாவையும், பத்தி செலுத்துந் தெய்வத்தையுந் தந்தையெனச் சிந்தித்து, தினமுமேத்தித் தொழுது வாழ்த்திப் போற்றுவார்கள். ஆதலால், நீங்களனைவரும் இவ்வகையான உலகவியற்கைகளை மனதுட் கொண்டு, விராடராஜனை யடுத்து, நாள்தோறுங் குற்றமற்ற ஏவற்றொழிலை முடித்து, அகந்தையற்ற மனத்தினராய்ப் பெருமை பொருந்தி இன்சொல் விளைத்து, அக்ஞாதவாசம் ஒருவருஷமுங் கழிப்பீர்களாகில், அது உங்களிடத்தி லுண்டாகிய நல்ல நினைப்புக்குத் துணைக்காரணமா யிருக்கும் என்று தௌமியாச்சாரியர் சொல்லவும், அப்போது பர்வதாகிர்தியாகக் குவிந்த தோளினையுடைய பாண்டவர்கள் ஜெயங்கொண்டதைப் பார்க்கிலும் மேலான விருப்பமுடையவர்களாய், பௌரோகிதருடைய மனமகிழ இதனைச் சொல்லலுற்றார்கள்: ஓ வேதியர் பெருமானே! காவலனிடத்தில் ஏவல்செய்யு முறைமைகளை எங்களுக்கின்று கற்பித்தருளினீர். ஓ குறைவற்ற தவராஜசிங்கமே! நீருரைத்த திவ்விய மொழிகளை வேதபாடங் கற்குஞ் சந்தைபோலுஞ் சிந்தையுட் கொண்டோம். இனிமேல் நாங்கள் மறைந்துறைந்து ஒருவருடந் தொலைக்கிறவரைக்குந் தேவரீர் தவவேடம் பூண்டு, மாதவர்கள் வாழும் வனமடைந்து மருவத்தக்க தன்றோ என்று செந்தாமரை போன்ற அவரது திருவடியைத் தொழுது போற்றி, இதுவரையிலும் பத்தியுடன் பூசை பண்ணிக்கொண்டு வந்த நித்தியாக்கினியை நெரியோடளித்தார்கள். அதனைத் தௌமியாச்சாரியார் அன்போடு கைப்பற்றிக்கொண்டு, பாண்டவர் தம்மைப் பட்சமாய் நேர்க்கி, அருண்மலர் முகத்தோடு ஆசீர்வதித்து, அவ்விடம் விட்டு அப்பாலெழுந்து, மாசற்ற மாதவர் வாழ்வனம் புகுந்து, தேசுற்ற தவத்தில் சீர்பெற்றிருந்தனர்.

### பாண்டவர்கள் வில்முதலிய படைகளை வன்னி விருக்ஷத்தருகில் பதனஞ் செய்து வைத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இப்பால் பாண்டவர்கள் தங்களுக்குந் திரௌபதா தேவிக்கும் பணிவிடை செய்துவந்த பாங்கர் பாங்கியர்களைப் பார்த்து, நாங்கள் ஒருவருடம் ஒளித்திருக்குங் காலம் நேரிட்டபடியால், அதுவரையிலும் நீங்கள் யாவரும் விசனப்படாமல், மான்கள் உலாவும் வனஞ் சூழ்ந்த பாஞ்சால தேசம் சேர்ந்திருங்கள் என்று அவர்களுக்கு ஆதரவு சொல்லி அனுப்பிவிட்டு, பெருமையிற் சிறந்த அப்பாண்டவர்கள் மகாலட்சுமிபோன்ற பாஞ்சாலியுடன் சிலதூரம் போகையில், தருமராஜன் தன் தம்பியர்களை நோக்கிச் சொல்லுகின்றார்: ஓ என்னருமைச் சகோதரர்களே! நாம் இந்த இராஜன் சார்பிற்சார்ந்து நமது தொழில்களை நடத்துநாளில் நமது கரத்திலிருக்கும் ஆயுதங்களை ஒருவருமறியாமல் ஒளித்துவைப்போமாகில், நம்மைச் சத்துருக்கள் முதலாகிய யாவருங் கண்டுகொள்ள மாட்டார்களென்றார். அச்சொல்லைக்கேட்ட அருச்சுனன் வணங்கி, அண்ணாவே! தேவரீர் சொன்னது நியாயந்தான் என்று வாய்விட்டேங்கி யிரைந்து, பெற்ற தாயைப் பிரியுங் கன்றுபோலேங்கிப் பதைபதைத்து, தனது வெற்றிகொண்ட காண்டீபத்தையும், அஸ்திர நிறைந்த அக்ஷயத்தூணியையும், சஸ்திரமாகிய மற்ற ஆயுதங்களையுங் கவ்சத்துடன் கழற்றிக் கொடுத்தான். மாருதி மைந்தனாகிய வீமசேனனும் வாரிதிபோற் பொங்கி, சேருதற்கரிய கோபங்கொண்டு, சிந்தை சோர்வடைந்து, துன்பந்தாங்கி நைந்து, மேகங்கள் வெளுக்கச் சிதைக்கும் வில்லையும், நாகங்கள் பதைக்க வதைக்குங் கதையையும், மோகமும் மானமுமுடைய படையையுஞ் சோபத்துடன் அயர்ந்து மனமுருகி வைத்தான். நகுலசகாதேவரென்னுந் தம்பியரிருவருந் தலைவனாகிய தருமராஜனுரை தவறாதவர்களாய் பல்லோருங் கவலைகொள்ளும் வில்லாயுதமும், வேலாயுதமும், வாளாயுதமும், தோமராயுதமும், சூலாயுதமும், கேடகமும், அம்பறாத்தூணியும் அவிழ்த்துக் கொடுத்தார்கள்.

இப்பால் ஒப்பில்லாச் சித்தசுத்தமுள்ள தருமராஜன் தன்னுடைய ஆயுதங்களையுங் கூடவைத்து மொத்தமாகச் சேர்த்து, இவைகளை யொருவரும் உணராதிருக்கு மிடந்தேடி வைக்கவேண்டுமென்று யோசித்து, செழுமையுடன் வளர்ந்து இருளுக் கிருப்பிடமாக வுயர்ந்து தழைத்து கவிந்திருந்த ஒரு வன்னி மரத் தோப்பின் வளப்பத்தைக் கண்டு, மகா

சந்தோஷங்கொண்டு, அதில் ஓர் மரப்பொந்தில் இவ்வாயுதங்களை வைத்து பகைவர் முதலாகிய பலருக்குந் தோன்றாமலிருக்கவேண்டுமென்று மான்தோலால் மறைத்து, அவைகளை மூடிக் கட்டும்படிக்கு வீமசேனனுக்கு உத்தரவு செய்து, அத்தரும சொரூபியாகிய தார்வேந்தன் தந்தையாகிய எமதருமராஜன் திருவடியைச்சிந்தித்து வந்தித்து, சுவாமி! எங்களுக்கு வெற்றியையும் வீரத்தையும் கொடாநின்ற ஆயுதங்கள் அனைத்தையும் இந்த வன்னி விருட்சத்தில் வைத்திருக்கின்றோம். இவைகளை நானே எடுக்கத்தக்கதேயன்றி; மற்ற யார் வந்து எடுத்தாலும் இம் மரத்தின் கிளையையடுத்தாலும் இவைகள் பெரும் பாம்புருவாய் ஆலாலவிடத்தைச் சுவாலை மாலிகையாய் வீசி வெகுண்டு மேல்விழக் கடவதுகள் என்று பேசிக் கட்டுரையாகிய உறுதி மொழியால் திடத்த வரத்தைப்பெற்று, அவ் வரத்தைப் பரிக்ஷிக்கவேண்டி வீமசேனனை அழைத்து, நாம் பத்திரப்படுத்திய படைகளைப் போய் பார் என்று உரைத்தார். அப்போதே வீமசேனன் போய் அந்த மரத்தின் கிளைமேற் சார்ந்து எட்டி யெடுக்கக் கிட்டியபோது, அவ்வாயுதங்கள் உடனே பெரும் பாம்புருவாகி, மட்டுமிதமற்ற கொடுவிடத்தைக் குபீரென்றுக்கி, அழலால் தகித்துத் துரத்துவதாகியது. அதனைக் கண்ட வீமன் பெருமூச்சுவிட்டு, பொறிபுலன் கலங்கி, புகல்சொலிப் புலம்பி, பொன்போன்ற முகந்திரிந்து இரைந்தகன்றனன். அச்செய்கையைக் கண்ட தருமராஜன் முதலிய யாவருந் துதிக்கைபெற்ற யானைபோல் துயர் நீங்கி மகிழ்ந்து, அவ்வன்னி மரத்துக்கு எதிரே யாவரும் சாமவேதத்தாற் றுதிசெய்யாநிற்க பஞ்சத்த கன்னியருள் ஒருத்தியாய்ச் சங்கு சக்ராதி படைகளோடு எழுந்தருளிய ஓர் மகா காளியின் திருவடி தொழுது, அவ்விடம்விட்டு நீங்கிச் சில தூரத்திற்கு அப்பாலிருக்குஞ் செந்தாமரைப் பொய்கையைச் சேர்ந்து ஸ்நானம் பண்ணி, நீர் துவட்டி நெடுமயிராற்றி, வேதவிதிப்பிரகாரம் மத்தியானக்கடன் முடித்து அவ்வவர்கள் தந்தையரின் பதத்துணையைச் சிரமேற்கொண்டு, அத் தந்தையர் வசிக்குந் திக்கு நோக்கித் தெண்டனிட்டு, ஓ தென்றிசைக் கடவுளாகிய எமதருமமூர்த்தியே! ஓ வடமேற் றிசைக் கடவுளாகிய வாயுபகவானே! ஓ கீழ்த்திசைத் தேவராகிய இந்திரமகாராஜனே! ஓ ஆகாயவாசிகளாகிய அஸ்வினிதேவர்களே! நீங்கள் நாங்கள் எடுக்கவேண்டிய வேடத்திற்குத் தகுந்த உபகரணப் பொருள்களெல்லாம் உதவி செய்து, சுஜாதிகப் பிரகாசமுந் தந்தருளவேண்டும் என்று வருந்திக் கேட்டுக்கொண்டார்கள். அவ்வாறே அத் தேவர்கள் தங்கள் தனையர்கட்கு அநுக்கிரகஞ் செய்து அருளினார்கள்.

## பாண்டவரும் பாஞ்சாலியும் வேற்றுருவமைத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் தருமபுத்திர மகாராஜன் ஒளிவிடுங் கிரண உதய சூரியன்போற் சதுர்வேத சம்பன்னனுருவாய்த் தழைத்தபின், குடுமியும், செழித்த முப்புரிநூலும், கவிந்த வெண்குடையும், தடித்த தண்டுகமண்டலமும், கையிற் பவுத்திரமும், கண்டவர் மதிக்கும் புண்டர நுதலும், கண்ணிற் கடாட்சவீட்சண்யமும், கரத்திற் செபமாலையும், கனிவுறும் வாக்கிற் பனிமொழியாசியும் பெற்று, முனிவரிற் சிறந்த முகவிலாசமுடையவராயினர். மற்போர் வல்லவனாகிய வீமனானவன் மடைத்தொழிலாள உருவமமைந்து, நுதற்கிசைந்த திலதவகையும், செவிக்கிசைந்த திருமணிநகையும், பாகசாஸ்திரப் பேச்சும், சந்தனபாளிதப்பூச்சும், தாழ்ந்த விருகர வீச்சும், சரிகை சால்வைப்போர்வையின் வேய்ச்சும் உடையவனாகி, சிருஷ்டி கர்த்தாவினாலுஞ் செய்தற்கரிய நூதன வேடங் கொண்டான். மண்ணுலகத்தாரும், விண்ணுலகத்தாரும் போற்றி விரும்பும் பவளமலைபோன்ற பரமசிவமும் அப் பவளமலைமேற் படர்ந்த பச்சைப் பசுங்கொடிப் பார்வதியாரும் ஆசைப்பெருக்கோடடுத்து முன்னின்று அருட் பார்வையளிக்க, தன்னிலைதவறா தவத்திலிருந்து, உன்னிய கருவிகள் ஒருங்குடன் பெற்று காட்சிகண்டருளிய காண்டீப அருச்சுனன், கண்ணுதல் தன்னுடன் கலந்து விளையாடிய தன் திருமேனி தழை பிரகாசத்தை நீக்கி வாசனை நெருங்கலர்க்குழலும், கலகலவென்று கலித்த கைவளையும், உடலை மறைக்கும் ஆயாரைச் சட்டையும், கருநிறக் குவளை கடுத்த கண்களும், உடுக்கைக்கிணையாயுற்ற சிற்றிடையும், உயர்ந்த சரிகை யோங்கு பட்டுடையும், உலவுஞ் சொகுசாகிய பிடிநடையும், செந்தூரப்பொட்டணி செவ்விய நுதலும், தாளமுங் கோலுஞ் சதங்கையுமுடையனாய், பேடியரில் உயர்ந்த பேருருவமைந்

தருமநந்தர் கங்கபட்டரென்னும் அந்தண சிரேஷ்டராய் விராடனுக்கு ஆசாரியத் தன்மை பூண்டிருத்தல்.

வீமன் கீசகனுடலைப் பேய்ப்பதிபோல் சிங்காரித்து திரௌபதிக்குக் காட்டுதல்.

தான். பின்னவர் இருவரில் முன்னவனாகிய நகுலராஜனானவன் தலைப்புறத்தும் காதின் புறத்துஞ் சுருள் செய்து கத்தரித்துவிட்ட மயிர்க்குச்சும், வன்னப்பிச்சமும், முறுக்கு மீசையும், கனகமயச் சுருணை கலந்து கட்டிய வண்டிற்பாகையும், நெற்றியிற் கோபியும், கஞ்சுகக் கவசமும், கலகல வென்னும் குதிரைச் சம்மட்டியும், கதிநடை பழக்கும் கயிறுங்கொண்டு, குதிரைகளினுடைய குணம்-குற்றம்-கோணம்-வட்டம்-வளைவு-மாறல்-பிணி தீர்க்கும்விதம்-அவுஷதம் இவைகள் அனைத்தும் உணர்ந்த குதிரைப் பாகனைப்போல் குறைவில்லா வடிவெடுத்தான். மகா விற்பன விவேக சகாதேவனானவன் சிரசில் நிறைந்து பரந்த கொண்டையும், வளர்ந்த தாடியும், இளர்ந்த மீசையும், செம்மண் வெண்மண் திலகக் காப்பும், கருங்கம்பளமும், கச்சப்பையும், கயிறுங் கோலும், கன்றின் வாய்ப்பூட்டும், காதணி குழையும், தாதுகுதலையும், கந்தை வேஷ்டியும், பெருங்குரல் தாஷ்டியுமுடையவனாய், பலகோடி பசுக்களைப் பாதுகாக்கும் கோபாலனைப்போல் வடிவமானான். வேலாயுதம்போன்ற கண்ணினளாகிய பாஞ்சாலி தலைசீவி வகிர்ந்து, கூந்தல்விட்டு முடிந்து, நெற்றிக்குச் சுட்டிகட்டி, நீலவிழிக்கு மைதீட்டி, இரத்தினப் பணிகள் பூட்டி, வாசனைப்பொடி கூட்டி, அண்ணல் முதலிய ஐவருங் களிக்க, வண்ணமகளுருவாமெனச் சமைந்தாள்.

### தருமராஜன் கங்கபட்டரென்னும் அந்தண சிரேஷ்டராய் விராடனுக்கு ஆசாரியத் தன்மை பூண்டிருத்தல்

கேட்டிரோ ஜெனமேஜெயமகாராஜனே! இவ்வாறு இவர்கள் அறுவரும் தாங்கள் நிச்சயித்துக்கொண்ட வண்ணம் வெவ்வேறு வேடந் தாங்கி, ஒருவரை யொருவர் பார்த்து உற்சாகமடைந்து, மச்சராஜனிடத்திலொருவருடம் வாழலாமென்று இச்சை மேற்கொண்டு, அச்சமில்லாதவர்களாய் இருந்தார்கள். அப்போது மறுவகன்ற தருமராஜன் மனமகிழ்ந்து, பலவித வுபாய வள்பமும் பேசி, ஓ திறமுடையவர்களே! ஊன் நாறும் வேலோங்கிய விராடனிடத்தில் நான் போய்ச் சேர்ந்த பிற்பாடு, நீங்கள் அனைவரும் முறையாகத் தனித்தனி வந்து சேருங்கள். நான் அவ்விடத்தில் இருப்பதால் என்னை நோக்கி வணங்கி இணங்கி போற்றுதற் கெளிதாயிருக்கும் என்று விளம்பிக் கிளம்பிய அறக் கடமை நீங்காத அண்ணல் தன் தம்பிமாரும் பாஞ்சாலியும் வாழ்த்திப் பரதவித்து வர, தேவர் முதலிய யாவருங் கொண்டாட, மாதவ வேதியர் வடிவங் கொண்டதற் கேற்பக் கங்கபட்டர் என்னுந் திருநாமமும், இளஞ்சூரியன் போற் பிரகாசமும், பாற்கடலை போல் முப்புரி நூலும், பரந்த மார்போடு உயர்ந்த தோளும், வெகு உலாச முகவிலாச மந்தஹாச சுகந்தவாச மாலையு முடையவராய், விகட தடகரடகட வாரணம் போற் சென்று மராட-கர்நாட-கன்னட-கிராட-மலைநாடர் முதலியோர் வந்திறைஞ்சு மணிக்கதவமைந்த வாசலிற் போய் நின்று, வெண்குடை நிழலில் நன்குடன் பொருந்திய விராடராஜனுக் கறிவிக்கச் சொன்னார். அவ்விடத்திற் காவலிருந்த தூதுவர் உடனே சென்று, அரசனிடத்திற் றங்கள் வாய்மூடிக் கைகட்டி, சுவாமி பராக்! யாரோ ஒரு பெரியவர் நமது கொலுமுக வாசலில் வந்திருக்கின்றார் என்றார்கள். அவர்கள் பேச்சைக் கேட்ட மச்சராஜன் உடனே எதிரோடிச் சென்று, ஐம்புலன் ஒடுங்கப் பணிந்து, முகமலர்ந்து, அகங்களித்து, கரம் இரண்டுங் குவித்துச் சிரத்திற் பொருந்தி, கருத்தில் துதித்துச் சேவித்து நின்றான்.

உடனே கங்கபட்டர் மங்களானிபவந்து என்று உபசாரஞ் சொல்லி, இடது கையை வலது கையுடன் எடுத்து இருக்குவேத சாகையினால் ஆசீர்வசன முரைத்தருளினார். அந்த விராடன் சபையிலிருந்த யாவரும் வந்த வேதியர் பெருமானைக் கண்டு, விந்தையென் றுட்கொண்டு தொழுதார்கள். அந்த வேளையிற் சந்திரவிம்ப பிரமதேஜசு சொலித்து மகா சோபியாயிருந்த கங்கபட்டரால் மங்களாசனம் பெற்ற மகாராஜன் அவ்வரை இச்சை மேலான பட்சத்துடன் அழைத்துப் போய், வைதீகர்களிருக்க வமைத்த ஆசனத்தில் எழுந்தருளப் பண்ணி அவருடைய திருவடிக்கு அருக்கியம்-பாத்தியம் - ஆசமன்னியம் - அபிஷேகம்-வஸ்திரம்-புஷ்பம் - அரிச்சந்தனம்-அக்ஷதை - தூபம் - தீபம் - நைவேத்தியம் இவை முதலிய உபசாரங்கள் யாவும் புரிந்து பக்தி செலுத்திப் பரிந்தேத்திப் போற்றி, வாய்பொத்தி நின்று, சுவாமி! தேவரீர் யார்? எவ்விட மிருப்பது? இவ்விடத்திற்கு எழுந்தருளிய காரணம் யாது? தங்களுடைய நாமதேயம் என்ன என்று கேட்டான். அதற்குக்

கங்கபட்டர் சொல்லுகின்றார்: ஓ அதிதீவிர பக்குவமுள்ள அரசனே! இந்தச்சக்கரவாளஞ் சூழ்ந்த பூமியை ஆக்கிஞச்சக்கரஞ் செலுத்தியாஞந் தருமராஜருடன் பழகி யிருந்தேன்; அவர் வனவாசம் பண்ணிய நாளையிலுங் கனநேசம் பண்ணிக் கலந்து திரிந்தேன்; என்னை விட்டு ஒரு வருடம் பிரிந்திருக்க வேண்டி வந்ததால், நான் உம்மிடத்திற் சிலநாள் ஒழிக்கலாம் என்று வந்தேன் என்று வேள்வியினுலுங் கேள்வியினுலும் மிக்கோனுகிய தக்கோனுரைக்க, மனுநீதி தவருத மச்சராஜன் கேட்டு,மதியால்மகிழ்ந்து, துதியாற்புகழ்ந்து, பரவசமடைந்து தெளிவாகிய அறிவும், அன்பும், ஆசையும், உள்ளக் களிப்பும் ஒளிகொண்டிலங்க, ஓ என் ஆண்டவனே! தேவரீர் இந்தப் பட்டணத்திற்கு எழுந்தருளிய பிரயோசனமானது நான் ஏழேழு பிறப்பிலுந் தேடிக்கொண்ட நான் நல்வினையின் நலமேயல்லது, வேறில்லை. ஆதலால், நாதகீதவேத முனிவராகிய தேவரீர், இவ்விடத்தில் எத்தனை நாளைக்கிருக்க இஷ்டமோ அத்தனை நாளும் அதிபதியா யிருக்கலாம் என்று வித்தக விராடன் புத்திமேற் கொண்டு சொல்லவும், கங்கபட்டரானவர் அவ்வாறே புனிதமாகிய சிங்காசனத்திருந்து, வேதியர் முதலிய பல மாதவரும் விராடர் முதலிய பல பூதரருந்தொழ, பவளச்செபமாலை கரத்திலுங் குவளைத்தொடைமாலை உரத்திலுந் தரித்த தருமராஜன் இருந்தருளினர்.

### வீமார்ச்சுனுள் பலாயனனும் பிரகனளையுமாய் அட்டிற்றெழிலும் அருநடச் செயலுமேற் றிருத்தல்

பின்னுஞ் சில நாள் சென்றபிற்பாடு விற்போருக்கும் மற்போருக்கும் இவன்தான் என்னும் பலம் பொருந்திய கதாபாணியாகிய வீமனுனவன் தான் தெளிந்த தேவாமிர்தத்திற் கொப்பாகச் சமையற் செய்யும் பக்குவத்தைக் குறித்தும், கல்வியின் திடத்தைக் குறித்துந் தெரிவிக்க, ஏகபோகத்திற் கொருவனுகிய விராடன் சபைக்குட் புகுந்து, நாகரத்தினம் போல் நலம் பெற்றிருந்த தருமராஜன் திருவடியில் தண்டனிட்டு, இம்மண்டலத்தரசே! யான் மடைத்தொழிலுக் குரியவன். கூட்டுக்கறி-குழம்புக்கறி-குழைக்கறி - பொறிக்கறி-பச்சடி-கிச்சடி இவை முதலிய பலவகைக் கறிகளும், உண்டல் - தின்றல்- நக்கல்-பருகல் என்னும் இன்னுன் குணவுகளையும், அவ்வவற்றிற்குரிய அறுசுவை நிறைவோடு அமைவுறச் சமைப்பேன். ஒரு சமயத்தில் மல்லு கொடுப்பேன். ஒரு சமயத்தில் வில்லு மெடுப்பேன். அல்லும் பகலும் நல்லவனுய் நடப்பேன். பலாயனன் என்னும் பெயர் பெற்றேன். திரிபுவனத்தில் தேடிப் பார்க்கிலும் என் தொழிற்கிணைசொல்ல எத்தொழிலுமிராது. எனக்கு ஈடானவர் எவருமில்லை. சமய பேதத்தால் தருமராஜனுக்கிளைய வீமனென்பவனை விட்டு உம்மிடத்தில் ஒருவருடம் இருக்கும்படியாய் உன்னி வந்தேனென்றான். இவ்வாறியம்பிய பலாயனன்பேரில் இஷ்டங்கொண்டு முகமலர்ந்த விராடராஜன் அவன் தலைமேற் கை வைத்து, பொன்னுரமும், பூவாரமும், இரத்தினுபரணமும்,முத்தாரமும்,வச்சிரவாகுவலயமும், மரகதம்தாணியும், மெல்லிய வஸ்திரங்களும், யானை-குதிரை-பல்லக்கு முதலிய வாகனங்களும் பெருமையாகக் கொடுத்து, ஓ சுயம்பாகி! அரசனிடத்தி லிருக்கின்ற உத்தியோகங்களிற் சிறந்தது தாய்போல் ஊட்டிவைக்கும் சுயம்பாகித் தொழில். ஆதலினுல், நீ இன்று முதல் எனக்கும் என் சுற்றத்தாருக்கும் இனிமையுடன் உண்பிக்கும் உரிமையும், இங்குள்ள மடைத்தொழிலாளர் அனைவருக்கும் தலைமையாம் அதிகாரமும் உனக்குக் கொடுத்தோம். இந்த வேலையை உன் சொந்த வேலையாகப் பார்த்து, சிந்தை வேறுபடா திருக்கவேண்டும் என்று சொல்லி யனுப்பி, விந்தை தங்கும் புயத்தோனுகிய அவ்விராடன் மிகக் களித்திருந்தான்.

இப்படி வாயுபுத்திரன் சேர்ந்து மடைத்தொழிலில் தலைமைபூண்டிருக்க, மறுநாட் காலையில் அறிவா லுயர்ந்த பிரகனளை யென்னும் பேடியரனவன் வட்டவெண் குடையும் மணிமகுடந் தரித்த மச்சராஜன் இருந்த உச்சித சபையானது சிறக்கும்படி சென்று, முப்புரிநூல் விப்பிரரான கங்கபட்டரென்னும் முதல்வன் பாதத்தில் ஒருக்களித்து வணங்கி, ஐயா! எண்டிசை கொண்டாடும் காண்டீபதரனுன அருச்சுனனுடைய அரண்மனையில் இருக்கும் பேடியர் அநேகரில் நான் ஒருபேடி. நாதப் பிரமம்-சத்தப் பிரமம் - ஒலி ஒத்து- தாளம்-மேளம் இவை முதலிய யாவையுங் கலந்து, சுரம் - சுதி - லயை இவை குறையாமற் பாடவும் ஆடவும், நடன சாஸ்திரப் பிரசங்கஞ் செய்யுஞ் சபைக்கு யோக்கியமாகப் பேதைப் பருவப் பெண்களுக்குப் பாட

தங் கற்பிக்கவுங் கற்றிருக்கின்றேன். பிரகநனே யென்னும் பெயரினையுடையேன். உனது செல்வமா நகரிலிருந்து சிலநாள் கழிக்கும் பொருட்டு அடைந்தேன். என்னை நீர் ஆதரிப்பீர்களாகில், வேதமும் வேள்வியுமுள்ள மேதினியில் உம்முடைய மரபு விருத்தியாம் என்று பேடி வாழ்த்தவும், அவள் வாழ்த்தியதைச் சாஸ்திர முணர்ந்த விராடராஜன் கேட்டு, இத்தன்மையான பேடி இக்கடல் சூழ்ந்த காசினியிற் கிடைப்பது அருமை யென்று பெருமையாகப் பேசி, அளவற்ற பொன்னுடைகள், பொற்பூஷணங்கள், பரத நாட்டியத் தொழிற்குரிய பலவகைக் கருவிகள் சங்கீத சாஹித்தியத்திற்குரிய பற்பல வாத்தியங்கள் இன்னுமுண்டான வரிசை முதலிய வண்மைகளுங் கொடுத்து, இன்னும் உனக்கு வேண்டுவனவெல்லாந் தருவேன். என் பெண்ணுக்கு உயிர்ப்பாங்கிபோற் கண்ணுக்குக் கண்ணுமிருந்து, பரதசாஸ்திர முற்றிலும் பயிற்றுவிப்பாயென்று உத்தர குமாரத்தி யிருக்கிற அந்தப்புரத்திற்கு அனுப்புவித்தான்.

### நகுல் சகாதேவர் தாமக்கிரந்தியும் தந்திரபாலனுமாய்க் குதிரைகளையும் பசுக்களையும் பாதுகாத்து வருதல்

பின்னுஞ் சிலநாள் சென்ற பின்பு அழகில் மன்மதனையும் அறிவிற் சுக்கிரனையும் பழிக்கச் செழித்த நகுலராஜன் போய், விராடனுடைய குதிரைச்சாலைக் கெதிராக நின்றான். அன்று சாயங்கால வேளையில் மின்னலொங்கிய வேல்தாங்கிய விராடராஜன் வன்னக் குதிரையேறி வையாளி விட்டு வரும்பொழுது நகுலன் கடிவாளமும், கம்பியும், கயிறும், கிலுகிலுக்கும், கட்டையும், ஜாட்டியும் பிடித்து, பார்த்தபேரெல்லாம் அஸ்வசாஸ்திரந் தெரிந்த மூர்த்தண்ணியனென்று மதிக்கும்படியாய் இருக்கவும் அப்பரிவல்லவனை விராடராஜன் இச்சை மேற்கொண்டு உற்சாகப் பார்வையாகப் பார்த்துக் கையை நீட்டி, ஓ குதிரைச் சம்மட்டி கொண்டு நிற்கின்ற குதிரைப் பாகனே! நீ எங்கிருந்து வருகிறாய்? உன் பெயரென்ன என்று கேட்டான். இவ்விதங்கேட்ட அவ்வாருட வரசனைக் குதிரைச் சேவகஞ் செய்யும் வேஷங்கொண்ட கோமானுனவன் குறுகி, தன் தொழிலுக்குத் தகுந்த மரியாதைசெய்து, அரசனே! பாண்டவரைவரில் நடுப்பிறந்தோனாகிய விஜயனுக் கிளையவன் நகுலனென்று பலதிசையிலுமொழிய வெற்றி பெற்றவ னொருவனுள னன்றோ? அவனது கீர்த்தியைச் சொல்ல வல்லவருமுண்டோ? அந்த நகுலராஜனுடைய குதிரைச் சாலைகளுக்கு தலைவர்களில் ஏழ்மையாகத் தாழ்ந்து வாழ்ந்தவன். தாமக்கிரந்தி யென்னும் நாமம் புனைந்தவன். யானோ? இமையவரும் இவுளியும், இராஜர்களேறுங் குதிரையும் இது விதுவென் றறிந்து, அவற்றின் மனமும் - வடிவமும்-சுழியும்-சுத்தமும்-நிறமும்-திறமும்-திடமும்-குணமும்-மணமும்-குலமும்-குரலும்-வேகமும்-கதியும்-தேசமும் - வீரமும் - ரோஷமும் - மறுவும் - பிறவுமுள்ள மார்க்கமு மறிவேன். அவ்வக் குதிரைகளுக்குள்ள தீராப் பிணிகளுந் தீர்ப்பேன். மேலுமவற்றை மண்டலம்-கோணம்-வளைவு-முன்னோட்டம் - பின்னோட்டம்-நேரோட்டம் இவை முதலியவைகளின் வண்ணமோட்டுவேன். அவற்றை நரி-கரி-அரி-கிரி-வேங்கை இவற்றி னடைபெறவுங் காட்டுவேன். தேருக்குப் பூட்டுங் குதிரையும், போருக்குமூட்டும் புரவியும், பட்டாபிஷேகப் பரிகளும், பார்வேட்டையாடு மரிகளும், கலியாணவாசியும், கடவுண்மகத் தூசவும் இதுவிதுவென் றறிந்து, அவ்வவற்றின் வாயுவேக மனோவேக சரவேக சர்ப்பவேக முதலியவை தெரிந்து வகுப்பேன். ஓ சத்துவகுண சாந்தனே! அண்டிணோரையாதரிக்கும் பாண்டு மைந்த ரைவரும் வனவாசம் பண்ணப்போன பின்பு, உண்டியு மிழந்தேன். உறுதியு மழிந்தேன். உமது கீர்த்தியைக் கேட்டு இவ்விடம் வந்தேன். என்னை யாதரித்தருளும் உத்தமனே யென்றான்.

அந்தப் புரவித் தலைவனது பொய்யா மொழியைக் கேட்டமாத்திரத்தில், துன்னி நெருங்கிய மன்னவரியார்க்கும், பொன்னுலகோர்க்கும், பூவுலகோர்க்கும், புனிதஞானியர்க்கும், பூசுரர்க்கும், விசுவாச நேச மெய்யறிவோர்க்கும், உற்ற கவலையை யொருங்குடன் தீர்க்கும் வித்தக விராடன் மெய்ப்புளகிதனாய், மந்திரிமார்கள் மகிழ்ந்து கொண்டாட, செந்திரு கலைமகள் சேர்ந்து நின்றாட, பொன்னின் குடநிறைந்த தன் பொற்கோபுர வாசலில் வந்திறங்கி, முன்னந் தன்னைவந் தடுத்திருக்குஞ் சத்தியநெறிபெற்ற தருமராஜன் முதலியவருக்குக் கொடுத்த வெகுமானத்திலும் மூன்றுபங்கு அதிகமாகக் கொடுத்துச் சன்மானஞ் செய்து, தன்னுடைய குதிரை வல்லவருக் கெல்லாந் தலைவனென்று முதன்மையுங்

கொடுத்தான். இவ்வாறு அஸ்வங்களை அபிவிர்த்தியாக அளிக்கும்படிக் கமைந்த நகுலராஜனுக் கிளைய சகாதேவராஜன் பின்பொருநாள் நந்தகோபன் மைந்தன்போல் வேடங்கொண்டு, அசைந்தாடிய செவிகளுக்கிசையச் சூடிய பச்சிலையுடன், புள்ளாங்குழலிசைபாடுந் தடியும், தொறட்டுக்கோலும், கன்றணைக்குங் கயிறும், மாடுகட்டுந் தும்பும், சிக்கக்கச்சமுந் தோள்மேற் கொண்டடைந்து, கீர்த்தி தழைத்த விராடராஜன் சபையைக் கிட்டினான். அவனைக் கண்ட அரசன், ஓ கருங்கம்பளப் போர்வையுடைய கனவானே! நீ யாரென்று கேட்டான். அப்போது தருமராஜனுடன் சமமாயிருந்த விராடராஜனை பணியாமற் பணிந்து, ஓ மகாராஜனே! துரியோதனனுடன் சொக்கட்டாடி இக்கட்டடைந்து நாட்டை விடுத்துக் காட்டையடுத்து வனவாசம் பண்ணிய பாண்டவர்களில், நான் இளஞ்சிங்கமாகிய சகாதேவ ராஜனுடைய பசுக்களைப் பார்த்து மேய்த்துக் காத்துவந்த கோபாலனையா! என் பெயர் தந்திரபாலனென்றான். அவன் சொல்லைக்கேட்ட விராடராஜன் மகிழ்ந்து, அவனைத் தன்னருகிலழைத்து வேண்டிய வெகுமானங் கொடுத்து, நமது பசுமந்தைகளை உன் சொந்தம்போற் காப்பாற்றிக்கொண் டிருவென்று அனுப்பிவிட்டுச் சந்தோஷ முற்றிருந்தான்.

### திரௌபதாதேவி விரதசாரணியாய் விராடன் மனைவியை யடுத்தல்

இப்பால் ஓமாக்கினியில் உற்பவித்த திரௌபதாதேவி வண்ணப்பெண் வடிவாகி வந்து, மருமலர் மாலை வர்சமேயிய திருமலர் வேலைத் தேசம் வீறிய மச்சராஜனது தோளணைந்த சுதர்க்கணை வாழும் அந்தப்புரத்தை நாடி, அவ்விடத்திற் காவலிருக்கும் பாங்கியரை நோக்கி, யாரோ வொருத்தி வந்திருக்கின்றாளென்று உங்கள் அரசிக்குச் சொல்லுங்களென்றாள். அவர்கள் அவ்வாறே சென்று தங்கள் அரசியை வணங்கி, எங்களையாளும் அம்மணி! தேன்நிறைந்த செந்தாமரை மலரிற் பிறந்த செந்திருவுந் தாழுதற்குரியாளாகிய ஓர் பெண்பெருமாள், இடையசைய விசையாய் நடந்து, நமது தலைவாசலைக் கடந்துவந்து இருக்கின்றாள். தாயே பங்கஜாக்ஷி! தேவரீர் கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கின்றோம் என்று உபசரித்தார்கள். அந்த பாங்கியர் உரைத்ததைக் கேட்ட பாரமார்த்தியமுள்ள சுதர்க்கணை மிகுந்த பட்சமுள்ளவளாய் தட்சணமே அழைக்கச் சொன்னாள். அந்நேரமே சேடியர் கூடி, பாடிடு குயில்போலோடி, வாடிய மயில்போல் வாசலில் நின்ற மங்கையை நாடி, ஓ நூதனமான மாதனமே! வாரும் வாரும் என்று அன்போடு அழைத்தார்கள். அவ்விடம் இருந்த வண்ணப்பெண்ணானவள் மகா பாக்கியமென்று வந்தாள். அம்மாதின் துடியிடைப்பிடி நடை சுந்தரத்தைக் கண்ட சுதர்க்கணையானவள் திடீரென்று எழுந்து, செழுமுகமலர்ந்து, கைகொடுத்தணைத்து, பக்கத்திலிருத்தி குங்கும சந்தன கதம்ப தாம்பூல மஞ்சளாதிகளோடு சுகுண நிறைந்த புஷ்ப வஸ்திராபரணங்களாற் பூசித்து, அன்னையே! உமது தேசவாசம் யாது? எதுகாரணம் இவ்வளவுதூரம் எழுந்தருளியது. தமது பெயர் என்ன? அடியாள் அறியச்சொல்லு மென்று நயமாகக் கேட்டாள். அப்படிக்கேட்ட சுதர்க்கணைக்கு உபசார வார்த்தைசொல்லி, ஓ அருட்கண்ணிறைந்த ஆரணங்கே! பாண்டு பூபதியின் குமாரராகிய பஞ்சவர் இந்திரப்பிரஸ்த முதலிய எல்லாவற்றையும் சகுனியாடிய சூதால் தோற்று, காடே வீடாகவும், பட்சிமிருகங்களே பந்துவாகவும் பன்னிரண்டு வருடம் வனவாசம்பண்ண, அவர்கள் மருவிய பான்விருமடந்தையுங் கூடச்செல்ல, நான் அவளைப்பிரியாதிருந்தேன். இப்போதவர்கள் ஒரு வருஷம் அக்ஞாதவாசஞ் செய்யவேண்டி மறைய நான் பிரியலானேன். என்பேர் விரதசாரணி. சந்தனாதி கந்த கதம்பம் பூசுவதிலும், சேலைமாலை சேர்த்து கட்டுவதிலும், பூஷணாபரணங்கள் பூட்டுவதிலும், கூந்தல் வகிர்ந்து முடித்துப் பின்னுவதிலும், மார்புக்குத் தொய்யில் எழுதி அலங்கரிப்பதிலும், விழிகளுக்கு மைத்தீட்டுவதிலும், மிக வல்லவளாய் யாவராலும் புகழ் பெற்றேன். உமக்கு இச்சையான படி அழகுண்டாக்கி மனமகிழச் செய்யவேண்டுமென்றெண்ணி வந்தேன். ஓ பெண்கள் சிந்தாமணியே! இன்னமொரு காரியமியம்பக் கேளும்: யான் என் தாய்வீட்டிற் சஞ்சரித்துலாவுங் கன்னிப் பருவத்தில், ஜெய விஜய ஜயந்த ஜனசேன ஜயற்பாலரென்னும் ஐந்து காந்தருவரின் காவலிலடங்கிக் கற்புடையவளாயினேன். ஆதலால், என்னை மற்றமனிதர்கள் நோக்கப்படாது. நானும் மற்ற மனிதர் வதனநோக்கி மகிழவு மாட்டேன். நீர் மாதவமுடைய மதியூகி யென்று உமது மாளிகைநோக்கி வந்தேனென்றாள்.

இவ்வாறு கூறிய வண்ணப்பெண் வசனத்தைக் கேட்ட சுதர்க்கணை திடுக்கிட்டுப் பயந்து, திடத்துடனயர்ந்து, மகிழ்ச்சியாய் விரும்பி, புகழ்ச்சியாய்த் திரும்பி, ஓ பூதேவி போன்ற சீதேவியே! தெய்வப்பெண்போல் வந்த உம்மைச் செவ்வையாகப் பார்த்துச் சிந்தை மகிழ்ந்தேன். இன்றுமுதல் நீர் என்னிரு கண்ணாகவும், எங்களோடு ஒப்பாகவும், வண்ணப் பெண்ணாகவும் என்னுடனுமு யிருமுமது காவலாய்க் காத்து, உற்றதாகிய நீர் பெற்ற தாயெனப்பார்த்து, புகழ்படவாழ்ந்து, நன்மொழி புகன்று, நலம்பெற நடத்துவது உமது கடன். அன்றியும், எனக்கு யாதொரு குறைவு நேராதபடி இரட்சித்தருளும் என்னம்மணி யென்று உபசரித்தாள். இவ்வாறுபசரித்த பூரண புத்திசாலியான சுதர்க்கணையைப் பாஞ்சாலி பார்த்து, அம்மா! அப்படியே யாகட்டும் என்று சொல்லி ஏற்மெதந்த வேலைக் கெப்படி செய்யவேண்டியதோ அந்தந்த வேலைக்கான அலங்கார நன்மைகளை வெறுப்பில்லாமல் விருப்பத்துடன் விதவிதமாகச் செய்து, நாளுக்கு நாள் அதிக விசுவாச முண்டாகும்படி நடந்துகொண்டாள். இந்தப் பிரகாரம் மைதீட்டிய வாள்போல் நீட்டிக் காட்டுங் கருங்கண்ணமைந்த திரௌபதாதேவியுஞ் சந்திரகுல மைந்தராகிய பாண்டவர்களும் உருவமறைந்து, இராஜ சின்னங்கள் யாவையுந் துறந்து, உல்லாசப் பேச்சுரைகள் மறந்து, அஞ்ஞாதவாசத் தொருவருடமுங் கழிக்கச் சிறந்து வரு நாளையில் மெய்ப்பயிர் விளைத்துப் பொய்க்களை களைந்து, தீவினை தீர்த்து நல்வினை சேர்ந்து, இராச்சிய பரிபாலனஞ் செய்து வராநின்ற விராட ராஜனுடைய மச்சநாடானது, நித்திய ஜெயமங்களப் பெருஞ்செல்வமும், மாதமும்மாரியும், நன்செய் புன்செய்களும், விஞ்சு விருத்தியாகி, இரதகஜ துரக பதாதிகளும் மிஞ்சி, நானகு வருணத்தவருங் குலாவிக் கொஞ்சி, குருநாட்டுக்கொப்பாய்க் குறைவற வோங்கி, பூவாதமரமும் பூத்து, காயாதமரமுங் காய்த்து, பசுப்பாக்கியம் புறப்பாக்கிய மிகுத்து, சுபசோபனங்களுடன் சந்தோஷ சப்பிரமங்கள் நிரம்பி ஆனந்தத்துடன் வசிக்கின்றூர்கள்.

பாண்டவர் கரந்துறை சருக்கம்

முற்றிற்று.

இரண்டாவது,

## மற்போர்ச் சருக்கம்.

### கண்ணன் துதி

புவிதனைப் பாயலாய்ச் சுருட்டிப்போய்ப் பாதலத்திற் புகுந்தபொற்க ணவுணனுயிர் குடிமைப்பி னப்புவியை முன்போலுண் டாக்குமாறு, நவமுறுமொண் பிறைக்கோட்டுப் பன்றியுருக் கொண்டருளி நகர்போற்றப், பவமகற்றி யாட்கொண்டு பாம்பணைமேற் றுயில்கூரும் பரமனெங்கோவே.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! நித்திய கவியாண சுபசோப வைபவ நீங்காச் செல்வச்சிறப் போங்கிய விராட புரத்திற் பாஞ்சாலியும் பாண்டவர்களும் போகபாக்கிய புனிதவினிமையிற் பூரணசந்திரன்போற் பிரகாசித்து, தாங்களிருவருங் களங்க ரகிதராய்க் கலந்து, கூடுங்கால மறிந்து கூடி பேசுங்கால மறிந்து பேசி, ஒருவர் கண்ணிற்படாமல் திரிந்து, ஒருவரையொருவர் பிரிந்துறுமற் பொருந்தித் தாழ்வற வாழும்நாளையில் மச்சராஜனு மற்றையரும் யானை-புலி-கரடி-சிங்கம்-காட்டெருமை-கலைமான் முதலிய மிருகங்களுடன் மல்லரைச் சண்டைக்கு விட்டு, விதவித வேடிக்கை இச்சையின்படி விளைத்து மகிழ்வுற்றிருந்தார்கள். அப்போப்பட்ட சமயத்தில் வேலாயுதத்திற்கு பாலசுப்பிரமணிய னென்றும், சூலாயுதத்திற்கு ஏமதருமராஜனென்றும், வில்லுக்கு இராமனென்றும், சொல்லுக்கு அகத்தியனென்றும், மல்லுக்கு நானே மகாதேவனென்றும், தேசந்திரிந்து சீருற்ற வாசவனென்னும் பேருற்ற மல்லனொருவன் கொலுமுக வாசலில் வந்தான். அவன் எப்போப்பட்டவனென்றால், அண்டமுகட்டை யளாவிய மெய்யான். திசைமட்டு மேந்திய கையான். வாகுவலயம் வளைந்த தோளான். வீரகண்டை புனைந்த தாளான். வாடைக்காற்றை மறிக்கும் வலத்தான். ஓடைக்களிற்றை யொடிக்கும்பலத்தான். சிவந்த மயிர்விரிந்த தலையான். தீரபராக்கிரம புய மலையான். இப்படிப்பட்டவன் தன்னைப் புடைசூழ்ந்த நிழல்போல் ஆயிர மல்லர்களொடுத்து வரும்படி சப்தமாய் பூட்டிய ஒற்றையாழித் தேரினையுடைய சூரியன்போல உன்னதத் தேரேறி, விருது-டால்-கொடி-குடை-ஜெயபேரி-டங்கா-பாங்கா-கொம்பு-தாரை-பூரி-வீர

சின்னம்-எக்காளம் இவைமுதலிய பல சின்னங்களும் வாத்தியங்களும் விளங்கிப் பிரகாசிக்க, கடல்சூழ்ந்த உலகத்தில் இவனுடன் சண்டை செய்யத் தக்கவர்கள் யாருமில்லையென்று கட்டியக்காரர் எச்சரிக்கை சொல்ல, பட்டுவான்கள் கொண்டாடிக் கொக்கரிக்க, நவமணிப் பணி மகுடஞ்சொலிக்க, நாகரத்தினத் தனிப்பட்டய மிலங்க, நவமோகன மன்மதனிவனென்ன புவனேசுரர் புந்தியில் மிகவுன்ன, இராஜசிங்காசனத்திற் கொலுக்கொண்டிருந்த விராட பூபதியின் சமுகத்திற்கு வந்தான். இவ்வித படாடம்பத்துடன் வந்த வாசவனென்னும் அம்மல்லன் தேசபூஜிதராஜனைப் பணிந்து, ஓ மகாராஜசிங்கமே! எழுகடல் வளைந்த வட்டாரத்தில் என்னுடனெதிர்த்து மல்யுத்தம் பண்ணத்தக்கவரில்லை. நான் அநேகம் பட்டினங்களில் திரிந்து இராஜராஜர்களைக் கண்டு, என் சமர்த்தைக் காட்டிப் பொன் பூஷணவாகனாதி வரிசைகள் பெற்றிருக்கின்றேன். இவ்விடத்தில் உமது மகா சபையை நோக்கி வந்தேன். என் வல்லமையைச் சொல்லுந் தரமல்லவென்றுரைத்தான். அந்த மல்யுத்தத் தொழில்முறை தெரிந்த விராடராஜன் வந்த மல்லன் கூறிய வார்த்தையைக் கேட்டு, தன் சபையிலிருந்த ஆஸ்தான மல்லர்களை நோக்கி உதட்டைப் பிதுக்கி தலையை யசைத்து, புதிதாக வந்த மல்லனுக்குக் கொடுக்கத்தக்க பரிசுகள் கொடுத்து, நமது சபையில் நிர்வாகமுள்ள மல்லர்கள் இல்லையல்லவா வென்று வாய்விட்டுச் சொல்லமாட்டாமல் மனம் புழுங்கி இருந்தான்.

### வெளியூர் மல்லனுக்கும், விராடனூர் மல்லருக்கும் யுத்தம்

அந்தச் சமயத்தில் விராடனுடைய சொந்த மல்லர்களுக்கு மனம்பொறுமற் கோபாவேசங் கொண்டு, வந்த மல்லன் இவ்வளவு வரிசை பெற்றுப்போகவும் நாம் வல்லமை யற்றவர்களாக இங்குக் குந்தியிருக்கவும் மானக்கேடும் மரியாதைத்தாழ்வு மாயிற்றே யென்றெழுந்து, காரிடிபோற் பேரொலி காட்டி, காண்டீரவம்போல் ஓரடியாய் நடந்து ஆக்கிரமித்துப் பராக்கிரமம் பேசி, வியாக்ர மொத்து வெகுண்டெழுந்தேகி பதைத்துத் துடிதுடித்து, அதட்டி புயந்தட்டி மீசையை மேலெழ முறுக்கி, விழிகள் சிவப்பேறவுருக்கி, புழுங்கிப் பற்கடித்து, புதுமல்லனை வளைத்து, இது நல்ல சமயமென்று உணர்த்தி, எங்களுடன் சண்டைபோட வாவென்று மறித்து, அவன் பெற்ற ஆடையாபரண வெகுமானங்களையெல்லாம் ஒன்றையும் விடாமற் பறித்து, அரிய மற்போர் நூலில் வகுத்தபடிக்கு விற்போர் - வாட்போர் விதமெல்லாம் வளைத்து, வேந்தர்கள் முதலிய வெகுஜனங்காண பாய்ந்தெதிரோடி சண்டை செய்தார்கள். இவ்வாறு ஒவ்வொருவனுந் தனித்தனி சென்று அவனோடு சண்டை பண்ணும்போது, தானம்விட்டகலாமல் தத்தியும், தருக்கி ஒருவனை யொருவன் மொத்தியும், உடலுடனுடல் சேர ஒத்தியும், உரத்துடனுரஞ்சேர எத்தியும், தாளுடன் தாளடித்துத் தத்தியும், தலையுடன் தலை தாக்கிச் சுற்றியும், இடசாரி வலசாரி யோடியும், இரைப்பெடுத்து ஒருபுறம் வாடியும், இடைந்து முன் பாய்ந்து கூத்தாடியும், இடம்விட்டடஞ்சாய்ந்து கூடியும், வச்சிரமுட்டியா லிடித்தும், வைரக்கையால் அடித்தும், காலுடன் கால்கூட்டி மாட்டியும், கதாயுதந்தனை நீட்டிக் காட்டியும், கருங்கற்பாறையுடன் கருங்கற்பாறை யிடித்துக்கொள்ளுங் காட்சிபோல் மார்பும் மார்பும் கலங்க மோதி, வாரிவாரி எடுத்து வீசி, நேரோடி வாது புரிந்து போராடும்போது, பார்ப்பவர்கள் கண்கள் பதறிக் கலங்க வேர்க்க விதிர்க்க மல்யுத்தஞ் செய்தார்கள். அக்காலையில், வெளியூரிலிருந்துவந்த மல்லன் கையால் விராடனூரிலிருந்த மல்லர்களெல்லாம் எமலோகஞ் சேர்ந்தார்கள். இவ்விதமாகத் தன்னுறுதியைச் சோரவிடாமல் யுத்தஞ் செய்து, விராட்புரத்து மல்லர்களை வீரசொர்க்கத்திற்கனுப்பிய வாசனென்று மல்லனை விராடராஜன் நேசவிசுவாசத்துடன் மெச்சி, ஆ! சபாஷ்! நீ மெத்தவும் நல்லவன்; கைமுடக்கிக் குத்தவும் வல்லவன் என்று புகழ்ந்து, உயர்ந்த வஸ்திராபரணங்களு மீந்து, விருது - முடி - குடை - கொடி இவைகளுடன் பற்பல மேன்மைச் சிறப்புகளுஞ் செய்துவிட்டு, போர்புரிந்து இறந்த மல்லர்களைப் புதைக்கும்படி உத்தரவு கொடுத்து, தானுஞ் சபையைவிட்டு எழுந்து அரண்மனைக்குட் போய் அன்றிரவு விடியுமளவும் நித்திரை பிடியாமல் மெத்தவும் வருந்தி, மறுநாட் காலையில் நித்தியவிதிமுடித்து இராஜகொலுக் கூடத்திற்கு வந்து, தனக்குமுன் எழுந்தருளியிருந்த கங்கபட்டர் தாளில் வீழ்ந்து, அவராற் சுப மங்கள ஆசீர்வசனம்பெற்று, மந்திரி சாமந்தர் முதலிய மன்னவர்களுடன் அன்னிருந்தான்.

### விராடன் தன் மல்லர்பட்டதை யெண்ணி வருந்த கங்கபட்டர் பலாயனன் திறங்கூறி மகிழ்வித்தல்

அந்தவேளையில் வாசவனுகிய மல்லன் வந்து பணிந்து, ஓ இராஜாதிராஜ போஜ மகாராஜனே! ஓ பூஜாதுரந்தரா! புநிதமூர்த்தி அடியேனுக்குச் செலவு கொடுத்தனும் என்று கைதொழுது நின்றுன். அவனைக் கண்ட மச்சராஜன் நேற்றிறந்த தன் சொந்த மல்லர்களின் பரிதாபத்தைப் பாராட்டி இவனை ஜெயிப்பதற்குத் தகுந்த மல்லர்கள் நம்மிடத்தி லில்லாமையாலன்றே இவன் இவ்விடத்தி லுண்டான மல்லர்களை யெல்லாம் வாரிப் போர்கொடுத்து, ஆருக்கும் பயங்கரம் உண்டாக்கப் பேரெடுத்து, ஊருக்கும் போகப் போகிறனென்று மனத்தாங்கலாகப் பேசினன். அந்தக் கருத்தை அண்டையிலிருந்த கங்கபட்டர் அறிந்து, ஓ மாங்குயிர்கூவும் வளநாட்டிறைையாகிய மச்சராஜனே! கேளும் அரசனிடத்தில் வரிசைபெற்று உரிசைகண்ட வாசனுகிய மல்லனை வெல்லவாவது, கொல்லவாவது வேண்டுமானுல், பலாயனனென்று நமது மடப்பள்ளியில் இருக்கின்றுனே, அவனே அவனை வெல்லத்தகுந்த மல்லன். அவனே மெத்தவும் நல்லவன். மகா சமர்த்துள்ள வல்லவன். பூர்வத்தில் தருமராஜனுடைய தம்பி வீமசேனனிடமா யிருக்கும்போது, வெகுபேர் மல்லர்களை வென்று, அப்பலாயனனென்னும் பேருங்கொண்டு, வெற்றிமாலையும் வெகுமதியும் பெற்றிருக்கின்றுன். அஞ்சா நெஞ்சுறமுற் றிருக்கின்றுன். அசுரகுலகாலனென்னும் பலசாலி. அவனுல் இவனை யடக்கிப் போடலாம் என்று நினைக்கிறேன் என்று கங்கபட்டர் சொல்லியதை அரசன் கேட்டு மகிழ்ந்து, அப்படியானுல் அந்த மடைத்தொழிலாளியை வருவியுங்கள் என்றுன். உடனே தூதரை யனுப்பி அழைத்துவரச் சொன்னுர். அவ்வாறு போய் அழைத்தவர்களை பலாயனன்கண்டு, அடா தூதர்களே! அரசன் அழைத்த காரணம் என்ன? முன்னம் அதனை எனக்குச் சொல்லுங்கள் என்று கேட்க, தூதர்கள், ஐயா! யாரோ ஒரு மல்லன் வந்துநின்று, நமது சில்லரை மல்லரையெல்லாங் கொன்று, அரசனுற் பல வெகுமானங் கொண்டு, நமக்கெல்லாம் அவமானங் கண்டான். ஆதலால், அவனேடு சண்டை போடுவதற்கோ, அல்லது உம்மைக் கண்டு பேசுவதற்கோ நாங்களறியோம். அன்றியும், உம்மைக் குறித்துக் கங்கப்பட்டர் செம்மையாகச் சொல்லி யிருக்கின்றுர். ஆதலால், அழைப்பித்ததுபோலு மிருக்கின்ற தென்றுர். அவர்கள் வார்த்தைக் கேட்ட வீமசேனன் முகமலர்ந்து அகமகிழ்ந்து, இதோ வந்தேன்; வந்தேன்; என்று மகமேருவைச் சக்கிரவாளகிரி வளைந்ததுபோல இடுப்பிற் கச்சைவரிந்து இறுக்கி, அண்ட முகட்டுக்கு முட்டுகொடுக்குந் தண்டமொன்று கையிற் கொண்டு, விஷாமிர்தம் புசித்த திடகாத்திர தீர ஜெயசிம்மவீரன் சீக்கிரம் வந்து, சிங்காசனத்திருந்த கங்கபட்டரைத் தொழுது, ஸ்வாமி! பராக் என்று சொல்லி நின்றுன். ஐயா! ஏதோ உமது அனுக்கிரகத்தாலும், இதோ எழுந்தருளி யிருக்கும் பெரியோர்களின் ஆசீர்வசனத்தினுலும் போர்புரிய மாட்டுவேன். தேவரீர் காலதாமசம் இல்லாமற் கட்டளையிட்டருளும். இதோ ஒரு நொடியில் இவனை ஸ்தானப் பிரஷ்டத்துவ மாக்கி ஸ்நானம் பண்ணி வருகிறேன் என்றுன். அந்தப் பாகசாஸ்திரப் பலாயனன் சொல்லை விராடராஜன் கேட்டு நகைமுகங் காட்டி, புதுமல்லனை அழைத்து, இவனுடன் யுத்தஞ் செய்வதற்கு உனக்கிஷ்டந்தானு வென்றுன். ஆஹா! அதற்கென்ன தடை? ஆனுல் ஒன்று சொல்லுகிறேன் கேளும்: நீர் நல்ல புண்ணியபூபாலன். உமது சபையிலிருந்த மல்லர்களை எல்லாம் வீணுய் மடித்து விட்டேன். இவனுகிலும் மல்லனென்னும் பேருக்கிருக்கட்டும். இவனும் இறந்து போவானுகில் எனக்கு மெத்த மனஸ்தாபமாயிருக்கும். உம்மைப்பற்றி இவனை மருந்துபோல் வைத்து விடுகிறேன். அந்தோ! அவனது ஊழ்வினைப் பயனுல் நமக்கு விருந்தாக வந்திருக்கின்றுன் போலு மிருக்கிறது. நீங்களும் இவன்உயிருக்கு உலைவைத்து இருக்கின்றீர்கள். என்பேரிற் குற்றஞ் சொல்ல வேண்டாம். எமனுடன் எதிர்த்த உயிரும், சிங்கத்தைப் பகைத்த யானையும், என்னுடன் போர் ஆட வந்தபேரும் பிழைக்கப் போகிறதேயில்லை. ஆகையால், இவன் இன்றைக்கு இறந்து போவான். இவனுக் காராவது பெண்டு-பிள்ளை - தந்தை - தாய் - அண்ணன் - தம்பி - மாமன் - மைத்துனன் - உற்றூர் - உறவினர் - இவர்களில் யாரேனு முண்டானுல், முன்னுடி சொல்லி யனுப்பித் தலைமுழுகிப் போடப் பண்ணுங்கள். உங்களுக்குஞ் சம்மதமானுல் என்னுடன் சண்டைக்கு வரச் சொல்லுங்கள்

என்று அண்டையசலைப் பார்த்துக் கண்ணுருட்டிக் கறுத்து விழித்து, மீசை முறிக்கித் திரிந்து மேனி குலுங்கச் சிரித்து, அண்டமதிர ஆர்ப்பரித்து கொண்டல் சிதறக் கொக்கரித்து, வீமனுக் கண்டையில் வந்தான். அவ்விடம் இருந்த கங்கபட்டர் ஒருவர் தவிர மற்றவர்கட்கெல்லாம் பயம் உண்டாகி, பலாயனன் இறந்து போனான் என்று திண்ணமாய் எண்ணங் கொண்டு, தியங்கி மயங்கித் தத்தளித்து நின்று விட்டார்கள்.

### வாசவனோடு பலாயனன் மற்போராடி வதைத்தல்

இவர்கள் இவ்வாறிருக்க, காமதகனனுக் கொப்பாகிய வீமன் தன்னண்டையிற் சண்டைக்கு வந்த வீரமல்லனைக் கிட்டி உதயகிரி அஸ்தகிரி இரண்டும் நெருங்கிப் போராடப் புகுந்ததைப்போற் பொருந்தி, இருவருந் தோளடித்து பெருங்குரல் முழக்கி யிடித்து பிரதாபப் பேச்சுகள் படித்து, காலாலுங் கையாலும் பின்னிப் போரிட்டுப் பிடித்தார்கள். ஒருவரை யொருவர் அடித்தார்கள். ஒருவர் காலை ஒருவர் மிதித்தார்கள். ஒருவரை ஒருவர் உதைத்தார்கள். ஒருவரை ஒருவர் பற்றினார்கள். ஒருவரைஒருவர் சுற்றினார்கள். ஒருவரை ஒருவர் எறிந்தார்கள். ஒருவரை ஒருவர் செறிந்தார்கள். ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்தார்கள். மார்புடன் மார்பழுந்த இறுக்கிக் கட்டி யணைத்துச் சுற்றினார்கள். கையை முடக்கி மார்புந்தோளுந் தளர்படக் குத்தினார்கள். கால்மேலாகியெழ எற்றினார்கள். கை கீழாகிவீழச் சுற்றினார்கள். புருவம் - வாய்- மூக்கு-காது இவை முதலிய உறுப்புக்களழியச் சிதைத்தார்கள். பொருப்பெனும் புயங்கள் ஒடிய இடித்துப் பகைத்தார்கள். ஒருத்தரை ஒருத்தர் குத்தி நிறுத்திப் பிடித்தார்கள், ஒருத்தரை ஒருத்தர் பழித்துத் தெழித்துக் கடித்தார்கள், ஓடி - வாடி - நாடி-தேடி-கூடி-பாடி-ஊடி- நிலையில் மீண்டார்கள். ஒதுங்கி-பதுங்கி-ஒடுங்கி-அடங்கி-பாய்ந்து-காய்ந்து-சாய்ந்து-வதங்கி வாடினார்கள். இத்தன்மையாக இருவரும் போர் புரிந்ததில் புதுமல்லன் கற்ற வித்தைகளையும், சாகசங்களையும், கைலாகவத்தையும், வீமசேனன் கண்டுகொண்டு, இவ்வளவுதான் இவனிடத்தி லிருக்கின்ற மகிமை என்று தெரிந்து, எதிரிக்கிடங் கொடுத்து ஏழைபோல் நின்றான். உடனே அவனை எதிரில் இருந்த புதுமல்லன் திடீரெனப் பூமியிற் குனிந்து குபீரெனப் பாய்ந்து, தொடையிற் கைதுறுத்துத் தூக்கி, தொப்பென்று பூமியிற் குப்புறப் போட்டுத் தோள்மேல் ஏறத் துணிந்தான். அப்போது இடும்பாசுரனையும், பகாசுரனையும் ஏற்றிக் குத்தி எமலோகம் அனுப்பி இவ்வுலகத்திற் பேருபகாரியெனப் பெயரெடுத்த வீமன் தன்னுடைய சரீரச் சமர்த்தினால் வீராவேசங் கொண்டு, அந்த மல்லன் கையினின்றும் நீங்கி நிலத்திற் பாய்ந்து, பதறி நிமிர்ந்து குதித்து நிதானமாய் மதித்து, நேருக்கு நேர் சென்று ஒரு கையை நீட்டி அவன் உடலை நெருக்கிப் பிடித்து, மற்றொரு கையால் கழுத்தை மடக்கி யொடித்து நிலத்தினில் மோதி ஒரே அமுக்காக அமுக்கி பழுத்த பாலைப் பழம்போற் கொழுத்த கண்கள் பிதுங்கத்தக்கதாகக் கரசரணாதிகளை யொடித்து, உயிரை மடித்து, வெறுப்பில்லாமல் வீசி யெறிந்து, எங்கே இவன் பின்னால் வந்த மல்லரென்று புயங் கொட்டிப் பார்த்து, கண்கள் பொறியெழ விழித்து, முகம்வியர்த்து, ஆர்ப்பரித்து, வீறிட்டு எழுந்தான். இவ்வாறு அடங்காத் திடங்கொண்டு எழுந்த சுயம்பாகியை விராடன் கண்டு ஒப்பிச்சொல்லுவதற்கு இடமில்லாமல் அப்பப்பா வென்றயர்ந்து, இப்பா லென்ன வாமோ வென்று பயந்து, உடனே முகநயந்து, ஓ ஜெகமகிழுந் திடவானே! என்று புகழ்ந்து, தன்னிரு கரத்தாலும் அவனை அணைத்து, பொன்னரிமாலை முதலிய பூஷணங்கள் கொடுத்து, இனிமேல் என்னுடைய போர் முகங்களுக்கு உன்னையன்றி யுற்றதுணை உளதோ உத்தம பராக்கிரமனே! யென்று உபசரித்து, மன்னர் மதிக்க வாணர் துதிக்கப் பன்னற்கரிய பல வரிசைகள் அளித்து, முன்னவன் என்னப் பொருந்திய கங்கபட்டரைப் பூசித்து, சுவாமி! உம்மால் எனக்கு இவ்வளவு பெருமை உண்டாயிற்றென்று உவந்து வாழ்த்தி, பலாயனனைத் தன்னுடல்போலும், தன்னுயிர் போலும், தன் பொருள்போலும் பக்கத்திலிருத்தி, இந்த அதிவீர பராக்கிரமனாகிய சுயம்பாகிக் கொப்பாக ஸ்ரீராமனைச் சொன்னாலும் என்காதுக் கினிமையாயிராது. ஆ! ஆ! என்ன சாகசஞ் செய்தான்? என்ன சமர் புரிந்தான்? என்று தினந் தினம் சந்தோஷமடைந்து சிறப்புற்றிருந்தான். இப்பால் பாண்டுமக்கள் தத்தம் தொழில்களிற் குறைவின்றி அதிஜாக்கிரதையாய் இருந்து, விராடராஜன் நடத்தும் மரியாதைகளினால்

அந்நியதேசத்தில் இருக்கின்றோமென்றும் வெறுப்பின்றி, விசனமற்ற சுக ஜனங்களுடன் இந்திரப் பிரஸ்தத்திலிருந்து அரசாளும் செல்வம்போல் சுகமுற்றிருந்தார்கள். இப்படி இருக்குங்காலையில், இச்சங்கதிகளை இந்தப் பட்டினத்திற் கதிபதியாகிய மச்சராஜனுக்கு மைத்துனரும், சுதக்ஷணை தேவிக்குத் தம்பியுமான கீசகர்கள் கேட்டு ஆச்சரியப்பட்டு, தேசங்கள் தோறும் சிறப்படைந்து வந்த வாசவனென்னும் பேருடைய மல்லனைத் தங்கள் வாசலிலிருந்த மடைத்தொழில் மல்லன் நாசகால நமன்போல் எதிர்த்துக் கொன்றுவிட்டதைக் குறித்துச் சந்தோஷங் கொண்டாடி, நேற்றிறந்த பழைய மல்லரைக் குறித்து இரக்கமடைந்திருந்தார்கள். அன்று முதலாக் சுயம்பாகியாகிய பலாயனனைப் பார்க்குந் தோறும் அவ்வூரிலுள்ளார்க்கும் மற்றவர்களுக்கும் மகா பீதியும், பயமும் உண்டாகி, அவ்விராடராஜனுக்குங் கீசகர்தியர்க்குங்கூட வயிற்றில் பெருநெருப்புண்டாயிருந்தது.

மற்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

## கீசகன் வதைச் சருக்கம்

---

### கண்ணன் துதி

அருமறையைக் கவர்ந்துவிரி மகரவாரிதியினிற்சென் றன்றுரெளித்த, பெருவலிகொள் சோமுகா சுரனுமத் தவுணனை முன்பிறங்குமீனத், திருவுருக்கொண் டறமாய்த்தம் மறைவையுல கிடைவிரித்துச் சீவர்த்மமைப், பொருவிலரு ளிற்புரந்து புயங்கமீ தறிதுயில் கொள் புனிதபோற்றி.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வாறு பஞ்சபாண்டவரும் பாஞ்சாலியும் வித்தியாசமின்றிப் பத்துமாதங் கழித்து, மற்ற நாலுந் தொலைக்க வேண்டுமென்று ஒருநாள் ஒரு யுகம்போற் போக்கி, யாதினுலுஞ் சோர்வடையாமலும், தேகசுகம் பாராமலும், தங்கள் வலிமையைப் பிறருக்குக் காட்டாமலும் ஒரு மார்க்கமாகக் காலங்கழித்தார்கள். அப்படி வருநாளையில் ஒருநாள் சுதர்க்கணையுடன் பிறந்த நூற்றுநாலு பேருக்கு மூத்தவனும், விராடராஜனுக்கு மைத்துனனும், அவன் படைக் கதிபதியுமாகி, காமனைய பழிக்குங் காந்தியும், அளவிடப்படாத ஆண்மையும் உடைய கீசகராஜன் தன் சகோதரியான சுதக்ஷணாதேவியைப் பார்க்கவேண்டுமென்று வந்து அந்தப்புரத்திற் புகுந்து, சிலம்பு புலம்பும் அவள் சீரடியிற் பணிந்து, கன்னமதம்-கபோலமதம்-பீசமதம் என்னு மும்மதம் பொழியும் வாரணம்போற் றணிந்து சிலநேரம் வரையிலும் பேசியிருந்து, தன் தமக்கையாளிடத்திற் செலவுபெற்று சிங்காரவனத்தின் வழியாய் வந்தான். அவன் வரும்போது பாண்டவர்களின் தேவியாகிய விரதசாரணியானவள் அடகலோகத் திறைவனாகிய தேவேந்திரனது நந்தவனத்திற் கொப்பாகிய அந்தப்புரத் தோட்டத்திற் சுகந்த பரிமளமிகுந்த புட்பங்கள் பறித்து, சோடசகலைகள் நிறைந்த மதிமுகம் வெயர்த்து, சொரூபவுலாசமும் இந்திரதனுசை யொத்த புருவவிலாசமும் பிரகாசிக்க செந்தாமரை மொக்கைபோலும், கூவிளங்கனிபோலும், யானையின் மத்தகம்போலும், தென்னங் குரும்பையைப்போலும், தங்கக் கிண்ணம்போலும், மேருவைப்போலும், பருத்துத்திரண்ட கொங்கையைச் சுமக்கமாட்டா மற் றுவண்டாடும் நூலிழைபோன்ற இடையும், அன்ன நடையும், வன்னவுடையும் உடையவளாய், இவள் சாயல் கண்டு இளமயிலாட, குரலோசை கேட்டுக் குயிலிசைபாட, அளிமொழிக்கிடைந்து கிளியினம்வாட, அடிப்புறவடிக்கு ஆமையொளிக்க, பொன்னொளி பார்த்து மின்னல் தெளிக்க, இன்னெழில் பெற்ற கன்னிகையானவள், பொன்னங்காவிற் பொலிந்து எதிர்ப்பட்டாள்.

### கீசகன் விரதசாரணியைக் கண்டு மோகித்தல்

அப்போது செயற்கை யழகின்றி இயற்கையழகுள்ள அப்பாவையை கீசகன் கண்டு, ஆசை மேற்கொண்டு மோகசோக மூச்சுமேவிட்டு, காமன்கணையாற் கலக்கப்பட்டு, ஆ! ஆ! ஆ! இப்படிப்பட்ட பெண்ணை இதுவரையிலுங் கண்டிலேன். இவ்வுலக மயக்க வந்த மாயையோ? சும்மாயிருப்பவர்மேல் தொடுக்கு மோகனாஸ்திரமோ? திக்குப் பாலகருக்குச் சொக்குப்பொடியோ? பிரம்மா வமைத்த பெரு விசித்திரமோ? கம்மியன் செதுக்கிய கனகசித்திரமோ? அம்மா! ஏதொன்றும் அறிகிலேன்! ஏதொன்றுந் தெரிகிலேன்! தெய்வப் பெண்ணோ? தேவரம்பையோ? கந்திருவர் மாதோ? கன்விஞ்சையர் தேனோ? இவளாரோ? எவளோ? என்று ஐயங்கொண்டு, அவளண்டையில் வந்து, இருகண்ணிமைக்குந் தன்மையாற் றுணிந்து காமுகனுகி, சிந்தைவருந்தி நை

ந்து நினைந்து நினைந்து, மையலால் வெந்து வாடி வதங்கி, மானம்-மகிழ்ச்சி-பெருமை-புகழ்ச்சி இவையாவு மறந்து, ஐம்புலனும் புரண்டு, அறிவு மருண்டு, ஓ மோகப்பயிருக்கு ஆதாரமாகிய வித்தே! உன்மேற் கொண்ட தாகத்தால் வருந்தும் என்னெதிரில் நீ நேரிட்டும், விரகசோகந் தீராச் சங்கட மென்னே? ஆ! ஆ! நேசப் பெண்ணரசே! உன் சரித்திரத்தை இன்னவிதமெனக் கேளாத் தரித்திரனாய் இருக்கிறேன். நீ யாரோ? எவ்விடம் இருப்பதுவோ? உன்னாயகன் எங்கே? நீ என்ன காரியமாய் வந்தா யிங்கே? உன் பெயரென்ன? உன்மேல் மிகப்பரிவுற்ற என்பேரில் தயைபுரிந்து சொல்வாயோ என்று பலவிதத்திலுங் கேட்டான். இப்படி யெல்லாங் கேட்டதற்கோர் உத்தரமுஞ் சொல்லாமலிருந்த சித்திரப் பாவையைப்போன்ற செல்வியைக் கீசகன் மீண்டும் பார்த்து, ஓ பெண்ணரசி! நான் உனக்கோர் பொருளாகத் தோன்றவில்லையோ? என்சொல் உன்செவியிற் கேறவில்லையோ? நான் படுந்துயர் நீதி யறியாததோ? உன் காதென்ன கருங்கல்லோ? உன் கருத்தென்ன மகாகடிதோ? உன்னினைவென்ன பெரும் இரும்போ? உன்னெஞ்சென்ன உருக்கெழுகோ? என்னுடன் வார்த்தையாடினால் உன் வாய் முத்து சிந்துமோ? ஆபத்து நீக்கி விட்டாற் பாபத்திற் கிடமல்லவோ? என்பேரிற் கோபத்தை வைக்காதே; நான் கொண்ட சோபத்தைத் தீர்த்தருளும்; ஓ சோலைக்கண்ணுறையும் வாலைப்பருவக் குயிலே! நான் ஆலைக்கண்ணுறையும் சோலைக்கரும்பானேன். ஐயோ! என் மனமகிழச் சற்று வசனியாயோ? என்று பலவாறு பிதற்றினவனாய், அவ்விரதசாரணி பக்கத்தில் தங்கிய பாங்கியரை நோக்கி இதனைப் பேசுவதாயினான்.

அடி தாதியரே! இந்தப் பெண்பெருமாளாரடி? இவளுக்கென்ன பேரடி? இவளெந்தவூரடி? இதுவரையிலும் நானறியேனடி? நீங்கள் யாராகிலுஞ் சொல்லுங்களடி? என்று கேட்டான். அவர்கள் அவனுக்குப் பயந்து, ஐயா! இந்த வண்ணமகள் உங்கள் தமக்கையாரிடத்திற் பத்துமாதமாய் வேலைக் கமர்ந்திருக்றாள் என்றார்கள். அந்த வாசகங் கேட்ட கீசகன் ஊழியஞ் செய்யவந்தவள் தானே யென்று இலேசாக நினைத்து, காமத்தீப் பெருக்காற் கருகி யுருகி, நாணங்கொண்டொடுங்கி, முகங்கோணி, முன்னின்ற விரதசாரணியின் பாதத்தில் வீழ்ந்து, ஓ என்னாவியே! நான் மகா பாவியே! என்னைக் கொல்லுவது உன் ஆசை வசனாவியே! ஆதலால் வசந்தகால வண்டைப்போல் உன் வாய்மலரிற் சுரக்குந்தேனையுண்டு பிர்மாநந்தங்கொண்டு மேன்மைபெற விரும்புகின்றேன். உனக்குண்டாகிய வழகும், அந்த வழகுக்கேற்ற பருவமும், அப்பருவத்துக்குரிய வுருவமும், அவ்வுருவத்திற் கிசைந்த காந்தியும், அக்காந்திக்குத் தக்க சாந்தியுமுண்டாயிருந்தும், உனக்குத் தகுந்த சொகுசுநாயகனில்லாமையால் உன் காலம் அநியாயமாயகன்று போகின்றதே. ஐயோ! ஓ அஞ்சுகமே! மிஞ்சிய மோகத்தாற் கெஞ்சுறு நானுனக்குக் கிரீடி. நீ யான் கொஞ்சற் கிசைவாகிய கண்ணாட்டி, அடிசீமாட்டி! இவ்வுலகின்கண் பெண்ணாகப் பிறந்தவர்கள் உன்னழகைக் கண்டு பின் தொடரவேண்டுமே; அலங்காரமென்பனவெல்லாம் உனதலங்காரத்தைக் கண்டு அலற வேண்டுமே; இவ்வளவு நிறைவுற்றிருக்கும் உனக்கு மெனக்கும் என்ன குறைவு? நாம் பேசிக் குலாவிக் கூடுவதே யுறவு; உனக்கு வேண்டுவதான நவரத்தினாபரணங்களும், கட்டு வர்க்கங்களும், பட்டு வர்க்கங்களும், பொன் பாத்திரங்களும், இன்னுமுள்ள பொருள்களும் தருகிறேன். எனக்கு எவ்வளவு மோகங் கொடுத்தையோ அவ்வளவு போகங் கொடுக்கிறேன். நித்தியம் உன்னுத்திரவின்படி நடக்கிறேன். மற்றொருவர் முகத்தை நோக்கிலேன். சத்தியம்பண்ணித் தருகிறேன். சற்றேனு மனமிறங்கவேண்டுந் தையலே! என்று எத்தனையோ கோடி யுபசார வார்த்தைகள் சொன்னான்.

### கீசகனுக்கு விரதசாரணி புத்திகூறிக் கடிதல்

அத்தனை மொழிகளுக்கும் எள்ளத்தனைப் பேச்சும் பேசாமல், ஓர் மரத்தினோரமாய் மறைந்திருந்து, ஆ கீசகா! பாவமாகிய மூட்டையும், பழிப்பாகிய கேட்டையும், பாசப் பெருங்கோட்டையும், ஏன் கட்டித் தள்ளுகிறாய்? ஏழைப்பெண் பாவத்தை ஏன் கொட்டிக் கொள்ளுகிறாய்? இம்மைப்பயனை யேனொழிக்கிறாய்? மறுமைப்பயனை யேனழிக்கிறாய்? இம்மை மறுமையிரண்டையும் யோசிக்கவில்லையோ? ஏதோ விபரீதமாய் நினைத்த இந்த வீண் நினைப்பை இன்னும் மாற்றவில்லையோ? ஐயோ! இஃதுனக் கெந்நாளுந் தொல்லை. நற்குடிப் பிறப்பையும் போற்றிலை. நாடாத காரியங்களை நாடுகிறாய். வீணாகிய சொற்களைச்

சொல்லுகிறாய். அந்தோ! இந்தப்பேச்சு உன்னுடனற்றுப்போகிறதாயிருக்கவில்லையே; அனேக மன்னரும் வெகுவாகிய ஆத்மகோடிகளும் வந்து ஒதுங்குகின்ற சந்திரவட்டக் குடை நிழலையுடைய விராடராஜனது பெருமைக்கும், அவனது புகழுக்கும், அழிவுதேட ஏற்பட்டாய்போலுமிருக்கின்றாயே. ஓ முடிவுகாலத்தைத் தேடிக்கொண்ட மூர்க்கனே! விவேகமற்ற வெறியனே! மன்மத பாணமாகிய நெருப்புக்கு பயந்து, மகா பதிவிரதைகளின் வயிற்றெரிச்சலாகிய வடவாமுகாக்கினியில் வீழ்ந்து வாழ்நாளழிந்து மாளப்போகிறாய். அடபாவி! சிறந்த மரபிற் பிறந்தவர்கள் தங்களுடைய உடலழிந்தாலும், உடலிற் பொருந்திய உயிரொழிந்தாலும், பிறர் மனைவியையும், பிறர் பொருளையும், விரும்பமாட்டார்களே. வாய்புழுக்க வசைமொழி வசனிக்கார்களே. நொய்ய வுரையார்களே. நோவக்கண் பாரார்களே. அவர்களைத்தானன்றோ மிக்கோரென்று துதித்தும், தக்கோரென்று மதித்தும், சாஸ்திரங்களிற் பேசியிருப்பது? நீ இறந்த பிறப்புள்ள ஈனனாகையால் துற்பாஷைகளை ஏறக்குறையப் பேசினாய். அவைகளையெல்லாஞ் சுதார்க்கணையைப்பற்றி மனம் பொறுத்தேன். அந்தமட்டும் உன் துற்புத்தியை விலக்கி, நற்புத்தியைத் துலக்கினால், தொல்லுலகில் இன்னுஞ் சிலநாளிருந்து வாழ்வாய். இல்லாவிட்டால் எமலோகஞ் சேர்ந்து நரகத்துள்ளாழ்வாய். என்னை நீ யாரென்று நினைத்தாய். தேவபுருஷர்களாகிய ஐவருடைய காவலிலிருக்கின்றவள். அந்தத் தேவர்களுக்கு முனக்குமிருக்கிற பேதத்தை யோசித்துப்பார். உனது நடத்தையை இதுவரையிலு மவர்களறியார்போலுமிருக்கின்றது. அவர்களிலொருவனாகிய வீரபோஜனென்னு மேலோனறிந்தானாகிற் கண்மூடித் திறப்பதற்குமுன் உன்னுடல் மண்மூடிப் போய்விடும். உன்னுயிர் விண்ணோடுக் காய்விடும். அடா காலாந்தகா! என்று காமவேதை கொண்ட கயவனுக்கெதிரில் நாமம் வேறுகொண்ட நாயகி பேசினாள்.

### கீசகன் விரதசாரணிக்குத் தன் பராக்கிரமங் கூறிப் பிரதாபித்தல்

இவ்வளவு சொல்லியும் அந்த நாசகாலனாகிய கீசகனுக்கு ஆசைநோயதிகரித்து, சிறிதுங் கூசுதலற்று அவ்வண்ணம் பெண்ணை நோக்கி, உம்மைப் பார்த்த கண்ணுக்கு மற்றொரு பெண்ணைப்பார்க்க எனக்கெண்ணமில்லையே, ஓ என்னிரு கண்மணியே! அதற்கிசைந்த நன்மணியே! அம்மணியினொளியே! அவ்வொளியிடத்தின் வெளியே! இந்திரலோகத்திற் கொப்பாகச் சந்திரமண்டலத்திற் கப்பாலளாவிய என் மாளிகையைத் தருகிறேன். அம்மாளிகை நிறைந்த சாளிகையைத் தருகிறேன். சகல வனுபவவதிகாரமுந் தருகிறேன். நானுமுமக் கேவல்செய்ய வருகிறேன். என்னை நீர் நிஷ்டூரஞ் சொல்லாமல் என்னிஷ்ட தெய்வம்போலாண்டருளும். ஓ ஆடகலோகத் தமுதம்போன்ற ஆரணங்கே! உமதன்புள்ள கருணைப் பார்வையால் எனக்கு விபரீதத்தை விளைத்த காமப்பேயை யோட்டிவிடும். என் கலக்க மயக்கத்தை மாற்றிவிடும். நான் கடைத்தேறும்படி தேற்றிவிடும். கலவியமளியிலேற்றிவிடும். உமது சிறுநகை நிலவினால் என் புத்திமருண்ட மோகவிருளைப் பிரகாசிக்கப் பண்ணும். மன்மதன் கணை துளைத்த என் மார்பின் புண்ணுக்கு மதமேறிய ஸ்தனத்தால் ஒத்தனம் போடும். உமது கமலம்போன்ற கரங்களிரண்டாற் கட்டியிருக்கும் என்னுயிருக்கு மருந்தாய் உம்மிதழமுதமூட்டும். உயிர்போம்; எனக்கு உறுதிமொழி சொல்லும். மதப்பயல் சண்டைக்கு வந்து முன்னிலும் என்னைத் தடுத்தாட்கொள்ளும். சரணஞ்சரணம் அபயமபயம். ஓ பெண்ணுலகச் செல்வமே! இவ்விதமாக வணங்குகிற வென்னை இன்னானென்றறிந்துகொள்ளும். இந்திரன் முதல் யாவரையும் தந்திரத்திற் ஜெயிக்குஞ் சுதந்தரமுடைய நான், திரிபுவனஞ் சேர்ந்தெதிர்த்தாலும் அபஜயமடையமாட்டேன். இளமைப் பருவத்திற் மாரன். வளமைச் செல்வத்திற் குபேரன். கல்வியிற் சேடன். கலவியில் விசேடன். நன்மைக்கு வந்தவன். நானுன் தன்மைக்குத் தகுந்தவன். இந்த மச்சதேசத்தில் நான் வைத்தது பிச்சை. இந்த நாட்டரசனை விராடனை மேன்மையுறா யெண்ணாதேயும். அவனென் தமக்கைப் புருஷனாகையாலும், சிங்காசனத்தில் ஏறியிருப்பதற்குச் சாவகாசமில்லாமையாலும், இவனை இவ்விடத்திற்கு முடிசூட்டி நிலைநாட்டி ஆள்காட்டிபோல் வைத்திருக்கின்றேன். அவனால் ஒன்றுமில்லை. எல்லா மென்னாலிருக்கின்றது. என் பெயர் சொன்னால் மராட முதலிய கர்நாடகமு நடுங்கும். ஆதலால், நானவனை மதிப்பதுமில்லை. துதிப்பதுமில்லை. என் மகிமையை நீர் நன்றாய் விசாரிக்கவுமில்லை.

ஓ பெண்கள் பெருமாட்டீ! உமக்கு எது வேண்டியிருந்தாலும், நீ எப்படி நடத்த வேண்டுவதானாலும், உமது சொற்படிக் கெல்லா முடிக்கக் காத்திருக்கின்றேன். என் பெண்சாதிமார்களும் உமக்கேவல் செய்யப் பார்த்திருக்கின்றேன். நீர் வண்ணப் பெண்ணென்னுஞ் சின்னத்தொழிலை விடுத்து, என்னை யடுத்து மேன்மையா யிருக்கலாம். நீர் எனக்கு வசப்படுவீராகில், விருஷபத் துவஜராகிய திரிநேத்திரதாரியை, பார்வதி பங்கரை, என் பரமேட்டியான பரமசிவத்தைப் பூசித்தும் பிரமோற்சவம் பண்ணி வைக்கிறேன். யான் இதுவரையிலும் பண்ணிய புண்ணியங்களை உமக்கே தத்தம் செய்கிறேன். உடல்-பொருள்-ஆவி மூன்றையும் உமக்கே ஒப்புவிக்கிறேன். உமதாசையால் மோசம் போகிறேன். நான் கொண்ட மோகலாகிரி தலைக்கேறிவிட்டது. இந்தக் காம மயக்கத்தைத் தணியாவிடில், என்னுடலும் உயிரும் ஒருங்கே போய்விடும். அதனால் உமக்குப் பாவம் சம்பவிக்கும். ஓ பருவரதியே! நான் மெத்தப் பெரிய மனிதன். மகா மேன்மையுற வாழ்ந்தேன். காமக் குழியில் கால்தவறி வீழ்ந்தேன். மோகக்கடலி லாழ்ந்தேன். ஆதரவற்று அலைந்தேன். ஆசை வலையாலுலைந்தேன். ஐயோ! அறிவுந் தொலைந்தேன். நீர் என் னுயிர்க் குறுதியாகித் தெப்பம்போற் கை கொடுத்துக் கரையேற்ற வேண்டும். ஓ கலாநிதியே! ஓ நிலாமதியே! ஓ ஜீவசஞ்சீவியே! ஓ தேவ வரப்பிரசாதமே! ஓ கருணைப் பிரவாகமே! ஓ காந்திப்பிரவாகமே! என்னை இத் தருணம் கைவிடாமல் காப்பீராகில், உமக்கு மேலாகிய புண்ணியமுண்டு. இனி நான் என்ன செய்வேன். உமது சித்தம் என் பாக்கியம். தருமத்தை எண்ணித் தயவு பண்ணி, என்னை இரட்சிக்க வேண்டும். என் மனமோ பதை பதைக்கின்றது. என்னுடலோ துடிதுடிக்கின்றது. என் பொறி புலன்களோ கலங்குகின்றது. என் புத்திமதிகளோ விலங்குகிறது. நான் பிழைத்த பிழைப்போ வீணாய்ப் போயிற்று. நான் உழைத்த உழைப்போ பிறர்க்கு நகைப்புண்டாயிற்று. உள்ளம் உருகுது. உடல் கருகுது. உயிரும் அலையுது. உரையுங் குழறுது. ஆ! ஆ! பெண் தெய்வமே! உமதரவிந்தப்பாதம் எனக் கடைக்கல ஸ்தானம். உம்மை நம்பினேன்; நம்பினேன். மூக்காலும் நம்பினேன் என்று வெம்பி வீழ்ந்து, அந்த விரதசாரணியின் காலடிப் பொடியில் இவன் தலைமுடி படும்படியாய்த் தாழ்ந்து, கண்டபடி பிதற்றினான்.

### கீசகனுக்கு விரதசாரணி சில நீதியும் தன்னால் நேரும் உபாயமும் கூறி நிந்தித்தல்

அப்பொழுது வண்டுமொய்க்கும் கூந்தல் விரிந்த மாதரசி கை நெரித்து, ஜகத்திற் கடுமை காட்டி, அடா கொலைப்பாதகா! அநாசார முடையவனே! உத்தமஜாதியிற் பிறந்தும், உயர் வாழ்க்கையி லிருந்தும், யோசிக்காமற் போனையே. பாத்திரமில்லாத சூத்திரசாதியாகியும், ராஜஸ்திரீகளுக்குப் பணிவிடை செய்பவளாகியும், தாழ்ந்த நிசையி லிருக்கிற என்பேரி லாசைப்பட்டு மோசம்போய்ப் பேசுவது உனக்கு நாசகாலமல்லவோ? அடா! ஏழையாகிய எனக்குக் கொடுக்கிறேனென்ற செல்வங்களை உன் குலத்துக்குரிய பெண்களுக்குக் கொடுத்து, அக்கினி சாட்சியாகக் கலியாணஞ் செய்துகொண்டு கலந்துண்டு அழகாயிருக்கலாமே. அவர்கள் சுகத்தை விட்டுவிட்டு, வயிறு வளர்க்கவந்த மாறு வேஷங்கொண்டு, தலையும் பம்மை உடையுங் கந்தை இக்கோலமான என்னை விரும்பியே ஞசை கொண்டாய். அடா வீணாசைகொண்ட வெம்பாதகா! ஓமகுண்டத் தமுதென்று உன்னுமற் கலங்குகிறாய். உயர்ந்த பொருளுக்குந் தளர்ந் தாசைப்படுகிறாய். அடா துன்மார்க்கனே! புத்திமானாகிய ஒருவன் தான் மணம் புரிந்த மனைவியைத் தனியேவிட்டு அந்நிய ஸ்திரீகளை நாடி, அவர்கள் காலடியில் வாடிக் கிடப்பது அழகல்லவே. அக்கினி சாட்சியாகச் செய்த சத்தியந் தப்பினவர்களுக்கு இம்மையில் வாழ்வு மாறும். மறுமையில் நரகமீளும். எப்பிறப்பிலும் பழியும் பாவமும் அபகீர்த்தியு மேறும். ஐயோ! நான் சொல்வதைக் கேள். மறுமாதர்மேல் மையல் கொள்ளுவது அநியாயம். அம் மையலால் விளைவது அபாயம். எந்தவேளையும் அச்சமும் துன்பமும் சேரும். இதுவோ தொல்லை இன்பமோ இல்லை. அன்றியும், பரஸ்திரீகள் தங்களை விரும்பிய நாயகனுடைய சுக துக்கத்திற்கு உரியராக மாட்டார்கள். அது ஏனெனில், தங்களைச் சேர்ந்த சோர நாயகனிறந்தால், அவனுக்குக் கருமைக் கிரியை முதலாகிய சிரார்த்தங்கள் செய்ய அதிகாரமில்லை. அவள் கருப்பங் கொண்டு பெற்ற பிள்ளையுந் தந்தை வழிக்கு இசைந்த கருமச் சடங்குகளைச் செய்யவொண்

ணாது. அந்தப் பிள்ளையினால் வம்மிச விருத்தியும் ஆகாது. ஒருவேளை வம்மிச விருத்தியானால் தந்தை குலம் நசித்துப்போம். அபிமானத்தால் வந்த இந்த மைந்தன் தலை எடுத்து மேம்பாட்டைய[illegible], நீயெவ்வளவு செல்வம் பெற்றிருந்தாலும், எருமைச்சாணம் எக்கியத்திற்கு ஆகாதென்பது போலாம். குலத்திற் கொண்டவள் குரங்கானாலுங் குறை சொல்லுதற்கு இடமிராது. வேதவிதியும் நீதிமுறையும் பிசகாது. திதி முதலிய பிதுர் கடனுக்கும் அதிகாரியாவான்.

அடா மூடனே! இவைகளை யெல்லாம் ஓதியுணர்ந்த கோத்திரத்தானாகிய நீ ஜாதி யழிந்தவன்போல் அதர்மத்திற்கு உடன்பட வேண்டாம். என்னை நாடுவதும், இஷ்டமாகத் தேடுவதும், உன் குலத்திற்கு உரிமையல்லவே. முடவனுக்குக் கொம்புத்தேன் எட்டுமா? மூடனுக்கு என் அன்புத்தான் கிட்டுமா? ஓ மூர்க்கனே! நானொரு விரதம்பற்றி இவ்விடத்தில் வந்திருக்கிறேன். என் பேர் விரதசாரணி. நீ தப்பு நினைத்துக்கொள்ளாதே. சாக நினைத்து துள்ளாதே. பூர்வஞ் சீதையை எடுத்துப்போய்ச் சிறையில் வைத்து உண்ணாமல் தின்னாமல் ஊரம்பலமாகி புத்திரமித்திர பௌத்திராதியுடன் நிர்மூலமாய்ப் போன இராவணன் சரித்திரத்தைக் கேட்டிலையோ இந்நாட்டில். ஐயோ! உனக்கும் அதே கதி. உருள்வந்ததே தலைவிதி. நீ என்ன செய்வாய். என்னைக் கலியாணம் பண்ணிக்கொண்ட காந்திருவர் ஐவர். அவர்கள் மகா பராக்கிரமசாலிகள். என் விஷயத்தில் தீங்கு செய்பவர்களுடைய தலைகள் பனங்காயைப்போல் உருண்டலைய ஓங்கி விற்பிடித் திருக்கின்றார்கள். இந்த இரகசியத்தை நான் உனக்குச் சொல்லவேண்டிய அவசியமில்லை. ஆகிலும், விராடன் பத்தினியாகிய சுதர்க்கணையை அடுத்து அவள் அன்னம் புசித்து வருகின்றமையால், நன்றி குன்றாமற் சொன்னேன். கெடுவாய் கேடு நினையாதே யென்றால், இன்னுங் கெடுவேன் பந்தயமென்ன வென்பதுபோல் என்னை விரும்பி மேலு மேலுஞ் சின்ன வார்த்தை பேசுகிறாய். துற்புத்தியை விட்டுவிடு. வாய்க்கடங்காப் பிடிபிடித்து மண்டை உடைந்து மடியாதே. என்னண்டையடைந்து துடியாதே. என்னுடன் பேசுவதற்குத் தெய்வலோகத்தாருந் திடுக்கிடுவார்கள். அப்படி யிருக்க, நீ பயமில்லாமற் பேசினாய். அடா பாவி! எனக்குரிய காந்திருவர்கள் இப்பொழுது இந்நகரத்தில் இருக்கின்றார்கள். அவர்களுக்கு விரோதிகளில்லை. சில சமயத்தில் விரோதியானவர்கள் ஆகாயத்திற் பதுங்கினாலும், அலைகடல் மூழ்கி ஒதுங்கினாலும், பாதலத்தில் மறைந்தாலும், பூதலத்தி லுறைந்தாலும், திக்குப் பாலகருடைய பேருதவி பெற்றாலும், நவக்கிரகங்களின் நன்மையுற்றாலும், ஹரி ஹரப் பிரமாதிகளான போதிலும் அவர்களுயிரை அழிக்காமல் விடார்கள். ஆகையால், நீ என்னிமித்தம் உன்னினத்தாருடன் மடியவேண்டாம். காம பாசத்தினால் கொழுத்து எம பாசத்தை இழுத்துக் கழுத்தில் மாட்டிக்கொள்ளக் கருதுவானேன். அப்பால் கண்ணீர் சொரிந்து கலங்குவானேன். எரியும் நெருப்பை எடுத்து முடிவானேன். கரிய விஷத்தைக் கண்டு குடிப்பானேன். தன் பலமும் எதிரி பலமும் எண்ணாமல் தவிக்கின்றனையே? அடா சண்டாளா! அப்பால் ஓத்திப்போடா! உன் மனதில் என்னை பெரு நெருப்பென்று நினையடா? என்னைக் கண்டால் அண்டக் கூடாத ஆலகாலமும் அஞ்சுமடா? என்னை நினைத்தால் எமனும் ஒடுங்கி அடங்குவானடா என்று கெட்டியாய்க் கூவி எட்டி நடந்தாள்.

விரதசாரணி சுதர்க்கணையிடஞ் சென்று
கீசகன் செயல் கூற, அவளச் சமா
தானஞ்செய்ய, அங்குமவன்
வந்து பிடித்தல்

இவ்வாறு அட்டதிக்கும் ஜயஸ்தம்பம் நாட்டிய பட்டாபிஷேகப் பாண்டவர் தேவியானவள் ஏசக்கேட்ட கீசகன், திடுக்கிட்டுச் சேர்ந்து, அவளை யடுத்துப் பின் சென்று, கையால் தடுத்து முன்னின்று, ஆஹா! என் ஆசைக் கனியே! உமக்குரிய காந்திருவரால் என்னுயிர் போயினும் போகட்டும். என் எண்ணம் கைகூடினாலும் கூடட்டும். உமது கருணைப் பார்வை என்மேல் நீட்டட்டும். நீர் வேண்டுமென்று நினைத்தால், எம்மையுங் காத்து உம்மையு மீத்துக்கொள்ளலாம். அப்பால் உமது சித்தம். எனது பாக்கியம் என்று கீசகன் பேசினான். அக்காலையில் வடிவேற் கண் படைத்த வண்ணப் பெண்ணானவள் வாய் வறண்டு கோபங்கொண்டு இனி இந்தப் பாதகனுக்கு எதிரில் நிற்கப்படாதென்று தூதுளங் கனிபோன்ற வாயும், முத்துப்போன்ற பல்வரிசையுமுடைய சுத

க்ஷுணதேவிக்கு எதிரேரடி, நடுங்கிய தேகமும் ஒடுங்கிய உயிருமாய், நாணமும் மானமும் நாவரட்சியுங் கொண்டு, குருச் சந்திரயோகத்திற் பொழியும் மழைபோற் கண்ணீர் விட்டு, சித்திரப்பாவைபோல் அசைவற்றுத் திகைத்துத் திகைத்துத் தேம்பி நின்று, ஓ கடுங்கோபக் கண்ணினையுடைய பட்டத்து யானைமேற் பவனிவரும் பார்த்திபன் பத்தினியாகிய தாயே! நமது பூந்தோட்டத்திற் புட்பம் பறித்துக்கொண்டு திரும்பி வரும்போது வீர கண்டை தரித்த உமது தம்பியானவன் சொல்லாத வார்த்தைகளைப் பலவாகச் சொல்லி, பொல்லாத எண்ணங் கொண்டு துரத்தினன். ஐயோ! உம்மிடத்தில் நான் ஊழியஞ் செய்ய வரும்போது நான் கொண்டிருக்கும் விரதமும், எனக்குக் காந்திருவரைவரால் உண்டாயிருக்குங் காவலும், என்னை இச்சித்தவர்க்கு உண்டாகும் இக்கட்டும், இன்னவிதம் என்று உமக்கு உறுதியாகச் சொல்லி யிருந்தேனே! இப்போது வீணாய் வாணாளழிய வழிதேடிக் கொண்ட உமது சகோதரனுக்குப் புத்திமதிகள் போதித்து, சரசசல்லாப சுரதலீலைகளைச் செய்யுந் தாசிகளை அழைத்து வந்து, அவன் தலைக்கேறிய காமத்தைத் தணித்துவையும். சத்தியந் தப்பாமற் புத்தியாயிருக்கச் செய்யும். உத்தமியாகிய நீர் முன் ஜாக்கிரதை படாமற் போனால் என் ஜாக்கிரதையில் நான் முந்தியிருப்பேன். அதனால் அவன் உயிர் சிந்திப் போய்விடும். இந்தச் சொல்லை உண்மையாக நம்பும். என்பேரிற் குற்றமில்லை. முக்காலுஞ் சொன்னேன்; சொன்னேன்; சொன்னேன் என்று கதறினாள்.

இப்படி வையம்புகழுந் தையலுரைத்த சங்கதியைக் கேட்ட சுதர்க்கணையானவள் கையை நெரித்து, வயிற்றைப் பிசைந்து, சந்திரபிம்ப முகமலர்ச்சி தளர்ந்து, கேகய பட்சி போற் கொஞ்சிப் பேசுகின்ற சொல்லுங் குழறி, மயிலுக் கொப்பான சாயலுமாறி, அன்னம்போன்ற நடையுமசைந்து, கோடை இடியைக் கேட்ட பாம்பென ஒடுங்கி, பசலைக் கொடிபோல் வாடி வதங்கி, வெதும்பி விம்மி வியர்த்து வண்ணமாமுகளை அணைத்து, கண்ணீர் துடைத்து, அம்மா! வாரும்; கிருபைக் கண்பாரும்; என்னருகில் உட்காரும்; அவன் கெட்டான் கொடிய துஷ்டன்; உம்மைத் தொட்டானா? அதற்காக நீர் பயப்பட வேண்டாம். அந்த மட்டும் பாவி கையில் அகப்படாமல் தப்பி வந்துவிட்டதே நான் செய்த பாக்கியம் என்று அருமை பாராட்டி, அந்த அழகிய சீமாட்டி அவள் மனந் தேறும்படி சில பேசிக்கொண்டிருந்தாள். அப்போது முன்னந் துரத்திக்கொண்டு வந்த காமாட்டியாகிய கீசகனானவன் பணிப் பெண்ணாகிய அம்மாலினியைப் பார்த்து, சுதர்க்கணையைப் பணிந்து, அம்மா! உம்மிடத்திற் பிரியமாய் பணி செய்ய வந்திருக்கிற இந்த வண்ணப்பெண்ணால் என் உயிர் போவது திண்ணம். எனக்கு நேரிட்ட சோபத்தை நீக்கி, ஆபத்தைக் காத்து உமது கோபத்தை மாற்றவேண்டும். அன்னையே! நமது பூந்தோட்டத்தில் இவளைக் கண்டேன். மையல் கொண்டேன். மாஞ்சோலைக் குயில் கூவ, மன்மதன் கணை தூவ, அதனால் மனம் வேவ, இந்தச் சீதேவி காலில் வீழ்ந்தேன். உடனே என்னை ஆதரிக்காமல், சீச்சீ மூதேவி என்று மூக்கத்தாலடித்து, விடவிடத்துப் பேசினாள். படபடத்தேசினாள். இவளுக்கு நாயகர் ஐந்து காந்தருவர் என்றும், அவர்கள் அந்தகற் கந்தகரென்றுங் கேள்வி. அவ்வந்தகற் கந்தகற் கந்தகன் நானென்று உமக்கு நன்ருய்த் தெரிந்திருக்கின்ற தல்லவா? அப்படியே யிருக்கட்டும். நான் ஒருவேளை அவர்களால், வீணாய் அழியப்போகின்ற தாயினும், நான் இவளுடன் கூடி இன்பமநுபவித்து, இவளுக்குச் சொந்தமான அக்கந்திருவர் கையால் இறந்து போனாலுஞ் சுகிர்தமுண்டு. ஐயையோ!! இவளைச் சேராவிடில் எப்படியும் நான் எமலோகஞ் சேருவேன். நான் இறந்தால் உமது புருஷனுடைய ராஜாங்க முழுவதும் பறக்கும். பகைஞர்கள் மேலிடுவார்கள். பார்த்தோருக்குக் கேலியாம். என்னுடன் பிறந்த உமது தாலிக்கு நித்தியகண்டஞ் சம்பவிக்கும். ஆகையால், நீர் இவளுக்குத் தெரியப்படச் சொல்லி என்னுடன் இணங்கி வாழச் செய்வீராகில் உமது மங்கிலியந் தீர்க்கமங்கிலியமாம். நல்ல செல்வங்களை யநுபவிக்கலாம். இந்த விராடராஜனது அரசாக்ஷிக்குத் தாழ்ச்சி வராது. நானிப்போது இவ்விரதசாரணிமேற் கொண்டிருக்கின்ற மோகதாபத்திற்கு முடிவு என்னுயிரேயன்றி வேறில்லை. இவளைக் கண்டது முதல் எனக்கு மற்றோர் விவகாரத்திலும், மற்றோர் விநோதத்திலும், எனது மனஞ் சிறிதும் செல்லவதில்லை. ஆதலால், நான் இன்னுஞ் சில நாளைக்கு இருக்கும்படியாகக் கிருபை செய்தருளுஞ் சகோதரியே யென்று சுதர்க்கணை பாதத்தைத் தொழுதான்.

### சுதர்க்கணை கீசகனைச் சினந்து கண்டிக்க, அவனவளுக்குச் சில நயபயங்காட்டிக் கெஞ்சுதல்

இவ்வாறு மிகுந்த வணக்கமாகப் பணிந்து வேண்டிக் கொண்ட கீசகன் முகத்தை நெருப்பைப்போற் பார்த்து, அவனுக்கிடங் கொடுக்காமல் அதட்டி, ஆமடா வென்று கறுவி, அடா தோஷி! என்ன பேச்சுச் சொன்னாய்? அடா பாவி! ஹரி! ஹரி! என்று இரண்டு காதையும் பொத்திக்கொண்டு, மானம் பெரிது என்று மதித்தவருக்குப் பிராணன் துரும்பென்று மதியூகிகள் எண்ணுவார்கள். புத்தியீனர்களோ பிராணனைப் பொருளாக நினைத்து மானங்கெட வயிறு வளர்த்து, அப்பிராணனைச் சில நாளில் இழந்துவிட்டு, மண்ணுள்ள வரைக்கும் வசையினிலழிந்து, விண்ணுள்ள வரைக்கும் மிகு நரகழிந்து, வேறு வேறு யோனியிற் பிறந்து, மாறுமாறு யலைந்து, வீரமழிந்து, சங்கடப் படுவார்கள். ஐயோ! துரோகி! இந்த சைரந்திரியானவள் என்னிடத்தில் வரும்பொழுது தனக்கு மானக்கேடு வாராமற் பெற்ற தாய்போற் காப்பாற்ற வேண்டுமென்றும், தன்னை யாரேனுஞ் சிந்தித்து நிந்திப்பாராகில் அந்திவண்ணனருளாற் றனக்கு நாயகராகிய கந்திருவரால் அநர்த்தம் விளையுமென்றும், தான் ஒரு காரணத்தின் பொருட்டுச் சில நாள் கழிக்கவேண்டுமென்றும், உனக்கு நான் அடைக்கலமென்றுஞ் சொன்னாள். நானும் அவ்வாறே வாக்குத் தத்தம் பண்ணி, விராடராஜன் முதலிய வேந்தர்களாலும் மற்ற மாந்தர்களாலும் பொல்லாங்கு வரவொட்டாமல், பெண் பழி பெண் தோஷம் பேச வொட்டாமல், என் கருப்பத்தில் வைத்துக் காப்பதுபோல் இது வரையிலுங் கண்ணுண்டாயப் பார்த்து வந்தேன். அடா துரோகி! நீ என் கட்டுக் காவலையுமழித்து, என் பெயரையுங் கெடுத்து, எங்களை நடுத்தெருவில் விடுத்து, உனது உயிரை நமனுக்குக்கொடுத்து விராடராஜனது செங்கோலையுங் கொடுங்கோலாக்கி, நிஷ்டூரத்தாற் கஷ்டப்படும் மார்க்கத்தை இலேசாகத் தேடிக்கொண்டாய். அடா தீவினையாளா! ஈதுனக்கழகல்லவே; இஃதோர் பிவல்லவே; என் சொல்லை நம்பிப் பேசாமற் போய்விட்டா தம்பி! இந்தப் பெண்ணணங்குக் கண்ணாகிய காந்திருவர்கள் கருடனுக்குங் காற்றுக்கும் மேலான வேகமுள்ளவர்களாம். வருணனுக்குந் தேவேந்திரனுக்கும் மேற்பட்ட வல்லமையுள்ளவர்களாம். அக்கினியையுஞ் சூரியனையும் பழிக்குங் காந்தியுடையவர்களாம். அவர்களுடைய கோபாவேசத்திற்கு மூன்றுலோகமுந் தாங்கமாட்டாவாம். இந்த விர்த்தாந்தங்களை நான் முன்னடி அறிந்திருக்கின்றேன். நீ பிழைக்க மனதுள்ளவனாகில், இப்பெண்மேற் கொண்ட மோகத்தைக் கனவிலும் நினையாமல் மறந்துவிடு. மறவாவிடில் வீணே கெட்டழிந்து போவாய். ஆ! பழிகாரா என்று சுதர்க்கணை கண்டித்துச் சொன்னாள்.

அம்மொழியைக் கேட்ட கீசகன் விந்தையாகச் சிரித்து, சிந்தைநொந் துருத்து, என் தந்தைக் கொப்பாகிய தமக்கையாரே! என் வல்லமை தெரிந்துந் தெரியாதவர்போற் பேசுகிறீர். அவ்வளவு பலவான்களாகிய கந்திருவர் பதினாயிரம்பேர் ஒன்றாகத் திரண்டு வரினும், என்னோடெதிர்த்து என்னைப் பகைத்து வெல்வார்களோ? நான் ஒருவருக்குப் பயந்தவனோ? அவர்களைப் பஞ்சுபோலடித்து, எமலோகம் நோக்கப் பறக்க விடுத்து, இவள் இதழைக் கடித்து, இன்பரசங் குடித்து, என்னெண்ண முடித்து, உம்மெதிரில் நகைத்து உலாவி விளையாடப் போகின்ற என்னை துன்பப்பட்டு இறப்பாய் என்று நீர் சொல்லியது என்ன பேதை மதியோ? பெரியவள் என்னப் பெயர் வைத்துக்கொண்டீரே; போம்; போம் என்று நொடித்துப் பின்னுஞ் சொல்லுகிறான்: நல்லதம்மா! அஃதப்படியே யிருக்கட்டும்; நீர் பெண்ணாகப் பிறந்திருந்தும், எனக்குத் தமக்கையென்னப் பேர் பெற்றிருந்தும், மனை வாழ்க்கையில் நன்றாய்ச் சிறந்தும், பெண்களுக்கு வேண்டிய பிரதான காரியங்களில் ஒன்றாயினும் உமக்குத் தெரியவில்லையே; உலகிலுள்ள பெண்களின் குணாதிசயத்தையும் அந்தரங்க ரகசியத்தை நீர் அறியாமற் பேசினீரே; ஸ்திரீகளின் சுபாவகுணம் என்னவெனில், கைநிறைந்த பொன்னிலுங் கண்ணிறைந்த கணவனே போதும் என்று எண்ணுவார்கள். அன்றியும், பெற்றவனானாலும், கூடப்பிறந்தவனானாலும், தான் பெற்ற பிள்ளையானாலும், சௌந்தரியமா யிருந்தால் முறை பாராட்டாமல் மோகங் கொள்ளுவார்கள். அழகிலும், இனிய மொழியிலும், பருவத்திலும், உருவத்திலும், சங்கீத சாகித்தியத்திலும், எல்லாராலு மதிக்கத்தக்க நாயகன் வாய்த்திருந்தாலும், அம்மான் பிள்ளை

அத்தை பிள்ளையா யிருந்தாலும், அப்படிப் பட்டவர்கள்மே லாசையைவிட்டு, அந்நிய புருஷர்கள் பேரி லிச்சைப்படுவது பெண் ணுருவாய்த் தோன்றிய பேதமையோருக் கியற்கையென்று பெரியோர்கள் பேசி யிருக் கின்றார்கள். அஃதெப்படி யென்றால், 'தந்தை யாயினும் விழைவிற் றன்னுடனே யொரு வயிற்றிற் சார்ந்தாரேனும், மைந்த ராயினு மிகவும் வனப்புடைய ரெனிலவர்மேன்மட நல்லார்தஞ், சிந்தை நடந்திடுமதனாற் செய்ய மலர்க் கணைவேளிற் செவ்வி வாய்ந்தோன், பைந்தொடியா ரினிதமரு மகத்தினிடைத் தனிவருதல் பான்மையன்றே.' என்றும், 'ஏந் தெழின் மிக்காளையா னிசைவல்லான், காந் தையர்கண்கவருங் காட்சியான்-வாய்ந்த, நய னுடையின் சொல்லான் கேளெனினு மாதர்க், கயலார்மேலாகு மனம்.' என்று மிருப்பதால் ஸ்திரீகள் விசுவஸ்தை யற்றவர்களென்றும், ஸ்திரீகளை நம்பப்படா தென்றுஞ் செப்பி யிருக்கின்றார்கள். மேலும், அத்திமலரு மருங் காக்கை வெண்ணிறமும், கத்துபுனன் மீன் பதமுங் கண்டாலும்-பித்தரே, காணார் தெரியற் கடவுளருங் காண்பரோ, மாணார் விழியார் மனம்.' என்னுந் தன்மையால், நீர் இவளுக் கிப்போது நல்ல புத்திமதியைப் போதித்து, என்னைக் கலந்து இன்புறச்செய்விப்பது உமக் குரிய கடமை யென்று கெஞ்சினான்.

### கீசகன் சுதற்கணையாற் கடிந்து துறத்தப்பட்டு தன் மாளிகை சென்று விரகநோயாற் றவிக்க தாதியருபசரித்தல்.

இவ்வாறு கெஞ்சிய கீசகனைச் சுதர்க் கணை நோக்கி, அடா பஞ்சமாபாதகா! கொஞ்சமேனும் நாணமில்லாமல், பக்கத்தி லிருக்கும் பாங்கிப் பெண்களையும் பாராமல், என்னிடத்தில் இந்தப் பேச்சைப் பேசலாம் பேசப்படாதென்றும் யோசிக்காமல், துணிந்து பேசினையன்றோ? நீ யென்னகதி யடைவாயோ? எப்பாடுபடுவாயோ? சைரந்திரிமேற் கொண்ட மோகாக்கினியில் தனக்குத்தானே வீழ்ந்திருக்கின்ற விட்டிற்பூச்சிபோல் ஆவாயோ? நீயும் உன்னைச் சார்ந்தோரும் எவ்வாறுவீர்களோ? பசிக்குப் பனம்பழந் தின்னப் பார்க்காதே துஷ்ட காரியங்களைத் தொடங்கி கெட்டுப்போவார்கள் கோடாகோடி யுண்டு. அடா மட்டி! என்னுடன் பிறந்தவர்கள் நூற் றைந்துபேர் என்னுங் கணக்கு இன்றைக்கு ஒழிந்தது. குட்டாயிருந்த கட்டுந் தளர்ந்தது. காவலழிந்தது. போங்கால மாச்சுது. சாவுங் காலம் வாய்ச்சுது. இப்போது உன்னை இழந் தவளாயினேன். இனி என் தலைவாசலை மிதிக் காதே. எனக்கெதிரில் நிற்காதே. நீ செத்தா லும் நான் முகத்தில் விழியேன். அடாத பகைக்காரா! இந்நிமிடத்தில் அப்பாற்போடா வென்று அதட்டினாள். அப்போது பாவபுண் ணியமெண்ணிப் பாராத பாவியாகிய கீசகன் கோபமேலிட்டுக் கொதித்து, சோபதாபத்து டன் தன் மாளிகைக்குப் போனான். அப்படி போகும்போதே சுரமும்-குளிரும் - சோம்ப லும்-ஏம்பலும்-தேம்பலும்-திகிலு முடையவ னாய், ஆ! ஆ! பணிப்பெண்ணான பாதகி! என் னைக் கெடுத்தாயே; 'பாம்பின் வாய்ப்பட்ட தேரையாக்கினையே என்று பரிதாபமடைந்து மூச்சுத் திணறிப் பதைபதைத்தான். அந்த வேளையில் மன்மதன் பிரவேசித்து, இது நல்ல தருணமென்று இடைக்கொள்ளைக் காரனைப் போல்முல்லை-அசோகு-நீலோற்பலம்-மாம்பூ-தாமரையென்னும் பஞ்சபாணத்தை எடுத்து, கொஞ்சமேனும் நெஞ்சிரக்கமின்றி தொடுத் தான். அதனாற் கீசகன் சிந்தையழிந்து செயல் வேறுபட்டு தட்டுக்கெட்டு தலைதடுமாறி, மெத் தையின்மீது பொத்தென வீழ்ந்து, ஐயோ வென்னும் அவச்சொல் மிகுந்து, அரண்டு புரண்டு அவஸ்தைப் படும்பொழுது தாதியர் கூடிச் சயித்தியோபசாரஞ் செய்தார்கள்.

அவர்கள் எத்தனைவித உபசாரம் பண் ணியும் அத்தனையும் அவனுக்கு வெறுப்பாய் இருந்ததால், ஐயோ! இந்த மலரணை வெதுப் புறுதே; வாசப்பன்னீர் கொதிக்குதே; சந்தன சேறு தணல்போல் தகிக்குதே; அடி சிறுக்கி களா! நீங்கள் எல்லோரும் பெண்ணாகையால், ஒன்றாய்ச் சேர்ந்துகொண்டு என்னைப் புண் ணாக்கவோ? அன்றி மண்ணாக்கவோ? பாலை நிலத்தின் நெருப்பை மெத்தையென்று பரப்பி வைத்தீர்களே; சிற்றாலவட்டம் - பேரால வட்டம் - பொன்னாலவட்டம் - பூவாலவட்டம் என்று விதவிதமாய்ச் சொல்லி வீசுகின்றீர் களே; இந்த ஆலவட்டக்காற்றும், சாளரத்திற் புகுந்து பெரும்புலிபோற் பாய்ந்து வருகின்ற தென்றலும் வாசுகி முதலாகிய பாம்புகளின் விஷக்காற்றைப்போல் என்னுடலையும் வாட் டுதே; ஓசைப்பட்டு ஒலிப்பதென்ன கடலோ? அந்தக் கடலுக்கு என்மேலென்ன அடலோ? இளஞ்சந்திரன் காயுதே இதென்ன வடவைத் தீயின் வார்தையோ? கோடைக் காச்சலின்

சூரிய வேதையோ? இந்த மாலைப்பொழுது வந்ததென்ன காளவிஷக் கறுப்போ? மகாதேவனுடைய நெற்றிக்கண் ணெருப்போ? இரவுமுடி எத்தனை காலமாச்சோ? பொழுது விடியாமல் இருக்கும்படியாய்ப் பெண்கள் கூறி விட்ட சாபப்பேச்சோ? வண்ணப்பெண் முகச்சாயல் வந்து பாயுதோ? மதிதான் எழுந்து காயுதோ? நித்திரை பிடியாதது சித்தப்பிரமையோ? நெடுமூச்செறிவது மோகச்சிரமையோ? கண்ணெதிர்ப் படுவது கண்ட வாசனையோ? கருத்திற் செல்வது காமவேதனையோ? அல்லதவள் கடைக்கண் சோதனையோ? அம்மம்மா!! அவள் குரலோ குயில்போற் கூவி பேசுவது. அவள் மொழியோ கிளிபோற்றூறிப் பேசுவது. என்னை மோகப்பேய் பிடித்துத் தலை சுற்றியாட்டுதே. காமச்சோகபாசங் காலனாருக்கு ஓட்டுதே. அடி தோழிகளே! அங்கே பேசுவதாரடி? பஞ்சவர்னக் கிளியோ? கொஞ்சும் பணிப்பெண் ணொளியோ? அவ்விடத்தில் அசைந்து நடப்பது அன்னமோ? இவ்விடத்தில் இசைந்து நடப்பது விரதசாரணியாகிய சொன்னமோ? என்று அன்றிரவு முழுதும் அவன் பட்டபாடு மற்றியார் படுவார்கள்? ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்விதமாக விபரீதம் விளைந்த சமயத்தில் ஊழியப்பெண்கள் யாவருஞ் சேர்ந்து, ஐயோ! ஈதென்ன அனியாயமென்று பயந்து சந்தன பாளித குங்கும பங்கஜ பராகங்களைக் கலந்து அவன் தேகத்தில் தெளித்து, தாமரைக் கொழுந்து-முத்துச்சரம் - வாழைக்குருத்து இவை முதலிய சீதள வஸ்துக்களினால் படுக்கை விரித்துப் பக்குவம் பண்ணினார்கள். அத்தனையும் அவனுக்கு ஒத்துக்கொள்ளாமல் மெத்த வருத்தப்பட்டு, ஐயோ! எரியுதே; மேனி பொரியுதே; கண்ணீர் சொரியுதே; கைகால் எரியுதே; கண்களிருளுதே; கருத்து மருளுதே; கட்டுவிட்டுப் போகுதே; தட்டுகெட்டு மாறுதே; நாவும் உலர்ந்துதே; நாபியோ வரண்டுதே; செவியு மடைக்குதே; சிரசு முடைக்குதே என்று கதறிக்கொண் டிருக்கும்பொழுதே பேச்சடங்கிப் போயிற்று.

### கீசகன் மரணமூர்ச்சை யடையக்கண்ட தாதியர் சுதர்க்கணைபால் முறையிட்டு விரதசாரணியை யனுப்பும்படி பலாத்காரஞ் செய்தல்.

அப்போது பக்கத்திலிருந்த பத்தினிமார்களும் பாங்கியரும் பார்த்து, ஆச்சுது பெருமூச்சு வாய்ச்சுது, பேச்சுது போச்சுது பிழைமோசமாச்சுது என்று காச்சுமூச்செனக்கதறி, இனிமேல் நாம் சும்மாவிருப்பது காரியமல்லவென்று பதறி பாவி படும்பாடு இவ்வண்ண முடிந்ததே யென்று கண்ணீர் விட்டழுது, தெய்வத்தைத் தொழுது, இவனினைத்த நினைப்புப் பழுது, ஆதலால் இது சொற்பமாகப் போகத்தக்கதல்லவென்று பற்பலவாகப் பேசி அப்பாலியாவருந் தங்கள்பேரிற் பழிசாராமல் எஜமானிக்கறிக்கையிட வேண்டுமென்று காற்பதறவோடி, இராஜ பத்தினியாகிய சுதர்க்கணையைப் பணிந்து, ஓ குலக்கொடியே! தேவரீர் கோபித்துக்கொண்ட கடுமையினாற் கூசாமற் சென்ற கீசகராஜன் படுக்கைமேல் வீழ்ந்து, காமத்தீயாற் கருகி மோகக்காற்றால் மொத்துண்டு, பித்தலும் பிதற்றலு முடையவராய்ச் சிந்தைவாடி தியங்கி வருந்தி, தலையெடுக்க மாட்டாமல் தன்னை மறந்து, அரட்டலும் புரட்டலுங் கொண்டு அயர்ந்து போய் விட்டார். எங்களாற் கூடிய உபசாரமெல்லாஞ் செய்து பார்த்தோம். ஏதேது? தேறுவதாய்க் காணோம். காமக்கடலூடழுந்திப் போனார். இனிக் கரை யேறுவாரென்று கனவிலும் நினைக்க வேண்டியதில்லை. ஆனால் உடன்பிறப் பென்னுங் கருணை பெருகி, அதனால் உமதுள்ள முருகி, ஜீவகாருண்யஞ் செய்ய இரங்குவீராகில் இன்னுஞ் சில நாளைக்குக் கீசகராஜ னிருப்பாரென்று ஒருவாறெண்ணலாம். அவருயிர் பெற்றால் மாத்திரந்தான் விராட நகர்ப்புரிசையும், நமது வாழ்க்கையாம் வரிசையும் குறைவுபடாமற் கண்டு மகிழலாகும். எங்களைப்போன்ற ஏழைகுடும்பங்களுங் காலங் கழிக்கலாம். அப்படிக் கில்லாவிட்டால், கீசகருக்கு நேரிட்ட கெடுதி வெளிப்பட்டவுடனே பகைவர் மேலிடுவார்கள். நானாவித விரோதங்களும் விளையும். அதனால், நமது மச்ச நாட்டின் வட்டமும், பச்சைக்கொடி நாட்டிய பட்டமும் போம். அப்பால் உங்களை அண்டிய நாங்கள் பிச்சை எடுத்துப் பிழைக்க நேரிடும். ஓ கொச்சைமொழி மானே! இனிமேல் வினைச்செயல் எப்படியோ அறியோம் என்று கையை நெரித்துக் கண்ணீர் விடுத்து, சுதர்க்கணையின் கால்மேற் படுத்துக் கதறிப் பதறி அழுதார்கள்.

அப்படி கண் கலங்கிய பாங்கியரைச் சுதர்க்கணை பார்த்து, சங்கதி என்னடியென்று

கேட்டாள். அப்போது அவ்விடம் நின்ற தோழிமார், அம்மா! பின்னையொன்றுமில்லை. நம்மிடத்து வந்திருக்கும் கருங்குவளைக் கண்ணளாகிய வண்ணப் பெண்ணென்னும் நுண்ணிடையாளை எப்பாடு பட்டாகிலும் வசப்படுத்திக் கீசகரிடத்தில் அனுப்புவீராகில், அவர் கொண்ட வெறியும், கடுங்காதற் குறியும் தனக்குத்தானே தணிந்து போய்விடும். போன பிராணனும் மீளும். அவர் மனைவியர்களும் மங்கிலியத்தோடிருப்பார்கள். இப்படிப்பட்ட ஆபத்து எப்பொழுதும் வந்ததில்லை. இப்போது நேரிட்ட இந்தத் தத்துக்குத் தப்பிப் பிழைக்கும்படி நீரே சாந்திசெய்ய வேண்டும். ஓ ஏந்திழையே! இந்த வேளை நீர் இரங்காமற்போனால், இப்பவோ இன்னுஞ் சற்று நேரத்திலேயோ? பொழுது விடியும் காலத்திலேயோ? கீசகருயிர் நாசமடைந்து போம். ஊழியராகிய எங்கள்மேல் தோஷஞ் சொல்ல வேண்டாம். எங்களால் உபசரிக்க வேறு வழியுமில்லை என்பதாய்ப் பாங்கியர் உரைத்த பசப்பு வார்த்தையைச் சுதர்க்கணை கேட்டு, ஓ தோழிமார்களே! ஆசைப்பட்ட பாவியாவது வேறு பெண்கள்மேல் ஆசைப்படலாகாதா? ஐயோ! மோசம் வந்ததே? கந்திருவர் காவலிலடங்கிய தெய்வப் பெண்ணை நான் எப்படி வசப்படுத்தி யனுப்புவது? அப்படி செய்வது நன்மையல்லவே? ஒரு வேளை அனுப்பி வைத்தால், மோகாந்தகனாகிய பாவி மேல் விழுந்து தொந்தரை செய்வானாகில், இந்நாடும் - நகரமும் - குலமும் - கோத்திரமும் - குடியும் - படையும் - குன்றி போய்விடுமே; நானென்ன செய்வேன்? ஓ என் சகிமாரே! கெடுவழியிற் பிரவேசிக்கலாகாதே; என் மனதிற்குச் சஞ்சலமென்னுந் தணலை மூட்டினீர்களே என்று முகத்திலும் வயிற்றிலும் அறைந்துகொண்டு கலாபமயில்போல் அசைந்து கலங்கினாள்.

அப்பொழுது வஞ்சகனாகிய கீசகனுடைய தாதிமார் இராஜவஞ்சியை நோக்கி, அம்மா! நீர் ஏன் அஞ்சுகிறீர்? பெண்ணென்பவரெல்லாம் ஒன்றே. நாமெல்லாம் ஸ்திரீயினமே. மானமென்பது யாவருக்குயன்றி வேறல்ல. கீர்த்தி அபகீர்த்தி எவர்கட்கு முள்ளதே. இந்த விஷயத்தைக் குறித்து உமக்கும் உம்முடைய நாயகனுக்கும் பொல்லாங்கு நேரிடுமாகில், எங்களுக்குத் துன்பமுந் துயரும் இல்லாமற் போமோ? நீங்கள் நன்மையாயிருந்தாலல்லவோ எங்களுக்குச் சௌக்கியமுண்டு. நாங்கள் கீசகர் பக்கத்தில் நீங்காமலிருக்கும்போது, வேறு வித்தியாசம் விளையுமென்று நினைக்கின்றீரா? அப்படி நினையாதீர்? எங்கள் உயிரைவிட்டாலும் விடுவோமேயொழிய, அபகீர்த்திக் காளாகமாட்டோம். அவருடைய அக்கிரமத்துக்கு இடங்கொடுக்கமாட்டோம். எங்கள் பேச்சை நீர் சத்தியமாய் நம்பும். நாங்கள் செய்யப்போகிற தந்திரத்தைக் கேளும். இந்த விரதசாரணியை அழைத்துப்போய் அவர் முன்னே நிறுத்தி, இவளைச் சுற்றிலும் நாங்கள் நின்றுகொண்டு, இதோ வந்தாள் வண்ணமாதென்போம். இச்சொல் அவர்செவியில் விழுந்தவுடனே மோகினியைக் கண்ட முனிபோல் எழுந்து, இவளுடைய கால்மேற் பணிந்து, கண்ணே! பெண்ணே என்று புலம்பிக் கதறுவார். காமவேஷ்டையால் பதறுவார். அண்டையில் இருக்கின்ற நாங்கள் இவரைத் தடுத்து, ஐயா! உமது உடம்பு கசங்கி அசங்கியப்பட்டிருப்பதினால் ஸ்நானஞ் செய்து, சந்தனம் - புனுகு - சவ்வாது - பனிநீர் - சாந்து - கதம்பம் - கலவை இவைகளைத் திமிர்ந்து, போஜனமுண்டு, தாம்பூலந் தரித்து, ஆபரணவலங்காரத்துடன் அடுத்து பழுவர்க்கங்களும், பட்டு பட்டாவளியும், புட்பச்செண்டுங் கொண்டு இந்தப் பெண்ணுக்குக் கொடுத்து, உல்லாசப்படுத்திச் சல்லாபமாய்ப் பூமேலேற்றித் தேற்றி, உடனே இந்தச் சைரந்திரியை உம்மிடத்திற் கனுப்பி விடுகிறோம். அம்மா! பெருநெருப்பை ஈமொய்க்குமா? இரும்பைச் செல்லரிக்குமா? எவ்வளவும் வித்தியாசமெண்ணாதீர் என்று உறுதியாய்ச் சொன்னார்கள்.

இவ்வாறு ஸ்திரமாய்ப் பேசிய சேடியரைச் சுதர்க்கணைப் பார்த்து, ஆமடி என் பெண்களே! நீங்கள் சொல்லுவது பக்குவந்தான். இவ்வாறு நடந்தால் எவருக்குந் தோஷமில்லை. ஒருவேளை கரைபுரண்ட வெள்ளம் அணைகடந்துபோனால் எப்படி? நீங்கள்தான் என்ன செய்வீர்கள்? நான் பாவியாய்ப் பழிகாரியாய் விடுவேனே. அன்றியும், கட்குடியன் - காமுகன் - பொய்யன் - பொறாமைக்காரன் - புறங்கூறுபவன் - கள்ளன் - ஊராருடைமைக் குலைவைத்திருப்பவன் - வறியன் - மூடன் முதலிய இவர்களுக்கு, சத்தியம் - சவுசம் - ஆசாரம் - சாந்தம் - தன்மை - உண்மை - ஆணை - ஆக்கினை இவைகளில் ஒன்றுமிராதே. இப்படிப்

பட்ட மூடர்கள் சற்றும் யோசிக்கமாட்டார்களே; மோகக் காற்றுங் காமத்தீயும் முழுகி வரும்பொழுது கைகொண்டு மறிக்கப்போமோ? அஃது வேறென்றாற் கட்டுப்படுமோ என்று கருமந் தவறாத சுதர்க்கணையானவள் சொல்லும்போது, அந்தக் கீசகனிடத்தினின்று வேறு சில தாதியரோடி வந்து, ஐயோ! அப்பா! எப்படி என் செய்வோம்! ஓ மைப்படிந்த கண்ணுளான மதனரதியே! உன் பேரி லாணைப்படிக்குக் கீசகர் முடியப் போகிறார். காலங் கிட்டிவிட்டது. ஜாலம் பண்ணாமல் இந்தச் சைரந்திரியை அனுப்பிவிடும். ஆபத்திற்குப் பாவமில்லை. இத் தருணத்தில் நீர் அவரைக் காக்கவேண்டும். இந்தம்மாள் பேரில் அவர் கைப்படவொட்டாமற் செய்து, இவள் பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றி, உங்கள் சத்தியத்தையுங் கீர்த்தியையுந் தழைக்கப் பார்க்கிறோம். இல்லாவிட்டால், அவர் கொண்டிருக்கிற மோகலாகிரி எம்மனோராற் றீர்க்கத் தகுந்ததா யில்லை. நாங்க ளுபகரிக்குந்தோறும் அவர் கொண்டிருக்கிற விரகதாபாக்கினியானது அழலில் நெய் சொரிந்தது போல் அதிகரிக்கின்றது. ஆதலால், விரைவிற் கிருபை புரியுமென்று பல்லைக்காட்டிக் கெஞ்சினார்கள்.

### விரதசாரணியைக் கீசகனைக் கண்டு வரும்படி சுதர்க்கணை வருந்திப் பணிந்து கேட்டுக்கொள்ளுதல்

இவ்விதமாக அத்தாதியர் பட்ட பரிதாபத்தைப் பார்த்த சுதர்க்கணையானவள் காலகதியாற் கருத்து மயங்கி, ஊழ்வினை வசத்தால் உணர்வு மழிந்து, அந்தோ! அடா பாவி கீசகா! பாசா வேசங்களாகிய ஐம்புலாதிகளின் சேட்டை யறிந்து கேட்டை யொழிந்து தேறித் தெளிந்த பாக்கியவான்களின் வாக்கியங்களைக் கற்றும், யோக்கியமாகக் கேட்டும், இன்னும் தெளியாமற் போயினையே; மன்மத வேதமார்க்க மகிமையும் பார்த்திலையே; கேடு வரும்போது மதிகெட்டு வருமென்பதுபோல் நாசம் வரும்போது ஞானமும் உண்மையுங் கெட்டு, எல்லா நன்மையும் விட்டுப்போமே; மழைக்கா லிருட்டானலு மந்தி கொம்புவிட்டுக் கொம்பு பாயுமா? புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமோ? சிங்கஞ் சிறுத்தாலும் பங்கப்படுமோ? சிறு சிங்கமானாலும் யானை மாமிசமின்றி வேறு மாமிசந் தீண்டுமோ என்று அழுது, (தானுடர்விட்டாலும் தன் சந்தையா டும்) என்னும் பழமொழிக் கிணங்கச் சகோதர பாசத்தால் வியாகூலப்பட்டு, நெஞ்சு புண்ணுக் கொட்டிய பஞ்சுபோற் படிந்து, கண்மாரி சொரிந்து, தன் அருகில் வந்த பணிப்பெண் கால்மேல் வணங்கி, ஓ பதிவிரதா சிரோமணீ! திருந்திய குலத்திற் பிறந்து அருந்ததியினுஞ் சிறந்த தேவரீர் சிறிது கடைக்கண்ணருள் செய்வீராகில், எங்கள் செங்கோலும், வாழ்வும், நீதியும், நெறியும், சீரும், சிறப்பும் குறைவுபடாது. தேவரீர் கிருபை செய்யாவிட்டால், எங்களரசுரிமை முதலிய யாவும் அழிந்து போய்விடும். எங்கள் தலைமேல் இடி விழுவதற்கு உமது வாய்மொழியைப் பார்த்துக்கொண் டிருக்கின்றது. நீர் ஆமென்று ஒப்புக்கொண்டால் நாங்கள் பிழைப்பதற்கு இடமுண்டாகும். நீர் ஒத்துக்கொள்ளாவிடில் நாங்கள் அடியோடழிந்து போகும்படியாய் நேரிடும். ஓ பூரணச் செல்வியே! நான் பேசப்போகிற வசனத்தைப் பொறுமையுடன் கேட்டருளுமென்று விராடராஜன் பத்தினி சொல்லத் துணிந்தாள்.

ஓ என்னுயிர்க்கு உயிராகிய துணைவியே! எனக்குத் தம்பி யென்று பிறந்த வம்பன் அறிவில்லாச் சிறுவனாகையால், மன்வுறுதியில்லாமல் மதனவெறியேறிப் போனானும். மதிமயங்கி பிணமானானும். இதுவரையினும் உயிரிருக்கிறதோ இல்லையோவென்று தாதியரோடிவந்து சேதி சொன்னார்கள். மூவாசையொழித்த முதியோர்களையும் பெண்ணாசை விடாது. பிரபஞ்ச மாயை யென்பது இது தான். நான் மகா பாபியாயினேன். நீ றென்பேரிற் கோபியாதிரும். உமது விரதங் குறையாமல் தாதியர் மெத்தப் பிரயாசைப்படுவோமென்று எனக்குச் சத்தியவசனஞ் சொன்னார்கள். அப்படிச் சொன்னபோதிலும், படாடம்பனான கீசகன் அடாத காரியமாக உம்மை நாடி யாசைப்பட்டது அநியாயம். ஆகிலும் உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். ஆபத்துக் காலத்திற் கிரங்கி, அடியேன் முகத்தைப் பார்த்து, என் மனச்சஞ்சலத்தையும் அவன் படுகிற துன்பத்தையும் போக்கும்வகையை நீர் யோசிக்கவேண்டும். உமது கற்புக்கும் பழுது வராமல், என்னையும் புனிதவதியாக்கி, அவனும் பிழைக்கும்படி கிருபை செய்தருளும். நீர் இவ்வளவு ஜீவகாருண்யம் வைத்து எங்களை ரட்சிப்பீராகில் உமது குலமும்-கோத்திரமும்-குணமும் - நீர் கொண்டிருக்கிற நோன்பும் -

குறைவுறாமல் மேன்மேலும் விருத்தியாகும். உலகுள்ள மட்டும் உமது மகத்துவம் நிலை நிற்கும். எங்கள் நூற்றைந்து பேரையும் பெற்று வளர்த்த தாயென்று நாங்கள் கொண்டாடுவதுமன்றி, உலகத்தாரும் புகழ்ந்து மகிழ்ந்து வாழ்த்துவார்கள். தினமுந் திருவிளக்கேற்றிவைத்து, எங்கள் குலதெய்வமென்று உம்மைக் கும்பிடுவேன். ஓ தீனரக்ஷகி! உமது பத்தினி தவத்தில் பங்கம் வரும்படியாகப் பார்க்கமாட்டேன். நானும்மை நம்பினேன் எனக்கொருவருந் துணையில்லை என்றுசொல்லி கெதியில்லாத அடியாளுக்கு உமதிரண்டு பாதமே கெதியென்று பணிந்து, இரண்டு காலையும் பிடித்துக்கொண்டு, அம்மா! துணிந்து நானொரு யுக்தி நினைந்திருக்கின்றேன். அது உமது சித்தத்திற் கெப்படியிருக்குமோ தெரிகிலேன். சிறியாளாகிய என் மொழியைச் சிந்தையிற்கொண் டருளவேண்டும். அஃதென்னவென்றால், நாசகால வழிமை நாடி மோசம்போய்க் கிடக்கின்ற கீசகனிடத்திற்கு நீர் போய், வாசப் பூமாலையுந் தேனும் உன் தமக்கை வரிசை யனுப்பினாளென்று கொடுத்து வருவீராகில், என்னிஷ்டம் உம்மைவிட் டெப்பொழுது மகலாது என்று அதிக வருத்தத்தோடுரைத்தும் இந்த உத்தமியை யனுப்புவதற்குச் சற்று மனமில்லாதவளாய்க் கவலை கொண்டிருந்தாள்.

இத்தன்மையாகச் சொல்லிய விராடன் மனைவியைக் கற்புக்கணியாகிய பாஞ்சாலியானவள் நோக்கி, ஓ என்னை யாதரிக்கத் துணிந்த அன்னையே! உம்முடைய தம்பியாகிய கீசகன் அற்ப விஷயத்திற் காசைப்பட்டுப் பூந்தோட்டத்திலிருந்து என்னைத் துரத்திக்கொண்டு வந்தபோது நீர் கடுமையாக பேசிய வார்த்தையாற் கொல்லத்தக்க பகைகொண்டு போனான். அவனுடைய கருத்து உமக்கு நன்றாய்த் தெரிந்திருந்தும், அந்த இடத்திற்குப் போவென் றெவ்வாறு சொல்லுகிறீர்? அவனிடத்திற் கென்னை யனுப்ப நினைப்பது, உமது மேலான புத்திக் கழகல்லவே; நானும்மிடத்தில் வந்தடுத்தபோது என்பேரி லொருவர் காதல் கொள்ளப்படாதென்றும், கொண்டால் உடனே உயிரிழக்க வேண்டுமென்றும் முன்னமே சொன்னேனே; அப்படியே குறைவு வாராமற் காக்கிறேனென்று வாக்களித்து, அது முதலிதுவரையிலுந் தளர்ச்சியின்றிக் காத்து, இப்பொழுது அந்தச் சண்டாளனிடத்திற் கனுப்புவதற்கு எப்படி யுமது மனமொப்பியதோ அறியேன். அப்படியேயாகட்டுமென்று உமது வார்த்தையைத் தள்ளாமற் போவேனாகில், அந்த வம்பன் என்னைக் கண்டவுடனே காதல்மீறிக் காமமேறிக் கைகலக்கத் துணிவானே; அப்போது நான் கண்கலங்கப் படுவேனே; அப்பால் விருதாவாய் அநர்த்தம் விளைந்துபோமே; மறந்து செத்தேன் பிராணனே வாவென்றால் வாராதே; ஆதலினால், அவனிடத்திற் கென்னையனுப்புவதை நிறுத்தி, வேறெந்த வேலைக்கனுப்பினாலும் உமது சொல்லுக்குத் தடைசொல்லேன். இந்தவேளையில் என்னை விலக்கிவிடும் என்னைப்போல் இன்னும் அநேக தாதிய ரிருக்கின்றார்கள், அந்தச் செளந்தரியவதிகளிற் சிலரை யனுப்புவது உத்தமமாயிருக்கும். என் மர்மத்தை யுமக்குச் சொன்னேன். அப்பால் உமதிஷ்டமென்று சைரந்திரி சொல்லினள். இவையனைத்துங் கேட்ட சுதர்க்கணை மீண்டும் வணங்கிச் சொல்லுகின்றாள்: ஓ விதரணைசாலி! உம்மைக் கண்டு ஆசைப்பட்டு உயிரொழியும்படியாய் உரக்கங்கொண்டு படாதபாடும் படுகிற பதிதனுக்கு மற்றொரு பெண்ணைக்கண்டு பேச இச்சையுண்டாமோ? அப்படி யல்லவென் றனுப்பினாலும் உம்மேற்கொண்ட மோகம் மற்றொரு பெண்ணால் மாறுமோ? உமதுருவங் கண்டாலும், உமது இன்சொற் கேட்டாலும், இறக்க வழிபார்க்குங் கீசகன் எழுந்திருப்பானென்று சொல்லுகின்றார்களே. ஓ என்னிஷ்டமே! நீர் பட்ட கஷ்டத்தோடு [illegible] கஷ்டமாய்ச் சென்று திரும்புவது மகா பாக்கியம். ஆதலால் நீர் நீடூழிவாழ்வீர். எங்களையும் நிலை பெறச்செய்வீர் என்று போற்றினாள்.

### விரதசாரணி கீசகனிடஞ் செல்ல, அவன் தொடக்கிட்டலும் ஓடி விராடன் சபையி லபயம் புகுதல்

இவ்விதமாக வணங்கிப் போகத் தகாத காரியத்திற்குப் போகச்சொல்லிய சுதர்க்கணையைப் பேரறிவாலும், பிசகாமொழியாலும், பெருமைவாய்ந் துயர்ந்த பாஞ்சாலி பார்த்து, ஓ மேதினிபோற்று மாதரசே! நீர் கொடிய பாதக நிமித்தமாகக் குரூர வார்த்தையைக் கூசாமற் சொன்னபடியால், உமது சொல்லைத் தள்ளக்கூடாத தாக்ஷண்யத்தின் பொருட்டுப் போகின்றேன். பின்னாலென்ன கெடுதி விளையுமோ? அதைக் குறித்து நீ என்னைக் கேட்க வேண்டியதில்லை. ஓ அன்னமே! சொன்னேன்;

சொன்னேன்; முக்காலுஞ் சொன்னேன்; என்னை வெறுக்காதேயும். அப்பால் இக்காரியத்தில் இதுவரையுந் தழைத்து விளங்கிய சுற்றத்தாருக்கும் மற்றையோருக்கும் மெத்த வருத்த மேலிடும்போ லிருக்கின்றது. (விநாச காலம் விபரீதகோலம்) என்பதை யோசிக்காமல், காலானுகூலத்திற்குத் தகுதியாய் நீருமிப்படி கட்டளையிட்டீர். அப்படியே நான் போய் வருகிறேன் என்று சொல்லி வினையின் பயனே பயனென் றெழுந்து, முத்துப்போற் கண்ணீரை முகஞ்சோர விட்டு, வாசப்பூமாலையுந் தேனுங் கைக்கொண்டு, அந்தப்புர வாசலுக்கு வெளியே வந்து நின்று, தேவேந்திரன்-வாயுதேவன்-எமதருமராஜன் - அஸ்வனி தேவர்கள்- இவ்வைவரையுந் தியானித்து, எஜமானியுத்தரவைக் கடக்கக்கூடாமையால் நாசகாலக் கீசகன் வாசஸ்தலத்தை நாடிப்போனாள். கேட்டீரோ ஜனமேஜெய மகாராஜனே! இந்தப் பாஞ்சாலி விரதசாரணியென்ன வேஷங்கொண்டு சுதர்க்கனை இடத்துக்கு வந்தபொழுது காந்திருவரைவர் தனக்குக் கணவரென்றும், மற்றவர் தன்னைத் தீண்டப்படாதென்றும், கண்ணேறிட்டுப் பார்த்தவர்கள் வெண்ணீறாய்ப்போவார்களென்றும், ஒருதரத்திற்குப் பத்துதரமாகச் சொல்லியும், மகா புத்திசாலியாகிய சுதக்ஷணாதேவி நீதிநெறி கெட்ட கீசகனிடத்திற்கு இந்தம்மாளை யனுப்பியவிதத்தை யோசிக்கும்போது, ஆசானு பாகுவைப்பெற்ற அம் மச்சராஜன் மனைவியால் யாதொரு தோஷமுமில்லை. ஜன்மாந்திர வினைவசத்தால் வந்த அநுபவத்தை யாரும் அனுபவித்தேயொழிக்கவேண்டு மன்றி, அநுபவியாமல் வெல்ல வல்லவர்களில் யாருமில்லை. முன்னே வீமன்கையால் அழிந்தவர்கள்போக, இன்னும் இக்கீசகனு முடியவேண்டிய காரணமிருப்பதினாற் பாஞ்சாலியைப் பார்த்து அவனாசைப்படவும், இவளவனிடத்திற் கனுப்பவும், சமயத்திற்குத் தக்கபடி தாதியர் சொல்லவும் நேரிட்டது. மேல் நடந்த விர்த்தாந்தத்தையுங் கேளும்: இப்பாற் புட்பமாலையுந் தேனுங் கொண்டு சென்ற திரௌபதாதேவி முந்தி நீனைத்துவந்த ஐந்து தேவருடன், சூரியன்-குபேரன்-வருணன்-உருத்திரன்-மகாவிஷ்ணு விநாயகன் - ஷண்முகன் - பிரமன் முதலான தேவர்களையும், உருத்திரை-மகாலட்சுமி-சரஸ்வதி இத்தியாதி தேவதைகளையுந் தனக்கு வந்து வழித்துணையாக வரும்படி வருந்தித் துதித்து, சத்துருசங்காரஞ் செய்யும்படிக்கு வந்தித்து, வேடன் வீசிய வலைக்குள் அகப்படப்போகின்ற மான்போற் கண்களிரண்டுமிரண்டு வெருண்டு, நான்குபுறமுந் தேங்கிப் பார்த்து இருட்டிலுண்டாகிய பயத்தினாலும், நாணத்தினாலும், விதிர் விதிர்த்து மெய் சிலிர்த்து, இராஜவீதியாகப் போய் அந்தக் கீசகனரண்மனையிற் புகுந்து, தூக்கமும் ஊக்கமும் விட்டு மெய்மறந்து அன்னபானாதிகள் கசந்து அவஸ்தையா லுள்ளடைந்து விரதசாரணியைப்போல் தனக்கெதிரில் உருவெளித் தோற்றங் கண்டு நாவரள வாய் பிதற்றிக்கொண்டு கண்டபடிக்கெல்லாம் புரண்டுருண்டு கிடக்கின்ற பேயனைக் கண்டாள்.

அப்பொழுது மோகத்தாற் சிதைந்து மோசவலையிற் புதைந்து கிடக்கின்ற கீசகன் எப்படி யிருக்கின்றானென்றால், தனக்கு அகால மிருத்துவாகப் பூங்காவில் நேரிட்ட மங்கையை நினைத்து, புன்சிரிப்பாக நகைத்து, இதோ என்பேரிற் பாசங்கொண்ட ஆசைப்பெண் வந்தாள். என்னாத்மாவை இரட்சிக்கும் அமுத சஞ்சீவி வந்தாள். ஜீவகாருணி வந்தாள். தேகபோஷகி வந்தாள். ஜீமூதமான அஞ்ஞான கேவலத்தைப் போக்கும் ஞான சொரூபி வந்தாள். சித்தசன் தொடுங்கணையை வெற்றிகொள்ள வந்தாள். ஆசைக்கடலுளமுழுந்திய நான் ஆதாரவாகப் பற்றி நீந்தி கரைசேருவதற்கு அமுதகொங்கைக் குடங் கொண்டு வந்தாள். என்னை அடிமை கொண்டாளு மங்கை வந்தாள். இருநிதிப் பொக்கிஷச் செல்வி வந்தாள். பட்டாபிஷேகத்தேவி வந்தாள். என் சீமாட்டி வந்தாள். என் கண்ணாட்டி வந்தாள். என்று சரச சந்தோஷச் சைகை காட்டித் தலையாட்டி, இன்றெனக்கு நல்லகாலம் என்னுடைய சிறுகுடிலில் நல்லவர்கள் திருவடி பெயர்த்தருளப் பெற்றேன். ஓ சைரந்திரியாகிய தனமே! தேவரீர் செங்கமலப் பாதமுஞ் சிவக்க நடந்ததோ? அடி சேடிமார்களே! ஓடி வாருங்கள் ஓடி வாருங்கள். நான்பிறந்தபிறப்பு இன்றுதான் பயன்பட்டது. இதோ என்னெண்ணப் பெண் வந்தாள். இவள் வந்தெந்நேரமாகிறது? ஒதுங்கி நிற்கவேண்டிய காரணமென்ன? உபசாரஞ் செய்து உள்ளே அழையுங்கள். வாசங் கலந்த பனிநீர் கொண்டு வாருங்கள். ஸ்நானம்பண்ணி வையுங்கள். பத்தரைமாற்றுப் பசும் பொன்னிழையிற் சித்திரித்த உத்தரியப் பட்டுடுத்துங்கள். இந்திர வானப்பட்டு-மேகவண்ணப்பட்டு-வெண்பட்டு - செம்பட்டு

இவைகளா லமைந்திருக்கிற பாவாடை ரவிக்
கையைக் கும்பிட்டுக் கொடுங்கள். முத்துமாலை-
மோகனமாலை-ஆணிப்பொன்மாலை - அலர்ந்த
பூமாலை-மாணிக்க மாலை-வச்சிரமாலை - மரகத
மாலை இம்மாலையா லலங்கரியுங்கள். புநுகு-
சவ்வாது-கதம்பம்- கஸ்தூரி - பனிநீர் - அத்
தர் சந்த னாதிகளைப் பூசுங்கள். மது மாமிச
பக்ஷண கச்சாயங்களும் கனிவர்க்கங்களும்
இச்சையானமட்டுந் தின்னக் கொடுங்கள். வழி
நடந்துவந்த இளைப்பாற்றுங்கள். ஓ விரத
சாரணி யென்னு மின்னே! என்பேரில் அன்பு
வருவதற்கு இத்தனை காலம் சென்றதோ!
வாரும் வாரும் என் மஞ்சத்தில் உட்காரும்.
வாடிப்போன என் முகத்தைப் பாரும். உம்மை
நாடிவந்த என் மோகத்தைத் தீரும். இதனா
லுமக்கு அதிக புண்ணியஞ் சேரும். ஓ இன்ப
ரசமே! ஓ இனியசுகமே! எனப் புலம்பி, மூடிய
கண்ணை விழித்துப்பாராமல் முறண்டிக்
கொண்டிருக்கின்ற மூர்க்கனைப் பாஞ்சாலி பார்
த்து, நம்மைக்கண்ணிற் காணாதபோதேகண்ட
பாவனையாகப் பேசிக் கலங்குகிற லோபியான
வன் எதிரிற் கண்டால் என்ன செய்வானோ
வென்று மனங் கலங்கிப் பெருமூச் செரிந்து
இந்தப் பாதிராத்திரியி லிவனைப்பார்ப்பதைப்
பார்க்கிலும் பொழுது விடிந்தபின்பு காணலா
மென்று அழகிய பூஞ்சோலை நெருங்கிய ஓர்
தடாகத்திற் புகுந்தாள். அக்கால் ஒருகாலுள்ள
தேரைக்கூட்டி, மின்னற்கொடி நாட்டி, பரிமா
வேழும்பூட்டி, படர்ந்த விருட் கூட்டங்களை
யோட்டி, உதயகிரியினுச்சியி னீட்டி, கதிர்க்
கிரணங்களைக் காட்டி, முக்காலும் அருக்கிய
மேற்குஞ் சூரியனை எக்காலுங் கொண்டு வரு
வதுபோல் மெதுவாய் வராமல் அக்காலையில்
அவசரத்துடன் கிழக்குத் திசையில் அருணன்
கொண்டு வந்தான்.

இவ்வாறு முருக்கம்பூப் போன்ற சூரி
யோதயம் கண்டவுடனே செருக்கி யெழுந்த
சேவலாதிப்பட்சிகள் கண்விழித்து தறிதலைக்
கீசகன் பிதற்றிய சங்கதிகளைச் சகிக்க மாட்டா
மற் சங்கடப்பட்டுப் பரதவித்துத் தியங்கித்
திட்டுவதுபோல் றெக்கைகளினால் வயிற்றி
லடித்துக்கொண்டு கூவிப் பறந்தனகள். தடாக
மென்னும் பெண்ணானவள் திரௌபதா தேவி
யின் சஞ்சலத்தைப் பார்க்க மாட்டாமற் கண்
களைச் சுருக்கிக் கண்ணீர் பெருக்கிக் கையை
விரிப்பதுபோல், கருங்குவளை முதலிய புட்பங்
கள் குவிந்து தாமரை மலர்கள் தேன்சொரி
ந்து விரிந்தனகள். மாபாவியாகிய கீசகனை
யிகழ்ந்து பாடுவதுபோல் வண்டோல மிட்
டது. இத்தன்மையாகிய காலத்தில் தெங்கு-
மா-கோங்கு-பலா-கமுகு இவை முதலிய மரங்
களோங்கும் வனஞ்சூழ்ந்த அப்பொய்கையி
னிடத்திற் பாஞ்சாலி இருந்து, கைகாலாதி
களைக் கழுவிக்கொண்டு நித்தியவிதி நிறைவே
ற்றி, சூரியனுக்கு அருக்கியம் விட்டு, இருகரத்
தையுங் கூப்பி, நமஸ்கார மந்திரஞ் செபித்து
வணங்கினாள். அஃதெவ்வாறெனில், உலகெ
லாம் விளங்கும் ஒரு பெருஞ்சோதி சர்வசாட்சி
தனிப் பரம்பொருளே! பாவமும் புண்யமும்
பருகும் பருதியே! புத்தியும் சித்தியும் பொரு
ந்து மாதவனே! சத்துரு ஜெயந்தரு மித்திர
வெயிலோய்! உத்தமகுணமுஞ் சுத்தமும்வீடும்,
வித்தகக்கல்வியும் மேம்படு செல்வமும், பத்தி
செய்வோர்கட் கித்தனை பேறும்,பாலித்தருளும்
பராபரகிதனே! எந்தையேபோற்றி இரவியே
போற்றி, சுந்தரச் செங்கதிர்ச் சுடரேபோற்றி,
ஆயிரங்கிரணத் தலரியே போற்றி, இருள்வலி
யொழிக்கு மிறைவனே போற்றி, தினகரன்
வெய்யோன் தினமணிபோற்றி, பங்கய பதங்கப்
பரிதியேபோற்றி, பனிப்பகைப் பானுப் பக
லோய்போற்றி, மித்திர விருச்சிக விண்மணி
யேபோற்றி, சித்திரபானு திவாகர போற்றி,
அண்டயோனி அறியமாபோற்றி, அருக்கனா
னலி யருணனேபோற்றி, சுதக்ஷணா தேவியின்
சொற்பிசகாமல், கீசகன் தன்பாற் கிட்டுமேழை
க்கு, துன்பங்கெடுதி துயரமெய்தாமல், இன்
பங்கொடுத்தா ளென்றுமொளியே, உன்னைத்
தொழுதேற் குறுகணில்லாமல், இந்நகர் மன்
னற் கிடர்விளையாமல், விராடன்தேவி விசனா
முறாமல், என்குலதெய்வமா யென்று மிருந்து,
தன்மங் காத்தருள் சத்தியமணியே, சரணஞ்
சரணஞ் சவிதாசரணம், சான்றோய் சரணம்
தர்ணிசரணம்,தருணந்தருணமென்று பிரதட்
சண தெண்டம் சமர்ப்பித்து பூமியைத்தொட்டு
நெற்றியிற் பொட்டிட்டு, அப்பூமாதேவி முத
லியோரை வழிபட்டு சலம்புரோக்ஷித்து, சங்
கற்பஞ் சொல்லி, தற்சனி வைத்து சற்றுநேர
மிருந்து தக்க மந்திரத்தால் ஆசமன்ய முடித்
துக்கொண்டு கரையேறி, காம விகாரத்தாற்
கன்றி வருந்திய கீசகனிருந்த கெடுமனைகிட்டி,
நமனை எதிர்த்த உயிர்போல் மெலிந்து, ஐயா!
உம்முடைய தமக்கையார் இந்த பூவுந்தே
னும் இதுவென்று கொடுத்து, அவன் மாறுத்
தரஞ் சொல்லுமளவும் வேறோர் புறத்தில்
ஒதுங்கி யிருந்தனள். அந்த வேளையில் கீச

கன் கெதி எப்படி யிருந்ததென்றால், ஆருத மோகநெருப்பால் நீறாய் வெந்து வெதும்பி, தலைவிசிறி, நிலைதவறி, மதிபதறி, விதிகுறுகி, மேனிகருகி மெலிந்து, ஊனுமுருகி யுலர்ந்து, செந்தாமரைக் கொழுந்தும், இளவாழைக் குருத்தும், யானைதந்தப் பலகையும், அனிச் சந்தளிரும், அலர்ந்தமலரும் அணையாகப் பரப்பி அதன்மேற் படுத்திருந்தான். அஃதெப் படியெனில் கட்டையுடன் முட்டைக் கலந்து அடுக்கி அதன்மேற்சுட்டெறிக்க நீட்டிவைத்த பிணம்போலத் துலங்கினான். இதன்றியும், சந்தனம்-பாளிதம்-குங்குமம் - பனிநீர் இவைகளைத் தெளிக்கின்றார்கள். அஃதெவ்வாறிருந்த தெனில், சமயதீக்ஷை விடுவித்து கலசச்சலமிறைக்குங் காட்சிபோல் இருந்தது. மேலும், அவனைச்சுற்றிலும் வாசனை வத்திகளை தாதிப் பெண்கள் வைக்கின்றார்கள். அஃதெவ்வண்ண மிருந்ததெனில், கருமக்கிரியை செய்வதற்குப் புத்திர னில்லாதவர்கள் பெண்கள் கையில் தர்ப்பை யளித்து கொள்ளி நாட்டுங் கொள்ளைப் போலிருந்தது. இவ்வாறு செய்த சயித்தியோப சாரத்தினாலுந் தணியாமல், ஐயையோ! என்று ஓங்கி யிரைந்து ஏங்கிய கீசகனுக்கு, பாங்கிலிருந்த பாங்கியர் பலரும் ஆலவட்டம்-தாலவட்டம்-மயில் விசிறி-குயில்விசிறி - குறுவேர்விசிறி-சிறுவேர் விசிறி-பட்டுவார் விசிறி-வெட்டிவேர் விசிறி-தந்தவிசிறி-சந்த விசிறி-இவைகளாலும் உபசரித்தார்கள். அவர்கள் வீசிய விசிறிக் காற்றினாற் கூசி மெய் குலைந்து, ஓ தோழிகளே! ஈதென்ன ஊழித்தீக்காற்றோ? அல்லது ஆழித்தீக்காற்றோ? என்னுயிரைக் கொள்ளையாட வந்த கூற்றோ? ஆஹா! என் ஆன்மா அயருகிறதே என்று அவசத்தமிட்டான். அப்பொழுதே அவ்விடமிருந்த பெண்கள் ஆத்திரப்பட்டு பூவாரம் - பொன்னாரம்-புநுகாரம்-சந்தனாரம்-சந்திராரம்- முத்தாரம் என்னும் இவைகளை விஸ்தாரங்கொண்டு உத்தாரஞ் செய்தார்கள். அவைகள் அவன் சரீரத்திற்பட்டவுடனே பளபள மளமளவென்று பொரிந்து நீறு நெருப்புமாய் வெந்துபோவதினால் தள்தளவென்று தக்காளி பழம்போல் கொப்புளமெழும்பக் குப்புறப்படுத்தான்.

இதன்றியும், காமநோய் கலந்த கலக்கத்தால் சந்திரனை தூஷித்து, சமுத்திர கோஷத்தைக் கோபித்து, தென்றலைச் சீயென் றேசி வரிச்சிறைக் குயிலை இருபிறப்பென்று பேசி, கிள்ளைமொழியைக் கடிந்து, கடகடவென்று புரண்டு, கிடைகொடுக்காமல், உடை உடுக்காமல், உணவெடுக்காமல் கன்னியை விரும்பி அன்னியனாய் வெம்பி நான்கு புறமும் நன்றாய் பார்த்து மெத்தைமேல் வீழ்ந்து தத்தளிக்கா நின்றான். அப்போது அப்பாதகன் ஜன்மாந்திரத்திற் செய்த தவங் கைகூடியது போல், தாழ்ச்சியில்லா வண்ணமடந்தையைக் காட்சியாய் முன்னிற் கண்டான். அவளைக் கண்டவுடனே நான் பண்ணிய புண்யம் பலித்ததென்று கக்கட நகைத்து, பக்கமாய்ப் படுத்து, திக்கென் றெழுந்து, தீர்க்கமாய் வீழ்ந்து சரணஞ் சரணம், இது நல்ல தருணந் தருணம். என் மாதவம் வந்தது; என் வழித்துணை வந்தது; என்னிஷ்ட தெய்வம் வந்தது, நான் கும்பிட்ட தெய்வம் வந்தது; என் பிராண சஞ்சீவி வந்தது; பேசப்பேச பெருகுங்குமுதமிதோ வந்தது; என்னகத்துயிர் வந்தது; மோகவித்து வந்தது; போகமுத்து வந்தது; என் கண்ணிற் பாவை வந்தது; என் முன் வண்ணப்பூவை வந்தது; ஓ ஆபத்திற் குதவு மணங்கே வாரும்; ஓ தாகத்தைத் தணிக்கும் தயாரசமே வாரும்; என்னருகி லுட்காரும்; வறண்டுபோன என் மண்டைக்குந் தொண்டைக்கும், சுருண்டுபோன நாக்குக்கும் மூக்குக்கும் பசைஉண்டாகும்படி மதுர வார்த்தையை பொழியும்; என்னை இறுகக் கட்டிச் சேரும்; கைப்பாகிய என் வாய்க்குக் கனிவாய் முத்தந்தாரும்; என் பவம் போக்கடிக்க வந்த பதமே! என்னைவிட்டுப் பிரியாதிருக்க வேண்டும் நிதமே; நானுமக்குச்சதமே என்று நிலத்திற் குப்புறற்றிருந்த தலையை நிமிர்ந்து, எக்களிப்பிட்டெழுந்து முன்பின் பாராமல் விரதசாரணியைத் தொட்டணைக்கக் கிட்டினான். இப்படி மீளாநரகத்திற் காளாகுங் கீசகன் காம விகாரத்தினாற் பேய்போல் ஓடி வருவதை விரதசாரணி கண்டு, ஆ! அடசண்டாளா! அடா துரோகி; என்னைத் தொடாதே! என்னை யொருவருந் தீண்டப்படாதே; வீணாசை கொண்டு வாணாளை யொழிக்காதே; நெருப்பிலழுந்திய புழுப்போற் சாகாதே; விளக்கில் வீழும் விட்டிற் பூச்சிபோல் வேகாதே; மறு மாதர்மே லாசைப்படாதே; மையல் மோகத்தால் நாசப்படாதே; காமப் பேயால் கண் கலங்காதே என்று கடுஞ் சொற்களாற் கண்டித்தாள். அவ்வாறு கண்டித்துந் தேறாதவனாய், தேடிய மருந்து சிக்கியது போற் கிடைத்த தேவியே! என்னாவியே! நான் மகா பாவியே! பெருகிய காமாக்கினியால்

உருகி வாடுகிற நான் நூறாயிரம்பேர் தடுத்தாலும் உன்னை விடமாட்டேன். திறட்டுக் கெட்டரப்பழும் வாய்க் கெட்டும்போது அப் பழத்தைச் சுவைக்காமல் விட்டுவிடுகிற மூடனுண்டோ? ஓ தோகையே! என்று துரத்தினான். அதனால், நீயஞ்சாத் துன்பங்கொண்டு பாஞ்சாலியானவள் பயந்து, உடல் வியர்த்து, கொலை வேடனைக் கண்ட கலை மானைப்போற் சேலை குலைய, மாலை யலைய, கமலமுகம் வாட, கண்ணீர் பெருகியோட, கருங்கூந்தல் ஆட, கலை மான்களோட, குடல் நடுங்க, குலை நடுங்க துடியிடைமானான் விடவிடென் றோடினாள். அவ்வாறோடிய பாஞ்சாலியானவள் நவமணி இழைத்த கதிர்முடி தரித்த விராடராஜன் கொலுவில் வந்து, தருமராஜன் முதலிய யாவரும் பார்க்கும்படியாய் அபயம் அபயம் என்றலறி வாடிய கொடிபோல் வதங்கி வீழ்ந்தழுதாள்.

### விராடன் சபையில் அடைக்கலம் புகுந்த திரௌபதியையும், அவளைப் பிடிக்க நேர்ந்த கீசகனையும் கண்டு ஆக்ரமித்த வீமனைத் தருமர் அடக்குதல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! அந்த விராடபுத்திரர் கங்கபட்டர் வந்தநாள் முதல் உதயுத்திற் சபை சேரும்படியாய் வழக்கப்படுத்திய பிரகாரம், மகா ஜனங்களுடன் கூடியிருந்த மனுகுலத் தோன்றலாகிய மச்சராஜனும் மந்திரிமார் முதலிய சாஸ்திரிகளும் தேம்பி அழுகின்ற தெரிவையைக் கண்டு, கவலை மேற்கொண்டு கருத்து வேறுபட்டு ஒன்றும் தோன்றாமல் இருக்குஞ் சமயத்தில் காமப் பிணியால் கலங்கிய கீசகன் சோமவதனத் திரௌபதையை தொடர்ந்து பிடிக்கத் துணிந்து அங்கெய்தினான். அந்தச் சமயத்தில் மகாலட்சுமிபோன்ற மாதரசியைப் பற்றுவதற்கு நீட்டிய கீசகன் கையிரண்டும் அந்தப் பதிவிரதையின்மேல் படவொட்டாமல் சூரிய பகவான் அநுக்கிரகத்தால் சுழற்காற்றைப் போல் தோன்றிய ஒரு கிங்கரனானவன் அக் கேடுகால கீசகன் கரத்தைப் பற்றி, கிறுகிறெனச் சுழற்றி விறுவிறென விட்டெறிந்து போனான். அதனால் கைவீச்சோடு கடுகிய கீசகன் பெருமூச்செறிந்து பிரமித்து, மன்னர் நகைக்கக் குப்புற விழுந்து, பின்னும் தேறிப் பிடிக்க வெழுந்தான். பின்பு தான் இருக்கும் இடத்திற்கும், திரௌபதை இருக்கும் இடத்திற்கும் வெகுதூரமென்று கண்டு தலை கவிழ்ந்து, உடல் குனிந்து, வெட்கி, சந்தடிகாட்டாமல் வந்தவழியே ஓடிப்போனான். அவ்விடத்தில் நடந்த அதிசயத்தைக் கண்ட யாவரும் திக்கற்றவருக்குத் தெய்வமே கதியென்று சிந்தை நைந்துருகித் திகைத்திருந்தார்கள். இப்பால், அச்சபையில் வந்து வீழ்ந்தழுத அவ்வேழைப் பெண்ணின் அலங்கோலத்தையும், தொட்டிழுக்க வந்த தன் மைத்துனனது அக்கிரமத்தையும், அதனால், தனக்கு நேரிட்ட நிந்தையையும் விராடராஜன் யோசித்து, அவ்விடமிருந்த பெரியோர்களையும், இராஜராஜர்களையும், மந்திரி பிரதானி முதலிய மதிவல்லோரையும் பார்த்து, ஓ விற்புத்தி யுடையவர்களே! துற்புத்தியுடைய இக் கொடிய கீசகன் துறை தப்பி நடந்ததைப் பார்த்தீர்களா என்று ஆத்திரப்பட்டு, அவனுக்கு நற்புத்தி சொல்லி அவன் செய்த வேலைக்குத் தகுந்த தண்டனை விதிக்கத் தன்னால் கூடாமையால், அக் கீசகனுடைய திடதைரியம் பராக்கிரம திக்குவிஜயத்தைக் குறித்துப் பயந்து சிந்தித்திருந்தான். அந்தக் காலத்தில் இராஜ சபையில் நின்ற விரதசாரணியானவள், ஐயையோ! இதென்ன அநியாயம் ஓ தெய்வமே! தெய்வமே! என்று விசனப்பட்டாள். அப்பொழுது அவ்விடத்தில் நிறைந்திருந்த வெகு ஜனங்களுள் தானும் ஒருவனாக வந்திருந்த வீமசேனனாகிய பலாயனனென்பவன் மன வேஷ்டையடைந்து, அஞ்சிக் கெஞ்சிப் பஞ்சுபோற் பறந்து ஓடிவந்த பாஞ்சாலியையும், அவளைப் பிடிக்கவந்த கீசகனையும் பார்த்து, பஞ்சேந்திரியமும் பதறத் துடிதுடித்து ஆசார வாசல் முகப்பில் இருக்கின்ற பெருந் தருவைப் பிடிங்கி அடித்துக் கீசகனையும் விராடனையும் ஒருமிக்க முடித்து விடுவதற்கு எண்ணினான். அப்பொழுது தம்பியாகிய வீமசேனன் எங்கே பதறுகிறானோவென்று அதுவே நினைப்பாகப் பார்த்துக்கொண்டிருந்த தருமராஜன் அவனது கோபக் குறியையும் எண்ணத்தையும் அறிந்துகொண்டு, அப்பா பலாயனா! நீ மடைப்பள்ளியிற் கெசமானனையாற் காய்ந்த விறகு எங்குண்டோவென்று உயர்ந்த மரங்களைக் கண்ணோட்டமிடுகிறது போலும் காண்கிறது. நீ இப்போது பார்க்கிற விருட்சம் அவசரத்திற்கு விறகாக மாட்டாதே; இதைக் காயவைத்துக் கொள்ளலாமென்று கருதினாலும் இன்னும் இரண்டொருதஞ்

செல்லாமல் உலராதே; முக்கியமாய் விறகு வேண்டிய திருந்தால் தருந்த மனிதருடன் காட்டுக்குப் போய், நீ நினைத்த மரங்களை வெட்டி உன்னிஷ்டப்படி முடித்துக்கொள்ள வேண்டுமேயன்றி, இவ்விராட ராஜன் சபையில் விளைவாகின்ற மரத்தை அவசரப்பட்டழிக்கக்கூடாதே; மிகுந்த பலசாலியாகி உனக்கு எதுவும் லட்சியமில்லை. ஆதலின், அப்பட்டணத்திற்குப் புறம்பிற் சென்று, வேண்டு மரங்களை வேருடன் கெல்லி எளிதாக எரிக்கலாம்; இங்கிருக்குந் தருவானது அநேகம் பக்ஷிகட்காதாரமாகியும் நமது வாழ்நாளுக் குதவியாயும் குளிர்ந்த நீழலைக் கொடுத்துக் கொலுமுகத்திற் கழகா யிருக்கின்றது. ஐயோ! இம்மரத்தைப் புத்திமான்கள் குறைக்க நினையார்கள். பச்சை மரத்தை வெட்டலாகாதென்று பெரியோரால் சொல்லப்பட் டிருக்கின்றது; என்ன ஆபத்து வந்தாலும் பாபத்திற்குப் பயப்பட வேண்டுமே என்று சொல்லித் தமது காலாற் பூமியைத் தேய்த்தார். அவர் இங்கே விறகின்மே லேற்றி வெளிப்படையாகச் சொல்லியவற்றின் பொருள், பரோபகாரியாகிய விராடனைக் கொல்லாமற் கீசகனைக் காட்டிற் கொண்டுபோய்க் கொல்லவேண்டுமெனக் குறிப்பால் விளக்கியதால், அதையறிந்துகொண்ட வீமசேனன் சிறிது நிதானித்து, ஓ! ஓ! இவரிங்குந் தடையானோ யென்று உடலெங்கும் பதறி எழுந்த கோபவேகத்தை யடக்கி, திரௌபதைக்கு நேர்ந்த விபத்தை யெண்ணிச் சிறிதும் ஆற்றமாட்டாதவனா யிருந்தான்.

### திரௌபதி இராஜ சபையிலுள்ள விராடனோடும் பெரியோர்களோடுஞ் சில தருமங்கள் கூறி முறையிட அவர்கள் தேற்றுதல்.

இவ்வாறு வீமசேனன் கொண்டிருக்கு மாற்றாமையும் அவனை யடக்கிய தருமபூபதியினுடைய கருத்தையுங் குறிப்பா யறிந்துகொண்ட பாஞ்சாலியானவள் தனக்கு நேரிலிருந்த விராட ராஜனை நோக்கி, ஓ மகாராஜனே! நல்லொழுக்கத்தை முற்றிலும் ஒழுகவிட்ட கீசகன் துன்மார்க்கமாய் என்னைத் தொடர்ந்து தொட்டிழுக்க வந்தது நீதானோ? சாஸ்திரங்களைப் படித்தும், சாதுஜன சங்கத்தை யடுத்தும், தன்னுயிர்போல் மன்னுயிர் காத்தும், பரதாரஞ் சோதரமெனப் பார்த்தும், பாவபுண்ணிய மின்னவென் றறிந்தும், அடைக்கலம் புகுந்தோரை ஆதரித்தும், தேவதா பக்திகள் ஆசாரிய பக்திகள் செலுத்தியும், குலமுறை பிசகாமல் நடத்தியும், ஏழைகள் மனது நோவாமலிரங்கியும், படை-குடி-கூழ்-அமைச்சு-நட்பு-அரண் இவ்வாறினையுமுடையவனாகியுஞ் செங்கோல் செலுத்துஞ் சீமானாகிய நீர்; உமது மைத்துனனுடைய துற்புத்தியை விசாரித்து, எனது உள்ளக் கலக்கத்தை மாற்றி ஆறுதல் சொல்லி, ஆதரியாது இருப்பது உமதரசாட்சிக் கழகாகுமோ? ஓ நீதிபரனே! நெறிமுறையறிந்த நிருபர்கள் தம்மை யண்டினோர்களைத் தம்மக்களைப்போற் காக்கவேண்டும் என்று தரும சாஸ்திரஞ் சொல்லி யிருக்கின்றது அல்லவோ? ஓ தயாநிதியே! வலியவனாகிய ஒருவன் எளியனை அடித்தாலும், ஒருவன் பொருளை ஒருவன் அபகரித்தாலும், வம்பு வார்த்தைகளை வழங்கினாலும், அவைகளை அரசன் விசாரித்துத் துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனம் பண்ணவேண்டுவ துண்டோ இல்லையோ? அவ்வாறு விசாரியாத கொடுங்கோல் மன்னன் இருந்து என்ன? ஓ உத்தமனே! உயர்ந்தோர் முதலிய சர்வ ஜனங்களுந் துற்சோபம்-துற்பயங்கரம்-துற்மரணம் - துற்வியாதி இவை முதலிய பீடைகள் அடையாமல் சற்சிநேகம்-சன்மார்க்கம்-சற்குணம்-சதாயு முதலிய நன்மைகளைப் பெறும்படிக்கு அல்லவோ அரசனுக்குச் சிங்காசனப் பட்டாபிஷேகஞ் செய்வது? அவ்வாறு பட்டங் கட்டிக்கொண்ட அரசனுக்கிணையால் அல்லவோ வருண நான்கும் வரிசை தப்பா திருப்பது? பூர்வத்தில் ஒரு பாதம் சந்தனக் குழம்பிலும், மற்றொரு பாதம் அக்கினிப் பிழம்பிலும் நாட்டி அரசாட்சி புரிந்து வந்த சக்கரவர்த்திகளின் சரித்திரத்தைக் கேட்டிலீரோ? ஓ தருமாத்மாவே! உமது தேவியாருக்குப் பணிவிடை செய்து பிழைக்கவந்த ஏழையாகிய என்னை இக்காட்சிகண்ட கீசகனைத் தீர விசாரியாமற் போவீராகில், எனக்கு வேறு கெதியே யில்லை. உமது திடத்தைத் தெரிந்துகொண்ட பாதகன் இனி என்னை எங்கும் பிழைக்க வொட்டான்; எல்லாந் தெரிந்த பெரியோருக்குச் சொல்லா லுணர்த்துவது யாதொன்று மில்லை. ஓ தோன்றலே! இவ்வுலகத்தில் தவஞ் செய்வதும், யாகம் புரிவதும், தீர்த்தமாடுவதுந், தெய்வந் தொழுவதும் பெரிதல்ல. அபயம் என்றுவந்து அடைக்கலம் புகுந்தவர்களை ஆதரிப்பதுவே தருமங்கள் எல்லாவற்றிலுஞ்

சிறந்ததென்று, சதுமறைப் புரோகிதர் பிர்ம சூத்திரத்திற் சாற்றி யிருக்கின்றனர்.

அதற்குத் திருஷ்டாந்தங் கேளும்: முற்காலத்தில் ஒருநாள் பிர்மாவினுடைய சபைக்குத் தேவேந்திரன் போனான். அவனைக் கண்ட பிர்மதேவன் சந்தோஷித்து, ஓ இந்திரனே! சொர்க்கமத்திய பாதலத்தோர் நடத்துகின்ற தர்மா தர்மங்கள் உன்னாதீனமா யிருக்கின்றபடியால், நீ தருமசூக்கும மறிந்து நடத்தவேண்டியதா யிருக்கிறது. நீ அவ்வண்ணம் நடத்தாவிடில், இந்தப் பூலோகத்தார் செய்யும் பாபங்களிற் பேர்பாதி யுன்னைப் பிடியாமற் போகாது. அப்படிப் பிடித்த பாபங்களை நீ நீக்கிக்கொள்ள வேண்டுமானால், பற்பல அதர்மஞ் செய்கிறவர்களை உடனே அழித்துவிடவேண்டு மென்றார். இப்படிப் பலவாறாகிய அதர்மஞ் செய்யும் பாவிகள் யாரென்று தேவேந்திரன் கேட்க, வேத விதியும், நீதிவழியும் உலக நடையுந் தப்பி நடந்தவர்கள்தான் பாவிகள். இவர்களில் நன்றி கெட்டவர்கள், அடைக்கலம் புகுந்தோரை ஆதரியாதவர்கள், இவர்களை மகாபாவிகளென்னப்படும். ஆதலின், இக் கொடிய அதர்மிகளை வச்சிராயுதத்தால் மண்டைகிழிய மோதி பண்டு செய்த பாபங்களைப் போக்கித் தருமத்திற் பிரவேசிக்கப் பண்ணுவையாகில், அவர்கள் செய்த புண்ணியங்களிற் பேர்பாதி யுனக்குண்டாம். நீ மூவுலகத்திற்கு முதற்பதியோனாகையால், இந்தத் தருமசூக்குமத்தை யுமக்குச் சாற்றினே னென்றார். அந்தச் சதுர்முகன் மொழியைக் கேட்ட இந்திரன் பூலோகத்தில் வந்து துஷ்டர்களைச் சிக்ஷித்து சிஷ்டர்களை ரக்ஷித்து, புண்ணியம் பெருகப் பொருந்தி வாழ்ந்திருந்தான் என்று பெரியோருரைக்கக் கேட்டிருக்கின்றேன். ஓ விராடராஜனே! உன் மனைவியாரிடத்தில் வந்து சேர்ந்த அந்நாள்முத லிந்நாள் வரையிலும் இத்தன்மையாகிய துன்பம் நான் அறியேன். இன்றென் பொல்லாவினையால் வல்லாண்மைக்காரக் கீசகன் இக்கொடிய எண்ணங் கொண்டான். அவன்தான் அப்படி நினைத்தாலும், ஜெகந்தாங்கிய நீரும் பேசாம லிருந்தது என் தீவினைதான். ஐயா! உம்மிடத்தில் இப்பேர்ப்பட்ட குணம் இருக்குமாகில், அரசாட்சி எவ்வாறு நடக்கும்? உம்மை யார் மதிப்பார்கள்? உம்மை யார் துதிப்பார்கள்? உம்மை யாரடுப்பார்கள்? வருந்தி வந்தவர்களின் துன்பத்தை மாற்றிக் காக்கவேண்டியது உமது கடமையல்லவா? நீர் அவ்வாறு செய்யாமற் போனால் சாஸ்திரப்படிக்கு உமக்கு மோக்ஷங் கிட்டாதே. ஓங்கிய நரகமும் உம்மைவிட்டு அகலாதே. அதிலும், பேதைப் பெண்கள்-நாதனற்றவர்கள் - முடவர் - ஊமர்-செவிடர்-குருடர்-பிணியாளர்-தரித்திரர்-வேசிகள் இவர் முதலானோருக்குத் தாயுந் தந்தையும் இராஜனாகையால், அவர்களைத் தன் பிராணனைப்போலாதரிக்கவேண்டும். ஓ பழிக்குடம்படாத பார்த்திபனே! நான் அநாதையா யிருக்கிறேன். நீர் என்னை நிராதரவு செய்யாமல் இரட்சிக்கவேண்டும் என்று சைரந்திரி சொன்னாள்.

இவ்வாறு சைரந்திரியாகிய விரதசாரணி மொழிந்ததை விராடராஜ னறிந்து, ஓ மங்கையே! நான் கீசகனை விசாரிக்கவில்லை என்று கிலேசப்படுகிறாய். உனக்கும் அவனுக்கும் நேரிட்ட நேசமும், நீ அவன் வீட்டிற்குப் போன காரணமும், உன்னைத் துரத்திவந்த விசுவாசமும், இன்னதென்று எனக்குத் தெரியாமையால், ஒருதலைவழக்காகத் தண்டிப்பது உத்தமமல்ல. எதையும் காரணகாரியந் தெரிந்துகொண்டு தீர்க்க விசாரணை செய்யவேண்டியது. ஆயினும், உனக்கு வந்த தீங்கு ஒருவாறாய் விலகிப் போனதினால், அம்மா! நீ இந்தவேளை மனம் பொறுத்துக்கொள் என்று வாய் குளிரப் பேசினான். அவனது இன்சொல்லைக் கேட்ட பாஞ்சாலியானவள் விராடராஜனுக்கு மனோதைரியம் இல்லை என்று உணர்ந்து, ஐயா! நீர் சத்தில்லா வசனஞ் சொன்னீர். நான் உற்றது உரைக்கின்றேன் கேளும்: அடியாளுக்குக் காந்திருவ ரைந்து பேர் கணவர்கள். புஜபல பராக்கிரமசாலிகள், ஒப்பற்றவர்கள், விற்பன விவேகிகள், அவர்கட்குப் பகைவரில்லை. யாருக்காயினும் அழிவுக்காலம் நேரிடில், அவர்க ளவர்கட்குச் சத்துருவாய்த் தோன்றி அழிவார்கள். அக்காந்திருவர் வருகின்ற தேர் ஓசையையும் அவர்கள் கைக்கொண்டிருக்கும் வில்லோசையையும், எட்டுத்திக்குப் பாலகரையுந் திடுக்கிட்டு விழிக்கச் செய்வது மன்றி, சக்கிரவாள முடி மட்டும் உக்கிரமாக உடைபட்டுத் தத்தளித்து ஆடப் பண்ணும். அவர்களை யண்டினோருக்கு வேண்டிய பாக்கியங்கள் உண்டாம். அப்பேர்ப்பட்ட மகா புருஷர்களை மாலையிட்டு மருவி வாழும் என்னை, இப்பேர்ப்பட்ட கேவிக்கிட

மாக்கிவிட்ட கீசகனுக்கு நாசகாலங் கிட்டியது என்பதற்கு சந்தேகமில்லை. ஐயோ! இரும்பை நசுக்கி யொடிக்குஞ் சம்மட்டியானது நெருப்புக்கும் படுவதுபோல், உம்மை எங்கே மாட்டிக்கொள்ளுகிறதோ வென்னுந் துக்கத்தால் இவ்வளவு தூரஞ் சொல்லி யழுகிறேன். ஐயா மச்சராஜனே! இத்தியாதி வல்லமை பெற்ற காந்திருவர்கட்கு மனைவியாகிய நீ என் தேவிக்கு வேலைசெய்ய வருவானேன் என்றால், வினைப்பயனை வெல்ல வல்லவர் இல்லாமையால் என் நாயகர் ஐவருந் தீவினை வசத்தால் தங்களுருமாறி யிருக்கின்றார்கள். அவ்வாறு இருந்தபோதிலும் (கடுகு சிறுத்தாலும் காரம் போகாது) என்பது போல் தங்கள் தீரவீர மாறினவர்களல்ல. இப்போது இவ்விடத்தில் நடந்திருக்கின்ற கலகத்தை அவர்களு மறிந்திருப்பார்கள். தடையின்றி எங்கு சஞ்சரிக்கும் நெஞ்சுர முள்ளவர்கள். தமக்குத் தாமே சங்கதி தெரிந்து கொள்ளுஞ் சக்தியுடையவர்கள். இந்நேரம் இவன் பிராணனுக்கு முடிவு தேடி உலைவைத் திருப்பார்கள்.

ஆகிலும் மண்ணாளும் வேந்தன் வாய் பேசாதிருந்தால், பெண்ணாகிய நான் போவதெவ்வாறு? ஓ புநிதனே! நான் ஒருவரையும் நோகத்தக்கதில்லை. பூருவந் தேடிக்கொண்ட வினையையே நோகவேண்டும் என்றுபொருமி விம்மிப் புலம்பி, ஓ சபை நிறைந்த புண்ணியவான்களே சத்திய தருமம் என்றும் அசத்திய தருமம் என்றும் இரண்டு உண்டு. அவ்விரண்டினுள் சத்திம் தருமமே முக்கியம். இச்சத்திய தருமம் எவ்விடத்தில் விளங்குகின்றதோ அவ்விடத்தில் மகாலட்சுமியுடன் மாயோனிருப்பார். அந்த ஸ்ரீயப்பதி யிருக்குமிடத்திற் கிளர்ச்சியுஞ் சத்துரு ஜெயம் உண்டாம். அசத்திய தருமம் எவ்விடத்தி லிருக்கின்றதோ அவ்விடத்தில் மூதேவி குடி புகுவாள், மூடருறவு எய்தும். அன்றியும், அவ்வசத்தியமுடையோர் கொடுநரகிற்காளாய் தளர்ச்சியுற்று, அல்லலும் அருந்துயரு மடைவார்களெனச் சுருதி முறையிடுகின்றது. ஆகையால், ஆணைப் பெண்ணைப்பெற்ற நீங்களாயினுங் கவனித்து, தருமத்தை யனுசரித்துப் பொதுவாய்ப் பேசப்படாதோ? (அரசனெவ்வழி குடிகளவ்வழி) என்னும் வாக்கியத்தை நிலைநாட்டினீர்களே. நீதிநெறி யற்றீர்களோ? ஐயா! இந்நீணிலத்தில் நான் பெண்ணாகப் பிறந்தபெரும்பிழையாதோ? தெய்வமேஎன்று தளர்ந்து வாடினாள். அவ்வழகிய மாதின் தளர்ச்சியைச் சபையிலிருந்த சகலரும் பார்த்து, கீசகனையும், விராடனையும் நிந்தித்து விரதசாரணியின் பதிவிரதா தருமத்தைச் சிந்தித்து, பெண்ணிலக்கணம் பூரணமாக யமைந்திருக்கின்ற பெருந்தன்மையை நிதானித்து, இந்த அம்மாள் நல்ல குடிப்பிறப்பாகக் காண்கிறது. தேவபுருஷ சம்பந்தம்போலத் தோன்றுகிறது. குணம் - மணம் - குறல் - வசனம் இவற்றை நோக்குங்கால், பத்மினி ஸ்திரீயாயிருக்கின்றாள். இத்தன்மையளாகிய உத்தமிகள் நினைத்த காரியங்களெல்லாஞ் சித்தியாகாமற் போகா. இந்தப் புண்ணியசாலியை லேசானப் பெண்களைப்போல் எண்ணப்படாது. கெட்டமதியுள்ள கீசகன் துஷ்ட நினைப்பினால் தொடர்ந்த மூடத்தனமானது அவன் பிராணமுடிவுக்கோ? அல்லது யாதுகாரணத்திற்கோ? ஏதுந் தெரியவில்லை. பூர்வஞ் சீதாதேவிக்கு ஸ்ரமம் நேரிட்டாப்போல் இந்த மாதுசிரோமணிக்கும் ஸ்ரமம் நேரிட்டதல்லவா என்று தங்கள் மனதை தாங்களே தேற்றிக்கொண்டு, அம்மா சும்மாவிரும், விசனப்படாதீர். உமக்கு நல்லகாலம் இந்த விராடபுரத்தில்தானே வரப்போகின்றது. உமக்குக் கெடுதி நினைக்கும் பாதகர்கள் விரைவிலழிந்து போவார்கள். நீர் யாதொன்று மஞ்சாதீர் என்று சொல்லி வாழ்த்தினார்கள்.

### திரௌபதியைத் தருமராஜன் கடிய அக்குறிப் பறிந்து சபையை நீங்கிச் சுதர்க்கணையிடஞ் சென்று கூற, அவளுமற்றையருங் கேட்டு [illegible]

அக்காலையில் இவற்றையெல்லாம் பார்த்து உள்ளே மாச்சரியமும் வெளிக்கு ஆச்சரியமுங் கொண்டிருந்த கங்கபட்டரானவர் அத்திரௌபதியைப் பார்த்து, ஓ சைரந்திரிப் பெயர் பெற்ற பெண்பாவாய் பெண்களுக்கு உரிய நாணமட முதலிய நாற்குணங்களுமாறி, ராஜசபையேறி, அத்துமீறிப் பேசுகின்றாய். நீ மிக அநியாயக்காரி, தருமபதியாகிய விராடபூபதி, மகாதயாநிதி, சத்திய வாக்கியர், சாதுசங்கப் பழக்கமுள்ள யோக்கியர், சகலவித சம்பத்துடைய பாக்கியர், சதுர்வேதமோர்ந்தவர், தநுர்வேதந் தேர்ந்தவர், மநுமுறை கற்றவர், மக்களைப் பெற்றவர், நடுநிலையாக விசாரிப்பார், பக்ஷபாதமிராது, நீ அஞ்சாதே, அவசரப்படாதே, இந்த மச்சராஜன் விசாரியாமற் போனாலும், உன்குறிய காந்திருவர்கள் அவ

சியம் விசாரிப்பார்களென்று உன் சொல்லினாலேயே விளங்குகிறது. நீ இந்தச் சபையில் ஆத்திரப்படவேண்டாம். தற்காலத்துள்ள எசமான் கட்டளையைப் பரிபாலிப்பதே முக்கிய தர்மம், சாந்தகுணமே தகுந்த பூஷணம், பெண்ணாகப் பிறந்தோருக்கு அடக்கமிருக்கவேண்டும். ஆதரவற்றவர்க்கு அரசனே தெய்வமென்று நம்பி வாயடங்கி ஒடுங்கிப்போகவேண்டும். அல்லது தாங்கள் எவ்விடத்தில் வேலை செய்கிறார்களோ அந்த விடத்திற் சொல்லி அவர்கள் மூலமாக விசாரணைக்கு வரச்செய்யவேண்டும். அப்பொழுது உன் மனக்குறை எப்பொழுதுமில்லாமல் நீங்கும். இப்பொழுது நீ அந்தப்புறம் போய்ச் சேர் என்று கங்கபட்டர் உரைத்த கருத்தை தெரிந்துகொண்ட மங்கையானவள் அங்கை குவித்து புத்தியென்று போற்றி, சுதர்க்கணையிடத்திற் போய்ப் பெருங்காற்றில் அலைந்த முருங்கைபோற் சுருங்கி ஒடுங்கி நின்றாள். இவ்வாறு ஓய்ந்துநின்ற மாலினியை அரசன் பத்தினி பார்த்து, அம்மா! கருங்குவளை நெருங்கிய கண்களும், வெண்டாமரை போன்ற முகமும், சண்பகப்பூவனைய மூக்கும், முல்லையரும்பைப் பழிக்கும் பல்லும், அமுதமாகிய சொல்லும், கொவ்வைக்கனிக் கொப்பா மிதழும், ஆகிய இவைகளெல்லாம் இராகுவினால் தீண்டப்பட்ட சந்திரன்போற் குறைந்து வதங்கிய உடலும், வாடிய நடையுமாய் வருவானேன்? கண்ணீர் சொரிவானேன்? போன இடத்தில் பொல்லாங்குண்டோ? அப்படிக்கு ஏதாகிலும் உண்டானால் இப்பொழுதே சொல்லும்; நான் இராஜனிடஞ் சொல்லித் தப்பாமல் தண்டிக்கிறேன் என்று கேட்டாள். அப்படி அன்புடன் கேட்ட சுதர்க்கணையைத் திரௌபதாதேவி பார்த்து, அம்மா! கைவிரலாற் கண்ணைக் குத்திவிட்டு யார் குத்தினார்கள்? குத்தியதற்கு காரணமென்ன? என்று கேட்பது ஆச்சரியத்தின் மேல் ஆச்சரியம். ஆ! ஆ! என் நிர்வாக முதலிய யாவற்றையும் முன்னாடிச் சொல்லியிருந்த என்னை உமது தம்பியினிடத்திற்கு அனுப்பி வைத்து, பின்னொன்றுந் தெரியாதவள் போல் துடிதுடித்துப் பேசுகின்றீர் அல்லவா? ஆயினும் பெரிதல்ல. உமது வார்த்தையின் வண்ணம் புட்பமுந் தேனும் கொண்டுபோய் கொடுத்தேன். அந்தக் கீசகன் என்னைக் கண்டவுடனே எழுந்தோடி வந்து என் கையில் இருந்த மாலையையும் மதுவையும் வாங்காமல், என்மேல் விழுந் திரப்பதற் கெண்ணினான். நான் அந்த பாதகன் கையில் அகப்படாமல் தப்பியோடி, விராடராஜன் சபையிற் போய் விழுந்தேன். அப்பாலென்னைத் தொடர்ந்து வந்த பாவி எப்பாடுபட்டானோ நானறியேன் என்று சொல்லி இரு கண்களிலும் நீருகுத் திருகியழுதாள்.

இவ்வாறு உருகியழா நின்ற விரதசாரணியின் துக்கத்தையும் சோபத்தையும் சுதர்க்கணை நோக்கி, அம்மா! அந்தப் படுபாவி என் தம்பியானாலும் மகா பதிவிரதையான உமது சித்தத்தை சிதையப் பண்ணினபடியால் கடைகஷ்டனாகிய துஷ்டனானன். (தாய்க்காகாத பிள்ளை ஊர்க்காகாது) என்பதுபோல் உனக்கு ஆகாத சாவான் எனக்கும் ஆகாமற் போவான். உனக்கொருநாளும் குறைவில்லை. ஓ பங்கமில்லாத தங்கமே! காமி-வாமி-வெறியன்-முறியன்-வறியன்-சிறியனிவர்களுக்கு மட்டு மரியாதை-கட்டுதிட்டம்-ஈனமானம்-விதிவிலக்கு விவேக முதலியவுங் கிடையா. இவாள் நன்மையினால் வசமாகமாட்டார்கள். விர்த்தியாகவு மாட்டார்கள். அவர்களுக்குச் சவுக்கடியே தெய்வம். ஆதலின் முறைகெட்ட மூடனாகிய கீசகனைக் கொல்லவேண்டு மென்னும் நினைப்பிருந்தாற் சொல்லும், விராடராஜனுடன் கலந்து பேசி வேலையை முடிக்கச் செய்கிறேன் உமது எண்ணத்தை எனக்குணர்த்தும் என்று சுதர்க்கணை கேட்க, அம்மொழியைக் கேட்ட விரதசாரணியானவள், அம்மா! ஏதோஎன்னுடைய கர்மானுபவ மிப்படி யிருந்தது. ராஜசபையிலிருந்தவர்கள் நகைப்பதற்கிடமுண்டாயிற்று. திக்கற்ற எனக்குத் தெய்வ மிருக்கின்றது. (அடாது செய்பவர் படாது படுவர்) என்னும் பழமொழியுண்டு. அது பழுதுபடாது. என் விஷயத்தில் அபராதியாகிய கீசகன் கந்திருவரைவராற் கால்சாய்ந்துபோவான். எனக்குரிய நாயகர்கள் இன்றைக்கோ நாளைக்கோ வரப் போகின்றார்கள். அப்பொழுது இவன் செய்த அக்ரமமனைத்தும், இவன் தலையோடு போமோ? அல்லதிந்தத் தரணியோடு போமோ? நான்யாதொன்றுந் தெரியேன். ஓ அன்னையே! நான் உம்மைவந்தடுத்து உம்முடைய உப்புந் தண்ணீரும் புசித்து, ஒரு குறைவுமின்றிக் காலங் கழித்துவந்த என்னால், உமக்கு ஒரு குறைவும் இல்லாதிருக்கும்படி என்னிஷ்ட தெய்வத்தைப் பிரார்த்தித்துக்கொண் டிருக்கின்றேன் என்று வண்ணமகள் கூறினாள். அப்பெண்ணின் வார்த்தையைக்கேட்ட சுதர்க்கணை

யானவள் கண்ணீர் விடுத்து அவள் கண்ணைத் துடைத்து விம்மி மெலிந்து நம்மிலொருவனாகிய தம்பி விழுங்காலம் வந்ததே; புத்திர மித்திராதியரை இழந்துபோக நேரிட்டதே என்று கலக்கமுற்று மிகவும் ஏக்கங்கொண்டிருந்தாள். இப்படி துக்கப்பட்ட சுதர்க்கணையாகிய வண்டுவிழியாளுக்குப் பண்டுதொட்டுத் தொண்டுபுரிந்து அண்டையில் நின்ற பெண்டுகளெல்லாம் ஒன்றுகூடி மாலினியைக் கண்டு மதிமருட்கொண்டு, ஐயோ! கண்டகனாகிய கீசகன் பண்டை வினையால் பொன்றுங் காலத்தைத் தேடிக்கொண்டானே; அது பெருந்தீயைப்போல் மூண்டுவிட்டதே; விராடராஜனுக்கும் விதண்டையான வியாகூலம் விளைந்ததே; இந்த மோசத்திற்கு நாம் தப்பிப் பிழைக்கும் வகை எப்படியென்று கிலேசித்து எண்ணமிட்டுக்கொண் டிருந்தார்கள். இப்பாற் பாஞ்சாலியைப் பிடிக்கவந்த கீசகன் திரௌபதாதித்தன் அனுப்பிவைத்த கிங்கரனால் வீசியெறிய வீழ்ந்து, மிகவும் வேஷ்டியால் தாழ்ந்து; தாம் வாழ்ந்தவாழ் விதுவோ வென்று மன மெலிவடைந்து தாஷ்டீகந் தளர்ந்து, மோகச் சமுத்திரம் வடிந்து, திம்மைதிரும்பிச் சிந்தை தெளிந்து மயக்கமாறித் தன் மாளிகைபோய்ச் சேர்ந்தான்.

### தருமநந்தனர் சில குறைபாடுகளைக் கூறி விராடனைக் கடிய, அவன் சபை கலைவித்து அந்தப்புரஞ் சேர்தல்

இவனது நிலை இப்படியிருக்க, அச்சமில்லாதிருந்த மச்சராஜன் கொச்சை மொழியாள் கேட்ட கேள்வியினால் நாணப்பட்டு, சபையிலுள்ளோர் பேசிய தன் விபகாரத் தாழ்வையும், கீசகன் தேடிக்கொண்ட நாசத்தையும் தன் மனதுட்கொண்டு, மைத்துனனைக் கொல்லுந் திறம் தனக்கில்லாமையால், புல்லியர் தங்களைபோல் பொருமலுற்றிருந்தான். இத்தன்மையிலிருந்த விராடராஜனை வேதவிதியும் நீதிவழியும் தெரிந்த கங்கபட்டர் பார்த்து, 'பூதலமாண்மையாற் புரக்குமன்னவர், தீதொழில் புனிஞரைத் தெண்டியாரினி, நீதியுஞ் செல்வமு நிலைபெறுங்கொலோ, வேதிலர்தமரென விரண்டு பார்ப்பரோ.' ஓ சாந்தகுண வேந்தனே! ஆண்மையுடன் அரசாக்ஷி செய்யும் அரசர்கள் துட்டரைப் பிடித்துக் கொட்டமடக்காவிடில் அப்பட்டினத்துச் செல்வமும், ராசநீதியும் நிலைபெறுவாம். புகழ்ப்பிரதாபமும் கைகூடாது, செங்கோற் செலுத்துந் திறமை யுடையவர்கள் விபகார திசையில் தன்னவன் பிறன் என்னும் பக்ஷபாதம் பார்க்கப்போகாது. வயிறு வளர்ப்பதற்கு வந்து உம்முடைய மனைவியை அடுத்துக் குற்றேவல் செய்து சீவனம் பண்ணுகிற ஓரேழைமேல், மச்சராஜன் மச்சான் இச்சை வைத்தானென்பது வசையோ? அன்றி இசையோ? இது பெரிய மனிதனுக்குள்ள நேயமா? ஒரு பெண்ணைத் துரத்திவந்தது ஞாயமா? சுத்த வீரனாயிருப்பவன் கொடுமை நினைத்தது தாமமா? நீர் சும்மா யிருந்துவிட்டது மர்மமா? இது கீழ்மக்கள் செய்கையல்லவோ? அக்கீசகன் தன்னைவிடப் பிரபஞ்சமில்லையென்று உம்மை மதியாதிருக்கின்றான். உமது துரைத்தனத்தில் இப்போப்பட்ட கெடுதியைச் செய்து கெலித்துப் போனான் இவனுக்கு எதிரி ஒருவருமில்லை. அப் பணிப்பெண்ணுக்கு திக்கு ஒருவருமில்லை. அப்படிக் கிருந்தபோதிலும், எல்லோருக்கும் பொதுவில் தெய்வமொன்று இருக்கின்றதல்லவா? பாவ புண்ணியங்களைப் பார்க்கும் தரும தேவதையானவள் சற்றேனும் சகிக்கமாட்டாளே? அரசன் அன்றே கொல்லும். ஆனால், தெய்வமோ நின்று கொல்லும். உலகமாயை யொழித்த ஞானியையுந் தீவினை தொடராது விடாது. தருமத்திற்கு விரோதமான காரியம் எப்போதுங்கழுத்தறுப்பு என்பது கதையிலுங் கேட்டறியீரோ? பெண்ணிச்சை என்று சொல்லும் இது, சகல ஆத்மகோடிகளுக்குஞ் சகசமா யிருப்பது. அவ்வாறிருப்பினும், இலைமறைவோ காய் மறைவோ என்றிருந்து, தாரதரமறிந்து, காலமிடந்தெரிந்து, காற்றடித்தது தாழைபூத்தது என்னுங் கற்பனைபோல் அநுபவிக்க வேண்டியது. அப்படிக்கில்லாமல், அதுவே உற்பனமாய்க் கண்டவிடத்தில் கண்ணுங்கருத்துஞ் செலுத்திப் பெண்டாசைகொண்டு பிதற்றித் தவிப்பது துன்பத்திலும் பெருந் துன்பமாய்ச் சேருமே. ஐயோ! நீர் இதுவரையிலும் பெற்ற மகிழ்ச்சியும் புகழ்ச்சியுங் கெட்டுப்போமே. இனி இகழ்ச்சிக்கு இடமாகுமே இறைவனே என்று தருமராசன் சாற்றினார்.

இப்பால் விராடராஜன் இங்ஙனமுரைத்த கங்கபட்டர் வாக்கியமும், விரதசாரணிக்கு நேரிட்ட அபாக்கியமும், அதனால் தனக்கு வந்த சிலாக்கியமும், தன் இரு காதைத் துளைத்து உருவிப்போனதினும் களைத்து புத்தியு மிளைத்

துச் சிங்காசனம்விட்டு எழுந்து, திருமனையுட் புகுந்து தியங்கித் திகைத்து, மயங்கி மலைத்து, பிரக்ஞை தப்பி யிருந்தான். அந்தக் கொலு மூகத்திலிருந்த வீமன் நெருப்பினும் அதிக மாகப் பொங்கி, பொறிசிதறக் கண்களையுருட்டி விழித்து, நறநறவென்று பல்லைக் கடித்து, கையை தேய்த்து முறுக்கி மோதி, முகத்தைச் சுளித்து விராடனைப் பழித்து, விண்ணுமண் ணும் வேகக் கலகலவென்று சிரித்து, குகை யுட்புகுஞ் சிங்கம்போல் மடைப்பள்ளியிற் புகுந்தான். பின்பு தருமராஜனும் மற்றத் தம்பிமாருந் தங்கள் காலத்தை நினைந்து வருந்தி, தங்கள் தங்கள் இடம்போய்ச் சேர்ந் தார்கள். வெற்றிவேலேந்திய விராடராஜன் படுக்கை பொருந்தாமற் புரண்டு, அழிவில்லா அரசுக்கு அநர்த்தம் வந்ததேயென்று பழி காரக் கீசகனை வெறுத்துக் குறுகுறுத்து, தன் தீவினையை யொழித்து இனி நாம் முடி பொறுத்திருப்பது எப்படி யென்று ஏங்கி யிருந்தான். மகாலட்சுமிக் கொப்பாகிய சுத க்ஷுணதேவியானவள் துன்பமடைந்து, எப்படி விளையுமோ? என்ன நேரிடுமோ? நமது செல் வங்கள் எவ்வாறுமோ? என்று திகிலடைந் திருந்தாள். அந்த மச்சநாட்டில் மருவிய நான்குவருணங்களும் தங்களுயிரின் மேலும், உடலின்மேலும் இச்சைவிட்டு அச்சமோடு இருந்தார்கள்.

ஓ அரசனே! இக் கொடிய செய்கைக்கு யார்தான் விசனப்படார்கள் என்று வைசம் பாயனர் சொல்லி வரும்போது, சந்திரகுல தோன்றலாகிய ஜெனமேஜெய மகாராஜன் மனஸ்தாபப்பட்டு இதென்ன பாவமென்று ஏங்கி, பக்கத்திலிருந்த தக்க மனைவியான வபுஷ்டாதேவியுட னெழுந்து பணிந்து, சுவாமி! மகா பதிவிரதையாகிய பாஞ்சாலியம் மனைவள், அந்தத் துன்மார்க்கக் கீசகனைச் சபித்துத் தன் மகத்துவத்தை நிலைநாட்டி வரிசைபெறலாகாதோ? ஏன் சும்மா விருந் தாள்? மானங் கெடுங்காலத்தி லில்லாத மகத் துவம் மற்றொரு காலத்தில் இருந்தென்ன போயென்ன? அந்தக் கீசகன் எம்மாத்திர மனுஷன்? எவ்வளவு பலமுள்ளவன்? எந்தக் குலத்திற் பிறந்தவன்? சுதர்க்கணைக்கும் இவ னுக்கும் சகோதர சம்பந்தம் எவ்வாறு உண் டாயிற்று? இவனுக்கு விராடன் அடங்கி யிருக்கவேண்டிய காரணமென்ன? இந்த விபரங்களை யெல்லாம் எனக்கு அறிவிக்க வேண்டும் புண்ணியனே என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

### கீசகன் வரலாறு

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! பிரம்சிருஷ்டியா லுண்டான பிரபஞ்சத்திற் பிராமண ஸ்திரீக்கும் க்ஷத்திரியனுக்கும் பிறந் தோர்களைச் சூதகுலத்தாரென்று சொல்லுவார் கள். அந்தச் சூதகுலம் க்ஷத்திரிய குலத்திற் குத் தாழ்ந்ததென்றும், வைசியருக்கு உயர்ந் தது என்றும் ஜாதிநூலிற் சொல்லி யிருக் கின்றது. அப்படிக் கிருந்தபோதிலும், அது முதல் இதுவரையிற் சூதகுலத்தில் க்ஷத்திரி யர்கள் சம்பந்தம் பண்ணிக்கொண் டிருக் கின்றார்கள். க்ஷத்திரிய குலத்திற்கு சூதகுலத் தாருக்குச் சம்பந்தமில்லை. இந்தப் பரத கண்டத்திற் கேகயராஜன் ஒருவனிருந்தான். அந்தக் கேகயராஜன் இராஜகன்னி யென் பவளை விவாகம் பண்ணிக்கொண்டு லோகப் பிரசித்தனாய் வாழ்ந்தான். அவனுக்கு ஒரு பெண் பிறந்தாள். அந்தப் பெண்தான் இந்தச் சுதர்க்கணை யென்பவள். இவள் பிறந்த பின்பு வேறு பிள்ளைகளில்லாமையால் இந்த சுதக்ஷுணதேவியை புஷ்ப செடிபோல் அருமையாக வளர்த்து வந்தார்கள். இப்படி யிருக்கையில், இவள் தந்தையாகிய கேகய ராஜன் ஆண் பிள்ளை பிறக்கவேண்டு மென் னும் ஆசையால், மாளவதேவி யென்பவளை இரண்டாவது மணம் புரிந்து கொண்டான். அவள் கருப்பத்தில் நாற்றுநாலு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் இந்தக் கீசகன்தான் மூத்தவன். சிங்கபல னென்றும், பாணனென் றும் பேர்வாய்ந்தவன். மகா பலசாலி. இப்படி யிருக்க, விராடனுடைய முதற் பெண்சாதியா கிய சுரதை யென்பவள், சதானீகன் - சங் கன் - வராகன் - வராககேது என்னும் இந் நால்வரைப் பெற்று வைத்து இறந்து போனாள். பிற்பாடு இந்தச் சுதர்க்கணையைக் கலியாணஞ் செய்துகொண்டான். உத்தரன் உத்தரை என்னும் ஆணும் பெண்ணும் ஒரு பேறாய்ப் பிறந்தார்கள். இவ் விராடராஜ னுக்கு அபிமான புத்திரனாக முதற் பிறந்த சுவேதன் ஒருவன் இவர்களியாவரும் குழந் தைகளானபடியாலும், விராடன் தம்பிமார்கள் பதின்மர் இடந் தப்பினவர்களாகையாலும், விராடனுடைய மச்சதேசஞ் சகல வளங்களும் உள்ளதாகையாலும், சத்துருக்கள் அநேகர் இருந்தார்கள். அதனால் விராடன் சித்தம்

கலங்கி, சுதர்க்கணைக்குத் தம்பியாகிய கீசகன் சத்துரு சங்கார னென்று கேள்விப்பட்டு, அவனை வருவித்துத் தனக்குதவியா யிருக்கும்படி கேட்டுக்கொண்டான். அதற்குடன்பட்ட கீசகன் உபகீசகர்களாகிய தன் தம்பிமார்களுடன் இந்த விராடபுரத்தை யடுத்து, சேனாதிபதிப் பட்டமுடையவனாய்த் திக்கு விஜயம் புரிந்து, சகல காரியாட்சிக்குந் தானே சுதந்திரனானான்.

இப்பொழுது நான் சொன்ன கீசகர்கள் யாவரும் பூர்வசனனத்திற் காலகேயர்களென்னும் காந்திருவர்கள் பாணனென்பவன் முதலாக அந்த நூற்றுநாலுபேர்களும்வாமகாரிகளாகவும் காமகாரிகளாகவும் சாமவேதியர் சாபம்பெற்று பூமியிற்பிறந்தார்கள். பாணனென்னுஞ் சிங்கபல கீசகனானவன் அஸ்திர சஸ்திரங்களுக்குரிய சாஸ்திரங்களை அப்பியசித்து பதினாயிர யானை பலமுள்ளவனாய் பகைவரைக்கொன்று பலரையும் வென்று விராடபுரத்தரசை நிலைநிறுத்தி வைத்தான். இவனை பகைத்தெதிர்த்த திரிகர்த்த தேசாதிபன்-தசாரணதேசராஜன்-கஜேருகதேசாதிபன்-மாளவதேசபோஜன-யவனதேசராஜன்புலிந்தநகர்த் தலைவன்-கோசலதேசமுதல்வன்-அங்கராஜன் வங்கதேசன் - கலிங்கராஜன் - தக்கணதேசாதிபன்-நிடததேசாதிபதி இவர்கள் முதலானோர்களும், கிராதகுலத் தலைவர்களும் இவனுடன் போர்புரிந்து வெல்லமாட்டாமல் தேரழிந்து வில்லொடிந்து இனிச் சாகிற பரியந்தம் இவனுடன் சண்டைக்கு வருவதில்லை யென்னு சபதம் பண்ணிக்கொண்டு, ஊர்முகமா யோடிப் போனார்கள். அதனால் இவன் அநேக வெற்றி பெற்றவனாய், மதிமந்திரி யோர்ப்பப் புத்திகற்றவனாய், இத்தேச முழுவதும் தனக்குச் சுவாதீனமாக்கிக் கொண்டு, தனக்கொருவரும் நிகரில்லாமல் யதேச்சையாக விருக்கின்றான். எல்லாமர்மங்களுந் தெரிந்தவ னாகையால், இவனுடன் விராடன் அடங்கி யிருக்கின்றான். இதனாலேதான் திரௌபதியைத்துரத்திவந்த துராக்கிரதத்தைப் பற்றி யொன்றுங் கேளா மற்போனது. அதன்றியும், திரௌபதியம்மன் கீசகனைச் சபிக்கப்படாதா என்று வினாவினீரே அதற்குக் காரணஞ் சொல்லுகிறேன் கேளும்: தனக்குரிய கணவர்கள் கண்குத்திபாம்பு போற் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்திருக்கும்போதுதான் சபிப்பது தருமமல்ல வென்றும், சூரிய நமஸ்காரஞ் செய்த சுகிர்தத்தினால் தனக்குத் துன்பமில்லாமற் போயிற்றென்றும் எப்படியும் வீமன் தப்பாமற் கொல்லுவா னென்றுந் தைரியங்கொண்டு, சபிக்காமல் விடுத்தாள். ஓ வெண்கதிர் குலத்தோன்றிய வேந்தனே! நீர் கேட்ட சங்கதியைச் சந்தேகமறச் சொன்னேன். மேல் நடக்குங் கீசகனுடைய அழிவையுஞ் சொல்லுகின்றேன் கேளும் என்று வைசம்பாயனர் ஸ்ரீ வேதவியாசரைச் சிந்தித்து வந்தித்து செப்பத் தொடங்கினார்.

### திரௌபதி வீமசேனனை மடைப்பள்ளியிற் சென்று கண்டு தன் குறை கூறி வெறுத்துக் கொள்ளுதல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் மாதமொன்றுக் கொவ்வொருவராக மகாமேருவை வலம் வருகின்ற துவாதசாதித்தர்களில், அந்த மாசத்தி லுதயமான மித்திரு வென்னும் சூரியன் சதா திரௌபதியம்மனாற் பூசிக்கப் பட்டவனாதலால், திரௌபதாதித்த னென்று பேர் பெற்றான். அவன் விரத சாரிணிக்கு விளைந்த வேஷ்டையை குறித்து அச் சூரியகுலத்தோன்றிய கீசகனை வெறுத்து அவன் குலதர்மத்தை விட்டு வழுவினானென்னுங் கோபத்தினால் விஸ்தாரமுள்ள தன் கிரணத்தை ஒன்றுபட கூட்டி அஸ்தமனகிரியில் தேரோட்டி மேற்றிசை சிவக்க நாற்றிசையுவக்க சாய்ந்து சமுத்திரத்தில் தோய்ந்தான். அக்கால் அன்னகரிலுள்ளோர் யாவரும் அடிவயிற்றில் வடவா முகாக்கினியை குடிவைத்துக்கொண்டு, பகிரெனத் திகிலடைந்து, நித்திரை விட்டு, நினைவுங் கெட்டு, நெட்டுயிர்ப்பெறிந்து, உயிராசை துறந்து, உறக்கமற்று இருந்தார்கள். சுதேஷ்ணை தேவியினிடத்தில் இருந்த திரௌபதா தேவியானவள் தீராத் துயரத்தினாற் சிந்தை வருந்தி கண்கலங்கிக் கவலை கொண்டு ஜெபதபஸ்நான போஜனாதிகளுந் துறந்து எண்ணாது மெண்ணி, நமது புகழுக்குப் பழுதுவந்ததே என்று நெருப்பில் இட்ட மெழுகுபோல் நெஞ்சமுருகி, ஏக்கம் மேலிட்டு தூக்கங் கொள்ளாமல் நடுராத்திரியில் வெளிப்பட்டு, தருமராஜனுடைய சரணாரவிந்தத்தைத் தியானித்து, காவலாளிகளின் கண்ணிற் படாமல் மடைப்பள்ளிக்குட் சென்று, வெண்பட்டு மெத்தமேற்சயனித்து நித்திரை பிடியாம லிருக்கின்ற பலாயனனைப் பார்த்து, ஓ வருஷகாலத்து விருஷபம் போன்ற மன்னவனே! என் மானங்கெட நினைத்த கீசகனை வாட்டாமல் மெய்மறந்து உறக்கஞ்

கொள்கின்றீரோ? கவலையுள்ளவர்க்குக் கண்ணுறக்கம் வருமோ? நான் பட்ட பாட்டைப் பார்த்திருந்த நீர் கொஞ்சமேனும் பட்படப்பின்றி முற்றிலும் மறந்துவிட்டீரோ? நல்லது எழுந்திரும்; எழுந்திரும் என்றாள். இவள் வருவதற்குமுன்னமே எண்ணமிட்டுக் கண்ணை மூடிக்கொண்டு கலவரத்திருந்த வீமசேனன் திடுக்கென்றெழுந்து, ஓ பேதையே! நாம் ஓர் இனத்தார் என்று ஒருவருக்குந் தெரியக் கூடாதே. அதை யோசிக்காமல் நீ இப்படியும் வரலாகுமோ வென்றான்.

அந்தச் சொல்லைப் பொறுக்கமாட்டாமற் பதைத்து, ஆ! ஆ! நீர் சொல்வது நன்று யிருக்கின்றது. நான் எவ்வளவோ பரதவிப்போடு குறை சொல்லிக்கொள்ள வந்தால், வந்த காரியத்தைப் பற்றி யோசிக்காமல் ஆரோ எவரோ ஏனோ தானோ என்பவனைப் போல் அலட்சியமாகப் பேசுகிறீர்? வெகு நேர்த்தி வெகு நேர்த்தி பாஞ்சால புத்திரியாகியும், பாண்டவர்களுக்குப் பத்தினியாகியும், இந்திரப் பிரஸ்தத்திலிருந்த என்னை அஸ்தினபுரத்திற் கழைத்து வந்து நூறு துட்டரை வெளியிட்ட பட்டபுதேவியை எனக்கிட்ட மான மாமி என்று அவள் கிட்ட வைத்துப் போய், சொக்கட்டாணுடித் தோற்று இக்கெட்டுமுள்ள துராதுரைகள் நிறைந்த சபையில் துர்ச்சாதனன் என்னை மற்கட்டி யிழுத்துவர கர்னன்-துரியோதனன் முதலிய பலரும் இகழ்ந்து துர்பாஷைகள் வழங்க, அதனால் என் அங்கம் பங்கப்படும்போது வீஷ்மர்-துரோணர் கிருபர்-விதுரர்-திரிதராஷ்டிரர் இவர்கள் ஊமைபோலிருக்க, நீங்கள் ஐவரும் ஐம்பொறி யடக்கி என்னும் ஆமைபோலிருக்க ஆபத்பாந்தவனும், ஆதிமத்தியாந்தரகிதனும், ஆதிமூலப் பொருளும், அநந்த கல்யாண குணனும், யதுகுல முதல்வனாகிய ஜநார்த்தனன் சன்மானத்துடன் என் மானங் காத்தருளினார். நீங்கள் அந்நாளிலிருந்த தன்மை போலவே இந்நாளிலும் இருக்கப் போகின்றீர்கள் என்று முன் ஜாக்கிரதை செய்ய முழுராத்திரியில் வந்தால் என்னை யேன் வந்தாய் என்று கடிகின்றீர். நான் பிறந்த அகத்திலும் புகுந்த அகத்திலும் அதிக செல்வமாய் ஓராயிரஞ் சேடியர் புடை சூழ்ந்து ஊழியஞ் செய்ய வாழ்ந்திருந்தேன்; உங்களுடைய வீரமில்லாத சாந்தத்தினால் இப்போது கற்களும் முற்களும் உள்ள கானக மெங்குந் திரிந்தலைந்து, கசங்கி வருந்தி, காய்கனி அருந்தி, பன்னிரெண்டு வருடங் கழித்தேன். இது போதாமல் இன்னும் ஒருவருஷம் அக்ஞாதவாசஞ் செய்வதற்கு உருமாறிப் பெயர் வேறு கொண்டு, என்னிருகையுங் கன்றி, என் மெய்யொளியுங் குன்றச் சிற்றேவல் புரிந்து வருங் காலையில் கொடிய கீசகனனவன் இவ்வித அவதிப்படுத்தினன். பூமண்டலமுழுதும் புகழ்பெற விளங்கிய தருமராசனனவர் வைதீகவேடம் பூண்டு ஒரு மார்க்கமா யிருக்கின்றார். திரிபுவனகண்டக ஜெயசிகாமணியாகிய விஜயன் பேடியுருவெடுத்து, நாடகத் தொழில் எடுத்து, ஆடல் பாடல் தொடுத்து, மூடிமுக்காடிட்டுக்கொண்டு இருக்கின்றார். நகுல சகாதேவர்க ளிருவரும் வெளியில் தத்தமக்கேற்ற தொழிலில் அமைந்திருக்கின்றார்கள். இவர்களிடத்தில் எல்லாஞ் சொல்லி காரியமென்ன, ஒரு லாபமுமில்லை. எனக்குரிய ஐவரில் என்னெண்ணப்படி நிறைவேற்ற உம்மைவிட மற்றொருவரால் ஆவதில்லை. உற்றதுணை நீயே; வாயாற் கூறிய சபதத்தையும், மனத்தால் நினைத்த குரோதத்தையும், முன்பின் பாராமல் முடிக்கத்தக்க பலசாலி நீராகையால் உம்மிடத்தில் என் குறையை முறையிட்டுக் கொண்டேனென்றாள்.

### வீமன் திரௌபதியைத் தேற்றிக் கீசகனைக் கொல்வதற்கான ஓர் சூழ்ச்சியைச் சொல்லி யனுப்புதல்

ஓ மகாராஜனே! இவ்வாறோதிய பாஞ்சாலியின் மொழியை வீமன் கேட்டு வெடுக்கென்றெழுந்து, காரணகாரியங்களை யோசித்து, 'பொறைமெனப் படுவதாடவர் தமக்குப் பூணெனப் பகலிலும்பொருந்தார், முறையறப் பிரிந்தா லக்கணத்தவர் தம் முடித்தலை துணிப்பதே முழுப்பூ, ணறைமலர்க் குழலார் தமக்கு மெய்யகலா தாணமே நலஞ் செய்பூணெனிலும், நிறையுடைப் பெரும்பூ ணமளிவாய் நாணநிகழ்வுறு நிகழ்ச்சியே யன்றோ' ஓ மாதே! புருஷர்களுக்குரிய ஆபரணம்-பொறுமை ஆயினும் நீதி வழுவிய நிர்மூடரைக் கணப்பொழுதாயினுந் தாமதியாமற் குப்புறத்தள்ளி யுதைத்து, தலைபிளக்க மிதித்து கீர்த்தியை நிலைநாட்டுவதே சிறந்த ஆபரணமாம். கலனிறைந்த மங்கையருக்கு நலனிறைந்த ஆபரணம் நாணமென்பதுதான். ஸ்திரீ புருஷர்கள் கூடுங்காலத்திலும் அந்நாணம் நீங்காமல் சரசஞ்செய்து அனுபவிப்பதே, பொற்பூஷணங்களிற் சிறந்த நற்பூஷணமாகும். இப்படி யிரு

க்க, எனக்குப் போதுமான பலமிருந்தும், என்னைக்குத் தக்க கதாயுதமிருந்தும், என் தம்பி தனஞ்சயனுக்கு சாற்றற்கரிய சௌரிய பராக்கிரமமிருந்தும், அவன் கையில் திரிலோகத்தையும் வெல்லவல்ல காண்டீபம் இருந்தும், என்னலாபம்? அஸ்தினாபுரத்திற் சகுனியுடன் சூதாடித் தோற்றபொழுதும் உன்னைத் துர்ச்சாதனன் இழுத்துவந்த பொழுதும், இராஜசபையில் மானபங்கம் பண்ணிய பொழுதும் துரியோதனன்-கர்னன் இவர்கள் வம்புவார்த்தைகள் பிதற்றிய பொழுதும், ஆற்றக்கூடாமல் உடல்பதறி யெழுந்த எங்களை ஆத்திரப்படவேண்டாமென்று அடக்கிய அண்ணாவானவர், இப்பொழுதும் இந்த விராடன் சபையில் உன்னைத் துரத்திவந்த கீசகனைக் கொல்ல வெண்ணிய என் கோபக்குறி தெரிந்து, சவுக்ஞையாகப் பேசிச் சாடைகாட்டித் தடுத்துவிட்டார். இவர் என்னென்றைக்கும் இத்தன்மையாகவே யிருந்தால், எங்கள் மானமுங் கெட்டு ஈனமும் பட்டுப் போவோமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆதலால், ஓ நல்லாய்! இப்படி எங்களைச் சமயத்தில் மீறவொட்டாமற் சங்கடப் படுத்திவருந் தருமராஜனாலுண்டாகிய மனஸ்தாபத்தையும், துரியோதனாதியராற் விளைந்திருக்கின்ற கோபத்தையும், இந்தக் கீசகன் பேரிற் காட்டிய, என் கீர்த்தியை நிலைநாட்டி யானை மத்தகத்தைப் பிளக்குஞ் சிங்கம்போற் பாய்ந்து, அவனுடலை வாட்டிக் குடலைப்பிடுங்குகிறேன். இனிமேல் இவன் விஷயத்தில் யார் குறுக்கிட்டாலும் நானுடன் படப்போகிற தில்லை. இவனை உயிருடன் விடப்போகிறது மில்லை. இவ்வுலகத்தில் அற்பர்களுடைய பெண்சாதிமார்களெல்லாரும் அதிக சௌக்கிய மடைந்திருக்கும்போது, விற்பனர்களாகிய எங்கள் பத்தினியான நீமெலிந்து விசனப்படவேண்டிய விதியென்ன? நல்லதாகட்டும்; வல்லவருக்கு வாழ்க்கைப்பட்டும் இப்படி வருத்தப்படுகின்றோமே யென்று நீ சற்றும் மனம் இளைக்க வேண்டாம்.

ஓ மாதரசி! முன்னாளில் தீவினை வசத்தால் அகஸ்தியருக்கு அன்புடைய பத்தினியாகிய லோபா முத்திரை யென்பவள் கணவனுக்கு பணிவிடை செய்து ஆகாரம் நித்திரையின்றி நெடுநாள் கஷ்டப்பட்டு, பிற்பாடு நல்வினைப் பயத்தாற் சுபமுஞ் சுகமுங் கீர்த்தியும் பெற்றாள். இதன்றியும், யயாதி மகாராஜன் புத்திரியாகிய சுகன்னியானவள் சவனக மஹாமுனிவருக்குச் சிசுருஷை செய்து, சிலநாள் வருத்தப்பட்டு பலநாளும் பாக்கியத்துடன் வாழ்ந்து, கன்னியம் பெற்றுப் புண்ணியலோகமுற்றாள். வீமராஜன் மகளாகிய தமயந்தியானவள் பிள்ளைகளைப் பிரிந்து, புருஷனையும் நீங்கித் தனியளாய்க் காட்டில் அலைந்து கரும்பாம்பின் வாய்பட்டு, வேடனால் வெளிப்பட்டு, சிறிய தாயசர் வீட்டிற் போய்ச் சேர்ந்து அங்கே குற்றேவல் செய்து கொண்டிருந்து, கொஞ்ச நாளைக்குள் தாய்தந்தையை யடுத்து, பின்பு தூதுவிடுத்து பிரிவுற்ற நாயகனைக் கண்டுபிடித்து தன் சேயோடு மகிழ்ந்து சிறந்து வாழ்ந்திருந்தாள். இவ்வாறு எத்தனையோ கோடி ராஜஸ்திரீகள் படாதபாடும் பட்டுக் கற்புக்கோரிடையூறு மின்றிப் பதம்பெற்றிருந்தார்கள். ஆகையால், தேவர்களானாலும் நல்வினை தீவினையை அனுபவித்தே தீர்க்கவேண்டும். இப்பொழுது நமக்குண்டாகிய துன்பம் இன்னும் முப்பது நாளைக்குமேல் இன்பத்தை விளைக்கக் காத்திருக்கின்றது. (பட்டவர் பதத்திலிருப்பார்கள்) என்னும் பழமொழி யறியாயோ? அப்படிக் கிருந்தபோதிலும் இந்த பகையை எந்த விதத்திலுஞ் சீக்கிரத்தில் நானே முடிக்கிறேன். ஓ பாக்கியவதியே! அஞ்சவேண்டாம் என்று வீமசேனன் சொல்லித் தேற்றினன். இவ்வார்த்தையைப் பாஞ்சாலி கேட்டு, ஐயா கதாபாணி! முரசக்கொடி முதல்வனாகிய தருமராஜன் உமது குறிப்பை அறிந்து கோபமேலிடவொட்டாமல் தணித்தாரென்று மனக்குறை வேண்டாம். நம்முடைய பகையாளி நிச்சயித்த பன்னிரண்டு வருடமுங் கழித்து ஒருவருடம் அக்ஞாதவாசஞ்செய்யும்படியாக இந்த விராடபுரத்தில் வந்து கொஞ்சநாளாயிற்று. இன்னுஞ் சிலநாள் ஒருவரும் அறியாமலிருந்து காலம் போக்கவேண்டும். இதற்குள்ளாக நம்மை யாவரேனுங் கண்டாற் பகைவெல்ல வந்த நற்காலந் துற்காலமாம். பின்பு பழையபடி வனவாசம் பண்ண வரும். அதனால் உங்கள் சீருஞ் சிறப்பும் சபதமும் பலயீனப்படும் என்று நினைத்து உம்மை அவசரப்படவொட்டாமல் அடக்கினார்.

இதல்லாமல் அவர் காலதேச வர்த்தமானந் தெரிந்த புத்திமானாகையால், உமது வெகுளியைக் கண்டவுடன் அடக்கவேண்டிய கடமைதான். அதனால் அவர்பேரில் தோஷ

மில்லை. இந்தப் பஞ்சையாகிய கீசகன் என்னைக் கொஞ்சமாக நினைத்தான். அப்போது அவனை நான் பார்த்து, அடா பாவகாரி! அடா துரோகி! உனக்குக் கேடுகாலம் நேரிட்டது. எனக்கு காந்திருவர் ஐந்துபேர் கணவர்கள். மிகுந்த திடவான்கள். சத்துருவை வீரசொர்க்கம் சேர்க்கும் விஷயத்தில் மகா வல்லவர்கள். மித்துருவானவர்களுக்கு உத்தம குணமுள்ள நல்லவர்கள். எல்லாமறிந்தவர்கள். பொல்லாங் கொழிந்தவர்கள். எங்குமிருப்பவர்கள். நீ செய்த தீமைகள் அனைத்தையுந் தெரிந்துக் கொள்ளத்தக்க ஞானமுள்ளவர்கள். சொல்லாமற் கொல்லத்தக்கவர்கள். நீயும் உன் குடும்பமும் நீறுயழியாதே என்று பல நீதிகளையும், பழமொழியாய் நடந்திருக்கின்ற சில சேதிகளையும் சொன்னேன். அந்தக் கீசகன் நான் சொல்லியவற்றை அலட்சியஞ் செய்து பேர் போ; அவர்கள் எப்பேர்ப்பட்ட காந்திருவராஞலும் என் முன்னிற்பார்களோ? என்று ஏசித் துரத்திக்கொண்டு வந்தான். அந்தப் பதிதன் உமக்குமுன் எதிர்ப் படுவானுகில், என்னபாடு படான்? கருடனது நிழற்பட்ட பாம்புபோற் கெடுவான். என் மனம் பற்றி எரிகிறது. அந்த நாசகால கீசகன் வந்த வழி தெரியாமல் நொந்தழியும்படிக்கு நீர் பிரவேசிக்கவேண்டும். ஆனல், ஆத்திரப்படாதேயும். இன்னும் இரண்டொருநாள் காலதாமசஞ் செய்து இவனை முடித்தால், விரதசாரணிக்கு அன்பர்களாகிய காந்திருவர் கீசகனைப் பிடித்துத் திடு திடுக்க அடித்து முடித்து விட்டார்களென்று பேசிக்கொள்வார்கள். அப்போது உம்மேற் சந்தேகங் கொள்வதற் கிடமிராது. ஆகையால், உமது யுத்திக்கு இசைந்தபடி பார்த்துக்கொள்ளும் என்று திரௌபதி சொன்னுள்.

அந்தக் கற்புடையாள் வார்த்தையை வீமன் கேட்டு, ஓ பாஞ்சாலி! கீசகனைக் குறித்துக் கிஞ்சித்தேனும் நீ யோசிக்க வேண்டாம். அவனென்றைக்கு உன்னைத் தொடர்ந்தானே அவனென்றைக்கு அழிந்தானென்று நம்பு. உன் அன்றைக்கே அழிந்தானென்று நம்பு. அப்படியே அவனுயிரை நஷ்டப் படுத்தி விடுகிறேன். ஆனல், விஷ்ட மெப்படியோ அப்படியே அவனு இப்பொழுது விடியற்கால மாயிற்று. இனி நாம் அந்தக் காரியத்திற்குப் பிரவேசித்தால், அக்ஞாதவாச ரகசியம் வெளிப்பட்டுப் போய் விடும் தருமபுத்திரர் சித்தத்திற்கு மெத்தவருத் தஞ் சம்பவிக்கும். அன்னமே! நீ முன்னமே சொன்ன வண்ணமே எண்ணித் துணிவது கருமமாதலால், இன்றிரவு முழுமையும் நாளைப் பகல் முப்பது நாழிகையும் பொறுத்து, நாளை யிராத்திரியை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீ யந்தச் சுதர்க்கணை மாளிகைக்குப் போய் விடுவையாகில் அந்தத் துற்புத்தியுள்ள கீசகன் நாளைக்காலமே உன்னிடத்திற்கு வந்து, இறுமாந்து கொவங் கொண்டு, ஓ விரதசாரணி! இப்போது என்ன சொல்லுகிருய்? நானுன்னைத் துரத்திவந்த போது என்னை யார் தடுத்தார்கள்? எனக்கும் எதிரில்லை. உனக்குந் திக்கில்லை என்று சொல்லி மகா தாராளமாய்க் கிட்டிப் பேசுவான். அவனை நீ பார்த்தவுடனே அன்புள்ளவளைப்போல் அரைக்கண் பார்வை காட்டி, அதிமோகமுக நயஜாடை காட்டி, ஆசை விநய அபிநயம் புதட்டி, மோக விஷயத்தை அவன் முடிமேலேற்றி உன் கற்புக்குமாத்திரம் பழுதில்லாமல் அந்தக் கயவனுடன் கலந்து பேசி, விராடபுரத்திற்கு மேற்கிலிருக்கு மாஞ்சோலை சூழ்ந்த வசந்த மண்டபத்தில் நாளை இராத்திரி பத்து நாழிகைக்கு அவனை வரும்படியாகப் பக்குவப்படுத்திக் கொள் என்று யுத்திசொல்லி திரௌபதியை அனுப்பிவிட்டு, தான் நெய்வார்த்த நெருப்பெனப் பொங்கி முகம் வேர்த்து, நித்திரை பிடிக்காமற் சித்தம் பிரமித்து, தான் குறித்த காலவளவைக் கருதி, பகலிரவென்று பாராமற் சுடச்சுட வேலை முடிப்பதற் கில்லையே என்று மனக்கலக்கங் கொண்டு, படுக்கையில் மல்லாந் தெண்ணமிட்டுக் கொண்டிருந்தான். அவனுரெனில், தருமராஜனுக்கிளைய சத்தியவிரதனும், கருமலைபோல் வளர்ந்த இருபுஜமுள்ளவனும், பதினுயிரம் யானைபலம் பெற்றவனுமாகிய வீமசேனன்.

பாஞ்சாலி வழக்கப்படி நந்தவனத்திற்குச் செல்ல, அங்கே மீண்டுங் கீசகன் வந்து வேண்ட, அவனை வீமன் குறித்த விடத்திற்கு வரச்சொல்லி மீளுதல்.

இத்தன்மையா யிருந்த வீமனிடத்தில் விடைகொண்டு சென்ற விரதசாரணியானவள் சுதர்க்கணை மாளிகைக்குப் போய், பொழுது விடியுமளவும் ஒருவிதமாய் முகஞ் சுளுக்கிக் கொண்டிருந்தாள். அப்படிக்கிருந்த பாஞ்சாலியின் மனே துக்கத்தை பரிகரிப்பதுபோல் அகமுக கமலமான்தை மலரக் காட்

டும்படியாக, ஒளியைக்கூட்டி இருளையோட்டி கதிர்க்கிரணங்களை நீட்டிக்கொண்டு சூரியன் உதயமாயினான். அழகிய உதயகிரியிலெழுந்த ஆதித்தனைக்கண்ட சைரந்திரியானவள் வழக்கப்படி காலைக்கடனை முடித்து, சுதக்ஷணாதேவிக்கு மலரெடுத்துத் தொடுத்துக் கொடுப்பதற்குப் பூஞ்சோலைக்குட் புகுந்தாள். அப்போது இராஜஸ்திரீயாகிய சுதர்க்கணைமுன் தன்னை நிந்தித்த நிர்பாக்கியத்தால் மனம் வருந்திப் போன கீசகன் தன் தமக்கையைச் சந்தித்து க்ஷமை கேட்டுக்கொண்டு வருவோம் என்று நினைத்து, மந்தமாருத முலாவிய நந்தவனத்தில் வந்தான். அவன் வந்தவழியிற் சந்திர உதயம்போற் கொந்தலர் பறித்துக்கொண்டு நின்ற கோதையானவள் அவனை கண்டமாத்திரத்தில் அந்தகனைக் கண்ட ஆன்மாவைப் போல் நடுங்கி, தெளிந்த சிதேந்திரியர்களைப் போல் உடனே தேறி, மனந்தளராமல், சங்கப்படாமல், தள்ளாடி ஓடாமல், தவித்து வாடாமல், சற்றும் அச்சமில்லாமல், தலைகுனிந்து, தன் காற்புறவடியைப் பார்த்து நிமிஷத்திற்கு ஒருதரம் கீசகன் முகத்தை நோக்கி, சற்றே புன்சிரிப்பாக நகைத்து, அவனது துற்புத்தி படருவதற்குத் தானே கொழுகம்பாகி, வீமனிடத்திற் பேசிக்கொண்ட சங்கேதப்படி நிறைவேற்ற யெண்ணினாள். அப்போ தவ்விடத்திற் கற்புநிலை தவறாமற் பொற்பிரதிபோல் இருந்த மாலினியைப் பழிவழிக்கு வந்த மூழுடன் பார்த்து, சந்திரனைக்கண்ட சமுத்திரம் போற் பெருகி, சந்திரகாந்தக் கல்லைப்போல் உருகி, செல்வத்தைக் கண்ட கனவான்போல் மகிழ்ந்து, கல்வியிற் பொருளிற் கற்பனை யலங்கார கவிதைமேற்கண்ட கனவான்போல் முகமலர்ந்து, விழிகுளிர்ந்து, அவன் கால்முதல் தலைவரைக்கும் இமையாமற் பார்த்து, தன் அறிவு கெட்டு, அற்பபுத்தி மேலிட்டு, திக்கு நோக்கி கும்பிட்டு, இதனைப் பேசுவதாயினான்.

ஓ விரதசாரணி! எனக்குப் பிராணாதாரம் நீயன்றி வேறில்லை. நான் சொல்லப்போகின்றதை நன்றாய்க் கேள். இந்தப் பட்டினமும் இந்நாட்டு வளப்பமும் விராடனுடையவாழ்க்கையும் என் தமக்கையாரது மங்கிலிய சூத்திரமும், இதோ என் இடதுகையில் மூடிவைத்திருக்கின்றேன். என் கையை விரித்து விடுவேனாகில், அவைகளெல்லாம் துருவாசற் சாபத்தாற் சமுத்திரம்போயழிந்திய தேவேந்திரன் செல்வம்போலாய்விடும். என்னை என்னமோ வென்றெண்ணாதே. முன்னமே என் வல்லமை யாவுஞ் சொல்லி யிருக்கின்றேன். உன்னை நான் துரத்தி வந்தபொழுது யாரென்னைத் தடுத்தார்கள்? எவர்கள் என்னருகில் வந்தார்கள்? விராடராஜனாவது ஏனிப்படி செய்தாயென்று கேட்டானா? உனக்காகிலும் உதவி ஒத்தாசை செய்தானா? ஒன்றுமில்லை. ஆதலால், இன்னும் நான் உனக்குச் சொல்லவேண்டுமா? இந்தவேலை என்னையல்லாமல் இன்னொருவன் செய்திருப்பானாகில், இந்நேரம் அவனை எமலோகத்திற் புழுவாய்த் துடிக்கச் செய்வேன். எல்லோரும் என் காலில் வீழ்வதினாற் சகலமுமெனக்கே சொந்தமென்று உனக்குத் தெரியவில்லையா? இந்த விராடனுக்கு நான் கட்டி வைத்திருக்கின்ற பட்டத்தை இப்பொழுதே உனக்குக் கட்டி, உன்னைப் பெண்ணரசியாக்கி வைக்கிறேன். வேண்டுமானாற் பிரத்தியக்ஷமாகப் பார். இதன்றியும், உன்னைக் காக்குங் கந்திருவருண்டென்று பேதை மதியால் நம்பிப் பெருமோசம் போயிருக்கின்றாய். என்னைப் பேசாதும்பேசிக் கருக்கின்றாய். வீண் கர்வங்கொண்டு செருக்கின்றாய். இப்போப்பட்டதியில் உதவிசெய்ய வாராதவர்களை உனக்கு உரியவர்களென்று எண்ணலாமா? அவர்கள் வண்டவாளத்தையும் பக்ஷத்தையுங் கண்டு கொண்ட நீ இனி வேறு பேசப்போமா? அற்பகந்திருவர் பேச்சு அவலமாய்ப்போச்சு. நான் ஆருக்கு மடங்காதவன். ஆர் படைக்குந் தோற்காதவன். என்னைக் குறித்து இன்னுமென்ன சொல்லப்போகின்றாய்? உன் எண்ணந்தானென்ன? அடி வண்ணமகளே! ஒரு வேளை என்பேரிற் குற்றம் எத்தனையோ இருக்கலாம்; சிறியோர் செய்த பிழையைப் பெரியோர் பொறுக்கவேண்டுமென்று புண்ணியவான்கள் பேசியிருக்கிறார்கள். அந்த வார்த்தைக்கு விக்கினமில்லாமல் மன்னித்து, என்னை ரட்சித்து, பொறுமையுடன் ஆதரிப்பது உன் கிருபைக்குரிய கடன் என்று தன் இருகரத்தையுந் தலைமேற் குவித்துச் சேவித்து, உன் கல் மனம் இளகி என் கருத்துமுற்றக் கனிவாய் திறக்கவேண்டுமென்று காலில் வீழ்ந்தான்.

இவ்வாறு பரதவித்துக் காலில் வீழ்ந்த கடும்பாவியை மாலினி பார்த்து, முக நயத்துடன் மூறுவலுங்காட்டி, நாம் நினைத்தகாரியம் இன்றைக்கு நிறைவேறுமென்று மாயசாயல் மயக்கநோக்கம் வஞ்சனைப்பேச்சு இவை முதலிய மார்க்கங்களினால் வசனிக்கத் தொடங்கி

ளுள். வாரும் கீசகராஜனே! நான் உம்மைத் தடுத்ததும் விரகதாபப்பட விடுத்ததும் உமது மனம் வருந்தப் பேசியதும் என்னத்தினுலென்ருல், எனது மேலான மரபினுலும் நல்லொழுக்கத்தினுலும் நான் கொண்டிருந்த விரதத்தினுலும் உமது எண்ணத்தைப் பின்னப்படுத்தினேன். நீரென்பேரில் ஆசைப்படு முன்னமே நான் உம்மேற் பாசங்கொண்டிருந்தேன். அதல்லாமலும், நீரென்மேல் வைத்த மோகம் நிலையானதுவோ? நெறியானதுவோ? வேறொரு பெண்ணைக் கண்டாற் பின்வாங்குமோ? மனதேங்குமோ? என்னமோ? ஆதலால் ஆண்பிள்ளைகளின் புத்தி சபலமாமே. என்று சோதிக்கு நிமித்தமாக, இஷ்டமில்லாதவள் போல அபிநயித்தேன். என் மெய்தொட்டிருந்த காந்திருவர் ஐவரும் என்னைக் கைவிட்டார்போலுங் காண்கிறது. இனி காரியமில்லை. என்மேற் காவலுமில்லை. ஓ வீரியவானே! நிராதரவான என்னைத் தராதரமறியத்தக்க நீர் அபேக்ஷித்த பொழுதே, நான் புனிதவதியானேன். என்னைப் பெண்டாள நினைத்த உமக்குச் சீக்கிரத்தில் மேலான பாக்கியமுண்டாம். என்ஞல் உமக்கு விளைந்த வருத்தமும் இன்று கூண்டோடு போய்விடும். பெண்களின் குணமறிந்திருந்தும் வீணே இத்தனை தூரம் பிரபலப்படுத்தி வைத்தீர். நீர் காணுது கண்டு கருதி மோகித்ததும், வீணுசைகொண்டு விருதாப்பழி சுமந்ததும், நான் நாணுது நாணி நலிய வாதித்ததும், நீரென்னைப் பிடிக்கவந்ததும், நான் இராஜசபையிலோடிவிழுந்ததும், ஊர்நாடெல்லாஞ் சிரிக்க உடம்படுத்ததும், ஏதோ நம்மிருவருக்குங் காலவித்தியாசம் கடந்துபோய்விட்டது. போகட்டும்; இவ்வுலகத்தில் ஆலாலவிடத்தையும், ஆவிபறிக்கு மந்தகனையும், யானை கவட்டையும், வேங்கைப் புலியையும், அறிவில்லாமூடரையும் ஒருவாறு நம்பலாம். சேலைகட்டு மாதரை க்ஷணமும் நம்பப்படாது.

அஃதெவ்வாறெனில், இந்திரன் முதலாகிய இமையோர் வந்து ஆடையாபரணம் தந்து ஆசைப்பட்டாலும், ஸ்திரீகள் தாங்கள் கொண்ட மையலை வெளிப்படுத்தாமல், ஆசையற்றவர்போல் முகத்தைச் சுளித்து, மூக்காய் முறுக்கி, என் என்னைப் பார்க்கின்ருய்? நான் என்ன வேசியா தாசியா? உனக்கு தங்கை தமக்கையில்லையா? எங்கள்வீட்டார்கண்டாற் சும்மா விடுவார்களா? என்று தலை குனிந்து, கலகலவென்று கண்ணீர் சொரிந்து, சிறுநகை காட்டி, குறுவியர்வு வழித்தெறிந்து, மாராப்புத் துணியை பத்துதரம் இழுத்து இழுத்து சொருகி, வாயைமூடிக் கையைநெரித்து, ஜாலமான மாயமயக்கங்காட்டி, கால்கடுக்க நிற்பானேனென்று தனக்குத்தானே பேசிக்கொண்டு அப்பால் சிலதூரம்போய் இப்பால் வந்து எட்டிப்பார்த்து, ஒரு பக்கத்தில் ஒதுங்கி தலைநீட்டிக் காட்டி மறுபடியு மறைந்து, மறுபடியுங் கிட்டி, உறவுகொள்வதுபோல் கலந்து உடனே ஓடி, ஊடிக்கலந்து கூடித்திரிவர். இது பெண்களின் கெட்டசுபாவம். இப்போய்ப்பட்டவர்கள் மனதை எப்படி தெரிந்துகொள்ளலாமென்ருல், அந்நிய பெண்டுகளாவது தாதிமார்முதலிய வேலைக்காரிகளாவது குழந்தைகளாவது கிட்ட நின்ருல், அவர்கள்பேரில் விழுந்தும், வல்லிக்கொடிபோல் துவண்டு வளைந்தெழுந்தும், பிள்ளையை அணைத்துக் கொஞ்சி முத்தாடியும், புஷ்பத்தைப் புன்சிரிப்போடு முகந்து, பெருமையாக டம்பம்பேசியும், விருதாவாய் ஒருவரை யேசியும், சொற்பமான பேச்சுகளை ஓடியமாய் சொல்லியுங் கூறுவார்கள். நாயகன் அவர்களைப் பார்த்தால் அவர்கள் நிலத்தை நோக்குவார்கள். நாயகன் அவர்களைப் பார்க்காதபோது தலையெடுத்துப் புருஷனை நன்ருய்ப்பார்த்து நாணி நகைப்பார்கள். இப்படி இன்னும் அநேகஜால தந்திரங்களுண்டு. இந்தக் குறிப்புகளையெல்லாம் வேறுபாடில்லாமற் சரசநாயகன் தெரிந்து, மேளத்திற்குத் தகுந்த தாளம்போட்டு எண்ணத்தை முடித்துக்கொள்ளுவான். மற்றவன் கண்டாற் சங்கதியறியாமல், இதெப்படிப்போமோ என்னமாமோ என்று பயந்து ஓடிப் போவான். ஆதலாற் பெண்கள் கொண்ட புருஷவிரகமானது லோபியர் பொருள்போல் அழுந்தியிருக்கும். ஆண்பிள்ளைகள் கொண்ட மோகமானது கல்லாதான் கற்ற கல்வியைப் போல் வெளியாய்ப்போம். இந்தகாரியம் தெரியாமல் அவசரப்பட்டவர்கள் பலனடையார்கள். நீரும் அவ்வாறே ஆத்திரப்பட்டு விட்டீர். இப்பொழுதுதானென்ன? உமது இஷ்டத்தை என்னிஷ்டப்படி முடிப்பதினுற் பாபமில்லை. உமக்குள்ள காமவெள்ளத்தைக் கடந்து கரையேறுவதற்கு வழிகாட்டுகிறேன். நீர் கள்ளமில்லாமல் வாரும். எத்தனைவித சாகசங் கற்றிருந்தாலும் உன் வீட்டிற் கரணம் போடலாகாது. என் கணவராகிய காந்திருவர் ஒருவேளை இந்தச் சேதி தெரிந்து வந்துவிட்

டால் உம்முயிரும் போம். என் தலைமயிரும் போம்.

அன்றியும், நேற்று என்னைத் துரத்திய உம்மை இந் நாட்டிலுள்ள பெண்களும் புருஷர்களும் இராஜன் முதலிய அனைவரும் நன்றாயறிந்தார்கள். லோகப்பிரசித்தியாச்சுது. அப்படியிருக்க, நாம் இருவரும் இன்றைக்கு உறவாடுவதைப் பார்த்தால் மெத்தவும் எளிதஞ் சொல்லி பழிப்பார்கள். உம்முடைய தமக்கையாகிய சுதர்க்கணைக்குத் தெரிந்தால், என்னைச் சுத்தமாய் நம்பமாட்டாள். இதுவரையிலும் நான் பிழைத்த பிழைப்பு பேய்பிழைப்பாய்விடும். அநேக பொல்லாங்குகளும் விளையும் நல்லதல்ல. ஓ சந்தனமணித்தோளனே! நீர் இன்றிரவிற் பத்து நாழிகைக்கு மேல் வருவீராகில், உன்னிஷ்டப்படி முடியுமென்று பாஞ்சாலி சொன்னாள். அந்த தேன்மொழியானது கீசகன் காதிற் புகுந்து அமுததாரைபோல் விரகாக்கினியை ஆற்றியபோது, வெளியெழுப்பிப்போக வழி பார்த்திருந்த பிராணன் நிலைத்து, இளைத்த உடம்பும் பூரித்து துன்பங்கள் நீக்கி இன்பஞ் செழித்தேற தேகம் பரவசமடைந்து, மோகஞ் சிறந்து, ஓ மேகங் கண்டாடு மயிலே! இப்போதல்லவோ உன் சொல்லாகிய ஆபரணம் என் காதிற் கணியாயிற்று. இந்தக் கர்மபூமியில் உடலெடுத்த பயன் இன்றுதான் லபித்தது; துற்பலனான நான் நற்பலனுற்றேன்; என்பாவங்கள் யாவும் பறந்தோடிப் போயின; நான் இதுவரையிலும் பண்ணிய புண்ணியம் இன்று ஈடேறியது; என் பாக்கியமே பாக்கியம். நான் பிழைப்பதற்குத் துணைக்காரணமான உன் வாக்கியமே வாக்கியம் என்று வாய் புதைத்து, கைகட்டி, மெய்யொடுங்கி வணங்கி பணிந்து, ஓ என்னிஷ்ட காமியத்தை நிறைவேற்றிய ஆவியே! பாவியாகிய நான் எவ்விடத்திற்கு வரும்படியாய்க் கட்டளையிட்டருளுகின்றீர் என்று கேட்டான். வாரும் ரசிகனே! விராடராஜனது கோட்டைக்கு மேலண்டையிலிருக்கின்ற மாஞ்சோலையில் குயில்கள் கூவவும், மயில்களாடவும், கிளிகள் கொஞ்சவும், அளிகள் மிஞ்சவுமாகி, மகா அலங்காரமாக பளிங்குக் கற்களாற் கட்டிய வசந்தமண்டபத்தில் வந்து சேரும். நீர் வருமுன்னமே நான் வந்திருக்கின்றேன். ஓ மலைகள்போலு மோட்டுந் தேரினையுடைய வீரியனே! இப்பொழுது நான் சொன்ன இடம் சந்தடியற்ற தனியிடமல்லவா? என்று விரதசாரணி வினவினாள்.

அம்மொழியைக் கேட்ட கீசகன், ஆ! ஆ! என் கண்ணே! அதுவே எனக்குத் தகுந்த இடம். தேவரீர் திருவாய் மலர்ந்தவண்ணஞ் சீக்கிரம் வருகிறேன். உமது திருமேனி புழுதிபடிந்து அசுத்தமாயிருக்கிறதென்று கூச்சம்வேண்டாம். உமக்கு நல்ல நல்ல ஆபரணங்களும், விலையேறப்பெற்ற வஸ்திரங்களும், புனுகு-சவ்வாது-கதம்பம்-கஸ்தூரி-அத்தர்-பனிநீர் இது முதலிய பூச்சுவகைகளும், புட்பச்செண்டுகளும், பஞ்ச கச்சாயங்களும், பரமான்னமும், பலகாரங்களும், பலவர்க்கங்களும், பஞ்சவிடைய தாம்பூலங்களும் என் தலைமேற் சுமந்துகொண்டு வருகிறேன். நீர் அவைகளை அங்கீகரித்து என் கோரிக்கையை யீடேற்ற வேண்டும். ஓ கோமளமே! ஓ என் குல தெய்வமே! ஓ சித்தசன் கொலுக்கூடத்திற் கமைத்த பொக்கிஷமே! என் பிராணனை உமக்கே ஒப்புவித்தேன். இதைவிட வேறே உபசாரஞ் சொல்ல அறியேன். அடிமை சிறியேன். என்னுயிருள்ளமட்டும் உம்மை நான் பிரியேன். மறுமாதரை நோக்கேன். என்பேரிற் கிருபை வைக்கவேண்டும் என்று செலவு பெற்றுக்கொண்டு, காளவிடத்தை தாகத்திற்கு உட்கொள்ளக் கருதிய தரித்திரன்போற் கீசகன் சென்று, இந்த சூரியன் எப்பொழுது தொலைவானென்று அந்தகன்பாசந் தன்னைக் கலக்கவிருக்கும் அஸ்தமானத்தை நாடியிருந்தான்.

### திரௌபதி வீமசேனனைக் கண்டு நடந்த விதங்கூற, அவனவட்குச் சில திட்டங்கூறி யனுப்புதல்

இப்பாற் கொலை செய்யுங் கூர்வேல் போன்ற கண்ணாளாகிய பாஞ்சாலி சுதர்க்கணை மனைக்குப் போய்ப் பூமாலைகளைத் தொடுத்தளித்து, பூசுவனவுங் கொடுத்து, அவளுத்தரவின்பேரில் மடைப்பள்ளிக்குச் சென்று, மதகரி வீமனைக் கண்டு, நாம் பேசிக்கொண்டபடிக்கு அவனை இசையச் செய்து கொண்டேன். அப்பால் தெய்வச்செயலெப்படியோ என்றாள். அந்தத் திரௌபதியை வீமசேனன் பார்த்து, ஓ காதலி! நீயேன் கவலைப்படுகிறாய். ஒருவேளை யந்த கீசகன் வராமற் போவானாகில் நான் போய்க் கொல்லுகிறேன். அஞ்ஞாதவாசத் தவணைக்கு இவ்வூரார் அறிவார்களே யென்று யோசிப்பையாகில் இந்த விராடபுரத்திலுண்டாகிய ஆண்பெண் அடங்கலையும் கொன்று, துரியோதனாதியருக்குச் சேதி தெரியாமற் பண்ணுகிறேன். சிலவேளை

துரியோதன னறிந்து பெரும்படை கொண்டு
வந்து, அக்ஞாதவாசம் பூரணமாய் நிறைவே
றுமற் குறைவுபட்டுக் கெட்டுப்போனபடியால்
மறுபடியும் பன்னிரண்டு வருடம் வனவாசம்
பண்ணவேண்டிய நிபந்தனைப்படிக்குப் போக
வேண்டுமென்று புகன்றானாகில், அப்போதே
யந்தத் துரியோதனனையும் அவனைச் சேர்ந்த
மற்றவர்களையுங் கொன்று பள்ளத்திற் புதை
த்து, அஸ்தினாபுரம்-விராடபுரம்-உபலாவிய
முதலிய உலகுக்கெல்லாந் தர்மராஜனைப் பட்
டங்கட்டி வைத்து, எல்லோருங் கொண்டாட
எங்கும் பிரக்கியாதியா யிருப்பேன். 'சண்டி
புரண்டாற் காடு கொள்ளாது' என்னுஞ் சங்
கதி யறியாயோ. சமுத்திரந் தடையிருப்பது
கரையினாலேயா சத்தியத்தினாலேயா? ஓ பாஞ்
சாலி! நீ யாதொன்றுக்கும் பயப்படவேண்
டாம் போ என்று அனுப்பினான். அவ்வாறே
செலவு பெற்றுக்கொண்ட திரௌபதியான
வள் வீமசேனனைப் பார்த்து, ஓ கெடிவீர
சிங்கமே! அங்கம் பங்கப்பட்டு அழியப்போ
கின்ற கீசகன், என் சொல்லை நம்பி எப்படியுந்
தப்பாமல் வருவான். நீர் இன்று இரவில்
அங்கு சென்று, ஜால்ஞ் செய்யாமல் சந்தடி
காட்டாமல் வேலையை முடிக்கவேண்டும். வேந்
தனே! இப்படியாக இதனை நடத்திவிட்டால்
சாந்தமூர்த்தியாகிய தருமராஜனுடைய சித்
தங் களிக்கும். மற்றத் தம்பிமார்களுக்குஞ் சந்
தோஷமுண்டாகும். சுதர்க்கனையும் மற்ற
ஸ்திரீகளும் ஆதிமுதல் விரதசாரணி சொல்லி
வந்த வசனம் நிசமானதென்பார்கள். உங்கள்
யார்மீதுங் கலவரமில்லாமற் போய்விடும். இந்
தச் சொல் வெளிப்படுமாகில் நமதெண்ண
மெல்லாம் அழிந்து போய்விடும். அன்றியும்,
பதிவிரதைக் கருதிய பாவியாகிய கீசகன்
பாழாய்போனான் பார்த்தீர்களாவென்று உலகி
லுள்ள பதிவிரதைகள் இப்போது மகத்துவ
மாய்ச் சொல்லிக்கொள்ளும் வார்த்தைகளுங்
கெட்டுப்போம். மேலும், பாண்டவர்கள் அக்
ஞாதவாசம் பண்ணும்போது, தவணை யொரு
வருஷங் கடப்பதற்கு முன்னுதாய் வெளிப்
பட்டுவிட்டார்கள்; சொற்சோர்வு பட்டார்கள்;
பஞ்சவர் பேச்சுப் பஞ்சுபோலாச்சு என்று
யாவரும் நகைப்பதற் கிடமாய்விடும். நீங்காப்
பழிச்சொல் நிலையாய் நிற்கும். ஆகையால், நீர்
மனம்பொறுத்து, அவசரப்படாமல், ஆடம்
பரங் காட்டாமல், யாருமறியாமல், அடக்க
மாய் முடிக்கவேண்டுமென்று கூறினாள்.
அந்த மொழியைக்கேட்ட பலாயனன் சிந்தை
மகிழ்ந்து, நல்லதப்படியே யாகட்டும். நீ மாத்
திரம் பிறரறியாமல் விரைவாய் அவ்விடம்
வந்து சேர் என்று தலைவாயல் வரையிலும்
வந்து விடை தந்து, இந்தச் சூரியன் எப்
பொழுது அஸ்தமான மாவானென்பதாய்ச்
சிந்தை வருந்தித் தியங்கி யிருந்தான்.

### திரௌபதியும் வீமசேனனுங் கீசகனுக்குக் குறித்தயிடஞ் சென்று அவன் வரவுக் கெதிர்பார்த்திருத்தல்

இவ்விடத்தில் திரௌபதியானவள் சுதர்க்
கனைக்கு வேண்டிய சித்திரான்னவிதமும்,
திவ்வியம்ணக் குழம்பும், கச்சாயவர்க்கமும்,
கதம்பப் பொரியலும் ஆகிய அறுசுவையுண்டி
களையுஞ் சுயட்பாக வீமனிடத்தில் வாங்கி
வந்து கொடுத்து, வழக்கப்படிக்கு வேடிக்கை
யாக விளையாடி, சந்தனாதிகந்தந் திமிர்ந்து,
சிந்தை நோயற்ற செல்வியைப்போற் கபட
மில்லாமல், யாருடனுங் கலந்துறவாடி களங்க
ரகிதமாய்க் காலம் பார்த்திருந்தாள். அப்படி
யிருக்கும்போது எட்டுதிக்குங் கெட்டழிந்
தோடிய இருளெல்லாந் திரளாகச் சேர்ந்து
தங்கள் பகையாகிய சூரியனை வெல்ல வந்த
வாறுபோற் சூழ்ந்துகொண்டன. அவ்விருளைக்
கண்டு பாபத்திற்கு பயந்தோடும் பாக்கியவான்
களைப்போற் புண்ணியப் பொருளாகிய வெய்
யோன் மேற்றிசை புகுந்து அஸ்தமானகிரி
அணைந்தான். அக்காலத்தில் அளவிறந்த
ஆசையை அடைத்து வைத்திருந்த கீசக
னானவன் தான் மோசம்போவ தறியாது
வண்ணப் பெண்மேற் கொண்ட மதவிகாரத்
தினால் வாசநீரில் தோய்ந்து, பூஜாவிதி முடி
த்து, போஜனமுண்டு, இளைப்பாறவுஞ் சமய
மில்லாமல் சந்தன-குங்கும-சிந்தூர-பாளித-
கந்த-கதம்ப-மிகுந்த-சுகுந்த நிறைந்த மக
ரந்த மலர்மாலையும் நவமணிபதித்த அழகிய
ஆபரணமும் சித்திரத் தெழுத்தினிற் பிரித்
திரத்ன கொத்து முத்து வைத்திழைத்த சரி
கைகள் சுற்றிய வஸ்திரமும், கொத்து சரப்
பணியும், ரத்தின முருகும், முத்திரை மோதி
ரம், அஸ்தகடகம், விசித்திர மகுடம், சுத்த
பவித்திரம் இவை முதலிய ஆபரணங்களும்
அணிந்து, வாசத்தாம்பூல முண்டு, திரௌ
பதாதேவிக்குப் பற்பல பண்டு பலாதிகளுங்
கொண்டு, கறுத்த இருளிற் காலால் வழிதேடி
அந்தகனிருக்குந் திக்கு நோக்கிச் செல்வது
போல், அந்த மாலினி சொன்ன வார்த்தையை
நிசமென்று நம்பி, அச் சுதர்க்கனை [illegible]

மாஞ்சோலையி லிருக்கிற வசந்தனுக் கிசைந்த மண்டபத்தை நாடி ஓடிவந்தான். இவ்விதமாக வந்த கீசகனுடைய பிராணனென்னும் பனியைக் கெடுக்கப் புகுந்த சூரியன் போன்ற பாஞ்சாலியானவள் இரவு தோன்றியவுடனே விரைவில் ஸ்நானஞ் செய்து நித்திய ஜெப முடித்து சூரியன் முதலிய தேவர்களைத் தொழுது அந்தப்புரம் விட்டுப் புறப்பட்டு, சத்துருக்களுயிரையுஞ் சமயல் வேலைகளையும் இம் என்பதற்கு முன் முடிக்காநின்ற செம்பொன் மலையை நிகர்த்த தோளும், வீரகண்டைத் தாங்கும் தாளும், உடைவாளுமுடைய வீமசேனனிடத்திற்குப் போய் விரைவிற் புறப்படுமென்றாள். அவள் சொல்லைக்கேட்ட வீமசேனன் எந்த வேளையில் எந்த வேடமெடுக்க நினைத்தாலும் அவனிஷ்டப்படிக்கு அமைய வரங்கொடுத்திருக்கும் எமதருமராஜ னருளினாற் சகலாபரண அலங்காரச் சௌந்திரியப் பெண்ணுரு வெடுத்து, கையில் அள்ளிக்கொள்ளத் தக்கதாய்க் கலந்த நள்ளிருளில் மெல்லச் சென்று கீசகக் கள்ளன் வருவானோ? வாரானோ? என்று கவலைகொண்டு கனகமயவுசித சிகர மாடமுடைய பளிங்கு மண்டபத்தை யடுத்து தெய்வப்பெண்ணான திரௌபதா தேவியை அவ்விடத்தில் ஒளித்து, வண்ணமகள் போலாகிய தன் உருவத்தைத் தூணில் மறைத்து, கண் சிமிட்டாமற் காட்டு வழிமேல் நாட்டம் வைத்திருந்தான்.

### கீசகன் விரதசாரணி வேடம்பூண்டிருந்த வீமனைக் கலவிக்குக் கொஞ்சுதல்

அந்த வேளையிற் செத்த பிணமானது மெத்தப் பணிபூண்டு வருவதுபோலும், எக்கியத்திற்கிசைந்த நெய்யை நக்கிப் புசிக்கவரும் நாய்போலும் வருகிற கீசகன் உயர்ந்த மாமரச் சோலையிற் சாந்தினால் மெருகிட்ட தாவளயமான வசந்த மண்டபத்தைக் கண்டு கெண்டையங் கண்ணாளிங்கு வந்தாளோ? ஒன்றியாய்வரப் பயந்து நின்றாளோ? மறைந்திருந்து மனஞ் சோதிக்கின்றாளோ? என்னமோ? அவள் எண்ணம் அறியேன். வாசப்பூ மலர் மேனிமானே! ஓ என்னாசைச்சக்கோரளி மதுரத் தேனே! ஓ மன்மதன் படையை வாட்டவந்த துணையே! ஓ மாதவத்தை அழிக்கு மலர்விழிக் கணையே! என்று கூவிக்கொண்டு வந்த கீசகராஜனை ஆஜானு பாகுவினுடைய தண்டகரனாகிய வீமன் கண்டு, வெட்கங்கொண்டு ஒதுங்கும் பெண்களைப்போல் அந்தத் தூண் மறைவில் ஒதுங்கித் தலையை நாட்டி சந்திரபிம்ப முகங்காட்டி, இன்னும் பற்பல அபிநயங்களால் அவனைப் பேய்போலாட்டினான். அப்போது அடங்கிக்கிடந்த காமத்தீயைத் தொடங்கச்செய்த சீமாட்டியை அந்தக் கீசகன் கண்ணுருவக் கண்டு பெண்ணுருவெனச் சிந்தையுட்கொண்டு, குனிந்து நேராக அத்தையல் கால்மேற் பணிந்து என்னின்பக்கனியே வாராய். எனக்கு உன் இனிய முத்தந் தாராய். கும்மென்றிருக்கின்ற இவ்வனத்து, என்னையொரு பொருளாய் மதித்து, என்பேரில் இஷ்டம் வகித்து, இத்தனை தூரந் தனித்து, கால் வருந்தத் தக்கதாக வரும்படி பொருத்தி வைத்த தவம் யாருடையதோ? இத்தலம்புரி தவமோ? என்குலம்புரி தவமோ? ஓ வலம்புரிக் கழுத்தினையுடைய மாதே! அறியேன்; அறியேன்; காலதாமச மாச்சுதென்று கோபங் கொள்ள வேண்டாம். ஓ ஓ பருவரதியே! காமவெறியேறிக் கருத்தழிந்துபோன நான் மானாபிமானம் பாராமல் உம்மைத் துறத்தி வந்து மனக்குறை விளைத்தேன். அப்பிழை பொறுத்து எளியேனை ஆண்டருள்வீர் என்று நலம்பொலி மணிமுடி நிலம்பட வீழ்ந்து, மறுபடியும் எழுந்து, அன்னமே என்று புகழ்ந்து செங்கை யிரண்டையுஞ் சிரமேற் குவித்து, அவள் முகத்தைப் பார்த்து, ஓ செவ்விள நீரைப் பழித்துத்திரண்ட இரண்டு கொங்கைத் தாங்கிய மங்கையே! ஓ புனல்படிந்து, புகைபரந்து, புறுகளைந்து, பூவணிந்து, புள்ளுறைந்து, பொங்குமங்குலைப் பொருக்கிக் கங்குலைத் திருத்தி முடித்த குழற் பூங்கோதையே! ஓ குழலிசைக்கினிய மொழிபல பயிலும் பேதையே! உமக்குத் தீது நினைத்த மகா பாவி நானாகையால் தேவரீர் தீர்க்க வைரம் வையாமல், அதனால் உமதுள்ளம் நையாமல், இத்தநியில் என்னை யாட்கொள்ள வேண்டும்.

இந்தக் கடுமையான காட்டில் கொடிய கபவர்மனம்போற் கறுத்த இருட்டில், அடியேனிமித்தங் கலவியை நாடிவந்து காத்திருக்கின்ற உமக்கு நானென்ன உபசாரஞ் செய்யப் போகிறேன்; எவ்வித உபகாரம் பண்ணுவேன்; நீர் கிருபை வைத்து நடத்த நினைத்த உதவிக்குப் பிரதியுதவிபுரிய வகையறியேன்; நீரின்று கொடுக்கப்போகிற தனத்திற்கு நான் கோடி தனங் கொடுத்தாலும் ஈடாகாதே. ஓ என்னாசைக் கண்ணே! இனிமேல் நானென்ன செய்வேன்; ஆகிலும் பதிலுதவி செய்வதற்கு ஒரு

வந்தை யிருக்கின்றது. அஃதென்ன வெனில், என்னுயிரை உமக்கு ஒப்புவிப்பதுதான் உயர்ந்த கைமாறு. இதைவிட வேறு விதியில்லை. இப்போதுந் தமக்கு வேண்டிய வஸ்துக்கள் எல்லாம் இதோ கொண்டுவந் திருக்கின்றேன். தயையுடன் அங்கீகரித்துக் கொள்ளும். ஓ கருணீ! தவறு தப்பிய என்னைத் தாங்கிக் கொள்ளும்; ஏன் சும்மாயிருக்கின்றீர்? ஐயோ! இப்போது அநியாயமாய்ப் போகின்றதே; அநேக போஜன வஸ்துக்கள் ஆறி யலண்டு போகின்றதே; கிஞ்சுகவாய் திறந்து கொஞ்சம் பேசப் போகாதோ? ஓ பஞ்சவர்னக் கிளியே! அஞ்சிய வென்னை ஆதரிக்கப்படாதா? எஞ்சிய வென்னை ஈடேற்றப்படாதா? தித்திப்பான உமது பேச்சு என் செவிக்கேறும் கால மாச்சு. ஓ தெய்வப் பெண்ணே! நீர் இப்படி மௌனமா யிருந்தீராகில் மன்மதனால் நொந்து வெந்து போன நான் கடைத்தேறுங் காலம் எதுவோ? நீர் எனக்கிசைந்து இவ்வளவு தூரங் கிட்ட வந்திருந்தும் ஒட்டாமல் எட்டி இருப்பது என்ன பாவமோ? உத்தம ஸ்திரீ கட்குள்ள சுபாவமோ? எதுவும் உமது கருணைக் கெதிர்நிற்க மாட்டாதே. தழைத்திருக்குத் தோப்பில் தனித்திருக்கும் நாமிருவரும் கொஞ்சி விளையாட வேண்டாமோ? ஆவி துளங்கத் தாவித் துளைக்கும் பாவி மன்மதன் கணையோ பொல்லாது. என்னிஷ்ட தெய்வமும் அஷ்டயிஸ்வரியமும் உம்மையன்றி வேறொன்றுமில்லை. உமது காலடி அழகுக்கு ஈடுபடாத என் பெண்சாதிமார்களின் தேகத்தையும், அவர்கள்மே லுண்டான மோகத்தையும் இன்று துறந்தேன். உமதாணை என் கண்ணாணை. இன்று முதல் என்றைக்குங் கண்ணெடுத்துப் பார்க்க மாட்டேன். இதுவே சத்தியம். என் சொல்லே நித்தியம். உம்மை இணங்க நான் அநித்தியம். ஆ பத்தினீ! என்னைப் பற்றி எரிக்குங் காமாக்கினி வெதுப்பிக் கருக்கிக் கவிழ்க்கப் பார்க்கின்றது. இந்தத் ததியில் நீர் கைகொடுக்க வேண்டும். இனித் தாளமாட்டேன். இன்னும் சற்றுநேரம் போனால் உம்மை நான் ஆள்மாட்டேன். ஓ வாளாயுதக் கண்வாய்ந்த மனோரதமே என்று அவளுக்கு நேர்சென்று நின்று, ஆ! ஆ! நீர் முந்திப் பேசலாகாதோ? பேசினால் உமது வாய்முத்துச் சிந்திப்போமென்றோ என் பேரிற் கோபமோ? அல்லது மனஸ்தாபமோ? ஓ பெண்ணரசே! என்று பலவாறாகிய பஞ்சைப் பாட்டுகளைப் பாடினான்.

## வீமசேனனுக்கும் கீசகனுக்கும் யுத்தம்

அவன் பிதற்றிய மொழிகளைக் கொஞ்ச நேரம் வரையிலுங் கேட்டிருந்த வீமசேனன் தன் முகத்தைக் கீசகனுக்குக் காட்டாமல் தூணில் மறைத்து, ஒரு பக்கத்திற் கொருபக்கந் திரும்பி, அவனைப் பார்க்கப் பார்க்க மனமுறிந்து, ஆணவமல முதலான அஞ்ஞானவிருள் மூடிய ஆசார யீனர் வாசா கைங்கரியஞ் சொல்லி, ஊர் மெச்ச பால் வார்த்து உண்பதுபோல் உலகம் மெச்சச் செய்கிற பட்டாடம்ப பூசாவிதியின் புண்ய பயனால் அப்பூசை செல்பவரையும் அவர் கால்வழியையும் நாசமாக்க நகைக்குங் கடவுள்போல் நகைத்து, கோபாக்கினியாற் கீசகனைக் குறித்து வெறித்துப் பார்த்தான். அதுகாலையில் கீசகராஜன் கௌரவமாய்ச் சிரித்து, ஓ வண்டுலாவு மலர்க்குழல் மாதே! என்மேல் அன்புவர இத்தனை நாழிகை சென்றதோ? இப்போதுதான் மனஇரங்கியதோ? இவ்வளவு தயவு போதுமென்று தன்னிருகரத்திலுந் தாவி, ஓ என் பிராணமோக்ஷகாரணி! என்று பாவி தழுவினான். அத்தூணில் மறைந்திருந்த வீமன் கீசகன் கைக்குச் சிக்காமல், யானைத் துதிக்கைபோன்ற தன்னிருகையையும் அத்தூணுக்கிருபாலு நீட்டி முறைவழுவித் துறைதப்பித் தழுவ நீட்டிய கீசகன் கையிரண்டையும் பற்றிக்கொண்டு நெருக்கினான். நெருக்கவே கீசகன் செந்தேள்கொட்டித் திகைப்பதுபோல் துடித்து, உதட்டைமடித்து, ஈதென்ன வாச்சரியம்? விபரீதமாய்த் தோணுதே; பெருமோசம்போற் காணுதே; நாமெண்ணிய வண்ணமகளானால் அவளுடைய உள்ளங்கை தாமரைப் புட்பம்போல் மிருதுவா யிருக்குமே; இந்தக் கை கல்லினுங் கடிதாகக் காணுதே; இந்தப் பிடி எமலோகத்திற் கிடுங் கத்திரிக்கோல் போலுமிருக்கிறதே; இது யார் செய்த மாயமோ? அவள் தேடிய உபாயமோ? என்னுத்மாவுக்கபாயமோ? ஒருவேளை நம்மை நம்பவைத்து மோசம் பண்ணி யிருப்பாளா? ஏறவிட்டேணியை வாங்கும் புன்னெறியரைப்போல் நினைப்பாளா? நமது தமக்கையினிடமாய் அண்டிப் பிழைக்கவந்த அநாதையானவள் வஞ்சனை விரோத மனதில் வைப்பாளா? கொஞ்சமேனும் நன்றி நினையாளா? எனைச் செய்யும் வினைச்செய லெப்படியோ வறியேன். ஆகிலும் ஸ்திரீகளை நம்பலாகா தென்

புது பெரியபேச்சு. அந்தச்சொல்லை யோசிக்குமிடத்தில் எல்லாப் பெண்களும் மோசமுள்ளவர்களா யிருப்பார்களா? சிலவேளை நாம் கொண்ட மோக சோபத்தினாற் புத்திமறுண்டு சுத்திமாறியதோ? நம்மை இவ்விடம் வரச் சொன்ன காதலி இவளோ? அல்லது இன்னுமெவளோ? இதை நன்றாய்ச் சோதித்தறிவோமென்று தனக்குள்ளே கலவரங் கொண்டு இதனைப் பேசுவதாயினான்.

அடி என் கையைப் பிடித்த தையலே! எனக்கு மையலாகிரி மீறுதடி! நீ சரசமாய்ப் பிடித்த என் கையைச் சற்றே விட்டுவிடடி! நீ பிடித்த பிடிப்புக் களைபாதிருக்கிற என் பிராணவலுவைப் பாரடி! உன் பலத்திற் கென் பலம் ஒன்பது பங்குயர்ந்ததடி! உன்னை நான் அடிபிடி என்பதாய்ப் பேசுகிறேனென்று நீ ஆயாசப் படாதே. காமசரசக் கலவிக் களிப்பாற் கசிந்து வருகிற கசிதவுசித வார்த்தையடி! அடி என்னிரு கண்ணே! அடி என் காதலிப் பெண்ணே! என்று தன்கையைப் பிடிங்கினான். இவனைத்தனையோ பராக்குக்காட்டி அசப்பில் தன் கையை யிழுத்தபோது ஜாக்கிரதையிலிருந்த வீமன் தான் பிடித்தபிடி விடாமல், வலது கையை நீட்டி இடது கையையிழுத்து, இடது கையை நீட்டி வலது கையையிழுத்து, நிலைமத்திட்டுத் தயிர் கடையுந் தன்மைப் போல் மாறி மாறி யிழுத்து வலித்து, தூணுடன் தேய்த்து, பின்பு சரேலென்று ஓர் பக்கமா யிழுத்து, அவனிரு கரத்தையுஞ் சேர்த்துத் தன்னொரு கரத்தாற் பற்றிக்கொண்டு, மற்றொரு கரத்தினால் மொத்தியும், குத்தியும், கிள்ளியும், நிமிட்டியும், பிசைந்தும், பிரமிக்கச்செய்தவனாய் இது சரசக் குத்து. இது கலவிக்கிள்ளு என்று சொல்லி ஒவ்வொரு கிள்ளுக்கு அள்ளிச்சதை துள்ளும்படியாகவும், ஒவ்வொரு குத்துக்கு உழக்குரத்தம் மீறும்படியாகவுஞ் செய்து, அவன் தேகத்தை வருத்தி அளவற்ற தீமைகளைப் புரிவதானான். அப்போது கீசகன் சகிக்கமாட்டாமல் வாய்விட்டிரைந்து, நாட[illegible]நாடி, வாடாத முகமும் வாடி, எண்ணாத எண்ணமுமெண்ணி, குண்ணாத குண்ணலுங் குண்ணி, தேகமெல்லாம் வியர்த்து சூரசம்மாரச் சுப்பிரமண்யக் கடவுளோ? இராக்ஷச வயிரியாகிய மகாவிஷ்ணுவோ? என்று நிலவரம் விண்டு, கலவரங் கொண்டு, வகைதப்பி மாட்டிக்கொண்ட தன்னாற் கூடிய மட்டுஞ் சாகசஞ் செய்து வாங்குவதானான். அப்போதந்த வீமசேனன் மின்னொளிபோல் விளங்கி, கீசகனுடைய இரண்டு கையில் ஒரு கையை விட்டுவிட்டு, மற்றொரு கையைப் பிடித்தபிடி தளராமலிறுக்கி, விறுவிறென்று சுழற்றி, விசைக் கயிற்றை இழுப்பது போல அவனுடைய தலைமயிரைப் பற்றி யிழுத்து, நான்கு திசையிலுங் கரகரவென்று சுழற்றி மேலே தூக்கிக் கீழே தாக்கி வீசினான். அப்போது கீசகன் பெருமூச்சு விட்டெழுந்து, ஐயையோ! ஆண்டவனே! பெண்ணென்றெண்ணிய எண்ணம் போச்சுதே; இப்போ இது பேயுருவாய் வந்து வாய்ச்சுதே; இனிப் பிழைக்கும்வழி யெப்படி? இந்த வேளையிற் பதறி யிளைப்போமாகில் வந்திருப்பவன் மனிதன் எப்படியும் நம்மை மாட்டுவான்போ லிருக்கிறது. நாமிவனை முந்தி முடித்துவிட்டாற் பிந்தி அந்தப் பெண்ணுடன் கூடிப் பேசிக்கொள்ளலாம். இவனைப் பிராணனுடன் விடப் போகாது என்று விரைந்தோடி வந்தான்.

ஓ மகாராஜனே! இந்தமட்டுங் கிரகசாரம் விட்டதென்று போகாமல் விரைந்தோடி வரவே, வந்த கீசகனை வீமன் மடக்கிப் பிடித்தான். அப்பிடிப்பைக் கீசகன் சடுக்கென்று தட்டினான். தட்டிய கீசகன் தலையிற் குட்டினான். குட்டிய வீமனை முகத்தைப் பார்த்துக் குத்தினான். குத்திய கீசகன்மேற் கொதித்தெழுந்து குதித்து அவன் மூக்கில் தாக்கினான். தாக்கிய வீமனைத் தடுத்துப் பிடித்தான். பிடித்த கீசகனைப் புரட்டிப் பூமியிற் சாய்த்தான். சாய்த்த வீமனைக் காலால்தளைந்தான். தளைந்த கீசகனைப் புரட்டி யுதைத்துத் தள்ளினான். தள்ளிய வீமனுக்கிளையாமல் பின்னுங் கீசகனெழுந்து, முன்னம் பேசிய ஆணவமும், நாணமும், மானமும் விடாமற் மற்போர் கொடுக்கவந்தான். அவ்வேளையில் வீமன் ஆக்கிரமித்தெழுந்து எதிரியின் தோள்மேற் கோடையிடிபோல் இடித்தான். அவ்விடியை யடியத்தாங்கிய கீசகன் இவனை முடியப் பார்ப்பேனென்று விடியற்காலத்துக் காக்கைபோற் கதறி, அக்குத்துக்குப் பதிற்குத்து குத்தினான். அவன் குத்திய குத்தை மகமேருவோ டொத்த தோளில் தாங்கிய வீமசேனன் தத்தளிக்காமல், முகஞ்சுளித்து தன் கைவிரல்களை மடக்கி, கீசகன் மார்புகிழியவும், அவன் தலையெழுத்து அழியவும், முதுகெலும்பு நொறுங்கவும், பழுவெலும்புமுறியவும், தலையோடுடைந்து இரத்தந் ததும்பி வழியவுந் தாக்கினான். அந்தத்

தாக்கு தலைமேற் கொண்டெழுந்தான். எழுந்
தவன் கரமிரண்டுங் கொழுந்தென வதங்கி
வாடும்படிக்கு, வீமன் தட்டிவிட்டு, குலத்திற்
குப் பழுது தேடிக்கொண்ட கீசகனைத் துன்னி,
தன் காலால் அவன் காலைப்பின்னி, அப்பின்ன
லோடு சேர்த்து தூக்கி எடுத்துத் திரௌபதி
யை யழைத்து, தீரா மோகங்கொண்ட விகார
சுரூபனைப் பாரென்று காட்டி, சுழற்காற்றிலகப்
பட்ட துரும்புபோலுங் காற்றாடிபோலுங் கற
கறவெனச் சுற்றிக் கொக்கரித்து போர்சிங்கம்
போற் பூரித்து பூமியிலெறிந்தான். வீமசேன
னால் எறியப்பட்டு வீழ்ந்த கீசகன் காமவின்பத்
தைக் கட்டுடன் மறந்து, சோம குலந் துலங்
கப்பிறந்த பாண்டவர்களில் இவன் வீமசேன
னென்று அறிந்து, துன்ப நிறைந்து, ஐயை
யோ! ஐயோ! இவனை யிந்தமட்டும் விட்டு
விட்டு என்னோட்டத்தை நீ பிடிக்கமாட்டாய்
போடாபோவென்று ஓடலாமென்றால், இவன்
நம்மை எந்நாளைக்கும் பிராணனுடன் விடப்
போகிறதில்லை. நாமிதுவரையிலும் பிழைத்த
பிழைப்புக்குப் பழுதுவந்ததே போம். நம்மை
யாருஞ் சட்டை பண்ணார்கள். பெட்டாகிய
குட்டுக் கெட்டுப்போய் விடும். ஆகையால்,
இவனை ஒரு கை பார்ப்போம். நமக்கு நல்
வினைப்பயன் கை கூடுமானால் இவனை நம
னுலகஞ் சேர்ப்போம். ஆகாமற்போனால் இவ
னிடத்தில் நமது உயிரைத் தாரைவார்ப்
போம் என்று எழுந்து விரைந்து கந்து
பாய்ந்து வீமன் தலைமயிரைப் பிடித்துக் கை
விரலிற் சுழற்றி, கறகறவென சுழற்றி, நிலக்
கடையாகத் தள்ளி, தன்னிருகாலாற் புரட்டிப்
புரட்டி உதைத்து அவனுடலைத் தேய்த்து,
மழுங்கிய திரண்ட கற்றூண்போலாக்கி, உள்
ளங்கா லிரண்டும் இரத்த வெள்ளங் காண
மிதித்து, அவன் தேகஞ் சிவக்கச்சீறி அறைந்
தான். இவ்விதமாகக் கீழே வீழ்த்தி மோதிப்
பிடித்து மாறியடித்து மொத்துகின்ற கீசகன்
வசத்தில் வகைமோசமாய் மாட்டிக்கொண்ட
வாயு குமாரனைப் பாஞ்சாலி கண்டு, பரத
வித்து, ஐயையோ!! பாபம் பெரிதோ புண்ணி
யஞ் சிறிதோ? சத்தியங் குறைவோ? அசத்
திய நிறைவோ? ஓ தேவர்காள்! ஓ வனதேவ
தைகாள்! வீமராஜனுக்குப் பொல்லாங்கு
நேரிட்ட பிற்பாடு இம்மேதினியில் நானும்
பிராணனுட னிருக்கவேண்டுமா? அவருக்கு
முன்னே என் உயிரை மாய்த்துவிடுகிறேன்.
ஐயா! முதலையைக் கொன்று மூரியானையைக்
காத்த முதல்வனே! என்றழுது பரதவித்தாள்.

அப்போது இந்தத் திரௌபதா தேவி
யின் வியசன வசனமானது வீமன் காதில்
நுழைந்தது. அதனா லவனுக்கு வீரசன்னத
மேறி, மேலாள் கீழாளாகப் புரட்டி கீழாள்
மேலாளாகக் கண்ணுருட்டி, ஓ பாஞ்சாலி!
அஞ்சாதே; உயிர்விட மிஞ்சாதே: பதறாதே;
இதோ நான் பிழைத்தேன் என்று தேக ஆயா
சந் தீர்ந்து, பிராணனைத் திரணமாக மதித்து,
நீருண்டு வேகங்கொண் டெழுந்த மேகம்
போல் இறைந்து, பூவை தோய்ந்து, குபீ
ரெனப் பாய்ந்து, கீசகனைப் பற்றிக் கிறுகி
றெனச் சுற்றி வானத்தி லெறிந்தான். ஆகா
யத்திற்போன கீசகனவன் வாயுவை ஸ்தம்
பித்துக் கேசரி மார்க்கத்திற் கிளம்பி, விறுவி
றெனச் சுழன்று வீமன் தலைமேற் குதித்து,
அவன் கழுத்தைக் கெட்டியாய்க் கட்டிக்
கொண்டு தொங்கினான். அப்படி தொங்கிய
கீசகனை வீமசேனன் எடுத்துக்கொண்டு அவ
னிருகரத்தையுந் தன்னொரு கரத்தி லடக்கி,
ஆளை யிழுத்துக் கீழேபோட்டு மடக்கி வயிறை
மிதித்து, வாயிலு முதைத்து, பக்கப் பற்கள்
பதினாறையும் உதிர்த்தான். வீமன் இடித்த
இடியினாற் கீசகன் வாய் கிழிந்து, கெடுநினைப்
பழிந்து, பல்லெல்லாம் பதர்போற் பறந்து
போயின. அப்படி போகியும் அப்போது அப்
பொக்கைவாய்க் கீசகன் புறங்கொடுக்காமல்
உரங்கொண்டேங்கி, மரங்களைப் பிடுங்கி வரி
சைகள் தொடங்கினான். வீமனும் அவனை
விடாமல் தொடர்ந்து, வேண்டிய மரங்களை
வேருடன் களைந்து, விதம் விதமான போர்
புரிந்து வீரவெறி கொண்டாடினான். இப்படி
ஒருவரை யொருவர் விடாமல், இடம் வலம்
வருதல் கெடாமல், இருவரும் அடிகள் படா
மல், ஆயுதமென்பது எடாமல், அடிக்கடி
முதுகு கொடாமல், சோபதாபந் தொடாமல்,
சூக்ஷாதிசூக்ஷமாயொட்டி நடத்திய யுத்தத்தை
யும், அவர்கள் மனோதிடத்தையும், தேகாபிமா
னம் விட்டு அமர்புரிகின்ற திறத்தையும் நாம்
சொல்லத்தக்கதே யல்ல. ஓ வல்லவனாகிய
ஜெனமேஜெயராஜனே! இவ்விதமாக இவர்க
ளிருவரும் தங்கள் தங்களுடைய முழுப் பலங்
களைக்காட்டி மாறாமற் போராடி வரும்போது
பொழுது விடியப்போகிறதே? நமது பூர்
வோத்திரம் வெளிப்படுமே என்று வீமன்
துடித்து இவனை விரைவில் முடித்துவிட
வேண்டுமென்று நினைத்து, பங்கப்பட்ட சிங்க
மானது அற்ப மிருகத்தை அமுக்குவதுபோல்
அந்த கீசகனை அமுக்கி, காலிரண்டையும்

மேலாகத்தூக்கி, கவ்வாயக்காய்ப் பூமியில் தாக்கி, அவன்மீதேறி அமுக்கி உட்கார்ந்து மார்பும், தோளும், வயிறும், பிடரியும் வலிப் பெடுக்கக் குத்தினன். அவன் குத்திய குத்தைச் சிங்கபலம்பெற்ற கீசகனவன் திரஸ்கரித்து, அதை யொரு வரவு செலவில் வைக்காமற் காலால் வீமன் கழுத்தை மடக்கி தன்னிரு கையையும் தரையில் தேய்த்து வாயுகுமாரன் தலையோடு நெரியத் தாக்கினன். அந்தக் கீச கன் அறைந்த அறையானது வீமன் தலைமேல் வீழ்ந்தகாலையில் அரை நாழிகை வரையிலும் அறிவு மயங்கி, நெருப்பில் நெய் விட்டது பேர்ற் கோபங்கொண் டோங்கி, கருப்பைக் குட் கட்டுப்பட்ட சிசுவைப்போற் கீசகனை அசைய வொட்டாம லடக்கி, ஒரே அழுத்தாக அழுத்தி, அவன் தலை மயிரை கெட்டியாய்ப் பிடித்து, வச்சிராயுதத்தால் மாட்டுவதுபோற் கையை முடக்கி நகங்களை நீட்டி முட்டி அடிக் கொப்பாய் அவன் உச்சியிற் குட்டினன். அத னற் கீசகன் தலை கிழிந்து, மலசலாதிகள் வழிந்து, கண்ணிரண்டுங் கழிந்து, காதில் உதிரம் பொழிந்து, அந்தக்கரண வாதனை யாற் பதறி, அந்தகன் மரண வேதனையினற் கதறி, ஆவியழிந்து புவிமேற் சாய்ந்தான்.

### வீமன் கீசகனுடலைப் பேய்ப்பதிபோல் சிங்காரித்துத் திரௌபதிக்குக் காட் டிப் பின்பு இருவரும் பட்டி னம் போதல்

இப்படி அழிந்து சாய்ந்து மண்மேற் கிடந்த விராடன் மைத்துனனை வீமசேனன் அந்தமட்டில் விட்டுவிடாமல் வாரிப் பிடித்து மார்பை பொடியாய் இடித்து, கையை முறி த்து, காலைக் குறைத்து, மெய்யைச் சுருக்கி, கையாற் பிசைந்து, மாவிளக்குப் போடுவது போல் மாமிசத்தைத் திரட்டி, உண்டையாக வைத்து, அந்த உண்டையின்பேரில் மீசை யுங் கண்களும், விரிந்த வாயும், பரந்த முகமு முடைய தலையை நாட்டி, தன் தலையையாட்டி, பணிப் பெண்ணுக்காக கொண்டுவந்த வஸ் திராபரண அலங்கார புட்பங்களை யெல்லாஞ் சூட்டி, பண்டு பலாதி கச்சாயங்களை அதோடு வந்த தலை வாழை யிலையிற் படையற்போட்டு, கந்த கதம்ப கஸ்தூரிகளை வாரி இறைத்து, இவ்வுலகத்துள்ள பூசாரிகள் பேயோட்டிப் பதிபோடச் சிங்காரிக்கும் பொம்மை முகம் போல் அமைத்து, இந்த வேடிக்கை யைத் திரௌபதிக்குக் காண்பித்து காமப் பேயோட்டிக் காட்டுப் பூசை போட்டுப் பேய்ப்பதி சிங்காரித் திருக்கின்றேன் பார் என்று சொல்லுவோம் என்பதாக நினைத்து காயும் கனியும் பூவுமா யிருந்த ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கிக்கசக்கி, தீயெனத்தேய்த்து பூவென்று நெருப்பெழ வாயினலூதி பக்கத் தில் இருந்த காட்டைக் கொளுத்திவிட்டு எங் கும் ஜோதியாய் எரியச் செய்து, திரௌபதி யை அழைத்துவந்து, ஓ வெற்பெனத் திர ண்ட சொற்கத்தைச் சுமந்த கற்பினிலுயர்ந்த பத்தினிப் பெண்ணே! உன் கால்மேல் வீழ்ந்த கடையனைப்பார், கயவனைப்பார், காமக்களிப் போட்டிய பேயனைப்பார் என்று காட்டினன். அதை வேலும் சேலும் விழியா யமைத்து பாலுந் தேனும் மொழியாய்ச் சமைத்த அப் பங்கயப் பெண்பெருமாள் பார்த்து, தனது வயிறும்-வாயும்-மனமும்-பதறிக் கதறிய வாட் டமொழிந்து வீமசேனன்பேரில் நாட்டமாய் இருந்தாள். கேட்டீரோ ஜெனமேஜெய மகா ராஜனே! அவரவர் தேடிய வினைப்பயன்களை அவரவர் அனுபவித்து தீரவேண்டு மல்லது இது பலியாமல் விடாது. தாங்கள் ஒரு காரியத்தைப்பெற எண்ணினல் நினைத்தபடி முடியாது. எண்ணியவண்ணம் எவர்களும் பெறவில்லை. எண்ணம் முன்னுக்கு வராது. தெய்வபல மிருந்து ஒருவேளை முடிந்தால் முடியும். சிங்க பலம்பெற்ற கீசகன் பாஞ்சா லியினுள்ளில் நினைத்த பொல்லாங்கானது நாம் எல்லோரும் நாவாற் பேசப்படாத பாப காரியமாதலால், அதனல் வந்த மிதமற்ற பலனை உடனே அவன் அனுபவித்தான். அதைப்பற்றி நாம் பேசவேண்டும். அவசர மில்லை. இப்பால் வாயுசுதனகிய வீமசேனன் அக்கினியிற் பிறந்த அணங்கையை நோக்கி, உனக்குப் பகையான கீசகன் ஒருவகையாய் அழிந்துபோனன். உன் விஷயத்தில் இன் னும் யாராவது மன்மத கோலாகல மயக்கத் தைக் கொண்டார்களாகில், அவர்களும் இப் படியே அனுபவிப்பார்கள். நீ ஒன்றுக்கு மஞ் சாதே. இனி நாம் இவ்விடத்தில் இருக்கத் தகாது. பொழுதுவிடியுமுன் போய்விடவேண் டும் என்று இருவருங் காட்டைவிட்டு புறப் பட்டு மச்சநாட்டை நோக்கி வருகையில், வழி யில் ஓர் தாமரைக்குளத்தி லிறங்கி, தேகபரிசுத் தஞ் செய்துகொண்டு, தீர்த்தமருந்தி, தெய்வப் பிரார்த்தனையுடன் சுதர்க்கண அரண்மனைக்கு போகும்படியாக, திரௌபதியை அனுப்பு வித்து, வீமசேனன் மடைப்பள்ளிக்குப் போய்

மலரணைமேற் படுத்து, நித்திரை வராமற் குத்துக்கா லிட்டுக்கொண்டிருந்தான்.

### உபகீசகாள் இரவிலடவிச்சந்தடி கேட்டு ஐயுற்று வந்து, தமயனுக்கு நேர்ந்த சம்பவங் கண்டு அழுதல்.

இப்படியிருக்க மடலவிழ்ந்து, இதழ்பரந்து, மலர்விரிந்து, மது நிறைந்து, மணமுறைந்து, தளிர் தழைந்து, தலை செறிந்து, கிளை மிகுந்து, மிகவுயர்ந்து, இருளடர்ந்து, கொடிபடர்ந்து, காய்சொரிந்து, கனியுதிர்ந்து, கதிர்மதி நுழையாக் களிப்போடிருந்த அம்மாந்தோப்பில், வீமராஜனுங் கீசகராஜனும் பேசிய வோசையும், கைக்குத்தின் முழக்கமும் மண்டபத்திலுண்டான எதிரொலியும், மரங்களைப் பிடுங்கி மாட்டிய ஆர்ப்பும், சத்தடங்கிய இருபது நாழிகைச் சமயமாதலால் விராடபுரம் முதலிய சுற்றுக்கிராமங்களிற் கேட்டன. கேட்டுஞ் சனங்கள் அப்போது இராக்காலமானதினாலும் நித்திரைமயக்கத்தாலும் எப்பொழுதும் யுத்தம் இல்லையென்றிருந்த மப்புப்புத்தியினாலும், காட்டின்கணெழும் ஓசையாயிருப்பதினால் விசாரிக்க வேண்டிய அவசியமில்லாமையினாலும், தாங்கள் வாழு நாட்டில் யாதொரு கலவரமும் எண்ணாதவர்களாய் அயர்ந்து நித்திரை செய்தார்கள். ஆனால், முன்னமே கலவரங் கொண்டிருந்த கீசகன் தம்பிமார் இந்தப் பேரோசையைக் கேட்டு, படுக்கை விட்டெழுந்து, உப்பரிகைமேல் ஏறிப் பார்த்து, அந்தச் சத்தம் வருகிற வழியையுற்றுக் கேட்டு தங்கள் அண்ணன் நினைத்த எண்ணமும் வண்ணப்பெண் வகித்த வயிற்றெரிச்சலும் ஊரார் பேசிக்கொண்ட வலதும் தங்களைச் சந்தேகத்திற் கொண்டு வந்துவிட, அதனாற் சிறிது அச்சப்பட்டு, கீசகன் படுக்கை வீட்டைப் பார்த்து, அவன் அவ்விடத்தி லில்லாமையாற் பாங்கியர் முதலாகிய பணிப்பெண்களைக் கேட்டனர். அவர்கள் இன்றிரவில் பத்து நாழிகைக்கு ஸ்நானம் பண்ணிச் சர்வாலங்கார சம்பிரமமாய் மேனி மினுக்கி வெளியே போனார் என்று உரைக்க, அம்மொழி கேட்ட உப்கீசர்கள் பரதவித்து, சரிதான் சரிதான்; நமது சுதர்க்கணைக்குச் சாந்து சந்தனாதி மலர் முதலியதும் புனைந்து வந்த தெய்வப் பெண்ணின்மேல் இச்சை வைத்தமையால் அது முதல் அன்னத் துவேஷங் கொண்டு, தனக்குரிய போகமாதரையும் விண்டு, மன்மதன் கணையாலுடைந்து, பாகொத்த மொழியாளாகிய அப் பணிப் பெண்ணைத் தொடர்ந்தும், தன் எண்ணம் பயன்படாமையாற் சோகமேலிட்டு தூக்கமுங் கெட்டுத் துயரமாயிருந்தவன், தான் கொண்ட விரகவெப்பந் தணிவதற்காக மாமரச்சோலை வசந்த மண்டபத்திற்குப் போனவனாகவேண்டும். அந்த வேளையில் வண்டறுமலர்க் கொண்டையையுடைய சைரந்திரியானவள் ஏதோ ஒரு காரியார்த்தமாய் அவ்விடத்திற்குப் போயிருக்கவேண்டும். பிரசண்டவேக மதயானை போன்ற கீசகன் அவளைக்கண்டு, ஏதடா நமக்குடன் படாதவள் இவ்வளவு தூரம் வந்திருக்கிறாள்? இந்த இருட்டில் தனித்து வருவதற்குக் காரணம் என்ன? என்று சற்றேனும் யோசனை பண்ணாமல், காமக்கலயை கருதினவனாக வேண்டும். இதற்கு முன்னாள் அவளைத் துரத்திச் சின்னாபின்னப் படுத்திய செய்தியை அவளுக்குரிய காந்திருவரைவர்கட்கு அவள் தெரிவித்திருந்தவளாகவேண்டும். அவர்கள் அவ்வாறே வசந்தமண்டபச் சோலையில் வந்திருந்தவராக வேண்டும். இவனுடைய பொல்லாத வினைவசத்தாற் போர்மூண்டிருக்கவேண்டும் என்று தங்களுக்குள்ளே நிச்சயித்து இதனைப் பேசுவதானார்கள்.

ஓ சகோதரர்களே! இனி நாம் சும்மாவிருக்கலாகாது, சீக்கிரம்போய்ப் பார்ப்போம். அப்படிப் பார்க்குமிடத்தில் நிந்தைக்குடன்பட்ட நிஷ்டூரன் உயிரோடு இருப்பானாகில், வந்திருக்குங் காந்திருவருடன் முந்திப் போர் விளைத்து, அவர்களைக் கைப்பிடியாய்ப் பிடித்துக் கண்கலக்கப் படுத்துவோம். ஒருவேளை கீசகன் நாசமடைந் திருப்பானாகில் அவனைப் பறிகொடுத்து நாம் உயிருடன் இருந்து மானமில்லாமல் வாழ்வது மரியாதையல்ல. கூடப்பிறந்த தோஷத்திற்காக அந்தக் காந்திருவருடன் போராடி, அவன் மடிந்த விடத்திலேயே நாமும் மடிந்து போவோம். இதைவிட உறுதி வேறில்லை என்று தம்பியர் யாவரும் ஒன்றாய்க்கூடி கண்ணிற் கனற்பொறியெழ விழித்து, கடகடவென்று பல்லைக் கடித்து, விடவிடவென்று வில்லைப்பிடித்து, மடமடவென்று பலவாயுதங்களுங் கொண்டு, தடதடவென்று விரைந்து வந்து, கசந்த மனம்போற் கருகிய விருட்டில் வசந்த மண்டபத்தைச் சேர்ந்து, சங்குச்சுண்ணந் தடவி, திங்களொளிபோற் பிரகாசிக்கும் அம் மண்டபத்திற் கொழுந்துவிட்டெரியுங்கோடமல் வெளி

ச்சத்தினால் அழிந்து-சிதைந்து - அரைந்து-திரைந்து-திரண்டு-உருண்டு மொத்தகாரமாயிருந்த மாமிசத் திப்பையின்பேரில் தன்மையனுடைய தலைமாத்திரம் அழியாமல் இருக்கக் கண்டு, திக்கென்று வயிறெரிந்து, திடீலென்று கீழேவீழ்ந்து, வாடிவதங்கி, வயிற்றைப் பிசைந்து, கைகளைநெரிந்து, செய்வதென்னென்று வெம்பித் தேம்பி விம்மி விழித்து மண்டபத்தைச் சுற்றிப்பார்த்து, ஒருவரையுங் காணாமல் வாய்விட்டழுது, முகத்திலும் தலையிலு மோதிக்கொண்டு புலம்பி, அண்ணனுடைய கால்கை முதலான அவயவங்கள் ஒன்றுங் காணாதவர்களாய்ப் பிண்டாசாரமாய் இருக்கும் பேருடலைக்கண்டு, ஓ! ஓ! ஓ! ஈதென்ன விந்தை? இதுவரைக்கும் இகலற்று வாழ்ந்த எங்களுக்கு நேரிட்டதே நிந்தை. அளவிறந்த பலபராக்கிரமங்களுள்ள நமது ஜேஷ்டனை இப்படியாகக் கொன்றபேர் எவர்களோ? இவனைக் கொல்லத்தக்க வல்லவருந் தொல்லுலகி லுளரோ? இவனைக் கொன்றவன் மானிடனல்ல. தேவபிறப்பாய் இருக்கவேண்டும். வேறொரு பிறப்பில் விளைந்தவனாகில், கழுத்தை முறித்து வயிற்றைக் கிழித்து, கைகால்களை யொடித்துக் கசக்கி கோசபீசத்துடன் நையக் குத்தி மொத்தையாகச் செய்வானா? ஐயோ! தன்னிஷ்டப்படிக்கெல்லாம் வைச்சபதமிருக்க பிச்சைக்குப் போவானேன்? வசந்தப்பி தாமரணமடைவானேன்? இருக்கட்டும்; ஆனால்தா னென்ன? அவனெப்பேர்ப்பட்ட தேவனாய் இருந்தபோதிலும் இவன் அவன் கையால் இறக்கமாட்டான். ஏதோ சூதுவிளைத்து தீதுசெய்து விட்டார்கள். ஆ! ஆ! என்ன ஆச்சரியம்! ஐயோ! அந்தப் பெண் மோகத்தாலும் இவனது தீவினை வசத்தாலும் வீணாய் மாண்டானே என்று மார்பில் அடித்துக்கொண்டு மண்மேல் வீழ்ந்து புரண்டு மானம் போச்சுது வையகத்தார் பழிக்கும்படிக்கும் ஏனமாச்சுது. ஆஹா! தெய்வமே என்று கலங்கிக் கதறி இதனை யோசிப்பதாயினார்கள்.

### உபகீசகாள் சுதர்க்கணையிடஞ் சென்று தமயன் செயல் கூற, அவள் அது கேட்டு நடத்த வேண்டுவ துணர்த்தி யனுப்புதல்

ஓ சகோதரர்களே! இவனிப்படி அழிந்ததைப் பிறரறியாமல் அடக்கம் பண்ணிவிட வேண்டும். பிறரறிந்தாற் பெருமோசம் வந்துவிடும். ஆனதால், நமது சுதர்க்கணைக்கு மாத்திரந் தெரிவித்து அவள் கருத்தின்வண்ணம் நடந்து கொள்வோமென்று நினைத்து அவளிடத்திற்குச் சென்று தங்கள் தலையில் அடித்து மோதி வீழ்ந்து, அவள் பாதத்தில் தாழ்ந்து, ஓ மாதரசி! நாம் வாழ்ந்த வாழ்வு இன்றோடழிந்தது. நமது வண்ணப்பெண் மோகங்கொண்ட அண்ணன் விண்ணுலகேறினான். இனிமேல் நடத்துங் காரியங்களுக்கு நாங்கள் ஆலோசனை செய்ய வந்தோம் என்று சொன்னார்கள். அச்சொல்லை அந்தச் சுதர்க்கணை கேட்டு, ஐயையோ! தெய்வமே என்று அலறி, தம்பிமாரைத் தழுவி நின்று, கொம்பிலாக்கொடிபோற் றுவண்டு, தரைமேலுருண்டு தலையிலடித்துக்கொண்டு, பெரு மூர்ச்சையடைந்து, பதறியெழுந்து, அடா பாவி! எங்களைத் தெருவில் விட்டாயே; வாழ்ந்த வாழ்வு இவ்வளவுதானா? உன்மேற் பாய்ந்து சாய்த்தது மன்மத பாணந்தானா? அதனாலேயா நீ மரண மடைந்தாய். ஐயோ! அப்பா! என்று உடல் தளர்ந்து உயிருலைந்து, ஊசலாடி, ஓ சகோதரர்களே! நானெவ்வளவோ சொல்லியும் பாவி கீசகன் கேளாமற் போய்க் கழிந்தான். அந்நிய ஸ்திரீகளினாசை ஆயுளழிக்குமென்று மோகநிவாரண நூலில் மொழிந்திருந்தும், அதை பலகாற் கண்டுங், கேட்டும் காலாந்திரத்திற் கதி சேர்ந்தானே. ஐயோ! அடா கீசகக்களிறே என்று கண்ணீர் வடித்து அவனது புஜபல காரியங்களைப் படித்து ஒருவரு முணராம லொப்பனையிட்டழுது கீசகனிறந்தானென்னுங் கேள்வி பரராஜர்கள் உணர்ந்தால் படையெடுத்து போர் கொடுத்து இப்பட்டணத்தை அபகரிப்பார்களே; என் நாயகனுக்கு மெனக்கும் இந்த நட்டத்தை வைத்தானே; நடுக்கடல் துரும்பானேனே; நடுத்தெருப் புழுதியானேனே; அடடா துட்டசாவானே என்று பட்டப்பகலின் தோன்றிய சந்திரன்போல் முகத்தொளி மழுங்கி, ஓ என் சகோதரர்களே! நான் இந்த வார்த்தையை உங்களுடைய மைத்துனராகிய விராடராஜனுக்குப் பக்குவமாய் சொல்லிவிடுகிறேன். நீங்கள் சீக்கிரத்திற் சென்று அண்டையயலார் அறியாமல் அடக்கம்பண்ணிப் போடுங்கள்; பரப்பில் விடாதீர்கள்; பழிப்புக்கிடம் பண்ணாதீர்கள்; பதறாதீர்கள்; என்னைப் பரதேசியாக்கிப் போடாதீர்கள். நமக்கு நான்கு திக்கிலும் பகைவர்க ளிருப்பதினாற் கீசகன் உயிருடன் இருக்கின்றானென்னுங் கொடியைக் காட்டி, அவனுக்குச் செய்யவேண்டிய உத்தாரிணைக் கடன்களை தீர்த்துவிடுங்கள் என்று உறுதிகள்

சொல்லி யனுப்பிவிட்டு, உள்ளம் நடுங்கி ஒடுங்கி, வெள்ளம்போற் கண்ணீர் விடுத்து, பூமிமேற் படுத்து, ஓ தெய்வமே! என்று தேம்பித் தொழுது, துக்கமற்றவள்போல் பக்கத்தி லிருப்பவர்கட்குத் தெரியாமல் விக்கி யிருந்தாள்.

### உபகீசகாள் தமயனைத் தகனஞ்செய்ய வரும் வழியில் விரதசாரணியைக் கண்டு ஐயுற்று முடுக்க, அவள் அலறிக் கூவுதல்

இப்பால் அந்தச் சுதர்க்கணை சொன்ன வண்ணம் அண்ணனைத் தகனஞ் செய்வதற் கெண்ணிய தம்பிமார் நூற்றுமூன்று பேரும் பிரேதத்திற்குவேண்டிய சல்லா-சாதராஷால்வை-சந்தனக்கட்டைகள் - ஸ்நான திரவியங்கள் இவை முதலிய சகலமுங்கொண்டு, தமக்கை அரண்மனையிலிருந்து சுருக்கிற் குறுக்கு வழியாய் வருவதானார்கள். அப்போது வீமசேனனைவிட்டு வராநின்ற வண்ணப்பெண்ணைத் தாங்கள் கண்ணிற் கண்டு, வழிமறித்து நின்று, அவள்பேரிற் அடங்கா மனஸ்தாபங் கொண்டு மனோதிடமுடைய தமையன் மாளுவதற்கு இவளே காரணமல்லாது வேறில்லை. நாம் எண்ணியபடி இவளே முடித்துவிட்டு, எங்ஙனோபோயிருந்து இப்போது வருகிறாள்; இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. அவன் இவள்மேல் வைத்த ஆசையும், இவளவனைக் கெடுத்த மோசமும் அடியோடு நாசமாகும்படியாய் இவளையும் அவனுடன் சேர்த்துக் கொளுத்திவிடுவது உத்தம தர்மம். இம்மையிற் கலந்தெரிந்தால் அம்மையிலும் எம்மையிலும் பிரியாவிடையா யிருப்பார்கள். ஆகையால் இவளைக் கூசாமற் பிடியுங்கள் என்று நான்கு திசையிலும் பரந்து நாய்போல் வளைந்து மான்போல் மருண்டு செல்லும் பாஞ்சாலியைத் துரத்தினார்கள். அக்கால் வனவேடர் போன்ற உபகீசகர்களைக் கண்ட சைரந்திரியானவள் எப்பேச்சும் பேசாமல், அல்லலடைந்து ஆவி பறியக் கதறும் அன்னம்போற் பதறி பொறிபுலன்சிதறி கைகாலுதறி விரைவிலோடி, ஆ கார்ந்திருவர்களே! எனக்குக் காவலாகிய தெய்வங்களே! பேய்களுலாவுங் காலமாகிய இவ்விரவில் யமதூதரைப்போல் சில துஷ்டர்களடுத்து என்னைப்பிடித்து நெருப்பிலிட்டுக் கொளுத்தும்படிக்கு நிச்சயித்தார்கள். அந்தோ! கொழுகொம்பில்லாக் கொடிபோல் தவளுகிறேன்.என்னசெய்வார்களோவென்று வாடுகிறேன். இந்த வீணர்கையி லகப்பட்டாமலோடுகிறேன். இப்பாவிகள் வசம்பட்டு ஆவியழியுந் துன்பத்தைப் பார்க்கிலும் என்னில் நானே என் உயிரை ஒழித்துவிடுவது இன்பமென்று நாடுகிறேன். இந்தப் பஞ்சைகள் கையிலகப்பட்டுப் பரதவிக்கு முன்னே, அஞ்சேலஞ்சேலென்று நீங்களோடிவந்துபேரு மோடி வாருங்கள்; இந்த ஆபத்துவேளையில் வந்தென்னைக் காருங்கள்; மலைகளை மண்ணாக்கும் உங்கள் புஜபலத்தைக் காட்டுங்கள்; அந்தத் துன்மார்க்கனை முடித்ததுபோல் இந்தக் கயவர்களையும் வாட்டுங்கள், மனோவேகத்திலுங் கடுக ஓடிவந்து இவர்களை யமலோகத்திற் கோட்டுங்கள். ஓ ஜயவிஜய ஜயந்த ஜயசேன ஜயற்பாலனென்று நாமங்களை வாய்ந்த என்து நாயகர்களே என்று அக்ஞாதவாச முதலில் நேமித்துக்கொண்ட சங்கேதப் பெயர்களைச் சொல்லிக் கூப்பிட்டாள்.

### வீமசேனன் திரௌபதி கூச்சல்கேட்டு ஓடிவந்து, உபகீசகாள் நூற்று மூவரையும் வதைத்தல்

அவள் கெட்டியாய்க் கூவிய ஓசையை மடைப்பள்ளியிலிருந்த வீமசேனன் கேட்டு, அதிவேகங்கொண் டெழுந்து, ஏதோ பிரமாதம் விளைந்ததென்று இடையிற் கச்சையையிறுக்கி வரிந்து, தொடையிலிரத்தந் துடிக்கப் பறந்து, இதோ வந்தோம்; இதோ வந்தோம்; மனந்தளரேல் மனந்தளரேல் என்று பேரிடிபோல் இரைச்சலிட்டுக் கொக்கரித்து, மகா எக்களிப்புடன் எதிரிலிருந்த மரங்களைப் பிடுங்கி விறுவிறெனச் சுழற்றி, கையோடு கையறைந்து, காடுகலங்கக் குதித்து, வழியிலகப்பட்ட நீண்ட விருக்ஷங்களெல்லா மளமளவென்று நெறிந்துமுறிய மிதித்துக்கொண்டு வந்தான். அவனாரவாரிப்புண்டாகிய திசையையும் மரங்கள் முறியும் விசையையும் உபகீசகர்கள் பார்த்து உடனே முகம் வேர்த்து, தங்களுக்குள் தயங்கி, தைரியமில்லாமல் மயங்கி, ஆ! தம்பிகளே! இவளிரைந்து கூவியபோது இதோ விரைந்து வந்தோமென்று ஒரு பேரொலி கேட்டது. அவ்வோசை அடங்குவதற்கு முன்னே பெறுங்காற்று புறப்பட்டது. மரங்களியாவும் மடமடவென் றோடுகிறது. பூமி கடகடவென் றோடுகிறது. இவர்களுக்குரிய கார்ந்திருவர் துணை வருகிறாப்போல் இருக்கிறது. நமது தமயனை யடித்து முடித்துவிட்டு இப்பொழுதுதான் போகிறவர்போலுங் காண்கிறது. நம்முடைய தமயனை இக்கேடு கண்டவர்

கள் நம்மை எளிதில் விடார்கள்போலுந் தோன்றுகிறது. இனி என்செய்வோம் என்று பயந்து, உடல்பதறி நடுங்கி, கட்டழகமைந்த விரதசாரணியை விட்டு ஓடி பிழைப்பதே மேலென்று யோசிக்கு முன்னமே, காலபாசச் சூலங்கொண்ட காலனைப்போலும், ஆலகால நிலம்போலும் வீமன் வந்து புகுந்து விளா சுவதானன். அப்போது புத்தித் தாழ்வாற் பிராணனைப் போக்கடித்துக்கொண்ட கீசகன் தம்பிமார்கள் சுற்றியோடி விலகினார்கள். அவர் களை யமன் கொத்துப்போற் சேர்த்துவளைத்து, பத்துப்பேர்க் கோரடியாயடித்து, ஒருவருந் தப்பிப் பிழைக்காதபடி யடித்து அவரெலும் பையும் ஒடித்து மேலுலகிலேற்றினான். அந்த உபகீசகர்கள் சகோதர வாற்சல்லியந் தப்பா மலும் தமயனைப் பிரியாமலும், அவன் போன வழியே இவர்களும் போனார்கள். கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! 'பண்ணியவினை களின் பயனலாதுதா, மெண்ணிய கருமமற் றியரவரெய்தினார், திண்ணியகீசகர்செய்ததீங்க வா, புண்ணியமானதாற்புகல்வதென்கொலோ' ஆதலால், யாவருக்கும் வினையின் வண்ணமுடி யுமேயன்றி தம்மிச்சையில் ஒன்றுமாவதில்லை. கீசகர்கள் செய்துகொண்ட புண்ணியங்கள் இப்படிக்கிருந்தால் அவைகட்கு யார் என்ன செய்யலாம். துவளுமிடையும், சுவர்னப் பட் டுடையும், அன்னநடையும், அரம்பைத் தொடையும், அருட்கட்டையும் அணிப்பூஞ் சடையும், கற்புடைமை யாங்களின் சீருடை மையுள்ள விரதசாரணியின்மேல் விருப்பம் வைத்த கீசகனை வீமசேனன் அழித்தபோது, அவன் ஒருவரும் அறியாமல் உபாயத்தில் ஒழிந்தான். இந்த உபகீசர்களை மடித்தபோது, பொழுது விடியுஞ் சமயமாகையினாலும், விராடபுரத்தை சமீபித்தவிட மாகையினாலும், அவர்களால் உண்டான பேரோசையினாலும், ஊராரறிந்து, உறக்கந் துறந்து, காற்றாய்ப் பறந்து, கலங்கிப் பயந்து, சரிதான்; சரிதான்; வண்ணமாதுமீ தெண்ணங்கொண்ட திண் ணியனாகிய கீசகனை அந்த பெண்ணுக்கிசை ந்த காந்திருவர் வந்து கொன்றார்களாக்கும். அவனுக்காகப் பரிந்து அவன் தம்பிமார்கள் ஒன்றுகூடி வந்து சண்டை விளைத்து நிற்க, அந்நூற்று மூன்று பேரையும் வென்றார்க ளாக்கும். ஆகிலுந் தேவஸ்திரீயை மனிதன் நாடுவது தீங்கு. தேவர்களுடன் மனிதரெதிர் த்துச் சண்டைசெய்வது அத்தீங்கிலுந் தீங்கு. தன் பலமும் எதிரி பலமும் எண்ணாமற் சண் டையிட்ட கீசகர்களில் ஒருவரும் பிழையாமல் விண்ணுலகுற்றார் போலும் என்று பட்டணத் திலுள்ளவர் யாவரும் பற்பல விதங்களாகப் பயந்து பழித்துப் பேசிக்கொண்டார்கள்.

### வீமசேனன் திரௌபதிக்கு ஜயை சரிதங் கூறித் தேற்றி, இருவருந் தம திருக்கையை யடைதல்

இவ்வாறு உலகம் நடுங்கி யொடுங்கும் படிக்கு அன்றிரவிற் கொடும்பாவியாகிய கீச கனை கொன்றதல்லாமல், உபகீசர்களாகிய மற்ற நூற்று மூவரையும் ஒரே மூச்சிற் கொன்று, அங்குள்ள நாய்-நரி-பேய்-பிசாசம்-காக்கை-கழுகு-கூளி-காளி இவை முதலியவற் றிற்கு விருந்தாக்கிவிட்ட சுயம்பாகியாகிய வீம சேனனும் பாஞ்சாலியும் அவ்விடம் விட்டுத் திரும்பும்போது வாயுகுமாரன் திரௌப தையை யணைத்து, ஓ! வண்டரு மலர்க்கூந் தல் வாய்ந்த மாதே! கற்புடையமாதர்க் கெப் போதும் ஆபத்து நேரிடாது. ஒருவேளை தீவி னைப்பயனால் நேரிட்டால் சூரியனைக் கண்ட பனிபோலகலும். மேலும், நற்குண நற்செய் கைகளையுடைய பதிவிரதைகள் தாங்களெப் படி நினைத்தாலும் முடியும். அதற்கொப்பாக ஒரு கதை சொல்லுகிறேன் கேள்: பூர்வத்தில் இமய பர்வத ராஜகுமாரியான பவானியிடத் திற் பணிவிடை பண்ணிக்கொண்டிருந்த ஜயை என்னும் பெயரினையுடைய தெய்வப் பெண்ணொருத்தி இந்தப் பூலோகத்தில் வாழு மாதர்களுடைய இல்லற தர்மம் எப்படியோ வென்று சந்தேகங்கொண்டு பார்வதியாரைக் கேட்டாள். அதற்கு அவ்வம்பிகையார் அந் தப் பெண்ணைப் பார்த்து, நான் சொல்வதினா லுனக் கனுபவமாகாது. நீ போய்ப் பூமியிற் பிறந்து, இல்லற தர்மத்தைக் காட்சிப் பிர மாணமாகக் கண்டநுபவித்து வரக்கடவாய் என்று சொல்லி அநுக்கிரகம் பண்ணினார். அவ்வாறே அந்த ஜயை யென்பவள் மண் ணிற் பிறந்து வளர்ந்து சிறந்துவருங் காலே யில், தேவரதனென்றொரு முனிவன் தனக் குபசாரஞ் செய்வதற்கு உத்தம குணசாலியான பத்தினி யொருத்தி வேண்டுமென்று தேச முழுமையும் தேடித் திரிந்து, வாடி வருந்தி வரும்போது, ஒரு சிற்றூர்க்கிராமத்திலிருந்த இந்தப் பெண்ணைக் கண்டு, கன்னிகை யென் றுணர்ந்து, இவளது பதிவிரதா குணத்தைச் சோதிக்க வேண்டுமென் றெண்ணிப் பெரிய ராக்ஷத ரூபந்தொண்டு, கோரமாய் எதிர்

சென்று நின்று, அவளைப் பருந்துராய்ஞ்சும் பாவனைபோல் தூக்கிக்கொண்டு, மந்தர வாரணியத்திற் போய் நூறு யோசனை விசாலமுள்ள தாமரைத் தடாகக் கரைமேல் வைத்து, வெகுவித சந்தோஷ முண்டாக்கி, பற்பல கனி-தேன் - கிழங்குகளுங் கொடுத்து, உற்பலம்-தாமரை - மல்லிகை முதலிய புட்பங்களும் அளித்து, போகப் புணர்ச்சியின் பொருட்டுப் பேசுவனவெல்லாஞ் சரசமாய்ப் பேசி, தன்னால் கூடியமட்டுந் திருத்தி, நயபயங் காட்டி பொருந்திப் பார்த்தான். அவள் எந்தவிதத்திலும் மயங்காமல் திடச்சித்தமாயிருந்து, கல்வியமளியைக் கலத்தலுக்குச் சம்மதியாமல் போனாள்.

அப்போது இராக்ஷச ரூபங்கொண்டவன் தன் கையில் பிடித்திருந்த கோலால் அவளைக் கீழே தள்ளி, பலவந்தமாய் ஒரு தலைக் காமப் புணர்ச்சி செய்ய ஆரம்பித்தான். அவள் அதற்குமஞ்சாமல், தன்னிரு கைகளையுந் தலைமேற் குவித்து, ஓ தர்மதேவதையே! நான் இதுவரையிலும் மனோ வாக்குக் காயங்களினால் வழுவுதல் முதலிய பழுதுகளில்லாமற் கற்புடைமை காத்து, ஒப்புவமை இல்லாதிருந்தேன். இப்போதிந்த இராக்கதன் கை என்மேற் படுமுன்னமே அல்பமாகிய என்னுடலங் கருங்கல்லாய்ப் போகக்கடவதென்று கூவினாள். அவ்வாறு உரக்கக் கூவினவளை அவ்விராக்ஷசன் அதட்டி வெருட்டிப் பயங்காட்டி, மீண்டும் மேல்விழுந்து தழுவப்போனான். அக்காலவள் கல்லாய்ச் சமைந்தாள். அவளுக்கு நேரிட்ட அபாயத்தைக் கண்ட முனிவன் இராக்ஷச ரூபத்தைவிட்டுப் பழைய வடிவெடுத்து, அவளுடல் கல்லாகியதைத் தடுத்து, தான் அதுவரையிலுந் தேடிய தபோ மகிமையை அதனுக்கீடாகக் கொடுத்து அவளைத் தன் வாழ்க்கைத் துணை நலத்திற் கமைவியாக்கி விபகாரப்படி புணர்ந்து, சூரிய மனைவியாக்கி விபகாரப்படி புணர்ந்து, கொக்கோக நூலிற் கூறிய வண்ணம் ஆலிங்கன முதலிய யாவும் நடாத்தி, அநேக வரங்களு மளித்து, தன் ஆச்சிரமமடுத்து, அறம்-பொருள்-இன்பம்-வீடு என்னும் நாற்பயன்களையும் திறம்பாமலடைந்து, இகத்தில் இவ்விருவரும் இல்லற வாழ்க்கை இத்தன்மையாமென்று யாவருமறிய நாட்டி வைத்தார்கள். ஓ பாஞ்சாலச் செல்வீ! நல்லவர்களுக்கொரு நாளும் பொல்லாங்கு வராது. வந்தாலும், நிலையாயிராது. பின்னால் நன்மையுண்டாகும். ஆதலால், எப்போப்பட்ட ஆபத்துகள் வந்தாலும் அதற்கஞ்சி விசனப்படலாகாது. இப்போது உனக்கு நேரிட்ட கஷ்ட நிஷ்டூரங்களுக்காகத் துக்கப்படாதே. இன்னுஞ் சில நாளைக்குள் நமக்கு நல்லகாலம் வரும் என்று நயந்து பேசி சுதர்க்கணை யிடத்திற்கு அவளையனுப்பிவிட்டு, தானொரு தடாகத்தி லிறங்கி ஸ்நானம்பண்ணி, நித்தியவிதி நிறைவேற்றிக்கொண்டு, வெளியே போய்வந்த செய்தி ஒருவரும் உணராதிருக்கும்படியாய் மடைப்பள்ளிக்குப் போய்விட்டான். இந்தப்பிரகாரம் வீமசேனன் போக, திரௌபதியானவள் பொழுது விடிந்து போயிற்றே யென்று பயந்து, ஒடுங்கி, ஒதுங்கி, வாடி, வதங்கி, நம்மை யார் பார்ப்பார்களோ? என்ன நினைப்பார்களோ? என்னவென்று ஏசுவார்களோ? நாம் போகிற வழியில் யாரேனும் சந்திப்பார்களோ? ஏதோ என்னமோ வென்று அச்சத்துடன்போய்ச் சுதேஷ்ணாதேவியின் அரண்மனைக்குள் புகுந்தாள். இவ்விதஞ் சொன்ன வைசம்பாயனரை ஜெனமேஜெய ராஜன் பரிந்து நோக்கி, ஓ சுவாமி! உபகீசகர்கள் கையிலகப்பட்ட பாஞ்சாலியை வீமசேனன் வந்து விடுவிக்காமற் போனால் உபகீசகர்கள் தங்கள் தமையனோடு சேர்த்துக் கொளுத்திப் போடுவார்களே. ஆ! ஆ! அந்த உத்தமிக்கு என்ன வாபத்து வந்து நேர்ந்தது? என்று சொல்லிப் பரிதாபித்தான். அது கேட்ட வைசம்பாயனர் சொல்லுகின்றார்: ஓ மகிமை புதித்த மன்னவர் பிரானே! கேளும்: ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய கடாட்ச வீட்சண்ணியத்தினாலும், தருமபுத்திர மகாராஜனுடைய சத்திய நித்திய தவத்தினாலும், பாஞ்சாலியினுடைய பத்தினி தன்மத்தினாலும், அப்போப்பட்ட பொல்லாங்கு நேரிடாது. ஒருவேளை நேரிட்டாலும் அவளுக்குத் தந்தையாகிய அக்கினிதேவன் தான் பெற்ற பெண்ணைத் தானே கொளுத்துவானா? தானே சுட்டெரிப்பானா? அப்படி நேரிடுங்காலையில் தருமதேவதையும் அதற்குச் சகாயப்படுமா? தர்மந் தலைகாக்காமற்போமா? ஓ சந்திரகுலாதிபனே! என்று சந்தேகந் தீர்ந்து மேல்நடந்த வர்த்தமானங்களையுஞ் சொல்லத் தொடங்கினார்.

### விராடனுஞ் சுதர்க்கணையுங் கீசகர்க்குரிய கடன்களை முடித்து, திரௌபதியைத் தெய்வம்போல் போற்றி வருதல்

இப்பால் ஜகத்தை மறைத்துப் போர்த்த கருத்த விருட்டிரைக் களங்கத்தை இரவியா

னவனிந்திர திசையினின்று மெழுந்து இகல்
கொடு விலக்கி, நிலத்தை விளக்கி உதயகிரி
முடிமேல் ஏற்றிய மணி விளக்கைப்போல்
எட்டுத்திசையும் பிரகாசிக்கப் பிரபை விட்டு
ஒளிகாட்டினன். உடனே அன்றிரவில் நடந்த
யுத்த விபரீதமுஞ் சத்தப் பிரதாபமும் விராட
புரம் எங்கும் பரவி, ஆயிரங் கிரணனிலும்
அதிகமாய் விரித்து, மச்ச நாட்டுள்ள ஜனங்
கள் எல்லாங் கோட்டைக்கு மேற்புறத்தை
அடைந்து, வனத்தில் மாண்டு கிடக்கின்ற
உபகீசகர்களையும், அவ்வியாமல் எரிகிற
மாஞ்சோலையில் ஆயி மகம்மாயிக்குப் பூசை
போடச் செய்த புதிய அலங்காரம்போல்
இருக்குங் கீசகன் தலையையுங் கண்டு, விசனங்
கொண்டு, பயந்து ஓட்டமாய் ஓடி வந்து,
விராடராஜனுக்குச் சொல்லி வெறுப்படைந்
தார்கள். இதற்கு முன்னமே கீசகனழிந்த
செய்தியைத் தன் பெண்சாதி சொல்லக்கேட்டு
வருந்தி, ஐயையோ! ஓ கன்னியன்னமே!
இனி நானென்ன செய்வேன்? என் தோள்
வலி போச்சே என்று துடித்துக் கண்ணீர்
வடித்துப் படுக்கை விட்டெழப் பலமற்றவ
னாய்ப் பரதவித்துக் கொண்டிருந்த அப்பார்த்
திபன் செவியில் உபகீசர்களு முயிரொழிந்
தார்களென் றுரைத்தவுடனே இடிமேலிடி
யும், அடிமேலடியும், எய்தியவாறு போலிரங்கி
யிரைந்து, விரைந்தெழுந்து, கொலுச்சாவடி
யிற் கூடிய தூதர்களைக் கூவி, என் மைத்துன
ரிறந்த காரண காரியங் கண்டறிந்து வாருங்க
ளென் றனுப்பினான். அப்படியே அவர்கள்
போய்ப்பார்த்து, சிதைந்து வதைந்த கீச
கரைக் கண்டு, ஆச்சரியமு மாச்சரியமு முள்
ளவர்களாய் வந்து அரசன் திருமுகத்தைப்
பார்த்து, ஓ ராஜாதிராஜனே! பராக். கீசகராஜ
னுடன் உபகீசகராஜரும் பறந்து உலகவாழ்க்
கையைத் துறந்து மண்மேற்கறந்து இறந்து
போனார்கள். அவர்கள்பேரு மிறந்து போயி
ற்று. அந்தப் பிணங்கள் அலங்கோலமாய்க்
கிடப்பதை நோக்கி இந்தப் பட்டினத்துச்
சனங்க ளெல்லோரும் பயங்கொண்டு வெளி
வரமாட்டாமல் வேசாரி வெம்புகின்றார்கள்.
இந்த விபரீத மெல்லாஞ் சைரந்திரி
யென்னும் பெண்ணால் விளைந்ததன்றி, மற்
றொருவராலுமல்ல. அந்தப் பாக்கியசாலி
இன்னுஞ் சில நாள் இவ்விடத்தில் இருந்தால்
இவ்வூரிலுள்ளோ ரியாவருஞ் சகாமற்
போகார்கள். ஓ தருமசீல தயாளுவாகிய தரா
பதியே! இப்பால் தாங்களே யோசிக்கத்தக்கது
என்று சொல்லிச் சரணஞ் செய்தார்கள். அன்
னவர்களுரைத்த மொழியை விராடராஜன்
யோசித்து, மந்திரிகளுடன் கலந்து வார்த்தை
யாடி, ஓ என் மித்திரர்களே! நீங்களுங்கள்
தந்திர யுத்தத்தினாலும், மந்திர சித்தியினா
லும் அந்தக் காந்திருவரைக் கண்கலங்கப்
பிடிப்பதற்கான உபாயந்தேடி, விற்படைவேற்
படை யோங்கிய வீரர்களை விடுத்து மற்புய
வலி மிகுந்த என் மைத்துனரை அற்பமா
யெண்ணிச் சற்பனை செய்து பிராணனை வாங்
கிய அற்பலமுள்ள துட்டர்களை எப்படி யாகி
லும் கைப்பிடியாகப் பிடித்து என் சொற்படி
விரைவில், வரச்சொல்லுங்களென்று பற்கடித்
துப் பகர்ந்து இறந்துபோன மைத்துனருக்
குச் செய்ய வேண்டிய சமவிதிக் கடன்முடித்து
இனியென்ன மோசம் வருமோவென்று ஏக்
கமேலிட்டுத் தூக்கம் பிடியாமலிருந்தான்.

இவன்செய லிவ்வாறாக நேற்றிரவில்
நடந்த சங்கதிகளைப் பாண்டுமக்களைவரும்
பாஞ்சாலியுந் தனித்தோ ரிடத்திற் சேர்ந்து
கலந்து வார்த்தையாடி, அக்ஞாத வாசஞ்
செய்ய வந்த நமதவதி நாளாயிற்று. இன்னு
முள்ள கொஞ்சநாளுந் தொலைந்தால் வெறுப்
பாயெடுத்த இவ் வேடத்தை விடுத்து, விருப்
பாய்ப் பழைய வேடமெடுத்து, வெகு ஜனங்
களுங் காண வெளிப்பட்டுப் பேசவேண்டிய
சேதிகளை யெல்லாம் பேசிக்கொள்ளலாம்.
அதுவரையிலுஞ் சந்தடி பண்ணாதிருப்போ
மென்று பேசிக்கொண்டு, விற்பன விவேகிக
ளாகிய அவ்வேந்தர்கள் தங்கள் கற்பனைத்
தொழிலிற் பக்குவமாகவிருந்து காலங்கழித்து
வந்தார்கள். அதுமுதல் விராடராஜனும்,
சுதார்க்கனையும், புறம்பிலுண்டான சுற்றத்
தாரும், மற்றையர்களும் அந்த விரதசாரணி
யிடத்தி லதிகமாய் நெருங்கவும், வேடிக்கை
யாய்க் கொஞ்சவும், விநோதமாய்க் குலாவவும்,
போவாவென்று வாய்ப்பேச்சுப் பேசவும் பய
ந்து, அவளா லாகவேண்டிய வேலைகளைத்
தாங்கள் செய்துகொண்டு, அம்மா! தாயே! நீர்
சும்மாவிரும் என்றுபசரித்து, எங்களுக் குயிர்
த்துணையாயிருந்த கீசகாள் உன்மே லாசை
வைத்து மானமழிகள் கெட்டு மாண்டார்கள்.
நீரெங்கள் பேரில் யாதொரு குற்றங் குறை
வையாமல், கோபதாபஞ் செய்யாமல் உமக்
குக் காவலாகிய காந்திருவரிடத்திற் சொல்லி
எங்களை ரக்ஷிக்கும்படி பிராண பிழைதாரும் நீ
ரெங்களுக்குப் பக்கத்துணையிருந்து காரும்

என்று உபசாரம் பண்ணி பொன்னைப்போற்றி மாறுபோற் பூசித்து வந்தார்கள். அந்நகரி லுள்ள நான்கு வருணத்தவருந் திரௌபதி யம்மனைக் கண்டால் எதிர்சென்றோடித் தீர்க்க தெண்டனிட்டு, மரியாதையுடன் பாதபூஜை பண்ணி, மஞ்சள்-குங்குமம்-கந்தம்-கதம்பம்-அக்ஷதை இவைகளைச் சாத்தி, தூப தீபங் கொடுத்து வணங்கி, வாய்க்குற்றம் கைக்குற் றம் வரப்போகின்ற தென்று வயிற்றில் வாள் கட்டிக் கொண்டவர் போற் பயங்கரத்துடன் மதித்துத் துதித்துச் சன்மானம் புரிந்து, தெய்வோபசாரம் இராஜோபசாரம் போற் பல உபசாரங்களையுஞ் செய்து வந்தார்கள். பாஞ்சாலியும் இந்தப் பூனை அந்தப் பாலைக் குடிக்குமா வென்பதுபோல விளங்கி, ஓ ஐய மீர்! ஓ அம்மைமீர்! எனக்கென்ன தெரியும்? நானென்ன அறிவேன்' என்று கூறிக் கொண்டு சுதர்க்கனைக் கிணையாய்ப் பொருந்தி அமர்ந்து வாழ்ந்திருந்தாள்.

### விராடராஜன் கீசகனிறத்தலைக் குறித்து விசனப்பட, தருமபுத்திரர் தேற்றி ஆதரனை கூறுதல்.

திரௌபதா தேவி இவ்வளவு பூசிதை யோடு மிருக்க கீசகர் நூற்று நால்வரும் ஈட ழிந்து நாடழிந்து கேடுகண்டதைக் குறித்து மச்சராஜன் பெருமூச்சு விட்டுக் கிலேசமுற்று இந்நாள் வரையிலும் இந்த ராச்சியத்திற் கிடையூறு வராமற் காத்துச் சேனாதிபதித் துவ விசாரணையுஞ் செய்து எனக்கு திகிலுந் தீங்கு மில்லாமல் தனது சொந்தம்போற் பார்த்து வந்த என் மைத்துனன் மாண்டானே! அந்தோ! இனி நானெப்படிப் பகைவரை வெல்லுவேன்; இறை கேட்டனுப்பும் முறை மையுடைய வேந்தர்க்கு இல்லை யென் றெண்ணமாய்ச் சொல்லுவேன்; எங்கும் விரோதிகளாய்ப் படைகொண்டு சண்டை செய்ய வருவார்களே; அப்படி வருபவர்களுக் குப் பயிர்க்களை பறித்த பாவனையாயிற்றே; கோட்டையை யிடித்த கொள்கைபோ லாயிற் றே; உன்னியத்தில் வைத்த மதிப்பு மூத லிய கௌரவமும் இன்றோடு ஒழிந்ததே; நமது கீசகனுக்குச் சமானமான பலசாலி யைச் சம்பாதித்துச் சேனாதிபதியாக்க வேண் டுமே; தெய்வமே! என்று மனக்கவலை யுற் றிருந்தான். அந்தச் சமயத்தில் அவன் பக் கத்திலிருந்த கங்கபட்டர் மச்சராஜன் மன தைத்தேற்றி, வாய் பிதற்றலைமாற்றி, ஐயா! துஷ்ட கீசகர்களுடைய நஷ்டத்தைப்பற்றிக் கஷ்டப்படுகிறீர். அந்நியராஜ பயங்கரங் கொண் டச்சப்படுகிறீர். நீர் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். படுபாவியான கீசகன் பட் டதே உமதிஷ்ட தெய்வாநுக்கிரக மென் றெண்ணிக் கொள்ளும். இனி யுமக்கு நல்ல காலம். அந்தக் கீசகனின்னு மிருப்பானாகில், சத்திய வாக்கியமும், சகல பாக்கியமும், யோக் கிய சிலாக்கியமும் ஒன்று மில்லாமற் பாழாய்ப் போய்விடும். இது வரையிலும் உம்மைப் பிடித்திருந்த ஏழரை நாட்டுச் சனி விட்டுப் போயிற்று. துட்டத் துரோகியை நினைத்துத் துன்பப்படாதீர். நமது மடைப்பள்ளி மல் லனைவிட வேறுசேனாதிபதியும் வேண்டுமோ? இனி யுமக்குப் பகைவ ரென்பாருமில்லை. உம் மைப் பகைத்துவந்து பிழைப்பாருமில்லை. உம்மைப் பகைத்துவந்து பிழைப்பாரு மில்லை. எமது சத்திய சவுசவாசார விரதம் உற்றதுணையா யிருந்தது, மேலான சம் பத்தை யுமக்குண்டாக்கி வைக்கும் நீர் சஞ் சலப்பட வேண்டாம். ஓ சாந்தகுணனே! என்று தருமசொரூபனுரைத்துச் சமாதானப் படுத்தியபோது, விராடராஜன் வேதியர் பெருமானுரைத்த புத்தியைக் கேட்டு, மிகு மகிழ்கொண்டு மேன்மையோ டிருந்தான். அந்நிய மாதர்மேல் வைத்த ஆசாபாசத் தால் மோசம்போய்த் தம்பிமார்களுடன் கீச கன் பட்டானென்று தேசாதேச மெல்லாம் பேசிக்கொண்டார்கள்.

கீசகன் வதைச் சருக்கம் முற்றிற்று.

---

நான்காவது,

## தக்ஷண நிரைமீட்சிச் சருக்கம்

### கண்ணன் துதி

மந்திரஞ்சேர் சமதக்னி றேணுகைபுற் பரசிராமப் பேற்பெற்று, மைந்தனெனத் தோன்றிமறை யோங்கிடச்செய் தறநெறியை மாய்த்தவேந்தன், தொந்தமுறுங் குலமுழுது மறைச்செருத்தம் மறையோர்க்குத் துணை யாய் நின்று, சிந்தைமகிழ்ந் துலகாண்டு யாற் கடலுட் டுயின்றவனென் சிந்தையானேன்.

ஓ ஜெனமேஜய மகாராஜனே! பாண்ட வர்கள் அஸ்தினாபுரத்திற் சொக்கட்டாஞடித் திரௌபதியோடு பன்னிரண்டு வருஷம் வன

வாசஞ் செய்யப் புகுந்து காடாக்கினியோங்கிய காட்டிலும் காளவிஷாக்கினி தங்கிய பாலை நிலத்திலும் வடவாமுகாக்கினி வந்து குடிகொண்ட மலைச்சார்பிலும், திருபுராக்கினி சிவந்த பருக்கைக்கல் மேட்டிலும், மதனக்கினி மலர்ந்த மடுக்கரை-குளக்கரை-நதிக்கரைகளிலுந் திரிந்து, மழை-பனி-காற்று-வெயில் முதலாகிய வருத்தங்களையும் பொறுத்து அலைந்த சரித்திரத்தை முன்னமே சொன்னேன். பின்பு அவர்கள் ஒரு வருஷ அக்ஞாத வாசங் கழிக்கவேண்டி உருமாறி விராடராஜனிடஞ் சென்று, தங்கள் தங்கள் புத்திசாதுரியத்திற்கேற்ற நாமமுந் தொழிலுங் கொண்டு வாசவனென்னு மல்லனையுங், கீசகரென்னும் புல்லரையும் வதைத்துச் சகலரும் போற்றச் சிறந்திருந்த சரிதத்தை இப்போது சொன்னேன். இனி பஞ்சவரைக் காட்டிலோட்டிவிட்டு, வீரகண்டைதாங்கிய தன் பாதத்திற் சத்துருவெல்லாம் மித்துருவாய்ப் பணிந்து, கப்பணங் கட்டிவரப் பொற்பணி முடிபூண்டு, எப் புவனங்களுக்கும் ஏகசக்ராதிபதியாயிருந்து துரைத்தனஞ்செய்து வராநின்ற, பாப இருதயம்படைத்த துரியோதனராஜன் அச்சமில்லாச் சேனைகளுடன் மச்சநாட்டைப் பகைத்து, இச்சையின்படிக்கும் பசுமந்தைகளைக் கொள்ளையிடலாமென்று கொச்சை மதியாமல் இச்சை கெட்டுவந்த சண்டையைச் சொல்லுகிறேன் கேளும்:

### துரியோதனன் பாண்டவரிருக்கையறியத் தூதரையேவ, அவர்கள் சென்றுய்ந்து அலுலீத்து வருதல்

ஓ மகாராஜனே! மராடமன்னர்முதல் யாவரும் வணங்கும் விராடமன்னனிடமேவி யிணங்கும் பாண்டவர்கள் அக்ஞாதவாசஞ் செய்து வரு நாளையில், சகல வளமைகளும் பொருந்தி நிலைமைபெற்ற இருபுரத்திலும் அலையெறிந்தோதுக்கிய பொற்சன்னனங்களும், நவமணிக் குப்பைகளும் ராசிராசியாய்ப் புரண்டு பிரகாசித்திருக்கின்ற கங்கைவள மோங்கிய குருநாட்டுக்கு அதிபதியான துரியோதனராஜன் அஸ்திஹுபுரத்தை யாண்டுவருங் குந்திதேவியின் பிள்ளைகள் இன்னும் வனவாசஞ் செய்ய வேண்டியிருக்குமா? அல்லது அக்ஞாதவாசம் பண்ணப் போயிருப்பார்களா? அவர்கள் நாட்டைவிட்டுக் காட்டுக்குப்போன நாளைக் கணக்கிட்டு பாருங்கள் சம்பிரதிகளே என்றான். அவ்வரண்மனைக் கணக்கரில் பெரிய ராயசக்காரனெழுந்து வணங்கி, ஓ இராஜராஜ பரமேஸ்பர ராஜமார்த்தண்ட ராஜயுத்தண்ட ராஜகெம்பீர ராஜப்பிரபுடீக ராஜதுரந்தர் ராஜராஜேஸ்வர வணங்காமுடி பொறுத்த துரியோதன் மகாராஜனே! பராக். ஆண்டவனுத்தாரப்படிக்குப் பாண்டவர்கள் வனவாசங் கழித்து அக்ஞாதவாசம் முக்கால் வாசியுந் தொலைத்து விட்டார்க ளென்றான். அந்த மொழியைக்கேட்ட அரவகேதனன் சிந்தை வருந்தி, மிக அவசரத்தோடு அருகினிறைந்திருந்த சாரணர்களை யழைத்து, அடா தூதரே! பாண்டவர் உறைந்திருக்கும் பதியையும் அவர்கள் கொண்ட மாறுவேடத்தையும் கண்டறிந்து நமக்கு வெளிப்படுத்துவீராகில், உங்களுக்குக் கோடி திரவியமும், குதிரை-யானை-தேர்-குடை-கொடி-பட்டு-பட்டாவளி-இரத்னுபரணம்-சிவிகை-அருகு-தீவட்டி-ஜெயபேரி-பங்கா-வாத்தியம் - கிராமம் - பூமி முதலாகிய வெகுமதிகளுங் கொடுப்பேன். நான்கு திக்கும் நன்றாய்த் தேடிப்பார்த்து வாருங்க ளென்று சந்தன தாம்பூலங் கொடுத்து விடுத்தான்.

அரசன் சொல்லாசையை நம்பி அநேக தூதர் புறப்பட்டு, சபை மெச்சும்படி வெகுமதி பெறவேண்டு மென்னுஞ் சந்தோஷத்தால் வானமளாவிய மதில்வளைந்த கோட்டைகளும், மாடமாளிகை கூடகோபுரமுள்ள பட்டினங்களும், சீறூர் கிராமங்களும், அக்கிராரங்களும், துருவங்களும், நதி-குளம்-ஏரி-தடாகம்-ஓடை-கயம்-கால்வாய்களும், வாழை-க்முகு-கரும்பு தேங்கு-வருக்கை இவை முதலிய விருக்ஷ வளம்பெற்ற நாடுகளும், மேன்மை பொருந்திய வீடுகளும், வண்டோலஞ் செய்யும் பூங்காடுகளும், விண்டல முயர்ந்த பர்வதங்களும், சுரை - புன்னை - தாழை- கரும்பனை இவை முதலியன் வடர்ந்த மணல்மேடு உள்ள கழிக்கரையும், பற்பல வழிக்கரையுந் தேடி, பாண்டவர்களின் காலடிச் சுவடுண்டோவென்று நாடி, நாலு திக்கும் பிரிந்தவர்கள்கூடி, வேசாறி வாடி, நாம் எல்லோரும் அதிர்ஷ்ட மற்றவர்களென்று தங்களைத் தாங்களே நொந்துகொண்டு அஸ்திஹு புரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது சூரிய புத்திரனுகிய கர்னன், சௌபலராஜ குமாரனுகிய சகுனி, பரத்துவாசதநயன் துரோணுச்சாரி, சிவன் காதலன் அஸ்வத்தாமன், சரத்துவந்த மகாரிஷி சந்ததி கிருபாச்சாரி, சந்தநுநந்தனன் வீஷ்மர், பச்சை முதலிய ரத்திஹுபரண

மும் வெட்சிமாலையும் புனைந்த திரிகர்த்தன், வியாசன் வழித்தோன்றல் விதுரன், குருகுலாதிபதி திரிதராஷ்டிரன் இன்னுமுள்ள பல தேசராஜரும் மந்திரி சாமந்தருந் தந்திரிசாளுவருஞ் சூழ்ந்திருக்க, சந்திரனைவிட்டகலாத தாரகாகணம்போல் தம்பிமார் மொய்த்திருக்க, முடிமன்னர் முறைமையுடனிணங்கிக் கப்பணஞ் செலுத்துங் கால்மேல் வணங்க, மூடியர் கூற, பட்டுவர்புகழ, துஷ்டர்கள் தாழ, கவிவாணர் துதிக்க, இசைவாணர் இசைக்க, மறையவர் ஆசீர்வதிக்க, பரத நாட்டியப் பாவையராட, சுரதசங்கீதத் தோகையர் கூட, வெண்சாமரை போட, வீரர்க ளதிரோட, வெண்பட்டுக் குடை நிழற்ற, செம்பத் மரகதத்தால் அமைத்த வீரசிங்காசனத்தின்மீது மத்தியானச் சூரியன்போல் வேந்தனான சுயோதனராஜன் வீற்றிருந்தான்.

அக்கால வினைப்பயனுக் கேற்க விதியை மதியாக்கிக்கொண்ட வேந்தனிருந்த கொலுமுகத்திற் பாண்டவர்களைத் தேடி இளைத்து வந்த தூதர் போய் நின்று தீர்க்கதெண்டனிட்டு, ஓ நந்தியாவட்ட மாலைபுனைந்த நாதனே! கொன்றைமாலை யணிந்த பரமசிவனுக்கு வலது கண்ணாகிய சூரிய கிரணங்கள் பாயுமிடங்களினும், அந்த சர்வேஸ்வரனுக்கு இடது கண்ணாகிய சந்திரப்பிரகாசம் பரவும் இடங்களினும், அவ்வாதி பரண்டரங்க நெற்றிக்கண்ணாகிய அக்கினிதேவன் பொருந்தும் இடங்களினும், காலகண்டன் தாளருள் கண்ட காலனுடைய கரும்பாசஞ் செல்லு மிடங்களினும் புகுந்து சோர்வில்லாமலாராய்ந்து பார்த்தோம். எங்கும் பாண்டவரைக் காணமற் பங்கப்பட்டிங்குவந்தோம். ஓ பார்த்திபனே! தங்கள் சமூகத்தில் நாங்களுண்மையாய் சொல்லுகின்றோம், ஆண்டவன் அருளால் பாண்டவர் மாண்டே போயினார்கள். இதற்குச் சந்தேகம் இல்லை. தேவரீரிடத்தில் யாங்கள் தவணைவைத்துக்கொண்டு போனநாள் முதல் இதுகாறுந் தேடித்தேடி எங்கள்கால்கள்வாடி விருதாவாய் காலம்போக்குவதிற்பிரயோசனமில்லையென்று தீர்மானித்து சீக்கிரஞ்சென்று மன்னர் பெருமானுக்கு முன்னடிச் சொல்லிவிட்டால் இன்னும் வேண்டிய உபாயந் தேடிக்கொள்ளுவாரென்று எண்ணி வந்துவிட்டோம். தேவரீர் கட்டளையின்படி நடக்கக் காத்திருக்கின்றோம் என்று நமஸ்கரித்து, வாய்புதைத்துக் கைகட்டி, புத்திபுத்தி யென்று விண்ணப்பம் பண்ணினார்கள்.

### கர்னன் பாண்டவரிருக்கை இவ்வாறு இருக்குமெனக் கூறுதல்

இப்பாற் பஞ்சபுஷ்ப பாணங்களையும், கருப்புவில்லையுமுடைய மன்மதனை யொத்த வடிவமைந்த துரியோதனராஜன் சாரணர் உரைத்த லோபமொழியைக் கேட்டு, காதிரண்டுங் கும்மென்றடையக் கதறி, உடல் பதறி, இரு கரத்தையும் உதறி, தன்னருகிலிருந்த சாதுக்கள் முகத்தை நோக்கி, ஐயா பெரியோரே! இந்தத் தூதர்கள் அவனிமுழுதுந் தேடி, யலைந்துவந்து உரைத்ததைக் கேட்டீர்களே! இனி நான் செய்யவேண்டிய காரியம் இன்னதென்று இயம்புங்கள். பாண்டுமக்கள் ஐவரும், பாஞ்சாலன் தையலுந் துவாதச வருடம் வனவாசம் பண்ணி, தேகம் இளைத்துக் களைத்து ஆவியழிந்து போனார்களோ? அல்லது அஞ்ஞானவிருளைப் போக்கிச் சுஞ்ஞானச்சுடரெரிக்கச் செய்யுந் தவமுனிவர்களினால் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை களைவிட்டு மனோதிடம் பெற்று, விஞ்ஞான விளக்கத்தால் வேதாந்தியானார்களோ? ஒருவேளை யாருமறியாம லக்ஞாதவாசங் கழித்து, முடிவி லிவ்விடம் வந்து முளைப்பார்களோ? யாது தெரியவில்லை. அதனை உங்களுள்ளத்திற் செவ்வையாக நிதானித்து யோசித்துச் சொல்லுங்கள் என்று கள்ள மனத்தோனான காந்தாரி புதல்வன் கேட்க, சூரியன் புத்திரனாகிய கர்னன் சொல்லலுற்றான்:

ஓ அரவக்கொடி நிலவிய கௌரவகுல முதல்வனே! என் சொல்லுறுதியைக் கேளும்: பாண்டவரைவரும் வனவாசம்பண்ணிப் பன்னிரண்டு வருடத்தையுங் கழித்து காடுவிட்டு அகன்று, நாடுபற்றிச் சென்று, கூடுவிட்டுகூடு பாய்வதுபோல் மாறுவேடம் பூண்டு, பெயர் வேறுகொண்டு குலம்வேறு காட்டி குணம்வேறு நாட்டி, நீதிநெறி பிசகாமல், ஆசாரம்வழுவாமல், பழைமைச் செல்வம் பாராட்டாமல், அடங்கி ஒடுங்கி, ஆயுதங்களை மறைத்து வைத்து காலத்திற்குத்தக்க கோலமாக ஒவ்வொரு வேலையிலிருந்து, அக்ஞாதவாச வருடமுந் தொலைத்து அப்பால் வெளிப்பட்டு ஆபரண மணிமாலைகள் பிரகாசிக்கு மார்பினை யுடையவராய், ஆயுதபாணிகளாய், இருமாந்திவ்விடம் வந்து, நாங்கள் முன்னஞ் சூதாடித் தோற்ற நாடு கொடுப்பையா? அல்லது போர் தொடுப்பையா என்று நம்மைக் கேட்பார்கள். இப்படி அவர்களுயிருடன் வருவார்க ளென்பதற்குச்

சந்தேகமில்லை. வேறாக நினைக்கவேண்டாம். ஓ இலங்கிய வலம்புரி மாலையைப் பார்த்து, அரம்பைய ராசைகொண்டடரும் அலங்கார மார்பனே! என் சொல்லை நம்பும் என்று வீரப்பிரதாபந் தெரிந்த மேலோனும், மந்திரசக்திவரோதயனுமாகிய அங்கதேசாதிபன் யறைந்தான்.

### துர்ச்சாதனன் கர்னனுரையை மறுத்து பாண்டவர் தமக்குட் பகைத்து இறந்தன ரெனல்

இவ்வாறிசைத்த கர்னன் கருத்தைத் துர்ச்சாதனன் கேட்டுத் துடித்து, மனங்கொதித்தெழுந்து, கண்ணுங் கருத்துங் காதும் புகையக் கனன்று, அண்ணன் கமலவடியிற் பணிந்து, ஓ மலையிரண்டுதிரண்ட வயத்தோள் வள்ளலே! ஏழையாகிய வென்சொல்லையு மிரங்கிக் கேட்டருளும். பாண்டவர்கள் நாட்டைவிடுத்துக் காட்டை யடுத்தபோதே செத்த பிணத்தோடொத்த பிணமானார்கள். மனுஷத்தனமுள்ள மாணிகள் இந்நாள்வரையில் உயிரோடிருந்து இனி யிவ்விடம் வரப்போகிறார்களென்றெண்ணுகின்றீர்களா? ஐயோ பாவம்! அவர்களப்போதே கெட்டு மண்ணில் மக்கிவிட்டார்கள். அவர்களைப் புதைத்த விடமும் புல்முளைத்தாயிற்று. ஐவர்கள் பேரு மறைந்துபோயிற்று. அக்காரியங்களை நிதானிக்காமற் கர்னராஜன் இப்படி சொன்னது தப்பேயல்லாது வேறில்லை. இதன்றியும், அவர்களுயிருடனிருந்தாற் பாதாளபேத அஞ்சனம்போன்ற நம்முடைய தூதர்களின் கண்ணிலகப்படாமற் போவார்களா? இதுவே நமக்கு போதுமான சாட்சியாயிருக்க வேறுவேறெண்ணி விரிக்கவேண்டியதென்ன? தேவரீர் கட்டளையிட்டருளுவீராகில், காட்டிற் கஷ்டப்பட்டுக் காலங்கழித்த ஐவர்கள் தாறுமாறாயிறந்ததற்குக் காரணஞ் சொல்லுகிறேன். அதைக் கவனித்தருளும்.

ஓ பாவலர் புகழுங் காவலர்க்கிறையே! வாரேறிய மலைமுலையும், வாடியவல்லிக் கொடியிடையும், வாழைத் தொடையும், அன்னநடையும், வர்ணவுடையுமுடைய மங்கைமார்க்கெல்லாங் கடைப்பட்ட அந்தஸ்தினால் வறுமையடைந்த பாஞ்சாலியானவள் மர்மம் விட்டுத் தர்மராஜனை நோக்கி, ஐயோ பாவி! அன்னம் இல்லாமல் நானழுகின்றேனே; ஆவியொழிகின்றேனே; ஏழை யெளியதிற்குப் பெண்சாதியானவர்கள் எவ்வளவோ செல்வங்களை இன்பமாய் அநுபவிக்கின்றார்களே; கோழையாகிய உங்களுக்குப் பெண்டாகிய நான் ஏழையாகிக் குக்கித் தவித்துக் கண்டார் சிரிக்கக் கலங்குகின்றேனே; முகத்திற்கு மஞ்சளுண்டா? நெற்றிக்குக் குங்குமமுண்டா? கூந்தலுக்கு மாலைகளுண்டா? குட்சிக்குக் கஞ்சியுண்டா? அஞ்சலென்பவருண்டா? ஆதரிப்பவருண்டா? ஒஞ்சரித்துப்படுக்க வோலைப்பாயுண்டா? குந்தியிருக்கக் குடிசையுண்டா? வெளுத்த வாய்க்கு வெத்திலையுண்டா? ஆ! ஆ! தெய்வமே! ஜாண்பிள்ளையானாலும் ஆண்பிள்ளை மேலென்பார்கள். நீங்கள் வேலும், வில்லும், வாளும், பூரித்த தோளுமுடையவர்களாயிருந்தென்ன பலன் பெற்றீர்கள்? எனக்கென்ன நலம் வைத்தீர்கள்? நீங்கள் ஐவரும் ஆண்பிள்ளைகளிற் சேர்க்கைதானா? உங்களைப் போன்றவர்களைப் பார்க்கும்போது வெட்கம் இல்லையா என்று நாள்தோறுஞ் சலித்துக்கொண்டு பேசி, வீணாய் வெறுத்து அவமதித்தேசி, முகங் கடுகடுத்துத் தினமுஞ் சண்டைதொடுத்தாள்.

அதனால் தர்மராஜன் குக்கல்வாய்ப்பட்ட முசல்போல் மனங்கூசி வருத்தமுற்ற நாளையில், தம்பிமார் நால்வருந் தமையனை யடைந்து வடவைக் கனல்போற் கொதித்துக் கோபித்து, அடா துரோகி! உன்னுடன்பிறந்து என்ன பலன் பட்டோம். பெண்சாதி பிள்ளைகளை விட்டோம். நாடு நகரங்களைச் சூதால் இழந்து கெட்டோம். சகோதரர்களாகிய துரியோதனாதியரைப் பிரிந்தோம். உண்டு தின்று உறங்கும் பருவத்தில் உண்ணாமல் தின்னாமல் ஓட்டாண்டியானோம். ஒருவர்க்கொரு காசு கொடுக்கக் கதியற்றோம். யுத்த முனையில் வெற்றி பெறுதற்கும் வகையற்றோம். இனி உன்னிடத்திற் பொருந்தியிருப்பது தர்மமா? எங்களை இப்படிக்கு ஏளிதஞ் செய்தது மர்மமா? பாண்டுவுக்குப் புத்திரராகப் பிறந்த கர்மமா? ஒரு பிரயோசனமுமில்லாமல் உனக்கு ஊழியஞ் செய்ய எங்களை மடக்கி வைத்துக் கொண்டாய். ஓ வேப்பம் வித்துக் கொப்பானவனே! என்று மரியாதைத் தப்பி யெதிர்த்துக் கொண்டார்கள். தனோடொருநாளும் மாறுபட்டுப் பேசாத தம்பிமார்கள் வாயில்வந்தபடி பேசிய வருத்தத்தினாலும், திரௌபதை படுத்துந் தொந்தரையினாலும், தனக்கு உள்ளிருக்குஞ் சில அசந்தர்ப்பங்களினாலும், அகாலபோசனத்தினாலும், காட்டுத் தீ வெப்பத்தினா

லும், மலைக்கானலினாலும், பணியினாலும், தன்னைப் பிடித்த சனியினாலும், சமானவரசர்கள் பழித்துச் சின்னத்தனஞ் செய்வதினாலும், பாபமும் பழியு மேலிட்டதினாலும், நம்மிடத்தில் வந்து முகத்தில் விழிக்க பவிஷில்லாததினாலும் தன்னாற் கூடியவரையிலுந் தாழ்ந்து குறைந்து விசனாக்கினியால் வெந்து சஞ்சலத்துடன் சலித்து உயிர்விட்டான் தருமராஜன்.

என்றும் பிரியாமல் இருந்த தருமராஜன் உயிர் பிரிந்தபோது தம்பிமாருந் திரௌபதியுந் தழுவியழுது, அந்தோ! பழுது வந்ததே என்று பரதவித்து, அண்ணனைப் பறிகொடுத்தும் மண்ணிலிருந்து என்ன வாரிக்கொள்ளப் போகிறோம். என்றைக் கிருந்தாலும் நமக்கும் இதுவே கெதியெனத் தேறி இறந்துபோனார்கள். அவ்விடம் இருந்த கழுகு-பருந்து-காக்கை இவை முதலிய பட்சிகளும் மிருகங்களும் வயிறாரத்தின்று கழித்துவிட்ட வெலும்புகள் மண்ணில் மக்கி மறைந்து போயின. அவர்களைக் குறித்து இன்னும் பேசுவது வீண். எனக்கு அநேக விதங்களினால் திருஷ்டாந்தமாயிற்று. அண்ணா! நான் திண்ணமாய்ச் சொல்லுகிறேன்: கருமானுலையிற்காய்ச்சித் துவைத்த இரும்பிலேறிய சலமானது திரும்பி வந்தாலும் வரும் காடேறிய பாண்டவர்கள் இனி நாடேறப் போகிறதில்லை. என் சொல்லுக்கு எதிரெவர் பேசினாலும் அது ஈடேறப் போகிறதுமில்லை என்றுரைத்த அந்தத் துர்ச்சாதனன் சொல்லைத் தேவர்கள் விரும்புந் திவ்யக்கியான இச்சா சுதந்தரராகிய துரோணாசாரியார் கேட்டுப் பச்சாதாபப்பட்டு, பின்னகை விலைத்து, பாண்டவர் பக்ஷத்தில் வைத்த பக்ஷமும்-பண்பும்-அன்பும் - யாவருக்கும் பரிஷ்காரமாய்த் தெரியும்படிக்குச் சொல்லத் துணிந்தனர்.

## துரோணாசாரியர் பாண்டவர் நிலைமைகூறித் துர்ச்சாதனனுரையைக் கடிதல்

ஓ ராஜாதிராஜனான சுயோதன மகாராஜனே! கேளும் உம்முடைய தம்பியாகிய துர்ச்சாதனராஜன் க்ஷாத்திரமாகச் சொன்ன ஆத்திரவார்த்தையை யோசித்துப் பாரும். பாண்டவர்களை இலேசாக நினைக்கவேண்டாம். சிறு பிள்ளை யுடுத்த சிற்றாடைபோற் பேசாதீர்கள். முன்பின் எண்ணி பாராமல் முழுமோசம் போகாதீர்கள். முறைதப்பான ஆலோசனை பண்ணாதீர்கள். பாண்டவர்களெத்தன்மையரென்றால், வேதமுறை வழுவாத வித்தகர்கள். விண்ணவர் கொண்டாடு மேன்மை பெற்றவர்கள். யாவருடைய நாவுக்கு மினிமையானவர்கள். எத்தலத்தவர்க்கு முதன்மையானவர்கள். மூவாசையற்ற முனிவராலுங் காணுதற்கருமையான கண்ணுதலாற்பெற்ற பாசுபத முதலிய பாண வலிமை யுடையவர்கள். மிகுந்த சுகந்த கற்பகமாலை புனைந்தவர்கள். விற்பன விவேக முயர்ந்தவர்கள். எங்கும் விளங்கும் இளஞ்சூரியன்போ லுடையவர்கள். மந்திர ஞானியார். எப்புவனமுமதிக்கு ஒப்புவமையில்லாதவர். மருதமரத்தையுதைத் திரட்சித்துக் குருந்தமரத்திற் குதித்து விளையாடிய பன்னக சயனனாகிய திருமாலைப் பாண்டவர் சகாயனென்று யாவருஞ் சொல்லும்படிக்கு பெற்று இறுமாந்திருக்கும் பார்த்திபர் காலகேயர் நிவாத கவசர்களுடைய உரத்தையும், வரத்தையும், சிரத்தையும், புரத்தையும் போக்கி, தேவர்கள் இடரை நீக்கி, தேவேந்திரனுக் காதிக்க முண்டாக்கிவைத்து அழியாக் கீர்த்தியைப் படைத்தோர். கடலிலுமுயர்ந்த கண்ணருளுடையோர். அமுதினுமினிய அன்புடையோர். சற்றும் பிசகாச் சத்தியசம்பன்னர். வித்தகமநுகூல மேம்படு மன்னர். இத்தன்மையராகிய அந்த உத்தம வேந்தரைச் செத்தனரென்பது தகுமோ? அத்தினபுரியில் உத்தமர் கூடிய சபையிற் கூறிய உறுதிச் சபதம் முடிக்காமற் போவரோ? மத்திமர் கூடி வரை பேசும்படியாய் சாவரோ? பாண்டவரை மாண்டவரென்று மனப்பால் குடியாதீர்கள். அவர்கள் பகைவருக்குப் பாசகரென்று யோசிக்க வேண்டியது. தங்களுண்மையை நிலைநிறுத்தும்படி தவணை நாட் கழித்து இன்னுஞ் சில நாளையில் இவ்விடம் வந்து சேரப்போகின்றார்கள். நாம் எல்லோருங் கண்ணாற் காணப் போகின்றோம். தேனோங்கு மாலை தாங்கும் பூமானே! நான் சொல்லியதைச் செவ்வையாகத் தெரிந்து உமது உள்ளத்தில் உறுதி கொள்ளுமென்று துரோணாச்சாரியார் சொன்னார்.

## கிருபாசாரியர் பாண்டவர் பராக்கிரமங்கூறித் துரியோதனாதியர்க் கறிவுறுத்தல்

இப்பால் வில்லின் மறை வல்லவராகிய கிருபாசாரியர் சொல்லத் தொடங்கினார்: நல்ல விவேகசுகபோகமுற்ற வேந்தனே! சத்தியம் விட்ட அசத்தியர்களுக்கு மிர்த்தியு கிட்டி வருமேயன்றி, சத்தியந் தொட்ட உத்தமர்

கட்கு உரிய காரிய நிறைவேறுமுன் மிருத்தியு
எட்டிப் பாராது. ஆதலால், உண்மையுள்ள
பாண்டவர்கள் மரணமானார்களென்று அகால
மரணத்திற்கு இடமானவர்களே சொல்லு
வார்கள். புத்திமான்கள் அவைகளை ஒருபோ
தும் ஒப்புக்கொள்ளார்கள். விம்முதலோடுஞ்
சென்ற வேந்தர்கள் ஐவரும் நம்மிடத்தில்
ஒப்புக்கொண்ட ஈராண்டு வெளிதிற் கழித்து,
அக்ஞாதவாசங் குறித்து, அவரவர் உருவம்
மறைத்து, எந்த நகரத்திலாவது அடுத்து,
எடுத்த காரியம் முடிப்பதற்கும், தொடுத்த
வேலை நடத்துவதற்கும் காலங் கருதி காத்
திருப்பார்கள். அவர்களைக் கண்டு பிடிப்பவர்
களும் உண்டோ? ஓ மண்டல துரந்தரா!
அவர்கள் மகா சூரர்கள். தருமறை முதலிய
சாஸ்திரம் அறிந்த வீரர்கள். சாதுசங்கப்
பழக்கமுற்ற தீரர்கள். தனகனக வஸ்துவாகன
தர்ம விசாரணையிற் குபேரன் போன்றவர்கள்.
மகா தவம் பெற்றவர்கள். மேலான மதியுற்ற
வர்கள். ஒருமையும் பெருமையும் உறவாய்
கலந்தவர்கள். அவ்வைவர்களில் தருமநந்த
னர் சதா நிஷ்டை கூடினவர். அவாவறுத்த
லும் பொருமையும் அழுக்காறின்மையும் நற்
குண நற்செய்கையும் புறங்கூறாமையும் உடை
யவர். தம்பிமாரிடத்தில் அன்பு தவறாமல்
அவர்கள் இஷ்டப்படி மாறுபடாது நடந்து,
காலத்திற்குத் தகுந்த புத்தி யுத்திகளை
எடுத்துக் காட்டி, அவர்களைத் தன் வசப்
படுத்திக்கொண் டிருக்கத்தக்கவர். அந்தத்
தம்பிமார்களோ தமையன் சொல்லுக் கிரண்
டில்லாம லிருந்து, அவராற் கீறிய கோட்
டைக் கடவாமல் நடந்து தமயனைத் தந்தை
யாக உட்கொண்டு நிந்தைதேடா திருப்பவர்
கள். ஆதலால், அவர்களுக் கொருபோதும்
பொல்லாங்கு நேரிடாது. அப்பேர்ப்பட்ட
அறிவாளிகள் மனவெறுப்பினால் ஜேஷ்ட
னைத் தாறுமாறாகப் பேசி, அவருமிறக்கத்
தாங்களும் இறந்தார்களென்பது மாச்சரிய
மன்றும் மறந்து எப்படியு மிவ்விடம் வரு
வார்களென்னும் எண்ணம் வைத்து, அவர்
கள் வந்துவிட்டால் அதற்கு என்செய்வோ
மென்று அச்சத்தோ டிருக்கவேண்டும்.

ஓ மதிகுலவரசே! அவருள் அர்ச்சுனனோ
வென்றால், அசகாயசூரன். அதிரதவீரன்.
மூன்றுலகையும் வெல்லுந்தீரன். சுந்தரத்
திற் செருக்குடைய மாரன். தேவதா சாஸ்திரந்
தெரிந்த கௌமாரன். வீம னெப்பேர்ப்பட்ட
வனோ வென்னில், ஊழிக்காலத்து யமன்போல
யுத்தம் பண்ணத்தக்க சண்டப்பிரசண்ட தண்
டதரன். சாந்தகுண தர்மராஜன் சண்டை
செய்ய வந்தாலோ திரிபுவனமுந் திக்கென்
றெரிந்துபோம். வடவா முகாக்கினியும் வாடிச்
சாம்பராய்ப் போய்விடும். அவருடைய மகி
மையை யாருமறியார்கள். அறியத்தொடங்
கினா லளவிறந்திருக்கும். ஓ அரவக்கொடியோ
னாய விளங்கும் அரசனே! இளையவரிருவர்
எத்தன்மையரெனில், இராமபாணத்திலுங்
கொடிய அம்பினை யுடையவர்கள். பரதன்
போலும் இலக்குமணன் போலும் விரதங்
காப்பவர்கள். பாஞ்சாலியோ பதிவிரதை
களுக்கெல்லாம் அதிதேவதை யானவள்.
சொல்லைக் கடந்து சொற்புகலாதவள். பல்லைத்
திறந்து பலுக்கறியாதவள். இல்லையென்று
உரைத்தல் என்றுமில்லாதவள். வல்லவர் தம்
மால் மாறுகொள்ளாதவள். துடிப்பினை யுடை
யவள். தூற்றலிலாதவள். நற்குண நற்
செய்கை வாய்ந்தவள். இப்பேர்ப்பட்ட எழி
லுடைய மாணாள் தருமராஜனுடனே வெறு
த்து சண்டை போடலாயினாளென்பது தவறி
லுந் தவறே. இவர்கள் முக்கியமாய் அக்ஞாத
வாசந் தொலைத்து இவ்விடம் வருவார்கள்.
உங்கள் எண்ணத்தைப் பார்த்தால் அநர்த்தம்
விளையும் என்பதற்கு முன் ஐயமில்லை. அவர்
கள் வெளிப்படுவதற்கு முன் எவ்வகையிலா
வது கண்டு பிடித்து, சபையிற் பேசியிருக்கிற
படிக்கு மறுபடியும் வனவாசம் போகச் செய்
வோமாகில், நாம் சுகப்படலாம். அப்படி
செய்யாவிடில், அர்ச்சுனன் கணை அக்கிர
மித்து வந்து நம்மைக்கொண்டுபோய் நமனா
லயத்திற் சேர்க்கும். இஃதன்றியும், வேதிய
ருக்கு வேதமே கண்கள். க்ஷத்திரியருக்குத்
தூதரே கண்கள். ஆகையால், நீங்கள் சார
ணரை விடுத்து முன் ஜாக்கிரதைப் பட
வேண்டியது. நமது யுத்திக்கு மேலான புத்
தியையுடைய பாண்டவர்கள் ஆண்டவன்
அருளைப் பெற்றவர்கள் எவர் கண்ணுக்கும்
அகப்படார்கள். பகலளவு போனாலொழிய
இரவு வராது. இரவளவு சென்றாலல்லது
பகல் தோன்றாது. அதுபோல், உருவ மறைந்
துறையும் பாண்டவர்கள் அக்ஞாதவாசங்
கழித்து வெளிப்படுவார்கள். நமது பல
பலத்தை நாமெண்ணி மெச்சும்போது, எதிரி
களின் பலாபலத்தையும் எண்ணித் துணிய
வேண்டியது. இப்படிக்கெல்லாம் யோசித்து
ஒன்றைச் செய்தால், என்னென்றைக்கும்

பழுதுபடாது. அதைவிட்டுத் துராலோசனை
செய்வதினுற் பிரயோசன மென்ன? என்று
மதியிலுயர்ந்த கிருபாச்சாரியர் வருந்தார்.

### வீஷ்மாச்சாரியர் பாண்டவருள்ள நகர் இவ்வித வியல்பை யுளதா மென அறிவித்தல்

இந்தப்பிரகாரம் துரோணசாரியருங் கிரு
பாச்சாரியரும் பேசிய விபரங்களைச் சபை
நிறைந்த சகலருங் கேட்டு, பெரியோர்களின்
கருத்தைத் தங்கள் தங்கள் புத்திக் கிசைந்த
படி யோசித்து, முடியப்போகிற காரண காரி
யங்களை நிதானித்து, வாய்மூடி மௌனம்போ
லிருந்தார்கள். அந்த வேளையில் கௌரகுலப்
பிதாமகனுகிய வீஷ்மர் துரியோதனனைப்
பார்த்து, அப்பா திரிதராஷ்டிரனுக்குச் சுபுத்
திரனும், எனக்குப் பௌத்திரனுமான சுகோத்
திரனே! நீ தூதர்களை யனுப்பிப் பாண்டவர்
களைத் தேடச் சொன்னது ஞாயமே. அவர்கள்
தேசமெங்குந் தேடிப் பார்த்துத் திரும்பி
வந்து உரைத்தது அபாயமே. அதற்கா
கக் கர்னராஜன் பேசியது நேயமே. உன்
தம்பி துர்ச்சாதனன் அறைந்தது உனக்கு
அநியாயமே. துரோணச்சாரியரும் கிருபாச்
சாரியரும் மொழிந்தது காயமே. நீ அந்தப்
பாண்டவர்களை எப்படியும் கைப்பிடியாகப்
பிடிக்கவேண்டுமென்று எண்ணுவது உபா
யமே. இதனுல் காரியமில்லை. பாண்டவர்
கள் பன்னிரண்டு வருஷம் வனவாசம்
செய்து அஞ்ஞாதவாச மோராண்டு தொலைப்ப
தற்குன்னி, தங்களுருவ மறைந்து, ஒரு
தேசத்தி லுறைந்து, முக்காலே மூன்றுமா
முக்காணி வருஷமுங் கழித்து விட்டார்கள்.
இப்போது நீங்கள் ஐவர்களைக் கண்டு பிடிக்கு
முன் மற்ற நிகரற்ற மாகாணி வருஷத்தையு
மொழித்து விட்டு வெளிப்படுவார்கள். அப்
பேர்ப்பட்ட அறிவுடையோர்களை மரண
மடைந்தா ரென்று பேசினவர்கள் அந்தப்
பாண்டவர்களால் மரணமடையத் தக்கவர்
களே; அத்தன்மையான அவசரப் பேச்சை
எத்தன்மையோ னெடுத்திசைத்தாலும், யுத்தி
மானுகிய நீ யெவ்வளவும் நம்பப்படாது.
ஆனுல், ஐவரிருக்கு மிடத்தை நீங்களறிய
வேண்டுமென்னும் முக்கிய முளதாகில், முந்
நூலாசிரியர்களால் அதற்கோருபாய முண்டா
யிருக்கின்றது. அந்தக் குறிப்பின் வழியைப
நான் குறிக்கின்றேன். நீங்கள் நிதானித்துக்
கொள்ளுங்களென்று காங்கேயர் சொல்லத்
தொடங்கினுர்.

அப்பா துரியோதனு! பிரமாதி தேவர்
களே யன்றி, முனீஸ்வரர்களாலும் ரிஷீஸ்
வரர்களாலும் மதித்தற் குரிய தருமராஜனும்
திரௌபதாதேவியும் சகோதரர்களும் ஒன்றாய்ப்
பொருந்தி வாழ்கின்ற நாடும் நகரமும் மாத
மும்மாரி வருஷிக்க வளங்கொண் டிருக்கும்.
காடு கரம்புள்ள மலைகளெல்லாந் தேன்மாரி
கசிந்துகொண் டிருக்கும். ஆறு குளத்தின்
அலைகள் யாவும் நவரத்தினங்களைக் கொழித்
துக்கொண் டிருக்கும். கழனிகளி லூர்ந்து
தவழா நின்ற சிப்பிகள் முத்துக்களை முறை
முறையே ஈன்றுகொண் டிருக்கும். கருங்
கடற் கரைகளிற் சிவந்த பவளக்கொடிகள்
படர்ந்திருக்கும். காடுகள் தோறுந் தேடுதற்
கரிய பொருள்வளம் நிறைந்திருக்கும். பசு
வினங்கள் வேளைக்குப் பத்துப்படி பால் கறக்
கும். வெகு ஜனங்கள் நடக்கும் வழிகளெங்
குங் கரும்பாலை சிறக்கும். எப்போது முப்போ
கந் தப்பாமல் விளையும். நித்திய சுபமங்களமா
யிருக்கும். அருந்ததியைப்போற் பதிவிரதை
யான ஸ்திரீகள் பொருந்தி யிருப்பார்கள்.
சாரபயம் வராது. சோரபயமிராது. தெருக்
கடோறுந் தருமக்கொடி நாட்டியிருக்கும்.
போர் முகத்தில் வெற்றிகொள்ளும் ஜெய
கொடிகாட்டி யிருக்கும். வண்டினம் மதுவுண்டு
மகரந்தந் தோய்ந்து காந்தாரம் பாடும். அந்
நகரப்பதியோர் அண்டினபேரை யாதரித்துக்
கீர்த்தி பிரதாபம் பெற்று ஜீவகாருண்யரா
யிருப்பார்கள். துற்சோபம் - துற்பயங்கரம்-
துற்மரணம்- துற்வியாதி இவைமுதலிய தேக
பீடை வாரா. யோகமார்க்க நெறி தேடித்
தீவினை யொழிந்திருப்பார்கள். பொதுச் சாலை
யிற் கட்டிய ஆராய்ச்சிமணி என்று மசையாது
அசையும்படியான அக்கிரமங்களு மிராது.
எளியவரென்றும் வலியவரென்றும் பாராமல்
யாவர்க்கும் எவர்க்கு மறிவு குறையாது. சகல
கலைக்கியானங்களும் தவறாது. உடனுக்குடனே
துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் நடந்தேறி
வரும். ஆசார பூசாவிதிக ளதிகமா யிருக்கும்.
தேவாலயம்-விஷ்ணுவாலயம் மிகுதியாய்ச்
சிறப்புற்றிருக்கும். பாபத்திற்குங் கோபத்திற்
கும் பயந்தடங்கி வாழ்வார்கள். புண்ணியத்திற்
கும் பொறுமைக்கும் பொக்கிஷமா யிருப்
பார்கள். தைரியம், கல்வி, ஞானம், குணம்,
பெருமை, மேன்மை, தபம், செபம், தானம்,

நிதானம், வெகுமானம், சன்மானம், வேதமந்திரம், கேள்வி, ஓமம், பூரண கும்பம், பண்ணிய போசனம், நவமணி மாளிகை, யரசு, இவைகளனைத்தும் எங்குஞ் சிறந்திருக்கும். சுபமங்கள கல்யாண முரசும், தியாக முரசும், வெற்றி முரசும், வலம்புரிச் சங்கங்களு மெங்கெங்கு முழங்கிக்கொண்டிருக்கும். காயா மரங் காய்க்கும். பூவாமரம் பூக்கும். கமலக்கருணைக் கண்ணனும் மகா லட்சுமியுடன் வாசமாயிருப்பார். இத்தன்மையாகிய உத்தமநகர மெதுவோ அதுதான் புண்ணிய புருஷர்களிருக்கும் பதியென்றுணர்ந்து கொள்ளுக. இவை பெரியோர்கள் பேசிய வண்ணம் நானுமுண்மையாகச் சொன்னேன். இனிமேலுன்னுடைய வல்லமையினால் யோசித்து உறுதி செய்து கொள்ள வேண்டியதென்று வீஷ்மர் விளம்பினார்.

### கிருபாசாரியர் துரியோதனனைச் சொற் சோர்வுபடலாகாதெனக் கடிதல்

இவ்வாறு வீஷ்மர் கூறிய வனைத்துங் கேட்ட கிருபாச்சாரியார் மனமகிழ்ந்து, வணங்காமுடி மன்னனை நோக்கி, ஓ வில்லும் வேலுந் தாங்கிய வேந்தே! உமதெண்ணப்படி முடியும் வண்ணஞ் சுளுவாகிய சூட்சியை உங்கள் பாட்டனார் சொல்லிவிட்டபடியால், திண்ணிய தூதரை விடுத்துத் தேடச் செய்வதற் கிதுவே நல்ல ஆதரவென் றிசைந்து, மேலுஞ் சொல்லுகின்றார். அன்புடைமையை ஆபரணமாகவுடைய பாண்டவர்கள் இராஜசபையிற் சொக்கட்டாடி தோற்ற நாளையில், என்போலொத்தவர்கள் ஏற்படுத்திய வாக்கியம் பழுது போகாமல், பன்னிரண்டு வருடங் காடுறைந்து ஒருவருட நாடுறைந்து காலங் கழிப்பதற்காகத் தங்கள் தங்கள் வடிவத்தை மறைந்திருப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை. பூருவம் இந்த இராஜசபையில் உடன்பட்டு, பேசின பேச்சின்படிக்குச் சொற்சோர்வு படாமல், விபகாரப்பழுது வாராதபடி தவணை நாளை தவிர்த்துக்கொண்டு மெய்வழி நிற்கின்றார்கள். ஆதலால், நீர் முன்னம் அவர்களை நோக்கி, ஓ பாண்டவர்களே! இப்போது பெரியோர்கள் கூறிய இந்த பதின்மூன்று வருடமுஞ் சென்ற பிற்பாடு நீங்கள் இவ்விடம் வருவீர்களாகில், உங்கள் நாட்டை ஒப்பிவித்து விடுகிறேன் என்று உறுதியுடன் எங்களுக்கு முன்பாக நீர் சொல்லி இருக்கின்றீர் அல்லவா; நீரப்போது உரைத்த வாக்கியத்தை இப்போது தவறி ஏதேதோ பேசுகின்றீர். இன்னும் பாண்டவர்களைக் கண்டுபிடித்து, பின்னும் பன்னிரண்டு வருடங் காட்டிலோட்டிவிட வேண்டுமென்று மெத்தப் பிரயாசத்துடன் சித்தப்பிரமையடைவது அநியாயமல்லவோ? ஐயோ! தலை போங்கால நேரிட்டாலும், சரீரத்தை விட்டு உயிர் கெட்டாலும், உம்மைப்போலொத்த உத்தமன் சொல் நிலைதப்பிச் சோர்வடையலாமோ? அப்படி நிலை தவறுவீராகில், உமதரசாக்ஷி என்ன பிரயோசனத்தைப் பெறும்? உம்மை யார்தான் மதிப்பார்கள்? ஆனால் எனக்கொன்று தோன்றுகிறது. பாபங்களைந்த பாராளும் பார்த்திபரிடத்திற் சத்தியந்தப்பிய குணந் தோன்றுமாகில், அவர்களின் அரசாட்சி பராசர் பங்காயவிடும். அஷ்டலட்சுமியும் அகன்று கஷ்ட லட்சுமி கலந்துற வாடுவாளென்று வேதத்தில் விளம்பியமொழி ஒன்றுண்டு. அதை யுன்னுமிடத்தில், செல்வ முழுமையும் சத்தியவான்களாகிய ஐவர்களுடையதென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. இதை நீர் செவ்வையா யோசித்துப் பாரும். உம்முடைய நாவை ஸ்திரமாக காரும்.

ஓ சந்திரகுலத் தோன்றலே! ஆதிகாலத்தில் நாங்களெல்லோரும் உம்முடன் கூடிக் குலாவியிருந்து பேசியவிதம் என்னவென்னில், பாண்டவர்கள் வனவாசம் பண்ணிவந்தால், அவர்கள் நாட்டைக் கொடுத்து விடுவதென்னுந் தீர்மானமேயன்றி, வேறொன்றில்லை. இப்போது உமக்கிஷ்டமாகிய தம்பிமார் முதலிய பேர்களோடு நீருந் தாறுமாறாய்ப் பேசுவதுஞ் சரியல்ல. அறியாதவர்கள் அப்படி பேசினாலும், பெருமையு நிலைமையுமுடைய பெரியவனாகிய நீர் பேசப்படாது. உங்கள் குணத்தை நிதானிக்குமிடத்தில் நீங்கள் நினைத்த கருத்தை நேரேயறிந்தோம். நீங்கள் ஒன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்னும் நெறியறியீரோ? நீங்கள் எண்ணிறந்த நாள் தேடினாலும் உங்கள் கண்ணுக்குப் பாண்டவர் அகப்படப் போகிறதில்லை. அவர்களைக் கண்டு பிடிக்குஞ் சாமர்த்தியமும் உங்களிடத்திலில்லை. அப்படிக்கல்ல வென்று காண்பதற்கு எத்தனிப்பீர்களாகில், வீணான பழியும் மேலான விழிவுங், குறைவு நேரிடுமேயல்லது நிறைவேறாது. அவர்கள் எந்நாளு நன்னாளாகவே யனுபவிப்பார்கள். ஆச்சுது. அஞ்ஞாதவாசமும் பண்ணிவிட்டார்கள். நீர் கங்கணங் கட்டிக்

கொண்டு இதுவரையிலுந் தேடவிட்டிருந்த தூதராற் பாண்டவரிருக்கும் ஸ்தானந் தெரிந்து கொள்ளாமற் போனீர். இனிமேல் தேடவிட்டு என்ன லாபங் காணப் போகின்றீர்? விருதா ஆலோசனையாற் பிரயோசன மில்லை. ஏதொரு காரியத்திற்கும் முன் ஜாக்கிரதை என்ப திருக்கவேண்டும். பின்னெண்ணிப் பார்ப்பது பேதையர் பக்ஷம். தவணை நாட்கழியுங் காலையில் தடவிப்பார்க்கத் துணிவது மேன்மையோர் பக்ஷமல்ல. ஆயினும், பாகீரதி பெற்ற கோமுனியாகிய பரிசுத்த இருதயரான வீஷ்மர் சொன்ன குறிப்பின்படிக்கு, தூய்மையும் வாய்மையும் பொருந்திய தேசம் எவ்விடமிருக்கிறதென்று அதையாகிலுந் தெரிந்து கொள்ளும். அப்பால் மற்றக் காரியம் யோசிக்கலாம் என்று பூர்வாசாரியராகிய கிருபாசாரியார் பேசி முடித்தார்.

### தூதர்கள் துரியோதனனுக்கு மச்சநாட்டு வளமும், அந்நாட்டில் நடந்த விதமுங் கூறுதல்

அப்போது அவரிடத்தில் நேசவிசுவாசமுள்ள துரியோதன மகாராஜன் மனம் வருந்தி, மாநிலமெல்லாந் தேடித் திரிந்தலைந்து வந்த சாரணர்களை நோக்கி, நீங்கள் பார்த்த தேசத்தில் எங்கள் ஐயா அவர்களுரைத்த வார்த்தையின் படிக்கு அழகும்-வளமும்-அன்பும்-நோன்பும்-நேயமும்-நிலையும் - நீதியும் - நெறியும் - மானமும் - தியானமும் - வண்மையும்-பண்பும் இசைந்திருக்கும் பட்டினம் இயாதோ? அதைத் தெரியச் சொல்லுங்கள் என்று கேட்டான். உடனே வேவுகார ரெல்லோருங் கூடி, அரவக்கொடிக் கதிபனுடைய அடிமேற் பணிந்து விளம்பினார்கள். ஓ சுவாமி! பராக் பெரிய மூதாதை பேசியபடியே மாத மும்மாரியின் போகமும், பூதலப்பயிர் பொருந்து முப்போகமும், ஆதுலர்க் களிக்கும் அன்ன முதலாகிய தியாகமும், மற்றக் சீருஞ் சிறப்பும், திகழுநற் செல்வமும், அறம் பொருளின்ப மேம்பாடும், நிறந்தரும் பசுக்கள் நெருக்கமும், பரிசுத்தப் பெருக்கமும், பாபச்சுருக்கமும், படையின் வருக்கமும், வாழை கமுகு தெங்கு-கரும்பு இவை முதலியவைகள் வளம்பட விளைந்து, பார்ப்பவர் மனதையுங் கவர்ந்து, மேன்மேற் சிறந்த நாடு மச்ச நாடு அல்லது மற்ற நாடில்லை. வேறே மாறிச் சொல்லுவதற்கும் வகையில்லை. எங்கு மாராய்ந் துணர்ந்தோம். அந்நாட்டின் மகிழ்ச்சியை நாங்களென்னென்று சொல்வோம். ஓ எந்நாட்டு மிசைபெற்ற ஏந்தலே! நம்முடைய பிதாமகர் பேசிய வார்த்தை பிசகன்று. அது சத்தியமே. மேலும் அம்மச்ச நாட்டில் மற்றோர் ஆச்சரியத்தைக் கேளும். யாரோவொரு பெண்ணானவள் சைரந்திரியென்றும், மாலினியென்றும், பணிப்பெண்ணென்றும், வண்ணமா மகளென்றும் பேர்கொண்டு, விராட ராஜனுடைய மனைவியினிடத்தில் வந்து சேர்ந்திருக்கின்றாளாம். அவள்பேரிற் கீசகன் ஆசை கொண்டு துரத்தினானும். எவனோ ஒரு கிங்கரன் குறுக்கே நுழைந்து, அவனைப் பிடித்து எறிந்து வீசினானும். சபையிலிருந்தவர்கள் ஏசினார்களாம். அந்த கீசகனையும் அவன் தம்பிமார்களையும் அன்றிரவில் மோசஞ் செய்து, பொழுதுவிடியு முன்னமே சிலர் கொன்று போட்டார்களாம். இவ்விதமாகக் கொன்றவர்கள் யாரென்று விசாரிக்குமிடத்தில், மேற்கூறிய வண்ணமா மகளுக்கு மெய்க்காவலாக விண்ணுலகிற் சஞ்சரிக்குங் காந்திருவர் ஐவரென்று மண்ணுலகெல்லாம் பேசிக் கொள்ளுகிறார்கள். நாங்கள் அதை நன்றா யோசிக்குங் காலத்தில், அந்தக் காந்திருவர் ஐவரும் பாண்டவர்களென்று துணிவாய்ச் சொல்லுவோம். இதுவே நிச்சயம் என்று ஸ்திரமாகச் சொன்னார்கள்.

### துரியோதனன் தூதுவர் சொல்லைச் சன்மானித்துச் சபையாரை வினாதல்

இப்பால் துரியோதன ராஜன் சாரணர்கள் கூறிய ஸ்திரவார்த்தையையும், வீஷ்மர் மனங் குவிந்துரைத்த சத்தியமொழியையுஞ் சேர்த்து, தன் கருத்துக்கிசையச் சீர்தூக்கிப் பார்த்து, காரணகாரியத்தை யோசித்து தனது பூரண மனதோடு இதனைப் பேசத் தொடங்கினான். ஐயா கிருபைக்கடலாகிய பெரியோர்களே! கேளுங்கள்: கீசகன்-வீமசேனன் பகாசுரன்-மத்திரராஜன்-பலதேவன் இவர் யாவரும் இந்திரன் முதலிய பேர்களாற் புகழத்தக்க தோள்வலிமையுள்ளவர்கள். பதினாயிரம் யானை பலம் படைத்தவர்கள். இவர்களில் ஒருவரையொருவர் கொல்லலாமே யன்றி மற்றொருவரால் மடியாரென்று பெரியோர்கள் பேசக் கேள்விப்பட் டிருக்கின்றேன். அப்படியிருக்க, காந்திருவர் வந்து கீசகர்களை மடித்தார் என்பதை எப்படி நம்பலாம்? அந்தச் சைரந்திரி நிமித்தமாய்க் கீசகர்கள் சங்கரிக்கப்பட்டார்க ளென்பதை உன்னி யோசிக்கு

மளவில் அவள் சைரந்திரி யல்லள் திரௌபதி யென்றும், காந்திருவரல்லர் பாண்டவரென்றும், அப்பாண்டவரில் வீமசேனனே கீசகர்களை நாசஞ் செய்தவனென்றும், இவர்கள் யாவரும் பெட்டியிற் பாம்புபோ லடங்கி விராடபுரத்தி லிருக்கிறார்களென்றும், கெட்டியாய்ச் சொல்லுவதற்கு யாதொரு அட்டியுமில்லை. அதேனெனில், வல்லிரும்பெனத் திருத்திய புயவலி பொருந்திய யக்ஷர்கள் - அமரர்கள் - நாகர்கள் - அசுரர்கள் - இராக்கதர்கள் - காந்திருவர்கள் முதலாகிய யாவரும் அந்தக் கீசகன் வல்லமைக்கு ஆற்றமாட்டாமல், கால் கை நடுங்கி யொடிங்கி யிருந்தார்கள். இவர்களில் ஓர் பிரிவாகிய காந்திருவர் வந்து கொன்றார்களென்பது எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. தேன்றுளிக்கு முடியோனாகிய கீசகனை மடித்தவன் காமனுக்கொப்பாகிய வீமனென்று நினைப்பதற் கியாதுஞ் சந்தேகமில்லை. வண்டுமொய்க்குங் கொண்டையினையுடைய வண்ணப்பெண் வடிவினள் ஐவர்க்குரிய தேவியே; இதற்கையமென்பதில்லை. ஆகையால், பாண்டவர்கள் விராடபுரத்தில் மறைந்திருக்கின்றார்கள். அஞ்ஞாதவாசத்தவணை கழிக்குநா ளின்னுமிருக்கிறபடியால் தாங்கள் வெளிப்படாமல், இரகசியமாய்ச் சிங்கபல கீசகனுயிரைத் தீர்த்துவிட்டார்கள். இதற்குமேல் நடக்கவேண்டிய யோசனை யென்ன? இன்னதென் றுரையுங்கள் ஓ என் பொன்னனைய பெரியோர்களே! என்று ஜெயங் கொண்டாடும் புயங்கக்கொடியோன் கேட்க, சூரியகுமாரனாகிய கர்னன் ஓர் மொழியுரைக்கலுற்றான்.

### கர்னன் மச்சநாட்டிற் பாண்டவரைக் காணற் கேதுகூற, திரிகர்த்தன் தன் பூர்வபகைநாடி யங்கு செல்ல, துரியோதனன் யுத்த சன்னத்தனாதல்

ஓ மணங்காதலிக்கும் வணங்காமுடி மன்னனே! நீரெண்ணியதே நிசம். இன்னுமேன் தாமசம்? மேகமண்டல மளாவிய தேர் விதங்களும், மும்மதம்பொழி யானை யினங்களும், குப்புற்றுலாவுங் குதிரைத்திரள்களும், ஆலாலம்போன்ற காலாட்களும் இக்ஷணமே புறப்பட்டு, மச்சநாட்டை வளைத்துப் போர் கொடுத்து, பசுக்கணங்களைத் தடுத்து நமதூர் புகவிடுத்து கண்மூடிக் கண் திறப்பதற்கு முன்னமே கலகம் விளைத்துவிடுவோம்; நாமெண்ணியவண்ணம் பாண்டவர்க ளிருப்பார்களாகில், விராடராஜனுக்குப் பரிந்து நம்மேற் சண்டைக்கு வருவார்கள். சும்மாவிருக்கமாட்டார்கள். அவர்களைக் கண்டுபிடித்து நமக்குள்ள விபகாரஞ் செலுத்தலாம். அவர்களவ்விடத்தி லில்லாமற்போனால், அப்போதும் மடக்கிய பசுமந்தைக ளெல்லாம் நமக்கு அடைக்கலந்தானே இதனால் இரண்டுவிதத்திலும் நமக்கு லாபமிருக்கிறது. இதுவே பாங்கென்று அங்கதேசராஜன் சொல்ல, அங்கிருந்த அரசர் யாவரும் பொங்கிப் பூரித்து, இதுவே எல்லோருக்குஞ் சம்மதமென் றிசைந்தார்கள். பெருமையுடைய துரியோதன மகாராஜனும் இக்கருத்துக் கொத்திருந்தான். அந்த வேளையில் திரிகர்த்த தேசாதிபனாகிய சுசர்மா எழுந்து, கரத்தை சிரத்திற்குவித்துப் பணிந்து, ஓ கௌரவ குலாதிபனே! முன்னொருநாள் சேனாதிபதியாகிய கீசகனுக்கும் எனக்கும் போர்விளைந்து அப்போதவன் விராடன் முதலிய மன்னர்களுடன் வந்து வளைந்து, என்னைப் பிடித்து இறுகப்பிணித்துத் தன்னகரத்திற் கொண்டுபோய் விட்டான், அவன் கையைவிட்டு தப்பித்து வரப்பட்டபாடு தெய்வமறிந்தது. அந்தச் சத்துருவை வெல்லுவதற் கென்னாற் கூடாமையால், அந்நாள்முத லிந்நாள் வரையிலும் நன்னாள் நமக்கெப்போது வருமென்று காத்திருக்கின்றேன். முன்னாள் செய்த முழுவினை வசத்தால், அவன் தன்னாற் கெட்டான் காமாந்தகனாகிய கீசகன் வாசஞ் செய்த மச்சதேசத்திற்கு என்னைப் போகச்சொல்லுவீராகில், விராடன் முதலிய வேந்தரையும் பிடித்துக்கட்டி என் மனத்தில் வெந்துகொண்டிருக்குங் குரோதத்தையுங் காட்டித் திட்டி, அந்த விராடன் மைத்துனனாகிய கீசகன் என்னைப் படுத்திய அவமானத்தை இவன்பாற் படுத்தி, அவ்விடத்தில் ஒளித்திருக்கும் பாண்டவரைப் பக்குவமாயறிந்து, மச்சராஜன் வளப்பங்களைக் கைவசப்படுத்தி கீசகன் பலத்தால் நமக்குக் கப்பணங் கட்டாதிருந்த செருவத்தை யடக்கி, பசுமந்தைகளையுமடக்கி அஸ்தினாபுரம் வந்து சேருகிறேன் என்று திரிகர்த்தன் சொல்லவும், இராஜராஜன் நகைத்து மகிழ்ந்து, இவன் படையிலுமொருவன் கொடையிலுமொருவனென்னப் புகழ்ந்து, அண்ணா கர்னா! சுசர்மா சொல்லிய வாக்கியம் உமக்கெப்படி யிருக்கிறதென்று கேட்டான். அடடா!! இப்போதே யப்படி செய்வது உத்தமமென்றான். அப்பொழுதே சேனாசைனியங்களைச் சேகரிக்கும்

படி உத்தரவு செய்து, சுசர்மாவுக்கு வரிசைகளுந் தாம்பூல மரியாதையும் நடத்தி, அண்டகடாகமதிரும் வாத்தியங்களுடன் சண்டைக்கனுப்பினான். அவ்வாறு விடைகொண்டுதிரும்பிய திரிகர்த்தனானவன் விந்தகிரிக்கொப்பான தேரேறி பூலோக தேவேந்திரன்போற் புறப்பட்டு சிறப்புப்பொருந்திய விராடபுரத்தின் மீது போர்புரியப் போயினான்.

இப்பால் நந்தியாவட்ட மாலையணிந்த நராதிபன் சபையிலுயர்ந்த சாதுக்களை நோக்கி, ஓ பெரியோர்களே! பூரணஞான புண்ய சீலராகிய மூதாதை புகன்ற குறிப்பிற்கிணங்க, நமது தூதருரைத்த சொற்களினாலும் என்னுடைய நிச்சயத்தினாலும் அந்த விராடபுரத்திற் பாண்டவ ரிருக்கிறார்களென்பது பரிஷ்காரமாய்த் தெரியவந்தது. அதற்குக் காரணமென்னவெனில், கேகயராஜ குமாரனாகிய கீசகனிறந்த காட்சியே சாட்சியாய் விட்டது. இப்போது நம்மிடத்தினின்றும் விடைபெற்றுத் தண்டெடுத்துப்போன திரிகர்த்தனானவன் மச்சநாட்டிற் புகுந்து மாட்டை மடக்குங் காலத்தில் எதிரிகள் சும்மா விருக்கமாட்டார்கள். எவ்விதத்திலேனும் அவர்கள் மேல் விழுந்து, போர் கொடுத்து மாட்டைத் திருப்பிக்கொள்ளுவார்கள். அப்போது நம்மிடத்தினின்றுஞ் சென்ற திரிகர்த்தன் அம்மச்சநாட்டாருடைய ஆயுதங்களா லடிபட்டு, மூளை கெட்டு, முறிபட்டு, பிடித்த பசுக்களைவிட்டு முதுகிட்டோடி வரும்படி நேரிடும்; அப்படி நேர்ந்தபிற்பாடு அவ்வருத்தத்தைக் கேட்டு, அதற்கேற்றபடி நாம் படையெடுத்துப்போவது நன்மையா? இதனை நீங்கள் யோசித்துக் கூறுங்களென்று வெற்றிபெற்ற துரியோதன மகாராஜன் கேட்க, புத்தியிற் சிறந்த கர்ண ராஜன் மனம் பூரித்து, ஓ கொற்றவனே! வித்தக விராடராஜன் தன் மைத்துனனாகிய கீசகனை யனுப்பி அடிக்கடி யுத்தம் பண்ணச் சொல்லி நம்மைத்திடுக்கிடப் பண்ணிக்கொண்டிருந்தானன்றோ? அந்த வஞ்சநீர நாமவனைத் தண்டிக்கவே வேண்டும். ஆதலால், உமது பெரியவர்களின் அனுமதி கேட்டு, பெருஞ்சேனை படைகூட்டிப் புறப்பட்டு போர் மாட்டென்று கவசகுண்டலன் கழற, அவன் மொழியைத் துரியோதனன் சிவன் மொழியாய் உட்கொண்டு, பின்னும் பெரியோர்களைப் பார்த்து, நான் நினைத்த நினைப்புக் கென்ன சொல்லுகின்றீர்கள்? உங்கள் கருத்தையும் ஒளியாமல் வெளியிடுங்களென்று வினவினான். அப்போதங்கிருந்த விரதப்பொருளாகிய இருபாச்சாரியரும், மெய்த்தவ வித்தக வீஷ்மரும், வேதவித்தாகிய துரோணாச்சாரியரும் படையெடுத்துப் போகவேண்டியதே முக்கியமென்றுச் சம்மதித்து, பொழுது போனபிற்பாடு போவோமென்று உரைத்தார்கள். அந்த மொழியைச் சற்பக்கொடியோன் கேட்டுச் சந்தோஷித்து துர்ச்சாதனனை யழைத்து, ஓ எனக்கு நற்றுணையாகிய தம்பி! இரதகஜதுரகபதாதிகள் முதலிய சேனைகளைப் பிரயாண பேரிகை அறைந்து புறப்படச்செய் என்றான். அவன் அப்படியே செய்வேனென்று போய்ப் பிரயாணபேரி முழக்கி வைத்தான். உடனே புள்ளிப்பட்டந்திருந்திய நாகக்கொடி பொருந்திய சுயோதனன் தம்பிமாராகிய அத் துர்ச்சாதனனோடு தொண்ணூற்றொன்பது பேரும் சல்லியராஜன்-சௌபலராஜன்-சகுனிராஜன்-கர்னராஜன் முதலாகிய ராஜர்களுங்கூடி துரியோதனனுடைய துர்க்கிருத்திய நினைவின் படிக்கி யுத்தகோலங் கொண்டிருந்தார்கள்.

### திரிகர்த்தன் பசுநிரைகளை மடக்குவதைக்கண்ட கோபாலர் அவனோடெதிர்த்து இளைத்தோடி விராடனுக்கு அறிவித்தல்

இவர்கள் செய்தி இங்ஙனமாக கொத்துச் சித்திரவேலை பதித்த ரதத்தைச் செலுத்தி மச்சநாட்டின் மேற்சென்ற திரிகர்த்ததேசாதிபனுடைய செய்தி யாதாயிற்றெனில், ஓ மகாராஜனே! பெருமையிலுயர்ந்த பெரியோர் பேச்சைப் பொருளாகக்கொள்ளாத துரியோதனன் ஆக்யாபித்தவண்ணம் படைசேர்த்து எழுந்த வெற்றிமாலைபெற்ற அத் திரிகர்த்தனானவன் முரசவாத்தியம்-பேரி-டங்கா-பாங்கர்-காகளம்-சங்கம்-தாரை - பூரிவீர சின்னம்-தப்பட்டை இவை முதலாகிய வாத்தியங்களை திக்கெட்டுஞ் செவிடுபட முழக்கி, கத்தி - கட்டாரி-கேடயம்-ஈட்டி-எரிவேல்-சூலம்-பிண்டிபாலம்-வாள்-முசலம்-தோமரம்-குந்தம்-சக்ராயுதம் மற்றுமுள்ள ஆயுதங்களெல்லாம் பளபளவென்று விளக்கொளிபோல் மின்னப் பிடித்தவர்களாய் கவசகுண்டலம்-கிரீடம்-மதாணி-கடக கங்கணம்-தோளணிபுதக்கம் இவை துலங்கி யிலங்கும் வீரர்களையுந் திடகாத்திர தேகதீரர்களையுந் திசாதிசைளிற் பாயவிட்டு ஓர் அக்குரோணி படைகளுடன் மச்சதேசத்திற்கு தெக்ஷணபாரிசத்தில் வந்திறங்கி கட்டுக்காவல் இல்லாமல் யதேச்சையாக தின்று கொழுத்துக்

கன்றுகளுடன் தழைத்து திரிகின்ற பசு மந்தைகளனைத்தையு மடக்கினன். அப்போது அந்த மாடுகளெல்லாங் காதுகளை நெரித்து கண்களை யுருட்டி விழித்து, கடைப்பார்வை பார்த்து, தலையேறிட்டு, தங்களை மடக்கினவர்கள் அந்நியரென்றறிந்து தங்கள் தங்கள் கன்றுகளுடன் பெயர்ந்து கும்பலினின்று முறிந்து கும்மாளமிட்டு, நாலு பக்கமும் பிரிந்து அம்மாவென்றலரி, வீறிட்டதிர்ந்து அயர்ந்து பயந்து செம்மான் பாய்வதுபோற் பாய்ந்து சும்மாவொரு மூலையிற் கொம்பசைத்துக் கூட்டமாய்ச் சாய்ந்து, வெருண்டு பதறிக் கதறி, கால்தவறிக் கலங்கித் திகைத்து, மயங்கித் தியங்கிய கன்றோடும்படிக்காயின. அப்பசு மந்தைகளைச் சுசர்மனுடைய சேனைசைனியங்கள் துரத்தித் துரத்தி மறித்துப் பிரித்து, இருப்புக் கண்ணியால் தடுத்தார்கள். அந்தப் பசுமந்தைகளைக் காத்திருந்த காவலர்களும் ஆக்கிரமித்து அதிர்த்தெழுந்து, மூவுலகதிரும்படித் தாவி, மேவலர் சேனைமேல் விழுந்து, அஸ்திர - சஸ்திர - ஆயுதங்களாலும் குடுதடி-குண்டாந்தடி-சுக்குமாந்தடி-வளைதடி-குலுக்குத்தடி - முறுக்குத்தடி - பாணத்தடி-ஈட்டி-எறியீட்டி-திருகீட்டி - சொருகீட்டி-உருகீட்டி-குத்தீட்டி-குறியீட்டி - பாலா - பல்லயம்-பற்ஜீ-பட்டா-பாங்கு-சாங்கு - கத்தி-கட்டாரி-பிச்சுவா - கவண் - உண்டைவில் - சுண்டுவில்-அம்புவில் இத்தன்மையாகிய ஆயுதங்கள் பலவுங்கொண்டெதிர்த்து கோபமுதிர்ந்து பாய்ந்து சினத்தால் காய்ந்து மாய்ந்து போகும்படியாய் சிலரை வெட்டியும், பலரைக் குத்தியும், சிலரை அடித்தும், சிலரை மடித்தும், சிற்சிலபேரை யுதைத்தும், சிற்சிலபேரை வதைத்தும், பற்பலரை மறித்தும், பற்பலரை முறித்தும், சிலரைத் துண்டித்தும், சிலரைக் கண்டித்தும், சுற்றியபோர்களைக் குத்தியும், பற்றிய போர்களை யெற்றியும், தங்கள் மாட்டையெல்லாம் திருப்பினார்கள்.

அப்போது திரிகர்த்தனைச் சேர்ந்த சேனைகள் சித்தம் பிரமித்து ஒருமுகமாகச் சாய்ந்து, கணக்குமிதமற்ற கடுங் கணைகளை நாலுமுகத்திலுந் தூண்டி, மும்மத யானைகளை முடுக்கிக் கோட்டை மதில்போற் குறுக்கி வகுத்து, சிகரம்பெற்ற தேர்களைச் செலுத்தி, திசைகளிலோடிய நிரைகளை வளைத்து, குப்புற்றுப் பாயுங் குதிரையை விடுத்து, கூட்டமாகிய சேனை நிலைகெட்டலையக் கடுகடுத்து, தன் சேர்ந்த சேனைகளால் அந்தச் சேனைகள் முறிந்து போகச்செய்து, மறுபடியும் மந்தையைத் திருப்பிக்கொண்டு கட்டுக்காவலமைத்து, ஜெயஞ் ஜெயமெனச் சிங்கநாதமுழக்கி, அந்தப் பசுக்கூட்டங்களுக்காக மேலிட்டு வந்த கோபாலர்களையும் பூபாலர்களையும் வில்லெடுத்து வளைத்து, சரமாரி தொடுத்து, திசைமாற விடுத்து, விசனப்படும்படியாய் மாட்டி வாட்டினார்கள். அப்போது இடையர்களெல்லாம் உடைந்திடைந்து, கையிழந்தவரும், காலிழந்தவரும், மேலிழந்தவரும், கீழிழந்தவரும், முடிபோனவரும், அடிபோனவரும், முனைகெட்டபேரும், நிலைவிட்டபேரும் ஆனவர்களாய் கண்ணீர் ஆறு கரையின்றிப் பெருகி மாரி நீர் வழிவதுபோல் வழியவந்து, விராடபுரத்தில் புகுந்து, முடிவேந்தனுடைய கொலுமுகத்திற்கு முன் சென்று, ஓ சங்காழி முடிந்தனைப்போற் சிங்காசனத் திருந்தருளிய எங்கோனே! சுசர்மாவுடன் திரிகர்த்தர்களும், குருசேனை சகிதராய்ச் சேர்ந்து தென்றிசையில் நிறைந்த பசு மந்தைகளை மடக்கினார்கள். அவர்களுடன் நாங்களும் பகைத்து எங்களால் கூடியமட்டும் போரிட்டுப் பார்த்தோம். அவர்களை வெல்ல வல்லமை இல்லாமல் அடிபட்டு வெதும்பி ஓடி வந்துவிட்டோம். அறுபதினாயிரம் பசுக்கள் அவர் வசப்பட்டதுகள். இன்னும் நாற்பதினாயிரம் பசுக்களையும் கைகொள்ளப் பார்க்கின்றார்கள். ஓ நாதனே! தேவரீர் ஆலசியம் பண்ணாமல் அமர்க்கெழவேண்டுமென்றார்கள். இவ்வாறு முல்லை நிலமாக்கள் மொழிந்ததைக் கேட்ட வல்லவன் நகைத்து, கண்ணிரண்டுங் கறுத்து, கையிரண்டு நெரித்து, பற்கடித்துச் சிரித்து, படைகள் துன்பைப் பொறுத்து, ஓ அமைச்சராகிய அறிஞர்களே! திரிகர்த்தனுடைய விசுவாச மோசத்தைக் கண்டீர்களா? சொப்பனத்திலும் நினைக்கப்படாத அற்பனாகிய இவன் எங்களால் கட்டுப்பட்டு நொந்து கால்மேல் வீழ்ந்திரந்து, என்றென்றைக்கும் அடிமையென்று புகன்று, இழிவுபட்டுப் போனதை மறந்து மூவர் முதலிய தேவராலும் வேறு நினைக்கப்படாத விராடபுரத்திற்கு இப்போது வந்து, மிகுந்த சேனையுடன் எதிர்த்துப் போர்கொடுத்து வெகுபேரைக் கெடுத்து மாட்டையும் மடக்கியிருக்கின்றானல்லவா? நல்லது ஆகட்டும். ஓ சேனாதிபதிகளே! வீரபட்டம்பெற்ற நமது இரதகஜதுரக கால்பலமுள்ள ஓர் அக்ரோணி சேனைகளையும் யுத்த

சன்னுகப் படுத்துங்கள் என்று மெத்த முழக்கமாய் வெடிபடச் சொன்னுன்.

### விராடராஜன் தன் தம்பிகளோடுந் தனயரோடும் போர்க்கோலங் கொண்டு பிரயாணமாதல்

அந்தச் சொல் செவியில் புகுமுன்னமே கரத்தில் வில்லுங் கழுத்தில் மாலையுந் தரித்த அதிரதர் அநேகர் எட்டுத்திசையிலும் மட்டுப்படாத வாத்தியங்கள் முழங்கத் திரண்ட தேர் ஏறி, வெள்ளம்புரண்டு வருவதுபோல் வந்து மொய்த்தார்கள். இதன்றியும், வெல்லும்படியான பல காவலர்கள் எழுந்து நவமணிகளாற் சிறந்த முடியும், சூரியன் நாணத்தக்க மாணிக்கப்பதக்கமும், ஆணிப்பொன் மதாணியும், நிறைவென்றோர் அணியுந் தும்பைமாலையும், கேயூரமணி குண்டல கண்டியும், பிரதாப வில்லும், சபதச் சொல்லும் பொங்கமாகக்கொண்டு, சிங்கம்போற் சென்று, பொன்னுலகைவிட்டிழிந்த தேவேந்திர னென்னும்படியாய் திக்கஜங்களுக் கொப்பாகிய யானையின்மேலேறி, பெரும் புலியெனச்சீறிப் புறப்பட்டார்கள். எண்ணிய எண்ணங்களை நிறைவேற்றுகின்ற திண்ணிய விடபுயகாத்திர தீரர்கள் யாவரும் ஒன்ருகக் கூடி விராடராஜன் வெளிப்படுமுன்னமே நாம் போய்த் திரிகர்த்தனையும் அவன் சேனைகளையும் வென்று, பசுக்கணங்களைக் கொண்டு விராடனுக்கு எதிர் சென்று, தாங்கள் ஜெயித்து வந்தோம். நீங்கள் போகவேண்டிய அவசரமில்லை என்று சொல்லி உயர்ந்த விருது பெறுவோ மென்பதாக ஆலோசித்தவர்களாய், ஆணிவில்லை வளைத்து நாணிபூட்டி, அம்புறுத்தூணி மாட்டி, வாளும்-கேடகமும்-வல்லயமும் - பல்லவமுங் கொண்டு, பகைவர் பட்டார்கள். மூதுகிட்டார்கள். அவர்கள் கெட்டார்கள் என்று கெறுவித்தெழுந்து, கட்டுக்கடங்காமல் அட்டாளதேசமு முலாவிவரும் பட்டாடக்குதிரைகளின் மீதேறி வந்தார்கள். சேனுவீரர்கள் திரண்டு, திக்கென்றெறியச் செவ்விழி காட்டிச் சீறிப்புகைந்து, செம்பொறி சிதறக் காய்ந்து, வீரகெண்டையையாட்டி, வெதுப்பும் வெறுப்புங்காட்டி, ஆயுதங்களைப் பிடித்து, அரைக்ஷணமுந் தரியாமல் துடித்து, அலை பரந்த கடலேழும் அடியோடு பெயர்ந்த அந்நாள் இந்நாளென்று அகில சராசரமும் பேசிக்கொள்ளும்படியாய்ப் பேரோசை முழங்கிப் பெருங்குப்பு சேர்ந்தார்கள். இவ்விதமாகச் சதுரங்கசேனைகள் புறப்பட்ட வீராவேசத்தை விராடனுடைய முதற்பிள்ளை சுவேத னென்பவன் கேள்விப்பட்டு, நாமிருக்க நம்முடைய தந்தை வருந்துவானேன்? என்று தனது பிராணனையும் எதிராளியையுந் துரும்பாக மதித்து, பம்பரம்போற் சுழலுஞ் செம்பொற்றேரேறி, வீரலட்சுமியை விவாகஞ் செய்வதற்கு விரும்பியுந் தீரபுருஷனைப்போற் கூரம்புக்கூடுங் கார்முகக்கோடுங் கைக்கொண்டவனுய் குவலய நடுங்கக் கவலையோ டடைந்தான்.

இரண்டாவது பிள்ளை சதானீக னென்பவன் சங்கதிகள் அறிந்து, முகச் சுளிப்புடன் வெளியே வந்து, அப்படியா இந்நாள் வரையிலும் பின்னமில்லாத மச்சநாட்டிற் கொஞ்சமேனும் அச்சமில்லாமற் பிரவேசித்து மாட்டை மடக்கிய லச்சைகெட்ட திரிகத்தனுடைய சேனைகளென்னுஞ் செய்கால் நிலத்தை என் வில்லம்பு கொண்டுழுது, இரத்த நீர்பாய்ச்சி, அவர்கள் உயிராகிய விரையை விதைத்து, அக்கிரமமென்னுங் களையைக் களைந்து, வெற்றிப்பயிர் விளைத்து, பூபாரப்பிணைப்போர்கட்டி, எமனுக்கு மேல்வாரங் கொடுத்து, என் தந்தைக்குக் கீர்த்தியென்னு நிலவாரங் கொடுக்கிறேன். ஆ! ஆ! எதுமற்ற திரிகர்த்தன் இந்த வழிக்கர் வந்தான்? என்று திடுக்கென் றெழுந்து, வில்வளைத்து நாணோசைதெறித்து, பங்கப்படாத சிங்கக் குட்டியானது தங்கக்கிரியில் தாவுந் தன்மைபோல் விசாலமான தேரேறி வீதியில் வந்தான். மூன்ருவதுபிள்ளை சிங்கன் என்பவன் சிங்கநாதஞ் செய்தெழுந்து, எங்கள் மாமனுகிய கீசகராஜ னிருக்கிறவரைக்குங் கொஞ்சம் கோப்பியமாயிருந்தது. அவனிறந்த பின்பு மெத்த சாப்பியமாய்விட்டது. இனிமேற் பலரும் வசைபா யேச, அந்த மொழியை கேட்டு நானுயிரோடிருந்து இன்பம் அனுபவிக்கமாட்டேன். இதோ வாளாயுதமெடுத்துப் புறப்படுகிறேன். வந்தவர் நொந்தழியக் கொந்தித் தள்ளுகிறேன். அவர்களை வெல்லாமலுங் கொல்லாமலும் போவேனுகில், என்னுவியழிந்து பொன்னுலகம் போய்ச் சேருகிறேன். இதுவே சத்தியம் என்று சபதங்கூறிக் கவசமணிந்துவிரைவுடனேடி, திசையனைத்திலுந் திப்பிரமிக்கச் செம்பொன்எனுந்தேரேறி தன்னையொத்த தராபதிக் குமரர்கள் மின்னுக்கிணையான ஆயுதந்தாங்கி, வீராவேசங் கொண்டுவரத் தானும் பிரயாணமானுன். நான்காவது பிள்ளை வராககேதென்பவன் நான்கு

வேதமுந் தரும சாஸ்திரமுந் தேர்ந்து, அறம்பொருளின்பம் வீடென்பவற்றை யறிந்து, பொறுமைக்கவசம் பூண்டு, மன்னுயிரனைத்தையுந் தன்னுயிராய்ப் பரித்து பாதுகாக்கும் பருவநாயகன், அவன் குலமன்னர் கூட்டமும், பலமன்ன ரீட்டமும், காலாட்படைகளும், ரதகஜ துரகமும், தன்னைச் சூழ்ந்து வரும்படியாகத் திட்டப்படுத்தி, தான் வேற்படை-விற்படை முதலியவைகளை கைக்கொண்டு, நமது மச்சதேசத்துத் தெக்ஷண திசையில் லட்சியம் வையாத அந்தத் திரிகர்த்தனை இக்ஷணமே பிக்ஷா பாத்தனுக்கி, வீரசொர்க்கத்தி லேற்றிவிட்டு வேறு வேலை பார்க்கிறேனென்று விசித்திரக் கவசம் பூண்டு, தேரேறிப் போரேறுபோற் புறப்பட்டான்.

இந்தப் பிரகாரம் நான்கு பிள்ளைகளும், நால்வகைச் சேனைகளும், ஆரவாரத் தெழுந்து சத்திரம் - சாமரம் - ஆலவட்டம்-கொடி-குடை - பீலிக்குஞ்சம் - மகரதோரணம் - டால்வகைகள் ஆகிய இவைகளோடு படைமன்னரும், வாத்திய கோஷமும், பின்னு முன்னும் பெரும்புறக் கடல்போற் பெருகிவர, சிங்கநாதம்-சங்கநாதம் எங்கு நாதமாய் முழங்க, நிரை யானை நிரை முதலிய பல முறையுடன் சேர்ந்த திரத்தினை விராடராஜன் கண்குளிரக் கண்டு, பிள்ளைகள் நால்வருஞ் சொல்வதைப் பார்த்து, ஐயோ! இந்நாள்வரைக்கும் என்னை விட்டுப் பிரியாமலும், போர்முக மறியாமலு மிருந்த அறியாச் சிறுபிள்ளைகள் முன்பின் யோசியாமற்போக, நானிவ்விடமிருப்பது நியாயமோ? அவ்விடம் விளைவது என்ன அபாயமோ? என்றெண்ணித் தன் சகோதரர்களாகிய சதானீகனையும், மதிராசுவனையும் அழைத்து வாருங்கள் தம்பிமார்களே! தெக்ஷண நிரை மீட்சிக்குப் போகின்ற நமது பிள்ளைகளின் போர் திறத்தையும், குருசேனையுடன் வந்த திரிகர்த்தனது போர்திறத்தையும், நான் பார்க்கவேண்டி யிருப்பதால், சீக்கிரத்தில் தேர் கொண்டுவரச் செய்யுங்களென்றான். தமையன் மொழி தவறாத தம்பியரிருவரும் இரதவலங்காரம் புரிந்து, திடவேகமுள்ள குதிரைகள் பூட்டி, மதிமோகனென்னுஞ் சாரதியுடன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அம்மாத்திரத்தில் விராடராஜன் பொன்தகடு வேய்ந்து நவரத்தின மிழைத்த அஸ்திர சஸ்திர திரவ்யாலங்காரவகைக் கவசந்தரித்து, அம்புப் புட்டிலும், வரிநெருங்கிய வில்லும், வாளும், வேலும், மகுடமும், மகரகுண்டலமும், வாகுவலயமும், கச்சையும், வீரக்கண்டையும், விரற்சாடு, கரச்சாடும் மின்னுதற் பட்டமுந்தரித்து, தம்பிமார்களும், இராஜகுமாரர்களுமாகப் பிரபல்ய சேனைகளும் புடைசூழ, விருதுமேள வாத்தியங்கள் - வெண்சாமரைகள் - வெள்ளைக்குடைகள்-மயிற்பீலிகள் முதலிய சின்னங்களைப் பலர் புடைதாங்கிவரப் புறப்பட்டு, சேனாதிபர்களும் படைவீரர்களு முன்னேட, கட்டியரும் பட்டுவான்களும் புகழ்பாட, பருவக்கணிகைமங்கை ரெதிர் நின்று பரதநாட்டியமாட, திரிநேத்திரதாரியாகிய உருத்திரமூர்த்தி இவனென்னச் சாதிக்கும்படியாய்ப் புறப்பட்டு வந்தான். அம்மன்னனைத் தொடர்ந்து வழிவிடப்போன தருமராஜனை வீமசேனன் - நகுலன் - சகாதேவன் இவர் மூவரும் பார்த்து, இந்த விராடராஜனனவன் மாடுபிடிசண்டைக்கு நம்மை சகாயமா யழைக்காமற் போகின்றானே இதென்ன காரணமென்று கண் ஜாடையிற் பேசிக்கொண்டார்கள்.

கங்கபட்டர் விராடனுக்குப் பலாயனனாகிய மூவர் திறங்கூறி, தாங்களும் யுத்தகோலங்கொண்டு உடன் செல்ல, உடனே யுத்த மூளுதல்.

இவ்வாறு சகோதரர்கள் பேசிக்கொண்ட கருத்தையறிந்த கங்கபட்டரானவர் மச்சராஜனைநோக்கி, நமது மடைப்பள்ளியிலிருக்கின்ற பலாயனன் மல்லர்களை வென்றபோதே மகா பலசாலி யென்று நீரறிந்தீரல்லவா? அவன் மிஞ்சிய மற்போரிலுங் கொஞ்சம் விற்போரிலும் பழகினவனாகத் தோன்றுகிறது. இதோ நிற்கின்ற தந்திரபாலனும், தாமக்கிரந்தியும், போர்புரிவார்கள்போலு மிருக்கிறது. இவர்கள் தருமராஜனிடத்தில் இருக்கும்போது கௌரவர்களுடன்கூடி ஆயுதப் பரிட்சையில் பயின்றிருக்கின்றார்கள். சில சமயத்திற் சண்டையிலும் ஜெயங்கொண்ட தாஷ்டீகர்கள். இவர்களைரட்சிக்கும் நீர் சண்டைக்குப் போகும்போது, இவர்கள் உம்மைவிட்டு தனித்திருப்பது தருமமல்லவே; இம்மூவரையும் அம்மூவராய் பாவித்து கூட்டிப்போவது நலமாகும். அப்போது நான்மாத்திரந் தனித்திருப்பது நியாயமல்ல. நீங்கள் யாவரு முன்னேடிச் செல்லுங்கள். நான் நடந்து பின்னுடி வருகிறேன் என்று கங்கபட்டர் சொல்ல, அவரிசைத்த மொழியை அன்புடன் கேட்ட விராடன் சிந்தை களித்து, இது என் தவப்பயனென்று

உரைத்து, தம்பியாகிய சதானீகனை யழைத்து,
இந்த மகா ஸ்வாமியாகிய கங்கபட்டருக்கும்
மற்ற ஆசாமிகளுக்குஞ் சிங்கமுக லலாடத் தே
ரும்,பங்கப்படாத வில்லும், அம்புறாத் தூணி
யும், தினுசுவாரி ஆபரணங்களும், ஆயுதங்க
ளுங்கொடுத்து, அதிசீக்கிரத்தில் உன்னுடன்
கூட அழைத்து வாவென்று ஆக்யாபித்துப்
போனான். இப்பால் தருமர்முதலிய நால்வரும்
அரசன் உத்தாரப்படிக்கு சகல வரிசையுஞ்
சதானீகனாற் பெற்றுத் தடந்தேரேறி, எவர்க
ளுக்கு முன்னாதாய் இவர்கள் சென்று, விராட
ராஜன் தெற்குக்கோட்டை வாசல் தாண்டும்
முன்னமே சேனையுடன் கலந்து போனார்கள்.
அக்காலையிற் பொன்மலையை யொத்த எண்ணா
யிரந் தேர்களும், மும்மதம் பொழியும், ஐயா
யிரம் யானைகளும், இம்மெனப்பறக்கும் இரு
பதினாயிரம்குதிரைகளும்,பொம்மென நெருங்
கிய லக்ஷம் கால் பலங்களும், தம்பிமார்களும்,
சாதுரியமுள்ள சூரர்களும், மந்திரி தந்திரி
மகுடவர்த்தனரும், சுந்தரமைந்தருஞ் சுதந்
திரவேந்தரு மேவினார்கள். உடனே கொம்பு
கொடிமுதலிய சின்னங்களோடு முரசு முதலிய
வாத்திய கோஷ்டங்கள் எட்டு திக்குஞ் செவிடு
பட்டுப்போக, தும்பு தூசிகள் அம்பரமட்டு
மேக, செம்பரத்தம் பூப்போற் சிவந்த கண்க
ளையுடைய படையை தூசியணியாக நிறுத்தி,
தன் மாட்டை மடக்கிய சத்துரு சேனைகள்
மேற்சென்று போர்தொடுக்கத் தொடங்கினான்
விராடராஜன்.

இவ்வாறு விராடராஜன் கோபாக்கினி
யாற் பகைவருயிரை வாங்கச்செறிந்து வெற்றி
வேல் தாங்கித் திரிந்து முகங்கரிந்து புரிந்த
சண்டையைத் தேவேந்திரன் முதலிய தேவர்
களும் பார்க்கச் சொர்ணமயமான விமான மூர்
ந்து சென்று ஆகாயத்தி லிடமில்லை யென்ன
நெருங்கித் திரண்டு வேடிக்கைப் பார்த்திருக்
கும் வேளையில், இருதிறப்படைகளுங் கைகல
ந்து,யானையும்-யானையும், குதிரையும்-குதிரை
யும், தேரும்-தேரும், காலாளும் காலாளுமா
கக் கூடித் தொந்தயுத்தம் பண்ணினார்கள்.
அந்த யுத்தத்தில் யாரை யார் அழித்தார்கள்?
யாரையார் துவைத்தார்கள்? யாரையார் வதை
த்தார்கள்? யாரையார் சிதைத்தார்கள்? எவரை
யெவர் கொன்றார்கள்? எவரை யெவர் வென்
றார்கள்? எவரை யெவர் பொருதினார்கள்?
எவரை யெவர் வருத்தினார்கள்? எவரை யெ
வர் ஓட்டினார்கள்? எவரை யெவர் மாட்டினார்
கள்? ஐயா ஜனமேஜய மகாராஜனே!
அவற்றை இன்னவிதமென்று நான் எப்படி
சொல்லுவேன். ஆனாலும், வரிசையாகப் புகு
ந்து மாச்சரியத்துடன் உடலை வகிர்ந்து இர
த்தவெள்ளம் புரண்டோடச் செய்தபடியால்
போரின் பெருமையைப் புகழ்ந்து பேசவல்ல
வர் இல்லாமற் போனார்கள். இத்தன்மையான
காலத்தில் நூறு நூறாயிரம் ரதங்கள் நீறு நீறாகி
யழிய பலகதியிற்றேர்ந்த குதிரைகளிறந்து
குவிய, கொம்புள்ள யானைக்கும்புகள் யாவு
மொழிய, மாறுமாறாகிய மன்னருடல்களும்
வேறுவேறாகிய வீரர்குடல்களுந் தாறுமாறா
கிச் சிதைய, மலைநிகர் புஜபல மண்டலேஸ்வ
ரர்கள் தலைபோயுருண்டு சங்கடமடைய, இத
னைக்கண்ட யாவருமஞ்சி இன்சொல்லுரைக்க,
திறங்காட்டி வந்த திரிகர்த்தன் சேனைகள்
புறங்காட்டி நொந்து புலம்பி யோடும்படியாக
விராடன் சேனைகள் மேலிட்டுச் சாடிய
பொழுது, கோபமாயெழுந்த குருகுலச் சேனை
கள் கூறுகூறாய் நிலைகெட்டோடினார்கள்.
வீறிட்டடர்ந்த விராடன் சேனைகளோ டெதிர்
த்துப் போர்விளைத்த குருகுலச் சேனைகள்
ஆற்றமாட்டாமல் அஞ்சிப் பயந்தோடுகின்ற
அலங்கோலத்தைத் திரிகர்த்தன் தம்பியாகிய
திடனென்பவன் கண்டு முகம் வேர்த்து,
அண்டகடாகம் பிளக்கும்படி ஆர்த்து, வில்
லெடுத்து, நாணி தொடுத்து, இருட்பாணங்
களை விடுத்து, சூரியனுமஞ்சி யொதுங்கத்
தேரைச் செலுத்திப் போராடினான். இவன்
நீரைவாரிய மாரிபோல் வாரிப் பொழியும்
வாளியின் வல்லமையால் விராடனது நால்வ
கைப் படையும் ரதிகர்களும் பின்னிடைந்து,
ரதமுடைந்து, யானை குதிரைகளு மழிந்து,
மானாபரண மகிபரு மொழிந்து போனார்கள்.
இப்படிக்கு விராடராஜனோடு வந்த தநுர்
வேத சாஸ்திரிகளும், சுவேதனன் முதலாகிய
பிள்ளைகள் நால்வரும், சதானீகன் முதலாகிய
தம்பியரும், வெற்றிப்பயிர்விளைக்கும்வீரவேந்
தரும், விதரணசாலிகளாகிய பலமாந்தரும்
இசை கெட்டழிந்து திசைவிட் டோடும்படிக்
குத் திரிகர்த்தன் தம்பியான திடனென்பவன்
மலைந்து ஜெயம் பெறுகின்ற நன்மையைத்
திரும்பிப்பாராம லோடிய துரியோதனன்
சேனைகள் கண்டு, முன்பு வருந்திய தோஷம்
போக்கிப் புகழ்ந்து, வாடிய பயிர் மழைகண்ட
வாறுபோற் புளகாங்கிதத்துடன் மகிழ்ந்து,
கடல்முழக்கம்போ லிரைந்து,திரும்பி விரைந்
தோடிப் புகுந்து, திரிகர்த்தன் தம்பியைக்

கலந்து, நான்கு புறமும் பறந்து அணியணியாய்ப் பிரிந்து, வில்லினை இருகுதையும் பொருந்த வளைத்து, கொல்லெனப் பாணங்களைக் குவித்துச் சொரிந்தார்கள்.

அந்தத் தெப்பலினால் விராடன் சேனைகள் வெகுண்டு அரண்டு புரண்டு மருண்டு, மேனியெல்லாம் புண்ணாகி விலங்கி கண்கள் இருண்டுங் கலக்கி, கருதாதெல்லாங் கருதிக் கசிந்துருகி, வியாகூலமடைந்து, அச்சம் மேவிட்டு, அமர்முனைவிட்டோடா நின்றனர். அப்போதவர்களை விராடனுடைய முதற் குமாரனாகிய சுவேதனன் கண்டு, கோபத்தாற் கொதித்து, மனம் பதைபதைத்து, ஓடாதிருங்கள் என்று கையமர்த்தி, திரிகர்த்தனையுங் குரு சேனைகளையுஞ் சிதைத்து விடுகிறேன் என்று தேரைச் செலுத்திச் சென்று வைரவில்லை வளைத்து நாணி தொடுத்துக் குணத்தொனி செய்து அஸ்திரசஸ்திர முதலிய அளவற்ற பாணங்களை பெய்து, மாறுபடாத யானைப் பெருக்கங்களையும், கூறுபடாத குதிரைக் கூட்டங்களையும், வேறுபடாத மிருதிர வீரர்களையும் நீறு நீறாக நெரித்ததுமல்லாமல் மேலிட்டு வரும் வேந்தரையு மாட்டி, நூறு இரதங்களை நொடியிற் பொடிபடக் காட்டி, மற்றோர் திசையில் வளைந்து போர் மூட்டி, சுற்றிய பெருஞ் சேனைகளின் தலைகள் சுழலப் பேய் போலாட்டிப் பின்னிட வோட்டினான். இவனுக்கிளையவனாகிய சதானீகனென்பவன் மன்னவர் மதிக்க வரிச்சிலை வளைத்து, பொன்னாருள் பூண்ட தேர்மேல் வந்த மன்னர்முடிகளைத் தென்னங் குலைபோற் சிதறவுதிர்த்து கன்னமத முதலிய மும்மதம் பொழியும் யானை வீரர்களை முன்னும்பின்னும் முடுக்கியதிர்த்து வாயுகதி மனோகதியுள்ள குதிரை வயவரைச் சின்னப்பட்டுப் பயந்தொதுங்கும் படியாகத் துன்பப்படுத்தி, பராக்கிரமத்திற் சிறப்புற்ற பதாதிகளை யெல்லாம் உருத்துச் சினத்து உறுக்கிச் சிரித்து மகா உக்கிரத்துடன் முனைந்து ஒருதிசை புகுந்தான். அவனுக்குத் தம்பியான சங்கனென்பவன் முன்னவன் காட்டிய முடுக்கைப் பார்த்து, தானொரு திக்கிற்சென்று வன்னித் தேரோட்டி வரிச்சிலை யீர்த்து, நவமணிபதித்த கிரீடம் பொறுத்த வெற்றிவீரக் கொற்றவரேறிய ஆயிரந் தேர்களை யடித்துக் குறைத்து, அச்சுமச்சுகள் முறிய நிறைத்து, அநேகரை மடித்து, பிணமலை குவித்து, ஜெய சிங்கம் போல் தாக்கிச் சத்துருக்களை யமனிடத்திற்குப் போக்கினான். இவனுக்கிளையவனாகிய வராககேதென்பவன் வாசமாலைகள் மணக்கத் தரித்து, பூசலுக்குரிய புகழுடனெதிர்த்து, பலம்பெற்ற சிலையை வளைத்து, பாணங்களால் உருவத் துளைத்து, யாவரும் பதறிக் கதறிச் சிதறி முறியும்படிக்குச் செய்து, வேங்கைப்புலிக் கெதிர்ப்பட்ட மான்போலோடிய பகைவர் யாவருங் கெட்டொழியும்படி நீர்த்துளியாக்கி விட்டு பூணணிப் புயமிரண்டுஞ் செழிக்கப் பொருந்தினான்.

இந்தப் பிரகாரம் பாற்கடலை மந்திரகிரியானது கலக்கிக்கடைந்த வாறுபோல் விராடராஜனுடைய நான்குபிள்ளைகளும் நால்வகை சேனைகளோடு எட்டுதிக்கும் புகுந்து மிகுந்த போராடிய வேளையில், தந்தையான விராடராஜன் அந்தப் புத்திரர்களின் சாமர்த்தியத்தைக்கண்டு உற்சாகங் கொண்டு, ஆலமரத்தின் விழுது அம்மரத்தைத் தாங்குமாறு போல் தனக்குச் சகாயமாய் வந்துவளைந்த தன் மக்களைப் புகழ்ந்து மகிழ்ந்து, தளர்ச்சி யில்லாமற் களித்து, ஜெயமாலையு முடியுந்தரித்த தானும் வெகுண்டு எக்களித்து, விசித்திர வின்னாணேற்றி, விபரீத முழக்கங் காட்டி அச்சுடனமைந்ததேரோட்டி சங்குகளீன்ற முத்தினங்கள் சந்திரனைப்போற் பிரகாசிக்கும் வயல் சூழ்ந்த வள நாட்டுக் கதிபனாகிய திரிகர்த்தன் தம்பியை வளைத்து, பத்துக்கணைகளைப் பாயத் தொடுத்து, அவன் விடுத்த பாணங்களை யழியக் கெடுத்து, அவனுடைய கொடி-குடை-தேர்-குதிரை-சாரதி-வில்-வாள்-இவைகளையு மொழித்து, அவனுடன் கூடவந்த வீரர்களையுங் குறைத்து, நேருக்கு நேர் தாராளமாய் நெருங்கி அவன்மேல் மாறுவேக வடிக்கணை முடுக்கி, சேனைவேறு யானைவேறு தேசராஜர் கூட்டமும் வேறுவேறாகிச் சிதறும்படிக்குத் தாறுமாறாக முறித்து, தனிப்படப் பிரித்து பெரும் போர் விளைத்து நின்றான் அம்மச்ச தேசாதிபனானவன். அதனால் திரிகர்த்தன் தம்பியானவன் சிந்தை வருந்தி, தோளுந் துளைபட்டு, வாளுந் தறிபட்டு, சேனையுங் கெட்டு, செருமுகம் விட்டு, ஓடுகின்ற பதாதியருக்கோரடி முந்திப் புறங்கொடுத்தோடத் தலைப்பட்டான். இப்படி வெந்தொடுத்தோடப் புறப்பட்ட புன்மையைத் திறம்படைத்த விராடர்கோன் கண்டு, ஊழிக்காலத் தொருவனாகிய உருத்திரமூர்த்திபோ லுருத்தெழுந்து, வாடிப் போகின்ற குருசேனைகளை மறித்துத் தறித்து

மடியச் சிதைத்து, ஒருவருந் தனக்கெதிர்ப் படவொட்டாமல் வதைத்து பிணக்குப்பையின் மீது சக்கரம் புதையத் தேர் விடுத்துச் சென்றான்.

இந்தவிதமாக விராட பூபதியால் நிலையழிந்து விட்ட குருசேனையும், திரிகர்த்தன் தம்பியும் பலங் குறைந்து, படை முறிந்து நொந்து போனார்கள். அக்கால் அந்த யுத்தத்தில் இரத்தம் பெருகி ஆறுபோலோட பிணங்கள் மலைகளெனக் குவிந்து கூறுபோற் கூட, காக்கையுங் கழுகுங் கலந்து விளையாட நாயு நரியுஞ் சீறிப் போராட, பேயும் பூதமும் புகழ்ந்து கொண்டாட, எமபடாருயிரை யிழுத்துக் கொண்டோட, கூளியும் பருந்தும், விருந்துண்டாட, பைசாசகணங்கள் பாடி நின்றாட, அறுபட்ட தலைகளைப் பூமிதேவியம்மானாராட, புயமுந்தலையும் பொருந்திப்புரள, யாவரையும் பொடிப்பொடியாக்கி, ஒரு கோடி சுடுசரங்களையும் அருகோடித் தேரையுந் தூண்டிச் செயங்கொண்டு வருகின்ற விராடராஜனது திடத்தை திரிகர்த்தன் கண்டு, வெகுண்டு கொதித்து வில்லை வளைத்து, புரண்டு போன சேனா வெள்ளத்தைப் போகவொட்டாமல் திருப்பி, சந்திரனைக் கண்ட சமுத்திரம்போற் பொங்கி, அட்ட திக்கயங்களும் அயர்ந்து நடுங்கி மதம் பொழியும்படியாய் நாணொலி செய்து, வெற்றிப் பாடல்கள் பாடுகின்ற நால்வகைப் படைகளுடன் சேர்ந்து, மகமேருவைப்போன்ற இரத்தினத் தேர் மேலிருந்து, கடுவிஷ நாகக்கணை அமோகமாகப் பொழிந்து, விராடன் சேனைகள் யாவும் விருதிழந்து புறங்காட்டச் செய்து திக்கெட்டுந் திடுக்கிடத் திக்குமுக்காடி விக்கிட்டோடச் செருவிளைத்து, மதயானைக் கூட்டத்தில்வந்து புகுந்த மடங்கலென்னுஞ் சிங்கத்தைப்போற் பாய்ந்து, தேரணிகத்தையும், யானையினத்தையும், குதிரைப் பந்தியையும், காலாள்களையும், பல திசைகளிலும் பதறிச் சிதறப் போக்கி விட்டு, சோர்வடையாத தோளாண்மைபூண்ட அச்சுசர்மா வானவன் எட்டுத் திசையினுஞ் சுற்றிச் சுற்றித் துப்சஞ் செய்வதாயினான். அக்காலையில் விராடராஜன் பிள்ளைகள் வந்து மேல்விழுந்து, கொள்ளைகளான கொடுஞ்சமர் விளைத்தார்கள். அவர்களை யெல்லாம் அத் திரிகர்த்தனானவன் ஆக்கிரமித்து மடக்கிப் போராடி, அவர்கள் தங்கள் வெங்கணையாயுதமும் வில்லுமிழந்து கரி-பரி-தேர்-காலாளுங் குறைந்து, குடல் கலங்கி, உடல் குழங்கி, குலைகுலைந்து, தலை நடுங்கி, உயிரொடுங்கி, பெருமூச்செறிந்து, உடன்பட்டோருடன் திடங்கெட்டோடவும், தேகத்தில் தாங்கிய காயங்களுடன் சேனைகள் யருண்டேங்கவும், பசுக்காவலரும் படைவீரரும் பறந்து பின் வாங்கவும் படாத பாடு படுத்தி, மச்சராஜனுடைய பசு மந்தையைத் தன்னிச்சையின்படி கைக்கொண்டு நச்சரவக் கொடியை நாட்டி, நாம் வெற்றிகொண்டோமென்று ஜெயபேரியடித்துச் சிந்தை மகிழ்ந்து, சில தூரத்திற்கப்பால் சேனைகளையும் பசுக்களையுஞ் சேர்த்து ஜெயத்திறம் பேசியிருந்தான்.

### திரிகர்த்தனால் விராடராஜன் கட்டுபட, அது கண்ட தனயராதியர் கங்கபட்டரிடம் முறையிட, அவர் தம்பியரைச் செலுத்தித் தானுமேகல்

இவ்விதமாக வீரகண்டையும் ஜெயவீரபட்டமும் பெற்று, விண்மணி முடியிற் செங்கழுநீர்மாலையும், கரந்தைக்கோதையும் பொருந்தத் திருத்தியிருந்த பெருந்தகையான திரிகர்த்தராஜனை மச்சநாட்டன் கண்டு மதிமுகம் வேர்த்து, தேருடனெதிர்த்து, சிலை வளைத்திழுத்து, முறுக்கு நாணியை யிருக்கி ஏறிட்டு, ஐம்மலர்வாளி-ஐம்முகவாளி-ஐஞ்சிகைவாளி-ஐம்பூதவாளி - ஐம்பிறைக்கணை - ஐஞ்சிறைக்கணை-ஐந்திடிக்கணை - ஐங்கடுக்கணை முதலிய வேறு வேறு அஸ்திரங்களை விறுவிறென விடுத்து, திரிகர்த்தனேறிய தேரை முறித்து, சாரதி தலையைத் தறித்து, கொடியைக் குறைத்து, குதிரையை வதைத்து, வில்லைப் பிளந்து, நாணியைத் துணித்து, கவசத்தை பொடித்து, கருத்தைக் கலக்கி அச்சமுண்டாகும்படிக்குப் பின்னுங் கொத்தாகிய பத்தம்பை அவனுடைய மார்பில் விடுத்தான். அந்த விராடன் விட்ட கணைகளினால் வருந்திச் சினந்து நேர்புகுந்த சுசர்ம்மாவானவன் தேர் அழிந்து, சிலைமுறிந்து, சீரொழிந்து, பரதவித்து, பின்பு நெஞ்சுரமுற்று, இந்த விராடனை நான் எளிதில் விடமாட்டேனென்று சேமத் தேரேறிச் சில கணைகள் கொண்டு சென்று, நேர்நின்று ஆரவாரித்து, இருபது பாணம் இடிபோல் தொடுத்து, அவனது தேரினுடைய அச்சு-மச்சு-குற்றுக்கால் - கொடுங்கை-கொடி-குடை-குதிரை-சாரதி முதலிய எல்லாந் தூளுந்தூளாக்கி, மற்ற கொடி-குடை-ஆலவட்டம்-தாலவட்டம்-பீலிக்குஞ்சம் இவை

முதலிய சின்னங்களை யெல்லாம் பஞ்சுபோற் கொட்டிப் பறக்கவிறட்டி, அவனுடைய இடக்கை வில்லினைச் சடக்கெனத் தறித்து, துவச கவசாதிகளையு மழித்துக் கிழித்துச் சாடினான். அப்பொழுது தட்டுக்கெட்டுத் தடுமாறி வலைந்து, கட்டுவிட்டுக் காவலழிந்து, நிலத்தில் நின்று மலத்திது விழித்த கண்களுடன் வாடி வருந்தினான் விராடராஜன். அப்பொழுது அவனுடன் வந்த சேனைகள் அழுது, ஐயையோ! நமதரசனுக்கும் வந்ததோ பழுது; ஆ! ஆ! தெய்வமே என்று தொழுது, நாவறண்டு நாணமேலிட்டு யுத்தமுனைவிட்டுச் சித்தம் பிரமித்து ஓடும்படியாயின. இப்படி யாவரையுஞ் சிதறவோட்டிய திரிகர்த்தன் பலம்பெற்ற வில்லாளியாகிய விராடராஜன் கழுத்தில் வில் நாணியை மாட்டி, தனது ரதக் காலுடன் பூட்டி, ஜெயசங்கபேரி முழங்கி, நால்வகைச் சேனையோடு சென்று, நான்கு புரத்திலுங் காவல்கொண்டடர்ந்து பசுமந்தைகள் தொடர்ந்துவரும்படியாக ஓட்டிக்கொண்டு, பணிக்கொடி தரித்த பார்த்திபனை நாடிப் போவதாயினான். அந்த அபஜெயத்தைக் கண்ட விராடன் மைந்தரும் பசுக்கூட்டங்களுக்குக் காவலாள நந்தரும்,படைத்துணை வந்த வேந்தரும், பராக்கிரம வீரமாந்தரும், தங்களாற் கூடியவரையிலு நேர்ந்து காலகதியை யோர்ந்து மனநொந்து, நெடுந்தூரத்தி லிருந்து யுத்த விந்தையைப் பார்த்திருந்த கங்கபட்டரிருக்கு மிடத்திற்கு வந்து, அவர் கால்மேல் விழுந்து, ஓ மகானுபாவரே! எங்கள் தந்தையை யிழந்தோம். எந்தையாகிய அரசனைப் பிரிந்தோம் என்றேங்கி யழுதார்கள்.

அந்த வேளையில் தருமராஜனை குருகுலக்கோமான் பயப்படாதீர்கள் என்று அவர் படும் பரிதாபத்தை மாற்றி, தன் பக்கத்திலிருந்த பலாயனனாகிய தம்பியைக் கடைக்கண்ணாற் பார்த்தார். அவரது கண் ஜாடையைக் கண்ட வீமசேனன் ஊழித் தீயைப்போல் எழுந்து, தன் உடலை மறந்து, யுகமுடிவில் தோன்றுஞ் சர்வசங்காரக் கடவுளாகிய உருத்திர மூர்த்திபோற் பேரோசை கொண்டு, தன் தந்தையான சண்டவேக வாயுதேவனவன் உயர்ந்த மலைகளையும், உவரியலைகளையும் உலைத்து மோதிச் சிதைக்கு மாறுபோல் திரிகர்த்தனுடைய தேர் முதலானவைகளை யெல்லாஞ் சின்னபின்னப்படுத்தி அவன் படை வீரர்களையுங் கொன்று பசு நிரைகளையும் விராடனையும் விடுவித்துக்கொண்டு திரும்புதற் கெண்ணினவனாய் திடுதிடெனச் சென்றான். இப்படி யோசித்து எடுத்தடி வைக்கு முன்னமே ஏற்றல்கோல் தூரம் போய்விட்ட இளஞ் சிங்கத்தின் ஆத்திரக் குறிப்பைத் தருமராஜன் அறிந்து, ஓ! ஓ! ஓ! மோசம் வந்ததே என்று வருந்தித் தம்பியைத் தனிப்பட வழைத்தணைத்து, அப்பா! ஒப்பில்லாச் சுப்பிரதீபன் போன்ற உத்தமனே! உன் கருத்தை நான் அறிந்துகொண்டேன். என் கருத்தை நீ கண்டுகொள்ளவில்லை. ஆத்திரப்படாதே. நம தடக்கம் விடாதே. இதுவரையிலுங் கழித்த வனவாசத்தைக் கெடுத்துப் போடாதே. இப்போது உதையமான சூரியன் அஸ்தமனமாகிறவரைக்கும் நாம் இன்னாரென்று எவர்களு மறியப்படாது. ஒருவேளைச் சத்துருக்கள் நம்மைத் தெரிந்துகொண்டால், நாம் இதுவரையிலும் பட்டபாடு பாழாகிப்போம். இதை உன் கருத்திலிருத்திச் சென்று, பெருஞ் சண்டை விளைக்கும் வீமசேனனென்னும் பெயரை வெளிப்படுத்தாமல், வில்லும் பாணமுங் கொண்டு தேர்மேற் சென்று, திரிகர்த்தனுக்கு உன் திறங்காட்டி நின்று, அவனைத் தேருடன் வென்று நம் விராடராஜனை மீட்டிவிடுக என்று வேண்டிய புத்தி யுத்திகளைத் தருமராஜன் வீமனுக்குரைத்து, அவனுக்கு வீராவேச மேலிடாதிருக்கும்படி எமதர்மராஜனாகிய தன் தந்தையைப் பிரார்த்தித்து விடுத்தார். அவ்வாறு அண்ணன் சொல்லுக்கடங்கி வீமசேனன் கேயூர மணிகுண்டல முதலிய பணிகள் பூண்டு, அம்புறுத்தூணி முதலிய ஆயுத சின்னங்கள் யாவுந் தரித்து, ஆகாயமளாவிய முன்றனைய தேர்மேற் பாய்ந்து, வில்லை வளைத்து, நாணியேற்றி, வெற்றி பெற்ற சிங்கமானது யானைமேல் தாவும் வீறுப்பைப் போலும், விண்ணளாவி வளர்ந்த அடவியைப் பற்றிக்கொண்டு வேகின்ற தீயைப் போலும் மகா உக்கிர பராக்கிரம கோலாகலத்துடன் விரைந்து போகின்றான். அந்த வீமன் செல்லும் வேடிக்கையைப் பார்க்கும்படிக்குத் தேவேந்திரன் முதலிய தேவர்கள் ஆகாயத்தினிறைந்து, அழகிய விமானத்தமர்ந்து பார்த்தார்கள்.

இப்பால் வீமனுக்குப் புத்திமதி விளம்பி விடுத்த முரசக்கொடியோனாகிய தருமராஜன் மனந்தாளாமலும், தம்பியை நம்பாமலும், நகுல சகாதேவர்களாகிய தாமக்கிரந்தி சந்திர

பாலர்களைப் பார்த்து, அப்பா தம்பிமார்களே! உங்களண்ணனாகிய வீமனை அனுப்பி யிருக்கின்றேன். அவனோ மிகுந்த ஆத்திரமுடையவன். அவசரக்காரன். முன்கோப முதல்வன். அவன் ஒருவேளை சுசர்மன்பேரில் பாய்ந்து சுடுசரந் தொடுத்துச் சமர்புரியும் வேளையில் அவனால் இவனுடைய வில்லும் பாணமுமுறிந்து, மேனி வருந்தி வம்பு நேரிடுமாகில், இவன் தேரைவிட்டுக் கீழே குதித்து, அம்புகள் பறக்கும் கும்பலிற் புகுந்து, விற்போர் விடுத்து மற்போர் கொடுத்து, மலைகளை மரங்களை வாரணத் தேர்களை வாரி யடித்து மாறு கொடுப்பான். இதனால் இவன் வீமனென்று வெளியாகி, பாண்டவர் இவ்விடத்தி லிருக்கிறார்களென்று பகைவரறிந்து கொள்ளுவார்கள். அவர்களறிந்தால் மறுபடியும் நாம் வனவாசம்பண்ணவரும். நாமெண்ணிய எண்ணம் ஒன்றும் நிறைவேறுமற் போய்விடும். உலகம் பழிக்க இடமுண்டாகும் என்று தம்பியரிருவருக்கும் தணிக்கைச் சொல்லி, நீங்களிரண்டு பேரும் கூடச் சென்றிருந்து வீமனை மிஞ்சவொட்டாமல் அடக்கி, திரிகர்த்தனை மடக்கி யுத்தந் தொடங்கி பசுக்களையும் விராடனையும் விலக்கி, வேடிக்கை பார்ப்பவர் தலை குலுக்கி, வியக்கும்படியாய் அமர்முடித்து ஜெயத்துடன் வருவதே பெருமை யென்று உரைத்தனுப்புவித்தார். இளங்காளையரிருவரும் அவருடைய இதோபதேசத்தை சிரமேற் கொண்டு அவ்வாறே முடிப்போமென்று அண்ணலைத் தொழுது விடைபெற்று பொன்மயமான பொற்தேரூர்ந்து நடத்தி கல்லென்றிசைக்குங் கார்முகம் வணங்கி நூற்றிலொருவன் ஆயிரத்திலொருவனென்னு மதிரதவீரர் தலைகள் குதிரையின் காலிலும் யானையினடியிலும் மகப்பட் டுருளும்படியாகச் சேனைகளை நடாத்திப் பாணப்பிரயோகம் பண்ணிக் கண்ணுக் கெட்டிய தூரம் பறந்து ஓட்டமாயோடுகின்ற வாயு புத்திரனாகிய வீமசேனன்மேல் நாட்டம் வைத்து நாடிச்சென்றவர்கள் திரிகர்த்தன் சேனை வெள்ளத்தை நீந்திப்போய்த் தேருடன் தேர்கலக்கப் போராடினார்கள். இங்கே தேவர்கள் புகழா நின்ற குருகுலச் செயபதியான தருமராஜன் மனந்தாமதிக்காமல், தம்பிமார் மூவரும் போயிருக்கின்றார்களே; தாழ்ச்சியென்னமோ! சண்டையாதோ! என்று தான் எடுத்த வேடத்திற்குத் தக்க மரியாதையையும் மகிமையுந்தப்பாமல், சம்மாரகாலத்திற் புரண்டெழுகின்ற சல்நிதிபோற் குணக்கடலு மருட்கடலுங் குலவத்தேரேறி, அக்ஷதை யிரைத்து, கட்டுகளெட்டுங் குச்சுப்பட்டுடைய வில்லைத் தொட்டெடுத்து வாயுவேக மனோவேகத்துடன் வந்து தம்மைத் தம்பிமார் பார்க்கும்படிக்குச் சமர் முனையிற் கலந்தார்.

### பலாயனன் திரிகர்த்தனை வென்று தன் தேரிற் கட்டி, விராடராஜனையும் பசுநிரைகளையு மீட்குதல்

இவருக்கு முன்சென்ற தம்பியரிருவரும் எப்புறத்து சேனைகளு மப்புறத்தி லகலா தபடி துப்பற வொழித்து மன்னர் தம் உயிரை வானுலகேற்றிச் சின்னபின்னஞ் செய்துவருவதானார்கள். இத் தம்பிமார்களின் செய்கையை வீமன் கண்டு மேலாகிய சந்தோஷங்கொண்டு பலம் பொருந்திய தனது வில்லிற் சரங்களை பூட்டி தலம்புரண்டோடத் தாக்கினான். அவ்வேளையில் திரிகர்த்தனனவன் இவர்களாரடா அப்பாவென்று சென்ற தேரைத் திருப்பி எதிர்நின்று வீரலட்சுமிவிளையாடுகின்ற தனது வில்லை வளைத்து பாணங்கள் பற்பல திசையிலும் பறந்திடச் சொறிந்தான். அக்காலையில் அழிவில்லாப் பலம் படைத்த ஆண் சிங்கம் போன்ற வீமசேனன் தன்தேரை திரிகர்த்தன் தேருக்கெதிர் முடுக்கி, அயிந்திராஸ்திரங்களை விட்டு மடக்கி, அவன் தொடுத்த கணைகள் யாவையுந்தறித்து, வில்லையுமுறித்து, நாணியுமறுத்து, சாரதி குதிரைகளின் தலைகளையும் பறித்து தேரையுமுடைத்துத் தியங்கச் செய்தான். அப்போது திரிகர்த்தனனவன் இடைதைரிய தீரம் விடாமல் வேறு தேரேறி, மின்னென விளங்கும் வடிவேலை யெடுத்து வீமன் பேரில் வீசினான். அந்த வேலாயுதமானது பூரணசந்திரனைப் பிடிக்கத்தாவிய செம்பாம்பு போற் புரண்டு திசாதிசையிலுந் தீப்பொறி இறைத்து வருவதை மாருதி கண்டு மடமடவென்று பற்களைக் கடித்து நின்று அதனை தனது பிரமாஸ்திரத்தால் ஒடித்தான். வேற்படை முறிந்ததை சுதர்மன் கண்டு வெகுண்டு, வச்சிரக் கட்டுக்களோடு முட்கட்டுகளு முடைய ஓர் கதையை சுழற்றி, கரகரவென் றெறிந்தான். அது விறுவிறெனச் சுழன்று வீமனை நோக்கிவர, அதைப்பார்த்து நெருப்புத் தலைபெற்ற இருப்புக் கணைகளைப் பத்தெடுத்துத் தனக்கு நேர்வருங் கதாயுதத்தை நிமிஷத்திற் பொடித்து அசைவற்றிருந்தான். அப்போது புலவர்கள் புகழும்படிக்குப் பொடிப்பொடியாயுதிர்ந்தழிந்த தன் கதாயுதத்தை திரிகர்த்தன்

நோக்கி வந்தவேளை எந்தவேளையோ என்று மனநொந்து வாடி வாளை யுருவி விண்டலத் துயர்ந்தி மண்டலத்திற் பாய்ந்து வீசினன். அவ்வீரத்தை வீமசேனன் பார்த்து மகிழ்ந்து நாகம்போற் சினந்து மேகக்கணை ஒன்று போக்கி அவன் தேகஞ் சோகங்கொள்ளும்படி துளைத்துத் தாக்கி அவனைச் சார்ந்த யானை சேனை பரிவாரங்களையுங் கலக்கி அப்பாலோட்டுவித்து அச்சுசர்மாவையும் அவன் கைப்பிடித்தவாளையு மலங்கோலமாக்கி அவனை எங்கு நிலைக்க வொட்டாமல் இலவம் பஞ்சுபோற் பறக்கவடித்து அவன் தலைமயிரைப் பற்றி இழுத்தான். அக்காலையில் திரிகர்த்தராஜன் பொறிபுலன் மயங்கி திக்குமுக்கிட்டு, தலையிறக்கத்துடன் தத்தளித்து தளர்வுற் றிருந்தான். அஃதெப்படி யிருந்ததெனில், பாண்டவர் வனவாசம் பண்ணும்போது அவர்களைப் பங்கப்படுத்த வந்த துரியோதனன் சித்திரசேனனிடத்திற் சிக்கிப் புத்திரமித்திர பூவைமாருடன் தாமணிப்பிணியாகக் கட்டுண்டு பரதவித்த தன்மைபோல், யுத்தமுகத்தில் மற்றொருவரையும் வெற்றிபெற வொட்டாத சுத்தவீரத் திறமுற்ற திரிகர்த்ததேச ராஜனென்னும் சுசர்மாவானவன் சிங்கத்தினிடத்திற் சிக்கிக் கொண்ட மத்தகஜம்போல் வல்லமை குறைந்து வாயுகுமாரனாகிய வீமனிடத்தில் அகப்பட்டுப்போனான். உடனே வீமசேனன் விராடபூபதியைக் கட்டவிழ்த்து அவனை திரிகர்த்தன் தேரினின்று தன்தேரில் ஏற்றிக்கொண்டு தான்பிடித்த சுசர்மாவின் தலைமயிரைச் சுற்றிப் பிடித்தபிடி விடாமல் தன் தேர்மேல் இழுத்து இரத்ததூளி பீரிட்டுச் சுற்றிலுந் தெறிக்கும்படியாய் மடலோடு மடல்சேர மணிக்கயிற்றினால் இறுக்கிக்கட்டி அவனைத் தன் எதிரில் இருக்குங் குருசேனைகளுக்குக்காட்டி இன்னும் சண்டை செய்ய சமர்த்துள்ளவர்களிருந்தால் வாருங்களென்று அவர்கள்மீது சரமாரி பொழிந்து கோபாவேசங் கொண்டு நின்றான். இப்படி நின்ற வீமசேனனைச் சுசர்மாவின் சேனைகள் கண்டு பயங்கொண்டு புறங்காட்டி ஓடிப்போனார்கள். அவ்வேளையிற் சர்வசம்மார கால உருத்திரன்போல் உருத்தெழுந்த வாயுகுமாரனை விராடராஜன் நோக்கி, நமது பங்குத் தெய்வமோ இவ்வுருக்கொண் டெழுந்ததென்று மிகவு மகிழ்வடைந்தான். அப்போது பதினாயிரங் குதிரை வீரர்கள் பாய்ந்து கோபாலருடன் சேர்ந்து, திரிகர்த்தராஜன் கைக்கொண்ட பசுநிரைகளைத் திருப்பிக்கொண்டு, ஜெயம் ஜெயம் ஜெயம், என்று ஜெயக்கொடி நாட்டி சிறுபறை கொட்டி பலவித வாத்தியங்களையு முழக்கிக்கொண்டு தங்கள் எதாஸ்தானமாகிய மச்சதேசத்திற்குத் தென்புறத்திற் கலந்து முன்போலிருந்தார்கள். கங்கபட்டராகிய தருமராஜன் தனது பக்ஷம் ஜயமென்றறிந்து முந்தி யிருக்கும் ஓர் கூடாரத்திற்குப் போய் ஒன்றும் அறியாதவர்போல் தாமிருக்கத்தக்க ஆசனத்தி லிருந்தருளினார்.

இப்பாற் சத்துருவாகிய திரிகர்த்தனை வென்று அவனை தேர்க்காலில் இறுக்கி கட்டிக் கொணர்ந்த வீமசேனனும் விராடராஜனும் அத்தேரை நடத்திச் சென்று விராடராஜனுடைய தம்பியரோடுந் தனயரோடுஞ்சேனைகள் சூழத் தருமராஜனுக் கெதிரிற்போய்ப் பணிந்து நின்று, சுவாமி! தேவரீருடைய அநுக்கிரகத்தாற் இணையில்லாத கங்கபட்டர் அவர்களை யாசீர்வதித்து, அருகில் இருந்த ஆசனத்தி லிருத்தினார்.

அப்போது கங்கபட்டரை விராடராஜன் பணிந்தெழுந்து, ஓ ஆண்டவனே! போர்முகத்தில் வீரர்களை பொருத்தியோட்டி ஊர்முகத்தில் என்னைக் கொண்டுவந்துகாட்டி உலையாப் புகழை நிலைநாட்டி எனக்கு குலதெய்வமாய்த் தோன்றிப் பகைவர் கைப்பட்ட வென்னையும் பசுக்களையு மீட்டி ரட்சித்த பலாயனனுடைய பேருதவிக்கு நானென்ன கைம்மாறு செய்யப் போகின்றேன். அப்படிக்கல்லவென்று செய்தாலும் இவர்புரிந்த உதவிக்கீடாகாதே; இதற்கொத்த கைமாறுள்ளதோவென்று யோசிக்குமிடத்தில் இப்புவியிலு மெப்புவியிலுமில்லை. அன்றியும், இப்பிறப்பிலும் எப்பிறப்பிலுங் கூட இல்லையென் றுரைத்துப் பலாயனனை மிக மகிழ்வோடு தன் மார்போடணைத்துக் கொண்டு என் மைத்துனனான கீசகனைப் பறிகொடுத்து கதியற்றிருந்த வென்னை நீங்களிவ் வேளையிலடுத்து எதிரி கையிற்பட்ட சிறையை விடுத்து எனக்குயிர் கொடுத்தீர்கள். நீங்கள் இவ்வுதவி செய்யாவிடில், இந்நேரம் என்கதி எப்படியாமோ அதை நான் அறியேனாகையால் என்னரசுரிமையும், என் பட்டினமும், என் செல்வம் முதலாகிய யாவும் என்னுயிரோடு உங்களுக்கே தத்தமாகக் கொடுத்தேன். உங்கள் பெருமைக்கும் அருமைக்கும் நீங்கள் செய்த நன்மைக்கும் நான் தத்தம் பண்ணிய பொருள்கள் தகுதியற்றனவா யிருப்பினும் பக்தி சிரத்தையாகச் செய்கின்ற ஏழைப்பூசை

யை எப்பொருட்குமுரிய ஈசன் அங்கீகரித்துக் கொள்வதுபோல் தாங்களும் தயைபுரிந்து ஒப்புக்கொள்ளவேண்டும். எப்பொழுதும் என்னை விட்டு நீங்காமலிருந் திரட்சிக்கவேண்டும் என்று பற்பலவிதமாக உபசார வார்த்தைகளைச்சொல்லிப் பிரார்த்தித்தான். அவ்வரசன் மொழியைக் கேட்ட தருமராஜனும் மற்ற தம்பியர் மூவரும் மகிழ்ந்து புகழ்ந்து வாழ்த்தினார்கள்.

### கங்கபட்டர் திரிகர்த்தனைக் கட்டவிழ்ப்பித்து விடுத்தல்.

பின்பு முரசக்கொடியுடைய முதல்வன் மச்சதேசாதிபனாகிய மன்னனைப் பார்த்து, ஐயா! பாண்டவர்களிடத்திற் பக்ஷமாயிருந்த நாங்களைவரும் ஒருவரைவிட்டொருவர் பிரியாமல் உத்தமனாகிய உம்மிடத்தில் வந்தடைந்த அந்நாள்முத லிந்நாள் வரையிலும் நன்னாளாகக் கழித்து, அன்ன வஸ்திராபரணங்களு மனுபவித்து, மகிழ்ச்சியுடன் வாழ்ந்தோம். நாங்கள் வெளிப்பட்டுப் போவதற்கு இன்னுஞ் சிலநாளிருக்கிறது. அப்படியே நாங்கள் போனாலும் உமக்கெந்நாளுங் குறைவில்லை என்று உபசாரஞ்சொல்லி, ஓ பரிசுத்த இருதயம் படைத்த பார்த்திபனே! நீரளித்த சகல சம்பத்தையும் நாங்கள் அநுபவித்ததைப்போல் ஆயிரம் பங்கதிகமாக ஆநந்தப்படும்படியாக உமது தேரிற் கட்டுப்பட்டிருக்கின்ற திரிகர்த்தராஜனைக் கட்டவிழ்த்துவிட்டு, அவனை உபசரித்துச் சன்மான வெகுமானத்துடன் ஒரு ரதமுங்கொடுத்து அனுப்பவேண்டியதென்றார். இவ்வாறு மகா இரக்கமாகச் சொல்லிய தருமராஜனுடைய கருணை மொழியை விராடராஜன் காதாரக்கேட்டு, மறு வாய் திறவாமல் தானே எழுந்துபோய்க் கட்டவிழ்த்துவிட்டு, ஆபரணவஸ்திராதிகளும் வழங்கி, அழகிய தேருமளித்து, ஓ திரிகர்த்தனே! முன்னொருநாள் நீ யவமானப்பட்டிருக்கப் பின்னும் வந்தகப்பட்டமையால், மன்னர் முறைமைப்படிக்கு உன்னை வாளால் வெட்ட வேண்டும். அப்படி வெட்ட வேண்டிய வெட்டை இந்த மகாநுபாவராகிய கங்கபட்டரானவர் தப்புவித்தார். இவராற் கிடைத்தது உனக்குப் பிராணபிச்சை இதை எப்போது மறவாமலிருமென் றனுப்பினான். அத்திரிகர்த்தன் விராடனைப் பார்க்க வெட்கப்பட்டு, மெத்த விசனமுற்று, புத்தி மயங்கிச் சித்தப்பிரமை கொண்டு, சுயோதனன் முதலாகிய கொற்றவர் நமக்குப் பின்னுதவி வந்து கைகொடுக்காமற் போனார்களே; அவர்கள் முகத்தில் நாமெப்படிப்போய் விழிப்போம்? என்று மனமெலிந்து, ஓடி யொதுங்கிப் பதுங்கி யிருக்கின்ற தன் படையுடன் கலந்து, கங்கபட்டரென்பவரைக் கருணையில் தருமராஜனென்று புகழ்ந்து, பிழைத்தது போதும் போதும் என்று போயினான். அப்பால் தருமநந்தனன் விராடனைப்பார்த்து, இப்பொழுதுபோன திரிகர்த்தன் ஒருவேளை மேற்படை கூட்டிக்கொண்டு வந்தாலும் வருவானென்றுரைக்க, அதைக் கேட்ட மதிகுல வேந்தனாகிய மச்சராஜன் ரதகஜதுரக பதாதிகளான நால்வகைப்படையையும், பிள்ளைகள் மூவரையும் பேரணி நிறுத்தி, மேற்படைவருமார்க்கத்தில் வேவுகாரரை யனுப்பிவிட்டு, அன்றிரவு முழுமையும் அவ்விடத்தில் முகாம்போட்டுக் கொண்டிருந்தான். முன்பு திரிகர்த்தனாலடியுண்டு முறிபட்டோடிய மூத்தபிள்ளையாகிய சுவேதன் முக்கண்ணனாகிய முதல்வனைப் பூசித்து, எக்காலத்தும் எவர்களுக்கும் இளையாமலிருக்கும் உரத்தை வரத்தினாற்பெறக் கருதித் தவஞ் செய்திருந்தான். அக்காற் சூரியனஸ்தமானமானான். அஃதெப்படி யிருந்ததென்றால், வீமசேனன் திரிகர்த்தனைத் தேருடன் கட்டிய திறத்தையும், சமுத்திரநாதனான வருணன் கண்டு, இன்னும் பாண்டவர்களை வெளிப்படவொட்டாமல் தடுத்திருக்கிறான் சூரியனென்று கோபங்கொண்டு, தன் மேனியைச் சிவக்கக் காட்டி மேற்றிசையிற் கொண்டுபோன விதம் போலிருந்தது.

தக்ஷிண நிரைமீட்சிச் சருக்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது,

## உத்தரை நிரைமீட்சிச் சருக்கம்

### கண்ணன் துதி

அலையெறியும் பாற்கடலின் மத்தாகப் பொன்மலையை யமைத்துவானக், கலைமதியை யடையாக்கி வாசுகிநாமத்தானைக் கயிறுப்பூட்டிப், புலவர்குழாங் கடைபொழுதம் மலைகடலிலழுந்தாமற் புகழுமாமை, நிலவுருக்கொண் டடிதாங்கி யமிர்தோங்கப் பகிர்ந்தருளு நெடியோய்போற்றி.



அருச்சுனன் கௌரவப்படையை கண்டோடும் உத்தரனைத் தேற்றி
தன் சுயரூபத்தோடு போர்முகம் நிற்றல்.

ஓ ஜெனமேஜய மகாராஜனே! ஒப்பற்ற
சித்திரமணித்தேரேறிக் குருசேனையுடன் கூடி
வந்த திரிகர்த்த தேசாதிபனென்னுஞ் சுசர்
மாவானவன் விராடபுரத்தின் தெக்ஷிண
பாரிசத்திற் சேர்ந்து, ஆதிசேடனாற் சுமக்கப்
பட்ட இப்பூமி யதிரும்படிக்குப் பெரும்போர்
தொடுத்து, விராடனுடைய மந்தைகளை மடக்
கிப் பிடித்துச் செயம்படைத்துத் திரும்புங்
காலையில், பசுக்காவலரடிபட்டோடி விராட
ராஜனுக் கறிவிக்க அவ் வரசனுடனே ஓர்
அக்குரோணிச் சேனையுடன் வந்து திரிகர்த்த
னுடன் சண்டை புரிந்து தேரிற் கட்டுப்பட்டு,
சுயம்பாகியினால் விடுபட்டு மறுபடியுந் திரி
கர்த்தனைப் பிடித்துத் தேர்க்காலுடன் கட்டி
அவமானப்படுத்தி, கங்கபட்டர் மொழியால்
விடுத்து அவன் கைக்கொண்ட மந்தைகளைத்
திருப்பிக்கொண்ட விதத்தைச் சொன்னேன்.
இப்பால் திரிகர்த்த ராஜனுக்குப் பின்படை
யாகிவர யுத்தசன்னத்தரா யிருந்த துரியோத
னாதியர் பெருஞ்சேனைகள் வந்து மச்ச நகரத்
தின் வடபாரிசத்திலடுத்து அங்கிருந்த மாட்டு
மந்தையை மடக்கிப் பேடியினால் மானங்
கெட்டுப் பசுநிரைகளை விட்டோடிய சரிதை
யைப் பகருகிறேன் கேளும்: ஓ குவலயம்புக
ழுங் குருகுலக் கோமானே! திரிகர்த்தராசன்
தன் கைவசப்பட்ட மாட்டையும் விட்டுத்
தானுங் கட்டுண்டு விடுபட்டுச் சேனையுடன்
முதுகிட்டு திரும்பிவிட்ட செய்தியைத் துரி
யோதனன் சில தூதுவராற் கேட்டு ஆக்கிர
மித்து வியாக்கிரம்போ லெழுந்து, இந்தச்
சுசர்மாவானவன் நாம் சொல்லியனுப்பியபடி
பாண்டவர்கள் பதுங்கியிருக்கும் பருவத்தைப்
பாராமல், பசுநிறை மடக்கினவன் பக்குவத்து
டன் பட்டினம் வந்துஞ் சேராமல், விருதா
வேலை செய்துவிட்டானே யென்று வெம்பி,
ஐயோ! ஆண்மிக்கையுடையவ னிவனென்று
நம்பி வீண்மோசம் போனேமே! அடா துர்ச்
சாதனனாகிய தம்பீ! நமது நால்வகைப்படை
யும் எழும்படி விளம்பி என் வெற்றிமுடியை
விரைவிற் கொண்டுவாவென்று கிளம்பி நாம்
திக்கெட்டுஞ் செவிடுபடப் பேரிகை முழக்கிக்
கொண்டு பட்டப்பகலிற் புறப்படுவது பக்குவ
மல்ல வென்று சொல்லி விட்டெறிக்குங் கிர
ணங்களையுடைய வெய்யோன் உதயஞ் செய்யு
முன்பாக அட்ட கெஜத்திற்கு இணைபட்ட
திட்ட யானைகள் நடாத்திக் கட்டுக்காவலு
டன் மட்டுப்படாச் சேனைகள் புடைசூழப்
புறப்பட்டு, விராடபுரத்து உத்தரதிசையிற்
சென்று, நவதானியங்கள் விளைந்திருக்கும்
நாடு காடுகளை யழித்து, தனது நால்வகைச்
சேனைகளையு நிறைத்து, ஊரிலுள்ளோரை
யோடவிட்டடித்து ஓடும் பேர்களை யோடாமல்
மறித்து, செழித்துவளர்ந்த கருப்பங் கொல்லை
களைத் தீயிட்டுக்கொளுத்தி, நன்செய் புன்செய்
பயிர்களை நாசப்படுத்தி, ஆழ்ந்த குளங்க
ளனைத்தையுந் தூர்த்து, தடங்கள் மடங்களைச்
சரியவிடித்து, ஆறு-கால்-ஏரி-அணைக்கரை
இவைகளை அழித்து, போராகக் குவித்த நெற்
களைப் பெர்றிபறக்கக் கொளுத்தி, நாடு காடா
கக் காடு மேடாகக் கொடுத்து, மாடுகளைப்
பிடித்து, அறம்பறந்தேங்கவும் வில்லை வளை
த்து அல்லல் விளைத்தான்.

### கோபாலர் முறையிடக்கேட்டு தாயோடுவருந்திய உத்தரன் கருத்தை விரதசாரணி பிரகநளைக் கறிவித்தல்

அக்காலையில் அந்த மந்தைகளுக்குக்
காவலாயிருந்த நந்தகோபாலர் வந்தெதிர்த்
துப் போர் புரிந்து, சிந்தை நொந்து, திறன
ழிந்து, ஊர்புகுந்து ராஜமைந்தனாகிய உத்தர
குமாரனோடுஓலமிட்டு அழுதார்கள். அவர்களை
அவ் வரசிளங்குமாரனோக்கி, உங்கட்கு என்ன
துன்பம் நேரிட்டதென்று கேட்டனன்.
அதற்கவர்கள் ராஜகுமாரனடிமேல் வீழ்ந்
தெழுந்து இருகையுங் குவித்து, ஓ இளஞ்சிங்
கக் கன்றாகிய சுவாமி! பராக்கு! தென்றிசையில்
திரிகர்த்தன் வந்து புகுந்து பசுமந்தையை
மடக்கிய செய்தி யறிந்து அப் பசுக்குலங்களை
மீட்கவேண்டிச் சேனைகளுடன் விராடபூபதி
சென்றிருக்குஞ் சமயம்பார்த்து, அரவக்கொடி
யோனாகிய துரியோதனன் ராஜன் பலம்
பொருந்திய படைகளுடன் வடதிசையிற்
கலந்து, பதாதிகளைப் பிரித்துவிட்டு, நாட்டி
லுள்ள பலன்கள் யாவையு மழித்து, அதாக
தஞ்செய்து, மாட்டையுங் கவர்ந்து, கூட்டமா
யெதிர்த்த எங்களையு மாட்டிப் பிளந்துவிட்
டான். ஓ சந்திர குலேந்திரனே! நீர் இத் தரு
ணத்தில் வீட்டிலிருப்பது தகுதியோ? என்று
முறையிட்டார்கள். இவ் வண்ணம் உத்தர
குமாரனோடு வினை யுரைப்போர் விளம்பிய
சொல்லை அக்குமாரனைப் பெற்ற சுதர்க்கணை
யானவளறிந்து, ஆ! இதென்ன விந்தை?
யாரேனும் நாட்டில் அரசன் இல்லாத வேளை
பார்த்து வந்து, மாட்டை மடக்குவார்களோ?
இஃதிராஜ நீதிக்கு ஏற்குமோ? பெண்பாலா
கிய நானென் செய்வேன்? என்றேங்கித் தன்

பக்கத்திலிருந்த் பாங்கியரை நோக்கி, அடி
தாதியரே! இந்தவேளை தப்பித்துக் கொள்வ
தற்கு எந்த வழியுங் காணோம். வந்திருக்குங்
குருகுலச்சேனைகள் நமது அந்தப்புரம்
புகுந்து தொந்தரை செய்யும் முன்னமே ஜாக்
கிரதைப் படவேண்டும். அதற்கு என் சிந்தை
யில் ஒரு தந்திரந் தோன்றுகிறது அதைக்
கேளுங்கள்: எப்பேர்ப்பட்டவர்களும் பெண்
கள்பேரிற் படையெடுக்கலாகாதென்று அரச
நீதி யிருக்கின்றது. அதைப் பலரறியாவிட்
டாலுஞ் சிலராயினும் அறிந்திருப்பார்கள்.
பாவபுண்ணியம் பார்த்து நடப்பார்கள். ஆகை
யால் நீங்கள் யாவரும் ஆயுத பாணிகளாய்ப்
புறப்பட்டு, கோட்டை மதில்மேலேறிக் கூட்
டங்காட்டி, நமது மச்ச நாட்டுக்கோர் மறுவு
றாதபடி கவனிப்பாய் இருங்களென்று சொ
ல்லினள்.

அவளுரைத்த வார்த்தையைக்கேட்ட உத்
தரகுமாரன் நெருப்பில் விழுந்த புழுப்போல்
துடித்துப் பெருமூச்சுவிட்டு, பெற்ற தாயை
வணங்கி, அம்மா! நானிருக்க நீயென்னசொன்
னாய்? ஓ! ஓ! ஓ! நீ யிப்போதுரைத்த மொழி
யானது மிகவும் நன்றாயிருந்ததென்று வெகு
ண்டு நகைத்து, ஐயையோ! என்னைக் கொல்ல
மாட்டாமற் புல்லியமொழி சொல்லினையே?
உனது வயிற்றிற்பிறந்து சகலகலைகளுமறிந்து
செல்வச் சிறுவனாகயிருந்து செழித்து அமுத
ருந்தியவென்னை மன்னனுக்குப் பிறந்த மைந்
தர்களிற் கடைசியிற் பிறந்த மகனென்னப் பூரி
த்து ஆதரித்துவந்த அன்னையாகிய நீ என்னை
அருமையாக இதுவரையில் வளர்த்தது.
சத்துருக்களாற் பகைவந்து நேர்ந்தபோது
பெண்கள்கூடிச் சண்டைசெய்து தாங்குவதற்
குத்தானோ? இந்த ஸ்திரீகளால் மச்ச நாட்டு
க்குவந்த வருத்த நீங்கிப்போமானால் நானுனக்
குப் பிள்ளையென்றிருந்து பிரயோஜனமெ
ன்ன? எனக்கு வீரனென்னு மேம்பாடென்ன?
நான் கற்ற வித்தைகளினாற் பயனென்ன? நா
னொருவனிருக்கிறேனென்று சற்று மதியாது
பயனற்ற வார்த்தைகளைச் சொல்லினையே
தாயே! நானந்த சத்துருக்களை ஜெயிக்கமாட்
டேனென் றெண்ணினையாக்கும். சத்திக்குஞ்
சத்த சமுத்திரம்போற் படை எடுத்துவந்து
நமது பசுநிரைகளைக் கவர்ந்த பகைவருக்கெ
திரில், நானொருவனு முனைந்து முழுப்போர்
புரிந்து இமை கொட்டுமுன்ன மீளத்தோட
வாட்டி, விஜயக்கொடி நாட்டி, ஜெயபேரி
யடித்து, யாவரும் புகழ்ந்து மெச்சும்படி
திரும்பி வந்து உன் பொன்னடியைப் பூசிக்
கின்றேனம்மா! ஆனால் அந்தப் போர்முகத்
திற் காலமறிந்து, சமயந்தெரிந்து, மனக்
கருத்துணர்ந்து, முகக்குறிப் போர்ந்து, எதி
ரியினெண்ணங் கண்டு, எனது தேர்விடுக்கத்
தக்கவனாகவும், எனது மனதுக்கொத்தவனாக
வும், ஓர் சாரதி கிடைப்பானாகில் யாரென்னை
வெல்ல வல்லவர்கள்? அம்மணி! அப்படிப்
பட்ட சாரதியொருவன் இல்லாக்குறையினால்
நீ உரைத்தபேதமைச்சொல்லுக்குப் பின்னிட்
டுத் தவிக்கிறேன். இப்போது வந்தெதிர்த்
திரா நின்ற கர்னராஜன் - வீஷ்மாச்சாரி-கிரு
பாச்சாரி - துரோணாச்சாரி - அரவக்கொடி
படைத்த துரியோதனன் இவர்களியாவரும்
புறங் கொடுத்தோடப் போராடி, அம்புலிக்
குலத்தில் அவதரித்திரா நின்ற மகா வீரசிகா
மணியாகிய அருச்சுனன் கூட அதிசயிக்கும்
படியாக ஜெயித்து, நமது மாட்டு மந்தையை
மீட்டுக் காட்டுக் கோட்டிவிட்டு ஒரு கடிகை
நேரத்தில் இந் நாட்டில்வந்து அடிவைப்
பேன். அம்மா! இதைக்குறித்து வேறொன்றும்
யோசிக்கவேண்டாம். என்று உத்தர குமாரன்
சொல்ல, அதைக்கேட்ட சுதர்க்கணையானவள்
அவனைக் கட்டியணைத்து இதனைப் பேசுவதா
யினள்.

என் அப்பனே! நீ இப்போதுரைத்த
தெல்லாஞ்சரிதான். உன்னிஷ்டப்படிதேரைச்
செலுத்தத் தக்கவல்லவனை நானெங்கே கண்டு
தேடுவேன்? உனக்குச் சாரதி தேடுதற்கு முன்
னமே எதிரிகள் வந்து கோட்டையைக் கைக்
கொண்டுபோவார்களே என்று சொல்லித் தாயு
மகனு மேக்கமுறுஞ் சமயத்தில், இக்கருத்தைப்
பக்கத்தினின்று கேட்டிருந்த பணிப்பெண்
ணானவள் உத்தரனுரைத்த உறுதிச்சொல்லை
யும், அருச்சுனனைப் புகழ்ந்துபேசிய அன்
னையும் தன் சித்தத்திற் குறித்து, சற்று நிதா
னித்து, சித்திரவிற்கொண்டு, சிவபெருமானைப்
புடைத்து பாசுபதாஸ்திரம்பெற்ற தனஞ்சய
னாகிய பேடி யிருக்கும் நாடகசாலையிற் புகுந்
தாள். அப்போது மிக்க அவசரமாக வந்த
விரதசாரணியின் அக்கறையையும், முகக்
குறிப்பையும், பிரகநளையாகிய பேடிகண்டு ஓடி
வந்து, தங்களுக்குள் அமைத்துக்கொண்ட
சைகையினால் தனித்துச் சென்று இத்தனை
விரைவோடு இங்கு வந்த காரியமென்ன என்
றான். அதற்கவள், ஐயா! சில கோபாலர்கள்

வந்து உத்தர குமாரனைக்கண்டு, தெற்குதிசையில் திரிகர்த்தனை அனுப்பிவிட்டுத் திரண்ட சேனையுடன் வடதிசையிற் புகுந்து மாடுமடக்கினன் துரியோதனனென்று கூறினார்கள். அந்த மொழியைக் கேட்ட சுதக்ஷணாதேவி சிந்தை நொந்து, அருகிருந்த தாதியர்களை யழைத்து, விராடராஜன் வருகிறபரியந்தங் கோட்டை மதில்மேற் கூட்டங்காட்டி நாட்டைக் காருங்களென்று நவின்றாள். அப்பேச்சைக் கேட்ட உத்தரகுமாரன் மனம்பொறாமல் மாதரை வெறுத்து தனது வீரப்பிரதாப வெற்றியைப் பேசி, தன் மனதுக்கிசைந்தவனிருப்பாகில், தனஞ்செயன் கொண்டாடச் சண்டைபோடுவேன். பகைவரைச் சாடுவேன். க்ஷத்திரியத் திறத்தைச் சாதிப்பேன் என்று சஞ்சலப்படுகின்றானென்று சொன்னாள். அம்மொழி கேட்ட விவேகத் திறவானாகிய பேடி ஆத்திரப்படாமல், தாங்கள் நடத்தவேண்டிய அக்ஞாதவாசத் தவணை நாளைக் கணக்குப் பார்த்து ஊர்வசியின் சாபமுற்ற ஒருவருடத் தொகையோடு கால பலமுங் கண்டறிந்து கொண்டு, வெளிப்படுங் காலம் இதுதானென்று மிக மகிழ்ச்சியுடன் திரௌபதியைப் பார்த்து, ஓ பெண்ணரசியே! இவ்வளவு தூரம் வந்து என் காதிலேற்றிய வீரரசமானது விருதாவாய்ப் போகாமல், எப்படியாவது சுதர்க்கணைக்கும் உத்தரனுக்குந் தெரியப்படுத்தி, சாரதி தொழிலுக்கு என்னை இசைவிப்பது உன் கடமை என்று ஒருதரத்திற் கொன்பது தரமாகச் சொல்லி வேண்டினன்.

### விரதசாரணி பேடியை உத்தரனுக்குச் சாரதியா யழைத்தல்

அவையனைத்துங்கேட்ட வண்ணப்பெண்பாவை அவ்வாறே செய்விக்கிறேனென்று சொல்லி விடைபெற்று வந்து, நெருங்கித் திணிந்த தனமும், சுருங்கிக் கனிந்த மனமும், துவண்ட யிடையும், சிறந்த நடையுமுடைய உத்தரை குமாரனுக்குச் சங்கதி யாவுந் தெரிவித்து அவளை தன்னோடழைத்துக் கொண்டு சென்று, விராடன் புத்திரனாகிய வீரக்கண்டை தரித்த அவ் வுத்தரகுமாரனைக் கண்டு, ஐயா! நானொரு நன்மை சொல்லுகிறேன் ஐயமில்லாமல் அங்கீகரியும். வையமுழுதும் உம்மை வாழ்த்தும். பொய்யிலாப் புகழணி பூணலாம். இப்போது நேரிட்டிருக்கின்ற துஷ்டரை வெல்லுவதற்கு உமக்கிஷ்டமிருந்தால், திருத்தமாகிய தேரைப் பொருத்தமாகச் செலுத்துஞ் சாரதி யில்லையென்று சங்கடப்படவேண்டாம். இந்த உத்தரை நாயகியாருக்கு நடனத் தொழில் பயிற்றிவராநின்ற பிரகநளை என்னும் பேடிக்கு ஒப்பாகிய சாரதி எப் புவியிலு மில்லை. அவள் எப்படிப்பட்டவளென்றால், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் தங்கையான சுபத்திராதேவியைத் திருமண முடித்த அர்ச்சுனன் காண்டாவனத்தை எரித்த காலத்தில் அவனுக்கு அக்கினிதேவன் கொடுத்த அழிவில்லா இரதத்தைச் செலுத்தி யாவருந் துதிக்கத் தேவருங் களிக்க அடுபோர் புரிந்து ஜெயம்பெற் றிருக்கின்றாள். நான் பாண்டவர்க்குரிய பத்தினியிடத்திருந்த நாளையில் அந்தப் பேடியின் திறத்தை அறிவேன். மெத்த மகிமை பெற்றவள். வீரப்பிரதாபமுற்றவள். மேலும், நல்லவள். என்பேச்சை நம்பி யோசித்துப் பாரும் என்று விரதசாரணி சொல்லவும், உத்தரகுமாரனுக் குடன்பிறப்பாளாகிய உத்தரையானவள் அலர்ந்த செந்தாமரைக்கு ஒப்பாகிய தமயன் முகத்தைத் தயவுடன் நோக்கி, ஓ அண்ணா! இந்தமாலினி சொன்ன வாக்கியம் ஒருக்காலும் பிசகாது. ஒரு நாள் பரதசாஸ்திரத்தைக் குறித்து நானும் அந்தப் பேடியும் பேசிக்கொண் டிருக்கும்போது, சாரதி தொழிற்குரிய சாஸ்திரப் பேச்சும் வந்தது. அந்த விஷயங்கள் யாவையுங் கிரமமாகப் பேடி பிரசங்கித்து என் சித்தம் பிரமிக்கச் செய்து, தேர்விடுந் திறமெல்லாந் தனக்குத் திட்டமாய்த் தெரியுமென்று தன் உண்மையைச் செப்பி யிருக்கின்றாள். அதனால், அந்தப் பேடியை ஒப்புக்கொள்ளும்படியாக நானும் விரும்புகிறேன் என்று தங்கை பேசவும், இவ்விருவர் பேச்சையுங் கேட்ட உத்தரகுமாரன் கலீரென நகைத்து, பளா! பளா! நல்ல வார்த்தை சொன்னீர்கள். கேடில்லாக் கீர்த்தியையுடையவர்கள் பேடியையுஞ் சாரதியாகப் பெறுவார்களோ? ஆணும் பெண்ணுமல்லாத அலியைச் சாரதியாகக் கொண்டு போர்க்களத்திற் சென்று சத்துருக்களை வென்று ஜெயம் பெற்றாலும், அது நிலை நின்று புகழாமோ? என் பெருமைக் கழகாமோ? பேடி முகத்தில் விழித்துவிட்டு ஒரு வேலைக்குப் போனாலும் அக்காரியங் கெடுதலாவ தன்றி, நமக்குண்டாகிய ஆண்மையும், அறிவும், புகழ்ச்சியும், மகிழ்ச்சியும் பொருளாகாமற் போய் விடுமே. அடடா! இப்பேர்ப்பட்ட அலிகளது முகாலம்பனமும் பண்ணப்படாதே; அந்தோ!

பேதமைப் புத்தியாற் பேச வந்தீர்களே!
போங்கள் என்று பொருமி யுரைத்தான்.

இப்படி அறியாதவன் கொண்ட ஆத்தி
ரத்தைக் கண்ட சைரந்திரியென்னுந் திரௌ
பதா தேவியானவள் மீண்டுமவனைப் பார்த்து,
ஓ விராடராஜ தனயனே! நான் சொன்னவ
ளைப் பேடியென் றெண்ணிப் பேசாதீர். அவ
ளுடைய காரியமிப்போது தெரியாது. இனி
மேல் தெரியப் போகின்றது. அப்பொழுது
என்னை நீர் எப்போதுங் கொண்டாடப் போ
கின்றீர். ஐயனே! அவளை வலவனாகக்கொண்டு
ஜெயம்பெறப்போகிற மேன்மையும், நான்
புகன்ற வாய்மையும், நீர் வசனித்த தூய்மை
யும், இன்னுஞ் சற்றுநேரத்தில் அறியப்
போகின்றீர். வெகுகாலமாய் அவளுடன் கூடி
ஓரிடத்திருந்து பழகி யறிந்தவள் நானாகை
யால், இப்போர்ப்பட்டவள் என்று அவள்
குணங்களை யெல்லாம் எடுத்துச் சொல்லித்
துணிந்தேன். இன்னுஞ் சொல்லுகிறேன்
கேளும். உமக்கு நல்லகாலமிருந்து, அவ் வல்
லவியைச் சாரதியாகக்கொண்டு யுத்தகளத்திற்
புகுவீராகில், வீரமும் பிரபலவெற்றியும் பெற்
றும், பசுமந்தையை மீட்டுக்கொண்டு, சுபகர
மாய்த் திரும்பிவந்து உமது அன்னையாகிய
சுதர்க்கணையைத் தொழுது மகிழ்வீர். அவளுக்
குக் கைவாசியுண்டு. அந்தப் பேடியை விட்டு
நீர் வேறொரு சாரதியைக் கொண்டுபோனா
லும், போர்முனையும் இழிவாகிய அபஜெய
மடைவதற்கு ஐயமேயில்லை. அன்றியும்,சாரதி
எப்போர்ப்பட்டவனா யிருந்தாலுஞ் சாமார்த்
தியனா யிருக்கின்ற உமக்கதனால் தாழ்ச்சி
யென்ன? (வல்லவனுக்குப் புல்லுமாயுதம்)
என்னும் வசனமறியீரோ? (மண் பூனையானா
லும் எலி பிடிப்பதே காரியம்) என்பதை கருத்
தில் வையும். நான் உங்கட்கு விரோதியல்ல.
உங்களுடைய சுக துக்கங்களுக் குடன்பட்ட
வளே! ஓ இளங்களிறே! இனி நான் உமக்குச்
சொல்ல வேண்டியது யாதொன்றுமில்லை
என்று பணிப்பெண் இயம்பினாள். உத்தரை
குமாரத்தியும் அதற்கு ஒத்துப் பேசினாள்.
இவற்றை யெல்லாங் கேட்ட இளஞ்சிங்க
மானவன் சாரதித் தொழிலுக்கு வேறு வழி
யில்லாமல் ஒருவாறு சம்மதித்து, ஒ பெண்ணமா
மகளே! மண் குதிரையை நம்பி ஆற்றிலிறங்
கும் வகையா யிருக்கிறதே; உன் சொல்லை நம்
பினேன். அப்படியே யாகட்டும்; தெய்வச்
செயல் உள்ளபடியே நடக்கட்டும்; அந்தப்
பேடியை அழையுங்கள் பார்ப்போமென்றான்.
இப்படி அவனுடம்பட்டமையைத் தெரிந்து
கொண்ட பத்தரைமாற்றுப் பசும்பொன்னாகிய
பணிப்பெண்ணும் உத்தரை குமாரத்தியும்
ஓரடியாக வோடி, பேடி யுருவந்தாங்கிய
பெருந்தகையைக் கண்டு, அம்மா! வாடிய
மைந்தன் மனதைத் திருப்பினோம். கூடிய
வரையில் உடன்பட்டு உன்னை அழைக்கின்
றான். ஆதலால், நீர் வாருமென் றழைத்தனர்.

அச்சொல்லைக் கேட்டமாத்திரத்தில் பிரக
நளையானவள் இதோ வந்தேன்; இதோ வந்
தேன் என்றெழுந்து, வேகமாக நடந்து,
கையிலணிந்த வளையல்கள் கலகலவென்று
ஒலிக்க, கமலக் கண்ணிலங்கு மதிமுகஞ் சொலி
க்க, ஓரே மூச்சில் வந்து இராஜகுமாரனைக்
கண்டு உபசரித்து நின்றாள். இப்படியாக வந்த
பேடியை இராஜபுத்திரன் பார்த்து, ஓ பேடி!
அஸ்வங்களுடைய சுபாவமறிந்து, எஜமா
னன் கருத்தும், கால சமயமுங் கண்டு, கைத்
திறங் காட்டி, சமயோசிதமாகக் குதிரைகளை
நடாத்திப் போர் முகத்தில் தேர் செலுத்துந்
திறம் உனக்குண்டோ? என்று சிறுவன் கேட்
டனன். அதற்கவள் எதிரில் வணங்கி நின்ற
பேடியானவள், ஓ இளஞ்சிங்கமே! கூலிக்குக்
குற்றுகின்றவர்களை கேளிக்கையாடச் செய்
வதுபோல், நாட்டியங் கற்பிக்கும் அலியாகிய
பேதையை விற்பூட்டிப் பொருதும் போர்
முனையில் தேர்விடச் செய்வது இறமோ?
இராஜ ராஜர்கள் அறியுந் தொழிலை நான்
அறியத்தக்கவளோ? ஆகிலும், அந்தச் சார
தித் தொழிலென்ன சாமானியமோ? ஓ அழகு-
நகை - குணம் - புகழ் - மெய்ம்மை - வண்மை
முதலிய யாவுமுள்ள மச்சராஜன் மகனே!
ஆணும் பெண்ணுமல்லாத அலிவியான
யான் உமதுள்ளக் குறிப்புங் குதிரைகளின்
குணாதிசயங்களு முணர்ந்து தேர்விடத்தக்க
திறமுடையவளாவேனோ? என்று சிரமசை
த்து, கரநெரித்து, குறுநகைகொண்டு சொன்
னாள். அவள் காட்டிய புன்னகையின் குறிப்
பை மன்னன் மகனறிந்து, இவளிடத்தில்
ஏதோ கொஞ்சம் வித்தையின் இறுமாப்பிருக்
கின்றதென்றோர்ந்து, அடி பேடி! என் மன
தொத்தசாரதி மாண்டுபோய் விட்டான். அது
முதல் என் பராக்கிரமமும் ஓய்ந்துபோய் விட்
டது. இனி யெனக்குத் தக்க சாரதி யெப்படி
அகப்படுவானென் றேக்கமுற்றிருந்தேன். இப்
போது உன்னுடைய திறமையும், தெளிவும்

நெளிவும் அநுபோகசாலிகள் சொல்லத் தெரிந்துகொண்டேன். தேர்விடுந் தொழிலுக்கு உன்னையே விரும்பியிருக்கிறேன். சுத்த வீரனான ராஜன் எத்தனை பலசாலியா யிருந்தாலும் யுத்தஞ்செய்தல், ஓய்ந்திருத்தல், உடன் சென்றெதிர்த்தல், திரும்பியோடல், போர் மறுத்தல், பிராணனிறத்தல் முதலாகிய விவைகட்கெல்லாம் சமயம் - காலம் - இடம் - திடம் இவையறிந்து தேர்செலுத்துஞ்சாரதி தீர்க்காலோசனை செய்யாவிடில், எஜமானனுக்கு இன்பமென்பதெவ்வளவும் இராது. அன்றியும், அரசன் வெற்றிமாலையணிவதும், பெரும் புகழ் பெறுவதும், பெரிய காரியங்களை முடிப்பதும், எதிரிகளை ஓடவிட்டடிப்பதும் இவைகளியாவுஞ் சாரதியின் பேருதவியினாலுண்டாகத் தக்கனவே யன்றி வேறில்லை. ஆதலால், நான் விஸ்திரித்து சொல்லவேண்டுவதில்லை. நாம் இப்போது செல்லுகின்ற போர் முகத்தில் தேர்செலுத்தும் உன்றிறமையை நான் கண்டு கொண்டால் அளவுபடாத என் சம்பத்துக்கள் யாவும் உனக்கே சொந்தமென்று ஐயமில்லாமற் கைமேற்கொண்டு, இவ்வையகம் வாழ்த்த மகிழ்வுற்றுய்யலாம். ஓ வாசனை தங்கிய கருங்குழலோங்கிய பேடி! என்னை நீ வேறாக நினையாதே; உன் மனம்போல் நடந்து கொள்ளுவேன். நமது விராடபுரத்து வடதிசையில் வந்து வளைந்திருக்கின்ற சத்துருக்களோடெதிர்த்து, சண்டை விளைத்து ஜெயித்து மாட்டு மந்தையை மடக்கிவருவோம். சீக்கிரம் தேர் கொண்டுவா போவென்று கட்டளையிட்டான்.

## உத்தரகுமாரன் யுத்தகோலங்கொண்டு ரதமேறிச் சென்று உத்தரதிசை யடைதல்

இவ்வாறு உத்தரனுரைத்ததை கேட்ட பிரகநளையானவள் அவனைபார்த்து, ஓ இளங் கேசரியே! நான் பலவகைச் சாதுரியமுள்ள இச்சாரதி தொழிலுக்கு வல்லமையற்றவளாயினும் இராஜலக்ஷண மமைந்த உமது கருணைக்கண்ணின் கடாட்ச வீட்சண்ணியத்தினாலும் மேன்மை தங்கிய விராட பூபதியின் சத்திய நெறியினாலும், பொன்னாட்டினர் புகழ, இந்நாட்டினர் மகிழ என்னாற் கூடியமட்டுந் தேர்விடுகிறேன். நீர் யாதொன்றுக்கும் மயங்காமல் யுத்தகோலங் கொள்ளும் என்று பேடி கூறிய தீர்மொழியை உத்தரகுமாரன் யோசித்து நிதானித்து, தேர்விடுந் திறம் இவனிடத்தில் இல்லாவிடில் நமது பணிமாது இத்தனை துணிவாகப்பகர்வாளா ஏதோ கொஞ்சம் பசையிருக்கிறது. இனி நமக்குப் பயமில்லை என்று மனங் களிகூர்ந்து யுத்தகோலச் சாலையில் நுழைந்து குத்தினிசல்லடந் தொடுத்து தட்டி வரிந்து அரைப்பட்டி கைகட்டி, வச்சிர கவசம்-உருக்குக்கவசம்-இருப்புக்கவசம் இவைகளைத்தரித்து, பாஹுபந்துங்கடகங்கணமுமணிந்து, வாகுவலயம் புனைந்து, அங்கைமுடி-புறங்கைமுடி-வீரற்சாடு-கரச்சாடு - முன்கைப்பூண்-பின்கைப்பூண்-முழங்கைத் தோற்கட்டு-இருப்புச்சீரா-மார்புறை இவைகளைப் பூண்டு குண்டலம் பரித்து, திரிபுண்டரந் தரித்து, செந்தூர திலகமிட்டு, முத்தாரம் - இரத்தினாரம்-மோகனாரம் இவை முதலியனவணிந்து, மாணிக்கப்பதக்கம்-வயிரபதக்கம்-தும்பிப்பதக்கம்-துத்திப்பதக்கம்-சரப்பணி - கண்டசரம் - உத்தரசஞ்சம்-மோகனமாலை இவை முதலிய ஆபரணங்களும், தொடுத்தமாலை - கோத்தமாலை - தும்பைமாலை - வெட்சிமாலை முதலிய மலர் மாலைகளுந் தரித்து, சாந்து-சவ்வாது பூசி, நவமணிபதித்த ஜோதிமா மகுடஞ் சிரமேல் தாங்கி, வீரபட்டங்கட்டி, வாளும் வேலும் மருங்கிற் சேர்த்து உச்சிதமான பச்சைவில்லேந்தி அம்பறாத்தூணி யழகுடனிறுக்கி, காலில் வீரகண்டாமணி தொடுத்து, போரலங்கிர்தம் யாவும் புகழ்பெறக்கொண்டு யுத்தசன்னத்தனாகத் தோன்றித் தலைவாசலிற் சென்று நின்றான்.

இத்தன்மையான யுத்தகோலங் கொண்ட உத்தரகுமாரனை பெற்ற தாயாகிய சுதர்க்கணையானவள் கண்ணாரக்கண்டு, கருத்துள் மகிழ்ந்து, ஒன்றுந் தோன்றாமல் உள்ளங்குளிர்ந்து திருஷ்டிபடப் போகின்றதென்று சிந்திக்கும் வேளையில், மைந்தனோடிவந்து சாஷ்டாங்கமாகப் பணிந்து வணங்கினான். சேயானவன் தொழுத காட்சியைத் தாயானவள் பார்த்து, ஆசையாகத் தழுவி முத்தமிட்டு அன்பினாலுருகி, ஆநந்தம் பெருகி, அடா என் கண்மணியே! நீ தேர்மேற் சிறந்து போர்முனை புகுந்து, தீரசக்தியினருளால் வீரவேந்தரை வென்று வெற்றி மேற்கொண்டு பசுக்களுடன் மீண்டு பட்டினம் வரக்கட்வா யென்று வாழ்த்தினாள். அதற்குள்ளே பேடியானவள் நேர் பார்ந்து குதிரைப்பந்தியை ஆராய்ந்து, சுழி-சுத்தம்-ஜாதி-குணம்-தேசம் - வாசம் - இராப்பிறவி-பகற்பிறவி-மானம்-வயிரம்-தீரம்-திடம் ரோஷம்-வேகம் இவை முதலியவற்றிற் சிற

ந்த சுபகரமுள்ள குதிரைகளை நாடிப்பிடித்து ரதத்திற்பூட்டி, அம்பு முதலிய ஆயுத வகைகளும் வைத்து, சுற்றிலும் பத்திபத்தியாக வெற்றிக்கொடி நாட்டி ஆசாரவாசலிற் கொண்டுவந்து அத்தேரை நிறுத்தினாள். அந்தத் தருணத்தில் உத்தரன் தங்கையாகிய உத்தர குமாரத்தி தன் தமயனுக்கு முத்து இரத்தின முதலிய நவமணிகளாலமைந்த ஆலஞ்சுற்றி, வெண்ணீறளித்து, விநோதமங்கள் வாழ்த்தலினாற்போற்றி, அருமையான என் அண்ணாவே! தேவரீர் யுத்தமுகத்திற் சென்று, சத்துருக்களை வென்று, அவர்கள் சிரத்திற் கட்டிய சித்திர வஸ்திர விருதுத்துணிகள் எல்லாவற்றையுங் கொண்டுவந்து எனக்குக் கொடும் நான் விளையாடும் பொம்மைகட்குக் கட்டவேண்டுமென்றாள். இளையவள் வார்த்தையைக் கேட்ட ராஜகுமாரன் வளையாத தலையைவளைத்து (அக்காடு வெட்டிப் பருத்தி விதைக்குந் தருணத்தில் அப்பா எனக்கொரு துப்பட்டி தாரும்) என்னும் பழமொழியை ஒத்திருக்கின்றதே, நமது தங்கை மொழியென்று மாறுத்தரஞ் சொல்ல மாட்டாமல் நகைத்துக்கொண்டிருந்தான். அவனுக்கருகிருந்த பேடியானவள், ஆ! ஆ! ஆ! அம்மா! அவ்வாறே கொண்டுவருவதற் கட்டியென்ன; சாமர்த்தியமுள்ள உன், தமயனுக்கு இது ஒருபெரிதோ. அவரவர்களுடைய நிலைத் தலைபெற்ற நீண்முடியை யெல்லாம் நேர்பட்ட வரையிலுருட்ட போகும்போது அவரவர் தலைத்துணிகளை கொண்டு ஜெயம்பெற்று வருவதும் அரிதோ. நீர் சந்தேகப்படவேண்டாம் என்று உறுதியாகச்சொல்லி, உத்தரனை நோக்கி சகுனங்களெல்லாஞ் சரியாயிருக்கின்றன. இதுவே நல்ல வேளையாயிருப்பதால், இரதத்தின்மீ தேறுமென்றாள். அவன் அப்படியே யாகட்டுமென்று, அன்னை முதலிய பெரியோர் யாவரையும் வணங்கி விடைபெற்று, பொன்மலைபோன்ற தேரிற் பொருந்திய போர்ச்சிங்கம்போற் பூரித்திருந்தான்.

அப்பொழுது சுதர்க்கணையானவள் தன் புத்திரனது முன்னழகையும் பின்னழகையும் பார்த்து பொங்கிப் பெருமூச்சுவிட்டு, ஒரு பக்ஷத்திற் பூரிப்பும், மற்றொரு பக்ஷத்தில் அறியாச்சிறுவன் யுத்தத்திற்குசெல்லுகிறானே யென்ற ஏக்கமுங் கொண்டவளாகி நின்றாள். அவ்வேளையில் அரண்மனைப் பெண்களியாவருங் கற்பூரதீப நீராஞ்சனமெடுத்து, தங்கள் தங்கள் இஷ்ட தெய்வங்களைப் பிரார்த்தித்து, பேடியை வாழ்த்தி, எங்கள் பிள்ளை பத்திரம் பத்திரம் என்று சொல்லி நின்றார்கள். பேடியும் அவர்களைப் பார்த்து, நாங்கள் போய்வருகிறோமென்று சொல்லி, விடைபெற்றுக்கொண்டு குதிரைகளின் கலினக்கயிற்றை இடது கையாற் பிடித்து, குறடாவை வலது கரத்தில் தாங்கித் தேரின்மீது ஒருகால் ஊன்றி, முன்னமே புரவிகள் கதி கவனம் தாவல் என்று சொல்லப்பட்ட வேகத்தை யுடையனவாய்ப் பூமி கிடுகிடென்றதிரவும், தும்புகள் மேலெழுந்து ஆகாயத்தைக் கொள்ளவும், அதி வேகமாகச் சென்றதுகள். அந்த விராடபுரத்திலுள்ள பிரம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திராதிகளில், ஆண்களும் பெண்களும் அணியணியாக நின்று, எங்கள் இளவரசராகிய உத்தர குமாரனுக்கு மங்களமுண்டாகுக வென்று மனதார வாழ்த்தி, தங்கள் தங்கள் வழிபடு கடவுளைத் தொழுது துதித்தார்கள். இப்படியிருக்க, கண்மூடிக்கண் திறப்பதற்கு முன்னமே வானுற நிமிர்ந்து வளைந்தமதில் சூழ்ந்த ராஜவீதியையும், மற்றுமுள்ள பற்பல வீதிகளையுந் தாண்டி ஒற்றை சக்கரமும் சப்தமாவென்னுங் குதிரையுமுடைய தேர்மேற் பிரகாசிக்குஞ் செங்கதிர்போற் சங்கிராம ஜயவுத்தண்ட தீரனாகிய உத்தரகுமாரன் உத்தர திசைக்கு வந்துவிட்டான்.

### குருசேனையைக்கண்டஞ்சிய உத்தரகுமாரனுக்கும் பிரகநளைக்கும் வாது

இந்தப் பிரகாரம் வடதிசையை நோக்கி அதிவேகமாக வருகின்ற இரதத்தில் இளஞ்சிங்கம்போன்ற அவ்வுத்தர குமாரன் ஸ்ரீராமனைப்போ லிருந்துகொண்டு அக் குபேரதிசையை நோக்கிக் குறிக்குங் காலையில், வானமெங்கும் இடமறச் செறிந்து நிறைந்த நக்ஷத்திரங்கள் போலும், அளவிடுதற்கரிய கடற்கரையின் கண்ணுள்ள மணல்போலும் திரண்டு பரவிய துரியோதனன் சேனைகள் தன் கண்களுக்கெட்டிய தூரம் வெகுவாய் விரிந்து நிறைந்திருப்பதைக் கண்டு, ஆ! ஹா! ஹா! அடி பேடி! பொறு, பொறு, பொறு, பொறு, அவசரப்படாதே! நீ விடுந்தேர் விறுவிறென்றோடுகிறது. ஐயோ! என் தலை கிறுகிறென்று சுற்றுகிறது. பூமி நெறநெறென்று நெரிகிறது. என் குலையோ நடுங்குகிறது. குடல் குழம்புகிறது. எதிரில் நிற்குஞ் சேனைகளைப் பார்த்தால் கெற்பங் கலங்குகிறது. அடிபாவி! தேரைச் சற்றே நிறுத்தடி! நமக்கெதிராகிய படைகளைக் கண்ணாரப் பாரடி! யானை எத்தனை கோடியோ?

குதிரை எத்தனையெத்தனை கோடியோ? சேனை எத்தனையெத்தனை கோடியோ? தேர்கள் எத்தனையெத்தனை லக்ஷமோ? நாம் எப்படி கணக்கிடப் போகிறோம்? என்ன செய்வோம்? ஐயையோ!! ஆ பேடி! நீயாகிலும் பார்த்துச் சொல்லடி! என்றேங்கி, உள்ளங் கலங்கி, கைகால்கள் நடுங்கி, கண்களிருண்டு, உடல் பதைத்து, உயிர் துடித்து, நாவறண்டு, முடிசோர்ந்து, 'பிணம்போல் தேர்மேற் சாய்ந்து போனான். இவ்வாறு பிதற்றி முருகக் கடவுளாகிய செவ்வேள்விட்ட வேலாயுதத்தாற் கிழிபட்டு வீழ்ந்த கிரவுஞ்சகிரியைப்போற் சிறிதும் போர்முனை புகுதற்குச் சக்தியில்லாதவனாய்த் தேர்மேற் சாய்ந்த உத்தர குமாரனை பேடி பார்த்து, தன்னிருகையாலுமணைத்து எடுத்து நிறுத்தி, வேர்வை துடைத்து, சோபந்தீரத் தாகமளித்து, ஆளைத் தேற்றி, அவன் முகத்தை நோக்கி, ஏனப்பா இப்படியானாய் என்று அறிவாலுயர்ந்த பேடி சில சொல்லத் தொடங்கினாள்.

ஓ வாளும் வேலுங் கொண்ட விராடன் மைந்தனே! நீ எதிர்நிற்கும் படையைப்பார்த்துப் பயந்தாயோ? ஏன் கலங்கி வீழ்ந்தாய்? இறுமாந்தெதிர்த்த பகைவரை எங்குமில்லாமல் அழித்துவிடுவதொன்று. அல்லது நாமாவது யுத்தகளத்தில் மாள்வதொன்று. இதுவே சுத்த வீரருடைய துணிவு. வேறே யோசிக்கத்தக்க தொன்றுமிலது. இதைவிட யாதேனும் உண்டாயிருக்குமாகில், அதை எனக்குச் சொல். முற்றிலும் வளைத்த சத்துருக்களை வெற்றி பெற்றிபெற்று வருகிறேன் என்று நீ உன் அன்னை முதலிய யாவரிடத்திலும் உரைத்துவிட்டு, இப்போது உத்தரதிசையை நாடி இன்னுஞ் சற்றுநேரமாகவில்லையே; இதற்குள் மறந்துபோனாயோ? நல்லது; கைப்பிடித்த வில்லை வளைத்துக் கடுங்கணைதொடுத்து போர் செய்து அணுவத்தனையேனுங் காயம்பட்டுத் திரும்புவையாகில், அப்பொழுது சிலர் உன்னைக் கிஞ்சித்துச் சூரத்துவமுள்ளவனென்றேனு மதிப்பார்கள். இல்லாவிடில் அதிக இலேசாக எண்ணுவார்கள். சற்றுநேரத்திற்கு முன் நீ வீட்டிற் பேசிவந்த வீர வசனங்களை முற்றிலுமறந்து இப்பொழுது முதுகிட்டோடும் இழிவை யோசிக்குமிடத்திற் குறைந்த பெண்டுகள்கூடக் குலுக்கென்று நகைப்பார்களே? இப்படிப்பட்ட உடம்பும் எடுக்கலாமோ? உன்னை யார்தான் பூசித்துப் புகழ்வார்கள்? ஐயோ! அடா தம்பி! நீபுறப்படும்போது புலிபோற் கெர்ச்சித்து இதோ பார் சத்துருக்களையெல்லாம் அதஞ்செய்து நமது மாடுகளை மடக்கிக்கொண்டு வருகிறேனென்று வாய்ப்பதட்டமாய் உளறினையே; அப்படி மகாவீரன் பேசி வெளிப்பட்ட நீ எதிராளிகள் இருக்குமிடத்தை மிதிக்கு முன்னமே உயிருலைந்து உடல்நடுங்கி திடனழிந்து திகைத்து விட்டையே; உலகமென்ன சொல்லும்? படையைப் பார்த்து பதறிக்கதறி யோடினானென்னும் பழிப்பிற் கிடமாமே; இத்தன்மையாகிய நிந்தனை நேரிட்ட பின்பு உயிரிருந்து என்னலாபம்? மானங்கெட்டுப் பிராணனை வைப்பது மரியாதையோ? நீயே யோசித்துப்பார். பயப்படாதே: தைரியமாய் ரதத்தின்மீது உட்கார். அலைகடற் கொப்பாகிய பெரும்படைகளை வென்று வருவோம்.

அப்பா! இன்னொன்று சொல்லுகிறேன் கேள்: கருங்கற் றூணானது சுமக்கமாட்டாத பெரும்பளுவைத் தாங்கியபொழுதும், பிளந்து முறிந்துபோய் விடுமன்றி, தளர்ந்து வளைந்து தலை சாயமாட்டாது. அதுபோல் அளவிடப்படாத யானை சேனை யடுத்தாலுங் கூடியமட்டுஞ் சண்டை செய்து, தளர்ந்த விடத்து, அந்த போர்க்களத்திலேயே உயிரை யொழித்து விடவேண்டியது. மெலிந்து, வெருண்டு, புறங்கொடுத்தோடுவது வேந்தர்க்குத் தகுதியல்ல. இப்படியாக விளம்பி யிருக்குஞ் சாஸ்திரத்தை நீ விசாரித்த தில்லையோ? இப்பொழுதுதானென்ன ஒன்று முழுகிப் போகவில்லை. போர்முகநிலையுங் கார்முகமுறையுங் கடுங்கணைத்தொகையுங் கற்றிருக்கின்ற நீ பெரியமலையைக் குறியாகக் கொண்டடிப்பது போற் பெருங் கும்பாகிய சேனைகளின் மேரில் மொத்தமாகப் பாணந் தூற்றிவிட்டால் கும்பவிற் கோவிந்தம் போடுவதுபோல் அம்புகள் போய்விழுந்து இன்னாரினியாரென்று பாராமல் யாவரையுங் கொல்லும்; உனக்குத் தகுந்தபடி யானுந் தேரைச் செலுத்துவேன். அப்போது உனக்கு மேலான கீர்த்தி விளையும் வைத்த குறி தப்பாமல் மாட்டுகிறான் விராடராஜன் மைந்தனென்று, கடல்சூழ்ந்த உலகக் காவலரும் படைகளும் உனக்கெதிர் வாராமல் ஒருமிக்க மொழிவார்கள். அப்பனே! நாம் இப்படியாக அடித்து, வேந்தர் யாவரையும் முடித்து, அவர் கைக்கொண்ட பசுக் கூட்டங்களைப் பிடித்து, ஜெயபேரிகையடித்து, விராட

புரம்போய்ச் சேருவோமாகில்; சந்திரவமிசத்தரசரனைவரும் பந்துவர்க்கத்தார் எல்லோரும் உன்னைப் புகழ்வார்கள். நெடுநாளைக்கு உன் கீர்த்தி நிலைபெற்றிருக்கும். அவ்வா றின்றிப் புறங்காட்டியோடுவையாகில், உலகுள்ளளவுந் தீராத வசையடைவாய். வந்த பகைவரை வென்று திரும்புவோமாகில் வையகமெல்லாங் கைகுவித்துப் போற்றுவதுமன்றி, உன் தந்தையுஞ் சிந்தை மகிழ்ந்து, அளவில்லா ஆநந்தத்தை யடைவான். ஒருவேளை நமதெண்ண முன்னுக்கு வராமல் நாமிறந்து போனால், உடனே புகழுடம்பு பெற்று, வீர சொர்க்க முற்று, அரம்பாஸ்திரீகளின் இளமுலைப்போகந் துய்த்து, கற்பகத்தருவி னீழலில் வீற்றிருந்து வாழலாம். இரண்டு விதத்திலும் இன்பம் நமக்குண்டாம்.

ஓ இளங்கன்றே! பேடியா யிருப்பவரை பேடி யென்று யேசுவது பெருமையன்று. பெரும்போர் புரிவேனென்று வந்து, பேச்சு தடுமாறிச் சோர்ந்து படையைக் கண்டு பயந்து, ஓட வழிபார்க்கும் ஒருவனையே பேடி யென்று உயர்ந்தோ ருரைப்பார்கள். (சொற் சோர்வு படேல் சோம்பித்திரியேல்) என்னும் வாக்கியங்களை விற்போருடைய வேந்தர் மறவார்கள். கலகத்திற் சென்று கல்நாட்டர் நின்று, உயிரழிந்த வீரர்களின்து கதையின் திறம் உணர்ந்திலையோ? என்று பற்பல வகையினாலும் உத்தரகுமாரனைத் தேற்றி, கலவரத்தை மாற்றி, கட்டுரையாகிய வீர தர்மங்களாற் கரைத்தாள் பேடியானவள். இப்படிக் கெல்லா மெடுத்துக் காட்டியும் பேடியின் கருத்திற் கிணங்காமல் தேரோடும் வீதியிற் சேரோடுஞ் சிறப்பினையுடைய மச்சநாடன் மைந்தனாகிய உத்தரகுமாரன் விற்பிடிக்க வெருண்டு, பற்கடித்து மருண்டு, கண்ணீர் உகுத்து, கடைவாய் குழைத்து, புருவநெரித்து, நெற்றி வியர்த்துப் பொருமிச் சொல்லுகின்றான்: அடி பேடி! சற்றே உற்றுப்பாரடி! ஆ! குடிகேடி! உனக்குக் கண்ணில்லையோ? அவர்கள் சேனைக் கெண்ணில்லையோ? இப்படையோ டெதிர்ப்பதாரடி? அப்படியே திரும்பிப் போவது சீரடி! அப்பப்பா!! என் கொப்புங் கலங்குகிறதே. குடைகளும் நாற்படைகளும் கருங்கடல்போற் றுலங்குகிறதே. பூமிமுழுதுஞ் சேனைக் காடாகப் பொங்கி நிறைகின்றதே. ஐயோ! சித்தம் பிரமிக்கிறதே. இந்தக் கும்பலில் நானொருவனுஞ் சென்று மீண்டு வருவேனென்பது விந்தைப் பேச்சே; பெற்ற தந்தைக்கும் ஏச்சே; என்மதியுங் கெட்டுப் போச்சே; ஏதேது இனிக் காரியமில்லை.

அடி பேடி! நான் சண்டைக்குப் போனால் தப்பாமற் சாவேன். இதற்குச் சந்தேகமில்லை. ஆதலால் சற்றே தயவு செய்து என் கதியை இன்னதென் றறியடி! என் தந்தை தாய்க்கு நான் கடைக்குட்டிப் பிள்ளையடி! இனிப் பெறப்போகின்றோமா வென்று என்னை மிகச் செல்வமாக வளர்த்தார்களே; நானும் என் போலியராகிய சிறுவர்களோடு சேர்ந்து உண்டைவிற் கையிற் பிடித்து விளையாடித் திரிந்து கொண்டிருந்தேனே; என்னைச் சண்டைமுகத்திற் கொண்டு போகாதேயடி! யுத்தஞ் செய்யும்பருவம் எனக்கின்னுமில்லையடி! நான் அறியாத பிள்ளையடி! எனக்கேனிந்தச் சள்ளையடி! ஆ! ஹா! இதென்ன அநியாயம்! கொடையாளியாகிய கர்னன்-வீஷ்மர்-துரோணாச்சாரியர் - கிருபாச்சாரியர் - அஸ்வத்தாமர் மற்றுமுள்ள வீரர் பலருஞ் சேர்ந்து முனைந்த இந்தப் போர்முகத்தில், நான் புகுந்து போராட அறிவேனோ? போடி போ, அடி போடி! ஒருவேளை தெய்வச்செயலுள்ளபடியாகிறதென்று மனோதிடங்கொண்டு சண்டை செய்வோமென்றெண்ணினாலும், தேர்கள் கோடி, யானைகளதற்கிரட்டி, குதிரைகள் வெகுகோடி, பதாதியர் கோடாகோடி. இவையன்றியும், பட்டவர்த்தனரென்ன? மகுடவர்த்தனரென்ன? அதிரதரென்ன? சமரதரென்ன? மகாரதரென்ன? அர்த்தரதரென்ன? இவர்களை யெல்லாம் படைத்துணையாகக் கொண்டுவந்து நமது பசுமந்தைகளைக் கவர்ந்த வணங்காமுடியோனுக்கெதிரில், வணங்கு முடிபெற்ற பேடியாகிய உன்னை உதவியாக நம்பிப்போய்ச் சண்டை தொடங்கலாமோ? அடி பேடி! காலபலமும், தன்பலமும், மாற்றான்பலமும், துணைப்பலமும் ஆகிய இவைகளை ஆராய்ந்துணராத அரசனது முயற்சிகளனைத்தும் பயன்படாதென்று பெரியோர் சொல்வார்கள். நானோ மெத்தவுஞ் சிறியவன்; அதிலுஞ் சொற்ப பலமுள்ளவன்; இத்தன்மையனாகிய வென்னை அதிரதரிற் சிறந்து, பின்பலம் விரும்பாமற் போர்முகத்திற் புகுந்து, மதயானைகளைப் பிளந்து, புஜபல ப்ராக்கிரம விக்ரமம்பெறும் போர்விஜய சிங்கம்போன்ற அருச்சுனமகாராஜனென்று என்னை மதித்திருக்கின்றனையோ? ஐயோ! பேதையே! அந்த விஜயன் புரி

யும் போர்க்களத்தில் எழுந்து பறந்துபோகா நின்ற பரமா அணுவுக்கு ஈடாகுவேனோ? அடி பாவி! ஏண்டி வம்பு செய்கிறாய்.

அடி பேடி! யாரெப்படியானாலும், விளைத்தபோர் எப்படிபோனாலும் உனக்கென்ன நயநஷ்டங்கள்? என்னைத்தானே சாரும். நீ ஏன் வீணாய் துள்ளி விழுகிறாய்? ராஜஸ்திரீகளுக்கு ஆடல்பாடல் கற்பித்துப் பத்து நாளைக்கிருந்து வயிறு வளர்த்துப் போகின்ற உனக்கேன் இத்தனை வீம்பு. பிள்ளையருமையறியாத பெருமூடி போடி. இப்பொழுதுதான் புதிதாக வில்வித்தையிற் கைப்பழகிவருகிற நான் நெடுநாளாகக் கற்ற வில்லாளருக்கெதிர் போய் வில் வளைப்பேனாகில், மானங்கெட்டு ஈனம்பட்டு மாள்வேனென்பதற்குச் சந்தேகமென்ன? ஐயோ! உன்னால் என்னாவி ஒழிய வந்திருக்கிறதே என்று கண் சிவந்து, கடுங்கோபங்கொண்டு, ஓ பிரகநளை யென்னும் அலியே! எங்கள் பசுமந்தைகளை யெல்லாம் பகைவர் கொண்டுபோனாலும், மச்சநாடு முழுமையும் நாங்கள் இழந்தாலும், குடி-படை-அமைச்சு-நிதி-நிக்ஷேபம் இவைகள் குறைந் தொழிந்தாலும், முடிமுதற் செங்கோல் முறை யழிந்தாலும், இதனால் வரும் பெரும் பழியெனக் கடுத்தாலும், எங்களைத் தெய்வம் நடுத்தெருவில் விடுத்தாலும், உனக்கொன்றுமில்லை யல்லவா? என்னைத் தடுத்துரைக்க வேண்டிய அவசியம் உனக்கென்ன? நான் இப்போது சொல்லுகின்ற சொற்படி வாயை மூடிக்கொண்டு, என் பேச்சுக்கெதிர்பேச்சு பேசாமல், அப்படி யிப்படி போகாமல் ஊரை பார்க்கத் தேரைத் திருப்பு. அடி மாதரசி! உனக்குக் கோடி புண்ணியமுண்டு. தயை செய்து என் தாய் முகத்தில் விழுக்கும்படி பண். உனக்கு வேண்டியவை யெல்லாம் தருகிறேன். நான் சொன்ன சொல் மாறேன். சண்டை செய்யப் போகிறேனென்று என்னுயிருள்ள வரையிலும் இனிப் பதறிக் கூறேன் என்று கூகூவெனக் கதறிப் பேசிய சிறுவன் மொழியைக் காண்டீபதரன் கேட்டு, அந்தோ! ஏது? இனிக் காரியமில்லை. இவன் கருத்தைப் பார்க்குமிடத்துத் தேரைவிட்டுக் குதித்துப் புறமிட் டோடுவான்போலும் இருக்கிறது என்றெண்ணி, மறுபடியும் மனவெறுப்பில்லாமல் மன்னவன் மகனை மகிழ்ந்து நோக்கி, இதனைச் சொல்லுகிறான்:

அப்பா க்ஷத்திரிய குலாதிபனே! இப்பொழுது நிரை நிரையாக வந்தடர்ந்த பெரும் சேனைகளை ஒரு கணையால் மாளப்பண்ணி திரிலோகத்திலும் ஏகச் சக்ராதிபத்தியமும் ஆக்கிஞா சக்கரமும் செல்லும்படி செய்து உன் சிந்தைமகிழ நிமிஷத்தில் திரும்பி வந்துவிடுவோம். நீ யாதொன்றுக்கும் பயப்படாதே? உன்னை நம்பிவந்த யென்னை நீ திடமாக நம்பு. இந்தப் பகைவருடைய வாளாயுதம்-வேலாயுதம் - பாலாயுதம் - குந்தாயுதம்-சக்ராயுதம்-தோமராயுதம் முதலிய ஆயுதங்களெல்லாம், நெல்லிற் பதர்போல் நெருப்பெழப் புடைத்துச் சேனை-யானைகளைத் துடைத்து, ஜெயம்படைத்து மேன்மையாகத் திரும்புவதைவிட்டு, இதுவரையிலும் உண்டாயிருந்த கீர்த்தியைப் போக்கி, விராடராஜன் பெற்ற பிரதாபத்தையும் பாழாக்கி, எதிரிகளுக் கஞ்சி ஓடினானென்னும் ஏளனம் உண்டாக்கி, என் புகழை மண்ணாக்கிப்போட நினைப்பது க்ஷத்திரிய புத்திரனுக்குத் தகுதியோ? உன் தாயாகிய சுதக்ஷணா தேவியும், உனக்கிளையவளாகிய உத்தரையும், உன் பந்து மித்திர வர்க்கங்களும் உன்னிடம் வந்து வணங்கும் பணிப்பெண்களும், பட்டினத்திலுண்டாகிய வெகு ஜனங்களும், நமது இளவரசனாகிய உத்தர குமாரன் யுத்தத்திற்குப் போயிருக்கின்றான்; சத்துருவைவென்று அவர்கள் கைக்கொண்ட பசுமந்தைகளைத் திருப்பி வருவான் என்று மேகத்துளியை விரும்பிய பயிர்போல் வாட்டமுற்று வாய்திறந்து நீ வரும் வழியைப் பார்த்திருப்பார்களே; அப்பேர்ப்பட்டவர்கட்கெதிரில் நீ எப்படி போய் விழிப்பாய்? என்ன சொல் இசைப்பாய்? ஐயோ! இந்த அவமானத்தைப் பார்க்கிலும் நான் சொல்வது கசப்பா? நினைக்க நினைக்க எனக்கு விசனம் விளைக்கிறதே; நான் பேடியானபோதிலும் இதுவரையிக்கும் தேர் விடுத்த போர்முகத்தில் யார் பிழைத்தார்கள். கண்ட துண்டம் படக்கொன்று கைகண்டதன்றி சண்டைக்குப் பயந்தோடிய சங்கதியைப் பார்த்து மறியேன்; கதைகளிற் கேட்டுமறியேன்; என்னால் பிசகு வந்ததுமில்லை; என்னை நம்பிய பேருக்கிடர் தந்ததுமில்லை. இப்போதுமென்ன? இதழ்விரிந்த-மலர் சொரிந்த-மணமுறைந்த-வரிநிறைந்த-தொடையணிந்த - படைதிணிந்த பலவான்கள் அடங்கலும் விறுவிறென்று தலை சுழன்று தந்நிலை தெரியாமல் தயங்கும்படி, இரதஞ் செலுத்துகின்ற என் கைசாதுரி

யத்தினால் செல்வமிருந்த உங்கள் பசுமந்தையைத் திருப்பிக்கொள்ளுவோம். திடதைரிய தீரச்சிந்தை சிதையாமல் வா. நான் விடப்போகின்ற தேர்ச் சாகசத்தைப் பார்.

அப்பா அரசிளங்காளையே! ஒருவேளை உனக்கு சத்துருக்களாற் குற்றம் நேரிடுமாகில், உடனே உன்னுயிருக் கென்னுயிரைத் துணையாகக் கொடுக்கிறேன். நீ என்னை நம்பித் தேரிலுட்கார். எத்தனையோ கோடாகோடி சேனைகளென்று இதயங் கலங்காதே? இன்னும் எழுகடற்போல் படையெழுந்து எதிர்த்தாலும், பெரும்பொறைக் கடல்போற் பெயர்ந்து வந்தாலும், வரட்டுமென்று உறுதியாய் மனத்துணிவு பெறுவையாகில், தேவர்கள் மதித்துத் துதித்துச் செய்யும் ஆசீர்வசனமும் தீரலட்சுமியின் கருணை கடாட்சமும் பூதலத்தோர் காதலித்துப் புகழும் புகழ்ச்சியும் உனக்குண்டாமென்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. நீ மாத்திரங் குருகுலநாயகன் பேரைக் குறித்து வில்வளைத்துக் குணத்தொனி யெழுப்பு, அத்தொனி எழுமுன்னமே நான் பெருங்காற்றிற் பறக்கு முருங்கைச் சருகுபோலடித்து, வற்சலமந்தையைக் கைப்பிடித்து, க்ஷணப்பொழுதில் உன்னை மச்சதேசத்திற் கொண்டுபோய்விட்டு மறுவேலை பார்க்கிறேன். இன்னாரைக் கொல்லவேண்டும்; இவ்வாறு வெல்லவேண்டும்; இப்படிக்குச் செய்யவேண்டுமென்னும் வருத்தம் உனக்கெவ்வளவும் வேண்டாம். நீயஞ்சாதே; நன்மை தீமைக் குடன்பட்டு யென்னுடன் கூடிவா என்று புத்தியிலுயர்ந்த பேடியானவள் மெத்தவும் மனம் வருந்திச் சொன்னாள். இப்படிக்கெல்லாந் தன்னாற் கூடியமட்டும் உத்திரனுடைய மனதைக் கரைத்துரைத்தும் பெண்யானைகள் போன்ற வெருமைகள் கடைபுரள விழுத்துக் கன்றை நினைந்து விழியப் பொழிகின்ற பாலானது காலில் வீழ்ந்து சென்று மேலாகிய நெற்பயிரிற் பாய, அப்பயிற் கற்பம்போற் றழைத்துக் கதிருடன்சாயும். வளம்பொருந்திய மச்சநாட்டுக்கதிபதியாகிய விராடகுமாரனுக்கு அவ்வார்த்தை யத்தனையிலும் அணுவத்தனையேனுஞ் சித்தம் பொருந்தாமல் யுத்தவீரந் திருந்தாமல், மரணம்போமென்ன வருந்தாமல், வேறொன்றுந் தோன்றாமல், புறமிட்டோட நாணாமல், புகழாபரணம் பூணாமல், போக்கின்பேரிலேயே நோக்கமுள்ளவனாய்ப் பெருமூச்செறிந்து, பேச்சுத்தளர்ந்து, பேடியை நோக்கிப் பேசத்தொடங்கினான்:

அடி மோசக்காரி! நான் எத்தனை விதத்திற் சொன்னாலும், எள்ளத்தனையுந் தெரிந்துகொள்ளச் சக்தியுனக்கில்லை. உன் சுய வித்தியாற் துணிவு பெறுவை யென்றாலோ அதுவுமில்லை. சொற்புத்தியுஞ் சுயபுத்தியுமில்லாத் துஷ்டியைக்கொண்டு சண்டைக்கெப்படிப் போகலாம். இவ்விடத்திற் மேகம்போற் கவிந்த துரியோதனனுடைய சேனைக்கெதிரில் யுத்தஞ் செய்யத்தெரியாத என்னைக் கொண்டுபோய் விட்டு, நீ வெற்றி பெறலாமென் றெண்ணினாயோ? நரிவாலைக்கொண்டு கடலாழம் பார்க்கலாமோ? அதற்கு நான் ஆளல்லவே? என்னைப் பெற்றவனாலும், அவனைப்பெற்ற என் பாட்டனாலும், தனுர்வேதங்கற்ற சாதுரியரானாலும் இந்தப் படையை வெல்லும் வல்லமை எவர்க்குண்டாயிருக்கும்? சொல்லடி பெருமூடி! அடி புத்திகெட்ட பேதையே! உனக்கென்ன தெரியும்? நீயென்ன வறிவாய்? மறுமன்னர்க்குண்டாகிய உறுதியும் போர்மேற் செல்லுந் திறமும், காலபலமுதலிய காரியாகாரியங்களுந் தெரியாத கயவருக்கென்னசொன்னாலுங் கண்டறியமாட்டார்கள். ஐயோ! ஈதென்ன பாவம்! அடி ஏண்டி வீணே பழிசுமந்து கொள்ளுகிறாய்? வேண்டாமடி பாவி! நான் சொல்வதை இன்னுங்கேளடி லோபி! படமுடைய பாம்புக்கொடிபடைத்த பார்த்திபனுடன் சத்தியவிரதசரதநெறிபெற்ற சாந்தரும், வெற்றிவேலேந்திய வேந்தரும், குற்றமற்ற தனுர்வேதங் கற்றவரும், முனைந்து சண்டை செய்யப் போர்முகத்தில் கால்வைக்கமாட்டார்களே; நமனும் எட்டிப்பார்க்க நடுங்கிக் கண்கலங்குவானே; அப்போர்ப்பட்ட அதிரதர்களுக்குமுன் விற்பிடிக்கவறியாச் சிறுவனாகிய என்னைக் கொண்டு போய்விட்டுச் சண்டைபோடென்பது உனக்குத் தகுதியோ? அவர்கட்கெதிரில் நானெப்படி போய் நிற்பேன்? என்னயுத்தம் பண்ணுவேன்? நல்லது; உன் பேச்சை நம்பி நான் எதிர்த்தபோதிலும், தொலை தூரத்திலிருந்து பாணம் விடுப்பேன்; நான் ஒருகணை விடுக்குமுன்னமே அவர்கள் ஓராயிரங்கணை தொடுப்பார்களே; அவர்களெய்யும் அம்பினால் உன் கையும் மெய்யுங்கலங்கி முதற்பலியாய் நீ விழுவையே; உன்னைக்காக்கும் வல்லபம் என்றனக்கில்லையே; அப்பால் நான் செய்வதென்ன? அடி தப்பறைக்காரி! பிற்பாடு என் தேருஞ் சாரதியுங் குதிரையுமழிந்து, வில்லுந் துணிந்து, நானுமிறந்துபோனால் வெற்றி எவர் பக்ஷமாகும்? ஐயோ! ஒருவேளை தெய்வச்செய

லால் தப்பிப்பிழைத்தாலும் துரிதக்கணை ஏவி
துரத்தியடிப்பார்களே; அதனால் துயருழந்து,
துன்பமுற்று, தேகமலக்கழிந்து, கால்நடுங்கி,
கைநடுங்கி, கண்கலங்கி, புண்கள்பட்டு, கருத்
தழிந்து, கீழே விழுந்து, புரண்டெழுந்து,
உள்ளங்கால் சிவக்க உரங்கெட்டோடி, மச்ச
நாட்டிற்போய்ச் சேர்ந்து வாடி வருந்துவது
உனக்கிச்சையோ? அதனாலிகழ்ச்சியோ புகழ்ச்
சியோ நிதானித்துப் பார். ஐயோ! இதை
விட நாமேறி வந்த இரதமுறியாமல் வில்
லழியாமல், குதிரை சாவாமல், நீயு மடிவுறா
மல், நானு மடிபடாமல், ஒரு குறைவுமில்லா
மல் உயிருடன் திரும்பி வீரங்கெடாதவர்
போல் மீண்டு ஊர் புகுவது பெருமையோ
சிறுமையோ யோசித்துச் சொல். அடி என்
உயிரழிக்கவந்த பேடி! இனியேனும் என்
சொல்லைத் தடுக்காமல் தேரைத் திருப்படி!
என்று பற்பலவிதமாகப் பேசி, மலையருவி
போற் கண்ணீருகுத்து உண்ணீருலர்ந் துள்ள
முருகி, கொடிய பாவியாகிய இந்தப் பேடி
நம்மைப் பிராணனுடன் விடமாட்டாள்.
இவள் குடிகேடி என்று யோசித்தவனாய்,
கைப்பிடித்த வில்லையும் அம்பறாத்தூணியை
யும் மற்றக் கணைகளையுந் தேர்மேற் போட்டு
விட்டு, பின்புறமாய்ப் பூமியிற்பாய்ந்து விராட
புரத்தை நோக்கி விரைவிலகன் றோடினான்.

### உத்தரகுமாரன் தேர்விட் டிழிந்தோடக் கண்ட கௌரவாதிய ராலோசித்தல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே!
போர்முனையிற் சென்று வெல்லப் பூரண
வாண்மை பெறாத விராடகுமாரன் தேர்விட்
டிழிந்தோடுவதைக் கருணைக்கடற் கொழுந்த
லாகிய அர்ச்சுனன் கண்டு, பச்சாதாபப்பட்டு,
குதிரைகடிவாளத்தைத் தேர்க்காலிற்கோர்த்து
விட்டு நிலத்திற் குதித்து இளைத்தோடுகின்ற
உத்தரகுமாரனை பின்றொடர்ந்தான். திரண்ட
கற்றூணையொத்த புஜபல ஜெயசிங்க விஜய
னானவன் உத்தரகுமாரனுக்குப்பின் ஓடிய
போது, நந்தியாவட்டமாலை யணிந்த துரி
யோதனனுடைய படைமன்னர் பார்த்துச்
சங்கதி தெரியாதவர்களாய், ஓவென்று சமுத்
திரம்போ லிரைந்து, தங்களில் தாங்களே
பொங்கி மகிழ்ந்து, கைகொட்டிக் கலீரென்று
நகைத்தார்கள். அந்தவேளையிற் சிவந்த
கண்களையுடைய வீஷ்மரும், மற்றப் பெரி
யோர்களும் தமது விவேகத்தால் நிதானித்து,
இப்படி பேசுவதானார்கள். அஃதெப்படி
யெனில், நமக்கு எதிராகவந்து தேரைவிட்டு
ஓடுஞ் சிறுவனைத் தொடர்ந்து செல்லுஞ் சார
தியை யோசிக்குமிடத்தில், விசாலமாக நீண்ட
விழியும், ஏறுநெற்றியும், ஆஜானுபாகுவாகிய
துணைக்கரமும், வச்ரமாலைபோன்ற மார்பும்,
பச்சைவர்ணத் தாமரை மலரையொத்த முக
மும், பருத்தவிடையும், கனத்த தொடையும்,
சிவந்த பதமும், சிரித்த நகையுமுள்ள சிலை
விஜயனைப்போல் தோன்றுகிறது. ஆனால்,
அணிந்திருக்குங் காதோலையினாலும், தணிந்
திருக்கும் ஆபரணங்களினாலும், கலகலக்கும்
வளையல்களினாலும், கட்டியிருக்கும் புடவையி
னாலும், பின்புறமுடித்த கொண்டையினாலும்,
முன்புறு மைவிழிக் கெண்டையினாலும்,
பெண்ணுருவாய்க் காண்கிறது. ஆகையால்,
பெண்ணுருவென்றும், ஆணுருவென்றும்,
பெண்ணும் ஆணுமல்லாத பேடி யுருவென்
றும் எப்படி பேசலாம். இதன்றியும், முத்துச்
சரக்குடைகள் பத்திப்பத்தியாகச் சிறந்த
விராடநகரத்திலிருந்து இந்த ஒரு தேரே
புறப்பட்டது. அந்தத் தேரிற் பொருந்தின
வன் சிறுபிள்ளையாகத் தோன்றினான். அவன்
நம்முடன் யுத்தஞ் செய்ய எத்தனித்து விற்
பிடித்து வந்தவன்போலு மிருக்கிறது. அவ
னுக்குத் தேர்விடுஞ் சாரதி ஆணென்றும்,
பெண்ணென்றுந் தெரியாமற் சந்தேகத்திற்
கிடமுண்டாகிறது. அவர்கள் இன்னாரென்
றும், இன்ன காரணமாக வந்தார்களென்றும்
எடுத்துரைப்பார் யாருமில்லை. இந்த சூக்ஷியை
எவ்வாறு அறியலாம்? எப்படி உணரலாம்?
அந்தோ! ஈதென்ன சூதோ? இனி விளையப்
போகிறதென்ன வாதோ? என்று மனமுறுகி,
மறுபடியுந் தெளிந்து உடனே ஆலோசனைச்
சங்கங் கூடி, அவரவர்களும் நாடி ஸ்திர
மாய்ச் சொல்லலுற்றார்கள்.

திரிகர்த்த தேசவாசனான சுசன்மா வென்
பவன் விராடநகரத்திற்குத் தெக்ஷண பாரிசத்
தடைந்து பசுக்கூட்டங்களை ஓட்டியகாலையில்,
விராடராஜன் தடுத்து, மலைபோற் றிரண்ட
தனது தோண்மீறி எழுந்து வைரங்கொண்டு
பற்கடித்து, விற்பிடித்து, நால்வகைச் சேனை
யுடன் நடந்து, எதிரியை யடைந்து, எவரை
யும் வென்று, பசுநிரையைக் கைக்கொண்டு,
நாம் கேள்விப்பட்டபடிக்கு மண்ணுலகத்
தோரும், விண்ணுலகத்தோருங் கொண்
டாடும்படி ஜெயம் பெற்றவனாகவேண்டும்.
பாண்டு மைந்தர் ஐவரும் இப்பதியி லிருப்

பார்கள் என்பதற்குச் சந்தேகம் வேண்டுவதில்லை. மச்சராஜன் தெக்ஷணதிசையிற் சண்டைக்குப் போகும்போது உத்தரகுமாரன் என்னும் இளங்காளையைவிட்டு, மற்றப் பிள்ளைகளுட னுடன்பட்டு, அக்ஞாதவாசஞ் செய்வதற்கு மாறுவேஷத்துடன் அமர்ந்திருந்த தருமராஜன் - வீமன் - நகுலன் - சகாதேவன் இவர்கள் நால்வருந் தன்னுடன் வரச்சென்றவனாக வேண்டும். ஊர்வசி சாபம் பெற்ற பேடி யுருவத்துடன் வெளிப் புறப்பட வெட்கப்பட்டு இராஜ கன்னிகைக்கு நாட்டியம் பழக்கிவரும் நபுஞ்சகனானவன் நரனாகவேண்டும். நாமெல்லோரு மிங்கு திரண்டு சமுத்திரம்போற் புரண்டு மச்சநாட்டின் வடதிசையை யடைந்து வீட்டை நாட்டை வேகக்கொளுத்தி மாட்டைக்கூட்டி மடக்கிய வன்மையைத் தூதர்களோடித் துயருடன் சொல்ல, வில்வேளைப்போல் வீட்டிலிருந்து கேட்ட உத்தரகுமாரன் விசனமடைந்து, கண் சிவப்பேறி, என்றந்தையாருந் தமையன்மாருமில்லாச் சமயம்பார்த்து வந்தார்களே; எனக்கொரு சாரதியுமில்லையே? என்று தயங்கிச் சோர்வடைந்தவனாகவேண்டும். இக்காரியங்களைக் கேள்விப்பட்ட அருச்சுனராஜன் எக்களிப்புடனெழுந்து, பயிர்க்கொல்லைக்குதிருஷ்டிப்பரிகாரமாகச் செய்து வைத்திருக்கிற புல்லாடவனை யொத்த உத்தரகுமாரனுக்குப் போர்க்கோலஞ் செய்து, தானே சாரத்தியம் பண்ணச் சமைந்தவனாகவேண்டும். அந்தப் பேடி பேசிய சாதுரியவசனச்சமர்த்தினாலும், அச்சொல்லில் உறுதி யூக்க முடைமையினாலும், தான் சிறுவனாயிருக்கின்ற தன்மையினாலும், முன்பின் எண்ணிப்பாராமல், எதிரியையுந் தன்னையு மெண்ணாமல், மானாபிமானத்தை மதியாமல் (இளங்கன்று பயமறியாது) என் பதுபோல் தேர்மேலேறிப் போர்மேல் வந்த தாகத் தெரிய வருகிறது. இதுவே நிச்சயம். இதற்கு வேறாக நினைக்கவேண்டியதில்லை.

மேலும், அந்தப்பேடி நடத்திய இரதத்தில் வந்த உத்தரகுமாரன் கங்குக்கரை காணாத நமது சேனைகளைப் பார்த்து, கருப்பமுமனமும் கண்ணுங் கலங்கி, தானினைத்த சண்டை நினைப்பை மறந்து தாய் தந்தைய ரிடத்தில் உரைத்த தைரியத்தையுந் துறந்து வாட்டத்துடன் ஓட்டங்கொள்ள நினைத்த வறியனாக வேண்டும். அவன் மடமையைத் தெரிந்த சாரதி நான் சொல்லவேண்டிய கடமையையும் தீரவீரத்திறமையையும் ராஜ முறைமையையுந் தெளிவுறச்சொல்லித் தேற்ற சிறிதுந் தேறாதவனாய் தேர்விட்டிழிந் துயிர்க்குறுதி தேடி ஊரைப்பார்த்தோடுகிறான். அதிகபயங்கொண்டோடுகின்ற விராடகுமாரனைச் சாரதியாகிய பேடி நோக்கிப் பின்றொடர்ந் தோடுகிறாள். இதுதானிப்பொழுது நடந்திருக்கிற காரியமென்று ஆலோசனைச் சங்கமாகக்கூடி யாவருந் தங்கள் பேரறிவினால் நிச்சயித்தார்கள். இவர் கணிதானத்தைக்கேட்ட சுயோதனனும் அவன் மனதிற்கிசைந்த மன்னவர்களும் பயங்கொண்டு, இருதயத்திற் பசுமரத்தாணி போற் பதித்து, காதில் நாராசமென்ன நுழைத்து, என்னமோ? ஏதோ? என்னும் பிராந்தியாற் பதைத்தோடுகின்ற உத்தர குமாரனைக் கண்சிமிட்டாமற் பார்த்துக்கொண்டே யிருந்தார்கள்.

### உத்தரகுமாரன் தன்னை விட்டுவிடும்படி பிரகநளையை வேண்டுதல்

இவர்களிப்படியிருக்க, ஊர்முகமாயோடிய உத்தரகுமாரனைப் பிடிக்கப் போன பேடியானவள் க்ஷணப்பொழுதிலோடிச் சென்று அவனெதிர் நின்று மறித்து, அவனுடைய முன் கையைத் தொட்டிழுப்பதற் கஞ்சினாள். அதேனெனில், வீரப்பிரதாப மேன்மையில்லாத வேந்தனானாலும், அவனுக்குத் தான் சாரதித்தொழிற்கிசைந்த தன்மையினால், எசமானன் கையைத் தொடுவது மரியாதையல்லவென்றிருந்தாள். இப்பால் எமபாசம்போல் இரு கரத்தையும் விரித்துத் தடுத்தெதிர் நின்ற பேடியைப் பிதிர்கலங்கி யோடுகின்ற உத்தரகுமாரன் கண்டு, மதிமயங்கித் தியங்கி வதங்கி மதிமுகம்வாடி, ஏண்டி! அடிபேடி! ஓ! குடிகேடி! ஆ நிர்மூடி! இன்னுமென்னை விட்டுவிடாயா? என்று பூனையைக் கண்ட கிளிபோலும், பூதத்தைப்பார்த்த உயிர்போலும் பயந்து மெய்நடுங்கி ஒடுங்கி யுளறிப்பேசினான். அவனைப் பேடி வேடப் பிரதாபன் பிரியத்துடன் பார்த்து, ஓ இளவரசான இறைவனே! உன்னைத் துணையாக நம்பித் தேர் செலுத்த வந்த என்னை யோசிக்குமிடத்தில், வீணையைத் துணையாக நம்பிய வீணர்களை யொத்தேன் என்று சொல்லி வெறுத்து, சற்று நேரம் பொறுத்து ஆ! ஹா! ஹா! ஓ அரசிளங்கன்றே! இப்படியுஞ் செய்யலாமா வென்றிசைத்தாள். அவள் பேச்சைக் கேட்டுக் கலகலத்த உத்தரகுமாரன் அந்தப் பேடியின் முகத்தைப் பாராமல், நிலத்

தைப் பார்த்து நெடுமூச்செறிந்து, திக்குமுக்காடித் திடுக்கிட்டோடி, கண்களில் கலகலவென்று நீர் சொரியவும், கைகால் விடவிடவென்று நடுங்கவும், முத்துப்போல் வேர்வை முகத்திற் றுளிக்கவும், எண்ணங் குலையவும், இதயந் துடிக்கவும், மல்லுந்தளறச் சொல்லுங்குளற வெருண்டு விம்மி இதனைச் சொல்லலுற்றான்:

அடி சீமாட்டி! இவ்வுலக வாழ்க்கையை விரும்பிய உயிரானது நமனைக்கண்டு நடுக்கங்கொள்வதுபோல் உன்னைக்கண்டு ஒடுங்கிவிட்டேன்; நான் சொல்லும் நன்மையைக்கேள். பிள்ளையாகப் பிறந்த வந்நாண்முதலிந்நாள் வரையிலும் நான் தாய்தந்தையை விட்டுப் பிரியாத தனயன். நான் போர்க்கோலங் கொண்டு தேரேறி வரும்போது என்னைப் பெற்ற சுதக்ஷணாதேவி என் முகநாடி தன் முகம்வாடி வாசற்படி வரைக்கும் வந்து வழிவிட்டாளே; அவளுடைய மனமும் வயிறும் எப்படி வருந்தியதோ? என்ன திகிலடைந்ததோ? நான் அறியேன். அவள் அப்படி அவலமுற்றிருக்க, நான் இவ்விடத்தில் வந்து எதிரிகளைக்கொன்று வென்று விஜயத்துடன் திரும்பாமற்போனால், தாய் வயிரெறியச் சம்பிரமங்கொண்டாடுந் தலை தறியர்களில் நான் ஒரு பாவி யல்லவோ? அடி சகிகாரி! நான் வந்த சந்தோஷமாறுமற் கொண்டுபோய் விராட நகரத்திற் சேர்த்து விடுவையாகில் உனக்கு வெகுகோடி புண்ணிய முண்டு. கண்ணிய முண்டு. சுகிர்தமுண்டு. சுபமுண்டு. என் தாய் தந்தையின் பக்ஷம் உன்பேரில் அதிகமாயுண்டாகும். அவர்களுக்கு வெகுமானஞ் செய்யுமுன்னமே, யானை - தேர் - குதிரை முதலிய இவைகளோடு அளவற்ற ஆடையாபரணங்களும் யான் கொடுக்கிறேன். அடி பேடி! உன்னை நான் கனவிலுமறவேன். நீயுநானும் உடலிரண்டு முயிரொன்றென மிகவும் ஒருமையாயிருப்போம். எக்காலமும் உன் பேர் விளங்கும்படியாக, இவ்வுலகிலுன் உபசாரச் செய்கையை ஸ்தாபித்து, என் இஷ்ட தெய்வமாக உன்னைக் கொண்டாடுவேன். நான் மாத்திரம் நகரம் போய்ச் சேர்வேனாகில் மன்னவரை மடக்கி மாட்டை மடக்கிப் பின்னமில்லாச் செயம் பெற்றதுபோல் ஆவேனடி! அடி உத்தமி! ஏதோ என் மனங் கலவரப்படுகிறது. இன்னொருதரம் என் தாயைப்பார்க்க இச்சை மேலிடுகிறது. மச்சநாடு போய்த் திரும்பிவராமற் சண்டைக்கு அடியெடுத்து வைக்கமாட்டேன். அடி! என் மண்டையோலை கொண்டு வந்த கொடும்பாவி! கண்மூடித் திறக்கு முன்னம் பட்டினம் போய் சேரடி! கலங்க விடாதேயடி! கடவுள் முகத்தைப் பாரடி! என் மார்பையுந் தொட்டுத் தேரடி! ஐயையோ! என் குலை துடிக்கின்றதே; என் குண்டிக்காய் வெடிக்கின்றதே; கரைந்துருகிய வென்னைக்காரடி! அடி பேடி! நீ என் பங்கில் அஷ்டமத்துச் சனிபோல் எங்கிருந்து வந்தாயடி! நீ யாரடி? எனக்கென்ன நீ ஒட்டா? உறவா? ஒன்றுமில்லையே; ஆயினும் இந்தவேளை நீ தான் எனக்குத் தாயடி! இவ்வளவு சொல்லியும் உன் இருதயமென்ன இரும்போ கருங்கல்லோ சற்றேனும் இரங்காயடி! எனக்கு முனக்கும் என்ன பகையடி? எனக்கு முனக்கும் ஜென்மப்பகை ஏதேனு முண்டோடி? சிறிது தாக்ஷணியம் வையடி! எனக்குத் தைரியம் போய[illegible]டி! நீ யாதொரு நன்மை தீமையுஞ் சொல்லாமல் இடத்திற்கு கொண்டுபோய்ச் சேர்ப்பதே எனக்குச் செய்யும் உபகாரமடி! ஓடிப்போ என்னைத் தடுக்காமல் விட்டு விடுவதே உனக்குக் கோடி புண்ணியமடி! என்று இவ்வாறு பற்பல விதத்திலுங் கூறி, தப்பியோடுவதற்கு வழியில்லாமல் மிரளமிரள விழித்து வெம்பினன்.

### பிரகநளை உத்தரகுமாரனை வலவனாக விசைப்பித்து, வன்னித்தருவருகில் தேர் செலுத்துவித்தல்

இப்படி வெம்பிய விராடபுத்திரனை விஜயன் பார்த்து மெத்த விசனப்பட்டு, ஏதேது? இவனினித் திரும்பான் என்றெண்ணி, ஆகிலும் இப்போதிவனை விடப்படாது. மற்றொரு விதத்தால் மனந்தேறச் செய்யவேண்டும். என்று நினைத்தவனாய் உத்தரகுமாரனை நோக்கி, ஓ விராடராஜ புத்திரனாகிய உத்தமனே! உனக்கு நித்திய வாழ்வைத் தரவேண்டுமென்றெண்ணியிருந்த என்னெண்ணத்தைக் கெடுத்து நீயும் மயங்கிப் போய்விட்டாய்; போனது போகட்டும். இனியாவது செவ்வைப்படும்படி உனது சித்தப்பிரம்மையை விட்டுவிடு. நான் சொல்லப்போகிற உறுதிமொழியைக் கேட்டு உன் மனத்தைத்தேற்றி என் மனம்போ லிசைந்து வருவையாகில் மேலான திறம்பெற்ற வில் வல்லவர்களினுஞ் சிறந்தவனியென்று யாவரும் மதிக்க உன்னை முதன்மையாக்கி இப்பொழுது நேரிட்டிருக்குஞ் சத்து

ருக்கள் வாடும்படியாய் மாட்டி, நமது பசுமந்தைகளை யெல்லாங் கூட்டி, பெருங்கீர்த்தியை நிலைநாட்டி விராடபுரம் போய்ச் சேருவோம். இவ்வாறு ஜெயம் பெறுவதற்கு முன் மனந் தளர்ந்து வந்தவழியே திரும்பியோடுவதைக் கண்டால், என்னைப்போலொத்தவர்கள் ஏளனஞ் செய்யார்களோ? ஓ விராடராஜ புதல்வனே! பேடியென்று என்னைப் பிழைபட நினையாதே. நீ எப்போது ஜயங் கொண்டு வருவாயென்று உன் வரவை எதிர் பார்த்திருக்கும் உன் தாயும் தந்தையும் பந்துக்களும் சந்தோஷத்துடன் உன்னைத் தழுவவும், அன்பினாலுருகிப் பேரானந்தக் கண்ணீர் பெருகி முத்தந்தரவும், பொன்னுலகத்திற் கிணையாகிய உன்னுலகத்தார் யாவரும் என்னையும் உன்னையும் புகழ்ந்து மகிழ்ந்து பூரித்து எதிர்கொள்ளவும், மலையாகிய கீர்த்தியை வளர்த்து நிலையாகிய வெற்றியை விளைத்து - ஒரு நிமிஷத்திற்கு நிமிஷம் ஜெயம்பெறுகின்ற விஜயனென் றென்னைப் பலரும் நினைக்கவும் மந்தரகிரியா லலைவுபட்ட பாற்கடல்போற் பகைவரது சேனைக்கடலை படுபாழாக்கிக் கலக்கியடித்து கருந்தூள் செந்தூளெழும்ப முடித்து, நீடூழி வாழ்வை உனக்கு நிலைபெறச் செய்வேன். ஓ மச்சகுலாதிபன் மாதவப்பேறே! நீ இச்சொல்லுக் கிணங்கி, சப்தமா வென்னும் பச்சைப்புரவித் தேர்க் கொப்பாகிய அச்சுவச் சிரத்தா லமைத்திட்ட நமது உச்சிதத் தேர் மேலிருந்து, அச்சமில்லாமற் சாரதித் தொழிலாகிலுஞ் செய்வையாகில், முச்சகங் கொண்டாட முதன்மையைப் பெறலாம்; இதற்காகிலும் உடன்பட்டு வருவையோ? வரமாட்டாயோ? என்று போருக்கு முதற்புதமான பேடியுருவான அர்ச்சுனன் கேட்டான்.

அவையனைத்துங்கேட்ட உத்தரகுமாரன் சற்றுழ்ந்துயோசித்து நிதானித்து நாம்தனித் திவள் கையிற் சிக்கிக் கொண்டோம் காலகதி என்னமோ? அஃது இன்னதென்று தெரியவில்லை. நாம் போர்செய்வோ மென்று புறப்பட்ட வேளை எப்படிப் பட்டதோ? இன்றுதயத்தில் யார்முகத்தில் விழித்தோமோ? இந்த பேடிப் பாவி நமக்கெமன்போல் வந்துசேர்ந்தாள். இவள் நம்மை உயிருடன் விடாள் போலும் இருக்கிறது. எதிரியைப் பார்க்கப் பார்க்கப் பயம் மேலிட்டிருக்கிறது. (வாய் கொழுப்புச் சீலையில் வடிந்தது.) என்னுங் கதைபோல, என் வாய்ச் சொல்லே யெனக் கிடர் விளைத்து விட்டது. இனித் தெய்வச் செயல் எப்படியோ தெரியாது. தாய் தந்தை தேடிய தவம் இதுதானே? தர்மம் தலைகாக்கு மென்பது பொய்யோ? இந்த நபுஞ்சகியானவள் ஜெயம் பெறுகிற வில் வல்லபத்தைத் தீரர்களைப்போற் பேசுகிறாள். பயமகன்று சாரதித் தொழிலாவது பண்ணென்று பகர்கின்றாள். இதற்கு மாட்டேனென்று குதர்க்கம் பேசுவது தகுதியல்ல. நல்லது உள்ளபடியாகிறது. நாமும் கொஞ்சஞ் சாரதி சாஸ்திரம் பார்த்திருக்கின்றோம். ஆதலால், தேர்விடுந் தொழிற் கிசைந்து கொண்டால் போர் முனை புகுந்த பேடியின் திறத்தைத்தெரிந்து கொண்டு சமயத்திற்குத் தக்கபடி பார்த்துக் கொள்ளுவோம் என்று ஒருவாறுடன்பட்டு; நடுக்கமும் ஏக்கமும் நீங்கி ஊக்கமேலிட் டுள்ளந்தேறி திடுக்கிட் முடுக்கு சிங்கம்போற் சீறி, வீரப் பார்வைகாட்ட அடி சீமாட்டி! உனக்கு மெனக்கு ஏதோவொரு சம்பந்த முண்டா யிருக்கிறது. அஃதின்னதென்று தெரியவில்லை. உன்னிஷ்டப்படியே ஒப்புக்கொண்டேன். என்னிடத்திற் றப்பொப் பிருந்தாலும் நீயே சகிக்கவேண்டுமென்று உத்தரகுமார னுரைத்தான். அதைக் கேட்ட அர்ச்சுனனவன் சித்த மகிழ்ந்து திரும்பி, உத்தரனுந் தானும் ஒருமையுடனோடிவந்து தேர்மேலேறி, கடிவாளம் பிடித்துக் குதிரைகளை முடுக்கச்செய்து, அதிரதனாகிய தான் நாயகனாக வமர்ந்து, பூர்வ புண்யப் பிரயோசனப் பலனிப்போது கூடியதென்று களித்து, வில்லும் பாணமுங் கரத்திலேந்தி, வேந்தனான உத்தர குமாரனுக்குத் தயிரியஞ் சொல்லி, ஐயா விராட குமாரனே! நமக்கு நேர்வடக்காகிய உருத்திர பூமியிற் சாமுண்டி சந்நிதானத்தி லிருக்கும் வன்னி மரத்திற்கு நேராக நமது தேரைச் செலுத்தென்றான். அவன் சொல்லி யடங்கு முன்னமே சாரதியான உத்தர குமாரன் ஏன்னமோ காரணந் தெரியவில்லை யென்றெண்ணி, பொன்மயத்தேரை வன்னிமரத் திசையி லோட்டினான்.

### ஒற்றைத்தேருந் துற்சகுனமுங் கண்ட துரோணரும், வீஷ்மரும் வருபவன் அர்ச்சுனனென்றறிந்து சுயோதனனுக் கறிவித்தல்.

இச்சங்கதி யிவ்விடத்தி லிப்படி யிருக்க, நேராக வடதிசையை நாடிவந்த தேரானது

மாறி வடகிழக்கிற் போவதைத் துரியோ
தனன் முதலிய அரசர்களும் மற்ற பெரியோர்
களும் பார்த்து, நமது படையின்மீது லக்ஷி
யம் வைத்து வருகின்றவன் அருச்சுனனல்லது
மற்றொருவனுமல்ல. அந்நியனென்னுஞ் சந்
தேகம் வேண்டுவதில்லை. அவனை பேடி என்று
மதித்தது நமது பேதமைத்தனமேயென்றெண்
ணிப் போர்முனை விட்டோடி, புத்தி மழுங்கி,
பொறிபுலன்குன்றி, கண்கலங்கிக் கவலைகொண்
டார்கள். உடனே அனர்த்தமான அவசகுணங்
கள் விளைந்தன. இவற்றையெல்லாம் துரோ
ணாசாரியர் கண்டு யோசித்து விசனப்பட்டு
அரவக்கொடி படைத்த அண்ணனுக்குச்
சொல்லுகிறார். ஓ மதிமரபுற்ற வணங்காமுடி
பெற்ற மகீபனே யான் சொல்லுகிறதைக்கேள்.
வானமுழுது மதிர்ந்து திக்கெட்டுங் கம்பித
மெழுந்து,பகற்காலத்தில் நக்ஷத்திரமுதிர்ந்து
மேகம் இரத்தமழை பொழிந்து, பூமாலைகள்
கறிந்து, புலால்நாற்ற மிகுந்து, யானை குதி
ரைகள் கண்ணீர் சொரிந்து, பருந்துங் காக்
கையும் பறந்து மேல்வீழ்ந்து, நாயும் நரியும்
புரண்டு ஊளையிட்டு, கழுகுங் கூளியுங் கவிந்து
நிரைத்து, ஆயுதமுனைக ளனற்புகை மலிய,
சேனைகள் தியங்கித் திடுக்கிட்டலைய, பற்பல
துர்ச்சகுணங்கள் உண்டாகியதை யோசிக்கும்
இடத்தில், சகுணசாஸ்திரப்படி இராஜனுக்கு
தீங்கும் பயமும் விளையுமென்பதற்கு சந்தேக
மில்லை. சாஸ்திரம் தப்பென்றெண்ணாமல், நீ
முன் ஜாக்கிரதைப் படவேண்டும் என்றுரை
த்து, வீஷ்மர், கிருபாச்சாரியர் முதலிய மே
லோரை நோக்கி விளம்புகின்றார். ஓ அதிரத
மாரத சமரதத் தலைவர்களே! சமுத்திரம்போற்
பரவிய நமது தேர்வீரர்கட்கெதிரில் ஒற்றைத்
தேர் செலுத்திவருவோன் உறுதியை யுணர்ந்
தீர்களா? அவன் நமது எண்ணிறந்த சேனை
களையும் ஒருகணையால் வெற்றி பெறத்தக்க
வீரப்பிரதாபன் அல்லாவிடில் தானொருவனாய்
தனித்து வருவானோ? ஆதலின், நம்முடன்
எதிர்ப்பவர்கள் இல்லையென்றிறுமாந்து வாய்
மதம்பேசி மகிழ்ந்து திரிவது தகுதியன்று.
சூத்தவீரர்கள் தங்கள் தங்கள் படைகளை யணி
வகுத்து, காத்துக்கொள்வதே உத்தமம். ஓ
தக்ஷண நிரை மீட்சிக்கு சென்ற திரிகர்த்தனை
இகழ்ந்த சாதுரியவான்களே! நமது தேக
மழிந்தாலும், பிராணனொழிந்தாலும், மான
மழியாமலும், மடக்கிய மாட்டை விடாமலும்,
தீரவீரத் திடங்காட்டி, செயம்பெறுவதே திட
வான்கட்குரிய கடனாம் என்றுரைத்து, அப்
பொழுதே ரதகஜதுரகபதாதிகளை அணிவகு
த்து, இடைக்கிடை படைத்தலைவர்களை நிறு
த்தி, அவர்கட்கு நடுவிற் பசுமந்தையை மட
க்கி வைத்துக்கொண்டு, கட்டுக்காவல் திட்டப்
படுத்தி, மட்டுப்படாத தனுர்வேத வரோதய
னின்றார்.

இத்திறமோர்ந்த இராஜ வீரர்களனைவ
ரும் இனி இந்தப் பசுநிரையைக் கவர்வாரு
முண்டோவென் றிரைந்து பேசிக் கொண்டி
ருந்தார்கள். அவ்வேளையில் தேவர்கள்கொண்
டாடுஞ் சத்தியவிரத உத்தமனாகிய வீஷ்மரின்
முகக்குறிப்பை துரோணாச்சாரியா ருணர்ந்து,
தேவரீர் எண்ணிய கருத்துக்குத் திருகில்லை.
வருகிறவன் அர்ச்சுனனே. வாளாண்மை, வில்
லாண்மையிற் சிறந்த குருகுல சேனையை மதி
யாதவனாய் ஒன்றித்தேருடன் வெளிப்பட்டு
இருக்கின்றான். இவன் வருகிற வகையை
யோசிக்குமிடத்தில் சூரபன்மன்மேலெதிர்த்த
சுப்பிரமணியக் கடவுள்போல் இருக்கின்றது.
இதில் யார்யார் மாள்வார்களோ? யார்யார்
பிழைப்பார்களோ? என்ன அநர்த்தம் விளையு
மோ? அறியேனறியேன் என்று சொல்லிய
துரோணாச்சாரியரை, அர்ச்சுனன்பேரில் உள்
ளன்புடைய வீஷ்மர் பார்த்து, ஓ வீரர்கள்
மதிக்கும் வில்லாசிரியனே! நீர் முன்பு பேசிய
வசனத்தின்படி ஒற்றைத்தேரையும் ஒழுங்
கற்ற சகுணத்தையுங் கண்ட யான் 'என்ன
யோசித்தேன் என்றால், பாண்டவர்கள் அக்
ஞாதவாசம் பண்ணவேண்டிய ஒருவருடமுங்
கழித்து வெளிப்பட்டிருப்பார்களா? அல்லது
மாடுபிடி சண்டையென்று மகிழ்ந்து கோபத்
தினால் வெளிப்பட்டிருப்பார்களா? ஒருவேளை
காலவளவைக் கடந்து அவசரப்பட்டிருப்
பார்களானால் மேல்நடக்கவேண்டுவதுஎன்ன
வென்று வேந்தர் சபையில் நியமித்த நிபந்
தனையைச் சிந்தித்து பார்த்தேனன்றி வே
றொன்று நினைக்கவில்லை என்று இருவருங்கல
ந்து பேசிக்கொண்டு, துரியோதனனிடத்தில்
தாங்கள் எண்ணிய கருத்தைக் காட்டாமல்
வேறுவிதமாய் விளம்ப நினைத்து வாருங் குரு
குல சிந்தாமணியே! அந்தப் பாண்டவர்கள்
இதுவரையிலும் பொறுத்து அநுபவிக்கக்
கடவதான நாள் முழுவதும் போக்கி, எதிரி
யுடனெதிர்த்துப் போர்புரியத் தக்கநாள் இன்
றே யென்று புறப்பட்டார் போலுங் காண்
கிறது என்று வீஷ்மர் புகல, அம்மொழி
பேசியவுடன் தனுர்வேத சம்பன்னரானவர்

தெவிட்டா வமிர்தமுண்ட தேவர்போற்
களித்து ஒருவசனஞ் செப்புகின்றார். ஐயா!
மதிகுலவரோதய விரத சிகாமணியே! இவ்
விட மிருக்கும் நமது சேனையை நாடி ஒரு
வில்லுடன் தேர்செலுத்தி வரும் ஒருவன்
திறத்தை யுன்னுமிடத்தி லெப்படி யிருக்கிற
தென்னில், ஒரு புருஷ சிங்கமானது வெகு
காலங் குகைக்குள்டங்கிப் பசிதாகத்தா லிளை
த்து நற்கால நேரிடுகிற வரையிலும் வாட்ட
முற்றிருந்து கரட குஞ்சரக் கூட்டங்களைக்
கண்டு களித்துத் தாவியெழுந்து தனித்து
தனித்துவருந் தன்மைபோ லிருக்கின்றது.
கறைமிடற் றண்ணலாகிய பிறைமுடிப்பிஞ்ஞக
னளித்த பாசுபதாஸ்திரம் பெற்ற பார்த்தனை
யெதிர்த்துப் போர் தொடங்கத்தக்க வில்வீரர்
கள் எந்தத் தொல்லுலகிலுமில்லை. வெயிலுக்
கிணையாக மின்மினி பிரகாசிக்குமோ? ஓ சகல
கலை வல்லவரே! நீரே யுங்கள் பேரனுக்குச்
சொல்லுமென்று துரோணச்சாரியர் சொல்
லினர்.

**கர்னன் துரோணர் கூறியவற்றைக் கடிய**
**துரியோதனன் அவனைத் தணித்தல்.**

இச் சொல்லாகிய நாராசமானது கர்னன்
காதில் நுழைந்த மாத்திரத்தில், செயலுஞ்
சிந்தையுந் திகைத்து நொந்து, வாயுங் கண்
ணும் வறண்டு புகைந்து, வேசாறி யுள்ளம்
வெந்துவெகுளிமிகுந்து, வில்வேதந்தெரிந்த
வேதியரைப் பார்த்து, இரு கண்களுஞ் சிவ
ந்து, ஆ! ஆ! என்ன சொன்னீரென்று கறுவி,
அங்கிருந்த மணிமகுட மன்னரெல்லாங் கூசி
மடங்கவும், தடவிகட குஞ்சர வீரர்கள் வாய்
பேசாம லொடுங்கவும், சுற்றுமுற்ற மற்றச்
சேனைகள் குலைகுலைந் தேங்கவும், மிக்க இறு
மாப்புடன் ஒருத்தரஞ் சொன்னன். ஓ தநுர்
வேதியரே! சதுர்வேதமொழிந்த தன்ம
முணர்ந்தீரா! அஃதென்னவென்றல், நன்றி
மறவேல் என்னுந் தன்மந்தான். அப்படியிரு
க்க, மகுடமன்னர்கள் வந்து வணங்கும் மகா
மண்டலேஸ்வரனுகிய சற்பக்கொடி தரித்த
துரியோதனராஜன் உம்மிடத்திற் பட்சம்
வைத்து இராஜ வைபவ வலங்கார அணி
மணிப் பணியாடையும் படையும் வீரப்
பட்டமும் பெருமையுங் கொடுத்து, சவுக்
கிய போஜன சம்பிரமத்துடன் சீர்பெறச்
செய்து, உமது உதவியினுல் வெற்றிபெறலா
மென்னும் ஆசையை மிகுதியும் வைத்திருக்
கின்றார். நானுமஃதுத்தமமென் றெண்ணி

யிருக்கின்றேன். இப்பொழுது உமது எண்
ணத்தை நிதானிக்குங் காலையில், எதிரி
களைக் கொண்டாடியவர்கள் புஜபலத்தைப்
புகழ்ந்து, அன்னமிட்ட ஆண்டவனுடைய
ஆண்மையைக் குறைத்துப்பேசி, உலக மிக
ழும்படிக்குச் செய்த நன்றி குன்றி, மரம்
வைத்து வளர்த்தவற்குப் பலன் கொடாமல்
அண்டை வீட்டுக்காரன் அனுபவிக்கும்படி
யாகச் சாய்ந்த முடக்குத் தென்னமரம்போற்
குறைந்த மதியைக் கொண்டிருக்கின்றீர். தரு
ணத்தில் தண்ணீர் வார்த்து வளர்த்த கௌரவ
குல முதல்வனை விட்டு, சொல்வண்மையும்,
வில்வண்மையுமுள்ள பாண்டவாள் பேரிற்
பக்ஷங்கொண்டீர். ஐவர்பேரில் அன்பு மாசை
யும் உமக்குண்டாயிருக்குமாகுல், அந்தப் பஞ்
சைகட்கு நீர் இளைத்ததாகப் புகழ்ந்து பேச
வேண்டுமேயன்றி, மற்றையர்களைக் குறைத்
துப் பேசுவதில் உமக்கென்ன லாபம்? இதில்
உமக்கு எவ்வளவேனு மேன்மை கிடைக்கு
மோ? எம்போலியரை வெல்லும் வல்லபம்
அந்தப் புல்லியருக்குண்டா யிருக்குமாகில்,
போர்க்களத்திற் கண்ட எம்போலொத்த வீரர்
கள் அவர்களைப் புகழாதிருப்பார்களோ? (கற்
றரைக் கற்றரே காமுறுவர்) என்பதுபோல்
வீரரை வீரர் வியந்துரையாரோ?

ஓ மணங்கமழு மாலைபுனைந்த தோளினை
யுடைய மறையோனே! நீர் இப்படிக்கெல்
லாம் பூச்சிக்காட்டாதீர், இவ்வேளை நமக்கெதி
ரானவன் அசகாய சூரனுகிய வில்விஜயனை
லும் அவனுக்கெதிர் நானொருவனுமுனைந்து,
வில்வளைத் தமர்புரிந்து, மண்ணுள விரும்பிய
அவனை விண்ணுள விடுகிறேன். இதுவே
சத்தியம். உலர்ந்தசருகு எரிநெருப்பிற்கரிந்து
வேகா திருக்குமாகில், தேர்மேலேறிப் போர்
மேல் வருஞ் சிலைவிஜயனும் கீர்த்திபெறுவா
னென் றுணரலாம். நீரேன் விருதாவிற் சொற்
சோர்வு படுகிறீர்? வேதியர் குலத்தராகிய நீ
ரேன் வீண்பழி சுமக்கின்றீரென்றான். இப்படி
கர்னன் சொன்னவார்த்தைகளைக் காதிற்கொ
ண்ட சுயோதனராஜன் அண்ணு! எதிரியைப்
புகழ்ந்து பெருமையாகப் பேசுகிறவர்கள்
எல்லாம் பேசட்டும்; நீரேன் அவசரப்படு
கின்றீர். போர்செய்ய வருகிறவன் பார்த்தனு
யிருப்பானுகில், தமக்கு நல்லகாலமென்றே
எண்ணும். அதேதெனனில், அவர்கள் ஒப்புக்
கொண்டுபோன பன்னிரண்டு வருஷம் வன
வாசத்திலும், ஒருவருஷம் அக்ஞாதவாசத்தி

னும் நாள்குறை யிருக்கின்றது. அதைக்கண்டு பிடித்து மறுபடியும் அவர்களை வனவாசம் பண்ண அனுப்பிவிடலாம். அப்படிக்கல்லவென்றால், இந்த யுத்தத்தில் உயிரிழந்து போவார்கள் என்று உறுதியாய் சொல்லிவிடும். தாக்ஷணியமாக முன்பின் பார்க்கவேண்டுவதில்லை. என்று களிப்புடன்சொல்ல, தாமரை மாலை தரித்த தனுர்வேதியரும், பனைமாலை தாங்கிய வீஷ்மர் முதலாகிய அனைவோரும் சரிதான் என்று சிரக்கம்பனஞ்செய்து, வரவரக் கண்டறிவோமென் றிருந்தார்கள்.

### பிரகந்நளை உத்தரகுமாரனை வன்னிமரத்திலேறி ஆயுதமெடுவென அவனங்கோரரவு கண்டஞ்ச, பின்பவனைத்தேற்றி இசைவித்தல்

இப்பால் உத்தரகுமாரனை உடன் படுத்திக்கொண்டு வந்த விஜயன் அவனை நோக்கி, ஓ! ராஜகுமாரனே! எப்பேர்ப்பட்டவனானாலும், எக்குலத்தானானாலும் போர்முக வீரனென்று பேர்பெற்று யுத்தமுனை புகுந்தவன் முன் காயம் பெறாமல் முடிசாய்க்கப்படாது, பகைவனுக்கு இளைத்தோடி வருங் காலையினும் புகழுண்டாகப் புறங்காட்டாது, மார்பிற் காயம் வாங்கிவரவேண்டும். அப்படி வரத்தக்க வல்லமையில்லாதவன் தேகம், ஆறில்லா நாட்டையும், அரணில்லாக்கோட்டையும், தர்மபத்தினியில்லா வீட்டையும், வளநீங்கிய காட்டையும், பொறையில்லா வரசையும், ஞானமில்லாக் கல்வியையும், நன்மணமில்லா மலரையும், மதியில்லா விசும்பையும், மைந்தரில்லாச் செல்வத்தையு மொப்பாமென்று தனுர்வேதத்திற் கூறியிருக்கின்றது. என்று இராஜ தருமங்களால் அவன் மனத்தைத் தேற்றி, பயங்கரத்தை மாற்றி, வீராவேசம் விளைத்து, ஆறுகோடி மாயாசத்தியாலு மாறுபடாத அரன் போன்ற வீபத்சானவன், வன்னிமரத்தைச் சேர்ந்தான். அப்போது பராசத்தி கோயிலும் பாலை நிலமுஞ் சிறந்தடர்ந்த வன்னிமரத் தோப்பில் வந்த உத்தர குமாரன் கன்னிப் போரால் வந்த சந்நிததோஷத்தாற் கண் விழிக்க மாட்டாதவர்போற் கலங்கி அசைவற் றிருந்தான். அப்படிக்கிருந்த சாரதியைப் பேடி பார்த்து, அப்பா! நீ யென்சொல் தப்பாமல் இந்த மரத்திலேறி, வடபுறத்திற் பணைத்துப் பருத்த கிளையின் பொந்திற் சேமஞ் செய்திருக்கிற ஐவரது ஆயுதங்களையும், அம்புறா தூணியையு மெடுத்தவா வென்று கூறினான். அந்தப் பேடி மொழியால் தேறிய மைந்தன் ஈதென்ன விந்தையென் றெண்ணி, உயர்ந்து தழைத்து விரிந்த வன்னி விருக்ஷத்தை நோக்கி, ஐயோ! பூதப் பிரேதங்கட்குரிய பிணக்காட்டகத்தில் என்னை அநியாயமாகக் கொண்டுவந்து நிறுத்தி, இந்தப் பெரிய மரத்திலேறென்ப தென்ன பேதமை? அடி பேடி, ஓரேமட்டாய் என்னுயிர் வாங்குதற்கோ? அடி பாவி! இந்த மரம் என்னிரண்டு கைகளுக்கும் அடங்காதே, அணைத்தேறுவோமென்றால் என் மார்பிடம் போதாதே, காலணைத்தேறும் வல்லமையுமில்லையே, உனக்குக் கொஞ்சமேனுஞ் ஜீவகாருண்ய மில்லையா? அடி நபுஞ்சகி! நானொருயுத்தி சொல்லுகிறேன் கேள். மச்சநாட்டை நோக்கிச் சற்று தூரம் போவேனாகில், வேண்டியவேலைக்காரர் அகப்படுவார்கள். அவர்களாலாயுதம் எடுப்பிக்கிறேன். இப்படிப்பட்ட மரமேறுகிற வாடிக்கை எனக்கு இல்லை. கடன்வாங்கி யிறைகொடுத்தவரும், மரமேறிக் கைவிடுத்தவரும், தலையெடுக்கப் போகிறதில்லையே. ஓ வீரமாகாளி! நான் இந்தப் பாவி கையில் அகப்பட்டுக்கொண்டு உன் சந்நிதானத்தில் வந்தேன். யாவரும் இறந்தழியுமிடஞ் சேர்ந்துவிட்டேன். இனி யென்னுயிராசை விட்டேன். ஆ? ஹா! கெட்டேன் என்று இரு கண்ணிலுங் கண்ணீர்விடுத் தேங்கினான்.

இவ்வாறிரங்கிப் பின்வாங்கிய பாலனை, அவன் பாங்கிலிருந்த அர்ச்சுனன் தன் கைகளாற்றாங்கி, மார்போடணைத்து, மகிழ்ச்சியாய் தழுவி, அவன் உடலைத் தடவிக்கொடுத்து உள்ளன்பு காட்டி, அப்பா! நீ அஞ்சாமல் ஏறி ஆயுதமெடுப்பாயாகில், அதனால் உனக்கு அதிகமங்களகரமுண்டாம். ஆதலாற்றான் உன் கையால் எடுப்பிக்க யான் யெண்ணங்கொண்டேன். வேறாக நினையாதே என்று சொல்லி, அவனைத் தேர்க்கொடுங்கைச் சிகரத்திலேற்றி மரக்கிளையிற் றாண்டிப் போகும்படிக்கான உபாயமுஞ் சொல்லிப் போக்கினான். கேட்டீரோ ஜனமேஜய மஹாராஜனே! அந்தப் பேடி பேச்சுப் பிசகாமற் பின்னாற்பெற்றுப் பலிக்கப்போகிற பெரும்பயனென்று காத்திருப்பதினாற் மச்சகுமாரன் அச்சமில்லாமற் கிளைமேற்றாவி ஆயுதங்களைப் பாண்டவர்கள் பதுக்கி வைத்தார்களென்னும் பேச்சு நிச்சயமோ வென்னமோ நிதானிப்போமென்று கிட்டி, கிருஷ்ண சலத்தினாற் கட்டியிருந்த

கட்டை அவிழ்த்துப் பார்த்தான். அப்போது உச்சிதமான கிருஷ்ண சர்ப்பமொன்று சீரித்துரத்தியதைக்கண்டு, மதிமருண்டு மயங்கி, வருந்தித் தியங்கி, அடி வஞ்சகப் பேடி! சண்டைமுகத்திற்கு வரேனென்ற வென்னை உபாயமாய்க் கூட்டிவந்து வன்னிமரத்திலேற்றி, பாம்புக் கிரையாக்கவோ பார்த்தாய். நான் பண்ணியபாவ மென்னமோ? உன்னைச் சாரதியாக வெண்ணிவந்த தோஷமோ? இன்னமும் என்னை யென்னசெய்யப் போகிறாய்? இந்த மட்டும் என்னை விட்டுவிட்டி! எனக்குப் புத்தி வந்ததடி! அடிசதிகாரி! என்று மயங்கி இறங்கி வரத் திரும்பிய உத்தர னியற்கையைப்பற்றி புத்திசாலியாகிய புண்ணிய விஜயன் கண்டு, இறங்காதே, இறங்காதே என்று கையமர்த்தி, நீண்ட பாம்பானது உன்னைப் பதறிக்கடியாது அதற்கு நீ பயப்படாதே. ஓ அதிகுணசாலியாகிய அரசகுமாரனே! உனக்குப் பொல்லாங்கு விளைக்கும்படியான பொருமை எனக்கில்லை. நீ விருதாவிற் கவலைப்படுகிறாய். இன்னுஞ் சற்று நேரத்தில் உனக்கு மேலான சுபங் கிட்டப் போகின்றது. எபபோதும் என் சொல்லுனக் கொப்பில்லா வின்பத்தையும் உண்டாக்கக் காத்திருக்கின்றது. உங்களுடைய ஆதரவில் இருக்கின்ற யான் ஒருக்காலும் உனக்குக்கெடுதி செய்யக்கருதேன். இங்கினி நடக்கப்போகின்ற சில காரியங்களால் நீயே சந்தோஷிக்கப் போகின்றாய் என்று அவன் கருத்திலெழுந்த கலவரத்தைக் களைந்தான்.

### உத்தரகுமாரன் பிரகன்னளையின் சொற்படி ஆயுதங் கண்டதன் வரலாறு கேட்க அதற்கு அவன் விடைதரல்

இப்பால் அம்மரத்தின் மீதிருந்த ராஜகுமாரன் சிறிது மனந்தேறி, பிராணன் போனாலும்போகட்டும் இப்பேடி பரிந்துவருந்திச் சொன்ன பேச்சைப் பார்ப்போம் என்றுளந் தெளிந்து, பேடியிடத்திற் சிக்கிப் பேய்போலலைவதிலும் பெரும்பாம்பின் வாய்ப்பட்டிறப்பது புண்ணியவசந்தானென்று துணிந்து, பாம்புருவாய்க் கண்ட படையின்பேரிற் கைவைத்துக் கலைத்தான். அப்போது அவனுக்கு ஒரு பொல்லாங்கு மில்லாதிருந்தது. அதை யவன் பார்த்து, அடடா!! இதிலென்னமோ மகுத்துவமிருக்கிறது என்று தனக்குத்தானே பூரித்து, பூமியில் நின்ற பேடியை நோக்கி, ஓ வீணன நிஷ்டூரத்திற் காளான விந்தைக்காரீ! இந்த மரப்பொந்தில் வைத்திருக்கும் ஆயுதங்களுடன் மலைப்பாம்பொன்று சுற்றிக் கொண்டிருக்கிறது. உன்னு லெனக்கென்ன தைரியம் நேரிட்டாலும், (பாம்பென்றாற் படை நடுங்கும்) என்னும் பழமொழி யுண்டல்லவோ? அதனால் என் மனம் அளவுபடாமல் வருந்தி வாடுகின்றது. அப்படி யிருந்தபோதிலும், பாண்டவர்களின் படைகளிவ்விடத்தில் வந்த வரலாறும், விஷாக்கினியுள்ள பாம்பொன்று சீறிக்கொண்டிருக்குந் தன்மையும், அவர்களிந்த வன்னிமரத்தில் ஒளித்துவைத்த காரணமும் இந்த ரகசியமுனக்குத் தெரிந்த விதமும் எனக்கொளியாமல் விபரமாகச் சொல்லுவையானால், நானிந்த ஆயுதங்களை எடுத்துக்கொண்டு கூடவந்து நீ சொன்னபடி கேட்டு நடப்பேன். இல்லாவிடில், இம்மரத்தைவிட் டிறங்கமாட்டேனென்று உத்தரகுமாரனுரைத்து அம்மரத்தில் அட்டகாசஞ் செய்தமர்ந்திருந்தான். அந்த மைந்தன் அறைந்த வார்த்தைகளை அர்ச்சுனன் கேட்டு, சிந்தை பூரித்துச் சிரித்து மகிழ்ந்து தேர்த்தட்டின்மீது ஏறிநின்று, ஓ! அடுத்தோரைக் காக்கும் அரசிளஞ் சிங்கமே! பாண்டவர்கட்குரிய படைகளை இந்த வன்னிமரத்தில் மறைத்து வைத்தபோது, இருவர் தவிர மற்றவர்கள் கண்ணுக்குப் பாம்புருவமாய்த் தோன்றக்கடவதென்று தருமராஜனுரைத்த சத்திய வாக்கின்படிக்குச் சர்ப்பமாகத் தெரிவதைக் கண்டு சஞ்சலப்படாதே; அஃதொரு பெரிய வில்லென்றறிந்து கொள்ளக்கடவை.

அந்த வில்லின் பிரதாபமும் அது கிடைத்த முறைமையும் எப்படிப்பட்டதென்னில், சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமாவினிடத்தில் நூறாயிரவருடம், தக்ஷகப் பிரமாவினிடத்தில் பதினாயிர வருடம், தேவேந்திரனிடத்தில் ஆயிரவருடம், சந்திரனிடத்தில் ஐஞ்ஞூறு வருடம், மற்றும் பலரிடத்தில் நெடுங்காலம் இருந்து; இவர்கட்குண்டாகிய பகைகளைக் களைந்து; பின்னும் வருணனிடத்தில் வந்து சேர்ந்து, பொன்னுமணியும் பூசையாகக் கொண்டு, சிலவருடஞ் சென்றபின்பு கடைசியில் அக்கினிதேவன் அடுத்துக் கேட்க, அவனிடத்தில் ஆசைவைத்த அவ்வருணராஜன் அன்போடு கொடுத்துவிட்டார். இந்த வில்லினால் வெற்றிபெற்று வரும் அக்கினிதேவன், காண்டாவன தகன காரணத்தினால் அருச்சுனராஜனுக்குக் கொடுத்து, தனக்கு வேண்டிய காரியங்களை முடித்துக்கொண்டார். அதுமுதல்

இதுவரையிலும் அறுபத்தைந்து வருடமாக அருச்சுனராஜன் கரத்திற் கிசைந்து, அநாவிர்தகண்டம் அளாவிர்தகண்ட முதலிய எண்டிசையும் வென்று, ஜெயமாலை புனைந்து, மனோபீஷ்டங்களைக் கொடுத்து, தேவர்கள் உரைத்தருளிய ஆசீர்வாதத்தினால் வெகுவித அதிசய வெற்றியைப் பெற்று, காண்டீபமென்னும் அசைவற்றிசை பெற்றிருக்கும் பேர்கொண்ட வில்லென்று அறியக்கடவாய். இந்த வில்லுக்கொப்பாகிய வில் இந்திரவுலக முதலிய எவ்வுலகத்திலும் இல்லை. இந்திர நீலம் வைத்திழைத்த எழிலொளிபோற் பிரகாசிக்கும். அதனை நீ நன்றாய் நிதானித்துப் பார்க்கில் உனக்கே செவ்வையாய்த் தெரியும். அன்றியும், பஞ்சபூதங்களினாலும், பண்ணவர் முதலிய பதினெண் கணங்களினாலும், எக்காலத்தும் பழுதுபடாத வியல்பு அதனிடத்துள்ளதால்? அதற்குக் காண்டீபமென்னும் பெயருண்டாயது. பூருவம் அர்ச்சுனனானவன், சொர்க்கலோகத்தினுக்குற்ற துன்பத்தினை நீக்கும்பொருட்டு காலகேய நிவாத கவசர்களை வென்று யமபுரத்திற் கனுப்பிய திறமையும், ராஜசூய யாகத்திற்காக விஜயம்பெற்றுத் திரவியம் சேகரித்த முறைமையும், சித்திரசேனன் முதலிய காந்திருவரைக் கண்கலங்கச் செய்து துரியோதனனைக் குடும்பத்துடன் கட்டவிழ்த்து மீட்ட கருணையும் இக் காண்டீபத்தினால் என்றறியக் கடவை. இந்தமட்டும் இது நிற்க சத்தாகிய பாற்கடலை கடைந்த மத்தாகிய மந்திரகிரி போன்று, கொத்தாகிய மற்ற வாயுதங்களுடன் கலந்து விளங்குகின்ற வெவ்விய கதையானது வீமசேனனுக்கு உரியது. மற்றுமுள்ள வாயுதங்கள் யாவுந் தருமராஜ நகுல சகாதேவர்களுக் குரியனவாம் என்று அருச்சுனன் சொல்லவும், வெற்றிமேற் கொண்ட விராடகுமாரன் தன்மனங் கலக்கந்தெளிந்து, சகல படைகளையுங் கண்ணுற்கண்டு சொல்லுகின்றான்.

### உத்தரகுமாரன் பாண்டவர்க்கு நேர்ந்த சம்பவங்கேட்டு அவரெங்குள்ளாரோவென்று வருந்த, பிரகநளை உள்ளவாறை வெளிப்படுத்துதல்.

ஓ கடையேனாகிய வெனக்கு இவற்றையெல்லாங் காண்பித்தென்னை யாளாக்கிவிட்ட காரிகையே! ஓ இஷ்டதெய்வம்போலென்னைத் தடுத்தாட்கொண்ட வேந்திழையே! மகா புண்ணியவதியாகிய குந்திதேவியீன்ற மைந்தரைவருந் தங்கள் தங்களுயிற்போற் கருதிய வாயுதங்களை யொருநாளும் பிரியார்களே; அட்பேர்ப்பட்ட மகா புருஷர்கள் இந்த வன்னிமரத்தில் மறைத்துக் குறிப்பிட்டு வைக்க வேண்டிய அவசரமென்னமோ? இப்பொழுதவர்களெந்நாட்டி லிருக்கின்றார்களோ? என்னகரத்துள்ளார்களோ? எப்படியானார்களோ? அதை எனக்குணர்த்தவேண்டும் பாக்கியசாலி! என்று உத்தரன் கேட்க, வாசநிறைந்த மலர்போற் சிறந்த வாள்விழியினையுடைய பேடியானவள் முகநயந்து புன்னகை புரிந்து, ஓ அன்புள்ள வரசனே! பாண்டவரைவரும் நந்தியாவட்ட மாலையணிந்த நராந்தகனுடைய வஞ்சகத்திற்குள்ளாகி சொக்கட்டாடி, அவ்வாட்டத்திற் றோல்வி யடைந்து சோர்வடைந்தவராகி, அத்தோல்விக்குப் பன்னிரண்டு வருடம் வனவாசமும் ஒருவருட மஞ்ஞாதவாசமுமவண்போக்க அதற்குடன்பட்டுச் சென்று, காட்டிற் கழிக்கு நாட்களை கழித்து, நாட்டிலிருக்கு நாளை நினைத்து, யாவராலுந் தங்களை யின்னாரென் றறியாதிருக்கும்படிக்குத் தங்கள் ஆயுதங்களை இம்மரத்தில் மறைத்துவைத்து, வேடமாறி வேற்றுருக்கொண்டு, எவரும் ஐயங்கொள்ளாதிருக்கும்படிக்கு அவரவர்க்குத் தக்க தொழிலை மேற்கொண்டார்கள். இப்பொழுதவர்கள் எவ்விடத்தில் இருக்கின்றார்களோ? எனக்குத் தெரியாது என்று திங்கள் குலஞ்சிறக்கப் பிறந்த சிலைவிஜயன் கூற, மறுவில்லா மச்சகுமாரன் பெருந்தகை பேசிய வார்த்தையைக்கேட்டுப் பெருமூச்செறிந்து, உடல் படபடத்து, உயிர் துடிதுடித்து, ஒரு வாக்கியம் புகன்றான். ஐயோ தெய்வமே! சத்தியந்தப்பாத சாதுவானவர்கள் அசத்தியத் துஷ்டராகிய சுயோதனாதியரால் இப்பாடுபடத் தக்கவரோ? தருமமவர்கட்குச் சகாயம் பண்ணமற் போயிற்றோ? கலிகாலமாயிற்றோ? பாவமே லிட்டதோ? நீதிவழுவிக் கெட்டதோ? கொடியோர் களித்திருக்கப் பாண்டவர்கள் துன்புற்றுத் தேம்பிவாடச் செய்தது தீவினையோ? தவத்தைத் தஞ்சமென்று கருதி இவ்வுலகிலுள்ளோர்கள் கொண்டாடுகின்றார்களோ? அந்தோ! இனி எப்படி தருமத்தை நம்பலாம்? அசத்திய மேலிட்ட அக்கிரமிகளுக்குத் துணைசெய்யுமாயின், சத்தியத்தை நம்பிச் சங்கடப்படுவது தகுதியோ? ஓ என் பிரமைதீர்த்த பிரகநளைப்பாவாய்! தருமமே சத்தியஞ் சத்தியமே நித்தியமென்றிருந்த தருமராஜனும், தோள்வலியைத் துணையாகக்கொண்ட வீம

சேனனும், திறனுற்ற சிலைபெற்ற விஜயசிகா மணியும், மற்ற இளையவரிருவரும் பெருமையாக வாழ்ந்த புண்ணியர்களன்றோ? அவர்களுக்கு மித்தன்மைத்தான இடையூறு வரலாமா? வாசமணக்கு மலர்க்குழலினையுடைய திரௌபதி மாதுடன் எவ்விடத்திற் றுன்பமநுபவிக்கின்றார்களோ? எத்தொழிற் செய்கின்றார்களோ என்று வருந்திப் பின்னுஞ் சொல்லுகிறான்.

ஐயோ! இவ்வுலகத்திலொருவர் பற்பல யாகங்கள் செய்து சோடசமகாதானமும் பண்ணி மேலாகிய வாழ்வநுபவித்துத் திரிபுவனத்துஞ் ஜெயம்பெற்றிருந்தாலும், அவ்வாழ்வைக் கீழ்படுத்தித் தாழ்வைமேற்படுத்தி நல்லாரை பொல்லாராக்கி, பொல்லாரை நல்லாராக்கி, விதவைகளை வீரர்களாக்கி, வீரர்களை விதவைகளாக்கி, ஜாதியீனரை சிரேஷ்டராக்கி, சிரேஷ்டரை ஜாதியீனராக்கி, தனவான்களைத் தரித்திரராக்கித் தரித்திரரைத் தனவான்களாக்கி புநிதரைப் பிணியராக்கி, பிணியரைப் புநிதராக்கி, பொய்யரை மெய்யராக்கி, மெய்யரைப் பொய்யராக்கி, இவ்வாறு தலைகீழாகப் பண்ணுவதோ ஊழ்வினைப்பயன் என்றுருகி, தன்மனங் கருகி, கண்ணீர் பெருகியோடக் கசிந்து, பெருமூச் செறிந்து, ஓ தெய்வமே! பாண்டவர்கள் இப்போது எங்கிருக்கின்றார்களோ? நல்லவர்கட்குத் தீவினை விளையுங் காரணமென்னமோ? என்று உயிர் வேதனையுடனே ஏக்கங்கொண்ட உத்தரகுமாரனுடைய உண்மையையும் உறுதியையும் அருச்சுனன் தெரிந்துகொண்டு, உள்ளமகிழ்ந்து இதனை உரைக்கத் தொடங்கினன். ஓ பள்ள நீர்க் கயங்கடோறும் பால் பெருகியோடு மச்சநாட்டிறைவனுன் மைந்தனே! நிந்தையில்லாப் பாண்டவர்களை குறித்து நைந்து வருந்தாதே? அவர்களிப்போது உன்னாட்டிலும், நகரிலும், பட்டை வீட்டிலும் இருக்கிறார்களே யொழிய, வேறெங்கு மில்லையென்று சொன்னான். அவன் வார்த்தையைக் கேட்ட உத்தரகுமாரன் சித்தம்பிரமித்து, அம்மம்மா! என்னு நாட்டிலும் வீட்டிலும் எப்படி இருக்கின்றார்கள்? ஐயோ! அந்தவிந்தையை எனக்கு விபரமாகச் சொல்லுந் தாயே! என்று உத்தரன் கேட்க, விஜயன் சொல்லுகிறான். அப்பா! மூதன்மையான குலத்தையும் மூடிவில்லாத நலத்தையுமுடையவராய், விராடராஜனுக் கருகாசனத்தி லிருந்து திவ்விய மங்கள விக்கிரகமாய் விளங்கி, விவகார தரும நீதிகளை விளம்பி, கங்கபட்டரெனப் பெயர் பெற்ற கருணையாளர்தான் முரசக்கொடி படைத்த தருமராஜன். நாவிற்கினிய அறுசுவை பதார்த்தத்துடன் அன்னஞ் சமைக்கும்படியாக உங்கள் மடைப்பள்ளியி லிருக்கும் பலாயனென்னுஞ் சுயம்பாகிதான் வீமசேனன். எங்கும் பிரசித்தமாகிய குதிரைக் கூட்டங்களுக்கெசமானனாகிய தாமக்கிரந்திதான் நகுலராஜன். உங்கள்பசுமந்தைகட்குத் தலைவனென வந்த தந்திரபாலனனவன் சகாதேவன் உன் தாயாகிய சுதர்க்கணையினிடத்திற் பணிப்பெண்ணாய் அமைந்த விரதசாரணியானவள் மகா லட்சுமிக் கிணையான திரௌபதாதேவி உன் தங்கையாகிய உத்தரைக்கு மத்தள தாள விதத்துடன் தித்திமிதாவென நர்த்தனம் பழக்கிகொண்டிருந்த பிரகநளை என்னும்பேர் கொண்ட பேடியாகிய நான்தான் அருச்சுனன். அன்றியும், உன் அம்மானுன கீசகன் திரௌபதியின்மீது காதல்கொண்டு துன்மார்க்க நினைத்தமையால், அவனை வசந்த மண்டபச்சோலையில் அடித்து, அவன் தம்பிமார்களையும் மூடித்து காந்திருவர்பேரிற் பழிவைத்தவன் வீமசேனனென்றுதெரிந்துகொள். வீமன்கொன்று போட்டுக் காந்திருவர் பேரிற் பழி சுமத்தியதேனென்றால், நாங்கள் கழிக்கவந்த அஞ்ஞாதவாசத்திற்கிடையூறு வருமென்று அஞ்சிதான் அவ்வாறு சுமத்தி மறைத்தோம். இதுவரையில் நாங்களறுவரும் உனது மச்சநாட்டிற்றுனே மந்திரத்தால் தடைபட்டிருந்த கிருஷ்ணசர்ப்பம்போ லடங்கியிருந்து தவணை நாளைக் கழித்து விட்டோம். நாங்கள் அநுபவிக்க வேண்டிய பதின்மூன்று வருஷங்களும் நேற்றோடு தீர்ந்து போய் விட்டன. இனிமேலெங்கட்கு யாதொரு பயமுமில்லை யென்று உண்மையை விளம்பினான்.

### உத்தரகுமாரன் அருச்சுனன் பெயர்களும் அவற்றின் வரலாறுங்கேட் டையந் தீர்ந்து ஆயுதமெடுத்துத்தரல்

இவையனைத்துங் கேட்ட உத்தரகுமாரன் ஆச்சரியத்துடன் புகழ்ந்து இது நல்லகாலமாயிருப்பதால் இவ்வேளையி லின்னுஞ் சில ரகசியங்களை வெளியாக்கிக் கொள்ள வேண்டுமென்று விரும்பி ஏரேமனதாய்த் துணிந்து, ஓ பெண்ணுருக் கொண்டு நிற்கும் பெருந்தகையே! தேவர்கள் கொண்டாட நின்ற பேரழகும், சிவபெருமானளித்த அருளாண்மையும்,

சுத்த வீரர்கள் மெச்சுஞ் சிலைவிஜயத்திறமும் ஆகிய இவைகளைப் பெற்ற தீரவீர அர்ச்சுனர்ஜன் நான்தானென நீர் சொன்ன பேச்சை நான் நம்பமாட்டேன், நீரேதானென்று ஸ்திரமாக சொல்லுவீராகில் உமக்கெத்தனை பெயர் கிடைத்திருக்கிறது? அப்பெயர்கள் வந்ததற்குக் காரணமென்ன? நீர் அவற்றையெல்லாம் என் மனக்கலக்கந்தீர சொல்லுவீராகில், நான் உமக்கு அடிமையாவேன் என்பதற்கு யாதொரு தடையுமிராது என்று உத்தரகுமாரன் உரைக்க, சித்திரப் பாவைபோல் இருந்து கேட்ட விஜயன் சிந்தைகளித்துச் சொல்லத் தொடங்கினான். ஓ வெற்றிபெற்ற விராடராஜனளித்த உத்தரகுமாரனே! எனக்கு கிடைத்திருக்கின்ற பெயர் பதினொன்று. அவையாவன், பற்குணன்-பார்த்தன்-கிரீடதனஞ்சயன் - விஜயன்-சுவேதவாகனன் - வீபற்சு - சவ்வியசாசி-கிட்டினன்-அருச்சுனன்-கிருட்டினன். இவ்வாறமைந்த என்பெயரை பெரியோர் முதலிய யாவரும் பெருமையாகக் கொண்டாடி பேசுவார்கள். இப்பெயர் வந்ததற்குக் காரணம் யாதெனில், பங்குனி யுத்தரத்தில் பிறந்தமையால், பற்குணனென்னும் என்னை யீன்ற அன்னை பெயர் பிரதமையாதலின் பிரதை சம்சம்பந்தம் பார்த்தனென்றும், தேவலோகத்திற் புகுந்து தேவேந்திரன் கொடுத்த கிரீடம் புனைந்து சிம்மாசனத்தில் வீற்றிருந்தமையாற் கிரீடியென்றும், இராஜசூயயாகமியற்றிய வந்நாளில் உத்தரகுருகண்டத்து சென்று தேவர்கள், காந்திருவர்கள் முதலியோர்களை வென்று எண்ணிறந்த தனக்குவையை மகமேருபோற் குவித்தமையின் தனஞ்சயனென்றும், திரிபுவனத்து மென்னை செயித்தவரின்மித் திசை முற்றும் யானொருவனே வென்று விஜயங் கொண்டமையால்விஜயனென்றும், பரமசிவத்தின் வெள்ளி விடைபோல் விளங்கும் நான்கு சுவேதனப் புரவிகள் பூட்டிய தேரேறி நடத்துகின்றமையாற் சுவேதவாகனன் என்றும், என்னைக் கண்ட வேந்தர் யாவரும் பொன்-மண்-பெண் என்னும் மூவாசைகளை விட்டுக் கண்ணைப் பிசைந்து கலங்கிப் பின்னிடவும் விண்ணைச் சேரவும் விடுக்குந்திறத்தால் வீபற்சென்றும், இடக்கை வலக்கை இரண்டினாலும் பாணந் தொடுக்குந் திறத்தாற் சவ்வியசாசியென்றும், என்னையும்-என் விலலையும்-என் தமயனையும் இகழ்ந்து பேசுகின்றவர்கள் மட்டற்ற வல்லமைபெற்ற வானவராயினும், மன்னவராயினும் அவர் தலையை நட்டப்படுத்தி நாசஞ் செய்வேனென்று சபதங் கொண்டிருக்கின்றமையாற் கிட்டினனென்றும், பான் மரகதமணிபோற் பசப்புற்ற உடல் கொண்டிருத்தலால் அருச்சுனனென்றும், காண்டாவன தகனகாலையில், மாதவனும் யானும் வேற்றுமையின்றி மருவியவாற்றாற் கிருட்டினனென்றும் இத்தன்மையாயிசைந்த பதினொரு பெயருங் கற்றவராலும், சொற்றவராலும், நற்றவராலும், தேவர்கள் முதலிய மற்றவராலும் எனக்கு வந்துற்றன.

ஐயா உத்தரகுமாரனே! பூர்வந் திரிபுரமுநீறெழச் சிரித்தருளிய சிவபெருமான் அநுக்கிரகஞ் செய்த திவ்யாஸ்திரங்களும், பிரமா-விஷ்ணு-இந்திரன்-முதலிய தேவர்களளித்த கூரிய பாணங்களும் பெற்றிருக்கின்றேன் அவைகளை நாங்களும் அஞ்ஞாதவாசஞ்செய்ய எத்தனித்தபோது, இந்த வன்னிமரப் பொந்தில் வைத்திருக்கின்றோம். இப்போது உனக்கு பாம்புருவமாக காணுகின்ற காண்டீபமும், அக்ஷய தூணியும், அக்கினிபகவானால் கிடைத்தன. முப்பத்து முக்கோடி தேவர்களும் தேவேந்திரனுங் கொண்டாடிக் கொடுத்த தேவதத்தத்துடன் பதினாயிரங் குதிரை பூட்டிய இந்திரவிமானத்தை மாதலியோட்டிய காலையில், அதன்மேல் ஆரோகணித்துத் தோபமாபுரத்திற்சென்று மூன்றுகோடி நிவாதக்கவசர்களைக்கொன்று ஜெயங்கொண்டு, தேவஸ்திரீகள் ஆலமெடுக்கவும், புட்பமாரி பொழியவும், புகழ்ந்து வாழ்த்தவும் பிரதாபம் பெற்றேன். இரணியபுர வாசிகளாகிய அறுபதினாயிரம்பேர் காலகேயர்களையும், அவர்கட் குதவியாக பதினாயிரம் அரக்கரையும், பாசுபதக் கணையால் மாய்த்து, யான் மந்தாரமாலை புனைந்து, வரிசை பெற்றுப் பூலோகத்திற்கு வந்த மேன்மையை நீ கேட்டறியாயபோலும் இருக்கிறது. நல்லது, ஓ உத்தரகுமாரனே! ஆயிரம் பேச்சென்னத்திற்கு; ஒரு வார்த்தை சொல்லுகிறேன் அதனை நீ யோசிக்கத்தக்கது. சத்துருக்களை யடிப்பதும், அவர்களுயிரைத் தாகத்திற்குக் குடிப்பதும், இவ்விரண்டும் எனக்கு அதிசொற்பமான வேலையன்றி வருத்தமன்று. ஆதலால், நான் அருச்சுனனென்பதற்குச் சந்தேகங் கொள்ளாதே. இதற்குத் திருஷ்டாந்தமாக இப்போது நமக்கு நேராகிய சேனைகளை கண்காணாமல் ஓடவடிக்கிறேன். கன்றுகளுடன் கலந்த பசு நிரைகளை மீட்கிறேன். நீ இனித் தாமதஞ் செய்யாமல் புறப்

பமென்று சொன்னான். அம்மொழி கேட்ட உத்தரன் ஒருவாறு தேறி மகிழ்சிறந்து இனி நமக்குப் பயமில்லையென்று தானேறிவந்த விருக்ஷத்தை விட்டிறங்கி இரதத்தின்மீது இளஞ் சூரியனை பனிமூடியவாறுபோல் பேடியுரு அமைந்த பெருமானை வணங்கி, நெடு நாளாகத் தேடிய தேவரைப் பணியும் அன்பர்போல் பணிந்து, துன்பமுந் துயருந் தொடராச் சுகசொரூபனுடைய திருவடியை சிரத்திலும், கண்களிலும், முகத்திலும் சேர்த்து முத்தமிட்டு, தன்னைத் தான் மறந்து தனக்குத்தானே திடுக்கிட்டு பயந்து இனிய வசனமொழிந்து நயந்து நின்றான்.

அக்காலையில் பார்த்தனானவன் விரைவிற் றேர்விட்டிழிந்து, பிரியாப் பிரியத்துடன் முகமலர்ந்து, உத்தரகுமாரனை உடல் குழைய அணைத்து, ஐயனே! இன்னுமுனக்கு பயமுண்டா யிருக்கிறதோ? என்னளவிற் சந்தேகமுண்டோ? நீ ஏதொன்றுக்கும் அஞ்சாதே. இனி நீ தீதில்லாச் செயம்பெற்று வாழ்வாய் என்று உறுதிவார்த்தைக ளுரைத்துத் தேற்றினான். அதனால், உத்தரகுமாரன் களித்து முகமலர்ந்து சிவந்த கைகளைச் சிரத்திற் குவித்து கண்ணீர் பெருகக் கசிந்து உள்ளுருகி, ஓ பாற்கடல்போற் கீர்த்தி படைத்த பார்த்த மகாராஜனே! தேவரீ ரின்னாரென் றறியாமற் கன்று பின்றுவென்று ஏழைமதியாற் பிதற்றி, அபசாரங்களைப் பெரிய மூட்டையாகக் கட்டிக்கொண்டேன். நான் மகா பாவியாயினேன். சிறியேன் செய்த பிழையைப் பொறுத்து அருள்சுரந் தாளவேண்டும். ஓ அத்தனே! ஓ என்னிஷ்டமாகிய கர்த்தனே! என்று பற்பல வசனங்களினாற் பரதவித்துக் கூறி மேலுஞ் சொல்லுகின்றான்: ஓ கருங்கடல்கடுவுஞ் சொல்லுகின்றான்: ஓ கருங்கடல்கடு கிழிய ஒருங்குடனோடி கலக்குங் கங்கை நீர் வலம்பெருகிய குருநாட்டரசே கேட்டருளும்: தேவரீர் திருவடி பெயர்த்தருளப்பெற்றுத் தேவரீர் சாரதித்தொழில் செய்ய எனக்குக் கிடைக்குமா? ஜன்மாந்திரப் புண்ணிய பலன் கைகூட்டுமா என்று எண்ணியவண்ணங் கவலைகொண்டு மனங் கண்ணீ வெகுநாளாகக் கவலைகொண்டு மனங் கண்ணீ யிருந்தேன். அண்ணலே! மெத்தப் பிரயாசப்பட்டுத் தான் கற்ற வித்தையைத் தானே புகழ்ந்து பேசுகிறவர்களைப்போற் பேசப்படாதென்றிருந்தாலும், தமது கருணையானது என்னைப் பேசச் செய்கிறது. அருமை யறியும் பெருமானிடத்திற் பேசப்போகின்றேன்? அரவாபரணம் பூண்ட ஆண்டவருக்கு வேதப்பரி தூண்டிய பிரமாவினால் விதித்திருக்கின்ற சாரதி நூல்களெல்லாம் பார்த்து எல்லா வல்லமையிலுங் கை தேர்ந்திருக்கின்றேன். ஓ கருணைகடாட்ச காண்டீபதரனே! அதனாலவ் வித்தையைத் தங்களுக்கு உபயோகப்படுத்திப் பேர் பெறவேண்டு மென்பதே எனது வெகு நாளைய கருத்து என்று சொல்லிப் பணிந்த ராஜகுமாரனை அருச்சுனன் தழுவியணைத்து, ஓ என் இருதயத்திற்குவந்த இளஞ் சிங்கமே! நீயும் நானும் நெருங்கிய இஷ்டமானோம். இனி நெருப்பும் காற்றுஞ் சேர்ந்தபின்பு சத்துருவாகிய காடு நீறுபடாதிருக்கக் கூடாது. இன்னும் யோசனைக்கு இடங்கொடாது. விரைவிலேறி இம்மரத்தில் ஒளித்து வைத்திருக்கும் நமது காண்டீபமென்னும் வில்லும், அக்ஷய தூணியும், தேவதத்தமும் எடுத்து வா என்று விஜயன் விளம்பினான். உடனே உத்தரகுமாரன் தடையில்லாமல் ஏறி, உத்தரவின்படி தேவதத்தமும்-காண்டீபமும்-அக்ஷய தூணியும் எடுத்துக்கொண்டு, மற்ற வாயுதங்களையும் முன்போல் வைத்து, மான் தோலாற் கட்டி மறைத்துவிட்டு மரத்தைவிட்டிழிந்து, அர்ச்சுனராஜனைத் தொழுது கொடுத்து, தனக்குச் சாரதித் தொழில் கிடைத்த சந்தோஷத்தால் திடீரென்று தேரிற் குதித்து, குதிரைக் கடிவாளங்களைக் கையிற் கொண்டான்.

### அருச்சுனன் சுயரூபங்கொண்டு இந்திராதியராலணிமணிக்கலனோ டனுமக்கொடி படைத்துப் படைமுகம் போதல்

அப்பொழுது அருச்சுனராஜன் இந்திரன் முதலிய தேவர்களையும் ஊர்வசியையுஞ் சிந்தித்து, தந்தை-தாய்-தமையன் முதலான பேர்களையும் வந்தித்து, தர்மதேவதையையும் போற்றினான். அவ்வேளையில் விஜயனுக்குப் பாண்டுராஜன் பூருவந்தேடிய பாக்கியம் பலித்ததுபோற் பேடிரூபம் நீங்கி, ஆதிபுருஷ ரூப லாவண்ய வடிவமாயினான். ஆகாயத்திலுள்ள அமரரியாவரும் வாழ்த்தினார்கள். அருச்சுனன் நிஜரூபத்தோடுங் கண்ட உத்தரகுமாரன் பெண்மையை அவாவும் பேரெழிலாடவரையொப்ப அவாவினான். கேட்டீரோ! ஜெனமேஜெய மகாராஜனே! க்ஷணத்திற்கு முன்னம் இருள் மூடியவாறுபோற் பேடியாயிருந்த அருச்சுனன், இப்போது பச்சைமணியினது பிரகாசம் வீசிச் சொலிப்பதுபோற்

றுலங்கிய தன்மையெவ்வாறிருந்ததென்னில், இந்திரஜாலங் கற்றவர்கள் க்ஷணத்திற்கு க்ஷணம் வெவ்வேறு ரூபங் காட்டுகின்ற விந்தைபோன் றிருந்தது. அருச்சுனனது தேககாந்தியைக் கண்ட உத்தரகுமாரன் மின்னலுக்கெதிரில் விழித்தவர்போற் கண் கூசிக் கவிழ்ந்து, இரண்டு கையினாலுஞ் சேர்த்திறுகத் தழுவி, ஓ என்னையனே! உமது மாசற்ற திருமேனிக்கு இம்மறு வந்த காரணம் யாதோ? என்று வணங்கிக் கேட்க, விஜயன் சொல்லுகிறான்: ஓ இராஜ செல்வமே! முன்னொருபோது இந்திரனோடு சொர்க்கலோகம் போய் தேவர்கட்குப் பகையாகிய காலகேய நிவாதகவசர்களை ஜெயித்து, வெள்ளையானையின் பேரிற் பவனி வந்து, அமுதபோஜனமுண்டு, அமரர் யாவரும் புடைசூழும்படியாக இந்திராசனத்தி லிருந்தேன். அப்படி யிருந்த எனக்குச் சந்தோஷமுண்டாக்கும்படி அத்தேவேந்திரன் நினைத்து, அரம்பை-ஊர்வசி-மேனகை-திலோத்தமை இவர்களால் நாட்டியமாடுவித்தார். அவர்களாடிய ஆட்டிலும், பாடிய பாட்டிலுஞ் சிறந்த முகநயமுள்ள ஊர்வசியை நான் மெச்சிச் சிரக்கம்பஞ் செய்தேன். அவணிருந்த தேவர் முதலிய யாவரும், ஊர்வசி இன்று செவ்வையாய் நடித்தனளென்று கொண்டாடினார்கள். அன்றிரவில் எனக்கு அங்கமைத்த அரண்மனையிற் போயிருந்தேன். நடுராத்திரியில் அந்த ஊர்வசி என்னிடத்திற்கு வந்தாள். அவளை யான் கண்டமாத்திரத்தில், எங்கள் பாட்டனாகிய புரூரவச் சக்கரவர்த்தியின் பத்தினியாதலால், மெத்தப் பயந்து, உடனே எழுந்து, அவள் பாதத்தில் விழுந்து நின்றேன். அதுகண்ட ஊர்வசி கொழுந்துவிட்டெரியுஞ் சுடர்போற் கொதித்து நானெண்ணி வந்த எண்ணத்தைப் பின்னம் பண்ணினபடியால், மண்ணினில் வாழு மனுக்களில் நீ பேடியாகுகவென்று சபித்துப் போயினாள்.

அப்பாற் பொழுது விடிந்தபின்பு, அவ்வுருவத்தோடு வெளியே வருவதற்கு வெட்கப்பட்டிருந்த என்னைத் தேவேந்திரன் கண்டு விசனமடைந்து, சங்கதி யறிந்துகொண்டு, ஊர்வசியினிடத்திற்குச் சென்று, அவளுக்கு வேண்டிய உறுதிமொழி புகன்று, எனக்கிட்ட சாபத்தை நிவாரணஞ் செய்யும்படி கேட்டுக் கொண்டார். அதற்கவளிரங்கி, அந்தச் சாபம் நானினைத்தபோது ஒரு வருஷம் என்னைத் தொடர்ந்திருக்கவும், நான் நினையாதபோது என்னைவிட்டு நீங்கி யிருக்கவும் அநுக்கிரகித்தாள். அந்த ஊர்வசி யனுக்கிரகத்தால் உன்னுடைய விராடபுரத்தில் ஒரு வருஷம் பேடியாயிருந்து அக்ஞாதவாசம் பண்ணும்படி நேரிட்டது; அப்பனே எனக்குப் பேடியுருவமைந்த வரலாறிது என்று உத்தரகுமாரனுக்கு உரைத்துச் சந்தோஷிப்பித்த அர்ச்சுனன் பின்பு, தன் தந்தையான இந்திரனையும், வம்ஸநாயகனாகிய சந்திரனையும், திரௌபதியைப் பெற்றவனாகிய அக்கினிதேவனையும் சிந்தையிற் றுதித்து, வந்தனை புரிந்து, தனக்கு வேண்டிய அணிமணிப் பணிகளைக் குறித்து விரும்பினான். அவ்வேளையில், தேவேந்திரனானவன் தன் மைந்தன் பழைய கோலத்தினைக் கொள்ளப்போகிறானென்று மகிழ்ந்து கதிர்மணிக்குண்டலம் - கனகிரீடம்- நவமணியிழைத்த ரத்னாபரணம் இவை முதலிய பல பூஷணங்களுடன், ஒப்புவமையில்லா முப்புரிநூலுங், கற்பகமாலையும் கந்தமுந் தந்தான். அவற்றையெல்லாம் அன்போடும் பெற்றுக்கொண்டு, ஊர்வசியம்மனை உள்ளத்தில் நினைத்துப் பஞ்சாயுதனைப் போலும், செஞ்சிலை மதனைப்போலும், அஞ்சனமேனியின் அழகனா யமைந்து விளங்கிய அக்காண்டபனென்னுங் காளையானவன், அக்கினிதேவனால் அநுமக்கொடியும், அவ்வகதியும் வரும்படியாகச் செய்துகொண்டு, சகல ஆபரண பூஷிதனாய்ப் பூரணவலங்கிர்தத்துடனிருந்து, உத்தரகுமாரனைப் பார்த்து, அப்பா மச்சநாட்டரசே! நமது தேரில் நாட்டி யிருக்குஞ் சிங்கக்கொடியை மாற்றி, அண்டமுகடு அதிர ஆகாயமார்க்கமாய் வந்த அநுமக்கொடியை அமைத்திடுகவென்று சொன்னான். அவனு மவ்வாறே யமைத்து, தனது சிங்கக்கொடியை வன்னிமரப் பொந்தில் மறைத்து வைத்தான். அஃதெப்படி யிருந்ததென்றால், அருச்சுனனுடைய அநுமக்கொடியை உத்தரகுமாரனுடைய சிங்கக்கொடியானது கண்டு துவண்டு, நாம் இந்த அநுமக்கொடிக்குச் சரியாக மாட்டோம். இந்த அநுமாரானவர், இராம ராவண யுத்தத்திற் சங்கைதீர்த் திருக்கின்றவர் என்று தைரியம் விட்டுச் சந்து பார்த்து நுழைந்து ஒளித்துக் கொண்டதுபோ லிருந்தது.

இப்பால் அருச்சுன ராஜனும், உத்தரகுமாரனும் ஒருவரையொருவர் நோக்கிக் களி

த்து, அவ்விடத்திருந்த காளிகாதேவியைக் கை தொழுது எழுந்து இரதமீதேறி, ஆகாயுமளாவி தழைத்த வன்னிமரத்தை வலம் வந்து, தொழுது, விஜய காண்டீபவில்லை நிறுத்தி, வாச மலர்மாலை சாத்திப் பூஜை புரிந்து, இருகுதையும் வளைய நாணேற்றி டங்காரஞ் செய்தான். அக் குணத்தொனியினால் உலகெலாம் பெயரும் ஊழிக்காலம்போலோசை யெழுந்து, எங்கும் நெருங்கிப் பொங்கும் கடல்போன்ற கௌரவச் சேனைகளெல்லாம் நின்ற நிலையில் நிலைதவறிப் போய், யானைவீரர் - அஸ்வதீரர் - அழகிய தேரர் - அணிபடைக் காலாளர் - அதிரத மகரத சமரத அர்த்தரதர் முதலிய யாவரும் பேரிடி முழக்கங்கேட்ட பெரும் பாம்பினம் போல் தலையெடுக்க மாட்டாமல் தட்டழிந்தார்கள். அக்காலையிற் கற்பகமாலையணிந்த மற்புய கோலாகல விற்பனவிவேக விதரண சாலியான வீபற்சு, யாவருந் திடுக்கிட்டுக் கண்கலங்கும்படியாகத் தேவதத்தத்தை யெடுத்துத் தனது செவ்விய வாயில் வைத்து ஊதினான். அவன் செய்த சங்கத்தொனியால், மகமேரு முதலாகிய மலைகளும் அதிர்ந்து, கடலுங் கீழ்மேலாகக் குழம்பி, சப்த மேகங்களும் பிதிர்ந்து, அஷ்ட நாகமுஞ் சிதைந்து, நக்ஷத்திரங்களும் உதிர்ந்து, அண்டமுகடுகளெல்லாம் விண்டு கடகடாயினமாயின. இவ்வித சங்கத் தொனியினாலும், வில்லினோசையாலும் தேரிற்கட்டிய புரவிகள் பதைத்து, சாரதியாகிய உத்தர குமாரனுஞ் சங்கடப்பட்டுத் தலை நடுக்கொண்டு கையிற்பிடித்த கடிவாளத்தையும் விட்டு, கண்பொறி கலங்கச் செவிடுபட்டு, உணர்வு கெட்டு ஒடுங்கி வீழ்ந்தான். இவ்வாறு நடுங்கி ஒடுங்கி நிலத்திற் சாய்ந்த உத்தரகுமாரனை காண்டாவன தகன காண்டீபன் கண்டு, தனது நீண்ட கைகளால் எடுத்தணைத்து, ஆலவட்டங்களினாலும், சாமரைகளினாலும் வீசி, ஆயாசந் தணித்து வியர்வுபோக்கி, அயர்வு நீக்கி, பன்னீர் தெளித்து, வெந்நீரளித்து விடாயப்பட்டிருந்த களையையாற்றினான். அப்போது களை தீர்ந்தெழுந்து, கண்விழித்துப் பார்த்த உத்தர குமாரன் நடுக்கமுங் கவலையு நீங்காதவனாய், கும்மென்று காதடைபட்டு ஈனசுரமாகப் பேசினான். அந்தப்பிள்ளையை அர்ச்சுனன் இரக்கமாகப் பார்த்து, ஓ பொருப்பனைக் குடைந்து கடைந்து பொருந்திய புஜபூரிப் படைந்த விராடர்கோனவித்த புனிதகுமாரனே! புகழ்கொள் விநோதனே! நான் செய்த சங்கத் தொனியினால் ஐம்புலாதிகளு மயங்கி அவசமடைந்த உன் பேதைத்தனம் யாதோவென்று கேட்டான்.

அக்கால், உத்தரகுமாரன் சிறிது தலை எடுத்துப் பார்த்து ஐயா! சப்தசமுத்திரங்களும் பொங்கி வழிந்து உலகமழியுஞ் சர்வசம்ஹார ஊழிக்காலத்து ஓசையென்பது தேவரீர் முழக்கிய சங்கோசையைப் பார்க்கிலும் பெரிதாய் இருக்குமோ? எல்லாவுலகினும் எழும் பற்பல ஓசைகள் யாவும் இப்போது இவ்விடத்தில் உமது வில்லாலுண்டாகிய விபரீதவோசைப்போல விந்தை விளக்கவல்லவோ இத்தன்மையாகிய பேரோசையைக் கேட்ட தேவர்களிலுந் திக்குபாலர்களிலும் யார்தான் பயந்து மயங்காமற் போவார்கள்? யார்தான் திகிலடைய மாட்டார்கள்? அப்படிக் கிருக்க உமது கால்மாட்டிலிருந்த நான் பயப்பட்டு வீழ்ந்தது பெரிதல்லவே, அந்தமட்டும் உயிர் தப்பிப் பிழைத்துத் தேவரீருடன் பேசப் புறப்பட்ட நான் மிகவுந் தைரியசாலி யல்லவோ; முத்தொழில் நடாத்துகின்ற மூவரு நடுங்கு முழக்கத்திற்கு சித்தப்பிரமை கொண்டு தேறியவென்னை ஆதரித்தருளும். ஓ அருச்சுனராஜனே! இனி நானென்ன சொல்லப் போகிறேன் என்றிரங்கிய விராடராஜகுமாரனை அருச்சுனன் அன்புடனோக்கி, தோளுடன் மார்புத்தோயத் தழுவி, மாதவமுனிவரால் தான்கற்ற மயக்கந்தீரு மந்திரத்தை உபதேசித்து, ஓ உத்தரகுமாரனே! உனக்குங் குதிரைகளுக்கும் இனி யொருநாளும் பயமில்லை; ஈரேழுலகுங் குலுங்கினாலும், ஓரேழ்கடலும் கலங்கினாலும் என்றென்றைக்குங் கவலையில்லாதிருக்கலாம்; இப்பொழுது விரைவில் தேர் செலுத்தென்று தனஞ்சயன் சொன்னான். அச்சொல்லைக்கேட்ட மச்சராஜன் மதலையானவன் தனக்கு அருச்சுனன் கிடைத்த ஆசையினால் அன்புமேலிட்டு, கையிற் கடிவாளம் பிடித்து, உச்சவான்கதிர்த் தேரிற்பூட்டிய பச்சைமாவோரேழையு மோட்டிய அருணனைப்போற் சவ்விய சாசியின் சுவேதவாம் பரிகளையொப்ப விளங்கிய குதிரையைப் பட்டபடவென்று செலுத்தினான். அப்பொழுது பனியினால் மறையப்பட்டு ஒளிமழுங்கி உடலொடுங்கியிருந்த சூரியனானவன், தனது ஆயிரங் கிரணங்களோடும் அலைகடல் முகட்டில் உதயமான தன்மைபோல், பேடியுருவால் மறைந்து பெருமை குறைந்திருந்த அருச்சுனன் பேசு

தற்கரிய தன் பின்னழகும் முன்னழகும் பிரகாசிக்கச் சிறந்தது. நெடுஞ்சிலையுங் கொடுங்கணையுங் கைப்பிடித்து கௌரவமுதல்வன் சேனையிலுள்ள நிருபர்களியாவரும் நடுநடுங்கி நாவறண்டு கிடுகிடுத்துப் போகும்படியாக அவர்களுக்கு நேராகத் தோன்றினான்.

### அருச்சுனன் வரவைக்கண்ட துரோணர் துரியோதனனுக் குணர்த்தி யறிவுறுத்தல்.

இவ்விதமாகிய அழகிய தேர்மேல் வந்த அநுமக்கொடிக்கதிபனை வீஷ்மர் முதலாகிய வீரர்கள் கண்டு, வேறுவேறெண்ணங் கொண்டு விருதுமுதலிய வீரசின்னங்க ளெல்லாஞ்சோர நின்றார்கள். அவ்வேளையில், நான் மறைக் கொடியும் நந்தியவர்த்த மாலையுமுடைய துரியோதன மஹாராஜனைப்பார்த்து, ஓ வணங்காமுடிபெற்ற மகிபனே! இசைபெற்ற விஜயன் சர்வசம்ஹாரகாலக் கடவுள்போற் சலனமில்லாமல் வருகின்றான்பார். அவனூர்ந்து வருகின்ற தேர்வேகத்தினால் இந்தப் பூமியைத் தாங்கும் பணமகுடமுடைய ஆதிசேடன் என்னபாடு படுகின்றானோ? அந்தத் தேரிலிருக்கிற மஹாபுருஷன் கைப்பிடித்திருக்கும் வில்லினது நாணோசையால் தேவலோகம் எப்படி தத்தளித்ததோ அவன் போர்முகத்தில் முழக்குஞ் சங்கத்தைப் பூரித்த பேரொலியானது, எட்டுத்திக்கையுஞ் செவிடுபடுத்தாமல் விட்டுவிடுமோ? ஒண்டித்தேரும் ஒற்றைவில்லுங் கொண்டு ஒன்றுக்கும் அஞ்சாமல் தனிமையாய் வருபவன் எப்படிப்பட்ட வீரனாயிருக்கவேண்டும்? இவ்விடத்தி லிருப்பவர்கள் இன்னாரின்னாரென் றறியாமலும், நன்மை தீமைகளை நாடாமலும், நம்மோடெதிர்த்து யுத்தஞ்செய்ய வருகிறவன், அசகாய சூரனென்றுந் திடதைரிய தீரவீர பராக்கிரமமுள்ளவனென்றுந் தேர்ந்தாயோ எப்போதும் யாதொரு காரியங்களையுஞ் செவ்வையாக நிதானித்து யோசிக்கவேண்டியதே. ஐயா துரியோதனராஜனே! ஜோதிப்பிரகாச குண்டலமும், சுடர்விடு கதிர்மணி மகுடமும், உதயகிரியிலெழுந்த சூரியன்போற் றுலங்கும்படியாக வருகிறவன் இந்திரன் மைந்தனென்பதற்குச் சந்தேகமில்லை. அதற்குத்திருஷ்டாந்தமென்னவென்றால், சந்திரனைப் பாதியாகப் பிளந்ததையொத்த கோரதந்தங்கள் பெற்ற கொடிய இராக்ஷசப்படைகளை அடியோடு மடியப்படுத்திய அநுமக்கொடிக் காட்சியே சாட்சியாக விருக்கின்றது.

அன்றியும், அவன் வருகிற திறத்தை நோக்குமிடத்தில், வெற்றிபெற்ற வில்லைப் பற்றி ஏரேழுலகையும் இன்றேவென்று செல்வேன் என்று இறுமாப்படைந்து யாவரையும் ஒருபொருளாக எண்ணாமல் யானைகளை நோக்கித் தாவுகின்ற சிங்கம்போல் வந்துவிட்டான். மேல் நடக்கவேண்டியதென்ன? இனி சும்மாயிருப்பது காரியமல்ல. அவனோ இனி நமது சேனைகளை வீரியங்கெடச் செய்து சூரியனுக்கு எதிர்ப்பட்ட பனிபோலோட்டப் பண்ணுவான். அல்லாமலும் ஆழ்ந்த பேரறிவுடைய அவ்வர்ச்சுனன் இங்கு சூழ்ந்த நமக்கெதிரில் வந்து வெல்லவேண்டுமென்று வில்வளைத்தானாகில், இவ்விடத்தில் நிறைந்த பெருங்கும்பலில் அவனோடு எதிர்த்து போராடத் தக்கபேர் யாரிருக்கின்றார்கள்? ஒருவேளை அவனுக்குத் தப்பி ஓடிப்பிழைப்போம் என்றாலோ? அவன் கையிலிருக்கும் அஸ்திர வலிமையால் அதலசுதல பாதாளம் போனாலும், அங்கும் வந்து போர்புரிந்து கொல்லுவான். நாம் அறிந்த அர்ச்சுனனே அல்லது வேறல்ல. ஆகையால், நானொன்று நினைக்கிறேன். நம்மோடு அவன் எதிர்ப்பதற்கு முன்னமே அஸ்தினபுரத்திற்குப் போய்விடுவோமாகில், ஒருவருக்கும் ஒன்றுமில்லை. ஊர்சிரிக்கும் பழியும் இல்லை. யோசிக்குமிடத்தில் வேறு வழியும் இல்லை. அப்படிக்கல்லாமல் தானென்னுங் கருவத்தால், தலைகாட்டி நிற்போமாகில் என்றைக்கும் அவனை வெல்லும் வல்லபம் நமக்கில்லாதிருந்தாலும், இன்றைக்கு நிச்சயமாக நாமவனைச் செயிக்கமாட்டோம். அதேதென்றால், நாடுவிட்டு புறப்பட்டது முதல் மாடுமடக்கிய இதுவரையில் நேரிட்ட துற்சகுனத்தினாலும், மனச்சோர்வினாலும் வெற்றிபெறுவ தரிது. ஆதலால், நாமடக்கிய பசுக்கூட்டங்களை ஓட்டிக்கொண்டு, பட்டிணம்போய்ச் சேருவோமாகில், நமக்கு லாபமுண்டு. நாம் பயந்து ஓடிவிட்டோமென்று யாரும்பழியார்கள். அதற்கு ஓர் உபாயமுமுண்டு; அவ்வுபாய மென்னவெனில், குருகுல நாயகனாகிய வீஷ்மரும் கிருபாச்சாரியரும் அஸ்வத்தாமா முதலிய பலரும் நானும் இங்ஙனெ நெருங்கி நின்று, எதிர் வருகின்ற தனஞ்செயனை மறித்து யுத்தஞ் செய்கின்றோம். நீயும், உனக்குரிய சில வேந்தரும் வீரர்களும் பாதிச் சேனைகளும் மடக்கிய பசுக்கூட்டங்களோடு, இவ்விடம் விட்டுப் பெயர்ந்து, அரவக்கொடி நாட்டிய தேரைத் திருப்பிக்கொண்டு தேசம் போய்ச்

சேர்ந்துவிடு; அப்படி போய்ச் சேர்ந்து விடுவையாகில் துரியோதனராஜன் பெரும்படையுடன் வந்து விராடராஜனுடைய பசு மந்தைகளை மடக்கிக்கொண்டு போய்விட்டானென்று உன்னைப் பலரும் கொண்டாடுவார்கள். (ஆரியக் கூத்தாடினாலுங் காரியத்தின் மேற் கண்) என்பதை யோசிக்கவேண்டும். அப்பனே! நான் சொல்வது உனக்கு ஒப்போ அல்லது தப்போ? நன்று யோசித்துச் சொல்லென்று துரோணாச்சாரியர் கேட்டார். அவருரைத்த சொற்சூசகத்தை யுணராத துரியோதனன் பதைத்துச் சொல்லுகிறான்:

### துரியோதனன் துரோணர் கூறியதைக் கேட்டு வெறுத்துக்கொண்டு மற்றயரை யுத்தத்திற்கு ஆயத்தப் படுத்துதல்

வாரும் சதுர்வேத பாராயணராகிய தநுர்வேதியரே! பாண்டு புத்திரர்கள் எங்கள் மாமனிடத்திற் சொக்கட்டாடித்தோற்று, நீர்வளனுற்ற நாடும், சீர்நலனுற்ற நகரும், மற்றும் பற்பல செல்வங்களுஞ் சேனைகளும் இழந்து, பனிரண்டு வருடம் வனவாசமும் ஒரு வருட அக்ஞாதவாசமு மொழித்து ஒருவருக்குந் தெரியாமலிருந்து வெளிப்படும்படியாக உங்களைப்போல் தேறித்தெளிந்த பெரியோர்களால் நிச்சயித்த நிபந்தனையை ஒத்துக்கொண்ட காலத்தில், மற்றொருவிதம் நிர்ணயம் பண்ணியிருந்ததை மறந்து பேசுகின்றீரோ? ஐயரே! ஐவரும் உருவ மறைந்து கருவங் குறைந்து அக்ஞாதவாசத்திலிருக்கும் போது, அவர்கள் இன்ன இடத்தில் இருக்கின்றார்களென்று நாமறிந்தால், அன்றுமுதல் மீண்டும் பன்னிரண்டு வருடம் வனவாசம் பண்ணி ஒருவருடம் அக்ஞாதவாசஞ் செய்யவேண்டுமென்று ஸ்தாபித்திருக்கிற மொழிப்படிக்குச் சத்தியந் தவறாமற் போக்கவேண்டுமல்லவோ? அப்படியிருக்க, அந்த அக்ஞாதவாசத் தவணைநாள் அகல்வதற்கு முன்னே எப்படி வெளிப்படலாம். என்னுடைய நல்ல காலம் இப்போது வருகிறவன் அருச்சுனனாகில், நமக்கு மேலான நியாய வழியைத் தருமல்லாமல், தாழ்வான தீமையைத் தரமாட்டாது. ஓ தநுர்வேதியனே! மாறுபட்டுப் போராடும் பெருஞ்சமர் வல்லவராகிய பாண்டவர்கள், இந்த மச்சநாட்டிலிருந்தவாறு தெரியாமலோ வந்தோம் ஏதோ சில காரணங்களால் தெரிந்திருந்தும் விராடபுரத்தின்மீது நமக்கிருந்த வெகுநாளையப்பகையைப் முடித்துவிட வேண்டுமென்னும் எண்ணத்தினுலும் ஒரேமனதாய் முன்னாடித் திரிகர்த்தனை யனுப்பிவித்து, பின்னாடி நாமெல்லோரும் ஆலோசித்து, பஞ்சவர்களின் அக்ஞாதவாசத்தைக் கெடுத்துவிட வேண்டுமென்று தானே வந்தோம்? ஐயா துரோணரே! இப்படியெல்லா மிருக்க, அருச்சுனன் வந்தான் என்று ஏன் அதைரியமாகப் பேசுகின்றீர்? ஐயோ நரனேவந்து நமக்கெதிர்நின்று யுத்தஞ்செய்யத் தொடங்குவானாகில், நாம் அவனுடன் பகைத்துப் போர்புரிய வேண்டிய அவசரமில்லையே; விவகாரமென்கிற கயிற்றினால் அவனையும், அவனுடைய சகோதரர்களையும் அவனுக்குச் சகாயமான பேர்களையுங் குண்டுக் கட்டாகக்கட்டி யுருட்டிவிடலாமே, அவனெவ்விதம் நம்மை வெல்லக்கூடும்? நாம் கைக்கொண்ட மாடுகளை அவனெவ்வாறு கைப்பற்றக்கூடும்? அவன் கழிக்கவேண்டிய அக்ஞாதவருஷத் தவணையில் இன்னும் ஒருநாள் போக்கவேண்டியதா யிருக்கிறது. எங்கள் குலமுதல்வராகிய வீஷ்மருக்கு இந்த வித்தியாசங்களெல்லாம் நன்றாய்த் தெரியவரும். அந்த மஹாநுபாவரே இந்த விவகாரத்தைக் கண்டறிந்து, மறுபடியும் பாண்டவர்கள் வனவாசம் பண்ணும்படிக்கு ஸ்தாபிக்கப் போகின்றார். இதற்குள் நீரேன் ஆத்திரப்படுகின்றீர்? உயுத்தத்திற் கிளைத்த உலோபரைப்போல் என்னை ஊருக்கு ஓடிப்போவென்று உறுதிச் சொல்லவந்தீரே, என்ன காரணத்தால் இவ்வாறு கூறினீர்! நல்லது.

ஓ துரோணரே! நீர் சொல்லியவண்ணம் ஒண்டித்தேர்மேல் வருகின்றவன் தனஞ்சயனாகிச் சண்டை தொடுத்தாலும், அவனுக்குச் சகாயமாகத் திக்குப்பாலர்கள் அடுத்தாலும், தேவர்கள்-காந்திருவர்-அரக்கர்-யக்ஷர்-இயக்கர்-அரசர் முதலியோர்கள் வந்து என்னுடன் போர் கொடுத்தாலும், நம்மை அஞ்சக்கப்படாது. எப்படியும் நாமெண்ணிய எண்ணம் பழுதுபடாமல் மாட்டு மந்தையை மடக்கி நமது வசம் பண்ணிக்கொண்டோம். நாமுந் துணிந்து வந்திருக்கின்றோம். ஆகையால், இவ்விடம் விட்டுப் பெயராமலிருந்து, ஒருகை பார்த்து வென்று, வருகிற வீரனைப் புறங்கண்டு, விபகார மேற்கொண்டு, ஜெயபேரி முழக்கி என் தேசத்திற்குப் போவேனல்லது, திருடனைப்போற் பதுங்கி யோடிப்போகமாட்டேன். ஓ! நூலுணர்விற் பயின்ற நுண்ணி

யனே! இதுவரைக்குஞ் சத்துருக்கள்பேரில் யுத்தம்பண்ண வேண்டுமென்று சொல்லுமுன்னமே கண்கள்சிவந்து, கறுவிப்புகைந்து, கைதேர்ந்த காரியவான்கள்போல் மேகமண்டலம் அளாவிய தேர்மேலேறி, ஆயுததீர ஆரபார வீராவேசத்துடன் அடுத்து, வீரச்சேவகங் காட்டி, எட்டு திசையினும் இசையை நாட்டி வந்த உங்களுடைய பகல் வேஷமெல்லாம் மெய்யென்று நம்பியிருந்தேன். இப்போது வெட்டவெளியாயிற்று. ஐயா நமக்கெதிரோடி வரும் பகைவரைக் கண்டவுடன் வருந்தி மயங்கிவாடி ஒருவர் முகத்தை ஒருவர்பார்த்து நெடுமூச்சுவிட்டு, நீ நாட்டை நோக்கி ஓடிப் பிழை நான் காட்டைப்பார்த்து நாடிப்பிழைக்கிறேன் என்று கண்கலக்கப் படுவதற்குத் தானோ இவ்வளவு பிரயாசமெடுத்துக்கொண்டு வந்தது. என்னத்திற்காக இவ்விடம் வந்தோம்! புறங்கொடுத் தோடுவதற்கா? இதை நீர் நன்றாய்த் தெளிந்து சீர்தூக்கிப் பாரும். ஓ தேசிகனே! விற்றிறமேன்மை படைத்த வேந்தர்களானால் இந்த விஜயனுக்கெதிர் நின்று மேன்மை படைத்த ஜெயம் பெறுந்திறத்தை ஒரு பொருளாகச் சிந்தையில் நினைக்கமாட்டார்கள். நீர் அத்திறத்தினுக்குரியரல்லாத அந்தணராதலால், அப்பா!! அவன் மகா தீரனுச்சே? வீரனுச்சே? ஆவியைக் கொள்ளைகொள்வானே! எப்படி வெல்லப்போகின்றோம்! என்று சொல்லித் தளருகின்றீர். உமது சொல்லைக் கேட்டு மீதலத்தோரும், பூதலத்தோரும் கலகலவென்று கைகொட்டி நகைப்பார்கள். இனி உம்மைக் கண்ட கைம்பெண்களும் அலட்சியமாக நினைத்துப் பகைப்பார்கள். ஓ காயத்திரி தேர்ந்த கலைவேதியனே! மற்போரி னிறைந்து விற்போரிற் சிறந்த வானவர்கோன் மகன் வருவதைப் பார்த்து வளைத்துக் கொள்ளாமல் மடக்கி, மாட்டை யோட்டிக்கொண்டு ஒதுங்கி மாநகர்க்குப் போவேனாகில், அதனுலெனக்கு வருவது வசையோ? இசையோ? அல்லது வருகிறவனைக் கண்டு பயமில்லாமல் எதிர் நின்று போர் புரிந்து வென்று ஜெயம் பெறுவது புகழோ? இகழோ? சொல்லும். ஓ மித்துருவை யிகழ்ந்து சத்துருவைப் புகழ்ந்து மகிழ்ந்து பாடாநின்ற நைச்சிகனே! எண்ணிறந்த கோடிகளாக் இவ்விடத்திற் கூடிய நமது வீரப்படைகளெல்லாஞ் சேர்ந்து ஒருவனைத் தனித்துவரா நின்ற வில்லாளியை ஜெயிக்கமாட்டார்களென்றால் ஒற்றைத் தேரோட்டி வருகின்ற ஒருவன் இத்தனை பேர்களையும் எப்படி ஜெயிப்பான். வருகிற சுத்தவீரன் தன் பிராணனைத் துரும்பாக மதிப்பவனென்றால், அத்தன்மையானபேர் நமது சேனைகளி லில்லையோ? ஆகிலும் போர் செய்யப் புகுந்த பேருக்குப் பிராணன் பெரிதோ? கடல் சூழ்ந்த உலகத்திற் பெருமையும் மானமும் போனபிற்பாடு, சஞ்சாரப் பிரேதம்போற் பிராணனுடனிருப்பதில் என்ன பிரயோசனம்.

ஆ புண்ணிய பூசுரனே! இனி நான் பலவாறாகப் பேசுவதில் லாபமில்லை. ஒரே வசனஞ் சொல்லுகிறேன் கேளும். இதோ வருகிற என் பகையாளியைக் கண்டு பயந்து அஸ்தினாபுரத்திற்குப் போகமாட்டேன் எனக்குபகாரம்போற் சொல்லுகிறவர்களின் பேச்சையுங் கேட்கமாட்டேன். இது அவரவர்கள் புத்தியிற் கெட்டியாயிருக்கட்டும். ஆனால், இப்பொழுது வருகிற அர்ச்சுனனுடைய சண்டைக்குப் பயந்தவர்கள், ஆவியைக் காக்க ஆசைப்பட்டவர்கள், பெண்சாதி பிள்ளைகள் மீதிலும், மண்மனை பாதிகளிலும், நிதி நிக்ஷேபங்களிலும் பாசமுள்ளவர்கள் யாவரும் நன்மையுடன் பட்டினம்போய்ச் சேரலாம். அப்படிப் போக மனதுடையோர்களுக்கு யாதொரு தடையுமில்லை. போகின்றவர்கள் இவ்விடத்தில் வந்திருக்கும் படைகள் அடங்கலையுஞ் சாய்த்துக்கொண்டு போனாலும் போகட்டும் என்னதிர்ஷ்டம் போகிறதில்லை. ஒருவருக்கொருவர் துணையென்பதில்லை. அவரவர்களுடைய நல்வினை தீவினையே அவரவர்கட்குத் துணையாய் நிற்கும். ஓ அறிவிலுயர்ந்த மறைவேதியரே! இதனை நீர் நன்றாயறிந்து உட்கொள்ளும் என்று அடங்காக் கோபங் கொண்டு, துர்ச்சாதனன் முதலாகிய தம்பிமார்களையுந் தார்வேந்தர்களையு நோக்கி, விருஷப முக்காரம்போற் கனைத்து, தணல் நெருப்பைச்சிந்தி, அதிக படபடப்புடன் விரைந்து இதனைச் சொல்லுகின்றான். ஓ என்னன்பிற்குரிய தம்பிமார்களே! ஓ எனக்கு வெற்றியைத் தரவந்த சம்பிரம வீராளாகிய வேந்தர்களே! இப்பிரமதேயசுடைய மூதற்குலத்தோனாகியும், விற்குருவாகியு மிரா நின்ற துரோணாச்சாரியர் நன்னெறிகற்ற பெரியோராயிருந்து, சமயோசிதப் பேச்சை சாதுர்யமாகப் பேசி சாப்பாட்டுக்குச் சங்கடப் படாமற் காலபோஜனங்கொண்டு காலங்கழித்திருப்பதே காரியமென்று ஆரிய சித்தாந்த

முதலிய சாஸ்திரம் யாவும் படித்தவர் அன்றி யும், தனுர்வேதத்திலுள்ளன வெல்லாந் தப் பாமலுணர்ந்து புத்திமான்களுக்குப் போதிக் கத் தெரிந்தவர், வாதித் தெதிராநின்ற சத் துருக்களைச் சேதிக்கச்சென்று யுத்தங்கண்டு வென்று வருகின்ற வீரத்திறம் இவருடைய தொழிலன்றென்று நன்றாய்ப் பிரசித்தமான வர். ஆகையால், இப்போப்பட்டவரை நீங் கள் நம்பியிராமல், வருகிற எதிரியென்னும் போர்யானையின் முனைபுகுந்து தனிமுகச் சிங் கம்போற் சாதித்து விடுங்கள். சண்டைபோ டப் பயந்த வைதீகர்களெல்லோரும் அர்த்த ரதப் படைக்குப் பின்னாலே நின்று, நமக்குச் ஜெய முண்டாகும்படியாக ஜெபம் பண்ணிக் கொண்டிருக்கட்டும். உங்கள்வேலையில் நீங்கள் ஜாக்கிரதையா யிருங்கள். ஒருவர் உதவியைப் பார்க்கவேண்டாம். விரைவிற் படைகூட்டிப் போங்களென் றுரைத்தான்.

## அஸ்வத்தாமன் தன் தந்தையை நிந்தித்த துரியோதனனைக் கடிந்து கூறுதல்

இப்படியாக துரியோதனன் சொன்ன சொல்லானது அங்கங்ன மிருந்த பேர்களின் செவிகளில் நுழைவதற்கு முன்னமே, துரோ ணாச்சாரியார் குமாரனான அஸ்வத்தாமன் கேட்டு, நெருப்பில் வீழ்ந்த புழுப்போற் துடித்து, கண்கள் சிவந்து, பொறிபறந்து, புகை மலிந்து, பொருப்புக்கிணையான புயம் படைத்த அப்புயங்ககேதனனைப் பார்த்து, ஆ! ஆ! வணங்கா முடியுடைய மன்னனே யென்று கூவி, மத்தகஜம்போற்றாவி, அன்புக்கொருவ ராகிய வீஷ்மாச்சாரியரும் கிருபாச்சாரியரும் கர்ணமகா ராஜனும் துற்சாதனன் முதலிய தம்பிமார்களும் மன்னர் மண்டலீகரும் மற்று முண்டான முடிமகேபருங் கண்ணிரண்டு மூடி காதிரண்டு மடைத்து, உள்ளங்கலங்கி உடல் நடுங்கி உயிரும் ஒடுங்கும்படிக்குச் சில வார்த் தைகள் சொல்லத் தொடங்கினான். ஓ கௌரவ குலாதிபனே! நாம் அஸ்தினபுரத்தைவிட்டு வந்ததும், விராடராஜனுடைய பசு மந் தையை மடக்கிக் கொண்டதும், கூட்டமாகிய நால்வகைச் சேனைகளை வரிசைப்படுத்தி வைத்ததும், ஜெயம் பெறுவதற்கோ? அல் லது அபஜெய மடையவதற்கோ? நீர் சொல் லும். அப்படியிருக்க, நீர் வீரலட்சுமி வாசமா யிருக்கும் வெற்றிவேல் பெற்ற துரோணாச் சாரியருடைய மனது நொந்து நையும்படி யாக வசை மொழிகளை வழங்கி வைத்தது தகுதியோ? ஓ கூறிய வேலும் வில்லுங் கொண்ட கோமானே! நீர் பிள்ளையாகப் பிற ந்தநாள் தொடங்கி இதுவரையிலும் யுத்த மென்பது செய்து எங்கே வெற்றி யடைந் திருக்கின்றீர்? இந்த விராடபுரத்திற்கு வந்து பசுக்காவலாளரை யடக்கிப் பசு மந்தைகளை மடக்கிவிட்டீர். இதுவொரு ஜெயம். முதலில் சுகமாயிருந்த பாண்டவர்களை யழைத்து மோசச் சூதாடிப் பூமி முதலிய செல்வங்களை அபகரித்துக்கொண்டு காட்டினுக் கோட்டி விட்டீர். இதுவொரு ஜெயம். இதுதானே நீர் கண்கூட்சியாகக் கண்டிருப்பது. இதைவிட வேறு சொல்ல யோக்கியம் உண்டா? என் னமோ பெரிய யுத்தங்களெல்லாஞ் செய்து, சூரர்களைவென்று, வெற்றிமாலை பூண்டு, கோட்டை கொத்தளங்களை முற்றுகையிட்டது போல் மெத்தமெத்த இறுமாந்து பேசுகிறீர். இதென்ன கட்டுவார்த்தை? இந்த வீரம் ஒரு துட்டுபெறுமே? நமது திறத்தை நாமே எடுத் துப் பேசிக்கொள்ளுகிறதா? இது நன்றா யிருக்கவில்லை. போம்; போம்!

ஓ ராஜனே! இராஜ சபையிலிருக்கும் பெரியோர்களுக்குக் கடமை என்னவென்றால், காமாகாரர்களாகிய காவலருக்குக் காரியா காரி யங்களைக் காட்டிக்கொண்டு இருக்கவேண்டு மென்பதாக நீதி நூல் முறையிடுகின்றது. ஆத லால், நீதிப்பழக்கத்தையும் உலக வழக்கத்தை யும் அநுசரித்து உமக்குச் சொல்லவேண்டிய தருமத்தைச் சொன்னாருக்கும். அவ்வாறிடித் துச் சொல்லுந் தருமவாக்கியம் உமக்குச் சம் மதமில்லாமற்போனால், அவருடைய சொல் லுக்குக் காதுகொடுக்காமல், வருகிற வீரனுக்கு எதிர்ப்போய் நின்று போர்புரியலாமே? அப் படிக்குப்போகிற உமது வீரதீரத்தை யார் தடுத்தவர்கள்? நீரென்ன சண்டை போடாத வரா? இதுகாறும் நீர் புகுந்த போர்முகத்தில் எங்கேயாகிலும் அடிபட்டும், புறங்கொடுத்தும் ஓடியிருக்கின்றீரா? இல்லையே. கையில் வில் லுங் கணையுமிருக்கச் சத்துருக்கள் கையில் அகப்பட்டுக்கொண்டு சண்டை போடமாட்டா மல் கட்டுப்பட் டிருக்கின்றீரா? இல்லையே. இப்போதுதானென்ன, நீர் தேரேறிப் புறப் படுவதுதான் தாமதம்; துரியோதன மஹா ராஜன் வில்வளைத்தானென்று கேட்டவுடனே போர்முகத்திலுள்ள அதிரத வீரர்கள் முத லியபேரும் அபஜெயமடைந்து உயிர் தொலை வார்கள். அப்போப்பட்ட வாகைபெருந்

சேவகனுகிய பூபதியைப் பார்த்து நீ மாட்டை ஓட்டிக்கொண்டு ஊர்முகனேக்கி ஓடிப்போ வென்று இந்த விருத்த வேதியர் சொல்ல லாமா? ஐயோ! உத்தமனே! அவர் சொன்ன சொல்லானது நீர் இதுவரையிலும் பெற்றிருந்த வீரத்திற்கு மிகவுங் குறைவாயிற்றே; அய்யா அய்யா சுத்தவீரனே! சமர்க்களத்தில் சகல விருதுகளோடு நின்று சத்ருக்களை மட்க்கித் தனுர்வேத விதிப்படி யுத்தஞ்செய்து வெற்றி பெறும் விதத்தை என்னென்று நினைத்திருக்கின்றீர்? சகோதரர்களிடத்தில் சூதாடிப் பூமியைப் பறித்து, ஜேஷ்ட பிராதருவின் பெண்ஜாதியான திரௌபதாதேவி யென்னுந் தாயைத் தலை மயிரைப் பிடித்திழுத்து, சபைநடுவே வஸ்திரத்தை உரிந்து மானக்கேடுண்டாக்கி, காட்டுக்கு வழி காட்டி விட்ட கதைபோல் நினைத்தீரோ? அல்லது உமது மாமனுகிய இச்சகுனி முதலிய போர்கள் வாய் கொண்டமட்டும் பேசி ஜெயித்த வீரமென் றெண்ணினீரோ? ஐயோ! அப்படி ஜெயித்த அனியாய் ஜெயமெல்லாங் கரும பூமியிற் பாபமென்னுங் காணியாட்சியைக் கொடுக்கத்தக்கது. இப்போது வந்திருக்கின்ற போரை அவ்வளவு எளிதென்று எண்ணுதீர். வருகிறவன் தனஞ்செயன். அவனுக் கெதிரிருந்து வில் வளைத்து பாணந் தொடுத்து யுத்தம் பண்ணியே தீரவேண்டும். சூதாடித் தோற்ற அந்த நாளையிலிருந்த அருச்சுனன் தானேயென்று அலட்சியமாய் நினைக்காதீர். இந்த நாளையில் உங்களை எளிதில் விடுவானென்று எண்ணங்கொள்ள வேண்டாம்.

உமதம்மானுன சகுனிராஜன் உமக்காக பாடுபட்டுச் சம்பாதித்த தருமமானது, சிக்கிரத்தில் திரண்டுருண்டு வளர்ந்து இப்போது வந்தெதிர்ந்து கொண்டது. இதைக் குறித்து நீரொருவருக்குச் சொல்லவேண்டிய அவசரமில்லை. நீர் யாரையுந் துணைப்பற்ற வேண்டாம். நீரொருவரை விரும்பித் துணைவரக் கேட்பீராகில் யாருந் துணையாகமாட்டார்கள். அந்த ஆசையை விட்டுவிடும்படி சூதாடி உமக்குச் சந்தோஷமுண்டாகப் பண்ணினவர் இதோ உமக்கு நேராக நிற்கின்றூர். இப்போது நேரிடப்போகின்ற போர்முனைக் கெதிரில் அவரைப் போகச்செய்வது ஞாயம். ஆயுதபாணியாய் அவர் போர்மேற் புறப்படும் விதத்தைப் பாரும். நல்ல நல்ல ஆயுதங்கள் அவரிடத்திலிருக்கிறது அவ்வாயுதங்கள் யாரொருத்தர் தன்னை எதிர்க்கிறூர்களோ அவர்கள் குடித்தனத்தைக்கெடுத்துவிடும். அப்பேர்ப்பட்ட ஆயுதமிருக்க உமக்கென்ன குறைச்சல். அத்தன்மையான ஆயுதம் எத்தன்மைப்பேருடைய தென்றூல், பன்னிரண்டு-எட்டு-இரிக்கால்-தொகை என்னுஞ் சிறந்த பேருள்ளது கள். இவைகளினுல் கட்டு-வெட்டு-குத்து-பிரித்துவிடு-தனியே ஓட்டிவிடு-கீழே தள்ளி படுக்கவை என்று இப்படிக்கெல்லாஞ்சொல்லி விஜயனுக்கு எதிராகி வெல்லுவார். அந்தப் பார்த்தனை வெல்லும் பராக்கிரமம் எங்களைப் போன்றவர்களாவில்லை. எங்களை யல்லாமல் நாகலோகத்தார் முதலிய மூன்று லோகத்தாரும் நரனுக்கெதிர் நிற்க மாட்டார்கள். ஒருவரும் நிகரில்லாதவனுய்வருகிற அர்ச்சுனனைக் கண்டு நான் வெல்லுகிறேனென்று வாய் வண்ணம்பேசுகிற வல்லர்களுமுண்டு. ஆனுல் வாய் சொற் சொல்லுவதற்கென்ன பஞ்சமா? வருகிறவனை ஜெயிக்கலா மென்பதென்ன கொஞ்சமா? ஓ மதிமரபிற் பிறந்தவனே! பெரியோனுகிய சிலையாரியனை அவமதித்துச் சொல்லத்தகாத சொல்லைச்சொல்லி வெல்ல வல்லவனுகியவன் நீராகையால், இதோ நான் சொல்லுகிறேன் கேளும். இந்த மண்டலத்திலும் அந்த விண்டலத்திலும்அர்ச்சுனனுக்கு ஒப்புச்சொல்வது தப்பு. அவனுக்கெதி ரொருவருமில்லை. அவனுடைய போர்முனையில் நீர்தான் வந்து இன்னும் எப்பேர்ப்பட்டவர்களாவது கிட்டி எட்டிப்பார்த்துவந்தாலும்போதும்; அதுவே அவனை ஜெயித்த கீர்த்தியினுலும் எண்மடங்கதிகமான பெருமையை யுண்டாக்கும். அவனுடைய போர் முகத்தில் நீர் நேர்முகமாகப் போய்வர மாட்டுவீரோ? உமது கண்ணிற் கண்டு கலங்காதிருப்பீரோ? ஓ நாகக்கொடியோனே! உம்மிடத்தில் விசுவாசம் வைத்த ஆசாரியர், எதிரி இப்பேர்ப்பட்டவன் அவனேடு சண்டை செய்ய வல்லவர் எண்டிசையிலும் இல்லை என்று சொன்னுல் இந்தப் பேச்சுக்குத் தகாதவார்த்தைகளைப் பேசினீர். அருமையறியாத உம்முடைய யுத்தமுனையில் எங்களைப்போன்றவர்களிருக்கமாட்டோம் என்று பேசி, தன் தந்தையின் செயலை யெண்ணி வருந்தி, ஆ! பகவானே! இந்தத் திறமுறை தெரியாத துரியோதன ராஜனிடத்தில் வீரத்தைவிட்டு நாணமுங் கெட்டிருக்கிற இந்தத் துரோணுச்சாரியார் தனுமனறைக் குருவாயிருந்தும், இவன்பேசிய ஈனவார்த்தைகளைக் கேட்டும் இன்னும் போகாமலிருக்கின்றூர். இவர்

இவ்விடத்திலிருந்து சண்டையுஞ் செய்வார்போல் இருக்கின்றது. ஐயோ! அவமரியாதை நேரிட்டபோதே அந்த அரசனுடைய உறவை நீக்கிவிடவேண்டும். அல்லது பேசினவன் பிராணனை அறப்போக்கிவிட வேண்டும். இவ்விரண்டி லொன்றும் இல்லாதிருப்பதும் மனுஷத்தன் மல்லவே என்று அஸ்வத்தாமன் தன் தந்தையை நொந்துகொண்டு மீண்டும் அரவக்கொடிக் கதிபனைப்பார்த்து, ஓ அரசனே! இப்போது நான் சொல்லுகிறதை கேளும்: எல்லாவுயிரையுங் கவரும்படியான எமதருமராஜனையும், கடல் நீரை வரட்டும் வடவா முகாக்கினியையும், உருத்திர மூர்த்தியின் கண்டத்தைக் கருக்கிய ஆலால விடத்தையும், மட்டுப்படாத எட்டுத் திக்கையும், அட்டமாகயத்தையும் ஒருநொடியில் முடிக்கப் பார்ப்போம்; அல்லது ஜெயிப்போம்; தேவேந்திர குமாரனை சிலைவிஜயனை மாத்திரஞ் ஜெயிக்கமாட்டோம். நீர் உமது சிந்தையில் இதை விந்தையாகக் கொண்டு மனவுறுதியோடு நின்று, தெளிந்து பார்த்துக் கொள்ளுமென்று கூறினான்.

### கர்னன், துரோணரும், அஸ்வத்தாமனுங் கூறியவற்றைக் கேட்டு மறுத்துத் தன் பராக்கிரமங் கூறல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இந்தச் சொற்களை யெல்லாந் துரியோதன ராஜனுக்குச் சமீபத்தில் நின்ற கர்னராஜன் கேட்டு நறநறவென்று பற்கடித்து, வெற்றிமிக்க வீரவேல்பெற்ற பெரியோர்களை நோக்கிப் பேசத் தொடங்கினான்: ஓ பூலோகபுரந்தரராகிய புநிதர்களே! விராட ராஜனுடைய பசுமந்தைகளை மடக்கும்படியாய் நிதானித்து அஸ்தினபுரத்தைவிட்டுப் புறப்பட்ட நாம், வாசமாலைதரித்து வராநின்ற விஜயனென்னும் வில்லாளியை வியந்து புகழ்ந்து பேசுவது மேன்மையோ! குந்திதேவியின் மைந்தர் தொடுக்குங் கணைக்கஞ்சிப் பயப்படுகிறவர்கள் வீருதாவில் இவ்வளவு தூரம் ஏன் வரவேண்டும். ஐயோ! வீட்டிலிருக்கப்போகாதா? அப்படியே வேலைமினக்கிட்டு வந்தவர்கள் எதிரியைச் செயிக்க திறமில்லாவிட்டாலும், வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்கலாகாதா? திறவான்களாகிய தீரர்களுக்கு நேரில் வாய்க்கு வந்தமட்டும் பிதற்றுவானேன். இவ்வளவு காரியத்திற்குப் பெரியவர்களென்று பேர் வைத்துக் கொள்ளுவானேன்? தனக்கு வெல்லவல்லப மில்லாவிட்டால், தரணியிலுள்ள பேர்க ளெல்லோரும் வெல்லமாட்டார்கள் என்று தப்புந்தாறுமாறாய் வீண்பேச்சுப் பேசவேண்டிய வேலையென்ன? சுத்தவீரர்கள் மனமுறிய மெத்த வருத்தப்படுத்துவானேன். இருளைக் கெடுத்துவந்த மத்தியானச் சூரியன் போன்ற நானொருவனு மெழுந்து, நெருப்புக்கொழுந்துபோல் வருகிற விஜயனையடுத்து அச்சமில்லாமல் நாணி தொடுத்து அபாரமாகக் கணைகள் விடுத்து, என்னிச்சையின்படிக்குப் போர் தொடுத்து, அவன் ஏறிவருந் தேரின் அச்சு-மச்சு-குத்துக்கால் முதலியவைகளையு முறித்து, குதிரை நான்கையும் அறுத்து, காண்டீபத்தையும், அநுமக்கொடியையுங் குறைத்து வெற்றி பெறப்போகின்ற என் வீரத்தை அருச்சுனனைக் கண்டு கொண்டாடுகின்றவர்கள் அவனுக்கு அச்சப்படுகின்றவர்கள் யாவரு மிருந்து சாக்ஷியாய்க் காணுங்கள். மேலும், மண்டலத்தைக் கீறி, விண்டலத்தைப் பீறி, குண்டலமசைய வருந் தேரோனாகிய தண்டதரன் தம்பியைக் கண்டவுடனே, எண்டிசையதிர மண்டலாகிர்த்தியாகிய வில்லை வளைத்து, வருணாஸ்திரப் பிரயோகஞ்செய்து, வடவைத் தீவேகத்தை மாற்றுந் தன்மைபோல ஒருகணத்தில் அவன் பலத்தை மாற்றி, நீங்கள் யாவருங் கண்டு களிக்கச் செய்கிறேன் அந்த விநோதத்தை வேண்டுமானாற் பாருங்கள். இதல்லாமல், அவன் வனவாசம் பண்ணிய பன்னிரண்டு வருடமும், அக்ஞாதவாசமான ஒரு வருடமும் துருப்பிடித்து அழுக்கடைந்து மழுங்கிக் கிடந்த காண்டீபத்தையுங் கணைப்பெட்டியையுங் கைக்கொண்டு நமக்கெதிரிற் கலங்காமல் வருகின்ற அவனுடைய திடத்தையுந் தீரத்தையுந் தேகத்தையுஞ் சின்னபின்னமாகும்படிச் சேதிக்கிறேன் நீங்களெல்லோருங் கூடிப் பார்க்கலாம்.

ஓ பெரியோர்களே! அருச்சுனனுக்கு எதிரி அங்கர்கோனென்று இச் சகமுதல் எங்கும் பிரசித்தமாகப் பேசிக்கொண்டிருக்க, நான் அவனை எளிதில் விடப்போகிறதில்லை. நானும் ஒரு வில்லைப் பிடித்து மலைபோ லெதிர்த்து மலைந்து, போர்த்திறந் தெரிந்த புண்ணியவான்களைப்போற் புகழ் பெறுகின்ற பிரதாபத்தைக் காண வாருங்கள். குளம்படியாற் கிளம்பு மண்பொடிகள் விண்ணிலேயாம லெழுவருங் குதிரைகள் பேரிலும், அக் குதிரைகள் பூட்டிய தேரின்பேரிலும் கோடி கோடி பாணங்களைச்

செலுத்திக் கொல்லுவதல்லாமலும், அவனது ஆஜாநுபாகுவாகிய கரங்கள் தறிபடவும், கால்கள் முறிபடவும், விரிந்த மார்பு துளைபடவும், அணிந்த முடியுடன் தலை யறுபடவும், விரைந்து போர்புரிந்து நான் வெற்றிகொள்ளப்போகின்ற விந்தையைப் பார்த்து, நீங்கள் மகிழுங்கள். இவ்விடத்தினின்று நான் உறுதியாகச் சொல்லுகிறதை யாவரும் ஞாபகமாய்க் கேளுங்கள்: நான் இதுவரையில் நரபதியாகிய துரியோதன மகாராஜனிடத்தில் உண்டு வளர்ந்து வந்த செஞ்சோற்றுக் கடனும், கர்னன்-அருச்சுனன் என்று சொல்லப்படும் எங்கள் இருவரில் வல்லவர் யாரோவென்று, சந்தேகங்கொண்டிருந்த சகலருக்குஞ் சந்தேகந் தீரும் சமயமும், இளமைப்பருவத்தில் தனுர்வேத பரீக்ஷை பார்த்தபோது, அருச்சுனன் தலையை அறுத்து அரங்கபூஜை செய்கிறேனென்று அரசருக்கு முன்னே நான் கூறியிருந்த சபத வார்த்தை முடியுங் காலமும், பற்குணனை வெல்லும் வல்லவரில்லையென்று சிலையாரியனும், அஸ்வத்தாமனும் பேசிய கட்டுவார்த்தை கெட்டோடச் செய்யுந் தருணமும் இப்போதெனக்கு நேரிட்டிருப்பதினால், என் பரமகுருவாகிய பரசுராமர் அற்புதமாகக் கற்பித்துவைத்த அஸ்திர வித்தைகளை நிலைபெறச்செய்து அவருடைய திருவடிகளைத் துதிக்குங்காலங் கிடைத்திருக்கின்றதை மதிக்கும் விவேகிகளாகிய மன்னவர்களே பாருங்கள். பெருந்தேரிலோங்கி ஒருசிலை தாங்கி வருகிறவனைக் கண்டேங்கி மயங்குகின்ற ஒரு கோடி நரபாலரும் என் சுற்றினிலிருந்து, அவனை நான் ஒருவனே சென்றெதிர்த்து வெற்றிபெறும் வேடிக்கையை முற்றிலும் அறியுங்கள் என்று உருத்திரமூர்த்திக் கொப்பாகிய வீஷ்மர் முதலிய பேருக்கும் நன்றாய்க் கேட்கும்படியாகச் சொன்னான் அங்கதேசாதிபனான கர்னமகாராஜனானவன்.

### கிருபாச்சாரியர், கர்னன் கருத்தைக் கண்டித்து உல்லங்கனஞ் செய்ய, அதற்கவனிந்தித்தல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இவ்வாறு கர்னராஜன் கூறிய வார்த்தையுங் கிருபாச்சாரியர் கேட்டு மனந்தாளாமல், ஆஹா! அங்கதேசத் தரசாகிய அறிஞனே! நெடிய கடல்சூழ்ந்த உலகத்தை யாளுகின்ற அரசருக்கு, சாமம் பேதம் தானம் தண்டம் என்னுஞ் சதுர்வித உபாயமுண்டு. இந்நான்கில் நீ தண்டமென்னும் உபாயத்தை அநுசரித்துச் சண்டை செய்யக் கற்றிருக்கின்றாயன்றி, மற்ற மூன்று உபாயமும் அறியமாட்டாய்போலு மிருக்கின்றது. அவ்வுபாய மூன்றையும் அறிந்துக் கொள்ளத்தக்க சுயபுத்தி உனக்கில்லாவிடினும், தெரிந்த பெரியோர்கள் சொல்லுகின்ற சொற்புத்தியாகிலுங் கேட்டு நடக்கவேண்டும். தண்டமென்பதைத் தாமத குணத்தோர் விரும்புவார்கள். சாத்வீக குணமுள்ளவர்களுக்கு மற்ற மூன்றுந் தகுதியுடையனவாகும். அஃதெவ்வாறெனில், அரசனானவன் காரியத்தைக்கருதி யோசியாமற் பகைவர் மேற்செல்லுதல் அப்பகைவரைத் துன்பமில்லாமல் நிலைக்கச் செய்வதாகும். மேலும் தொழில் வல்லமையையும், தன் வல்லமையையும் எதிரி வல்லமையையும் துணைவல்லமையையும் ஆராய்ந்து, தன் வல்லமை மேலிட்டிருக்குமாயின் தானெடுத்த காரியத்தை முடிக்கலாம். ஆகையால், காரியா காரியங்களெல்லாவற்றையுங் கருதி, பிற்பாடு சமராடப் புகுந்த பேர்களுக்கு எவ்வுலகத்தும் எக்காலத்தும் ஒப்பில்லாக் கீர்த்தி யுண்டாகுமென்று நீதிநூலோர் பேசியிருக்கின்றார்கள். அதுவுமல்லாமல், தன் பலமும் எதிரிபலமும் அறிந்து வீரியமாக யுத்தஞ் செய்யக் கற்ற புத்திமான்களான போதிலும் (பெரியாரைத் துணைக்கொள்) என்னும் நீதிவாக்கியப் பிரகாரந் தனக்கு மேற்பட்ட அகண்ட அறிவாளர்களைக் கேட்டு, அவர்கள் புகன்ற புத்திவழி நடக்கவேண்டும். அப்படிக் கேளாது அரசன் உன்மத்தனா யிருப்பானாகில், அவனது சுகதுக்கத்திற்கொக்கப் பொருந்திப் பக்கமிருக்கும் எம்மைப்போன்ற பெரியோர்கள் அவனுக்கு இடித்துச் சொல்லவேண்டிய கடமை. ஓ இசையளவு நாறும் உதிரப் பசை வீசும் வேலேந்திய கர்னனே! வருகின்ற தேர் ஒன்றென்றும், அத்தேர்மேல் வருகிறவன் தனியனென்றும், அவன் கைப்பிடித்த வில் ஒன்றென்றும், அவனெம்மாத்திர மென்றும், வெகு சுலபமா யெண்ணி ஆத்திரப்பட்டு சொன்னாயல்லவா? உன்னைப்போலொத்தவன் இவ்வாறுரைத்தால், மாற்றுயர்ந்த பொன்னைப்போன்று வருகின்றவன் உன்னை என்னென்று புகலவேண்டும்? அவனுன்னளவுக் கடங்கினவனா இலேசானவனா! அந்தோ! இந்தப் பாராளுந் துரியோதனன் முதலாகிய படைமன்னர் கூட்டங்களையும், வீஷ்மர் முதலாகிய பெரியோர்களையும், வீரியம் பேசுகின்ற உன்னையும் என்னையும் ஒரு பொருளாய் நினைக்

காமல் திரஸ்காரஞ் செய்யத் தக்கவனென்று உனக்குத் தெரியாதா! ஆண்சிங்கஞ் சீறி யானை கூட்டத்தின்மீதேறிப் பாயுந் தன்மைபோல் வருகின்றானே! அவனுக்கெதிர்நின்று போராடுவோர்களு முண்டோ? சிவபெருமா னொருவரே சென்று திரிபுரமும் நீறாக்கக் கண்டு திரும்பினாரென்பதை இதுவரையிலும் நீ கேட்டிருக்கவில்லையோ! அப்படிப்பட்ட அமலனோடேயே அமர்செய்து பெற்று வந்தவன் நம்போலொத்தவர்களிடத்தில் ஒருவனாய் வந்து வெற்றியைப் பெறுவது அருமையோ?

ஓ செருமுகப்புலியே! சீர்படைத்த பாஞ்சால ராஜனுடைய பட்டினத்தில் திரௌபதா தேவிக்குத் திருக்கலியாண முகூர்த்தமென்று சுயம்வரஞ் சாட்டியபோது, மச்சேந்திரலக்ஷியத்தை முடித்து இச்சைவைத்து வந்த ராஜரெல்லோரையும் ஓடவிட்டடித்து, கச்சணிந்த பெருந்தனக் காரிகையையுங் காண்டீபத்தையுங் கைப்பிடித்து, ஜெயலக்ஷ்மி கலகலவென்று நடித்துவரக் கண்ட காளை வருகின்றான்; அக்கால் அவனுடனெதிர்த்துப் போராடுந் திறனுற்றவர்கள் யார் யிருந்தார்கள்? சிற்சிலர் வெளிப்பட்டுப் பட்டபாட்டை மறந்தாயோ? ஓ மாலைபுனைந்த மணிமுடிகர்ணா! நீ அந்தச் சுயம்வரக் காலத்தில் திரௌபதா தேவியை குறித்து போயிருந்த தில்லையோ! சகல ராஜராலும் வளைக்கப்படாத வில்லை நீ தாங்கி வளைக்கவில்லையோ? அக்கால் நீ யடைந்த அவமானத்தையும், உன்னைப்போற் றுணிந்து வளைக்கச் சென்றவர் இளைத்தோடிய ஏளிதத்தையும், அங்ஙனமிருந்தோர் பேசிக்கொண்ட அவ்விந்தைப் பேச்சுகளையாவது வேடிக்கையாய்க் கேள்விப்பட வில்லையோ? இதன்றியும் கொடுமையாளராய்த் தொடர்ந்த யதுகுலத்தாரை யெல்லாங் குமுக்கிச் செயித்துக் கொண்டு, சுபத்திராதேவியை மணம் புணர்ந்துக்கொணர்ந்த காலத்திலும், முப்பத்து முக்கோடி தேவர்கள் முதுகுகாட்டியோட ஓட்டி, அஷ்டவசுக்களுடன் அஷ்டதிக்கு பாலகரும் சப்த சமுத்திரத்துடன் சப்த மேகங்களுஞ் சலிக்க கெலித்து காண்டாவனத்தை அக்கினி தேவனுக்கு ஆகாரமாக ஊட்டிவைத்த காலத்திலும், அளாவிர்தகண்ட முதலாகிய உத்தர குரு கண்டத்தி லுற்றோரியாரும் முடிவணங்கித் தொழுது கண்ணீர்விட்டழுது எங்களுக்குப் பழுதுவாராமற் காரும் கடைக்கண் பாரும் என்று உபசாரத்துடன் அநேக திரவியங்கள் குவிக்கப் பெற்ற காலத்திலும், மாயாவரத்துடன் தோயமாபுரத்தி லிருந்த காலகேயரையும் இரணியபுர வாசிகளாகிய நிவாதகவசர்களையு மடித்து, அவர்களுடைய தோள்வலியும் தாள்வலியும் உருத்திரதேவனாற் படைத்த வரத்தின் வலியும், உபயோகமாக வொட்டாமலடித்து முடித்த நாளையிலும், அட்டதிக்கும் புகழ் பெற்ற சித்திரசேன னென்னுங் கந்திருவ ராஜனைக் கொட்டமடக்கி நமதரசனாகிய துரியோதன மகாராஜனையும் தம்பிமார்களையும் தர்மபத்தினிகளையும் கட்டவிழ்த்து மீட்டு, மானங்கெட்ட பிராணனைக் காப்பாற்றிவிட்ட காலத்திலும், இதோ வருகிற கட்டழகனாகிய கிருட்டினனுக்கு யார் துணையாயிருந்தார்கள். ஒருவருமில்லை. எந்த காலத்திலும் அவன் கைப்பிடித்த விஜயகாண்டீபமே துணையல்லது, அவனுக்கு வேறுதுணை கண்டதில்லையே! அப்படி ஏதாகிலுந் துணை நாடிப்போய்ச் செயித்திருப்ப துண்டானாற் பேசு.

ஓ கர்னராஜனே! உன்னுடைய குணாதிசயவழக்க மென்னவெனில், இராஜர் முதலிய பேர் கூடிய சபையில் எனக்குமிஞ்சி யெவருமில்லையென்றும், புயவல்லமை எனக்கே பொருந்தியதென்றும், என்னுடன் போராடும் பகைவர் பூமியிலில்லையென்றும் பலவாறாக பேசுகிற வழக்கம். நீ சொல்லிய வண்ணம் எங்கேயாவது சோர்வறமுடித்து வெற்றி கொண்டிருக்கின்றையா? நீ எந்தச் சத்துருக்கள்பேரிற்சண்டைக்குப்போனாய்? எவ்விடத்தினின்று கீர்த்திகொண்டு வந்தாய்? இந்த நரனுக்கு நேராகப்போய் நிற்கத்தக்க திறமுனக்குண்டா? அப்படி யிருந்தால், ஒரு அனுபவங் கொண்டா, அப்பா நான் பேசுவதென்ன தப்பா! சிவபெருமானும் - செங்கண் மாலும் - பிரமதேவனும் - தேவேந்திரனும் - தேவர்களும் - மற்றுமுள்ளவர்களுங் கோலாகலமாய் வந்தெதிர்த்து யுத்தஞ் செய்வதற்கே கூடாத வல்லபனான அந்நல்லவன் வில்லை வளைத்தானாகில், அவனுடைய வீரியத்தைப்பழித்து, இங்கிருக்கும் அரசர் முதலிய ஆரியர்களுக்கெதிரில் உன் காரியத்தைக்காட்டிச் செயம் பெறப் போகிறாயோ? அல்லது என்னமாற் பேசி இழிவடையப் போகின்றையோ? இதுவரையில் உன் திறத்தை நாங்களு மிருந்து பார்த்தது தானே? அடா அப்பனே! சிரேஷ்ட முனிவராகிய வீஷ்மரும், சிலைக் குருவான துரோணாச்சாரியரும், சிவசுப்பிர

மணியக் கடவுள்போன்ற அஸ்வத்தாமாவும், நானும், நீயும், தேனிறைந்த வலம்புரி மாலை யணிந்த துரியோதன மகாராஜனும், ஜகரட்சகராகிய தார்முடி வேந்தர் பலரும் ஒன்றாகச்சேர்ந்து, அழகிய தேரை செலுத்தி, வில்லம்புகள் தாங்கி மேலான யுத்தஞ் செய்தாலும், அந்த அர்ச்சுனனை வெல்வது அரிதரிதென்று கருதிக் கரையும். எங்கட்கெதிரில், நானொருவனும் போர்முனை புகுந்து வெல்லுகிறேன், அவனைக் கொல்லுகிறேன், என்று நீ சொல்லுகிறது காலில்லாதவன் காதவழி நடப்பேனென்பது போலாம். நீ சொன்ன சொற்படி முடிப்பையானாற் பனியானது சூரியனை விழுங்கிப்போடுமென்று சந்தேகமறப் பேசலாம். ஓ கொடைக்கரசனே! நீர்வளமுள்ள குருநாட்டுக் கதிபனாகிய கௌரவகுல முதல்வன் உன்னிடத்தில் நேயம் வைத்திருந்தால் அவனுக்கு உறுதிவார்த்தைகளைச்சொல்லி, நீதிநெறி குறையாமற் பாராளு முறையை போதித்து, பக்கத்தில் மந்திரிபோலிருந்து தந்திரத்துடன் நடத்துவதைவிட்டு, பயன்படாத வார்த்தைகளைப் படித்து, அசத்தியத்தை சத்தியமென்று துடித்து, சண்டைமுகத்திலவனையு மிழுத்து, இரண்டுபுறத்தும் இடியுண்டிளைத்து மருண்டு நிற்கவைத்து, அந்தச் சமயத்தில் நீ அப்பால் நீங்கிப்போவதற்காகவோ இவ்வளவுதூர நினைத்து சொல்லவந்தாய்? உத்தமனே! அந்தமட்டும் நீ யறிந்ததுபோதும். இந்தமட்டும் உன் கடையைக் கட்டும் என்று சகல மேம்பாடுகளினும் மூவரையும்வெல்லுங் கிருபாசாரியார் சொல்லினார்.

இவ்வாறு கிருபாச்சாரியர் சொன்னமொழியைக்கேட்ட கர்னராஜன் நெருப்பில்விட்ட நெய்போலுருகிப் புகைந்து கண்ணிரண்டுஞ் சிவந்து, கடுங்கோபம் பிறந்து, குற்றமான மொழியை மெத்தப்பேசி, கிருபாச்சாரியருடைய முகத்தைப் பாராமல், மற்றவர்கள் பக்கமாய்த் திரும்பி ஓ முடியரசர்களே! வாசங்குலாவு மாலை நிலாவும் வணங்காமுடி வேந்தனுடைய வளப்பங்களையும், சகல சுபசந்தோஷ சவுக்கியங்களையும் தாழ்ச்சியில்லாமல் தங்கள் தங்கள் புந்துவர்க்கங்களுடன் காலங் கருப்பு தோன்றாமல் அனுபவித்துச் சிறுமையின்றிச் சண்டைமுகத்தில் வந்து நின்றால், அன்னமிட்டவரை யிகழ்ந்து, கன்னமிட்ட சத்துருவைப் புகழ்ந்து, சித்தங்களித்து மகிழ்ந்து, தோள்வலியைத் துதித்து தாள்வலியை மதித்துக்கொண்டாடா நிற்பவர்களால், நமக்குச் செயங் கிடைக்காமற் போமோ? இவ்வுலகத்தில் நன்னெறியில்லாமற் போமோ? மழைமாரி குறையுமோ? வாளறங்குன்றுமோ ஆ அகாலமே! வருகிற நரனானவன் மிகவுந் திறவானென்று புகழ்ந்து பேசுவதினால் லாபமென்ன? அவன்பேரில் அவர்களுக்கு அன்பிருக்குமாகில், அந்த அன்பு விருதாவாய்ப் போகாமல் ஒண்டியாய் வருகிற அவனுடன் போய்க் கூடிக்கொள்வது தகுதியாகும். அப்படிக்கில்லையென்றால், அவரவர்களுடைய வீட்டுக்குப்போய் பெண்சாதி பிள்ளைகள் முகத்தில் விழிக்கலாம். இதற்குயாதொரு தடையுமில்லை. நேரே வருகிற பார்த்தனாகிய பஞ்சைக்கு நானே எதிராகிறேன். அவனா என்னைச்செயிக்கிறவன்? அடடா!! பாதளமேழும் பூதலமேழும் பரந்த அகண்ட சக்கிரவாளப் பரப்புந் தப்பாமற் பெருமைபெருஞ் சுப்பிரதீபக் கணைகளில் அவனைச் சிவனுக்கெதிரான மதனைப் போலாக்கி, திக்கு திக்காந்தத்திலுஞ் சொக்குப்பொடிபோல் தூற்றி விடுகிறேன். அவர்களுக்குஞ்சேதிசொல்ல ஓலைவிடுகிறேன். தங்களூருக்குப்போய்ச் சுகமாய் உறங்கட்டும் என்று உரத்து கொதித்து உரைத்துச் சிரித்தான்.

### வீஷ்மர், ஆசாரியநிந்தைசெய்த துரியோதனனையும் கர்னனையும் கோபித்து அவர்கள் பெருமையைக் கூறுதல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இந்தப் பிரகாரங் கொடைக்கரசாகிய கர்னராஜன் பேசியபோது, சேமித்துவைத்த திரவியம்போலுற்ற சிலைநூல் முதலிய பல நூலுங் கற்ற வீஷ்மர் உன்மத்தனையொத்த துரியோதனராஜனை யழைத்து, தராசு நிறைபோல் நடுவு நிலைமையாய்த் தெரிவிக்கத் துணிந்து, ஓ திங்கள் மரபிற்றோன்றிய என் சிந்தைக்கு இனிய சுயோதனனே! சிலையாரியனாகிய துரோணாச்சாரியர் உரைத்த தனைத்துஞ் சரிதான். மேன்மை மிகுந்த பெரியோர்கள் பேசவேண்டிய விதியும் அதுதான். சகலக்கியானமுந் தேர்ந்த அஸ்வத்தாமாவானவர் பரிந்தெழுந்து, வேண்டுமானபோது காரியாகாரியமெடுத்துக்காட்டி கண்டிக்கவேண்டிய கடமைதான். மலைபோல் நிலைபெற்ற கிருபாச்சாரியர் மடக்கி தெரிய வைத்தது மனுநெறி முறைதான். இப்போ திலையோலொளிரும் வேலேந்திய கர்னராஜன் தராதரமறியாமற் பேசியது தகுதியற்றதுதான். பெரியாரை நிந்தித்து பே

சப்போகாது. பெரியோர் சிந்தை நொந்தால், வறுமை நிறையும் வாழ்நாள் குறையும். இது எவர்களுக்கும் எப்போதுந் தகாது. ஓ! மல்லின் வலியும், வில்லின் வலியுந் தளர்வில்லாமல் வளருந் தடம்புயனே! ஓ! அரவக்கொடியும் அணிமணி முடியும் பொறுத்த அரசரேறே! ஓ திரிதராஷ்டிர புத்திரனே! ஓ! துரியோதனனென்னும் என் பௌத்திரனே! நீ நான் சொல்வதைச் செவிகொடுத்து கேட்க வேண்டும். மெய்யறிவுள்ள மேலோர் செய்கை எவ்விதமெனில், தங்களுக்குத் தற்காலம் நடந்து வருகிற திசாபலனும், காலபலனும், செய்கை பேதமும், காரண காரியங்களும், செவ்வையாக நாடித் தீர்க்காலோசனை செய்து வெல்லத்தக்க வல்லமை தங்களுக்குண்டாகி யிருந்து துணிவு பற்றிய போதிலும், பகைவரை வெல்லுவது அருமையா யிருக்கிறதென்றும், அசாத்தியமென்றுஞ் சொல்லி ஆய்ந்துணர்ந்த அறிவாளரோடு ஆலோசிப்பா ரல்லாமல், அஞ்சாது அலக்ஷியமாக எண்ணி அவசரப்படார்கள். தங்களால் ஆகிற காரியமானாலும், என்னமோ போய்ப் பார்ப்போ மென்பார்கள். இதுதான் மேம்பாடுடைய விவேகிகள் இலக்கணம். இப்படிக்கின்றி முன்பின்னெண்ணாமல் வாய்க்கு வந்தமட்டும் வல்லமை பேசி, எதிரியின் பலத்தை யெண்ணாமலேசி, காரியங்களிற் பிரவேசித்த காலத்தில், நாலுபேருஞ் சீ! சீ!! யென்று நகைக்க முகங்கூசி நாணி வந்தால், சொன்ன சொல்லின்படி வெல்லாமற் பல்லைக் காட்டிப் பரதவித்து ஓடி வந்துவிட்டானென்று உலகமுள்ள வரையிலும் பெரிய வசையாகப் பாடுவார்கள். அதனால் நல்லோர்கள் அடங்கி யிருந்து, தாங்களெண்ணிய காரிய யாவங்களில் தங்கள் கருத்து முற்ற நேரிடுங் காலமறிந்து, தங்கள் வல்லமையைக் காட்டித் தளர்ச்சி பெறுமற் புகழுடன் மனக்கிளர்ச்சி பெறுவார்கள். அப்பேர்ப்பட்ட வீரர்களைக் கொண்டாட வேண்டியது. இதுதான் பெரியவர்களுக்கும், சிறியவர்களுக்கும், புத்திமான்களுக்கும், புத்தியீனர்களுக்கும் இருக்கின்ற வித்தியாசம்.

ஈதிப்படியிருக்க, நாம் பூசிக்கப்பட்ட ஆசாரிய புருஷர்களோ? யுத்த நிலத்தில் வருஞ் சத்துருவைக் கண்டமாத்திரத்தில் வெற்றிபெற விரும்பி, போர்முனை புகுந்து, வில் வளைத்து, கூறிய கணைகளைச் செலுத்தி, கருக்குலையச் செருக்கலையக் கால்மாடு தலைமாடாக்கி, எல்லாவிதத்திலுஞ் ஜெயம்பெறக் கற்ற திடவான்களானவர்கள். இத்தன்மை வாய்ந்த உத்தமர்களை யுத்தகளம்விட்டோடிப் போங்களென்றும், எனக்குப் பின்னிருந்து பாருங்களென்றும், அக்கியான கேவலரைப் போற் பெண்டாட்டி பிள்ளைகளைச் சேர்ந்து பிழையுங்களென்றும் இப்படிக்கெல்லாஞ் சொல்லலாமோ? அன்றியும், அவர்கள் முன்பாக நானே வீரமுள்ளவனென்றும், அருச்சுனனுக்கு வைரி நானே யென்றுஞ் சொல்லப்போமோ? மானமுள்ளவர்கள் இவ்வாறு வெளிப்படையாகப் பேசி வெளிப்படுவார்களோ? மானங் கெட்டவர்கள் எனக்கவன் பகை யென்பார்கள். நாளைக்கு உறவாடும் வேலையி லிருப்பார்கள். ஒருபோது, மெத்த நல்லவனென்பார்கள். மற்றொருபோது, அப்பா! அவனா? மகா கெட்டவனென்பார்கள். அவர்களுக்கு ஈனமானமில்லாமையாலும், நாணம் வெட்கம் நலிந்தமையாலும், களிம்பு துலங்கிய செம்புபோல் விளங்கி, முன் சொன்ன வார்த்தைக்குப் பின் சொன்ன வார்த்தை மாறுதல்படுமே யென்னு மதியில்லாம லலைவார்கள். மானமுள்ளவர்கள் சொற்சோர்வுபடாம லிருந்து, மானக்கேடு வராமற் காத்து தங்கள் பிராணனைத் துரும்பாய் மதித்து, சத்துரு நேரிட்டால் யுத்தமும் பண்ணி, வெற்றியும் பெற்று, வீரவாகை யுற்றுத் தீரலட்சுமிக்கு இருப்பிடமாவார்கள். ஆதலால், (பழம்புண்ணாளி பரிகாரி) என்பதுபோல் நான்கு துறையுமறிந்த அநுபவசாலியான பெரியோர்கள் இப்படி போனால் இப்படி முடியும். இன்னது செய்தால் இன்னது வரும் என்று நம்போலியரைத் தடுத்துச் சொல்லவேண்டிய சம்பந்தமுண்டாயிருந்தபடியாற் சொன்னார்கள். வழியே போகிறவர்கள் நமக்கு நற்புத்தி சொல்ல வருவார்களா? அப்பா துரியோதனா! மூதுமறையாளராகிய இவர்கள் மூவரும் மும்மூர்த்திகளுக் கொப்பானவர்கள். திரிகாலஞானிகள். இத்தன்மையராகிய ஜீவன் முத்தரை இந்தக் கர்ன னெதிர்த்து இழிவாகப் பேசுவதற்குத் தகுதியானவனோ? நல்லது; இப்போது வருகின்ற அர்ச்சுனனுக்கு முன்னின்று போர்கொடுத்து வெல்லுந் திடமுள்ள ஆரியருள்ளத்தை வெம்பி வெதும்பி வெந்து போகும்படியாய் விளைத்து விட்டீர்களே. ஆ! ஆ! இப்படியும் பேசலாமா? ஐயையோ!! இது கடவுளுக்கும் ஒப்புமா? என்று தன் கையோடு கையறைந்து, முகம் வாடி வதங்கி தேர்விட்

டிழிந்து, சூரியன்போற் புகழ்படைத்த அவ்வீஷ்மரானவர், துரோணாச்சாரியார்-கிருபாச்சாரியார் - அஸ்வத்தாமர் இவர்களிருக்கும் இடத்திற்குச் சென்று நின்றார். பிரதாபம் பெற்ற பாட்டனார் தேர்விட்டிறங்கு முன்னமே துரியோதனன் பயந்து, தானும் தேர் விட்டு இறங்கி ஓடிவந்தான்.

அப்போது துரோணாச்சாரியார் முதலிய அம்மூவருக்குஞ் சிறிது சந்தோஷமுண்டாகும்படியாக துரியோதனனைப் பார்த்து, வீஷ்மர் சொல்லுகின்றார். அப்பா துரியோதனா! இம்மூவரும் எப்பேர்ப்பட்டவர்களென்றால், தேவருங் கொண்டாடுகின்ற சீலத்திறமுடையவர்கள். நம்மைப்போன்றவர்களால் வணங்குவதற்கும், வழிபடுதற்கும், பூசிப்பதற்கும், தருமநீதிகளை யோசிப்பதற்கும், தானமாதிகளை யாசிப்பதற்கும், நமக்கு நன்னெறிகளை யாராய்ந்து நன்மார்க்கம் போதிப்பதற்கும், நமது மனத்தை தக்கபடிக்கெல்லாஞ் சோதிப்பதற்கும், கிருபைக்கண் வைப்பதற்கும், ஆசீர்வசனஞ் செய்வதற்கும் உன்னத ஸ்தானத்தில் இருந்து உயர்ந்த பூஜிதையாய்ப் பெருமை பெறத்தக்க பெரியோர்கள்; இவர்களுடைய திருவடி நமது மணிமுடிமேற் பதிக்கத்தக்கதன்றி வேறல்ல. அப்படியிருக்க, இவர்களைக் கோபித்து அற்பமாகப்பேசி, அவமதிப்பாக ஏசி, அவர்களுடைய சிந்தைவருந்தி திடுக்கிடச்செய்து, நாம் வீண்பழி சுமந்து வீணைமூட்டை கட்டிக் கொள்வதற்கு உரியோரல்லவே; அப்பா துரியோதனா! ஆ! ஆ! என்ன காரியம் செய்துவிட்டாய்? என்று பாரமார்த்திய தருமங்களைப் படித்து, இவ்வளவுதானா உன்னுடைய இராஜாங்கமென்று வெறுத்து (பெற்றோர் அகடழித்தால் பிறரும் அகடழிப்பார்) என்னும் பழமொழியை யோசித்திலையோ ஐயையோ! இப் பெரியோரைப் பழித்த பேதைமையால், கண்டவர் நின்றவர் கொண்டது கொண்டபடி கொழிப்பார்கள். அண்டையயலுஞ் சிரிப்பார்கள். சண்டையின் தன்மை உனக்கென்ன தெரியும்? சாதுக்களின் சேதியை நீ எப்படி அறிவாய்? சாதுசங்கப் பழக்கம் எவ்வாறு உணர்வாய்? காரியத் தாழ்ச்சிசெய்து கலக்கப்படுத்திக் கலைத்துவிட அறிவாய். போ! போ! என்று கடுஞ்சொற்சொல்லி ஆசாரியருடைய பாதங்களில் விழுந்து, கையு மெய்யுங் குவிய நையுமன்பு நிறைய வெற்றிக்கு வித்தாகிய வேதவேதியரைப் பார்த்து வீஷ்மர் விளம்பலுற்றார்.

### வீஷ்மர், ஆசாரியர் மூவரையும் அபராதமன்னிப்புகேட்டு வணங்க, அதற்கவரிணங்கி இனியாகவேண்டுவ துரைத்தல்

ஓ ஆசாரியசுவாமிகளே? ஓ தநுவேத சதுர்வேத சம்பன்னர்களே? சரணம் சரணம் புல்லறிவுடையோரென்ன சொன்னாலுங் கற்றறிவுள்ள உத்தமராகிய தங்களை போன்றவர்கள் அதைக் குற்றமாய்க் கொள்ளார்கள். மேலும் தங்களை யிகழ்ந்து பேசிய தறுகண்ணரை பதிலுக்குத் தாங்களிகழாமல், ஜீவகாருண்யத்தால் க்ஷமிக்க வேண்டியது. அதுவுமல்லாமல் ஊழ்வினைப் பயத்தால் இகழ்ந்தவர்கள் மீளா நரகத்திற்கு ஆளாகாதபடி ஜெகதீசனைக் குறித்து மந்திர ஜெபார்ச்சனை செய்து மன்னிப்பு கேட்டு வரம்வாங்கி க்ஷமித்தலுஞ் சான்றோர்க்குரிய கடனாகையால், ஓ பூரணகிருபா நோக்கமுள்ள புண்ணியர்களே! இந்த புத்தியில்லாத பேருக்கு குற்றம் நேரிடாமற் சித்தமிரங்கி திருவருள் பாலிக்கவேண்டும். பகைவர் நேரிட்ட சமயத்தில், இப்பாதகர் பேசிய வீண் வீரபேச்சும் விருதாக் கைவீச்சும் பயன்படாது; காற்றுக்குப் பதர் கலங்காதிருக்குமா? ஓ கலங்காமணியாகிய காரணர்களே! அடிமை புகுந்த எங்கள் பேரில் அன்பு வைத்து ஆதரிக்கவேண்டும். இனி நான் சொல்லவேண்டிய உபசாரமென்ன விருக்கிறது? தனுவேதக்கடலுஞ் சதுர்வேத சாகரமும் உள்ள நிறையக் கொண்டிருக்கும் உத்தமர்கள் நீங்கள் குற்றமற்ற உங்களுக்கொப்பாக வேறொருவரை நினைக்கத் தக்கதோ? அது நிற்க, மற்றொருகாரியம் குருகுல நாதனுக்கும் அவன் சேனைக்கும் ஏதாகிலும் ஒரு தீங்குவருமாகில், அந்தப்பழியானது துரியோதனனுக்குரிமையாகிப் பிரியாதிருக்கின்ற தனுவேத சம்பன்னராகிய உங்களைச் சாராமல்விடாது. அப்போது மதிப்பிலுயர்ந்த உங்களை நாடெங்குந் தூறுவார்கள். மதிப்பற்றவர்களை குறித்து யாவரும் பேசமாட்டார்கள். ஆதலால், தங்கள் மனத்திற் பலவாறாகிய குற்றங் குறைகள் இருந்தாலும் அவைகளைத் தீர்க்கவயிரமாகப் பாராட்டாமல், தங்களை யடுத்த மன்னவனுக்கு எப்போதுங் கீர்த்தியுண்டாகும்படியாக சகாயஞ் செய்யவேண்டும். மநுநெறி முதலிய மற்ற நூல்களிலுஞ் சொல்லியிருக்கு முறை இதுவன்றோ? அப்பேர்ப்பட்ட சாஸ்திரங்களை முற்றுங் கற்றிருக்குங் கருத்தினையுடைய உங்கட்கு யாரால் என்னகுறை நேரவல்லது. மற்

றோர் விண்ணப்பம்: இந்தக் கர்னராஜன் கழ
றிய வார்த்தைகள் களங்கமுள்ளன வென்று
யோசிக்கவேண்டாம்; அவனுடைய கருத்தை
வேறுவிதமாகக் கண்டுகொண்டேன். அஃது
என்னவெனில், தானிப்படி பேசினால் உங்க
ளுக்கு இன்னும் மேலான வீரத்துவமுந்,
தீரத்துவமும் உண்டாய் அருச்சுனனை ஜெயிப்
பீர்களென்றும், துரியோதனன்பேரிற்கொண்
டிருக்கின்ற உங்கள் அன்பு வெளிப்படுமென்
றும், புருஷ யுத்தியாகச் சொன்னான். ஆத
லால், தாங்கள் மனம்பொறுத்துக் காத்தருள
வேண்டும். இதோ நமக்கெதிரில் அதாகதஞ்
செய்யக் கருதி வருகிற சுவேதவாகனனென்
னுங் கர்ணை சூரியபகவானுக்கு ஒப்பாகக் காணு
கிறான். அவனுக்கு முன்னே நாமும், நமது
சேனையும் பனிபோ லாய்விடுவோம். இது
பிரத்யக்ஷமாக தெரிந்திருந்தும் நீங்கள் மன
வெறுப்படைவானேன்? அப்பால் தங்களு
டைய சித்தம் என்று அளவிடுதற்கரிய புகழ்ப்
பிரதாபத்தையுடைய வீஷ்மர் வேண்டிக்
கொண்டார்.

அப்போது துரியோதனராஜனும், கர்ன
ராஜனும் துரோணாசாரியர் முதலிய மூவரை
யும் பணிந்துபோற்றி, சுவாமிகளே! விளையப்
போகின்ற தீங்கு இவ்வகையானதென்று
தெரியாமல் ஏதேதோ பேசிவிட்டோம்; எங்
கள் பிழையைப்பொறுத் திரக்ஷிக்கவேண்டும்.
என்று மீண்டுஞ் சாஷ்டாங்கமாக நமஸ்காரம்
பண்ணி வேண்டிக்கொண்டு, தங்களால்
நேரிட்ட அவர்களின் மனக்குறையை மாற்றி
னார்கள். இந்தப்பிரகாரம் இவ்விருவரும்
வேண்டிக்கொண்ட காலையில், சான்றோர் சின
மாதலால் நீர்கிழிய வெய்த வடுப்போலுடனே
மாறி ஆசீர்வதித்து பக்கத்திலுள்ள பலரையு
நோக்கிச் சில மொழி பகர்ந்தார்கள். ஓ கண்
ணியவான்களே! இதழ்விரிந்த வலம்புரிமாலை
யணிந்த குருகுலவேந்தனும், அங்கதேச ராஜ
னும் எங்களைப் பேசிய சொல்லானது முடி
வில்லாத துன்பத்தை விளைத்துவிட்டது. அத்
துன்பமானது, தேவர்கள் கைகூப்பிச் சிந்
தித்து வந்திக்கப்பெற்று விரதசீல வீஷ்மரு
டைய சாந்தவசனமென்னும் அமுத தாரை
யால் தணிந்துபோயது. இனி சிந்தனையில்லை.
இப்பால் நம்முடையபேரிற் கோபங்கொண்டு
வருகிற நரனுக்குத் தப்பி பிழைக்க வழியை
யும், மேல் நடக்கவேண்டிய வகையையும்,
துரியோதனராஜனுக்கு ஆகவேண்டிய உறுதி

யையும் யோசித்துச் சொல்லுங்கள். நாமெல்
லோரும் படைகூடி நின்று வருகின்றவனை
வளைத்துப் போர்புரியும்போது, அந்த அருச்
சுனன் இந்த துரியோதனன்பேரிலும், நாம்
மடக்கிய பசுநிரையின்பேரிலும் லட்சியம்
வைத்து வருகின்றவனாகையால்; எதிரில் நிற்
கின்ற நம்மையெல்லாம் ஒருபுறமாய் ஒதுக்கி
விட்டு, வணங்காமுடி மன்னனைத் தனித்து
வளைந்து விஜயகாண்டீபக் கணையால் துளை
த்து அடிநாளையப் பகையை ஆற்றுவான்.
அப்படி யாற்றுவானாகில் அநேககோடி அசுவ
ரதங்களும், திரளாகிய யானை சேனைகளும்,
வெகுவாகிய வேந்த வீரர்களும் நாமுங் கும்பு
கூடி யிருந்து என்ன பிரயோசனம்? துரியோ
தனன் அடிபட்டான்; அருச்சுனன் கையிற்
பிடிபட்டான்; வில்லாசிரியர் முதலிய பல்லோ
ரும் விழித்து பார்த்திருந்தார்கள். இந்த
அநியாயத்தைப் பார்த்தீர்களா வென்னும்
பழிப்பும் அவமதிப்பும் வருமல்லாமல் வேறு
புகழுண்டோ? ஐயா வீஷ்மரே! நமது நேரில்
வருகின்றவன் நீலமேனியை யுடையவனுத
லின் அருச்சுனனென்பதற்கு ஐயப்படவேண்
டியதில்லை. ஆகையால், அவனுடன் எதிர்த்து
சண்டைபோடுவதொன்று. அல்லது ஒரு வரு
டம் அக்ஞாதவாசத் தவணைக்கு ஒரு நாள்
குறைவென்று துரியோதனமகாராஜன் எண்
ணிச் சொன்ன பிரகாரம் வழக்கிட்டு, மறுபடி
யுங் காட்டுக்கு ஓட்டிவிடுவதொன்று. இவ்
விரண்டு காரியத்தில் ஒன்றை நிச்சயித்து,
ஸ்திரமானதை செய்து விடுங்கள். மிஞ்சிப்
போன பிற்பாடு விழிப்பது காரியமல்ல என்று
துரோணாச்சாரியர் சொல்ல, அந்த மொழியை
வீஷ்மர் கேட்டு துரியோதனனுடைய சிந்தை
தெளியும்படி செப்பத் தொடங்கினார்.

### அக்ஞாதவாசத்தவணையி லையுற்ற துரியோத னனை வீஷ்மர் தேற்றி யறிவுறுத்த அவனதற் கோவ்வாது தன் கொள்கை கூறுதல்

அப்பா துரியோதனா! தப்பான காரியத்
திற் பிரவேசிக்காதே; நானுனக்குச் சொல்லு
வதைக்கேள். அக்ஞாதவாசத் தவணை நாளைக்
குறித்துப் பாண்டவர்கள் பேரில் வழக்கிட்டு
மீட்டும் வனவாசத்திற்கு அனுப்பவல்லவர்கள்
ஆண்டவனாற் படைத்த நமது குல முதல்வ
னை சந்திரனுடைய நிழல்படிந்த இத்திரி
லோகங்களிலுங் கிடையார். அதேனப்படி
யென்றால், ஜகதீசனுடைய ஆக்கினைப்படிகால

சக்கரஞ் சுழன்று வருகின்றதால் அதிலகப்பட்ட சூரியசந்திரர் முதலாகிய நவக்கிரகங்களின் சாரத்தினுலும், தினசார பேதத்தினுலும் சற்றேறக்குறைய ஐந்து வருஷத்திற்கொருதரம் அதிக மாசம் வருகின்ற கணிதப்படிக்கு யோசிக்குமிடத்தில் இப்போ திரண்டு மாதமும் பன்னிரண்டு நாளும் உயர்ந்திருக்கின்றது. அந்த உபரி நாளை கூட்டி நேற்று உதயத்திற்கே பதின்மூன்று வருடமுங் கழித்துப் போட்டார்கள். இன்றையதினந் தவணை நாளுக்கு மேற்பட்ட நாளாகையால், நேர் புகுந்து போர்செய்யப் புறப்பட்டிருக்கின்றுன் விஜயன். நீயதை யோசியாமற் சொன்னுய். அடா என் பௌத்திரசிகாமணி! பாண்டவர்கள் எப்பொழுதுஞ் சொற்சோர்வு படார்கள். வார்த்தை தப்பி வசனிக்கமாட்டார்கள். ஒருவர் தினையத்தனை நன்றி செயினும், அதைப் பனையத்தனையாகக் கொண்டு பிராணனுள்ளவரையிலு மறவாமற் புகழ்ந்து பேசத்தக்கவர்கள். ஒருவர் செய்த பல பொல்லாங்குகளையும் அருவிச்சலம்போல் அன்றே மறப்பார்கள். தீர்க்க வைரிகளல்லர். சத்தியநெறியும் நித்தியவிதியுந் தப்பார்கள். வான்வர் கொண்டாடும் ஞான முள்ளவர்கள் - வண்மை - உண்மை - திண்மை இம்மூன்று முடையவர்கள். நல்லொழுக்கமும், அவ்வொழுக்கத்திற்குத் தக்க நடைப்பழக்கமு முடையோர்; பொருமையற்றவர்கள்; அயலார் சொத்துக்கும் ஆசை வைக்காதவர்கள்; புறங்கூருதவர்கள்; அக்கிரமத்திற்கு உடன்படாதவர்கள்; குலமுறை குன்ருதவர்கள். ஆகையால், அவர்களொருநாளும் அபக்கியாதி பெறமாட்டார்கள். அபஜெயமு மடையார்கள்.

இப்பேர்ப்பட்ட இருதய சுத்தியுள்ளவர்கள் ராஜ சபையில் ஒப்புக்கொண்டுபோன தவணை நாள் கழிப்பதற்கு முன்னமே தாராளமாகச் சண்டைக்கு வருவார்களா? கணித நூல் உணராதவர்களா? நல்லது; அப்படி தப்பி வருந்தன்மை பாண்டவர்களிடத்தில் உண்டாயிருக்குமாகில், அஸ்தினுபுரத்தில் நீங்கள் ஆடிய தலையறுந்த ஆட்டத்திற்கும், சொக்கட்டானிற் சாதித்த நாட்டத்திற்கும், திரௌபதியைத் துகிலுரிந்த வாட்டத்திற்கும், இராஜசபை கூடிய உங்கள் துன்மார்க்கக் கூட்டத்திற்கும் உட்பட்டு, தடைக்கஞ்சிய சர்ப்பம் போலும், கரைக்கடங்கிய கடல்போலும் பொறுமையாய் இருப்பார்களா? இதனுலாவது நீயே தெரிந்துகொள்ள வேண்டாமா? கழனியிற் றழைத்த கருப்பஞ் சோலையின் செழுமையைச் செந்நெற்பயிர் காட்டவும், செந்நெற் பயிரின் கொடுமையைப் படப்பையில் வளர்ந்த கமுகஞ்சோலை நாட்டவும், கமுகஞ்சோலையின் வளமையை முடக்கின்றி யுயர்ந்த தென்னஞ்சோலை தெரிவிக்கவும், தென்னஞ் சோலையின் சீர்மையை இன்னுமுள்ள சோலைகள் விளக்கவும் ஆகிய சிறப்புக்கள் தங்கும் நில்வளத்தினையுடைய குருநாட்டுக்கதிபதியான குபேரனே! பன்னிரண்டு வருஷம் வனவாசம் பண்ணிய பாண்டவர்கள், சந்திரனுடைய சாரகதியினுல் அக்ஞாதவாச வருஷம் ஒன்றையும் நேற்ருேடு தொலைத்துவிட்டார்கள். நீ அதைக் குறித்துச் சந்தேகப்படவேண்டாம். பதின்மூன்று வருஷமும் போக்கி வந்தால், உங்கள் நாட்டை விட்டுவிடுகிறேனென்று நீ ஆதியில் சொல்லியவண்ணம் பாண்டவர்களுக்குரிய பதியைக் கொடுத்து அவர்களுடன் கலந்து சமாதானமாய்ப் போவது மிகவும் நல்லது. க்ஷத்திரிய தர்மத்திற்கும் உத்தமம். சத்திய வாக்குந் தப்பாது. ஆதலால், இந்தப்படி நடவென்று மனத் தழுக்குற்ற வீஷ்மர் சொல்லினர். இவ்வாறுக் சொல்லிய குருகுலமிக்கிய பிதாமகனைத் துரியோதன மகாராஜன் நோக்கி, முகங் கருகி, மனங்குறுகி, உரை தளர்ந்து, ஓளங்களையாவே! தேவரீர் சொன்ன சொல் எனக்குச் சம்மதமில்லை. முன்னே நிச்சயித் தனுப்பிய பதின்மூன்று வருஷமுங் கழிந்து போனுல்தான் என்ன? இன்னமும் ஒருமுறை வனவாசம் பண்ணி வரும்படி ஓட்டிவிடுவேனே யன்றி, நான் நாடு கொடுக்கப்போகிறதில்லை. நீங்கள் அந்தத் தவணை நாளைக் கணக்குப் பார்க்க வேண்டுவதில்லை. இதோ மின்னல்போற் பிரகாசிக்கும் வில் வேந்தர்களுக்கு முன்பாக விளம்புகின்றேன். சங்கினமீன்ற முத்துக்களால் அடைபடு மடைநீர் தடைபடாதோடுங் கழனிகள் சூழ்ந்த ஓர் நாடேனும் நகரேனும் இவருக் களிக்கமாட்டேன். அதேதெனெனில், இனி நான் என்னகொடுத்து இணங்கினுலும் என்னிடத்திற் பிரியம் வையாமல் எந்நாளுஞ் சத்துருவா யிருப்பார்களன்றி, எனக்கு மித்துருவாகார்கள். ஆகையால், நான் கொடுத்துப் பொல்லாங்கு பெறுவதைவிட கொடாமல் விரோதப்படுவதே நன்மை. அவர்கள் வேண்டுமானுற் சண்டைபண்ணி மூன்று லோகத்தையும் வென்று தாமே ஆளட்டும் அவர்கள்

செல்வஞ்செருக்கி வாழுங்காலத்தில், துரியோதனனாற் சுகப்பட்டோமென்று சொல்லிக்கொள்ளுவார்கள். மேலும், இத்திரிலோகவாசிகளும் என்னைப்பார்த்து ஆ! ஆ! துரியோதனனுடைய தீரமே தீரம் அவன் கொண்டதே வீரம் எந்தக்காரியமெப்படியானாலும் எவர்களெவ்வாறு சொன்னாலும் அதுகளுக்கெல்லாம் அசையாமலிருந்து ஒரேநிலையாக யுத்தம் புரிந்து போர்முனையிலிருந்து பெருஞ்சுவர்க்க முற்றானென்று எனக்கொரு கீர்த்தியுமுண்டாம். அனித்தியமாகிய இவ்வகிலவாழ்வை ஒரு பொருளாக எண்ணி வாழவேண்டுவர்கள் வாழட்டும். அக்கால் எனக்கு என்றுமழியாத அவ்வும்பர் வாழ்வு இருக்கவேயிருக்கின்றது. எனக்கு எதினாலுந் தாழ்ச்சியில்லை. ஆதலால், யார் யாதுசொன்னபோதிலும் என் கட்டுப்பாட்டினை ஒருக்காலுங் கடவேனென்றான் வணங்காமுடி வேந்தனாகிய துரியோதனன்.

## துரியோதனன் கருத்துணர்ந்த துரோணர் அவனைப் பசுமந்தைகளோடு பாதி சேனையுங்கூட்டிப் பட்டணமனுப்பி, தாங்களிங்ஙன் படை வகுத்திருத்தல்

இப்படி சுயோதனன் ஸ்திரமாகச் சொன்னகருத்தையும், வீஷ்மர் சொல்லிவந்தவிதத்தையும், கால நிதானத்தையும், படைமன்னர்களுடைய எண்ணத்தையும் வெற்றிமாலை பொருந்த துரோணாச்சாரியரறிந்து, ஓ பேரும் பிரதாபமும் பெருமையும் படைத்த கௌரவகுலச் சிங்கமே! பாண்டவர்களுக்கு நாடு கொடேனென்று நீ பகர்ந்தது நிச்சயமானால், உனக்கு அவர்கள் ஓடு கொடுப்பார்களென்பது உண்மையே. இனியொரு க்ஷணப்பொழுதும் நீ இவ்விடத்தில் நிற்கப்போகாது. எங்களையும் ஸ்திரமாக நம்பாதே. இப்போது கைக்கொண்டிருக்கிற மாட்டையோட்டிக்கொண்டு ஓட்டமுநடையுமாய் ஊர்போய்ச் சேருவையானால் நீ வெற்றிபெற்றதுபோலாம். நமது யுத்தியும் நிறைவேறும். இவ்விடத்திலிருந்து போர்புரிந்து ஜெயங்கொண்டு போகலாமென்றால், நாம் ஓட்டிய மாட்டையுங் குருநாட்டையுமிழந்து, அனியாயமாக உயிரிழக்க வேண்டிவரும். ஆனதால், நம்முடைய சேனைகளை இரண்டுபிரிவாக்கி, ஒருபிரிவை ஆவினங்களுக்குக் காவலாக அழைத்துக்கொண்டு நீ அஸ்தினாபுரம்போய்ச் சேர்வது உத்தமம். மற்றச் சேனைகளுடன் நாங்கள் கும்பலாக நின்று வருகின்ற தனஞ்சயனை உன்பேரில் வரவொட்டாமற்றடுத்து, எங்களாற் கூடியமட்டுஞ் சண்டைதொடுத்து சமயம்பார்த்து நாங்களும் பட்டினம் வந்துவிடுகிறோம். (விரதங்கெட்டாலுஞ் சுகந் தக்கவேண்டும்) இரண்டுங் கெட்டால் என்னபலனுண்டாம்? இறைவனே நாங்களெப்படியாகிலும் அடிபட்டு அவதிப்பட்டுத் தட்டுகெட்டுத் தடுமாறி வந்தாலும், விராடபுரத்திற்குப்போய் மாட்டு மந்தைகளை மடக்கி வந்தோமென்று பெருமை பாராட்டிப் பேசித் திரியலாம். இழிவென்பது நம்மை எட்டிப் பாராது என்று தநுவேதசம்பன்னருரைத்தருளிய வார்த்தையை விரதமுனியாகிய வீஷ்மருங் கிருபாச்சாரியருங் கேட்டு சந்தோஷித்து, அந்தோ! இந்த புத்தி யாவர்க்கு மேன்பாட்டை விளைவிக்குமென்று விளம்பி, இரத கஜ துரகபதாதிகளை இரண்டிரண்டு கூறாக்கி, ஒரு கூறு துரியோதன மகாராஜனுக்கும் பசுமந்தைகட்கு காவலாக அமைத்து அஸ்தினாபுரத்தை நோக்கிப் போகும்படியாக அனுப்பிவித்தார்கள். பெரியோருரைத்த பேச்சின்படிக்கு உடன்பட்ட பிரதாபமுடி வேந்தன் அப்போதே புறப்பட்டு, அரவக்கொடி நாட்டிய தேரிலமர்ந்து, ஆவினங்களையும் அநேக வீரப் படைகளையுந் தனக்கு முன்னாகவும் பின்னாகவும் நடத்தி, தானும் தேரை விரைவிற் செலுத்திக்கொண்டு சந்தடிசெய்யாமற் போயினான்.

இப்பால் துரோணாச்சாரியர்-கிருபாச்சாரியர்-வீஷ்மர்-அஸ்வத்தாமா-கர்னன் இவர்கள் முதலிய யாவரும் ஒன்றுகூடி இங்ஙனம் நின்ற மற்றச்சேனை கடல்போற் பெருக்கக் காட்டி எங்குந்தாமாயிலகி நின்றார்கள். அஃதெப்படியென்றால் எவ்வகைப்பட்ட திறமுடையோரும் இவர்களுக்கு முன்சென்று நின்று யுத்தஞ்செய்வது மெத்தவும் அருமையென்று இளைத்து வாடி ஓடிப்போகும்படியாக சில சேனைகளைப் பல சேனைகளாகவும்; பல சேனைகளைச் சில சேனைகளாகவும் தோற்றும்படியமைத்து உத்தரதிசைக்குக் கிருபாச்சாரியர், தெக்ஷண திசைக்குக் கர்னன், தூசிப் படைக்குத் துச்சாதனன், கூழைப்படைக்கு விகர்னன், இவர்களை மெய்க்காவலாக நிறுத்தி, சேனைகளுக்கு மத்தியில் சகுனி-சயிந்தவன்-சோமதத்தன்-பாகுலீகன் இவர்கள் முதலாகிய முதன்மையோரையிருத்தி, புறமிடாப் புகழ்பெற்ற புண்ணிய சீலனாகிய வீஷ்மரும், மங்களம் பொங்கும்

மகிழ்ச்சி தங்கிய துரோணாச்சாரியரும், சேனைகளின் முனைமுகத்தினு நடுநிலத்தினு முயற்சி விடாமல் பொருந்தினார்கள். அப்போது வான்மளாவிய குடைகளும், வாயொளி மின்னும் படைகளும், வகைவகையான கொடிகளும், வளைதடி முதலிய் தடிகளும், பாலா-பல்லயங்களும், மகர தோரணங்களும் நிறைந்து, முரசு - காகளம் - எக்காளம் - கொம்பு-பம்பை-தாரை-பூரி - வீரசின்னம்-சங்கம்-பேரி மற்றுமுள்ள வாத்தியங்க ளெல்லாம் பூமி செவிடுபட முழக்கினார்கள். இத்தன்மையாக ஆர்ப்பரித்திருந்த இவர்கள் துணியும் சேனாசைனியங்களைத் திருத்தி அமைத்த திறமும், துரியோதனன் பசு மந்தையுடன் நீங்கிப் பட்டினம் போகின்ற ஒழுங்கும் தேவேந்திரன் கண்டு, விட்டாற்றியாய் ஒரு தேரில் வருகிற அர்ச்சுனனுக்கும் கட்டாற்றலோடு ஆண்மைகொண்டு அங்ஙனநின்ற கௌரவர்களுக்கும் இனி இவ்விடத்தில் நடக்கப்போகின்ற யுத்தத் திறத்தைப் பார்ப்போமென்று, அக்கினி-யமன்-வருணன்-குபேரன்-பிர்மா-விஷ்ணு-உருத்திரன்-இவர்கள் முதலாகிய சகல தேவர்களுடனே அந்தரநிறை இந்திர விமானத்தின்மீது வந்து நின்றனர். அவ்வேளையிற் பரவாசுதேவனனுக்கிரகஞ் செய்ய அவனுக்கிணைப்படிக்குச் சொர்க்கலோகவாசம் பெற்ற அஷ்டகன்-வசுபுத்திரன் - வருகன்-நகுஷன் - மாந்தாதா - சிபி - புரூரவன்-கார்த்தவீரியன்-பரதன்-பகீரதன்-சகரதன்-தசரதன்-அரிச்சந்திரன்-பாண்டு இவர்கள் முதலாகிய மகாராஜரும், விருதுடால் மேளங்களுடன் அரிசந்தனாதி கற்பகப் பூமாலை வாசங் கமகமவென்று பரிமளிக்க வந்து விளங்கிய, வேடிக்கை பார்த்திருந்தார்கள். அவர்களில் தனது மகன் வரவைக்கண்ட சந்திரகுலத் தோன்றலான பாண்டு மகாராஜன் மகிழ்ச்சிகொண்டு, இரண்டு தோளும் பூரித்து திரண்ட உடலும் பாரித்து இன்ப மதுவுண்டு தென்புமேற்கொண்டு காணாதுகண்டு களித்தவர்போல் இந்திரனுக்கு அருகாசனத்திற்பொருந்தியிருந்தான்.

### துரியோதனன் செல்கையுந் துரோணாதியர் செய்கையுங் கண்ட அர்ச்சுனன் பெரியோர்க்கு வந்தனக்கணையேவ அவர்களவனை வியந்து பயந்திருத்தல்.

இந்தப் பிரகாரந் தேவேந்திரனும், மற்றத் தேவர்களும் வானத்தில் தானமில்லாமல் விமானத்திலிருந்து வேடிக்கை பார்க்கும்போது, தேனிறைந்த மாலைபுனைந்த சூரியகுலத்தரசரும், சந்திர குலத்தரசரும் சற்றும் ஏமாறாமல் விழித்தகண் விழித்தபடி பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்போது விஜயப்பிரதாப வீரகாண்டீப அர்ச்சுனனானவன், பானுகோடி ஜொலித்த ஜோப்பியம்போல் தேர்செலுத்தி அணிவகுத்திருக்குங் கௌரவச் சேனைக்கெதிரில் வெளிவந்தான். அப்படி வந்த காண்டீபனது தேரொலி யென்னும் பேரொலியால் அஷ்டகிரிகளும், அஷ்டகரிகளும், அஷ்ட நாகங்களும், அஷ்ட திக்குகளும், அஷ்ட பாலர்களும், அஷ்ட வசுக்களும் திடுக்கிட்டுத் திகைத்தார்கள். அந்தத் தேரிற் பூட்டிய குதிரைகளின் குரத்தெழுந்த துகட்படலங்களானது எண்டிசையுமொய்த்து, ஏழுகடலுந் தூற்று சக்கரவாளச் சுற்றும் அண்டமுகடு முற்றுங் கப்பிக்கொண்டதுகள். வேடிக்கை பார்க்கநின்ற தேவருமொடுங்கினார்கள். சக்கரவர்த்திகள் முதலிய யாவரும் பதுங்கினார்கள். சேனையும் சேனாதிபதிகளான வீரரும் ஒடுங்கினார்கள். தங்கள் தங்கள் ஜீவன் தப்பாதென்று தயங்குகின்ற கௌரவர்களுடைய நால்வகைச் சேனைகளின் திறத்தையும், அவைகளைச் சுற்றி நின்ற படைவீரர்களின் மறத்தையும் எளிதில் தெரிந்துக்கொண்ட விஜயனானவன், தனக்குச் சாரதியான உத்தர குமாரனைப் பார்த்து, அப்பா! விராடபுரத்து வெற்றிச் சிங்கமே! எதிரி சேனைக ளிருக்கின்ற இறுமாப்பைப் பார்த்தையா? நீரோட்டமுள்ள நெடுங்கடல்போல் நிலைகொள்ளா திருக்கின்றன. ஆகிலும் நமக்கொரு லக்ஷியமல்ல, இப்போதவர்கள் செய்திருக்கிற உபாயமான அபாயத்தை உனக்கு நான் எவ்வாறுரைப்பேன்? என்னுடைய வெட்கம் என் வாயை மூடுகின்றது. நம்மையவர்கள் மோசம்பண்ணி விட்டார்கள். அந்தச் சங்கதியை உனக்குச் சொல்லாமல் வெல்லக்கூடாது. அஃதென்னவென்றால், காட்டுபாண்டவர்களிற் பார்த்தனானவன் தலைமாட்டுக்குத் தீங்குவிளைக்க வந்துவிட்டான். நீ நாட்டுக்கு நல்லதுரையானதால் நாம் கூட்டிய மாட்டு மந்தையை ஓட்டிக்கொண்டு உன் வீட்டுக்குப் போய்விடென்று வணங்காமுடி மன்னனுடைய மனதைத் திருத்தி, பாதிச்சேனையை அவனுக்குக் காவலாக பொருத்தி யனுப்பிவிட்டு, மீதிசேனையை நமக்கெதிர் நிறுத்திப் பேரணிவகுத்துப் போராட நினைத்துப் பெரி

யோர்கள் நிற்கின்றார்கள். இவர்களுடன் யுத்
தஞ் செய்யத் தொடங்குவோமாகில், பசுக்கூட்
டங்களோடு துரியோதனன் பட்டினம்போய்ச்
சேர்ந்து விடுவான். அப்பால் இவர்களை
வென்று நாமடையப்போகின்றலாபமென்ன?
ஆகையால், நமக்கு நேர் நிற்கின்ற பெரியோர்
களு மறியாமல், அம்மன்னனுக்குறியோர்களு
மறியாமல், நாம் செய்யப் போகின்ற வேலை
யின்னதென்று யாருங் குறியா திருக்கும்படி
யாய், தேரோட்டிக்கொண்டு போகாநின்ற
அத்துரியோதன ராஜனுக்குக் குறுக்கே நாம்
போய் நின்று, மறித்து வருத்தி, நமது
மாட்டை மடக்கிக்கொள்வது மதியூகராகிய
மன்னவர் செய்யும் போர்த்திற உபாயமாக்கும்.

ஓ மைந்தனே! நாம் மீட்கவந்த பசுமந்
தைகள் அஸ்தினாபுரம்போய்ச் சேர்ந்துவிட்ட
பின்பு இவ்விடத்திலுள்ள பல்லோரை ஒழித்
தும், வல்லோரை யழித்தும் பிரயோசனம்
என்ன? ஆரியக் கூத்தாடினாலுங் காரியத்திற்
கண்ணாயிருக்க வேண்டியது. ஆதலால், முன்னு
தாகப் பசுக்களை மடக்கி விராடபுரத்திற்கு
அனுப்பிவிட்டு, அப்பாற் பெரியோர் முதலிய
உரியோர்களுடன் சமராடி துரியோதனனை
யுஞ் சுற்றவிட்டு, எவ்விதத்திலேனும் வெற்றி
பெருவதற்குத் துரிதமா யிருக்க வேண்டும்.
ஒருவேளை நாம் துரியோதனனைத் தடுக்க
நாடிப்போங் காலையில், இந்தப் பெரியோர்கள்
மேல் விழுந்து போர்கொடுப்பார்களாகில் நாம்
நேர்புகுந்து, கடுங்கணைப் பிரயோகங் காட்டிக்
கலக்கி, கண்ணுக்குக் காணாமல் ஓடிப்போகும்
படியாய் விலக்கி, காரியானுகூலங் காண்போம்.
இதைவிட வேறு யோசனை யில்லை என்றிசை
த்து எக்களிப்போடெழுந்த பற்குணனை உத்
தரகுமாரன் பணிந்து, மகா பாக்கியமென்று
சித்தமகிழ்ந்து, சரிதான், ஓ சூத்தனே! இப்
பேர்ப்பட்ட காலத்திலல்லவோ என் சாமர்த்தி
யத்தைத் தேவரீர் அரியவேண்டும் என்று
குதிரையின் கடிவாளத்தைக் குறுக்கிப் பிடித்து
குலுக்கு விடுத்து, சிகரக் குன்றம்போன்ற
தேரைச் செண்டுபோ லெழுப்பி, துரியோத
னன் போன திக்கைத் தொடராமல், பெரி
யோர்களுக்கு வல்சாரி வருவதுபோற் சூழ்ச்சி
காட்டி, மேலுக்கு மேலாக மேற்றிசையை
நோக்கி விரைவில் விட்டுவிட்டான். அக்காலை
யில் அனுமக்கொடியோடுந் தேரின்கண் அமர்
ந்து வருகின்ற அர்ச்சுனராஜன் தெக்ஷண
திசையி லிருக்குஞ் சிலைக்குருவான துரோணா

சாரியருக்குக் குருபாத வணக்கம் பண்ணிக்
கொள்ள வேண்டுமென்று கருதி, காண்டீபம்
வளைத்து நாணேற்றி சரஞ்ஞைசைகாட்டி, இர
ண்டு கணைகளை எடுத்துப் போற்றிப் பணிந்து
விடுத்தான். காமதகனனாகிய கண்ணுதலின்
கடாட்சம் பெற்ற காண்டீப னபிமந்திரித்து
விட்ட அஸ்திர மிரண்டும் அந்தரம் புகுந்து,
ஆகாயக் கங்கையைக் கவர்ந்து, அங்கலர்ந்து
விரிந்த மலர்களைப் பரித்துவந்து, துரோணாச்
சாரியருடைய பொன்னடிமேற் பொழிந்து
பூசித்து வரும்போது, பின்னும் இரண்டு
பாணங்களைப் பிரயோகஞ் செய்தான். அவ்
விரண்டுந் திரண்ட உருண்டை போன்ற
அண்டத்திற் பறந்து, அவற்றுள் ஒன்று
பிரிந்து சென்று ஆசாரியரைச் சூழ்ந்து பிர
தக்ஷணஞ் செய்து திருவடியிற் பணிந்து,
மற்றொன்று பதின்மூன்று வருடம் வன
வாசஞ் செய்து அக்ஞாதவாசமும் பண்ணித்
துன்பந் தொலைத்துத் தேவரீருடைய அநுக்
கிரகத்தால் இன்பம்பெற வெளிப்பட்டோம்.
என்னுடன்கூட எல்லோரும் க்ஷேமமாயிருக்
கின்றார்கள் என்று சுபஞ்சொல்ல வந்தது
போல் ஆசாரியருடைய செவியினிடத்தி
லொதுங்கி ரீங்காரமிட்டு நின்றது. இந்த விந்
தையைக் கண்ட துரோணாச்சாரியார் சிந்தை
தளர்ந்து, திக்பிரமைகொண்டு, தியக்க மடை
ந்து, ஒன்றுந் தோன்றாமலிருந்து விட்டார்.

அவரத் தன்மையி லிருக்கும்போது, பச்
சிமதிசையிற் படர்ந்த அர்ச்சுனனானவன் அங்
கிருந்த குலமுதல்வனாகிய வீஷ்மரைக்கண்டு
அவரையும் தொழும்படியாகக் கருதி, துரோ
ணாச்சாரியரைக் குறித்துத் தொடுத்த பிரகாரம்
நான்கு பாணம் விடுத்து, கங்கை நீராட்டிக்
கர்ச்சித்து, பத்திர புஷ்பங்களினால் அர்ச்
சித்து, செவிகளுக்கு க்ஷேமச் சமாச்சாரமுந்
தெரிவித்து, இதுபோலவே வடதிசையில்
மேருவைப்போற் படைக்காவ லிருக்கின்ற
கிருபாச்சாரியருக்கும் நான்கு பாணஞ் செலு
த்தி வந்தனை வழிபாடு செய்து, கர்ணகளிடத்
துங் கணையொலி காட்டி, தன்பேரில் அவர்
கள் நெடுநாளாக வைத்திருந்த காதலை
விருத்திசெய்து, அவரவர்கள் தம்மைத் தாம்
மறக்கும்படியாகத் தலை மயக்கங்கொள்ள
விடுத்து, இச் சமயத்தில் தன்னையவர் தொட
ராதிருக்கவும் தேடாதிருக்கவும் மோகன முண்
டாக்கி, செவ்வானத்திற் கலந்து மறைந்து
செல்கின்ற செங்கதிர்ச் செல்வனுடைய தேர்

போல் தன்னுடைய தேரைச் செந்துகளால் மறைத்து, அங்கு நிறைந்த பெரியோர்களும், பிறமன்னர் முதலாகிய யாவரும் அறியாதிருக்கும்படியாக அவர்கட்குப் பின் பக்கமாக ஓர் நெறிபற்றிப் போயினன். இவ் வண்ணமாகப் பார்த்தனேறிய தேரை மூர்த்தாண்யமாகத் திருப்பி முடுக்கி வேகமாய் விடுத்த உத்தரகுமாரன் திறத்தை வீஷ்மர்ச்சாரியர், துரோணச்சாரியர், கிருபாச்சாரியர், அஸ்வத்தாமா இவர்கள் முதலிய யாவரும் பார்த்து, பார்த்தனுக்குத் தகுந்த தேர்ப்பாகன் அகப்பட்டானென்று பட்சமாய்ப்பேசி, என்றுங் காணாத அதிசயம் இன்று கண்டவர்களைப் போல் ஆநந்தங்கொண்டு, ஆ! தெய்வமே! இந்நாள் வரையிலுந் தனுர்வேதங்கற்று, சம்பிரதாயமுற்று மந்திரார்த்தங்களை பெற்று மகா சமர்த்தாயிருந்து சம்பிரமமாய்க் காலங் கழித்து வாழ்ந்த நாம் கதையிலுங் கேட்டில்லாத கற்பனையிலுங் கண்டறியாத அந்நியாதிசயமான அம்புகளை யனுப்பி, கும்பலில் நின்ற நம்மைக் குறித்து அன்பு பாராட்டினனே: என்று ஒருவரோடொருவர் கூடிக் கலந்து, ஆ! ஆ! இந்த வல்லவனுக் கீடாகிய புருஷர்களுமுண்டா? அடடா!! விஜயன் விட்ட கணைகளில் ஒரு கணையானது ஆகாய க்ங்கையை அள்ளிக்கொண்டு வந்து சளசள வெனப் பொழிந்து சரணங்களில் அபிஷேகம் பண்ணவும், மற்றொருபாணம் புஷ்பங்கள் பறித்து வந்து அர்ச்சனை செய்யவும், மற்றொரு அஸ்திரம் வஸ்திரம்போல் வளைந்து வலஞ்சுற்றி வரவும், பின்னுமோர் அம்பு நிதிலாச் செய்தியைக் காதிற்போதிக்குந் திறம் போல் இரையவும், இப்படிக்கெல்லாம் செய்த பிரதாபம் வாய்ந்த பெருமையேந்த தனுமறைகள் முதலிய சாஸ்திரங்களாய்ந்த தனஞ்சயன் இனி சண்டைமுகத்திற்றொடுக்குஞ் சரத்தைத் தடைசெய்யப் படித்த தாஷ்டீகர்களு முண்டோ? இதன்றியும் பெரும்பார மேறினுந் தளர்ந்து வளையாத கற்றூணைப்போல் எத்தனைகோடி கொடிப்படைகள் தன்னைச் சுற்றினுஞ் சற்றுமிளையாதத் தனஞ்சயனவன் மெத்த வல்லமைகொண்டு, ஒருசாரதி துணையைக்கண்டு சண்டைபோடத் தலைப்பட்டிருக்கின்றான். இன்று இவனது போர் முகத்திற்கு நேர்முகமாகத் தேர்செலுத்தி நின்று யார் செயிக்கப் போகின்றார்கள்? நாம் பிழைக்குமாறெப்படி? என்று யாவருந் திப்பிரமைகொண்டவர்களாய்த் திகைத்திருக்கும்போது, அவருள் துரோணர் திடுதிடுத்து ஐயா கங்கா புத்திரனே! இந்த அர்ச்சுனன் என்னிடத்திற் கற்காத கணை வித்தைகளெல்லாங் கற்றிருக்கின்றானே: ஆ! ஆ! என்ன சமர்த்தன் என்று கண்கலக்கப்பட்டுக் கழறியபோது வீஷ்மர் இதனை விளம்பத் தொடங்கினர்.

ஐயா துரோணச்சாரியரே! அநுமக்கொடி படைத்த அர்ச்சுனராஜன் நமக்கு மரியாதை நடாத்திய மந்திராஸ்திரத்தையும், நம்முடையபேரில் எதிர்க்க நலியாமல் வருகிற மனோதிடத்தையும் நிதானிக்கு மிடத்து அவனைத் தொடர்ந்தெதிர்த்து அமராடிக் கெலிப்பதற்கு இயாவராற் கூடும்? அல்லாமலும், பாஞ்சசன்யப் பரந்தாமனான ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய பரமதயாள பாத்திரனாயிருப்பவன் தந்தையாகிய இந்திரனுடைய சொந்தக் கருணையையும், அவன் தந்திருக்கின்ற பல மந்திரக் கணையையுந் துணையாகப் பற்றி, அன்புக்குந் தயைக்கும் இடமாயிருப்பவன். ஏற்றுவாகன மூர்த்தியாகிய கூற்றுதைத்தோனது கடாட்ச வீட்சண்ய முண்டாயிருப்பவன். இத்தியாதி நல்வினைப் பயனுற்ற நரனானவனைச் சற்றேனுஞ் ஜெயம் பெறுகின்ற தன்யரில்லையே; நாமென்ன செய்யலாம். நமது சொல்லை உட்கொள்ளாமற் றள்ளி நடக்குந் துரியோதனன் துள்ளுகாலை போற் றுடித்து, அப்பாண்டவருடன் சொக்கட்டாடி அவர்களுடைய நாடு நகரத்தைப் பிடுங்கிக்கொண்டான். அதுவுமல்லாமல், பட்டு ஸ்திரீயாகிய பாஞ்சாலியம்மனைத் தலைமயிரைப் பற்றி யிழுத்துச் சபையேற்றுவித்து, வஸ்திர முரிந்து, மானபங்கம் புரிந்து, பன்னிரண்டு வருடம் வனவாசம் பண்ணப் பண்ணப் போக்கி அபாக்கியனானான். அவன் ஒரு போதுஞ் சிலாக்கியனாகமாட்டான். சத்திய வாக்கியனான தருமராஜனுக்கிளைய தம்பியினாற் கெடுவான், உயிர் விடுவான். இன்றைக்கு இவனால் அவமானப்படுவான். இதற்குச் சந்தேகமிராது. அஃதப்படியிருக்க, அணி நிறுத்திச் சேனைக்குக் காவலாயிருந்த நம்மை ஆவலாய்ப் பூசை பண்ணிப் போய்விட்டான். அவன் செய்த உபசாரத்திற்கு நாம் ஒரு ஆசீர்வசனஞ் சொல்ல வகையில்லாமற் போயினோம். இதனால் நமக்கெதிராகி வந்த மலைப் புயன்-சிலைக்கரன்-வானவர்கோன் மைந்தன்-நந்தனந்தனனேயன் ஆகிய இந்நரனுமனுக்குச் சரியாகாதவர்களாயினோம். நல்லது; நாம்

மடக்கிய மாட்டு மந்தையை விடுவிக்க வந்தவன் படைமேல் விழுந்து அமராட வேண்டுமே. அப்படிக்கில்லாமல், நம்மையு மயக்கி, நமது சேனையையும் விலக்கி, நான்கு திக்கையுங் கலக்கி, ஊரை நாடிப்போகின்ற துரியோதனனை விடாமல் நாடிப் போனான்போலுமிருக்கின்றது. ஐயா! மற்றப் பேச்சுகளை யுத்தமுனையிற் கலந்து பேசித் தெரிந்துகொள்ளுவோம். வெற்றிவீர விஜயன் போன வழியைச் சுற்றிப்பாருங்கள். பிரசித்தனான துரியோதனனை உற்றுக் காருங்கள். யாவருஞ் சேர்ந்து வாருங்கள். சித்தப்பிரமை கொண்டு தியக்கப்படாதீர்கள். சிலைவிஜயன் தேரைத் தெற்கு-மேற்கு-வடக்கு இவைகளில் விட்டாலும், கிழக்கில் விடாதீர்கள். ஓ சேனை மன்னர்களே! யாவருஞ் சாக்கிரதையா யிருங்களென்று யானை சேனை பரிவாரங்களுடனின்று, ஒன்றுந் தோன்றாமல் யோசித்துக்கொண்டு, ஒருவாறு உறக்கம் பிடித்திருந்தார். மற்றையரும் பிறக்கம்படைத் தயர்ந்தார்கள்.

### அருச்சுனன் அத்தினபுரிக்குச் செல்லுந் துரியோதனனைச் சேனையோடு மடக்கி, பசுநிரைகளைமீட்டுச் சரக்கூடிட்டு விராடநகரனுப்புதல்

அத்தருணத்தில் உத்தரகுமாரனானவன் அருச்சுனராஜனுடைய குறிப்பறிந்து, மடமடவென்று மண்ணுங் குலுங்க, விடவிடவென்று விண்ணுங் கலங்க, திடுதிடுவென்று திசைகள் நடுங்க, குடுகுடுவென்று குவடுகள் நுடங்க, கடுமையாக வீசிய காற்றின் வேகத்தாற் கருங்கடலைக் கிழித்தோடுகின்ற கப்பலைப்போற் பார்ப்பவர்களெல்லா மயங்கும்படியாக மனோவேகத்திலு மிஞ்சிய வேகங் காட்டி, கடகட படபட தடதட வென்று தேரைச் செலுத்தி, துரியோதனராஜனுடன் ஓட்டமு நடையுமாய்ச் செல்லுகின்ற சேனைக்குமுன் தான் சென்று, ஜெயம் ஜெயம் என்று தடுத்து நின்றான். அப்போது அந்தப் பசுக்கூட்டங்களுக்குக் காவலாகப் போகின்ற ஆயர்களும், கோப சபதங்கள் கூறும் வாயர்களும், யுத்தஞ் செய்யவல்ல நேயர்களும் ஆயுதபாணிகளாய் அதிர்ந்து, வந்தவனுடன் போர் புரிவதற்கு எதிர்த்து, வாளும் வேலும் பிடித்து விதிர்த்து, ஓடும் படைகளோடு உரக்கக் கொக்கரித்துக் கர்ச்சித்தார்கள். அதுகண்ட அருச்சுனன், ஏ! ஏ! ஹே! என்று இரைந்து, இருதோளும் பூரிக்க விரைந்து, காண்டீபத்தில் நாரி பிகிந்து காய்த்துத் துவைத்துக் கடைச்சற் பிடித்த கணைகளைத் தொடுத்து, ஆகர்ணபரியந்தம் இழுத்து விடுத்தான். அச்சமயத்திற் கிரீடியின் தேரோடி வந்து கிட்டி வளைத்த கெடுதியைச் சடுதியிற் கண்ட துரியோதனன் சஞ்சலப்பட்டு பெரியோர்கள் பேசிய பேச்சு கேளாமற் பெருமோசமாச்சே; அவர்கள் அங்கும் நாம் இங்குமாகப் பிரிந்து இவனிடத்தில் அகப்பட்டோமே என்று பெருமூச்சு விட்டு சற்று நிதானித்து சித்தம்பேதித்து அவனை விட்டு அப்பாலோடவுங் கூடாமல் திரும்பிப் போய் வீஷ்மர் முதலிய பேர்களுடன் கூடவு முடியாமல், வாடிவதங்கி மரத்தினிழலில் ஒதுங்கி மறைதலும் வெளிப்படுதலுமாகி பதுங்கி நின்றான். இவ்வாறு தீரகண்டனான துரியோதனன் மதின்மேற் பூனைபோற் சமயத்தை நோக்கி இளைத்துக்காட்டிய செய்கையையும், அவன் சேனைகள் சிலைவிஜயனால் வளைக்கப்பட்ட வகையையும் வீரகண்டை தரித்த விராடராஜ குமாரன் தெரிந்துகொண்டு, விஜயலட்சுமியருளால் இன்று நமக்கு ஜெயமென்று முகமலர்ந்து, விந்தகிரிபோல் அமைந்த தன் சொந்த ரதத்தை பாரிதியிற் சுழன்று மந்திரகிரிபோற்றிருப்பி, கரகர கரகரவென்று கர்க்கரத்தொனி காட்ட விற்கரத்தனான் விஜயனை நோக்கினான். அந்தவேளையில் அர்ச்சுனனானவன் பேரிடி முழக்கம்போற் காண்டீப நாண் ஒலி காட்டி அட்டகாசஞ் செய்தான்.

அத்தொனியை வீஷ்மர்-கிருபர்-துரோணர்-அஸ்வத்தாமா-கர்னன்-சகுனி இவர்கள் முதலாயினோர் கேட்டுத் திடுக்கிட்டு, ஓ! ஓ! என்னமோ மோசம்வந்தது. நாணோசையுந் தனுவோசையுங் கேட்கிறது. சமர்புரியுங் குமாரனைக்காணோம். ஆரபார தீரவீர மூர்த்தனையுமாகத் தேரூர்ந்துவந்த போர்வீரனெங்கே? ஈசானமூலையில் இடிக்கின்றாப்போலிருக்கின்றது. ஆனால், இது மழையிடியல்ல. மகரமச்சமுலாவுகின்ற கடலொலியுமல்ல. மாருதமுழக்குமல்ல. கொடிவீர சிங்கக்கிரீடியைக்கொண்டு காண்டீபக் கிண்கிணி நாணோசைபோற் காணுகிறது. கவனமாகக் காதுகொடுத்துக் கேளுங்கள்; தீதணுகவொட்டாமற் றிசைகளைக் காருங்கள்; சிந்தையும் எண்ணமுஞ் சிதறாமலுய்த்துணருங்கள்; பார்த்திபன் கதியைப்பதறாமற் பாருங்கள் என்று வடகிழக்குமூலையிற் கண் வைத்து ஏதேது? இதற்குள் அர்ச்சுனனிவ்வளவு தூரங் கடந்துபோவானா? இப்போது தானே

நாம் பார்த்தோம் மேற்குத் திக்கில் வெகுதூரம் போனானேயென்று ஒருவர்க்கொருவர் வாதுகொடுத்து நான்குபக்கமுங் காதுகொடுத்திருந்தார்கள். அப்போது பசுமந்தையையும் பாம்புக் கொடிபடைத்த பார்த்திபனையுஞ் சேனைகளுடன் மடக்கிய செஞ்சிலை வீரச் சேவகனானவன் தனக்குத்தானே யோசிக்கத் தொடங்கினான். அஃதென்னவென்றால், நாம் இன்னுஞ் சற்றுநேரந் தாழ்ந்து வருவோமாகில், மாட்டு மந்தைகளுடன் மன்னனுஞ் சேனையும் அஸ்தினாபுரத்தின் எல்லைபோய் அணைவார்கள். அவர்களந்த எல்லையை மிதித்துவிட்டால், அப்பால் நாம் அபஜெயமடைந்து திரும்பியதுபோலாம். பிராணன் வைத்திருக்கவேண்டிய பெருமை யிராது. ஏதோ தெய்வானுகூலத்தினாலும், பெரியவர்களைப் பூசை பண்ணிய பூஜா பலத்தினாலும், துரியோதனன் பசு மந்தையுடன் அகப்பட்டுக் கொண்டான். மேற்படையோ? சமீபத்திலிருக்கின்றது. நமது வில்லோசையைக் கேட்டவுடனே வீஷ்மராதியரா்யுள்ள வீரரில் பல்லோரும் வந்து கவிந்து கொள்ளுவார்கள். அப்பால் மிகுந்த பிரயாசத்துடன் பசுமந்தைகளை மீட்கவேண்டி வரும். ஆகையால், முன்னே மாட்டை மடக்கி மச்ச நாட்டுக்கு அனுப்பிவிட்டு, அப்பால் வருகிறவர்களுடன் போராடுவது உத்தமம் என்றுன்னிக் காண்டிபத்தில் அனல்முகக் கணைகளைத் தொடுத்து, பொருப்புமுதற் பூமியெல்லாம் நெருப்பு மழை பொழிவித்து, எக்களித்துக் கர்ச்சித்த சேனைகளை யெல்லாந் திக்குமுக்காடச் செய்து திசாதிசைகளனைத்துஞ் சின்னாபின்னப் படுத்தி விட்டான். அவனுடைய தீவிரத்தைத் தேவர்கள் கண்டு திக்கென்றொதுங்கி, அவர்களிருந்த இடத்தைவிட்டுப் பக்கென்றெழுந்து இனிக் காரியமில்லை. இந்தப் பூமியில் பலி கொடுப்பதற்கு எண்ணிச் சேனைகளைக் கூட்டி வந்தான் துரியோதனன். ஐயோ! பகவானே! இப்படியுங் கெடுவாருமுண்டோ? எவ்விதத்திலுஞ் சவ்வியசாசி பந்தித்து வென்றுவிடுவான். எவர்களையும் சும்மாவிடான் என்று துரியோதனனை நிந்தித்துப் பார்த்திருந்தார்கள்.

அக்காலையில் விஜயனுடைய வில்லோசையும், நாணோசையும், தேவதத்த முழக்கமும், தேரோடும் ஒலியும், குதிரைகள் அனுமானிக்கும் பழக்கமும், சாரதி யினையும் வழக்கமும், அனுமக்கொடி ஆடுகின்ற படபடாகாரமும், போராடும் இடங்கள்தோறும் புறப்படும் ஒலியும், வீரர்கள் மாறும் வலியும் ஆகிய இவைகளெல்லாம் மிகுந்து புவன மூன்றும் பயங்கொள்ள வியம்பெறுஞ் ஜெயசிங்கம் வருகிற வழியில், திரளாகக் கூடிய யானைக்கும்புகள் போல் துரியோதனனைச் சேர்ந்த சேனைகளும் வெற்றிவாளேந்திய வீரர்களும் பொங்கி, தங்களால் கூடியமட்டும் போராடி, விஜயனுக்கெதிர் நிற்கமாட்டாமல் நாணிப் புறங்கொடுத்தோடினார்கள். அர்ச்சுனன் தொடுத்த அனல்முகக் கணைகள் கொதித்தெழுந்து, கோபித்து விழுந்து, குதிரைகளை தறித்து, யானைகளை முறித்து, கொடி மன்னரைக் குறைத்துக் குலாவி யுலாவித் திரிந்து கொண்டிருந்தன. அக் கொடுமையைத் தேவேந்திரன் முதலிய தேவர்களும் மற்ற மூவர்களும் பார்த்து கிரீடியைக் கொண்டாடி, ஒப்புச் சொல்லுவதற்கு உவமை தேடினார்கள். பின்னும் புகழ்ந்து ஆனந்த வெள்ளத்தில் குளித்து ஆசை மேலிடக் களித்து ஆடினார்கள். அர்ச்சுனன் ஏவிய அக்கினி பாணங்களின் பிரசண்ட வேகக் காற்றினாற் பாதலமு நைந்து, பூதலமும் பஞ்சு பஞ்சென்னப் பறந்தது. சுயோதனாதியர் முதலிய யாவரும் நெஞ்சுலர்ந்து நாவறண்டு நாபி வரையிலும் புகைந்து, நாடாதும்நாடி, இதென்ன அக்கினி நக்ஷத்திர உதயமோ? அல்லது ஆலாலஞ் சேகரித்த புகையலோ? வடவைத்தீயின் அம்பாரமோ? வன்னிக் காற்றின் வண்மையோ என்று, அவர்களன்று பட்டபாட்டை நானென்னென்று சொல்லுவேன்? நான்கு வகை ரதிகரையும், நால் வகைப் படையையும், சுயோதனாதியரையும் உயிருடன் சுடும்போது சும்மா விருப்பாருமுண்டோ? ஐயா; ஜெனமேஜெய மகாராஜனே! இந்தப்பிரகாரம் நரனேவிய அக்கினி பாணங்களால் பல படைவீரர்களெல்லாம் மண்ணோடு மண்ணாய்ப் படிந்து, பதறிப் பெதறிச் சிதறிப் பிரிந்து பலர் மாய்ந்து, சிலர் தேய்ந்து, படையோய்ந்து போனார்கள். அந்தப் பக்குவத்தை உத்தரகுமாரனறிந்து, எதிரிகளின் காவற் கட்டுக் குட்பட்டிருந்த தங்கள் இடையரைநோக்கி, ஓ கோவலர்களே! உமக்கு யாதொரு தடையுமில்லை. உங்களோடு எதிர்க்கப் படையுமில்லை. நீங்கள் உற்சாகத்துடன் வற்சலங்களை ஓட்டிக்கொண்டு ஊர்போய்ச் சேருங்களென்று உரக்கப்பேசி, இருகரங்களையும் வீசி, ஏகுங்கள்; ஏகுங்களென்று சொல்லினான்.

அப்போது தங்கள் ராஜகுமாரன் கூறிய
இனிய வார்த்தையைத் தனிமையாய்ச் சஞ்ச
லப்பட்டுக்கொண் டிருந்த சகல யாதவருங்
கேட்டு, சம்பிரமங் கொண்டாடி நமது இளஞ்
சிங்கமே யுத்தஞ் செய்ய ஏற்பட்டுப் புறப்பட்ட
படியாற் கௌரவகுல சேனைகளை எங்குமில்லா
மற் சங்கரிப்பார்; நாமுங் கெலிக்கலாம் என்று
பொங்காரத்துடன் உங்காரமிட்டு அகமகிழ்
ந்து, முகமலர்ந்து முனைகலந்து கலகல என்று
மணி முழங்கப் பசுவடர்ந்து நின்ற இடம்
அடைந்து, ஊவென்று வாய் குவித்து ஊதி
புள்ளாங்குழ லிசையையுஞ் சமிக்ஞையையும்
வழக்கப்படி காட்டினார்கள். இடையர்களு
டைய குறிப்போசையைக் கேட்ட காட்டுப்
பசுக்களும் நாட்டுப்பசுக்களும் தலை எடுத்துப்
பார்த்து வாலெடுத்து, காதசைத்து, உடல்
குலுக்கி, கொம்புகளைத் தாழ்த்தி, தங்களைக்
கிட்டியிருந்த மச்சநாட்டு எல்லையைக்குறித்து,
இறுமாந்து நெறித்து, சேனைக்கும்புகள்
அலையமுறித்து, அம்பாரமுழுதுந் தும்புகள்
மடியக் கம்பளத்தாயர் கலந்து பின்னடையப்
பம்பரமென்னச் சுழன்று, மானினந் தாவுதல்
போல் கும்மாளமிட்டுக் குதித்து, வண்டென
பறந்து, செண்டென வெழுந்து, கண்டவர்
கலங்க, மண்டலம் மயங்க, திசைதடுமாற, தின
கரனோட, திரைகடல் வறள, சேனைகள் உருள,
அரைக்கணப்பொழுதில் செந்தூள் கருந்
தூள் வெண்டேளெழுந்து பறக்கும்படிக்குத்
திரும்பியதுகள். அப்படி திரும்பிய பசுக்களைத்
துரியோதனனும், அவனுடன் கலந்து வந்த
தேசராஜவீர பூபாலர்களும், கோபாலர்களும்
பார்த்து, திக்கு வேறில்லாமல் வருந்தி,
மடக்கிவந்த மந்தைகளை விடப்படாதென்று
மான்போர்வை பூண்டுவந்து, வல்லமையெல்
லாங் காட்டி மனநொந்து, அப்பால் தங்களா
லாகாமல், காய்ந்துருகிச் சடப்படங்கிய நெய்
போல் வாயடங்கி மடங்கினார்கள். மச்சராஜ
னுடைய கோபாலர் இச்சை மேற்கொண்டு
தாவி, உருகி ஓசை யடங்கிப்போன நெய்யில்
ஒரு துளிப் பால் தெறித்ததைப்போற் சள
சளவென்று உரத்துக் கூவி, எதிரி கைக்
கொண்டுபோன எங்கள் மந்தையை மீட்சி
பெற்றோமென்று எங்கும் பிரகாசிக்க மேவி,
எந்நாளும் பெறக்கூடாத ஜெயத்தை இந்நா
ளடைந்தோமென்று இறைவனைப் புகழ்ந்து,
மந்தையை விடாமற் தொடர்ந்து வந்தார்கள்.
இவ்வாறு ஜெயங் கொண்டாடிவரும் கோபா
லர்களுடைய புல்லாங்குழற் றொனியாலுங்
கண்டத் தொனியாலுங் கால்வீசியோடும் பசுக்
களும், பசும்பொற் குடம்போன்ற மடியையு
டைய கபிலைகளும், பருவக் கன்றுகளுள்ள
கோமளங்களும், சூற்கொண்ட சுரபிகளும்,
சூற்படாக் கடாரிகளும், இளமையான விடை
களும், முதிர்ந்த விருஷபங்களும், கட்டுப்
படாக் காலிகளும், கறுப்பு-வெளுப்பு-சிவப்பு-
கலப்பு-இவை முதலான பலவர்ணப் பசுக்க
ளும், துரியோதனன் சென்றவிடந் தொடங்கி,
வீஷ்மர், துரோணர் முதலியோர்கள் அணி
வகுத்து நின்ற நிலம் வரைக்குங் காலால்
சிலரை எறிந்து மிதித்தும், வாலாற் பலரை
யடித்து மடித்தும், உடலாற் சிலரை யுராஞ்சி
யிடித்தும் உரத்தாற் பலரை யொசியத் தாக்கி
யும், கொம்பாற் சிலரைக் குத்தி வீழ்த்தியும்,
கோலாகலமாய்ப் பல்கும்பலைக் கலைத்தும்,
அம்புபோற் பறந்து நேருக்கு நேராய் நிரை
நிரையாய்ப் பாய்ந்து போகாநின்றன.

இப்படிப் போகாநின்ற பசுமந்தைகளைப்
பார்த்தன் பார்த்து, இம்மாடுகள் போகின்ற
மார்க்கத்தில், வீஷ்மர் முதலானோர் படை
வைத்துக்கொண் டிருக்கிறார்களே; ஒரு வேளை
இந்தப் பசுமந்தைகளை மடக்குவார்களே;
நாம் இந்தப்பசு மந்தைகளுடன் கூடப்போய்
மச்சநாட்டில் விட்டு வரலாம் என்று நினைத்
தால், வீபற்சு வந்தான். எங்களை மயக்கவை
த்து மாட்டை யோட்டிக் கொண்டு போய்விட்
டான். சண்டை செய்து வெற்றி கொண்டு
போனவனல்ல என்று பல்லோரிடத்திலும்
பழிப்பாய்ச் சொல்லிக் கொள்ளுவார்கள்:
மேலும் நாம் போய்த் திரும்பி வருவதற்கு
முன்னே துரியோதனன் தப்பிப் பிழைத்தேன்
என்று அஸ்தினபுரத்திற்குப் போய்விடுவான்
போலுந் தோன்றுகிறதே; ஐயோ! அவனைக்
காணவும் அவனுடன் ஆவலாய்ப் பேசவும்
அவசரப்பட்டு பதின்மூன்று வருடங் கழித்து
ஓடிவந்தோமே; ஆகையால், நாம் இவனை விட்
டுப் போகலாகாது. இப் பசுமந்தைகட்கு
வேறு வகையான காவல் செய்யவேண்டும்
என்றெண்ணி, தனது விஜய காண்டீபத்தில்
சோனமேகம் பொழிவதுபோற் பாணப்பிர
யோகம் பண்ணி, பசுமந்தைக் கிருபாலும்
அண்டச்சுவருக் கொப்பாகச் சரக்கூடவேலி
யமைத்து, அவ் வேலிக்கு மந்திரமென்னுங்
கட்டுகளிட்டு, அக்கட்டுகட்குக் காவலாக வைர
வனென்னும் மகாபுருஷனை அமைத்தான்.
அந்தப்படியே அப்பசுமந்தைகள் யாதொரு

ஆக்ஷேபனையு மில்லாமல் நிரந்தர மங்கள துரந்தர புரந்தரனாகிய விராடராஜனது மச்ச நாட்டில் இதுவரையிலும் வசித்திருந்த வனங்களிற் போய்ச் சேர்ந்தன. எமன் கைக்கொண்ட உயிர் மீண்டவாறுபோற் பகைவரால் மடக்கிய பசுக்கணம் வந்ததை அந்நாட்டிலுள்ள பலரும் பார்த்து ஜெயம் ஜெயமென்று சிந்தை மகிழ்ந்து, பத்திரமாகப் பசுமந்தையைப் பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். இப்பால் பசுமந்தைகள் பாணப் பந்தலோடும் பலவிதக் காவல்களோடுஞ் சென்றதை வெகுதூரத்திற் றேர்களி லேறியிருந்த சிலைக்குருவாகிய துரோணாச்சாரியர்-வீஷ்மா- கிருபாச்சாரியர் - அஸ்வத்தாமா - கர்னன் - சகுனி - சாளவன் - விகர்னன் - துற்சாதனன் முதலிய பேர்கள் பார்த்து; சரிதான்; நாம் ஆலோசனை பண்ணிப் பசுநிரைகளையும் பார்த்திபனையும் அஸ்தினாபுரத்திற்கு முன்னாடி அனுப்பிவைத்த உளவை அர்ச்சுனன் எப்படியோ அறிந்து கொண்டு, இங்கிருந்த நம்மெல்லோருக்கும் இன்பம் உண்டாகும்படியாய் அம்புகளை விடுத்து, அயரப்படுத்திச் சாரதியுந் தானுந் தேரூர்ந்துசென்று, சமர்த்தாக வென்று, மாட்டையுஞ் சேனையையும் மன்னனையு மடக்கி விட்டான். நாமெண்ணிய வெண்ணம் கைகூடவில்லை. (பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரியும்) என்பது போல், அவன் எண்ணிய வண்ணம் இசைவாக்கிக் கொண்டான். யாவரேயாயினுந் தருமத்தின் வழி நிற்பார்களானால் அவர்களை யத்தருமமே தலைகாக்குமென்று பெரியோர்கள் சொல்லும் வாக்கியம் பிழைபடுமா? ஒற்றைத் தேருடன் ஒருதவியுமில்லாமல் வந்த இவனுக்கு நாமித்தனை பேரிருந்தும் என்ன பிரயோசனப்பட்டோம். இவ்விடத்திற் கூட்டமான நமக்கு இனியென்ன ஆட்டபாட்ட மிருக்கின்றது. அவன் நம்முடனெதிர்த்தால், நாமெடுப்பது ஓட்டவாட்டமே என்று ஒரே நாட்டமாய் மனநொந்து உறங்கினார்கள்.

**மடக்கிய நிரைகள் மச்சநாடு செல்வதைக் கண்டு ஐயுற்ற வீஷ்மராதியர் துரியோதனனுக்குத் துணைபடுமுன், அருச்சுனன் அவனைக் கண்டு இழித்துரைத்தல்.**

இங்ஙனஞ் சிலைவிஜயனானவன் உருத்திராம்ஸ மூண்டாய் அரைக்கணத்தில் நிரைக்கணத்தை மீட்டிச் சரக்கூடங் கட்டிப் பெருக விடுத்த தன்மைப்படிக்கு வடகிழக்கு மூலையிலிருந்து தென்மேற்கு மூலையில் மாடுகள்போய்ச் சேர்ந்தவா றுணர்ந்து மனமகிழ்ந்து வீஷ்மராதியோர் வினவப் பிரமிக்கும்படி வெற்றிச் சங்க மூழக்கி, நல்லது இராஜாதிராஜன் எங்கே? அவனேறிச் சிறக்குந் தேரெங்கே? அத்தேரிற் பறக்கும் பாம்புக்கொடி யெங்கே என்று எட்டுத்திசையும் மட்டிடப் பார்த்து வருவதானான். அப்போது ஆனினங்களை முன்னாக்கிச் சேனைக்கணங்களைப் பின்னாக்கி, முடுக்காய்ச் சென்ற துரியோதனராஜன் அருச்சுனன் தெறித்த விற்குணத்தினாலும், வாய் வைத்து மூழக்கிய சங்குநாதத்தாலும், அகில மழல் விடுத்த பாணக்குழாத்தாலும், அருஞ்சமர் வீரர்படும் பெரும்பாட்டாலும், நால்வகைச்சேனை கெடுங் கேட்டாலும் வெருண்டு, அலமருண்டு, புத்திபுரண்டு, கண்கலங்கி ஒருபுறமொதுங்கி, நெறிமயங்கி, ஒடுங்கி நின்றுவிட்டான். இவ்விதமாகிய துரியோதனராஜனைச் சவ்வியசாசி கண்டு கண்கள் சிவந்து, மூகஞ் சுளித்து, பற்கடித்து, மீசை துடித்து, வியர்வுபொடித்து, வெகுளிமேற்கொண்டு, எத்திசையிலும் பிரசித்தனான உத்தரகுமாரனைப் பார்த்து, ஓ வெற்றிபெற்ற வேலாயுதம் பற்றிய விராட குமாரனே! நம்முடைய ரதத்தைக் கண்டு பயங்கொண்டு, தனது படைகளையும் பசுக்கூட்டங்களையும் விட்டு, தானுந் தலையிரக்கங்கொண்டு இந்த நிலத்தைவிட்டகன்று, அதோ ஒரு மரத்தினிழலில் ஐம்பொறியடக்கிய ஆமைபோ லிருப்பவன், கௌரவகுலாதிபனான துரியோதன மகாராஜன்; அவனண்டையில் நமது தேரைக் கொண்டுபோய் நிறுத்துவையாகில், அல்பமிருகத்தைச் சொல்பமா யழிக்கும் ஆண் சிங்கம்போல அவனுதிரத்தை என் பாணத்திற்கு ஆகுதி கொடுக்கிறேன் என்று நமடு கடித்து, உடலந் துடித்து, குறிப்பினால் தெரியப்படுத்தினான். அருச்சுனனுரைத்த வார்த்தையைக் கருங்குவளை மலர்ந்து நிறைந்த வாவிசெறிந்த கழனிகள் சூழ்ந்த மச்சநாட்டிறைவன் மைந்தனான உத்தரகுமாரன் கேட்டு, மனோவேகமும் வாயுவேகமும் மட்டென் றுரைக்கத்தக்கதாக தன் தேரை விடுத்து, துரியோதனனுடைய சேனையைத் துடுத்து, அவன் தேரையடுத்து, தன் தேர்க்குதிரைகளின் முன்னங்காலை யவன் தேர்க்குதிரைகளின் தலைமேல் ஏற்றுவித்து அப்பாலிப்பால் அசையவொட்டாமல் அழுத்தினான்.

அந்தவேளையிற் சந்தேகங்கொண்டு சலிப்பாயிருந்த வீஷ்மர், துரோணாசாரியர் முதலிய மேன்மையோர் மாடுகள் திரும்பிவிட்ட மார்க்கத்தினாலும், சங்கத்தொனி-வில்நாரித்தொனி-சரமாரித்தொனி இவைகளைக் கேட்ட தன்மையினாலும், செவ்வையாய் காரியபாவந் தெரிந்துகொண்டு, ஓ! ஓ! மிஞ்சிப்போய்விட்டது. அஸ்தினாபுரத்தை நோக்கி, ஆனினங்களுடன்போன நமதரசனைப் போர்முகப் புலியான புருஷனிதுவரை மடக்கிகொண் டிருப்பானே இவ்விடத்திலிருந்த நம்மை ஏங்கவைத்து, சிங்கமானது நரியடி தேடிச் செல்லுமாறுபோல் மேற்குமுகத்திற் போக்குக்காட்டி கிழக்குமுகம் வந்து கிட்டிவிட்டானே; இவன் எந்த வழி வந்தானோ? அந்தரவாசிகளாகிய அமரர்கள் இவனுக்கு உளவா யிருப்பார்களோ? வணங்காமுடியோன் சென்ற மார்க்கம் இவனுக்கெப்படி தெரிந்ததோ? என்னமாயறிந்தானோ? இத்தனை பேர்களின் கண்களுக்குந் தெரியாமல் இவனெப்படி அவனைத் தெரிந்துபோனான்? ஆ! ஆ! அவன் மனசுக்குத் தக்குந்தாப்போற் சாரதியுங் குதிரையுஞ் சமைந்ததல்லவா? ஆகிறகாலத்தில் எல்லாம் அடுக்காய் அமையும். நல்வினையை யாவரும் புகழ்ந் தேத்றுவார்கள். ஆதலால், நாம் சும்மாவிருக்கப்போகாது.இந்நேரம் நமது மன்னன் என்னகெதியானானோ தெரியாது? இப்படியே நாமெல்லோரும் பிரியாது சென்று, துரியோதனனுக்கு உகபலமாக நின்று, அபாய நேரிடாமல் அர்ச்சுனனை வென்று, மறுபடியும் விராடபுரத்தை திரும்பிப்பாராமல் ஊர்போய் சேரவேண்டுமென்று உள்ளத் துறுதியாக்கிக் கொண்டு தாங்களிருந்த இடத்தைவிட்டு நீங்கி அங்கு வகுத்திருந்த வச்சிரயூகம்-பத்மயூகம்-அர்த்தசந்திரயூகம் இவை முதலிய யூகங்களைகலைத்து மந்தமாருதமும் பிந்திப்போகும்படியாய் முந்தி நால்வகை சேனைகளுடன் ஓடிவந்தார்கள். ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! இவர்கள் இவ்வளவு வேகமாய்த் தேர் செலுத்தி வந்தாலும், நந்தனநந்தன் மைத்துனனாகிய இந்திரன் மைந்த னுந்திய சயந்தன் வேகத்திற் கிணையில்லையென் றியம்பத்தக்கதே. இப்பால் அவர்கள் துரியோதனனிடம்போய்ச் சேரு முன்னமே தான் தன் தேரை அத் துரியோதனனிடத்திற் றிருப்பியிருந்தானன்றோ. அப்போது அவ்வரவக்கொடியோன் எப்படி யிருந்தானென்றால், பெருத்தமான வெள்ளங் குறுகிச் சுருக்கமாயோடுஞ் சேர்வைப்போற் குதிரைகள் நடையோய்ந்து, சாரதி யொருபுறஞ் சாய்ந்து, தானும் மாய்ந்தான்போ லிருந்தான். அப்படியிருந்த மன்னனுக்கு நேரில்நின்ற அர்ச்சுனனவன், அவன் முகத்தைப் பார்த்துப் பேசவேண்டுமென்று ஆசைகொண்டு நோக்கினான்.

அப்போது சுயோதனனுடைய முகம், அர்ச்சுனனுக்குத் தெரியவொட்டாமல் அவன் தேரிலிருந்த சாரதியும், ரதத்திற் கட்டிய நான்கு அஸ்வங்களுந் தடையா யிருந்தமையால், திடீரென்று வடிக்கணை யெடுத்து, அபிமந்திரித்து விடுத்து சாரதியையும், குதிரைகளையும் போக்கி, வெட்டாரவெளியாக்கி இந்திர பிரஸ்தத்தில் இராஜபோகத்தி லிருந்த தங்களை யழைத்துப்போய் சூதனாகிய சகுனியைச்சேர்த்து இக்கட்டான சொக்கட்டானாடி, வஞ்சனை நினைப்பினால் வாய்க்கு வந்தபடி யேசித் தங்கள் ஐஸ்வரியம் முதலிய யாவும் ஒன்றொழியாமல் ஒருங்கே கைக்கொண்டு, கொஞ்சமேனும் நெஞ்சிரக்க மில்லாது வனவாசம் பண்ணவிட்ட பஞ்சமா பாதகனாகிய பாம்புக்கொடியோனைச் சங்கடப்படாமல் தாராளமாய் எதிராகப் பார்த்து சற்றே நகைத்தான். அது காலையில், துரியோதனனுடைய சாரதியுங் குதிரைகளுந் தலை சாய்ந்து போனதைக் கண்ட உத்தரகுமாரன் கைப்பிடித்த கடிவாளத்தை உலுக்கிப் பின்னுக்கிழுத்து, தன் தேரை முன்னுக்கு முடுக்கி, குதிரையை ஒரடி யடித்தான். எக்காலத்திலும் அடிபடாத தன் குதிரைகள் உடம்பு சிலிர்த்து, ஓவென் றிரைந்து கனைத்து, விரைந்து தடாரித்து, கைக்கடங்காமற் கால்மீறி யெழுந்து, துரியோதன மகாராஜனுடைய தேர்த்தட்டின்மேல் அக்கால் வைத்தூன்றி நின்றன. கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்படி தேருந்தேரும் முட்டியபோது சிலைவிஜயன் தேரிற்கட்டிய அநுமத்துவஜமும், துரியோதனன் தேரில் நாட்டிய அரவத்துவஜமுங் காற்றினாலாடி, கடுகடுப்பாயூடி ஒன்றினோடொன்று தின்னிபின்னி போராடுவதுபோலிருந்தன. அஃதெத்தன்மையா யிருந்ததெனில், அவ்விரண்டு துவசங்களும் படபடாகாரமாய் அடிபட் டிடிபட்டுரைபட் டுரிபட் டொடிபட் டுறைபட்டு உடனே விடுபட்டு,கோபமேலிட்டு,அண்டமுமகண்டமும் அதிரும்படி வாய்விட்டு, அனுமக்கொடியானது அரவக்கொடியைப் பார்த்து, ஓ பணிப்பதாகையே! என் தந்தையான வாயு

தேவனுக்கும், உன் தந்தையான ஆதிசேஷனுக்கும் ஒருகாற் பலத்தைக் குறித்துப் பிரமாத தர்க்கம் நேரிட்டு, நீ சிறியவன் நான் பெரியவனென்று பேச்சு விளைந்து, என் தந்தையானவர் தன் திடத்தை யெவர்களுங் காணும்படியாய் மகமேருவின் அடிமுதல் முடிவரைக்கும் ஆயிரஞ் சுற்றாக வளைந்து தன் வல்லமையைக் காட்டினார். அப்போது என் தகப்பனானவர் இரைந்து விரைந்து தன்னாற் கூடியமட்டுஞ் சாதித்து, உனது தந்தையான சேடன் பெதறிக்கதறி சிதறிப்பதறிப் போகப் புரட்டி, அந்த மேருவின் சிகரத்தில் மூன்று முடியை வாரிக்கொண்டு போய்ச் சமுத்திரகதியாக்கி, தன்னுண்மையை நிலைநாட்டி ஜெயங்கொண்டார். அன்றுமுத லின்றளவும் பாம்பினங்களும், வாயுவினங்களுக்கும் பகை விளைந்திருக்கின்றது. அதுபற்றி நான் அந்த வாயுதேவனுடைய மைந்தனுகையாற் பூர்வம் நடந்த பொல்லாங்கை பாராட்டி உன்னை வெல்லாமலுங் கொல்லாமலும் விடுவதில்லை என்று மேல்விழுந்து துரியோதனன் பாம்புக் கொடியைப் படாதபாடும் படுத்தியதுபோலிருந்தது.

அக்கால், அர்ச்சுனன் துவஜத்தில் ஆஞ்சநேயர் வந்து நிர்த்தனம் பண்ணினார். அவர் எப்படிப்பட்டவரென்றால், முன்பு காண்டவ வனதகன நிமித்தம் அக்கினிதேவன் இந்த அநுமக்கொடியை அர்ச்சுனனுக்கு அளித்த காலத்தில், ஆஞ்சநேயர் அக்கொடியினின்றும் பிரசன்னமாகி அக்கினிதேவனைக் கண்டு, ஐயா! இராவண கும்பகர்ணாதியரோடு மூலபலங்களையெல்லா முடித்து, தாயாகிய சீதைக்குத் திருவாழி கொடுத்து, தந்தையரான ஸ்ரீராமலட்சுமணரையுந் தோளிலெடுத்து, அவர்களுடைய திருவடியை அடுத்து, பட்டாபிஷேக சம்பிரம் பாக்கியங்களையும் பார்த்த கண்களால் இந்தப் பஞ்சையான போரையும் பார்க்கும்படிக்கமைந்ததோ வென்று பரதவித்தனராக. அப்போது அக்கினிதேவன் அருட்கண்ணோக்கி, அப்பா மாருதி மைந்தனே! அடியேனிமித்தம் நீ அர்ச்சுனன் தேரில் அமர்ந்தருளல்வேண்டுமென்றறைய, அவ்வாறே நல்லதென் றமர்ந்தவர் அவ்வநுமாரானதால், சுயோதனனுடைய சேனை கடலைக்கலக்கி கடக்கவும், விஜயவீரியன் ஜெயம் படைக்கவும் உதயகிரியிலெழுந்த சூரியன்போற் கோபச்சுடர் விரித்து, கூர்மமெரித்து கோரதந்தந் தெரித்து குறுகுறுத்ததிர்ந்து அர்ச்சுனனுடைய தேர்க்கொடி யாடையில் அநுமார்வந்து பிரசன்னமாய் நர்த்தனம் பண்ணினார். இப்பால், வேடன் கையில் அகப்படாமல் விடுபட்டுப்போன மிருகம் மீண்டும் அகப்பட்டவாறுபோல் அர்ச்சுனன் கையிற் சிக்கிக்கொண்ட அரவக்கொடியோன் இடிமுழக்கங் கேட்ட உரகம்போலேங்கி, தானிருக்கும் நிலை தனக்குத் தெரியாமல் மயங்கி ஓடுங்கினான். அர்ச்சுனன் அவனை பார்த்துச் சில வார்த்தை சொல்லத் தொடங்கினான். ஓ வணங்கா முடிபெற்ற மன்னனே! நீ எங்கே ஓடுகின்றாய்? ஏன் வாடுகின்றாய்? ஓடவேண்டிய அவசரமென்ன? ஐயோ! உன் கையிற் பருத்த வில்லும், பக்குவமான அஸ்திரங்களும், போதுமான பலமுமிருக்க, புண்ணியவான்களாகிய பெரியோர்கள் பக்கத்துணையாக விருக்க, வேண்டியமட்டுந் தனங்களிருக்க, தம்பிமார்களும், ஏவலாளிகளும், எழுகடல் சூழ்ந்த பூமியும், மாயச்சூதாடு மாமனும், மகா பிரபலனாகிய கர்னனுமிருக்க, போர்முனை வந்து புறமிட நினைந்து வாயைத்திறவாமல் மயங்கிப் பேய்போலோடிப்போவது திறனோ? நல்லகாரியம் நீ இப்படியே அஸ்தினாபுரம் போய் சேர்ந்தாலும் வீரபட்டமுஞ் சிந்தூரப் பொட்டுமிட்ட பட்டத்து யானைமீதேறி பவனிவரும் இராஜ வீதியில் உன்னைப் பார்ப்பதற்கு ஓடிவரா நின்ற பொற்பாவையைப் போன்ற கச்சணிந்த கன்மாதர்களோடு கைம்பெண்களுங் கண்டு, இச்சகத்தையாண்ட துரியோதனராஜன் பித்தன் பித்தனென்று இகழ்ந்து பேசிச் சிரிப்பார்களே? இங்கே நீ வந்த காரியத்தை வழியாய் முடித்து வெற்றிகொண்டு போகாமல், விழலாய்ப் போகலாமோ?

இதன்றியும், சோடசகலை நிறைந்த மதியம்போ லிலங்கிய சுவேதகஷத்திர மென்னும் வெள்ளைக்குடை பிடிக்க, இரு பக்கத்திலும் பால்நுரைபோன்ற சாமரைவீச, பந்தியர் சூழ்ந்து வாழ்த்திப்புகழ, பரராஜர்வந்து பதமேற் பணிய, தவராஜரும் வந்து ஆசீர்வதிக்க, மகா சிறப்போடு சிந்தைகளித்துச் சிங்காதனமேறி மித்ரபுத்ர பந்துவுடன் கூடி வாழ்கின்ற வேந்தர் வேந்தனென்னும் லோகாதிபதியாகிய நீ, சண்டை முகத்தில் வந்து சாதிக்க வேண்டுவதை வீட்டுப் பெண்டுகள் போல ஓடுவது தீரத்துவமோ? நீ இப்போ தென்னிடத்தில் தனித்தகப்பட்டாய்; உன்னையும் உன் சகோதரர்களையும் ஒரு கணப்



கர்ணனுக்கும் காண்டபனுக்கும் யுத்தம்.

போதில் என் கணைகளினாலே சல்லடைக் கண்களாகத் துளைத்து, அவற்றிற்கு இரையுமாக்கி விடுவேன். ஆனால், சிங்கக்கொடிக் கதிபனாகிய என் தமையன் உங்கள் நூற்றுவரையுங் கொல்வேனென்று இராஜ சபையிற் சொல்லிய சபதம் வீணாய்ப்போமே என்று உங்கள் வாணாளை விடுத்தேன். பகற்பொழுதை விளக்கிய பானு அஸ்தமிக்கிற வரைக்கும் பார்த்திருந்து அப்பாற் றன்னரசாய் வந்து உடுக்கூட்டங்களென்னு முறவினரோடு சஞ்சலமில்லாமற் பிரகாசிக்க வருஞ் சந்திரன் போல எங்களைக் காட்டிலோட்டிவிட்டு, நீங்கள் நாட்டிலிருந்து நல்ல பாக்கியங்களை அநுபவித்துக் காலந்தப்பாமற் புசித்து ஆக்ஞாச்சக்கரஞ் செலுத்தி அரசாக்ஷிசெய்து வந்தீர்கள். மறுபடியும் விடியற் காலத்தில் அந்தச் சந்திரனொளியைத் தவிர்த்துத் தானே பிரபுத்வஞ் செய்ய வந்த சூரியனைப்போல், இப்போது நாங்கள் வெளிப்பட்டோம். சங்கினங்கள் தவழுந் தண்ணிய வயல் சூழ்ந்த கங்கைவள நாடாகிய வீமசேன மகாராஜன் கையினால், தாமிசமின்றி நாளைக்கே உங்களைக் களப்பலி யூட்டிவைக்கப் போகின்றோம். மேலும், வீமசேனனுடைய சபதந் தப்பினாலும் தப்பட்டும்; இப்போது பாவியான உன்னைப் பார்த்துங் கொல்லாமல் விடலாகா தென்று ஓர் கடுங்கோபம் எனக்குண்டா யிருக்கின்றது. ஆனால், இரப்பவர்கள் யுத்தத்திலிளைத்தவர்கள் புறங்கொடுத் தோடினவர்கள், வில்லைப் போட்டுப் புல்லைக் கவ்வினவர்கள், குழந்தைப்பருவமுடையவர்கள், இளையவர்கள் இயாவரும் புகழுங்கவிராஜர்கள்-தவராஜர்கள்-தூதுவர்கள்-நோயாளிகள் - விருத்தர்கள் - பிரமக்கியானமுள்ள பிராமணர்கள்-ஸ்திரீகள் இவர்களைக் கொல்லுவது மகா பாவமென்று பெரியோர்கள் பேசியிருக்கின்றார்கள். அந்த தருமம் என்னைப் பிசக வொட்டாமற் றடுக்கின்றது. அதனால், இப்போது இளைத்து ஓடிப்போக விருக்கும் உன்னை நானென்ன செய்வேன்? அவர்கள் கூறிய நீதிவாக்கியத்தை நினைத்து, நான் உன்னுயிரைத் தப்பவிட்டேன்.

அடா வஞ்சனே! பாவ புண்ணியத்தை எண்ணிப் பாராத நஞ்சனே! நீ யெண்ணிய எண்ணஞ் சித்திக்குமென் றிருந்தனையோ? வனவாசஞ் சென்ற பாண்டவர்கள் மறுபடியும் திரும்பி வரமாட்டார்களென்று மதித்திருந்தனையோ? இனி நீ நோவவேண்டுவது உன் தலையின் விதியினையோ? ஐயோ! (வாழ்வாரைப் போலுந், தாழ்வார் தாழ்வாரைப் போலும் வாழ்வார்) இதைச் சற்றேனும் உன் மனத்தில் வைக்காமற் போனதென்ன? அடா பேயா! (சமர்த்திற் குண்டுபாயுமா?) எவருஞ் சதுராயிருக்கிறோமென் றெண்ணப்போகாது; தருமத்திற் கொருநாளும் பிசகு வராது; தானென்னுங் கருவம் நிலை நில்லாது. ஐயையோ!! அது பொல்லாது, அடா செல்லாது போகின்ற தூர்த்தனே! என்று இன்னும் பலவாறுக இழியக் குத்தினான். இவ்வா றிகழ்ந்து பேசியபோது, துரியோதன ராஜன் எதிர்ப் பேச்சு பேசாமற் சோபமேற்கொண்டு, ஆபத்துவேளை இதுவென்று மனத்தாபத்துட னிருந்தான். அவன் இவ்விடத்தி லிவ்வா றிருக்கும் போது, இந்த முகநோக்கித் திரும்பிய வேதக் கொடியுடைய துரோணாசாரியர் - கிருபாச்சாரியர்-அஸ்வத்தாமர்-வீஷ்மர்-கற்பகக் காவைப் போல் அற்புதமாகக் கொடுக்குங் கர்னராஜன்-சகுனி-சயிந்தவன்-விகர்னன் - துற்சாதனன்-சாளவன் இவர் முதலிய சாமர்த்தியவான்களெல்லாஞ் சற்பக்கொடி படைத்த மற்றுப மகாராஜனுக்குத் துணைவந்து கூடினார்கள். அவ்வாறு வந்தவர்களில், துற்சாதனன்-விகர்னன் முதலிய தம்பியரிற் சிலரும் முடிவேந்தர்களிற் பலரும், வெற்றிமாலை யணிந்த சுத்த வீரர்களும், மாமனும் மைத்துனனும் உடல் பதறி யோடிவந்து மதயானைகள்போற் புகுந்து நந்தியாவட்டமாலை தரித்த நராதிபனைத் தாங்கி ஆதரித்துத் தேற்றினார்கள். இதற்குள்ளாகக் காரோசை-கடலோசை - இடியோசை-வற்றோசை முதலிய எல்லாம் ஒன்று சேர்ந்து ஓரிடத்திற் கூடி முழங்கியவாறு போல, தேர்களினோசை-குதிரைகளினோசை-நாணோசை-சங்கவோசை - தாரை-பூரி முதலிய வாத்தியவோசை - சரங்களினோசை ஆகிய இவைகளெங்கு முழங்கப் படையாளர் வந்து குவிந்தார்கள். சப்தசமுத்திரம்போ லிரைந்து ஆர்ப்பரித்து இருபக்கத்திலுங் கவிந்த இப்படை மன்னர்களைத் துரியோதன மகாராஜன் கண்டு சற்றுத் திடங்கொண்டு, குனிந்த தலையை நிமிர்ந்து பார்த்தான்.

### கர்னனுக்கும் காண்டீபனுக்கும் யுத்தம்

இப்படி துரியோதனன் பார்த்தபோது, அப்பார்வையின் பரிபவத்தைக் கண்ட கர்னன் பச்சாதாபப்பட்டு, உடனே நறநறவென்று பல்லைக் கடித்து, வெம்பிக் கிளம்பி, வேதம்

பிச்சீறி, கனைத்துச் சினத்து, திசா திசைகளுந்
திடுக்கிடத் திரும்பி, சடக்கெனத் தேரைத்
தடதடவென்று முடுக்கி, மின்னுடன் மின்
மினியும், வேங்கையுடன் மானும், சிங்கத்து
டன் யானையும், மலையுடன் மணற்குன்றும்,
எதிர்ப்பச் செல்வதுபோல் விஜயன் தேருக்கு
நேர் சென்று நின்று, ஓ அர்ச்சுனா! என்முக
மாகத் திரும்பு; வணங்காமுடி மன்னனாகிய
துரியோதனனை வளைத்துத் தகுதியற்ற சொல்
லால் இகழ்ந்து கண்டவாறு பேசுவது நியாய
மல்ல; நாங்கள் யாவருமிருக்க நராதிபனை
யெதிர்த்தது வீரமுமல்ல; நீ ஏன் வீணாகக்
கிடந்து மயங்குகின்றாய்; இதோ நான் உனக்கு
முன் வந்திருக்கின்றேன்; என்னுடன் பகைத்
துப் போர்புரிவதற்கு உனக்குத் திறமுண்டா
யின், இங்கே திரும்பிப் பார் என்று போர்த்
திறக் குறிப்பாற் புகன்று, அக்கினியிற் பொறி
யும் புகையுந் திக்கென் றெழுவதுபோல்
மொழிந்தான். இவ்வண்ணமாக அங்க தேசா
திபன் சொன்ன வார்த்தையை அருச்சு
னன் கேட்டு குபீலென்று பொங்கி யெழு
ந்த கோபாக்கினியானது கால்முதல் தலை
வரைக்கும் உதிரத்தை முறித்து விட்டத
னால் முகங்கருத்து, கும்பகரடக் குஞ்சரத்தை
மடக்கி யடக்கிய யாளியானது சிங்கத்தைக்
கண்டு செறுத்து பாய்கின்ற செயல்போல்
துரியோதனனை விட்டுவிட்டு, அறை கூவி
வந்த விருந்தினனாகிய அங்கராஜனுக்கு
நேரே இரதத்தை முடுக்கி யெதிர்த்தான்.
அப்போது அர்ச்சுனன் தேருங் கர்ணன்
தேருங் கிட்டிநெருங்கி ஒருவரோ டொருவ
ரெதிர்த்து யுத்தஞ் செய்யப் புகுந்த காலையில்,
கர்ணனைச்சேர்ந்த காவலர்களும் ரதகஜதுரக
பதாதிகளும்-கனைத்துக்கனன்று, சிங்கத்தைத்
துரத்திவருஞ் சேங்கன்றுகள்போற் பங்கப்
படாத பற்குணனை வளைந்து பற்றினார்கள்.
இவர்களல்லாமலும், துரியோதனன் தம்பிய
ராகிய சித்திராங்கதன் - விகர்ணன் - சித்திர
சேனன் - சங்கிராமசித்து - சித்திர விரதன் - துன்
முகன் - துர்ஜெயன் முதலாகியவர்களும் கர்ண
னுக்கு உபதம்பிமாராகிய ராதைமக்களுங் கர்
ணனைப் பின்னாக்கி, தாங்கள் முன்னாகி, கனகன
வென்று காலாக்கினி கதித்தெழுந்த வாறு
போற் சேர்ந்து, விசித்திரமான வில்லைவளைத்
துச் சரநாணேற்றி, தங்கள் தங்கள்
சற்குருவைப் போற்றி, உடலாடுருவிப் பாய
கின்ற உயர்வடிக் கணைகளைப் பப்பத்து நூறு
நூறு என்னும்படியாகத் தொடுத்து, திக்குத்
திசை யெங்கும் அக்கினி மயமாக்கி அதிக
வேகமுங் கோபமுங் கொண்டு யாவருக்கு
மடங்காமலின்று அமராடினார்கள்.

அப்போது சுப்பிரமணியக் கடவுளை
நிகர்த்த சுவேதவாகனனானவன், இவ்வளவு
பேருக்கும் இவ்விடத்திலேயே மரணமென்
றெண்ணி, திறமிகுந்த செஞ்சிலையைத் திடீ
என்று வணங்கி, கட்டுப்படாத சரநாணோசை
காட்டினான். அக்கால், எதிரிகளுக்குண்டாகிய
இறுமாப்பெல்லா மழிந்து, தனித்தனி விழு
ந்து சரீரமயர்ந்து, தங்கள் தேராகிய சயந்த
னத்திற் சாய்ந்து, மறுபடியுந் தெளிந்தெழு
ந்து, கண்கள்சிவந்து, போரிற்புகுந்து, தேரிற்
சிறந்து, சாணை பிடித்து தயிலதுபஞ்செய்து,
சரங்களை மாரிபோற் சொரிந்தார்கள். அப்
பாணவருஷத்தைப் பார்த்த பார்த்தனானவன்,
இவர்களை எளிதில் விடலாகாதென் றெண்ணி
சோனாமேகஞ் சொரிவதுபோல் நானாவித
அஸ்திரங்களை விடுத்து, துரியோதனன் தம்பி
யரிற் சித்திராங்கதனுடைய வில்லையும், அவ
னேறிய இரதத்தையும் அழித்து, முடியையுங்
குறைத்து, உடலையுஞ் சல்லடைக் கண்ணாக்கி
மதியூகியான விகர்ணனைப் பார்த்து, பிறை
முகக் கணைகளினால் பிளந்து, புறங்காட்டிப்
போகக் கிளர்ந்து, சித்திரசேன னென்பவனை
வளைத்து, அவன் ஏறிவந்த தேரையு மழித்து,
அவன் சேனையையும் ஒழித்து, இடியோசை
கேட்டு இளைக்கும் பாம்பைபோல் பூமியில்
புரளவிட்டு அவனுடம்பெங்கும் புண்ணாக்கி,
மேலிட்டுவந்த சங்கிராமசித் தென்பவனைச்
சலிக்க அடித்து, சரீரம் வலிக்க விடுத்து, துன்
முகனோ டெதிர்த்துத் துரத்திவிட்டு, துர்சய
னைக் கெர்ச்சனையோடு நோக்கி, அடா நச்சர
வக்கொடியோனுடன்பிறந்த நாசகாலர்களே!
என்று கூவி நலியத் தாக்கினான். அப்போது
நால்வகைத் தானைகளும், நானில வீரர்களும்,
ரத-கஜ-துரக-பதாதிகளும், அதிரத-மகாரத-
சமரதர்களும், சூரிய கிரணத்திற்குமுன் பனி
நெருக்கம்போல் சூழ்ந்து, நாம் வாழ்ந்த
வாழ்வு இம்மட்டோவென்று சோர்ந்து,
நிலத்திலாழ்ந்து, சிலர் முன்னேங்கி, பலர்
பின்வாங்கி, யாவரும் பலங்குறைந்து அயர்
ந்துபோனார்கள். இப்படி சேனைகளும், சேனை
வீரர்களும் அயர்ந்து போனதைக் கர்ண
ராஜன் கண்டு கனகோபங்கொண்டு காண்டீ
பன் எங்கே எங்கே என்று கடுகடுத்து வந்
தான். அப்படி வந்தவனை அஸ்வத்தாமன்

குறுக்கிட்டு, ஓ அங்கராஜனே! நீ எந்த அருச்சுனனை இகழ்ந்து பேசினையோ? அந்தச் சங்கிராம விஜயன் இவன்தான், இவனை எவ்விதத்திலும் வாட்டி, இவ்விடம்விட் டோட்டி, எங்கள்முன் நீ ஜெயமடைந்து வரவேண்டியது அபஜயத்திற் கிடங்கொடாதே. அப்பனே! செவ்வையான ஆலோசனை செய். உன் பேரில் வெகுநாளைய அடம் வைத்திருக்கின்றான் இந்தக் கிரீடி. நீ இராஜ சபையில் பேசிய சங்கதிகளை யெல்லாஞ் சரக்கோவையாய்க் கோர்த்து வைத்திருப்பான். இதுகளினால், நீ தப்பி வருவது அருமை. ஜாக்கிரதை ஜாக்கிரதை என்று உச்சிதமாகச் சொன்னான்.

இவ்வாறு அஸ்வத்தாமன் சொன்னதை கேட்ட கர்னராஜன் மனந்தாளாமல், ஓய் அஸ்வத்தாமா! நான் பிராமண ஜாதியில் பிறந்திருந்தால் யுத்தம் செய்வதற்கு அஞ்சுவேன். அப்பேர்ப்பட்ட நைச்சிக இனத்திற் பிறவாமல் க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவனாகையால், க்ஷத்திரிய தருமத்தை அனுசரித்துக் கையில் விற்பிடித்த நான் அமருக் கஞ்சுவேனென்று நினையாதே. இப்போதென்னுடன் எவரெதிர்த்தாலும், அவர்களுக்கு இந்தப் பூமியே சமாதியிடமாக அடக்கம்பண்ணித் திரும்புவேன் இதற்கு வேறு திருகில்லை. என் பராக்கிரமத்தையும், நான் செய்யப்போகின்ற யுத்தத்தின் அதிசயத்தையும், நீயே கண்ணாரக் கண்டு களிக்கப் போகின்றாய் என்று சொல்லி, வெற்றிக்கொடியும் வாகைமாலையுஞ் சுற்றிலும் கட்டித் தூக்கிய கொற்றத்தேரை நெருக்கி யுத்தத்திற்குக் குறுகினான். இவ்வாறு இவனடுத்த சமயத்தில், இந்திர குமாரனுடைய ரதமுங் கிட்டியது. அக்கர்னனுடைய ரதமும் அதோடு முட்டியது. உடனே அவ்விருவர் தேரிலும் பூட்டிய குதிரைகள் கனைக்கவும் சாரதி யிருவருஞ் சப்தித்திரையவும், தேர்ச் சக்கரங்கள் கிறிச்சிட்டொலிக்கவும், சிறு மணிச் சதங்கைகள் கணகண வென்றார்க்கவும், தீரர்களிருவரும் வில்லை யெடுத்துப் பிடித்து நிறுத்தி வளைத்து இழுத்து நாணிதொடுத்து, நாரிதெறித்து, டங்காரஞ் செய்து, பொன் மலைபோற் பிரகாசிக்கின்ற அவ்வில்லிலிருந்து விறுவிறென்று விடுத்த வேகக்கணைகளின் வீரத்திறத்தாற் சமுத்திரஞ் சுவறி நிலைதடுமாறி, தளதளவென்று கொதித்துக் குறைந்தது; பூமியின்பரப்புப்புகையால்மறைந்தது; யுகமுடிவோவென்று உலகத்தோரிரைந்தனர். அஷ்டதிக்குக் காதாரமாகிய எட்டுக்கிரியும் எதிரொலி செய்தன. திசையானைகள் திடுக்கிட்டு வாடின. அஷ்டமாநாகங்கள் அலறியஞ்சின. ஆகாயத்தில் வேடிக்கைப் பார்க்குந் தேவாதி தேவர்களும் பூபாலராகிய போர்வேந்தர் பலரும், எப்புவனங்களிலும் இதைவிட அதிசயமில்லையென்று அற்புதமடைந்தார்கள். அன்றியும், இருவருஞ்செய்த சங்கவொலிகள் திக்கெட்டுஞ் செவிடுபட முழங்கியதுகள். ஒருவரையொருவர் சீறிக் கூறும் வீர வார்த்தைகள் தாறுமாறான ஒலியோடார்த்தன. இவ்வாறு எண்ணற்கரிய தீரவீர பராக்கிரமத்தோடு தீவுகளனைத்துந் திகைக்கும்படியாகச் சிங்கலலாடத் தேர்க்கிறையாகிய அங்கர்கோனானவன்; ஆலாலவிஷத்திற் கொப்பாகிய அம்புகளை கும்பலாய்ப் பொழிந்து, அர்ச்சுனனுடைய வில்-பாணம்-தேர்-குதிரை - சாரதி முதலிய வெல்லாஞ் சீர்குலையப் பண்ணினான்.

இப்படி கர்னன் தொடுத்த அஸ்திரங்கள் கதித்துவருகின்ற செயலை அர்ச்சுனன் கண்டு வாய்மடித்து, சிரித்து தனதடையாளப் பொறித்த அனலாஸ்திரங்களை அனந்தமாக ஏவி, கர்னன் விட்ட கணைகளத்தனையும் ஒரு நொடியிற் செத்தைபோலாக்கி, வில்லில் மேகாஸ்திரந் தாக்கி வந்தித்து, மந்திரித்து வள்ளலான கர்னன் பேரிற் கொள்ளை கொள்ளையாகக் கூசாமலிறைந்தான். இப்படி வெள்ளை யானைமேற் பவனிவரும் வேந்தன் மகனுந்திய பாணங்கள் காரிடி-கடலிடி-நீரிடி-நெருப்பிடிபோல் நெறிப்போடு வருதலைக் கர்னன்கண்டு,கடுகணைகள் கோடாகோடிகளைப் படபடெனத்தாக்கி, எதிரியுந்திய மேகாஸ்திரங்களைச் சிந்துசிந்தாக்கினான். இவ்வாறாக இருதிறத்தவர்களுந் திரண்ட பக்ஷிகளைப் பரபரவென்று செலுத்தி, தேரைக் கரகரவென்று சுழற்றி, செஞ்சிலைச் சதங்கைகள் குலுங்க அசைத்து, கொஞ்சமேனும் ஒருவரை யொருவர் மிஞ்ச விடாமல் அடர்த்துப் போர்கொடுத்து வரும்போது, கனகக் கொடையாளனாகிய கர்னன் மிஞ்சி, காய்த்துத் தோய்த்துக் கடைச்சற் பிடித்த பத்து பாணங்களை யெடுத்து உத்தரகுமாரன் பேரிலோச்சி, இரதத்தின்மீது இருபது கணைகளை யெடுத்துச் செலுத்தி, குதிரைகள்மீது குறிபிசகாது நாற்பது சரங்களைப்போக்கி, விஜயன்பேரில் நூறு கணைகளை விடுத்தான். அம்மாத்திரத்தில் அக்கணைகள் அண்டச்சுவரின் அடிமையைப்

பெயர்த்து, எண்டிசை முழுதும் இடியப் பொடித்து, பரபரவென இரைந்து, சரசரவென விரைந்து, அண்டரெல்லாம் திப்பிரமைக் கொள்ள மண்டியெரிந்து வருவதைத் தனஞ்சயன் கண்டு, ஒரு சதுர்முகக் கணை கொண்டு, அவற்றை யெல்லாம் பிளந்துப் பொடிப்படுத்தினன். அந்த விபரத்தை பார்த்திருந்த அமரர்கள் யாவரும் போர்த்திறப் பார்த்தனைப் புகழ்ந்துக் கொண்டாடினார்கள். இப்பாற் பற்குணன் வெகுண்டு வில்லையெடுத்து கணைகளைப் பக்குவமாகத் தொடுத்து, கர்னன் மீதும், அவன் தேரின்மீதும், குதிரைகளின்மீதும், சாரதிமீதும் பிரயோகித்தான். அந்தக் கணைகளெல்லாம் ஏகமுகமாய்க் கூடி இந்திரநாட்டை நாடி சப்தமேகம்போ லெழுந்து இரைந்து ரதகஜதுரகபதாதிகளை நாடித் தேடி வருகிறவேகத்தைக் கர்னராஜன் கண்டு, காலாக்கினிபோன்ற பாணங்களை விடுத்து அவற்றை யெல்லாம் அணுவினும் பரமாணுவாக்கிவிட்டான். அவன் ஆண்மையைக் கண்ட யாவரும் துதித்து இவனுக்கு எதிருண்டோ வென்று மதித்தார்கள்.

உடனே இருவரும் பிரிந்து பின்னும் எதிர்ந்து, வாசாமகோசர்மாய் வடிக்கணைகளைச் சொரிந்து அமர் புரிந்தார்கள். இருவர் விழிகள் எரியவும், இருவர் மனது பதறவும், குதிரை யினங்கள் கதறவும், சேனைகளெங்கும் சிதறவும், கண்கள் கக்குங் கனலும், தேர்ச் சக்கரங்கள் கக்குங் கனலும், கணைகள் கக்குங் கனலும், பொங்கிப் புகைந்தன. ஒருவரையொருவர் வெகுண்டு புகன்ற உயிரையினின்றெழுந்த பெருங்கனல் விரிந்து எரிந்து நிறைந்தது. இருவர் தேரும் இடைந்து மிடைந்து இடைவிடாம லுழன்று குயவன் திகிரிபோல் சுழன்று பாதல பூதல முழுவதும் பள்ளமாக்கி, மறுபடியுஞ் சேனைகளா லெழுந்த புழுதிகளால் நிறைந்தது. இவ்விதமாகத் தொடர்ந்து தாறுமாறும் வேறுவேறு பாணங்களை நூறுநூறாகத் தொடுத்துச் சண்டை கொடுத்து நின்றார்கள். அவ்வேளையில் அருச்சுனனவன் அங்கராசன் செய்த அமர்த்திறத்தைக்கண்டு, அதிக கோபங்கொண்டு, ஆ கர்ண! உனது சாமர்த்தியமும், நீ செய்யுஞ் சண்டையும், நீ கற்ற கல்வியும் இவ்வளவென் றறிந்து கொள்ளும் பொருட்டாகவே இது வரையிலும் உன்னைப் பிராணனுடன் விட்டு வைத்திருந்தேன். இனி நான் தாமதிக்க மாட்டேன். பொறுமைக் கிடங்கொடுத்தால் அது வறுமைக்கிடமாகும். இவ்விடத்திலுள்ள பெரியவர்களும் உரியவர்களும் அறியத்தக்க ஒரு கணையால் உன்னை வாட்டி, கீர்த்தியை நிலைநாட்டி, நானடையப் போகின்ற வெற்றியை நீயே நன்று யோசித்துப் பார்; என்று இரண்டு அர்த்த சந்திராஸ்திரங்களை விட்டு அதிசீக்கிரத்தில் கர்னன் கைபிடித்த வில்லைக் கடுக்கென்றொடித்தான். அப்பொழுது கர்னன் கலீரென்று நகைத்து, மலை பிளந்ததுபோல் ஒடிந்த வில்லை விட்டெறிந்து, கண்களையுருட்டி விழித்து, காரும்பாருங் கருக நோக்கி, தனதுகரத்தில் வேறுவில்கொண்டு, பற்குணன் பேரில் சிகைவிரித்த செங்கதிர் வேலெடுத்துச் செலுத்தினன். இப்படி அங்கராஜன் எறிந்த வேலாயுதமானது, அண்டங்களதிர வெளிப்பட்டு சொர்னநிறமாகச் சோபித்து பூர்ண சந்திரனைப்பிடிக்க வருகின்ற இராகு கிரகம்போற் செஞ்சிலை விஜயனை நோக்கி வந்தது. அந்த வேலாயுதங் கந்தமாதனமும் கட்டுங்கலங்கித் திரிபுவனமுந் திடுக்கிட வந்தவிதத்தைச் சர்ப்பக்கொடி தரித்த கௌரவகுல துரியோதனனும் இரதகஜ துரகபதாதியுடன் கலந்த பல காவலர்களுங் கண்டு, ஓ! ஓ! ஓ! அர்ச்சுனனுடைய சௌரியம் இப்போதல்லவோ தெரியப் போகின்றதென்று நிமையுடன் நிமை கொட்டாமற் கண் விழித்துப் பார்த்துக்கொண்டே இருந்தார்கள்.

இப்படி எல்லோரும் நடுங்க எதிரேறிவந்த வேலாயுதத்தை அநுமக்கொடிக் கதிபனாகிய அர்ச்சுனன் பார்த்து, வலிதிருந்தி மணி பொருந்தி மலரணிந்து விளங்குகின்ற வச்சிரக்கணை யொன்றெடுத்து அசைவற்ற வில்லிலமைத்து அபிமந்திரித்து ஆவேசங்கொண்டு உந்தினன். அந்தக் கணையானது பந்துபோ லெழுந்து வந்து மேல்விழுந்து அந்த வேலாயுதத்தை அரப்பொடியாக நூறி, அந்தப் பொடியை வணங்காமுடி மன்னன் முதலாகிய கௌரவச் சேனைகளின் கண்களிற் றூவியது. விழித்தகண் விழித்தபடி வேடிக்கைப் பார்த்திருந்த வேந்தர்கள் யாவருந் திகைத்து இதற்கோ இந்தக்கொள்ளையென்று தலையிறங்கிக் கொண்டார்கள். அதைக்கண்ட தேவர்கள் அகங்களித்து ஆடினார்கள். அங்கதேசராஜனாகிய கர்னன் அருமையாய்ப் பெற்றிருந்த அவ் வேலாயுதம் அருச்சுனன் கணையால் அழிபட்டுப் போனதைக்கண்டு சற்றுந் தளராமல்

மனோதிடங்கொண்டு, வைரவில் ஒன்றெடுத்து அதைத் தீர்க்கமாய் வாங்கிச் சிறுநாணேசை காட்டி, சிலைவிஜயனுக்கு எதிரில் வந்து அளவுபடாத அஸ்திரங்களை அமோகமாகச் செலுத்திப் போர்விளைத்தான். அச்சமயத்தில், இந்திரன் மைந்தனான தனுவேத சுந்தர தனஞ்சயன் மகாதேவனை வணங்கி அர்ச்சனை புரிந்து சிறந்த பொற்கட்டு அமைந்த அஸ்திரங்களைத் தெரிந்தெடுத்து விடுத்து, சங்கமுங் குறித்து, சொர்ணமயமாய் விளங்குகின்ற அக்கர்னனுடைய தேரையும், கவின்பெற்ற கச்சைக் கொடியையும், நான்கு புரவியையும், அப்புரவிகளை பாங்குற விடுக்கும் சாரதியையும், பொடித்து, அவனுடற் காப்பாகிய மணிக் கவசத்தையுந் துணித்து விடுத்து, வீரபட்டத்தையுந் தூளாக்கி, அவனைத் தலையிறக்கமாய்ப் பூமியினிற்கச்செய்தவனும் மிகமகிழ்வுற்றுப் புகழ்பெற்ற அந்நரனானவன் சிற்சில வார்த்தைகள் சொல்லலுற்றான். ஐயா கர்ண! இளமைதாங்கிய ரிஷபம்போன்ற உன்னை நான் நெடுநாளாக அறிவேன். உன் யோக்கியம் எப்போர்ப்பட்டதென்னில், புத்தியில்லாத புரவலர்சேர்ந்த புன்சபையில் என்னை வெற்றிகொள்ளத்தக்க சுத்தவீரர்கள் ஒருவருமில்லையென்றும், யுத்தத்தில் நான் அதிசமர்த்தனென்றும் விஸ்தாரம் பேசுவாய்; நான் நிகரற்றவனென்பாய்; இப்படி புலம்பிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் உன் பொல்லாத வேளை யுத்தநேரிட்டால், அற்ப பலம்பெற்ற அறிவில்லாரைப்போல் அயலிற் பதுங்குவாய்; ஒருவேளை அடுத்து போர்கொடுக்க துணிந்து ஆனமட்டும் பார்ப்பாய்; அடிபட்டு ஓட்டமெடுப்பாய்; இக்குணம் உன்னுடன் கூடப் பிறந்திருக்க, வேறே வாவென்றால் வருமா?

ஐயா! எவர்களென்னகேட்டாலும் இல்லையென்னமற் கொடுக்குந் தன்மை உன்னிடத்திலுண்டென்றும், ஓயாமலீயுங் கொடையாளியென்றும், இடையெழுவள்ளலி லொருவனென்றும் உன்னைப்போற்றி புகழ்கின்றார்கள். ஆனால், யுத்தகளத்தில் வந்து ஒரு தெப்பைபட்டவுடனே அப்பாவென்று புறங்காட்டியோடுகின்றவிஷயத்திலும் நீமிகவுங் கொடையாளிதான், நானும் உன்னை மதித்திருக்கின்றேன். ஓ வாய்மதம் பேசும் வள்ளலே! போர்முகத்திற் றேர்செலுத்தி போர் புரிந்து, புறமிடாதிருந்து பிராணனைவிட்டு விடுவையாகில், இகத்திலுள்ள எல்லோரும் புகழ்வார்கள்; பரத்திலுள்ள தேவர்களும் எதிர்கொண்டு சென்று மகிழ்வார்கள். அரம்பா ஸ்திரீகளின் போகமுண்டாம். வீரசுவர்க்க மடைவாய். இதற்குச் சம்மதியில்லாத பக்ஷத்தில், நீ யடுத்திருக்கின்ற அரவக்கொடியோன் கொண்டாடும்படிக்குத் தப்பு வார்த்தைகளை குளறி, உன் காலத்தைக் கழித்து நமனுக்கு நாளையொப்பிவிப்பது உத்தமம். இவ்விரண்டுமின்றி நானுமொரு நாயகவீரனென்று அமர்செய்ய வந்து புகுந்து பிறைமுகம் பகழி சொறிந்து போராடுகின்ற வீரபுருஷ ரெதிரிற் றேரேறி வந்து எதிர்த்தது மதியீனம். ஓ திறனற்றவனே! மேலும், பாஞ்சாலராஜன் பண்ணிய யாகாக்கினியிற் பிறந்த திரௌபதாதேவியை அத்தினபுரியிற் கூடிய கொற்றவர் சபையிலேற்றி வஸ்திரபங்கஞ் செய்தகாலையில், பொறிபுலன் கலங்கி, கண்ணீர் தாரைதாரையாய்ச் சொரிந்து மெய்சோர்ந்து நடுநடுங்கி, மானந்தன்னதென்று மனம் வாதிக்கநின்று தன்னாற் புடவையைத் தடுத்துக்கொள்ள மாட்டாமல் வஸ்திரத்தைக் கைவிட்டு, தேகாபிமான நீங்கி, ஓ ஹரிவாசுதேவா! ஸ்ரீ கிருஷ்ண! எனக்குரிய மானாபிமான மனைத்து முன்னுடையதென்று வாழ்த்தி வணங்கி மரம்போல் நின்ற பாஞ்சாலியை, துஷ்டராகிய நீங்கள்பார்த்து நகைத்துப் பரிகாசவார்த்தை பகர்ந்தீர்களல்லவா? ஈனஜாதியோரும் இவ்வித செய்கைக் குடன்படுவார்களா? அந்தவேளையில், எங்கள் தமயனாகிய தர்மராஜன், அப்பா தம்பிமார்களே! இப்போதொன்று முழுகிப்போகவில்லை; இதுவரையிலும் நாம் தருமந்தப்பி நடந்தோமென்னும் பேருமில்லை; பழிச்சொற் பெருமைசகித்திருங்கள் என்று அடிக்கடி எங்கட்கு அறிவுறுத்தி, சுத்த சாந்தமே பத்தினியென்றும், துய்யபொறுமையே தனயனென்றும் தாமஞ் சொல்லித் தடைபடுத்தினார். அவரோதிய மூலமந்திரத்தால் நாங்கள் மகா நாகம்போ லடங்கித் தடைபட்டு, கன்மானுபவப் பிரத்தாரங் காலங் கடத்தினோம்.

ஆ! ஹா! ஹா! வைதீக சாந்தஸ்தராகிய தருமராஜனது அருணிறைந்த கடைக்கண் கொஞ்ச மசையுமாயினும், எங்களை நோக்காதிருக்கினும் போதுமே, இதுவரைக்குங் கர்னன் அரியோதனன் என்கிறபெயர்களிந்தக் காசினியோர் பேசிக்கொள்ளவு மிருக்குமோ? இவர்கட்குச் செல்வமுஞ் செருக்குமோ? ஊரும் பெருக்குமோ? ஆ! பாவி! அப்படிக்கு நாங்கள் ஒடுங்கியிருந்தும், அந்தச் சபையில்

நீங்கள் நடந்த அநீதத்தால் வீமசேனன் வெகுண்டு மனம் நொந்து, துரியோதனன் முதலாகிய நூறுபேரையும் என் கதையால் நானே நொறுக்குகிறேனென்று சபதம் பேசி, இவர்களை முடிக்கிற பரியந்தந் தாகத்திற்குச் சலங் குடிக்கமாட்டேனென்று கூறினான். அந்தச் சொல்லைக்கேட்ட சமஸ்தமான பேருந் தலைகுலுக்கிச் சாய்த்தார்கள். அந்த வேளையில் நானுமெழுந்து, மின்னிய கணையால் உன்னுயிர் போக்குகிறேன் என்று உறுதி வார்த்தை உரைத்திருக்கின்றேனே அது உனக்கு நன்றாய்த் தெரியவருமல்லவா? என்றைக்கிருந்தாலும் என்பாணத்திற்கு உன் தலை சொந்தமே; அஃதுனக்கிரவலே, இப்போதுமென்ன? ஒருமுழுக்கில் மண்ணெடுக்கவேண்டுமென்னும் அவசரமில்லை. நீ இப்போதிருக்கின்ற கதியை யோசித்துப்பார். உனக்கு என்னுடன் சண்டைசெய்யத் தெரியுமாகில் தாராளமாய் வந்து போர்புரிந்து என்னை ஜெயிக்கலாம். நான் உனக்கு இந்தப் பூமியை இடம் பண்ணி யிருக்கின்றேன். ஐயோ! பாவம்; நீ எங்கே பிறந்தாய்? எங்கே வளர்ந்தாய்? எங்கேயிருந்தாய்? அங்ஙனேயிருந்து காலங்கழிக்காமல் அரவக்கொடியோனைக் கெடுக்க இங்கே புகுந்தாய். ஓ அங்கதேசாதிபனே! நீ இன்னுஞ் சிலநாளைக்கு இருக்க வேண்டுமென்று எண்ணினால், இதோ நான் தொடுக்கப்போகின்ற இந்து முகாஸ்திரங்களினால் தப்பாமல் உன் தலை தத்திவிழப் போகின்றது. அதை முன்னதாய் உனக்கறியச்செய்தேன். ஏதோ நீ வீரனானால் யுத்தத்துக்கு உன்னுயிரைத் தப்பிக்கொண்டு ஓடிப்போ வென்று உறுக்கி உரைத்தான். இந்தப்பிரகாரம் அர்த்தநாரீஸ்வரம்பெற்ற அம்பிகையுடன் என் கர்த்தராகிய பரமேஸ்வரர் மழவிடைமேல் எழுந்தருளி வரும்படிக்கு தவயோகஞ்சாதித்த தனஞ்சயனவன் சாற்றியபோது, அவனிசைத்த கடுமொழிகளெல்லாங் கலந்து பிலம் புகுந்துறையுமாறுபோற் கர்னனுடைய காதில் புகுந்து கலங்கச் செய்தன. அதனாற் கர்னனானவன் சூரியன்போற் கண்கள்சிவந்து, நெருப்புக்காற்று வீசுவது போவதுபோல் நெட்டுயிர்பெறித்து, இரத்தின மிழைத்த கடக கங்கணமுந் தோளணியுந் தாங்கிய இருபுயத்தையும் பளபளவென்று தட்டி, இரண்டு கையையுங் கூப்பிக்கொட்டி, கக்கடக்கக்கடச்சிரித்து, காதுடன் சிரத்தையசைத்து திக்கென்றெரிய விழித்து பக்கத்திற் குப்புறப் பாய்ந்தோடினான்.

இவ்வாறோடிய கர்னன் மீட்டு மனந்துணிந்து, மலைபோற் றிணிந்த சேமத்தேரேறி வச்சிரக்கவசம் உச்சிதக்கவசம் மணிக்கவசம் மாழைக்கவசம் இவைகளைப் பூண்டு விசாலமான மார்பில் முப்புயுநூலும், முத்தாரமும், கொத்துச் சரப்பளியும், பொன்மாலையும் பூமாலையும் பொலிவுற்று மின்னும்படியாகத்தரித்து கடலின் அலைபோற்றுலங்கிய நாரிமாட்டிய வில்லைப் பிடித்து, விசையாயிழுத்து, தட தட வென்று தேரைச்செலுத்தி, சற்றுநேரத்திற்கு முன்னே சண்டைபோட்டு இளைத்து ஓடிவந்த அத்தடத்திற்போய் நின்று மீசை முனைக்கு மிகு முறுக்கேற்றி, கண்டபேர் கலங்கக் கணைக்குங் கொண்டல்வாகனன் குமாரனை கிரீடியை அண்டையிற் கண்டு, அடா அர்ச்சுனா! எங்கே ஓட வழிபார்க்கின்றாய்? என் சண்டைபோடச் சக்தியில்லாமற் போகின்றாய்? இதோ நான் வந்திருக்கின்றேன். இப்போது இளைத்துப் போய்விடாமல் என்னை வளைத்துப் போர்புரிய வாடா என்று யாவரு மறியத் தானோடிய நிலைமையைமறைக்கத் தனஞ்செயனோடியவாறுபோற் குறித்து அவனை மடக்கி ஏண்டா என்னை இழிவாகப் பேசினை? என்று தன் நாக்குத் தழும்பேறும்படியாய்க் கோபங்கொண்டு கொடிதான-சில சொற்களைக் கொட்டுகிறான். அடா பஞ்சவரில் இடைப்பட்ட பஞ்சையே? நீ என்னடா கொஞ்சமேனும் அஞ்சாமல் மெத்தவுங் கற்ற சுத்தவீரன்போற் கருவங்கொண்டு மிஞ்சிப் பேசுகின்றாய்? தலையறுந்த ஆட்டமாய்த் தனக்குத்தானே சுழன்றாடுகின்றாய்? இவ்வூரிலுலகத்திலுள்ள பெரியோர்கள்-உரியோர்கள்-வறியோர்கள் முதலாகிய இவர்களியாவரும் உன்னைப் பார்த்து, இவனும் ஒரு வீரன்தானோவென்று எளனஞ்செய்து சிரிக்கும்படிக்கு ஏமாந்துச் சூதாடி, நாட்டை - நகரத்தை - நலத்தை - பலத்தை இன்னுமுள்ள எல்லாவற்றையும் பங்காளிகள் கையில் ஒப்புவித்துப்போட்டு, மானம் போனாலும் பிராணனிருந்தாற் போதுமென்று இருளருக்குப் பிறப்பிடமும் இருப்பிடமுமாகிய வனத்திற்சென்று கதியற்றிருந்து, கஞ்சிக் கலைந்து, வயிறுகட்டி, வாணாளோட்டி இப்படிக்கெல்லாம் காலங் கழிக்கக் கற்றாயன்றி, போர்முனைக்கண் ணேர்புகுந்து வில்லாளரான வல்லாளருடன் விதண்டை விளைத்து வெற்றி பெறுகின்றவிதம் இன்னதென் றறிவாயோ? வீரப்பிரதாபம்பெற்ற விவேகிகளை உணர்வாயோ? நீயும் ஒரு வில் வீரனென்று வீரப்

டங் கட்டிக்கொண்டு வில்லெடுத்துப் போர் கொடுக்க வந்தாயல்லவா? போதும் போதும்.

அடா அர்ச்சுனா! அஸ்தினபுரத்து ராஜ கோஷ்டியில் வட்டாடித்தோற்று மரியாதை கெட்டதன்றி, உங்கள் நாட்டைப் பறித்துக் கொண்ட நரேந்திரனனவன் உங்கள் பெண் சாதியையும் மயிரைப்பற்றி இழுத்துவந்து சபையிலேற்றி மானபங்கஞ் செய்வித்தானே, அந்தக் காலத்தில் இல்லாதமுனையும் முடுக்கும் இந்தக் காலத்தில் எங்கடாயிருந்து எழுந்தது; என்னைக் கண்வே கிளைத்தோடி வந்ததோ? அல்லது முளைத்தோடி வந்ததோ? மானமும் வல்லமையு மாறாதவன் நீதானோ? இதுபோகட்டும்: கீழேகிடப்பவன் கீழேதானே கிடப்பான் என்பதுபோல், ஒருவேளை சூரத்துவம் இப்போதுதான் வந்தாலும், என்னைச் செயித்து இசைபெறப் போகின்றவன் நீதானோ? விஜயகாண்டீபம் எடுத்து வெற்றி வாங்கை பெறுதற்கு வந்தாயோ? ஆ! பைத்தியக்காரா! இராஜ ராஜேஸ்வரனாகிய துரியோதன மகாராஜன் சமுகத்திற் பேச்சு மூச்சு மில்லாமற் பதறிக் கிடந்த பாண்டவர்களிற் பின்னிட்டிருந்த நீ, என்னை மிரட்ட வந்தாயென்னடா? அடா பேதையே! இதோ யிப்போது நான் விடுக்கப்போகின்ற இரவியாஸ்திரங்களால் உன்னுயிர் வெளிப்பட்டு, உடல் முறிபட்டு, உன்போலொத்தவர்கள் நிந்திக்கத் தலைப்பட்டு, நீ நெடுநாளாய்த் தேடிச் சேகரித்த கீர்த்தியுங் கேடுபட்டு, நிஷ்டூரமாகிய வசை மேற்பட்டு, பொன்னாடு போய்ச் சேரும்படியாய் நாளிட்டு வைத்த நன்னாள் வந்து ஒத்துக்கொண்டது. ஐயோ! இனி என்ன யிருக்கின்றது? தாய்-தமையன்-தம்பியர்கள்-தாரம்-தனயர் இவர் முதலிய பேர்களை ஒழித்துவிட்டுத் தனியே சண்டைக்குத் தலையிட்டு, இவ்விராடபுரத் தெல்லையிற் செத்துப்போக விருக்கின்ற உன்னைக் குற்றமான கொடுஞ்சொற் கூறுவானேன்? அப்படிப் பேசுவதினால் எனக்கென்ன லாபம்? ஓ பார்த்தனே! சற்று நேரத்திற்கு முன்னே என்னைச் செயித்து ஓட்டிவிட்டதாய் இறுமாந்து, முன்னாலோசனை பின்னாலோசனை எண்ணாமல் நிறைகுடம் தளும்புவதுபோலும், நெய்யரிசி கொதிபொறுக்காத் தன்மைபோலும், இன்னப் பேச்சுகளைக் கொட்டிப்போட்டாய்; உன்னுடனெதிர்த்த என் கைவில்லும், நானேறிய தேரும் ஒழிந்து, நானும் போர்முனையிற் றெழித்துப்போனதை இன்ன விதமென் றறியாமல், வெற்றி யடைந்தோமென்னும் உற்சாகங் கொண்டு உனக்கிச்சையானமட்டும் பேசினையாக்கும்.

அப்பா அர்ச்சுனா! யானையைச் சிங்கம் பங்கப்படுத்துவது இயற்கை. அப்படிப்பட்ட சிங்கம் அந்த யானைக்கு ஏதோவொரு காரணமாகச் சற்றிடைந்து போமாகில், அந்த யானை சந்தோஷப்பட்டுச் சிங்கத்தைப் பழித்துப் பேசுவதுந் தீரமோ? இதுவுமொரு வீரமோ? நீ என்னமோ மெத்தத் தெரிந்தவனென்று பேசிக்கொள்ளுகிறாய்களே; உனக்கென்ன தெரியும்? வில்லானது எவ்வளவு துவண்டு வளைகிறதோ அவ்வளவும் வேகத்திற் கிடமென்று தோன்றவில்லையோ? ஆட்டுக்கடா பின்னுக்கிடைவது இன்னொரு ஆட்டின் தலையோட்டுக்குக் கேடென்றுணராயா? ஏதோ காரியத்தினால் பின்னிட்ட சிங்கமானது, மறுபடியும் பிரவேசித்து, மத்தகத்தைப் பிளந்து உதிர மூளையை நிரப்பப் புசிக்குமென்று சற்றேனும் நீ நினைக்காமல் போனதென்ன? நல்லது இப்போது நானுன்னை செய்யப்போகின்ற செய்கையினாலும், காரண காரியங்களினாலும், என்னை இன்னானென் றறியப்போகின்றாய். உன்னிடத்தில் விருதாவாகப் பேசுவதிற் பிரயோசன மொன்றுமில்லை. அடா அப்பிரயோசனா என்று உரத்துத் தொனியிட்டு தட்டி கரத்திலிருக்கும் வில்லை நாட்டி, நாணி பூட்டி, வலுத்த கணைகளை வந்தித்து மாட்டி, வீரலக்ஷணங்காட்டி, மிகுந்த விசையுடன் தகுந்த சரங்களை விறுவிறுவிறென்று பொழிந்தான். இப்படிக்குச் சூரிய குமாரனான கர்னன் தொடுத்த சரங்களினாலும், அவனால் தூஷிப்பேசிய வீறிய சொல்லினாலும் அர்ச்சுனன் மனம் புதைத்து, அனலாஸ்திரம்-புனலாஸ்திரம்-மினலாஸ்திரம்-மேகாஸ்திர முதலியவைகளை அபிமந்திரித்துப் போக்கி, பற்பல தேயமாந்தரும், விற்பன மேயவேந்தரும், வீரசேனைகளும், இருண்டு மருண்டு, இளைத்துப் போகும்படியாக்கி, கர்னன்பேரிலும் கனக்க மாட்டினான். இவ்வாறு கும்பு கும்பாய் உந்திய அம்பினங்களைக் கர்னன் கண்டு எதிரெதிர் தடுக்கும்படிக்குக் கோடி அஸ்திரங்களேவிப் போராடி நின்று, மாறுடிய தங்கள் சேனையுடன் அவனை வந்து, நாறுகிய வேந்தருடன் சேர்ந்து தனைந்து, ஏறுகிய கிரீடியை மொய்த்துக்கொண்டு, ஈட்டி-கதை-வாள்-வேல்-சூலம்-பிண்டிபாலம்-தோமரம்-கத்தி-கட்டாரி-வாங்கு-

சாங்கு-முசுண்டி-முனை-சக்கரம் இவை முதலாகிய சஸ்திரங்களை எடுத்தெடுத்தெறிந்து, மூடுபனிபோற் ஜாடினான். அக்காலையில் தனிச்சிங்கமென நின்ற தனஞ்செயனானவன் செஞ்சுடர்க் கணையைத் தெரிந்து, சிரத்தையாய் எடுத்துப் பரிந்து, பூசைகளனேகம் புரிந்து, காண்டீப நாரியில் வரிந்து கால் தலை தெரியாமற் சொரிந்தான்.

இந்தக் கணைகளெல்லாஞ் சேர்ந்து கர்னன்விட்ட அஸ்திரங்களை யெல்லாந் துவஸ்திரமாக்கி, அவனைச் சூழ்ந்த கும்பலிற்போய் விழுந்து தும்பு பறக்கச் சுட்டெரித்தன. அப்போது காவலர் முதலாகிய யாவருங் கடல் முகட்டெழுந்த கதிரவனைக்கண்ட பனி படும்பாடு பட்டழிந்தார்கள். விண்படரு மேகம்போல் அடர்ந்த நான்கு படைகளிலும் புண்படாமற் போனவர்களில்லை. இந்தப்பிரகாரங் கர்னனோடுவந்த சேனைகளெல்லாங் கரமுறிந்து, கால் தறிந்து, சிர மெறிந்து, சிலை நெரிந்து, சிதைந்தன. இப்படியாகச் சேனைகளெல்லாஞ் சிதைந்த சேதத்தையும், வதைத்த தேகத்தையும், ஊன் சேற்றின் வருக்கத்தையும், உதிரவாற்றின் பெருக்கத்தையும் பானுகுமாரனான கர்னன் பார்த்து, படபடத்துச் சினந்து, குருசேனையிற் கூடிய பலபடை மன்னரும் அன்புகூர்ந்து இன்புறும்படியாய் ஆசாரியரான பரசுராமரைப் பணிந்து, அழல்வாளிகோடி - அறல்வாளி கோடி - அரிவாளி கோடி யெடுத்து ஆகாயமெல்லா மறையும்படிக்குத் தொடுத்தான். அக்கணைகளியாவுஞ் செந்தீ யிறைத்து, ஜெகமுற்று நிறைந்து, விண்ணைக்கருக்கி, மேகங்களைச் சுருக்கி, வேலை நீரை வெதுப்பி, வெந்நீராகக் குழப்பி, விண்டல மளாவிப் பிடித்து, மேலிட்டு நின்ற மலையையிடித்து, பெருங்காற்றடித்துப் பொழியுஞ் சோனாமேகம்போற் பரவிச் சற்றேனுந் தங்காமற் றிரிவதாயின. இப்படி பரவித் திரியும் அஸ்திரங்களைப் போர்முக விஜய புருடசிலாக்கியன் கண்டு, தனக்கு கைவந்த இந்து முகாஸ்திரம் ஐந்து ஆய்ந்தெடுத்து, அபிமந்திரித்து, எதிர்விட்ட பாண முழுமையுஞ் சற்றுநேரத்தில் சிதறவடித்துப் பொய்யெனப் பிளந்து, மெய்யெனப் பிளந்து, கெய்யெனத் தழைத்து வெற்றிவீரப் பிரதாபத்துடன் வரக்கடவீரென்று விட்டான். அம்மாத்திரத்தில், அவ்வைந்தஸ்திரங்களு மவனுந்திய வண்ணம் வந்து முந்திய கணைகளைப் பிளந்து, மேவலர்கண்டோடக் களைந்து நிற்குங் காலையில்; முப்புவனமுங் கொண்டாடக் கொடுக்குங் கொடையாலெங்கும் பெயர் பெற்றுக் கீர்த்தி விளங்கிய கொற்றவனாகிய கர்னனும், எப்புவனமுந் திண்டாடத் தொடுக்கும் படையாலெங்கும் பெயர் பெற்றுக் கீர்த்தி விளங்கிய நற்றவனாகிய பார்த்தனும் ஒருவர்க்கொருவர் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். இருவர் கணையும் பறிந்து, இருவர் ரதமுஞ் செறிந்து, இடைப்பட்ட சேனையுமுறிந்து, ஆகாயமும் பூமியுநிறைந்து, சூரியனொளியுங் குறைந்து, வேடிக்கைப் பார்த்திருந்த மூவருந் தேவருமறைந்து இடம் பெயர்ந்தார்கள். வாயுதேவனும் உலகிலுலாவுதலொடுங்கி ஸ்தம்பித்துப் போனான்.

இப்படி இவர்களிருவரும் பிரயோகஞ் செய்த பாணவேகத்தினால் வெகுபேர் மாண்டார்கள். அடிக்கடி அவசகுனங்களும் விபரீதங்களுமுண்டாய்த் திகிலும் விளைந்தது. யுத்தஞ் செய்கின்ற இருவர் கண்களுஞ் சுழன்று, இருவரெண்ணங்களு மழன்று, சிறப்பாய் வருந் தேருந்தேரும், நெரிப்பாய் வருங் குதிரையுங் குதிரையும், பொறுப்பாய் வரும் பாகும் பாகும், உறுப்பாய் வருங் கொடியுங் கொடியும் ஒன்றோடொன்றுதாக்கி அநர்த்த மூண்டாக்கியபோது, கர்னன் களைத்து, இடம் வலம் - வலம் இடமாகத் தேரைத் திருப்பி, யெருநகை, பெரும்புலியெனப் புகுந்து, அடா அர்ச்சுனா! அக்ஞாதவாசஞ் செய்யப்போன ஒரு வருஷத்தில் இன்னும் ஒரு நாட் கழிக்க வேண்டியிருக்க, அதற்குள் அவசரமாய் வெளிப்பட்ட உன்னால் நீங்களைந்து பேரும் இனி யநுபவிக்கப் போகின்ற வனவாசத் துன்பமானது உங்கள் தலைமேலேறிக்கொண்டது. சபையிற் சொல்லிய சத்திய வசனத் துறுதி அது வல்லவா. அது தெரியாமல் என்னடா மெத்தத் தத்திச் சுற்றித் தலைகீழாய் விழுகின்றாய்? கற்ற வித்தை யெல்லாங் காட்டுகின்றாய்? குற்றமற்றவர்களைப்போல் கொண்டாடி நடக்கின்றாய்? இதோ நான் விடப்போகின்ற சிலீமுகங்களினால் இறந்து போவாயாகில் (கூண்டோடு போயிற்று குளிருங் காய்ச்சலும்) என்று கூறும் பழமொழிப்படிக்கு மற்றயரை மன்னித்து விடப்படும். சில வேளை என் கணைக்குத் தப்பிப்பாயாகில், இன்னும் பதின்மூன்று வருடம் வனவாசம் பண்ண வேண்டும். இவ்வாறு அந்தந்த அக்ஞாத

வாசந்தோறும் உங்களை எப்படியாகிலுங் கண்டுபிடித்து நீங்கள் காட்டுக்கு ஆட்சியாய்ப் பொருந்த நாங்கள் நாட்டுக்கு அரசாட்சியாயிருந்து எங்கள் காலத்தை இன்பமாய் கழிப்போம். உங்கள் காலத்தை உதவாமலொழிப்போம். நீங்கள் பண்ணுகின்ற இந்திரஜாலத்தைப் பசையறக் கறைப்போம் என்று சிந்தை வெம்பி, தீப்பொறிபம்பிய எட்டுக் கம்பி கணைகளை ஒன்றின்பின் ஒன்றாகவுந்தி, நிரை நிரையாகச் சிந்தி, கும்பல்கும்பலாகக் கொளுவி, குப்பையுங் கூளமுமாகக் குவித்து அர்ச்சுனனையும் அவன் தேரிற் பூட்டிய அஸ்வங்களையும் அவைகளை யோட்டுஞ் சாரதியையும் அலமலங்கப் படுத்தினன்.

அந்தக் கர்னன் சிந்திய கணைகளானது ஆகாசபாணம்போ விரைந்து, இராகுக்கிரகம் போல் விரைந்து, எங்கும் பறந்து எரிந்து வருகின்ற கோரத்தைப் பார்த்தன் பார்த்து, கண்ணு மனமும் வேகக் கருத்து, விண்ணு மேகமும் வெடிக்கச் செறுத்து, வின்னாணியை விசைபட வீக்கி, வேகங்கொண் டொன்றுபட்டோடச் சரங்களைத் தாக்கி, பானுகுமாரன் விட்ட பாணமெட்டும் பாதி வழியில் நாணப்பட்டுப் போகப்படுத்தி, பரந்துநின்ற பண்டையினுள்களையெல்லாம் பட்டப்பகல்போல வெட்டவெளியாக்கிக் கிடத்தி, அடடா!! இந்தக் கர்ணனை எதிரியாகக்கொண்டு நாம் இவனுக்கு நேராகநின்று போராடுவதும் இவன் நம்மையடிப்பதும், நாம் இவனை யடிப்பதும் பெருமையாய் இருக்கவில்லை. பார்க்கின்ற பேர்கள், இவனுஞ் சுத்தவீரன்தான். இவனால் அர்ச்சுனனும் அடிபட்டான். வெகுநேரம் சண்டை போட்டான் என்று சொல்லுவதற்கு இடங்கொடுக்கிறது. ஆதலால் நமக்குத்தகாது. இவனோடெதிர்த்து, வெகுநேர மாகின்றது என்று நெற்றி வியர்த்து, புருவநெறித்து, சற்று நகைத்து, மூற்றப்பகைத்து, உச்சிதமான வச்சிராஸ்திரந்தொடுத்து, அவனுக்கு உடற்காப்பாகிய கவசத்தையும், துவசத்தையும், உடையையும், பீரிக்கிழித்து, எங்கும் பெருந்துளை போக்கி, உடலில் உதிரமயமாக்கி, அந்தமட்டும் விட்டுவிடாமற் பின்னும் இரண்டு காளமேகக் கணையைத் தூக்கி, வீணுப் பிதற்றும் வாய்மேல் தாக்கி, கச்சக்கொடியை பிச்செறிந்தொடித்து, கண்ணிரண்டிலும் புண்படவடித்து, நவரத்தின முடியைத் தவரக்கொடுத்து, நகுவாகு வலய நலங்க விடுத்து, அவனது பாரியவில்லை படாலென முறித்து, அவனைப் பார்க்கப் பார்க்க படீரென வெறித்து, அடங்கா வயிற்று எரிச்சலுடன் அனற்கணை யனேக மிறைத்து, அவன் இருதோளையுந் தாளையும் அநேகந் துவாரம்படத் துளைத்து, பஞ்சுபோற்கொட்டி குமுக்கிக் குவித்து, இப்படி எவரையுங் குலை குலைந் தோடப்பிடித்து க்ஷமித்து எதிரொருவரில்லாமல் எங்குந்தனித்து ஊடாடி வருகின்றான் தாடாளனான தனஞ்சயன். அவனை வக்ஷஸ்தலத்தில் மகாலட்சுமியை வைத்தருளிய மாயனும், அவரது திருநாபிக்கமலத் தெழுந்தருளிய சேயனும், பக்ஷத்துடன் மகிழ்ந்து பரிந்தார்கள். தேவர்களும் மென்மேலாகப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

இப்பால் அங்கதேசாதிபன் அர்ச்சுனனாலடிபட்டு, தனக்கு உயிர்த்துணையான வில்லும் ஒடிபட்டு, ஜீவரத்தினத்தை இழந்த செந்தலை நாகம்போற் சிந்தை தளர்ந்து, பின்னும் தைரியம்விடாமற் புந்தி கிளர்ந்து, வேறுவில் ஒன்றினை எடுத்துப் பிடித்து மின்போற் பிரகாசிக்கின்ற நாரியிறுக்கி, திசாதிசைகளும் பிதிர சந்திர சூரியரும் அதிர, வானிறைந்த மோனமுனிவரரும், முப்பத்துமுக்கோடி தேவர்களும் முக்குண முத்தொழில் விளையாட்டுடைய மூவர்களும் பேரானந்தங் கொள்ளும்படியாய், கொஞ்சநேரத்திற் குள்ளாக துரோணமேகம் பொழியுங் கொள்கைபோற் கொடிய விஷ நெருப்புள்ள காலாக்கினி கணைகளை கைகொண்டமட்டுங் கட்டு கட்டாக மாட்டித் தொடுத்தான். இப்படியாகக் கர்னன்தொடுத்த கணைகளினால் அர்ச்சுனனுடைய தேரும் நான்கு குதிரையும், உத்தரகுமாரனான சாரதியும் அலைக்கழிந்து கலக்கங் கொண்டார்கள். அவ்வேளையில் எங்கும்புகழ பங்கு வைத்திருக்கின்ற பற்குனனானவன், அமுதாகர நிமிடகரித் திருக்கின்ற அர்த்தசந்திர பாணத்தை காண்டீபத்திற்பூட்டி கடுகடுத்தெறிந்து, கர்னனால் விடப்பட்ட காலாக்கினி கணைகளையெல்லாம் ஒன்று போனவழி ஒன்று போகவொட்டாமல் தடைத்துக் கிழித்து, ஒழித்துப் பழித்து இடியாஸ்திரங்களை முடியப்பரப்பி, வடுவில்லாக் கர்னன் பிடித்திருந்த வில்வளைவை நிமிர்த்தி மளமளவென்று நடுவற முறித்தான். அப்போது துட்டரைக்கொட்ட மடக்கும் அங்கதேச பட்டாபிஷேகத்தைத் துரியோதனனாற் கட்டிக்கொண்ட கர்னராஜன் தன் கையிலிருந்த வட்டவரி வில்லானது அர்ச்சுனனால் வெட்டுப்

பட்டுப் போனபோதே அது கெட்டதென்று விட்டெறிந்து போட்டு, எட்டுதிக்குங் கெட்டரும்படியாய் ஆர்ப்பரித்து, வச்சிரக்கட்டிட்ட மலைபோன்ற கதாயுதமெடுத்து விறுவிறெனச் சுழற்றி விட்டெறிந்தான். அதனால் குவலய நடுங்கிப் பின் வாங்க, அலைகடல் நிலைதவறி முன்னேங்க, திசையானை யெட்டுந் திடுக்கிட்டொதுங்க, சக்கரவாளகிரியுந் தலை தாழ்த்திப் பதுங்கவாயது. இப்படியாகக் கலக்கி எங்குமுலாவி யுழக்கி வருகின்ற கதாயுதக் கடுமையைக் காண்டீபன்கண்டு, வயிரக்கணையொன்று மந்திரித்தெடுத்து மலையுடன் மலை மலைவுறுமாற் கதாயுதம் வருவதைக் காட்டிக் காதுபரியந்தம் இழுத்து மாட்டினன்.

அந்த வயிரக்கணையான்து வெளிப்பட்ட மாத்திரத்திற் கர்னன் வீசிய கதையை வழிமறித்துக்கொண்டு, அனந்தங்கோடி சக்கைச் சக்கையா யுடைத்து, வெற்றி பெறுதற்கு விரும்பி வந்த அவன் சேனைகளின் பேரிலிறைத்து அவர்களையுஞ் சின்னபின்ன மாக்கியது. அதனாற் சேனைகளுஞ் சேனை வேந்தர்களுஞ் சகிக்க மாட்டாமற் கவ்ண்கல்லடியுண் டழிந்தவர்களைப்போற் கை-வாய்-சிரம்-உரல் - கால் முதலிய உறுப்புகளெல்லாம் வருந்தி மடங்கியோடினார்கள். இவ்வாருகத் தன் படை மன்னர்களுஞ் சேனைகளும் அவ்விடத்திற் பொருந்திப் போர்கொடுக்க மாட்டாமல் மாறுபட்டோடினதையும், தானெடுத் தெறிந்த தண்டாயுதமானது உமியுந் தவிடும்போல் நூறிந்து பறந்து சிதறிப் போனதையும், எதிரியாகிய இந்திர குமாரனும், அவனேறிய தேரும், அதிற் பூட்டிய் குதிரையும், அதை யோட்டுஞ் சாரதியும் அணுவத்தனையேனும் பழுதுபடாமலிருந்த அதிசயத்தையுங் கர்னன்கண்டு, பெருமூச்செறிந்து ஏக்கங்கொண்டு, ஏதொன்றுந் தோன்ருமல் இளைத்து நின்று விட்டான். அப்படியாக நின்ற அங்கராஜனைச் சங்கிராம விஜயன் பார்த்துச் சிரித்து, மற்ற வீரர்களையு மடித்து, சத்துப்போக முடித்து, வெற்றிபெறப் படித்திருக்கின்ற பத்துக் கணைகளை ஆராய்ந்தெடுத்து, பற்பல பூசையும் பண்ணி, உபசாரத்துடன் வணங்கி அபிமந்திரித்துத் தெறித்தான். அந்தக் கணைகளானது பந்தபாசம்போற் பற்றி, எட்டுத்திக்கிலுஞ் சுற்றி, கர்னன் ஊர்ந்துவந்த கனகமயமான ரதமும், அந்த ரதத்திற் பூட்டிய அதிக வேகக் குதிரையும், அக்குதிரையின் மனமும் எசமானுடைய மனமுமறிந்து தக்கபடி தேர் செலுத்துஞ் சாரதியும் ஒரு க்ஷணத்திலழிய ஒழித்து, அக்கம்பக்கத்தில் நிற்கும் படைகளைக் கழித்து, அண்டகடாகம் வரையிலுஞ் செழித்து உலாவிக்கொண் டிருந்தன. அப்படி யிராநின்ற பாணங்களையுங் கலைமதிமுகங் கடுகடுத்து கறுத்து நிற்கின்ற காண்டீபனையுங் கர்னன் கண்டு, கனல்வீசக் காய்ந்து, தேர்விட்டிறங்கிப் பாய்ந்து, உதடு மடித்து, முகஞ் சுளித்து, கைவேல்-கதிர்வேல்-வடிவேல்-நெடுவேல் முதலிய பல வேலாயுதங்களைப் போக்கி, பூமியில் நின்று செவ்வையான யுத்தஞ் செய்தான். இப்படி பூபதனைய் நான்கு புறம்பிலுந் திரும்பி, வாங்கு வரிசைகள் விரும்பி வளைந்து விளையாடி வருகின்ற செங்கதிர்ச் சேயனைச் சிலைவிஜயன் பார்த்து, இனி இவனை இவ்விடத்திலிருக்கச் செய்யலாகாதென் றெண்ணி விருதுகட்டி அம்பொன்றெடுத்து பிர்ம்மாஸ்திர மந்திரத்தை யுச்சரித்து, ஆசாரிய வணக்கஞ்செய்து அரைக்ஷணத்திற் றூண்டினன்.

அந்தப் பிர்மாஸ்திரம் புறப்பட்டுக் கர்னனெறிந்த வேலாயுதங்களை யெல்லாம் அதாகதஞ் செய்து, அந்தக் கர்னனுடைய மார்புந் தோளும் புண்பட்டுத் துளைபட்டு மயிர்க்கால் தோறுங் கண்விட்டு இரத்தப் பிரவாகமாகத் தக்கதாய் வருத்தப்படுத்தியது. அதனாற் கர்னனுடைய தேகமுழுமையுஞ் சரங்கள் பாய்ந்து, அம்புப் பயிர்நட்ட செம்பொன் மலைபோல் வாய்ந்து, அனேக துன்பத்தால் வருந்திக் கால் சாய்ந்து, எதிர்ந்து போரிடுவதற்கு வேறுவகையில்லாம லோய்ந்து, படுகுழியில் வீழ்ந்து பரதவிக்கும் யானைபோற் பரதவித்திருந்தான். அப்படிக்கிருந்த கர்னராஜனைச் சுவேதவாகனன் கண்டு, வேகத்தக்க கோபங்கொண்டு, இரக்கம் என்பது எவ்வளவுமில்லாமல் மேலுமேலும் மகிமைபெற்ற சரங்களை வாரிவாரிச் சொரிந்தான். இப்படி அர்ச்சுனனவன் அஸ்தலாகவத்தால் அமோகமாகப் பொழிந்த அஸ்திரங்கள் யாவுங் காடாக்கினிபோ லெரிந்து, வாடாமல்லியென வந்துவிழுந்து கர்னனது நெற்றியிற் கட்டியிருந்த விரபட்டத்தைத் துட்டத்தனையாய்ப் பொடித்து, அந்தப் பட்டங் கட்டிய நெற்றியிற் பொட்டிட்டதுபோல் முத்திரையடித்து, அவனுடலெங்கும் ஊசி நுழைவதற் கிடமில்லாமலுருவி, அவனுயிரோடும் ஊடாடிப் போராடலை மருவின.

அப்போது கர்னனானவன் யாதொன்றும் யோசிப்பதற் கிடமில்லாமல், பெருமைபெறக் கருதிய சகல்வித சாமர்த்தியங்களையும் விட்டு, சண்டைமுனையுங் கெட்டு, தானும் புறமுதுகிட்டோடினான். அதுகாலையில், அர்ச்சுனன் தேரிலிருந்த உத்தரகுமாரன் பளபளவென்று இருகர மலரையுங் கொட்டி, கலகலவென்று கனநகை யதுகொடு திட்டி, ஓ! ஓ! ஓ! என்றிரைந்து விரைந்து தேர்விட்டான். இங்ஙனம் அஞ்ஞான வஞ்சகத்தில் அனுதினமும் கருத்தைப் பொத்திய துரியோதனனும், அவன் தம்பிமார்களும், குற்றத்திற்கு மெத்தத் திடஞ்சொல்லித் தேற்றுகின்ற சகுனிமாமனும், மற்ற வித்வசிரேஷ்ட மேன்மையோர்களும் அர்ச்சுனன் செய்த யுத்தமுகத்திற் புறங்கொடுத்தோடுகின்ற கர்னனைக் கண்டு, கவலை மேற்கொண்டு, ஐயையோ! இக்காலத்தி லிவ்வொருவனுக்கே நாமுடையதானால், ஐவருமொன்றுசேரில் இனி யெக்காலத்திலும் நமக்குச் செயமில்லை. இப்போதிருக்கின்ற அரசாட்சியும் போய்விடும் என்று ஏங்கித் தளர்ந்தார்கள். சூரியனுக் கொப்பாகிய ஆரியர்களான வீஷ்மாசாரியார் - கிருபாசாரியார் - துரோணாச்சாரியார் முதலிய பெரியோர்களெல்லாம் முக மலர்ந்து, அகமகிழ்ந்து, புயம் பூரித்து, தேகம்பாரித்து, ஜெயமுஞ் செல்வமுந் தனஞ்செயனே பெறுவான். இவனே தீரனென்பதற்குத் தடையேதாகிலு முண்டோவென்று வாழ்த்தினார்கள்.

### அருச்சுனனுக் கிளைத்துப் புறங்காட்டிப் போகுங் கர்னனை அசுவத்தாமன் கண்டேசுதல்.

அந்தவேளையில் அதிரதத் தலைவர்களில் யாருமெனக் கிணையாக மாட்டார்களென்று ஆவிபறியப் பறியப் பலகாலுங்கூறி கூறித் தேறிய அங்கதேசாதிபன் சங்கடப்பட்டு நொந்து, பின்காற் பிடறியிலடிபட ஓடுகின்றதை அழகிய தேர்மேல் அமர்ந்திருந்த அஸ்வத்தாமா கண்டு வெகுண்டு, மகா அவசரத்தோடுந் தன் தேரை முடுக்கிச்சென்று, இந்தக் காலத்தில் தான் அந்தக் கொடையாளியைத் தடுத்துப் பேசவேண்டுமென்று போனான். இவன் தேரோடிவருகின்ற பேரோசையைக் கலவரங்கொண் டோடிவருகின்ற கர்னன் கேட்டு திரும்பிப்பார்க்கச் சாவகாசமுந் திடதைரிய தீரமுமில்லாதவனாய் அர்ச்சுனன் துரத்தி அடிக்க வருகின்றானோ வென்பதாய் மேன்மேலாகிய திகிலடைந்து, பின்னு முடுக்காய்ப் பதறிப் பூமிமேலிடறிப் பொத்துப் பொத்தென் றடிக்கடி தடுமாறி விழுந்தோடினான். இவ்வாறிளைத்துப் பிராணபயங் கொண்டோடுகின்ற கர்னனை அதிவேகங் கொண்டுவந்த அஸ்வத்தாமா வளைத்துப் பேசுகின்றான். ஓ படையாளியான பாரமார்த்தியனே! நான் அஸ்வத்தாமன், இப்போது நீர் கண்பொறிகலங்கித் தலைகவிழ்ந்தோடும் வேளையில் என்னை அர்ச்சுனனென்று மதித்து ஆத்திரப்பட்டு ஓடவேண்டாம். நில்லும்: நில்லும்: ஐயோ! பாவம்: சற்றே நிதானித்துப்பாரும், இங்கேவாரும், கொஞ்சம் இளைப்பாரும் ஓ! ஓ! ஓ! இதென்ன கோலம்? ஐயோ! பொல்லாத காலம்? ஏனிவ்வா றோடுகின்றீர்? மண்களிற் புரண்டொதுங்கி கண்களிற் சலங் கலங்கி, மார்பும்-தோளும் - காலும் - கையும் நடுங்கிக்கொண்டு போவானேன்? எதிரிகள் வாயெடுக்கவொட்டாமல் வாயாடுகின்ற உமது வசனம் ஒடுங்கிப் போவானேன்? ஓ காரியவானே! காரணஞ் சொல்லும்; நாமெல்லோருங் கூடி மாடுமடக்கிய அந்தவிடத்திற் சற்று நேரத்திற்கு முன்னே இதோ ஓடிவருவது ஒரு தேரென்றும், அதன்மேல் வருகின்றவன் ஒண்டிக்காரனென்றும், அவன் கைப்பிடித்திருப்பது ஒருவில்லென்றும், அவனை செயிப்பதற்கு நம்மிலெவராலு மாகாதென்று நாங்கள் சொல்லியபோது அவன் எனக் கெம்மாத்திரமென்று ஆணவமாய்ப் பேசி, நீங்களியாவரும் எனக்குப் பின்னின்று வேடிக்கை பாருங்களென்றேசி வந்திப்பாகிய பல படைகளுடன்சென்று, முந்திபோய் நின்று முனைந்து போர்புரியப் போனாயே: அப்பா கர்னா! நீ கைப்பிடித்திருந்த வில்லெங்கே? நீ ஜெயிப்பேனென்று சொன்ன சொல்லெங்கே? அங்கதேசராஜ பட்டாபிஷேகம் பெற்ற முடியெங்கே? ஆகாயமளாவிப் பறக்குங் கச்சைக் கொடியெங்கே? கூசாமலோடுங் குதிரை எங்கே? குணமறிந்தோட்டுஞ் சாரதி எங்கே? தந்திரச் சேனையெங்கே? மந்திர உச்சரிப்பெங்கே? வீரபட்டமெங்கே? மணிக்கவசமெங்கே? துணிக்கவச மெங்கே? எனக்குத் தயவுசெய்து சற்றே சொல்லப்பா.

ஓ வெல்லப்பாகினு மினிப்பாய்ச் சொல்லுஞ் சொற்களிற் சிறிதுஞ் சோர்வில்லாத விற்சாதுரியனே! உனக்குத் துணைபட்டுத் துள்ளிக்குதித்த வேந்தன் தம்பியாகிய துற்

சாதனனெங்கே? அவன் மச்சானெங்கே? அன்புள்ள மாமனெங்கே? ஆ! பச்சாதாபம் பார்க்காத பதிதனே! மாறுபட்டு வரும் பகையாளிகளைப் பேறுபெற்ற ஆயுதங்களினாற் கூறுகூறாக்கித் தாறுமாறாக வேறுலகாள விட்டு வலம்புரி மாலையணிந்த துரியோதன மகாராஜனை இந்த நிலம்புரக்கப் பட்டாபிஷேகம்பண்ணிப் பெருஞ்செல்வத் தமைக்கிறேனென்றும், அர்ச்சுனனுக்கு வைரி நானொருவன்தானென்றும், பெருமைபாராட்டி அருமையாகச்சொல்லிய நீ அந்த அர்ச்சுனனாலடிபட்டு, பெருகி வழிகின்ற இரத்தவெள்ளத்தில் நீந்தி, விசன நீர் மாந்தி, இருதையேந்தி, நிலத்தில் வீழ்ந்து ஆழ்ந்தி, நிணச்சேற்றிலழுந்தி நெடுங்காற் புதைந்து ஓடவேண்டியதென்ன? ஓ உத்தமனே! எங்களைப்போன்றவர்கள் ஒருவனுடைய அன்னத்தைப் புசித்து, யுத்தநேரிட்ட காலத்தில் எசமானையிழந்து எதிரியைப் புகழ்ந்து நன்றி குன்றி மானங்கெட்டு நாணம்விட்டு நடக்கத் தக்கவர்கள். இதல்லாமலும், தீரத்துடன் செயிக்கப்போகின்ற உன்னைப் போலொத்த வீரனுக்குப் பக்கத்திலிருந்து நச்சு நச்சென்று லச்சை கெடப் பேசி ஜெயிப்பவர்களையுந் தடுத்து, அவர்களுக்குள்ள திடதைரியத்தையுங் கெடுத்து, நாங்களுங் குப்புறப்படுத்து, எதிரிட்ட பகையை வெல்லாமலும், வெல்லுகின்ற போர்கட்கு உற்சாகஞ் சொல்லாமலும் காரியத்தாழ்ச்சி செய்கின்றவர்கள். ஆதலாற்றான் எங்களை ஊரைப் பார்க்கப் போகச் சொன்னாய் அப்படிப்போக மனதில்லாதவர்கள் அர்ச்சுனனை யடித்து வெற்றிபெறப் போகின்ற என்னுடைய யுத்த வல்லபத்தைப் படித்து, எனக்குப் பின்னாலே நின்று கண்டு சந்தோஷப்படுங்களென்று பேசினாய்? போகட்டும். எங்கள் கதிதான் அப்படிக்கானாலும், வாய்ப்பகட்டுரைத்த உன் கதியை யோசிக்குமிடத்தில் போர்முனையை விடுத்து, சாதுரியவான்களாகிப் பாண்டவர்களுக்குச் சந்தோஷங் கொடுத்து, உனக்கு அன்னமிட்டு ரக்ஷித்த துரியோதனராஜனுக்கு துன்ப மூட்டையைக் கொடுத்து, நீ வாயாற் பேசியிருந்த வரிசையற்ற புகழையுங் கெடுத்து, நன்றி மறவாத வெற்றி வீரனானையே. ஆ! ஆ! வீரசுந்தரனே! ஆயினும், இப்போது ஓடுகின்ற நீ ஒருவேளை திரும்பி வருவையாகில் உன்னைக் காப்பாற்றிய துரியோதனனுக்கு என்ன சொல்லுவாய்? பெரியோர் முதலிய பிராமணருக்கு க்ஷாத்திரமில்லையென்றும்; வைதீக சாந்தஸ்தமுடையவர்களென்றும்; க்ஷாத்திரமுள்ள க்ஷத்திரிய குலாதிபன் நான்தானென்றும் மார்புத் தட்டிப் பேசினையே. ஓ தராதிபனே! ஓ ஏதுகாரியங்களையு மெண்ணித் துணியாமல் விண்ணானம் பேசுகின்ற வீணனே! இத்தருணத்திலேனும் நானிசைப்பதைக் கேட்பாயாக.

இவ்வுலகத்தில் மௌடீகர்களாய் இருக்கின்றவர்கள் இருந்தயிடம் விட்டு எழுந்திராமல் வாய்கொண்டமட்டும் வசனிப்பார்கள். சொல்லிய வண்ணம் நடத்தமாட்டார்கள். விவேகிகளாயினோர் பல முகத்திலுந் திரிந்து ஆராய்ந்து, தங்களுக்குச் சகல காரியங்களுங் கைகூடியிருந்தும் வாயடங்கி தன் பலமும், எதிரி பலமும் காலமுமறிந்து சொல்லிய வண்ணம் நடத்துவார்கள். இப்படிக் கெல்லாம் இல்லாவிடத்து அப்படி நடத்தலாமென்பது சிருஷ்டி கர்த்தாவாகிய திசைமுகனாலுங் கூடாது. நீயோ கெடிவஸ்தலாதிபனான கௌரவகுல முதல்வனால் தனம்-தானியம்-சம்பத்து-பசு-பத்தினி-புத்திரர் - மித்திரர் இவை முதலிய எல்லாப் பாக்கியமும் படைத்து, பொக்கிஷப் பொருளைப் பூரியாகக் கொடுத்து, புகழுடம்பெடுத்துப் பூரித்திருக்கும் புஜபல வலிமையால் முன்பின் யோசிக்காமல் வம்பு பேச்சுகளைப் பேசிவிட்டாய். மகான்களுக்கு மனம் ரோசிபோயது. உன் பேச்சின்படி முடிப்பதற்கு உனக்கும் அசாத்தியமாயது, இன்னும் ஒரு சிங்கத்தைப் பதினாயிரம் யானைகள் வளைத்துக்கொண்டாலும், தங்கத்தைக் குப்பையோடு மறைத்துக்கொண்டாலும், சிங்கத்திற்குந் தங்கத்திற்கும் பங்கம் வருமென்று உன் சிந்தையில் எண்ணாதே என்று பலவிதமாய் எடுத்துப் படித்து தவடையிலும் இடித்ததுபோல் பேசினான். அப்போது சூராதி சூரனும் அஸ்திர சஸ்திர சாமார்த்தியனுமாகிய கர்ணன் ஏதொன்றும் பேசாமல், எதிர்த்து வாயாடாமல், தலையெடுத்துப் பாராமல், சமயத்திற்குத் தக்கபடி சொல்லாமல், அர்ச்சுனனால் மடிந்த பிணமலைகளுக்குப் பின்னால் ஒதுங்கி, ஆமைபோல் பதுங்கி, அகதிபோல் நின்றான். அவன்கதி அப்படியிருக்க, வாசத்தேன் மருவிக் குலவிய, வசனத்தார் மாலை நிலவிய வீரத் தோள் பூரித் திலகிய வில்வேதியர் மகனென மருவிய அஸ்வத்தாமா வென்னும் அதிரத முதல்வன், பின்னிட்டோடும் விதனை முகத்தைப் பேணவுமாகாது. விழிக்கவுமாகாது.

விழித்து வசனிப்பது மிகுபர்வம் என்று அவ்விடம்விட்டு நீங்கித் தனது தந்தை முதலாகிய பெரியோர்களிருக்கும் சார்பிற் போய்ச் சார்ந்தான். இப்பால் அர்ச்சுனனிடத்தில் நடந்த அதிசயத்தைச் சொல்லுகிறேன் கேளும்.

### அர்ச்சுனன் தன்னெதிர் நிற்கும் படைக்கணுள்ள சத்துரு மித்துருக்களை உத்தரனுக் குணர்த்தி அறிவுறுத்தல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! பிற்பாடு விஜயவீர பராக்கிரமத்திற் சிறந்த கிரீடியானவன் பொற்சிகரங்கூடிய அனுமக்கொடியாகிய தேர்மீதிருந்து கர்னன் ஓடும்போது கைகொட்டி நகைத்த உத்தரகுமாரனை ஆ! ஆ! வென்று அதட்டினான். அந்த அமட்டலைக் கேட்ட உத்தரகுமாரன் கெர்ப்பங் கலங்கி, சர்ப்பம்போல் வளைந்து ஒருவாறு வாடி தாய் ஊட்டிய செவ்வெண்ணெயும் கழன்று, உறங்கியுழன்று ஒடுங்கி யழன்று, தேரில் சாய்ந்தான். இவ்வாறிளைத்த விராட புத்திரனைப் பாண்டு புத்திரன் பார்த்துப் பச்சாதாபங்கொண்டு, மெத்தவும் பயந்துவிட்டானென்று தன்னுடைய சித்தத்திற் றேர்ந்து, மகிழ்ந்த முகமும், குளிர்ந்த பார்வையும், கனிந்த சொல்லும், கசிந்த அன்புமுள்ளவனாய்ச் சொல்லுகின்றான். ஓ மச்சகுலத்திற் கணியாகிய மணியே! இச்செகத்தில் பிரகாசிக்கின்ற இரவி மைந்தனான கர்னன் என்னுடனெதிர்த்து அதிர்ந்து போர்புரிந்து வெறுங்கை வீணன் போற் பின்னிட் டோடிப்போனான். அவனோடிவிட்டானென்று நாம் அலட்சியமாயிருக்கலாகாது. இராஜ வீரர்கள் யுத்தத்தில் இளைத்து ஓட்டமெடுப்பதுமுண்டு. மறுபடியும் இளைத்துவந்து போர்கொடுப்பது முண்டு. இதன்றி அங்கர்கோனை அடித்துத் துரத்திய வாறுபோற் பெருங்காடென்னக் கலந்து நமக்கு நேரில் அடர்ந்து பெருமுழக்க மிட்டிருக்கின்ற சேனைகளுடன் அதிரதர் முதலாகிய வேந்தர்களையும்வென்றுஜெயம்பெறவேண்டியிருப்பதனால், இவ்விடத்திற் கூடிய பேர்கள் இன்னாரின்னாரென்று நீ தெரிந்துகொள்ளும்படிக்குச் சொல்லுகிறேன் கேள்.

ஓ மாலையணிந்த தோள்வாட்படை மைந்தனே! இதோ நமக்கு யெதிரிற் பாரிய தேரினில் வீற்றிருக்கும் வீரியர் நெய்த நிலக்கருப்பொருளாகிய பனையைக் கொடியிலெழுதிப் படைத்திருக்கின்றவர். தெய்வத்தன்மை பெற்ற அஷ்டவசுக்களிற் கனிஷ்டரானவர். இவ்வுலக முதலாகிய எவ்வுலகருங் கொண்டாடாநின்ற எங்கள் குலைத்தலைவர். இவரது தந்தையாகிய சந்தனு மஹாராஜனுக்குப் பரிமளகந்தியாருடைய போகநலங் கிடைக்கும்படியாய் விவாகம்பண்ணி வைத்தார். அந்த விவாக முன்னிலையில் இவர் அனுபவிக்க வேண்டிய சகல வைபவ சம்பிரமங்களையுஞ் சிறுவயதிற் கைவிட்டு, இராஜயோகமான விரதவழியில் நின்று வீஷ்மரென்று பேர் கொண்டு, மெய்வழிகண்ட மேன்மையோர்களால் மேன்மை பெற்றவர். இவர் எந்தக்காலத்தில் இறக்கவேண்டுமென்று எண்ணுகின்றாரோ? அந்தக்காலத்தில் எமதர்மராஜன் இவரிடத்திற்கு வரவேண்டுமல்லது, மற்ற ஆத்மகோடிகள்போற் கருதி வரப்படாது. இப்பேர்ப்பட்ட மேலான வரத்தையும், ஆசீர்வசனத்தையும் சந்தனு மகாராஜனாற் தந்தருளப் பெற்றவர். இவ்வுலகத்தில் இவரெத்தனை நாளைக்கு இருந்தாலு மிருக்கலாம். இவர்தானையா எங்கள் மூதாதையாகிய பாட்டன்.

ஓ சத்துவகுண புத்தி நுட்பத்தாற கற்றறிவுடைய உத்தரகுமாரனே! இந்த வீஷ்மருக்கு அண்டையில் நான்கு வேதத்தையும் பொரித்த நான்மறைக்கொடி தரித்த சக்கரத் தேர்மேல் அமர்ந்திருக்குஞ் சுவாமியவர்கள், தேன்சாறுபாயு மாஞ்சோலைவீறு பாஞ்சால தேசத்தையாளுந் துருபதராஜன் கொண்டகர்வத்தைப் பங்கப்படுத்தினவர். அறுபத்துநான்கு கலைஞானங்களும் ஐயந்திரிபில்லா விருத்திப் பொருளுடன் ஆராய்ந் துணர்ந்தவர். தேவதாஸ்திரங்கள் முற்றும் ஸ்திரம்பெறத் தேர்ந்தவர். சம்பிரதாயத் தனுவேதமோர்ந்தவர். திரவிய சம்பன்னர்களாகிய பங்குவர்களுக்கு சிலைத்திறந் தெரிவிக்கும் விற்குருவானவர். முடிதாங்கிய தேவர்களும், படியோங்கிய முனீஸ்வரர்களும் பணியும்படியான பதம் பெற்றவர், உத்தம க்ஷத்திரிய குலத்தி லுற்றவர்போல வெற்றி வாகையைப் படைத்த வீரப்பிரதாபர். மதாணி முதலிய ஆபரணங்களை யணிந்தவர். இவர்தானையா எங்களுக்கு விற்குருவாகிய துரோணாச்சாரியர்.

ஓ மச்ச நாட்டினர்க் குச்சிதப்பேறே! சங்கிராம விற்குருவான துரோணாச்சாரியருக்கும் கங்கா புத்திரரான வீஷ்மாச்சாரியருக்கும் நடு

வில் வெள்ளைக்கொடியும், பொன்னிற முடியும், வீரபட்டமும், வேகப்புரவியும் பூட்டிய மேகமளாவிய வெண்கலத்தேரோட்டி ஊக்கத்துடன் வந்திருக்குந் தீர்க்கமும், அமுதங் குலாவிய மதிமுகமும், குமுதமனைய சிறுநகையும், குலவிய குறுவியர்வும், பெருமித வருள் விழியும், பற்பல மணியாற் செய்த ஆபரண அலங்காரமும், பார்த்தவர்களைப் பாதுகாக்கும் பிரம தேஜசும், பணைத்த தோளும், வீரகண்டை தரித்த தாளும், சௌந்திரிய காந்தியும், தவமும்-ஜெபமும்-வரமும்-உரமும்-பொறுமையும் உடையவர்; தனுர்வேதத்திலும், மனுவேதத்திலும், சமர்வேதத்திலும், சதுர்வேதத்திலும் நிபுணரானவர். இவர்தானையா இந்தக் குவலயமெல்லாங் கொண்டாடுங் குணநிதியாகிய கிருபாச்சாரியார்.

ஓ உத்தம குணத்திற் சிறந்த உத்தரகுமாரனே! இந்தக் கிருபாச்சாரியருக் கண்டையில் நிற்கின்ற அழகிய தேராளியானவர், பஞ்சபாணந்தரித்த மன்மதனென்று சிலர்பேச, வேலாயுதந் தரித்த பாலசுப்ரமணியரென்று பலர் சொல்ல, சோடசகலை நிறைந்த சந்திரனென்று சிலர் துதிக்க, வச்சிராயுதந் தாங்கிய இந்திரனென்னப் பலர்மதிக்க மூதிண்ட நடுநுகுங் கோதண்டராமனென்று சிற்சிலர் கொண்டாட, பிதுர்வாக்கிய பாலனஞ்செய்த பரசுராமனென்று பற்பலர் வந்திக்க, இப்படிக்கு எப்புவனமுங் கொண்டாட ஒப்புவமையில்லாத தோற்றம்படைத்த புண்ணியன். முப்புரமெரித்த எப்பொருட்கு மிறையான முக்கண் மூர்த்தியின் திருவருட்பயன் பெற்ற காளை. ஒரு க்ஷணத்திற் றிரிபுவனத்தையும் அழிக்கவல்ல குழக்கன்றுபோன்ற அஸ்வத்தாமா. எங்கள் குருவான துரோணச்சாரியருடைய குமாரன் இவர்தானையா எனக்குரிய அரிய பரிவிய மித்திரன்.

ஓ சாதுசங்க சற்சனர்மேவு நேயனே! இப்போது நான் சொல்லிவந்த வித்தக வீஷ்மரும், இரண்டாசிரியரும், அஸ்வத்தாமாவும், என்னிடத்தில் அருமைப் பாராட்டி அன்பு வைத்திருக்கின்றவர்கள். இவர்களுடைய குற்றமற்ற விற்றிறத்தை குறிக்க விண்ணவரானும் முடியாது. அப்படிக் கிருந்தபோதிலும், அவர்களுடன் போர்புரிய வேண்டிய அவசியம் தற்காலத்திலில்லை. இன்னும் நாம் வெல்லவேண்டிய அசாமிகள் வேறிருக்கின்றார்கள். அவர்களை முன்பின் பாராமல் மூதலறக்கொன்று வெற்றி பெறுவது நமக்கு மேலாகிய கீர்த்தியாம். அன்று பூர்த்தியாகப் போர்புரிந்து புகழுறச் செய்வோமாகில், நல்ல திடத்தையும், திறத்தையும், அறத்தையும், மகிமையையும் நமக்கு விளக்காமற் போகாது. ஆகையால், நாம் வெல்லவேண்டிய மேவலரைச் சொல்லுகிறேன் கேள்.

ஓ உலகமதிக்கச் சிறப்புற்றோங்கிய உத்தம குலப்பேறே! இதோ உனக்கு நேராக நீலக் கொடியாடை பறக்கும் தேரிலிருப்பவன் வணங்காமுடி மன்னனை மயக்கி, அவனது மதியைக் கசக்கி, தன் வசமாக இணக்கி, இந்திரப்பிரஸ்தத்திலிருந்த எம்மை வரவழைத்து வஞ்சக சூதாடச்செய்த கொடும்பாவி அப்போது அத்துரியோதனனுகிய தன் மருமகனைக் கொண்டு மகாமன்னர்களும், மாநகரச் சனங்களும் ஒன்றுபட கூடியிருந்த மகாசபையில் எங்களை கண்கலங்கும்படியாய் இயற்றிய காதகன் காந்தாரதேச வீரன்; சவுபலராஜ குமாரன்; எங்கள் சமஸ்தானத்தைக் கெடுக்கப் புகுந்த கறுப்பன்; கபடமென்பனவற்றை யெல்லாம் அடைத்து வைத்த குடுக்கை; கடைவால் விஷங்கொண்ட செந்தேள்; ஒருகாலத்தும் நம்பப்படாத உரகம்; இவன்தானையா சகுனி யென்பவன்.

ஓ சுதர்க்கண்ணுதேவி தனயனே! அந்தச் சகுனி மாமனுக்குச் சமீபத்திற் குச்சிதமில்லாக் கெச்சைகொடியோடு அச்சடித்ததுபோ லுச்சித விற்பிடித்துப் பொற்சிகரத்தேரேறி விசித்திரப்பணி பூண்டிருப்பவன் நச்சரவக் கொடியோனுக்குக்கனிட்டன்; இளவரசு பட்டங் கட்டிக்கொண்ட அனிட்டன்; சர்வதந்திர உபாயன். சகல சுதந்தரநயன். பழிபாவத்திற் கஞ்சாத துச்சாதனன். இவன்தானையா பாஞ்சாலி மயிரைப் பற்றியிழுத்து கன்னியாக விருந்த சபைக் கேற்றிவைத்து வஸ்திர பங்கம் பண்ணிய புண்ணியவான்.

ஓ விவேகத்திற் சிறந்த விராடகுமாரனே! அதோ ஈசான திசையிற் பன்றிக்கொடி பறக்கச் சண்டைத்தேரேறித் துச்சாதனனுக்கு அண்டையிலிருப்பவன் துரியோதனன் முதலாகிய நூறுபேருக்கு மச்சான்; இவர்கள் தங்கையாகிய துச்சலையைக் கலியாணம் செய்து கொண்ட தோன்றல்; சிந்துதேசராஜ சயத்திரதன்; இவன் எங்களாற் பெற்ற வெகுமானங்களையுஞ் சன்மானங்களையும் மறந்து நாங்கள்

காட்டிலுறைந்து வேட்டைபோ யிருக்கும் போது முறைதுறை பாராமல் திரௌபதியை யெடுத்துப்போயினன். அந்தச் சங்கதியைக் கேட்டுவந்த நாங்கள் ஓட்டமாகச் சென்று, இவனைக் கண்டுபிடித்து வாட்டப்படுத்தி, இவன் மயிர்முடியை ஐந்து சிகைவைத் தரிந்து, முகத்திற் புள்ளியிட்டு, பேரும்வேறி ட்டு, தருமராஜனுக்கெதிரில் நிறுத்திக் கட்ட விழ்த்து,வெட்டவெளியில் வேணமட்டும் அவ மானப் படுத்திவிட்டுத் துரத்தினோம்.

ஓ மச்சராஜன் மாதவப்பேறே! இப்பால் வாயுமூலை மடக்கில் வாலசூரியன் போற் பிர காசித் திருக்கின்றவன் காந்தாரி திரிதராஷ்டிர னென்னுஞ் சேற்றிற்பூத்த பலதினுசு புஷ் பங்களிற்சிறந்த ஒரு செங்கழுநீர் புஷ்பத்தை யொப்பப் பிறந்திருக்கின்ற விகர்ன்னன். இந்த நீதிமான் நெறிமுறை தவறுமவுன்னி, பாவ புண்ணியங்களெண்ணி, திரௌபதி கேட்ட கேள்விக்கு இராஜசபையில் நியாயஞ்சொல்லி, பாஞ்சாலிபட்ட சஞ்சலத்தை மாற்றித் தேற்றி விட்ட தருமவான். இவனை இவ்வுலகத்திற் புகழாதவர்களில்லை.

ஓ புத்தியிற்சிறந்தபுரவலரேறே! இதோ நமது தேருக்கெதிராக நட்சத்திரக் கூட்டம் போற் பற்பல தேர்களின்மேல் விளங்குகின்ற பசங்கள். துரியோதனனுக்குத் தம்பிமார்கள் காலாந்தகரென்றுகருதுவதற்குத் தடையில்லை கொடிய துஷ்டாள். அதோ தத்தித்தாவென வாடும் குதிரைகள் பூட்டிய ரதத்திலமர்ந்த வன் சோமதத்தன். இதோ தித்தித்தோமென னீளுஞ் சித்திரவில் வளைப்பவன் அச்வசே னன். அதோ தென்புற நிற்பவர்களியாவரும் தேசராஜ போஜர்கள்.

ஓ விராடராஜன் மைந்தனே! இப்போது நானுனக்குக் காட்டிய இவர்களை யெல்லாம் எதிர்த்துச் சண்டை விளைத்து திக்காலொருவ ராய்க் குலைத்தோட வடித்து, மந்திரகிரியாகிய பாற்கடல்போர் மத்தாலடிப்பட்டலைபட்ட ஒருகணப்பொழுதில் உறுமாறிச் சுழலவிட்டுக் கலக்குகின்றேன். நீ சற்றே மனங் கொண்டு காண் என்று சொல்லி தன்னுள்ளக் கருத்தையும் அவனுக்கு விள்ளும் படியாய் இவ்வாறுரைசித்துரைப்பதாயினன். அஃதெவ் வாறெனில், யுத்தமுனையி லடிபட்டு யோடிப் போன கர்ணனைக்கண்டு உத்தரன் கைகொட்டி நகைத்தானுதலாலும், இனிமேல் வீஷ்மர்-துரோணர்-கிருபர் - அஸ்வத்தாமா இவர்கள் நால்வருந் தன்னோடெதிர்த்து சண்டை விளைத்து அடிபட்டுப் புறங்கொடுத்தோடப் போகிறார்களென்று தனக்கு நன்றாய்த் தெரிந் திருக்கின்ற படியாலும், ஒருவேளை யப்படி யோடும்போது, இந்தச் சாரதி கைகொட்டிச் சிரிப்பானாகிற் குலமுதல்வனான வீஷ்மர் முத லாகிய பெரியோர்கள் தங்களிடத்தில் அன்பு வைத்தவர்கள், அவர்களுக்கு வந்த குறைவும் அவமானமுந் தனக்கு வந்ததுபோலாம். ஆத லால், அவர்களிடத்தில் பக்ஷமிச்ச மானதால் அம்மச்சராஜ குமாரனுக்கு அச்சமுண்டாகப் பேசி, மற்ற சத்துருக்களையுந் தெரிவித்து, இச்சத்துருக்களைமாத்திரங்கண்டு நகைத்தால் அதனால் தாழ்ச்சி யொன்றுமில்லை யென்று எண்ணிய தன்கருத்தை உத்தரனுக்குக் காட்டி, பெரியோர்கள் பேரிலிருக்கின்ற பட்சமும், துரியோதனாதிய ரென்று பகைவர்மே லிருக் கும் அபட்சமும் வேறு வேறு விதமாகவும் வெளிப்படுத்தி, அப்பா உத்தரகுமாரா! இப் போது பரிசுத்தவான்களாகிய ஆசாரிய புரு ஷர்கள் பேரில் எதிர்த்துப் போராடவேண் டிய கருத்தை யொழித்து மற்றவர்கள் பேரில் யுத்தஞ் செய்யவேண்டி யிருப்பதால், நமது தேரைச் செலுத்து. ஒரு க்ஷணத்தில் அவர் களை யெல்லாம் வென்று ஜெயம் பெறலாம் என்று சிந்தை மகிழ்ச்சிகொண்டு செப்பினன்.

இப்படிக்கு சொல்லிய சுப்ரதீபம் போன்ற அர்ச்சுனனது கருத்தை உத்தகுமாரன் மிகு ந்த நுட்பமாயறிந்து, தான் நகைத்ததைக் குறி த்து மிக பயந்து இளைத்து, தன்னிடத்தில் அர்ச்சுனன் கலந்து பேசினனென்று தன்னை மறந்துபோகாமல் ஜாக்கிரதையாய் மரியாதை யுடன் அடங்கி, அர்ச்சுனன் உரைத்து வாய் மூடுமுன்னமே மனோவேகத்திலும், வாயு வேகத்திலும் மிஞ்சும்படிக்கி அஸ்வங்களை முடுக்கி மண்டலம் அதிர, எண்டிசை பிதிர, அண்டர்கள் ஒதுங்க, மண்டர்கள் பதுங்க, கடலேழு மதிர, கனமேழு முதிர, கதிர்மதி வெருவ, கல்லின முருவ, கடகட - தடதட படபட-மடமட வென்றோட்டி, தடமகுட வர சர் படைகளை யெல்லாஞ் சாய்த்து, மகா உக் கிர பராக்கிரமத்துடன் சக்கரங்களினின்றும் கர்க்கத்தொனி யெழும்பும்படியாக விரை வுடன் ரதத்தை விடுத்தான்.

## துரோணாச்சாரியருக்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

இந்தப்பிரகாரம் உத்தரகுமாரனுக்குத் தெளிவுண்டாகும்படியாய்த் தெரிவித்துப் போர்மேல் வருகின்ற தீரன் கருத்தையும், அவனேறிய செம்பொற்றேரின் வேகத்தையும், சேனைகளின்பேரிற் செல்கின்ற மர்மத்தையும் ஆழ்ந்த கேள்விகளா லுயர்ந்த துரோணாச்சாரியர் கண்டு தன்னருள் கொண்டு பெற்ற தந்தையாயினோன் பிள்ளையை நாடிப் போவதுபோல் தன்னுடைய தேரைச் செலுத்திக்கொண்டுபோய் அர்ச்சுனன் தேருக்கு நேர் சென்று நின்று மறித்து, அப்பா அர்ச்சுனா! நாங்களெல்லோரும் உனக்கு நேராக விருக்க, நீ எங்களை விட்டுவிட்டு எங்கே போகின்றாய்? நீ எப்படி ஒதுங்கிப்போனாலும் நானுன்னை விடமாட்டேன். என்னுடன் யுத்தஞ் செய்ய வா என்று வில்லை வளைத்து, நாணிதொடுத்து ஷ்டங்காரங் காட்டினார். இந்தப்படிக்கு வார்த்தையாடிச் சண்டை செய்யவந்த துரோணாச்சாரியைத் தருமராஜனுக்கிளைய தனஞ்செயன்கண்டு தேர்விட்டிழிந்து, அன்புகூர்ந்து சிந்தை மகிழ்ந்து, செந்தாமரைக்கமலம் போன்ற அவர் திருவடியிற் பணிந்து, கரங் குவித்துத் துதித்து, ஓ அந்தணர்க்கரசே! தேவரீரனுக்கிரகத்தாற் பன்னிரண்டு வருடம் வனவாசமும், ஒருவருடம் அக்கியாதவாசமும் கழித்து வெளிப்பட்டோம். இனிமேல் தர்மா தர்மந் தெரிந்து நடப்பிக்கவேண்டிய கடமை. தங்களைப்போன்ற பெரியோர்கள் தன்மை. அப்படிக்கிருக்க, யாதொரு காரியங்களும் இன்னதென்றறியாத வென்னை எல்லாந் தெரிந்தவனென்றாக்கி, இவனுக்கு மிஞ்சிய செஞ்சிலைவீரர்கள் இவ்வுலகத்தும் எவ்வுலகத்தும் இல்லையென்று துதித்து, பல்லோரும் புகழும் நல்லோர்கள் கொண்டாடும்படியாய் வில் வேதமும், அஸ்திர சஸ்திர சத்தியும் குற்றமறக் கற்பித்தருளிய சத்திய வுண்மைச் சம்பன்ன தேசிகனாகிய தேவரீர்; என்னை மறித்து ஒரு பொருளாக மதித்து, யுத்தஞ் செய்யப் பகைத்து வரத்தக்கதோ? ஐயனே! அடியேன் பயமில்லாமல் வெளிவந்தது, என் குல ஸ்வாமியாகிய தங்களோடு உருத்து, என் கையில் விற்பிடித்து, நாணிதெறித்து, கணைகள் விடுத்து, தேவரீர்க் கீடாகப் பூசல் புரியத்தக்க விதரணையும் பெற்றிருக்கின்றேனோ? ஓ விற் குருவாகிய வேந்தனே! ஓ வேதியகுல சாந்தனே! அப்படிக்கல்ல வென்று என்னறிவினைத் தாலெதிர்த்து, அடித்துப் போர்விளைத்து, ஆசாரியராகிய தமது திருவடிக்குத் துரோக நினைப்பேனாகில், அது பஞ்சமா பாதகத்தில் ஒன்றாகிய பெரும்பாவமல்லவோ? ஓ பாபரகித புண்ணியவானே! என்னுடைய வெண்ண மென்னவென்றால், தேசராஜ வீரர்களுடன் சேர்ந்து, நால்வகைச் சேனைகளுடன் புகுந்து, விராடராஜனது மாட்டுமந்தைகளை மடக்கிய துரியோதன ராஜனையும், அவன் தம்பிகள் முதலாகிய போர்களையும் வளைத்துக்கொண்டு, இடியுடனிடி - மின்னலுடன் மின்னல் - மேகத்துடன் மேகம் எதிர்த்து எரிந்து புகைந்தெழு மாறுபோர்ப் போர்த்திறங் காட்டி பார்த்து, தேவரீர் உபதேசித்தருளிய மந்திரக் கணைகளைத் தொடுத்து, அவர்கள் உயிரை வதைந்துக்கொடுத்து, எமலோகத்திற் குடிபுக விடுத்து இணையில்லாம விருப்பதல்லாமல், தேவரீருடனேயும், கிருபாச்சாரியருடனேயும், தேவாள் குமாரனாயும் என் சினேகனாயு மிருக்கின்ற அஸ்வத்தாமாவுடனேயும், பாட்டனாராகிய வீஷ்மருடனேயும் சண்டை போடப்படாது. அப்படிக்கு ஒருவேளை சண்டை செய்ய நேரிடுமாகில், அது தர்மமல்ல. தகுதியான தன்மையுமல்ல. எனக்குக் கொடிய பாவத்தைக் கூட்டிவைக்குமென்று என்றென்றைக்கும் சத்தியமாய் எண்ணியிருக்கின்றேன். ஆதலால், ஓ முனிசிரேஷ்டரான மூதறிவோனே! என்பேரிற் கிருபைகூர்ந்து சற்றப்பாற் போகத் தயைபுரிய வேண்டுமென்று வணங்கிச் சொல்லினான்.

இப்படியாக அர்ச்சுனன் சொன்ன மொழியனைத்துங் கேட்ட துரோணாச்சாரியார் சற்று நேரம் வரையிலும் புத்தியில் நிதானித்து, சம்மதியாகிய பேரன்புடன் நிம்மதியா யிருந்து, பின் எம்மதியுந் தோன்றாமல் நன்மதியோடு ஆசீர்வதித்து, விண்மதிக்குலத்து வேந்தனை விஜயராஜனே! என்னிஷ்டம் எப்போப்பட்டதெனில், ஒருவனுக்கு யுத்தகளத்தில் உனக்காக உழைக்கிறேனென்று உறுதியாகச் சொல்லி, அவனுடைய உப்புந் தண்ணீருமுண்டு, அவனுடைய நன்மை தீமைகள் என்னுடையது என்று நான் சமயம் வந்தபோது அவனுக்கு துரோகம் பண்ணாமல் உடன்பட வேண்டும் என்பதுதான். இதுகாரியம் உனக்குத் தெரியாமலிராது. ஆதலால் துரியோதன ராஜனுக்குச் செஞ்சோற்றுக்கடன் கழிக்கும்படியாய்

அமர்தொடங்கி, படுகளத்திற் சீஷனென்றும், பிள்ளையென்றும் ஒப்பாரி பாராமற் கலகம் புரியத்தக்க காரணம் வந்து நேரிட்டிருக்கிறது. ஆதலால், நீ தேவேந்திரன் முதலிய தேவர்களை யெல்லாம் வருத்தப்படுத்தித் திரிலோகத்தையும் பயமுறுத்தி நடுங்கப்பண்ணிக் கொண்டிருந்த காலகேய நிவாதகவசர்கள் மூன்றுகோடி அறுபதினாயிரம் பேர்களை ஒரு க்ஷணத்தில் மடித்து ஜெயக்கொடி பிடித்து, சிவசுப்ரமணியக் கடவுள்போல் தேவசேனாதிபதி பட்டமுங் கிரீடியென்னும் பெயரும் பெற்றுச் சிறப்படைந்தா யென்று சில நாளைக்கு முன்னே கேட்டு சிந்தை மகிழ்ந்திருந்தேன். அந்தத் திறமை எப்படிப்பட்டதோ? அம்முறைமையை எனக்கு காண்பிக்கவேண்டும் என்று வருந்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். அதற்கு நீ உடன்படாவிட்டால் உனக்குக் கோபம் பிறக்கும்படியாய் நான் முன்னுதாய் உன்னை அடிக்கிறேன் பார் என்று மகம்மேருவனைய தமது வில்லை இருகுதைகளும் பொருந்த வளைத்து, இந்து முகாஸ்திரம்-இந்திர மோகாஸ்திரம்-கொந்தமலர்ப் பகழிகள்-கூர் வாயம்புகள்-சதா கதிர்ச்சரங்கள் - சக்ஸ்திர முகபாணங்கள் இவை முதலியவைகளை யெடுத்து, வந்தித்து-மந்திரித்து - அநுசந்தித்து, செந்தூள் கருந்தூளெழும்ப மந்திர வரையனைய தேரை வலமிடமாக மாறி விடுத்து, வானமும் பூமியும் மழைபோ னிறையும்படி வாசாமகோசரமாக வாரி வாரி இறைத்து, சாரதி குதிரைகளைச் சற்றுந் தெரியவொட்டாமல் மறைத்து தனுவேத சாகசமெல்லாங் காட்டினார். இப்படி தாமே மிஞ்சிக் காட்டிய உத்தமகுணத் துரோணாச்சாரியைக் கொற்றவர் முதலிய பலரும் மெத்தப்புகழ்ந்து, சித்தமுவந்து கொண்டாடி, இத்தினம் அர்ச்சுனன் இற்றனன், அற்றனன், செற்றனன் என்று சிறந்து கூத்தாடினார்கள். இதல்லாமல் ஆகாய நிறைய வேடிக்கை பார்த்திருந்த தேவேந்திரனுந் தேவர்களும் பாண்டுமுதலாகிய பார்த்திபர்களும் பரதவித்து, ஆ! ஆ! ஆ! துரோணாச்சாரியர் இதுவரையிலும் இப்பேர்ப்பட்ட விற்றிறங் காட்டிய வீரத்திறம் கண்டறியோம். ஐயோ! சீஷனாகிய விஜயனுடன் வேடிக்கையாய் பேசி வீணச்சண்டை விளைத்தாரே என்று மேன்மேலும் பேசிக்கொண்டார்கள்.

இவ்வாறு பலம்பெற்ற பாணங்களைப் பொழிந்து யுத்தஞ் செய்கின்ற துரோணாச்சாரியைச் சுத்த வீரனான பார்த்தன் பார்த்து, சுவாமி! அடியேன் தேவரீருடைய அடிமை புத்திரனென்று முடிதாழ்த்தி வணங்கினேன். தேவரீர் என்னை மன்னிக்காமற் சன்னல் பின்னலாய்ச் சரவருஷம் வருஷித்து விட்டீர். இனிமேல் தன்னைத்தான் தப்பித்துக்கொள்ள வேண்டியது தர்மமே. தாமறியாத காரியம் ஒன்றில்லை. என்பேரில் தப்பிதமுமில்லை. நீர் ஜாக்கிரதையாய் இரும் என்று தனிப்புலி போற் குமிறி இரைந்து புருந்து விரைந்து தேரூர்ந்து புகழெய்திய பிரதாப வில்லை பிடித்து நிறுத்தி நாணிமாட்டி, ஷ்டங்காரங் காட்டி, நானாவிதமாகிய நாராசக் கணைகளை பூட்டி, நாராயணமந்திர மேற்றி, நான்கு குதிரையு நடுங்கமுடுக்கி, துரோணாச்சாரியர் தொடுத்த பாணங்களத்தனையுங் கொள்ளைபோற் குனிந்து, எள்ளைப்போல் இடிந்துபோகச் செய்தான். அவனது பாணத்திறத்தைப் பார்த்த துரோணாச்சாரியரும், ஆசாரியபட்ச மறவாத அருச்சுனராஜனும், ஒருவருக்கொருவர் குறுகி நேரிட்டு, புயமிரண்டும் பூரித்து மேலிட்டு, மலைபோன்ற வில்லானது பிறை போன்று வளைய நாணிபிகிந்து, ஆகர்ணபரியந்த மிழுத்து, வருஷகாலத்து மேகம்போற் கோடாகோடி சரங்களை ஒருவர்மீதொருவர் ஓயாமற் சொரிந்தார்கள். இப்படி கையோயாமற்பொழிந்த அதிரதத் தலைவர்களிற் பயமுகராகிய துரோணாச்சாரியரும், நயமுகனாகிய காண்டீபனும் பட்டபடத்து விட்ட பகழிகளானது, சிடசிடத் தெழுந்து சீறிப் புகைந்து, தீப்பொறி மிகுந்து, சினங்கொண்டு புகுந்து, கதிர்முனையிற் கடுவாயு வேகத்தைக் கலந்து, கலகலவென்று நேருக்குநேர் சென்று முனைந்து, ஒன்றினோடொன்று உருய்ந்து, ஒன்றினோடொன்று விராய்ந்து, ஒன்றையொன்றுபற்றி, ஒன்றையொன்று எற்றி, ஒன்றையொன்று கிழித்து, ஒன்றையொன்று அழித்து, ஒன்ருலொன்று கலந்து, ஒன்ருலொன்று அலைந்து, இதுவுமதுவும் அதுவுமிதுவுமாகப் பிசறிக்கொண்டு போய்ப் பிரித்துப் பேசக்கூடாமலிருந்த தல்லாமல், அருச்சுனன்பேரில் துரோணர் பாணமும், துரோணர்பேரில் அர்ச்சுனன் பாணமும் பட்டதில்லை.

அப்பால் வேதக்கொடியாகிய சூரியன் தேருக்கொப்பான தேர்மேலேறிய துரோணாச்சாரியரும், அனுமக்கொடி சூடிய இந்திர விமானத்திற் கொப்பாகிய இரதத்திலேறிய

அருச்சுனராஜனும் கரகரவென்று தேரைச் சுழற்றி சரசரவென்று மீண்டுஞ் சில நேரஞ் சரமாரிபொழிந்து, துரோணாச்சாரியர் இந்திராஸ்திரம் எடுத்து மந்திரிந்து விட்டார். அர்ச்சுனனு மற்றோ ரிந்திராஸ்திரம் விடுத்து அதைக் கெடுத்தான். துரோணர் அக்கினியாஸ்திர மெடுத்துத் தொடுத்தார். அர்ச்சுனன் வேறோரக்கினியாஸ்திரந் தொடுத்து அதைத் தடுத்தான். துரோணர் சூரியாஸ்திரஞ் வீசினார். அர்ச்சுனனுஞ் சூரியாஸ்திரம் செலுத்தி அதைத் துகளாகப் படுத்தி சந்திராஸ்திர மொன்றெடுத்து உந்தினான். துரோணருஞ் சந்திராஸ்திரம் போக்கி அதைச் சிந்தி, வருணாஸ்திர மெடுத்துத் தாக்கினார். அர்ச்சுனன் அதை வருணாஸ்திரம் பூரித்து மாற்றினான். துரோணர் வாயுக்கணை யொன்று தூவினார். அர்ச்சுனன் வேறு ஓர் வாயுக்கணையேவி அதைக் குறைத்தான். இந்தப்பிரகாரம் மேலுமேலுங் கருடாஸ்திரம்-நாகாஸ்திரம்-மேகாஸ்திரம்-பர்வதாஸ்திரம்-மோகாஸ்திரம்-விருக்ஷாஸ்திரம்-கமலாஸ்திரம் முதலிய தேவதாஸ்திரங்களை வீசி, தெய்வலோகத்தார் மெய்ம்புளகுற்று வாழ்த்தும்படிக்கு வெகுநேரந் திரிந்து, ஒருவரையொருவர் பிரிந்து, மறுபடியும் போர்புரியப் பரிந்து ஆர்ப்பரித்துப் பாணந் தொடுத்தார்கள். அதேனெனில், நல்ல புத்திமான்களிடத்திற் கல்வி முதலியவற்றைப் பேசப்பேச ஆசைபிடிக்கு மாறுபோல், வீரனுடன் வீரனெதிர்த்து போர் கொடுக்கக் கொடுக்க வீராவேச மேறுகின்ற விதத்தால் துரோணாச்சாரியர் பிராணபதமான விஜயனைப் புகழ்ந்து, ஓர் சூரியாஸ்திரமெடுத்துத் தொடுத்தார். அர்ச்சுனன் ஓர் மேகாஸ்திரம் விடுத்து அந்தச் சூரியக்கணையின் வெப்பத்தை யொடுக்கி, காளகூடம்போற் கறுத்து மின்னல் இடியுடன் வெள்ளம்பொழியப் பண்ணினான். அந்த விஜயனுடைய பாணத்தின் விந்தையைக் கண்ட துரோணாச்சாரியர் ஓர் வாயுவாஸ்திரத்தை மந்திரித்து விடுத்து, மேகாஸ்திரத்தைச் சிதறவடித்தார். ஆசாரியரேவிய வாயுக்கணை அனர்த்தம் பண்ணுவதை அர்ச்சுனன் கண்டு, வாயு பக்ஷணஞ் செய்கின்ற நாகாஸ்திரத்தை விடுத்து நாசம் பண்ணினான். நரனுந்திய நாகாஸ்திரத்தைத் துரோணாச்சாரியர் பார்த்து நடுங்கி, ஓர் கருடாஸ்திரமுய்த்து அதனைக் கெடுத்தார். இக் கருடாஸ்திரக் கடுமையைக் காண்டீபன் கண்டு கலகலவென்று நகைத்து, நாராயணாஸ்திரத்தால் அதை யடக்கி தன்மையுண்டாகச் செய்தான். இவ்வாறு கருடாஸ்திரத்தைக் காண்டீபனொடுக்கிய கதியைக் கண்ணுற்ற தனுவேதியரும், அர்ச்சுனனும் பின்னும் வேறு வேறு சத்துருமித்துருவான அஸ்திரங்களை யறிந்து, உத்தம மத்திம யந்திர மந்திர மார்க்கமுந் தெரிந்து, மனங் களிகூர்ந்து, மறுகாலுந் தேரூர்ந்து, வலமிடஞ் சுழன்று, கர்க்கரத் தொனியுடன் கலகலவென்று சப்தித்து, இருவர் தேரு நெருங்க, இருவர் வில்லுங் குனிய, இருவர் நாணியு மொலிக்க, இருவர் சண்டையுங் கலிக்க, பூமியும் பொருப்புங் கிடுகிடென்றதிர, தாராகணங்கள் பலபலென்றுதிர உலக மதிக்கக் கலகம் விளைத்தார்கள். இவ்வாறு இருவரு மேவிய பாணங்களெல்லாஞ் சக்கிரவாளம் வளைந்த தடமெல்லா நிறைந்து, பேராசை பிறந்து, அண்டச்சுவரடங்கலுமுட்டி, எட்டுத்திசைமட்டுமெட்டி, மட்டுப்படாமல் வாட்டி நின்றன. இதன்றியும், முப்புரத்தை எரித்தருளிய தற்பரனுதற்கண்ணிற் பிறந்த அக்கினிப்பொறிக் கிணையாகச் சிறந்த அந்தப் பாணாக்கினியின் வெப்பத்தினால், மகர முதலாகிய மச்சங்களுக்காதாரமாகிய கடலும் பரந்து விரிந்த பாதாளத்தினீரும், மேலுலகடைந்த ஆகாய கங்கையும் வறண்டதென்று பேசுவதற்கு வாய் கூசாமற் சொல்லுவார்கள்.

இப்படி துரோணார்ச்சுனர்க ளிருவரு முனைந்தபோது, ஓட்டம்-கோணம்-வட்டம்-வளைவு-இருகல்-மாறல்-முன்செல்லுதல்-பின்செல்லுதல் முதலாகிய தேரோட்டத்தை அவர்கள் சாரதிகள் காட்டுந் தன்மைகளினால் பூமி பிளந்து ஆதிசேடனுடைய ஆயிரம் பணாமகுடங்களு முடைந்து, திசைகளுந் திக்குமுக்கிட்டசைந்து, மேருவுங் குலுங்க, ஈரேழுலகு மலங்க, காட்டிலுள்ள மிருகங் கலங்க, நாட்டிலுள்ள யாவரு நடுங்க, வித்தெனப் பரவிய நக்ஷத்திரங்கள் கொத்துக் கொத்தாய் முத்துப்போலுதிர, இத்தன்மையான யுத்தஞ் செய்தார்களென்று யாவருஞ் சொல்லுதற் கிடமில்லாமல், வல்லமையேறிய வில்லாளர்களும் வல்லாளர்களும் சொல்லாமல் ஓடும்படி நேரிட்டது. அந்த வேளையில், துரோணாச்சாரியருடைய சேனைகளானது, கடல்போலிரைந்து பூரித்துப் பொங்கி உருத்திர சன்னதங்கொண்டு, தேவேந்திர குமாரனாகிய சிலைவீரனை வளைத்து, அவனது தேர்ச்

சக்கரங்களைத் துளைத்து, ஈட்டி - தோட்டி - துறட்டி-பாலா-பல்லயம்-தண்டாயுதம் - சக்கராயுதம்-வேலாயுதம்-காலாயுதம்-வாளாயுதம்-சூலாயுதம்-மழுவாயுதம்-எழுவாயுதம் - கொழுவாயுதம்-வச்ராயுதம்-பிச்சுவா-கட்டாரி - வளைதடி-குடுதடி-குண்டாந்தடி-பாணத்தடி-முறுக்குந்தடி-இருப்புத்தடி-கிலுக்குத்தடி - உக்குலக்கை - செக்குலக்கை இன்னும் பற்பலவாகிய அஸ்திர சஸ்திரங்களுங் கொண்டு மோதி அமராடியபோது, அந்தர வாசிகளாகிய தேவர்கள் ஆச்சரியங்கொண்டு, இப்படி யுத்தஞ்செய்கின்ற சேனைகளின் ஆச்சரியங்கண்டு, இது என்ன காரணத்திற்கோ இப்பேர்ப்பட்ட விபரீதச் சண்டை யுண்டாகியதென்று ஏக்கங்கொண்டு பார்த்திருந்தார்கள். அந்த வேளையிற் கலங்காக் கருத்தினனாகிய காண்டீபனும், குந்திமாதேவிக்கு நடுப்பிறந்தோனாகிய புத்திரசிகாமணியும், நாராயணனுக் கொப்பாகிய நரனும், நான்முகனுக் கொப்பாகிய வரனும், நானிலம்புகழுங் கோமானும், வானில மகிழுஞ் சீமானுமாகிய அர்ச்சுனன் சற்று நகைத்து, இதுவுமொரு நிமித்தமென்று பார்த்து, மட்டுப்படாதனவாகியும், எதிரிகளினால் வெட்டுப்படாதனவாகியும் விளங்குகின்ற வெகுவாகிய வீரங் காட்டி, வெங்கனலைக் கொப்பளிக்கும் அம்பினங்களைத் தனது வீரகாண்டீபத்தில் அநுசந்தித்து, ஒன்றின்மே லொன்றுகச் செலுத்தி, உவர்க்கடலூடெரியும் வடவையை யொப்பக் குப்பென்றோங்கி வெகுளி மேற்கொண்டு விரைந்து முன்னின்றான். இவ்விதமாகச் சவ்வியசாசி தொட்ட அஸ்திரம் அடங்கலும் போய்விழுந்து, துரோணாச்சாரியருடைய நால்வகையான சேனைகளையும், அச்சேனைகள் செலுத்திய ஆயுதங்களையும் நலிபடுத்தி நாசமாக்கி, எங்குமுதிரவெள்ளம் ஓடும்படி யாவரையும் அதாகதஞ் செய்தன.

இத்தன்மையாக எள்ளத்தனைபோதுந் தாங்காமற் சேனைகளையெல்லா மடிவித்த முறைமையைத் துரோணாச்சாரியார் கண்டு, அர்ச்சுனன் தேருக்கு நேர் சென்று நின்று, தன் படைகளுக்கு நேரிட்ட இடரை நீக்கும்படியாய் யோசித்து, நெறநெறென வில்லை வளைத்து, நீண்ட பாணங்களை வேண்டியமட்டும் போக்கி, அர்ச்சுனன் செலுத்திய கணைகளத்தனையையு மண்ணாக்கி, பின்னும் ஈடுக்கீடாகப் பெருஞ்சரங்களேவினார். அச்சரங்கள் அருச்சுனனுடைய கணக்கிடை புகுந்து இடைக்கிடை நுழைந்து இரண்டிரண்டாகத் துண்டுபண்ண, அதை அப்பராக்கிரம விஜயனேக்கி, படபடத்துப் பசைய ழிக்கும் நாராசக்கணைகளைப் பார்த்தும் பாராம லெடுத்து, வச வச வென்று மொய்த்துக்கொள்ளும்படிக்கு வாரி வாரிச் சொரிந்து, தேரில் வந்த துரோணாச்சாரியையும், அவராலுந்திய அஸ்திரங்களையும் மாறி மாறித் தாறுமாறாகப் போக நூறுவிதமாகக் கண்டான். இந்தப்படி அர்ச்சுனன் மண்டலமுழுதும் பொழியுஞ் சோணமேகம்போற் சோர்வில்லாம லடித்த துணிவையும், அவனது வீர வில் வேக வித்தையையும், வண்டுகள் துன்றுந் தாமரை மாலையணிந்த துரோணாச்சாரியர் கண்டு, ஆ! ஆ! ஈதென்ன ஆச்சரியம்? இவன் செயலைச் சிந்தைசெய்யு மிடத்தில், மான்மழு சூலப்படை தரித்தருளிய மகாதேவன்கூட இவனுக்கெதிர்வந்து மலைந்து போராட மாட்டான் போலு மிருக்கின்றதே; அப்படியா? இனி என்போலொத்தவன் என்ன செய்யப்போகின்றேன் என்று கண்டுங் காணதவர்போற் சற்று நின்று தயங்கி, ஆதியில் இவனுக்கு வில் வித்தை கற்றுக்கொடுத்து வீஷ்மர் முதலாகிய வேந்தர்கட் கெதிரிற் பரிட்சித்து யாவரு மெச்சும்படியாய் லக்ஷயம் பெற்ற தனு சாஸ்திரங்களும், மந்திரங்களும், அஸ்திரங்களுமாகிய இவைகளெல்லாம் அப்போதைக்கப்போது ஒன்றுக்குப் பத்தாய் பத்துக்கு நூறாய் உயர்ந்திருக்கின்றனவே; இத்தன்மையான விற்றிறத்தினாலன்றோ முத்தலமும் புகழுங் கீர்த்தியைப் பெற்று வைத்தவனா யிறுமாந்து நம்மையெங்குமில்லாமலடித்து ஜெயித்தான். ஆதலால், ஜெயவிஜயனென்னும் பேர் இவனுக்கே தக்கது. இனி வேறு பேர் கூறுவதற்கிடமில்லை. ஆனால், நாம் ஒரு காரியஞ் செய்தால் உத்தமமா யிருக்கும். அஃதென்னவென்றால், அந்த அர்ச்சுனனுக்கு நாம் தொண்டு செய்து அவனண்டையிற் காத்திருந்து அருமையான வில் வித்தையைக் கற்றுக்கொள்வதே நமக்கு நலம் என்று தன்னுட்டானே கருதி கவலையுற்றிருந்தனர். இவ்வாறான எண்ணங்கொண்டு கவலித்த துரோணாச்சாரியருடைய நினைப்பு ஒரு முடிவு பெறுவதற்கு முன்னமே நாரணனாற் புகழு நரனானவன், ஊரோடுயிர்களை வேரோடு களைகின்ற உகாந்தகாலப் பேரொலி காட்டி, உருத்திடித்துப் பயங்கரங் காட்டும் இடியாஸ்திர முதலிய பர்வதாஸ்திரங்களை யேவினான். அவ்வஸ்திரங்களானது பளபள வென்று

வந்து விழுந்து, ஆசாரியருடைய தேரை மளமளவென்று முறித்து, வேதக்கொடியை வெடுக்கென்றொடித்து, குதிரை நான்கையுங் குறுகக் குறைத்து, சாரதி தலையைச் சரியத் தறித்து, கையிற் பிடித்த வில்லையு முறித்து, வில்லில் மாட்டிய நரம்பையு மறுத்து, வேஷ்டையாக நடுக்கம் புரிந்து, வானுலகத்து வாய்விட்டிரைந்து, மண்ணுலகத்துத் திண்ணெனச் சார்ந்தது. அதனால் வேறு வில்லுந் தேருங்கொண்டு மாறுகணை தொடுக்க மாட்டாமல் வெட்கப்பட்டு, மூதறிவனைத்து மயங்கக் கீதநாத வேதவேதியரான தநுவேத முனிவர் புறங்கொடுத் தோடினார்.

## அஸ்வத்தாமனுக்கும் அருச்சுனனுக்கும் உயுத்தம்

இந்தப் பிரகாரஞ் சமர்முனைவிட் டோடுகின்ற தந்தையான துரோணாச்சாரியையும், அர்ச்சுனன் தொடுத்த தனிப்பாணங்களின் கிளர்ச்சியையும் அஸ்வத்தாமா கண்டு, சீற்றங் கொண்டு, வெதும்பி வெதும்பிக் கண்ணீர் ததும்பி, தனது தேரைச் சடுதியிலுந்தி தனஞ்செயனுக்கு முந்திச் சண்டை செய்யத் தொடங்கினான். இவ்வாறு தனுவேத சாஸ்திரசாலைச் சினேகனும், ஆசாரிய குமாரனும், வீரிய நாமனுமாகிய அஸ்வத்தாமாவானவன், அர்ச்சுன ராஜனைத் தடுத்துப் போர் கொடுக்க வந்தது எத்தன்மை யொத்திருந்ததென்னில், மேன்மேலாக நெருப்புப்பொறி வீசிய பெருந் தீக்கடவுளைப் பகைத்து, ஆலாலவிடத்தில் முளைத்த அருங்கனல் வந்தெதிர்த்தது போ லிருந்தது. இப்படியாக முனைந்த அஸ்வத்தாமன் அர்ச்சுனனுடைய தேரின்பேரில் ஐம்பது அஸ்திரங்களும், அஸ்வங்களின்மீது நூறு கணைகளும், சாரதிபேரில் இருநூறு சரங்களும், அநுமக்கொடிமேல் ஐந்நூறு அம்புகளும், பச்சைநிறப் பார்த்தன்பேரில் ஓராயிரம் பகழிகளும் முன்பின் பாராமற் பிரயோகம்பண்ணி, தனக்கு பின்பலமொன்றுந் தேடாமற் பங்கப் படாத சிங்கக்குட்டிபோற் சீறி நின்றான். இப்படி இந்த அஸ்வத்தாமன் கோர்த்த அம்புக் கும்புகளைப் பார்த்த தேவேந்திரன் முதலிய தேவர்களெல்லாம் பார்த்து, ஆச்சரியங் கொண்டு, ஆ! சபாஷ் சபாஷ் என்று அதிசயப் பட்டார்கள். அப்போது ஜயவிஜய சௌரிய பராக்கிரம காண்டீபதரனாகிய தனஞ்செயன் அண்டமுகடதிர வருகின்ற பிரசண்டக்கணைகளாகிய ஓராயிரத் தொண்ணூற்றைம்பது பாணங்களையும் ஒரு நொடியில் நறுக்கென்று குறுக்காக வெட்டி குறுந்துளாக்கிவிட்டு, கூர்மையான இருபது சூரியாஸ்திரங்களை குறித்துக் கைப்பிடித்து, ஆரிய மந்திரம் உச்சரித்துத்தொடுத்து அஸ்வத்தாமன் ரதத்தில் நாட்டிய சுவேதத்துவத் துவஜத்தை அடியோடு மாட்டித் தீரப்பார்வை காட்டி நின்றான். அதைக் கண்ட அஸ்வத்தாமன் கச்சிதமான வச்சிரவாளியைத் தட்சணமேகொண்டு பிரயோகம்பண்ணி மெச்சிய மேன்மைக்கு உச்சிதமாகிய அர்ச்சுனராஜனது வீரபட்டத்தை யறுத்து, ஒடியாத காண்டீபத்திற் பூட்டிய அருத நாணியைக் குறை நீக்கித் தளர்த்தி அனந்தங் கோடி அம்புகளினால் ஆகாயம் பூமியாவற்றுந் தெரியாமல் மறைத்து, அர்ச்சுனனுடைய தேரையும் மூடினான். இத்தன்மையாக குருபுத்திர னடாத்திய யுத்தத்திறத்தை வெற்றி வீரப்ரதாப விஜயன் கண்டு புன்சிரிப்புகொண்டு, ஓ அஸ்வத்தாமாவென்னுஞ் சிரஞ்சீவியே! என்னுடைய வின்னாணியைத் தளர்த்திவிட்டதினால் உனக்கு போர்ச் சேவகனென்னும் புகழ் கிடைத்ததுண்டோ? போபோ இது வீண்பைத்தியம் என்று தனது வீரதீர காண்டீப வின்னாணி யிறுக்கி கோரபார சரங்களைக் குறையாம விறைத்தான். அஸ்வத்தாமாவும் அதற்கேற்கிய அஸ்திரங்களை அபரிமிதமில்லாமல் அமோகமாய் நிறைத்தான். இப்படிக்கு எண்ணற்ற கணைகளை இருதிறத்தவருஞ் செப்பிடுவித்தை செய்பவர்போல் ஒப்புவமையுரைப்பதற்கின்றி எப்புவனமு நடுங்க அம்பு மாரியெனப் பொழிவதைச் செப்புதற்கரிய சூரியோதனனுடைய சேனைகள் நோக்கி, தங்களுக்குச் செயகாலமென் றுட்கொண்டு, சந்திரனைக்கண்ட சமுத்திரம்போல் இரைந்து பொங்கி, ஆசாரியகுமாரன் செய்த அமர்த்தொழிலைப் புகழ்ந்து மகிழ்ந்தார்கள். இவர்களிருவரும் விட்ட அஸ்திரங்களானது பரவி, எட்டுத்திசையும்-எட்டுக்கரியும்-எட்டுக்கிரியும்-எட்டுப்பணியும் நடுங்கி நலிவடைந்து, வட்டப் புவியுடன் வானோருலகும் வறிதே நாணச் செய்தன.

இந்தப்படிக்கு ஒருவருக்கொருவ ரோயாமல், ஒன்று - பத்து-நூறு-ஆயிரம்-பதினாயிரம்-லக்ஷம்-கோடி-அற்புதம்-நிற்புதம் என்று சொல்லும்படியாக் கங்குகரை காணமல் எங்கு மிறைந்து கிடப்ப ஒரு முகூர்த்த பரியந்தங் கணைகளைத் தரதர பரபரவெனப் பொழிந்த

காலையில், தோள்வல்லமையுடைய துரோணுச்சாரியருடைய தோன்றலது அம்பறுத்தூணி நிறைந்த அஸ்திரங்கள்யாவும் வறண்டுபோய் சொற்ப தரித்திரன்போற் சோர்வடைந்திருந்தான். அஃதெப்படியென்னில், கீழ்மக்கள் மேன்மக்களாவார்களென்பது கனவிலுங் கிடையாது. ஒருவேளை தந்தைவிந்தெழுங் காலத்தின்னிவந்ததெந்தவினையோ? அந்தச் சம்பந்த வினையினுல் நடுவது பாதி முதவிய நாட்களிற் செல்ல நேரிடலாகும். அவ்வாறு நேரிட்டால், அதைப் பாதுகாத்து தன்னிலுஞ் சிறந்த சாதுக்களுடன் சாவகாசஞ் செய்து விற்பன விவேகம் விளங்க கற்பனையான கல்வியை யறிந்து, அக்கல்வியிற் கழறிய கருத்தை யுணர்ந்து, அந்த கருத்திற்கிணங்க அடங்கியிருந்து, முன்பின்னுள்ள உலகமுறைமையுந் தேர்ந்து, அடக்கம் வணக்க முதலியவைகளை அணிகலனுய்ப் பூண்டொழுகி, இரக்கமுந் தயையும் பெற்றிருப்பவர்கட்குச் சம்பத்தென்பதெந்நாளுந் தவறடையாது. அப்படிக்கில்லாமற் புறப்பல் அகந்தைகள் விளைத்து தலைகாற்தெரியா சன்னதமாடி யிளைத்து, பெரியாரைப் பணியாத பெருமை முளைத்து, வீஷ்மத்தாற் றிளைத்து, வெறும்பொய்யாற் களைத்து, விசனத்தாலுளைத்து வெதுப்புண்ணும் அறிவில்லாத அற்பர்க்கு செல்வம் பகைபென்பதற்குச் சந்தேகமில்லை. இதற்கிணங்க, இவ்வஸ்வத்தாமனும் அருமையாய்ச் சம்பாதித்த அஸ்திரங்களடங்கலும் வழிதுறையில்லாமல் வாரியிறைத்துப்போட்டுகிடைத்திருந்த ஐவஸ்வரியத்தைப் பிரயோசனப் பட்டொட்டாமற் போக்கடித்துக்கொண்ட வெறும் வீணரைப்போல வதங்கி வாடியிருந்தனன். இந்திரகுமாரனுகிய அர்ச்சுனனது அம்புறுத்தூணியானது இரைக்கச் சுரக்கு மணற்கேணிபோல் எடுக்கவெடுக்கக் குறையாமல் அட்சமாய் எப்போதும்போ லிருந்தது. அஃதெப்படியெனில், தப்பிதமில்லாமற் கற்கவேண்டிய ஆசு - மதுரம்-சித்திரம்-வித்தாரம் என்னு நான்கு கவிகளையும் ஆராய்ந்து, தெளிந்த பூரண வித்துவான்களின் விவேக விளைவினுல், கற்பனை அலங்காரங்கள் கணக்கற்றனவாய் காணச்சுரக்கும் பாவினவிர்த்திபோ லிருந்தது.

### கிருபாச்சாரியருக்கும் அர்ச்சுனனுக்கும் உயுத்தம்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இஃதிப்படிக்கிருக்க குற்றமற்ற வெற்றிபெற்ற கொற்றவனைப்போல் தேரின்பேரி லசையாமலிருந்த சிங்க குருளைபோன்ற அஸ்வத்தாமனது செயலையறிந்தோ? அல்லது திறமாகிய சிலைவிஜயனுடன் போர்புரிந்தது ஜெயம்பெற நினைந்தோ? அல்லது மைத்துனராகிய துரோணரும்,மருமகனுகிய அஸ்வத்தாமாவும் இளைத்துப் போனுர்களே: அப்படியே நாமும் இளைத்துப் போவோமென்ன முனைந்தோ? மற்றென்னமோ? செவந்த நிறமுந் திறமும் படைத்த கிருபாச்சாரியர் திடீரென்று தம்முடைய தேரை கடகடவென்று விடுத்து, கணைகளை வெகுவாய்த் தொடுத்து, தனஞ்செயனுேடெதிர்த்துச் சண்டை விளைத்துத் தடுத்தார். அந்த வேளையிற் கடல் நிறங்கொண்ட காண்டீபனுனவன் சாரதியான உத்தர குமாரனைப்பார்த்து, அப்பா புத்திமானே! அஸ்வத்தாமன் அம்பு கூட்டிலுள்ள அஸ்திரங்கள் எல்லாவற்றையும் வாரியிறைத்து வறண்டிளைத்துப் போயினுன். அவனுக்கு நேரிட்ட அவமானத்தை வெளிப்படுத்தலாகாதென்று அவனல்லம்மானுன கிருபாச்சாரியர் நம்முடன் எதிர்த்துப் போர்புரிய வருகின்றுர். அவர் வருகின்ற அவசரத்தையும் ஆத்திரத்தையுஞ் சற்று நிதானித்துப்பார் என்று தனது அருட்பார்வையாற் காட்டினுன். அந்த குறிப்பை அறிந்துகொண்ட உத்தரகுமாரன், தன் தேர்சக்கரங்களிற் கர்க்கரத் தொனி காட்டி, முட்காரமாக வோட்டி, பூர்வாச்சாரியருடைய தேருக்கெதிர் வந்து வளைத்தான். அது காலையில்; அர்ச்சுனராஜன் காண்டீபத்து நாணியை யிறுக்கி மின்னலிடி முழக்கத்துடன், மன்னிபொழிகின்ற மேகமுநாணி வெட்கப்படும்படிக்கு சரசரவென்னச் சரதாரைகளைச் சாய்த்தான். அதைக்கண்ட கிருபாச்சாரியருங் கிட்டி, ரதத்துடன் ரதத்தை முட்டி, நாலாவித கோலாகல லீலாவினுேத பாணங்களைக் கொட்டி, அவனுந்திய கணைகளை வெட்டி, அவனுக்கிளையாம லொட்டி, யுத்தம் பண்ணினுர். இவ்வாறிவ்விருவரும் போராடிய வல்லமையை இவ்விதமென்று மதித்துச் சொல்ல வல்லவர் எவ்விதத்தினுமில்லை ஆனல் வானத்தில் வேடிக்கை பார்த்திருந்த வானவரும்,மாதவர் முதலாகிய பிதிர் தேவதைகளுஞ் சேணேதூரம் ஒதுங்கிச் சென்றுர்கள். பிரசண்டவாயுங் கலங்கி, பிரகாசிக்கு மகமேருவுங் குலுங்கி, எட்டுதிக்குஞ் செவிடுபட்டொடுங்கிப் போயின. அம்பரஞ் சுழன்று பம்பரம்போலோடியது. அக்கினி மிகுந்து அனற்பொறி

மலிந்து வீசியது. அண்டகூடந்தொட்டு அக
ண்டமும் நெக்குவிட்டுச் சாய்ந்தது. அஞ்சன
மேகமும் விக்கி, அந்தரகதியாய்த் தொக்கி,
அதனது வாயைப் பெருக்கி, நீரிடிப் பிடியைக்
கக்கி, மலைக்குகைகளிலும் பிலத்துவாரங்களி
லும் புகுந்து உக்கி ஒடுங்கிப் போயது.

இப்படியாக விற்றிறங் காட்டிய விக்கிர
மக் கிருபாச்சாரியரும், பராக்கிரமப் பற்குண
னும் தங்களுக்குத் தெரிந்த சிலைத்திறங்களைக்
கணைத்திறங்களைச் சீராட்டிப் பாராட்டி, முன்
னோட்டம் பின்னோட்டமாகத் தேரையுந்தி,
வெகுநேரம் வரையிலும் பகழிகள் நுந்தி,
ஒருவர்க்கொருவர் உதிரஞ் சிந்தி, உடலெல்
லாம் சிந்துசிந்தாய்க் கொந்தி, உருத்துருத்து
முந்திப் போர் புரிந்தார்கள். அதுகாலையில்
கிரீடியானவன் கைமிஞ்சி உருத்தி, நிருடிச்
சரங்களைச் சரேலெனப் புகுத்தி, புட்பக விமா
னம்போன்ற சக்கரத்தேரினையும், வேத வெள்
ளக்கொடியையும், சாரதி குதிரைகளையும்,
கத்திவீழத் தாக்கி, கிருபாச்சாரியருடைய
உடல் முழுதுந் துளைபோக்கி, மறுபடியும்
பாதமுதற் றலைவரைக்கும் பாணங்களை ஊடுரு
விப் போகும்படிக்கு நாணி வீக்கி, டங்காரஞ்
செய்தான். அனையகாலையிற் கிருபாச்சாரியர்
மதிமயங்கித் தியங்கிக் கண்கலங்கி, மானந்
துலங்கி மண்மேற் கரைந்தார். அந்தக் கிரு
பாச்சாரியருக்கு இரண்டு பக்கத்திலுந் திர
ண்ட மலைபோலிருந்த சக்கரக்ஷகாளிற் சந்
திரகேது - சுவேஷணன் - மணிமந்தன் - ஏம
வான் இவர் முதலிய வெற்றிவீர வேந்தர்
அநேகர் ஆர்ப்பரித்து அர்ச்சுனனை மடக்கி,
ஜெயம் பெருமல் விடமாட்டோமென்று
வஸ்திரப்போர் விளைந்தார்கள். அவர்களை
அர்ச்சுனன் பார்த்து, அதிகோபமாய் வேர்
த்து, மறுகிக் கொதித்து, மாறிமாறி அவ்வீரக்
கும்புகள்பேரில் நூறு நூறாயிரம் அம்புகள்
எவி, அன்னோருடைய ஆயுதங்களையும்,
பாணங்களையும், விற்களையும், தேரையும், சிக
ரத்தையும், மற்றச் சின்னங்களையும் நொறுக்
கிப் பறக்க வடித்து, மலையொத்த புயத்தைக்
குறைத்து, இடையுந் தொடையும் இடையத்
தறித்து, கரமுங்காலும் புறம்பட முறித்து,
தலையைச் சிதைத்துத் தரணிமேற் குவித்து,
தாவியகாலையில் வீரத்தேரேறி, தீரம்விடாத
வீருத்தராகிய கிருபாச்சாரியர் மீண்டும்வெளிப்
பட்டார். உடனே அவர் நூதனமாகப்
பெற்றுவந்த வில்லையும் ரதத்தையும் குதிரை
யையும் அழித்து, அவருக்குப் பின்னுதவி
வந்த மன்னவர் பலரையுஞ் சிந்தினன்.

இப்படி தன்னுதவியான மன்னரையு
மடித்து, தன்தன் கையிலிருந்த வில்லையு
மொடித்து, தானேறிவந்த தேரையும் பொடி
த்து தானைகள் நான்குந் தவிடாயிடித்துச்
சயம்படைத்திருக்குந் தனஞ்செயனைக் கிரு
பாச்சாரியர் கண்டு, தாளமாட்டாமல் வருந்தி,
உடல்படபடத்து பூரித்து, பூமியிலுட்கார்ந்து
பாய்ந்து, ஒ ரெறிவேலெடுத்துப் பூசைமுடித்
துப் பற்குணன்மேல் விட்டெறிந்தார். அந்த
வேலாயுதம் அதிர்ந்து வருகின்ற ஆர்ப்பாட்
டத்தை அர்ச்சுனன் தெரிந்து, நகைமுகமாகச்
சிறித்து, அக்கினியாஸ்திரந் தொடுத்து அவ்
வேலாயுதத்தை வெட்டையாகி வெண்கலப்
பொடிபோலுடைத்துத் தள்ளினன். அப்
போது கிருபாச்சாரியர் தானெறிந்த வேலா
யுதம்போன விதத்தையும், அதை முறித்த
அர்ச்சுனனது திறத்தையுங் கண்டு, மகாவுக்கி
ரத்துடன் ஆக்கிரமித்து வெகுண்டு, தனதுடல்
மறந்து, சிறந்த ஓர் வாளாயுதமுங் கேடயமுங்
கைக்கொண்டு, ஒரேவீச்சாய் வீசிவிடக் கருதி
விஜயனுடைய தேரிற் பாய்ந்தார். இப்படி
யாக எண்ணிப் பாய்ந்த பூர்வாச்சாரியைக்
காண்டாவனமழித்த காண்டீபன் கண்டு,
வெந்திடச்செய்யும் இந்து முகாஸ்திரச் சுந்
தரக் கணைகளுந்தி, அவ் வாளாயுதத்தையும்
பரிசையையும் நீறுகப்படுத்திப் பூளைப்பூப்
போற் போக்கினன். அதனால் யுத்தமுனையில்
வெற்றிபெறக்கற்ற வீரம்பெற்ற கிருபாச்சாரி
யர் வேறுபோர் புரிவதற்கு விதியில்லாமல்
சற்றுநேரம் வரைக்கும் அசைவற்றிருந்து,
தன்னறிவைத் தானே நிதானித்து, தனக்கு
முன்னே சண்டையிலிளைத்த தாஷ்டிகாளையும்
யோசித்து, கீழ்க்கண் பார்வையாய்க் கிரீடி
யைப் பார்த்துச் சிறுநகைவிளைத்து, திடீரென்
றோடி, வீரகண்டாமணி கட்டிப் பிரகாசிக்கின்ற
துரோணாச்சாரியர் புத்திரனான அஸ்வத்தாம
னுடைய தேரின்மேலேறிக்கொண்டார்.

### வீஷ்மருக்கும் அருச்சுனனுக்கும் யுத்தம்.

இங்ஙனம் முனைவீரங்காட்டிப் போர்
புரிந்த கிருபாச்சாரியர் பின்னிட்டோடி மருக
னுடன் ரதத்திலிருந்த வண்மையை அவரை
நம்பிப்போன சேனைகள் கண்டுவாடி, அர்ச்
சுனன் பாணத்தால் அடிபட் டோடினார்கள்.
முன்னிட்டடுத்து யுத்தமுனையேறிய கிருபாச்

சாரியர் இழிவு தேடிக்கொண்டு பின்முதுகு
கொடுத்துப் பேர்யினுரென்று பொற்சக்கரம்
பூட்டிய தேர்மேலிருந்த போர்ச்சிங்க வீஷ்
மர் புறப்பட்டு மேகங்களை மின்னுடன் பிடித்
துப் பிழிந்ததைப்போல் விளங்குஞ் செஞ்
சிலை தாங்கி யோங்கிய சேவத்திறங் காட்டி,
பேரணிப்படை புடைசூழ்ந்து வரும்படி
யாய்ப் பிரவேசித்து, பிரதாபனை சவ்விய
சாசியை வளைத்து நாணொலிசெய்தார். அந்த
குருகுலக் கோமான் தெறித்த குணத்தொனி
கேட்ட மாத்திரத்திற் கரையுடைந்த ஏரி நீர்
போலிருந்த சகுனி துச்சாதனன் முதலாகிய
சங்கிராம வேந்தர்களெல்லாம் ஒன்றாகக்கூடி
வீஷ்மருடைய ஆதரவின்பேரில் அர்ச்சுனனை
நாடி அளவற்ற அம்புகளைத் தொடுத்தார்கள்.
அவ் வம்புக் கும்புகளைக்கண்ட நரனவன்
பம்பிய மேகம்போல் நச்சரவப் பாணங்களை
யெடுத்து, அவர்கள் தூற்றிய அஸ்திரங்களை
யெல்லாம் நாலிரண்டா யொடித்து, நாரி
யோசை யடித்து தேவதத்தத்தையுந் தொனி
யெழும்பப் பிடித்தான். அத்தொனியால் யா
வரு மயங்கி மடங்கி நலியா லடங்கினார்கள்.
இப்பால் சந்திரகுலத் திந்திரனாகத் தோன்
றிய தனஞ்செயன் தானேறிவந்த மந்தரமலை
போன்ற ரதத்தைத் தந்திரமாகச் செலுத்தும்
படி சாரதியான உத்தரகுமாரனுக்குச் சாற்றி
னன். அவனப்படியே முடுக்கி ஒரு நொடிப்
பொழுதிற் குலக்குரவன் கலக்கவருந் தலத்
தில், அவர்லக்கண் மிகப் பெலக்கும் வகை
போய்ச் சார்ந்தான். இவ்விதமாகச் செவ்வி
சேர்ந்த மன்மத வடிவம்பெற்ற வாசவன்
மதலை உலகமுடிவி லெழுகின்ற ஆலகாலம்
போலும் காலகாலன்போலும் போர்முனையிற்
கலந்ததைக் காங்கேயன்கண்டு களிக்குங்காலை
யில், வாளாயுத வல்லமைகற்ற இடபசேனன்
வெறித்து அர்ச்சுனனைக் குறித்து, கேது
ராகுக் கிரகங்கள்போல் மறித்து, பலம்பொரு
ந்திய பாணங்களைத் தெறித்து, கிரமமாகப்
பிறித்து, தானும் நெறித்து நின்றான். இவ்
வாறிடபசேனன் செய்த போரைப் பார்த்த
நரனவன் ஆங்காரங் கொண்டு, வஸ்தான
சரங்களைப் பலமாகச் செலுத்தி படித்து,
அவனுடைய தேர்-சாரதி-குதிரைகள் இவை
முதலிய யாவையும் ஒருகணப் போதிற்
போக்கி முடித்து, கைப்பிடித்த வில்லையுங்
கரணையாய் ஒடித்து, ஓர் செங்கதிர்ச்சிலீ
முகந் தெறித்து அவனது தேகத்தையுந்
துளைத்தான். அந்த அடியினாற் களைத்த இடப
சேனன் உடலெரிந்து, உயிர் கரிந்து, வீஷ்
மருக்காகப் பரிந்து புகுந்த பக்ஷம் போது
மென்று முனைகெட்டழிந்து, முதுகிட்டயர்
ந்து முறைபட்டோடிப் போயினன்.

அவனோடுவதை நோக்கிய சிந்துதேசா
திபனென்னுஞ் சயிந்தவனும், காந்தார
தேசாதிபனான சௌபலச் சகுனியும், வெம்பு
மனத்தினராகிய துரியோதனன் தம்பிமார்க
ளோடும், மற்றுமுள்ள மன்னவர்களோடும்
எதிர்த்து விதிர்விதிர்த்து, வெந்தழற்கணை
மழைகளை வெகுவாகச் சிந்தினார்கள். அக்
காலையில் மதத்த கெஜகேசரியாகிய மாதவி
கொழுநன் நகைத்து, மனவேஷ்டையாய்ப்
பகைத்து, புரத்தை யெரித்த அஸ்திரங்களை
யுந்தி, அவரவர் பிடித்திருக்கின்ற வில்லையும்
பாணங்களையுஞ் சிந்தி கொடி நாணியுங் குறை
த்து, குதிரையைச் சாரதியைத் தறித்து,
குடையுடைத் தேரையு முறித்து, பின்னும்
நூறுபேருங் கணைகளைத் தாக்கி, வீறுபட்ட
சேனைகள், காறுபட்ட யானைகள், கூறுபட்ட
குதிரைகள், மாறுபட்ட ரதங்கள் இவ்வாறு
பட்டவென்று சொல்வதற் கிடமில்லாமல்
வெவ்வேறுபட்டு நீறுபட்டேறிய நிமிஷத்
திற் பொடித்து சேறுபட்ட உதிரவெள்ளத்
தின்மீது தேர் செலுத்தி எதிரொருவருமில்
லாமல் வருகின்றான். அப்படி வருகின்ற விஜய
பராக்கிரமனைப் பருந்து பறக்கச் சிறந்த தேர்
மேல் இருந்த பிதாமகன் கண்டு, அப்பா பற்
குணா! இதோ நான் காத்திருக்கின்றேன்.
என்னை விட்டு அவ் வெளியவர்களோடு
போராடுவதில் என்ன பிரயோஜனம்? விரை
வில் என்னோடு ஒரு கைபார்த்துச் செல் பார்ப்
போம் என்று கூவினர். அப்படிக் கெதிர்த்த
வீஷ்மரை அர்ச்சுனன் வணங்கி ஒடுங்கி,
ஐயா! தேவரீருக்கு நான் எம்மாத்திரம்?
என்னை ஒரு பொருளாகக்கொண்டு சண்டை
போடவுஞ் சம்மதியுண்டோ? ஆ! ஆண்ட
வனே! என்று நிர்மதியாய் நின்று, மேகம்
போன்ற காண்டீபங் கொண்டு மின்னற்
கிணையாகிய நாணிபிகிந்து, கரணங் கலங்க
நாணொலி செய்து, தீரஜெயவாளி - வீரஜய
வாளி - மகேந்திரபாணம் - உகாந்தரபாணம்
இவை முதலியவற்றை வாரிவாரி வரிசையாய்
சொரிந்தான். வீஷ்மரும் உகாந்தகால உற்
பாதகால மழைபோல் வாகார்ந்த வாளிகளை
வரிசை வரிசையாய்ப் பொழிந்தார். இவ்வாறு
மலையும் மலையும் எதிர்த்து மாறுடும் வாறுபோ

விருவரும் எதிர்த்துப் போராடினார்கள். இவர்கள் புரிந்த கலகத்தினால் ஏழு சமுத்திரமும் எட்டுத் திக்குப்பாலகரும், ஒன்பது கிரகங்களும், பத்துத் திசையும், பதினொரு ருத்திரரும், பன்னிரண்டு சூரியரும் பட்டபாடின்னதென்று பாவாணரும் பகர்வதற்கு இடம்படவில்லை. அந்தர வாசிகளாகிய இந்திரன் முதலாகிய தேவர்களும் வேடிக்கைப் பார்த்து வெருண்டு, அனேக யோசனை தூரம் அகன்று போய் நின்றார்கள். சந்திர சூரியர்களுங் கதி மாறினார்கள். இவர்களிருவரும் உதயகிரியும் அஸ்தமனகிரியும் ஒதுங்கி நடுங்கியதுகள். கடலுங் கொதித்து, கனலுங் கதித்து, களகள வென்றிரைந்தன. எட்டுத்திசை யானைகளும் தட்டுக்கெட்டயர்ந்தன. இவ்வுலகமும் எவ்வுலகமும் ஏங்கித் தளர்ந்தன.

இவ்வாறு பிரமாத முண்டாகும்படியாய் இவர்களிருவரும் அமராடிய காலையில், வீஷ்மர் மிஞ்சி, பஞ்சபூதம்போன்ற அஞ்சு கணைகளைச் சாரதியான உத்தரகுமாரன்பேரில் தாக்கினார். அந்தக் கணைகள் வருகின்ற நிருடியைக் காண்டீபன் கண்டு, ஓர் காலாக்கினிக் கணையை எடுத்துப் பாச்சி, பஞ்சு பொதியில் நெருப்புப் பற்றிய பான்மைபோ லெரித்து, வஞ்சமறியா மனத்தோராகிய வீஷ்மருடைய நெஞ்சு திடுக்கிடும்படி அவர் கையிலிருந்த வில்லையும் ஒடித்துவிட்டான். இப்படி ஒப்பாரில்லாத தன் பேரனை அர்ச்சுனனால் ஒடிபட்ட வில்லை அப்பாலெறிந்து, இப்பாலொரு வில்லை எடுத்து மலைபோல் வளைத்து, புற்றிலிருந்து புறப்படுங் கிருஷ்ண சர்ப்பங்கள் பேரோசை கொண்டு புகுந்தவாறென்ன அஸ்திரமாரியைத் துஸ்தரமாகச் சொரிந்தார். இவ்வாறு வீஷ்மர் தார்ஷ்டீகமாய்ச் சாய்த்த கணைகள் யாவற்றையும் இணையில்லாத அர்ச்சுனன் திரணபரிகாரமாய்ப் போக்கி, காரணபரியங் காண்டீப நாரியை ஊக்கி, அருணோதயம்போல் சில செஞ்சரங்களை மிஞ்சத் தாக்கி, அஞ்சிப் பயந்தோடச் சேனைகளைப் புடைத்து, அசையாக் கீர்த்தி படைத்து, அமராடினான். அக்காலையில் ஏழு கடல் நீருஞ் சுண்ட, மலை முதல் யாவுங் குன்ற, உலகிலுள்ள யாவரும் இதங்க, அஷ்ட கஜமும் ரத்தங்கக்கி வதங்க, அமரர்களும் அகடையெக்கி யொதுங்க, பிரளயகாலத்திலுண்டாகாநின்ற பெருநெருப்பைப்போற் சரங்களிறைத்து, பிரம்மாதிகளுங் கண்டு கலங்கும்படியாய்ப் புலிங்க நிறைத்து, தகுதியான இவ்விருவருந் தேரை செலுத்தி ஓரிடத்திலுந் தங்காமல் அண்டச் சுவரின் அடிவாரமட்டுந் திரிந்துகொண்டிருந்தார்கள். இவர்களேறிய தேரானது வாயுவேக மனோவேக மென்பதைக் கடந்து, வட்டமாகச் சுழன்று, ஒன்றுக்கொன்று கிட்ட நெருங்கி யுருய்ந்து, ஒன்றை யொன்று விட்டுப் பிரிந்து பாய்ந்து, நெடுந்தூரமோடி ஓய்ந்து, வலசாரி யிடசாரியாய்த் திரிந்து, சூரியன்றேருஞ் சுழலவிடுத்தது.

இதன்றியும், இந்திரன் மைந்தனான விஜயனுடைய வில்லும், கங்கா புத்திரனான வீஷ்மருடைய வில்லும், குலாலன் சக்கரம்போற் கூசாமற் சுழல, அச்சுழலினின்றும் வந்து வெளிப்படுங் கூரம்பு முதலாகிய பாணங்கள் ஒன்றோடொன்று புரண்டு, முடிகளோடு முடிகள், தலைகளோடு தலைகள் இடிபட உடைபடச் சாடியபடியால், தேரிற் கட்டிய குதிரைகள் பிடிபடாமற் கனைத்துக் கருளித்துக் கலித்துப் பறிபட்டோடின. இருவர் சாரதிகளும் எக்களிப்பிட்டு இறைத்து விரைந்து பரிகளைத் தடுத்தனர். அர்ச்சுனனுடைய அனுமக் கொடியும், வீஷ்மருடைய பனைமரக் கொடியும் ஆகாயமளாவி நீடிய வாயுதேவனுடன் போராடி யாடின. வாள்வீரர் முதலாகிய மன்னவர்களெல்லாந் தோள்கள் பூரிக்கவும், நெற்றி வியர்க்கவும், மீசை துடிக்கவும், உரோமஞ் சிலிர்க்கவும், வாள்விழி செவக்கவும், தீப்பொறி பறக்கவும், அஸ்திரந் தொடுக்கும் விரல்கள் நெளிக்கவும், அமர் விற்பிடித்த கரங்கள் மொறைக்கவும், வீரகண்டை முழங்கவும், வெற்றிப்பட்ட மிலங்கவுமானார்கள். வேடிக்கைப் பார்த்த வேந்தர்கள் கலங்கினர்; மேலுலகத்தோர் வெதும்பி யொதிங்கினர்; நாகலோகத்தார் நலிந்து விலங்கினர்; நாநிலத்தார் நடுங்கிக் குலிங்கினர்; இவ்விதமாக இருவருமாக நிலைத்து ஒருவருக்கொருவர் ஈடுதாழ்த்தி இல்லாமற் சமராடுகின்ற தன்மையினாலே மதுசூதனன் மைத்துனனானவன் ஓர் யுக்திசெய்து கொற்றமுற்ற பத்துக் கணைகள் எடுத்துக் கொத்துக் கொத்தாகத் தொடுத்து, வெற்றிப் பனைக்கொடி வீறிய வீஷ்டுமர் தேரைத் தடுத்து வில்லையு முறித்தான். அவனால் முறிந்த வில்லையெறிந்து வேறுவில்லை வீஷ்மரெடுப்பதற்கு முன்னே விஜயன் முனைந்து அட்டகாசம் பண்ணி, அர்த்தசந்திர பாணம் ஆயிரமாக எய்து பாட்டனுடைய தேகத்

ளைக் கொய்து செல்லரிப்பதுபோற் சல்லடைக் கண்ணாய்த் துளைத்துவிட்டான். முன்னமே சிவந்திருந்த வீஷ்மருடைய திருமேனியானது ரெத்தத்தினாற் பசந்து பாணந் துளைத்த வருத்தத்தினாற் களைத்து வருந்தி வாடி, நிலைதவறி நெடுமூச்செறிந்து, கரைபுரண்ட கருங்கடல்போல் தேர்மேல் விழுந்து அசைவற்றிருந்தார். அப்போது எஜமானிளைத்த சமயத்தையறிந்த தேர்ச்சாரதியானவன் அர்ச்சுனனுடைய போர்முனை விட்டுத் தேரைச் செலுத்தி, நேர்முகமான திசையிற் கொண்டுபோய் நிறுத்தி, அவரைச் சீர்பெறத் தேற்றி அவிழ்தாதிகளூட்டிக் களை தெளியச் செய்து அன்பு பாராட்டினான். அந்த வேளையிற் பகல் விளக்கான பரிதியி னிரதமானது ஆகாயத்தி னுச்சியையடுத்தது. அதுகாலையில் வீஷ்மர் மத்தியானக் கருமத்தை முடிக்கச் செல்பவர்போல் யுத்தமுனையை மறந்து மறைந்து போயினார். அவரிடைந்து சென்ற செயலைக்கண்ட துரியோதனன் தம்பிமார்களும், புத்திரர்களும், சயிந்தவனும், சகுனியும், இடபசேனன் முதலாகிய மற்றப் பேர்களுந் தங்கள் தங்கள் சதுரங்கப் படைகளோடு தயங்கி மயங்கி, தங்களுக்கு உதவியாய்ப் பின்புறம் நின்று தாங்குவாரில்லாமையால் தனித் தனியேங்கி, பற்குணன் பாணத்தாற் பங்கப்பட்டு, நிற்பதற்கில்லாமலுழன்று மனமழன்று புறமிட் டோடினார்கள். ஐயா மகாராஜனே! இந்த வீஷ்மாச்சாரியர், கிருபாச்சாரியர், அஸ்வத்தாமா, துரோணாச்சாரியர், கர்னமகாராஜன் ஆகிய இவர்கள் பராக்கிரமம் எத்தன்மைப்பட்டது? இத்தன்மையான பேர்களுக் கிளைக்காதவனுக்கு விஜயனென்னும் பேர் ஓர் வியப்பாணதோ?

## அருச்சுனன் செய்த யுத்த பராக்கிரமச் சிறப்பு.

அந்தவேளையில் மந்தர புயத்தோனாகிய அர்ச்சுனன் யுத்த முகத்திற் பிரவேசித்து விசித்திர சரங்களை விதவிதமாய்த் தொடுத்து துன்னிய சேனைகளைத் தாக்கி மன்னரை வேறுவேறாகப் போக்கினான். இந்தப்பிரகாரம் மேலுமேலுங் கோடிகோடி கணைகளை வீக்கிய காலையில், நாலுமூலையிலுங் கோலாகலமாய் இருந்த வணங்காமுடி திருந்திய துரியோதன மஹாராஜன் படைகளானது தாவரிக்கமாட்டாமற் பின்னிட்டுப் பறந்து, இரதங்கள் முன்னிட்டு முறிந்து, கொடிமரங் கீழ்ச் சாய்ந்து, குதிரைகள் காலோய்ந்து, தேரிற் கட்டிய சித்திரத்துகிலுங் கிழிந்து, திரிகிச்செல்லுஞ் சக்கரங்களூமுடைந்து, அச்சுகள் பிளந்து, மச்சுகள் சரிந்து குற்றுக்காலுங் கொடுங்கையும் வீழ்ந்து, போதிகையும் பீடிகையுந் தாழ்ந்து, சிகரமுதிர்ந்து சிதறிக்கழிந்து, திகழ்தட்டினைத்துஞ் சிந்திச் சிதைந்து, வீறிட குடையுஞ் சுருங்கி, சாரதி குடலுங் கலங்கி வரிசை விட்டுக் கிரிசைகெட்டு மாரொடிந்து போனதுமல்லாமல் வஞ்சமனத்தனான துரியோதனனுடைய வெற்றிபெற்ற மத்தகஜ மனைத்தினுக்கும் மத்தகக் கும்பம் பிளந்து, வித்தகத் தந்த முறிந்து, சுளகுபோன்ற காதுகளறுந்து, தும்பியாகிய கைகள் தறிந்து, நான்கு காலுங் கமுகனைய வாலும்போய் வறண்டு, நல்ல உடலுங் குடலும் ஒன்றாய்ப் புரண்டு, வட்டக்கடலுலகில் மலையெட்டுந் தலைநட்டுப்பட்டு விழுந்தவாறுபோல் ஒன்றொழியாமல் உயிர்கெட்டொழிந்தன. தெய்வலோகத்தில் இந்திர சிங்காசனமேறிய கிரீடியானவன், நிருடியாய்ச் சிந்திய சரோருகக் கணைகளால் துரியோதனனுடைய குதிரை கூட்டங்கள் யாவும் படைமுறிந்து, பலங்குறைந்து, வால்தறிந்து, கால்முறிந்து, கழுத்துமயிர் உதிர்ந்து, கடிவாளக் கயிறு கழன்று, மார்பு கிழிந்து, மன்குளம் பழிந்து, தோல் மடிந்து, மேலொடிந்து, ஐப்பையு முகமுங் குப்புறவீழ்ந்து சரகெனச் சிதறின. நாகக்கொடி படைத்த நராதிபனுடைய பதாதிகளானது சிரஞ்சிதைந் திடைந்தன; சுரந்தறிந்தழிந்தன; எலும்பொடிந் துடைந்தன; ஈரல் சரிந்ததிர்ந்தன; நாடியற்றிந் துழன்றன; நல்லுதிரம் பொழிந்தெழுந்தன; நெற்றியும் புருவமும் நிமிர்ந்து பிளந்தன; புயமும் மார்பும் புண்ணாய்க் கிழிந்தன; குதமும் பதமுங் குறைந்து சுருங்கின; காலுங் கரமுங் கறணையாய் வீழ்ந்தன; எவ்விடங்களிலும் பிணக்குவியல் உயர்ந்தன; இனி யொருவர் எதிர்த்துப் போர் கொடுப்பார்கள் என்று கனவிலும் நினைக்காதபடி சவ்வியசாசி விட்ட சரங்களினால் நால்வகைச் சேனைகளிற் றப்பிப் பிழைத்தவர்கள் இப்புவியில் இல்லையென்று சொல்ல மாண்டார்கள்.

இப்பால் யுத்தஞ் செய்தவிடத்தில் நெஞ்சுரம் பொருந்த நஞ்சுபோலிருந்த நரனென்னுங் காலாக்கினிக்கு எதிர்ப்பட்ட பூளைப்பூப் போல், துரியோதனன் சேனைகள் எதிர்ந்து-பொடிந்து-பொறிந்து - புகைந்து - பறந்து

புரண்டுபோய் விட்டன. மேலும், சிரித்துப்
புரமெரித்த சிவபெருமான்போனின்ற செஞ்
சிலை விஜயனுக்கெதிரில் திரிபுராதிகட்கொப்
பாய்த் துரியோதனன் படைகள் பட்டார்கள்.
இன்னும் அநுமக் கொடிபடைத்த அர்ச்சுன
ராஜன் அநுசந்தானஞ்செய்த அஸ்திரங்
களினால் ஆறுபட்டோடிய ரெத்தவெள்ள
மானது சேறுபட்டுச் சிதைந்து செந்தூளாகி
யது. பின்னும் அர்ச்சுனனுடன் மாறு
கொண்டு மடிந்த பெயர்களின் வல்லுடலா
னது நீறுபட்டு நெரிந்து ஊறுபட்டொழிந்
தது. அசைவில்லாமலெழுந்த விஜயன்கணைக
ளானது தங்களிஷ்டப்படிக்குச் சண்டை
போட்டு, திசையின் கடைசிவரைக்கும் போய்
முட்டிப் பார்த்துத் திரும்பி, அப்பாலுந் தங்
கள் விசையடங்காமற் பூமியைத் துளைத்து
அதுவும் போதுமென்றிராமற் சுழற்காற்று
டனுங்கலந்து சுரவை குறையாமற் றிரிந்தன.
மேலும் மாதவி காதலனாகிய பார்த்தனே விய
வர்கணைகளானது திக்கெட்டுங்கிட்டி, திசைப்
பாலகர் தலையிலுங்குட்டி, அஷ்டகஜங்களைத்
தட்டி, அண்டச் சுவரையுமுட்டி, இன்னும்
ஆராகிலும் பகைவருண்டோவென்று ஆராய்
ந்து விட்டன. இதன்றியும் சிற்சில நெருப்
புக் கணைகளானது பற்பல தேர்நிரைகளையும்-
யானைப் பெருக்கங்களையும்-குதிரை நெருக்
கங்களையும்-கால்பல வருக்கங்களைக் கசியக்
கரைத்து, கண்ணுக்கிடு மைபோலரைத்து,
கால்வாய் கொண்டோடுகின்ற ரெத்தங்களிற்
கரைத்து, கடலிற் பெருங்காயங் கலத்தல்
போற் கலக்கிவிட் டிரைந்ததுகள். வீபற்சு
விளைத்த வினையால் கொற்றவர்களும் மற்ற
வர்களும் மெத்த வருந்திச் செத்ததல்லாம
லும், தலைமேற் குவித்த கரத்தினராய் தபி
ந்து வீழ்ந்த சிரத்தினராய் தைரியங்கெட்ட
உரத்தினராய் தங்கள் தங்கள் வாய்விட்டர
ற்றி அவரவர்க்குரிய பெரியபெரிய சந்திரவட்
டக் குடைகளும், வெண்சாமரைகளும், பல்ல
க்குகளும், வாகனங்களும் பேரிகை-பூரி-தாளம்
மேளம்-தவிலடி-காளம்-கொம்பு-கொடி-முரசு
இவை முதலிய வாத்தியக்கருவிகளும், வில்
லும் - பாணமும் - வேலும் - வாளும் வெவ்
வேறுயழிந்து, பூமியிற் குப்பையாய் பொருந்
திக் குவிந்ததுகள். இந்தப் பிரகாரம் சண்டை
புரிந்த இந்திரன் மைந்தன் அண்டச்சுவரை
யளாவிய சமுத்திரப்போ லிரைந்தெழுந்த
துரியோதனனுடைய சேனைகளை மகர மச்சம்
போற் குடைந்து வாட்டிவிட்டான். மேன்மே
லுந் தெறிந்த வெங்கனற்கணைகள் மிதமறப்
படர்ந்து, வெளியெல்லா மடர்ந்து, காடெல்
லாங்கடந்து, கடையுகாக்கினிபோ லெறிந்து,
விரோதிகளைத் தொடர்ந்து, மேனிகளைப்
பிளந்து, சேனையைச் சிதைத்து, ஊனினைப்
புசித்து, உதிரங்குடித்து, தாராகணங்களைத்
தரையிலுதிர்த்து, தேவர்கணடுங்கச் செந்தீ
யெரித்துச் சிரித்துக் கலித்துத் திறம்பெற்று
நின்றதுகள்.

இவ்வாறு மாடுபிடி சண்டை போடுவதற்
காகப் புகுந்த வணங்காமுடியோன் முதலா
கிய மன்னர்கள்பேரிற் குறிப்பறிந்து நெறிப்
பறிந்தி கூசாமலேவிய பாசுபதன் பாணங்
கள் ஒவ்வொன்றும் எப்படியிருந்ததென்னில்,
தசரதச் சக்கரவர்த்தி தந்த மைந்தனான தாச
ரதியானவர் தாப்பசயனத்தி லிருந்து வருந்தி
யழைக்கும்போது வராத சமுத்திரராஜன்
பேரில் வலுக்கொண்டுந்திய வன்னிக்கணை
போன் றிருந்தது. ஆனை சர்ப்பக்கொடி நாட்
டிய துரியோதனனுடன் பொருந்திப் போர்
புரிந்த போர்வீரர்கள்பேரிற் புரந்தர துரந்
தரன் போக்கிய புங்கவங்களானது எவ்வா
றிருந்தனவென்னில், தீரம்பெறுஞ் சூரனையும்
அவன் சேனைகளையுங் களைந்த சிவசுப்ரமணி
யக் கடவுளின் வேலாயுத மொத்திருந்தன.
மேலும் கருங்கடல்போற் கவிந்த கௌரவ
குல முதல்வன் சேனைகளியாவற்றையுங் கண்
கலங்கப் புண் துலங்கக் கசக்கி வதக்கிக் கருக்
கும்படிக்குக் கேசவற்றோழன் முடுக்கிய கிளைக்
கணைகளானவை எத்தன்மை யொத்தனவெ
னில், எமதருமராஜனேவி வீசிய தண்டபாசத்
திற் கிணையாயிருந்ததுகள். வேந்தர்கள் முடி
மேற்கவித்த வெள்ளைக் குடைகள் காம்பு
முறிந்து பூமியிற் கவிழ்ந்து காற்றினால் நிமிர்
ந்து கலந்து கிடப்பவை எவ்வாறிருந்தன
வென்னில், சுபத்திரை நாயகன் துரியோதன
னுடைய படையை வென்று அடலுற்றுச்
செய்யும் யாகத்தில் அவிர்ப்பாகம் பெறவே
ண்டி சந்திரன்வந்து தலைகவிழ்ந் திருப்பது
போலிருந்தன. வெற்றி வீரமுள்ள வேந்தர்
கள் கையிற் பற்றிய வலம்புரிச்சங்க முதலிய
வெல்லாவற்றையும் அர்ச்சுனன் அம்பாலடித்
துத் தள்ளுதல் எவ்வா றிருந்ததென்றால்,
ஏகச்சக்ராதிபனாகிய துரியோதனனது கீர்த்
தியை வேரறக் களைந்தவாறுபோ லிருந்தது.
தேர்களிலும் யானைகளிலும் பொருந்தியிரு
ந்த பலநிறக் பட்டுக்கொடிகள் பார்த்தன்

விட்ட பாணங்களால் அறுபட்டு-முறிபட்டு-தறிபட்டு மாலைமாலையாய் வீழ்வது எப்படிக்கிருந்ததென்றால், வெகுநிற மேகங்கள் விண்டலம்விட்டு நீங்கி மண்டலத்தில் ஒரே மொத்தமாய் விழாமல் தனித்தனி வரிசைவரிசையாய் விழுந்தவாறுபோன்றிருந்தது.

இதல்லாமலும் மாசற்ற தேசுற்ற வளம்பெற்ற மனதுற்ற தருமராஜனுக் கிளவலாகிய தனஞ்செயனனவன் ஜெயலக்ஷ்மியைக் கலியாணம் பண்ணிக்கொள்வதற்குத் தனித்தனி எடுத்துத் தொடுத்த சரக் குவியலானது தூசிப்படைச் சூரர்களின் வீரவில்லை வெடுக்கென்று முறியப்படுத்திய வேடிக்கை எவ்விதமிருந்ததெனில், ஜனகராஜனுடைய வில்லைச் சீதாபிராட்டியாற்காகச் செங்கண்மால் வளைத்தொடித்த செயல்போன்றிருந்தது. இதன்றியும் கரும்பை பரிந்தெடுத்துண்ணும் வாயும்-பணைக்கையும் - விரிந்த காதும் பொருந்திய உடலையுள்ள திடகாத்திர கும்பகரடதட யானைகளின்பேரில் முழங்காநின்ற முரச வாத்தியங்களை நரனுந்திய நாராசப்பகழிகளுடைத்தது எப்படிக்கிருந்ததென்றால், உயர்ந்த மலைமேலுற்ற பெருங் கருங்கற்களைப் பேரிடிவிழுந்து பிளந்தவாறொத்தது. மேலும் வெற்றிப்போரிற் புகுந்த மத்தகஜங்கள் வீரபட்டங் கட்டிய கும்பம் பிளப்புண்டு இரண்டு பக்கங்களிலும் ரத்தம் புரண்டோடும்படியாக திரிகின்றது எத்தன்மை யொத்ததெனில், சித்திரைப் புயலடிக்குங் காலத்திற் சிவந்த வெள்ளம் பெருகிக் கறுத்த மலைமேற் கால்கொண்டு வழிந்த காட்சியை யொத்திருந்தது. இதல்லாமலும் அர்ச்சுனன் அந்த இடத்திற் போர்செய்த திறம் எப்படி யிருந்ததெனில், ஒரு யாகஞ் செய்து, தேவர்களுக்குப் பூர்ணாகுதி கொடுத்த செயல்போன்றிருந்தது. அஃதெவ்வாறென்னில், மாடுபிடி சண்டை விளைந்த காடு குடிகொண்டு பரந்த நிலமானது வேள்விச் சாலையாகவும், வீராளெதிர்ந்து போர்புரிந்த இடமானது ஓமகுண்டமாகவும், அவர்கள் பிரயோகம் பண்ணிய பாணாக்கினிகள் யாகாக்கினியாகவும், போர்முகங்கொண்ட வீரானுடைய தேகமானது சமித்துக்களாகவும், அன்னோர் உடம்பிலிருந்து வழிந்த ரெத்தங்கள் நெய்யாகவும், போர்பொறவழைக்கும் வீரப்பேச்சுகள் வேதமந்திரங்களாகவும், இயாவருடைய உயிரும் அவிர்ப்பாகமாகவும், தேர்ச்சிகரங்கள் பூர்ணகலசங்களாகவும், அயமேதம்-கயமேதம்-புருஷமேதம்-பசுமேதம் என்னும் யாகத்தை ஒரு நாள் விரதத்தில் அவ்வுத்தமன் செய்ததை ஒத்திருந்தது. மேலும் பிரமசிருஷ்டிக் குட்பட்ட ஆத்மகோடிகளின் கண்ணுக்குள் மணிபோன்ற கண்ணனைப் போல் அந்த யுத்தபூமியைச் சாரிவரும் அர்ச்சுனனைக்கண்ட பாரிய தேர் வீராளெல்லோரும் இன்னுந் தங்களை நாடி தனஞ்செயன் தேடி வருகின்றானென்று தளர்ச்சியடைந்தார்கள்.

இப்படியாகப் போர்விளைந்த யுத்தகளம் எப்படி யிருந்ததென்றால், பருந்துகளிருந்து விருந்துகளருந்த, கழுகுகள் குழுமிக் கொழுநிணங்கொள்ள, காக்கைகள் வீராள் கண்ணைப் பிடுங்க, ஆக்கையைப்பேயாய் அடுத்துக் கடிக்க, பிணந்தின்னுங்கூளிக் கணங்கள் பறக்க, ஈரலை குலையைக் குழிநரியிழுக்க, மிகுந்த ஓசையுள்ள பட்சிகளின் றெக்கை நெருக்கத்தினால் வானமும் - மலையும் - மரங்களுமறைய, ஆறாகவும் - சேறாகவும் - மடுவாகவும் - ஓடையாகவும் - கயமாகவும் - காலாகவும் பெருகியோடிய உதிரங்களினாற் கடல்வளைந்த உலகஞ் செவக்க, பைசாசங்களும் - பூதகணங்களும்-பிணங்கி, மறுபடியும் இணங்கி, வராகியை வணங்கி, கைகோர்த்து ஆடியும் பாடியும் ஓடியுமிருக்க பாம்பாரம்-என்புமாலை-சூலகபாலம் - யாளிவாகனம் - உடுக்கை - பம்பை இவைகளைக்கொண்டு திரிகின்ற காளிக்கூட்டமும் மணிமுடியணிந்த மயிடனைத் துணித்த கன்னிப்படையும், குத்துச்சண்டை, வெட்டுச் சண்டையிற்றேறிய குறளி-கூளி-பாரிடம்-இவைகளுங் கூடிக் குலாவிப் போர்க்களமுழுவதும் பொருமித் திரியவுமா யிருந்தது. அன்றியும் ஒரு பேய்ப் பெண்ணானவள் சண்டையி லுருண்ட தரியலர் தலைகளை, அண்டையிற் கிடக்கும் யானைத்தலைகளை குப்பையாய்க் குவிந்த குதிரைத் தலைகளை, மலைப்பாம்புடல்களில் வரிசையாய்க் கோர்த்து, தாலியுருவு முதலிய மங்கல சூத்திரமாய்க் கழுத்திற் றரித்து, உருவுகள் கோர்த்துக்கொண்டேனென்று பிரதாபம் பேசித் தன்னை மறந்து வந்து, சற்றே தவறி இரத்தத்தில் வீழ்ந்து ஆழ்ந்து சுழியிற் றாழ்ந்து, செத்தேனென்று முழுகி எழுந்து தெணறிக் கூச்சலிடும்போது, ஒரு பூதம் ஓடிவந்து ஏற்றக்கோல் போன்ற நீண்ட கரத்தைக் காட்ட அக்கரத்தைப் பிடித்துக் கரையேறுபவர்போல், அக் கரத்தைப்

பிடித்துக் கரையேறிவந்து, இன்றைக் கொருத்தென்று சந்தோஷிக்குஞ் சந்தடிப் பெருக்கமும், அவ்வாறு பிழைத்த அப்பெண் பேயானது தன்னைக் கரையேற்றிவிட்ட பூதத்தைப் பிடித்துக்கொண்டு, எப்போதுமது கைப்பிடித்தேனோ அப்போதே உமக்கு நான் பெண்சாதி எனக்கு நீரே புருஷன் இனி வேறு புருஷனை விரும்பேன் என்று பந்து ஜனங்களுக்குச் சொல்லி, அவர்களனுமதியிற் கலியாணஞ் செய்துகொள்ளுகின்ற ஆரவாரமும், அக் கலியாணத்தில் நிணமாமிசத்தை நிரம்பத்தின்று மயங்கி வீழ்ந்து புரளுகின்ற வயிறுதாரிப் பேய்களின் கோடணையும், அர்ச்சுனராஜனுடைய புகழ்ப் பிரதாபத்தைப் பாடி, அவனுக்கு நன்மையுண்டாகக் கடவதென்று வாழ்த்திக்கூடி, அவனுடைய காண்டீபத்தையும், அக்ஷய தூணீரத்தையும் தோத்திரஞ் செய்கின்ற பேரொலியும் எங்கும் நிறைந்திருந்தன. இதன்றியும் சோரி வெள்ளமானது வாரிபோலோட அதில் மடிந்த யானைகள் அவ்வாரியிற் படிந்த திமிங்கிலம் போலவும், அதில் வீழ்ந்த குதிரைப் பிணங்கள் திமியென்னு மீன்போலவும், அதிலுலாவும் வாளாயுத முதலிய மற்றவாயுதங்க ளெல்லாம் பற்பலவித மச்சம்போலவும், அதிலோடுகின்ற தேர்த் தட்டுகள் முதலியவை கடல்மேற் செல்கின்ற கப்பல்கள் - கட்டுமரம் - தோணி-படகு இவைபோலவு மிருந்தன. பிணங்களாற் குவிந்த மேடானது எண்காற் பட்சிகளிருக்கும் பெருமலைபோன் றிருந்தது. மதயானைகள் கொம்பொடிந்து கூக்குரலிடும் ஓசையானது, தீர புருஷாள் ஒருவருக் கொருவர் கூறிய கணையால் குத்திக்கொண்டிரையும் பேரோசையா லடங்கின. கடையாணி கழன்றோடுகின்ற சக்கரங்களும், தலையறுந்த முண்டமாடும் ஆட்டங்களும், பரதநாட்டிய ஸ்திரீகள் வெட்கமுறும்படியா யிருந்தன.

இந்தப்பிரகாரங் கற்பகப் பூமாலையணிந்த பொற்பிரகாசப் பொன்னுலகிற் சிறந்த தேவேந்திர குமாரனான பார்த்தன் ஆர்த்து அமரருந் தரித்த போர்க்களத்தில், யாளிக்கும்-சிங்கத்திற்கும் - யானைக்கும் - புலிக்கும் நிகராகிய வேந்தர் முதலாகிய வீரர்களை, கூளிக்கும்-ஞாளிக்கும் - காக்கைக்கும் - கழுவுக்கும் அளவில்லாத் தன் கைவாளுக்கும் அவ்வூர் வாழுங் காளிக்கும் விருந்தாக்கி, தேவர்கள் கண்களிக்கும்படிக்கு விஜயலட்சுமியைத் திருமணம் கண்டருளினான். இந்த வீரப்பிரதாப தீர காண்டீப யோக வைபோக தியாக மாயோக விஜய மகாராஜன் செலுத்திய வெந்தழற் கணைகளுக்கு யாவரும் பஞ்சுபோற் பறந்து அஞ்சி பல்லைக் காட்டி கெஞ்சி எஞ்சிப்போனார்கள். சிலர் சண்டையைத் துறந்தார்கள். பலர் மண்டை கிழிந் திறந்தார்கள். சிலர் முகம் விட்டவாறே ஓடினார்கள். பலர் மூச்சுவிட்டுத் திணறி வாடினார்கள். இவ்வாறான நிலையைச் சவ்வியசாசிகண்டு வெவ்விய நகையுடன் வெகுண்டு, ஆபத்தினா லோடுகின்றவர்களைப் பாபத்திற்குப் பயப்படாமற் றுரத்தி, விடாதே விடாதே என்று வெருட்டுவதானான். இதுவுமல்லாமல், திருதராஷ்டிர குமாரனான துரியோதனன் - துச்சாதனன்-சிந்துராஜ மைந்தன்-சௌபலராஜகுமாரன்-குந்திதேவி முதற்பிள்ளையான சூரிய தனயன் இவர் முதலாகிய வெற்றி வீரர்களியாவருந் திசை விலங்கி-மதி நலங்கி - நிலைகுலுங்கி-தலைகுலுங்கிப் போகும்படியாய்ச் செந்தீக் கணைகளை முன்னும் பின்னும் முடுக்கி, தேர் செலுத்துஞ் சாரதியான உத்தர குமாரனுந் தானும் சற்றிளைப்பாறும்படியாய்க் கைப்பிடித்த காண்டீபத்தை நாணி தளர்த்தி, தோட்புறமாட்டிய அம்புறுத்தூணியை நீக்கி, விரற்சாடு-கரச்சாடு-முன்கைத் தோற்கட்டு-பின்கைத் தோற்கட்டு இவை முதலிய கவசங்களைக் களைந்து இரதத்தின் மீது வைத்து, அஸ்வ சஞ்சீவி மந்திரத்தால் குதிரைகளைத்தேற்றி, சாரதியின் சலிப்பையுமாற்றி, தனதாசாரியர்களைப் போற்றி, இன்னமும் பகைவர் ஒன்றுகூடி வருவார்களாகில் மெத்தவும் நேர்த்தியென்று பூர்த்தியான தன் சரீர வருத்தந் தீர்ந்து முகம் வேர்த்து நின்றான். அத்தருணத்தில் உத்தர குமாரனுந் தேர்விட் டிழிந்து குதிரைக் கடிவாளத்தைக் குத்துக்காலுடன் சேர்த்து குதிரை நடாத்துங் காலையுந் தேர்மேல் வைத்துக்கட்டி, குதிரைகளைத் தடவித்தட்டி, அர்ச்சுன ராஜனைக் கிட்டி, மாடுபிடி சண்டை நடந்த மகத்துவத்தையும் இனிமேல் நடக்க வேண்டிய மார்க்கத்தையும் பேசிக்கொண் டிருந்தான்.

### துரியோதனாதியர் மீண்டும் அருச்சுனனோடு பொருது, அவனது மோகனஸ்திரத்தால் மயங்கிச் சாய்ந்து போதல்.

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இப்பால் பகை நிறம்படைத்த பார்த்தனுடன்

கொச்சைப் போர் புரிந்து லெச்சைக் கெட்டழிந்து அடிபட்டோடிய பேர்களின் செயலென்னவெனில், இவ்விதமாக ஒவ்வுதலில்லாச் செவ்வையதான சவ்வியசாசி பௌவமாம் படையில் அவ்வவர்மீதிற் கௌவுமம்பாய்ந்து எவ்வமாகென்று வின்னுணிமாட்டி முன்னுகப்பூட்டி இழித்துவிட்டுச் சற்றிளைப்பாறி இருக்கவும், துவ்விய பாணந் தெவ்வர்களுடைய கொவ்விய பிடரியைக் குறைத்தழித்தொழித்த கொடுமையைக் கௌரவக் குலமகன் கண்டு, செவ்விய கண்கள் செவ்வரக்கினுஞ் செவந்து, நாப்புரண்டுலர்ந்து, தீப்பொறி மலிந்து, நாடாது நாடி, வாடாது வாடி, க்ஷாத்திரத்தால் முனைந்து, நான் இந்த நரனுடன் சண்டை விளைத்து நலிந்து-மெலிந்து-தறிந்து-முறிந்து - இறந்துபோனாலும் போகிறதேயல்லது, இவனால் என் படை கெட்டு இவ்வளவு அவமானப்பட்டு அஸ்திறபுரிமட்டும் போய்ச் சேரமாட்டேன். என்று நடநடவென்று பற்கடித்து, மடமடவென்று விற்பிடித்து, பளபளவென்று தோளடித்து, கிடுகிடுவென்று கெற்சித்து, தடதடவென்றேடித் தேரேறி, கடகடவென்றுடப் புரவி செலுத்தி, படபடவென் றரவக்கொடி நீட, விடவிடவென் றமரர்த் தடம்வீட, ஆணவப்பேயாட, அருவினை யூடாட, கிராட-மராட - கர்னுடர் முதலிய மன்னவர் சூழப் படாடம்பங்காட்டி வந்தான். இப்படிக்கு வரா நின்ற துரியோதன மகாராஜனைக் கர்னன் பார்த்து கடுங்கோபங்கொண் டார்த்து, ஆ தம்பி! நானுயிருட னிருக்கும்போது நீ சண்டைக்குப் போகவேண்டுமோ? நில்லு; நில்லு; என்று தடுத்து, தன்னுடைய தேரை முன்னுதாய் விடுத்து, மன்னவன் ரதத்தைப் பின்னுறவமைத்தான். அன்னகாலையிற் பொன்னணிபூண்ட துரியோதனனுடைய தம்பிமார்களும் பூபாலர் முதலிய பேர்களும் மின்னெனவெழுந்து, கர்னனுடன் கலந்து முனைந்தார்கள். வீஷ்மர் - துரோணச்சாரியர்-கிருபாச்சாரியர்-அஸ்வத்தாமா இவர்கள் நால்வருந் துரியோதனனுடைய மனோபாவ மறிந்து, தவறுபேசுதல் தவிர்ந்து, போனவருடனேர்ந்து புகுந்தார்கள். அப்போது மகமேருவுக்கொப்பாகிய அத்தினபுரி யென்னும் வெற்றியானை மீதேறிக்கொண்டு, அருச்சுனன் சண்டையை யிப்போது அமராகப் பொடியாக்குவேன், இது எப்போதுந் தப்பாது எங்கள் பெருமைக் கொப்பேது பாருங்கள் என்று விண்டல முதலாகிய மேகங்களும்-எண்டிசை முதலாகிய நாகங்களும்-மண்டல முதலாகிய அண்டங்களும் விண்டுதிர்ந்துபோமென்னத்தக்கதாய் விளைந்திருக்கின்ற இப்போர்முகத்தில், இவனே வெற்றிபெறுவானென்று கொற்றவர் பலரும் மற்றவரெவருங் குறித்துக்கொண் டாடும்படியாய் விகர்னன் என்னுங் காளை செண்டென வெழுந்து திரண்ட சேனையுடன் வந்து கலந்தான்.

இதல்லாமலும் பார்த்தன் பாணத்திற்குப் பயந்து, போர்க்களம் விட்டுப் பிரிந்து, பெண்டு பிள்ளைகள்மேற் பரிந்து, பின்னு முன்னுமாக இறந்துபோன மகுடவர்த்தனர் பட்டவர்த்தனர் முதலிய பேர்களுஞ் சேர்ந்து, எமதர்மராஜன்மேல் எதிர்க்கின்ற உயிர்வகைக் கூட்டம்போல் திரும்பினார்கள். கோபமீறிய குரோதமேறிய நான்கு படைகளும், அதிரதர்-மகாரதர்-சமரதர் - அர்த்தரதர் முதலிய வீராதிவீரர்களும் பொருந்தி, பிருதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாயம் என்னுமிவ் வைம்பெரும்பூதமுங் கலங்கும்படியாய் ஆதிசேடனுடைய பணமகுடமுங் குலுங்கும்படியாய்த் துணிந்து திடதைரிய தீரத்துடன் இளைப்பாறிக்கொண்டு தனித்திருந்து சாரதியுடன் சண்டையின் திறத்தினைப் பேசி நின்ற தனஞ்செயச் சிங்கத்தைத் தட்டியெழுப்பி வளைத்தார்கள். சற்று நேரத்திற்கு முன்னே தனஞ்செயனுற் பட்டபாடும், கெட்ட கேடும், அஸ்திரந்துளைத்த நோயும், பச்சையுதிரமோடிவரும் புண்வாயுங் காயுமுன்னமே ஆயும் அறிவினர் ஆயாசம் பாராமல் போர் புரியப் புகுந்து நாற்றிசையிலும் பரவி நானுவிதமாகிய அஸ்திரசஸ்திர ஆயுதங்களை விஸ்தாரமாக விடுத்து அடுத்தார்கள். அவ்வவர் தொடுக்கும் அம்புக் கும்புகளை அர்ச்சுனன் கண்டு இரதத்தின் மேற்கொண்டு, எதிர்வந்த பேர்கள் பிதுர்கலங்கிப் போகும்படிக்கு விஜய காண்டீபம் வளைத்து, நாணொலி விளைத்து முளைத்த முழுமதிபோல் மதர்த்து நின்றான். இந் நாயகனான நரன் தேரேறு முன்னமே வாரேறுதனச் சுதர்க்களை மைந்தனான உத்தரகுமாரனென்னுஞ் சாரதி களையாறிய குதிரைகளைத் தேரிற்பூட்டி, கலகலவென்று ஒலிக்குஞ் சதங்கைகள் கர்க்கரத் தொனியுடன் கலந்து முழங்க முடுக்கினான். அர்ச்சுனராஜன் தேர் அசைந்தாடி ஓடும்பொழுது மணிமுடி தரித்த மன்னவர் பலருங் காரிடி-நீரிடி-நெருப்

பிடி-பேரிடி யென்ன நெடு நாணோசை காட்டி அளவுபடாத அம்புகளைச் சொரிந்தார்கள். அதுவுமல்லாமல், அக்கினிபற்றி யெழுகின்ற கொழு - மழு - தண்டாயுதம்-சூலம்-அங்குசம்-பாசம்-உலக்கை-சக்கராயுதம்-தோமரம்-ஈட்டி-வாங்கு இவை முதலிய ஆயுதங்களை முக்கண் மூர்த்திக்கு ஒப்பான பற்குணன் பேரிலும், சாரதிமீதிலும், தேரின்பரப்பிலும், குதிரைக ளுடம்பிலும் படும்படியாய் வீசி முடுக்கினார் கள்.

ஈதன்றியும் யானைமே லிருந்தவர்கள்-தேர்மே லமர்ந்தவர்கள் - குதிரைமேற்கொண் டவர்கள்-பூமிமேல் நின்றவர்கள். ஆகிய இவர் கள் தங்கள் தங்களுக்கு இஷ்டமானபடி முனைந்து தனிப்படைகொண்டு ஜாடினார்கள். அப்போது பூண்டயங்குந் தேரிலிருந்த பாண்டு புத்திரனாகிய பார்த்தன் எமந்தரித்து காலத்தில் மூடுபனியினாற் மறைக்கப்பட்ட சூரியன்போ லிருந்தான். அவ்விதமாகச் சற்று நேரம் ஒளிமழுங்கி உருத்தெரியாம லிருந்து உடனே யோசித்து விரைந்து தனக்கெதிர் நேரிட்ட தரியலர்களையும், அவர்களாற் றூக் கிய சரக்கணைகளையும் சட்டை பண்ணாதவ னாய்ப் பட்டங்கட்டிய முடித்தலையாட்டி, பக பக நகைத்துப் பற்காட்டி உடலு மும்முறும் பதைக்க நம்முடன் அடல் விளைக்கவந்த இத் தனை பேர்களும் பட வதைத்துவிட வேண்டு மென்று பதறி நினைத்து மறுபடியும் பொறுத்து, விஜயகாண்டீபத்தை யெடுத்து நிறுத்தி வளைத்து நாணேற்றி, பூர்வத்தில் தனக்கு தேவேந்திரன் கொடுத்திருந்த இந்தி ராஸ்திரத்தை யேந்தி, மந்திரஞ் சொல்லி வணங்கி இந்திரத்திக்கினி லுந்தி, யமதர்ம ராஜனாற் பெற்ற ஏமாஸ்திரத்தை யெடுத்து பூசித்து தென்றிசையிற் செலுத்தி, வருணாஸ் திரத்தை வணங்கி, மேற்குத் திக்கில் முடுக்கி, குபேராஸ்திரத்தை கைக்கொண்டு கும்பிட்டு பணிந்து வடக்குத் திக்கில் விடுத்து, இந்தி ரன் முதலாயுள்ள அஷ்டதிக்குப் பாலர்களை யுந் துதித்து, நான்கு திக்கிலும் பாங்குட நடந்து திரும்பி நாணி தளர்த்திய காண்டீ பத்தையும், அம்புறுத் தூணியையும் இரதத் தின்மேல் வைத்துப்போட்டு, அக்கால் நடக் கின்ற விந்தையான வேடிக்கைகளைப் பார்த் துக்கொண் டிருந்தான். இப்பிரகாரந் தருக்கு டன் செருக்கிநின்ற தனஞ்செயனையும், அவ னாலே வியசாயகங்களையும், அந்தச் சாயகங் கள் தங்களைத் தடைப்படுத்துகின்ற தந்திரங் களையும் அவன் கற்றிருக்கின்ற தநுர்வேத மந் திர சூத்தரங்களையுந் துரியோதனன் படை வீரர்கள் தெரிந்துகொள்ள மாட்டாதவர்க ளாய், பண்டாட்டமாவதே கொண்டாட்ட மென்னக் குறித்து, சப்தமேக மெழுந்தது போற் கவிந்து, மின்னலிடியும் வீறிட்டவாறு போல் முழங்கி விற் பிடித்து கல் வருஷம் பொழியுங் காட்சிபோல் அஸ்திரங்களைச் சொரிந்து, வேணமட்டும் பரிந்து சலிப்பில் லாமற் பாடுபட்டார்கள்.

இவ்வாறு தம்மாற் கூடியவரையிலுந் தாட்சியில்லாமல் முடுக்கி பிரயோகித்த சரங் களை யெல்லாம் அருச்சுனன்விட்ட நான்கு தேவதாஸ்திரங்களும், அப்பா லிப்பாற் செல்லவொட்டாமல் முடக்கி, அவ்வர்ச்சுனன் பேரிற் போகவொட்டாமல் மடக்கி, அப் பாணங்களின் வேகத்தையும் அடக்கி, ஆவென னத் திறந்த வாயால் அமுக்கி, முறுக்கி வாரி யடித்து நொறுக்கித் தாறுமாறாய் வேறுவே றாய் கூறுகூறாய் நீறுநீறாய்ச் செய்யுந் தன் மையை மந்தரமலைபோ லுயர்ந்த தோளினை யுடைய வீஷ்மர்-துரோணாச்சாரியர்-கிருபாச் சாரியர்-அஸ்வத்தாமா இவர் முதலிய சாந்த ரும், துரியோதனராஜன் முதலாகிய வேந்த ரும், மகாரதர் முதலாகிய மாந்தரும் பார்த் துத் தலை கவிழ்ந்து குனிந்து, மதிமயங்கி முனிந்து, மனந்தியங்கி நினைந்து, ஐயோ! இந்த அர்ச்சுனனால் முன்னாடி அடிபட்டு இடைந்தோமே அந்தத் தெப்பலுடன் போய்விடாமல் திரும்பி யெதிர்த்தும் வெல்ல மாட்டாமல், இப்போது துரியோதனன் தொப்பலுக் குள்ளானோமே, ஓ! ஓ! ஓ! வெகு நாளைக்கு நிலைநிற்கும்படியான அபகீர்த்தியை யடைந்தோமே, இதுவரையிலும் நாம் பெற் றிருந்த சுபகீர்த்தியை யிழந்தோமே; வீணாக வேசாறிநொந்தோமே; பூணாரம்பெற்ற புரந் தரன் மைந்தன் செய்வனவற்றைச் செய்து போட்டு மெய்வருத்தமில்லாமல் விசாலமூற் றிருக்கின்றானே; நாம் இதற்கென்ன செய் வோம் என்று வெட்கப்பட்டு வெந்து வெதும்பி யொதுங்கிப்போனார்கள். இப்பால் வானத்தினின்று வேடிக்கை கண்ட வானவர் மாதவர் முதலாயினோர் மகிழ்ச்சிமேற்கொண்டு மாதவி கொழுநனை மகிழ்ந்து, மந்தாரப் புகழ்ந்து, மலர்மழை பொழிந்து வாழ்த்தி னார்கள். சரஸ்வதிநாயகனை சதுர்முகப்பிரம

ஞனவர் சாக்ஷாத்காரமான சங்காழி முகுந்த னுடைய தனியருளென்று சந்தோஷங் கொண்டாடினுர். அமராபதிக்கு அதிபனுகிய தேவேந்திரன் காலகேயாளே ஜெயித்து நம ராயு ளளித்த விஜயன் நவநீதசோர நாதன் மைத்துனனென்று நாடி புகழ்ந்தாடினன். அளகாபுரிக் கிறைவனுன குபேரன் சந்திர சேகர சடாதரனருளால் இந்திராதிப ரெவர்க் கும் முந்திய முதற்காரணமாகி வந்து அவ தரித்த மரகதநிறத்தனே அருச்சுனனுமனென் ருனந்தங் கொண்டான் பாண்டு பூபதியான வன். மற்றப் பார்த்தியர் பலரோடுங் கலந்து, நமது காண்டீபன் வெகுண்டு தூண்டியசரத் தாற் செத்தழிந்தொழிந்த சேனையும் யானை யும் இத்தனை கோடியென் றியம்பப்படாமை யால், நல்ல புத்திரப்பேறு பெற்றன மென்று மெத்தவும் பேசி மேன்மை யடைந்தனன். அமரர் - சித்தர் - அசுரர்-தைத்தியர்-கருடர்-கின்னர்-நிருதர்-கிம்புருடர்-காந்தருவர்-இயக் கர்-விஞ்ஞையர்-பூதர்-பைசாசர் - அந்தரர் - முனிவர்-உரகர் - ஆகாயவாசிகள் - போகபூமி யர் - ஏகாதசருத்திரர்-துவாதசாதித்தர்-அட்ட வசுக்கள் இவர்கள் முதலாகிய பேர்கள் யாவ ரும் இந்த சவ்வியசாசியின் சாதுரியத்தைக் கண்களாற் கண்டு களித்துத் தங்களாலுந் தாங்கமாட்டாமல் ஓங்கிய மலைக்கண்ணுவப் புற் றிருந்தனர்.

இவ்வாறு எல்லோருங் கொண்டாடிக் கொண்டிருக்கின்ற அந்த வேளையில், வீபத்சு என்னும் பெயர்பெற்ற விஜயன் மறுபடியும் வில்லை எடுத்து, நாணிதொடுத்து, தானினைத்த காரியஞ் சித்தியாகும்படி கருதி மோகனுஸ்தி ரம் பிடித்து, பூசாவிதிகள் முடித்து, பிரணவ மந்திரம் படித்து, பிரதாபராமன்போல விடு த்து, பெருங்கும்புகளெல்லாந் தும்புகளெழும் படியாய்ப் பெதறி வாடி ஓடி, அவர்கள் படும் பாட்டை யோகபுருஷன்போல் நாடிப் பார்த் துக் கொண்டிருந்தான். இங்ஙனம் நின்றெழு ந்த மோகனுஸ்திரமானது தியாகம் வாங்கச் சென்ற தெரிவைபோற் சென்று, பிராணத்தி யாகம் பண்ணுவதற்கு பின்வாங்காமல் முன் னேங்கி மற்போர் விளைக்கும் பற்பல வீரர்களை யும் விற்பன விவேகிகளையும் சொற்பனங் காண்பவர்போற் சோர்வுறச் செய்து மயக்கிய போது, சண்டை செய்யவந்த திறமும், தாங் கள் புரிந்த மறமும், தேக நிறமும் அறந்து மறந்து , மடிந்தவர்களைப்போற் பூமிமேற் படிந்து போனூர்கள். இதன்றியும் தேர்மேல் இருந்தவர்கள் தேரின் பேரிலும், யானைமேல் வந்தவர்கள் யானையின்பேரிலும், குதிரைமீது வந்தவர்கள் குதிரையின்பேரிலும், நிலத்தின் மேல் நின்றவர்கள் நிலத்தின்பேரிலும் இருந் தது இருந்தபடி பெருந்திகிலடைந்து, இந்த லோகம், அந்த லோகம், எந்த லோகமோ வென்று நிலைதவறித் தலையுதறிப் பொறிசித றிப் பலன்பதறி சாய்ந்து விட்டார்கள். அவர் கள்படும் பாட்டைப் பார்த்த பார்த்தனுனவன் மனக்கிசைந்த சாரதியான உத்தரகுமாரனு டைய சித்திர முகத்தை பரிந்துநோக்கி, பிர யோசனமற்ற ஓர் நகை புரிந்தான். பிரயோசன மில்லாத நகை யாதெனில், இரும்புக்கு விழு கின்ற சம்மட்டியானது நெருப்புக்கும் விழு வதுபோல் திரியோதனுதியர் படப்போகின்ற அவமானத்தைத் துரோணர் முதலிய பெரி யோர்களும் படப்போகின்றூர்களே என்று வெறுப்பினுல் நகைத்த வெறு நகை யென்று சொன்னேம்.

### அருச்சுனனின் ஏவலால் உத்தரகுமாரன் தன் தங்கைக்கு தரணிபர் தலையாடை பறித்து வருதல்.

இப்படி யாதொரு சந்துஷ்டியுமில்லா மல் வெறுப்பாய் நகைத்த தனஞ்செயனுன வன் விராடகுமாரனைத்தழுவி, அப்பா உத்தர குமாரனே! உன் சகோதரியான உத்தரை சொல்லிய சங்கதி ஞாபகத்திலுண்டோ இல் லையோ? மறந்துவிட்டாயோ? ஜெயங்கொண்ட தன்மையால் மகிழ்ந்து விட்டாயோ என்று கேட்டான். அவ்வசனங்கேட்ட உத்தரகுமா ரன் கண்களிருண்டு, மனமருண்டு, சிந்தை கலங்கி, தீரம்விலங்கி, திடுக்கிட் டலமலங்கித் தியங்கி, ஒன்றுந்தோன்றுமல் மயங்கி, உறக்க முந் துன்பமும் ஒருவாறடைந்து இப்போப் பட்ட மகா புருஷனுடைய அருமை பெருமை தெரியாமல் நமது தங்கை என்ன சொன்னுளோ? ஏதுகாரணமோ? என்று பெரு மூச்செறிந்து, பற்குணனைப் பணிந்து, பயம் விட்டுத் துணிந்து, எனக்கிட்ட தெய்வமான எந்தலே! அறியாதவளான சிறியாள் குறியா மற்பேசிய கொடுமொழிகளேதேனு முண்டா யின், அம்மொழியை என்னைப்பற்றி மன்னிக்க வேண்டும் என்று வாய்பொத்திக் கைகட்டி மன நடுங்கச் சொன்னுன். அவனது அடக்கம்-ஒடுக்கம் - நடுக்கம் - வணக்க முதலியவற்றைக் குறிப்பினு லுணர்ந்துகொண்ட நரனுனவன்

உத்தரகுமாரனுடைய முதுகைத்தட்டி, அப்பா குழந்தாய் ஓ! மற்றொன்றுமல்ல. நீ வாய் வறளாதே மனந்தளராதே மதிபுரளாதே ஓ வல்லவனே! இப்போது நாம்போக்கிய மோகனக் கணையால் அயர்ந்து எழுந்த யாவரும் இன்னும் ஒரு முகூர்த்தத்திற்குள்ளாக மயக்கம் நீங்கி எழுந்திருப்பார்கள்; இதற்கு முன்னுதாய் நீ அவர்களிடத்திற்குப்போய் அவர்கள் கிரீடத்திற் சாம்பிரதாயமாய்க் கட்டிக்கொண்டு இருக்கின்ற துஸ்தரவஸ்திரங்களையும் விருதுகருதித்தொடுத்த இரத்ன சீலைகளையும் பக்குவமாய்ப் பறித்து வருவையாகில், உன் தங்கை கேட்டுக் கொண்டவண்ணம் பொம்மைகட்கணிந்து விளையாடக் கொடுக்கலாம் என்று புகன்ற அர்ச்சுனன் வார்த்தையை உத்தரன் பற்றரைமாற்றுப் பசும்பொன்போற் சித்தமுவந்து தேர்ந்து, சிந்தைதெளிந்து ஜெயமென்றெழுந்து சீக்கிரம் செல்லுவதானான்.

அப்படி செல்லவெழுந்த உத்தரகுமாரனைப் பராக்கிரமக் கொடிபடைத்த பார்த்தன் அழைத்து, ஓ விராடபதிகுமாரனே! ராஜாதி இராஜனான துரியோதனமகாராஜனணிந்திருக்கும் வஸ்திரமானது, கருத்த மணிகள் பொறுத்த நிறத்தையுடையது. அஸ்வத்தாமாவுந் துச்சாதனனுந் தரித்திருக்கும் வஸ்திரம் நீலமணிகளழுத்திய கோலத்தை யுடையது. கொடையாளனாகிய கர்னராஜனுடைய சிரோவஸ்திரமானது, நான்குபுறமும் நவமணி பதித்து மரகதநிறத்தை மாற்றி யிருப்பது. மநுவேதமறிந்த தனுவேதிய ரிருவருந் தரித்த கலையானது, சுத்தமுத்து வைத்துக் கோர்த்த குற்றமற்ற வெண்பட்டாற் சமைந்தது. இன்னுமுள்ள மன்னவர் துணிகள் பன்னிறவன்னமா யிருக்கும். அன்னவைகளில் உன் கண்ணுக்கிசைந்தனவெல்லாங் கழற்றிக் கட்டிக்கொண்டு வந்துவிடு; அப்படிக்கு வரும்போதில் எங்களையாவாகிய வீஷ்மரிடத்திற்கு போகாதே, அவரது கலைவேஷ்டியானது மெத்தச் சிறந்திருக்கும்; அதன்பேரி லாசை வைக்காதே, அவரிந்த மோகனாஸ்திர மயக்கத்தில் மூழ்கமாட்டார். நீ ஒருவேளை அவரை கிட்டிப் போவையாகில், ஒரேவெட்டாய் வெட்டியெறிவார். ஆகையா ல்வரை எட்டிப்பாராதே மற்றையர்களிடத்தில் தாராளமாகசென்று அவரவர்களுடைய தலைத்துணியைக் கைக்கொண்டு சல்தியில் வந்துவிடுக. கேளும் நீ கால்நடையாகச் செல்லாதே, அவர்கள் படும் பாட்டைக்கண்டு ஒன்றுஞ் சொல்லாதே, கண்மூடிக் கலங்கிக் கசங்கிக் கிடப்பவரைக் கொல்லாதே, அவர்களுன்னைக் கண்டுவிட்டால், ஐயோ? அது பொல்லாதே, நீ அவ்விடங்களில் தாமிசப்பட்டு நில்லாதே, நமது தேரை செலுத்திக்கொண்டுபோய்ச் சீக்கிரத்தில் வரக்கடவாய் என்று காண்டீபன் சொல்ல அந்தப் பிரகாரமே செய்வேனென்று இரதமூர்ந்து சென்று அவரவர்கள் கால்மாடு தலைமாடாக விழுந்து உறங்கி யிருக்கின்ற கலக்கத்தைக் கண்டு, அவாளவாளுடைய தலைத்துணியைக் கவர்ந்து கொள்ளும்படிக்குப் பாய்ந்து பாய்ந்து பறிப்பதாயினான்.

அப்போது மாய்ந்தவர்போற் சாய்ந்து கிடக்கிற வேந்தர்களெல்லாம் விழியைத் திறக்காமலிருந்தார்கள். சிலபேர்கள் விழித்த பார்வையுடன் விறைத்தாற்போ லிருந்தார்கள்.. ஆவெனத்திறந்த வாயர்கள் சிலபேர், ஓவென ஒலிக்கும் பேயர்கள் பலபேர், ஊவென வோசையிட்டுளறினோர் சிலபேர், ஏயெனவேங்கியெண்ணமிட்டோர் பலபேர், நாக்கைக் குழப்பி நலிந்தோர் சிலபேர், வாக்குக்குளறி வலிப்பேர் பலயேர், நழுவா மற்பிடித்த எழுவாயுதத்துடன் விழுவார் சிலபேர், விழுவாரையெல்லாம் விழியாரக்கண்டு எழுவார் பலபேர், கால்தவறி மண்ணைக்கவ்வுவோர் சிலபேர், மேல்சுவறிரத்தவெள்ளத் துழலுவோர் பலபேர். இதன்றியும் கைகாலசைவது குறியாமலும், மெய்சாய்வதினை யறியாமலும், வாயில் எப்புகுவது தெரியாமலும், நோயில் தீப்படுவது தரியாமலும், பல்லைக்காட்டிப் பரதவித்து, வில்லைநாட்டி விலவிலத்து பலவிதஜாலமாய், தலைவிரிகோலமாய் யாவரும் பதைபதைத்து இருந்தார்கள். இப்படியா யிருந்தபேர்களைப் பார்த்த உத்தரகுமாரன் ஜயமடைந்து, பையநடந்து என்செய்வோமென்று அர்ச்சுனன் சொன்ன சைகையைமறந்து, அவனது ஆதரவையும் போதரவையும் பூரணமாகநினைந்து, கையுங்காலும் கடகடவென்று குலுங்கி, நடுங்கி, மெய்யும் வாயும் படபடவென்று அலமலங்கி யொடுங்கி, பேய்போற்பதறி முடங்கி, பேய்மனம் பெதறியடங்கி, பின்னுமுன்னும் போகத்தொடங்கி, வீஷ்மரிருந்த நிலையிற் போய்ப் பார்த்தான்.

அந்த மெய்விரதசீலராகிய வீஷ்மரானவர் கண்ணை யுருட்டிக்காட்டி விழித்து வீரப்பார்வை நாட்டியிருந்தார். அவரைக்கண்ட

மாத்திரத்தில் ஒருதரம் வேர்த்து, பயங்கரத் துடனுர்த்து, நான்குபுரமும் பார்த்து சித்தி ரச்சிலே விஜயனைச் சிந்தித்து, திடதீரத்து டன் கனைத்து, வந்த காரியத்தை நினைத்து, வஸ்திரம்பறிக்கத் தனித்து, கிரீடி யுரைத்த உத்தரத்திற்குத் துஸ்தரமாகிய துஷ்டகத்த னம் செய்யப்படாதென்று மதித்து, வெற்றி வீரர்களின் பட்டுத் துணிகளில் ஒன்றையும் விட்டு விடாமற் றெட்டுப் பறித்துப் பெரு மூட்டைகட்டி, தேர்மேலேற்றி, கார்போலிரை ந்து செல்லுங் குதிரைகளை முடுக்கிக் கணப் போதில் வந்து சேர்ந்தான். இந்தப்படிக்கு அச்சமில்லாமற் சென்று மச்சராஜன் மைந் தன் கொண்டுவந்த துணிமூட்டையைப் பச்ச மேனிப் பற்குணன்கண்டு, அவனை மிகவுங் கொண்டாடி மகிழ்ச்சியடைந்து புகழ்ச்சியாய் பார்த்திருந்தான்.

மன்னர்யாவரு மயக்கமாறி வீஷ்மராற் றலை யாடை போனதறிந்து உடனே அத்தின புரிக்குப் பிரயாணமாதல்

இப்பால் அர்ச்சுனன் கணையா லடிபட்டு நொந்து, மேனிமுழுதும் வேஷ்டையால் மெலிந்து, மோகனக்கணையால் முனை கெட்ட ழிந்து, வில்முதலிய பாணம்பிளந்து, வெறுங் கையாய்த் தளர்ந்து முடிசாய்ந்துவிட்ட கெடி வீர வர்க்கமும் படியாளுமன்னரும் பார்த் தீபன் படைகளுங் கொஞ்சங் கொஞ்சமாய் கலக்கம்பிரித்து, நஞ்சொழிந்த நாகம்போல் நெளிந்து, தங்களைத்தாங்களேயறிந்து, தலைக் கேறிய மயக்கந்தெளிந்து, தத்தித் தடுமாறிச் செறிந்து, மெத்தனவெழுந்து பித்தர்போல விழுந்து, செத்தவர்போற்கிடந்து, எக்காலு நீங்காத துக்கமும் - துயரமும் - வெட்கமும் - நாணமும்-விசனமு மேலிடும்படியாய், ஏது ஏது? இனி தலையெடுக்கப்போகிறது இல்லை யென்று சொல்லும்படிக் கிருந்தார்கள். இப் பேர்ப்பட்ட விசனத்தினல் திப்பிரமைகொண் டிருந்தவர்கள் சுப்பிரதீபம்பொன்ற அர்ச்சுன ராஜனை எண்ணி மதித்து அற்புதமடைந்து, அவனுக்கு எதிர்வர மாட்டாமற் றியங்கி சிவனுக் கெதிர்செல்ல நானுந் திரிபுராதிக ளைப்போற் றிடமற்றவர்களாகி, திகிலடைந்த மனமுற்றவர்களாய், திறலழிந்த உரவற்றவர் களாய் வற்றண்டுபோன நெஞ்சும் நாக்கும், சுருண்டுபோன ஈரலுங் குடலும், அன்பப் படாமற் சிறிது ஜலமுண்டு நனையச்செய்து கொண்டு, இணங்கினேரை இன்புடன் காக் குங் கருணைக் கடலாகிய கங்கா புத்திரரை நோக்கி, ஓ எங்கோனே! இதற்கென்ன செய் வோம்? மயக்க மெங்களைவிட்டு மாறவில்லையே. தியக்க மெங்களை விட்டுத் தீயவில்லையே என்று ஏங்கியபோது மதனுக்கிடங் கொடாத மகாவிரத வீஷ்மரென்னசெய்வார்? உடனே எப்புவனத்தும் ஒப்பில்லாத மற்புயவல்லவ னை சுயோதன பாக்கியவானுக் கெதிர் சென்றுநின்று, ஓ யோக்கியவானே! என் வாக் கியத்தை இனியேனுங்கேள். இப்போதெல்லா ருயிரையும் வல்லான்கை பம்பரம்போ லாட்டி வாட்ட வந்த இவ்வர்ச்சுனனேடு பகைத்துப் பதறிப்போய் எதிர்த்து யுத்தம்பண்ணுவ தற்கு தேவர்களாலும், அத்தேவர்களைப்பெற்ற மூவர்களாலும் ஆகாது. மற்றெவர்கட்கும் வெற்றி பெறுவிதக் காட்சியும், யுத்தஞ் செய் யுந் திடசூட்சியும் வராது. ஈதிவ்வாறிருக் கின்றமையால், இனிமேல் யுத்தகளம் நாடி வெற்றிபோர் புரிவோமென்று என்றென்றைக் கும் எண்ணவேண்டாம். அப்பா துரியோ தனு! நீயாவது மற்ற பெயராவது இனி ஒரு வேளை கிரகசார சாமானியத்தாற் சண்டை போடக் கருதுவீராகில், மெய்யாகவே பிரா ணன் பெறமாட்டீர்கள். அஃதென்னத்தினு லென்றல், அவனுந்திய மோகனுஸ்திரத்தால் நாமெல்லோரும் உயிர்ச் சிந்தியவாறுபோ லயர்ந்து தலை சாய்ந்து கிடந்த சமயத்தில், ஏதோ ஒரு நினைவுகொண்டு தன் சாரதியை யனுப்பி, அவரவர் தலையை விரைவிற் கொண்டுவாவென்று விட்டால், அந்தச் சொல்லுக் கிரண்டில்லாமல் இதுவரையில் நமது பிராணன் போயிருக்கலாம். இதற்குச் சாட்சியாதெனில், சற்று நேரத்திற்குமுன்னே செத்தவர்போ லொடுங்கிக் கிடந்த நம்மைச் சுற்றிப் பார்த்து வரும்படியாய் உத்தர குமா ரனை யனுப்பினன்போலும். அவன் நமது தலையிலிருந்து தனக்கு வேண்டியவற்றைச் சுற்றிக்கொண்டு போனன். அதற்குத் திருஷ் டாந்தம் உங்களுங்கள் தலை தப்பியிருப்பதைத் தடவிப் பாருங்களென்றார்.

அப்போது தங்கள் தங்கள் தலையைத் தடவிப் பார்த்தது மல்லாமல் ஒருவர் தலையை யொருவர் பார்த்து, உன் தலை துணியெங்கே? என் தலைதுணி யெங்கே என்று பெருங் கூச்சலிட்டு, ஐயையோ! தலைத் துணியைக் கொண்டுபோன சாதுரியனுக்கு நமது தலை யைத் தரித்துக்கொண்டு போவது தாட்சியா?

ஓ! ஓ! ஓ! வெகு சுளுவில் முடித்துக்கொள்ள
லாமே. அந்தமட்டும் நம்மைச் சும்மாவிட்டுப்
போனது நமது பெண்சாதிமார்களின் மாங்
கல்யபலமே! ஆ! ஆ! ஹா! என்ன ஆச்சரி
யம் என்று மகிழ்ந்து வீஷ்மரைப் புகழ்
ந்து தேவரீர் சொன்ன வார்த்தைக்குத்
திருகில்லை யென்றார்கள். அப்போது வீஷ்
மர் இப்படியே என் சொல்வழி நிற்பீர்க
ளாகில், நாமெல்லோருஞ் சௌக்கியம் பெற
லாம். அஃதெப்படியெனில், கடல்நிறம் பெற்ற
காண்டீபனானவன் உயிர்ப்பிச்சை கொடுத்தா
னென்று உரக்கக் கூவி, அவனுக்கு மங்களகர
முண்டாகும் படிக்கு வாழ்த்தி, நம்முடைய
படை முழக்கத்தைத் தாழ்த்தி, அஸ்தினபுர
த்தை நோக்கிப் போவதே நேர்த்தியென்று
சொன்னார். இவ்விதமாக மாதவத்திலுயர்ந்த
வரதன் கூறலும், உடனே மன்னன் முதலிய
தம்பியர் பலரும், கர்னன் முதலிய நண்பினர்
சிலருஞ் சத்தியஞ் சத்தியமென்று திரும்பி,
பகீரதி புத்திரனுரைத்த புத்தியை விரும்பிப்
போனார்கள். அத்தருணத்தில் அரவக்கொடிக்
கதிபனான துரியோதனனுடைய சகோதரர்
களின் விகர்னராஜனென்பவன் அத்தினபுரி
யென்னும் பட்டத்து யானைமேலேறி, தன்
தமையனை முன்னடத்தி, அவனை மறைத்துக்
கொண்டு தான் பின்னாகப்போனான். இரதகஜ
துரகபதாதியர் முதலிய மன்னர் மண்டலீகர்
யாவரும் பெருங்காற்றிற் பறக்கின்ற இலவம்
பஞ்சுபோற் றிசாதிகளை நோக்கிப் பறந்து,
கரத்தைச் சிரத்திற் குவித்துச் செறிந்து, துரி
யோதனன்மீது மனமுறிந்து, மெய்விரதன்
தம்பியான விஜயனைப் புகழ்ந்து, உயிர்ப்
பிச்சை யளித்தான் உத்தமனென்று மகிழ்
ந்து ஊர்முகநாடி ஓடினார்கள்.

### அத்தினபுரிக்குச் செல்லுந் துரியோதனனை அருச்சுனன் அவமானஞ்செய் தனுப்புதல்.

இப்பால் அர்ச்சுனன் தொடுத்த பாணங்
களினால் அழிந்தவரொழிய, ஓடி யொளிந்த
சேனா சைனியங்களுந் துரியோதனன் மகா
ராஜனுந் திரும்பிப்போவதை ஆண்மையா
லுயர்ந்த அர்ச்சுனன் பார்த்து, அடிவயி
றெரிய ஆர்ப்பரித்து வேர்த்து, தேவர்கள்
முதலாயினோரும் திடுக்கிடும்படியாய் ஆர்த்து,
அவன் அஞ்சும்படியான அவமானச் சொற்
களையெல்லாங் கோர்த்து, ஓ கௌரவகுல
முதல்வனே! ஓ கீர்த்திபடைத்த மூர்த்தண்ணி
யனே! ஓ கெடிஸ்தலாதிபனே! ஓ வணங்கா
முடி மன்னனே! ஓ அரவக்கொடியானே! ஓ
நந்தியாவட்டமாலைதரித்த நரேந்திரனே! ஓ
துரியோதன மகாராஜனே! ஓ அவனியையா
ளும் நேயனே! ஓ அபத்தம்பேசும் வாயனே!
மாயச் சூதாடக்கற்ற வஞ்சகச் சகுனிமாமனி
ருக்க, மகா பதிவிரதைகளை வஸ்திர மூரியக்
கற்ற துச்சாதனத் தம்பியிருக்க, வாயாடக்கற்ற
தேர்ப்பாகன் வளர்ப்புப் பிள்ளையான கர்ன
னிருக்க, உனக்குப் போதுமான புத்தியிருக்க,
சத்துருக்களை வெல்லுஞ் சமர்த்திருக்க, சத்தி
யந்தவறி வாயாடிப்படிக்குஞ் சாதுரியமிருக்க,
இத்தனை பலமும் அபலமாகும்படியாய் ஏன்
ஓடுகிறாய்? பூர்வம் அரசர்கள் கூடிய அஸ்தின
புரத்து ராஜசபையில் இரத்தினமுடி பொ
றுத்த உன் தலையாட, உன் காதிலணிந்த
குழையாட, உன் வாயிலடங்கிய நாவாட,
கட்டுரைபேசி வாதாடிச் சொக்கட்டா னாட்டத்
தில் எங்களைச் ஜெயித்துக் காட்டிலோட்டி
விட்டகற்ற நீ இப்போது சண்டைநேர்ந்த
இவ்விடத்தில் விற்றிறங்காட்டி வெற்றிபெற
மாட்டாமல் தலை கவிழ்ந்து, தலைத்துணி
யிழந்து உயிர்கொண்டு போவது பொல்லாது.
இதைப் பார்க்கிலுஞ் சாவதுமேல்; ஓ காவ
லனே! யுத்தத்திற் செத்துப்போவது மெத்த
வும் புகழ்ச்சியல்லவோ? மானங்கெட்ட பிற்
பாடு பிராணனிருக்கவேண்டுமோ? ஆ! மன்ன
னே! அரவக்கொடியும்-அணிமணிமுடியும்-
வெள்ளைக்குடையும் - வேண்டிய படையும்-
அரச சாத்தியமும்-சங்கத்தொனியும் எங்கு
முழங்கி நெருங்க இந்த விராடபுரத்திற்கு
வந்து சுத்தவீரக் கர்த்தனைப்போற் பசு மந்
தைகளை மடக்கினையல்லவோ? நீ யோட்டிய
மாட்டுமந்தையை எதிரிகளிடத்தில் விட்டுப்
போட்டு, நீ கூட்டிவந்த சேனைகளிலும் பாதி
மடியக் கொடுத்து, உயிரெழுந்த பிணம்போல்
ஊரைநோக்கிப் போகின்றனையே இதுவு
மொரு வீரந்தானா?

இதல்லாமலும் இப்போது நீ போய்ப்
பட்டினஞ் சேர்ந்தவுடனே உன்னைக் கலந்த
மங்கைமார்கள் என்ன செய்தியென்று எதிர்
நின்று கேட்டால், அந்த உரியவர்களுக்கு
என்ன சொல்லப் போகின்றாய். ஐயோ! அப்
பா! பெரிய தனம்படைத்த பேயா! அப்பேர்ப்
பட்ட பெண்களுக்கெதிரில் நாணாமல், தலை
கோணாமல், மானம்விட்டு நடப்பாயோ? அட
பாவி! இப்போது நீ யாளும் பூமியையும்

உன்னுயிரையுந் தீங்கில்லாமல் வாங்குவதற்கு என் தமையன் வீமசேன மகாராஜன் காத்திருக்கின்றானென் றெண்ணி, இன்றையதினம் உன்னைக் கொன்றுவிடாமல் வெற்றிமாத்திரங் கொண்டேன்; இதன்றியும் பொறுமையாக உன் பிராணனையும் விட்டேன்; இல்லாவிட்டால் நீயும் உன்னைச்சார்ந்த படைமன்னரும் எனக்கோர் லக்ஷயமோ? எப்போது மலக்ஷியமே, அது உனக்கு விலக்ஷணமாகத் தெரியுமல்லவா? ஓ குலக்ஷயம்பண்ணப் பிறந்த கோமானே என்று வெகுண்டு நிந்தையான வார்த்தை புகன்று நிஷ்டூரம் பேசிய காலையில், இராஜாதிராஜன் அர்ச்சுனன் சொன்ன மொழியைக் கேட்டுங் கேளாத செவிடனைப்போல் இரு தோள்களும் வாடி பூரிப் படங்கி துன்ப இருளால் மூடப்பட்டு, ஆமைபோலேங்கி ஊமைபோற் போனான். அந்தச் சமயத்தில் பச்சை நிறம் பெற்ற பற்குணனானவன், வச்சிரகண்ட வாளியொன்றேவி, விகர்ணனேறிச் சென்ற வீரபட்ட யானையை வெட்டி முடக்கி, துரியோதனன் வெட்ட வெளியாய்த் தெரிய மடக்கி, மீட்டும் பாரிய வில்லிற் கூரிய மூனைப்பகழி யடுக்கி; அரவக்கொடி தரித்த துரியோதனனுடைய வணங்கா முடியிற் பொருத்த கிரீடத்தை யுடைத்து முடுக்கி, மொட்டைத் தலையுடனிருந்த அத்துட்டனைப் பார்த்தும் பொட்டென நகைத்தான். அது காலையில், துரியோதனனுடைய முகமானது சந்திரனைக்கண்ட கரோருக மலர்போல் குவிந்து கரிந்து, பொறிந்து செறிந்த கண்கலக்க முள்ளவனாய், ஒட்டகத்தின்பேரில் நாட்டம் வைத்துப் போயினான்.

அருச்சுனன் அத்தினபுரிக்கேகும் ஆசாரியர்க்கச்சந்தீர வந்தன விடைபெற்று மீண்டு தானுத்தரனோடு வசனித்தல்.

இந்தப்பிரகாரம் பொல்லாங்குக் கிருப்பிடமான வஞ்சக நெஞ்சினைச் சேர்ந்த பூபாலர்களுங் கோபாலர்களும், யுத்த மனை தொட்டுப் புறமுதுகிட்டுப் பேராசை விட்டுப் பேராசை கெட்டுப் போகுங்காலையில், கற்பகக் காவைப்போல் கருணையும் பிரக்யாதியும் பெற்று மகாவாகையுடைத்தாய் தேர்மீதிருந்த செஞ்சிலை விஜயன் மச்சகுலாதிபன் முகத்தைப் பார்த்து, ஓ சித்தசனுக் கொப்பான உத்தர குமாரனே! நமது மச்சதேசத்திலுள்ள மாட்டை மடக்கி வெற்றிகொண்டு போகவந்த வேந்தன் முதலாகிய வீரான் யாவரும் யுத்தம் பண்ணி நம்மைச் செயிக்கச் சத்துவமற்றவர்களாய்ச் செத்தவர்போக மற்றவர்கள் மெத்த நொந்து, சிதைந்து, நைந்து உயிர் மாத்திரங்கொண் டோடுகின்றார்கள். நம்மிட காரியம் செயமாய்விட்டது. இந்தமட்டிலும் இவர்களை விட்டுவிடாமல் இன்னமுமேல்விழுந்து தொடர்ந்து துரத்தி யடிப்போமா? அல்லது அவர்கள் கெட்டார்கள் பஞ்சைகளென்று விட்டு பெரிய மனசு பண்ணி விராடபுரத்திற்குப் போவோமா? இன்னுஞ் சற்றுநேரம் இவ்விடத்திற்றானே யிருப்போமா? உன் கருத்து என்ன? அதனை விரைவிற் றிருத்தமாய்ச் சொல்லுகவென்று கேட்கவும்; விராடகுமாரன் காண்டீபனை வணங்கி, ஓ வீரியவிஜய வெவ் வேலனே! சீரியமதிகுலச் செஞ்சேவகனே! அடியேன் உமது திருவடிக்கு அடைக்கலம் அடைக்கலம்; ஐயா! காரியங்குறியாக் கடையேன், சிறியேன் பாரிய யுத்தம்பண்ணி யான் அறியேன். ஆயினும், ஐயா அவர்களெல்லோரும் செத்த பிணத்தோடொத்த கணம்போல, தத்துவங் கெட்டுத் தளர்ந்தோடினார்கள். ஆனதால் இனித்தோடுகின்றவர்கள் பேரிற் கணைதொடுப்பீராகில், தேவரீர் இதுவரையிலும் பெற்றிருந்த புகழ்ச்சி இகழ்ச்சியாய் விடும். மேலும் இன்னும் ஆகவேண்டியகாரியம் பின்னிட்டிருப்பதால், அப்போது பார்த்துக்கொள்ளலாம். நாம் இப்போது விராடபுரம் போய்ச் சேருவோம். ஓ பலஞ்சுரந்து பொங்குந் தோளினையுடைய பார்த்திபனே! இதுதான் எளியேனுடைய கருத்து. அப்பால் தேவர்சித்தம் சிறியேன் பாக்கியம் என்று உத்தரகுமாரன் சொல்லினான்.

இவ்வாறு உத்தரகுமாரனுரைத்த உத்தரத்தைப் பார்த்தனுற்றுக் கேட்டு, உத்தர திசையை விட்டுத் திரும்பிக்களித்து, வில்நாணி தளர்த்தி, அம்பறுத்தூணியு மவிழ்த்துத் தேர் மேலிருத்தி, அப்பா இளஞ்சிங்கமே! இனித்த பேர்களைத் தொடரப்படாது என்னும் என் னெண்ணப்படிக்கே நீயுஞ்சொற்றனை நம்மிருவர் மனசும் ஒருமையானதே பெருமை; நீ யுத்தகோலங் கொண்டு புறப்படும்போது உன்னைப் பெற்ற தாயான சுதட்சணை தேவியானவள், மிகுந்த வியாகூலமடைந் திருந்தாள். விரைவிற் போய்ச் சேராவிட்டால் இன்னமும் எப்படியோ வென்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். ஆகையால், நாம் இவ்விடத்தில் வந்த சத்துருக்களைச் செயித்து, ஒன்பது

கோடி பசுக்கூட்டங்களையு மீட்டி வனத்தில் அனுப்பிவைத்த சங்கதிகளை நாமே ருசுவிற் போய்ச் சொல்லி, அவள் மனக்கவலையை ஆற் றல் வேண்டும் என்று தேவர்கள் மதித்துக் கொடுத்திருந்த தேவதத்தத்தை யெடுத்து, உலகமயங்கும்படியாய் முழக்கினான். அந்தச் சங்கத்தொனியைக் கேட்ட வீஷ்மாச்சாரியர்-துரோணாச்சாரியர் - கிருபாச்சாரியர் - அஸ்வத்தாமா இவர்கள் முதலிய பேர்களெல்லாம் பார்த்தன் பின்றொடர்ந்து ஆர்த்து வருகின்றானோ? அல்லது இன்னுமென்னமோ? என் னும் பயத்தால் திரும்பித் திரும்பிப் பார்த்தார்கள். அப்படிக்குப் பயந்து பார்க்கும்பேர்களை அர்ச்சுனனும் பார்த்து, தேர்விட்டிறங்கி தகுதியுடைய பெரியோர்களைத் தலைவணங்கிப் பணிந்து, நான் இம்மட்டும் போர் விட்டு விடை கொள்கிறேன் என்னுங் குறிப்பு காட்டித் திரும்பி, மறுபடியுந் தேரேறி, மிகுந்த சந்தோஷத்துடன் உத்தரகுமாரன் விடுத்த இரதத்தின்மீதிற் சென்றான்.

இப்பாற் கடல்சூழ்ந்த உலகைப் பரித்த அரவக்கொடிதரித்த துரியோதன மகாராஜன் அணிந்திருந்த அழகிய நவமணிமுடி ஒளி விடு மிரத்தினாபரணங்களும் அதுலசங்கிராம ஜயவிஜயனது அஸ்திரங்களினால் அறுப்புண்டு, பிளப்புண்டு, தவறுண்டு, தள்ளுண்டு, கீழ்த்திசையில் உதித்த சூரியகிரணங்களால் மேற்றிசையிற் றோன்றிய சந்திரன்போல் ஒளிமழுங்கி, இன்னமும் ஏதேது செய்ய வந்திருக்கின்றானோ? ஏதேதாய் முடிப்பானோ? என்று ஏக்கங்கொண்டு, அட்டதிக்கும் பரவிய சேனைகளுடன் பட்டம்பகலிற் பட்டினம் போக மாட்டாமல் வெட்கப்பட்டு, சகல ஆட்டபாட்டங்களு மடக்கி, அத்தினபுரியிலுள்ள யாவரும் நித்திரைபோனபிற்பாடு கோட்டை மதில் வளைந்த ராஜபாட்டையிற் புகுந்து ஓட்டமும் நடையுமாய் ஊர்போய்ச் சேர்ந்தான். பெரியோர் முதலிய உரியோர்களும் பாதிராத்திரியிற் பேய்போற் போனார்கள். இவர்கள் இப்படியிருக்க மாடுபிடிசண்டையை வென்று ஆடு கொடியுடன் திரும்பிய அர்ச்சுனராஜன் மேடு படும் பாலை நிலத்திற் காடுபடப் படர்ந்து நீடிய வன்னிமரத்தைச் சார்ந்து அம்மரப் பொந்தில் முன்னிருந்த வண்ணம் ஆபரண வலங்கார முடியும், அனுமக்கொடியும், தேவ தத்தமும், வில்லும், அம்பறாத்தூணியும் வைத்து பழையபடி மான்றோலிட்டிறுக்கி, மச்ச குமாரனையுமிறக்கி, முச்சகங் கொண்டாட நின்ற தனது முன்னழகையும் பின்னழகையு மாற்றி, இனிமேல் நடக்கவேண்டிய முறைமைகளையுந் திறமைகளையும் யோசித்து, பழய படி பேடியுருவை நினைத்து, அவ்வழுவில்லாத வடிவமமைந்து, பொன்மயமான தேரில் உத்தரகுமாரனது சிங்கக் கொடியை நாட்டி, குதிரைக்கயிறுங் கோலுந் தாங்கிச் சாரதியாகிச் சயிந்தவ முந்தினான்.

இப்படி தேர்முகத்திற் குந்தியுந்தி முந்திய பேடியுருவைக்கண்ட உத்தரகுமாரன் கோவென்றழுது, ஓவென்றிரைந்து, ஐயா! பொய்யாமொழிப் பொறையன் சகோதரா! இப்போது சொல்லு மெய்யான என் மொழியைச் சற்றே தயவுசெய்து கேளும். இனி நான் செத்தாலுந் தேரேறமாட்டேன்; இனிச் சற்றேனும் நாயகனா யிருக்கமாட்டேன். ஆ! ஆ! இதென்ன கொடுமை? தேவரீருடைய காலடிப்புறத்தில் இருக்கத்தக்கவரிற் கடைப் பட்ட நாயேன், நடுநாயகத்தட்டிற்பொருந்து நலம்பெறுவேனோ? ஆ தெய்வமே! என்று சிந்தைசிந்தி நொந்துநைந்து தேம்பினான். அத்தன்மையாய்க் கலங்கிய உத்தரகுமாரனைத் தேற்றி, அவனது விசனத்தை மாற்றி, பிரிய வசனங்களினாற் பேடியாகிய கிரீடி பேசத் தொடங்கினான். ஓ விராடன் தவத்தாலுதித்த வீரச்சிங்கமே! எனக்கு மூத்தவர்களும் இளைய வர்களுந் தங்களுடைய எதாருபமெடுத்து வெளிப்பட்டார்களோ? இன்னும் வெளிப்பட வில்லையோ? என்னை எதிர்பார்த்துக் கொண் டிருக்கின்றார்களோ? அது இன்னதென்று எனக்குத் தெரியவில்லை. அஃதப்படியிருக்க, நான்மாத்திரம் நிசரூபங் கொண்டு நடக்கலாமோ? தமயன் கருத்தைத் தள்ளி நடக்கப் போமோ? அப்படிக்குத் தப்பி நடந்தாற் பிற் படிக்குப் பாபம் பீடிக்காமல் விட்டுவிடுமோ? தருமவிருத்த னென்னுந் தாட்சிபெறுவே னல்லவோ? அப்பனே! உனக்குமெனக்கு ஒரு பேதமில்லை. உள்ளன்பென்பது ஒன்றுமே போதும். என் வார்த்தை தள்ளாமல் இந்தத் தேரிலேறுக என்று அவனை ஒருவாறுதேற்றி, அவனை அதிரதராஜனாகப் போற்றி, விற்பாணங்களும் வீரகண்டையும் பூட்டி குதிரைக் கயிறுங் கோலுந்தாங்கித் தேரைச் செலுத்தி சற்றேனுங் குந்த மனம்பெறாத உத்தரகுமாரனோடுமெத்தனவான வார்த்தையாடிக்கொண்டு விராடபுரக் கோட்டைக்கு வடமேற்காகச்

சென்று அங்கு குளிர்ச்சியும் பசுமையுங் கூடிக் குலாவுஞ் செழிச்சியாகிய சிங்காரத் தோப்பில் வந்திறங்கி தேக வெப்பத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டிய சிந்தையைக் கொண்டிருந்து, ஒருவருக்கொருவர் பரிந்து, பாண்டவர்களாகிய தங்கள் பன்னிரண்டுவருடம் வனவாசம் பண்ணிய துன்பங்களையும், ஒருவருடம் அக்ஞாதவாசஞ் செய்வதற்காக வடிவமாறிய துயரங்களையும், அவன் தந்தையான விராடராஜனிடத்தில் தாங்கள் செய்துவந்த தொழில் விதங்களையும், அவ்வத் தொழிற்கேற்ற வேறுவேறாகிய மாறுபெயர் வைத்துக் கொண்ட மார்க்கங்களையும், அமுதரசம்பொழிவது போல் உத்தரகுமாரனுடன் சொல்லிக் கொண்டிருந்தான் விஜய காண்டீபனாகிய அர்ச்சுனமகாராஜன்.

**தக்ஷணநிரை மீட்டுவந்த விராடன் உத்தரகுமாரன் சேதிகேட்டு வருந்தி பின் கங்கபட்டராலுங் காண்டீபன் தூதராலுந்தேறி அமைச்சாரதியரை யழைத்துவர விடுதல்.**

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இப்படி இருவரும் ஆசேர்தை பெற்றிருக்கின்ற வேளையில், விராடபுரத்திலிருந்து சில தூதர்களோடிவந்து க்ஷேம விசாரணை செய்தார்கள். அந்தத் தூதர்களிடத்தில் அர்ச்சுனன் சொன்னதாவது, அப்பா சாரணர்களே! நீங்கள் விராடபூபதியைக் கண்டு, பேடி தேர் செலுத்தச் சென்ற உன் புத்திரனாகிய உத்தரகுமாரன் எதிர்த்துவந்த மன்னருடன் அதிர்த்துப் போர்புரிந்து, கோடி தேராளிகளை வென்று குப்புற்றுப் புறமிடக்கண்டு, நமது மந்தை மீட்டு விட்டானென்று சீக்கிரத்திற் சென்று சொல்லுங்கள். தாமதஞ் செய்யாதீர்கள் என்று அவர்களை யனுப்பிவிட்டு, கங்கா நதி பாயுங் குருநாட்டுக் கதிபதியாகிய காண்டீபன் விராட குமாரனுடன் வசனித்துக் கொண்டிருந்தான். இங்ஙனம் இவர்களிவ்வாறிருக்க இதற்கு முன்னாள் தென்றிசைக்குப் போன விராடராஜன் திரிகர்த்தனைஜெயித்து, அன்றிரவு முழுதும் அங்ஙன மேற்படைவருமென்று கங்கபட்டர் முதலான பேர்களுடன் தூக்கமில்லாமற் சேனைகளுடன் காவலிருந்தனன்றோ? அப்பால் மேற்படையொன்றும் வாராமையால், மறுநாட் சூரியோதயமான பின்பு பந்துவர்க்கங்களும் மன்னரினங்களும் மைந்தரனைவரும் மற்றப் பரிசனதி சேனைகளுந் தாம்தாமென்று சங்கீத முழங்க விராடபுரம் வந்து சேர்ந்தார்கள். அவர்களோடு ஜயபிரதானத்துடன் மச்சநாடு வந்து சேர்ந்த விராடராஜனை விஷமும் அமுதுங் கலந்த வேற்கண்ணாளாகிய சுதேக்ஷணாதேவி இச்சைகொண்டு எதிர்சென்று கண்டு மச்சகுலாதிபனை வணங்கி, தேவரீர் தக்ஷணநிரை மீட்சிக்குப் போயிருந்தசமயத்தில் வீஷ்மாச்சாரியர்-கிருபாச்சாரியர் - துரோணாச்சாரியர் - அஸ்வத்தாமா - கர்னராஜன் இவர்கள் முதலானவர்களோடு தம்பியருந் தானை வெள்ளங்களும் புடைசூழத் துரியோதனன் வந்து நமது விராடபுரத்தின் வடதிசை புகுந்து வளைந்து மாட்டுமந்தையை மடக்கினான். அந்த செய்தி கேட்ட தங்கள் திருமகனாகிய உத்தரகுமாரன் நமது சித்திரப்பதுமைப் போன்ற உத்தரகுமாரத்திக்கு நாட்டியங் காட்டி ஆட்டிவைத்திருந்த பேடியைத் தேர் செலுத்த வாக்யாபித்து, தான் யுத்தகோலங் கொண்டு வெற்றிபெறப் போயிருக்கிறான் என்று விளம்பினாள்.

இப்படி தனது மனைவி கூறிய சங்கதியைக் கேட்ட விராடன் உயிரொழிந்த உடம்பு போலொடுங்கி உணர்வடங்கி உருகி வீழ்ந்தான். உடனே பக்கத்திலிருந்த பேர்கள் வாரியெடுத்து மார்போடணைத்து சீதளசந்திரகாந்த கிண்ணங்களிற் பொருந்திய சுண்ணங்களையுஞ் சந்தனபாளித குங்குமக் குழம்புகளையும் பூசி பனிநீர் தெளித்துச் சயித்தியோபசாரஞ் செய்து சிற்றாலவட்டம் பேராலவட்டமுதலிய விசிறிகளசைத்து விராட ராஜனைத் தேற்றினார்கள். இப்படி எவ்வித உபசாரங்கள் செய்யினுந் தேறாதவனாய்ச் சோர்வடைகின்ற தோன்றலை நித்தியவிதிகூறு நின்மலனாகிய கங்கபட்டர் பார்த்து, ஓ மகாராஜனே! நீர் என்னத்திற்கு இவ்வண்ணம் வருத்தப்படுகிறீர். வாரேறுங் கனதனப் பேடியானவள், தேரூரும்படியாய் சென்றிருப்பாளாகில் இன்னுஞ் சற்று நேரத்திற் சம்பிரம வெற்றி பெற்று உமது மகன் வரப்போகின்றான். அவனைக்குறித்து நீர் சித்தங் கலங்கவேண்டாம். என்று சொல்லித் தேத்தினார். இப்படிக்குச் சொல்லிய தருமப்பிரபுவின் வாக்கியத்தினால் விராடராஜன் நிறைந்த பாக்கியம் பெற்றவனைப்போல் தேறித் தெளிந்து சிறப்புற்றிருந்தான். பின்னுஞ் சற்று நேரத்திற்குள் ஏதேதோ தன் மனத்து ளுன்னினவ

ளுய் ஓ கங்கபட்டரே! என் பாக்கியமெப்படி யாமோ? உமது வாக்கிய மெப்படிபோமோ? நானறியேன்; ஆகிலும் நால்வகைப் படையுங்கொண்டு நாமே எதிர்நோக்கிச் சென்று நம்மாலான உதவியுஞ் செய்தால், அவ்வறியாச் சிறுவனுக்கு அநுகூலமாயிருக்குமென்று என்மனம் நாடுகின்றதென்று விராடராஜன் விளம்பினான். இம்மொழிகேட்ட கங்கபட்டரானவர் அவ்வரசனை நோக்கி, ஐயோ! நீரிப்படி துணைப்படுவீராகிற் கனம்பெற்று வருகின்ற உமது குமாரனுக்கு அவமானத்தை விளைக்குமல்லது, வெகுமானத்தை விளைக்க மாட்டாது. ஆகையால் இன்னுங் கொஞ்சநேரம் நீர் செவ்வையாக நிதானித்து சிலகாரியஸ்தரையனுப்பி எதிர்கொண்டழைத்துவரச் சொல்லுமென்று கங்கபட்டர் சொல்லினர்.

அதற்கு விராடராஜன் உடன்பட்டிருக்குங் காலையில், திறம்படைத்த துரியோதனன் வீஷ்மர்-துரோணாச்சாரியர்-கிருபாச்சாரியர்-அஸ்வத்தாமா-கர்னன் இவர் முதலாகிய பேர்கள் புறங்கொடுத் தோடிப்போயினரென்றும், அவர்களால் மடக்கப்பட்ட மாட்டு மந்தையனைத்தும் மச்சநாட்டைச் சார்ந்த காட்டுபுரத்தில் வந்ததென்றும், ஒருதேரும் ஒருவில்லுங்கொண்டு முனைந்து யுத்தம்புரிந்து வெற்றிபெற்று வருகின்றார் உமது புத்திரசிகாமணியாகிய உத்தரகுமாரனென்றும், முன்ன மர்ச்சுனனாற் சொல்லியனுப்பிய தூதரோடி வந்து தொழுதுரைத்தார்கள். அவர்க ளுரைத்த அமுதரசத்தைச் செவிவழியாகத் தெவிட்ட வருந்தி, கொதிப்பாறிக் குளிர்ந்தகுளத்து நீர் போலும், குமுதநாதன் கிரணத்தை யுண்ட சகோரம்போலும் சோபதாபத் துயரமாறிச் சிந்தைகளித்து, இச்சேதி சொன்னவர்கட்கும் அவர்கள் பந்து ஜனங்கட்குஞ் சுகபோஜனமுஞ் சுகந்த பரிமள சந்தனாதிகளும் பற்பல வெகுமானத்தோடு கொடுத்து, மந்திரிமார்களையும் மற்ற மன்னர்களையும் நோக்கி, நீங்கள் யாவரும் ரதகஜ துரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளுடன் பலவிருது சின்னங்களும் வினோத வாத்தியங்களும் கொண்டு சென்று ஜெய ஜேஷ்டமுடைய என் சிறிய குமாரனை சீக்கிரமழைத்து வாருங்கள்; வீதிகளெல்லாம் அலங்கரிக்கும்படியாய்ப் பறைசாற்றச் செய்யுங்கள்; பந்தலடைத்து மகரதோரண முதலியவை கட்டுங்கள் என்று ஆக்கியாபித்தான். கேட்டீரோ! ஜெனமேஜெய மகாராஜனே! இந்த விராடராஜன் கொண்ட சந்தோஷம் எவ்வகைப்பட்டதெனில், ஒருவன் மனைவியானவள் அயலாரிடத்திற் சோரத்வஞ் செய்து பெற்றுக்கொண்ட பிள்ளையை தனக்குபிறந்த பிள்ளையென்று உள்ளங்களித்து முத்தமிட்டு மடிமேலுந் தோண்மேலும் வைத்து, தாலாட்டி, கொஞ்சிக்குலாவி ஆசைவைத்து உருகுகின்ற அறிவில்லான் தன்மையை யொத்திருக்கின்றது. இங்கே விஜயபராக்கிரம விக்கிரமன் வெற்றி பெற்றிருக்க அதனை விராடன் தெரிந்து கொள்ளாமல் உத்தரகுமாரன் வெற்றி கொண்டானென்று உண்மையாய் நம்பி உடல் பூரித்திருந்தான். இவனுக்கியாபித்த ஏவலைக் கொண்ட காரியஸ்தர்கள் வீதிகள் திருத்தி, புழுதிகளடங்கி செம்பொற் கலசங்கள் பொருத்தி, வாழை-தாழை-கரும்பு - கமுகு - பனை-பலா-தெங்கு-தேமா - கூந்தற்பனை - கோங்கு இவைகளை நாட்டி, மாணிக்கத் தீபங்கள் வரிசையாய்வைத்து, கொடி-குடை-ஆலவட்டம்-தாலவட்டம்-மகரதோரணம்-மாமணித்தோரணம் இவைகளை வரிசைபடவமைத்து எழுப்பரிகை யுயர்ந்த மாடமாளிகை கூட கோபுரமுள்ள வீடுகளையெல்லாம் அலங்கரித்து விதம் விதமாய் சிங்காரித்தார்கள். மன்னர் மந்திரியர் முதலானபேர்கள் சகல விருது வாத்தியங்களோடு நால்வகைச் சேனைகளும் புடைசூழ உத்தர குமாரனிருக்கும் உத்தரதிசையை நாடிச் சென்றார்கள்.

### விராடன் தன் குமாரன் வருமளவுங் கங்கபட்டரோடு வட்டாடலிற்புக அதனாலிருவர்க்கும் வாதாடல் குகவிரதசாரணி தன் றலைவனுதலில் வடுவாடல் கண்டு வருந்தல்

இவ்விடத்தில் விராடராஜன் தர்மராஜனைப் பார்த்து, உம்முடைய ஆசீர்வசன வாக்கின்படிக்கு என்து உசிதகுமாரன் ஜெயப்பிரதாபத்துடன் வருகிறவரையிலும் நாமிருவரும் சொக்கட்டா னடுவோமென்றான். அவருமப்படி ஆகுகவென்றார். உடனே அங்குள்ள காரியஸ்தர் பவளம்-நீலம்-மரகதம்-புஷ்பராகம் இவைகளினாலாகிய காய்களைவச்சிரப்பாச்சிகை முதலியவைகளோடு கொண்டு வந்து வைத்தார்கள். உடனே இருவருங்கூடி யாடினார்கள். அவ்வாட்டத்திற் கங்கபட்டர் வென்றார். தோற்றுவிட்ட மச்சராஜன் வெட்கி, ஐயா கங்கபட்டரே! இவ்வாட்டத்தில் நான் சற்று அஜாக்கிரதையா யிருந்துவிட்டேன்.



கங்கபட்டரோடு சொக்கட்டானாடுகையில்
விராடன் தன் குமாரன் வருமளவும்
அதனாலிருவரும் வாதாடல், விரதசாரணி தன் கணவனுதலில் வடுவாடல் கண்டு வருந்துதல்.

ணிப் பாராமல் எதிரியை மதியாமல் என்னை யடுத்து ஜீவனஞ் செய்து வருகிற வியற்கை யையு மோராமல், பலதரமு மென்னை யலட்டி வாது செய்கிறீர். சொல்பமான பேடியைப் புகழ்ந்து பேசுகின்ற நீர் என் பிள்ளையைக் கொண்டாடிப் பேசப்படாதோ? உமக்கு என் பிள்ளையின்பேரில் இவ்வளவு பொறாமையும், பேடியின்பேரில் அவ்வளவு அக்கறையும் உமக்கு வந்த காரணமென்ன? என்று சொல் லும் விடங்கொண் டெழுந்த நல்ல பாம்பு போற் சீறி, தன் கைமேலிருந்த பாச்சிகையை நிலத்தில் விட்டெறிந்து மகா கரோ நகை நகைத்தான். அவ்வாறு அதிக கோபத்தால் வீசிய பாச்சிகையானது பூமிமேற் பட்டுத் தெறித்து, நேரிலிருந்த கங்கபட்டர் நெற்றியி லடித்து குங்குமக் குழம்பால் படிந்த திலகம் போற் குன்றிமணியத்தனை இரத்தங் குபீ ரென்று கொப்பளித்தது.

அப்போது உத்தர குமாரனது க்ஷேமத் தைக் குறித்து ராஜ சபையில் என்ன பேசிக் கொண்டார்களோ? அதனையறிந்துவர போ வென்று சுதக்ஷணாதேவியினால் அனுப்பப் பட்ட பணிப்பெண்ணானவள், சபை கூடிய அவ்விடத்திற்கு வந்து சங்கதி யாவும் விசா ரித்துக்கொண் டிருக்கிறாள். அச்சமயத்தில், தர்மராஜன் நெற்றியிலுண்டான துளி இரத் தத்தைத் திரௌபதி கண்டு, நீர் வற்றிய தடாகத் தாமரை மலர்போல் நிறங்குன்றி, நெஞ்சம் வெருண்டு மருண்டு கூசி குலைந்து அந்தத் தருமனுடைய வுதிரத்தொரு துளி பூமியில் விழுமாகில், விராடராஜ னெனுந் தருவிற் றழைந்திருக்கின்ற பந்துக்க ளென் னும் பல கிளைகளும் புத்திர பௌத்திராகிய ரென்னும் புட்பங்களும், மித்திரர் முத லாகிய மென்வாய் களிகளும், புகழ்ப்பிரதா பப் பெருமணச் சிறப்பும், அழகும் வாழ்வும் அமைந்த மூலமும், தாங்களாறுபேரும் அக் ஞாதவாசஞ் செய்யவந்தடுத்து ஒதுங்கியிரு ந்த நீழலும் அன்றே கெடுமன்றோ? அல்லது தனக்குரிய நாயகனென்னு நேயத்தினாலோ? அல்லது இயாவருக்கேனும் இடையூறுண் டாவதில் உபசாரஞ் செய்யவேண்டுவது எல் லோருக்கும் பொதுவென்பது பற்றியோ? அல்லது அர்ச்சுனன் முதலிய பேர்கட்கு உத் தரஞ் சொல்லவேண்டுமென்பதை நத்தியோ? அல்லது பெரியவரென்னும் பத்தியோ? அந் தப் புண்ணியவதியின் சுபாவப் புத்தியோ? ஓ மகாராஜனே! அவள் கருத்து இன்னவித மென்று எனக்குத் தெரியாது. உடனே கை கால் நடுங்கவோடி, கண்ணீர் துளித்தழுது, கடகடவென்று உடல் நடுங்கத் தொழுது, ஐயோ! பழுதுபடாத சத்திய தரும பூசுரனுக் கும் பழுது நேரிட்டதே என்று வெகுநேரம் வரையிலும் ஒத்தியக்கை யெடுக்காமல் தரும பத்தினிபோ லிருந்தாள். அப்படிக்கிருந்த வண்ணப்பெண்ணின் மரியாதையையும், அவ ளுடலின் துடிப்பையும், அவள் ஆவிபடும் பரிதாபத்தையும் விராடன் பார்த்து விசனப் பட்டு இதென்ன ஆச்சரியம்? இதுவரையிலு மில்லாத கோபம் நமக்கு இப்போது நேரிட்ட தென்ன ஆச்சரியம் என்று எண்ணமுஞ் செய்யலும் வேருகி ஐயோ இதற்கென் செய் வோம்? ஏது சொல்வோம் என்று தன்னைத் தானே நொந்து, பின்னால் அறியப்போகின்ற பெருமை தெரியாதவனாய் ஆ! ஆ! ஆ! கோபம் மகா சண்டாளமென்னும் வாக்கியத்திற்கு நாமே இலக்காயினோமே என்று தான் கொண்ட மனமகிழ்ச்சி குறைந்து வீழ்ந்தான். இந்த விராடராஜனுடைய மனோதுக்கத்தைக் கண்டு மனந்தாளாத ஆயிரங்கிரணக் கதிரோ னாகிய சூரியன் அஸ்தமனகிரியை நோக்கி அடைவதாயினான்.

### உத்தரகுமாரன் பட்டினமீண்டு கங்கபட்ட ருக்கு நேர்ந்த கடுமையைக்கண்டு வருந்துதல்.

கேட்டீரோ! ஜெனமேஜெய மகாராஜ னே! இப்பால் முன்னம் விராடராஜன் தன் பிள்ளையை யெதிர்கொண்டு அழைத்துவரும் படி ஆக்கியாபித்தவண்ணம் அமைச்சர் முத லாயினோர் போய்ச் சந்தித்தலும், உடனே உத்தரகுமாரன் அவ்வமைச்சர் முதலானவர்க ளோடு அநேக நகரமாக்கள் அந்தணாளர் மடைத்தொழிலாளர் மருத்துவக்கலைஞர் நிமி த்திகப் புலவராதிய பரிவாரங்கள் புடை சூழ்ந்து நெருங்க வீரவாத்திய மேளமுழங்க விருது-டால்-கொடி-குடை இவைகள் வித விதமாய் விளங்க பாலா-புல்லயம்-சவளக் கோல்-கத்தி-கட்டாரி-ஈட்டி-கேடயம் இவை கள் மின்ன எங்குஞ் சங்கத்தொனி பொங்கித் தழங்க, பட்டத்து யானைகளும், ஆட்டக் குதி ரைகளும், உன்னத தேர்களும், துன்னிய காலாள்களும் இருபக்கமும் நெருங்கிவர, தேவேந்திர லோகத்திலிருந்த ஜெயமுள்ள காளமேகந் தேர்மேலேறிப் பூலோகத்தில் வரு

மற்றோராட்டம் ஆடுவோம் வாரும். இந்த ஆட்டத்தில் என் மகனாகிய உத்தரகுமாரன் வெல்ல, அவனுக்கீடுபட மாட்டாமல் யுத்த முனை கெட்டோடிய வெற்றி வீரர்களைப்போல் உம்மை யான் ஓடவிட் டடிக்கின்றேன் பாரும் என்று பிரதாபமாகப் பேசினான். அவ்வாறு உரைத்த விராடராஜனை கங்கபட்டர் தடுத்து, ஓ மன்னர் மன்னனே! பேடியாகிய ரதசாரதியானவள் ஜயங் கொண்டுவருகின்ற பெருமையைப்போல் உம்மை நான் ஜயங்கொள்வேனென்று பேசுவீராகில் அது எனக்குச் சம்மதியாகும். நீர் அப்படிச் சொல்லாமல் உத்தரன் ஜெயித்ததைப்போலென்று தப்புரை செப்புவதினால் அதற்கு நான் ஒருக்காலும் ஒப்பமாட்டேன். அதேனென்னில், பிரகநளையென்னும் பேதையைப் பேடியென்று எண்ணுதீர். அவள் பூர்வங் காண்டாவன மழித்த காலைக்குத் தேரூர்ந்து, தேவர்களுக்குப் பகையாகிய ராக்ஷசாளைவென்று, தேவசகாய விஜயியென்று பேர்பூண்டு, திக்குத்திகாந்தம் வரைக்கும் அதிசொற்பத்தி ஜயங்கொண்டு திரண்ட கீர்த்திபெற்றிருக்கின்றவள். ஆதலால், அவளை இலேசாக மதிக்காதீர் என்று கங்கபட்டர் சொல்லினர். உடனே மச்சராஜனுக்கு மிச்சமாகிய கோபம் பிறந்து மனங்கறுத்து மதியுஞ் சிறுத்து கண் செவந்து கனற்பொறி பறந்து கங்கபட்டரைக் கனைத்துப் பார்த்து, ஓ பெரியவரே! இப்போது இங்ஙனம் வந்த தூதர்கள் என் குமாரனாகிய உத்தரன் பேடி தேர்விடச் சென்று கோடாகோடி குரு சேனைகளை நீடாதடித்து நிரமிக்கெடுத்து, என் பிள்ளை யொருவனுமே யாவரையும் வென்று பகைவர் மடக்கிய பசுமந்தைகளையுங் கைக்கொண்டு திரும்பி வருகிறானென்று சொல்லப் பிரத்தியக்ஷத்திற் கேட்டிருந்த நீர் ஒரு கூனைக் கூடக் கொல்லவும் வெல்லவு மாட்டாத அதி சொற்பமான ஒரு பேடியைக் கொண்டாடி ஸ்தாபித்துப் பேசுகின்றீர். ஈதென்ன பிடிவாதம்? இஃதெவர்கள் சொல்லுகின்ற பக்ஷபாதம். ஓ பிரமக்கியானம் உணர்ந்த பேரறிவாளரே! இந்தப்படி பேசாதீர் வாய் மூடும் என்று கடுகடுத்து மொழிந்தான். அந்த மொழியைக் கேட்ட தர்மராஜன், சிறு நகை நகைத்து நான் சொன்ன வார்த்தை பழுதல்ல. இன்னுஞ் சற்றுநேரத்தில் நீரறியப் போகின்றீரென்றார்.

இதைக் கேட்ட விராடராஜன் மனந்தளர்ந்து முகஞ்சுளித்து, ஓ விஸ்தாரங் கற்றிருக்கும் வேதமுனியே! இனி என்னத்தையறிகிறது. கைப்புண்ணுக்குங் கண்ணாடி வேண்டுமோ? பேடிக்குங் கிரீடிக்கும் பேதமறியாதவர் நீர். கிரீடி யென்ற ஜெயத்தோடு அக்கிரீடிக்குத் தேர்விடுத்த பேடியையுங் கூட்டிப் பேசினீர். இதனாலே உம்மை ஏதுமறியாதவரென்று கண்டுகொண்டேன். ஆ! ஆ! போதும்; போதும். இனி இப்படி வீண்வாது பேசாதீர்; தீதில்லா மன்னரானவர் ஏதேனு மோர் புன்மை புகன்றாலும் அச்சபையிலுள்ளவர்கள் நன்மை நன்மையென்று நாளுஞ்சொல்லி ராஜனுக்கிதம்படப் பேசவேண்டு மல்லாமல், அவன் தயவுக்குக் காத்திருந்து ஜீவனஞ் செய்பவர்கள் மன்னன் கருத்துக்கு மறுத்துப் பேசுவது முண்டோ? கால சமயமறிந்து கலந்துகொள்ள வேண்டாமோ? நீர் நான்கு வேதங்களையு நன்றாயோதிய ஞானவானாயிருந்தும் இராஜர்களோடு பேசவேண்டிய விதிமுறை யறியாமல் விருதாவான வார்த்தை சொன்னீரென் றுரைத்தான். இப்படி வெறுத்து மமதைகொண்டு பேசிய மச்சராஜன் பேச்சுக்குக் கங்கப்பட்டர் இடங்கொடமல் தடுத்து, ஓ விராடராஜனே! நீர் கொஞ்சம் நிதானியும். கொடையாளியான கர்னராஜனென்ன? படையாளியான வீஷ்மரென்ன? தநுர்வேத சம்பன்னரான துரோணாச்சாரியரென்ன? வித்த மகத்துவமுடைய அஸ்வத்தாமாவென்ன? இவர்கள் முதலிய சுத்த வீரானை உண்டைவிற் பிடித்து விளையாடிக் கொண்டிருந்த உமது பிள்ளை வெல்லவல்லவனென்று நீர் சொல்லமாட்டுவீரோ? ஓ நிருபனே! நில்லும்; நில்லும். இதோ எல்லாச் சங்கதியும் வந்துரைக்கப் போகின்றார்கள். அப்போது என் சொல்லுக்கு நீர் மறுத்து மறுத்துக் கூறிய வனைத்தும் மனத்தப்பென்று உமது மதி உமக்கே ஒப்பச் சொல்லும் அது தப்பாகவே தோன்றும். இனி மெய்ப்படும்போது, பெருமை யடைந்தது துப்பார் திருமேனி படைத்த பேடியே என்றுணருவீர் என்று தருமராஜன் பேசினார். இச் சொல்லைக் கேட்ட விராடராஜன் இரு கண்ணுஞ் செவந்து, கோபச்சிரிப்பாகச் சிரித்து, ஓ! ஓ! ஓ! ஐயா! மெத்த மெத்தக் கற்ற வேதியரே! வில்லாண்மையி லுயர்ந்த என் குமாரன் சொல்லாண்மையிற் சிறந்த பகைவரை யோட்டிப் பாரமார்த்தியமாய் வருகின்ற வீரப்பிரதாபத்தைப் பார்த்த தூதர் வந்து நேரிற் சொல்லக் கேட்டு அறிந்திருந்தும் எவ்வளவும் எண்

மகிழ்ந்தான். மனங்கலைந்த உரியோர் பலரும், சினங்குலைந்த பெரியோர் சிலரும் புடைநெருங்கிப் பூரித்தார்கள். இவர்களெல்லோருந் தன்னைப் புகழ்வதை உத்தரகுமாரன் கேட்டு ஒன்றுஞ் சொல்லாமல் வெட்கி, தன் தந்தையை தனியே யழைத்துக்கொண்டு அந்தப்புரம் போனான். அங்கே ஜெயங்கொண்டுவந்த மைந்தனைச் சுதர்க்கணை கண்டு, தவமிருந்து பெற்ற அப்பிள்ளையின்மீது ஈன்றபோதிருந்த பேராசையைவிட எண் மடங்கதிகமான இன்பமடைந்து எடுத்தாள். முத்தங் கொடுத்தாள். கரஞ்சுற்றி நெறித்தாள். நமது கருப்பஞ் செய்த புண்ணியமென்று பூரித்தாள். இவ்விதமாக சோடசகலைகணிறைந்த சந்திரனெழுச்சிகண்ட சமுத்திரம்போல அத் தாய் தந்தையரும் அங்குள்ள மற்றயரும் புகழ்ச்சியாய்ப் பூசித்து மகிழ்ச்சியடைந்து கங்குகரை காணாமற் பொங்கிய பேரானந்த வெள்ளத்தில் மூழ்கி, பெருமையாகிய பள்ளத்திற் படிந்து, ஜெயமென்னுஞ் செய்தியாற்றேறியிருந்தார்கள். அச்சமயத்தில் உத்தரநிரை மீட்சிக்குச்சென்ற உத்தரகுமாரன் கௌரவச் சேனைகளைக்கண்டு பயங்கொண்டு புறங்கொடுத் தோடியபோது, அந்த ராஜகுமாரனைத் தேற்றி, அவன் திகிலைமாற்றி, சாரதித் தொழில் செய்யும்படிக்குத் தேர்மேலேற்றித் தனக்கெதிர் நின்று உத்தரிக்க மாட்டாமலோடிய துரியோதனாதியரை வென்ற அர்ச்சுனனவன் இரதத்தின்மீது வைத்திருந்த எதிரிகளின் சிரவேஷ்டி மூட்டையை பேடி ரூபங்கொண்ட தன் தலைமேற் சுமந்துவந்து உத்தரகுமாரத்தி கையிற்கொடுத்து, உத்தர குமாரனைப் பெற்ற உத்தமியான சுதர்க்கணைக்கும் பின்பக்கத்திலொதுங்கி ஒடுங்கித் தலைவணங்கி நின்றான். அவனின்ற கோலத்தைக் கண்ட உத்தரகுமாரன் கைநெரித்து கலீரெனச் சிரித்து தேம்பி விம்மித் திகைத்து திகிலடைந்து துக்கத்தினால் விக்கித் துயருழந்திருந்தான். அவன் குறிப்பையறிந்த அன்னையுந் தந்தையும் ஆசையுடன் தழுவி, அடா அப்பனே! ஐயனே! அதிசயமென்ன? நீ இப்பேடியைக் கண்டு கைநெரித்துச் சிரித்த காரணமென்ன? உடனே திகிலுந் தேம்பலுங் கொண்டு துயருழந்த காரணமென்ன? அவற்றை எங்கட் கையந்திரச் சொல்லுகவென்று பல முறையாகக் கேட்டார்கள்.

அப்போது உத்தரகுமாரன் ஆயாசந் தீர்ந்து, அடிவயிற்றிலிருந்து எரிந்தெழுந்த அக்கினித்தணல் நீங்கும் வழியைத் தேடி, அப்பேடி முகத்தை நாடி, பேசாமல் வாய் மூடி, மீண்டும் பெருமூச்சுவிட்டு, நானென்னத்தைச் சொல்வேனென்று தந்தை தாய் இருவரையுந் தனித்தழைத்துச் சென்று, இனி நாம் பிழைக்கும்விதமெப்படி? எந்த காலத்திற்குப் புனிதராகப் போகின்றோம்! இப்போது நீர் விளைத்துவிட்ட பகையானது எப்போது நீங்கும்? சமுத்திரம்போற் புரண்டு, சதுரங்கமுந் திரண்டு, நமது மந்தைமாடுகளுமிரண்டு போகவந்து மடக்கிய கௌரவ குலாதிபர்கள் நொந்து போகச் செய்த அடமும், அவர்கட்கு முந்திச் சினந்து போர்புரிந்த மூர்த்தண்ணிய திடமும், மந்தைப் பசுக்களை மீட்டமார்க்கமும், வீண்சண்டைக்கு வந்தபேர்கள் சோர்ந்து விழும்படி மோகனாஸ்திரப் பிரயோகஞ் செய்து அவர்கள் அணிந்திருந்த தலைத் துணிகளைப் பிடுங்கி மூட்டை கட்டிக் கொண்டுவந்த மொய்ப்பும், இவைகளியாவும் என்னாலான வல்லமையல்ல; என்னாலாகும் என்பதுமல்ல; எங்கள்முன்னால் ஒருவர் வென்றதுமல்ல; சொன்னால் உங்கட்கு நன்றாய்த் தோன்றும். ஓ என் அன்னாய்! ஓ என் அத்தா! அந்த விநோதத்தைச் சொல்லுகிறேன் சற்று நிதானித்துக் கேளுங்கள். தேவரீர் தெக்ஷண நிரை மீட்சிக்குச் சென்ற வேளை கண்டு, சத்துருக்கள் மொய்த்து உத்திர திசையில் ஒருமிக்க வந்து, பத்திரை மந்தைகளை மெத்த வருத்தப்படுத்தி மடக்கினார்களென்று சித்தநொந்து ஒற்றரோடிவந்துரைத்தார்கள். நான் அவ்வார்த்தையைக்கேட்டு, இத்தாயைத் தொழுது, அம்மா! எனக்கொரு சாரதி கிடைப்பானாகில் பழுதுவராமற் ஜெயிப்பேனென்று சொன்னேன். அக்கால், நமது உத்தரைக்கு நாட்டியம் பழக்கிவருகிற பேடி மெத்தவும் உத்தமமான சாரதி என்று பணிப்பெண் சொல்ல, அது கேழ்க்கவும் அவளைச் சாரதியா யமைத்துக்கொண்டு தேரேறிச் சென்று, கடல்போற் கவிந்த சேனையைக் கண்டு, கண்கலங்கி மனம்விண்டு, தேர்விட்டிழிந்து ஊர்முகமாக ஓடி வருவதாயினேன். அப்படி பயந்தோடிவந்த என்னை ஊர்வசி சாபத்தாற் பேடியுருக்கொண்டிருந்த தனஞ்செயனென்னும் புருஷோத்தமன் விடாமற்றடுத்துப் பிடித்து, என்னைத் தனக்குச் சாரதியாக்கித் தேற்றி என்பயத்தை மாற்றி, தேர்மேலேற்றி, வன்னிமரத்தில் மறைத்து வைத்திருந்த விஜயகாண்டீப வெம்படை தாங்கி,

மாறுபோற் பேடி தேர்செலுத்த, வண்டு மொய்க்கும் அம்மலர்க்காவைவிட்டு நீங்கி, வர்கைமாலே தாங்கி, மணிப்புயமோங்கி, நீடிய கீர்த்தியோடு விராடபுர வீதியில் மேவினுன். இந்தப் பிரகாரஞ் சத்துருஜெயஞ் செய்து வருகின்ற உத்தரகுமாரனே வேதியர்களும் மாதர்களுங்கண்டு, அன்புகொண்டு ஆலஞ் சுழற்றி திருஷ்டிகழித்து மங்களலாலி வாழ்த்தி கொப்பிகள் முதலிய பாடலேப்பாடி ஆசீர் வதிக்க, பரத நாட்டிய ஸ்திரீகள் அபிநயங் காட்டி யாடித்துதிக்க, கட்டியர் புகழ, ஜெட்டியர் மகிழ, பட்டுவான்கள் போற்ற, சந்திர வட்டக் குடைநிழற்ற, வெண்சாமரைபோட, அட்டதிக்குங் கொண்டாட இராஜ சின்னங்களுடன் மகன் வருகிற மகிமையை விராடராஜன் கேள்விப்பட்டு, வரைபக வெறிந்த வள்ளிமணுளனைச் சிலமதனைச் செற்ற சிவ பெருமான் எதிர்கொண்டு சென்று கண்டது போல் ஆநந்தங்கொண்டு சென்று கண்டு, தேர்மேலிருந்த சிறுவனைச் சீக்கிரந் தழுவி அணைத்தெடுத்து, தன் சித்தங்குளிர முத்தி கொடுத்துக் கீழே விடுத்தான். உடனே உத்தர குமாரன் அத் தந்தையை வணங்கி, ஆசிபெற்று, பின்பு அத்தந்தை முதலிய யாவரோடுந் தடதடவென்று கொலுமுகவாசற் சென்று, அங்கு தனியா யெழுந்தருளி யிருக்கின்ற வேத வித்தாகிய கங்கபட்டரை வணங்கித் துதித்து, அவருடைய திருவடிகளைச் சிரத்தி லுங் கண்களிலும் பொருத்தி, பற்பல ராஜ கூட்டங்களும் பார்க்க அவருடைய பொற் புயத்தைப் புகழ்ந்து அற்புதக்கருணை முகத் தையு நோக்கினுன்.

அப்போது அவ் விற்பன விவேகியான வர் கடாட்சத்துடன் சொற்பலவாய் ஆசீர் வதித்தருளினுர். அக்காலவர் நெற்றியிலி ருந்த வடுவை உத்தரன் பார்த்து, உடனே முகம் வியர்த்து, அண்டரண்ட சராசரங்களு மதிரும்படியாய்க் கூவி, ஓ என்னுண்டவனே! விபூதிரேகை பிரகாசிக்கின்ற தமது லலாடஸ் தானத்தில் அபூர்வமான காயம்படுதற்குக் காரணம் யாது? இயாவன் வடுச்செய்தவன் என்று கார்முகங் கைக்கொண்டு கடுகடுத்து நின்ருன். அங்ஙன நேர்முகமாய் நின்ற விராடராஜன் நடுங்கி, முன்னடந்த காரியங் களைப் பக்குவமாய்ப் பேசினுன். அவ்வார்த் தைக்கூறிய தந்தையைச் சினந்து, தன் சிந்தை வருந்தி நொந்து, கைகொண்ட வில்லேயொ டித்து, பல்லேக் கறகறவென்று கடித்து, ஆ! ஆ! நல்லகாரியஞ் செய்தீர் போம்: போம். என்று வெறுத்து, நீர் இந்த மஹானுபாவருடைய சொல்லே இகழ்ச்சிசெய்தே னென்ற போது, ஐயோ! என்னுடல் நடுங்குகிறதே; அதை நினைக்குந்தோறும் என்னுடலே விட்டு உயிர் வெளியோடுகிறதே: இதனுல் உண்டாகிய பயமானது என்னுரத்தைச் சாடுகின்றதே: அந்தோ! பிர்ம சிருஷ்டியினுலாகிய பெரும் பொறைக்கடலே ஆடையாயுடுத்த அவனியி னிடத்திற் பாரிய மணிமகுடப் பட்டந்தரித்த வீரிய வேந்தர்க்கு வேந்தாகிய வேந்தே! இவருக்கு ஒப்பாகிய பேர் எப்பாரிலும் இல்லேயே, இவரை யாரென்றுணர்ந்தீர்? ஓ பின்னமேற் கொண்ட மன்னனே! என்னெதிரில் நீர் நிற்கச் சகியேன். சற்றப்பார்ப்போம் என்றதட்டிப் பூசுரனுகிய புண்ணியனைப் பணிந்து, அத்தனே! அன்பு நீங்காப் பரிசுத்தனே! எங்களே யாண்டுகொள்ளுங் கர்த்தனே! (சிறியோர் செய்த தீமைகளேத்தும் பெரியோராயிற் பொருப்பது கடனே) என்று தாங்களே செலவு கொடுத்திருப்பதினுல் விவேகமற்ற என் தந்தையின்பேரில் தேவாள் கோபங் கொள்ளுவது ஞாயமன்று என்று அக் கங்கப் பட்டருடைய அடியிற்ருழ்ந்து, மீண்டுந் தந்தையை நோக்கி (பெரியோர்கள் திருவுள்ளம் பேதித்தால் எப்பொருளும் பேதியாதோ) என்று மேலோர் சொல்லிய மெய்ம்மொழியைச் சிறிதும் யோசிக்காமற் பழிக்காளாயினீர் என்று கூறி, அவ் விராடராஜனேயும் வீழ்த்திரஞ்சச் செய்து, பின்னும் பின்னுந் தாணிறைஞ்சி, தடுத்துப் பேசவரியாத தாக்ஷண்ணியபரராகிய தருமபுத்திர னென்னும் மோனவானுடைய மனேதுக்கத்தை மாற்றி விட்டான்.

## உத்தரகுமாரன் தன் தாய்தந்தையரோடு கங்கபட்டராதியர் வரவை வெளிப் படுத்துதல்

அப்போது தருமநந்தனர் நீர்கிழிய வெய்த வடுப்போலக் கடுப்பாறி, சாஸ்திரங் கற்று மாட்சிமைபெற்றுப் பெருமையுங் கருணையும் பொருளெனக்கொண்ட தனது சித்த மகிழ்வோடு அவ் விராடராஜ குமாரனுக்குத் தகுந்த வாழ்த்துதல் வாழ்த்தி, உத்தர நிரை மீட்சிக்குப் புகுந்து வெற்றியடைந்து வந்த அவன் பெருமையைக் கொண்டாடினுர். மச்சராஜனும் இச்சையுடன் அதனைக்கேட்டு

அனுமக்கொடி நாட்டி, யாவரும் மெச்சும்படி
யாகிய அர்ச்சுன உருவமுங்காட்டி, தேவதத்த
முழங்கி, அரவக்கொடிக் கதிபனுடைய சேனை
களிற் புகுந்தபோது, அவ்விடத்தில் நடந்த
விந்தையை நான் சொல்லத்தரமோ? ஓ
நராதிபனே! சூரியனுக்கெதிர்ப்பட்ட பனி
போலவும், சுடருக்கெதிராகிய இருள்போல
வும், சிங்கத்திற் கெதிர்ப்பட்ட யானைகள்
போலவும், நெருப்புக்கெதிராகிய விட்டிற்
பூச்சிபோலவும், இடிக்கு நேரிட்ட பாம்புகள்
போலவும், எமனுக்கெதிர்ப்பட்ட உயிர்கள்
போலவும், சிவனுக்கெதிர்ப்பட்ட சிலைமதன்
போலவும், தீச்சலுக் கெதிர்ப்பட்ட பயிர்கள்
போலவும் அடங்கலும் அழிந்து ஒழிந்தார்
கள்.

ஐயா! அப்போது நான் பயந்து இந்த
அர்ச்சுனராஜனை விசாரிக்குமிடத்து, தேவரீ
ரிடத்தில் உண்மை நண்பராய் உயிர்க்குயிராய்
தர்மாதர்ம முதலிய நீதிகளைத் தெரிவித்துக்
கொண்டு கங்கபட்டரென் றிருக்குந் தயாளு
வானவர், சந்திரகுலத் தோன்றலான தரும
ராஜனென்றும், வாசமலரோடு பூசுதல் முத
லாகிய புநுகுஞ் சாந்துஞ் சம்பங்கித் தயில
முந் தரித்த கூந்தல் விரித்த வண்ணமகள்,
பாஞ்சாலராஜ கன்னிகையான திரௌபதா
தேவியென்றும், மல்லர்களைமாட்டிக் கீசகர்களை
வாட்டி மடைபள்ளியின் சமையற்கூட்டி நமக்
கூட்டி வரா நின்ற வல்லமையாளன், வீமசேன
ராஜனென்றும், குதிரைச் சேவகத்திலமைந்த
கோமான் நகுலராஜனென்றும், பசு மந்தை
கட் கெசமானுயிருந்த பாக்கியவான் சகா
தேவராசனென்றும், வேலாயுதம் பிடித்த
வீரர்களை மடித்த பட்டத்துயானை படைத்த
இப் பாண்டவர் ஐவரும் பாஞ்சாலியும் அக்
ஞாதவாசந் தொலைப்பதற்காக இந்த மச்ச
நாட்டில் மறைந்திருந்து காலங்கழித்தன
ரென்றும்; நேற்றையவரையிலும் அவர்க
ளுக் குண்டாகிய தவணை நாளைப் போக்கிவிட்டு
இன்றுமுதல் வெளிப்படவேண்டிய காரண
மென்றுங் கேள்விப்பட்டேன். இனி இதைக்
குறித்து நாம் யோசிக்கவேண்டி யிருக்கின்
றது. இதுவரையிலும் நம்மா லிவர்களுக்கு
என்ன குற்றங் குறைகள் நேரிட்டிருக்கின்ற
னவோ? அவைகளில் ஏதொன்றும் எனக்குத்
தெரியவில்லை. இப்போது பிரத்தியட்சமாய்
தருமராஜனுக்கு நெற்றியில் வடு
வடுவில்லாத தருமராஜனுக்கு நெற்றியில் வடு
வுண்டாக்கி வைத்திருக்கின்றனர். ஐவருக்கும்
அன்பாகிய பாஞ்சாலியை ஆசைப்பட்டு
அணைத்து நேசமுறத் தொடர்ந்த கீசகன்
முதலாகிய தம்பிமார்களும் நாசப்பட்டுப்
போனார்கள். இவ்விரண்டினாலேயே பெரிய
மோசம் வந்திருக்கின்றது. இவைகளையெல்
லாந் தக்கபடி யோசியுங்கள் என உத்தரகுமா
ரன் சொன்னான்.

இம்மொழி யனைத்துங் கேட்ட விராட
ராஜனுஞ் சுதர்க்கணையுந் தன் குமாரனையும்
புதைத்திருந்த பொருள் குதித்து வெளிப்
பட்டதுபோற் கண்டு, ஆ! ஆ! ஆ! அப்பா
கதலனே! பாண்டவர்களா யிவர்கள்? பாஞ்
சாலியா பணிப்பெண்? ஐயோ! ஆண்டவனே!
என்ன காரியஞ் செய்துவிட்டோம்? என்ன
விதமாய் மதி இழந்தோம்? என்று அங்ஙன
மயர்ந்து, நிலத்திற் சாய்ந்து, உயிருடன்
மாய்ந்து மூர்ச்சையானார்கள். அப்போது
உத்தரகுமாரன் அவர்களை யணைந்து, சோபத்
தையும் மனஸ்தாபத்தையுந் தணித்து, இனி
துக்கப்படுவதிற் காரிய மில்லை. சீக்கிரம்
இதற்குவேண்டிய பரிகாரந் தேடுங்கள் எனக்
கொன்று தோன்றுகிறது. அஃதென்னவெ
னில், மன்மதனுக் கொப்பாகிய வடிவமும்,
மயில்வாகனனுக் கொப்பாகிய வெற்றியும்,
மகாமந்திரவாதியும், உமா மகேஸ்வரரைப்
பூசிக்கும் புத்தியும், விருஷப குஞ்சர சிங்க
விராட்டின் சத்தியுமுள்ள பார்த்தனாகிய பரந்
தாமன் மைத்துனனுக்கு எனக்கிளைய உத்தர
குமாரத்தியைக் கொடுத்து, நம்முடன் கலந்து
வாழச் செய்யுங் கருத்தைக் கடைப்பிடிப்போ
மாகில், தெரிந்துந் தெரியாமற் செய்த தீமை
களியாவுஞ் சிதறிப்போம். இதனைத் தான்
என் சிந்தையில் நினைத்தேன் என்றான். இவ்
வாறு இயம்பிய மைந்தன் வார்த்தையை மன
மகிழ்ந்து கேட்டு, தந்தையுந் தாயுஞ் சிந்தை
களிகூர்ந்து, அப்பா மைந்தனே! உந்தன்
மனதின்படியே எங்கட்கும் அவ்விச்சை மிச்
சந்தான் என்று சொல்லி அன்றிரவு வந்து
விடியளவும் அச்சத்துடன் ஒடுங்கி அசைவற்
றிருந்தார்கள். உத்தரன் நிரைமீட்சிக்காகப்
பார்த்தன் பண்ணிய சண்டையிற் செந்தூள்
கருந்தூள் பறந்து படிந்து மறைந்த தன்
ஜொளியைச் சுத்தம்படக் கழுவிக் கொள்ளுவ
தற்குப் போனவன்போல் உடனே சூரியனான
வன் மேற்குச் சமுத்திரத்திற் போய்க் குளிர்ந்
தான்.

இப்பாற் பெருமையில் உயர்ந்த பாண்டவர்களும், பாஞ்சாலியும் விராடனுடைய அரண்மனை விட்டு நீங்கி, அம்மச்ச நாட்டின் புறம்பில் தங்களாயுதங்களைச் சேமித்துவைத்திருக்கின்ற வன்னி விருக்ஷச் சோலைக்கருகிற் சென்று, கூடுவிட்டுக் கூடுபாய்கிறவர்களைப் போல் தாங்கள் கொண்டிருந்த வடிவத்தை மாற்றி, பழயரூபங் கொண்டு, எமதர்மராஜனைத் தோத்திரம்பண்ணி வணங்கி,மேற்றிசையடைந்த சூரியபகவான் கீழ்த்திசைக்கு வருங்காலத்தை நோக்கிக் கொண் டிருந்தார்கள். அந்த வேளையிற் கோழி முதலிய குருவிகள் எல்லாந் துயிலொழிந்து, ஓ பாழியப்புயம் படைத்த பாண்டவர்களே? நீங்கள் நீடூழி வாழி வாழி; ஆழியினலையுடன் மாநில நடுங்குவதாற் சூரியன் வரப்போகின்றான் என்று சொல்லுவதுபோற் கூவியதுகள். அந்நாலையில் மேற்றிசையில்மறைந்த வெய்யோன் மீண்டுங் கீட்டிகைக்கு வரயத்தனித்து, பாண்டவர்களின் சங்கதி யெல்லாந் தெரிந்து கொண்டோம். இனி துரியோதனாதியர்களின் கருத்தையு மறிவோம் என்று மகமேருவைச் சூழ்ந்து வந்தவனைப்போல் உதயகிரியில் வந்து, தனது கிரணக்கதிர் நீட்டி, தாமரைமலர்க்கரங் காட்டி தண்மதி முதலிய துட்டரை யோட்டி சத்திய நிலைபெற்ற தர்மராஜனது ஆக்ஞைச் சக்கரத்தை நிலைக்கு நாட்டியதுபோல் உதயகிரியி னுச்சிமே லெழுந்தான்.

உத்தர நிரைமீட்சிச் சருக்கம்
முற்றிற்று.

---

ஆறுவது,

## பாண்டவர் வெளிப்பாட்டுச் சருக்கம்

### கண்ணன் துதி

வானையாதி பூதராசி தோறுலாய மாயனை, ஞானமாகி மறையனுச்சி கண்ணி னின்ற கண்ணனை, மோனமார் முழிக்குழாருணர்ந்தமுத்தி வித்தினை, யானுழன்ற பிறவி தீர விருபதங் கடுதிசெய்வாம்.

ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! விராடபுரம் விட்டு நீங்கிய பாண்டவர்களும் பாஞ்சாலியும் ஓர் மாஞ்சோலை சூழ்ந்த வனத்தூடமைந்த பூஞ்சேர்ந்த பொய்கையில் மூழ்கி, அருணோதயமானவுடனே ஜெபதப விதிகள் யாவற்றையும் முடித்து, சூரிய நமஸ்காரஞ் செய்து, ஸ்ரீ வேதவியாசரையும் எமதர்மராஜனையுந் திக்கு நோக்கிப் பணிந்து, பாண்டவசகாயனது பாதபதும நினைந்து, பருதியி னொளியினும் பழம்பவடிவஞ் சிறந்து, வாயு குமாரனன வீமசேனனும், தேவேந்திர குமாரனன் செஞ்சிலை விஜயனும், ஆயுள் வேதியரளித்த நகுல சகாதேவரும் தங்கள் குலத்திற்கும், குணத்திற்கும், நலத்திற்கும், நன்மைக்குந் தகுதியான முரசக்கொடி படைத்த முன்னோனைத் தொழுது, அன்னோ னருளிப ஆசிமேற்கொண்டு, பெரும்புகழ்ப் பிரதாசத்துட னவரைச் சார்ந்திருந்தார்கள்.

தருமநந்தனர் நெற்றியிற் றழும்பு கண்டடென்ற தம்பியரைச் சில தருமவாய்மைகூறித் தணிவித்தல்.

இவ்வாறிருக்குஞ் சமயத்தில் நிகரற்ற விற்றுங்கிய தனஞ்சயன் தருமராஜன் முகத்தைச் சந்தூர்ஷ்டியாய்ப் பார்த்து, அவர் நெற்றியில் செந்தூரத் திலதம்போல் செவந்த புண்ணைக்கண்டு, ஓ அண்ணா! தேவரீருடைய நெற்றியில் வடுவுக் கிடமானவாறு யாதென்று திடுக்கிடக் கேட்டனன். அதற்குத் தருமராஜன் சிறுநகை புரிந்து, யாதொன்றுஞ் சொல்லாம விருந்தனர். அப்போது மின்னலைப்பழித்த மேனிபடைத்த பாஞ்சாலி விராடராஜனுக்குந் தருமராஜனுக்கு முண்டான ஓர் வாக்குவாதத்தினால் வந்ததீது ஈது என்று சொல்லினள். அதுகேட்ட வந்நேரமே அர்ச்சுனனெழுந்து இன்னமுந் தாமசமாவென்று நெருப்புபோலெரிந்து நெடுமூச்செறிந்து, அண்ணன்மேற் பரிந்து, ஐயோ! நான் பிரிந்துவந்த துன்பமிதுவோ? இப்போதே விராடபுரம் வேகக்கொளுத்தி மச்சநாடன் றலையை வாங்கிவைக்கிறேன் என்று நச்சரவம்போற்சீறி, வெட்சிமாலையணிந்த ஆக்முந் தேகமுமலற நடுங்கிப் பற்கடித்து, கையில் விற்பிடித்து அவனுக்கிச்சையான குலத்தை இன்னிமிடத்திற் பச்சடி பண்ணுகிறேனென்று புறப்பட்டான். நெருப்புடன் காற்று நேசமானதுபோல் வீமனும் வெகுண்டு வீறிட்டெழுந்தான். நகுல சகாதேவர் இருவரும் வியாகூலத்தோடு நடுங்கி விராடராஜனுக்கின்று வினசகாலமாவென்று மெய்மறந்து விட்டார்கள்.

இத்தன்மை வாய்ந்த தம்பிமார்களின் கடுங்கோபத்தைத் தருமராஜன் கண்டு, ஓ! ஓ! மோசமாச்சுதே யென்று பூசித வார்த்தைகள் புகன்று, ஆ! நேசவிசுவாசிகளே! அப்பா ராஜகுல சிரேஷ்டர்களே! நிஷ்டூரம் வேண்டாம். "ஒன்றுதவிசெய்யினு மவ்வுதவிமறவா மற்பின்னையவர் செய்தபிழை பொறுத்திடுவர்பெரியோர் நன்றிபலவாக வொருநகைபுரிவரேனுங் கன்றிடுவதன்றி முதுகயவர் நினையாரே" என்றிருப்பதால் கொஞ்சந் தாசாவாயோசனை செய்யுங்கள். ஒருவருடைய ஆபத்காலத்தில் இன்னொருவர் உதவி செய்தால், அவ்வுதவியை ஆயுசுள்ளவரைக்கு மறக்காமல் நன்றி குன்றாமையென்னும் நீதியையும்-தருமத்தையும்-நிறைந்து நாடி, அவ்வுதவி செய்த பேர்களால் என்னபிழை வந்தபோதிலும் அதை சகித்து மனம்பொறுத்து நன்றியிற் பிழையாமல் நன்மையைச் செய்பவர்க ளெந்நாளும் பெரியவரென்று நானிலம் புகழ்வது உண்டு. "நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல, நன்றே மறப்பது நன்று" என்று சாதுக்களும் சாஸ்திரங்களிற் பேசியிருக்கின்றார்கள். பற்பலநாளும் ஒருவன் நன்மை புரிந்து சொற்பமாக ஒருநாளிற் குற்றம் நேரிட்டால் அச்சொற்பக் குற்றத்திற்காக நன்றி குன்றி மனங்கன்றி பொல்லாங்கு செய்ய நினைப்பது புகழல்ல பூணல்ல பொருளல்ல அது புலமை கெட்ட கீழ்மக்கள் செய்கையாம். "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை செய்ந்நன்றிகொன்ற மகற்கு" என்று வேதமுறை யிடுகின்றது. ஓ புண்ணிய குலத்திற் பிறந்த புனிதர்களே! ஒருகாலொரு நன்றிசெய்த பேர்களை உள்ளத்தில்வைத்து மறு காவலர்களே செய்தபிழை நூறுனுலுஞ் சான்றோராகிய பெரியோர் பொறுப்பர் கயவராகிய மூடர்களுக்குப் பலகாலும் பலநூறு நன்றிசெய்து ஒருகாலொருதீதாமாகில் முன்செய்த பலநூறு நன்றிகளும் பாழாய்க் கெட்டுப்போம்.

ஆகையால், காடாக்கினிமூண்ட காட்டிற் பனிரண்டு வருஷங் கஷ்டப்பட்டு பதிமூன்றாவது வருஷத்தில் இந்த விராடராஜனுடைய நிழலிலிருந்து, இவனது உப்புந் தண்ணீருமுண்டு நாம் எண்ணியவெண்ணம் பின்னமில்லாமல் அக்ஞாதவாசங் கழித்தோம். எத்தேசத்தரசர்களிலும் இத்தேசத்தரசன் மெத்தவுஞ் சரசன். நாம் எங்கிருந்து அக்ஞாதவாசம் பண்ணலாமென்று முன்னம் நான் வினவியபோது, நீங்கள் விராடபுரத்திற்கு மிஞ்சிய ராஜனுமில்லையென்று சொன்னீர்கள் உங்கள் சொல்லைநம்பி இங்குவந் தடுத்தபோது; நமக்கிவன் ஊழி..ன்போலவும், இவன் அரசாட்சி நமது அரசாட்சிபோலவும், காலங் கடத்தினோமே யல்லது நாமிவனுக்கு தாழ்ந்து நடுங்கி நடந்ததில்லை. நம்மை இவன் அதிகாரஞ் செய்ததுமில்லை. ஏதோ கோபப்பாயமென்னுங் கொள்கையாலும், நமது தீவினை வசத்தாலும், ஓர் சிறிய குற்றம் நேரிட்டது. அதற்காக நாம் கடவுளைநோக்கி மன்னிப்பு கேட்டு, இவனுக்கொரு பொல்லாங்கு நேரிடாமற் காக்கவேண்டிய கடமை நம்முடையதாயிருக்க, நீங்கள் அவனைக் கோபித்தெழுவது குணமல்ல. "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற, றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா லும்மை, எரிவாய் நிரையத்து வீழ்வர் கொலென்று, பரிதுவதுஞ் சான்றோர் கடன்" என்று மேலோர்கள் கூறியிருப்பதைச் சன்மானிக்க வேண்டியது. நம்மைத் தொழுது ரட்சித்த தோன்றலின்பேரில் பழுது நினைப்பது மகாபாவம். பார்த்தனே பதராதே என்று தர்மராஜன் தடுத்தார்.

### பாண்டவராயுதபாணியராய் பழையகோலங் கொண்டு கொலுக்கூடம் வர, விராடன் வரிசைவைத்து வணங்க, தருமரவனைச் சன்மானித்தல்.

இப்படி சொன்னதின்பேரில் வீமார்ச்சுன ளிருவரும் நகுல சகாதேவரும் மூத்தவர் மொழிந்த முறையிற் பிறழாமல், மச்சராஜன்மேல் வைத்த கோபமாறி, தருமராஜனுத்திரவின்படி வன்னிமரத்திலேறி, அவரவர் ஆயுதங் கைக்கொண்டு, அந்தப் பாலைநிலத்தி லமர்ந்த கோலாகலி! நீலிசடாதரி! லீலாவதி! சூலிகலாதரி யென்னுங் குண்டலிகுமரி சாமுண்டியைப் பணிந்து, வன்னிமரத்தை வலம்வந்து வணங்கி, எங்கள் தாயினது கருப்பம்போல் ஆயுதங்களைக் காத்தளித்த தமனியத் தருவேயென்று சந்தோஷப்பேரிட்டுச் சம்பிரமங்கொண்டாடி, விராடராஜனுடைய கொலுமுகச் சாவடியில் கூசாமற் புகுந்து, ஐந்து தேவேந்திரர்கள் ஒரு இந்திராணியுடன் வந்திருந்த வாறுபோல் சிங்கத்தவிசேறி இருந்தார்கள். அந்த வேளையில் செந்தழல் வளர்க்கும் அந்தணர்-முனிவர்-மந்திரியர்-சாமந்தர்-தந்திரியர் - பிரதானிகர்-சுற்றத்தினர்-காப்பாளர்-நகரமாக்கள்-படைத்

தலைவர்-இவுளிமறவர்-யானைவீரர் - சேனாபதியர்-தூதர்-கருமாதிக்காரர் - நட்பாளர்-மடைத்தொழிலர்-மருத்துவக்கலைஞர் - நிமித்திகப்புலவர் இவர் முதலிய யாவருஞ் சேர்ந்து வந்து, குந்திதேவியார் தந்த மைந்தரைவருங் குருகுலம் விளங்கப் பிரகாசித்து கயமாகிய குமுத நண்பன்போற் சிங்காசனத்தி லிருக்கக்கண்டு, தங்களாற் றாங்கப்படாத சந்தோஷங்கொண்டு விராட ராஜனுக்கு விரைவிற் றெரிவித்தார்கள்.

அச்செய்தி கேட்ட மச்சராஜன் இச்சை மேற்கொண்டு, ஐயோ! நாமென்செய்தோம்? இனியென் செய்வோம்? என்று மனவருத்தங் கொண்டு, சந்தனம்-தாம்பூலம்-புட்பம்-பனிநீர்-மஞ்சள் - குங்குமம் - வர்சனைத் திரவியம்-தேங்காய் - வாழைக்கனி-மாங்கனி-பலாக்கனி-பற்பல அப்பங்கள்-பருப்புவர்க்கங்கள் இவை முதலியவைகளைத் தட்டு தட்டா யெடுப்பித்துக் கொண்டு, பட்டுப்பட்டாவளிகள்-கட்டுக்கட்டாகிய கட்டுவர்க்கங்கள்-தாபிதாக்கள் முட்டுப்படாத முத்துமுதல் நவரத்தினங்கள் இவை முதலானவைகளுங் கொண்டுவந்து காணிக்கை வைத்து தானும் புத்திரனும் தருமபுத்திரனியும் பாண்டவர்களின் பொன்னடியில் வீழ்ந்து புழுதிபடப்புரண்டு ஓ பூரணநிதியே! ஓ பொறுமைக்கரசே! எளியேங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளுமென்று துதித்து பூமியை விட்டெழுந்திராம லிருந்தார்கள். அம்மூவரையுந் தருமராஜன் வாரியெடுத்து, விராடனையும் உத்தரகுமாரனையு மார்போடணைத்து, அரசனைப் பக்கத்தில் வைத்து ஆதிசேடன் முடிமேற் றாங்கிய இப் பூமியில் உம்மைப்போல் யாரிருக்கின்றார்கள்? நீர் மெத்தவும் உத்தமர். புண்ணியசாலி பொறுமைக்கு வேலிபோன்றவர் என்று புகழ்ந்து மகிழ்ந்தார்.

இவ்வாறு கொண்டாடிய குருகுலக் கோமானது குளிர்ந்த வாசகத்தால் மச்சகுலாதிபனெழுந்து, மறுபடியும் பணிந்து, ஓ வேந்தராகிய சாந்தமூர்த்தியே! தோத்திரமென்பது தம்மைப்போல் அவர்க்குத் தகுமல்லது, எங்கட்குத் தகாது. நாங்கள் அவ்வளவு பாத்திரமும் க்ஷேத்திரமும், கோத்திரமும் பெற்றவர்களல்ல. ஆதலால், அடியேன் மிகவும் பேயன், விவேகமற்ற சேயன், முன் கோபத்தாற் பதறிப் பேசுகின்ற வாயன், அப்படிக்கிருந்தபோதிலும், தங்கட்கு நான் தகுந்த நேயனெனப் பாராட்டி, என்னால் நேரிட்ட குற்றங்குறைகள் யாதிருந்தாலும் அவைகளை மன்னித்து ஓட்டி, தீர்க்கவைர நாட்டாமல், சில காலத்திற் சொல்லிக்காட்டாமல், ஓ பார்த்திபரேறே! ஈனனானவென்னை ஆண்டருள் செய்யவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். இந்தப் பிரகாரம் புகன்றடைக்கலம் புகுந்த விராடராஜனை? வேந்தர் வேந்தாகிய தருமராஜன் பார்த்து, இரக்கமுள்ளவராய் இஷ்டபூர்த்தியாய் இதனை சொல்லத்தொடங்கினார்.

ஐயா! விராடபூபதியே உமது பட்டணத்தில் நாங்கள் வந்து சேர்ந்தபிற்பாடு துன்பமென்பவை யில்லாமல், எங்கட்குரிய தேசம் போலவே எங்கும் பிரக்யாதி யுண்டாகும்படியாய் வேற்றுமையின்றி வீற்றிருந்து வாழ்ந்தோம். உன்னுமிடத்தில் உம்மிலு முயர்ந்த உற்றாருமில்லை பெற்றாருமில்லைமற்றாருமில்லை. ஓ மாசற்றமரபோய்! உம்மைவிட எனக்கு வேறொரு உதவியுமில்லை. நாங்களிதுவரையிலுங் குறைவில்லா தநுபவித்து வந்த உமது பட்டினத்தின் பதவியைவிட வேறொரு பதவியும் இல்லை. நீரும் உமது சகோதரர்களும், உமது புத்திரமித்திர பௌத்திராதியரும், நால்வகைச் சேனைகளும் ஆகிய யாவரும் எனக்குப் படைத்துணைவந்து என் பக்கத்தில் நிற்பீர்களாகில், துராங்காரமாய் எங்களை வஞ்சித்த சத்துருக்களையும் அவர்கட் குடன்பட்டு வந்த சேனைவேந்தர்களையும் ஒருநிமிஷத்தில் இயமலோக மேற்றிவைக்கிறேன். இது மெய்யென்று பறைசாற்றி வைக்கிறேன். இதனை உமது கருத்தில் ஐயமற உட்கொள்ளும், என்று வையகம்வாழ்த்த மரபினன் சொல்ல, அதனால் மச்சராஜன்தேறி, மனத்துயர் மாறி மகிழ, அதுகண்ட மாதோடு மகனுந் தீதகன்றுற்றார்கள்.

### உத்தரன் வேண்டுகோளின்படி உத்தரையை அபிமன்னுவுக்காக சம்மதித்த பாண்டவர் கருத்தறிந்த விராடன் பந்துக்களாதியர்க்கும் ஓலை விடுத்தல்

இப்பால் உத்தரகுமாரன் நமக்குறுதித் தேடிக்கொள்ளும் தருணமிதுதா னென்று துணிந்து தந்தைதா யிருவரையு முன்னிட்டுகொண்டு தருமராஜனைப்பணிந்து, வாய்பொத்தி நின்று, ஓ சமுத்திரத்தை ஆடையாகத் தரித்தருளிய இவ்வுலகமுழுமையுமோர் வெள்ளைக்குடை நீழலில் அடக்கியாளும் விதரண

வேந்தே! யான் தமக்குத்தக்க பக்குவமாகப் பேசவறியாச் சிறியேனாகிலும், யான் செய்து கொள்ளும் விண்ணப்பத்திற்கு தேவரீர் செவி கொடுத்தருளல்வேண்டும். இந்த விராடபுரம் இதனது பூவளம் பொருள்வள முள்ளன யாவுந் தேவரீருடையதே; யாங்கள் யாவரும் உங்களுடைய ஏவற்பணிவிடைக் கேற்றவர்களே; எங்கட்கு சுதந்தரமான ஆறுவிதப் படைகளுந் தங்களுடையதே; ஈதல்லாமல் என் தங்கையாகிய உத்தரகுமாரத்தியும் அர்ச்சுனராஜற் குரியவளே; ஓ எங்களாண்டவராகிய பாண்டுநந்தனரே! இவ்வளவு தயவுசெய்து தெங்களை யாண்டுக்கொள்ள வேண்டும் என்று வேண்டி விளம்பினான். இவ்விதமாக உத்தரகுமாரன் சொல்லக்கேட்ட விஜயகாண்டீபதரன் அவனை நோக்கி, ஆ! ஆ! ஹா! என்று கையமர்த்தி, ஓ கல்வியின் சாரமும்-செல்வியின் அபாரமும்-கைப்படை வீரமும்-விற்பன விவேகமும்-காமன் மயமும்-சேமன்ஜெயமும் காரியசித்தியும் - கூரிய புத்தியுமுடைய் காவலன்மகனே! உன் தங்கையாகிய உத்தரகுமாரத்திக்கு நான் சிலகாலம் நாட்டியம் பழக்கி வைத்தபடியால், எனக்குப் பெண் மரியாதையாம். நீ இப்போது கொண்ட நினைப்பை நீக்கிவிடு, அல்லது உன்னிஷ்டப்படிக்குத் தப்பாமல் உறவு கலக்கவேண்டுமானால், உனக்கிளையவளாய் நன்னலம் நற்குணம் வாய்ந்திருக்கின்ற அவ்வுத்தரைப்பாவை பொன்னில முதலிய நன்னில மன்னவர் புகழும் பெரும்பேர் படைத்த என் மைந்தன் வாளபிமன்னனுக்கு உரியவளாகுவென்றான். இப்படிக்கு அற்புதமாய் விளம்பிய பற்குணன்மொழியைக் கேட்ட மாத்திரத்தில் அவ்விடத்திருந்த சாஸ்திரசம்பன்னருடன் தருமராஜன் விராடராஜன் முதலிய சகலமானபேரும் சதாஸ்து; சதாஸ்து; என்று சம்பிரமங்கொண்டாடினார்கள். உடனே விராடபூபதியானவன் கலியாண முரசவாத்யமுழக்கிவைத்து, பந்து மித்திராதியர்கட்கெல்லாம் பாண்டவர்கள் விராடபுரத்தி லிருக்கின்றார்களென்றும், அப்பாண்டவரில் நடுப்பிறந்தோன் பிள்ளையாகிய சிரஞ்சீவி அபிமன்யுகுமாரனுக்கும், எனது பெண்ணாகிய சௌபாக்கியவதி உத்தரை குமாரத்திக்கும் கலியாணம் நடக்கப்போகிற தென்றும் ஓலைகளெழுதி தூதர்வசத்தி லனுப்பி யறிக்கையிட்டான்,

## ஸ்ரீ கிருஷ்ணபகவான் பந்துக்களோடு அபிமன்னனையும் சுவேதனையு மழைத்து வருதல்.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! ஈதிப்படியிருக்க விராடராஜனுடைய முதற் குமாரன் சுவேதனென்பவன் கைலாச பதியைக் குறித்துத் தவஞ்செய்யப் போனானென்று முன்னமே சொல்லி யிருக்கின்றே னல்லவா? அந்தச் சுவேதனானவன் மனோபக்திமாராமல் வைராக்கிய நிலையை வகித்து, மகாதேவனைக் குறித்துத் தவமீழ்த்து, தாட்சியில்லாத காட்சியும் பெற்று, எந்த ஆயுதம் பிடித்துப் போர் புரிந்தாலுந் திரிபுவனத்தையுஞ் செயிக்கும் படியான அருளாற்று, மற்றெவருந் தனக்கு எதிரில்லாமல் யாவரையும் வெற்றிபெரும்படியான சித்தியைப்பற்றினான். அவன் பற்றியிருக்குஞ் சித்தியை முத்திக்கு வித்தாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி யறிந்து, இனிமேல் நாம் குருக்ஷேத்திரத்திற் கூட்டி வைக்கப்போகின்ற யுத்தத்திற்கு இவனொருவன் இருக்கின்றான். இவனை விட்டுவிடுவது யுத்தமல்ல. எவ்விதத்திலு மிவனைக் கொண்டுபோக வேண்டும் என்று நினைத்து அவன் இருந்த இடத்திற்குப்போய், பிரிந்துபோன உம்மைப்பார்க்கயித்தனை நாட் சென்றதென்று உபசரித்துப் பரிந்தழைத்து வந்து, தனக்குண்டாயிருந்த பகைவர்களை யெல்லாம் அதனாற் போக்கிக் கொண்டு, துவாரகாபுரிக்கு அழைத்துப் போய்ச் சுரேசனு மெச்சும்படியான விருந்து செய்து, அளவற்ற வெகுமதி யளித்து, கேளிக்கை முதலாகிய சம்பிரமங்களிற் காலதாமசம் பண்ணிக்கொண்டு, பாண்டவர்கள் வெளிப்பட்ட சமாச்சாரம் இன்றைக்கு வருமோ நாளைக்கு வருமோ வென்று தமதிதயத்தில் எண்ணமுற்றிருந்தார். அச் சமயத்தில் தூதர்கள் ஓலை கொண்டுவந்து வணங்கினார்கள். அந்தச்சுருளை யவரவிழ்த்துப் பலபத்திரருக் கெதிரிற் படித்துக்காட்டி அண்ணா! நமது பாண்டவர்கள் அக்ஞாதவாச மகற்றி வெளிப்பட்டார்களாம். இதல்லாமலும் உமது மருமகன் அபிமன்னனுக்குத் திருக்கலியாணம் நடக்கப் போகின்றதாம் என்று சொல்லி மகா விருப்பத்துடன் நீருண்ட கருமேக நிறங்கொண்டகோபாலனானவர், பலராமர்-சாத்தகி-கிருதபன்மன் - கிருதவீரியன் இவர்களும், இவர்கள் குடும்பங்களும், வண்டு செறிந்த மதுமாலையணிந்த சுருட்கருங்கொண்டை சிற

ந்த தங்கை சுபத்திரா தேவியும், அயிலாயுதம்
படைத்த முருகையனுக் கொப்பான அபிமன்
னனும், கூறிய வேற்படைகொண்ட சுவேத
னும், குறிக்கப்பட்ட முதலியோருஞ் சூழ்ந்து
வரும்படிக்குக் கூட்டிக்கொண்டு விராடபுரம்
வந்து சேர்ந்தார்.

இந்தப்பிரகாரம் மேகவண்ணனான கண்
ணனும், அவரண்ணனும் வருகின்றார்களெ
ன்று சோகம் நீங்கிச் சுகம்பெற்றிருந்த பாண்
டவர்களும் விராடராஜனும் தூதுவரால்
கேள்விப்பட்டு, அவ்வேத நாயகனைக் காண
வேண்டுமென்று எதிர்கொண்டு சென்று
கண்டு, இருவர் தேகமும் ஒன்றென்று சொல்
லும்படியாய் ஒருவரை யொருவர் இறுகத்
தழுவி யணைத்து, ஆகாயமளாவிய சிகரகோபு
ரஞ்செறிந்த பேரவையி லழைத்துவந்து பல
ராமர், சாத்தகி, மற்ற யாதவ குமாரர்கள் முத
லிய பேர்களுக்கும் அரவணைப் பள்ளி நீங்கிய
ஆதிமத்தியாந்த ரகிதனோடுவந்த பெரியோர்
முதலிய உரியோர் யாவர்களுக்கும், தகுதியா
கிய சன்மானமும் வெகுமானமும் கொடுத்துப்
பிரிய வசனங்கள் பேசிக்கொண்டார்கள். மந்
திரி பிரதானியர் சிலரும் வந்தநல் யாதவர்
பலரும் மரியாதை குறையாமல் வணங்கி நின்
றார்கள். சுபத்திரா தேவியும், யாதவஸ்திரீ
களும் ஸ்ரீகிருஷ்ணருடைய அஷ்டபாரியர்
களும், தேவகி தேவியாரும், உரோகிணி தேவி
யாரும் மற்றுமுள்ள தாய்மார்களுந் திரௌ
பதாதேவியிருந்த அந்தப்புரம் போய்ச் சேர்
ந்து சகலவித மரியாதையுடன் உபசாரமும்
பாராட்டிச் சுபங்கொண்டாடி யிருந்தார்கள்.
இப்பால், அபிமன்னன் நெருங்கி வெகுநாளா
கப் பிரிந்திருந்த தந்தையரை வணங்கி பாஞ்
சாலியைப் பணிந்து, மாஞ்சோலையிற் குயில்
கூவும் வளமுடைய மச்சநாடனுக்கும் வந்த
னந் தந்தான். அவர்க ளியாவரும் அவனை
ஆலிங்கனம்பண்ணி ஆசீர்வதித்து, ஆண்மிக்
கையுடைய பாண்டவர் பக்கத்தில் இளஞ்சிங்
கம் வீற்றிருக்குந் தன்மைபோல் இருக்கச்
செய்தார்கள். அப்போது அந்தப் பிள்ளையை
சபையிலிருந்த பெரியோர்கள் கண்டு, மிகவும்
மகிழ்ந்து, வியப்புடன் புகழ்ந்து, நயந்து
வியந்து, பாண்டவர்கள் பூர்வஞ் செய்த புண்
ணிய நலமே இப்பிள்ளையாகப் பிறந்த பின்பு
கொள்ளை கொள்ளையாய்க் கொண்டாடிக்
கொண்டிருந்தார்கள். அப்போது தர்மசொரு
பியாகிய உதிஷ்டிரர் தனது விடாத கடாக்ஷ
வீக்ஷண்யப் பார்வையால் வீரப்பிரதாபத்
தோள்பூரித்த அபிமன்னனை நோக்கி, அவ
னோடு ஸ்திரமான வார்த்தைகளைப் பேசி,
அதற்கவன் சொல்லுக்குச்சொல் சாஸ்திர யுத்
தமாய்ச் சொல்லுந் துணிவைத் தேர்ந்து
ஆசைமேலிடச் சிறந்து அகமகிழ்ந்திருந்தார்.
இவ்விதமாகப் பெரிய தந்தையி னிடத்திற்
பேசிய அபிமன்னனை மாமனாகப் போகிற
விராடராஜனும்,மைத்துனனாகிய உத்தரகுமா
ரனும், சுவேதனன்முதல் மற்றுமுள்ளோரும்,
சுதேக்ஷணாதேவியுங் கண்டு கண்களி கூர்ந்து,
செவி குளிர்ந்து, முக மலர்ந்து, ஆனந்தங்
கொண்டாடினார்கள்.

இப்படியாக விருக்கின்ற சமயத்தில் ஸ்ரீ
கிருஷ்ண பகவானுடைய திருவருட்பயனால்
விராடபுரம் வந்து சேர்ந்து சுவேதனென்ப
வன் தன் தந்தையான விராடனையும், சிறிய
தந்தைமார்களையும்,தருமராஜன் முதலியபேர்
களையும், தாயாகிய சுதர்க்கணையையும் பணிந்
தான். இவர்களெல்லோரும் அவனை யேந்தி
முத்தமிட்டார்கள். அவருள் மச்சராஜன்
இச்சைமேலிட்டு எழுந்து, மைந்தன் பேரில்
விழுந்து, ஆ! என் விவேகக் கொழுந்தே
என்று மார்போடணைத்து, புஜத்துடன் புஜ
மொத்தி, முகத்துடன் முகஞ்சேர்த்து, இரு
கரத்திலும் எடுத்துப்பிடித்து உச்சிமோர்ந்து,
கருத்தினாற் களித்து, கண்ணருள் தழைத்துச்
சில மொழிகள் புகன்றான். அப்பா என்கண்ம
ணியே! நீ இதுவரையில் எங்களை விட்டு
எந்த இடத்தி லிருந்தாய்? தந்தவண்ணனுக்
கிளைய நந்தகுமாரன் உன்னை எங்கேகண்டார்?
இவருடன்கூடி நீ எப்படிவந்தாய்? எவ்விடத்
தில் நீங்களிருவருஞ் சந்தித்தீர்கள்? இது
எனக்கு நல்லகாலம். ஆதலால் என்மனங்குளி
ரச் சொல்லுக வென்று கேட்டான். அதற்கச்
சுவேதனருகிலிருந்த கடல்நிறவண்ணக் கண்
ணன் சொல்லத் தொடங்கினார். ஓ விராட பூப
தியே! உமதுகுமாரன் அருந்தவமிருந்து சிவ
னருள் பொருந்திப் பெருந்திறற் படைகளும்
பெருமையும் பெற்றான். இத்தன்மையாகச்
சித்திபெற்றிருக்கிற திடத்தை யான் அறிந்து,
இந்த உத்தமனை யழைத்துக்கொண்டு துவார
கைக்கு வந்து, எனக்கு அசாத்தியமாயிருந்த
சத்துருக்களை எல்லாம் இவனால் ஒழித்து
விட்டு, இவனுக்கு விருந்து முதலிய உபசாரங்
களெல்லாஞ் செய்து என்னிடத்தில் வைத்
துக் கொண்டிருந்தேன். அப்போது நீங்கள்

எழுதியனுப்பிய ஓலையைக் காணவும், உடனே பிரயாணமாகி இம்மச்சநாட் டடைந்தோம் என்று கோபாலன் சொல்லவும், அச்சொற் கேட்ட விராடராஜன் பட்சமேலிட்டு, மகன் பக்கத்திலிருந்து, தவம்புரியப் போனதுமுதல் வந்தது வரையிலுஞ் சாங்கோபமாய் க்ஷேம லாபங்களை விசாரித்து, பகைவரென்னும் யானைகளைக் கொல்லுகின்ற சிங்கம் போன்ற பாண்டவருடன் மற்றப் பெரியோர் யாவரையும் பணிவித்து, சபாமண்டபத்திற்றனே அவனைத்தழுவி இருத்தித் தானு முடனிருந் தான். அக்கால் விராடராஜனுடைய மற்றய பிள்ளைகள் யாவருந் தமயனுன சுவேதனைச் சாஷ்டாங்கமாகத் தொழுது, அவனால் உப சரிக்கப்பட்டுத் தருக்கியிருந்தார்கள். அன்னை யாகிய சுதெக்ஷணாதேவியுந் தன்னைப்பணிந்த சுவேதனை வாழ்த்தி, பொன்னுக்கிணையாகிய தன் புத்திரியின் கண்ணுக்கினிமையான கணவனையும் பார்த்துக் களிப்போ டிருந்தாள்.

### பாஞ்சாலர் குந்திபோசர் இவர்கள் முதலாயினோரும் தௌமியாசாரியராதியரும் வருதல்.

அதுவேளையிற் பாஞ்சாலதேச ராசனும், சோமகானும், அவர்கட்குரிய நால்வகைச் சேனைகளும், இளம்பஞ்ச பாண்டவர்களும், திருஷ்டத்துய்மன் முதலாகிய பேரும் வந் தார்கள். அவர்களை விராடராஜனும் பாண் டவர்களும் எதிரே சென்று கண்டு, ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டு தகுந்த மரியாதை களுடன் புகுந்து சபாமண்டபம் போய்ச் சேர்ந்திருந்தார்கள். இப்பாற் குந்திபோஜ குலராஜர்களும், மந்திர தேசாதிபர்களும், புத்திரவர்க்கங்களும், மித்திர வேந்தர்களும், பாண்டிநாட் டரசரும், சோழராஜ சிகாமணிகளும், சேரபூபதிகளும், மகத தேசாதிபதிகளும், இன்னும் பலபல தேசத்திறைவர்களும், வன்னவன்ன வாகனமேறி வந்தார்கள். அன்னவர்க் கெல்லாம் பல வரிசைகளோடு உபசரித்து ஆசனத்தி லமர்த்தினார்கள். வந்த வேந்தர்கள் சிந்தையுவந்து பாண்டவர்களைப் பார்த்து, அந்தோ! நீங்கள் பன்னிரண்டு வருடம் காட்டில் வனவாசம் பண்ணும்படியாகி நாங்கள் உங்களைப் பிரிந்திருக்கும்படியாய் நேரிட்டதல்லவா? ஆ! ஆ! இஃதென்ன வினை? என்றுசொல்லி மனம் நொந்தார்கள். தம்மைக் குறித்து வெம்மை யடைகின்ற தராதிபர்களைத் தருமராஜா நோக்கி, ஓ சகல சாஸ் திரங்களுங் கற்ற சம்பன்னர்களே! மேல்வினை எவரையு மீளவிடாது. மேதினியில் பிறந்தேன். வேதனுனுலும் வினைக்கு புறம்பாய் மீளப்போகாது. ஆகையால், நடந்துபோன காரியத்தைப்பற்றி விசனப்படுவதில் யாதொரு லாபமுமில்லை. இனி நடக்கவேண்டிய காரியங் களை நன்கு ஆராய வேண்டியது என்று சாந்தமாகப் பேசி பின்னுஞ் சொல்லுகின்றார். ஓ தரணீஸ்வரர்களே! தாமரை சேர்க்கையில் படுத்த அம்சங்கள் அம்மலர்த் தேன்களால் நனைந்த இறகுகளை வானத்தில் விரித்து உலரச் செய்கின்ற வண்மையும், தானத்தைப் பொழியுந் தந்தாவளத் திண்மையும், நீர்வள நிலவள நன்மையுமுடைய இந்த மச்சராஜன் வசந்தகால மன்மதன்போன்ற மகாராஜன்; வெகுதேஜன். இவருடைய நாட்டிற்கு நாங்களெப்போது வந்தோமோ, அப்போதே காட்டிற்றிரிந்த வருத்தமும், எங்களைமாட்டி வருத்திய தீவினைப் பொருத்தமுங் கேட்டையடைந்து போய்விட்டன. இந்த அன்பருடைய பேருதவியால் துன்பம் அகன்றிருந்தோம். முன்பு நான் மாட்டிக்கொண்ட தெய்வாறெண்ணில், சுரலய பேதங்களாகிய ச-ரி-க-ம-ப-த-நி என்னும் சப்த சுர தாதுடன் சேர்ந்த குரல்-துத்தம்-கைக்கிளை-உழை-இளி-விளரி-தாரம் இவை முதலிய ஏழிசைப் பாடலுக்கு விரும்பி வந் தருகிய அசுணப் பட்சிகளானது, பறையடி யோசை கேட்டுச் சிறையடியா தயர்ந்து ஒருவன் கைக்குள் மாட்டிக் கொள்ளுமாறு போல் விண்ணுக்கிறைவனென நீண்டு மண்ணுக்கொருவனென வாண்ட திரிதராஷ்டிர மகாராஜனென்னும் எமது பெரியதந்தையின் வார்த்தையால் மயங்கி, துரியோதனன்-சகுனி-துச்சாதனன்-கர்னன் இவர்கள் கூடி எண்ணிய வஞ்சனையில் மாட்டிக்கொண்டு வருந்தினேன் இனி நான் செய்யவேண்டிய காரியமென்னை? நீங்கள் யாவரும் என்னைக் காக்கும்படிக்குக் கண்ணுக்கிமைபோற் கலந்திருக்கின்றீர்கள். உங்கள் சித்தம் எங்கள் பாக்கியம் என்று மெத்தவும் வருந்தியுரைத்த உத்தமன் சொல்லைக் கேட்ட கொற்றவர் பலரும் பதை பதைத்து இப்போ திவ்விடத்திற் சேர்ந்திருக்கின்ற நாமெல்லோரும் இதுவே பயணமாகப் புறப்பட்டு இன்றைக்கே சண்டை விளைத்து, துரியோதனன் மண்டையோலையைக் கிழித்து, அவனுக்குத் துணைவந்தவர்களைக் கொன்று கழித்து, ஜெயம்! ஜெயம்! என்ன வென்று வருவோம் வாருமென்று தருமநந்தனன்

கருத்திற்குப் பொருத்தமாக வற்புறுத்திச் சொன்னார்கள்.

இவ்வாறு மன்னர்கள் பின்னருளுமல் முன்னிட்டுரைத்த மூர்த்தன்ன மொழியை விராடர்கோன் கேட்டு மகிழ்ந்து உங்களுடைய பூர்வத்தியான கிருபை கீர்த்தியிற் சிறந்த இப் பாண்டவ பூபதிகளுக்கு கீர்த்தியாக விருக்கும் போது, இன்றைக்கும் மற்றென்றைக்கும் என்னகுறை? என்றுபசாரங் கூறிச் சபையை விட்டெழுந்து யாவருக்குஞ் சாஷ்டாங்கமாக விழுந்து கோபாலகிருஷ்ணனைச் சிந்தித்து, பூபாலவேந்தரைச் சந்தித்து, இருகரங் குவித்து வந்தித்து, தான் சிந்தித்திருந்ததைத் தெரிவித்துக் கொள்ளுவதானான். ஓ இந் நிலங்காக்கு மிறைவர்களே! யான் கூறும் விண்ணப்பத்தைச் செவிகொடுத்துக் கேண்மின்கள், மலைகள் மதித்துத் துதித்து வணங்கப் பூரித்தபுயமும், நீதிசாஸ்திர நெறிமுறைப்பயனும், சொற்பொருணயமும், விற்பனவியனும், சௌந்தரியமும் கூர்வேல் தாங்குந் தைரியமுமுடைய பாண்டவ சுபுத்ரனென்னும் அபிமன்ன ராஜனுக்கும், என் தவக்கொழுந்தாகிய உத்தரையாட்குங் கலியாணவைபவங் கண்டருளிய பிற்பாடு வாளைகள்பாய கமுகம்பாளைகள் சாய வனிதையருடி மகிழ்நருங்கூடி விளையாடும் வளநாடாகிய குருநாட்டைச் சண்டையிட்டு வாங்கப் புறப்படுவோம். அதுவரையில் நீர் யாவரும் மனம் பொறுத்திருக்கக் கேட்டுக்கொள்ளு மென்னை மன்னிக்கவேண்டும். மேலும் மாயனுக்கு மருமகனாக வாய்ந்த வாளபிமன்னன் எனக்கு மருமகனாக வாய்க்கின்றமையால், பற்பல தேசாதிபர்கள் யாவரும் ஏக காலத்தில் ஒருமிக்க வரும்படிக்கு முற்பிறப்பிற் செய்த தவம் இப்பிறப்பிற் கை வல்லியமாயதென்று சிறப்புற்றிருக்கின்றேன். மாலை தாங்கிய வண்புயமோங்கிய மன்னவான்களே; சீக்கிரத்தில் முகூர்த்த நடக்கும்படிக்குச் செலவு கொடுத்தருளவேண்டும் என்று சந்தனபாளித புஷ்ப தாம்பூலபலாதிகள் யாவற்றையுந் தட்டுதட்டாய் வைத்து, முட்டுப்பா டில்லாமற் கை கட்டிக்கொண்டு விராடராஜன் கேட்டான். அதன்பேரிற் சகலத்திராஜருஞ் சம்மதித்து, தருமராசனது தயைப் பார்வையையு நோக்கி, அவ்வாறு நடாத்துவதே அதிகஸ்ய அதிகபல மென்றார்கள். அப்போது அன்புக்கொரு வித்தாகிய தருமராஜன் முதலான பாண்டவரும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் புஜங்கள் பூரித்து, அகமு முகமு மலர்ந்து ஆசைமேலிட்டார்கள்.

இப்பாற் பாண்டவர்கள் அக்ஞாதவாசம் பண்ணப் புகுந்த காலையிற் பிரிந்த தௌமியரும் பன்னீராயிரம் பிரமக்கியானிகளும் வந்தார்கள். அவர்களை ஐவர்களுங் கண்டு அன்பு மேற்கொண்டு ஓ சுவாமிகளே! யாங்கள் செய்யவேண்டி யிருந்த ஒரு வருடத் தொண்டும் அகன்றது என்று புகன்று சரண்மேற் பணிந்தார்கள். அவ்வாறு உபசரித்துத் தொழுத ஐவர்கட்கு மவர்கள் ஆசீர்வதித்தான பின்பு திரௌபதாதேவி-வேதிகை-சுபத்திரை-இரேணுமதி-விஜயை இவர்கள் முதலியபேரும் பணிந்தார்கள். அவர்களுக்கும் மங்களாசனஞ் சொல்லி உடனே பணிந்து எழுந்த இளம்பஞ்சபாண்டவர்கள் - வன்சகாதேயன்-அபிமன்னன் - நிர்மித்திரன் - செயக்ஷேத்திரன் இவர்கள் முதலிய புத்திரானையும் வாழ்த்தி எத்திக்கும் புகழும்படி கீர்த்தி பெறுங்களென்றிசைத்து, தருமநந்தனரைப் பார்த்து, ஓ தணிகரே! எம்மைவிட்டு நீங்கி அக்ஞாதவாசத்திற் கிசைந்த ஒரு வருடம் வரையிலு நடந்த சங்கதி யாவும் உரைத்தருளவேண்டு மென்று கேட்டார்கள். இப்படியாகக் கேட்ட தௌமியர் முதலிய மகான்களும் மன்னர்களு மகிழ்வுறும்படியாய் நிறைவுறுஞ் செய்திகளைக் குறைவுறக் கூறினார் தருமநந்தனர். அவை யனைத்துஞ் சொல்லக் கேட்டுச் சந்தோஷித்த முனீஸ்வரர்களையுந் தௌமியாச்சாரியையுந் தருமநந்தனும் விராடராஜனும் பார்த்துக் கை குவித்து, ஓ வேதவேதியர்களே! நமது வாளபிமன்னனுக்கும் உத்தரைகுமாரத்தியாருக்கும் பாணிக்கிரகண முகூர்த்தம் நடக்கவேண்டியபடியால், இதற்குத் தகுந்த நன்னாள் நியமிக்கவேண்டுமென்று விளம்பினார்கள்.

### விராடன் தௌமியரால் முகூர்த்தநாள் கோரி பாண்டவரை உபலாவியத்திருத்தி மணவினைக்குரிய தொழில்யாவு முடித்தல்

இவ்வாறு கேட்டுக்கொண்ட அவர்கள் எண்ணப்படி நக்ஷத்திரம் - இலக்கினம்- திதி-ஓரை - யோகம் - கரணம்-பொருத்தம் ஆகிய இவைகளை யெல்லாந் திருத்தமாக விவாக சக்கர முதலியதோடுஞ் சோதித்து தாங்கள் கற்றுணர்ந்த தரும சாத்திரத் திரங்களெல்லாம் காட்டி, தகுதியான பலங்க ளூட்டி ஓர்

முகூர்த்தநாள் வைத்தார்கள். அந்தக் கலியாண நாள் வரையிலும் பந்தல் முதலிய பல அலங்காரங்கள் பண்ணவேண்டியிருப்பதால், விராட ராஜனானவன் பாண்டவர்களையும் அவர்கட்கு வேண்டியவர்களையும் உபலாவியத்திற்கனுப்பிவைத்து அவ்விடத்திற்சவுக்கியமாயிருக்கும்படி செய்து சகல சாமக்கிரியைகளும் உடையாதி உசிதங்களுங் கொடுத்து, ஒரு நாளைப்போற் பலநாளுஞ் சலிப்பில்லாமல் விசாரணைசெய்து வந்தான்; இவ்வாறு பாண்டவர்கட்கு உபலாவியத்தி லாகவேண்டுங் காரியங்களிற் றடையறநிறைவேற்றிவரும் விராடராஜன் தனது நகரவலங்காரஞ் செய்யும்படியாய் பேரி முழக்கி வைத்து கருங்கடற்கலையுடுத்த காசினியை ஆளுங் காவலர்க்கெல்லாங் கலியாணவோலையுந் தூதும் ஒருமிக்கவிடுத்து விராடபுர முழுவதும் விநோதமான பவளக்கால் நாட்டி, தவளவிட்டம்பூட்டி, மரகத ஓலைகளீட்டி, வச்சிரப்பிரதிமெய் மாட்டி, மாணிக்க மலர்மாலை தூக்கி, முத்துக்கொத்து வடங்கள் வீக்கி, ஆணிப்பொன்ரேகை யமைத்து, அற்புதக் காட்சிகள் சமைத்து, தொங்கொளி வட்டஞ் சுவரொளிவட்டங்க ளிருத்தி, தூங்கா விளக்கு தோரண விளக்குகள் பொருத்தி, வாழை - கமுகு-மாங்கனி-பலாக்கனி-தாழை - இளநீர்-சரக்கொன்றை-ஈந்து-பாளை-கரும்பு-கூந்தற்பனை - பற்பல மலர் - இரசிதக் குண்டுகள்-ஜாலர்கள்-சடைமாலைகள்-தமனியப்படங்கள் - நீலக்கண்ணாடிகள் - நிலைக்குங்கண்ணாடிகள்-முத்தினத்தூண்கள் - ரத்தினப்பூண்கள்-வேடிக்கை மான்கள்-விநோத ஆண்கள்-வாரணக்குதிரைகள் - வஸ்திரசித்திரங்கள் - தோரணநிறைகள்-சோடித்தவரைகள்-மேல் விதானங்கள்-விதவிதக்கொடிகள் - பலவிதக் குடைகள்-பைம்பொன்மேடைகள்-வேதிகைச் சாலைகள்-மென்மலர்ச்சோலைகள் - கும்பக்குடங்கள்-குடமாடங்கள்-விம்ப வேடங்கள்-வெயில்மணி சிகரங்கள் எண்டிசையண்டருங்கொண்டாடச் சமைத்து,சாந்து சந்தனத்தினால் தரையெலாமெழுகி, முத்துச் சுன்னத்தால் மொக்கெலாமிட்டு,கலியாணமண்டபக் கலசந்திருத்தி,மணவறைநிறைய மாலைபொருத்தி,மதுரக நிறைந்தப் பூமாலை - மகிழ்ச்சி சிறந்த பொன்மாலை - வாடாப்பவள மலர்மாலை - தேடாப்படிகத்திரண்மாலை - ஆணிமுத்துமாலை - இரத்தின மாலை- அரிமரகதப்பசுமாலை-அரவின்மாணிக்க மாலை - வச்சிரமாலை - பச்சிலைமாலை முதலிய மாலைகளை எல்லாம் புகழ்கொண்ட பூவுலகோர் கண்டு கொண்டாடும்படி சோடிப்பித்தான். இப்பாற் கலியாணவாசலிற் சால்-கரகம்-முளைப்பாலிகை-தழல்வளர்க்குமேடை - குடவிளக்கு - அரசாணிகால்-மாவிலை - தருப்பை - அறுகு-மஞ்சள் - குங்குமம் - சந்தனம் - தாம்பூலம் - வாழைப்பழம் - தேங்காய்-புட்பம்-வெல்லம்-அக்ஷதை-சாம்பிராணி-கூடம்-சமித்து-நெய்-பால்-தயிர்-நவதானியம் - பொரி இவை முதலிய யாவு மழைத்து நாளைய யுதயத்திற் பத்து நாழிகைக்கு முகூர்த்தமென்று பாண்டவர்களுக்குத் தெரிவித்து நன்னாடு முதலிய பன்னாட்டுக்கும் பறை சாற்றுவித்தான்.

### அபிமன்னன் உபலாவியத்திலிருந்து விராடபுரத்திற்கு மணக்கோலம் போதல்

இச்சங்கதியைக் கேட்ட மாத்திரத்தில் தருமராஜன் முதலியோர் பந்துவருக்கத்துடன் ஜெயமென்று எழுந்து சிந்தை மகிழ்ந்து, சிவாலயம் விஷ்ணுவாலயங்களுக்குச் சிறந்த பூசைகள் செய்வித்து, திங்கள் மரபிற்றோன்றிய தங்கள் சிறுவனைத் திருமணக்கோலமாகக் கொண்டுபோக வேண்டுமென்று தமக்குள் நினைத்து, பொங்குந் தடத்துப் புனித நன்னீரைத் தங்கக்குடத்திற்றுமெடுத்து வந்து சங்கையில்லாத சாஸ்திரம் பாராட்டி, ஓங்கிய புதல்வனை யுவந்து நீராட்டி, வெண்டுகிலால் நீர் துவட்டி சிங்காசனத்தி லேற்றி, சிகை சீவி வகிர்ந்து, சில பணி புனைந்து, தேமல ரணிந்து, திரிபுண்டரந் தீட்டி, திலகமுங் காட்டி, குண்டலமாட்டி, பச்சக்கல் முருகிட்டு முத்தாரமுதலிய பத்தாரங்களோடு வித்தாரப் பதங்கங்களுந் திருத்தி, திருமுடி பொருத்தி, தங்கச் சஞ்சந்தரித்து, பாஜிபந்து-தோளணி-நாககங்கணம்-கடககங்கணம் - கணையாழி இவைகளைப் பூட்டி, அரைப்பட்டிகை-அரைஞாண் - வீரகண்டை முதலியவைகளும் வீக்கி, திவ்விய வேஷ்டிகளால் அலங்கரித்து, உயரமுஞ் சுற்றும் உன்னதமாகி ஏழுறுப்பும் பூமியிற் படிந்து, கிம்புரிப்பூண்கொம்புகட்கிட்டு, முகபடாமதனைமொய்ப்புறச் செறித்து, கவுட்குழிகன்ன மகரிகை பொரித்து, கும்பக்கலசங் கொடியுடனமைத்து, வெண்கவரி-செங்கவரி தூக்கி, ஒன்பது வகை இரத்தின வவுதாவமைத்த அரசக்களிறுகிய பட்டத்து யானைமேல் அபிமன்னனை யேற்றி, அந்தணர்க்கும் ஆதுலர்க்குந் தானங் கொடுத்து, முத்துக் குச்சுடன் பவளமமைந்த சந்திரவட்டக் குடை கவிக்க, வெள்ளைக் கொடி



அபிமன்னனுக்கும் உத்தரைக்கும் திருக்கலியாணம்.

கள் பிடிக்க, ஆலவட்டம்-சுருட்டி-பீலிக்குஞ்சம் பவளச் சவளம்-விருது - டால் - கருடடால் - அருகு-ஒருகு-மயிற்பீலி-வெண்சாமரம் - மேற்கட்டி-தோரணம் இவை முதலியன நெருங்க, இளம்பாண்டவ ரைவரும் பஞ்சவர்ணக் குதிரையேறிப் பக்கத்தில்பிறங்க, மத்தகஜத்திலமர்ந்த மற்றப் பிள்ளைகள் சுற்று நடக்க, பல்லக்கிலேறிய பாத்திபர் முடுக்க, மல்லர்கள் சிலம்பு வரிசைமுன் கொடுக்க, மாதவர்-வேதியர் - வாணர்களடுக்க, கீதநாதக் கிளரொலி தொடுக்க, நரகபேரி நடனமுன்னடிக்க, துரகஜ துந்துமி சுரதியடுக்க, ஐந்து கருவியும் முந்திமுன்னேங்க, பந்திபந்தியாய்ப் பந்துஜனந் தேங்க, மத்தள-தாள-மேள முழங்க, வித்தகசங்க நாதங்கழங்க, நாட்டியமாதர்கள் நடிக்க, நற்கீத மாதர்கள் படிக்க, கட்டியக்காரர் மன்னர்களைச் சுட்டிக் காட்டிக் கொண்டாட, பட்டுவான்கள் வேந்தர்களின் பிரதாப விருதுகளைவிண்டாட, குலமுறைவந்திப்போர் தலைமுறை யடுக்க, நலமுறப் புகழ்வோர் நற்சீர் தொடுக்க, இந்திர வாத்தியந் தும்தும்தும்மென, இணையில் நாற்சேனை திம்திம்திம்மென நந்தகோபாலருந் தந்தவண்ணனும் கொந்தலர் கூந்தலாற் வந்தவர் பலரும், தேரின்பேரிலும் வண்டிகள் பேரிலுஞ் சென்றார்கள். திரௌபதாதேவி, சுபத்திராதேவி, அஷ்டலட்சுமிகள், ஆயமாதர்கள் ஆகிய யாவரும் நவரத்தினங்களால் அமைத்த சித்திரப் பல்லக்கிலேறிச் செல்ல, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியுங் கூடச் சென்றனர்.

இப்படியாக இவர்கள் வரவும், ஆரியர்களுஞ் சீரியர்களும், பூமாரி-பொன்மாரி-மணிமாரி - நவதானியமாரி இவைகளை யக்ஷதையுடன் வாரிச் சொரிந்து வாழ்த்தினார்கள். மங்கிலியப் பெண்கள் மகிழ்ந்து, மஞ்சள்-குங்குமம்-தாம்பூலம்-தேங்காய் - வாழைக்கனி-மாங்கனி-தேங்கனி இவைகளை வருவார் போவாராகிய மங்கையரைப் பூசித்து விசுவாசித்துக் கொடுத்துப் போற்றினார்கள். தண்ணீர்-வெந்நீர்-ததிநீர் இவைகளை உண்ணீ ருண்ணீரென்று உபசரித்து வழியிளைப்பு மாற்றினார்கள். இவ்வாறாகிய எக்களிப்புடன் விவாக முரசங்களுந் தியாக முரசங்களுமுழங்க, தோரண மாடங்களும் வாரண கூடங்களிலும் பூரண கலசங்கள் நிறைய, பவளப் பட்டையு முத்துப் பட்டையும் பத்திப் பத்தியாய் அடித்திரா நின்ற சுவர்களுந் திண்ணைகளுந் தெருவாசல்களும் பந்நீர் தெளித்துக் கோலமிட்டுத் தீபமேற்றிவைத்து, முத்தாலாத்தி-பவளாலாத்தி-நீராலாத்தி எடுத்து கண்ணெச்சல் கழித்து, மங்களம் லாலி சுபசோபனப் பாடல், வாழிப் பாடல் இவைகளைப் படித்து, கையைச்சுழற்றி மடக்கிக் கன்னத்தில் நெட்டை யொடித்து, இப்பேர்ப்பட்ட கணவன் நமக்கிசையாமற் போனானே யென்று கன்னியர் கலங்கி கவலை கொண்டு துடிக்கவும், கட்டியிளமாதர் காதல் கொண்டு நடிக்கவும், இவ்வாறாகப் பலவிதச் சிங்கார வளங்களையுடைய விராடபுர வீதியில் பவனிவருகின்ற பரந்தாமன் மருமகனானவன், ஆடவருமகளிறு மானந்தங் கொண்டாடிப் பணிந்து புகழும்படியாய் வீதிகளெல்லாங் கடந்து விவாகமண்டபத்தின் முன் முகப்பிற்கு வந்தான். இவ்வண்ணந் திருமணக் கோலங் கொண்டுவந்த அபிமன்னனுக்குச் செவ்வண்ணமேனித் திரிஷ்டத்துய்மனுந் திருமாலும் பெருமன்னர் குழுவுங் கைகொடுக்க, மேகம் விட்டிழியு மின்னொளிபோற் பட்டத்து யானை விட்டிழிந்து, அந்தணர்-அருந்தவர்-பாவலர்-பூவலர் - கோவலர் இவர் முதலிய வெவ்வரையும் பணிந்து குருசுவாமியார் பெண்கொடுக்க வருமாமியார் இவரிருவரையும்போற்றி, அவர்களன்புறவளித்த அருண்மொழியும் பெற்று சம்பிரமமாகச் சதிர்சாலையிலிருந்து, உம்பர் கொண்டாட உயர்பொன்னளித்து, ஓங்கிய தருமதானம்புரிந்து, உற்றார் பெற்றார் கற்றார் பரிந்து உடனிருந்து விருந்து அருந்தச் செறிந்து வருந்தி உபசார வரிசை யளித்து வரும் வண்மையைக்கண்டு மகிழ்வுற்ற வாளபிமன்னனை முகூர்த்தமயமென்று தௌமியர் முதலிய முனீஸ்வரர்கள் வந்தழைத்தார்கள்.

## திருக்கலியாணச் சிறப்பு

உடனே கலியாணப் பிள்ளையானவன், இராஜவைபவத்துடன் கைலாகுக் கொடுக்குங் காரியவஸ்தர் பக்கத்தினெருங்க மணப்பந்தலில் வந்தான். அப்போதங்கிருந்த வேதவேதியர் யாவருமெழுந்து, வேதநான்கு மொழிந்து மன்மதனுந் தலைசாய்க்கும் வடிவமைந்த மால் மருகனை அறுகாற் பீடத்திலேற்றி மந்திராக்ஷதையுடன் வாழ்த்தினர். மான்போலும் விழிப் படைத்த உத்தரகுமாரத்தியைத் தேன்போலுஞ் சொல்லமைந்த சேடியர் ரதிதேவியைப் போற் சிங்காரித்துச் சகலவித மேள சம்பிரமங்களோடுங் கூட்டிவந்து நாயகனுக்கு வலப் பாகம்வைத்து, திரையால் மறைத்து நலங்கு

முதலிய சடங்குகள் புரிந்தனர். பின்பு வான மாதர் வாழ்த்தொலிசெய்ய, அந்தணர் வேத மந்திரமோத, சந்திரக்குலத்திந்திரர் சேர, சுந்தரக்கனல் ஜோதியாய் வளர, நந்தகுலாதிபர் வந்தனைசொல்ல, கந்தனை கணேசனைக் கமலனைப் பூசித்து, இந்திராதிபரை யேற்றி வணங்கி, மாசுதீர்ப்போனல் மறைவிதி முடித்து, பிரமசாரி விரதங்களைந்து, ஸ்நானஞ் செய்வித்து சாதராதரித்து, வைதீகச் சடங்கு மார்க்கங்காட்டி, கங்கணங்கட்டி காலாழிமாட்டி கரத்திலுரத்த கதிர்வாள் அளித்து, கருணையாளர்க்குக் கனகமேற்கொடுத்து, மேற்பட்டுடையை விரித்து மேன்மூடி விதிமுறை செவியிலவிதப்படவுரைத்து, தேங்காய் - வாழைப்பழம்-குங்குமம்-புட்பம்-அக்ஷதை மஞ்சள்-தாம்பூலம் - கண்ணடி - சந்தனம்-திருமங்கிலியம் இவைகளை யெல்லாம் பொற்றும்பாளத்தில் இட்டு, நற்றவர் முதலிய கற்றவர் பலரும், உற்ரூர் பெற்ரூர் உறவினரெவரும் இருகரத்தாலும் பரிசித்து இஷ்டதெய்வப் பிரார்த்தனையுடன் வாழ்த்தவும், தாய்தந்தை இருவரும் தத்தம்பண்ணவும், மாப்பிள்ளை குருவைத் தந்தையை வாழ்த்தவும், செந்நீனெய்யைச் சிதருமற் கொட்டவும், திரைச்சீரையைத் தாழ்த்திச் சற்றே பிடிக்கவும், செனசமுகங்கள் ஜெய ஜெய வென்னவும், பொன்னுலகத்திேனர் பொன்மாரி பொழியவும், மன்னுலகத்திேனர் மலர்மாரி சொரியவும், பங்கஜமுகமாதர் வாழ்த்தவும், அங்குஜவயமல்லர் போற்றவும், எங்கணும் பருணிதர்களேற்றவும், திங்களும் பகலுமருளூற்றவும், நரகஜதந்தமி யொலிக்கவும், சுரஜதிதாளங் கலிக்கவும், சங்குமுழக் கந்தழைக்கவும், திங்கட்குலத்தார் செழிக்கவும், தம்பூர்வீணையிசைக்கவும், சல்லரியாதிகளசைக்கவும், புள்ளாங்குழலிசை யிடிக்கவும், புகழ்யாழ்வகைமிக முடுக்கவும், மற்றக்கருவிகளெல்லாமிரையவும், தாரை - பூரி - வீரி-சின்னம்-தடாரி-பம்பை-காளம்-முரசம்-முழவம் - சர்வாத்தியம் இதுகளியாவுங் கோஷிக்கவும் மறைவாணர்-கலைவாணர் முதலியோர் கூடிக் குலாவி சூரியாக்கினி சாட்சியாகத் தாட்சியில் மனக்காட்சியுடன் கலியாணங் கண்டருளினுர்கள்.

இப்பால் பெண்ணும் பிள்ளையும் வலம் இடமாக மாறியிருந்து, ஓமவிதி நடாத்தி, அக்னிமிற் பொரியிறைத்துப் பூரணகுதி கொடுத்து பிரதக்ஷணம் வந்து பணிந்து, மாலை மாற்றி, மறைவாணரைப் போற்றி, மாமுனிவரையேத்தி, மங்களாசனங்கொண்டு அப்பெண்ணும் பிள்ளையுஞ் சுண்டுவிரல் மாட்டி நின்று, நிறைகுடம்-வெண்சாமரம்-கண்ணடி-இயானைக்குடாரி மணிமுரசு-விளக்கு-விருதுக்கொடி-இணைக்கயல்-வன்னும் - அஷ்ட மங்கலங்களுங்கண்டு, அம்மி மிதித்து, அருந்ததியைத் தரிசித்துப் பூசித்து, அரசாணிக்காலையும் நைவேத்தியத்துடன் தொழுது, மற்றப் பேர்களையும் பணிந்து, திருவனைய மாதர் எடுத்துவராநின்ற திருவிளக்குத் துணையுடன் சிற்றறைக்குட் போந்தனர். இப்படி சிற்றறை சேர்ந்தவுடனே சிலபெண்களிருந்து வாழ்த்துதல் ஏசல் நடத்தி, பெண்பக்ஷத்திலும் பிள்ளைபக்ஷத்திலும் நிந்தாஸ்துதியாகப் பிரதாபம்பேசி, பிரபந்தம்படித்து, பாலும் பழமுங் கொடுத்து, மாப்பிள்ளையும் பெண்ணும் மருவியிருக்குஞ் சமயத்தில், அத்தை-மாமி-மச்சினி-அம்மான் - மச்சான் இவர் முதலிய பேர்கள் இச்சையுடன் கொச்சைமொழி பேசி நொடிக்க, வெள்ளைச்சுருள்கள் மடித்து மணப்பெண் பிடிக்க, அதை மணப்பிள்ளை கடிக்க, மணப்பிள்ளை கூசாமற்கொடுக்க, அதை மணப்பெண் கோதிவந்தெடுக்க, இவ்வாறு ராஜவிவாகச் சடங்கின் வண்ணம் யாவுமுடித்து, மஞ்சணீர் வசந்தமாடி மஹோற்சவங்கொண்டாடி, சந்தனம் - புட்பம் - தமனியப்பொடி-சுகந்தம் இவைகளை நிறைந்த பந்திச்செண்டுடனும் ஆரத்துடனுமணிந்து, குந்திதேவியார் நந்தனராகிய பாண்டவர்கட்கும் மற்ற வேந்தர்கட்கும் பிராமணஸ்திரீகள் ராஜஸ்திரீகள் முதலிய யாவருக்குஞ் சம்பந்தத் தட்டுடன் மரியாதைத் தாம்பூலமும் வைத்து இப்படி எம்மன்னருங்கண்டு சந்தோஷப்படும்படியாய்ச் சகல காரியங்களுஞ் சம்பிரமமாய் நடந்தன.

## சீதனச் சிறப்பு

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இப்பால் விராடராஜனவன் தன் குமாரத்திக்கு சீதனங்கொடுக்க யத்தனித்து, நவரத்ன கசிதப்பணிகள்-முகப்பாடம்-வீரதண்டை-தீரதண்டை-அவுதா இவைகளுடன் சேர்ந்த யானைகள், துரா முதலிய முத்துக்குச்சுகள்-கழுத்துக்குப்பிகள்-துமிச்சுப்பில்லைகள் - பாதசரவண்டயங்கள்-பின்கவரி - முன்கவரி -கல்லணை இவைகளுடன்கூடிய குதிரைகள்-பொன்-வெள்ளி-பட்டு இவை முதலியவற்ருலாகிய

பெரிய ரதங்கள், கால்பலங்கள், தாதிகள், சேடிகள், தோழிகள், நல்ல ஆளடிமைகள், பால்பொழியும் பசுக்கள்மேலுயர்ந்த வீடுகள், வளப்பமுள்ளமாடுகள், இளப்பில்லாக்காடுகள், ஜோதிப்பிரகாசம்பெற்றஆபரணத்திணுசுகள், பலவித வஸ்திரப்பட்டுப் பட்டாவளிகள், தேவேந்தர் நாட்டிலும் பூவேந்தர் நாட்டிலும் அகப்படாத அருமையான வஸ்துக்கள், சித்திரப்பொம்மைகள், விசித்திரப் பஞ்சணைகள், பெட்டி பேழைகள், தங்கக்கட்டிகள், பஞ்சலோகப் பாத்திரங்கள், அவள் படித்த சாஸ்திரங்கள் இவைகள்முதலிய யாவும் பற்பல வாத்தியங்களுடன் சீதனமாகக் கொடுத்தான். அதைக்கண்ட ராஜராஜர்களெல்லாரும் சிரக்கம்பஞ் செய்தார்கள். இதன்றியும் இந்தக் கலியாணத்துக்கு வந்த காசாம்பு வண்ணன் முதலாகிய காவலர்களுக்கும், குந்திதேவியின் புத்திரர்களான பாண்டவர்களுக்கும், விராடபுரத்திலுற்ற சகலருக்கும், வேறுவேறாய் அவரவர்களின் ஆசாரபூஜாவிதி குலமுறைக்கடுத்தபடி விருந்துபோசனமும்-வெகுமதிகளும்-சந்தன தாம்பூலங்களும்-தாட்சியில்லாமற் கொடுத்து மரியாதைசெய்து பூசித்தான்; மகாவன்போடு நேசித்தான்; வெகு நயமாக விசுவாசித்தான். இப்பால் விராடராஜனவன், க்ஷத்திரிய விதிப்பிரகாரம் ஐந்து நாளும் ஓமஞ்செய்து, கங்கணவர்ச்சிதமுங்காட்டி, மங்களஸ்நானமும் ஆட்டி, நல்ல சுபமுகூர்த்தத்திற்கூட்டி, காப்புதானமுஞ் செய்தான். பின்பு நற்பயன்சேர்ந்த நலம்போற் செறிந்த விற்பன விவேகிகளாகிய பெண்ணும் பிள்ளையுஞ் சொற்பமுதுருமல் அற்பமேனும் ஒருவரைவிட்டொருவர் பிரியாமல், கற்பனை யலங்காரம்போற் கலந்து வாழ்வுற்றார்கள்.

இக்கலியாணத்தில் மந்திராலோபங் கிரியாலோப மில்லாமல் வளர்த்திய ஓமாக்கினி யாகத்தால் முப்பத்து முக்கோடி தேவர்கள்-அஷ்டவசுக்கள் - திக்குப்பாலகர்கள் - துவாதசாதித்தர்கள் முதலாகிய தேவர் யாவருந் திருப்தியடைந்து களித்தார்கள். பூசித்தன் புடனளித்த பெரும்பொருட்குவையால் வேதவேதிய சாதிய ரியாவரும் வெகுவாய்க் களித்தார்கள். களிந்து நற்கவி சொல்லுங் கவிவாணர்க ளெல்லோருங் கனகக்கொடையாற் கலி நீங்கிக் களித்தார்கள். காசினிக்குரிய காவல் வேந்தர்கள் கலியாணச் சம்பிரமங்கண்டு களித்தார்கள். பூமியிலுள்ள பேர்கள் எல்லோரும் போஜன சவுக்கியத்தாற் புகழ்ந்து களித்தார்கள், தரித்திரர், யாசகர் முதலிய சகலருந் தனத்தாற் கனத்துக் களித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணதேவராகிய வெண்ணுண்டவனும் பாண்டவர் முதலிய மற்றியாவரும் உத்தரகுமாரத்தியின் சற்குணத்தாற் களித்தார்கள். வரைபக வெறிந்த வள்ளிமணாளனை யொத்த அபிமன்னன் உத்தரையின் சரசசல்லாப வுல்லாச இங்கிதக் கலவியமளியிற் கலந்து களித்து வாழ்ந்திருந்தான். மற்ற அரசர்கள் யாவரும் இஷ்டப்படி யிருந்து செலவு பெற்றுக் கொண்டு தங்கள் தங்கள் பட்டினம்போய்ச் சேர்ந்தார்கள். பிள்ளையும், பெண்ணும், பாண்டவர்களும், திரௌபதாதேவியும், சுபத்திரையும், இன்னுமுள்ள ஆண்பாலர் பெண்பாலர் யாவரும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியோடு உபலாவியுஞ் சேர்ந்து வீற்றிருந்தார்கள்.

## பாண்டவர் வெளிப்பாட்டுச் சருக்கத்தோடு

விராடபர்வம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:







ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## ஐந்தாவது,

## உத்தியோகபர்வம்

**கண்ணன் துதி**

மீனமாகியுங் கமடமதாகியும் மேருவை யெடுக்குந்தாள்
ஏனமாகியும் ஆளரியாகியும் எண்ணருங் குறளாயும்
கூனல்வான்மழு தரித்தகோவாகியும் அரக்கரைக் கொலைசெய்த
வானநாயகனாகியும் நின்றமால் மலரடி மறவேனே.

### சூதபுராணிகர் வாக்கியம்

[ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு ஆதிபஞ்சகத்தில் நான்காம்பாகமாகிய விராட பர்வதததைக் கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! பாண்டவர்களுந் திரௌபதா தேவியும் தங்களுடைய சுந்தரவுருவ மறைந்து, ஒருவருடம் விராடபுரத்திலுறைந்து, மல்லர் முதலிய கீசகனாதியரை மாய்த்து, மாடு மடக்கவந்த தென்றிசைச் சேனைகளைச் சாய்த்து, திரிகர்த்தனைச் செல்லவொட்டாமற் றடுத்து, தேரிற் கட்டப்பட்ட விராடனை விடுத்து, திரிகர்த்தனையும் சேனைகளையும் விரட்டி ஓட்டி, தென்றிசையில் ஜெயஸ்தம்பமும் நிலை நாட்டி, உத்தர குமாரனும் பேடியும் உத்திர திசைச் சென்று, உவரிபோ லொலிக்குஞ் சேனைகளைக் கண்டு கலங்கிக் காலோட்டங் கொண்ட உத்தரனைக் காண்டிபன் தடுத்து, இராச நீதிகளை விண்டு இசைப்பித்து, வன்னி மரத்திருந்த ஆயுதங்களைக் கொண்டு யாவரும் பயந்தோட வடித்து, வஸ்திரங்களும் மாடுகளுங் கைக்கொண்டு வந்து மன்னரைவருங் கொலு வீற்றிருந்து, மச்சதேசாதிபனும் சுதர்க்கனையு மனமகிழ்ந்து, வையகத்தார் முதல் மன்னர் மண்டலீகர்களும் புகழ்ந்து, வாளபிமன்னுவுக்கு வைபவத்துடன் உத்தரையை மணந்து, வரிசையாகக் கொடுத்தஉபலாவியத்திலிருந்து, மங்கையர் முதல் தங்குலச் சுற்றங்கள் யாவருங் கலந்து, சகலவாழ்விலுஞ் சிறந்தார்களென்று இதுகாறுங் கேட்டு மனமகிழ்ந்தேன். இப்பால் ஐந்தாம் பருவமாகிய உத்தியோக பருவத்தையும் கிருபைகூர்ந்து திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று ஜெனமேஜெய மகாராஜன் கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.]

அருச்சுனனும் துரியோதனனும் கண்ணனை படைத்துணைவரப் பிரார்த்தித்தல்.



பாண்டவர்களுக்காக உலூக முனிவர் தூது செல்லுதல்.

முதலாவது,
## உலூகன் தூதுச் சருக்கம்

துதி.

அருமறை முதல்வனை யாழிமாயனை
கருமுகில் வண்ணனைக் கமலக்கண்ணனை
திருமக ளுலவனைத் தேவதேவனை
இருபதமுளரிக ளிறைஞ்சி யேத்துவாம்.

எங்கும் விரிந்த கங்குல் அகற்றி மங்குத லில்லாப் பொங்கிய கிரணத் திங்கள் குலத்தில் தங்கமாயுதித்த சிங்கமே கேளும்! பாண்டவர்கள் பதின் மூன்று வருடமும் நீங்கி, வன்னி மரத்தில் மறைத்து வைத்த ஆயுதங்களுந் தாங்கி, அவரவர்கள் புயாசலங்களும் வீங்கி, செல்வமும் மேலோங்கி, பலராமர், ஸ்ரீ கிருஷ்ணர், சாத்தகி முதலாகிய பாஞ்சாலன், இளம் பஞ்சபாண்டவர், பற்பலதேச பந்து ஜனங்கள், தௌமியாச்சாரியர் முதலிய வேதவிப்பிராள் சமஸ்தமான பேர்களும் பொருந்த அக்கியானம் விட்டு நீங்கிய சுக்கியான சூரியர்களைப்போல உபலாவியத்திலிருந்த ஐவர்களைச் சகல அரசர்களு நோக்கி, வனவாசத்தில் நடந்த மகத்துவங்களையுங் கேட்டு மகிழ்ந்து, இனிமேல் நடக்க வேண்டிய காரியங்களுக்கு என்ன யோசனை செய்து இருக்கின்றீர்கள்; எங்களுக்கு உத்தரவு கொடுத்தால் இப்போதே அஸ்தினபுரத்தி லிருக்கும் துரியோதனன் முதலாகிய புத்திரமித்திர வருக்கத்தாரை முடித்துப் போட்டு தங்களுக்கே சகல சுப சந்தோஷங்களும் உண்டாகும் படியாகச் செய்து போடுகிறோ மென்று சொல்லக் கேட்டு, தருமராஜன் புன்னகை செய்து, இது ஞாயமே தாங்களெல்லோரும் என்பேரில் இருக்கும் பக்ஷத்தினால் சொல்லுகின்றீர்கள். ஆகிலும், (பொறுத்தார் பூமியாள்வார், பொங்கினார் காடாள்வார்) என்னும் பழமொழி இருப்பதினால் நாம் சற்று யோசித்து ஒரு தூதுபோக்கி அறியவேண்டி இருக்கிறது. மேலும், இஷ்டதெய்வம் போலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய இஷ்டப்படி நடப்பதே நமக்கு நஷ்டமில்லாத ஜெயமென்று சொல்லி, தருமபுத்திர மகாராஜன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, இனி நடக்க வேண்டியதற்குத் தாமே யோசிக்கத் தக்கதென்று சொல்லவும், கோவர்த்தனமென்னுங் குடையினால் கல்வருஷத்தைத் தடை செய்தருளிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுவதாயினார்.

கேளுங்கள் நமது முக்கிய பாக்கியங்களுக்கு உரியமன்னர் மண்டலீகர்களே! வணங்கா முடிபொறுத்த துரியோதன மகாராஜனவர், ஆதியிற் சூதாடி, பாண்டவர்களுக்கு உரித்தாகிய மண்மனை முதலிய பாக்கியங்களைப் பறித்துக் கொண்டதும் அல்லாமல், தருமப் பத்தினியாகிய பாஞ்சாலியையும் சபையில் மானபங்கஞ் செய்து, பாண்டவர்களை பன்னிரண்டு வருடம் காடேக்தியாக திரியச் செய்து நாடேபதியாக நீதி நடாத்திவந்த அரவகேதனனுடன் மறுபடியுஞ் சூதாடி, அவன் கைக் கொண்ட இராச்சியத்தை ஐவர் கைகொள்ளுவதுவே ஞாயம் அல்லாமல், சேனை சைனியங்களுடன் எதிர்த்து, வில் முதலிய அஸ்திர ஆயுதங்களினால் யுத்தம் புரிந்து, வெற்றியடைந்து, பட்டாபிஷேக பாக்கிய இராச்சியத்தைக் கைக்கொள்ளுவோம் என்று நினைப்பது இராஜநீதியிற் கிடையாது. ஆனால், பூர்வம் சூதாடிய சபாமண்டபத்தில் வீஷ்மர்-துரோணர் முதலிய பெரியோர்களுக்கு நேராகப் பனிரெண்டு வருடம் வனவாசமும், ஒரு வருடம் அக்கியாதவாசமுஞ் செய்து பாண்டவர்கள் வெளிப்படுவார்களே யாகில், அவர்களுடைய இராச்சியங்களை அவர்களுக்கே கொடுத்து விடுகிறேன் என்று துரியோதனன் சொல்லிய வாக்கியம் ஒன்றுண்டு. அதனால் ஒருதூது அனுப்பி ஆதியிற்சொல்லிய உறுதியின்படிக்கு அவர் கருத்தை அறியத்தக்கதே கடமை என்று கண்ணன் சொல்லிய கட்டுரையைக் கேட்டு, அண்ணனாகிய வெள்ளை வண்ணப் பலராமர் சொல்லுகின்றார்.

மண்ணினை ஆளும் அண்ணலே கேளும்! அழகிய சமுத்திரத்தை ஆடையாகத் தரித்தருளிய பூலோகத்தில் துரியோதன மகாராஜனுடைய சாமர்த்தியங்களையும், தருமபுத்திர மகாராஜன் முதலிய தம்பிமார்களின் வல்லமைகளையும், பற்பல தேசத்தரசர்களும் மற்புய வீரத்தலைவர்களும் அறியும்படியாக விருப்பமுள்ள பெருஞ்சூதாடிச் செயித்து, சகலபாக்கியங்களையும் கைக்கொண்டு பதின்மூன்று வருடம் வீணாய்க்கடந்து போகும்படிசெய்த துரியோதன ராஜனிடத்திற்கு மறுபடி தூது அனுப்பியும், யுத்தஞ் செய்தும், சூதினால் தோற்ற பூமியை லச்சையில்லாமல் வாங்க யோசிக்கும் யுத்தி கொடிய தீப்புத்தி என்று காமபாலன் சொல்லவும், சமீபத்தில் இருந்த தம்பியாகிய சாத்தகி தமையனை யுறுக்கிக் கண்

கனுக்க நோக்கி, பளா! பளா!! வெகு நேர்த்தி, இப்படியா நீர் எண்ணங்கொண்டது; உமது திருநாவினிடத்திலிருந்து பிறந்த வார்த்தை யான்து, தேவரீருடைய திருமேனியின் வெளுப்பைப் பார்க்கிலும் மிகவும் வெளுத்தது; என்று பலபத்திரருடைய மனம் வருந்தும்படியாகச் சொல்லவும்; அதுகேட்டு அடுத்த அன்பர்களுடைய இடுக்கங்களையும் புயல்வண்ணனாகிய ஸ்ரீ கிருஷ்ணதேவர் கரம் அமைத்து, யான் கூறிய வசன யுத்தியிலும் அண்ணா அவர்கள் பலராமர் சொல்லியமொழியிலும் பிரயோசனமில்லை. இனி எவர்களாகிலும் கட்டுரையாகிய புத்திகளைச் சொல்லுங்களெனவும், ஆதிசேடனுடைய சிரோரத்தினப் பிரகாசங்களினால் உலகத்திலுள்ள இருள் கெடும்படியாகிய வளப்பங்கொண்ட பாஞ்சால தேசத்திற்கு இறைவனாகும் துருபதேய மகாராஜன் சொல்லுகின்றான்.

ஓ மன்னவர்களே! தருமநீதிப் பெருமை தவறாமல் செங்கோல் செலுத்தியும், நான்கு வேதம் ஆறுசாஸ்திரம் கலைக்கியான முதலிய நன்னூல்களெல்லாந் தெரிந்துணர்ந்தும், உச்சமாகிய பேதாபேதங்கள் ஒன்றும் உணராத பரிசுத்த உள்ளமுடையவர் பலபத்திரராகையால், முன்பின் யோசிக்காமல் இந்த வார்த்தையைச் சொன்னார். அதற்காக குரூரத்துடன் கொடிய வசனங்களினால் கோபிக்க வேண்டாம். சபைதனில் ஒருவர் சொல்லிய வசனம் சம்மதி யில்லாவிட்டால், உடனே அதை மறுத்து மறந்துவிட வேண்டியதே முறைமை என்றான் பாஞ்சாலராஜன். அப்போது மச்சதேசாதிபதி எழுந்து மாயோன் முதலாகிய மன்னர்களை நோக்கி, ஐயா! பாபத்தையும்-கோபத்தையும்-லோபத்தையும்-ஆபத்தையும் பொருளாகக்கொண்ட அரவக்கொடியோன், மோசமாய்ச் சூதினால் கவர்ந்துக்கொண்ட பூமியை அபேக்ஷிக்க இல்லை. பாஞ்சாலியை வஸ்திரபங்கஞ்செய்த காலையில், அந்தச் சபையிலிருந்த பெரியோர்களுக்கு முன்பாக நாங்கள் கூறிய சபதம் முடிக்கவேண்டிய விதத்தை யோசிக்கின்றோமென்று ஐவர் மொழிந்தால், அதை தீயபுத்தி என்று இந்தப் பலபத்திரர் சொல்லலாகுமா? யாவரும் பிழைக்கும்படியாகிய நன்னீதியைச் சொல்லும் துளபமாலையணிந்த ஸ்ரீ கிருஷ்ணதேவர் ஒரு தூதுபோக்கி அறியலாம் என்று சொல்லியதே இராஜ முறைமை; அதுவே வேதவாக்கியத் திறமை. அந்தப் பிரகாரம் தூதுபோய் அவன் இசையாத கருத்தை அறிந்துகொண்டு இப்போதே சென்று யுத்தஞ் செய்தாலும் பெரிதன்று என்று மச்சதேசாதிபதி சொல்லவும், துருபதேய மகாராஜன் காசாம்பூ வண்ணனை நோக்கி, சுவாமி! இதோ இருக்கின்ற வேதவிப்பிர சிலாக்கிய விண்மணிபோன்ற உலூகமா முனியாகிய பௌரோகிதர் சதுர்வித உபாயங்களுந் தெரிந்த பரிசுத்தர் இவரை இன்று தூது அனுப்ப நினைப்பீராகில், அதற்கு இவரே யோக்கியம், இதுவே எங்கள் பாக்கியம் என்று உரைக்க, அந்தச் சபையிலுள்ள பற்பல மன்னவர்களின் மனப் பொருத்தத்தையும், உதிஷ்டிரன் முதல் உயர்ந்த தோளினையுடைய தம்பிமார்களின் சிந்தை உறுதியையும், நடக்கவேண்டிய காரியங்களையும் கண்ணபிரான் நிதானித்து, சபையை நோக்கி களித்திருக்குந் தருமனந்தனைப் பார்த்து, தோஷ-மோச குற்றங்களைப் பூஷணமாகக்கொண்ட சுயோதனன் தனக்குப் படைத்துணை வரும்படியாக திட வீரகாத்திர பராக்கிரம ஆண்மிக்கையையுடைய அரசர்களுக்கு தூது அனுப்பு முன்னமே, உமக்குப் படைத்துணை வரும்படியாக முன் சாக்கிரதையுடன் தூது அனுப்பிவிட்டு, அப்பால் உமது கருத்தைச் சொல்லி மறுமொழி கேட்டு வரும்படியாகத் திருதராட்டிரனிடத்திற்கு உலூகமாமுனியை தூது அனுப்பும் என்று சொல்லி, முடிமகிபர் அடிபணியச் செலவு பெற்றுக்கொண்டு, அசோதைப் பிராட்டியார் கட்டிய உரலுடன் ஊர்ந்த உத்தமன் பலபத்திரர் சாத்தகி முதலிய பேர்களுடன் துவாரகை போய்ச் சேர்ந்தார்.

இப்பால் தருமராஜனை சபையிலிருந்த அரசர்க ளெல்லோரும் எழுந்து வணங்கி, ஐயா! இந்த உலூகமா முனியை அஸ்தினபுரத்திற்குத் தூது அனுப்பி தங்களுக்கு இராச்சியம் வரும்படியாகிய விதங்களெல்லாம் பேசச்சொல்லி, அதற்குத் திரிதராட்டிரனும் துரியோதனனுஞ் சொல்லியனுப்பும் வார்த்தைகளைக் கேட்கும்போது உங்களுக்குப் பிரதிகூலமாயிருக்குமாகில் உடனே ஓலையும் தூதும் அனுப்பினால், யாங்களியாவரும் சதுரங்க சேனைகளுடன் ஆயுதபாணியாகப் படைத்துணை வருகிறோம். தேவரீருக்கு மாமனாராகிய பாஞ்சால ராஜனும், விராடபூபதியும் உங்களை விட்டு நீங்கி இருக்கமாட்டார்கள்

நாங்கள் அவ்வளவு பாக்கியஞ் செய்யாமற் போனாலும் உங்களுடைய சுகதுக்கமே எங்களுடையதாக எண்ணி இருக்கிறோம். ஆதலால் விடைதாரும் என்று கேட்கவும், தருமராஜன் எழுந்து அவர்களைத் தழுவிக்கொண்டு சந்தோஷத்துடன் உத்தரவு கொடுக்கப் பெற்று, தங்கள் தங்கள் பட்டினம் போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு முரசத்துவஜனவன், தம்பிமார்கள் பாஞ்சாலன் விராடன் முதலிய பேர்களோடு சபையிலினிதாக விருந்து, ஸ்ரீகோபால கிருஷ்ணனுடைய உத்தரவின்படிக்கு இவ்விடத்தில் வந்திருந்துபோன மன்னவர்கள் தவிர, இங்கு வராதிருந்த இறைவர்களுக்கெல்லாம் தங்களுடைய யோக க்ஷேமங்களையும், படைத்துணை வந்து காக்கவேண்டும் என்று எழுதிய திருமுகங்களையுந் தூதர்களோடு அனுப்பிவிட்டு, உலூகமா முனிவரென்னும் பெரியோனை அழைத்து ஆசனத்திலிருக்கச்செய்து, ஐயனே! நீர் அஸ்தினாபுரம்போய் வீஷ்மாச்சாரியார் - த்ரோணாச்சாரியார்-கிருபாச்சாரியார்-அசுவத்தாமர், என் தந்தையாகிய திருதராஷ்டிர மகாராஜன், விதுரமகாராஜ னிவர்களுக்கெல்லாம் எங்களுடைய வந்தனத்தை முதன்மையாகசொல்லி மற்றபேர்களிடத்தில் நீர்போகும் தூதுக்குரிய வார்த்தைகளை பேசிவரக்கடவீர் மெய்மையுமுடைய வேதவேதியனே என்று மொழிந்தான். அதுகாலத்தில், போதுமான தவங்களைச்செய்து பவங்களகற்றி சுபங்களுடன் மனவுறுதிபெற்றிருக்கும் தரணீகனாகிய துருபதேய மகாராஜனனவன், எதிரில் இளஞ் சூரியனைப்போற் பிரகாசித்திருக்கும் வேதபண்டிதனுடைய மலர்ந்த ஒளிமுகத்தைப் பார்த்து, நீலகண்டனுக்கொப்பாகிய உலூகமாமுனியே! நீர் தூதுசென்று பாண்டவர்கள் சிறப்பு பெறும்படியாக அஸ்தினாபுரிக்கு அரசனாகிய திரிதராஷ்டிரமகாராஜன் - வீஷ்மர் - துரோணர்-கிருபர்-அஸ்வத்தாமர்-விதுரர் முதலியவர்களின் அரண்மனைக்குச் சென்று, தனித்தனியாக கண்டு சாஷ்டாங்க நமஸ்காரம் புகன்றார்களென்று நவின்று, நாள்தோறும் பழகி அவர்களிடத்தில் அதிக விசுவாச நேசமாகி வீஷ்மர் முதலிய மற்றவர்களுக்கெல்லாம் ஐவர்மீது அன்பு வரும்படியாக நடந்துகொண்டு, வணங்காமுடியோனைக் கண்டு உமதிஷ்டப்படிக்கு பதின்மூன்று வருடம் காட்டிலும் நாட்டிலும் காலங்கழித்துவந்த காவலர்களுக்கு நீர் முன்பு இராஜசபையில் சொன்னவண்ணம் இனி நாடுகொடுப்பீரா இல்லையாவென்று அவனது நினைப்பின் கருத்தை நிதானித்துணர்ந்து, தாமும் தகுந்தபடி தருமங்களைப் புகன்று, பக்கச்சொல் பதினாயிரமென்பதுபோல அங்குள்ள பெரியோர்களாலும் பேசச்செய்து, கலங்கா மனத்தினராகிய தேவரீர் அவ்வவர்களுடைய காரியபாகங்களை கண்டறிந்துகொண்டு சீக்கிரமிவ்விடம் வந்து சேரவேண்டியதென்று இருகரங்குவித்து யாவரும் காலிற் பணிய அவர்களுக்கெல்லாம் ஆசீர்வதித்து, வாயுவேக மனோவேகமுடைய வண்பரி பூட்டிய விண்தொடு மிரதத்தில் ஆரோகணித்துக்கொண்டு உபலாவியத்தை விட்டுப் புறப்பட்டார்.

பெண்களுடைய கண்களென்னும் வண்டுகள் மொய்க்காத மலர்மாலை அணிந்த உலூகமாமுனிவர் அஸ்தினாபுரிக்குச் செல்லுமுன்னமே, அஸ்தினாபுரியில் துரியோதனன் முதலாகிய தம்பிமார்களும், வீஷ்மர் துரோணர் முதலிய பெரியோர்களும், அசுவத்தாமா-கர்னன் முதலிய படை மன்னர்களும், வீராதிவீரர்களும், சூராதி சூரர்களும், மற்றியாவர்களும் விராடபுரத்தில் அர்ச்சுனன் கையில் அடிபட்டு, மடக்கிய மாடுகளையும், உடுத்திய விருது வஸ்திரங்களையும் அவர்களுக்கு ஒப்பிவைத்துவிட்டு பகலில்வர வெட்கப்பட்டு, எல்லோரும் நித்திரை செய்யும் அர்த்தராத்திரி வேளையில் பச்சையுதிரம் பாயும்படியாகிய புண்கள் நோகவும், பவிசும்பலமும் குன்றிப் போகவும், தேகஞ்சாகவும் தங்கள் தலையைத் தாங்களே தடவிக்கொண்டு தனித்தனியே அஸ்தினபுரத்தைச் சார்ந்து, நித்திரையிற் சோர்ந்து, அன்று இரவு விடிந்தபின்பு யாவருஞ்சென்று சபையில் நிறைந்து, தங்கள் முன்பு வந்தவர்கள் முகங்களை பார்த்து வந்தனை புரிந்து முகம் வியர்த்து, அவற்றுள் கள்ளமிருந்த உருத்தினனாகிய துரியோதனனவன் பெரியோருள்ளம் வருந்த விளம்புவானாகி, பெரியவெள்ளம் நிறைந்த கடலென இரைந்த எள்ளுவிழுந்தால் எடுக்கொணாதிசைந்த அநேக வெள்ளஞ்சேனையும் வீரரும் சூழ விராடபுரம்போய்,வேந்தரைவரும் பாஞ்சாலியுடனே பதுங்கி யிருந்ததும், பேடியாய் அர்ச்சுனன் பேணியே வந்ததும், உருவந்தெரிந்ததும், யுத்தஞ் செய்ததும், பசுக்களைத்

திருப்பிக்கொண்டு போனதும், இவைகளை எல்லாம் திரிதராஷ்டிரனுக்குங் காந்தாரிக்கும் நமஸ்கரித்துச் சொல்ல, அவ்விருவரும் கேட்டு, பெருமூச்சுவிட்டு வெட்கப்பட்டு சபைக்கு வராமலிருந்து, அப்பாலொரு நாள் இராஜ மண்டபத்திற்கு வந்து, உபலாவியத்திலிருக்கும் பாண்டவர்களினுடைய தினச் செய்கைகளை அக்கம் பக்கத்தில் விசாரித்து வரும்படியாகத் தூதரை அனுப்ப, அவர்கள் உடனே சென்று பாண்டவர்கள் வெளிப்பட்டதும், அபிமன்னனுக்கு உத்தரையை சகலவித சம்பிரம மங்களஜயத்துடன் விவாகம் நடத்தியதும், அவ்விடத்தில் வந்திருந்த அரசர்கள் இன்னாரின்னாரென்பதும் அவரவர்கள் அஸ்தினாபுரத்தின்மீது படையெடுக்கக் கருதிய விதமும், தருமராஜன் முதலிய பேர்கள் செய்யும் யோசனையும், துரியோதன மகாராஜன் சகல தேசத்தரசர்களையும் படைத்துணைக்கழைக்கத் தூது அனுப்பு முன்னமே, நம்முடைய தூது அனுப்பவேணுமென்றதும், உலூகமாமுனியை அஸ்தினாபுரத்திற்குத் தூது அனுப்பிவிடச் சொல்லி கிருஷ்ணமூர்த்தி துவாரகைக்குப் போனதும், படைத்துணை வருவதற்கு தேசங்களில் தூதர்களையும் ஓலைகளையும் போக்கி, இங்கே உலூக மகாமுனியைப் பயணப்படுத்தியதும் தெரிந்துகொண்டு வந்து, திரிதராஷ்டிரனுக்கும் துரியோதனனுக்குஞ் சொல்ல, அதைக்கேட்டு ராஜன் கொலுவுக்கு வந்து, துச்சாதனன்-கர்னன்-சகுனி-வீஷ்மர் - துரோணர் - கிருபர் முதலான பெரியவர்களுக்குந் தெரியப்படுத்தவும், அவை யாவருங் கேட்டு ஆலோசனை செய்து, பாண்டவர்கள் படைத்துணை சேர்க்கும்போது நாம் ஆலசியமாயிருக்கலாகாது என்று திரிதராஷ்டிரனுக்குச் சொல்லி, இப்போதே வணங்காமுடி பொறுத்த மன்னவன் துவாரகைக்குப்போய் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய உதவியைப் படைத்துணையாகக் கொள்ளல்வேண்டுமென்றும், (ஆயிரங்கோடி நக்ஷத்திரம் ஒன்றாய்ச் சேர்ந்தாலும் ஓர் சந்திரனாகமாட்டா)வென்றும், (பன்றி பல குட்டி ஈனுவதிலும் யானைக் கன்று ஒன்று கிடைத்தால் பெருமையன்றோ) என்றும், நிச்சயித்துக்கொண்டு தேசதேசமெங்கும் செங்கோலும் ஆக்கினா சக்கரமுஞ் செலுத்தும் அரசர்களுக்குத் தூது அனுப்பிவிட்டு உடலும் உயிரும்போலும், பாலும் நீரும்போலும் ஆத்மகோடிகளதோறும் அமைந்த பகவானிடத்திற்கு, இரத கஜ துரக பதாதிகளுடன் அரவகேதனனை அனுப்பி வைத்தார்கள்.

அப்படியே துரியோதன மகாராஜனும் துவாரகாபுரி வீதியில் வரும்போது அநேகங் கோடி அகண்ட வீதிகளும், அவ்வீதிகளில் நிறைந்த மாடமாளிகைகளும், அவைகளைச் சூழ்ந்த பவழக் கால்களும், பூங்காவனங்களென்னும் முல்லைக் காடுகளும், அக்காடுகளில் நிறைந்த மயில் குயில்பேடுகளும், குளங்களில் நிறைந்த அன்னப் பேடுகளும், மலையில் அமைந்த யானைக்கோடுகளும், சவுக்கடி என்னும் மண்மேடைகளும், சகல வளமும் உற்பவிக்கும் கடைகளும், சங்கினங்கள் தவழு மடைகளும், ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீ கிருஷ்ணனாக இவ்விடத்தில் அவதரித்திருக்குந் தன்மையைக் கேட்டு, ஆதிசேடன் தனது ஆயிரம் பணாமகுடம் விரித்து சிரோரத்தினங்கள் பிரகாசிக்கும்படியாக மண்டலாகிருதியாய் வளைந்து கொண்டதைப்போலும், வானமளாவியிருக்கா நின்ற மதிலும், அதின்மேற் பொருந்திய சிகரகோபுரங்களும், மதிலுறுப்புகளும், க்ஷீராப்திநாதன் நம்மைவிட்டு நீங்கி இங்ஙனம் அவதரித் திருக்கின்றாரென்று உட்கொண்டு பாற்கடலானது வந்து பாதலம் வரையில் ஆழ்ந்து வட்டமாகிய மதிலைச் சூழ்ந்து கருநிறங்கொண்டு இருப்பதையொத்த பலவித புட்பங்கள் நிறைந்த அகழும், அவைகளுள் ஏறுந் துறைக்கும் இறங்குந் துறைக்கும் அமைந்திருக்கும் பளிங்குப் படிகளும், ஆகாயத்தை யளாவிய அநேகங் கொடிகளும், அதின்மேலமைத்த சிகர முடிகளும், அரவணை துயின்ற எங்கள் பெருமான் ஐவர்க்குச் சகாயன்; அவர்களுக்கே படைத்துணையாகுவான் அல்லாமல் உனக்குத் துணையாகமாட்டான்; நீயேன் விருதாவில் வருகின்றாய்; திரும்பிப் போய்விடுமென்று நடனமாடும் பெண் கைகளை நீட்டி ஆடிக் காட்டுந் தன்மையைப்போல் அசைந்தாடுங் கொடிகளின் படபடப்பும் கண்டவனாய் கிருபைக்கு உற்பத்திஸ்தானமாகிய தாமரைக் கண்கள் நிறைந்த மஹாவிஷ்ணு வந்து அவதரித்திருக்கின்ற வடமதுராபுரியான ஸ்ரீ வைகுந்தமா நகரம் போலும் மெய்ஞ்ஞானச் சுடர்விரிந்து அஞ்ஞான இருளவிந்து அழகிய மாணிக்கத் தீபங்கள் மிகுந்து சோதிப்பிரகாசம் கலந்து விளங்கிய வளங்களையுடைய துவாரகாபுரி வீதியில், சித்து அசித்து தெரியாத துரியோதனன்

வருங் காரியங்களைத் தெரிந்துகொண்ட அரி பரந்தாமன், அர்ச்சுனனை வரும்படியாகத் தூது அனுப்பிவிட்டு, வாசற் காவலோரை நோக்கி, புவன பூபதியாகிய துரியோதன ராஜன் வந்தால் எனக்கு அறிவிக்க வேண்டு மென்று எண்ணுமலும், தடை பண்ணுமலும் விட்டுவிடக் கடவீர்களென்று உத்தரவுசெய்து அரண்மனைக்குச் சென்று பவளத்தினுலும், பளிங்கினுலும் ஏற்படுத்திய மண்டபத்தில் மரகத வாசலில் வயிரக் கொலுசுகள், அசைந் தாட பிரளயகாலத்தில் மிதந் தசைந்தாடும் வடபத்திரசாயி போலவும், பாற்கடலில் பரு மணிச்சிகர ஆதிசேடன்மேல் கியான நித் திரைகொள்ளும் பதுமநாபன் போலவும், அன்பருள்ளத் தமர்ந்த அருளாழி வேந் தன் போலவும் சயனித்துக்கொண்டு, சந் திரகலை யொடுக்கிச் சூரியகலை யோடும் படியாகக் காட்டி அதிக நித்திரை என்பது தோன்ற அன்பெல்லாம் அருச்சுனனிடத்தி லூன்ற அழகிய பிரதமைகள் கொலுசு கைக் கொண்டசைக்க ஐயனிருந்த அக்காலத்தில், அரவக்கொடியோன் தன்னுடன் கூடவந்த தளங்களை வெளியில் நிறுத்தித் தான் ஒண்டி யாகவந்துஒருவரையும்கேளாமல்பவளத்தால் மண்டபம் எதிரில்தோன்றும் பளபளப்பின் பிரகாச விந்தையினுல் எதிர்நோக்கினுன். மிகுந்த நித்திரை கொள்வதுபோலிருந்த மாயனை நாமா எழுப்புகிறது? அவனுக எழுந்த பிற்பாடு பேசிப் போகலாமென்று நினைத்தவனுய், திருவடிப் பக்கத்தில் ஒரு உயர்ந்த ஆசனம் இருக்கக்கண்டு, இவன் எம் மாத்திரம் பஞ்சை இவன் காலடிப்புறத்திலே யா நாமிருப்பதென்று கோபங்கொண்டு, இவ் விடத்தில் இவனுக்காக நாம் காத்திருக்கத் தகாது என்று நினைத்து அந்தப் பீடத்தை இழுத்துக் கொண்டுவந்து சுவாமியின் திரு முடிப் பக்கம் போட்டுக்கொண்டு உட்கார்ந் திருக்கும்போது, இவனுடைய உள்ளத்திலி ருக்கும் கள்ளம் அறிந்த கடவுள், இன்னம் வரவில்லையே பற்குனன் என்று எண்ணங் கொண்டு இருக்கையில், திண்ணியனுகிய கிரீடி துவாரகைக்கு நண்ணி இரதம்விட்டு இறங் கிப் பள்ளியறைக்குட்சென்று பகவானைக் கண்டு திருவடிப் புறத்தில் மண்டியிட்டு இருந்து இருகரங்களினுலும் இதழ்விரிந்த செந்தாமரைக் கமலம்போன்ற ஸ்ரீ பாதங் களைத் தடவிப் பிடிக்கும்போது, நித்திரைக் கலைந்து மேற்போர்வையாகிய நவரத்தின பீதாம்பரத்தை நீக்கி, திருக்கண்மலர்ந்து நாற் புறத்தில் பார்வை நோக்கும்போது அர்ச்சுன னிருக்கக்கண்டு, எப்போது வந்தாய் அர்ச்சுனு என்று கேழ்க்கவும், இதுதான் வந்த பயண மென்று சொல்லி சாஷ்டாங்கமாகச் சேவிக்க வும், திக்கு விஜயங்களும் சத்துருகண்டனமும் மனுேபீஷ்டமும் உண்டாகக் கடவதென்று மங்கள ஆசீர்வசனஞ் சொல்லி, மறுபடியும் மாயன் நித்திரை மயக்கம் நீங்காதவர்போல் கண்களை மூடிக்கொண்டு உடனே அருட்பார் வைநிறைந்த அரவிந்தக் கண்கள் மலர்ந்து பற்குனனைப் பார்த்து பக்கத்தில் உட்காரு மென்று பகர்ந்தார்.

அவ்வுரையைச் சிரமேற்கொண்ட காண் டீபனெழுந்து இருகரங்குவித்து, ஓ தேவ தேவா! தேவதா சார்வ பௌமா! சர்வலோக சகாயா! சுவாமிபராக்! எங்கள் அண்ணவா கிய அரவத்துவஜமகாராஜன் வந்திருக்கிறு ரென்று சொல்லவும், திடுக்கிட்டு திக்கென்று எழுந்து எதோ நான் பார்க்க இல்லையே அட டா! இது ஆச்சரியம் என்னை இந்தத் தூக்கம் மோசம்செய்தது நான் எம்மாத்திரம்பஞ்சை; பஞ்சாசதகோடி பூமண்டலாதிபதி இவ்விடத் தில் வந்து காத்துக்கொண் டிருக்கும்படியாக நேரிட்டதே. இது என்ன பாவம், இந்த வாசற் காவலாள்களும் தெரிவிக்காமற் போ னுர்கள் என்று மிகச் சீறி கோபங்கொண்டு எழுந்து நின்று, நந்தியாவர்த்த மாலையணைப் பார்த்து, ஓ சந்திரகுலத் திந்திரனே! நமக்கும் உங்களுக்கும் பேதமில்லாதிருக்க இங்கு வந்த நீர் என்னை எழுப்பிவிடலாகாதா, உம்மை விடவா எனக்கு நித்திரை. நீர் வந்ததே என் பாக்கியம் இந்த மாநகரஞ் செய்ததே யோக்கி யம். ஆகிலும், நான் அறியாமல் நடந்தது அபசாரம். இதைப் பொறுத்தருளவேண்டு மென்று இறுகக் கட்டி ஆலிங்கனஞ் செய் துக்கொண்டு எது அபூருபமா யிருக்கின்றது? நீங்கள் இருவருஞ் சேர்ந்து வந்தது ஆச்சரி யம்! ஆச்சரியம்!! சேனைசயின்ய மேளா வாத் திய சத்திரசாமர முதலிய சின்னங்களெங்கே என்று அவன் மனதில் தன்னை இலேசாக நினைத்து தாமே எடுத்து துரியோதனன் மன தில் படும்படி அதிவினயங்களாகச் சொல்லி என்னை யொருபொருளாக நினைத்து இவ்வ ளவு தூரம் பிரயாசைகொண்டு வந்தது யாது காரணமோ, அதை என்னிமித்தத்தில் காத் திருந்தோமென்று கோபங் கொள்ளாமல்

தெளிவில்லாத யான் தெரிந்துகொள்ளும்படியாகச் சொல்லுங்களென்று கேட்கவும், அப்போது துரியோதனன் அகமகிழ்ந்து முகமலர்ந்து நம்மிடத்தில் வெகுவித உபசாரத்தையும் பயத்தையுங் கொண்டிருக்கிறரென்று மிருந்த இறுமாப்புடனே, ஐயா! நாளை நடக்கப்போகிற பாரத யுத்தத்திற்கு உம்மைப் படைத்துணையாகக் கொண்டுபோக வந்தேன் என்று சொன்னான்.

உடனே அருச்சுனன் வணங்கி, ஆதீன தயாளுவாகிய தெய்வமே! ஏழ்மையாகிய எங்களுக்குப் படைத்துணைவேண்டி இங்கு வந்தேனென்ன; இருவர் மொழிகளையும் ஒரு மொழியாகக் கேட்ட என்னையன் ஆபத்பாந்தவாகிய சங்குசக்கர கையன் சுயோதனனை நோக்கி மெய்யன்பாக விளம்புகிறார்: வையதங்காக்கும் ஐயனே! தூய்யனாகிய தருமராஜனுந் தம்பிமார்களும் வெளிப்பட்டு விராடபுரத்தி லிருக்கக்கேட்டு யான் சென்றபோது, என்னை எதிர்கொண்டு கண்டு வார்த்தைகளாடி இருக்குங் காலையில் இனிமேல் எங்கள் சபதம் நடக்கப்போகின்ற பாரத யுத்தத்திற்கு தேவரீர் படைத்துணையாகவேண்டு மென்று வினவுஞ் சமயத்தில் யாம் தடுத்து, துரியோதன மகாராசனும் படைத்துணை கேட்டாரல்லவா? எனக்கு நீங்களிருவரும் இரண்டு புஜமும், இரண்டு கண்களுமாம். ஆகையால், ஒருவரை நீக்கி ஒருவருக்குப் படைத்துணை வர மாட்டேன். என்னை நீக்கிவிடவேண்டு மென்று மறுத்துச் சொல்லியும் பிடிவாதமாக வாதித்தபோது ஒரு யுத்தி வார்த்தை சொல்லி வந்தேன். அதென்னவென்றால், யான் நித்திரை செய்து எழுந்திருக்கும் காலத்தில், எவர்கள் என் முகத்தில் முன்விழிக்கின்றார்களோ அவர்களுக்கு நான் படைத்துணையாவே னென்று உண்மையாகச் சொல்லி யிருந்தேன். அந்தப்படியே இன்று அர்ச்சுனன் வந்து முந்தி முகத்தில் விழித்தான். ஆகையால், அவர்களுக்கே படைத்துணையன்றி உமக்குப் படைத்துணையாகக் கூடாது. இது என் தப்பிதமல்ல உம்முடைய அஜாக்கிரதை. முன்வந்த நீர் என்னை எழுப்பிவிடாமலும், சேவகரைக் கொண்டு தெரிவிக்காமலும், கைதட்டி கனைத்து ஜாக்கிரதைசெய்யாமலும் வேசாகிய எனக்குப் பிரயுத்தனங் கொடுத்து வீண்பொழுது போக்கிவிட்டீர். ஐயோ! இனி யான் என்ன செய்வேன். ஆனால், என்னைப் படைத்துணை விரும்புவதும் ஏனனம். நானோ யுத்தகளத்தில் ஆயுதம் ஒன்றும் தொடேன். நிராயுதனாக நானொரு புறமும் என் தமையன் முதலிய சகலரும் இன்னொரு புறமுமாக இருப்பார்கள். இது சத்தியவசனம்; உங்களிருவருக்கும் இந்த இரண்டுபக்ஷத்தில் யாவர் வேண்டியது. அருச்சுனா! உங்களெண்ணத்தைச் சொல்லுங்களென்று கேட்க, விஜயன் பணிந்து தேவரீரை மாத்திரம் வேண்டினேனென்று விளம்பவும்; கலகலவென்று நகைத்து, (விளையும் பயிர் முளையிற்றெரியும்) என்பதைக் கேட்டதில்லையோ? கிரீடி! ஆயுதமெடாத என்னைப் படைத்துணையாக அபேட்சித்தையே என்னாலுனக்கு என்ன காரியம் நடக்கும். இந்திரன் மதகம் என்று கேட்கவும் இணையடி வணங்கி சுவாமி! அடியேனுடைய இரதத்தி லிருந்து சாரத்தியஞ் செய்வீராகும். மண்ணுலகிலுள்ள மகாஜனங்களும், விண்ணுலகிலுள்ள வித்தியாதரரும் கருட கின்னர காந்திருவர் யாவரும் களிக்க, அசுர இராக்கதர் அடங்கலும் வென்று ஒரு முகூர்த்தத்தில் சத்துருக்களின் மூலவேர் களைந்து, வஞ்சினமுடித்து, வாழ்விற் சிறப்போம் அஞ்சனமேனியாம் அண்ணலே என்னவும். அப்பால் அமலன் வஞ்சனையுள்ள வணங்கா முடியோனை நோக்கி, தனஞ்சயன் என்னைச் சாரதியாகக் கொண்டபடியால் குதிரைகளை நடாத்தி இருப்பதே யன்றி எவர்கள் பேரிலும் ஆயுதமெடுத்து அடிப்பதில்லை. நான் சொல்லும் மொழியை நம்பு. இதல்லாமல் எங்கள் அண்ணன் தாலகேதன முடைய பலராமர் உமக்குச் சாக்ஷாத் மாமனு ராதையால் அவரையும், எங்கள் யதுவம்சத்தார் பலரையும், உமக்குத் துணைவர இருக்கும் எமது பங்காளிகளாகிய கிருதவீரியனையும், கிருதவன்மனையும் ஒரு அக்ரோணி சேனைகளையும், இன்னமிருக்கும் பலரையும் படைத்துணையாகக் கொண்டுபோம் என்று காலத்திரயம் உணர்ந்த கண்ணன் இன்சொற் கூறி, விடைகொடுக்க செலவு பெற்றுக்கொண்டு, பலபத்திரராகிய மாமனைக் கண்டு வணங்கி, படைத்துணை விரும்பி வந்ததும், பார்த்தன் நேரிட்டதும், ஆயுதம் எடுப்பதில்லை என்று தனக்குக் கிருஷ்ணன் இசைத்ததும் சொல்லி, அப்பால் தாங்களும் தங்கள் தம்பி முதலான சகல சேனையும் எனக்குத் துணையாகப்பெற வாக்களித்தனர். ஆகையால், அவ்வாறே தாங்களும், கிருதவன்மனும், கிருதவீரியனும்,

அளவிறந்த சேனைகளும், யாதவகுமாரரும், படைத்துணை வாருங்களென்று பகர்ந்து செலவு பெற்றுக்கொண்டு அஸ்தினபுரம் வந்து சேர்ந்தான்.

இவ்வண்ணந் தீர்மானித்துவந்த துரியன் அரசர் சபையிற் புகுந்து, வீஷ்மர் முதலானோர்க்குப் படைத்துணைபெற்ற விதத்தை விளம்ப, அவர்கள் கேட்டு மனம் வருந்தி (கடல்பெருகி நிற்கினுங் களைதீர்க்கு நீராகுமா? ஊற்றுச்சலங் கொஞ்சமேனும் உண்ணு நீராகும்) என்கிற பழமொழி கேட்டதில்லையோ? அதுபோல் சேனைப் பெருக்கத்தில் பிரயோசனமில்லை. கண்ணனொருவன் கை வசப்படுவானாகில் அண்ணலே உன்னை யாவர் வெல்லுவார் என்று பேசியிருக்கும்பொழுது, நகுல சகாதேவர்களுக்கு நல்லம்மானாகிய மத்திர தேசாதிபதி பாண்டவர்களுக்குப் படைத்துணை வருகின்றார் என்று தேச தேசங்களுக்குச் சென்ற துரியோதனனுடைய தூதுவர்கள் ஓடிவந்து உரைக்க, அதைக் கேட்டு வீஷ்மர் முதலிய மேலோர்களும் மன்னனை நோக்கி, இந்தச் சல்லியராஜனையாவது வழிமடக்கிப் படைதுணை கொண்டால் பெரிய சகாயமாகும் என்று புத்திவிளம்ப இறைவனும் இசைந்து நன்று நன்றென்று நலம்பெற நடந்து, அஸ்தினபுரிக்கு அடுத்த மேற்புறத்தில் கல்வி யறியாக் கசடர் மனம்போல், கற்றறிவில்லாக்கயவர் இனம்போல் செல்வமில்லார் சிந்தைக் கொப்பாய் சத்திய நன்னெறி வேறினோர் வாழ்வென, பெண்ணலங்கிட்டா பேதையர் தாமென, தானந் தவஞ் செய்தரியார் மன்மென, ஞானமில்லார் நவிலு மொழியென, தெய்வநிந்தனை செய்வோர் கதியென, முள்ளு முரடுங் கல்லுங்கரடும்,புல்லும்பூடும் பொருந்தாவழியும், நிழலிலா வெளியும், நெருப்புறும் பாலையும், மழைத்துளியறியா மாநிலப் புழுதியும் இருக்கும். அவ்வழியில் இறைவனுஞ் சேனையும் வெந்து வெதும்பி விடாய்ப்பட வருவார் என்று அறிந்து, இந்திரனுலகென பந்தல் அமைத்து, பன்னீர் தெளித்து, தென்றலுக்கெதிர் சிங்காசனம் வகுத்தி, மேற்கட்டிவிட்டு, விதம்விதமாக சாலர் தூக்கி, சாரளமமைத்து, வாழை - கமுகுகள் - வான்கரும்புடனே, தாழை இளநீர் சரஞ்சரமாக, பற்பலக் கனிகளும், பாயச விதங்களும், வகைக்கொரு கிழங்கும், வாசனை மலர்களும், பல விதத் தண்ணீர் பன்னீர் வகையும், வாசனைப் பண்டமும், வரிசையா பூசலும், தாதியர் சேடியர் சங்கீதம் பாட, திடு - திமாசு - சித்திர மேடை-பூசாவிதிகள் புரியுஞ்சாலை-போஜனச் சாலை புகழ்பெற அமைத்து, கணக்கர் - காரியஸ்தர்-காவலர் இறைஞ்ச, சுக்குநீர் - வென்னீர் - சுத்தநீர் - பன்னீர் - கச்சாயவர்க்கமும், காசாலட்டும், விதம் விதமாகிய விசிறிகள் அனேகமும், ஆலவட்டமும், அரிவையர் பிடித்த நிலைக்கண்ணாடியும், நிமிர்சாய் மரமும், படுக்கை மெத்தையும் பலவித மலரும், அறுசுவை அன்னமும் அமுதெனச் சமைத்துச் சந்தன புட்பந் தாம்பூல விடயமும் வந்தவரெவர்க்கும் வழங்க அமைத்து, மாமனார் வருகிற வழியிற் பாண்டவர் உபசாரஞ் செய்யும் உயர் தண்ணீர்ப்பந்தல் என்று விளம்பி எழுதியமைத்து, அண்டையில் மறைந்து அரவக்கொடியோன் இருக்கும் வேளையில், யானைமுன் சேனையின் தன்னினம் நெருங்கிய சல்லியராஜனும், வெய்யலில் மிகுந்து விடாய்ப்பட்டு வருந்தி, தண்ணீரென்றே தாக மிகுந்து, காலும் மேலுங் கனலாயெரிந்து, நாபீ வறண்டு நாவு முலர்ந்து விடாய்ப்பட்டு வந்த வேலையிலிருந்த காரியத்தாதருங் கணிகைமாதரும் எதிர்கொண்டோடி இறைஞ்சியழைத்து, ஆலவட்டத்தால் ஆயாசமாற்ற, தண்சுக பரிமள ஸ்நானமுஞ் செய்து, சந்தி பூசைக்கு சந்தனம்-அக்ஷதை-மந்திர ஜெபங்களும் வரிசையாய் நடத்தி, பொன் வாழை இலையிற் போஜனஞ்செய்து, சந்தன புட்பந் தையலர்சாற்றி, தாம்பூலவிடயந் தகுதியாய்க் கொடுத்து, ஊசலிருத்தி ஊசலும்பாடி, சேனையர்க்கெல்லாம் தேவாயமிர்தம்போல் போசனமிடவும், புசித்தவர் மகிழ்ந்து மார்க்காயாசம் மகிழுடன் தீர, சங்கீதம்-வீணை-தாளசுரங்கள் இங்கிதமாக இறைவனுங்கேட்டு, அகமும் முகமும் அன்புமலர்ந்து, இவ்வளவு சம்பிரமம் இன்று யான் கண்டேன், தீயமாபாவிகள் சிந்தைபோல் வறண்டு, பேய்குடியிருக்கும் பேயாக்கானகம் இப்பெருவெளியில் யிவ்விதமாக சம்பிரமம் அமைத்த தருமவானெவர் கொலோ, பொருளெலாம் நிறைந்த புண்ணியரெவர்கொலோ, அவரென்முன் வந்தென் அரசு கேட்டாலும், உயிரினை விரும்பினும் உவந்து யான் கொடுப்பேன் என்று பூரித்துளம் இறுமாந்துரைக்க, இதுவே சமயம் என்று மகிழ்ந்து வணங்காமுடியோன் வரவெதிர்கண்டு, சல்லியனோடி தழுவிக்கொளலும், இருவருந்தழுவி இன்பமாயிருந்து யிப்

பெரும் வெளியில் இதம்பெற வமைந்த ஒப்பில்லாத் தண்ணீர்ப்பந்தலால் யானும், யானையும் சேனையும் யாவரும் பிழைத்தோம். தேவரீர் செய்த சித்திரமியாது சொல்லும்; யான் தருவேன், சொன்னசொல் மறுக்கேன் மன்னனே என்றுமொழிந்த சல்லியனை கரத்தோடு கரமும், கண்ணொடுகண்ணும், சிரத்தொடு சிரமும், சேரவணைத்துப் பாண்டவர் தமக்குப் படைத்துணையாக ஆண்டகைசேரல் அறிந்து யான் இங்கு பந்தல் அமைத்து வழிபார்த்திருந்தேன். எந்தையே படைத்துணை எனக்காகவேண்டும் என்று துரியோதனன் யியம்ப மகிழ்ந்து, நன்றுநன்று நானும் அப்படியே உமதுப்பு நீரும் நானுண்டேனாதலால், இப்பவே படைத்துணைக் கிசைந்தேனாகிலும், பாண்டவரிருக்கும் பதிக்குயானேகி, மீண்டு வருவேன் மெய்யெனச்சொல்லி, விடை பெற்றுக்கொண்டு வேந்தனை விடுத்து சேனையுந் தானுஞ்சென்றனன். இப்பால் தருமராசனுந் தம்பியர் யாவரும் எதிர்கொண்டு வந்து இறைஞ்சிப்பணிந்து சகல உபசாரசம்பிரமம் செய்து சிங்காதனத்திலிருந்து க்ஷேமங்கள் எங்கோன் வினவவும் யாவுமுரைத் திருக்குங் காலையில், இறையாஞ்சல்லியன் அரன் மகன் முதலிய அரசரைநோக்கி, படைத்துணைவந்த பாட்டையில் துரியன் தருமன்பேரால் தண்ணீர்ப்பந்தல் அமைத்துபசாரஞ் சகலர்க்கும் உதவி என்னைப் படைத்துணை யாக்கிக்கொண்டான். மன்னனே வாக்குவழங்கி யான் வந்தனன். என்மேல் மனமகிழ்ந்து உடனே விடைதாருமென்று விளம்ப, சந்திரவமிசக் குலோத்துங்கனாகிய தருமராஜன் சல்லியனைப்பார்த்து, ஓ! ஓ! மாமா அஷ்டலட்சுமிகள் அடுப்பதானாலும், அடுத்த பர்க்கியங்கள் விடுப்பதானாலும், ஆவியை யொருகாற் கொடுப்பதானாலும், அயலார் நம்மைக் கெடுப்பதானாலும் சத்திய வசனந் தப்பலாகாது; சொன்ன சொற்சோர்வு சொல்லலாகாது, அன்னமும் பாலும் அவன் தரப்புசித்து, இன்னமும் ஒருவர்க் கிசையலாகாது, உண்டவீட்டுக் கிரண்டகஞ் செய்தல், உத்தமர் தமக்கு ஒருகாலுந்தகாது, நீர் சொல்லிவந்த நீதி தப்பாதுபோவதே உமக்குப் பெரும்புகழாகும், எங்கட்குச் சத்தியம், என்றைக்குந் துணையாம், அவர்க்கு நீர் படைத்துணை ஆனீரென்று எமக்கொருநாளு மில்லை விசாரம் வார்த்தை கொடுத்த வலிமைதப்பாது பார்த்திபனுக்கு படைத்துணை போம் போம்; எங்கட்கோர்வரம் ஈந்திடவேண்டும் அஃதியாதெனில், அர்ச்சுனன் தன்மேல் கொடுங்கோபம் கொண்டு கொலைசெய்வேனென்று சபதம் புரிந்து தரித்தனன் கர்னன். சாரதித் தொழிலில் சல்லியனும் கிருஷ்ணனும், வல்லவரென்று மானிலந்துதிக்கும் அழகிலா நூல்கள் அறிந்த வல்லவர்கள் இருவரே உவமை இருவரே சமமாம், பார்த்தசாரதியாய் பகவானமைந்தார், வள்ளல் கர்னற்கு வலவனாக உம்மை அமைப்பான் ஒருவேளை துரியன், அப்படிநேர்ந்தால் அர்ச்சுனன்மீது தன்னருள்வைத்து காப்பதுன் கடனாம் என்று தருமன் இயம்பக்கேட்டு, சல்லியன் நகைத்துச் சந்தோஷங் கொண்டு அஷ்டபாலரும் அபயமென்றோட, அசுரர் அக்கண்டத்தவர்களும் வாட, அமரர் கந்திருவர் அன்புகொண்டாட, அஷ்டதிக்கிலு மட்ட கிரியிலும் அட்ட கஜங்கள் அணி நெற்றி தன்னிலும் துட்டகண்டகன் சுவேதவாகனனெனப் பட்டமுங் கொடியும் பதித்த பற்குணற்குத்துணையாம் முரசத்துவஜனே கேளும் சாரதிவளப்புத் தனையன் தனக்குத் தேர்விட மாட்டேன்; தெய்வச்செயலால் நேரிடுமாகில், நீர் சொல்லும் வண்ணம் நடப்பது சத்தியம்; நட்புமென் சொல்லே, சத்திய சௌசத் தவசு நீதியில் உத்தமராகும் உங்களை சூதில் ஜெயித்து வஞ்சித்த சுயோதனன் வாழ்வு, இரவி முன்பனிபோல் எரிந்துபோகும். கேடு செய்தோர்கள் கெட்டுப்போவார், பாடுபட்டோர்கள் பதத்திலிருப்பார்; ஆடவர் திலகனே அரசுஞ் செல்வமும் யீடும்புகழும் பெறுவாய் சொன்னேன். ஆதியிற் சசியை அமரர்கோன் பிரிந்து தீதால்வருந்திச் செல்வமும் பெற்றான், அத்தன்மையைப்போல் அடவியில் நொந்தீர், வித்தக யுத்தத்தில் வெற்றிபெறுவீர் என்று சல்லியன் இதம்பெற வுரைக்கத் தருமனும் சல்லியன் தன் முகம்நோக்கி தேவேந்திரனும் தேவியும்பிரிந்து வருந்திய கதையை வழங்கெனக்கேட்க, மந்திர தேசாதிபதி சொல்லுகின்றார்.

## இந்திரனைப் பிரம்மஹத்தி தோஷந் தீண்டல்

கேளும் பாண்டு புத்திரசிகாமணியே! முப்பத்து முக்கோடி தேவர்களும்-நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகளும்-அஷ்டவசுக்களும்-கின்னரர்-கிம்புருடர்-கருடர்-காந்திருவர் முதலானவர்களோடு சப்தரிஷிகளும் கூடி நிறைந்த சபையில் தேவேந்திரன் அணிமுடி பணியுடன் கற்பகமாலை யிலங்க, கடவுள்மணிப் பிரகாசிக்க, காந்திருவர் தாங்கும் குடைகவிக்க,

அரம்பை-ஊர்வசி-திலோர்த்தமை-மேனகை முதலிய அறுபத்து நாலுகோடி மாதருங் கட்டியங்கூற, கைலாகேந்த அடைக்காய்கொடுக்க, படிக்கம் பிடிக்க, ஆலவட்டம்வீச, சாமரை போட, பீலிக்குஞ்சந் தாங்க, சுருட்டிபெடுக்க, ஆலாத்தி சுழற்ற, மங்களம், லாலி, சங்கீதம்பாட இங்கித பரதநாட்டியம் ஆடக்கொலுக்கொண் டிருக்குங்காலையில், தேவ குருவாகிய பிரகஸ்பதிபகவான் கொலுச் சபைக்கு வரவும், "தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு செயலுமுண்டோ" யென்பதுபோல் ஸ்திரீகளுடைய மையலால் மயங்கி நாட்டியம் பார்த்திருந்த வச்சிராயுதன் வந்த குருவைப் பார்த்து மரியாதை செய்யாமல் மறந்திருக்கவும், சற்றுநேரம் நின்று கோபங்கொண்டு திரும்பிப்போகிற தேவகுரு வானவர், தெய்வலோகத்தை விட்டு மறைந்துபோகவும், "பெரியோர்கள் திருவுள்ளம் பேதித்தாலெப்பொருளும் பேதியாதோ" என்பது தோன்ற, தேவேந்திரனுக்குச் செல்வமும் கல்வியும் சீரும் சிறப்பும் முககாந்தியும் நாளுக்குநாள் குறைந்துபோக விசனமடைந்து, இது ஏதால் விளைந்தது என்று நொந்து, குருவை மரியாதைசெய்யாத குறையென்று உணர்ந்து, இந்திரனுலகும்-சந்திரனுலகும் - இயக்கருலகும்-யக்ஷருலகும் - அளகாபுரியும் - அமராபதியும்-பூமண்டலமும்-நாகமண்டலமும் தேடிக் காணமல் தியங்கி மயங்கி சத்தியலோகத்தைச் சார்ந்து பிரமனை நோக்கிப் பெருமூச்சுவிட்டு, என் குரு சுவாமியார் கோபித்துச் சென்றார் என்று தன்னால் நடந்த தாழ்ச்சியும் சொல்லி, நித்தியசெபம்-ஓமம்-இயாகம் - அவிர்ப்பாகம் இவைகளெல்லாம் நின்று போய்விட்டதால் எங்குந் தேடிப்பார்த்தேன்; என் குருவைக் காணேன் இதற்கொரு வழிசொல்லும் எந்தையேயென்று வணங்கிப் பணிந்தான்.

அப்படிப் பணிந்த வச்சிராயுதனைப் பிரமன் நோக்கி, அப்பா! ஆசானை இப்படி அவமதிக்கலாகாது: உனது செல்வ கர்வத்தினால் உன்னை மறந்திருந்தா யென்றுசொல்லி தன் மனதில் ஒருருக்ஷியை நினைத்து இந்திரனைப் பார்த்து, உனக்கு பிரகஸ்பதிபகவான் கிடைக்கிறவரைக்கும் துவஷ்டாவென்னும் ஒரு பெரியவர் தனது வெகுளி மானசத்தால் பெற்ற பிள்ளையாகிய விஸ்வரூப னென்பவர் இருக்கின்றார். சேற்றில் செந்தாமரை பிறந்தது போல், அர்க்கர் குலத்தில் பிறந்த தோஷமே அல்லது வேதம் நான்கும், சாஸ்திரம் ஆறும், கலைக்ஞான மறுபத்து நாலும், மூப்பத்திரண்டு உபநிடதமும், மற்ற சித்தாந்தங்களும், செபம்-தவம்-ஓமம்-யோகம் இவையெல்லாந்தெரிந்த உத்தமர். அவரை ஆசாரியராககொண்டு சகல காரியங்களையும் நடத்திக் கொள்ளென்று நான்முகன் சொல்ல, அந்த வார்த்தையை நம்பிப் பணிந்து விடைபெற்றுவந்து மூன்று தலையினையுடைய விசுவரூபனைக் கண்டு உபசாரமாகத் தொழுது எனக்கு குருவாக இருக்க வேண்டும் என்று வருந்த (இராக்ஷசன் தேவ குருவாகிறதற்கு எத்தனை காலம் தவம்பண்ணினுலுங் கிட்டாதாகையால், அப்போப்பட்டவனிடத்தில் இந்திரன் வந்து அழைக்கவே, தேடிய பொருள் நாடிவந்ததைப்போல் சந்தோஷித்து) இதோ வந்தேனென்று தெய்வலோகத்திற்குப் போய் சிலநாள் இருந்து, தேவேந்திரன் ஒரு யாகஞ்செய்ய எத்தனித்த போது, குருவாகிய விசுவரூபன் தேவர்கள் பேரினால் கூச்சலிட்டு மந்திரஞ்சொல்லி அக்கினியில் அவிர்ப்பாகம் விடுத்தான். அப்போது தங்கள் இனமாகிய இராக்ஷதருக்கு இந்த அவிர்ப்பாகப் பலன் சேர்ந்து வீரதிடகாத்திர தைரிய பலன்களுண்டாகும்படியாகவும், தேவதைகள் நசித்துப்போகும்படியாகவும் மனதில் நினைத்து வாய் முணமுணப்புடன் மந்திரஞ் சொல்லிய கள்ளக்குறிப்பை சதமகன் அறிந்து கோபங்கொண்டு, (தன்னினந் தன்னைக்காக்கும் வேலி பயிரைக்காக்கும்) என்னும் மொழி தப்பாது செய்தானல்லவா இந்தச் சண்டாளக் குருக்களென்று, தன் கையிலிருக்கும் வச்சிராயுதத்தினால் அவன் தலையை வெட்டினான்.

அப்படி வெட்டினமாத்திரத்தில் அவன் பெற்றிருந்த வரத்தின் பலத்தினால், ஒரு தலை ஊர்க்குருவியாகியும், மற்றொருதலை சிச்சிலிப் பட்சியாகியும், இன்னொருதலை காடையாகியும் பறந்தோடிப்போக விசுவரூபனாகிய குருவைக் கொன்ற பிர்மஹத்திவந்து கோபதியைப் பிடித்து வருத்தவும், அதனால் துன்பம் அடைந்த தேவராஜனைக்கண்டு தேவர்களெல்லாங் கலங்கி வாடி, பூமியிலிராநின்ற மணல்-தண்ணீர்-மரங்கள் - ஸ்திரீகள் இவைகளைப் பார்த்து இந்திரன் சுமந்த தோஷத்தை நீங்கள் ஏத்துக்கொள்ள வேண்டுமென்று இரங்கிச் சொல்லக்கேட்டு, இந்த நான்கும் தேவராஜனால் சுமக்கக்கூடாத ஹத்தியை நாங்கள் எவ்விதந் தாங்குவோ மென்று கேட்க, பூமியில்

ச்வர்மண்ணாகவும், தண்ணீரில் நுரையாகவும், மரங்களில் பிசினாகவும், ஸ்திரீகளில் மாத விடாயாகவும் சுமந்துக்கொள்ள வேண்டிய தென்று தேவர்கள் வேண்ட, நல்லது அப்ப டியே அழியாப் பெரும்பழியாகிய பிரமஹத்தி தோஷத்தை நாங்கள் வாங்கிக் கொண்டால், அதனால் எங்களுக்கு என்னலாபம், எப்படி அந்தப் பழியைத் தீர்த்துக் கொள்ளுவோம் என்று கேட்கும்போது, அமரர்கள் சந்தோ ஷித்து, பூமியில் வெட்டிய பள்ளம் தானாகத் தூர்ந்துபோகவும், சலங்கள் இறைக்க இறைக்க சுரக்கவும், மரங்கள் வெட்டினால் துளிர்க்க வும், ஸ்திரீகள் கருப்பமாகிய பத்துமாதம் வரைக்கும் கணவனைக் கலந்து வாழவுமாக அநுக்கிரகஞ் செய்யவும், அப்படியே அந்தப் பிரமஹத்தி தோஷத்தை நாலுபங்காகப் போக்கி, தேவேந்திரன் இந்திரலோகத்தில் அமரர்களுடன் அரசுபுரிந்து வாழ்ந்திருந் தான். அந்நாளையில், விசுவரூபன் இறந்த செய்தியை துவஷ்டாவாகிய தூயோன் கேள் வியுற்று, "கடந்துளோர்களுங் கடப்பரோ மக் கண்மேற் காதல்" என்னும் வாய்மைக்கு நேராக மனம் வருந்தி, புத்திரசோக துக்கத்தி லாழ்ந்து துன்பம் அடைந்து, நமது குமார னைக் கொன்ற ஆகண்டலனை வென்று பழி தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று ஒரு புத் திரகாமேஷ்டி யாகஞ் செய்து மந்திரலோபம் கிரியாலோபம் இல்லாமல் பூரணாகுதி கொடுக் குங் காலையில், சிவந்த நெருப்புக் கம்பிகள் போன்ற தலைமயிரும், வடவாமுகாக்கினி வந்து குடியிருக்கும் கண்களும், ஏழு கடலின் ஆழமும் இதுதானென்று அளவுகாட்டவந்த வாயும், எட்டுக்கிரியின் உயரத்தையும் பருமத் தையும் தெரிவிக்க வந்த தோள்களும், இறு ண்ட கறுப்பு இதுதான் என்னும் மேனியும், திண்ணிய யானைத் துதிக்கைகள் பல திரண்டு வந்த கால்களும், சூலம்-வாள் முதலிய ஆயு தங்களும் சுமந்து, ஒரு மகா புருஷன் அந்த யாகாக்கினியிலிருந்து அண்டகடாகம் வரைக் கும் உயர்ந்து வளர்ந்தெழுந்து, தன் தந்தைக் குச் சாஷ்டாங்க தண்டஞ் செய்து என்னை ஏற் படுத்திய காரியம் யாதென்று கேட்க, அந்த மைந்தனை துவஷ்டா நோக்கி விருத்திராசுர னென்று பேரிட்டழைத்து, உன் தமயனைக் கொன்ற இந்திரன் முதலிய தேவர்களையும் விழுங்கி, அந்தத் தேவேந்திரப் பட்டத்தை யும் மூவுலகத்தையும் நீயே ஆளுவை என்று ஆசீர்வசனஞ் செய்து அனுப்பிவைக்க, விருத் திராசுரன் தேவராஜனுக்குச் சத்துருவாகிக் கோபங்கொண்டு இரதமேறி வந்ததை இந் திரன் கேட்டு, தேவபடைகளுடன் வெள்ளை யானையின்மேல் ஆரோகணித்து வந்து விருத் திராசுரனோடு சிற்சில அஸ்திர சஸ்திரங்க ளைத் தொடுத்துப் போர் புரியும்போது, அவ் வசுரன் தேவப்படைகளைத் திரணமாக எண்ணி இரதம்விட்டிறங்கி, இந்திரனையும், அவன் ஏறிவந்த வெள்ளை யானையையும், மற் றச் சேனையையும் வாரி விழுங்கித் திரும்பி வரும்போது, அவ்வசுரனுக்குச் சோம்பலும், ஏப்பமும், தும்மலும், இருமலும், கொட்டா வியும் வந்து வாயைத்திறக்க அதனால் வெள் ளையானை, தேவேந்திரன் தேவர்முதல் யாவ ரும் பூமியிலே குப்புற்று விழுந்தார்கள். இப் பால் கக்கின வஸ்துவைக் காறியுமிழ்ந்தவன் போல விருத்திராசுரன் போய்விட்டான். இவர் கள் எல்லோருஞ் சாகாமல் சற்றுநேரம் ஆயா சந் தீர்ந்து எழுந்து பார்த்தார்கள். அது எப்படி இருந்ததென்றால், குமாரசுவாமியும் தாருகாசுரனும் யுத்தஞ் செய்கையில், கைலா யத்தி லிருந்து வந்த இரண்டாயிரம் தேவ கணங்களையும், பூதகணங்களையும் தாருகாசுரன் வாரி வாரி விழுங்க, அதைச் சண்முகர் கண்டு நகைத்து, வயிரக்கணையை விடுத்து அவன் வயிற்றைக் கிழிக்க, அந்த வயிற்றிலிருந்து சாகாமல் அக்கணங்கள் குதித்து வந்தது போல் இருந்தது. அப்பால் இந்திரன் முதல் யாவரும் களைதெளிந்து, இந்த அசுரனை வெல்ல நம்மால் ஆகாது என்று மேருமலைச் சாரலிற் போய்ச் சேர்ந்து ஏக்கமுற்று, இனி மேல் நமது தேவதத்துவமும் இந்திரதத்து வமும் நடவாது என்று ஒடுங்கி யிருக்குங் காலத்தில், விருத்திராசுரன் தனது புஜ பல பராக்கிரமத்தினால் மூன்று லோகமும் தானே அரசுபுரிந்து வந்தான். அதைக்கண்டு மகா ரிஷீஸ்வரர்களெல்லாம் விருத்திராசுரனிடத் திற்குப் போய் அவனை ஆசீர்வதிக்கவும், அவன் எழுந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து ஆசனங்கொடுக்கவும், அதன்மேலவர்க ளிருந்து ஓ! துவஷ்டாவுடைய புத்திர காமே ஷ்டி யாகத்திலுதித்த சற்புத்திர தீரனே! ஓ! விருத்திராசுரனே! இன்று முதல் இந்திரன் முதலிய தேவர்கள்பேரில் யுத்தஞ் செய்யாது இருப்பையாகில் உனக்கு மிகுந்த பலமும் சகல நலமுங் கைகூடும். யுத்தஞ்செய்ய நினைத்தால் அபலமும் சபலமும் உண்டாய் மற்ற யாவுங் குறைந்து போவதும் அன்றி, நீயும் அழிந்து

போகுங் காலமும் நேரிடும். அந்த உளவறிந்து சொல்ல வந்தோமென்று உணர்த்தவுங் கேட்டு பயந்து, உடனே ரிஷிகளை வணங்கி, இனி இந்திரன்பேரில் சண்டைக்கு வருவதில்லை. அவர்களுடைய இராச்சியத்தை அவர்களே ஆளும்படியாகச் செலவு கொடுத்தேன். நான் கொடுத்த வரம் தப்புவதில்லை. தேவதைகளின் திவ்வியாஸ்திர முதலிய ஆயுதங்களினால் நான் சாகாமலிருக்கும்படியாகிய வரம் தாங்கள் தயவு செய்யவேண்டும் என்று கேட்க, அப்படியே வரங்கொடுத்து மகாரிஷிகள் விடைபெற்றுக் கொண்டுபோய் இந்திரனை அழைத்து வந்து எப்போதும்போல இந்திரலோகத்தில் இருத்திச் சுகம் பெற வாழ்த்தினார்கள்.

இப்படி சிலநாள் சென்ற பிற்பாடு, நாளுக்குநாள் விருத்திராசுரன் பலப்பட்டு மகாரிஷிகளோடு சொல்லிய வார்த்தையை மறந்து மாறுபட்டு, சகல புவனமும் தானே கைக்கொண்டு ஆண்டு, யாவர்களையும் மதிக்காமல் எல்லோரையும் வருத்தி, இந்திரன் மேலும் பகைத்து வருவதைக்கண்டு, இந்திரன் மனம்பொறுமல் பிர்மாவினிடத்திற் சென்று விசுவரூபனை குருவாக்கிக்கொண்டது முதல் இதுவரையிலும் நடந்த சங்கதிகளையும் இப்போது தான்படும் சங்கடங்களையும் விளம்பி வணங்கிச் சதுமுகனைவர் இந்திரனை அழைத்துக்கொண்டு பாற்கடற் சயனராகிய பரந்தாமனிடத்திற்குப் போய் இருவரும் பணிந்து தங்கள் குறைகளைச் சொல்ல, அம்மகாவிஷ்ணு இந்திரனைப் பார்த்து, ஓ சுரர்பதி! சகல பலங்களையும் சகல வரங்களையும் உடைய விருத்திரனைக் கொல்லுவதற்கு உன் கையிலிருக்கும் வச்சிராயுதம் அதிக பழைசானபடியால் சத்துருக்களின் பிராணனை வாங்கமாட்டாது. மற்ற எந்த ஆயுதத்திலும் அவன் மாளான். இனி வேறொரு வச்சிரம் வேண்டும் என்று விளம்பி, அப்புதிதாகிய வச்சிராயுதம் வேண்டியதற்கு ஒரு யுக்தி சொல்லுகிறோம் கேளும். இந்திரனே! முன்னே யாம் பாற்கடல் கடையும்போது, அமரர் அசுரர் யாவரும் கொண்டுவந்த ஆயுதக் கூட்டங்களைக் கண்டு கலகம் விளையும் என்று ததீசி மகாமுனிவர் வசத்தில் ஒப்பிவைத்து வரும்படியாகச் சொன்னோம்; அப்படியே வைத்து வந்து அமுதங் கடைந்தார்கள். அசுரர்களுக்கு அமுதம் அகப்படாமையால் வருந்தி கோபங்கொண்டு ஆயுதங்களை மறந்துபோய் விட்டார்கள். தேவர்கள் அமுதம்புசித்த சந்தோஷத்தால் அவர்களும் மறந்துபோய் விட்டார்கள். அந்த ஆயுதங்களையெல்லாம் வெகுகாலம் வைத்துக் காப்பாற்றி ததீசிமகாமுனிவரானவர் ஒவ்வொன்றாய் எடுத்து விழுங்கிவிட்டார். அவைகளெல்லாம் அவருடைய முதுகெலும்பைப்பற்றித் திரண்டு இருக்கின்றன. அந்த முனிவரானவர் "அன்பிலாரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்-என்பும் உரியர் பிறர்க்கு" என்பதுபோல லோகோபகாரி ஆகையால், அவரிடத்தில் நீர் போய்க்கேட்டால் கொடுப்பார். அந்த எலும்பை வாங்கி வச்சிராயுதம் பண்ணிக்கொண்டு, விருத்திராசுரன் சமுத்திரக்கரையோரத்தில்வரும் இரண்ணிய வேளையில் எதிர்த்து, என்னை நினைத்து ஒரு திரணமேனும் விடுப்பாயாகில், அவன் இறப்பானென்று மால்சொல்லக் கேட்டு அடிவணங்கிப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு, ததீசி மகாமுனிவரைக்கண்டு வணங்கி எங்களை யாண்டு இரட்சிக்க வேண்டுமென்று தன் குறையைச்சொல்லி இருகரத்தையும் நீட்டிக்கொண்டு இரக்க, அந்த மகாமுனிவர் தேவேந்திரனை நோக்கிச் சொல்லுவார். "நாய் நமதென நரிநமதெனப் பிதா-தாய் நமதென மனமதிக்கும் பெற்றிபோல்-ஆய நமதெனப்படும் யாக் என்றுசொல்லி, நிலையில்லாத இந்த யாக்கை கையாரதே" பலருக்கும் உபயோகப்படும்பொருட்டு அழிவதே உத்தமம் என்று யோகத்திலிருந்து ஆன்மாவைப் பிரிக்கவும், உடனே தேவதுந்துமி முழக்கத்துடன் சுயம்பிரகாசச்சோதி வானுலகத்திற் கலக்கவும், இந்திரன் அந்த மகாமுனியினுடைய முதுகெலும்பை எடுத்து விசுவப் பிரமனிடத்திற் கொடுக்க, அதை வச்சிராயுதமாகச்செய்து ஆசீர்வதித்து தனது கரத்தில் அளிக்கவும் வாங்கி, வைகுந்தநாதன் சொல்லியகாலம் வருகிறவரையில் காத்திருக்கவும், ஒரு நாள் விருத்திராசுரன் சமுத்திரக் கரையோரத்தில் வரக்கண்டு, அமரர்களுடன் வெள்ளைவாரண மேறிவந்து எதிர்த்து யுத்தஞ் செய்து புதிதாகிய வச்சிராயுதத்தை பிரயோகஞ்செய்ய, அதற்கு விருத்திரன் ஈடுபடாமல் இளைத்துஓடி மிகவும்வாடி ஆழியில் மூழ்கி மறைந்தான். வச்சிராயுதமுங்கூடவே தொடர்ந்து தேடிக்காணமல் நாணித்தியங்கவும், அதைக்கண்டு தேவர்கோன் மனம்வாடி மண் பொதுத் தந்தையிடத்திற்சென்று வாரிதியில்

அசுரன் மறைந்துபோனதைச் சொல்ல, அதை மலரோன் கேட்டு வாசுவனை நோக்கி, ஸ்ரீமந் நாராயண மந்திரத்தோடு ஏன் பிரயோகிக்க வில்லை என்று கோபித்து, நல்லது மூக்குணமும் முத்தொழிலும் முப்பொருளுமாகிய மூலகாரணனென்னும் முதற்பொருளுக்கு அடிமையாகிய அகஸ்தியரைக் கண்டு வணங்கினால் உமது காரியங்களெல்லாம் அநுகூல மாகுமென்று வெண்டாமரையோன் விளம்பக் கேட்டு, அக்கணமே அகஸ்தியரிடத்திற்கு வந்து வணங்கி அடிபணிந்து நிற்க, அவர் ஆசீர்வதித்து, ஓ தேவேந்திர மகாராஜனே! நீர் இவ்வளவு தூரம் வந்த காரணம் யாது? என்று குருமுனி கேட்க, வேலாவலயத்தில் விருத்திராசுரன் மறைந்து போனான். தேவர்கள் முதலியயாவரும் யானும் மெத்த வருத்த முறுகின்றோம். அந்த அசுரனைக் காண்பிக்க வேண்டும் கருணைக்கடலே என்று தொழவும், நன்றென்று இசைந்து கயிலையங்கிரியில் எழுந்தருளிய கடவுளையும் அவரால் விளைந்த திரிபுர தகனாக்கினி, மன்மத தகனாக்கினி, வடவாமுகாக்கினி இவைகளை மனதில் நிறுத்தி, கண்ணுதல் அருளினால் கடலைக் கடுகளவாகக் கரத்தினில் ஏந்தி உட்கொண்டருளினார். அதுகாலத்தில் சமுத்திரம் நீர் வரண்டு அதனடுவிலுள்ள ஓர் மலைச்சிகரத்தில் விருத்திராசுர னிருந்து கண்களை மூடிக்கொண்டு யோகத்தி லிருக்கக் கண்ட வச்சிராயுதம் அவனை மாய்த்துவிட, தேவர்கள் பாரிஜாத மலர்மாரிதூற்ற மாயவனை வாழ்த்தி வந்த தேவேந்திரனை விண்ணுலகுள்ளோர் மண்ணுலகுள்ளோர் எல்லாம் வாழ்த்தித் துதிக்க, அக்காலத்தில் அவனை பிர்மஹத்தி தோஷம் பிடித்து, அழகு முதலிய செல்வமும் இழந்து, நிதியையும் பதியையும் நீங்கி, தபோ பலங்களும் வரப்பிரசாதங்களுங் குறைந்து, மனத்தில் பயங்கரமும் அச்சமும் உண்டாக ரூபீகரித்துவரும் பிர்மஹத்தியை இந்திரன் நோக்கமாட்டாமல் ஓட்டமெடுத்து ஈசானிய திசையிலிருக்கும் நிர்மாணிட மென்னும் மலையிற் சேர்ந்து மிகுந்த துக்கத்துடன் அவனிருக்க, தெய்வலோகத்திற்கு அரசன் இல்லாமல் ரிஷிகள் முதலிய தேவர்கள் யாவரும் வருந்தி இந்திரனைக் கண்டு, எங்களைவிட்டுப் பிரிந்திருக்க எப்படி மனங்கொண்டீர். அரசில்லா நாடு காடென்பது அறிந்ததில்லையா? ஐயனே! வாரும் அரசு புரியும். அடியேங்களைக் காருமென்று யாவரும் அழைக்க அந்த வார்த்தைக்கு அவன் உத்தரஞ் சொல்லாமல் ஊமைபோலிருந்து, பிர்மஹத்தியைக் கண்டு மிகவும் நடுக்கமுற்றிருக்க, இந்திரனை அழைக்கவந்த ரிஷிகள் முதல் தேவர்களெல்லோரும் ஏதேது இனி நமக்கு இவர் உதவமாட்டார் என்று ஆலோசித்து, ஆவைப் பிரிந்த கன்றுபோலவும், தாயைப் பிரிந்த சேயைப் போலவும், மழையைப் பிரிந்த பயிரைப் போலவும், உயிரைப் பிரிந்த உடலைப்போலவும் துக்க மடைந்து, பட்டமில்லாத அரசு பாழென் றுணர்ந்து, கேளும் தருமபூபதியே! உங்கள் பாட்டனாராகிய ஆயு மகாராஜாவின் புத்திரன் நகுஷ மகாராஜன், நூறு அசுவமேதயாகஞ் செய்து இந்திர பட்டத்துக்கு எதிர் பார்த்திருந்தார். அவரிடத்திற்கு தேவர்கள் முதலிய பேர்களெல்லோரும் வந்து உபசரித்து தேவராஜனாக இருக்கவேண்டுமென்றும், எங்களுடைய தபோபலன்களை எல்லாம் உமக்குக் கொடுத்தோ மென்றும் வாக்கு தத்தஞ்செய்து பிரார்த்தித்து அழைத்துவந்து, சகல நலமும் செல்வமும் அழகும் உண்டாக சிங்காதனத்தில் ஏற்றி, தேவக்கிரீட பட்டாபிஷேகமும் செய்து வைக்க, முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும், அமரர்-சித்தர் - அசுரர் - தைத்தியர் - கருடர்-கின்னரர் - நிருதர் - கிம்புருடர் - காந்திருவர்-இயக்கர்-விஞ்சையர்-பூதர்-பைசாசர்-அந்தரர் உரகர்-முனிவர் - ஆகாய வாசிகள்-போக பூமியோர் இவர்களெல்லோரும் வணங்க, அரம்பாஸ்திரீகள் யாவரும் பரத நாட்டியஞ்செய்ய, கற்பக பூங்காவனத்தி லுறைந்து நகுஷன் அரசு செலுத்திவரும் நாளையில், பழைய தேவேந்திரனைப் பிரிந்திருக்கும் இந்திராணி தன்னாயகன் செல்வமிழந்த தன்மையை நோக்கி மனஸ்தாபம் அடைந்து, அநேகம் ஸ்திரீ கூட்டங்களுடன் வனங்களில் உலாவி மயில்போல வருஞ் சாயலை நகுஷன் கண்டு, "மோகத்துக்கோர் முடிவுமுண்டாங் கொலோ" என்பது தோன்ற, ராவணன் அழியுங் காலம் சீதையை நாடினதுபோல அவள்மீது ஆசைகொண்டு, சந்திரனைக் கண்ட பேர்கள் தாரகைகளை நோக்காத தன்மைபோல், மற்ற ஸ்திரீகளின்பேரி லிருக்கும் ஆசையை விடுத்து தேவதூதரை நோக்கி, இந்திராணியை அழைத்து வாருங்களென்று அனுப்பினான். இவர்கள் போய் புலோமிசையைப் பார்த்து வணங்கி, இந்திரன் அழைத்துவரச்

சொன்னாரென்று சொல்லக்கேட்டு தேவகுருவினிடத்திற்சென்று திருவடிமலரைப்பணிந்து, ஐயா! என்னாயகன் உயிருடனிருக்க இப்போது வந்த இந்திரன் என்னை விரும்பி அழைக்கின்றதாக இவர்கள் சொல்லுகின்றார்களே இதற்கெப்படியென்று கண்ணீருதிர்க்கவும், அதுகண்ட குருவானவர் உன் பதிவிரதாதனத்திற்கு பழுதுவராமல் காக்கிறேன் நீர் கண்கலக்கப் படவேண்டாம் அம்மா என்று தைரியஞ்சொல்லி, தூதரை நோக்கி அப்பா நகுஷமகாராஜன் மிகவும் புத்திசாலி ஆகையால், இந்திராணியை அழைப்பது ராஜநீதியல்லவென்று நான் சொன்னதாகச் சொல்லுங்களென்று அனுப்பவும், அதைக்கேட்ட நகுஷன் மெத்தக் கோபங்கொண்டு கூடாது கைப்பிடியாகக் கொண்டுவர வேண்டியது என்று தூதரை மீண்டுமனுப்பவும், இந்திராணி பார்த்து முறடனோடு எதிர்க்கலாகாது இவ் வசனத்தினால் ஜெயிப்பதே யுத்தியானதால், ஐயா! எனக்கு விடைகொடும் நான்போய் வார்த்தைபேசி நகுஷனை மகிழச்செய்து வருகிறேன் என்று பிரகஸ்பதியினிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு, அரம்பா ஸ்திரீகளுடன் கூடி, அரண்மனையை நாடி வேங்கைப்புலிக்கு எதிரிற் செல்லும் பெண் மானைப்போல வெருண்டு மருண்டு நகுஷன் சபைக்குப் போகும்போது, ஆயுவின் குமாரன் இந்திராணியை என்றைக்குக் காண்பேனென்று இரவும் பகலும் ஏக்கங்கொண்டிருந்தவனுக்கு அவ்விந்திராணி வெளிப்படலும், கல்லாதான் கற்ற கல்விபோலும், காணாதான் கண்ட செல்வம்போலும் கண்டு, சகல சாம்பிராச்சியம் பெற்றவனைப் போலாகிக் குறுநகைகொண்டு தேவர்கள் முகத்தைப்பார்க்க, அமரர்களெல்லாம் சுவாமி பராக்! தங்களிஷ்டப்படிக்கி சசிதேவி வந்துவிட்டாளென்று சாற்றவும், இந்திராணி அவன் சமீபத்தில் வந்து நின்று புதிய இந்திரனைக் கண்டு, என்னாயகன் உயிருடனிருக்க என்னை அழைப்பது தருமமா? நீர் பெருமையடைந்த தேவபட்டம் பெற்றும் சிறுமையிற் சிந்தை செலுத்தப்போகுமா? இன்னமும் நன்னீதியுடன் நடப்பீராகில் அளவிறந்த கீர்த்தியைப் பெறுவீர்? தகாதபோகத்தை விரும்பிச் சுகாதியோகத்தை அநேகம்பேர் இழந்து தாழ்ந்து அழிந்துபோன தன்மையைக் கேட்டறியீரா? நற்குலத்தில் பிறந்தும் நற்றவங்களிழைத்தும் அற்பத்திற்கு ஆசைபட்டு ஆயுள் மாய்ப்பரோ? ஆயுவின் தவத்திலுதித்த அரசே கேளும்! மலைகளின் சிறகை யரிந்த வச்சிரபாணியானவர், விருத்திராசுர னென்னும் விறலோனைக் கொன்று பிர்மஹத்தி தோஷம் பிடித்து அதைத் தவிர்த்துக்கொள்ளத் தவம் பண்ணப் போயிருக்கிறார். அந்த இந்திரன் பழி தீர்த்துக்கொண்டு இவ்விடத்திற்கு வராதிருப்பாராகில் எங்களை எல்லாங் காத்து இரக்ஷிக்குங் கடமை உமக்கேயல்லது மற்றியாருக்கு உண்டாயிருக்கும். அப்படியிருக்கஉமக்கு நான் புறம்பல்லவே? என்னை இந்தச் சபையில் அழைத்தது விபகாரமா? தருமமா என்று இந்திராணி சொல்லிய இனிய நயவசனங்களைக் கேட்டு நகுஷன் உடம்பு அடங்கா மகிட்சிகொண்டு, ஓ பொன்னுலகிற் சிறந்த புலோமிசையே! பழைய இந்திரன் பிழைத்து வருவதும் வராமற்போவதுந் தெரிந்துக் கொள்ள வேண்டுமென்று உம்முடைய உள்ளம் விரும்பி இருப்பதினால் அதுகளை விசாரித்துக்கொண்டு என்பேரில் கருணை கூர்ந்து என்னைக்கி வரும்படியாக உத்தரவு செய்கின்றீரோ, அன்றைக்கு உம்முடன் சல்லாபமாய்க் கூடவருகிறேன் என்று சகல உபசாரஞ்சொல்லி மரியாதைசெய்து செலவு கொடுக்க, இந்திராணி அச்செலவு பெற்றுக்கொண்டு இராகுவினால் விடுபட்ட சந்திரனைப்போல் சபையை விட்டுத் திரும்பி, அரம்பா ஸ்திரீகளின் கூட்டத்துடன் பிரகஸ்பதி பகவானிடத்தில் வந்து வணங்கி, தான் போனதும் வசனித்ததும் அவன் சந்தோஷப்பட்டதுஞ்சொல்லி, குருவினுடைய ஆசீர்வசனமும் பெற்று, தன் புருஷனை நீங்கியிருக்கும் ஆறாத் துயரத்தினால் நிடதகிரிக்குப்போய் தேவேந்திரனைக் கண்டு தீர்க்க தெண்டஞ் செய்து, தேவர் கைக்கொண்ட பாக்கியமெல்லாம் நகுஷன் கைக்கொண்டு ஆளுகின்றானென்று அவனால் தனக்குவந்த விபத்துக்களெல்லாந் தெரியப்படுத்தி விசனப்படும்போது, இந்திரன் இந்திராணியை நோக்கி, செல்வமும் சிறப்பையும் அனுபவிக்கவொட்டாமல் உன்னையும் என்னையும் பிரித்துவிட்டது பிர்மஹத்தி தோஷமே அன்றி வேறல்ல, அந்தத் தோஷம் ஏதோ என்னைப் பிரியாதிருக்கின்றது. இன்னங் கொஞ்ச நாள் மனம் பொறுப்பையாகில் நான் தெய்வலோகம் வந்து சேருகின்றேன் நீ போவென்று சசிதேவியை அனுப்பிவிட்டு, ஓ திருத்துழாய் தரித்திருக்குந் தீனதயாளுவே! என் குறையகற்றுங் கோவே! என் தீவினை யகற்றுந் தெய்வமே! கோவிந்தா! கோவிந்தா என்று

கூவிக்கொண்டு வைகுந்தமா நகரஞ் சேர்ந்து,
அனந்தசயனனாகிய ஆதிபகவானுடைய அடி
யிணை மலரைத் தொழுது, உலக அபகாரி
யாகிய விருத்திரனைக்கொன்று பூலோகத்திற்
கும் பொன்னுலகத்திற்கும் உபகாரஞ் செய்த
உமது அடிமையாகிய எனக்கு இந்தப் பிர்ம
ஹத்தி நீங்காதிருக்கவும், என் செல்வம் என்
பத்தினி முதலிய அரசாட்சியாவும் இன்னொ
ருவன் கைக்கொள்ளவும், நான் ஒன்றியாய்
தரித்திரம் அடைந்து திரியவும்ஆயதே; தேவ
ரீர் கடாக்ஷம் இப்படி யிருந்தால் நான் செய்வ
தென்னவென்று நின்று சிந்தித்து வந்திக்
குங்காலையில், தேவதேவன் திருவாய்மலர்ந்து,
ஓ மேகவாகனா! உன்னை வருத்தும் பிர்ம
ஹத்தி தோஷம் நீங்குவதற்கு இந்திராணி
சமேதமாக இருந்து அயமேதமென்னும் ஒரு
யாகஞ் செய்வையாகில், தோஷமும் நீங்கி
வாழ்வும் பெறுவாய் என்று மகாவிஷ்ணு
அருள்செய்ய, அப்படியே சில தேவர்களுக்
கும் ரிஷிகளுக்குந் தெரிவித்து இமோத்பர்வ
தச் சாரலில் இந்திராணியுடனிருந்து அந்த
யாகத்தை முடிக்க, அதனாலே பாபரகிதனாகி
பயந்தீர்ந்து சகல தேவர்களுடனேயும் தெய்
வலோகம் போய்ச் சேர்ந்தும், முன்போல
சம்பத்தும் அழகும் பலமும் இந்திரபதமும்
கூடிவராமல் பிர்மஹத்தி பிடித்தமுகமென்று
சொல்லும்படியா யிருப்பதினால், நகுஷனு
டைய சுந்தரத்தன்மைக்கு இவன் ஈடுபடாமல்
மன விசாரம் பிடித்து, வெகு துக்கத்துடன்
ஒருவருக்குந் தெரியாமல் ஈசானதிசையி லிருக்
கும் ஒரு தடாகத்தில் நிறைந்த தாமரை
நாளத்தினுட் புகுந்து தபசுசெய்துகொண்
டிருந்தான். அப்படி இருக்குநாளில் தேவேந்
திரன் இறந்துபோனானென்றும், இந்திராணி
முதலிய போகங்களையும் துறந்துபோனா
னென்றும், வெகுநாளாய்ச் சுமந்த ஸ்தூல
தேகத்தை மறந்துபோனானென்றும், கண்க
ளிற் காணாமல் பறந்துபோனானென்றும், இப்
படி பற்பல விதங்களா யாரும் பேசிக்கொள்
ளும்வகையை இந்திராணிதேவிகேட்டு மனந்
திடுக்கிட்டு, வாயுலர்ந்து விசனமென்னும்
வாரிதியிலாழ்ந்தி, கலைவாணியின் இணையடி
போற்றி விரதம் இழைக்க, அந்தத்தேவி ஒரு
ஸ்திரீரூபமாய் எதிரில் நின்று, சுரேந்திரன்
மனைவியே கேளாய்! உன்னாயகன் பிர்மஹத்தி
யின் பீடிதத்தினால், பெருமையும் புகழும் பிர
தாபமுங் குறைந்து, எவர்களுக்குந் தெரியாத
ஈசானமூலையில் இருக்கும் ஒரு பொய்கையுள்
நிறைந்த தாமரை நாளமத்தியில் அணுரூப
மாய்த் தவசு செய்கிறான். நீ படும் விசனத்தி
னால் இரக்கமுற்று வந்துசொன்னேன். என்
பின் வருவையாகில் இப்போதே காண்பிப்
பேன் என்றுரைத்த வாக்கியங் கேட்டு மனங்
குளிர்ந்து, அம்மணி! இதோ வருகிறேனென்
றுத் தொடரவும் அழைத்துக்கொண்டு போய்
அந்தப் பொய்கையில் மலர்ந்திருக்கும் தாம
ரைத் தண்டின் மத்தியில் உண்டாகிய சிறிய
துவாரத்தில் புகைரூபமாகப் புகுந்து போய்த்
தேவேந்திரனைக் காட்டி அந்தத் தேவி மறை
ந்துபோகவும், இந்திராணி இந்திரனுடைய
கால்மேல் விழுந்து கதறியழுது விசாரப்பட
வும், ஆச்சரியமுற்று நானிருந்த இந்த ஸ்தா
னத்தை நீ எப்படி யறிந்துவந்தாய் உனக்கு
எவர்கள் தெரிவித்தவர்கள் என்று இந்திரன்
வினவ, தேவரீர் இறந்துபோனதாகவும், துற
ந்துபோனதாகவும் வெகு ஜனங்கள் பற்பல
வாறாகப் பேசிக்கொண் டிருப்பதைக் கேட்டு
மனந்தாளாமல் கலைவாணியைக்கருதி விரதம்
இழைக்க, அந்த அம்மன் அழைத்துவந்து
காட்டி எனது துன்பத்தை நீக்கிச் சென்றாள்.
நான் இன்புற்று இவ்விடம் வந்தேனென
வும், அதைக்கேட்டு மகிழ்ந்த நாயகனை மீண்
டும் பார்த்து, இந்திர பட்டாபிஷேகத்தை
விட்டு ஏன் வந்துவிட்டீர் என்று சசிதேவி
கேட்க, சசிநாதன் சொல்லுகின்றான்.

வாராய் பெண்ணே! நாமிருவருங் கூடிச்
செய்த அயமேதயாகத்தினால் விருத்திராசுர
னைக் கொன்ற பிர்மஹத்தி தோஷம் நீங்கிய
தென்று பேர்மாத்திரமே யொழிய, மயக்க
மும் தியக்கமும் மனதுறுநடுக்கமும் என்னை
விட்டுநீங்கவில்லை. அரசும்-வாழ்வும்-அழகும்-
பலமும்-ரிஷிகளுந் தேவர்களுங் கொடுத்த
தபோபலமும் நகுஷனைச் சேர்ந்து அரசுபுரி
கின்றான். அவைகள் யாவும் என்னிடத்திற்கு
வருமாகில் அப்போது நான் தேவேந்திரனாகு
வேன்; இல்லாவிட்டால் என்கதி இவ்வளவு
தான் என்று சொல்ல, அவைகள் தேவரீருக்
குக் கிடைக்கும்படியாகிய உபாயஞ் சொல்லும்;
நான் அப்படியே முடிக்கிறேனென்று இந்
திராணி விளம்பக்கேட்டு, நல்லது பெண்ணாய
கமே! உன்பேரில் இச்சைகொண்டு தூது
யனுப்பினானென்று முன்சொல்லி யிருக்கின்
றையே அதை யனுசரித்து, சப்தரிஷிகள்
தாங்கும் இந்திரவிமானப் பல்லக்கில் நகு
ஷன் ஏறிவரப் பண்ணினால் அவனுடைய

தபோபலமெல்லாங் குறையும் என்னிடத்தில் வந்து நிறையும். இது உன்னால் வரவேண்டிய செல்வமென்று உறைத்து விடைகொடுத்து எப்போதும்போற் றவஞ்செய்திருந்தான். இப்பால் இந்திராணி செலவு பெற்றுகொண்டு தெய்வலோகம் போய்ச் சேர்ந்து, தானே வெளுவிற் றூதயனுப்பி இந்திராணி உமக்குக் கியாபகஞ் செய்யச்சொன்னாளென்று சொல்லவே, நான் பிழைத்தேன் பிழைத்தேன் எனச் சந்தோஷித்து மறவாமல் இவ்வளவு தயவை வைத்திருந்தது எனது பாக்கியமே, இதுவும் எனது நற்காலமே என்று மகிழ்ந்த செய்தியைத் தெரிந்துக்கொண்ட நூல் இடைபுகாத ஸ்தனத்தையுடைய இந்திராணி நகுஷன் எதிரிற்போய் நின்று, இன்பமொழியும், நல்லொழுக்கமும், நன்னீதியும், நற்கீர்த்தியும், பரிசுத்த வாய்மையும், அழகும் உடையவர் தங்களைப்போல் எங்குமில்லையென்று இப்போதறிந்தேன். நீ ரன்றழைத்தபோதே எனக்கு இச்சையுண்டு. ஆனால், ஸ்திரீ சனங்களாகப் பிறந்த பேர்களுக்கு லச்சையுண்டு; கொள்ளா மோக மிருந்தாலும், ஸ்திரீகள் புருஷரிடத்தில் அதை வாய்விட்டு விள்ளார்கள். இவ்வுலகத்தில் எனக்குப் பணிப்பெண்ணாகிய பேர்களெல்லாரும் இன்பசுகத்தை அனுபவிக்கும்போது, நானொருத்திதானே துன்பத்தை அனுபவிப்பது உம்மை வெறுக்கவேண்டியதில்லை. (ஆரால் கெட்டாயென்றால் நோரால் கெட்டேன்) என்பதுபோலத் தானேவருஞ் சீதேவியை நானே காலாலுதைத்து தள்ளிவிட்டுப் போய்விட்டேன். இந்திரன் வந்துவிடுவாரென்று எண்ணிப் பார்த்தேன், இதுவரையிலும் வரக்காணேன். ஆகிலும் இன்னங் கொஞ்சநாள் பார்க்கவேண்டும். அதுவரையிலும் என்னாயகன் சப்தரிஷிகள் சுமக்கும் பல்லக்கிலேறிப் பவனிவரும் வழக்கப்படியே, நீரும் அந்த தேவவிமானத்திலேறிப் பவ்னி வரும்படியாகவும், என் கண்களால் நோக்கவும் விருப்பமுற்றிருக்கின்றேன் என்று கபடமாகச் சொல்ல, அம்மொழியானது நகுஷனுடைய காதுகளில் தேவாமிர்தம் வாரிப் பொழிந்த தன்மையைப்போல் இருக்க ஆனந்தித்து இன்னுஞ் சிலநாளில் அப்படியேவருவேன் உமது அரண்மனைக்கு இப்போது நீர் போமென்று இந்திராணியை அனுப்பிவிட்டு, மிகுந்த சந்தோஷத்துடன் புன்னகைகொண்டு சப்தரிஷிகளையும் வரவழைத்து, யான் இந்திரலோகச் சிறப்பையும் அரண்மனை வீதிகளையும் பார்க்கவேண்டியிருப்பதால், நீங்கள் தாங்கப்பட்ட பல்லக்கு கொண்டுவாருங்கள் என்று உத்தரவுசொல்ல, அப்படியே கொண்டுவந்து வைத்தார்கள். அந்தத் தேவ விமானத்தில் தான் ஏறிச் சிங்காரவீதி - தேவர்கள்வீதி-மண்டபவீதி-மலர்வாவிவீதி-தேவஸ்தலவீதி - சித்திரவீதி - கோபுரவீதி - அரம்பையர்வீதி - ஆவணவீதி - தேரோடும்வீதி - திரவியவீதி - போகமாநகரம்-புண்ணியநகரம் - மாதவநகரம் - மடாலயநகரம்-வீரமாநகரம் - வெற்றிமாநகரம் - காமதேனுசாலை-கற்பகச்சோலை - வெள்ளையானைச்சாலை-வெண்பரிச்சாலை-ஆயுதச்சாலை - அறஞ்செயுஞ்சாலை-இந்திராணிஅரண்மனை முதலியவிடங்களில் சப்தரிஷிகளும் தாங்க உலாவிவருகையில், நகுஷனுக்குத் தபோபலம்-ஊக்கம்-தைரியம்-அழகு இதுகளெல்லாம் நாளுக்குநாள் நசித்துப்போகவும், பழைய இந்திரன் செய்யும் தவத்தினால் சகல பலமும் நலமும் அவனுக்கு விர்த்தியாகிவரவும், இப்படி நடந்துவரும் நாளையில் ஒருநாள் அகஸ்திய முனிவர் இவன் பெரியோர்களை வருத்தும் பிரபல அதிசயங்களையெல்லாங் கேள்வியுற்று, பொன்னுலகத்திற் பொருந்திய நகுஷனை நோக்கிவர உடனே எழுந்து சாஷ்டாங்க தண்டஞ்செய்து, அர்க்யபாத்திய ஆசமன்னிய சந்தனக்ஷதை தாம்பூல தூபதீப உபசாரங்களும் புரிந்து, உயர்ந்த ஆசனத்தில் எழுந்தருளச்செய்து, அவருடைய ஆசீர்வசனமும் பெற்று, தனது அரியாசனத்திலிருந்து க்ஷத்திரியர் அறியக்கூடாத வேதரகசிய மந்திரங்கள் சிலவற்றைப் பொருளுணர்வினால் பிராமணரிடத்தில் கற்றுக்கொண்டு கர்வம் அடைந்திருந்த அந்நகுஷனனவன், அகஸ்தியரை இன்னாரென்று அறிந்தும் மறந்து எவர்களும் கேட்கும்படியாக அந்த மந்திரத்தைச் சொல்லி இதற்குப் பொருளுரையும் குருமுனியே என்று வினவ, அவருக்குக் கோபம்வந்து குலுங்க நகைத்து, உணரக்கூடாத பரமரகசிய மந்திரத்தை நீ தெரிந்துகொண்டதல்லாமலும், பஞ்சையாகிய நீ என்னைப் பயன் சொல்லச் சொல்லிப் பயமில்லாமலும் கேட்கத் தகுமோவென்று உருக்கிப் பார்க்கும்போது, நகுஷன்மீறி ஆத்மார்த்தமாக யாவர்களும் மோக்ஷம் அடைவதற்கே விசித்திருக்கும் மந்திரத்தை நான் கேட்கவுங் கற்கவுங் கூடாதென்று கற்றுணர்ந்த நீர் கியானமில்லாமற் கழறிய மொழிக்குக்

கலகலவென்று நகைப்பதேயன்றி வேறொன்றையுங் காணேனென்று நிந்தித்து, சற்ப சற்ப சீக்கிரம் இவ்விடம் விட்டுப் போமென்று கொடிய நாகப்பாம்புபோற் சீறிக் கூறக்கேட்டு, தடங்கடல் அடங்கலுங் குடங்கையிலொடுங்க அருந்திய அகஸ்தியர் வடவைக் கனல் போன்ற விஷங்களைக் கக்கும் அஷ்டமா நாகத்தினும் மேற்படச்சீறி, அடா பிரஷ்டா! முதியோரென்று மதியாமல் முழுமையும் அவமானம்வரப் பேசினாய். சப்த ரிஷிகளையுந் தாங்கும் தேவயானத்தைச் சப்த முனிவர்களுந் தாங்க ஏறி நடத்தினாய். அன்னத்தின் நடைபோல் நடந்த காக்கை தன்னடையுங் கெட்டு வருந்திய தன்மையை அறியாயா? சின்னத்தனமுடைய உனக்குப் பெரிதனம் பொறுக்குமா? குரங்கின் கைப் பூமாலையைப் போல் பெரியோர்களின் மனம் குறையச் செய்தனையே நிறையாத்தவஞ்செய்த நிஷ்டூரா என்று உடனே எழுந்து, தமது இடது காலினால் நெற்றியிலுதைத்து ஆருக்கோபத்துடன் மறுபடியும் சொல்லுகின்றார்: அறிவில்லாத அற்பரானவர்க்குச் செல்வமல்லது பகைவேறில்லை என்பது தோன்ற இனி நீ அடர்ந்த ஆரணிய மலைச்சாரலின் உன் வாக்கில்வந்த சற்ப மென்னும்மொழி தப்பாமல் ஒப்பில்லாத மலைப் பாம்பாய் விழக்கடவை யென்று சபித்தார். உடனே தேவர்கள் முதலிய யாவரும் பயந்து நடுங்குங் காலையில், புதிய தேவேந்திரன் நிலத்திற் புரண்டெழுந்து தனது உரமும்-கரமும்-சிரமும்-திறமும் பதறி நடுங்க, உதறி யொடுங்க, விரைந்து ஓடிவந்து பொன்னால் வீரகண்டை பொறுத்த புதிய மலர்போன்ற பொதிகை முனியின் திருவடியைத் தனது பூமுடியிற் சூட்டிக்கொண்டு, அடியேன் தெரியாமல் அக்கியானத்தினாலும் வினைச் செயலாலும், வருந்திவந்த செல்வங்களை விடுத்து மலைப்பாம்பாகச் சாபம் பெற்றேன் எனக்கு நேரிட்ட அரிதாகிய தவக்குறை சாபம் விமோசனமாகுங்காலம் அருள் செய்ய வேண்டும் விந்தகிரியின் கர்வம் அடக்கிய விமலனே என்று இரு கரங்களையும் நீட்டி இரக்கவும், "எள்ளார் அறிவுடையார்" என்பதையும், "சிறுமை கண்டவர் பெருமைகண்டல்லது தேறார்" என்பதையும் கும்பசம்பவன் நினைத்து மனம் இரங்கி, தனது தாளிற் றலைமுடி சூட்டிய நகுஷனை நோக்கி, கானகத்திலிருக்கும் கரடி-புலி-சிங்கம்-யானை முதலாகிய மிகுந்த பலத்தினையுடைய செந்துக்கள் உனக்குண்டாகும் அரிதாகிய பசிக்கு எளிதாகிய உணவாகக்கடவது என்று இயம்பி, இப்படி நீ மலைப்பாம்பாக வாழ்ந்திருக்குங் காலத்தில் திங்கள் குலமாகிய உங்கள் குலத்தில் உதிக்கும் தங்கம்போன்ற தருமராஜன் ஒரு காரணத்தினால் வனத்தில் வந்து உன்னைப் பார்த்து வசனிக்கும்போது நெருங்கிய சாபம் நீங்கி சுவர்க்கம் அடையக் கடவை என்று அனுக்கிரகமாக அருள் செய்யவும், உடனே முனி கூறிய சாபத்தின் வண்ணம் மலைப்பாம்பாகி மலைபடிவாரத்தில் விழுந்தான். அகஸ்தியர் பொதிகையிற் சேர்ந்தார்.

இப்பால் ரிஷிகளுந் தேவர்களும் இந்திரனீங்கிய எண்டிசைப் பாலரும் பழைய இந்திரனிருக்கும் இடந்தெரியாமல் தேவகுருவினிடத்தில்வந்து பணிந்து மயங்குங் காலையில், மேலான கற்பினையுடைய இந்திராணி தேவேந்திரன் தவஞ்செய்யும் இடத்தைக் காண்பிக்க, யாவரும் வேதவசனங்களினால் போற்றிப் புகழ்ந்து, தேவேந்திரனுடைய பொன்னடியில் வணங்குவோர்கள் வணங்கி, நகுஷன் சாபம் அடைந்ததை நவின்று இனிமேலாகிலும் தேவரீர் தேவபட்டத்திற்கு வரலாமென்று திசைப்பாலரும், இந்திராணியும், தேவகுருவும் ஊக்கமுடன் அழைக்க, தேவ குருவின் திருவடியைப் பணிந்து, கண்ணீர் சொரிந்து, தேவரீரைத் தெரியாமல் அவமதித்த என் தீவினையானது செய்ய வேண்டிய வேலைகளை எல்லாஞ் சீராகச் செய்து முடிந்தது. இனிமேல் தாளமாட்டேன். சரணாகதி யடைந்தேன். பிழைகளைப் பொறுப்பது சான்றோர் கடன். ஆதலால், என்னை ஆண்டு இரட்சியும் ஐயனே! என்று போற்றவும், இந்திராணி முதலிய யாவரும் வாழ்த்தவும், இரக்கங்கொண்டு இந்திரனுடைய இருகரத்தையும் தேவகுருபற்றி அமராபுரிக்கு அழைத்துச்சென்று மங்களஸ்நானம் ஆட்டி, தேவ சிங்காதனத்தில் வைத்து திவ்விய கிரீடந் தரிக்க, அரசு புரிந்து வரும்போது, அவ்விந்திரனுக்கு ஒவ்வொரு வேளை மதிமயக்கமும் மனத்தியக்கமுந் தோன்ற பிரகஸ்பதி பகவானுடைய பூவடிபணிந்து, சுவாமி! தேவரீர் கிருபைசெய்யாமல் என் தியக்கமும் மயக்கமுந் தீரமாட்டாது. "ஈசனுக் கிழைத்த குற்றந் தேசிகனெண்ணில் தீர்க்கும்-தேசிகற் கிழைத்தகுற்றந் குரவனே தீர்ப்பதன்றிப்-பேசுவதெவனோ என்னும் வாக்கியத்தின்

படி, சர்வலோக நாயகராகிய சாம்பவமூர்த்திக்கு ஒரு குற்றஞ்செய்தால் ஆசாரியரிடத்தில் விண்ணப்பம் பண்ணிக்கொண்டு தீர்த்துக் கொள்ளலாம். ஆசாரியருக்கு ஒரு குற்றஞ் செய்தால் அந்த ஈசன் முதல் மற்ற யாவர்களாலுந் தீர்க்கக்கூடாது. "அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்பதுபோல் ஆசாரியராலேயே தீர்த்துக் கொள்ளவேண்டும். ஆகையால், என்னைக் காப்பாற்றுமென்று வணங்கிய இந்திரனை பிரகஸ்பதி தேவர் பார்த்து, தன்னை இகழ்ந்தமையால் வந்த பழியைத் தீர்க்கும்பொருட்டுத் தானே ஒரு வழிதேடி, சில தேவதூதருடன் பூலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போய் சகல புண்ணிய தீர்த்தம் திவ்விய ஸ்தலங்கள் யாவுங் கண்டு வணங்கிப் பணிந்து தென்றிசைக்கு வரும்போது கடம்பவனத்தில் வந்து நிற்கவும், கலக்கம் - தியக்கம் - மயக்கம் யாவுந் தணிந்து நல்ல கியானம்தோன்றிய இந்திரன் குருவினிடத்திற் சொல்லவும், அவர் தூதரை விடுத்துத் தேடிப்பார்க்கவும், ஒரு சிவலிங்கப் பெருமானும் பொய்கையும் இருக்கக்கண்டு இந்திரன் அவ்விடத்தில் நெருங்கி, புற்றூடு கற்காடு முதலானவைகளைக் களைந்து, திருக்குடை சாத்தி, தெய்வலோகத்திற்குத் தூதரை ஏவி, காமதேனுவின் பால்-தயிர்-நெய் - கோசலம் - கோமயம் இவைகளோடு தூபம்-தீபம்-நைவேத்தியம் - பொன்னுடை-இரத்தினாபரணம் முதலான அபிஷேக திரவியங்களையும், ஆடையாபரணாதிகளையும் கொண்டுவரச் சொல்லி விசுவப் பிரமனைப்பார்த்து, அஷ்டகஜம் தாங்கும் இந்திரமணி விமானம் அமைக்க விடுத்து அர்ச்சனைசெய்யப் புஷ்பம் வேண்டுமே யென்றிருக்கும்போது, அந்தப் பொய்கை நிரம்பப் பொற்றாமரை மலராக நிறைந்திருக்கப்பறித்து, அந்தப் பொய்கைக்குப் பொற்றாமரைப் பொய்கையென்று பேரிட்டுப் புகழ்ந்துக்கொண்டு இருக்கும்போது, தெய்வத்தச்சன் ஆகாயத்திலிருந்து யிறக்கிய விமானம் சாத்திப் பொய்கையில்மூழ்கி, தூதர் கொண்டுவந்த திருமஞ்சனத் திரவியங்களால் அபிஷேகஞ்செய்து, ஆடையாபரணந் தரித்து நிவேதனஞ்செய்து, பொற்றாமரை மலரால் அர்ச்சனைபுரிந்து, தூபதீபங்கள்-ஆலாத்தி-குடை-கவரி-சுருட்டி-ஆல்வட்டம்-பூர்ணகும்ப முதலிய உபசாரமுஞ்செய்து, கண்ணீருங் கருத்துங் கனிந்து களிக்கத் துதிப்பானாகி, "அடியேன் வினையை யகிலப்பத்திகில் கருவாயுருவா யமைந்தெழுந்த, விடையாய்போற்றி, வேதத்தின் வித்தேபோற்றி, கடம்பநிழல் உடையாய்போற்றி, உயிர்க்குயிரா யுறைந்தாய் போற்றி, யுடுபதியார் சடையாய்போற்றி,யைந்தெழுத்தாய்ச் சமைந்தாய்போற்றி தனிமுதலே என்று துதித்து, ஏகாங்கத் திரியாங்க பஞ்சாங்க அஷ்டாங்கங்களாற் பணிந்து, ஆகமவிதிமுறை தப்பாது பூசித்து மதிமயக்க நீங்கி, பிரகஸ்பதி முதலானவர்கள் தன்னைச் சூழ விருத்திரனைக்கொன்ற சமுத்திரத்தருகில் வந்து விஷ்ணுவை பூசித்து, தீனதயாளுவாகிய தெய்வமே! ஆபத்பாந்தவா! அனாதரட்சகா! வைகுந்தவாசா! அடியேன் உன்னடைக்கலம் என்று தொழுது, இந்திரலோகம் புகுந்து சிங்காசனத்தில் இருந்து, இமையவர்களும்-எண்டிசைப் பாலரும் - வசுக்களெண்மரும்-ஏகாதசருத்திரரும் - பதினெண் கணங்களும் நெருங்க, தேவதுந்துபி முழங்க, பாரிசாதமலர்தூவ, கிரீடபட்டந்தரித்துக்கொண்டு ஐராணி சமேதனாக இமையவர் வேந்தனாகியிருந்து, அயன்-அரி-அரன் முதலிய யாவரும் ஆசீர்வதிக்க, கட்டியங்கூற, கணிகையர் ஆட, பதியும் நிதியும் பலமும்பெற்று மதிதவறுமல் வாழ்விற் சிறந்தனன்.

கேளும் எனது மருமகனாகிய தருமநந்தனனே! அகஸ்தியர் சாபத்தால் மலைப்பாம்பாகி வனத்திலுழன்ற நகுஷ மகாராஜனும் உம்மைக்கண்ட நலத்தினால் சாபந்தொலைந்து திவ்யரூபம் பெற்று சுவர்க்கலோகஞ் சார்ந்த சங்கதி உமக்குத்தெரியுமே ஓ சந்திரகுலோத்துங்கனே! மலைப்பாம்பாகிய நகுஷனைப்போன்றவன் துரியோதனன். தேவேந்திரனே இந்திராணியே இந்தத் திரௌபதாதேவி. சாட்சாத்காரமாகிய கடம்பவனக்கடவுள் வைகுந்தநாதர்-மண்பொதுத்தந்தை தேவகுரு ஆகிய இவர்கள் தான் உமக்குத்துணையாக இருக்கும் துவாரகாபுரிவாசன். இந்திரனுமிந்திராணியுமனுபவித்த வருத்தங்களெல்லாம் நீங்கள் அனுபவித்தீர்கள். அவர்கள் எப்படி பழிபாவங்களையும் சத்துருவையும் வென்று அமராபதியை ஆண்டார்களோ, அப்படிபோல் இன்னங் கொஞ்சம் நாளையில் நீங்களுஞ் சத்துருவைச் செயித்து உலகமெல்லாம் ஒரு குடை நிழலில் அரசு செலுத்தப் போகின்றீர்கள். எனது வார்த்தைக்குத் தவறு வராது என்று மங்களாசனஞ் சொல்லி, சகல அரசர்களும் பாண்டவர்களும் பாஞ்சாலி முதலிய யாவர்

களும் அடங்கா மகிழ்ச்சி அடையும்படியாக விடை பெற்றுக்கொண்டு, சதுரங்க சேனைகளும் சூழ சல்லியமகாராஜன் இரதம் யேறும்போது ஐவர்களும் பின்றொடர்ந்து வழிவிடுத்துத் திரும்புங் காலையில், முரசக்கொடியோன் ஓ மாமா! நான் கேட்டுக் கொண்ட வாக்கியம் மறந்துவிடப் போகிறீரென்று உறுத்திய போது, ஒருக்காலும் மறவேன் உள்ளத்திற் பதித்தேன் உமது இஷ்டப்படி முடிப்பேன் என்று மரியாதைசெய்து நிறுத்திவிட்டு அஸ்தினபுரம் போய்ச் சேர்ந்து அரவக்கொடியோன் முதலாகிய யாவர்களையுங் கண்டு வந்தனை வழிபாடுகள் பெற்று வணங்காமுடியோனிடத்தில் படைத்துணையாக உற்று வாழ்ந்திருந்தான் மத்திர தேசாதிபதியாகிய சல்லிய மகாராஜன். ஐவர் முதல்வரும் அரசர்களும் உபலாவியத்தில் இருந்தார்கள். அந்த வேளையில், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் அருச்சுனனும் துவாரகையிலிருந்து இரதம் ஊர்ந்து இன்பமுற்று பாரதயுத்தத்திற்குத் தகுந்த யோசனை செய்ய வந்தார்கள். எல்லோரும் எழுந்து உபசரிக்க ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஓ ராசனத்திலமர்ந்தார். அப்போது இவரைப் படைத்துணை கேட்கப் போனதும், துரியோதனன் படைத்துணை விரும்பி அவ்விடம் வந்ததும், அங்கேநடந்த செய்திகளும், சுவாமி மொழிந்ததும், துணையாயமைந்ததும் இவை யாவையு மறக்காமல் பற்குணன் தருமராஜனுக்குச் சொல்லக்கேட்டு, உடல்பூரித்து மகிழ்ந்து இவ்விடத்தில் சல்லியராஜன் படைத்துணை வந்த வழியில் தனது பேரால் ஒரு தண்ணீர்ப் பந்தல் அமைத்து வஞ்சனையாக வழி மடக்கிச் சுயோதனன் படைத்துணை கொண்டதும், அம்மத்திரராசன் தன்னிடத்தில்வந்து சொல்லிப் போன வசனங்களியாவையும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு தருமர் சொல்லக்கேட்டு, ஒருவருக்கொருவர் மகிழ்ந்து பேசிக்கொண்டு மேல் நடக்கவேண்டிய காரியங்களையும் முறைமைகளையும் யுத்தி செய்து இருந்தார்கள்.

இப்பால் உபலாவியம்விட்டுப் புறப்பட்ட உலூக மகாமுனியானவர், மலைகள்-செடிகள்-வனங்கள்-வனந்திரங்கள்-காடுகள்-மேடுகள்-பாலைகள்-சோலைகள் - சாலைகள் - நாடுகள்-நகரங்கள் இயாவுங்கடந்து அஸ்தினபுரத்திற்கு வந்து, வீஷ்மர்-துரோணர் - கிருபர்-அசுவத்தாமர்-விதுரர் முதலாகிய பெரியோர்களின் அரண்மனைக்குச் சென்று சத்தியவாய்மை தப்பாத பாண்டவர்கள் சாஷ்டாங்க நமஸ்காரஞ் சொன்னார்கள் என்று சொல்லித் தானும் வந்தித்து, அவர்கள் தந்த வந்தனமுங் கொண்டு மரியாதையும் பெற்று, தான் கற்ற வேதசாஸ்திரம்-நீதிசாஸ்திரம்-தருமசாஸ்திரம்-கியானசாஸ்திரம்-இது முதலாகிய நூல்களெல்லாம் எடுத்துக் காட்ட, அந்தப் புத்திமான்கள் கேட்டு செவி நிரம்பிய தேவாமிர்தத்திலும் இனிய சொற்களைக்கேட்ட இதுவே புண்ணிய தினமென்றும், தேவரீருடைய திருவடியைத் தாக்க இந்நகரம் இன்று செய்தது பாக்கியமென்றும், தம்மைத் தரிசிக்கப்பெற்றதே நாங்கள் கண்கள் படைத்தற்கு லாபமென்றும் சொல்லி உடல்புளகமுற்று உபசாரஞ் செய்து உதிட்டிரன்முதல் மற்றெல்லோர்களின் க்ஷேமங்களை விசாரித்துச் சிந்தை மகிழ்ந்து வந்த பௌரோகிதருக்குத் திடஞ்சொல்லி யிருந்த காலையில், ஒருநாள் மது நிறைந்த மலர்மாலையும் முப்புரிநூலும் தழைத்திலங்கிய மார்பினனாகிய உலூகமாமுனி திருதராட்டிர மகாராஜாவின் பெரிய சபைக்குச் சென்றார். அவரைக் கண்ட யாவரும் தண்டம் சமர்ப்பித்து தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவானைக்கண்ட தேவேந்திரன் முதலாகிய சபையார் செய்யும் உபசாரம்போல் எல்லோரும் வணங்கிப் பணிந்து மங்களாசனம் பெறவும், வணங்காமுடி பொறுத்த துரியோதன மகாராஜனும் எதிர்கொண்டு கண்டு இருபாதங்களிலும் தீர்க்க தண்டனிட்டு, நயமிருது வசனத்துடன் நவரத்தின கஜித வீராசனத்தில் எழுந்தருளச் செய்து கண்ணில்லாத காவலனுக்குச் சொல்ல அவனும் இவருக்கு இருகரத்தையுங் குவித்து வணங்க, உலூகமாமுனிவர் அரசன் முதல் யாவர்களுக்கும் ஆசீர்வாதஞ் செய்து அக்ஷதை தூவினார். அப்போது விந்தகிரிக்கு ஒப்பாகி மேல் நிமிர்ந்த தோள்களையுடைய விரத வீரிய வீஷ்மர் முதலிய மேலோர்கள் உள்ளக் களிப்புடன் அவரை உவந்துநோக்கி தேவரீர் வந்தகாரியம் தெரிவிக்கவேண்டுமென்று செப்பவும், எட்டுக்கிரியுந் தியங்கவிழித்து வட்டக்கிரியு மயங்கமிதித்து முட்டுக்கொடுக்க முயங்கி மதர்த்துக் கட்டுத்தறியை முறிக்கு மதங்கொண்ட பட்டத்து யானையை உடைய திட்டியற்ற திருதராஷ்டிரனும், அவன் குமாரர்களும், கர்னனும், சகுனியும் கொதிப்பு மனத்தாற் குன்றும்படியாக தூதுவந்த உலூகமாமுனியானவர் தான்வந்த வரலாற்றை ஒழுங்காக விரித்துச் சொல்லுகின்றார்.

கேளுங்கள் குருகுலாதிபரே! பனிரண்டு வருடம் வனவாசமும், ஒருவருடம் ஆரும் அறியாமல் அக்கியாதவாசமும் போக்கிய பாண்டுவின் மைந்தர் ஐவரும் வெளிப்பட்டு உபலாவியத்தில் வந்திருக்கின்றார்கள். ஆதியில் அநேகம் அரசர்களுங்காண மாய சூதாடி வென்ற இராச்சியத்தை யனுபவிப்பது மரியாதையல்லவென்று கொடுத்துவிடாமல் நீங்கள் கைக்கொண்டு ஆண்டு அனுபவித்து வந்த அந்தவளம் நிறைந்த பூமியை பதின் மூன்று வருடங் கழித்துவந்தால் கொடுத்து விடுகிறோமென்று முன்ன மொழிந்திருக்கின்றீர்களாம். அந்தச் சத்தியவாக்கின்படி இப்போது பாண்டவர்களுக்கு நாடு கொடுக்கின்றீர்களா? கொடுக்கமாட்டீர்களா? நாங்கள் இராச்சியங் கொடுக்கமாட்டோம் யுத்தமே சம்மதிதானென்று சொல்லுவீர்களாகில், இந்திரப்பிரஸ்தத்திலிருந்து வாழ்ந்த ஐவரை விசுவாச வார்த்தைகள்சொல்லி அழைத்துவந்து வாய்ப்பேச்சு பேசவொட்டாமல் மோசசூதாடி தேசத்தை கைக்கொண்ட நாசத்தைப்போல் மாய யுத்தஞ்செய்ய எண்ணாமல், எதிரிலிளைக்காமல் நின்றுமோதி யுத்தஞ்செய்ய நினைப்பீராகில் வெளிப்படுங்கள். அப்படியே ஞாயமா யுத்தஞ் செய்தபோதிலும் நீங்கள் ஒருக்காலும் ஐயம்பெறப் போகிறதில்லை. வீணாகிய எண்ணம்வேண்டாம். ஏரிகளிலும் குளங்களிலும் அழகினையுடைய செங்கா லன்னமுங் கருங்கான் மயில்களுங் கலந்து விளையாட, கிளை நாடுங் குயில்பாடும் வளநாட்டையுடைய மன்னவர்களே! தமயன் தம்பிகள் வேற்றுமையில்லாமல் ஆதியிலிருந்த அன்புரிமையைப் போல் கலந்து வாழ்வீர்களாகில், பெருவாழ்வும் - பெருந்தனமும் - பெருநிதியும் - பெரும் புகழும் - பெருமையும் வரும். இவ்விதமாகப் பொருந்தி வாழ்வு பெறுமலும், விருதாவாய்ப் பாண்டவர்களுடன் எதிர்த்து யுத்தம் பண்ணினால் நாம் அழிந்து போவோம் என்று நினையாமலும் எவ்விதத்திலும் வெற்றியடைவோ மென்று கருதி எதிர்ப்பீர்களாகில், உங்களால் அவர்களை வெல்லுவ தென்பது அரிது! அரிது! ஏனெனில், கண் கறுத்து மனங்கறுத்து கதையைத்தாங்கிய பலமுடைய வீமசேனனும், காண்டீபதாரியாகிய அர்ச்சுனனும், நகுல சகாதேவர்களும், யுத்தகளத்திற் புகுந்துவிட்டால் சத்துருவாகிய நீங்கள் புத்திர மித்திர களத்திராதிகளுடன் அழிந்து அவிந்துபோவீர்கள். முனீஸ்பரர்கள் சொல்லும் வாக்கியம் மெய்யாகாமற் போமோ? ஐயா! ஒருக்காலும் பொய்யாக மாட்டாது. என்றிவ்வாறு உலூகமாமுனி சொல்லவும், சந்தன குங்கும பங்கந்தங்குஞ் செம்பொன் மேருவைத் திரட்டி இணையற்றுயர்ந்த துணியென வகுத்த பிரகாசம்பொருந்திய புயத்தையுடைய குருகுலத்தில் வருதவத்தில் அவதரித்து அரசுபெற்று வரிசையுற்ற பெருமை பெற்ற ஐயமிகுத்த சுயோதனராஜன் உலூகிதனைப் பார்த்து, இவ்விடத்தில் இதுவரையிலும் பூனைபோலிருந்து பெரும் புலிபோற் சொல்லிய உன் வாக்கியம் நாங்கள் செய்யப் போகின்ற யுத்தத்தைப் பார்க்கிலும் மிகக் கொடியதாக யிருக்கின்றது. நல்லது ஐயரே! உமது வாக்கியத்தையும், எங்களிருதிறத்தாருடைய ஆண்மிக்கையின் சிலாக்கியத்தையும், தருமவான்களின் யோக்கியத்தையும், தோள் வலியின் பராக்கிரமத்தையும், நாளை நடக்கப் போகிற யுத்தகளத்தில் பார்த்து அறியலாமென்று சொல்ல, கல்வி முதலாகிய சகல வித்தைகளையுங் கற்றும், அதினுடைய உண்மைக் கியானத்தை யறிந்து நடக்குங் கருத்தில்லாத துரியோதனன் சொல்லிய மொழிகளை யெல்லாங் கேட்ட தத்வக்கியானியாகிய விசயவில் விதுரமகாராசன் சொல்லுகின்றான்.

அப்பா! சூதினாற் கைக்கொண்ட நாட்டை மறுபடியுங் கொடுத்துவிடுகிறே னென்று சொல்லியபடிக்குப் பாண்டவர்களுக்குக் கொடுக்காமல், புன்மைமேலிட்டு அறிவில்லாமலிருக்கும் பல மூடர்களுடைய துற்போதனையைக் கேட்பாயாகில், ஸ்ரீ மகாலக்ஷிமி உன்னை விட்டு நீங்கிப் போய்விடுவாள். நால்வகைச் சேனைகளும் பந்துக்களும் நாசமடைந்து போகும். இது நல்லதல்ல உடனே உனக்கு அல்லல்வரும் என்றான். அந்தச் சமயத்தில் துரோணாச்சாரியார் நந்தியாவர்த்தத்தாமனை நோக்கி, அரசே! பனிரண்டு வருடங் காட்டிலும், ஒரு வருடம் நாட்டிலுமிருந்து மீண்டு வருவீராகில், உங்கள் செல்வத்தை உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேனென்று இராஜ சபையில் ஸ்திரமாகச் சொல்லிய உமது சத்திய வசனம் தவறிப்போய், சேனைசைனியங்களைக் கொண்டு வீரப்பிரதாபத்துடன் பொறுத்த வாளாயுத யுத்தஞ் செய்ய நினைப்பது ஞாயமல்ல. உலகம் பழிக்கும் பெரும் பிழையாகும். அந்தப் பழிகளையும் ஒரு வழியாகத் தள்ளி பாண்டவர்கள்பேரில் போர் புரிவோர்

மாகில், விஜயனென்பவன் தனது காண்டீபத்தில் இருந்துவிடும் சரங்களினுடைய முனை வாய்களினால் இரத்த மாமிசச்சேறும் உயிரும் கக்கும்படியாகப் போக்கிவிடுவான். பெரிய அவமானமுஞ் செய்வான். பின்பலம் வேண்டாமல் தன் பலம் வேண்டிய காண்டீபனாகிய தனஞ்சயனுக்கு எவரும் நிகரல்லவே என்று சொல்லவும், துரியோதனன் அதனைக் கேட்டு, உத்தமராகிய இத்தனை பேரும் எத்தனை விதமாகச் சொன்னாலும், என் சித்தமிரங்கி எள்ளத்தனை நாடும் கொடுப்பதென்பதே இல்லை. மண்டைகள் கிழியச் சண்டைகள் செய்து வென்றவர்களுக்கே இந்த ராச்சியம் சொந்தமென்று இயம்பிய பேரனை, வீஷ்மர் ஏற நோக்கி இப்படிப்பட்ட கல் மனத்தனைக் கொன்று கசகசவென்று மென்று தின்றுவிடலாமா வென்று பல்லைக் கடித்து, சிறந்த புத்திரனாகிய திரிதராஷ்டிரனைப் பார்த்து, உன் குமாரனாகிய துரியோதனன் ஒருவர் சொல்லும் புத்திவழியிலும் வாரான்; தன் சுயபுத்தியையும் உன்னிப் பாரான்; சின்னமனிதர் வார்த்தையைக் கேட்டு, நமது திங்கள்மரபின் நீதி முறைமையைக் கைவிட்டுப் போட்டு, பதின்மூன்று வருடம் வனவாசஞ் செய்து வாருங்களென்றுசொல்லிய உறுதிவாக்கியத்தின் வண்ணம் உன் புதல்வராகிய பாண்டவர்கள் காட்டைக்கழித்து நாட்டில்வந்து ஒரு உத்தமனைத் தூதாக அனுப்பி நாட்டைக் கேட்ட விடத்திலும், ஐவருக்கு நாடுங் கொடாமல் வெவ்விய வினைக்கு மேலாகும் போர்புரிய விரும்புவானாகில், மகமேருவுக் கொப்பாகிய காண்டீபங் கரத்திலேந்தி வந்து எதிர்க்கும் விஜயனுக்கு எதிரில் வில்வளைத்துச் சமர்செய்யும் வீரன் எவன் இருக்கின்றான்; அவன் திருஷ்டிக்கு எதிர் நிற்பவர்கள் யாருமில்லை; எவர்கள் பலத்தைக்கண்டு இவன் இப்படித் துள்ளுகின்றான்; ஊமைகண்ட கனவுபோல் பேசுவதில் உபயோகமில்லை; வாக்கினால் அளப்பதில் வருவதொன்றில்லை வெளிப்பட்ட பாண்டவர் விடப்போகின்றதில்லை. ஆகையால் காது கேளாதவரைப்போல் கேட்டுக்கொண்டு இருப்பதில் காரியமில்லை. முன்னுக்கு இன்பமும், பின்னுக்குத் துன்பமும் ஆகிய காரியத்தையுங் கைப்பற்றலாமோ? (வாய்க்கு இனிப்பு வயிற்றுக்குக்கேடு) என்பதை யறியாயா? இதனால் உனக்கு வரும்புன்மை; கல்களுஞ் செய்வோர்க்கெல்லாம் நன்மை. ஆதலால், உன் புத்திரனுக்குத் தெரியப்படுத்தி ஆதியிற் சொல்லிய நீதிதப்பாமல் ஐவருக்கும் நாடு கொடுப்பதே நலமென்று மிகுந்த கோபங்கொண்டு சொல்லிவந்தனர். அப்போது பக்கத்திலிருந்த அங்க தேசாதிபதி பதைபதைத்து, வெகுளி மேற்கொண்டு, ஈரேழுலகினும் எனக்கு எதிர் இல்லையென்று இறுமாந்திருக்கும் வீரன் யானொருவனிருக்க, முன்பின் எண்ணிப்பாராமல் அர்ச்சுனனுக்கு எதிர் யாருமில்லையென்று அவனையே அதிக சிலாக்கியமாகப் பேசிவருகின்றீர். (பொக்கைவாயன் பொரிமாவை மெச்சினான்) என்னுங் கதைபோல மகிழ்ந்து புகழுகின்றீர். உமது வல்லமைக்கும் நீர்கற்ற தனுர்வேதத்திற்கும் விஜயன் மேற்பட்டவனென்று விளம்ப வேண்டியதேயன்றி, உலகத்தில் ஒருவரும் அவனுக்கு ஈடுபடமாட்டார்கள் என்று நீர் எப்படிச் சொல்லுவீர். அதற்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேளுமென்று கர்னன் சொல்லத் தொடங்கினான்.

### வியாக்கிரயுத்தி கதை.

ஓ வீமஷ்ரே! ஒரு ஏழைக் குடித்தனக்காரன் காடு அடர்ந்த ஏரிக்கரையோரத்தில் ஏரைப்பூட்டி உழுதான். அந்தக்காட்டில் இருந்த வேங்கையொன்று உழுகின்ற மாட்டைப் பாய்ந்து பிடித்துக்கொண்டது. அந்தக் குடியானவன் விசனமடைந்து கண்ணீர் சொரிய அதை அந்த வேங்கை நோக்கி ஏன் அழுகின்றாய் உழுகின்றவனே என்னலும், குடியானவன் ஐயா! எனக்கொரு பெண்ணுண்டு. அந்தப்பெண் தனக்கு திடவீர தைரியசாலியாக ஒரு நாயகன் வேண்டும் என்று சொல்லியிருந்தது. நானும் அப்படிப்பட்டவனை எங்கள் பந்துக்களிலும் மற்ற உலகங்களிலுந் தேடிக் காணாமல் வருந்தி இருந்தேன்; உம்மைக்கண்டு மகிழ்ந்தேன்; ஆனால், நீர் மிருகமாயிருப்பதினால் என் குலத்துக்கும் இவ்வுலகத்துக்கும் விரோதமாக இருக்குமேயென்று விசனப்படுகிறேன் என்றான். அந்த வார்த்தையைக்கேட்ட வேங்கையானது, உள்ள மகிழ்ந்து (பெண்ணென்றால் பேயும் இரங்கும்) என்னும் வசனப்பிரகாரம் மயங்கி, யான் எப்படி யிருந்தாலும் குறைவில்லை; மேலும் வீரனென்னுந் தைரியசாலிகள் எந்தக் குலத்திற் பிறந்தாலும் தோஷமில்லை; என்னிடத்திற் கொலைத்தொழில் இல்லை; உம்முடைய குமாரத்தியைக் கொடுத்தால் வேண்டிய செல்வங் கொடுப்பேன் என்று சொல்லக் குடியானவன் கேட்டு, நான் வீட்டுக்குப்போய் மாட்டை

விட்டுவிட்டு வருகின்றேன் இவ்விடத்தில் தானே இருமென்று சொல்லிச் சற்றுதூரம் சென்று ஒருநாழிகை மறைந்து இருந்து மறுபடியும் வந்து, ஓ வியாக்கிர உத்தியென்னும் வீரதீர மருமகனே! வீட்டுக்குப்போய் என் குமாரத்தியிடத்திலும், உனது மாமியாரிடத்திலும் இந்த வார்த்தையைச் சொன்னேன். அவர்களும் எங்கள் பந்துக்களில் சிலரும் சந்தோஷமடைந்து இப்போதே விவாக முடிக்கவேண்டும் என்றார்கள். என் பெண்மாத்திரம் தேம்பித் தேம்பி அழுதாள். ஏனம்மா அழுகின்றாய் என்று கேட்டேன். இந்நாட்டில் வாழும் நங்கையரைப்போல நல்ல மானிடப் புருடனைத் தழுவாமல், காட்டில்வாழும் மிருகராஜ புருஷனைத்தழுவி முத்தமிட்டுக் கொஞ்சிக்குலாவி விளையாடி வாழ்வதற்குப் பிறந்த பெரும்பாவி யானேனே என்றாள். என்ன காரணத்தால் என்றேன். இருகரங்களில் நகங்களும் வாயிற் கோரதந்தங்களும் இருப்பதினால் எப்படித் தழுவுவேன் இதுகள் மாத்திரம் இல்லாவிட்டால் எனக்குக் கிடைத்த புருஷருடைய சுந்திர வீரத்திற்கு என்போலொத்த பெண்கள் ஏக்கங் கொள்ளவேண்டும் அல்லது கைகால்கள் வீக்கங் கொள்ளவேண்டும் என்ன சிலாக்கியம் என்னுடைய பாக்கியம் என்றாள் என்று குடியானவன் சொல்லவும், வேங்கை வருந்தி அன்பிற் சிறந்த மாமா! யான் நகங்களையும் பற்களையும் அடக்கிக்கொண்டு தேகத்திற் படவொட்டாமல் உமது குமாரத்தியுடன் கொஞ்சிக் குலாவி விளையாடுகிறேன் என்று சொல்லக்கேட்டு, இதோபாரும் எங்கள் நகங்களை க்ஷவரகன் வாங்கிப் போடுவதுபோல நீரும் வாங்கிப்போடும் அப்போது குடித்தனமுறைமைக்குத் தரித்திரமில்லாத சவுக்கியமாம் என்று குடியானவன் சொல்லக்கேட்டு, அப்படியே செய்யுமென்று வேங்கை சொல்லவும், க்ஷவரகனை அழைத்து வருவேனென்றுபோய் ஒரு தச்சனை அழைத்துவந்து இருகரங்களிலும் இருக்கும் கூர்மையாகிய நகங்களை அடியோடு நறுக்கிவிட்டு, வாயைக் காட்டச்சொல்லி கோர தந்தங்களையும் குறடு கொண்டு பிடுங்கிவிட்டுப் போபோவென்று முகத்தில் அறைவிட்டான். அந்த அறையைத் தாங்கிய வேங்கையானது கோபித்து பெருவியாதி கொண்ட ஈயாத லோபியினது விரல் குறைந்திருக்கும் அங்கைபோலொத்த தன் கூழைச் சரத்தால் ஓங்கி ஓங்கி மோதும்போது குடியானவன் தாற்றுக்கோல் வாங்கி வீசினான். அதனால் வேங்கையானது ஓட்டம்பிடித்து ஓடிப் பதுங்கி வலிப்பெடுத்து பாய்ந்தது. ஐயா வீஷ்மரே! இதுபோலவே வீரமும் வில்லும் தவமும் ஸ்ரீராமனிடத்தில் பறிகொடுத்து நகமிழந்த வேங்கைபோல் மலிவுற்ற பரசுராமனைத் தீட்டிய மரத்திற் கூர் பார்ப்பதுபோல அவனிடத்திற் கற்ற அல்ப வித்தையைக்கொண்டு அம்பையென்னும் பெண்ணுக்காய்ப் பின்பு அவனையே புறமுதுகிட்டோடச் செய்த சேவகத்தை மேற்கொண்டாய் அல்லாமல் எந்த இடத்தில் எந்த வீரர்களைவென்று ஜயம்பெற்றிருக்கின்றாய். உன் வண்டவாளம் இப்படி இருக்க, யாவரையும் அலட்சியமாகத் தூறிச் சொல்லுவது அனியாயம் உமக்கு இது ஞாயமல்லவென்று கண்கள் சிவந்து கடுகடுத்து கர்னன் சொன்னமொழியைக் காங்கேயன் கேட்டுக் கடுங்கோபங்கொண்டு சொல்லுவார்.

அடா கச்சைக் கொடியோனே! நான் என்ன யுத்தஞ்செய்தேன்; எங்கே வீரப்பிரதாபம் பெற்றேன்; ஆளில்லாக் காலத்தில் வீண் வார்த்தைகளைப் பேசி அகப்பட்டுக்கொண்டு ஆரிடத்தில் விழித்தேன்; நான் எவ்வளவு அப்பா கர்னு! நீயோ சுத்த சாமர்த்தியன், ஒருவர் துணை வேண்டாத வீரன், சொல்லிய வீரந் தப்பாதவன், வல்லமைசாலி, மெத்தவும் நல்லவன், வெவ்விய புகையெழும்பும்புத்திர காமேஷ்டியாக அக்கினியில் துருபதேயமகாராஜனுக்குப் புத்திரியாகப் பிறந்த தோகை மயிலைப்போன்ற திரௌபதாதேவியின் சுயம்வரகாலத்தில் வில்வளைத்து மச்சேந்திரத்தை அறுத்துமாலை சூட்டுவதற்கு வந்திருந்த மன்னர்களெல்லாரும் மதிமயங்கப் பயத்தைத் தரும்படியாகிய வில்லை எடுத்து நிறுத்தி இழுத்து வளைத்து நாணிபூட்டி நாணமலிருந்தவன் நீதானே அடா கவசகுண்டலா! சகல அரசர்களும் தலை குனியும்படியாகப் பிராம்மண ரூபத்துடன் வில்வளைத்து, வன்மை நுன்மை சலம் நிச்சலம் என்னும் நான்கு குறியாக வைத்த மச்சேந்திரம் அறுந்து விழும்படியாக அம்பினால் எய்து பாஞ்சால மாலைசூட்டக் கைப்பற்றிக் கொண்டுபோகும் கைவலிமையையுடைய விஜயனைப்பார்த்து, ஐயோ! பெண்ணைக்கொண்டு போகின்றானே பிராமணன்! நமது குலத்தாராகிய இராஜர்களுக்கெல்லாம் மானமும் - ஈனமும் - வீரமும்- வெட்கமும் இல்லையா என்று இந்தத் துரியோதனன் மனவருத்தப்படுங் காலையில், தனு

ர்ப்பாணங்களுடன் சென்று கிரீடியைத் தகை
ந்து யுத்தஞ்செய்து, திரௌபதியை மீட்டுக்
கொண்டுவந்த வீராதிவீரன் நீதானே? வன
வாசஞ் செய்யும் பாண்டவர்களை அவமானஞ்
செய்ய நினைத்து மன்னர் மண்டலீகரும் நால்
வகைச் சேனையும் இராஜஸ்திரீகளும் சுவேத
க்ஷத்திரமுடைய வணங்காமுடியோனும் நீயும்
வனஞ்சுற்றிப் பார்த்து சலக்கிரீடை பண்ணி
வருவோம் என்று போன நாளையில் காந்தருவ
னுக்கும் உங்களுக்குங் கலகம் நடந்து அவன்
எல்லோரையும் பிடித்துப் பின் கட்டாகக்
கட்டிப் பிணைய லாடிக்கொண்டு போகும்
பொழுது, தருமராஜனுடைய சரணங்களில்
விழுந்து அழுது சிறை நீக்கிவிடவேண்டும்
தேவரீரென்று தூதுவர் சொல்லக் கேட்டு,
வீமராஜனையும் அருச்சுன ராஜனையும் விடு
த்து மீட்டுவிட்டபோது அந்த இடத்தில் நீ
யல்லவோ முன்னின்று வெற்றி பொருந்திய
யுத்தஞ் செய்து மீட்டினாய். அடா தாஷ்டிகா!
போனதெல்லாம் போக நேற்று விராடபுரத்
தில் ஒரு அக்குரோணி சேனைகளும், கோடி
தேர்களும், நாமுஞ்சென்று பசுக்களை ஓட்டிக்
கொண்டு வரும்போது, உண்டைவில் பிடித்
துக்கொண்டு திரியும் உத்தரகுமாரன் தேர்
செலுத்த, உத்தர திசையில் வந்து அந்த
அக்குரோணி சேனைகளையும், கோடி இரதங்
களையும் பாணங்களினால் மூடி, இராஜனையுந்
தேடி, பழிப்பாகப் பாடி, என்னையுந் துரோ
ணர் முதலாகிய பேர்களையும் நாடி யடித்து,
நீயும் ஓடி ஒளிக்கத் தடுத்து நானாவித பங்கஞ்
செய்து, நாமெல்லாம் தலைத் துணியும் பிடுங்
கிக்கொள்ளக் கொடுத்து மடக்கிய பசுக்களையும்
விடுத்து வரும்படியாக மாட்டியது விஜயன்
ஒருவனே யன்றி, இரண்டுபேரில்லை. அப்
போது அருச்சுனனைச் செயித்து பசுக்களையுங்
கொண்டு துரியோதனனையுஞ் செயம்பெறச்
செய்து சகல செல்வமுங் கொடுத்து அஸ்தின
புரத்திற் சேர்த்த உத்தம வீரனும், பதினான்கு
லோகமும் ஒருவனென்றிருக்கும் தீரனும்
நீதானே? அப்பா! இப்பவும் பசுமை நிறமும்
வாசனையும் தேனு மருவிய துளபமாலை
அணிந்த ஸ்ரீ கிருஷ்ணதேவன் சாரத்தியஞ்
செய்யக் காண்டீபமுங்கணையும் கரத்திலேந்தி
யுத்தஞ் செய்யவரும் சவ்வியசாசியை ஜயிப்ப
தற்கு வேறொரு வீரர்கள் எக்காலும் இல்லை;
மூக்காலுஞ் சொன்னேன். நீயொரு பிராணி
தான் மருந்தைப்போல் வெற்றி பெறுதற்கு
பொருந்தி இருக்கின்றாய். நல்ல மரத்திற்
பாயும் புல்லுளிபோல நல்ல குலத்தை நாசஞ்
செய்யுங் கல்லுளியாக சேர்ந்த கர்ணா! இவ்
விடத்தி லிருக்கும் யாவரும் உயிருட னிருந்து
உள்ளங்கைப் புண்போல் உனது வல்லபத்
தைப் பார்க்கத்தான் இங்கிருக்கிறோம் என்று
கங்கா புத்திரன் சொல்ல, கர்னன் மறுமொழி
கூறாமலும் இருந்தான்.

அச்சமயத்தில் துரியோதனன் கையோடு
கைதட்டிக் கொட்டிக் கலகலவென்று குலுங்க
நகைத்துக் கெட்டி கெட்டி அண்ணா கர்னா!
இப்போது வீஷ்மர் சொல்லும் வார்த்தை
யெல்லாம் பாண்டவர்கள் பேரிலிருக்கும்
இஷ்டத்தினால் சொல்லும் வார்த்தை என்று
பட்டப்பகல்போல் தெரிய வருகின்றது. துஷ்
டப்பகையைப் போக்கவும், இஷ்டனாகிய
என்னைக்காக்கவும், அஷ்டதிசையும் அவதரித்
திரனென்று பேர்பெற்ற வள்ளலே! அதை
ரியம் வேண்டாம் என்று தட்டிக்கொடுத்து,
தூதாக வந்து எதிரிலிருந்த பிராம்மணனை
நோக்கி வேலையில்லாமல் இந்த வீண்வார்த்
தையைப் பேசவந்தீர் என்று அவமதித்து,
இங்கிருக்கும் நாடுகளெல்லாம் எங்களுடை
யது, அங்கிருக்கும் காடுகளெல்லாம் அவர்க
ளுடையது; அரசர்முதலிய குடிப்படைகளெல்
லாம் எங்களுடையது; ஆரணியவாசமாகிய
மிருகங்களெல்லாம் அவர்களுடையது; தன
தானிய போசன அனுபவம் எங்களுடையது,
சருகுகந்தமூல அனுபவம் அவர்களுடை
யது; இந்தப்படி முன்னமே தெய்வம் முடித்
திருக்கின்றது. அது தோன்றாமல் உம்மைத்
தூது அனுப்பியது கொடிய வறுமை என்று
தோணுகிறது. ஆகையால் நீர் சீக்கிரம்போய்
ஐவருக்குந் தெரிவித்து ஆசைவிட்டு விடும்படி
யாகப் போதியும் என்று சற்பக்கொடியோன்
சொல்லவும், சந்திரகுலசிகாமணியாகிய திருத
ராட்டிரமகாராஜன் துரியோதனனைக்கடிந்து,
சிறந்த பெரியோர்களும் நிறைந்த அரசர்க
ளும் பொருந்திய பெரியசபையில் அழகுந்
தகுதியும் அல்லாதசொற்களை நீ சொல்லியது
நன்மையோவென்று அதட்டி அடக்கி பாண்
டவர்கள்பேரில் பக்ஷம்வைத்துபேசுகிறவனைப்
போல் அன்புநிறைந்த உருவமாக எதிரில்
இருக்கும் உலூகமாமுனியைப் பார்த்து,
ஐயா! நீர்வந்து சொல்லிய வார்த்தைகளெல்
லாம் மெய்யாகியசத்தியமே; இருதிறவர்களும்
மனம் ஒத்து வாழ்வைப்பெறாமல் அமர்செய்
வார்களாகில் அழிவது நித்தியமே; பிழைப்

கௌரவர்களுக்காக சஞ்சய முனிவர் தூது பேசுதல்.



திரிதராட்டிரன், காந்தாரி, துரியோதனன் இவர்களுக்கு வேதவியாசர்
நடக்கப்போகும் காரியமுணர்த்தல்.

பார் ஒருவருமில்லை அப்படி யுத்தம்விளையாமற் செய்யவேண்டும் எங்கள் பிள்ளைகள் இருதிறத்தாரும் நிறைந்த செல்வத்துடன் சுகப்படும்படியாகிய காரியங்களை யாங்கள் யாவரும் ஆலோசித்துக்கொண்டு விவேகமே தேகமாகப் படைத்த உண்மையானவர்களை என் பிள்ளைகளிடத்திற்கு அனுப்பிவைக்கின்றேன். தேவரீர் உபலாவியத்திற்கு எழுந்தருளி குலமும்-பலமும்-தவமும்-நலமும்-வரமும்பெற்ற பாண்டவர்கள் துரியோதனாதிகள்பேரில் கொண்டிருக்கும் கோபங்களும், மனஸ்தாபங்களும், சபையிற்கூறிய சபதங்களும் நீங்கும்படியாக, அநேக தருமஞாயம் குலமுறைமை முதலிய நீதிகளினாற் றெரிவித்துப் புகழாகிய சகாயஞ் செய்யவேண்டும் - பெரியோராகிய தேவரீர் என்று நமஸ்கரித்து, வெகுவித உபசாரமுஞ் செய்து, தேவர்களும் தாவிவந்து ஆசைகொண்டு மகிழும்படியாகச் சந்தனபுட்பமும் கந்த கதம்பமும் பீதாம்பரங்களும் நவரத்தினகசித ஆபரணங்களும் கொடுத்துத் தீர்க்கதண்டஞ் செய்து விடைகொடுக்க, வீஷ்மர்-துரோணர்-விதுரர் முதலிய பேர்களும் வணங்கி, சுவாமி! பெரிய அரசன் சொல்லிய வண்ணமே நடத்தவேண்டும் போய்வாரும் என்று செலவுகொடுக்க ஆசீர்வதித்து, அஸ்தினாபுரத்தை விடுத்து, காடு மலை யெல்லாங் கடந்து உபலாவியம் வந்து, தன்னைத் தூது அனுப்பிய அரசர்களும் ஸ்ரீ கிருஷ்ணதேவரும் பொருந்தி இருக்கும் இராஜசபைக்கு நேராக வரும்போது, யாவரும் வணங்கி உபசரித்த அவர்களுக் கெல்லாம் மங்களாசனஞ் சொல்லி உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து, மேற்சொல்லிக் கொண்டு வந்த தூது வசனங்கள் யாவற்றையுஞ் சொன்னார். அதைக் கேட்டுப் பாண்டவர் சகாயன் முதலிய பேர்களும் இனிமேல் நடக்கவேண்டிய காரியங்களுக்கு இப்போது யோசிக்கவேண்டிய தென்ன ஒன்றுமில்லை. இனி அவர்கள் அனுப்பும் தூதினால் நேரிடுஞ் சங்கதிகளையும் உள்ளக் குறிப்பையும் வரவரத் தெரிந்து கொள்ளுவோம் என்று அஸ்தினாபுரத்தின் சபையை நோக்கி இருந்தார்கள்.

உலூகன் தூதுச் சருக்கம் முற்றிற்று.

## இரண்டாவது,
## சஞ்சயன் தூதுச் சருக்கம்.

### கண்ணன் துதி

எக்கடலு மெக்கிரியு மெவ்வுலகு முலகிற்
றக்கபல யோனிகள் சராசரமனைத்தும்
மிக்கவிதி யால்விதிசெய் விதியினை விதிக்குஞ்
செங்கமல நாபிமுகில் சேவடி துதிப்பாம்.

கேளும் ஆண்டவர்குல திலகனாகிய ஜெனமேஜெய மகாராஜனே! உலூகமாமுனி அஸ்தினாபுரத்தைவிட்டு நீங்கிய வுடனே, நஞ்சமுடைய நாகத்தைக் கொடியாயுயர்த்த நராதிபனும், பயத்தைத்தரும் வேலாயுதந் தாங்கிய பற்பலமன்னர்களும், சற்புருஷராகிய வீஷ்மாச்சாரியர்-விற்றிறமைகொண்ட துரோணாச்சாரியர்-தவத்திற் சிறந்த விதுரமகாராஜன்-ரவிபுத்திரனாகிய கர்னன் - கிருபாச்சாரியார்-அசுவத்தாமர் முதலாகிய பேர்களும், திருதராட்டிரனும் எதிரில் இருகரங்களையும் குவித்து வணங்கி வாழ்த்திநிற்கும் சேனாசயின்யமத்தியில் இந்திரசபைக்குமேலாகிய ராஜமண்டபத்தில் பொருந்தியிருந்து, யுத்தியிலும்-புத்தியிலும் கல்வியிலும்-கியானத்திலும் இணையில்லாமல் உயர்ந்த சத்தியவசன உத்தமனாகிய சஞ்சயனை வரவழைத்துச் சபையினிடத்தில் இருத்தி, என்றென்றைக்கும் சண்டையில்லாமல் இருக்கவேண்டும் என்று எண்ணங் கொண்ட திரிதராட்டிரன் இயம்பலுற்றான்: ஓ சஞ்சயனே! குருகுலத்தரசர்களுக்கு நேரிடும் காரிய காரியங்களை அறிந்து சொல்லும்படியாகிய சுதந்தரமும் மாட்சிமையும் உடையவன் நீ யாகையால், இருதிறத்தவராகிய கவுரவர்களும் பாண்டவர்களும் உனது சொல்லாகிய நீதிவசனத்தை ஒருக்காலுந் தள்ளமாட்டார்களாதலால், கருமான் உலைக்களனுக்கு ஒப்பாகிய மிகுந்த கோபங்கொண்ட என் தம்பி பிள்ளைகள் மாறுபட்டுப் பேசுகின்ற வஞ்சினத்தை நீக்கி, இருவர்களில் ஒருவர் சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தை ஆளும்படியாக உனது உள்ளத்தில் நினைக்கவேண்டும் யுத்திக்கு வித்தானவனே! அளவு சொல்லக்கூடாத கோபக்கருத்தினராகிய என் பிள்ளைகளுக்கு எத்தனை விதத்திற் சொன்னாலும் பாண்டவர்களுக்கு நாடு கொடுக்கச் சம்மதியாமல் மீண்டும் யுத்தஞ் செய்தற்கு இசைந்தியிருக்கின்றார்கள். என் தம்பி புத்திரர்களோ

அப்படியல்ல; நற்குணங்களிலும்-விற்றிறங்களிலும்-சத்தியங்களிலும்-ஆண்மிக்கையிலும்-குளிர்ச்சியாகிய மிர்துவசனங்களிலும் - நீதியிலும் - தருமதானங்களிலும் - தவங்களிலும்-பொய்யில்லா மெய்விரதங்களிலும்-புகழிலும்-அருளிலும் - பொறுமையிலும் நிறைந்த பூரண புத்திமான்கள் இப்பேர்ப் பட்டவர்களும் நமது பசங்களைப்போல இடம் அகன்ற போர்க்களத்தில் யுத்தஞ் செய்யும்படியாகக் கருத்துகொண்டு இருப்பது தன்மையோ? சஞ்சயனே! பிறவிப்பிணியையும், பெருந்துக்கத்தையும், அனித்திய வாழ்வையும், பாபமாகிய பொருளையும் விளையச்செய்யும் இந்தக் தர்மபூமியின் ஆசையை விடுத்து, இவையெல்லாம் மறந்த மறப்பும், கியானப் பிறப்பும், மோட்ச வழிச் சிறப்பும் உண்டாகும்படியாக விசாலம் பொருந்திய கானகத்தில் பாண்டவர்கள் இன்புற்றிருந்து, நித்தியமாகுந் தவத்தைச் செய்யும்படியாக அன்புகொண்டிருக்கும் என் கருத்தையுஞ் சொல்லி நீயுந் தெரியப் படுத்தக்கடவை யென்று இருள் அடர்ந்த தனது புத்திக்கு ஒப்பாகச் சொன்னான்.

இப்படி திரிதராட்டிரன் சொல்லிய வசனம் பாரபக்ஷம் என்று தெரிந்தும், தடை சொல்லாமல் அரசனுடைய கட்டளையைச் சிரக்கொண்டு யாவரும் புகழப்புகழ்ந்து, விடைகொடுக்கப் பெற்று அஸ்தினபுரத்தை விடுத்துக் காடு மேடு மலைகளெல்லாங் கடந்து, ஐவர் வாழும் உபலாவியத்திற்கு வந்து அன்றையத்தினமே ஸ்ரீ கிருஷ்ணபகவான் எழுந்தருளி யிருக்கும் திருமாளிகையிற் சென்று, திரௌபதியும் பார்த்தனும் வார்த்தையாட மலரணையில் வீற்றிருக்கும் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியாகிய அமலனைக் கண்டு தீர்க்கதண்டமாகப் பணிந்து வணங்கி துதித்து தான் வந்த சங்கதிகளில் சிற்சில காரியங்களைப் பேசி, தருமபுத்திர மகாராஜன் முதலிய தராதிபர்கள் கூடியிருக்குஞ் சபைக்கு நாளையத்தினம் வந்து சகல காரியங்களையும் சொல்லுகிறேனென்று தொழுது விடைபெற்றுக் கொண்டு, அவர்களால் நேமித்த ஓர் விடுதியிற் போயிருந்து, சூரியன் உதயமாகு முன்னம் எழுந்து, நித்தியகருமம் ஸ்நானம் செபம் தபம் இவைகளை முடித்துக்கொண்டு தருமராஜனுடைய பெரிய சபைக்குச் செல்லும்போது, ஸ்ரீ கிருஷ்ணபகவானும், சாத்தகியும், துருபதேய மகாராஜனும், விராட பூபதியும், இன்னம் பற்பல பாஷை மன்னவர்களும் சூழ்ந்துகொண்டிருக்க நடுநாயகமாக இருந்து, தஞ்சமென்போரை அஞ்சலென்றளிக்கும் வஞ்சகம் இல்லா நெஞ்சினனும் மெய்விரதனாகிய உதிட்டிரனிடத்தில் விரைந்துசென்று, கண்களும் மனமும் களிக்கக் கண்டு, அறிவும் அறமும் புகழும் மிகுந்த தகுந்த தம்பிமார்களாக விளங்கிய வீமார்ச்சுன நகுல சகாதேவர் நால்வரோடு அக்கினியில் உற்பவித்துக் கற்புக்கு அணியென இருந்த பாஞ்சாலியும், பின்பக்கத்தில் சிறப்புடன் பொருந்த முன் பக்கத்தில் நெருப்புடன் யிருந்த அறத்தின் மைந்தருடைய மலரடியைச் சிரத்திற்சூடி வணங்கினான். இவ்வாறு வணங்கிய சஞ்சயனைத் தருமராசன் நோக்கி, கருணை கூர்ந்து, எழுந்திரும் எழுந்திரும் என்று சொல்லி இரத்தினகசிதமாகிய ஆசனங்கொடுப்பித்து, அந்த ஆசனத்தின்பேரில் உட்காருமென்று சொல்லவும், சஞ்சயன் அகமகிழ்ந்து யாவர்களையும் வந்தித்துப் புகழ்ந்து, வணக்க ஒடுக்கமாக ஆசனத்தில் அமர்ந்து சஞ்சயன் சொல்லுகின்றான். பொய்யைச் சினந்து மெய்யைப் புனைந்து வையகங் காக்கும் ஐயனே! கேளும்; பாதலத்தில் பொருந்தும் ஆதிசேடன் முதலிய பாம்புகளின் விஷச்சுவாலைகளை அடக்கி, இவ்வுலகதிதில் யாவர்கட்கும் இன்பம் விளையும்படியாக அமுத கிரணங்களைப் பொழியும் சந்திரன் பிரகாசித்தபோதிலும், தாமரை மலரானது சூரிய கிரணங்களை விரும்பி முகமலருமல்லவா? அதுபோல உலகமெல்லாம் ஒரு குடையில் ஆளும் திரிதராட்டிர பூபதியினுடைய அருளுக்கும் அன்பிற்கும் உரியவனாகி, நான் இருந்தபோதிலும் ஒளியும் சிறப்புமுடைய உமது முகத்தைப் பார்த்து உயிர் வாழும்படியாக என் சிந்தையானது வுந்த, நான் வந்தேன் என்று சொல்லக்கேட்டு, சேறு நாறும் வயல்களெல்லாம் செங்கழுநீர் மணமாறும் குருநாட்டுக்கு அதிபதியாகிய குந்தி புதல்வன், சஞ்சயன் கூறிய உபசார வார்த்தைக்கு புன்னகைகொண்டு, அவனுடைய மனம் மகிழும்படியாக உள்ளன்புடன் இனிய வார்த்தைகள் சொல்லி, சஞ்சயனே! பெருமை பெற்றிருக்கும் என் பெரிய தந்தையாகிய திரிதராஷ்டிர மகாராஜனும், ஐயா அவர்கள் வீஷ்மாச்சாரியரும், குரு சுவாமியாராகிய துரோணாச்சாரியரும், கிருபாச்சாரியாரும், கயிலாசபதியின் அருள் நிறைந்து பலஞ்சிறந்த அசுவத்தாமாவும், பெரிய

கியான வரம்பெற்ற சதுரனாகிய சிறிய தந்தை விதுர மகாராஜனும், இன்னும் உண்டாகிய பெரியோர்கள் யாவரும் சுகமா யிருக்கின்றார்களா குணபூஷணனே? என்று கேட்கவும், தூதுவந்த சஞ்சயன் கரத்தைச் சிரத்திற் குவித்து, ஐயா! அவர்களெல்லோரும் க்ஷேமமாக இருக்கின்றார்கள். உங்களுக்கு க்ஷேமம் உண்டாக வாழ்த்தி ஆசீர்வதித்தார்கள் என்று சஞ்சயன் சொல்லத் தருமராஜன் மனமும் தேகமும் மறந்து புளகமுற்றுச் சொல்லுகின்றார்.

அப்பா! பூர்வம் இராஜசபையிற் பொருந்திய மகா ஜனங்களெல்லாரும் உடல் பதறி ஆச்சரியப்படும்படியாகத் தம்பியை நோக்கி, திரௌபதையைக் கைப்பிடியாக இழுத்து வந்து என் மடிமேல் வையென்று தனது சிவந்த தொடையை ஆசனமாகக் காட்டிய துரியோதன மகாராசனும் சுகமா? நேசமாக யிருந்து மோசச் சூதாடக் கற்றுணர்ந்த சகுனி மாமாவும் சுகமா? பரிசுத்தமுள்ள பாஞ்சாலி இடையிலுடுத்திய வஸ்திரத்தைத் தடையில்லாமல் பிடித்து உரிந்து சபையில் மானபங்கம் செய்த தம்பி துச்சாதனனும் சுகமா? சுத்த வீரர்களை யுத்தஞ்செய்து வெல்வதற்குச் சத்தியில்லாமல் சிங்காரப் பேச்சினால் ஜெயிப்பேனென்று காலங்கழிக்கும் கர்னனும் சுகமா? மற்றப் புத்திர மித்திரர்களுஞ் சுகமா? பற்பல தேசத்து மன்னர்களுஞ் சுகமா? யானைத் தலைவர்-சேனைத் தலைவர்-படைத் தலைவர்-குடைத் தலைவர் - கொடித் தலைவர் - சேவகர் முதலிய யாவர்களுஞ் சுகமா? என்று கேட்கும் தருமராஜனைச் சஞ்சயன் பார்த்துப் பொல்லாங்கென்பவை எல்லாம் நீங்கிய உள்ளமுடைய வள்ளலே! அவர்கள் இதுவரையிலும் சுகம் இல்லாதிருந்தாலும், தேவரீருடைய திருநாவினால் க்ஷேமம் விசாரித்தபடியால், இன்றுமுதல் நாளுக்குநாள் அபிவிர்த்தியாவார்கள் என்று கூற, முரசகேதனன் மகிழ்ந்து சொல்லுகின்றார். ஓ சஞ்சயனே! நாட்டை விடுத்துக் காட்டை யடுத்து நெடுநாளாகப் பிரிந்த எங்களைப் பார்க்க எண்ணங்கொண்டு வந்ததோ? அல்லது திங்கள் மரபில் உதித்த எங்கள் குலத்தில் கதித்த யிறைவனாகும் திரிதராட்டிர மகாராஜன் சொற்படியே வந்ததோ? இவ்விடம் நீர் வந்ததற்கு யாது காரணம் விளம்புமென்று கேட்க, சங்கினங்கள் வயிறுளைந்து பெறும் ஆணிமுத்துக்கள் நீரின்மடைகளை அடைக்கும் வயல்களால் வளப்பங்கொண்ட திருநாடென்னுங் குருநாட்டுக்கு அதிபதியாகிய கோவே! உங்கள் பெரிய தந்தையாகிய திரிதராட்டிர மகாராசன் சொல்லி யனுப்பிய செய்தியைத் தெரிவிப்பதற்கு இவ்விடம் வந்தேன். ஆகையால், திருநாபிக்கமலமுடைய ஸ்ரீ கிருஷ்ண தேவரும், நீங்கள் ஐந்துபேரும் இந்த ராஜ சபையை நீங்கித் தனிமையி லிருந்து சங்கதி முழுமையுங் கேட்டு யோசிப்பீர்களாகில் மிகவும் நன்றென்று சஞ்சயன் விளம்பத் தருமராஜன் நகைத்து, வாளாயுதம் வேலாயுதம் பிடித்து இவிடத்தில் வந்து நிறைந்திருக்கும் இராஜமன்னவர்கள் யாவரும் எங்கள் பிராணனும்-ஊக்கமும்-உற்சாகமும்-ஊற்றமும்-புகழுமாக இருக்கின்றவர்களே யொழிய வேறல்ல; இவர்கள் அறியக்கூடாத இரகசிய மொன்றுமில்லை; இவர்களை அன்றி யாதொரு எண்ணமுமில்லை; தாய்க்கு ஒளிக்கும் சூதுமில்லை. ஆதலால், ஓ சத்தியத்தை நித்தியமாக நம்பும் சாமார்த்தியமுடைய சஞ்சயனே! இந்தச் சபையினிடத்தில் தடையில்லாமல் சொல்லுமென்று தருமராஜன் கூற, பாண்டவர்களின் கருத்தைத் தெரிந்துக்கொண்ட சஞ்சயனானவன், துளபமாலை அணிந்த மேகம்போன்ற திருமேனியையுடைய பகவானைப் புகழ்ந்து, சபைநிறைந்த மன்னவர்களை நோக்கித் தங்களுக்குத் தெரியாத காரியம் ஒன்றுமில்லை. இராஜதந்திரத்தை அநுசரித்து தனிமையிற் சொல்லவேண்டுமென்று புகன்றதே அன்றி வேறல்ல. அடியேன்பேரில் கோபஞ்செய்யாதிருக்கவேண்டுமென் றிருகரத்தையுஞ் சிரத்திற் குவித்து, வினைய வந்தனத்துடன் வணங்கி, கடைந்த இடையினையுடைய புனக்கிளி போன்ற திரௌபதாதேவியையும் பெருமையுடன் நோக்கித் தொழுது, ஐவர்களுடைய கருத்தையும் சிரமேற்கொண்டு முன்னம் என் கருத்தைச் சினவாமற் கேளுங்களெனச் சொல்லலுற்றான்.

மநுநீதி தவறாத மன்னரே கேளும்! நீங்கள் இந்தப் பூமியை ஆளவேண்டுமென்னும் ஆசையை விடுத்து, ஈஷணைத் திரையங்களைக் கடந்த மகாரிஷிகளைப்போல் நல்லகதி கிடைக்கும்படியாகத் தவஞ்செய்வதே நன்மை; பதின்மூன்று வருடம் வனத்திற் கைபழகி வந்த நீங்கள் (பழம்புண்ணுளி பரியாரி) என்பதைப் போல் மறுபடியும் காட்டுக்குப்போக பயப்பட

மாட்டீர்கள். சகல மந்திர தந்திர எந்திரங்களும் தெரிந்த சுந்தரராகும் புண்ணியசீலராகிய நீங்கள் இப்போது பவத்தை யொழிக்கும் தவத்தைக் கருதிச் சென்றால் அதிசீக்கிரத்தில் ஆன்மலாபம் கைகூடும்; கதியும் பெறலாம்; ஜன்மாந்திரத்திற் றவஞ்செய்யாப் பாவிகள் இம்மையிற் றவஞ்செய்ய விரும்பினால், தவங்கெட்டு அவமேலிட்டு நரகத்தில் விழுவார்கள். இதன்றியும், எல்லாப் பிறவியிலும் உத்தமமாகிய மானிடப்பிறப்பு அரிது. அதனிலும், ஊமை - செவிடு - குருடு - மூடம்-நோய் இவை நீங்கிப் பிறப்பது மிகவும் அரிது. கல்வியும்-கியானமும்-செல்வமும் நற்குணம் உண்டாவது அதனிலும் அரிது. தானம்-தருமம்-தவம் இவைகள் கிட்டுவது அதிலும் அரிது. இவைகளெல்லாம் உண்டாகிய காலத்திலும் மோக்ஷம் அடைவது மகா அரியதென்று லோகதர்மஞ் சொல்லுகின்றது. இந்தக் காரியங்களெல்லாம் ஒருருவாகத் திரண்டு, மாயா மயக்கம் அகன்று, தூஷண பூஷண திரஸ்காரங்களெல்லாம் சுத்தப் பிரமத்திற்கென்று பேரறிவு விளங்கிய பெருந்தகையோர் தேவரீர்களல்லது வேறில்லை. அகந்தையும், ஆசையும், அகப்பற்றும், புறப்பற்றும், மமதாங்காரமும் உள்ள சுயோதனன் உங்களுடன் உடன்பட்டு வாழ்வதுமில்லை; நாடு கொடுப்பதுமில்லை; பெறவேண்டு மென்னும் இச்சையும் உங்களுக்கு இல்லை. அனித்தியமாகிய ஆசாபாசத்தை விடுத்து, நித்தியமாகிய பிரமநேசவிசுவாசத்தைத் தொடுத்து, உண்மையாகிய ஊர்த்தகதியை யடைவதே உத்தமம். மேலும் ஓ தருமபூபதி! தேவரீர் பெரிய தந்தை சொன்னதாவது: பராகமகாரிஷியினுடைய சந்ததியிற் றோன்றிய தனக்குப் பிறந்த பிள்ளைகள் துரியோதனாதியர் நூறு பேர். என் தம்பி புத்திரர் ஐவர். இந்த நூற்றைந்து பிள்ளைகளில் பொய்யும் - சூதும்-பொறாமையும் மிகுந்து, மண்ணாசை-பெண்ணாசை-பொன்னாசைகொண்டு, கியான சூனியராய்க் குலத்தின் பேரையும் புகழையும் கெடுத்து, இனிப் பிறக்கும் பற்பல பிறவிக்கும் இடங் கொடுத்து, தந்தைமொழி - தாய்மொழி-குருமொழி-வேதமொழி இவையெல்லாந் தள்ளிப் பாபமென்னும் மூட்டையைத் தேடிப் பரதவித்து, என் வார்த்தையைக் கேளாமல் அலையும் துரியோதனாதிகள் பேரில் வைத்திருந்த பட்சத்தை விடுத்தேன்; என் மூத்த பிள்ளையாகிய தருமநந்தனனை நம்பி அடுத்தேன். சராசரங்கள் தோறும் வியாபித்திருக்கும் சுகப்பிரமத்திற்கு ஒப்பாகிய பிள்ளை அவன் ஒருவன்தான். அவன்தான் இந்த மண்ணும்-பெண்ணும்-பொன்னும்-வாழ்வும் நிலையில்லாத தென்று நிச்சயித்து இருப்பவன் அவன்தான் நீதிமான்; அவன்தான் கோமான்; அவன்தான் பூமான்; அவன்தான் சீமான்; அவன்தான் புதநிமான்; அவன்தான் சத்தியமே நித்தியமென்றிருக்கும் தருமனாகிய புத்திர சிகாமணி; என் உத்தரந் தள்ள மாட்டான். ஆதலால், "சிறியோர் செய்த சிறு பிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப்பது கடனே'' என்றும், "அகழ்தோறுந் தாங்கும் நிலம்போலத் தம்மை யிகழ்வார் பொறுத்தலை'' என்றும், "தம்மையிகழ்ந்தமை தாம் பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால், உம்மை எரிவாய் நகரத்து வீழ்வர்கொலென்று பரிவதூஉஞ் சான்றோர் கடன்'' என்றும் சொல்லிய நீதிவாக்கியங்களையும், கோபமும் பாவமும் சண்டாளமென்கிற கொள்கையுஞ்சொல்லி, முன்புநடந்த நன்மை தீமைகளை யெல்லாம் ஈஸ்வரார்ப்பிதஞ்செய்து, அக்காலத்தில் கூறிய சபதங்களையும இப்போது செய்ய எத்தனிக்கும் சண்டையையும் விடுவித்து, திருதராட்டிரன் பழியும் பாவமும் தழைக்கப் பாராளும் ஆசை விளைக்கும் எண்ணத்தையும், அறுசுவை யுணவாதிகள் விரும்பி அனுபவிக்கும் போகத்தையும் அருகப் பெருகும் சோகத்தையும் விடுத்து, இந்தத் தருமராஜனாகிய புத்திரனால் இருபத்தொரு தலைமுறையும் கதிசேரப் பெற்றான் என்னும் பெரும்புகழ் எனக்கும் என் கால்வழிகட்கும் விட்டு நீங்காதிருப்பதற்கு நன்னெறி ஓங்கிய தவத்தை உறுதியாகச் செய்வது உத்தமம். இதுதான் குடும்பக்கொத்து குன்றாமல் இருக்க வேண்டு மென்னும் ஆசைகொண்ட உமது தந்தை உரைத்தது என்று சஞ்சயன் சொல்ல, பெருமை என்பது சிறுமைப்படாமல் சத்தியத்தை அனுசரிக்கும் மெஞ்ஞான சிந்தையனுகும் தருமநந்தனன் பூதபௌஷிய வர்த்தமானந் தெரிந்துணர்ந்த சஞ்சயன் பன்னிச் சொல்லிய வார்த்தையை உன்னி, அழகுற நகைத்து, ஓ தெளிந்த சஞ்சயனே! இவ்வுலகத்து இராஜ ராஜர்களும் நகைக்கும்படியாக துரியோதனாதிகளால் நாங்கள் பட்ட அவமான நிந்தைகள் சக்ரவாளகிரி போல வளைந்து வளர்ந்து நிலைத்திருக்க, அதனால் விளைந்த சபதங்கள் பெரும்புறக்கடல்போல் சூழ்ந்

திருக்க இவைகளைச் சாதியாமல் முத்தியடைய முயற்சி செய்ய வேண்டுமென்று என் பெரிய தந்தை சொல்லியதைப் பார்க்கிலும், தமப்பிரபை - இமப்பிரபை - தூமப்பிரபை-வாலுகப்பிரபை-சாகரப்பிரபை-இரத்தப்பிரபை அழற்பிரபை என்னும் வெப்பமாகிய ஏழுநரகத்திலும் தனித்தனி வீழ்ந்து அனுபவிப்பது மிகவும் நன்மையாம். சத்தியவசனந் தப்பினல் நித்திய நோன்பு பலிக்குமா? தாயைக்கொன்ற பழியிருக்கக் கோடி கோடியாய்த் தானம்பண்ணினுல் மோக்ஷம் உண்டாகுமா? ஆசார ஈனமாகிய சண்டாளத்துவம் வகித்து விரதம் அனுஷ்டித்தால் தவங் கைக்கூடுமா? பழியையும் நிந்தையையும் சுமந்த நாங்கள் எத்தனை விதமாய்த் தவஞ் செய்தாலும் நரகமே அன்றிச் சுவர்க்கங் கிட்டாது. ஓ சஞ்சயனே! ஒரு சிறிய கதையைச் சொல்லுகிறேன் கேளும்.

ஆற்றின் கரைமேல் ஐந்துபேர் நின்றூர்கள் நிரம்பிய வெள்ளத்தில் கரடியானது தலையைக் கால்சந்தில் வைத்துக்கொண்டு மிதந்து வருவதைக் கண்டு கம்பிளி மூட்டையென்று கருதினார்கள். அவருள் ஒருவன் நீந்திப் போய் அதைப் பற்றவும், நிராதரவாக வந்த கரடி அந்த மனிதனுடைய கழுத்தை கட்டிக்கொள்ளவும், இவனும் அதுவும் முழுகியெழுந்து வருத்தப் படும்போது, கரையில் நின்ற நால்வரும் கம்பிளி மூட்டையைக் கைவிடுத்து நீ வந்துவிடு என்று சொல்ல, கம்பிளி மூட்டையை நான் கைவிட்டு விட்டேன் கம்பிளி மூட்டை என்னைக் கைவிடவில்லை என்று ஓங்கிக் கூவி உயிரினையிழந்தான். அதுபோல சபதத்தையும் யுத்தத்தையும் கைவிட்டு நாங்கள் தவஞ் செய்தாலும், அவைகள் எங்களைக் கைவிடாது. மேலும் எக்குலத்தாருக்கும் இணையற்ற மேலாகிய நற்குணம் நற்றவம் எங்களுக்கு விளங்கச் சொல்ல வேண்டியது தந்தையின் கடமையே அந்தத் தந்தையின் தருமகுண வாக்கியத்தைத் தள்ளாமற் செய்வது எங்கள் முறைமையே. ஆயினும், தரும சாம்பிரதாயமாகிய நற்குலத்திற் பிறந்த மன்னரானவர்கள், ராஜ முறைமை தவறி வேறொரு காரியங்களைக் குறிப்பார்களா? சஞ்சயனே! வீரப்பிரதாபத்திற் சிறந்த தீரர்கள் கூறிய சபதம் நிறைவேறும்படியாகச் சத்துருக்களுடன் எதிர்த்து புறமுதுகுகாட்டி ஓடாமல் நின்று ஜயங்கொண்டு வெற்றிமாலை சூடினால், இப்பூமியில் கல்லெழுதி நாட்டுவதும் அன்றி, வீரசொர்க்கமும் பெறுவார்கள். இப்பூமியாகிய தலமும் சலமும் உள்ளவரைக்கும், அவர்களின் குலமும் குணமுங் கீர்த்தியும் நிலைக்கும். இதைவிட அறமாகிய தவம் எவ்வுலகத்திலுமில்லை. முன்கூறிய சபதமும் சத்துருக்களும் முடியாதிருக்கத் தவஞ் செய்ய மனம் வராது. இப்படிக்குச் சுளுவாகிய தவம் எங்களுக்கிருக்க, காட்டிலிருந்து கந்தமூல பலாதிகளைப் புசித்துண்டு, காற்றிலும்-வெய்யிலும்-பனியிலும்-குளிரிலும் வருந்தி மோட்சம் பெறும்படியாகப் பெரிய தந்தை முதிர்ந்த வயதினால் தெரியாமற் சொன்னதுபோலும் இருக்கின்றது என்றிவ்வாறு கண்கள் சிவக்கக் கடுங்கோபத்துடன் தருமநந்தனன் சொல்லிய வார்த்தையைச் சஞ்சயன் கேட்டு, ஐயா! பழைய பகையை மனதில் குடிவைத்துக்கொண்டு யுத்தம் புரிந்து சபதம் நிறைவேற்ற நினைப்பது, கற்றுணர்ந்த காவலராகும் புண்ணியம் நண்ணிய விவேகவான்களுக்கு முறைமையோ? அப்படியே யுத்தம் செய்தாலும் என்ன பலன். அண்ணன் தம்பிகள் மாமன் மைத்துனர் புத்திரர் மித்திரர் சுற்றத்தார் மற்ற தேசத்தார் யாவர்களையுங் கொன்று யமன் கையில் ஒப்பி வைப்பதிலும், வனங்களிலிருந்து தவங்களிழைத்துப்பவங்களொழிப்பது வகையோ? அதுதான் என்றும் அழியாத இசையோ? முள்ளாடியும் வாழைக்கே நஷ்டம்; வாழையாடியும் வாழைக்கே நஷ்டம். தெரியாத பேர்களைத் தெரியச் செய்யலாம். தெளிந்தோர்களைத் தெருட்டுவது அருமை. மேலும், திங்கள்மரபுக்கு வித்தாகியும், உங்களுக்கெல்லாம் பாட்டனாகியு மிரா நின்ற வீஷ்மாச்சாரியர் - உயர்ந்த சிலைக்குருவாகிய துரோணாச்சாரியர் - கிருபாச்சாரியார்- ஒருசாலை மாணக்கரில் பால்ய சிநேகராகிய குருபுத்திரர்-அசுவத்தாமர்-தந்தைக்குப்பிந்தி வந்த தத்துவக்கியானியாகிய விதுரமகாராஜன் முதலிய பேர்கள் இந்தக் குலந் தழைக்க வேண்டுமென்னு உத்தம நினைப்பினையுடைய பெரியோர்கள் இவர்க ளெல்லாரும் புவன பூபதியாகிய திரிதராட்டிர மகாராஜனுடைய செல்வநலத்தைக் குறித்துக் காவலாகக் கைவசப்பட்டிருக்கின்றவர்கள். மேலும் இவர்கள் திரிலோககண்டரென்னும் உமக்குத் தெரிந்திருக்குமே? இப்பேர்ப்பட்ட முதியோரெல்லாரும் அழியும்படியாகப் பழிபூண்டு, உலகம் அதிர வெற்றிகொண்ட அன்றைக்கு அல்லவோ நீங்கள் ஒருகுடை நீழலில் உலகம்

அடக்கி ஆளப்போகிறது. அவர்கள் அழி யப்போகிறதும் இல்லை. உலகம் நீங்கள் ஆளப்போகிறதும் இல்லை. ஜயிப்பதற்கு அரு மையாகிய காரியங்களில் நீங்கள் துணிவது நன்மையன்று. இத்தன்மையாகிய உத்தமர்க ளுடன் எதிர்த்து யுத்தஞ்செய்து கொல்லுவ தற்கு உங்களுக்கு ஒருக்காலுமன நந்துணியாது. இரக்கமும் சீவகாருண்யமுமுள்ள வேந்தலே! தன்பலமும் எதிரியின் பலமும் யோசிக்கவேண் டிய தருமத்தை இங்கு நினைக்கவேண்டும். ஒரு வரை நெருங்கிய கோபாக்கினி மிகுந்த கண் களையுடைய வலிமையோரென்றும், மற்றொரு வரைச் சாமர்த்தியமில்லாத துற்பலரென்றும் இப்போது நினைப்பதிலும் சொல்லுவதிலும் என்னலாபம். அவரவர் சேவகங்களை எதிர்த்து யுத்தஞ்செய்து அமர்க்களத்தில் தெரிந்து கொள்ளவேண்டியது. அன்றியும் சந்திர குலத்திற் பிறந்த இருதிறவரும், சிறியோர்கள் யுத்திகேட்டு நிதானிக்காமல் போர்செய்ய நினைப்பீர்களாகில், மெலிவாகிய துன்பக்கட லில் மூழ்கிப்போய் விடுவீர்கள். நடுவுநிலைமை யும் நன்மனமும் உடைய பெரியோர்களின் புத்தியைக் கேட்கில், அதனால் இன்பக்கடலுள் மூழ்கலாம். எனக்குத் தோன்றியதைச்சொன் னேன். அப்பால் உங்கள் சித்தமென்று கோப மில்லாத சஞ்சயன் கூறியமாத்திரத்தில், சூரி யனைக் கனிந்தகனியெனத் தாவிய நவவியா கரண பாண்டித்தியமுடைய ஆஞ்சநேயருக் குத் தம்பியாகிய வீமசேன மகாராஜன் இனி நமது தமையனும் முரசத்துவமகாராஜனுக் குப் பதிலாக நாமே நேரிற் பேசவேண்டிய கடமை. இனிச் சும்மாயிருக்க லாகாதென்று இருவிழிகளும் செவ்வரக்கினு நிறக்கச்சிவந்து, ஒப்பற்ற உகாந்த காலத்தினில் மேகம் இடிக் குந் தன்மைபோல் முழங்கி, கொடிய கோப மேற்கொண்டு சொல்லுவதானான்.

ஓ சற்குணத்திலுஞ் சாதுர்யத்திலுஞ் சிறந்தவனே! எங்களுக்கும் எங்களைப் பகைவ ராக்கிய எதிராளிகளுக்கும் பொதுவாக யிருக் கும் நீ, ஒருதலைப்பக்ஷமாக அன்புகொண்டு பேசுவது உனக்குத்தகுதியோ? இது ஞாய மன்று. ஆனால், அரசனெவ்வழியோ அவ்வழி குடிகளென்னுந் தன்மையாய்ச் சொல்லுகின் றனை. அது நிற்க, பெரியோர்களுடன் யோசி த்து என்பிள்ளைகள் கூடி வாழும் வித்தைச் சொல்லி அனுப்புகிறேனென்று அஸ்தினா புரத்திற்கும் அதுவந்த உலூகமாமுனிவரி டத்தில் எங்கள் பெரியதந்தை சொல்லி அனுப்பியிருக்க, அதை மறந்து இப்போது நாட்டைத்துறந்து காட்டிலிருந்து தவத்தை செய்து முத்திபெறும்படியாக எங்களுக்குப் புத்திசொல்லி அனுப்பிவைத்தது என்ன கார ணம். ஆதிசேஷனாற் சுமக்கும் அவனியை ஆளும் அரசர்கள் ஒன்றைச்சொல்லி மற் றொன்றை விரும்பி அதுவேறுபடப் பின்னை ஒன்றைச்சொல்லுவார்களோ? ஆகிலும் பாண் டவர்களும், கௌரவர்களும் இடதுகண் வலதுகண் என்று எண்ணாமல், பிடரியிற் புத்தியுடைய கண்ணில்லாத அண்ணல் தகுதி யும் பெருமையும் அல்லாத காரியங்களைச் சொல்லி அனுப்பினான். காவலரும் சேனைக ளும் கடல்போற்கலந்து வெப்பமாகிய யுத் தஞ்செய்யும் போர்க்களத்தில் என் கரந்தாங் கிய கதையினால் செய்யப்பட்ட அதிசயமாகிய தவங்களைச் சொல்லுகின்றேன் கேளும். ஓ ஐயனே! எங்கள் தந்தை சொல்லியவண்ணம் நீ வந்து சந்தோஷித்துச் சொல்லியது அரிய தவம் அல்லவேயல்ல, நான் செய்யப்போகின் றது பெரியதவம்; அதென்னவென்றால், சத்து ருக்களின் தேகத்திலிருந்து மாரிபோலப் பொழியும் உதிரச்சோரியில் மூழ்கி, தலை அறு ந்து ஆடும் கவந்தமாகிய காட்டில் ஸ்தம்பித் திருந்து உள்ளத்தில் கொதித்துக்கொண்டு இருக்குங் கொடிய தீவினைகளைக் களைந்துவிட் டால், அதுதான் தவங்களுக்கெல்லாம் தலையா கிய மோக்ஷத்தைத் தருவதான தவம். இது எனக்குப் போதும், இந்தத் தவமும் அல்லா மல் பிரபலயாகமும் நடத்துகிறேன் கேளும். கடல்சூழ்ந்த உலகத்தில் போர்க்களமென்னும் யாகசாலையில், துரியோதன னாதியரென்னும் நூறு பசுக்களை என்கதையாகிய யூகஸ்தம்பத் தில் அணைத்து, அவர்களின் வினைக்காத்து வீச எனது கோபாக்கினிமூட்டி, திரௌபதை யின் சபதமென்னும் நெய்யைச் சொரிந்து, பகையென்னுஞ் சமித்தைச்சேர்த்து, வீரம் என்னும் முனியினால் வேதமந்திரமொழிந்து, பாஞ்சாலி விரித்த கூந்தல் முடிக்க அவிர்ப்பா கங்கொடுத்து, எங்கள் பெரியதந்தைக்கும் சந் திரகுலத்திற்கும் குறைவில்லாப் புகழ் நிறை யும்படியாகராஜசூயயாகமுஞ்செய்வேன். அது வரையில் கதையினால் சலத்திலடித்து மேல் எழும்பும் துளியை வாயினாலருந்தி தாக விடாய் தீருவதன்றிக் கரத்தினாற் சலம் வாரிப் பருகேன். அப்போதுதான் யான் சபதங் கூறிக் கட்டிய கங்கணத்தையும் அவிழ்த்து

விடுவேன். அக்ரகண்ய மரியாதையும் அரசுரிமைக்குரிய முடியும் அறக்கடவுளாகிய எங்கள் அண்ணவுக்குத் தரிப்பேன் என்று ஆங்காரங் கொண்டு ஓங்காரமிட்டு பற்பல மொழிகள் சொல்லிய மற்புய வீமனை தருமராஜன் கையமர்த்தி, மலர்மாலையும் மணிமகுடமுந் தரித்த மன்னர் மன்னன் தூது அனுப்ப வந்த சஞ்சயனே! எனக்குத் தோன்றியது ஒன்று சொல்லுகின்றேன் உனது மனங்கொள்ளக் கடவை. அதாவது துரியோதனன் மோசமாகப் பறித்துக்கொண்ட ராஜ்ஜியத்தை வாங்க வேண்டும் என்றும், வழியாய்க் கிடையாவிட்டால் யுத்தஞ்செய்து வெற்றியிற் கொள்ளுவோம் என்றும், எவ்விதத்திலும் ஜயங்கொள்ளும் வீரமுடையவர்களென்றும் வரங்கள் முதலியவை பெற்றேமென்றும், மிகுந்த சிறப்புக்களைத் தாங்கினே மென்றும், மகிழ்ச்சியடைந்து சொல்லயில்லை. வினை வசத்தால் ஈஸ்வரச்செயல் எப்படி நடக்குமோ யாமறியோம். மாமாவாகிய சகுனியை எங்களுக்கு இணையாகிய எதிரியாக்கி, மாயச்சூதினல் வையகமுழுமையுங் கைக்கொண்ட தல்லாமல் சபையோர் நகைக்க, தம்பிமார் உடல்ப்தைக்க எங்களை மதிக்காமல் தையல் திரௌபதையை அவமானப்படுத்திய தாழ்ச்சியை யோசிக்குமிடத்தில், இந்தத் தேகமும் வைத்திருக்க வேண்டுமோ சஞ்சயனே! அப்போது எங்களுக்குக் குலமும் - நல்மும் - மானுபிமானமும் - தீரமும் -வீரமுஞ்-செல்வமுங்-கல்வியும் இல்லாமல் நாங்கள் சித்திரம்போலிருக்கவில்லை. ஓ உத்தமனே! சத்தியமுந் தருமமுங் குன்றலாகாது என்று அன்று மனம் பொறுத்து இருந்தோம். மன்னர் முன்கூறிய வாக்கியப்படிக்குப் பதின்மூன்று வருடமுங் கழித்தோம்; நீதியின்படி தூதும் விடுத்தோம்; பெரிய தந்தை சொல்லியனுப்பிய வார்த்தையுங் கேட்டோம்; இனிமேல் இராஜவீர முறைமைதப்பாமல் எங்கள் சபதங்களையும் மனத்திலுற்ற குற்றங்களையும் நீக்கிக்கொள்ளச் சித்தமாயிருக்கின்றேம். மானங்கெட்ட பிற்பாடு பிராணனிருந்தும் பிரயோசனமென்ன? "குணமென்னுங்குன்றேறி நின்றர்வெகுளி, சனமேனுங் காத்தலரிது" என்று இருக்கும் நீதிக்குச் சரியாக நாங்கள் இதுகால் நடந்திவந்ததும் இனி நடக்கப்போகிறது நன்மையோ தீமையோ யோசித்துப்பார்? அழகிய மேனியிற் குணபூஷணமணிந்த ஓ சஞ்சயனே! எந்தையாகிய பாண்டு இறந்த சிந்தைத் துயர்தீர விந்தையாகிய வித்தைகளைக் கற்பித்துச் சொந்தமாக இரட்சித்தபெரியதந்தைக்கு இவையனைத்தையுஞ் சொல்லும்; நாங்களோ வாளாயுதத்திற் கைபழகிய மகாராஜாவின் மைந்தர்களுடனேயும் அவர்களுடன் சிநேகமாயிருந்து தருமங்களையும் சத்தியங்களையுங் கெடுத்துப் பாபத்தைச்சேர்க்கும் ஆபத்தைப்போன்ற சில பாவிகளுடனேயும் யுத்தஞ்செய்து வெற்றியடைந்து எங்கள் பத்து செலுத்துவதே அன்றி, வேதவேதியர் மூதாதையர் சிறிய தந்தை அசுவத்தாமா முதலியவர்களிடத்தில் போர்புரிய நினைக்கமாட்டோம். கல்வியின் அழகார்ந்த சஞ்சயனே! அரசர்களுக்கு இயல்பாவது, சொன்னசொற் றப்பாமல் நீதிசெலுத்தி தர்மபரிபாலனஞ் செய்வதேயாம். ஆகையால், எங்கள் சபதங்களை நிறைவேற்றிக் கொள்ளும் வேலைகளில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கின்றேம். எங்கள் பெரியதந்தை உம்மிடத்திற் சொல்லி யனுப்பிய வார்த்தையைத் தள்ளிவிட்டோமென்று கோபங்கொண்டு எங்கள்பேரில் இதுவரையிலும் வைத்திருந்த கிருபையும் கடாக்ஷமும் அவரிடத்திற் பொய்த்துப்போனலும், நாங்கள் நம்பியிருக்கும் வழிபடு கடவுள் எங்களிடத்தில் வைத்த தயையும் அன்பும் ஒருக்காலும் தப்பாது. இதுகளையெல்லாம் நிச்சயமாக நீ யுணர்ந்துகொள்ளென்று தருமசொரூபர்சொல்லவும்,ஒப்பில்லாதபைந்துளபமாலையணிந்த திருமார்பனுகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் அந்தச் சபையிலிருந்த அரசர்களெல்லாரும் வெவ்வேருகக் கொண்டிருந்த எண்ணங்களை விடுத்து சந்தோஷத்தில் மூழ்கும்படியாக ஒரு வாக்கியஞ் சொல்லுகின்ருர்.

ஓ சஞ்சயனே! வஞ்சகச்சூதாட ஆசைகொண்டு பாண்டவர்களிடத்திற் பறித்த பூமியைத் துரியோதனன் கைப்பற்றிக் கொள்ள வேண்டியதே யொழிய, இந்த பேதையாகிய பாஞ்சாலியை மயிரைப்பற்றி இழுத்துவரச் சொல்லவும், வயிரூர நாறுபிள்ளைகளைப் பெற்றும் மலடியாகிய பெரும்பாவியிலுங் கொடும்பாவிபோன்ற காந்தாரியிடத்தில் மாமிமாமி என்று சென்று கண்கலங்கினள் பயப்படாதேயென்று ஆதரிக்காமல், சொந்த மச்சினமார் சபைக்குப்போக இலச்சை என்னடி என்றும் அடிபோடி (கள்ளிக்காக்கை கற் என்றல் மூக்கை மூடிக்கொள்ளும் காயக்கி) என்றும் சொல்லி, தாக்ஷிண்ணியமில்லாமல் கையைப் பிடி

த்து இழுத்துக்கொண்டு போவென்று சொன்னதும் பெருமைதானா? அந்தப் படுபாவி அவ்வாறே சபையில் இழுத்துவந்ததும் தன் மந்திரிகளெல்லாரும் சரிப்போனபடி பேசியதும் ஞானமா? மேலும் அம்மா என் புருஷர்களாகிய ஐவரெங்கே என்று கேட்டால், சின்ன மனிதரெல்லாரும் கலகலவென்று நகைக்க மன்னனுக்குத் துணைவனாகிய கர்னன் இனி உனக்கு அவர்கள் ஏன் என்றும், இந்தச் சபையில் கண்ணுக்கு ரம்மியமாகிய புருடனைக்கூடிக் கலந்து வாழடியென்றும் சொன்னது குலமைந்தன் காதுக்குக் குளிர்ச்சிதானா? மேலும் உத்தமி புத்திரனாகிய உலகாளும் இராஜன் அந்த மகாசபையில் வஸ்திரத்தை உரிந்து மானபங்கஞ் செய்யச் சொன்னதும், தன் தொடைமேற் கொண்டுவந்து அவளை வையடாதம்பி யென்றதும், வம்சபரானுடைய மதிதானா? கடவுள்சகாயத்தினாலும் பதிவிரதா தர்மத்தினாலும் வளர்ந்த மாளாத வஸ்திரத்தைக்கண்டு திரிதராட்டிரன் வணங்கி, என் மருமகளே! இவர்களெல்லோரும் உன் பிள்ளைகள் நீ என் குலதெய்வம் கோபிக்கவேண்டாமென்று வேண்டிக்கொண்டு சூதினால் தோற்ற நாடு நகரங்களெல்லாங் கொடுத்த போது, அதை இந்தத் துரியன் கூடாதென்று தடுத்ததும் முறைமைதானா! மறுபடியும் பாஞ்சாலி நாணத்தோடு மிருந்து சூதாடித் தெய்வ அனுக்கிரகத்தினால் பாண்டவர்களையும் பார் முதல் பாக்கியங்களையும் கெலித்துத் திருப்பிய போது, இன்னம் இவளோடு ஆடினால் மாமா நம்மையும் உம்மையும் கெலிப்பாள் என்று சகுனி இடத்திலும் மற்ற பேர் ளிடத்திலும் ஆலோசித்து, பன்னிரண்டு வருடம் வனவாசமென்றும், ஒரு வருடம் அக்கியாதவாசமென்றுஞ்சொல்லி அனுப்பி விட்டதும் நீதிதானோ? இந்தப் பதின்மூன்று வருடமுங் கழித்து அவர்கள் வந்தால் நாடுகொடுத்துவிடுகிறேன் என்று சத்தியவசனஞ் சொல்லி, இப்போது தூதுவிடுத்துக் கேட்டால் யுத்தத்திற்குச் சித்தமாயிருக்கின்றேன் என்று சொல்வதும் நன்மைதானா? அதற்குத் தந்தையாகிய பெரியவர், பாண்டவர் காட்டுக்குப்போய்த் தவஞ்செய்வதே தனக்குக் கண்காட்சி என்று சொல்லி யனுப்புவதும் முறைமைதானோ? இதுகளெல்லாம் உத்தமகுலத்திற் பிறந்த யோக்கியர்களாகிய அரசர் செய்யும் தருமநீதிக்கு மாட்சிமையாமா? ஓ சஞ்சயனே? மூளையிற்றானே இள்ளி எறிந்தால் பிற்பாடு விளையவும் விளையாது கிளையவுங் கிளையாது. அந்தக் காலத்தில் தன் பிள்ளைகளை வயிரமாகும்படி விட்டுவிட்டு,இந்தக்காலத்தில் வாய்புளிப்போ என்பதுபோலும் (கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்தால் அது உருகிக் கண்ணில் விழும் அப்போது பிடித்துக் கொள்ளலாம்) என்னும் தன்மைபோலும் இருக்கின்றது பெரிய அரசன் சொல்லிவரவிட்ட வார்த்தை. மேலும் இந்திரப்பிரஸ்தத்திலிருந்தபரிசுத்தவான்களாகிய பாண்டவர்களை மரியாதையுடன் வரவழைத்து பசுவைப் புலிவாயில் தள்ளிக் கொடுக்குந் தன்மைபோலத் துரியோதனன் சகுனியிடத்தில் காட்டிக்கொடுத்தபோது தாய்மையும் விதரணையும்உடைய பெரியோர்களும், பெரிய தந்தையாகிய அரசனும், இப்பேர்ப்பட்ட இகழ்ச்சியெல்லாம் சபையில் நடக்கப் பார்த்து சீவனில்லாத தேகம்போலவும், சிங்குவையில்லாத ஊமைபோலவு மிருந்தார்களேயொழிய, துரியோதனா உனக்கு இது புத்தியல்ல, மரியாதையல்ல, தருமமல்ல என்று ஒரு வார்த்தை சொன்னதும் உண்டோ? சஞ்சயனே! சுத்தமுள்ள உத்தமர்களானால் எவரையும் ஒருவிதமாகக் கொள்ளும் பட்சமில்லாமலும் கெடுநினைப்பு இல்லாமலும் இருதிறவர்களும் பொதுமை என்று எண்ணும் நீதியில் வல்லவர்களுமாயிருந்து, இந்த அநியாயமும் அக்கிரமும் சந்திரகுலத்தில் நடக்கக்கூடாது என்று ஒரு வார்த்தையினால் நிறுத்திவிடக் கூடுமே அப்படி விலக்காமலிருந்து இந்தத் தீங்கு விளைந்ததற்குக் காரணம் திருதராட்டிர மகாராஜனே அன்றி, வேறொருவரை நோகத் தக்கது இல்லை. இதற்கு மூலஞ் சொல்லுகின்றேன் கேளும்; சஞ்சயனே! காமம்-குரோதம்-உலோபம்-மோகம்-மதம்-மாச்சரியம் ஆகிய உட்பகை ஆறுங் கூடிய துரியோதனனே கொடிய பெரிய விருக்ஷம்: அதற்குப் பிராணனும் வாசனையும் சூரியகுமாரனாகிய கர்னன்; சப்திக்கும்படியாகிய கிளைகள் சகுனி; கல்லின்மேல் வழுதலை காய்க்குமாவென்றால் கொத்தாலாயிரம், கொடியாலாயிரம் என்னும் மைத்துனர்கள்; அக்கிளைகளுக்கு இலைகள் தம்பிமார்களே; பூவும் பிஞ்சும் காய்களுமால் எவர்களுக்கும் உபயோகமில்லாதகனி துச்சாதனன்; திருதராட்டிர மகாராஜனே இந்த விருட்சத்திற்கு மூலமாகிய ஆணிவேர். இதல்லாமல் சத்தியம்-பொறுமை-சீவகாருண்ணிய முதலான நற்குணங்கள் வாய்ந்த திவ்யவிருட்சம் தருமராஜன்; அதற்குப் பிராணனும், குணமுள்ளமண

மும் வீமசேனனும் விஜயனும் நகுல சகாதேவர் இருவரும், கிளைகள் ஒப்பில்லாத பூவும்-பிஞ்சும்-காயும்-உலோகோபகாரமாகிய கனியும், யான் நெருங்கிய பிராமணர்களும் வேதங்களும் இந்த விருட்சத்திற்கு மூலமாகிய ஆணிவேர்; ஐயா சஞ்சயனே! இத்தன்மையவாகிய இரண்டு விருக்ஷத்தில் அழிவு இல்லாதது எது, அழிவது எது, உன் சிந்தையிற்றேர்ந்து மனப்பூர்த்தியாய் நிதானித்து செப்பக்கடவை என்று சொல்லி மேலும் விளம்புகின்றார்.

கேளும் சஞ்சயனே! சத்துருக்களைத் தொலைத்து சபதமுடிக்கக் கோபங்கொண்டிருக்கும் வீமசேனனும் அர்ச்சுனனும் யுத்தத்திற்கு எதிர்த்த காலையில், மண்ணசை பிடித்த வாழ்வை மனங்கொண்டிருக்கும் வஞ்சகராகிய துரியோதனாதியரின் வல்லபங்களை தாம் காண்போம் என்பதுவும் உண்டோ? (அரச மரத்தைப் பிடித்தசனி அதன்கீழ் வசிக்கும் ஆனைமுகனையும் பிடித்தது) என்பதுபோல, துரியோதனாதிகள் நூறுபேரும் இவர்களுக்குச் சகாயமாகிய மன்னவர்களும் மாண்டுபோவது நிச்சயம். வையகம் முழுமையும் பாண்டவர்கள் ஆண்டு அனுபவிப்பது சத்தியம். விவேகம் நீங்கிய திருதராட்டிரன் சொல்லிவிடுத்த கொடிய திமொழியை நீர்கேட்டுச் சம்மதித்து இவ்விடம் வந்து கூறியதை எங்கள் உயிருள்ள வரையிலும் மறக்கமாட்டோம் என்று சர்வசீவதயாபரனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லவும், இந்த வாக்கியங்களை யெல்லாங்கேட்டு மனங்கலங்கிய சஞ்சயன் வேறு தருமங்களையும் புத்திகளையும் சொல்லுதற்குப் புத்தி தோன்றாமல் உடலயர்ந்து, ஊர்த்துவ சுவாசங்கொண்டு, சற்றுநேரம் நின்று இத்தன்மையவாகிய எண்ணங்கொண் டிருக்கும் இறைவர்களே! நான் இவ்வளவு தூரம் வந்தும், பெரிய அரசன் மொழிந்த வார்த்தைகளைப் புதிய அலங்காரமாகச் சொல்லியும், யாதொரு பிரயோசனமும் பெறாதவனாக இருக்கின்றேன். தாங்கள் ஆதியோடந்தமாகச் சொல்லிய வசனங்கள் யாவற்றையும் பூமண்டலாதிபதியாகிய பெரிய அரசனுக்குப் போதிக்க வேண்டி யிருப்பதால், நீங்கள் கொண்டிருக்கும் கோபங்களும் மனஸ்தாபங்களும் நீக்க வேண்டியது. அறமாதி புருஷார்த்தங்களை ஆபரணமாகப்புனைந்த, ஓ ஐவர்கள் முதலிய அரசர்களே! தங்கள் சமூகத்தில் இன்றுயான் இயம்பிய மொழிகள் இகழ்ச்சி உடைய வாயினும், இணைவசனமாயினும், அவற்றில் சொற்சோர்வு முதலிய குற்றங்கள் இருந்தாலும், கோபமில்லாமல் க்ஷமிக்கவேண்டியது என்று உபசாரஞ்சொல்லி விடைகொடுங்கள் என்று வணங்கிய சஞ்சயனைநோக்கி, அந்த மன்னர்கள் சிற்சில வார்த்தைகள் சொல்லத் துணியுங் காலையில், மேருகிரிச்சாரல் வரைக்கும் போர் புரிந்த தீரதரனாகிய தாருகரனும் பாண்டு புத்திரன் பார்த்து, மடைகளென்னும் வாயினால் கடகடவென்றுவரும் சலங்களைக்கொண்டு மடமடவென்று வளரும் பயிர்களார்ந்த செய்கால் வளங்களையுடைய அரசர்களே! சற்று இருங்களென்று கைபமர்த்தி சஞ்சயனைப் பார்த்து, ஐயா! எங்கள் தந்தையாகிய பாண்டு பூபதி மாண்டுபோன ஏழாண்டில் ஆதரித்து, தனுர்வேத முதலிய கல்விகளும் வருவித்து, இளவரசு முடிதரித்து, சகலசுப சந்தோஷ வாழ்வைத் தந்து, செவிப்புலனும் மதிக்கண்ணும் மகிழ்வுபெறக்கண்ட அவர், இப்போது அவைகளையெல்லாம் விடுத்து, எங்களுக்குத் தாழ்வைக் கொடுத்து, கொடுமையாகிய பயிரைத் தழையச்செய்தார். ஆகிலும், "தந்தை சொல்மிக்க மந்திரமில்லை" என்றபடி பிதாவினுடைய வார்த்தைக்கு மேலாகிய மந்திரங்கள் ஒன்றும் இல்லாமையால், அந்த மொழியைத் தப்பி நடக்கலாகாது. நல்ல காரியமே சில பிள்ளைகள் காடாண்டு தாழ்விற் பறக்கவும் தந்தை செய்யலாமென்று நன்மை நூல் உணர்ந்த உத்தமர்கள் சொல்லி யிருக்கின்றார்களோ? சஞ்சயனே! இந்திரப்பிரஸ்தமென்னும் நகரையும், குருநாட்டையும், தகுதியாகிய செல்வங்களையும், நால்வகைச் சேனைகளையும், தாங்கள் விரும்ப வில்லை. பதின்மூன்று வருடம் துக்கத்தையே சுகமாகக் கொண்டு காடு திரிந்து கலங்கி கசங்கி வந்த எங்களை ஆசையையுடைய பெரிய தந்தையாகும் அத்தன் கண்டு, நமது புத்திரர் மிகவும் வருந்தி வந்தார்களே யென்று உட்கொண்டு, எங்களுடைய அருமை பெருமை யாவும் தெரிந்த தன் மனத்தின் தோன்றியதைக் கொடுத்து, அப்பா நீங்கள் இதை வைத்துக்கொண்டு வாழ்வைப் பெறுங்களென்று சொன்னால், குலமும் நலமும் கொடிகொண்டு தழைக்கும். பெருமையும் உண்டாம். எங்கள் மனத்தில் விளைந்த குறையும் நீங்கும். இப்போது ஏங்கி உம்மை வரவிடுத்தற் கேதுவாகிய பிழையும் எப்போதும் இல்லாமல் நீங்கி விடுமே. இப்போதும் சிறப்பினையுடைய

பெரிய தந்தையின் வார்த்தையைத் தள்ளாமல் சிரசாக வகித்துக்கொண்டு, அவருக்கே கீர்த்தி யுண்டாகும்படியாக இராஜ தருமமும் தப்பாமல் முயற்சி செய்துக்கொண்டு நடந்து போன காரியங்களை யெல்லாம் நாடாமல் சில வருடங் கழித்துக்கொண்டு வருகின்றோம். இதை நிறைந்த அன்பினையுடைய என் தந்தையினிடத்தில் சொல்லக்கடவை. நீதியைப் பிரக்கியாதியாயுடைய சஞ்சயனே! "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதுதோன்ற இருக்கும் தகுதியை உடைய பெரிய தந்தைக்கும், தாயாகிய காந்தாரியம்மனுக்கும், தவவிரதத்தில் உயர்ந்த பாட்டனாராகும் வீஷ்மாச்சாரியாரும், காமம்-வெகுளி-மயக்கம் அகற்றிய துரோணாச்சாரியார், கிருபாச்சாரியார், விதுர மகாராஜன் முதலிய பெரியோர்களுக்கும், திக்கு நோக்கிப் பணிந்தோம் என்று சொல்லும். மற்றவர்களுக்கு க்ஷேமம் விசாரித்தோமென்று சொல்லும். என்றுரைத்து, நரைதிரையை ஓட்டித் தேவாமிர்தத்தையும் தெவிட்டச் செய்யும் திவ்விய போசன மளித்து, சுகந்த பரிமள சந்தனங் கொடுத்து, மலர்மாலைகளும் அளித்து, அருமையாகிய பெருமையிற் சிறந்த பொற்கலையும் இரத்ன பூஷணங்களும் புனைந்து கொள்ளும்படி ஈய்ந்து, போய்வாரும் சஞ்சயனே! என்று செலவு கொடுக்கவும்; மற்றையர்களிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு வேகப்பரி பூட்டிய இரதம் ஏறி விரைவாகச் சென்று, திரைவாயிற் சூரியன் செல்லுங்காலத்தில் நோக்குவதற்குக் கண்கள் பாக்கியஞ்செய்ய வேண்டியதான சிலாக்கியமும் யோக்கியமும் உடைய அஸ்திநாபுரத்திற்கு வந்து சேர்ந்தான் சஞ்சயமுனிவன்.

இப்பால் சஞ்சயன் திரிதராட்டிர மகாராஜன் அரண்மனையுட்சென்று கண்டு வணங்கித் தூதுபோய் வந்த சங்கதிகளைச் சுருக்கமாகச் சொல்லத் தொடங்கி இந்திரப் பதத்திலுயர்ந்த யிறைவனே! கேளும் மூவர்களுந் தேவர்களும் மற்ற யாவர்களும் கொண்டாடிப் புகழும்படியாகத் தருமபூபதிவாழும் துன்பம் நீங்கி, இன்பம் ஓங்கிய உபலாவியம் சேர்ந்து தம்பிமார்கள்முதலிய தரணிபாலர்களும் சூழ்ந்திருக்கும் சபையிற் போய் அவர்களுடைய கருத்தெல்லாந் தெரிந்துகொண்டேன். ஆசைகொண்டு தேவரீர் சொல்லி யனுப்பிய தன்மை யாவற்றையும், இகபரத்துக் கேதுவாகிய இயற்கைகளையும் பற்பலவித உறுதியாகப் புகன்றேன். அருள் நிறைந்து சுரக்கும் முகத்தையுடைய ஐயா! திரும்பி வந்தேன். யான் தமது சமுகத்தில் என்னென்று சொல்லப் போகின்றேன். ஏந்தலே! சிறப்பினையுடைய துரியோதனன்-சகுனி-துற்சாதனன்-அங்கர்கோமான் இவர்கள் எல்லாரும் அவர்கள் நெஞ்சைவிட்டு நீங்காத பெரிய பகைஞராயிருந்தும், உன்பேரிலிருக்கும் நிஷ்டுர உறுதி வசனங்களை ஒரு யுகாந்தரம் சொன்னாலும் முடிவுபடா பலபல வார்த்தையேன் அவர்களுடைய மனவிருப்பப் பிரகாரம் இராசமுறைமையிற் சொல்லிய நடுவுநிலையின்படி அவர்களுக்கு அரசாக்ஷி கொடுக்காமற் போவீர்களாகில், அகண்ட சாம்பிராச்சியமும்-உன் மக்களும்-ஒக்கலும் - செல்வமும் - சீரும் இன்னஞ் சில பகலில் வாயுகுமாரனாகிய வீமசேனனுடைய கதையால் மாண்டுபோம். ஐயா! அவ்விடத்தில் நடந்த காரியங்கள் அநேகமுண்டு அவைகளை யெல்லாம் தேவரீருக்கு மாத்திரம் உரைத்தால் பூரித்த தோள்களையுடைய புண்ணியர்களும், திண்ணிய கண்ணியர்களும், உன் புத்திரர்களும், மற்ற மித்திரர்களும் கேட்பதற்கு இப்போது இவ்விடத்தில் இல்லாமையால் பொழுது விடிந்தவுடனே நித்தியவிதி முடித்துக்கொண்டு, தீங்கில்லாத திருச்சபைக்கு வந்து யாவருங் கேட்க சொல்லுகின்றேன் என்று திரிதராட்டிரனிடத்தில் சஞ்சயன் சிலவு பெற்றுக்கொண்டு விடுதிபோய்ச் சேர்ந்தான்.

இப்பால் உலகத்தை இருள்மூடுந் தன்மைபோல், தரணீசனாகிய திரிதராட்டிரனுக்கு மனச்சஞ்சலம் வந்து தோன்ற, பெருமூச்சும் நெடுமூச்சும் உண்டாய் ஆலஹாலவிஷத்தைப் புசித்தவர்கள்போல் நடுநடுங்கி ஆருத்துயரத்தில் வீழ்ந்து இரங்கி மயங்கித் தியங்கித் தாழ்ந்து ஒன்றுந் தோன்றாமல் நித்திரையின்றி இரட்டலும் புரட்டலும் அதிகரிக்க, கண்ணீர் சோர அழுவான். கையையூன்றி எழுவான். கால் நடுங்கி விழுவான். கடவுளே என்று தொழுவான். இப்படிக்குப் பலபல துன்பம் அடைந்து சகிக்கமாட்டாமல் மந்திரயுத்தியிலும் தந்திரயுத்தியிலும் உயர்ந்த தம்பியாகிய விதுரமகாராசனை அழைத்தோடி வாருங்களென்று உயிர்ச்சேவகரை அனுப்ப, அவர்கள் விரைந்தோடி வந்து வணங்கிச் சொல்லுமொழி கேட்டுச் செம்மலாகிய விது

ரன் அர்த்தராத்திரியில் அண்ணனிடத்திற்கு வந்து, அணிமலர்போன்ற அடியில் வீழ்ந்து ஆசீர்வசனங்கொண்டு அருகிலிருக்கும் ஆசனத்தில் இருந்து மார்பையும் தோளையும் தடவிக் கொடுத்து, வரண்ட நாவுக்குப் பசையுண்டாகக் கச்சாயவர்க்கங் கொடுத்து திடப்படுத்தி ஆலவட்டங்களால் உபசரித்துப் பல ஆறுதல் சொல்லி என்னை அழைத்த காரணம் யாது அண்ணாவே யென்று வினவத் தம்பியை நோக்கி, மாட்சிமையுடைய கல்வியிலும் கேள்வியிலும் சாஸ்திரக்கருத்து தப்பாமல் தெரிந்து நடக்கும் அப்பனே! மேலாகிய அறிவிற் சிறந்த சஞ்சயன் ஐவரிருக்கும் உபலாவியம் புகுந்து, யான் சொல்லிய வசனங்களெல்லாம் உரைத்து மறுமொழிகொண்டு இவிடம்வந்து அவர்கள் கூறிய சங்கதி அநேகங்களில் சிற்சில காரியங்களைத் தெரிவித்து நாளை உதயத்தில் வந்து மற்றவைகளையுஞ் சொல்லுகின்றேன் என்று விடைபெற்றுக்கொண்டு விடுதிக்குச் சென்றான். அதுமுதல் கண்ணுறக்கங் கொள்ளாமல் கலங்கிய எனக்கு எரியுங் கொள்ளியை ஏறத் தள்ளுவதுபோல், இந்த இராக்காலம் நான்கு யுகமாக நிலைபெற்றிருக்குந் தன்மைகொண்டு நலியச் செய்கின்றது. ஆகையால் ஏதாகிலும் தருமங்களைச்சொல்லி இந்த யிராப்பொழுதை போக்கடிப்பாயென்று இவிடத்திற்கு உன்னை யான் அழைப்பித்தேனென்றிறையவன் இயம்பக் கேட்டு, இளைய தம்பியாகிய விதுரன் சொல்லுகின்றான். என் அண்ணாவே! சதுரங்க தளத்துடன் சாமர்த்தியமுமுள்ள ஓர் அரசன் சளையாமல் யுத்தஞ் செய்யத் துணிந்து வளைந்துகொண்டால் அவனை வெல்லுவதற்கு வல்லமை இல்லாத சவுங்கலாகிய ராஜ தீரர்கள் எவர்களோ, அவர்களும் தான் சம்பாதிக்காமலே தந்தை முதலிய பேர்கள் எச்சிற்கையாலுங் காக்கை ஓட்டாமல் சேகரித்து க்ஷேமத்தில் வைத்த திரண்ட திரவியங்களை, பந்துஜன போஷகம் தானதருமம் பரவுபகாரம் செய்யாமல், தாங்களே பிரபுக்களென்று இறுமாந்து பொன்காத்த பூதம் போற் பார்த்திருந்து, அந்தப் பொருள் இழந்த பிற்பாடு தலை கவிழ்ந்து வாகன மிழந்து பூரியராகித் திரியும் பேதைபோன்ற லோகியரெவர்களோ, அவர்களும் திருடவேண்டுமென்னும் வியாபகமுடைய திருடர்களும் கல்கமும் வஞ்சனையும் செய்து சீவனஞ் செய்யக் கங்கணங் கட்டிக்கொண்டு திரிகின்ற கர்மிகளும், பற்பல பாஷைகளையும் சாஸ்திரங்களையும் படித்துணர வேண்டிய ஆசைகொண்டவர்களும், நித்திய தரித்திரத்தில் ஆழ்ந்து வருந்தி நிலையாகிய வாழ்வைப் பெறவேண்டுமென்னும் இச்சையை யுடையவர்களும், எந்த வேலையும் போகத்தை விரும்பி காமாந்தகராய்த் திரிபவர்களும், வியாதிக்காரர்களும், ஆகிய தேவர்களெல்லாம் தாங்களெண்ணிய கவலையினால் நித்திரை அற்றிருப்பார்கள். இவர்களுக்கு கண்ணுறக்கம் வராதிருப்பது ஞாயமே. பஞ்சாசதகோடி பூமண்டலாதிபதியாகிய தேவரீர் கண்ணுறக்கங் கொள்ளாதிருப்பதற்குக் காரணமென்னவென்று வினவிய விதுரனை இராஜன் நோக்கி, நிறைந்த உயிருக் குயிராகிய தம்பியும், மதி மந்திரியும், தோழனுமாகிய தோன்றலே! கேளும்; பலமும் நலமுமுடைய பாண்டவர்களால் நடக்கப் போகின்ற யுத்தத்தில், அபலமும் சபலமுமுடைய அரவகேதனன் முதலாகிய புத்திர மித்திர வர்க்கங்கள் என்னபாடு படுவார்களோ, எந்தக்கேடு கெடுவார்களோ என்று என் சிந்தை நினைத்து பெருமூச்செறிந்து, தியங்கி மயங்கி, திடுக்கிட்டெழுந்து நித்திரைவராமல் நெடுந்துயருழன்றேன். ஆகையால், என்னையுந் தேற்றி யுத்தம் நேரிடாமலிருப்பதற்குத் தகுதியாகிய யுத்தி யுபாயங்களையும் புகன்று அபாயம் நீக்கி ஆளவேணும் ஐயனே என்று அரசன் கூற, அவ்வார்த்தையைக் கேட்ட விதுரனவன் சொல்லத் தொடங்கினான்.

ஓ அகண்ட பூமண்டலாதிபதியாகிய என்னண்ணாவே! கேளும்; காசினியாளும் காவலர்களுக்கு இரண்டு காரியமுண்டு. அதாவது தாயாதி முதலிய பந்துக்களுடன் வித்தியாசமின்றி ஒருமை மனத்தினராய் உடன்பொருந்தி வாழ்வதே உலகமொய்க்கும் வாழ்வு. அப்படியில்லாமல் விரோதங்கொண்டு பகைத்து வாழ நினைப்பாராகில் மாறாததுயரம் ஆறாகப் பெருகும். இது சத்தியவசனமாதலால், உன் புத்திரர் ஐவரைப் பகைத்துக்கொண்டபடியால் விளையப்போகின்ற சண்டையை விலக்க வல்லவர்களொருவருமில்லை. அப்பகையை முதலில் விளையும்போதே முளையிற் கிள்ளிவிட வேண்டும். அப்படி கிள்ளாமற் போனதினால் இவ்வளவாய் விளைந்துவிட்டது. ஆகிலும் ஐயா! சிருஷ்டிகர்த்தாவாகிய திசைமுகன் வரன்முறைப்படி விதித்த விதியையே மதியும் அனுசரிக்கும் பாண்டுராஜாவின் புத்திரர் தங்களுக்கு நிரியாண நேரிடும் ஆபத்காலங்களி

லும் தேவரீர்பேரில் வைத்திருந்த அன்பும் புத்தியும் விசுவாசமும் ஆசையும் தினையத்தனை யேனு மறந்து மாறுபட்டு வேருக நினைக்க மாட்டார்கள். ஆனல் இந்திரப் பிரஸ்தத்தி லிருந்தவர்களை சபாமண்டபம் பார்த்துப் போகலாமென்று பெரிய தந்தையாகிய நீர் திருமுகமெழுதி கையொப்பமிட்டு வரவழை த்தகாலத்தில், உமது புத்திரன் மாயச்சூதாடி அவர்களுடைய உரிமையைக் கைக்கொண்ட போதும், உமது பிள்ளைகளும் அவர்களைச் சார்ந்தவர்களும் இழிவாகிய சொற்களை சொல் லியபோதும் தாமரை மலர்போன்ற முகத்தை யும் சரமாகிய கமுகின்பாளைபோன்ற குழலையு முடைய திருவுக்கொப்பாகும் திரௌபதியை மயிரைப்பற்றி இழுத்துவந்த காலத்திலும், வஸ்திரத்தை யுரிந்து மானபங்கஞ் செய்த காலத்திலும், கரத்தைநீட்டித் தொடையைக் காட்டி இந்தத்துடையின்மீது கொண்டுவந்து வையடா தம்பியென்று கூறிய காலத்திலும், அவர்களுயிறு முடலுநொந்து வருந்தி உன் பேரில் வைத்திருந்த அன்பும் ஆசாபாசமுங் கொஞ்சங் கொஞ்சமாக நீங்கிப் போய்விட் டது. அதைக்குறித்து நீர் ஆயாசப்படவேண் டாம். இவ்வுலகத்தில் உத்தமர், மத்திமர், அதமரென்று மூவருண்டு. அதாவது, "கற் பிளவோடொப்பர் கயவர் கடுஞ்சினத்திற், பொற்பிளவோ டொப்பாரும் போல்வரே விற் பிடித்து, நீர்கிழிய வெய்த வடுப்போலுமாறு மே, சீரொழுகு சான்ருேன் சினம்" என்றபடி, அண்ணு! அதமராகும் கயவர்களுடைய கோ பம் பிளந்த கல்லைப்போலாகும். மறுபடியும் பொருந்தாது. மத்திமராகும் புத்தியினர்களு டைய கோபம், வெட்டுப்பட்ட பொன்துண்டு போலாகி மூசையில் வைத்து படிக்காரமிட்டு உருக்கப்பொருந்தும். அதுபோல் இன்னெரு புத்திமான் இடையிலிருந்து சமாதானஞ் செய்தால் கலந்திருப்பார்கள். மேன்பாட்டினை யுஞ் சிறப்பினையும் கல்வித் திறத்தினையும் குல சாம்பிர தாயத்தையு முடைய உத்தமர்களுக் குக் கோபம் வராது. வந்தாலும் தண்ணீரின் பேரில் பாணத்தைத் தொடுத்தால் வடுவாகிய காயமும் வேறுபாடாகிய பிறிவுமில்லாமல் ஒன்ருகயிருக்குந் தன்மை போலாகும்; அது போல ஐவர்கள் மேன்பாடுடைய சீரியர் ஆத லால், எப்பேர்ப்பட்ட குற்றங்களையும் உடனே மறக்கத் தக்கவர்கள். வீரவழகு நிறைந்த தோள்களையுடைய வேந்தே! ஆண்மிக்கையி லும் விவேகத்திலும் கீர்த்தியிலும் நீதிஞாயங் களிலும் சத்தியத்திலும் இளையாமலுயர்ந்த பாண்டவராகிய நல்லபுத்திரர்களை இப்போது வரவழைத்து, அவர்களுக்குரிய பூமியைக் கொடுக்க மனதுளதோ சொல்லும். அப்படிச் செய்வீராகில் வீரகண்டா மணியைத் தரித்த அரசர்களாகிய ஐவரும் பெரிய தந்தையான உமது வார்த்தையைத் தள்ள மாட்டார்கள். சபையிற் சொல்லிய சபதங்க ளெல்லாவற்றை யும், குடும்ப தோஷத்தையும், பரராஜர்கள் பழித்த நிந்தையாகிய வழூஉச் சொல்லையும் மறந்து, உமது புத்திரர்களுடன் வித்தியாச மில்லாமல் பொருந்தி வாழ்வார்கள். அதனல் இந்தச் சந்திரமரபு மேன்மேலாகத் தழைக் கும். இப்படிச் செய்யாமல் கொடிதாகிய யுத் தம் விளையும்படியாக எண்ணுவையாகில்,கடல் வளைந்த காசினியை எல்லாம் அந்த ஐவரே ஒரு குடையில் ஆள்பவர்கள். இரணக்களத் திற்குப் பலியாக்கப் படுவோரெல்லாம் நினது புத்திரரும் பௌத்திரரும் மித்திரர்களுந் தான். இது உறுதியென்று நம்புவதற்கு ஒருக் காலுஞ் சந்தேகமில்லை. ஓ சிரேஷ்டனே! உயர்ந்த தபமும், சிறந்த பெருமையும், அரசர் முதற் சேனைகளின் கூட்டமும், உரிய பெரிய வர்களின் நண்பும், செல்வப் பெருக்கமும், சூதினல் தாயத்தாரை வென்ற மமதையும், ஏகபோகமாகிய இராச்சியத்தை ஆளுவதும், நூறு பிள்ளைக ளென்னுந் தொகைமகிழ்ச்சி யும், இவைகளெல்லாம் நித்தியமாகிய பொரு ளென்று நினைவுகொள்ளாதே, ஐயோ! அனித் தியமே ஏனெனில் தூண்டின் முள்ளில் மாட் டிய சொற்ப இரையைக் கருதி விழுங்கிய சல சரமாகு மீன்களுக்கு நேரிடுந் துன்பந்தான், உமது புத்திரர்களுக்குவரப்போகிறது. இரை யைக் கருதி உண்டு இன்னம் வாழலாமென்று வந்து விழுந்து மாட்டிக்கொண்ட மீன்களைக் கரையிலிருந்தவன் இழுத்துக் கொள்ளுவான் அதுபோல் பாண்டவர்களை வஞ்சித்து வாயிற் போட்டுக் கொண்ட பூமியை, நமது சொந்த மாகக் கொண்டு வெகுநாளிருந்து ஆண்டு அநுபவிக்கலா மென்னும் ஆசைமேலிட்டிருப் பதினல், நாளை நடக்கும் யுத்தகளமென்னுங் குளத்தில், பரசொத் தபேக்ஷயாகிய இரைக ளைக் கொண்ட உன் புத்திரன், வீமார்ச்சுனுள் கதையினுலும் விற்கணையினுலும் தூக்கிப் பாக்கியில்லாமல் மாட்டி இழுத்து வாட்டிவி டப் போகிருர்கள். வேட்டிமையுடைய அண் ணலே! நீர் இதை நன்ரு யோசிக்கக் கடவது. மெய்யாகவும் ஸ்திரமாகவும் நடக்கப்போகிற

இரகசியத்தை இன்று சொல்லி விட்டேன். மேலும் வீஷ்மாச்சாரியார் முதலிய என்போலொத்தவர்களெல்லாம் உன்புத்திரனுக்கு எத்தனை விதத்தில் வருந்திச் சொன்னாலுங் (கிழவன் பாடல் கின்னரிக்குச் சரிப்படாது) என்பது தோன்ற, காதுக்கு நாராசமாகவும் நாவுக்குக் காஞ்சிரங்காயாகவும் இருக்கின்றது. லாபலோபத்திற் குடன்பட்ட நண்பர்களைப்போலும் விரும்பியிருக்கும் கர்னன்-சகுனி-துர்ச்சாதனன் இவர்கள் சொல்லும் வார்த்தைகள், தேன்பாகு-மணப்பாகு-கற்கண்டுப்பாகு-சீனிச்சருக்கரைப்பாகு இதுகளுக்கு மேலாகிய மாதுரியமா யிருக்கின்றது. ஐயா! இது நன்மை இது தீமை என்றுணராத சிறுபிள்ளையினிடத்தில் ஏகச்சக்ராதிபத்தியத்தை விடுத்து ஏதொரு பலனுமில்லாத யோகீஸ்வரனைப் போலிருக்கின்றாய். அவனோ அவனைச் சேர்ந்தவர்களோ, அழகிய ஆயுதங்களையும் அரம்பாஸ்திரீகளையும் வைத்துப் படைக்கும் வகையுணராத நபும்சகர்களைப் போல, வழிதுறை இல்லாமல் தங்கள் மனது வந்தபடிக்கு நடந்து செய்தற்கரியனவற்றைச் செய்யும் பெரியோர்களையும் எடுத்தெறிந்து பேசி, (இளங்கன்று பயமறியாது) என்பது தோன்ற, உமது உரிய வார்த்தைக்கும் உடன்படாமலிருக்கின்றார்கள். உன் புத்திரர்களைக் குறித்து நான் என்ன சொல்லுவேன். அவர்களுக்காக நீர் விசனப்படுவானேன். பெருமூச்சு விடுவானேன். நித்திரையற் றிருப்பானேன். கமுகம்பாளை விரிந்து அதிற் பெருகிய தேன்கள் சொரிந்து பாயுங் குருநாட்டுக்கு நாயகமாகிய எங்கோவே! இன்னமுங் கேளும் நீர் கொடுத்த காண்டவப் பிரஸ்தமென்னுங் காட்டைத் தெய்வானுகூலத்தால் நாடு நகரங்களாக வேற்படுத்தி அரசுபுரிந்து, பெருமை பாராட்டிக் கொண்டிருந்த பாண்டவர்களை முன்பின் எண்ணாமலழைப்பித்து, சகுனியை எதிராக்கி சொக்கட்டானாடச்செய்ததே தகாது. அதிலும் பந்தயம் வைக்கச்சொன்னது பழுதுபோலும். ஐவரையும் திரௌபதையையும் வைத்துக் கெலித்தது ஐயையோ!! அனியாய மனியாயம் இப்படியாகச் சூதினாற் ஜயங்கொண்ட பூமியைக் கைப்பற்றினாலும் ஒருவிதத்திற் பெரிதல்ல. தேவர்கள் முதலிய யாவர்களும் துதிக்கும்படியாகிய பெருமையிற் சிறந்த பாண்டவர்களாகிய பிரபலரை, அற்பமாகிய துரும்பினுந் துரும்பாக அவமதித்து, அந்தச் சபையிற்பேசிய புன்மொழிகளை புருஷமேருவாகிய தீரர்கள், பிராண பரியந்த மறப்பார்களோ சொல்லுமண்ணா? மேலும் "தீயினாற்சுட்டபுண் உள்ளாறு மாறாதே, நாவினாற் சுட்டவடு" என்று இயம்பிய தீதிற்கிணங்க, நெருப்பினாற் சுட்டபுண்ணும் பாண முதலிய ஆயுதங்களினால் துளையாகிய புண்ணும் சல்லியகரணி முதலாகிய மருந்துகளினால் உடனே ஆறிப்போம். சொல்லினாற் பட்டபுண் என்றைக்கும் ஆறாது. அதை எவர்கள் நீக்கத்தவர்கள் சர்வசங்கப்பரித்தியாகஞ் செய்த மகானுக்களையும் துளைக்கும். அவர்களும் சகிக்கமாட்டாமல் பாண்டவர்கள் மேன்மையாகிய அறிஞராகையினால், அகன்று அந்தச் சபையில் மனம் பொருந்திருந்தார்கள். அவர்களல்லாமல் தேவர்கள் முதலிய மற்றெவர்களானாலும், இந்தப் பாவிகள் செய்த பொல்லாங்கினால் தயை-தருமம்-சாந்தமென்னும் பாசங்களை விடுத்து, அன்னேரமே நாசப்படுத்திக் கோபந் தீருவார்களல்லவா? தேவரீரும் உரிமை-அறிவு-ஒழுக்கம்-கிருபை-குணம்-தெளிவு இவைகளில்லாத தீயர்களைப்போல் கண்ணை மூடிக்கொண்டிருந்தபடியால், இவ்வளவு அலங்கோலத்திற் கிடமுண்டாயிற்று. போனது போகட்டும் இப்பவும் பட்சபாரமில்லாமல் சமமாக நடத்த வேண்டுமென்னும் நடுவு நிலைமையாகிய புத்தி உம்மிடத்தி லிருக்குமாகில், நமது குலத்திற் பிறந்த பிள்ளைகள் பிரவேசிக்கத் தகாத பகை வழியிற் புகவொட்டாமல், பாண்டவர்களை அழைத்து, உனது புத்திக்கிசைந்த இராச்சியத்தையும் சேனைகளையுஞ் செல்வங்களையுங் கொடுத்து சமாதானஞ் செய்தாலொழிய, கௌரவர்கள் பிழைக்கமாட்டார்கள். என்று பரிசுத்தவான்களிலுயர்ந்த விதுரமகாராஜன் விளம்பிய மொழிகளை யெல்லாங் காதின் வழியாக அருந்தி, எனது அருமைத் தம்பியே! நீ சொன்னதெல்லாம் உண்மைதானென்று விசனந்தீர்ந்து சந்தோஷித்து, மனங் குளிர்ந்து, மறைந்த சூரியன் உதயமானவுடனே என் தம்பி பிள்ளைகளுக்கு நாடு நகர முதலிய பாக்கிய மியாவுங் கொடுத்து விடுகிறேன். இதற்கு யாதொரு தடையுமில்லை. இவ்வுலகிலிருக்கு மனிதர்களும், பற்பல தேசத்தரசர்களும், முத்தொழில் நடாத்து மூவர்களும், துரியோதனனாதி யாவர்களுங் கூடிவந்து அவர்களுக்கு நாடு கொடுக்கக்கூடாதென்று தடை செய்தாலும், அவர்கள் வார்த்தையைத் தடை செய்து கொடுக்கிறேன். ஒருக்காலும் நான் சொன்னசொற் றவறேன். சத்துருக்கள் பத்

திகளின் தாலியையும், அவர்கள் நகரக்காவலாகிய வேலியையும் களையவல்லயுஞ் சிலையையுடைய தம்பி! நீ போய் வா வென்று விடைதரவுங் குணநிதியாகிய சுகவிதுரன் அணிபலமேவுந் தனது அகம்புகுந்தான்.

ஓ ஜெனமேஜெயு மகாராஜனே! இவ்வாறு தருமஞ்சொல்லிய தம்பி அரண்மனைக்குப் போனபிற்பாடு, "புல்லார்க்குநல்லோர் சொன்னப் பொருளெனப் போயதன்றே" என்பதற்கிணங்க, கற்காத அற்பபுத்தியுடைய பேர்களுக்குக் கற்றுணர்ந்த மேலோர்கள் சொல்லியகியானப்பொருள் ஒரு காதில் நுழைந்து மற்றொரு காதின்வழியாய்ப் போய்விடுமென்பார்கள். அத்தன்மையைப்போல் கண்ணொளியற்ற குருடனுடைய கவலை மனமும் இருண்டுதன் மகனுடைய கல்மனம்போ லிருந்தது. அவன் மனத்தைப்போல் இராத்திரியு மிருண்டு வளர்ந்து எமனைப்போல் நிறைந்தது. அஃதெப்படி யென்றால், மேகங்களெல்லாந் தலையும், பிரகாசிக்கு மின்னலெல்லாம் சுருண்டச் செய்பட்டமயிரும், மூன்றும்பிறையே கோர்தந்தமும், சிற்சில மலைகளே பற்பல புயங்களும், நட்சத்திரங்களே லக்ஷஸ்தல ஆபரணங்களும், கறுத்த இருளே தேககாத்திரமுமாக உடைய இராக்காலமென்னும் யியமன் வாடைகாற்றாகிய பாசந்தாங்கி, துரியோதனாதியர்கள் இறப்பதற்கு மூகூர்த்தநாள் ஏற்படுத்திக்கொள்ளத் திரிதராட்டிரனைச் செலவுகேட்க வந்ததுபோலு மிருந்தது. இவ்வாறு அவனுக்கு அளவற்ற ஊழிக்காலமென்ன இடைவிடாமற் குழம்பி நெருங்கிய இருட்கூட்டமானது பின் நனவிற்றேன்றி கனவிற்கண்ட வாழ்க்கையைப்போலகன்றது. உடனே "ஞானிதன்னளவிற்பட்டால் நவியிருட் பிறவி நீங்கும்" என்பதற்கிடாய், பரப்பிரமக் கடவுளின் வலக்கண்ணுகிய நவவியாகரண பாண்டித்தவமுடைய சூரியபகவான் உதயமாக நினைத்தார். அவரெப்படி நினைந்தாரென்றால், விவேக சூனியரின் மனம்போ லிருண்ட மூன்னை நாள் நடு இராத்திரியில் இளவலாகிய விதுரமகாராசன் திரிதராட்டிரனுக்கு உபதேசித்த மந்திரவார்த்தைகளெல்லாம் ஏதாகமுடியுமோ அதை யறியவேண்டுமென்று நினைத்து, சப்தமாவென்னும் பரிபூட்டிய இரதமேறி, உதயகிரியின் உச்சியில் வந்து விளங்கி வண்மையும் தண்மையும் உண்மையும் நிறைந்த மகானுக்களின் மனதிற் கொப்பாகப் பிரகாசித்து, அரண்மனைச் சாளரங்களிலும், மேல்வீடு முதலாகிய சாலைசோலையாதி இடங்களிலும் பிரகாசமுள்ள கிரணங்கள் நுழைந்துக் காயும்படியாக உதயமானர். அந்தக் கிரணங்கள் விரிந்து நுழைந்து காய்ந்தது எப்படி யிருந்ததென்றால், விதுரமகாராசனுடைய விவேகத்தைகேட்டு திரிதராட்டிரன் ஐவருக்கு நாடு கொடுக்கிறதாகச் சொல்லி இருக்கின்றான். அந்த அதிசயத்தை யாவருமெழுந்து பாருங்கள் என்று கிரணமாகிய கரங்களினுல் கிட்டித் தட்டி எழுப்பியதைப்போலு மிருந்தது. உடனே நகரில்வாழும் ஜனங்களெல்லோரும் முகமும் அகமும்மலர்ந்து மகிழ்ந்து எழுந்து விழுந்து சூரியனைத் தொழுதார்கள். வீஷ்மாச்சாரியர்-துரோணுச்சாரியர் கிருபாச்சாரியர்-அசுவத்தாமர்-அங்கதேசாதிபதி-துரியோதனன் துச்சாதனன்-சகுனி மற்றத் தம்பிமார் முதலாகிய சகலரும், இரத்தந் தோய்ந்த வேலாயுதந் தாங்கிய இராஜபோஜரும் வேதபண்டித விப்பிரர்களும், ஜோதிடநூல் வல்லவர்களும், சகுனசாஸ்திரிகளும், மாசறக் கற்ற கவிவாணரும், மற்ற தேசதேசத் தலைவரும், தங்கள் தங்களுக்குரிய அணியாசனங்களிலும் வீற்றிருந்தார்கள். அந்தச் சமயத்தில் இராத்திரி முழுமையும் நித்திரையற்றிருந்த திரிதராட்டிரமகிபதி சுத்தியாய்ப் பத்தியாய் நித்தியக்கடனை வெற்றிபெற முடித்துக்கொண்டு குருகுலம் விளங்கக்கூடி யிருக்கும் மதிமந்திரிமார்களும், துதிதந்திரியோர்களும், பட்டவர்த்தனரும், மகுடவர்த்தனரும், மண்டலீகரும், உரிய பலநாட்டரசரும் பெரிய குழூஉக்கொண்டுவர, பரதகீதநாத நடன நாட்டியங்களும், பட்டுவான்களும், கட்டியங்களும் சதிர்சேர்ந்திருக்குஞ் சபையில்வந்து அவ்விடத்திலிருப்பவர்கள் யாவரையும் விசாரித்து, விதிமுறைப்படி வந்தனம் - மரியாதை-உபசாரம் யாவுஞ் செய்து, மேலான முனிவர்களால் அட்சதைமுதலிய ஆசீர்வசனங்களுந் தரப்பெற்று அரியாசனத்தி லமர்ந்தான் பெரிய அரசன்.

அந்தவேளையில் சஞ்சயனுனவன் உதயத்தில் எழுந்து திருமஞ்சனமாடி, திவ்விய மலரால் சூரியனை அர்ச்சித்து நமஸ்காரஞ் செய்து, அணிமணிக்கலன்க ளணிந்து அழகிய சபைக்கு நேராகவந்து நின்று, அரண்மனைக் காவலோரைக் கண்டு, கடைத்தலையில் தான் வந்து காத்திருப்பதைக் காவலனுக்கு அறிவியுமென்றான். அதைக் கேட்டு தூதர்

போய் வணங்கிச் சொல்ல, வரும்படியாக அரசன் உத்தரவு செய்ததை அறிந்துக்கொண்டு சபைக்குட்சென்று, துரோணாச்சாரியர் முதலிய பிராமணர்களுக்கும், வீஷ்மாச்சாரியர் முதலிய பெரியவேந்தருக்கும் கைதொழுது தருமசாஸ்திர முணர்ந்து, வெறுப்பும்-விருப்பும்-வெப்பமும்- தட்பமுமில்லாத சஞ்சயனாகும். உத்தமகுணத்தோனானவர் இராஜனுக்குச் சமீபத்திலிருந்த ஓர் ஆசனத்திலிருக்கவும், கட்புலனற்ற காவலன் சிந்தித்து ஆசையுடன் சஞ்சயனை அணைத்துப் பாண்டவர்களிடத்தில் தூது போய் வந்த கருத்து முழுவதும் சபையில் நிறைந்த யாவருங் கேட்கப் பெரியோர்களுக்கு முன்பாகச் சொல்லும் என்றவுடனே, சஞ்சயனானவன் எல்லோர்க்கும் சந்தேகப்படும்படியாகச் சொல்முடிபு-பொருண்முடிபு காணாமலும், காரியகாரணந் தோன்றாமலும், மனவெறுப்பினால் பொழிப்பாகச் சொல்லவும், அதைக் கேட்டு வெற்றியையுடைய திரிதராட்டிரன் சஞ்சயனைப் பார்த்து, ஐயா! நீர் போனதுமுதல் வந்தவரையில் அவர்கள் கூறியவசனத்தில் ஒருசொல்லாகிலும் சோர்வுபடாமல் பதம்பதமாக விரித்துச் சொல்லவேண்டுமென்னவும், சஞ்சயன் சொல்லலுற்றான். அம்புலி மரபிற் கதித்து அம்பிகை சுதனென உதித்து அம்புவி அரசுசெலுத்தும் அரசன் முதலிய யாவருங் கேண்மின்! அஸ்தினாபுரத்தை விடுத்து அழகிய உபலாவியத்தை யடுத்து ஸ்ரீ கிருஷ்ணனிருந்த திருமாளிகைக்குச் சென்று சஞ்சயன் வந்திருக்கின்றேனென்று தெரிவிக்கும்படி வாசலிலிருந்த தூதரைச் செலுத்தினேன். உடனே அவர் வரச்சொல்லென்று கூறிய மறுமொழிகொண்டு அந்தப்புரத்திற் சென்று, அழகுகுலவிய இரத்தினமணிகளாற்செய்த மஞ்சத்தில் ஆதிசேஷனுக்கு ஒப்பாக விளங்கும் திவ்ய பீதாம்பரத்தினாலாகிய பட்டுமெத்தை-மலர்மெத்தை முதலானவைகள் பரப்பிய அணையின்மீது அருச்சுனனிருந்து அடியிணை சுமந்துவருட, உருக்குமணி தேவியார் இரு கரத்தினாலும் மயில் விசிறிகொண்டு உபசரிக்க, அக்கினியில் உதித்த பாஞ்சாலி கவரிவீச, இவர்கள் மூவரேயன்றி மற்றொருவருமின்றி சயனித்துக்கொண்டிருந்த அஞ்சனமேனியனாகிய இணையில்லாத எந்தலை, உட்புலன்கள் ஐந்துந் தேறிய உத்தமர்களின் உள்ளத்திலூறும் உணர்வானவனை, உந்திபூத்தோனை, உவணகேதனனை, உந்திவிட்டிவண் வந்துதித்த மாயனை, உரகசயனனை, அளவற்ற நாள் வருந்தித் தவப்பேறு பெறுவார்களைப் போல் எனது கண்ணுக்குக் காட்சியாகக் கண்டு, இதுவே நாம் பெறவேண்டிய முத்திவீடென்று தேவதேவனுடைய திருவடியில் சாஷ்டாங்கமாகப் பணிந்தவென்னை, அம்மூர்த்தி மனமகிழ்ச்சியுடன் பக்கத்திலழைத்தணைத்தனர். நானுங் கைகட்டிக்கொண்டு நின்றேன். அப்போது இளமையும் அழகையும் இயல்பாகக்கொண்ட என் தாய்மார்களின் முகத்தைத் தமது தாமரைக் கண்ணினால் நோக்கினார். உடனே அவர்களிருவரும் அரக்காம்பலுக்கு ஒப்பாகிய கரங்களினால் நவரத்தினங்கள் இழைத்து, மாற்றுயர்ந்த தங்கத்தினாற் செய்து எங்கும் பொங்கும் ஒளியினாலுயர்ந்த சிங்காதனங்கொண்டு வந்து போட்டார்கள். அதன்பேரில் உட்காராமல் கையை மாத்திரம் அந்த ஆசனத்தின்பேரில் வைத்துக்கொண்டு, சுவாமியின் பக்கத்திலிருந்து சூற்கொண்ட மேகம் போலும், காசாம்பூவைப்போலும், மரகதமணியைப்போலும் விளங்கிய அக்கண்ணன் திருமேனியினழகையும், அருச்சுனனுடைய இடவீர காத்திர சிலாக்கிய உருவத்தையும், கண்களிகூற நோக்கினேன். அவர்களுடைய கிருபாகுணத்தையும், சௌரிய பராக்கிரமத்திறத்தையும் என்ன சொல்வேன். ஆக்கலும், அழித்தலும், தோற்றலும், மறைதலுமுடைய சுதந்தரரான இவர்கள் திருஷ்டிக்கு லோகாலோகங்களும் நிலையில்லாமல் அழியும். இந்தப் புண்ணியவான்களைச் சிநேகித்தால் மூவுலகும் ஆளலாம். மாறுபட்டுப் பகைத்தால், எதிர்த்தவர்களேயன்றி ஈரேழுலகமும் அழிந்துபோம். இப்பேர்ப்பட்ட மைத்துனனும், தம்பியும் கைகாட்டும் வேலைகளைச் செய்யும் ஏவலாளாக யிருக்க, தருமராஜனுக்கு வேறே படைத்துணையும் வேண்டுமோ? ஆண்மிக்கையற்றவரென்றுஞ் சொல்லப்போமோ. புவனாபுவன முழுமையும் தனக்கு வேண்டுமென்று நினைப்பாராகில், இப்போதே கிடைக்கும்படிச் செய்வார்கள். இந்த இருவரும் இப்பேர்ப்பட்ட பலசாலிகளாயிருந்தும் காட்டைவிடுத்துக் காட்டிலுறைவானேனென்றால், பரிசுத்தமுள்ள நினைப்பும் ஒப்புவமை இல்லாதவருமாகையால், எதையும் விரும்பாமல் வெறுத்திருந்தாரென்று என்னெண்ணத்தில் பலபல வண்ணம் பண்ணிக்கொண்டிருக்கையில், கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்துக்

கல்வருஷத்தைத் தடுத்துக் கோபாலரைக் காத்தருளிய தேவாதிதேவனாகிய கண்ணன் என்னைப் பார்த்து, இப்போது இவ்விடத்திற்கு நீர் வந்தகாரியமென்னவென்று கேட்க, அடியேன் ஒளிக்காமல் சிற்சில வார்த்தைகளால் சுருக்கிச் சொன்னேன். அப்போது கேசவனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் ஒரு வாக்கியம் திருவாய் மலர்ந்தருளினார்.

அப்பா சஞ்சயனே! துரியோதனாதியர்க்கும், பாண்டவர்களுக்கும் நடக்கப்போகின்ற யுத்தத்தைக் குறித்துத் திரிதராட்டிர மகாராஜன் விசனத்துடன் பயப்படுவாராகில், ஐவர்களுக்கும் இனிமையாகிய வசனங்களைச் சொல்லி விரித்த தலைமயிரை முடிக்காமல் விசனமும் உலகப்பழிப்புங் கொண்டிருக்கும் பாஞ்சாலியின் மனத்துயரத்தையும் போக்கி, சூதாடிப் பறித்துக்கொண்ட நாடு நகரம் திரவிய முதலிய யாவையும் பாண்டவர் பெறும்படியாகக் கொடுத்து, அவர்களுக்கு இப்போது படைத்துணை வந்திருக்கும் பார்த்திபர்களையும் நன்மையுடன் சிநேகித்தால், கிரீடபதியாகிய பாண்டவர்கள் தங்கள் தம்பிமாராகிய துரியோதனாதியரும் சுகப்பட வேண்டுமென்றெண்ணி தங்கள் சிந்தையிற் றோன்றிய மாத்திரம் நாடுநகரங் கொடுப்பார்கள். அதுவும் கௌரவர்கள் வஞ்சமில்லாமல் உரிமைப்பாடாக மரியாதையுடன் கீழ்ப்படிந்து நடப்பார்களாகில் கிடைக்கும்; இல்லாவிட்டால் எப்போதுங் கலந்து வாழப்போகிறதில்லை. இது ஒரு பக்ஷம் இப்படி நடத்துவதற்கு மனதொப்பாவிட்டால், யுத்தகளத்தி லெதிர்த்து அவரவர்கள் புஜவலிமைக்குத் தகுந்தபடி சண்டைபண்ணி சத்துருநாசஞ்செய்து துன்பம் நீங்கி இன்பத்துடன் உலகாள்வது ஞாயம். இது ஒரு பக்ஷம் இவ்விரண்டிலொன்றைத் தெரிந்து துணிந்து நடந்த அறியுங்குண மில்லாதவர்களைப் பெரியோரென்று சொல்லுவதிற் பிரயோசனமில்லை தெரிந்தோர்களும் தெரியவுரையா திருப்பது என்ன காரணமோ சஞ்சயனே! நீ வந்தகாரியத்தை நானறிந்துகொண்டேன். நாடு நகரம் விரும்பிப் பெருமைப்பெற விருக்கும் அரசராகிய பாண்டவர்களைச் சகல செல்வத்தையும் கூடிய சபத்தையும் நாடிய யுத்தத்தையும் விடுத்து, வீடுபெறுந் தவத்தைச்செய்யக் காட்டையடையும்படியாகப் பெரிய தந்தை விளம்பினரென்றுச் சொல்வதற்கு நீ ஓடிவந்தது. அது எத்தன்மை யொத்ததென்றால், அடர்ந்த காடு முழுமையும் தொடர்ந்து, புகையும் பொறியும் படர்ந்து, மேலோங்கி யெரியும் காடாக்கினியை வாடைக்காற்றும் துணைப்பட்டுவந்து கலந்து அதை அவிக்கத் துணிந்தது போலாகும். பாண்டவர்கள் மனம் வருந்தி அக்கினியாய் எரிந்துக்கொண் டிருக்கும் வேளையில், உங்களைத் தவஞ்செய்யப் போகச்சொன்னானென்று நீ சொல்லப்போகிற சொல்லாகிய வாடைக்காற்றுங் கூடவே கலந்துகொண்டால், உலகம்யாவுமொன்றாய் முழுகிப்போமே; பெரியதந்தை வார்த்தையென்னும் பெருமையும் எகிறிப்போமே; இந்த மொழிகளையும் மநுநெறி முறைமைகளையும் யோசிக்குமிடத்தில், தங்கள் தங்க ளிச்சையின்படியாகவும், வணங்காமுடியோனுக்கு மறுத்துச் சொல்லக்கூடாத முகஸ்துதியாகவும், பாரபக்ஷமாகவும் நினைத்துச் சொல்லியதாக இருக்கின்றதே தவிர, காரியா காரியந் தெரிந்து இப்படி போனா லிப்படி நடக்கும்; இப்படி விதைத்தா லிப்படி விளையும்; இது தகுந் தகாதென்பதுணர்ந்து சொல்லி யனுப்பியதாகத் தோன்றவில்லையே. இஃது பெரிய அரசன் புத்தியல்ல, அல்பமதியையுடைய அறிவீனர் உரைதத புத்தியைக் கேட்டுச் சொல்லி யனுப்பிவைத்ததாக இருக்கின்றது. பரிசுத்தமாகிய சாஸ்திரங்கள் முழுமையுங் கற்றுணர்ந்த புண்ணியராகும் பெரியோர்களின் யுக்தியைக்கேட்டு மொழிந்த வார்த்தையா யிருக்கவில்லை. தம்பி பிள்ளைகள் காட்டில் தவஞ்செய்யவும், தன் பிள்ளைகள் நாட்டில் அரசுபுரியவும் எந்த மதியைக் கொண்டு திரிதராட்டிரன் சொல்லி யனுப்பி வைத்ததோ? இது அவர் மனதுக்கே தெரிய வேண்டியது. எனக்கு இது தகுந்த யோசனையா யிருக்கவில்லை.சஞ்சயனே! நீ வந்த காரியத்தை நாளையத்தினம் உத்தமனாகிய தருமநந்தனனுடைய சபையிற் சொல்லிய யாவையும் அறிந்துகொள்ளென்று முத்திக்கு வித்தாகு முதல்வனாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் திருவாய் மலர்ந்தருளினாரென்று சஞ்சயன் சொல்லுவதற்கு முன்னமே, பூபதியாகிய திரிதராட்டிரன் சஞ்சயனை நோக்கி, புஜபல வலியாற் கஜமென வுயர்ந்த விருஷபவிராட்டாகிய விஜயன் ஒன்றுஞ் சொல்லவில்லையோ வென்று கேட்டான்.

அப்போது சஞ்சயன் அரசனைப்பார்த்து, ஐயா! தூயவனாகிய மாயவன் சொல்லியதைக்

கேட்டிருந்த இந்திர குமாரனாகிய நாயகன் அவியாத அக்கினியைப்போல் வாள்விழி சிவந்து, மார்புந் தோளும் வலக்கண்ணுந் துடித்து, என் முகத்தை ஏறநோக்கி, ஆ! ஆ! சஞ்சயனே! பெரியோராகிய உத்தமர்களும், சிறியோராகிய மற்றையர்களும் நெருங்கிய இராஜசபையில், இந்தவார்த்தையை விஜயன் விளம்பினனென்று கலங்காமல், பயப்படாமல், ஒளிக்காமல் சொல்லக் கடவையென்று சில சொன்னன். அஃதியாதெனில், பாபங்களென்னும் பயிரை விளையச்செய்யும் தன் புத்திரராகிய துரியோதனாதியர்பேரில் வைத்த பட்சத்தினால் அப் புத்திரர்களோடுங் கூடி, குடும்பங் குலைக்கும் அல்பர்களுடைய புத்தியைத் தானும் விரும்பிக் கேட்டு, தருமத்திற்கு அடாத கருமத்தை மேற்கொண்டு, ஐவர்களையும் அனாதையாக்கி, அழகியவாளஞ் செறிந்த நாட்டில் ஒன்றாகிலுங் கொடுக்கமாட்டேன். பாண்டவர்கள் இராச்சிய அபேக்ஷையை விடுத்துத் தவம் புரிந்து மோக்ஷவீட்டையடுத்துக் கரையேற வேண்டுமென்றே எங்கள பெரிய தந்தை பக்ஷமாகப் புத்திகள் சொல்லி அனுப்பி வைத்தது. ஓ ஓ சஞ்சயனே! குல கோத்திரத்துக்கும் தனக்கும் நன்மையுண்டாகத் தவஞ் செய்யச்சொல்லி அனுப்பி வார்த்தையைச் சிரசாகக்கொண்டு நாங்கள் முன்பு சபையிற் கூறிய சபதத்தை விடுத்துத் தவஞ் செய்வோமாகில், திரிதராஷ்டிரன் தம்பி பிள்ளைகள் சொன்ன சபதஞ் சோர்ந்து போனார்களென்னும் பழியும் பாபமும் இவரையும் எமது மரபையுஞ் சேருமே. பெரிய வயதினால் அதை மறந்தாரோ? சஞ்சயனே! நாங்கள் வீரப்பிரதாபத்துடன் ஆபத்துவேளையில் கோபத்தினால் சபையில் விளம்பிய சத்திய வாக்கியத்தை லோகப்பிரசித்தமாக முடித்து, உதிர வெள்ளத்தில் மூழ்கி ஸ்நானஞ்செய்து, அரசர்கள் பழிக்கும் பழுதுகள் போக்கி, எங்கள் குலமாகிய திங்கள் குலமோங்க இந்த அங்கையிற் சங்கு சக்கிராதர தேவனும், ஹரிபரந்தாமனும், ஐவர்சகாயனுமாகிய அழகிய மணவாளனுடைய அடிமலரைப் பணிந்து குற்றமகற்றிக்கொள்ளுவோம். அன்றியும், எங்களுக்குப் பொல்லாங்குசெய்து எக்காலத்திலும் அசையாத வசையை இசையாகக்கொண்ட துரோகிகளுடைய அழகார்ந்த மேனியை தெய்வீகமாகிய எமது விற்களில் தொடுத்துவிடுங் கணையினால் சின்னபின்னமாகப் பிளந்து இரத்தவெள்ள மொழுகவும், வெப்பமாகிய மூளைகள் அற்பவாயிற் பெருகவும் செய்த அப்பொழுது எங்கள் பெரிய தகப்பனார் சொன்ன சொற்படி தவஞ்செய்யக் கானகம் புகுவதென்றி, இதற்குமுன் ஒருக்காலும் வனம் போகமாட்டோமென்று சொல்லும் சஞ்சயனே! நினைக்குந்தோறும் சத்துருக்களுடைய மார்பும், பெரியதோளும், காத்திர வுடலும், அவர்கள் செய் கபட வஞ்சகமும் என் கண்ணெதிர் தோன்றிக் கொண்டிருப்பதினால், அவர்களுடைய தேகத்தை ஒரு நொடிப்போதில் எனது விஜய காண்டீபத்திலிருந்துவிடும் அளவிறந்த கணைகளினால் சல்லடைக்கண்களாக்கி, சூரியகிரணங்கள் சாளரங்கள்தோறும் பிரகாசிக்குந் தன்மைபோல் உதிரக்கம்பிகள் பீரிட்டடிக்கவும், வாய்-செவி-மூக்கு-கண் இதுகளின் வழியாய்த் திரியும் இந்திரியங்கள் துந்து மந்திக்கவும், உயிர்கள் சிந்தவும், காக்கை கழுகுகள் கொந்தவும் செய்வேனல்லாமல் ஒருவரையும் உயிருடன் விடமாட்டேன். ஆ! ஆ!! சஞ்சயனே! பஞ்சபூத சிரேஷ்டனாகிய வாயுகுமாரன் தனது கரங்கொண்ட கதாயுதத்தினால் துரியோதனாதியர் நூறுபேர்களுடைய மண்டைகளுஞ் சிதைந்து சிந்தி மண்மேல் விழுந்து அழியும்படி மோதி, பூதப்பிரேத பைசாச கணங்களோடு நாய்-நரி-காக்கை - கழுகு-பருந்து முதலியவைகட்கு விருந்திட்டாலொழிய எங்களுள்ளத்திற் கோபமென்று குடிகொண்டெழுந்த சிவந்த யுகாந்த காலாக்கினி தணியமாட்டாதே; தெளிவிற்சிறந்த சஞ்சயனே! தேவாமிர்தத்திலும் சிறந்த போஜனமுண்டு அம்சதூளிகா மஞ்சத்திற் சயனங்கொண்டு வாயுவேக மனோவேக முடைய தெய்வப்பரிமேலும், கன்னகபோல கரட மதங்களையுடைய இராஜ குஞ்சரத்தின்மேலும், நவரத்தினப் பணியார்ந்த திவ்யமணி இரதத்தின் மேலுமாரோகணித்து உலாவிவரும் தருமசொரூபியாகிய என் தமையன் பாதசாரியாய் நடக்கவும், மாயச்சூதாடி பாக்கியங்களை யெல்லாம் கைக்கொண்டு வனவாசம் பனிரெண்டு வருடமென்று அனுப்பப்பனியிலும்-வெய்யலிலும்-காற்றிலும்-மழையிலும்வருந்தி மேடுபள்ளங் கற்பாறை முதலிய இவைகளிற் படுத்து நித்திரை செய்யவும், கந்தமூல சருகாதிகளருந்தி வாழ்நாளை விண்நாளாகக் கழிக்கவும், தாங்கள் சுகத்தை அனுபவித்திருக்கவுஞ் செய்த இம் மக்களுடைய உடல்கள் என் வில்லிலிருந்து வல்லியம் போல்வரும் காலாக்கினி ருத்திராஸ்

திரத்தின் நெருப்பினால் வெந்து-புதைந்து-வருந்தி - கரிந்து - பொரிந்து-சரிந்து மண்மேற் பொடிப்பொடியாகப் போம்படிசெய்து, தமயனென்னும் வாஞ்சை தரித்தேனென்று சகலரு முணரக் காட்டுவதுமன்றி, நாளை நடத்துகின்ற யுத்தத்தில் சிகைகூடிய சிரம்-கரம்-கால்களம்-உரம்-இடை-குடல்-செவி - நாக்கு-மூக்கு- நலமிலாக்கண்கள்-மாமிசம் - உதிரம் - மயிர்-தோல்-என்பு-நரம்பு-நிணம்-சீழ் நாற்றமாம் வெப்புநீர்-இப்படியாகக்கூடிய பகைவருடலத்தைக் கண்டங்கண்டமாக வெட்டிக்கோடி துண்டங்கண்டு சிரமெல்லா முருட்டி நிலமெல்லாம் பரப்பிப் பொடிப் பொடியாக்கி நாசஞ் செய்து, எங்களைப் போல் அவர்கள் மோசம் போய் அலையாமல், எல்லாமிழந்து வனத்திலுழலாமல், நாங்கள் செய்த சபதங்களையும் கருதாமல், எங்களுக்கும் இகழ்ச்சியில்லாமல் புகழ்ச்சி வரும்படியாய் அரம்பாஸ்திரீகள் எதிர்த்து ஆசை விசுவாசத்துடன் தமது வாசந்தங்கு முலைமேலணைந்து, இராஜபோக வீரசொர்க்கத்தில் வாசமாகவைத்து உபசரிக்கும் அந்தச் சுகத்தை இவர்களனுபவிக்கும்படியாகக் கூசாமல் அனுப்பிவிட்டு, ஓசைக் கடல் சூழ்ந்த உலகமுழுமையும் வாசத்தார் புனைந்த சத்தியவாக்கியனாகிய தருமபூபதிக்குச் சம்பிரமமாக இஷ்டமுடனே யாவரும் தேவரும் போற்றப் பட்டமுங் கட்டிப் பார்ப்பேனையா? எங்கள் தந்தை வார்த்தைக்கு யாங்கள் அடங்கி சபதமறந்து உலக ஆசையுந் துறந்து இருந்தாலும், இராஜசபையிற் பயந்து வருந்தி வயிறு எரிந்து மனங்குழைந்து திக்கற்றவளைப் போல் தியங்கிய மின்போன்ற கண்களையுடைய பாஞ்சாலி, அன்று விளம்பிய சாபம் இவர்கள் கோத்திரத்தையும் விட்டு நீங்காதென்று அழகியதோளிணையுடைய ஐயனே! எங்கள் ஐயாவுக்குச் சொல்லும்; இப்பேர்ப்பட்ட மனவைரமுடைய நீங்கள்போர்புரிந்து வெற்றி கொண்டு இராச்சியங் கைக்கொள்ளாமல், பழமையாகிய நாடு நகரங்களை எங்களுக்குக் கொடுவென்று யாசிப்பவர்களைப் போலே உலூகமா முனியைத் தூதனுப்பிக் கேட்கச் சொல்லுவானேன் என்றான். யாங்கள் புத்தியில்லாமையாலும், யுத்தஞ் செய்யச் சக்தியில்லாமையாலும், பயத்தினாலும் கேட்டனுப்பவில்லை. அவர்கள் நாடுகொடுக்க மாட்டார்கள் என்றும், அதன்மூலமாய் வீரசொர்க்க மென்னும் வீடு விடுக்கமாட்டார்களென்றும் எங்களுக்கு முன்னமேதானே நன்றாய்த் தெரியும். நாங்கள் எத்தனை நாளைக்குச் சும்மாயிருந்தாலும் அவர்களும் அத்தனை நாளைக்கு விசனமற்றிருப்பார்களென்று கருதி, எங்களுடைய நாட்டைக் கொடுவென்று நாமேதூண்டினால், அவர்கள் தரமாட்டோமென்று தாண்டி விழுந்தெழுந்து சண்டைக்கு வருவார்கள். அப்போது நாம் பூண்டுகொண்ட சபதங்களெல்லாம் தீர்த்துக்கொண்டு புகழ்பெறலாமென்று மேலாகிய யுத்தி செய்து தூதுவிடுத்தோமேயன்றி வேறல்ல. அதற்கு எங்கள் பெரிய தந்தை உம்மிடத்திற்சொல்லி அனுப்பிய வாக்கியங்களைக் கேட்டவுடனே முன்னிலும் விசேடித்த நூதனமாகியபூமியும், பொன்னாபரணம் முதலிய பொருள்களோடு சகலவித நன்மையும், கோடா கோடியான பங்குங் குறைவில்லாமல் மேலாகப் பெற்றவர்களைப் போலானோம். அந்தோ! எங்கள் கோறிக்கை நிறைவேறுங்காலம் கைகூடியபடியால், பெரிய தந்தைக்கு இந்தப் புத்திபிறந்து வனத்திற்றவஞ் செய்யச் சொன்னார். இந்த விபரீத வார்த்தைகளையுங் கேட்டு மனஞ் சகித்து வழிதெரிந்து எங்களிடத்தில் நேராக வசனிக்கும்படி நாணாமல் வீணாகத் தூதுவந்தசஞ்சயனே! நாங்கள் சபையில் மொழிந்த சபதங்கள் முடியுங்காலம் எதுவென்றிருந்த சந்தோஷத்திற்கு இடையூறு விளையும்போலிருக்கின்றதென்று என் மனது வருந்தும்படியாக நினைத்திருந்தேன். அதை நீ தெரிந்து கொள்ளும்படியாக இப்போது சொல்லுகின்றேன் கேளும். எங்கள் பாட்டனாராகிய வீஷ்மாச்சாரியார் - குருவாகிய துரோணாச்சாரியார் - கிருபாச்சாரியார் - சிறிய தந்தை விதுரமகாராஜன் இவர்களியாவரும் அந்தப்பக்ஷத்திலிருக்கிறார்களே, அவர்கள் ஒரு காலத்தில் இருதிறவர்களையும் சமாதானப்படுத்தி நாடு நகரங்களைக் கொடுத்து நீங்கள் இவ்விதமாக இருங்களென்று இயம்பினால், "மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம்" என்னும் பழமொழிக்கு இணங்கும்படியாகப் பெரியோர்கள் சொல்லும் வார்த்தையைத் தள்ளாமல் கேட்கவேண்டுமே, அவர்களுடைய வாக்கியத்தைக் கேட்டு யுத்தத்தை நிறுத்திவிட்டால் நாங்கள் சபையிற்கூறிய சபதங்களெல்லாம் பிசகிப்போய் விடுமே, சபதவசனம் பிசகினால் பழியும் பாவமும் வந்து விளையுமே, என்று சஞ்சலங் கொண்டிருந்தேன். அந்தச் சஞ்சல வியாகூலம் இன்றளவில் நீங்கிவிட்டது. அதென்னவென்றால் வீஷ்மர் முதலிய பெரியோர்கள் சமாதானஞ் செய்ய விரும்பி

யிருந்தால், எங்கள் பெரிய தந்தை இந்த வார்த்தையைச் சொல்லி உம்மை அனுப்பி வைக்க மாட்டார். அவர் கருத்துக்குப் பெரியோர்கள் உடன் படாமையால் காட்டுக்குப் போகச் சொல்லி கைகாட்டினு ரென்றும், நாடு கொடுப்பதில்லை சண்டை செய்யச் சித்தமாய் இருக்கின்றார்கள் என்றும் ஸ்திரமாகத் தெரிய வருகின்றது. எங்களுக்குச் சந்தேக நிவர்த்தி ஆச்சுது சஞ்சயனே! துரியோதனன் முதலிய நூறுபிள்ளைகளின் உயிர்கள் தேறித் தெளிந்த பெரியோர்களுடைய உள்ளங்கையில் அடங்கியிருந்தன. அந்தப் பெரியோர்களின் வார்த்தையைக் கேட்டு வணங்கி நடந்தால் இன்னஞ் சிலநாளைக்குக் கூட்டங் குலையாமலிருப்பார்கள். உரியோராகிய பெரியோர்களின் வாக்கியத்தை எப்போ திழந்தார்களோ, அப்போதிவர்கள் இவ்வுலகத்தாரல்ல; யமலோகத்தில் ஒருவர் முகத்தை ஒருவர்பார்க்காமல் வருந்தி வாழ்கின்றவர்கள்; இதற்கு யாதொரு தடையுமில்லை. எங்கள் பெரியதந்தையின் எண்ணம் கைக்குவராது. நாமொன்று நினைத்தால் தெய்வந்தானொன்று நினைக்கும் என்பதைமறந்த திரிதராட்டிரனும் மற்யாவருங்கேட்க இவையனைத்துஞ் சொல்லக் கடவையென்று பராக்கிரம சாலியாகிய விஜயன் ஆக்ரமத்துடன் சொன்னான். இது தான் அருச்சுனன் விளம்பியதென்று இராஜ சபையினிடத்தில் சஞ்சயன் அஞ்சாமல் விளம்பினன்.

### தேவரகசிய வாக்கியம்.

இவ்வாறான வசனங்களைகேட்டு யாவரும் திகிலடைந்திருக்குஞ் சமயத்தில், விவேகத்தி லுயர்ந்த விஷ்மாச்சாரியர் இராஜாதி ராஜனாகிய திரிதராட்டிர மகாராஜாவின் அழகிய முகத்தைப் பார்த்து, பக்கங்களிற் பொருந்திய துரோணாச்சாரி முதலிய பெரியோர்கள் யாவரும் சந்தோஷங்கொண்டு சஞ்சலம் விண்டு ஏக்கம் நீங்கி ஊக்கமோங்கும்படியாக தேவரகசியவாக்கியம் ஒன்று சொல்லத் துணிந்தார். இந்த உலகத்தை இதுகாறும் நிந்தை இல்லாமல் விந்தையாய் அரசுபுரிந்து வந்து இப்போது மைந்தர் நூற்றுவரால் சிந்தை நொந்த அந்தகனாகிய என் மைந்தனே! கேளும் சத்தியலோகத்தில் நித்தியராகு மாதுரிய வசன மகாமுனிவர்கள் சுற்றி யிருக்கப் பொற்றாமரைத் தவிசில் வீற்றிருக்கும் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவர் தருமபத்தினி யுடன் பொருந்தி யிருக்குஞ் சமயத்தில், வேதபுங்கவராகிய தேவகுருவும் தேவேந்திரனும் தேவர்களும் வந்து நான்முகனைக் கண்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அருகுற்ற ஆசனத்தில் அமர்ந்திருக்கையி லிரண்டு பேர் திவ்விய தேசோமயப் புருஷர்கள் அந்தச் சபைக்கு நேராகவந்து சிருஷ்டி கர்த்தாவுக்கு வணங்காமல், இறுமாந்து அப்பால் நடந்துபோகும் பெருமையைக்கண்டு, பிரகஸ்பதியினுடைய மனதில் ஆச்சரியந்தோன்றப் பிரமனைநோக்கி, ஓ பரிசுத்தனே! நல்லவரென்பவரெல்லாம் உருவாகத்தோன்றி யதையொத்த இந்த வல்லவர்கள் இவிடம் வந்து தேவரீரை மதியாமற்போகின்ற காரணம் யாதோ? இவர்களியாரோ? அடியேனுக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்னவும், பிரமதேவர் நகைத்து, தேவகுருவை நோக்கி, இந்த மகானுபாவர்களை இதுவரையிலும் நீ ரறிந்ததில்லையோ பிரகஸ்பதியே! கேளும் புரகதன் சராசரங்களாலேயும் ஸ்துதிக்கும் ஏரும்புகழினையுடைய நரநாராயண ரென்பவரிவர்கள்தான். தேவர்களுக்கும் சத்தியவசன ஆசாரபரர்களாகிய தேவபக்தியுடைய புண்யவான்களுக்கும் இடையூராகிய துன்பம் வருமாகில், தக்ஷணத்தில்வந்து அவர்கள்பட்சத்திலிருந்து துன்பம்நீக்கி இன்பம் விளையச்செய்து புண்ணிய வெண்ணமுள்ள கண்ணியவான்களுக்குப்போதுமான துணையாயிருந்து, பாபசிந்தையுடைய பாபிகள் எண்ணிய எண்ணங்கள் கைகூடவொட்டாம லவர்களுடைய புத்திர மித்திரர்களைப் பாழாக்கி சதாகாலமும் லோகோபகாரஞ்செய்து இரட்சிக்கும் பழமையாகிய மூலகாரணர்கள். மேலும், நாமிருக்குஞ் சத்தியலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் இந்த மூன்றுலோகங்களுக்குந் தடையறப் போய்த் திரும்புவார்கள். தகுதியாகிய காரியங்கள் ஏதாகிலுமொன்று விளையுமாகில், அதை நீக்கும்பொருட்டுப் பொன்னுலகத்திலும் புகுந்து வருவார்கள். பூமியிலும் சத்திய வசன நித்தியவிரத பக்திமான்களாகிய புத்திமான்களிடத்தில், அவர்களுடைய விசுவாச நேச உத்தம பத்தினிமார்கள் வயிற்றின் வாயிலாக ராஜபுத்திரராகப் பிறந்து, வேத முதலிய மநுநீதி தருமங்களை நிலைநிறுத்தி சிஷ்டாசாரத் தன்மையும் பழகித் திரும்பி வருவார்கள். ஆதிமூலமாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் நினைப்பினால் உற்பத்தியானவர்கள். இவர்களுடைய பெருமையும் பிர

தாபமும் இவ்வளவென்று எடுத்துச்சொல்லுவதற்கு என்தரமல்லவென்று பிரமதேவர் சொல்லக்கேட்டு மகிழ்ந்து நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு, தேவகுருவும் இந்திரனுந் தேவர்களுந் தெய்வலோகம்போய்ச் சேர்ந்திருக்கும் நாளையில், பூமியில் சில ராக்ஷதர் பிறந்து தவங்களிற் சிறந்த முனிபுங்கவர்களோடு தேவர்கள் முதலிய யாவர்களும் வருந்தும்படியாக உபத்திரவஞ் செய்துவருங்காலத்தில், தேவர்களுந் தேவேந்திரனுஞ்சேர்ந்து, ஆதியில் பிரமன் சொல்லிய வாக்கியத்தை நினைத்து, ஆபத்பாந்துவாய் அனுதரட்சகராய் விளங்கிய நரநாராயணமூர்த்திகளை அரக்கரால் விளைந்ததுன்பஞ் சகிக்கப்படவில்லையென்று திக்குநோக்கித் தொழுது அடைக்கலமென்று கூவியழுதபோது, அந்த நரநாராயண மூர்த்திகளிருவரும் ஸ்ரீ கிருஷ்ணதேவராகவும், அழகிய விஜய பராக்கிரம அருச்சுனனாகவும் இந்தப் பூமியி லவதரித்தார்கள்.

அப்பனே! அந்தக் காரணத்தினு லல்லவா வேதமுந் தேடிக் காணக்கூடாத செஞ்சடைக் கடவுளென்னுஞ் சிவபெருமானைச் சீக்கிரத்திற் றரிசிக்கத் தவஞ்செய்ததும், அவர் பிரசன்னமானதும், கட்டிப் புரண்டு விளையாடிக் கங்கையும், திங்களும், மங்கையும், பெரங்கவும், அஞ்சமுங் கலங்கக் காண்டீபத்தினடியுண்டதும், கருணை சுரந்ததும், பாசுபதாஸ்திரம் பெற்றதும், காலகேய நிவாதகவசஇராக்கதரை வென்றதும், இரணிய புரவாசிகளைக் கொன்றதும், இந்திரனுக்குப் பட்டாபிஷேகம் நின்றதும், சகல சுபசந்தோஷ வைபவங்களுந் தேவர்களுக்கு வரும்படியாகக் கண்டதும், அமுத போஜன முண்டதும், தெய்வலோக அரசு புரிந்ததும், இவனே அவன் அவனே இவனுகையா லல்லவோ இவ்வளவு மகத்துவங்களும் நடந்தது. குழந்தாய்! தொழுந்தக விணையுடைய பலமும், குண நலமும் - அழகும், பழகிய விற்றிறமையின் விற்பனமும்-ஆண்மிக்கையும் - பெருமையும்-பிரகாசமும்-கீர்த்தியும்- நீதியும்- இராஜ முறைமையும் - உண்மையுமுடைய காண்டீபனுக்கு ஒப்பாகப் பெரும் புகழையும், பிரதாப வெற்றியையும் பெற்றவர்க ளெவர்களிருக்கிறார்கள். திரிபுர தகனனுகிய திருநேத்திர தாரியை இணையாகச் சொன்னுற் சொல்லலாம். மற்றொருவரையுஞ் சமமாகச் சொல்லக்கூடாத விற்குணமேற்றும் வீராதி வீரனுகிய பற்குணனைச் சாதாரணமாகிய சத்துருவாக நினைந்து ஜயங்கொள்வோ மென்றெண்ணி இருப்பது அவிவேகமேயன்றி, விவேகத்துடன் சேர்க்கத்தக்கதோ? இத்தன்மையாகிய வீரதீரசூர பார காண்டீபமுடைய விஜயனுக்கு நானே எதிரியென்று சூரியன்பெற்ற சவுரியன் நாள் தோறும் அஞ்சாமற் சொல்லிவரும் வஞ்சக வார்த்தையைக் கொஞ்சமேனும் நிஜமென்று நம்பாதே. சுயோதனு! அருச்சுனனே அஸ்திர சஸ்திர வலிமையில் மேலாகச் சிறந்தவன். கர்னனே குத்திர க்ஷாத்திர வார்த்தையில் காலாகப் பறந்தவன். இதை நானுணர்ந்து சொன்னதாகக் கொள்ளாதே. திரிலோகத்தாரும் அறிந்ததேயன்றி வேறல்ல. அப்பா எனது பேரனே! இந்த மொழியை நீ உட்கொண்டு யோசிப்பையாகில், இவ்வுலகத்திற்கு முதன்மையாகும் பெருமையே நீயே பெறுவாய். ஓ இராஜச்செல்வமே! விவேக சூனியனுகிய உன் மாமன் சகுனியும், கட்டிக் கொண்டு வாவென்ருல் வேரற வெட்டிக் கொண்டுவரும் உன் தம்பி துர்ச்சாதனனும், (என்னடா ஆண்டி தாதனு வென்ருல் இதுவும் ஒரு கந்தாயம்) என்பதை யொத்த அங்கதேச ராஜனுகிய கர்னனும், இந்த மூவருஞ் சொல்லிய உறுதி மொழியைத் தேனும் பாலும்போலக் கேட்டு, அதற்கிணங்க நடக்கின்ருு யல்லது, என்போ லொத்தவர்கள் பொன்போல் நயமாகச் சொல்லிய ஞாயவசனங்களைத் தள்ளிப்புகைந்து எரிந்து அழியச் செய்யுங் கோபாக்கினியைத் தாபாக்கினியாகக் கொண்டு, சகலராச்சிய சம்பத்துமுதலிய பந்துமித்திரரைப் போக்கடித்துக்கொள்ள ஏதுவாயிருக்கிருய். ஒருவர் (கட்டிக்கொடுத்த சோறுங் கற்றுக்கொடுத்த சொல்லும் நிலைநிற்காது) என்னு முலகமொழியை மறந்து சிறந்த உன்னுல் இந்தக் குருகுலத்துக்கு நேரிடுங் கொடிய பொல்லாங்கைக் குறித்து கடைசி முடிவில் உரியோராகிய பெரியோர்களிருந்தும் தகும் தகாதெனச் சொல்ல அரசை நிறுத்தாமற் போனர்களென்று யாவரும் எங்களை நொந்து ஒறுத்துக்கொள்வார்களே யல்லது இந்த அல்பரை எவரும் நினைத்து நோவமாட்டார்கள். பெருங் காற்றுனபோது உயர்ந்த மரத்தை அலைத்துவருத்தி முறிப்பதற்றி தாழ்ந்த மரத்தைச் சாராது. அதுபோல உலகத்திற் பிறக்கும் பழிச்சொல்லானது உயர்ந்த பெரியோர்களை அடுப்பதன்றி சிறியோர்களைத் தொடர மாட்டாது. ஆகையால், இன்றுமுதற்கொண்டு

எங்களுடைய விவேகத்தினால் விளையும் நீதி வாய்ந்த தரும வசனங்களைக்கேட்டு உயிர் வாழும்படியாக ஓர் உறுதிகொண்டு எங்களை நம்புவையாகில், இந்தப் பஞ்சாசதகோடி பூ மண்டலமுழுதும் சுவேதகக்ஷத்திரிய நீழலில் ஏகச் சக்கிராதிபதியாகத் தம்பிமார்களுடன் நீயே அரசாட்சி செய்யும்படியாய்க் கொடுக்க மாட்டுவோம். பரிசுத்தவான்களாகிய பாண்டவர்கள் பூர்வத்தில் இராஜசபையிற்கூறிய சபதங்களையும் திருப்பிவிடுவோம். இதற்கு யாதொரு தடையுமில்லை பால்யராசனே! திங்கள் குலத்திலும் உங்களிடத்திலுமெனக்கு மிகுந்த ஆசையிருப்பதினால் சொன்னேன். இந்த வாக்கியங்களை உன்னுள்ளத்திற் சிந்திக்கக் கடவையென்று வீஷ்மாச்சாரியர் சொல்லவும், அந்த வார்த்தைகளைக் கர்னன்கேட்டுத் தலைசாய்ந்து பக்கத்திலிருக்கும்பெரியோர்களுடைய சந்திர பிம்பமுகத்தை நோக்கிச் சொல்லுவான்.

அறிஞரே கேளுங்கள்! இந்த உத்தமராகிய காங்கேயரென்னும் புத்திமான் எந்த வேளையிலும் என்னை சுட்டிச்சுட்டித் திட்டித் திட்டிக் கோபிக்கின்றார். ஐயோ! நானென்ன செய்வேன். இராஜனுள்ளம் - இராஜதந்திரம் - காலம்-சமயம்-நோக்கம்-வீரம்-பெருமை-புகழ் கீர்த்தி-திடம்-தீரம் இவைகளெல்லாம் தெரிந்த உத்தமராகும். இவருக்கு தெரியாதது ஒன்றுமில்லை இதழ்விரிந்தமலர்மாலையணிந்த மார்பினராகிய மன்னர்களின் மனோபீஷ்டமெப்படியோ அப்படியே அநுசரித்துக் குழைந்து நடக்கும் என்னைப்போலொத்தவர்களுக்கு, ராஜகாரியத்தைத் தடுக்கவும் நடப்பிக்கவும் என்ன சுதந்தர முண்டாயிருக்கும். இராஜசபையில் சமானமாக எங்களை யிருத்தி வீரபட்டமுள்ள தீரரென்று தன்னைப்போல் பாவித்து சவரட்சணை செய்து ஆண்டுவரும் பட்சமுடைய பட்டாபிஷேக பிரபுக்களின் தாமரை மலர்போன்ற பாதங்களிற் பஞ்சுபட்டாலும், சேவகத் தொழில்செய்யும் நாங்கள் இருகண்களிலும் முள்பட்டதாக அநுசரித்து நடவாமற் போவோமாகில், அவர்களை யடுத்து நெடுநாளாகச் சாப்பிட்ட அரிய செஞ்சோற்றுக்கடன் எவ்விதத்திற்றீரும். நாங்கள் எந்தக்காலத்தில் நற்கதியை யடைவோம். வணங்கா முடியோனுடைய மனதை யறிந்த நாங்கள் ஏதோ கோபமாகப் பேசினால், இராச்சியமும் செல்வமும் எங்களா லழிந்துபோகிறதாகச் சொல்லுகின்றீர்; ஐயா வீஷ்மாச்சாரியரே! சிந்தினா லறுந்துபோகிற மூக்கு சேனை நாளைக் கிருக்குமோ? சீமானுக்கு ஆகிறதும் அழிகிறதும் எங்களாலிருக்கிறதோ? அத்தனே! இராஜ முறைமைகளில், இது தகுங் காரியம்; இது தகாதகாரியமென்று சொல்லி நடத்தவேண்டிய கடமை உம்மைப்போலொத்த நாதர்களுடையதாயிருக்க, இராஜர்களுடைய அன்பையுந் தயவையுஞ் சம்பாதிக்கும் எங்களைப்போன்ற சேவக வீரர்கள் சமயம் வாய்த்தபோது எப்படிப்பட்ட தீரர்களையுந் திரணமாகமதித்து, எங்கள் திருஷ்டிக்குந் திரிமூர்த்தியும் ஈடல்லவென்று மதித்து, அஷ்ட கிரிகளையுந் துஷ்ட ஜனங்களையும் விட்டெறிந்து விளையாடி, வானத்தை வில்லாகவளைத்து, மணலைக் கயிறுகத் திரித்து, சமுத்திரத்தை சாப்பிட்டு ஏப்பமிடும் வல்லாளரென்று சொல்லாலுரைக்குங்கடமை எங்களுடையதாயிருக்க, பரியாரி தலைமாட்டிலிருந் தழுவதுபோல தனி வழிக்குப் பிடித்த கொள்ளி தலைமாட்டுக் கொள்ளியாய்ச் சமைந்ததற்கீடாய்த் தங்களைப் போல் நாங்களும் இளைத்துச் சொல்லுவது தருமமா? ஐயா! இராச விபகாரங்களுஞ் சேவகச் செய்கைகளுந் தெரிந்த பெரியோராகிய தேவரீர் எங்களை வெறுத்துச் சொல்லவும் ஞாயமுண்டோ? சாகத்துணிந்த பேர்க்குச் சமுத்திரத்தில் மூழ்கிப்போய் விடுவோமென்னுந் துன்பமுந் தோன்றுமோ? தாஷ்டீகராகிய வீஷ்மாச்சாரியரே! புண்ணிற் கோலிடுந் தன்மைபோல் எங்களை விடவிட பேசவேண்டாமென்று உண்மையாகிய கட்டுரைகளை வெளிவிட்டுக் கர்னன் சொன்னவுடனே, பரிசுத்த மனத்தினையுற்ற வீஷ்மாச்சாரியார் பிரகாசமற்ற கண்களைப் பெற்ற திரிதராட்டிரனுடைய முகத்தை நோக்கி, இதனைச் சொல்லுவதானார்.

அப்பா திரிதராட்டிரனே! கேட்டையா? எப்படிப்பட்ட சத்துருக்களென்றாலும், ஒரே கணையினால் உடல்வேறு தலைவேறாகத் துண்டித்து விடுவேனென்று இந்தக் கர்னன் தன்னைத்தானே மெச்சிக்கொண்டு தானே புகழ்ந்து வாய் வள்ருஞ் சொல்லுகின்றதைக் கேட்டிருக்கின்றோமல்லாமல், கைவளத்தினால் யுத்தஞ் செய்து வெற்றியைப் பெறக் கண்டறிந்த தில்லையே; அதற்குச் சாட்சியாக இப்போது சொல்லிய வார்த்தையை யாவருங் கேட்டீர்களா? சபை நிறைந்த தன்னியர்களே? துருபதேய மகாராஜன் சுயம்வரம் நாட்டி

வைத்த பாஞ்சால தேசத்தில் திரௌபதா தேவியின் விவாகத்திற்குப் பற்பல தேசத்தா ரர்களுஞ் சென்று நெருங்கியிருந்த காலையில், திருஷ்டத்துய்மனால் நேமித்த வில்வளைத்து மச்சேந்திரத்தை யறுத்துப் பிரகாசம்பெற்ற துரியோதன மகாராஜனுக்கு வெற்றியும் பெருமையுங் கொடுத்தான். அன்றியும் சித்திரசேனனென்னுங் கந்திருவன் துரியோதனன் முதலிய யாவரையுங் கட்டிக்கொண்டு போம்போது தான்பேர்யெதிர்த்து அனேக யுத்தங்களைச்செய்து அரவக்கொடியோனாகிய அரசனை மீட்டுவந்தான். பின்னையும் புயவலிமையையுடைய அருச்சுனன் பேடி ரூபத்துடன் இணையில்லாமல் வளர்த்த விஜய காண்டீபத்தைத் தாங்கி, வேகங்கொண்ட குதிரை பூட்டிய இரதத்தைக் கைபழகாத சிறுபிள்ளை உத்தரகுமாரன் செலுத்த ஆரோகணித்து, ஒரு தேர் ஒரு வில் தானொருவனென வந்த அவ்விஜயன் அநேகங்கோடி இரத முதலிய அதிரதர் மகாரதர் சமரதர்களை வீழ்த்திய போது, இரதகஜ துரகபதாதியர் பின்னிட்டோட முன்னிட்டோடி யொளித்த இந்தக் கர்னனையும் பின்னமுறத் துளைத்துப் பசுக் கூட்டங்களைத் திருப்பிக்கொண்டு ஸ்திரமாக விடுத்த மோகனாஸ்திரத்தால் யாவரையும் மயங்கச்செய்து, சில வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் கைக்கொண்டு, அஸ்தினாபுரம் வரைக்கும் இவனைப் புறமுதுகிட்டோட அடித்து ஜயங்கொண்ட காலத்தில் அந்த அருச்சுனனை வெற்றிகொண்டு அவன் கைக்கொண்ட ஆவினங்களையு மீட்டுக்கொடுத்து, வணங்கா முடியையுடைய மன்னவனுக்கு வலிமையும் புகழும் வரச்செய்தான். அடக்கமுடையவராயிருந்து யுத்தகாலம் நேரிடுகிறவரையிலும் காத்திருக்கின்ற தீரசூர சேவகத்திறமுடைய வீராதி வீரராகிய பேர்கள் சத்துருக்கள்பேரில் படையெடுத்துச் செல்வதும் அவர்களை வெல்வதும் உலகமெல்லாங் கொண்டாடப் புகழ் பெற்று வருவதும் இயற்கையே. இத்தன்மையாகிய திடவீரத்தில் வல்லவரான பேர்கள் தங்கள் திறத்தை வாக்கினாற் சொல்லமாட்டார்கள். அப்படி சொல்லுவார்களாகில் உடனே யவர்கள் வில்திறமை முதலிய சாமர்த்தியங்களும் அழிந்துபோம். "அடக்க மமரருளுய்க்கு மடங்காமை யாரிரு ளுய்த்துவிடும்" என்பது நீதியன்றோ? இதன்றியும், தான் பிறந்த வருஷமும், தனக்குக் கிடைத்திருக்குஞ் சம்பத்தும், குற்றமில்லாத யோககாலமும், பசிக்கும் ஔஷதமும், குருவின் உபதேசமும், நேரிட்ட அவமானமும், தான்செய்த தருமமும், ஸ்ரீபோகமும், கற்ற கல்வியும், திடவீர சாமர்த்தியமும், மானமும், வயதின் றொகையும் இவைகளை யெல்லாம் ஒருவரறியும்படியாகச் சொல்லக்கூடாது. அப்படிக்கு சொன்னார்களாகில், அப்போதே அவைகளெல்லா மழிந்துபோம். மேலும், ஜயிக்கத் திறமில்லாத மூடர்கள் படைமுகத்தில் ஜயிப்பேனென்று வாக்கில் வந்தவண்ணம் பிதற்றுவார்கள். (குரைக்கின்ற நாய் கடிக்கவறியாது) என்னும் பழமொழி என்ன பொய்யா? "வற்றியவேரலை கலகலக்குமென்ஞான்றும், பச்சோலைக்கில்லையொலி" என்றும், "வெண்கலத்திலோசைமிகு மேவிரியகம்பொனொண் கலத்திலுண்டோவொலி" என்றுஞ் சொல்லியபடி ஜயம் பெறுவதற்கு முன்னமே ஜயிப்பேனென்று சொல்லும் பிரதாபங்கள் மாசடையுமென்று மானமேற்கொண்ட மேலோர் சொல்லமாட்டார்கள். (நிறைகுடந்தளும்பாது குறைகுடமே தளும்பும்) என்ற வாக்கியத்தின்படி வாசாகயிங்கரியஞ் சொல்லிக்கொண்டு காலங்கழிக்குங் கர்னனுடைய ஆதரவினால் சுவேதவாம் புரவிபூட்டிய தேரேறி ஆலகால விஷத்தையொத்த அழகிய அருச்சுனனை மதியாமல், அதிக சொல்பத்தில் வென்றுவிடலாமென்று சொப்பனம்போ லெண்ணி, இந்தக் குற்றமாகிய துன்பங்கள் யாவற்றையும் விளைவித்துக்கொண்டான் துரியோதனன். அவனப்படிக்கு எண்ணங் கொண்டாலும் பொய்யில்லாத உள்ளமும்-பொறுமையும்-நற்குணமும்-பரிசுத்தமும்-நயவசனமும் உடைய ஐவர்களை, கோபமும்-துற்குணமும்-அசுத்தமும்-அசத்தியமும்-கரேவசனமும்.-குற்றமும் பொருந்திய அயோக்கியராகுந் துரியோதனாதியர்களோ ஜெயிப்பவர்கள்? யாவருங் கற்றுணர்ந்த சாஸ்திரமுதலிய நீதிநெறியை யுத்தியினாற் றெரிந்துக்கொண்ட புத்திமானாகிய திரிதராட்டிரனென்னும் என் புத்திரனே! உனக்குச் சம்மதமாகத் தோன்றிய நாட்டை பாண்டவர்களுக்குக் கொடுத்து, அவர்கள் மனமகிழ்ந்து அரசுபுரியும்படியாகச் செய்து, மற்ற இராச்சிய முழுமையும் அழகிய வெள்ளைக் குடை நீழல் படுத்தி, உனது புத்திரர்களுடன் வாழ்வைப் பெறுதல் எனது மனத்தினுக்கு மிகுந்த துணிவாயிருக்கின்றது. இதற்கு யாதொரு குறைவுமில்லை. நான் நிறைந்த மனதாகச் சொன்னேனென்று சத்திய விரத சிந்தையை

நித்தியமாகவுடைய வீஷ்மாச்சாரியார்சொல்லவும், பக்கத்திலிருந்த யாவரும் தகுந்த தருமமும் இராஜ முறைமையும் சாற்றினார் வீஷ்மரென்று மகிழவும், தனுர்வேத பண்டிதராகிய துரோணாச்சாரியர் திரிதராட்டிரனை நோக்கிச் சொல்லுவார்.

அரசனே! பரதமகாராஜனுடைய மரபென்னும் பிரயோசனத்தை இன்று நிலைநிறுத்தினார் விரதபூஷணராகிய காங்கேயர். ஆகையால், இந்த வசனம் எல்லா மேன்மைக்கு மேன்மையானது. இதைவிட வேறு நன்மையென்பதில்லை. குலாவியிருக்குங் கூட்டமாகிய பந்துக்களுடன் வேற்றுமையில்லாமற் பொருந்தி, பிறர் பழிக்க இடங்கொடாமல் வாழ்கின்ற வாழ்வைப்போல் சுகம் இதுவரையிலும் நான் கண்ணாற் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை; இனி காணப்போகிறதுமில்லை. வீஷ்மாச்சாரியர் தகுதியாகிய காரியங்களை யோசித்துச் சொன்னார். இன்றுமுதலாக உன்னுடைய குலமுந் தழைக்கும்; புத்திரமித்திராதி முதலிய உலகத்துயிரும் பிழைக்கும்; உனது செல்வஞ் செழிக்கும். ஐயா! உன்னுடைய வழிபடு கடவுள் சொன்ன வாக்கியத்தைப்போல் இந்த மகானுபாவர் சொல்லிய தருமவசனத்தை வழித்துணையாகக்காப்பாற்றுவாயாகில், நன்மை என்பவைகள் யாவையும் பெறுவாய். இதன்றியும், அரசராகப் பிறந்தபேர்கள் சத்துருக்களிடத்தில் தங்களுக்குள்ள வீரியங்களையுஞ் சொல்லி, இல்லாத சௌரியங்களையும் இரவலாகக்கொண்டு எடுத்துப் பேசவேண்டியது. சகோதராள் முதலிய உள்ளிட்டாரிடத்தில் காரியங்களாகிய தொழில்களைக் குறித்துக் கலந்து பேசவேண்டியது. குடும்பத்திற் பிறந்த பெரியோர்களாவது, ஆசானாவது, மந்திரியாவது, அன்பு நிறைந்த தோழனாவது, நடுவு நிலைமையாகப் பகுத்துச் சொல்லும் நீதிவாக்கியங்களைத் தருமதேவதை சொல்லிய சத்திய வாக்கியமென்று தனது விவேகத்தினால் ஆராய்ச்சிசெய்து அவ்வழி நடக்கவேண்டியது. இதுகளைச் செவ்வையாகவுன்னி உன் புத்திரரை நல்ல வழியில் நடத்துவையாகில், நுண்மையறிவிலும் நுட்பம் உணர்ந்த அறிஞர்கள் கொண்டாடும்படியாக உன்னுடைய குலநலமானது வாழ்விற் சிறந்து தாழ்விலாதோங்கும். என்று துரோணாச்சாரியர் இனிய வசனங்களினாற் பற்பலவாகச் சொல்லவும், இவ்விதமாகச் சொல்லிய பெரியோர்களை வணங்கித் துதித்து அவர்களுடன் கலந்து ஆலோசிக்காமல், அம்மேலோருரைத்த வாக்கியங்களெல்லாம் ஆலகால விஷம்போல் கர்ன கடூரமாய்க் கேட்டு மனம் வருந்தி, அவர்கள் பக்ஷத்தில் வைத்திருந்த குவிந்த தாமரை மலர்போன்ற முகத்தைச் சஞ்சயனுக்கு நேராகத் திருப்பிக்கொண்டு, ஓ சஞ்சயனே! சொல்லுவதற்கரிதாகிய குருகுலத்திற் பிறந்த துரியோதனன் முதலாகிய மன்னவர் யாவரும் பகைமேற்கொண்டு எதிர்த்துப் போர் செய்யப் புகும் யுத்தகளத்தில், கானகந் திரிந்து கால் கைகள் ஓய்ந்து அன்னபானாதிகளுக்கு அவதிப்பட்டு வதங்கிய பாண்டவர்கள் உற்சாகத்துடன் எதிர்த்து யுத்தஞ் செய்வதற்கு வல்லமையுண்டோ? இளைத்த இவர்களுக்குச் சகாயம் எவர் வருவார்கள்? ஆருடைய துணையை நம்பி அமர்செய்ய வருவார்கள்? ஐவர்களுக்கு நேரிட்டிருக்கும் பலா பலங்களைச் சொல்லும் சஞ்சயனே என்று திரிதராட்டிரன் கேட்கவும், அந்த வார்த்தைகளைக் கேட்டுச் சபையில் நிறைந்திருந்த சத்திய முனிவர்களும் தேசதேசத்து அரசர்களும் விசனமடைந்து, இராஜனுடைய ஊழ்வினைப் பயனுக்குத் தகுந்த புத்தி இதுவென்று தங்கள் பிராணன்பேரில் வைத்திருந்த ஆசையை அன்று விடுத்து, இனி மடியுங்காலம் நேரிட்டது என்று மனம்வருந்தி இருந்தார்கள்.

இப்படியிருக்க அந்தச் சமயத்தில் திரிகாலமுந் தெரிந்த சஞ்சயன் மெலிந்து வருந்தி, ஐயோ! சந்திரகுலத்திற் பிறந்த நமது அரசனுடைய தெளிவாகிய விவேகத்திற்கு என்னதாக்ஷியோ? வீஷ்மாச்சாரியர் துரோணர் முதலிய பெரியோர்களும் சொல்லிய தருமநீதிகளை உன்னி உணராமற் போயினான். இதென்னகாலம்? ஏதேது இனி யாவரும் பிழைப்பதற்கு ஏதுவையில்லையென்று பெருமூச்சுவிட்டு, விதையொன்று போடச் செடியொன்று முளைக்குமா? வீடுபோவென்க் காடுவாவாவென இருக்கும் முதிர்ந்த வயதினையுடைய தகப்பன் இவ்வளவு அறிவினையுடையவனானால், இவன் பெற்ற பிள்ளைகளைப் பழித்து மனம்வருந்தி நோவது நமக்குப் பெருமையன்று. (தந்தையெவ்வழி அவ்வழி தனையர்) என்றும், (தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்) என்றும் உள்ளமுதியோர் வாக்கின்படி இவனுடைய கெடுநினைப்பும் பாபங்களுஞ் சேர்ந்து மைந்தரென்று

முருவாகி வந்திருக்கிறார்கள். இவைகளுக்
கெல்லாம் மூலமானவன் இந்தக் குருடனே
என்று ஸ்திரமாகச் சிந்தையிற்கொண்டு சபை
யிலுள்ள யாவர்களும் ஆச்சரியப் படும்படி
யாகத் திரிதராட்டிரனை நோக்கிச் சஞ்சயன்
சொல்லுகின்றான். குடும்பந் துலங்கச் செய்
யுங் குருகுலக்கோவே கேளும்! தெய்வசகாயம்
பெற்ற ஐவர்களுக்குப் பின்பலமும் வேண்
டுமோ? அவர்களும் ஒருவரைப் படைத்துணை
விரும்புவார்களோ? தென்றிசை யமனையும்
குலகிரியையும் பந்துபோலெடுத் தெறிந்து
விளையாடிமடிக்கும் இடும்பாசுரனை-பகாசுரனை-
கிம்மீராசுரனை - சகடாசுரனை - ஜராசந்தனை
இயக்கர் நடுங்கும் மணிமாலனை - கீசகனை -
இறைபோதினுக்குள் இடித்து மடித்துத்
தேய்த்துக் கிழித்து மாய்த்து அழித்துச் சயங்
கொண்ட வீரகண்டை யொலிக்குங் காலினை
யுடைய கதாயுதனாகும்வீமசேனனிருக்க, வெற்
றியையுடைய பாண்டவர்களுக்குச் சத்தியாகிய
துணையும் வேண்டுமோ? சொல்லும் ஐயனே!
இஃதன்றியும் உலகமெல்லாம் வருந்தக்காண்
டாவனமெரித்தும், மாக்ஷிமையை யுடைய
இராஜவருக்கங்களை வேரறுத்தும், உத்தர
குரு கண்டத்தோரியாவரையும் வென்று உம்
பாயகிழச் செம்பொன் முதலிய திரைகொண்
டும், பின்பலம் வேண்டாத வீரப்பிரதாபத்தை
யும், அனுமக்கொடியையும், அம்பொன் மக
மேருவில் நாட்டி நின்மல நிஷ்கள நிராமய
னாகிய சங்கரசுயம்புவின் தரிசனங்கொண்டு
பாசுபதாஸ்திரமும் பெற்று, காலகேய நிவாத
கவசர்கள் மாய்ந்திடக் காய்ந்து, வீரவாகை
வேய்ந்து, இந்திரன் முதலிய தேவர்களுக்குச்
சுகமீய்ந்து, தேவாமிர்தம் புசித்துக் களித்து
இணையில்லாக் கணைகள் பெற்ற விரஷப
விராட்டாகிய விஜயனிருக்கப் பாண்டவர்
களுக்குப் பலமுண்டோவென்று நீர் நினைத்
துக் கேட்டது எனக்கும் பழிப்பாக விருக்கின்
றது. பார்த்திபனே! இன்னமுங் கேளும்
பிள்ளையென்று வந்த பூதகியுயிரை முலைப்பா
லுடன் பருகியும், தேவேந்திரன் வஞ்சகத்தி
னால் வருஷிக்கச்செய்த கல்மாரியைக் கோவர்த்
தனகிரி யென்னுங் குடையினாற் றடுத்தும்,
ஆயர்களோடு ஆவினங்களை இரட்சித்தும்,
மாமனாகிய கம்சனைக்கொன்றும், இந்திரப்
பிரஸ்தத்தில் நடந்த இராசசூயயாகத்தில் சிசு
பாலனைச் சிரச்சேதஞ்செய்தும், ஐவர்சகாய
னென்று அஞ்சன மேனியையுடைய கண்ண
னிருப்பது திண்ணமாய்த் தெரிந்திருந்தும்,
ஐவருடைய வல்லபங்களையும் படைத்துணை
களையும் விசாரிக்கும் புத்திமான்களுண்டோ?
மேலும், "குணமென்னுங் குன்றேறிநின்றார்
வெகுளி கணமேனுங் காத்தலரிது" என்பது
போல், சத்தியமும்-சாந்தமும்-பொறுமையும்-
தருமமும் வழுவாத, விரதசீல மெய்ஞ்ஞான
நீதிபரனாகிய தருமநந்தனன் கோபித்து வில்
வளைத்துப் பகைவர்மே லெதிர்க்குங்காலத்தில்,
திரிபுராந்தகனையும் வடவா முகாக்கினியையும்
ஒப்பாகி நிற்பான். நவரத்தின மழுத்திய
அணிமுடிதரித்த அரசே! மற்றத் தம்பிமார்
களுக்கு ஈடாகயெதிர்த்து நேர்நின்று போர்
செய்பவர்கள் யாரிருக்கின்றார்கள்.

இவர்களெல்லாமிருக்க, இந்தச் சந்திர
வம்சத்திற் பரம்பரையாகப் பிறந்து அந்நாள்
முத லிந்நாள்வரையில் நீதிசெலுத்திவந்த
வேந்தர்களின் தீரவீரங்களிலும் தன் தந்தை
யாகிய விசயபராக்கிரமனுடைய சேவகத்திறங்
களிலும், நூறுபங்கு உயர்ந்த திடகாத்திர
ஜெயசிம்மக் குருளைபோன்ற ஒரு அபிமன்னு
வென்னும் அருச்சுனகுமாரனே, உன்னு
டைய புத்ரமித்ரகளத்திராதி முதலிய பதி
னொரு அக்குரோணி சேனைகளாகிய துரும்புக்
குச் சூறாவளிக்காற்றைப்போற் றோன்றிச் சுழ
ற்றி மடக்கியடித்து முடிக்கத் தக்கவனென்று
சத்தியமாக உன் சித்தத்திலுணர்வாய். இதன்
றியும் நாகாதிபன் மைந்தனாகிய அருச்சுன
னுக்கும் நாககன்னியாகிய உலூபிக்கும் பிறந்து
சிறந்த திறவானாகிய அரவா னென்பவன்
போர்முகத்தில் நேர்புகுவானாகில், அவனுட
னெதிர்த்து அமர்செயமதிக்கும் அடல்வீரர்
கள் சுவர்க்கமத்திய பாதலத்திலுமில்லை.
மேலும், எல்லாத்திறங்களிலும் எதிரில்லாத
வீமசேனன் இடும்பியை மணந்து புணர்ந்து
பெற்ற திணிந்த தோள்களையுடைய காளை
யாகிய பாற்கடல் கலங்கக் கடைந்த மத்தாகிய
மந்திரகிரியை யொத்த கடோற்கஜனுக்குக்
கீழ்த்திசையிலுதித்த சிவந்த சூரியனைக் கனி
யெனத் தாவிக் கவ்விய அநுமந்தனை ஒப்பா
கச் சொன்னால் ஒருவேளையொக்கும். அவனே
மாய விசித்திரப்போரில் மகா வல்லபமுடைய
வன். அல்லாமலும், அக்கினியிற் பிறந்த
பாஞ்சாலிபெற்ற இளம்பஞ்ச பாண்டவரென்
னும் பிதிரிவந்தன் - சுருதிசன்மன் - சுதசே
னன்-சதானீகன் - சுதகீர்த்தி என்னும் ஐந்து
பிள்ளைகள் தங்கள் தகப்பன்மார்களுடைய
பலாபலங்களிலும் பதின்மடங்கு மேலாகிய

கோலாகலப் பரிசுத்தரா யிருக்கின்றார்கள். இன்னமுஞ் சொல்லுகின்றேன் இறையே கேளும். ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய தம்பி சாத்தகியென்னும் சாமர்த்தியன் விஜயனிடத்தில் வில்வித்தை கற்றுக்கொண்ட வீராதி வீரன்; போஜகுலத் தலைவரும் மத்திரதேச மித்திரருந் துணையானார்கள். அவரோடு எதிர்த்து அமர்செய்ய நினைப்பவர்கள்யாரோ அறியேன். அரசே! யாகத்திற் பிறந்த துஷ்டத்துய்மன், துரோணாச்சாரிக்கு வைரி, எதிர்த்துப் போர் செய்யும் சத்துருக்களுக்கு யமன். பாண்டவர்களுக்குத் தோள்வலித் துணையாகிய மைத்துனனும் விற்றிறமையைக் கற்றுணர்ந்த வேந்தர்களிலும் தேர்ந்த விவேகமுள்ள சத்தியகுணனாகிய துருபதேயனும், சிகண்டியும், உத்தமோசாவும், உதார்மனும், மற்றுமுள்ளோர்களும் தருமபுத்திரருக்குப் படைத்துணை யானார்கள். விராடராஜனும் அவன் புத்திரராகிய சதானீகன் - சங்கன்-சுவேதன்-வராககேது-உத்தமன் முதலிய மித்திரவருக்கத்துடன் புஜபல பராக்கிரமத்திற்குத் தாளுருவனன்றி வேறில்லை யென்றெதிர்த்து யுத்தஞ்செய்து பாண்டவர்களுக்கு வெற்றியைக் கொடுக்கச் சம்பந்தஞ் செய்து உற்ற துணையானான். பின்னும் பற்பல மகுடாதி வேந்தரும், சிற்சிலகுருநில மாந்தரும், சேதிபதேசாதிபதி சிசுபாலனுடைய குமாரன் துஷ்டகேதுவும், சராசந்தனுடைய குலபுத்திரனாகிய சாதேவனும், சோழராசனும் இன்னும் அநேக மன்னர்மன்னரும், அவர்களுக்குப் படைத்துணை நெருங்கி யிருக்கின்றார்கள். சுவேதக்குடையினையுடைய தோன்றலே! யித்தன்மையவாகப் படைத்துணைக் கொண்டு நெருங்கியிருக்கும் அரசர்களும்-யானைகளும்-குதிரைகளும்-தேர்களும்-பதாதிகளும் - ஏழக்குரோணியென்றும், கணக்கர் - காரியஸ்தர் - படைவீரர்-சேனைத்தலைவர்-முதலிய இவர்கள் கோடாகோடி பேர்களென்றுந் தொகைசொல்லக்கேட்டு மகிழ்ந்து, சத்தியத்தை நித்தியமென்று நம்பிய பாண்டுபுத்திரர்கள் உபலாவியத்தில் வீற்றிருக்கின்றார்கள். ஆதலால் அவர்கள் வனவாசஞ்செய்து வலியற்றார்களென்றெண்ணாமல், மேல் நடக்கவேண்டிய காரியங்களைக் கட்டளையிடுங் காவலனேயென்று அஞ்சலியஸ்தனாகச் சஞ்சித வினையற்ற சஞ்சயன் சொல்லக்கேட்டு, கட்புலனில்லாத காந்தாரி கொழுநன் நெடுமூச்சும் பெருமூச்சும் விட்டு வியர்த்து வெளிப்பட்டுப்போகிற பிராணனை விடாமலிருத்தி இராஜ சபையிலிருக்கும் எல்லோரையும் பார்த்து கூவிச் சொல்லுகின்றான்.

ஓ அரசர்களே! கல்வியிற்றேர்ந்த வல்லவனாகிய சஞ்சயன் இப்போது சொல்லிக்கொண்டுவந்த படைத் துணைவர்களின் பலாபலங்களெல்லாம் ஒருகாலத்தில் இளைத்துப் போமென்று நினைத்தாலும் நினைக்கலாம். அப்பப்பா! கோபாக்கினி விளைந்து தகிக்குங் கண்களையுடைய வீமசேனனென்பவன் இருப்புக் கட்டுகளார்ந்த நீண்டகதையைக் கைக்கொண்டு ரணக்களம் புகுவானாகில், யாவரும் மண்ணைக்கவ்வி மடிவார்களன்றி மாயாமற் றிரும்பி வருவாரு முண்டோ? வாகைமாலையணிந்த மன்னர்களே! அந்த வீமனைப் பார்க்கக் கண்ணில்லாத வெனக்கு அவனைப் பார்த்தவர்கள் பயந்து பயந்து வந்து சொன்னதை அம்மம்மா! என்ன சொல்லுவேன்? ஆகாயபரியந்த முயர்ந்து திணிந்த வச்சிரப் பொருப்புக் கிணையாகிய உச்சிதப் புயமென்றும், திருதிருவென் றெரிந்து புகையும் நெருப்புக் கண்களென்றும், போர்மன்னரை யெல்லாம் பொடிப்பொடியாக போக்கி நமனுக்குச் சமானமாக நாசஞ் செய்யத்தக்கவனென்றும், அவனுடனெதிர்த்தும் போர்புரிபவர்கள் எவருளனென்றுஞ் சொல்லக்கேட்டிருக்கும் என்மனந் துடிக்கிறதே; நுட்பமாக வளர்ந்த புட்பம் போன்ற தோள்களையுடைய என் மக்கள் வீமனுடனெதிர்த்துப் போர்விளைக்க மாட்டார்களே; மேலும், நாகப்பாம்பின் விஷம்போல வேகந்தாங்கி வெகுநாளாக வைரங்கொண்டிருக்கும் வீமசேனன் வெகுண்டு போர்செய்யச் சீறியெழுந்து வருவானாகில், கொழுந்து போன்ற என் குழந்தைகள் நூற்றையும் நீறாக்கி விடுவானே; அவனை நினைத்துப் பேசினால் எனக்கு வயிறு கலங்குதே? அப்பா மைந்தர்களே! அவனுடன் பகைத்து யுத்தஞ் செய்ய யார் நினைப்பார்கள். விளக்கைப் பிடித்துக் கிணற்றில் விழும் விவேகிகளா யிருக்கின்றீர்களே; அவனை என்னுள்ளத்தில் உன்னும் போது என்னுடல் நடுங்குதே, என் ஈரல் கருகுதே, என்னிதயம் வேகுதே, என்னாவும் புலருதே; ஐ ஐயோ! பிள்ளைகளே! பகையென்பதை மறந்து பிழைக்கும் விதத்தைத் தேறித் தெளிந்து சொல்லுங்களப்பா; தழைக்கும் புத்திமான்கள் சொல்லிய நீதியை உட்கொள்ளுங்களப்பா; என்றும் தருமத்தைக் கெடுக்கும் பாபத்தைத் தொடுக்காதீர்கள்; அருமையாகிய

ஆசாரியர் பெரியோர் அன்னையர் தந்தையர் இவர்கள் சொல்லும் புத்தியை விடுக்காதீர்கள். ஓ மைந்தர்களே! என்று இவ்வாறு புத்திர வாஞ்சையினால் எத்தனையோ விதத்திற் சொன்னான் வெற்றியையுடைய திரிதராட்டிரன். இத்தன்மையவாகப் பெற்றவனாகிய அத்தனுரைத்த புத்திமதிகளைச் சித்தத்திற் சற்று நேரமாகிலும் வைத்திராமல் சுபுத்திரனாகிய துரியோதனன் தந்தையை நோக்கி, சிந்தை வருந்தி மெத்தவுங்கனன்று சீறி, மனமடியாம விறுமாந்து, இராசசபையில் நிறைந்திருக்கும் எல்லோரும் திடுக்கிடும்படியாகச் சொல்லுகின்றான்.

ஓ மன்னவர்களே! அங்கே மாண்டவரை யொத்த பாண்டவர்களின் வல்லபங்களையும், அவர்களுக்கும் படைத்துணைவந்த மன்னவர்களின் கீர்த்தியையும் இந்த சஞ்சயன் சொல்லக் கேட்டு, தருமன் முதலிய பேர்களை சத்தியமுள்ள பிரபலரென்று தங்களுக்குத் தாங்களே கொண்டாடிச் சந்தோஷங் கொண்டீர்க ளல்லாமல், எங்களுடைய சாமர்த்தியமும் எந்திர மந்திர தபோபல சித்தியையும் எள்ளத்தனையு மெண்ணாமல் போனீர்கள். கள்ளத்தன மனமுடையவரானீர்கள். திடவீரசிம்மம் போன்று படைவீரராக எனக்குத் துணைவந்திருக்குந் தீரர்களுடைய திடத்தையுஞ் சிந்திக்காதவரானீர்கள். ஆகிலும் நான் சொல்லுகிறேன் கேளுங்கள். சுவர்க்க மத்தியபாதாளங் கொண்டாடா நின்ற ப்ரதாபசாலியாகிய பரசிராமரைப் போலொத்தவர் புறமுதுகிட்டோடும்படியாகப் போர்புரிந்து, திண்ணிய கீர்த்தியாகிய வெற்றியை கொண்ட புண்ணியனாகும் எங்கள் பாட்டனார் வீஷ்மாச்சாரியர் புராந்தகனையும் நராந்தகனையு மொத்துப் போர்முகத்தில் வில்வளைத்து நேர் புகுந்தாராகில், அவருக்கெதிரில் ஈடாக எதிர்த்து நிற்பவர்கள் ஈரேழுலகத்திலு மில்லை. அப்பேர்ப்பட்ட வீரகேசரிக் கெதிராகக் காடுமலையுங் கசங்கித் திரிந்து இளைத்து வருந்திய பாண்டவர்களோ எதிர்த்து நிற்கத்தக்கவர்கள். சோற்றிலிருக்குங் கல்லெடுக்கமாட்டாதவன் முகவண்ணக் கல்லெடுப்பானென்ப தெவ்வண்ணம்? அன்றியும் அழகிய தநுர்வேதத்தினுக்கும் புயவலிமைக்கும் ஒருவரு நிகரில்லாத சதுர்வேத சம்பன்னராகிய துரோணாச்சாரியர் யுத்தஞ் செய்யத் தொடங்கும் போர்முனையினிடத்தில், சர்வசங்கார கர்த்தனாகிய உருத்திரனும் யமனும் எட்டிப்பார்ப்ப தருமை யென்றால், ஒரு திரௌபதையின் காமத்திலகப்பட் டுழலுகின்ற ஐவர்களோ என்னை வென்று வெற்றி யடைகின்றவர்கள். வேந்தர்களே! இயக்கர் முதலிய விண்டலத் தேவரும், இராஜர்கள் முதலிய மண்டலத்தியாவரும் எல்லா விதங்களிலும் வல்லாரிவரென்று புகழும்படியாகத் திகழும் கிருபாச்சாரியர், பகலிற் பிரகாசிக்குஞ் சூரியனைப்போலும் விளங்கி, உயர்ந்த தோள்கள் பாரிக்கவும், ஒப்பில்லாச் சங்கம் பூரிக்கவும் விற்றொடுத்து, யுத்தகளத்தி லடுத்து, சத்துருக்களைப் படுத்து, என் பகையை கெடுத்து, வெற்றிக் கொடி பிடித்துவரும் வல்லமைத் திறந்தையும் நீங்கள் மதிக்கயில்லையே. மேலும் பிறையணியுஞ் சடைமுடி கொண்ட பிறப்பிலியாகும் பெம்மானுடைய தாதுவித்தாகிய சிலைத்திறமும் - கலைத்திறமும்-சிரஞ்சீவியும் பெற்ற அசுவத்தாமர் கைக்கொண்டிருக்கும் வில்லுக் கொப்பாக்கிய வில்லையுடைய காவலர்கள் மூவுலகத்திலு மில்லையே சொல்லுங்கள். அரசர்களே! அறிவு வளர்ந்தோங்கிய விக்ஞானம் விளையுமுள்ளமும் வேறொருவ ரிணையில்லாத வீரமும் விரதவைராக்கியமுங் கொண்ட பரசிராமனிடத்தில் வில் வித்தைகளைப் பூரணமாகக்கற்று, தேகத்துடன் பிறந்த கவசகுண்டலத்தைத் தேவேந்திரனுக்குத் தியாகமாகக் கொடுத்து, திரிலோகமும் புகழ்ந்து மகிழ்ந்துக் கொண்ட வள்ளலாகியும், அருச்சுனனை விற்பரிக்ஷை காலத்தில் அவமானப்படுத்தி அப்போது நேரிட்ட பகையினால் தாமரை மலர்போன்ற முகநிறைந்த தலையை அறுத்து அரங்குபூசை செய்வேனென்று சகலவரசர்களும் நடுங்கச் சபதங்கூறியும், காண்டவ வனத்தி லிருந்து அருச்சுனனுடைய கணையினாற் கலங்கிக் கரிந்து எரிந்து வருந்தி அபயமெனவந்த நாகாஸ்திரத்தை ஆதரித்து தாங்கியும், தோளாண்மையிலோங்கியும் பதினான்கு லோகத்திலும் பாணவருஷங்களைப் பொழியும் என்னண்ணனாகிய கர்னமகாராசன் என்னிடத்திலிருக்கப் பகைவரால் நேரிடும் பயமென்பதும் எட்டிப் பார்க்குமோ? கிட்டி விழிதிறந்து நோக்குமோ? ஆ! ஆ! அரசர்களே! சத்துருக்களின் தேகமாகிய வயலைத் தன் கரத்திற்பிடித்த சிலையிற்றொடுக்கும் கணைகளாகிய கொழுவினா லுழுது, மாமிசச்சேறு படுத்த இரத்தநீர்பாச்சி, யுத்த விதைவிதைத்துப் பூர்வம் தன் மனதில் விளைந்திருக்கும் களைகளையகற்றி, கீர்த்திப்பயிர் தழைக்கச்செய்து அவர்

களுடைய பிராணனை மேல்வாரமாக நமக்குக் கொடுத்து, வெற்றியைக் குடிவாரமாகக் கைக்கொண்டு உலாவத்தக்க என் மைத்துனன் சிந்து தேசாதிபதியும், சப்ததீவிலும் ஒப்பற்ற வெப்பமாகிய பகதத்தனும், அந்த ஐவருக்கும் மிகுத்தவரென்று சொல்லும்படி சுகமுற்று என்னிடத்தி விருப்பதை நீங்கள் கண்டதில்லையோ? இவர்களிருவரும் போர் புரிய முனைந்தால் இந்த அண்டமும், அயனது சொந்த அண்டமும், பகிரண்டபேரண்டமும், நமக்கு இது ஒரு கண்டமென்று பாழாகிப் புழுதியாய்ப் போய்விடுமே. மேலும் புஜவுறுதிக்கும் - கஜமிகுதிக்கும் - போர் புரிவதற்கும் - தேர் விடுவதற்கும் - கலை வலிமைக்கும்- சிலை வலிமைக்கும் - விண்மணி யணைய் கண்மணியாகும் மந்திர தேசாதிபதியாகிய என் மித்திரன், கூளிபோற்கூடிய பகைவரை யாளி போற் சீறியடித்துக் கண்ணை நிமைகாக்குந் தன்மைபோல் என்னைக்காக்க வந்திருக்கின்றான் இந்திரனுக் கொப்பாகிய சோமதத்தனும்-பூரிசிரவனும்-காந்தாரராஜனும் - கிருதவன்மன்-கிருதவீரியன் - முதலிய யாதவகுலத் தலைவரும் எனக்குப் படைத்துணையாகிச் சூழ்ந்துகொண் டிருக்கின்றார்கள். இதன்றியும் வீமார்ச்சுனர் முதலிய பேர்களை வில் யுத்தத்திலும் மல்யுத்தத்திலும் வென்று கொல்லுகிறோமென்று விற்பிடித்து, வெற்றிமாலை தரித்து, சங்கார ருத்திரனைப்போல் ஓங்காரமிட்டு, சம்சத்தராகிய அறுபதினாயிரம் வெண்கல ரதக்காரர்கள் பாதலத்திலிருந்து படைத்துணை வரவிருக்கின்றார்கள். அளவு சொல்லுதற் கருமையாகிய தவத்தையும் பலத்தையுமுடைய அனேகங்கோடி இராக்ஷசாள் என்னுடத்தி லுண்டாகிய இஷ்டத்தினால் துஷ்ட நிக்கிரக பரிபாலனஞ்செய்ய படைத்துணை வரப்போகின்றார்கள். இப்போது என்னோருயிருக்குத் தங்கள் பல உயிர்களைக் கொடுக்கும்படியாகச் சிநேகித்திருக்குந் தீவுகளிலுள்ள பேர்களும், பூமியிலுள்ள பேர்களும் பாரதயுத்தந் தொடங்குங் காலங்கேட்டு ஒருநாளைக்கு முன்னதாக இவ்விடம் வந்து சேருவார்கள். இத்தன்மையாக அளவற்ற சேனைசைனியங்களுடன் எனக்குத் துணையாக வருபவர்களெல்லாரும் என்னுயிருக்குயிராகிய பேர்கள் அவர்களிறந்தால் நானிறப்பேன்; நானிறந்தால் அவர்களிறப்பார்கள்; இந்த உலகமழிந்தால் நாங்களெல்லோரும் அழிவோம். உலக மழியப்போகிறதுமில்லை; நாங்கள் யாவரும் ஒழியப்போகிறதுமில்லை; இது உண்மையே இனி நான் பற்பலவாக சொல்லவேண்டியதில்லை.

என் தந்தையாகிய பரராஜ பயங்கரனே! கேளும் இதுவரையிலும் படைத்துணைக்குக் கூடிய தேர்-யானை-குதிரை-காலாள் வீரர்கள் முதலாகிய எல்லாஞ்சேர்ந்து பதினொரு அக்ரோணியென்று கணிதநூல் தெரிந்த பெரியோர்கள் தொகை செய்தார்கள். இவ்வளவு சேனைகளும் வீராதி வீரர்களும் எனக்காகச் சேர்ந்திருப்பவர்கள். இவர்களுடனெதிர்த்து போர்புரியுந் தன்மையை யுடையவர்கள் ஒருவருமில்லை. அப்படிக்கு நேர்நின்று சண்டை செய்பவர்கள் யாவரேனும் இருப்பார்களாகில் சொல்லுங்கள். ஓ நீங்காத விவேக நிறைந்த நீதிமான்களே! சூற்கொண்ட மேகம் போன்ற திருமேனியையுடைய கிருஷ்ண பகவான் பாண்டவர்களுக்குப் படைத்துணையானே, அவனுக்கு ஈடாரென்று சொல்வீர்கள். அப்படியே படைத்துணையானாலும் நிராயுதனாகி தேர்செலுத்த வமைந்தானன்றி வேறல்ல. அவனண்ணன் பலபத்திரர் கலப்பையாயுதத்துடன் எனக்குப் படைத்துணையானார். இவைகளெல்லாம் அந்தக் கிருஷ்ணனுக்கு முன் நிலையில்லாம லழிந்துபோகும் என்று பயந்திருக்கின்றீர்களல்லவா? அப்படியே மடிந்துபோகுமாகில் நாமெல்லோரும் வீரரென்றும் வேந்தரென்றும் ஏனிருக்கின்றோம். ஐயோ! நாம் அனைவரும் கால் கை குறைந்த சப்பாணி முடம்போ லெண்ணிக்கொண்டோ சஞ்சலித்து வாடுகின்றீர்கள். ஓ தைரியமற்ற மன்னவர்களே! இன்னமும் கேளுங்கள். கதாயுதத்தைக்கொண்டு யுத்த முனையிற் கலந்து நின்றேனாகில், இவ்வுலகத்திலுள்ள தேவர்களும் மூவர்களும் ஒன்றாய்ச் சேர்ந்து வந்து எதிர்த்தாலும் ஒரு க்ஷணப்போதில் அவர்களியாவரையும் வதைத்து வீர சொர்க்கம் அனுப்பிவிடுவேன். இவ்வளவு வலிமையை யுடைய என்னை வீமசேனனோவெற்றிகொண்டு வெல்பவன். இதை நீங்கள் யோசிக்க இல்லையோ? அந்தோ! அந்தோ! நானென்ன சொல்லப்போகிறேன். மேலும், திடவீர காத்திர திண்ணியராகிய துச்சாதனன் - துன்முகன் - விகர்னன் - சுமத்தி - சித்திரசேனன் - சித்திரபானு இவர்கள் முதலிய என் தம்பிமார்கள் மல்லைப் புரியுந் தோள்வல்லமையும், சொல்லற்கரிய வாள்வல்லமையு முடையவர்கள் வட

பத்திரசாயியாகிய மாயோன் பார்த்தசாரதி
யாக வந்தாலும் அதைக் குறித்து மெச்சி சந்
தோஷப்படாமல் அருச்சுனனையும், மற்றப்
பேர்களையும் பிச்சிப் பிடுங்கி இலவம் பஞ்சு
போல காற்றைத் தூற்றிவிடுவார்கள். வீம
சேனனுடைய விதியை மாற்றுதற்கு நான்
ஒருவனிருக்கின்றேன். இதல்லாமலும், என்
பேரிலும் எதிர்த்து வரப்பட்டவரெவரையும்
இனி பிறவாமற் செய்வதுமன்றி, ஈட்டி-எறி-
வல்லையம்-குண்டு-குழல் முதலியவற்றைத் தடுக்
கவும், இடித்து மின்னிவரும் ஏழுமேகங்களின்
முழக்கத்தை விலக்கவும், மேதினி கிழியப்
பொழியுங் கல்வருஷங்களைக் கலக்கவும், ஓங்கி
வீசிய யுகாந்தகாலச் சண்டமாருதத்தை ஒடுக்க
வும், வேண்டியபோது விடுக்கவும், பேரிருளைப்
பிரகாசிக்கச் செய்யவும், பிரகாசத்தைப் பேரிரு
ளாக்கவும், ஆகாய கங்கையைப் பூமியில்
அழைப்பிக்கவும், அதன்பேரில் யானை சேனை
பரிவாரங்களெல்லாம் நடக்கவும், எதிராளி
களின் சேனைப் படைகள் முழுகிப் போகும்படி
யாக மூடிக்கவும், வெப்பமாகிய பாலைநிலத்தில்
மேகம் பொழிந்த சலமானது தவறிப் போகா
மல் வரும்படியாய் மடக்கவும், என்னுடைய
சேனைகள் தாகவிடாய் தீர்த்து குளித்து முழுகி
இளைப்பாறி நடக்கவுஞ் செய்வதுமன்றி மண்
டலமேலாகவும், விண்டலங் கீழாகவும் மாற்று
வேன். சரபம் - சார்த்தூலம் - கண்டபேரண்
டம் - சிங்கம் - யானை-மலைப்பாம்புகள் முதலா
கிய மிருகங்களெல்லாம் நான் கைகாட்டிய
தொழில்களைச் செய்துகொண்டு இன்னமும்
வேலைசெய்யக் கட்டளையிடவேண்டும் இறை
வனே என்று இறைஞ்சிநிற்கவும், அப்போது
குறுங்காற்பூதம்-குடங்கைப்பூதம் - குடவயிற்
றுப்பூதம்-குழிக்கண்பூதம் முதலாகிய பைசாச
கண பிரமராக்ஷசர்களெல்லாம் சிரத்தை கரத்
தைக்குவித்து என்ன உத்தரம் எந்தவேளையில்
வருமோவென்று எதிர் காத்திருக்கும்படியா
கிய ஸ்தம்பனம்-மோகனம்-உச்சாடனம்-ஆக்
ருஷணம்-தொட்டியம்-சல்லியம் - இந்திரஜா
லம்-மயேந்திரஜாலம்-கண்கட்டு-திசைக்கட்டு-
தேகக்கட்டு-விண்கட்டு-மண்கட்டு-மறைவுமை
மாயாவித்தை முதலிய மந்திர எந்திரதந்திர
சாகசங்களும், முனிவர்-சித்தர் முதலியோர்
கள் அநுக்கிரகஞ் செய்யக் கற்றிருக்கிறேன்.
சலஸ்தம்பனம்-வாயு ஸ்தம்பனம்-அக்கினிஸ்
தம்பனம் முதலான வித்தைகளோடு இவ்வுல
கத்தில் தற்செயலாய் மாய்ந்துபோன உயிரை
மறுபடியும் வரவழைக்கும் அமிர்தசஞ்சீவி

மந்திரங்களும் பெற்றிருக்கின்றேன். இத்
தன்மையாகிய உபாயங்களெல்லாவற்றிலும்
வல்லவனாகிய நான் படைத்துணை வந்தபேர்
களை நம்பிக்கொண்டிருக்கத் தக்கதுமுண்டோ,
தேவர்கள் அடைக்கலமென்பார்களாகில் அசு
ரர்களைவென்று ஒரு வாக்கியத்தினால் அமரர்
களைக் காக்குந் திறத்தையுடைய என்னைத்
துதித்துக் கொண்டாடிப் புகழாமல் அற்ப
பலத்தையுடைய ஐவரைக்கொண்டாடி விம்மி
விம்மி வாடுவது வேந்தர்களுக்குப் புகழல்
லவே. இப்போது நான் சொல்லிவந்த காரி
யங்களித்தனையும் உறுதியுடையதல்லவென்று
உங்கள் மனதில் நினைப்பீர்களாகில் உண்மை
யாகிய வார்த்தைகளைச் சொல்லுகின்றேன்
கேளுங்களுத்தமர்களே! (பேறிளமையின்பம்
பிணிமூப்புச் சாக்காடிவ்வாறுங் கருவிலமை
ப்பு) என்றபடி, தாய் தந்தையர்கூடிச் சுக்கில
சுரோணிதஞ் சம்பந்தப்படுங் காலத்தில்,
ஐந்து கோசமாக வாயு உந்தியபோது
தரித்த கருவுருவாகிய உடலுக்கு அவ்வாறுங்
கருவிற்றானே அமைத்திருக்கின்றான் சிருஷ்டி
கர்த்தனாகிய பிரமனென்று பெரியோர்களாற்
றெரிந்துகொண்டு இருக்கின்றேன். (அன்
றெழுதியதை யழித்தெழுதப் போகிறதில்லை)
என்று சொல்லும் பழமொழியுங் கேட்டிருக்
கின்றேன். இதை வென்று வாழ்ந்தவர்
களு மில்லை யென்றுணர்ந்திருக்கின்றேன்.
அப்படி எவர்களாகிலும் இவ்வினையைத்
தவிர்ந்திருப்பவர்களுண்டானால் எனக்கு அத
னைச் சொல்லுங்கள். ஆகையால் க்ஷத்திரியர்க
ளுக்கு விதித்திருக்குமுறை நெறிப்படியுத்தஞ்
செய்வதே ஞாயம். எங்களை வெற்றிகொண்டு
பஞ்சாசதகோடி பூமண்டலமுழுதுந் தரும
ராஜன் ஆண்டாலும், அல்லதுமாண்டாலும்,
நாங்கள் மிகுஜெயம்பெற்றாலும், அல்லது
அபஜெயமுற்றாலும், ஆருக்கென்ன (பள்ள
மிறைத்தவன் பங்குகொண்டுபோவான்) என்
பதுபோல் சாகிறவரையிலும் யுத்தஞ்செய்து,
ஜயித்தவர்களுடைய இராஜ்ஜியமென்று
இராஜ முறைமை இருப்பதனால் ஒருகை
பார்த்துவிடுவேனல்லாமல், பாண்டு மைந்த
ரைப் பணிந்து இனிய வசனங்கூறித் தாழ்
ந்து அவர்கள் பாதத்தைப் பிடித்துக்கொண்டு
நித்திய தரிசனஞ்செய்து அற்பத்திற்கு அரு
மைக் குலைந்து அரியபண்டத்திற்கு ஆசை
கொண்டு வாழ்ந்திருக்கமாட்டேன். இதனால்
என்னுயிர் மாத்திரம் அழியுமேயன்றி என்புக
ழொழியமாட்டாது. ஆகையால்என்னதன்புங்

கள் வந்தாலும், எதுகளழிந்தாலும், எவர்கள் மொழிந்தாலும், எவர்களொழிந்தாலும் யுத்த மென்னும் வீரத்தை என்னிதயம் ஒருக்காலும் விட்டு நீங்காது என்று இராஜாதி ராஜனுகிய திரிதராட்டிரனையும், மற்ற அரசர்களையும் நோக்கித் துரியோதனன் பலபல வார்த்தை களை சலசலவென்று மொழிந்தான்.

அப்பால் மனதிற் றுயரும் முகத்தில் வியர்வும் பெருமூச்சுங்கொண்ட தந்தையாகிய அரசன் மைந்தனை நோக்கி, ஐயா குழந்தாய்! அப்பா கண்மணியே! நான் சொல்லுகின்ற கடைமுறை வார்த்தையாகிய கட்டுரையை உன் காது கொடுத்துக் கேட்கக்கடவை. காதலனே! இப்போது நீ சொல்லிவந்த சகலவித பலாபலன்களையுங் கேட்டேன். ஆகிலும் இவைகளெல்லாவற்றிலும் மிகச் சிறந்தவர்களாயுஞ் சொல்லுதற்கரிய பெரிய வல்லமையுந் தவங்களையும் உடையவர்களாகிய பாண்டவர்களுடன் யுத்தஞ்செய்யக் கருதி யுடன்படுவது, நம்மாற் சாதனை செய்யக்கூடாத காரியமென்று நீதியாய் நினைக்கக்கடவாய். ஏனெனில், தெய்வபலமும்-யாகபலன்களும் - திணிந்த தோள்வலியையும்- திவ்வியாஸ்திரத் திறமையும்-சேனைப்பெருக்கமும் உறுதி முதலிய யாவும் ஐவர்களுக்கு அமைந்திருக்கின்றன. உனக்கென்னிலோ இவ்விடத்திலிருக்கும் அரசர்களுடைய வலிமைத்துணை யல்லாமல் மற்றொரு துணையுமில்லையே. மகனே! அருச்சுனன் தவஞ்செய்த பலத்தினுல் ஆதிபாண்டரங்கனுடைய அருள்பெற்று தேவலோகம் போய் தேவர்கட்குப் பகைவராகிய காலகேய நிவாதகவசரைச் செயித்து, தேவாமிர்த போசனங்கொண்டு தேவசிங்காசனத்தி லிருந்து தேவர் சகாயனென்று பேரும் புகழும் கிரீடமும் பெற்று பூலோகத்திற்கு வந்தவனுதைலால், அந்த விஜயவீரனை இந்த அரசர்களைக் கொண்டு ஜயிக்க உன்னுற்கூடுமோ? பதினுயிரங்கோடி நட்சத்திரங்கள் கூடிப் பிரகாசித்தாலும் ஒரு சூரியகிரணத்தினுல் ஒளிமழுங்கி உலகத்தாருக்குத் தோற்றுமற் பிரகாசம் மறைந்து போவதுபோல், விஜயனுகிற சூரியனுக்கெதிரில் இராஜாக்களென்னும் நட்சத்திரங்கள் ஒளிமாறி - நிலைமாறி- தலைமாறிப் பலபலவென்று உதிர்ந்து போவனவேயல்லது நிலைத்துநின்று நிலைவெறிக்கமாட்டாவே? மேலும் மருதமரத்தைக் காலினு லுந்திக் குபேரன் பிள்ளைகளின் குறையகற்றிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் சாரதியாகி ரதஞ் செலுத்தும்படியாக இசைந்தமையால், மகிழ்ச்சி பொருந்திய அருச்சுனன் யுத்தகளம் புகுவானுகில், இரத்த மாமிசந் தோய்ந்த வேலாயுதத்தைத் தாங்கிய பற்பல மன்னர் கூட்டங்களும் வெலவெலவென் றுதைத்துக்கொண்டு குலைந்து அழிந்துபோவார்களேயன்றி வேறல்ல. அவரவருடைய வல்லபங்கள் அவரவர்களுக்குத் துணையல்லது ஒருவருடைய வல்லபம் ஒருவருக்குத் துணையென்று நம்பும் வம்பர்களுக்கு இகழ்வும் வசையும் வருவதல்லாமல் புகழு மிசையும் வரமாட்டா. ஆகையால், உன்னுடைய பெரிய வல்லபங்களெல்லாம் பாண்டவர்களுக்கு ஒரு லக்ஷியமாயிராது. இப்போது கூடியிருக்கும் வீஷ்மர், துரோணர் முதலிய பெரியோர்களுடைய உயிரிருக்கிற வரைக்கும் நீ பலசாலிதான் உனக்குப் பயமில்லை. அவர்களுக்குப் பிற்பாடு நீ துன்பப்படுவாயென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையால், நீங்கள் இருதிறத்தவரும் பகை நீங்கி இருப்பதற்காக ஒரு யுத்தி சொல்லுகின்றேன் கேள். அர்ப்பாகங்களைப் புசிக்கும் அமரர்களும், நமது புறஜனங்களும் சந்தோஷமடையும்படியாக இந்த ராச்சியத்தை இருகூருக்ப் பங்கிட்டுத்தருகிறேன்; உன்னுடைய பாகத்தை யாவரும் புகழ்ந்து துதித்து மகிழும்படியாகவும், உன்னையடுத்தவர்கள் இருகரத்தையுங் குவித்து வாழ்த்தி வணங்கி வாழ்ந்துகொண்டிருக்கும்படியாகவும் பற்றி சுவேல நக்ஷத்திர நீழலில் துரைத்தனஞ்செய்து சிறந்த சுகத்தைப் பெறக்கடவை என்று திரிதராட்டிரன் சொல்லவே, அவ்வார்த்தை செவிக்குட் புகுமுன்னமே சிந்தைவருந்தி மிகவும் கோபங்கொண்டு துரியோதனன் சொல்லுகின்றுன்.

ஐயர்! பூர்வத்தில் சூதாடிதோற்று இனிமேல் இராச்சியம் நமக்கு வரப்போகிறதில்லையென்று கைவிட்டுக் காடேகதியாய்க் கலந்திருந்த பாண்டவர்களைக் கருமேகத்தையொத்த திருமேனிவாய்ந்த கண்ணன் மறுபடியும் வரவழைத்து, நாட்டைநான் வாங்கித் தருகிறேனென்று உறுதி வார்த்தைகள் சொல்லிப் பந்துக்களாகிய சில படைத்துணைகளைச் சேர்த்துவிடுத்து நான்கொண்ட பூமியை மீட்டுக்கொடுக்க கருதி கலகஞ்செய்து இதுவே வேலையாக வேலையற்றுத் திரிகின்றுன். அவன் செய்கின்ற தந்திரமருட்பினுல் நீர் மயங்கிப் பயப்படுகின்றீர்; நான் பயப்படேன். அவனெண்ணிய யெண்ணத்தின்படி நான் பூமி

யைக்கொடுத்து விடுவேனாகில், எனக்கீடாகிய
மன்னர்களும், என் சத்துருக்களும் குலுங்க
நகைப்பார்கள். தந்தை வாக்கியத்தைக்கேட்
டுத் தருமமாய்க் கொடுத்ததல்ல ஐவருடைய
பலத்திற்குப் பயந்து கொடுத்துவிட்டான்
துரியோதனனென்று அவமதிப்பாய் நிந்திப்
பார்கள். ஆதலால், என்னுயிருள்ளவரைக்கும்
அல்பத் துரும்பளவு பூமியும் அவர்களுக்குக்
கொடுக்க மாட்டேன். பாண்டவர்களுக்குப்
பயந்து இளைத்தான் துரியோதனனென்று
ஏழ்மையாகிய சொற்கேட்டு உயிர் விரும்பி
வாழமாட்டேன். திரிநேத்திரன்வந்து எதிர்த்
துச் ஜெயித்தாலும் ஜெயிக்கலாமேயன்றி,
மற்ற பேர்கள் போர்முகத்தி லென்னைச்
ஜெயிக்கமாட்டார்கள். இத்தன்மைய வாகிய
புஜவலியையுடைய யென்னை உச்சாகப்படுத்
தாமலும், உமது யுத்தியில் நிதானிக்காமலும்,
புத்தியில்லாத பேதையர் மருட்டிய வார்த்தை
மயக்கத்தால் கலங்கிச்சொல்ல வந்தீரையா?
அப்படி நீர் ஒன்றுக்குங் கலங்கவேண்டாம்.
எந்தையே! திடகாத்திரவீர அமோக வரங்
கொண்டு உரங்கொண்டிருக்குஞ் சத்துருக்க
ளானாலும் அவர்களை ஒருநொடிப்பொழுதில்
வெல்லவல்ல வல்லமையிற் கைபழகி இருக்
கின்றேன். ஆனால். நீர் கொண்டிருக்கும் நடுக்
கத்தை மாற்றுகிறதற்குக் கல்லாமற்போ
னேன். ஆகிலும் அதுவுந்தெரியும். அஃதெப்
படியென்னில், உன் பிள்ளைகளின் புயவலி
மையினால் எதிர்த்த சத்துருக்களெல்லாரு
மிறந்து யமலோக மடைந்தார்களென்று
எப்போது நீர் கேட்கின்றீரோ, அப்போது
இந்தச் சந்தேகமும் பயமும் உம்மைவிட்டு
நீங்கிப்போம். அதுவரையிலும் உமது மனந்
தாளமாட்டாது. ஆகிலும் கொஞ்சம் பொறு
த்து இந்தக் காலத்தைத் தள்ளும். இப்போது
நேரிட்ட போரைப் புரிவது தருமமேயன்றி
இராஜ்யம் பகுந்து கொடுப்பதில் எனக்குங்
கீர்த்தியில்லை; என்னிடத்தில் வாங்கிக்கொள்
ளும் பாண்டவர்களுக்கும் பெருமையில்லை.
ஆதலால், பூமியைப் பிரித்துக் கொடுக்கிறே
னென்னும் வார்த்தையை இன்னொருதரம்
என் செவியிற்போடா திருக்கக் கோருகிறேன்;
இதை முற்றினுமறந்துவிடும் என்னையனே
என்று துரியோதனன் படபடப்புடன்சொல்ல,
அவ்விடத்தில் இருந்த பேர்கள் யாவரும்
நடுநடுங்க, அந்த வேளையில் அரசன் வார்த்
தைக்குக் குறுக்காகப் பாய்ந்து பக்கத்திலி
ருந்த கர்னன் சொல்லுகின்றான்.

பெரிய அரசனே கேளும்! மண்ணாசை
கொண்டலையும் பாண்டவர்களுடைய படை
வலிமையைப் புகழ்ந்து, எங்களுடைய புஜ
பல பராக்கிரம விற்றிறமையை யோசிக்காம
லிகழ்ந்து இழிவாகப் பேசுகின்றீர். அப்படிப்
பேசவேண்டாம். போர் புரியும்படியாக நினைப்
பேனாகில், ஒரே கணையால் உவரிவளைந்த உலக
முழுமையும் வேர்களைந்து வெந்நீர் வார்த்து
விடுவேன். என்னிலு முயர்ந்த வில்லாளிக
ளுண்டென்னும் எண்ணமுமக்குண்டோ மன்
னவனே! வெப்பமாகிய வடவாமுகக் கனலும்,
மேதினியெல்லாம் நிறைந்த வெக்கனலும்,
வேதநாதன் மதனையெரித்த விழிக்கனலும்,
வேறுபடாத திரிபுரமெரித்த நகைக்கனலும்
சேர்ந்து உருகிக்கலந்து மொய்த்த கூரம்பா
கிய கணைகளைச் செலுத்தி ஒரு கணத்திற்குள்
சத்துருக்களை சாம்பராக்கும் வல்லபமுடைய
என் முன்னே, தேறிய படை வல்லவர்களே
ன்று போர்புரிய வந்தால் அவர்களையும், மறு
மன்னர்களையும், அவர்கள் துணையையும்,
இரதகஜ முதலிய படைகளையும் பின்பலம்
வேண்டாமல் தன்னந்தனியனாக விற்கொண்டு
ஜாடி - உதிரவெள்ளங்களோடி - காளிகள்கூடி
கொண்டாடிப் புசித்துக் களிக்கக் கண்டங்
கண்டமாய்க்கூறுபடுத்தி, மாமிச இரத்தங்களி
னாற் சேறுபடுத்தி, கரமுஞ் சிரமுங் கலந்து
விதைத்து, கடல் சூழ்ந்த காசினிமுழுவதும்
உன் புத்திரருடைய வெள்ளைக்குடை நிழலில்
விளங்கவைத்து, உன்னுடைய மன நடுக்கத்
தையும், மற்றவர்களுடைய மதிபொடுக்கத்தை
யும்; பகைவரால் விளையும் மடுக்கத்தையும்
நொடிப்போதிலடக்கி அகற்றிவைக்கின்றேன்;
ஐயா இப்போதெனக்குச் செலவு கொடுமென்
றுப் பற்பலவிதமாகிய சாமர்த்தியங்களைப்
பகர்ந்த அங்கதேசாதிபதியினுடைய வல்லப
வார்த்தை முழுமையுங் கேட்டுத் திரிதராட்டி
ரன் சந்தோஷமுஞ் சந்தேகமுங்கொண்டு
சொல்லுகின்றான்.

அப்பா கர்ண! முறியாத காண்டீபமும்,
அருதநாணியும், அக்ஷயத்தூணியும், இளை
யாத சுவேதவாம்புரவியும், அழியாத இரத
மும், அநுமத்துவஜமும், அக்கினிதேவனாற்
கொடுக்கப் பெற்றவனென்றும்,கங்கையுந் திங்
களும் பொங்கரவுமங்கையும் அக்கத்திற்றரித்
தருளிய சங்கரசுயம்புவானவ ரளித்த பாசுப
தாஸ்திர முடையவனென்றும், தேவேந்திர
னுடன் சமமாயிருந்து யுத்தமுத போஜன

முண்டவனென்றும், காலகேய நிவாதகவசர் முதலிய பேர்களைக் குலத்தோடழிக்குங் கொடுங் கணை கொண்டவனென்றும், சகல தந்திர சுதந்தர மாயனாகிய கிருஷ்ணன் சாரதியாகித் தேர்செலுத்தக் காண்டவதகனத்திற் போர் செலுத்தினவனென்றும், இந்த மூன்றுலோக மும் புகழப் பேர்கொண்ட அருச்சுனனுடைய போர்முனையில் நானெதிர்த்து யுத்தஞ் செய்கி றேனென்று சொல்லத் தக்கவர்களுமுண்டோ? எப்பிறப்பிலுமில்லை. சொப்பனம்போல் இப் பிறப்பில் நீயொருவன் சொல்லுகின்றதைச் சாக்கிரத்திலிருந்து பார்க்குமெனக்குப் பெரிய ஆச்சரியமா யிருக்கின்றது. நல்லதப்பா! விராடபுரத்தில் நேற்று நடந்த மாடுபிடி சண்டையில் நீயில்லையோ? இது சேதி அறிய மாட்டாயோ? அற்புத மற்புதம் தம்பி! அருச்சுனனை வெல்லுவே னென்று ஆர் சொல்ல வேண்டுமென்றால், அநேக கற்ப கோடி காலம் தவஞ்செய்து சர்வசங்கார கால ருத்திரனுக்கொப்பாக ஏற்படப் போகின்றவ னொருவனிருப்பானாகில் அவனுமொருவேளை ஆலோசித்துச் சொல்ல வேண்டியதுதான். அதைவிட வேறொருவரையுங் காணோம். நாம் இருக்கிறோமென்றாலோ (மரமிருக்கு நாட்டில் வந்திறங்கும் காக்கை, ஊசென்றாலும் பறக் கும் ஆசென்றாலும் பறக்கும்) என்று சொல் லும் பழமொழியைப்போல், அர்ச்சுனன்போர் செய்ய வந்தானென்று கேட்டவுடனே, யுத் தத்தையும் உடலையுமறந்து ஓடிப்போங் காக் கையைப்போன்ற நாம் வாக்கினால் வெல்லு வோமென்பது எப்படி இருக்குதென்றால், “உள்ளான் பதுங்காலும் ஓணான்றன் கர்வ மும் ஓங்குபுகழ், வெள்ளான் கிறந்தமும் பார்ப்பான் தமிழும் விழல்விழலே” என்றால், உள்ளான் குருவியானது பூமியசையுதோ வென்று ஆட்டிப் பார்ப்பதும், ஆகாயமிடியப் போகுதென்று இருகாலையு மேலேநாட்டி மல்லாந்து படுப்பதும், ஓணான் தலையாட்ட லும், வெள்ளான் கிரந்தங்கற்றுப்பேசுவதும், பார்ப்பான் தமிழ்கற்றுப் பிரசங்கஞ்செய்வ தும் விழலுக்கொப்பாம். அதுபோல விஜயன் வெம்பிட்பதைத்து ஒருகணை விடுவானாகில், அம்புவியெல்லா மழியும்; என் சொல்லைப் பழு தாக்காமல் புந்தியுட்கொண்டு பெருமையுடன் வாழக்கடவீர்கள். ஓ புத்திரர்களே! மைந்தர் களும், பந்துஜன நண்பர்களும், பரிவாரச் சேனைகளும் நூறுநூறாய்க் கூறுகூறாய்ச் சிதைந்து அழிந்துவிடும்படியாகப் பாண்டவ ருட னெதிர்த்து அமர் செய்யவேண்டிய தென்ன? அவர்கள் கையைக்கொண்டே அவர் கள் கண்ணைக் குத்துவதுபோல் முன்னே உங்களிடத்தில் சொக்கட்டானாடித் தோற்ற புவி முழுமையும் முறையாகக் கொடுத்து எல்லா உயிருந் தொழும்படியாக மித்திரருட னிருந்து அரசாக்ஷி செய்யுங்களப்பாவென்று கட்புலனிழந்த காவலன் மொழிந்த சொல்லை மகமேருவைப்போல் கேட்டிருந்த வீஷ்மாச் சாரியர் சொல்லுகின்றார்.

ஓ அரசர்களே! ஆதி முதற்கொண்டு இதுவரையிலும் பாண்டவர்களை இகழ்ந்து வெற்றியடைந்துவந்த இந்த வீரனுடைய திறத்தை எல்லோரும் அறிந்திருக்கின்றீர்க ளல்லவாவென்று சொல்லிக் கர்னனை நோக்கி, ஓ கை தேர்ந்தவனே! போனதெல்லாம் போகட்டும் இப்போ தருச்சுனனுக்கு எதிரில் முனைந்து யுத்தஞ் செய்யத் துணிந்து நிலை த்துநின்று உன்னுயிரைத்தப்பித்துக்கொண்டு வரமாட்டுவையோவென் றுருகிக் கேட்டு கல கலவென்று நகைத்து நகைத்துப் போபோ பைத்தியக்காரனே! (குறைவானவர்கள் கூவிக் கதறுவர் நிறைவானவர்கள் நிதானித்திருப் பர்) என்னு மொழிக்கொப்பாக யுத்தஞ் செய் யக் கையிலாகாதவர்கள் தான் வாக்கினாற் பிதற் றிக்கொண் டிருப்பார்கள். பூரணமாகச் சபிக் கத் தெரிந்த புண்ணியவான்கள் சமயம் வந்த போது தங்கள் சாமர்த்தியத்தைக் காட்டுவார் களன்றி நாவினால் ஒருக்காலும் நவிலமாட் டார்கள். அதுதான் வீரதருமமென்பது. நீ சொல்லுவது அதர்மம். ஆகையால், பிறந்த வீட்டின் பெருமையை உடன்பிறந்த மூத்தோ னிடத்தில் புகழ்ந்து சொல்வதைப்போல் உன் பண்டவாளந் தெரிந்த எங்கள் சபையிற் சொல்லாதே? சந்தைகூடிய விடத்தில் உன் சாமர்த்தியத்தைப் பேசினால் சகலரும் கேட்டு சந்தோஷப் படுவார்கள். இந்த வார்த்தை யைப் பேசலாம் இந்த வார்த்தையைப் பேசக் கூடாதென்று சிறிதும் உணராத நீ காலமிட மறிந்து சற்று யோசித்துச் சொல்லக் கடவை யென்று உலகமதிக்கும் புகழினையுடைய வீஷ் மாச்சாரியர் சொல்லைக் குற்றங் குறையோடு குச்சிதமில்லா மனத்தோனாகிய அங்கதேசாதி பதி வடமுகாக்கினிபோற் பொங்கிக்கொதித்து மனோவியாதி கொண்டிருக்கின்ற திரிதராட்டி ரனுக்கு சொல்லலுற்றான். அரசனே கேளும்! பாண்டவர்களுந் துரியோதனாதியர்களுக்கும்

யுத்தம் விளையப் போகுதென்று முன்னமே தேவதைகளெல்லாங்கூடி வஞ்சனையாக யோசித்து, நான் கற்ற மந்திரங்களையும் தேவாஸ்திரங்களையும் தருணத்திற்குதவாமற் போகும்படியாக என்னைச் சபித்திருக்கின்றார்கள். ஆகையினாலே இதுவரையிலும் அருச்சுனன் பிராணனுடன் பிழைத்திருக்கின்றான். அல்லாவிட்டால் அன்றே இறந்து நாமெல்லாருமறந்து அவன் செத்தவிடம் புல்முளைத்துப் போய்விடும். ஆகிலும் என்னசாபம் நேரிட்டாலும் (யானை படுத்தால் குதிரை யத்தனை உயரமிருக்க மாட்டாதா? ஆகட்டும் ஒரே பாணத்தினால் காண்டீபனுடைய பிராணனை வாங்குகின்றது நிச்சயம். அபத்தமல்ல ஒருவேளை இவனென்ன வாங்கப்போகிறதென்று உமது மனத்தில் சந்தேகமிருந்தால் பாண்டவர்களுக்கு இந்தராச்சிய முழுமையும் கொடுத்துவிட்டு, நூறு பிள்ளைகளையும் அவர்களையடுத்த பேர்களையும் எப்படி விடவேண்டுமோ அப்படியே உமது மனத்துக்கு ராஜியானபடி செய்யுமென்று கண் சிவந்து மிகுந்த கோபத்துடன் சபாமண்டபத்தை விட்டெழுந்து துரியோதனனை நோக்கிச் சொல்லுகிறான். அப்பா! கல்லுங் கரையும்படியான சொல்லுகளைக் கொண்டு சிலர் உன் தந்தையின் மனதைக் கரைத்திருக்கின்றார்கள். அதனால்உன் தந்தை அஞ்சிப் பேசுகின்றார். நீர் அவருடைய இஷ்டப்படி தடுக்காமல் நடப்பதுவே ஞாயம். அப்பால் தெய்வசகாய மெப்படி இருக்கின்றதோ பார்த்துக்கொள்ளுவோமென்று இரப்போர்களுக்கு இல்லையென்னாமற் கொடுக்கும் ஈகையாளன் தன்னுடைய அரண்மனைக்குப் போகவும், துரியோதனன் - சகுனி - துச்சாதனன் தவிர மற்றப் பேர்களும், திரிதராட்டிரனும் கர்னன் நீங்கிப் போனதற்கு விசனப்படாமல் தீங்காகிய தடை நீங்கியதைப் போல் சந்தோஷங் கொண்டு சஞ்சயனை நோக்கி, என் தம்பி புத்திரராகிய பாண்டவர்கள் எவர்களை எவர்கள் கொல்லுகிறதென்று சபதங் கொண்டிருக்கின்றார்கள் அதனை நீரறிந்தமாத்திரஞ் சொல்லுமென்று கேட்கத் திரிதராட்டிரனை நோக்கிச் சஞ்சயன் சொல்லுகின்றான்.

ஐயனே! வீஷ்மரைச் சிகண்டியும், துரோணாச்சாரியரைத் திரிஷ்டத் தூய்மனும், சல்லிய ராசனைத் தருமராஜனும், துரியோதனன் முதலாகிய நூறுபிள்ளைகளை வீமசேனனும், கர்னன் சிந்துபதி முதலாகிய இவர்களை அர்ச்சுனனும், மாமாவாகிய சகுனியை நகுலனும், சகுனி தந்தையாகிய சௌபலன் முதலிய குலத்துள்ளோரைச் சகாதேவனும், ஆயிரம் பேர்களாகிய உமது பேரப்பிள்ளைகளுக்கும் பதினாயிரம் பேர்களாகிய இராஜ குமாரர்களுக்கும் அருச்சுன குமாரனாகிய அபிமன்னுவும், கிருதவன்மனைச் சாத்தகியும், ஆத்திமாலையைத் தரித்த அரன் வந்து தடுத்தாலும் கொல்லுவோமென்று சபதங் கூறிக்கொண்டிருக்கின்றார்கள். விராடனும் அவனுடைய புத்திரவர்க்கமுதலிய சேனைகளும் திர்ஷ்டத் தூய்மனுக்குத் துணையானார்கள். திரௌபதியினுடைய பிள்ளைகள் இளம் பஞ்சபாண்டவரைவரும் சிகண்டிக்குத் துணையானார்கள். தேசதேசத்து இராஜர்களெல்லோரும் தங்கள் தங்களுக்குப் பகையாகியபேர்களுடன் போர்புரியத் துணிந்திருக்கின்றார்கள். பாண்டவர்களுக்கும் திரௌபதைக்கும் பிறந்த இளம் பஞ்சபாண்டவர் தவிர மற்ற உபபத்தினிமார்களுடைய புத்திரர் ஏழுபேரிருக்கின்றார்கள். அவர்களோ ஏழு யுத்த சமுத்திரத்தையும் எளிதில் நீந்துகின்றவர்கள். அல்லாமலும் (செல்லுஞ் செல்லாததற்குச் செட்டியாரிருக்கின்றார்) என்னுங் கதையைப்போல், அரவானொருவனிருக்கின்றான். மகாமாயை வல்லபத்திற் சிறந்த கடோற்கஜனென்பவன் கடலைப்போல் வருகின்ற இராட்சசப் படைகளுக்குத் தடையாகத்தான் ஒருவனே என்றிருக்கின்றான். உத்தமோசன் உதார்மனுவென்பவர்கள் அருச்சுனனுக்குச் சக்கர ரக்ஷகரானார்கள். இந்தப்பிரகாரம் ஏற்படுத்திப் பிரித்துக்கொண்டிருக்கின்றார்கள். பாண்டவர்களென்றுசொல்லி, ஓ மன்னர் மன்னனே! இனிமேல் உமது புத்தியிற்றோன்றிய தன்மையைச் சொல்லுமென்று கேட்க, அச்சபையில் நிறைந்திருக்கும் பேர்களிற் சிலர் சஞ்சயனைப்பார்த்து, நீர் சொல்லிவந்த பலவான்கள் நிச்சயித்துக்கொண்ட எதிரிகளெல்லாரும் சரிதான். ஆனால் தருமராஜன் சல்லியனைக் கொல்ல இருக்கின்றாரென்றீர் அது சரியல்ல. சல்லியபூபதிக்குத் தருமராஜனெம்மாத்திரமென்று சொல்லவே, அதைக் கேட்டிருந்த விவேகமுடைய சல்லியராஜன், ஓ நண்பர்களே! சகல வெப்பங்களைத் தணிப்பதும், சீவதாரமாயிருப்பதும், பாவவினாச பரிசுத்தமுடையதும் கங்காசலம்; அந்த கங்கா சலத்தினிடத்தில் நெருப்புப் பிறக்குமாகில் எதைக்கொண்டவிக்கலாம்? அந்த ஜலத்தைப் போன்ற தருமராஜனாகிய, கருணை வள்ளல்

என்னைக் கொல்ல வெகுண்டு வருவாராகில், அவருடனெதிர்த்துப் போர்செய்யத் தக்கவர்கள் இந்தத் திரிபுவனங்களிலு முண்டோ? அவருடைய தந்தையாகிய எமதருமராஜனைப் போற் சாமர்த்தியங் கொண்டிருக்குந் தவத்தினராகையால், தருமராஜன் என்னை கடிந்து செயிப்பேனென்று தாராளமாகச் சொல்லத் தகுமென்றான் சல்லியராஜன். அதைக்கேட்ட தேசதேசத்தரசர்களெல்லாரும் வாயை மூடிக் கொண்டார்கள்.

பின்பு திரிதராட்டிரன் சஞ்சயனை நோக்கி, அப்பா சஞ்சயனே! உனக்கு பிரயாசை கொடுத்து இவ்வளவுதூரம் பன்னிப்பன்னிக் கேட்டதெல்லாம் என் பிள்ளைகள் தெரிந்து கொண்டு ஏதாகிலும் ஒரு வழியாக வருவார்களென்னும் இச்சையை உடையவனாய்க் கேட்டதேயல்லாமல் வேறல்ல. நான் எவ்வித யோசனைகள் செய்தபோதிலும், என் புத்திரர் வழிக்கு வருகிறதாக இல்லை. யோசிக்குமிடத்தில் பாண்டவர்களுக்கு ஜயமும், துரியோதனாதியருக்கு அபஜயமும் உண்டாமென்று தோற்றுகின்றது. மேலும், என் குமாரர்களுக்கு இறக்குங் காலம் நேரிட்டபடியால் இப்பேர்ப்பட்ட துற்புத்தியும், துர்யோசனையும் சேர்ந்திருக்கின்றன. பிழைக்கும் பிள்ளைகளானால் பெரியோர்களுடைய நீதி வாக்கியங்களையும், தந்தையாகிய என் வசனத்தையுந் தள்ளுவார்களோ? இறந்துபோவதற்கு இதுவே திருஷ்டாந்தமாக இருக்குதென்று மனவெறுப்புடன் சொல்லி நொந்த பெரிய மன்னனுடைய மனக்கருத்தை யறிந்துகொண்ட, இரக்க மனத்தினையுடைய விதுரராஜனெழுந்து, அண்ணாவே! கேளும்; உமக்குப் பக்ஷபாதமில்லாமல் இருதிற புத்திரர்களையுஞ் சமமாய் நடத்தவேண்டுமென்னும் இச்சையிருக்குமாகில், அடிக்கடி சபலிக்குஞ் சிந்தையை நீக்கி உறுதிபடுத்திக்கொண்டு, மறுபடியும் மாசற்ற இதயமுள்ள சஞ்சயனை உபலாவியத்திற் கனுப்பிப் பாண்டவர்களைக்கண்டு பெரியதகப்பனார் உங்களைப்பார்க்க அழைத்துவரச்சொன்னார் என்று இனிய மொழிகள் சொல்லச் செய்வீராகில், இந்த வார்த்தையை கேட்டவுடனே, அஞ்சலி அஸ்தராக வந்து உமது பாதங்களில் வணங்குவார்கள். அப்படிக்கு வந்த பிள்ளைகளை ஆதரித்துப் பிரிய வசனங்களைப் பேசினால் மனமகிழ்ந்து, உடல் புளகமுற்று வருத்தம் நீங்கி ராஜ சபையில் பூர்வத்தில் கூறிக்கொண்ட சபதமென்னும் கோபாக்கினிகளெல்லாம் மாறிப்போய் உமக்குரிய அன்பராவார்கள். இவ்வளவு பக்குவம் பண்ணிக் கொள்ளும்படியாக உமது மனந்துணியுமாகில் இப்போதே செய்யலாம்; இதைவிட வேறுவிதமாகிய நலங்களொன்றுங் காணேமென்று விதுரராஜனாகிய தம்பி சொல்லக்கேட்ட வேந்தன் விவேகமுள்ள சஞ்சயனுடைய முகத்தைநோக்கி, வாசனையார்ந்த மாலைகள் புனைந்த மார்பனே! நான் சொல்லியனுப்பிவைத்தால் என் தம்பி பிள்ளைகள் என் வார்த்தையைத் தள்ளாமல் இவ்விடத்திற்கு வருவார்களாவென்று ஆச்சரியத்துடன் கேட்ட அரசனைப்பார்த்து சஞ்சயன் சொல்லுகின்றான்.

ஐயா! குபேரசம்பத்தே கூடிவருவதானாலும், குவலயமெல்லாம் ஒரு குடையில் ஆளவமைந்தாலும், குன்றச்செய்யும் வறுமை நோய்கள் கூடினாலும், வாராத ஆபத்துகள் வந்தாலும், மடியுங்காலம்நேரிட்டாலும் இவ்விடத்திற்கவர்கள் ஒருக்காலும் வரமாட்டார்கள். ஆனால், சத்தியவிரதந் தப்பாத உத்தமர்களாகையால், தந்தை வார்த்தையைத் தப்பலாகாதென்னுந் தருமத்தை அநுசரித்து இப்போது வந்தாலும் வருவார்கள். இத்தன்மை வாய்ந்த புத்திசாலிகளாகிய புத்திரரைவரையும் அழைத்துவரும்படி உத்தரவானால், சித்தங் களிக்க இதோ அழைத்துக் கொண்டு வருகிறேன் விடைகொடுமென்று சஞ்சயன் கேட்க, இந்த வசனமானது துரியோதனனுடைய காதுகளில் நாராசம்போல் ஏறவும், வடவாமுகாக்கினி பொங்கி எழுந்த தன்மைபோற் கோபங்கொண்டு கண்களினால் தீப்பொறி இறைத்து சஞ்சயனானவன் முகம் மாறிப்போகும்படியாய்ப் பற்பல வார்த்தைகளைச் சொல்லி, அடா சஞ்சயனே! என்னிடத்தில் சூதாடித் தோற்றுக், காடே கதியாகப் போய்க் காலங் கழித்திருந்த பாண்டவரென்னும் பஞ்சைகளை, பால் - வெண்ணெய்-தயிர் முதலியவைகளைத் திருடி அன்று தின்ற கண்ணனானவன் ஏதேதோ ஆசைகளைச் சொல்லி, இன்று அழைத்துவந்து சில தந்திரம் செய்துக்கொண்டிருக்கிறான். நன்று! நன்று! அவனுடைய திறத்தையும், பாண்டவர்களின் திறத்தையும் பாழாக்கவேண்டுமென்று எண்ணியிருக்குமெனக்கு விரோதமாக நீ போய் ஐவரை அழைத்துக்கொண்டு வந்து

விடுகிறதும், இந்தத் திரிதராட்டிரமகாராசன் அவர்களுக்கு ராச்சியங் கொடுத்துவிடுகிறதும், திரிலோகமு மறிந்த தீனராகிய பாண்டவர்கள் பெற்றுக்கொள்ளுகிறதும், சிறிய தந்தையாகிய விதுரன் சந்தோஷப்படுகிறதும், நான் பயித்தியக்காரனைப்போற் பார்த்திருப்பதுமாக எண்ணங்கொண்டோ இந்த யோசனை செய்தீர்கள். அடடா! இஃதென்ன வனியாயம்! உனக்கும் விதுர மகாராஜனுக்கும் எவ்வளவு ஏழ்மையாய்ப் போய்விட்டேன் பார்த்தையா? நல்லது தூரத்தாலோசனை செய்யாமல் அவசரப்பட்டீர்கள். இதுவரையில் என் சோறும், என் வஸ்திராபரணமுமாகிய சகல செல்வத்தையும் குறைவற அனுபவித்து வருகிற நீங்களும் அந்தப்பக்ஷத்தி லிருக்கின்றீர்களல்லவா? ஐயோ! உங்களை ஒருக்காலும் நம்பலாகாது. இப்பேர்ப்பட்ட பக்ஷபாதிகளாகிய நீங்கள் என் சபையைவிட் டெழுந்து இந்நிமிடம் பாண்டவர்களைச் சேரவேண்டியது. இனி என் முகத்தெதிர் வரவேண்டியதில்லை போம்போமென்று புகன்று, இன்னமும் இந்தச் சபையில் பட்சபாதிகளா யிராநின்ற பேர்கள் எப்பேர்ப்பட்ட தகுதியையுடைய சுதந்தரராகி யிருந்தாலும் அவர்களுக்கெல்லாம் இதுவே உத்தரவென்று சொல்லி, வெண்கலமென்று சொல்லுமிடத்தில் ஓட்டை ஓட்டையென்று சொல்லத்தக்க பேர்களைப்போலும், தலைமாட்டுக் கொள்ளியைப்போலும் இவ்விடத்தி லிருந்துகொண்டு எந்நேரமும் தைரியமில்லாத வார்த்தைகளைப் பேசிச் சஞ்சலத்தையுண்டாக்கிக்கொண் டிருக்கும் பேதையர் முகத்திற் பெரியவள் வாசமாக யிருப்பாள். அப்பேர்ப்பட்டவர்களுடைய முகத்தில் நாம் விழிக்கலாகாது. அவர்கள் நிழலும் நமது பேரிற் படலாகாது. அவர்கள் வார்த்தைகளையும் நமது காது கேட்கலாகாது. அப்படி மருவிக் கேட்டுக்கொண் டிருப்போமாகில், நமக்குண்டாகிய செல்வமும் வீரமுங் குறைந்துபோகும். ஆகையால், இப்பேர்ப்பட்டவர்களெல்லாரும் பலசாலிகளாகிய பாண்டவர்களிடத்திற்போய்ச் சேருவதே மிகுந்த நன்மையாக இருக்கும். நீங்கள் என்னை விட்டுப் போவதினால் எனக்கொரு குறைவுமில்லை. என்னுயிர்த் துணைவனாகிய கர்னமகாராஜன் ஒருவன் இருந்தாற்போதும். அவருடன் கூட மாமன் தம்பியர்கள் தேசத்தலைவர்கள் முதலாகிய பற்பல பேர்கள் என்னிடத்தில் நண்புகொண் டிருக்கின்றார்கள். (கூனனைக்கொண்டு குழப்படி மாமி காணிக்குப் பிள்ளையுறும்) என்னும் பழமொழிபோல், இவர்களைக்கொண்டு எதிர்த்து யுத்தஞ்செய்து வெற்றி பெறுவேனே யன்றி, நான் சாகிறவரையிலுஞ் சமர் செய்யாமல் நிறுத்திப் பொறுத்துத் தரித்திருக்கமாட்டேன். ஒருவருக்கும் வணங்கிப் பயந்து இணங்கி அடங்கி உத்தரஞ் சொல்லேன். (தலைக்குமேலோடிய வெள்ளஞ் சாணோடியு மென்னும் முழமோடியு மென்னும்) என்னும் பழமொழிபோல் நான் பயப்படமாட்டேன். அவரவர்களுக்கு எந்தெந்தப்படி இஷ்ட மிருக்கின்றதோ அந்தந்தப்படிக்கு நடந்து கொள்ளலாம். அதற்கு யாதொரு தடையுமில்லை. (கெட்டமாடு தேடுவாருமில்லை, மேய்த்தகூலி கொடுப்பாருமில்லை) சம்பளமில்லாச் சேவகமும், கோபமில்லாத் துரையும் ஏற்பட்டிருந்தால் வேலைகள் சாயுமா? மண் குதிரையை நம்பி ஆற்றிலிறங்குவார்போலே நான் உங்களை நம்பி இருக்கவில்லை. (மண் பூனையானாலும் எலிபிடிப்பது லாபம்) என்பதுபோல், உருக்கிய செம்பிலும் ஒளிமிகுந்த கோபக்கண்களையுடைய உத்தமன் அங்க தேசாதிபதியாகிய எங்களண்ணன் கர்னமகாராஜனுடைய கரத்திற் பிடித்திருக்கும் வில்லானது, சத்துருக்கள் வந்து வளைத்துக்கொண்ட காலத்தில், அவர்களை வெதுப்பி நாசப்படுத்தி எனக்கு வெற்றியைக் கொடுக்குந் துணையாயிருக்கின்றது. அதை நான் விவரித்துச் சொல்லவேண்டியதில்லை. என்பேரில் அன்புடையவர்களைப்போ லிருந்து இதுவரையில் கேழ்வரகரைத்தது போதும் போதும் அகலுமினென்றான் துரியோதனமகாராஜன்.

வினையையே துணையாகக் கருதிய வித்துவ வேந்தன் இப்படியாகச் சொல்லிய வார்த்தையைக் கேட்ட திரிதராட்டிரன் மனம் புகைந்தெரிய வெம்பி விசனமடைந்து, வெவ்விய கோபங்களையும் தாபங்களையும் அடக்கிக்கொண்டு, விதுரனையும் சஞ்சயனையும் நோக்கி மறுமொழி சொல்லாதிருக்கும்படியாகத் தனது கரத்தினால் தடவி யணைத்து கரமமைத்து, கண்ணீர்சொரிந்து, ஐயோ! என்ன பாவம்? இந்தப் பாவி முன்பின் எண்ணாமல் வார்த்தை சொல்லுகின்றானே என்றேங்கி, எதுவுந் தோற்றாமல் சற்றுநேரமிருந்து பெருமூச்சு விட்டு, ஆ! ஆ!! சிருஷ்டி கர்த்தாவாகிய தெய்வமே! இவன் இவ்வாறு அக்கிரமித்திருப்பது பூமியில் மாண்டு விழவோ? அல்லது பூமியை

ஆண்டு வாழவோ? தெரியவில்லை. நீர் இவன் தலையில் எவ்விதமாய் எழுதி இருக்கின்றீரோ அறிகிலேன். விதியை யநுசரிக்கு மதியென்பதற்குச்சரியான அறிவும் பிறந்திருக்கின்றதே? அதை விலக்கி நடத்திவைப்பதற்கு என் றரத்திலில்லையே? (கண்ணைக்கெடுத்த தெய்வங் கோலைக் கொடுத்ததுபோல்) எனக்கு மேலான புத்திரபாக்கியங் கிடைத்தும் உள்ள சரக்கை கப்பலிலேற்றி நடுக்கடலில் கவிந்து வருந்திய ஒருவன்போல், அதைப் பகைவர்க்குப் பறிகொடுத்துத் துன்புறலாச்சே என்று வாடி பிள்ளையைநாடி ஓ துரியோதனா! பாண்டவர்கள்பேரிற் பக்ஷமாய்ப் பேசுகிறதாய்ச் சொன்னையே, அவர்களால் இவர்களுக்காக வேண்டியதென்ன இருக்கிறது. அப்பா! இப்படிக்கெல்லாம் நல்லோராகிய நமக்கு இனியவர்களின் மனம்நோகப் பேசாதே; (ஊருடன் பகைக்கின் வேருடன்கெடும்) என்னும் வேத வாக்கியத்தை மறந்தாயோ; (சிறியோருடன் சேராதே செம்புக்குப் புளிவராதே) என்று சொல்லும் என்மொழியை யோசிக்க இல்லையோ; (பெரியோரைத் துணைக்கொள்) என்பதைப் போக்கிவிட்டையோ; அப்பா! பெரியோர்கள் வருந்தப்பேசுவது புகழன்றென்று சொல்லி இதுயார் செய்தபாவமோ யாரிட்ட சாபமோவென்று தன்னைத்தானொந்துகொண்டிருக்கும் சமயத்தில் வீஷ்மரெழுந்து தன் வீட்டுக்குப்போனார். அவருடனே துரோணாசாரியர்-கிருபாச்சாரியர்-அசுவத்தாமர் - விதுரர் முதலாகிய பெரியோர்களும் சிந்துதேசாதிபதி-மத்திரதேசாதிபதி-சகுனியாகிய மாமன்-தொண்ணூற்றொன்பது தம்பிமார்கள் - தேச ராஜர் முதலான பேர்களும் சபையைவிட்டு நீங்கி,இனி யாவரும் எமதூதர் கைக்குள்ளடங்குங்காலம் சமீபித்ததென்றேங்கித் தங்கள் தங்களுடைய விடுதிகளிற் சேர்ந்தார்கள். ஆலகாலத்தையொத்த துரியோதனன், அருமருந்நீதியையுடைய சஞ்சயன், மூலவேருகிய திருதராட்டிரன் இவர்கள் மூவருந்தான் சபைவிட்டு நீங்காமல் இருந்தார்கள்.

இப்பால் குளிர்ச்சிதங்கிய ஓர் வெள்ளைக் குடை நீழலில் அநேக உலகங்களையாளும் திருதராட்டிரமகாராஜன் ஒப்பில்லாத பிள்ளையையும். சிறந்த சஞ்சயனையும் அழைத்துக் கொண்டு பரிசுத்தமும் பதிவிரதா தனமுங் கொண்டு பிரகாசமுற்ற பொற்பிரதிமை ஒத்த காந்தாரியம்மனிருக்கும் உயர்ந்த அரண்மனைக்குட்சென்றான். அந்தக்காலத்தில் காந்தாரி தேவியானவள், தன் கணவனை எதிர் கொண்டு ஓடி பாதபூசைசெய்து பத்திரமக்ஷதைசாத்தி வணங்கி சிங்காதனத்திற் சீர்பெறவமைத்து தீர்க்கதண்டஞ்செய்து இருக்கும் போது, துரியோதனன் தன்தாயை பணிந்துகொள்ளவும், அவனை வாழ்த்தியெடுத்து மார்புற வணைத்துவிட, சஞ்சயனும் துரியோதனனும் அரசனுக்கு சமீபத்திலிருந்தார்கள். அப்போது திரிதராட்டிரன் காந்தாரியை நோக்கி, பெண்ணே! இன்றையதினம் இராஜசபையிலிருந்த எல்லோர்களுங்கூடிப் பற்பல நீதி நெறிகளையும் தருமங்களையும் அற்புதமற்புதமாக எத்தனைவிதத்தி லெடுத்துச் சொல்லியும், உன் புத்திரனாகிய சர்ப்பக்கொடியோன் விற்பிடித்துப் போர்செய்வதே பொருளெனக் கொண்டு பூரிப்படைந் திருக்கிறான். விசாரிக்குங் காலத்தில் மேலாகிய தவத்தினாற்கொண்ட அஸ்திரசஸ்திரங்கள் திறத்தையும் வரத்தையும் அறத்தையும் பூரணமாகப் பெற்றிருக்கும் புகழினையுடைய பாண்டுவின் புத்திரர்களுடன் யுத்தஞ்செய்யத் துணிவது தகுதியல்லவென்றும், பொருந்தி வாழ்வதுவே உத்தமமென்றும் நம்மிடத்தில் பத்தியையுடைய மன்னர் பலரும் சொன்னார்கள், நான் இந்தச்சிரேஷ்ட புத்திரனை நோக்கி, அப்பா! பகைதேடிக் கொள்ளவேண்டாம் வகையில்லாமல் வரமெனவிளையும் யுத்தத்தை நிறுத்திவிடு மகனே யென்று சொல்லியும் நமது தந்தை நமக்கு விரோதம் சொல்லுவாரா என்றெண்ணமல், கர்னனுடைய வார்த்தையைக் கனமலையாக நம்பி என் வாக்கியத்தை இகழ்ந்துவிட்டான். ஆகையால் நங்கையே! உன்னைக்கொண்டாகிலும் உன் புத்திரனுக்குத் தெரியச் சொல்லச் செய்து சீர்படுத்தலாமென்று எண்ணங் கொண்டு இவ்விடத்திற்கு அழைத்து வந்தேன்; இப்போதும் பாண்டவர்களுக்கு விசேஷித்த தொன்றுங் கொடுக்கவேண்டியதில்லை. முன்னே யவர்கள் சூதாடித் தோற்றுப்போன பூமியை இப்போது கொடுத்துவிட்டால் அவர்கள் கூடிய சீக்கிரமும் மனஸ்தாபமும் [illegible] கொண்ட கோபமும் மாறிப்போய்விடுவார்கள்; நமது பெரியோர்களின் எண்ணமும் இப்படியே யிருக்கின்றது. இதைவிட்டுத் தீமைபுத்தியையுடைய தீங்கினர் வாய்மையை ஸ்திரமென்று நினைத்துச் சமர்செய்யப் போகின்றாணும். அப்படி சமர்செய்யத் தொடங்குவானாகில், ஜயாபஜயம் எப்படி முடியுமோ தெரிய

வில்லை. ஜெயமும் விபகாரமும் சேற்றில் நட்ட கம்பம் ஆதலால், உன்னுடைய புத்தியிற் றெளிவாகச் சிந்தித்து, அஸ்திநபுரிராஜனு கிய இந்தத் துரியோதனனுக்குத் தெரியப் படுத்தக் கடவையென்று திரிதராட்டிரனுகிய நாயகன்கூற, தேவியானவள் அந்த வார்த் தையை மந்திரம்போற் கேட்டு வணங்கி எதிரி லிருந்த மைந்தனை நோக்கிச் சொல்லத் தொடங்கினுள்.

ஓ என்னருமைச் செல்வனே! (பெரியா ரைப்பேண்) என்னும் வாக்கியத்தைக்கொண்டு சிறியோர் சிநேகத்தை விடுத்துப் புகழைப் பெருமல், பெரியோர் சொல்லும் வார்த்தையை பிரயோசனமல்லவென்று இகழ்ந்து விடுவது சிறுமையோ அல்லது பெருமையோ, இவ் வுலகமன்றி மற்றெவ்வுலகத்தினும் இணையில் லாமற் சிறந்த என் மைந்தனே! உன் தந்தை யானவர் கனிந்து மிகுந்த ஆசையுடன் சொல் லுந் தன்மைப் பிரகாரம் நடந்து பெரு வாழ் வைப் பெறக்கடவை யென்றுரைத்து வாழ்த் திய அன்பினையுடைய தாயைப் பணிந்து, அரவக் கொடியோன் அம்மா! ஐவர் சம்மதித் துச் சூதாடி இழந்த அவனியை இப்போது நான் கொடுத்துவிடுவேனுகில், அவர்களுடைய ஆண்மைத் திறத்தினுக் கஞ்சிக்கொடுத்து விட்டதாய் வீரராகிய வேந்தர்கள் அவமதிப் பாய் நினைத்து நிந்திப்பார்கள். அதனுலெனக் குக் குறைவுண்டாகும். இதுவரையிலும் பத் துத் திசையிலும் வெற்றிசெலுத்திச் சுற்றத் தாருடன் சுகவாழ்வைப் பெற்ற வணங்காமுடி யோனுகிய யான், இப்போது பசபசவென்று விழித்து வசைகொண்டு இசைபெற்ற பாண்ட வர்களுடைய பாதங்களில் வணங்கி இச்சகஞ் சொல்லி, எண்சாணுடம்பு ஒரு சாணுகக்குன்றி வயிறு வளர்த்துக்கொண்டு உயிருடனிருந்து வாழேன். ஆறிலும் சாவு நூறிலும் சாவு அம் மணி! அழியும் பிராணனை அவத்தில் மாய்க் காமல் அமர்புரிந்திறப்பேன். அல்லவென்ருல் என்னுடைய வெற்றியையும், பாண்டவர்களு டைய யுத்தி சகாய சாமர்த்திய சத்தியையும் ஈரேழுலகமும் கொண்டாடும்படியாகச் செயம் பெற்று, புவன சக்ரேஸ்வரனென்னும் புகழ் கொண்டு இப்பூமியை யாள்வேன். அற்பபலங் கொண்ட ஐவர்கள் என்னுடனே எதிர்த்து நின்று போர்புரியமாட்டார்கள். எதிர்நின்று வென்று ஜயங்கொள்ளும்படியாகிய முறைமை இதுவரையிலும் என்னிடத்தில் இருப்பது மன்றி இன்னமும் முயர்ச்சி செய்துகொண் டிருக்கிறேன். இதன்றியும், சொக்கட்டானை யுருட்டித் தங்கள் செல்வம் முழுதையுந் திரட் டிக்கொடுக்கப் பெற்றுக்கொண்ட நான் அவர் களைக் காட்டில் விரட்டிவிட்டிருக்க, மாண் டார்போல் வனமடைந்த பாண்டவர்கள் மீண்டுவந்து என்னை மருட்டி பூமியைப் பெ றக், கருதினுல் பேரிகைச் சத்தங்கேட்டிறந்த நரியைப்போற் பயந்து பூமியைக் கொடுக்க மாட்டுவேனே? ஒருக்காலும் ஏமாறமாட்டேன். ஐவர்கள் பூச்சிகாட்ட வந்ததும், அவர்கள் பொருட்டில் நம்மிடத்திலிருக்கும் பலபேர்கள் ஏச்சுக்காட்ட விருந்ததும், இவைகளை யெல் லாம் யோசிக்காமல் என் தந்தை சபையினி டத்தில் என்னுடைய வல்லபத்தை இகழ்ந்து பேசியதுங் கேட்டுச் சகிக்காத கோபத்தினுல் தந்தை வார்த்தையைத் தடுத்தேன். தாயே! வச்சிராயுதன் முதலாகியபேர்கள் வந்தாலும் லக்ஷியமில்லாமல் வெல்லுந் திறத்தினையு டைய என்சேனைகளை யுத்தகளத்திற் கண்ட வுடனே பாண்டவர் மெத்தவருந்தி இறப்பார் கள். என்றிவ்வாறு பற்பலவித பராக்கிரமங்க ளைப் பவளம்போன்ற இதழினையுடைய காந் தாரியினிடத்திற் சொல்லிக்கொண்டு வரா நின்ற மகனுடைய மனமறிவில்லா விற்கைப் பெரிய மன்னவன்கேட்டு மயக்கமுற்று, வாடி வருந்தி பெருமூச்சுவிடுத்து, ஏதேது இனி காரியமில்லையென்று இளைத்து தெளிவினையு டைய சஞ்சயனை நோக்கி புத்தியிற்சிறந்த உத் தமனே! பாண்டவர்களுடைய பலங்களையும், நமது பிள்ளைகளினுடைய தோளாண்மைகளை யும் ஆதியோடந்தமாகத் தெரிந்தவன் நீயா கையால் இந்த இருதிறவர்களுமெதிர்த்து யுத் தஞ்செய்தால், எவர்கள் வெல்லுவார்கள்; எவர் கள் தோற்று இறப்பார்கள்; இதை யான் தெளிந்துக் கொள்ளும்படியாக உள்ளபடி சொல்லென்று திருதராட்டிரன் கேட்கச் சஞ் சயன் சொல்லுகின்றுன்.

அரசனே கேளும்! காலக்கியானந் தெரி யாத மானிடனுனகையால், இதை அறிந்து சொல்லுந்திறம் எனக்கில்லை. தேவரீர் தெரிந் துக்கொள்ளவேண்டுமாகில், அளவற்ற புகழ் பெற்ற மூலகாரணனுகியும், முக்காலமுணர்ந்த தவசிரேஷ்டனுகியும், இறப்பும் பிறப்பு மற்ற இறையாகியும், வேதங்களைப்பெற்ற விமலனுகி யும் விளங்கா நின்ற ஸ்ரீவேதவியாசரை தாமச மில்லாமல் வந்தித்துச் சிந்திப்பீராகில், அவர்

சிறந்து வந்து உமக்கு தெரிவிப்பா ரென்று சஞ்சயன் சொல்ல, சரிதானென் றுட்கொண்டு சஞ்சல மகற்றி அசைவற்ற தன்மையில் இருத்தி வருந்தி நினைத்தபோது, மின்னூர்ந்த பொன்போலும் புரியோடிய சடையும்-பூமுடியும்-புலித்தோலுடையும்-அசைந்த நடையும்-மிதியடியும்-அழகிய குடையும்-கரத்திற் றடியும்-முப்புரி நூலிலங்கு மார்பும்-விபூதி தூளித மேனியும் பிரகாசிக்க, விண்ணைவிட் டிறங்கிய சூரியனைப்போல் வந்து வேந்தனுக்கெதிரில் நின்ற ஸ்ரீ வேதவியாசரைத் திரிதராஷ்டிரன்-காந்தாரி-துரியோதனன்-சஞ்சயன் இவர்கள் நால்வருங் கண்டு எதிர்கொண்டோடி சாஷ்டாங்க தெண்டனிட்டு, அர்க்கிய பாத்திய ஆசமன்னிய அட்சதை சந்தனாதி தூபதீபங்களுங் கொடுத்து, ஆசனத்தில் எழுந்தருளச்செய்து, கலக்கமுற்ற மனத்தினையுடைய காந்தாரி நாயகன் கண்ணீர் சோரவிட்டுத் தானெண்ணிய காரியங்களைக் குறித்துக் கேட்கவும், பெருமையி லுயர்ந்த ஸ்ரீ வேதவியாசர் கேட்டுக் கலீரென நகைத்துத் திரிதராஷ்டிரனைப் பார்த்து, நாளை நடக்கப்போகிற சமரிலெதிர்க்கும் பிள்ளைகள் நூற்றைவரில் இறப்பவர்கள் யார் என்று கேட்டனை. இந்தக் கேள்விக்கு விவேகத்திற் சிறந்த மேலானவர்கள் விளம்பிய மொழி யொன்றுண்டு. அஃதென்னவென்றால், சத்திய தரும முள்ளவிடத்தில் ஜயமுண்டாம். அசத்தியம் அதர்மமுள்ள விடத்தில் அபஜெய முண்டாமென்று பழமொழி இருப்பதினால் நல்வினையை நட்பாகக்கொண்டும், நல்வினைக்குத் தக்க நல்லொழுக்கங்களுக்குத் துணையாகயிருந்தும் நடத்திய நல்லோரெவர்களோ, அவர்களுக்கு நலமும்-பலமும்-ஜயமும்-புகழ்ச்சியும் உண்டாம். இதை விடுத்துத் தீவினையை நட்பாகப்பெற்றும், தீவினைக்குத் தக்க தீயகுணங்களுக்குத் துணைப்பட்டிருக்குந் தீயராகிய பேயர்களுக்குத் தீமையும்-துயரும்-இகழ்ச்சியும்-அபஜயமும்-எமபாசப் பந்திப்பாகிய நரகவேதனை முதலிய துன்பங்களும் உண்டாகும். மேலும் உன் பிள்ளைகள் ஏழு சமுத்திரத்திற் கொப்பாகிய சேனாசயினியங்களைக்கொண்டு யுத்தஞ்செய்து வெற்றி பெறக் கருதி யுத்தபூமியில் வந்தாலும், இவர்கள் படையினிடத்தில் தானவவைரியென்னுந் திருமாலுக்கொப்பாகிய திரர்களிருந்தாலும், தேவர்கள் மதித்து மகிழும்படியாகப் புகழ்ந்து யமதூதர் உயிருடன் விட்டுவிடுவார்களோ ஒருக்காலும் விடார்கள்.

இன்னமுங் கேளும் அரசனே! ஆனால், எமது கர்த்தனாகிய கடவுளின் கருணைக்கண் எவர்களிடத்திற்றங்கி இருக்கின்றதோ; அவர்களுடைய புயத்தில் சேற்கெண்டையை ஒத்த கண்களையுடைய ஜெயலட்சுமி சேர்ந்து வாழ்வாள். கிளைகள் தழைத்த சோலைக்கொப்பாகிய பந்து மித்திர புத்திர சம்பத்துகளுடன் சிறந்த செல்வத்தைப் பெற்றோங்கிய திரிதராட்டிர மகாராசனே! இவைகளைச் செவ்வையா யோசிக்கக்கடவை. அஷ்டாக்ஷரப் பொருளாகிய மாதவன்-ஸ்ரீநாதன்-ஹரிவாசுதேவன்-முகில்வண்ணன்-முரஹரி-ஜநார்த்தனன்-பக்தபராதீனன்-பக்தவற்சலன்-பரமதயாளன்-பரமபுருஷோத்தமன் என்னுந் திருநாமங்களிற் பல நாமங்களை கொண்ட பகவானுடைய பாதபங்கயங்களை யுள்ளத்திற் கொள்ளும் பரம பாகவதர்கள் பெறுதற்கருமையாகிய பேறு பிரமாண்ட பேரண்டங்களிலுமே லாகியது. ஆதலால் இத்தன்மைவாய்ந்த பரமரகசியத்தை நீங்கள் கைப்பற்றுமற் போனீர்கள். இதற்குத் திருஷ்டாந்திரம் சத்திய சவுச ஆசார சற்குணங்களிற் றழைத்த அந்தப் பாண்டவர்கள் தங்களுடைய நாதனென்றும், தங்கள் மைத்துனனென்றும், தங்கள் சகாயனென்றும், ஆபத்தி லருள்புரியு மையனென்றும், திரிகரணசுத்தியாய்ச் சிந்தித்து அவர் நடந்து காட்டி நடத்தும் நன்னெறி பிரகாரம் நடந்து வருகின்றார்கள். அதனாலவர்கள் எந்தக் காரியங்களிலும் வெற்றிபெற்று வருகிறார்கள். உனது புத்திரர் வெற்றி பெறுவரார்களென்று எவர்கள் சொல்லுவார்கள். வேந்தனே! புள்ளாங்குழலைப் பூரிக்குஞ் செம்பவள வாயனாகியமாயன், சிந்திப்பவர்களுக்குச் சேயிடத்திற் பொருந்திய தாயைப் பார்க்கிலும் பரிவுள்ள நேயனானவனென்று துணிவுகொண்டு, நீங்களும் நேச விசுவாசத்துடன் அந்தக் கடவுளை நெஞ்சில் நினைப்பீர்களாகில், நினைத்த காரியங்களெல்லா மினிமேற்கைகூடுமென்று வெகுவாகிய வசனங்களை பரிசுத்தமுள்ள ஸ்ரீ வேதவியாசர் சொல்லக் கேட்டிருந்த திருதராட்டிரன் முநிசிரேஷ்டனுடைய கருத்தை தெரிந்துக் கொண்டு வணங்கி என்னிஷ்ட தெய்வமே! இவ்வுலகவாழ்வென்னும் மாயை வலைக்குட் சிக்கியுழன்று வருந்தி மாய்ந்தவியும் பெருமோசத்தைக் கண்டிருந்தும், படுகுழியில் வந்து வீழுமென்னைப் பாதுகாத்து யானுய்யும் பொருட்டு வேதவிதியாகிய தத்துவத்தை எனக்கு விளம்பி யருளிச்

செய்ய வேண்டும். சுவாமிகளால் சகல காரியங்
களையும் இப்போது அறிந்துக் கொண்டேன்.
போனநாட்போக இன்றுமுதற் கொண்டே
னும் மன்னுயிர் யாவையும் பெற்றளிக்கு மாத
வனுடைய மலரடியை மனத்தில் நிறுத்தி,
அவனுக் கடிமையாகிய யரசுபுரிந்து வாழ்
வேன். இதுவரையிலும் உலக அரசையே
உற்ற கதியென்று நம்பி அறிவழிந்தேன்
யென்று திரிதராட்டிரன் சொல்லித் துதிக்க,
இதைக் கேட்டிருந்தமாசுணக் கொடியோனா
கிய துரியோதனன் சொல்லுகின்றான்.

இப்போது ஐயா அவர்கள் எவனையோ
விசுவாசித்து நடந்துகொண்டதால் ஒருகுறை
வும் இல்லையென்று சொன்னார்களே. அவன்
இவ்வுலகங்களை எல்லாம் ஓரடியிலளந்த திரு
மாலானாலும், மற்றெவ்வுலகங்களையும் விழுங்
கிக் கக்கின அரியானாலும், குழந்தையிற்றானே
பூதகியின் பெரும்பாலுடன் அவள் பிராண
னையு முறிஞ்சிவிட்ட அவனானாலும், ஆத்ம
கோடிகளைச் சிருஷ்டித்த அயனுக்கும் அப்ப
னானாலும், பலவித ஆபரணங்களினாற் பிரகா
சிக்கு மார்பினனாகிய அருச்சுனனுக்கு உறவாகி
அந்த ஐவருள்ளத்திலும் பொருந்தியிருக்குந்
தன்மையினால், அவனுக்கு இவ்வுலகத்திற்
கோர் திலகம்போன்ற யான், எள்ளத்தனைப்
போதும் என் சிந்தையால் வந்திக்க மாட்டே
னென்று வரையறுத்துக்கூறிய மைந்தன்வார்
த்தையைக் கேட்ட மன்னவன் எதிரிலிருந்த
மாமுனியை நோக்கி, சுவாமி! இவனென்ன
காரணத்திற்கு உற்பத்தியானானோ? எல்லாரு
யிரையும் போக்கவந்த யமனோ, அல்லது
இவன் பிள்ளையோ, பெரும்பூதமோ, என்குல
கோத்திரத்தைக் கெடுக்கவந்த குறளியோ,
துதிக்கும் புகழை அழிக்கவந்த துடைகால
னோ, யானறியேன். இன்று முழுவதும் நான்
சொல்லியவார்த்தைக்கெல்லாம் எதிர்த்துமாறு
பாடாக மறுத்துச் சொல்லுவதே யன்றி, இப்
பாவி கிஞ்சித்தும் இணங்கிவரவில்லையே; இவ
னுக்குச் சாங்காலம் சமீபித்ததோ; கடவுளே!
(ஆங்காலம் பொய்யு மெய்யாம், போங்கால
மெய்யும் பொய்யாம்) என்றுபுவியில் வழங்கும்
பழமொழியும் என்னளவி லுண்மையாச்சே.
ஆகிலும், அனித்தியமாகிய உடலென்னும்
பொய்யை மெய்யெனப் பேர்கூறி யிருக்கும்
விதம்மிகவும்நன்றாகவேயிருக்கின்றது. ஐயோ,
மாயாமயக்கப் பிரபஞ்ச வலையில் அகப்பட்டு
முன்வருந்தி மடியவேண்டிய தென்னை என்ற
மைந்தனை வேதவியாசர் திடங் கொண்டு
நோக்கி, குற்றமில்லாத என் குலந்தழைக்
கப் பிறந்த உத்தமனே, உன் சிந்தையினி
னைத்த வண்ணம் நடக்கக்கடவையென்று பற்
பல விதமாகிய வெறுப்பு வார்த்தைகளை
விளம்பி, புத்திரனுடைய மனத்தை எவ்
விதத்திலாகிலும் ஸ்திரம்பெறத் திருத்திப்
பெரும்புகழ் மாண்பில் நிலைநிறுத்தவேண்டும்
என்கிற எண்ணத்தோடு வியாசபகவான்
சொல்லுகின்றார். கேளும் அரசனே! நீ
ஏதுக்கு வீணாய் வருந்துகின்றாய்? கரம்பு பற்
றிப்போன மனம் இனித்திரும்பாது. இவ
னுக்கு ஏற்படுத்தி இருக்குந் தலைவிதிப் பிரகா
ரம் இவன் சத்துருக்களுக்கு எதிரில் யுத்தம்
செய்து இறக்குங் கொள்கையை உடையவனா
கவே யிருக்கின்றான். இது உண்மைதான்.
இன்று முதல் நீ உலகரட்சகனாகிய உவண
மூர்த்தியின் உபய திருவடிகளை உள்ளத்திற்
சிந்தித்துக்கொண்டு, நீர்க்குமிழிபோன்ற இவ்
வுடல் இருக்கின்ற வரையில், காலஹேது
வாய்ப் பிறந்து வாதிக்கும் இச்சிறுவர்கள்மீது
வைத்த ஆசைப் பெருக்கினால், விருவதாகிய
பற்பல சிந்தையையும் பற்பல துயரங்களையும்
விடுத்துச் சதாகாலமும் நிர்விகார சித்தனாய்
நன்னெறி நிலையில் நிற்கக் கடவையென்று
வேதமுனிவன் விளம்பிய தண்ணமுதினுக்
கொப்பாகிய மொழிகளைத் தன் செவியாரக்
கேட்டு, இதுவே கடைப்பிடியென்று மனங்
கொண்டு, விக்கியான வந்தனாகி சுக்கியான
சூரியனையொத்த வியாசருடைய பாதங்களில்
வீழ்ந்து, சுவாமி எந்த பாசபந்த நெறியைத்
தொடர்ந்து எவர்கள் கெட்டழிந்தாலும்,
தேவரீர் உபதேசித்த திருமந்திரத்தைச் சிந்
தனை செய்து என் காலகதிக்குத் தகுந்த இச்
சையைப் பெறுகின்றேன் இறைவனே என்று
கரங்குவித் திறைஞ்சிய திரிதராட்டிரனுக்கு
ஆசீர்வதித்துத் தட்சணம் வானத்திற்றோன்
றிய மின்னலைப்போல் மறைமுனிவன் மறை
ந்து போயினார்.

இப்படி வேதங்களை விரித்து விளம்பி
யருளிய ஸ்ரீ வேதவியாசர் போனபின்பு திக்கு
நோக்கித் தெண்டனிட்டுக்கொண்டு, தனக்கு
சமீபத்தில் நிற்கா நின்ற புத்திரனை நோக்கி,
இதுவரையில் யாங்கள் கூறிய வனைத்தும்
உள்ளத்திலிருத்தி நினைத்து, உன் மனதுக்கு
இஷ்டமானபடி செய்யென்று விடைகொடு
த்துவிட்டுச் சிவந்த சூரியனைப்போலொத்த

கண்ணன் அஸ்திநபுரிக்கு கௌரவர்களிடம் தூது செல்லுதல்.



கண்ணன் தூது போகும்போது காட்டில் நாரதர், கண்ணுவர், ஜமதக்னி முதலிய ரிஷிகளை சந்தித்தல்.

தேகத்தையும் விவேகத்தையுமுடைய சஞ்சயனை விடுதிக்குப் போகும்படி அனுப்பிவிட்டுப் பல மணிகளினாலும் நலம்பெறச்செய்த மாளிகை இடத்திற் காந்தாரியுடன் ஆகுங் காரியங்களை யோசித்துக்கொண் டிருந்தான் திரிதராட்டிரமகாராஜன். இதுகால் இருளில்லா மனத்தினையுடைய சஞ்சயன் தெளிவுற்ற பாண்டவர்களிடத்தில் தூதுபோய் வந்து உரைத்த பல வாக்கியங்களையும், தெளிவில்லாத திரிதராட்டிரன் முதலிய பேர்கள் அவைகளைத் தெரிந்துக்கொண்டதைக் குறித்துப் பேசிக்கொண்ட விதங்கள் இியாவையும் விளம்பினோம். இப்பால் மயக்கமற்ற பாண்டவர்களிடத்தில் வார்த்தையாடி விடைபெற்றுக் கொண்டு சஞ்சயன் வந்தபின்பு அந்திவண்ணனுடைய அருளைக் கவசமாகக்கொண்டு ஆடல் புரியத் துணிந்து, ஹரிபரந்தாமனுடைய அடியிணையைப் பணிந்து வாழும் ஐவர்கள், உபலாவியத்தில் யிருந்த உத்தமர்களுடன் கலந்து இனி நடத்தாநின்ற செய்கைகளும் சொல்லுகின்றோம். கேளும் ஜெனமேஜெய மகாராஜனே என்று வைசம்பாயனர் சொல்லுவதாயினார்.

சஞ்சயன் தூதுச்சருக்கம் முற்றிற்று.

---

மூன்றுவது,

## கிருஷ்ணசுவாமி தூதுச்சருக்கம்

---

### கண்ணன் துதி

அரியதண் கலைவாண் மதியமுங் கொதிகொ ளாலமுத் தனதிடத் தடக்கி, யுரிபவொண் கங்கா நதிக்கொரு பதியா யுயர்பெறு முயர்மகோ ததியிற், பரியதிண் சிலையோ டம்பெலாமுகத்து பற்குணப் பொருப்பிடை பொழியுங், கரியபைம் புயலைக் கைதொழு மவரே கருவலே திருவுடை யவரே.

திருநாட்டிற் சிறந்த குருநாட்டிற் பிறந்த ஜெனமேஜெய மகாராஜனே கேளும்! தம்பிமார் நால்வருடன் தருமபுத்திர மகாராஜன், பன்னிரண்டாண்டு வனவாசமும் ஓராண்டு அஞ்ஞாதவாசமுந் தொலைத்து, உபலாவியமென்னும் பட்டணத்தில் வந்திருந்து, தன்னுடைய ஸ்ரீதன புரோகிதனாகிய உலூகமாமுனியை துரியோதன னிடத்திற்குத் தூது அனுப்ப, அந்த துரியோதனன் தன் தந்தையாகிய திரிதராட்டிரன் முதலானவர்களோடுங் கலந்து பேசிக்கொண்டு, இன்னுஞ் சில தினத்தில் மேல் நடக்கவேண்டிய காரியங்கட்குச் சொல்லி யனுப்புகிறோமென்று உலூகமாமுனிவரை யனுப்பிவிட்டுத் தங்களுடைய புரோகிதனாகிய சஞ்சயமுனிவனை யழைத்து, நீர் உபலாவியத்துக்குச் சென்று பாண்டவர்களைக் கண்டு ஞானப்பிரசங்கம் பேசி தருமபுத்திராதியரை இன்னமும் வனவாசம் போகத்தக்கதாக இசைந்துவாருமென்றனுப்ப, அந்தப்படியே சஞ்சயன் பாண்டவர்களிடத்தில் வந்து ஞானப்பிரசங்கம் செய்து, ஆக்கை-செல்வம்-ஆயுள் இவை முதலியவைகள் அனித்தியமாகையால், நித்தியமாகிய தவமிழைத்து முத்திப்பெறுவதே உறுதியாகிய உத்தமமென்றுரைக்க, அதைக்கேட்ட வீமசேனன் மெத்தவுங் கொதித்து, சத்துரு சங்காரஞ் செய்து நாங்கள் கூறிய பிரதிக்கினையை முடிப்பதே தவமென்று பேசியனுப்ப, இவ்வார்த்தையைக் கேட்ட சஞ்சயமுனி திரும்பி அஸ்தினபுரம் போனபிற்பாடு, பாண்டவர்கள் மற்ற மன்னவர்களோடு இனி நடக்கவேண்டுங் காரியங்கட்கு ஆலோசிக்கத்தலைப்பட்டவர்களாய், சமாதானத்தாற் காரியங் கைக்கொள்வதான சாமமும், பொருள் முதலியவற்றைக் கொடுத்துக் காரியவனுகூலம் பண்ணிக்கொள்வதான தானமும், வேறொருவராற் பகையை விளைத்துத் தான் சிநேகமாயிருந்து காரியசித்தி செய்துக் கொள்வதான பேதமும், நால்வகைச் சேனைகொண் டெதிர்த்து யுத்தஞ்செய்து வெற்றியுடன் வேண்டியவைகளைப் பெறுவதான தண்டமும், ஆகிய இந்நான்கும் இராஜர்களுக்குரிய உபாயமாகையால், இவ்விதமாகிய தந்திரயுத்தி புத்தி முதலாகிய நீதி முறைமைகளில் வழுவாமற் பேசிச் சத்துருக்களை வசப்படுத்தி, ஆகவேண்டிய காரியங்களைக் காலத்துக் கேதுவா யமைத்துக்கொண்டு வரத்தக்க வல்லவர் கோபாலகிருஷ்ணரேயன்றி வேறொருவ ரில்லையென் றுணர்ந்து, பரிமளம் பொருந்திய பரிசுத்தமாகிய குளிர்ச்சிகொண்ட அத்துளபமாயனை மீண்டுந் துரியோதனனிடத்திற்குத் தூது விடுவதற்கெண்ணித் தருமபுத்திர மகாராஜன் கிருஷ்ணமூர்த்தியை நோக்கிச் சொல்லுவதாயினான்.

ஓ தீனதயாளுவாய் ஜெகத் ரட்சகராய்த் தோன்றிய தேவே! செவ்வையாகிய காரியங்களைச்சொல்ல வந்தவரைப்போல் வந்து நீங்

காகிய வார்த்தையைச் சொல்லிய சஞ்சயமுனிக்கு நாம் செப்பிய வசனமும், உலூகமுனியை முன்னதாகத் தூதுவிடுத்த நமக்குத் துரியோதனன் அப்போது பேசியனுப்பிய வசனமும், தேவரீருடைய திருவுளம் அறியுமே; சுவாமி! அப்படியிருக்க கொடியவிஷத்தை வெருவாகக் குடித்து அந்த விஷந் தலைக்கேறி உடம்பு மறந்து உறங்கிக்கிடக்கும் ஒருவனுக்கு சவுக்கியஞ்செய்ய நினைத்து நல்ல மருந்தும் மந்திரமும் கடுக விசாரித்துக் கொடுத்து நன்மை செய்ய நினைக்காமல், சுற்றிலுமிருந்து வருந்தி வாட்டமுற்று மயங்கித் துன்பப்பட்டுக் கொண் டிராநின்ற அவனுடைய அண்ணன் தம்பி முதலிய பந்துக்களைப்போலத் தேவரீரும் அவ்விஷ முண்டவர்களைப் போலிருக்கும் எங்களுக்கு வேண்டிய பக்குவங்களைச் செய்து இரக்ஷிக்காமல் ஏனோதானோவென்று சும்மா யிருப்பது ஞாயமோ? சர்வ ஜீவராசிகளின் மனத்திலுமிருந்து விளையாடும் சோதியே! ஏதாகிலும் ஒரு யுத்தியை எங்களுக்குப் போதித்தருளவேண்டும். குருக்ஷேத்திர பூமியில் அரிதாகிய யுத்தஞ்செய்யத் துரியோதனனாதியர் சம்மதிப்படுவார்களாகில் அது நமக்கு மிகவும் நல்லது. அதைவிட்டு நாம் யுத்தஞ் செய்வதற்கு தயாராக இருக்கிறோமென்று முந்திச்சொல்லி யனுப்பி வைப்பது முறைமையல்லவே. ஆகையால், தேவரீர்பிரயாசை எடுத்துக்கொண்டு திருவடிவருந்த அஸ்தினபுரத்திற்குப்போய்த் திரிதராட்டிரன் துரியோதனன் முதலிய பேர்களைக்கண்டு வார்த்தையாடி அவர்களுடைய கடைப்பிடி கருத்தையறிந்து ஐயப்படுத்தி வரவேண்டிய கடமை உம்முடையதென்று கிருபாவெள்ளம் பெருகும்படியாகத் தருமராஜன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட வாணாசுரனுடைய வாணாளையும் புஜகிரி இரண்டாயிரத்தையும் அழித்த அரிபரந்தாமனானவர், வீமசேனன், அர்ச்சுனன், நகுல சகாதேவனென்னும் நால்வரையுங்கூட வைத்துக்கொண்டு, சாத்தகி முதலியபேர்களும் சுற்றிலு மிருக்கவைத்து, யுத்தகளத்தில் வெற்றிபெற நாட்டும் முரசக்கொடியினையுடைய தர்மராஜனே! நாளை ஒருகாலத்தில் நீங்களென்னை வீணாக நிந்திக்கவேண்டாம். அவர்களுடைய மனோநிச்சயத்தை வெளியிட்டுச் சொல்லுங்கள். நான் சொல்லுவதையும் கேளுங்கள். அதென்னவெனில் வயல்களிடத்தில் தாமரை மலர்களுடன் வராலினங்கள் மருவி விளையாடும் வளப்பங்கொண்ட குருநாட்டில் பாகப்பிரகாரம் பாதிநாடு வாங்கிக்கொண்டு அரசாட்சி செய்து வாழ்ந்திருக்க நினைவோ? அல்லது பழையபடியே துன்பமுடையவர்களாய்த் தனமுங் கனமும் விடுத்து, அனமும் மனமும் வெறுத்து, வனமே கதியாக அடுத்து இன்னமும் வாடித்திரிய நினைவோ? அஃதன்றிப் பிழைப்பார் யாரோவென்று சந்தேகப்படும் போர்முகத்தில் பகைமேற்கொண்டு, முனங் கோபித்தெழுந்து சபையிற்சொல்லிய பிரதிக்கினையின்படியே துரியோதனனாதியரைக் கொன்று ஜெயம்பெறநினைவோ? ஐவராகிய உங்களில் ஒவ்வொருவருக்கு மிருக்கின்ற எண்ணமென்னவென்று திருமால் கேட்க, அப்போது தரும சொரூபியாகிய உதிஷ்டிரராஜன் சொல்லுகின்றான்.

நந்தகோபாலன் களிக்கும் நாதனே கேளும்! வைராக்கிய மென்னுங் கொடூரமாகிய நெருப்பை வாசாமகோசரமாக வளர்த்துவிடுவோமாகில், மூங்கில்களானது தனக்குத் தானே இழைந்து பற்றிக்கொண் டெறிந்து சுற்றிக்கொண் டிருக்குந் தன்னினத்தோடு அழிந்துபோகுந் தன்மையைப்போல், நாங்களிருதிறவரும் குற்றம்பொருந்திய யுத்தகளத்தில் ஒரேதரமாய் மாண்டுபோவோம். ஆண்டவனே! (வாழையாடியும் இலைக்குச் சேதம், உள்ளாடியும் இலைக்குச் சேதம்) என்னும் பழமொழிபோல் எங்களிருதிறத்தவருக்குங் கெடுதி வராமல், செவ்வல்லியுந் தாமரையும் பரிமளிக்கின்ற வயல்கள் சூழ்ந்த குருநாட்டிலே நாங்கள் நூற்றைந்துபேரும் அந்த மலர்களைப்போல ஒருமித்துக் கலந்து வாழும்படியாக எங்களுயிருக் குயிராகிய தேவரீர் தூதுபோய் க்ஷாத்திரமின்றித் தாட்சியில்லாத க்ஷேத்திரஞ் சேர்ந்து வாழும்படியாய்ப் பொருந்தச் செய்யவேண்டிய கடமை உம்முடையதென்று தருமராஜன் சொல்லத் தாயென்று வந்த பூதகி யுயிரைக் கொன்ற ஜனார்த்தனன் சொல்லுகின்றார்.

உய்த்துலகாளும் மைத்துனா! கேளும்; பூர்வம் சபாமண்டபத்தில் சூதாடி யாவையுந் தோற்றபிற்பாடு, புண்ணியத்தைப் பொருளாக வைத்து மறுபடியும் சொக்கட்டானாடித் திரௌபதையும் நீங்களைவருஞ் சுவாமி தயையினால் மீண்டபோது, அச்சபையி லிருந்த அரசர்களுக்கும் பெரியோர்களுக்கும் எதிராக உங்களைப் பார்த்துக் கலீரென நகைத்து, பன்னிரண்டு வருடம் வனவாசமும், ஒரு வருடம்

அக்ஞியாதவாசமும் செய்து வருவீர்களாகில் உங்களுடைய பாகத்தைக் கொடுத்துவிடுகிறேனென்று, விதுரனையும் துரோணாச்சாரியையும்கொண்டு அப்போது சொல்லிவைத்த துரியோதனன் இப்போது சொன்னசொல் தவறிப்போவானாகில், அவனைப் போர்முகத்தில் மாய்த்து உங்கள் சொந்தமாகிய பூமியை நீங்கள் பட்டங் கட்டிக்கொண் டாள்வதற்கு யாதொரு தடையுமில்லையே என்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் சொல்ல, அதைக் கேட்டுத் தருமராஜன் சொல்லுகின்றார்.

கேளும் காசாம்பூ வண்ணமுள்ள கண்ணனே! ஆசாரியர்களையும்-சுற்றத்தாரையும்-குருகுலத்திற்குரிய அண்ணன்-தம்பி-பாட்டன்-மாமன்-மித்திரர் முதலாகிய இத்தனை பேர்களையும் நேரில் நின்று போர்புரிந்து கொன்று வென்று, கடலாடையை யணிந்த பூமியைப் பிணந்தின்ற பூச்சிபோல் தனியாக யிருந்து அரசாட்சி செய்வதைப் பார்க்கிலும், கபட வஞ்சங் கலந்த மனமுடைய என் பெரிய தந்தையார் சஞ்சயனிடத்திற் சொல்லிய சஞ்சலமான சொற்படியே வனவாசம்செய்து, காய்-கனி-கிழங்கு - சருகுகளைப் புசித்து, இரவும் பகலும் காலங்கழிப்பது மிகவும் நன்றென்று தருமபூபதி சொல்ல, இந்த வார்த்தையைக் கேட்ட வேதவித்தாகிய விமலன் சொல்லுகின்றார்.

கேளும் தருமநந்தனா! மெய்யே மெய்யாகக்கொண்டு வையங்காக்கு மையனே! ஒருவரோ டொருவர் பகைத்து உயுத்தம் செய்வது பாவமான காரியமென்று விடுத்துப் பலம் பொருந்திய தம்பிமார்களுடன் வனத்தையடுத்து வாசஞ்செய்யப் போவாராகில், பாண்டவர்கள் தந்தை யுரைத்த வார்த்தையைத் தப்பாமற் போனார்களென்று சிலர் சொல்லுவார்கள். பெரும் பாலரெல்லாம் தாயாதிகளுடன் யுத்தஞ்செய்து சபதம் முடித்துக் கொள்ளக் கையிலாகாமல் பயந்தோடிப் போனார்களென்று பழிப்பார்களே? ஏசுவார்களே? அதுபோக நீங்கள் சொல்லிய சபதமும் பொய்த்துப்போமே? அதனாற் பாபமும் வருமே? இதுவோ நீதி. நிறைமதி கொண்ட இறையே! உன் யோசனை மிகவும் நன்றாயிருக்கின்றதென்று நெடியோனுரைக்க, அதற்குத் தருமராஜன் மறுமொழி சொல்லுகின்றார்.

சேணுலகத்தோர் துதிக்கும் வேணுகோபாலத் தெய்வமே! தேவரீரே எங்கள் நிமித்தமாகத் துரியோதனனிடத்திற் றூது சென்று அவனிடத்தில் எங்கள் கருத்தையுங் காட்டிப்பேசினால், மகரந்தங்களை யூதி, வண்டுகள் பாடும் சோலைகள் சூழ்ந்த நாடும் எங்கள் பாகமுங் கொடுப்பான். அப்படிக்குத் தேவரீர் போய் பேசியும் கொடாமற் போவானாகில், அதற்குமேல் வெற்றிச் சங்கும், வலம்புரிச் சங்கும், தவளைச் சங்கும், ஜெயம்பெறும் சங்கும் எங்கும் முழங்க; வீரகாளமும், வெற்றி முரசும் மொய்க்கும்படியாக நெடிய கொடிய இடியினையுடைய யமதூதர் மனங் களிக்க யுத்தம் செய்தாலும், தாயாதி பட்சத்தி லுள்ள பூமியைப் பெற்றுக்கொள்ளலாம். அப்போது நமக்கு அபகீர்த்தியும் பழிப்பும் இல்லையென்று உரைத்து மேலும் சொல்லுகின்றார்.

ஐயா துஷ்டஜன நிக்கிரக சிஷ்டபரிபாலகனாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானே! கேட்டருளும். வெற்றி முதலாகிய சம்பிரமத்திற்குமுந்தி நாட்டிய சர்ப்பக் கொடியினையுடைய துரியோதன மகாராசனாலும் அஸ்தினாபுரத்துக்குத் தேவரீர் எழுந்தருளிச் சென்று, அவனைக் கண்டு பள்ளர்களுடைய முற்றங்களிற் சங்கினங்களுருகின்ற சலவளம் பொருந்திய எங்களுக்குரிய நாட்டைக்கேளும்; அதைக்கொடுப்பதில்லை யென்று மறுப்பானாகில், எங்களைந்து பேருக்கும் இந்திரப்பிரஸ்தம்-எமப்பிரஸ்தம்-அவந்தியாபுரி - வாரணாபுரி - அஸ்தினாபுரி என்னும் ஐந்தூரைக் கேளும்; அவையுங் கொடானாகில், ஐந்து மனையாகிலும் கொடுமென்று கேளும்; அவையும் இல்லையென்றால், யுத்தத்துக்காவது வருகிறையா வென்று சம்மதித்து வாரும். சிந்தூரத்திலத மெழுதிய குவலயாபீடமென்னும் யானையின் கொம்பைப் பிடுங்கிக் கம்சனைக்கொன்ற வீரம் பொருந்திய செந்தாமரைக் கண்ணனே! இதுதான் எனது அபிப்பிராயமென்று ஐவருள் மூத்தவனாகிய தருமராஜன் சொல்ல, வீமசேனன் கேட்டு, முன்னமே கோபங் குமுறக்கொண் டிருக்கும் மனத்தினில் இன்னமுங் கோபாக்கினி குடங்கொண்டு சொரிய, குற்றமற்ற நாவாற் கூரிதான சொற்களை வசனித்துக்கொண்டு விரைவிலெழுந்து வந்து, ஸ்ரீ கிருஷ்ணதேவரைப் பணிந்து, பூலோக முழுதுந் திருநாபிக் கமலத்தாற் பிறக்கச்செய்தவனே! பொற்றாமரையி லுதித்த மகாலட்சுமியையுங் கௌஸ்துவாபரணத்தையும் பொருந்த வணிந்த திணிந்த

வஹஸ்தலனே! நம்பின பேர்களுக்கு நேரிடுந் துன்பத்தை நீக்கிய இன்பவாரிதியே! பழிபாவமில்லாத பரிசுத்த குணமுள்ள எங்களண்ணாவாகிய தருமபூபதியானவர், தன் மானம் பிறர்மான மென்பதைச் சற்று முணராமற் சொல்லும் வார்த்தைகட்கு நானென்ன செய்வேனென்று நடுநடுங்கி, மறுபடியுஞ் சொல்லுகின்றான்.

மதிமரபுதித்த அதிபதியாகிய அண்ணா! மூன்றுலட்சத் தறுபத்தாறாயிரம் பட்டவர்த்தனரும், ஆறுலட்சத்தறுபத்தாறாயிரம் மகுடவர்த்தனரும், பதினெண்பூமிமன்னர் மண்டலீகரும், ஐம்பத்தாறுதேசத்து அரசவர்க்கமும், வீஷ்மாச்சாரியர் - துரோணாச்சாரியர்- கிருபாச்சாரியர் - அசுவத்தாமர் - கர்னன் - சகுனி-சல்லியன் - அதிரதர்-சமரதர் முதலிய சமஸ்தமானபேரும் நிறைந்திருந்த இராஜ சபையில், விரித்தகூந்தலையும் பசிய வளையல்களுமுடைய திரௌபதியை அபிமானபங்கம் பண்ணுவித்தநாளில், அந்தப் பெண்ணானவள் மெத்தவும் நாணமடைந்து, திக்கில்லாப் பாவியானேனே தெய்வமேயென்று வஞ்சமில்லாதவர்களைப்போல முறையிட்டபோது, சரீரந் துடித்தெழுந்த யெங்களைப் பதறாதீர்கள். கோபியாதீர்கள். (ஆக்கப் பொறுத்தபசி ஆறுகிறமட்டும் பொறாதோ) என்று சொல்லியடக்கி, குருகுலத்துக்கும் நமக்கும் பூலோகமுள்ளமட்டும் தீராப் பெரும்பழியை உண்டாக்கி வைத்தீர். அதுவுமல்லாமல் கள்ளக் கவறுகொண்டு சூதாடி கெலித்துத் தீப்படுகின்ற காட்டில் நம்மை யோட்டிவிட அதற்கும் சம்மதித்துப் போவேனென்றீர். அப்படியே போய்த் திரிந்து பதின்மூன்று வருடங் கழித்துப் பிழைத்துவந்ததும், இன்னமும் பகையை முடிக்க மனமில்லாதவராய்த் தூது அனுப்பி பார்க்கவேணுமென்று இளைக்கின்றீர். ஆதலாலே துரியோதனன் செய்த கொடுமையைப் பார்க்கிலும் உம்முடைய கிருபைக்கு மிகவும் பயந்தேன் தருமபுத்திரரே யென்று பின்னுஞ் சொல்லுவான்.

ஓ வைதீக சாந்தஸ்தமே உருவாக வளர்ந்த அண்ணா! உம்மைப்போலொத்த உண்மைப் பொருளையே வனவாசம் போகச் சொன்ன கண்ணற்ற திரிதராட்டிரனுடைய காதலனாகிய துரியோதனன் ஆண்டு வருகின்ற பூலோக முழுமையும், இன்றைக்கே ஒரு குடைக்கீழ் நீராளும்படியாகத் தருவேன். அதுவுமல்லாமல் முன்னே நம்முடைய ஆட்சியான நாட்டைக் கைக்கொண்டு, நாம் வெறுத்துக்கொள்ளும்படியாக வனத்தில் விரட்டிவிட்ட அந்த துரியோதனனானவன், ஐயோ அநியாயமே! என்னரசாட்சியை தருமராஜன் அடித்துப் பிடிங்கிக்கொண்டாரென்று தேவரீரை வெறுத்துக் கொள்ளாதபடிக்கு வீர சொர்க்கத்தை அவனாளும்படியாக இந்திர பதவியைக் கொடுக்கிறேன். என் வார்த்தையை அண்ணா! நன்றா யோசியுங்களென்று சொல்லிப் பின்னும் ஸ்ரீ கிருஷ்ண தேவரை நோக்கிச் சொல்லுகின்றான்.

ஓ சுவாமி! எங்கள் அண்ணாவியார் துரியோதனனுடனே யுத்தஞ் செய்து பகையை முடித்தார். அன்றவிழ்த்துவிட்ட கூந்தலையும், புலம்பிக் கூறிய சபதச் சொல்லையு முடைய திரௌபதைக்கு அவ்விரண்டும் இன்று முடித்துக்கொள்ளும்படியாகச் சாதித்துவிட்டார். தம்பிமாராகிய நாங்கள் சபையிற் பேசிய சபதங்களை யெல்லாம் தடையில்லாமல் முடிப்பித்தார். தெய்வத்தன்மை பொருந்திய கங்கை யடங்குஞ் சடாமகுடத்தை யுடைய உருத்திர தேவர் கையிலே பிரமகபாலங்கொண்டு இரப்பதைத் தவிர்த்தருளிய ஈசனே! உம்முடைய மனமறியப் பூலோகத்திலே நிலைநின்றுயர்ந்த கீர்த்திமானென்னும் தன் பேரைப் பிரசித்தமாக நிலைநாட்டி முடித்தார். இப்படிக்கு யாவர் முடிக்கப் போகின்றார்கள். இவருடனே நாங்களும் இவ்வாறான கீர்த்தியைப் பெற்றது போதும் போதும். இன்னம் எங்களை முடிக்க காத்துக்கொண் டிருக்கிறார் தருமநந்தனரென்று பின்னுஞ் சொல்லுகின்றான்.

சுவாமி! யாவரும் போர்க்கோலங் கொண்டு வருகிற பெரிய யுத்தகளத்திலே புகுந்து, துரியோதனனுடனே கூடி யெதிர்க்கும் அரசர்களுடைய சரீரங்களெல்லாம் இரண்டு துண்டாகும்படி போர் செய்து, பழைய உலக முழுவதும் கைக்கொண்டு அரசாட்சி செய்யத் துணியாமல், பொறுமை மேற்கொண்டு தருமத்தையுங் கிளையுறவையும் பாராட்டி, இன்னமுந் தூது விடுத்து துரியோதனனை வணங்கி பூமியை யாசித்து அவன் கொடுக்கப் பெற்றுக்கொண்டு சவுக்கியமாக காலபோசனந் தப்பாமல் சாப்பிட்டுக்கொண் டிருக்கவே எண்ணுகின்றார் தருமபுத்திர மகாராஜர். ஐயோ! குருகுலம்பட்ட பாட்டையும், கெட்ட கேட்டையும் நானென்ன சொல்லுவேனென்று விசனப்

படும் வீமசேனனுடைய வார்த்தைகளைக் கேட்ட, பொறுமை நிறைந்த புண்ணியவானுகுந் தருமராசன் பரிவாகச் சொல்லிய தம்பியைச் சற்றிருவென்று மலர்போன்ற கையினுலமர்த்தி, ஓ குருகுலசிகாமணியாகிய தம்பி! குற்றம் பார்க்குமிடத்திலே சுற்றமுண்டோ? ஒரு குலத்திலே பிறந்த அண்ணன் தம்பிமாருடனே கூடி வாழும் வாழ்வினைப்போல் வேறு ஒரு உறுதியுண்டோ? பெரிதாகிய இப் பூமியைப் பெறுவது காரணமாகக் கருதிப் பகைத்தெதிர்ப்பது நம் மிருதிறவருக்கு நஷ்ட மல்லவோ? செத்தவன் வீட்டில் சிருஷ்டி யாருக்கெனில், உற்றார் பெற்றார் முதலாகிய புத்திரருக்கன்றி மற்றவர்க்கென்ன என்பதுபோல், நமது கோபம் நமக்கே துன்பத்தை விளைவிக்கும். ஆகையால், ஒரு குலத்திற்பிறந்த உரிமையுள்ள நமது பெரிய தந்தையின் பிள்ளைகளாகிய தம்பிமார்கள், அறியாமையினாலே சபையிற் சொன்ன வார்த்தைகள் நமக்கு இழிவையுண்டாக்குமோ? நமக்குச் சம்பந்தமில்லாத அன்னியராற் சொல்லப்பட்டா லல்லவோ பேரிழிவாகுந் தம்பி, அதை யோசிக்குமிடத்தில், கண்களிற் கைவிரல் பட்டால் அந்தக் கையைத் துணித்துவிடலாமோ? எப்போதும் (பொறுமை கடலிலும் பெரிது) என்னும் வாக்கியத்தை அனுசரித்துச் சண்டையை நிறுத்திச் சமாதானமாய்ப் போவதே தன்மை. ஆகையால், நம்மாற் கூடியமட்டும் முயற்சி செய்து சந்தி சமாதான முதலாகிய வழிகளெல்லாம் பார்த்து எதிலும் ஒவ்விவராமற் போவானுகில், பின்னல் யுத்தத்தைக் குறித்து ஆரம்ப சூரத்துவமாய் முதலில் தப்பட்டைக் காரன் பட்டானென்பதுபோல் யுத்தமென்று பேசுவது யுத்தமல்ல அப்பாவென்று கீர்த்தியைப் பூஷணமாக தரித்தருளிய தருமபுத்திர மகாராஜன் சொல்ல, அந்த மொழியினுல் வீமசேனனுக்கு கோபந்தணியாமல் மனத்தாப மேற்கொண்டு தருமராஜனைப்பார்த்து எங்கோவே? துரியோதன னிடத்துக்குத் தூது விடுத்து, அவன் அபிப்பிராயத்தை அறிய வேண்டுமென்று சத்தியமுள்ள தேவரீர் சித்தத்திற்கு இஷ்டமுண்டாகில், துளபமாலையணிந்த ஸ்ரீ கிருஷ்ணதேவர், தேவர்களும், முனிவர்களும், நான்கு வேதங்களும் யின்னமுந் தேடுகின்ற தமது திருவடிகள் சிவக்க நடந்து நமது திருநாடு பெறுவதற்காகத் தூது செல்லவேண்டாம். வாடுகின்ற திரௌபதியினுடைய பிரதிக்கினையும், என்னுடைய பிரதிக்கினையும் வழுவிப்போகாமல் நிறைவேறும்படியாக துரியோதனனிடத்தில் நானே போய்வருகிறேன்; என்னைத் தூதாக அனுப்பிவையும் அண்ணுவென்று கோபச்சிரிப்பாக நகைத்து, ஐயோ? மலையைக்கண்ட தன்மையைப்போல் என் கரத்தில் வலுவேறியிருக்குந் தண்டாயுதத்தினுடைய பிரபலங் கண்டும், அர்ச்சுனனுடைய காண்டீபத்தின் வல்லமையைக்கண்டும், நகுல சகாதேவர்களுடைய வல்லமை கண்டும், நமக்குச் சகாயமாக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி துணைப்பட்டிருக்கும் நிலைமை கண்டும், இந்தப் பாஞ்சாலிவிரித்த அளகபாரங்கண்டும் ஒரு மாத்திரைப்பொழுதில் துரியோதனுதியரைச் சர்வ சங்காரம் பண்ணி மகிக்ஷியடையாமல் பகைபாளியின் குடையின் கீழொதுங்கி வாழும்படியாகவோ எண்ணி இருக்கின்றீர். ஆ! ஆ! அண்ணுவே என்று, வெப்பமாகிய தோள்களும் மீசையுந் துடிக்க, நுட்பமாகிய மனமுங் கண்ணுங் கறுக்க, மேலோங்கி யெழுந்து பூமியிற் ருழ்ந்து, விறுவிறெனச் சுழன்று, நறநறெனப் பற்கடித்து, மேகம் நடுங்கிப் பதுங்க முழங்க, கோபமெழுந்துற் றழுங்கக் கலக்கிக் கூகூவெனக் கூறியவார்த்தையைக் கோபால கிருஷ்ணதேவர் கிருபையுடன் பரிவுகூர்ந்து கேட்டு, அப்பா வீமா! பூமியிலே முன் பிறந்த தமையன்மார் இராஜநீதி முறைமை சொன்னுல் அதைக்கேளாமல், பின் பிறந்த தம்பியானபேர் பிழைசொல்லி மறுப்பார்களோ? அந்தோ! பெரும்பிழைவந்ததே அடடா! கடியகோபத்தை க்ஷமிக்கக் கடவாயென்று திருவுளம்பற்ற, வீமராஜன் சற்றே கொதிப்பாரி கொடூர கடுவிஷம்பெற்ற நல்ல பாம்பைப்போல் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தான்.

அப்படி யிருக்கிறபோது யிந்திர குமாரனுகிய அர்ச்சுனனெழுந்து வணங்கி நின்று இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னு முக்காலங்களையு முணர்ந்த ஸ்ரீ கிருஷ்ணதேவருக்கும், தருமபுத்திரருக்கும் சொல்லுவான். ஒ முற்றுணர்ந்த முதியோர்களே! அந்தக்காலத்திலே துரியோதனன் பண்ணிய அக்கிரமங்களையும், அவமதிப்பையும் பொறுத்த பொறுமைகளெல்லாம் போதாமல், இன்னமும் பொறுக்கச்சொல்லி பொழுது விடியுமட்டும் தருமத்தையே சொல்லிக்கொண்டிருந்தால், யினிஎந்த காலத்தில் பகையை முடித்து

நாம் தலையெடுக்கப் போகிறது. அப்போது தலையை விரித்துக்கொண்ட திரௌபதை இனி எப்போது கூந்தலை முடித்துக்கொள்ளவிருக்கின்றாள். தேவர்களானாலும், பழைய இராக்கதரானாலும், இன்னமும் வலிமைபெற்ற எவர்களானாலும், எதிர்த்தவர்களுடைய ஈரலிற்பற்றிய பிராணனை தனக்கு இரையென்று நினைத்திருக்கின்றது என் கையில் இருக்கும் பாணம். ஓ மும்மூர்த்திக்கு முதல்வனாகிய முகுந்தனே! இத்தன்மையவாகிய வென்னுடைய திறத்தையுந் திடத்தையுந் தெரிந்திருக்கும் தருமராஜனானவர், மேகந்தவழும் கமுகமரத்தில் வராலினம்பாயுங் கழனிகள் சூழ்ந்த குருநாட்டை, என்ன நிமித்தியமாய்த் துரியோதனன் இடத்தில் வேண்டிப் பெறுவது. ஐயோ! பாண்டவர் சகாயனும், விஜயனும் இறந்தார்களென்று எப்போது கேட்கின்றீரோ அப்போதல்லவோ நம்முடைய நாட்டை இறந்து பெறவேண்டும். அண்ணா தருமநந்தனா! ஓ கோபால கிருஷ்ணமூர்த்தி! அக்கினியைப்போல் தீண்டப்படாத பதிவிரதா மகத்துவமுடைய திரௌபதையை இராச சபையிலே துகிலுரியடா தம்பி துச்சாதனா என்று துரியோதனன் சொன்னபோது, அவள் திக்கில்லாதவரைப்போலத் தியங்கிக் கலங்கித் தாரை தாரையாய்க் கண்ணீர் சொரிந்து, ஓ ஜெகத்ரக்ஷகா! ஓ தீனபந்தோ! ஓ ஜெனார்த்தனா! ஓ தீனதயாளுவே! ஓ நெடியோனே! ஓ நீலமேனியனே! ஓ நிரந்தரனே! ஓ நின்மலனே! ஓ நித்தியானந்தனே! நேசமுற்ற தாசருக்கு விசுவாசமந்தஹாச நிர்மலசொரூபனே! நிராதாரமாகிய வெளியேனைத் தற்காலத்தில் வந்து இரட்சிக்கக்கடவை என்று தன்னந்தனியாய் நின்று தளர்ச்சியுற்றபோது, நாங்கள் ஐவருஞ் சீவனில்லாத உடலைப்போலே இராஜ சபையிற் பார்த்துக்கொண் டிருந்த குற்றம் இனியேனும் விட்டுத் தீரவேண்டாமோ? இன்னமும் இரந்து நாடு வேண்டுவது மன்னறமாமோ? மண்ணுலகெல்லாம் வாழ்வுற வாழும் தண்ணளிசுரந்து தருமம் நிறைந்த புண்ணியதேகப் புகழியினையுடைய அண்ணா! பொற்பிரகாசம் பொருந்திய சக்கிராயுதத்தை யுடைய நமது ஸ்ரீ கிருஷ்ணதேவர் நமக்காகத் தூது போய் நாம் சொல்லிய வாக்கியங்களை யெல்லாம் தேவாமிர்தத்தைப்போல் கலக்கித் துரியோதனனுடைய காதுகளில் வார்த்தாலும், அவன் கேளான். அதேனென்னில், அவர் நிலத்தில் முளை வீசிய விதைகளை விதைத்தாலும் முளையாது. ஒருவேளை தப்பு விதைகள் முளைத்தாலும் விளையாது. படத்தையுடைய பாம்புக்கு பால் வார்த்து வளர்த்தாலும் கொடிய விஷத்தைத தருமே யல்லாமல் குணமாகிய அமிர்தத்தைக் கொடாது. அன்றியும் சர்க்கரையை மணல் போற் பரப்பிப் பாலேரிப் பாய்ச்சி தேன்மாரி பொழிந்து வேப்பம்விடினும் அவ்விதத்தினின்றும் முளைத்த மரமானது கசப்பே யல்லது இனிப்புறாது. அதுபோல் துரியோதனனுடைய ஊழ்வினைவலியினால் கெடுமதி கண்ணுக்குத் தோற்றவில்லை. கிருபாநிதியாகிய ஸ்ரீகிருஷ்ணசுவாமியையும் அவமதிப்பாய் பேசுவானேயல்லது, அவருக்கு ஞாயமாகிய உத்தரவு சொல்லமாட்டான். ஆதலால், தூதனுப்ப நினைப்பது அனியாயமென்று சொல்லிய அர்ச்சுனனை ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சற்று பொறுவென்று கையமைத்து, நகுலனை பார்த்து நீ என்ன சொல்லுகிறாயென்று கேட்டருளினார்.

உடனே அன்புடன் நகுலனெழுந்து, அரி வாசுதேவ மூர்த்தியின் பாதங்களில் வணங்கி, தருமபுத்திரருக்கு சாஷ்டாங்க தண்டஞ்செய்து, சூதினாலிழந்த சமுத்திரம் வளைந்த பூமியை பெருமைபொருந்திய பாண்டவர்கள் பெறுவார்களென்று சொல்லுவது பொய்யோ; ஐயா! இதுமெய்யே; தருமபுத்திரருடைய ஒப்பற்ற பராக்கிரம சாமர்த்தியமே சொல்லி வெல்லாதோ? ஓ கிருஷ்ணசுவாமி தேவரீருக் கொன்றுந் தெரியாதோ திருவாய் மலர்ந்தருளும் தேவனேயென்று ஆவலாய் பின்னுஞ் சொல்லுகின்றான். ஓ அண்ணா! தீர்ப்பதற்கரிய பகையானது மேலிட்டிருக்க, கோவினங்களைக் காத்தருளிய கோபாலன் தூதுபோய் உரைத்தாலும், குருநாட்டையும் அரசாட்சியையும் அந்த துரியோதனன் ஒருக்காலுங் கொடுக்கமாட்டான். சிறியேன் சொல்லும் வாக்கியத்தைச் செவ்வையா யோசிக்க வேண்டியது. ஓ தருமபூபதியே? காற்றிலும்-பனியிலும்-வெய்யலிலும் மழையிலும்-மலையிலும் அலைந்து திரிந்து வருந்திவந்த பாண்டவர்கள், துரியோதனனிடத்தில் நாட்டை இழந்தார்களென்று சம்புத்தீவாகிய இந்தப் பூமியை யாளும் அரசர்க ளெல்லாரும் ஒன்றுகூடி நம்மை நகைத்துக் கேலிசெய்யாதபடிக்குத் துரியோதனனுடைய புயவலிமையையும் தேவரீர் பார்க்கலாம். அண்ணா!

முன்னம் அன்னம்போல நடையையுடைய அரம்பாஸ்திரீயை அசுரர்கள் அபகரித்துக் கொண்டுபோக, அப்போது அவள் பயந்து அலறி அபயமிட்டு அடைக்கலம் வேண்ட, அதையறிந்து அந்தரவாசியாகிய இந்திரனுக்காக அந்த அசுரருடன் அமர்புரிந்து அரம்பையை மீட்டு அப்யமளித்தான் நமது குலத்திலுதித்த முப்பத்தெட்டாவது பாட்டனாகிய புரூரவச்சக்கிரவர்த்தி. அப்படிக்கிருக்க அன்னியஸ்திரீகளுக்கு வந்த ஆபத்துக்குதவும் அரசர் குலத்திற்பிறந்த நாம் குட்டிச் சுவர்போ லிருந்து காணும்படிக்குத் துஷ்டனாகிய துர்ச்சாதனன் திரௌபதியை எட்டி மயிர்பிடித் திழுத்துவந்து சபையில் விட்டு அபிமான பங்கம்செய்ய ஆக்யாபித்த அருளற்ற பாவியாகிய அரவக் கொடியோனிடத்தில் நமது பூமியை யாசித்து, அவன் கொடுக்கும் குடைநீழலிலிருந்து அங்கம் வளர்த்தால் நம்மை யுலகம் நங்கஞ்சொல்லாதோ? திங்கள் குலத்திற் பிறந்த தேவே! தேவரீர் தருமமும் பொறுமையும் தழைக்கும்படிக்கு யோசிக்கின்றீர். அவர்களிடத்திலும் இந்த நினைப்பிருக்குமாகில் இது தருமந்தான். அப்படி இல்லாதிருக்க நீர் நினைப்பது அதர்மந்தான். அண்ணுவே? இன்னும் கேட்டருளும். வனவாசம் பன்னிரண்டு வருடமும், அக்யாதவாசம் ஒரு வருடமும் சத்தியமொழி தப்பாமல் கழித்து வந்தார்களே, நமது சிற்றப்பார் பிள்ளைகளாகிய அண்ணன் தம்பிகளென்று கொஞ்சமேனுமிரக்கம் வையாமலும், நம்மைக் கூட்டிப் போய்த் தன் சொல்லின்படியே தாயாதிபாகந் தமைசெய்யாமலும், உலூகமாமுனி போன தூதினுலு மனம்நையாமலும் போவாறுகில், தானே யறிந்துகொள்ளாத ஒருவனுக்கு மற்றொருவர்போய்ச் சொன்னுல் அறிவாரோ? (தனக்குத்தானே கனியாதபழந் தடிகொண்டடித்தாற் கனியுமோ) அன்றியும், (கண்ணைக் காட்ட வாராதவள் கையைப்பற்றி இழுக்க வருவாளோ?) என்று பற்பலவித பழமொழிச் சொல் புகல்கின்ற நகுலராஜனை அற்புத குணமுடைய அரிவாசுதேவன் கையமைத்தருளி, சகாதேவனைப் பார்த்து, சௌரியத்தையுடைய வீமசேனன் சொன்னதும், வலிமையுடைய அர்ச்சுனன் சொன்னதும், மனோதிடங்கொண்ட நகுலன் சொன்னதுங் கேள்விப்பட்டோம். சொல்லுதற்கரிய அரிவையுங் கீர்த்தியையும் பராக்கிரமத்தையுமுடைய தோன்றலே! உன் கருத்தையும் சொல்லென்று கேட்க, கரியதிருமேனியையுடைய கண்ணனைப் பார்த்து, மனமுருகும்படி சகாதேவன் சொல்லுகின்றான்.

ஓ ஆதிநாராயணராகிய ஸ்ரீ கிருஷ்ண தேவரே! நீர் நினைத்தபடியே தூதுபோனால் என்ன? போகாமல் நின்றுவிட்டால் என்ன? துரியோதனன் பாண்டவர்களுக்குப் பூமி கொடுத்தால் என்ன? கொடாவிட்டால் என்ன? பூங்கொத்தையுடைய அளகபாரத்தை இந்த திரௌபதி முடித்தால் என்ன? முடியாமற் விரித்தால் என்ன? நீரெண்ணியிருக்குங் காரியங் கடைசியில் முடியப்போகிறவிதம் அடியேனுக்குத் தெரியுமே? வாசனையை வீசுகின்ற பசிய துளபமாலையை யணிந்த கிரீடத்தையுடைய ஸ்ரீ கிருஷ்ணு! அன்று பூதகியினுடைய விஷப்பாலாகிய முலைப்பாலை யுண்டு, சாபம் பெற்ற மருதமரத்தை யுதைத்து, உயர்ந்த ஜடாசுரன் விழும்படியாகவுந்தி, விந்தையாகிய கன்றால் விளாங்கனி எறிந்து விளையாடி நந்தகோபாலன் அசோதை பிராட்டியாராக மகிழ யாதவர் மனைகடோறும் புகுந்து வளர்ந்தருளிய புருஷோத்தமனாகிய ஸ்ரீ கபடநாடகா! இங்கே நீர் செய்கின்ற மாயமும் ஞாயமும் ஒருவருக்குந் தெரியாமற் போயினும் எனக்குத் தெரியும். ஆகையால், சத்தியமாக உம்முடைய திருவுளத்துக்கு நினைப்பு எதுவோ அதுவே எனக்குக் கருத்தென்றான்.

தெய்வத்தை யொத்த சகாதேவன் சொன்ன அந்த மொழியைக்கேட்டு ஸ்ரீ கிருஷ்ண தேவர் புன்சிரிப்புக்கொண்டு, வலிமையையும் வைரத்தையுங் கொண்டிருக்கும் தருமராஜன் முதலியபேர்கள் சொன்னவிதந் தான் சொல்லாமல், கொஞ்சம் உபாயமாகவும், பக்குவமாகவும் சொல்லழுத்தமாகவும் பேசினன். இந்தச் சகாதேவன் இன்னமும் இவ்விடத்தில் இவனுடன் பேசினுல் என்னென்ன ரகசியங்களை வெளிப்படையாக இழுத்து சொல்லுவானோ தெரியாது. சாஸ்திர விசாரணையுள்ள புத்திமானாகையால், கலந்து பேசுவதற்குத் தனிமையிற் கொண்டுபோய் இவனது உள்ளக்கருத்தை அறியவேண்டுமென் றெண்ணித் தருமன் முதல் நால்வரையும் நோக்கித் தம்பியாகிய சகாதேவன் உண்டு உடுத்து விளையாடும் வயதுள்ள பாலனாகையால் மனவெறுப்பாகச் சொல்லுகின்றான். ஆதலால், அவனைத் தனிமையிற் கொண்டுபோய் தெரியப் படுத்தி அழைத்துக்கொண்டு வருகிறேன். தருமநந்தனு! சும்மாயிருந்த எனக்குச் சுண்ம

கொண்டுவந்து வைத்தீர்கள். அப்பா! (கொஞ் சத்தி லிருக்கிறதா குரங்கு மிளகுநீர் குடிப் பது) என்று சொல்லி யெழுந்து, சகாதேவன் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய், நாகரத்தினத்தா லிழைக்கப்பட்டிருக் கிற ஒரு ஏகாந்தஸ்தானத்திலேபோய் இரு வரு மிருந்து, சகாதேவனைப் பார்த்து, ஓய் மைத்துனரே? நாலுபேரைக்கேட்ட தன்மை போல் உம்மையுங் கேட்டால் அவர்களுடன் கலந்துகொண்டுசொல்லாமல் என்னையிழுத்து வெளியிற்போட எத்தனை நாளாக எண்ணிக் கொண்டிருந்தீர். விவேக நிறைந்த புத்தி மானே! இப்பவும் உம்முடைய இஷ்டப்படிக் குப் பாரதயுத்தம் நடக்காம லிருப்பதற்கும் யாவரும் பிழைப்பதற்கும் ஏதாகிலும் உபாய முண்டானாற் சொல்லும்; நாமிருவருங்கலந்து யோசித்துக் கொண்டு அந்தப்படி நிறை வேற்றி விடலாமென்று சூஸ்திரதாரி கேட்க, சகாதேவனெழுந்து அவருடைய பாதகமலங் களிற் பணிந்து சொல்லுவான்.

ஸ்ரீகிருஷ்ணதேவா! குள்ள நரியின் வா லைக்கொண்டோ சமுத்திரத்திலுள்ள ஆழம் பார்க்கப்போகிறீர். சுவாமி! நீர்வேறு நான் வேறென்றெண்ணி என்னைப் புறம்பாக விட் டுப்பேசாதீர். தேவரீர் சர்வதேசத்து இராஜ வர்க்கத்தையும் இராக்ஷதரையும் குரு க்ஷேத் திரத்திலே கூட்டிச் சாம்பராக்கிக் காற்றிற் றூற்றிவிட்டுப் பூமிபாரந் தீர்க்கும்படியாய்க் கருதியன்றோ க்ஷீராப்தியைவிட்டு நீங்கித் தேவகிதேவியார் கர்ப்பத்தில்வந் தவதரித்தி ருக்கின்றீர். மேகமேனியையுடைய வேதவித்த கரே! பசுக்களைப் பரிபாலனஞ் செய்தருளிய பாக்கியரே! ஸ்ரீ அரிகோவிந்தா! இது வேலை யாக வந்திருக்கும் உம்மையல்லாமல் இந்த மகாபாரதத்தை நீக்கவல்லவர் வேறே யாரி ருக்கின்றார்களென்று சகாதேவன் சொல்ல, பாண்டவர்கள் சகாயன்கேட்டு நகைத்து, நாமி ருவருங் கலந்து பேசுவதென்று நேமித்துக் கொண்ட பிற்பாடு நீர் இன்னமுங் கபடமாய் பேசுவது ஞாயமன்று. உமதுகருத்தை வெ ளிப்படுத்தும் அப்பால் நான் சொல்லுகிறே னென்று காரியவாதியாகிய கண்ணனருள் கொண்டுரைக்க, கருணையே உருவாகவுடைய சகாதேவன் கண்ணீர்ததும்ப நின்று அவரது கருத்தையுன்னி, ஓ காசாம்பூவண்ணா! என் வாக்கினாலேயே வெளிப்படுத்த வேண்டுமென னும் எண்ணமிருக்குமாகில் சொல்லுகிறேன் கேளும். சுவாமி! இப்போது இந்தப் பூமி யைப் பட்டங்கட்டிக்கொண் டாளவேணும் என்று எண்ணங்கொண்டிருக்கிற துரியோதன ராஜன் தருமராஜன் இவர்களிருவரையும் நா ட்டை விடுத்துக் காட்டிற்போக விரட்டி, பஞ் சாசதகோடி பூமண்டலத்தையும் கர்னனுக்கு பட்டாபிஷேகஞ் செய்து, கர்னனைக் கொல்லு கின்றேனென்று சபதங்கூறிப் பதைத்திருக் கின்ற அர்ச்சுனனை முன்னே கொன்று விட்டு, பிற்பாடு பந்துமித்திரர் பெரியோர் முதலிய வெகுபேர்களுடைய தலையைவாங்கக் கூந்தலை விரித்துக் கொண்டிருக்கும் திரௌபதியினு டைய அக்கூந்தலைக் களைந்து மொட்டையாக் கிக் காலிலே விலங்குபூட்டி வைத்து, எனக்கு நேரிலிருக்கும் உம்மையும் என் கையாரப் பிடித்துப் புயத்தோடு புயநெருங்கக் கட்டுவ னேயானால், இந்த மகாபாரதயுத்தம் விளையா மல் இருக்கும்படி செய்யலாமென்றான் சகா தேவன்.

அந்த வார்த்தையை அரிவாசுதேவன் கேட்டுப் புன்னகை யுடையவராய், பாம்புக் குத் தெரியும் பாம்பின்கா லென்பதுபோல் அறிந்துகொண்டு, ஓ சகாதேவராசனே! நல்ல யுக்தி சொன்னீர். சந்தோஷமானேன். ஆகி லும், தருமராஜனையும், துரியோதனனையும் காட்டிலோட்டிக் கர்னனுக்கு நாட்டைப் பட் டங் கட்டி அர்ச்சுனனை வெட்டித் துரோப தையை மொட்டையடித்து விலங்கும் பூட்டி வைத்தால், பாரதயுத்தம் வராதென்று நீர் முக்கியமாகச் சொல்லிய இவைகளெல்லாம் ஒருவேளை முடிந்தாலு முடியும். அது நிற்க, என்னைக் கைப்பிடியாகப் பிடித்துக் கட்டிவிட வேண்டுமென்று சொன்னீரே அது எவ்விதம்? என்னை எப்படி கட்டுவீரென்று கமலக்கண் ணன் கேட்கச், சகாதேவன் சொல்லுகின்றான்.

சுவாமி! மலையினுயரத்தை மலையறியாது மற்றவர் அறிந்து சொல்வதுபோல், உம்மு டைய பெருமை உமக்குத் தெரியாது. உத்தம ராகிய புத்திமான்கள் தா னறிவார்கள். உந்தி பூத்தோனே! உம்முடைய உருவத்தை உண் மையாகக் காட்டினால் உமதடியார்க்கு ளொரு வனாகிய நான் கட்டுவேனென்று உறுத்திச் சொன்னான் சகாதேவன். அந்த மொழியை ஸ்ரீ கிருஷ்ணதேவர் கேட்டு, அவ்வன்பனு டைய பக்தி மனத்தை அறியும்படி நம்மைக் கட்டும் பிள்ளாயென்று தமதிச்சையினாலாகிய பதினாயிரம் வடிவு கொண்டு, அவ்வந்தரங்க

மண்டப முழுமையுஞ் சுந்தர வங்கமுடைய வரா யிருந்தார். அந்தக் காலத்தில் பரிசுத்த சித்தமுடைய சகாதேவனும், அந்த ரூபங்களுக்குள் ஆதியாகிய உருவத்தை உண்மை ஞானத்தால் உணர்ந்து, உலகமுழுமையுந் தாவியளந்த உபய திருவடிகளையுந் தன் கருத்தென்னுங் கயிற்றினாலே இறுகக் கட்டினான். அப்போது பதினாயிரம் வடிவிலே ஆதிமூலமாகிய வடிவை ஆற்றலா லுணர்ந்த நீதான் தேவனென்று சந்தோஷித்துத் தாம் கொண்டருளிய எல்லா வுருவும் ஒரே யுருவாகிப் பிரத்தியக்ஷயமாய் நின்றார். அவராரெனில், பூலோகத்தில் யாவரும் போற்றித் தவம் புரிந்து தேடியுங் காணாத தாமரை மலர்போன்ற பாதங்களையுடைய சங்குசக்கரக் கையனாகிய வென்னையன்.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி மீண்டும் சகாதேவனைப் பார்த்து, பத்தியினாலும் புத்தியினாலும் என்னை இன்னானென் றறிந்து கட்டிய மைந்தனே! உன்னைப்போலொத்த உண்மைஞானிக்கே நானுரியேன். என்னுடைய பாதத்தை இனி நீ கட்டவிழ்த்து விட்டுவிடக் கடவை. மெத்த உறுதியாகிய பாசக்கட்டையா இது வென்று ஸ்ரீ கிருஷ்ணதேவர் சொல்ல, சகாதேவன் சகஸ்திர நாமங்களினாலும் ஸ்தவுத்தியஞ்செய்து, சுவாமி! வண்மை பொருந்திய பாரத யுத்தத்திலே தேவரீர் திருவடிக்கு அடைக்கலமாக வந்து சேர்ந்த எங்களைவரையும், உம்முடைய கடாட்சத்தினாலே ரட்சணை செய்யவேண்டும் என்று சொல்லி வணங்கி, இரண்டு செந்தாமரை மலர்போன்ற திருவடிகளில் நமஸ்கரித்த சகாதேவனுக்கு ஐவரையுங் காக்கிறேனென்று நிச்சயஞ்சொல்லிக் கட்டு விடுவித்துக்கொண்டு,இன்று நாமிரண்டு பேரும் இவ்விடத்திற்பேசி நடத்திய சங்கதிகளொன்றும் அயலாரறியச் சொல்லாதே யென்று மேல் நடக்கவேண்டிய காரியங்களை எல்லாங் கலந்து பேசிக்கொண்டு, அந்தச் சபையை விட்டு நீங்கி, அறிவுடையோராகிய அவ்விரண்டுபேரும் தருமபுத்திரர் முதலானோரிருக்கிற சபைக்கு வந்தார்கள்.

அப்போது குற்றமற்ற குணத்தினையுடைய திரௌபதியானவள், மற்ற நாலு பேரைப்போலே சகாதேவராஜன் ஒப்புக் கொள்ளமாட்டார். நமக்காகவே பாடுபட்டுப் பேசி அளகம் முடிக்கும் விதத்தை யோசித்து வருவாரென்று மிகவும் மனமகிழ்ந்து, நெடிய அளகபாரஞ் சோர எதிரில் நின்ற பாஞ்சாலியின் கருத்தை யுணர்ந்த கண்ணன், அவள் முகத்தைப் பார்த்து, ஓ திரௌபதாதேவியே! பாண்டவர்களில் இளையோனாகிய இந்தச் சகாதேவன் வேறு விதமாகச் சொல்லுவானுக்கு மென்றெண்ணித் தனித்துப்போய் யோசித்த காலத்தில், துரியோதனன்பால் தூதுபோகச் செய்வதே உத்தமமென்று இவர்கள் கருத்தைப்போலவே எடுத்துச் சொன்னானென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் சொல்ல, இந்த மொழியைக் கேட்ட பாஞ்சாலி இடியோசை கேட்ட நாகம்போலேங்கி, இரைச்சலிட் டேங்கிப் பெருமூச்சுவிட்டு, ஓ தெய்வமே! தாயாதிகளுடன் சண்டையிட்டு சபதத்தை முடிக்க மனமில்லாமல் தூதுபோக்கி பெருமை பொருந்திய பூமியைப் பெற்றுக்கொண்டு, அவர்களுடன் குலாவி வாழ்வதற்குத் தருமபுத்திரர் முதல் சகாதேவருக்கும் இஷ்டமிருக்குமென்று தேவரீர் சொல்லுவீராகில், பூவை மறந்து புழுதியிற் புரளும் அளகபாரத்தை வாரி முடித்து என் வஞ்சினந் தீர்க்குங்காலம் எதுவோ வென்று மின்னலையொத்த திரௌபதையானவள் மாயவனுடைய மலரடிமேல் வீழ்ந்து, மண்ணிற் புரண்டு கண்ணீர் சோர விட்டழுது இதனைச் சொல்லுவதாயினாள்.

முன்னொருபோது இரணிய கசிபனானவன் காமியத்தால் ஆதிமூலப் பொருளாகிய தேவரீரையே வாயினாற் செபித்திருக்கும் தன் குமாரனைப்பார்த்து, மிகவுங் கோபங்கொண்டு, இராட்சத வயிரினை நாவினாற் கூவி என் குலத்தை நாசம் பண்ணவந்த மோசக்காரனாகிய அடா பாலா பிரகலாதா! இப்போது நீ சொல்லுகின்ற பேரையுடையவன் எங்கே இருப்பானடா வென்று கேட்ட தந்தையை நோக்கி, ஐயா! சங்காழியிற்றுயின்ற சங்கு சக்கரதாரனாகிய எங்கோன் எங்குமிருப்பாரென்று சொன்னவுடனே, அனலினும் கொடிய கனல்போற் சீறி, அடா பாவி! இந்தத் தூணி லிருப்பானோவென்று கேட்க, கலீரென நகைத்துத் துரும்பிலு மிருப்பாரனென்று சொல்ல, அவ்வாறே துரிதத்துடன் ஆங்காரங்கொண்டு ஓங்காரமிட்டு அறையும்படியாக அந்தத் தூணிலிருந்து உக்கிர நரசிங்கமூர்த்தியா யுதித்து, இரணிய கசிபனைச் சங்காரம்பண்ணிப் பிரகலாதனனை சன்மானஞ் செய்தருளிய இறைவனே! மற்றொருபோது பதினாயிரவருடம் முதலையினிடத்தில் அகப்

பட்டு வருந்தி ஆதிமூலமே யென்று
பெயரிட்டு அழைத்த மும்மதம் பொழியுங்
கஜேந்திரனுக்குச் சம்மதமாக நீலமலைபோல
நேரில் நின்று முதலையை அழித்து யானை
யைக் காத்தருளிய கஜேந்திரவரதா! கண்ணில்
லான்பெற்ற துச்சாதனன் கற்றையாகிய என்
அளகபாரத்தைப் பிடித்திழுத்து வந்து சபை
யில் நிறுத்தி, நஞ்சைப்போன்ற பலவார்த்தை
களைக் கொஞ்சமேனும் அஞ்சாமற் பேசி அபி
மான பங்கமாக வஸ்திரத்தை யுரியும்போது,
என்னருமைக் காவலராகிய பஞ்சபாண்டவ
ரும் நெஞ்சுபொருந்திப் பார்த்திருந்தார்களே
யொழிய வேறொன்றும் செய்திலர். அக்கால்,
நான் தாதுகலங்கித் தஞ்சமென்றழ, வெற்றி
பொருந்திய சக்கராயுதத்தையுடைய கோவி
ந்தா! அன்றைக்கும் என் மானத்தை நீர் காப்
பாற்றினீரல்லாமல் வேறே யார் வந்து காத்
தவர்கள். ஐயனே! இன்றைக்கும் மற்றென்
றைக்கும் நீரே துணை என்று புலம்பிப் பின்
னும் சொல்லுகின்றாள்.

ஓ தேவே! இராஜசபையில் என்னையழை
த்து நிறுத்தி என் குலகோத்திரத்துக்கும் பழு
துண்டாகும் படியாகிய குற்றத்தைச் செய்த
சர்ப்பக் கொடியோனிடத்தில் தூதுவிடுத்து,
அவன் கொடுக்க ஐந்தூர்பெற்று, சுத்தவீரர்க
ளென்று பேர் வைத்துக்கொண்டு உயிர்வாழ்ந்
திருக்க இப்பாண்டவர்கள் நினைப்பார்களே
யானால், தீவினைப் பாவியாகிய நான் அன்று
விரித்த கூந்தலை இனியென்று முடிக்கப்போ
கிறேன்? தீனர்களுடைய எண்ணத்தை முடிக்
கும் எமது தெய்வமே, தெய்வமே! யென்றழு
தாள். அவள் முகத்தைக்கண்ட அந்தச்
சபையிலிருந்த யாவருங் கண்கலக்கப்பட்ட
காலையில், சாத்தகி மூர்த்தண்ய கோபமுடைய
வராய்த்தருமராஜன் முதலியபேர்களை நோக்கி
எழுந்து, ஐயையோ! இதென்ன அனியா
யம் மூவுலகமு மதிக்கும் வீமசேனன் கையில்
தண்டாயுத மிருந்தும், திசை பத்தும் இசை
பெற்ற விஜயன் கையில் காண்டீப மென்னும்
வில்லிருந்தும், பூவும் வண்டும் பொருந்திய
அளகம் புழுதியிற் புரளும்படியாய் திரௌ
பதி புலம்பிப் பரதவித்துக் கொண்டிருந்தும்,
இன்னமும் நீங்கள் எல்லோரும் பார்த்துக்
கொண்டிருக்கின்றீர்க ளல்லவா? சத்துருக்க
ளிடத்திலே தாழ்ந்து வருந்தி அவன் கொடுக்
கும் நாட்டைப் பெற்றுக் கொண்டு குறைவில்
லாமற் புசித்து உயிர் வளர்ப்பதற்கு யோசிக்
கின்ற உத்தமர்களே! க்ஷத்திரிய தருமநெறி
இதுதானோ சொல்லுங்களையா! இதன்றியும்
பிரசண்ட வேகமுடைய மேகத்தினது பிரள
யக்காலத்து இடியைப்போன்ற சர்வலோக
ஜயசிம்மனாகிய ஜராசந்தனுடைய தண்டனைக்
குப் பயந்து, தன்னைக் காப்பதற்குக் காவலா
கிய துவாரகையைக் கைக்கொண்டு, சகலவளப்
பமு முடைய வடமதுராபுரியை விட்டுவிட்
டோடிய திணிந்த சாமர்த்தியமுடைய ஸ்ரீ
கிருஷ்ணமூர்த்தியின் சொற் புத்தியைக்
கொண்டோ, அல்லது பிரகாசம்பொருந்திய
தருமபுத்திரருடைய சுயபுத்தியைக் கொண்
டோ, துரியோதனனாதியருடைய துற்குணம்
உள்ளதெல்லாம் பூர்வத்தில் தெரிந்திருந்தும்
இன்னமும் அவனிடத்தில் தூதுபோக்கி
நாடு கேட்கச் செய்வது. தெய்வமே! இது
என்ன மதியோ? இரணியகருப்ப னெழுதிய
விதியோ? ஏதொன்றும் அறியேன் சிறியே
னென்று மிகுந்த ஆருமையோடு சாத்தகி
யானவர் தன்னைமறந்து சொல்லவே, சின்ன
பின்னலாகச் சடைபட்டிருக்குந் தலைமயிரினை
யுடைய பாஞ்சாலி சபையில் விழுந்து, சஞ்
சலத்தி லாழ்ந்து, பிரலாபித்துப் புலம்பும்
போது, தருமபுத்திரர் முதலாகிய ஐவரை
யும் அருள் நிறைந்த தாமரைக்கண்ணராகிய
ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பார்த்து, கற்புக்கு வித்
தாகிய திரௌபதியை நோக்கிச் சொல்லுவ
தாயினர்.

என் தங்கையாகிய மங்கையே! நீ கண்
கலக்கப்படாதே; காரியமொன்றும் முழுகிப்
போகவில்லை. (குடலறுபட்ட நரி கூப்பிடுதூர
மோடுமா) குணவதியே! இப்போதும் தரும
ராஜன் முதலிய பேர்களின் எண்ணத்தின்படி
நான் தூது போய் வருகிறேன். நீ இதைக்
குறித்து விசனப்படாதே; தடுக்காதே. ஓ
திரௌபதையே! பாண்டவர்க்காகத் தூது
போய் வந்தவுடனே உன்னுடைய பின்னிய
கூந்தல் மயிரையும், உன்னைப் பேரவையில்
அவமானஞ்செய்த பேர்களுயிரையும் நானே
முடிக்கிறேன். இதல்லாமல் உன் கூந்தல் விரி
யும்போது அஸ்தினாபுரியும், அரசருடைய
சபையும் அறிந்ததேயன்றி மற்ற யாவரும்
அறியார்கள். இனிமேல் சத்துருக்களின்
அந்தப்புரத்தி லிருக்கும் ஸ்திரீகளுடைய
கூந்தல் விரியப் போகிறதையும், அவர்கள்
படும் அலங்கோலத்தையும், யாவரும் உலக
முள்ள வரையிலும் அறிந்துசொல்லி நகைக்

கப் போகிறதை நாளையே காணப்போகிறாய்; கரியகூந்தலையுடைய காரிகையே! இன்னமுங் கேள். சத்துருக்களுடைய தேகங்களென்னும் வயலிலே, உழுதற்குரிய கொழுவாயுதம் போன்ற வாளாயுதத்தினாலுழுது, வீரவம்பு புதுக்கி நிணச்சேறு திருத்தி, இரத்தநீர் பாய்ச்சிப் பிராணவிதை விதைத்து, வளர்ந்த அரசர்களுடைய குலமாகிய முதலை அறுத்து கழுகு, பருந்து, காக்கை, முதலானவை களுக்குக் களப்பிச்சை தந்து, நமனுக்குக் கீர்த்தி என்னும் மேல்வாரங் கொடுத்துக் குடி வாரங் குவித்து ஐவருடைய துயர சாகரத்தையும் உன்னளக பாரத்தையும் துரியோதனாதியராகிய பூமி பாரத்தையும் முடித்து விடுவதற்கு உன் குமாரனாகிய அபிமன்னனொருவனிருக்கின்றானாகையால், அம்மா சும்மா இருவென்றுரைத்துப் பெண் தன்மையிற் சிறந்த திரௌபதியினுடைய கண்களிலிருந்து மாரி போற் பொழியுங் கலுழிவாரியைத் தம்முடைய கரங்களினால் துடைத்து தமது கண்களிலுங் கிருபைவெள்ளம் பெருக்கக்காட்டித் திரௌபதியினுடைய மனம் நம்பும்படியாகத்தேற்றி அந்தப் புரத்தினுக் கனுப்பி விட்டனர்.

### கண்ணன் அத்தினபுரிக் கெழுந்தருளல்.

இப்பால் பிருதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும் பஞ்சபூத வடிவமாகிய ஸ்ரீ கிருஷ்ணதேவர் தருமபூபதியைப் பார்த்து, ஓ அரசனே! கேளும் வியாதிக்காரர் துறவிகள் ஒருவருக்கும் அடங்காத துஷ்டர்கள் கோபமுடையவர்கள் கற்றுணரா மூடர்கள் சிறு பிள்ளைகள் நீதியுணராதவர்கள் பேதமையாகிய ஸ்திரீகள் இவர்களைச் சபையிற் கூட்டி வைத்துக்கொண்டு ஒரு ஆலோசனையுஞ் செய்யக்கூடாது. அப்படிக்குத் தருமவிதியிருக்க இந்தத் திரௌபதையைச் சபையில் வைத்துக்கொண்டு ரகசியம் பேசினதினால் நாமே தோசவுக்கியத்தைக் குறித்துப் பேசுகின்றோமென்று பெண்புத்தியினால் இவ்வளவுதூரம் விபரீதமுயரத்தை விளைத்துவிட்டாள். ஓ தருமநந்தனா! நான் அந்த வேளையில் அவ்வளவு உபசார வார்த்தையாகச் சொல்லாவிட்டால் அந்த மனதுக்கு மெத்த வருத்தமுண்டாகும் ஆகையால் இத்தன்மையவாகிய உபசாரஞ் சொன்னேனென்று தருமராஜனுக்கு மன வருத்தம் வராமற் சாந்தி சொல்லிக்கொண்டிருந்த ஸ்ரீ கிருஷ்ணசுவாமியினுடைய வசன தந்திரங்களைத் தருமராஜன் முதலிய பாண்டவரைவரும் நிறுத்தி, தமக்குத்தாமே ஒப்பாகவிருக்கும் சுவாமி! காலதாமசம் பண்ணாமல் தேவரீர் தூதுபோகவேண்டுமென்றுவேண்ட, அவர்கள் வேண்டுகோளின்படி வணங்காமுடி பொறுத்த மன்னவனிடத்தில் தாம் தூது போகும்படியாய்ச் சர்வாபரண வலங்கார சந்தனுக்ஷதைகள் தரித்துக்கொண்டு, தம்முடைய ஜனனநாளாகிய உரோகணி நட்சத்திரத்திற்குத் தாராபலஞ் சந்திர பலமுள்ள ரேவதி நக்ஷத்திரத்தில் பிரயாண முகூர்த்தங் கொண்டு, தானதருமங்கள் செய்து, சமஸ்தமான பேர்களிடத்திலும் விடைபெற்றுக் கொண்டு, தெய்வவணக்கம் ஆசாரிய வணக்க முதலானவைகளைச் செய்து, நற்சகுன முதலியவும் பார்த்துத் தம்மனதின் வண்ணம் நடக்கும்படியாகிய நல்லவேளையில், விராடர் பாஞ்சாலர் முதலிய அரசர்களோடு பாண்டவர்கள் பின்றொடர்ந்து வழிகூட்டி விடும்படியாக, மனோவேகத்திலும் வாயுவேகத்திலு மிஞ்சிய வேகப் புரவிபூட்டி மகம்மேருக் கொப்பாகியிருக்கின்ற தேரின்மேலேறிக்கொண்டு, சல்லரி-மல்லரி-சங்கு - பம்பட்டம் - பம்பை-பேரிகை-முரசு-மத்தளம்-தாரை-முதலான வாத்தியங்கள் முழங்க, வெள்ளைக்குடை முதலிய பலவன்னக் குடைகள் கவிந்து நிழல்செய்து நெருங்க, யிருபக்கங்களிலுஞ் சாமரைவீச, கணக்கிறந்த ரதகஜ துரகபதாதிகள் - பூமியையாளும் அரசர்கள் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர்-மன்னர் மண்டலீகர்-மந்திரிகள்-சாமந்தர் - தந்திர சுதந்திரசேவகர் - எண்டிசைப்பாலர் இவர்கள் யாவருஞ்சூழ, கட்டியர்-பட்டுவான்கள் - புகழ்வோர் - வந்திப்போர் முதலிய பேர்கள் முந்திக்கூடிக்கொண்டோட, பரதநாட்டிய ஸ்திரீகள் பிந்திப் பாடிக் கொண்டாட, ஆலவட்டம்-தாலவட்டம்-பீலிக்குஞ்சம்-மயிற்பீலி-மேற்கட்டி -மகரதோரணங்கள் -குடைகள்-கொடிகள்-சவளக்கழி - பாலா-பல்லயம்-ஈட்டி - எறியீட்டி-வாள் - வேல்-முதலியவைகளெல்லாம் அளவற்றனவாயேந்திக் கொண்டு வீதிகளில் நெருங்கி வரும்படியாக ஸ்ரீ கிருஷ்ணதேவர் புறப்பட்டார்.

அது காலையில், தம்பியாகிய சாத்தகியும் இரதமேறிச் சேனை நாயகராகப் புறப்பட்டுச் சேனைகளை எல்லாம் அணியணியாக நிறுத்தி, யானைத்தலைவர்-சேனைத்தலைவர் - கொடித்தலைவர்-குடைத்தலைவர் - குதிரைத்தலைவர்-இரதத்

தலைவர் - அணித்தலைவர் - பணித்தலைவர் -
படைத்தலைவர்-முடித்தலைவர் - வாத்தியத்தலை
வர் - குசோத்தியத்தலைவர் - சேவகத்தலைவர் -
பொக்கிஷத்தலைவர் - நவரத்தினப் பூஷணத்
தலைவர்-பட்டுபட்டாவளி பீதாம்பர முதலிய
வஸ்திரத்தலைவர்-அஸ்திரத்தலைவர் - சஸ்தி
ரத்தலைவர்-சாஸ்திரத்தலைவர் - மல்யுத்த முத
லிய வாள்வீரத்தலைவர் - வில்யுத்த முதலிய
வேல்வீரத்தலைவர் யாவருஞ் சூழ்ந்து வரிசை
வரிசையாக வரும்படி நடத்திக்கொண்டு வர,
அப்போது கார்கால மேகம்போன்ற ஸ்ரீ கிரு
ஷ்ணபகவான் தன்னை வழிவிடும்படியாக வரு
கிற யாவரையும் பார்த்து நில்லுங்கள் நில்
லுங்களென்று சொல்லும்போது, தருமரா
ஜன் சுவாமியை நோக்கி, ஓ கருணைவாரிதியே!
எல்லாந் தெரிந்த உமக்கு நான் விஸ்தரித்துச்
சொல்லவேண்டியதில்லை. (இலைக்கு மண்ணுங்
கட்டி ஆதரவு, மண்ணுங்கட்டிக்கு இலை ஆத
ரவு) என்றுரைக்குந் தன்மையைப்போல் ஒன்
றுக்கொன்றாதரவாக முடித்துக்கொண்டு வர
வேண்டியது. ஆனால், காற்று மழையுங் கலந்
தடித்தால் காற்றினால் இலை பறந்துபோமே?
மழையினால் மண்ணுங்கட்டி கரைந்துபோமே
யென்று தேவரீர் திருவாய் மலர்ந்தால், அப்
பால் நாம் செய்யத்தக்கதென்ன ஒன்றுமில்லை;
எல்லாம் சிவன் செயலென்று நடத்தவேண்
டியதே நன்மை. ஆகையால், தேவரீர் அஸ்
தினபுரம் போய்ப் பேசுமிடத்தில் தருமதேவ
தையும், வேதப் பிராமணர்களும், நீதியை
யுடைய வேந்தரும் சந்தோஷமாய் ஒப்புக்
கொள்ளும்படியாகப் பேசவேண்டியது. எங்
கள் பெரிய தந்தை - பாட்டனாராகிய வீஷ்
மாச்சாரியர்-துரோணாச்சாரியர் - கிருபாச்சாரி
யர் - அசுவத்தாமர் முதலிய யாவருக்கும் எங்க
ளுடைய சாஷ்டாங்க நமஸ்காரம் சொல்ல
வேண்டியது. இரக்கமு நீதியுமுடைய சிறிய
தந்தை விதுரமகாராஜனுக்கும் பணிந்த
தாகச் சொல்லி, தேவரீர் எங்கள் பேரில்
வைத்திருக்கும் கடாட்ச வீட்சண்ணியத்தை
யுந் தெரிவித்து, எங்கள் தாயாகிய குந்தி
யம்மனுக்கும் எங்களுடைய சரணஞ்சொல்லி
இதுவரையிலும் உன் பிள்ளைகள் உன்
னுடைய புண்ணியவசனத்தினால் பிழைத்
திருக்கின்றார்களென்று தெரிவித்து, அந்த
அம்மாளுடைய பேதை மனது பேதிக்காம
லிருக்கும்படிக்கு தேவரீர் திருவாக்கினால்
உறுதிவாக்கியமுஞ்சொல்லிப் பிற்பாடு சபையி
னிடத்திற் பேசவேண்டிய பிரகரணங்க
ளெல்லாம் பேசி நன்மையான காரியங்களாக
நடத்திக்கொண்டு சீக்கிரம் வரவேண்டிய
தென்று முரசக்கொடியினையுடைய முதல்வன்
சொல்ல, வீமசேனன் வணங்கி சுவாமி! எங்
கள் ஐயா முதலிய எல்லோருக்கும் என் வந்த
னங் கூறி எல்லோரையும் ஏககாலத்தில் ஒரே
கூட்டமாய்ப் பார்க்க என்றைக்குக் கிடைக்கு
மென்று ஏக்கங்கொண்டு தூக்கமில்லா திருக்
கின்றான் வீமனென்று விளம்பும் மேகமேனி
யனே என்றான். உடனே அருச்சுனன் வண
ங்கி சுவாமி! தேவரீரைக் கண்டவுடனே பற்
பல உபசாரங்கள் செய்து, எல்லாந் தேவரீரா
லேயே முடியவேண்டியதென்றும், உமதிஷ்
டப்படி நாடுநகரங்களெல்லாங் கொடுத்துவிடு
கிறோமென்றுந் திரிதராட்டிர ராஜன் முதலிய
சகலருஞ் சொல்லுவார்கள். அது வாசாகயிங்
கரியமேயன்றி வேறல்ல; தேவரீர் அதை நம்ப
வேண்டாம் அவர்களிடத்தில் டங்கிங்கெனத்
தாக்ஷண்ய மில்லாமல், ஆம் அல்லவென்று
இரண்டொரு வார்த்தையாய்க் கேட்டுக்கொ
ண்டு சீக்கிரமாய் வந்துவிடும் தீனதயாளுவே
என்னவும், நகுலசகாதேவர்களும் வணங்கி,
ஆண்டவனே நாட்பட்டிருக்க வேண்டாம்.
போனதும் வந்ததுமா இருக்கவேண்டுமென்
றுப் புகல, திரௌபதி தீர்க்க தண்டஞ்செய்து
வணங்கி மேகவண்ணமுடைய அண்ணா! நான்
இதுவரையிலுங் காலங்கழித்தது பெரிதல்ல;
இப்போது நீர்போய் வருகிறவரையிலும் ஒரு
பிர்ம கல்பமாய் நாளைக் கழித்துக்கொண்டிருப்
பேன் என்று நவிலவும், விராடன் பாஞ்சா
லன் முதலிய பேர்கள் அருகிற் கலந்து,
ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி! எது வந்தாலும் எது
போனாலும் இவர்களுடைய சபதமாத்திரங்
குறைவுபடாமல் நிறைவேறும் விதத்தை
யோசிக்க வேண்டியதென்று உரைக்க, எல்
லோருடைய வார்த்தையுங் கேட்ட இறைவன்
சந்தோஷமடைந்து, நல்லதாகட்டும் உங்க
ளிஷ்டப்படியே பேசி வருகிறேனென்று யாவ
ரையும் நிறுத்தி, ஸ்ரீ கிருஷ்பகவான் தேரை
நடத்தும்படி உத்தரவுசெய்ய, உடனே அவ
ருக்குச் சமமாகிய தம்பி சாத்தகியானவர் தேர்
முதலிய சேனைகளைச் செல்லவிடுத்து, தானும்
அடுத்து முன்னும்பின்னும் பராபரி பண்ணிக்
கொண்டு சேனாநாயகராக நடக்கவும், தேவேந்
திரன் முதலாகிய தேவர்களும் நாரதாதி மகா
ரிஷீஸ்வரர்களும் பார்த்து மனங் களிக்கவும்,
ஆதிசேடன் பணமகுடங்கள் களிக்கவும், பூமி
தேவி மகிழ்விற் குளித்து உடல் பூரித்து

நமது பொருட்டால் சுவாமி! அஸ்தினபுரிக்குத் தூதுபோகின்றாராகையால், இனிமேல் நமது பாரம் நீங்குமென்று உபசரிக்கவும், சகல வளமுங்கொண்ட உபலாவியத்தைவிட்டு, அஸ்தினபுரத்தை நோக்கி நாட்டைக்கடந்து காட்டில் வரும்போது, நாரதர் - கண்ணுவர் - சமதக்கினி என்னுமிந்த மூவரும் தங்களுடன் அனேக உபரிஷிக் கூட்டங்கள் நெருங்கும்படியாக வந்து, ஜகநாதன் தூதுபோவதைப் பார்த்தார்கள். அவர்களைக் கண்டவுடனே ஸ்ரீ கிருஷ்ணதேவர் தேரைவிட்டிறங்கி, அவர்களுக்கு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, வந்த காரிய மென்னவென்று கேட்டார். அதற்கு அந்த ரிஷிகள் மூவரும் அவரை மனத்தினால் வணங்கி தேவரீருடைய விஸ்வரூப தரிசனம் செய்யவேண்டிய இச்சையுடையவர்களாயும், தேவரகசியப் பிரகாரம் அஸ்தினபுரத்துக்குத் தூதுபோய் அரவக்கொடியோனைக்கண்டு அவனிடத்தில் பேசப்போகிற அதிசயங்களைக் கூடயிருந்து பார்க்கவேண்டுமென்னும் அவாவுடையவர்களாயும் வந்தோமென்று இணங்கிச் சொல்லிய பெரியோர்களைப் பார்த்து நீங்கள் அஸ்தினபுரத்திற்கு வருவீர்களாகில், உங்களிச்சைகளியாவும் நிறைவேறுமென்று பரிபூரணமாக அருள் வாக்கியம் பகர்ந்த பரமபத நாதனைப் பணிந்து வாழ்த்தித் தேவரீர் முன்னதாகச் செல்லும், நாங்கள் பின்னாலே வருகின்றோமென்று விடைபெற்றுக்கொண்டு மூவரனைய அம்முனிவர்கள் மறைந்து போனார்கள்.

இவ்வகையாய் முனிவர்கள் சென்றபிற்பாடு ஸ்ரீகிருஷ்ணபகவான் தேரேறிக்கொண்டு கல்லுமலையும் காடுமேடும், புல்லும்பூடும், புதருந்திடரும், பாலைநிலமும், பனிவரைச்சாரலும், வேலையை நிகர்த்த வெண்புனற்றடங்களும், காட்டெருமைப்பால் கட்டியாய்ப் பெருகி, ஓட்டங்கொண்டே உறையுமிடங்களும், சிங்க முதலிய செழுமிருகங்கள் தங்கியே விளையாட்டயரும் வனங்களும், ஆகாயமளாவிய வாகாய மரங்களும், மலை யருவிகளும், வடியாக்கான்யாறும், நீர்வளம் நெல்வளம் நிறைந்த நிலங்களும், வாளைகள் பாயும் வயல்பெறு தவங்களும், வெண்கிளி - பசுங்கிளி - மைனாக்கள் - வண்குயில் - மயிலிவை வதியு பூம்பொழில்களும், வாழை கமுகு வான்கரும்புடனே தாழையிளநீர் தழைதருசோலையும், வேர்ப்பலாக்கனியை வியன் மந்திபீற வண்டாரார்க்குதேன் மருதவவனியுங் கடந்து, இரண்டுநாள் வரையில் வழியில் இருந்திளைப்பாறி, மூன்றுநாள் குருநாட்டெல்லையில் வந்து, அண்டகடாகத்தை அளக்கப்புகுந்த தன்மைபோன்ற உயரத்தையுடைய கோபுரங்களும், நாகலோகம் வரையிலும் ஆழ்ந்து மேகலோகம் வரையிலுமுயர்ந்து வளைந்திருக்கும் மதில்களும், அம்மதில்களைச்சூழ்ந்த அநேக அகழ்களுமுடைய பெரிய செல்வமோங்கிய அத்தினபுரியை ஸ்ரீ கிருஷ்ணதேவர்கண்டு நடக்கும்போது, அந்த மார்க்கத்திலே வரிசையாயிரானின்ற பசுமை பொருந்திய பாக்குமரங்களில், அதில் பழுத்திருக்கும் பச்சைக்குலைகளும் விரிந்த பாளைகளும் தழைத்து விளங்கியது எப்படி இருந்ததென்றால், தாவிய வேகத்தையுடைய குதிரை கட்டிய தேரின்பேரில் ஸ்ரீ கிருஷ்ணதேவர் அஸ்தினபுரத்துக்கு தூது வருகின்றாரென்று பவளச்சரங்களும் மரகத மணிகளின் பந்திகளும், வெண்மையாகிய முத்துக்கோவைகளும் வரிசையாகத் தூக்கிய அலங்கார மண்டபம் அமைந்ததுபோலு மிருந்தன. மேலும் பரிமளம் வீசும் அகில் விருட்சமும், சந்தனமரமும், பலாமரமும், மாமரமும், சண்பகமரமும், பச்சிலைமரமும் நெருங்கி விளங்கிக்கொண்டிருக்குஞ் சோலையில் தேவநாயகன் வந்திறங்கித் திருவடி பெயர்த்தருளியபோது, எதிர்கொண்டு உபசரிக்க வந்திருந்த பரதநாட்டிய மாதர்களை போன்ற மயில்கள் கண்ணனுடைய திருமேனியைக் கார்கால மேகமென்று கண்டு தோகையைவிரித்துக் களிப்புடன் தொந்தோமென்று ஆடிக்கொண்டிருந்தன; வண்டுகள் பாடிக்கொண்டிருந்தன.

இஃதன்றியும், சுவாமி வரும் வழியில் இருபக்கங்களிலும் நிறைந்த நீர்நிலையுடைய அலர்ந்த செந்தாமரைப் பொய்கைகள் பொருந்தியதன்மை எப்படி யிருந்தனவென்றால், அழகுக்கிடமாகிய அஸ்தினபுரி யென்னும் கன்னிகையானவள், மகாலட்சுமிக்கு நாயகராகிய மகாவிஷ்ணு வருகின்றாரென்று, பற்பல நிறமுள்ள சாதமும் மலர்ந்த தீபமும் பொற் சுண்ணங் கலந்த மஞ்சள் நீருடன் ஆலாத்தி எடுத்து அசைந்து நின்றதைப்போலு மிருந்தன. அப்பால், தூது வரும்படியாகிய ஸ்ரீ கிருஷ்ணதேவர் ஆதிவராகரூபியாய்ச் சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப் பெயர்த்த நாளில், அந்தவழியாக வந்தெழுந்த பாதாளகெங்கை அஸ்தினபுரத்தின் பெரிய மதிலை வளைந்து

கொண்டதென்று சொல்லச்சிறந்து ஆழ்ந்து வாழ்ந்திருக்கும் அகழியும், அடியானது பாதலத்திலும் முடியானது மீதலத்திலும் பொருந்தி, அளவிடக்கூடாததாகி, ஒப்பு உவமை இல்லாமலுயர்ந்து, வளர்ந்துவளைந்து, நெடியக் கடல்சூழ்ந்த சக்ரவாளகிரியை இந்த மதிலுக்குப் படியாயமைந்திருக்கின்ற தென்று சொல்லும்படியாய், பற்பல பொறிகளையுங் கொண்டு விளங்கியமதிலும், பகற்காலத்தில் சூரியவெப்பம் பூமியிற்படவொட்டாமல் நிழலைச்செய்து, ஒற்றைச்சக்கரமுடைய சூரியனது தேரை நடாத்தும் அருணனுக்கு சகாயமாகப் படபடாகார சப்தத்தினால் சப்தமாவென்னும் குதிரைகளைத் துருசாயோட்டி, வெற்றிவீரப் பிரதாபத்தைத் திசைகளிடத்திற்காட்டி, வேகங்கொண்ட காற்றின் விசையினால் ஆகாயகங்கையில் நனைந்து அதினுடைய அலையைப்போலசைந்து, மேக மண்டலத்திற் புகுந்து, மின்னலைப்போல் பிர்காசித்து, அழகியமதில் முதலிய நகரங்களெல்லாம் நெருங்கி ஆடிக்கொண்டிருக்குங் கொடியாடைகளும் வகித்து; ஆதிசேடன் முதலாகிய பேர்களுக்கு மோகமாகிய நாகலோகமோ ஐந்தருவளர்ந்து இந்திரற்கமைந்த தெய்வலோகமோ? வளமெலாஞ் சுரந்த அளகாபுரியோ? நித்திய மகிஷியையுடைய சத்தியலோகமோ? இந்த அஸ்தினபுரி யென்றெண்ணும்படியாகிய பட்டணத்தில் மலைகளின் சிகரத்தில் இருந்தெழுகின்ற கரிய மேகங்களைப் போல், மாடமாளிகையில் இருந்தெழுகின்ற அகிற்புகை சந்தனப்புகையின் வாசனைகளும், அரசர்களுடைய தேர்களும்-யானைகளும்-குதிரைகளும் எதிரெதிர் மயங்கிப் பின்னு முன்னும் காலெடுத்துவைப்பதற் கிடமில்லாமல் நெருங்கி, இடியுண்டு, போமின்கள்போமின்களென்னுஞ் சொல்லினுடைய சத்தங்களே மிகுந்து புறம்போக மாட்டாமல் மயங்கிக்கொண்டிருக்கு மணிவீதிகளும், மலைபடு திரவிய மாணிக்கம்-யானை தந்தம்-மிளகு-கோஷ்டம்-அகில்-தக்கோலம்-குங்குமம்-முதலாகியனவும், காடுபடு திரவியமாகிய சௌரிமான்மயிர்-மெழுக்கு-மலைத்தேன்-கூண்டுத்தேன்-அரக்கு-மயிற் பீலி-கஸ்தூரி முதலியனவும், நாடுபடு திரவியமாகிய நாண்யவாரிகள் செந்நெல்-சிறுபயறு-கரும்பு-வாழை - செவ்விளநீர் முதலியனவும், கடல்படு திரவியமாகிய பவளம்-முத்து-சங்கு-உப்பு-ஒக்கோலை முதலாகியனவும் விதவிதமாகக் குவித்து வரிசை வரிசையாக வமைத்திருக்கின்ற கடைவீதிகளும், எங்கும் நிரைநிரையா யமைந்திருக்கின்ற படைவீடுகளும், காட்டிலிருக்கும் பற்பலவித மலரைப்பார்க்கிலும் சிறந்து மிகுந்த கூட்டங்கொண்டிருக்கின்ற சுத்த வீரர்களும், கடற்கரையின் வெள்ளைமணற் பரப்பைப் பார்க்கிலுங் குவிந்து நிறைந்த கிள்ளைக் கொப்பாகிப் பறக்கும் அச்சுத்தவீரருடைய குதிரைப்பந்திகளும், இராக்காலத்திற் றோன்றும் நக்ஷத்திரங்களிலும் அதிகமாகிய அவர்கள் யானையினங்களும், மேகத்தின் றுளியினுமேற்பட்ட அவ்வீரர்களூர்ந்து திரியுந் தேர்களும், குற்றமில்லாத நான்குவேதமு முணர்ந்த பிர்மக்ஞானமுடைய வேதவேதியர்க ளிருக்கும் அக்ராரவீதிகளும், மாசற்றமணிகளாற் செய்த கிரீடம் பொறுத்த மன்னவரிருக்கும் அரண்மனை வீதிகளும், பழுதில்லாத புத்தி யுத்திகளையுடைய மந்திரிமார்களிருக்குஞ் சுந்தர வீதிகளும், நித்தியதவமாகிய சத்தியங்களும் தருமமுஞ் சிறந்த வைசியர் வாழ்வுபெறும் மாணிக்க வீதிகளும், மங்கள சங்க முழங்கக் கலியாணஞ் செய்கின்ற கடிமண வாசல்களும், சிலம்போசை சப்திக்க நடனஞ் செய்கின்ற தேவமாதர்களின் தெருக்களும், வெற்றிமுரசு-வீரமுரசு-தியாகமுரசு-கலியாணமுரசு - முழங்கிக்கொண் டிருக்கும் கெடிஸ்தலாதிபதிகளின் ஆசார வாசல்களும், மத்தளம்-டோல் முதலாகிய வாத்தியங்கள் முழங்கிக்கொண்டிருக்கும் பிர்ம்மால்ய தேவாலய வீதிகளும், தெருவாசலில் நிற்க இடம்பெறாமல் அரசர்களுடைய கிரீடங்கள் ஒன்றோடொன்று ஊடுதாக்கி உருய்ந்து உதிர்ந்த அபரஞ்சிப் பொடிகளோடு இரத்தினராசிகணிறைந்த ஆசாரவாசலின்படிகளமைந்த மகமேருவையொப்போ லிருக்கும் கொலுக்கூடமும், சித்திரமேடை மணிமாளிகை முதலானவைகள் நிறைந்த தெருக்களும், சூரியன்வந்து இளைப்பாறுதலுக்கு ஏற்பட்டதென்று சொல்லும்படியாக உயர்ந்த கோபுரவாயில்களும், சிங்காரத் தோப்புகள்-பளிங்குமேடைகள்-நீராழிமண்டபங்கள்-மணிவேதிகைகள்-பூரண கும்பங்கள்-மேற்கட்டில்கள்-பூப்பந்தல்கள்-மணிப்பந்தல்கள் இவை முதலானவைகளை எப்போதுமாறாத வைபவத்தைப் பெற்ற அஸ்தினபுரத்தின் அலங்காரத்தைக் கண்டு கண்களிக்கப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணசுவாமி முதலிய யாவர்களுந் தெற்கு கோபுரவாசலில் திவ்யமணங் குடிகொண்டு

குளிர்ச்சி பொருந்தியிருக்கும் சண்பகச்சோலை யினிடத்தி லெழுந்தருளி யிருந்தார்கள்.

அந்தச் சோலையிலும், அஸ்தினாபுரத்தின் சாலையிலுங் காலையுமாலையுங் காவலாக யிருந்த தூதுவர், சுவாமி வரவைக்கண்டு வணங்கி, நந்தியா வட்டமாலை யணிந்த துரியோதனன் சபையிற் சென்று சுந்தர மிருந்த சுந்தரா! பராக்; புரந்தரர் போற்று நிரந்தரா! பராக்; மகிதலப்புரக்குந் திரிதராட்டிரன் மனைவியா லுதித்த கண்மணியே பராக்; அகிலமுழுதும் ஆணை செலுத்தி அணிமுடி வணங்கா முடிக்கரசே பராக்; பாதலஞ்சுமக்குஞ் சேடனைத் துஜத்திற் சேர்த்திய நீரமாமணியே பராக்; திங்கள் குலத்திற் செழிவுற்றோங்கிச் செகதலம் புரக்குந் தெய்வமணியே! பராக்; துரியோதனனென்னும் மகா ராஜாதிராஜ சிந்தாமணியே பராக். ஐயா! அன்று அநுமாரைத் தூதாக விடுத்து இலங்காபுரியை எரிமூட்டிவித்தவர், இன்று பஞ்சபாண்டவர்க்கு தூதாக இசைந்து நமது செண்பகச் சோலையில் வந்திறங்கி இருக்கின்றாரென்று சொன்னவுடனே, பகைகொண்ட பாவிகளாகிய பேர்களுக்கு இடதுகண் இடதுதோள் துடிக்கவும், புண்ணியராகிய பெரியோர்களுக்கு வலது கண் வலதுதோள் துடிக்கவுமாக இருந்தது. அந்த வேளையில் துரியோதனன் எழுந்து திரிதராட்டிர மஹாராஜனுடைய அரண்மனைக்குச் சென்று, அவனைக்கண்டு வணங்கி, இராஜ ராஜேஸ்வரனே! பாண்டவர்கள் பக்ஷமாய் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தெற்குக் கோபுர வாசற் செண்பகவனத்தில் வந்து இறங்கி இருப்பதாகத் தூதுவர் சொன்னார்களென்று விண்ணப்பம் பண்ணிக்கொள்ள, அந்த வார்த்தையைக் கேட்ட திரிதராட்டிரன் மனமகிழ்ந்து, வீஷ்மர்-துரோணர்-விதுரன் முதலியபேர்களுடன் ஆலோசித்து துதிப்பதற்குந் தொழுவதற்குந் தரிசிப்பதற்கும் அரிதாகிய வேதநாராயணனென்னுந் தேவதேவன், நாமிருக்கும் பூமியை மிதிக்கப்பெற்றது அற்புதம்! அற்புதம்! என்று கொண்டாடி, சிலர் இஃது நாம் செய்த தவமென்றும், சிலர் நமது நலஞ்செய்த தவமென்றும், சிலர் நமது குலஞ்செய்த தவமென்றும், சிலர் நமது குணஞ்செய்த தவமென்றும் எண்ணினவர்களாய் அவர்களில் திரிதராட்டிரன் அடங்கா மகிழ்ச்சி கொண்டு, அண்டரண்ட பகிரண்டங்களையும் கர்ப்பத்தி லடக்கி யருளிய அரிமுகுந்தன் நம் மிடத்திற்கு வருவாராகில், நமது பெரியோர்கள் சம்பாதித்துவைத்த கேயூரம்-மதாணி-குண்டலம்-கிரீடம் - புஜகீர்த்தி - வாகுமாலை-தும்பிப் பதக்கம்-தோட்டிதழ் பதக்கம்-சகோரப்பதக்கம் - தனிமுத்துமாலை - மோகனஹாரம்-உத்தர சஞ்சம் முதலிய ஆபரணங்களும், குடை-கொடி-சாமரம்-இரத-கஜ-துரக-பதாதிகளும் வெகுமதியாகக் கொடுப்பேன். இதன்றியும் தாமரைக் கண்ணனுடைய மனதில் நினைத்திருக்கின்ற யாவையுங் குறிப்பினால் உணர்ந்து கொடுத்து மனங்களிக்க வைப்பேனென்று, தன்னை மறந்து சந்தோஷங்கொண்டு சொல்லும் வார்த்தையை விதுரமகாராஜன் கேட்டுச் சொல்லுவான்.

அண்ணா! கல் மழையைத் தடுத்துக் கோவினங்களையும் கோபாலரையுங் காத்தருளிய கர்த்தனுக்கு இப்போது சொல்லிய வெகுமதி யெல்லாங் கொடுத்து, பாண்டவர்களுக்கு ஏதாகிலுங் கொடுவென்று கேட்க வந்திருக்கும் அவர் காரியத்தைத் தடுத்துவிட நீர் நினைத்திருக்கின்றீ ரல்லவா? ஐயா! பதின்மூன்று வருடங் காட்டிலும் நாட்டிலும் உழன்று வருந்திவந்த மைந்தர்களை ஆதரித்து, இருக்க இடங்கொடுக்க இளகாத மனத்தினையுடைய நீர், உலகமெல்லாமுண்ட ஒருவனுக்குச் சகல வெகுமதியுங் கொடுக்கிறேனென்று துணிந்து சொல்வது ஆச்சரியந்தான். அண்ணா! (வடித்தகஞ்சி வார்க்காத பெரியப்பன் வஸ்திரத்தை மன்னிக்கொண்டு, மணமிடவந்தா னென்னும்) பழமொழிக்குப் பிரயோசனந் தங்களிடத்திற்கண்டேனென்று சஞ்சலத்துடன் தம்பியாகிய விதுரன் சொல்ல, வீஷ்மர் நகைத்து, விந்தையாகிய மைந்தனே! அஷ்ட லட்சுமியாகிய ஆதிதேவன் உபலாவியத்திலிருந்து அஸ்தினாபுரிக்கு இவ்வளவு அவசரமாக வந்தது, நீர் சிறிது வெகுமதி கொடுப்பீர் அதை என்றைக்குப் பெறுவோமென்று ஓடி வந்ததாய்த் தோணுகிறது. அப்பா! பொன்னையும், பூமியையும், நவரத்தினக் குவியல்களையும், புகழையும், புத்திரமித்திராதிகளையுமுடைய உன்னையும், ஒருதவியுமில்லாத என்னையும் படைத்தருளிய பிரமாவைத் தமது உந்திக் கமலத்தில் புத்திரனாகப் பெற்ற ஒப்பில்லாத ஒருவருக்கு நீ என்ன கொடுக்கப் போகிறாய். அவர் உன்னிடத்தில் கைநீட்டி என்ன வாங்கப் போகிறார். ஏந்தலே! இவைகளெல்லாம் உபயோக மில்லாத

வார்த்தைகள். இந்தமட்டும் இதை நிறுத்தி விட்டு, வந்திருக்குங் கண்ணனுடைய மனதை யறிந்து அவருக்கு மரியாதை செய்து அனுப்பிவைக்கும் விதத்தை யோசிக்கக் கடவை என்று வீஷ்மர் சொல்ல, துரோணச்சாரியர் திரிதராட்டிரனைப் பார்த்து, அரசனே! ஸ்ரீ கிருஷ்ண தேவரே தூதாக வந்திருக்கின்றார் என்றபோது, பாண்டவர்களுடைய நன்னடத்தையும் அவர்களினது மனோதிடத்தையும் யோசிக்க வேண்டிய தல்லாமலும், ஸ்ரீ கிருஷ்ணசுவாமி சொல்லப் போகிற இராஜநீதி முறைமை முதலிய திறமைகளையும் உன்னுடைய தீர்க்க புத்தியினால் நிதானித்து, உன் புத்திரராகிய நூறு பேர்களுக்கும் யுத்தி விளைவித்து, உன் மனதுக் கிசைந்த நாட்டைப் பாண்டவராகிய மைந்தர்களுக்குக் கொடுத்தால், வாசுதேவனுடைய மனமகிழ்ந்து, கிருபை சுரந்து, சகல சம்பத்துடன் நீடூழி வாழும்படியாகிய காலமுங் கொடுப்பார். அவருடைய கடாக்ஷ வீக்ஷணியத்தால் தாக்ஷியில்லாமல் ஆக்ஷியாக அரசாட்சி செய்து, காட்சியாக நீங்களுஞ் சுகப்படுவீர்கள். தேவர்கள் முதலிய யாவரும் சந்தோஷ மடைவார்கள். இதற்கு மிஞ்சிய யுத்தியும் பத்தியும் உறுதியும் வேறொன்றுமில்லை யென்று துரோணச்சாரியர் சொல்ல, பக்கத்திலிருந்து கேட்டிருந்த துரியோதனனுக்கு மிகுந்த கோபம் பிறந்தது, கண்கள் சிவந்து, கலீரென நகைத்து, சபை நிறைந்த காவலரெல்லாங் கலங்கும்படியாகத் தன்னிஷ்ட சிரேஷ்டராகிய சகுனியையுங் கர்னனையும் பார்த்துச் சொல்லுகின்றான்.

துளபமணி மாயனாகிய தூதன் பாண்டவர் பக்ஷத்திலிருந்து என் நகரத்துக்குள்ளே வருவானாகில், ஆ! ஆ! அவனுக்கு நான் செய்யப்போகிற மரியாதைகள் வேணதுண்டு. அதாவது, கோட்டை வாசலிற் புகுந்த வுடனே கிங்கரர்முதலிய மல்லர்களை விடுத்துப் புஜத்தோடு புஜம் நெரியப் பின்கட்டாய் கட்டிக் காராக் கிரகத்திற் சேர்த்து, பிராணன் போக வொட்டாமற் கஞ்சியும் உப்புமாகக் கலக்கி வார்த்து, அவன் காலமுடிந்த பிற்பாடும் அவன் தேகத்தைச் சிறைச்சாலையில் வைப்பேன். அதேதெனனில், துடையையுங் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டி விட்டிருக்குந் துஷ்டர்களைப்போன்ற கலகக்காரரைத் தண்டிக்கச் சொல்லித் தருமநீதியிற் சாற்றியிருப்பதினால் அவனை நான் விடமாட்டேன். விட்டால் குடிகெட்டுப்போம். ஐ! ஐயோ!! காட்டிலே காய் கனி கிழங்குகளைத் தின்றுக்கொண்டிருந்த பாண்டவர்களை, நாட்டிலிழுத்து வந்து அவர்களுக்கு இதவுபதேசம் பண்ணி, நானே தூதுபோய் நாடுவாங்கித் தருகிறேனென்று சொல்லி வந்திருக்கின்றான். அந்தப் பேச்சைப் பாண்டவர்களாகிய பயித்தியக்காரர்கள் நம்பி, இவன் ஓடுவாங்கி வருவதையுணராமல் நாடுவாங்கி வருவானென்றும், ஐந்து வீடுவாங்கி வருவானென்றும், வழிபார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆகையால் இவனை இங்கே தானே மாட்டிவிட்டால், இந்தச்சேதியைப் பாண்டவர்கள் கேட்டுப் பயந்து பறந்தோடிப் போய்க் காடு சேர்வார்கள். அவர்களுக்குப் படைத்துணையாக அடைந்தோரெல்லோரும் நடுநடுங்கி, எனக்குப் பிரிய செனஞ் சொல்லி, என் காலில் விழுந்து, தங்கள் தங்கள் நாடு சென்று சேர்வார்கள். என்றென்றைக்குங் கலக மென்பதில்லை; என்னுடைய நல்லகாலமானது இவனை எங்கேயோ இருந்து இழுத்துக் கொண்டு வந்து விட்டது. இதுவே தகுதியாகிய யோசனை. ஓ மாமா! ஓ அண்ணா! என்று துரியோதனன் சொல்லிய சொல்லானது பெரியோர்கள் செவியிற் புகுதலும், நாராசம் எரிகிறதுபோல் நடுங்கி இரு செவியையுங் கரத்தால் மூடிக்கொண்டு, ஹரி ஹரி!! இதென்ன விபரீதகாலம். கட்டுப்படாத ஒருவனைக் கட்டவும் சிறைப்படாத ஒருவனைச் சிறைப்படுத்தவும் நினைத்திருப்பதினால், நாங்கள் இனி பேசத்தக்க தொன்றுமில்லை. புத்திமானே! உன் விதி எப்படியோ அப்படியே மதியும் அனுசரித்து நடக்கும். அப்பா துரியோதனா! எங்களுக்குக் கொஞ்சநெஞ்சம் இருந்த சந்தேகந்தீரப் பேசிவிட்டாய் என்று சொல்லி, யாவருந் தலைகுனிந்துக் கொண்டார்கள். அந்த வேளையில் திரிதராட்டிரன் தன் பிள்ளையை நோக்கிப் பதை பதைத்துச் சொல்லுகின்றான்.

அடா புத்திரனே! வேத விதிகளையும், தரும சாஸ்திரங்களையும், ராஜமுறைமையும் அழிக்கவோ எனக்கும் பிள்ளையாய் பிறந்தாய். அடடா! ஒருவன் சொல்லிய வார்த்தையைச் சொல்லுதற்காகத் தூதுவந்த பேர்களை துன்பப்படுத்தலாகாது. கொல்லப் போகாதென்று எல்லா நூல்களுலுங் கூறியிருக்க, அவைகளை வாசித்துங் கேள்வியுற்றுந் தேறியிருக்க, நீ

தூது வந்தவர்களைக் கொல்லவும், கொடுமை செய்யவும் நினைப்பையாகில், எதிராளியின் கருத்தை நீ எப்படி அறிந்துக் கொள்வாய். உன்னிடத்தில் எவர்கள் தூதுசொல்ல வருவார்கள். குழந்தாய்! காரியவாதியாகிய நீ தூதுவரத்தக்கவர்களை எதிர்கொண்டழைத்து உபசாரஞ் செய்து நன்னயமாகப் பேசுவையாகில், இருவருக்குங் குறைவில்லாமல் வந்த காரியங்களைப் பேசி இன்பமுறச் செய்வார்கள். ஆகையால், இப்போது தூதுவருகின்றவன் கபடநாடக சூத்திராவதாரி. அவரை நீ எதிர்கொண்டு சென்று வணங்கி, உன் தீவினையைப் போக்கடித்துக் கொள்ளச் சிந்திக்காமல் வாயில் வந்தபடி பிதற்றுகின்றாய். என்னடா பாவி! நான்கு வேதங்களினாலேயும் காணக் கூடாத நாராயணனை மடலுடன் மடல் விரியக்கட்டிச் சிறையிற் போடவும், உலகிலுள்ள உயிர்களுக்கெல்லாம் படியளக்கும் ஒருவனுக்கு உப்புந் தண்ணீரும் வார்த்து உலரவைக்கவும் உன்னாற் கூடுமோ? மதிகேடா! உன் துற்புத்தியினாலே இப்படிக் கெல்லாம் பேசினையல்லாமல், நற்புத்தியினால் உணர்ந்து பேசினவனல்ல. இப்போது அந்த துராங்கார யோசனையை விட்டுப் பெரியோர் சொல்லும் புத்தியைக்கேட்டு நடந்து, நன்மைபெற விரும்பத் தக்கதே யல்லாமல், உனக்கிஷ்டமாகிய துஷ்ட நினைவின்படி நடப்பையாகில், குஷ்டமும் கஷ்டமும் அஷ்ட தரித்திரமும் நேரிட்டு, வருத்தஞ் செய்யப் பட்டும்போய் நஷ்டப் பட்டு, பலவாறு கெட்டலைந்து போவாயடா துஷ்ட மகனே என்று வெறுத்துக்கொண்டு, மந்திரி பிரதானிகளைப் பார்த்து பட்டணமெங்குந் திட்ட வட்டமாய் சிங்காரிக்கச்சொல்லி, கண்ணாடிப்பட முதலிய மேற்கட்டிகளைச் சட்டமாய் அமைத்து, மாணிக்கத்தீபம் பிரகாசிக்கச் செய்து, மகர தோரணம் - வாழை - கமுகு- தெங்கு-தாழைமலர்-தாமரைமலர்-பவளவடம் முத்துவடம்-ரசக்குண்டுகள் தொங்கொளிவட்டம்-நிலையொளி பட்டம்-நிலைக்கண்ணாடிகள்- இவைகளெல்லாங் கட்டி அலங்காரஞ் செய்வித்து, மாவிலை-தருப்பை-தேங்காய்-வாழைப் பழம் - சந்தனம் - புஷ்பம் - தாம்பூலம் - அக்ஷதையுடன் பூரணகும்ப வேதிகைகளமைவித்து, நமது புரத்திலிருக்குஞ் சனங்களெல்லோரும் ஸ்நானஞ்செய்து ஆடையாபரண அலங்காரங்களணிந்து சுசியாகவந்து தொழுமின்களென்று முரசறைவித்து, மத்தளதாள விதத்துடனொத்துத் தத்திமிதாவென நர்த்தனமிட்டுவரும் பரதநாட்டிய மங்கையர்களாட, மிருஞ்சுரதவீணைகளை எங்கெங்கு நிறுத்திப்பாட, வாத்தியமுதலிய ஜெய மங்களபேரி முழக்கிவைத்து, வஸ்துவாகிய ஸ்ரீகிருஷ்ண பகவான் வந்திறங்குவதற்குத் தகுதியாகிய விதியேற்படுத்தி, அவருடன் கூடவந்த யாவர்களுக்குங் குறைவில்லாம விருக்கும்படியாக குபேர சம்பத்தைப்போல சகல சாமான் முதலிய வஸ்துக்களும் அமைவித்து, சுயம்பாகிகளைவைத்து சமைப்பித்து, சந்தன பாளிதம் ஏற்படுத்திவைத்து, ஓ மந்திரி பிரதானிகள் முதலாகிய மன்னர்களே! நீங்கள் பயணப்பட்டு, பிரயாணபேரி முழங்கி எனக் கறிக்கை பண்ணுவீர்களாகில், இரண்டுகண்ணுந் தெரியாத நான் எதிர்சென்று, மேக வண்ணனாகிய கண்ணனை உபசரித்தழைத்துக்கொண்டு வருகிறேனென்று பெரிய அரசன்சொல்லக்கேட்டு, சமஸ்தமானபேருஞ் சம்மதிப்படாமல் தடுத்து, ஓ ராஜராஜேஸ்வரா! பெருமானை வைத்துக்கொண்டு திருநாள் செய்வதுபோல் தேவரீரை தக்கதினிடத்தில் பெருமையாக வைத்து நாங்களெதிர்கொண்டுபோய்க் கண்டு வணங்கியழைத்து வருகிறோமென்று சொல்ல, இந்த வார்த்தைகளையெல்லாங் கேட்டிருந்த துரியோதனன் தந்தையின்பாதத்திற் சாஷ்டாங்கமாகப்பணிந்து இதனைச் சொல்லுகின்றான்.

கேளும் என்னையாவே! தேவரீருடைய சிந்தையின்படிக்கு நானே எதிர்கொண்டு போய் சகல வைபவங்களுடன் ஸ்ரீகிருஷ்ண சுவாமியை அழைத்துவருகிறேன். என்பேரில் கோபம் பண்ணவேண்டாம். எங்கோவே என்று தந்தையை வணங்கி, அமைச்சர் முதலிய அனைவரையும் பார்த்துத் தனது தந்தையிட்ட கட்டளைப்படி விரைவில் பட்டணவலங்காரஞ் செய்யும்படி திட்டஞ்செய்தான். துரியோதனமகாராஜன் அப்படி சொன்னபோதே ஒட்டகத்தின்பேரில் பிரசித்த பேரிகை கட்டி, வீதிவீதியாய்க் கொட்டினார்கள். இப்படி திட்டம்செய்வதற்குமுன்னே தானே கிருஷ்ணனாகிய கர்த்தன் வந்தாரென்று தானந் தருமமுதலிய சம்பிரமங்களுடன் ஆனந்தங்கொண்டு, அலங்காரஞ்செய்து பந்நீர் தெளித்து, சாந்தால் தரை மெழுகி, சந்தனத்தாற் கோலமிட்டு, கதம்பகஸ்தூரி கர்ப்பூர சுன்னங்கலந்திறைத்து, மகாலட்சுமியை அலங்கரித்து வைத்ததுபோல் அஸ்தினாபுரிவீதியை அலங்கரித்து வைத்தார்கள். அதைத் துரியோதன

மகாராஜன் கேட்டு மனமகிழ்ந்து, இரதகஜ துரகபதாதிகளுடன் பற்பல மன்னவர்களும், அரசனது அற்புத பட்டத்துக்குரிய யானைகளும், குதிரைகளும், ரதங்களும் அலங்காரத்துடன் அழகிய தெருக்களில் இருபக்கங்களிலும் நெருங்கி யிருக்க, பேரியாழ் - சகோடயாழ்-செங்கோட்டியாழ் - முகவீணை - சுரமண்டல் முதலிய வாத்தியங்களெல்லாம் வகைவகையாய் முழங்க, பட்டுவான்கள் கட்டியம் பகர்ந்து துதிவழங்க, அரவக்கொடியோனாகிய துரியோதனன் அரவணை துயின்ற அமலனை எதிர்கொண்டு அழைக்க எழுந்துவருங்காலையில், பொய்யுஞ்-சூதும்-பொறாமையுங்-கொடுமையும்-நெய்யும்-பாலும்போல் நிறைந்த நெஞ்சினனாகிய வஞ்சகர் சகுனி மாமன் வயிற்றைப் பிசைந்துக்கொண்டு ஓடிவந்து, வழியில்நேரிடுந் துர்சகுனம்போல் வணங்காமுடி மன்னனை வழிமறித்துத் தடுத்து, என் அருமை மருமகனாகிய அரசர்க்கரசனே! இது என்ன அநியாயம்? இதென்ன ஞாயம்? இதென்ன முறைமை? இதென்ன மரியாதை? இறைவனே! இன்னமுஞ் சின்னஞ் சிறு பிள்ளைத்தனமாகச் செய்கின்றீர். ஓ யோகபோக தேவேந்திரா! மூவுலகமும் மதித்துத் துதிக்க வணங்காமுடி பொறுத்த மன்னர் மண்டலேஸ்வரா! ராஜாதிராஜ ராஜப்பிரபுடிகா! ராஜ உத்தண்ட ராஜமார்த்தாண்ட - இராசராஜ கோபால- ராஜபூபால-ராஜதுர்த்தண்ய-ராஜமூர்த்தண்ய ஜயவிஜய சங்கிராம சார்வபூமா! சந்திரன் முதற்கொண்டு இன்றுன்மகன் யினனென் றறியச் சிங்காதனத்தி லிருந்து செங்கோற்பிடித்து நீதிசெலுத்திய மகுடாபிஷேக துரந்தரா! புரந்தரா! சாம்பிரதாய பூமண்டலாதிபதியாகிய கோமானே! ஒரு குருநில மன்னனாகக் கோக்குலக் கிராமத்தி லிருந்து பட்டாபிஷேகமில்லாத ஒட்டுக்குடித்தனக்காரனாகியும், பஞ்சையாகிய பாண்டவர்கள் கெஞ்சிக்கொண்டு தூதனுப்ப வந்த கொஞ்ச மனிதனாகியு மிராநின்ற கிருஷ்ணனை, தேவரீர் எதிர்கொண்டுபோய் அழைத்துவரக் கூடுமா? சிங்கமானது நரிக்கு எதிர்க்கொண்டு செல்லுமா? உமது சிந்தையுமிப்படி தளருமா? நீங்கள் இந்த காரியத்தைச் சிந்தித்தீர். இது சிறிய காரியத்தை அல்ல, பெரிய அரசர்களுக்கு மரியாதை யல்ல வென்று அன்பினாற் சொல்லி நில்லுமென்று நிறுத்தவே, துரியோதனனுடைய எண்ணத்துக்குச் சரிப்பட்டிருந்த மாமனுடைய வார்த்தையாகிய மணிமந்திர அவுஷதத்தை உட்

கொண்டு சபாமண்டபத்துக்குத் திரும்பி வந்து, தம்பிமார் முதலிய உரியோர்களை நோக்கி, நீங்கள்போய்ச் சக்கரதரனாகிய ஸ்ரீ கிருஷ்ணதேவரை அழைத்து வாருங்களென்றனுப்பிவிட்டு, அவருக்கு விடுதி அரண்மனையும் வேண்டிய வஸ்துக்களுந் திட்டஞ்செய்து வைக்கும்படி உத்தரவு செய்து, யுத்தவலிமைபெற்ற இராஜவர்க்கங்களும், பந்துஜனங்களும் வணங்கிச் சூழ்ந்திருக்க நந்தியாவட்டமாலையணிந்த புஜபலத்தையுடைய துரியோதனன் சிங்காதனத்தி லிருந்தான். ஜெனங்கள் யாவரும் இதென்ன விபரீதகாலமென்று மெய்மறந்து வருந்தினார்கள்.

## விதுரன் கண்ணனுக்கு விருந்திடல்

அந்த வேளையில் வீஷ்மாச்சாரியரும், துரோணாச்சாரியரும், அசுவத்தாமாவும், விதுரமகாராஜனும், கிருபாச்சாரியரும், வேதபண்டிதராகிய பெரியோர்களும், அரசர்களாகிய உரியோர்களும், அறுபது நூறாயிரம் மன்னர் மண்டலீகரும், நால்வகைச் சேனைகளும், பேரி-பாங்கா முதலாகிய பஞ்சவாத்தியத் தொனிகளும், கணிகைமாதர்க ளாட்டமும், குடை-கொடி-ஆலவட்டந்-தாலவட்ட முதலிய கூட்டமும், அவரவர்களின் கண்கள்முதற் கரசரணாதிகள் நெருக்கமும், நீங்காம லோங்கிய அஸ்தினாபுரத்தின் வீதியைவிட்டு, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை இரண்டு யோசனை தூரம் எதிர்கொண்டுவந்து கண்டு, இரு கண்களிக்க இறைஞ்சிப்பணிந்து, இரண்டு பக்கத்திலுமொதுங்கி நெருங்கினார்கள். அப்படி நெருங்கி நின்ற யாவரையும், துளபமாலையணிந்த சுவாமியார் கிருபைப் பார்வையாகப் பார்த்து, அவரவர்களைத் தழுவிச் சந்தோஷமுற்று, தன்னுடன் கூடவந்த சேனைகளும், அஸ்தினாபுரத்தி லிருந்துவந்த சேனைகளும், அரசர் முதலியயாவரும் புடைசூழ்ந்துவரச் சண்பகச்சோலையைவிட்டுப் பாதசாரியாய்ப் புறப்பட்டு, வீஷ்மர்-துரோணர்-விதுரர் முதலிய பெருங் கைலாகுகொடுக்க அஸ்தினாபுரத்தின் அரண்மனைவீதியில் வரும்போது, அவ்வீதி இருபக்கங்களிலுமிருக்கிற வீடுகளை பார்த்து, இது யாருடையவீடு? இது யாருடைய மாளிகை? இது யாருடையமாடம்? இதுயாருடைய அரண்மனை? இதுயாருடைய மந்திரம்? இது யாருடைய சுபக்கிரகம்?என்று கோபாலகிருஷ்ணர் கேட்கும்போது, பக்கங்களி லிருப்பவர்கள் பதறியோடிவந்து பகவானைப் பணிந்து,



விதுரன் கண்ணனுக்கு விருந்திடல்.

இது என்னுடைய வீடு; இது என்னுடைய மாளிகை; இது என்னுடைய அரண்மனை; இது என்னுடைய மந்திரம்; இது என்னுடைய சுபக்கிரகம்; என்று சொல்லிய யாவரையும் பார்த்துப் புன்னகைகொண்டு, அப்படியா வெகு நேர்த்தி! வெகு சந்தோஷம்! என்று வார்த்தையாடிக்கொண்டு விதுரராஜனுடைய மனைக்கு நேராக வரும்போது, இது யாருடைய இருக்கையென்று பகவான்கேட்க, பக்கத்திலிருந்த விதுரன் பாதங்களிற் பணிந்து, ஓ தேவதேவதா சார்வபூமா! இது தேவரீருடைய இருக்கையென்று சொல்லவும், அதைக் கேட்ட கண்ணணானவர் உள்ளமகிழ்ந்து, இவ்வளவு பெரிய நகரத்தில் உனக்குமொரு வீடிருக்கின்றதல்லவா வென்று சந்தோஷித்து, ராஜாதிராஜனாகிய துரியோதனன் ஏற்படுத்திய விடுதிக்குப்போகாமல் வீஷ்மர் துரோணர் முதலியபேருக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, விதுரன் வளவிற் புகுந்தார்.

அந்தக்காலத்தில் விதுரமகாராஜன் பகவானுடைய இரண்டு திருவடிகளையும் தன் முடிமேற் பொத்திக்கொண்டு, 'முன்னமே துயின்றருளி யமுதுபயோததியோ, பன்னகா சயனப்பாயலோ பச்சையாயிலையோ, சொன்ன நான்மறை சுருதியோகருதி நீ எய்தற்கென்ன மாதவஞ்செய்த இச்சிறுகுடிலையா' ஓ சர்வக்ஞ மூர்த்தி! தேவரீர் திருவடி பெயர்த்தருளும்படியாய் இந்தக் குடிசையானது என்ன தவஞ்செய்ததோ? எந்த விரதமிழைத்ததோ? தேவரீர் பூர்வத்தில் திருக்கண்வளர்த்தருளிய பழைய பாற்கடலோ? சிரோரத்னம் பிரகாசிக்கும் ஆயிரம் பணாமகுடப் பாயலாகிய ஆதிசேஷ சயனமோ? ஆலிலையோ? வேதமோ? நான்குவேதத்தின் ஆதியோ? அந்தமோ ஐயனே! இச்சிறுகுடிலுக்கு என்ன நினைத்து எழுந்தருளியதோ? என்று இருகண்களிலும் நீர்சொரிய வணங்கித் துதிக்கும் விதுரனை மார்போடெடுத்தணைத்து, ஓ விதுரராஜனே! உமது வீட்டுக்கு விருந்துண்ண வந்தோமென்று சகல சீவாத்மாவோடுந் தாமொரு சீவாத்மாவாயிருந்து விருந்து செய்தருளுந் திருமால் திருவாய் மலர்ந்தருளக்கேட்டு, மூன்றுவிதமாகிய புவனங்களையெல்லாம் உண்டருளிய முதல்வராகி, மும்மையிலும் எம்மை அடிமையாகவுடைய ஸ்ரீ கிருஷ்ண பகவான் நமது விருந்துக்கு வந்தாரே யென்று ஆச்சரியப்பட்டு தன்னிடத்துள்ளவர்களல்லாமல் அயலூர்களிலுமிருந்து ஆறுநூறாயிரஞ் சமையற்காரரை அழைப்பித்து அவர்களை நோக்கிச் சுவாமியார் முதலிய எல்லாச்சேனைகளுக்கும் அறுசுவை பதார்த்தத்துடன் ஒருநொடிப்போதில் அன்னமாகவேண்டுமென்று ஆக்யாபித்தான். அப்போது மாயவனாகிய மகா விஷ்ணுவானவர், வீரஞான விதுரனுடைய உள்ளன்பு யாவருக்கும் வெளியிடத் தமது சதுர்ப்புஜகோல தரிசனங் கொடுக்க வேண்டுமென்று சந்தோஷங் கொண்டு, சமீபத்திலிருந்த விதுரமகா ராஜனைப் பார்த்து, சமையலாகிற வரைக்கும் நான் பசி தாளமாட்டேன். உமக்குச் செய்திருக்கும் போசனத்தை எனக்குப் போடுமென்று கேட்க, உடனே தனக்கு செய்திருந்த நூக்கு நொய்க்கஞ்சியைக் கொண்டுவந்து வைக்கும்படி பரிசாரகர்கட்குத் திட்டஞ் செய்து, பாதோதகமுடைய பகவானுக்குக் கரத்தில் ஜலத்தைக் கொடுத்தான். அந்த ஜலத்தினால், கரம் - சிரம் - கால் மேல் சுத்தி செய்து, நித்தியவிதி முடித்துக்கொண்டு போசனத்துக்கு வந்த காலையில், பொன் போன்ற வாழை இலையில் அக்கஞ்சியை விடுத்தார்கள். அதைக் கண்ணன் கரத்தால் வாரிப் புசிக்கப் போங்காலையில், விதுரராஜன் வீழ்ந் திறைஞ்சி, சுவாமி! திவ்விய அன்னமுதலாகிய சட்ருசி பதார்த்தங்களும் ஜாக்கிரதையாகிக் கொண்டிருக்க, தேவரீர் இந்த நொய்க் கஞ்சிக்கு எத்தனை நாள் ஏக்கமுற்றிருந்தீரோ? ஓ ஐயனே! என்னை யாவரும் பழிப்பார்களே? இது நன்மையல்லவே. ஓ நாதனே யென்று அஞ்சலியஸ்தனாக விதுரன் உபசாரஞ் சொல்லிக்கொண்டிருக்கும்போது, இலையில் விடுத்த கஞ்சியானது ஒரு கரத்தினால் இலையைத் தூக்கிப் பிடித்தார். பின்பு இன்னொரு பக்கத்திலோடும்போது, மற்றொரு கரத்தால் அந்தப் பக்கத்தையுந் தூக்கிப் பிடித்துக்கொண்டார். பின்னொரு பக்கம் ஓடும்போது, இன்னொருகர மேற்படுத்திக் கொண்டு பிடித்தார். இன்னொரு பக்கம் நழுவும்போது, அந்தப் பக்கத்துக்கும் ஒரு கரம் உண்டாக்கிக்கொண்டு, தலைகுனிந்து வாயினாலுறிஞ்சி, நாவினாற் சுவையறிந்து புசிக்குங் கடவுளானவர் விதுரனைப்பார்த்து, ஓ! ஓ! அரசனே! இதைத்தானோ அல்பமான கஞ்சி என்று இழிவாகச் சொல்லவந்தீர். அப்பனே! இன்றைக்குப் பருகும்படியாக நேரிட்ட இந்தக் கஞ்சி என் பிராணனுக்கு வந்துதே. ஓ

விதுரராஜனே! பூர்வத்தில் இரணியகசிபன்-இராவணன்-கும்பகர்ணன்-தந்தவக்கிரன்-சிசுபாலன் முதலிய பலவான்களை யெல்லாம் முடித்துக் கொன்றபோது என் தலையை வணங்காமல் என்னிரு கரத்தினாலுங் கொன்று போட்டேன். உம்முடைய அன்பினால் வார்த்தறூக்கு நொய்க்கஞ்சியை அடக்கி உட்கொள்ளுவதற்கு, நான்கு கரத்தைக்கொண்டு என் சிரம் வணங்கியும் பிடிக்கப்படவில்லையே; இதைக் குடிக்கப்படவில்லையே; என்று ஸ்ரீ கிருஷ்ணதேவர் பூரித்துப் புகழ்ந்து மகிழ்ந்த காலத்தில், புத்திபுத்தியென்று புளகாங்கிதமுற்றுப் பூதசம்பந்தமாகிய ஜனன மரணவவஸ்தையை விட்டு நீங்கினவனைப்போல் விதுரமகாராஜன் மெய்மறந்து பரவசத்தனானன்.

உடனே போஜனமாச்சுதென்று சமையற்காரர் சொல்லவே, பரிமளசுகந்த மிகுந்த தகுந்த குளிர்ந்த ஜலங்கொண்டு விதுரன் ஸ்நானஞ்செய்விக்க, சுவாமி ஸ்நானஞ்செய்துக் கஸ்தூரி அக்ஷதை யணிந்துக்கொண்டு வழிபடு கடவுளை வணங்கி தம்பியாகிய சாத்தகியுடனிருந்து, அநேகவிதமாகிய கறியமுதுகளையும் அன்னங்களையும் விருப்பத்துடன் புசித்து, சம்பிரமமாக இளைப்பாறி பச்சைக் கர்ப்பூர முதலிய மணமுள்ள சந்தனாதிகள் பூசி, வாசனையுடைய மாலையணிந்து, மாணிக்காதிகளைப் பதித்த ஆபரணந் தரித்து, தாம்பூலமணிந்து, இரத்தின சிங்காதனத்தில் வீற்றிருந்தார் பார்வதி பங்கராகிய பரமேஸ்வர மூர்த்திக்குப் பிச்சையிட்டுப் பிரம கபாலத்தை நிறைத்துப் பசியை நீக்கிய பெரிய பெருமாள். இத்தன்மையாக மார்க்காயாசந்தீர்ந்து மகிட்சிக்கொண் டிருக்க, விதுரனானவன் அவரை சாஷ்டாங்கமாக வணங்கித் திருப்பாற் கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதளித்த நாராயணமூர்த்தியும், நமது வீட்டுக்கு விருந்தாக வந்தாரேயென்று மனமுருகி சுவாமியின் திருவடிகள் திருமுக மண்டலம் திருக்கரங்களென்னுந் செந்தாமரைக் கமலங்களில் தனது கண்களென்னுங் கருவண்டை நாட்டிக் களிப்படைந்து, இப்பிறப்பிற்கும், இனி வருவதான மறுபிறப்பிற்குஞ் சூழற்குரிய துன்பங்களனைத்தையும் போக்கினதல்லாமல், எப்பிறப்பிலும் பெற்றிராத புக்ஷை இப்பிறப்பிற்பெற வழி தேடிக்கொண்டவனாய் அம்மேக வண்ணனை மனதில் நினைத்து, கண்ணீர் பெருக மண்ணில் விழுந்து பணிந்து, திண்ணென வெழுந்து, துள்ளிக் குதித்து, அவரது துணைப்பதத்தைச் சிரத்திற் றரித்துக்கொண்டு, துன்ப நீங்கி, இன்பமோங்கி, தத்துவாமிர்தத்தை அள்ளிச் சாப்பிட்டவர்போல் சுவாமியினுடைய திருமுகத்தைக் கண்களினாற் கவர்ந்து பருகி, இருகண்களும் இமையோடிமை மூடாமலசைவற்றிருந்து, அந்தப்பிர்ம்மானந்தத்தோடு மீண்டுமெழுந்து சென்று, சுவாமியுடன் கூடவந்த வேல்-வில்-வாள் முதலிய ஆயுதங்களையுடைய வீரர்களும், மன்னர்-மண்டலீகர்-மந்திரிமார் முதலிய பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர்-ஆகிய ஐம்பது லக்ஷம் அரசர்களும், மற்றுமுள்ள பேர்களும், சட்சுவையோடுங் கூடிய போஜனாதிகளையும், பழவர்க்கங்களையும் புசிக்கச் செய்தபோது, அவர்கள் தேவர்களுக்குங் கிடைக்காத தேவாமிர்தம் புசித்தவர்களாகத் தெவிட்ட வுண்டு, ஆபரண முதலான சகல அலங்காரமுஞ் செய்துகொண்டு, கிருஷ்ண பகவானைச் சுற்றிலும் நெருங்கி இருந்தார்கள். அந்தச் சமயத்தில், உபய சாமரங்கள் வீச, சந்திரவட்டக் குடை நிழற்ற, வாத்திய முழங்க, மாணிக்கச் சிங்காதனத்தில் ஸ்ரீகிருஷ்ண தேவர் எழுந்தருளி இருந்தார். அக்காலத்தில் மெஞ்ஞானச் சட்டையணிந்த விதுரமகாராஜனுடைய வீட்டில் பரவாசுதேவன் அறுசுவையுண்டியை அன்புடன் புசித்தாரென்று அகமலர்ந்த சூரியனானவன் மேருமலைக் கப்புறத்திலிருக்கும் அமுதத்தைப் புசிக்கப் போனவனைப்போல் மேற்றிசைக்கடலில் மூழ்கினான்.

அப்போது மகாரிஷிகள் முதலிய வேதப் பிராமணர்களெல்லோரும் வேதமந்திர மென்னும் வில்லினிடத்தில் அனுஷ்டிப்பதற்குக் கரத்தில் வாரிய அருக்கிய சலமென்னும் பாணத்தைத் தொடுத்துவிட்டபடியால், சூரியனைச் செல்ல வொட்டாமற் றடுக்கும் அரக்கரழிந்து அவர்களுடைய உதிரம்பெருகி வழிந்ததைப்போற் பிரகாசிக்குஞ் செவ்வானமும், அந்த அரக்கருடைய கால்கரங்கள் துண்டமாய் வீழ்ந்து கிடப்பதையொத்த பவளக்காடுகளும், நீரமகளிருக்குப் பகற்காலத்தில் நிழலைச்செய்ய செம்பட்டுக்குடை வெண்பட்டுக் குடையென விரிந்தும், இராக்காலத்தில் அக்குடைகளைச் சுருக்கி விட்டதைப்போற் குவிந்துமிருக்கின்ற வெண்டாமரை செந்தாமரை மலர்களும், மங்கலபேரி முதலாகிய வாத்தியச் சங்கமும், தங்கம்போன்ற அழகினையுடைய

மங்கையர்களின் மெய்யாகிய மெய்விளக்கும், மாணிக்கத் தீபமும், தடாகங்களி லிருக்கும் தாமரை மலர்கள் குவிந்ததைக்கண்டு அவ்ஸ் தினபுரி யென்னும் அணங்கு அநேகந் தாம ரைக் கண்களைத் திறந்து பார்ப்பதையொத்த தீபப் பிரகாசமுமுடைய அப்பட்டணத்தில், விதுர மகாராசனது அரண்மனையில், ஆதி சேடனுடைய சுரோரத்தினப் பிரகாசம்போ லும், ஆயிரம் பிரதிமெய்கள் ஆயிரந் தீபங் களைத் தாங்கிக்கொண்டிருக்க, இரண்டாயிரஞ் சிங்கஞ் சுமந்த ஆசனத்தி லெழுந்தருளி யிரு ந்த ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் புண்ணிய தேகத் தையுடைய விதுரமகாராஜன் வணங்கிப் போற்றி, ஓ பூரணானந்தப் பெருவாழ்வுடைய புண்டரீகாக்ஷனே! திருப்பாற்கடலையுஞ் சேஷ சயனத்தையும் விட்டுநீங்கி, வசுதேவர் மனை வியராகிய தேவகீதேவியார் கர்ப்பத்தி லுதி த்து, ஆயர்பாடியில் வளர்ந்து, உரலுடன் றவழ்ந்து, மருதமரத்தை இடர்ந்து, காளிங்க நிர்த்தனம் புரிந்து, காலிக்கன்றுகளுடன் திரிந்து, கங்காநதியானது பொருந்தப்பெற்ற திருவடிகள் வருந்தும்படியாய் இவவிடத்துக் குத் தேவரீர் தனித்தெழுந்தருளிய காரணத் தைத் திருவாய் மலர்ந்தருளவேண்டும். ஓ கரு ணையங்கடலாகிய தேவதேவனே என்றுகேட்க, அவனை ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி நோக்கி, பூவித ழிற் பொருந்திய சிவந்ததேவனை அருந்தும் வண்டுகள் இசைகொண்டு பாடும்படியாகிய பூமாலை யணிந்த புயாசல பல பராக்கிரம முடைய மகாமாதுர்யவாசன விதுரனே! பூர் வத்தி லிராஜ சபையி லேற்படுத்திக்கொண்ட தவணை நாளைக் கழிக்கச் சந்தோஷத்துடன் பன்னிரண்டு வருடங் காட்டிலே திரிந்து, ஒரு வருடம் அக்ஞாதவாசஞ்செய்து, இப்போது நாட்டிலே வந்திருக்கின்ற பாண்டவர்களுக் குக் குருநாட்டைக் கேட்கத் தூது வந்தோம் என்று சுவாமி சொல்ல, அந்த மொழியை விதுரராஜன் கேட்டமாத்திரத்தில், அதுவிஷ யத்தில் தனக்கொரு விருப்பும் வெறுப்பும் இல்லாதவனுகச் சொல்லுகின்றான்.

ஓ மையினும் நிறத்த மெய்யனே கேளுப்; வலிய மனத்தினையுடைய துரியோதனன் முன் னோர் வழக்கத்தையும் முறைமைகளையும் அனுசரித்து, ஆதியிற்றான் சொல்லியிருந்த வாக்குந் தப்பாமல் தன் பிராண னுள்ளவரை யில் தருமராசனுக்கு நாடு முதலிய பாகத்தை கொடுக்கப் போகிறதே இல்லை. ஆனால் ஐவ ருக்குரிய பாகத்தை அவ்வரவகேதன னிடத் திற் பெறுவதற்கு ஒரு உபாயமுண்டு. அஃ தென்னவென்றால், எட்டுத் திக்கும் இடிந்து சரிந்து போகும்படியாய்ப் பேரிகை-பாங்கா- முரசு முதலிய வாத்தியங்கள் சத்திக்க, இரு திறத்தவரும் எதிர்த்து யுத்தகளத்திற் புகுந்து அஸ்திர சஸ்திரங்களைச் சொரிந்து வெந்து வெதும்பி விழுந்தழியுங் காலத்தில், அவன் தி திரேகந் தளைபட்டு மனம் நொந்து புத்தி வந்து ஒருவேளை நாடு கொடுப்பானே? அப் போதும் கொடானே? நானறியேன். ஓ நாதனே! தேவரீருக்குத் தெரியாமர்மம் என்ன இருக்கிறது. அதை அடியேன் சொல்லுந் தரமோவென்று விதுரராசன் சொல்லக்கேட்டு மகிழ்ந்து, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி விதுரனைப் பார்த்துச் சொல்லுகின்றார்.

ஓ விதுரராசனே! துரியோதனன் செய்த அநீத அக்கிரமங்களினால் வருந்தி இளைத்து வந்த பாண்டவர்கள், மனத்தில் குற்றங்குறை வைக்காமல் இங்கிதவார்த்தைகளைச் சொல்லித் தூதனுப்பி நாடு கேட்டால், நல்லகாலமென்று சந்தோஷங்கொண்டு நாடு கொடுப்பதே ராஜ தருமம். அதை மறுத்து நடந்தால், நாசகரு மம். ஆதலால், நாளையதினம் துரியோதன னுடைய சபையிற் போயிருந்து, வாளைகள் பாய இளங்கமுகின் பாளைவிரிந்து தேன் பொழிந்து பெருகும் வயல்கள் சூழ்ந்த குரு நாட்டைப் பாண்டவர்களுக்குக் கொடுவென்று கேட்கிறேன். அப்போது கொடாமற்போனு னேயாகில், உடனே அவனைச் சமர்பூமியில் எதிர்த்து அவன் தலை மூளையானது வாய்மூல மாய் வழியும்படி யுத்தஞ்செய்து முடிப்போம். உலோபிகளானபேர் (மயிலே மயிலே ஒரு இறகு கொடுவென்றால் கொடுக்குமா? இருத்தி மிதித்துப் பிடுங்கினு லுண்டு) என்பதுபோல், எத்தனை விதத்தில் இதமாகப் பேசிப் பதமாக வேண்டிக்கொண்டாலும், அவர்கள் சுத்த மூர்க்க சுபாவ குணமுடையோராதலால், ஒரு காசும் அதி லொட்டிய தூசும் கொடுக்கமாட் டார்கள். மாறுமாறென்று தாறுமாறாக அடித் துச் சிதைத்து வதைத்துப் புதைக்குங்காலம் நேரிட்டால், அப்போது கேட்டவைகளை எல் லாந் தடையில்லாமற் கொடுப்பார்கள். இவ் விதமாக இருக்கின்றது உலகத்தினுடைய இயற்கையென்று விதுரராஜனுக்குச் சொல்லி, நல்லது எல்லாம் பொழுது விடிந்தால் பார்த் துக்கொள்ளுவோம். விடியும் நேரமாச்சுது;

விதுரராஜனே! நீர் சயனித்துக்கொள்ளப் போமென்று செலவு கொடுத்தனுப்பிவிட்டுத் தான் மாணிக்க மரகதத்தாற் செய்த சயன வீட்டில் இரத்தினக் கொலுசுகளினு லமைத்த ஊசலில், வாசனையுடைய அன்றலர்ந்த புஷ்பங்களினுல் நிறைந்த அமிசதூளிகா மஞ்சத்தின்பேரில், பொன்போலப் பிரகாசிக்குந் தோள்களும் தாள்களும் பொருந்தத் திருக்கண் வளர்ந்தருளினுர் சக்கரதரனுகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி.

அதுகாலையில் விதுரராஜனுனவன், இராத்திரியெல்லாம் நித்திரை யில்லாமல் கஸ்து சுற்றிக்கொண்டு காவற்காரர்கள் பறைமுழக்கி வரவும், உருவிய கத்திகளுடன் உயிர்ச் சேவகர் காத்திருக்கவும், அடிக்கடி ஜாக்கிரதை செய்துக்கொண் டிருந்தான். அந்தகாரமாகிய இராத்திரியானது ஒரு வேசையை ஒத்திருந்தது. அஃதெப்படியென்றுல், சந்திரனே முகமாகவும், மலர்ந்த செவ்வலரி மலரே வாயாகவும், முல்லை யரும்புகளே பற்களாகவும், சூரியன் மறைந்த பிற்பாடு முகிழ்ந்த தாமரை மொக்குகளே குவிந்த கைகளாகவும், வண்டினங்களின் ஆரவாரமே மொழிகளாகவுங் கொண்டு, துரியோதனன் மனதென்னும் அவ்விருளாகிய வேசையானவள், சர்வ வல்லமையுமுடைய லட்சுமி நாயகன் பாண்டவர் தூதாக வெழுந்தருளி இருக்கிறபடியால், பொழுது விடிவதற்கு முன்னமே இந்தச் சுவாமியாரைத் துரியோதனனுக்கு வசப்படுத்தி விடவேண்டுமென்று வந்து வளைந்ததைப் போலு மிருந்தது. அப்படிக் கிருந்த இராத்திரியைச் சூரியன் பார்த்து, ஓ! ஓ! மோசம் வந்தது. துரியோதனனுடைய மனமென்னும் இருட்டாகிய பெண்ணுனவள் சுவாமியாரை மயக்கி வசப்படுத்திக் கொள்ளுவாளாகில் தருமமுதலிய தவமுங் கெட்டுப் பூமி பாரமும் அதிகப்பட்டுப் போமென்று கருதிக் கடுங்கோபத்துடன் கறுத்த அந்தகாரமாகிய திரையைக் கிழித்துக்கொண்டு, அண்டம் ஒருபக்கத்தில் விண்டதென்று சொல்லவும், ஏழு சமுத்திரமும் வரண்டு அதிலிருக்கும் வடவா முகாக்கினியானது பிரகாசித்ததென்று விள்ளவுமாக முகஞ்சிவந்து, அநேக கிரணங்களென்னுங் கரங்களை நீட்டி அவ்விருளென்னும் பெர்துமகளை வெருட்டத் தான் உதயனும் பெர்துமகளை வெருட்டத் தான் உதயகிரியி னுச்சியினின்று விளங்கினுன். அஃதெப்படிக் கிருந்ததெனில், சுவாமியினுடைய

சக்கராயுதமானது, பண்டவர்களிடத்தில் பகைகொண்டிருக்குஞ் சர்ப்பக்கொடியோனுகிய துரியோதனனிருந்த புராதனமாகிய அஸ்திநுபுரத்திலே, அகிலபுவன சராசரனுகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் தனித்தூது வந்திருப்பது தெரிந்து, மகரமச்சங்கள் முதலிய ஜெந்துக்களையுடைய சமுத்திரத்தைவிட்டுப் புறப்பட்டு கீழ்த்திசையிற் பிரகாசிக்குந் தன்மையைப்போலும் இருந்தது.

கண்ணன் துரியோதனன் சபைக் கெழுந்தருளல்.

அதுகாலத்தில் கங்காபுத்திரராகிய வீஷ்மாச்சாரியரும், துரோணுச்சாரியர் முதலாகிய மகத்வமுடைய கனவான்களும், திடவான்களென்னும் அரசர் முதலாகிய தனவான்களும், தருமநீதியுணர்ந்த மூன்றுலக்ஷத்தறுபத்தோராயிரம் நிருபர்களும், குற்றமற்ற பதினுேரக்குரோணியாகிய சேனைத்தலைவர்களும், கூட்டமாகிய வெள்ளிய சாமரங்கள்-மயிற்குஞ்சம்-ஆலவட்டம் - தாலவட்டம்-கைவாள்-உடைவாள்-கதிர்வேல் - வளைதடி-அஸ்திர சாஸ்திரங்கள்-வஸ்திரங்கள்-காளாஞ்சிகள் முதலிய சின்னங்களைக்கொண்டு நெருங்கி நிற்கும் பணிப்பெண்க ளனேகரும், சகல வேதசாஸ்திர பண்டித சாமார்த்தியமுடைய பிராமணக்கூட்டமும், கலைக்கியானங்களிற் கைபழகிய கருணையோர்களும், துரியோதனனுக்குத் தகுதியாகிய தம்பிமார் தொண்ணூற்றென்பது பேரும் வந்து நிறைந்து வளைந்து சூழ்ந்திருக்கக் கிரணைக் கூட்டங்களையுடைய பொன்னினுற் சுவர் செய்து, நூறுலக்ஷம் மரகதத்தூணிறுத்திக் கோமேதகத்தினுற் போதிகை யமைத்து, பவளத்தினுல் உத்தரம் போட்டு மாணிக்கவச்சிரங்களினுற் பிராவி யமைத்து, வைடூரியத்தாற் பலகைதைத்து, முத்துவர்க்கங்களைப் பரப்பிச் சுதைதீற்றிச் சிகரங்கள் வைத்து, வெற்றிக்கொடிநாட்டி, மேகமண்டலபரியந்தம் அளாவி இருக்கின்ற கொலுமண்டபத்தில் பவளக்கால் நிறுத்தி, ஆணிமுத்துக்களினுற் பந்தலிட்டு, எங்குஞ் சிங்கமுகமாய்த் தங்கத்தினுற் செய்த சிங்காசனத்தில், போக தேவேந்திரனைப்போல் துரியோதனமகாராஜன் கொலுவீற்றிருந்தான்.

அப்போது பட்டவர்த்தனர்களும், மகுடவர்த்தனர்களும், மன்னர் மண்டலீகரும், எண்

கண்ணன் துரியோதனன் சபைக்கெழுந்தருளல்.



விதுரன் வில்லை யொடித்தல்.

டிசைவேந்தரும் தனது பாதங்களில் வணங்
கியகாலையில், வணங்காமுடி பொறுத்த மகா
மண்டலேஸ்பர மன்னர் மன்னனாகிய துரி
யோதனன் அவர்களைப் பொன்னினாற் செய்த
ஆசனங்களி லிருக்கும்படி பூரணப்பார்வை
யாகிய அருட்கண்ணாட்டினான். அக்காலத்
தில், அரசர் முதலிய யாவரும் அவரவர்களுக்
குரிய ஆசனத்திற் பொருந்தி இருந்தார்கள்.
அந்தச்சமயத்தில், அந்தச் சபை நிறைந்த
எல்லாருடைய முகங்களையும் துரியோதனன்
பார்த்து, தன்னுடைய அகங்களிக்க வேர்
த்து, ஓ மீன்போலும் பிரகாசிக்கும் வேலா
யுதங்களை ஏந்திய வேந்தர்களே! நம்முடன்
பகைத்து யுத்தஞ்செய்ய நினைத்துக் கறுவிக்
கனைத்துப் படைகள் சேர்த்துக்கொண்டிருக்
கிற பஞ்சபாண்டவர்களுடைய ஏவலாளாய்த்
தூதுவருகின்ற கன்றுமேய்க்கும் கண்ணனா
வன், இன்று நம்முடைய கொலுக்கூடத்
துக்கு வருகின்றானாம். அப்படியே ஒருவேளை
வருவானாகில், அவனுக்கு நீங்களெதிர்
சென்றுவணங்கி வந்தனை வழிபாடுகள்
செய்து பந்துமித்திரரென்னும் பண்பிற்கல
ந்து உறவுகொண்டாடுவீராகில், உடனே உங்
களுடைய நாடுநகர முதலிய ஊர்களை நெருப்
பிட்டுக் கொளுத்துவதல்லாமலும், உங்களை
யும் பிடித்து விலங்கிட்டுச் சிறையில்வைத்து
வருத்துவேனென்று மிகவுஞ்சீறிக் கூறினான்.
அவனுடைய கோப மொழியைக் கேட்டுக்
கோவேந்தரியாவரும் இதென்ன கொடுமை
யாகிய காலமென்று தலைகுனிந்திருந்தார்கள்.

இத்தன்மையாகிய வார்த்தைகளைச் சொ
ல்லி அரசர்க்கரசனாகிய துரியோதனன் அவை
நிறைந்த அரசர்களுடனிருக்குங் காலையில்,
வெள்ளை மேனியராகிய பலபத்திரருக்குப் பின்
பிறந்த கறுப்பு மேனியையுடைய கண்ணனா
னவர், இரவிற் குவிந்த செந்தாமரை மலர்
பகலில் இரவியைக் கண்டு மலர்ந்ததைப்
போல் நித்திரை நீங்கிப் பிரகாசம் பொருந்திய
கண்கள் மலர்ந்து, உதயாதியி லெழுந்து, பந்
நீர் கலந்த தண்ணீர் ஸ்நானஞ் செய்து நித்
திய கருமவிதிகளை முடித்து, மணங்கொண்ட
மலர்களைக் கொண்டு தேவார்ர்தனைகளை நிறை
வேற்றிச் சூரிய நமஸ்காரஞ் செய்து, அலங்
காரச்சாலையில் வந்து, ஆடையாபரணாதிக
ளோடு ஆரகேயூர மணிமகுட குண்டலாதி
களையுந் தரித்து, நெற்றியிற் கஸ்தூரித் தில
கந் தீட்டிச், சாத்தகி முதலிய சகலமான பேர்
களும் தன்னைச் சூழ்ந்துவரத் தாவி நடக்கும்
பரிபூட்டிய தேரேறிக்கொண்டும், கட்டுப்பாடு
செய்துக்கொண் டிருக்குந் துரியோதனனு
டைய சபைக்கு இசையையுடைய புள்ளாங்
குழலைக்கொண்ட எல்லா வல்லமையுங் கண்ட
ஸ்ரீ கிருஷ்ணதேவர் அடிமேலடி வைத்து
எழுந்தருளிய காலத்தில், வீஷ்மாச்சாரிய
ரும்-துரோணாச்சாரியரும்-அசுவத்தாமாவும்-
நீதியைப் பிரக்யாதியாய்த் தரித்த விதுரராஜ
னும் - மற்ற அரசர்களும் எதிர்கொண்டு
எழுந்துவந்து, சிவந்த திருவடியில் தொழுந்
தன்மையுடன் விழுந்து வணங்கினார்கள்.

அப்போது கர்னமகாராஜன் பாரதவன்
போற் றலையைக் கவிழ்ந்துகொண்டிருந்தான்.
சகுனி துரியோதனனுடைய கட்டளையினால்
உள்ளமழன்று சுவாமியின் பாதங்களைக் கருத்
திற் கருதிக்கொண்டிருந்தான். இவைகளை எல்
லாந் தமதுள்ளத்திற் றெரிந்துகொண்டு வரு
கின்ற ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு எதிரிலிருந்த
வர்கள் பாதபூசை முதலிய துப்பண்ணி, ஆசன
மளிக்க, அந்த ஆசனத்தின்பேரில் துளப
மாலை யணிந்த ஸ்ரீ கிருஷ்ணதேவருஞ் சாத்
தகியும் எழுந்தருளி யிருந்தார்கள். அந்த
வேளையிற் முன்னே வழியிற் கண்டு பேசிப்
பின்னாற் சபைக்கு வருகிறோமென்று சென்ற
நாரதர்-கண்ணுவர் ஜமதக்கினி இந்தமூன்று
ரிஷிகளும் சுவாமியினுடைய திருஷ்டிக்கு
நேராக நின்று, அவருடைய அநுக்கிரகத்தி
னால் இராஜ சபைக்கு வந்தார்கள். அவர்களை
அங்கிருந்துகண்ட வேதபிராமணர்களெழுந்
திருந்து, அர்க்யபாத்திய ஆசமன்ய வஸ்தி
ராபரண சந்தனாக்ஷதையோடு, புஷ்ப தாம்
பூல தூபதீப நைவேத்திய மந்திரங்களினாற்
பூசித்து, வெவ்வேறு ஆசனங்களிற் பொருந்
தச் செய்தார்கள். அவர்கள் மூவரும் அவ்
வாறிருந்த பிற்பாடு, துரியோதனனவன்
கோவர்த்தனகிரியைக் குடையாக வெடுத்துக்
கன்மாரியைத் தடுத்தருளிய காசாம்பூவண்
ணன் எழுந்தருளியிருக்கும் இடத்தை நோக்
காமல், வேறொரு திசையில் முகந்திருப்பிக்
கொண்டு, நேற்றைய பொழுது இந்த மகா
நகரத்தில் வந்திருந்தும் எனக்கெதிரில் வரா
மல், நான் அமைத்துவைத்த விடுதியிலும்
வந்திறங்காமல், என்னை இகழ்ந்த தன்மை
போல இந்த விதுரன் வீட்டிலே போயிறங்
கிய காரணமென்ன; முன்னே இதனைச் சொல்
லிப் பின்னே பேசவேண்டியதைப் பேசலா

மென்று சர்ப்பக்கொடியோன் கேட்க, அந்த வார்த்தைகளைக் கேட்டுப் புன்னகை யுடைய வராய் ஸ்ரீ கிருஷ்ணதேவர் அதற்கெதிருத்த ரஞ் சொல்லுகின்றார்.

ஓ நந்தியாவட்ட மாலையணிந்த நராதி பனே! கேளும் நீர் வேறென்றும் நான் வேறு என்றும் நம்மிருவரி லொருபேதமுமில்லை. இது உமதுவீடு அது அவன்வீடு என்கிற பேதம் எள்ளத்தனையாகிலும் நான் நினைத்தா லல்லவோ சொல்லலாம். அப்படி நானென் றும் பேதம் நினைத்ததே இல்லை. எனது மன மகிழ்ச்சியாய் உமது அரண்மனைக்கு வரும் போது, மின்னலைப்போலப் பிரகாசிக்கும் வில் லையுடைய விதுரராஜன் எதிரில் வந்து வண ங்கி எனக்கு விருந்து சொன்னான். அதைத் தள்ளக் கூடாமையாலும், யோசிக்குமிடத்தில் இன்னமொரு காரியமுண்டு. அதாவது, பஞ்ச வர்கள் சொல்லியனுப்பிய சொல்லைச் சொல்ல வந்த ஒரு தூதனாகிய யான் உம்முடைய வீட் டில் வந்திறங்கி, நீர் உபசரித்திடும்படியாகிய இனிமையுள்ள ஷட்ருசிகூடிய அன்னத்தைப் புசித்து, உம்மோடேதானே எதிருத்தரமாய் விபகாரங்களைப் பேசி வெறுக்க நினைப்பது தருமநீதியல்லவே? ஓ சர்ப்பக் கொடியைத் தரித்த துரியோதனனே! விவேகத்தையுடைய மந்திரிகளாயிருந்து அரசாட்சியை அழித்தா லும், பெரியோர்கள் சொல்லும் புத்தி விசே ஷங்களை மறுத்தாலும், ஒருவர் செய்த உபகா ரத்தை மறந்தாலும், ஒருவருடைய வாழ்மனை யிலுண்டு பின்பு அவருடன் பகைத்து யுத் தஞ் செய்ய நினைத்தாலும், சூரியர் சந்திர ருள்ளவரைக்கும் இவர்கள்தான் கொடிய நரக வட்டத்திற் குமுங்கிக் கொண்டிருப்பவர்கள் என்று குளிர்ச்சி பொருந்திய பொற்றாமரை மலரிற் பிறந்தருளிய மகாலக்ஷிமிக்கு மணவா ளனாகிய மாயோன் தருமங்களை யெடுத்துச் சொல்லவே, நாதனாகிய அக்கிருஷ்ணமூர்த்தி யின் முகத்துக்கு நேராகத் தன் முகத்தைத் திருப்பி, இருநயனங் களிக்க அவர் திருமுக மண்டலத்தை நோக்கி, மிகவுங் குலுங்க நகைத்து, ஐயோ பாவம்! ஐவருக்குத் தூத ராகி வந்த அவசரத்தைச் சொல்லுமென்று ராஜாதிராஜனாகிய கொடியோன் கேட்டான்.

அப்போது வேதங்கள் மணக்குந் தாம ரைமலராகிய திருநாபியையும் கீதங்களுடன் வண்டுகள் பாடுந் துளபமாலையையுமுடைய ஸ்ரீ கிருஷ்ணசுவாமியார் வேணுநாதஞ் செய் யுந் தமது திருவாயினை மலர்ந்தருளி, ஓ திரி தராட்டிர மகாராஜனுடைய செல்வக் குமா ரனே! உமது சகோதரராகிய பாண்டவர்கள் சூதாடியதினாலே ஐஸ்வரிய முதலாகிய அர சாட்சியை இழந்தும், அக்கால் நீர் சொல்லிய வார்த்தைகள் வழுவாமற் காட்டிற் சென்று, யாதொரு ஆதரவற்ற அன்னியர்களென்று சொல்லும் படியாய் வருந்தி நொந்து, வெய் யலும், வெப்பமும் மிகுத்து விளங்கிய கான கத்திற் றிரிந்து, நீர் குறித்தனுப்பிய தவணை நாளைத் தீங்கில்லாமற் கழித்து, தெய்வச் செய லால் யாதொரு குறையுமின்றித் திரும்பிவந்த அவர்களுக்கு, சொற்றவறாத குற்றமற்ற குரு குலத்திற் பிறந்த கோவாகிய நீர், ஆதியிற் சொன்னபடி அவர்களுக்குரிய பூமியை நன் மையாகிய சினேகத்துடன் கொடுக்கவேண்டிய தல்லாமலும், ஒரு குலத்திற் பிறந்த உரிமை யுடையவர்களாதலின், உமக்குள்ள சொந்தம் அவர்களுக்கு முண்டு. அவர்களுக்குள்ள சொந்தம் உமக்குமுண்டு. ஆகையால் ஒருவர்க் கொருவர் மனநோக்காடில்லாமற் சினேகித்து, அவர்களுக்கு உரிமையாயுள்ள நாட்டில் உமக்கிஷ்டமுள்ள சில நாடு கொடுத்து அவர்களுடன் கூடி வாழ்வீரே யானால், நல்ல சத்யகுண நெறியுள்ள சத்பாத்திர னென்று சகல மன்னவரும் உம்மைச் சிநே கித்து, நாள்தோறும் புகழ்ந்து மகிழ்ந்து கொண்டாடி இருப்பார்கள். அப்படிச் செய் யாமல் மறுத்தீரேயானால், பழியும் பாவ மும் ஒழியாமல் வளரும்படியாகப் பலரும் பழிப்பதற் கிடங்கொள்ளு மல்லாமல், தரும மும் - கீர்த்தியும் - சௌரியமும் - சந்திரகுலத் தின்றன்மையும் தழைத்து விளங்கமாட்டாது. அது உமக்கு நன்மையுமல்ல என்று ஸ்ரீ கிருஷ்ணதேவர் சொல்லவே, எதிரிலிருந்த துரியோதன மகாராஜன் படபடத்துக் கடு கடுத்து மிகவுஞ் சீறிச் சொல்லுகின்றான்.

கலகத்திற்கு முனையாகிய கண்ணனே! கேளும். ஆதிநாளையிற் சொக்கட்டானாடித் தங்களுரிமைகளை யெல்லா மிழந்து எங்களைப் புகழ்ந்து மகிழ்ந்து காட்டிற்குப் போய்விட்ட புனிதராகிய ஐவர்களுக்கு, என்னிடத்திற் றோற்ற அந்நாட்டையும், நகரத்தையும் உங் கட்கு வாங்கிக்கொடுத்து ஒருபாட்டை செய்து வைக்கிறேனென்று, சாட்டியில்லா பம்பர மாட்டத் தருந்த நீர் சொல்லிய தந்திர வார்த் தைகளை நம்பி, உபலாவியத்தில் வந்திருக்கும்

அந்த வம்பர்களைப் போலே என்னையும்
லேசாக நினைத்துக்கொண்டு, உபாயப் பேச்சி
னால் ஏமாற்றலாமென்று எண்ணி வந்திருக்
கின்றீர். உமது பேச்சை நம்பும் ஐவர்களைப்
போலே நானும் பயித்தியக்காரனல்ல. உமது
தந்திரம் என்னிடத்திற் சாயாது. ஓ மாயனே!
அவர்கள் இன்னமுங் காடே கதியாகத் திரிந்
துக் காலங் கழிப்பதுவே நற்காரியம். அதை
விட்டு உமது பேச்சை நம்பி பேராசைகொள்
வது துற்காரியம். இதன்றியும் சகல மன்னர்க
ளும் பழிப்பார்களென்று எனக்கொரு பூச்சி
காட்ட வந்தீர். அடடா! இந்த பூச்சிக்கு
நான் பயப்படுவேனாகில், இன்னம் எத்தனை
பூச்சிகள் புறப்படும். ஓ பேய்ச்சி முலையுண்ட
பெரும் பூச்சியே! குள்ளநரி மரட்டாக
மிரட்டவந்த கோபாலா! என்னை நீர் வெறுத்
துக்கொண்டால்தானென்ன? இவ்வுலகிலுள்ள
அரசர்களெல்லாருங் கறுத்துக் கொண்டால்
தானென்ன? பற்பலவாறாக நினைத்தால்தா
னென்ன? எனக்குப் பின்னாற் போய்ச் சிரித்
தால்தானென்ன? சத்தியவசனந் தப்பினான்
என்று சாற்றினால்தானென்ன? அம்மாலை
யணிந்த மார்பினராகிய வஞ்சகநெஞ்சுடைய
பஞ்சபாண்டவர்கள் ஆயுதபாணியராய் என்
னுடன் எதிர்த்து வெவ்விய யுத்தஞ் செய்தா
லென்ன? இன்னும் இப்பேர்ப்பட்ட காரி
யங்களை எவர்கள் செய்தாலும், எவர்கள்
வைதாலும், என்னென்ன உபாயம் பண்ணி
னாலும், உன்னுடைய எண்ணமும் பாண்
டவர்களின் இச்சையும் இன்றுமுதலென்
றென்றைக்கும் இல்லாதழியும்படியாய் எவ்வி
தத்திலேனு முடித்து வெற்றிபெறுவதேயல்
லது இந்தக் குருபூமியிலே அவர்களுக்கு ஒரு
ஈ இருக்கும் அவ்வளவு இடமும் இனி கொ
டுக்கமாட்டேன். இவைகளுக்கெல்லாம் நான்
ஒருக்காலுங் கலங்கமாட்டேன் என்று சப்த
மேகங்களின் முழக்கத்தைப்போல் விரைந்து
கடுங்கோபத்துடன் கண்ணில்லான் பிள்ளையா
கிய துரியோதனன் சொல்ல, அப்போது ஸ்ரீ
கிருஷ்ணபகவான் நகைத்து, தமது கீழ்க்
கண்ணினாற் சபையிலிருக்கப்பட்ட சகலரை
யும் பார்த்து, ஒரு மொழியுஞ் சொல்லாமல்
ஊமைபோலிருக்கும் வீஷ்மர் முதலிய மே
லோர்களையும் நோக்கி, உங்களெல்லோருக்கும்
இந்தத் துரியோதனராஜன் சொல்லிய வார்த்
தை சம்மதந்தானா சொல்லுங்கள் குலமுறை
தலைமுறையறிந்த புத்திமான்களேயென்று
வினாவி, பெரிய அரசனாகிய திரிதராட்டிரனைப்
பார்த்துச் சொல்லுவார்.

ஓ மகாராஜனே! இந்தப் பூமிக்குச் சுதந்
தரமாகிய பெரிய அரசன் நீராகையால்,
உமது பிள்ளையின் வார்த்தையையும் என்
வார்த்தையையும் நன்றாய்க் கேட்டீரே,
இதற்கு மறுமொழி நீர்தான் யோசித்துச்
சொல்லவேண்டும் வேறொருவராற் சொல்லக்
கூடாது. நல்லதென்று சொன்னாலும் அது
நடவாது; இதனால் கீர்த்திவந்தாலும், அப
கீர்த்தி வந்தாலும் உம்மைச் சாருமேயல்லா
மல் மற்றொருவரையுஞ் சாராது. மேலும்
உமது தம்பியாகிய பாண்டுமகாராஜன் இந்த
ஐந்து பிள்ளைகளையுங் குந்திதேவியையுங்
காட்டிலே விட்டு இறந்துபோன க்ஷணம்,
அவர்களையழைப்பித்துத் தனுர்வேத முதலிய
யாவுங் கற்பித்து, இளவரசு பட்டமும் ஆண்
மிக்கையுங் கொடுத்து சம்ரக்ஷணைசெய்து
ரக்ஷித்த பெரிய தந்தையாகிய நீரே, மறுபடி
யுங் காட்டுக்குப் போகும்படி சஞ்சயனிடத்தில்
மனதொப்பிச் சொல்லியனுப்பியது மகா ஆச்
சரியம். ஐயோ! உமது மனது இப்படி கறுக்கு
மென்று எவர்களுக்குந் தெரியாது. இதன்றி
யும் உமது சிரேஷ்டகுமாரனாகிய துரி
யோதனன் பாண்டவர்களைப் படுத்திய பாடு
களையெல்லாம் முற்றும் மறந்து விட்டீராக்கும்.
ஐயோ பாவம்! பெரிய வயதாகையால்,
உமக்கு கியாபகம் வரும்படியாய்ச் சில
சங்கதியைச் சொல்லுகிறேன் கேளும். ஐயா!
நூற்றைந்து பிள்ளைகளுஞ் சிறுபிள்ளை
களாய் மருவி விளையாடிக்கொண்டு வளர்ந்து
வருங்காலத்தில், மித்திரபேத நினைப்பினால்
துரியோதனன் வீமசேனனுக்கு அன்னத்தில்
விஷமிட்டான். பாம்புகளைக்கொண்டு கடிப்பிக்
க்ச்செய்தான். கங்கையில் வசிநாட்டி வைத்
தான். இன்னும் பற்பல தீங்குகளைச் செய்தும்
அவன் மடியாததினால், ஐவரென்னும் செடி
யை அடியோடழித்து விடவேண்டுமென்று
கருதி கண்ணில்லாத உன்னைக்கொண்டு பாண்
டவர் காசிப்பட்டணம் போகும்படிச் செய்து,
அரக்கு மெழுக்கு அழுஞ்சிலினால் அரண்மனை
கட்டிவைத்து, அதில் தாயையும் பிள்ளைகளை
யுங் குடியேற்றி நெருப்பிட நினைத்தான். (நாம்
ஒன்று நினைக்கத் தெய்வந் தானொன்று நினைத்
தது) என்பதைப்போல் அந்தவீடு வெரிந்து
இடிந்து அதிலிருந்த புரோசனுங் கரிந்து
மடிந்துபோக, இவர்கள் தப்பிப் பிழைத்து,

இடும்பாசுரனையும், பகாசுரனையுங் கொன்று
வேத்திரகீயத்தில் பிராமணரூபத்துடனின்று,
பாஞ்சாலதேசஞ் சென்று மச்சேந்திரத்தை
யறுத்து, வேந்தரைவென்று பாஞ்சாலியை
மணம்புரிந்து கொண்டு, உன்னுதவியினால்
இந்திரப்பிரஸ்தத்தி லிருந்து அரசுபுரிந்து,
இராஜசூய யாகமுடித்து உலகிலுற்றோரே
யன்றி மற்றோரும் கீர்த்தி படித்து, வெற்றிக்
கொடிபிடித்து, ஜயபேரி அடித்துப்புகழ வாழ்
ந்துகொண் டிருந்தார்கள்.

அப்படிப்பட்டவர்களை மீண்டும் உமது
மூத்தகுமாரனாகிய இந்த துரியோதனராஜன்
அவர்களை யஸ்தினாபுரத்துக்கு வரவழைத்து,
மாயச் சூதினால் மாநிலத்தைப் பிடுங்கிக்
கொண்டு, திரௌபதா தேவியின் துகிலை யுரி
ந்து, பனிரண்டுவருடம் அவர்களைக் காட்டுக்
கனுப்பிவிட்டுத் தான் பந்துமித்திரர்களுடன்
சீரான குடைகவிக்கப் பாராண்டு வந்தான்.
அந்தமட்டிலும் விட்டுவிடாமல், அவர்களைக்
கொல்லவேண்டுமென்று நினைத்துத் துர்வாச
ருக்கு விருந்திட்டு மகிழ்ச்சிசெய்து, வனத்தி
லிருக்கும் பாண்டவர்களிடத்தில் இந்தப்படி
க்கு விருந்து புசிக்கவேண்டுமென்று வரம்
பெற்றுக்கொண்டு அனுப்பிவைத்தான். காள
மாமுனியைக்கொண்டு மாரணயாகஞ் செய்
வித்து அதிலெழுந்த மகாப்பிரசண்ட பூதத்
தைக்கண்டு ஐவர்களைப்பட்சித்து வாவென்று
அனுப்ப, அந்தபூதம் மீரேதமாகிய பாண்ட
வர்களை பார்த்துவிட்டு திரும்பிவந்து தன்னை
யனுப்பிய தவமுனிவனை வாயிற்போட்டுக்
கொள்ள, அந்த பிரமஹத்திதோஷந் தன்
னைச் சாரும்படி பண்ணிக்கொண்டான். ஆயி
ரம் வார்த்தை என்னத்திற்கு; உலகிலுள்ள
எல்லாவஞ்சனைகளையும் எல்லா துரோகங்களை
யுங்கொண்டு தன்னாலானமட்டும் பாண்டவர்க
ளிறப்பார்களென்று பார்த்துவிட்டான். பாண்
டவர்களெதினாலேயும் இறக்காம லும்முடைய
கருணையினாலும், தெய்வ வல்லமையினாலும்,
அவர்களுடைய சத்தியசவுச ஆசாரங்களினா
லும், யாவர்களும் நன்னெறிக்கீடான நன்மை
யையுடைய விகிதராகையினாலும், இத்தனைப்
பொல்லாங்குக்கும் வித்தியாசமில்லாமல் தப்பி
பிழைத்தார்கள். மேலுமிவர்களுக்கும் உமது
பிள்ளை கூறிவிட்ட தவணைப்பிரகாரம் பன்னி
ரண்டு வருடமுங் காட்டிற்கழித்து, ஒரு வரு
டம் அக்கியாதவாசமுந் தொலைத்து, நாட்டி
லும் வந்து நம்மையடுத்து தூதுவிடுத்து,
ஒருநாடு கேட்டனுப்பினவர்களுக்குப் பாதி
நாடாவது, அந்தப் பாதிக்குப் பாதியாவது,
உங்கள் மனதுக்குச் சம்மதியான மற்ற ஏதா
வது, ஒருவூராவது கொடுத்து, அவர்களை யாத
ரித்து சந்துஷ்டிப்பதினால், உங்களுடைய வம்
சமும் புத்திரமித்திர களத்தியாதியரும் சுகப்
பட்டு வாழ்வீர்கள். அல்லவென்று வலிமை
பேசினால், சத்துருக்களின் ஆயுதக்காயத்தை
ஆபரணமாகவணிந்த மார்பினையுடைய வீம
சேனன், விஜயராஜன் முதலிய பேர்களால்
கண்ணீர் ததும்பிக் கால்சாய்ந்தோடி வந்து
வெதும்பி விரிந்து போவீர்கள். அவர்களுக்
கீடாகியபேர் யாருமில்லை. துரியோதனாதியர்
சொன்னசொற் சோர்ந்தார்களாதலால், ஐவர்
வந்துவிழுந்து அடித்து நாசப்படுத்தி அக
ண்ட சாம்பிராச்சியமெல்லாங் கைக்கொண்
டார்களென்று அவர்களுக்கு பிரதிஷ்டையும்,
உங்களுக்கு அப்பிரதிஷ்டையு முண்டாகும்.
மேலும் நான் அவர்களுக்கும் உங்களுக்கும்,
சமமாகிய பாத்தியஸ்தனாகையாலும், பாண்ட
வர்களின் வீரப்பிரதாப மெய்மை முதலிய
தருமங்களை அறிந்திருக்கின்றவ னாகையா
லும், உங்களை செவ்வைப்படுத்தும் பொருட்டு
இவ்வளவு தூரம்வந்து உங்களுக்கு சொல்ல
வேண்டிய உறுதி மொழிகளையும் சொன்
னோம். அஃதேனெனில், இருதிறத்தவர்களு
டைய காரியங்கள் யாவும் பூர்த்தியாய் உமக்
குத் தெரிந்தும், நடக்கப்போகிற செய்கைக
ளும் எண்ணங்களும் நீர் நன்றாய் உணர்ந்
திருந்தும், எங்கட்கு ஒரு வார்த்தை முன்னா
டிச் சொல்லலாகாதா? ஒருவாறு இருவரையும்
ஒருமிக்க ராஜிபண்ணி வைக்கலாகாதா? ஓ
கிருஷ்ணாவென்று ஒரு காலத்தில் வெறுத்துக்
கொள்வீர்கள். அன்றியுந் தெரிந்துந் தெரி
யாமலிருப்பவர்களுக்கு அந்தச் சங்கதி
தெரிந்த உரியவர்கள் முன்னாடி தெரிவிக்க
வேண்டியது தருமநீதி. அப்படிக்குத் தான
றிந்தமாத்திரம் தெரிவிக்காவிட்டால், அவர்
கள் கோத்திர சத்துருவென்றும், கொடிய
பாவிகளென்றும் தரும சாஸ்திரங்களிற் குறி
த்திருக்கின்றமையால், பாபத்திற்கும் நரகத்
திற்கும் பயந்து நயந்து இவ்வளவு அக்கரை
யாகச் சொன்னோம்.

ஓ சகலமும் நன்குணர்ந்த சந்திரகுலோத்
தாரணனே! இன்னமுங்கேளும் உமது தம்பி
பிள்ளைகள் உன் சொல்லைக் கடக்கவறியார்கள்.
இத்யாதி துன்பத்திலேயும், பெரிய தந்தை

மொழியென்று பேசினுல் சத்திய மொழியாகத் தலைமேற் கொள்ளுகிறுர்கள். உலோகாலோகமெல்லாம் வெற்றிகொண்டு இராஜசூய யாகமுஞ்செய்து, சந்திரகுலந்துக்கும் பெருமையும் புகழும் இந்திரன்போலொத்த உமக்கு அழகும் அருமையும் சம்பாதித்த சுதந்தராளாகிய பிள்ளைகளின்பேரில் சந்தோஷப்படாமல், பெருமையும் புகழையும் போக்கடிக்கும் பிள்ளைகளின்பேரில் இச்சை வைத்து, அவர்களுக்குக் கொச்சைசெய்ய உமது மனம் ஒப்பி இருந்ததல்லவா? இப்போது இந்த இருதிறப் பிள்ளைகளையும் இரண்டு கண்களாகப் பார்த்து இஷ்டமுடன் நடப்பிப்பது திட்டமாகிய உமது கடன். ஓ பட்டத்திறையே! உம்முடைய குலத்திற்கு நஷ்டமில்லாமல் தாயாதி பாகத்தைத் தம்பிபிள்ளைகளுக்குக் கொடுத்து, தமது பாகத்தை நூறு பிள்ளைகளுக்குங் கொடுத்து, இருவகுப்பினரும் சந்துஷ்டியாய்ப் பொருந்தி வாழச் செய்வதைவிட மேலான பொருள் உமக்குவேறென்றுமில்லை. இப்பூமியில் இதைவிட உமக்கு உண்டாவதான புகழுமில்லை. இதைவிடுத்து இந்த மண்ணுசைகொண்டு யுத்தம் பண்ணினுல், யார் சாவார்களோ? யார் பிழைப்பார்களோ? தெரியாது. யார் செத்தாலும் ஆர்பிழைத்தாலும், துக்கமும் சுகமும் பெற்ற தந்தையாகிய உம்மைச் சாருமல்லாமல் மற்றொருவரைச் சாராது. உம்மிடத்தில் உற்றிருக்கும் வீராதிவீரராகிய அரசர்கள் யாவரும் நாளை விளையப்போகிற வினையறியாமல், ஓச்சன் கைவாளுக்குள் அகப்பட்ட ஆட்டுக்குட்டி தன் தலைபோவதை யுணராமல், தழையைக் கண்டு சந்தோஷப்படுந் தன்மையைப் போல் மகிழ்ந்து எமன் வந்தாலும், மற்றெவன் வந்தாலும் போய் விழுந்து பொருதுவென்று ஜயங்கொண்டு வருகிறேமென்று இருந்த இடத்தி லிருந்துகொண்டு வாய்ச்சுளுவாய் வீரமாகப் பேசுவார்கள். அஃதெப்போது தெரியுமென்றால், மூன்றுங்கட்டு அவிழ்க்கும்போது தெரியுமென்பதுபோல், சத்துருவைச் சமீபத்திற்காணும்போது பறந்தும், தங்களைத்தாங்கள் மறந்தும், தொண்டை மண்டைகள் திறந்தும், இறந்துபோங்காலத்தில் உங்களுக்குத் தெரியும். இப்போது எவர்களுக்குந் தெரியாது. அப்பேர்ப்பட்ட வீர பராக்கிரமங்களையுடைய சூரர்கள் பேச்சை நம்பிப் பாண்டவர்களைப் பகைகொண்டு மேதினியையும் செல்வத்தையும் விறுதாவா விழக்கப்போகிறீர்கள். வாய்ப் புஷ்டியின் வார்த்தை கைப்புஷ்டிக்கு நிற்குமோ?) ஐயா! நான் சொல்லும் மொழி நாராசம்போலிருந்தாலும், இனிக் கொஞ்சநாளையில் பஞ்சபாண்டவர்களின் மிஞ்சிய சக்தியைத் தஞ்சந் தஞ்சமென்று நீங்களே அஞ்சி அறியப்போகிறீர்கள்.

ஓ மஞ்சினைப் பொருவு மன்னனே! உபலாவியத்தைவிட்டுப் புறப்பட்டு அஸ்தினுபுரத்தை நோக்கி, உம்மிடத்துக்கு நான் தூது வரும்போது பாண்டவர்கள் பணிந்து சொல்லிய பட்சத்தைக் கேளும். ஐயா! எங்கள் பாட்டனுர் வீஷ்மாச்சாரியருக்கும், தனுர்வேத ஆசாரியர்களுக்கும், நேசமுள்ள பெரிய தந்தைக்கும், விதுரர் முதலிய பெரியோர்களுக்கும், சாஷ்டாங்க நமஸ்காரம் சொல்லி, சகோதரர் முதலிய உரியோர்களுக்கும், தகுந்த வந்தனை வழிபாடுகளைச் சாற்றி, மிகுந்த வருத்தமடைந்த எங்களுக்கு ஆதியில் பிரித்துக்கொடுத்த அரசாட்சியைக் கொடுத்தாலுஞ்சரி, அல்லது அவர்களுக்குச் சம்மதமாகிய ஓர் நாடு கொடுத்தாலுஞ்சரி, அவர்கள் யாதுகொடுக்கச் சம்மதிக்கிறுர்களோ அதனை யவர்கள் மனது ஒப்பிக்கொடுக்கப் பெற்றுக்கொண்டு வாரும். எப்போதும் நாங்கள் எங்கள் தந்தையினுடைய பட்சமான வார்த்தையைக் கடந்து நடவோம். ஒருவேளை இதுதான் சமயமென்றுகாட்டுக்குப்போகச்சொன்னுல் அதுமாத்திரம் ஒப்பமாட்டோம். ஆனுல், எதுவுங் கொடுப்பதில்லை யுத்தத்திற்கு வருகிறேமென்று இசைவார்களாகில், ஆயிரத்தெட்டண்டமும் ஆளும்படியாகிய சந்தோஷம் எங்களுக்குண்டாகும். ஆனதால், உடனே அந்த யுத்தவார்த்தைகளை ஸ்திரப்படுத்திக்கொண்டு வீரகண்டா மணிகளைத் தரித்திருக்கும் வேந்தர்கள் முன்னிலும், சாந்தர்களாகிய மேலோர்கள் முன்னிலும் திரிதராட்டிர மகாராஜனுக்குத் தெரிவித்து, அவர் சொல்லும் வாக்கியங்களையும் கேட்டுக்கொண்டு, சகலருமறிய சாட்சிமுன்னிலையில் துரியோதனனுதியரிடத்தில் உறுதிபெற்றுக் கொண்டு, காலதாமச மில்லாமல் கடுகெனவாருங் கண்ணனே என்று விடைகொடுத்தனுப்பவந்த நான், என்னுள்ளே யிருந்த யாவற்றையும் எடுத்துச் சொன்னேன். இனிமேல் இதுகளை யெல்லாம் யோசித்து, மேல் நடக்கவேண்டிய காரியங்களையும் நிதானித்து, தாயாதிகளுடைய பாகங்கொடுப்பதும் கொடுக்கக் கூடாதென்று மறுப்பதும், சண்டைக்கு

வருகிறதும் அந்தச் சண்டை இன்ன தினத்திற் றொடங்குவதுந் தெரியப்படுத்துவீராகில், (பாப்பாத்தியம்மா மாடுவந்தது பார்த்துக் கொள்) என்னும் பழமொழிபோலே சீக்கிரஞ் சென்று, நான் தூதுபோய் வந்தசெய்தி இதுவென்று பாண்டவர்களுக்குத் தெரியச்செய்து விடுவேன். வீணாக வாழ்நாளைப் போக்கடித்துக்கொண் டிருப்பதில் லாபமென்ன சொல்லுங்களென்று சுவாமியார் கேட்க, இந்த வார்த்தைகளை யெல்லாங் கேட்டிருந்த திரிதராட்டிர மகாராஜன் பெருமூச்சுவிட்டுப் பிரலாபித்துத் தாமரை நாபியையுடைய சர்வலோக சரண்யனை நோக்கிச் சொல்லுவான்.

என்னருமை மருமகனே! நீ உரைத்த மொழிக ளெல்லாம் நிசமே நிசமே. நான் என்னசெய்வேன். எறிவார் கையிற் கொடுத்த கல்லைப்போல் என்னரசாட்சியைப் பகவானிடத்திற் கொடுத்துவிட்டு, நான் பரதவித்துப் பல்லைக் காட்டிக்கொண் டிருக்கிறேன். என் வசத்தில் நாடுநகர மிருக்குமாகில், என் தம்பி பிள்ளைகளுக்குக் கொஞ்சமேனும் வஞ்சனை செய்வேனோ! ஓ அஞ்சனவண்ணா! நீ நன்றாய் யோசிக்கக்கடவை. காசில்லாத வெறுங்கையை யுடையவன் முழம்போடுவதுபோல், எனக்கு ஐவருடன் விசுவாச நேசமா யிருக்கவேண்டுமென்று ஆசையிருக்கிறது. அப்படிக்கிருந்தாலும் என் வார்த்தையைப் பிள்ளைகள் எடுத்தெறிந்து விடுகிறார்களே; ஓ கண்ணனே! இந்திரனுலகுக் கொப்பாகிய இந்தச் சந்திரவம்சம் தழைக்கும்படியாக யோசித்து, நீயே சந்தி செய்து வைக்கவேண்டியது. ஓ தாமரைக் கண்ணா! நீ தயைசெய்து எனக்குச் சொன்ன சங்கதிகள் யாவற்றையுந் துரியோதனனுக்குத் தெரிவித்தால் உனது வார்த்தையை ஒருக்காலுந் தள்ளான். உன்னிடத்தில் மிகுந்த அன்புள்ளான். அவனுக்கு நீ சொல்லவும்-தண்டிக்கவும்-கண்டிக்கவும்-திட்டவும்-வெட்டவும்-பொருத்திவைக்கவும்-திருத்தி வைக்கவும் சகல சுதந்தரமும் உனக்குண்டு. நீயே இவ் விடத்துக்கு வந்தமட்டுக்கும் என் துன்பத்தை நீக்கி என்னைக் கடைத்தேறச் செய் கண்ணனே என்று திரிதராட்டிரன் சொல்லக்கேட்டு, தேவாதிதேவனாகிய சக்கராதரன் துரியோதனனைப் பார்த்து நீதிவசனங்கள் சொல்லத் தொடங்கினார்.

ஓ பேரும் பிரக்கியாதியுமுடைய பூமண்டலாதிபதியே! உத்தமராகிய பெரியோர் முதல் உன் தந்தையும் பேசிய வாக்கியங்களை யெல்லாம் கேட்டீரல்லவா? இப்போது நான் சொல்லுவதையுங் கேளும். பிரதாபசாலியாகிய விஜயன் கயிலாசபதியாகிய பரமசிவத்தைக் குறித்துத் தவஞ்செய்து பாசுபதாஸ்திர முதலிய வரங்களையும் பெற்று, தேவேந்திரன் எதிர் கொண் டழைக்கத் தெய்வலோகத்திற்குப் போய் இந்திராணி உபசரிக்கத் தெவிட்டா வமிர்தம் புசித்துக் காலகேயர் முதலிய வரக்கரைப் பாசுபதாஸ்திரத்தாற் காய்ந்து, இந்திரலோகத்திற் கிரீடம்பெற்றுச் செயகீர்த்தி கொண்ட அக்கிரீடியினுடைய கொடிவீர பராக்கிரமங்களையும், வீமசேனனுடைய திடகாத்திர பராக்கிரமத்தையும் மற்றவர்களின் மனோ திடத்தையும் அறிந்திருக்கின்றீரல்லவா? அப்பேர்ப்பட்ட சாமர்த்தியவான்கள் இப்பேர்ப்பட்ட குலத்திற் பிறந்து, உமக்குச் சகோதரர்களுமாகி, அளவற்ற நாள் காட்டிலிருந்து கண்கலக்கப்படவும், நீர் நாட்டிலிருந்து சவுக்கிய நலத்தைப் பெறவும் இருப்பது ஞாயமன்று. பார்ப்பவர் கேட்பவர்களுக்கும் அழகன்று. மேலும் உங்களிருதிறவர்களில் நிறைவுக்குறைவு நேரிட்டால் ஒருவர்க்கொருவர் சகித்துக்கொண்டு தருமவிரோத மில்லாமற் பெரியோர்கள் சொல்லும் வாக்கியங்களைச் சிரமேற்கொண்டு, பழுது வராமல் இருவரும் ஒருமைப்பட்டு வாழ்வீர்களாகில், உமது சகோதரர்கள் முதலிய சுற்றத்தார்களும், புத்திர மித்திரர் முதலாகிய வெகு ஜனங்களும் சுகமாக விருந்து பிழைக்கலாம். பரராஜரும் பயந்து மதிப்பினை யுடையவர்களாய் புகழ்ந்து வாழ்வார்கள். இம்மைப் பயன் மறுமைப் பயன் இரண்டுக்கும் லாபமாயிருக்கும் சூரியர் சந்திரருள்ளவரைக்கும் இகட்சியில்லாமற் புகட்சியுண்டாமென்று ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சொல்ல, அதைக் கேட்டிருந்த திரிதராட்டிரன் சிந்தை களித்து, மைந்தனைப் பார்த்துச் சொல்லுகின்றான்.

அப்பா குழந்தாய்! நந்தநந்தன னுரைத்த இந்த வார்த்தை உன்னை விந்தையாகச் சுகப்படுத்தும். அதற்காகவே இந்த அஸ்தினாபுரத்தில் அரசர் சபைக்கு வந்தது. அப்படி வந்தபோதிலும், தான் வந்த காரியத்தை ஆம் அல்லவென்று பார்த்துக்கொண்டு போகாமல், உன்னுடைய கோபதாபத்திற்கும் உடன்பட்டு இவ்வளவு புத்திமதிகளை இவரைப்போல் யார் சொல்லப்போகிறார்கள். ஆகையால், பிள்ளாய்!

இவருடைய மொழியே வேதம். இவரே தருமஸ்வரூபி. இவரால் உன் குலமும் வாழ்வுந் தழைக்கும். குறைவில்லாப் பாக்கியமுஞ் செழிக்கும். இந்த கோபால கிருஷ்ணருடைய இஷ்டப்படிக்கு உனக்குத்தோன்றிய நாட்டை ஐவர்களுக்குக் கொடுத்து, அவர்களும் நீங்களும் தாழ்வில்லாமல் வாழ்வதே வாழ்வு. அந்தப்படிச் செய்யாவிட்டால், இனி வருவதெல்லாந் தாழ்வு. மேலும், தருமராஜன் உன்னிடத்தில் வைத்திருக்கும் பிரீதி வார்ச்சல்யங்களைப்போல் என்னிடத்தி லில்லையே. அடா சுதனே! அப்பேர்ப்பட்ட அண்ணனை இழந்து அன்னியர்களைப் புகழ்ந்து ஆபத்தாளாய் எண்ணிக் கலந்துகொண்டிருப்பது காரியமல்லவே. (தன்னைப் பெற்றதாய் தவிட்டுக்கலையப் பொன்னைச் சிலவழித்துப் பூரிகொடுத்தான் பிள்ளை) என்பதுபோல், பெருமை பெறும்படி பிறரைத் தழுவி அவர்களுக்கு உபசரிப்பதினால் ஆவதென்ன? அப்பனே! இப்பொழுது இக்கிருஷ்ணதேவரும், பெரியவர்களும், தந்தையாகிய நானும் சொல்லும் வார்த்தைகளைச் சோர்வுபடவொட்டாமல், பாண்டவர்களுடன் பக்ஷமாய்க் கலந்து வாழ்வையாகில், எங்களுக்கெல்லாம் பெருமையுஞ் சிறப்புமுண்டாம். நமது சொல்லைக் கடவாமல் நடந்தான் துரியோதனனென்று நாங்களெல்லோரும் புகழ்ந்து மகிழ்ந்துப் பூரிப்பை யடைவோம். இதன்றியும் இரண்டு கண்ணுந் தெரியாத என்னை இவ்வுலகுக்கு இறையாக்கி வைத்து, என் சொல்வழி நின்று என்னேவலைச்செய்து, எதிர்த்த சத்துருக்களைக் கொய்து, சகல பெருமையும் நானடையச் செய்து, ஊழியனைப்போலடங்கி நடந்து வந்தான் என் தம்பியாகிய பாண்டுராஜன். அவனால் நிலைத்தராச்சியமிது. ஆதலால், எல்லாம் அவனுடைய செல்வம்; எல்லாம் அவனுடைய அரசாட்சி; எல்லாம் அவனுடையபிள்ளைகள்; எனக்கென்னசொந்தமுண்டு மகனே! அந்தப் பாக்கியவானுடைய பிள்ளைகளை பரதேசிகளைப்போல்வேறுபடுத்தி, பதிநிதி முதலிய பாக்கியங்கொடுக்காமற் பகைமேற் கொண்டு பேசினால், ஐஐயோ பாவம் விளைந்துய்யுமே;மன்னவர் நீதியுமாமே;நமது குலமுறை குன்றுமே; நானில மெல்லாம் நகைக்குமே;கலகமுமிருக்குமே;அரசரிற் பகை வீங்குமே; அதனால் நமது உரிமையும் பெருமையும் நீங்குமே; வறுமையுஞ் சிறுமையுமோங்குமே; வையகமுழுமையு மேங்குமே;மதலாய்! மேலும் இந்தக் கிருஷ்ணதேவர் நமது அருச்சுனனுக்கு இஷ்டரென்றும், உனக்கு அனிஷ்டரென்றும் நீ எண்ணி யிருக்கிறாயல்லவா? அப்பா! இவர் உங்களிரு திறவருக்கும் யிரண்டு நேத்திரங்களே யன்றி வேறல்ல. நமது உரிய சம்பந்தத்திற்கும் புறம்பல்ல. இவருடைய உறுதியும் உதவியுமே உங்களுக்குத் துணையல்லது வேறு துணையில்லையே. இந்தப் பகவானுடைய வசத்தின் வண்ணம் ஐவருக்குரிய அரசைக் கொடுத்து, சண்டை முதலிய சப்தங்களையும் விடுத்து, சமத்துவமாகத் திரைத்தனஞ் செய்து, ஜகமெல்லாம் வாழ்த்த சுகம்பெறக் கடவீர்களென்று திரிதராட்டிரபூபதி துரியோதனனுக்குச் சொல்ல, இவைகளைக் கேட்டிருந்த வீஷ்மாச்சாரியர் பட்சபாதம் இல்லாமல் நடுவு நிலைமையாகச் சொல்லி வந்த திரிதராட்டிரனைப் புகழ்ந்து, உள்ளமகிழ்ந்து, பேரனாகிய துரியோதனனென்னுங் குபேரனைத் தமது திருமருட்கண்ணால் நோக்கி, உன்னுடைய மனக்களங்க நீங்கும்படியாக நானுரைக்கும் வசனத்தையும் உன்னுடைய திடசித்தத்தோடு கேட்கக் கடவையென்று சொல்லுவதாயினர்.

அடா குழந்தாய்! பரதகுலத்திற் பிறந்த ராஜாதி ராஜனாகிய நீ, பெரியோர் முதலிய பந்து மித்திரர்கள் சொல்லும் வார்த்தைகளை தள்ளலாகாது. பாபத்தை மூட்டை கட்டலாகாது. பிராணனை அலட்சியமாக எண்ணி யுத்தஞ்செய்ய நினைப்பது க்ஷத்திரிய தருமமானபோதிலும், சத்துருக்கள்பேரி லல்லாமல், சுற்றத்தார்பேரில் விரோதம் நினைக்கக்கூடாது. தன்னுயிரைப்போலே மன்னுயிரைக் காத்துத் தருமத்தை நிலைநிறுத்தவேண்டியது. பெருமையும் புகழும் பெறவேண்டிய பதார்த்தத்தை யல்லாமற் சிறுமையும், இழிவையுந் தரத்தக்க பதார்த்தத்தைச் சேர்க்கலாகாது. தாழ்ந்த பேர்களுடன் சிநேகமாகாது. தையலார் மோகந் தாங்கலாகாது. நல்லவர்கள் நடுங்கச்செய்ய லாகாது. நாவினாற் பதறிப் பேசலாகாது. இரக்கம்-தயை-சாந்தம்-பொறுமை இவைக ளிருக்கவேண்டியது. இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் எண்ணி நடக்கவேண்டியது. இத் தன்மையாகிய பற்பல நீதிகளும் தருமங்களும் உன்னிடத்திற் குடிகொண் டிருக்கவேண்டும். ஐயனே! நமது குலபுத்திரராகிய பாண்டவர்கள் அன்னியரல்லவே. அவர்களுக்கு உன் இஷ்டத்திற் றோன்றிய ராச்சியங் கொடுத்துக்

கீர்த்தியையுங் கௌரவத்தையும் பெறவேண்
டியது. இப்போது அப்பாண்டவருக்கு நாட்
டைக் கொடுத்தாற் பயந்து கொடுத்தான் துரி
யோதன னென்பதாய், உலகத்தார் பழிப்பார்க
ளென்று நீ நினைக்கப் போகிறாய். அந்த அவ
மானம் உனக்குவேண்டாம். அதேனென்
றால், அந்நியரிடத்தில் அபகரித்துக்கொண்ட
அரசாட்சியை மறுபடியுங் கொடுக்க நினைப்
பையாகில், மன்னவரெல்லாரும் உன்னைச்
சின்னத்தனமாகச் சொல்லுவார்கள். அது
மூலத்தி லுனக்குக் குறைவுண்டாகும். இப்
போது நாங்கள் சொல்லுவதினால் உனக்கு
யாதொரு தாட்சியுமில்லை. மாட்சிமையுடைய
மைந்தனே! அண்ணன்-தம்பி-தாயாதிகள் ஒரு
வருக்கொருவர் ஏதோ கொஞ்சம் முகத் திருப்
பாயிருந்து (நீரடித்து நீர் விலகுமா?) என்
பதுபோல் மறுபடியுங் கூடிக் கொண்டார்கள்
புத்திமான்களென்று சகலருஞ் சந்தோஷப்
படுவார்கள். ஓ மதலாய்! ஐவராகிய சகோதரர்
களுடைய அரசைச் சூதாடி, அணியாயமாய்ப்
பறித்துகொண்டான் துஷ்டனாகிய துரியோ
தனனென்று நிஷ்டூரவசனங்களினாற் பலரும்
தூற்றுவதைப் பார்க்கிலும், நாங்கள் சொல்
லும் நன்னெறியின்படி நீ நடப்பது குறை
வோ? நிறைவாகிய குறைவற்ற கோவே! இந்
தப்படி நீ நடவாவிட்டால் இந்தப் பாருள்ள
வரையிலும், கடல்நீருள்ளவரையிலும், கருங்
காருள்ளவரையிலும், மகம்மேருள்ளவரையி
லும் பழிச்சொல்லும் பாவமும் கிளைகிளையாய்
விளையுமே யல்லது, மற்றொரு லாபமுமில்
லையே. அரவக்கொடியோனே! இந்தக்கிருஷ்
ணதேவர் நமது பட்டணத்துக்கு வரவும்,
இராஜசபையேறி யுன்னிடத்திலிருந்து பேச
வும், நாமெல்லோரும் எத்தனைகாலம் தபசு
செய்தாகிலுங் கிட்டாதே. அப்பேர்ப்பட்ட
வர் நம்மிடத்திற் கலந்து, யாவருடைய வச
னத்தினாலேயோ வந்து உனக்கு மிகுந்த
தருமநீதிகளைச் சொன்னார். அவருடைய வாக்
கியத்தை வேதமந்திரமாககொண்டு மேன்மை
யுறக்கடவை: இது கிடைத்தற் கருமையாகிய
பொருள். இந்த மகானுபாவரை லேசாக
நினைக்கவேண்டாம். இவரே புராண புரு
ஷர்; இவரே நம்மிடவர்களில் மகா புத்தியும்
யுத்தியும் ராஜதந்திர வெற்றியு முடைய உத்
தமராகையால், இவருடைய வாக்கியத்தைச்
சிரமேற்கொண்டு நடப்பையாகில், ஊழிமலை
யுங் காலம் வரைக்கும் உன் கீர்த்தி தொலை
யாது. இந்தப் படியின்மீது தீர்க்காயுசுடன்
கெடியுடைய அரவக்கொடி யசைந்தாட,
வணங்காமுடி பொறுத்த மன்னனாகவே நெ
டுங்காலம் வாழ்ந்திருப்பாய். அப்பா பார்த்
தீபனே! இனிமேலும் இந்தப் பகவானுடைய
பக்குவமொழிகளைக் கேளென்று காங்கேயன்
சொல்லப் பக்கத்திலிருந்த துரோணாச்சாரி
யர் வணங்காமுடி மன்னனை நோக்கிச்
சொல்லுகிறார்.

ஓ மன்னவனே! பாண்டவர் தூதனாக
வந்து இவ்விடத்திற்கூடிப் பேசுகின்ற இவ
ரை யாரென்றெண்ணியிருக்கிறாய்; இவர்தான்
பரமபதநாதன்! இவர்தான் சங்கு சக்ர கதா
கட்க கோதண்டதாரி! இவர்தான் கோவர்த்
தன கிரியைக் குடையாகத் தூக்கி ஆயர்களு
டைய ஆபத்தைக்காத்த அரிபரந்தாமன். இப்
படிப்பட்டவர் உங்கள் குலமாகிய திங்கள்
குலஞ்செய்த தவத்தால் அல்லவா இங்கு வந்
து யாங்களெல்லாந் தரிசிக்க உனது சபைக்கு
எழுந்தருளினார். மேலும், இந்தக் குலத்தின்
முதியோரெல்லாம் ஜன்மாந்திரத்திற் செய்த
தபோ பலத்தினால், உன்னுடைய கோப
மொழிகளை எல்லாங் கேட்டுச் சகித்துக் கொ
ண்டு குணமாகிய தருமமுறைகளையுங் கூறினார்.
உன்னொருவனால் உலகம் சுகப்படவும், நாங்
கள் கண்களித்துகாணவும் இவ்விடத்திற் றிரு
வடி பெயர்த்தருளினாரல்லது பாண்டவர்க
ளுக்கு நாடுபெறவேண்டி முக்கியமாய் வந்தவ
ரல்லர் இதை நீர் நன்றாக யோசிக்கத் தக்கது.
ஆதியிற் காண்டவப் பிரஸ்த மென்னுங்
காட்டை ஒரு நொடிப்போதில் இந்திரப் பிர
ஸ்தமாக ஏற்படுத்தி எல்லாப் பாக்கியங்களும்
பாண்டவர்களுக் கீய்ந்த இறைவன், அகண்ட
சாம்பிராச்சியமும் இப்போது அவர்கட்கு
அளிக்க வேண்டுமென்று நினைத்தால் அதற்கு
யாதொரு அட்டியுமுண்டோ? அப்பனே! அப்
பனே! அப்படி நினைத்து வந்தவரல்ல, நீங்க
ளொரு குலத்திற் பிறந்தவர்கள். ஆகையால்,
உரிமையாக விருப்பதழகென்று உரைக்கவும்,
நமது புத்ரமித்ர களத்திராதிகள் முதலிய
யாவுஞ் சுகப்படவும் எண்ணி எழுந்தருளிய
தேயன்றி வேறல்ல. இவைகளையெல்லாம் உன்
சிந்தை யுட்கொண்டு, சொந்தமாக வந்த பக
வான் சொல்லிய வார்த்தையின்படிக்கு உன்
தந்தை உரைத்த தருமத்தின்படிக்கும் காடு
திரிந்து வந்த பாண்டவராகிய கனவான்க
ளுக்கு நாடு கொடுத்து, நாரணன் முதலாகிய
நால்வரும் புகழவிருக்குமவ் வைவர்களில் தரு

மராசனும் வீமனுந்தழுவ வணங்கியும்,மற்றவருன்னைப் பணிந்து வாழ்த்த இணங்கியும், நாங்களியாவருங் கண்டு கண்களிக்கச் செளபாக்கிய சம்பன்னனாக வாழ்வைப் பொருந்தித் தாழ்வில்லாமல் வாழக்கடவை துரியோதனாவென்று துரோணாச்சாரியருஞ் சொல்லவே, இம்மொழிகளைக் கேட்டிருந்த துரியோதனன் இடியைப்போ லிரைந்து, நீங்களளக்க வேண்டிய கல்விகளெல்லாம் இவ்வளவு தானோ? இன்னமேதாகிலுங் கொஞ்சங் குறை இருக்கின்றதோ வென்று குலுங்க நகைத்து, குரோதமுங் கோபமுங் குடிகொண்டெழும்பக் கொதித்து மணிவண்ணனாகிய மாயனைப் பார்த்துச் சொல்லுகின்றான்.

ஓ கபட நாடகா! உன்னுடைய கற்பனையினாலும், உன் திரேக காந்தியினாலும், நஞ்சனைய வஞ்சகநிறைந்த உன்னெஞ்சத்தினாலும், நீ கொஞ்சமேனும் யோசிக்காமற் சொல்லிய நீதிசாஸ்திரங்களினாலும், இவ்விடத்திலிருப்போருடைய பக்கச் சொல்லின் பலத்தினாலும் என்னைமயக்கி மருட்டி நாடு பெற்றுக்கொண்டு போகவல்லவோ நாடி ஓடிவந்தாய்? அடடா நாரணனே!! நீ ஓடிவந்ததற்கு நான் நாடு கொடுத்தவனல்லன், நீ வாங்கினவனல்லன். ஐயோ பாவம்! பாண்டவர் நீ வரும்வழியைப் பார்த்துக்கொண்டு இருப்பார்களல்லவா? சமுத்திரத்தின் அலை ஓயப்போகிறதுமில்லை, தம்பி தற்பணஞ்செய்து தலைமுழுகப் போகிறதுமில்லை, என்று (தமயனுக்குப் பெண்வாய்க்கப் போகிறதுமில்லை, தங்கச்சி கலியாணம் முடியப்போகிறதுமில்லை) என்றும் சொல்லுகிற வாக்கியங்களை நீ கேட்டதில்லையோ? இந்த மட்டும் போதும்போதும். எங்களவர்களெல்லாரும் மெத்தத்தெரிந்த பெரியோரென்னும் பேர்மாத்திரமே யொழியப் பின்னை யொன்றுமில்லை. உன்னுடைய வஞ்சனையும், சூதும், மாய்வித்தையும் எனக்குத் தெரியும்; இவர்கள் அறியமாட்டார்கள். நீ எல்லோரையும் மயக்குவாய்: நான் உன்னை மயக்கும்படியாகிய உலகுக்கொருவன்; வணங்கா முடியோன் நந்தியாவட்டமாலையன் அரவகேதனன். ராஜாதிராஜப் பிரதாபவீரன் கெடிஸ்தலாதிபதியாகிய என்னை நீ நன்குமதித்துப் பார் புன்னமரத்தின்கீழ் கன்றுகள் மேய்க்கும் புண்ணியனே! நான் ஆளப்போகிறது அந்நாடாகிய விண்ணுடானாலும், அவர்களை வணங்கிப் பணிந்து கைகுவித்து வாழேன். அவர்களுக்கு நான் தாழேன். அணுவத்தனை நாடும் அவர்களுக்குக் கொடுக்கேன். என் பிராணனிருக்கிறவரையிலும் அவர்களை உயிருடன் விடுக்கேன். உங்களுடைய யுத்திபுத்திகளைக் கேட்டு நடக்கேன். ஒன்றுங் கொடுக்கேன். இதுதான் கடைசி வார்த்தை. நாளை நடக்கப்போகிற அமர்க்களத்தில் அவரவர்களுடைய பெருமையும் பிரதாபமும் வீரமும் தீரமும் வெளிப்படவே போகின்றது. ஆகாயத்திலிருக்குந் தேவர்கள் வேடிக்கைபார்க்கவே போகிறார்கள். இதற்குள்ளாக நீங்கள் எல்லோரும் ஏன் மனமடிந்து போகிறீர்கள். திங்களைத்தரித்த சங்கரன் வந்து உரைத்தபோதிலும், பஞ்சவருடைய பங்கை கொடுக்கமாட்டேன். இதோ இங்கு வந்திருக்கும் இந்தப் பெரியோர்களைப்போல் உம்மை மதித்து உமது வார்த்தையை நம்பிக் கேட்கமாட்டேன். என்றந்தை முதலாகிய உரிய பெரியோரெல்லாரும் என்னை வெறுத்தாலும், இந்தப் பிரபஞ்சமெல்லாம் என்னைப் பழித்தாலும், என்னைச் சார்ந்தவர்களெல்லாரும் மாண்டழிந்து போனாலும், பாண்டவர்கள் மறுபடியும் நாடு பெற்றதாய்ப் பட்டத்திலுமெழுதவொட்டேன். இல்லையென்று என்னுக்கினுற்சொல்லிய வாக்கியத்தை மறுத்து, மீண்டும் உண்டென்று ஒருக்காலும் சொல்லமாட்டேன். திடங்கொண்ட என்மனத்தினுறுதி இதுவாக்கும். ஓ கிருஷ்ணனே! உன்னெண்ணத்தை இப்போதே மறந்துவிடென்று சிறந்த துரியோதனன் சொல்ல, ஸ்ரீகிருஷ்ணமூர்த்திகேட்டு, திருமுகமண்டலத்தில் திவ்ய காந்தி யுடையவராய் புன்னகைகொண்டு மன்னரைநோக்க, அந்நேரத்திற் சபையில் வந்திருந்த முனிவர் மூவர்களில் ஜமதக்கினேயரென்பவர் நந்தியாவட்டத் தாரினையுடைய நாயகனைப் பார்த்துச் சொல்லுகின்றார்.

## ஜமதக்கினிமுனிவர் நரநாராயணர் சரித்திர முரைத்தல்

ஓ ராஜாதிராஜனே! இவ்வுலகத்தில் நரநாராயணர்களென்னு மிருவர். மண்ணாசை-பெண்ணாசை-பொன்னாசைஎன்னும் ஈஷணாத்திரையங்களில் வீழ்ந்து மயங்கி நிலையில்லாத் தோற்றமாகிய பொய்யை மெய்யென விரும்பி விருதாவிலழிகின்ற விவேக சூனியரைப் போலலையாமல், உண்மைப்பொருளை நாடிய உத்தமரென்றுரைக்கும்படியாய் வேடம் பூண்டு, உலகுக்கு சிஷ்டாசாரத் தன்மையைப் பழக்கி பாபத்தைபொறுத்து, புண்ணியத்தை

நிலைநிறுத்தவேண்டி இருடிகளாகவந்து கந்த
சுவாமி விளையாடிக்கொண் டிருந்த கந்தமா
தனச்சாரலில் யாகங்கள் செய்து, சகல சித்தி
யும் பெறும்படியாக மௌனவிரதம் அனுஷ்
டித்துக்கொண்டு வருநாளையில், ஒருநாள் இடி
களையொத்து இடிக்கும்படியான மொழிகளும்,
சக்ரவாளகிரியை சாய்க்கும் பலமும், தேவர்
களை நிராயுதபாணியாக ஓடச்செய்யும் பிரதா
பமும், வடவாமுகாக்கினியைப் புண்கள் செய்
யும் பெரியகண்களும், இந்த பூமியைச்சுற்றி
லும் செல்லும்படியாகிய வில்லும் அஸ்திரங்
களும், தலையிற்புனைந்த முடியும், ஜயவீரக்
கொடியும், தானேறிய தேரும், பாபியென்னும்
பேருந்தாங்கிய ஆண்மிக்கையையுடைய அரக்
கன் ஒருவன்வந்து, தவஞ்செய்வோர்களைக்
கண்டு, ஆரடா இங்கு தவம்புரியா நின்றவர்?
உங்களுக்கு வில்லேன்? பாணமேன்? வீராதி
வீரரைப்போல் இருக்கின்ற நீங்கள் வெளியே
வாருங்களடா யென்று மேகம்போலக் கர்ச்
சித்து மொழிந்து, அளவற்ற சரங்களை யவர்
கள்மேற் பொழிந்தான். அவர்களைக் கண்ட
புண்ணிய சீலர்களிருவரும் இவனுடன் நாம்
போர்செய்தால் நமது தவுங்கெடுமென்றெ
ண்ணி, அந்த ராட்சதனுக்கு அநேக வுபசார
வார்த்தைகளைச் சொல்லி, அப்பா நாங்கள்
தபசிகள். மிருக பயங்கரத்திற்காக வில்லும்
பாணமும் வைத்திருக்கின்றோம். மற்ற வே
றொன்றுக்குமல்ல. மேலும், எங்களை நீ ஜெயித்
ததாக விஜயஸ்தம்பம் நாட்டிக்கொண்டு, எங்
கள்பேரில் தயவுசெய்து அப்பாலே நீங்கிப்
போவென்று அவர்கள் அடங்கிச்சொல்லியும்,
அந்த வார்த்தைக்கு அவனொப்பாமற் குப்பல்
குப்பலாகக் கணைகளைச் சொரிந்தபோது, நர
னுக்குக் கோபம்வந்து வில்லைவளைத்து, ஆகர்
ணப்பரியந்த மிழுத்து அமோகமாகிய அஸ்
திரங்களைப் பிரயோகித்து, அவனுடைய வீரப்
பட்டத்தையும், கவசத்தையுமறுத்து, வில்லை
இரண்டுதுண்டாய் முறித்து, மார்பிலும், வயிற்
றிலும், தோளிலும், தாளிலும், மூழ்கித்துளை
க்க, முனையம்புகளையேவிச் சின்னபின்னப் படு
த்தி, தேரையும் அவன்பேரையும் அழித்துச்
சிதைத்து உதிரவெள்ளம் பெருகச் செய்து,
உலகுக்குபகாரஞ் செய்தருளிய அந்த நரநா
ராயணரென்னும் இருவரும் இந்த யுத்தத்
தில் ஸ்ரீகிருஷ்ணதேவராகவும், அர்ச்சுனராக
வும் ராஜகுலத்தி லவதரித்து, உங்களிலொரு
வராயிருக்கின்றார்கள். அவர்களோ ஒன்றைக்
காட்டி ஒன்றை முடிப்பார்கள். அசக்தியர்

கள். அவர்களால் முடியாத தொன்றுமில்லை.
அவர்களை யாரொருத்தர் சிந்தித்து வந்தித்து
தாசத்துவம் புகுகின்றார்களோ, அவர்களிடத்
தில் மிகுந்த நேசமாயிருப்பார்கள். நிந்திப்ப
வர்களைத் தகுந்தபடி நாசஞ்செய்வார்கள்.
யுகந்தோறும் இவர்கள் பிறக்காவிட்டால்
பாபம் இறக்கமாட்டாது. ஆகையாலிவர்கள்
பிறந்தே தீரவேண்டும். இந்த துவாபரயுகத்
தில் தருமத்தை நிலை நிறுத்தும்படியாய்
இவர்கள் பிறந்திருக்கின்றார்கள். இனி பிறக்
கப்போகிற கலியுகத்தில் தெய்வமில்லை யென்
றிகழ்ந்து நிந்தனை செய்து, தங்கள் தங்
கள் சுயசமயத்தையும் சுயபூசையையும் விட்டு
இதரமதத்தையும் இதரதேவதையையும் பூசி
த்து அனுஷ்டிப்பார்கள். ஆசார முதலிய
பூஜாவிதியாவுந் தவிர்த்துச் சுசிசுத்தமில்லா
மல் வருண சங்கிரமமாகிய கடைப்பட்டோ
ரெல்லோரும், கல்வி சாஸ்திரங்களையும்,
ஜோசிய நூல்களையும், சாமுத்திரிகா சாஸ்தி
ரங்களையும், வயித்திய நூல்களையும், வேதங்
களையும், வேதாந்தங்களையும் கற்றுக்கொண்டு,
உயர்ந்த குலத்தோர்போல ஸ்நானம்-பூசை-
ஆசாரம்-சுசி-சுத்தம்-வைதீகம்-மாண்பு-கௌ
ரவம்-உடையவர்களாய், மற்றவர்களுடைய
வீடுகள்தோறும் சென்று மரியாதையும் உயர்
ந்த ஆசனமும் பெறுவார்கள். முதன்மைக்
குலத்தோராகிய பிராமணர் முதலாகிய பேர்
களும் கடைப்பட்டோரிடத்திற் கைகட்டிக்
கொண்டு காத்திருந்து, வேதநூல் முதலிய
கல்விக் கியானமுங் குறைந்து, இழிவானவன்
உபதேசஞ் சொல்லக்கேட்டு இன்பமடைந்து
இச்சகம்பேசி, இன்னான் இன்னானென்றில்லா
மல் முறைமைமாறி, இரந்துண்பார்கள்.
நற்குலமெல்லாம் நடுங்கியொடுங்கும். துற்குல
மெல்லாம் துளிர்த்துத் துலங்கும். (குப்பை
யேருங் கோபுரந் தாழும்) என்பதைப்போலா
கும். அப்படி ஒருவரை ஒருவர் மதியாமற்
கெட்டழிந்து போங்காலையில், இந்தப் பரம
புருஷர்கள் திருவவதாரஞ்செய்து, துஷ்ட
ஜன நிக்கிரக சிஷ்டஜன பரிபாலனம்பண்ணி,
உலகத்தை வரிசைப்படுத்தி, வருணாச்சிரம
தருமம் வகுப்பார்கள். ஆகையால், அரசனே!
உங்கள் பாட்டனாரும், ஆசாரியரிருவரும்,
பெரிய தந்தை சிறிய தந்தை இவர்களும்,
எம்போலியருஞ் சொல்லும்படியாகிய வசனங்
களைக் கேட்டு, ஆயர்பாடியில் நேயராகிய கோ
பாலர்கள் வீடுதோறுந் தயிர் வெண்ணெய்
களைத் தாவியுண்டு தையலார் சம்பிரமங்களை

யனுபவித்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைப் பணிந்து, அவருக்குச் சந்தோஷம் வரும்படியாய்த் தருமத்தை யனுசரித்துப் பாண்டவர்கட்கு நாட்டைக்கொடுத்து அவர்களுடன் பொருந்தியிருந்து வாழ்வையாகில், பெரும் பிரதிஷ்டையு முண்டாய்ச் சுகம்பெறலாம். சுவாமியின் அருளும்பெறலாம் என்று ஜமதக்கினி ரிஷீஸ்வரர் சொல்ல, அந்த வார்த்தையைத் துரியோதனராஜன் கேட்டு நகைத்து, இவர்களெல்லாரும் இதுவரையிற் சொன்னதெல்லாம் சமஸ்கிரதம் ஒன்றுந்தெரியவில்லை; தேவரீர்தான் தாராளமாய் விளங்கச் சொன்னீர் சுவாமியென்று உபசரித்தான். அந்த வேளையிற் பக்கத்திலருந்த கண்ணுவமகாரிஷியானவர் மன்னவனைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

கண்ணுவ முனிவர் கருடன்
சரித்திர முரைத்தல்

ஓ துரியோதனராஜனே! பெரியோர்கள் சொல்லைக்கேளாமல் அவமான மடைந்தவர்களின் சரித்திரத்தைச் சொல்லுகிறேன்கேள். முன்னொருபோது தேவேந்திரனுடைய சாரதியாகிய மாதலியென்பவன், திவ்விய சுந்தர மோகன வடிவினையுடைய ஒருபெண்ணை பெற்று வளர்த்து, இந்த பெண்ணுக்குத் தகுந்த புருஷன் வேண்டுமென்று சூரிய கிரணந்தாங்கும் இடங்களெல்லாந்தேடி பார்த்து வருகையில், ஒருநாள் பாதலத்திலிருந்த நாக குமாரனைக்கண்டு, அவன் சுந்தரவடிவை தன் சிந்தையிற்கொண்டு, அப்பா! மிகுந்த அழகினையுடைய என் பெண்ணை உனக்கு கலியாணம் பண்ணிக் கொடுக்கிறேன். நீ பெற்றுக்கொள்ளென்றுசொல்ல, அந்தவார்த்தையை நாககுமாரன் கேட்டு, ஐயா! எங்களுக்குப் பகையாகி இருப்பவன் கருடன்; அவன் என் தகப்பனையுந் தாயையுங் கொன்றுதின்று விட்டு என்னையும் கொல்வேனென்று கறுவிக்கொண் டிருக்கின்றான். அவன் கண்ணிற் படாத காலமெல்லாம் பிழைத்திருக்கிறேன். எப்போது அவன் கண்ணிற் படுகிறேனோ அப்போதே நானிறந்தவனென்றான். ஐயா! இப்படி மகாபலமாகிய பகைநேரிட்டு (நித்திய கண்டம் பூரணயுசு) என்னும் பழமொழி போல் வருந்தி ஏக்கங்கொண்டிருக்கின்ற நான், என்றைக்கிருந்தாலுங் கருடனால் இறந்துபோவோமென்று நன்றாய்த் தெரிந்திருந்தும், உமது பெண்ணை விவாகம் செய்துகொண்டு நெடுநாள் கூடி வாழ்வதற்கில்லாமல் விட்டுவிடுவது பிரயோசனமில்லை. மேலும், நல்லபெண் அகப்பட்டாற் போதுமென்னும் ஆசையுடன் எனக்கிருக்கும் விபத்தைச்சொல்லாமற் கலியாண முடித்துக்கொண்டால், எனக்குப்பழியும் பாவமும் வந்து நேரிடும் ஆகையா லுற்றது சொன்னேனென்றுரைக்க, அந்தவார்த்தையைக் கேட்ட மாதலிக்கு மிகுந்த சந்தோஷம்வந்து தன்னை மறந்தவனாக உடல்பூரித்து, இவன் மன்மதா கீர்த்தியாகிய வடிவிலும், கல்விக்கியானத்திலுஞ் சிறந்திருப்பதல்லாமல் உண்மைமொழியிலும் உயர்ந்திருக்கின்றான். இவனைச் சுகப்படுத்தி நமது பெண்ணை இவனுக்கே கொடுக்கவேண்டுமென்று மகிழ்ந்து சொல்லுகின்றான்.

ஓ நரகபாலனே! எங்கள் தேவராஜனுக்குச் சொல்லி, உனக்கிருக்கும் கருடனுடைய பகைப் பயத்தை நீக்கித் தீர்க்காயுசா யிருக்கும்படிச் செய்விக்கிறேன் வாவென்று கூட அழைத்துக்கொண்டு தேவேந்திரனுடைய சபைக்கு வருகையில், இவர்களுடைய பாக்கிய வசத்தினால் ஸ்ரீ வைகுந்த வாசனாகிய ஜெகத்ரக்ஷகன் தேவேந்திரனுடைய சபையில்வந்து எழுந்தருளி யிருந்த திவ்யகோலத்தை இந்த மாதலியும், நாக குமாரனுங் கண்டு வணங்கிக் கரத்தைக்குவித்து நாவிற்றுதித்து, இந்திரன் முதலாகிய பேர்களையும் பணிந்துகொண்டு, மாதலி தான் வந்த வரலாறுகளை இந்திரனிடத்திற் சொல்ல, அதைக்கேட்ட இந்திரன் எழுந்து மாயோன் மலரடியில் வீழ்ந்து, சுவாமி! பக்தவற்சலனாகிய பரமதயாளுவே! என் சாரதியாகிய மாதலியின் கருத்தைக்கேளுமென்று மனுப் பண்ணிக்கொள்ள, அதைக் கேட்ட விஷ்ணுவானவர் சந்தோஷித்து நாக குமாரனைப் பார்த்து, இனிமேல் உனக்கு ஜீவ பயமின்றித் தீர்க்காயுசாக விருக்கக்கடவையென்று திருவாய் மலர்ந்தருளித் தமது திருவைகுந்தத்திற் கெழுந்தருளினார். உடனே மாதலியானவன் தேவராஜனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு போய், தன் குமாரத்தியை நாக குமாரனுக்குத் தத்தஞ்செய்து, சகலவித அலங்கார சம்பிரமங்களுடன் விவாகமுடித்து சீதன முதலாகியதுங் கொடுக்கப் பெற்றுக் கொண்டு, ஸ்திரீயும் புருஷனும் நாகலோகம் போய்ச் சேர்ந்து, குங்குமந் தங்கிய கொங்கை குலுங்கி னெருங்க, மங்கள வங்கண இங்கித

கிரீடையிற் சிறந்து வாழ்ந்திருந்தார்கள். இவைகளை யெல்லாங் கருடன் கேள்விப்பட்டுக் கடுங்கோபங்கொண்டு, கண்கள் சிவந்து நெருப்புப் பொறிகள் சிதறும்படியாக வந்து தேவேந்திரனைக் கண்டு சினந்து சொல்லுகிறான்.

ஓ இந்திரனே! அதிதியினுடைய புத்திரன் நீ; வினதையினுடைய புத்திரன் நான். நம்மிருவருக்குந் தந்தையானவர் கசியப்பிர்மா. நாமிருவரும் அண்ணனுந் தம்பியுமாயிருக்கின்றோம். உனக்கு வந்த நன்மை தீமை என்னுடையது. எனக்கு வந்த நன்மை தீமை உன்னுடையது. இவைகளை எல்லாம்பாராட்டி அநேகங்கோடி ராட்சதரைக் கொன்று உன் பகையெல்லாம் போக்கினேன். உனக்குச் சவுக்கிய முண்டாக்கினேன். அண்டரண்ட பகிரண்டங்களையும் கர்ப்பத்தில் வைத்திருக்கும் லோகநாயகராகிய தேவ நாயகனை என் தோளிற் சுமக்கும் பராக்கிரமத்தை உடையவனாக இருக்கின்றேன். இப்பேர்ப்பட்ட என்னுறவை விரும்பாமல் என்னையும், என் தாயையும் அடிமையாக்கிக்கொண்டு வருத்திய என் பகைவரீனமாகிய பாம்புக்கு மிகுந்த உதவியைச் செய்து, தீர்க்காயுசு வாங்கிக்கொடுத்தாயென்று கேள்விப்பட்டு வந்தேன். ஆனதினால், உன்னை என் சிறகினாலடித்து பிடித்துப், பிலத்துவாரத்தில் கொண்டுபோய்ப் போட்டு விடுகிறேனென்று சீறி, எழும்பும்படியாகிய கருடனைப் பார்த்து ஐயா! நானொன்றுஞ் சகாயம்பண்ணவில்லை. தேவாதி தேவராகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தி இவ்விடம் வந்திருந்தார். அவரைக்கண்டு வணங்கிக் கேட்டுக்கொண்ட நாகத்திற்கு, அந்த ஆதிமத்தியாந்த ரகிதனே அருள் புரிந்தாரென்று இந்திரன் சொல்லக் கேட்டு, அப்படியா? நல்லது; ஆகட்டுமென்று வைகுந்தத்திற்குப்போய் லட்சுமி நாராயணனைக் கண்டு வணங்காமனின்று, இன்று தேவரீர் நாக குமாரனுக்குத் தீர்க்காயுசு கொடுத்ததாய்க் கேள்விப்பட்டேன். அவன் எனக்கு நெடுநாட் பகையாயிருக்க, உமக்கு நான் அடிமையா யிருக்க, என் சத்துருவுக்கு அருள் செய்த காரண மென்னவென்று முடுக்காகக் கேட்க, விஷ்ணு நகைத்துச் சொல்லுகின்றார்.

ஓ கருடனே! நம்மை நாக குமாரன் இரந்து வேண்டினான். ஆகையால், அவன்மீது கடாட்சம் வைத்து அனுக்கிரகஞ் செய்தோமென்று சாந்தமாக சொல்லவும், கருடன் கேளாமற் கோபித்துக்கொள்ளுவதை நோக்கி இந்தக் கருடன் கர்வங்கொண் டிருக்கிறான். ஆகையால், அதை அடக்கவேண்டுமென்று திருவுளங்கொண்டு, ஓ கருடராஜனே! நீ சொல்லுகின்றது ஞாயமே? ஆனால், அந்த நாககுமாரன் என்னை வணங்கிப் பணிந்து வருந்தியதால், நான் மனமிரக்கம் வைத்தேன். எப்போதும் எனக்குரிய பக்தனாகிய உனக்கு உதவி செய்யாமல், உன் பகையாளிக்கு வரமளித்தது தப்பிதமே. ஆனால், அவனிருக்கும் நாகலோகத்திற்குப் போய், அவனுக்குக் கொடுத்த வரங்களைத் திருப்பிவிடுவோம் வருகிறையாவென்று திருமால் அழைக்க, வருகிறேனென்று வந்து பணிந்த கருடன்மீது கருணையுடையவர்போற் காட்டி, என்னுடைய இரதத்தைக்கொண்டு வரச்சொல்லும் என்று சொல்லக்கேட்டுப் பதைபதைத்து சுவாமி! என் தோளின்பேரில் எழுந்தருளுமென்று மண்டியிட்டுப் புயங் கொடுக்க, மகாவிஷ்ணுவானவர் தமது திருவடியை ஒரு தோளினிடத்தில் நாட்டவே, என்புகளெல்லாம் நெக்குவிட் டொடிந்து களைத்து பூமியில் மூர்ச்சைாய் விழுந்து சோர்ந்த புள்ளரசைநோக்கி, ஏனப்பாவென்று இருகரத்தாலுந் தழுவியெடுத்து நிறுத்திய போது, கண்ணீர் சோரவிட்டுப் புண்ணியனே! தேவரீருடைய எண்ணந்தெரியாம லிளைத்தேன்; தேவரைத் துதிக்கத்தக்க எறும்பு கடை யானை முதலிய எல்லோரும் பரம பாகவதரென்று இன்று கண்டுகொண்டேன். விவேக சூனியத்தால் வெகுளியுற்ற வென்னையும் நாகராஜனைப்போல் இரட்சித்தருள வேண்டியதென்று முறையிடலும், திருவடியைச் சிரத்திலுறுத்திய பக்தவச்சலனாகிய பரந்தாமன் கருடன்மீது கடாட்சம் வைத்து, எப்போதும்போலச் சகல பலங்களு முண்டாகச்செய்து, சிறிய திருவடியென்று திவ்ய நாமஞ்சூட்டி, வாகனமுங் கொடியுமாகக் கொண்டு ரட்சித்தார். அந்த விஷ்ணுவே இந்தக் கிருஷ்ணமூர்த்தியாகவந்து அவதரித்தவர். கேளுந்துரியோதனா! ஆணவத்தாற் பெரியோர் வார்த்தையைத் தள்ளி நடந்து அவமானம் அடையத்தக்கவர்கள் அநேகம் பேருண்டு. ஆகையால், நண்பராகிய ஸ்ரீகிருஷ்ணதேவரும், அன்பராகிய மற்றயாவரும், நாங்களாகிய மூவருஞ் சொல்லும் வார்த்தையைக் கேட்டு நடத்துவையாகில், புகழ்ச்சியும் மகிட்சியுமுண்டு இல்லாவிட்டால் நெகிழ்ச்சியும்,

இகழ்ச்சியுமுண்டு. கடைசியில் உயிருமிழந்து போகும்படியாகும் உத்தமனே! (சிரிக்கச்சொல்பவர் தீயர் அழச்சொல்பவர் அன்பர்) என்னும் பழமொழி அறியாயா? என்று கண்ணுவர் சொல்லி முடித்தவுடன் நாரதமகா முனிவரானவர் நந்தியாவட்ட மாலையனைப் பார்த்துச்சொல்லுவதானார்.

### நாரதமுனிவர் காலவமுனி சரித்திர முரைத்தல்

அரசனே! இவ்வுலகத்திற் பூர்வஞ்செய்த புண்ணியபாவ பலத்தினால் ஏதுமில்லாதவர்கள் இறைவராவார்கள். எல்லாமுடையவர்கள் புல்லராவார்கள் சகல பலமுடைய வீரர்கள் அபலரிடத்தில் அகப்பட்டழிவார்கள். அபலர் சகல பலமுடைய வீரராகின்றார்கள். கீழ்மேலாம்-மேல்கீழாம்-நாடுகாடாம் - காடுநாடாம் - ஓடம் வண்டியாம் - வண்டி ஓடமாம் ஒருவருக்கும் ஒன்றும் சொந்தமில்லை. ஆகையால், நமக்கே பலமிருக்கின்றது; நாமே செய்யப்போமென்று நினைத்து அகந்தைகொண்டு, பெரியோர் உரைத்த மொழியை அலக்ஷியஞ் செய்வையாகில், ஒரு நாளைக்கும் உருப்படப்போகிறதில்லை. உத்தமனே! பதினாலுலகுந் துதிக்கும் பாட்டனாகிய வீஷ்மர்-துரோணர்-விதுரர் முதலிய பேர்களும், உன்னிடத்தில் வைத்த விசுவாசத்தால் இவ்வளவு தூரம் தழுவிச் சொல்லுகின்றார்கள். அவர்களைப்பற்றி நாங்களும் ஆசையாகச் சொல்லுகின்றோம். இவைகளெல்லாம் தள்ளி உன்னிஷ்டப்படி நடப்பையாகில் உனக்குச் சுகம்வரப் போகிறதே இல்லை. அல்லலில் மூழ்கி அவஸ்தைப்படுவாய். அதற்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேள்: ஓ அரவக் கொடியோனே! சூரியகுலதிலகனாகிய காதிமகாராஜாவின் குமாரன் விசுவாமித்திரரிடத்தில், காலவரென்னும் பிரமசாரியானவர் வேதப்பாட முதலிய வித்தையெல்லாங் கற்று, அவ்வித்தையை விற்று, மகாரிஷியென்று யாவரும் வணங்க வாழுநாளி லொருநாள் ஆசாரியரை வணங்கி விடைபெற்றுக்கொள்ள விசுவாமித்திரர் மனமகிழ்ந்து, குழந்தாய்! ஐயந்திரியில்லாமல் அறியவேண்டியவைகளை யெல்லாம் அறிந்துக்கொண்டையா வென்று கேட்கத் தேவரீருடைய அடியிணையருளால் யாவுமுணர்ந்தேனென்று காலவர் சொல்ல, கௌசிகர் கேட்டுக் கண்களிகூர்ந்து போய்வாருமென்று விடைகொடுக்க, அவர் குருவைப் பணிந்து சுவாமி! குருதக்ஷிணை கொடுத்துப் போவது உத்தமம்; இல்லாவிட்டால் என்னுடைய மனம் மெத்த வருந்தும். ஆகையால், சுவாமிகள் தடைசொல்லாமல் தங்களுக்குச் சம்மதமானதை அடியேனுக்குக் கட்டளையிடவேண்டுமென்று கேட்க, அதைக்கேட்டு விஸ்வாமித்திரர் சொல்லுகின்றார்.

ஓ காலவரே! உமது வணக்கமும்-ஒழுக்கமும்-அடக்கமும்-ஒடுக்கமும்-சாந்தமும்-அன்பும்-எனக்குப் போதுமான குருதக்ஷிணையாயிருக்க, வேறே தக்ஷிணையென்பது முண்டோ? நீரும் நாமும் இரண்டோ? ஒன்றேயன்றி வேறல்லவே, நீர் சும்மா தபச்செய்யப் போமென்று கௌசிகர்சொல்ல, அதைக்கேட்ட காலவர் கோபங்கொண்டு, நான் என்ன எளியவனோ, கையிலாகாதவனோ? குருதக்ஷிணை கொடுக்காத பாவியருடைய நரகத்திற் கேதுவாகும்படியாய்ச் செய்கின்றீர்கள். அப்படிக்கு வேண்டாம்; நீர் குருதக்ஷிணை வாங்கிக்கொள்ளும்படியாய்க் கேளும் நான் கொடுத்துவிட்டுப் போகிறேனென்று சொல்ல, இந்த வார்த்தையால் விசுவாமித்திரருக்குக் கோபம்வந்து, நான் சொல்லுகின்ற வர்னமும் நல்ல சாதியுமுள்ளதாய் எண்ணூறு குதிரை குருதக்ஷிணையாகக் கொடுவென்று சொல்ல, நல்லதாகட்டும் அதினுடைய நிறமும் சாதியும் எப்போப்பட்டதோ அதனைச் சொல்லுமென்று காலவர் கேட்க, விசுவாமித்திரர் அவரைநோக்கி பாலினுஞ் சிறந்த வெள்ளையும், நீலநிறமுடைய காதும், அசுவசாஸ்திரத்தின்படி சுழிசுத்த சுபலக்ஷணமும், வாயுவேக மனோவேகத்திலும் மேலாகிய கதியை யுடைத்தாயிருக்க வேண்டியதென்று விளம்ப, அப்படியே கொண்டு வருகிறேனென்று மண்டல விண்டலமெல்லாம் எண்டிசைகளும் ஓடித் தேடிவருகையில், எவ்விடத்திலுங் காணப்படாமையால் வாடி விசாரமடைந்து போஜனமில்லாமற் பிரையாசமுற்று வருந்தி, (ஐங்காதம் போனாலும் அறிமுகம் வேண்டும்.) என்பர்களே அது போல இவ்விடத்தில் ஆரையுங் காணேமே. ஓ தெய்வமே யென்று கூவியபோது, ஒரு மலையினிடத்திலிருந்த பூர்வ சிநேகிதனாகிய கருடபகவான் வந்து, நீர் ஆரையா இவ்விடத்தில் வருந்தி யிருக்கின்றீரென்று கேட்க, நான் காலவனென்று சொல்லக்கேட்டு ஓடிவந்து, இளைப்பாற்றித் தழுவிக்கொண்டு, என்ன காரியம் என்னுடைய அன்பரேயென்று கேட்க, ஒருவர்க்கொருவர் தழுவிக்கொண்டு பழமை

பாராட்டித் தான் வந்த குருதட்சணையின் சங்கதியை விளம்ப, அதை அந்தக் கருடன் கேட்டுத் தலை நடுக்குற்று, நானும் ஒரு நாள் பகவானுடைய வார்த்தையை இரட்டித்த போது, அவரது பெருமையைக் காட்டப் பயந்து வணங்கிப் புத்தி பெற்றுக்கொண்டேன். அப்படியே நீரும் வருத்தம் வைத்துக்கொண்டீர். எப்போதும் உரியோராகிய பெரியோர்களின் வார்த்தையைக் கேளாமல் தடுத்துவந்த பாவம் இப்போது நீர் அனுபவிக்கின்றீரென்று இடருழ்ந்து, சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தில் அவ்விதக் குதிரைகளில்லையென்று சொல்லி, தெய்வலோகம் போய்ப் பார்த்து வருவோம் வாருமென்று அக்காலவரைத் தன் சிறகின்மேல் ஏற்றிக்கொண்டு கேசரிமார்க்கமாகப் போகையில், காற்றின் வலுவினாலும், சூரியக்கிரண வெப்பத்தினாலும் மூர்ச்சையடைந்து சோர்ந்து சமுத்திரத்தில்விழவும், அதைக்கண்ட கருடன் தனது காலினால் உருஞ்சி எடுத்துக்கொண்டு போய்க் கந்தமாபருவதத்தில் விட்டுத் திகிலையும் பயத்தையும் தெளிவிக்க, மூர்ச்சை தெளிந்தெழுந்த காலவரை நோக்கிப் போவோம் வாருமென்று புள்ளிறை அழைக்க, நான் குருவுக்குப் பொய்த்தாலும் குறைந்து இளைத்தாலும் ஆகாயத்துவழி எங்கள் அப்பாணை வரமாட்டேனென்று சொல்ல, அப்பால் இருவரும் பூமியிலிறங்கி வந்து குதிரையைக் குறித்துச் சகல தீவுகளிலுந் தேடித் திரிகையில், ஓ துரியோதனராஜனே! உங்கள் பிதா மகனாகிய யயாதிமகாராஜன் இந்த அஸ்தினாபுரத்தைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டு வருநாளையில், காலவரிஷியும் கருடபகவானும் அவர் இடத்திற்கு வந்து கண்டார்கள். உடனே அவர்களுக்கு வந்தனை வழிபாடுகள் செய்து, இவ்விடத்திற்கு நீங்கள் வந்த காரியமென்னவென்று கேட்க, குருதக்ஷிணைக்காக சுபலக்ஷணமுள்ள எண்ணூறு குதிரைகள் சம்பாதிக்கும்படி வந்தோம். எங்குந்தேடி இளைத்தோம் எங்கள் களையைத்தீர்க்கும் உத்தமகுணமுள்ள உம்மிடத்தில் வந்தோமென்று சொல்லிய வாக்கியத்தைக்கேட்டு, யயாதிராஜன் துடி துடித்துப் பதைபதைத்து, என்னிடத்தில் லக்ஷங்குதிரைகளிருக்கின்றன. ஆனால் நீங்கள் தேடிவந்த லக்ஷணமுடையதல்ல, நானென்ன செய்வேன் ஒருவருடைய காரியங்களை நிறைவேற்றுஞ் சக்தியை உடையவனெவனோ, அவன் வந்தவர்களின் சங்கதியை விசாரிக்கவேண்டும். அதை நிறைவேற்றமாட்டாதவன் சங்கதி கேட்காமல் உபசரித்தனுப்பி விடவேண்டுமென்று பெரியோர் நூல்வழிகளாற் கூறியிருந்தும் நான் பாபத்திற்குள்ளானேன். போகட்டும் ஐயா! மகம்மேருவைக் கேட்டவர்க்கு அந்தயினமாக அணுவாகிலும் கொடுத்தனுப்ப வேண்டுமென்றிருப்பதால், குதிரையுங் குணமுள்ள ஸ்திரீயுஞ் சரியென்று தருமசாஸ்திரத்திற் சொல்லியிருக்கின்றது. ஆகையால், என்னிடத்தில்வந்து உங்கள் குறையைச் சொல்லி மனக்குறையுடன் போகாமல், நிறைவாகிய சந்தோஷ மனத்துடன் என் பெண்ணாகிய மாதவியென்னுங் கன்னிகையை தத்தம்பண்ணித் தருகிறேன் வாங்கிக்கொள்ள வேண்டுங் காலவரென்னும் மகானுபாவரேயென்று வணங்க, அப்போது காலவர் சொல்லுகிறார்.

கேளும் ஓ மகாராஜனே! குதிரைகளுக்காக நாடுகாடு மேடெல்லாம் தேடிவாடி வரும்படியாகிய நான் அப்பெண்ணை எங்கே யிழுத்துக்கொண்டு திரிவேன்; எனக்கு வேண்டாமென்று பிணங்கக் கருடபகவான் இணங்கும்படியாகப் பேசி, யயாதியின் மனதிற்குச் சந்தோஷம் வரும்படியாகச் செய்ய, உடனே அந்த மாதவியென்னும் பெண்ணைக் காலவருக்குக் கன்னிகாதானமாகச் செய்து, போசனங் கொடுத்து நமஸ்கரித்து அனுப்பிவிட, உடனே காலவரும் கருடனும் அந்தப் பெண்ணை அழைத்துக்கொண்டு, இவர்கள் மூன்று பேரும் வையகமெல்லாம் ஐயமறத் திரிந்து தேடிவரும்போது, அயோத்திமா நகரத்தை யாளும் இட்சுவாகு மகாராஜாவினிடத்தில் இருநூறு குதிரைகளிருக்கக்கண்டு, நாம் எப்படி போய்க் கேட்கிறது? அந்த ராஜன் பிராணபதமாய் வைத்திருக்கிறானே, அது நமக்கெப்படி கிடைக்குமென்று ஆலோசித்து ஏங்கும்போது, காலவருடைய ஸ்திரீயாகிய மாதவி சொல்லுகின்றாள். மகாரிஷியாகிய என் கணவனே என்னுடைய பால்யதிசையில் ஒரு பெரியவருக்குப் பணிவிடைசெய்து ஒரு மந்திரம் பெற்றிருக்கின்றேன்; அதனுடைய பலனென்னவென்றால், நாயகனனுமதியிற் பிறரைப் புணர்ந்து பிள்ளைபெற்று மறுபடியும் கன்னிகையாகி நிர்த்தோஷமுள்ள கற்புடைய மனைவியாய்க் கணவனைச் சேரும்படி ஆசீர்வதித் திருக்கின்றார். ஆகையா லிந்த அயோத்தியை யாளும் இட்சுவாகு மகாராசன் தனக்

குப் பிள்ளையில்லாமல் வருந்துகின்றானும். அவனைத் தேவரீர் கண்டு பேசி, ஒரு பிள்ளை பிறந்தால் லக்ஷணமுள்ள அந்த இருநூறு குதிரை கொடுக்கவேண்டு மென்று சொல்லுறுதி பெற்றுக்கொண்டு, என்னை அனுப்பி வைத்து அவ்வாறு நடந்தபின்பு, குதிரைகளை வாங்கிக்கொள்ளு மென்று தேவி சொல்லக் கேட்டு, இருவருஞ் சிந்தை மகிழ்ந்து சம்மதித்து, இட்சுவாகுவி னிடத்திற் போய் பேசிக்கொண்டு, யயாதி மகளாகிய மாதவியை அனுப்பி வைத்தார்கள். அவளிடத்தில் இட்சுவாகு கூடி பட்டத்துக்கு ஒரு பிள்ளை வசுவ மகாராஜ னென்பவனைப் பெற்றுக்கொண்டு, இருநூறு குதிரைகளையும், மாதவியையும் கொடுத்து வணங்கினான். அப்பால் இந்த மாதவியானவள், முன்போற் கன்னிகையாய்க் காலவரைச் சேர்ந்து கலந்திருந்தாள். இதை கண்ட கருடனானவன் குதிரைத்தேடிக் கொடுக்குங் குளிகை உமக்குக் கிடைத்தபடியால், இந்த உபாயப்படிக்கு மற்றை அறுநூறு குதிரைகளுந் தேடிக்கொள்ளுமென்று செலவும் பெற்றுக்கொண்டு, தன்னுடைய யதாஸ்தானத்திற்குப் போய்விட்டான்.

இவ்விடத்திற் காலவரும் மாதவியும் குதிரைகளைச் சம்பாதிக்கும்படி இராச்சியங்களிற் றிரியும்போது, கங்கை மகுத்துவமுள்ள காசி மாநகரத்தில் அரசாட்சி செய்யும் திவோதரா னென்னும் ராஜனிடத்தில் இதே மாதிரியாக இருநூறு குதிரை யிருக்குதென்று கேள்விப்பட்டு அவரிடத்திற் பேசியபோது, எனக்கு ஒரு பிள்ளைவேண்டும்; தேவரீர் அருள் செய்தால் இருநூறு குதிரைகளையும் கொடுத்து விடுகிறேன். அல்லாமலும், என்னுடைய பாக்கிய மெல்லாந் தருகிறேனென்று சொல்லக் கேட்டு மகிழ்ந்து, மனைவியாகிய மாதவியை விட்டு, ஒரு புத்திரன் பிறந்த பிற்பாடு மேற்கூறிய இருநூறு குதிரைகளையும் பெற்றுக் கொண்டார். மறுபடியும் மாதவி மகா பதிவிரதையாகிய கன்னிகைப் பருவம்பெற்று, நாயகனும்தானும் இன்னும் 400-குதிரைகள் வேண்டுமே இனி எங்கே அகப்படுமென்று அப்பால் நாடிப்போகையில், போசராசனுடைய சமுகத்திற்குப் போனார்கள். அவரிடத்திலும் இருநூறுகுதிரைக ளிருக்கக்கண்டு, பிள்ளையில்லாமல் மனவருத்தப்படுந் தன்மையையுணர்ந்து மாதவியை அவரிடத்தில்விடுத்து, சிபிக்கீர்த்திவந்தனென்னும் ஒரு பிள்ளையை பெற்றளித்துப் பழையபடி கன்னிகையாய் இருநூறு குதிரைகளையும் பெற்றுக்கொண்டு, ஆக அறுநூறு அசுவங்களுடன் வரும்போது, இன்னும் இருநூறு அஸ்வம் வேண்டுமே மாதவி! இனி நானென்ன செய்வேன்? என் காலமெல்லாம் குதிரை தேடுவதிலேயே போய்விட்டது. நான் பார்க்காத லோகமில்லை. எவ்விடத்திலும் இனிமேல் இத்தன்மைவாய்ந்த குதிரைகளில்லை. மேல் நடக்கவேண்டிய தென்னவென்று நாயகன் நாயகியுடன் யோசிக்கும்போது, பழைய சினேகிதனாகிய கருடபகவான் வந்து கலந்துக் கொண்டான். அவனைக் கண்டு சங்கதி யெல்லாம் சொல்லி இன்னும் இருநூறு குதிரைகள் வேண்டுமென்றார். அதைக் கருடன் கேட்டு, ஓய் காலவரே நீர் பூலோகமெல்லாம் தேடித் திரிந்தீர். நான் மேலோக மெல்லாம் ஆராய்ந்து விட்டேன். நாம் தேடிவந்த குதிரைகள் நாகலோகத்திலுமில்லை. ஆகையால், இப்போது அகப்பட்ட அறுநூறு குதிரைகளையும் ஓட்டிக் கொண்டு போய் விஸ்வாமித்திர ரிடத்தில் விட்டு நமஸ்கரித்துக் கொண்டால், இன்னும் இருநூறு குதிரை எங்கே என்று கேட்டால் அப்போது வணங்கி, சுவாமிகளே ஒவ்வொரு பிள்ளைக்கு இருநூறுகுதிரை வாங்கினேனென்று உண்மையாய்ப் பேசி, அத்தன்மையின் படிக்குத் தேவரீருக்கும் பிள்ளை யில்லாமையினால் இந்த மாதவியுடன் கூடி ஒரு புத்திரனைப் பெற்றுக் கொள்ளும். உமக்கும் புத்திரனுண்டாகின்றான். எனக்கும் எண்ணூறுகுதிரை கணக்குச் சரிப்படும் என்று சொல்லி, குருதக்ஷிணையைச் சரிபடுத்தி விட்டு, உமது மனையாளுடன் தவத்தைச் செய்து வாழுமென்று கட்டியணைத்துக் கொண்டு சினேகனை விட்டு நீங்கிக் கருடபகவான் போய்விட்டான்.

அப்படியே காலவரும் மாதவியும் அறுநூறு குதிரைகளையும் ஓட்டிக்கொண்டு, விஸ்வாமித்திர ரிடத்திற் சென்று சாஷ்டாங்க தெண்டனிட்டு, நடந்த வர்த்தமானங்களை எல்லாஞ் சொல்லி, அறுநூறு குதிரைகளையும் ஒப்பிவித்து, மற்ற இருநூறு குதிரைகளுக்கும் வகைமானஞ் சொல்ல, அந்தப்படிக்கு விசுவாமித்திரர் ஒப்புக்கொண்டு மாதவியுடன் கலந்து ஒரு பிள்ளையைப் பெற்றுக்கொண்டு, அந்தப் பிள்ளைக்கு அசுவஷ்டகனென்று பெயருமிட்டு, மாதவியையும் காலவரையும் வாழ்த்தி ஆசீர்வதித்து, அப்பா காலவனே! குருதக்ஷிணை

வேண்டாமென்று சொன்ன எனக்கு கோபம் வரும்படியாய் பேசி இவ்வளவு வருத்தம் அடைந்தாய். ஆதலால், இனிமேல் பெரியோர்களின் வார்த்தைக்கு மீறிப் பேசவேண்டாம்; இன்றுமுதற் சிவத்தைப் பேணித் தவத்திலிருந்து பவத்தை யொழித்து நலத்தைப் பெறுவாயென்று விடை கொடுக்க, ஆசாரியரிடத்தில் ஆசீர்வசனம்பெற்றுத் தாமும்தமது பத்தினியாகிய மாதவியும் அருமையாகிய தவத்தில் அமர்ந்தார்கள். ஆகையால், துரியோதனா! பெரியோர்கள் பேச்சை கேளாத பேதையர்கள் பேய்போல் விழித்து தாய்போற் பாடுபட்ட அனுபோகத்தைச் சொன்னோம்; இதுகளை யாகிலுந் தெளிந்து யோசித்துச் சுகப்படலாம். மேலும், சந்திரவம்ச திலகனாகிய உங்கள் பிதாமகன் யயாதியானவர், தன்னிடத்து வந்த அவர்களை நோக்கி, எங்குவந்தீர்களென்று கேட்ட தோஷம் இல்லை என்று சொல்லமாட்டாமல், தன்பெண்ணைக் கொடுத்தார். அந்தப் பெண்ணினாற் குதிரைகளும் கிடைத்தன. குமாரர்களும் உண்டாய்க் குருதக்ஷிணையுங் கூடியது. காலவரென்னும் மகாமுனியையும் உங்கள் பாட்டனையும் செகமெல்லாங் கொண்டாடினார்கள். இன்னமும் புகழ்கின்றார்கள். பெரியோரைப் பூசிக்கும் யயாதிராஜனுக்குப் பேரனாகிய நீர் இத்தனை உரிய பெரியோர் சொல்லியும் நாடு கொடுப்பதில்லையென்றால், உமக்குப்பேரும் புகழும் பெருமையும் எப்படி வரும்? பலவந்தருடன் பகைத்தால் பவுஷ்யம் போம்; ஜயம்வராது. பெரியோர் வார்த்தையைப் பூசித்துக் கேட்பையாகிற் சுகப்படுவாய் துரியோதனாவென்று நாரத முனிவர் சொன்னார்.

இப்படியாகச் சொல்லிவந்த ரிஷிகள் மூவரையுந் துரியோதனன் நோக்கி, கண்பொறி பறக்கக் கடுகடுத்து வெகுளி மேற்கொண்டு, ஓ! பெரியவாள்களே! கேளுங்கள்! கிருஷ்ணன் கட்டிக்கொண்டு வந்த கட்டுகள் எல்லாம் என்சமுகத்தில் சபைக்கட்டாக முடிந்ததேயல்லது வேறல்ல. அஃதிருக்கட்டும்; இவ்வுலகத்தில் எவரேனுந் தங்கட்கு நேரிட்ட ஊழ்வினையைத் தன்னறிவுகொண்டு தள்ளிக்கொண்டவர்களுமுண்டோ? நீங்கள் கண்டிருக்கின்றீர்களோ? அப்படி யுண்டானால் ஒருவரைக் காட்டுங்கள்? இப்போது இருக்கிற புத்தியைவிட வேறுபுத்தி ஏறப்போகிறதுமில்லை. இது மாறப்போகிறதுமில்லை. வீணாகக் கிருஷ்ணன் பேச்சை கேட்டுவந்து சோஷை போனீர்கள். ஐயோ பாவம்! எங்களுக்குப் புத்தியில்லையோ? பத்திமான்களே! தயை செய்து புத்தி சொல்ல நீங்கள் மூவரும் வாருங்கள் என்று உங்களை நாங்கள் வரிசை செய்து வரவழைக்கவில்லையே? அன்றெழுதிய அயன் அழித்தெழுதப் போகிறதில்லை என்று பெண்கள் சொல்லும் பழமொழியை நீங்கள் அறியாமல் வழுவித் தெரியாதவர்களானீர்களே? ஐயையோ! ஏன் இவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டீர்கள். ஈதெல்லாம் வீணாகிய கொள்ளையே; நீங்கள் சொல்வது மிகவும் சள்ளையே; வீணாகப் பேசிய வெள்ளை வாய்க்கு வெற்றிலையு மில்லையே. சுவாமிகளே! எங்களை ஏமாற்றி நாட்டைப்பறித்துக் காட்டிலுயன்ற பாண்டவருக்குக் கொடுக்க ஸ்ரீகிருஷ்ணதேவர் இருக்கின்றார். உலகத்தை ஆளுகிறதற்குப் பாண்டவர்கள் இருக்கின்றார்கள். உயிருடன் கொடுப்பதற்கு நானிருக்கின்றேன். உங்களுக்கென்ன வந்தது? (எள்ளுதான் எண்ணெய்க் குலருகின்றது, எலிப்புழுக்கையும் ஏன் உலருகிறது) என்னும் வசனத்தைப்போல் தாங்கள் நித்தியவிதி-சத்தியசவுசம்-ஆசாரம் - பூசை - செபம் - தபம் இவைகளைவிட்டு, இவருடன் ஏன் இப்படித் திரிந்து வருந்திக் காலத்தை வீணிற் கழிக்கின்றீர்கள். வேண்டாம் பெரியோர்களே! நீங்கள் தவஞ்செய்யும் இடத்திற்கு இப்பொழுதே தயவு செய்து எழுந்தருளுங்கள். நீங்கள் யிருக்கும் இடத்திற்கு வேறு ஆள் சம்பாதிக்கிறேனென்று துரியோதனன் தூறிச்சொல்ல, இதைக் கேட்ட மூன்று ரிஷிகளும் திடுக்கென்று சிங்காசனத்தைவிட்டு எழுந்து, மிகுந்த கோபங்கொண்டு, முகஞ்சுளித்துக் கண்கள் சிவக்கப் பார்த்தார்கள்.

அச்சமயத்தில் வீஷ்மாச்சாரியார் திடுக்கென்றெழுந்து, தீர்க்கதண்டஞ் சமர்ப்பித்து, ஓ மகத்துக்களே! இவனே சிறுபிள்ளை, தங்களுடைய சுரூப சுபானுபவங்கள் இப்பேர்ப்பட்டதென்று இதுவரையிலும் அறியாதவன். ஏதோ எங்கள் தலையிலெழுத்து நாங்களனுபவிக்கிறோம். தங்களுக்கென்ன வந்தது? இவ்வளவு தூரம் புத்திமதி சொல்லியும் வசத்திற்கு வராத இவனால், இந்தக் குடும்பமெல்லாம் குன்றிப்போகக் காலம் வந்திருக்கின்றது; அப்படியிருக்கத் தாங்கள் கோபங்கொண்டதை விடுத்துச் சாந்த மூர்த்திகளாய் இதையொரு விஷயமாகச் சித்தத்தில் வையா

மல், எங்கள் நிமித்தத்தில் க்ஷமிக்கவேண்டும் என்று நயமதுரவசன உபசாரங்களாற்சொல் லிப்பணிய, சான்றோர் சினமாகையால் உடனே கோபமாறி ஆசனத்தில் அமர்ந்தார்கள்.

கிருஷ்ணன் கையேந்தி நின்று இரத்தல்

அப்போது ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் மறுபடியும் வணங்காமுடிபெற்ற மன்னனை நோக்கி, வாரும் துரியோதன மகாராஜனே! பூமியிலே நற்குணங்களும், நற்செய்கைகளும், நன்னடக்கைகளும், சத்தியவசனமும், தரும சிந்தையும் வகித்து, தன்னுயிர்போல் மன்னு யிரைக்காக்கும் ஒருராஜனும், துர்க்குணமும் - துர்ச்செய்கையும் - துராச்சாரமும் - துர்த்த குணமும்-அதருமமும் - அசத்தியமும் வகித்து, எமனைப்போல மன்னுயிரை வாட்டும் ஒரு அரசனும், ஒருவருக்கொருவர் சண்டைகள் நேரிட்டுப் போர்க்களத்தில் வந்து யுத்தம் செய்வார்களாகில், தருமகுணமும் நித்திய சத்திய வசனமுடைய அரசனுக்கு மகாவிஷ்ணுவின் சகாயமும் வீரலட்சுமி கடாட்சமும் உண்டாய் ஜயத்தைப்பெற்றுத் தரணியை ஆளுவான். மாளுங்காலத்தில் வீரசொர்க்கமும் பெறுவான். அதருமகுணமும் அசத்தியவசன முமுடைய அரசனோ அரிவர்சுதேவனுடைய அருள் கிஞ்சித்துமில்லாமல், வீரலட்சுமியின் விஜயமுங்கெட்டு அவமானப்பட்டு, அபஜய முற்று அரசாக்ஷியை இழந்துமாள்வான். மீளாநரகத்திலுமுறுவான். இது முன்னோர் மொழிந்த நீதிசாஸ்திரங்களிலும், தருமசாஸ்திரங்களிலும் சொல்லி இருக்கின்றது. நீரும் தெரிந்திருக்கின்றீர். ஆகையினால் எத்தனைவித பலமும் நமும் உமக்கிருந்தாலும், பாண்டவர்களுக்கு நீர் சமமாய்ப்போகிறதில்லை. உம் மைச்சார்ந்த நால்வகைச்சேனைகளையும், ராக்கதர்களையும், படைத்துணையாக வந்திருக்கும் பார்த்திபர்களையும், போர்க்களத்தில் மாளச் செய்து பூமியைப் பெறுவோமென்னும் பூரிப்பு பாண்டவர்களிடத்திலில்லை. ஒருவேளை சபையிற் சபதங்கூறி யிருக்கின்றார்களென்று நினைப்பீராகில், உடனே சமாதானப்படுத்துவதற்கு நாங்களெல்லாருமிருக்கின்றோம். சூதாடி பறித்துக்கொண்ட நாட்டை சூக்ஷத்திற்கொடுத்துவிடுவதேயன்றி, அதிகங் கொடுக்கவேண்டுவதில்லை. அப்படியல்லவென்றால் பெரியோர்கள்சொல்லும் தருமநீதின்படி ஐந்தூரேனும் கொடுப்பது உத்தமம். அதுவுங் கூடாதென்றால், உம்முடைய இஷ்டத்துக்குத் தோன்றிய தெவ்வளவோ அவ்வளவு கொடுத்தாலும் அதுவும் நமக்குச்சம்மதமே. அரசனே! நான் தூதுவந்து வீணுக வீணாந்ததல்லாமற் பிரயோசனமில்லையென்று எனக்கொரு பேச்சு வராமலும், பெரியோர்கள் சொல்லிய பேச்சைத் தள்ளினான் துரியோதனனென்று உமக்கொரு ஏச்சுவராமலும் உமது மனதுக்கிசைந்ததை தயவுசெய்யுமென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி இருகரத்தையும் நீட்டி இரப்போரைப் போல் கேட்க, அதற்கிசையாத துரியோதனன் சொல்லுகின்றான்.

கேட்டீர்களோ சபையி லிருப்பவர்களே! இவ்வுலகவழக்கம் எவர்களுக்கு எவர்களிடத்தில் இஷ்டம்பிறக்குதோ அவர்களே சாமர்த்தியரென்று தனக்குத்தானே புகழ்ந்து மகிழ்ந்து கொள்வதுண்டு. அது இப்போது தெரிய வந்தது. தருமமுள்ளவன் ஜயம்பெறுவான் என்றும், அன்பினுற் சொல்பவர்களுடைய வாக்கியம் போர்முகத்திற் பார்க்கவேண்டும். ஓய் புண்ணியர்களே! போனதெல்லாம்போகட்டும்; தர்மமுள்ள பாண்டவர் ஜயித்தால் அவர்களே அரசாளட்டும். அதர்மமுள்ள நான் ஜயித்தால் நானே ஆளுகிறேன். இதைவிட மறுமொழி வேறொன்றுமில்லையென்று இறைவன் சொல்ல, அதைக் கிருஷ்ணமூர்த்தி கேட்டு, தம்பி! யாவரேனும் வீணுக சண்டை செய்து விறுதாவிற் சாவே னென்று சொல்லி, மகாபலியினிடத்தில் மூன்றுலோகத்தையும் தானம் வாங்கும்போது இருகரத்தையும் நீட்டிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி, பாண்டவர்களுக்காக இந்த பஞ்சையொத்த பூமியை பெறுவதற்கு இரண்டு கரத்தையும்நீட்டி இரந்து, அப்பா! பெரியமனது செய்து நாஸ்தியென்றுரையாமல், ஜாஸ்தியாயுங் கொடாமல், முன்பாத்தியமாகிய நாட்டை மாத்திரம் பாலித்தருளுமென்ன, அதைத் துரியோதனன் கேட்டுக் கொடுக்கமாட்டேனென்ன, ஐந்தூராகிலும் தயவுசெய்யுமென்று எழுந்து இருகரத்தினாலும் இரக்க, அதைத் துரியோதனன் கண்டு, அம்மண மானவனுக்கு அரைக்கீரை அகப்பட்டாற் போதாதா? ஐயா! நிலைகெட்டு காடேகதியாகத் திரிந்த ஐவர்களுக்கு இவ்விடத்தி லொரு வீடு கொடுத்தாலும் போதுமே. கண்டோங் கண்டோமென்று கண்களி லொத்திக்கொள்ளுவார்களே? அவர்களும் வேண்டாமென்று சொல்லப்போகிற தில்லையே. வேணுமென்ற உன் எண்ணத்தின்

படி நான் கொடுக்கப்போகிறது மில்லையே. நீர்
ஏன் கையை நீட்டிக்கொண்டு காத்திருக்கின்
றீர். அதற்கென்ன; காரியவாதி கையையும்
நீட்டுவான், காலிலும் வீழ்வான். ஏன் வீணாய்
உடம்பை ஒடித்துக்கொள்ளுகிறீர். போம்போ
மென்று கடிந்துரையாடினான் துரியோ
தனன்.

அதை ஸ்ரீ கிருஷ்ணபகவான் கேட்டு
நகைத்து, குழந்தாய்! உன் வமிசத்தில் தந்
தையாகிய சந்தனு மகாராஜனுக்குப் பரிமள
கந்தியை பாரியாளாக்க, அவளுடைய பிள்ளை
கள் இருவருக்கும் இராச்சியத்தைக் கொடுத்து
தான் வீஷ்மம் பெற்றுக்கொண்ட மேலோனா
கிய உனது பாட்டன் வீஷ்மாச்சாரியர் இதோ
உயிருடனிருக்கிறார். இப்பேர்ப்பட்ட தரும
முள்ள குலத்திலுதித்த சிரேஷ்டனே! சகல
சொந்தமுள்ள சிறிய தந்தையாகிய பாண்டு
வின் பிள்ளைகளுக்குப் பாதி ராஜ்ஜியமும்
கொடுப்பதில்லை யென்றும், ஐந்து ஊருங்
கொடுப்பதில்லை யென்றும், ஒரே உறுதியாகப்
பேசினால், உனக்கிந்த நாடும், இந்த அரசும்
நடக்கமாட்டாதே. ஒரு குலத்திற் பிறந்த பிள்
ளைக ளிரண்டுபேரும் ஒத்து வாழ்வதே உத்த
மம். ஒவ்வாமல் பேதப்படுத்திக்கொண்டு அனு
பவிப்பது மத்திமம். ஒருவர் பங்கை ஒருவர்
பறித்துக்கொண்டு துன்மார்க்க வழியில்
வார்த்தை நழுவிப் பேசுவது அதர்மம்.
ஒரு பங்காளி சவுக்கியமடைய, ஒரு பங்காளி
துன்பப்படுவது அதர்மாதர்மம். இப்பேர்ப்
பட்ட அதிசயங்களை யெல்லாம் கண்ணி
னால் காணும்படி ஈசன் நம்மை ஏற்படுத்தி
இருக்கின்றான் யென்று விசனப்பட்டு, இது
தருமத்திற் கொவ்வாத காரியமே யன்றி,
வேறல்லவென்று ஸ்ரீ நாதன் சொல்லிச் சலித்
துக்கொள்ள, அதற்குத் துரியோதனன்
சொல்லுகின்றான். ஓ கிருஷ்ணரே! எத்தனை
தரம் சொன்னாலும் உலகாளும் அரசருடைய
மெனுக்குவை அறிந்து கொள்ளுவதற்கு
உமக்கு அறிவு போதாது. நீரென்ன செய்வீர்
பாவம்; மாட்டுடன் பழகிய புத்திமான் மனித
ருடன் பழகுவது வருத்தம். இன்னும் பழகிக்
கொண்டு வாரும்; போமென்று துரியோதனன்
சொல்ல, இந்த வார்த்தையைக் கேட்ட வீஷ்
மர்-துரோணர்-கிருபர்-திரிதராட்டிரர் முதலா
கிய பெரியோர்களெல்லாரும் கடகடவென்று
நடுங்கச் சொல்லுகின்றார்கள்.

ஓ துரியோதனா! இச்சகத்தை யெல்லாம்
படைக்குந் திருவுந்தியையுடைய ஸ்ரீமந்
நாராயணமூர்த்தியே ஸ்ரீ கிருஷ்ணதேவராய்
வந்து நமக்குத் தரிசனந் தந்து, இருகரத்தா
லிரந்து நாடு கேட்க, நீ கூடாதென்று கூறு
வது ஞாயமன்று. முன்பின் யோசித்து விளை
யப்போகிற வினையையும், ஓராமல் எம்போலி
யர் சொல்லிய வார்த்தைகளையும் கேளாமல்,
ஒரே பிடிவாதமாய் என்னண்டையி லிருக்கும்
வீரர்களைக் கொண்டு சண்டைபண்ணிப் பாண்
டவரை அண்டவொட்டாமல் ஜயித்து,
நாடாள்வேனென்று சொன்னதையே சொல்
லுகின்றாய். அப்பால் உன்னிஷ்டப்படி நட
வென்று எல்லோரும் மிகுந்த விசாரங்க
ளுடன் ஓவென்று கூவி இரைந்தார்கள்.
இவையெல்லாம் அண்டையிலிருந்து பார்த்
துக்கொண்டிருந்த துச்சாதனனானன் துரி
யோதனனை வணங்கி, அண்ணா! இந்தக்
கிருஷ்ணன் இவ்விடம் வந்திருக்குந் தந்திர
மும், வீணாய் நமது பெரியோர்கள் அவரைக்
கண்டு திகைத்து மயங்கி எண்ணிக்கொண்
டிருக்கிற மந்திரமும் பார்த்தால், துராக்கிர்த
மாய் உமது கையைப் பிடித்துக் கிருஷ்
ணன் கைமேல் வைத்து நாடு கொடுத்தான்,
நாடு கொடுத்தானென்று கூவிக் கையறைந்து
பாண்டவர்களையும் அழைத்து உமது காலில்
விழச்செய்து, எல்லோரும் ஒரேமுகமாயிரு
ந்து ஐவராகிய இவர்களைக் காப்பாற்று
மென்று சொல்லுவதற்காக எண்ணங்கொண்
டிருக்கின்றார்களென்று நான் நினைக்கிறேன்.
அப்பால், (இவ்வளவு பெரியவன் கையைப்
பிடித்திழுத்தால் எப்படி மாட்டேனென்னு
வேன்) என்பதுபோல் முடியும். ஆகையால்,
இந்த வம்பாகிய சபையை விட்டெழுந்து
அரண்மனைக்குப் போவது நன்மார்க்கமென்
றெண்ணுகிறேன். ஓ அண்ணா! தேவரீர்
சித்தம் என்பாக்கியமென்று துச்சாதனன்
சொல்லவே, தட்சணத்தில் துரியோதனன்
எழுந்தான். உடனே கர்னன் - சகுனி - துர்ச்
சாதனன் முதலிய தன்மனதொத்த அரசர்க
ளெல்லாரும் சிங்காசனத்தை விட்டிறங்கிச்
சபையைவிட்டு நீங்கி அவரவர்கள் விடுதிக்
குப் போயினார்.

இப்பால் கன்றால் கனியுதிர்த்த காசாம்பூ
வண்ணன் திரிதராட்டிரனை நோக்கிச் சொல்
லுகின்றார். ஜெகபதியாகிய தீரனே கேளும்!
இந்தத் துரியோதனனால் உலகமழிந்து தானு

மழிந்து போவதல்லாமலும், பந்து புத்திர மித்திரர்களையுங் குடும்பத்தையுந் திடைக்குந் திடைகாலனை நீர் சிரேஷ்ட புத்திரனென்று பட்சம் விடாமல் எண்ணியிருப்பது மகாபாவம். பூர்வத்தில் கம்சனென்னப்பட்ட எங்கள் நல்லம்மான் எவர்கள் சொன்னாலுங் கேளாமல், தன்னறிவுகொண்டும் நடவாமல் தங்கள் தாய்தகப்பனை ஒடுக்கி எங்கள் தாய்தகப்பனை விலங்கிட்டுச் சிறையில் வைத்து வெகுவாகிய அக்கிரமங்களை செய்துக்கொண்டு வந்தான். அதை அவனுடைய தகப்பன் சம்மதிக்க மாட்டாமல் என்னையழைத்து, மனோபீஷ்டத்தை உண்மையாகச் சொன்னான். அதற்கு வேண்டிய யுத்திகளைச்செய்து அவனை முடித்து விட்டுக் குலத்தைப் பெருமைபடுத்தி நலத்தை விளைத்தோம். இந்த காரியம் உலகமெல்லாந்தெரியும். அப்படிபோல சொல்லுக் கடங்காத பிள்ளையைத் தக்கபடி செய்துப் போட்டு பாசகர்மங்களைப் பரிகரிக்க வேண்டிய தேசரி; மேலும் தனது சரீரத்தில் குரு கட்டியாகிய ரணமெழுந்தபோதே அதைத்திணமாயெண்ணி அறுத்தெறிந்தால், அது ஒருநாளு பத்திரவங் கொடுத்துப் பலநாளும் சந்தோஷத்தைக் கொடுக்கும். அப்படிச் செய்யாவிட்டாற் பலநாளுந் துன்பப்படுத்தும். அதுபோல நூறு பிள்ளைகளில் இவனொருவன் குறைந்தால் உமக்குப் பெரிதல்ல. நீர் மோட்ச வீடு பெறுவதற்குக் குறைவில்லை. (பலதிட்டுக் கொருமுழுக்கு) என்பதுபோலும், (பலநாளைய் திக்கம் ஒருநாளையில் விலக்கம்) என்பதுபோலும், செய்துவிடுவதே நல்ல உறுதி என்றுசொல்லி, ஐயோ! குலத்தினலமுங் குணமுங் கெட்டுதேயென்று ஸ்ரீ கிருஷ்ணதேவர் விசனப்படுவதைப் பிறவியந்தகன் கேட்டு, மிகுந்ததுக்கத்தோடு பொம்மலும்-விம்மலும்-பொருமலும் - செருமலும் - பெருமூச்சும் உடையவனாய் துக்கித்து, துரியோதனனை அழைத்து வா என்று ஒரு தூதனை யனுப்ப, அப்படியே தூதுவன் போய்ச் சொல்லக் கேட்டு, நமது தந்தை அழைக்கிறபடியால், நமது கருத்துக்கு விரோதமிராதென்று அதிசீக்கிரத்தில் அரசர் கூடியிருக்குஞ் சபைக்கு அரவக்கொடியோன் வந்து சிங்காசனத்தில் அமர்ந்தான். உடனே திரிதராட்டிரன் தெரிந்துக்கொண்டு, துரியோதனனை நோக்கிச் சொல்லுகின்றான்: அப்பா துரியோதனா! பெரியோரெல்லாரும் பேசிக்கொண் டிருக்கையில், நீ பேசாமல் எழுந்து போய்விட்டாயே; இதுவோ பெரியதனம்? காரியம் இல்லாத கடையனுஞ் செய்யமாட்டானே. என் கண்ணே! வந்தவருக்குப் பூரணமாகிய உத்தரஞ் சொல்லி, எல்லோருக்குஞ் சம்மதியாகும்படி நடத்திப்போவது சபைக்கு நாயகனாயிருப்பவன் செய்யும் நலம். அதனால் நமது குலமும் வாழ்நாளுந்தழைக்கும். ஆகையால், இன்னம் உனக்கு நன்மையாகிய புத்தி என்றைக்கு என்று கண்ணீர்விடுத்த தந்தையை நோக்கித் துரியோதனன் சொல்லுகின்றான்.

எந்தையே! தூதுவந்தவர்களின் சங்கதி தெரிந்துகொண்டு தகுமாகிய உத்தரஞ்சொன்னால், அதைக் கேளாமற் றடுத்துத் தடுத்துப் பேசினால் அதனாலெனக்குக் கோபம் வந்து எழுந்துபோய்விட்டேன். இனிமேலும் நான் சொல்லவேண்டிய வார்த்தை ஒன்றுமில்லையென்று சொன்ன துரியோதன மன்னனைப் பின்னைப் பிராட்டியின் நாயகனாகிய மணிவண்ணன் மீட்டுங் கை ஏந்தி நோக்கி, அண்ணலே! பெரிய மனசுபண்ணும். சகல ஜனங்களும் ஒருவனாற் சுகப்படுவது பெருமை. ஒருவனால் வெகு ஜெனங்கள் கெட்டுப்போவது பெருமையல்ல. ஆகையால், இவையனைத்தையும் நீர் நிதானித்து யோசித்துக் கவனித்து, வருங்காரியம் போங்காரியந் தெரிந்துச் சொல்லுமென்று மாயவன் சொல்ல, மகுடாதிபதியாகிய துரியோதனன் கேட்டு, மிகுந்த கோபங்கொண்டு கண்கள் சிவந்து கன்று இந்தக் கர்மபூமியை நான் கொடுக்கவும், அதைப் பாண்டவர் பெறவும், நீர் நடுவே தூதுபேசவும், பெரியவாளெல்லாரும் எனக்குப் புத்தி சொல்லவும், இத்தனை விபரீதம் என்னத்திற்கு? ஒரே வார்த்தை உரைக்கின்றேன். சுத்த வீரனானவன் யுத்தம் பண்ணி வெற்றிபெற்று இராச்சியமுற்றிலும் கட்டிக் கொள்ளுவதே காரியம். ஒருவனை ஒருவன் இரந்து ஒருவன்கொடுக்க ஒருவன் பெறுவது அகாரியம். ஆகையால், நீர் பாண்டவரிடத்திற்குப் போய், இந்தச் செய்தியை நான் சொன்னதாகச் சொல்லும்; அவர்கள் வெகு சந்தோஷப் படுவார்கள். வீரமென்பதும், ஜெயமென்பதும், புகழென்பதும் உமக்குத் தெரியாது. அவர்கள் சந்தோஷப்படும்போது நீருங் கூடச் சந்தோஷப்படும். ஓ கிருஷ்ணா! இப்போதே எழுந்துபோமென்று துரியோதனன் சொல்ல, அந்த மொழியைக் கேட்ட ஸ்ரீகிருஷ்ணபகவான் சற்று நிதானிப்பவர்

போல் இருந்து, ஓய் துரியோதன ராஜனே! நீர் சொன்ன காரியமெல்லாம் சரிதான். ஆதியில் இந்தச் சபையில் நீர் சொல்லியிருந்த வார்த்தையை மறந்து, பதின்மூன்று வருடங் காலங் கழித்துவந்த பாண்டவர்களுக்கு மனப்பூர்வமாக இராச்சியங் கொடுக்க மனதில்லாமல் எப்போ சொற்சோர்வுபட்டையோ, அப்போதே உன் பேச்சு நிதானமற்று அசைவு கொண்டிருக்கின்றது. ஆதலால், அரசே! யுத்தமே சரியென்று சொல்லுகின்ற வார்த்தையின்வண்ணம் அதிலாவது நீ நிலையாக நிற்பையென்று நான் எப்படி நம்புவது. அதற்காகிலும் சகலமானபேரும் அரியும்படியாய்க் குருக்ஷேத்திரத்திற் படை கூட்டிக் கொண்டு வந்து பாண்டவர்களுடன் யுத்தஞ் செய்வது நிச்சயமென்று கைபோட்டுக் கொடுமென்று தமது கரத்தை நீட்டினார் கருணையங்கடலாகிய கண்ணன். அந்த வார்த்தையைச் சொல்லத் துரியோதனன் கேட்டு, செவ்வரக்கிலும், செம்புருக்கிலும், செம்முருக்கையிலும், செம்பவளத்திலும் மேலாகச் சிவந்து, பொறிபறக்குங் கண்களை யுடையவனய்ச் சிங்காதனத்திலோங்கி அறைந்து யாவருந் திடுக்கிடக்கூவி யிரைந்து, படபடப்புடன் விரைந்து, மனங்குலைந்து, பலவான தூஷண வார்த்தைகள் சொல்லத் தொடங்கினான்.

ஓய் தூதுவந்த மனிதனே! உயர்குலத்தை விட்டு இடையருக்குப்பிள்ளைபுகுந்து, தாழ்ந்த தொழிலாகிய மாடுகள் கன்றுகளை மேய்த்துக் கோபால ஸ்திரீகளை யேய்த்து, அவர்கள் வீடு களிற் கட்டிய உரிகள்தோறும் வெண்ணெயுந் தயிரும் வேண்டியமட்டுந் திருடியுண்டு, அந்த இடைச்சியர் கண்டுபிடித்துக் கயிற்றினாற் கட்டி உரலுடன் சேர்த்தால் ஊர்ந்து உளுக்கார்ந்தழுது மானம் ஈனமில்லாமல் மதிகெட்ட நீ எல்லாக்குலங்களிலு முயர்ந்த மதிமரபினனாகிய யென்னை உன்னைப்போல நினைத்துக் கைபோடச்சொல்லி கேட்ட உன் தைரியமே தைரியம்? ஆ! ஆ! மாடுமேய்க்குங் கோல்கொண்ட உன்மரக்கைமீது, செங்கோல் தாங்கிச் செகத்தையாளும் மண்மலர்க்கையோ அடிப்பது? திருட்டிற் பழகிய உன்கையில் திருட்டு நீக்கத் தெண்டிக்கும் என்கையோ அறைவது? முல்லைக்காட்டிற் பல்லைக்காட்டி புல்லைப் பிடுங்கும் உன்கையின்மீது ஐவரைக் காட்டிற் செல்லக் கடுகவோட்டிப் பூட்டுஞ் சொல்லை நாட்டுக்கு மென்கையோ போடுவது? ஓ! ஓ! உமது குலமும், உமது நலமும் மற்ற யோக்கிய முதலிய சிலாக்கிய மெல்லாந் தெரிந்து கொண்டேன். அந்தமட்டும் நீர் மெத்த புத்திசாலி; நல்லகாரியஞ்செய்தீர்; சீக்கிரம் நடவும் பாண்டவர்களைக் குருக்ஷேத்திரம் வந்து சேரச்சொல்லும்; நீருங் கூடயிருந்து சகலபல முஞ் செய்யும்; நான் பேச்சுதப்பிப் போவேனென்றல்லவோ கையடிக்கச் சொன்னீர்? நீர் மாத்திரம் சொல் தப்பாமல் வந்துசேரும்? சுயோதனனுதியரென்னும் சிங்கங்கள் கர்ச்சித்துக்கொண் டிருக்குதென்று சொல்லி ஐவரென்னும் யானைகளை அழைத்தோடிவாரும்? அபலமதியினை யுடையவரே! நீர்சாம்பிரதாய இராஜனுமல்ல; உமக்குப் பட்டாபிஷேகப்படி பவிஷுமில்லை, ஆகையால் இராசமுறைமை முதலிய மெலுக்குவை உமக்குத் தெரியாமற் பேசினீர்; நல்லஞாயம். ஓ கிருஷ்ணு! வெகு பேர் கூடிய சபையில், யாவரும் நகைக்கத் துரோபதையை துகிலுரிந்தபோது பார்த்திருந்த மானமில்லாத வீரர்களுக்கு என்ன சூரத்தனம் ஏற்படுத்தினீர்? எவ்விதச் சேவகராக்கிவிட்டீர். திருடர் சேவகராகும்போது சேவகர் திருடராவது ஞாயமல்லவோ? ஓ சொற்சோர்வு படாதவரே! இதுவரையில்யான் சொல்லிய ஒரே உறுதியான வார்த்தையைப் பலமுறை கேட்டும் என்ன மதியைக்கொண்டு அடிக்கடி விவகாரம் பேச வருகுறீர்? மாயவரே! குந்திதேவியானவள் ஐந்து புருஷரைச் சேர்ந்து ஐந்து பிள்ளைகளைப் பெற்றாள். அவ்வைந்து பிள்ளைகளும், தாம் நடந்த முறைமை தப்பாமல் திரௌபதியாகிய ஒருத்தியைப் பெண்டாக வைத்துக் கொண்டு திரிகிறார்கள். அவ்வாறேனுந் திரிந்து தக்கபடி பிழைக்கமாட்டாமல் உழலுகின்ற பேயராகிய பாபிகளை, எனக்கு அண்ணன் தம்பிகளென்றும் எனது சிறிய தகப்பன் புத்திரரென்றும் என் பங்குக்குரிய பங்காளிகளென்றுங் கூறி, அவர்களுக்குப் பாதிராச்சியங் கொடுத்து அவர்களுடன் கலந்து வாழும்படியாகப் புத்திசாலிகளும் புத்தி கெட்டுப் போய்ச் சொல்லுவார்களாகில், இது எவர்க்கு மேலாகிய ஆச்சரியமாயிராது? இவ்விஷயத்தில் நீர் பேசுங் காரியங்களெல்லாம் விந்தையாகவே யிருக்கின்றதென்று சொன்னான் துரியோதனன்.

### விதுரன் வில்லையொடித்தல்

அந்த மொழியைக் கேட்ட இன்சொலார்க்கினிய எந்தையாகிய நெடியோன் புன்சிரிப்

புக்கொண்டு, ஓ புயங்ககேதனு! உமக்கெப்படி
சம்மதமோ அப்படியேசெய்யுமென்று இராஜ
சபையை விட்டுப் பொட்டென வெழுந்து,
தத்துவங்கியானியாகிய விதுரமகாராசன் வீட்
டுக்கெழுந்தருளினர். உடனே சபையிலிருந்த
பெரியோர்களெல்லாம் முகம் வெதும்பி மனங்
கனன்று ஐயோ! இதென்ன விபரீதகாலம்!
இவன் அறியாதவனுகையால் தெரியாமற்
கோபித்துக் கொண்டான். தெரிந்த பெரி
யோர்கள் கோபிப்பார்களா? எதுவந்தாலுஞ்
சந்தோஷமாய் எண்ணவேண்டியதே யன்றி
வெகுளியை மேற்கொள்ளக் கூடாதேயென்று
யாவரும் விசனப்பட, அந்தக்காலத்தில் துரி
யோதன மகர்ராஜனுக்குக் கோபம்வந்து, தான்
அணிந்திருந்த நந்தியாவட்ட மாலைகளெல்
லாம் கறுகறுத் துலர்ந்து கருகவும், தேகமுழு
மையும் வியர்வை பெருகவும், செம்பை யுருக்
கிய தன்மைபோலுஞ் செவ்வரக்குருகியகுணம்
போலும் கண்கள் சிவந்து, நெருப்புப்பொறி
சிதறவும், பக்கத்தி லிருப்பவர்கள் பதறவும்,
வாய்மடித்துப் பற்கடித்து மீசை துடிக்கப்
பெருமூச்சுவிட்டு, சபையிலிருக்கும் வெகுபேர்
களையும் நோக்கி, கேட்டீர்களா அரசர்களே!
இவனுடைய அயோக்கியத்தை அறிந்துதான்
நான் எழுந்து போய்விட்டேன். நீங்களெல்
லாரும் என்னை மறுபடியும் வரவழைத்தது
இந்த அவமரியாதையைப் பெறுதற்கென்று
தோன்றுகிறது. ஆகிலும் பெரிதல்ல, (கோ
டாலிக்காம்பு குலத்துக்கீனம்) என்பதுபோல,
ஒருவனுக்குத் தூதாக வந்தவனை வழிமடக்கி
விருந்து செய்விக்கவும், உறவாடவும், இவ
னுக்கென்ன காரியம்? இவனாரவன்? இவன்
எப்படிச் செய்வானென்று சிறிய தந்தையா
கிய விதுரனைப் பார்த்துச் சொல்லுகின்றான்.

ஓ நன்றியற்ற விதுரனே! தன்னுண்மை
யினாலேயும், சவுந்தரியத்தினாலேயும், வசன
சாதுரியத்தினாலேயும் மயக்கி, என் செல்வத்
தைப் பிடுங்கிப் பாண்டவர்களுக்குக் கொடுக்க
வேண்டுமென்று வந்த வேஷதாரி என் வீட்
டிற் சாப்பிடாமல் உன் வீட்டுக்கு வந்தால்,
அவ்விடத்திற் சாப்பிடாமல் இவ்விடத்திற்
கேன் வந்தீர் அது முறைமையல்லவே என்று
திருப்பிவிடாமல், அவனுக்கும் அவன் சேனை
களுக்கும் திவ்விய போஜனஞ்செய்து வைத்த
காரிய மென்னவென்று கேட்டு, மீண்டும் அரு
கிலிருப்பவர்களையும் நோக்கி, என் தந்தை
யுடன் கூடப்பிறந்தோ னென்றிருக்குந்
தோஷத்தினால், இவனுக்கும் இவனைச்சார்ந்த
பேர்களுக்கும் அன்னவஸ்திர பூஷணாலங்
கிர்த வார்சனாதிகளெல்லாம் இவ்விடத்தில்
நடந்துகொண்டுவர, அவ்விடத்திற் பட்சம்
வைத்து, என் பகையாளியைத் தனக்கும் பகை
யாளியென் றெண்ணாமல், (மாமி மேற்கையும்
வேலியோரத்தில் கண்ணும்) என்னும் பழ
மொழிபோல், என்னிடத்திற் சுகம் அனுபவித்
துப் பாண்டவர்களிடத்திற் பலனைக் கொடுக்
கும் பட்ச முடையவனாய், மூடத்தெங்கைப்
போல் இருக்கின்ற நன்றி குன்றிய இந்தப்
பாவியை யோசிக்கு மிடத்தில், ஒரு தாசியான
வள் பத்துபணங் கொடுத்துவருந் தலைவனி
டத்தில் இருக்கும்போது, மற்றொரு நாயகன்
வந்து பதினைந்துபணந் தருகிறேனென்றால்,
பழயவனை விடுத்துப் புதியவனைக்கூடி வாழ்
வதும், தன்னை யனுபவித்தவன் ஊர்ப்பிரயா
ணம்போனாற் பிரியாவிடை நாடகிபோற் பின்
றொடர்ந்து, கண்ணீர் சோரவிட்டுத் தேம்பி
வெம்பி வருந்தி வழிவிட்டுவாடி நிற்கும்
போது, இவளுக்குரியவன் தயிரியஞ்சொல்லி
என் பிராண நேசியே! இன்னும் பத்து தினத்
தில் வந்துவிடுகிறேன் நீ போவென்று
சொல்லிவிட்டு அவன் போக, இவள் அவன்
போனவழியைப் பார்த்துக்கொண்டு மயங்கி
யிருப்பவள்போல் அவன் தலை மறைகிற
வரைக்கும் நிற்கும்போது, அதற்கு முன் வரு
ஷத்தில் இவளை விட்டுப் பிரிந்த ஒரு நாயகன்
அப்போது ஊரிலிருந்துவரக்கண்டு அவனைக்
கட்டிக்கொண்டழ, அதற்கு அவன் ஏண்டி
கண்ணே! அழுகிறாயென்று கேட்கும்போது,
நீங்கள் ஊருக்குப் போகுங்காலத்தில் வழிவிட்
டுப் போனேனே, அன்றுமுதல் இன்றுவரை
யில் நித்தியம் இந்த இடத்திற்குவந்து நீங்
கள் அடி வைத்து நின்ற இடத்தை முடியினால்
வணங்கித் தெய்வமே! எங்கள் இருவரையும்
பிரித்த நீ என்றைக்குக் கூட்டிவைப்பாய்
என்று இறைஞ்சிக் கொண்டிருக்கின்றே
னென்ன, அந்தச் சொல்லை வந்த பேதை
மகன் கேட்டு மயங்கிக் கையிலுள்ள சம்பாத்
திய மெல்லாங் கொட்டிக் கொடுத்தான். இப்
படிக்குத் தந்திர உபாயத்துடன் சமயோசித
மாய்ச் சதிசெய்யத் தக்கது தாசிகளின் குலா
சார தருமம். ஆதலால், அத்தன்மையவாகிய
நமது அரண்மனைத் தாசியின் வயிற்றிற்
பிறந்த இந்த விதுரனுக்கு (குளத்தளவே
யாகுங் குணம்) என்பதுபோலச் சொந்தக்
குணம் வருமல்லாமல் வேறு குணம் வருமா?

நாம் வெறுத்துப் பேசுவதில் தன்னவன்
பிறனவனென்னுந் தாக்ஷண்ய முறுமா? மான
மீனம் இல்லாதபேர்க்கு வம்சமென்ன சதமா?
இனிக் காரியமில்லையென்று துரியோதனன்
சொல்ல, சபையிலிருந்த யாவர்களும் வாயை
மெல்ல, கொல்லத்தக்க கோபத்தோடு வில்லை
யுடைய விதுரனெழுந்து, குபீரென வியர்த்து
வழிய, இழிய இருகண்களு மெரிந்து ஜொ
லிக்க, அக்கினிக்கொழுந்து கபகபவென்
றெறிந்து பறக்கத் தன்னைத்தான் மறந்து
வாய் திறந்து இதனைப் பேசுவதானான்.

அடா துரியா! இந்த ராஜசபையிலே
விசுவாச நேசர்களுக்கெதிரிலே இடக்கர்
மொழியாக இகழ்ந்துபேசிய இடும்பா! இதோ
உனது நாக்கையும் அந்நாக்கை வெளிப்படுத்
திய உன் வாக்கையும் இழுத்து எனது கைவா
ளாற் போக்குகிறேன். உதிரம் புரளும்படி
யாக்குகிறேன். உன் தலையையு முருட்டுகி
றேன். துன்மார்க்கப் பயலே! இன்னமும்
உயிருடன் இருக்கின்றையோ! ஓ! ஓ! துஷ்டா
வென்று எதிர்நோக்கி எழுந்து உறுக்கிவரும்
போது, உடனே சிறிது சாந்தமுண்டாகித்
தயைபிறந்து அந்தோ! அடாபாவி! இந்த
வசனத்தை என் சிந்தை வருந்த எப்படி
சொன்னாயடா துரோகி! இந்நேரங் காக்கை
கழுகுகளுக் கிரையாக்கி விடுவேன் அடா கர்மி!
சிறிய தந்தையா யிருந்தும் தெரியாத பிள்ளை
சொன்ன வார்த்தையை க்ஷமிக்காமல் துரியோ
தனனுடைய தலையை யறுத்தான் விதுர
னென்று தேவர்கள் பழிப்பார்கள். மற்ற யாவ
ரும் நகைப்பார்கள். அதனாலென்னுடைய
நன்னெறி நன்னடை நன்னலமெல்லாம்
நலியுமென் றெண்ணி மனம் பொறுத்தேனே
யல்லது, என்னை இகழ்ந்துபேசிய உன்னை
ஒரு பொருட்டாக நினைத்து நின்றவனல்ல.
இதுவரையிலும் உயிருடன் வையேன். உன்
காலம் நல்லதாச்சுது உலுத்தனே! மன்னர்க்
குரிய சுற்றங்களைத் தழுவி வாழ்பவன் வேந்
தன் ஆகையாலும், தூதாக எவர்கள் வந்தா
லும் அவர்களை வரவழைத்து அந்த ராஜ
ரகசிய மெல்லாந் தெரிந்துக்கொள்ளவேண்
டிய அக்கரைக்காரன் நானாகையாலும், அந்த
முறையின்படிக்கு நானெதிர்கொண்டு போய்
பிரார்த்தித் தழைத்து வந்து விருந்துஞ்செய்
தேன்; உறவாடினேன்; அவருடன் கலந்து
கொண்டு பாண்டவர்களுடைய எண்ணங்க
ளெல்லாம் அறிந்துகொண்டேன்; தூது வந்
தவருடைய மனோபீஷ்டமுந் தெரிந்துக்
கொண்டேன். இப்போதுதானென்ன? எப்
படியு மென்தமயன் பிள்ளைகளாகிய பாண்ட
வர்களிடம் போய்ச் சேர்ந்தால் என்னைச் சம்
ரக்ஷணை செய்யமாட்டார்களா? அல்லது
அவர்களுக்குப் படைத்துணையாய்ப் போவே
னாகில் உலகத்து ராஜர்களும் நீயும் வேண்டா
மென்று என்னைத் தடுக்கக்கூடுமா! இல்லை
உன் தடைக்குப் பயப்படத்தக்கவனா? இவ்
வுலக முழுமையும் பாண்டவர்கள்வசம் ஒப்பி
வைக்கச் சக்தியில்லாதவனா? அடா புத்தியில்
லாதவனே! நாம் அப்படிசெய்யலாகாது; நாம்
இருந்தும் தாயாதிகள் கலகப்படக் கூடாது;
ஒருவித சமரசமாய் போகட்டுமென்று உன்னி
னதே யன்றி வேறல்ல. அப்படி யிருக்க இப்
படி உன்மனம் போனபடி பேசினா யல்லவோ
நல்லதாகட்டும் உங்களிருவருக்கும் நாளை
நடக்கப்போகிற யுத்தகளத்தில் தாசி பிள்ளை
யாகிய நான் உனக்குதவியாகவிருந்து வெற்றி
பெற யுத்தம்பண்ணப் போகிறதில்லை; இந்தச
பையறியச் சொல்லுகிறேன் இதுசத்தியம் சத்
தியமென்று சொல்லி சண்டை செய்யாத என்
னண்டையில் இந்தவில் லிருக்கலாகாது; இரு
ந்தாலே (பெற்றமனம் பித்து பிள்ளை மனங்
கல்லு) என்னும் பழமொழிபோற் சமுசாரிப்
பிள்ளையாகிய உனக்குபகாரஞ் செய்யச் செய்
யும். ஆகையால், இதோ மகாபாவிக்குத் துணை
யாகாதபடி நான் வைத்திருந்த வில்லை வெட்
டுகிறேன் பாருங்கள் சபையாரேஎன்று கூவித்
தன்னுடைய வில்லை உடைவாளினால் இர
ண்டு துண்டாக வெட்டி எறிந்து போட்டு,
விதுரன் தனது அரண்மனைக்குச் சென்றான்.
இப்பால் சபையில் நிறைந்திருந்த அரசர்க
ளெல்லாரும் சஞ்சலப்பட்டுத் தளர்ந்து,
ஐயோ! தேவர்களிடத்திலுள்ள விற்களிற்
சிறந்தது பரமசிவனுடைய பினாகமும், விஷ்
ணுவினுடைய சாரங்கமும் ஆகிய இவ்விரண்
டுமாம். இவ்விரண்டும் ராசவம்சத்திற் பிரப
லித்திரா நின்ற அருச்சுனனிடத்தி லொன்
றும் விதுரனிடத்தில் ஒன்றும் வந்திருக்கின்ற
தென்று எண்ணி மகிழ்ந்திருந்தோம்; அவ்வி
ரண்டில் இன்றையதினத்தில் ஒன்றறுந்தது,
மற்றொரு வில்லை கைகொண்டிருக்கும் அருச்
சுனன் தேர்மீதேறிப் போர்புரிய வருவானாகில்,
அவன் வில்லுக் கெதிர்வில் யாரிடத்திலுமில்
லையே; நமக்கு யாதொரு திக்குமில்லையே; இனி
எப்படி என்று அங்ஙனே சிலர்ஏங்கித் தூங்கி
னார்கள். அந்த வேளையில் வீஷ்மரானவர்
துரியோதனனை நோக்கிச் சொல்லுகின்றார்.

அப்பா துரியோதனா! இதென்ன விபரீத காலம் விளைவித்துக் கொண்டாய்? தருமசாஸ்திரம்- நீதிசாஸ்திரம் - இராச தருமம் இவையெல்லாம் பழுதுபடும்படி சிறிய தந்தையின் சிந்தை வருந்தத் தீங்காகிய மொழிகளைச் சொல்லித் திரிலோகமும் புகழும்படியாயிருந்த அவன் வில்லை அவனே வெட்டி எறிந்து தன் பிராணனிருக்கிற வரையில் உனக்குச் சகாயஞ் செய்கிறதில்லை என்று பவிருஷமுஞ் செய்து, தீராப்பெரும்பகையை மேற்கொண்டு போம்படி செய்து கொண்டாய்? நமக்கிருக்குஞ் சத்துருக்களை நீ சாதிக்கப் போகிறது தெரிந்தேயிருக்கிறது? நாங்களனைவரும் வேண்டியபடி என்ன பாடுபட்டு யுத்தஞ்செய்தாலும் பள்ளமுள்ள யிடத்தில் தண்ணீர் சேருமாப்போற் பாபரகிதராகிய பாண்டவர்களிடத்தில் ஜயஞ் சேருமேயன்றி வேறல்ல? ஆகையாலெங்களைத் தள்ளி மற்ற யாவரைக் கொண்டு செயம்பெறவிருக்கின்றாய்? என்ன திடதைரியத்தைக்கண்டு இப்படி தலைகுலுங்க பேசினாய்? ஐயோ பெரியோர் சிறியோரென்றெண்ணமற் பேசினையே; அந்தப்பாவம் சத்துருக்களுக்கு முன்னே தலைகவிழ்ந்து சகல வளமுடைய பூமியையு மிழந்து, போர்முகத்தில் விழுந்து போங்காலம் நேரிட்டதாய் தோன்றுகிறதே?(ஆராலேகெட்டாயென்றால்நோராலே கெட்டேன்) என்னும் பழமொழியை இங்கு உன்னிடத்திற்கண்டேன். 'காலயஸ்குடிலாகதி' என்பதுபோல் வினைவசத்தால் விபரீதம்விளைத்துவிட்டது என்று பலவாறாகச்சொல்லி வெறுத்துக்கொண்ட பிதாமகனைப் பார்த்துப் பேரனாகிய துரியோதனன் சொல்லுகின்றான்.

ஐயா! இந்த விதுரனையல்லது வேறுவில்லாளிகள் இவ்விடத்திலில்லையோ? பஞ்சாங்கம்போனால் அமாவாசியுங் கூடப்போய் விடுமோ? வாழ்க்கைப்படும் பெண்ணுக்குச் சீப்பொடிந்துவிட்டால் தாலிகட்டார்களோ? ஓ பாட்டனாரே! ஒரு ஊரிற் சாவற்கோழியும், கும்படிச்சட்டியும் வைத்துக்கொண்டு ஒரு கைம்பெண் கிழவியிருந்தாள். அவளுக்கேதோ அந்த ஊராற்பேர் கோபம்வந்து ஆ! ஆ! அப்படியா! என்கோழியாற் பொழுது விடிகிறதும், கும்படிச்சட்டியாற் கஞ்சிக்காச்சிக் குடிக்கிறதுமாயிருக்க, என்னை பகைத்துக் கொள்ளுகிறீர்களா? நல்லதாகட்டும்; இனிமேற் பொழுது விடிகிறதும், நீங்கள் போசனங்கண்டு புசிக்கிறதும் எங்கேபார்ப்போம். உங்கள் வாயில் மண்ணைப்போட்டு விடுகிறேனென்று அவ்விரண்டையும் எடுத்துக்கொண்டுபோய் தன் துணியால் மூடிவைத்துப் படுத்துக்கொண்டாள். நெருப்பு கனிந்து பற்றிக்கொண்டு சாவலுந் தானுமாகத் தானே வாயில் மண்ணைப் போட்டுக்கொண் டிறந்துபோய் விட்டார்களென்று பெரியோர் சொல்லுவார்கள். அவளைப்போல் இந்தவிதுரன் வில்லை முறித்துவிட்டா லிந்த வில்லுக்கு அப்பனாகிய வில்லையுடைய வீராள் என்னிடத்தி லெத்தனைபே ரிருக்கின்றார்கள். அவர்களை சொல்லுகிறேன்கேளும். மிகுதாதாவாகிய என்சகோதரன் கர்னமகாராசன் விருதுபெற்ற விற்பிடித்து வெளிவருவாராகில்,பாண்டவரென்னுஞ் சருகுகள் பறந்தோட வடித்து என்பக்கத்திலிருக்கும் யாவர்களும் விஜயங்கள் பாடும்படிச்செய்வார். தேவரீரிருக்கின்றீர்; துரோணர்-கிருபர்-அசுவத்தாமா முதலாகிய அநேகங்கோடி யரசர்களிருக்கவே யிருக்கின்றார்கள். உங்கள் தயவினால் இத்தனை சுத்தவீரரெல்லாமிருக்க, வழியே போகிற இடையனையழைத்துவந்து உறவாடி விருந்து செய்து மேன்மை சம்பாதித்துக்கொண்ட வேசைமகன் வில்லையறுத்தாலென்ன? அவனை வெறுத்தாலென்ன? அவன்போனாலென்ன? உயிரோடிருந்தாலென்ன? ஒருவேளை பாண்டவர்கள் பட்சத்திற்சேர்ந்து நமதுபேரிற் சண்டைக்கு வந்தால்தானென்ன? இதுகளுக்கெல்லாம் பயப்படேன் என்று விளம்பிய துரியோதனனுக்கு அண்டையில் நின்றிருந்த அங்கதேசாதிபதியாகிய கர்னன் சொல்லுகின்றான்.

கேளும் சபையிலுள்ளவர்களே! அர்ச்சுனன் தலைக்கு லக்ஷம் வைத்திருக்கும் வீரன் நானொருவனிருக்க, விதுரன்கையில் வில்லைப் பெற்றாலென்ன? அற்றாலென்ன அவனா லர்ச்சுனனை ஜெயிக்கக்கூடுமா ஒருக்காலு மில்லை. இதோ எல்லோரும் அறியச் சொல்லுகிறேன். இளங்கன்றால் விளாங்கனி என்ற ஸ்ரீ கிருஷ்ணன்வந்து தேர்விட்டாலும், இந்திரன் முதலாகிய எண்டிசைபாலர் சந்திரசூரியர் முதலிய சகலரும் அவர்களுக்கு படைத்துணை வந்து பாணந்தொட்டாலும் விஜயனை நானேவெல்வேன். என்னிடத்தில்வளர்ந்துவரும் நாகாஸ்திரத்தாற் கொல்லுவேன். இவ்விருதிறவர் படைகளிலே எனக்குமிஞ்சிய வீரர்கள் ஒருவரும் இல்லையென்று துரியோதனனுடைய பாட்டனுக்கெதிரிற் கற்பகமுநாணக் கொடுக்கும் கர்னன்சொல்ல, வீஷ்மர்கேட்டு மிகுந்த

கோபங்கொண்டு, அடாகர்னா! தேவர்களாலும்
செயிக்கப்படாத காலகேய நிவாத கவசரை
ஒருநொடியிற் பனிபோலாக்கி,இந்திரலோகப்
பட்டாபிஷேகத்தாற் சூரியனைப்போற் பிர
காசித்து மேன்மையுற்ற கிரீடிக்கு நீயோ
எதிராகிறவன்? சந்திரனுக்குமுன் சுக்கிரனீடு
படுவனோ? அப்படிபோல் அவன்முன் நீ ஒளி
மழுங்கிப்போவாய்? அல்லது அவன் திருஷ்
டிக் கெதிர்ப்படமாட்டாய். ஆனால், நீ வாய்
வண்மை பேச்சில் வல்லவனேயன்றி வில்
வண்மைபோரில் வல்லவனல்ல; உன் காலம்
எல்லாமிப்படியே கழித்துவிட்டாய்; நீ சொல்ல
வந்தது போதும்போதும் வாயை மூடென்று
வீஷ்மர் சொல்ல, கர்னன் சொல்லுகின்றான்.
ஓ வீஷ்மாச்சாரியரே! இதுவரையிலும் இந்த
மகாராசனுடைய அன்னத்தையும்-சொர்னத்
தையும்-ஆபரணத்தையும் - வஸ்திரத்தையும்
அனுபவித்து, சமயம் வந்தபோது சத்துருக்
களின் தோளாண்மையைப் புகழ்ந்துபேசுகிற
வீரந் தங்களைப்போல் நான்கற்கவேயில்லை. நீ
ராகையால் இப்படி வியந்து பேசுகிறீர். நான்
அப்படி வேளைக்கொரு பேச்சு விதம்விதமாய்
பேசமாட்டேன். தண்டிற் போனால் இரண்டி
லொன்று சாதிப்பேன். என்னை நம்பிய பேரை
என் பிராணன் இருக்குமளவும் எருமையின்
வாலைப்பற்றி ஆற்றிலிரங்கி பிராணன் இழப்ப
வரைப்போல கைவிடமாட்டேன். ஈரேழுபதி
னான்கு லோகத்துள்ள வீரர்கள் என்பேரில்
எதிர்த்தாலும் வெல்லுவேன். முத்தொழில்
காரணராகிய மூவரும் வந்தாலும் என்பாணத்
திற்கு இடைந்து போகும்படியாய்க் கொல்லு
வேன். நாளை உமது சின்னகண்ணாலே பார்க்
கவே போகின்றீரென்று கர்னன் பகரவும்,
அதற்குக் காங்கேயர் நகைத்து, (கெட்டிக்கா
ரன் புளுகு எட்டு நாளைக்குள் தெரியும்) என்
பது பொய்யோ? ஐயோ! நாங்களே பார்க்கப்
போகிறோம். அப்பா அங்கதேசாதிபதி வீணாய்
அவசரப்படாதே என்று அதட்டிக்கூறி, இப்
போர் தாக வேண்டிய தென்னவென்று நாரதர்
முதலான ரிஷிகள் மூவருக்கும் நமஸ்கரித்த
வர்களை யதாஸ்தானத்திற் கெழுந்தருளுங்கள்
என்று விடைகொடுத் தனுப்பிவிட்டு தாமுந்
தம்முடைய அரண்மனைக்குச் சென்றார். பின்பு
துரியோதனன் தன்னைச் சார்ந்த சகலருக்குஞ்
செலவு கொடுத்துத் தானுஞ் சபையை விட்டு
எழுந்து அந்தப்புரத்திற்குப்போனான். திருத்
துழாய் மாலைதரித்த தேவாதி தேவனாகிய ஸ்ரீ
கிருஷ்ண மூர்த்தியும், சாத்தகியும், சேனா சயி
னியங்களுடன் விதுரன் வீட்டுக்குச் சென்றார்
கள் என்று முன்னமே சொல்லி யிருக்கின்றோ
மே, அவ்விடத்தில் நடந்த அதிசயங்களைக்
கேளும் ஜனமேஜய மகாராஜனே! விது
ரன் வீட்டுக்குச் சென்ற வேதநாராயணன்
மாணிக்கச் சிங்காசனத்திற் கொலுக் கொண்
டிருக்க, நாரதர்-கண்ணுவர்-சமதக்னி முதலா
கிய பெரியோர்கள் வந்து கிருஷ்ண சுவாமி
யைக் கண்டு தேவரீர் சபையைவிட்டெழுந்து
வந்த பிற்பாடு, மிகுகோபியும்-வெகு பாபியும்-
பிடிவாதக்கார லோபியுமாகிய துரியோதனன்,
விதுரனை இழிகுறைவாகப் பேசினான். அந்த
விதுரன் கோபித்துத், தன் கையிலிருந்த
வில்லை வெட்டிப்போட்டு வந்து விட்டான்.
அப்பால் விஷ்மருக்குங் கர்னனுக்கும் வெகு
வாய்ப் பல வார்த்தைகள் வளர்ந்தன. அவரு
மவன்மேல் வெறுத் தெழுந்து அரண்மனைக்
குப்போனார். மற்ற யாவரும் சபை கலைந்து
போனார்களென்று சொல்லி விடை பெற்றுக்
கொண்டு, முனிவர் மூவரும் தங்கள் தங்கள்
கதியை நோக்கிச் சென்றார்கள்.

இப்பால் வில்லை வெட்டி முறித்தெரிந்த
விதுரமகாராஜன் தனது வீட்டுக்கு வந்து,
திரிலோக நாயகனுடைய சீர்பாதங்களில் வீழ்
ந்து தெண்டனிட்டுக் கைகட்டி வாய் புதைத்
துக்கொண்டு நிற்க, அவனை மாயன் உட்காரு
மென்று உபசரித்துரைத்து, ஓ விதுரமகா
ராஜனே! நானொரு ஆச்சரியங் கேள்விப்பட்
டேன். அதாவது, பூமண்டலாதிபர் புகழும்
படியாகிய வில் உமது கையிலொன்றும், அர்ச்
சுனன் கையிலொன்றும் இருந்தது. அதில்,
இன்று உமது வில் குன்றிப்போனதாய்
தெரியவந்தது. அஃதென்ன காரணம் சொல்
லும் என்று சுவாமியாகிய சதுரன் கேட்க,
பூமியாளும் விதுரன் சொல்லுகின்றான்.
நேமியையுடையசுவாமியே! கேளும். பூமியை
ஆளுகிறவன், காமியாயும்-வாமியாயும்-கோபி
யாயும்-லோபியாயும் இருப்பானாகில், கடவுள்
அவனைக் கெடுத்து விடுவார். காரியாகாரியந்
தெரியாத ஒரு கயவனுக்கு ஆகிற காரியமிது
அழிகிற காரியமிது வென்று அருகிலிருக்கும்
பெரியோர் உரியோர் மந்திரிமார் முதலாகிய
பேர்கள் புத்திமதி சொன்னால் அதனைக்கேட்க
வேண்டும். கேளாதவனாயிருப்பானாகில் மீளா
நரகத்திற் கிரையாவான். ஆகையால், இந்
தத் துரியோதனனோ சாத்தியா சாத்தியந்
தெரியாத வயித்தியனைப்போற் சாகிறதும்,

பிழைக்கிறதும் அறியான். சாஸ்திரப்படிக்கும் நடக்கான். சத்திய சவுசமுந்தேருன். பெரியோர் சிறியோரென்றறிந்து பேசான். இத்தன்மை வாய்ந்த பேதையாகிய துராத்மாவுக்குப் பிணைப்பட்டுத் துணைப்பட்டு போர்க்களத்திற்போய் விழுந்து போர்புரிந்து, புரவலர் முதலிய சேனைகளைக் கொல்லுவதைப் பார்க்கிலும் யுத்த களத்திற்குப் போகாமல் யாத்திரை போவது உத்தமமென்றெண்ணி வில்லை வெட்டி எறிந்தேன். தீங்கினருக் குபகாரம் செய்யும் செல்வருக்குத் தீங்குவரும். அதைவிட செற்றுப்போவது மேலென்று பெரியோர் சொல்லும் உரிய மொழியொன்றிருப்பதனுல், மனம் வெறுத்து வந்தேன். மேலும், "செல்வம் வந்துற்றகாலை தெய்வமுந் தவமும் பேணுர், சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையு நோக்கார், வெல்வதே கருமமல்லால் வெம்பகை வலிதென்றோரார், வல்வினை விளைவும்பாரார் மண்ணின்மேல் வாழுமாந்தர்" என்பது போல, ஓ கிருஷ்ணமூர்த்தியே! ஐஸ்வரியம் வந்தால் தெய்வத்தையும் தவத்தையும்கொஞ்சமேனும் தொழார்கள். பேசத்தக்கமுறைமை யறிந்தும் பேசார்கள். பந்து ஜனங்களையும் தோழமையாகிய பேர்களையும்கண்ணேறெடுத்துப் பாரார்கள். தாங்கள் வெல்லவேணுமென்று கருதுவதே யல்லாமல் எதிரியின் பலத்தை யெண்ணுர்கள். இதனுல் விளையப்போகிற வினைமூட்டையையும்யோசிக்கார்கள். அவர்கள் யாரென்ருல், இவ்வுலகத்திலுள்ள சாம்பிர்தாயமற்ற மனிதர்கள் இப்போப்பட்ட மமதாந்தகாரத்தை மகமேருவா யெண்ணியிருக்கு மனிதர்களில் தலையானவன் இந்தத் திரியோதனன். அதேனெனில், நமது குலபந்துவிற் சிறந்த நாயகனுகிய நீர் இவ்விடத்திற் கெழுந்தருளப் பாக்கியம் பெற்றும், மனங்கலந்து பேசி வணங்கி வாடிய பயிருக்கு மழைபொழிவது போற் பாண்டவர்களுக்கு நாட்டைக் கொடுத்து ஒத்துவாழ்வோமென் றெண்ணுமல், என்னையுஞ் சின்னச் சொல்லாலேசிக் கோபமுங் கடினமுங் காட்டி, முகங்கூசப் பேசுந் துரியோதனனென்னுங் கர்மியின் முகத்தில் விழிக்கலாகாதென்று மனங் கசந்து, அவனுடைய தலையை வெட்டுவதற்குப் பதிலாக என் கைவில்லை வெட்டி எறிந்து போட்டேனென்று விதுரமகாராஜன் சொன்னுன்.

அதைக்கேட்ட அரிவாசுதேவன், துடிதுடித்துப் பதை பதைத்துத் துரியோதனனுஞ் சேனைகளும் நானை குருக்ஷேத்திரத்தில் யுத்தத்திற்கு வரும்போது நீர் வரமாட்டீர் போலுமிருக்கின்றதே. அப்படி செய்யலாகுமா? அவன்ருன் அறியாதவன் தெரியாமற் சொன்னுலும், அருமையாகிய வில்லை முறிக்கலாமா? யுத்தத்திற்கு வராமல் இருக்கலாமா? இது தருமமல்லவேயென்று சாமி சொல்ல, நான் செத்தாலும் வரப்போகிறதில்லை என்று விதுரராஜன் ஸ்திரமாகச் சொல்ல, அதைக் கண்ணன் கேட்டு அப்படியா? நீருஞ் சபதசத்தியந் தப்பாதவர் நாமென்ன செய்யலாம். துரியோதனனுடைய காலகதி இப்படியாச்சுதென்று விசனப்பட்டு, விதுரனுடைய உள்ளத் துணிவை யறிந்துகொண்டு, ஐயோ! நெருப்பானது எவ்வளவு விறகுகள் போட்டுக் கொளுத்தினுலும், நெய்யைச் சொரிந்தாலும், குங்கிலிய கர்ப்பூரங்களைக் கட்டி கட்டியாய்க் கொட்டினுலும், காற்று சகாயமில்லாத போது சற்றுமெரியாது. அதுபோல் எத்தனை பலாபலங்கள் துரியோதனனுக்கிருந்தாலும், உமது சகாயமற்றபடியினுல் அவைகள் ஒன்றும் உபயோகப்படமாட்டா. உமது புத்திரராகிய பாண்டவர்களுக்கு நல்லகாலமும், நாடும் கிடைத்ததென்று இன்று நம்பினேன். அது உமது விற்செய்த சகாயம் ஆக்கும். மேலும் பெரியோர் சொல்லிய தருமங்களில் "அன்னையும் பிதாவு முன்னெறி தெய்வம்" என்றிருக்க, உம்மை அவமதித்துப் பேசினுனல்லவா? அவனுக்கே கேடுவரும். நீர் விசனப்படாதீர் விதுரரே! நான் இங்கு தூதுவரவும், நீர் நம்மை யழைத்து உபசரிக்கவும், அவனந்த ராஜசபையிலே உம்மை இழிவாகப் பேசவும், நீர் வெகுளிமேற் கொண்டு வில்லை வெட்டவும், இதுகளெல்லாம் என்னுல் வந்ததல்லவோ? நான் வராதிருந்தால் இவ்வளவு துன்பம் உமக்கு வராதே; நான் பாவியானேன் விதுரரே! என்னைபற்றி மனம் பொறுமென்று உபசரிக்க, அந்த வார்த்தையைக் கேட்ட உடனே விதுரன் எழுந்து விழுந்து தொழுது, சுவாமி தேவரீரிப்படிச் சிந்தையில் நினைக்க வேண்டியதில்லை. அவன் கெட்டான் துஷ்டன் தமது எண்ணம் நிறைவேற வேண்டியதே என்னிஷ்டமென்று விதுரன் சுவாமியோடு நெடுநேரம் பேசிக்கொண் டிருந்தான்.

## கண்ணன் குந்திதேவியிடஞ் செல்லுதல்.

அப்போது சுவாமி விதுரனை நோக்கிக் குந்திதேவியாகிய எங்கள் அத்தை யிருக்கும்

இடத்திற் சென்று கண்டு, பாண்டவர்கள் பட்சமாகச் சொல்ல வேண்டிய வார்த்தைகளுஞ் சொல்லி, நமஸ்காரமும் பகர்ந்து வருகிறேன் விடைதாரும் என்று புறப்பட்டுச், செந்தாமரைப் பாதங்கள் நேராக நடந்து வருவதாயினர். இவ்வாறு கபட நாடக சூத்திராவதாரியாகிய கண்ணன், பெரிய அரண்மனையிலிருக்கும் பாண்டு பூபதியினுடைய தரும பத்தினியாரிருக்கும் அந்தப்புர வாயிலுக்கு நேராக வருவதைக் குளிர்ச்சிபெற்ற பூரண சந்திர விம்ப முகத்தையுடைய குந்திதேவியானவள் கண்டு, எதிரோடிவந்து, வாரும் வாரும் மருமகனே! என்று வார்த்தையாட முகம்வாடித் தமது முகத்தைநாடி நிற்கானின்ற அத்தையினது அடியிணையில் வீழ்ந்து தெண்டஞ் சமர்ப்பிக்க, உடனே குந்திதேவி அவரை வாரி யெடுத்து மார்போடணைத்து, உச்சி மோந்து உபசரித்து வாழ்த்தி, நீருண்டு சூற்கொண்ட மேகத்தைக் கண்டு நீலக்கலாபம் விரித்தாடும் மயிலைப்போல மயிர்க்குச்செரிய மகிழ்ந்து, தம்பி நானொருத்தி இவ்விடமிருக்கின்றேன் என்றும்; என்னையொரு பொருட்செய்தும் இவ்வளவு தூரம் வருவதற்கு வழி தெரிந்ததோ? மனது வந்ததோ? மகிழிருந்ததோ? மறவாதிருந்ததே என் பாக்கியமென்று அழைத்துப்போய் மணியாசனத்திலிருத்தி, அப்பா மருமகனே! யாவரும் க்ஷேமமாய் இருக்கின்றார்களா? நீரிப்போது இந்த அஸ்தினபுரத்துக்கு வந்த காரிய மென்னவென்று கேட்க, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி நகைமுக முடையவராய் சொல்லுகிறார்.

தேளாய் மாமி! நாட்டை விட்டு நீங்கிக் காட்டில் பனிரண்டு வருடமுங் கழித்து, உருத் தெரியாமல் நாட்டிலொரு வருடமும் போக்கி, மேட்டிமையாக வெளிப்பட்ட தாஷ்டீகராகிய பாண்டவர்கள், உமக்கு சாஷ்டாங்க நமஸ்காரந் திக்குநோக்கி செய்தார்கள். இன்னம் கொஞ்ச நாளையில், உமது கஞ்சமலரடியிணையைக்கண்டு தரிசிக்க வருகின்றோமென்றுஞ் சொன்னார்கள். திரிதராட்டிரன் காந்தாரி முதலாகிய பெரியோர்களுக்கெல்லாம் சரணம் சொல்லி, இராஜ சபைக்குப்போய் விபகாரப்படிக்கு நாடு கொடுப்பீர்களா இல்லையா வென்றொரு வார்த்தை கேட்டு, அவரவர்கள் கருத்தை அறிந்துகொண்டு வாருமென்று ஐவர் அனுப்ப, அடியேன் அவர்பொருட்டு தூதாக வந்து, துரியோதனன் முதலாகிய அரசர்களுக்குச் சொல்லத்தக்கதுஞ்சொல்லிப் பேசத்தக்கதும் பேசினேம். உபவார்த்தைகளாகப் பெரியோர்களும் உரைத்தார்கள். அவைகள் எல்லாவற்றையுங் கேட்டு, காலனுக்குக் கூட்டாளியாகிய கண்ணில்லாதவனுடைய பாலன், வேலமுட்குத்து மிடமேனுங் கொடுக்கேன். நால்வகைச் சேனையுடன் சண்டைக்கு வருவேனென்று உறுதிமொழி கூறியிருக்கின்றான். இருதிறத்தவரும் இப்படி வருத்தப் படுவதை திருத்தமாக்கிப் பொருந்தவேண்டுமென்று யோசித்தாற் சரிப்பட இல்லை. ஆகிலும் இன்னும் ஒருதரஞ் சொல்லிப் பார்ப்போம். அதற்கு மிணங்காமற் போவானாகில், நாம் என்ன செய்யலாம் மாமி! அப்பா லிருப்பது அவ்வவர்கள் சண்டையே? ஆகையால், தெய்வச்செய லெப்படி முடியுமோ தெரியாது. இதன்றியும் இன்னொரு காரியம் தங்களோடு அந்தரங்கமாய்ப் பேசவேண்டி யிருப்பதால், உள்ளறையில் வாருங்களென்று அழைத்துப் போய், கள்ளத்தமாயன் எள்ளத்தனையு மிதக்கமில்லாமல் மெள்ளத் தன்னெண்ணம் வெளிப்படுத்தலானார். மாமி! நானொரு சமாசாரங் கேள்விப்பட்டு வந்தேன். அதைச் சொல்லச் சொன்னால் சொல்லுகிறேனென்று ஸ்ரீ கிருஷ்ணர் கேட்க, சுகமாய்ச் சொல்லப்பாவென்று குந்திதேவி சொல்லக் கோபால கிருஷ்ணர் சொல்லுகிறார்.

ஓ அத்தாய்! நான் கேள்விப்பட்டு சொல்லுகிறதைக் கியாபமாகவும் உறுதியாகவுங் கேளும்: நீர் உங்கள் தாய் வீட்டிற் கன்னிகாமாடத்தி லிருந்த சிறுவயதிற் ஆரோ ஒரு ரிஷீஸ்வரர் வந்து விரதமிழைக்க, அவருக்கு நீர் பணிவிடைசெய்ய, அந்தப் பெரியவர் சந்தோஷித்து ஐந்து தேவதா மந்திரம் உபதேசம் பண்ணிப்போக, அந்த ஐந்து மந்திரத்தில் ஒரு மந்திரத்தை நீர் பரிக்ஷித்ததாகவும், அப்போது சூரியபகவான் பிரசன்னமாக நீர் கலங்கிக் கண்ணீர் விடவும், அப்பகவான் உமக்குத் தழைக்கச்சொல்லி உம்மிடத்திலொரு சற்புத்திரன் பிறக்கும்படி கர்ப்பதானஞ் செய்யவும், தக்ஷணமே குழந்தை பிறக்கவும், உடனே உலகப் பழிப்புக் கஞ்சிப் பெட்டியில் வைத்துச் சிந்து நதியில் விட்டீராம். இது உண்மைதானாவென்று கேட்ட கண்ணனைக் குந்திதேவி பார்த்து, இதைக் கொண்டு நீவந்த மற்ற காரியங்களையுஞ் சொல்லப்பாவென்று கேட்க, அப்பால் இந்த நதி

அடித்துக் கொண்டுபோய் கங்கா நதியில் விடவும், திரிதராட்டிரனுடைய சாரதியாகிய சூதனும், அவன் பத்தினி ராதையுங் கண்டெடுத்துவந்து அப்பிள்ளையை வளர்க்கவும், அப்போது அசரீரி வாக்கியமாகிய இந்தப் பிள்ளைக்குக் கர்னனென்று பேரிடச் சொன்னதை அவர்கள் கேட்டு, அப்படியே பேரிட்டழைக்க அவன் வளர்ந்து சகல சாஸ்திரமுமுணர்ந்து பரசுராமரிடத்தில் வில்வித்தையுங் கற்று மேன்மையுற்றிருந்தானாகி அதை துரியோதனன் கண்டு சிநேகங்கொண்டு அங்க தேசாதிபதியாக்கி, சுயம்வரத்திற் கலியாணமுஞ் செய்து, தனது சகல அகண்ட சாம்பிராச்சியமும் அக்கர்னன் வசத்தி லொப்பிவித்து, ஏகசக்ராதிபத்திய சேனாதிபதியென்று ஏற்படுத்தி இருக்கின்றான். அந்த கர்னனைச் செயிக்கப்பட்டபேர் மண்ணினுமில்லை விண்ணினுமில்லை. அவனுக்கும் நமது அருச்சுனனுக்கும் பூர்வத்திலேயே ஜன்மப்பகையாகி வசைமேற்பட்டிருக்கிறது. இருதிறவரும் யுத்தஞ்செய்ய எத்தனித்திருக்கின்றார்கள். ஆகையால், சீக்கிரம் கர்னனிடத்திற் சென்று அவனுடைய ஐயந்திரத் தாயென்று தெரிவித்து, நீ பாண்டவர்கள் சகோதரன் என்றுணர்த்தி, நீங்களாறுபிள்ளைக ளிருக்க, நானிப்படி அவதிப்படுவானேன்? அப்பா! நீ இப்போதே பாண்டவர்களிடத்தில் வந்துவிடு; அவர்கள் உனக்குப் பணிவிடைசெய்ய நீ அரசாக்ஷிசெய்யலாம்; நாங்கள் கண்களிக்கப் பார்ப்போம் என்று இதமாகிய வார்த்தைகளைப் பேசி அழைத்துவாரும். மாமி! ஒருவேளை உமது சொல்லைத் தடுப்பானாகில் அவன் அர்ச்சுனன் பேரில் விடுவதற்கு அச்சுவசேனனென்னும் நாகாஸ்திரத்தை அருமையாய் பூசித்து வருகின்றான். அதுவோ காண்டாவன தகனத்தில் தன் தாயைக்கொன்ற பழியையும், தன் வால் அறுப்புண்ட பகையையும் தப்பாமல் முடிப்பேனென்றிருப்பதால், அந்த நாகாஸ்திரத்தை விஜயன்பேரில் ஒருதரம் விடுவதன்றி, மறுகணை தொடுக்காதிருக்க வரம் வாங்கிக் கொண்டு வாரும் என்று பக்த பராதீனனாகிய கிருஷ்ணன் சொல்ல, இந்த வசனங்களையெல்லாங் குந்திதேவி கேட்டு, உயிருடன் குன்றி, ஐயோ! உலகமறியும்படி வந்ததே; நமக்குங் கியாபகமில்லாமல் மறந்ததே; நமது மருமகனுக் கெப்படியோ தெரிந்ததே என்று மனதிலெண்ணி இளைத்து, ஓ கோபாலா! இந்த வார்த்தை முன்னதாயறிந்தால் உனது இஷ்டப்படி பாண்டவரிடத்திற் சேரப்பண்ணுவேன். இப்போது உனக்கோ எனக்கோ என்றிருக்கும் இந்த வேளையில், நான்போய்ச் சொல்லுவது ஞாயமோ? இது உன்னுடைய மாயமோ? அல்லது என்ன அபாயமோ? (விடியற்காலையில் கலியாணம் பிடியதற்கஞ்சாதே தாப்பூலம்) என்னுந் தன்மைபோ லிருக்கின்றதே; நீ நினைத்துக்கொண் டோடிவந்து சொல்லுங்காரியம் நல்லது; அப்படியே கர்னனிடத்திற் சென்று, தாயென்று அவனுஞ் சந்தோஷிக்கச் செய்து, நாகாஸ்திரத்தை ஒருதரம் விடுவையே யொழிய இரண்டாவது தரம் விடாதேயென்று வரங்கேட்டால் என் வார்த்தையை தள்ளாமற் கொடுப்பான். அப்போது கர்னனுடைய பிராணனுக் காணிவருமல்லவா? அதல்லாமல் அந்த வரத்தை நான் கேளாமற் போவேனாகில், அர்ச்சுனனிறப்பானல்லவா? இந்த இரண்டு விதத்திலேயும் எனக்கு நஷ்டமேயல்லது வேறில்லையே. (பிச்சைக்குப் பிச்சையும்போய் ஒருகாசு நாமமும் போச்சு) என்னும் பழமொழி யாச்சுதே; (உழக்கு நெல்லுக்கு உழைக்கப்போய் பதக்கு நெல்லை பன்றிதின்றது) என்னும் பழமொழி வாய்ச்சுதே; (கழுதைமப்பைக் கண்டு கரைத்த மாவை வட்டிக்குவிட்டாள்) என்னுங் கதை போலாச்சுதே. இதென்ன காரணம் என்று சந்தனமரங்களை யுந்திவராநின்ற சிந்துநதி சூழ்ந்த நாட்டில் வாழுங் குந்திபோஜன் தலைவன் பெண்ணாகிய இந்த தேவி மிக வருந்தினாள். அப்படி வருந்திய குந்திதேவியின் கருத்தை மருமகனாகிய மாயவனுணர்ந்து, மாமி! நீர் இப்போது யோசித்துச் சொன்ன காரியா காரியங்களனைத்தும் சரியே; ஆனால், உன் மக்களாகிய பாண்டவர்கள் பிரிதிவு முதலிய பஞ்சபூதம் போலவும், அஞ்சு தலைப் பாம்புபோலவும் பொருந்தி இருக்கின்றவர்கள். அந்த ஐந்து பூதத்தில் ஒருபூதங் குறைந்தால் உலகங் குறைந்துபோம்; ஐந்து தலைபாம்பில் ஒருதலை இழந்தால் உடலுமிழக்கும்; அதுபோல் ஐவர்களி லொருவரிறந்தால் மற்ற நால்வரும் உடனே மடிவார்கள். நீர் அருமையாகப் பெற்றெடுத்து வளர்த்து, ஈ எறும்பு கடிக்கவொட்டாமற் பாதுகாத்து, பக்ஷமுடன் இரக்ஷித்த பாண்டவ ரைந்துபேரும் இறந்துவிடுகிறது பெரிதா? நீர் இன்னானென்றறியாமலும் எடுத்து வளர்க்காமலு மிருந்து, இப்போது பிள்ளையென்று உணர்ந்த இந்தக் கர்னன் ஒருவனிறப்பது பெரிதா? செவ்

வையா யோசியும்; நானேதோ அவசரப்படுத்தினேனென்று நாளை யொருகாலத்திற் பழி சொல்லப் போகிறீர். மாமி பத்தும் பதினைந்துக்குஞ் சம்மதியா யிருக்குமாகில் மனோதிடங்கொண்டு போய்வாரும்; அப்பாலும திஷ்டமென்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு விதுர னரண்மனைக் கெழுந்தருளி நித்திய விதிகளோடு போஜனாதிகளையும் முடித்துக்கொண்டு திருக்கண் வளர்ந்தருளினார்.

### துரியோதனன் கண்ணனுக்குப் படுகுழி சமைத்தல்

இப்பால் ஜகன்மோகனனாகிய நாதனது மாயவசன வலைக்குளகப்பட்ட குந்திதேவியானவள், குலைகுலைந்து கொடியதுயரி லுழன்று கலங்கிக் கண்ணுறக்கங் கொள்ளா திருந்தாள். பகற்போதையளக்குஞ் சூரியபகவான் மேற்றிசைப்பெண்ணின் நெற்றியிலிடப்பட்ட செந்தூரத்திலகம்போல் பிரகாசித்து அஸ்தமானமாயினான். வேதபண்டிதர் முதலிய பேர்கள் சந்தியாகால விதிமுடித்துத் தொழுதார்கள். வருணன் சூரியனுக்கிட்ட மாற்றுயர்ந்த பொற்சிங்காசனம்போற் செவ்வானம்பரந்தது. தாமரைப் புஷ்பமென்னுங் கன்னியர்கள் வண்டுகளாகிய புருஷருடன் ஊடி முகங் குவியுந்தன்மைபோற் குவிந்தன. அவ்வண்டனென்னும் நாயகர்களைக் கண்டு கடைக்கண் காட்டியழைத்து இதழ்த்தேனருந்த வின்பங்கொடுக்குந் தாசிகளைப்போற் குமுதம் ஆம்பல் முதலிய மலர்கள் மலர்ந்தன. தாமரைப் புட்பங்களிற் சஞ்சரித்த அவ்வண்டுகளானவை அக்குமுத மலரிடத்தும் ஆம்பலினிடத்துங் குலமாதரை விடுத்து விலைமாதரை யடுத்த வேசிக்கள்ளர்போலத் தங்கித் தேனைப் பருகி யுள்ளுடைந்து கூவித் திரிந்தன. முல்லையரும்பு விரிந்ததைப்போல் எல்லை யில்லாத நக்ஷத்திரங்கள் பிரகாசித்தன. இரவென்னும் யானையேறிப் புறப்படும் மன்மதனுக்கு வெள்ளைக்குடை விரிந்ததைப்போற் சந்திரனுதயமாயினான். அந்த வேளையில், தலைவருந் தலைவியரும் அமளிகளிற் கலந்து சரசசல்லாபத்தினாற் சோர்வுற்று நித்திரைபோனார்கள். இவ்வாறு சந்தடி யடங்கிய நடுராத்திரியில் இந்திரனுக் கொப்பாகுஞ் சந்திரகுலத் தோன்றலாகிய துரியோதனன் அந்தரங்கமண்டபத்திற்கு வந்து, தம்பிமார் தொண்ணூற்றொன்பது பேரோடு மாமனாகிய சகுனி கர்ண மகாராஜன் இவர்கள் சூழ்ந்திருக்கத் தானு மிருந்தவர்களை நோக்கி, காடே கதியென்று போய்விட்ட பாண்டவர்களை, நாடு வாங்கித் தருகிறேனென்று அழைத்துவந்து உபலாவியத்திலிருத்தித் தானே தூதாகவந்து, துந்தகிணற்றைத் தூறு வாறுவார்போற் கலகம் விளைத்து, நமக்கு எதிரியாகவும், வீரூப்பாகவும் அந்த விதுரன் வீட்டில் வந்திறங்கிய அந்தக் கிருஷ்ணனை முடித்துவிட்டால், பலநாளையச் சநி ஒரு நாளையிற் போச்சுதென்று பாலை வார்த்துத் தலை முழுகிவிடலாம். இவனிருக்குமளவும் ஆகவுமொட்டான், அழியவுங்கிட்டான். ஆதலால், நீங்களென்ன சொல்லுகிறீர்கள் சொல்லுங்களென்று துரியோதனன் கேட்க, தம்பியாகிய துர்ச்சாதனன் எழுந்து காலில் விழுந்து, தேவரீருக்கு இந்தக் கியாபகந் தெய்வங் கொடுக்குமா வென்று பிரார்த்தித்திருந்தேன், என் எண்ணப்படிக்குக் கேட்டால் தயை செய்து யான் சொல்வதை கேட்டருளுக வென்று சொல்லுவான்.

அண்ணாவே! தாங்கள் யோசித்தது நன்றாக யிருக்கிறது. பலநாளுஞ் சிக்காமற் கலகஞ்செய்து கொல்லும் ஓர் பெரும் புலியானது, வலைக்கு ளகப்பட்டாற் கொலைக்கஞ்சிப் பார்க்கலாமோ? என் கோவே! இந்த இராத்திரி விடியு முன்னமே நால்வகைச் சேனைகளுடன் அவனை வளைந்துகொண்டு, நல்லபாம்பின் தலையை நசுக்குவதுபோல் நறிக்கிபோடுவதே காரியம்; அதுவே நமது வீரியமென்று தம்பியாகிய துசுவாசனன் சொல்ல, அதுவே சரி என்று மற்றைத் தம்பியரும் ஒத்துக்கொள்ள இந்த நூறு பேர்களில் தர்மதேவதையைப் போன்ற விகர்னனானவன் பெரிய தமயனை நோக்கி, அண்ணா! இதுவரையிலும் வாழ்ந்த மூவகைக்குல மன்னவர்களிலேயும் தூது வந்த பேரைக் கொன்றவர்களுமில்லை; கொல்லென்று விண்டவர்களுமில்லை. நாம் கொல்லுவோமாகில் எவ்வுலகத்துக்கு மொவ்வாது. பழிபாவங்களுக்கு ஆளாவோம். அன்றியும், கிழவர்கள் - குழந்தைகள் - வேதியர்கள் - வியாதிக்காரர்கள் - வித்துவான்கள் - ஸ்திரீகள் - தூதர்கள் இப்படிப்பட்டவர்கள் எவ்வளவு குற்றஞ் செய்தாலும் கொல்லக்கூடாதென்று இராஜ தருமமிருக்கின்றது; மீறிசெய்தாலோ குடும்ப சமேதராய் நரகமென்னுங் காணியை நாம் அனுபவிக்கவரும். மேலும், பகைவரானாலும் நமது வீட்டுக்குவந்தால் அவருக்கும் நமக்குமிருக்கும் விரோதங்களை மறந்து, புதிய

உறவினர்போல மரியாதைசெய்து வந்திப்
பது குலமுறை தவருக்குலோத்துங்கர் குண
மாம். அப்படி செய்யாமல் நெஞ்சில் வஞ்ச
கம் நினைப்பீராகில், அதற்கு மிஞ்சியபாவம்
வேறில்லை. அப்படியல்லவென்று பழிபாவங்க
ளுக்கும் பயப்படாமல் தூதரைக் கொல்ல
நினைப்பீர்களாகில், காசாம்பூ வண்ணனாகிய
கண்ணன் ஒருவனிடத்திலேயும் கட்டுப்படவு
மாட்டார், வெட்டுப்படவுமாட்டார். இதனால்
உங்கள் குட்டங் கெட்டுப்போகும்படியான
துஷ்ட காரியங்களை ஆலோசிக்கின்றீர்கள்
வேண்டாம் இப்போது நீங்கள் நினைக்கும்படி
யான காரியம் ஒரு விதத்திலுமுடியாது. நான்
சொல்வதை நன்றாயோசனை செய்யுங்க
ளென்று விகர்னன் சொல்ல, அதுகாலையில்
துச்சாதனனெழுந்து நல்ல பாம்பை போற்
சீறி அடா விகர்னா! உனக்கு என்னடா தெரி
யும் பெரியோர் பேசுஞ் சங்கதிகளில் நாமேன்
பிரவேசிக்கவேண்டுமென் றிராமல், குறுக்கே
தடுத்துப்பேசத்தக்க அவ்வளவு குணக்கியன்
ஆய்விட்டையோ! அந்த மட்டும் வாயை
மூடடாவென்று அடக்கித் துரியோதன மகா
ராஜனைப் பார்த்து வெறுத்துக்கொண்டு,
அண்ணா! யாதேனுமோர் காரியத்தை ஆலோ
சிக்க வேண்டியிருந்தால் அறியாத பசங்களை
நீக்கிப் பெரியோர்களாயிருந்து பேசவேண்டு
மென்று முதியோர் சொல்லுவார்கள். அது
போல, இவனென்ன மிக்பாலியன் இராஜ
தந்திரமறியான் இப்போது தாங்கள் உத்தே
சித்த காரியத்தைப்பற்றி நான் சொல்லும்
புத்தியை நன்றாய்க் கேளுங்கள்.

அதாவது அதிரதர் முதலாகிய சேனை
களை விதுரன் வீட்டைச்சுற்றிக் காவலாக வை
த்து வைக்கோல் முதலிய செத்தைகளைச்
சேர்த்துக் கொளுத்திவிட்டால் நமதுவிரோதி
களுக்குத் தூதாகவந்த கோபாலனும் அவ
னுக்கு விருந்துசெய்த விதுரனும் வெந்து
கரிந்து எரிந்து போவார்கள்; பார்ப்பவர்கள்
கேட்பவர்களும் ஐயோ! தீப்பற்றிக்கொண்ட
தென்று சிந்திப்பார்கள்; நமக்கொரு நிந்த
னையுமில்லை; பாண்டவர்களிந்தவழியும் வரார்
கள்; இது அழியாயோசனை. அண்ணா! இக்காரி
யத்தைப் பொழுது விடிவதற்குமுன்னே முடி
த்து விடவேண்டுமென்று துச்சாதனன்
சொல்ல, இந்த யுக்தியைக் கேட்ட கர்னன்
சொல்லுகிறான். இருளை விலக்குஞ் சூரியனைப்
போல் அக்கினிச்சுவாலையுடைய ஒரு பாணத்தி
னால் அவ்விருவரையும் எரிப்பதற்கு நான்
ஒருவன் இருக்கும்போது, நெருப்பினாலேயா
அவர்களைக் கொல்லுவது? ஜெயிக்கமாட்டாத
திறத்தையுடையவன் செய்யவேண்டிய யோ
சனையே யன்றி, நாம் நினைக்கத்தக்க தல்ல
வென்று கர்னன்சொல்ல, அதைக்கேட்டு விகர்
னன் தவிர மற்றைத் தம்பிமார்களெல்லாரும்
துரியோதனனை நோக்கி, அண்ணா! இப்போது
நமது பட்டணத்துக்குள் வந்தகப்பட்டுக்
கொண்ட இந்தக் கிருஷ்ணன் தந்திரவாதி
யாகையாற் பொழுதுவிடிந்தாற் பாண்டவர்க
ளிடத்திற் போய்க் கூடிக்கொண்டு யாதொரு
காரியங்களும் ஆகவொட்டாமல் நமது எண்
ணத்தைக் கெடுத்துவிடுவான். ஆகையால்,
எவ்விதங்களிலாவது பொழுதுவிடிவதற்கு
முன் கொன்றுவிடுகிறதே காரியமென்று
கூவிச்சொல்ல, அவைகளையெல்லாங் கேட்டி
ருந்த மாமன் சகுனியானவன் நகைத்து, இது
களெல்லாஞ் சிறுபிள்ளைகளின் ஆலோசனை
யாக இருக்கின்றதே யொழிய, காரியத்தை
முடிக்கும் பாரியவாலோசனையா யிருக்கவில்லை.
அப்படி ஏதாகிலுஞ் செய்யவேணுமாகில்,
நான் சொல்லப்போகிற யுத்தியைக் கேட்டு
வெல்லுங்களென்றான். அந்த யுத்தியென்ன
வென்று துரியோதனன் கேட்கச் சகுனி
சொல்லத் தொடங்கினான்.

கேளும் என்னருமை மருமகனே! விகர்
னன் சொன்னவாக்கியப்படி தூதரைக்கொல்ல
லாகாது. துசுவாசனன் சொன்ன புத்தி நல்ல
புத்தியாலும் பூர்வாபூர்வமாகப் பெரியோர்
கள் வாழ்ந்தவீட்டில் நெருப்பைப் போடலா
காது. போட்டாலும் அந்த நெருப்பினால் கிரு
ஷ்ணனுக்கொருகெடுதியும்வராது. கர்னராஜன்
சொன்னபடி கணைவிடுத்து கொல்ல நினைப்
போமாகில், நாளைவரப்போகிற கலகம் இப்
போதே விளைந்து, நமது நாடு சுடுகாடாகிப்
போம். ஆகையால், இதுகளெல்லாங் காரிய
மல்ல; ஒரு காரியஞ் செய்யும். நமது கொலுக்
கூடத்தில் ஒரு படுகுழி வெட்டி அதிலே ராக்ஷ
தர்களையும், மல்லர்களையும், கிங்கரர்களையும்
வைத்து, மூங்கிற் பத்தைகளினால் மூடி,
மேலே ஒரு சிங்காசனம் அமைத்து, அதிலே
கிருஷ்ணனை அழைத்து உட்காரச் செய்தாற்
பத்தை முறிந்து படுகுழியில் விழுவான்.
உடனே பிடித்து விலங்குபோட்டுச் சிறைச்
சாலையில் வைத்துப் பிராணன் போகவொட்
டாமல் தண்ணீர் வார்த்துக்கொண்டு வந்தால்,

பாண்டவர்களுக்கும் பகை நேரிடமாட்டாது. கலகமற்றுப்போம்; உலகமும் பழிக்காது; இது தூதனைச் செய்யவேண்டிய முறைமையென்று மாமன் சொல்ல, மருமகன் கேட்டு ஆனந்தமடைந்து, ஓ மாமா! உங்கள் புத்தி எவருக்காகிலும் வருமா? நீங்கள் யோசித்தால் அது வீண்போமா? என்று மகிழ்ந்து புகழ்ந்து அந்நேரமே அநேக மல்லரை அழைப்பித்து, மிகுந்த ஆழமும் அகலமு முள்ளதாய் நிலவறை வெட்டச்செய்து, அதிலே கிங்கரர்-ராக்ஷதர் - மல்லர்கள் முதலிய பேர்களை வாளாயுதம்-வேலாயுதம்-சூலாயுதம் - குந்தாயுதங்களுடன் வைத்து, அநேகங் கயிறுகளுடன் பப்பரர்களையும் பதுக்கி, மூங்கிலைப் பிளந்து மேலாக மூடி, நவரத்தினகசித சிங்காதனம் அமைத்து, பக்கங்களில்முத்துமாலை-மாணிக்கமாலை-பூமாலை-பொன்மாலை இவைகளைத் தூக்கித் தம்பிமார் முதலிய யாவருஞ் சந்தோஷிக்கும்படியாய், பிறவிப் பெருங்குழியில் வீழ்ந்து பந்தபாசப் பிணிப்புற்றுப் பரமதயாநிதியே என்று கூவிப் பரதவிக்கும்படியான பக்தஜனங்களை அப்படுகுழியினின்றுங் கரையேறிரட்சிக்குங் கருணைக் கண்ணனாகிய அண்ணனுக்கும் படுகுழி யமைத்தான் துரியோதனன்.

## கண்ணன் விஸ்வரூபங் கொள்ளுதல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இவ்வாறு நஞ்சமுதருந்தி கஞ்சனைக் கொன்ற அஞ்சன வண்ணனுக்கு சிறிதேனுமெண்ணிக்கையின்றி வஞ்சனையைசெய்தானே பஞ்சமாபாதகனென்று பதைத்து, பாரைக் கவிந்துகொண்டிருந்த இருளானதுடனே பறந்தோடிப்போயது. இரவில் நடந்த அதிசயங்களை ஏல்லாரும் பாருங்களென்று தனது கிரணக்கரத்தால் யாவரையுங் காய்ந் தெழுப்பிக்கொண்டு வருவான்போற் கிழக்குத்திசையிற் சூரியனுதயமாயினன். மகானுக்கள் முதலிய ராஜராஜர்களும், பிராதகாலத்தில் ஸ்நானம் பூஜைமுதலிய நித்தியவிதிக் கருமங்களைமுடித்துக்கொண்டு வழக்கப்படி ராஜசபைக்கு வந்தார்கள். ராத்திரியெல்லாந் தூக்கமற்றிருந்த துரியோதனராஜனும்-தம்பிமார்களும்-சகுனி-கர்னன்-மந்திரிகள்-சாமந்தர்கள் முதலியபேர்களும் சபையில்வந்து நிறைந்தார்கள். விதுரன் வீட்டில் திருக்கண் வளர்ந் தெழுந்த சுவாமியானவர், சாத்தகியுடன் நித்யக்கடனை முடித்துக்கொண்டு சிங்காதனத்தில் வீற்றிருக்கும்போது, துரியோதனனுடைய உத்தரவின்பேரில் தூதுவரோடிவந்து தீர்க்கதெண்டனிட்டு, சுவாமி தூதுவந்த உங்களை எங்கள் ராஜாதிராஜனாகிய துரியோதன மகாராஜன் இராஜசபைக்கு அழைத்துவரச்சொன்னதால் அதிசீக்கிரத்தில் வரவேண்டுமென்று சொல்ல, இதோ வருகிறேனென்றெழுந்து சேனைகளையெல்லாம் நிறுத்திவிட்டு, சாத்தகி மாத்திரம் ரதமேறிவரத் தாமும் ரதமேறிக்கொண்டு, திரிதராட்டிரன் - வீஷ்மர்- துரோணர்-கிருபர்-அசுவத்தாமர் முதலாகிய பெரியோர்களும் உரியோர்களும் நிறைந்திருக்கும் சபைக்கெதிரில் வரும்போது, இதோகிருஷ்ணபகவானும் சாத்தகியும் வந்தார்களென்று போக தேவேந்திரனைப்போற் கொலுக்கொண் டிருக்கும் போக பூவேந்தனாகிய துரியோதனனிடத்தில் தூதர்வந்து சொல்ல, துரியோதனன் கேட்டு கிருஷ்ணனை மாத்திரம் விடுங்களென்று ஆக்யாபிக்க, அந்தப்படியே ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தூதர் வார்த்தையைக்கேட்டு சாத்தகியை வெளியே நிறுத்தி, தம்மை அழைப்பிக்கும் வஞ்சகச் சங்கதியைத் தமக்குள்ளே யறிந்துகொண்டு சந்தோஷித்தராய் தம்பி சாத்தகி! நான் வந்தகாரியம் இன்றைக்கு நிறைவேறுமென்றுகூறி, தேவாதிதேவனாகி சகல ஜீவாத்மாக்களுக்கும் பரமாத்மாவாகிய ஸ்ரீநாதன் கொலுக்கூடத்தில் வரவே, விஷமாகிய அரவக்கொடியோன் மிகுந்த உபசாரத்துடன் லோகநாதனைப்பார்த்து, வாரும் ஆசனத்தில் இருமென்று கைகாட்டினன். வீஷ்மர்முதலிய பெரியோரெல்லாரும் ஏதடா அப்பா சுவாமிக்கிவ்வளவு மரியாதை நடந்தது; நமக்கெல்லாம் நல்லகாலம் பிறந்தது; இனியொன்றுங் குறைவில்லை; பாண்டவர்களும் செவ்வைப்படுவார்கள். துரியோதனன் புத்தியை ஆண்டவனே மயக்கி வழிக்கு கொண்டுவந்ததாக விருக்கின்றதேயென்று சந்தோஷித்து கிருஷ்ணனுடைய முகத்தை யாவரும் பார்த்திருக்கையில், ஸ்ரீகிருஷ்ணர் துரியோதனனென்னும் நாசக்காலனமைத்தஆசனத்திலேறிஉளுக்காரும்படியாய் ஒருகாலையூன்றினார். உடனே மளமளவென்று முறிந்து சிங்காதனத்துடன் தேவாதிதேவன் நிலவறைக்குட் போகும்போது, ஸ்ரீ பாதபங்கஜ மிரண்டும் ஆதிசேடனுடைய முடிக்கப்பாலும், திருமுடி அண்டகோளகையினடிக்கப்பாலும் பொருந்தும்படி நின்று விஸ்வரூபங்கொள்ள, சந்திர சூரியர் இந்திரர் முதலிய தேவர்கள் சப்தரிஷிகள் யாவரும் சிரத்திற் கரங்குவித்து தெண்டனிட்டு, சிந்தித்



கண்ணன் திரியோதனன் சபையில் விஸ்வரூபங் கொள்ளுதல்.

துள்ள நாகலோகத்தார் நடுங்கி நாங்களெப்
படி பிழைப்போமென்று ஒடுங்கிச் சாஷ்டாங்க
நமஸ்காரஞ்செய்து வந்திக்க, அப்போது
ஆகாயத்துக்கும் பூமிக்கும் ஒன்றாய் வளர்ந்த
பகவான், அநேகந் தலைகளும் வெகுவாகிய
கரங்களும் மிகுதியாகிய கால்களுமுடைய
வராய், படுகுழியிலிருக்கும் மல்லரை-கிங்க
ரரை-ராட்சதரை-பப்பரரைத் தப்பில்லாமற்
கொல்லத் தமது நெட்டைக் கால்களினால்
நீட்டி யுதைத்தும், குட்டைத் தாள்களினால்
குழம்பமிதித்தும், மட்டப்பாதத்தினால் மாள
வதைத்தும், கட்டைக்காலினாற் சதைக்குழைப்
பியும், சிலரைத் துவைத்தும், சிலரை மிதித்
தும், சிலரை யெடுத்துச் சிதறவீசியும், சிலரை
யொடித்துப் பதற வீசியும், சிலரை நாக
லோகத்தில் நசுங்கிவிழ உதைத்தும், சில
ரை மாலோகத்தில் மயங்கிவெழ வெறிந்
தும், இவ்வாறு உதிரவெள்ளம் சபையி
லோடி வரும்படியாகப் படுகுழி நிரம்பக் கால்
களை வளர்த்திப் பருக்கச்செய்து குடையும்
போது, சிலர் சிரமிழந்து நெரிந்தார்கள்.
சிலர் செவியழிந்து விரிந்தார்கள். சிலர் கர
மருந்து உரிந்தார்கள். சிலர் கால் முறிந்து
சரிந்தார்கள். சிலர் உடல் நெறுங்கி உடைந்
தார்கள். சிலர் ஊனழிந்து சிதைந்தார்கள்.
சிலர் படைநெரிந்து பிரிந்தார்கள். சிலர் பசி
யென்று பறந்தார்கள். சுவாமியைக் கட்ட
வைத்திருந்த பாசக் கயிறுகளறுபட்டுத் தாங்
கள் கட்டிக்கொண்ட பெண்சாதி பிள்ளைக
ளென்னும் பாசந் தங்களைக் கட்டக் கலங்கின
வர்களாய் வருந்தி, வாளாயுதமுடைய வீரர்
வாளாலும், வேலாயுதமுடைய வீரர் வேலா
லும், தண்டாயுதமுடைய வீரர் தண்டாலும்,
தடியாயுதமுடைய வீரர் தடியாலும் இறக்க
வும், வாயுவினால் மகமேருவின் சிகரம்போன
துபோல் வானத்தில் சிற்சில வீரர் பறக்கவும்,
ராக்ஷதருடைய ஆயுதங் கட்டிய பாரித்த
உடல்களெல்லாம் யானைக்காலிற்பட்ட சிறு
தூறுகளைப்போல் நையவும், வச்சிராயுதத்தி
னால் ரெக்கை யறுபட்ட மலைகள்போலக் கிங்
கரர்களெல்லாம் சுவாமியின் காலுதையால்
முறிபட்டுப் பறிபட்டு வீழவும், இவ்விதமாகப்
படுகுழியிலுள்ளோர் எல்லாம் பரதவித்து
மாள உழக்கி, பற்பல காலால் பப்பரருடல்
களை வாரி யெறிந்தும், சிற்சில தாளால் கிங்
கரர் குடல்களைக் கீறி யணிந்தும், பற்பல
காலால் இராக்கதரின் சிரத்தை வாரி யெறிந்
தும், சிற்சில தாளால் மல்லர்களின் கரத்தை
வாரி வீசியும் நிர்த்தனஞ் செய்யும்போது,
அங்குள்ள எலும்புகளை வாரிவாரி இந்திர
லோக முதலான இடங்களில் தமது காலால்
வீசிவீசி இறைத்தது எப்படி இருந்ததென்
றால், சுக்ரீபனுக்காகத் துந்துபி என்பவனு
டைய எலும்பை ஸ்ரீராமமூர்த்தியின் காலா
லுந்திய தன்மைபோலிருந்தது. அரசர்க
ளிருந்த சபையெல்லாம் உதிரப்பெருக்கமும்,
மூளைநெருக்கமும், நிணவருக்கமும், பிணவரு
க்கமுமாய்க் குவியச்செய்ததுமல்லாமல், அகஸ்
தியராற் பாதலத்தழுந்தும் விந்தகிரியைப்
போலே எவரையும் மேலோங்கவொட்டாமல்
அழுத்திப் பாற்கடலில் சுழன்ற மத்தாகிய
மந்தர கிரியைப்போல் படுகுழியினின்று
சுழன்று கூத்தாடி, ஆகாயத்தில் விரிந்த
அனேக கரங்கள் தோறும், வேலாயுதம்-சூலா
யுதம்-குந்தாயுதம்-சக்கராயுதம்-தோமராயு
தம்-எறியாயுதம்-ஈட்டி-வல்லயம்-சாங்கு-
வாங்கு-கத்தி-கடாரி-இருப்புலக்கை-கதை-
மழு-கொழு-கவண்-கண்டக்கோடாலி-வளைதடி
-கொடுதடி-குண்டாந்தடி-சுக்குமாந்தடி-பாணு
தடி இவைகள் முதலிய ஆயுதங்களைப் பிடித்
துச் சுழற்றி, உடுக்கை தரித்த கரங்களனந்
தம், உறுதிப்பிடித்த கரங்களனந்தம், பேரி
யடிக்குங் கரங்களனந்தம், தாரைபிடிக்குங்
கரங்களனந்தம், தாளமத்தள மிறையுங் கரங்க
ளனந்தம், குடமிழா பேரியறையுங் கரங்க
ளனந்தம், சின்னம்பிடிக்குங் கரங்களனந்தம்,
ஜெயகாளந் தாங்குங் கரங்களனந்தம்,
கொத்துமணுகளாட்டுங் கரங்களனந்தம், சிட்
டிகைகள் போடுங் கரங்களனந்தம், கொப்பு
கள் முழக்குங் கரங்களனந்தம், பம்பை சங்கு
முழக்குங் கரங்களனந்தம், புஷ்பம்-சந்தனம்-
பாளிதம்-குங்குமம்-களபம்-கஸ்தூரி-கதம்பப்
பொடியணியுங் கரங்களனந்தம், முத்துமாலை-
மோகனமாலை-இரத்தினமாலை-வெற்றிமாலை-
பதக்க முதலிய பற்பல ஆபரணங்களைத் திருத்
திக் கொள்ளும் கரங்களனந்தம், சித்திரவஸ்
திரம் பீதாம்பர முதலிய பற்பல பட்டு பட்டா
வளிகளைத் தரித்துக்கொள்ளுங் கரங்களனந்
தம், கைகளைச் சேர்த்துக் கொட்டிக்கொண்டு
அவர்களைக் கறுவிக்காட்டுங் கரங்களனந்தம்,
எட்டு திக்கும் நிறைந்து இராஜசபையி லிருக்
கும் துரியோதனன் முதலிய பேர்களைச் சுட்
டிக்காட்டுங் கரங்களனந்தம், திலகந்தீட்டி
வீரபட்ட மணிந்து வாகைமாலை முதலானவை
களைச் சூடிக்கூட்டுங் கரங்களனந்தம், சமுத்
திரத்தை அள்ளியிறைக்கும் பற்பல கரங்கள்,

மண்ணை வாரித் தூற்றுஞ் சிற்சில கரங்கள், மரங்களைப் பிடுங்கி யெறியும் பற்பல கரங்கள், மலைகளை வாரி ஒன்றோடொன்று மோதி வீசும் சிற்சில கரங்கள், கற்பகத்தருக்களின் புஷ்பங்களை யுருவி யிறைக்கும் பற்பல கரங்கள், சூரிய சந்திர நக்ஷத்திரங்களை உள்ளங் கையிற் காட்டுஞ் சிற்சில கரங்கள், மேகங்களை யெல்லாம் வாரிப் பிடித்துப் பிழியும் பற்பல கரங்கள், திக்கு யானைகளைச் சேர்த்து வாரியெடுக்கும் சிற்சில கரங்கள், திசைக்காவலரை யெல்லாம் நடுங்கப் பிடிக்கும் பற்பல கரங்கள், அமரர்களுக்கு அமுதம் பகரும் சிற்சில கரங்கள், அஷ்ட குலாசலங்களைப் பறித்து நுனிவிரலில் வைத்து சுழற்றும் பற்பல கரங்கள், மகமேருவே முதலிய அஷ்ட குலாசலங்களையும் வாரியெடுக்கத் தாவும் சிற்சில கரங்கள், பாஞ்சசன்னிய முதலிய கோடி சங்குகளைப் பவளம் போன்ற திருவாயில் வைத்து நாதம் பிடிக்கும் பற்பல கரங்கள், வில்லை வளைத்து நாணி தொடுத்துக் குணத்தொனி விளைக்கும் சிற்சில கரங்கள், வீரகண்டாமணியை விருதாகக் காலிற்றொடுக்கும் பற்பல கரங்கள், கடககங்கணந் தோளணிமாலை கழற்றியெறியும் சிற்சில கரங்கள், வீணை புள்ளாங்குழல் பேரி யாழ் முதலிய நாகசுரங்களை நாதிக்கச் செய்யும் பற்பல கரங்கள், மிர்தங்கம்-மத்தளம்-தாள முதலிய கருவிகளைக் கொட்டியடிக்கும் சிற்சில கரங்கள், இவ்வாறு உலகமெல்லாம் நிறைந்த கரங்கள். இத்தன்மையான விபரீதம் விளைத்துக்கொண்டிருக்க, மேலண்டத்திற்கும் மேலாகபோன சிரங்களானவை அதற்கப்பாலுள்ள பேரண்டத்திற்கு மூட்டுக்கொடுத்ததைப்போல் முட்டிக்கொண்டு, நாலண்டையுங் குனிந்து பார்த்துச் சில சிரங்கள் சிரக்கம்பஞ் செய்யும், பல சிரங்கள் கலகலவென்று நகைக்கும், சில சிரங்கள் ஆகட்டுமென்று சொல்லி அதட்டும், பல சிரங்கள் கோடையிடிபோற் குமிறி மிரட்டும், சில வாய்கள் தேவலோகங்களைப் பார்த்துப் பேசும், பல வாய்கள் திரியோதனாதிகள் செய்த சவுரியங்களைக் கண்டு ஏசும், சில வாய்கள் சத்துருக்களைத் தூற்றும், பல வாய்கள் அக்கினிப்பொறிகளைப் பீறும், சில கண்கள் சிவக்க விழித்து உறுக்கும், பல கண்கள் மின்னை வீசிப் பெருக்கும், சில கண்கள் அஸ்தினாபுரத்துள்ள துரியோதனன்-சகுனி-துற்சாதனன்-கர்னன் முதலானவர்களைத் தேடிப்பார்க்கும், பல கண்கள் உபலாவியத்திலுள்ள தருமன் - வீமன் - அருச்சுனன் முதலானவர்களை நாடிக்கோர்க்கும், சில கண்கள் பக்தாள்பேரில் அருட்பக்ஷம் வைத்துக் காக்கும், பல கண்கள் பாவிகள் இன்னும் உயிரோ டிருக்கிறார்களாவென்று நோக்கும். இப்படி பற்பலவிதமாகிய கண்களினாலும்-கரங்களினாலும்-சிரங்களினாலும் - உரங்களினாலும்-கால்களினாலும்-வாய்களினாலும்-தோள்களினாலும் - தாள்களினாலும் பிரளய கால நடுக்கம்போற் செய்யும் பிரமாதத்தை இந்திரன் முதலிய அண்டர்களெல்லாருங் கண்டு பயங்கொண்டு, கண்ணீர் சோரவிட்டு, மூர்ச்சை போய்த் தெளிந்தெழுந்து, நான்கு வேதங்களினாலும் ஸ்தவுத்தியஞ் செய்து ஏகாங்கத் திரியாங்க பஞ்சாங்க சாஷ்டாங்க அஷ்டாங்க நமஸ்காரங்கள் செய்து தோத்தரித்தார்கள். நாகலோகத்தினரெல்லாம், ஓ ஆரணனே! ஓ நாரணனே! ஓ புவனங்களனைத்தையும் பெற்ற காரணனே! ஓ கருணாகரனே! ஓ கமலாசனி காதலனே! ஓ பூரணனே! ஓ புண்ணியனே! ஓ கஜேந்திர வரதனே! ஓ கருணைக் கண்ணனே! ஓ லோக நாயகனே! கோபம் வேண்டாம்; கோபம் வேண்டாமென்று ஓலமிட்டு நடுங்கினார்கள். மத்திய லோகத்திலுள்ள மன்னுயிர்களெல்லாம், ஓ மாதவா! ஓ மதுசூதனா! ஓ மன்னுயிரைப் பெற்று வளர்க்கும் மங்களகுண சம்பன்னா! ஓ ஆபத்பாந்தவா! ஓ அனாதரட்சகா! ஓ உவணகேதனா! ஓ உலகளந்த நாதா! ஓ கமலக்கண்ணா! ஓ காசாம்பூவண்ணா! ஓ சங்கு சக்கராயுதந் தரித்தருளிய கண்ணா! ஓ காளமேகத்தையுங் கடலையுங் கறுக்கச் செய்யும் வண்ணா! ஓ எங்கள் சீதரனே! ஓ பீதாம்பரனே! ஓ பெருமானே! ஓ முகுந்தனே! ஓ முரகரி! ஓ வாசுதேவா! ஓ வைகுந்தநாதனே! என்று வாழ்த்திப் பணிந்தார்கள். முன்னமே விஸ்வரூப தரிசனஞ் செய்யக்கருதி கிருஷ்ணமூர்த்தியினுடைய ஆக்ஞையினால், துரியோதனன் சபைக்குவந்திருந்து, அவனுடைய துஷ்கிர்த்திய சிந்தையை யறிந்து, தக்கபடி தனித்தனி சில நீதிகளைத் திருஷ்டாந்தமாக எடுத்தோதியுங் கேளாத அவன் சபையிலிருக்கச் சகியாது கண்ணனிடத்தில் விடைபெற்று அப்பால் சென்றிருந்த முனிவர் மூவரும்; தங்கள் விழிகள் களிக்கத் தரிசித்துப் பிரம்மானந்த சாகரத்தில் மூழ்கினவர்களாய் அளவற்ற வேத சாகைகளினால் ஸ்தவுத்தியஞ்செய்து கொண்டாடினார்கள்.

அக்காலத்தில், அந்த இராஜசபையி லிருந்தவீஷ்மர்-துரோணர்-கிருபர்-அசுவத்தாமர்-கர்ணன்-திருதராட்டிரன்-துரியோதனன் தவிர மற்றைய பிள்ளைகள், சகுனி-சிந்துபதி முதலாகிய தேசத்தலைவர்கள், பதினெண்பாஷைத் தலைவர்கள் யாவருமெழுந்து, தீர்க்கதண்டமாக விழுந்து நடுநடுங்கி, உடல் வியர்த்து, குடல் கலங்கி, கோவென்றலறிக் கூறி, அடா பாவி என்று துரியோதனனைத் தூற்றி, ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் புகழ்ந்து போற்றி, தத்வக்கியான சித்தமுடனே கர்த்தருடைய விஸ்வரூபத்தை நோக்கவும் பயந்து, இரு கரத்தையும் சிரத்திற் குவித்து, ஓ சுவாமி! அடியேம் அக்கியானங்களினால் தெரியாமல்செய்த அபராதங்களைப் பொறுத்து இரட்சிக்கவேண்டும். புண்ணியா என்று தண்டஞ்செய்து, ஓ அருட்கண்ணா! ஓ மணிவண்ணா! மன்னியும் மன்னியும்; ஓ வெண்ணெய் திருடிக் கூத்தாடிய கள்வனே! மன்னியும் மன்னியும்; ஓ மேகநிறமுற்ற காமனைப்பெற்ற வாமனா! மன்னியும் மன்னியும்; ஓ வஸ்துரூபமாகிய வரதனே! மன்னியும் மன்னியும்; ஓ பதிதபாமரராகிய நாங்கள் செய்த பாவத்தை மன்னியும் மன்னியும்; ஓ கெடுவது தெரியாமல் விளைத்த கெடுதியை மன்னியும் மன்னியும் என்று பலவாறுகப் புகழ்ந்துபேசியும், பாடியும் ஆடியும் பாதங்களையுஞ் சிரங்களையும் பார்க்க ஏக்கமுற்றவர்களாய்ப் புலம்பிக்கொண்டிருக்க, இந்திரன்-பிரமன் முதலாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் பாரிஜாத புஷ்பங்களைக் கொண்டு சதசகஸ்திர நாமார்ச்சனை சாற்றித் தோத்திரஞ் செய்தார்கள். இதன்றியும் எழுவகைத்தோற்றம், நால்வகைப் பிறப்பென்று துன்னிய மன்னுயிர்த்தொகை யாவும் கண்ணீர் ததும்பக் கசக்கிக் கலங்கி மதிமயங்கி ஏங்கும்போது, மும்மூர்த்தியும் ஒரு மூர்த்தியாய் விளங்கிய தேவதேவன், கொதியாறிய சலம்போற் கோபமாறிக் குளிர்ந்து, சுகுணசாந்த மூர்த்தியாய் விஸ்வரூபச் சொரூபத்தை யடக்கிப் பழைய வடிவினையுடையவராய்ப் பள்ளத்தினின்றும் கரை ஏறி மாபலியினிடத்தில் தானம் வாங்க மண்டலத்தையும், விண்டலத்தையும் அளந்து அடங்கிய வாமனனைப்போல் நிற்கக் கண்டு, எல்லோரும் வணங்கி வாழ்த்தவும் போற்றவுமாகி யிருக்க, அப்பேர்ப்பட்ட காலங்களிலேயும் துரியோதனன் சற்றுங் கலங்காமல் இறுமாந்துகொண்டு எனக்குப்பட்டமான நாள்முதல் இந்நாள் வரையிலும் அனேக இந்திரசாலம் மகேந்திர சாலங்களெல்லாம் பார்த்தேன் எனக்கிது எம்மாத்திரம் போ போ; இன்னுஞ் செவ்வையாகக் கற்றுக்கொண்டு வா; போவென்று சொல்லி, சிங்காசனம்விட் டிறங்காமல் திட தைரியத்துட னிறுமாந்திருந்தான். அப்பேர்ப்பட்டவனை ஸ்ரீ கிருஷ்ணபகவான் உறுத்துப் பார்த்துச் சொல்லுகின்றார்.

ஓய் துரியோதன மகாராஜனே! நல்ல காரியஞ் செய்தீர். நம்மைப் படுக்குழியிற்றள்ளிக் கொல்லவல்லவோ நினைத்தீர். உமது நினைப்புக்குத் தெய்வஞ் சகாயம் பண்ணுமற் போய்விட்டது. என துபத்தினிமார்களின்மாங்கல்ய பலமானது என்னை இரட்சித்தது. இப்போது நமக்கு வெகு சந்தோஷமாச்சுது. சக்கிராபதியாகிய நீர் அக்கிரமத்துக்குடன்பட்டபடியால், விக்கிரமத்துடன் உமதுபுத்திரமித்திர களத்திராதிகளையும் இன்றே கொன்று தென்றிசைப் பாலனிடத்தில் அனுப்பிவைப்பேன். அப்படி செய்யாமல் மனம் பொறுத்தேன். அதேனென்று கேட்பீராகில், பூர்வம் நீரும் அர்ச்சுனனும் துவாரகைக்குவந்து நம்மைப் படைத்துணை கேட்டபோது, ஆயுதம் எடுக்கிறதில்லை என்று வாக்குத்தத்தஞ் செய்திருந்த படியினாலேயும், சூதாடிச் செயித்து துரோபதையை துகிலுரிந்த சபையிலுங்கள் நூறுபேரையும் நானே கொல்லுகிறேன் என்று வீமசேனன் சபதம்பண்ணிய வீரவசனம் தப்பிப்போகாமல், தூதுவந்த நான் சகல பகையு முடித்துவிட்டால் உமது பகைவராகிய பாண்டவர்களுக்குப் பெருமையில்லை என்றும், இவைகளை எல்லாம் எண்ணிப்பார்த்து இன்று உம்மை மன்னித்துப் பிராணனுடன் விட்டு வைத்ததேயல்லாமல் வேறில்லை. நல்லது ஓய் துரியோதன மகாராசனே! நீர் எனக்குப் பூமியிற் பள்ளம் வெட்டியபடியால், நான் உமக்கும் உமது புத்திரமித்திரர் யாவருக்கும் ஆகாயத்திற் பள்ளம்வெட்டி யிருக்கின்றேன். உமக்கு அனுகூலமானவர் களுடனே அந்தப் பள்ளத்தில் அட்டியில்லாமல் விழப்போகிறீர்; இதற்கு யாதொரு சந்தேகமும் இல்லை. (முன்னளந்த நாழி பின்னளக்கும்) என்னும் பழமொழியாகிலும் கேட்டதில்லையோ; இந்த மொழியின் தாற்பரியமென்னவென்றால், அரிசி முதலிய வஸ்துக்களை முன்னாலே ஒருவருக்கொருவர் அளந்து கொடுத்திருந்தால், வாங்கினபேர்கள் பின்னாலே அளந்து கொடுப்பார்

களாதலால், உலகத்தில் ஒருவருக் கொருவர்
உதவுதல் வேண்டுமென்று சொல்லுவார்கள்.
அப்படியல்ல இந்த மொழிக்குப் பொருள்
சொல்லுகிறேன் கேளும். பூர்வத்தில் நல்வினை
தீவினைகளை எவ்வளவு அளந்து தொகை
செய்து வைத்தார்களோ, அந்த அளவின்படி
பின்னுக்கு அனுபவிக்கும்படியாய் அந்த
வினைகள் அளந்திருப்பதை நடத்துமென்று
பொருள் கொள்ளும் பூர்வமென்று சொல்லு
வது முன்ஜனனமென்று சிலர் பேசுவார்கள்;
அப்படி எண்ணவேண்டாம். நடந்த தெல்
லாம் ஜன்மாந்திரமென்றும், பூர்வமென்றும்,
கதாப்தமென்றும் சொல்லப்படும். ஆகையால்,
இப்போது என்னை குழியிற்றள்ளப் பள்ளம்
வெட்டியபடி தெய்வம் உமக்கிதோ பின்னாலே
பள்ளம் வெட்டி இருக்குதென்று தடையற
யோசிக்கலாம் என்று எல்லோருங் கேட்கும்
படியாகச் சொல்லி, ஸ்ரீ கிருஷ்ண பகவான்
சபையை விட்டெழுந்தருளிய போது, வீஷ்
மர்-துரோணராதி வெகு ஜனங்களும் வந்த
னஞ்செய்து அவர்முகநாடிப் பின்றொடர்ந்து
வர, அவர்களெல்லாரையும் அவர் பார்த்து
நகைத்து கண்டீர்களாசற்குணவான்களே! எந்
தத் தலத்தில் எந்த குலத்தில் இந்த மோசம்
நடக்கும்! இவன் ஆகத்தக்கவனால் இப்பே
ர்ப்பட்ட அனியாயத்திற்கும் உடம்படமாட்
டான். இவன் அழிந்து போகிறவனாகையால்,
இந்தத் துன்மார்க்க புத்தியை நினைத்தான்.
நீங்களெல்லோரும்அறிந்திருங்கள்; யென்பே
ரிற் குற்றமில்லை நான் போய் வருகிறேன்
நீங்களிவ்விடத்திற்றானே நில்லுங்களென்று
சொல்லிக் கர்னனுடைய கையைப் பிடித்துக்
கொண்டு சிலதூரம் போய் இதனைச் சொல்லு
வதானார்.

### கண்ணன் கர்னனோடு சம்பாஷித்தல்

ஓ அங்க தேசாதிபதியே! பார்த்தீரா!
நானென்ன விரோதியா! இல்லை உனக்கும்
அவர்களுக்குங் கலகமூட்டி விட்டவனா! நீ
வேறு அவர்கள் வேறென்று பார்க்கும்படியா
னவனா? ஒன்றுமில்லையே; பாண்டவர்கள்
சொல்லிய சங்கதியைக் கேட்டு உற்றது சொல்
லவந்த தூதன்யான்; என்னைப் படுகுழியிற்
றள்ள நினைக்கலாமா? இந்தப் பாவம் வீண்
போமா? தூதரைக் கொல்ல நினைத்த தோஷம்
இந்தப் பூதலமுள்ள மட்டுக்கு நீங்காதிருப்
பது மல்லாமல், அவன் செல்வமு மோங்க
மாட்டாதே? அவனுடையபுத்தியை நீர்தானே
யோசியும்? அவனுக்கு இன்னம்தகுந்த புத்திக
ளைச் சொல்லும்? நீர்இங்ஙனே நில்லுமென்று
சொல்லி நாலடி பெயர்த்து வைத்துப் போய்,
மறுபடியும் ஏதோ ஒரு நினைப்பு வந்தவரைப்
போற் கர்னனை யழைத்து, ஓ கர்னராஜனே!
நீர் சாஸ்திர விசாரணையை யுடையவர், நல்ல
புத்திசாலி, சாமர்த்தியர், விபகாரமுடையவர்,
மிகு கொடையாளி, அங்கதேசாதிபதி எல்லா
பாக்கியமும் உமக்கு இருக்கின்றது. ஆனால்,
ஒரு குறைவு மாத்திரமுண்டு. அதாவது நீர்
இன்னானென்றும் தாய் தந்தை இன்னாரென்
றும் தெரிந்துகொள்ளாம லிருக்கின்றீர். உல
கத்தா ரெல்லாரும் சூதபுத்திரனென்று பச்
சையாய்ச் சொல்லுகிறார்கள். நீரும் சபையி
னிடத்தில் யாராகிலும் இந்த இழிவு சொல்
லைப் பேசினால் அப்போது குன்றிப் போகின்
றீர். அது ஞாயந்தான் எவ்வளவு அழகும்
செல்வமும் தவமு மிருந்தாலும் குலதோஷம்
வரலாகாது; வந்தாலோ குணமோசம் போம்.
நானுமப்படியே எண்ணியிருந்தே னப்பால்
விசாரிக்கு மிடத்தில், உமது உத்தமப் பிறப்பு
முதலிய தன்மைகளெல்லாங் கேட்டு மேலாகிய
பரம சந்தோஷமடைந்து இந்தச் சந்தோஷ
சமாச்சாரத்தை உமக்குச் சொல்லவேண்டு
மென்றே இவ்வளவு தூரம் வந்தேன்.
மேலும் நானறிந்தும் உமக்குச் சொல்லாவிட்
டால் என்னத்தனை சிநேகத்துரோகி இவ்வுல
கத்திலிரா னதலாற் கொஞ்சங் கியாபகமாய்
கேளும். குந்திபோஜ மகாராஜாவின் குமா
ரத்தியாகியும், பாண்டுபூபதியின் பத்தினியா
கியுமிராநின்ற குந்திதேவி யம்மனவள், தன்
தந்தையிடத்திற் கன்னிகையா யிருக்கும்
போது, தூருவாசர் அருள்செய்த மந்திரம்
ஐந்தில் ஒரு மந்திரத்தைப் பரிக்ஷிக்க நினைத்
துச் செபிக்க, அந்த மந்திரத்துக்கு அதிதேவ
தையாகிய சூரியபகவா னறிந்துவந்து குந்தி
தேவிக்கு அனுக்கிரகஞ் செய்ய, உடனே உம்
மைப் பெற்றாள். அந்தச் சூரியனுடைய வரத்
தினாற் கன்னிகையாகவே யிருந்து, பின்பு
பாண்டுராஜனைக் கலியாணம் பண்ணிக்கொ
ண்டு மூன்று மந்திரங்களால் தருமராஜன்-
வீமசேனன் - அருச்சுனன் இந்த மூன்று
பிள்ளைகளையும் பெற்றுக்கொண்டாள். மற்ற
ஒரு மந்திரத்தையும் தன் சக்களத்தியாயும்,
பாண்டுராஜனுக்கு துவிதியை பாரியாளுமா
கிய மத்திராதேவிக்கு அநுக்கிரகஞ் செய்து,
திவ்யமான பிள்ளைகள் ஒரு கர்ப்பம் ஒரு பிறப்
பாய் நகுல சகாதேவர்களைப் பெற்றுக்கொள்

ளச் செய்தாள். கேளும் கர்னமகாராஜனே! கன்னிகைப் பருவத்தில் முதற்பெற்ற பிள்ளை யாகிய உம்மை வளர்க்கப் பாக்கியம் பண்ணு மல், உலகம் பழிக்குமே அரசன் பெண்ணுகிய இன்னுள் கலியாணமில்லாமற் பிள்ளையைப் பெற்றுளென்று, தேரை மோர்ந்த இளநீ ரென்னும் பழமொழிபோல் வருமே; தன் தகப்பனுடைய நீதிக்கு குறைவுண்டாகுமே என்றேங்கி, உடனே ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டுவிட்டாள். மற்றக் காரியமெல் லாம் உமக்குத் தெரிந்தேயிருக்கின்றது. நான் இனி விசேஷித்தொன்றுஞ் சொல்லவேண் டியதில்லை. ஆனல், பாண்டவர்களுக்கு மூத்த தமயன் நீராகையால், இந்த ராச்சியத்தைச் செயித்துக்கொண்டாலுஞ் சரியே, அல்லது விட்டாலுஞ் சரியே, இன்றுமுதல் உமது தம்பிமார்கள் ஐவரும் வணங்க நீருமிணங்கிச் சகோதர வாஞ்சல்லிய மேலிடும்படியாகப் பொருந்தி வாழ்வைப்பெற நான் கண்ணுற் கண்டு களிக்கவேண்டுமென்று ஆசைகொண்டு இந்தமொழிகளை விண்டேன். இரண்டாம்பே ருக்குத் தெரியவேண்டாம். மனதுண்டானல் யோசித்து உடனே வந்துசேருகிறது உத்த மம். அப்பால் உமதிஷ்டம் என்பேரிற்கோபம் வேண்டாம் என்று சொல்லிய ஸ்ரீ கிருஷ்ண ணனைப் பார்த்துக் கர்னன் சொல்லுகிருன்.

ஓ கிருஷ்ணதேவா! இன்றெனக்கு நல்ல காலம் என் குலகோத்திர முதலிய யாவையுந் தேவரீர் வாக்கியத்தால் தெரிந்துகொண்டு தன்னியனுனேன், சுகமடைந்தேன், கிருதார்த் தனுனேன், கீர்த்திமானுனேன். ஆனல், ஒரு வார்த்தை கேளும்; பாண்டவர்கள் என் தம்பி மார்களென்று இப்போ தறிந்துகொண்ட யான் அவர்களிடத்தில் வந்து சேர்ந்து விட்டால், அடாபாவி! நன்றி குன்றினவனே என்று நாலுபேரும் பகைத்து நகைப்பார் களே யல்லது தெரிந்த யோக்கியனென்று என்னைச் சிந்திக்கப் போகிறதில்லை. உல கம் நிந்திக்கும்; என் தம்பிமார்களுந் தேவ ரீரும் என்னை எவ்வளவாக மதிப்பீர்கள். அது மரியாதையல்ல; மேலும், ஆற்றில் மிதந்துவந்த என்னை யெடுத்துச் சூதனுய கன் வளர்த்துவந்த காலத்தில், இன்னன்- இன்னவூர்-இன்னஜாதி-இன்னகுலம்-இன்ன கோத்திரம் என்று எதுவுமறியாமல் மன துங்கூசாமல் என்னையாதரித்து அங்கதேசாதி பதியாக்கி, அஸ்தினுபுரத்தின் செல்வங்களை யெல்லாம் என்வசத்தி லொப்பிவைத்துத் தன்னுடனே கூட சரியாசனத்திலு மேற்றி, சகல ராஜர்களும் பணியும்படியாகச் செய்து, சிரேஷ்ட பிராதாவைபார்க்கிலும் விசேஷமரி யாதை யுடையவனுய்ப் பேதமில்லாமல் உடல் இரண்டு உயிரொன்றென்று உரைக்கும்படி யாக மலரும் மணமும்போல் வைத்திருந்த மகாராஜனுகிய துரியோதன பூபனுக்கும், பாண்டவர்களுக்கும் தற்காலம் பகைமேலிட்டு, உனக்கோ? எனக்கோ? இப்பவோ? அப்ப வோ? வென்றிருக்கும்போது, செய்தநன்றி குன்றிய தீயர்கணுப்போல் நான் என் தம்பி மார்களிடத்திற் கூடிக்கொள்வது நியாயமா? நீரே சொல்லுமென்று கச்சைக் கொடியினனு கிய கர்னன் சொல்ல பச்சைத் திருமேனியையு டைய கண்ணன் சொல்லுகிருர். ஐயா கர்ன னே! நானறியக்கேட்டதையும் நான் சொல்ல வேண்டிய கடமையுஞ்சொன்னேன். அப்பால் உமது இஷ்டத்திற்கு சரியானபடி நடக்கலா மென்று விடைபெற்றுக்கொண்டு, அஸ்வத் தாமன் அவ்விடத்திற் நிற்கக்கண்டு, வாரு மையா அஸ்வத்தாமரே யென்று கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு நடந்துபோய் இதனைச் சொல்லுவார்.

## கண்ணன் அஸ்வத்தாமனேடு சம்பாஷித்தல்

ஓ குருபுத்திரரே! நான்கேட்டகாரியமும், துரியோதனன் சொல்லிய உத்தரமும், எனக் குப் பள்ளம் பறித்ததும் இதுகளெல்லாம் உமக்குச் சம்மதமாயிருக்கிறதா? ஐயோ! அனி யாயமாய் பதின்மூன்று வருடம் நாட்டை விட்டுக் காட்டில் வருந்திவந்த பாண்டவர் களுக்கு அவாளுடைய நாட்டையுங் கொடா மல் ஐந்துவீடுங் கொடுப்பதில்லையென்று சொன்னல், அவர்களென்ன இவனை விடப் போகிறவர்களோ? உமக்கென்ன தெரியாதோ? நாளை நடக்கப்போகிற கெடுதியை நாமெல் லோரும் அறியவே போகின்ருேம். (பதருத காரியம் சிதருது) என்னும் பழமொழி பொய் யோ? அது போகட்டும் இந்தத் துரியோதன னுக்கு இவ்வளவு கர்வமென்ன? உங்களை யாவாகிய துரோணரைக்கூட ஆசாரியரென் றும் பாராமல், ஒவ்வொரு சமயத்தில் எடுத் தெறிந்து பேசுகிறதாய் நான் கேள்விப்பட்டி ருக்கிறேன். உம்மிடத்தில் மெத்தபயங்கர மாயிருக்கிருனும்; நீரெப்போப்பட்டவர் இந் தத் திரிலோகத்திலும் உமக்கு மிஞ்சியபோக

ளொருவருமில்லே. ஐயா! உமக்கு அருச்சுனன்
பேரிற் பக்ஷமுண்டு; நீங்களிருவரும் பள்ளிக்
கூடத்துக் கூட்டாளியாகச்சே, உங்களிலொரு
வர்க்கொருவர் வைத்திருக்கும் பக்ஷத்தை நான்
சொல்லவேண்டியதில்லே. அதற்கு உங்கள்
மனதே சாட்சி; இன்னொரு காரியம் துரியோத
னன் உம்மை வணங்கி வழிபட்டு நாளே நடக்
கப்போகிற யுத்தத்திற்குச் சேனுதிபதியாயிருக்
கச் செய்வானென்று நான் நினைக்கிறேன். ஒரு
வேளே அப்படி நேரிடுமாகில், உங்கள் தகப்
பனுக்குச் சீஷராகிய பாண்டவர்கள் உமக்
குஞ் சீஷர்களே? அவசியம் பிதுராசாரமென்
னுந் தன்மையைப்போற் பாண்டவர்களிடத்
தில் உங்கள் தகப்பனுருக்கிருக்கும் பக்ஷம்
உமக்குமிருக்கவேண்டும். நீர் பின்னேயொரு
உதவியுஞ் செய்யவேண்டாம். சேனுதிபதி பட்
டத்திற்கு மாத்திரம் ஒப்புக்கொள்ளாதீர். எவ்
விதத்திலாகிலும் விலக்கி விட்டுவிடும். பாண்ட
வர்களுக்கு உம்மாலாகிற உபகாரமிதுவென்று
வாயினுற் பேசிக்கொண்டு வந்து தவது வலக்
கரத்தின் விரலிருக்கும் முத்திரைமோதிரத்
தைபெருவிரலாற் றள்ளி நிலத்தில் விழச்
செய்தார். அப்போதே பூமியில்விழுந்த அந்த
மோதிரத்தை அவ்வத்தாமன் கண்டு இரங்கி
யெடுத்து ஐயனே! இதோ மோதிரங் கீழே
விழுந்ததென்று கொடுக்க, அதை வாங்கக்
கைநீட்டினவர்போல், மேல்நீட்டி ஆகாயத்
தைப்பார்த்து, அஸ்வத்தாமரே! சூரியனேப்
பரிவேடஞ் சூழ்ந்திருப்பதைப் பார்த்தீரா!
உடனே மழைக்கேதுவாயிருக்கிறது. நானுஞ்
சேனேகளும் பாண்டவர்களிருக்கும் உபலாவி
யம்போய்ச் சேருகிறவரைக்கும் மழையில்லா
மலிருக்குமாவென்று கேட்க, அஸ்வத்தாம
னும் அந்த மோதிரமெடுத்த கையைநீட்டி
ஆகாயத்தைக்காட்டி, ஆம் சூரியப்பிரிவேடமே
யென்றுசொல்ல, அப்பாற் பூமியைப் பார்த்
துக் கையைக்காட்ட, அஸ்வத்தாமன் அவர்
கையில் அம்மோதிரத்தை வைக்க வாங்கிக்
கொண்டு நல்லது போய்வாருமென்று விடை
பெற்றுக்கொண்டு, தமது எண்ணங்கள் நிறை
வேறியதுபோக, இன்னுமென்ன இருக்கிற
தென்று எண்ணிச் சந்தோஷமடைந்து,
தேவர்களெல்லாம் பூமாரிபொழிந்து போற்
றும்படியாகச் சாத்தகி முதலிய சகல ஜனங்க
ளுடனேயும், விதுரன் வீட்டுக்கு வந்து மத்தி
யான போஜனஞ்செய்து இளைப்பாறி இருந்
தார்.

இப்பால், அஸ்வத்தாமன் ஸ்ரீ கிருஷ்ண
மூர்த்தியினிடத்தில் விடை பெற்றுக்கொண்டு
இராஜசபைக்குப் போகும்போது, அவ்விடத்
தில் இருந்த சகுனி முதலாகிய பேர்கள் அஸ்
வத்தாமன் செய்த குறிப்பைக் குற்றமாகப்
போதனைசெய்து, துரியோதனுடைய மனதை
கலைத்துவிட்டார்கள். அப்போது வணங்கா
முடியோன் மனம்பதைத்து, சபையிலுள்ள
யாவரையும் பார்த்து, கேட்டீர்களா? பகை
யாளியின் தூதனென்றுவந்த அந்த பஞ்சை
யைப் பொருட்படுத்தி இந்த அஸ்வத்தாமன்
அவன் பின்னே போனதும், யாவருக்கும்
போதிக்கும் ஆசாரிய புத்திரனுகிய இவனுக்கு
அவன் போதித்ததும், அப்படியே இவன்
உடன்பட்டுத் துரியோதனன் எனக்குச் சேனு
பதி பட்டங்கட்டினுற் பாண்டவர்கள் பக்ஷத்தி
லிருந்து துரியோதனனேக் கெடுத்துவிடுகிறே
னென்று சொன்னதும், அந்தக் கிருஷ்ணன்
இவன் சொல்லே நம்பமாட்டாமற் சத்தியம்
பண்ணிக் கொடுவென்று கேட்க, அப்படியே
ஆகாயம் பூமியறிய பாண்டவர்களே ரட்சிக்
கிறேனென்று பரவசஞ் செய்துகொடுத்து
வந்ததும், என்ன ஆச்சரியம்? இந்த மித்
துருத் துரோகிகளே எப்படி நம்புவதென்று
உரக்கக்கூவி, ஐயோ, என்னுடைய சோத்
தைத் தின்னத்தக்க பேரெல்லாரு மிப்படியா
யிருக்க வேணுமா? ஓ தெய்வமே! என்று சிந்
திக்க, அப்போது அந்த வசனத்தை கேட்டுக்
கொண்டு சபைக்கு வந்த அஸ்வத்தாமனேத்
துரோணர் முதலிய யாவரும் நிந்திக்க, அஸ்
வத்தாமன் சிந்தித்து, நாமொன்றும் பிர
மாணம்பண்ணிக் கொடுக்கவில்லே. அவரும்
பிரமாணங் கேட்கவுமில்லே. இப்படியிருக்க,
இப்பேர்ப்பட்ட அபரோதனே எப்படி விளே
ந்ததென்று யோசித்து, சூரியப் பரிவேடங்
காட்டியது ஆகாயத்தை காட்டினுனென்றும்,
பூமியில் விழுந்த மோதிரத்தை யெடுத்து
பூமியைத்தொட்டுச் சத்தியஞ் செய்தானென்
றும் ஸ்தாபித்து விட்டார்கள். இது சரிப்
பட்டுப் போச்சுது. இனி நாமெத்தனே விதமா
கக்கற்ற உண்மைகளேச் சொன்னுலும், இந்த
நாட்டார்கள் சற்றுகிலும் நம்பமாட்டார்கள்.
ஆ! ஆ! கிருஷ்ணு! உன் எண்ணத்தில் வைத்
துக்கொண்டு பண்ணிய சூதா யிது? புண்ணி
யனே! உன்னெண்ணம் நிறைவேறிற்று?
இந்த வையகமெல்லாம் என்னே வஞ்சகனென்
றுரைக்கும்படியாக ஒரு பேர் மாட்டிவிட்
டையே, சபையிலிருந்த எல்லார்மனத்தையும்

பம்பரம்போலாட்டிவிட்டையே,செந்தாமரை நாட்டமுடையவனே! நீரே இப்படி மித்திர பேதஞ்செய்யக் கங்கணங் கட்டிக்கொண்டாற் பாண்டவர்களுக்குப் பகைவருமுண்டோ? ஓ ஆண்டவனே என்று வருந்திக்கொண் டிருந்தான்.

## குந்திதேவி கர்னனிடஞ் செல்லுதல்

அப்பால் விதுரன் வீட்டிற்சென்ற சதுரனாகிய கிருஷ்ணமூர்த்தியானவர், பகற்காலமெல்லாம் இளைப்பாறிக்கொண் டிருந்து, சாயங்காலம் தங்களத்தையாகிய குந்திதேவியினரண்மனைக்குச்சென்றார். இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களும் ஏத்திப் போற்றி, நமது கர்த்தன் நமக்காக பொன்னடி பெயர்த்தருளி என்ன பாடுபடுகின்றாரென்று தோத்திரஞ்செய்து வாழ்த்தினார்கள். அதுகாலத்தில், வசுதேவருடனே கூடப்பிறந்த நல்லத்தையாகிய குந்திதேவியம்மனைவள் எதிர்கொண்டு வந்து கண்டு மருமகனைத்தழுவி வாழ்த்தவும், கோபாலகிருஷ்ணன் குந்திதேவியை போற்றி மாமி! கொடையாளியாகிய கர்னனிடத்திற்கு போய்வந்தீராவென்று கேட்க, இன்னம்போகவில்லையென்று சொல்லக்கேட்டு, இது நல்ல தருணம் போய்வாருமென்று நடந்த காரியங்களைச் சொல்லி, இனி நடத்தவேண்டிய காரியங்களையும் பேசிக்கொண்டு வாருமென்று பிரயாணங்கூட்டி யனுப்பிவிட, உடனே குந்திதேவி மூத்தமகனைப் பார்த்து பேசவேண்டும் என்னும் ஆசைமேலிட்டு, நேசவிசுவாசமுள்ள கர்னமகாராஜனுடைய கொலு வாசலுக்குப் போகும்போது, வாசற்காவலர்கள் விரைந்தோடிச்சென்று, ஓராஜபூஜித மகாராஜராஜ ஸ்ரீயாகிய போஜனே! கேளும், வாசநீங்காத மாலையணிந்த தேசத்தரசர்கள் திறைகொண்டளக்க, சிங்காதனத்திலிருந்து செங்கோற் செலுத்து மெங்கோனாகிய பாண்டு பூபதியின் பட்டத்தரசி குந்திமாதேவி நமது கொலுக் கூடவாயலில் எழுந்தருளினாரென்று இறைஞ்சிக்கூற, அந்த வார்த்தையை அங்கதேசாதிபன்கேட்டு, எதிராகச்சென்று பிரதக்ஷணஞ் செய்து, சாஷ்டாங்கதெண்டனிட்டு பாதபூசை செய்து மிகுந்த வாச்சல்லியத்துடனே யழைத்துக் கொண்டுபோய் ஆசனமமைத்து, அதன் மேலிருத்திப் பிர்மானந்த மடையவும், தாயாகிய குந்திதேவியும் குமாரனைப்பார்த்து, சந்திரனைக் கண்ட சமுத்திரம்போற் சரீரம்பொங்கிச் சந்தோஷமடையவும், இவ்விதமாக இருவருமகிழ்ந்து ஒருவரையொருவர் உற்றுநோக்கவும், கர்னமகாராஜன் கண்ணீர் சொரிந்து, அம்மா! ஜன்மாந்திரங்களிலே நான் நல்ல தவங்களைச் செய்திருந்தபடியால், எனக்குத் தரிசனங்கொடுக்க இவிடத்திற் கெழுந்தருளினீர் என்பாக்கியமே பாக்கியம். தாயே! தேவரீர் இவ்வளவு தூரந் திருவடிவருந்த வரவிருந்த காரியமென்ன? அதனைக் கிருபைசெய்து திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கர்னன் கேட்கக் குந்திதேவி சொல்லுகின்றாள்.

கேளும் குழந்தாய்! நீ என்னுடைய பிள்ளை; நானுன்னைப்பெற்றதாய். அதெப்படியென்றால், தன்னந் தனிமையாகிய கன்னிகை பருவமாய் என் வீட்டிலிருக்கும்போது, ஒரு முனிவரானவர் என்னுடைய தந்தையாகிய குந்திபோஜ மகாராஜனிடத்திற்கு வந்து, வந்தனுதி மரியாதிகளைப்பெற்று ஆசீர்வதித்து, சாதுர்மாத விரதஞ் செய்யவேண்டும் என்றுசொல்ல, அதற்குடன்பட்டு, எனது தந்தையானவர் அந்தப் பெரியவருக்குச் சகல வித ஊழியப் பணிவிடைகளுஞ் செய்யும்படி எனக்குக் கட்டளையிட்டார். அந்தப்படிக்கு முதல்நாளைப்போற் பலநாளுஞ் சகலவித உபசாரங்களுஞ் செய்துக்கொண்டு வந்தேன். அப்போது அந்த மகாமுனிவருக்கு என்பேரிற் கிருபைவந்து மகிழ்ந்து, ஐந்து தேவதைகள் பேரால் ஐந்து மந்திரம் உபதேசஞ் செய்து ஆசீர்வதித்துச் சென்றார். அப்பால் வாலையாகிய யௌவனமுடைய யான் ஏதுந் தோன்றாமல், அந்த மந்திரத்தி லொன்றைப் பரிட்சிக்கும்படி எண்ணியுச்சரித்தேன். அந்த க்ஷணத்திற்றானே அந்த மந்திரத்துக் கதி தேவதையாகிய சூரியபகவான் தன் கிரணங்களைத் திருக்கிப் பிரத்தியக்ஷமாகி, என்னைத் தருணியாக்கிக்கூடி, மீண்டும் எனக்கு அக் கன்னிகைப் பருவங் குறைவில்லாம லிருக்கும்படி வரங்களைப்பெருக்கி அனுக்கிரகஞ்செய்ய, உடனே எனது கர்ப்பத்தில் நீ வந்து உதயமாயினை? மகனே! அந்த வேளையில் உன்னுடைய திருவுருவத்தையும், கவச குண்டலத்தையுங் கண்டு களிகூர்ந்த யான், கன்னிகையாதலாற் கன்கலக்கமுற்று ஆளனில்லாமல் ஆண்பிள்ளை பெற்றாள்; அரசனுடைய மகளென்று யாவருஞ்சொல்லிப் பழிப்பார்களே; தந்தை முதலிய பந்துக்களும் நிந்திப்பார்களே; குடிகேடி யென்றென்னைக் குறித்துக் கோபிப்பார்களே; குணவதி இப்படி யானு

ளென்று கூறுவார்களே; என்று குலைகுலைந்து, பற்பலவாறாக நினைந்து பழிக்கஞ்சின பாவியாகிய யான், ஒரு பெட்டகத்தி லுன்னை வைத்து ஆற்றில் விட்டுவிட்டேன். அன்றுமுதலெனக் கொன்றுந் தெரியாது. அப்பனே! இன்றறிந்துன்னைப் பார்க்கவந்தேன். என் கண்மணியே! உன்னை நானெடுக்கவும், மார்போடணைத்துப் பால்கொடுக்கவும், நீராட்டவும், தாலாட்டவும், சந்திரனைக் காட்டவும், சப்பாணி கொட்டவும், ஆபரணம் பூட்டவும், தத்தடியிட்டு நடந்து சிறு தேரோட்டவும், சக்கரை கைக்குங்குதலை மொழிபகர்ந்து தாயே அம்மாவென்று நீ அழைக்கவும், சரீரந் தழைக்கவும் பாக்கியஞ் செய்யாத பாவியானாகினேன். அடாபாலனே! நானுனக்குத் தாயென்றும், நீ யெனக்கு ஜேஷ்ட குமாரனென்றும், பாண்டவர்களுனக்குத் தம்பிகளென்றும், சந்தேகமில்லாமல் உனக்குத் தெரிவிக்க வந்தேனென்று குந்திதேவியார் சிந்தை வருந்திச் சொல்லினாள்.

இந்த வார்த்தைகளை யெல்லாம் குந்தியின் முதற்புத்திரனாகிய கர்னன்கேட்டு, அம்மா கோபஞ்செய்யாதீர், அடியேன் ஒரு மொழி சொல்லுகிறேன். இதுவரையிலும் இல்லாத தாய் இப்போது எங்கே யிருந்து வந்தார்கள். இதுகள் நம்பகம் இல்லை. தேவரீரை ஆளாக்கி இங்கு அனுப்பிவைத்த ஆளை நான் அறிவேன். மேலும் உமது வாக்கியம் உண்மைதான். சந்தேகமில்லை. அப்படி இருந்தாலும் நானிப்போது நம்பமாட்டேன். அதேனெனில், எவர்களானபோதிலுந் திரவியசம்பன்னரா யிருப்பார்களாகில் அவர்களை, என் பிள்ளை - என்தமயன் - என்தம்பி - என்மாமன் - என்தந்தை - என்பந்து - என்சொந்தம் என்று சொல்வது இவ்வுலகமார்க்கம். ஆகையால், துரியோதன மகாராஜனுடைய சம்பத்தெல்லாம் என்பற்றாயிருக்கின்றது. அதனால் எனக்குத் தாயென்று வெகுபேர் வந்து, நான் பெற்றேன் நான் வளர்த்தேனென்றார்கள். அப்போது நான் விசனப்பட்டு, "அன்னையெத்தனை யெத்தனை யன்னையோ அப்பனெத்தனை யெத்தனை யப்பனோ" என்று மொழிந்த பெரியோர்களின் சொல்லைக்கிணங்க இருக்கின்றதே நமது பிறப்பென்று நாணமுற்று, சூதநாய்கனையும், அவரது மனைவியாராகிய இராதையம்மனையும் வணங்கி நோக்கி, என் வரலாறென்னவென்று கேட்டேன். அவர்கள் சொல்லியதாவது, குழந்தாய்! பிள்ளையில்லாமல் வருந்தியிருந்த வெங்களுக்குப் பிள்ளை கலிதீர்க்கும்படியாய்ப் பெருகிய ஆற்றிற் பெட்டியில் மிதந்துவந்த பெருமான் நீ, உன்னைக் கண்டெடுத்து வந்து வளர்த்துப் பேரிட வேண்டுமென்று யோசிக்கும்போது, கர்னனென்று பெயரிடும்படி அசரீரிவாக்கியம் பிறந்தது. அப்படியே பெயரிட்டு எங்களாற் கூடிய சீரிட்டுவந்தோம் அப்பனே! இது நீ வந்த வரலாறென்று சொன்னார்கள். அதைக் கேட்டு மறுபடியும் அவர்களைப்பார்த்து, நல்லது நான் வந்தபெட்டியில் ஏதாகிலும் எழுதி இருந்ததா? அல்லது வேறுபொருளேதாகிலும் இருந்ததா? அந்தப் பெட்டி எங்கேயென்று கேட்டேன். அப்பா! அந்தப் பெட்டியில் உன்னுடைய திருவுருவமன்றி வேறொரு பொருளுமில்லை. அந்தப்பெட்டியுமிதோயிருக்கிறதென்று கொண்டுவந்து வைத்து, மகனே! இந்தப் பெட்டியைக் காப்பாற்றிய தன்மையைப்போல் உன்னையும் கூட வைத்துக் காப்பாற்றவில்லையென்று சொன்னார்கள். அப்போதெனக்குப் பதினொன்றும் வயதாகித் தனுர்வேதங்கற்றுத் துரியோதன மகாராஜனுடைய சம்பத்தை யனுபவிக்கும் காலமாகையால், அந்தப்பெட்டியை எடுத்து வந்து எனது அரண்மனையிற் பூசைவீட்டில் வைத்துக்கொண்டு, நித்தியபூசை தூபதீபமும் கொடுத்துவந்த காலத்தில், ஒருநாள் என்னை யாதரித்த அன்னையின் கர்ப்பம்போன்ற அந்தப் பெட்டியைத் திறந்து பார்த்தேன். அதனிடத்திலொரு நாகவுரிப்பட்டை என்னும் ஒரு திவ்வியமான பட்டடை நாலாக மடித்து விரித்திருந்தது. அது என் கண்ணுக்குத் தோற்றியபடியால், நான் எடுத்துப் பூசித்து வைத்திருக்கின்றேன். அம்மா! அந்தக்காலத்தில் எனக்குத் தாயென்று வந்த ஸ்திரீகளிடத்தில் இந்தப் பட்டுவஸ்திரத்தைக் கொடுத்து உடுத்திக்கொள்ளச் சொன்னேன். அவர்களும் உடுத்திக்கொள்ளும்படியாகக் கரத்தில்வாங்கி விரித்தவுடனே சிரத்தைத் திருப்பி உள்ளுடைந்து, உதிரம்வரண்டு அக்கினிக்கொழுந்தின் அனல்வந்து வீச, அரண்டுவெருண்டு அடித்துக்கொண்டுமோதியும் விழுந்தும் உரண்டு புரண்டும் ஓடிப்போய் விட்டார்கள். அம்மணி! என்னிடத்தில் தாயென்று வந்து பேய்போற் கதறிப் போவாரைக் கண்டு, அன்றுமுத லின்றுவரையிலும் தாயென்று வருவா ரொருவருமில்லை என்று

கர்னன் சொல்ல, குந்திதேவியார் கேட்டுக் குலுங்க நகைத்து, மீண்டு மவனைப்பார்த்து இதனைச் சொல்லுவதானாள்.

அடா எனது புத்திரசிகாமணியே! உன்னைப்பெற்ற நாளையில் உடுத்திக்கொண்டிருந்த பட்டு வஸ்திரத்தை உன்னுடம்பு வருந்தாமற் பெட்டியில் வைத்துவிட்டேன். அந்தப் பட்டோசுசி- ஆசாரம்-பக்தி-இவை யெல்லாம் உள்ளவர்க்குத் தோன்றுமல்லாமற் மற்ற பேருக்குத் தோன்றாது. ஆகையால், எதோ அந்த வஸ்திரத்தை எடுத்துவாவென்றியம்ப, அப்படியே பரிக்ஷிக்கவேண்டுமென்று கர்னனும் பக்ஷமுடன் தக்ஷணங் கொண்டுவந்து கொடுக்க, அதைவாங்கிச் சற்றுநேரம் யேங்கி, சூரியபகவானைச் சிந்தித்து, அந்நாகவுரிப் பட்டாடையை விரித்து, அரையிலுடுத்திக் கொள்ள வாடாமல் வதங்காமல், ஓடாமல் ஒதுங்காமல் வெண்டாமரைபோல் விளங்கிய முகமும், பால்சுரந்து பசந்ததனமும், பட்சமும் இச்சையும் உடையவளாயிருந்த குந்திதேவியைக் கர்னன் கண்டு பிர்மானந்தங்கொண்டு, அமுத முண்டவனைப்போல அன்பு நிறைந்து, அன்னையின் பாதத்தில் சாஷ்டாங்கமாக விழுந்து, என்னை இன்னானென்று தெரியச் செய்த இறைவியே சரணமென்று இறைஞ்சிக் கர்னன் செய்த உபசாரமும் தோத்திரமும் இன்னவிதமென்று எம்போலியரா லியம்பப் படலாமோ? அந்தக்காலையிற் குந்திதேவியானவள், தனது வாலைப்பருவத்திற் பெற்ற அக் கன்னிப் பிள்ளையைக் கட்டி தழுவிக்கொண்டு, உச்சி மோர்ந்து உடலுடனணைந்து, தேகமெல்லாந் தடவிக்கொடுத்து வளர்த்தெடுக்கப் பாக்கியம் பண்ணாமற் போனேனே என்று மனம் வருந்தும்போது, மகனாகிய கர்னன் சொல்லுகின்றான்: கேளும் மாதரசி! தேவரீர் நல்ல பூசை-விரதம்-நோன்பு - தவம் - பெரியோர் நேசம் இவை முதலிய பாக்கிய மெல்லாம் பெற்றவராகையினால், ஆறு பிள்ளைகளைப் பெற்று, ஐந்து பிள்ளைகளை யெடுத்து வளர்த்துப் புத்திரவாஞ்சையை நீக்கிவிட்டீர். அடியேன் தேவரீருடைய கரத்திலிருந்து வளரவும், பாண்டவரைவரும் யெனக்குத் தம்பிகளென்று பாரோர் மதிக்கவும், பாக்கியஞ் செய்யாத பாவியானேன். அன்றியும், என் தாய் - தந்தை - சகோதரர் - ஜாதி-குலம் இவைகளின் தன்மை இன்னதென்று தாரணியோர் சொல்லிக் கொள்ளும்படியாகிய தவஞ் செய்யாத தரித்திரனானேன். இன்றெனக்கு நல்லகாலமானதால் உம்மைக் கண்டு தெரிசிக்கப் பெற்றேன்; என் மனக்குறைக ளெல்லா மற்றேன்; மேன்மையுமுற்றே னென்று தாயும் பிள்ளையுஞ் சந்தோஷத்துடன் வார்த்தையாடி மகிழ்வுற்றபோது, குந்திதேவியானவள் கர்னனைப் பார்த்து, அப்பனே! இதுவரையிலும் உன் பிறப்பை நீயறியாதபடியால், துரியோதனனிடத்தி லிருந்தாய். இப்போது இன்னானென்று அறிந்து கொண்டமையாற், பாண்டவராகிய தம்பிமார் பணிவிடை செய்யச் சிங்காசனத்தில் வீற்றிருந்து, தேச தேச இராஜர்கள் வந்து விசுவாசமாகப் பணியவும், ஓ புவனசக்கிரேஸ்வரா! புண்யவானே! தருமபூபதிக்கு ஜேஷ்ட சகோதரனான கர்னராஜ மகாப்பிரபு! என்று தேவர்கள் முதலிய யாவர்களும் ஜெயங்கூறிக் கொண்டாடவுமாக, இனி நீ அஸ்தினாபுரத்தி லிருந்து அரசாளுகிறதைப் பார்க்கிலும் வேறாகிய வைபவம் ஒன்றுமில்லையே. அப்படி செய்வதே கடனென்று குந்திதேவியாகிய தாய் சொல்ல, அதைக் கேட்டுக் கர்னனென்னும் சேய் சொல்லுகின்றான்.

கேளுமம்மா ராஜபத்தினியே! சூரியபகவானுடைய அநுக்கிரகத்தினால் யென்னைப் பிள்ளையாகப் பெற்று, பிறர் பழிப்பார்களென் றஞ்சிப் பெட்டியிலிட்டுப் பெருங் காற்றில் விட்டுப் புத்திரப் பேராசையை நிராசை செய்துக்கொண்டு, பெற்றதும் அல்ல; பெருததும் அல்லவென்று என்னை மறந்துவிட்டீர். அம்மணி! உமது கர்ப்பத்தின் நலத்தினாலேயோ, அல்லது என்னை உற்பவித்த சூரியபகவானுடைய பலத்தினாலேயோ, ஜன்மாந்திரத்தில் நான் தேடிக்கொண்ட தபோ பலத்தினாலேயோ உயிர் பிழைத்து ஆற்றில் மிதந்துவரும்போது சூதனாயகனும், ராதையும் என்னை எடுத்து வளர்க்க அந்தச் செய்தியைத் திரிதராட்டிரமகாராசன் கேட்டுத் தன் குலத்திற்குரிய பிள்ளையாகச் சகல செல்வத்துடன் போஷித்து வந்தான். (இத்தனை பெரியவன் கைதொட் டிழுத்தால் எப்படி மாட்டோமென்பது) என்னும் பழமொழிபோல், என்னைப் பிள்ளைக் கலி தீர்த்த பெருமானென் றெண்ணி வளர்த்த சூதனாயகனும், ராதையுந் தடை சொல்லா திருந்தார்கள். நானும் தனிக் குழந்தை யாதலினால், அதிக செல்வத்தில் வளர்ந்து வந்தேன். அப்பால் துரியோத

ணுதியரும் பிறந்தார்கள். நான் பரசுராம ரிடத்தில் தனுர்வேத முதலானவைகளைக் கற்றேன். துரியோதனன் - பாண்டவர்கள் முதலிய யாவருந் துரோணாசாரியரிடத்தில் வில் வித்தை முதலானவைகளைக் கற்றுக்கொண்டு பரிக்ஷை பார்க்கும்போது, அர்ச்சுனனுக்கும் எனக்கும் பகை நேரிட்டுச் சபதங்கள் கூறிய காலத்தில், துரியோதனராஜன் என்னை உயிர்த் தோழனுக்கொண்டு, அங்கதேச பட்டாபிஷேகந் தரித்துப் பொன்மாலை யென்னும் பெண்ணைச் சுயம்வரத்திற் கலியாண முடித்து வைத்துத் தன்னுடன்கூட சரியாசனத்திலேற்றித் தம்பிமார்களும், சகல ராசர்களும் போற்றிச் சுற்றத்தார் முதலிய யாவரும் என்னைத் தொழும்படியாகச் செய்து, காணியாட்சி, அரசாட்சி, படையாட்சி முதலாகிய நிதி நிட்சேபங்களும் என்னிடத்தி லொப்பிவைத்தும், பொற்பள்ளயத்தில் தன்னோடுகூட விருந்து புசிக்கும்படியாகப் பாராட்டிப், பேரும்-பிரபலமும்-புகழும்-பெருமையும் உண்டாக்கிப் பேதமில்லாமல் என்னைப் பாதுகாத்து வந்தான்.

இதல்லாமலும், இன்னமொரு விந்தையைக் கேளும், அன்னையாகிய குந்தியே! ஒரு நாள் கெடிஸ்தலாதிபதியாகிய சுயோதன மகாராஜாவின் தர்மபத்தினியாகிய பானுமதியும், நானும் தனிமையாய் ஏகாந்தசாலையிற் சொக்கட்டானுடிக்கொண் டிருந்தோம். அந்த வேளையில், அத் துரியோதன மகாராஜன் வந்தான். அவன் வருவதை நேராகப் பார்த்த பானுமதியானவள், ஆட்டத்தை விட்டெழுந்தாள். அரசன் வந்ததை நானறிந்துகொள்ளாமல், தோர்ப்பு கெலிப்பு இரண்டும் பார்த்து விட் டெழுந்திருவென்று அரையிற் கட்டியிருந்த மேகலாபரணத்தைப் பற்றினேன். அந்தப் பட்டத்தரசி அவசரப்பட்டுப் போம்போது மேகலையறுந்து பலபலவென் றுதிர்ந்தது. அந்த அம்மனுடைய அரைவஸ்திரமுந் தளர்ந்தது. இந்த அலங்கோலத்தைப் பார்த்துக்கொண்டுவந்த அரசனானவன், சற்றுஞ் சிந்தையிற் பேதம் பாராட்டாமல், அண்ணா! மேகலாபரணத்தை பொறுக்கி எடுக்கவா! அல்லது கோர்க்கவா என்று கேட்ட துரியோதனனென்னு மிறைவனுகிய சாந்த மூர்த்திக்கு இப்போது வஞ்சகஞ்செய்து உம்முடைய ஐந்து பிள்ளைகளிடத்தில் வந்து சேரச்சொல்லி நீரழைப்பதும், உமது வார்த்தையைக்கேட்டு நான் வந்துவிடுவதும் ஞாயமா? தருமமா? அம்மணி! நீரே சொல்லும். இதன்றியும் க்ஷாத்திரமேலிட்டு பாண்டவர் சண்டை செய்யக் காத்திருக்கும்போதாகிய இன்று உமக்கு ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லக் கேட்டுவந்து அழைக்கின்றீர் அன்றுமுதலின்றுவரையிலும் தாய் தந்தை தமர் குரு தெய்வம்போலிருந்து சாதி குலம் கோத்திரம் க்ஷேத்திரம் இவைகளெல்லாம் உண்டாக்கி, எனக்கும் ஒரு பெண்ணைப் பெண்டாக்கி, அன்னபானுதி ஆபரணங்களுங் கொடுத்து ஆதரித்த மன்னனை, இந்த வேளையிற் கைவிட்டு எப்படி வரலாந்தாயே, "தந்தைசொன்மிக்க மந்திரமில்லை தாய்சொற்றுரந்த வாசகமில்லை" என்னும் நீதிக்கிணங்க, உமது சொல்லைத் தள்ளாமல் வருவேனாகில், சந்திரசூரிய ருள்ளளவரைக்கும் உலகம் பழிக்கும்; நரகங் கிடைக்கும்; நன்றிகுன்றிய பஞ்சமாபாதகரில் நான் முந்தி இருப்பேன். என்னைச் சுமந்துபெற்ற உமது கர்ப்பத்திற்கு நிந்திப்பாகிய இழிவு வந்து நேரிடும். தெய்வமும் சகியாது. இதற்கு மேலாகிய பாவமும் பழியுமில்லை. அன்னையே! என்னை முன்னமே நம்பியிருக்கும் மன்னனுக்கு அவனிடத்திலுண்ட அன்னக்கடன் கழியும்படியாய் மன்னவருடனெதிர்த்து, அவர்களை யெல்லாஞ் சின்னபின்னப்படுத்தி இந்நிலந் துதிக்கப் பொன்னுலகத்திற் புகுவேனாகில், கன்னிகையாகிய உமது கர்ப்பத்திற் பிறந்த யான் கர்னன் என்கிற பெயருடையவனுவேன். மின்னலுக் கிணையாகிய இடையும், கன்னலுக் கிணையாகிய மொழியும், சொன்னத்திற் கொப்பாகிய வடிவும், அன்னத்திற் கொப்பாகிய நடையுமுடைய அன்னையே! இப்போது சொல்லவந்த சங்கதியைச் சில நாட்களுக்கு முன்னே சொல்லுவீராகில், உமது மனைக்கு ஒப்பாக வந்துவிடுவேன். அப்போதில்லாமல், இப்போது வந்தபடியால் என் மனது ஒப்பாது. ஒருவேளை தப்பாக வந்தாலும், பாண்டவர்களுக்குத் தமயன் உண்ட வீட்டுக் கிரண்டகஞ் செய்பவனு வென்று தேவர்கள் முதல் யாவர்களுந் தூறுவார்கள். மன்னர் முதலிய யாவரும் வசை கூறுவார்கள். ஓ மாதவா! இப்படி நடப்பது சற்றுஞ் சரியல்லவே என்று வாய் குளிர்ந்த வார்த்தைகளினுல் தேற்றிக் குந்திதேவியி னெண்ணத்தை மாற்றினுன். அந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் பகீரெனப் பதறி, வாடி வருந்தி, மயங்கித் தியங்கிக் குலைகுலைந்து, கண்கலங்கிக் கோவென்றழுங் குந்திதேவி

யைப் பார்த்து, தானும் மனந்தளர்ந்து' தாயைத் தழுவிப் பணிந்து தைரியஞ் சொல்லிக் கண்ணீர் துடைத்துக் கவலையகற்றி, ஓ கருணைசுரந்த தல்லீ! இதுவெல்லாம் நமது செயலன்று. யாவும் பிரமத்தின் கட்டளையல்லது வேறில்லை. போனதுபோக துந்தகினைற்றைத் தூறு வாருபவரைப்போற் றுரிதப்படுத்தித், தேருக்குள்ள சிங்கார்முஞ் செய்து, தேவரீரை என்னிடத்திற்கு அனுப்பிவைத்த தேவன் கருத்தென்னமோ? அதைத் தெரியச் சொல்லுந் தாயேயென்று கேட்ட தனயனைப் பார்த்துத் தாயாகிய குந்திதேவி சொல்லுகின்றாள்.

என் கான்முளையே! என்னிஷ்டப்படிக்கு உன் தம்பிமார்களுடன் நீ கூடிவாழ என் கண்களிக்க காணவேணுமென்று கருதி வந்தேன். அதற்குத் தரும விபகாரமும் நீதியுஞ்சொல்லி விலக்கிவிட்டபடியால், காண்டவ வனத்திற் பகைத்து வந்த அச்சுவசேன னென்னும் நாகாஸ்திரத்தை அருச்சுனனுக்காக வளர்க்கின்றாயென்று கேள்விப்பட்டேன். அந்தக் கணையை அருச்சுனன்பேரில் எப்படியுந் தொடுக்கவே போகிறாய். அப்படியே அருச்சுனன்பேரில் பிரயோகஞ் செய்தபோது தெய்வபலத்தினால் தப்பிப் பிழைப்பானாகில், இரண்டாந்தரம் நாகாஸ்திரம் விடுவதில்லையென்று ஒரு வரமும், இதன்றி அருச்சுனன் தவிர மற்ற நால்வரும் போர்முகத்தில் நேரிடுவாராகில், அவர்களிடத்தில் நீ பக்ஷமுய்த்து இச்சைவைத்து, வீரப்பிரதாபங் காட்டாமல் லகுவாகிய யுத்தஞ்செய்து, அவர்களுயிரைக் காக்கவேண்டியது உன் கடமையாக ஒரு வரமும், இந்த இரண்டு வரமு மெனக்குக்கொடுவென்று ஈன்றாள் கேட்க, கர்னமகாராஜன் முகமலர்ந்து சொல்லுகின்றான். கேளாய் அம்மா! நாளை நடக்கப்போகிற ரணக்களத்தில் அருச்சுனனும் நானுமெதிர்த்துப்பற்பல யுத்தங்களும் பண்ணிப் பார்த்துக் கடைசியில் நாகாஸ்திரத்தை விடப்போகிறேன். அது எப்படியும் அவன் தலையை வாங்கிப்போடும் நீர் அப்போது மனங்கூசவேண்டாம். ஒருவேளை தலை போகாமல் உயிர்பெறுவானாகில், திரும்பவும் நாகாஸ்திரந் தொடுக்கேன். அதேனெனில், நல்ல சுத்தவீரன் கரத்திலிருந்து புறப்படுங் கணைகள் சத்துருவைக் கொல்லாமல் விடாது. ஒருவேளை லக்ஷயந் தப்பிப் போமாகில், மறுபடியுந் தொடுவது ராஜதர்மமும்-தனுர்வேத தர்மமும்-வீரதர்மமும்-மேலாகிய ஆண்மையுமல்ல; மேலும், மற்ற நாலு தம்பிமார்களையும் என் கையினாற் கொல்லுகிறதில்லை. இதை ஐயமில்லாமல் உமது மனதிற் கொள்ளும் அம்மாவென்று அங்கதேசாதிபதி இவ்விரண்டு வரமுங் கொடுத்துப் பூமிதேவியைப்போன்ற குந்திதேவியைப்பார்த்து, பாண்டு பூபதியின் மாதேவி! நீர் வேண்டிய வர மிதுதானா? ஆனால், எனக்கிரண்டுவரந் தாருமென்று தொழுது அடிவணங்கிய குழந்தையை ஆதரித்தெடுத்து, அப்பா மகனே! என்னருந்தவக் கண்மணியே! உனக்கு வேண்டிய வரம் இன்னதென் றுரையடா என் செல்வத்திற் சிறந்த செங்கரும்பே! என்று குந்திதேவியார் சொல்லப் புந்தி மகிழ்ந்து கர்னன் கேட்கிறான்.

என்னுயிரையும் மன்னுயிரையும் ஈன்று வளர்க்கும் இறைவியே! கேளும்; போர்க்களத்தில் அருச்சுனனும் நானும் எதிர்த்துச் சமர் புரியும்போது, அருச்சுனன் கணையினால் நான் இறந்துவிடுவேனாகில், உடனே தேவரீரோடி வந்து என்மேல் விழுந்து, என் மகனே என் மகனேயென் றலறியழுது உமது மகனென்று உலகமறியச் செய்வது ஒரு வரம். அப்போர்ப் பட்ட முடிவுகாலம் எனக்கு நேரிடுகிற வரையிலும், நானுனக்கு மூத்த பிள்ளை யென்றும், தேவரீர் தாயென்றும், பாண்டவரெனக்குத் தம்பிகளென்றும், இம் மண்ணுலகிலொருவருக்குந் தெரிவிக்காமல் மனத்தில் வைக்க வேண்டியது ஒரு வரம். ஒருவேளை வெளிப்படுமாகிற் பாண்டவர்கள் சண்டையை நிறுத்திவிட்டுச் சபதங்களையும் விட்டு, நாட்டை எனக்குக் கொடுத்து, தாங்கள் காட்டை யனுபவிக்கும்படியாய் போய்விடுவார்கள். அப்படி எனக்கு நாட்டைக் கொடுத்தாலும், அந்த நாட்டை என் தோழனாகிய துரியோதனனுக்குக் கொடுத்துவிடுவேன். ஆகையால், விரதமுங் கெட்டுச் சுகமும் விட்டுப் போவானேன்? அம்மா! இப்போது நாமிருவரும் பேசிய மர்மம் வெளிப்படாமலிருக்கவேண்டியது. இந்த இரண்டு வரமும் எனக்குத் தாருந் தாயேயென்று இருகரத்தையும் நீட்டி இரந்து கேட்குங் கர்னனை நோக்கிக், கண்ணும் மனமுங் கரைந்து விரைந்து, உன்னெண்ணப்படிக்கு வரந் தந்தேனென்றுரைத்த தாயைப் பணிய, தாயுஞ் சேயைத் தழுவிச் சிந்தை களித்துத் தேகந் தணிய, அடா கண்மணியே! இது

வரையிலும் பிரிந்திருந்த நம்மை இன்னாரென்று தெரிவித்துக் கூட்டிய தெய்வம் மறுபடியும் பிரிக்க நினைத்தால், என் மனமெப்படி தாளுவேன்? வழிநடந் தெப்படி மீளுவேன்? ஆ! ஆ! குமாரனேயென்று அலறிய அன்னையை ஆதரித் துபசரித்து, அடிமலரிணையில் முடியுற வணங்கி விடைகொடுத்தனுப்பித் துடிதுடிப்புடன் அரண்மனைக்குப் போயினான் கர்னமகாராஜன்.

இப்பால் குந்திதேவியானவள், படபடவென்று வழி நடந்துவந்து, மன்னர் பெருமான் மனையிற் புகுந்து, மருமகனாகிய கிருஷ்ணன் எதிரோடி வந்து வணங்கச் சிந்தை மகிழ்ந்து, வாரியெடுத்து உபசரித்து உள்ளறையிற் போயிருந்து, கர்னனிடத்திற் சென்றதும், அவனைக் கண்டதும், சங்கதி விண்டதும், அவன் நவின்றதும், அதற்கு அங்கு நடந்ததும் ஆகிய யாவற்றையும் குறைவில்லாமற் சொல்லக் கேட்ட கிருஷ்ணன் தன் எண்ணமெல்லாம் ஈடேறியதென்று இறுமாந்தெழுந்து, மாமி! நான் வந்து சில நாளாய்விட்டது, என்னமோ ஏதோவென்று என்னை எதிர்பார்த்துக்கொண் டிருப்பார்கள் உன் பிள்ளைகளாகிய பாண்டவர்கள். ஆதலால், விரைவில் யான் அவர்களிடத்திற்குப் போகும்படியாய் உத்தரவு கொடும் உத்தமியாகிய அத்தையேயென்று கிருஷ்ணன் கேட்க, குந்திதேவி சொல்லுகின்றாள். மருமகனே! எங்கள் குடும்பத்தினுடைய காரியங்களை யறிந்த நீயிருந்தும், என் பிள்ளைகள் சகலத்திலும் நிறுவாகசாலிகளா யிருந்தும், நாட்டையும், நகரத்தையும், நலத்தையும், மானத்தையும் பங்காளிகள் கையில் ஒப்பி வைத்துப் போட்டு, காட்டையும், கலகத்தையும், அவமானத்தையும், கைக்கொண்டு காலம் போக்குவது காரியமல்லவென்று, நான் சொன்னதாய் என் பிள்ளைகட்குச் சொல்லும். மேலும், நீர்மேலெழுத்துபோல நிலையில்லாக் காயமென்னும் நிச்சயத்தைப் பெற்ற இந்தப் புல்லுடலைக் கல்லுடலாக நினைத்து, சபையிற் கூறிய சபதத்தை நிறைவேற்றாம லிருப்பது இராஜவீரதருமமல்லவென்று சொல்லும். இதன்றியும், இந்தப் பாண்டவர்களைப் பெற்று வளர்க்கத் தவம் பெற்றேனே யல்லது, பாரதயுத்தத்தில் பிராணனுக் கானியில்லாமல் காக்குங் கடமை என்னுடையதல்ல. எல்லாந் தேவரீருடைய கடமையே. திருவுந்திறனும் உம்முடைய உடைமையே. என் மருமகனாகிய கண்ணனே! என் புத்திரரை உமது அடைக்கலமாக ஒப்பி வைத்திருக்கின்றேன். எனக்கு வேறொரு துணையுமில்லை. நீரே துணை. உம்மையே நம்பினேன் என்று குந்திதேவி யானவள் கோவென்றலறிக் கூறக்கேட்டு, தீனதயாளுவாகிய திருமால் மாமியைப் பார்த்து, ஓ மாமி! நீர் ஒன்றுக்குஞ் சிந்தனைப் படவேண்டாம். எல்லாம் என்பொறுப்பேயல்லது வேறில்லை. நீர் நல்ல சேதி கேட்கப்போகிறீர். இவ்விடத்திற்றானே நில்லுமென்று சொல்லிப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு விதுரன் வீட்டுக்கு வந்து, ஓ விதுரராஜனே! நான் உபலாவியத்திற்குப் போய்வருகிறேன் விடைதாருமென்று சொல்ல, விதுரராஜனானவன் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து இருகரத்தையுங் குவித்து அஞ்சலியஸ்தனாய் நின்று, சுவாமி! பாண்டவர்களையும் என்னையுங் காப்பாற்றவேண்டிய கடன் தேவரீருடைய திருவடித் துணை யல்லது வேறில்லை. ஆகிலும், ராஜசபையில் மோசஞ்செய்து சூதாடி, நாட்டைப் பறித்துக்கொண்டு வாதாடிக் காட்டைக்கொடுத்த துஷ்டனாகிய துரியன், இனி இஷ்டஜன புத்திராளுடன் ரணக்களத்தில் பட்டழியும்படியாகச் செய்துக் கெட்டியாகிய வெற்றியைப் பெறவேண்டுமென்று என் புத்திராகிய ஐவருக்குந் தெரியப்பட சொல்லித் தேவரீருங் கூடியிருந்து ஜெயஸ்தம்பம் நாட்டித் திருமுடிசூட்டி வைக்கவேண்டிய பாரந் தங்களுடையதென்று விதுரராஜன் விண்ணப்பஞ் செய்துகொள்ள, அதைக்கேட்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லுகின்றார்.

கேளும் விதுரராஜனே! செப்பிடுவித்தைபோல் உமது சொற்படியே நடக்கும். அப்படியே பார்ப்பீர், இப்படியே நில்லும். துயரப்படாதீர் துரிதமாகச் செலவுகொடும் விதுரராஜனேயென்று பயணம் பெற்றுக்கொள்ள, உடனே யாவரும் பயணபேரி முழக்கினார்கள். சாத்தகி முதலிய சேனைகள் சமுத்திரகோஷ்டம்போலச் சப்திக்கக் குடைகொடி முதலிய சகல விருதுக்களும் வாத்தியங்களுடன் ராஜவீதியில் நிறைந்து நெருங்கும்படியாய் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி இரதமேறி வரும்போது, துஷ்டத்துஷ்டாள் நான்குபேர் தவிர, மற்ற யாவரும் வாகனமேறிப் புறப்பட்டு வந்து, சுவாமியாருடன் தெற்குவாசற்படிவரையிலும் போய் வழிவிடுத்து வணங்க, அவ்விடத்தில்

தமது ரதத்தை நிறுத்தி, யாவரையும்நோக்கி வெகுதூரம் வந்துவிட்டீர்கள் நில்லுங்கள் நில்லுங்களென்று எவரெவர்களுக்கு எந்தெந்த மரியாதை செய்யவேண்டியதோ, அந்தந்த மரியாதை உபசார வந்தனங்களைச் செய்து விடை பெற்றுக்கொண்டு சிலதூரம் போம்போது, சிற்சிலபேர்கள் தனித்துவந்து பேசினார்கள். அவர்களுக்குத் தகுந்த வார்த்தைகளைச்சொல்லி அஸ்தினாபுரத்திற்கு போம்படியாய் உபசாரத்துட னிறுத்திவிட்டு அப்பாற்போகையில், விதுரராஜன் ஓடி வந்து பணிந்து ஒருமொழி சொல்லுகிறான். சுவாமி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி! அந்த சபையில் துஷ்டனாகிய துரியன் அவமரியாதையாய் என்னை இகழ்ந்து பேசிய வசனத்தை என் பிள்ளைகளாகிய ஐவரிடத்திற் சொல்லவேண்டாம். அதேனெனில், இந்தச் சொல்லைக் கேட்டவுடனே என் பிள்ளைகள் இப்போதே வந்து இவனைச் சேதித்துக் கத்திக் கத்தனை சதையாகக் கழித்துவிடுவார்கள். அப்போது உலகரென்ன சொல்லுவரென்றால், ஏதோதெரிந்து தெரியாமற் பிள்ளையானவன் ஒரு வசனத்தைச் சொன்னபோதிலும், ஒரு பொல்லாங்கைச் செய்தபோதிலும், தந்தையே முதலிய பெரியவர்கள், அப்பப்போது தண்டித்துக் கண்டித்துவிட்டு அப்பால் மறந்துபோவார்கள். அப்படியிருக்க, இந்த விதுரன் ஒரு குடல் வேற்றுமையானதினால், வெகுண்டு எழுந்து சொல்லிய பேச்சை விஷம்போல் வைத்திருந்து, பாண்டவர்களுக்குத் தெரிவித்து, துரியோதனனுடைய பிராணனை வாங்கிவிடச் செய்தான். பார்த்தீர்களா? கண்ணில் விரற்பட்டால் நாலுபேருக்குச் சொல்லிக் கலகஞ்செய்து கையைத்தறித்து விடுவார்களுமுண்டோ? என்று பலவித பழிப்பு வசனங்களைப் பேசுவார்கள். என்னையே ஏசுவார்கள். அந்தப்பழி நமக்குவருவானேன். எப்படியும் நடக்கவேண்டிய கருமம் நடக்கப்போகிறது. ஆதலால், தேவரீரொன்றுஞ் சொல்லவேண்டாம் என்று விதுரராஜன் விளம்பியபோது, அரிவாசுதேவன் மெத்தவும் விசனமுடையவராய் விதுரராஜனைப் பார்த்துச் சொல்லுகின்றார். ஓ விதுரராஜனே! (நனைந்த கிழவன் வந்தால் உலர்ந்தவிறகு சேதமாம்) என்பதுபோல், நானிவ்விடத்திற்கு வரவும், உள்ளன்பினையுடைய உமதுவீட்டிலிறங்கவும், உமக்கு இப்பேர்ப்பட்ட சொல்லிழிவு வில்லழிவு வரவும் இருந்ததல்லவா? நல்லது சுவாமியிருக்கின்றார். விதுரரே! நீரொன்றுக்கும் விசனப்படாதீர். இந்தச் சங்கதியைப் பாண்டவர்களுக்கு நானேன் சொல்லுகின்றேன், சொல்லமாட்டேன். நீர் நில்லும் விதுரராஜரே யென்று சொல்லி நிறுத்திவிட்டு, உபலாவியத்தை நோக்கிப் புறப்பட்டார்.

இவ்வாறு முல்லைமாலையையுடைய முகுந்தன், இரதகஜ துரகபதாதிகளுடன் சகல வாத்தியங்களு முழங்கிக் கொண்டுவரப் பிரயாணமாகி, சாத்தகியுந் தமது பக்கத்திற்றனே வரும்படியாகச்சென்று, மார்க்கத்திற் பல மன்னவர்களாற் போஜனாதி முதலிய சவுக்கியங்களையுங் கொண்டு, பண்டுபலாதிகளு முண்டு, உபலாவியம் வந்து நிற்க, தங்களைக் கண்டு பேச யத்தனித்துவரும் பகவானை எதிர்கொண்டு பார்க்கும் படியாய் வருகின்ற அப்பாண்டவர்களும், பற்பல அற்புத சொற்செறு மற்புத மற்புய விற்பெறு நற்குண விற்பன இராஜர்களும், பிராண விசுவாசர்களும், மிகுந்த நேசர்களும், மகா கவிராஜர்களும், சற்குல போஜர்களும், பற்பணி தாசர்களும், மந்தஹாசர்களும், நகரவாசகர்களும், ஜேஜே யென்று கூடிச் சம்பிரமங்கள் பேச, இங்கித மங்கையர் தங்கள் தனங்கள் குடங்கள்குலுங்க, நடனங்கள்புரிந்தடி தத்திமிதாவென திமிதிமி திமியென, மத்தளபேரிகைகுமுகுமுகுமுவென, தாரை பூரி வீரசின்னபேரி சாகளங்களோசை சமுத்திரத் தோசையென்ன அதிர்ந்திட, மகத்துவத்துடன் முன்ன மெதிர்த்திட, கண்டவரனைவருந் தெண்டன் தெண்டனென்று சொல்லிக் கற்பகப் பூமாரி பொழிய, அற்புதர் பாமாலைமொழிய, கலைந்திருவர் சேனைகளுங் கைப்பிடித்துக் கொண்டாடிக் கண்ணனைக் கண்ணினாற் கண்டு, யாவரும் வாகனம்விட்டிறங்கி மகிழ்ந்து வரும்போது, சுவாமியும் இரதம் விட்டிழிந்து எதிர்நோக்கினர். எல்லோரும் வணங்கிப் பல்லோருமிணங்கி, நல்லோரையினிற் சகலவைபவங்களுடன் நீராஞ்சனாதி கற்பூர தீபங்களினாலுபசரித்து, உபலாவிய ராஜவீதியைப் பிரதக்ஷணஞ் செய்து வைத்து, இராஜமண்டபத்திற் கழைத்துக் கொண்டுபோய் நவரத்னகசித சிங்காசனத்திலெழுந்தருளச் செய்து, அர்க்யபாத்ய ஆசமனீய சந்தனக்ஷதை தாம்பூலபுஷ்ப தூபதீப நைவேத்திய உபசாரங்கள் செய்து வணங்கி நிற்கையில், சர்வலோக சரண்யன் சந்தோஷித்து, சகலரு மிருக்கும்படியாய் உபசாரஞ் சொல்லி, அப்படியே யாவரு மிருந்த பின்பு,

உபலாவியம்விட்டு அஸ்திநு புரத்திற்குத் தூது போனதும், அவ்விடத்தில் துஷ்ட சதுஷ்டாள் தவிர மற்றப்பே ரெல்லாரும் எழுந்து எதிர்வந்து கண்டு களித்து மகிழ்ந்ததும், தாம் விதுரன்மனையி லிறங்கியதும், மறுநாள் இராஜசபைக் கெழுந்தருளியதும், நாரதர் - கண்ணுவர் - சமதக்கினி இவர்கள் மூவருங்கூட வந்ததும், எல்லோருக்கும் வந்தனை வழிபாடுகளை நீங்கள் சொன்னதாகச் சொல்லித் துரியோதனனுடைய கொலுக்கூடத்திற் சென்றிருந்து வந்த செய்தியைப் பேசியதும், அந்த வார்த்தைக்கு அவன் உடன்படாமற் போனதும், முனிவர் மூவர்களும் உறுதியாகிய சில நீதி தருமங்களெல்லாம் உரைத்ததும், அவனந்த வார்த்தைகளைக் கேளாமற் சண்டை செய்து ஜெயித்தவர்கள் நாடாளுகிற தென்று சொன்னதும், தனக்கு விருந்து செய்த விதுரனை இகழ்ந்து வாய்க் கடாத வார்த்தை பேசி ஏசியதும், அவன் உடம்பு கூசி வில்லை வெட்டியெறிந்து சீ சீ என்றிகழ்ந்து எழுந்துபோனதும், அன்றி ராத்திரி நிலத்தைப்பறித்துப் படுகுழியாகச் சமைத்து உதயத்திற் றம்மை யழைப்பித்து அந்த படுகுழியில் வீழச்செய்ததும், உடனே தமது விஸ்வரூபத்தால் அவன் கருத்தை அதமாக்கி அசுவத்தாமனுக்குச் சேனுபதி பட்டம் ஆகவொட்டாமல் தடுத்துவிட்டதும், மற்றச் சங்கதிகளியாவும் மைத்துனராகிய பாண்டவர்க்கும் மற்றையர்க்கும் மனத்திர்ப்தியாகும்படியாய்ப் பிண்டமாகத் திருவாய் மலர்ந்தருள, யாவரும் அதிக ஆவலோடுங்கேட்டு, ஆனந்தங்கொண் டிருந்தார்கள். ஆனுல், ஓ ஜெனமேஜெயமகாராஜனே! கர்னனின்னுன் என்பதும், குந்திதேவியைவிட்டு அக்கர்னன் இடத்தில் வரம்வாங்கி வரச்செய்ததும், குந்திதேவி அவனுக்கு வரங்கொடுத்ததும், இந்த சங்கதிகளை மாத்திரம் பாண்டவர்களுக்குத் தெரிவிக்காமல், மற்றச் செய்திகளையெல்லாந் தெரிவித்தார் ஸ்ரீநிவாசனுகிய திருமாலென்று வைசம்பாயனர் சொல்லவே, வபுஷ்டாதேவி நாயகனுகிய ஜெனமேஜெயமகாராஜன் கேட்டு மனமகிழ்ந்து, அவரை பிரமமாக நினைத்துப் பூசித்து, வந்தனை வழிபாடுகள்செய்து வணங்கி, என்னைப் புனிதனுக்கிய புண்ணியனே! மேல் நடந்த விர்த்தாந்தத்தை சொல்லவேணுமென்று இருகரத்தையுங் குவித்துக் கேட்கவைசம்பாயனர்சொல்லத்தொடங்கினுர்.

கிருஷ்ணன் தூதுச் சருக்க முற்றிற்று

நான்காவது,

## அணிவகுப்புச் சருக்கம்

### கண்ணன் துதி

படர்ந்த கானகந் திரிந்துமீண் டன்புடன் பணிந்த பஞ்சவர்க்காக், கடந்த ஞானியர் கடவுளர் காண்கலாக் கழலிணை சிவப்பேறத், தொடர்ந்த நான்மறை பின்செலப் பன்னக துவஜன்மா நகர்த்தூது, நடந்த நாயகன் கருமுகில் வண்ணமென் னயனம் விட்டகலாதே.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! அப்பால் ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர், பாண்டவர்களுடன் சபாமண்டபத்திலிருந்து சொல்லுகிறுர். ஓ தருமராஜனே! கேளும்; நாம் இவ்விடம் விட்டுப் புறப்பட்டு அஸ்திநுபுரத்திற்குச் சென்று விதுரன் வீட்டிலிறங்கிப் போசனங்கொண்டு துரியோதனன் சபைக்குப் போனேன். அவ்விடத்தில் இருந்த யாவரும் வந்தனை முதலிய மரியாதை செய்ய ஆசனத்தில் இருந்தேன். அது காலையில், நான் விதுரன் வீட்டில் இறங்கினே னென்று துரியோதனன் சற்றுநேரங் கோபமா யிருந்து, மறுபடியும் என்னைப்பார்த்து நீர் வந்த காரியமென்ன சொல்லுமென்று கேட்டான். அதற்கு நான் சொன்னதாவது, பாண்டவர்கள் சூதாடித் தோற்ற நாளையில், பனிரண்டு வருடம் வனவாசமும், ஒருவருடம் அக்ஞாதவாசமுங் கழித்து வந்தால் அவர்கள் பூமி முதலியவற்றையுங் கொடுத்து விடுகிறேனென்று நீர் வாக்குத் தத்தஞ்செய்து அனுப்பிய வண்ணம், பதின்மூன்று வருடமுங் கழித்துவந்து உபலாவியத்திற் சேர்ந்திருக்கின்ற பாண்டவர்கள் தங்களுடைய யோகட் சேமாதிசயங்களை உங்கள் யாவர்களுக்குந் தெரிவித்துத் தங்களுக்கு நீர் சொல்லியிருந்த சத்திய வசனப்படி ராஜ்யங் கொடுங்களென்று கேட்கும்படியாக என்னைத் தூதனுப்பி வைத்தார்கள். நானும் உங்களைப் பார்க்கவேணு மென்னும் ஆசையையுடையவனுக இவ்விடத்திற்கு வந்தேன். உங்கள் இயாவரையுங் கண்டேன். சந்தோஷங் கொண்டேன். ஆதியிற் சொல்லிய வார்த்தையின்படிக்கு ஐவர்களுக்கு அரசு கொடுத்து வாழ்வதே உத்தமம் என்றுகூறி, இதற்கு நீங்கள் யென்ன சொல்லுகிறீர் என்று கேட்டேன்.

யென்னுடன் கூடவந்த மூன்று ரிஷிகளும், வீஷ்மரும்- துரோணரும் கிருபரும்- விதுரன் முதலாகிய பேரும், ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறதைக் கெட்டியாய் நம்பிப் பாண்டவர்களை நேசித்துப் பட்சமுடன் வாழ்வதே நன்மையென்று சொல்லியும், பாபியாகிய துரியோதனன் கூடாதென்று தடுத்துப்பேச, மறுபடியும் அவனுக்குத் தணியச்சொல்லி, அப்பா துரியோதனா! வீணாகிய வம்புகள் விளைவித்துக் கொள்ளவேண்டாம். இனி விளையப்போகிற விபரீத மெத்தவுண்டு. பாண்டவர்களோ மிகுந்த பலவான்கள். யெல்லாந் தெரிந்த இறைவனாகிய நீர் ஒரே பிடிவாதமாகப் பேசவேண்டாம். அப்படிக்கு நாடு நகரங் கொடுக்க மனதில்லாவிட்டால், ஐந்தூராகிலும் ஐந்து வீடாகிலும் கொடும். விபகார விதிப்படிக்கிக் கொடுக்கமனது வராவிட்டாலும், அவர்களுக்குப் பிச்சையாகவேனுங் கொடுமென்று என்னுடைய இரண்டு கரங்களையும் யேந்தி இரந்து கேட்டேன் அத்ற்கும் மனதிரங்கிக் கொடுக்காமற் றடுத்தான். நாளை நடக்கப்போகிற கதி இன்னதென்றுஞ் சொன்னேன். அதையும் யோசிக்காமல் எத்தனைபேர் எத்தனை சொன்னாலும் கேளாமல், அடிக்கவடிக்க பயந்து விசைகொள்ளுமென்னுந் தன்மைபோற் கோபமும், லோபமும், பிடிவாதமும் அதிகரித்துபோம் போம்; உமக்கும் அவர்களுக்கும் வேலையில்லை. ஒருமொத்தை வெண்ணெய்க்குக் கோபாலஸ்ரீகளின் கா்லில் விழுந்து கூத்தாடுகிற நீர், இந்தப் பாண்டவர்களுக்கு நாடுவேண்டி இரப்பது பெரிதோ? இதென்ன அரிதோ? இந்தத் தந்திரமெல்லாம் நான் அறிவேன். இத்தனைப் பஞ்சைப் பாட்டு யென்னத்திற்கு? பாண்டவர்கள் பலவான்களென்றும், தெய்வ பலமுடையவர்களென்றுஞ் சனக்கட்டினையுடைய சரசிகளென்றுஞ் சொல்லிய நீர் பிச்சை கொடுமென்றுங் கேட்கிறீர். இப்படி கேட்க அதென்னவீரியம்? இதென்ன வெட்கமில்லாத காரியம், வல்லமையுடைய பேர்கள் மானமழியப் பிராணனுடனே ஒருவரை யாசிப்பார்களோ? யாசிக்கமாட்டார்களே இதெல்லாம் உன்னுடைய தீனத்துவமேயல்லது வேறில்லை. இப்பவும் நான் சொல்லுவதை நன்றாய்க் கேளும்; சண்டை முகத்தில் யுத்தஞ் செய்து வெற்றி பெறுகின்ற வீரர் எவர்களோ, அவர்கள் இந்த அஸ்தினாபுரத்தை யாளுகிறதே யல்லாமல், என்னுயிருள்ளவரைக்கும் ஒரு கடுகத்தனை மண்ணும் பாண்டவர்கள் கண்ணுக்குக் காட்டேன் என்று ஒரே தீர்ப்பாகச் சொல்லிவிட்டான்.

இதுகளையெல்லாம் உடனிருந்து அறிந்த உங்கள் சிறிய தந்தையாகிய விதுரமகாராஜன் (வாழ்வார்க்கு சீதேவி வாக்கில்) என்பதுபோல் இந்த மண்ணுக்குந் தன்னுயிருக்கும் சரிப்படுத்திக்கொண்டு இருக்கின்றான் இந்தத் துரியன். ஆதலால், இவனுயிர் மாளவேணும்; அப்பாற் பாண்டவர் பாராளவேணும்; இல்லாவிட்டால் அரசாட்சி பெறுவது அருமையே; மேலும், அநேகம் பெரியோர்கள் முதற் சிறியோர்களு மிறப்பார்களே; உலகம் பழிக்குமே யென்று யோசித்து யுத்தம் செய்யாமல் நிறுத்துவாராகில், அவர்கள் செய்துக்கொண்ட சபதத்தை எப்படி நிறைவேற்றிக்கொள்வார்கள். இதுவரையிற் பட்டிருக்கும் அவமானத்தையும் பழிப்டையும்விட, இனிமேல் வரப்போகிற பழிப்பும் அவமான பெரிதாகியதல்ல. இந்தத் தருணத்தில் யுத்தம்பண்ணிச் செயிக்காமல் விட்டு விடுவார்களாகில், இதுதான் பெரிய அவமானம்; இதுதான் லோக நிந்தை; இதுதான் இராஜநீதிக்கும் பழுதாகிய காரியமென்று உங்களுக்குத் தெரியப்படுத்த சொன்னார். உங்கள் தாயாகிய குந்தி தேவியாரும், சத்துருக்களால் விளைந்திருக்கும் பொல்லாங்கெல்லாம் இருக்க, ராஜசபையில் விளம்பிய அவர்கள் சபதத்தை முடிக்காமல் ஈரேழு பதினான்கு லோகத்தையும் ஏகச்சக்கிராதிபதியாய் ஆண்டாலும், அதினால் யாதொரு பெருமையும் இல்லை; புகழும் இல்லை; இகழே எதிர்க்கொண்டு இருக்கும். ஆகையால், சீக்கிரம் சபதமுடித்துத் திரிலோகமுங் கொண்டாடும்படியாய் முடிதரித்துக் கொண்டு வாழக் கடவீர்களென்று ஆசீர்வதித்ததாகச் சொன்னார்கள்.

ஓ பாண்டவர்களே! இவர்கள் கருத்திவ்வாறிருக்க, என் எண்ணத்தையுங் கேளுங்கள். அவர்கள் உங்களைச் செய்திருக்கிற அநியாயங்களை யோசிக்கும்போதெல்லாம் மண் கல் மரம் முதலானதும் அழுமல்லாமல் வேறல்ல, அந்த மட்டும் நீங்கள் பொறுமை யுடையவர்களே? ஆகிலும், எத்தனை என்று பொறுப்பது? பொறுக்குமிடத்திற் பொறுப்பும்மூச்சுவிடுமே. ஓ கண்ணியர்களே! (ஒரு பொற்காசுக்கு போன மானம் பலகோடி பொற்காசு கொடுத்தாலும் வாராது) என்று பழமொழி கூறுவார்கள். அதுபோல் எப்படியும் அவமானம் வந்தி

விட்டது. (உரலிற்றலை துறுத்துக் கொண்டவன் உலக்கைக்குப் பயந்தால் விடுமா? ஆகையால், (துணிந்த பேர்களுக்குத் துக்கமில்லை) என்பதுபோற் பேர் புரிந்து, அவர்களைப் போக்கடித்து இனியேனும் சீர் பெறும்படியாய்த் தேசத்தைக் கைக்கொள்ளுவது ராஜ தீரம், பல தேசத்து ராஜர்களும் சந்தோஷப் படுவார்கள். அல்லது தம்பி தமயன் பாட்டன் பூட்டனென்று பாராமற் படைமுகத்தி லொப் பாரியாவென்று சாடித்துப் பாக்கியம்பெற மனமில்லாவிட்டால் வனத்திற் சென்று தவத்தைக்கொண்டு சுகத்தைப்பெறுவது எல்லாவற்றிலும் மகத்துவமுடையது. இவ்விரண்டில் எதைச்செய்ய யோசித்திருக்கின்றீர்கள்? உங்களெண்ணத்தைச் சொல்லுங்க ளென்று முகுந்தன் கேட்க, அதற்குத் தகுந்தபடி தருமராஜர் நகைத்துச் சொல்லுகின்றார்.

ஆபத்பாந்தனாகிய அரியேகேளும்; நாங்கள் யுத்தஞ் செய்வதற்குச் சர்வசித்தமாயிருக்கின்றோம். இதோ நீர் பாருமென்று சொல்லி, விராடனுடைய இராயசம் சித்திரகதனென்பவனை யழைத்துத் திருமுகமெழுதச் சொன்னார். அவ்வாறேயவனும், "எங்குமிருளற வொளிபரப்பி முக்கண்ணனா ரெழில் வேணிமிசைவைகிமா, நேந்தி யிருபத்தேழு மாதர்தோ டோய்ந்தமிர்த மீய்துரகர் விடமகற்றுந் திங்களின் மரபினானுயர்முரச கேதனன் றிகழ் தருமனெழுது நிருபந் தேசதேசத்தர் மகராஜபோசத் தலைவர் சேர்ந்து வந்தெதிர் கொள்கமேற், குங்கியாம் நாடுவிட்டுக் காடடைந்து பதின்மூன்றாண்டு குன்றல் செய்து, கோமச்ச னாட்டணண்பிற் சுதன் மணங் கண்டுகூடி, யுபலாவியத்திற் சங்குசக்ராயுதன் றூதினாற் துரியோதனன் மனதறிந்துங்கள்பாற், சாற்றினோம் போர்க்குப் படைத்துணை யெமக்காச் சயந்தரத்தாம வருகவே, என்று எழுதி எங்கணுங் கங்குலறும்படி கிரணங்கள் விரித்தும், திரிநேத்திரதாரியாகிய சிவபெருமானுடைய சிவந்த ஜடாபாரத்தில் பொருந்தி யிருந்தும், முயற்கறை யென்னுமானைத் தன்னிடத்திற் கொண்டும், அசுவனி முதலிய இருபத்தேழு ஸ்திரீகளின் தோள்களைத் தழுவியும், சமுத்திரங் கடைந்த காலத்தில் தானே தானாக நின்று அமிர்தத்தைத் தேவர்களுக்கு ஆதாரமாக வளித்தும், ஆதிசேடன் முதலிய பெரும் பாம்புகளின் விஷச் சுவாலையால் உலகம் வருந்தாமல் தனது அமிர்த கிரணங்களினால் ஆற்றல் செய்துமிரா நின்ற சந்திரனுடைய குலத்தில் தோன்றிய தானாகரன், உயர்ந்த முரசக்கொடியினையுடைய மானாபரணன், சத்தியவசனன், நித்திய விரதன், உத்தமனெனத் திகழும் தருமபுத்திர மகாராஜன் எழுதி விடுத்த திருமுகப்பத்திரம் இது இதனைப் பதினெண்பாஷைத் தேசத்து மன்னவர்களும், மகாராஜராகிய போஜகுலத் தலைவரும் ஒருங்குசேர்ந்து சந்தோஷித்து எதிர்கொண்டுவந்து காணக்கடவர். நாங்கள் சூதாடி நொந்து, நாடுநகரத்தை விடுத்து, காடுகரம்பை அடுத்துப் பனிரண்டு வருஷம் வனவாசம், ஒருவருஷம் அக்ஞாதவாசம் ஆகப் பதின்மூன்று வருஷமும் போக்கி, மேன்மைபெற்ற ராஜனாகிய மச்சதேசாதிபதியின் சிநேகத்தினால் எங்கள் பிள்ளையாகிய அபிமன்னனுக்கு உத்தரையைக் கலியாணஞ் செய்வித்து, மிகுசம்பிரமத்துடன் உபலாவியஞ் சேர்ந்து, சங்குசக்கிராயுதமுடைய ஸ்ரீ கிருஷ்ணதேவனைத் தூதுவிடுத்து, யுத்தத்திற்குடம்பட்ட துரியோதனனுடைய மனது அறிந்துக்கொண்டு, உங்களுக்குத் தெரிவிக்கும்படியாக ஓலையுந் தூதுமனுப்பினோம். ஆகையால், மேல் நடக்கப்போகிற யுத்தத்திற்காக எங்களுக்குப் படைத்துணை வந்து ஜயம் பெறச்செய்து, உங்கள் நகரங்களுக்காகக் கட்டவேண்டிய பகுதிப்பணங்களை இனமாக்கிக் கொண்டு நீடூழி வாழவேண்டியது என்று வாசித்தான். அதில் தருமராஜன் கைச்சாத்துவைத்துச் சகல தேசங்கட்கு மனுப்பினார்.

## பாண்டவர்க்கு வந்த படைத்துணைகளின் விபரம்

இந்தப்படிக்குக் கஷ்டதிசையினால் விடுத்த திருமுகங்களை சகல ராசர்களும் பார்த்து முகம் வியர்த்து, எட்டுத் திசையிலுமிருக்கும் துஷ்ட கண்டகர்களாகிய ஜயவீரப்பிரதாப சேனைத்தலைவர்களோடு அவரவர்களுடைய நால்வகைச் சேனைகளும் புடைசூழ யுத்த கோலங்கொண்டு வருவதானார்கள். அவர்களாரென்றால், பாஞ்சால ராஜனும், அவன் பிள்ளைகள் துஷ்டத்துய்மன்-சிகண்டி-சுமுத்திரன் - பிரியதரிசனன் - சித்திரகேது-சுகேது-துவசேனன் - உத்தமோசா - உதார்மனு முதலிய இவர்களோடு நால்வகைச் சேனைகளும், விராடராஜனும், அவன்பிள்ளைகள் சுவேதன்-சுதானீசன் - சங்கன் - வராககேது - உத்தரன் முதலிய இவர்களோடு நால்வகைச் சேனைக

ளும், சேரன்-சோழன்-பாண்டியன் என்னும் மூன்றுபேரும், தங்கள் தங்களுடைய நால் வகைப்படையும், கேகய தேசாதிபரும், குந்தி போஜரும், பாண்டவர்கள் தனித்தனி கலியாணம் பண்ணிக்கொண்ட ஸ்திரீகளிடத்திற் பிறந்த பிள்ளைகளில், தருமராஜனுடைய பிள்ளை தேவகனும், வீமனுடைய பிள்ளை கடோற்கஜனும், அவன் பிள்ளை அஞ்சன வர்மனும், அருச்சுனனுடைய பிள்ளை இராவானும் - அபிமன்னுவும், நகுலனுடைய பிள்ளை விஜயனும் - நிர்மித்திரனும், சகாதேவனுடைய பிள்ளை விரசுகோத்திரனும், இதன்றியும் திரௌபதையி னிடத்தில் ஒவ்வொருவருஷம் ஒவ்வொருவர் முறையிற் பெற்றுக்கொண்ட பிரதிவிந்தன் - சுரதசோமன் - சதானீகன் - சுரதகீர்த்தி - சுருதிசன்மன் என்னும் இளம் பஞ்சபாண்டவரைவரும், போஜ சம்பந்தத் தலைவர்களாகிய போஜாள் - பாஞ்சாலாள் - சோமுகாள் - சிரஞ்சேயாள் - மார்ச்சாள் - மாகதாள் - திரிகால வாசுதேவாள் - பவுண்டர வாசுதேவாள் - அரிவாசுதேவாள்- இவர்களும், இவர்களின் படைகளும், குந்தி போசனுடைய பிள்ளைகளாகிய மந்தனும்- சுமந்தனும், அவர்களின் சேனையும், கீசகன் பிள்ளை பிரிதீபனும் - காசிராஜனும், அவன் பிள்ளை தூமகீர்த்தியும் - மலயத்துவச பாண்டியனும், இவன் பிள்ளை பிரிதிவுபாண்டியனும், சராசந்தன் பிள்ளை சகதேவனும், சிசுபாலன் பிள்ளை துஷ்டகேதுவும், ஜெபசேனுள்-கிராதாள் - அவுணுள் - ஆந்தராள்- புண்டரீகாள் - சோழபுருமித்திராள் இவர்களும், இவர்களுடையசேனைகளும்; சீனர்-சாவகர்-மத்திரர்-மாளவர் - தெலுங்கர் - கலிங்கர் - குலிங்கர்-பலிங்கர்-சோனகர்-கன்னடர்-மாகதர் -துருக்கர் - குச்சரர் - ஒட்டர் முதலாகிய பதினெட்டுப் பாஷை மன்னவரும், மகுடவர்த்தனர்-பட்டவர்த்தனர்-இளவரசர்-மன்னர்-மண்டலீகர்-மந்திரியர்-தந்திரியர்-சாமந்தர்-பூமந்தர் இவர்களும், இவர்களுடைய சேனு சயினியம் முதலிய நாலுவித கோலாகலங்கள் சேர்ந்து சதுரங்க பலத்துடன் ஏழக்குரோணி சேனைகளும் ஆகிய சகல படைத்துணைவர்களெல்லாம் சமுத்திரப் பெருக்கம் போலவும், தாராகண நெருக்கம்போலவும் அதிகரித்து சப்தமேக முழக்கம்போலவும், சங்கத்தொனி முழக்கம் போலவும் பெருங் கூச்சலிட்டுத் தாரணி இடம் பெருது தத்தளித்ததென்று சொல்லும்படியாய் உபலாவியம் வந்து சேர்ந்துக்கொண் டிருந்தார்கள்.

அதுகாலையிற் பாண்டவரைவரும், ஸ்ரீ கிருஷ்ணதேவரும், சாத்தகியும் வருகின்றவர்களை யெல்லாம் எதிர்கொண்டு போய்க் கண்டு எந்தெந்த அரசர்களுக்கு எத்தன்மையான மரியாதை வந்தனங்களைச் செய்யவேண்டியதோ அந்தப்படிக்குத் தலைவான்களுக் கெல்லாம் மரியாதைசெய்து அவர்களிடத்திற் தாம் பெற்றுக்கொள்ளும் உபசார மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு, ஒருவர்க்கொருவர் தழுவிப் பற்பலவாருக உபசரித்து இராசசபைக்கு அழைத்துவந்து சிங்காதனத்தி லிருக்கச் செய்து, இராஜோபசார முதலிய யாவும் நடத்தி அவ்வவ்வரசர்களை நோக்கித் தருமராசன் சொல்லுகின்றூர். செகத்திலுற்றுச் சுகத்தைப் பெற்று மகத்துவமுற்ற ஓ மன்னரே! கேளுங்கள். பன்னிரண்டு வருடம் நாட்டை விட்டுக் காட்டில் திரிந்து, ஒரு வருடம் காட்டைவிட்டு நாட்டிற் பொருந்தி, விராடராசனுடைய வீட்டில் ஒரு வருடமிருந்து வெளிப்பட்டுத் துரியோதன னிடத்திற்கு உலூகமா முனியைத் தூதுவிட்ட தற்காக மற்றொரு தூது எங்களைக் காட்டுக்குப் போகும்படி சொல்லச் சொல்லி எங்கள் பெரிய தந்தை சஞ்சயனை அனுப்பி வைத்தார். அந்த சஞ்சயன் சொல்லிய வஞ்சனை மொழிகளை அஞ்சனவண்ணனும் யாங்களுங்கேட்டு, அதன் பின்பு எங்கள் பிராணனுகயிருக்கும் அக் கிருஷ்ணமூர்த்தியை வேண்டிக் கொண்டு தூதனுப்பி வைத்தோம். இந்த மகானுபாவர் போய் எத்தனை விதத்தில் சொல்லியும் கேளாமல், சுத்த வீரனைப்போல் யுத்தமே செய்ய எத்தனித் திருக்கின்றுன் என்றும்; பாண்டவருக்கு எள்ளத்தனையாகிலும் நாடு கொடுக்கேனென்றும் அந்தகன் புத்திரனுகிய வித்தகன் சொன்னுலும், நீங்களித்தனைபேரும் எனக் குற்றவர்களா யிருக்க, நானினிமேல் எண்ணிப் பார்க்க வேண்டியதென்ன? மேலும், தம்பிமார்களுந் திரௌபதியும் கூறிய சபதங்கள் தலைவிரித்துக்கொண் டிருக்க அதையும் பாராட்டாமல், தருமத்தை எண்ணி ஒரு குலத்திற் பிறந்த இருதிறவரும், பெருநலத்தைப் பெற்றுக் கலந்து வாழ்வோமென்று நான் பேசச் சொல்லியும், அதற்கு அவனொவ்வாமல் யுத்தம் செய்வது உத்தமமென்று சொல்லி யனுப்பியபடியால், உங்களுடைய உதவியெல்லாம்பெற்ற நான் செத்

வனைப்போ விருப்ப தேனென்று யுத்தத்திற்குப் படைத்துணை வரும்படியாய் உங்களுக்கு இத்தனை வருத்தங் கொடுத்தேன். இந்த யுத்தம் பதினெட்டு நாளையில் செய்து முடிப்பதென்று ஒரு நிர்ணயம் செய்துகொண்டோம். இவ்வளவு தைரியம் எங்களுக் குண்டாகும்படியாய் ஏற்பட்ட நீங்களெல்லோரும் இந்தச் சங்கதியை சித்தத்தில் வைத்து சத்துருவைச் செயித்து, சபதமென்னுங் குற்றத்தை யகற்றி எனக்கு வெற்றிமுடி தரித்து வைக்க வேண்டிய உரிமை உங்களுடையதென்று தருமராஜன் சொல்ல, சந்திரனைச் சூழ்ந்த தாராகணங்கள்போலச் சபையில் நிறைந்திருந்த தாட்டிக ரெல்லோரும் தருமநந்தனனை நோக்கி, எங்கள் பிராணனும், எங்கள் சேனா சைன்யங்களியாவும் உங்களுடையதாகையால், எங்களைக்கொண்டு ஏதேது பெற்றுக்கொள்ள வேண்டுமோ அவைகளெல்லாந் தாராளமாய்ப் பெற்றுக் கொள்ளலாம். அதற்கு யாதொரு தடையுமில்லை. வீரப்பிரதாப செயம் உமக்கே வரப்போகிறதென்று மன்னவரெல்லாரும் உபசார வார்த்தைகள் சொல்ல, அவ்வார்த்தைகளினாற் சத்துருக்களைச் செயித்துச் சபதம் நிறைவேற்றிக் கொண்டவர்களைப்போலச் சந்தோஷமடைந்து, நமது ஏழக்குரோணி சேனைகளுக்குச் சேனாதிபதியாய் எவரை நியமிக்கலாமென்று தருமராஜன் கேட்க, சகல இராஜர்களும் நேசர்களும் விசுவாசமுடன் ஹரிவாசுதேவனைக் கேட்டார்கள். அந்த வார்த்தையைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி நகைத்து தனுர்வேத முதலிய யுத்தத் திறந் தெரிந்த நீங்களே ஏற்படுத்துங்கள் என்று மேலும் சொல்லுகின்றார்.

ஓ இராஜர்களே! இப்போது ஆயத்தமா யிருக்கிற ஏழக்குரோணி சேனைகட்கும் ஆரையேனும் ஒருவரை சேனாதிபதியாய் நான் நியமிப்பேனாகில்; மற்றவர்களிற் சிலர் என்னை நியமிக்கவில்லை என்னை ஏற்படுத்தவில்லை என்று கோபஞ் செய்து கொள்ளுவார்களே? ஆகையால், நீங்கள் எனக்கு இந்தவேலை வைக்க வேண்டா மென்று சொல்லிய சுவாமியை நோக்கி, தேவரீர் எங்களை நிச்சயித்த போதிலும் அவர்களை எஜமானகக் கொண்டு வழிபடுகிறோ மென்று மன்னவ ரெல்லாரும் சொல்ல மனமகிழ்ந்து, விராட குமாரனாகிய சுவேதனனை யழைத்து, ஓ இராஜர்களே! இவருடைய ஜென்ன விர்த்தாந்தத்தைக் கேளுங்கள். மச்ச தேசாதிபதியாகிய விராட ராஜன் ஓர் நாள் வன வேட்டைக்குப் போன காலத்தில், மிகுந்த குணவதியாகியும் பதிவிரதையாகியும் நற்றவற்றை யுற்றவளாகியு மிருந்து, பிராரத்துவ வினையினால் விராட ராஜனைச் சேரவேண்டு மென்று விரகமிழைந்துக் கொண்டிருந்த ஓர் வேட கன்னிகையி னிடத்தில் அவ்வரசன் இந்தப் புத்திரனைப் பெற்றுக் கொண்டு மச்சதேசம் வந்து இந்தப் பச்சைக் குழந்தையை இச்சையுடன் வளர்த்து வைத்திருந்து அக்ஷராப்பியாசம் தனுர்வேத முதலிய யாவும் கற்பித்து மகிழ்ந்து வாழ்ந்து வருநாளையில், ஓர் நாள் இந்தச் சுவேதனனானவர் தனிவேட்டைக்குச் சென்று தவஞ்செய்யும் முனீஸ்வரரைக் கண்டு, தானுந் தவம் புரிய மனங்கொண்டு பெரியோர்களை வணங்கி அரிய தவத்திலிருந்து, கைலாசபதியை நினைந்து கண்ணீர் சொரிந்த காலத்தில்,சிவபிரான் ரிஷப வாகன ரூடராய் எழுந்தருளப் பணிந்து, கரத்திற் பிடித்த வில்லினால் திரிலோகத்தையும் சாதிக்கும்படியான அருளைப் பூரணமாகப் பெற்ற புருஷோத்தமர். இவருக்கே சேனாதிபதிபட்டங் கட்டவேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்ல, அதற்கு எல்லோருஞ் சம்மதிக்க, உடனே செந்திருமணாளராகிய திருமால் அச் சுவேதனனுக்கு சகலவித உபசார அபிஷேக ஓமாக்கினியுடனே சேனாபதிப் பட்டங் கட்டிப் பெரிய யானையின் பிடரியிலேற்றி, முரசவாத்திய முழங்கச் சகல வைபவங்களுடனே பட்டணப் பிரதக்ஷணஞ் செய்வித்து, எல்லாச் சேனைகளுக்கும் இவரே சேனாதிபதித்தலைவ ரென்று தெரிவித்தார். அப்பால், அங்கிருந்த அரசர்களுடன் யாவரும் விருந்து போசன முதலியதும் அருந்திச் சந்தன தாம்பூலாதிகளை வாங்கிக்கொண்டு விந்தையாகிய வீரலட்சுமியைச் சிந்தித்து வணங்கி, குருக்ஷேத்திர பூமிக்குப் பிரயாணமானார்கள். அந்தச் சமயத்தில், அர்ச்சுனன் குமாரர்களில் நாககன்னிகையின் பிள்ளையாகிய இராவானனவன், அவ்விடத்திற் பேசிக் கொண்டிருந்த சங்கதிகளை யெல்லாந் தெரிந்துக்கொண்டு, சேனாதிபதியும்-சேனைகளும்-தேசத்தரசர்களும் குருக்ஷேத்திர பூமிக்குப் புறப்படப்போகிற காலத்தில், இராஜ சபையிற் போய நின்று, தந்தைமார் முதலிய சகலரையும் நோக்கி விந்தகிரியைப்போன்ற தோளைக் குலுக்கி, மந்திரவாளைக் கரத்திற்பிடித்து, ஐயோ! இந்தத் துரியோதனாதியர்க்குள்ள

சேனைகளைக் கொல்லப் பதினெட்டுநா ளென்னத்திற்கு? அவர்கள் பட்டணத்தை விடுத்துப் பெண்சாதி பிள்ளைகளையும் விடுத்து வந்திருக்கின்றவர்கள் பதினெட்டு நாள் வரையிலும் வருத்தப்படுவானேன்? நீங்களெல்லாரும் இவ்விடத்திலிருக்க மனதிருந்தா லிருங்கள். இல்லாவிட்டால் அவரவர்களுடைய நகரத்திற்குப் போகச் சிலவு பெற்றுக்கொள்ளுங்கள்; எனக்கு உத்திரவு கொடுங்கள். இன்றைக்குள்ளாகத் துரியோதனாதிய ரெல்லாரையு முடித்து இந்தப் பூமியைத் தருமராஜனாகிய என் பெரிய தந்தைக்குச் சொந்தமாக்குகிறேனென்று சிந்தை கொண்டுரைத்த இராவான் வசனத்தைப் பந்தமுற்றும் பந்தமுறாதவனைப்போ லிராநின்ற பரவாசுதேவன் கேட்டு நகைத்து, நல்லது அப்படியே யாகட்டும். நாமெல்லோருங் குருக்ஷேத்திரம் போய்ச் சேர்ந்த பிற்பாடு உன் இஷ்டப்படியாகிலும், அல்லது என்னிஷ்டப்படியாகிலும் யோசிப்போம் என்று இராவானைத் தட்டிக்கொடுத்து முத்தமிட்டு யாவரும் வியக்கச் சந்தோஷித்துப் புகழ்ந்து மகிழ்ந்தார். பின்பு சகலரும் எழுந்து சுவாமியை நமஸ்கரித்துக்கொண்டு, சேனா சைனியங்களுடன் குருக்ஷேத்திரம் போகவேண்டிய முயற்சியி லிருந்தார்கள். இவர்கள் சரிதம் இவ்வாறாக; முன்பு தூது போன சுவாமியானவர் அஸ்தினாபுரத்தை விட்டு உபலாவியத்திற்கு வந்த பிற்பாடு, துரியோதனனிடத்தில் நடந்த சங்கதியைச் சொல்லுகிறோம் கேளும். ஜெனமேஜெய மகாராஜனே யென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

### கௌரவர்க்கு வந்த படைத்துணைகளின் விபரம்

இப்பால் துரியோதனராஜன் தனக்குப் படைத்துணை வரும்படியாய்ச் சகல தேசத்தரசர்களுக்கும் திருமுகமெழுதி, அதில் இப்போது எனக்கு படைத்துணை வராநின்றயாவரும் சந்திரருள்ளவரையிலும் தங்கள் தங்களுடைய இராச்சியத்தில் வரியிறை யில்லாமல் சுமாலாய் அனுபவிக்கும்படி உத்தரவு சொல்லி யிருக்கின்றோம். ஆகையால், முத்திரையிட்டிருக்கும் இந்தத் திருமுகத்தையே சாசன பத்திரிகையாய் வைத்துக்கொண்டு மனப் பூர்வீகமாய்ச் சதுர்வித சேனைகள் சூழப் புத்ர மித்ராதிகளுடனே சீக்கிரம் வந்து சேரவேண்டிய தென்னுங் கருத்தமைத்து, அத்திருமுகத்தோடு தூதுவரைப் போக்கினன். அந்த ஓலைகண்ட க்ஷணம் சமஸ்த இராஜாக்களும் வந்தார்கள். அவர்களின் விபரம் என்னவென்றால், மந்திர தேசாதிபதியாகிய சல்லியனும், அவனுடைய உடன்பங்காளி - கோத்திரப்பங்காளி - தாயாதி முதலிய பேர்களும் இரதகஜதுரகபதாதியுடன் வந்தார்கள். காந்தார தேசாதிபதியாகிய சௌபலனும், அவனுடைய தாயாதி வருக்கத்தா ரெல்லாரும் சகல படைகளுடனும் வந்தார்கள். மகத தேசாதிபதிகளாகிய சர்வதேவனும் - விந்தரனும்-விந்தனும் அவரவர்கள் சொந்த சேனையுடன் வந்தார்கள். அலம்புதனும், அவன் தம்பிகள் மாரசி-கிமிதி-சூதன் என்னும் மூவரும் அனேகங் கோடி இராக்ஷதப் படைகளோடும் வந்தார்கள். நரகாசுரன் பிள்ளையாகிய பகதத்தனும் நால்வகைப்படையும் கோடி யானைக் கூட்டங்கள் நெருங்க வந்தார்கள். கௌசிதனும், காம்பீலீசனும், தெலுங்க தேசாதிபதியும், போஜனும், கேகயராஜனும், திரிகர்த்தனும், கவுடிசித்தனும், மாளவதேசாதிபதியும், மராடர் ராஜாதிபதியும், வளவனும், சோமனும், சோழ பாண்டியரும், சூத நாயகன், பிள்ளையாகிய கர்னன் பங்காளிகள் சுசேனன் முதல் நூறு பிள்ளைகளும், சோமதத்தனும் அவன் பிள்ளைகள் பூரிசிரசு-சரன் பூரி என்பவர்களுக்கு அவிக்கு தேசாதிபதிகள் விந்தன்-அநுவிந்தன் என்பவரும், கலிங்க தேசாதிபதி கேதுமாலனும், அவன் தம்பிகள் அசுவத்தாமா - சக்கிரதேவன் என்பவரும், மாளுவராஜன்-புளிந்தன என்பவனும், சவுராஷ்டக தேசாதிபதிகள் - சவுபதி சாலுவன் என்பவரும், கேகய தேசாதிபதிகள் சுதர்பா-சுவர்மா என்பவரும், உக்ரசேனன்-யாதவான் - விருஷ்ணான் - அந்தரான் - போஜான் இவர்களும், பலராமர் - கிருதவன்மா-கிருதவீரியன் - சாம்பன்-சாரணன்-பிரத்துமன்-சாருதக்ஷணன் - வீடூரதன் - பானுவுசிதன் - விபுருதி-பிருது - அக்குரூரன் - ஆருகன் - உக்ரசேனன்-உத்தவன் இவர்களும், நவகோடிநாராயணான்-நிவாதகவசான் - காலகேயர்-பவுலமாள் இவர்களும், விருஷ்ண-அந்தக-சாத்துவ-மாதவ-குரூர - பப்பர தேசாதிபதிகளாகிய உதரசித்தும் - நீலனும்; அங்கவங்க ஆரிய சிங்கள கொங்கண குடார கொங்க மராட ஒட்டதேச முதலிய ஐம்பத்தாறு தேசத் தலைவர்களும், தங்கள் தங்கள் நால்வகைப் படைகளோடு மந்திரி தந்திரிமார்களும் புடை சூழும்படி

யாக வந்து நிறைந்தார்கள். பாதலத்திலிருந்த மாதலி வருக்கத்தார் சம்சத்தகாளென்னும் அறுபதினாயிரம் வெண்கல ரதக்காரர்களும் வந்தார்கள். யாதவ குமாரர்களென்னும் இருநூறாயிரம் வெண்கல ரதக்காரர்களும் வந்தார்கள். அநேகம் ராஜகுமாரர்கள் வெகுவாகிய பாலிய சேனைகளுடனே வந்து குவிந்தார்கள். துரியோதனன் பிள்ளைகள் விகதத்தன் முதலிய பேர்களும், அவன் தம்பிமார் துர்ச்சாதனன் முதலிய 99 பேர்களும், துர்ச்சாதனன் பிள்ளை துச்சினி இலக்கணகுமாரன் முதலிய பேர்களும், வீஷ்மாச்சாரி, துரோணாச்சாரியரும், கிருபாச்சாரியரும், அசுவத்தாமாவும், கர்னனும், அவன் பிள்ளைகள் சித்திரசேனன்-சித்திர கீர்த்தி-சூரிய வர்மன் முதலிய பேர்களும், சிந்துதேசாதிபதி சயிந்தவனும்-சகுனியும், இவன் பிள்ளைகள் உலூகன்-சயிந்தன் முதலியபேர்களும், அஷ்டகுலாசலம்போன்ற தேரிலேறி ஆயுதபாணிகளாய் அமைந்திருந்தார்கள். இத் தன்மையாகத் திரண்ட சேனைகளின் மிகுதியானது லோகாலோகங்களெல்லாம் புரண்டுவந்த கடலைப் போலப் பெருகிவரவும், தனக்காகவந்த அச்சேனைகளைச் சம்பத்திற்சிறந்த துரியோதனன் கணக்கிடும்போது, பதினொரு அக்குரோணியென்று தொகை போடப் பேரானந்தங் கொண்டவனாயிருந்தான்.

இதல்லாமல் பந்துக்களில் மிருந்தவர் படை, சத்துருக்களா லிளைத்தவர்படை, சவுக்கியமாய்வாழ உபகாரஞ் செய்யப்பட்டவர்களுடைய படை, தீவுக்களிற் பெருக்கமாய் விசனமற்றிருக்கும் படை, தற்காலத்திற் பொருள் கொடுத்துவைக்கும்படை, தன்னுடைய சொந்தப்படை என்னும் இவ்வாறுவிதப் படைகளு நெருங்கி, மண்ணும் விண்ணும் ஒன்றாகக் கலங்கும்படியாய் ஆரவாரிக்குந் தன்மையைத் துரியோதனனும் மற்ற யாவருங் கண்டு களிகொண்டு, இந்த சேனைகளுக்கு சேனாதிபதியாய் ஆரை நேமிக்கலாமென்று யோசனை செய்து, தங்கள் வம்சநாயகனைப் பரசுராமர் இடத்திற் றனுர்வேதங் கற்று அவரையே ஜெயித்து வெற்றி பெற்றிருக்கும் பெரியோராகிய வீஷ்மாச்சாரியரை யல்லது வேறில்லையென்று நிதானித்து, அவருடைய பாதங்களில் வணங்கி, ஐயா எங்கள் மூதாதையே! சேனையோ திரண்டு புரண்டு வந்திருக்கின்றன; அந்த சேனைகளுக்கு தேவரீரே சேனாதிபதியாக வேண்டுமென்று வருந்திக் கேட்டுக்கொண்டு, நல்ல முகூர்த்தத்திற் சேனாதிபதிப் பட்டமுங் கட்டிவைத்துப் பதினொரு அக்குரோணிச் சேனைகளையும் அவர்வசத்தில் ஒப்பிவைத்து, அந்தச் சேனைகளை தரம்பிரிக்கும்படியாக அதற்குவேண்டிய திட்டவட்ட சட்டமும் செய்தபோது, அதிரதர் - மகாரதர்-சமரதர்-அர்த்தரதர் - மகாரதர் முதலியபேர்களெல்லாரும் தங்கள் சேனாதிபதியாகிய வீஷ்மரைக் கண்டு வணங்கிக்கொண்டு, மகரகுண்டல ஆரகேயூர மணிமகுட வாகுவலய வச்சிராங்கி முதலியதுங் கொண்டுவந்து உபசரித்து காணிக்கையாகக் கொடுக்க, அவைகளை வாங்கித் தரிந்துக்கொண்டு பிரளயகால ருத்திரனைப்போலச் சேனாசைனியங்களின் மத்தியில் மகம்மேருவைப்போலொத்த தேரின்மீதேறி நின்றார் கங்காபுத்திரராகிய வீஷ்மாச்சாரியார். மற்றச் சேனைகளெல்லாம் ஏழு சமுத்திரமும்வளைந்து நிறைந்ததைப்போலும், சுத்த வீரர்களுடைய ரதங்களெல்லாம் அஷ்ட குலாசலம்போலும், சூழ்ந்திருக்கும் யானைகளெல்லாம் அஷ்டகஜங்களைப்போலும், வளைந்துலாவும் குதிரைகள் எல்லாஞ் சுழன்றடிக்கும் காற்றைப்போலும் பிரகாசிக்கும்படியாய், தாரத்துவஜ நாட்டிய தேரேறி வீரத்துவஜ நீட்டிய வீஷ்மாச்சாரியார், பாரியவில்லையுப் பக்குவமாகிய வீரகோலத்தையும் உடையவராய் நிற்கக்கண்டு, எமதருமராஜனும்நடுநடுங்கி நாணமுற்றிருந்தான். சூரியபகவானும் ஆகாயத்திற் செல்ல நமக்கு வேறுகதி யில்லையேயென்று அஞ்சியிருந்தான். ஹரிஹரப்பிரமாதியரும் நடுக்கங் கொள்ளும்படியாய் துரோணாச் சாரியரும், கிருபாச்சாரியரும், அசுவத்தாமாவும், கர்னராஜனும் மற்றுமுள்ள அரசர்களியாவரும் திடதைரியங்களுடன் சேர்ந்து மனமொத்து வார்த்தையாடிக் கொண்டிருந்தார்கள்.

### துரியோதனன் சகாதேவனால் யுத்தத்திற்கு நாள்வைத்துக் கொள்ளுதல்

அதுகாலையில், தேவர்கள் முதலியோர் சேனைகளின் பெருக்கத்தைநோக்கி இவ்வுலகிலுள்ள மலைகளெல்லாம் யானைகளாகவும், செடி-கொடி-மரங்கள்முதலிய தோப்புகளெல்லாந் தேர்களாகவும், பூமி நிறைந்த புற்பூண்டுகளெல்லாங் குதிரைகளாகவும், பிரமசிருட்டியில் வந்த உயிர்களெல்லாம் பதாதிகளாகவும், சப்தமேகம், சத்தசமுத்திரம் சப்ததீவுகள்

இசைகளின் முழக்கங்களெல்லாம் வாத்தியாதிகள் முழக்கமும், யானை சேனைகளின் முழக்கமுமாக அமைந்து வந்தனவோ? அல்லது ஆதிதேவனாற் சமைந்துவந்தனவோ? என்று ஆச்சரியங் கொள்ளும்படியாய், தாராகணக் கூட்டம்போலும், சலசராதிக ளீட்டம்போலும் பதினொரு அக்ரோணி சேனைகளுந் தங்கி இருக்கும்போது,வீஷ்மாச்சாரியார் துரியோதனனைப் பார்த்து, சேனைகளோ அக்ரோணியாய்ச் சேர்ந்திருக்கின்றன. அஸ்தினபுரமோ இடம்பெருகிறதா யிருக்கவில்லை. ஆகையால், இந்தச் சேனைகளைக் குருக்ஷேத்திரத்திற் கனுப்பி விடும்படியாகிய முயற்சி யோசிக்க வேண்டும். அதாவது (நாட்செய்வது நல்லூற்றார் செய்யார்) என்ற பழமொழி சொல்லுமாப்போல், சேனைகள் குருக்ஷேத்திரம்போய்ச் சேருகிறதற்கு ஓர் நல்லநாளும், ஆயுதங்கைக் கொண்டு யுத்தவாரம்பஞ்செய்வதற்கு தகுந்த ஓர் முகூர்த்தநாளும் பார்த்துக் கொண்டால் உத்தமமென்று சொல்ல, அந்த மொழிகேட்ட துரியோதனன் உடனே தனது புரோகிதனை அழைக்கும்படி உத்தரவுசெய்தான். அந்த வார்த்தையை வீஷ்மர் தடுத்து, இந்தப் புரோகிதருக்கெல்லாம் நாம்கேட்கிற நாள் வைக்கத் தெரியாது. இவர்கள் வைத்தாலுஞ் சரிப்படாதென்றுசொல்ல, அந்தத் துரியோதனன் கேட்டு, பின்னை யார் நாள்வைக்குந் திறத்தினையுடையவர்களென்று கேட்க, வீஷ்மர் சொல்லுகின்றார்.

தம்பி துரியோதனா! பாண்டவர்களிற் கடைபடு குமாரனாகிய சகாதேவன் சாஸ்திரதாரி. அவன் நாள்வைத்துக் கொடுப்பானாகிற் சொன்னகுறி தப்பாமல் முடிக்கலாமென்று காங்கேயன் சொல்லத் துரியோதனன் கேட்டு ஆச்சரியமடைந்து, இப்போது அவனை எப்படி கேட்கிறது? அவனெப்படி நமக்கு அகப்படுவான்? அப்படி யல்லவென்று கண்டு கேட்டாலும் தப்பில்லாமல் உண்மையாகச் சொல்லுவானா? அதற்கெப்படி யென்று வணங்கா முடியோன் சொல்ல, வீஷ்மர் சொல்லுகின்றார். அப்பா துரியோதனா! நீங்கள்தான் பேதாபேதம் நினைப்பீர்கள்; அவர்கள் அப்படி ஒருக்காலும் நினைக்கமாட்டார்கள். நீர் மாத்திரம் நேரிற்போய்க் கேட்பாயாகில், சந்திரர் சூரியர்மாறி நடந்தாலும், தங்களுடைய சத்திய வாய்ச்சொல் தப்பாத அவ்வுத்தமர்களிற்சிறியனாகிய அவன் உனக்கு உண்மையைச் சொல்லுவான். அப்படியே இராவானையுங் கடப்பலிக்கு இராஜிப்படுத்திக்கொண்டு வந்து விட்டால், நமக்கு யெல்லாக் காரியங்களும் ஜெயமாமென்று வீஷ்மர் சொல்ல, அதற் குடன்பட்டு ஒருநா ளிராத்திரியிற் பிரம்பினாற் செய்திருக்கும் சூத்திர அன்னப்பக்ஷிமீ தேறிக்கொண்டு உபலாவியத்திற்குச் சென்று, சகாதேவனுடைய அரண்மனையிற்போய் இறங்கி அவனைக் கண்டபோது, அந்தச் சகாதேவன் துரியோதனனென்னுந் தமயனைப் பார்த்துச் சந்தோஷங்கொண்டு, ஏன் அண்ணாவாரும் இருமென்று வணங்கி உபசரித்து, ஏது இவ்வளவு தூரம் வந்ததென்று கேட்க, அப்போது அவனைப்பார்த்து தம்பி சகாதேவனே! எங்களுக்கும் பாண்டவர்களுக்கும் பகை நேரிட்டிருக்கின்றபடியால், யுத்தஞ் செய்வதற்குப் படை கூட்டி விட்டோம். அந்தப் படைகள் குருக்ஷேத்திரம் போய்ச் சேரவும், தருமராஜன் தலையற்று விழும்படியாய் ஆயுதமெடுக்கவும் நாள்வைத்துக் கொடுக்கும்படிக்கு உன்னை நாடிவந்தேனென்று சொல்ல, அதைக்கேட்டு நகைத்து, அப்படியே நாள்வைத்துத் தருகிறேன் அண்ணாவென்று சொல்லி, துரியோதனனுடைய காலபலமுதலியது ந்திசா நாதன்-புத்தி நாதன்-அந்தர நாதன் இவர்களுடைய பலாபலத்தையும், ஜெயாப ஜெயத்தையும் யோசித்து, சாஸ்திரங்களை எல்லாம் பார்த்து, அண்ணா! தேவரீருடைய இஷ்டப்படிக்கு வெற்றிபெற வேண்டுமாகில், நாளை நன்றைக்குப் பூரண அமாவாசையில் அன்றி ராத்திரி ஒன்பது நாழிகைக்குமேல் குருக்ஷேத்திரத்திற் சேனைகளை போகும்படிக்கு முகூர்த்தங்கொண்டப்போதே களப்பலியும் கொடுத்து, பராசக்தியைப் பூஜித்து ஆயுதமெடுப்பீர்களாகில், தருமராஜன் தலைதப்பாது அற்றுவிழும். இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. அப்பால் தெய்வசித்தம் எப்படியோ நானறியேனென்று உபசரித்து வணங்கிப் போஜனம் செய்துபோமென்று பிரியவசனஞ் சொல்ல, அதைத் துரியோதனன் கேட்டு மதிமயங்காமல் மனமகிழ்ந்து தம்பி! நல்லது நான்போய் வருகிறேன் சாயுங்காலந்தான் சாப்பிட்டு வந்தேனென்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு வெளிப்பட்டான். இவ்வாறு சகாதேவனிடத்தி னின்றும் விடை பெற்று துரியோதனன் இராவானுடைய விடுதிக்குப் போயினான்.

### துரியோதனன் இராவானைக் களப்பலிக்கு உடன்படுத்திக் கொள்ளுதல்.

அவனை அங்கிருந்த இராவான் கண்டு
எதிர்கொண்டு வந்து, அவனடியில் வீழ்ந்து
பணிந்து, ஐயா! ஏது இவ்வளவு தூரம் தயை
செய்ததென்று கேட்க, அப்பனே! ஐவர்களுக்
கும் எங்களுக்கும் பகை நேரிட்டுப் படைகள்
சேர்த்து யுத்தத்திற்கு ஆரம்பஞ் செய்யப்
போகிறபடியால், எதிர் உரோமக்காரராகவும்,
பலசாலிகளாகவும் இருக்கிற பேரைப் பலி
கொடுத்து ஆயுத மெடுத்தால் செயமென்று
பெரியோர்கள் சொல்லுகின்றார்கள். அதற்காக
உன்னைக் குறித்துப் பலி இரத்தலுக்கு வந்தே
னென்று சொல்லவே, அந்த வசனத்தைக்
கேட்ட இராவான் கலகலவென்று நகைத்து,
ஐயா! நீங்கள் பிறந்தநாள்முதல் இதுவரையி
லும் சகல சம்பத்தையும் அனுபவித்தது
போதுமென்று விடாமலும், இனி இருப்ப
வர்கள் குழந்தைகளாச்சே, அவர்கள் அனுப
விக்கட்டுமென்று எண்ணாமலும், மண்ணாசை
பெண்ணாசை-பொன்னாசை மாறாமலும், பிள்
ளைக் கொன்றாகிலும் பின்னும் அனுபவிக்க
வேணுமென்று எண்ணி ஆசைமேலிட்டு
மனம் ரோசாமல், தேகங் கூசாமல், வாய்
சோராமல், என்னைப் பலிக்கு வரும்படியாய்
இரந்தீரலலவா? ஐயோ! என்றைக் கிருந்தா
லும் இத்தேகம் இறந்து போகின்றதே?
இதற்கு இவ்வளவு அவசரம் மேலிட்டிருக்க
லாமா? நல்லகாரியம். அப்படியே என்னைக்
கொன்று நீரே இந்த மண்ணைக் கட்டிக்கொண்
டாலும், அதற்கு யாதொரு தடையில்லை.
ஆனால், இந்தத் தேகம் அனித்தியதேகமாகை
யால், நீரெப்போது நாள் வைத்துக் கொண்
டீர் சொல்லுமென்று இராவான் கேட்க,
நாளை நன்றைக்கு நாள் வைத்துக்கொண்டே
னென்று துரியோதனன் சொல்ல, அதைக்
கேட்டு இராவான் சொல்லுகிறான்: ஐயா!
அதுவரையிலும் இந்தத் தேகம் இருக்கு
மாகில், உண்மையாக உமக்குக் களப்பலிக்கு
வருகிறேன். இதற்கு யாதொரு சந்தேகமு
மில்லை. இப்பேர்ப்பட்ட தனகனக சாம்பிராச்சி
யத்தை யனுபவித்த நீரே வந்து இரண்டு
கையையும் நீட்டி இரந்தால், நானில்லை
யென்று சொல்லக்கூடுமா? ஐயா! உமது ஆசை
யடங்கச் சுகமாகப் பெற்றுக்கொள்ளுமென்று
இராவான் சொல்ல, அந்தச் சொல்லுறுதியை
ஸ்திரமாகப் பெற்றுக்கொண்டு மனமகிழ்ந்து,
நான் போய்வருகிறேனென்று விடைபெற்றுக்
கொண்டு, அஸ்தினாபுரத்திற்குப்போய், வீஷ்
மர் முதலிய பெரியோருக்குச் சொல்ல, அவர்
கள் கேட்டு அதிசயித்து, ஆ! ஆ! அவர்க
ளுடைய மனமும், குணமும், சத்தியமும், பரி
சுத்தமும், பசியாதாபமும், உண்மையும் என்ன
நன்மையாக யிருக்கின்றது பார்த்தீர்களா?
சத்தியநெறி தப்பாதிருப்பவர்களாகையால்,
நித்தியவெற்றியை அவர்களே பெறுவார்க
ளென்பதற்குச் சந்தேகமில்லையென்று, யாவ
ரும் தங்களுக்குத் தாங்களே அகமகிழ்ந்திருந்
தார்கள்.

### சகாதேவன் துரியோதனனுக்கு நாள்வைத்துக் கொடுத்ததைக் கண்ணன் வெளிப்படுத்துதல்.

இவ்வாறு துரியோதனன் சகாதேவனி
டத்தில் வந்து நாள் வைத்துக்கொண்டதும்,
இராவானிடத்திற் களப்பலி இரந்து பெற்
றுக்கொண்டுபோனதும், ஒருவருக்குந் தெரி
யாமலிருந்தது. இப்படியிருக்க உபலாவியத்
தில் இருக்கும் பாண்டவர்களும், ஸ்ரீகிருஷ்ண
பகவானும், அனேகங்கோடி அரசர்களும்
ஊழித்தீயும் வடவாக்கினியும் காலகோடிவிஷ
முங்கூட நேரிடுமாகிற் காங்கிக் கரிந்துபோ
கும்படி யுத்தஞ்செய்து வெற்றிகொள்ளத்
தக்கமற்ற உத்தமவீரர்களெல்லோரும், அன்று
போய் மற்றுநாள் குரு க்ஷேத்திரத்திற்குப்
போகும்படியாக நிச்சயித்து, அக்காலையிற்
சில ஏற்பாடுகளை ஏற்படுத்தினார்கள். அஃதெப்
படியென்னில், சேனாதிபதியாகிய சுவேத
னன், வீமசேனன், விஜயன், அபிமன்னு,
சாத்தகி, துஷ்டத் தூய்மன் இவ்வாறு
பேரும் அதிரதத்தலைவராகவும், சிகண்டி,
விராடன், தருமராசன், பாஞ்சாலன் இவர்கள்
நாலுபேரும் மகாரதத்தலைவராகவும், உத்த
மோசா, உதார்மனு, நகுலன், கடோற்கஜன்
இவர்கள் நாலுபேரும் சமரதத்தலைவராகவும்
சகாதேவன், அஞ்சனவர்மன், இளம்பஞ்ச
பாண்டவர்கள் இன்னுமுள்ள ராசகுமாரர்கள்
யாவரும் அர்த்தரதத் தலைவராகவும், இந்தப்
படிக்குத் தேவர் சேனாதிபதியாகிய குமார
சுவாமியார் அணிவகுத்ததுபோற் சேனைகளை
அணியணியாக அமைத்து, ஸ்ரீ கிருஷ்ண
மூர்த்தியினிடத்திற் சுவேதனன் வந்து
சொல்ல, அதைக் கேட்டுப் பாண்டவர்களிடத்
திற் சொல்லப்பா என்னிடத்திலேன் சொல்லு
கின்றாயென்று சொல்லி, ஸ்ரீகிருஷ்ணதேவர்

சும்மா யிருந்தார். அந்த வேளையில், பாண்டவர்கள் அந்தந்தச் சேனைகளின் பிறிவைப் பார்த்து மெத்தவுஞ் சந்தோஷ முடையவர்களாய்ச் சுவேதனனைப் புகழ்ந்து மங்களாசனஞ்சொல்லி, உபலாவியத்திலிருந்து நல்ல சுபகாலத்திற் குருக்ஷேத்திரத்திற்குச் சேனைகள் புறப்படும்படியாய் யோசிக்கும்போது, அவ்வூரிலுள்ள சகல ஜனங்களும் தாங்கள் தாங்க ளிருக்குமிடத்திற்றானே சம்பிர மங்களங் கொண்டாடி வாழ்த்தி, நீராஞ்சனம் ஆலாத்தி யெடுத்து, அன்னதான முதலிய சோடச மகாதானங்களும் செய்து, சுபகரங்களும் மிரு ஜயங்களும் ஐம்பூதம்போன்ற பாண்டவர்களுக்கு வரக்கடவதென்று இஷ்ட தெய்வங்களைப்பூசித்து வாழ்த்தவும், நவரத்திஞதிகளை வாரித்தூற்றவும், மங்களம் லாலி சோபனம் இவைகளைப் பாடவும், பரதநாட்டியமாடவும், கட்டியர் கெட்டியாய்ப் புகழ்ந்து வாழ்ந்தவும், பட்டுவான்கள் துதிகூறி ஏற்றிப் போற்றவும், அனேகர் பேரி-உறுமி-குடமுழா-முரசு-காகளம்-சின்னம்-கொம்பு - தவில்டி-தப்பட்டை-தவண்டை - மல்லரி - தாரை-பூரி முதலாகிய வாத்தியங்கள் முழங்கவும், செம்பொன்பூ வெண்பொன்பூ முதலாகிய சகல புஷ்பங்களையும் வாரி மாரிபோல் தேவர்களிறைக்கவும், நன்னிமித்தங்க ளுண்டாகும் படியாகிய நல்லவேளையும் நல்ல லக்கினமும் கைகூடிய வேளையில், தேவர்கள் முதலாகிய யாவருஞ் செயஞ்செயமென்று தீர்க்கமாய் வாழ்த்த, சகல சுபசந்தோஷத்துடன் குருக்ஷேத்திர பூமிக்குப் போகும்படியாக யத்தனித்தது. துவாரகாபுரி வாசகனுகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, சுவாமி! என்ன சும்மாயிருக்கின்றீர்? எழுந்தருளும் என்று தருமராசன் சொன்னகாலத்தில், முக மலர்ச்சியர்க இல்லாதவராய், நான்பின்னதாக வருகிறேன் நீங்களெல்லோரு முன்னதாகப் போங்களென்று சொல்ல, அதைக்கேட்ட முரசக்கொடியுடைய தருமராஜன் பெருமூச்சுவிட்டுச் சொல்லுகின்றார்.

ஓ முகுந்தனே! இதென்ன மோசமோ? என் மனதைச் சோதிக்கும் விசுவாசமோ? அந்தமட்டும் வெகுநேர்த்தி! வெகுநேர்த்தி! எழுந்திரு மெழுந்திருமென்று இரண்டு கரத்தையும் பற்றித் தூக்கும்போது, கண்ணிலுமுகத்திலு நயத்தைக் காட்டாமற் சுளிப்பினைக் காட்டி, ஏன்காணு மென்னைத் தொந்தரவு செய்கிறீர்? (வீணனகாரியத்திற்கு வாணள்பூழி வேணே?) என்னுந் தன்மைபோல் விருதாவாகிய காரியங்களை என் தலைமேற் போட்டுக் கொண்டு, படாதபாடும்பட்டு, நோய்க்குத் தருந்த சிட்டிகை எல்லாம் போட்டு, உலகத்திற் (பெரிய எருமை பேர்பெற்றகதைபோற்)பாண்டவர் சகாயனென்றும், பார்த்தசாரதி யென்றும், நரநாராயணனென்றும், ஐவருக்கு ஒன்றுந் தெரியாது எல்லாக் கலகமும் இவனே செய்கிறானென்றும், குவலயமெல்லாங் கலகமும், என்னைக் கூலியதருந் தகாதவர்களை எல்லாஞ் சிநேகித்து, எந்தக்காரிய மெப்படி முடங்குதோ? எந்தவேலை எப்படிமடங்குதோ? நமது எண்ணம் என்னமாய் முடியுதோ? மற்றவர் திண்ணம் ஏதாய் விளையுதோ என்று இரவும் பகலும் வயிற்றில் வாள் கட்டிக்கொண்டு, ஆகாரம் நித்திரையில்லாமல் அவதிப்பட்டு, ஐவர் பிழைத்தாற் போதும்; அவர்கள் சபதம் நிறைவேறினாற் போதும் என்று காரியத் தாழ் வாராமல் என் முழுமனதுடனே எல்லாக் காரியங்களையும் குறைவில்லாமல் நிறைவாய்ச் சீர்படுத்திக்கொண்டு வந்தால், என்னை உங்கள் குலதெய்வமாக நினைத்து, என் சொற்படி நின்று செவ்வைப்படாமல் என்னைச் சத்துருவாக்கி, அவரவர்கள் மித்துருவாக இருந்து லாபம்பெறப் போகின்றீர்க ளல்லவா? போகட்டும்; என்னாலே நீங்கள் விரோதிக்க வேண்டாம். நீங்களும் அவர்களுஞ் சுகமாக யிருங்கள். (ஆயிரம்பட்டும் அபலம் கோயிற்கட்டியுங் குறை) என்பதுபோ லாச்சுது. நான் உங்களுக்குப் பயந்தவனல்ல. உங்கள் வேலைக்காரனல்ல; உங்கள் சேவகனல்ல. உங்களால், கிராமம் - பூமி-நாடு-நகரம் - ஆடு - மாடு - வீடு - யானை - தேர் - பரி - ஆபரணம் - அலங்காரம் - வஸ்திரம் இவைகள் பெறக் காத்திருப்பவ னல்ல. என்னை நீங்கள் தடைப்படுத்தவும், போவென்னவும், வாவென்னவுங் கூடாது. (புண்ணியத்திற்கு வந்த மாட்டைப் பல்லைப் பிடித்து பருவம் பார்த்தான்) என்பதுபோல என்னைப் பரிட்சிக்கின்றீர்கள். அடா போங்காணும் நன்றியற்றவர்களே! இப்பவும் குருக்ஷேத்திரத்திற்கு வாவென்று கூப்பிடுகிறீர்கள். அவ்விடத்திற் கொண்டுபோய் கழுவுக்கேற்ற கோமட்டி யகப்பட்டானென்று விட்டுவிட்டு, (கொண்டானுங் கொடுத்தானும் ஒண்ணு. இந்தக் கலியாணத்தைக் கூட்டி வைத்தவன் வாயிற் பிடிமண்ணு) என்னும் பழமொழிப்போல், நீங்களுந் தாரி

யோதனாதியரும் ஒன்றாய்க் கூடிக்கொண்டு, இந்தக் கிருஷ்ணன் தானடா நம்மிருவரையும் கூடவொட்டாமற் கலகஞ் செய்துக் கொண்டே வந்தான். இவனைப் பிடியடா; இவனை அடியடா; சிறையில் செல்லடா; விரைவிற் கொல்லடா வென்றால், எனக்கார் துணை? அப்போ துங்களுக்கு எதிருமில்லை; எனக்குத் திக்குமில்லை. தெய்வமேயென்று உங்களாக்கினையினால் நானிறந்து விட்டாலும், யுத்தமுகத்தில் எனது உயிரைத் துறந்துவிட்டாலும், என்னை நம்பி என் காலைச் சுற்றிக்கொண்டிருக்கிற பெண்சாதி பிள்ளை குடும்ப மெல்லாவற்றையும் ஆர் காப்பாற்றுவார்கள்? ஒரு வேளை அன்னம்போட்டு ரட்சிக்கிறவர்கள் யாரிருக்கின்றார்கள்? இதெல்லாம் வீண் காரியம் (பள்ளிக்கூடத்திற்குப் போனால் வாத்தியார் அடிப்பார் போகாவிட்டால் என் அடிப்பார்?) அதுபோல, உங்களுடன்கூட வருவானேன்? (கரிப்புக்கு இருந்து பிழை, கலகத்திற்கு ஓடிப்பிழை) என்பதுபோல், நான் எங்களூருக்குப் போய்விடுகிறது நன்மையா யிருக்கிறது. (ஏழு ஊரிற்போய் இருந்துண்பதிலும், வாழும் ஊரிற் றாழ்ந்து கூழ் குடிப்பது நன்று) அது போகட்டும்; ஒருதரம் பழகிவிட்டோமே, லாடுலகாடு எதுவந்தாலும் அனுபவிப்போமென் றெண்ணினாலோ, (எரிமூட்டிய அடுப்பும் இல்லிப்பானை வெந்நீருமாய் முடிகிறது) நீங்களெப்படியும் பலவான்கள் உங்களுக்கொரு குறைவுமில்லை. ஏனக்கென்ன அண்ணனா? தம்பியா? பங்கும் பங்காளிகளா? ஆரிருக்கின்றார்கள்? போனாலும், இருந்தாலும் நானொருவன் தான். ஆகையால், (காலம் போம் வார்த்தை நிற்கும்) என்றிருப்பதால், நானித் தருணத்தில் ஒன்றுஞ் சொல்லக் கூடாது. கடவுள் கிருபையால் நீங்கள் இருதிறத்தவர்களுங் கலந்து வாழ்ந்தால், நானுங் கண்குளிரப் பார்ப்பேனென்று பற்பல நிஷ்டூரங்களாகப் பேசிவரும் புண்ணியனுடைய மொழியைக் கண்யமுடைய பாண்டவர்களோடு புத்திராள் யாவருங் கேட்டு மனங் கலங்கி மதிமயங்கி யிருக்கத் தருமராஜன் நெடுநேரம் யோசித்து, சுவாமி தேவரீர் போகிறேனென்று சொல்லவும் மனந் துணிந்ததல்லவா? இது என்னுடைய விண்ணப்பமென்று கண்ணீர் சோரவிட்டு நாங்கள் உம்மைப்பிரிந்தும் மண்ணில் வாழ்வைப் பெறுவதா? உம்மை விலக்கி ஒரு காரியஞ் செய்வதா? எமது மனையில் யாங்களிடுந் தூபதீபம் உம்மைவிட்டு அப்பால் ஒருவருக்கிடுவதா? என் மனதைப் பேதித்துவிட்டீர். பெருமாள் இல்லாமற் றிருநாள் நடக்குமா? ஓ சுவாமி! சுவரை வைத்துக் கொண்டல்லவா சித்திரம் எழுதவேண்டும்? என்ன எங்களுடைய நன்றியற்றதனம்? என்ன நாங்கள் உள்ளுக்குள்ளே உறவாடுகிற முறை? என்ன எங்களால் நேரிட்ட குறை? என்ன எதிரிகளாற் றங்களுக்கு வந்த பொல்லாங்கு? தேவரீருக்கு இவ்வளவு மனஸ்தாபம் வந்த விதம் யாதினாலோ, அது இப்பேர்ப்பட்டதென்று அடியேனுக்கு ஒன்றுந் தெரியவில்லையே. அவைகளை யெல்லாந் தெரிவிக்க வேண்டும் தேவனே என்று தீர்க்கதெண்டமாய் விழுந்த தருமராஜனைத் திடுக்கென் றெழுந்து, ஆ! ஆ! என்னகாரியஞ் செய்தீர்? எழுந்திரு மெழுந்திருமென்று வாரியெடுத்து மார்போடணைத்து உட்காரவைத்து உபசாரஞ்செய்து இப்படியுஞ் செய்யலாமா தருமராஜனே? இதென்ன அனியாயமென்றார். அப்போது தருமராஜன் இதெல்லாம் இருக்கட்டும், என் தம்பிமார்கள் ஏதாகிலுந் தவறி நடந்தார்களா? நானேதாகிலுந் தப்பிப் போனேனா? அப்படி நாங்கள் தெரிந்துந் தெரியாமலுஞ் செய்திருந்தாலும் சீர்திருத்தவேண்டிய கடமை உம்முடையதன்றிப் பின்னை யாரிருக்கிறார்கள்? அப்படி வேறொன்றுங் காணேமே. ஏதாகிலும் உண்டானால் அந்தச் சங்கதியை வெளியிடுமென்று தருமராஜன் சொல்ல, நானென்ன சொல்வது? நான் கோளனா? குண்டினியா? (அம்மையார்மெழுகிமொக்கிட்ட விடத்தில் அறியாதவள் முன்தானையால் அழித்தாள்) என்பதுபோல் பெரியோர்கள் செய்யும் பெரிதாகிய காரியங்களைச் சிறியோர்களெல்லாஞ் சிதைத்து வருகின்றார்கள். அதை நான் சொல்லுவேனாகில் என்பேரில் எல்லோருக்குங் கொல்லத்தக்க 'பகை வருமென்று கோபாலன் சொல்லத் தருமராஜன் கேட்டு, அவ்வளவு இரகசியமான காரியத்தை நான் அறியப்போகாதா? அதுதான் இன்னதென்று தெரியட்டுமே? யாவரும் அறியட்டுமே? யானையை முறத்தால் மூடுவதுபோல மறைக்க வேண்டியதில்லை. நீர் திருவாய் மலர்ந்தருளும் ஐயனே என்று வையகம் புரக்குந் தருமராஜன் கேட்க, செய்யாளுறையுந் திருமார்பர் பொய்யாமொழியாய்ப் புகல்கின்றார்.

கேளும் தருமநந்தனா! துரியோதனன் முதலிய சத்துருக்களெல்லாம் அடியோடழி

யும்படியாய் முகூர்த்தம் வைத்து ஆயுதபூசை
செய்ய வேண்டுமென்று நாம் எண்ணியிருக்க,
நமது பகையாளியாகிய துரியோதனன் இவ்
விடம் வந்து, தருமராஜன் தலை அற்று விழும்
படியாகிய நாள் எனக்கு வைத்துக் கொடு,
நான் அந்த நாளையில் ஆயுதபூசை செய்கிறே
னென்று கேட்க, அப்படியே உமது தலைபோ
கும்படியாகிய ஸ்திர நாள் வைத்துக் கொடுத்
தான் இந்தச் சகாதேவன். ஒருவரை யொருவ
ரறியாமல் உள்ளுக்குள்ளே இப்படி நடக்கு
மாகில், தான் ஊரைவளைத்து மென்ன? உறவு
பிடித்துமென்ன? இன்னம் எந்த வேலைகளை
எப்படி முடித்தும் என்ன பிரயோசனம்?
(நிழலிலிருக்கும் பொருத்தம் வெய்யலிற்றெரி
யும் வருத்தம்) என்பதுபோல, நான் பட்ட
பாடு எனக்குத் தெரியும். இதனால்தான் என
க்கு மெத்த மனவேஷ்டை யாச்சுதென்று
மாயன் சொல்லத் தருமராஜன் கேட்டு, தம்பி
யாகிய சகாதேவனை யழைத்து, என்ன தம்பி
ஸ்வாமியார் சொல்லுகிறது சத்தியமா அசத்
தியமா வென்று கேட்க, சத்தியம்தான்; சந்
திரகுலத் தோன்றலாகிய துரியோதனராஜன்
வேத்திரவெகினமூர்ந்து நேற்றிராத்திரி என்
னிடத்திற்கு வந்தார். அவருக்கு மரியாதை
செய்து ஆசனமளித்து, ஏதண்ணா! இவ்வ
ளவு தூரம் வந்ததென்று கேட்டேன். பாண்
டவர்களுக்கும் எனக்கும் யுத்தம் நேரிட்டுப்
படைகூடி யிருப்பதால், தருமராஜன் தலை
போகும்படியாகிய நல்லநாள் உன்னைக்
கேட்டு வைத்துக்கொண்டு, நான் ஆயுதபூசை
செய்து ஆயுதமெடுக்க வேண்டுமென்று கேட்
டார். அப்படியே நல்லதென்று வாரம்-திதி-
நாள்-ஓரை-சுத்தி முதலியவும், நன்மையாகக்
கூடிய அமாவாசையி னன்று ஆயுதமெடுத்
துக் கொள்ளென்று நாள் வைத்துக் கொடுத்
தேன். நாமே பகையாளிகளா யிருக்க, அதனை
நினைக்காமல் என்னையே நாள்வைத்துக்கொடு
மென்று கேட்டபடியாற் சத்தியந் தப்பலாகா
தென்று நாள் வைத்துக் கொடுத்தே னென்
றான். அதைத் தருமராஜன் கேட்டு, ஆ! ஆ!
வென்று நகைத்து ஆனந்தங்கொண்டு, இது
வரையிலும் நீ எனக்குத் தம்பியல்ல; இன்று
முதலாக எனக்கு நீ நல்ல தம்பியாயினை.
ஓ என்னப்பனே! சத்தியநெறி தப்பாத நித்
தியனே! உன் சத்தியமே உன்னைக் காக்கக்கட
வது. இனி எனக்கு இவ்வுலகம் வராவிட்
டாலும், வந்தாலும், யார்போனாலும், யார்
இருந்தாலும், நான் கூறிய சபதம் சரிப்பட்
டாலும், தப்பிப்போனாலும், எனக்குப் பெரி
தல்ல. என் தம்பியினுடைய உண்மையொன்
றுமே போதுமென்று பூரித்துப் புளகாங்கித
முற்றுச் சிறியவனா யிருந்தும், பெரிய பொரு
ளைக் கைக்கொண்ட சகாதேவனைக் கட்டித்
தழுவி முத்தமிட்டுக்கொண்டு கண்ணனைக் கண்
ணினா லுற்றுப் பார்த்து, ஓ காசாம்பு வண்
ணனே! உலகமுள்ளவரைக்கும் அழியாப் புகழ்
கொண்டான் என் தம்பி என்று சொல்லி, என்
தம்பி சகாதேவன் எனக்குச் செய்த சகாயம்,
மற்றத் தம்பிகள் முதலிய யாவருஞ் செய்ய
மாட்டார்களென்று வியந்து, ஐயா! என் தம்
பியினுடைய சத்தியத்தைக் குறித்து நீர் மெத்
தவுஞ் சந்தோஷப்பட வேண்டுமென்று தரும
ராஜன் சொல்ல, அதைக்கேட்ட ஹரிமுகுந்த
னனவர் இரண்டு கையையுங் கொட்டிக் கல
கலவென்று நகைத்துச் சொல்லுகின்றார்.

கேட்டீர்களா சபையி லுள்ளவர்களே!
(உளவனில்லாமல் ஊரழியாது) என்பது
போல, இவரனுமதியில்லாமல் இந்தச் சகாதே
வன் இப்படி செய்வானா? சரிதான்; சரிதான்.
இனிப் பேசவேண்டியதில்லை. (குழந்தையி
னுடைய துடையுங் கிள்ளித் தொட்டிலையும்
ஆட்டினால் தூங்குவதெப்படி சொல்லுங்கள்.)
இவர் பெரியவரென்று நான் சொன்னால்,
ஏண்டா யிப்படி செய்தாய் புத்தியற்றவனே
யென்று தண்டிக்காம லவனைக் கட்டித் தழுவி
முத்தமிட்டு மிகவும் புகழலாமா? இனி இந்த
அனியாயத்தை நான் யாருடன் சொல்லி
யாறுவேன். அரசர்களே! இப்போது வீணாய்
நானொருவன் பழிக்காளானேன். இதுவரை
யிலும் பகை களையவேணும், விதை விளைய
வேணுமென்று நான் பட்டபாடு விழலுக்கி
றைத்த நீராச்சே? வெய்யலின் மஞ்சட் பூச்
சாச்சே? விருதாவா எனக்குப் பேச்சாச்சே?
விபகாரங் கெட்டுப்போச்சே? என்று விசனப்
பட்டு, ஓய் தருமநந்தனரே! (அதிகாரி வீட்
டில் திருடி தலையாரி வீட்டில் அடுக்கி வைத்
தார்போல) உம்மிடத்திற் சொல்லிக்கொண்
டேன். எது நடந்தாலும் வாய்பேசாம லிருக்
கும்படியாகச் செய்துவிட்டீர். எனக்கென்ன
கெட்டுப் போனது. எனக்கென்ன ஆண்சிறை
யுந் தலைவிரிகோலமாக அவதிப்படுவது ஒன்று
மில்லை. (அக்கரைக்காரருக் கில்லாதகாரியம்
அயலாருக் கென்ன வந்தது வீரியம்) ஓ தரும
நந்தனா! உமது கருத்தை நானறிந்து கொண்
டேன்; இது போகட்டும். மேல் நடக்கவேண்

டிய காரியங்களுக்கு என்ன சொல்லுகிறீர் என்றுகேட்க, அந்த வார்த்தையை முரசக் கொடியினையுடைய முதல்வன்கேட்டு, இனிமேல் நடக்கவேண்டிய காரியங்கள் இன்னதென்று கட்டளையிட்டால், அடியேன் அந்தப்படி நடக்க காத்திருக்கிறேனென்று சொல்லப் பின்னை வேறொன்றுமில்லை. நாமும் சேனைகள் முதலிய யாவர்களும் குருக்ஷேத்திரம் போய்ச்சேர்ந்து வீரமாகாளியைக் கொலுநிறுத்தி, அபிஷேக அலங்கார தூபதீபத்துடன் பலிகொடுத்து, ஆயுதபூசையும் செய்து ஆயுதமெடுப்போமாகில், சத்துருக்களை ஜெயித்து மித்துருக்களும் நாமும் வெற்றிபெறலாம். இதற்கு நாளையத்தினம் நாள் நேமித்திருக்கின்றேன்; அந்தப்படி நடத்திப் பூசியுங்களென்று நாரணன்சொல்ல, யாவருஞ் சந்தோஷித்து, முக்கியமாகச் செய்யவேண்டிய ராஜதர்மமும் வீரதர்மமுமிதுவேயென்று சொல்ல, உடனே முரசகேதனன் கேட்டுக் கண்ணனை நோக்கி, உமதிஷ்டப்படியே காட்டெருமை முதலிய யானை-குதிரை-பன்றி-ஒட்டை-கோழி-ஆடு-மான்-இவைகளெல்லாம் பலியிடுங்களென்று சொல்ல, அதைக்கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுகிறார்.

### இராவான் துரியோதனனுக் களப்பலிக் குடன்பட்டதைக் கண்ணன் வெளிப்படுத்துதல்.

ஓ தருமநந்தனா! இதெல்லாம் உலகத்திற் சுளுவாகிய பிரார்த்தனை முதலிய காரியங்களுக்குச் சாதாரணமாய்ப் பலியிடுசிறதுண்டு. நாம் தொடங்கி இருக்கும் வேலையோ மலைபாண்டமாகிற வேலை. இதன்றியும், துரியோதனனோ வெகுபேர் பெரியோர்களைச் சிநேகித்து, திவ்யமாகிய பலிகொடுத்து, பராசத்தி பூசைசெய்து, ஆயுதமெடுக்கும்படியாய் ஸ்திரதாள் நேமித்துக்கொண்டிருக்கின்றான். நாம் பூசைசெய்து ஆயுதமெடுக்கப்போகிற ஸ்திர வேளையினால், அவனுக்குச் செயங்குறைந்து நமக்கு ஜெயம் வரவேண்டும். ஆகையினால், எனக்குத் தோன்றியதைச் சொன்னேன்; உமக்குத் தோன்றியதை யோசித்துச் சொல்லும் ஐவர் முதல்வனே! என்று சுவாமியார் சொல்ல, அதைக் கேட்ட தருமராஜன் நகைத்து, (நரிவாலைக் கொண்டு கடலாழம் பார்ப்பதுபோலிருக்கின்றதே) தேவரீரென்னைக் கேட்கிறயுக்தி இதுவொரு நன்றாயிருக்கிறது. சுவாமி! இப்படி அடிக்கடி என்னைசோதிக்கவேண்டாம்; தேவரீருடைய சிந்தையின் வினைவெப்படியோ அப்படியே முடித்துவிடுமென்று தருமராஜன் சொல்ல, ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லுகின்றார். ஓ தருமநந்தனா! நானென்ன நினைக்கிறேனென்றால், சத்தியசவுச ஆசார விபகாரமுள்ளவனால், வீரப்பிரதாப அதிரதத் தலைவனால், எதிருரோமக்காரனால் இருக்கும்படியாகிய ஒருவனைப் பிடித்து, வீரமாகாளிக்கு நரபலி யூட்டிவைத்துவிட்டால், எத்தனைபேர் எத்தனைசாஸ்திரம் எவ்வளவு பார்த்து நாள்வைத்துக் கொடுத்தாலும், எவ்வளவு பலியிட்டு பூசை செய்து ஆயுதமெடுத்தாலும், அந்தத் துரியோதனனுடைய புத்ரமித்ராதியரை மீறவிடாமல் தாமேமுடித்து வெற்றிபெறலாம். இதற்கு நானே முன்னிற்பேன். நீர் வேறாக யோசிக்கவேண்டியதில்லையென்று கோபாலன் சொல்லத் தருமராஜன் அந்த வார்த்தையைக் கேட்டு, சற்றுநேரம் யோசித்து, ஓ சர்வக்ஞனாகிய கண்ணனே! தேவரீரிஷ்டப்படி நடத்திவையுமென்று சொல்ல, கிருஷ்ணன் ஆரைக்கொண்டு நடத்துகிறது; (கடையில் விற்கிற பண்டமா? காசுகொடுத்துக் கொண்டோமா? வேலையை முடித்து வென்றோமா? வீரமாகாளியைப் பூசித்தோமா?) என்று போகிறதற்கு இதுவோ மானிட உயிரைச் சார்ந்தவேலை. அதிலேயுஞ் சாஸ்திரப்படிக்கு லக்ஷணம் அமைந்திருக்கின்றவர்களருமை? அப்படியுந் தேடிப்பார்த்தால், நம்முடைய கூட்டத்தில் நாலத்திரண்டுபே ரிருக்கின்றார்கள். அவர்களுக்கும் ஒவ்வொரு காரியம் நேரிட்டிருக்கிறது. அதென்னவென்றால், சல்லியனொருவனிருக்கின்றான்; அவனோ துரியோதனராஜனுக்குப் படைத்துணையாய்ப் போய்விட்டான். அருச்சுனனொருவனிருக்கின்றான்; அவனைப் பலியூட்டினாலோ பஞ்சபூதம்போன்ற ஐவரென்னும் பூண்டு அப்பொழுதே யற்றுப்போம். இராவானொருவனிருக்கின்றான்; அவனோ துரியோதன மகாராஜன் களப்பலிக்கு உடன்பட்டு விட்டதாய்க் கேள்வி. வேறொருவருமில்லை. (செல்லுஞ் செல்லாததற்குச் செட்டியாரிருக்கிறார்) என்பதுபோல், நானொருவனிருக்கின்றேன். தருமநந்தனா! என்னை களப்பலியூட்டி உங்கள் சபதத்தையும் சத்துருக்களையும் முடித்து வெற்றிபெற்று அரசாட்சி செய்யுங்களென்று அமலனாகிய அரிவாசுதேவன் சொல்லவே, தருமராஜன், ஹரிஹரி! என்று இரண்டுசெவியையும், பொத்திக்கொண்டு ஏக்க

முற்றவர்போல் நின்று பெருமூச்சுவிட்டு, இப்பேர்ப்பட்ட பெரும்பழியாகிய சொற் கேட்பதற்கோ என் காதுகளிருந்தன வென்று மனம் வருந்தி சபையை நோக்கிச் சொல்லுகின்றார்.

ஓ அரசர்களே! இந்த விந்தையாகிய வார்த்தையைக் கேட்டீர்களா? நந்தநந்தனனைக் களப்பலி கொடுத்து, நான் எழிற்கிரீடத்தை விடுத்துப் பழிக்கிரீடத்தை முடித்துக்கொண்டு ராஜாங்கஞ் செய்யவேண்டியது என்று நமது நாரணன் சொல்லுகின்றார். அப்படி செய்து சத்துருக்களைச் செயித்து வெற்றி பெற்று நானெத்தனை நாளிருந்து வாழப் போகிறேன். இதைப் பார்க்கிலும் துரியோதனனே உலகத்தை யாளும்படியாய் விட்டுவிட்டு நாங்களைந்துபேருங் காட்டுக்குப் போய் விடுவது மெத்த உத்தமமா யிருக்கின்றது. நீங்களெல்லோருந் தங்கள் தங்கள் நாடுக்குப் போங்களென்று இருகரத்தையுங் குவித்து வந்தனைசெய்து மரியாதையுடன் சொல்லி, ஓ தம்பிமார்களே! எழுந்திருங்களென்று கூறி, தானும் எழுந்தார் தருமராஜனவர். அந்த வேளையில் இராவானெழுந்து, அறத்தின் மகன் காலில் விழுந்து, ஐயா! அவசரப்பட வேண்டாம் உனுக்காருமென்று சொல்லிச் சபையிலிருந்த யாவரையும் பணிந்துகொண்டு, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, ஜெகரட்சகனாகிய தேவா! (காஞ்சீபுரத்திற் றிருடுவதற்குக் காவிரிப்பூம் பட்டினத்தில் கவிழ்ந்துபடுத்து மாரால் நகர்த்துவந்த கதையைப்போல) வலைவீசிவந்தீரே; ஓ மாய்வா! உமது சிந்தையி லெண்ணியவண்ணம் நடக்கும்படியாகிய காலம் நேர்ந்திருக்கின்றபடியால், நீர் இந்த தந்திர மாத்திரமோ செய்வீர்? இன்னும் ஏதேதோ செய்யக் காத்திருக்கின்றீர். இறைவனே! என்னை முடிக்க இவ்வளவு யுத்தி செய்யவேண்டுமோ? உமதிஷ்டத்தில் நினைந்தாற் பகைவனிறந்த இடத்தில் இருக்கமாட்டானோ? ஈசனே! சும்மாயிருந்த ஐவர் மனதுக்குத் துயரங்கொண்டு வந்து வைத்த தோன்றலாகிய உம்மை யாரறிவார்கள்? என்னையும், என்னை ஈன்றோர்களையும், அவர்க்கு முன்னோரையும், அம்முன்னோரை யீன்ற முன்னோரையும், நீயறிவாயன்றி, என் போலிகளா லறியத்தக்கதோ? ஓ பன்னகசயனனென்று பணிந்து பாண்டவர்களைப்பார்த்து, என்றன் நேயர்களே! நேற்றிராத்திரி துரியோதன மகாராஜன் என்னிடத்திற்குவந்தார், அவரை எதிர்கொண்டு கண்டு வணங்கி ஆசனத்திலிருத்தி ஏது இவ்வளவு தூரம் வந்ததென்று கேட்டேன். அதற்கு அவர் சொன்னது, பாண்டவர்களுக்கும் பகைமேலிட்டிருப்பதனாற் களப்பலிக்கு நீ வரவேண்டுமென்று இருகரத்தையும் நீட்டி இரந்தார்; போக தேவேந்திரனை யொத்த கவுரவகுல முதல்வன் இச்சை மேற்கொண்டு பிச்சை தாவென்று லச்சையின்றி என்னை யிரக்கும்போது, நான் நாஸ்தியென்று சொல்லக்கூடுமோ? ஓ அரசர்களே! ஆகையால், இப்படியாக இரந்த என் பெரிய தந்தையை நோக்கி, எப்போது களப்பலியூட்ட நினைத்திருக்கின்றீரோ அதுவரையிலும் இந்த அனித்தியதேகம் நிலைத்திருக்குமாகில் நீரே ஒப்புக்கொள்ளு மென்று நான் ஒப்புக்கொண்டதுண்டு. இப்போதும் நான் தப்பிதமாகச் சொல்லமாட்டேன். ஓ குவலயாபீட மென்னுந் தந்தியைக் கொன்றவனே! நீர் முந்திக்கொள்ளுவதானால், இதோ உமக்குச் சொந்தமாக இருக்கிறேன். இப்போது உமக்குச் சிந்தைகலி திடுக்கென்று விழுந்ததா? இனியுமக்கு நித்திரைபிடிக்குமா? ஓ நந்தகோபாலனே என்று சொல்லிய, நர்க கன்னியின் புத்திரன் வார்த்தையைக் கேட்டு, இதென்ன அனியாயம்? நானென்று சொல்லப்போய்த் தானென்றாய் விளைந்தது. அப்படியா? இராவானே! துரியோதனன் வந்து உன்னைக் களபலிக்குக் கேட்டானா? அடாடா! தருமநந்தனரே! கேட்டீரோ சங்கதி. (கிணறு வெட்டப்போய் பூதம் பிறந்த கதையாச்சுது) இப்படியிருக்கிறது உலகம். நேற்று துரியோதனதியரைக் கொல்லப் பதினெட்டுநாளென்னத்திற்கு, நீங்களெல்லாம் இங்கிருந்து என்னையனுப்பினால், இன்றைக்குள் நாளொருவனேசென்று அதமாக்கி வருகிறேனென்று சொன்னவன், இன்று இப்படி ஆய்விட்டானா? ஆ! ஆ! என்ன ஆச்சரியம்? அவனவன் பிழைக்கும் வகை அவனவன் தேடிக்கொள்ளுகின்றான். நாம் மாத்திரம் வீண்காலம் போக்கிக்கொண் டிருக்கிறோமென்று சொல்ல, இந்த வசனத்தைத் தருமர் கேட்டு, இராவானை அழைத்துத் தமது சரீரத்தில் அணைத்திருகப்புல்லி, அப்பனே! அப்பனே! என்னையனே! சாந்தமூர்த்தி! துரியோதனன் உன்னைக் களப்பலிக்குக் கேட்க, அதற்கு ஒத்துக்கொண்ட என்னிருகண்ணே! சந்திர குலத்தை விளங்க வந்த மணித்தீபமே! பிராணனைக் கேட்டவர்க்கும் பிறழாமற் கொடுக்க விசைந்த தாருவே!

என்று பலபலவிதமாயும் புகழ்ந்து மகிழ்ந்தார். அர்ச்சுனன் முதலிய பெயரும் அகங்களித் திருந்தார்கள்.

### கண்ணன் களப்பலி விதியுரைத்தல்.

அதுகாலையில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சொல்கின்றார்: ஏனையா! இவர்களெல்லோரு மிப்படி ஒன்றுபட் டிருப்பார்களாகில் நான் மாத்திரம் வேலை யற்றவனா? (ஆற்றிற்போகிற சலத்தை அப்பாகுடி ஐயாகுடி என்பதுபோ லிருக்கின்றதே) இதென்ன அனியாயமென்று ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியானவர் தருமராஜனைத் தனியே அழைத்துப்போய் நடக்கவேண்டிய காரிய மர்மங்களைக் கலந்து பேசி, இராவானைக் களப்பலிக்கு வைத்து விடும்படியாய்ச் சொல்ல, ஐயோ! என் பிள்ளையைக் கொன்று களப்பலி யூட்டி வைப்பது பெருமையோ? உயுத்த வாரம்பம் செய்யும்போதே புத்திர சோபத்துடனே யுத்தஞ் செய்யலாமோ சொல்லுங் கண்ணனே? என் தம்பி முதலிய பேர்களின் மனம் எப்படி துணியும்? நான் சற்றும் உடன்படமாட்டேன் என்று தருமராஜன் சொல்ல, அதற்கு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லுகின்றார். தருமராஜனே! கேளும்; களப்பலி யூட்டுவதென்றால், தலை அறுத்து வைப்பதா யோசித்து வருந்துகின்றீர். அப்படியல்ல; இந்தப் பிள்ளையை ஸ்நானம் செய்வித்து அலங்காரப்படுத்தி, அவன் கையிற்றானே வாள் கொடுத்து முப்பத்திரண்டு உறுப்புக்களிலேயும் கொஞ்சம் கொஞ்சம் அறுத்து, வீரமாகாளிக்கு நைவேத்தியம் வைக்கச் செய்வது களப்பலியே யல்லது வேறில்லை. இந்த இராவானுஞ் சுத்தவீரனாக நின்று யுத்தமுஞ் செய்வானென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் சொல்ல, தருமராஜன் சிந்தை மகிழ்ந்து, சுவாமி! எந்தை திருரோமக்காரன் வேண்டுமென்னுஞ் சித்தாந்த மென்னவென்றுகேட்க, ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லுகின்றார்.

ஓ தருமராஜனே! மாமிசம் அறுக்கும் போது அந்த இடத்தில் உதிரம் வராமலும், கண்ணீரெழாமலு மிருக்கவேண்டிய மனோ திடத்தைப்பற்றிய திருரோமக்காரரை தேடுவதென்று சொல்ல, அப்படியா வென்று அகமகிழ்ந்து அருச்சுனன் முதலாகிய தம்பிமார்களுக்குந் தெரிவிக்க, அவர்கள் கேட்டுத் திருமாலுடைய மனதிற்கும் தேவரீருடைய சித்தத்திற்கும் எப்படி சம்மதமோ, அப்படியே எங்களுக்கும் சம்மதமென்று புத்திரவாஞ்சையை அகத்தி லடக்கிச் சொல்ல, அந்தக் குறிப்பை இராவானறிந்துகொண்டு, ஐயா! நீங்கள் ஒன்றுக்கும் யோசிக்க வேண்டாம். (காற்றிருந்தவர் கால்வாங்க நேற்றிருந்தவரின்றில்லை, பார்த்திருந்தவர் பாழானார்) என்னும் பழமொழி கேட்டிருப்பீர்களல்லவோ? ஆகாயத்திலெறிந்த கல்லைப்போலும், காற்றையடைத்து வைத்த தோல் துருத்திபோலும், நெருப்பிற் காட்டிய மெழுகைப்போலும், வெய்யலில் வைத்த வெண்ணெய்ப்போலும், பெருங் காற்றிற் றோன்றிய குமிழிபோலும், மாலுமி யில்லாக் கப்பல்போலும், சூத்திரக் கயிறுடைய பொம்மைபோலும், வேகாப் பண்டத்தினிறைந்த ஜலம்போலும், நிமிஷ மாத்திரமும் ஸ்திரமென்று சொல்லக்கூடாத பொய்யாகிய தேகத்தை மெய்யென்று நிச்சயித்து வெகுபேர் மறந்து மடிந்தார்கள். ஆகையால், அநித்தியத்தை நித்தியமென்று நினைத்து, (பாம்பின்வாயி லகப்பட்ட தேரை அப் பாம்பினுடைய பல் நுனியிற் றொங்கும் விஷத்துளியைப் பார்த்து ஈ யென்று கருதி, இதைப் பிடித்து நாம் புசித்துப் பசியாறி இருப்போமென்று எண்ணி அந்த விஷத்துளியைத் தாவ, பாம்பு வாழைப்பழம்போல் தேரையைப் பின்புறமாகவே பிடித்து விழுங்கித் தன் பசி தணிவதுபோல) சாகிறவரையிலும் அவா நீங்காமையும், பிராண பயமும், யாவருக்கு மிருக்கும். அப்படி இருந்தாலும் சமுத்திரத்தினலைபோலும், வண்டிற் சக்கரம் போலும், ஊசலின் கயிறுபோலும், கீழது மேலதாய் மேலது கீழதாய்ப் போயும் வந்து கொண்டுமிருக்கும் பீற்றைச் சடலத்தை, பெருமையாக நினைத்து மூடர் மயங்குவார்கள். நுண்ணறிவுடையோர் நொடிப்பொழுது மகிழார்கள். உலூகியின் வயிற்றில் உங்களுக்கு நான் பிள்ளையாகப் பிறந்து என்னபலன்? தந்தையின் துயர்போக்கித் தர்ப்பணக்கிரியை முதலிய கடனைத் தீர்ப்பவன் எவனானாலும் அவனுக்கே பிள்ளையென்றும், பெரும் செல்வப் பேர் தகும். இல்லாவிட்டால் இருந்தும், இல்லாமையாகிய இழிவைப்பெறத் தக்கதாக இருக்கும். அதோ நமது குலத்தில் வீஷ்மாச்சாரியார் தந்தையாகிய சந்தனு மகாராஜன் நிமித்தத்தில் விரதசீலனாகி மேன்மைப் பெற்றார். ஆதலால், நானும் என் சரீரம் வருந்தி என்னாலியன்ற உபகாரங்களைத் தந்தைமார்களின்பொருட்டுப் பராசக்திக்கு திர்ப்தி செய்ய

நினைக்கின்றேன். நீங்கள் தயவு செய்து இந்தச் சிறியேனுலாகிய உதவியை அங்கீகரிக்க வேண்டும். மேலும், எல்லாரும் உயிருடன் இருந்து வாழவும், நான்மாத்திரம் இறந்து போகவும் நேரிட்டதேயென்னும் பயம் எனக்கில்லை. அதேனெனில், இவ்வுலகத்திலுள்ள ஆத்மகோடிகளில் வெகுபேரைக் குருக்ஷேத்திர பூமியிற் கூடி, வேலை முடிப்பதற்கு தனக்குள்ள சகலவேலைகளையும்விட்டெழுந்து, இதுவே வேலையாக வந்திருக்கின்ற இந்த விமலன், என் கண் காண எல்லாரையும் முடிப்பாரென்பது என்னுள்ளே தோன்றுகின்றமையால், முன்னே இறப்பது பின்னே இறப்பதென்னும் பேதமும், அதனுல் நேரிடும் பிராண பீதியும், என் மனதை வருத்தப்படுத்த இல்லை. (பழுத்தவோலை முன்விழுந்தால் குருத்தோலை பின்விழும்) என்னும் பான்மை போல், கடைசியில் கணக்கு பார்க்கும்போது சகடு முழங்காலென்னுந் தன்மையாய்ச் சரிப்பட்டுப்போகும். ஐயா! (குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னரே) என்னுந் தன்மையுமாகுமென்று இராவான் வணங்கிச் சொல்ல, அர்ச்சுனன் முதலிய யாவரும்கேட்டு மனமகிழ்ந்திருந்தார்கள். அந்தச் சமயத்தில், இராவானுனவன் பெரிய தந்தைமுதல் யாவரையும் பணிந்து, தாய்மார்களுக்குந் தீர்க்க தண்டஞ் செய்துக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியை வணங்கி, சுவாமி! தேவரீருடைய எண்ணப்படி உடம்பட்ட எனக்கு ஒரு வரங் கொடுக்கவேண்டும். அதாவது ஜெயவீரப் பிரதாப விஜயனுடைய பிள்ளையாகிய இராவான் களப்பலியா லிறந்தானென்றும் பெயர் இல்லாமல், யுத்தகளத்தில் சுத்தவீரனுலிறந்தானென்னுங் கீர்த்தியும், அப்பேர்ப்பட்ட வீரனிடத்திற் போர்புரிந்து இறக்கும்படியாகிய சத்துவமும் எனக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்க, அப்படியே ஈசன் அனுக்கிரகஞ் செய்வாரென்று அருள்புரிந்து யாவரும் மகிழும்படியாய்ப் பேசியிருந்து, தாங்கள் தங்கள் இறங்கியிருக்கும் இடம்போய்ச் சேர்ந்து, போசனுதிகளையும் புசித்திருந்தார்கள்.

### கண்ணன் திதியைப் புரட்டல்.

அன்றுபோய் -மற்றுநாட்காலமே எல்லோரும் எழுந்து சபைக்குவந்து சேர்ந்தபிற்பாடு, கண்ணனுனவர் நெடுநேரம் வரைக்கும் வார்தைை யாடிக்கொண்டிருந்து, அப்பால் இன்றையதினம் அமாவாசியாதலினுல், யாவரும் திலதற்பணுதிகள் முடித்துப் போஜனஞ் செய்து இருபதுநாழிகைக்குக் குருக்ஷேத்திரம் போய்ச் சேரவேண்டுமென்று சேனுதிபதியாகிய சுவேதனையழைத்து உத்தரவு சொல்ல, அதைக் கேட்ட அரசர்களெல்லாரும் ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் பார்த்து, இன்றைக்குச் சதுர்த்தசி நாளைக்கு அமாவாசையாகையால், நாளைக்கல்லவோ சேனைகள் குருக்ஷேத்திரம் போகவேண்டிய நாளென்றுசொல்லக் கண்ணனுனவர் நகைத்து, ஐயா! இன்றைக்குத்தான் அமாவாசை யென்று ஸ்தாபித்தார். அப்போது அரசர்கள் முதலானவர்களோடு பாண்டவர்களும் பஞ்சாங்க மெடுத்துவரச் சொல்லிப் பார்த்தபோது, அதிலுமின்றைக்கென்றே இருக்கப் பார்த்து, பௌரோகிதரையுங் கேட்கும்போது, ஐயா! இன்றைக்கே அமாவாசை யென்று அவர்களுஞ் சொல்ல, அவர்களும் அந்நகரத்திலுள்ள மற்ற யாவரும் ஸ்நான சங்கற்பங்களைச் செய்து கொண்டு, திலதற்பணுதிகளை முடித்துப் பிதிர்த்தேவதைகளைப் பூசித்து நைவேத்தியம் வைத்தபோது, அந்தப் பிதுர்த்தேவதைக ளெல்லாரும் வந்து சாப்பிட்டார்கள். அந்த வேளையில், தேவர்களுக்குப் பிதுர்ப்பாகம் அகப்படாமையினுல், இதென்ன காரணம்? பிதுர்க்களெல்லாரும் உண்டு களித்திருக்க, நமக்குப் பாகமகப்படாமற் போன வயணமென்ன வென்று அத்தேவர்க ளெல்லோருங் கூட்டங்கூடிச் சூரிய சந்திரரை அழைத்து, இன்றைக்குப்பிதுர்த்தினமென்று பூலோகமெல்லாங் கொண்டாடிப் பூசிக்கின்ருர்கள்? உங்களுக்குக் கிடைக்கவேண்டிய பிதுர்ப்பாகங்கிடைத்ததாவென்று தேவர்கள் கேட்க, அச்சொற்கேட்ட சந்திர சூரியர் இரண்டுபேருந் திடுக்கிட்டு, நாளைக்கல்லவோ நாம் கூடவேண்டிய காலம்? நாம் ஒன்ருய்ச் சம்பந்தப்பட்ட காலமல்லவோ அமாவாசி? அதற்கல்லவோ பிதுர்த்தினமென்று பெயர்? நம்முடைய கதி இன்று முழுமையுஞ் சென்றபிற்பாடல்லவோ நாளைய கதியிற் கூடப்போகிறேம்? அப்போதல்லவோ பிதுர்ப்பாகம் நமக்குக் கிடைக்கும்? அப்படியிருக்க இன்று கூடியதாய்க் கொண்டாடியவிதம் எங்களுக்குந் தெரியவில்லையே என்று மற்றக் கிரகங்களை கேட்க, அதென்னமோ எங்களைத் தானம் விட்டுத் தானம் புரட்டி இருக்கிறது; எங்களுக்குத் தெரியவில்லை யென்று சொல்ல, இப்போது நம்மெல்லோருக்குஞ் சந்தேகப் பட்டிருப்பதால், நமக்காகப் பூலோகத்தி லவதரித்திருக்

கும் புண்யனாகிய கண்ணன் உபலாவியத்தில் இருக்கின்றார். அவரைப் போய்க் கேட்போமென்று அந்தரம்விடுத்து இந்திரன் முதலிய சந்திர சூரியர் யாவரும் சேர்ந்துவந்து சுவாமியைத் தனித்துக்கண்டு வணங்கி, நாளைய தினம் நாங்கள்கூடுஞ் சங்கமமாகி இருக்க, இன்றையதினமென்று தாங்களுத்திரவு செய்ததாய் பேசிக்கொள்ளுகிறார்கள். ஆகையால், சந்தேகப்பட்டு உங்களைக் கேட்கும்படியாக வந்தோம் என்று ஒருவர் பின்னொருவர் நின்று சந்திரசூரியர் சொல்ல, ஸ்ரீகிருஷ்ணதேவர் அவர்களுடைய வசனத்தைக்கேட்டு, நல்லது அமாவாசி எப்பவென்று கேட்க, தாங்களிரண்டுபேருங் கூடியகாலம் அமாவாசி பிதுர்த்தினமென்று சொல்ல, அதைக்கேட்ட பகவானானவன் நகைத்து அவர்களை நோக்கி, இப்போது நீங்கள்கூடி இருக்கின்றீர்களா சொல்லுங்களென்று கேட்க, தேவரீரைக்கண்டு சந்தேகநிவர்த்தி செய்து கொள்ளும்படியாக நாங்கள் இருவருங்கூடி வந்தோமென்று சொல்ல, நீங்கள் கூடியதினமே அமாவாசியாகையால், இப்போது கூடியிருக்கின்றீர்களே இதுவே அந்தப் பிதுர்க்காலந்தானென்று சொல்ல, நாளையதினத்தை இன்றாக ஒப்புக்கொண்டால் எங்கள்கதி எப்படி சரிப்படும் என்று கேட்க, இன்றுமுதற் பலநாட்களிலும் சேர்ந்து ஒவ்வொரு தினத்திற்கு மாத்திரைப்போது கதியாகச்சென்று சரிப்படுத்திக்கொள்ளுங்களென்று சக்கராயுதன் சொல்ல, அப்படியே மகாபாக்கியமென்று ஒப்புக்கொண்டு போய்விட்டார்கள். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அந்தக் குறைவுதான் நாளதுவரையிலும் அமாவாசி சரியாகவராமல்; இன்னுமிரவும் பகலுமாகப் புரண்டு வருகிறதென்று வைசம்பாயனர் சொல்ல, அதைக்கேட்டு மகா சந்தோஷமடைந்து, நாளையுங் கோளையும் புரட்டும் நாயகனாகிய நாரணனே பாண்டவர்களுக்கு நன்மைத்தனாக அமைந்திருக்கும்போது, வேறாக நடக்கும் காரியங்களுமுண்டோ? (முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ) என்னும் பெரியோர்கள் வாக்கியமென்ன பழுதாவதோ? ஓ வேதாந்த முதல்வனாகிய சுவாமியென்று சிந்தனைசெய்து வந்தனைபுரிந்து மேல்நடந்த மற்ற செய்கைகளைத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று ஜெனமேஜெயமகாராஜன் கேட்க, வைசம்பாயனர் பிறகு நடந்தவைகளைச் சொல்லுகின்றார்.

## பாண்டவர் குருக்ஷேத்திரஞ் சென்று வீரமாகாளியைப் பூசித்தல்

இப்பால் ஸ்ரீ கிருஷ்ணனானவர், சேனாதிபதியாகிய சுவேதனனை யழைத்து, நமது சேனைகளெல்லாம் இன்றையதினங் குருக்ஷேத்திரம் போய்ச்சேர்ந்து, இராத்திரிக்கு வீரமாகாளி பூசைசெய்து ஆயுதமெடுத்து, நாளைக்கு முதல்நாள் யுத்தம் ஆரம்பிக்கும்படி நாள் நியமித்திருப்பதினால், அதி சீக்கிரத்திற் பிரயாணப்படுமென்று சொல்லவே, அப்போதே பிரயாணபேரி முழங்கச்செய்து, அளவிறந்த முரசு-பேரி-குடமுழா-துந்துமி-டங்கா-பாங்கா-உறுமி-தவிதடி-தப்பட்டை-தாரை பூரி-கற்றை-கொம்பு முதலிய வாத்திய முழக்கவும், சேனைப்பெருக்கமும், இரதகஜ துரக பதாதிகளின் நெருக்கமும், அண்டமுகடுமுதல் எண்டிசையும் அதிரும்படியாய் மண்டலமும் புண்டரீகனுலகமும் பெருகும்படியாய்ப் புறப்பட்டார்கள். ஒருமையென்பது சிறுமையாற் குழையவும், இருமையென்னும் அஸ்திரசஸ்திர ஆயுதங்களிரண்டு மிழையவும், மூன்று லோக முழங்கவிருக்கவும், நான்கு நிலமும் நடுங்கிப் பயக்கவும், ஐந்து பூதங்களலறவும், ஆறுசமய மடங்கவும், ஏழுகடலுமிரைக்கவும், எட்டுகஜமுந் துடிக்கவும், ஒன்பது கிரகங்கள் உலையவும், பத்துத்திசைகளும் பதறவும், பதினொரு ருத்திரர்பேரவும், பனிரண்டு சூரியர் மாறவும், பதின்மூன்று தமிழ்நாட்டரசர் சேனைகளுக்குப் படிபோடவும், பதினாலுலகம் நடுங்கவும், பதினைந்துதிதியு மொடுங்கவும்; புகழ்-வலி-வெற்றி-பெருமை-நல்லூழ்முதலிய பதினாறுபேரும், பாண்டவர் பெறவேண்டும் என்னும் பக்தியினால் பாதலத்திலிருக்கும் நாகங்களினுடைய தலைநசுங்கி அதின் சிரசிலிருக்கின்ற நாகரத்னம் பிரகாசிக்கும்படி மூலாவுந்தொகை இறந்தயானைகளும், மகமேருவே முதலிய பர்வதங்களுக்கு அச்சு மச்சுமுதலிய அங்கங்களமைத்து குதிரைகள்கட்டி வருவனபோலொத்த கோடாகோடி தேர்களும், குரத்தாற்றூளிப் படலங்களை எழுப்பி மேகக்கூட்டங்களுங் குமிங்கிப் போகும்படியாய் அநுமானித்து தாவிவரும் அளவற்ற குதிரைகளும், அத்தன்மையாக எழும்பிய தும்புகளை யானை மதங்கள் உளைச்சேறாக்க, அந்தஉளைச்சேற்றை இரதங்களினுருளைகளூர்ந்து வான்கருக்கைப்போலும் மண் வெட்டி இலையைப்போலும் காய்ந்துவரச் செய்ய, அப்படி யுலர்ந்து காய்



பாண்டவர்கள் குருக்ஷேத்திரமடைந்து வீரமாகாளியை பூசித்தல்.

ந்த கனிமண் கட்டியைப் பரம அணுவாக்கி ஆகாயத்தில் மறுபடியும் பறக்கச்செய்து, அதனால் இமையா நாட்டத்தவரைக் கண்ணிமைத்துத் தியங்கும்படியாக்கி இமைக்கு நாட்டத்தவரென்று பேரிட்டழைத்துப் பெருங் கூச்சலிட்டுச் செல்லும் பலவாறான பதாதிகளும், அப்படித் தேவர்களுடைய கண்களில் வீழ்ந்ததும் பையைத்துடைத்து விசனப் படாதீர்கள்; நீங்கள் இமைய நாட்டத்தவர்கள் யென்று பேர் விளக்கித் தேவோபகாரஞ் செய்யும்படியாகிய பற்பலவித வன்னன் கொடியாடைகளும், அக்கொடிகளின் வஸ்திரங்களைத் தாங்கி யிருக்கும் பளைக்கொடிகளும், கொம்புகளையும், பலவிதக் குடைகளையும் பிடித்து வராநின்ற படியாட்களும், அந்த நிழலில் வரும்படியாகிய முடிமன்னரும், வீரப்ரதாபக் கொடிமன்னவரும், முடியுடன் முடிகளுருங்க, புஜத்தோடு புஜங்கணெருங்க, அடியுட னடிகண்மிதிக்க, ஆயுதங்களுடன் ஆயுதமிழைக்க, ஆக்ரமித்துப் பராக்ரமித்து பராக்ரமத்துடன் வியாக்ரமம்போற் சீக்கிரம் வந்து பற்கடித்துச் சொற்படிந்து வாய்மடித்து வாள்பிடித்துப் படபடவென்ன மீசை முடித்துக் கடகடவென்ன ஓசை எடுத்து விற்பிடித்து மற்கொடுத்து வீரங்களைப் பேசு மோசையும், காரங்களைப் பேசும் ஆசையும், யானையின் முழக்கமும், தேர்களின் சக்கரத் தொனியும், குதிரைகளின் அநுமானிப்பும், சேனைகளின் பெருங் கூச்சலும் அவைகளெல்லாம் உலகம் செவிடுபடும்படியாய் முழங்க வந்து குருக்ஷேத்திரம் சேர்ந்து, செங்கண் மாலே சிரசுஞ் சீவனுமாகவும், சேனாதிபதி சுவேதனனே அணிமுடியும் ஆபரண அலங்காரமாகவும், மற்றைய வரசர்களே பலவித உறுப்புக்களாகவும், பாண்டவர்களே படைத்தேகமாகவும் இருந்து, அந்தக் குரு பூமியில் அந்த ஏழக்குரோணி சேனைகளுந் தாங்களும் இருப்பதற்குப் பாசறை அமைக்கும்படியாக யோசித்துக் காண்டவ வனத்தில் அருச்சுனனால் உயிருதவிபெற்ற மயனென்பவனை, அடியார்க் கெளியவனாகிய நெடியோன் அருளினால் நினைக்க, அவன் வந்து ஆதிநாரணனை வணங்கி, அடியேனை நினைத்த காரிய மென்னவென்று கேட்க, இவ்விடத்தில் யாவரும் அவரவர்க ளந்தஸ்தின் படி இருப்பதற்காகிய படை வீடு வெகு திட்டமாய் அழகிய சட்டமாய் ஏற்படுத்த வேண்டு மென்று சொல்ல, அப்படியே மஹா பாக்கிய மென்று தனது மனத்தினாலுன்னி, கரத்திலிருக்கும் மாத்திரைக் கோலினாலும், தன து கண்களினாலும் கோடுகளேற்படுத்தி, நான்கு புற மதிற்கோயிலும், நவரத்தினக் கோட்டை வாயிலும், ஆயுதச் சாலையும், பூந்தருச்சோலையும், புனிதஸ்நானஞ் செய்யும் இடமும், பூசை விதி முடித்துக்கொள்ளும் மடமும், தேவதார்ச் சனைக் கூடமும், திருவாபரண மாடமும், அலங்காரம் செய்துக்கொள்ளும் அறையும், அரசர்க ளிருக்குந் துறையும், ஆலோசனை மண்டப முறையும், அரிவையர் கூடும் நிறையும், ஆனைகட்டுங் கொட்டாரமும், ஆன்றோர் வசிக்கும் விட்டாரமும், குதிரைகள் பந்திக்கும் சோலையும், தேர்கள் நிறையும் சாலையும், பதாதிகளடங்கும் இடமும், ராஜஸ்திரீகளிருக்கும் அந்தப்புர மடமும், சவுக்கடி மேடையும், சந்தன வாடையும், சித்திரகூடமும், அஸ்திர மாடமும், சாதுசங்கச் சாலையும், வேத வேள்விச் சோலையும், ஓமசாந்தித் திட்டும், கலியாண மண்டபக் கட்டும், கனதனப் பெட்டி வைக்குங் கூடமும், கவிவலோர் மிக்கிருக்கும் பீடமும் ஆகிய இவைகளெல்லாம் ஏற்படுத்தினான் மயனவன். அந்த அலங்காரத்தைக் கோபாலனும், பூபாலனும் பார்த்து நாவினாற் சொல்லத் தக்கதன்றென்று தம்முடன் மகிழ்ந்து, அம்மயனைப் புகழ்ந்து, நல்ல வேளையிற் கிரகப் பிரவேசஞ்செய்து தியாகயோக யேகபோக இந்திரனைப்போற் கொலுக்கொண் டிருந்தார்கள். அன்றிராத்திரி ஒன்பது நாழிகைக்கு மேல், ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமதெண்ணம் நிறைவேறும்படியாய் ஆயுதச் சாலையில் ஆவாகனஞ் செய்திருக்கும் வீரமா காளிக்குப் பூசை போட வேண்டுமென்று சகலவித அலங்காரத்துடன் சென்று, அபிஷேகத் திரவியங்களாகிய சந்தனம்-கரும்பு - இளநீர் - பச்சைக் கற்பூரம்-குங்குமம்-கதம்பம்-புனுகு-சவ்வாது-பன்னீர் - பால் - தேன் - தயிர் முதலிய யாவுங் கொண்டு, திருமஞ்சனமாட்டி, திவ்ய வஸ்திராபரண முதலிய திலகமுஞ்சூட்டி, மலர்ந்த மணமுறைந்த பராசமுந் தேனு நிறைந்த புட்பமாலையுஞ் சாத்தி, கன்னல்-பயறு-காய்கனி-கிழங்கு-வாழைக்கனி-வருக்கைக்கனி-மாங்கனி தேங்காய்-தாம்பூலம்-கர்ப்பூரம்-சாம்பிராணி-தட்சணை-அரிசி-துவரை-அவரை-எள்-மொச்சைக்கடலை-முழுவுளுந்து-அபினி - சாராயம்-சடைகஞ்சா-புகையிலை-பாயசம்-சுகியன்-சுண்டல்-எள்ளுருண்டை-மோதகம்-வடை - பணியாரம்-கொட்டி-அன்னம்-கச்சாயம்-அறுசுவைக்

கறி - கொழுக்கட்டை இவை முதலியவைக
ளோடு தாம்சத்திலுள் சும்மரக் கறிவகைகளு
மமைத்து, இடையிடை இளநீர்-எலுமிச்சம்
பழம்- பேரீச்சம்பழம்-வேர்ப்பலா-விளாம்பழ
ம்-கிச்சிலிப்பழம்இவைகளைவைத்து,விதம்வித
மாக சர்க்கரை வெல்லத்தால் தரைமுன் மெ
ழுகி, பக்குவநெய்யாற் பள்ளமமைத்து, யாக
சாஸ்திரவிதிப்படி ஓமம் வளர்த்தி, யாமள
சாஸ்திரவிதிப்படி உயிர்ப்பலி கொடுத்து, சுடர்
மணி விளக்கு தூண்டாவிளக்கு முதலானவைக
ளோடு கர்ப்பூர ஜோதிகாட்டி, இராவானை
யழைத்து அபிஷேகஞ்செய்து, சிவப்பு நிறம்
கொண்ட செம்பட்டணிந்து,செஞ்சந்தனமும்
சிவப்பு மாலையுந் தரித்து, தேஜோன்மயமான
திவ்யாபரணங்களினால் தேகமெல்லா மறை
த்து, வீரகண்டாமணி கட்டி, விருத்துவஜம்
நாட்டி, வாளாயுதத்தை மகாதேவி சந்நிதியில்
வைத்துப் பூசிக்கும்படியாய்விட்டார்கள். அந்
தப்படியே இராவானும் தீர்க்கதண்டமாகப்
பணிந்து, தூபதீபம் கொடுத்து நீர்மாற்றி,
வாளாயுதத்தை வலதுகரத்தாலெடுத்து மண்டி
யிட்டு ஓங்காரங்கொண்டு தனது முப்பத்திர
ண்டு உறுப்புக்களிலும் துண்டறுத்துப் பரா
சத்தியின் முன்வைத்து மனம் கோணாமல்,
உடல்வாடாமல், பிராணபயம் நாடாமல், வாய்
பேசாமல், தேகந் துடியாமல், உதிரம் வடியா
மல், கண்ணீர் சோராமல், தண்ணீர் பாராமல்,
வாழ்நாள் தேடாமல், மண்ணாசை நீடாமல்,
சாஷ்டாங்கமாக விழுந்துவிட்டான். உடனே
பாண்டவர்களும், கிருஷ்ணமூர்த்தியும் ஜலங்
கொண்டு தெளித்து உபசாரஞ்செய்து, தாக
விடாய் தீர்த்து, நீறும் பத்திரியும் நிறையப்
பூசி, அந்தப் பராசத்தியின் சாலையிற்றானே
வளர்த்தி வைத்தார்கள். அப்பால் மூர்ச்சை
நீங்கி எழுந்த இராவானனவன், மூன் பலத்
திற்கு மூன்றுபங்கு பலங்குன்றிப்போய்ச்
சுவாமியின் அருளினாற் கொஞ்சம் பலமுடை
யவனாக இருந்தான். பாண்டவர்களும் நல்ல
வேளையில் ஆயுதமெடுத்துக்கொண்டு மிகுந்த
சந்தோஷமுடையவர்களாய்ப் பொழுது எப்
போது விடியுமென்று சகல சேனைகளுடன்
ராத்திரி முழுமையும் நித்திரையில்லாமல்
மிகுந்த ஆத்திரத்துடன் சூரியோதயம் பார்த்
திருந்தார்கள்.

### வீஷ்மருக்கும் கர்னருக்கும் வாது

இப்பால் துரியோதனமகாராஜன் உடலா
விபத்தில் நடந்த சங்கதியும், அமாவாசியைப்
புரட்டியதும், இராவானைக் களப்பலி பூட்டி
யதுந் தெரிந்துகொண்டு மெத்தவும் விசன
முடையவனாய், தான்போய் நாள்வைத்துக்
கொண்டு களப்பலிக்கு இராவானை உடன்படு
த்தி வந்ததையும்,அதைக் கிருஷ்ணன் புரட்டி
விட்டதையும் வீஷ்மர் முதலிய உரியவர்களுக்
குந் தெரியப்படுத்தி, தங்களுடைய பட்டத்து
யானையைப் பலிகொடுக்கும்படியாய் அன்
றையதினமே சித்தம் செய்துக்கொண்டு பாட்
டனாகிய வீஷ்மருக்குச் சாஷ்டாங்கமாகத்
தண்டம் செய்து, நமது சேனை சமயினியங்க
ளுடன் குருபூமிக்குப் போகும்படியாய்ப் பிர
யாணப்பட வேண்டுமென்று மிகுந்த தைரியத்
துடன் சொல்லிப்போன துரியோதனனுடைய
பேச்சைக் கேட்டு, வீஷ்மரானவர் அணி
வகுத்துத் தரமேற்படுத்தினார். அவ்வந்தரத்
தின் விபரம் யாதெனில், துரோணாச்சாரி
யார்,அஸ்வத்தாமர்,வீஷ்மர் தாங்கள் மூவரும்
அதிரதத் தலைவரென்றும், பூரிசிரன், சோம
தத்தன், துன்பருடன், பகதத்தன் இந்த
நாலுபேரும் மகாரதத் தலைவர்களென்றும்,
கிருதவன்மன், துரியோதனன், சகுனி, சல்லி
யன், சயிந்திரன், திரிகர்த்தன் இவர்கள்
சமரதத் தலைவரென்றும், அங்கதேசாதிபதி
யாகிய கர்னன், விஷசேனன், துசுவாசனன்
முதலாகிய தொண்ணூற்றொன்பது தம்பி
மார்கள் அவர்கள் அர்த்தரத ரென்றும்
ஏற்படுத்தி வணங்கா முடியை யுடைய
மன்னவனிடத்திற் சொல்ல, அதைக்
கேட்ட அரசனானவன், அதிரதரிற் சிறந்த
அங்கதேசாதிபதியை அர்த்தரதரி லேன்
போட்டார் நமது ஐயாவென்று யோசிப்ப
தற்கு முன்னமே, கர்னனானவன் இந்தச் சங்
கதியைக் கேள்விப்பட்டு, காச்சிய செம்பைப்
போற் கண் சிவந்து கோபங்கொண்டு, முகம்
கறுத்து மீசை துடிக்க-வியர்வை யொடிக்கத்-
தோள் துடிக்க, வாளை யுருவிக்கொண்டு மண்
ணும் விண்ணும் நசிக்கும்படியாகத் துரியோ
தனன் முதலிய சகல ராஜர்களுக் கெதிரில்
வந்து வீஷ்மரைப் பார்த்து, விற்பிடிக்கத்
தெரியாத நீ அதிரதத்தலைவனாகிய என்னை
அர்த்தரதரி லேற்படுத்தினா யல்லவா? பளா!
பளா! வெகு நேர்த்தி ஐயா! பெரியவனென்
றும் உரியவனென்றுந் துரியோதன மகா
ராஜன் உனக்குச் சேனாதிபதி பட்டம்கட்ட,
அந்தப் பெரிய தனத்தைச் சீர்படுத்திச்
சிறப்பாக்கிக்கொள்ள வகைதெரியாமற் சிறிய
தனமாக்கிக் கொண்டாயே சீமானே! நீ தனூர்

வேதத்தில் என்னென்ன சாஸ்திரங் கற்றிருக்கிறாய்? எந்தெந்த வீரத்திறந் தெரிந்திருக்கிறாய்? என்ன சாகசமறிவாய்? என்ன தன்மை என்னிடத்திற் குறைவுண்டென்று அர்த்தரதரிற் போட்டாய்? நீ என்ன அறிவாய்? கெடு நினைப்பினையுடைய வீஷ்மனே! இதோ உன் தலையை வாளினால் மாட்டிக் கடப்பலி யூட்டித் துரியோதனனுக்கு ஜெயஞ்சூட்டி வைக்கிறேனென்று வாளை யோங்கி வீசி வரவும், அந்த வேளையிற் வீஷ்மாச்சாரியாரும் வாளை யுருவிக்கொண்டு தேவர்கள் நடுங்கும்படி கடுங் கோபத்துடன் சீறி, (தப்பற்ற தோழனுக்கு இரட்டைப் பங்கு) என்னுந் தன்மையைப் போல் உன் சுத்த வீரத்திற்கு அதிரத்தலைவனென்னும் ஆண்மிக்கையும் வேண்டுமோ? அடா கர்ணா! இப்போதே உன் தலையை வெட்டித் தொலைப்பேனாகில், புகழினையுடைய இந்தக் குருகுலம் விளங்கி இருதிறப் பிள்ளைகளுஞ் சுகப்பட்டுப் போவார்கள். அடா பாவி! இதோ வெட்டினேன் வெட்டினேனென்று பலவாறாகத் திட்டிக்கொண்டு கிட்டவரவும், இதைக் கண்ட அரசர்களெல்லாரும் அஞ்சி நடுங்கி எட்டிப்போகவும், வீரர்களெல்லோரும் வெருண்டொடுங்கவும், இவ்விரண்டுபேரு மெதிர்த்துக் கொண்டார்கள். இவ்விருவருங் கொண்ட பெருங் குரோதத்தைத் துரியோதனன் கண்டு திகில்கொண்டு, இரண்டு பேருக்கும் நடுவில் வந்து நின்று, பகைவர் நகைக்கும்படியாய் நீங்களிருவரும் எதிர்க்கலாகுமோ? ஓ ஐயா! ஓ அண்ணா! எங்களை இவ்வித அவமானம் பண்ணுவதைப்பார்க்கிலும், எங்களைக் கொன்றுபோட்டு உங்களெண்ணத்தைச் சரிப்படுத்திக்கொள்ளுவது உத்தமமென்று இருவருக்கு மத்தியினின்று விலக்கினான். அப்பொழுது காற்றினாற் கலங்க யடிபட்டு விலகிய காளமேகத்தைப்போலக் கண்கறுத்து இருவரும் விலகி நின்றார்கள்.

அப்போது அந்தச் சேனைகள் இருந்த மன்னவர் யாவரும் மனஸ்தாப மடைந்து, வீஷ்மாச்சாரியானவர் கர்னனை அர்த்தரதத் தலைவரிற் போட்டதற்குக் காரணங் கேட்காமலும், அதைத் தெரிந்துகொள்ளாமலும், அவமரியாதையாகப் பேசி வாளையுருவி வெட்டுகிறேனென்று வந்த கர்னனை ஏன் இவ்வாறு நடத்தினையென்று விசாரியாமலும், இருவரையும் சமாதானம் பண்ணிய முறைமையறியாத துரியோதனனைக் குறித்து பேசவேண்டிய தென்ன விருக்கின்றது? இனி ஒன்றுங் காரியமில்லை. ஓம் பிரதானமென்று ஆயுதம் எடுத்த போதே என்னை வெட்டு உன்னை வெட்டென்று விளைத்தபடியால், இதுபோலவே பொழுது விடியும் வரையிலும் கலகம் விளையுமென்று பேசிக்கொண்டிருந்தார்கள். இப்பால் கர்னனானவன் நெடுநேரம் வரையிலும் விசனத்துடனின்று, ஆ! ஆ! இந்தத் துரியோதனன் நமது பேரில் வைத்திருந்த பட்சமெல்லாம் பாழாகப் போய்விட்டது. ஐயையோ! இந்த வீஷ்மனை நோக்கி, ஏனையா இப்படி செய்தீரென்று ஒரு வார்த்தையுங் கேளாமற் பாட்டனென்னும் பட்சமறவாமல் இருந்தானே யன்றித் தன்க்கிஷ்டமாகி யிருந்த என்னை மறந்தானல்லவா? அடடா! துஷ்டசாவகாசமாய் விட்டதென்று துடிதுடிப்புடனிருந்தான். அதுகாலையில், துரோணாச்சாரியார் முதலிய பேர்கள் வீஷ்மரை யடுத்து, ஐயா சேனாபதியே! அதிரதத் தலைவனாகிய இந்தக் கர்னமகாராஜனை அர்த்தரதத் தலைவரிற் போட்டதற்குக் காரணமென்ன சொல்லுமையா வென்றுகேட்க, பீஷ்மர் சொல்லுகின்றார். அரசர்களே! கேளுங்கள்; இவிடத்திலிருக்கிற மகா வீரர்களில் நானுங் கர்னனும் அடங்கலுக்குப் புறம்பாகி இருக்கின்றோம். ஆதலால், நான் முதற்படையிலிருக்கின்றபடி கடைப்படையிற் கர்னனைப் போட்டேன். இதுவேயன்றி மற்ற வேறொன்று மில்லையென்று சொல்ல, அதைக் கேட்டுத் துரியோதனன் முதலிய யாவரும் கர்னனை கட்டித் தழுவிக்கொண்டு, ஓ அங்கதேசாதிபதியே! கேளும்; வீஷ்மர் செய்த காரியம் வஞ்சகமல்ல, சேனைகளை ரட்சித்துக் காக்கும்படிக்கு இப்படி செய்ததாகச் சொல்லுகிறார். ஆகையால், நீங்களிருவரும் கலந்து வார்த்தையாடி யோசித்து ஒரு காரியத்தைச் செய்தால் மாத்திரம் மெத்தப் பெருமையா யிருக்கும். ஜெயமுங் கிடைக்கும். இல்லாவிட்டால் காரியமல்லவென்று துரியோதனன் முதலிய பேர்களும் சொல்ல, அந்த வசனத்தைக் கர்னன் கேட்டுக் கலீரென நகைத்து, இவருடைய சூது உங்களுக்குத் தெரியாது. (பாம்பின்கால் பாம்புக்குத் தெரியும்) என்பதுபோல், இவருடைய வஞ்சகத்தையும், சத்துருவைப் புகழ்ந்து பேசுந் தன்மையும், என்னிடத்திலிவர் வைத்திருக்கும் இஷ்டத்தையும் நானறிவேன். இவரோ நல்லபாம்பின் விஷப் பகையிலுங் கொடிய துவேஷக்கொடுமையை யுடையவர். எப்போதும் மனதிற் சந்தேகந் தோன்றாமற்

சகல காரியங்களும் நடக்க வேண்டும். சந்தேகந் தோன்றினலோ ஒரு காரியமும் நடவாது. (மிரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்) என்பதுபோல அவருக்கும் எனக்கும் அனுமானம் பிறந்துகொண்டேயிருக்கும். ஆகையால், இந்த வீஷ்மர் என்றைக்குச் சாகின்றாரோ அன்றைக்கு நான் மனப்பூர்வமாய் ஆயுதமெடுத்து யுத்தம் பண்ணுகிறதேயன்றி, இதற்கு மத்தியில் யுத்தகளத்திற்கு வரமாட்டேன். வந்தாலுமோ மனக்களிப்பாய் வேணுமென்று போர்புரிய ஆயுத மெடுக்க மாட்டேன். இந்தப் பட்சபதி சாகவேணும். நான் பாண்டவர்களைக் கொல்லவேணும். துரியோதனராஜன் இந்தப் பாராளவேணும். இஃதல்லது மற்ற வேறொன்று மில்லை. என்று சொல்லி அப்பால் போய்விட்டான்.

## கௌரவர் குருக்ஷேத்திரமடைதல்

இப்பால் வீஷ்மரானவர் சேனைகளைக் கூட்டி, பிராணபேரி - வீரபேரி - ஜெயபேரி முதலிய வாத்திய முழங்கும்படியாகச் செய்து பயணப்படுத்தினர். அந்தவேளையில் துரியோதனன் - சகுனி - துச்சாசனன் இவர்கள் மூவரும் கர்னனுக்கு வேண்டிய தேறுதல் சொல்லி, மனவுறுதியை விட்டுவிடார். இந்த பீஷ்மருடைய மனது எங்களுக்குத் தெரிந்தேயிருக்கின்றது. நாங்கள் அறிந்துகொள்ளாமலிருக்கவில்லை. பாண்டவர்களிடத்திற் பட்சம்வைத்து அவர்களை ஜெயிக்கவேணுமென்று பாடுபடுகிறார். நீர் ஒரு பிராணி எங்களுக்காக உண்மையாய்ப் பாடுபடுகிறபடியால், உம்மை அர்த்தரதரிற்போட்டு அவமானஞ் செய்யவேண்டுமென்றே செய்தார். ஆகையால், (கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டியதில்லை) பட்டப்பகற்போல் எங்களுக்குத் தெரிகிறது. ஆகிலும், (பந்திக்கு முந்தவேணும் படைக்குப் பிந்தவேணும்) என்னும் பழமொழிப்பிரகாரம் எங்களுடைய அதிர்ஷ்டமும், உம்முடைய நல்லகாலமும் அப்பீஷ்மருக்குப் பொல்லாத காலம் பிறப்பித்து உம்மை அர்த்தரதரிற் போடும்படியாகச் செய்தது மெத்த நல்ல காரியம். முந்தி மடியத்தக்கபேரெல்லாரும் மடியும். வீரர் சூரர் முதலிய பேர்கந்து போகட்டும். பிற்பாடு ளெல்லாருங் கை கால் அசரட்டும்; பிற்பாடு நாமிருக்கிறோம். பாண்டவர்களிருக்கின்றார்கள் பார்த்துக் கொள்ளுவோம். நீர் ஒன்றுக்கும் பயப்படவேண்டியதில்லையென்று கர்னனைத்தேற்றி அழைத்துக்கொண்டுபோய் திரிதராஷ்டிர மகாராஜனுடைய காலில் யாவரும் விழுந்து, குருக்ஷேத்திரத்திற்குப் படைகளை கூட்டிக்கொண்டு போகும்படி விடைகேட்டார்கள். அதற்குத் திரிதராஷ்டிரன் சந்தோஷமடைந்து, நமஸ்காரஞ் செய்த பிள்ளைகளை எல்லாம் வாரி மார்போடணைத்து ஆசீர்வதித்து, எனது மைந்தர்களே! இதுவரையிலும் இந்தச் சந்திரவம்சத்தி லில்லாத பகையை நீங்கள் தேடிக்கொண்டீர்கள். பாண்டவர்களோ மெத்த நயிச்சிகாள். அதற்குத் தக்கபடி வரங்கள் முதலிய பலமுந் தவமும் தெய்வ கடாட்சமும் பெற்றிருக்கின்றார்கள். ஆகையால், காலம்-இடம்-சமயம்-பலம்-படைத்துணைகளின் விரம் இவைமுதலியயாவையும் அறிந்துகொண்டு சந்தற்பமெப்படி இருக்குதோ அந்தப்படி வழிவிட்டுப் பெரியோர்கள் சொல்லும் வார்த்தையைக்கேட்டு உரியோர்களைக் கைவிடாமல், தைரியம்விடாமல் காரியத்தாட்சி வாராமல் செயம்பெறக் கடவீர்கள் என்று சொல்லிக் கர்னன் சகுனி முதலிய பேர்களைப் பார்த்து குழந்தைகளே! என் பிள்ளைகளோ அறியாதவர்கள். இதுவரையிலும் யுத்தஞ் செய்ததுமில்லை. பெரும்போர் நடந்ததைப் பார்த்ததுமில்லை. ஏதோ ஆத்திரத்தால் க்ஷாத்திரங்கொண்டு போர்த்துணையாகிய உங்களை நம்பி யுத்தத்திற்கு வருகின்றார்கள். இவர்களைக் காப்பாற்றிக் கொண்டுவந்து என்னிடத்தில் ஒப்பிவைக்கவேண்டிய கடமை உங்களுடையதென்று கையைப் பிடித்துக்கொண்டு வெகுவாகச் சொல்லி, இளையபிள்ளைகளையும் பேரப் பிள்ளைகளையும் பார்த்து, (இளங்கன்று பயமறியாது) என்னுந் தன்மையாய்ப் போர்முகத்திற் போய் விழாதீர்கள். அணிவரிசையினின்று சத்துருக்களைவென்று, அண்ணன் தம்பிகள் பெரியோர்கள் பந்துக்கள் இவர்கள் சொல்லும் வார்த்தையைக்கேட்டு அடங்கியிருந்து காரியா சாதனம் பண்ணிக்கொண்டு வரக் கடவீர்களென்று ஆசீர்வதித்து, அப்பா துரியோதனா! தம்பிமார்களையுந் தமயன்மார்களையும் பத்திரமாய்ப் பார்த்துக்கொண்டு படைமுகத்தில் நின்று ஜெயங்கொண்டு வரும்படியாகச் சுகமாய்ப் போய்வாவென்று விடைகொடுத்தான். அப்பால் யாவரும் காந்தாரியாகிய தாயிடத்திற் சென்று காலில்விழுந்து, அம்மா உயுத்தகளத்திற்குப் போய்வருகிறோமென்று செலவுகேட்க, உடனே அந்த அம்மாளானவள் பிள்ளைகளையும் மற்ற பேர்களையும் உபசரித்து, மைந்தரே! உங்களுக்கு நான்



கௌரவர்கள் குருக்ஷேத்திரமடைந்து வீரமாகாளியை பூசித்தல்.

விசேஷித்துச் சொல்லவேண்டியதில்லை. எல்லாக் காரியங்களும் உங்களுக்குத் தெரியும். ஆகையால், சத்துருவை நாசப்படுத்திவாருங்களென்று விடைகொடுத்தனுப்ப, அவரவர்கள் யுத்தகோலங்கொண்ட திறத்துடன் ஆயுதபாணிகளாய் ராஜஸ்திரீகள் முதலிய பேர்களுடன் புறப்பட்டு அஸ்திஞபுரத்தின் சாலை தெருவில் வருவதானார்கள்.

அப்போது சொன்னசொற் றப்பியவர்களும், அறுதுதியென்ற மிண்டைகளும், தனமில்லாத மார்பர்களும், இனமில்லாத கோபர்களும், மயிரைவிரித்தமங்கையரும், புகையுநெருப்பேந்து நங்கையரும், விறகுசுமந்த தலையரும், வீழ்ந்து வருந்து நிலையரும், மின்னலும் இடியும் பிண்டித்தூறலும் பின்னியே விழும் பெருங்காக்கை மாறலும், நாய்கள் குரைப்பும், பேய்கள் சிரிப்பும், பருந்துங்-கழுகும் பறந்து விழவும், குதிரையும் யானையுங் குண்ணி யழவும், ஆயுதம் புகையவும், மாலை கருகவும், குறைக்கொள்ளி குழன்றுவிழவும், சுமங்கலப்பெண்கள் சுற்றி அழவும், சந்நியாசி - தட்டான் தயிலமெதிராகவும், முன்னுடி பார்ப்பான் முடிவிரித்தேகவும், இத்தன்மையவாகிய பற்பல துற்சகுனங்களை முன்னோடிச் சகுனம் பார்ப்போர்கள் மன்னவருடன் சொல்ல, நல்லதென்று திரும்பிக் கொலுவிற்போ யிருந்து இராஜவீதியில் ஒருவரும் வராமற் கதவு மூடும்படி திட்டப்படுத்தி, சதுர்வேத சம்பன்னரா யிருப்போர்க்குச் சாஸ்திரப்படி கோடி பசுக்கள்-கோடாகோடி பொன்கள்-அளவற்ற வஸ்திரங்கள்-அநேக ஆபரணங்கள் இவை முதலிய சோடச தானங்களுங் கொடுத்து, சந்தோஷத்துடன் தாகம் புசித்து, தாம்பூலமணிந்து, சகல சம்பிரமத்துடன் உயுத்தபூமிக்கு நடக்கையில் மறுபடியுந் துற்சகுனங் காண, அதைப் பாராட்டாமல் இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளும், வாட்படை - விற்படை - கதைப்படை - வேற்படை - சக்கரப்படை - சூலப்படை என்னும் இந்த ஆறுவித ஆயுதங்களையுடைய படைகளும், பேரி - பாங்கா முதலியதோடு, தோற்கருவி - துளைக்கருவி - நரம்புக்கருவி - கஞ்சக்கருவி - மிடற்றுக் கருவிகளாகிய வாத்தியங்களும், தேரோசையும், பதாதிகளுடைய பேரோசையும், மனுஷர்களைப் பிரியும் ஊரோசையும், யானை-குதிரை முதலியவைகளாலுண்டாகும் போரோசையும் சமுத்திர கோஷ்டமும் அடங்கிப் போகும்படியாய் முழங்கிக் கொண்டு வரவும், துரியோதனன் - அவனுடைய தம்பிமார்கள் - சகுனி-சல்லியன் மற்றுமுள்ள ராஜர்கள்-சேனைகள்-புத்திரர்கள்-மித்திரர்கள் முதலாயினோர் சுற்றிக்கொண்டு வரவும், அரண்மனைப் பெண்களோடும் பரத நாட்டியத்துடன் பட்டணம்விட்டுப் புறப்பட்டுக் குருக்ஷேத்திரம் போய்ச் சேர்ந்து, பாசறை முதலிய யாவும் ஏற்படுத்திய இடத்திற் பாராசவுக்குடன் சேனாசைனியங்களை நிறுத்திப் பலபலவாகிய கொடிகள் - வகைவகையாகிய குடைகள்-ஆலவட்டங்கள் - தாலவட்டங்கள் - பீலிக்குஞ்சங்கள்-மயிற்பீலிகள் வெண்சாமரைகள் - மேற்கட்டிகள் முதலிய விதரணை யலங்காரத்துடன் அமைத்திருக்கும் காலையில் துரியோதனனுதியரிறங்க, சேனாநாயகர் சேனைகளை அணி அணியாய் நிறுத்திப் பிரித்து அமைக்க, உலகம்பொறுமல் தத்தளிக்க, உரகருடைய பலமும் உடலும் தலையும் ஒடுங்கி வளைந்து உதற, அதனால் அவரவர்கள் பதற, எவர்களும் ஓசையிட்டுக் கதற, இப்படிபுரக குருபூமியிற் சகல சேனைகளும் வரம்பு வரம்பாகக் கலந்திருந்தன.

அப்போது துரியோதனன் வீஷ்மாச்சாரியரை நோக்கி, இனிமேல் தேவரீருடைய வேலையிற் சாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளென்று சொல்லவே, அவர் எத்தெந்தச் சேனைகளை எங்கெங்கே அமைக்க வேண்டியதோ அங்கங்கே அமைத்துக் கோட்டை மதில் போற் சூழ நிறுத்தி, வீரமாகாளி பூசையை விதிப்படி நிறைவேற்றி, பட்டத்து யானையைப் பத்தியுடன் பலிகொடுத்துப் பாசறைக்குக் காவல் வைத்துப் பெரியஜெண்டா-சிறிய ஜெண்டா முதலிய பாவட்டாக்களும் நாட்டி, எதிரிகளுக்குப் பயங்காட்டிப் பக்குவப்படுத்தினர். இவ்வாறு இருதிறத்தாருடைய சேனைசைனியங்கள் பெரும்புறக் கடல்போலப் பெருகி, நாகசுரம்-புள்ளாங்குழல்-முகவீணை-சங்கநாதம் - சிங்கநாதம் முதலிய சீரோசைகளும், நால்வகைச் சேனைகளால் ஓயாதொலித்து முழக்கும் பேரோசைகளும், விற்குணத்தொனியும், விண்மணித்தொனியும், வேலாயுதம் - சூலாயுதம் - சக்கிராயுதம்-குந்தாயுதம் - வாளாயுதம்-ஈட்டி முதலிய ஆயுதங்களினுடையு மோசையும், அதிலிருந்து புறப்படும் நெருப்புப் பொறிகளும், அப்பொறிகளோடு கொண்டற் கொண்டலா யெழும்பும் கறுத்த புகைக

ளும், அண்டமுகடும் பிண்டவகடுந் தத்தளித்து வெடிபடும்படியா யிருந்தன. இதன்றியும் அங்கு கருந்தூள் செந்தூளெழும்பிய தன்மை எப்படி யிருந்ததென்றால், இதுவரையிலும் பாவியாகிய துரியோதனன்பால் நாம் இருந்தோமே. அந்தப் பாபந்தீர ஆகாய கங்கையில் ஸ்நானஞ்செய்து தருமராசனுடைய கீர்த்தி பிரதாபக் குடைநிழலிற் போய்ச் சேருவோம் என்று பூமிதேவியார் புழுதிவடிவாய் எழுந்து பறந்துபோனதுபோ லிருந்தது. இதல்லாமலும், அக் குருக்ஷேத்திர பூமியில் வந்திறங்கிய கௌரவர் பாண்டவர்களுடைய இருவகைச் சேனாசமுத்திரங்களில் நாட்டிய துரியோதனனுடைய அரவக் கொடியும், வீஷ்மருடைய பனைமரக்கொடியும், இன்னும் பலவாறாகிய பேர்களின் கொடியும், தருமராசனுடைய முரசக்கொடியும், சுவேதனுடைய சிங்கக் கொடியும், மற்றப் பலவாறாகிய பேர்களின் கொடியும், ஆகாயத்தில் நிறைந்திருப்பது எப்படி யிருந்ததென்றால், காலபுருஷனானவன் ஜெயம் ஆருடையதென்று நாணிக் காலையூன்றி ஆங்காங்கு எக்கிப்பார்க்குந் தன்மைபோலிருந்தது.

## பலராமனும் விதுரனும் தீர்த்த யாத்திரை போதல்

இப்படியாகப் பதினெட்டு அக்குரோணியென்னும் இருதிறப் படைகளும் குருக்ஷேத்திர பூமியில் நெருங்கி நிற்க, இருதிற அரசர்களும் பாசறையிற் கொலுக்கொண் டிருந்தார்கள். அஃதெப்படி யென்றால், பட்டவர்த்தனர் மன்னர் மண்டலீகர் முதல் மந்திரி சாமந்தர்களும், மத்தியில் கனகரசித உசித நவரத்தினச் சிங்காசனத்தின் மீது திடவீர காத்திரத் தம்பிமார்களும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியுஞ் சூழ்ந்திருக்க, முரசகேதனாகிய தருமராசன் கொலுக்கொண் டிருந்தார். அதிரதர் முதலிய சகல அரசர்களும் அடிவணங்க, கட்டியர் பட்டுவான்கள் புகழ, வந்திப்போர் துதித்து மகிழத் தம்பிமார்கள் சூழ, இந்திர வோலக்கம் போன்ற மகாசபையில், இராச கண்டீரவத்தைப் போற் சகல செயவீரப் பிரதாபத்துடன் சாம்பூனதத்தா லிழைத்த மாணிக்க சிங்காதனத்தில் வீற்றிருந்தான் துரியோதன மகாராசன். அந்தச் சமயத்தில், ரேவதி தேவிக்கு நாயகராகிய பலராமர் தனித்துவரக் கண்டு, தருமபூபதியும், தம்பிமார்களும், கோபால கிருஷ்ணனும், கொலுக்கூடி யிருந்த மற்ற அரசர்களும் எழுந்து எதிர்கொண்டு சென்று வந்தனை மரியாதைகள் செய்ய, அவரவர்களுக்குத் தக்கபடி பதில் மரியாதை செய்து, தருமராசனைத் தழுவி ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு, ஓ தருமநந்தனா! நீங்களுந் துரியோதனாதியரும் பகைத்துப் போர் புரியப் போகிறீர்களே, அந்தயுத்தத்திற் சகல ஜெயமும் பெற்று அவனியை ஆளப்போகிறது நீங்களே. சகல சேனைகளுஞ் செத்துப் புத்ரமித்ராதியரைத் துறந்து பூமியையும் இழந்து நாளை மாளப்போகிறது துரியோதனாதியர்களே. இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. ஆனால் வெற்றிபெறப் போகிறது உங்களுடையதா யிருந்தாலும், யுத்தகளத்தில் அநேகம் விந்தைகள் நடக்கும். அந்த விந்தைகளையும், துரியோதனன் மாளுகிற நிந்தைகளையும் என் கண்ணினாற் பார்த்து நான் சகிக்கமாட்டேன். ஆகையால், துரியோதனன் இறக்கிறவரைக்கும் நான் தீர்த்தயாத்திரை பண்ணிக்கொண்டு, இதற்குப் பதினெட்டானாளிவ்விடம் வந்து சேருகிறேன். நீரெனக்குச் செல்வு கொடுமென்று பலராமர் கேட்க, அதற்குத் தருமராஜன் சற்றுநேரம் யோசித்து, உங்களைப்போ லொத்தவர்க ளிருந்தால் இவ்விடத்தில் நடக்கும் ஞாயம் அனியாயம் அறிந்து சொல்லுவீர்களென்று நான் மெத்த ஆசையாயிருந்தேன். தேவரீர் இப்படி சொல்லுகிறபடியால் நான் செய்யவாவதென்னவென்று சொல்ல; அதைக் கேட்டுப் பலராமர் சொல்லுகிறார். ஓய் தருமநந்தனரே! எல்லா விஷயத்திற்கும் ஸ்ரீ கிருஷ்ணனிருக்கின்றான். ஞாயம் அனியாயம் அறிந்து சொல்லுவான். அவனறியாத காரியம் அவனியிலில்லை. இவனைக்கொண்டு எல்லா வேலைகளும் நடத்திக் கொள்ளுமென்று சொல்லி விடைபெற்றுக் கொண்டு, தம்பியை நோக்கி நான் போய்வருகிறேனென்று புறப்பட்டபோது, விதுரராஜனும் வந்து பலபத்திரரைக் கண்டு ஒருவருக்கொருவர் முறைமை பாராட்டிக் கொண்டார்கள். அந்த வேளையில் விதுரராஜனைப் பலராமர் நோக்கி, ஏது நீர் யுத்தகோலங் கொள்ளாமல் என்னைப்போல் யாத்திரைவேடங் கொண்டிருக்கிறீரென்று கேட்க, அந்த வார்த்தையைக்கேட்டு விதுரராஜன் சொல்லுகிறான். ஆர் கெட்டாலென்ன? ஆர் செத்தாலென்ன? நீர் வாரும் யாத்திரை போவோமென்று விதுரன் சொல்ல, ஹரி! ஹரி! இதென்ன ஆச்சரியம்? உமக்கே ளிவ்வளவு மன வெறுப்

பென்று பலராமர்கேட்க, ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சொல்லுகின்றார். அண்ணா! முன்னம் யான் பாண்டவர்களுக்காக அஸ்தினா புரத்திற்குத் தூதுபோய் இவர் வீட்டில் இறங்கினேன்; அதற்குத் துரியோதனன் கோபித்துக் கொண்டு, தூது வந்த பகையாளி மனிதனுக்கு நீ எப்படி விருந்துசெய்வாய்? என் வீட்டில் அழைப்பாய்? ஓ வேசைமகனேயென்று பேசினான். அதற்கு இந்த விதுரராஜன் கையிலிருந்த வில்லை வெட்டி எறிந்துபோட்டு, என்னுயிருள்ளவரைக்கும் உனக்குத் துணைப்படுவதில்லையென்று சபதம் பண்ணிக்கொண்டார். அந்தக் கோபம்போலிருக்கிறது இன்று இவர் சொல்லுங் கருத்தென்று ஸ்ரீ கிருஷ்ணர் சொல்ல, அதைக்கேட்டுப் பலராமர் நகைத்து, அடா தம்பி! நீ நல்லதற்கா விதுரன் வீட்டிற் போய் இறங்கின என்றுசொல்லி, மனதில் மகிழ்ச்சியில்லாமல் விசனம்வைத்துக்கொண்டு வாரும் விதுரராஜனே யென்று அழைத்துக் கொண்டு, பலராமரும் விதுரராசனு மிரண்டு பேரும் குருபூமியைச்சூழ்ந்த தீர்த்தங்களாடும் படியாகப் போய்விட்டார்கள். இந்தச்சேதி துரியோதனனறிந்து, நமக்குப் படைத்துணை வந்த பலராமரையுங் கலைத்து அழைத்துக் கொண்டு போய்விட்டான் இந்த விதுரன் பார்த்தீர்களாவென்று வீஷ்மர் முதலியபேர்களிடத்திற் சொல்ல, நல்லதாகட்டுமென்று கருவிக்கொண்டு கடுகடுத்திருந்தான்.

## துரியோதனன் பாண்டவர்களுக்குத் தூதனுப்புதல்

அப்பால் அளவிறந்ததூரம் சேனைகளை நிலைபெறச்செய்த வீஷ்மருந் துரியோதன னும் பாசறைவிட்டு வெளியேபுறப்பட்டு, ஏழு கடலும்-ஏழுமேகமும்-ஏழுதீவும்-ஈரேழுலகும் ஏககாலத்திற் கூடியதைப்போல் இறைந்துக் கொண்டு, கண்ணுக் கெட்டியதூரந் தெரியாமல் நெருங்கிநின்ற இருதிறப் படைகளையும் பார்த்துப் பிரமைகொண்டு, துரியோதனன் மயங்கி, சேனாதிபதியாகிய பீஷ்மரை நோக்கி, ஐயா! இத்தனை சேனைகளை ஒருசுத்தவீரன் எத்தனை நாளையிற் கொல்லுவான். சற்று யோசித்துச் சொல்லுமென்று வணங்காமுடி மன்னன் கேட்க, பீஷ்மாச்சாரியார் சொல்லுகின்றார். "ஒருபகலில் யான் மலைவன் முப்பகலிலே மலையும் உபநிடத விற்கைமுனிவன், வருபகலொரைந்தின்மலையும் பருதிபந்தன்முனி மைந்தனொரு நாழிகையில்" என்றால், கேளுந் துரியோதனராஜனே! இந்தச் சேனைகளையெல்லாம் ஒரேபகலில் நான் வெல்லுவேன். வேத புராண உபநிடதந் தெரிந்த தனுர்வேத பண்டிதராகிய துரோணாச்சாரியர் மூன்று பகலில் வெல்லுவார். சூரியகுமாரனாகிய கர்னன் ஐந்து பகலில் முடிப்பான். அசுவத்தாமா ஒருநாழிகையிற் போக்குவானென்று வீஷ்மர் சொல்லவே, இந்த வார்த்தையைக்கேட்ட துரியோதனன் சந்திரனைக்கண்ட சமுத்திரம் போற் பொங்கிப் பூரித்து, இனி எனக்கென்ன தாக்ஷி? இதைவிட வேறென்ன சாக்ஷி? எவர்க்குண்டிந்தக் கண்காட்சு? இப்பேர்ப்பட்ட பலவான்களை எனக்குக் கூட்டிவைத்த என் பாக்கியமே பாக்கியமென்று புகழ்ந்து, பாண்டவர்கள் தலையெடுக்கமாட்டார்களென்று மகிழ்ந்து, எதிரிகளை இவ்வாறு இகழ்ந்த தன்மையை வீஷ்மரான்வர் அறிந்து, துரியோதனனைப் பார்த்து அப்பா துரியோதனா! நமது பலத்தை நாமே கண்டு சந்தோஷிப்பது காரியமல்ல. அது வீரியம் பெறாது. எதிரிகளின் பலத்தை நிதானித்துக்கொண்டு அப்பால் நமது பலங்களைப் பார்த்துச் சந்தோஷப்படவேண்டும். ஆகையால், நமது சேனைகளி லிருக்குந் தலைவான்களாகிய பலவான்களுடைய பல பராக்கிரமத்தைக் கேட்டையே, அவர்களுடைய பல பராக்கிரமத்தையுங் கொஞ்சங் கேட்டறிந்து கொள்ளக்கடவை. அதென்னெனில், "பொருபடை யடங்கலுமிவ் வம்புவியும் வானொடு புயங்கர் தலமுந்திசைகளும், வெருவுறமுனைந்தொரு கணத்தினிடையே மலைவன் வில்விஜயன் என்றறிதியால்" என்றால், இந்தப்படைகள் முழுமையும், இவ்வுலக முழுமையும் திக்குகளெட்டுந் திடுக்கிட்டுப் பயந்து போகும் படியாய்க் காண்டீபங்கொண்டு முனைந்து ஒரு க்ஷணத்திற்குள்ளே பஸ்மீகரப்படலாகும்படி போர்புரிந்து போக்கிவிடுவான் திசைகள் மகிழ இசையும் புகழுங்கொண்ட விஜய பராக்கிரமனென்றார். அந்த வார்த்தையைத் துரியோதனன் கேட்டு முன்கொண்ட சந்தோஷத்தினின்று மாறி, உடனே தனது துஷ்டசேஷ்டையால் தேற்றத் தேறி, கர்னன் சகுனி துர்ச்சாதனன் முதலாகிய பேரோடு ஆலோசித்துக் கொண்டு ஊகி யென்னும் ஒரு தூதனையழைத்து, அவனுள் சொல்லத்தக்க பேச்சுகளெல்லாஞ் சொல்லி, நீ பாண்டவர்களிடத்திற் சென்று இந்த வசனங்களைத் தெரியப்படுத்தி இதற்குப் பதிலுத்தரம் அவர்களென்ன சொல்லுகின்றார்களோ அதையறி

ந்துகொண்டு அதிசீக்கிரத்தில் வாவென்று அனுப்பிவைத்தான்.

அந்தப்படிக்கே, உலூகியானவன் தருமராஜனுடைய சபைக்குப் போய், ஐயா! என்னைத் தங்களிடத்தில் துரியோதனராஜன் அனுப்பிவைத்தாரென்றுசொல்ல, அதென்ன காரியத்திற்கென்று தருமராஜன் கேட்க, உலூகி சொல்லுகின்றான்: ஓ தருமபூபதியே! கேளும்; இராஜ சபையில் சொக்கட்டாடித் தோற்றபோதும், திரௌபதியைத் துகிலுரிந்த காலத்திலும், பன்னிரண்டு வருடம் வனவாசஞ் செய்தபோதும், ஒரு வருடம் அக்ஞாதவாசஞ் செய்தபோதும், உங்கட்குச் சிறிதும் இல்லாத வீரமும் - தீரமும் - இப்போது எங்கிருந்து வந்தது என்றும், நல்லது அந்த ராஜசபையில் துரியோதனாதியர் நூறுபேரையும் நானே கொல்லுகிறேனென்று வீமசேனன் சொல்லியிருந்த சபதமும், கர்ணமகாராஜனைக் காண்டீபன் கொல்லுகிறேனென்று சொன்னதும், நகுலன் சவுபலனைக் கொல்லுகிறேனென்றதும், சகாதேவன் சகுனியைக் கொல்லுகிறேனென்றதும், இதுகளெல்லாம் (நாட்கொண்டது ஆட்கொண்டது) என்று வராமல் நலிந்து போனதைப்போல் இருப்பானேன் என்றும், பதின்மூன்று வருடம் காடு திரிந்துவந்த நீங்கள் முன் பேசிய சபதப்படிக்குக் காரியம் நிறைவேற்றிக் கொள்ளாமற் கண் கலங்கி, அப்பா! நீபோய் சொல்லு. ஐயா! நீர் போய்ச் சொல்லுமென்று அவரவர்களைக் கும்பிட்டு, உலூகமாமுனியையும், ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியையும் தூதனுப்பி நாடிரக்க வேண்டிய காரியமென்ன என்றும், அதற்கு நாங்கள் உடனே சஞ்சயனை அனுப்பி, இராஜர் முறைமைப் படிக்குப் போரில் யுத்தஞ் செய்து புகழுடன் வெற்றி பெற்றவர்களுக்குப் பூமியுண்டென்று சொல்லியிருக்க, அந்த வசனத்தைக் கேட்டும் இன்னுஞ் சண்டைக்கு வரப் பயந்திருப்பானேன் என்றும் இப்போதுஞ் சரியான தைரியமிருக்குமாகில், தாமிசமில்லாமல் சண்டைக்கு வரச்சொல்லும் என்றும், இரு திறவர்க்கும் வம்ச நாயகனாகிய வீஷ்மரும், துரோணாச்சாரியரும், அசுவத்தாமாவும், கர்னராஜனும், ஒருகை பார்த்துவிடுகிறோமென்று மூகம் வியர்த்துக் கரத்தில் வில்லேந்திக் கொண்டு, உங்களைவரையும் உங்களுக்குத் துணைவந்திருக்கும் அரசர்களையும் மண்ணுலகத்தைவிட்டு நீக்கி, விண்ணுலகத்திற் கனுப்பி விடுகிறோமென்று வந்திருக்கின்றார்கள். உங்களுடைய வாயுருட்டும் கைப்புரட்டும் அவர்களறிந்தே இருக்கின்றார்கள். இனி உங்களுடைய பேச்சு இவ்விடத்திற் கேலாது உங்களைக் கொல்லாது விடப்போகிறதில்லை. எதாகிலுங் கொஞ்சம் வீரங்களுண்டானால், இப்போதே வரலாம் என்றும்; அப்படி யுத்தத்திற்கு வரச் சம்மதமில்லாவிட்டால் பூர்வத்தில் மச்சராஜனாகிய விராடன் வீட்டில் புரோகிதனாகியும், சோறு சமைக்குஞ் சுயம்பாகியாகியும், பரத நாட்டியங்கள் கற்பிக்கும் பேடியாகியும், குதிரைச் சேவகஞ் செய்யும் தாமக்கிரந்தியாகியும், மாடு மேய்க்கும் தந்திரபாலனாகியும் சொற்ப சீவனஞ் செய்து காலங் கழிக்கும்படியாய் இருந்ததுபோல் இப்போதே திரும்பிப் போய்விடலாம் என்றும்; இராச தருமங்களிருந்தால் தடை சொல்லாமல், சந்தி பேசாமல் சண்டைக்குவரலாம் என்றும்; அருச்சுனனைக் கொல்லுகிறேனென்று வெகுநாளாய் உருச் செபிப்பதைப்போல் சபதங் கூறிக்கொண்டிருந்த ஜெயவீர கர்னமகாராஜனானவர் வில்லைக் கையிலேந்தி, சபதச் சொல்லை நிறைவேற்றும்படியாய்க் குருக்ஷேத்திர எல்லையில் எப்போது விஜயன் வருவானென்று வழி பார்த்துக்கொண்டிருக்கின்றார் என்றும், இன்னும் சொல்லிச் செய்வது பெரியோர் கடமையாதலால் சொன்னோம். இப்போது கிரீடிக்குத் தைரியம் இருக்குமாகில், ஜல்தியிற் புறப்படச் சொல்லும் என்றும்; மேலும், என்னைப் பகைத்த சத்துருக்களை யெல்லாம் எரியுந் தணல்முன் சருகாய்க் கருக்கி, எமலோகஞ் சேர்ப்பேனென்று இறுமாந்து சிங்கம்போல் காத்திருக்கும் எங்கள் தம்பியாகிய துயுவாசனராஜன், உங்கள் குலத்திற்குக் கோடாலியும், உங்கள் கூட்டத்திற்குச் சூறுவளியும்போலிருந்து சொல்லச் சொன்னதென்னவென்றால், முன்னாலே மன்னர் கூடியிருந்த சபையில் உங்களுக்குரிய கன்னியாகிய திரௌபதையை மயிரைப்பிடித்திழுத்துவந்து, மானபங்கமாகப் பேசி வஸ்திரபங்கமுஞ் செய்த நாளையில், என்னைக் கொன்று உதிரபானம் பண்ணுகிற வரையிலுங் கையினால் தீர்த்தபானம் பண்ணுகிறதில்லை யென்று சபதம் பண்ணிக், காட்டுக்குப் போய் நாட்டுக்குவந்த கோட்டையுடைய வீமசேனன் ஓட்டமெடுப்பானா அல்லது யுத்தத்திற்கு வருவானா என்றும், அன்றியும் இந்த

நாட்டின்கண் ஓரிடத்தில் ஓர் தாய்தந்தைக்குப் பிறந்து, மற்ருேரிடத்தில் மற்ருெரு தாய் தந்தைக்குப் பிறந்து, மற்ருேரிடத்தில் மற்ருெரு தாய் தந்தையர்களாகிய இடையர் வீட்டில் வளர்ந்து, திருட்டுப் பிழைப்பினுல் மாறடியும் மத்தடியும் பட்டு சாரத்துவ சோரத்துவத்திற் றன்னுலானமட்டும் வயிறு வளர்த்துக்கொண்டு பிழைக்கும் கிருஷ்ணன் அவ்வகைக்கான காரியங்களைத் தேடாமல், பிர்மாவேயென்று சும்மா இருப்பவர்களைத் தூண்டிவிட்டு, அவர்கட்காகத் தூதவேஷம் போட்டுக்கொண்டு உங்களை யானையாக்குகிறேன் எதிரிகளைப் பூனையாக்குகிறேனென்று பொய்யும்புரட்டும் பேசி, கபடும் வஞ்சனையுங் கலந்து கலகப்படுத்தி அரசனுக்குக் குதிரைப் பிடிக்குஞ் சாரதியாகியும், சிசுஹத்தி-ஸ்திரீஹத்தி-கோஹத்தி முதலியவைகளைச் செய்தும், காலிக்கன்றுகளை மேய்த்தும், கபடில்லாத ஆயர்களை ஏய்த்தும், இத்தரணியெங்கணுந் தகல்பாசியாய்த் திரிகிற அவ்விடைப்பயலை ஓர் சினேகனுகச் சேரப்பிடித்து வைத்துக்கொண்டு பயங்காட்டுவதினுல், நான் அவனுக்குப் பயந்து உங்களுக்கு நாடு கொடுப்பனே வென்றும்; அவனுக்கும் அவனுடைய வஞ்சனையான மாயமருட்டுக்கும் உங்களுக்கும் பலகேடும் ஒரு ஓடுங் கொடுப்பேனே யல்லது ஒரு வீடுங் கொடுக்கமாட்டேன் யென்றும், மேலும் (சப்பாணிக்கு நொண்டி சண்டப் பிரசண்டன்) (ஊமைக்குத் தொத்துவாயன் உற்பாதபிண்டம்) என்னும் பழமொழிபோல், இந்தக் கிருஷ்ணனுக்குச் சரியாய்ச் சண்டனுக்கு மிண்டனுன எங்களம்மான் சகுனி ராஜனை ஏற்படுத்தி வைத்திருக்கிறேனென்றும், இதன்றியும் எங்கள் அம்மானுகிய சகுனியையும், சௌபலனையுங் கொல்லுகிறதாய்ச் சபதஞ் செய்த நகுல சகாதேவரென்னும் பயல்களைக் கொல்ல அவர்களே காத்திருக்கிருர்கள். ஆகையால், அவர்களையுஞ் சீக்கிரம் ஓடிவரச் சொல்லும் என்றும், மேலும் நகரத்திலும், நாட்டிலும், கொலுக்கூடத்திலும் நல்ல ரத்தங்களூறி ஸ்திரம்பெற்றிருந்த அரசர்களாகிய அப் பாண்டவர்களைச் சூதினுல் தோற்கச் செய்து, அவர்கள் பெண்சாதியையும் அவமானப்படுத்திக் காட்டிற் பனிரண்டு வருடம் வனவாசஞ் செய்யுங்களென்று ஓட்டிவிட்ட காலத்திலில்லாத வீரம், காட்டிற் சென்று காய்கனி கிழங்குகளைத் தின்று கற்பாறையிற் படுத்துக் கண்ணுறக்கம் விடுத்து, நல்ல ரத்தங்களினுடைய சத்துப்போயிருக்கும் இந்தக் காலத்தில் உண்டாகி, பற்பல பவுரிஷங்களும் கோபமுங்கொண்டு, பசித்தவன் பழங்கணக்கைப் பார்ப்பதுபோற் பழைய பகையை நினைத்து, அதற்காகக் கூறிய சபதங்களை முடிக்கவேண்டுமென்று ஓடிவந்தார்களோ? இல்லை; நான் நாடு கொடுப்பேன் அதைப் பெற்றுக்கொண்டு வாழலாமென்று நாடி வந்தார்களோ? அந் நாணமற்றவர்களுடைய செய்தியை யறிந்து வா, என்றும் இப்படிக்கெல்லாஞ் சொல்லி அவர்கள் எப்போது சண்டைசெய்ய எண்ணங்கொண்டிருக்கின்ருர்களோ அந்தக்காலத்தையும், அவர்கள் சொல்லுகின்ற இந்திரஜாலத்தையும் அறிந்துக்கொண்டு சீக்கிரம் வரக்கடவையென்று துரியோதன மகாராஜன் அனுப்பினவைத்தா ரையரவென்று உலூகியென்பவன் சொல்ல, இவைகளையெல்லாங் கேட்டிருந்த பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய திருமுக மண்டலத்தைப் பார்த்து, இந்தக் கேள்விக்கெல்லாம் உத்தரந் தேவரீரே திருவாய் மலர்ந்தருளவேண்டும் என்று தருமராஜன்சொல்ல, மகா சந்தோஷத்துடன் நகைத்து, ஐயோ! நான் என்னசொல்லப்போகிறேன் என்ன சொல்லியும் என்வயிறு வளர்ப்பதற்கான ஏது ஒன்றையுங் காணேமேயென்று உலூகியைப்பார்த்து நான் சொல்லுகிற வண்ணம் உங்கள் ராஜனுக்கு நீ பயப்படாமற் சொல்லக் கடவையென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லுவதானுர்.

### கிருஷ்ணன் துரியோதனனுக்குச் சொல்லி யனுப்புதல்

அப்பா உலூகியே! பாண்டவர்கள் வனத்தில் இருக்கும்போது அவர்களை அவமானப்படுத்தவேண்டுமென்று நினைத்து, உன்னுடைய தம்பிமார் முதலானவரோடு கர்னனுஞ் சகுனியும் உங்களுடைய பத்தினிமார்களும் கூடவரும்படியா யழைத்துக்கொண்டு வந்து வழியிற் சலக்கிரீடை பண்ண யத்தனித்த போது, காந்தருவராஜனுகிய சித்திரசேனன் கையிலகப்பட்டு, அவன் தாமணிப் பிணையலாய்ச் சேர்க்கத் தம்பிமாரெல்லாரும் ஒருவரிசை; பெண்டுகளெல்லாருந் தலைமயிருடன் கலைகுலையும்படியாய் ஒருவரிசை; மாமா முதலியபேரோடு நீயும் மடலிறுகும்படியாய் ஒரு வரிசை; இப்படியாகக் கட்டுப்பட்டுக்கொண்டு போகும்போது, உன்னுடைய சேனைகள் முதலிய வீரர்களெல்லாருந் தருமராஜனிடத்தில் வந்து முறையிட் டமுதகாலத்தில், சேவகாருண்

யமுடைய தருமராஜன் இரக்கங்கொண்டு, (தொடைப்புண்ணை வெளிக்காட்ட லாகாது) என்னும் பழமொழிப்படிக்குத் தங்களுக்குள் என்னவிரோத மிருந்தாலும் புறத்தியர்க்கிடங் கொடுக்கலாகாதென்று தன் தம்பிமாராகிய பீமார்ச்சுனரை யழைத்து, தனது மரபிற்குக் குறைவுவராம லிருக்கும்படியாய் உன்னையும், உன்னுடைய புத்திரர் மித்திரர் பெண்டுகள் முதலிய பேர்களையும் மீட்டுக்கொண்டு வரக் கட்டவதாகவும், தன் தம்பிமார்களுக்குக் கோபந் தணியும்படியாகவும், உன்பேரிலன்பு தழைக்கும்படியாகவும் சொல்லி அனுப்பிவைத்ததின் மேல் சித்திரசேனன்கட்டிய சிறைநீக்கித் தரும ராஜனுக்கெதிரில் கொண்டுவந்துவிட, அவர் வேண்டிய புத்திமதிகளைச் சொல்லி உயிருடன் மீட்டு அனுப்பியதெல்லாம் என்னத்திற்கென்றால், சித்திரசேனனிடத்திற் சிறை புகுந்து உயிர்விடுவீர்களாகில், ராஜசபையில் தாங்கள் கூறிய சபதம்தப்பி போகுமென்று அந்தச் சபதந் தப்பாமல் தாங்களே கொல்லும்படியாக உங்களைச் சிறைநீக்கி விட்டிருக்கிறார்களே யொழிய வேறல்ல; இதனால் பாண்டவர்கள் ஐவரும் சபதம் முடிப்பார்களென்று உங்களுக்குத் தெரியவில்லையா? அந்தச் சித்திரசேனனை ஜெயித்த பாணத்தோடு உங்கள் சிறையை மீட்ட பீமார்ச்சுனனிருவரு மிருக்கின்றார்கள் என்றும், நேற்று விராடபுரத்தில் உருமாறியிருந்த பாண்டவர்களை அறியும்படியாக வந்து உத்தர நிரைகொண்ட காலத்தில், பேடியாகிய விஜயன் அறியாத பிள்ளையாகிய உத்தரனைச் சாரதியாக வைத்துக்கொண்டு, தானொருவனாக ஒரேவில்-ஒரேதேர்-ஒரே அம்புறாத்தூணி இவைகளைக்கொண்டு பீஷ்மர்முதலிய ஆசாரியரைப் பாணங்களினால் வணங்கி, ஒரு அக்குரோணி சேனைகளையு மிளைத்தோட வென்று கர்னனைப் புறமுதுகிட்டோட கண்டு, கொடிதேராளிகளு மழிந்துபோகப் போர்புரிந்து, பீஷ்மர் துரோண ராதியபேரும் புறமுதுகிட்டோடச்செய்து, ஊரை நோக்கி ஓடிக்கொண்டிருந்த வணங்கா முடியோனாகிய உன்னைத் துரத்தி வணங்கச்செய்து, உன்னுடைய குதிரை முதலிய சாரதியையு மாட்டி, அங்கமழியும்படியாகவும், எல்லோரும் நகைக்கும்படியாகவும் பேசி, சீச்சீயென்று யேசி, பாணங்களை வீசி, என் தமயன் வீமராசன் கூறிய சபதத்திற்காக உன் தலையைவிட்டுவித்தேனென்று சொல்லி, உன் தலையி லிருந்த கிரீடத்தையும், அத்தினகிரி யென்னும் பட்டத்து யானையையும் வீழ்த்தி, மோகனாஸ்திரத்தை விடுத்து யாவரும் நிலத்தில் மயங்கி விழச்செய்து, தன் சாரதியைவிட்டு எல்லோருடைய தலைத் துணிகளைப் பிடுங்கிக்கொண்டு வரப்புரிந்து, பசுக்கூட்டங்களை யெல்லாம் உடனே கொண்டு போன விசயனிருக்கும்போது சபதம் நிறைவேறாமற் போகுமா? இது தெரியாதா? அறியாத சிறுபிள்ளைகளுக்கும் நேற்று அடித்தவனை இன்றைக்குத தெரியுமே. நமது ஐயாவாகிய கண்ணில்லான் குழந்தைக்கு ஏன் தெரியாது; பீஷ்மரானவர் இது அர்ச்சுனன் கொடுத்த பிராணப் பிரதிஷ்டையென்று எல்லோரும் வாழ்த்துங்களென்று சொல்ல, யாவரும் அப்படியே சொல்லி வாழ்த்திக்கொண்டு அஸ்தினாபுரத்திற்குப் பகலிற் போக வெட்கப்பட்டு, ராத்திரியிற் போய் நுழைந்த அவ்வரசன் முதலாகிய பேர்களுக்கு அன்று அடிபட்ட அந்தப் புண்களின்று மிருக்குமே? காயமாற் பச்சை யுதிரம் வடியுமே? உடம்பிற் சிறிது மிலச்சையில்லையே; ஐயோ? சொப்பனத்தில் பீமார்ச்சுனனைக் கண்டாலும் துரியோதனன் இறந்துபோவானென் றுலகஞ் சொல்லுமே? இவனெங்கே யுத்தம்பண்ணியிருக்கிறான்;எந்த யுத்தங்களைப் பார்த்திருக்கிறான் அப்படியே யிவன் சுத்தவீரனாகில், (பூசாரித்தனஞ் செய்யப்போனவிடத்தில் விபசாரித்தனம் வாய்த்ததைப்போல்)தனுர்வேதங்கற்பிக்கவந்த துரோணாச்சார்ரியாகிய பிராமணரையும், வைதீக சாந்தமுடைய கிருபாச்சாரி முதலிய பேர்களையும், சுகபோகங்களை நீக்கிய பிர்மச்சாரியாகிய பீஷ்மரையும், திரிகண்ட சந்யாசியாகிய அசுவத்தாமனையும் வணங்கித் தழுவிக்கொண்டு, பாண்டவர்களைச் செயித்து எனக்குப் பட்டங் கட்டி வையுங்களென்று காலில் விழுந்து கிடக்குந் துரியோதனனுக்கு யுத்தத்திற்கு வரச் சொல்லென்னுந் துணிவு எங்கிருந்து வந்தது. சித்தங் கொண்டிருக்கிறார்கள் என்றும் சொல்லிய சபதங்களி லொன்றாகிலுங் குறையாது என்று உங்கள் ராஜனுக்கு நீரே போய்ச் சொல்லும்.

ஓ உலூகனே! திரிலோகமும் திரிமூர்த்தியும் சேர்ந்துவந்து துரியோதனனுக்குத் துணையானாலும், பீமார்ச்சுனன் கையினால் முடிந்துபோகிறது நிசமென்று நாம் சொல்லியதாய்ச் சொல்லுமென்று ஸ்ரீ கிருஷ்ண தேவர் செலவுகொடுக்க, தருமராஜன் அந்தத் தூதுவந்த உலூகனுக்குவேண்டிய ஆடை

யாபரணங்களெல்லாங் கொடுத்து, சுவாமி சொல்லிய வசனத்தையும் துரியோதனனிடம் பயப்படாமற் சொல்லுமென்று விடைகொடுத்தனுப்பிய பின்பு, ஸ்ரீ கிருஷ்ணதேவரும் பாண்டவர்களும் சபையிற் பேசிக்கொண்டிருக்கும்போது, உருக்குமணித் தேவிக்குத் தமயனாகிய உருக்குமியென்னும் ராஜன் இரதத்திலேறி, அதிக வேகத்துடனே ஓடிவந்து அர்ச்சுனனை நோக்கி துரியோதனனாதியர் முதலாகிய பேர்களைச் செயிக்கதிறமும் தைரியமும் உமக்கு இல்லாவிட்டால், என்னை வேண்டிக்கொண்டு படைத்துணை விரும்புவீரேயாகில், ஒரு நொடிப்பொழுதில் துரியோதனனாதியர் யாவரையுஞ் செயித்து, உங்களுடைய சபதங்களும் நிறைவேறச் செய்து, தருமராஜனுக்குப் பட்டமுங் கட்டிவைத்து என் கண்ணாற் பார்த்து மகிழ்ந்துபோகிறேன். சீக்கிரஞ் சொல்லும் அர்ச்சுனாவென்று, சபையிலிருக்கும் யாவருந் திடுக்கிடும்படியாகப் பேசினான். அந்த உருக்குமியை அர்ச்சுனன் பார்த்து கலகலவென்று நகைத்து, எங்கள் காலில்விழுந்து வேண்டிக்கேட்டாலும் எங்களுக்கு மற்றொரு வீரர்களுதவி வேண்டியதில்லை. ஆனால் இப்பேர்ப்பட்ட சூரனை துரியோதனராஜன் வேண்டி யழைக்கிறார். அவரிடத்திற்போய்ச் சேருவீராகில் மெத்தவும் முக்கியமாய் வைத்துக்கொள்ளுவர். இது நல்ல சமயம். கோடைக்காலத்தில் விடாப்பட்டு வருபவனுக்குக் குளிர்ந்த தீர்த்த மகப்பட்டதைப்போல நீர் கிடைத்ததென்று குருங்குவார். உமது பலுக்குக்கும் அவருடைய பிலுக்குக்கும் சரிப்பட்டிருக்கும். இப்போதே போமென்று அர்ச்சுனன் சொல்ல, மறுபேச்சு பேசாமல் உருக்குமி தனது பட்டணம்போய்ச் சேர்ந்தான். அப்பால் இந்த உலூகனனவன் துரியோதனனிடத்திற் சென்று, இவ்விடத்தில் நடந்த சங்கதி யாவற்றையும் அங்குள்ள சகலமான பேருங் கேட்கச் சொன்னான். அதைக் கேட்டுத் துரியோதனன் உடம்பு சவுங்காமல் உற்றாருடன் மகிழ்ந்து, நாளை யுதயத்திற்கு யுத்தமென்று சேனாதிபதிக்குச் சொல்லித் தானும் மற்றவர்களும் யுத்தகோலங் கொண்டிருந்தார்கள். இருதிறப்படைகளிலும் பேரி முதலிய வாத்தியங்களெல்லாஞ் சப்திக்கும் பெருங்கூச்சல் கடலிரைச்ச லொடுங்கும்படியாய் முழங்கச் சூரியன் எப்போது வருவான்? எப்போது உதிப்பான்? எப்போது உதயமாவான் என்று இருதிறப்படைகளும் நித்திரையற்று வெற்றிபேறி நினைத்துச் சுத்தவீர பராக்கிரம தளத்தை வரிசையாக நிறுத்திச் சப்த சமுத்திரம் போல நிறைந்திருந்தார்கள்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வுலகத்திற் செங்கோல் செலுத்தும் வெண்குடை வேந்தற்கு உயிரும் உடலுமாயிருப்பது நட்பும் படையுமாம். ஆக்கையொன்றே வேறன்றி உயிர் உடன் நீங்கும் உரிமையராய் ஓர் நூலின் பொருளைக் கற்குந்தோறும் கற்றார்க்கின்பஞ் செய்தலைப்போல, அரசனுக்கு ஆவதும் வெல்வதுமாய் நன்மைக்கு உதவுவது என்றால், யானை முதலிய நால்வகை யுறுப்பாலும் தன்னரசனுக்குத் தாழ்வு வாராமற் காக்கும்மானமும், போரின்னவுஞ்சினரை எதிர்த்துக்கொல்லும் ஆண்மையும், பகைவராற் கீழறுக்கப்படாத தோற்றமும், தமக்கெதிரிற் பல படைவருங் காலத்தும் விழித்த கண்ணை இமையாதிருக்கின்ற வீருப்பும், ஒருஎன்றால் கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக்கொள்ளும் பொது மகளிரைப் போலவும், பிறர் கேடு நோக்காது தன் சோர்வுநோக்கும் கள்வரைப்போலவும், நட்புள்வு பாராது அதனால் வரும் பயனளவு பார்ப்போரும், அமர் வாராதபோதெல்லாந் தாங்குவதுபோ லிருந்து குலாவி அமர் வந்தபோது விட்டு நீங்குவோரும், தம்மால் முடியுங் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரும், உளமுஞ் சொல்லு மொவ்வாது வேறு வேறாயிருப்பாரும், தனியே மனைக்கனிருந்த விடத்து நட்பாடிப் பலரோடு மன்றின்கண் இருந்தபோதும் பழி கூறுவாரும், ஆகிய இவர்கள் காதல்மிகுதியாற் பருகுவார்போன்றாராயினும், அவரைச் சிறிதாயினும் நணுகுதலைப் பரிகரிக்கவேண்டும். கூடநெட்டென்பது பகைமையால் அசுத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்கும் இடம்பெறுந் துணையும் புறத்தாற்கூடி யொழுகுவார். நட்பு என்றால் நல்லனவாகிய பல நூல்களைக் கற்றவிடத்தும் அதனால் மனந்திருந்தி நட்பாத லில்லது கண்டபொழுது முகத்தா லினியவாகச் சிரித்தெப்பொழுதும் மனத்தால் இன்னாதன செய்யும் வஞ்சகரது சொல்வணக்கமும், அவரது தொழுகையும், அவரழுத கண்ணீரும், சொல்லாலும், கையாலும், கண்ணாலுந் தேற்றிப் பின்னர் தப்பாது கொல்கின்றவன் படையாகும். அவ்வஞ்சகர் தனக்கு நட்டாராய் ஒழுக வேண்டுங் காலம் வந்தால், தானும் அவரோடு

முகத்தால் நட்பு செய்து அகத்தால் அதனை விட்டுப் பின் அதுவுந் தவிர்தல் வேண்டும். உள்ளொன்று புறமொன்றுதல் ஒருவருக்குத் தகாததாயினும், தீயார்மாட்டானுல் தகுமென்பது நீதிநூலினது துணிவாதலாற் குற்றமன்று. பேதையர் நட்பென்பது யாது மரியாதார் நட்பு என்றால், பழி-பாவம்-வறுமை என்பவற்றிற்கு நாணுமையும், செய்வன தவிர்வன அறியாமையும், குடிப்பிறப்பு-ஒழுக்கம்-கல்வி முதலானவைகளைப் பேணுமையும், யாவரிடத்தும் முறிந்த சொல்லாடுஞ் செயலுடைமையும், ஆகாத ஒடுக்கத்தின்கண் தன்மையும், கேடு பயப்பனவற்றைக்கொண்டு, ஆக்கம் பயப்பனவற்றை கைவிடுக்குந் தலன்மையும், மனமொழி மெய்கள் அடக்குதற் கேதுவாய் நூல்களை யோதியும், அதனை அறியவுறப் பிறர்க்கு உரைத்தும், தான் அவை யடங்கி யொழுகாமையும் ஆகிய இப் பெற்றிகளையுடையோர் நட்பைப் பேதையர் நட்பென்று சொல்லப்படும் நூல்களையும் கற்றாராகவிரைத்துத் தன் தன்மையை வெளிப்படுத்துவர். தமக்கு நல்லுணர்ச்சியை யறிவிக்கப் புகும் ஆன்றோரை அறிவிலாராக நாட்டுவர். ஆதலால், இத்தன்மையரோடு சிறிதும் நண்ணுதிருத்தல்வேண்டும். புன்னுறு துணையாய் மற்றைப் படையினியல்பு; அதிலும் பெருங் கேடாம். ஆனதால் அதனை விரைத்துரைக்க வேண்டாவாயிற்று. இவ்வித நட்பையும் படையையுமுடைய அரசனுக்குப் பகையென்பது பக்கத்திற்றனே படர்ந்தோங்கி நிற்கு மென்பதற்கையமென்னே? அந்தோ இருவர் தம்முட்பொருது வலியும் உயிருந்தொலைத்தற் கேதுவாகிய இப்பகை ஊழியன் வயத்தாய ஒருகால் தனக்குண்டாகி, மற்றொருவன் தனக்கு வெறுப்பனவற்றைச் செய்தானுயினும், அவனோடு மாறுபடுதலைக் குறித்துத் தான் அவனுக்கு இன்னுதவற்றைச் செய்யாதிருப்பனுயின், அவனுக்குப் பகைவரும் உறவாவர். எல்லாச் செல்வமும் பலிக்கும். கொடை முதலிய காரணங்களாற் புகழும்பெறுவன். பிறரோடு மாருபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று இன்னுதன செய்வனுயின் உடனே தமரும் எதிலராவர். பகைமை வளரும் வலிதொலையும் பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே உண்டாகும். ஆதலால், ஓ அரசனே! இருநிலம்புரக்கும் வேந்தர்க்கு மேற்கூறிய இருவகைத் துணையும் இனிதினெய்தாக்காலத்தும், பெருமை-அறிவு-முயற்சி என்னும் ஐவகையாற்றல்களுமுளனுகி, தவத்திற்சிறந்த முனிவோரையும் தமரிற்சிறந்த முதியோரையும் தழுவிப்போற்றி யொழுகவல்லானுயின், அவன் ஈட்டிவைத்த எல்லாப் பொருள்களும் விருத்தியடையும்; அவனுக்குப் பகையாண்டுமில்லை. எல்லா வலியுஞ் சிறக்கும். அவர்களை அவமதித்துப் பகையானுக்கு, அந்த நட்பும் படையும் நயக்கக்கூடி அரசனும் பொருளும் ஆர அமையினும், அழித்துவிடுவன். இப் பகை இரண்டிற்கும் சான்று இந்த துரியோதனனே சாலும் இதுகாலகதி யென்றுணர்க.

## அணிவகுப்புச் சருக்கத்தோடு

உத்தியோகபர்வம் முற்றிற்று.



